உ

சிவமயம்.

# இப்புத்தகத்திலடங்கியவை

சிவமயம்.

திருக்கைலாய பரம்பரை, திருக்கோவலூராதீனம்,

திருப்பாதிரிப்புலியூர்ச் சந்நிதி வீதியிலுள்ள ஸ்ரீமத் ஞானியார் மடாலயம்

ஸ்ரீ ல ஸ்ரீ

## சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய வாழ்த்துச் செய்யுட்கள்.

---

### எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

நிறைபரம் பொருளாஞ் சிவபெரு மான்ற
னிகரிலாப் பரத்துவ முணர்ந்து
மறைபுக ழுவன்ற னுவமையில் பத்தி
மன்குரு சரணர்தம் பத்தி
தறையின ருணரச் செய்தநம் வசவ
சற்குரு புராணநல் லுரையை
முறையுற வுஞற்றி வசவநற் குருவின்
முழுதரு ளினிதடைந் துய்ந்தான். (க)

மன்னுசித் தாந்த சிகாமணி நூலின்
மறைபொருள் வெளிப்படுத் தறிஞன்
என்னரும் வீர சைவநற் சமயத்
தியல்பினை யிற்றெனு வுணர்வான்
பன்னுறு நூல்க ளச்சினிற் பதிக்கும்
பாங்குறு பத்தியிற் சிறந்தோன்
தன்னமுந் தீய றுறவினை நாடாத்
தன்மையிற் பொலிந்திடு சீலன். (உ)

சென்னைசேர் நாகி செட்டியென் செல்வன்
தேர்ந்தநற் கல்வியு முடையோன்
பன்னிரு கரத்துப் பரம்பொரு ளருளாற்
பகர்பல வாண்டுக ளிருந்து
தன்னுறு கருத்தில் வேண்டுவ வெய்திச்
சரணரைப் பூசைசெய் வதுவே
முன்னவ னருளைப் பெறும்வழி யென்னு
முறைமையி னின்றுவா ழியவே. (ங)

---

சிவமயம்.

# சாத்து கவிகள்.

சென்னை, ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்

ம - ள - ள - ஸ்ரீ,

## கோ. வடிவேலு செட்டியாரவர்கள்

இயற்றிய

---

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

சிவம்பெருகு நெறிமறவான் சிவஞான
சாதனத்தைத் திகழக் கண்டான்
தவம்வளரு மகமுடையான் சாதுசங்க
நேயமுளான் சலிப்பை யாக்கும்
பவமறுக்கு வீரசைவப் பண்புடையா
னன்னெறியைப் பகரும் வாயான்
உவமமறு வித்தையுளா னுமைபாகன்
கருணையையே யுன்னுஞ் சீரான். (க)

தாமரைவாழ் திருமகளுங் கலைமகளுந்
தன்னிடத்துத் தங்கி நிற்சப்
பூமனுய் வாழ்சீலன் புலவர்சொலும்
புகழ்வாய்ந்த புண்ய சாலி
காமரைவெல் கணக்கறிந்து கண்ணாக
வுறுபுனிதன் கற்றோ ருக்குச்
சேமநிதி யெனவுறுவா னுகிசெட்டி
யெனும்பெரிய சீமா னுய்ந்து. (உ)

விளங்குமுறை யுலகினருக் குதவவெணிப்
பலகலையாய் விரிந்த மைந்த
களங்கமறும் வேதாதிப் பிரமாணம்
பலதிகழக் கற்றோர் போற்ற
வளங்கொள்பல கதைவிரவ வாய்ப்பாக
வியற்குறிப்பு மருவித் தோன்ற
இளம்பிறைசூ டியவிறைவ னெற்குரியா
னிவனென்ன வியப்பு மாறு. (ங)

வீரசைவ நெறிச்சென்று வித்தகரா
விளங்கிநின்றார் வீர மெல்லாந்
தீரமுட னெடுத்துரைக்கும் வசவ புரா
ணத்திற்குச் செப்ப மாகக்
காரணகா ரியவமைப்புக் கவிதைப்
பொருந்தியுறக் கறைசே ராத
வுரணவு முரையியற்றி யீந்தளித்தா
னிசையெங்கு மிலக மாதோ. (ச)

---

சென்னை, ராயப்பேட்டை, வேதப்ரவசன மந்திரத்து

ஸ்ரீ ல ஸ்ரீ,

## சதுர்வேதி-சிவத்யாநாநந்த மஹர்ஷியவர்கள்

## உவந்தளித்தவை.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

மனமருட்டு மதங்கள்பல வுலகினுள
வவற்றையெலா மதியாற் றாக்கி
யினமருட்டுங் குலமருட்டு மிவைமுதலா
விந்நாட்டி லிலகா நிற்குங்
கனமருட்டுக் கடிந்தகலச் சித்தாந்த
சிகாமணிக்குக் கையில் நெல்லி
யெனமருட்டெல் லாமொழிய வுரைபகர்ந்த
நல்வாக்கோ னின்னுங் கேண்மோ.

அல்லமா ப்ரபுவினது லீலைக்கோ
ரழகான குறிப்பிங் காய்ந்தே
சொல்லவா நறுநிலையிற் சமைத்துள்ளோன்
சிவாத்துவிதந் துலங்கா நிற்போன்
பல்லவாத் தமையொழித்தோன் வீரமகே
சுவரநெறி பரந்து லாவ
வெல்லவா மெழிற்சங்கத் தொடுசென்னை
யுணவுறைபு ளியைத்த தீரன்.

‘ தந்தருமங் கீர்த்திதரு ’ மெனுமொழிக்கிங்
கிலக்காகத் தாங்கா நின்ற
விந்துமதத் துயர்தரப்பா டங்கொளுவுஞ்
சாலையிறைத் தலைமை யேற்றே
னந்துறுதாய் நல்லகடு புனிதமுற
நானிலத்தி னடக்க லுற்றோன்
செந்தமிழா ரியந்தெலுங்கு கன்னடங்காண்
நாகனெனுந் தேசோன் மன்னே.

தன்மதநூல் பிறர்வயப்பட் டுண்மையழிந்
தெழிலொழிந்து தளர்வ தோர்ந்து
நன்மதமாம் வீரசைவ மெக்காலுந்
தமிழகத்தே நடைபெற் றோங்கப்

பொன்மதியா திழிதகர்த மிடும்பினைத்தூள்
செயும் வசவர் புராணத்துக் கோர்
நன்மதிசேர் நல்லுரையை நாட்டுவித்தான்
புலவர்புகழ் நவிலு மாறே. (௪)

இருபதின்மே லெழுபதளா வாயுளான
வகலவுரைக் கவிஞர்க் கெண்ணாந்
தருபதங்கள் முச்சொல்லின் வழங்கவல
நாகியெனுந் தகைசால் வள்ளல்
குருபதந்தன் சிரமணிந்தோ னங்கலிங்க
வைக்கியத்தைக் கூடு மெய்யோன்
றுருவனென வழியாத நிலைபெறவே
தமிழுலகிற் றேய்ந்து வாழ்க. (௫)

---

சென்னை, பிரசிடென்சி காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்
ம - ா - ா - ஸ்ரீ,
கா. ரா. நமச்சிவாய முதலியாரவர்கள்
இயற்றிய

---

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

திருவளர் வீர சைவமா மரபிற்
றிகழ்தரு மடியவர் சீர்த்தி
மருவளர் வசவ புராணரத் தினத்தின்
வயங்குசொற் பொருளெலாந் தெளியக்
கருவளர் நுட்ப மெவற்றையும் விரித்துக்
கனிவுட னல்கினன் முன்னாள்
குருவளர் நாலாஞ் சிகாமணி தனக்கு
கோதில்சி றுரைவகுத் தவனே. (௧)

அன்னவன் யாவ னென்னிலோ தமிழே
அரும்பெறற் செல்வமாக் கொண்டோன்
முன்னவன் சிவனே யெனவுளத் தமைத்து
முடிவிலா வின்பமே யடைவோன்
பன்னுநல் லடியா ரடியிணை மறவான்
பாவல ருவலன் பண்பின்
இன்னருள் புரியும் நாகியா மகிபன்
இருநிதிக் கிழவனு மன்றே. (௨)

---

சென்னை, பச்சையப்பன் கலாசாலைத் தமிழாசிரியரும்
"தமிழரசு" பத்திராசிரியருமாகிய
ம-ள-ள-ஸ்ரீ,

## மணி. திருநாவுக்கரசுமுதலியார் அவர்கள்

இயற்றிய

---

**அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.**

அன்புவளம் பழுத்தொழுகும் அடியவர்தம்
வரலாற்றை அழகாக் கூறும்
இன்புவளம் நனிபொதிந்த வசவ
புராணத்துக் கோருரை யியற்றித்
தன்புகழை நிலைநிறுத்தி யாவருக்குந்
தமிழமுதந் தந்து நின்றான்
மன்புகழார் நாகி செட்டி நாமத்தான்
நற்குணத்தான் மதிமிக் கோனே.

---

சென்னை, பச்சையப்பன் காலேஜ் தமிழ்ப் பண்டிதர்
ம-ள-ள-ஸ்ரீ,

## கா. ர. கோவிந்தராஜ முதலியார் அவர்கள்

இயற்றிய

---

நிலைமண்டில வாசிரியப்பா

வண்புனற் கடலேய் மாநிலந் தன்னில்
எண்ணலி லுயிர்த்தொகைக் கியைதரு பிறவிகள்
அளவில வாமவற் றரியநற் பிறவி
மக்கட் பிறப்பென வகுத்தனர் பெரியோர்
அன்னமாண் பிறப்பினை யடைந்த வுயிர்களும்
விழுத்தகு மமுதினை விடாகத் துக்கும்
தன்மைய வாகித் தனித்துய ருழத்தலைப்
பேரரு ளுடைய பெரியோர் பல்லோர்
உன்னுபு மக்க ளொப்பிலா வின்பம்
எய்துறும் வண்ண மினியன நெறிகள்
அமைத்தன ரவற்றுளொன் றுயவிர் நெறியாம்
வீர சைவமென் விழுத்தகு நெறியை
இனிதுறவரு ளிய வின்குணப் பெரியோர்

முசிறி, உயர்தரப் பாடசாலைத் தலைமைத் தமிழாசிரியரும்,
'வீரசைவம்' இதழாசிரியருமான
ம-ள-ள-ஸ்ரீ

## வீ. குமார வீரையரவர்கள்

இயற்றிய

### நேரிசையாசிரியப்பா

திருவளர் மார்பனுந் திசைமுகத் தேவனுந்
திருவடி முடியிணைத் தெரிசிப்பான் முரணிப்
பன்னாண் முயன்றும் பயன்பெறா ரேங்க
அன்னோர்க் கருளா தருணெறி முறையிற்
சிவமே பழுத்த சிந்தைய ராய
சரணர்தஞ் செம்மையைத் தானே காண்பான்
கண்ணுதற் பெருமான் கைலைநின் றிழிந்த
அருட்டிரு மேனிய னல்லம தேவன்
பத்திக் கடலே! பாசவெம் பகையே!
முத்திக் கரசே! மூவா மருந்தே!
சித்திப் பொருளே! சிவானந்த முதலே!
ஞானமணி விளக்கே! நான்மறை முடிவே!
நற்குணக் குன்றே! நம்மனோ ருறவே!
அருணந்தி தேவே! அழிவுறா வன்பே!
எனக்கரைந் தழைத்தே இயைபுறத் தழுவிப்
புகழப் பெறாஉம் புண்ணிய வசவர்
தொன்மைப்பே ரடியார் தொகைபெறு சரிதையை
முறைக்கிளை மரபான் முரணின்றி விளங்க
இன்னமு தனைய கன்னட மொழியிற்
போற்றிய வசவ புராணநன் னூலை
இயலுணர்ந்தாரெலாம் ஏத்திப் பராவத்
தண்டமிழ் மொழியின் றகைபெற யாத்தனன்
வீர சைவனும் வீறுடைப் பெரியோன்
அன்னோன் பெயரு மருளிய காலமும்
யாது மறியோ மந்தோ! அன்றியும்
அச்சிற் சுவடியும் அலமந்து தேடினுங்
அந்தோ! கிடைத்தற் கரிய தாயிற்
றக்குறை தீர்க்கு மவாவின னாகி
அரிதிற் கிடைத்ததோ ரப்பழ நூல்கொண்
டறிஞரிடையாய்ந் தறவழுக் களைந்தே

எளிதி னுணர்வர னியைபுபல காட்டி
விரிபொரு ளுரைத்து விளக்குவித் ததனொடு
கல்லா தவருங் கதைத்தொடர் பெலாமனக்
கண்ணுற் கண்டே கரைந்தன்ப ராகக்
கண்கவர் வனப்புங் காமுறு வியப்பும்
விளங்கித் தோன்றி மேவுந் தகையவாய்ப்
படம்பல வமைத்துப் பழுதிலா வச்சில்
எற்றுவித் தனனே யெவரு மகிழ
அத்தகைப் பெரியோ னியாரெனி னறைகுதும்
மாலர னேயரு மாவணி கருநிறை
சேலநன் னகரான் சிவ வீரசைவன்
சென்ன வசவைய னெனும் பேருடையோன்
புரிதவப் பயனா வருதவப் புண்ணியன்
அமிழ்தினு மினிய தமிழ்மொழிப் பௌவமும்
வடமொழிக் கடலும் வளர்கன் னடமும்
ஆங்கில மொழியும் பாங்குறப் பயின்று
நயத்திற் பிணிக்கும் நற்குண சீலன்
மன்னற் குறையுளா மல்கிய சீருண்டச்
சென்னைமா நகரிற் சிறப்புட னுறைவோன்
விருந்து புரந்தரும் வேட்கைமிக் குடையோன்
சமய வளர்ச்சியிற் றகுபொரு ளுதவுவோன்
மாணவர் விடுதியை மாண்புற நிறுவினோன்
நற்கொடை யாளனா நாகி சிரேட்டி
அவன்நன்றி மறவேம்! அவன்வா ழியரோ!
அவனறம் வாழிய! அவன்குலம் வாழி!
அவனாயு ணீள்க வென்றே
யென்று மிறைஞ்சுது மெம்மிறை வனையே.

சென்னை, அர்ச் கபிரியேல் உயர்தரக் கலாசாலை.

(St. Gabriels High School.)

தமிழ்ப்பண்டிதர்,

ஸ்ரீமத் ஆ. நா. கன்னையா அவர்கள்

இயற்றிய

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

எண்ணிய நல்வளம் யாவைப் புமிக்கெழு
இன்றமிழ் நாட்டிலொரு
புண்ணிய மாநக ரென்றுபல் லோர்களும்
போற்றுறு சேலமதில்
நண்ணிய சைவருள் வீரசை வர்குலம்
நற்பெறு சீர்பெறவே
திண்ணிய மெய்ப்புருக் கொண்டு வந்தாலெனத்
திகழ்சென்ன வசுவய்யர். (க)

அன்னவர் இல்லறம் நல்லற மேவுற
ஆனவர் பொற்புடையோர்
கன்னியர் யாவரும் தந்நல நெறிகொளக்
கற்பொளி ரற்புடையோர்
முன்னவர் பன்னியர் இந்நிகர் இலரென
மூதுல கோர்நவிலத்
தென்னிவர் நலனுடைத் தேவகிரிப் பெயர்
சேர்ந்தொளிர் அம்மையரோ. (உ)

இத்தகை யோர்புகழ் வுற்றிட நற்றவ
முற்றிட மேலுலகோர்
பத்தியின் மிக்கவர் இத்தரை இல்லெனப்
பற்றுட ஞேதிடவும்
சித்தியின் பெற்றமை மிக்கொரு பொற்புடன்
அற்புதமா யுலகில்
தக்கவர் தக்கவன் இவனெனச் சொற்பொருள்
நிற்கவு தித்தனனே. (ரு)

ஆயும் பலநூல் மேலும் பலபொருள்
ஆய்ந்தொளிர் கற்றவனே
காயம் மிகையென ஓய்வு சதமெனக்
கண்டு தெளிந்தவனே
வீயும் மனதிலை ஏயும் வழிசொலு
வேதங் கண்டவனே

நாயன் எனப்புகழ் சீலம் மிருந்தவ
நாகி செட்டியரோ.
அறிவுடை மக்கள் பேரறி வுற்றிட
அத்தகை யாலுலகம்
நெறியெழில் பெற்றிட இருள்வழி யற்றிட
நேமியு ருட்டியபோல்
பொறிவழி செல்லும் மனமது தெருளுறப்
போதமி குத்திடவும்
வருவழி பெற்றிட வசவ புராணத்
துரையருள் சொற்றனனே (௫)

**நேரிசை வெண்பா.**

சீர்பெறுசித் தாந்த சிகாமணிக்கோர் நல்லுரை
பேர்பெற் றிடவரைந்த பெட்பினுன்—ஏர்கொள்
வசவபுரா ணத்தினிற்கோர் வாய்மையுரை கண்டான்
சுசனம் துதிக்கத் துணிந்து.

சிவமயம்

# முகவுரை

உலகத்திலுள்ள பல்வேறு சமயங்களில் உயர்ந்து விளங்குவது இந்து சமயமாம். இந்து சமயத்திலும் சைவம், வைஷ்ணவம், ஸமயமதம் ஆகிய இம்மூன்றே பிரசித்தமாய் விளங்குவதைக் காணலாம். இவற்றில் ஒவ்வொன்றும் பல திறப்படும். அவற்றுள் தலைசிறந்து விளங்குவது வீரசைவமாம். வீர சைவர்கள் சிவார்ச்சனாதி கர்மங்களால் முக்தியடைய வேண்டியவராவர். வேதங்களில் பதிதர்மமென்றும் பசுதர்மமென்றும் இரண்டு தர்மங்கள் சொல்லப்பட்டுள்ளன. பூர்வகாண்டத்திற் சொல்லப்பட்ட [illegible] ஷ்டோமாதி கர்மங்கள் பசுதர்மங்களெனப்படும். உத்தரகாண்டத்திற் சொல்லப்பட்ட சிவலிங்கதாரணம், சிவலிங்கார்ச்சனை, சிவத்யானாதி கர்மங்கள் பதிதர்மங்களெனப்படும். பசுதர்மங்களை யநுஷ்டிப்பதனால் அநித்யமான ஸ்வர்க்காதி பலன்கள் சித்திக்கின்றன. பதிதர்மங்களை யநுஷ்டிப்பதனால் நித்யமான கைவல்ய பலன் சித்திக்கின்றது. ஞானகாண்டத்திற் கூறிய வீரசைவ தர்மங்கள் (பதிதர்மங்கள்) ப்ரஹ்ம வித்தைக்கு உபயோகிகளாவதன்றி ஸ்வர்க்காதி அநித்ய பலனை யுண்டாக்கும் ஜ்யோதிஷ்டோமாதி (பசு) தர்மங்கள் உபயோகிகளாவதில்லை. பசுதர்மத்தை யநுஷ்டிப்பதனால் புண்யம் கிடைப்பினும் முக்தி கிடைப்பதில்லை. பதிதர்மத்தை யநுஷ்டிப்பதனால் புண்யம் கிடைப்பதன்றிச் சமுசார பந்தமும் முற்றிலும் நஷ்டமடையும். ஸ்வர்க்காதி பலன்களை யுண்டாக்கும் பசுதர்மங்களும் முக்தி பலத்தை யுண்டாக்கும் பதிதர்மங்களும் ஒரே வேதத்திற் கூறப்பட்டுள்ளவை. எவர்க்கு எப் பலத்தில் விருப்பமுள்ளதோ அப் பலனுக்குச் சாதனமான கர்மத்தை அவர் செய்தல் வேண்டும். ஸ்வர்க்காதி பலன்களுக்குச் சாதனமான கர்மங்கள் வேதத்தின் பூர்வகாண்டத்திற் சொல்லப்படுகின்றன. முக்தி சாதனமாகிய சிவலிங்கார்ச்சனாதி கர்மங்கள் உத்தரகாண்டத்திற் சொல்லப்படுகின்றன. பூர்வகாண்டத்தை யநுசரிப்பவர்கள் பசுதர்மிகளென்றும், உத்தரகாண்டத்தை யநுசரிப்பவர்கள் பதிதர்மிகளென்றும் சொல்லப்படுவர். பசுதர்மிகள் பிரவர்த்தகரென்றும், பதிதர்மிகள் நிவர்த்தகரென்றும் சொல்லப்படுவர்.

வேதங்களிற் சொல்லப்பட்ட எல்லாக்கர்மங்களையும் ஒருவன் அநுஷ்டிப்பது சாத்தியமன்று. வேத சம்பந்தமான தர்மங்களில் எம் மதத்திற்கு எத் தர்மங்கள் சாதனமாயிருப்பனவோ அப்படிப்பட்ட தர்மங்களை மாத்திரம் அந்த மதத்தன் தவறாமல் அநுஷ்டித்து அம் மதத்தில் த்யேயத்தைச் சாதித்து வேத கர்த்தனான பரமேச்வரனை த்ருப்தியடையச் செய்கின்றான். ஒவ்வொரு மதத்தின் தர்மம் ஒவ்வொரு விதமாயிருக்கின்றது. அவ்வெல்லாத் தர்மங்களையும் வேதங்கள் கூறுவதனாலேயே அத் தர்மங்களெல்லாவற்றையும் ஒருவன் அநுஷ்டிக்க வேண்டுமென்னும் நியமமில்லை. மனித வர்க்கத்திற்கு வேண்டிய தர்மங்களெல்லாவற்றையும் வேதங்கள் சாமானியமாய்ப் போதிப்பினும் இரண்டொரு ஆசார்ய

பகவத் பாதர் அவ் வேதங்களை யெல்லாம் செவ்வனே பரிசோதித்துத் தமக்கு அநுகூலமாயுள்ள சில பிரதான தர்மங்களை யநுஷ்டித்துச் சித்தியடைந்து தாம் அநுஷ்டித்த அந்த தர்மங்களை லோகோத்தாரணமாக நூல்களில் எழுதியிருக்கின்றார்கள். அப்படிப்பட்ட வேத தர்மங்களை யநுஷ்டிப்பதனால் வேத சம்பந்தமான தர்மங்களெல்லாவற்றையும் அநுஷ்டித்த பலனுண்டாம். அவ்வாறின்றி வேதத்திற் சொல்லப்பட்ட வெல்லாத் தர்மங்களையும் அநுஷ்டிக்க வேண்டியதில்லையென்று நிச்சயமாய்க் கூறுகின்றனர். சதுர்வித புருஷார்த்தங்களில் மோக்ஷமே சிறந்ததெனை எல்லா நூற்களும் கூறுகிற்கும். இவ்விதமான பரம புருஷார்த்தம் சித்திக்கவேண்டின் வேதத்தின் உத்தரகாண்டத்திற் கூறப்பட்டுள்ள சிவலிங்கதாரணாதி பதிதர்மங்கள் வேண்டுவனவாம். சிவலிங்கார்ச்சனாதி தர்மங்கள் ஜீவபாவத்தை அடியோடே ஒழிக்கின்ற வல்லமையுள்ளவைகளாயிருத்தலால் பதிதர்மங்க ளெனப்படும். முக்தி சாதனமாகிய சிவலிங்கார்ச்சனாதி பதிதர்மங்களை யநுஷ்டித்து ஜீவபாவத்தை யொழித்து சிவஸ்வரூபத்தை யடைவதே பதிதர்மாசரணையாம்.

இது வீரசைவ மதத்தின் பரம த்யேய மென்று வீரசைவ மதத்தைத் தாபித்த சிவபஞ்ச வ்யோக ஸ்வரூபரான ரேணுகாதி பஞ்சாசார்யர்கள் கட்டளையிட்டிருப்பதனால் சரமசரீரி யென்றெண்ணப்பட்ட வீரசைவ மதத்தன் வழிபடுதற்குரிய தர்மங்களைச் சாங்கோபாங்கமாய் அறிவிக்கும் இவ் வசவபுராணம் உரையுடன் வெளியிடப்படுகின்றது. இது முதன்முதல் ஆந்திரபாஷையில் சோமநாத பண்டிதரால் இயற்றப்பட்டது. பிறகு பீமகவியென்பவரால் கன்னட பாஷையில் இயற்றப்பட்டது. அதன்பிறகு தமிழ்மொழியில் செய்யப்பட்டது. இத் தமிழ்ப்புராணம் இயற்றியவர் பெயர் அறியக்கூடவில்லை. இப் புராணம் சங்கரார்ய என்பவரால் வடமொழியிலும் எழுதப்பட்டுள்ளது. வசவண்ணர் சரித்திரத்தைக் கூறுவதால் இது வசவபுராணமென்னும் பெயருடைத்து.

வசவண்ணர் இரண்டாம் சம்புவென்றும் பெயர் பெறுவர். இவர் ஜீவியகாலம் கி. பி. 10 அல்லது 12-ம் நூற்றாண்டாகும். இவர் பிஜாபூரிலுள்ள பாகவாடியைச் சேர்ந்த இங்குளேஶ்வர கப்படி (இங்குளாபுரி) அக்கிராகரத்தில் அவதரித்தவர். இவர்க்குப் பால சங்கையரென்னும் புத்திரர் ஒருவர் உண்டென்று சிங்கிராஜபுராணம் கூறுகிற்கும். ஆனால் சோமநாதபண்டிதரால் இயற்றப்பட்ட வசவபுராணத்தில் இச்செய்தியைக் காணோம். ஆதலால், புத்திரன் உண்டென்னும் விஷயம் ஆதார மற்றதாம். இவர் சிறு வயதிலேயே, கர்ம மார்க்கத்திற்குரிய பூணூல் தரித்து உபாயனச் சடங்கினை யனுசரிப்பது துர்வழக்கமெனக் கண்டித்து, ஞான மார்க்கத்திற்குரிய லிங்கதாரணத்தை உத்தாரணம்செய்த திறமை வாய்ந்தவர். வீரசைவத்தில் லிங்காங்க சாமரஸ்யமே பரம புருஷார்த்தமாம். இவர் மதஸ்தாபகராயிருந்ததன்றி நீதியை நிலைப்படுத்தினவரும், சீலாசாரங்களை உலகில் பரவச்செய்தவரும், அசத்தியத்தைக் கண்டித்தவரும், சத்தியத்தை நிலைப்படுத்தியவரும், பெண்களுக்குச் சம உரிமையை ஏற்படுத்தியவரும், சாது ஜனங்களின்

சககாரியும், சிவசரணசேவகரும், குருலிங்க ஜங்கமபக்தியில் சலனமற்ற நிஷ்டையுள்ளவரும், சிவபக்தர்களின் பொருட்டு ப்ராணத்யாகம் செய்பவரும், மகத்துவமுள்ளவரும், களங்கமற்ற மனமுள்ளவரும், அநாதரக்ஷகரும், கைத்தொழில் உத்தியோகம் முதலியவற்றிற்குத் தகுந்த மரியாதை கொடுத்தவரும், அரசியல் நிர்வாகத்தில் சமர்த்தரும், உலக நன்மையின்பொருட்டு பல கஷ்டங்களைப் பொறுத்தவரும், ஏழைகள் நண்பரும், தாழ்ந்தவர்களை உயர்த்துவதில் மிகச் சிரத்தையுள்ளவருமாவார். இவர் தமக்கு உண்மையென்று தோன்றிய தத்துவங்களை நிலைநிறுத்தற் பொருட்டுத் தாய்தந்தை முதலானவர்களை யறவே துறந்த சத்தியாக்கிரகியும் பல கலைகளையும் ஓதாதுணர்ந்த மூதறிவாளரும், அருள் நிறைந்த நெஞ்சினரும், சிறுவயதிலேயே பேரறிவாளராய் விளங்கினவரும், ஞானிகள் அனைவரும் வழிபடும் மாண்பினரும், உலகியல் ஒன்றினையும் உணராது சிவலிங்க நிஷ்டையில் அமர்ந்திருப்பவருமாவார். தர்மஸ்தாபகரான புத்தர், சங்கரர், இயேசு கிறிஸ்து, முகமது, ராமாநுஜர், மத்துவர், குருநானக் முதலியவர்களின் வரிசைக் கிரமத்தில் இவரையும் சேர்த்துக்கொள்ளலாம். இவர்க்குப் பண்டிதத்திறமை யிருந்ததாகத் தோன்றவில்லை. ஏனெனின் சாமானிய ஜனங்களும் அறிந்துகொள்ளக்கூடிய தெளிந்த தாய்ப்பாஷையாகிய கன்னட பாஷையில் வசனநடையில் இவர் இயற்றிய நூல்கள் அநேகமுண்டு. அவை அவர்மனமுருகி நிற்க அம்மனத்தினின்று ஆறுப்பெருக்கெடுத்த வசனங்களேயாம். அவற்றில் உபநிஷதார்த்தங்கள் பொதிந்திருக்கின்றன. இவர் வசனங்கள் பெரும்பாலும் வெளிவந்திருக்கின்றன. மேலும் இவர் பஞ்ச ஸ்பர்ஶ சக்தி வாய்ந்தவர்.

இவ் வசவபுராணத்தில் சரியை, கிரியை, யோக, ஞான பாதங்களை அநுபவபூர்வகமாய் அடைந்த பெரியோர்களாகிய அறுபத்துமூன்று நாயன்மார்களின் சரிதங்களையும் பார்க்கக் காணலாம். வீரசைவ சரணர்களின் சிறப்பினையும் அறியலாம். இதில் நீதிபோன்ற வேதாந்த சித்தாந்தங்களும் மிளிர்வனவாம். இப்புராணத்திலேதான் சிவபக்தி வீரசைவபக்தி விசேடங்களையும் அவற்றின் தாரதம்மியங்களையும் பார்க்கக் காணலாம்.

இப்புராணத்தில் வீரசைவமத தத்துவங்களும், வீரசைவ மதாசரணைகளும் வசவண்ணர் செய்த மதப்பிரசாரங்களும், அத்துவித விசாரணையும், வீரசைவ மத கண்டனத்திற்குத் தக்க விடைகளும் தெரியக்கிடக்கின்றன. பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கன்னட தேசத்திலிருந்த சைவர், வைஷ்ணவர், ஜைனர், பவுத்தர் முதலாய மதத்தர்கள் செய்த மதப்பிரசாரங்கள் அனைத்தும் உயர்குலத்தார்க்குச் செய்தவையேயாம். தாழ்ந்த குலத்தார்க்கும் சாமானிய ஜனங்களுக்கும் அவை பயன் அளித்ததாகத் தோன்றவில்லை. இவர்கள் உபதேசங்களும் சாத்திரங்களும் வடமொழியிலிருந்தமையினால் தாழ்ந்த குலத்தாரும் ஏனையோரும் உணர்ந்து ஞானமடைந்து உயர்பதவி யடைய ஏதுவில்லாமற் போயிற்று. தாழ்ந்த குலத்தாரும், பெண்களும், ஏனையோரும் ஆத்மவிசாரணைக்கு அவசியமாயிருந்த சகல சுதந்தரங்களையும் இழக்கும் காலமாயிருந்தது. குணகர்மத்தினால் ஏற்பட்

டிருந்த பூர்வீக வர்ண கற்பனைகள் ஒழிந்து ஜனன விசிஷ்டமான வர்ண கற்பனைகள் நிலைபெற்றன. ஜைனமதம் ஒழியுங்காலம் வரவரப் பசு யாகங்கள் தலையெடுத்தன. வசவண்ணர் அவதரிக்குமுன்னர் கன்னட தேசத்தின் நிலைமை கௌதம புத்தர் அவதரித்த காலத்திற்கு முன்னர் பரதகண்டத்தின் நிலைமையை ஏறக்குறைய ஒத்திருந்ததெனக் கூறலாம்.

இப் புராணத்திற் சொல்லப்பட்ட சிவசரணர்களில், மாச்சையர், கின்னரப் பிரமையர், முசுண்டிச்சவுண்டையர், கலைக்கேத்தபிரமையர், தெலுங்கச் சோமையர், சுரிகைச்சவுண்டையர், தசரையர், ஏகாந்தராமையர் முதலிய பெரியார்கள் வசவண்ணர் காலத்திலிருந்தவர்களென்று தெரிகிறது. பாகூர்ப் பொம்மையர், அலாபுதையர் முதலானவர்கள் வசவண்ணர் காலத்திலும் முற்பட்ட காலத்திருந்தவராவர். இவர்களில் சைவர்களும் வீரசைவர்களும் கலந்துள்ளனர். பொம்மையர், கலைக்கேத்த பிரமையர் முதலான ஐயர்பட்டம் பெற்ற சிவசரணர்கள் கன்னடியர்களென்றும், கலியநாயனார், நமித்தண்டி நாயனார் முதலான சிவனடியார்கள் திராவிடர்களென்றும், தெலுங்கச் சோமையர் முதலானவர்கள் தெலுங்கர்களென்றும் அறியக்கிடக்கின்றன. இப் புராணத்தைப் படிக்கும் மேதாவிகள் அடிமைப் புத்தியை யொழித்து சுயமரியாதையைப் பெறுவர் என்பது திண்ணம். திராவிட சிவனடியார்களையும் ஏனையோரையும் இப் புராணத்தில் சேர்த்துள்ளதற்குக் காரணம் அவர்கள் பூண்ட வீரபக்தியேயாம்.

இப் புராணம் அச்சிட முயன்று முடிவுசெய்ய நீண்டகாலம் பிடித்தது. இடையில் நேர்ந்த இடையூறுகள் பல. இப் புராணம் அச்சிட்டு முடிந்து வெளிவருமோ வென்னும் சந்தேகமும் நிகழ்ந்தது. ஈசன் அருளால் எனது சிற்றறிவிற்கு எட்டியவரையில் இதற்கு ஓர் உரை எழுதிவெளியிடத் துணிந்தேன். கன்னடத்திலுள்ள பல நூல்களைக்கொண்டு ஆராய்ந்து மூல பாடத்திலுள்ள சில பாடபேதங்களையும் ஒத்திட்டுப் புராணம் முடிவுசெய்யப்பெற்றது. பெரியோர்கள், பேராவலுடன் செய்த இவ்வெனது வேலையில் குற்றமேதேனும் கண்ணுறுவரேல் க்ஷமிக்கும்படி கேட்டுக்கொள்ளுகின்றேன். வீரசைவ நூல்கள் அநேகமிருக்கின்றன. நான் அவற்றை ஒன்றன்பின் ஒன்றாக வெளிப்படுத்த ஆவலுள்ளவனா யிருக்கின்றேன். ஆயினும் எனது கர்மவசத்தினால் நான் தேகாரோக்கியம் குறைந்தவனாயிருப்பதால் இன்னும் அதனை முடிக்காம லிருக்கின்றேன். ஆயினும் என் 'எண்ணம் நிறைவேறும்படி திருவருள் கூட்டுவிக்குமென நம்பி எல்லாம் வல்ல இறைவனை வழுத்துகின்றேன்.

46. அநுமந்தராயன் தெருவு,
பார்க் டவுன், சென்னை.
1—12—1930.

இங்ஙனம்,
செ. நாகிசெட்டி.

சிவமயம்,

# செய்யுள் முதற்குறிப்பகராதி

உ

சிவமயம்.

# சருக்கம் புராண வகராதி.

உ

சிவமயம்.

# பிழை திருத்தம்

இந்நூலை வாசிக்குமுன்னரே பிழையைத் திருத்திக்கொள்க.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௬ | 35 | விஸ்வா | விப்ரவா |
| ௮ | 32 | போல | போல் |
| ௧௫ | 36 | தாய | தாய் |
| ௧௫ | 37 | அடைப்பை | அடப்பை |
| ௨௦ | 4 | என்ற | என்று |
| ௩௦ | 21 | எம்முடனே | நம்முடனே |
| ௩௪ | 13 | பெற்று | கொண்டு |
| ௩௫ | 31 | போல | போல் |
| ௪௮ | 25 | நோன்பில் | நோன்பின் |
| ௫௦ | 8 | யதனை | அதனை |
| ௫௨ | 32 | அருள் | அருளி |
| ௫௨ | 34 | ஒத்தி | ஒத்து |
| ௫௩ | 8 | இதழில் | இதழின் |
| ௫௪ | 18 | உச்சியில் | உச்சியின் |
| ௫௪ | 21 | மேலேமேலே | மேன்மேல் |
| ௫௬ | 18 | போல | போல் |
| ௫௮ | 7 | மெய்யில் | மெய் |
| ௫௯ | 15 | நமது | கேள், நமது |
| ௫௯ | 16 | எமது | கேட்பாயாக, எமது |
| ௭௨ | 10 | எ | எந்த |
| ௭௩ | 1 | நீ | என்று நீ |
| ௭௩ | 1 | நீ | என்று மாதராசையர் சொல்லி, நீ |
| ௭௪ | 31 | ஞபி | ஞதி |
| ௮௧ | 24 | இங்ஙனம் | இஙன் |
| ௮௩ | 39 | பேற்றின் | இ பேற்றின் |
| ௮௩ | 39 | ஆத்ம | இந்த ஆத்ம |
| ௮௪ | 4 | ஆத்ம | இந்தஆத்ம |
| ௮௮ | 29 | பிராந்தராகி | பிராந்தராய் |
| ௯௫ | 3 | குகூர்த்த | முகூர்த்த |
| ௯௫ | 26 | மேற்கட்டியினும் | மேற்கட்டியாலும் |
| ௯௮ | 23 | பசவேசுரர் | வசவேசுரர் |
| ௧௦௦ | 41 | மீது | மேல் |
| ௧௦௨ | 30 | உருவம் | உருவாம் |
| ௧௧௨ | 20 | சிறிது | சிறிது என்று |
| ௧௧௨ | 21 | மனத்திடை | மனத்தினிடை |
| ௧௧௮ | 28 | ஈய | நந்திதேவனார்க்கு ஈய |
| ௧௧௮ | 28 | விவாகஞ்செய்து | வசவண்ணர்க்கு விவாகஞ்செய்து |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௨௧ | 1 | மந்திரிகளும் | அம்மந்திரிகளும் |
| ௧௨௧ | 9 | மந்திரிகளும் | அம்மந்திரிகளும் |
| ௧௨௨ | 34 | பதம் | மென்பதம் |
| ௧௨௨ | 34 | திருவடிகளை | மிருதுவாகிய திருவடிகளை |
| ௧௨௩ | 1 | திருவடிகளை | மிருதுவாகிய திருவடிகளை |
| ௧௩௨ | 32 | திறமான | திறமான |
| ௧௪௩ | 36 | நந்தியின் | நந்தியின் மீதினும் |
| ௧௪௩ | 36 | (மேலும்) | மேலும் |
| ௧௫௫ | 34 | தர்மநேதரமே | தர்மநேத்ரமே |
| ௧௬௫ | 8 | அமூர்தம் | அமுதம் |
| ௧௭௩ | 17 | சொல் | சொல் எல்லாம் |
| ௧௮௫ | 26 | ஆனது | ஆனதனை |
| ௧௮௭ | 13 | பொன் | அரிய பொன் |
| ௧௮௭ | 13 | அழகிய | அருமையானதும் அழகியதுமாகிய |
| ௧௮௮ | 4 | சேர்ந்தார் | செய்தார் |
| ௧௮௯ | 9 | மண்ணால் | மண்ணன் |
| ௧௯௫ | 23 | ஓதினால் | இது ஓதினால் |
| ௧௯௫ | 23 | நாம்) | நாம் |
| ௧௯௬ | 11 | அகம் | அகன் |
| ௨௧௩ | 23 | ஓரு | ஒரு |
| ௨௧௯ | 8 | போல | போல் |
| ௨௨௩ | 41 | எருத்தின் | எருத்தில் |
| ௨௩௧ | 23 | டதயாரகமி | யுதயாரகமி |
| ௨௩௨ | 23 | சேலை | கனகம் சேலை |
| ௨௩௬ | 15 | நிற்க | நிற்ப |
| ௨௩௭ | 33 | எமமை | எம்மை |
| ௨௪௬ | 20 | மடந்தையர்க்கு | மடந்தையர் |
| ௨௪௭ | 17 | சுருங்கிக் முழுதும் | முழுதும் |
| ௨௪௭ | 17 | கூம்பிய | சுருங்கிக் கூம்பிய |
| ௨௬௭ | 21 | கூம்பிய | சுருங்கிக் கூம்பிய |
| ௨௫௦ | 5 | மணி | மணியினால் |
| ௨௫௦ | 39 | சாமங்களையும் | சாமரங்களையும் |
| ௨௫௨ | 36 | பொறை | பொறையுறும் |
| ௨௫௨ | 39 | தரிக்கிலாய் | தரிக்கில்லாய் |
| ௨௫௩ | 15 | ருத்ராக்ஷங்களை | (வெண்மையாகிய) ருத்ராக்ஷங்களை |
| ௨௫௩ | 23 | ருத்ராக்ஷங்களை | வெண்மையாகிய ருத்ராக்ஷங்களை |
| ௨௬௨ | 9 | வல்லன | வல்லன் |
| ௨௬௨ | 27 | காலையில் | காலையின் |
| ௨௬௮ | 25 | அன்புளோர் | அன்புளோர்கள் |
| ௨௬௫ | 33 | சிந்தனையுள்ளவர்கள் | சிந்தனையுள்ளவர் |
| ௨௭௬ | 6 | கை | கையில் |
| ௨௮௨ | 8 | இருத்தி-வைத்து | வைத்து-இருத்தி |
| ௨௮௨ | 14 | வைத்து | இருத்தி |
| ௨௮௩ | 37 | உன் | நின் |
| ௨௮௩ | 41 | தையலார் | தையலாள் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨௮௮ | 17 | வெண்ணெய் | வெண்ணெய்தனை |
| ௨௯௦ | 7 | என்னை | எண்ணெய் |
| ௨௯௩ | 13 | முதலே | முதல் |
| ௨௯௪ | 10 | என்று | என்றும் |
| ௨௯௪ | 13 | என்றும் | என்று |
| ௨௯௪ | 31 | புலம்பி | புலம்பியும் |
| ௨௯௪ | 34 | என்று | என்றும் |
| ௨௯௪ | 36 | புலம்பி | புலம்பியும் |
| ௩௦௨ | 39 | கதவுகளை | கதவுகளையும் |
| ௩௦௩ | 4 | கதவுகளை | கதவுகளையும் |
| ௩௦௩ | 5 | மெல்லாம் | முழுதும் |
| ௩௦௩ | 12 | கிணற்றை | கிணறுகளையும் |
| ௩௦௩ | 20 | கிணற்றைத் | கிணறுகளையும் |
| ௩௧௦ | 10 | இஷ்டலிங்க | இட்டலிங்க |
| ௩௧௨ | 29 | என் | என்தன் |
| ௩௧௪ | 12 | திருக்கோலத்துடன் | திருக்கோலமாக |
| ௩௧௪ | 12 | வந்தருளி | எழுந்தருளி |
| ௩௧௭ | 19 | நம் | நம்தம் |
| ௩௧௮ | 12 | போதனே | போதகனே |
| ௩௨௧ | 13 | குருலிங்கத்து | குருலிங்கத்து |
| ௩௨௫ | 32 | விந்தியம் | விந்தியம்தான |
| ௩௨௫ | 34 | மந்தரம் | மந்தரம்தான் |
| ௩௨௫ | 38 | கையில் | கை |
| ௩௨௫ | 39 | மைநாகம் | மைநாகம்தான் |
| ௩௨௬ | 14 | வந்தர்க்கங்களிலும் | ஆதவன்தன் |
| ௩௨௮ | 5 | ஆதவன் | வனந்தர்க்கத்தும் |
| ௩௨௮ | 13 | வனந்தர்க்கம் | வனந்தர்க்கங்களிலும் |
| ௩௩௦ | 39 | கிரி | கிரிகள் |
| ௩௩௧ | 37 | கொடிகள் | கொடி |
| ௩௩௨ | 25 | (பெரிய | பெரிய |
| ௩௩௨ | 30 | ாலுந் | பாலுந் |
| ௩௪௧ | 25 | தாருவென்ன | தாருவென்ன |
| ௩௪௩ | 5 | தவங்கள் | மாதவங்கள் |
| ௩௪௫ | 20 | என்ன | என |
| ௩௪௬ | 36 | தோம் | தோமென்று சொல்லி |
| ௩௪௮ | 2[illegible] | சித்தம் | மாதிராசர் சித்தம் |
| ௩௪௮ | 29 | (மாதிராசையரை) | மாதிராசையரை |
| ௩௫௨ | 32 | கின்றமுகிவர் | கின்ற பெரிய ஜங்கம மூர்த்தி |
| ௩௫௫ | 19 | இலலே | இல்லே |
| ௩௫௬ | 33 | நாம் | யாம் |
| ௩௫௭ | 7 | பெரும் | இரும் |
| ௩௫௮ | 21 | இல்வேன் | இல்லேன் என்று |
| ௩௫௮ | 21 | றேன் | றேனென்று |
| ௩௫௮ | 12 | என்னில் | இச்சிப்பன் என்னில் |
| ௩௫௮ | 19 | என்னில் | இச்சிப்பன் என்னில் |

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩௬௨ | 20 | அந்நிலை | அன்னிலை |
| ௩௬௪ | 26 | என் | என் |
| ௩௬௪ | 27 | மிக்க | நல் |
| ௩௬௫ | 15 | காலையில் | காலையின் |
| ௩௬௮ | 4 | யாது ? | யாது சொல்லுவாய்? |
| ௩௭௦ | 17 | தோள் | புயம் |
| ௩௭௨ | 6 | பூசுவன் | நிறை பூசுவன் |
| ௩௭௨ | 6 | தாரணஞ் | நிரம்பத் தாரணஞ் |
| ௩௭௫ | 36 | ஒருவர் | யார் ஒருவர் |
| ௩௭௮ | 21 | செல் | செல்ல |
| ௩௯௦ | 37 | தெனன | தென்ன |
| ௩௯௩ | 6 | வஞ்ஞுகிய | வனுமாகிய |
| ௩௯௩ | 12 | வஞ்ஞுகிய | வனுமாகிய |
| ௩௯௬ | 15 | மன த்தில் | மனத்து |
| ௩௯௮ | 16 | தரித்தார் | தறித்தார் |
| ௪௦௦ | 26 | சேடதாசர் | சேடத்தாசர் |
| ௪௨௬ | 1 | இக்கண் | இக்கண் மூன்று |
| ௪௩௫ | 37 | அன்பர் | நண்பர் |
| ௪௩௬ | 12 | சிவபத்தி | சிவபத்தியது |
| ௪௩௬ | 13 | சிவபக்தி | அந்தச் சிவபக்தி |
| ௪௩௬ | 19 | சிவ | அந்தச் சிவ |
| ௪௩௬ | 43 | வறிந்து | வரிந்து |
| ௪௫௨ | 7 | தவர்க்கு | தவத்தர்க்கு |
| ௪௫௨ | 40 | யார்க்கும் | யாவர்க்கும் |
| ௪௬௦ | 4 | அரையன் | அரையன் தனக்கு |
| ௪௬௪ | 16 | குடம்பை | குரம்பை |
| ௪௬௪ | 39 | தாள் | தான் |
| ௪௭௩ | 13 | வேந்தன் | வேந்தனை |
| ௪௭௮ | 12 | செய்து | நெய்து |
| ௪௮௪ | 31 | தொடரேல் | தொடரேல் என்று |
| ௪௮௪ | 31 | பிடிக்காதே | பிடிக்கதே யென்று |
| ௪௮௪ | 26 | பிடிக்காதே | பிடிக்காதே யென்று |
| ௪௯௦ | 29 | ஆது | அது |
| ௪௯௫ | 8 | கண்டும் | காண்டும் |
| ௫௦௧ | 25 | செயவாய் | செய்வாய் |
| ௫௦௪ | 33 | களர்ப | களர்ப்ப |
| ௫௧௨ | 7 | போல | போல் |
| ௫௧௬ | 8 | பிராந்தி | பிராந்து |
| ௫௨௦ | 34 | மலர் | மலர்களை |
| ௫௨௭ | 2 | அளித்தனையே | அளித்தனையோ |
| ௫௨௭ | 36 | குளிர்ச்சி | சீதம்-குளிர்ச்சி |
| ௫௩௫ | 12 | னென | னென் |
| ௫௩௫ | 7 | —டி | படி |
| ௫௩௮ | 21 | பொய் | பொய்யால் |
| ௫௪௭ | 19 | ஓர் | ஓர் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௫௫௧ | 42 | உள்ளம் மகிழ்ந்து | உள்ளம் நெகிழ்ந்து |
| ௫௫௧ | 42 | மனமகிழ்ந்து | மனம் குழைந்து |
| ௫௫௨ | 8 | மகிழ்ந்து | குழைந்து |
| ௫௫௩ | 25 | மகிழ்து | மகிழ்ந்து |
| ௫௫௪ | 23 | பத்மம் | பதுமம் |
| ௫௫௬ | 3 | யில் | யாலே |
| ௫௫௬ | 3 | யினுல் | யினுலே |
| ௫௬௨ | 20 | சோழன் | அபயசோழன் |
| ௫௬௨ | 7 | ஒன்றிட | பக்கம் ஒன்றிட |
| ௫௬௩ | 2 | படைத்து | உளப்பம் எய்துறப் படைத்து |
| ௫௬௩ | 9 | கொடுத்து | மேன்மையாகக் கொடுத்து |
| ௫௬௩ | 3 | கொடுத்து | மேன்மையாகக் கொடுத்து |
| ௫௬௩ | 20 | சாழன் | சோழன் |
| ௫௬௪ | 13 | மெல் | மென் |
| ௫௬௪ | 8 | வீரசோளங்வையர் | வீரசோளங்கையார் |
| ௫௭௪ | 27 | உல்லார் | வல்லர் |
| ௫௮௦ | 10 | கல்யாண | ராஜதானியாகிய கல்யாண |
| ௫௮௦ | 16 | கல்யாண | ராஜதானியாகிய கல்யாண |
| ௫௮௩ | 30 | ஜங்கமாரதனை | ஜங்கமாராதனை |
| ௫௮௬ | 6 | பாத்து | பாது |
| ௬௦௧ | 27 | மூர்த்திகளுக்கு | மூர்த்திகளை |
| ௬௦௧ | 35 | மூர்த்திகளுக்கு | மூர்த்திகளை |
| ௬௦௩ | 22 | சங்கமமே | நல் சங்கமமே |
| ௬௦௩ | 22 | ஜங்கமமூர்த்திகளே | சிறந்த ஜங்கமமூர்த்திகளே |
| ௬௦௩ | 30 | நீங்கிய | நீங்கிய சிறந்த |
| ௬௦௪ | 21 | மழுவோ | சுடர் மழுவோ |
| ௬௦௪ | 21 | மழுப்படையோ ? | பிரகாசிக்கின்ற மழுப்படையோ ? |
| ௬௦௪ | 27 | மழுப்படையோ ? | பிரகாசிக்கின்ற மழுப்படையோ ? |
| ௬௦௬ | 16 | என்ன | எழுவீர் என்ன |
| ௬௦௬ | 16 | என்று | எழுந்திருங்களென்று |
| ௬௦௬ | 21 | வாழுங்களென்று | வாழுங்கள், எழுந்திருங்களென்று |
| ௬௧௩ | 14 | என் | இவ்வாறு என் |
| ௬௧௧ | 37 | புசண்டி | புசுண்டி |
| ௬௧௩ | 14 | என்னவென்று | இவ்விதத்தை யென்னவென்று |
| ௬௧௩ | 25 | என்ன | இவ்விதத்தை யென்ன |
| ௬௨௩ | 17 | கல்யாண | ராஜதானியாகிய கல்யாண |
| ௬௨௩ | 24 | கல்யாண | ராஜதானியாகிய கல்யாண |
| ௬௨௫ | 26 | திருவடிகளுக்கு | திருவடிகளை |
| ௬௨௫ | 33 | திருவடிகளுக்கு | திருவடிகளை |
| ௬௩௬ | 35 | சித்க்ராம | சித் க்ராம |
| ௬௩௭ | 44 | தெரிக்க | தெரிவிக்க |
| ௬௬௬ | 40 | கல்லையர்க்கு | கல்லையரை |
| ௬௬௬ | 15 | அந்த | அ-அந்த |
| ௭௨௯ | 2 | பருப்பத | அரிய பருப்பத |
| ௭௨௯ | 2 | ஸ்ரீ | கிடைத்தற்கரிய ஸ்ரீ |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௭௨௧ | 9 | ஸ்ரீ | கிடைத்தற்கரிய ஸ்ரீ |
| ௭௩௨ | 2 | பொருந்த | பொருந்தல் |
| ௭௩௭ | 2 | தண்ணிமை | திண்ணிமை |
| ௭௩௮ | 30 | யழி | யழிந் |
| ௭௪௭ | 24 | கடவுளோ; அல்லாத | கடவுளை யல்லாத |
| ௭௫௨ | 8 | சிவபெருமானுக்கு | மலமில்லாதவராகிய சிவபெருமானுக்கு |
| ௭௫௨ | 15 | சிவபெருமானுக்கு | மலமில்லாதவராகியசிவபெருமானுக்கு |
| ௭௭௦ | 34 | அப்பால் ஆனவன் | அப்பாலான் |
| ௭௮௩ | 11 | அடர்ந்து | அடர்த்து |
| ௮௩௮ | 2 | ஓர் | ஒரு |
| ௮௪௨ | 21 | சிபக்தியின் | சிவபக்தியின் |
| ௮௪௩ | 7 | செய்வார் | செய்வர் |
| ௮௪௩ | 13 | அமையார் | அம்மையார் |
| ௮௯௮ | 13 | மண்டு அரும் | தண்டரு |
| ௮௯௮ | 13 | மிகவும் அருமையாகிய | இன்பமாகிய |
| ௮௭௧ | 7 | விலிக்கந்தன்னை | விலிக்கந்தன்னை |
| ௮௮௩ | 19 | செயயாத | செய்யாத |
| ௯௯௮ | 39 | சீர்த்தி | கீர்த்தி |

| பக்கம். | வரி. | விஷயங்கள். | சேர்த்தலும், விடுதலும். |
|---|---|---|---|
| ௨௩௭ | 19 | சமைபுறம் கருத்தாகி-சாந்தகுண முள்ளவராகி, சங்கமர்-விடஜங்கமர். களித்து-மனமகிழ்ந்து, சென்றார்-போயினர். | இவற்றை ஈற்றில் சேர்க்க. |
| ௨௩௭ | 24 | சாந்தகுணமுள்ளவராகி விடஜங்கமர் மனமகிழ்ந்து போயினர். | இவற்றை ஈற்றில் சேர்க்க. |
| ௨௯௪ | 33 | (2) | இதனை யடிக்க. |
| ௨௯௫ | 5 | (2) | இதனை ஈற்றில் சேர்க்க. |
| ௩௪௬ | 32 | அறையா-சொல்லி, | இவற்றை ஈற்றிலுள்ள எ-று. என்பதன் முன் சேர்க்க. |
| ௩௭௭ | 40 | சொலாய்-சொல்லுவாய், | இவற்றை ஈற்றிலுள்ள எ-று. என்பதன் முன் சேர்க்க. |
| ௩௯௮ | 4 | சொல்லுவாய் | இதனை ஈற்றில் சேர்க்க. |
| ௪௮௦ | 30 | தங்களில் கலந்து பேசிக்கொண்டு | இவற்றை அவரிடத்தில் என்பதன் முன் சேர்க்க. |

உ

ஸ்ரீசற்குருவே நம:

# வ்ருஷபேந்த்ரவிஜயம் அல்லது நந்திகேஶ்வரவிஜயம்

என்னும்

# வசவபுராணம்

## மூலமும் உரையும்.

### பாயிரச்சருக்கம்.

#### விநாயகர்.

கோச்சகப்பா.

மாதங்க ளாண்டுகங்கண் மாறநின்று மாறாத
மாதங்க வரைக்கரத்தான் மனத்தருளு மலையாளா
மாதங்கந் தோன்றநம்பால் வந்தாளு மதியுநல்க
மாதங்க முகத்தானை மறவாமல் வழுத்துவாம்.

(பதவுரை-)

மாதங்கள் - மாசங்களும், ஆண்டு - வருடங்களும், உகங்கள் - யுகங்களும், மாற - மாறவும், நின்று - நிலைபெற்று, மாறாத - மாறுபடாத, மா - பெருமைபொருந்திய, தங்கவரை - பொன்மலையை, கரத்தான் - கையிலுடையவனுகிய சிவபெருமான் தனது, மனத்தருளும் - மனத்தருளையும், மலையாள் ஆம் மாது - மலைமகளாகிய உமாதேவி, அங்கம் தோன்ற - தன் திருமேனியிற் றோன்றும்படி, நம்பால் வந்து - நம்மிடத்தெழுந்தருளி, ஆளும் - எம்மை யாள்வதற்குரிய, மதியும் - திருவுள்ளத்தையும், நல்க - கிருபை செய்யும்பொருட்டு, மாதங்கம் முகத்தானை - யானைமுகத்தை யுடையவனுகிய விநாயகக்கடவுளை, மறவாமல் வழுத்துவாம் - மறவாமல் வாழ்த்துவோம் (யாம்), எ - று.

(விசேடவுரை.)

யாம் என்னுந் தோன்று வெழுவாய் வருவிக்கப்பட்டது. இத்தலைச்செய்யுள் என்னுதலிற்றோவெனின், ஆன்றோரொழுக்கப்படி ஸர்வ விக்நோபஶாந்தராகிய விநாயக வணக்கங் கூறுதனுதலிற்று. மாதங்கள் முதலியவற்றீற்றில் உம்மைகடொக்கன. மாறாத என்றது நிலைபெயராத என்றபடி. தங்கவரையென்றது பொன்மலையாகிய வில் என்றபடி. இது எக்காலத்தும் அழியாது நிலைபெற்றிருத்தலால், இதனை 'மாதங்களாண்டுகங்கண் மாறநின்று மாறாத மாதங்கவரை' என்றார். மாதங்கமுகத்தனை யென்னுந் தொடரில் முகம் தலையைக் குறித்தது. மறவாமல் வழுத்தலாவது இடையறாது வழுத்தல். விநாயகர் என்பதற்குத் தனக்கு மேலொரு நாயகரை யில்லாதவரென்பது பொருளாதலால், எல்லாரும் முன்முகத்திவரையே வணங்கலாசாரமாயிற்று. (க)

## வசவதேவர்.

கலிவிருத்தம்.

இசையுங் கல்வியு மெண்வகைச் சித்தியும்
விசய தன்மமு மேதகு செல்வமு
மசைவி லின்பமு மாநந்த முத்தியும்
வசவ வென்றுவ சநிக்க வுன்னவாம்.

(ப - ரை.) வசவ என்று - வசவதேவரேயென்று, வசநிக்க - (ஒருவன்) சொல்லினும், உன்ன - நினைப்பினும், இசையும் - கீர்த்தியும், கல்வியும் - வித்தையும், எண்வகைச் சித்தியும் - அட்டமாசித்திகளும், விசயதன்மமும் - வெற்றிக்குக் காரணமாகிய தர்மமும், மேதகு செல்வமும் - மேன்மைபொருந்திய ஐசுவரியமும், அசைவு இல் இன்பமும் - சலநமில்லாத ஆநந்தமும், ஆநந்த முத்தியும் - இன்பவுருவாகிய முக்தியும், ஆம் - உளவாம்.

(வி - ரை.) வசவ என்பது அண்மைவிளி. எண்வகைச்சித்திகளாவன-அணிமா, மகிமா, கரிமா, லகிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈஶத்வம், வஶித்வம் என்பன. வசவவென்று வசநிக்க வுன்ன, இசை முதலிய பற்பல நன்மைகளுண்டாவதாயின், இவரை நேரே தரிசித்து வணங்கினவர்கள் அடையும் பயனின்னதெனக் கணித்துரைக்கற்பாலார் ஒருவருமிலரென்பது பெறப்பட்டது. (உ)

## (இதுவுமது.)

அறுசீர்விருத்தம்.

மெத்திய முத்தி யெய்தும் விதிதரு நந்தி போற்றி
வத்திது வென்ன வந்த வசவதே சிகனே போற்றி
சுத்தியாந் தவத்து தித்த சுகதண்ட நாத போற்றி
சத்திய நெறியி ரண்டாஞ் சம்புநின் சரணம் போற்றி.

(ப - ரை.) மெத்திய - மேன்மையாகிய, முத்தி எய்தும் - முத்தியடைதற்குரிய, விதி - முறையை, தரும் - தந்தருளுகிற, நந்தி - நந்தியே, போற்றி - (உனக்கு) நமஸ்காரம், வத்து இது என்ன - (உண்மைப்) பொருளிதுவென்று அருள்செய்யும்பொருட்டு, வந்த - எழுந்தருளின, வசவதேசிகனே - வசவாசாரியனே, போற்றி - (உனக்கு) நமஸ்காரம், சுத்தி ஆம் தவத்து உதித்த - பரிசுத்தமாகிய தவத்திற்றோன்றின, சுகதண்ட நாத - சுகதண்ட நாதனே, போற்றி - (உனக்கு) நமஸ்காரம், சத்தியநெறி - சத்தியமார்க்கத்தையுடைய, இரண்டாம் சம்பு - இரண்டாஞ்சம்புவே, நின்சரணம் - உன் திருவடிக்கு, போற்றி - நமஸ்காரம், எ - று.

(வி-ரை.) வந்த என்றது அவதரித்தருளின என்றபடி. சுகதண்ட நாதன் - இன்பத்தையருள்செய்கிற தண்டநாயகன். இரண்டாஞ்சம்பு - இரண்டாஞ்சிவன் (த்விதீயஶம்பு என்ப வடநூலார்.) பர்யாப்தி பிறவாமையான் போற்றியென க்ரியை கொடாதொழிந்தார்.

வசவேசன் வெள்ளிமலை, பாற்கடல், ஸ்ரீசந்தனம், கற்பகவ்ருக்ஷம், நுரை, முத்துமாலை, ஐராவதம், வயிரமணி, வெண்டாமரை, அன்னப்பக்ஷி, பலராமன், அமிர்தம், சரஸ்வதி, ஶரத்காலமேகம், சந்திரன் இவைகளின் உபாதியில் விஸ்தார மானதும் வெண்மையானதுமான பிரகாசமுள்ள மநோஹரமான கீர்த்தியின் தேஜஸினால் அதிக மானவன், என்றால் நிர்மலமான கீர்த்தியுள்ளவனாதலால் "இசையுங் கல்வியுமாம்" என்றும்,

வசவேசன் சிவசரணர்களின் கைக்குக்கண்ணாடியாகவும், அநாதி ஜங்கமர்களுக்கு பக்தனாகவும், சிவபக்தர்களுக்குக் காமதேநுவாகவும், பரசிவனுக்கு ப்ரீதிபாத்ரமான வாஹ

னமாகவும், அந்யமதஸ்தர்களின் வாதங்களென்னும் மேகக்கூட்டங்களுக்குச் சண்டமாருதமாகவும், பூமண்டலத்திற்குப் பரிசுத்தமான ருத்ரஸ்வரூபனுகவும், சம்பூர்ண ஞானவித்தை யுள்ளவனுகவும், ஜன்மம் என்னும் சமுத்திரத்திற்கு அகத்தியனுகவு மிருப்பவனுதலால் "எண்வகைச் சித்தியுமாம்" என்றும்,

வசவேசன் அநாதிமூர்த்தியாகவும், பிரபஞ்சத்திற்கு மூலகாரணனுகவும், அபரிமிதமான கீர்த்தியுள்ளவனுகவும், ஜன்மமென்னும் மேகத்திற்குப் பெருங்காற்றுகவும், எல்லாருக்கும் பந்துவாகவும், சிவபக்தர்களின் முகமென்னும் தாமரைக்குச் சூரியனுகவும், வாதிகளென்னும் தாமரைகளுக்கு மதயானையாகவு மிருப்பவனுதலால் "விசய தன்மமு மேதகு செல்வமுமாம்" என்றும்,

பூலோகத்தில் வசவேசனது திருநாமத்தை நினைத்தும், கீர்த்தியைத்துதித்துப்பாடியும், மூர்த்தியை ஆவலுடன் தியானித்தும் பிரகாசிக்கிற மனிதர்களுக்குப் பிறவியில்லை அஞ்ஞானமில்லை, பாவக்கூட்டமில்லை, அபம்ருத்வின் வசத்தால் வரும் பயமில்லை, கர்வத்தினுலுண்டாகும் குருட்டுத்தன்மையில்லை யாதலால் "ஆநந்தமுத்தியாம்" என்றும்,

வசவேசன் சிவனது ஹ்ருதயகமலமென்னும் பீடமே வீடாகவும், சிவகீர்த்தியென்னும் சந்திரைக்குச் சந்திரனுகவும், சிவனது தயைமுதலிய ஸத்குணங்களென்னும் ரத்நஹாரத்திற்கு நிர்மல நூலாகவும், சிவனது பூஜ்யமான மஹிமை யென்னும் பொன்னுப்பரிகைக்கு மணிமய கலசமாகவும், சிவனது முகத்திற்குக் கண்ணுடியாகவு மிருப்பவனுதலால் "வத்திது வென்னவந்த வசவதேசிகனே" என்றும்,

அந்த ஸ்ருஷ்டிகாலத்தில் வசவேசனது டணத்கார மென்னும் கண்டத்தொனியினுல் நாதமும், * சரீரத்தின் அதிகமான பிரகாசத்தினுல் பிந்துவும், முகத்தின் அதிகமான பிரகாசத்தின் சாராமிசத்தினுல் கலையும், சஞ்சலமான கண்களின் கருவிழி வெள்விழி சிவப்புரேகையென்னும் மூன்றுபாகங்களினுல் சமானமில்லாத ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்னும் மூன்று குணங்களும் உண்டாகி வசவேசன் தானே பரப்ரஹ்மமாதலால் "சத்தியநெறி இரண்டாம் சம்பு" என்றும் கூறினுர் என்றறிக.

வசவேசனது மஹிமையை ப்ருஹஸ்பதி என்ன, ஆதிசேஷன் என்ன, ப்ரஹ்மா என்ன இவர்களின் ஆயிரக்கணக்கிற்கும் வர்ணிப்பதற்குச் சக்தியுண்டாமோ? தோத்திரஞ் செய்வே னென்று யோசிப்பவன் மூடனுவான். (௩)

## சிவஞானபாலையசுவாமிகள்.

கலிவிருத்தம்.

பார்வி ளங்கும் படியுருக் கொண்டவ
னேர்வி ளங்கநின் றுண்டரு ணின்மலன்
சீர்வி ளங்குஞ் சிவஞான தேசிக
னேர்வி ளங்கு மலர்ப்பத மேத்துவாம்.

---

* நாத பிந்து கலைகளின் லக்ஷணம்:—சமுத்திரம், தேவதுந்துபி, மேகம், மத்தளம், காளம், சங்கு, மணி, குழல், வீணை, சதங்கை, வண்டு இவைகளின் சத்தம்போல அநாஹத சக்ரத்தில் பிரகாசிப்பதே நாதமாம். பவளம், மின்னல், பொன், ரத்நம், நக்ஷத்ரம், சூரியன், சந்திரன் முதலியவற்றின் கூட்டம்போல பலவித வர்ணங்கள் தோன்றி த்ரிகூடஸ்த்தாநத்தில் பிரகாசிப்பதே பிந்துவாம். அநேக துவாரங்களுள்ள கடத்தினிலுள்ளதாகிய நிஸ்சலமான தீபத்தின் வெளிச்சம் துவாரங்களின் மூலமாய் புறப்பட்டுப் பிரகாசிப்பதுபோல, இந்த்ரியங்களின் முகங்களில் பிரகாசித்து ஜடரூபமான ப்ரபஞ்சமென்னும் த்ருஶ்ய பதார்த்தங்களின் ஸ்வரூபத்தை வெவ்வேருய்த் தோன்றச் செய்யும் ஞானப்பிரகாசமே கலையாம்.

(ப - ரை.) பார் - உலகிலுள்ளவர், விளங்கும்படி - விளக்கமடையும்படி, உருகொண்டவன் - வடிவுகொண்டவனும், நேர் விளங்க நின்று - கண்ணுக்கெதிரே விளங்கும்படி நின்று, ஆண்டருள் - (எம்மை) ஆண்டருள்கின்ற, நின்மலன் - நிர்மலனும், (ஆகிய) சீர் விளங்கும் சிவஞான தேசிகன் - மேன்மையோடு விளங்குகிற சிவஞானதேசிகனது, ஏர் விளங்கும் - அழகோடு கூடி விளங்காநின்ற, மலர்ப்பதம் - தாமரைமலர்போலுந் திருவடியை, ஏத்துவாம் - துதிப்போம் (யாம்), எ - று.

(வி - ரை.) பார் - ஆகுபெயர். பதம் என மேல் உவமிக்கப்படுபொருள் வருதலால் மலர் தாமரைமலரையே குறித்தது. ஏத்துவாம் என்னும் வினைக்கு வினைமுதலாகிய யாம் என்பது வருவிக்கப்பட்டது. சிவஞானதேசிகன் என்றது சிவஞானபாலையசுவாமிகளை. சிவஞானபாலையஸ்வாமிகளது வீரசைவசிம்மாசனமடம் மயிலத்திற்கும் புதுவைக்கும் சமீபத்துள்ள பொம்மையபாளையத்திலுள்ளது. (௪)

## பருப்பதம் அல்லது *ஸ்ரீசைலம்.

திருப்ப தந்தருஞ் சிந்தித்த செய்தியாங்
கருப்ப தங்கெடுங் காலன் கணக்கறுந்
தருப்ப தங்கொள் புதுமலர் தந்தெழும்
பருப்ப தந்தொழு வாய்துணைப் பாணியே.

(ப - ரை.) துணை பாணியே - (என்) இரு கைகளே, தரு - மரங்கள், பதம் கொள் - அழகைக்கொண்ட, புது மலர் தந்து எழும் - புதிய மலர்களைப் பூத்து வளர்தற்கிடமாகிய, பருப்பதம் - ஸ்ரீசைலத்தை, தொழுவாய் - வணங்குவாயாக, (வணங்குவையாயின் அது) திருப்பதம் தரும் - செல்வப்பதவியைக் கொடுக்கும், சிந்தித்த செய்தி - நினைத்த காரியம், ஆம் - கைகூடும், கருப்பதம் கெடும் - பிறவியென்னுஞ் சொல்லுமொழியும், காலன் கணக்கு அறும் - யமன் கணக்குந் தீர்ந்துபோம், எ - று.

(வி-ரை.) துணை - இரண்டு. காலன் கணக்கு என்றது இறப்பை. ஸ்ரீசைலம் தெலுங்கு தேசத்தின்கண் கொல்லிபாக்கத்தில் உள்ளது. இது ஸ்ரீரேணுகாசார்யஸ்வாமிகளது திருவவதாரக்ஷேத்ரமாம். இவர் வீரசைவ சித்தாந்தத்தை அகத்தியமுனிவருக்குபதேசித்தவர். இவரது சரித்திரத்தின் விரிவைச் சித்தாந்தசிகாமணியில் காணலாம். (௫)

## மல்லிகார்ஜுநேசுவரர்.

அளவில் வானவ ராரண நாவினர்
புளக மெய்யிற் பொருந்துந் தபோதநர்
வளர்ப ருப்பதம் வாழ்மல்லி கார்ஜுந
னுளமு றும்படி யுன்னிநின் றுய்குவாம்.

(ப - ரை.) அளவு இல் வானவர் - அளவற்ற தேவர்களும், ஆரணநாவினர் - அந்தணரும், மெய்யில் புளகம் பொருந்தும் - (தமது) உடம்பில் புளகமடைகிற, தபோதநர் - தபோதநரும், வளர் - வளர்கிற, பருப்பதம் - ஸ்ரீசைலத்தில், வாழ் - நித்யவாசம் பண்ணுகிற, மல்லிகார்ஜுநன் - மல்லிகார்ஜுநேசுவரன், உள்ளம் - (எமது) மனத்தில், உறும்படி - எழுந்தருளும்படி, உன்னி நின்று - கருதி நின்று, உய்குவாம் - உய்யக்கடவோம் (யாம்).

(வி-ரை.) இடையறாது மறைபயிலும் நாவினராதலால் அந்தணரை ஆரணநாவினர் என் . புளகம் - மயிர்க்குச்செறிதல். (௬)

---

* இந்தப் பருப்பதமானது விஷ்ணு, ப்ரஹ்மா, மநு, முநி முதலானவர்களுக்கு ஒவ்வொரு விதமான ஸ்ரீயை (அதாவது முறையே லக்ஷ்மியையும், வசோலக்ஷ்மியையும், மோக்ஷலக்ஷ்மியையும்) கொடுத்திருப்பதனால் ஸ்ரீசைலம் என்னும்பெயரை யுடையதாயிற்று.

## ப்ரமரகுந்தளாம்பிகை.

கலைம டந்தையுங் கந்தக் கமலையு
நிலைமை தங்கட்கு நீடப் பணியவாழ்
தலைமை யாலுயர் சங்கரி யம்பிகை
மலைம டந்தை மலர்ப்பதம் வாழ்த்துவாம்.

(ப - ரை.) கலை மடந்தையும் - சரசுவதியும், கந்தம் - மணம்பொருந்திய, கமலையும் - கமலாசநியாகிய இலக்குமியும், தங்கட்கு நிலைமை நீட - தமது நிலைகள் நீடுதற்பொருட்டு, பணிய - வணங்க, வாழ் - வாழ்கின்ற, தலைமையால் உயர் - தலைமையாலுயர்ந்த, சங்கரி - சங்கரியும், அம்பிகை - அம்பிகையுமாகிய, மலை மடந்தை - மலைமகளது, மலர் - தாமரை மலர்போலும், பதம் - திருவடியை, வாழ்த்துவாம் - துதிப்போம் (யாம்), எ - று.

(வி - ரை.) கமலை கமலா என்னும் வடசொற்றிரிபு, இதற்குப்பொருள் தாமரை மலரில் வீற்றிருப்பவளென்பது. நிலைகள் - பதவிகள். நீடல் - நீட்டித்திருத்தல். தலைமை - இறைமை. சங்கரி - ஸங்கரியென்னும் வடசொற்றிரிபு (இதற்கு ஆன்மாக்கட்கு நன்மையைச்செய்பவள் என்பது பொருள்.) மலை யென்றது இமயமலையை. யாம் என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது. (எ)

## வீரபத்திரர்.

சார பத்திர மிக்கிலாத் தக்கனைப்
பார பத்திரம் பாணியிற் பற்றியே
கோர பத்திரங் கொண்டுவ தைத்திடும்
வீர பத்திரர் மெய்ப்பத மேத்துவாம்.

(ப - ரை.) சாரபத்திரம் - சாரமாகிய நல் அத்ருஷ்டம், மிக்கு இல்லா - மிகுதியாயுடையனல்லாத, தக்கனை - தக்ஷனை, பாரம் - பெரிய, பத்திரம் - வாளாயுதத்தை, பாணியில் பற்றி - கையிற்கொண்டு, கோரபத்திரம் கொண்டு - கோரமாகிய கோலங்கொண்டு, வதைத்திடும் - கொன்ற, வீரபத்திரர் - வீரபத்திரரது, மெய் - உண்மையாகிய, பதம் - திருவடியை, ஏத்துவாம் - துதிப்போம் (யாம்), எ - று.

(வி - ரை.) யாம் என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது. வதைத்திடல் - ஒருசொல். மெய் - அழியாமையைக் குறித்தது. (அ)

## கந்தவேள்.

வந்த சூரன் மயில்வடி வாகியே
சுந்த ரத்தனி வேலாற் துணித்தெறிந்
தந்த ரத்த ரருந்துய ராற்றிய
கந்த வேளைக் கருத்தி லிருத்துவாம்.

(ப - ரை.) மயில் வடிவு ஆகி வந்த - மயிலுருக்கொண்டுவந்த, சூரன் - சூரபன்மனை, சுந்தரம் - அழகாகிய, தனி - ஒப்பற்ற, வேலால் - வேலாயுதத்தால், துணித்து எறிந்து - துண்டித்தெறிந்து, அந்தரத்தர் - தேவர்களுடைய, அருந்துயர் - சகித்தற்கரிய துன்பத்தை, ஆற்றிய - தணித்த, கந்தவேளை - முருகக்கடவுளை, கருத்தில் இருத்துவாம் - எமதுள்ளத்தில் இருத்தி வைப்போம் (யாம்), எ - று.

(வி - ரை.) துணித்தல் - துண்டித்தல். அந்தரம் - ஆகாயம். (கூ)

## குருசமூகம்.

அருளு மல்லம தேவரி ரேவணர்
மருள சித்தர் மலர்த்தாள் வணங்கியே
தெருளி ராமைய தேவர்க்கி றைஞ்சியே
பொருவில் பண்டிதா ராத்ரியர்ப் போற்றுவாம்.

(ப - ரை.) அருளும் - அருள்செய்கிற, அல்லமதேவர் - அல்லமப்ரபுதேவர், இரேவணர் - ரேவணாராத்ரியர், மருளசித்தர் - மருளாராத்ரியர், (ஆகிய இவர்களுடைய) மலர்த்தாள் - தாமரைமலர்போலுந் திருவடிகளை, வணங்கி—, தெருள் - மனத்தெளிவையுடைய, இராமையதேவர்க்கு - ஏகோராமாராத்ரியரை, இறைஞ்சி - வணங்கி, பொருவு இல் - ஒப்பில்லாத, பண்டித ஆராத்திரியர் - பண்டிதாராத்ரியரை, போற்றுவாம் - நமஸ்கரிப்போம் (யாம்), எ - று.

(வி - ரை.) தேவர்க்கு - உருபுமயக்கம்.

இச்செய்யுளால் வீரசைவ சமயாசார்யர்களைத்துதித்தனரென்க. இதில் அல்லமப்ரபுவையும் சேர்த்து பஞ்சாசார்யர்களாகத் துதித்தனர்போல் காணப்படுகிறது. அவ்வாறாயின், எந்த ஆதாரத்தைக்கொண்டு இந்நூலாசிரியர் துதித்தனர் என்பது நன்கு புலப்படவில்லை. குருசமூகம் என்றதினால் ஆசார்யகூட்டத்தைக் குறிப்பிக்கிறது. தென்தேசங்களில் வீரசைவசமயாசார்யர்களது சரித்திரம் கிடைத்தலரிதாதலின் கர்ண பரம்பரையாய்க் கேள்விப்பட்டதை அவ்வாறு துதித்திருத்தல் கூடும். அல்லமப்ரபு பஞ்சாசார்யர்களில் ஒருவரல்ல. கல்யாணபுரியில் விஜ்ஜலராஜன் காலத்தில் ஸ்ரீ வசவேசரையாட்கொள்வதி னிமித்தமும், வீரமாஹேஶ்வரர்களின் பக்தியின்பொருட்டும் நிஷ்களசூனிய நிரஞ்சநமாயுள்ள மஹாலிங்கமாயிருக்கும் பரப்ரஹ்மமே மூர்த்திகரித்து அல்லமப்ரபு என்னும் பேரால் இக்கலியுகத்தில் திருவிளையாடல் புரிந்து விளங்கிற்று என்பது ப்ரபுலிங்கலீலையில் காணப்படுகின்றது. ஆனால், சுப்ரபோதாகமத்தில் கண்டவாறு, பஞ்சாசார்யரென்னும் வீரசைவ சமயாசார்யர்களின் வரலாறு யாதெனின்:—பரசிவனது ஸத்யோஜாத முகத்தினின்று ரேவணாராத்ரியரும், வாமதேவமுகத்தினின்று மருளாராத்ரியரும், அகோரமுகத்தினின்று பண்டிதாராத்யரும், தத்புருஷமுகத்தினின்று ஏகோராமாராத்ரியரும், ஈஶாந்யமுகத்தினின்று விஸ்வாராத்ரியரும் உத்பவித்து, ருக் யஜுஸ் ஸாம அதர்வண அஜப வேதங்களுக்கு முறையே அதிகாரிகளாகி, இஷ்டலிங்க தாரணம்பெற்று, வீரசைவ சிம்மாசநங்களை உலகத்தில் ஸ்தாபித்தார்கள். மைசூருக்குச் சேர்ந்த கடூர் ஜில்லாவில் ரம்பாபுரி என்னும் க்ஷேத்ரத்தில் ரேவணாராத்ரியரது வீரசிம்மாசநமும், பல்லாரி ஜில்லாவில் உஜ்ஜயனிபுரி என்னும் க்ஷேத்ரத்தில் மருளாராத்ரியரது வீரசிம்மாசநமும், கர்னூல் ஜில்லாவில் ஸ்ரீசைலம் என்னும் க்ஷேத்ரத்தில் பண்டிதாராத்ரியரது வீரசிம்மாசநமும், இமயமலையில் பத்ரிகேதாரம் என்னும் க்ஷேத்ரத்தில் ஏகோராமாராத்ரியரது வீரசிம்மாசநமும், வாராணஸி என்னும் காஸீ க்ஷேத்ரத்தில் விஸ்வாராத்ரியரது வீரசிம்மாசநமும் உள்ளன. ரேவணாராத்ரியர் முதலிய பஞ்சாசார்யர் ஒவ்வொரு யுகத்திலும் வெவ்வேறு பெயரால் அவதாரம்செய்து வீரசைவசமயத்தை உத்தாரணம்செய்வர். விரிவஞ்சி இம்மட்டே நிறுத்தினும். (க0)

## நால்வர்.

போற்றி ஞானசம் பந்தர் பொலன் கழல்
போற்றி நாவுக் கரையர் புகழ்ப்பதம்
போற்றி வன்றொண்டர் பொன்னடி நாண்மலர்
போற்றி மாணிக்க வாசகர் பொற்சரண்.

(ப - ரை.) ஞானசம்பந்தர் - திருஞானசம்பந்தசுவாமிகளது, பொலன் கழல் - பொற்கழலையணிந்த திருவடிக்கு, போற்றி - நமஸ்காரம், நாவுக்கரையர் - திருநாவுக்கரசு சுவாமிகளது, புகழ்ப்பதம் - புகழ்பெற்ற திருவடிக்கு, போற்றி - நமஸ்காரம், வன்றொண்டர் - சுந்தரமூர்த்திசுவாமிகளது, நாள் மலர் - புதிய தாமரைமலர்போன்ற, பொன்னடி - திருவடிக்கு, போற்றி - நமஸ்காரம், மாணிக்கவாசகர் - மாணிக்கவாசக சுவாமிகளது, பொன்சரண் - திருவடிக்கு, போற்றி - நமஸ்காரம், எ - று.

(வி - ரை.) நாள் - புதுமை. திருஞானசம்பந்தரை ஆளுடையபிள்ளையார் என்றும், திருநாவுக்கரசரை ஆளுடைய அரசு என்றும், சுந்தரமூர்த்தியை ஆளுடைய நம்பி என்றும், மாணிக்கவாசகரை ஆளுடைய அடிமை என்றும் கூறுப. திருநாவுக்கரசரை வாகீசர் என்பர் வடநூலார். மாணிக்கவாசகரை மணிவாசகர் எனவும் கூறுப. பக்தியின் வீரத்வம் பற்றி நால்வரையும் துதித்ததென்க. (௧௧)

## சிவசரணர்.

பண்டு செய்த பழவினை யிவ்வுடல்
கொண்டு செய்த கொடுமை குலையவே
தண்ட நாதர் முதலாஞ் சரணர்தம்
புண்ட ரீக மலர்ப்பதம் போற்றுவாம்.

(ப - ரை.) பண்டு செய்த - பூர்வகாலத்திற்செய்த, பழவினை - பழவினையும், இவ்வுடல் கொண்டுசெய்த - இவ்வுடம்பெடுத்துச்செய்த, கொடுமை - கொடுமையும், குலைய - அழியும்பொருட்டு, தண்டநாதர் முதலாம் - தண்டநாதர் முதலாகிய, சரணர்தம் - சரணருடைய, புண்டரீகமலர் - தாமரை மலர்போன்ற, பதம் - திருவடியை, போற்றுவாம் - வணங்குவோம் (யாம்), எ - று.

(வி-ரை.) சரணர்-சிவசரணர். புண்டரீகம் - வடசொல். தண்டநாதர்-வசவேசர்.

## வாழ்த்துரை.

திருப்ப ருப்பதத் தேசிகர் சங்கமும்
பெருத்த மண்ணிற் பிறங்குந் தவத்தரு
மருத்த வாக்கமு மார்ச்சிக்கு மாந்தருந்
தருக்கு செங்கோற் றகையுந் தழைக்கவே.

(ப - ரை.) திருப்பருப்பதம் - ஸ்ரீசைலத்தில் வாழ்கிற, தேசிகர் சங்கமும் - ஆசாரிய சமூகமும், பெருத்த மண்ணில் - பெரிதாகிய நிலவுலகத்தில், பிறங்கும் - விளங்குகிற, தவத்தரும் - தவசிகளும், அருத்தம் ஆக்கமும் - செல்வப்பெருக்கமும், ஆர்ச்சிக்கும் - (அச்செல்வத்தை) சம்பாதிக்கிற, மாந்தரும் - மக்களும், தருக்கு - செருக்குதற்குரிய, செங்கோல் தகையும் - செங்கோலின் பெருமையும், தழைக்க - செழிக்கக்கடவன, எ - று.

(வி - ரை.) சங்கம் சமூகம் என்பன வடசொற்கள் (கூட்டம் என்பது பொருள்). அருத்தம் அர்த்தம் என்னும் வடசொற்சிதைவு. மாந்தர் - நித்யபஹுவசநம். செங்கோற்றகை - செங்கோலரசன் எனினுமாம். ஸ்ரீசைலத்தைத் தரிசித்தவர்கள் முக்திப்பேறடைவராதலானும், வீரசைவ சமயாசார்யர்களிலொருவரது சிம்மாசன பீடமாயுளதாதலானும், வீரசைவ சித்தாந்தசிகாமணியை யுபதேசித்த ஸ்ரீரேணுகர் உத்பவித்த க்ஷேத்ரமாதலானும், சிலாதருஷி தவம் செய்து நந்தியெம்பெருமானை புத்திரராகப்பெற்ற க்ஷேத்ரமாதலானும் ஸ்ரீசைலத்தைச் சிறப்பித்து வாழ்த்தினாரென்க. (௧௩)

## தமிழிற்செய்தகாரணம்.

அருளுஞ் சென்ன வசவேச ளுதியாம்
பொருவில் காஞ்சி புரஞ்சேர் தபோதநர்
மருவுஞ் செஞ்சொல் வசவச ரிதைமுற்
றரும நீங்கா துரையெனச் சாற்றுவாம்.

(ப - ரை.) அருளும் - அருள்செய்கிற, சென்னவசவேசன் ஆதி ஆம் - சென்னவசவேசன் முதலாகிய, பொருவு இல் - ஒப்பற்ற, காஞ்சிபுரம் சேர் தபோதநர் - காஞ்சிபுரத்திற் சேர்ந்திருக்கிற தபோதநர்கள், மருவு செஞ்சொல் - செஞ்சொற்களால், வசவசரிதை - வசவபுராணத்தை, முன் தருமம் நீங்காது உரையென - முற்காலத்துத்தருமநெறி வழுவாமற் சொல்லென்று நியமித்தலால், சாற்றுவாம் - (இதனைச்) சொல்லுவோம் (யாம்), எ-று.

(வி - ரை.) சென்னவசவேசர் முதலியோரது கட்டளையே இந்நூல் செய்தற்குக் காரண மென்பதிதனாற் கூறப்பட்டது. (கச)

## நூற்பயன்.

நன்றி மூலத்த னன்னந்தி கேச்சுரன்
வென்றி நூலின் விதிவழி நின்றுளோ
ரொன்றி யச்சி லுதியா ரொழிந்திடா
ரென்று நற்பர மாநந்த மெய்துவார்.

(ப - ரை.) நன்றிமூலத்தன் - நன்மைக்குக் காரணனாகிய, நல் நந்திகேச்சுரன் - நல்ல வசவேசுரனது, வென்றி நூலின் - வெற்றிநூலினது, விதிவழி நின்றுளோர் - விதி நெறியில் நிலைபெற்றுளோர், அச்சில் ஒன்றி உதியார் - உடம்போடு கூடிப் பிறவார், ஒழிந்திடார் - இறவார், என்றும் நல் பரமாநந்தம் எய்துவார் - எக்காலத்தும் நல்ல பேரின்பத்தை யடைவார், எ - று.

(வி - ரை.) அச்சு - உடம்பு. ஒழிதல் - இறத்தல். நந்திகேசுவரனது வெற்றியைக் கூறும் இந்நூல்வழி நிற்போர் பிறப்பிறப்புக்களொழியப் பெற்றுப் பேரின்ப வாழ்வடைந்திருப்ப ரென்பதிதனாற் கூறப்பட்டது. (கரு)

## அவையடக்கம்.

நிதிய வைப்பை மருளி னிகழ்த்தல் போன்
மதியி லேனென்றன் வாக்கால் வகுத்தநூ
லதிக னந்திய ரும்புக ழாதலாற்
புதிய சொல்லிதென் றெள்ளார் புலமையோர்.

(ப - ரை.) நிதியவைப்பை - பொருட்புதையலை, மருளில் - மருள்கொண்ட காலத்தில், நிகழ்த்தல்போல - சொல்லுதல்போல, மதியில்லேன் - அறிவிலியாகிய நான், என்றன் வாக்கால் - என்வாயினால், வகுத்த நூல் - வகுத்துச்சொல்லப்பட்ட நூலானது, அதிகன் - மேன்மையுள்ளவனாகிய, நந்தி - வசவேசரது, அரும் புகழ் ஆதலால் - அரிய புகழாகையால், புலமையோர் - புலவரானோர், இது புதிய சொல் என்று - இது புதிய நூலென்று, எள்ளார் - இகழார், எ - று.

(வி - ரை.) நிதியம் - பொருள். வைப்பு - புதையல். மருள் - மயக்கம். புலமை - அறிவுடைமை. (கசு)

## நூற்பெயர்.

முத்தி யேதரு மோகமில் வித்ததாய்ப்
பத்தி யென்றெழு பைங்கூழ் பணைத்திட
வித்த ரைக்கண் பொழியு மெழிலியாய்
வைத்த தன்பேர் வசவபு ராணமே.

(ப - ரை.) முத்தி - மோக்ஷத்தை, தரும் - கொடுக்கிற, மோகம் இல் - மயக்கமற்ற, வித்து ஆய் - வித்தாகி, பத்தி என்று - பக்தியென்று, எழு - தோன்றுகின்ற, பைங்கூழ் - பயிரானது, பணைத்திட - செழித்திட, இ - இந்த, தரைக்கண் - உலகினிடத்தே, பொழியும் - சொரிகிற, எழிலியாய் - மேகமாக, வைத்த - வைக்கப்பட்ட, தன் பேர் - தன் பேரானது, வசவபுராணம் - வசவபுராணமென்பது, எ - று.

(வி - ரை.) தரை - தரா என்னும் வடசொற்றிரிபு. (௧௭)

## வழிநூல்.

குலவு * பாலக் குருக்கிச்சோ மீசுர
னுலகின் முன்ன முரைத்த தெலுங்கினை
யிலகு வீம கவிகன் னடந்தரு
நலபு ராணந் தமிழா னவிற்றுவாம்.

(ப - ரை.) குலவு - விளங்குகிற, பாலக்குருக்கி சோமீசுரன் - பாலக்குருக்கி சோமநாராத்ரியர், உலகில் - இவ்வுலகத்தில், முன்னம் - முன்னமே, உரைத்த - சொன்ன, தெலுங்கினை - ஆந்த்ரபாஷையை, இலகு - பிரகாசிக்கிற, வீமகவி - பீமகவியென்பவர், கன்னடம் தரு - கன்னடபாஷையிற்செய்த, நல்ல புராணம் - சிறந்த புராணம், தமிழால் - தமிழ்ப்பாஷையில், நவிற்றுவாம் - சொல்லுவோம் (யாம்), எ - று.

(வி-ரை.) முதலில் பாலக்குருக்கி சோமநாராத்ரியரால் தெலுங்கிற் செய்யப்பட்டதும், பீமகவியால் கன்னடத்திற் செய்யப்பட்டதுமாகிய இந்நூல் இப்பொழுது என்னால் தமிழிற்செய்யப்பட்டது என்பதாம். இது சங்கரார்யரால் வடமொழியினும் செய்யப்பட்டுள்ளது. எளந்தூர் ஷடக்ஷரஸ்வாமிகளால் வ்ருஷபேந்த்ரவிஜயம் என்னும் காவ்யம் கன்னடபாஷையில் பொருட்சுவையும் சொற்சுவையும்கூடின திவ்யமான நடையிற் செய்யப்பட்டுமுள்ளது. (௧௮)

நாதனோ லக்கமுன் னந்தி வந்ததுஞ்
சாதமாய்த் தண்ட நாதராந் தன்மையுங்
கோதி லாத்திருக் கூட்டரால் வாதரை
மோதி வென்றது முத்தியுஞ் செப்புவாம்.

(ப - ரை.) நாதன் - சிவபிரானது, ஓலக்கமுன் - திருவோலக்கத்துக்கெதிரே, நந்தி வந்ததும் - நந்திதேவர் வந்ததும், சாதம் ஆய் - பிறந்து, தண்டநாதர் ஆம் தன்மையும் - தண்டநாதரான தன்மையும், கோது இல்லா - குற்றமில்லாத, திருக்கூட்டரால் - திருக்கூட்டத்தாரால், வாதரை - வாதுசெய்தவரை, மோதி - முனைந்து, வென்றதும் - செயித்ததும், முத்தியும் - முக்தியடைந்த விதமும் (ஆகிய இவையாவையும்), செப்புவாம் - சொல்லுவோம் (யாம்), எ - று.

(வி - ரை.) ஓலக்கம் - திருச்சமுகம். திருக்கூட்டம் - சிவகணங்கள். (௧௯)

பாயிரச்சருக்கம் - முற்றிற்று.

---

* இது பால்தூரி என்று தெலுங்கில் வழங்குதலுண்டு.

சிவமயம்.

# திருக்கயிலாயச்சருக்கம்.

## திருக்கயிலாயச்சிறப்பு.

கொச்சகப்பா.

நிதிபடைத்த மனையாளு நிலமன்ன மனையாளுங்
கதிவிலக்கா மறவென்றோர் கருத்தினெல்லா மறவென்றோ
ரதிகமுத்தி வைப்புடையா ரன்பர்குழு வைப்புடையார்
மதியிருக்கு மச்சடையார் வந்தொழியு மச்சடையார்.

(ப - ரை.) நிதி - செல்வம், படைத்த மனை - படைத்த வீடு, ஆளும் - ஆளப்படுகிற, நிலம் - பூமி (ஆகிய இவற்றோடு), அன்னம் அனையாளும் - அன்னம்போல்பவளாகிய மனையவளும், கதி - முத்திக்கு, விலக்கு ஆம் - தடையாகும் (ஆதலால் இவற்றை), மற என்றோர் - மறந்திடுக என்றவர், கருத்தின் - கருத்தினால், எல்லாம் அற வென்றோர் - எல்லாம் அற வென்றவர், அதிகம் - மேன்மையாகிய, முத்தி - மோக்ஷமாகிய, வைப்பு உடையார் - செல்வத்தையுடையவர், அன்பர்-சிவபக்தர், குழுவை-கூட்டத்தை, புடையார்-பக்கத்திற் பெற்றிருப்பவர், மதி - பிறை, இருக்கும் - தங்கிய, அ - அந்த, சடையுடையார் - சடையையுடையவர், வந்து - தோன்றி, ஒழியும் - அழிகின்ற, அச்சு அடையார் - உடம்பினையடையாதவர், எ - று.

(பொ-ரை.) செல்வம், படைத்த வீடு, ஆளப்படுகிற பூமியாகிய இவற்றோடு அன்னம் போல்பவளாகிய மனையவளும் முத்திக்குத் தடையாகுமாதலின், இவற்றை மறந்திடுக என்றவர், கருத்தினால் எல்லாம் அற வென்றவர், மேன்மையாகிய மோக்ஷமாகிய செல்வத்தையுடையவர், சிவபக்தர்கூட்டத்தைப் பக்கத்திற்பெற்றிருப்பவர், பிறைதங்கிய அந்தச் சடையையுடையவர், தோன்றியழிகின்ற உடம்பினையடையாதவர்.

(வி - ரை.) அன்னமனையாளும் என்னும் உம்மையை நிதி முதலியவற்றோடுங்கூட்டி யுரைத்துக்கொள்க. (க)

சூழுமண்டர் தொழும்பதத்தான் றுளக்கமிலாப் பெரும்பதத்தா
னூழியனற் கிளையாதா னுறும்பிறப்பிற் கிளையாதா
னேழுலகு மறியாதா னென்றென்று மறியாதான்
வாழியென வந்திப்பார் வருந்தார்கள் வந்திப்பார்.

(ப - ரை.) சூழும் - சூழ்ந்த, அண்டர் - தேவர்களால், தொழும் - வணங்கப்படுகிற, பதத்தான் - திருவடியையுடையவன், துளக்கம் - அசைவு, இல்லா - அற்ற, பெரும் - பெரிய, பதத்தான் - பதவியையுடையவன், ஊழி அனற்கு - பிரளயகாலத்தீயினுக்கு, இளையாதான் - மெலியாதவன், உறும் - மிகுகின்ற, பிறப்பில் - பிறவிகளில், கிளையா தான் - பிறக்காதவன், ஏழ் உலகும் - ஏழுலகங்களும், அறியாதான் - தெரியாதவன், என்றென்றும் - எப்பொழுதும், மறியாதான் - தடைபடாதவன், வாழி என - வாழக் கடவை யென்று, வந்திப்பார் - துதிப்பவர், இ - இந்த, பார் - பூமியில், வந்து - பிறந்து, வருந்தார்கள் - வருத்தமடையார்கள், எ-று.

(போ - ரை.) சூழ்ந்த தேவர்களால் வணங்கப்படுகிற திருவடியையுடையவன், அசைவற்ற பெரியபதவியையுடையவன், பிரளயகாலத்தீயினுக்கு மெலியாதவன், மிகுகின்ற பிறவிகளிற்பிறக்காதவன், ஏழுலகங்களும் தெரியாதவன், எப்பொழுதும் தடைபடாதவன், (அவனை) வாழக்கடவையென்று துதிப்பவர் இந்தப் பூமியிற் பிறந்து வருந்தமடையார்கள்.

(வி - ரை.) துளக்கமில்லாப் பெரும்பதம் - முத்தியுலகு.

எண்சீர்விருத்தம்.

தரும சிந்தையர் பெருமை தங்கிய தவமு றுந்தொழில் சதுரி னொன்றின
ரிருமை கண்டவ ரிறைவ வென்றடி யிணைப ணிந்திட வினிதி ருந்தரு
ளரும ருந்தன வுருவ னன்புட னமரர் வந்தநு தினமி றைஞ்சிய
கருணை பொங்கிய விழியி னன்புகழ் கயிலை யங்கிரி கயிலை யங்கிரி.

(ப - ரை.) தருமசிந்தையர் - தருமசிந்தையுடையவர், பெருமை - மகிமை, தங்கிய - பொருந்திய, தவம் உறும் - தவமிகும், தொழில் - தொழிலையுடைய, சதுரின் ஒன்றினர் - சதுரப்பாட்டினையுடையவர், இருமை கண்டவர் - இம்மை மறுமைப் பயன்களையறிந்தவர் (ஆகிய இவர்கள்), இறைவ என்று - தலைவனேயென்று, அடியிணை - திருவடியிரண்டையும், பணிந்திட - வணங்க, இனிது இருந்து - இனிதாயிருந்து, அருள் - கிருபைசெய்கிற, அரு - அருமையாகிய, மருந்து - தேவாமிர்தம், அன்ன - போன்ற, உருவன் - திருவுருவுடையவனும், அன்புடன் - அன்புடனே, அமரர் வந்து - தேவர் வந்து, அநுதினம் - நாள்தோறும், இறைஞ்சிய - வணங்க, கருணை பொங்கிய - கருணை மிகுந்த, விழியினன் - கண்களையுடையவனுமாகிய சிவபிரானது, புகழ் - கீர்த்தி (போல்வது), கயிலையங்கிரி கயிலையங்கிரி - திருக்கயிலாயமலை திருக்கயிலாயமலை, எ - று.

(போ - ரை.) தருமசிந்தையுடையவரும், மகிமைபொருந்திய தவமிகுந்தொழிலையுடைய சதுரப்பாட்டினையுடையவரும், இம்மை மறுமைப் பயன்களை யறிந்தவருமாகிய இவர்கள், தலைவனே! என்று திருவடியிரண்டையும் வணங்க, இனிதாயிருந்து கிருபைசெய்யும் அருமையாகிய தேவாமிர்தம் போன்ற திருவுருவுடையவனும், அன்புடனே தேவர் வந்து நாள்தோறும் வணங்க, கருணைமிகுந்த கண்களையுடையவனுமாகிய சிவபிரானது கீர்த்திபோல்வது திருக்கயிலாயமலை திருக்கயிலாயமலை.

(வி - ரை.) அமரர் - இது மங்கல வழக்கு. இறைஞ்சிய - செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். புகழுக்கு நிறம் வெண்மையென்றல் கவிஞர் மரபாதலால் கயிலையங்கிரி "கருணைபொங்கிய விழியினன் புகழ்" என்றார். (௩)

கலிவிருத்தம்.

ஆல முண்டெனை யாரா வரற்குநா
னேல வோர்கிரி யாவனென் றெண்ணியே
சீல நல்லவ முதந்தி ரண்டுவிண்
கோல மெய்திக் குலவி யெழுந்ததோ.

(ப-ரை.) ஆலம் உண்டு - விஷத்தையுண்டு, என்னை ஆரா - என்னையுண்ணாத, அரற்கு - சிவபெருமானுக்கு, நான் - யான், ஏல - பொருந்த, ஓர் - ஒப்பற்ற, கிரி ஆவன் - மலையாவேன், என்று எண்ணியே - என்று நினைத்தே, சீலம் நல்ல - நல்லொழுக்கத்தையுடைய, அமுதம் திரண்டு - அமிர்தமானது கூடி, விண் - ஆகாயத்தில், கோலம் எய்தி - அழகு பொருந்தி, குலவி எழுந்ததோ - விளங்கியெழுந்ததோ, எ-று.

(போ - ரை.) விஷத்தையுண்டு என்னையுண்ணாத சிவபெருமானுக்கு யான் பொருந்த ஒப்பற்ற மலையாவேனென்று நினைத்தே நல்லொழுக்கத்தையுடைய அமிர்தமானது கூடி ஆகாயத்தில் அழகுபொருந்தி விளங்கியெழுந்ததோ? (௪)

வேத சத்தியும் விண்ணவர் சத்தியும்
போத நாரணன் பொற்புறு சத்தியு
மாத வத்தர் வலியுந் திரண்டர
ஞத னக்கிரி யாவமென் றுனதோ.

(ப - ரை.) வேதன் - பிரமனது, சத்தியும் - ஆற்றலும், விண்ணவர் - தேவர்களின், சத்தியும் - ஆற்றலும், போதம் - அறிவினையுடைய, நாரணன் - திருமாலினது, பொற்பு- அழகு, உறு - மிக்க, சத்தியும் - ஆற்றலும், மாதவத்தர் - பெருந்தவத்தினரது, வலியும் - ஆற்றலும், திரண்டு - கூடி, அரன் - சிவபிரானது, ஆதனக்கிரி - ஆசனமாகியமலை, ஆவம் என்று - ஆவோமென்று, ஆனதோ - ஆகியதோ, எ - று.

(போ - ரை.) பிரமனது ஆற்றலும், தேவர்களின் ஆற்றலும், அறிவினையுடைய திருமாலினது அழகுமிக்க ஆற்றலும், பெருந்தவத்தினரது ஆற்றலும் கூடி சிவபிரானது ஆசனமாகிய மலையாவோமென்றாகியதோ? (ரு)

சந்தி ரன்முதற் றாரக ரீறிவ
ரந்த ரும்மொளி கூடி யழுந்தியே
யெந்த நாளு மிறவாவ கைக்கரன்
சந்த வாகந மாகச் சமைந்ததோ.

(ப - ரை.) சந்திரன் முதல் தாரகர் ஈறு - சந்திரன் முதல் நக்ஷத்ராதிபர் இறுதியாகிய, இவர் - இவர்களது, அம் - அழகை, தரும் - தருகின்ற, ஒளி - சோதி, கூடி - திரண்டு, அழுந்தியே - பதிந்தே, எந்த நாளும் - எக்காலமும், இறவா வகைக்கு - அழியாதிருக்கும்பொருட்டு, அரன் - சிவபெருமானது, சந்தம் - அழகாகிய, வாகனமாக - ஊர்தியாக, சமைந்ததோ - ஆனதோ, எ - று.

(போ - ரை.) சந்திரன் முதல் நக்ஷத்ராதிபர் இறுதியாகிய இவர்களது அழகைத் தருகின்ற சோதி திரண்டு பதிந்தே, எக்காலமும் அழியாதிருக்கும்பொருட்டுச் சிவபெருமானது அழகாகிய ஊர்தியாக வானதோ? (சு)

பரந்த பாற்கடற் சோதி பரிவினால்
வரம்பெ றச்சிவன் வைகுங் கிரியதா
யுரந்த ரித்துமண் டங்கிவிண் ணூடெழுந்
தரந்தை நீங்கிய சஞ்சல மானதோ.

(ப - ரை.) பரந்த - விரிந்த, பால் கடல் - பாற்கடலின், சோதி - ஒளியானது, பரிவினால் - அன்பினால், வரம் பெற - வரம் பெறும்பொருட்டு, சிவன் - பரமசிவன், வைகும் - தங்கிய, கிரி ஆய் - மலையாகி, உரம் - வலி, தரித்து - பெற்று, மண் தங்கி - மண்ணில்தங்கி, விண் ஊடு - ஆகாயம் வரையில், எழுந்து - உயர்ந்து, அரந்தை நீங்கி - துன்பம் நீங்கி, அசஞ்சலம் ஆனதோ - அசைவற்றிருந்ததோ, எ - று.

(போ - ரை.) விரிந்த பாற்கடலின் ஒளியானது அன்பினால் வரம் பெறும்பொருட்டுப் பரமசிவன்தங்கிய மலையாகி வலிபெற்று மண்ணிற்றங்கி ஆகாயம்வரையிலுயர்ந்து துன்பம் நீங்கி அசைவற்றிருந்ததோ? (எ)

சுரபி யாதிய வென்னுந் தொகையுட
னரிய தாமரிச் சந்தந மாதியைந்
தரவி தாகவு திக்க வொடுங்கிட
விரிவ தாமுபா தாநவி லங்கலோ.

(ப - ரை.) சுரபி - காமதேநு, ஆதிய என்னும் - முதலியனவாகிய, தொகையுடன் - கூட்டத்தோடு, அரியது ஆம் - அரியதாகிய, அரிச்சந்தநம் ஆதி ஐந்து - அரிச்சந்தநமுதலிய பஞ்சதருக்களும், உரவிதாக - உறுதியாக, உதிக்க ஒடுங்கிட - தோன்றவும் ஒடுங்கவும், விரிவு ஆம் - விரிந்திருக்கிற, உபாதாந - உபாதாநகாரணமாகிய, விலங்கலோ - மலையோ, எ - று.

(பொ - ரை.) காமதேநு முதலியனவாகிய கூட்டத்தோடு அரியதாகிய அரிச்சந்தந முதலிய பஞ்சதருக்களும் உறுதியாகத் தோன்றவும் ஒடுங்கவும் விரிந்திருக்கிற உபாதாந காரணமாகிய மலையோ ?

(வி - ரை.) உரவிது - உரமுடையது, உரம் - வலி. பஞ்சதருக்களாவன: — அரிச்சந்தநம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம். (அ)

செய்ய சித்தரி யக்கர்தி ரட்சியோ
துய்ய மந்திரத் தந்திரச் சோதியோ
வைய கத்தவர் வானவர் மங்கலத்
துய்ய வந்தவு ருவோவென் றுன்னலாய்.

(ப - ரை.) செய்ய - செவ்வியராகிய, சித்தர் இயக்கர் - சித்தர் யக்ஷர் என்போரது, திரட்சியோ - கூட்டமோ, துய்ய - பரிசுத்தமான, மந்திரத் தந்திரச் சோதியோ - மந்திரதந்திரங்களின் ஒளியோ, வையகத்தவர் - மண்ணுலகோர், வானவர் - விண்ணுலகோர், மங்கலத்து - மங்கலத்தோடு கூடி, உய்ய - கடைத்தேறும்பொருட்டு, வந்த - தோன்றின, உருவோ என்று - வடிவமோவென்று, உன்னல் ஆய் - நினைத்தற்குரியதாகி, எ - று.

(பொ-ரை.) செவ்வியராகிய சித்தர் யக்ஷர் என்போரது கூட்டமோ ? பரிசுத்தமான மந்திர தந்திரங்களின் ஒளியோ ? மண்ணுலகோர் விண்ணுலகோர் மங்கலத்தோடுகூடி கடைத்தேறும்பொருட்டுத் தோன்றின வடிவமோ ? என்று நினைத்தற்குரியதாகி. (கூ)

## அரசாட்சிமண்டபச்சிறப்பு.

ஓங்கு மாகயி லாயத்தி னுச்சிமேற்
றேங்கு சோதிச் செழுமணி யொன்பதாற்
பாங்கு றச்செய்த பண்பியன் மண்டபந்
தாங்கு சந்திர காந்தத் தளமிசை.

(ப - ரை.) ஓங்கும் - உயர்ந்த, மா - பெரிய, கயிலாயத்தின் - திருக்கயிலாயமலையின், உச்சி - சிகரத்தின், மேல் - மீது, தேங்கு - நிறைந்த, சோதி - ஒளியினையுடைய, செழு - செழுமையாகிய, மணி ஒன்பதால் - நவரத்நங்களால், பாங்கு - அழகு, உற - மிக, செய்த - பண்ணிய, பண்பு இயல் மண்டபம் - நன்மையமைந்த மண்டபம், தாங்கு - தாங்கப்பெற்ற, சந்திரகாந்தத் தளமிசை - சந்திரகாந்தத் தளத்தின்மேல், எ - று.

(பொ - ரை.) உயர்ந்த பெரிய திருக்கயிலாயமலையின் சிகரத்தின்மீது நிறைந்த ஒளியினையுடைய செழுமையாகிய நவரத்நங்களால் அழகுமிகப்பண்ணிய நன்மையமைந்த மண்டபம் தாங்கப்பெற்ற சந்திரகாந்தத் தளத்தின்மேல்.

(வி - ரை.) சந்திரகாந்தம் - சந்திரனைக்கண்டு நீர்காலும் ஓர் வகைக்கல். நவரத்நங்களாவன:—கோமேதகம், நீலம், பவளம், புஷ்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம். (க0)

## சிங்காதனத்திருத்தற்சிறப்பு.

மீதி ளங்கதிர் கோடி விளங்கல் போற்
சோதி வீசித் துளும்பிவ ளங்கொள்சிங்
காத னத்தில ரியயர் தம்பிரான்
வேத வோசை மிகவந் திருந்தனன்.

(ப - ரை.) மீது - மேன்மையாகிய, இளம் கதிர் கோடி - கோடியிளஞ்சூரியர்கள், விளங்கல்போல் - ஒளிசெய்தல்போல், சோதி - ஒளி, வீசி - பரப்பி, துளும்பி - ததும்பி, வளம் - வளத்தை, கொள் - கொண்டிருக்கிற, சிங்காதனத்தில் - சிம்மாசனத்தில், அரி அயர் - அரி அயர் என்பவர்க்கிறைவனாகிய, தம்பிரான் - சிவபெருமான், வேத ஓசை மிக - வேதவொலி மிகாநிற்க, வந்து இருந்தனன் - வந்தெழுந்தருளியிருந்தான், எ - று.

(பொ - ரை.) மேன்மையாகிய கோடியிளஞ்சூரியர்கள் ஒளிசெய்தல்போல் ஒளி பரப்பித் ததும்பி வளத்தைக்கொண்டிருக்கிற சிம்மாசனத்தில் அரிபிரமர்க்குத்தலைவனாகிய சிவபெருமான் வேதவொலி மிகாநிற்க வந்தெழுந்தருளியிருந்தான்.

(வி - ரை.) கதிர் - ஆகுபெயர். (கக)

## மகாசபைகூடுதற்சிறப்பு.

### எண்சீர்விருத்தம்.

அந்த வேலையி லம்புயக் கண்ணனு மாதி வேதனு மாயிரங் கண்ணனு
மிந்தி ராதிய ரெண்மரு மாறுருடைஞ் சென்னு ருத்திர ரும்பன் னிரண்டுவிண்
வந்த வாதித்த ருமெண் வசுக்களு மாறி லாவொன் பதுவகைச் சித்தரு
நந்தி லாத வெழுவகை யோருட னற்ச நந்தந னாதி முனிவரும்.

(ப - ரை.) அந்த வேலையில் - அந்தச் சமயத்தில், அம்புயக் கண்ணனும் - செந்தாமரைக்கண்ணனாகிய திருமாலும், ஆதிவேதனும் - முதன்மையையுடைய பிரமனும், ஆயிரங் கண்ணனும் - ஆயிரங்கண்ணனாகிய இந்திரனும், இந்திராதியர் எண்மரும் - இந்திரன் முதலிய அஷ்டதிக்பாலகரும், ஆறுருடு ஐஞ்சு என் உருத்திரரும் - பதினோரு ருத்திரரும், விண் வந்த - ஆகாயசஞ்சாரிகளான, பன்னிரண்டு ஆதித்தரும் - பன்னிரண்டு சூரியரும், எண் வசுக்களும் - அஷ்டவசுக்களும், மாறு இல்லா - மாறுபாடற்ற, ஒன்பது வகைச் சித்தரும் - நவசித்தரும், நந்து இல்லாத - கெடுதலில்லாத, எழுவகையோருடன் - சத்த ருஷிகளுடனே, நல் - நல்ல, சநந்தநன் ஆதி முனிவரும் - சநந்தநன்முதலிய முனிவரும், எ - று.

(பொ - ரை.) அந்தச்சமயத்தில் செந்தாமரைக் கண்ணனாகிய திருமாலும், முதன்மையையுடைய பிரமனும், ஆயிரங்கண்ணனாகிய இந்திரனும், இந்திரன்முதலிய அஷ்டதிக் பாலகரும், பதினோரு ருத்திரரும், ஆகாயசஞ்சாரிகளான பன்னிரண்டு சூரியர்களும், அஷ்டவசுக்களும், மாறுபாடற்ற நவசித்தரும், கெடுதலில்லாத சத்தருஷிகளுடனே நல்ல சநந்தநன்முதலிய முனிவரும்.

(வி - ரை.) அம்புயக்கண்ணன் ஈண்டைக்கேற்பத் திருமாலைக் குறித்தது. நந்தல் - கெடுதல் (நந்து - முதனிலைத்தொழிற்பெயர்.)

அஷ்டதிக்பாலகர்கள் :— இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன்.

பதினோரு ருத்திரர் :—மாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோத்பவன், காபாலி, சௌமியன்.

பன்னிரண்டு சூரியர்:—தாத்துரு, சக்கரன், அரியமன், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரணியன், பகவான், திவச்சுவான், பூடன், சவித்துரு, துவட்டா.

அஷ்டவசுக்கள்:—அனலன், அனிலன், ஆபச்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூஷன், பிரபாசன்.

நவசித்தர்:—சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், அநாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர்.

சத்தருஷிகள்:—அகத்தியன், ஆங்கிரசன், கோதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன்.

சநந்தனன்முதலிய முனிவர்:—சநந்தனன், சநற்குமாரன், சநாதனன், சநகன். (கஉ)

கருட ருங்கிந் நரரு மியக்கருங் கார வீணைய ருங்கிம் புருடரு
முரக ரும்வித்தி யாத ரருமர னுற்ற வோலக்கத் தொவ்வோர் புடையராய்த்
தரநி னைந்துநின் றஞ்சலி யத்தராய்ச் சயசய வென்னச் சதுமறை யார்க்கவே
யரசிவா சங்க ராபரி பூர ணு நந்தவென் றங்க னைவரும் போற்றவே.

(ப - ரை.) கருடரும்—, கிந்நரரும்—, இயக்கரும் - யக்ஷரும், காரவீணையரும் - தும்புருநாரதரும், கிம்புருடரும்—, உரகரும் - நாகரும், வித்தியாதரரும்—, அரன் - சிவபெருமான், உற்ற - எழுந்தருளியிருக்கிற, ஓலக்கத்து - திருவோலக்கத்தின், ஒவ்வோர் - ஒவ்வொரு, புடையராய் - பக்கத்திலிருந்தவராகி, தரம் - முறையே, நினைந்து நின்று - தியானித்து நின்று, அஞ்சலி அத்தராய் - அஞ்சலிக்கையையுடையவராகி, சயசய என்ன - ஜய ஜயவென்று, சதுமறை - நான்குவேதங்களும், ஆர்க்க - கோஷிக்க, அர - ஹரனே, சிவா - சிவனே, சங்கரா - சங்கரனே, பரிபூரணாநந்த - பரிபூரணாநந்தனே, என்று—, அங்கு - அவ்விடத்து, அனைவரும் போற்ற - எல்லாரும் துதிக்க, எ - று.

(பொ - ரை.) கருடரும், கிந்நரரும், யக்ஷரும், தும்புருநாரதரும், கிம்புருடரும், நாகரும், வித்தியாதரரும் ஆகிய இவர்கள்யாவரும் சிவபெருமானெழுந்தருளியிருக்கிற திருவோலக்கத்தின் ஒவ்வொரு பக்கத்திலிருந்தவராகி, முறையே தியானித்து நின்று, அஞ்சலிக்கையையுடையவராகி, ஜயஜயவென்று நான்கு வேதங்களும் கோஷிக்க, ஹரனே! சிவனே! சங்கரனே! பரிபூரணாநந்தனே! என்று அவ்விடத்து எல்லாரும் துதிக்க. (கங)

சங்க ரன்றிரு நாயகன் மீதிலே சார்ந்துகொண் டயன்மேற் சர்ப்ப கங்கணப்
பங்க யக்கரம் வைத்துப் புரந்தரன் பாத மெல்ல வருட மதிபகன்
றுங்க சாமரம் வீசக்கு பேரன்முற் றூய டப்பை யிடத்தந் திரமறை
யங்க மந்திர மாதி புராணதர்க் கங்கள் வல்லவ ரங்கங்க மர்ந்துற.

(ப - ரை.) சங்கரன் - பரமசிவன், திருநாயகன் மீதிலே - திருமகள்நாதனாகிய திருமால் மீது, சார்ந்துகொண்டு - சாய்ந்துகொண்டு, அயன் மேல் - பிரமன் மீது, சர்ப்ப கங்கணம் - சர்ப்ப கங்கணமணிந்த, பங்கயம் - தாமரைமலர்போலும், கரம் வைத்து - திருக்கையை வைத்து, புரந்தரன் - இந்திரன், பாதம் - திருவடியை, மெல்ல - பைய, வருட - தடவ, மதி - சந்திரனும், பகன் - சூரியனும், துங்க - பரிசுத்தமாகிய, சாமரம் - கவரி, வீச - வீசாநிற்க, குபேரன் - குபேரனானவன், முன் - முன்னே, தூய - பரிசுத்தமாகிய, அடைப்பை இட - வெற்றிலைப்பையேந்திநிற்க, தந்திரம் - ஆகமம், மறை - வேதம், அங்கம் - வேதாகமங்களின் அங்கோபாங்கங்கள், மந்திரம் - மந்திரம், ஆதி - முதலான, புராணதர்க்கங்கள் - புராண தர்க்கங்களில், வல்லவர் - வல்லோர், அங்கு அங்கு - அவ்வவ்விடங்களில், அமர்ந்து உற - அமர்ந்திருக்க, எ - று.

(போ - ரை.) பரமசிவன் திருமகள்நாதனாகிய திருமால்மீது சாய்ந்துகொண்டு, பிரமன்மீது சர்ப்பகங்கணமணிந்த தாமரைமலர்போலுந் திருக்கையை வைத்துக்கொண்டு, இந்திரன் திருவடியை பையத்தடவ, சந்திரனும் சூரியனும் பரிசுத்தமான கவரிவீசாநிற்க, குபேரனானவன் முன்னே பரிசுத்தமாகிய வெற்றிலைப்பையேந்திநிற்க, ஆகமம் வேதம் வேதாகமங்களின் அங்கோபாங்கங்கள் மந்திரம் முதலான புராணதர்க்கங்களில் வல்லோர் அவ்வவ்விடங்களிலமர்ந்திருக்க.

(வி - ரை.) மதிபகன் என்பவற்றிற்று எண்ணும்மைகள் தொக்கன. அடைப்பை - தாம்பூலப்பை எனினுமாம். (கச)

விரும்பு கிந்நரம் வீணை மிகவல்லோர் மிக்க சச்சரி மத்தளந் தாளநீள்
பெருந்த கைத்தவர் நின்று மிழற்றவாழ் பேர வைக்கட் பிறங்கு பிருங்கிவந்
திருங்க ளிப்பு மவிநய வின்பமு மெய்த நின்று நடிக்கு மியல்பினை
யருந்த வர்க்கயன் மாற்கரி தாம்பர னன்பி னோக்கி யலமென் றருளியே.

(ப - ரை.) விரும்பு - விரும்புதற்குரிய, கிந்நரம்—, வீணை—, மிக - மிகவும், வல்லோர் - வல்லவர், மிக்க - மிகுதியாக, சச்சரி—, மத்தளம்—, தாளம்—, நீள் பெருந்தகைத்தவர் - மிகப் பெருந்தவத்தினர், நின்று மிழற்ற - நின்று முழக்க, வாழ் - தாம் வாழ்கின்ற, பேர் - பெரிய, அவைக்கண் - சபையின்கண், பிறங்கு - விளங்குகிற, பிருங்கி வந்து - பிருங்கிருஷிவந்து, இருங்களிப்பும் - பெருமகிழ்வும், அவிநய இன்பமும் - அவிநய சுகமும், எய்த - உண்டாக, நின்று நடிக்கும் இயல்பினை - நின்று நடனஞ் செய்யுந் தன்மையை, அருந்தவர்க்கு - அரிய தவத்தினர்க்கும், அயன்மாற்கு - பிரம விட்டுணுக்களுக்கும், அரிது ஆம் - அருமையாகிய, பரம் - சிவபிரான், அன்பின் - அன்போடு, நோக்கி - பார்த்து, அலம் என்று - அமையுமென்று, அருளி - திருவாய்மலர்ந்தருளி, எ - று.

(போ-ரை.) விரும்புதற்குரிய கிந்நரம் வீணை (இவைகளில்) மிகவும் வல்லவரும், மிகுதியாக சச்சரி மத்தளம் தாளம் (இவைகளில்வல்ல) மிகப்பெருந்தவத்தினரும் நின்று முழக்க, தாம் வாழ்கின்ற பெரிய சபையின்கண் விளங்குகிற பிருங்கிருஷி வந்து பெருமகிழ்வும் அவிநயசுகமு முண்டாக நின்று நடனஞ்செய்யுந் தன்மையை அரிய தவத்தினர்க்கும் பிரம விட்டுணுக்களுக்கும் அருமையாகிய சிவபிரான் அன்போடு பார்த்து அமையுமென்று திருவாய்மலர்ந்தருளி.

(வி - ரை.) அலம் - போதும். (கரு)

மாலை நோக்கி மகிழ்ந்துரை செய்தயன் வதன நோக்கி வசனித் தமரர்கோன்
பால வானந நோக்கிப் பகர்ந்தபின் பரவுந் தேவரைப் பார்த்தருள் செய்தவ
ரேல வேண்டிய நல்கி விடைகொடுத் தெம்பி ரானங் கிருந்தரு ளெல்லையிற்
சில ரான கணத்தர் தமதுமுன் சென்று காதலிற் சேவிக்குங் காலையில்.

(ப - ரை.) மாலை - திருமாலை, நோக்கி - பார்த்து, மகிழ்ந்து - மகிழ்ச்சியோடு, உரைசெய்து - வசனித்து, அயன் - பிரமன், வதனம் - முகத்தை, நோக்கி - பார்த்து, வசனித்து - வார்த்தையாடி, அமரர்கோன் - தேவேந்திரனது, பால - அழகிய, ஆனநம் - முகத்தை, நோக்கி - பார்த்து, பகர்ந்த - பேசின, பின் - பின்பு, பரவும் - வணங்குகின்ற, தேவரை - தேவர்களை, பார்த்து - நோக்கி, அருள்செய்து - கிருபைசெய்து, அவர் - அத்தேவர்கள், ஏல - இசைய, வேண்டிய - விரும்பினவற்றை, நல்கி - தந்து, விடைகொடுத்து - உத்திரவுகொடுத்து, எம்பிரான் - சிவபிரான், அங்கு - அவ்விடத்தில், இருந்தருள் - வீற்றிருந்தருளின, எல்லையில் - சமயத்தில், சிலர் ஆன - ஒழுக்கமுடையவரான, கணத்தர் - சிவகணநாதர்கள், தமது முன் - தமக்கெதிரே, சென்று - வந்துநின்று, காதலில் - விருப்பத்தோடு, சேவிக்கும் காலையில் - சேவிக்கும்பொழுது, எ - று.

(பொ - ரை.) திருமாலைப்பார்த்து மகிழ்ச்சியோடு வசனித்து, பிரமன்முகத்தைப் பார்த்து வார்த்தையாடி, தேவேந்திரனது அழகிய முகத்தைப்பார்த்துப் பேசினபின்பு, வணங்குகின்ற தேவர்களைப்பார்த்து கிருபைசெய்து, அத்தேவர்கள் இசைய விரும்பின வற்றைத் தந்து உத்திரவுகொடுத்து, சிவபிரான் அவ்விடத்தில் வீற்றிருந்தருளின சமயத்தில், ஒழுக்கமுடையவரான சிவகணநாதர்கள் தமக்கெதிரேவந்து நின்று விருப்பத்தோடு சேவிக்கும்பொழுது.

(வி - ரை.) அயன் - அஜன் என்னும் வடசொற்றிரிபு, அயன் - மங்கலம். (கசு)

தீர நாரத னத்தன் சபையிடஞ் செல்லு நேரந் தெரிந்துவந் துட்புகுந்
தாரு மன்பி லணைந்து பணிந்தெழுந் தஞ்ச லிக்கரத் தானின் றவனிமேற்
சேர நீதியை விண்ணப்பஞ் செய்யவே சிந்தி யாமுன் றிருவுளத் துன்னியே
வார நோக்கின னாகி யுமையினை வரவ ழைத்திடம் வைத்து மகிழ்ந்துபின்.

(ப - ரை.) தீரம் - தைரியத்தையுடைய, நாரதன் - நாரதமுனிவன், அத்தன் - சிவபெருமான், சபையிடம் செல்லும் - சபையில் செல்லுதற்குரிய, நேரம் - சமயத்தை, தெரிந்து வந்து - அறிந்து வந்து, உள் - உள்ளே, புகுந்து - பிரவேசித்து, ஆரும் - மிக்க, அன்பில் - அன்போடு, அணைந்து - கிட்டிப்போய், பணிந்து எழுந்து - வணங்கி எழுந்து, அஞ்சலிக்கரத்தால் நின்று - அஞ்சலிக்கையோடு நின்று, அவனி மேல் - பூமியின்மீது, சேர - செல்லுதற்கு, நீதியை - நியாயத்தை, விண்ணப்பம் செய்ய - விஞ்ஞாபனம் செய்ய, சிந்தியாமுன் - நினைக்கு முன்னமே, திருவுளத்து உன்னி - திருவுளம்பற்றி, வாரம் நோக்கினன் ஆகி - அன்போடு நோக்கி, உமையினை வரவழைத்து - உமாதேவியை வரவழைத்து, இடம் வைத்து - இடப்பாகத்தில் வைத்து, மகிழ்ந்து - சந்தோஷித்து, பின் - பிறகு, எ-று.

(பொ - ரை.) தைரியத்தையுடைய நாரதமுனிவன் சிவபெருமான் சபையிற் செல்லுதற்குரிய சமயத்தையறிந்து வந்து, உள்ளே பிரவேசித்து, மிக்க அன்போடு கிட்டிப் போய், வணங்கி எழுந்து, அஞ்சலிக்கையோடு நின்று, பூமியின்மீது செல்லுதற்கு நியாயத்தை விஞ்ஞாபனம் செய்ய நினைக்கு முன்னமே திருவுளம்பற்றி, அன்போடு நோக்கி உமாதேவியை வரவழைத்து இடப்பாகத்தில் வைத்துச் சந்தோஷித்துப் பிறகு.

(வி - ரை.) ஆர்தல் - நிறைதல், அது இங்கு மிகுதிப்பொருளது. (கஎ)

முனிவநீ வந்த செய்தி மொழியென முக்க ணனருள் செய்ய முகுளிதப்
புனிதக் கையின னாகி யெனத்தனே புவனி மேனின் பெரும்புகழ் பொன்றியுன்
னினிய பத்தியு மஞ்செழுத் தோசையு மெய்யி னீறு மிலங்கிய கண்டியு
மனிதர் பாலின் றியற்பச் சமணெறி மல்கிச் சைவ மகிமை மறைந்ததால்.

(ப - ரை.) முனிவ - முனிவனே, நீ வந்த செய்தி - நீ வந்த சமாசாரம், மொழி என - சொல்லென்று, முக்கணன் - மூன்று கண்களையுடைய சிவபிரான், அருள் செய்ய - கிருபைசெய்ய, முகுளிதம் - குவிந்த, புனிதம் - பரிசுத்தமாகிய, கையினன் ஆகி - கரங்களை யுடையவனாகி, என் அத்தனே - எனது தந்தையே, புவனிமேல் - பூமியின்மீது, நின் பெரும் புகழ் - உன் பெரும் புகழ், பொன்றி - நசித்து, உன் - உனது, இனிய பத்தியும் - இனிதாகிய பக்தியும், அஞ்சு எழுத்து ஓசையும் - ஸ்ரீபஞ்சாக்ஷரஜபமும், மெய்யில் நீறும் - சரீரத்தில் திருவெண்ணீறும், இலங்கிய கண்டியும் - பிரகாசம்பொருந்திய உருத்திராக்கமாலையும், மனிதர்பால் - மானிடரிடத்தில், இன்றி - இல்லாமல், அற்பம் - அற்பமாகிய, சமண் நெறி - சமணமதம், மல்கி - நிறைந்து, சைவ மகிமை - சைவசமயத்தின் பெருமை, மறைந்தது - ஒளித்தது, எ - று.

(பொ-ரை.) முனிவனே! நீ வந்த சமாசாரம் சொல்லென்று மூன்றுகண்களையுடைய சிவபெருமான் கிருபைசெய்ய; குவிந்த பரிசுத்தமாகிய கரங்களையுடையவனாகி, எனது தந்தையே! பூமியின்மீது உன் பெரும்புகழ் ஈசித்து, உன் இனிதாகிய பக்தியும் ஸ்ரீ பஞ்சாக்ஷரஜபமும் சரீரத்தில் திருவெண்ணீறும் பிரகாசம்பொருந்திய உருத்திராக்கமாலையும் மானிடரிடத்திலில்லாமல், அற்பமாகிய சமணமதம் நிறைந்து, சைவசமயத்தின்பெருமை ஒளித்தது.

(வி-ரை.) "பத்தியுமஞ்செழுத்தோசையும் மெய்யினீறு மிலங்கிய கண்டியும்" என்றதனால் அஷ்டாவரணத்தையும் விளக்கிற்று; அஷ்டாவரணமாவது - குருலிங்க ஜங்கம விபூதி ருத்ராக்ஷ பஞ்சாக்ஷர பாதோதக ப்ரஸாதம். "சமணெ நிமக்கி" என்றதனால் ஜயினம் சார்வாகம் முதலான சமயங்களையும் குறித்தது. (௧அ)

விடத்தை யொத்த வசுரர் விபுதரை வெருட்டல் போலச் சமணர் மிகையினாற்
குடத்தி லிட்ட விளக்கென நின்புகழ் கூறு மன்பர் குவலயத் துண்மறைந்
தடக்க மாகி யிருக்கச் சமணரே யரிய குன்றின் விளக்கது போலவே
திடத்தராகியத்தென்றிசைச்செம்மினர்செப்பும்வேதசிவாகமச்செய்திபோய்.

(ப-ரை.) விடத்தை - விஷத்தை, ஒத்த - நிகர்த்த, அசுரர் - ராக்ஷஸர், விபுதரை - தேவரை, வெருட்டல்போல - மயக்கல்போன்று, சமணர் மிகையினால் - சமணர்செய்யும் துன்பத்தினால், நின் - உனது, புகழ் - கீர்த்தியை, கூறும் - சொல்லும், அன்பர் - பக்தர், குடத்தில் - குடத்திலே, இட்ட - வைத்த, விளக்கு என - தீபமென்று சொல்லும்படி, குவலயத்துள் - பூமியில், மறைந்து - ஒளித்து, அடக்கம் ஆகி இருக்க - அடங்கியிருக்க, சமணரே - சமணர்களே, அரிய - அருமையாகிய, குன்றின் - மலைமேலிட்ட, விளக்கதுபோலவே - தீபம்போலவே, திடத்தர் ஆகி - வலியுடையராகி, அ - அந்த, தென்திசை - தென்திசையை, செம்மினர் - மூடிவிட்டார்கள், செப்பும் - சொல்லப்பட்ட, வேத சிவாகம செய்திபோய் - வேதசிவாகமங்களின் செய்கையொழிந்து, எ - று.

(பொ-ரை.) விஷத்தை நிகர்த்த ராக்ஷஸர் தேவரை மயக்கல்போன்று சமணர் செய்யும் துன்பத்தினால் உனது கீர்த்தியைச்சொல்லும் பக்தர் குடத்திலேவைத்த தீபமென்று சொல்லும்படி பூமியில் ஒளித்து அடங்கியிருக்க, சமணர்களே அருமையாகிய மலைமேலிட்ட தீபம்போலவே வலியுடையவராகி அந்தத் தென்திசையை மூடிவிட்டார்கள், சொல்லப்பட்ட வேதசிவாகமங்களின் செய்கையொழிந்து.

(வி-ரை.) குவலயம் - பூமண்டலம். (௧௯)

அந்த கார மடைந்துன் னடியவ ரஞ்செ ழுத்தை யறையவு மஞ்சியே
யெந்த நாளிற் றுயர மொழிவமென் றிரங்கு கின்றன ரேழுல காளிநீ
யந்த மண்ணி லணைந்தச்சமணரை யாழ்த்தி மூவித மானநின் பத்தியே
வந்தி டும்படி செய்துன் மகிமையே மல்கி யன்பர் வளர வருளென.

(ப-ரை.) அந்தகாரம் - இருள், அடைந்து - சேர்ந்து, உன் அடியவர் - நினது பக்தர், அஞ்சு எழுத்தை அறையவும் - ஸ்ரீபஞ்சாக்ஷரத்தையுச்சரிக்கவும், அஞ்சி - பயந்து, எந்தநாளில் - எக்காலத்தில், துயரம் ஒழிவம் என்று - துன்பம் நீங்குவோமென்று, இரங்குகின்றனர் - இரக்கமுற்றிருக்கின்றனர், ஏழ் உலகு - ஏழுலகத்தையும், ஆளி நீ - ஆள்பவனாகிய நீ, அந்த மண்ணில் அணைந்து - அந்தத் தென்திசையை யடைந்து, அ - அந்த, சமணரை - சமணர்களை, ஆழ்த்தி - அடக்கி, மூவிதமான - மூன்றுவிதமான, நின் - உனது, பத்தியே - பக்தியே, வந்திடும்படிசெய்து - வருமாறுசெய்து, உன் மகிமையே - நினது பெருமையே, மல்கி - நிறைந்து, அன்பர் வளர - பக்தர் விருத்தியடையும் வண்ணம், அருள் என - கிருபைசெய்யவேண்டுமென்று விண்ணப்பம் செய்ய, எ - று.

(பொ-ரை.) இருள்சேர்ந்து நினது பக்தர் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தையுச்சரிக்கவும் பயந்து எக்காலத்தில் துன்பம் நீங்குவோம் என்று இரக்கமுற்றிருக்கின்றனர், ஏழுலகத்தையும் ஆள்பவனாகிய நீ அந்தத் தென்றிசையை யடைந்து, அந்தச் சமணர்களையடக்கி, மூன்று விதமான உனது பக்தியே வருமாறுசெய்து, நினது பெருமையே நிறைந்து, பக்தர் விருத்தியடையும் வண்ணம் கிருபைசெய்யவேண்டுமென்று விண்ணப்பம் செய்ய.

(வி - ரை.) ஏழ் உலகு என்றதனால் மேலேழுலகத்தையும் கீழேழுலகத்தையும் குறித்தது ; அவை முறையே பூலோகம் புவலோகம் சுவலோகம் சனலோகம் தபோலோகம் மகாலோகம் சத்தியலோகம் என்றும், அதலம் விதலம் சுதலம் தராதலம் மகாதலம் இரசாதலம் பாதலம் என்றும் சொல்லப்படும். ஆளி என்பதில் இகரம் வினைமுதற் பொருண்மைவிகுதி (வினையாலணையும் பெயர்.) மூன்றுவிதமான பக்தி என்றது குருலிங்க ஜங்கமபக்தியை. (௨௦)

மெய்யு ரைத்த முனிவவிந் நந்திநம் மேன்மை யொத்தவ னிந்த வுரையினுக்
கையமில் லிரண்டாஞ் சம்பு வாகியே யங்க ணைந்தச் சமணை யகற்றுவன்
செய்ய சைவம் விளங்கும் படியுப தேச நல்குவ னென்ன வுமையரன்
றுய்ய வாநந நோக்கிநற் பத்தியின் றூய்மை யோவன்றிச் சுத்தமெய் யோவென.

(ப - ரை.) மெய் உரைத்த - உண்மைசொல்லிய, முனிவ - முனிவனே, இ - இந்த, நந்தி - நந்திதேவனானவன், நம் மேன்மை ஒத்தவன் - எமது பெருமைக்கு நிகரான பெருமையுடையவன், இந்த உரையினுக்கு - இந்தச் சொல்லுக்கு, ஐயம் இல் - சந்தேகமில்லை, இரண்டாம் சம்பு ஆகி - இரண்டாம் சிவமாகி, அங்கு - அவ்விடத்து, அணைந்து - அடைந்து, அ - அந்த, சமணை - சமணமதத்தை, அகற்றுவன் - ஒழிப்பன், செய்ய - செவ்வியதாகிய, சைவம் விளங்கும்படி - சைவசமயம் பிரகாசிக்கும்படி, உபதேசம் நல்குவன் என்ன - உபதேசம் பண்ணுவனென்றுசொல்ல, (அதுகேட்ட) உமை - உமாதேவியார், அரன் - சிவபிரானது, துய்ய - பரிசுத்தமாகிய, ஆநநம் - முகத்தை, நோக்கி - பார்த்து, நல் - சிறந்த, பத்தியின் - பக்தியின், தூய்மையோ - பரிசுத்தமோ, அன்றி - அல்லது, சுத்தமெய்யோ என - பரிசுத்தமான சரீரமோவென்று கேட்க, எ - று.

(பொ-ரை.) உண்மை சொல்லிய முனிவனே ! இந்த நந்திதேவனானவன் எமது பெருமைக்கு நிகரான பெருமையை யுடையவன், இந்தச் சொல்லுக்குச் சந்தேகமில்லை, இரண்டாம் சிவமாகி, அவ்விடத்தடைந்து, அந்தச் சமணமதத்தை ஒழிப்பன், செவ்வியதாகிய சைவசமயம் பிரகாசிக்கும்படி உபதேசம் பண்ணுவனென்று சொல்ல ; அதுகேட்ட உமாதேவியார் சிவபிரானது பரிசுத்தமாகிய முகத்தைப் பார்த்துச் சிறந்த பக்தியின் பரிசுத்தமோ ? அல்லது பரிசுத்தமான சரீரமோ ? என்று கேட்க.

(வி-ரை.) "செய்ய சைவம்" என்றது பக்தி ஞானம் சிவாசாரங்களை. "இந்நந்திநம் மேன்மை ஒத்தவன்" என்றது நந்திகேசருக்கும் பரமசிவனுக்கும் உள்ள அத்வைதத்தை. "நற்பத்தியின் றூய்மையோவன்றிச் சுத்த மெய்யோ" என்பதை பக்தனே தேஹமாயிருப்பவனோ ? அல்லது நந்திகேசருக்கும் பரமசிவனுக்கும் அபேதமோ ? எனப்பொருள் கொள்ளினு மமையும். (௨௧)

அறுசீர்விருத்தம்.

பத்தியி னாலு மொப்பன் பகரினு நந்தி யென்னு
மத்திற முரைத்துங் கேட்பா யாதியிற் சிலாத னென்றோர்
மெய்த்தவன் கோர மான மிகுதவம் பருப்ப தத்தி
னுெத்தநன் னிருதி மூலை யுற்றுநீர் காலே யுண்டு.

(ப - ரை.) (அதுகேட்ட சிவபிரான்) பத்தியினாலும் - பக்தியினாலும், ஒப்பன் - (எம்மை) நிகர்ப்பன், பகரின் - சொல்லுமிடத்து, நாம் - யாம், நந்தி என்னும் - நந்திதேவன் என்று சொல்லுகிற, அ - அந்த, திறம் - வகையினையும், உரைத்தும் - சொல்லுவோம், கேட்பாய் - கேட்கக்கடவை, ஆதியில் - பூர்வகாலத்தில், சிலாதன் என்ற - சிலாதருஷி யென்று சொல்லப்பட்ட, ஓர் - ஒரு, மெய்த்தவன் - உண்மையாகிய தவத்தோன், பருப்பதத்தின் - ஸ்ரீசைலபர்வதத்தின், ஒத்த - பொருந்திய, நல் - நல்ல, நிருதி மூலை உற்று - நிருதிமூலையடைந்து, நீர் - நீரையும், காலே - காற்றையுமே, உண்டு - புசித்து, கோரம் ஆன - பயங்கரமான, மிகு - மிகுதியாகிய, தவம் - தவஞ்செய்து, எ - று.

(போ - ரை.) அது கேட்ட சிவபிரான் பக்தியினாலும் எம்மை நிகர்ப்பன், சொல்லுமிடத்து யாம் நந்திதேவனென்று சொல்லுகிற அந்தவகையினையும் சொல்லுவோம் கேட்கக்கடவை; பூர்வகாலத்தில் சிலாதருஷியென்று சொல்லப்பட்ட ஒரு உண்மையாகிய தவத்தோன் ஸ்ரீசைலபர்வதத்தின் பொருந்திய நல்ல நிருதிமூலையடைந்து, நீரையும் காற்றையுமே புசித்து, பயங்கரமான மிகுதியாகிய தவஞ்செய்து. (௨௨)

அலைவற மூன்று கோடி யாண்டுகண் மாய்ந்த தற்பின்
சிலைகடு களவ ருந்தித் தேவராச் சரிய மெய்த
நிலைதவ றுதிருந்த நெடுந்தவன் முன்னா நின்றே
யுலைவிலா வுனக்கு வேண்டிற் றுரைதரு வோநா மென்ன.

(ப - ரை.) அலைவு அற - சலனமற, மூன்று கோடி ஆண்டுகள் - மூன்றுகோடிவருஷங்கள், மாய்ந்ததற்பின் - சென்றபிறகு, கடு அளவு - கடுகளவாகிய, சிலை - கல்லை, அருந்தி - உண்டு, தேவர் ஆச்சரியம் எய்த - தேவர்கள் அதிசயமடைய, நிலை தவறுது இருந்த - நிலைகெடாதிருந்த, நெடு - பெரிய, தவன்முன் - அத்தவத்தினனுக்கெதிரே, நாம் நின்று - யாம் நின்று, உலைவு இல்லா - கெடுதியற்ற, உனக்கு வேண்டிற்று - நினக்கு வேண்டியதை, உரை - கேள், நாம் தருவோம் என்ன - யாம் கொடுப்போமென்று சொல்ல, எ - று.

(போ - ரை.) சலனமற மூன்றுகோடி வருஷங்கள் சென்றபிறகு, கடுகளவாகிய கல்லை (மூன்றுகோடி வருஷம்) உண்டு, தேவர்கள் அதிசயமடைய நிலைகெடாதிருந்த பெரிய அத்தவத்தினனுக்கெதிரே யாம் நின்று, கெடுதியற்ற நினக்கு வேண்டியதைக்கேள் யாம் கொடுப்போமென்று சொல்ல.

(வி - ரை.) கடுகளவாகிய கல்லை மூன்றுகோடி வருஷம் உண்டு என்றும் பொருள் படுத்திக் கொள்க. (௨௩)

தரைமிசை யங்க மெட்டுந் தாங்கவே பணிந்தெ ழுந்து
கரமலர் சென்னி கூப்பிக் காதலாற் றுதித்து நின்று
புரவல வெனக்கு நின்னைப் போலொரு புதல்வன் வேண்டுந்
தருதியென் றுரைத்தா னாமுந் தருதுமென் றிசைத்த போதில்.

(ப - ரை.) தரை மிசை - பூமியின்மேல், அங்கம் எட்டும் - எட்டுறுப்புக்களும், தாங்க - படும்படி, பணிந்து எழுந்து - வணங்கி யெழுந்து, கரமலர் - கையாகிய மலரை, சென்னிகூப்பி - சிரத்தின்மீது குவித்து, காதலால் - ஆசையால், துதித்து நின்று - போற்றி நின்று, புரவல - தேவர்க்கரசனே, எனக்கு நின்னைப்போல் - எனக்கு உன்னைப்போல், ஒரு புதல்வன் வேண்டும் - ஒரு புத்திரன் வேண்டும், தருதி - கொடுக்கக்கடவை, என்று உரைத்தான் - என்று கேட்டான், நாமும் தருதும் என்று - யாமும் அவ்வாறே கொடுப்போமென்று, இசைத்தபோதில் - சொன்னபொழுது, எ - று.

(பொ-ரை.) பூமியின்மேல் எட்டுறுப்புக்களும் படும்படி வணங்கி யெழுந்து, கையாகிய மலரைச் சிரத்தின்மீது குவித்து ஆசையால் போற்றுகின்று, தேவர்க்கரசனே! எனக்கு உன்னைப்போல ஒரு புத்திரன் வேண்டும், கொடுக்கக்கடவை, யென்றுகேட்டான்; யாமும் அவ்வாறே கொடுப்போமென்று சொன்னபொழுது.

(வி - ரை.) எட்டுறுப்புக்களாவன - கை யிரண்டு காலிரண்டு மார்பு நெற்றி தோளிரண்டு என்பன. (உச)

அத்தநின் பதத்தி னன்பின் பகுதியி லற்பங் குன்றுஞ்
சித்தனே யாவ னாயி னவன்சிரஞ் சிதைப்பே னெண்ணே
னொத்துநீ யவண்வி லக்கா தொழிவையேற் றாவி லக்கின்
வித்தக வெனக்குப் பிள்ளை விருப்பில்லை வேண்டா வென்றான்.

(ப - ரை.) அத்த - அத்தனே, நின் - உன், பதத்தின் அன்பின் பகுதியில் - ஸ்ரீபாத பக்தியின் பகுதியில், அற்பம் - சிறிது, குன்றும் - குறைகின்ற, சித்தன் - மனத்தை யுடையவன், ஆவன் ஆயின் - ஆவானானால், அவன் - அப்புதல்வனது, சிரம் - தலையை, சிதைப்பேன் - வெட்டுவேன், எண்ணேன் - மதியேன், ஒத்து நீ - இதற்கு நீ சம்மதித்து, அவண் - அவ்விடத்தே, விலக்காது ஒழிவையேல் - விலக்காது ஒழிவாயானால், தா - கொடு, விலக்கின் - விலக்குவதுண்டாயின், வித்தக - அறிவாளனே, எனக்கு பிள்ளைவிருப்பு இல்லை - எனக்குக் குழந்தையாசையில்லை, வேண்டா என்றான் - வேண்டாமென்று சொன்னான், எ - று.

(பொ - ரை.) அத்தனே! உன் ஸ்ரீபாதபக்தியின் பகுதியில் சிறிது குறைகின்ற மனத்தையுடையவனுவானானால், அப்புதல்வனது தலையை வெட்டுவேன், மதியேன், இதற்கு நீ சம்மதித்து அவ்விடத்தே விலக்காது ஒழிவாயானால் கொடு; விலக்குவதுண்டாயின், அறிவாளனே! எனக்குக் குழந்தையாசையில்லை, வேண்டாமென்று சொன்னான்.

என்றவன் பத்தி நன்மை யிருமையை யரன்ம கிழ்ந்து
நின்றநீ கேட்ட வாறே நல்குது மிந்த நந்தி
பொன்றுமின் மலனை நாதி யுதித்தவன் றரும ரூபி
யன்றியா னந்த மோங்கி யஞ்செழுத் துருவாம் யோகி.

(ப - ரை.) என்றவன் - என்று சொன்ன அம்முனிவனது, பத்திநன்மை - பக்தி நன்மைகளின், இருமையை - பெருக்கத்தை, அரன் மகிழ்ந்து - சிவபிரான் சந்தோஷித்து, நின்ற - நிலைபெற்ற, நீ கேட்டவாறே - நீ கேட்டபடியே, நல்குதும் - கொடுப்போம், இந்த நந்தி - இந்த நந்திதேவன், ஒன்றும் - பொருந்திய, நின்மலன் - மும்மலங்களு மற்றவனுவன், அநாதி உதித்தவன் - அநாதியேபிறந்தவனுவன், தருமரூபி - தருமவடிவின னுவன், அன்றி - அல்லாமலும், ஆநந்தம் ஓங்கி - சிவாநந்தம் பெருகி, அஞ்சு எழுத்து உரு ஆம் யோகி - ஸ்ரீபஞ்சாக்ஷரவடிவான யோகியாவன், எ - று.

(பொ - ரை.) என்று சொன்ன அம்முனிவனது பக்திநன்மைகளின் பெருக்கத்தைச் சிவபிரான் சந்தோஷித்து, நிலைபெற்ற நீ கேட்டபடியே கொடுப்போம்; இந்த நந்திதேவன் பொருந்திய மும்மலங்களுமற்றவனுவன், அநாதியேபிறந்தவனுவன், தருமவடிவினனுவன்; அல்லாமலும், சிவாநந்தம் பெருகி ஸ்ரீபஞ்சாக்ஷரவடிவான யோகியாவன். (உரு)

உத்தம தரும நான்கு மூன்றிரண் டொன்றாய் மண்ணி
லொத்தெழும் யுகங்க ளன்கி லுறுமிவன் பதமிம் மாற்றஞ்
சத்திய மிரண்டாஞ் சம்பு சகமெலா நிறையு நம்மை
நித்தமாய்த் தாங்க லாலே நிகர்நமக் கிவன்வி யாபி.

(ப - ரை.) உத்தமதருமம் - சிறந்த தருமரூபமாகிய, இவன் பதம் - இவன் பாதங்கள், மண்ணில் - பூமியில், ஒத்து - பொருந்தி, எழும் - உண்டாகிற, யுகங்கள் நான்கில் - நான்கு யுகங்களில், நான்கு மூன்று இரண்டு ஒன்ருய் - நான்கு மூன்று இரண்டு ஒன்ருகி, உறும் - பொருந்தியிருக்கும், இ - இந்த, மாற்றம் - வார்த்தை, சத்தியம் - உண்மையாகும், இரண்டாம் சம்பு - இவன் இரண்டாஞ்சம்புவாவன், சகம் - உலகு, எல்லாம் - முழுதும், நிறையும் - வியாபித்திருக்கிற, நம்மை - எம்மை, நித்தமாய் - சாசுவதமாய், தாங்கலாலே - சுமத்தலாலே, இவன் நமக்கு நிகர் - இவன் நமக்கு ஒப்பாவன், வியாபி - இவன் எங்கும் நிறைந்திருப்பவனுவன், எ - று.

(பொ - ரை.) சிறந்த தருமரூபமாகிய இவன் பாதங்கள் பூமியில் பொருந்தி உண்டாகிற நான்கு யுகங்களில் நான்கு மூன்று இரண்டு ஒன்ருய்ப் பொருந்தியிருக்கும், இந்த வார்த்தை யுண்மையாகும், இவன் இரண்டாஞ்சம்புவாவன், உலகமுழுதும் வியாபித்திருக்கிற எம்மைச் சாசுவதமாய்ச் சுமத்தலாலே இவன் நமக்கு ஒப்பாவன், இவன் எங்கும் நிறைந்திருப்பவனுவன்.

(வி - ரை.) யுகங்கள் நான்கு - க்ரேதாயுகம் த்ரேதாயுகம் த்வாபரயுகம் கலியுகம்.

ஆதலா லிவனுன் மைந்த னுகின்ரு னென்று நந்தி
நீதரை மேலி வன்பா னேசத்திற் செனிப்ப தல்லாற்
போதநாஞ் செனித்தல் வேண்டுங் காணென வணங்கிச் சென்று
தீதுறு முதரஞ் சேரா தயோநிஜ னுய்ச்செ னித்தான்.

(ப - ரை.) ஆதலால் - ஆகையால், இவன் உன் மைந்தன் - இவன் உன் மகன், ஆகின்ருன் என்று - ஆகிருனென்று சொல்லி, நந்தி நீ - நந்திதேவனுகிய நீ, தரை மேல் - பூமிமேல், இவன்பால் - இவனிடத்தில், நேசத்தின் - அன்போடு, செனிப்பதல்லால் - பிறப்பதில்லையாயின், போத - மிகவும், நாம் செனித்தல்வேண்டும் என - யாம் போய்ப் பிறத்தல் வேண்டும் என்றுசொல்ல, (அதுகேட்ட நந்தியெம்பெருமான்) வணங்கி சென்று - பணிந்துசென்று, தீது உறும் - தீமைபொருந்திய, உதரம் சேராது - வயிற்றை யடையாமல், அயோநிஜனுய் - யோநிவாயிலாகப் பிறவாதவனுக, செனித்தான் - பிறந்தான், எ - று.

(பொ - ரை.) ஆகையால் இவன் உன் மகனுகிருனென்று சொல்லி, நந்திதேவனுகிய நீ பூமிமேல் இவனிடத்தில் அன்போடு பிறப்பதில்லையாயின், மிகவும் யாம் போய்ப் பிறத்தல் வேண்டுமென்று சொல்ல, அதுகேட்ட நந்தியெம்பெருமான் பணிந்துசென்று தீமை பொருந்திய வயிற்றையடையாமல் யோநிவாயிலாகப் பிறவாதவனுகப் பிறந்தான்.

(வி-ரை.) அயோநிஜனுய் என்றதனுல், ஷடக்ஷரமந்த்ரமே தாயென்பதும், மஹேசுவரனே தந்தையென்பதும் பெறப்பட்டன. (௨௫)

இவனவண் பிறந்த போதே யெம்பதச் சிந்தை யன்பு
நவமிலா நந்த பத்தி நலமெலா முடன்பி றந்து
சிவபார தத்து வச்சி ரமுதுசெய் முலைப்பா லாகித்
தவகுரு பதத்தி யாநந் * தானுனு மெண்ணெ யாகி.

(ப - ரை.) இவன் அவண் - இவன் அவ்விடத்திலே, பிறந்தபோதே - உதித்த காலத்திலேயே, எம் பதச் சிந்தை - எமது பாத சிந்தனை, அன்பு - பக்தி, நவம் இல் - புதுமையில்லாத, ஆநந்த பத்தி நலம் எல்லாம் - சிவாநந்தபக்தி முழுதும், உடன்பிறந்து -

* தானுனும் வெண்ணெயாகி எனப் பாடமோதி தானருந்தும் வெண்ணெயாகி எனப்பொருள்கொள்ளினுமமையும்.

கூடப்பிறந்து, சிவபாதத்துவச்சீர் - சிவபாதத்துவத்தின் சிறப்பு, அமுதுசெய் முலைப்பால் ஆகி - உண்ணுதற்குரிய முலைப்பாலாகி, தவ - மிகுதியாக, குருபதத் தியாகம் - ஸ்ரீஸத்குரு பதத்யாகமே, தான் உண்ணும் என்னெய் ஆகி - தான் அருந்தும் என்னெயாகி, எ - று.

(போ - ரை.) இவன் அவ்விடத்திலே ஜநித்த காலத்திலேயே எமது பாதசிந்தனை பக்தி பழமையான சிவாநந்த பக்தி முழுதும் கூடப்பிறந்து, சிவபாதத்துவத்தின் சிறப்பு உண்ணுதற்குரிய முலைப்பாலாகி, மிகுதியாக ஸ்ரீஸத்குருபதத்யாகமே தானருந்தும் என்னெயாகி.

(வி - ரை.) சிவபாதத்துவச்சீர் - சிவஞானமெனினுமாம். (உ௯)

பரமறை மிருதி வாய்மை பகர்தருங் குதலை யாகி
வரசிவா சார மேதன் மனத்திலா சாரணையாகிக்
கரவிலா துதவு நல்ல கருணையே காய மாகித்
தெருடரு நம்ப தத்தின் சிரத்தைநற் பத்தி யன்பால்.

(ப - ரை.) பரம் - மேன்மையாகிய, மறை - வேதம், மிருதி - ஸ்ம்ருதி, வாய்மை - சத்தியம் (இவையே), பகர் தரும் - பேசுகின்ற, குதலையாகி - மழலைச்சொல்லாகி, வரம் - சிரேஷ்டமான, சிவாசாரமே - வீரசைவமார்க்க வொழுக்கமே, தன் மனத்தில் ஆசாரணை ஆகி - தன் மனத்தில் ஆசாரமாகி, கரவு இல்லாது - மறைக்காமல், உதவும் - கொடுக்கிற, நல்ல - சிறந்த, கருணையே - கிருபையே, காயம் ஆகி - உடம்பாகி, தெருள்தரும் - தெளிவைத்தருகிற, நம் பதத்தின் - எமது பாதத்தின், சிரத்தை நல் பத்தி அன்பால் - சிரத்தையாலும் நல்ல பக்தியினாலும் அன்பினாலும், எ - று.

(போ - ரை.) மேன்மையாகிய வேதம் ஸ்ம்ருதி ஸத்யம் இவையே பேசுகிற மழலைச் சொல்லாகி, சிரேஷ்டமான வீரசைவமார்க்க வொழுக்கமே தன் மனத்தில் ஆசாரமாகி, மறைக்காமல் கொடுக்கிற சிறந்த கிருபையே உடம்பாகி, தெளிவைத்தருகிற எமது பாதத்தின் சிரத்தையினாலும் நல்ல பக்தியினாலும் அன்பினாலும். (௩0)

கடுவிசை பெருகு மாற்றிற் கலக்குத லின்றி யோர்தா
ணடுவுற வூன்றி யோர்தாண் மேலுற நன்றாய் நீட்டி
யடுபுனற் களம ழிழ்ந்த வம்புய முகம லர்ந்து
கொடுமழை யினுந டுங்காக் குளிர்பெருங் கால நின்றே.

(ப - ரை.) கடுவிசை - மிகுவேகத்துடன், பெருகும் ஆற்றில் - பெருக்கெடுத்தோடும் நதியில், கலக்குதல் இன்றி - குழப்பமில்லாமல், ஓர் தாள் நடு உற ஊன்றி - ஒரு காலை மத்தியிற் பொருந்த ஊன்றி, ஓர் தாள் மேலுற நன்றாய் நீட்டி - மற்றொருகாலை மேல் நோக்க நன்றாக நீட்டி, அடு புனல் - கொல்லுதற்குரிய நீரில், களம் அமிழ்ந்த - கண்ட மமுழ்ந்த, அம்புயம் - தாமரைமலர்போன்ற, முகம் மலர்ந்து - முகமலர்ச்சியுடையவராய், கொடுமழையினும் - பெருமழையினும், நடுங்கா - நடுங்காமல், குளிர் - குளிருடனே, பெருங்காலம் நின்று - வெகுகாலம் நின்று, எ - று.

(போ - ரை.) மிகு வேகத்துடன் பெருக்கெடுத்தோடும் நதியில் குழப்பமில்லாமல் ஒரு காலை மத்தியிற்பொருந்த ஊன்றி, மற்றொரு காலை மேல் நோக்க நன்றாய் நீட்டி, கொல்லுதற்குரிய நீரில் கண்டமமுழ்ந்த, தாமரைமலர்போன்ற முகமலர்ச்சி யுடையவராய்ப் பெருமழையினும் நடுங்காமல் குளிருடனே வெகுகாலம் நின்று.

(வி - ரை.) அம்புயம் - அம்புஜம் என்னும் வடசொற்றிரிபு (நீரில் தோன்றுவ தென்பது பொருள்). நடுங்காக்குளிர் பெருங்காலம் - நடுங்குகிற பெரிய குளிர்காலத்திலும் எனினுமமையும். (௩௧)

தரைகடன் மலைந டுங்கத் தாரகை மதியா தித்தர்
நிரைதருஞ் சோதி குன்ற நேமிய னயன்விண் ணாள்வோன்
கரையறு துயரங் கொள்ளக் கணபணச் சேடன் சென்னி
புரைபடத் திக்குப் பால ரெண்மரும் புந்தி மையய.

(ப-ரை.) தரை - பூமியும், கடல் - சமுத்திரமும், மலை - மலைகளும், நடுங்க - நடுங்காநிற்கவும், தாரகை - நக்ஷத்ரங்களும், மதி ஆதித்தர் - சந்திர சூரியர்களும், நிரைதரும் - முறையே தருதற்குரிய, சோதிகுன்ற - ஒளிகுறையாநிற்கவும், நேமியன் - சக்ராயுதனாகிய திருமாலும், அயன் - பிரமனும், விண் ஆள்வோன் - தேவேந்திரனும், கரை அறு - எல்லையற்ற, துயரம் கொள்ள - துன்பமடையாநிற்கவும், கணம் - கூட்டமாகிய, பணம் - படங்களையுடைய, சேடன் சென்னி - ஆதிசேஷன் சிரங்கள், புரைபட - தொளைபடவும், திக்குப்பாலர் எண்மரும் - அஷ்டதிக்பாலகரும், புந்திமைய - புத்திமயங்காநிற்கவும், எ-று.

(போ - ரை.) பூமியும் சமுத்திரமும் மலைகளும் நடுங்காநிற்கவும், நக்ஷத்ரங்களும் சந்திரசூரியர்களும் முறையே தருதற்குரிய ஒளி குறையாநிற்கவும், சக்ராயுதனாகிய திருமாலும் பிரமனும் தேவேந்திரனும் எல்லையற்ற துன்பமடையாநிற்கவும், கூட்டமாகிய படங்களையுடைய ஆதிசேஷன் சிரங்கள் தொளைபடவும், அஷ்டதிக்பாலகரும் புத்தி மயங்காநிற்கவும்.

(வி - ரை.) விண் - ஆகுபெயர், நேமியும் அது. (௩௨)

திக்கய மெட்டு மட்ட நாகமுந் திசைகள் பேர
மிக்கதிண் பதினோர் பேரா முருத்திரர் மிகத்து ளங்கத்
தொக்குறுந் தேவ ராதி தொகையெலாஞ் சோகித் தேங்க
மிக்கநொந் தயரமண் ணோரீ தென்னவாச் சரிய மென்ன.

(ப-ரை.) திக்கயம் எட்டும் - அஷ்டதிக்கு யானைகளும், அட்டநாகமும் - அஷ்டநாகங்களும், திசைகள் பேர - தத்தம் திசைகள்விட்டு நிலைபெயராநிற்கவும், மிக்க - மிகுந்த, திண் - வலியுள்ள, பதினோர் பேர் ஆம் உருத்திரர் - பதினொருவராகிய உருத்திரரும், மிக - மிகவும், துளங்க - நடுங்கவும், தொக்கு உறு - கூட்டமாகக் கூடிய, தேவர் ஆதி - தேவர் முதலான, தொகை எல்லாம் - தொகைமுழுதும், சோகித்து ஏங்க - துக்கித்திரங்கவும், மண்ணோர் - மண்ணுலகத்தார், மிக்க நொந்து அயர - மிகவும் வருந்தி சோர்வடையவும், ஈது - இது, என்ன ஆச்சரியம் என்ன - என்ன அதிசயமென்று, எ - று.

(போ - ரை.) அஷ்டதிக்கு யானைகளும் அஷ்டநாகங்களும் தத்தம் திசைகள்விட்டு நிலைபெயராநிற்கவும், மிகுந்த வலியுள்ள பதினொருவராகிய உருத்திரரும் மிகவும் நடுங்கவும், கூட்டமாகக்கூடிய தேவர்முதலான தொகை முழுதும் துக்கித்திரங்கவும், மண்ணுலகத்தார் மிகவும் வருந்தி சோர்வடையவும், இது என்னவதிசயமென்று.

(வி - ரை.) மண் - ஆகுபெயர். அஷ்டதிக் கஜங்கள் :—ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்சநம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீபம். அஷ்டநாகங்கள் :—வாசுகி, அநந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன். (௩௩)

அருந்திற னந்தி கேச ரருந்தவச் செயலைக் கண்டு
பெரும்பதி னெண்க ணங்கள் பிரியத்தி னேத்தி வாழ்த்தத்
திருந்தரி யயன்சு ரேசன் றேவர்க ளெல்லாங் கூடிக்
குருந்திவன் றவந்தா னென்ன குறித்தெனத் தம்மிற் கூறு.

(ப - ரை.) அரு - சொல்லுதற்கரிய, திறல் - வெற்றியையுடைய, நந்திகேசர் - நந்தி தேவரது, அரு - அரிய, தவம் செயலை - தவத்தொழிலை, கண்டு - பார்த்து, பெரு - பெரிய, பதினென் கணங்கள் - பதினென்கணங்களும், பிரியத்தின் - அன்பினால், ஏத்தி வாழ்த்த - துதித்து வாழ்த்த, திருந்து - திருத்தமடைந்தவராகிய, அரி - திருமால், அயன் - பிரமன், சுரேசன் - தேவேந்திரன், தேவர்கள் - மற்றைத் தேவர்கள் (ஆகிய), எல்லாம் - எல்லாரும், கூடி - சேர்ந்து, குருந்து - குழந்தையாகிய, இவன் - இவனது, தவம் - தவமானது, என்ன குறித்து என - என் கருதியோவென்று, தம்மில் - தமக்குள்ளே, கூறு - சொல்லிக்கொண்டு, எ - று.

(பொ - ரை.) சொல்லுதற்கரிய வெற்றியையுடைய நந்திதேவரது அரியதவத்தொழிலைப் பார்த்து, பெரிய பதினென் கணங்களும் அன்பினால் துதித்து வாழ்த்த, திருத்தமடைந்தவராகிய திருமால் பிரமன் தேவேந்திரன் மற்றைத் தேவர்களாகிய எல்லாரும் சேர்ந்து, குழந்தையாகிய இவனது தவமானது என் கருதியோ? என்று தமக்குள்ளே சொல்லிக்கொண்டு.

(வி - ரை.) பதினென்கணங்கள் :— அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கிந்நரர், நிருதர், கிம்புருடர், காந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பைசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாசவாசிகள், போகபூமியர். கூறு - செய்யாவென்வாய்பாட்டிறந்த காலவினையெச்சம். (௩௪)

தந்தமக் குறுப தங்க டமைவிழைந் தனரோ வென்று
வந்தினி தெம்மை யன்பாற் றெரிசித்து வணங்கி வாழ்த்தி
நந்தியம் மண்மேற் செய்யு நண்ணரு மத்த வந்தான்
புந்தியி லெதுவி ரும்பி யென்றுமுன் போற்றி நின்றார்.

(ப - ரை.) தந்தமக்கு - தத்தமக்கு, உறு - பொருந்திய, பதங்கள் தம்மை - பதவிகளை, விழைந்தனரோ என்று - விரும்பினாரோவென்று, வந்து இனிது - வந்து இனிதாக, எம்மை - நம்மை, அன்பால் - பக்தியால், தெரிசித்து - தெரிசநஞ்செய்து, வணங்கி - பணிந்து, வாழ்த்தி - போற்றி, நந்தி - நந்திகேசன், அ - அந்த, மண் மேல் - மண்ணுலகில், செய்யும் - செய்கிற, நண் அரும் - அடைதற்கரிய, அ - அந்த, தவம் - தவஞ்செய்வது, புந்தியில் - மனத்தினால், எது விரும்பி என்று - எதனை விரும்பியோவென்று, முன் - எதிரே, போற்றி - துதித்து, நின்றார் - நின்றார்கள், எ - று.

(பொ - ரை.) தத்தமக்குப் பொருந்திய பதவிகளை விரும்பினாரோ? என்று வந்து, இனிதாக நம்மைப் பக்தியால் தெரிசநஞ்செய்து பணிந்து போற்றி, நந்திகேசன் அந்த மண்ணுலகிற்செய்கிற அடைதற்கரிய அந்தத் தவஞ்செய்வது மனத்தினால் எதனை விரும்பியோ? என்று எதிரே துதித்து நின்றார்கள். (௩௫)

தம்மையா நோக்கி நுந்தந் தாழ்பதந் தமைவி ரும்பா
னும்மையு மெண்ணு னந்த முயர்பதந் தனையும் வேண்டா
னம்மையே நச்சி நந்தி நற்றவஞ் செய்கின் றானீர்
செம்மைசேர் முகங்கள் வாடித் தேவரே கலங்கல் வேண்டாம்.

(ப-ரை.) தம்மை - (அவ்வாறு போற்றி) நின்றவரை, யாம் - நாம், நோக்கி - பார்த்து, தேவரே - தேவர்களே, நுந்தம் - உம்முடைய, தாழ் - தாழ்ந்த, பதந்தமை - பதவிகளை, விரும்பான் - இச்சியான், உம்மையும் - உங்களையும், எண்ணான் - மதிக்கமாட்டான், நந்தம் - நம்முடைய, உயர் - மேலான, பதந்தனையும் - பதவியையும், வேண்டான் - விரும்பான், நம்மையே - எம்மையே, நச்சி - விரும்பி, நந்தி - நந்திதேவன், நல் தவம் - நல்ல தவம்,

செய்கின்றான் - புரிகின்றான், நீர் - நீங்கள், செம்மை சேர் - அழகு பொருந்திய, முகங்கள் வாடி - முகங்கள் சோர்ந்து, கலங்கல் வேண்டாம் - குழப்பமடையாதீர்கள், எ - று.

(போ - ரை.) அவ்வாறு போற்றி நின்றவரை நாம் பார்த்து, தேவர்களே! உம்முடைய தாழ்ந்த பதவிகளை யிச்சியான், உங்களையும் மதிக்கமாட்டான், நம்முடைய மேலான பதவியையும் விரும்பான், எம்மையே விரும்பி நந்திதேவன் நல்ல தவம் புரிகின்றான், நீங்கள் அழகு பொருந்திய முகங்கள் சோர்ந்து குழப்பமடையாதீர்கள். (௩௬)

என்றவர் தம்மை நம்பி னெழுமென வழைத்துக் கொண்டு
சென்றவ ணிவன்செய் கின்ற திறத்தவந் தன்னை நோக்கி
யுன்றனக் கென்னை வேண்டிற் றுரைதரு வோநா மென்னத்
துன்றுநற் பத்தி யாலே தொழுதுவீழ்ந் தெழுந்து நின்று.

(ப - ரை.) என்று - என்றுசொல்லியும் (தேவர்களது சந்தேகமொழியாதிருத்தலைக் கண்டு), அவர்தம்மை - அவர்களை, நம் பின் - எம் பின்னே, எழும் என - எழுந்து வாருங்கள் என்று, அழைத்துக்கொண்டு சென்று - அழைத்துக்கொண்டு போய், அவண் - அவ்விடத்தில் (எதிரே பிரத்தியக்ஷமாகி), இவன் - இந்த நந்திதேவன், செய்கின்ற - செய்யும், திறம் - உறுதியாகிய, தவம் தன்னை - தவத்தினை, நோக்கி - பார்த்து, உன்றனக்கு - உனக்கு, என்னை வேண்டிற்று - யாது வேண்டியது, உரை - கேள், நாம் - யாம், தருவோம் - கொடுப்போம், என்ன - என்று கட்டளையிட, (அதுகேட்ட நந்திதேவன்) நல் - நன்மையாகிய, துன்று - மிகுந்த, பத்தியாலே - பக்தியினாலே, தொழுது - வணங்கி, வீழ்ந்து - (பூமியில்) விழுந்து, எழுந்து நின்று - எழுந்து நின்றுகொண்டு, எ - று.

(போ - ரை.) என்று சொல்லியும் தேவர்களது சந்தேகமொழியாதிருத்தலைக் கண்டு, அவர்களை எம் பின்னே எழுந்து வாருங்களென்று அழைத்துக்கொண்டு போய், அவ்விடத்தில் எதிரே பிரத்தியக்ஷமாகி, இந்த நந்திதேவன் செய்யும் உறுதியாகிய தவத்தினைப் பார்த்து, உனக்கு யாதுவேண்டியது கேள்? யாம் கொடுப்போமென்று கட்டளையிட; அதுகேட்ட நந்திதேவன் நன்மையாகிய மிகுந்த பக்தியினாலே வணங்கிப் பூமியில் விழுந்தெழுந்து நின்றுகொண்டு. (௩௭)

நிதியினை யிகழ்ந்து மண்ணை நேசிப்பா ருளரோ நல்ல
மதியினை மறந்து பொல்லா மருள்பெற மதிப்பா ருண்டோ
திதியினைச் செய்யு மாலோன் செங்கம லத்தோன் றேவர்
கதியினை நினைப்ப ரோநின் கழலிணைக் கன்ப ரானோர்.

(ப - ரை.) (தேவர்கள் ஆச்சரியமடையும்படி) நிதியினை - பொருளை, இகழ்ந்து - நிந்தித்து, மண்ணை நேசிப்பார் - மண்ணை விரும்புவார், உளரோ - இருப்பரோ, நல்ல மதியினை - நல்லறிவை, மறந்து - மறந்துவிட்டு, பொல்லா - கெட்ட, மருள் - மயக்கம், பெற - பெறுவதற்கு, மதிப்பார் உண்டோ - எண்ணுவாருண்டோ (அதுபோல), நின் - உன், கழல் இணைக்கு - இரண்டு சீர்பாதங்களுக்கு, அன்பர் ஆனோர் - பக்தரானோர், திதியினை - காத்தற்றொழிலை, செய்யும் - செய்கிற, மாலோன் - திருமால், செங்கமலத்தோன் - பிரமன், தேவர் - மற்றைத்தேவர் (இவர்களுடைய), கதியினை - பதவிகளை, நினைப்பரோ - கருதுவரோ, எ - று.

(போ-ரை.) தேவர்கள் ஆச்சரியமடையும்படி, பொருளை நிந்தித்து மண்ணை விரும்புவார் இருப்பரோ? நல்லறிவை மறந்துவிட்டுக் கெட்ட மயக்கம் பெறுவதற்கு எண்ணுவாருண்டோ? அதுபோல, உன் இரண்டு சீர்பாதங்களுக்குப் பக்தரானோர் காத்தற்றொழிலைச் செய்கிற திருமால் பிரமன் மற்றைத் தேவர் இவர்களுடைய பதவிகளைக் கருதுவரோ?

(வி - ரை.) நிதி - சங்கநிதி பத்மநிதி முதலிய நவநிதியெனினுமாம். (௩௮)

என்னையாண் டருள வந்த விறைவனே போற்றி போற்றி
யுன்னையா னறியக் காட்டு மொளியனே போற்றி போற்றி
பின்னையொன் றறியா நாயேன் பிழைபொறுத் தருள்வாய் போற்றி
யன்னையோர் பாகா போற்றி யத்தனே போற்றி போற்றி.

(ப - ரை.) என்னை - என்னை, ஆண்டு - அடிமைகொண்டு, அருள வந்த - கிருபைசெய்யத் தோன்றிய, இறைவனே - தலைவனே, போற்றி போற்றி - நமஸ்காரம் நமஸ்காரம், உன்னை - நின்னை, யான் - நான், அறிய - அறிந்துகொள்ள, காட்டும் - காட்டுகிற, ஒளியனே - ஒளியை யுடையவனே, போற்றி போற்றி - நமஸ்காரம் நமஸ்காரம், பின்னை ஒன்று - வேறொன்றும், அறியா - அறியாத, நாயேன் - நாயினேனது, பிழை - குற்றங்களை, பொறுத்து - மன்னித்து, அருள்வாய் - கிருபைசெய்யக்கடவை, போற்றி - நமஸ்காரம், அன்னை - லோக மாதாவாகிய உமாதேவியை, ஓர் பாகா - ஒரு பாகத்திலுடையவனே, போற்றி - நமஸ்காரம், அத்தனே - எமது தந்தையே, போற்றி போற்றி - நமஸ்காரம் நமஸ்காரம்.

(பொ - ரை.) என்னை அடிமைகொண்டு கிருபைசெய்யத் தோன்றிய தலைவனே! நமஸ்காரம் நமஸ்காரம், நின்னை நான் அறிந்துகொள்ளக் காட்டுகிற ஒளியையுடையவனே! நமஸ்காரம் நமஸ்காரம், வேறொன்றுமறியாத நாயினேனது குற்றங்களை மன்னித்துக் கிருபைசெய்யக் கடவை நமஸ்காரம், லோகமாதாவாகிய உமாதேவியை ஒரு பாகத்திலுடையவனே! நமஸ்காரம், எமது தந்தையே! நமஸ்காரம் நமஸ்காரம். (௫௯)

சத்தமாய்ப் பொருளு மான சங்கரா போற்றி போற்றி
நித்தமாம் பதத்தாய் போற்றி நின்மலா போற்றி போற்றி
யத்தமா தியவா மூன்றி னாசைதீர்த் தாண்டாய் போற்றி
யுத்தம வுன்னை யல்லா தொன்றிலேன் போற்றி போற்றி.

(ப - ரை.) சத்தம் ஆய் - ஒலியாகி, பொருளும் ஆன - அதன் பொருளுமாகிய, சங்கரா - சங்கரனே, போற்றி போற்றி - நமஸ்காரம் நமஸ்காரம், நித்தம் ஆம் - சாசுவதமாகிய, பதத்தாய் - பதத்தை யுடையவனே, போற்றி - நமஸ்காரம், நின்மலா - மலரஹிதனே, போற்றி போற்றி - நமஸ்காரம் நமஸ்காரம், அத்தம் ஆதிய ஆம் - பொன் முதலியவைகளாகிய, மூன்றின் ஆசைதீர்த்து - மூன்றின் ஆசை ஒழியச்செய்து, ஆண்டாய் - ஆட்கொண்டாய், போற்றி - நமஸ்காரம், உத்தம - உத்தமனாகிய, உன்னை யல்லாது - நின்னையன்றி, ஒன்று இலேன் - வேறொன்றுமில்லாதவனானேன், போற்றி போற்றி - நமஸ்காரம் நமஸ்காரம்.

(பொ - ரை.) ஒலியாகி அதன் பொருளுமாகிய சங்கரனே! நமஸ்காரம் நமஸ்காரம், சாசுவதமாகிய பதத்தை யுடையவனே! நமஸ்காரம், மலரஹிதனே! நமஸ்காரம் நமஸ்காரம், பொன்முதலியவைகளாகிய மூன்றின் ஆசை ஒழியச்செய்து ஆட்கொண்டாய் நமஸ்காரம், உத்தமனாகிய நின்னையன்றி வேறொன்றுமில்லாதவனானேன் நமஸ்காரம் நமஸ்காரம்.

(வி - ரை.) சங்கரன் - சுககரன், அத்தம் அர்த்தம் என்னும் வடசொற்றிரிபு. அத்தமாதியவாமூன்று என்றது பொன் பெண் மண் என்பவைகளை. (௬0)

பதவியென் கின்ற பாவப் பரிவிலே னடியே னின்ற
னிதவிய பதத்தின் பத்தி யினிமையே நியதி யாக
வுதவியா னென்னை யென்ன வுகந்தியா மகிழ்ந்து வாழ்த்தி
மதவினை யிலானை நந்த மலர்க்கையா லணைத்துக் கொண்டு.

(ப - ரை.) பதவி என்கின்ற - பதவியென்று சொல்லப்படுகிற, பாவப்பரிவு - சித்த விருப்பம், இலேன் - இலேனாகிய, அடியேன் - அடியனேன், நின்றன் - உனது, இதவிய - நன்மை செய்கிற, பதத்தின்பத்தி - ஸ்ரீபாதபக்தியென்கிற, இனிமையே - இன்பமே, நியதியாக - நியமமாக, உதவி - உதவிசெய்து, என்னை ஆள் என்ன - என்னையாளக்கடவையென்று (அரிபிரமாதியர்கள் சந்தேகம் ஒழியும்படி) விண்ணப்பஞ்செய்ய, யாம் - நாம், உகந்து - சந்தோஷித்து, மகிழ்ந்து - களித்து, வாழ்த்தி - ஆசீர்வதித்து, மதவினை - அகங்காரச்செய்கை, இல்லானை - இல்லாதவனாகிய நந்திதேவனை, நந்தம் - எமது, மலர்கையால் - மலர்போலும் கரத்தினால், அணைத்துக்கொண்டு - தழுவிக்கொண்டு, எ - று.

(பொ - ரை.) பதவியென்று சொல்லப்படுகிற சித்தவிருப்பமில்லாதவனாகிய அடியனேன் உனது நன்மைசெய்கிற ஸ்ரீபாதபக்தியென்கிற இன்பமே நியமமாக உதவிசெய்து என்னை யாளக்கடவையென்று அரிபிரமாதியர்கள் சந்தேகமொழியும்படி விண்ணப்பஞ்செய்ய; நாம் சந்தோஷித்து களித்து ஆசீர்வதித்து, அகங்காரச் செய்கையில்லாதவனாகிய நந்திதேவனை எமது மலர்போலும் கரத்தினால் தழுவிக்கொண்டு. (௨௧)

கலிவிருத்தம்.

நின்னுடற் பரிசநா நேச நாங்கொடு
முன்னுனை வாகன முகத்திற் கொண்டமை
பன்னுநான் மறையெனப் பகர்ந்து பல்கணத்
துன்னுநா யகமுமுற் றுணர்வு நல்கினம்.

(ப - ரை.) நின் - உன், உடல் - தேகத்தின், பரிசநம் - தீண்டுகையில், நாம் - யாம், நேசம் கொடு - விருப்பங்கொண்டு, முன் - முன்னே, உன்னை - நின்னை, வாகனமுகத்திற் கொண்டமை - (எக்காலமும்) வாகனஸ்தானத்திற்கொண்டபெருமை, நால் மறை - நான்கு வேதங்கள், பன்னும் - சொல்லாநிற்கும், என - என்று, பகர்ந்து - சொல்லி, பல்கணத்து - பல சிவகணங்களுக்கும், உன்னும் - மதிக்கத்தக்க, நாயகமும் - தலைமையையும், முற்று உணர்வும் - ஸர்வஜ்ஞதையும், நல்கினம் - கொடுத்தோம், எ - று.

(பொ - ரை.) உன் தேகத்தின் தீண்டுகையில் யாம் விருப்பங்கொண்டு முன்னே நின்னை எக்காலமும் வாகனஸ்தானத்திற் கொண்டபெருமை நான்கு வேதங்கள் சொல்லாநிற்கும் என்று சொல்லி, பல சிவகணங்களுக்கும் மதிக்கத்தக்க தலைமையையும் ஸர்வஜ்ஞதையையுங் கொடுத்தோம்.

(வி - ரை.) பரிசநம் - பரிசம். பல்கணத்துன்னு நாயகமும் உற்று-கணாதிபதிபட்டத்தையுந்தரித்து எனினுமாம். ஸர்வஜ்ஞதையை யருள்செய்தமைபற்றி அதற்கியைந்த பக்தியையும் அருள்செய்ததென்றபடி. (௨௨)

ஆங்கரி யோர்புடை யயனோர் பாலிபத்
தோங்கரி யோருழை யும்ப ரோரிட
நீங்கரு மன்பராய் நின்று நந்தியைப்
பாங்குறு துதியுடன் பாணி கூப்பினார்.

(ப - ரை.) ஆங்கு - (என்று ஆஜ்ஞாபித்த) அப்பொழுது, அரி - விட்டுணு, ஓர் புடை - ஒரு பக்கத்தில், அயன் - பிரமன், ஓர்பால் - ஒரு பக்கத்தில், இபத்து - வெள்ளை யானையையுடைய, ஓங்கு - உயர்ந்த, அரி - இந்திரன், ஓர் உழை - ஒரு பக்கத்தில், உம்பர் - தேவர், ஓர் இடம் - ஒரு பக்கத்தில், நீங்கு அரு - நீங்குதற்கரிய, அன்பர் ஆய் நின்று - பக்தராய் நின்று, நந்தியை - நந்திதேவனை, பாங்கு உறு - அழகுமிக்க, துதியுடன் - தோத்திரத்தோடு, பாணி கூப்பினார் - கைகுவித்தார்கள், எ - று.

(போ - ரை.) என்று ஆஞ்ஞாபித்த அப்பொழுது விட்டுணு ஒரு பக்கத்தில், பிரமன் ஒரு பக்கத்தில், வெள்ளையானையையுடைய உயர்ந்த இந்திரன் ஒரு பக்கத்தில், தேவர் ஒரு பக்கத்தில், நீங்குதற்கரிய பக்தராய் நின்று, நந்திதேவனை அழகுமிக்க தோத்திரத்தோடு கைகுவித்தார்கள்.

(வி - ரை.) இபம் - யானை, அது இங்கு வெள்ளையானையைக் குறித்தது. உம்பர் - ஆகுபெயர். (சங)

தொழுமிமை யோர்தமைத் தூய பார்வையால்
வழுவற முகமிக மலர்ந்த வின்சொலா
லெழுபய மறப்பணித் தேகு மென்றுநாஞ்
செழுவிய கயிலையைச் சேர்ந்த பின்னிவன்.

(ப - ரை.) தொழும் - வணங்குகிற, இமையோர்தமை - தேவர்களை, தூய - பரிசுத்தமான, பார்வையால் - திருநோக்கினால், வழுவு அற - குற்றமற, முகம் - முகமானது, மிக - மிகுதியாக, மலர்ந்த - அலர்ந்த, இன் - இனிய, சொலால் - வார்த்தையால், எழு - உண்டாகின்ற, பயம் அற - அச்சமற, பணித்து - கட்டளையிட்டு, ஏகும் என்று - (நுந்தம் பதங்களுக்குப்) போங்களென்றுசொல்லி, நாம் - யாம், செழுவிய - செழிப்பையுடைய, கயிலையைச் சேர்ந்தபின் - திருக்கயிலாயமலையை யடைந்தபிறகு, இவன் - இந்த நந்திதேவன், எ - று.

(போ - ரை.) வணங்குகிற தேவர்களைப் பரிசுத்தமான திருநோக்கினால் குற்றமற, முகமானது மிகுதியாக அலர்ந்த இனிய வார்த்தையால் உண்டாகின்ற அச்சமற கட்டளையிட்டுத் நுந்தம் பதங்களுக்குப் போங்களென்று சொல்லி, யாம் செழிப்பையுடைய திருக்கயிலாயமலையை யடைந்தபிறகு, இந்த நந்திதேவன்.

(வி - ரை.) தூயபார்வை - கருணைநோக்கம் எனினுமாம். (சச)

உற்றிருந் தவஞ்செயு முயர்ப ருப்பத
வெற்றிசேர் நிருதிகோ ணத்து மெய்யறந்
துற்றெழுஞ் சுத்தமாய்ச் சுகங்கொ ளெல்லையாய்
நற்றுமத் தலப் பெயர் நந்தி மண்டலம்.

(ப - ரை.) உற்று - பொருந்தி, இரு - பெரிய, தவம் செய்யும் - தவஞ்செய்கிற, உயர் - உயர்ந்த, பருப்பதம் - ஸ்ரீசைலத்தின், வெற்றிசேர் - வெற்றிபொருந்திய, நிருதிகோணத்து - நிருதிமூலையில், மெய் அறம் - உண்மையாகிய தருமம், துற்று எழும் - நிறைந்தோங்குதற்குரிய, சுத்தம் ஆய் - சுத்தஸ்த்தலமாய், சுகம் கொள் எல்லை ஆய் - மோக்ஷக்ஷேத்ரமாகி, நற்றும் - (யாவராலும்) விரும்பப்படுகிற, அ - அந்த, தலப்பெயர் - ஸ்த்தலப் பெயரானது, நந்திமண்டலம் - நந்திமண்டலமாம், எ - று.

(போ - ரை.) பொருந்திப் பெரிய தவஞ்செய்கிற உயர்ந்த ஸ்ரீசைலத்தின் வெற்றி பொருந்திய நிருதி மூலையில் உண்மையாகிய தருமம் நிறைந்தோங்குதற்குரிய சுத்த ஸ்த்தலமாய் மோக்ஷக்ஷேத்ரமாகி யாவராலும் விரும்பப்படுகிற அந்த ஸ்த்தலப் பெயரானது நந்திமண்டலமாம். (சரு)

அறுசீர்விருத்தம்.

அந்தமண் டலத்தி னுள்ளோர்க் கதிகநற் கதிய ளித்தோ
மிந்தநந் நியைத்து தித்தோர்க் கிணையிலா முத்தி யின்பஞ்
சந்ததிப் பேறி ரண்டுஞ் சதுர்வித பத்தி யுத்தி
சிந்தையி னினைத்த கன்ம சித்திமற் றெல்லாந் தந்தோம்.

(ப - ரை.) அந்த மண்டலத்தில் - அந்த நந்திமண்டலத்தில், உள்ளோர்க்கு - இருப்பவர்களுக்கு, அதிகம் - மேன்மையாகிய, நல் - நல்ல, கதி - பதவியை, அளித்தோம் - கொடுத்தோம், இந்த நந்தியை - இந்த நந்திதேவனை, துதித்தோர்க்கு - வணங்கினவர்களுக்கு, இணையில்லா - ஒப்பில்லாத, முத்தியின்பம் - மோக்ஷ சுகம், சந்ததிப்பேறு - புதல்வர்ப்பேறு, இரண்டும் - (ஆகிய இவை) இரண்டும், சதுர்வித பக்தி - நான்குவிதமான பக்தியும், யுக்தி - ஊகமும், சிந்தையில் - மனத்தில், நினைத்த - கருதிய, கன்ம சித்தி - காரிய சித்தியும், மற்ற எல்லாம் - வேறு எல்லாவரமும், தந்தோம் - கொடுத்தோம், எ-று.

(பொ - ரை.) அந்த நந்திமண்டலத்திலிருப்பவர்களுக்கு மேன்மையாகிய நல்ல பதவியைக்கொடுத்தோம், இந்த நந்திதேவனை வணங்கினவர்களுக்கு ஒப்பில்லாத மோக்ஷ சுகம் புதல்வர்ப்பேருகிய இவையிரண்டும், நால்வகையான பக்தியும், ஊகமும், மனத்தில் கருதிய காரியசித்தியும், வேறு எல்லா வரமும் கொடுத்தோம்.

(வி - ரை.) சித்தி - பலிப்பு. புதல்வர்ப்பேறு - புத்ரலாபம். சதுர்வித பக்தியாவது அங்கத்தில் குருபக்தி, மனதில் லிங்கபக்தி, அறிவில் ஜங்கமபக்தி, பரிணமத்தில் ப்ரஸாதபக்தி என்பனவாம். (௬௬)

துடியிடை யுமையே யிந்தத் தொன்மையா நந்தி நந்தம்
படிவனம் முடனே யொத்த பான்மைய னென்ன நித்தன்
அடியிணை யிறைவி வந்தித் தகமகிழ்ந் தந்த நந்தி
வடிவினை யன்பி னோக்கி மதித்திருந் தங்கண் சொல்வாள்.

(ப - ரை.) துடி - உடுக்கைபோன்ற, இடை - இடையினையுடைய, உமையே - உமாதேவியே, இந்த தொன்மை ஆம் - இந்தப் பழமையான, நந்தி - நந்திதேவன், நம்தம் - எமது, படிவன் - வடிவ முடையவன், எம்முடனே - நம்முடனே, ஒத்த - நிகர்த்த, பான்மையன் - தன்மையுள்ளவன், என்ன - என்று திருவாய்மலர்ந்தருள, நித்தன் - பரமசிவனது, அடியிணை - இரண்டு திருவடிகளையும், இறைவி - உமாதேவியானவள், வந்தித்து - வணங்கி, அகம் மகிழ்ந்து - மனங்களித்து, அந்த நந்தி - அந்த நந்திதேவனது, வடிவினை - உருவத்தை, அன்பின் - அன்போடு, நோக்கி - பார்த்து, மதித்திருந்து - கணித்திருந்து, அங்கண் - அப்பொழுது, சொல்வாள் - சொல்வாளாயினள், எ - று.

(பொ - ரை.) உடுக்கைபோன்ற இடையையுடைய உமாதேவியே! இந்தப் பழமையான நந்திதேவன் எமது வடிவமுடையவன், நம்முடனே நிகர்த்த தன்மையுடையவனென்று திருவாய்மலர்ந்தருள; பரமசிவனது இரண்டு திருவடிகளையும் உமாதேவியானவள் வணங்கி மனங்களித்து, அந்த நந்திதேவனதுருவத்தை அன்போடு பார்த்துக் கணித்திருந்து அப்பொழுது சொல்வாளாயினள். (௬௭)

இச்சதா சார நீதி யிந்தநன் முத்தி ஞான
மிச்சல மில்லாச் சித்த மிந்நிராங் கார புத்தி
யிச்சது ரான பத்தி யிக்குண மிந்த வார
மிச்சிவ நேயம் பெற்ற ரெவரிவர் போல வென்று.

(ப - ரை.) (ஓ பரமசிவனே! நந்திகேசுரனுக்கும் தேவரீருக்கும் பேதம் இல்லையென்னும் வார்த்தை சத்தியமில்லாதிருக்கும்பக்ஷத்தில்) இ - இந்த, சதாசாரநீதி - நல்லொழுக்க நியாயம், இந்த நல் - இந்த மேலான, முத்தி ஞானம் - மோக்ஷ ஞானம், இ - இந்த, சலம் இல்லா - சலனமில்லாத, சித்தம் - மனம், இ - இந்த, நிராங்கார புத்தி - அகங்காரமில்லாத புத்தி, இ - இந்த, சதுர் ஆன பத்தி - திறமான பக்தி, இ - இந்த, குணம் - நற்குணம், இந்த வாரம் - இந்த அன்பு, இ - இந்த, சிவநேயம் - சிவநேசம் (இவை

யாவையும்), இவர்போல - இவரைப்போல, எவர் பெற்ருர் என்று - யாரடைந்தாரென்று சொல்லி, எ - று.

(போ - ரை.) ஓ பரமசிவனே ! நந்திகேசுரனுக்கும் தேவரீருக்கும் பேதமில்லையென்னும் வார்த்தை சத்தியமில்லாதிருக்கும் பக்ஷத்தில், இந்த நல்லொழுக்க நியாயம், இந்த மேலான மோக்ஷ ஞானம், இந்தச் சலனமில்லாத மனம், இந்த அகங்காரமில்லாத புத்தி, இந்தத் திறமான பக்தி, இந்த நற்குணம், இந்த அன்பு, இந்தச் சிவநேசம் ஆகிய இவையாவும் இவரைப்போல யாரடைந்தாரென்று சொல்லி.

(வி - ரை.) நிராங்காரபுத்தி - சாந்தபுத்தி யெனினுமாம். சதுர் ஆன பக்தி - நான்கு வகையான பக்தியெனினுமாம். (௩௮)

யாவரீ ரேழு லோக மெங்குமாய் நிறைந்து நிற்குந்
தேவரீர் தம்மைத் தாங்குந் திடமுளார் தேவ ரீர்க்கொப்
பாவரீ தின்ற லோவிங் கடியனே னறிந்தே னென்னச்
சேவரீ ரன்கொ ணெஞ்சின் செய்யநா ரதனை நோக்கி.

(ப-ரை.) ஈர் ஏழு லோகம் - பதினான்கு லோகமாகிய, எங்குமாய்-எவ்விடத்துமாகி, நிறைந்து நிற்கும் - வியாபித்திருக்கும், தேவரீர் தம்மை - தேவரீரை, தாங்கும் - சுமக்கும், திடம் - வலி, உளார் - உள்ளவர், தேவரீர்க்கு ஒப்பு ஆவர் - தேவரீருக்குச் சமானமானவர், யாவர் - எவர், ஈது - இந்தச்செய்தியை, இன்று அல்லோ - இன்றல்லவா, இங்கு - இவ்விடத்து, அடியனேன் - அடியேன், அறிந்தேன் - தெரிந்தேன், என்ன - என்று சொல்ல, சேவர் - இடபவாகனத்தை யுடைய சிவபிரான், ஆரம் கொள் - அன்புகொண்ட, நெஞ்சின் - மனத்தினையுடைய, செய்ய - செவ்விய, நாரதனை - நாரதமுனிவரை, நோக்கி - பார்த்து, எ - று.

(போ - ரை.) பதினான்கு லோகமாகிய எவ்விடத்துமாகி வியாபித்திருக்கும் தேவரீரைச் சுமக்கும் வலி யுள்ளவர் தேவரீருக்குச்சமானமானவர் எவர் ? இந்தச் செய்தியை இன்றல்லவா இவ்விடத்து அடியேன் தெரிந்தேனென்று சொல்ல ; இடபவாகனத்தை யுடைய சிவபிரான் அன்புகொண்ட மனத்தினையுடைய செவ்விய நாரதமுனிவரைப் பார்த்து.

(வி - ரை.) சே - ஓரெழுத்தொருமொழி, இடபம் என்பது பொருள். (௩௯)

நந்திசீ ரிதுகா ணென்ன நந்திக ணயந நீர்கொண்
டந்திவா னனைய மேனி யத்தனைப் பணிந்து நின்றே
யிந்திரியங் கரண மங்க மெங்குநற் புளக மெய்திப்
புந்திநைந் திறைஞ்ச வத்தன் புரிவினா லெடுத்து கந்து.

(ப - ரை.) நந்தி - நந்திதேவரின், சீர் - சிறப்பு, இது காண் என்ன - இதுகாணென்று சொல்ல, (அது கேட்ட) நந்திகள் - நந்திதேவர், நயனம் - கண்ணில், நீர் கொண்டு - நீரைக் கொண்டு, அந்திவான் அனைய - அந்தி வானத்தை ஒத்த, மேனி - திருமேனியையுடைய, அத்தனை - சிவபிரானை, பணிந்து நின்று - வணங்கி நின்று, இந்திரியம் - பஞ்ச இந்திரியங்களும், கரணம் - நான்கு கரணங்களும், அங்கம் - உடலும் (ஆகிய), எங்கும் - எவ்விடத்தும், நல் - நல்ல, புளகம் எய்தி - மயிர்சிலிர்ப்படைந்து, புந்தி நைந்து - அறிவழிந்து, இறைஞ்ச - வணங்க, அத்தன் - சிவபிரான், புரிவினால் எடுத்து - அன்பினாலெடுத்து, உகந்து - சந்தோஷித்து, எ - று.

(போ - ரை.) நந்திதேவரின் சிறப்பு இது காணென்று சொல்ல, அதுகேட்ட நந்திதேவர் கண்ணில் நீரைக்கொண்டு அந்திவானத்தையொத்த திருமேனியையுடைய சிவ

பிரானை வணங்கி நின்று, பஞ்சேந்த்ரியங்களும் நான்கு கரணங்களும் உடலும் ஆகிய எவ்விடத்தும் நல்ல மயிர்சிலிர்ப்படைந்து அறிவழிந்து வணங்க, சிவபிரான் அன்பினுலெடுத்து சந்தோஷித்து.

(வி - ரை.) அந்திவானம் - செவ்வான மெனினுமாம். பஞ்சேந்த்ரியங்கள் - மெய் வாய் கண் மூக்கு செவி என்பன. நான்கு கரணங்கள் - மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பன. (௫௦)

இதுமறை சைவ மூல மிதுசம யத்தின் பேத
மிதுபத்தி மகிமை நேய மிதுபர தத்து வார்த்த
மிதுசிவ மந்தி ரங்க ளிதுதன்ம விரத நீதி
யிதுமுத லந்த மீதென் றிறைவிமு னுனக்கி சைத்தோம்.

(ப - ரை.) இது மறை - இது வேதம், இது சைவமூலம் - இது (வீர) சைவத்துக்குக் காரணம், இது சமயத்தின் பேதம் - இது (ஏனைய) சமய வேறுபாடு, இது பத்தி - இது ஸத்பக்தி, இது மகிமை - இது சிவநாம மகிமை, இது நேயம் - இது சிவநேசம், இது பரதத்துவ அர்த்தம் - இது பரத்திலுண்மைப்பொருள், இது சிவமந்திரங்கள் - இது சைவ மந்திரங்கள், இது தன்ம விரதம் - இது தர்மவிரதம், இது நீதி - இது நியாயம், இது முதல் - இது ஆதி, ஈது அந்தம் - இது முடிவு, என்று - என்று விவரித்து, இறைவிமுன் - உமாதேவியின் எதிரில், உனக்கு இசைத்தோம் - உனக்கு அநுக்கிரகித்தோம், எ-று.

(பொ - ரை.) இது வேதம், இது வீரசைவத்துக்குக் காரணம், இது ஏனைய சமய வேறுபாடு, இது ஸத்பக்தி, இது சிவநாம மகிமை, இது சிவநேசம், இது பரத்திலுண்மைப்பொருள், இது சைவமந்திரங்கள், இது தர்மவிரதம், இது நியாயம், இது ஆதி, இது முடிவு என்று விவரித்து உமாதேவியின் எதிரில் உனக்கு அநுக்கிரகித்தோம்.

(வி - ரை.) மறை சைவம் - வேத சம்பந்தமான சைவம் அதாவது வீரசைவமெனினுமாம். சிவமந்திரங்கள் - ஸ்ரீ பஞ்சாக்ஷரமாதியானவை. சமயத்தின் பேதமாவது:—

(௧.) வைஷ்ணவம் சைவம் சாக்தம் ஸௌரம் காணபதம் கௌமாரம்.
(௨.) கபிலம் கணாதம் பதஞ்சலி அக்ஷபாதம் வியாசம் ஜைமினி.
(௩.) பௌத்தம் ஜைனம் பைரவம் காளாமுகம் உலகாயிதம் சூனியவாதம்.
(௪.) வைரவம் வாமம் காளாமுகம் மாவிரதம் பாசுபதம் சைவம்.
(௫.) உலகாயிதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம்.

உன்றனு லிந்தப் போத முலகெலாம் விளங்கும் வண்ண
மின்றுனக் குரைத்தோ நந்த மிறைவிக்குங் கணநா தர்க்கு
முன்றரு முணர்வி னுக்கு முதிர்ந்தபே ரறிவ ளித்தோ
மன்றுநீ நம்மை நீங்காய் மறந்துநா முன்னை நீங்கோம்.

(ப - ரை.) உன்றனுல் - உன்னால், இந்தப்போதம் - இந்த ஞானம், உலகு எல்லாம் - உலக முழுதும், விளங்கும் வண்ணம் - விளங்கும்படி, இன்று - இப்போது, உனக்கு உரைத்தோம் - உனக்கு அநுக்கிரகித்தோம், நம்தம் - நமது, இறைவிக்கும் - தலைவியாகிய உமாதேவிக்கும், கணநாதர்க்கும் - சிவகணத்தலைவருக்கும், முன்தரும் - முன்னமே நாம் அநுக்கிரகித்த, உணர்வினுக்கு - அறிவினுக்கு, முதிர்ந்த - தேர்ந்த, பேர் அறிவு - பேருணர்ச்சி, அளித்தோம் - அநுக்கிரகித்தோம், அன்று - அக்காலத்தில், நீ நம்மை நீங்காய் - நீ எம்மை நீங்காதவனுவாய், நாம் - யாம், உன்னை - நின்னை, மறந்தும் - மறந்தேயாயினும், நீங்கோம் - நீங்கமாட்டோம், எ-று.

(பொ - ரை.) உன்றனால் இந்த ஞானம் உலகமுழுதும் விளங்கும்படி இப்போதுனக் கநுக்கிரகித்தோம், நமது தலைவியாகிய உமாதேவிக்கும் சிவகணத்தலைவருக்கும் முன்னமே நாம் அநுக்கிரகித்த அறிவினுக்குத் தேர்ந்த பேருணர்ச்சி அநுக்கிரகித்தோம், அக்காலத்தில் நீ எம்மை நீங்காதவனாவாய், யாம் நின்னை மறந்தேயாயினும் நீங்கமாட்டோம்.

தரைமிசை நீயி ரண்டாஞ் சம்புவாய்ச் செல்வாய் நந்தி
விரையவே யுலக மோங்கி விளங்கிடும் பொருட்டா யென்று
வரைவிலா னுரைக்க நந்தி வணங்கியெங் கெங்கு நீயே
யரையனென் னாவி நீயென் னன்புநீ யாக வென்ன.

(ப - ரை.) நந்தி - நந்திதேவனே, விரையவே - விரைவாகவே, உலகம் - உலகமானது, ஓங்கி - உயர்ந்து, விளங்கிடும் பொருட்டாய் - விளங்கும்பொருட்டு, தரைமிசை - பூமியின்மேல், நீ இரண்டாம் சம்புவாய் செல்வாய் - நீ இரண்டாம் சிவமாய் அவதரிப்பாய், என்று - என்று இவ்வாறு, வரைவில்லான் உரைக்க - (மேரு) மலை வில்லையுடையவனாகிய பரமசிவன் கட்டளையிட, (அதுகேட்ட) நந்தி - நந்திதேவன், வணங்கி - தொழுது, எங்கெங்கும் - எவ்வெவ்விடங்களினும், நீயே அரையன் - நீயே இறைவன், என் ஆவி நீ - என் பிராணன் நீ, என் அன்பு நீ - என் பக்தி நீ, ஆக என்ன - ஆகுகவென்று பிரார்த்திக்க, எ - று.

(பொ - ரை.) நந்திதேவனே! விரைவாகவே உலகமானது உயர்ந்து விளங்கும் பொருட்டு, பூமியின்மேல் நீ இரண்டாம் சிவமாய் அவதரிப்பாயென்றிவ்வாறு மஹாமேருமலைவில்லையுடையவனாகிய பரமசிவன் கட்டளையிட, அதுகேட்ட நந்திதேவன் தொழுது, எவ்வெவ்விடங்களினும் நீயே இறைவன், என் பிராணன் நீ, என் பக்தி நீயாகுகவென்று பிரார்த்திக்க. (௫௩)

மண்ணிடைக் குருவாய் வந்து மனத்தரு டருவோங் கையி
னண்ணுவோ மிலிங்க மாக நற்சர லிங்க மாகப்
புண்ணிய நின்பா னாளும் பொருந்துவோம் பொருண்மெய் யாவி
யெண்ணிநீ தரயாங் கொள்வோ மெனைத்துநிற் பிரியோ மென்று.

(ப - ரை.) (அதுகேட்டசிவபெருமான்) புண்ணிய - புண்ணியவானே, மண்ணிடை - பூமியில், குருவாய் - (உன்பொருட்டு) குருவாகி, வந்து - தோன்றி, மனத்து - திருவுளத்தின், அருள் தருவோம் - கிருபைசெய்வோம், இலிங்கமாக - இஷ்டலிங்கமாக, கையில் - (உனது) கரத்தில், நண்ணுவோம் - பொருந்தியிருப்போம், நல் - நல்ல, சரலிங்கமாக - ஜங்கமலிங்கமாக, நின்பால் - உன்னிடத்து, நாளும் - எப்போதும், பொருந்துவோம் - சேர்ந்திருப்போம், பொருள் மெய் ஆவி - பொருள் உடல் உயிர் என்பவற்றை, எண்ணி - மதித்து, நீ தர - நீ கொடுக்க, யாம் கொள்வோம் - நாம் பெறுவோம், எனைத்தும் - எவ்வளவும், நின் - உன்னைவிட்டு, பிரியோம் என்று - பிரியமாட்டோமென்று, எ - று.

(பொ - ரை.) அது கேட்ட சிவபெருமான், புண்ணியவானே! நாம் பூமியில் உன் பொருட்டுக் குருவாகித்தோன்றித் திருவுளத்தின் கிருபைசெய்வோம், உனது கரத்தில் இஷ்டலிங்கமாகப் பொருந்தியிருப்போம், நல்ல ஜங்கமலிங்கமாக உன்னிடத்து எப்போதும் சேர்ந்திருப்போம், உடல் பொருள் ஆவி என்பவற்றை மதித்து நீ கொடுக்கப் பெறுவோம், எவ்வளவும் உன்னை விட்டுப் பிரியமாட்டோமென்று.

(வி - ரை.) உடல் பொருள் ஆவி யெனற்பாலது பொருள் மெய் ஆவி யெனமுறை பிறழ்ந்து நின்றது செய்யுளாதலின். இச்செய்யுளால் குரு லிங்க ஜங்கம விசிஷ்டங்கள் கூறப்பட்டன; நாம் பூலோகத்தில் குருமூர்த்தமாகத்தோன்றி உனக்கு ஞான சௌக்கியத்தைக் கொடுப்போம், இஷ்டலிங்கமாகி உன் தநுகரணாதிகளிலெல்லாம்

வியாபித்துச் சுகிப்போம், ஜங்கமஸ்வரூபனாகி உனக்குப் பிரசாதத்தைக் கொடுப்போம், மற்றும் எமது ப்ராணஸ்வரூபரான சிவகணங்களையும் உன்னுடன் அனுப்புவோம் என்பதாம். (௫௪)

காரண னுரைக்க நந்தி காயநற் புளக மெய்தி
யேரணி யங்க மெட்டு மினிதுறப் பணிந்தெ ழுந்து
பாரணி தருக்க வாதப் பரசம யத்தர் நீங்க
வீரசை வத்த ருய்ய விடைகொண்டு பணிமேற் செல்வார்.

(ப - ரை.) காரணன் உரைக்க - ஜகத்காரணனாகிய சிவபிரான் ஆஜ்ஞாபிக்க, நந்தி - நந்திதேவர், காயம் - உடல், நல் - நல்ல, புளகம் எய்தி - மயிர்சிலிர்த்தலடைந்து, ஏர் அணி - அழகு பொருந்திய, அங்கம் எட்டும் - எட்டுறுப்புக்களும், இனிது உற - நன்றாக (பூமியில்) படும்படி, பணிந்து - வணங்கி, எழுந்து - மேலெழுந்து, பார் அணி-உலகிலுள்ள, தருக்கவாதம் - தர்க்கவாதஞ்செய்கிற, பரசமயத்தர் - இதரசமயிகள், ஒழிய - நீங்க, வீரசைவத்தர் - வீரசைவர்கள், உய்ய - கடைத்தேற, விடைபெற்று - உத்திரவுபெற்று, பணி மேல் செல்வார் - (உலகிற்சென்றவதரிக்கும்) தொழிலின்மேற் செல்வாராயினர், எ-று.

(பொ - ரை.) ஜகத்காரணனாகிய சிவபெருமான் ஆஜ்ஞாபிக்க, நந்திதேவர் உடல் நல்ல மயிர்சிலிர்த்தலடைந்து சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்தெழுந்து உலகிலுள்ள தர்க்கவாதஞ்செய்கிற இதர சமயிகளொழிய வீரசைவர்கள் கடைத்தேற உத்திரவுபெற்று, உலகிற் சென்றவதரிக்குந் தொழிலின்மேற் செல்வாராயினர்.

(வி - ரை.) அங்கம் எட்டு என்பது தலையொன்று, கையிரண்டு, செவியிரண்டு, மோவாயொன்று, தோளிரண்டெனப்படுவன. காரணன் - முதற்கடவுள். தருக்கவாதப் பரசமயத்தர் - வேதபாஹ்ய பாஷண்ட மதத்தினர். (௫௫)

பொன்றிகழ் விண்ணோர் மண்ணோர் போற்றவேண் டினகொ டுக்கும்
வென்றிசேர் பருப்ப தத்தின் மேற்கதாய் விபுல முய்யச்
சென்றிறை யருளா னந்தி திருவவ தாரஞ் செய்ய
நன்றிசேர் கருநா டச்சீர் நாட்டணி தொகுத்துச் சொல்வாம்.

(ப - ரை.) பொன் திகழ் - அழகு விளங்குகின்ற, விண்ணோர் - தேவர், மண்ணோர் - மண்ணுலகத்தார், போற்ற - வணங்க, வேண்டின - விரும்பினவற்றை, கொடுக்கும் - தருகிற, வென்றிசேர் - வெற்றியுள்ள, பருப்பதத்தின் - ஸ்ரீசைலத்தின், மேற்கதாய் - மேற்காக, விபுலம் உய்ய - உலகம் பிழைக்க, சென்று - போய், இறை - சிவபிரானது; அருளால் - திருவருளினால், நந்தி - நந்திதேவர், திருவவதாரம்செய்ய - திருவவதாரஞ் செய்யும்பொருட்டு, நன்றி சேர் - நன்மை பொருந்திய; சீர் - சிறப்புள்ள, கருநாடநாட்டு அணி - கன்னடநாட்டழகை, தொகுத்துச்சொல்வாம் - தொகுத்துரைப்போம், எ - று.

(பொ - ரை.) அழகு விளங்குகின்ற தேவர் மண்ணுலகத்தார் வணங்க, விரும்பினவற்றைத்தருகிற வெற்றியுள்ள ஸ்ரீசைலத்தின்மேற்காக உலகம் பிழைக்கக் கயிலையினின்றும் நீங்கிப்போய்ச் சிவபிரானது திருவருளினால் நந்திதேவர் திருவவதாரஞ் செய்யும் பொருட்டு நன்மை பொருந்திய சிறப்புள்ள கன்னட நாட்டழகைத்தொகுத்துரைப்போம்.

(வி - ரை.) தொகுத்துச்சொல்வாம் என்றமையான் விரியாமை பெறப்பட்டது. (௫௬)

திருக்கயிலாயச்சருக்கம் - முற்றிற்று.



ஆக - செய்யுள் - ௭௫.

சிவமயம்.

# திருவவதாரச்சருக்கம்.

## நாட்டுச்சிறப்பு.

### அறுசீர்விருத்தம்.

எங்களா தாரா தோரா விருந்தயா காரா போற்றி
வெங்குணா தூரா தீரா வினைசெறுங் கோரா போற்றி
பொங்கரா வூரா கத்தன் புரிநந்தி சிரா போற்றி
சங்கரா மாரா ரியென் சதுராரா ருயிரே போற்றி.

(ப - ரை.) எங்கள் - எங்கட்கு, ஆதாரா - ஆதாரமாயிருப்பவனே, தோரா - குறையாத, இரு - பெரிய, தயாகாரா - தயாரூபனே, போற்றி - நமஸ்காரம், வெம் - கொடிய, குணம் - குணங்களுக்கு, தூரா - தூரஸ்த்தனே, தீரா - தீரனே, போற்றி - நமஸ்காரம், வினை - வினைகளை, செறும் - அழிக்கிற, கோரா - கோரனே, போற்றி - நமஸ்காரம், பொங்கு - சீறுகிற, அரா - சர்ப்பங்கள், ஊர் - தவழ்கின்ற, ஆகத்தன் - திருமார்பையுடையவனாகிய சிவபெருமான், புரி - விரும்புகிற, நந்தி - நந்திதேவனென்கிற, சீரா - சீராளனே, போற்றி - நமஸ்காரம், சங்கரா - சங்கரனே, மாராரீ - மன்மத சத்துருவே, என் - எனது, சதுரர் - சதுரப்பாட்டினருடைய, ஆர் - அரிய, உயிரே - பிராணனானவனே, போற்றி - நமஸ்காரம். எ - று.

(பொ - ரை.) எங்கட்காதாரமாயிருப்பவனே! குறையாத பெரிய தயாரூபனே! நமஸ்காரம், கொடிய குணங்களுக்குத் தூரஸ்த்தனே! தீரனே! நமஸ்காரம், வினைகளையழிக்கிறகோரனே! நமஸ்காரம், சீறுகிற சர்ப்பங்கள் தவழ்கின்ற திருமார்பையுடையவனாகிய சிவபெருமான் விரும்புகிற நந்திதேவனென்கிற சீராளனே! நமஸ்காரம், சங்கரனே! மன்மத சத்துருவே! எனது சதுரப்பாட்டினருடைய அரிய பிராணனானவனே! நமஸ்காரம்.

(வி - ரை.) தோலா எனற்பாலது தோரா என வந்தது; தோரா - தொடர்பு எனினுமமையும். ஆகம் - மார்பு; உடம்பு எனினுமாம். அரி - சத்துரு; அரீயென நீண்டுநின்றது. சதுரப்பாடு - விவேகம். (க)

அண்ணறன் விடைய நேக வடிவமா யங்கங் கங்கே
விண்ணிடை வெளிறிப் பாய்ந்து விரிந்தவன் கண்ட காள
நண்ணல்போற் கருகி வேணி நலமென மின்னிக் கையி
னெண்ணிருந் துடிவிற் போலத் தொனிதந் தொடுவெற் பேறி.

(ப - ரை.) அண்ணல்தன் - பரமசிவனது, விடை - இடபம், அநேகக வடிவமாய் - அநேகரூபமாகி, அங்கங்கங்கே - அவ்வவ்விடங்களிலே, விண்ணிடை - ஆகாயத்தில், வெளிறிப்பாய்ந்து (போல்) - வெளுத்துப்பரவியதுபோல, விரிந்து - (மேகம்) பரவி, அவன் - அவனது, கண்டம் - ஸ்ரீகண்டத்தில், காளம் - நஞ்சானது, நண்ணல்போல - பரந்து சென்று (கறுத்து) அடைந்ததுபோல, கருகி - கறுத்து, வேணி - (அவனது) சடையின், நலம் என - அழகுபோல, மின்னி - மின்னலைச்செய்து, கையில் - (அவனது)

திருக்கரத்திலுள்ள, ஒண் - ஒட்பமாகிய, இரு - பெரிய, துடிபோல - உடுக்கைபோலவும், வில்போல - வில்போலவும், தொனியொடு - ஒலியோடும், தநுவொடு - வில்லோடும், வெற்பு ஏறி - மலைமீதேறி, எ - று.

(பொ - ரை.) பரமசிவனது இடபம் அநேகரூபமாகி அவ்வவ்விடங்களிலே ஆகாயத்தில் வெளுத்துப்பரவியதுபோல மேகம் பரவி, அவனது ஸ்ரீ கண்டத்தில் நஞ்சானது பரந்து சென்று கறுத்து அடைந்ததுபோலக் கறுத்து, அவனது சடையின் அழகுபோல மின்னலைச்செய்து, அவனது திருக்கரத்திலுள்ள ஒட்பமாகிய பெரிய உடுக்கைபோலவும் வில்போலவும் ஒலியோடும் வில்லோடும் மலைமீதேறி.

(வி - ரை.) அண்ணல் - பெருமையிற்சிறந்தோன், சிவபிரானிற் பெருமையிற் சிறந்தோர் வேறொருவரின்மையால் அவரை அண்ணல் என்றார். விண்ணிடை என்பதில் இடை ஏழனுருபு. வெளிறி யென்பதற்கு பகுதி வெளிறு. விடையினேக வடிவமாய் எனப்பாடமோதி இடபம்போல ஒரு ரூபமாகி எனப் பொருள்கொள்ளினுமமையும். தொனி - மேகமுழக்கம். வில் - இந்த்ரதநு. (உ)

உலவியே யுலக நித்த முறும்படி யமுத மும்பர்
பலவிதஞ் சொரிதல் போலப் பரந்தெங்குஞ் சொரித லாலே
யிலகிய கிரிமு ழங்க விழிந்துமண் ணீத்த மாகி
யலகிலா நதிக டோறு மணைந்தருந் தீர்த்த மென்ன.

(ப - ரை.) உலவி - உலாவி, உலகம் - உலகமானது, நித்தம் உறும்படி - நிலைபெறும்படி, உம்பர் - தேவர், அமுதம் - அமிர்தத்தை, பலவிதம் - அநேகவகையாய், சொரிதல்போல - பொழிதல்போல, பரந்து - பரவி, எங்கும் - எவ்விடத்தும், சொரிதலாலே - பொழிதலாலே, இலகிய - விளங்குகிற, கிரி முழங்க - மலை சத்திக்க, இழிந்து - இறங்கி, மண் - பூமிமுழுதும், நீத்தம் ஆகி - பெருக்கெடுத்து, அலகு இல்லா - கணக்கற்ற, நதிகள்தோறும் - யாறுகளிலெல்லாம், அணைந்து - பொருந்தி, அரு - அருமையாகிய, தீர்த்தம் என்ன - தீர்த்தமென்று சொல்லும்படி, எ - று.

(பொ - ரை.) உலாவி உலகமானது நிலைபெறும்படி தேவர் அமிர்தத்தை அநேகவகையாய்ப் பொழிதல்போலப் பரவி எவ்விடத்தும் பொழிதலாலே, விளங்குகிற மலை சத்திக்க விறங்கி, பூமிமுழுதும் பெருக்கெடுத்து, கணக்கற்ற யாறுகளிலெல்லாம் பொருந்தி அருமையாகிய தீர்த்தமென்று சொல்லும்படி.

(வி - ரை.) உம்பர் - ஆகுபெயர். தீர்த்தம் - புண்ணியநீர். (௩)

நதிகளி னிரண்டு பாலு நற்கர மநேக மென்னும்
விதிகளின் கால்க டோறும் வெவ்வேறு விரைந்து பாறி
யதிகமாங் கருநா டந்தா னளவிலாச் செல்வ மல்கிக்
குதிகொளச் செய்கண் முற்றுங் குலவிநீர் பாய்ந்த தம்மா.

(ப - ரை.) நதிகளின் - யாறுகளின், இரண்டுபாலும் - இரண்டுபக்கங்களிலும், நல்கரம் - நல்ல கைகள், அநேகம் என்னும் - பலவென்கிற, விதிகளின் - நியமங்களால், கால்கள்தோறும் - வாய்க்கால்களிலெல்லாம், வெவ்வேறு - வேறுவேறாகி, விரைந்து - வேகமாய், பாறி - ஓடி, அதிகம் ஆம் - சிறந்ததாகிய, கருநாடம் - கன்னடதேசமானது, அளவு இல்லா - அளவற்ற, செல்வம் - ஐசுவரியம், மல்கி - நிறைந்து, குதிகொள - குதிக்க, செய்கள் - வயல்கள், முற்றும் - முழுதும், நீர் - நீரானது, குலவி பாய்ந்தது - தழுவிப் பாய்ந்தது, எ - று,

(பொ - ரை.) யாறுகளினிரண்டுபக்கங்களிலும் நல்ல கைகள் பலவென்கிற நியமங்களால் வாய்க்கால்களிலெல்லாம் வேறு வேறாகி வேகமாயோடி, சிறந்ததாகிய கன்னடதேசமானது அளவற்ற ஐசுவரியம் நிறைந்தோங்க வயல்கள் முழுதும் நீரானது தழுவிப் பாய்ந்தது.

(வி - ரை.) குதிகொளல் - ஓங்கல் எனினுமாம். தான், அம்மா - அசைகள். (௪)

பாய்ந்தபின் மள்ளர் கூடிப் பகடுழு மார்ப்புங் காலிற்
றோய்ந்தெழும் வரால்கள் வாளை துள்ளுசே லுகளு மார்ப்பு
மேய்ந்தய லுயர்ந்த சோலை யிணைமலர் வண்டி னார்ப்பும்
வாய்ந்தவிக் காலை பாய்வோர் வாயார்ப்பும் வாரி யார்ப்பாம்.

(ப - ரை.) பாய்ந்தபின் - அவ்வாறு பாய்ந்தபின்பு, மள்ளர் - உழவர், கூடி - சேர்ந்து, பகடு - கடாக்களை, உழும் - கட்டியுழுகின்ற, ஆர்ப்பும் - சத்தமும், காலில் - வாய்க்கால்களில், தோய்ந்து - படிந்து, எழும் - எழாநின்ற, வரால்கள் - வரால்மீன்களும், வாளை - வாளைமீன்களும், துள்ளு - துள்ளுகின்ற, சேல் - சேல்மீன்களும், உகளும் - குதிக்கின்ற, ஆர்ப்பும் - சத்தமும், அயல் - பக்கங்களில், ஏய்ந்து - பொருந்தி, உயர்ந்த - நீண்ட, சோலை - சோலைகளிலுள்ள, மலர் - மலர்களில், இணை - பொருந்திய, வண்டின் - வண்டுகளின், ஆர்ப்பும் - சத்தமும், வாய்ந்த - பொருந்திய, இக்கு ஆலை - கருப்பாலை, பாய்வோர் - ஆட்டுவோரது, வாய் - வாயிற்பிறக்கும், ஆர்ப்பும் - சத்தமும், வாரி ஆர்ப்பு ஆம் - சமுத்திர சத்தத்தை யொத்திருந்தன, எ-று.

(பொ - ரை.) அவ்வாறு பாய்ந்த பின்பு, உழவர் சேர்ந்து எருமைக்கடாக்களைக் கட்டியுழுகின்ற சத்தமும், வாய்க்கால்களிற்படிந்து எழாநின்ற வரால்மீன்களும் வாளைமீன்களும் துள்ளுகின்ற சேல்மீன்களும் குதிக்கின்ற சத்தமும், பக்கங்களிற் பொருந்தி நீண்ட சோலைகளிலுள்ள மலர்களிற்பொருந்திய வண்டுகளின் சத்தமும், பொருந்திய கருப்பாலையாட்டுவோரது வாயிற்பிறக்குஞ் சத்தமும் சமுத்திரத்திலுண்டாகிற சத்தத்தை யொத்திருந்தன.

(வி - ரை.) பகடு ஈண்டு எருமைக்கடாக்களைக் குறித்தது. இக்கு - கரும்பு, இது இக்ஷு என்னும் வடசொற்றிரிபு. (௫)

அறம்புரிந் திடுவோர் தம்பா லாம்பொரு ளறவோர்க் கீயுந்
திறம்பெறச் சமைந்த நாறு சேறமை செய்யு ளாட்டி
யுறைந்தவத் தருமர்க் கின்ப முலவல்போ லுலவ மள்ளர்
நிறைந்தநீ ரகலா தார்த்து நேயத்து நின்று காப்பர்.

(ப - ரை.) அறம் - தருமம், புரிந்திடுவோர் - செய்வோர், தம்பால் - தம்மிடத்து, ஆம் - உண்டாகிய, பொருள் - பொருளை, அறவோர்க்கு - துறவறத்தார்க்கு, ஈயும் - கொடுக்கின்ற, திறம் - வகையின்பலனை, பெற - பெறும்பொருட்டு, சமைந்த - செய்த, நாறு - நாற்றினை, சேறு அமை - சேறுநிறைந்த, செய் உள் - வயலினுள்ளே, நாட்டி - நட்டு, உறைந்த - வாழ்கின்ற, அ - அந்த, தருமர்க்கு - தருமவான்களுக்கு, இன்பம் உலவல் போல் - சுகம் உலாவுதல்போல, உலவ - உலாவ, மள்ளர் - உழவர், நிறைந்த - மிக்க, நீர் - நீரை, அகலாது - ஒழியாமல், ஆர்த்து - கட்டி, நேயத்து - விருப்பத்தோடு, நின்று காப்பர் - நின்றுகாப்பாற்றுவார்கள், எ - று.

(பொ - ரை.) தருமஞ்செய்வோர் தம்மிடத்துண்டாகிய பொருளைத் துறவறத்தார்க்குக் கொடுக்கின்ற வகையின்பலனைப் பெறும்பொருட்டுச்செய்த நாற்றினைச் சேறுநிறைந்த வயலினுள்ளே நட்டு, வாழ்கின்ற அந்தத் தருமவான்களுக்குச் சுகம் உலாவுதல்போல

உலாவ, உழவர் மிக்கநீரை யொழியாமற்கட்டி விருப்பத்தோடு நின்று காப்பாற்று வார்கள்.

(வி - ரை.) அறவோர் என்றது ஈண்டுத்துறவறத்தார்க் காயிற்று. ஈதல் - தாரை வார்த்துக் கொடுத்தல். (௬)

மள்ளர்க டம்மேற் பாயும் வராலினங் கயல்க டம்மைத்
தள்ளலாற் கனைநீர் கட்டத் தாணிலைப் போதிங் கென்ப
ரொள்ளிய சங்க முத்த மொழிவற வாரி வாரித்
தெள்ளிய வுடுக்கு வால்போற் செய்வரம் பெங்குஞ் சேர்ப்பார்.

(ப - ரை.) மள்ளர்கள் - உழவர்கள், தம்மேல் - தம்மீது, பாயும் - பாய்கின்ற, வரால் இனம் - வரால்மீன்களையும், கயல்கள்தம்மை - கயல்மீன்களையும், தள்ளலால் - தள்ளுதலால், கனை - அழகிய, நீர்கட்ட - நீரைக்கட்ட, இங்கு போது - இங்குப் பொழுது, இல்லை என்பார் - இல்லையென்பார்கள், ஒள்ளிய - ஒட்பமாகிய, சங்கமுத்தம் - சங்கீன்ற முத்துக்களை, ஒழிவுஅற - ஓய்வில்லாமல், வாரிவாரி - வாரிவாரியெடுத்து, தெள்ளிய - தெளிவாகிய, உடு குவால்போல் - நக்ஷத்திரக் குவியல்போல, செய்வரம்பு எங்கும் - செய்கரைகளெங்கும், சேர்ப்பார் - தொகுப்பார்கள், எ - று.

(பொ - ரை.) உழவர்கள் தம்மீது பாய்கின்ற வரால்மீன்களையும் கயல்மீன்களையும் தள்ளுதலால் அழகிய நீரைக்கட்ட இங்குப் பொழுதில்லையென்பார்கள், ஒட்பமாகிய சங்கீன்ற முத்துக்களை ஓய்வில்லாமல் மிகுதியாக ஒருங்கெடுத்துத் தெளிவாகிய நக்ஷத்திரக் குவியல்போல செய்கரைகளிலெங்குந் தொகுப்பார்கள். (எ)

கன்னலை முறித்துப் பாயுங் கயலிணை யொலிக்க முத்தந்
தன்னல மேனி யெங்குந் தடித்திடத் தெறித்த வென்பா
ரன்னிறக் கரும்ப தோர்கை யம்புயங் கழுநீ ரோர்கை
மன்னிய வுழவ ரெங்கு மதனனைப் போல நிற்பார்.

(ப - ரை.) கன்னலை - கரும்பை, முறித்து - ஒடித்து, பாயும் - பாயாநின்ற, கயல க்கயல்கள், கக - ச க, முத்தம் - முத்துக்கள், தம் - தமது, நல்ல - அழகாகிய, மேனியெங்கும் - உடம்பு முழுதும், தடித்திட - வீங்க, தெறித்த என்பார் - சிதறினவென்பார்கள், அல் நிறம் - இருணிறத்தோடு கூடி, கரும்பு - கன்னல், ஓர்கை - ஒருகையிலும், அம்புயம் - தாமரைமலரும், கழுநீர் - நீலோற்பலமும், ஓர்கை - ஒரு கையிலும், மன்னிய - பொருந்திய, உழவர் - மள்ளர்கள், எங்கும் - எவ்விடத்தும், மதனனைப்போல - மன்மதனைப்போல, நிற்பார் - நிற்பார்கள், எ - று.

(பொ - ரை.) கரும்பை யொடித்துப்பாயாநின்ற இரட்டைக்கயல்கள் சத்திக்க முத்துக்கள் தமது அழகாகிய உடம்புமுழுதும் வீங்கச் சிதறினவென்பார்கள், இருணிறத்தோடுகூடிக் கரும்பு ஒருகையிலும் தாமரைமலரும் நீலோற்பலமும் ஒரு கையிலும் பொருந்திய மள்ளர்கள் எவ்விடத்தும் மன்மதனைப்போல நிற்பார்கள்.

(வி - ரை.) இணை - இரட்டை. கரும்பு முதலியவற்றையேந்தி நிற்றலானும் இருணிற முடையராதலானும் மள்ளரை மதனனைப்போல நிற்பார் என்றார். (அ)

கரும்பினிற் றெறித்த முத்தங் கதலியிற் புதைந்த வென்பா
ரரம்பையின் கனியின் றேனு மலர்களுங் கன்னன் மீதே
சொரிந்தன வென்பார் விண்ணிற் றோய்ந்ததெங் கின்ப ழுங்க
ணெருங்கிய கழுகெ ருத்த ணுமிர்ந்திட வீழ்ந்த வென்பார்.

(ப - ரை.) கரும்பினில் - கரும்புகளினின்றும், தெறித்த முத்தம் - சொரிந்த முத்துக்கள், கதலியில் புதைந்த - வாழைகளில் மறைந்தன, என்பார் - என்பார்கள், அரம்பை - வாழைகளின், இன் - இனிய, கனியின் தேனும் - பழங்களின் தேனும், அலர்களும் - மலர்களும், கன்னல் - கரும்புகள், மீதே - மேலே, சொரிந்தன - பொழிந்தன, என்பார் - என்பார்கள், விண்ணில் - ஆகாயத்தை, தோய்ந்த - தீண்டின, தெங்கின் பழங்கள் - தென்னம் பழங்கள், நெருங்கிய - அடர்ந்த, கமுகு - பாக்குமரங்களின், எருத்தம் - பிடர், நெரிந்திட - விரிந்திட, வீழ்ந்த - விழுந்தன, என்பார் - என்பார்கள், எ - று.

(பொ - ரை.) கரும்புகளினின்றும் சொரிந்த முத்துக்கள் வாழைகளில் மறைந்தனவென்பார்கள், வாழைகளின் இனிய பழங்களின் தேனும் மலர்களும் கரும்புகள்மேலே பொழிந்தனவென்பார்கள், ஆகாயத்தைத் தீண்டின தென்னமரங்களின் முற்றிய தேங்காய்கள் அடர்ந்த பாக்குமரங்களின் பிடர் விரிந்திட வீழ்ந்தனவென்பார்கள்.

(வி - ரை) அரம்பை ரம்பா என்னும் வடசொற்றிரிபு. முதிர்ந்த தேங்காயை தெங்கின்பழம் என்றார், "தெங்கம் பழங்க முகின்குலை சாடிக்கதலி செற்று" என்றார் மணிவாசகப்பெருமானும். (௯)

வருக்கையின் கனிகள் விண்டு வந்துவீழ் தேனுஞ் சூதத்
தருக்களின் பழத்தின் கள்ளுந் தண்மழை போன்ற வென்பார்
பெருத்தவப் பொழிலுட் செல்வோர் பேணிக்கைக் குடையாப் போந்து
வருத்துதங் காலிற் சேறம் மதுவினாற் கழீஇ நடப்பார்.

(ப - ரை.) வருக்கையின் கனிகள் - பலாப்பழங்கள், விண்டு - வெடித்து, வந்து வீழ் தேனும் - வந்துவிழுகின்ற தேனும், சூதத்தருக்களின் - மாமரங்களிற்பழுத்த, பழத்தின் - பழங்களின், கள்ளும் - தேனும், தண் - குளிர்ந்த, மழைபோன்ற - மழைபோன்றன, என்பார் - என்பார்கள், பெருத்த - பெரிதாகிய, அ - அந்த, பொழில் உள் - சோலைகளில், செல்வோர் - நடப்பவர்கள், கைக்குடையா - கைக்குடையாய், பேணி - விரும்பி, போந்து - சென்று, வருத்து - வருத்துகிற, தம் காலில் சேறு - தமது காற்சேற்றை, அ - அந்த, மதுவினால் - தேனினால், கழீஇ - கழுவிக்கொண்டு, நடப்பார் - செல்வார்கள், எ - று.

(பொ - ரை.) பலாப்பழங்கள் வெடித்துக் கீழேவந்து விழுகின்ற தேனும் மாமரங்களிற்பழுத்த பழங்களின் தேனும் குளிர்ந்த மழைபோன்றனவென்பார்கள், பெரிதாகிய அந்தச் சோலைகளில் நடப்பவர்கள் சோலையின் நிழலை கைக்குடையாய் விரும்பிச்சென்று, வருத்துகிற தமது காலிலுள்ள சேற்றை அந்தத் தேனினால் கழுவிக்கொண்டு செல்வார்கள்.

(வி - ரை.) பேணி காரணப்பொருட்டாகிய வினையெச்சம். கழீஇ - சொல்லிசையளபெடை. சூதம் - வடசொல். (௧௦)

ஆகவுங் கமுகம் பாளை யரிசிவீழ் முழக்கு மன்ன
யோகமார் வண்டி னங்க ளொலித்தெழு முழக்கும் பூக
மோகமார் கனியு திர்க்கு முழக்கமு மிலைகள் காற்றார்
வேகமார் முழக்கும் விண்ணோர் விழாவெழு முழக்கம் போன்ற.

(ப - ரை.) ஆ - தெய்வலோகப் பசுக்கள், கவ்வும் - கவ்வுகின்ற, கமுகம் பாளை - கமுகம்பாளைகளினின்றும், அரிசி வீழ் - அரிசியுதிர்கின்ற, முழக்கும் - முழக்கமும், அன்ன - அத் தன்மையவாகிய, யோகம் ஆர் - கூட்டமாகப் பொருந்திய, வண்டு இனங்கள் - வண்டுகள், ஒலித்து - சத்தித்து, எழும் - எழுகின்ற, முழக்கும் - முழக்கமும், பூகம் - கமுகமரங்கள், மோகம் ஆர் - விருப்பந்தரத்தக்க, கனி உதிர்க்கும் - பழங்களை யுதிர்க்கிற,

முழக்கமும் - முழக்கமும், இலைகள் - இலைகளும், காற்று ஊர்வேகம் ஆர் - காற்றுவேக மாய் வீசுதலுமாகிய இவற்றாலுண்டாகும், முழக்கும் - முழக்கமும், விண்ணோர் - தேவர்க ளின், விழா எழும் - ராக்களிலுண்டாகிற, முழக்கம்போன்ற - முழக்கத்தையொத் திருந்தன, எ - று.

(போ - ரை.) தெய்வலோகப் பசுக்கள் கவ்வுகின்ற கமுகம்பாளைச் சம்பாநெற்களி னின்றும் அரிசியுதிர்கின்ற முழக்கமும், அத் தன்மையவாகிய கூட்டமாகப்பொருந்திய வண்டுகள் சத்தித்தெழுகின்ற முழக்கமும், கமுகமரங்கள் விருப்பந்தரத்தக்க பழங்களை யுதிர்க்கிற முழக்கமும், இலைகளும் காற்று வேகமாய் வீசுதலுமாகிய இவற்றாலுண்டாகும் முழக்கமும் தேவர்களின் திருவிழாக்களிலுண்டாகிற முழக்கத்தையொத்திருந்தன. (கக)

சாலியந் நாட்டி னல்லோர் தாமெனச் செந்நி றத்தின்
வாலிய விழைவிற் பல்லோர் வணங்கல்போல் வணங்கித் தாழ்வோ
ரேலுமா துதிகள் போல விரைந்தெங்கு மேத்தி னோர்க்காஞ்
சீலமா ரின்பம் போல விளைந்தன தேச மெங்கும்.

(ப - ரை.) அ - அந்த, நாட்டில் - நாட்டின்கண், சாலி - செந்நெல்லானவை, நல் லோர் என - நல்லோர்கள்போல, செம்நிறத்தின் - செந்நிறத்தினால், வாலிய - பரிசுத்தத் தன்மையடைந்து, விழைவின் - அன்பினால், பல்லோர் - அநேகபக்தர்கள், வணங்கல்போல்- பணிதல்போல, வணங்கி - பணிந்து, தாழ்வோர் - வணங்குவோர்செய்கிற, ஏலும் - இயைந்த, மா - அழகிய, துதிகள்போல - தோத்திரங்கள்போல, இரைந்து - சத்தித்து, எங்கும் - எவ்விடத்தும், ஏத்தினோர்க்கு - துதித்தவர்க்கு, ஆம் - உண்டாகிற, சீலம் ஆர்- ஒழுக்கமிக்க, இன்பம்போல - சுகம்போல, தேசம் எங்கும் விளைந்தன - தேசமுழுதும் விளைந்தன, எ - று.

(போ - ரை.) அந்த நாட்டின்கண் செந்நெல்லானவை நல்லோர்கள்போலச் செந்நிறத் தினால் பரிசுத்தத்தன்மையடைந்து, அன்பினால் அநேக பக்தர்கள் பணிதல்போலப் பணி ந்து, வணங்குவோர்செய்கிற இயைந்த அழகிய தோத்திரங்கள்போலச் சத்தித்து, எவ் விடத்தும் துதித்தவர்க்குண்டாகிற ஒழுக்கமிக்க சுகம்போலத் தேசமுழுதும் விளைந்தன.

உழவரு மள்ளர் தாமு மும்பர்கோன் றனைவ ழுத்தி
விழைவினு லரிந்து சூட்டு மேதக வணியாச் சேர்த்திப்
பழகிய சும்மை செய்து பரித்துச்சென் றுயர்ந்த போர்க
ளழகிய நிதிவெற் பொன்றே யநந்தமாய் நிற்றல் போன்ற.

(ப - ரை.) உழவரும் - உழவர்களும், மள்ளரும் - மள்ளர்களும், உம்பர்கோன் தன்னை - தேவேந்திரனை, வழுத்தி - வாழ்த்தி, விழைவினால் - விருப்பத்தோடு, அரிந்து - (செந்நெற்களை) அறுத்து, சூடு - அரிக்கட்டுகளை, மேதக - மேன்மையாகவும், அணியா - வரி சையாகவும், சேர்த்தி-சேர்த்து, பழகிய - பழக்கமாகிய, சும்மைசெய்து - சுமைகள்செய்து, பரித்து - சுமந்து, சென்று - போய், உயர்ந்த - குவித்துயர்த்தின, போர்கள் - நெற் போர்கள், அழகிய - அழகாகிய, நிதிவெற்பு ஒன்றே - ஒரு பொன்மலையே, அநந்தம் ஆய் - அநேகமாக, நிற்றல் - நிற்பதை, போன்ற - ஒத்திருந்தன, எ - று.

(போ - ரை.) உழவர்களும் மள்ளர்களும் தேவேந்திரனைவாழ்த்தி, செந்நெற்களை விருப்பத்தோடு அறுத்து, அரிக்கட்டுகளை மேன்மையாகவும் வரிசையாகவும் சேர்த்து, வழக்கமாகிய சுமைகள் செய்து, சுமந்துபோய்க் குவித்துயர்த்தின நெற்போர்கள் அழ காகிய ஒரு பொன்மலையே அநேகமாக நிற்பதையொத்திருந்தன.

(வி - ரை.) உம்பர் - தேவர். கோன் - அரசன். (கங)

இத்திற முயர்த்த போர்க ளினிதுறச் சாய்த்து மீது
பத்தியாய்ப் படுக்குஞ் செய்ய மள்ளர்கள் பகடு போக்கு
மத்திறம் பசித்த மத்தி னணிகளை யகற்ற நேக
புத்தியாற் றருமபாநு பொற்கிரி சூழ்தல் போன்ற.

(ப - ரை.) இ திறம் - இவ்வகையாக, உயர்த்த - குவித்துயர்த்தின, போர்கள் - நெற் போர்களை, இனிது உற - இனிமையாக, சாய்த்து - திருப்பிவைத்து, மீது - மேலே, பத்தியாய்ப் படுக்கும் - வரிசைப்படுத்துகிற, செய்ய - செவ்விய, மள்ளர்கள் - உழவர்கள், பகடு - எருமைக்கடாக்களை, போக்கும் - நடத்துகிற, அ திறம் - அவ்வகை, பசி - பசியாகிய, தமத்தின் - இருட்டினால், அணி - உண்டான, களை - விடாயை, அகற்று - ஒழிக்கிற, அநேக புத்தியால் - அநேக புத்தியோடு, தருமபாநு - தர்மசூரியன், பொன்கிரி - பொன் மலையை, சூழ்தல் - வலம்வருதல், போன்ற - போன்றிருந்தது, எ - று.

(போ - ரை.) இவ்வகையாகக் குவித்துயர்த்தின நெற்போர்களை இனிமையாகத் திருப்பிவைத்து மேலே வரிசைப்படுத்துகிற செவ்விய உழவர்கள் எருமைக்கடாக்களை நடத்துகிற அவ்வகையானது, பசியாகிய இருட்டினாலுண்டான விடாயை ஒழிக்கிற அநேக புத்தியோடு தர்மசூரியன் பொன்மலையை வலம்வருதல் போன்றிருந்தது. (கச)

வையினைத் திகிரி வாளால் வரைபல வென்ன வாங்கிச்
செய்யநற் கிரியோ வென்னத் திரட்டிச்சேர்த் துயர்த்த பின்ன
ரையதாம் பதடி நீக்கி யரசர்பா லளித்து மிக்க
வுய்யவாழ் குரவர் தேவர் விருந்தொக்க லுடன்றாங் கொண்டு.

(ப - ரை.) வையினை - வைக்கோலை, திகிரிவாளால் - அரிவாளினால், வரைபல - அநேக மலைகள், என்ன - என்னும்படி, வாங்கி - வளைத்து, செய்ய - செவ்விய, நல் - சிறந்த, கிரியோ - மலைகளோ, என்ன - என்று அதிசயிக்கும்படி, திரட்டிச்சேர்த்து - கூட்டிச் சேர்த்து, உயர்த்த பின்னர் - உயர்த்தபின்பு, ஐயது ஆம் - நுட்பமாகிய, பதடி - பதரை, நீக்கி - ஒழித்து (நின்றநெல்லில்), அரசர்பால் - அரசர்பங்கு, அளித்து - கொடுத்து, மிக்க - மிக்கவற்றை, உய்ய வாழ் - உலகமுய்ய வாழ்கிற, குரவர் - ஆசாரியர், தேவர் - விண் ணோர், விருந்து - அதிதியர், ஒக்கலுடன் - உறவினருடன், தாம் கொண்டு - தாம் கைப் பற்றி, எ - று.

(போ - ரை.) வைக்கோலை அரிவாளினால் அநேக மலைகளென்னும்படி வளைத்து, செவ்விய சிறந்த மலைகளோவென்றதிசயிக்கும்படிக் கூட்டிச் சேர்த்துயர்த்தபின்பு, நுட்பமாகிய பதரையொழித்து, நின்றநெல்லில் அரசர்பங்கு கொடுத்து, மிக்கவற்றை உலகமுய்ய வாழ்கிற ஆசாரியர் தேவர் அதிதியர் உறவினர் ஆகிய இவர்களுடன் தாம் கைப்பற்றி.

(வி - ரை.) சக்ராக்ருதியாய் வளைந்திருத்தலால் அரிவாளை திகிரிவாள் என்றார்.

நிலவுவே தாக மஞ்சேர் நெறிகளி னீங்க லாநாற்
குலமுளோர் களுமற் றுள்ள குலத்துளோ ரெவரு மோங்க
மலைகளோ மாட மோங்கு மனைகளோ வானூர் மையோ
வுலவுமா கொடியோ வென்ன வோங்கின பதிக ளெங்கும்.

(ப - ரை.) நிலவு - விளங்குகிற, வேத ஆகமம் சேர் நெறிகளில் - வேதாகம மார்க்கங்களினின்றும், நீங்கலா - நீங்காத, நால் - நான்கு, குலம் உள்ளோர்களும் - வர்ணஸ்தர்களும், மற்றுள்ள - வேறுமுள்ள, குலத்துள்ளோர் எவரும் - தாழ்ந்த குலத்தினரி யாவரும், ஓங்க - உயர, மலைகளோ - மலைகள்தாமோ, மாடம் - மாடங்கள், ஓங்கு - உயர்ந்த, மனைகளோ - வீடுகள்தாமோ, வான் - ஆகாயத்தில், ஊர் - தவழ்கிற, மையோ-

மேகங்கள்தாமோ, உலவும் - அசைகின்ற, மா - பெரிய, கொடியோ - கொடிகள்தாமோ, என்ன - என்று சொல்லும்படி, பதிகள் - ஊர்கள், எங்கும் - எவ்விடத்தும், ஓங்கின - சிறந்திருந்தன எ-று.

(போ - ரை.) விளங்குகிற வேதாகம மார்க்கங்களினின்றும் நீங்காத நான்கு வர்ணஸ்தர்களும் வேறுயுள்ள இழிந்த குலத்தினரியாவரும் உயர, மலைகள்தாமோ மாடங்கள் உயர்ந்த வீடுகள்தாமோ ஆகாயத்தில் தவழ்கிற மேகங்கள்தாமோ அசைகின்ற பெரிய கொடிகள்தாமோ என்று சொல்லும்படி ஊர்களெவ்விடத்தும் சிறந்திருந்தன.

(வி - ரை.) மற்றுள்ள குலத்துள்ளோர் என்றது நாற்குலத்திழிந்தோரை. (கசு)

ஆலயந் தொறும்வி ழாவி னணிகளே மறுகு தோறும்
மாலைதோ ரணவி மாந வனப்பதே தெற்றி தோறுஞ்
சீலவே தாக மத்தாஞ் செய்தியே யகங்க டோறுஞ்
சாலவம் மனைக ளாடித் தருக்கலே தலங்க டோறும்.

(ப - ரை.) தலங்கள்தோறும் - இடங்கள்முழுதும் (காணப்படுவன யாவையெனின்), ஆலயம்தொறும் - கோயில்கள்தோறும், விழாவின் - திருவிழாக்களின், அணிகளே - அலங்காரங்களேயுள்ளன, மறுகுதோறும் - தெருக்கள்தோறும், மாலை - மாலைகள், தோரணம் - தோரணங்கள், விமாநம் - விமாநங்கள் என்பவற்றின், வனப்பே - அழகேயுள்ளது, தெற்றிதோறும் - திண்ணைகள்தோறும், சீலம் - ஒழுக்கத்தையுண்டாக்குகிற, வேதாகமத்து ஆம் - வேதாகமங்களின், செய்தியே - ஆராய்ச்சியே யுள்ளது, அகங்கள்தோறும் - வீடுகள்தோறும், சால - மிகுதியாக, அம்மனைகள் ஆடி தருக்கலே - அம்மானையாடிச் செருக்குதலே யுள்ளது, எ - று.

(போ - ரை.) இடங்கள் முழுதும் காணப்படுவன யாவையெனின்: — கோயில்கள் தோறும் திருவிழாக்களின் அலங்காரங்களே யுள்ளன, தெருக்கள்தோறும் மாலைகள் தோரணங்கள் விமாநங்கள் என்பவற்றின் அழகே யுள்ளது, திண்ணைகள்தோறும் ஒழுக்கத்தையுண்டாக்குகிற வேதாகமங்களின் ஆராய்ச்சியே யுள்ளது, வீடுகள்தோறும் மிகுதியாக அம்மானையாடிச் செருக்குதலே யுள்ளது.

(வி - ரை.) வனப்பு - அழகு. தருக்குதல் - யாம் வென்றோம் யாம் வென்றோம் எனச் செருக்குதல். அம்மானை - ஓர் விளையாட்டு. (கஎ)

சந்தனஞ் சண்ப கங்க டாதகி வகுளஞ் சூத
நந்திவத் தநங்க ணாக நரந்தைகள் கரவீ ரங்கள்
கொந்தலர் குரவு கோங்கு கூவிளை தாழை ஞாழ
லுந்துநந் தநவ நத்தின் மணங்களே யூர்க டோறும்.

(ப - ரை.) ஊர்கள்தோறும் - ஊர்கள்தோறும், சந்தனம் - சந்தனமரங்கள், சண்பகங்கள் - சண்பகமரங்கள், தாதகி - ஆத்திமரங்கள், வகுளம் - மகிழமரங்கள், சூதம் - மாமரங்கள், நந்திவத்தநங்கள் - நந்திவர்த்தநச்செடிகள், நாகம் - புன்னைமரங்கள், நரந்தைகள் - நாரத்தைமரங்கள், கரவீரங்கள் - அலரிச்செடிகள், கொந்து - பூங்கொத்துக்கள், அலர் - மலர்கிற, குரவு - குராமரங்கள், கோங்கு - கன்னிகாரமரங்கள், கூவிளை - வில்வமரங்கள், தாழை - தாழைச்செடிகள், ஞாழல் - குங்குமமரங்கள் (ஆகிய இவைகள்), உந்தும் - நிறைந்த, நந்தநவநத்தின் - நந்தநவனங்களின், மணங்களே - வாசனைகளே (உள்ளன), எ - று.

(போ - ரை.) ஊர்கள்தோறும் சந்தனமரங்கள், சண்பகமரங்கள், ஆத்திமரங்கள், மகிழமரங்கள், மாமரங்கள், நந்திவர்த்தனச்செடிகள், புன்னைமரங்கள், நாரத்தைமரங்கள், அலரிச்செடிகள், பூங்கொத்துக்கள் மலர்கிற குராமரங்கள், கன்னிகாரமரங்கள், வில்வ

மரங்கள், தாழைச்செடிகள், குங்குமமரங்கள் ஆகிய இவைகள் நிறைந்த நந்தவனங்களின் வாசனைகளே யுள்ளன. (௧௮)

மெய்யிலன் புள்ளா ரெங்கும் வெய்யசோம் புள்ளா ரெங்கு
முய்யருட் குலையா ரெங்கு முறுபசிக் குலையா ரெங்குந்
துய்யசொற் றேரா ரெங்குஞ் சோர்ந்துசற் றேரா ரெங்குஞ்
செய்யவே ளொப்பா ரெங்குந் தீயகோ ளொப்பா ரெங்கும்.

(ப - ரை.) எங்கும் - எவ்விடத்தும், மெய்யில் - உண்மையில், அன்பு உள்ளார் - பக்தியுள்ளார், எங்கும் - எவ்விடத்தும், வெய்ய - கொடிய, சோம்பு - மடிமைத்தனம், உள்ளார் - நினையார், எங்கும் - எவ்விடத்தும், உய் - உஜ்ஜீவிக்கும், அருட்குலையார் - அருட்கூட்டத்தார், எங்கும் - எவ்விடத்தும், உறுபசிக்கு - மிகுதியாகப் பசித்தற்கு, உலையார் - அழியார், எங்கும் - எவ்விடத்தும், துய்ய - பரிசுத்தமாகிய, சொல் - சொல்லுக்கு, தோரார் - இளையார், எங்கும் - எவ்விடத்தும், சற்று - சிறிது, சோர்ந்து - மெலிந்து, ஓரார் - ஆராயார், எங்கும் - எவ்விடத்தும், செய்ய - செவ்விய, வேள் - மன்மதனை, ஒப்பார் - நிகர்ப்பார், எங்கும் - எவ்விடத்தும், தீய - கொடிய, கோள் - கிரகங்களை, ஒப்பார் - நிகர்ப்பார், எ - று.

(பொ - ரை.) எவ்விடத்தும் உண்மையில் பக்தியுள்ளார், எவ்விடத்தும் கொடிய மடிமைத்தனம் நினையார், எவ்விடத்தும் உஜ்ஜீவிக்கும் அருட்கூட்டத்தார், எவ்விடத்தும் மிகுதியாகப் பசித்தற்கு அழியார், எவ்விடத்தும் பரிசுத்தமாகிய சொல்லுக்கு இளையார், எவ்விடத்தும் சிறிது மெலிந்து ஆராயார், எவ்விடத்தும் செவ்விய மன்மதனை நிகர்ப்பார், எவ்விடத்தும் கொடிய கிரகங்களை நிகர்ப்பார். (௧௯)

தருநிகர் கையா ரெங்குந் தவத்தரைக் கையா ரெங்கும்
வருபழிப் படையா ரெங்கு மறப்பொருட் படையா ரெங்கும்
பெருகணிக் குழையா ரெங்கும் பிணியினுக் குழையா ரெங்குங்
கருதின முடிப்பா ரெங்குங் கண்மலர் முடிப்பா ரெங்கும்.

(ப - ரை.) எங்கும் - எவ்விடத்தும், தரு - பஞ்சதருக்களை, நிகர் - நிகர்த்த, கையார் - கையினையுடையவர், எங்கும் - எவ்விடத்தும், தவத்தரை - தவசிகளை, கையார் - வெறுக்கார், எங்கும் - எவ்விடத்தும், வரு - வருகின்ற, பழிப்பு - பழிச்சொற்களை, அடையார் - பொருந்தார், எங்கும் - எவ்விடத்தும், மறப்பொருள் - பாவ வழியில் வரும் பொருளை, படையார் - பெறமாட்டார், எங்கும் - எவ்விடத்தும், பெருகு - பெருத்த, அணிகுழையார் - காதணியை யுடையவர், எங்கும் - எவ்விடத்தும், பிணியினுக்கு - நோய்க்கு, உழையார் - வருந்தார், எங்கும் - எவ்விடத்தும், கருதின - கருதினவற்றை, முடிப்பார் - முடிப்பார், எங்கும் - எவ்விடத்தும், கள் - தேன்பொருந்திய, மலர் - மலர்களை, முடிப்பார் - சூடுவார், எ - று.

(பொ - ரை.) எவ்விடத்தும் பஞ்சதருக்களைநிகர்த்த கையினையுடையவர், எவ்விடத்தும் தவசிகளையுபசரிப்பார், எவ்விடத்தும் வருகின்ற பழிச்சொற்களைப் பொருந்தார், எவ்விடத்தும் பாவவழியில் வரும்பொருளைப் பெறமாட்டார், எவ்விடத்தும் பெருத்தகாதணியையுடையவர், எவ்விடத்தும் நோய்க்குவருந்தார், எவ்விடத்தும் கருதினவற்றை முடிப்பார், எவ்விடத்தும் தேன்பொருந்திய மலர்களைச் சூடுவார். (௨0)

இக்கன சிறப்பி னேய்கு மெழிற்கரு நாடந் தன்னின்
மிக்கநா யகம தாகி விளம்பரும் வளத்த தாகித்
தக்கமா மறையோர் வாழுந் தலமதாய்ச் சதுர்வே தத்தா
யிக்கலை வென்றூர்க் காகு மிங்குளா புரியென் றொன்று.

(ப - ரை.) இ - இந்த, கனம் சிறப்பின் - பெருஞ்சிறப்பினோடும், ஓங்கும் - உயர்ந்த, எழில் - அழகையுடைய, கருநாடம் தன்னில் - கன்னடதேசத்தில், மிக்க - மேலான, நாயகம் ஆகி - தலைமையாகி, விளம்பு அரு - சொல்லுதற்கரிய, வளத்தது ஆகி - செல்வத்தையுடையதாகி, தக்க - தகுதியாகிய, மா - பெருமைபொருந்திய, மறையோர் - அந்தணர், வாழும் - வசிக்கும், தலம் ஆய் - இடமாகி, சதுர்வேதத்து ஆய் - சதுர்வேதத்தாகி, இக்கனை - கருப்புவில்லையுடையவனாகிய மன்மதனை, வென்றார்க்கு - வென்றவராகிய சிவபிரானுக்கு, ஆகும் - தகுதியாகிய, இக்குளாபுரி என்று - இக்குளாபுரியென்று சொல்லப்பட்ட நகரம், ஒன்று - ஒன்றுண்டு, எ - று.

(பொ - ரை.) இந்தப் பெருஞ்சிறப்பினோடுயர்ந்த அழகையுடைய கன்னடதேசத்தில் மேலான தலைமையாகி, சொல்லுதற்கரிய செல்வத்தையுடையதாகி, தகுதியாகிய பெருமை பொருந்திய அந்தணர்வசிக்கும் இடமாகி, கருப்புவில்லையுடையவனாகிய மன்மதனை வென்றவராகிய சிவபிரானுக்குத் தகுதியாகிய இக்குளாபுரியென்று சொல்லப்பட்ட நகரமொன்றுண்டு.

(வி - ரை.) இக்ஷுன் என்னும் வடசொல் இக்கன் எனத்திரிந்துவந்தது. ஈண்டு இச்செய்யுளைக் கவனிக்க:— பிரபுலிங்க லீலை,

"வாயின்மண் ணிட்டுக் கொண்டவன் றன்னை மதித்துமன் னுதலின்மலன் னிடாமற்
பாயும்வெண் டிரையிற் றுயில்பவன் றனக்குப் பரிதியொன் றளித்தருண் முக்க
ணாயகன் றனையே கருதிவெண் ணீற்ற ணன்னுதல் வீதியை யணியுந்
தூயவன் மறையோர் தமக்கிட மாகுந் துரிசிலா விக்குளா புரியே."

இக்குளாபுரி கலியாணபட்டணத்திலுள்ளது; இவை குல்பர்காஜில்லாவிலுள்ளன. (உசு)

சொன்னவிக் குளபு ரத்தைச் சூழ்வயற் கதலி செந்நெ
லின்னதென் றறிய வொண்ணா வுயர்வினா லிலையா லன்றி
கன்னலின் குழாங்க ளீது கமுகினக் குழாங்க ளீதென்
றுன்னிநின் றுணர வொண்ணா வுன்னதத் தடையா லன்றி.

(ப - ரை.) சொன்ன - மேற்சொல்லப்பட்ட, இக்குளபுரத்தை - இக்குளாபுரியை, சூழ் - சூழ்ந்த, வயல் - வயல்களில், உயர்வினால் - உயர்வினாலும், இலையால் அன்றி - இலையினாலுமேயன்றி, கதலி - வாழை, செந்நெல் - செந்நெல், இன்னது என்று - இது இதுவென்று, அறிய - தெரிந்து கொள்ள, ஒண்ணா - கூடாது, உன்னதத்து - உயர்வினாலும், அடையால் அன்றி - இலையினாலுமேயன்றி, கன்னலின் - கரும்பின், குழாங்கள் - தொகுதிகள், ஈது - இது, கமுகினம் - கமுகின், குழாங்கள் - தொகுதிகள், ஈது என்று - இதுவென்று, உன்னி நின்று - நினைத்து நின்று, உணர ஒண்ணா - தெரிந்துகொள்ளக் கூடாது.

(பொ - ரை.) மேற்சொல்லப்பட்ட இக்குளாபுரியைச்சூழ்ந்த வயல்களில் உயர்வினாலும் இலையினாலுமேயன்றி வாழையின்னதென்றும் செந்நெல்லின்னதென்றும் தெரிந்து கொள்ளக்கூடாது, உயர்வினாலும் இலையினாலுமேயன்றிக் கரும்பின் தொகுதிகள் இது கமுகின் தொகுதிகள் இது என்று நினைத்து நின்று தெரிந்துகொள்ளக்கூடாது. (உஉ)

கரும்பினிற் றெறித்த முத்தங் கதலியிற் புதைந்து தோன்ற
விரும்புநற் றீப மாலை விசேடமோ வல்ல தேவர்
பொருந்துமிந் திரனே வென்னப் பொற்பணி யரம்பை தானுந்
திருந்துமுத் தினு மோவென் னெனவுள செய்க ளெங்கும்.

(ப - ரை.) கரும்பினில் - கரும்பினின்றும், தெறித்த - சிந்திய, முத்தம் - முத்துக், கதலியில் - வாழையில், புதைந்து தோன்ற - மறைந்துதோன்றுவதனாலே, விரும் - விரும்புதற்குரிய, நல் - நல்ல, தீபமாலை - தீபவரிசையின், விசேடமோ - விசேஷ

மோ, வல்ல தேவர் - வலியுள்ளதேவர், பொருந்தும் - சேர்ந்திருக்கிற, இந்திரனோ என்ன - இந்திரனோவென்று சொல்லும்படி, பொற்பு அணி - அழகினையுடைய, அரம்பைதானும் - வாழையும், திருந்தும் - திருத்தமாகிய, முத்து - முத்துக்களை, ஈனுமோ என் என உள - ஈனுமோவென்னென்பதற்குரியனவாயுள்ள, செய்கள் - வயல்களே, எங்கும் - எவ்விடத்தும் நிறைந்திருப்பன, எ - று.

(பொ - ரை.) கரும்பினின்றும் சிந்திய முத்துக்கள் வாழையில் மறைந்து தோன்றுவதனாலே விரும்புதற்குரிய நல்ல திபவரிசையின் விசேஷமோ? அல்லது வலியுள்ளதேவர் சேர்ந்திருக்கிற இந்திரனோ? என்று சொல்லும்படி அழகினையுடைய வாழையும் திருத்தமாகிய முத்துக்களை ஈனுமோ வென்னென்பதற்குரியனவாயுள்ள வயல்களே எவ்விடத்தும் நிறைந்திருப்பன. (௨௩)

கனகபா டகங்க ளெங்குங் கவிஞர்பா டகங்க ளெங்கும்
வனசமா திடங்க ளெங்கு மனிதர்மா திடங்க ளெங்குந்
தனயருட் களிப்பா ரெங்குந் தணியருட் களிப்பா ரெங்கும்
புனிதகற் பகங்க ளெங்கும் புகழ்கைகற் பகங்க ளெங்கும்.

(ப - ரை.) கனகம் - பொன்னினாற் செய்யப்பட்ட, பாடு - பெருமைபொருந்திய, அகங்கள் - வீடுகளே, எங்கும் - எவ்விடத்து முள்ளன, கவிஞர் - வித்வான்கள், பாடு - பாடுகின்ற, அகங்கள் - இடங்களே, எங்கும் - எவ்விடத்துமுள்ளன, வனசமாது - திருமகளது, இடங்கள் - இடங்களே, எங்கும் - எவ்விடத்துமுள்ளன, மனிதர் - மாநுடரும், மாது - மகளிர்களும் (கூடிய), இடங்கள் - இடங்களே, எங்கும் - எவ்விடத்துமுள்ளன, எங்கும் - எவ்விடத்தும், தநயர் - மக்கள், உள்களிப்பார் - மனமகிழ்வார், எங்கும் - எவ்விடத்தும், தணி - சாந்தமாகிய, அருட்கு - அருளுக்கு, அளிப்பார் - தம்மை யீடாக்குவார், புனிதம் - பரிசுத்தமாகிய, கற்பகங்கள் - கற்பகமரங்கள், எங்கும் - எவ்விடத்துமுள்ளன, புகழ்கை - கீர்த்தியையுடைய, கற்பு - கற்புப்பொருந்திய, அகங்கள் - இடங்களே, எங்கும் - எவ்விடத்துமுள்ளன, எ - று.

(பொ - ரை.) பொன்னினாற்செய்யப்பட்ட பெருமைபொருந்திய வீடுகளே எவ்விடத்துமுள்ளன, வித்வான்கள் பாடுகின்ற இடங்களே எவ்விடத்துமுள்ளன, திருமகளது இடங்களே எவ்விடத்துமுள்ளன, மாநுடரும் மகளிர்களுங்கூடிய இடங்களே எவ்விடத்துமுள்ளன, எவ்விடத்தும் மக்கள் மனமகிழ்வார்கள், எவ்விடத்தும் சாந்தமாகிய அருளுக்குத் தம்மை யீடாக்குவார்கள், பரிசுத்தமாகிய கற்பகமரங்கள் எவ்விடத்துமுள்ளன, கீர்த்தியை யுடைய கற்புப்பொருந்திய இடங்களே எவ்விடத்துமுள்ளன.

(வி - ரை.) வனசம் வனம் - நீர், சம் - உண்டாவது (தாமரைமலர்). கற்பு - கல்வியென்றும் பாதிவ்ரத்யம் என்றும் கூறிக்கொள்க. மாதிடங்கள் - மிக்கவுறுதியா யுள்ளவர்கள் என்று பொருள்கொள்ளினுமமையும். (௨௪)

பச்சைநீழ் பந்த ரெங்கும் பணியின்சொற் பந்த ரெங்கு
கைச்சதிற் பணியா ரெங்குங் கனககற் பணியா ரெங்கு
நச்சவைப் புடையா ரெங்கு நயந்தபொற் புடையா ரெங்கு
மச்சுயிர்க் கொல்லா ரெங்கு மல்லவைக் கொல்லா ரெங்கும்.

(ப - ரை.) எங்கும் - எவ்விடத்தும், பச்சை - பச்சைநிறமுள்ள, நீழ் - நிழலைத்தருகின்ற, பந்தர் - பந்தல்களுள்ளன, எங்கும் - எவ்விடத்தும், பணி - பணிக்கப்பட்ட, இன் - இனிய, சொல் - சொல்லுக்கு, பந்தர் - கட்டுப்பட்டவர்களிருக்கின்றார்கள், எங்கும் - எவ்விடத்தும், கைச்சதில் - (பெரியோர்) வெறுத்தவற்றில், பணியார் - பிரவேசியார், எங்கும் - எவ்விடத்தும், கனகம் - பொன்போலும், கற்பு - கற்பினை, அணியார் -

ஆபரணமாகப் பூண்டவருளர், எங்கும் - எவ்விடத்தும், நச்சு - விரும்புதற்குரிய, அவை - சபையின், புடையார் - பக்கத்திலுளராவாரன்றி எங்கும் - எவ்விடத்தும், நயந்த - விரும்புதற்குரிய, பொற்பு - அழகு, உடையார் - உடையாருளர், எங்கும் - எவ்விடத்தும், அச்சு - அஞ்சுகின்ற, உயிர் - உயிர்களை, கொல்லார் - கொல்லமாட்டாதவருளர், எங்கும் - எவ்விடத்தும், அல்லவைக்கு - பாவச்செய்கைக்கு, ஒல்லார்-உடம்படாதவர் உண்டு, எ-று.

(பொ-ரை.) எவ்விடத்தும் பச்சைநிறமுள்ள நிழலைத்தருகின்ற பந்தல்களுள்ளன, எவ்விடத்தும் பணிக்கப்பட்ட இனிய சொல்லுக்குக் கட்டுப்பட்டவர்களிருக்கிறார்கள், எவ்விடத்தும் பெரியோர் வெறுத்தவற்றில் பிரவேசியார், எவ்விடத்தும் பொன்போலுங் கற்பினை ஆபரணமாகப் பூண்டவருளர்; எவ்விடத்தும் விரும்புதற்குரிய சபையின்பக்கத் திலுளராவருண்டு, எவ்விடத்தும் விரும்புதற்குரிய அழகுடையாருளர், எவ்விடத்தும் அஞ்சுகின்ற உயிர்களைக் கொல்லமாட்டாதவருளர், எவ்விடத்தும் பாவச்செய்கைக்கு உடம்படாதவருண்டு.

(வி-ரை.) பந்தம் - கட்டு. கைச்சது - வெறுத்தது. அஞ்சு அச்சு என வலித்தலாயிற்று. அல்லவை - பாவங்கள், இது "அல்லவை தேய வறம் பெருகும்" என்னுந் திருக்குறளானினிது விளங்கும். (உ௫)

கேதனச் சிறப்பி னார்ப்புங் கிளர்மறை யாக மார்ப்பு
மாதனந் தரவி ளிப்போர் வாயார்ப்பு மகஞ்செ யார்ப்பு
மோதநம் பகிர்வோ ரார்ப்பு முணவின்ப முரைப்போ ரார்ப்பும்
போதணி குழல்வண் டார்ப்பும் புணரியார்ப் பொக்கும் பொற்பூர்.

(ப-ரை.) கேதனச் சிறப்பின் - கொடித்திரளின், ஆர்ப்பும் - ஆரவாரமும், கிளர் - விளங்குகிற, மறை ஆகமம் - வேதாகமங்களின், ஆர்ப்பும் - ஆரவாரமும், மா தனம் - பெரும்பொருள், தர - கொடுக்க, விளிப்போர் - அழைப்பவரது, வாய் - வாயின், ஆர்ப்பும் - ஆரவாரமும், மகம் - யாகம், செய் - செய்வதிலுண்டாகிற, ஆர்ப்பும் - ஆரவாரமும், ஓதநம் - அன்னத்தை, பகிர்வோர் - பகிர்வோரது, ஆர்ப்பும் - ஆரவாரமும், உணவு - உண்டி, இன்பம் - இன்பத்தை, உரைப்போர் - சொல்வோருடைய, ஆர்ப்பும் - ஆரவாரமும், போது அணி - மலரணிந்த, குழல் - கூந்தலில் மொய்த்த, வண்டு - வண்டுகளின், ஆர்ப்பும் - ஆரவாரமும், புணரி ஆர்ப்பு - கடலோசையை, ஒக்கும் - நிகர்க்கிற, பொற்பு ஊர் - அழகாகியவூர், எ - று.

(பொ-ரை.) கொடித்திரளின் ஆரவாரமும், விளங்குகிற வேதாகமங்களின் ஆரவாரமும், பெரும்பொருள் கொடுக்க அழைப்பவரது வாயின் ஆரவாரமும், யாகஞ்செய்வதிலுண்டாகிற ஆரவாரமும், அன்னத்தைப் பகிர்வோரது ஆரவாரமும், உண்டியின்பத்தைச் சொல்வோருடைய ஆரவாரமும், மலரணிந்த கூந்தலில் மொய்த்த வண்டுகளின் ஆரவாரமும் கடலோசையை நிகர்க்கிற அழகாகிய ஊராகும். (உசு)

சங்கரன் மகிழ்ந்தி ரண்டாஞ் சம்புநீ யென்னப் பெற்றான்
வெங்குணச் சமணி ருட்கு மிகுசைவ முளரி கட்கும்
துங்கமார்த் தாண்ட னன்னான் றோன்றிய பதியின் மேன்மை
மங்கல மதனை யென்னான் மட்டிடும் பான்மைத் தன்றால்.

(ப-ரை.) சங்கரன் - சிவபிரான், மகிழ்ந்து - சந்தோஷித்து, இரண்டாம் சம்பு நீ - நீயிரண்டாஞ்சம்பு, என்னப் பெற்றான் - என்றுசொல்லப்பெற்றவன், வெம் - க்ரூரமான, குணம் - குணத்தையுடைய, சமண் - சமணாகிய, இருட்கும் - அந்தகாரத்துக்கும், மிகு - மேன்மையாகிய, சைவமுளரிகட்கும் - சைவமென்னும் தாமரைகளுக்கும், துங்கம் - உயர்ந்த, மார்த்தாண்டன் - சூரியனை, அன்னான் - நிகர்த்தவன், தோன்றிய - அவதரித்த, பதியின் - அந்நகரத்தின், மேன்மை - சிறப்பாகிய, மங்கலம் அதனை - மங்களகரத்தை,

என்னால் மட்டிடும் - என்னால் அளவறுத்துச்சொல்லும், பான்மைத்து அன்று - தன்மையுடையதன்று, எ - று.

(பொ - ரை.) சிவபிரான் சந்தோஷித்து "நீ இரண்டாஞ்சம்பு" என்று சொல்லப் பெற்றவனும், க்ரூரமானகுணத்தையுடைய சமணாகிய அந்தகாரத்துக்கும் மேன்மை பொருந்திய சைவமென்னும் தாமரைகளுக்கும் உயர்ந்த சூரியனை நிகர்த்தவனுமாகிய வசவேசன் அவதரித்த அந் நகரத்தின் சிறப்பாகிய மங்களகரத்தை என்னால் அளவறுத்துச் சொல்லுந் தன்மையுடையதன்று.

(வி - ரை.) முளரி - ஆகுபெயர். (உஎ)

அன்னநன் னகரில் வாழு மந்தணர்க் கதிக ராஞோர்
துன்னருந் தரும சீலர் சோமசே கரன்பா லன்ப
ரன்னவர்க் கன்னை யொப்பா ரறுதொழி லகலா நீரார்
மன்னரும் புனித நெஞ்சார் மாதிரா சைய ரென்பார்.

(ப - ரை.) அன்ன - அத் தன்மைத்தாகிய, நல் - நல்ல, நகரில் - ஊரில், வாழும் - வாழ்கின்ற, அந்தணர்க்கு - வேதியர்களில், அதிகர் ஆனோர் - சிறந்தவராயிருப்பவர், துன் அரு - பெறுதற்கரிய, தருமசீலர் - தருமவொழுக்கமுள்ளவர், சோமசேகரன்பால் - சிவபிரானிடத்தில், அன்பர் - அன்புடையாராகிய, அன்னவர்க்கு - அத் தன்மையர்க்கு, அன்னை - தாய், ஒப்பார் - போல்பவர், அறுதொழில் - ஷட்கர்மங்களும், அகலா - ஒழியாத, நீரார் - குணமுடையவர், மன் அரு - கிடைத்தற்கரிய, புனிதம் - பரிசுத்தமான, நெஞ்சார் - மனமுள்ளவர், மாதிராசையர் என்பார் - மாதிராசையரென்று சொல்லுவார், எ - று.

(பொ - ரை.) அத் தன்மைத்தாகிய நல்ல ஊரில் வாழ்கின்ற வேதியர்களிற் சிறந்தவராயிருப்பவர், பெறுதற்கரிய தருமவொழுக்கமுள்ளவர், சிவபிரானிடத்தில் அன்புடையாராகிய அத் தன்மையர்க்குத் தாய்போல்பவர், ஷட்கர்மங்களும் ஒழியாத குணமுடையவர், கிடைத்தற்கரிய பரிசுத்தமனமுள்ளவர், மதிராசையரென்று சொல்லுவார்.

(வி - ரை.) சோமசேகரன் - சந்த்ரஜடாதரன். ஷட்கர்மங்கள் :—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன. (உஅ)

இத்தகை மாதி ராசர்க் கினியராந் தேவி யார்பேர்
சுத்தமா தாம்பை யார்பொய்த் துகளிலார் குலத்தின் றூயா
ரத்தனார் பத்தி மிக்கா ராருயிர்க் கிரக்க முள்ளார்
நித்தமாங் கற்பி னிற்பார் நிகரில்லார் நீதி நீங்கார்.

(ப - ரை.) இ தகை - இப்படிப்பட்ட பெருமைவாய்ந்த, மாதிராசர்க்கு - மாதிராசையர்க்கு, இனியர் ஆம் - இனியராகிய, தேவியார் பேர் - மனைவியார் திருநாமம், சுத்தம் - பரிசுத்தமான, மாதாம்பையார் - மாதாம்பையாரென்பது, பொய் - பொய்யாகிய, துகள் - குற்றம், இல்லார் - இல்லாதவர், குலத்தின் - குலத்தினால், தூயார் - பரிசுத்தமானவர், அத்தனார் - சிவபெருமானாரது, பத்தி - பக்தியில், மிக்கார் - சிறந்தவர், ஆர் - நிறைந்த, உயிர்க்கு - உயிர்கள்மீது, இரக்கம் உள்ளார் - இரக்கமுள்ளவர், நித்தம் ஆம் - நிலையாகிய, கற்பில் நிற்பார் - பதிவ்ரதா தர்மத்தில் நிற்பார், நிகர் இல்லார் - ஒப்பற்றவர், நீதிநீங்கார் - நியாயத்தினின்றும் விலகாதவர், எ - று.

(பொ - ரை.) இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த மாதிராசையர்க்கு இனியராகிய மனைவியார் திருநாமம் பரிசுத்தமான மாதாம்பையாரென்பது, பொய்யாகிய குற்றமில்லாதவர், குலத்தினால் பரிசுத்தமானவர், சிவபக்தியிற் சிறந்தவர், நிறைந்த வுயிர்கள்மீது இரக்கமுள்ளவர், நிலையாகிய பதிவ்ரதா தர்மத்தில் நிற்பவர், நியாயத்தினின்றும்விலகாதவர்.

(வி - ரை.) அத்தனார் - சிவபெருமானார்; அத்தனார் பத்தி - சிவபக்தி. உயிர்க்கு உருபுமயக்கம். (௨௯)

மகவிலா நெறியி னாலே மனமிகத் தளர்ந்தி ரங்கிச்
சுகமிலா நோன்ப நந்தந் தொடங்கிச்செய் தொழிலா லெய்த்தே
யுகுமன மதனான் மக்க ளுறும்படி யெதுவென் றெண்ணித்
தகவுறு பதியுந் தாமுஞ் சான்றவர் தம்மைக் கேட்ப.

(ப - ரை.) மகவு - குழந்தை, இல்லா - இல்லாத, நெறியினாலே - முறையினாலே, மனம் - மனமானது, மிக - மிகுதியாக, தளர்ந்து - மெலிவடைந்து, இரங்கி - இரக்கங் கொண்டு, சுகம் இல்லா - சுகமற்ற, அநந்தம் - முடிவில்லாத, நோன்பு - நோன்புகளை, தொடங்கி - முயன்று, செய் - செய்யும், தொழிலால் - தொழில்களினால், எய்த்து - இளைத்து, உகும் - அழிகின்ற, மனமதனால் - மனத்தால், மக்கள் - பிள்ளைகள், உறும்படி - உண்டாகும் விதம், எது என்று - யாதென்று, எண்ணி - ஆலோசித்து, தகவு உறு - தகுதியையுடைய, பதியும் - நாயகனும், தாமும் - தாமும், சான்றவர் தம்மை - (கல்வி கேள்வி யறிவொழுக்கங்களால்) நிறைந்தவரை, கேட்ப - கேட்டலும், எ - று.

(பொ-ரை.) குழந்தையில்லாத முறையினாலே மனமானது மிகுதியாக மெலிவடைந்து இரக்கங்கொண்டு, சுகமற்ற முடிவில்லாத நோன்புகளை முயன்று செய்யும் தொழில்களினாலிளைத்து, அழிகின்ற மனத்தால் பிள்ளைகளுண்டாகும் விதம் யாதென்று ஆலோசித்து, தகுதியையுடைய நாயகனும் தாமும் கல்விகேள்வியறிவொழுக்கங்களில் நிறைந்தவரைக் கேட்டலும். (௩0)

பண்ணிய நோன்பி னெல்லாம் பலிப்பது நந்தி நோன்பென்
றெண்ணிநற் றவர்கள் சொல்ல வேற்றுக்கொண் டிறைவன் கோயி
னண்ணிமா தாம்பை செய்ய நந்தியைப் பணிந்து போற்றிப்
புண்ணிய மூர்த்தி யென்றன் புந்தியி னேயம் வல்லாய்.

(ப - ரை.) (அதுகேட்ட) நல் - சிறந்த, தவர்கள் - சான்றோர், பண்ணிய - (நீங்கள்)செய்த, நோன்பில் எல்லாம் - விரதங்களெல்லாவற்றுள்ளும், பலிப்பது - உங்களுக்குப் பலிக்கப் போகிறது, நந்திநோன்பு என்று - நந்திவிரதமென்று, எண்ணி-ஆலோசித்து, சொல்ல - உரைத்தலும், ஏற்றுக்கொண்டு - (அந்த நியமத்தை) ஏற்றுக்கொண்டு, இறைவன் - சிவபெருமானது, கோயில் - ஆலயத்தை, நண்ணி - அடைந்து, மாதாம்பை - மாதாம்பையார், செய்ய - செவ்வியராகிய, நந்தியை - நந்தியெம்பெருமானாரை, பணிந்து - வணங்கி, போற்றி - துதித்து, புண்ணியமூர்த்தி - தருமரூபியே, என்றன் - என், புந்தியின்நேயம் - மனவிருப்பத்தை, வல்லாய் - (முடிக்க) வல்லவனே, எ - று.

(பொ - ரை.) அதுகேட்ட சிறந்த சான்றோர், "நீங்கள் செய்த விரதங்களெல்லாவற்றுள்ளும் உங்களுக்குப் பலிக்கப்போகிறது நந்திவிரதம்" என்று ஆலோசித்து உரைக்க; மாதாம்பையார் அந்த நியமத்தையேற்றுக்கொண்டு, சிவாலயத்தையடைந்து, செவ்வியராகிய நந்தியெம்பெருமானாரை வணங்கித்துதித்து, தருமரூபியே! என் மனோபீஷ்டத்தை முடிக்கவல்லவனே! (௩௧)

எனமதி வார மாதி யெண்ணுமொன் பதுநா ளூற்று
மனமகிழ் நந்தி யார்க்கு மறுவின்மஞ் சநநீ ராட்டிப்
புனிதநற் கந்தஞ் சாத்திப் பூந்தொடை யாடை யார
நினைவுட னின்று சாத்தி நிதிபட்ட நெற்றி சூட்டி.

(ப - ரை.) என - என்றிவ்வாறு நந்தியெம்பெருமானைத் துதித்து, மதிவாரம் ஆதி - சோமவாரம் முதல், எண்ணும் - எண்ணப்பட்ட, ஒன்பது நாள் - ஒன்பது தினம், நோற்று - விரதமநுஷ்டித்து, மனமகிழ் - மனமகிழ்கின்ற, நந்தியார்க்கு - நந்தியெம்பெருமானார்க்கு, மறு இல் - குற்றமில்லாத, மஞ்சநநீர் ஆட்டி - திருமஞ்சநாபிஷேகஞ் செய்து, புனிதம் - பரிசுத்தமாகிய, நல் - நல்ல, கந்தம் - சந்தனம், சாத்தி - அணிந்து, பூந்தொடை - பூமாலை, ஆடை - வஸ்த்ரம், ஆரம் - முத்துமாலை, நினைவுடன் - ஞாபகத்துடன், நின்று சாத்தி - தாமே நேர்நின்று தரித்து, நிதி - பொன்னினாற் செய்யப்பட்ட, பட்டம் - பட்டத்தை, நெற்றி - நெற்றியில், சூட்டி - கட்டி, எ - று.

(பொ - ரை.) என்றிவ்வாறு நந்தியெம்பெருமானைத் துதித்து சோமவாரம் முதல் எண்ணப்பட்ட ஒன்பது தினம் விரதமனுஷ்டித்து, மனமகிழ்கின்ற நந்தியெம்பெருமானார்க்குக் குற்றமில்லாத திருமஞ்சநாபிஷேகஞ்செய்து, பரிசுத்தமாகிய நல்ல சந்தனமணிந்து பூமாலை வஸ்த்ரம் முத்துமாலை ஆகிய யிவைகளை ஞாபகத்துடன் தாமே நேர்நின்று தரித்து, பொன்னினாற் செய்யப்பட்ட பட்டத்தை நெற்றியில் கட்டி.

(வி - ரை.) மஞ்ஜநம் என்னும் வடசொல் மஞ்சநம் எனத் தமிழில் மருவிக்கிடக்கிறது. (௯௨)

தணிவுறக் கந்த ரத்திற் சதங்கைகிண் கிணித ரித்தே
யிணையடிச் சிலம்பு பூட்டி யெழினறுந் தூப தீப
மணியுறக் கொடுத்துத் தூய வைவகை யமுத ருத்திக்
கணிதமி லரன்ற னன்பர் களிக்கவா ராதித் தேத்தி.

(ப - ரை.) தணிவு உற - தொங்கலாக, கந்தரத்தில் - கழுத்தில், சதங்கை - சதங்கையும், கிண்கிணி - கிண்கிணியும், தரித்து - பூட்டி, இணை - இரண்டு, அடி - திருவடிகளில், சிலம்பு பூட்டி - சிலம்பு தரித்து, எழில் - அழகாகிய, நறும் - வாசனையுள்ள, தூபதீபம் - தூபதீபம், அணி உறக் கொடுத்து - முறையாகக் காட்டி, தூய - பரிசுத்தமாகிய, ஐவகை - ஐந்துவகையான, அமுது - திருவமுது, அருத்தி - படைத்து, கணிதம் இல் - கணக்கற்ற, அரன்தன் அன்பர் - சிவபக்தர், களிக்க - மகிழ, ஆராதித்து - நிவேதித்து, ஏத்தி - துதித்து, எ - று.

(பொ - ரை.) தொங்கலாகக் கழுத்தில் சதங்கையும் கிண்கிணியும் பூட்டி, இரண்டு திருவடிகளில் சிலம்பு தரித்து, அழகாகிய வாசனையுள்ள தூபதீபம் முறையாகக் காட்டி, பரிசுத்தமாகிய ஐவகையான திருவமுது படைத்து, கணக்கற்ற சிவபக்தர் மனமகிழும்படி நிவேதித்துத் துதித்து.

(வி - ரை.) ஐவகை அமுது - சுத்தாந்நம், சித்ரணியாந்நம், ததியாந்நம், கிலாந்நம், முத்காந்நம் என்பன. (௯௩)

பன்னக வணியா னேறே பசுபதி யென்னப் போற்றி
யென்னக மகிழ மைந்த னீவையே லிடுவ னின்பேர்
மன்னவ வென்று நின்ற மாதினை மதித்து நந்தி
தன்னரும் வலத்து மாலை தந்திடத் தருக்கி வாங்கி.

(ப - ரை.) பன்னகம் - சர்ப்பம், அணியான் - ஆபரணமாகிய சிவபெருமானது, ஏறே - இடபமே, பசுபதி - சீவாத்மாக்களுக்குத் தலைவனே, என்ன - என்று, போற்றி - துதித்து, என் - எனது, அகம் மகிழ - மனமகிழும்படி, மைந்தன் - (உம்மைப்போன்ற) மகனை, ஈவையேல் - அருள் செய்வீராயின், நின் - உம், பேர் இடுவன் - பேரிடுவேன், மன்னவ - இறைவனே, என்று நின்ற - என்று துதித்துநின்ற, மாதினை - மாதாம்பை

யாரை, நந்தி - நந்தியெம்பெருமான், மதித்து - களித்து, தன் - தமது, அரு - அருமையாகிய, வலத்து - வலப்பக்கத்து, மாலை - புஷ்பமாலையை, தந்திட - அநுக்கிரகிக்க, தருக்கி - (அம் மாதாம்பையார்) களித்து, வாங்கி - அதனைப் பெற்று, எ - று.

(பொ - ரை.) சர்ப்பாபரணனாகிய சிவபெருமானது வ்ருஷபமே! பசுபதி! என்று துதித்து, எனது மனமகிழும்படி உம்மைப்போன்ற மகனை யருள்செய்வீராயின் அக் குழந்தைக்கு உம்பேரிடுவேன், இறைவனே! என்று துதித்துநின்ற மாதாம்பையாரை நந்தியெம்பெருமான் களித்துத் தமது அருமையாகிய வலப்பக்கத்துக் கொம்பின்மேலிருந்த புஷ்பமாலையை யநுக்கிரகிக்க, அம் மாதாம்பையார் களித்து யதனைப்பெற்று. (௩௪)

சென்னியிற் சூட்டி யெண்ணஞ் சித்தித்த தென்ன நம்பி
நன்னியா யத்தி றைஞ்சி நந்தியை வலம்வந் தேத்தி
மின்னிக ரிடையார் சூழ மிக்கநன் னிமித்தத் தோடே
தன்னிக ரில்லா வில்லிற் றருக்கிச்சென் றிருக்கு நாளில்.

(ப - ரை.) சென்னியில் - தமது சிரத்தினில், சூட்டி - தரித்து, எண்ணம் சித்தித்தது என்ன - எண்ணம் பலித்ததென்று, நம்பி - உறுதியாகக்கொண்டு, நல் - நல்ல, நியாயத்து - முறைமையால், இறைஞ்சி - வணங்கி, நந்தியை - நந்தியெம்பெருமானை, வலம் வந்து - பிரதக்ஷிணஞ்செய்து, ஏத்தி - துதித்து, மின்நிகர் - மின்கொடியை நிகர்த்த, இடையார்சூழ - இடையையுடைய மாதர்கள் சூழ்ந்துவர, மிக்க - சிறந்த, நல் - நல்ல, நிமித்தத்தோடே - சகுநங்களுடன், தன் - தமது, நிகர் இல்லா - நிகரற்ற, இல்லில் - மாளிகையில், தருக்கி - களித்து, சென்று - போய், இருக்கும் நாளில் - வாழுங்காலத்தில், எ - று.

(பொ - ரை.) தமது சிரத்தினில் தரித்து, எண்ணம் பலித்ததென்று நம்பி, நல்ல முறைமையால் வணங்கி, நந்தியெம்பெருமானைப் பிரதக்ஷிணஞ்செய்து துதித்து, மின்கொடியை நிகர்த்த இடையையுடைய மாதர்கள் சூழ்ந்துவர, சிறந்த நல்ல சகுநங்களுடன் தமது நிகரற்ற மாளிகையிற் களித்துப்போய் வாழுங்காலத்தில். (௩௫)

எம்பிரா னேவல் சென்னி யேந்திமேற் கொண்டு சென்ற
நம்பிரா னந்தி தேவர் நன்மைமா தாம்பை யார்த
மம்பொருந் துதரத் துள்ளே யவதரித் துதித்தெம் மத்தன்
செம்பணி விடைமு டிப்பே மெனவறி வுடனே சேர்ந்தார்.

(ப - ரை.) எம்பிரான் - பரமசிவனது, ஏவல் - பணிவிடையை, சென்னி ஏந்தி - சிரசின் மீது தாங்கி, மேற்கொண்டு - ஏற்றுக்கொண்டு, சென்ற - வந்த, நம் - நமது, பிரான் - பெருமானாகிய, நந்திதேவர் - நந்திகேசுரரானவர், நன்மை - பெருமைபொருந்திய, மாதாம்பையார் தம் - மாதாம்பையாரது, அம் - அழகு, பொருந்து - வாய்ந்த, உதரத்து உள்ளே - திருவயிற்றினுள்ளே, அவதரித்து - அவதாரஞ்செய்து, உதித்து - தோன்றி, எம் - எமது, அத்தன் - சிவபிரானது, செம் - மஹத்தாகிய, பணிவிடை - காரியத்தை, முடிப்பேம் என்று - முடிப்போமென்று, அறிவுடனே - ஞானத்துடனே, சேர்ந்தார் - பிண்டருபமாயடைந்தருளினார், எ - று.

(பொ-ரை.) பரமசிவனது பணிவிடையைச் சிரத்தின்மீது தாங்கி யேற்றுக்கொண்டு வந்த நமது பெருமானாகிய நந்திகேசுரரானவர் பெருமைபொருந்திய மாதாம்பையாரது அழகுவாய்ந்த திருவயிற்றினுள்ளே அவதாரஞ்செய்து தோன்றி எமது சிவபிரானது மஹத்தாகிய காரியத்தை முடிப்போமென்று ஞானத்துடனே பிண்டருபமாயடைந்தருளினார். (௩௬)

அம்மைமா தாம்பை செய்த வரியபுண் ணியமென் சொல்வா
மெம்மையா ளிரண்டாஞ் சம்பு வென்னுநந் திச ஞர்தன்
செம்மையா முதரந் தன்னிற் செறிந்துநற் புதல்வ ராக
விம்மையிற் பெற்ற பேறு யாவர்க்கு மெய்தொ ணாதால்.

(ப - ரை.) அம்மை - அம்மையாராகிய, மாதாம்பை - மாதாம்பையார், செய்த - பண்ணிய, அரிய புண்ணியம் - அருமையாகிய புண்ணியம், என்சொல்வாம் - யாதென்று சொல்வோம், எம்மை ஆள் - நம்மை யாண்டருள்கின்ற, இரண்டாம் சம்பு என்னும் - இரண்டாஞ்சம்பு என்று சொல்லப்பட்ட, நந்திசனர் - நந்திதேவர், தன் - தமது, செம்மை ஆம் - செவ்விதாகிய, உதரம்தன்னில் - திருவயிற்றில், செறிந்து - சேர்ந்து, நல் - நல்ல, புதல்வர் ஆக - திருக்குமாரராம்படி, இம்மையில் - இவ்வுலகத்தில், பெற்ற - படைத்த, பேறு - பாக்கியம், யாவர்க்கும்-எவர்க்கும், எய்தவொண்ணாது-கிடைக்கமாட்டாது, எ-று.

(போ - ரை.) அம்மையாராகிய மாதாம்பையார் பண்ணிய அருமையாகிய புண்ணியம் யாதென்று சொல்வோம், நம்மை யாண்டருள்கின்ற இரண்டாஞ்சம்பு என்றுசொல்லப்பட்ட நந்திதேவர் தமது செவ்விதாகிய திருவயிற்றிற்சேர்ந்து நல்ல திருக்குமாராம்படி இவ்வுலகத்தில் படைத்த பாக்கியம் எவர்க்கும் கிடைக்கமாட்டாது. (௬எ)

உண்மையா மமுதங் கர்ப்பத் துறுதலாற் பசியொ ழிந்தா
ளொண்மைநல் லின்பங் காண்பா ளொழிந்தசிற் றுணவொ ழிந்தாள்
வெண்மையா மமல னுள்ளே மேவலான் விளர்த்தாள் மேனி
திண்மையாம் பரம யோகி செறிதலாற் றுயிலே சேர்ந்தாள்.

(ப - ரை.) உண்மை ஆம் - உண்மையாகிய, அமுதம் - தேவாமிர்தம்போன்ற நந்திதேவர், கர்ப்பத்து - கர்ப்பத்தில், உறுதலால் - அடைந்திருத்தலால், பசி ஒழிந்தாள் - (மாதாம்பையார்) பசி நீங்கினர், ஒண்மை - ஒட்பமாகிய, நல் இன்பம் - பேரின்பத்தை, காண்பாள் - காண்பவர் (ஆதலால்), ஒழிந்த - மற்றுள்ள, சிறு உணவு - சிற்றுண்டி, ஒழிந்தாள் - விட்டனர், வெண்மை ஆம் - வெண்ணிறமாகிய, அமலன் - நிர்மலரான நந்தியெம்பெருமான், உள்ளே மேவலால் - உள்ளே யெழுந்தருளியிருத்தலால், மேனி - திருமேனி, விளர்த்தாள் - வெளுப்படைந்தனர், திண்மை ஆம் - திடமாகிய, பரம - மேலான, யோகி - சிவயோகி, செறிதலால் - வீற்றிருத்தலால், துயிலே சேர்ந்தாள் - தூக்கத்தையே யடைந்திருந்தனர், எ - று.

(போ - ரை.) உண்மையாகிய தேவாமிர்தம்போன்ற நந்திதேவர் கர்ப்பத்தில் அடைந்திருத்தலால் மாதாம்பையார் பசிநீங்கினர், ஒட்பமாகிய பேரின்பத்தைக் காண்பவராதலால் மற்றுள்ள சிற்றுண்டியை விட்டனர், வெண்ணிறமாகிய நிர்மலரான நந்தியெம்பெருமான் உள்ளே எழுந்தருளியிருத்தலால் திருமேனி வெளுப்படைந்தனர், திடமாகிய சிவயோகி வீற்றிருத்தலால் தூக்கத்தையே யடைந்திருந்தனர். (௬அ)

புனிதனுள் ளுறைத லாலே புசிக்குமூண் பொறுதெ டுப்பா
டனிமுது நந்தி சேரத் தன்முலைக் கண்க றுத்தாள்
கனிமொழி யிடையுங் கண்டார் கனத்தனுள் ளுறைத லாலே
யினிதுளே பரம வந்த மிருத்தலா லெழாதி ருந்தாள்.

(ப - ரை.) புனிதன் - பரிசுத்தர், உள் உறைதலாலே - உள்ளே யெழுந்தருளி யிருப்பதனல், புசிக்கும் - உண்ணும், ஊண் - உணவை, பொறுது - பொறுக்காமல், எடுப்பாள் - உமிழ்ந்து விடுவர், தனி - ஒப்பற்ற, முது - பழையரான, நந்தி - நந்திதேவர், சேர - சேர்தலால், தன் - தமது முலைக்கண் கறுத்தாள் - திருமுலைக்கண்கள் கருநிறமடையுந் தன்மையினை யடைந்தனர், கனத்தன் உறைதலாலே - கனமானவர் உள்ளேயிருத்தலால், கனி

மொழி - சுவைமுதிர்ந்த சொல்லையுடையவராது, இடையும் - இடையையும், கண்டார் - கண்டனர், உள்ளே - உள்ளே, இனிது - இனிதாகிய, பரம அர்கம் இருத்தலால் - பரமார்த்த மிருப்பதனால், எழாது இருந்தாள் - மேலே எழாதிருந்தனர், எ - று.

(பொ - ரை.) பரிசுத்தர் உள்ளே யெழுந்தருளி யிருப்பதனால் உண்ணுமுணவைப் பொறுக்காமல் உமிழ்ந்துவிடுவர், ஒப்பற்ற பழையரான நந்திதேவர் சேர்தலால் தமது திருமுலைக்கண்கள் கறுத்திருந்தவராயினர், கனமானவர் உள்ளே யிருத்தலால் சுவை முதிர்ந்த சொல்லை யுடையவராது இடையையும் கண்டனர், உள்ளே இனிதாகிய பரமார்த்த மிருப்பதனால் மேலே எழாதிருந்தனர்.

(வி - ரை.) இடையும் கண்டார் என்றமையால் இதற்கு முன்னெல்லாம் கண்டிலர் என்றதாயிற்று, ஆகவே இடையினது நுண்மை விளங்கிற்று. கனம் - மேன்மை யெனினுமாம். (௩௯)

இவ்வழி பத்து மாத மெய்தியுள் ளவய வங்கள்
செவ்வழி நந்தி யார்தாஞ் சேர்ந்துதா யுதர மாகு
மவ்வழி யமர்ந்து நோக்கி யமலனை யகலா துன்னற்
கெவ்வமில் சமாதி யோகத் தெல்லையீ தென்ன வெண்ணி.

(ப - ரை.) இவ்வழி - இவ்விதமாக, பத்துமாதம் எய்தி - பத்துமாசம் அடைந்து, உள் அவயவங்கள் - உள்ளுறுப்புக்கள், செவ்வழி - செந்நெறியையுடைய, நந்தியார் - நந்திதேவர், சேர்ந்து - நிரம்பப்பெற்று, தாய் - தாயாரின், உதரம் ஆகும் - திருவயிறாகிய, அவ்வழி - அவ்விடத்தே, அமர்ந்து - இருந்து, நோக்கி - பார்த்து, அமலனை - சிவபிரானை, அகலாது - இடையறாமல், உன்னற்கு - தியானித்தற்கு, எவ்வம் இல் - குறைவில்லாத, சமாதியோகத்து - சிவசமாதியோகத்தின், எல்லை - ஸ்தலம், ஈது என்ன - இது தான் என்று, எண்ணி - கருதி, எ - று.

(பொ - ரை.) இவ்விதமாகப் பத்துமாசம் அடைந்து, உள்ளுறுப்புக்கள் செந்நெறியையுடைய நந்திதேவர் நிரம்பப்பெற்று, தாயாரின் திருவயிறாகிய அவ்விடத்தே யிருந்து பார்த்து, சிவபிரானை யிடையறாமல் தியானித்தற்குக் குறைவில்லாத சிவசமாதியோகத்தின் ஸ்தலம் இதுதானென்று கருதி. (௪0)

சித்திபங் கயாச நத்துச் சேர்ந்தச பையினாற் பூத
சுத்திதான் செயத்தொ டங்கிச் சுத்தன்முன் னருளி யோக
சத்தியா னாடி சுத்தி தகச்செய்து மூலத் தீமே
லொத்தித சுழுனை நாடி யுட்கிரந் திகளு குத்தார்.

(ப - ரை.) சித்தி - சகலசித்திகளையும் தரத்தக்க, பங்கயம் ஆசநத்து - பத்மாஸநத்தை, சேர்ந்து - அடைந்து, அசபையினால் - அஜபாமந்த்ரத்தால், பூதசுத்தி செய்யத்தொடங்கி - பூதசுத்தி செய்ய முயன்று, சுத்தன் - சிவபிரான், முன் - முன்னே, அருள் - அருள்செய்த, யோகசுத்தியால் - யோகசுத்தியினால், நாடிசுத்தி - நாடிசுத்தி, தகச்செய்து - தகுதியாகச்செய்து, மூலத்தீமேல் - மூலாக்கினியின்மீது, ஒத்தி - பொருத்தி, இதம் - சுகமான, சுழுனைநாடியுள் - ஸுஷும்நா நாடியின், கிரந்திகள் - பாசக்ரந்திகளை, உகுத்தார் - அழித்தார், எ - று.

(பொ - ரை.) சகல சித்திகளையும் தரத்தக்க பத்மாஸநத்தை யடைந்து, அஜபாமந்த்ரத்தால் பூதசுத்தி செய்ய முயன்று, சிவபிரான் முன்னர் அருள்செய்த யோகசுத்தியினால் நாடித்ரயசுத்திகளைத் தகுதியாகச்செய்து, மூலாக்கினியின்மீது பொருத்தி, சுகமான ஸுஷும்நா நாடியின் பாசக்ரந்திகளை யழித்தார்.

(வி - ரை.) அஜபாமந்த்ரம் - ஜபியாது ஜபிக்கு மந்த்ரம்; இது குருமுகமாயறிக. க்ரந்தி - கணு (தடை). நாடி சுத்தியாவது - இடைகலை பிங்கலை சுழுமுனையென்னும் மூன்று நாடிகளையும் தந்தம் நிலையிற் செல்லற்குரிய சாதனஞ் செய்தல். (௪௧)

நாலிதழ்க் கமல நின்று நாடுமுக் கோண நண்ணி
யேலுமா சுழுத்தி சர்ப்ப மெழுப்பியா றிதழி னேகி
மேலினீ ரைந்தீ ராறின் மேவியீ ரெட்டி தழ்க்கண்
சாலவுற் றூரா வின்பத் தன்மையா நன்மை கண்டு.

(ப - ரை.) நாலிதழ் - நான்கு இதழுடைய, கமலம் நின்று - தாமரையில் நின்று நாடும் - நாடுதற்குரிய, முக்கோணம் நண்ணி - முக்கோணத்திலடைந்து, ஏலுமாறு - பொருந்துமாறு, சுழுத்திசர்ப்பம் எழுப்பி - ஸுஷும்நா சர்ப்பத்தை யெழுப்பி, ஆறு இதழில் ஏகி - ஆறு இதழுடைய தாமரையிற்சென்று, மேலின் - அதன் மேலேயுள்ள ஈரைந்து - பத்து இதழுடைய தாமரையிலும், ஈராறில் - பன்னிரண்டு இதழுடைய தாமரையிலும், மேவி - சேர்ந்து, ஈரெட்டு இதழ்க் கண் - பதினாறு இதழுடைய தாமரையில், சால உற்று - மிகப்பொருந்தி, ஊரா - தெவிட்டாத, இன்பத் தன்மை ஆம் - இன்ப குண முள்ள, நன்மை - நலத்தை, கண்டு - பார்த்து, எ - று.

(போ - ரை.) நான்கிதழ் தாமரையில் நின்று, நாடுதற்குரிய முக்கோணத்திலடைந்து, பொருந்துமாறு ஸுஷும்நா சர்ப்பத்தையெழுப்பி, ஆறிதழ் தாமரையிற் சென்று, அதன் மேலேயுள்ள பத்திதழ் தாமரையிலும் பன்னிரண்டிதழ் தாமரையிலும் சேர்ந்து, அதன்மேல் பதினாறிதழ்த் தாமரையில் மிகப்பொருந்தித் தெவிட்டாத இன்ப குணமுள்ள நலத்தைப் பார்த்து.

(வி - ரை.) தேகத்தில் குதம் குய்யம் நாபி இருதயம் கண்டம் புருவமத்தியென்னும் ஆறு ஸ்தானங்க ளுள்ளதும், அந்த ஸ்தானங்களில் முறையே நான்கிதழ் ஆறிதழ் பத்திதழ் பன்னிரண்டிதழ் பதினாறிதழ் இரண்டிதழ் என்னும் ஆறு வகையான இதழுள்ள கமலங்களுள்ளதும், சதுரஸ்ரம் அர்த்தசந்த்ரன் த்ரிகோணம் ஷட்கோணம் வ்ருத்தம் சித்ரம் என்னும் ஆறு வடிவமுள்ளதும், ப்ருதிவி அப்பு தேயு வாயு ஆகாஸம் ஆத்மா என்னும் ஆறு பூதங்களுள்ளதும், பொன் வெள்ளை இரத்தம் நீலம் படிகம் மாணிக்கம் என்னும் ஆறு நிறங்க ளுள்ளதும், வ முதல் ஸ வரையில் ப முதல் ல வரையில் ட முதல் ப வரையில் க முதல் ட வரையில் அ முதல் அ: வரையில் உள்ள அக்ஷரங்களும் அம் க்ஷம் என்னும் அக்ஷரங்களுமுள்ளதும், ய வா சி ம ந ஓம் என்னும் ஆறு அக்ஷரங்களுள்ளதும், ஆதாரம் சுவாதிஷ்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்ஞை என்னும் ஆறு சக்கரங்களுள்ளதும், அக்ஷரங்களில் முறையே ஆசாரலிங்கம் குருலிங்கம் சிவலிங்கம் ஜங்கமலிங்கம் பிரசாதலிங்கம் மகாலிங்கம் என்னும் ஆறுலிங்கங்கள் மூர்த்திகரித்துள்ளதும் முறையே பக்த மாஹேஸ ப்ரஸாதி ப்ராணலிங்கி சரணஐக்யன் என்னும் ஆறு அங்கஸ்தலங்க ளுள்ளதுமாகத் தியானித்தல் சிவயோகநிலையாம். (சஉ)

ஓரிரண் டிதழா யுள்ள வொளிதரும் பதும முற்று
நேரின்மெய்ஞ் ஞான சோதி நிலைகண்டு நெஞ்சங் கொண்டு
சீரிய கமல மாறுந் திரும்பிமே னோக்கச் செய்து
நாரிகொள் விற்போன் மேலை நாளத்து நாத நண்ணி.

(ப - ரை.) ஓர் - ஒன்று, இரண்டு - இரண்டு, இதழாய் உள்ள - இதழுடைய, ஒளிதரும் பிரகாசத்தைத்தருகிற, பதுமம் உற்று - கமலங்களை யடைந்து, நேரில் - நேராக, மெய்ஞ் ஞானம் - உண்மையறிவாகிய, சோதிநிலை - தேஜோமயத்தை, கண்டு - தரிசித்து, நெஞ்சம் கொண்டு - மனங்கொண்டு, சீரிய - சிறந்த, கமலம் - பதுமங்கள், ஆறும் - ஆறனையும், திரும்பி - மீட்டும், மேல் நோக்கச்செய்து - மேலே பார்க்கச்செய்து, நாரிகொள் - நாண் பூட்டல் பெற்ற, வில்போல் - வில்போல, மேலை - மேலுள்ள, நாளத்து - வீணாதண்டத்தின், நாதம் நண்ணி - நாதத்தினை யடைந்து, எ - று.

(போ - ரை.) ஒன்று இரண்டு இதழாயுள்ள பிரகாசத்தைத்தருகிற கமலங்களை யடைந்து, நேராக உண்மையறிவாகிய தேஜோமயத்தைத் தரிசித்து, மனங்கொண்டு சிறந்த பதுமங்களாறனையும் தரிசித்து, மீட்டும் மேலே பார்க்கச்செய்து, நாண் பூட்டப் பெற்ற வில்போல மேலுள்ள வீணாதண்டத்தின் நாதத்தினை யடைந்து.

(வி - ரை.) சரீரத்தின் மஸ்தக ஸ்த்தானத்தில் ப்ரபாஜ்யோதிர்வர்ணத்தின் ஆயிர விதழ்த் தாமரையின் அகாரபீஜத்தின் த்யாகாங்கத்தின் ப்ரஹ்மமண்டபத்தில் நிஷ்கள லிங்கம் ஆநந்தமாயிருக்கும். தேகத்தின் சிகாஸ்தானத்தில் மஹாஜ்யோதிர்வர்ணத்தின் மூன்றிதழ்த் தாமரையின் உகாரபீஜத்தின் போகாங்கத்தின் சிகாமண்டபத்தில் சூனிய லிங்கம் விப்ராந்திமயமாயிருக்கும். தேகத்தின் சிகாஸ்த்தானத்தில் அகணித ஜ்யோதிர் வர்ணத்தின் ஓரிதழ்த் தாமரையின் மகாரபீஜத்தில் யோகாங்கத்தின் பச்சிம மண்டபத் தில் நிரஞ்சனலிங்கம் நிரந்த நிராமயமாயிருக்கும். மெய்ஞ்ஞான ஜோதி நிலை என்றது மஹாஸ்த்தலத்திலுள்ள நிஷ்கள சூனிய நிரஞ்சன லிங்கங்களை. (சங)

நச்சியே சொக்கி யின்ப நலந்திகழ் களிப்பி னாலே
யுச்சியி னிதழி ரைஞ்ஞூ றுள்ளபங் கயங்க ணோக்கி
மெய்ச்சுவை யமுத தாரை விழமேன்மேல் விடாத ருந்தி
யச்செலா மமிதத் திங்க ளனபெருஞ் சோதி யாகி.

(ப - ரை.) நச்சி - விரும்பி, சொக்கி - லயித்து, இன்பநலம் - சுகாநுபவம், திகழ் - பிரகாசிக்கின்ற, களிப்பினாலே - மகிழ்ச்சியினாலே, உச்சியில் - சிகாஸ்த் தானத்தில், இதழ் ஈரைஞ்ஞூறுள்ள - ஆயிரவிதழுள்ள, பங்கயம்கண் - கமலத்தில் நின்று (நிஷ்கள லிங் கத்தை), நோக்கி - தரிசித்து, மெய் - உண்மையாகிய, சுவை - ருசியுள்ள, அமுததாரை - அமிர்தவொழுக்கு, விழ - விழாநிற்க, மேலே மேலே - மேன்மேலும், விடாது - இடைய றுது, அருந்தி - உண்டு, அச்சு எல்லாம் - உயிர் முழுதும், அமுதம் - அமிர்தகிரணத்தை யுடைய, திங்கள் அன்ன - சந்திரனை நிகர்த்த, பெருஞ்சோதி ஆகி - பேரொளியாகி, எ - று.

(போ - ரை.) விருப்பங்கொண்டு லயித்து, சுகாநுபவம் பிரகாசிக்கின்ற மகிழ்ச்சியி னாலே சிகாஸ்த்தானத்தில் ஆயிரவிதழுள்ள கமலத்தில்நின்று நிஷ்களலிங்கத்தைத்தரிசித்து, உண்மையாகிய ருசியுள்ள அமிர்ததாரையானது விழாநிற்க; மேன்மேலும் இடையறு துண்டு, உயிர்முழுதும் அமிர்தகிரணத்தையுடைய சந்திரனை நிகர்த்த பேரொளியாகி.

(வி - ரை.) ஈண்டு இச்செய்யுட்களைக் கவனிக்க :—

சித்தாந்தசிகாமணி.

அகமுறு சக்க ரங்க ளாறினு முற்ற கஞ்சஞ்
சகமருள் பிரம ஞாதி தானமென் றுன்னி யப்பால்
வகையிதழ் பத்து நூறு மருவுபங் கயம தன்கண்
மிகநிறை விமல விந்து விம்பமொன் றுளது மாதோ.
அத்தட பதியி னுட்ப மகம்புழை யொன்று காண்க
வத்தொளை கயிலை யாக வறிந்தவன் வீற்றி ருந்த
சத்திய ஞான நந்த சங்கரன் றனைப்பா விக்க
வெய்த்தகா ரணங்கட் கெல்லாங் காரண னென்ன வன்றே. (ருச)

இதவிம கிரண காந்தத் தியற்றிய வெழிலார் பாவை
யுதரநன் னொளிநீள் தீப மொத்துதா யுதரத் துள்ளே
சிதைவிலா நிமலா நந்த சிற்பர சமாதி யொன்று
மதியரா யமர்ந்து மூன்றுவருடங்கண் மகிழ்ந்தி ருந்தார்.

(ப - ரை.) இதம் - இதமான, இமகிரணகாந்தத்து - சந்த்ரகாந்தத்தால், இயற்றிய - செய்யப்பட்ட, எழில் ஆர் - அழகுள்ள, பாவை - பிரதிமையின், உதரம்-வயிற்றின், நள்-நடுவே, ஒளி நீள் - பேரொளியையுடைய, தீபம் ஒத்து-தீபம்போன்று, தாய் - தாயாரின், உதரத்து உள்ளே - திருவயிற்றிலே, சிதைவு இல்லா - கெடுதியில்லாத, நிமல ஆநந்த - பரமாநந்த, சிற்பரசமாதி - சிவயோகசமாதி, ஒன்றும் - கூடும்பொருட்டு, மதியர் ஆய் - அறிவுடையராய், அமர்ந்து - வீற்றிருந்து, மூன்று வருடங்கள் - மூன்று வருஷங்கள், மகிழ்ந்திருந்தார் - சந்தோஷித்திருந்தனர். எ - று.

(பொ - ரை.) இதமான சந்த்ரகாந்தத்தாற் செய்யப்பட்ட அழகுள்ள பிரதிமையின் வயிற்றின் நடுவே பேரொளியையுடைய தீபம்போன்று தாயாரின் திருவயிற்றிலே கெடுதியில்லாத பரமாநந்த சிவயோக சமாதி கூடும்பொருட்டு அறிவுடையராய்வீற்றிருந்து மூன்று வருஷங்கள் சந்தோஷித்திருந்தனர்.

(வி - ரை.) இச் செய்யுளினாலும் மேற்போந்த மூன்று செய்யுட்களினாலும், சிவாத்வைத வித்யாபாரங்கதரான ஸ்ரீ நந்தியெம்பெருமானார் மனத்தையும் பிராணனையுமொருமுகப்படுத்திச் சோபித்துக்கொண்டிருக்கும் ஆயிர சூரிய காந்தியினால் பிரகாசிக்கும் பிரணவபீடத்தில் மூர்த்திகரித்திருக்கும் ஜ்யோதிர்லிங்கத்தைத் தியானித்துக்கொண்டு பிரமாநந்தத்திலிருந்தனர் என்பது பெறப்பட்டது. (௪௫)

இருந்தனர் நந்தி யார்தா மினியமா தாம்பை வாடிப்
பொருந்திய சூலின் பாரம் பொறுமையாற் புலம்ப லுற்றாள்
தெரிந்திதென் னென்ன வெல்லாஞ் சிவன்செய லென்னச் செப்பி
யருந்துய ருடனே யத்த னாலயத் தணைந்தி றைஞ்சி.

(ப - ரை.) நந்தியார்தாம் - (இவ்வாறு) நந்திதேவர், இருந்தனர் - வீற்றிருந்தனர், இனிய - இனியராகிய, மாதாம்பை - மாதாம்பையார், வாடி - சோர்ந்து, பொருந்திய - அடைந்த, சூலின் - கர்ப்பத்தின், பாரம் - சுமை, பொறுமையால் - ஆற்றாமையால், புலம்பல் உற்றாள் - புலம்புவாராய், இது என் என்ன - இது என்னகாரியம் என்று, தெரிந்து - அறிந்து, எல்லாம் சிவன்செயல் என்ன - எல்லாம் சிவன்செயலே என்று, செப்பி - சொல்லி, அரு - பொறுத்தற்கரிய, துயருடனே - துக்கத்துடனே, அத்தன் ஆலயத்து - சிவாலயத்தை, அணைந்து - அடைந்து, இறைஞ்சி - (நந்திதேவரை) வணங்கி, எ - று.

(பொ - ரை.) இவ்வாறு நந்திதேவர் வீற்றிருந்தனர், இனியராகிய மாதாம்பையார் சோர்ந்து, அடைந்த கர்ப்பத்தின் சுமை யாற்றாமையால் புலம்புவாராய், இது என்ன காரியம் என்று அறிந்து, எல்லாம் சிவன்செயலேயென்று சொல்லி, பொறுத்தற்கரிய துக்கத்துடனே சிவாலயத்தை யடைந்து நந்திதேவரை வணங்கி. (௪௬)

அனந்தநோன் பனுட்டித் தத்தா லாவதொன் றின்றி நின்றா
ளினைந்துவந் தேத்திப் பெற்ற நேயநற் கருப்ப மேந்தத்
தினங்கழன் றிடும்பொ றுக்குந் திறமிலேன் மூவாண் டாகக்
கனந்தனைப் பரிக்க மாட்டேன் கருணையாற் காப்பா யென்று.

(ப - ரை.) அநந்த நோன்பு - அநேக விரதங்கள், அநுட்டித்தத்தால் - அநுஷ்டித்திருத்தலால், ஆவது ஒன்று இன்றி - கைகூடுவதொன்றுமில்லாது, நின் - உமது, தாள்-திருவடிகளை, நினைந்து - தியானித்து, வந்து ஏத்தி - வந்து துதித்து, பெற்ற-அடைந்த, நேயம்-நேசமாகிய, நல் - சிறந்த, கருப்பம் - கர்ப்பம், ஏந்த - சுமக்க, தினம் கழன்றிடும் - நாள்கள் கழியாநின்றன, பொறுக்கும் - சுமக்கின்ற, திறம் இலேன் - வலிமையில்லாதவளா

னேன், மூ ஆண்டு ஆக - மூன்றுவருடங்களாக, கனம்தனை - சுமையை, பரிக்கமாட்டேன் - தாங்கமாட்டேன், கருணையால் - கிருபையால், காப்பாய் - இரக்ஷிக்கக்கடவீர், என்று - என்று முறையிட்டு, எ - று.

(பொ - ரை.) அநேக விரதங்கள் அநுஷ்டித்திருத்தலால் கைகூடுவதொன்றுமில்லாது உமது திருவடிகளைத் தியானித்து, சந்நிதியில் வந்து துதித்து அடைந்த நேசமாகிய சிறந்த கர்ப்பம் சுமக்க நாள்கள் கழியாநின்றன, சுமக்கின்ற வலிமையில்லாதவளானேன், மூன்று வருஷங்களாகச் சுமையைத் தாங்கமாட்டேன், இரக்ஷிக்கக் கடவீர் என்று முறையிட்டு. (சஎ)

அஞ்சலி செய்து போற்றி யமர்ந்தங்க ணிருந்தெ ழுந்து
விஞ்சவே யஞ்சித் தொஞ்சு மெல்லென வகத்து மேவிப்
பஞ்சணை மிசையி ராவிற் பரமனைப் பரவி நொந்து
துஞ்சுவாள் சொற்ப னத்தோர் தூயசங் கமர்போ லத்தன்.

(ப - ரை.) அஞ்சலிசெய்து - கும்பிட்டு, போற்றி - வணங்கி, அமர்ந்து - பொருந்தி, அங்கண் இருந்து எழுந்து - அவ்விடமிருந்தெழுந்து, விஞ்ச - அதிகமாக, அஞ்சி - பயந்து, தொஞ்சு - தள்ளாட, மெல்லென - மெத்தென, அகத்து மேவி - திருமாளிகையிற சேர்ந்து, பஞ்சணைமிசை - பஞ்சணையின்மீது, இராவில் - இராத்திரியில், பரமனை - சிவபிரானை, பரவி - துதித்து, நொந்து - வருத்தமுற்று, துஞ்சுவாள் - தூங்குவோளது, சொற்பனத்து - கனவில், ஓர் - ஒரு, தூய - பரிசுத்தராகிய, சங்கமர்போல ஜங்கம மூர்த்திகள்போல, அத்தன் - சிவபெருமன், எ - று.

(பொ - ரை.) கும்பிட்டுவணங்கிப் பொருந்தி அவ்விடமிருந்தெழுந்து, அதிகமாகப் பயந்து தள்ளாட மெத்தெனத் திரும்பிவந்து திருமாளிகையிற்சேர்ந்து, பஞ்சணையின் மீது இராத்திரியில் சிவபிரானைத் துதித்து வருத்தமுற்றுத் தூங்குவோளது கனவில் ஒரு பரிசுத்தராகிய ஜங்கமமூர்த்திகள்போல் சிவபெருமான்,

(வி - ரை.) அஞ்சலிசெய்தல் - கைகுவித்தல். ஜங்கமர் - கண்கண்ட தெய்வமாகிய சிவயோகி. (சஅ)

வந்துநின் றுனது மேனி வருத்தமுந் துயரு நீங்கிப்
புந்திநீ மகிழ நாளைப் புதல்வனும் பிறப்ப னுமஞ்
சுந்தர வசவ னென்று சொல்லுவா யிவன்ற னாலே
யிந்தலோ கத்தஞ் ஞான விருளெலா மகலு மென்றார்.

(ப - ரை.) வந்து நின்று - வந்து எதிர் நின்று, உனது - நினது, மேனி - உடம்பின், வருத்தமும் - கஷ்டமும், துயரும் - துன்பமும், நீங்கி - ஒழிந்து, நீ - நீ, புந்திமகிழ - மனமகிழ, நாளை - நாளையத்தினம், புதல்வனும் பிறப்பன் - புத்திரனும் பிறப்பன், நாமம் - அவன் பேர், சுந்தரம் - அழகாகிய, வசவன் என்று சொல்லுவாய் - வசவனென்றே இடக்கடவை, இவன்தன்னாலே - இவனாலே, இந்தலோகத்து - இவ்வுலகத்தில், அஞ்ஞான - அஞ்ஞானமாகிய, இருள் எல்லாம் - இருள்முழுதும், அகலும் - நீங்கிப்போகும், என்றார் - என்று சொல்லியருளினர், எ - று.

(பொ - ரை.) வந்து எதிரே நின்று நினது உடம்பின் கஷ்டமும் துன்பமும் ஒழிந்து நீ மனமகிழ நாளையத்தினம் புத்திரனும் பிறப்பன், அவன் பேர் அழகாகிய வசவனென்றே யிடக்கடவை, இவனாலே இவ்வுலகத்தில் அஞ்ஞானமாகிய விருள்முழுதும் நீங்கிப் போமென்று சொல்லியருளினர். (சகூ)

நித்திரை தெளிந்தெ ழுந்து நேரிழை கேளிர்க் கெல்லா
மித்திற முரைத்து நெஞ்சி னின்பமுற் றிருந்த பின்னர்
மெய்த்திரு நந்தி யார்தம் விமலநெஞ் சகத்திற் சோதி
யத்தம்வைத் தெழுப்பி னாற்போ லறிந்தரன் பணியை யுன்னி.

(ப - ரை.) நித்திரை - தூக்கம், தெளிந்து எழுந்து - விழித்தெழுந்து, நேரிழை - மாதாம்பையார், கேளிர்க்கு எல்லாம் - சுற்றத்தாரெல்லாருக்கும், இ - இந்த, திறம் - செய்தியை, உரைத்து - சொல்லி, நெஞ்சின் - மனத்தில், இன்பம் - மகிழ்ச்சி, உற்றிருந்த - அடைந்திருந்த, பின்னர் - பிறகு, மெய் - உண்மை நிலையையுடைய, திருநந்தியார் - ஸ்ரீ நந்திகேசுரர், தம் - தமது, விமலம் - பரிசுத்தமான, நெஞ்சகத்தில் - மனத்தில், சோதி - ஒளியுருவாகிய சிவபெருமான், அத்தம் வைத்து - திருக்கரம் சாத்தி, எழுப்பினால் போல் - எழுப்பினதுபோல, அறிந்து - (சிவயோக சமாதியினின்றும்) விழித்து, அரன் - சிவபெருமானது, பணியை - கட்டளையை, உன்னி - நினைத்து, எ - று.

(பொ - ரை.) தூக்கம் விழித்தெழுந்து, மாதாம்பையார் சுற்றத்தாரெல்லாருக்கும் இந்தச் செய்தியைச்சொல்லி, மனத்தில் மகிழ்ச்சியடைந்திருந்தபிறகு, உண்மை நிலையை யுடைய ஸ்ரீ நந்திகேசுரர் தமது பரிசுத்தமான மனத்தில் ஒளியுருவாகிய சிவபெருமான் திருக்கரம் சாத்தி எழுப்பினதுபோலச் சிவயோகசமாதியினின்றும் விழித்துச் சிவபெருமானது கட்டளையை நினைத்து.

(வி - ரை.) நேரிழை - அன்மொழித்தொகைக் காரணப்பெயர். அத்தம் - கை. (ருo)

சங்கரன் பதத்தை நோக்கித் தலைமிசைக் கரங்கள் கூப்பி
யங்கனை யுதர நின்று மதோமுகந் தோன்றும் போது
செங்கதி ரனைய நந்தி சித்தத்து நித்தன் றானே
துங்கநற் குருவாய் நின்று சுற்றந்தா யறியா வண்ணம்.

(ப - ரை.) சங்கரன் - சிவபெருமானது, பதத்தை - திருவடிகளை, நோக்கி - நாடி, தலைமிசை - திருமுடியின்மீது, கரங்கள் - கைகளை, கூப்பி - குவித்து, அங்கனை - மாதாம்பையாரின், உதரம் நின்று - திருவயிற்றினின்றும், அதோமுகம் - கீழ் நோக்கிய திருமுகமானது, தோன்றும்போது - உதயமாகும்பொழுது, செம் கதிர் - சூரியனை, அனைய - ஒத்த, நந்தி - நந்திகேசுரரது, சித்தத்து - ஹிருதயகமலத்தில் குக்குமரூபியா யெழுந்தருளியிருந்த, நித்தன்தானே - சிவபெருமானே, துங்கம் - மேன்மைபொருந்திய, நல் - சிறந்த, குரு ஆய் - ஆசாரியராக, நின்று - எதிரே பிரசன்னமாயிருந்து, சுற்றம் - உறவினரும், தாய் - தாயாரும், அறியாவண்ணம் - தெரியாதபடி, எ - று.

(பொ - ரை.) சிவபெருமானது திருவடிகளை நாடித் திருமுடியின்மீது கைகளைக் குவித்து, மாதாம்பையாரின் திருவயிற்றினின்றும் கீழ்நோக்கிய திருமுகமானது உதயமாகும்பொழுது சூரியனையொத்த நந்திகேசுரரது ஹிருதயகமலத்தில் சூக்குமரூபியா யெழுந்தருளியிருந்த சிவபெருமானே மேன்மைபொருந்திய சிறந்த ஆசாரியராக எதிரே பிரசன்னமாயிருந்து உறவினரும் தாயாரும் தெரியாதபடி.

(வி - ரை.) அங்கனை - அங்கநா (வடசொல்), பெண்ணென்பது பொருள். அதோமுகம் - தலைகீழாதல். சகல பிரமாண்ட மண்டலங்களும் நாசமாயினும் சிவபெருமான் நாசமடையாதவ ராதலால் நித்தன் என்றதாயிற்று. சங்கரன் - இன்பத்தைச் செய்பவன். ஈண்டு இச்செய்யுளைக் கவனிக்க:— (ருக)

சித்தாந்தசிகாமணி.

உரைப்பதென் பலமாற் றங்க ளுலகுதித் தொடுங்கும் வண்ணந்
தரித்திடு மிடம தாகுஞ் சச்சிதா நந்த மேனிப்
பரப்பிர மந்தா னேகாண் பரசிவ னுமங் கொண்டே
தெரிப்பது மிலிங்க மென்று செப்புறப் பட்ட தன்றே.

நந்திக ளங்க லிங்க நலம்பெறத் தரித்த பின்ன
ரந்தமெய் யிலிங்கங் கண்ட வன்னையு மருகு ளோரு
மிந்தநம் பாலன் றன்மே லிலிங்கமெவ் வாற்றி னாலே
வந்ததோ வச்சேய் நம்பால் வந்ததென் றுளம கிழ்ந்தார்.

(ப - ரை.) நந்திகள் - நந்திதேவர், நலம்பெற - சித்தியடைதற்சேதுவாக, அங்கம் - திருமேனியில், லிங்கம் - சிவலிங்கத்தை, தரித்த - தாரணஞ்செய்தருளிய, பின்னர் - பிறகு, அந்த - அந்தத் திவ்யமான, மெய்யில் - திருமேனியில், இலிங்கம் - சிவலிங்கத்தை, கண்ட - பார்த்த, அன்னையும் - திருத்தாயாரும், அருகு - சமீபத்தில், உள்ளோரும் - இருந்தவர்களும், இந்த - இப்போது உதயமான, நம் - நமது, பாலன்தன் - குழந்தையின், மேல் - மீது, இலிங்கம் - சிவலிங்கமானது, எ ஆற்றினால் - எவ்விதத்தினாலே, வந்ததோ - பிரசன்னமாயிற்றோ, அ - அந்த, சேய் - குழந்தையும், நம்பால் - நம்மிடத்து, வந்தது - பிரசன்னமாயிற்று, என்று - என்று நிச்சயித்து, உள்ளம் - மனத்தில், மகிழ்ந்தார் - சந்தோஷித்தார்கள், எ-று.

(பொ - ரை.) நந்திதேவர் சித்தியடைதற் சேதுவாகத் திருமேனியில் சிவலிங்கத்தைத் தாரணஞ்செய்தருளிய பிறகு, அந்தத் திவ்யமான திருமேனியில் சிவலிங்கத்தைப் பார்த்த திருத்தாயாரும் சமீபத்திலிருந்தவர்களும் இப்போது உதயமான இந்த நமது குழந்தையின்மீது சிவலிங்கமானது எவ்விதத்திலே பிரசன்னமாயிற்றோ? அந்தக் குழந்தையும் அவ்விதமாகவே நம்மிடத்துப் பிரசன்னமாயிற்றென்று நிச்சயித்து மனத்தில் சந்தோஷித்தார்கள்.

(வி - ரை) அங்கலிங்கம் தரித்தல் - விதிப்படி ஸ்தூலசரீரத்தில் இஷ்டலிங்கமும் சூக்குமசரீரத்தில் ப்ராணலிங்கமும் காரணசரீரத்தில் பாவலிங்கமுமாக மூவிடங்களில் லிங்கதாரணஞ் செய்தலாம். இதன் விரிவைச் சித்தாந்தசிகாமணியிற் காண்க. (ருஉ)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொருந்து வேணியு முடிமிசை நாப்பண் பொற்பி லிங்கமும் புண்டர
முதலுந், திருந்து கண்டிகை மாலைசேர் மார்புஞ் செய்ய தாம்பிரக் குண்டலங்
காதும், பரந்த தோண்மிசை யோகபட் டிகையும் பாணி பற்றிய தண்டமுங்
குடையு, நெருங்கு மாணிக்கக் கம்பள வுடையு நிலவு மூரலு நீண்டதா
டியுமாய்.

(ப - ரை.) பொருந்தும் - ஆசாரிய திருக்கோலத்துக்குரிய, வேணியும் - ஜடாபாரமும், முடி - திருமுடியின், மிசை - மீது, நாப்பண் - நடுவே தாரணஞ்செய்த, பொற்பு - அழகாகிய, இலிங்கமும் - சிவலிங்கமும், புண்டரம் - (உத்தூளனத்தின்மேரில்) த்ரிபுண்டர மணிந்த, நுதலும் - திருநெற்றியும், திருந்த - ஒழுங்காயுள்ள, கண்டிகைமாலை - உருத்திராக்க மாலைகள், சேர் - தாரணஞ் செய்யப்பெற்ற, மார்பும் - திருமார்பும், செய்ய - சிவந்த, தாம்பிரம் - தாம்பிரத்தாற்செய்த, குண்டலம் - குண்டலங்களையுடைய, காதும் - திருச்செவிகளும், பரந்த - விசாலமான, தோள்மிசை - திருப்புயத்தின்மீது, யோகபட்டிகையும் - யோகபட்டையும், பாணி - திருக்கரத்தில், பற்றிய - பிடித்த, தண்டமும் - யோகதண்டமும், குடையும் - குடையும், நெருங்கு - திருமேனி முழுதும் நிறையப்பெற்ற, மாணிக்கம் கம்பளம் - ரத்நகம்பளியினால் செய்த, உடையும் - செம்புஞ்சொக்காயும், நிலவும் - பிரகாசிக்கின்ற, மூரலும் - புன்சிரிப்பும், நீண்ட - நெடிய, தாடியும் - தாடியும், ஆய் - ஆகப்பெற்ற குருமூர்த்தங்கொண்டு, எ - று.

(பொ - ரை.) ஆசாரிய திருக்கோலத்துக்குரிய ஜடாபாரமும் திருமுடியின்மீது நடுவே தாரணஞ்செய்த அழகாகிய சிவலிங்கமும் உத்தூளனத்தின்மேரில் த்ரிபுண்டர

மணிந்த திருநெற்றியும் ஒழுங்காயுள்ள உருத்திராக்கமாலைகள் தாரணஞ் செய்யப்பெற்ற திருமார்பும் சிவந்த தாம்பிரத்தாற்செய்த குண்டலங்களையுடைய திருச்செவிகளும் விசாலமான திருப்புயத்தின்மீது யோகபட்டையும் திருக்கரத்தில் பிடித்த யோகதண்டமும் குடையும் திருமேனி முழுதும் நிறையப்பெற்ற ரத்நகம்பளியினாற்செய்த நெடுஞ்சொக்காயும் பிரகாசிக்கின்ற புன்சிரிப்பும் நெடிய தாடியுமாகப்பெற்ற குருமூர்த்தங்கொண்டு.

காண நின்றனர் காதன்மா தாம்பை கையி ரண்டினாற் கசிந்துகும் பிடவே
கேணி லாநுத லாய்நம திடமுங் கிளருங் கூடல சங்கம மதனுண்
மாண தாகயா மனந்தநா ளிருப்போ மன்னு கூடல சங்கம னம்பேர்
பேணி நீசெய்த தவத்தினு லுலகம் பிறங்கயா மிடும் பணிவிடை யதனால்.

(ப - ரை.) காண நின்றனர் - (முன் மறைந்துநின்று லிங்கதாரணஞ்செய்த சிவபெருமானாகிய ஜங்கமமூர்த்தியே யாவரும்) காணத்தக்கவராய் ப்ரத்யக்ஷமானார், காதல் - (அவரைத் தரிசனஞ்செய்தவராயும்) அன்பு பூண்டவராயுமுள்ள, மாதாம்பை - திருத்தாயாராகிய மாதாம்பையார், கசிந்து - மனமுருகி, கை இரண்டினால் - தமது இரண்டு திருக்கரங்களால், கும்பிட - நமஸ்கரித்தலும் (ஜங்கமமூர்த்தியானவர்), நிலா - (அவ்வம்மையாரை நோக்கி) பிறைபோலும், நுதலாய் - நெற்றியை யுடையவளே, நமது - எமது, இடமும் - வாஸஸ்தாநமும், கிளரும் - சொல்லப்பட்ட, கூடல சங்கமம் - கூடலசங்கமமென்னும் க்ஷேத்ரம், அதன் உள் - அதில், மாண் அது ஆக - மாட்சிமையுடையதாக, யாம் - நாம், அனந்தம் நாள் - நெடுநாள், இருப்போம் - தங்கியிருப்போம், நம் - எமது, பேர் - பெயர், மன்னு - நிலைபெற்ற, கூடல சங்கமன் - கூடலசங்கமேசன், நீ - நீ, பேணி - விரும்பி, செய்த தவத்தினால் - நெடுநாள் வருந்தி பண்ணின தவத்தினாலும், உலகம் - பூலோகம், பிறங்க - விளங்கும்படி, யாம் - நாம், இடும் - (சிவசமயமோங்கும்படி) கட்டளையிடுகிற, பணிவிடையதனால் - பணிவிடையினாலும், எ - று.

(பொ - ரை.) முன் மறைந்து நின்று லிங்கதாரணஞ்செய்த சிவபெருமானாகிய ஜங்கமமூர்த்தியே யாவரும் காணத்தக்கவராய் ப்ரத்யக்ஷமானார், அவரைத் தரிசனஞ்செய்தவராயும் அன்புபூண்டவராயுமுள்ள திருத்தாயாராகிய மாதாம்பையார் மனமுருகித் தமது இரண்டு திருக்கரங்களால் நமஸ்கரித்தலும், ஜங்கமமூர்த்தியானவர் அவ்வம்மையாரைநோக்கி, பிறைபோலும் நெற்றியையுடையவளே! எமது வாசஸ்தாநமும் சொல்லப்பட்ட கூடலசங்கமமென்னும் க்ஷேத்ரம், அதில் மாட்சிமையுடையதாக நாம் நெடுநாள் தங்கியிருப்போம், எமதுபெயர் நிலைபெற்ற கூடலசங்கமேசன், நீ விரும்பி நெடுநாள் வருந்திப் பண்ணின தவத்தினாலும் பூலோகம் விளங்கும்படி நாம் சிவசமயமோங்கும்படிக் கட்டளையிடுகிற பணிவிடையினாலும்.

(வி - ரை.) கூடலசங்கமமென்னும் க்ஷேத்ரமானது பிஜாபூர்ஜில்லா பாகவாடி தாலூகாவைச் சேர்ந்த கப்படியென்னுமூரிலுள்ளது. (ருஎ)

நின்னி டத்தினிற் பிறந்தன னிவன்மே னேச நாங்கொடு நிமலலிங் கமங்க
மன்னயா மின்று செய்தன மிவற்கு மருவு லிங்கநன் னிவேதன மல்லா
தென்ன நீகொடுத் தாலுநம் மாணை யென்றி யம்பிமின் னெனமறைந் ததற்பின்
பன்ன காரனென் றனைவருந் தெளிந்து பரவி யத்திசை பார்த்தனர் பணிந்தார்.

(ப - ரை.) நின் இடத்தினில் - உன்னிடத்தில், பிறந்தனன் - (இப்புத்திரன்) தோன்றினான், இவன்மேல் - (ஆதலால்) இவன்மீது, நாம் - யாம், நேசம்கொடு - வைத்த பக்ஷத்தால், நிமலம் - பரிசுத்தமாகிய, லிங்கம் - சிவலிங்கமானது, அங்கம் - திருமேனியில், மன்ன - நிலைபெற, யாம் - நாமே, இன்று - இப்போது, செய்தனம் - தாரணஞ்செய்தோம், இவற்கு - இந்தப் புத்திரனுக்கு, மருவு - தாரணஞ்செய்திருக்கிற, நல் - நன்மையை

யுடைய, லிங்கநிவேதநமல்லாது - சிவலிங்கார்ப்பிதமான பால் முதலான வுணவுகளல்லாமல், நீ - நீ, என்ன கொடுத்தாலும் - யாது தரினும் (அதற்குத்தடை), நம் - எமது, ஆணை என்று - ஆணையென்று, இயம்பி - சட்டமையிட்டருளி, மின் என - மின்னல்மறைந்ததுபோல, மறைந்ததற்பின் - மறைந்தபிறகு, பன்னகாரன் என்று - இவ்வண்ணம் நமக்கருளிய ஜங்கமமூர்த்தியானவர் சிவபெருமானேயென்று நிச்சயித்து, அனைவரும் - அங்கிருந்தவர் யாவரும் (பிரமித்துச் சிறிது நாழிகை சென்று), தெளிந்து - தெளிவடைந்து, அ - அந்த, திசை - திக்கை, பார்த்தனர் - நோக்கி, பரவி - துதித்து, பணிந்தார் - வணங்கினார்கள், எ - று.

(போ - ரை.) உன்னிடத்தில் இப்புத்திரன் தோன்றினுதலால், இவன்மீது யாம் வைத்த பக்ஷத்தால் பரிசுத்தமாகிய சிவலிங்கமானது திருமேனியில் நிலைபெற நாமே இப்போது தாரணஞ்செய்தோம், இந்தப் புத்திரனுக்குத் தாரணஞ் செய்திருக்கிற நன்மையையுடைய சிவலிங்கார்ப்பிதமான பால்முதலான வுணவுகளல்லாமல் நீ யாது தரினும் அதற்குத்தடை எமதாணையென்று கட்டளையிட்டருளி மின்னல் மறைந்ததுபோல மறைந்த பிறகு, இவ்வண்ணம் நமக்கருளிய ஜங்கம மூர்த்தியானவர் சிவபெருமானேயென்று நிச்சயித்து, அங்கிருந்தவர் யாவரும் பிரமித்துச் சிறிது நாழிகைசென்றுத் தெளிவடைந்து அந்தத் திக்கை நோக்கித் துதித்து வணங்கினார்கள்.

(வி - ரை.) பன்னகாரன் — பன்னகம் - பாம்பாகிய, ஆரன் - ஆரத்தையுடையவன். என்னகொடுத்தாலும் நம் ஆணையென்றதனால் இஷ்டலிங்க ப்ரஸாதமல்லாத இதரமான பதார்த்தங்களை யாதேனும் எக்காலத்தேனும் உண்பிக்கக் கூடாதென்பது பெறப்பட்டது.

குலவு மாயிரங் கோடிமார்த் தாண்டக் குழுவ தன்னநற் குழந்தைதன் னுருவா
லலகி லாதவஞ் ஞானமாந் திமிர மற்ற தவ்வயிற் றாதையா ரணைந்து
விலகி லாதநல் லின்பமே விடலால் விரும்பி நோக்கியெம் விமலனு ரடியார்
பலரு நீடவைத் தணிதிரு நீறும் பளித மாரடைக் காயிவை யிருத்தி.

(ப - ரை.) குலவும் - பிரகாசிக்கின்ற, ஆயிரங்கோடி - ஆயிரங்கோடிக் கணக்கான, மார்த்தாண்டன் - சூரியரது, குழு - கூட்டம், அன்ன - அந்தகாரத்தை யெல்லாம் ஒழித்தல் போல, நல் - பிரகாசிக்கின்ற, குழந்தைதன் உருவால் - குழந்தையின் திருவுருவத்தால், அலகு இல்லாத - அளவற்ற, அஞ்ஞானம் ஆம் திமிரம் - அஞ்ஞானந்தகாரம் எல்லாம், அற்றது - ஒழிந்தது, அவ்வயின் - அவ்விடத்து, தாதையார் - தந்தையாராகிய மாதிராசையரும், அணைந்து - வந்து, விலகு இல்லாத - நீங்காத, நல் இன்பம் - பரமானந்தம், மேவிடலால் - அதிகரித்தலால், விரும்பி நோக்கி - ஆசையுடன் பார்த்து, எம் - நமது, விமலனுர் அடியார் - சிவபக்தர், பலரும் - பலரையும், நீட - வெகுநேரம், வைத்து - இருத்தி, அணி - தரித்தற்குரிய, திரு நீறும் - திருவெண்ணீறும், பளிதம் ஆர் - கற்பூர மணம் நிறைந்த, அடைக்காய் - தாம்பூலமும், இவை - ஆகிய யிவற்றை, இருத்தி - அவர்கள் முன்னர் வைத்து, எ - று.

(போ - ரை.) பிரகாசிக்கின்ற ஆயிரங்கோடிக் கணக்கான சூரியரது கூட்டம் அந்தகாரத்தையெல்லா மொழித்தல்போலப் பிரகாசிக்கின்ற குழந்தையின் திருவுருவத்தால் அளவற்ற அஞ்ஞானந்தகாரமெல்லாம் ஒழிந்தது, அவ்விடத்துத் தந்தையாராகிய மாதிராசையரும் வந்து நீங்காத பரமானந்தம் அதிகரித்தலால் ஆசையுடன்பார்த்து நமது சிவபக்தர் பலரையும் வெகுநேரமிருத்தித் தரித்தற்குரிய திருவெண்ணீறும் கற்பூரமணம் நிறைந்த தாம்பூலமுமாகிய இவற்றை அவர்கள் முன்னர்வைத்துபசரித்தது.

(வி - ரை.) பளிதம் ஆர் அடை - கற்பூர இலை (இது ஒருவகையான வெற்றிலை.) ஈண்டு இச்செய்யுட்களைக் கவனிக்க:— (ருகூ)

பிரபுலிங்கலீலை.

எங்குருநந்தி தோன்றுநாட் புதுமை யென்சொல் வாம்கண்டு முட்டென்னும்
வெங்குண வமண ருளத்தெரி மழுவோன் வேடங்கண் டஞ்சலி செய்ய
வங்கொரு நேயம் பிறந்தது திருமா லடியவ ருளத்தினி லெங்கள்
சங்கர னிறைவ னெனவொரு ஞானஞ் சார்ந்தது தமையறி யாமல்.

கொலைகளை வழுக்கா றவாவொடு வெகுளி கொடுஞ்சொல்பொய் பயனில கூறல்
நிலையழீஇ யொருவன் செய்நன்றி மறந்த நிந்தனை வஞ்சனை பிறர்தஞ்
சிலைநுதன் மடவார்க் கருதலென் றினைய தீமைக ளியாவும்போ யினவா
னலமலி தரும மூர்த்தியாகிய நன்னந்தி வானவன் புவிவருநாள்.

அவர்ப தாம்புய நீரினான் மைந்த னரிய மேனியை யாட்டிநீ றணிந்தாங்
கெவரு மேத்தநல் வாச்சியந் தழங்க விதத்த கோசிகத் தினிதுறச் சேர்த்திச்
சிவபி ரான்முன மியம்பிய பேராற் செப்பி நல்வச வேசுர னென்று
நவம தாமணித் தொட்டின்மேற் சயன நண்ணுவித் துறநலங் கொளு நாளின்.

(ப - ரை.) அவர் - அச்சிவபக்தரது, பத அம்புயம் - ஸ்ரீ பாத பங்கஜத்தின், நீரினால் - தீர்த்தத்தினால், மைந்தன் - புதல்வனது, அரிய - அருமையாகிய, மேனியை - திருமேனியை, ஆட்டி - ஸ்நாநஞ்செய்வித்து, நீறு - அவர்கள் பிரசாதித்த திருவெண்ணீற்றை, அணிந்து - தரிப்பித்து, ஆங்கு - அப்பொழுதே, எவரும் - யாவரும், ஏத்த - துதிக்க, நல் - இனிய, வாச்சியம் - வாத்தியங்கள், தழங்க - முழங்காநிற்க, இதத்த - மேன்மையாகிய, கோசிகம் - வெண்பட்டாடையை, இனிது உற - சந்தோஷமாக, சேர்த்தி - உடுத்தி, சிவபிரான் - சிவபெருமான், முன்னம் - முன்னர், இயம்பிய - கட்டளையிட்டருளிய, பேரால் - பெயரினால், நல் - நன்மையையுடைய, வசவேசுரன் என்று - வசவேசுரனென்று, செப்பி - நாமகரணஞ்செய்து, நவம் அது ஆம் - புதியதாகிய, மணித்தொட்டின்மேல் - நவரத்நகசிதமான தொட்டிலின்மீது, சயனம் நண்ணுவித்து - படுக்கையி லெழுந்தருளப்பண்ணி, உற - மிகுதியாக, நலம் கொளும் நாளின் - இன்பமனுபவிக்குங் காலத்தில்.

(பொ - ரை.) அச் சிவபக்தரது பாதோதகத்தினால் புதல்வனது அருமையாகிய திருமேனியை ஸ்நாநஞ்செய்வித்து, அவர்கள் பிரசாதித்த திருவெண்ணீற்றைத் தரிப்பித்து, அப்போதே யாவரும் துதிக்க, இனிய வாத்தியங்கள் முழங்காநிற்க, மேன்மையாகிய வெண்பட்டாடையைச் சந்தோஷமாக உடுத்தி, சிவபெருமான் முன்னே கட்டளையிட்டருளிய பெயரினால் ஸ்ரீ வசவேசுரன் என்றழைத்து, புதியதாகிய நவரத்நகசிதமான தொட்டிலின்மீது படுக்கையி லெழுந்தருளப்பண்ணி மிகுதியாக இன்பமனுபவிக்குங் காலத்தில்.

(வி - ரை.) அம்புயம் பங்கஜம் என்பன தாமரையின் பரியாய நாமங்கள். (௬௭)

பின்னர் நின்றிடு மிருளினைக் கெடாத பெருகு சோதியென் றென்றுதம்
மனத்தான், முன்னெ ரிந்திடும் விளக்கினைப் பார்த்து முன்னி முன்னியே
சிரித்துமெம் மத்த, னன்னி வேதன மன்றியா னருந்தே னகிலெனத் தவிர்ந்
திருந் துகைகாட்ட, வன்ன மென்முலை யருந்தியு மப்பா லணைந்த கையென
வக்கரஞ் சுவைத்தும்.

(ப - ரை.) பின்னர் நின்றிடும் - (வசவேசுரரும் சாமானியமான குழந்தைபோல) தன் பின்னேயிருக்கிற, இருளினை - இருட்டை, கெடாத - அழிக்காத, பெருகு சோதி என்று - மிக்க வொளியாமதன்று, முன் எரிந்திடும் - எதிரே எரியும், விளக்கினை - தீபத்தை, பார்த்து - நோக்கி, தம் - தமது, மனத்தால் - மனத்தினால், முன்னி முன்னியே - பலகாலும் ஆலோசித்து, சிரித்தும் - நகைத்தும், எம் - நமது, அத்தன் - சிவபெருமானது, நல் - சிறந்த, நிவேதநம் அன்றி - நைவேத்தியமே யல்லாமல், யான் - நான், மகில்

அருந்தேன் - முலையுண்ணேனென், என - என்று, தவிர்ந்து இருந்து - முலையுண்ணுதிருந்து, கைகாட்ட - கைகாட்டாநிற்கவும், வன்னம் - அழகிய, மெல் - மிருதுவாகிய, முலை அருந்தியும் - முலையுண்டும், அ - அந்த, பால் - முலைப்பால், அணைந்த - பட்ட, கை என - கையென்று, அ - அந்த, காம் - திருக்கரத்தை, சுவைத்தும் - சுவைபார்த்தும், எ - று.

(பொ - ரை.) தன்பின்னேயிருக்கிற இருட்டை யழிக்காத மிக்க வொளியாது? என்று எதிரே யெரியும் தீபத்தை நோக்கித் தமது மனத்தினுல் பலகாலும் ஆலோசித்து நகைத்தும், நமது சிவபெருமானது நல்ல நைவேத்யமே யல்லாமல் நான் முலையுண்ணே னென்று முலையுண்ணுதிருந்து கைகாட்டா நிற்கவும், பின்னர் அழகிய மிருதுவாகிய முலை யுண்டும் அந்த முலைப்பால்பட்ட திருக்கரமென்று அந்தத் திருக்கரத்தைச் சுவைபார்த்தும்.

(வி - ரை.) எம் அத்தன் நன்னிவேதனம் என்றது இஷ்டலிங்கப் பிரசாதத்தை. நகில் - முலை (ஆகுபெயர்.) (௫௮)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நெஞ்சினுட் டம்பி ரானை நினைந்தெலா மறந்தா ராகி
யஞ்சவாம் பொறிய சங்கா தாலியா தமர்ந்தி ருந்து
மிஞ்சிய பிறப்பிற் றள்ளும் வினைகளைத் துரப்பா ராகித்
தஞ்சிறு கரமி ரண்டுஞ் சடக்கென வுதறி யார்த்தும்.

(ப - ரை.) நெஞ்சினுள் - தமது மனத்தினுள்ளே, தம்பிரானை - சிவபெருமானை, நினைந்து - தியானித்து, எல்லாம் - சராசரப் பொருள் எல்லாவற்றையும், மறந்தார் ஆகி - மறந்தவராகி, அஞ்சு - சப்தாதி ஐந்து விஷயங்களை, அவாம் - விரும்புகிற, பொறி - ஐம்பொறிகளும், அசங்காது - அசையாமலும், ஆலியாது - களிக்காமலும், அமர்ந்திருந்து - அமைதியாயிருந்து, மிஞ்சிய - அதிகமான, பிறப்பில் - பிறவிகளில், தள்ளும் - தள்ளுகிற, வினைகளை - நல்வினை தீவினைகளை, துரப்பார் ஆகி - ஓட்டுவாராகி, தம் - தமது, சிறுகரம் இரண்டும் - சிறிய இரண்டு திருக்கைகளையும், சடக்கென - சடக்கென்று, உதறி - உதறி, ஆர்த்தும் - ஆரவாரித்தும், எ - று.

(பொ - ரை.) தமது மனத்தினுள்ளே சிவபெருமானைத் தியானித்து, சராசரப்பொருள் எல்லாவற்றையும் மறந்தவராகி, சப்தாதி ஐந்து விஷயங்களை விரும்புகிற மெய் முதலிய ஐம்பொறிகளும் அசையாமலும் களிக்காமலும் சித்தம் ஒரு முகப்பட அமர்ந்திருந்து, அதிகமான பிறவிகளில் தள்ளுகிற இருவினைகளை யோட்டுவாராகி, தமது சிறு திருக்கைகளிரண்டினையும் சடக்கென்று உதறி ஆரவாரித்தும்.

(வி - ரை.) ஐந்து விஷயங்கள் - சப்தஸ்பர்சரூபரஸகந்தங்கள். ஐம்பொறிகள் - மெய் வாய் கண் மூக்கு செவிகள். அவாவுதல் - இச்சித்தல். வினையென்றது நல்வினை தீவினையென்னும் இரண்டையும் குறித்தது. இவை பிறவிக்குக் காரணமாகையால் பொன் விலங்கும் இரும்பு விலங்கும் போறலாமென்க. சடக்கு - விரைவு என்னும் பொருள்படும்.

ஒத்தபா சத்தைத் தாளா லுதைத்தென வுதறி யார்த்து
மெய்த்தமுன் சைவஞ் சென்னி யெடுப்பபோற் சிரமெ டுத்து
மத்தனார் பணியை யாமிங் கமர்ந்தறத் தாழ்த்தே மென்று
சுத்தமா நினைவு கொண்டு துணுக்கெனத் துடித்துக் கொண்டு.

(ப - ரை.) ஒத்த - ஜனனத்திற்குப் பொருத்தமாகிய, பாசத்தை - வினைக்கயிற்றை, தாளால் - திருவடிகளால், உதைத்து என்ன - உதைத்தாற்போல, உதறி - திருவடிகளை உதறி, ஆர்த்தும் - ஆரவாரித்தும், மெய்த்த - உண்மையான, முன் - பழமையதாகிய, சைவம் - வீரசைவமானது, சென்னி - (முன்னடங்கியிருந்து இப்போது) தலை, எடுப்ப

போல் - எடுப்பதுபோல, சிரம் எடுத்தும் - தலைதூக்கியும், அத்தனுர் - சிவபெருமானது, பணியை - பணிவிடையை, யாம் - நாம், இங்கு - இவ்விடம், அமர்ந்து - தங்கி, அற - மிகவும், தாழ்த்தேம் என்று - தாமதித்தோமே என்று, சுத்தம் ஆம் நினைவுகொண்டு - மெய்யறிவுடன், துனுக்கென - அதிக விரைவாக, துடித்துக்கொண்டு - திருவுள்ளம் பதறிக்கொண்டும், எ - று.

(பொ - ரை.) ஜனனத்திற்குப் பொருத்தமாகிய விளைக்கயிற்றைத் திருவடிகளால் உதைத்தாற்போல உதறி ஆரவாரித்தும், உண்மையான பழமையதாகிய வீரசைவமானது முன்னடங்கியிருந்து இப்போது தலையெடுப்பதுபோல தலைதூக்கியும், சிவபெருமானது பணிவிடையை நாம் இவ்விடம் தங்கி மிகவும் தாமதித்தோமேயென்று மெய்யறிவுடன் அதிக விரைவாக திருவுள்ளம் பதறிக்கொண்டும்.

(வி - ரை.) சுத்தமாம் நினைவு - சிவஞானம் எனினுமாம். (சு0)

துங்கமா கயிலை காணுத் துயரெனக் கலுழ்வா ராயு
மங்கமேற் சிவலிங் கங்கண் டன்பினு லிப்பா ராயு
மெங்கடம் பிரானு ரன்பர்க் கிறைஞ்சுவா ராய்க்க விழ்ந்தும்
பங்கயா தனத்தி ருக்கும் படியராய்ப் படிந்தி ருந்தும்.

(ப - ரை.) துங்கம் - பரிசுத்தமாகிய, மா - பெரிய, கயிலை - திருக்கைலாயத்தை, காணு - காணுமையாலுளதாகிய, துயர் என - துன்பம்போல, கலுழ்வார் ஆயும் - அழுபவராகியும், அங்கம் மேல் - தம் திருமேனியில், சிவலிங்கம் - (பிரகாசிக்கும்) இஷ்ட லிங்க மூர்த்தியை, கண்டு - பார்த்து, அன்பின் - அன்பினுல், ஆலிப்பார் ஆயும் - களிப்பவராகியும், எங்கள் - எம்முடைய, தம்பிரானுர் அன்பர்க்கு - சிவபக்தரை, இறைஞ்சுவார் ஆய் - வணங்குபவர்போன்று, கவிழ்ந்தும் - குப்புறவிழுந்தும், பங்கம் ஆதனத்து - பத்மாஸநத்தில், இருக்கும்படியர் ஆய் - இருப்பவர்போன்று, படிந்திருந்தும் - (அசைவற்றுத் தறிபோல) உட்கார்ந்தும், எ - று.

(பொ - ரை.) பரிசுத்தமாகிய பெரிய திருக்கைலாயத்தைக் காணுமையாலுளதாகிய துன்பம்போல அழுபவராகியும், தம் திருமேனியில் பிரகாசிக்கும் இஷ்டலிங்கமூர்த்தியைப் பார்த்து அன்பினுல் களிப்பவராகியும், சிவபக்தரைவணங்குபவர்போன்று குப்புறவிழுந்தும், பத்மாஸநத்திலிருப்பவர்போன்று அசைவற்றுத்தறிபோல் உட்கார்ந்தும்.

(வி - ரை.) அன்பர்க்கு - உருபுமயக்கம். பத்மாஸநம் - தாமரைஆஸநத்தொன்று (அது இருதொடைமேலும் இரண்டுள்ளங்காலையும் மாறித்தோன்றவைத்தல்.) (சுக)

உத்தம நந்தி நானென் றுணர்த்துவா ராய்த்த வழ்ந்து
நித்தமாஞ் சைவ நீதி நிறுத்துவா ராக நின்று
மத்தனன் மார்க்க மீதென் றறிவிப்பா ரெனந டந்து
மொத்ததாய் தந்தை யின்ப முறும்படி மழலை யாயும்.

(ப - ரை.) உத்தமம் - சிரேஷ்டமான, நந்தி - நந்திதேசுரர் என்பவர், நான் என்று - யானென்று, உணர்த்துவார் ஆய் - அறிவிப்பவர்போல, தவழ்ந்தும் - முற்றத்தில் தவழ்ந்துபோயும், நித்தம் ஆம் - சாசுவதமாகிய, சைவநீதி - வீரசைவாசாரத்தை, நிறுத்துவார் ஆக - நிலைபெறச்செய்பவர்போல, நின்றும் - எழுந்துநின்றும், அத்தன் - சிவபெருமானது, நல் மார்க்கம் - சன்மார்க்கம், ஈது என்று - இதுதானென்று, அறிவிப்பார் என - தெரிவிப்பவர்போல, நடந்தும் - அங்குமிங்கும் திரிந்தும், ஒத்த - இணக்கமான, தாய் தந்தை - தாய் தந்தையர், இன்பம் உறும்படி - மனமகிழும்படி, மழலை ஆயும் - சைவபரிபாஷைகளை மழலைச்சொற்களாகப்பேசியும், எ - று.

(போ - ரை.) சிரேஷ்டரான நந்திகேசுரரென்பவர் யானென்று அறிவிப்பவர் போல முற்றத்தில் தவழ்ந்துபோயும், சாசுவதமாகிய வீரசைவாசாரத்தை நிலைபெறச் செய்பவர்போல எழுந்து நின்றும், சிவபெருமானது சன்மார்க்கம் இதுதானென்று தெரிவிப்பவர்போல அங்குமிங்குந் திரிந்தும், இணக்கமான தாய் தந்தையர் மனமகிழும்படி சைவபரிபாஷைகளை மழலைச்சொற்களாகப்பேசியும். (௯௨)

(வி - ரை.) தவழ்தல் - ஊர்தல். மழலை - நிரம்பாமென்சொல்.

நிதிக்கிரி வில்லான் போல நித்தனி லென்ன வோங்கிக்
குதிப்பவ ராய்க்கு தித்துங் கூறுசொல் லான தெல்லாம்
விதிக்கரி யார்க்கே யாக்கி விமலனல் லன்பர்க் கண்டாற்
றுதிப்புட னோடி யோடித் தொழுவதே தொழில தாயும்.

(ப - ரை.) நிதிகிரி - பொன்மலையை, வில்லான்போல-வில்லாக வுடையவராகிய சிவபெருமான்போல, நித்தன் - அழியாதிருப்பவர், இல் என்ன - யாவரும் இல்லையென்று, ஓங்கி - மேலெழும்பி, குதிப்பவர் ஆய் - குதிப்பவர்போன்று, குதித்தும் - வீதிகளில் குதித்து புழுதியடியும், கூறும் - சொல்லப்படுகிற, சொல் ஆனது எல்லாம் - சொற்களானவை யெல்லாம், விதிக்கு - பிரமனுக்கு, அரியார்க்கே - அரியவராகிய சிவபெருமானுக்கே, ஆக்கி - சமர்ப்பித்தும், விமலன் - சிவபெருமானது, நல் - நல்ல, அன்பர் - பக்தரை, கண்டால் - தரிசித்தால், துதிப்புடன் - தோத்திரத்துடனே, ஓடி ஓடி - பலகாலும் விரைந்து சென்று, தொழுவதே - (அவர்களை) வணங்குவதாகிய திருவிளையாடலையே, தொழில் ஆயும் - தொழிலாகக்கொண்டும், எ - று.

(போ - ரை.) பொன்மலையை வில்லாகவுடையவராகிய சிவபெருமான்போல அழியாதிருப்பவர் யாரும் இல்லையென்று மேலெழும்பிக் குதிப்பவர்போன்று வீதிகளில் குதித்து புழுதிபாடியும், சொல்லப்படுகிற சொற்களானவையெல்லாம் பிரமனுக்கு அரியவராகிய சிவபெருமானுக்கே சமர்ப்பித்தும், சிவபெருமானது நல்ல பக்தரைத்தரிசித்தால் தோத்திரத்துடனே பலகாலும் சென்று அவர்களை வணங்குவதாகிய திருவிளையாடலையே தொழிலாகக் கொண்டும்.

(வி - ரை.) நிதி - பொன். நிதிகிரி - மேருமலை. தொழிலதாயும் என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. திருவாக்கினின்றும் வருகிற திருமொழிகளெல்லாம் சிவசம்பந்தமான தோத்திரரூபமாகும் சொற்களானவையிருைல் கூறுசொல்லானதெல்லாம் விதிக்கரியார்க்கே யாக்கியென்றார். ஓடி ஓடி - விரைவைக்குறித்தது. (௯௩)

இப்படி வால ராகி யின்புற நடந்த பின்ன
ரொப்பரு மறைகள் சைவ முரைக்குநற் புராண மங்கஞ்
செப்பரு மிவைமுன் னான திவ்விய கலைக ளெல்லாந்
தப்பறத் தம்பி ரான்போற் றமிலுணர் கருத்த ராகி.

(ப - ரை.) இப்படி - இவ்வாறு, வாலர் ஆகி - பாலராகி, இன்பு உற - தாய்தந்தையர் மனமகிழ, நடந்தபின்னர் - இப் பாலபருவம் கழிந்தபிறகு, ஒப்பு அரு - ஒப்பில்லாத, மறைகள் - ருக்முதலிய நான்கு வேதங்கள், சைவம் - காமிகமுதலிய இருபத்தெட்டு சிவாகமங்கள், உரைக்கும் - சொல்லப்பட்ட, நல் - நல்ல, புராணம் - பிரமம் முதலிய பதினென் புராணங்கள், அங்கம் - சந்தஸ்முதலிய ஆறு வேதாங்கங்கள், செப்பு அரு - சொல்லுதற்கரிய, இவைமுன்னான - இவைமுதலாகிய, திவ்வியம் - பரிசுத்தமான, கலைகள் - சாஸ்திரங்கள், எல்லாம் - முற்றும், தப்பு அற - சந்தேக விபரீதங்களொழிய, தம்பிரான் போல் - சிவபிரான்போலவே, தம்மில் - தமக்குள், உணர் - தாமேயறியும்படியான, கருத்தர் ஆகி - கருத்துடையராகி எ - று.

(போ - ரை.) இவ்வாறு பாலராகித் தாய்தந்தையர் மனமகிழ இளமைப்பருவம் கழிந்தபிறகு, ஒப்பில்லாத ருக்முதலிய நான்குவேதங்கள் காமிகமுதலிய இருபத்தெட்டு சிவாகமங்கள் சந்தஸ்முதலிய ஆறுவேதாங்கங்கள் சொல்லுதற்கரிய இவை முதலாகிய சாஸ்திரங்கள் முற்றும் சந்தேக விபரீதங்களொழியச் சிவபெருமான்போலவே தமக்குள் தாமே யறியும்படியான கருத்துடையராகி.

(வி - ரை.) இவை முன்னுன திவ்விய கலைகள் என்றது ஸ்ம்ருதி உபவேதம் உபாங்கம் உபபுராணங்களை. வசவேசர் த்விதியசம்புவானதால் தம்பிரான்போல் என்றார். தம்மிலுணர் கருத்தென்றது ஓதாதுணர்தலை. மறை - கடவுளை 'அல்லையீதல்லை யீதெனவன்மைச் சொல்லினுற் றுதித்து' மறைபொருளாகக் கூறுதலால் அப்பெயர்த்தாயது; இனி மறைந்த பொருள்களை யுடையதென்றும் ஸ்த்ரீகளுக்கும் நான்காம் வருணத்தார்க்கும் மறுக்கப்பட்டதென்று பொருள் கூறுதலுமாம். (௬௪)

நாலிரு வயத ராகு நாளிலே தாதை யார்தா
மேலிடும் பூணு நூற்கு விதிக்குநா ளமைக்கும் போழ்தில்
வாலிய வறிவ ரான வசவேசர் மறுப்பா ராகிச்
சூலியென் குருவ ளித்தான் சுத்தமுந் நூல தென்றே.

(ப - ரை.) நால் இரு வயதர் ஆகும் நாளிலே - வசவேசர் எட்டு வயதுடையவராகுங் காலத்தில், தாதையார்தாம் - தந்தையாராகிய மாதிராசையரானவர், மேல் இடும் - திருமேனியின்மீது தரித்தற்குரிய, பூணுநூற்கு - யஜ்ஞோபவீதம் அணிதற்கு, விதிக்கும் - (ப்ராஹ்மண குலத்துக்கேற்ப உபநயனச்சடங்கை) நியமித்தற்கேற்ற, நாள் - சுபதினம், அமைக்கும் போழ்தில் - ஏற்படுத்தும் சமயத்தில், வாலிய அறிவர் ஆன - மெய்யறிவினை யுடையவராகிய, வசவேசர் - வசவதேவர், மறுப்பார் ஆகி, - அப்போது அவ்வுபநயனத்தைத் திரஸ்காரஞ்செய்வாராகி, சூலி - சிவபெருமானாகிய, என் குரு - எனது தேசிகனானவன், சுத்தம் - பரிசுத்தமாகிய, முந்நூல் - இஷ்ட ப்ராணபாவலிங்கங்களென்னும் பூணுநூலை, அளித்தான் என்று - தாம் பிறந்தபோதே தரித்தருளினானென்று, எ-று.

(போ - ரை.) வசவேசர் எட்டுவயதுடையவராகுங் காலத்தில், அவர் தந்தையாராகிய மாதிராசையரானவர் திருமேனியின் மீது தரித்தற்குரிய யஜ்ஞோபவீதம் அணிதற்கு ப்ராஹ்மண குலத்திற்கேற்ப வுபநயனசடங்கை நியமித்தற்கேற்ற ஓர் சுபதினம் ஏற்படுத்தும் சமயத்தில், மெய்யறிவினையுடையவராகிய வசவதேவர் அப்போது அவ்வுபநயனத்தைத் திரஸ்காரஞ் செய்வாராகி, சிவபெருமானாகிய எனது தேசிகனானவன் பரிசுத்தமாகிய இஷ்டப்ராணபாவலிங்கங்களென்னும் பூணுநூலைத் தாம் பிறந்தபோதே தரித்தருளினானென்று.

(வி - ரை.) பரிசுத்தமாகிய முந்நூல் என்றதால் ஈண்டு சின்மய தீக்ஷையைக்குறித்தது; அதாவது இஷ்டப்ராணபாவலிங்கங்களைத்தரித்தல். பூணுநூல் என்றது உபவீதத்தை, இது குழந்தைபிறந்த எட்டாமாண்டில் பிராமணர்களால் செய்யும் சடங்காகும். தீக்ஷை என்பதில் தீ - சிவஞானத்தைக் கொடுத்தல், க்ஷீ - பாசஞானத்தைக் கெடுத்தல் எனப்பொருள்படும். சூலி என்றது கூடலசங்கமேசரை. வாலிய அறிவு என்றது தத்வஞானத்தை, அதாவது ஒவ்வொரு பொருளிலும் உலகத்தார் கற்பித்துக்கொண்டு வழங்கும் கற்பனை யொழித்து ஒழியாமல் நின்ற உண்மையைக்காணுதல், அதுவே சிவஞானமாம்; சிவஞானம் - பரம் என்றும் அபரம் என்றும் இருவகைத்து, அவற்றுள்பரமாவது சிவனொ டிரண்டற்று அபேதரூபமாயிருத்தல், அபரமாவது காமிகமுதலிய திவ்யாகமங்கள். சூலி - சூலாயுதத்தை யுடையவன். (௬௫)

இதமல வெனக்கு முந்நூ லெனுமுரை யிதனைப் போடு
கதமனத் துறுதே சர்ப்ப கங்கணன் றனையர்ச் சித்து
மதமுறு மருளே னந்தோ வந்ததிங் குன்பா லாசான்
பதமலர்க் கிறைஞ்சிப் பொல்லாப் பவநரர்க் கிறைஞ்சிற் பாவம்.

(ப - ரை.) எனக்கு - எனக்கு, முந்நூல் - யஜ்ஞோபவீதம், என்னும் - என்கிற, உரை - சொல், இதம் அல்ல - கேட்கவே இஷ்டமில்லை, இதனை - இந்தச்சொல்லை, போடு - வழுவ விட்டுவிடு, மனத்து - மனத்தில், கதம் உறுதே - கோபம் கொள்ளாதே, சர்ப்ப கங்கணன் தன்னை - சிவபெருமானை, அர்ச்சித்தும் - அர்ச்சனைசெய்தும், மதம் உறும் - நீர் கொண்டிருப்பதாகிய சாதியே பெரியதென்கிற, மருள் ஏன் - மருட்சியுண்டாவதற்குக் காரணம் யாது, இங்கு - இவ்வுலகத்து, உன்பால் - உமது வயிற்றில், வந்தது - பிறந்தும், அந்தோ - ஐயோ! பாவமே, ஆசான் பதமலர்க்கு - ஸ்ரீ குருபாத தாமரையை, இறைஞ்சி - வணங்கி, பொல்லா - தீயவராகிய, பவநரர்க்கு - பவிகளை, இறைஞ்சின் - வணங்கினும், பாவம் - பாவமே, எ - று.

(பொ - ரை.) எனக்கு யஜ்ஞோபவீதமென்கிற சொல் கேட்கவே யிஷ்டமில்லை, இந்தச்சொல்லை வழுவவிட்டுவிடு, மனத்தில் கோபம் கொள்ளாதே, சிவபெருமானை யர்ச்சனைசெய்தும் நீகொண்டிருப்பதாகிய சாதியே பெரியதென்கிற மருட்சியுண்டாதற்குக் காரணம் யாது? இவ்வுலகத்து உமதுவயிற்றில் பிறந்தும் ஐயோ! பாவமே, ஸ்ரீ குருபாத தாமரையை வணங்கித் தீயவராகிய பவிகளை வணங்கினும் பாவமே.

(வி - ரை.) பவநரர் என்றது பிறவிக்கேதுவாகிய பஞ்சமஹாபாதகங்களைச்செய்து அற்பசுகமடையும் ப்ராஹ்மணரை. பவம் - பிறவி. மருள் - அறியாமை. சர்ப்பகங்கணன் - சர்ப்பகங்கணமுடையவன். (கூகூ)

பாசவெங் குற்ற மற்றோர் பாசத்திற் புகுந்தாற் குற்றம்
பேசிலா சான்க ரத்திற் பிறந்தவ ரந்த ணாள
ராசுறு கன்ம தொந்தத் தடைதல்கா ணகலாக் குற்றந்
தேசிகன் பதம்பூ சிப்போர் தீயர்கால் கழுவிற் குற்றம்.

(ப - ரை.) பாசம் - பந்தமாகிய, வெம் - கொடிய, குற்றம் அற்றோர் - குற்றமில்லாதவர், பாசத்தில் - அப் பந்தத்தில், புகுந்தால் - மீட்டும் பிரவேசித்தாலும், குற்றம் - குற்றமே, பேசில் - சொல்லுமிடத்து, ஆசான்கரத்தில் பிறந்தவர் - சற்குருபுத்திரராகிய, அந்தணாளர் - பிராமணர், ஆசுறு - குற்றப்பொருந்திய, கன்மதொந்தத்து - கர்மத்வந்த்வத்தில், அடைதல் - சேர்தலும், அகலா - ஒழியாத, குற்றம் - குற்றமே, தேசிகன்பதம் பூசிப்போர் - ஸ்ரீ குருபாதபூஜைசெய்பவர், தீயர் - துஷ்டராகிய பார்ப்பாரது, கால் - கால்களை, கழுவின் - விளக்கினும், குற்றம் - குற்றமே.

(பொ - ரை.) பந்தமாகிய கொடிய குற்றமில்லாதவர் அப் பந்தத்தில் மீட்டும் பிரவேசித்தாலும் குற்றமே, சொல்லுமிடத்து சற்குருபுத்திரராகிய பிராமணர் குற்றம் பொருந்திய கர்மத்வந்த்வத்தில் சேர்தலும் ஒழியாத குற்றமே, ஸ்ரீ குருபாதபூஜைசெய்பவர் துஷ்டராகிய பார்ப்பாரது கால்களை விளக்கினும் குற்றமே.

(வி - ரை.) கன்மதொந்தம் - நல்வினை தீவினைகள் மாறிமாறி வருதல். அந்தணாளர் என்றது ஈண்டு வைதிகதாந்த்ரிகளை. பாசம் - கட்டு, முத்திநெறியிற் புகவொட்டாது தடுத்து மனைவியாதியரிடத்து நேசமிகச்செய்து அதுகாரணமாகப் பாதிகளுக்குதல். புத்திரர் - மாணுக்கர். தொந்தம் - த்வந்தவம் என்னும் வடசொற்றிரிபு. (எகூ)

மலமிலன் மந்தி ரத்தை வடுவறக் கற்று மற்றும்
பலசுரர் மந்தி ரங்கள் படிப்பதும் பழிப்பாங் குற்றங்
குலவுநஞ் சிவநேசர்க்குக் குவித்திடுங் கரங்க ளாலே
யலகிலாக் கன்மப் பார்ப்பார்க் கஞ்சலி செய்தல் குற்றம்.

(ப - ரை.) மலம் இலன் - பரிசுத்தனாகிய சிவபெருமானது, மந்திரத்தை - ஸ்ரீ பஞ்சாக்ஷரீ மஹா மந்த்ரத்தை, வடு அற - குற்றமற, கற்றும் - படித்திருந்தும், மற்றும் - வேறாகவுள்ள, பல சுரர் - பலதேவர்களுடைய, மந்திரங்கள் - மந்திரங்களை, படிப்பதும் - கற்பதும், பழிப்பு ஆம் - பழிச்சொற்கிடமாகிய, குற்றம் - குற்றமே, குலவு - விளங்குகிற, நம் - நமது, சிவநேசர்க்கு - சிவபக்தரை, குவித்திடும் - கும்பிடுதற்குரிய, கரங்களாலே - கைகளினாலே, அலகு இல்லா - அளவில்லாத, கன்மம் - கர்மங்களையுடைய, பார்ப்பார்க்கு - பிராமணரை, அஞ்சலிசெய்தல் - கும்பிடுதலும், குற்றம் - குற்றமே.

(பொ - ரை.) பரிசுத்தராகிய சிவபெருமானது ஸ்ரீ பஞ்சாக்ஷரீ மஹா மந்த்ரத்தைக் குற்றமறப்படித்திருந்தும் வேறாகவுள்ள பலதேவர்களுடைய மந்திரங்களைக் கற்பதும் பழிச்சொற்கிடமாகிய குற்றமே, விளங்குகிற எமது சிவபக்தரை கும்பிடுதற்குரிய கைகளாலே அளவில்லாத கர்மங்களையுடைய பிராமணரைக் கும்பிடுதலும் குற்றமே.

(வி - ரை.) ஸ்ரீ பஞ்சாக்ஷரம் எல்லா மந்த்ரங்களுக்கும் சிரேஷ்டமானது, ராஜமந்த்ரம் என்றும் சொல்லப்படும். சுரர் - பாற்கடலிற்பிறந்த அமிர்தத்தையுடையவர்; அந்த அமிர்தத்தை யுண்ணப்பெறாதவர்களுக்கு அசுரர் என்று பெயர். பார்ப்பார் - பூசுரர். பல தேவர் - இந்திரன், பிரமன், விட்டுணு முதலியவர். குற்றமற என்பதில் குற்றம் என்றது சந்தேக விபரீதங்களை. பழிப்பு - நிந்தை. குற்றம் - பாவம். (சூஅ)

கன்மபா சங்க ளூறு கண்டமாய்த் துணித்தோர் சாதி
வன்மபா சத்த ழுந்தி மயங்குதன் மாறாக் குற்றம்
நின்மலன் மெய்யி னீறு கண்டிகை நிறைத்து நித்தன்
றன்மைநே ரறிந்தோர் சன்ம முத்திரை தரித்தல் குற்றம்.

(ப - ரை.) கன்மபாசங்கள் - இருவினைக்கயிறுகளை, நூறு கண்டமாய் - அநேகதுண்டுகளாக, துணித்தோர் - வெட்டினவர், சாதி - குலமென்னும், வன்மம் - வலியுடைய, பாசத்து - பந்தமாகிய சமுத்திரத்தில், அழுந்தி - முழுகி, மயங்குதல் - மருட்சியடைதலும், மாறா - மாறுதலடையாத, குற்றம் - குற்றமே, நின்மலன் - சிவபெருமானது, மெய்யில் - திருமேனியில் தரித்த, நீறு கண்டிகை - விபூதிருத்ராக்ஷங்களை, நிறைத்தும் - தமது உடம்பு நிறைய அணிந்திருந்தும், நித்தன் - சிவபெருமானது, தன்மை - ஸ்வரூபத்தை, நேர் அறிந்தோர் - ப்ரத்யக்ஷமாயறிந்த சிவவேடத்தவர்கள், சன்மமுத்திரை - சர்ம முத்திரைகளை, தரித்தல் - அணிதலும், குற்றம் - குற்றமே.

(பொ - ரை.) இருவினைக்கயிறுகளை அநேகதுண்டுகளாக வெட்டினவர் குலமென்னும் வலியுடைய பந்தமாகிய சமுத்திரத்தில் முழுகி மருட்சியடைதலும் மாறுதலடையாத குற்றமே, சிவபெருமானது திருமேனியில் தரித்த விபூதி ருத்ராக்ஷங்களைத் தமது உடம்பு நிறைய அணிந்திருந்தும் சிவஸ்வரூபத்தை ப்ரத்யக்ஷமாயறிந்த சிவவேடத்தவர்கள் சர்ம முத்திரைகளை யணிதலும் குற்றமே.

(வி - ரை.) நூறு எண்டு நூறு என்னும் எண்ணுப் பொருள்படாது அநேகமெனப் பொருள்பட்டது. சர்மம் - யஜ்ஞோபவீதத்திற்கட்டும் மான்தோல் (இதைக்ருஷ்ணாஜிநம் என்பர்.) முத்திரை - உடம்பில் சுடப்படும் சங்கு சக்ரம் முதலிய அங்கிதங்கள், கோபீசந்தநத்தாலாய சங்கு சக்ரம் கதை முதலியன. நின்மலன்திருமேனியில் தரித்திருக்கும் திருவெண்ணீறு முதலியவை சிவலாஞ்சநமெனப்படும். இஷ்டப்ராண

பாவலிங்கார்ச்சனங்களின் முதிர்ச்சியால் மஹாலிங்கத்தில் யானெனதென்பது மற்று, வினையுமற்று, தன்னையுமறந்து அத்விதீயமாக சிவசாக்ஷாத்காரமாய் நிற்கும் நிலையுள்ள சிவயோகிகளுக்குச் சாதி வேற்றுமையில்லை; மற்றோ, சர்ம முத்திரைகள் யாதுபயனைத்தரும்? சன்மம் - சர்மம் என்னும் வடசொற்றிரிபு. கன்மம் - இதுவுமது. வன்மம் - இதுவுமதுவே. முத்திரை - முத்ரா என்னும் வடசொற்றிரிபு. (௬௯)

நீரிடை வாதை பூணு நீண்டபா சத்து வாதை
சாருத லில்லா வீர சைவமெய் யுபதே சத்தாற்
பாரபுண் ணியபா வத்தாம் பரப்பகன் றோனைக் கன்மக்
கோரவா ரியினுட் டள்ளக் குறிப்பது குணமோ வையா.

(ப - ரை.) ஐயா - ஐயனே, நீர் இடை - நீரினிடத்து, வாதை - துன்பமும், நீண்ட - நெடிய, பூணும் பாசத்து - பூணுநூலினிடத்து, வாதை - துன்பமும், சாருதல் இல்லா - சேருதலில்லாத, வீரசைவம் - வீரசைவத்தின், மெய் உபதேசத்தால் - தத்வோபதேசத்தினால், பாரம் - பெரிய, புண்ணிய பாவத்து ஆம் - புண்யபாபகர்மங்களாகிய, பரப்பு அகன்றோனை - பிறவிச்சமுத்திரத்தினின்றும் நீங்கினவனை, கன்மம் - கர்மமாகிய, கோரம் - அச்சந்தரத்தக்க, வாரியினுள் - சமுத்திரத்தில், தள்ள குறிப்பது - மீட்டும் தள்ள நினைப்பதும், குணமோ - தர்மமோ, எ - று.

(போ - ரை.) ஐயனே! நீரினிடத்துத் துன்பமும் நெடிய பூணுநூலினிடத்துத் துன்பமும் சேருதலில்லாத வீரசைவத்தின் தத்வோபதேசத்தினால் பெரிய புண்யபாபகர்மங்களாகிய பிறவிச்சமுத்திரத்தினின்றும் நீங்கினவனைக் கர்மமாகிய அச்சந்தரத்தக்க சமுத்திரத்தில் மீட்டும் தள்ள நினைப்பதும் தர்மமோ?

(வி - ரை.) நீரிடை வாதை என்றது சமுத்ரஸ்நான கங்காஸ்நானங்களாகிய விவற்றால் நேரிடும் துன்பங்களை. பாசம் - நூல், இது பூணுநூல் என்றமையால் யஜ்ஞோபவீதத்தைக்குறித்தது, இதனாலுண்டாகும் சடங்குகள் ஏராளமாயிருத்தலினால் நேரிடும் துன்பங்களைப் பூணுபாசத்து வாதை என்றார். வீரசைவனுக் கிவ்விதமான துன்பங்கள் நேரிடாதோவெனின் இல்லை; மற்றோ, இவன் சதாகாலமும் ஜங்கமபாதோதக ஸ்வீகாரமும் சிவத்யானமும் பஸ்மஸ்நானமு முடையோனாதலின். (௭௦)

வேதன்மா சென்னி கொய்த விமலனற் குலமா னோரை
நீதமோ வேதி யர்க்கு ளொருவராய் நினைத்துக் கூறல்
சாதிகோத் திரமில் லாத சற்குரு புதல்வர் தம்மை
யோதுநீ சாதி தன்ம முலகிய லுறுத்து மாறு.

(ப - ரை.) மா - பெருமைபொருந்திய, வேதன் - பிரமனது, சென்னி - சிரசை, கொய்த - சேதித்த, விமலன் - சிவபெருமானது, நல் - சிறந்த, குலம் ஆனோரை - குலமானவரை, வேதியர்க்குள் - பலதெய்வகுலத்தினரான பார்ப்பாருக்குள், ஒருவர் ஆய் - ஒருவராக, நினைத்து - மதித்து, கூறல் - பேசுதலும், சாதி கோத்திரம் இல்லாத - குலகோத்ர வேறுபாடுகளில்லாத, சற்குரு புதல்வர் தம்மை - ஸத்குருபுத்ரர்களுக்கு, நீ - நீர், ஓதும் - சொல்லப்பட்ட, சாதிதன்மம் - குலாசாரங்களையும், உலகு இயல் - லோகாசாரங்களையும், உறுத்தும் ஆறு - வற்புறுத்திச்சொல்லும் விதமும், நீதமோ - நியாயமோ, எ-று.

(போ - ரை.) பெருமைபொருந்திய பிரமனது சிரசைச் சேதித்த சிவபெருமானது சிறந்த குலமானவரை பலதெய்வகுலத்தினரான பார்ப்பார்க்குள் ஒருவராக மதித்துப் பேசுதலும் குலகோத்ர வேறுபாடுகளில்லாத ஸத்குருபுத்ரர்களுக்கு நீர் சொல்லப்பட்ட குலாசாரங்களையும் லோகாசாரங்களையும் வற்புறுத்திச்சொல்லும் விதமும் நியாயமோ?

(வி - ரை.) நீதமோ என்னுமோகாரம் எதிர்மறை. சற்குரு புதல்வர்தம்மை - உருபு மயக்கம். வேதன் மா சென்னி கொய்த விமலனற்குலமானோர் - சிவகுலத்தினர். புத்திரர் - மாணாக்கர். நற்குரு - ஞானசாரியன். கோத்திரம் - கோத்ரம் என்னும் வடசொற்றிரிபு. தன்மம் - தர்மம் என்னும் வடசொற்றிரிபு. வேதன் - பிரமன், எப்போதும் நான்கு முகங்களாலும் நான்கு வேதங்களையும் பாராயணஞ்செய்கின்றமையின் இவனுக்கு வேத னென்னும் பெயர்; இதனை வேதா என்னும் வடசொற்றிரிபாக்கொண்டால் விதித்தற் றொழிற்குரிய கடவுளென்று பொருளாம். சிவகுலத்தினராகிய ஞானிகளுக்குச் சாதிமுத லிய வேற்றுமையில்லை யென்பதற்கு அவிரோதவுந்தியாரில்,

"ஆதலான் மேலா நெறியடைந் தோர்க்கொரு
சாதிசமய மேதுந் தீபற
சங்கற்ப நாசமென் றுந்தீபற." என்று கூறியுள்ளது. (௭௧)

குலமிலன் பவம தற்றோன் குரைகழற் கன்பு செய்வோர்க்
குலகினிற் குலமி லென்ப துணர்ந்துநின் னுயர்சா திக்காம்
பலவித கன்ம முந்நூல் பஞ்சிநீ பகர வேண்டாம்
மலமறுச் சன்ம வேது வென்றலு மாதி ராசர்.

(ப - ரை.) குலம் இலன் - குலமில்லாதவனும், பவம் அற்றோன் - பிறவியில்லாத வனுமாகிய சிவபெருமானது, குரை கழற்கு - திருவடிகளுக்கு, அன்புசெய்வோர்க்கு - பக்திசெய்யும் சரணர்களுக்கு, உலகினில் - உலகத்தில், குலம் இல் என்பது - குலமில்லை யென்னும் ஆகம வாக்யங்களை, உணர்ந்தும் - அறிந்திருந்தும், நின் - உமது, உயர் - பெரிய, சாதிக்கு ஆம் - குலத்துக்குரிய, பலவித - பலவகைப்பட்ட, கன்மம் - கர்மங்களை யுடைய, முந்நூல் பஞ்சி - முப்புரிநூலிலுள்ள பருத்திப் பஞ்சின் செய்தியை, நீ - நீர், பகரவேண்டாம் - சொல்லவேண்டாம், மலம் அறு - மும்மலசம்பந்தமுமொழியாது, சன்ம ஏது - பிறவிக்குக் காரணமுமாகும், என்றலும் - என்று வசவேசர் மறுத்துச் சொன்னமாத்திரத்தில் (அது கேட்ட), மாதிராசர் - தந்தையாராகிய மாதிராசைய ரானவர், எ - று.

(பொ - ரை.) குலமில்லாதவனும் பிறவியில்லாதவனுமாகிய சிவபெருமானது திரு வடிகளுக்குப் பக்திசெய்யும் சரணர்களுக்கு உலகத்தில் குலமில்லையென்னும் ஆகம வாக்ய ங்களை யறிந்திருந்தும் உமது பெரிய குலத்துக்குரிய பலவகைப்பட்ட கர்மங்களையுடைய முப்புரிநூலிலுள்ள பருத்திப்பஞ்சின் செய்தியை நீர் சொல்லவேண்டாம், மும்மல சம்பந்தமுமொழியாது பிறவிக்குக் காரணமுமாகுமென்று வசவேசர் மறுத்துச்சொன்ன மாத்திரத்தில், அதுகேட்ட தந்தையாராகிய மாதிராசையரானவர்.

(வி - ரை.) மும்மலம் - ஆணவம் மாயை கன்மம் என்பன, குரை - சப்திக்கின்ற. கழல் - ஆகுபெயர் (திருவடி). சன்மம் - ஜந்மம் என்னும் வடசொற்றிரிபு. (௭௨)

வாதுரை வேண்டாங் கேளாய் மைந்தனே பூசு ரர்க்காம்
வேதமோ திடுங்க ருப்ப விசுத்திதான் முதல தாகக்
கோதறு பதினா றாகக் கூறுநங் கருமத் தொன்று
நீதவ றினையே னந்த நெடுங்குலங் கெடுங்கா ணென்றும்.

(ப - ரை) மைந்தனே - புதல்வனே, கேளாய் - கேட்பாயாக, வாது உரை வேண் டாம் - தர்க்கஞ் செய்யவேண்டாம், பூசுரர்க்கு ஆம் - அந்தணர்க்காகின்ற, வேதம் - வேதமானது, ஓதிடும் - விதிக்கும், கருப்ப விசுத்தி முதலாக - கர்ப்ப ஸம்ஸ்கார முதலாக, கோது அறு - குற்றமற்ற, பதினாறு ஆக - பதினாறென்று, கூறும் - சொல்லப்பட்ட, நம் -

நமது, கருமத்து ஒன்று - கர்மங்களிலொன்றனை, நீ - நீ, தவறினையேல் - வழுவினையேயாயின், என்றும் - எக்காலத்தும், நம்தம் - நமது, நெடும் குலம் - பெரிய ஜாதியானது, கெடும் - அழியும், எ - று.

(பொ - ரை.) புதல்வனே! கேட்பாயாக, தர்க்கஞ்செய்ய வேண்டாம், அந்த ணர்க்காகின்ற வேதமானது விதிக்கும் கர்ப்பஸம்ஸ்கார முதலாகக் குற்றமற்ற பதினாறென்று சொல்லப்பட்ட நமது கர்மங்களிலொன்றனை நீ செய்யாது வழுவினையேயாயின் எக்காலத்தும் நமது பெரிய ஜாதியானது அழியும்.

(வி - ரை.) மைந்து - உறுதி, (மைந்தன் - தந்தைக்கு மறுமையில் உறுதிபயப்பவன்). ஏல் - எனின் என்பதன் மரூஉ. பதினாறு கர்மங்களை ஷோடஸகர்மம் என்பர் வடநூலார்; அவையாவன:— கர்ப்பாதானம், பும்ஸவநம், ஸீமந்தோந்நாயநம், ஜாதகர்மம், நாமகரணம், அந்நப்ராஸநம், சௌளம், உபநயநம், வேதவ்ரதம், கௌதாநிகம், ஸ்நாதகம், விவாஹம், ஸ்மார்த்தாக்நிஹோத்ரம், ஔர்த்வதேஹிகம். விசுத்தி - பரிசுத்தம் (விஷுத்தி என்னும் வடசொற்றிரிபு). ஸம்ஸ்காரம் - மந்திரத்தினாலே சுத்தம் பண்ணுங் கிரியை.

இப்பதி னாறி லொன்றும் விருத்தமன் றிதற்க ரன்கா
ணொப்பருங் கண்ண தாகு முபநய னார்ச்ச னைக்குச்
செப்பிடும் விசேட நந்தி பிரணவஞ் செய்ய வீசன்
றப்பினற் பர்க னென்று சாற்றுமந் திரம லாதும்.

(ப - ரை.) இ - இந்த, பதினாறில் ஒன்றும் - பதினாறு கர்மங்களில் ஒன்றும், விருத்தம் அன்று - விரோதமல்ல, இதற்கு - இந்தக் கர்மத்துக்கு, அரன் - ருத்ரன், ஒப்பு அரு - நிகரற்ற, கண் அது ஆகும் - நேத்ரம் போன்றதாகும், உபநயனார்ச்சனைக்கு - உபநயனார்ச்சனங்களுக்கு, நந்தி - நந்தியெம்பெருமானையும், பிரணவம் - பிரணவத்தையும், விசேடம் - முக்யமாக, செப்பிடும் - கூறும், செய்ய - அழகிய, ஈசன் - தெய்வம், தப்பு இல் - குற்றமில்லாத, நல் - சிறந்த, பர்கன் - பர்கன், என்று - என்றும், அலாதும் - இவைகளல்லாமலும், மந்திரம் - மந்திரங்களையும், சாற்றும் - சொல்லாநிற்கும். எ - று.

(பொ - ரை.) இந்தப்பதினாறு கர்மங்களிலொன்றும் விரோதமல்ல, இந்தக் கர்மத்துக்கு ருத்ரன் நிகரற்ற நேத்ரம்போன்றதாகும், உபநயனார்ச்சனங்களுக்கு நந்தியெம்பெருமானையும் பிரணவத்தையும் முக்யமாகக்கூறும், அழகிய தெய்வம் குற்றமில்லாத சிறந்தபர்கனென்றும் இவைகளல்லாமலும் வேறு மந்திரங்களையும் சொல்லாநிற்கும்.

(வி - ரை.) அரன் - ஆன்மாக்களுடைய பாசத்தையரிப்பவன். ஈசன் - கட்டளையிடுபவன், என்றால் தலைவன் என்பது பொருள், ஈச என்னும் வடசொற்றிரிபு, ஐசுவரியங்களுக்குத் தலைவனெனினுமாம். கண் - முக்யம் எனினுமாம். ப்ரணவம் - பீஜமந்த்ரம். பர்கன் - சூரியன் எனினுமாம்.

பிடித்தபாத் திரம யன்றன் பெருந்தலை தரித்த தாரம்
விடத்தராக் கரப்ப லாச தண்டரி வெங்கிற் றண்டா
முடித்திடு மஞ்ச தான சிகைசடை மொழியி னீற
துடற்செறி கோபி சாந்த மொண்கரி யுரிதோற் சன்மம்.

(ப - ரை.) பிடித்த - உபநயநகாலத்தில் கைப்பற்றின, பாத்திரம் - பிக்ஷாபாத்ரமே, அயன் - (பரமசிவன் திருக்கரத்திலேந்திய) பிரமனது, பெரும் தலை - பெரிய கபாலமாகும், தரித்த - பூண்ட, தாரம் - உபவீதமே, விடத்து அரா - விடத்தையுடைய சர்ப்பமாகும், கரம் - கையிற்றாங்கிய, பலாசதண்டு - பலாசதண்டமே, அரி - விட்டுவினது, வெங்கில் தண்டு ஆம் - முதுகெலும்புத்தண்டாகும், முடித்திடும் - முடிக்கப்பட்ட, அஞ்சு அது ஆன சிகை-பஞ்சசிகையே, சடை - ஜடாபாரமாகும், மொழியின் - சொல்லுமிடத்து,

உடல் செறி - மேனியிற்பொருந்திய, கோபிசாந்தம் - கோபீ சந்தனமே, நீறு - திருவெண்ணீறாகும், சன்மம் - க்ருஷ்ணாஜிநமே, ஒள் - அழகிய, கரியுரி தோல் - யானைத்தோலாகும், எ - று.

(பொ - ரை.) உபநயநகாலத்தில் கைப்பற்றின பிக்ஷாபாத்ரமே பரமசிவன் திருக்கரத்திலேந்திய பிரமனது பெரிய கபாலமாகும், பூண்ட உபவீதமே விடத்தையுடைய சர்ப்பமாகும், கையிற்றாங்கிய பலாசதண்டமே விட்டுவினது முதுகெலும்புத் தண்டாகும், முடிக்கப்பட்ட பஞ்சசிகையே ஜடாபாரமாகும், சொல்லுமிடத்து மேனியிற்பொருந்திய கோபீசந்தநமே திரு வெண்ணீறாகும், க்ருஷ்ணாஜிநமே அழகிய யானைத்தோலாகும்.

(வி - ரை. சன்மம் - சர்மம் (வடசொல்), உபவீதத்திற்கட்டும் மான்றோல். உரி - உரித்த.

புரவரன் பிச்சை பண்ணப் புறப்பட்ட போது கொண்ட
வரமுறு வேட மெல்லாந் தரித்தலான் மறையோ னாகா
னரனெறி யன்பர்க் கிது விருத்தமன் றழகாம் பிள்ளாய்
பரவுநங் குடிக்கு நன்மைப் பண்புநீ முந்நூல் பற்றின்.

(ப - ரை.) புர அரன் - த்ரிபுராந்தகனாகிய சிவபெருமான், பிச்சை பண்ண - தாருகாவனத்தில் பிக்ஷையேற்க, புறப்பட்டபோது - வெளிப்பட்ட காலத்தில், கொண்ட - பூண்ட, வரம் உறு - மேன்மை பொருந்திய, வேடம் எல்லாம் - கோலமுற்றும், தரித்து - பூண்டு, அல்லால் - அல்லாமல், மறையோன் - அந்தணனன், ஆகான் - ஆகமாட்டான், அரன் நெறி - (ஆதலால்) சைவமார்க்கத்தையுடைய, அன்பர்க்கு - பக்தர்க்கு, இது - இவ் வேதியக்கோலம், விருத்தம் அன்று - விரோதமல்ல, அழகாம் - அழகேயாகும், பிள்ளாய் - புதல்வனே, நீ - நீ, முந்நூல் பற்றின் - பூணூலைப் பிடிப்பையாயின், பரவும் - (யாவரும்) துதித்தற்குரிய, நம் - நமது, குடிக்கு - பெரிய குலத்துக்கு, நன்மைப் பண்பு - உபகாரார்த்தமாகும், எ - று.

(பொ - ரை.) த்ரிபுராந்தகனாகிய சிவபெருமான் பிக்ஷையேற்க வெளிப்பட்டகாலத்திற் பூண்ட மேன்மைபொருந்திய கோலமுற்றும் பூண்டல்லாமல் அந்தணன் ஆகமாட்டான், ஆதலால் சைவமார்க்கத்தையுடைய பக்தர்க்கு இவ்வேதியக்கோலம் விரோதமல்ல அழகேயாகும், புதல்வனே! நீ பூணூலைப் பிடிப்பையாயின் யாவரும் துதித்தற்குரிய நமது பெரியகுலத்துக்கு உபகாரார்த்தமாகும்.

(வி - ரை.) நரன் - ஜடஜீவன். (எரு)

வசனவல் லமைகள் வேண்டாம் வசவநீ நந்தஞ் சொல்லிற்
கிசைவதே கருமந் தள்ள லியல்பன்று நீதி நிட்டை
திசைகொணந் சாதி கன்மச் செயலெலாஞ் செய்து வாழ்ந்திங்
கசைவற மறையோர்க் கெல்லா மதிகவுத் தமனா காமல்.

(ப - ரை.) வசவ - வசவனே, வசன வல்லமைகள் வேண்டாம் - வாக்சாதுர்யங்கள் பேசவேண்டாம், நீ - நீ, நம்தம் - எமது, சொல்லிற்கு - வார்த்தைக்கு, இசைவதே - இணங்கிவருதலே, கருமம் - நற்காரியமாகும், தள்ளல் - வார்த்தையைத் தள்ளிவிடுதல், இயல்பு அன்று - தகுதியல்ல, நீதி - ஆசாரங்களும், நிஷ்டை - பிரமாணங்களும், திசை கொள் - திக்குகளை யெல்லாம் கவர்ந்துகொண்ட, நம் - நமது, சாதி - குலத்துக்குரிய, கன்மச்செயல் எல்லாம் - கர்மத்தொழில் எல்லாவற்றையும், செய்து - இயற்றி, வாழ்ந்து - ஜீவித்து, இங்கு - இவ்வுலகத்தில், அசைவு அற - சலனமில்லாமல், மறையோர்க்கெல்லாம் - வேதியர்க்கெல்லாம், அதிக உத்தமன் ஆகாமல் - அக்ரகண்யனாகாமல், எ - று.

(பொ - ரை.) வசவனே! வாக் சாதுர்யங்கள் பேசவேண்டாம், நீ எமது வார்த்தைக்கு இணங்கிவருதலே நற்காரியமாகும், வார்த்தையைத் தள்ளிவிடுதல் தகுதியல்ல,

ஆசாரங்களும் பிரமாணங்களும் திக்குகளை யெல்லாங் கவர்ந்துகொண்ட நமது குலத்துக்குரிய கர்மத்தொழிலெல்லாவற்றையுமியற்றி ஜீவித்து இவ்வுலகத்தில் சலநமில்லாமல் வேதியர்க்கெல்லாம் அக்ரகண்யனுகாமல். (எஎ)

நீமனந் தன்னிற் கொண்ட நிட்டையில் சீலந் தன்னை
நாமறி யோமீ தெந்த நாட்டினுங் காணுேங் கேளோம்
யாமுமெங் குலமு முய்ய வெம்மிடத் துதித்தா யைய
காமகிழ்ந் தியாங்கள் சொர்க்கக் கரையுறுங் கருமஞ் செய்தே.

(ப - ரை.) ஐய - ஐயனே, நீ - நீ, மனம்தன்னில் - மனத்தில், கொண்ட - பிடிவாதமாய்க் கொண்டிருக்கிற, நிட்டையில் சீலம் தன்னை - பிரமாணமில்லாத ஆசாரங்களை, நாம் - யாம், அறியோம் - தெரிந்திலேம், ஈது - இந்தப் புதுமை, எ நாட்டினும் - எந்தத் தேசத்திலும், காணேம் - பார்த்திலேம், கேளோம் - கேட்டிலேம், யாமும் - நாமும், எம் - நமது, குலமும் - ஜாதியும், உய்ய - கடைத்தேறும்பொருட்டு, எம்மிடத்து - எமது வயிற்றில், உதித்தாய் - பிறந்தாய், யாங்கள் - நாங்கள், மகிழ்ந்து - சந்தோஷித்து, சொர்க்கக்கரை - மோக்ஷக்கரையை, உறும் - அடைதற்குரிய, கருமம் செய்து - கர்மம் பண்ணி, கா - காப்பாற்றக்கடவை, எ - று.

(பொ - ரை.) ஐயனே! நீ மனத்தில் பிடிவாதமாய்க் கொண்டிருக்கிற பிரமாணமில்லாத ஆசாரங்களை யாம் தெரிந்திலேம், இக்தப்புதுமை எந்தத்தேசத்திலும் பார்த்திலேம் கேட்டிலேம், நாமும் நமது ஜாதியும் கடைத்தேறும்பொருட்டு நம்மிடத்தில் பிறந்தாய், நாங்கள் சந்தோஷித்து மோக்ஷக்கரையை யடைதற்குரிய கர்மம்பண்ணி காப்பாற்றக்கடவை. (எஅ)

மண்ணினற் புத்தி ரன்முன் வரிற்குல மோங்கு மன்றித்
திண்ணிய குலநா சத்தன் சனிக்கிலக் குலமுந் தேயு
நண்ணிநங் குலத்தின் வேரை நசிக்குங்குந் தலிநீ யானுய்
புண்ணிய மறையோர் சாதிப் புறம்புனைப் புகலா நிற்பர்.

(ப - ரை.) மண்ணில் - மண்ணுலகத்தில், நல் புத்திரன் - சற்புத்திரன், வரில் - பிறந்தால், குலம் - (அவன்பிறந்த) குலமானது, ஓங்கும் - உயராநிற்கும், அன்றி - அப்படியல்லாமல், திண்ணிய - திடமான, குலநாசத்தன் - குலநாசகன், சனிக்கில் - பிறந்தால், அ - அந்த, குலமும் - குலமும், தேயும் - அழியும், நீ - நீ, நண்ணி - பிறந்து, நம் - நமது, குலத்தின் வேரை - குலத்தின் வேரினை, நசிக்கும் - கல்லுதற்குரிய, குந்தலி - கோடரி, ஆனுய் - ஆகிவிட்டாய், புண்ணியம்-பாபவிமோசனராகிய, மறையோர்-வேதியர், சாதி - ஜாதிக்கு, புறம்பு - புறம்பென்று, உன்னை - நின்னை, புகலாநிற்பர் - சொல்லுவார்கள், எ - று.

(பொ - ரை.) மண்ணுலகத்தில் சற்புத்திரன் பிறந்தால் அவன் பிறந்த குலமானது உயராநிற்கும், அப்படியல்லாமல் திடமான குலநாசகன் பிறந்தால் அந்தக்குலமும் அழியும், நீ பிறந்து எமது குலத்தின் வேரினைக் கல்லுதற்குரிய கோடரியாகிவிட்டாய், பாப விமோசனராகிய வேதியர் ஜாதிக்குப் புறம்பென்று நின்னைச் சொல்லுவார்கள்.

(வி - ரை.) சாதிப்புறம்பினை குலப்ரஷ்டத்வம் என்பர் வடநூலார். (எகூ)

என்றுநீ மண்ணி லொன்று மெய்திடா யெம்பால் வந்தாய்
நன்றினைக் கொடமாற் றீமை நாமுறச் செய்தா லந்தோ
வின்றுநங் குலங்கெ டாதோ வினிதுநின் பொருட்டா லின்பந்
துன்றுநற் கதியுண் டென்று துணிந்துயா மகிழ்ந் திருந்தோம்.



ஸ்ரீ ரேணுகாதி பஞ்சாசார்யரின் அவதாரம்.

(ப - ரை.) நீ - நீ, மண்ணில் - மண்ணுலகத்தில், ஒன்றும் - ஒருபிரயோசனத்தையும், எய்திடாய் - அடையப்படாத குழந்தையாகி, எம்பால் - எம்முடைய வயிற்றில், வந்தாய் - பிறந்தாய், நன்றினை - நன்மையை, கொடாமால் - பயக்காமல், நாம் - யாம், தீமை உறச் செய்தால் - தீங்கடையப்பண்ணுவாயானால், அந்தோ - ஐயோ, இன்று - இந்நாளில், நம் - நமது, குலம் - ஜாதியானது, கெடாதோ - அழியாதோ, இனிது - காரியம் நன்றாயிருக்கின்றது, இன்பம் துன்றும் - பேரின்பம்பொருந்திய, நல்கதி - மோக்ஷம், நின்பொருட்டால் - உன்வாயிலாக, உண்டு என்று - உண்டாகுமென்று, துணிந்து - நிச்சயித்து, யாம் - நாம், மகிழ்ந்திருந்தோம் - சந்தோஷித்திருந்தோம்.

(போ - ரை.) நீ மண்ணுலகத்தில் ஒரு பிரயோசனத்தையுமடையப்படாத குழந்தையாகி எம்முடைய வயிற்றில் பிறந்தாய், நன்மையைப் பயக்காமல் யாம் தீங்கடையப் பண்ணினால், ஐயோ! இந்நாளில் நமது ஜாதியானது அழியாதோ? காரியம் நன்றாயிருக்கின்றது, பேரின்பம் பொருந்திய மோக்ஷம் உன்வாயிலாக உண்டாகுமென்று நிச்சயித்து நாம் சந்தோஷித்திருந்தோம்.

(வி - ரை.) கெடாதோ என்னும் ஓகாரம் எதிர்மறையாய் உடன்பாட்டின்கண் வந்தது. உன்வாயிலாக - உன்வழியாக. (௮௰)

தக்கநஞ் சாதிக் கேற்ற சரித்திரஞ் சரித்தி ரத்திற்
கொக்கவே புராரி பத்தி யுறினிக பரத்தி லின்ப
மிக்குற வேது வாகு மனத்துயர் விடுமி ரண்டுந்
தொக்குறின் றென்பு லர்க்குஞ் சுரர்க்குஞ் சந்துட்ட மாகும்.

(ப - ரை.) தக்க - துதிக்கத்தக்க, நம் - நமது, சாதிக்கு ஏற்ற - ஜாதிக்குத்தக்க, சரித்திரம் - ஒழுக்கமும், சரித்திரத்திற்கு - அவ்வொழுக்கத்துக்கு, ஒக்க - தக்க, புராரி பத்தி - சிவபக்தியும், உறின் - உண்டாகுமாயின், இகபரத்தில் - இம்மை மறுமைகளில், இன்பம் மிக்குற - இன்பமிகுதற்கு, ஏது ஆகும் - காரணமுமாகும், மனத்துயர் - மனோதுக்கமும், விடும் - ஒழியும், இரண்டும் - ஒழுக்கமும் பக்தியுமாகிய விரண்டும், தொக்கு உறின் - ஒருங்குசேர்ந்தால், தென்புலர்க்கும் - பிதிரர்களுக்கும், சுரர்க்கும் - தேவர்களுக்கும், சந்துட்டமாகும் - சந்தோஷமுண்டாகும், எ - று.

(போ - ரை.) துதிக்கத்தக்க நமது ஜாதிக்குத்தக்க வொழுக்கமும் அவ்வொழுக்கத்துக்குத்தக்க சிவபக்தியும் உண்டாகுமானால் இம்மை மறுமைகளில் இன்பமிகுதற்குக் காரணமு மாகும், மனோதுக்கமும் ஒழியும், ஒழுக்கமும் பக்தியுமாகிய விரண்டும் ஒருங்கு சேர்ந்தால் பிதிரர்களுக்கும் தேவர்களுக்கும் சந்தோஷமுண்டாகும்.

(வி - ரை.) புராரி - த்ரிபுரஶத்ரு (சிவபெருமான்). தென்புலத்தார் - படைப்புக் காலத்தே படைக்கப்பட்டவோர் தேவஜாதியார், இவர்க்கிடம் தென்றிசையாதலால் இவரைத் தென்புலத்தாரென வழங்கலாயினர். மனோதுக்கம் - சம்சாரத்தின் மேனிகழ்வதாகுந் துன்பம். இகம் - இஹம் என்னும் வடசொற்றிரிபு. (௮௧)

நன்னெறி யுபாயஞ் சொன்னோ நாமிவை யுனக்கொப் பன்றே
னின்னெறி விரதந் தானு நீயுநின் னிச்சை யையா
வுன்னொடு மொழிக்கா றுண்டோ வுரைக்கில மினியா மென்னு
மின்னெறி வெய்ய சொற்கெ கெதிர்வச வேசர் சொல்வார்.

(ப - ரை.) ஐயா - ஐயனே, நாம் - யாம், நல் நெறி - சன்மார்க்கத்துக்குத்தக்க, உபாயம் - உபசாரவார்த்தைகளை, சொன்னோம் - கூறினோம், இவை - இவ்வார்த்தைகள், உனக்கு - நினக்கு, ஒப்பு அன்றேல் - சம்மதமல்லவாயின், நின் - உன், நெறி - ஒழுக்க

மும், விரதம் - பக்தியும், நீயும் - நீயும், நின் - உன், இச்சை - இஷ்டம்போல நடக்கலாம், உன்னொடு - உன்னோடு, மொழிக்கு - வழக்காடி வார்த்தைசொல்வதற்கு, ஆர் உண்டு - இவ்வுலகில் யாவரிருக்கிறார்கள், யாம் - நாம், இனி - இனிமேல், உரைக்கிலம் - ஒன்றும் சொல்லோம், என்னும் - என்கிற, இ நெறி - இவ்விதமாகிய, வெய்ய - கொடிய, சொற்கு - வார்த்தைகளுக்கு, அங்கு - அவ்விடத்து, வசவேசர் - வசவண்ணர், எதிர் - உத்தரம், சொல்வார் - சொல்வாராயினர், எ - று.

(பொ - ரை.) ஐயனே! யாம் சன்மார்க்கத்துக்குத்தக்க உபசாரவார்த்தைகளைக் கூறினோம், இவ்வார்த்தைகள் நினக்குச் சம்மதமல்லவாயின் உன் ஒழுக்கமும் பக்தியும் நீயும் உன்னிஷ்டம்போல் நடக்கலாம், உன்னோடு வழக்காடி வார்த்தை சொல்வதற்கு இவ்வுலகில் யாவரிருக்கிறார்கள்? நாம் இனிமேல் ஒன்றும் சொல்லோம் என்கிற இவ்விதமாகிய கொடிய வார்த்தைகளுக்கு அவ்விடத்து வசவண்ணர் உத்தரஞ் சொல்வாராயினர்.

(வி - ரை.) ஆர் உண்டு என்றது ஒருவருமில்லையென்றபடி. ஒசாரம் - ஒழிபிசை. உபாயம் - யுக்தி எனினுமாம். (அஎ)

கலிவிருத்தம்.

வேறுவை திகநெறி விமல சைவமும்
வேறிவை யிரண்டையும் விரவிக் கூறிடேல்
வேறுதெய் வங்களும் வேறு மந்திரம்
வேறுவே டங்குரு வேறு ணர்ச்சியும்.

(ப - ரை.) வைதிகநெறி - ப்ரஹ்மகர்மமார்க்கமும், வேறு - வேறாகும், விமலம் - பரிசுத்தமான, சைவமும் - சிவபக்திமார்க்கமும், வேறு - வேறாகும், இவை - இவ்விரண்டு மார்க்கங்களையும், விரவி - கலந்து, கூறிடேல் - பிதற்றிச் சொல்லாதே, தெய்வங்களும் - தேவதைகளும், வேறு - வேறாகும், மந்திரம் - மந்த்ரங்களும், வேறு - வேறாகும், வேடம் - வேஷமும், வேறு - வேறாகும், குரு - தேசிகனும், வேறு - வேறாகும், உணர்ச்சியும் - ஞானமும், வேறு - வேறாகும், எ - று.

(பொ - ரை.) ப்ரஹ்மகர்மமார்க்கமும் வேறாகும், பரிசுத்தமான சிவபக்திமார்க்கமும் வேறாகும், இவ்விரண்டு மார்க்கங்களையும் கலந்து பிதற்றிச் சொல்லாதே, தேவதைகளும் வேறாகும், மந்த்ரங்களும் வேறாகும், வேஷமும் வேறாகும், தேசிகனும் வேறாகும், ஞானமும் வேறாகும்.

(வி - ரை.) உணர்ச்சி - த்யாகபாஹ்யபக்திபாசாரங்களைப் பற்றிய ஞானம். (அஅ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வன்னியே முகமா யுச்சி மலரவ னாதி யீசன்
சென்னியிற் சிகைய தாகிச் செங்கண்மா லிதய மாகி
மன்னிய வுயிர்ப்புக் காலாய் வன்னயோ னிகளும் வேறா
யுன்னிநீர் செபிக்குங் காயத்திரியையு முரைக்கக் கேண்மோ.

(ப - ரை.) வன்னியே - (ஆனல்) அக்கியே, முகம் ஆய் - வதனமாகி, உச்சி - சிரசே, மலரவன் - ப்ரஹ்மாவாகி, ஆதி ஈசன் - ஆதிருத்ரனே, சென்னியில் - சிரசில் உள்ள, சிகையாகி - சிகையாகி, செம் கண் - தாமரைமலர்போன்ற செவந்த கண்களையுடைய, மால் - மஹாவிஷ்ணுவே, இதயம் ஆகி - ஹ்ருதயமாகி, மன்னிய - நிலையுற்ற, உயிர்ப்பு - ப்ராணனே, கால் ஆய் - தசவாயுக்களாகி, வன்னம் - தவளமே நிறமாகி, யோனி - பூமியே யோனியாகி, வேறு ஆய் - வெவ்வேறாக, உன்னி - த்யானித்து, நீர் - நீங்கள்,

செபிக்கும் - ஜபிக்கிற, காயத்திரியையும் - காயத்ரீ மஹா மந்த்ரத்தையும், உரைக்க - நான் சொல்ல, கேள் - கேட்கக்கடவை எ - று.

(பொ - ரை.) ஆனால் அக்நியே வதநமாகி, சிரசே ப்ரஹ்மாவாகி, ஆ திருத்ரனே சிரசிலுள்ள சிகையாகி, தாமரைமலர்போன்ற செவந்த கண்களையுடைய மஹாவிஷ்ணுவே ஹ்ருதயமாகி, நிலையுற்ற ப்ராணனே தசவாயுக்களாகி, தவளமே நிறமாகி, பூமியே யோநியாகி த்யாநித்து நீங்கள் ஜபிக்கிற காயத்ரீ மஹா மந்த்ரத்தையும் நான் சொல்லக் கேட்கக்கடவை.

(வி - ரை.) கால் - காற்று, இது ஈண்டைக்கேற்ப பிராணவாயுவுக்காயிற்று. மோ - அசை. சிகை - மயிர்முடி. கண் என்றதால் தாமரையைக் குறித்தது. தசவாயுக்கள் - ப்ராணன் அபானன், வ்யானன், உதானன், சமானன், தேவதத்தன், கூர்மன், க்ருகரன், தநஞ்சயன், நாகன். தவளம் - வெள்ளை. வன்னி - வஹ்னி என்னும் வடசொற்றிரிபு. இதயம் - ஹ்ருதயம் என்னும் வடசொற்றிரிபு. வன்னம் - வர்ணம் என்னும் வடசொற்றிரிபு. செபம் - ஜபம் என்னும் வடசொற்றிரிபு. காயத்திரி - காயத்ரீ என்னும் வடசொற்றிரிபு.

இருபதோ டீரிரண்டா மெழுத்தவாய் முடியைந் தாகி
வருபத மூன்று யாறு வயிறவாய் வகுக்க நீங்கண்
மருவுநூல் கடவு ளொன்றாய் வசனியா வன்றி மற்றுங்
கருமமா நுங்கள் சாங்கி யாயனங் கழறக் கேண்மோ.

(ப - ரை.) இருபதோடு ஈர் இரண்டு ஆம் எழுத்த ஆய் - (இத்தக் காயத்ரீ மஹா மந்த்ரமானது) இருபத்து நான்கெழுத்துக்களையுடையனவாகி, முடி ஐந்து ஆகி - ஐந்து சிரங்களை யுடையனவாகி, வருபதம் மூன்றாய் - எவ்வெட்டு எழுத்துக்களாக வருகின்ற மூன்று அடிகளையுடையனவாகி, ஆறு வயிற ஆய் - ஆறு வயிறுகளை யுடையனவாகி, வகுக்க - வகைப்படுத்தவும், நீங்கள் - நீங்கள், மருவும் - ஆசரிக்கும், நூல் - சாஸ்த்ரமானது, கடவுள் - தெய்வம், ஒன்று ஆய் - ஒன்றேயாக, வசனியா - நிச்சயித்துச் சொல்லாது, அன்றி - அல்லாமலும், மற்றும் - மேலும், கர்மம் ஆம் - கர்மமார்க்கமாகின்ற, நுங்கள் - உங்களுடைய, சாங்கியாயனம் - ஸாங்க்யாயந மஹர்ஷிகோத்ரத்தையும், கழற - நான் சொல்ல, கேள் - கேட்கக்கடவை, எ - று.

(பொ - ரை.) இத்தக் காயத்ரீ மஹா மந்த்ரமானது இருபத்து நான்கெழுத்துக்களையுடையனவாகி ஐந்து சிரங்களையுடையனவாகி எவ்வெட்டு எழுத்துக்களாக வருகின்ற மூன்று அடிகளையுடையனவாகி ஆறு வயிறுகளை யுடையனவாகி நீங்கள் ஆசரிக்கும் சாஸ்த்ரமானது தெய்வம் ஒன்றேயாக நிச்சயித்துச் சொல்லாது, அல்லாமலும் மேலும் கர்மமார்க்கமாகின்ற உங்களுடைய ஸாங்க்யாயநமஹர்ஷிகோத்ரத்துக்குச் சமானமானதோர் கோத்ரத்தின் வரலாற்றினையும் நான் சொல்லக் கேட்கக்கடவை.

(வி - ரை.) பதம் - பாதம் என்னும் வடசொற்றிரிபு. இருபத்துநான்கு எழுத்துக்கள் - ஓம் | தத்ஸவிதுர்வரேண்யம் | பர்கோதேவஸ்யதீமஹி | தியோயோநঃ ப்ரசோதயாத் || ஐந்து சிரங்கள் - வ்யாகரணம், சிக்ஷா, கல்பம், நிருக்தம், ஜ்யோதிஷம். ஆறு வயிறுகள் - நான்கு திக்குகளும் மேலும் கீழும். (அரு)

பலவடி விதனுக் காசான் பலகரு மச்ச டான்மாச்
சொலலுறு மந்தி ரந்தான் சொன்னமந் திரம் தன்றே
நிலைபெறு கன்ம பந்த நெறியிலா வெம்பி ரானை
விலகிலா வீர சைவ விதியினை விளம்பக் கேண்மோ.

(ப - ரை.) இதனுக்கு - இந்தக் காயத்ரீ மஹா மந்த்ரத்துக்கு, வடிவு - உருவங்களோ, பல - அநேகமாம், ஆசான் - தேசிகனே, பலகருமம் - பலகர்மங்களையுடைய, சட ஆன்மா - நரனுவான், சொலல் உறு - சொல்லுதற்குரிய, மந்திரம் - மந்த்ரமோ, சொன்ன - மேற்சொல்லிய, மந்திரம் - காயத்ரீ மஹா மந்த்ரமாம், நிலைபெறு - நிலைபெற்ற, கன்மபந்த நெறி இல்லா - கர்மசம்பந்த மார்க்கத்தையுடையனல்லாத, எம்பிரானை - எமது சிவபெருமானை, விலகு இல்லா - (தேசிகனுக மனோவாக்காயங்களினின்றும் எக்காலத்திலும்) விட்டு நீங்காத, வீரசைவவிதியினை - வீரசைவநுட்பத்தினை, விளம்ப - (நான்) சொல்ல, கேள் - கேட்கக்கடவை, எ - று.

(போ - ரை.) இந்தக் காயத்ரீ மஹா மந்த்ரத்துக்கு உருவங்களோ அநேகமாம், தேசிகனே பலகர்மங்களையுடைய நரனுவான், சொல்லுதற்குரிய மந்த்ரமோ மேற்சொல்லிய காயத்ரீ மஹா மந்த்ரமாம், நிலைபெற்ற கர்மசம்பந்த மார்க்கத்தையுடையனல்லாத எமது சிவபெருமானைத் தேசிகனுக மனோவாக்காயங்களினின்றுமெக்காலத்தும் விட்டுநீங்காத வீரசைவநுட்பத்தினை நான் சொல்லக்கேட்கக்கடவை.

(வி - ரை.) பிரான் - விராட் என்றும் சிதைவென்றும் பிரபு என்றும் சிதைவென்றும் கூறுப. பந்தம் - கட்டு. நரன் ஆவான் - ப்ராஹ்மணோத்தமனுன சிவபெருமானுகான். சடம் - ஜடம் என்னும் வடசொற்றிரிபு. ஆன்மா - ஆத்மா என்னும் வடசொற்றிரிபு. மந்திரம் - மந்த்ரம் என்னும் வடசொற்றிரிபு. அன்று ஏ - அசைநிலை. பலவடிவு என்றது காயத்ரீவைஷ்ணவீ ஸாவித்ரீ யாதியார்களை. ஜடான்மா என்றது விஸ்வாமித்ராதி ருஷிகளை. காயத்ரீ மஹா மந்த்ரத்துக்குரிய ருஷிகள் எழுவரென்றும் சில சாஸ்த்ரங்களிற் கண்டுள்ளது:—அத்திரி, ஆங்கிரசன், கௌதமன், சமதக்கினி, பாரத்துவாசன், வசிட்டன், விசுவாமித்திரன், அன்றியும் அகத்தியன், ஆங்கிரசன், கௌதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன், அன்றியும் விசுவாமித்திரன், வாமதேவன், அத்திரி, பாரத்துவாசன், விசிட்டன், பிருகு, உபமந்யு, அன்றியும் அத்திரி, பிருகு, விசுவாமித்திரன், வசிட்டன், கௌதமன், காசிபன், ஆங்கிரசன் என்பர். ஈண்டுப் பின்வரும் வாக்யங்களைக் கவனிக்கத்தக்கது:—

ஸந்த்யாவந்தனம்.

ருக்வேதவாக்யம்.

காயத்ரீ மஹா மந்த்ரம்.

ఓం భూః ఓం భువః ఓం స్వః ఓం మహః ఓం జనః ఓం తపః ఓం సత్యం ॥

ఓం తత్సవితుర్వరేణ్యం, భర్గో దేవస్య ధీమహి, ధియో యో నః ప్రచోదయాత్ ॥

ஓம் பூ: ஓம் புவ: ஓம் ஸ்வ: ஓம் மஹ: ஓம் ஜந: ஓம் தப: ஓம் ஸத்யம் ||

ஓம் தத்ஸவிதுர்வரேண்யம் | பர்கோதேவஸ்யதீமஹி | தியோயோந: ப்ரசோதயாத் ||

(இதன் பொருள்.)

பூலோகம் பரப்ரஹ்மரூபமானது, புவர்லோகம் பரப்ரஹ்மரூபமானது, ஸ்வ: என்னும் லோகம் பரப்ரஹ்மரூபமானது, மஹ: என்னும் லோகம் பரப்ரஹ்மரூபமானது, ஜந: என்னும் லோகம் பரப்ரஹ்மரூபமானது, தப: என்னும் லோகம் பரப்ரஹ்மரூபமானது, ஸத்யலோகம் பரப்ரஹ்மரூபமானது.

எவன் நம்முடைய புத்தியில் பிரவேசிக்கின்றனனோ? அப்படிப்பட்ட பிரேரகனை பரமாத்மாவின் சிரேஷ்டமாகி விளங்குகின்ற ஜ்யோதியை த்யாநஞ்செய்கின்றோம். (ஓம் பூமி ஆகாய சுவர்க்கங்களே! வணங்குதற்குரிய பிரகாசமுள்ள சூரியனை த்யாநிக்கின்றோம்: நமது புத்தி பிரகாசிக்கட்டும்).

காயத்ரீஸ்வரூபம்.

[illegible]

காயதரயாः காயத்ரீ சந்தோ விஸ்வாமித்ரருஷிः ஸவிதா தேவதா அக்நிர்முகம் ப்ரஹ்மாஸிரः விஷ்ணுர்ஹ்ருதயம் ருத்ரஸ்ஸிகா ப்ருதிவீயோநிः ப்ராணாபாநவ்யாநோதாநஸமாநா ஸப்ராணாஸ்ஸ்வேதவர்ணா ஸாங்க்யாயநகோத்ரா காயத்ரீ சதுர்விம்ஸத்யக்ஷரா த்ரிபதா ஷட்குக்ஷிः, பஞ்ச ஸீர்ஷோபநயந விநியோகः ஓம் பூः ........................ பூர்புவஸ்வரோம்.

(இதன்பொருள்.)

காயத்ரீ என்பதற்குக் காயத்ரீ என்பதே சந்தஸ், விஸ்வாமித்ரரே ருஷி, சூரியனே தெய்வம், அக்நியே முகம், ப்ரஹ்மாவே சிரம், விஷ்ணுவே ஹ்ருதயம், ருத்ரனே சிகை, பூமியே யோநி, ப்ராணனே ப்ராணன் அபானன் வ்யானன் உதானன் சமானன் என்பவைகள், உபப்ராணனே தேவதத்தன் கூர்மன் க்ருகரன் தநஞ்சயன் நாகன் என்பவைகள், வெள்ளை நிறமுள்ளதும் ஸாங்க்யாயந மஹர்ஷியோடு சமானமான கோத்ரமுடையதும், இருபத்துநான்கு அக்ஷரங்களையுடையதும் மூன்றடிகளையுடையதும் ஆறு வயிறுகளை யுடையதும் ஐந்து சிரங்களை யுடையதுமான இப்படிப்பட்ட காய்த்ரீ மஹாமந்த்ரத்திற்கு உபநயநத்தில் விநியோகம்.

ருக்வேதிப்ரஹ்மகர்மவாக்யம்.

காயத்ரீஸ்வரூபம்.

[illegible]

ஓம் ஸ்வேதோவர்ணः அக்நிர்முகம் ப்ரஹ்மாஸிரः விஷ்ணுர்ஹ்ருதயம் ருத்ரோலலாடம் ப்ருத்வீகுக்ஷிः த்ரைலோக்யம்சரணः ஸாங்க்யாயநகோத்ரம் த்ரிபதாகாயத்ரீ ॥ மமாஸேஷ பாபக்ஷயார்த்தம் காயத்ரீஜபமஹம் கரிஷ்யே ॥

(இதன்பொருள்.)

வெள்ளை நிறம் அக்நி முகம் ப்ரஹ்மா சிரசு விஷ்ணு ஹ்ருதயம் ருத்ரன் நெற்றி பூமி வயிறு த்ரிலோகங்கள் பாதங்களாக வுள்ளதும் ஸாங்க்யாயநகோத்ரமும் மூன்று பாதமுமுள்ளதுமான காயத்ரீ! என்னுடைய சமஸ்த பாபங்களும் நாசமாகும் பொருட்டு காயத்ரீ ஜபம் செய்கிறேன்.

ப்ராதஸ்ஸந்த்யா — காயத்ரீ.

[illegible]

[illegible] ॥
[illegible] ॥

பாலாம் பாலாதித்ய மண்டலமத்யஸ்தாம் ரக்தவர்ணாம் ரக்தாம்பரானுலேபன ஸ்ரகாபரணாம் சதுர்வக்த்ராம் தண்டகமண்டல்வக்ஷ ஸூத்ராபயாங்க சதுர்புஜாம் ஹம்ஸாஸனாரூடாம் ப்ரஹ்மதைவத்யாம் ருக்வேதமுதாஹரந்தீம் பூர்லோகாதிஷ்டாத்ரீம் காயத்ரீம் நாமதேவதாம் த்யாத்வா ‖ அஷ்டோத்தர ஸதவாரமஷ்டா விம்ஸதி வாரம்வா தஸவாரம்வா காயத்ரீம் ஜபித்வா ‖

(இதன்பொருள்.)

பால்யமுள்ளவளும், இளஞ்சூரிய மண்டலமத்தியிலுள்ளவளும், செவந்த நிறமுள்ளவளும், செவந்த பட்டுப்புடைவையும் செவந்த சந்தநமும் செவந்த புஷ்பமும் செவந்த ஆபரணமு மணிந்தவளும், நான்கு முகமுள்ளவளும், தண்டம் கமண்டலம் ஜபமாலை அபயமுமாகிய இவற்றைச் சின்னங்களாகவுடைய நான்கு கைகளுள்ளவளும், அன்ன வாஹநத்திலேறியுள்ளவளும், ப்ரஹ்மா தேவியும், ருக்வேதத்தைச் சொல்லுகிறவளும், பூலோகத்துக்கதிஷ்டான தேவியுமாயிருக்கிற காயத்ரீ என்கிற திருநாமமுள்ள தேவதையை த்யானித்து அற்றெட்டுத் தடவையாவது இருபத்தெட்டுத் தடவையாவது பத்துத்தடவையாவது காயத்ரீயை ஜபித்து.

மாத்யாஹ்நிகஸந்த்யா—ஸாவித்ரீ.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] ‖

யுவதிம் யுவாதித்ய மண்டல மத்யஸ்தாம் ஶ்வேதவர்ணாம் ஶ்வேதாம்பரானுலேபன ஸ்ரகாபரணாம் சதுர்வக்த்ராம் ப்ரதிவக்த்ரம் த்ரிநேத்ராம் சந்த்ரஶேகராம் த்ரிஶூல கட்க கட்வாங்க டமர்வங்கசதுர்புஜாம் வ்ருஷபாஸநாரூடாம் ருத்ரதைவத்யாம் யஜுர்வேதமுதாஹரந்தீம் புவர்லோகாதிஷ்டாத்ரீம் ஸாவித்ரீம் நாமதேவதாம் த்யாத்வா யதா ஶக்திகாயத்ரீம் ஜபித்வா ‖

(இதன்பொருள்.)

யௌவநமுள்ளவளும், இளமை திரும்பிய சூரியமண்டலத்தின் மத்தியிலுள்ளவளும், வெள்ளைநிற முள்ளவளும், வெள்ளைப் புடைவை வெள்ளைச் சந்தநம் வெள்ளைப் புஷ்பம் வெள்ளையாபரண மணிந்தவளும், நான்கு முகமுள்ளவளும், ஒவ்வொரு முகத்திற்கு மூன்றாக பன்னிரண்டு கண்ணுடையவளும், சந்திரனை முடியிலணிந்தவளும், சூலம் வாள் தண்டு டமருகம் ஆகிய இவற்றைச் சின்னங்களாகவுள்ள நான்குகைகளை யுடையவளும், வ்ருஷப வாஹநத்திலேறி யிருப்பவளும், ருத்ரதேவியும், யஜுர்வேதத்தைச் சொல்லுகிறவளும், புவர்லோகத்துக் கதிஷ்டான தேவியுமாயிருக்கிற ஸாவித்ரீ என்னும் திருநாமமுள்ள தேவதையை த்யானித்து சக்திக்குத்தக்கபடி காயத்ரீயை ஜபித்து.

ஸாயம்ஸந்த்யா—ஸரஸ்வதீ.

[illegible]
[illegible]

[illegible]

வ்ருத்தாம் வ்ருத்தாதித்ய மண்டலமத்யஸ்தாம் ஶ்யாமவர்ணாம் ஶ்யாமாம்பராநுலேபந ஸ்ரகாபரணாமேகவக்த்ராம் ஶங்க சக்ர கதா பத்மாங்க சதுர்புஜாம் கருடாஸநாரூடாம் விஷ்ணுதைவத்யாம் ஸாமவேதமுதாஹரந்தீம் ஸ்வர்லோகாதிஷ்டாத்ரீம் ஸரஸ்வதீம் நாமதேவதாம் த்யாத்வா யதாஶக்தி காயத்ரீம் ஜபித்வா ||

(இதன்பொருள்.)

வயது முதிர்ந்தவளும், வயதுமுதிர்ந்த சூரியமண்டல மத்தியிலுள்ளவளும், கறுத்த நிறமுள்ளவளும், கறுத்த புடைவை கறுத்த சந்தநம் கறுத்த புஷ்பம் கறுத்த ஆபரணமணிந்தவளும், ஒருமுகமுள்ளவளும், சங்கு சக்ரம் கதை தாமரை இவற்றைச் சின்னங்களாகவுள்ள நான்கு கைகளையுடையவளும், கருடவாஹநத்திலேறியுள்ளவளும், விஷ்ணுதேவியும், ஸாமவேதத்தைச் சொல்லுகிறவளும், ஸ்வர்க்கலோகத்துக்கதிஷ்டானதேவியுமாகிய ஸரஸ்வதி என்னும் திருநாமமுள்ள தேவதையைச் சக்திக்குத் தக்கபடி காயத்ரீயை ஜபித்து.

அகோரசிவாசாரபத்ததி வாக்யம்.

ப்ராதஸ்ஸந்த்யா—ப்ராஹ்மீ.

[illegible]

ரக்த பூஷாம்பராம் ரக்தாம் ஜடாயஜ்ஞோப வீதநீம் ஹம்ஸபத்மாஸநாம் பாலாம் சதுர்வக்த்ராஞ் சதுர்புஜாம் || ஸ்ரகக்ஷமாலிநீம் தக்ஷே வாமே தண்டகமண்டலாம் ப்ராஹ்மீமஷ்டத்ருஶம் த்யாயேத் ப்ராதஸ்தாரா திஸேம்பரே ||

(இதன்பொருள்.)

செவந்த ஆபரணங்களும் செவந்த பட்டுப்புடைவையு முடையவளாய், செவந்தநிறமுள்ளவளாய் ஜடையும் பூணுநூலுமுடையவளாய், அன்னவாஹனமுள்ளவளாய், பத்மாஸநமுள்ளவளாய், சிறுபெண்ணுருவுள்ளவளாய், நான்கு முகங்களும் நான்கு கைகளுமுள்ளவளாய், ஸ்ரக்கு ஜபமாலிகை யிரண்டும் வலது கைகளிலும் தண்டு கமண்டலமிரண்டும் இடது கைகளிலுமுள்ளவளாய், எட்டு நேத்ரங்களுள்ளவளாய்ப், பார்வதிதேவியே ஸரஸ்வதிரூபமாயுள்ளவளாய், ப்ராஹ்மீ என்கின்ற திருநாமமுள்ளவளாய் த்யானிக்க. இது நக்ஷத்ரங்கள் கூடியிருக்கின்ற ப்ராதக்காலத்திலேயே செய்யத்தக்கது.

மாத்யாஹ்நிக ஸந்த்யா—வைஷ்ணவீ.

[illegible]

ஶுக்லாம் பரதராம் ஶுக்லாம் ஸுமாலோபவீதிநீம் |
தார்க்ஷ்ய பத்மாஸநாஸீநா முத்பிந்ந நவயௌவநாம் ||
ஶங்கசக்ர தராம் வாமே தக்ஷிணே ஸுகதாபயாம் |
த்யாயேந் மாத்யந்திநே தேவீம் வைஷ்ணவீம் ஸர்வபூஷணாம் ||

(இதன்பொருள்.)

வெள்ளைப்பட்டுப்புடைவை யுடையவளாய், வெள்ளைநிறமுள்ளவளாய், ஸுமாலிகையும் பூணுநூலுமுடையவளாய், கருடவாஹநமுள்ளவளாய், பத்மாஸநமுள்ளவளாய், யௌவந வயசு பெண்ணுயுள்ளவளாய், சங்கு சக்ரமிரண்டும் இடது கைகளிலும் கதை அபயமிரண்டும் வலது கைகளிலுமுள்ளவளாய், பார்வதிதேவியே வைஷ்ணவீரூபமா யுள்ளவளாய், ஸர்வாபரணபூஷணமுள்ளவளாய் த்யாநிக்க. இது மத்யான காலத்திலேயே செய்யத்தக்கது.

ஸாயம் ஸந்த்யா—ரௌத்ரீ.

[illegible]

நீலோத்பல தலாபாஸாம் கிஞ்சிச்சலித யௌவநாம் |
சதுர்புஜாம் த்ரிநேத்ராஞ்ச ஜடாகண்டேந்து மண்டிதாம் ||
த்ரிஶூலாக்ஷதராம் தக்ஷே வாமேஸாபயஶக்திகாம் |
ரௌத்ரீம் த்யாயேத்வ்ருஷாரூடாம் காலேர்தாஸ்தமிதேருணே ||

(இதன்பொருள்.)

கருநெய்தல் புஷ்பம்போற் காந்தியுள்ளவளாய், சற்றே திரும்பின யௌவநமுள்ளவளாய், நான்கு கைகளுள்ளவளாய், மூன்று கண்களும் ஜடையும் பூணுநூலும் சிரசிலே மூன்றாம்பிறைச்சந்திரனுமுள்ளவளாய், சூலம் ஜபமாலிகை யிரண்டும் வலது கைகளிலும் அபயம் சக்தியாயுதமிரண்டும் இடது கைகளிலுமுள்ளவளாய், வ்ருஷபவாஹநமுள்ளவளாய், பார்வதிதேவியே ரௌத்ரீ ரூபமா யுள்ளவளாய் த்யாநிக்க. இது சூரியன் பாதி மறையுஞ்சமயமாகிய சாயங்காலத்திலேயே செய்யத்தக்கது.

[illegible]

[illegible]

[illegible]

ஸந்த்யாலக்ஷணம்.

க்ருஷ்ணஜிதாஸ்ஸர்வாஸ்ஸாக்ஷிண்யஸ்ஸர்வ கர்மணாம் | நிஸ்ரஸ்ஸத்வாதி ஸம்யுக்தா சதுர்திகுணவர்ஜிதா || இதி: ப்ரஹ்மாதி காரணோபாதிபேத கிஞ்சாநாம் ஸர்வக்ருத்யாநாம் ஸாக்ஷிணீம் ஶிவசக்தி மேவ ஸந்த்யாம் தத்காலாநுகுணம் ஹ்ருத்பிந்து ப்ரஹ்மரந்த்ரேஷு க்ரமேண த்யாயேதநுஸமயிந:

(இதன்பொருள்.)

இம் மூவர்களும் க்ருஷ்ணஜிநங்கள் தரித்துக்கொண்டு சர்வகர்மங்கட்கும் சாக்ஷியாய்ச் சாத்வீக குணமுள்ள ப்ராஹ்மியும் ராஜஸ குணமுள்ள வைஷ்ணவியும் தாமஸகுணமுள்ள ரௌத்ரியுமாக விருப்பார்கள், நாலாங்காலத்து தேவி ஓர் குணமுமில்லாதவள், இவ்வாறு ப்ரஹ்ம விஷ்ணு ருத்ராதிஷ்டதையாகிய சக்திகளைச் சர்வ க்ருத்யங்கட்கும் சாக்ஷியாயிருக்கிற சிவசக்தியாக நிச்சயித்து ஸந்த்யாத்ரயங்கட்கும் அந்தந்தக் காலத்துக்குத் தக்கபடி மார்பிலே ப்ராஹ்மீயையும், இரண்டு புருவத்திற்கு நடுவே வைஷ்ணவீயையும், உச்சியிலே ரௌத்ரீயையும், சமயவிஸேஷ திக்ஷைகளான சிஷ்யர்கள் த்யாநிப்பார்கள்.

(மேற்போந்தவாக்யங்களின் கருத்து.)

சிவபெருமானே ஸர்வ ஸ்வரூபமானவன். காயத்ரீ மந்த்ரமோ ஒருவனுடையதேவியாவள், ஸாங்க்யாயநருஷிகோத்ரத்தைச் சேர்ந்தவள். சிவபெருமானே அக்நி ப்ரஹ்மா விஷ்ணு ஜீவன் பூமிமுதலாகவுள்ளவன்; என்றால் அவன் எல்லாமானபிறகு ஒரு கோத்ரத்திற்பிறந்த ஒரு தேவியான காயத்ரீ மந்த்ரத்திலும் சிறந்தவனன்றோ? இதற்கு ரூபம் கோத்ரம் ஜடத்வம் குருமுகத்வமாதியாகிய கோலங்களேற்பட்டபிறகு எல்லாவற்றுக்கு மேலான தேவனுக்குச் சமானமாகி மோக்ஷமுண்டாதற்குக் காரணம் யாது? ஆனால் ஓம் நமசிவாய: (ஓம் சிவனுக்கு நமஸ்காரம்) என்னும் ராஜமந்த்ரத்தினால் மோக்ஷமுண்டாகாதிற்குமென்பதாம்; அதற்கு ஆறு எழுத்துக்களிருப்பதனால் ஷடக்ஷரீ மஹா மந்த்ரமென வழங்கலாயிற்று.

கலிவிருத்தம்.

தெரித்திஙன் மொழிந்திடுந் தரிச னர்க்கெலாந்
தரித்திட வரியதாய்த் தாவி லாரணம்
விரித்திது விதுவென விளம்பொ ணாததாய்ப்
பிரித்தரு ஞானராற் பேசொ ணாததாய்.

(ப - ரை) தெரித்து - ஐயந்திரிபற வாராய்ந்து, இங்ஙனம் - இத்தன்மைத்தென்று, மொழிந்திடும் - நிர்ணயித்துச் சொல்லுகிற, தரிசனர்க்கு எல்லாம் - ஷட்தர்ஸநர்க்கெல்லாம், தரித்திட அரியது ஆய் - கருதற்கரியதாகியும், தா இல் - அழிதலில்லாத, ஆரணம் - வேதங்கள், விரித்து - விளக்கி, இது இது என - வஸ்துவின் லக்ஷணம் இத்தன்மைத்து அதன் ஸ்வரூபம் இத்தன்மைத்தென்று, விளம்பு ஒண்ணாதது ஆய் - சொல்லக்கூடாததாகியும், அரு - அரிய, ஞானரால் - ஞானிகளால், பிரித்து - வகைப்படுத்தி, பேச ஒண்ணாதது ஆய் - எடுத்துச்சொல்லக் கூடாததாகியுமுள்ள, எ - று.

(பொ - ரை.) ஐயந்திரிபற ஆராய்ந்து இத்தன்மைத்தென்று நிர்ணயித்துச் சொல்லுகிற ஷட்தர்ஸநர்க்கெல்லாம் கருதற்கரியதாகியும், அழிதலில்லாத வேதங்கள் விளக்கி வஸ்துவின் லக்ஷணம் இத்தன்மைத்து அதன் ஸ்வரூபம் இத்தன்மைத்தென்று சொல்லக் கூடாததாகியும், அரிய ஞானிகளால் வகைப்படுத்தி யெடுத்துச் சொல்லக் கூடாததாகியுமுள்ள.

(வி - ரை.) தரிசனம் - பார்த்தது. ஆறுதரிசனங்கள் - யோகம் சாங்கியம் நியாயம் வைசேடிகம் பூருவமீமாமிசை உத்தரமீமாமிசை. இவ்வாறு கலைகளைப்போதித்தவர் ஷட்தர்ஸநர்களாவர். யோக சாஸ்த்ரத்தைச் செய்தவர் பதஞ்சலிமுனிவர், சாங்கியம் செய்தவர் கபிலமுனிவர், நியாயம் செய்தவர் கௌதமமுனிவர், வைசேடிகம் செய்தவர் கணாதமுனிவர், பூருவமீமாமிசை செய்தவர் ஜைமினிமுனிவர், உத்தரமீமாமிசை செய்தவர் வியாசமுனிவர். சிலர் ஐந்து என்பர், அவையாவன - சாங்கியம் யோகம் நியாயம் ஜைமினி வைசேடிகம். பூருவ மீமாமிசை அல்லது கர்ம மீமாமிசை யானது புண்ணியமடைதற்

குரிய கர்மங்களைச் சொல்லும், உத்தரமீமாம்சை அல்லது ப்ரஹ்ம மீமாம்சையானது வேதாந்தத்தைச்சொல்லும். வேதங்களையாதாரமாகக் கொண்டிருப்பன ஷட்தர்சனங்களாம். நியாயமும் வைசேடிகமும் தர்க்கசாஸ்த்ரங்களாம். இந்தத் தரிசனங்களைப் பயிலாதவரை வேதாந்த சாஸ்த்ரத்தில் பயில்வதில் பிரயோசனமின்றென்பர். இவ்வாறு தரிசனங்களில் வியாசமுனிவரால் செய்யப்பட்ட உத்தரமீமாம்சத்துக்கு வேதாந்தமென்னும் உபநிஷத்துக்களே மூலமாம். இவ்வேதாந்த சூத்திரங்களுக்கு கி. பி. எட்டாம் நூற்றுண்டில் நீலகண்டசிவாசாரியர் சக்திவிசிஷ்டாத்வைத பரமான (வீரசைவ) பாஷ்யத்தைச் செய்தனர். இது நீலகண்டபாஷ்யமெனப்படும். அதேகாலத்தில் சங்கராசாரியர் அதே சூத்திரங்களுக்கு அத்வைதபரமான பாஷ்யத்தைச் செய்தனர். இது சங்கரபாஷ்யமெனப்படும். சங்கராசாரியமதத்தருள் சில பண்டிதர்கள் பஞ்சதசி, ப்ருஹத்வாஸுதேவமனனம், லகுவாஸுதேவ மனனம், ப்ரஹ்மானந்தீயம் முதலான அநேக அத்வைத சாஸ்த்ரங்களைச் செய்தனர். மேலும் ஸ்ரீகரபண்டிதர் மேற்சொல்லிய சூத்திரங்களுக்கு வீரசைவபரமாய்ப் பாஷ்யம் ஒன்று செய்தனர். இது ஸ்ரீகரபாஷ்யமெனப்படும். ஈண்டு இச்செய்யுட்களைக் கவனிக்கத்தக்கது:—

**வள்ளலார்.**

*நிராமயமாய் நிட்களமாய் நித்தியமாய் நின்மலமாய்ப்*
*புராதனமாய்ச் சஞ்சலமாய்ப் பூரணமாய்ப் புனிதமாய்ச்*
*சராசரமாய்ச் சாக்கியாய்ச் சத்தியமாய்ச் சித்துருவாய்ப்*
*பராபரமாய் வெறுவெளியா யிருக்குமந்தப் பரமசிவம்.*

*ஒன்றாயும் பலவாயு முருவாயு மருவாயுங்*
*குன்றாயு மணுவாயுங் குணமாயுங் குணியாயு*
*நன்றாயுந் தீதாயு நானுயுந் தானுயு*
*மின்றாயு முளதாயு மிருக்குமந்தப் பரமசிவம்.*

*சொல்லாலு மனத்தாலுந் தொடராத சூக்குமமாய்ப்*
*பல்லாண்ற கேள்வியரு மீதென்று பகர்வரிதா*
*யொல்லாத பரஞ்சுடரா யுயிர்க்குயிரா யுண்மையதா*
*யெல்லாமா யல்லவுமா யிருக்குமந்தப் பரமசிவம்.*

**அப்பர்சுவாமிகள்.**

*மைப்படிந்த கண்ணாளுந் தானுங்கச்சி மயானத்தான் வார்சடையான் மாசொன்றில்லா*
*னொப்புடைய னல்ல னொருவனல்ல னோரூர னல்ல னுவமை யில்லி*
*யப்படிய னவ்வுருவ னவ்வண்ணத் தனவனருளே கண்ணாகக் காண்பதல்லா*
*லிப்படிய னிவ்வுருவ னிவ்வண்ணத் தனிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே.* (அ௭)

*இந்தவோர் பொருளெம தெழிற்க ரத்தினு*
*மந்தரங் கத்தினு மமர்ந்து காணமுன்*
*வந்திது விதுவென வகுத்துக் காட்டியே*
*தந்தரு ளாதியெஞ் சமய தேசிகன்.*

**(ப - ரை.)** இந்த - இந்த, ஓர் - ஒப்பற்ற, பொருள் - பரஞ்சோதியானது, எமது - நமது, எழில் - அழகாகிய, கரத்தினும் - ஸ்தூலரூபமாய் கரஸ்தலத்திலும், அந்தரங்கத்தினும் - ஸூக்ஷ்மரூபமாய் ஹ்ருதயத்திலும், அமர்ந்து - வீற்றிருந்து, காண - நாம் ப்ரத்யக்ஷமாய்த் தரிசிக்கும்படி, முன் - எமது கண்களுக்கெதிரிலும், வந்து - ஜங்கமரூபமாயெழுந்தருளி, இது இது என - இது இது வென்று, வகுத்து - வகைப்படுத்தி, காட்டி - காண்பித்து, தந்து அருள் - கடாக்ஷித்தருளிய, ஆதி - முதல்வனுகிய சிவபெருமானே, எம் - எமது, சமயதேசிகன் - சமயாசாரியனுவான், எ - று.

(பொ - ரை.) இந்த ஒப்பற்ற பரஞ்சோதியானது ஸ்தூலரூபமாய் நமது அழகாகிய கரஸ்தலத்திலும் ஸூக்ஷ்மரூபமாய் ஹ்ருதயத்திலும் வீற்றிருந்து நாம் ப்ரத்யக்ஷமாய்த் தரிசிக்கும்படி எமது கண்களுக்கெதிரிலும் ஜங்கமரூபமாயெழுந்தருளி இது இதுவென்று வகைப்படுத்திக் காண்பித்துக் கடாக்ஷித்தருளிய முதல்வனாகிய சிவபெருமானே எமது சமயாசாரியனாவான்.

(வி - ரை.) கரத்தில் வீற்றிருப்பது - இஷ்டலிங்கம். அந்தரங்கத்தில் வீற்றிருப்பது - ப்ராணலிங்கம். (அஅ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அத்தவெண் சோம சென்னி யருந்தவர் முத்தி யுண்மை
பெத்தவெம் பிறவி நாசன் பிணங்கியாட் கொள்ளும் பெம்மா
னொத்தபெண் பாக னேக னொண்கண்மூன் றுடையோன் வேளை
மத்தக விழியாற் காய்ந்தோ னெனமறை வழுத்த லாலே.

(ப - ரை.) அத்த - பிதாவே, வெள் - வெள்ளிய, சோமன் - சந்திரனையுடைய, சென்னி - முடியையுடைய, அரு - அரிய, தவர் - சிவசாரூபம்பெற்ற தபோதனர்களுக்குரிய, முத்தி என - பரகதியாயிருப்பவனென்றும், உண்மை என - தத்துவப்பொருளாயிருப்பவனென்றும், பெத்த - பந்தமாகிய, பிறவிநாசன் என - பிறப்பில்லாதவனென்றும், பிணங்கி - தடுத்து, ஆட்கொள்ளும் - ஆட்கொண்டருளும், பெம்மான் என - பெருமானென்றும், ஒத்த - தமக்குத்தாமே ஒப்பான, பெண்பாகன் என - உமாமகேசனென்றும், ஏகன் - கடவுளென்றும், ஒள் - மேலான, கண்மூன்று உடையோன் என - முக்கண்ணனென்றும், வேளை - மன்மதனை, மத்தக விழியால் - நெற்றிக்கண்ணினால், காய்ந்தோன் என்ன - எரித்தவனென்றும், மறை - வேதங்கள், வழுத்தலாலே - துதித்தலாலே, எ - று.

(பொ - ரை.) பிதாவே! வெள்ளியசந்திரனையுடைய முடியையுடைய அரிய சிவசாரூபம்பெற்ற தபோதனர்களுக்குரிய பரகதியாயிருப்பவனென்றும், தத்துவப்பொருளாயிருப்பவனென்றும், பந்தமாகிய பிறப்பில்லாதவனென்றும், தடுத்தாட்கொண்டருளும் பெருமானென்றும், தமக்குத்தாமே ஒப்பான உமாமகேசனென்றும், கடவுளென்றும், மேலான முக்கண்ணனென்றும், மன்மதனை நெற்றிக்கண்ணினால் எரித்தவனென்றும் வேதங்கள் துதித்தலாலே.

(வி - ரை.) அத்த - அண்மைவிளி. (அகூ)

இருவினை யென்னுந் தாரு விறக்கநின் றெறியு மெஃகாய்
மருவுமெய்க் கிரியை யெட்டாய் வளருமொண் பத்தி யாலே
பொருவரு குற்ற மெல்லாம் போக்கியின் முத்தி யின்க
ணுருகியொன் றிடுமிப் பேற்றி னுயர்ந்ததாம் பேறொன் றுண்டோ.

(ப - ரை.) இருவினை என்னும் - நல்வினை தீவினையென்கின்ற இரண்டுவினையாகிய, தாரு - மரமானது, இறக்க - பட்டுப்போகும்படி, நின்று எறியும் - முடுகிநின்று வெட்டுதற்குரிய, எஃகு ஆய் - கோடரியாகியும், மருவும் மெய் - உண்மையாகிய, கிரியை எட்டு ஆய் - அஷ்டாங்கயோகமாகியும், வளரும் - வளராநின்ற, ஒள் - சிறந்த, பத்தியாலே - சிவபக்தியாலே, பொருவு அறு - ஒப்பற்ற, குற்றம் எல்லாம் - எல்லாப் பாபங்களையும், போக்கி - ஒழித்து, இன் - பேரின்பம் பொருந்திய, முத்தியின்கண் - மோக்ஷத்தில், உருகி - கரைந்து கரைந்து, ஒன்றிடும் - ஐக்யமாகும், பேற்றின் - ஆத்மலாபத்தினும், உயர்ந்தது ஆம் - சிறந்ததாகிய, பேறு - சாம்ராச்சியம், ஒன்று உண்டோ - வேறொன்றுளதோ, எ - று.

(போ - ரை.) நல்வினை தீவினையென்னுமிரண்டு வினையாகிய மரமானது பட்டுப்போகும்படி முடுகி நின்று வெட்டுதற்குரிய கோடரியாகியும், உண்மையாகிய அஷ்டாங்க யோகமாகியும், வளராநின்ற சிறந்த சிவபக்தியாலே ஒப்பற்ற எல்லாப் பாபங்களையும் ஒழித்துப் பேரின்பம்பொருந்திய மோக்ஷத்தில் கரைந்து கரைந்து ஐக்யமாகும் ஆத்மலாபத்தினும் சிறந்ததாகிய சாம்ராச்சியம் வேறொன்றுளதோ?

(வி - ரை.) எஃகு - ஆயுதம்பொது; அது ஈண்டைக்கேற்ப கோடரியெனப்பட்டது. ஐக்யமாதல் - சிவாத்வைதமாதல். உருகுதல் - ஜீவகரணம் போய்ச் சிவகரணமாதல். ஈண்டு உருகியொன்றிடும் என்றமையாலும் மாணிக்கவாசகர் தேய்ந்து தேய்ந்தொன்றும் என்றமையாலும், இதன் கருத்திதுவாம்:—பல ஜந்மாந்தரங்களிற்செய்த புண்ய விசேஷத்தின் முதிர்ச்சியால் கோடிஜந்மங்களொழிந்து நரஜந்மம் லபிக்கின்றது. நரஜந்மமடைந்தும் நெடுங்காலவளவு செய்த சிவபுண்ய முதிர்ச்சியால் பக்தஸ்தலனாகின்றான். பக்தஸ்தல முதிர்ச்சியால் மாஹேஶ்வரஸ்தலனாகின்றான், மாஹேஶ்வரஸ்தல முதிர்ச்சியால் ப்ரஸாதிஸ்தலனாகின்றான், ப்ரஸாதிஸ்தல முதிர்ச்சியால் ப்ராணலிங்கிஸ்தலனாகின்றான், ப்ராணலிங்கிஸ்தல முதிர்ச்சியால் சரணஸ்தலனாகின்றான், சரணஸ்தல முதிர்ச்சியால் ஐக்யஸ்தலனாகின்றான். சர்யாக்ரியாயோகஜ்ஞான பாதங்களில் நிலைபெற்றவனுக்கு எவ்வாறு முறையே சாலோக சாமீப சாரூப சாயுஜ்யபதவிகள் ப்ராப்தமாகின்றனவோ, அவ்வாறே பக்த மாஹேஶ்வர ப்ரஸாதி ப்ராணலிங்கி சரண ஐக்யஸ்தலங்களில் நிலைபெற்றவனுக்கு முறையே ஆசாரலிங்க குருலிங்க சிவலிங்க ஜங்கமலிங்க ப்ரஸாதலிங்க மஹாலிங்கஸ்தலங்களும் ப்ராப்தமாகின்றன. இவ்வாறு ஷட்ஸ்தல நிஷ்டையில் நிலைபெற்றவனுக்கு ஓரே ஜந்மத்திலேயே சிவைக்யமுத்தி சித்திப்பது ஸத்யம் ஸத்யம். இந்த ஷட்ஸ்தல விவரங்களைச் சித்தாந்தசிகாமணியில் பரக்கக்காணலாம். தேய்ந்து உருகி என்றமையால் ஒன்றுகெட்டு வேறொன்றாகாமல், முன்னிலையின் முதிர்ச்சியே பின்னிலையாகிய அநேக சோபானங்களையடைந்து மேலாகிய சிவைக்யமுத்தி சித்திப்பதாம். அஷ்டாங்கயோகம்-இயமம் நியமம் ஆஸனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி. இவைகளை எட்டுநிலையெனவும் கூறுப. இயமம் - கொல்லாமை, வாய்மை, திருடாமை, விவாகமின்மை, பொறுமை, தைர்யம், கருணை, நேர்மை, மிதவுணவு, தூய்மை எனப் பத்துவகைப்படும். நியமம் - தவம், சந்தோஷம், சிரத்தை, தானம், ஈஶ்வரபூஜை, சித்தாந்தசிரவணம், நாணம், மதி, ஜபம், விரதம் எனப் பத்துவகைப்படும். ஆஸனம் - பத்திராதனம் முதல் எண்பத்துநான்கு வகைப்படும். ப்ராணாயாமம் - இரேசகபூரக கும்பகங்களாக வாயுநிரோதனம் செய்தலாம். ப்ரத்தியாகாரம் - விஷயங்களில் செல்லாவண்ணம் இந்த்ரியங்களை அந்தர்முகத்திலமையச் செய்தலாம். தியானம் - சிவசிந்தனை செய்தலாம். தாரணை - சிவத்தில் சித்தஸ்தாபனம் செய்தலாம். சமாதி - சிவத்தோடுதான் பிறனாகாத்தன்மையடைதலாம். உண்டோ என்றது இல்லையென்றபடி. ஈண்டு இச்செய்யுட்களைக் கவனிக்கத்தக்கது.

சித்தாந்தசிகாமணி.

கருமவேர்செறிந்துதுன்பப்பாசிலைகாட்டிநிற்கு
மொருபெரும்பவமரத்திற்குற்றவெம்பரசுதானும்
பெருமலவிருளினுக்குப்பிறங்கொளியிரவியாகுந்
தெருமருமனமடக்குஞ்சிவனுருத்தியானமன்றே.

திருவாசகம்.

இன்றெனக்கருளியிருள்கடிந்துள்ளத்தெழுகின்றஞாயிறேபோன்று
நின்றநின்றன்மைநினைப்பறநினைந்தேனீயலாற்பிறிதுமற்றின்மை
சென்றுசென்றணுவாய்த்தேய்ந்துதேய்ந்தொன்றாந்திருப்பெருந்துறையுறைசிவனே
ஒன்றுநீயல்லையன்றியொன்றில்லையாருன்னையறியகிற்பாரே. (கூ0)

இட்டலிங் கத்தொண் சேவை யெனுமுய ரனுப வந்தா
னுட்டரு மிட்ட மெல்லா முதவிடு முரைக்கி லுன்னிற்
றிட்டிசெய் திடிற்கொ டுக்குஞ் சீவனன் முத்தி யின்சந்
துட்டமென் றார ணங்கள் சொல்லுமிச் சுகம்போ லுண்டோ.

(ப - ரை.) ஒள் - மேன்மையாகிய, இஷ்டலிங்கத்துசேவை - இஷ்டலிங்கபூஜை, என்னும் - என்று சொல்லப்படும், உரன் - த்ருடமான, அனுபவம் - அநுபவமானது, உள்தரும் இட்டம் எல்லாம் - மநோபீஷ்டங்களெல்லாவற்றையும், உதவிடும் என்று - அநுக்ரஹிக்குமென்றும், உரைக்கில் - வாக்கினால் துதிப்பினும், உன்னில் - மனத்தினால் நினைப்பினும், திட்டிசெய்திடில் - கண்களினால் தரிசிப்பினும், நல் - மஹத்வமாகிய, சீவன் முத்தியின் - ஜீவன்முக்தியின், சந்துட்டம் - சுகத்தையும், கொடுக்கும் என்று - அநுக்ரஹிக்குமென்றும், ஆரணங்கள் - வேதங்கள், சொல்லும் - முறையிடாநிற்கும் (ஆதலால்), இ - இந்த, சுகம்போல - பரமசுகத்தைப்போல, உண்டோ - வேறொரு சுகமுண்டோ எ - று.

(பொ - ரை.) மேன்மையாகிய இஷ்டலிங்கபூஜையென்று சொல்லப்படும் த்ருடமான அநுபவமானது மநோபீஷ்டங்களெல்லாவற்றையும் அநுக்ரஹிக்குமென்றும், வாக்கினால் துதிப்பினும் மனத்தினால் நினைப்பினும் கண்களினால் தரிசிப்பினும் மஹத்வமாகிய ஜீவன்முக்தியின் சுகத்தை யநுக்ரஹிக்குமென்றும் வேதங்கள் முறையிடாநிற்கும், ஆதலால் இந்தப் பரமசுகத்தைப்போல வேறொருசுகமுண்டோ?

(வி - ரை.) இஷ்டலிங்கம் - அநிஷ்டமாகிய கர்மங்களைப்போக்கி இஷ்டமாகிய சிவாநந்தாநுபூதியை யநுக்ரஹிக்குங்காரணத்தால் இப்பெயர் வழங்கலாயிற்று. திட்டி - த்ருஷ்டி என்னும் வடசொற்றிரிபு. சந்துட்டம் - சந்துஷ்டம் என்னும் வடசொற்றிரிபு. இட்டம் - இஷ்டம் என்னும் வடசொற்றிரிபு. சேவை - ஸேவா என்னும் வடசொற்றிரிபு. சீவன் - ஜீவன் என்னும் வடசொற்றிரிபு. இச்செய்யுளால் மநோவாக்காயங்களின் க்ரியைகளையும் சிவலிங்கபூஜையின் வழிபாட்டினையும் சொல்லப்பட்டது. சீவன் முத்தி - யான் எனதென்னும் விகற்பம்பற்றிப்பசுகரணமாய்ப் பயில்வதின்றிச் சிவகரணமாய்ச் சாக்கிரத்தே யதீதத்தைப்புரிந்து நிற்றல். உண்டோ என்றது இல்லையென்றபடி. (கக)

கலந்திடே லந்த ணாளர் கன்மத்தைச் சன்மார்க் கத்தோ
டிலங்கரன் பத்தி மார்க்க வியலிது வேறு தேறி
நிலந்திகழ் சமயர் தந்த நிலைநல மெனத்தா பிப்பர்
சலங்கொடம் முணர்வா லந்தச் சமயரைச் சார லாமோ.

(ப - ரை.) அந்தணாளர் - வேதியரது, கன்மத்தை - கர்மமார்க்கத்தினை, சன்மார்க்கத்தோடு - சிவபக்தி மார்க்கத்துடன், கலந்திடேல் - குழப்பாதே, இலங்கு - விளங்குகிற, அரன் பத்திமார்க்க இயல் - சிவபக்தி மார்க்கத்தின் லக்ஷணம், இது - இதுவேயாகும், வேறு தேறி - இவ்வீரசைவ மார்க்கத்தினின்றும் வேறுவிதமாகத் துன்மார்க்கத்தில் தேர்ச்சியடைந்து, நிலம் - மண்ணுலகில், திகழ் - தோன்றுதற்குரிய, சமயர் - பரசமய வாதியர், தம் தம் - தங்கள் தங்கள், நிலை - மார்க்கத்தினையே, நலம் என - நன்றென்று, சலம் கொள் - சலநத்தைக்கொண்ட, தம் - தமது, உணர்வால் - சிற்றறிவினால், தாபிப்பர் - நாட்டுவோர்கள், அந்தச் சமயரை - அந்தப் பரசமயவாதியர்களை, சாரலாமோ - சேரலாமோ, எ - று.

(பொ - ரை.) வேதியரது கர்மமார்க்கத்தினை சிவபக்திமார்க்கத்துடன் குழப்பாதே, விளங்குகிற சிவபக்தி மார்க்கத்தின் லக்ஷணம் இதுவேயாகும், இவ் வீரசைவமார்க்கத்தினின்றும் வேறுவிதமாகத் துன்மார்க்கத்தில் தேர்ச்சியடைந்து மண்ணுலகில்

தோன்றுதற்குரிய பரசமயவாதியர் தங்கள் தங்கள் மார்க்கத்தினையே நன்றென்று சலாநத்தைக்கொண்ட தமது சிற்றறிவினால் நாட்டுவார்கள், அந்தப் பரசமயவாதியர் களைச் சேரலாமோ ?

(வி - ரை.) தாபித்தல்-ஸ்தாபித்தல் என்னும் வடசொற்றிரிபு. சாரலாமோ என்றது சாரக்கூடாதென்றபடி. ஈண்டு இச்செய்யுளைக் கவனிக்கத்தக்கது:—

பிரபுலிங்கலீலை.

பங்க வளற்று வழிமாற்றி யொரு நல்வழியைப் பகர்வார்போற்
றங்கண் மதியிற் பலபிதற்றுஞ் சமய ருரைக டமைநீக்கி
யங்க நிலையிற் றிலிங்க நிலையிற் றென்றருளும் வீரசைவ
சிங்க நிலைத்த வருட்சென்ன வசவன் றிருத்தாள் சிரத்தணிவாம். (௬௨)

அரன்பெரும் பத்த ராஞே ரன்னிய தெய்வ முன்னிற்
பரந்தயர் நரக மீரொன் பானுக மென்னும் வேதந்
திரந்தர ணியன்றீதிங்க ளரியய னிந்தி ராதி
வரந்தரு தேவ ரென்று வணங்கிநீர் வாழ்த்துங் காலை.

(ப - ரை.) வேதம் - வேதங்கள், பெரு - மஹத்வம் பொருந்திய, அரன் பத்தர் ஆஞேர் - சிவபக்தரானவர்கள், அன்னியதெய்வம் - பிறதெய்வங்களை, உன்னில் - நினைத் தாராயின், பரவி - மிகுந்து, அயர் - வேதனைபடுதற்குரிய, நரகம் - நரகத்தை, ஈர் ஒன் பான் உகம் - பதினெட்டுகோடி வருஷகாலம் அநுபவிக்கவேண்டிவரும், என்னும் - என்று முறையிடாநிற்கும், திரம் - நிலைபெற்ற, தரணியன் - சூரியன், தீ - நெருப்பு, திங்கள் - சந்திரன், அரி - விட்டுணு, அயன் - பிரமன், இந்திராதி - இந்திரன் முதலிய தேவர்களை, வரம் - வேண்டியவரங்களை, தரும் - கொடுக்கிற, தேவர் என்று - தேவர்க ளென்று ஒருபொருட்படுத்தி நினைத்து, வணங்கி - தொழுது, நீர் - நீங்கள், வாழ்த்துங் காலை - துதிக்குங் காலத்தில், எ - று.

(பொ - ரை.) வேதங்கள் மஹத்வம்பொருந்திய சிவபக்தரானவர்கள் பிறதெய் வங்களை நினைத்தாராயின் மிகுந்து வேதனைபடுதற்குரிய நரகத்தை பதினெட்டுகோடி வருஷகாலம் அநுபவிக்கவேண்டிவருமென்று முறையிடாநிற்கும், நிலைபெற்ற சூரியன் நெருப்பு சந்திரன் விட்டுணு பிரமன் இந்திரன் முதலிய தேவர்களை வேண்டிய வரங்க ளைக்கொடுக்கிற தேவர்களென்று ஒருபொருட்படுத்தி நினைத்து நீங்கள் தொழுது துதிக் குங்காலத்தில்.

(வி - ரை.) அயன் - அஜன் என்னும் வடசொற்றிரிபு. திரம் - ஸ்திரம் என்னும் வடசொற்றிரிபு. உகம் - யுகம் என்னும் வடசொற்றிரிபு. வருணன் வாயு குபேரன் முத லானவரைக் குறித்தற்கு இந்திராதி என்றார். உகம் - கோடிவருஷம் என்னும் பொருளில் வந்தது. நிலம் திகழ் - மண்ணில் தோன்றுதல் (ஜனனமெடுத்தல்). சிவபக்தன் பிற தேவர்களை வழிபடக்கூடாது என்பதைப்பற்றி,

ஆதித்ய புராண வாக்யம்.

யொவ்ஹநுாதஃ ஃநஃதெமாய தீ௦ ஶிவருவிணீ௦ ।
வஸ்ஹெதவஸ ஃஹாவொெ நாமெக கூ ஸ௦ஹ்யா ॥
யோப்யந்யதாது மநுதே காயத்ரீம் ஶிவரூபிணீம் ।
பச்யதேஸ மஹா கோரே நரகே கல்பஸங்க்யயா ॥ (இதன்பொருள்)

எவன் சிவரூபியா யிருக்கிற காயத்ரீயை வேறுவிதமாக நினைக்கிருனே அவன் மிஹா பயங்கரமான நரகத்தில் கல்ப கணக்காய்க் கஷ்டப் படுத்தப்படுகிறுன் என்று வேதங்கள் கூறுகிற்கும்.

(௬௩)



வசவண்ணர் ஜனனம்.

வந்தியா தொருநாட் டப்பின் மறையவர் நீதி கேடா
முந்தியே யிறைஞ்சி லீசன் மோகநற் பத்தி குன்றும்
புந்தியா லிவையி ரண்டும் பொருந்திலந் தணச்சீர் பொன்று
மந்திவா னிறத்தோ னன்ப னந்தண னாவ தெங்ஙன்.

(ப - ரை.) ஒருநாள் - (இவ்வாறு) ஒருதினம், வந்தியாது - துதிக்காமல், தப்பின் - தவறினால், மறையவர் நீதி - ப்ராஹ்மணத்வத்துக்கு, கேடு ஆம் - கெடுதியுண்டாகும், முந்தி - அத்தேவர்களை முற்பட்டு, இறைஞ்சில் - வணங்கினால், ஈசன் - சிவபெருமானது, மோகம் - அன்பாகிய, நல் - ஸத், பத்தி - பக்தியானது, குன்றும் - கெட்டுப்போகும் புந்தியால் - அறிவினால், இவை யிரண்டும் - இவ்விரண்டு ஆசாரங்களும், பொருந்தில் - கலந்ததாயின், அந்தணர் சீர் - ப்ராஹ்மணத்வமானது, பொன்றும் - கெட்டுப்போகும் (ஆதலால்), அந்திவான் நிறத்தோன் அன்பன் - சிவபக்தனானவன், அந்தணன் ஆவது - ப்ராஹ்மணனென்று சொல்வது, எங்ஙன் - எவ்வாறு, எ - று.

(பொ - ரை.) இவ்வாறு ஒருதினம் துதிக்காமல் தவறினால் ப்ராஹ்மணத்வத்துக்குக் கெடுதியுண்டாகும், அத் தேவர்களை முற்பட்டு வணங்கினால் சிவபெருமானது அன்பாகிய ஸத்பக்தியானது கெட்டுப்போகும், இவ்விரண்டு ஆசாரங்களும் கலந்ததாயின் ப்ராஹ்மணத்வமானது கெட்டுப்போகும், ஆதலால் சிவபக்தனானவன் ப்ராஹ்மணனென்று சொல்வது எவ்வாறு?

(வி - ரை.) அந்திவான்நிறத்தோன் - அந்திக்காலத்தில் செவ்வானம்போலும் செவந்த திருமேனியையுடையவன். கேடு - முதனிலைதிரிந்த தொழிற்பெயர், பகுதி கெடு. நீதி, சீர், த்வம் என்பன நிலை என்னும் பரியாய நாமங்கள். (கச)

மேதினி கல்லி மாவின் விதையிடின் வேம்ப தாகா
நீதிசேர் சிவன்ற னன்பர் நெறியுமப் படியே குன்றா
வேதியர் பலதெய் வங்கள் விரும்பலால் வேசி யன்னார்
தீதிலாச் சிவன்ற னன்பர் செய்யகற் புடையா ரொப்பார்.

(ப - ரை.) மேதினி - பூமியை, கல்லி - தோண்டி, மாவின்விதை - மாங்கொட்டையை, இடின் - நட்டால், வேம்பு ஆகா - வேம்பாகமாட்டாது, நீதிசேர் - ஸதாசாரத்தையுடைய, சிவன் அன்பர் - சிவபக்தரது, நெறியும் - சன்மார்க்கமும், அப்படியே - அவ்வாறே, குன்றா - கெடமாட்டாது, வேதியர் - மறையோர், பல தெய்வங்கள் - அநேக தேவர்களை, விரும்பலால் - வழிபடுதலால், வேசி - விலைமாதரை, அன்னார் - நிகர்ப்பார், தீதுஇல்லா - பாவமற்ற, சிவன் அன்பர் - சிவபக்தர், செய்ய கற்பு - கற்பிலக்கணம், உடையவர் - உடையமாதரை, ஒப்பார் - நிகர்ப்பார், எ - று.

(பொ - ரை.) பூமியைத்தோண்டி மாங்கொட்டையை நட்டால் வேம்பாகமாட்டாது, ஸதாசாரத்தையுடைய சிவபக்தரது சன்மார்க்கமும் அவ்வாறே கெடமாட்டாது, மறையோர் அநேகதேவர்களை வழிபடுதலால் விலைமாதரை நிகர்ப்பார், பாவமற்ற சிவபக்தர் கற்பிலக்கணமுடைய மாதரை நிகர்ப்பார்.

(வி - ரை.) செய்ய - லக்ஷணமாகிய. ஈண்டு இச்செய்யுளைக் கவனிக்கத்தக்கது—:

தாயுமானவர்.

கற்புறு சிந்தைமாதர் கணவரை யன்றி வேறோ
ரிற்புறத் தவரை நாடா ரியாங்களு மின்ப வாழ்வுக்
தற்பொறி யாகநல்குந் தலைவநின் னலதோர் தெய்வம்
பொற்புறக் கருதோங் கண்டாய் பூரண னந்தவாழ்வே. (கரு)

கேளையா நந்தி முன்னங் கீர்த்தியா லருச்சித் தெம்மை
யாளைய னனேகனேக னாமெனு மந்தி ரந்தா
னாளுநீ யறிந்து மீச னன்மனைத் தேவா யத்த
னீள்வே டந்த ரித்து நேசமென் பலதெய் வத்தின்.

(ப - ரை.) ஐயா - ஐயனே, கேள் - கேட்கக்கடவை, நந்தி - நந்தியெம்பெருமான், முன்னம் - முற்காலத்தில், கீர்த்தியால் - தோத்திரத்தால், அர்ச்சித்து - அர்ச்சனை செய்து, எம்மை - எங்களை, ஆள் - ஆண்டருள்கிற, ஐயன் - பர்கனென்பவனே, அனேகன் ஆம் என்னும் - பலவாயிருப்பவனென்றும், ஏகன் ஆம் என்னும் - ஒன்றா யிருப்பவனென்றும் உபதேசித்தருளிய, மந்திரம் - மஹாமந்த்ரத்தை, நாளும் - தினந்தோறும், நீ - நீர், அறிந்தும் - உணர்ந்திருந்தும், ஈசன் - சிவபெருமானும், நல் - சிறந்த, மனைத்தேவாய் - வீட்டுத் தெய்வமாக விருந்தும், நீள் - உயர்ந்த, அத்தன் வேடம் - சிவ வேஷத்தை, தரித்தும் - பூண்டிருந்தும், பல தெய்வத்தின் - அநேக தேவர்களின்மேல், நேசம் - அன்பு வைத்திருப்பதற்குக் காரணம், என் - யாது, எ - று.

(போ - ரை.) ஐயனே! கேட்கக்கடவை, நந்தியெம்பெருமான் முற்காலத்தில் தோத்திரத்தால் அர்ச்சனைசெய்து எங்களையாண்டருள்கிற பர்கனென்பவனே பலவாயிருப்பவனென்றும் ஒன்றாயிருப்பனென்றும் சொல்லப்படும் மஹாமந்த்ரத்தைத் தினந்தோறும் உணர்ந்திருந்தும், சிவபெருமானும் சிறந்த வீட்டுத் தெய்வமாக விருந்தும், உயர்ந்த சிவவேஷத்தைப் பூண்டிருந்தும், அநேக தேவர்களின்மேல் அன்புவைத்திருப்பதற்குக் காரணம்யாது?

(வி - ரை.) பர்கன் - தேஜோமயன். ஐயனனேகனேகன் என்பதை 'ஏகனநேக னிறைவனடி வாழ்க' என்றார் மாணிக்கவாசகரும். கீர்த்தி - கீர்த்தனை. (௯)

ஒருமொழி கேட்பா யீச னுறவராங் கவுத மேசன்
பிருகிடு சாபத் தாலே பிராந்தராய்ப் பெருமை சேர்க்குந்
திருவெணீ றின்றி மண்ணிற் றேவர்தா மென்று பேசும்
பெருமதத் தோர்க்கெம் மத்தற் பேணுநற் பத்தி யாமோ.

(ப - ரை.) ஒருமொழி - இப்போது நான்சொல்லும் விசேஷமானதோர் செய்தியை, கேட்பாய் - கவனமாய்க் கேட்கக்கடவை, ஈசன் உறவர் ஆம் - சிவபக்தராகிய, கவுதமேசன் - கௌதமமுனிவரும், பிருகு - ப்ருகுமுனிவரும், இடு சாபத்தாலே - இட்ட பெருஞ்சாபங்களாலே, பிராந்தராகி - உந்மத்தராய், பெருமை சேர்க்கும் - மேன்மையையுண்டாக்குகிற, திருவெண்ணீறு இன்றி - திருவெண்ணீறில்லாமல், மண்ணில் தேவர் - பூசுரர், என்றுபேசும் - என்று புகழ்ந்து சொல்லிக்கொள்ளும், பெருமதத்தோர்க்கு - பெரிய குலத்தினராகிய வேதியர்க்கு, எம் அத்தன் - எமது இறைவனாகிய சிவபெருமானை, பேணும் - வழிபடுதற்குரிய, நல் - ஸத், பத்தி - பக்தியானது, ஆமோ - உண்டாகுமோ, எ - று.

(போ - ரை.) இப்போது நான் சொல்லும் விசேஷமானதோர்செய்தியைக் கவனமாய்க் கேட்பாயாக, சிவபக்தராகிய கௌதமமுனிவரும் ப்ருகுமுனிவரும் இட்ட பெருஞ்சாபங்களாலே உந்மத்தராகி, மேன்மையையுண்டாக்குகிற திருவெண்ணீறில்லாமல் பூசுரரென்று சொல்லிக்கொள்ளும் பெரியகுலத்தினராகிய வேதியர்க்கு எமது இறைவனாகிய சிவபெருமானை வழிபடுதற்குரிய ஸத்பக்தியானது உண்டாகுமோ?

(வி - ரை.) உந்மத்தம்-மயக்கம். ஆமோ என்றது ஆகாது என்றபடி. பிருகு கௌதம முனிவர்களாலே யல்லாது ததீசி வியாசமுனிவர்களாலும் சாபம்பெற்றிருக்கின்றனர்.

இச்செய றுணிந்து செய்யு மிச்சையான் மேன்மையான
வச்செய லொழித்து நீயிங் கறைதல்வே தாக மத்து
நிச்சய மூல மல்ல நெடுமொழிப் பதகர் வாத
மெச்செய லத்தன் பத்தி விமலமென் பனவர்க்கர்கும்.

(ப - ரை.) இ - இந்த, செயல் - ப்ரஹ்மகர்மத்தை, துணிந்து - நிச்சயித்து, செய்யும் - பண்ணும், இச்சையால் - விருப்பத்தால், மேன்மையான - சிறப்பான, அ - அந்த, செயல் - சிவபக்தியை, ஒழித்து - விட்டு, நீ - நீ, இங்கு - இவ்விடத்தில், அறைதல் - வாதாடிப் பேசுதல், வேதாகமத்து - வேதாகமங்களின், நிச்சயம் அல்ல - துணிவு மன்று, மூலமல்ல - மார்க்கமுமன்று, நெடுமொழி - (ஆனால்) தாம் கற்றிருக்கிற வகையிலுள்ள அதிகவார்த்தைகளைப் பேசுகிற, பதகர் - அதிபாதகர்களுடைய, வாதம் - விதண்டா வாதமேயாகும், மெய் செயல் - சன்மார்க்கத்தினையுடைய, அத்தன்பத்தி - சிவபக்தியானது, விமலம் - பரிசுத்தமுடையதாம், பனவர்க்கு - பார்ப்பார்க்கு, என் ஆகும் - இது யாது பிரயோஜநத்தைப் பயக்கும், எ - று.

(பொ - ரை.) இந்த ப்ரஹ்மகர்மத்தை நிச்சயித்துப் பண்ணும் விருப்பத்தால் சிறப்பான அந்தச் சிவபக்தியை விட்டு நீ இவ்விடத்தில் வாதாடிப் பேசுதல் வேதாமங்களின் துணிவுமன்று மார்க்கமுமன்று, ஆனால் தாம் கற்றிருக்கிற வகையிலுள்ள அதிக வார்த்தைகளைப் பேசுகிற அதிபாதகர்களுடைய விதண்டாவாதமேயாகும், சன்மார்க்கத்தையுடைய சிவபக்தியானது பரிசுத்தமுடையதாகும், பார்ப்பார்க்கு இது யாது பிரயோஜநத்தைப் பயக்கும்?

(வி - ரை.) என் ஆகும் என்றது ஆகாது என்றபடி. (கூஅ)

மற்றுநின் பனவக் கன்ம வழியினை வலுவிற் செய்யென்
றுற்றுநீ யுரைக்கிற் செய்யே னுங்கள்கன் மங்க ளென்றுங்
குற்றவெங் கொடிவ ளர்த்த குயிற்குஞ்சு கூவுங் காலைக்
கற்றதங் குரலே யல்லாற் காகம்போற் காகாவென்னு.

(ப - ரை.) மற்றும் - மேலும், நின் - உனது, பனவக் கன்மவழியினை - பார்ப்பாரக் கர்ம குலாசாரத்தை, வலுவில் - வலாத்காரமாக, செய் என்று - செய்யக்கடவையென்று, உற்று - மேல்விழுந்து, நீ - நீ, உரைக்கின் - சொன்னாலும், உங்கள் - உங்களுடைய, கன்மங்கள் - கர்மங்களை, என்றும் - எக்காலத்தும், செய்யேன் - செய்யமாட்டேன், குற்றம் - குற்றத்தையுடைய, வெம் - கொடிய, கொடி - காகம், வளர்த்த - வளர்த்த, குயில் குஞ்சு - குயிற்குஞ்சுகள், கூவும் காலை - கூவுங் காலத்தில், கற்ற தம் குரலே - தாம் கற்ற குரலே, அல்லால் - அல்லது, காகம்போல் - காகத்தைப்போல, கா கா என்னு - கா கா வென்று கூவமாட்டா, எ - று.

(பொ - ரை.) மேலும் உனது பார்ப்பாரக் கர்மகுலாசாரத்தை வலாத்காரமாகச் செய்யக்கடவை யென்று மேல்விழுந்து நீ சொன்னாலும் உங்களுடைய கர்மங்களை எக்காலத்தும் செய்யமாட்டேன், குற்றத்தையுடைய கொடிய காகம் வளர்த்த குயிற் குஞ்சுகள் கூவுங்காலத்தில் தாம் கற்ற குரலே யல்லது காகத்தைப்போல கா கா வென்று கூவமாட்டா.

(வி - ரை.) தந்தை தாயரைக் காகத்திற்கும் வசவண்ணரைக் குயிற்குஞ்சிற்கும் உபமானஞ் செய்துள்ளது. (கக)

பரகுரு பதமே பார்ப்பான் பரமசை வங்கள் பார்ப்பான்
சரணசொற் செவ்வி பார்ப்பான் றற்பிர சாதம் பார்ப்பான்
விரவுநல் வீர பத்தி விதியையே விரைந்து பார்ப்பா
னிரவுறு முங்கள் கன்மத் தியல்புசெய் பார்ப்பா னன்லேன்.

(ப - ரை.) பரகுருபதமே - ஸ்ரீ ஸத்குருபாதங்களையே, பார்ப்பான் - பார்ப்பவனாவேன், பரமம் - உன்னதமான, சைவங்கள் - சிவாசாரங்களையே, பார்ப்பான் - பார்ப்பவனாவேன், சரணம் - சரணார்த்தியென்னும், சொல் - பதத்தினுடைய, செவ்வி - அழகையே, பார்ப்பான் - பார்ப்பவனாவேன், தற்பிரசாதம் - சிவப்பிரசாதத்தினையே, பார்ப்பான் - பார்ப்பவனாவேன், விரவும் - பொருந்தியுள்ள, நல் - சிறந்த, வீரபத்தி விதியையே - வீரசைவசமய பக்தி மார்க்கத்தையே, விரைந்து - விரைவில், பார்ப்பான் - பார்ப்பவனாவேன், இரவு உறும் - மயக்கத்தைப்பற்றிவருகிற, உங்கள் - உங்களுடைய, கன்மத்து - நன்வினை தீவினையென்னும் இரண்டு வினைகளுக்குரிய கர்மத்தில், செய் - அநுஷ்டிக்கிற, இயல்பு - ஒழுக்கத்தினை, பார்ப்பான் அல்லேன் - பார்ப்பவனல்லேன், எ - று.

(பொ - ரை.) ஸ்ரீ ஸத்குருபாதங்களையே பார்ப்பவனாவேன், உன்னதமான சிவாசாரங்களையே பார்ப்பவனாவேன், சரணார்த்தியென்னும் பதத்தினுடைய அழகையே பார்ப்பவனாவேன், சிவப்பிரசாதத்தினையே பார்ப்பவனாவேன், பொருந்தியுள்ள சிறந்த வீரசைவசமயத்தின் பக்திமார்க்கத்தையே விரைவில் பார்ப்பவனாவேன், இவ்வாறு பார்ப்பவனாகிய நான் மயக்கத்தைப்பற்றி வருகிற உங்களுடைய நல்வினை தீவினையென்னுமிரண்டு வினைகளுக்குரிய கர்மத்திலநுஷ்டிக்கிற ஒழுக்கத்தினைப் பார்ப்பவனல்லேன்.

(வி - ரை.) சரணர் - பக்தஸ்தலம், மாஹேஶ்வரஸ்தலம், ப்ரஸாதிஸ்தலம், ப்ராணலிங்கிஸ்தலம் ஆகிய இவைகளைத்தாண்டினவர் சரணஸ்தலத்தர், இதற்குமேல் இதன் விரிவை சித்தாந்த சிகாமணியிற் காண்க. இரவு - இராத்திரி, இது இருள் எனப் பொருள் கொண்டு மயக்கத்தின்மேனின்றது.

இச்செய்யுளை மற்றொருவிதமாய்ப் பொருள்படுத்தலுமமையும், எவ்வாறெனின் :—

பரகுருபதமே பார்ப்பான் - ஸ்ரீ ஸத்குரு பாதசேவை செய்வதிலேயே ஆசக்தியுள்ள வேதியனாவேன், பரமம் சைவங்கள் பார்ப்பான் - வீரசைவத்தின் உன்னதத்தையே சிந்திக்கும் வேதியனாவேன், சரணர் சொல் - சிவசரணர்களது வசனங்களின், செவ்வி - பிரயோஜனத்தையே யடைவதில் நினைவுள்ள, பார்ப்பான் - வேதியனாவேன், தத்பிரசாதம் - குருலிங்கஜங்கம ப்ரஸாதங்களையே ஸ்வீகரிக்கும், பார்ப்பான் - வேதியனாவேன், விரவும் - பொருந்தியுள்ள, நல் - சிறந்த, வீரபத்திவிதியை - வீரசைவபக்திமார்க்கத்தினையே, விரைந்து - விரைவாக, பார்ப்பான் - பார்க்கும் வேதியனாவேன், இரவு உறும் - இராத்தற்றொழிலைப்பொருந்திய, உங்கள் - உங்களுடைய, கன்மத்து - கன்மங்களின், இயல்புசெய் - ஒழுக்கங்களைச்செய்கிற, பார்ப்பானல்லேன் - வேதியனாகமாட்டேன். (க00)

தந்தையே கேளா யீரேழ் தன்மையா முலகிற் கெல்லாந்
தந்தையே தந்தை தெய்வந் தானென்று தனங்க னென்போன்
றந்தையே முதலாந் தேவர் தமைத்தொழு நீயெனக்குத்
தந்தையே யன்று தூய்ய தந்தைதா யரனைச் சார்வார்.

(ப - ரை.) தந்தையே - பிதாவே, கேளாய் - கேட்பாயாக, ஈர் ஏழ் தன்மையாம் உலகிற்கு எல்லாம் - பதினான்கு லோகத்துக்கும், தந்தையே தந்தை - பிதாவாயிருப்பவனே பிதாவாவான், தெய்வம்தான் என்று - அப்படிப்பட்ட தந்தையை கடவுளென்று சொல்லாமல், அனங்கன் என்போன் - மன்மதன் என்பவனது, தந்தையே முதல் ஆம் - பிதாவாகிய விஷ்ணுவே முதலாகிய, தேவர்தமை - தேவர்களை, தொழும் - வணங்குகிற, நீ - நீ, எனக்கு - எனக்கு, தந்தையே - பிதாவே, அன்று - அல்ல (உனது பத்தியும் மாதாவேயல்ல), அரனைச் சார்வார் - சிவபெருமானையடைந்த வீரமாஹேஶ்வரர்களே, தூய்ய - (எனக்கு) மேன்மையான, தந்தைதாய் - பிதாமாதாக்களாவார்கள், எ - று.

(பொ - ரை.) பிதாவே! கேட்பாயாக, பதினான்கு லோகத்துக்கும் பிதாவாயிருப்பவனே பிதாவாவான், அப்படிப்பட்ட தந்தையைக் கடவுளென்று சொல்லாமல் மன்மத

னென்பவனது பிதாவாகிய விஷ்ணுவே முதலிய தேவர்களை வணங்குகிற நீ எனக்குப் பிதாவேயல்ல, உனது பத்தியும் மாதாவேயல்ல, சிவபெருமானை யடைந்த வீரமாஹேஶ்வரர்களே எனக்கு மேன்மையான பிதாமாதாக்களாவார்கள்.

(வி - ரை.) பதினான்கு லோகம் :— மேல் உலகம் ஏழு - பூலோகம், புவலோகம், சுவலோகம், ஜனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம் என்பன, கீழ் உலகம் ஏழு - அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதாளம். முதலாம் தேவர் என்றது பிரமன், சூரியன், அக்கி என்பவர்களை. பிதாவென்றதனால் மாதாவையும் வருவிக்கப்பட்டது. (௧0௧)

சாரமா பத்தி தன்னிற் சாருமெம் மனந்த ருக்கும்
வீரமா யேச ரேநம் விருப்புடைக் கதிய தாவார்
திரமா நமதா சாரத் திறந்திறம் பாம லிற்பே
நீருநும் மாசா ரத்து நின்றிடு நீரார் நாமார்.

(ப - ரை.) சாரம் - மோக்ஷசாரமாகிய, மா - மஹத்வம்பொருந்திய, பத்திதன்னில் - வீரசைவபக்தியில், சாரும் - லயமடைகிற, எம் - எமது, மனம் - மனமானது, தருக்கும் - களிக்காநிற்கும், வீரமாயேசரே - வீரமாஹேஶ்வரர்களே, நம் - எமது, விருப்புடை - விருப்பத்துக்குரிய, கதி ஆவார் - நற்கதியாவார்கள், திரம் ஆம் - தைர்யமாகிய, நமது - எமது, ஆசாரத்திறம் - சிவாசாரத்தன்மை, திறம்பாமல் - வழுவாமல், நிற்பேம் - நிலையாக நிற்போம், நீரும் - நீங்களும், நும் - உமது, ஆசாரத்து - ஒழுக்கத்தில், நின்றிடும் - நில்லுங்கள், நீர் ஆர் - நீங்கள் யார், நாம் ஆர் - நாங்கள் யார் (யாதொரு சம்பந்தமும் இல்லையென்றபடி) எ - று.

(பொ - ரை.) மோக்ஷசாரமாகிய மஹத்வம்பொருந்திய வீரசைவபக்தியில் லயமடைகிற எமது மனமானது களிக்காநிற்கும், வீரமாஹேஶ்வரர்களே எமது விருப்பத்துக்குரிய நற்கதியாவார்கள், தைர்யமாகிய எமது சிவாசாரத்தன்மை வழுவாமல் நிலையாக நிற்போம், நீங்களும் உமது ஒழுக்கத்தில் நில்லுங்கள், நீங்கள் யார் ? நாங்கள் யார் ? (யாதொரு சம்பந்தமுமில்லை யென்றபடி.) (௧0௨)

மின்னயா ராமற் பாகம் விரைந்தருள் விமல னாளா
மென்னையன் னியன்றை யெனக்கைய ரின்னார் கேட்பாய்
சென்னைய னக்க யன்சிக் கயன்றெலுங் கச்சோ மைய
னன்னையர் கொடகூச் சவ்வை யம்மவை யாவ ரென்றார்.

(ப - ரை.) ஐய - ஐயனே, மின் - உமாதேவியார், அயராமல் - வருந்தாமல், பாகம் - (வாம) பாகத்தை, விரைந்து அருள் - விரைந்தருள்செய்த, விமலன் ஆள் - சிவபெருமானுக்கு சரணர்களாகிய வீரமாஹேஶ்வரர்களே, என் ஐயன் ஆம் - என் தகப்பனுவார்கள், நீ - நீ, அன்று - தகப்பனல்ல, எனக்கு ஐயர் - அவர்களில் எனக்குத் தந்தையார், இன்னார் - இப்படிப்பட்டவர்கள் (யாவரெனின்), கேட்பாய் - கேட்கக்கடவை, சென்னையன் - சென்னையனும், நக்கயன் - நக்கையனும், சிக்கயன் - சிக்கையனும், தெலுங்கச் சோமையன் - தெலுங்குஜோமையனும், அன்னையர் - (அவர்களில்) தாயார் (யாவரெனின்) கொடகூச்சவ்வை - கொடகூச்சவ்வையும், அம்மவ்வை - அம்மவ்வையும், ஆவர் - ஆவார்கள், என்றார் - என்று சொன்னார், எ - று.

(பொ - ரை.) ஐயனே ! உமாதேவியார் வருந்தாமல் வாமபாகத்தை விரைந்தருள் செய்த சிவபெருமானுக்குச் சரணர்களாகிய வீரமாஹேஶ்வரர்களே தகப்பனுவார்கள், நீ தகப்பனல்ல, அவர்களில் எனக்குத் தந்தையார் இப்படிப்பட்டவர்கள், யாவரெனின்:— கேட்கக்கடவை, சென்னையனும், நக்கையனும், சிக்கையனும், தெலுங்குஜோமையனும்

அவர்களில் தாயார் யாவரெனின் : — கோட்கூச்சவ்வையும், அம்மவ்வையு மாவார்க ளென்று சொன்னார். (௧0௫)

வசவரா சையர் நிட்டை மாதிரா சையர் கண்டங்
கசைவிலா மவுன ரானா ரவர்கண்மே னந்தி யாரு
நசையிலா ராகித் தம்பி னாகாம்பை யாருந் தாமு
மிசைவினாற் சிவன்ற னன்ப ரிடத்திற்சென் றிருக்குங்காலே.

(ப - ரை.) வசவராசையர் - வசவேசரது, நிட்டை - கர்மத்யாகத்தின் உறுதிப் பாட்டினை, மாதிராசையர் - மாதிராசையராவனர், கண்டு - பார்த்து, அங்கு - அவ்வி டத்தே, அசைவு இல்லா - சலனமில்லாத, மவுனர் ஆனார் - மவுனராகப் போயினர், அவர் கள்மேல் - தாய் தந்தையர்கள்பேரில், நந்தியாரும் - வசவேசரும், நசையில்லார் ஆகி - பாசத்தைவிட்டவராய், தம்பின் - தமது தங்கையாராகிய, நாகாம்பையாரும் - நாகாம்பை யாரும், தாமும் - தாமுமாக, இசைவினால் - மன வொருமைப்பாட்டோடு, சிவன் அன்ப ரிடத்தில் - சிவபக்தரிடத்தில், சென்று - போய், இருக்குங்காலை - வாழ்ந்திருக்கும் காலத்தில், எ - று.

(பொ - ரை.) வசவேசரது கர்மத்யாகத்தின் உறுதிப்பாட்டினை மாதிராசைய ரானவர் பார்த்து அவ்விடத்தே சலனமில்லாத மவுனராகப் போயினர், தாய்தந்தையர் கள்பேரில் வசவேசரும் பாசத்தை விட்டவராய்த் தமது தங்கையாராகிய நாகாம்பை யாரும் தாமுமாக மனவொருமைப்பாட்டோடு சிவபக்தரிடத்திற்போய் வாழ்ந்திருக்கும் காலத்தில். (௧0௬)

முன்னூலின் செய்தி நன்றாய் முடிந்ததே யென்று பார்ப்பார்
நன்னூலை மறுத்தா னந்தி நம்பனே தெய்வ மாகத்
தன்னூலைத் தாபித் தானிச் சகத்தினிற் புதுமை யென்னப்
பின்னூறு மனத்த ராகிப் பேச்சொழிந் தெழுந்து சென்றார்.

(ப - ரை.) முன்னூலின் - பூணூல் கல்யாணத்தின், செய்தி - வேலையானது, நன் றாய் - அழகாக, முடிந்ததே - நிறைவேறினதே, என்று - என்று வெறுத்து மனவருத்தத் துடன் சொல்லி, பார்ப்பார் - உபநயநத்துக்கு வந்திருந்த வேதிய பந்துஜனங்கள் யாவ ரும், நந்தி - வசவேசன், நம் - நமது, நூலை - பூணூலை, மறுத்தான் - நிராகரித்தான், நம்பனே - சிவபெருமானே, தெய்வமாக - வழிபடும் கடவுளாக, தன் - தனது, நூலை - சிந்தாந்தத்தையே, தாபித்தான் - நிலைநாட்டினான், இ - இந்த, சகத்தினில் - உலகில், புதுமை - இச்செய்தி ஆச்சரியம், என்ன - என்று, பின் ஊறும் - பின்னிட்ட, மனத்தர் ஆகி - மனமுடையராய், பேச்சு ஒழிந்து - பேசுதலைவிட்டு, எழுந்து சென்றார் - தம்தம் இடங்களுக்கு எழுந்துபோனார்கள், எ - று.

(பொ - ரை.) பூணூல் கல்யாணத்தின் வேலையானது அழகாக நிறைவேறினதே யென்று வெறுத்து மனவருத்தத்துடன் சொல்லி, உபநயநத்துக்கு வந்திருந்த வேதிய பந்துஜனங்கள் யாவரும் வசவேசன நமது பூணூலை நிராகரித்தான், சிவபெருமானே வழிபடும் கடவுளாகத் தனது சிந்தாந்தத்தையே நிலைநாட்டினான்; இவ்வுலகில் இச்செய்தி ஆச்சரியமென்று பின்னிட்ட மனமுடையராய்ப் பேசுதலை விட்டுத் தம்தம் இடங்களுக் கெழுந்து போனார்கள். (௧0௭)

திருவவதாரச்சருக்கம் - முற்றிற்று.

ஆக செய்யுள் - களஎ.

சிவமயம்.

# உபதேசச்சருக்கம்.



## ஸ்ரீ வசவேசர் திருக்கலியாணம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பத்தியா கத்தா போற்றி பரமமோ கத்தா போற்றி
முத்தியோ கத்தா போற்றி முனிவர்தா கத்தா போற்றி
மெத்தியா கத்தா போற்றி விமலவூ கத்தா போற்றி
புத்தியா கத்தா போற்றி புனிதர்பா கத்தா போற்றி.

(ப - ரை.) பத்தி ஆகத்தா - சிவபக்தியே திருமேனியா யுடையோனே, போற்றி - சரணம், பரமமோகத்தா - சிவபெருமானிடத்தில் மேலான விருப்பமுடையோனே, போற்றி - சரணம், முத்தியோகத்தா - சிவயோக சமாதி நிலையினை யுடையோனே, போற்றி - சரணம், முனிவர் தாகத்தா - ஜங்கம மூர்த்திகளுக்கு விருப்பத்தை யுண்டாக்குவோனே, போற்றி - சரணம், மெய்த்தியாகத்தா - உண்மையாகிய கொடையாளனே, போற்றி - சரணம், விமலவூகத்தா - பரிசுத்தமான விவேகத்தை யுடையோனே, போற்றி - சரணம், புத்தி ஆகத்தா - மெய்யறிவே திருமேனியா யுடையோனே, போற்றி - சரணம், புனிதர் பாகத்தா - பரிசுத்தராகிய பக்தரைப் பக்கத்திற் சூழப்பெற் றிருப்போனே, போற்றி - சரணம், எ - று.

(போ - ரை.) சிவபக்தியே திருமேனியா யுடையோனே! சரணம், சிவபெருமானிடத்தில் மேலான விருப்பமுடையோனே! சரணம், சிவயோக சமாதி நிலையினையுடையோனே! சரணம், ஜங்கமமூர்த்திகளுக்கு விருப்பத்தை யுண்டாக்குவோனே! சரணம், உண்மையாகிய கொடையாளனே! சரணம், பரிசுத்தமான விவேகத்தை யுடையோனே! சரணம், மெய்யறிவே திருமேனியா யுடையோனே! சரணம், பரிசுத்தராகிய பக்தரைப் பக்கத்திற் சூழப்பெற்றிருப்போனே! சரணம். (க)

அருணெறி வசவ தேவ ரன்னைமா தாம்பை முன்னோர்
பெருநெறி விச்ச லேசன் பிரியமந் திரியா யுள்ளார்
திருமலி செல்வ மிக்கார் சீபல தேவ ரென்பா
ரொருமைசே ரீச னேசத் துருகுநன் னெஞ்ச முள்ளார்.

(ப - ரை.) அருள்நெறி - க்ருபாமார்க்கத்தினையுடைய, வசவதேவர் - வசவேசருக்கு, அன்னை - திருத்தாயாராகிய, மாதாம்பை - மாதாம்பை யம்மையாரது, முன்னோர் - தமயனாரும், பெரு - மேன்மையான, நெறி - ஒழுக்கத்தினையுடைய, விச்சலேசன் - விஜ்ஜலராஜனுக்கு, பிரியம் - அன்புள்ள, மந்திரியாய் உள்ளார் - மந்திரியா யிருப்பவரும், திருமலி - மேன்மை பொருந்திய, செல்வம் மிக்கார் - செல்வத்தில் மிக்கவரும் (ஆகிய), சீபலதேவர் என்பார் - ஸ்ரீபலதேவரென்பவர், ஒருமைசேர் - ஒப்பற்ற, ஈசன் நேசத்து - சிவபக்தியால், உருகும் - கரைகின்ற, நல் - நல்ல, நெஞ்சம்உள்ளார் - மனமுடையவர், எ - று.

(போ - ரை.) க்ருபாமார்க்கத்தினையுடைய வசவேசருக்குத் திருத்தாயாராகிய மாதாம்பையம்மையாருக்கு தமயனாரும், மேன்மையான ஒழுக்கத்தினையுடைய விஜ்ஜல

ராஜனுக்கு அன்புள்ள மந்திரியா யிருப்பவரும், மேன்மை பொருந்திய செல்வத்தில் மிக்க வருமாகிய ஸ்ரீ பலதேவரென்பவர் ஒப்பற்ற சிவபக்தியால் கரைகின்ற நல்ல மன முடையவர்.

(வி - ரை.) ஒருமை - ஒரு தன்மை (ஒப்பின்மை). ஈசனேசத்தால் நன்னெஞ்சமாயிற்று. பெருநெறி என்றது செங்கோல் நெறிவழுவாதிருத்தலை. (உ)

நந்திகண் முந்நூல் சாத்து நலத்தினைக் காண்பான் வந்தார்
தந்திரு மகளார் தம்மைச் சங்கர னடியார்க் கல்லாற்
புந்தியி னல்கே னென்னும் போதமே போத வுள்ளா
ரந்தநல் வசவ தேவ ரரனிடத் தன்பு கண்டே.

(ப - ரை.) நந்திகள் - வசவேசர், முந்நூல் - பூணூலை, சாத்தும் - அணியப் பெறுகிற, நலத்தினை - உபநயனசடங்கின் வைபவத்தை, காண்பான் - பார்க்கும் பொருட்டு, வந்தார் - வந்தவர், தம் - தமது, திருமகளார்தம்மை - திருமகளாரை, சங்கரன் அடியார்க்கு அல்லால் - சிவசரணர்க்கல்லாது, புந்தியின் - (மற்றையோர்க்கு) மனப்பூர்வகமாய், நல்கேன் என்னும் - கொடேனென்கிற, போதமே - எண்ணத்தையே, போத உள்ளார் - மிகவுமுடையவர், அந்த - அந்த, நல் - நன்னெறிவாய்ந்த, வசவதேவர் - வசவேசர், அரனிடத்து - சிவபெருமானிடத்தில் வைத்துள்ள, அன்பு - பக்தியை, கண்டு - பார்த்து, எ-று.

(பொ - ரை.) வசவேசர் பூணூலை யணியப்பெறுகிற உபநயன சடங்கின் வைபவத்தைப் பார்க்கும்பொருட்டு வந்தவர், தமது திருமகளாரைச் சிவசரணர்க்கல்லது மற்றையோர்க்கு மனப்பூர்வகமாய்க் கொடேனென்கிற வெண்ணத்தினையே மிகவுமுடையவர், அந்த நன்னெறிவாய்ந்த வசவேசர் சிவபெருமானிடத்து வைத்துள்ள பக்தியைப்பார்த்து.

தக்கசீர் வசவ தேவர் தாமுறு மடத்திற் சென்று
பக்கமொன் றிடப்ப ணிந்து பண்பினா லணைத்து கந்து
மிக்கமண் விளங்க வந்தீர் விரும்புமென் மகளு மக்கே
புக்குய்ய வேண்டும் யான்வாழ் புரமதற் கணைவி ரென்றார்.

(ப - ரை.) தக்க - யாவராலும் போற்றத்தக்க, சீர் - கீர்த்தியினையுடைய, வசவதேவர் - வசவேசர், உறும் - வசிக்கிற, மடத்தில் - திருமடத்துக்கு, சென்று - போய், பக்கம் ஒன்றிட - அன்போடு, பணிந்து - வணங்கி, பண்பினால் - ஆசையினால், அணைத்து - தழுவி, உகந்து - சந்தோஷித்து, மிக்க - மேன்மைபொருந்திய, மண் - இவ்வுலகத்தாரனைவரும், விளங்க - நற்கதியடையவே, வந்தீர் - (நீர்) அவதரித்தீர், விரும்பும் - விரும்புதற்குரிய, என் - எளியேனது, மகள் - திருமகள், உமக்கே புக்கு - உம்மையே யடைந்து, உய்யவேண்டும் - உஜ்ஜீவிக்கவேண்டும் (ஆதலால்), யான் - நான், வாழ் - வசிக்கின்ற, புரமதற்கு - விஜ்ஜல நகரத்திற்கு, அணைவீர் - எழுந்தருளக் கடவீர், என்றார் - என்று வருந்தி னின்றனர், எ-று.

(பொ - ரை.) யாவராலும் போற்றத்தக்க கீர்த்தியினையுடைய வசவேசர் வசிக்கிற திருமடத்திற்குப்போய் அன்போடு வணங்கி யாசையினால் தழுவிச் சந்தோஷித்து மேன்மை பொருந்திய இவ்வுலகத்தா ரனைவரும் நற்கதியடையவே நீர் அவதரித்தீர், விரும்புதற்குரிய எளியேனது திருமகள் உம்மையே யடைந்து உஜ்ஜீவிக்கவேண்டு மாதலால் நான்வாழ்கின்ற விஜ்ஜல நகரத்திற்கு எழுந்தருளக்கடவீரென்று வருந்தினின்றனர்.

(வி - ரை.) தாம் - அசை; பக்கம் - பக்ஷம் என்னும் வடசொற்றிரிபு. உமக்கே - உருபு மயக்கம். மடத்தில் - உருபுமயக்கம்.
(௩)

பொருந்தினர் நந்தியார்தம் பொற்பதிக் கன்பி னாலே
யரும்பொனின் சிவிகை யேற்றி யவர்பின்பு தாமுஞ் சென்றங்
கிருந்துநன் முகுர்த்த மிட்டன் றிந்தவிச் சலபு ரத்தைத்
திருந்தவுற் றலங்க ரித்தல் செய்யுமி னென்றார் நின்றார்.

(ப - உரை.) நந்தியார் - வசவேசரும் (தமக்குத் திருமணத்தில் விருப்பற்றவராயினும் ஜீவகாருண்யத்தால்), பொருந்தினர் - பலதேவரது வேண்டுகோளுக் கிரங்கிச் சம்மதித்தனர், தம் - தமது, பொன் - அழகிய, பதிக்கு - விஜ்ஜல நகரத்துக்கு, அன்பினாலே - நேசத்தாலே, அரு - அருமையாகிய, பொன்னின் சிவிகையேற்றி - பொற்பல்லக்கி லேறச்செய்து, அவர் பின்பு - அவர்பின்னால், தாமும் சென்று - தாமும் கல்யாண நகரத்திற் போய், அங்கு - அவ்விடத்து, இருந்து - இருந்துகொண்டு, நல் - சுபமான, முகுர்த்தம் - முகுர்த்தம், இட்டு - வைத்து, அன்று - அப்போது, இந்த - இந்த, விச்சலபுரத்தை - விஜ்ஜல நகரத்தை, திருந்த உற்று - ஒழுங்காக்கி, அலங்கரித்தல் செய்யுமின் என்று - அலங்காரஞ் செய்யுங்களென்று கட்டளையிட்டு, நின்றார் - நின்றனர், எ - று.

(பொ - ரை.) வசவேசரும் தமக்குத் திருமணத்தில் விருப்பற்றவராயினும் ஜீவகாருண்யத்தால் பலதேவரது வேண்டுகோளுக் கிரங்கிச் சம்மதித்தனர், தமது அழகிய விஜ்ஜல நகரத்துக்கு அவரை நேசத்தாலே அருமையாகிய பொற்பல்லக்கி லேறச்செய்து, அவர்பின்னால் தாமும் விஜ்ஜலநகரத்திற்போய் அவ்விடத்திருந்துகொண்டு சுபமுகுர்த்தம் வைத்து அப்போது இந்த விஜ்ஜலபுரத்தை ஒழுங்காக்கி யலங்காரஞ் செய்யுங்களென்று கட்டளையிட்டுநின்றனர். (ரு)

அப்பெரு வீதி யெல்லா மரம்பைபூ கங்க ளாலு
மொப்பரும் பந்த ராலு மொளிருமேற் கட்டி யாலுஞ்
சப்பரந் திரைக ளாலுந் தயங்குதோ ரணங்க ளாலுந்
துப்புமா மணியின் றூய தொங்கலி னாலுந் துற்றே.

(ப - உரை.) அ - அந்த நகரத்தின், பெருவீதி எல்லாம் - பெருந் தெருக்களிலெல்லாம், அரம்பை பூகங்களாலும் - வாழை கமுகுகளாலும், ஒப்பு அரும் - ஒப்பிடுதற்கரிய, பந்தராலும் - பச்சைப் பந்தல்களாலும், ஒளிரும் - விளங்குகிற, மேற்கட்டியிலும் - விதானங்களாலும், சப்பரம் - சித்திரங்களமைக்கப்பெற்ற பந்தரின், திரைகளாலும் - வரிசைகளாலும், தயங்கு - பிரகாசிக்கின்ற, தோரணங்களாலும் - தோரணங்களாலும், மா - அழகிய, துப்பு மணியின் - பவளம் மாணிக்கம் என்னும் ரத்னக்கற்களாற் செய்யப்பட்ட, தூய - பரிசுத்தமாகிய, தொங்கலினாலும் - மாலைகளாலும், துற்று - நிறைத்து, எ - று.

(பொ - ரை.) அந்நகரத்தின் பெருந் தெருக்களிலெல்லாம் வாழை கமுகுகளாலும் ஒப்பிடுதற்கரிய பச்சைப் பந்தல்களாலும், விளங்குகிற விதானங்களாலும், சித்திரங்களமைக்கப்பெற்ற பந்தலின் வரிசைகளாலும், பிரகாசிக்கின்ற தோரணங்களாலும், அழகிய பவளமாணிக்கமென்னும் ரத்னக்கற்களாற் செய்யப்பட்ட மாலைகளாலும் நிறைத்து. (சு)

தண்பனி நீரிற் றுய்ய சந்தனங் கரைத்தி றைத்துக்
கண்கொளா வாறு வீதி கவின்பெற வலங்க ரித்தே
விண்பயி றமது வீட்டின் மெய்ம்மணப் பந்தர் முற்றுந்
தெண்பனி நீர்கத் தூரி சேர்த்துநன் மெழுக்குச் சாத்தி.

(ப - உரை.) தண் - குளிர்ச்சியாகிய, பனிநீரில் - பனிநீருடன், துய்ய - பரிசுத்தமாகிய, சந்தனம் - சந்தனத்தை, கரைத்து - கரைத்து, இறைத்து - தெளித்து, கண்கொள்ளா ஆறு - கண்கொள்ளாதபடி, வீதி - தெருக்களை, கவின்பெற - அழகுபெற, அலங்கரித்து -

அலங்காரஞ்செய்து, விண்பயில் - ஆகாயத்தை யளாவிய, தமது - தமது, வீட்டின் - மாளிகையின், மெய் - சொல்லுதற்குரிய, மணப்பந்தர் - திருமணப்பந்தல், முற்றும் - அடங்கலும், தெண் - தெளிவாகிய, பனிநீர் - பனி நீருடன், கத்தூரி - கஸ்தூரியையும், சேர்த்து - கலந்து, நல் - நேர்த்தியான, மெழுகுசாத்தி - மெழுக்கிட்டு, எ - று.

(பொ - ரை.) குளிர்ச்சியாகிய பனிநீருடன் பரிசுத்தமாகிய சந்தனத்தைக் கரைத்துத் தெளித்து, கண்கொள்ளாதபடி தெருக்களை யழகுபெற வலங்காரஞ்செய்து, ஆகாயத்தை யளாவிய தமது மாளிகையின் சொல்லுதற்குரிய திருமணப்பந்தர் அடங்கலும் தெளிவாகிய பனிநீருடன் கஸ்தூரியையும் கலந்து நேர்த்தியான மெழுக்கிட்டு.

(வி - ரை.) கண்கொள்ளா - அடங்காத.

(எ)

வரமுறு வாயி லட்ட மங்கலம் வைத்து வாழ்த்தித்
தரளமே சொரிந்து கும்பம் பாலிகை தாபித் தேத்தி
நிரைமணி விளக்கி னங்க ணிறைத்துத்தோற் கருவி யாதி
யிரையுமா கடலெ தென்ன வெங்கணும் பொலிய வார்க்க.

(ப - ரை.) வரம் உறு - மேன்மைபொருந்திய, வாயில் - முன் வாசற்படியில், அட்டமங்கலம் - எட்டு மங்களகரமான திரவியங்களை, வைத்து - அமைத்து, வாழ்த்தி - வாழ்த்துச் சொல்லி, தரளமே - முத்துக்களையே, சொரிந்து - இறைத்து, கும்பம் - பூர்ண கும்பத்தையும், பாலிகை - முளைப் பாலிகையையும், தாபித்து - பிரதிஷ்டைசெய்து, ஏத்தி - துதித்து, நிரை - வரிசையாகிய, மணிவிளக்கு இனங்கள் - ரத்நதீபக் கூட்டங்களை, நிறைத்து - நிறையவைத்து, தோல் கருவி ஆதி - தோற்கருவி முதலான வாத்யங்கள், இரையும் - சத்திக்கிற, மா கடல் என்ன - பெரிய கடலென்று சொல்லும்படி, எங்கணும் - எவ்விடத்தும், பொலிய ஆர்க்க - மிகுந்து முழங்காநிற்க, எ - று.

(பொ - ரை.) மேன்மைபொருந்திய முன் வாசற்படியில் எட்டு மங்களகரமான திரவியங்களை யமைத்து, வாழ்த்துச்சொல்லி, முத்துக்களையே யிறைத்து, பூர்ண கும்பத்தையும் முளைப்பாலிகையையும் பிரதிஷ்டைசெய்துத் துதித்து, வரிசையாகிய ரத்நதீபக் கூட்டங்களை நிறையவைத்து, தோற்கருவி முதலான வாத்யங்கள் சத்திக்கிற பெரிய கடலென்று சொல்லும்படி எவ்விடத்தும் மிகுந்து முழங்காநிற்க.

(வி - ரை.) அட்டமங்கலங்களாவன: — கவரி, நிறைகுடம், தோட்டி, கண்ணாடி, விளக்கு, முரசு, கொடி, இரட்டைமீன் என்பன. தோற்கருவி யாதி என்றது தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி யென்பவற்றை; இவை முறையே தோலினாலும், மூங்கிலினாலும், நரம்பினாலும், வெண்கலத்தினாலும் இயன்றனவும் மிடற்றுற் றாம் பாட்டுமாம்.

(அ)

எம்பிரா னன்பர் தம்மை யிங்கழைத் திடுமின் பாத
வம்புயங் களைவி ளக்கும் வணங்குமி னாத னத்திற்
கம்பள நிரைகள் போடுங் காதலி னிருத்தும் பூதி
விம்பமா ரிலைய டைக்காய் கர்ப்பூர மிகவும் வையமின்.

(ப - ரை.) எம்பிரான் அன்பர்தம்மை - சிவபக்தர்களை, இங்கு - இவ்விடத்து, அழைத்திடுமின் - அழைத்திடுங்கள், பாதஅம்புயங்களை - அவர்களுடைய ஸ்ரீ பாததாமரைகளை, விளக்குமின் - விளக்குங்கள், வணங்குமின் - அவர்களைத்தொழுங்கள்; ஆதனம் - ஆசனங்களாக, சீர் - சிறப்பினையுடைய, கம்பள நிரைகள்போடும் - கம்பளவரிசைகளை விரியுங்கள், காதலின் இருத்தும் - அவர்களையன்போடு எழுந்தருளப் பண்ணுங்கள், பூதி - திருவெண்ணீற்றினையும், விம்பம் ஆர் - ஒளிபுள்ள, இலை - வெற்றிலையையும், அடைக்

காய் - பாக்கையும், கர்ப்பூரம் - கருப்பூரவாசனைத் திரவியங்களையும், மிகவும் - மிகுதியாக, வைம்மின் - வையுங்கள், எ - று.

(பொ - ரை.) சிவபக்தர்களை இவ்விடத்து அழைத்திடுங்கள், அவர்களுடைய ஸ்ரீபாத தாமரைகளை விளக்குங்கள், அவர்களைத் தொழுங்கள், ஆசனங்களாகச் சிறப்பினையுடைய கம்பளவரிசைகளை விரியுங்கள், அவர்களை யன்போடு எழுந்தருளப்பண்ணுங்கள், திருவெண்ணீற்றினையும் ஒளியுள்ள வெற்றிலையையும் பாக்கையும் கருப்பூரவாசனைத் திரவியங்களையு மிகுதியாக வையுங்கள். (க)

கலிவிருத்தம்.

என்று சீபல தேவ ரியம்பவே
நின்ற பேர்மடத் தோர்க்கு நிகழ்த்தினர்
ரொன்றும் பண்டா ரியரங்கங் கோடியே
துன்று பத்தர்க்கு மாயேச ரர்க்கெலாம்.

(ப - ரை.) என்று - என்று இவ்வாறு, சீபலதேவர் - ஸ்ரீ பலதேவர், இயம்ப - கட்டளையிட, நின்றபேர் - அவ்விடத்தில் நின்றவர்கள், மடத்தோர்க்கு - மடாதிபதிகளுக்கு, நிகழ்த்தினர் - சொன்னார்கள், ஒன்றும் - மனமிணங்கிச்செய்யும், பண்டாரியர் - வேலைக்காரர்கள், அங்கு அங்கு - அவ்வவ்விடங்களுக்கு, ஓடி - விரைவாகச்சென்று, துன்று - அநேகமாயிரங்களாகக்கூடியிருக்கின்ற, பத்தர்க்கு மாயேசரர்க்கு எல்லாம் - பக்தமாஹேஸ்வரர்களனைவர்க்கும், எ - று.

(பொ - ரை.) என்று இவ்வாறு ஸ்ரீ பலதேவர் கட்டளையிட, அவ்விடத்தில் நின்றவர்கள் மடாதிபதிகளுக்குச் சொன்னார்கள், மனமிணங்கிச்செய்யும் வேலைக்காரர்கள் அவ்வவ்விடங்களுக்கு விரைவாகச்சென்று, அநேகமாயிரங்களாகக் கூடியிருக்கின்ற பக்தமாஹேஸ்வரர்களனைவர்க்கும்.

(வி - ரை.) பண்டாரியர் - மடத்து ஊழியக்காரர் (பொக்கசக்காரர்). (கய)

சொல்ல லும்பத்தர் மாயேச ர்திரள்
டெல்லை யில்லவ ராகி யெழுந்தருள்
பல்வி தத்தைப் பலதேவர் பார்த்தெழுந்
தல்ல றிர வடிகள் விளக்கியே.

(ப - ரை.) சொல்லலும் - சொன்னமாத்திரத்தில், பத்தர்மாயேசர் - பக்தமாஹேஸ்வரர்கள், திரள் - திரளாகக்கூடி, எல்லை இல்லவர் ஆகி - அளவுகடந்தவராகி, எழுந்து அருள் - எழுந்தருளிய, பல்வித்தை - பலதிறத்தாரையும், பலதேவர் - ஸ்ரீ பலதேவர், பார்த்து - கண்டு, எழுந்து - (பயபக்தியுடன்) எழுந்து, அல்லறிர - தமது அன்பமொழியும்படி, அடிகள் - (அப்பக்தமாஹேஸ்வரர்களது) சீர்பாதங்களை, விளக்கி - கழுவி, எ - று.

(பொ - ரை.) சொன்ன மாத்திரத்தில், பக்தமாஹேஸ்வரர்கள் திரளாகக்கூடி அளவு கடந்தவராகி யெழுந்தருளிய பலதிறத்தாரையுங்கண்டு, பயபக்தியுடன் எழுந்து, தமது அன்பமொழியும்படி அப்பக்தமாஹேஸ்வரர்களது சீர்பாதங்களைக்கழுவி. (கக)

அளவி லாதநல் லாதனத் தேசர்த்தபின்
வளமு றும்படி வைத்த விபூதியும்
பளித முமடைக் காயும் பரிவினு
லெளிய ராய்வைத் திறைஞ்சி யெழுந்தரோ.

(ப - ரை.) அளவு இல்லாத - அளவற்ற, நல் - மேன்மையான, ஆதநம் - ஆசனங்களில், சேர்த்தபின் - அவர்களை யெழுந்தருளச்செய்தபிறகு, வளம் உறும்படி - பெருமை

பெறும்படி, வைத்த - அமைத்திருந்த, விபூதியும் - திருவெண்ணீற்றினையும், பளிதமும் - கருப்பூர வாசனைத் திரவியங்களையும், அடைக்காயும் - வெற்றிலைப்பாக்கினையும், பரிவினால் - அன்போடு, எளியராய் - தொண்டுபூண்டவராய், வைத்து - சந்நிதானத்தில் சமர்ப்பித்து, இறைஞ்சி - சாஷ்டாங்கமாக வணங்கி, எழுந்து - மேலே எழுந்து, எ - று.

(பொ - ரை.) அளவற்ற மேன்மையான ஆசனங்களில் அவர்களை யெழுந்தருளச் செய்தபிறகு, பெருமை பெறும்படி யமைத்திருந்த திருவெண்ணீற்றினையும், கருப்பூர வாசனைத் திரவியங்களையும், வெற்றிலைப்பாக்கினையும், அன்போடு தொண்டுபூண்டவராய்ச் சந்நிதானத்தில் சமர்ப்பித்துச் சாஷ்டாங்கமாக வணங்கி மேலேயெழுந்து. (௬௨)

சகல பத்தர் மயேசர் சரணர்தா
நிகரி லார்கண நேசத்த ராகியம்
முகம லர்ந்துநம் முக்கணன் கீர்த்தியே
சுகம தாகத் துதித்துறுங் காலையில்.

(ப - ரை.) சகல பத்தர் மாயேசர் சரணர் - பக்த மாஹேஸ்வர சரணர்களெல்லோரும், நிகர்இல்லார் - ஒப்பற்றவர்களாகி, கணநேசத்தர்ஆகி - சிவகணங்களின்மேல் அன்பினராகி, அம் - அழகிய, முகம் மலர்ந்து - முகமலர்ச்சியுடையராகி, நம் - நமது, முக்கண்ணன் - சிவபெருமானது, கீர்த்தியே - புகழையே, சுகமாக - இன்பமாக, துதித்து உறும் காலையில் - தோத்திரஞ்செய்துகொண்டிருக்குங்காலத்தில், எ - று.

(பொ - ரை.) பக்தமாஹேஸ்வர சரணர்களெல்லோரும் ஒப்பற்றவர்களாகி, சிவகணங்களின் மேலன்பினராகி, அழகிய முகமலர்ச்சியுடையராகி, நமது சிவபெருமானது புகழையே இன்பமாகத் தோத்திரஞ்செய்துகொண்டிருக்குங்காலத்தில்.

(வி - ரை.) சரணர்தாம் என்பதில் தாம் - சாரியை. சுகமது என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. (௬௩)

பரசி வானு பவபச வேசுரர்
சரணர் பாதாம் புயநற்ச லந்தனின்
முரண மான பவமற மூழ்கிபொன்
டரணி போன்மொளிர் தண்டுகில் சாத்தியே.

(ப - ரை.) பரசிவ அனுபவம் - பரசிவாநுபவசெல்வத்தையுடைய, வசவேசுரர் - வசவதேவர், சரணர் - சிவசரணரது, பாதம் அம்புயம் - பாதத்தாமரையை விளக்கின, நல் - பரிசுத்தமான, சலம்தன்னில் - தீர்த்தத்தில், முரணம் ஆன - வலிதாகிய, பவம் அற - பிறவியொழியும்படி, மூழ்கி - ஸ்நானஞ்செய்தும், பொன் - அழகினையுடைத்த, தரணி போன்று - சூரியன்போல, ஒளிர் - விளங்குகிற, தண் - குளிர்ச்சிபொருந்திய, துகில் - பீதாம்பரத்தை, சாத்தி - தரித்தும், எ - று.

(பொ - ரை.) பரசிவாநுபவ செல்வத்தையுடைய வசவதேவர் சிவசரணரது பாததாமரையை விளக்கின பரிசுத்தமான தீர்த்தத்தில் வலிதாகிய பிறவியொழியும்படி ஸ்நானஞ் செய்தும் சிறப்பினைவாய்ந்த சூரியன்போல விளங்குகிற குளிர்ச்சிபொருந்திய பீதாம்பரத்தைத் தரித்தும்.

(வி - ரை.) ஒளிர்தண்துகில் என்றதனால் பீதாம்பரத்தைக் குறித்தது. துகில் - வஸ்திரம். (௬௪)

பூதி வெண்டிரி புண்டர மேற்றரித்
தாதி யாரச் சனைமலர் சென்னியின்
மீதி ருத்தி விமலநற் கண்டிகை
சோதி மேனிச் சுகாபர ணத்தராய்.

(ப - ரை) வெள் - வெண்மையாகிய, பூதி - விபூதியை (உத்தூளனமாகவும்), மேல் - அதன்மேல், புண்டரம் - த்ரிபுண்டரமாகவும், தரித்து - (லலாடத்தில் விதிப்படி) தாரணஞ் செய்தும், ஆதியார் - (தமது) இஷ்டலிங்கமூர்த்தியை, அர்ச்சனை - பூஜைசெய்த, மலர் - மலர்களை, சென்னியின்மீது - சிரசின்மேல், இருத்தி - தரித்தும், விமலம் - பரிசுத்தமாகிய, நல் - சிறந்த, கண்டிகை - உருத்திராக்கமாலையை, சோதி - ஒளியையுடைய, மேனி - திருமேனியிலணியத்தக்க, சுகம் - இன்பத்தைத்தருகிற, ஆபரணத்தராய் - ஆபரணமாகத் தரித்தவராகியும், எ - று.

(பொ - ரை.) வெண்மையாகிய விபூதியை யுத்தூளனமாகவும் அதன்மேல் த்ரிபுண்டரமாகவும் லலாடத்தில் விதிப்படித் தாரணஞ்செய்தும், தமது இஷ்டலிங்கமூர்த்தியைப் பூஜைசெய்த மலர்களைச் சிரசின்மேலே தரித்துக்கொண்டும் பரிசுத்தமாகிய சிறந்த உருத்திராக்கமாலையை ஒளியையுடைய திருமேனியிலணியத்தக்க வின்பத்தைத் தருகிற ஆபரணமாகத் தரித்தவராகியும்.

(வி - ரை.) ஆதியார் - சிவபெருமான், ஈண்டைக்கேற்ப இஷ்டலிங்கமூர்த்தியைக் குறித்தது. கண்டிகை - கண்டாபரணம். (௧௫)

வசவ தேவர் மகத்தரைக் கண்டுநன்
னசைகொ ணெஞ்சத்த ராகி நயனநீர்
விசையில் வீழ்வுற விம்மிப் பணிந்துநின்
றிசையு மேற்றவ மெய்திற்றென் றேத்தியே.

(ப - ரை.) வசவதேவர் - வசவேசர், மகத்தரை - மாஹேச்வரர்களை, கண்டு - தரிசனஞ்செய்து, நல் - சிறந்த, நசைகொள் - அன்புகொண்ட, நெஞ்சத்தர் ஆகி - மனமுடையவராய், நயனம் நீர் - கண்ணீரானது, விசையில் - வேகமாய், வீழ்வுற - ஒழுக, விம்மி - அழுது, பணிந்து - சாஷ்டாங்கமாக வணங்கி, நின்று - எழுந்துநின்று, இசையும் - இவ்வுலகிற்பிறந்து உய்யுதற்கிசைந்த, மேல் தவம் - முன்செய்த தபோபலன், எய்திற்று என்று - இப்போது சித்தித்ததென்று, ஏத்தி - துதித்து, எ - று.

(பொ - ரை.) வசவேசர் மாஹேச்வரர்களைத் தரிசனஞ்செய்து, சிறந்த அன்பு பூண்ட மனமுடையவராய், கண்ணீரானது வேகமாயொழுகவழுது, சாஷ்டாங்கமாக வணங்கி யெழுந்துநின்று, இவ்வுலகிற் பிறந்து உய்யுதற்கிசைந்த முன்செய்த தபோபலன் இப்போது சித்தித்ததென்று துதித்து.

(வி - ரை.) மகத்து - பெரியோர். நயனம் - வடசொல் (கண்). மேல்-மேலைநாள். (௧௬)

ஆடை சற்று மசையா தொதுக்கியே
நீடு மங்க நெருங்க வொடுக்கியே
கூடு மஞ்சலி கொண்ட கரத்தராய்த்
தேட ருஞ்சிவ பத்தித் திரட்சிபோல்.

(ப - ரை.) ஆடை - (தாம் தரித்திருக்கும்) வஸ்த்ரமானது, சற்றும் - சிறிதும், அசையாது - அசையாமல், ஒதுக்கி - ஒதுங்கச்செய்தும், நீடும் - நிலைபெற்ற, அங்கம் - தம் திருமேனியானது, நெருங்க ஒடுக்கி - மிகவும் ஒடுங்கச்செய்தும், கூடும் - குவித்த, அஞ்சலிகொண்ட கரத்தர் ஆய் - அஞ்சலி ஹஸ்தராகியும், தேடு அரு - தேடுதற்கரிய, சிவ பத்தி - சிவபக்தியின், திரட்சிபோல - திரண்ட வுருவம்போலவும், எ - று.

(பொ - ரை.) தாம் தரித்திருக்கும் வஸ்த்ரமானது சிறிதும் அசையாமல் ஒதுங்கச்செய்தும், நிலைபெற்ற தம திருமேனியானது மிகவும் ஒடுங்கச்செய்தும், குவித்த யஞ்சலி ஹஸ்தராகியும், தேடுதற்கரிய சிவபக்தியின் திரண்ட வுருவம்போலவும்.

(வி-ரை.) சிவபத்தியுண்டாத லருமையென்று தோன்ற தேடருஞ்சிவபத்தியென்றார்.

தந்தையார் - தந்தையாராகிய ஸ்ரீபலதேவர், பொங்கு ஆர்வம் பொருந்த - மிக்க அன்புடையவராகும்படி, நின்று - நேரில்நின்று, காட்டினார் - காண்பித்தார்கள், எ - று.

(பொ - ரை.) கங்காம்பையாரென்கிற தேவாமிர்தத்தை, உமாதேவியாரின் திருவடிகளுக்கு நேசமுள்ளவளை, அறியாத தவத்தைப்பண்ணி வசவதேவருக்குரியளானவளை, அழகுள்ள தோழிமார்கள் செவந்த கைகளாற் பிடித்துக்கொண்டுவந்து தந்தையாராகிய ஸ்ரீபலதேவர் மிக்க அன்புடையராகும்படி நேரில் நின்று காண்பித்தார்கள்.

(வி - ரை.) கழல் - ஆகுபெயர். உரியள் - மனையாள். (௨௨)

கன்னியர்கற் பெல்லாமோர் காயமாத் திரண்டாளை
நன்னயமாக் குருலிங்க நற்பத்திக் கேற்றாளை
யென்னைவாழ் விக்கவந்தீ ரென்னக்கை கொண்டுசென்று
மன்னுமருந் தவத்தோர்முன் பலதேவர் வணங்குவித்தார்.

(ப - ரை.) கன்னியர் - மாதராது, கற்பு எல்லாம் - கற்பு முழுதும், ஓர்காயமாய் - ஒருடம்பாக, திரண்டாளை - திரண்டிருப்பவளை, நல் - நல்ல, நயம் - ப்ரயோஜநத்தை யடைதற்குரிய, மா - பெருமைபொருந்திய, நல் - சிறந்த, குருலிங்க பத்திக்கு - குருலிங்க ஜங்கமபத்திக்கு, ஏற்றாளை - தக்கவளை, என்னை - அடியேனை, வாழ்விக்க - வாழச்செய்ய, வந்தீர் - அவதரித்தவர்களே, என்ன - என்று சொல்லி, கைகொண்டு - தமது கையிற் பற்றிக்கொண்டு, சென்று - போய், மன்னும் - நிலைபெற்ற, அரு - அரிய, தவத்தோர் - மாஹேஸ்வரர்களின், முன் - சந்நிதானத்தில், பலதேவர் - ஸ்ரீபலதேவர், வணங்குவித்தார் - தொழச்செய்தார், எ - று.

(பொ - ரை.) மாதராது கற்பு முழுவதும் ஒருடம்பாகத் திரண்டிருப்பவளை, நல்ல ப்ரயோஜநத்தை யடைதற்குரிய பெருமைபொருந்திய சிறந்த குருலிங்கஜங்கமபத்திக்குத் தக்கவளை, அடியேனை வாழச்செய்ய வவதரித்தவர்களே! யென்று சொல்லித் தமது கையிற் பற்றிக்கொண்டுபோய் நிலைபெற்ற அரிய மாஹேஸ்வரர்களின் சந்நிதானத்தில் ஸ்ரீபலதேவர் தொழச்செய்தார்.

(வி - ரை.) கன்னியர் என்றது இவ்விடத்து மாதர் பொதுவுக்காயிற்று. (௨௩)

வணங்கியபின் சிவனுருவாம் வசவேசர் தமைஞானக்
குணந்திரண்ட கோலத்தைக் குலவுமரி யாதனமீ
திணங்கருநற் பத்தியினா லெழுந்தருளி யிருக்கச்செய்
தணங்கொருபா கனைத்துதித்தங் காராமெய் யன்பினால்.

(ப - ரை.) வணங்கிய பின் - தொழுத பிறகு, சிவன் உருவம் - சிவசொரூபமாகிய, வசவேசர் தம்மை - வசவதேவரை, ஞானக்குணம் - ஞானமே, திரண்ட - கூடிய, கோலத்தை - திருவுருவத்தை, குலவும் - விளங்குகிற, அரியாதனம் மீது - சிங்காதநத்தின் மேல், இணங்கு அரு - உண்டாதற் கருமையாகிய, நல் - சிறந்த, பத்தியினால் - அன்போடு, எழுந்தருளி யிருக்கச்செய்து - வீற்றிருந்தருளப்பண்ணி, அணங்கு ஒரு பாகனை - சிவபெருமானை, துதித்து - வணங்கி, அங்கு - அவ்விடத்து, ஆரா - வெறுக்காத, மெய் - உண்மையாகிய, அன்பினால் - நேசத்தால், எ - று.

(பொ - ரை.) தொழுத பிறகு, சிவசொரூபமாகிய வசவதேவரை, ஞானமே கூடிய திருவுருவத்தை விளங்குகிற சிங்காதநத்தின்மேல் உண்டாதற் கருமையாகிய சிறந்த அன்போடு வீற்றிருந்தருளப்பண்ணி, சிவபெருமானை வணங்கி, அவ்விடத்து வெறுக்காத வுண்மையாகிய நேசத்தால்,

(வி - ரை.) அணங்கு - உமாதேவியாரை. ஒருபாகனை - ஒருபாகத்தி லுடையவனை. அரி - ஹரி என்னும் வடசொற்றிரிபு. வசவதேவர் தம்மை யென்பதில் தம் - சாரியை. (உச)

கங்காம்பை முதலாகக் கனகவகை யாபரணந்
தங்காத லாகமற்றுந் தம்மனையி லுள்ளவெலாம்
பொங்கார்வ முடனேந்திப் புண்ணியரை வலமாய்வந்
தங்காத வனையணைந்த வமுதமதி யெனவைத்தார்.

(ப - ரை.) கங்காம்பை முதலாக - கங்காம்பையார் ஆதியாக, கனகவகை - பொன் வகையாலியன்ற, ஆபரணம் - ஆபரணங்கள், தம் - தமது, காதலாக - இஷ்டமாக, மற்றும் - மேலும், தம் - தமது, மனையில் - அரண்மனையில், உள்ள - இருந்தன, எல்லாம் - எல்லாவற்றையும், பொங்கு - மிகுந்த, ஆர்வமுடன் - அன்போடு, ஏந்தி - தாங்கிக்கொண்டு, புண்ணியரை - புண்யஸ்வரூபியாகிய வசவேசரை, வலமாய் வந்து - ப்ரதக்ஷணஞ்செய்து, அங்கு - அவ்விடத்தே, ஆதவனை - சூரியனை, அணைந்த - சேர்ந்த, அமுதம் - அமிர்த கிரணங்களையுடைய, மதி - சந்திரன், என்ன - என்று கண்டோர் சொல்லும்படி, வைத்தார் - திருமுன்னே சமர்ப்பித்தார், எ - று.

(பொ - ரை.) கங்காம்பையாராதியாகப் பொன்வகையாலியன்ற வாபரணங்கள் தமதிஷ்டமாக மேலும் தமது அரண்மனையிலிருந்தன வெல்லாவற்றையும் மிகுந்த வன்போடு தாங்கிக்கொண்டு, புண்யஸ்வரூபியாகிய வசவேசரை ப்ரதக்ஷணஞ்செய்து, அவ்விடத்தே சூரியனைச் சேர்ந்த அமிர்த கிரணங்களையுடைய சந்திரனென்று கண்டோர் சொல்லும்படி திருமுன்னே சமர்ப்பித்தார்.

(வி - ரை.) ஆதவன் - ஆதபம் என்னும் வடசொற்றிரிபு, ஆதபம் - வெயில், அதனையுடையவனாதலின் சூரியனை ஆதவன் என்றார். மது - அமிர்தம், அதனையுடையவனாதலால் சந்திரனை மதியென வழங்குவர், இச்சம் வினைமுதற் பொருண்மை விகுதி.

எனைக்காப்பி ரென்மகளை யிப்பொருளைக் கொள்விரென
மனைக்காத லிலரேனு மதிச்சடையா ரருளொன்று
நினைத்தாகு தெனக்கொண்டார் நேயத்தாற் பலதேவர்
முனைக்காலத் தவமெனக்கு முற்றின்றென் றெனப்பணிந்தார்.

(ப - ரை.) என்னை - அடியேனை, காப்பீர் - காக்கக்கடவீர், என் - எனது, மகளை - திருமகளையும், இ - இந்த, பொருளை - பொருளையும், கொள்விர் - அங்கீகரிக்கக் கடவீர், என்ன - என்று வேண்ட (வசவதேவரும்), மனை - மனைவியின், காதல் - ஆசை, இலரேனும் - இல்லாதவரே யாயினும், மதி சடையார் - சிவபெருமானது, அருள் - திருவருளே, ஒன்றும் - இதுவானாலும், நினைத்து ஆகுது - நான் நினைத்தாகக்கூடியகாரியம், என்ன - யாது என்று சிந்தித்து, நேயத்தால் - அன்போடு, கொண்டார் - ஏற்றுக்கொண்டனர், பலதேவர் - ஸ்ரீபலதேவரும், முனைக்காலத்தவம் - முற்காலம் செய்த தபோபலமானது, இன்று - இன்றையத்தினம், எனக்கு முற்றிற்று என்று - அடியேனுக்கு நிறைவேறிற்றென்று, பணிந்தார் - வணங்கினர், எ - று.

(பொ - ரை.) அடியேனைக் காக்கக் கடவீர், எனது திருமகளையும், இந்தப்பொருளையும் அங்கீகரிக்கக் கடவீரென்று வேண்ட, வசவதேவரும் மனைவியின்மேல் ஆசையில்லாதவரே யாயினும் சிவபெருமானது திருவருளே யிதுவானாலும், நான் நினைத்தாகக்கூடிய காரியம்யாது? என்று சிந்தித்து, அன்போடு ஏற்றுக்கொண்டனர், ஸ்ரீபலதேவரு முற்காலத்திற் செய்த தபோபலமானது அடியேனுக்கு இன்றையத்தினம் நிறைவேறிற்றென்று வணங்கினர்.

(வி - ரை.) மனை - ஆகுபெயர் (இல்லறம்). மதிசடையார் - சந்த்ரசேகரர். (உரு)

நல்லவிலக் கணமுகூர்த்த மெனநின்றோர் நவின்றளவி
லல்லணியுங் கண்டனரு ளவனடியா ரருளிரண்டுஞ்
சொல்லரிய விலக்கணமுந் துணையுமுத்திச் சுகமுமாம்
வல்லவர்கட் கெனவங்கண் வசவேசர் வகுத்துரைத்தார்.

(ப - ரை.) நின்றோர் - அங்கிருந்த பெரியோர்கள், இலக்கணம் - சகல சுபலக்ஷணங்களையுடைய, நல்ல முகூர்த்தம் - உத்தேசித்த நல்ல முகூர்த்தகாலமும் சமீபித்தது, என்ன - என்று, ல், அங்கண் - வசவேசர் - வசவதேவர், வல்லவர்கட்கு - சதுரர்களுக்கு, அல் அணியும் கண்டன் - சிவபெருமானது, அருள் - அநுக்ரஹமும், அவன் - அச்சிவபெருமானது, அடியார் - பக்தரது, அருள் - அநுக்ரஹமும் (ஆகிய), இரண்டும் - இரண்டுமே, சொல் அரிய - சொல்லுதற்கரிய, இலக்கணமும் - லக்ஷணமுள்ள சுபமுகூர்த்தகாலமா யிருப்பதுவும், துணையும் - துணைப் பொருளா யிருப்பதுவும், முத்திச்சுகமும் - மோக்ஷாநந்தமாயிருப்பதுவும், ஆம் - ஆகும், என்ன - என்று, வகுத்து உரைத்தார் - விவரித்துச் சொல்லியருளினார், எ - று.

(பொ-ரை.) அங்கிருந்த பெரியோர்கள் சகல சுபலக்ஷணங்களையுடைய வுத்தேசித்த நல்ல முகூர்த்த காலமும் சமீபித்ததென்று சொன்னமாத்திரத்தில், அப்போது வசவதேவர் சதுரர்களுக்குச் சிவபெருமானது அநுக்ரஹமும் பக்தரது அநுக்ரஹமுமாகிய யிரண்டுமே சொல்லுதற்கரிய லக்ஷணமுள்ள சுபமுகூர்த்தமா யிருப்பதுவும், துணைப் பொருளா யிருப்பதுவும், மோக்ஷாநந்தமா யிருப்பதுவுமாகுமென்று விவரித்துச் சொல்லியருளினார்.

(வி-ரை.) சதுரர் - சிவத்யாநாதிகளில் வல்லவர். அல் அணியும் - விஷத்தையுடைய. கண்டன் - ஸ்ரீகண்டத்தை யுடையவன். அல்-இருள், அது ஈண்டு விஷத்தைக் குறித்தது.

இத்தகைய வதுவைநல மெங்குமிலை யெனவுலகோர்
மெத்தநின்று பாராட்ட மெய்த்தவர்க்கும் பத்தர்கட்குஞ்
சுத்தமிகு மிட்டானஞ் சுகநிறைய வளித்திறைஞ்சி
யத்தமுகிழ்த் தத்தவர்க ளனைவருமங் கறியவே.

(ப - ரை.) இத்தகைய - இத்தன்மைத்தாகிய, வதுவை நலம் - திருமணவழகு, எங்கும் - எவ்விடத்தும், இல்லை - கண்டதுமில்லை கேட்டதுமில்லை, என்ன - என்று, உலகோர் - உலகத்தார், மெத்த - மிகவும், நின்று - கூடியிருந்து, பாராட்ட - கொண்டாடா நிற்க, மெய் - உண்மையாகிய, தவர்க்கும் பத்தர்கட்கும் - பக்தமாஹேஸ்வர சரணர்களுக்கும், சுத்தம் மிகும் - மிக்க பரிசுத்தமாகிய, மிட்டான்னம் - த்ருப்தியாகிய அந்நத்தை, சுகம் நிறைய - சந்தோஷமிகும்படி, அளித்து - படைத்து, இறைஞ்சி - சாஷ்டாங்கமாக வணங்கி, அத்தம் முகிழ்த்து - கைகுவித்து, அ - அந்த, தவர்கள் அனைவரும் - பக்தமாஹேஸ்வர சரணர்களெல்லோரும், அங்கு - அவ்விடத்தில், அறிய - தெரியும்படி, எ - று.

(பொ - ரை.) இத்தன்மைத்தாகிய திருமண வழகு எவ்விடத்தும் கண்டதுமில்லை கேட்டதுமில்லையென்று உலகத்தார் மிகவும் கூடியிருந்து கொண்டாடா நிற்க, உண்மையாகிய பக்தமாஹேஸ்வர சரணர்களுக்கு மிக்க பரிசுத்தமாகிய த்ருப்தியாகிய அந்நத்தைச் சந்தோஷமிகும்படிப் படைத்துச் சாஷ்டாங்கமாகவணங்கிக் கைகுவித்து அந்தப் பக்தமாஹேஸ்வர சரணர்களெல்லோரும் அவ்விடத்தில் தெரியும்படி.

(வி - ரை.) மிட்டான்னம் - ம்ருஷ்டாந்நம் என்னும் வடசொற்றிரிபு. ம்ருஷ்டம் - த்ருப்தி. சுத்தமிகும் இட்டாந்நம் எனப்பிரித்து மிக்க பரிசுத்தமாகிய இஷ்டாந்ந மென்றுரைத்தலுமாம். இஷ்டாந்நம் - இஷ்டமாகிய அந்நம். அத்தம் - ஹஸ்தம் என்னும் வடசொற்றிரிபு.

(௨அ)

ஆயிழையார் கங்காம்பை நாகாம்பை யாருடனே
யேயமணப் பந்தரிலே பலதேவ ரிசைவினாற்
றூய்புகழ்க் கூடலசங் கமர்பாதந் தொழச்சென்று
நேயமுட னுபதேசம் பெற்றசெய்தி நிகழ்த்துவாம்.

**(ப-ரை.)** ஆய் - ஆராய்ந்தெடுத்த, இழையார் - ஆபரணமணிந்தவராகிய, கங்காம்பை நாகாம்பையார் உடனே - கங்காம்பையார் நாகாம்பையாரென்பவரிருவரோடு (வசவேசர்), ஏய - திருவுளமிசைந்த, மணப்பந்தரிலே - திருமணப்பந்தலிலே, பலதேவர் - ஸ்ரீபலதேவரது, இசைவினால் - சமாதானத்தினால், தூய - பரிசுத்தமான, புகழ் - கீர்த்தியினைப் பெற்ற, கூடலசங்கமர் - கூடலஸங்கம மென்கின்ற திவ்ய ஸ்தலத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானது, பாதம் - திருவடிகளை, தொழ - வணங்க, சென்று - போய், நேயமுடன் - அன்புடன், உபதேசம்பெற்ற - அந்தச் சிவபெருமானாகிய ஸ்ரீ குருநாதரால் உபதேசம் அருளிச்செய்யப்பெற்ற, செய்தி - வரலாற்றினை, நிகழ்த்துவாம் - சொல்லுவோம் (யாம்), எ - று.

**(பொ - ரை.)** ஆராய்ந்தெடுத்த ஆபரணமணிந்தவராகிய கங்காம்பையார் நாகாம்பையா ரென்பவ ரிருவரோடு வசவேசர் திருவுளமிசைந்த திருமணப்பந்தலிலே ஸ்ரீபலதேவரது சமாதானத்தினால் பரிசுத்தமான கீர்த்தியினைப்பெற்ற கூடலஸங்கமமென்கின்ற திவ்ய ஸ்தலத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானது திருவடிகளை வணங்கப் போய் அன்புடன் அந்தச் சிவபெருமானாகிய ஸ்ரீ குருநாதரால் உபதேசமருளிச் செய்யப்பெற்ற வரலாற்றினைச் சொல்லுவோம் யாம். (உக)

## கூடலஸங்கமேசர் வசவேசர்க்கு உபதேசஞ்செய்தல்.

கலிவிருத்தம்.

விச்சல புரத்தினை விரைந்தகல லுற்றே
யச்சமறு பத்தர்க ளனேகர்புடை சூழ
வுச்சிதநல் லற்புதமோ டுன்னரிய காத
மிச்சைதரு யோசனையி லேகியெல்லை கண்டார்.

**(ப - ரை.)** விச்சல புரத்தினை - அந்த விஜ்ஜலநகரத்தை, விரைந்து - விரைவாக, அகலல் உற்று - விட்டு நீங்கத்தொடங்கி, அச்சம் அறு - பயமற்ற, பத்தர்கள் அனேகர் - அநேக சிவபக்தர்கள், புடைசூழ - பக்கத்தில் சூழ்ந்துவர, உச்சிதம் - மேன்மையாகிய, நல் - மிக்க, அற்புதமோடு - ஆச்சரியத்துடனே, உன் அரிய - நினைத்தற்கரிய, காதம் - ஒரு காதவழியை, இச்சை தரு - விருப்பத்திற்குத்தக்க, யோசனையில் ஏகி - ஒரு யோசனை யளவிற் சென்று, எல்லை - அந்தக் கூடலஸங்கமேஶ்வரத்தின் எல்லையை, கண்டார் - தரிசித்தார்.

**(பொ - ரை.)** அந்த விஜ்ஜலநகரத்தை விரைவாக விட்டு நீங்கத்தொடங்கி, பயமற்ற அநேக சிவபக்தர்கள் பக்கத்தில் சூழ்ந்துவர, மேன்மையாகிய மிக்க ஆச்சரியத்துடனே நினைத்தற்கரிய ஒரு காதவழியை விருப்பத்திற்குத் தக்க ஒரு யோசனை யளவிற் சென்று, அந்தக் கூடலஸங்கமேஶ்வரத்தின் எல்லையைத் தரிசித்தார்.

**(வி - ரை.)** எப்போதும் சிவத்யானத்திலிருப்பவர்களுக்குப் பயங்கரமில்லை யாதலான் அச்சமறு பத்தர்கள் என்றார். (கo)

பத்தியதி கத்தொடு பணிந்துபல காலுஞ்
சித்திவச வேசுரர் சிரங்கர முகிழ்த்தே
யத்திசையை நாடியரு மந்ததுதி செய்யா
வெத்திசையு மெண்ணில ரெழுந்தருளு கின்றார்.

(ப - ரை.) பத்தி அதிகத்தொடு - மிக்க பத்தியுடனே, பலகாலும் - அடிக்கடி, பணிந்து - வணங்கி, சித்தி - சிவஞானசித்தி யடைந்த, வசவேசுரர் - வசவதேவர், சிரம் - திருமுடியின் மேலே, கரம் - திருக்கரங்களை, முகிழ்த்து - குவித்து, அ - அந்தக் கூடல ஸங்கமேஸ்வரர் எழுந்தருளியிருக்கும், திசையை - திக்கையே, நாடி - நோக்கி, அருமந்த - அருமையாகிய, துதிசெய்யா - தோத்திரங்களைச்செய்து, எத்திசையும் - வேறெந்தத் திக்கையும், எண்ணிலர் - நினையாதவராய், எழுந்தருளுகின்றார் - எழுந்தருள்வாராயினார், எ - று.

(போ - ரை.) மிக்க பத்தியுடனே அடிக்கடி வணங்கி, சிவஞானசித்தி யடைந்த வசவ தேவர் திருமுடியின்மேலே திருக்கரங்களைக் குவித்து, அந்தக்கூடலஸங்கமேஸ்வரர் எழுந் தருளி யிருக்கும் திக்கையே நோக்கி, அருமையாகிய தோத்திரங்களைச்செய்து, வேறெந் தத் திக்கையும் நினையாதவரா யெழுந்தருள்வாராயினர்.

(வி - ரை.) செய்யா - செய்யாவென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். சித்தி - ஸித்தி என்னும் வடசொற்றிரிபு. எண்ணிலர் - முற்றெச்சம். (௫௧)

அன்னதிரு முன்னக ரரும்பெருமை தன்னைப்
பன்னக பதிக்குமிது வென்றுபக ரொன்று
நன்னதி யனைத்துமிகு புண்ணிய நலத்தா
மின்னதல ரும்பரிச வேதிகிரி யெல்லாம்.

(ப - ரை.) அன்ன - அத்தன்மைத்தாகிய, திரு - தெய்வீகஸம்பத்தால், முன் - முற் பட்ட, நகர் - கூடலஸங்கமேஸ்வரத்தின், அரு - அரிதாகிய, பெருமை தன்னை - மகிமையை, பன்னக பதிக்கும் - ஆதிசேஷனாலும், இது என்று - இத்தன்மைத்தென்று, பகர் ஒன்று - சொல்லமுடியாது, நல் - மிக்க, நதி அனைத்தும் - ஆறுகளெல்லாமும், மிகு - மஹா, புண்ணியம் நலத்த ஆம் - புண்யமாகிய ப்ரயோஜனத்தையே தருவனவாகும், கிரி எல்லாம் - மலைகளெல்லாமும், மின் அலரும் - ஒளிவீசுகின்ற, பரிசவேதி - பரிசவே திகளேயாகும், எ - று.

(போ - ரை.) அத்தன்மைத்தாகிய தெய்வீக ஸம்பத்தால் முற்பட்ட கூடலஸங்க மேஸ்வரத்தின் அரிதாகிய மஹிமையை ஆதிசேஷனாலும் இத்தன்மைத்தென்று சொல்ல முடியாது, மிக்க ஆறுகளெல்லாமும் மஹாபுண்யமாகிய ப்ரயோஜனத்தையே தருவன வாகும், மலைகளெல்லாமும் ஒளி வீசுகின்ற பரிசவேதிகளே யாகும்.

(வி - ரை.) பரிசவேதி - இரதகுளிகை, இது செம்பினை யுருக்கித் தன்னொடு கூட்டி வேதித்துப் பொன்னாக்குமல்லது தான் பொன்னியல்பைக் காட்டாது தன்னுளடக்கி நிற்கும். பரிசவேதி - ஸ்பரிஸவேதி என்னும் வடசொற்றிரிபு. பெருமைதன்னை என்பதில் தன் - சாரியை. மின்னது என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி. (௫௨)

ஆலய மனைத்துமர னாலயம தாகும்
சோலைநல கண்டிகை துதைந்துகனி கொண்ட
மேலவெழு நந்தவன மேவனமி யாவு
மேலணியு நீறதனை மேவுமுயிர் முற்றும்.

(ப - ரை.) ஆலயம் அனைத்தும் - தேவாலயங்களெல்லாமும், அரன் ஆலயம் ஆகும் - சிவாலயங்களேயாகும், சோலை - தோப்புகளெல்லாமும், நல்ல - சிறந்த, கண்டிகை - உருத்

திராக்கமணிகள், துதைந்து - நிறைந்துள்ள, கனி - பழங்களையே, கொள்ளும் - பிடித்திருப்பனவாகும், வனம் யாவும் - காடுகளெல்லாமும், ஏல - சிவபூஜைக்குப் பொருந்தமாகிய, எழும் - உயர்ந்தெழுகின்ற, நந்தவனமே - பூந்தோட்டங்களேயாகும், உயிர்முற்றும் - ஆத்மகோடிகளெல்லாமும், மேல் அணியும் - மேனியின்மீது தாரணஞ்செய்தற்குரிய, நீறதனை - விபூதியையே, மேவும் - அடைதலாகும், எ - று.

(பொ - ரை.) தேவாலயங்களெல்லாமும் சிவாலயங்களேயாகும், தோப்புகளெல்லாமும் சிறந்த உருத்திராக்கமணிகள் நிறைந்துள்ள பழங்களையே பிடித்திருப்பனவாகும், காடுகளெல்லாமும் சிவபூஜைக்குப் பொருத்தமாகிய பூந்தோட்டங்களேயாகும், ஆத்மகோடிகளெல்லாமும் மேனியின்மீது தாரணஞ் செய்தற்குரிய விபூதியையே யடைதலாகும்.

(வி - ரை.) ஆலயமது என்பதில் அது - பகுதிப்பொருள்விகுதி. (௩௩)

ஆவினமெ லாமமர ராவினம தாகுஞ்
சேவினமெ லாமிடப செய்யவடி வாகும்
வாவிகுள மோடைகளும் வானநதி நீரே
மேவுதொழி லீசனை விரும்புவழி பாடே.

(ப - ரை.) ஆ இனம் எல்லாம் - பசுக்களெல்லாமும், அமரர் ஆ இனம் ஆகும் - காமதேனுக்களேயாகும், சே இனம் எல்லாம் - எருதுகளெல்லாமும், இடபம் - நந்திகளின், செய்ய - செம்மையாகிய, வடிவு ஆகும் - திருவுருவங்களேயாகும், வாவி - கிணறுகளெல்லாமும், குளம் - தடாகங்களெல்லாமும், ஓடைகளும் - நீரோடைகளெல்லாமும், வானநதி நீரே - ஆகாயகங்காதீர்த்தங்களேயாகும், மேவு தொழில் - அங்கு நிகழுங் காரியங்களெல்லாமும், ஈசனை - சிவபெருமானை, விரும்பு - அன்பு செய்தற்குரிய, வழிபாடே - பூஜைகளேயாகும், எ - று.

(பொ - ரை.) பசுக்களெல்லாமும் காமதேனுக்களேயாகும், எருதுகளெல்லாமும் நந்திகளின் செம்மையாகிய திருவுருவங்களேயாகும், கிணறுகளெல்லாமும் தடாகங்களெல்லாமும் நீரோடைகளெல்லாமும் ஆகாயகங்காதீர்த்தங்களேயாகும், அங்கு நிகழுங் காரியங்களெல்லாமும் சிவபெருமானை யன்புசெய்தற்குரிய பூஜைகளேயாகும்.

(வி - ரை.) ஆவினமது என்பதில் அது - பகுதிப்பொருள்விகுதி, இனம் - கூட்டம்.

நற்புருட ரெல்லவரு நல்லமர ராவர்
கற்புடைய மங்கையர்கள் மாதைய ரெல்லாஞ்
சொற்செய லனைத்துமரன் றோத்திர மதாகும்
பொற்பொலி யெல்லாமமரர் பொன்னுலகி யங்கள்.

(ப - ரை.) நல் - அழகாகிய, புருடர் எல்லவரும் - புருஷர்களெல்லாரும், நல் - சிறந்த, அமரர் ஆவர் - தேவர்களேயாவர், மாதையர் எல்லாம் - மாதர்களெல்லாரும், கற்புடைய மங்கையர்கள் - கற்புடைய மாதர்களேயாவர், சொல் செயல் அனைத்தும் - பேசுந்தொழில்களெல்லாமும், அரன் தோத்திரம் ஆகும் - சிவஸ்துதிகளேயாகும், பொற்பு - மிகுந்த, ஒலி எல்லாம் - முழக்கங்களெல்லாமும், அமரர் - தேவர்கள் வாழ்கின்ற, பொன் உலகு - தேவலோகத்தின், இயங்கள் - தூர்யவாத்யங்களேயாகும், எ - று.

(பொ - ரை.) அழகாகிய புருஷர்களெல்லாரும் சிறந்த தேவர்களேயாவர், மாதர்களெல்லாரும் கற்புடைய மாதர்களேயாவர், பேசுந்தொழில்களெல்லாமும் சிவஸ்துதிகளேயாகும், மிகுந்த முழக்கங்களெல்லாமும் தேவர்கள் வாழ்கின்ற தேவலோகத்தின் தூர்யவாத்யங்களேயாகும்.

(வி - ரை.) புருடர் - புருஷர் என்னும் வடசொற்றிரிபு. தோத்திரமது என்பதில் அது - பகுதிப்பொருள்விகுதி. தோத்திரம் - ஸ்தோத்ரம் என்னும் வடசொற்றிரிபு.(௩௫)

கோதின்மறு கெங்குமிகு கோலமிடு வாரே
வேதிகை யனைத்துமறை யாகம விளம்பே
நீதிதரு முத்தநிதி நீணிலமி யாவு
மாதிநக ரப்பெருமை யாரளவு ரைப்பார்.

(ப - ரை.) கோது இல் - பரிசுத்தமான, மறுகு எங்கும் - தெருக்களெவ்விடங்களி லும், மிகு - மிக்க, கோலம் - கோலங்களையே, இடுவார் - போடுவார்கள், வேதிகை அனைத் தும் - திண்ணைகளிலெல்லாமும், மறை ஆகம விளம்பே - வேதாகமாத்யயநங்களே யாகும், நீள் - விஸ்தாரமான, நிலம் யாவும் - நிலங்களி லெல்லாமும், நீதிதரு - சன்மார்க் கத்திற்குரிய, முத்தம் - முத்துக்களும், நிதி - நவமணிகளும் (நிறைந்திருப்பனவாகும்), ஆதி - பழமையாகிய, நகரப்பெருமை - ஸ்தலத்தின்மஹிமையை, அளவு உரைப்பார் - அளவுபடுத்திச் சொல்லவல்லவர், யார் - யார், எ - று.

(பொ - ரை.) பரிசுத்தமான தெருக்களெவ்விடங்களிலும் மிக்க கோலங்களையே போடுவார்கள், திண்ணைகளிலெல்லாமும் வேதாகமாத்யயநங்களேயாகும், விஸ்தாரமான நிலங்களிலெல்லாமும் சன்மார்க்கத்திற்குரிய முத்துக்களும் நவமணிகளும் நிறைந்திருப் பனவாகும், ஆதலால் பழமையாகிய ஸ்தலத்தின்மஹிமையை யளவுபடுத்திச் சொல்ல வல்லவர் யார்?

(வி - ரை.) முத்தம், நிதியென்றவற்றிற்றில் எண்ணும்மைகள் தொக்கன. யார் என்னும் வினா இல்லை யென்னும் பொருட்டாலால் எதிர்மறை, (௩௬)

பொய்யர்கலர் வீணர்மத போதரப காரர்
வெய்யவெடி சொல்லர்சிறு புல்லரறி வில்லோர்
துய்யநெறி யில்லரொடு தூடணர்க ளானோ
ரையமற வப்பதியி லாருமிலை யாகும்.

(ப - ரை.) பொய்யர் - பொய்பேசுபவர், கலர் - சண்டாளர், வீணர் - பயனற்றவர், மதபோதர் - பிறசமயபோதகர், அபகாரர் - நன்றிகெட்டவர், வெய்ய - கொடிய, வெடி சொல்லர் - கடுஞ்சொல்லை யுடையவர், சிறுபுல்லர் - மஹாவற்பர், அறிவு இல்லோர் - ஞானமில்லாதவர், துய்யநெறி - சன்மார்க்கம், இல்லரொடு - இல்லாதவருடன், தூட ணர்கள் - நிந்தகர்கள், ஆனோர் - ஆகிய இவர்கள், அ - அந்த, பதியில் - கூடலஸங்கமே ஶ்வரத்தில், ஐயம் அற - ஸந்தேஹமில்லாமல், ஆரும் - யாரும், இல்லையாகும் - கிடையா தாகும், எ - று.

(பொ - ரை.) பொய்பேசுபவர், சண்டாளர், பயனற்றவர், பிறசமயபோதகர், நன்றிகெட்டவர், கொடிய கடுஞ்சொல்லையுடையவர், மஹாவற்பர், ஞானமில்லாதவர், சன்மார்க்கமில்லாதவருடன் நிந்தகர்களாகிய இவர்கள் அந்தக் கூடலஸங்கமேஶ்வரத்தில் ஸந்தேஹமில்லாமல் யாரும் கிடையாதாகும்.

(வி - ரை.) தூடணர் - தூஷகர் என்னும் வடசொற்றிரிபு. (௩௭)

அங்கண்வச வேசரனை கின்றமை யறிந்தே
சங்கரன தப்பதி தருக்குதவ ரெல்லா
நங்கடுய ரிங்கறந டந்ததரி தென்றூர்
துங்கநகர் வாழைகொடி தோரணநி ரைத்தார்.

(ப - ரை.) அங்கண் - அந்தக் கூடலஸங்கமேஸ்வரத்திற்கு, வசவேசர் - வசவதேவர், அணைகின்றமை - எழுந்தருளிவருவதை, அறிந்து - தெரிந்து, சங்கரனது - சிவபெருமானுடைய, அ - அந்த, பதி - க்ஷேத்ரத்தில், தருக்கு - சிவபக்தியில் இறுமாந்திருக்கின்ற, தவர் எல்லாம் - வீரமாஹேஸ்வரர்களெல்லாரும், நங்கள் - எங்களுடைய, துயர் - துன்பம், இங்கு - இவ்விடத்து, அற - முழுதும், நடந்தது - நீங்கினது, அரிது - அருமையான கார்யமாகும், என்றார் - என்றுசொல்லி, துங்கம் - பரிசுத்தமாகிய, நகர் - அந்த க்ஷேத்ரமுழுதும், வாழை - வாழைகளையும், கொடி - கொடிகளையும், தோரணம் - தோரணங்களையும், நிரைத்தார் - வரிசையாய்க் கட்டினார்கள், எ - று.

(பொ - ரை.) அந்தக்கூடலஸங்கமேஸ்வரத்திற்கு வசவதேவர் எழுந்தருளிவருவதைத் தெரிந்து சிவபெருமானுடைய அந்த க்ஷேத்ரத்தில் சிவபக்தியிலிறுமாந்திருக்கின்ற வீரமாஹேஸ்வரர்களெல்லாரும் எங்களுடைய துன்பம் இவ்விடத்து முழுதும் நீங்கினது அருமையானகார்ய மாகுமென்று சொல்லிப் பரிசுத்தமாகிய அந்த க்ஷேத்ரமுழுதும் வாழைகளையும் கொடிகளையும் தோரணங்களையும் வரிசையாகக் கட்டினார்கள்.

(வி - ரை.) வாழை, கொடி, தோரணம் என்பவற்றிற்றில் எண்ணும்மைகள் தொக்கன. நிரைத்தார்-நிரையென்னும் பெயரடியாகப் பிறந்தவினை. என்றார் - முற்றெச்சம்.

வந்துநக ரெய்துவச வேசரெதிர் சென்றே
யெந்தமிடர் தீரவரு வீர்சரண மென்றார்
சிந்தைமகி ழும்படி திருந்துதுதி செய்தார்
நந்திக ளவர்க்குற நயந்துசர ணென்றே.

(ப - ரை.) நகர் - அந்த க்ஷேத்ரத்திற்கு, வந்து எய்து - எழுந்தருளி வருகின்ற, வசவேசர் - வசவதேவரை, எதிர்சென்று - எதிர்கொண்டு, எம்தம் - எங்களுடைய, இடர் - துயரம், தீர - ஒழிய, வருவீர் - எழுந்தருளக்கடவீர், சரணம் - சரணார்த்தி, என்றார் - என்று சொல்லி, சிந்தை மகிழும்படி - மனமகிழும்படி, திருந்து - பூர்ணமாக, துதிசெய்தார் - துதித்தார்கள், நந்திகள் - வசவேசரும், அவர்க்கு - அந்த வீரமாஹேஸ்வரர்களுக்கு, உற நயந்து - அதிக வணக்கத்துடன், சரண் என்றே - சரணார்த்தி யென்று உத்தரஞ் சொல்லியருளி, எ - று.

(பொ-ரை.) அந்த க்ஷேத்ரத்திற்கு எழுந்தருளிவருகின்ற வசவதேவரை எதிர்கொண்டு எங்களுடைய துயரமொழிய வெழுந்தருளக்கடவீர், சரணார்த்தியென்று சொல்லி, மனமகிழும்படிப் பூர்ணமாகத் துதித்தார்கள், வசவேசரும் அந்த வீரமாஹேஸ்வரர்களுக்கு அதிக வணக்கத்துடன் சரணார்த்தியென் றுத்தரஞ்சொல்லியருளி.

(வி - ரை.) என்றார் - முற்றெச்சம், என்று - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த கால வினையெச்சம். எந்தம் என்பதில் தம் - சாரியை. (௩௧)

அன்னநக ரந்தனை யடிக்கடி பணிந்தே
மன்னுதிரு வீதியை வலங்கொடு வணங்காச்
சொன்னகிரி யன்னசிக ரந்தொழுதி றைஞ்சிக்
கொன்னனையு மெந்தையுறை கோயிலுறு போதில்.

(ப - ரை.) அ - அந்த, நகரந்தனை - க்ஷேத்ரத்தை, அடிக்கடி - பலகாலும், பணிந்து - வணங்கி, மன்னு - நிலைபெற்ற, திருவீதியை - திருவீதியை, வலங்கொடு - ப்ரதக்ஷணஞ்செய்து, வணங்கா - வணங்கி, சொன்னகிரி அன்ன - பொன்மலைபோன்ற, சிகரம் - சிகரத்தை, தொழுது - பணிந்து, இறைஞ்சி - வணங்கி, கொன் அனையும் - பெருமைபொருந்திய, எந்தை - எமது பிதாவாகிய சிவபெருமான், உறை - வீற்றிருக்கின்ற, கோயில் - திருக்கோயிலில், உறு போதில் - பிரவேசிக்கின்ற காலத்தில், எ - று.

(பொ - ரை.) அந்த க்ஷேத்ரத்தைப் பலகாலும் வணங்கி, நிலைபெற்ற திருவீதியை ப்ரதக்ஷணஞ்செய்து வணங்கி, பொன்மலைபோன்ற சிகரத்தைப் பணிந்து வணங்கி, பெருமைபொருந்திய எமது தந்தையாகிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற திருக்கோயிலிற் பிரவேசிக்கின்ற காலத்தில்.

(வி - ரை.) நகரந்தனை யென்பதில் தன் - சாரியை. வணங்கா - செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். சொன்னம் - ஸ்வர்ணம் என்னும் வடசொற்றிரிபு. எந்தை - எம் தந்தை யென்பதன் மரூஉ. பொன்மலை - மஹாமேருபர்வதம். (சு0)

மைந்தர்வரு கின்றமை மகிழ்ந்துமக தேவர்
முந்தைவரு தேசிக முகுர்த்தமது கொண்டே
யந்தவச வேசர்விழி யாரவெதிர் நின்றார்
வந்துகுரு தக்கணை தனைக்கசிவில் வைத்தார்.

(ப - ரை.) மைந்தர் - தமது புதல்வராகிய வசவேசர், வருகின்றமை - வருதலுக்கு, மகதேவர் - மஹாதேவராகிய கூடலஸங்கமேஶ்வரர், மகிழ்ந்து - சந்தோஷித்து, முந்தை வரு - பழமையாக எடுத்துவந்த, தேசிக முகுர்த்தம்கொண்டு - ஆசாரிய திருவுருக் கொண்டு, அந்த - (அக்காலத்தில் லிங்கதாரணஞ் செய்தருளப்பெற்ற) அந்த, வசவேசர் - வசவேசரது, விழி ஆர - கண்களிறைய, எதிர் நின்றார் - பிரசன்னமாயினர், வந்து - (அப்போது வசவதேவரும் அவர் சந்நிதானத்தை) அடைந்து, குருதக்கணை தன்னை - குரு காணிக்கையை, கசிவில் - மனவுருக்கத்தோடு, வைத்தார் - சமர்ப்பித்தனர், எ - று.

(பொ - ரை.) தமது புதல்வராகிய வசவதேவர் வருதலுக்கு மஹாதேவராகிய கூடலஸங்கமேஶ்வரர் சந்தோஷித்துத் தாம் பழமையாக வெடுத்துவந்த ஆசாரியத்திருவுருக்கொண்டு அக்காலத்தில் லிங்கதாரணஞ் செய்தருளப்பெற்ற அந்த வசவேசரது கண்களிறைய பிரசன்னமாயினர், அப்போது வசவதேவரும் அவர் சந்நிதானத்தை யடைந்து குருகாணிக்கையை மனவுருக்கத்தோடு சமர்ப்பித்தனர்.

(வி - ரை.) தக்கணை - தக்ஷிணை யென்னும் வடசொற்றிரிபு, மைந்தர் - குருபுத்ரர். முகுர்த்தமது] என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. மக - மஹா என்னும் வடசொற்றிரிபு. தக்கணைதனை என்பதில் தன் - சாரியை. (சுக)

மற்றுமடி யற்றமர மென்னமன நைந்தே
பற்றுமிகு நண்பொடு பணிந்துதரை நின்று
தெற்றெனவெ ழாரையரு டேசிகர்க ரத்தா
லுற்றபெரு நண்பினுத லொற்றியெழு கென்றார்.

(ப - ரை.) மற்றும் - மேலும், அடி அற்ற மரம் என்ன - அடியற்ற மரம்போல, மனம் நைந்து - மனமுருகி, பற்றுமிகும் - பக்திமிகுந்த, நண்பொடு - அன்புடன், பணிந்து - சாஷ்டாங்கமாய் வணங்கி, தரைநின்று - பூமியினின்றும், தெற்றென - திடமென்று, எழாரை - எழாதவராகிய வசவதேவரை, அருள் - க்ருபாமூர்த்தியாகிய, தேசிகர் - ஆசாரியர், கரத்தால் - தமது திருக்கரங்களால், உற்ற - பொருந்திய, பெருநண்பின் - மிகுந்த அன்புடன், நுதல் ஒற்றி - நெற்றியைத்தொட்டு, எழுக என்றார் - எழுந்திருக்கக்கடவையென் றருளிச்செய்தார், எ - று.

(பொ - ரை.) மேலும் அடியற்றமரம்போல மனமுருகிப் பக்திமிகுந்த அன்புடன் சாஷ்டாங்கமாய் வணங்கிப் பூமியினின்றுந் திடமென்றெழாதவராகிய வசவதேவரை க்ருபாமூர்த்தியாகிய ஆசாரியர் தமது திருக்கரங்களால் பொருந்திய மிகுந்தவன்புடன் நெற்றியைத்தொட்டு எழுந்திருக்கக்கடவையென் றருளிச்செய்தார்.

(வி - ரை.) நுதலொற்றி என்பது உடலொற்றி என்னும் பாடம். (சுஉ)

எழுந்துவிழி நீர்விழ விரண்டுகர முந்தஞ்
செழுஞ்சிர மிசைக்குவிய வேதெளி யுமன்பி
னழுந்தினர் மகிழ்ச்சியெனு மாவிதரு நீராற்
றொழுங்குரு மலர்க்கழல் விளக்கினர் துதித்தார்.

(ப-ரை.) எழுந்து - தரையினின்று மேலே யெழுந்திருந்து, விழி - கண்களில், நீர் - நீர், விழ - சொரிய, இரண்டு கரமும் - இரண்டு திருக்கரங்களும், தம் - தமது, செழும் - அழகிய, சிரமிசை - திருமுடியின்மீது, குவிய - கூம்ப, தெளியும் - தெளிந்த, அன்பின் - அன்பில், அழுந்தினர் - முழுகி, மகிழ்ச்சி என்னும் - பரமாநந்தமென்கின்ற, ஆவி - தடாகம், தரு - தந்த, நீரால் - நீரினால், தொழும் - வணங்குதற்குரிய, குரு - ஆசாரியரது, மலர் - தாமரை மலர்போன்ற, கழல் - திருவடிகளை, விளக்கினர் - கழுவி, துதித்தார் - தோத்திரஞ்செய்தனர், எ - று.

(பொ-ரை.) தரையினின்று மேலே யெழுந்திருந்து, கண்களில் நீர்சொரிய, இரண்டு திருக்கரங்களும் தமது அழகிய திருமுடியின்மீது கூம்ப, அன்பில் முழுகி, பரமாநந்தமென்கின்ற தடாகந்தந்த நீரினால் வணங்குதற்குரிய ஆசாரியரது தாமரைமலர்போன்ற திருவடிகளைக் கழுவித் தோத்திரஞ்செய்தனர்.

(வி-ரை.) அழுந்தினர், விளக்கினர் - முற்றெச்சங்கள். கழல் என மேல்வருதலால் மலர் தாமரைமலரைக்குறித்தது. துதி - ஸ்துதி என்னும் வடசொற்றிரிபு. (ருச)

நேசமுட னேயருகி ருத்திநிக ரில்லாத்
தேசவுப தேசவகை செவ்வியின ளிப்பா
ராசிலெதிர் காலமு மருந்தவரை நம்போற்
பூசனைசெய் வாய்நினது புந்திமகி ழன்பால்.

(ப-ரை.) நேசமுடன் - அன்புடன், அருகு - சமீபத்தில், இருத்தி - உட்காரச்செய்து, நிகர் இல்லா - ஒப்பற்ற, தேசம் - குருகட்டளையாகிய, உபதேசவகை - உபதேஶக்ரமங்களை (பலவிதமாக), செவ்வியின் - செவ்வையாக, அளிப்பார் - அநுக்ரகஞ்செய்பவராயினர் (எவ்வாறெனின்), ஆசு இல் - குறைவற்ற, எதிர்காலமும் - வருங்காலத்திலும், அரு - மேன்மையாகிய, தவரை - ஜங்கமமூர்த்திகளை, நம்போல் - எம்மைப்போலவே, நினது - உனது, புந்திமகிழ் - மனமகிழ்ச்சியுடைய, அன்பால் - நேசத்தால், பூசனைசெய்வாய் - பூஜைசெய்யக்கடவை, எ - று.

(பொ-ரை.) அன்புடன் சமீபத்தி லுட்காரச்செய்து, ஒப்பற்ற குருகட்டளையாகிய உபதேஶக்ரமங்களைப் பலவிதமாகச் செவ்வையாக அநுக்ரகஞ்செய்பவராயினர், எவ்வாறெனின்:—குறைவற்ற வருங்காலத்திலும் மேன்மையாகிய ஜங்கமமூர்த்திகளை எம்மைப் போலவே உனது மனமகிழ்ச்சியுடைய நேசத்தால் பூஜைசெய்யக்கடவை.

(வி-ரை.) தேச வுபதேசவகை என்றது - வேதாகம புராணார்த்த விதிநிஷேத யுக்திகளை. பரசிவத்துக்கும் ஜங்கமத்துக்கும் யாதொரு வேறுபாடில்லாத க்ரமத்தை யுபதேசிப்பவராதலின் அருந்தவரை நம்போற் பூசனைசெய்வாயென்றார். சிவபெருமானே குருமூர்த்தமாக வந்து, லிங்கதாரணஞ்செய்து, ஜங்கம வடிவுதாங்கி யாட்கொள்பவனாதலால் குருலிங்கஜங்கமங்கள் அப்பெருமானின் அவர்களுக்குரித்தாகிய சகலவிதமான பூஜையும் ஒருபடித்தாம். (சுச)

அத்தவர்க டம்மைநர ராகுமென வுன்னு
துத்தமநி ருத்தனென வுன்னியவர் செய்யு
மெய்த்தவமு னைத்தினையு மிக்கநல மென்பாய்
குத்திவையி னஞ்சலிசெய் கூறினிய சொல்லே.

(ப - ரை.) உத்தம - உத்தமனான வசவண்ணனே, அ - அந்த, தவர்கள் தம்மை - ஜங்கமமூர்த்திகளை, நரர் ஆகும் என்ன - சாமானியராகிய மனிதராவாரென்று, உன்னாது - பாவியாமல், நிருத்தன் என்ன - சிவபெருமானே யென்று, உன்னி - பாவித்து, அவர் - அவர்கள், செய்யும் - இயற்றுகிற, மெய் - ஸத்யமார்க்கத்தையுடைய, தவம் அனைத்தினை யும் - விரதமுழுதும், மிக்க - மிகவும், நலம் என்பாய் - நன்மையாகிய காரியமென்றே கொள்ளக்கடவை, குத்தின் - (அவர்கள் உன்னை) அடித்தாலும், வையின் - திட்டினாலும், அஞ்சலிசெய் - கும்பிடக்கடவை, இனிய சொல் கூறு - நல்வார்த்தை சொல்லக்கடவை, எ - று.

(பொ - ரை.) உத்தமனான வசவண்ணனே! அந்த ஜங்கமமூர்த்திகளைச் சாமானிய ராகிய மனிதராவாரென்று பாவியாமல் மேன்மையாகிய சிவபெருமானே யென்று பாவித்து அவர்கள் இயற்றுகிற ஸத்யமார்க்கமாகிய விரதமுழுதும் மிகவும் நன்மையாகிய காரியமென்றே கொள்ளக்கடவை, அவர்கள் உன்னை யடித்தாலும் திட்டினாலும் கும்பிடக் கடவை, நல்வார்த்தை சொல்லக்கடவை.

(வி - ரை.) நிருத்தம் - நடனம். நிருத்தன் - நடனஞ்செய்பவன். உத்தம - அண்மை விளி. தவர்கடம்மை என்பதில் தம் - சாரியை. உத்தமம் - சிரேஷ்டமாகிய எனினுமாம்.

மேதகுத வத்தர்குல மேன்மைசிறி தென்றங்
கோதுதன் மனத்தினிடை யுன்னுத லொழிப்பாய்
போதவுட லுக்கிறுதி புக்குகினு நெஞ்சி
னீதிதரு நின்விரத நெக்குறவி டாதே.

(ப - ரை.) மேதகு - மேன்மைபொருந்திய, தவத்தர் - ஜங்கமமூர்த்திகளுடைய, குலம் - ஜாதியானது, மேன்மை என்று - உயர்ச்சி யென்றும், சிறிது - தாழ்ச்சி யென்றும், அங்கு - அவ்விடத்து, ஓதுதல் - வாக்காற்சொல்லுதலும், மனத்திடை - மனத்தில், உன்னுதல் - நினைத்தலும், ஒழிப்பாய் - ஒழித்துவிடக்கடவை, போத - மிகவும், உடலுக்கு - உடம்புக்கு, இறுதி - மரணகாலம், புக்குகினும் - நேரிட்டாலும், நெஞ்சில் - மனத்தில், நீதிதரும் - சன்மார்க்கத்தை யடைதற்குரிய, நின் - உன், விரதம் - நிஷ்டையை, நெக்கு உற - நெகிழ்ந்துபோக, விடாதே - கைவிடாம லிருக்கக்கடவை, எ - று.

(பொ - ரை.) மேன்மைபொருந்திய ஜங்கமமூர்த்திகளுடைய ஜாதியானது உயர்ச்சி யென்றும் தாழ்ச்சியென்றும் அவ்விடத்து வாக்காற்சொல்லுதலும் மனத்தால் நினைத் தலும் ஒழித்துவிடக்கடவை, மிகவும் உடம்புக்கு மரணகாலம் நேரிட்டாலும் மனத்தில் சன்மார்க்கத்தை யடைதற்குரிய உன் நிஷ்டையை நெகிழ்ந்துபோகக் கைவிடாமலிருக் கக்கடவை. (௬௯)

வண்டவரை நிந்தனைசெய் வாயினர்சி ரத்தைத்
துண்டியர னூல்விதிது லங்குலகில் வைப்பாய்
மண்டுசிவ பத்தியினில் வஞ்சனையொ ழிப்பா
யுண்டிதுவ தில்லையென வுன்னிநசை கொள்ளேல்.

(ப - ரை.) வள் - மாட்சிமைபொருந்திய, தவரை - ஜங்கமமூர்த்திகளை, நிந்தனைசெய் - தூஷிக்கின்ற, வாயினர் - வாயினையுடைய தீயவரது, சிரத்தை - தலையை, துண்டி - துணித்துவிடக்கடவை, அரன் நூல்விதி - சிவாகமவிதியை, துலங்கு - விளங்குகின்ற, உலகில் - உலகத்தில், வைப்பாய் - நிலைபெறச்செய்யக்கடவை, மண்டு - மிகுந்த, சிவபத்தியினில் - சிவபக்தியில், வஞ்சனை - குறைவு செய்தலை, ஒழிப்பாய் - ஒழித்துவிடக்கடவை, இது உண்டு - இப்பொருளுண்டாயிருக்கிறது, அது இல்லை - அப்பொருளுண்டாயிருக்கவில்லை, என்ன - என்று, உன்னி - நினைத்து, நசைகொள்ளேல் - ஆசைப்படாம லிருக்கக்கடவை, எ - று.

(போ-ரை.) மாட்சிமை பொருந்திய ஜங்கமமூர்த்திகளைத் தூஷிக்கிற வாயினையுடைய தீயவரது தலையைத் துணித்துவிடக்கடவை, சிவாகமவிதியை விளங்குகின்ற உலகத்தில் நிலைபெறச்செய்யக்கடவை, மிகுந்த சிவபக்தியில் குறைவுசெய்தலை யொழித்துவிடக்கடவை, இப்பொருளுண்டாயிருக்கிறது அப்பொருளுண்டாயிருக்கவில்லை யென்று நினைத்து ஆசைப்படாமலிருக்கக்கடவை. (சஎ)

அன்னியர்ம டந்தையரை யன்பினினை யாதே
யன்னியர்த னத்துமன மற்பமு முறாதே
யன்னியர்சு கத்துமன மாதிகள்வி டாதே
யன்னியரை நிந்தனை யயர்ந்துமுரை யாதே.

(ப-ரை.) அன்னியர் - பிறர், மடந்தையரை - மனைவியரை, அன்பின் - (காமநுகர்ச்சியின் பொருட்டு) ஆசையோடு, நினையாதே - கருதாமலிருக்கக்கடவை, அன்னியர் - பிறர், தனத்து - பொருளில், அற்பமும் - சிறிதும், மனம் உறாதே - சிந்தைவைக்காமலிருக்கக்கடவை, அன்னியர் - பிறர், சுகத்து - இன்பங்களில், மனம் ஆதிகள் - மனமுதலியவற்றை, விடாதே - செலுத்தாமலிருக்கக்கடவை, அன்னியரை - பிறரை, அயர்ந்தும் - மறந்தும், நிந்தனை உரையாதே - தூஷிக்காமலிருக்கக்கடவை, எ - று.

(போ - ரை.) பிறர்மனைவியரைக் காமநுகர்ச்சியின்பொருட்டு ஆசையோடு கருதாமலிருக்கக்கடவை, பிறர்பொருளில் சிறிதும் சிந்தைவைக்காமலிருக்கக்கடவை, பிறர் இன்பங்களில் மனமுதலியவற்றைச் செலுத்தாமலிருக்கக்கடவை, பிறரை மறந்தும் தூஷிக்காமலிருக்கக்கடவை.

(வி - ரை.) மனமாதிகள் விடுதலாவது மனத்தால் விரும்புதலும், வாக்கால் பேசுதலும், காயத்தால் அநுபவித்தலும். மறந்தும் - அபுத்திபூர்வகமாயெனினுமாம். (சஅ)

பத்தசன மெய்திடி லெழுந்துபரி வாலே
யத்தமிக வஞ்சலிசெய் தன்பொடு துதிப்பா
யித்தரையி னின்பரிவெ னுந்தமனி யத்திற்
கொத்தவுரை கல்லெமது ருச்செறித வத்தோர்.

(ப - ரை.) பத்தசனம் - பக்தர்கள், எய்திடில் - (உன்னிடத்தில் எழுந்தருளி) வந்தால், பரிவால் - அன்புடன், எழுந்து - (இருக்கின்ற ஸ்தானத்தை விட்டு) எழுந்து, அத்தம் - கைகளால், மிக - மிகவும், அஞ்சலிசெய்து - கும்பிட்டு, அன்பொடு - நேசத்தோடு, துதிப்பாய் - துதிக்கக்கடவை, இத்தரையில் - இவ்வுலகத்தில், நின் - உன், பரிவு - அன்பு, என்னும் - என்கின்ற, தமனியத்திற்கு - பொன்னுக்கு, ஒத்த - தகுந்த, உரைகல் - உரைகல்லாவது, எமது - நமது, உரு செறி - வேடத்தையுடைய, தவத்தோர் - ஜங்கமமூர்த்திகளே, எ - று.

(போ - ரை.) பக்தர்கள் உன்னிடத்திலெழுந்தருளி வந்தால் அன்புடன் இருக்கின்ற ஸ்தானத்தை விட்டெழுந்து, கைகளால் மிகவும் கும்பிட்டு, நேசத்தோடு துதிக்கக்கடவை, இவ்வுலகத்தில் உன் அன்பென்கின்ற பொன்னுக்குத்தகுந்த உரைகல்லாவது நமது வேடத்தையுடைய ஜங்கமமூர்த்திகளே.

(வி - ரை.) உரைகல் - மாற்றறிகல். அத்தம் - ஹஸ்தம் என்னும் வடசொற்றிரிபு.

அப்பொழுது நின்னினைவி னன்புநிலை குன்றா
தொப்படவு ன்மனமு றும்பிரிய மெல்லாந்
தப்பறவ ளித்துமிது சத்தியந மைத்தா
னெப்பொழுது நீபிரிவி லாயஃதி யாமும்.

**(ப - ரை.)** அப்பொழுது - அக்காலத்திற்றானே, நின் - உன், நினைவின் - மனத்தில், அன்புநிலை - பக்திமார்க்கம், குன்றாது - கெடமாட்டாது, ஒப்ப - (ஆதலால்) நல்லவழியில், நட - நடக்கக்கடவை, உன் - உன், மனம் உறும் பிரியம் எல்லாம் - மனோபீஷ்ட மெல்லா வற்றையும், தப்பு அற - தவறாமல், அளித்தும் - அநுக்ரஹஞ்செய்வோம், இது - இந்த வார்த்தையானது, சத்தியம் - உண்மையேயாகும், நம்மை - எம்மையே, எப்பொழுதும் - எக்காலத்தும், நீ - நீ, பிரிவு இல்லாய் - பிரியாதிருக்கக்கடவை, யாமும் - நாமும், அஃது - அவ்வாறே உன்னையேபிரியாதிருப்போம், எ - று.

**(போ - ரை.)** அக்காலத்திற்றானே உன் மனத்தில் பக்திமார்க்கம் கெடமாட்டாது, ஆதலால் நல்லவழியில் நடக்கக்கடவை, உன் மனோபீஷ்டமெல்லாவற்றையும் தவறாமல் அநுக்ரஹஞ்செய்வோம், இந்த வார்த்தையானது உண்மையேயாகும், எம்மையே யெக்காலத்தும் நீ பிரியாதிருக்கக்கடவை, நாமும் அவ்வாறே உன்னையே பிரியாதிருப்போம்.

**(வி - ரை.)** நம்மைத்தான் என்பதில் தான் - சாரியை. சத்தியம் - ஸத்யம் என்னும் வடசொற்றிரிபு. (௩௦)

என்றினிமை சேர்மதுர வாய்மைகளி யம்பா
நன்றிருக ரத்துடல நண்ணிடவ ணைத்தே
நின்றுபணி நந்தியென நீடுபணி வார்முன்
முன்றனது மேனிகொடு முத்தனுமி ருந்தான்.

**(ப - ரை.)** என்று - என்றிவ்வாறு, இனிமை சேர் - இன்பமுற்ற, மதுரம் - ருசிகரமான, வாய்மைகள் - ப்ரமாணங்களை, இயம்பா - போதித்து, நன்று - நன்றாக, இரு - இரண்டு, கரத்து - திருக்கரங்களால், உடலம் நண்ணிட அணைத்து - ஆலிங்கனஞ்செய்து, நந்தி - வசவனே, நின்று பணி - நீ நின்று வணங்கு, என - என்று கட்டளையிட, நீடு பணிவார் முன் - அவ்வாறு ஸாஷ்டாங்கமாய் வணங்குபவராகிய வசவதேவர்க்கு எதிரே, முத்தனும் - பரமாத்மாவாகிய ஸ்ரீஸத்குருவும், முன் - முன்னேகொண்டிருந்த, தனது - தனது, மேனி கொடு இருந்தான் - சிவலிங்கருபங்கொண்டிருந்தனன், எ - று.

**(போ - ரை.)** என்றிவ்வாறு இன்பமுற்ற ருசிகரமான ப்ரமாணங்களைப் போதித்து நன்றாக இரண்டு திருக்கரங்களால் ஆலிங்கனஞ்செய்து, வசவனே! நீ நின்று வணங்கு என்று கட்டளையிட, அவ்வாறு ஸாஷ்டாங்கமாய் வணங்குபவராகிய வசவதேவர்க்கு எதிரே பரமாத்மாவாகிய ஸ்ரீஸத்குருவும் முன்னேகொண்டிருந்த தனது சிவலிங்கருபங் கொண்டிருந்தனன்.

**(வி - ரை.)** நந்தி - அண்மைவிளி. (௩௧)

ஐயர்சிவ லிங்கமய மானதை யறிந்தே
வெய்யவர லாதவச வேசுரர்வி ருப்பா
லுய்யவுப தேசவகை யுண்மையை யுணர்ந்தார்
செய்யதிரு மேனியொடு சிக்குமுளா ரானார்.

**(ப - ரை.)** ஐயர் - ஸ்ரீ ஸத்குருவானவர், சிவலிங்கமயம் ஆனதை - சிவலிங்கருபமாயிருப்பதை, அறிந்து - தெரிந்து, வெய்யவர் அல்லாத - சாந்தமூர்த்தியாகிய, வசவேசுரர் - வசவதேவர், விருப்பால் - விருப்பத்தால், உய்ய - உஜ்ஜீவிக்கும்பொருட்டு (ஸ்ரீ ஸத்குரு செய்தருளிய), உபதேசவகை - உபதேசவிதத்தின், உண்மையை - தத்வத்தை, உணர்ந்தார் - அறிந்து, செய்ய - தேஜஸுள்ள, திருமேனியொடு - திருவுருவத்துடன், சிக்கும் - சிவபெருமான் அகப்பட்டும், உளர் ஆனார் - உள்ளவராயினர்.

(பொ - ரை.) ஸ்ரீஸத்குருவானவர் சிவலிங்கரூபமாயிருப்பதைத் தெரிந்து, சாந்தமூர்த்தியாகிய வசவதேவர் விருப்பத்தால் உஜ்ஜீவிக்கும்பொருட்டு ஸ்ரீஸத்குரு செய்தருளிய உபதேச விதத்தின் தத்வத்தை யறிந்து தேஜஸுள்ள திருவுருவத்துடன் சிவபெருமான் அகப்பட்டு முள்ளவராயினர்.

(வி - ரை.) உணர்ந்தார் - முற்றெச்சம். (ருஉ)

உற்றசிவ பத்தர்முனி வோருளம கிழ்ந்தா
ரிற்றைநல மேதவமெ மக்குவச வேசர்
நெற்றிவிழி யாரெனநி கழ்த்தியெதிர் நின்றார்
கொற்றவிடை யாரைவிழி கொண்டுதரி சித்தார்.

(ப - ரை.) உற்ற - அவ்விடத்திருந்த, சிவபத்தர் - சிவபக்தர்களும், முனிவோர் - ஜங்கமமூர்த்திகளும், உள்ளம் மகிழ்ந்தார் - மனமகிழ்ந்து, இற்றை - இன்றுண்டாகிய, நலமே - நன்மையே, எமக்கு - எமக்கு, தவம் - தவப்பயனுகும், வசவேசர் - வசவதேவரே, நெற்றிவிழியார் - சிவபெருமானுகும், என்ன - என்று, நிகழ்த்தி - வாழ்த்தி, எதிர் நின்றார் - எதிரே நின்று, கொற்றம் விடையாரை - சிவபெருமானை, விழிகொண்டு - தமது கண்களால், தரிசித்தார் - தரிசனமுஞ்செய்தார்கள்.

(பொ - ரை.) அவ்விடத்திருந்த சிவபக்தர்களும் ஜங்கமமூர்த்திகளும் மனமகிழ்ந்து இன்றுண்டாகிய நன்மையே எமக்குத்தவப்பயனுகும், வசவதேவரே சிவபெருமானுகுமென்று வாழ்த்தி எதிரே நின்று, சிவபெருமானைத் தமது கண்களால் தரிசனமுஞ் செய்தார்கள்.

(வி - ரை.) உளமகிழ்ந்தார், எதிர் நின்றார் - முற்றெச்சங்கள். நெற்றிவிழியார் - நெற்றிக்கண்ணர். கொற்றம் - வெற்றியையுடைய. விடையார் - வ்ருஷபவாகன முடையவர். (ருங)

இந்தவச வேசரிறை வற்கிணைய ராமா
மந்தவ வுருக்கொடரு குற்றருளு ரைத்தே
புந்திமகி ழும்படி புறந்தடவி மற்றுந்
தந்தரும மெய்யொடு தழீஇயினர் தருக்கால்.

(ப - ரை.) இந்த - மஹிமையுள்ள இந்த, வசவேசர் - வசவதேவர், இறைவற்கு - சிவபெருமானுக்கு, இணையர் ஆம் ஆம் - சமானரே யாகுமாகும், அம் - அழகிய, தவவுருக்கொடு - ஜங்கமவடிவம்பூண்டு, அருகு உற்று - சமீபத்தில் எழுந்தருளியும், அருள் உரைத்து - உபதேசஞ்செய்தும், புந்திமகிழும்படி - மனமகிழும்படி, புறந்தடவி - முதுகைத்தடவியும், மற்றும் - மேலும், தம் - தமது, தருமமெய்யொடு - தர்மஸ்வரூபமாகிய திருமேனியோடு, தருக்கால் - களிப்புடன், தழீஇயினர் - ஆலிங்கனமுஞ் செய்தருளினர்.

(பொ - ரை.) மஹிமையுள்ள இந்த வசவதேவர் சிவபெருமானுக்குச் சமானரே யாகுமாகும், அழகிய ஜங்கம வடிவம் பூண்டுச் சமீபத்தி லெழுந்தருளியும், உபதேசஞ்செய்தும், மனமகிழும்படி முதுகைத்தடவியும், மேலும் தமது தர்மஸ்வரூபமாகிய திருமேனியோடு களிப்புடன் ஆலிங்கனமுஞ் செய்தருளினர்.

(வி - ரை.) சிவபிரானின் மிக்க இறைமையுடையாரின்மையின் அவரை இறைவரென்றே கூறினர். (ருச)

அண்ணலரு ளிப்படி யணைந்தவரி லென்பார்
மண்ணிலிவர் வந்தது மகாபுதுமை யென்பார்
நண்ணியெழு நந்துயர்ந சிக்கவல ரென்பா
ரெண்ணிவச வேசவென வெய்துநல மென்பார்.

(ப - ரை.) அண்ணல் அருள் - சிவாநுக்ரஹத்தை, இப்படி - இவ்வாறு, அணைந்தவர் - பெற்ற புண்யசீலர்கள், இல் என்பார் - இல்லையென்பார்கள், மண்ணில் - உலகத்தில், இவர் - இவ்வசவேசர், வந்தது - அவதரித்தது, மகாபுதுமை என்பார் - மஹா அத்புதமென் பார்கள், நண்ணி எழும் - முடுகிவருகின்ற, நம் - நமது, துயர் - துன்பத்தை, நசிக்க - ஒழிக்க, வல்லர் என்பார் - வல்லவரென்பார்கள், எண்ணி - சிந்தித்து, வசவேச என்ன - வசவேசவென்று ஒருகால் சொன்னமாத்திரத்தில், நலம் எய்தும் என்பார் - மோக்ஷமுண் டாகு மென்பார்கள், எ - று.

(பொ - ரை.) சிவாநுக்ரஹத்தை யிவ்வாறு பெற்ற புண்யசீலர்களில்லை யென்பார் கள், உலகத்தில் இவ்வசவேசர் அவதரித்தது மஹாவத்புத மென்பார்கள், முடுகிவரு கின்ற நமது துன்பத்தை யொழிக்க வல்லவரென்பார்கள், சிந்தித்து வசவேசவென்று ஒருகால் சொன்னமாத்திரத்தில் மோக்ஷமுண்டாகு மென்பார்கள்.

(வி - ரை.) அண்ணல் - பெருமையிற் சிறந்தோன். மண்ணில் வந்தமை யென்றமை யால் முன்னிருந்தது சிவலோகமென்றதாயிற்று. (ருரு)

மக்களொடு தந்தையர்கண் மாதரைவ தைத்து
மக்கினியி லுற்றுட லனற்கொளுவ நின்று
நக்கனருள் பெற்றனர்க ணந்திகளி தென்னோ
விக்கணம தேசிவனை யெய்துதவ மென்பார்.

(ப - ரை.) மக்களொடு - பிள்ளைகளையும், தந்தையர்கள் - தந்தையர்களையும், மாதரை - மாதர்களையும், வதைத்தும் - கொன்றும், அக்கினியில் உற்று - பஞ்சாக்கியினிடையே யிருந்து, உடல் - உடம்பை, அனல்கொளுவ - நெருப்புச்சுட்டெரிக்கும்படி, நின்றும் - சிறிதும் சலநமின்றி நின்றிருந்தும் தவஞ்செய்து, நக்கன் அருள் - (முற்காலத்தில்) சிவா நுக்ரஹத்தை, பெற்றனர்கள் - தொண்டர்கள் பெற்றார்கள், நந்திகள் - (ஆனால்) வசவேசர், இக்கணமதே - (இக்காலத்தில்) இந்தக்ஷணத்திற்றானே, சிவனை எய்து தவம் - சிவபெரு மானை யடைதற்குரிய தவம் செய்தது, இது என்னோ - இது யாதோ, என்பார் - என்று வியந்து சொல்லுவார்கள். எ - று.

(பொ - ரை.) பிள்ளைகளையும் தந்தையர்களையும் மாதர்களையும் கொன்றும் பஞ்சாக்கி யினிடையே யிருந்து உடம்மை நெருப்புச்சுட்டெரிக்கும்படி சிறிதும் சலநமின்றி நின் றிருந்தும் தவஞ்செய்து முற்காலத்தில் சிவாநுக்ரஹத்தைத் தொண்டர்கள் பெற்றார்கள், ஆனால் இக்காலத்தில் வசவேசர் இந்த க்ஷணத்திற்றானே சிவபெருமானை யடைதற்குரிய தவம் செய்தது, இது யாதோ ? என்று வியந்து சொல்லுவார்கள்.

(வி - ரை.) பஞ்சாக்கியாவது ஐந்துநெருப்பு:— அக்கினிகுண்டம் நான்கும் சூரியன் ஒன்றும் ஆக ஐந்து. அக்கினி - அக்நி என்னும் வடசொற்றிரிபு. நக்கன் - நக்நந் என்னும் வடசொற்றிரிபு. (ருசு)

ஆகமகி ழும்பொழு திலங்கண்வச வேசர்
மோகமோ டெழுந்துகுரு மூன்பணிதல் செய்தே
வாகனைய மண்டபம தொன்றினிடை வந்தார்
நாகபணி யற்கினிய நல்லரோ டிருந்தார்.

(ப - ரை.) ஆக - இவ்வாறாக, மகிழும்பொழுதில் - சந்தோஷிக்கும்போது, அங்கண் - அவ்விடத்து, வசவேசர் - வசவதேவர், மோகமோடு - அன்போடு, எழுந்து - எழுந்து, குரு முன் - ஸ்ரீஸத்குருவாகிய கூடலஸங்கமேஶ்வரர் சந்நிதானத்தில், பணிதல்செய்து - ஸாஷ்டாங்கமாக வணங்கி, வாகு அணையும் - அழகுபொருந்திய, மண்டபம் ஒன்றினிடை - ஒரு மண்டபத்தில், வந்தார் - சென்று, நாகபணியற்கு - சிவபெருமானுக்கு, இனிய - விருப்பமுள்ள, நல்லரோடு - அன்பர்களோடுகூடி, இருந்தார் - வீற்றிருந்தருளினர், எ-று.

(பொ - ரை.) இவ்வாறாகச் சந்தோஷிக்கும்போது, அவ்விடத்து வசவதேவர் அன்போடெழுந்து, ஸ்ரீஸத்குருவாகிய கூடலஸங்கமேஶ்வரர் சந்நிதானத்தில் ஸாஷ்டாங்கமாக வணங்கி, அழகுபொருந்திய வொருமண்டபத்தில் சென்று, சிவபெருமானுக்கு விருப்பமுள்ள அன்பர்களோடுகூடி வீற்றிருந்தருளினர்.

(வி - ரை.) மோகம் - மோஹம் என்னும் வடசொற்றிரிபு (பெருவிருப்பம்). பணிதல் செய்து - ஒருசொல். வந்தார் - முற்றெச்சம். நாகபணியற்கு - சர்ப்பாபரணர்க்கு. மண்டபமது என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. (௫௭)

அன்றுமக பூசைக ளமைத்தளவி லன்பாற்
சென்றுதிரி போதுமுயர் தேசிகர்ப தத்தே
துன்றியவி ருப்பொடு பணிந்துதுதி செய்தா
ரென்றுமிவ ணின்றகலொ ணாதெனவி ருந்தார்.

(ப - ரை.) அன்று - அன்றையத்தினம், மகபூசைகள் - மாஹேஶ்வர பூஜைகளை, அமைத்து - நியமித்து, அளவு இல் - எல்லையற்ற, அன்பால் - அன்பினால், சென்று - போய், திரிபோதும் - முப்பொழுதும், உயர் - மேன்மைபொருந்திய, தேசிகர்பதத்தே - ஸ்ரீஸத்குருவின் திருவடிகளிலேயே, துன்றிய விருப்பொடு - மிகுந்த விருப்பத்தோடு, பணிந்து - ஸாஷ்டாங்கமாய் வணங்கி, துதிசெய்தார் - தோத்திரஞ்செய்து, என்றும் - எக்காலத்தும், இவண் நின்று - இந்தஸ்தலத்தினின்றும், அகல் ஒணாது - நீங்கக்கூடாது, என இருந்தார் - என்கின்ற ஸங்கல்பத்தோடிருந்தனர், எ - று.

(பொ-ரை.) அன்றையத்தினம் மாஹேஶ்வர பூஜைகளை நியமித்து, எல்லையற்ற அன்பினால் போய், முப்பொழுதும் மேன்மைபொருந்திய ஸ்ரீஸத்குருவின் திருவடிகளிலேயே மிகுந்த விருப்பத்தோடு ஸாஷ்டாங்கமாய் வணங்கித் தோத்திரஞ்செய்து, எக்காலத்தும் இந்த ஸ்தலத்தினின்றும் நீங்கக்கூடாதென்கின்ற ஸங்கல்பத்தோடிருந்தனர்.

(வி - ரை.) முப்பொழுது - காலை, மாலை, உச்சி. துதிசெய்தார் - முற்றெச்சம். இந்த ஸ்தலத்துத் தேசிகர் வந்துபதேசித்தமையால் இந்த ஸ்தலத்தை நீங்கக்கூடாதென்றார். (௫௮)

உபதேசச்சருக்கம் - முற்றிற்று.



ஆக திருவிருத்தம் - ௨௦௮.



சிவமயம்.

# தண்டநாயகச்சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பெரியவரு ளோதசர ணார்த்தி பிரகிருதி பேதசர ணார்த்தி
புரிதரும நீதிசர ணார்த்தி புகலருமசாதசர ணார்த்தி
யரபரம போதசர ணார்த்தி யதிகவித கீதசர ணார்த்தி
வரிசைதரு பாதசர ணார்த்தி வசவகுரு நாதசர ணார்த்தி.

(ப - ரை.) பெரிய அருள் ஓத - திருவருட்கடலே, சரணார்த்தி - சரணார்த்தி, பிரகிருதிபேத - மூலப்ரக்ருதியை பிளந்தெறிந்தவனே, சரணார்த்தி - சரணார்த்தி, புரிதரும நீதி - புண்யமார்க்கத்தில் நடப்பவனே, சரணார்த்தி - சரணார்த்தி, புகல் அரு - சொல்லுதற்கரிய, அசாத - பிறவியில்லாதவனே, சரணார்த்தி - சரணார்த்தி, அர - சிவபெருமானே, பரமபோத - பரப்ரஹ்மஜ்ஞாநியே, சரணார்த்தி - சரணார்த்தி, அதிகவித கீத - பலவகைப்பட்ட சாமவேதகீதனே, சரணார்த்தி - சரணார்த்தி, வரிசை - சன்மார்க்கத்தை, தரு - அநுக்ரஹஞ்செய்தற்குரிய, பாத - திருவடிகளை யுடையவனே, சரணார்த்தி - சரணார்த்தி, வசவகுருநாத - வசவதேசிகேந்த்ரனே, சரணார்த்தி - சரணார்த்தி, எ - று.

(போ - ரை.) திருவருட்கடலே! சரணார்த்தி, மூலப்ரக்ருதியைப் பிளந்தெறிந்தவனே! சரணார்த்தி, புண்யமார்க்கத்தில் நடப்பவனே! சொல்லுதற்கரிய பிறவியில்லாதவனே! சரணார்த்தி, பரப்ரஹ்மஜ்ஞாநியே! சரணார்த்தி, பலவகைப்பட்ட சாமவேதகீதனே! சரணார்த்தி, சன்மார்க்கத்தை யநுக்ரஹஞ் செய்தற்குரிய திருவடிகளை யுடையவனே! சரணார்த்தி, வசவதேசிகேந்த்ரனே! சரணார்த்தி.

(வி - ரை.) பிரகிருதி - ப்ரக்ருதி என்னும் வடசொற்றிரிபு. (க)

வேறு.

மற்றினிக் கல்லி யாண வளநக ரதனு ளத்த
னற்றிய பத்தி வித்தா நற்பல தேவர் பெற்ற
சிற்றிடை யாளை நந்தி தேவனுக் கீய நச்சி
யொற்றியங் கணன ழைத்த நீர்மைபோற் கயிலை சென்றார்.

(ப - ரை.) இனி - இப்பால், வளம் - தெய்வீக ஸம்பத்தையுடைய, கல்லியாண நகரதனுள் - கல்யாணபுரியில், அத்தன் நற்றிய பத்தி வித்து ஆம் - சிவபக்திக்குக் காரணராகிய, நல் - சிறந்த, பலதேவர் - ஸ்ரீ பலதேவரானவர், பெற்ற - தாம் ஈன்ற, சிற்றிடையாளை - திருமகளை, ஈய - விவாகஞ்செய்து கொடுத்தலும், ஒற்றி அம் கண்ணன் - சிவபெருமான், நச்சி - விரும்பி, அழைத்த நீர்மைபோல் - அழைத்த தன்மைபோல, கயிலைசென்றார் - சிவபதமடைந்தனர். எ - று.

(போ - ரை) இப்பால் தெய்வீக ஸம்பத்தையுடைய கல்யாணபுரியில் சிவபக்திக்குக் காரணராகிய சிறந்த ஸ்ரீ பலதேவரானவர் தாம் ஈன்ற திருமகளை விவாகஞ்செய்து கொடுத்தலும், சிவபெருமான் விரும்பி யழைத்த தன்மைபோலச் சிவபதமடைந்தனர்.

(வி - ரை.) அத்தன் - இறைவன். நற்றல் - நத்துதல் (விரும்புதல்). சிற்றிடையாள் - சிறிய விடையையுடையவள் (கங்காம்பையார்). நெற்றி அம் கண்ணன் - அழகிய நெற்றிக் கண்ணையுடையவன். நகரதனுள் என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. மற்று - அசை.

விச்சலன் பலதே வர்க்கா மித்திரர் தம்மை நோக்கி
யிச்சது ரங்க தேச மெமையினிப் பரிக்கும் பேரா
யச்சமின் மக்க ளாய்நன் றுடன்பிறந் தவரா யன்றி
யுச்சித வுறவ ராகி யுரியரா யுளரோ வென்றான்.

(ப - ரை.) விச்சலன் - விஜ்ஜலராஜன், பலதேவர்க்கு - ஸ்ரீ பலதேவருக்கு, ஆம் - வேண்டியவர்களான, மித்திரர்தம்மை - சிநேகிதர்களை, நோக்கி - பார்த்து, இ - இந்த, சதுரங்கம் - சதுரங்கசேனைகளையுடைய, தேசம் - ராஜ்யத்தையும், எம்மை - நம்மையும், இனி - இப்போது, பரிக்கும்பேராய் - தாங்கவல்லவர்களாயும், அச்சம் இல் - பயமில்லாத, மக்களாய் - பிள்ளைகளாயும், நன்று - பெருமைபொருந்திய, உடன்பிறந்தவராய் - சகோதரர்களாயும், அன்றி - அல்லது, உச்சிதம் - மேன்மைபொருந்திய, உறவராகி - சுற்றத்தார்களாயும், உரியராய் - பாத்யமுள்ளவர்களாயும், உளரோ - இருக்கின்றார்களோ, என்றான் - என்று கேட்டனன், எ - று.

(பொ - ரை.) விஜ்ஜலராஜன் ஸ்ரீ பலதேவருக்கு வேண்டியவர்களான சிநேகிதர்களைப்பார்த்து, இந்தச் சதுரங்கசேனைகளையுடைய ராஜ்யத்தையும் நம்மையும் இப்போது தாங்கவல்லவர்களாயும், பயமில்லாத பிள்ளைகளாயும், பெருமைபொருந்திய சகோதரர்களாயும், அல்லது மேன்மைபொருந்திய சுற்றத்தார்களாயும், பாத்யமுள்ளவர்களாயுமிருக்கின்றார்களோ? என்று கேட்டனன்.

(வி - ரை.) மித்திரர்தம்மை என்பதில் தம் - சாரியை. மித்திரர் - மித்ரர் என்னும் வடசொற்றிரிபு. சதுரங்கம் - ரத, கஜ, துரக, பதாதி. மற்று - அசை. (கூ)

என்னமற் றவர்கள் வேந்த னெழின்முக நோக்கி நின்றும்
மன்னகே ளவர்ப யந்த மகடனக் கினிய கேள்வ
ருன்னரும் பாரந் தாங்கற் குரியவ ருமையோர் பாகன்
றன்னரு ளதிகம் பெற்றார் தம்பெயர் வசவ தேவர்.

(ப - ரை.) என்ன - என்று அரசன் கேட்டலும், அவர்கள் - அந்தச் சிநேகிதர்கள், வேந்தன் - அரசனது, எழில் - அழகிய, முகம் - முகத்தை, நோக்கி நின்று - பார்த்து நின்று, மன்ன - அரசனே, கேள் - கேட்கக்கடவை, அவர் - அந்த ஸ்ரீ பலதேவர், பயந்த - பெற்ற, மகள்தனக்கு - திருமகளுக்கு, இனிய - பிரியமுள்ள, கேள்வர் - கணவரானவர், உன் - உன்னுடைய, அரு - தாங்குதற்கரிய, பாரம் - பூபாரத்தை, தாங்கற்கு - தாங்குதற்கும், உரியவர் - தக்கவர், உமை ஒரு பாகன் அருள் - சிவாநுக்ரஹத்தையும், அதிகம் - விசேஷமாக, பெற்றார் - பெற்றவர், தம் பெயர் - அவருடைய திருநாமம், வசவதேவர் - ஸ்ரீ வசவேசுரரென்பது, எ - று.

(பொ - ரை.) என்று அரசன் கேட்டலும், அந்தச் சிநேகிதர்கள் அரசனது அழகிய முகத்தைப்பார்த்து நின்று, அரசனே! கேட்கக்கடவை, ஸ்ரீபலதேவர் பெற்ற திருமகளுக்குப் பிரியமுள்ள கணவரானவர் உன்னுடைய தாங்குதற்கரிய பூபாரத்தைத் தாங்குதற்கும் தக்கவர், சிவாநுக்ரஹத்தையும் விசேஷமாகப்பெற்றவர், அவருடைய திருநாமம் ஸ்ரீ வசவேசுரரென்பது.

(வி - ரை.) மற்று - அசை. மன்ன - அண்மைவிளி. மகள்தனக்கு என்பதில் தன் - சாரியை. உமை - உமாதேவியாரை. ஓர்பாகன் - ஒருபக்கத்திலுடையவன். உன் அரு - நினைத்தற்கரிய எனினுமாம். (ச)

கூடலசங்க மத்தே குருவருட் பதங்கள் போற்று
நாடரும் பத்தியாலே நண்ணியங் கிருக்கின் றார் மன்
னீடநின் கருத்திற் கேற்ற நீர்மையா ரென்ன வேந்தன்
றேடருங் களிப்பு மன்புஞ் செறிந்தநற் சித்த னாகி.

(ப - ரை.) கூடலசங்கமத்து - கூடலஸங்கமேசத்தில், அருள் - க்ருபாமூர்த்தியா கிய, குரு - ஸ்ரீ ஸத்குருவின், பதங்கள் - திருவடிகளை, போற்றும் - வணங்குகின்ற, நாடு அரு - தேடுதற்கரிய, பத்தியால் - அன்புடன், அங்கு - அவ்விடத்தில், நண்ணி - சேர்ந்து, இருக்கின்றார் - வாழ்கின்றார், மன் - அரசனே, நீட - பெரிய, நின் - உன், கருத் திற்கு ஏற்ற - மனத்திற்கிசைந்த, நீர்மையார் - குணத்தையுடையவர், என்ன - என்று சொல்லுதலும், வேந்தன் - அரசன், தேடு அரு - நாடுதற்கரிய, களிப்பும் - மனமகிழ்ச்சி யும், அன்பும் - நேசமும், செறிந்த - பொருந்திய, நல் - நல்ல, சித்தன் ஆகி - மனமுடை யவனாகி, எ - று.

(பொ - ரை.) கூடலஸங்கமேசத்தில் க்ருபாமூர்த்தியாகிய ஸ்ரீ ஸத்குருவின் திரு வடிகளை வணங்குகின்ற தேடுதற்கரிய அன்புடன் அவ்விடத்தில் சேர்ந்து வாழ்கின்றார், அரசனே! பெரிய உன் மனத்திற்கிசைந்த குணத்தையுடையவரென்று சொல்லுதலும், அரசன் நாடுதற்கரிய மனமகிழ்ச்சியும் நேசமும் பொருந்திய நல்ல மனமுடையவனாகி.

(வி - ரை.) மன் - மன்ன (அண்மைவிளி.)

(௫)

அமைச்சரை வாய்மை யாலே யதிகரை யழைத்து வேந்த
னுமைக்கினி யவர்மே லன்பா லுயர்ந்தநன் னந்தி நம்பாற்
கமைத்தனு யக்க னாகுங் கருத்தினை யிசையப் பேசி
யெமைப்பரிக் கின்ற விந்த யானைமேற் றருவி ரென்னா.

(ப - ரை.) வேந்தன் - விஜ்ஜலராஜன், அமைச்சரை - மந்திரிகளையும், வாய்மை யால் - ஸத்யமார்க்கத்தால், அதிகரை - சிறந்த பெரியோர்களையும், அழைத்து - தரு வித்து, உமைக்கு இனியவர்மேல் அன்பால் - சிவபக்தியால், உயர்ந்த - சிறந்தவரும், நல் - புகழ்தற்கு ஏற்றவருமாகிய, நந்தி - வசவேசரை, நம்பால் - நம்மிடத்து, அமை - பொறு மையும், தன் - கடாக்ஷமுமுள்ள, நாயக்கன் ஆகும் - தண்டநாயகனாகின்ற, கருத்தினை - விருப்பத்தை, இசையப்பேசி - ஒப்பும்படிச்சொல்லி, எம்மை - நம்மை, பரிக்கின்ற - தாங்குகின்ற, இந்த - இந்த, யானை - பட்டத்துயானையின், மேல் - மீது, தருவிர் என்ன - அழைத்துவாருங்களென்று கட்டளையிட்டமாத்திரத்தில், எ - று.

(பொ - ரை.) விஜ்ஜலராஜன் மந்திரிகளையும் ஸத்யமார்க்கத்திற் சிறந்த பெரியோர் களையும் தருவித்துச் சிவபக்தியாற் சிறந்தவரும் புகழ்தற்கேற்றவருமாகிய வசவேசரை நம்மிடத்து பொறுமையும் கடாக்ஷமுமுள்ள தண்டநாயகனாகின்ற விருப்பத்தை யொப் பும்படிச் சொல்லி நம்மைத் தாங்குகின்ற இந்தப் பட்டத்துயானையின்மீது அழைத்து வாருங்களென்று கட்டளையிட்டமாத்திரத்தில்.

(வி - ரை.) உமைக்கு - உமாதேவியார்க்கு. இனியவர் - விருப்பமுள்ளவர் (சிவபெரு மான்). தண்டநாயகன் - சேனைத்தலைவன்.

(௬)

விரைவுட னவர்கள் சங்க மேசுரந் தன்னிற் சென்று
வரைமகள் பாகர்க் கான வசவதே வேசர் தாளின்
றரைமிசைப் பணிந்தி ரண்டாஞ் சம்புவே சைவர் வாழ்வே
பிரமன்மால் வாழ்வு மெண்ணுப் பெருமைசே ரொருமை யுள்ளீர்.

(ப - ரை.) அவர்கள் - மந்திரிகளும் பெரியோர்களும், விரைவுடன் - வேகமாக, சங்கமேசுரந்தன்னில் - கூடலஸங்கமேசத்துக்கு, சென்று - போய், வரைமகள் பாகர்க்கு - சிவபெருமானுக்கு, ஆன - தொண்டுபூண்டொழுகுபவராகிய, வசவதேவேசர் - வசவேசரது, தாளில் - ஸ்ரீபாதங்களில், தரைமிசைபணிந்து - ஸாஷ்டாங்கமாய்ப் பூமியிற்பொருந்த நமஸ்கரித்து, இரண்டாம் சம்புவே - இரண்டாம் சிவமே, சைவர் - சைவர்களுடைய, வாழ்வே - செல்வமே, பிரமன் மால் - ப்ரஹ்மவிஷ்ணுக்களுடைய, வாழ்வும் - பதவிகளையும், எண்ணு - ஒருபொருளாக மதிக்காத, பெருமைசேர் - மேன்மைபொருந்திய, ஒருமை உள்ளீர் - ஒப்பற்ற மோக்ஷஸாம்ராஜ்யத்தை யுடையவரே, எ - று.

(பொ - ரை.) மந்திரிகளும் பெரியோர்களும் வேகமாகக் கூடலஸங்கமேசத்துக்குப் போய், சிவபெருமானுக்குத் தொண்டுபூண் டொழுகுபவராகிய வசவேசரது ஸ்ரீபாதங்களில் ஸாஷ்டாங்கமாய்ப் பூமியிற்பொருந்த நமஸ்கரித்து, இரண்டாம் சிவமே! சைவர்களுடைய செல்வமே! ப்ரஹ்ம விஷ்ணுக்களுடைய பதவிகளையும் ஒருபொருளாக மதிக்காத மேன்மைபொருந்திய ஒப்பற்ற மோக்ஷஸாம்ராஜ்யத்தை யுடையவரே!

(வி - ரை.) வரைமகள் - மலைமகள். பாகர் - பாகத்திலுடையவர். (எ)

தேவரீர் சிவானு போகத் திவ்விய வின்பம் போலப்
பூவுல காளு மிச்சை பொருந்துமோ பொருந்தா தேனும்
யாவரு முய்ய நீரிங் கினிதெழுந் தருளப் பெற்றாற்
காவலன் விச்ச லேசன் காசினி முழுதுங் காப்பான்.

(ப - ரை.) தேவரீர் - ஸ்வாமிகாள், சிவாநுபோகம் - சிவாநுபவமாகிய, திவ்விய இன்பம்போல - மோக்ஷாநந்தம் போன்று, பூவுலகு ஆளும் - பூலோகத்தை யரசாளவேண்டுமென்கின்ற, இச்சை - திருவுளம், பொருந்துமோ - சம்மதிக்குமோ, பொருந்தாதேனும் - சம்மதிக்காதிருப்பினும், யாவரும் - அனைவரும், உய்ய - உஜ்ஜீவிக்கும்பொருட்டு, நீர் - நீர், இங்கு - இவ்விடத்தில், இனிது - மகிழ்ந்து, எழுந்தருளப்பெற்றால் - எழுந்தருள்வீராகப்பெறின், காவலன் - வேந்தனாகிய, விச்சலேசன் - விஜ்ஜலராஜன், காசினிமுழுதும் - உலகமெல்லாவற்றையும், காப்பான் - அரசாள்வான், எ - று.

(பொ - ரை.) ஸ்வாமிகாள்! சிவாநுபவமாகிய மோக்ஷாநந்தம் போன்று பூலோகத்தை யரசாளவேண்டுமென்கிற திருவுளஞ்சம்மதிக்குமோ? சம்மதிக்காதிருப்பினும் அனைவரும் உஜ்ஜீவிக்கும்பொருட்டு நீர் இவ்விடத்தில் மகிழ்ந்து எழுந்தருள்வீராகப் பெறின், வேந்தனாகிய விஜ்ஜலராஜன் உலகமெல்லாவற்றையும் அரசாள்வான். (அ)

(வி - ரை.) திவ்வியம் - திவ்யம் என்னும் வடசொற்றிரிபு.

மண்டரிப் பதற்கும் பட்டமல் குதற்கும் பொற்பண் டார
முண்டென நிறுத்து தற்கும் பரிசன மோங்கு தற்கும்
விண்டிடா நம்பிக் கைக்கு மிக்கவள் செல்வத் திற்கு
மெண்டரி னும்மைப் போல்வா ரில்லையெம் மிறைக்கங் கென்றார்.

(ப - ரை.) மண் - பூபாரத்தை, தரிப்பதற்கும் - தாங்குவதற்கும், பட்டம் - பட்டினம், மல்குதற்கும் - விருத்திபடைவதற்கும், பொன்பண்டாரம் - பொக்கசம், உண்டு என்ன - உண்டாயிருக்கிறதென்று, நிறுத்துதற்கும் - நிலைபெறச்செய்வதற்கும், பரிசனம் - பரிவாரங்கள், ஓங்குதற்கும் - விருத்தியடைவதற்கும், விண்டிடா - ராஜரஹஸ்யங்கள் வெளிப்படாத, நம்பிக்கைக்கும் - விசுவாசத்திற்கும், மிக்க - மிகுதியாகவும், வள் - மேன்மையாகவுமுள்ள, செல்வத்திற்கும் - தெய்வீக ஸம்பத்துக்கும், எண்டரின் - யோசிக்குமிடத்தில், உம்மை - உம்மை, போல்வார் - போன்றவர், அங்கு - அவ்விஜ்ஜலநகரத்தில்,

எம் - எமது, இறைக்கு - வேந்தனுக்கு, இல்லை - ஒருவருமில்லை, என்றார் - என்று விண்ணப்பஞ்செய்தார்கள், எ - று.

(போ - ரை.) பூபாரத்தைத் தாங்குவதற்கும், பட்டினம் விருத்தியடைவதற்கும், பொக்கசம் உண்டாயிருக்கிறதென்று நிலைபெறச்செய்வதற்கும், பரிவாரங்கள் விருத்தியடைவதற்கும், ராஜரஹஸ்யங்கள் வெளிப்படாத விசுவாசத்திற்கும், மிகுதியாகவும் மேன்மையாகவுமுள்ள தெய்வீக ஸம்பத்துக்கும் யோசிக்குமிடத்தில் உம்மைப்போன்றவர் அவ்விஜ்ஜலநகரத்தில் எமது வேந்தனுக்கு ஒருவருமில்லையென்று விண்ணப்பஞ்செய்தார்கள்.

(வி-ரை.) எண்டரின் - ஒருசொல் (பகுதி எண்டா). மன் - ஆகுபெயர். (௪௯)

ஒருபடி யரிசிக் கேனா னுரியன்று மெல்லாந் தாங்கும்
பெருமைய ரென்றான் வேந்தன் பிரியத்திற் செல்வீ ரென்ன
வருணெறித் தேசி கன்று ளகல்வதென் னெனவ யர்ந்தார்
மருவிமுன் னாசான் போந்தார் வணங்கினார் வசவ தேவர்.

(ப - ரை.) ஒருபடி - ஒருநாழி, அரிசிக்கே - அரிசிக்கே, நான் - யான், உரியன் - சுதந்தரமுள்ளவனும், தாம் - தாங்கள், எல்லாம் - எல்லாவற்றையும், தாங்கும் - தாங்குதற்குரிய, பெருமையார் - மேன்மையை யுடையவரும், என்றான் வேந்தன் - என்று அரசன் சொன்னான் (ஆதலால்), பிரியத்தில் - அன்போடு, செல்வீர் என்ன - எழுந்தருளுவீரென்று வருந்தியழைத்தலும், அருள்நெறி - க்ருபாமார்க்கத்தையுடைய, தேசிகன்தாள் - ஸ்ரீ ஸத்குருவின் திருவடிகளை, அகல்வது - விட்டுச் செல்வது, என் என்ன - எவ்வாறென்று, அயர்ந்தார் - வருத்தமடைந்தனர், முன் - பழமையாயுள்ள, ஆசான் - ஸ்ரீ ஸத்குருவானவர், மருவி - சமீபித்து, போந்தார் - எழுந்தருளினர், வசவதேவர் - வசவேசரும், வணங்கினார் - தொழுதனர், எ - று.

(போ - ரை.) ஒருநாழி யரிசிக்கே யான் சுதந்தரமுள்ளவனும், தாங்கள் எல்லாவற்றையுந் தாங்குதற்குரிய மேன்மையையுடையவருமென்று சொன்னான், ஆதலால் அன்போடு எழுந்தருளுவீரென்று வருந்தியழைத்தலும், க்ருபாமார்க்கத்தையுடைய ஸ்ரீஸத்குருவின் திருவடிகளை விட்டுச் செல்வது எவ்வாறு? என்று வருத்தமடைந்தனர், பழமையாயுள்ள ஸ்ரீ ஸத்குருவானவர் சமீபித்து எழுந்தருளினர், வசவேசரும் தொழுதனர். (௫௰)

அதுவுநம் பணிசொன் செல்வா யஞ்சலென் றையர் செப்ப
பதுமமென் பதமி றைஞ்சி விடைகொண்டு பத்தர் போற்றக்
கதுமெனச் சேனை சூழக் கரமலை மிசையி னேறிப்
புதுமல ரிமையோர் சிந்தப் புரியினும் புறம்பு சென்றார்.

(ப - ரை.) அதுவும் - அவ்வரசாட்சித்தொழிலும், நம் - நமது, பணி - பணிவிடையே, செல்வாய் - போகக்கடவை, அஞ்சல் - பயப்படாதே, என்று - என்று, ஐயர் - ஸ்ரீ ஸத்குருவானவர், செப்ப - கட்டளையிட்டருளுதலும், பதுமம் - தாமரைமலர்போன்ற, பதம் - திருவடிகளை, இறைஞ்சி - ஸாஷ்டாங்கமாகவணங்கி, விடைகொண்டு - (திருவருள் இதுவாகுமென்று) உத்தரவுபெற்று, பத்தர் - பக்தர்கள், போற்ற - துதிக்கவும், கதுமென - விரைவாக, சேனை - சதுரங்கசேனைகள், சூழ - நாற்பக்கங்களிலும் சூழ்ந்துவரவும், கரமலையின் - யானையின், மிசை - மேல், ஏறி - ஆரோகணித்து, இமையோர் - தேவர்கள், புது - அன்றுமலர்ந்த, மலர் - கற்பகபுஷ்பங்களை, சிந்த - இறைக்கவும், புரியினும் - அக்கூடலஸங்கமேசத்தினின்றும், புறம்புசென்றார் - வெளிப்பட்டனர், எ - று.

(போ - ரை.) அவ்வரசாட்சித்தொழிலும் நமது பணிவிடையே போகக்கடவை பயப்படாதே யென்று ஸ்ரீ ஸத்குருவானவர் கட்டளையிட்டருள்தலும், தாமரைமலர்போன்ற

திருவடிகளை ஸஷ்டாங்கமாக வணங்கி, திருவருள்தவாருமென்றுத்தரவுபெற்று, பக்தர்கள் துதிக்கவும், விரைவாகச் சதுரங்கசேனைகள் நாற்பக்கங்களிலும் சூழ்ந்துவரவும், யானையின்மேலாரோகணித்து, தேவர்கள் அன்று மலர்ந்த கற்பகபுஷ்பங்களையிறைக்கவும், அக்கூடலஸங்கமேசத்தினின்றும் வெளிப்பட்டனர்.

(வி - ரை.) கரமலை - துதிக்கையினையுடைய மலை (யானை). காண் - முன்னிலை யசையிடைச்சொல். (கக)

கண்டவர் கண்ணு நெஞ்சுங் களிப்புறக் கரங்கள் சென்னி
மண்டிமுன் கூம்பி நிற்க வானதுந் துமிமு ழங்கத்
தண்டரு மலரின் மூழ்குந் தகையராய்ச் சங்க மேசன்
புண்டரீ கத்தா ணேசம் பொங்கிய நெஞ்ச ராகி.

(ப-ரை.) கண்டவர் - பார்ப்பவர்களது, கண்ணும் - கண்களும், நெஞ்சும் - மனமும், களிப்பு உற - மகிழ்ச்சியடையவும், கரங்கள் - கைகள், சென்னி - சிரசின்மேல், மண்டி - நெருக்க, கூம்பி - குவிந்து, முன் - எதிரே, நிற்க - நிற்கவும், வானதுந்துமி - தேவதுந்துமிவாத்யங்கள், முழங்க - முழங்காநிற்கவும், தண்தரும் - குளிர்ச்சிபொருந்திய, மலரில் - புஷ்பத்தில், மூழ்கும் - முழுகுகின்ற, தகையராய் - தன்மையையுடையவராயும், சங்கமேசன் - கூடலஸங்கமேசரது, புண்டரீகம் - தாமரைமலர்போன்ற, தாள் - திருவடிகளில், நேசம் - அன்பு, பொங்கிய - மிகுந்த, நெஞ்சர் ஆகி - மனமுடையராயும், எ-று.

(பொ - ரை.) பார்ப்பவர்களது கண்களும் மனமும் மகிழ்ச்சியடையவும், கைகள் சிரசின்மேல் நெருக்கக்குவிந்து எதிரே நிற்கவும், தேவதுந்துமிவாத்யங்கள் முழங்காநிற்கவும், குளிர்ச்சிபொருந்திய புஷ்பத்தில் முழுகுகின்ற தன்மையையுடையவராயும், கூடலஸங்கமேசரது தாமரைமலர்போன்ற திருவடிகளில் அன்பு மிகுந்த மனமுடையராயும்.

மஞ்சனை வேழத் தேறி வரும்வளம் விச்ச லேச
னஞ்சலா னறிந்து வீதி யானவை யெங்கு மாடி
விஞ்சுதோ ரணமுஞ் சல்லி மிக்கதோ ரணமும் வெய்யோ
னஞ்சுமா ணிக்க மாலை யலங்குதோ ரணமு மார்த்தே.

(ப - ரை.) மஞ்சு - மேகம், அன்ன - போன்ற, வேழத்து - யானையின்மீது, ஏறி வரும் - ஏறிக்கொண்டுவருகின்ற, வளம் - வைபவத்தை, அஞ்சலான் - அஞ்சற்காரரால், விச்சலேசன் - விஜ்ஜலராஜன், அறிந்து - தெரிந்து, வீதியானவை எங்கும் - தெருக்கள் முழுதும், ஆடி - கண்ணாடிகள், விஞ்சு - மிகுந்த, தோரணமும் - தோரணங்களையும், சல்லி - தகட்டுக்கற்கள், மிக்க - மிகுந்த, தோரணமும் - தோரணங்களையும், வெய்யோன் - சூரியன், அஞ்சும் - பயப்படுதற்குரிய, மாணிக்கமாலை - ரத்னமாலைகள், அலங்கு - அசையாநின்ற, தோரணமும் - தோரணங்களையும், ஆர்த்து - கட்டுவித்து, எ - று.

(பொ - ரை.) மேகம்போன்ற யானையின்மீது ஏறிக்கொண்டுவருகின்ற வைபவத்தை அஞ்சற்காரரால் விஜ்ஜலராஜன் தெரிந்து, தெருக்கள் முழுதும் கண்ணாடிகள் மிகுந்த தோரணங்களையும் தகட்டுக்கற்கள் மிகுந்த தோரணங்களையும் சூரியன் பயப்படுதற்குரிய ரத்னமாலைகளையசைகின்ற தோரணங்களையும் கட்டுவித்து. (கங)

தெய்வமா விமானத் தோடே தெரிவையர் தரையில் வந்து
கைவருஞ் சதியா லாடுங் காட்சி போற் சப்ப ரத்திற்
பைவரு மரவ வல்குற் பாவைய ரிரும ருங்கும்
பொய்வரு மிடையா ராடப் புரியலங் கரித்த பின்னர்.

(ப-ரை.) மா - மேன்மைபொருந்திய, தெய்வவிமானத்தோடு - தேவவிமானத்துடன், தெரிவையர் - தேவமாதர்கள், தரையில் - பூமியில், வந்து - இறங்கி வந்து, கைவரும் - கைவந்த, சதியால் - சதியோடு, ஆடும் - நடனஞ்செய்கின்ற, காட்சிபோல் - தோற்றம்போல, சப்பரத்தில் - சித்திரப்பந்தல்களில், இருமருங்கும் - இரண்டுபக்கத்திலும், பைவரும் அரவம் - பாம்பின் படம்போன்ற, அல்குல் - நிதம்பத்தினையுடைய, பாவையர் - மாதர்களும், பொய்வரும் இடையார் - பொய்போலுமிடையை யுடையமாதர்களும், ஆட - நடனஞ்செய்ய, புரி - கல்யாண நகரத்தை, அலங்கரித்த பின்னர் - ஜோடித்த பிறகு, எ-று.

(போ-ரை.) மேன்மை பொருந்திய தேவவிமானத்துடன் தேவமாதர்கள் பூமியிலிறங்கி வந்து கைவந்த சதியோடு நடனஞ்செய்கின்ற தோற்றம்போலச் சித்திரப்பந்தல்களில் இரண்டு பக்கத்திலும் பாம்பின்படம்போன்ற நிதம்பத்தினையுடைய மாதர்களும் பொய்போலுமிடையை யுடையமாதர்களும் நடனஞ்செய்யக் கல்யாணநகரத்தை ஜோடித்த பிறகு.

(வி-ரை.) சதி - தாளவொத்து. மிகவும் நுட்பமான விடையைப் பொய்போலுமிடையென்றல் புலவர் வழக்காதலால் பொய்வருமிடையென்றார். தெய்வவிமானம் - தெய்வீகத் தன்மையுடைய ரதம். கைவருதல் - பழக்கமாயிருத்தல் (தேர்தல்). (கச)

நண்ணினர் புரியைச் சேர நந்திக ளென்ன வேந்தன்
கண்ணினால் விரும்பிக் காணுங் காதலா லெதிரே சென்றா
னண்ணலார் சேனை சூழ வரசன்வந் தணைதல் கண்டு
திண்ணிய களிற்றி னின்று மிழிந்துநேர் சேரப் போந்தார்.

(ப-ரை.) நந்திகள் - வசவேசர், புரியை - கல்யாண நகரத்தை, சேர - சமீபித்து, நண்ணினர் - எழுந்தருளினர், என்ன - என்று அஞ்சற்காரர் வந்து சொல்லுதலும், வேந்தன் - விஜ்ஜலராஜன், விரும்பி - அன்போடு, கண்ணினால் - கண்களால், காணும் - பார்க்க வேண்டுமென்கிற, காதலால் - ஆசையால், எதிரேசென்றான் - எதிர்கொள்ளப்போயினான், அரசன் - விஜ்ஜலராஜனானவன், அண்ணல் ஆர் - பெருமைபொருந்திய, சேனை - சதுரங்க சேனைகள், சூழ - சுற்றிலும் வர, வந்து அணைதல் - வந்துசேர்தலை, கண்டு - (வசவேசர்) பார்த்து, திண்ணிய - வலிதாகிய, களிற்றினின்றும் - யானையினின்றும், இழிந்து - இறங்கி, நேர் - வேந்தனுக்கு எதிரே, சேரப்போந்தார் - கிட்டப்போயினர், எ-று.

(போ-ரை.) வசவேசர் கல்யாணநகரத்தைச் சமீபித்து எழுந்தருளினரென்று அஞ்சற்காரர் வந்து சொல்லுதலும், விஜ்ஜலராஜன் அன்போடு கண்களாற் பார்க்கவேண்டுமென்கிற ஆசையால் எதிர்கொள்ளப்போயினான், விஜ்ஜலராஜனானவன் பெருமைபொருந்திய சதுரங்கசேனைகள் சுற்றிலும்வர வந்துசேர்தலை வசவேசர் பார்த்து, வலிதாகிய யானையினின்றுமிறங்கி, வேந்தனுக்கெதிரே கிட்டப்போயினர். (கரு)

வேதசைவங்க ளோங்க விமலனோர் வடிவ மென்ன
மாதவர் வைப்பை மன்னோர் வாழ்வினை வாத வேழந்
தீதருங் குழுவை வாட்டுஞ் சிங்கத்தை வீர சைவ
ருதியந் தன்னை ஞான வொளியைக் கொழுக்கக் குன்றை.

(ப-ரை.) வேதம் - வைதிக சம்பந்தமுள்ள, சைவங்கள் - சிவபக்திமார்க்கங்கள், ஓங்க - விருத்தியடைய, ஓர் - ஒப்பற்ற, விமலன் வடிவு - சிவஸ்வரூபம், என்ன - போன்றவரை, மாதவர் - ஐங்கமமூர்த்திகளுடைய, வைப்பை - நிக்ஷேபத்தை, மன்னோர் - உலகத்தாருடைய, வாழ்வினை - செல்வத்தை, தீதரும் - கொடிய, வாதவேழம் - பிறசமயவாதிகளாகிய யானையின், குழுவை - கூட்டத்தை, வாட்டும் - அழிக்கின்ற, சிங்

கத்தை - சிங்கத்தை, வீரசைவர் - வீரசைவராது, ஊதியம் தன்னை - (ஆத்ம) லாபத்தை, ஞானவொளியை - சிவஞ்ஞாந சூர்யனே, நல் ஒழுக்கம் - சன்மார்க்கமாகிய, குன்றை - மலையை, எ - று.

(பொ - ரை.) வைதிக ஸம்பந்தமுள்ள சிவபக்திமார்க்கங்கள் விருத்தியடைய ஒப்பற்ற சிவஸ்வரூபம் போன்றவரை, ஜங்கமமூர்த்திகளுடைய நிக்ஷேபத்தை, உலகத்தாருடைய செல்வத்தை, கொடிய பிறசமயவாதிகளாகிய யானையின் கூட்டத்தை யழிக்கின்ற சிங்கத்தை, வீரசைவரது ஆத்மலாபத்தை, சிவஞ்ஞாநசூர்யனை, சன்மார்க்கமாகிய மலையை.

(வி - ரை.) வீரசைவருதியந்தன்னை யென்பதில் தன் - சாரியை. (கசு)

மதியினு லொப்பி லாரை வாக்கினு லிணையி லாரை
நதிமுடி யத்தன் பத்தி நன்மையா னிகரி லாரை
யெதிரிலாக் கல்வி யாரை யினிமையா லமுத னாரை
விதியெலாம் வென்றார் தம்மை விச்சலன் விருப்பாற் கண்டான்.

(ப - ரை.) மதியினால் - மெய்யறிவினால், ஒப்பு இல்லாரை - இணையற்றவரை, வாக்கினால் - ஸத்யவசநங்களினால், இணையில்லாரை - நிகரற்றவரை, நதிமுடி அத்தன் பத்தி - சிவபக்தியாகிய, நன்மையால் - சன்மார்க்கத்தினால், நிகர் இல்லாரை - ஒப்பற்றவரை, எதிர் இல்லா - நிகரற்ற, கல்வியாரை - பண்டிதரை, இனிமையால் - இனிய சொற்களினால், அமுது அன்னாரை - தேவாமிர்தத்தை யொத்தவரை, விதியெல்லாம் - ஊழ்வலி முழுதும், வென்றார்தம்மை - வென்றவரை, விச்சலன் - விஜ்ஜலராஜன், விருப்பால் - அன்புடன், கண்டான் - தரிசித்தான், எ - று.

(பொ - ரை.) மெய்யறிவினாலிணையற்றவரை, ஸத்யவசநங்களினால் நிகரற்றவரை, சிவபக்தியாகிய சன்மார்க்கத்தினால் ஒப்பற்றவரை, நிகரற்ற பண்டிதரை, இனிய சொற்களினால் தேவாமிர்தத்தை யொத்தவரை, ஊழ்வலிமுழுதும் வென்றவரை விஜ்ஜலராஜன் அன்புடன் தரிசித்தான்.

(வி - ரை.) கல்வி என்றது அறநூல் நீதிநூல் சதுரங்கசேனையாதியவற்றின் நூல்களை. விதி - நல்வினை தீவினை யென்னு மிருவினைப்பயன் செய்தவனையே சென்றடைதற்கேதுவாகிய நியதி. விதியெல்லாவது சனனமரணமற்றிருத்தல். வென்றார்தம்மை என்பதில் தம் - சாரியை. நதிமுடி - கங்காநதியை ஜடைமுடியிலுடைய. அத்தன் - சிவபெருமான். (கஎ)

கலிவிருத்தம்.

களிப்பி னாலெதிர் காண்டலுங் காசினி வேந்த
னுளத்தி லாதர வெய்தியங் குவப்புரை யனேகங்
கிளத்தி யேயிரு வோர்களுங் கிட்டிநன் புடனே
வளப்ப நீடுநன் னகரினுள் வந்துறு மளவில்.

(ப - ரை.) களிப்பினால் - மனமகிழ்ச்சியோடு, காசினிவேந்தன் - உலகத்துக்கரசனாகிய விஜ்ஜலராஜன், எதிர்காண்டலும் - நேரே தரிசித்தமாத்திரத்தில், உள்ளத்தில் - மனத்தில், ஆதரவு எய்தி - அன்புடையனாகி, அங்கு - அவ்விடத்து, உவப்பு உரை - சந்தோஷகரமான வசநங்களை, அனேகம் - விசேஷமாக, கிளத்தி - சொல்லி, இருவோர்களும் - இருவர்களும், கிட்டி - நெருங்கி, நன்புடனே - அன்புடனே, வளப்பம் - எல்லாச் செல்வங்களும், நீடும் - நிலைபெற்ற, நல் - அழகிய, நகரினுள் - கல்யாணநகரத்தினுள்ளே, வந்து உறும் அளவில் - பிரவேசித்தமாத்திரத்தில், எ - று.

(பொ - ரை.) மனமகிழ்ச்சியோடு உலகத்துக்கரசனாகிய விஜ்ஜலராஜன் நேரே தரிசித்தமாத்திரத்தில், மனத்திலன்புடையனாகி, அவ்விடத்துச் சந்தோஷகரமான வசனங்களை விசேஷமாகச் சொல்லி, இருவர்களும் நெருங்கி யன்புடனே எல்லாச் செல்வங்களும் நிலைபெற்ற அழகிய கல்யாணநகரத்தினுள்ளே பிரவேசித்தமாத்திரத்தில். (கஅ)

மகர தோரண மாடமா ளிகைகளின் மீதுஞ்
சிகர மீதினுந் தேரினின் மீதினுஞ் செறிந்தே
நிகரில் பூரண சந்திர னிரைகளோ நிலவு
முகுர சாலமோ முளரியோ மடந்தையர் முகமோ.

(ப - ரை.) மகரதோரணம் - மகரதோரணங்களைக்கட்டியிருக்கின்ற, மாடமாளிகைகளின் - மாடமாளிகைகளின், மீதும் - மேலும், சிகரம் - சிகரங்களின், மீதினும் - மேலும், தேரினின் - இரதங்களின், மீதினும் - மேலும், செறிந்து - நெருங்கி, நிகர்இல் - ஒப்பற்ற, பூரணசந்திரன் நிரைகளோ - பூரண சந்திரக்கூட்டங்களோ, நிலவும் - விளங்குகிற, முகுரம் - கண்ணாடி, சாலமோ - கூட்டங்களோ, முளரியோ - தாமரைமலர்களோ, மடந்தையர் - மாதர்களுடைய, முகமோ - முகங்களோ, எ - று.

(பொ - ரை.) மகரதோரணங்களைக்கட்டியிருக்கின்ற மாடமாளிகைகளின் மேலும், சிகரங்களின் மேலும், இரதங்களின்மேலும் நெருங்கி ஒப்பற்ற பூரணசந்திரக் கூட்டங்களோ? விளங்குகிற கண்ணாடிக் கூட்டங்களோ? தாமரைமலர்களோ? மாதர்களுடைய முகங்களோ?

(வி - ரை.) முளரி - ஆகுபெயர். (கக)

கரிய மேகமா நிரைகளோ காரிரு ளனேக
முருவ மாகியே திரண்டதோ வொண்ணுத லார்தஞ்
சொருகு கொண்டையோ வள்ளையோ தோகையர் காதோ
வரிய நீலமோ வேல்களோ வரிவையர் விழியோ.

(ப - ரை.) கரிய - கறுத்த, மா - பெரிய, மேகம் - மேகம், நிரைகளோ - கூட்டங்களோ, கார் - கரிய, இருள் - இருளானது, அனேகம் - பல, உருவமாகி - வடிவங்கள் கொண்டு, திரண்டதோ - திரண்டெழுந்ததோ, ஒள் - அழகிய, நுதலார்தம் - நெற்றியையுடைய மாதர்களுடைய, சொருகு - செருகின, கொண்டையோ - கொண்டைகளோ, வள்ளையோ - வள்ளைத்தண்டுகளோ, தோகையர் - மாதர்களுடைய, காதோ - செவிகளோ, அரிய - மேன்மையாகிய, நீலமோ - நீலமலர்களோ, வேல்களோ - வேற்படைகளோ, அரிவையர் - மாதர்களுடைய, விழியோ - கண்களோ, எ - று.

(பொ - ரை.) கறுத்த பெரிய மேகக்கூட்டங்களோ? கரிய விருளானது பல வடிவங்கள்கொண்டு திரண்டெழுந்ததோ? அழகிய நெற்றியையுடைய மாதர்களுடைய செருகின கொண்டைகளோ? வள்ளைத்தண்டுகளோ? மாதர்களுடைய செவிகளோ? மேன்மையாகிய நீலமலர்களோ? வேற்படைகளோ? மாதர்களுடைய கண்களோ?

(வி - ரை.) கொண்டை - பூவை மயிர் முடியினொன்று, அது பக்கத்திற் சேர்த்து முடிப்பது. நீலம் - ஆகுபெயர். நுதலார்தம் என்டதில் தம் - சாரியை. தோகையர் - அன்மொழித்தொகை. (உ0)

திவளு நன்னிறக் குமிழ்களோ வெள்ளிதட் டிரளோ
துவளு நுண்ணிடை மடந்தையர் துண்டமோ சுடரும்
பவளமோ கொவ்வையோ துய்ய பாவைய ரிதழோ
தவள முல்லையோ தாளமோ தையலார் நகையோ.

(ப - ரை.) துவளும் - அசைகின்ற, நல் - நல்ல, நிறம் - நிறத்தையுடைய, குமிழ்களோ - குமிழமலர்களோ, எள் இதழ் - எட்பூவின், திரளோ - கூட்டங்களோ, துவளும் - அசைகின்ற, நுண் - நுட்பமாகிய, இடை - இடையையுடைய, மடந்தையர் - மாதர்களுடைய, துண்டமோ - நாசிகளோ, சுடரும் - ஒளிவிடுகின்ற, பவளமோ - பவளங்களோ. கொவ்வையோ - கோவைக்கனிகளோ, தூய்ய - பரிசுத்தமாகிய, பாவையர் - மாதர்களுடைய, இதழோ - அதரங்களோ, தவளம் - வெண்மையாகிய, முல்லையோ - முல்லை யரும்புகளோ, தரளமோ - முத்துக்களோ, தையலார் - மாதர்களுடைய, நகையோ - பற்களோ, எ - று.

(பொ - ரை.) அசைகின்ற நல்ல நிறத்தையுடைய குமிழமலர்களோ? எட்பூவின் கூட்டங்களோ? அசைகின்ற நுட்பமாகிய இடையையுடைய மாதர்களுடைய நாசிகளோ? ஒளிவிடுகின்ற பவளங்களோ? கோவைக்கனிகளோ? பரிசுத்தமாகிய மாதர்களுடைய அதரங்களோ? வெண்மையாகிய முல்லையரும்புகளோ? முத்துக்களோ? மாதர்களுடைய பற்களோ?

(வி - ரை.) கொவ்வை, முல்லை - ஆகுபெயர்கள். (உக)

பணில மோபசும் பூகமோ பாவையர் களமோ
மணிகொள் வேய்களோ மடந்தையர் தோள்களோ மலையோ
வணிகொள் செவ்விள நீர்களோ வரிவையர் தனமோ
விணையி லாவனக் குழுக்களோ தெரிவைய ரினமோ.

(ப - ரை.) பணிலமோ - சங்குகளோ, பசும் - பசுமையாகிய, பூகமோ - கமுகுகளோ, பாவையர் - மாதர்களுடைய, களமோ - கழுத்துகளோ, மணிகொள் - அழகிய, வேய்களோ - மூங்கில்களோ, மடந்தையர் - மாதர்களுடைய, தோள்களோ - புயங்களோ, மலையோ - மலைகளோ, அணிகொள் - அழகிய, செவ்விளநீர்களோ - செவ்விளநீர்களோ, அரிவையர் - மாதர்களுடைய, தனமோ - முலைகளோ, இணையில்லா - நிகரற்ற, அன்னக் குழுக்களோ - அன்னப்பறவைக் கூட்டங்களோ, தெரிவையர் - மாதர், இனமோ - கூட்டங்களோ, எ - று.

(பொ - ரை.) சங்குகளோ? பசுமையாகிய கமுகுகளோ? மாதர்களுடைய கழுத்துகளோ? அழகிய மூங்கில்களோ? மாதர்களுடைய புயங்களோ? மலைகளோ? அழகிய செவ்விளநீர்களோ? மாதர்களுடைய முலைகளோ? நிகரற்ற அன்னப்பறவைக்கூட்டங்களோ? மாதர்கூட்டங்களோ?

(வி - ரை.) மணிகொள்வேய் என்பதற்கு முத்துக்களைத் தம்மிடத்தே கொண்ட மூங்கில் என்றுரைத்தலுமொன்று. அணிகொள் என்பதற்கு ஆபரணங்களை யணிந்த என்றுரைத்தலுமொன்று. (உஉ)

ஆன யாழினின் முழக்கமோ வரிவையர் மொழியோ
வான மாதர்கள் வசவரா சையர்தம் வடிவைப்
பான லங்கணாற் பார்க்கவந் திழிந்தவப் பரிசோ
தேனு லாமலர்த் திருபல வடிவமாந் திரளோ.

(ப - ரை.) ஆன - மனோரம்யமான, யாழ் - வீணையின், இன் - இனிய, முழக்கமோ - நாதங்களோ, அரிவையர் - மாதர்களுடைய, மொழியோ - சொற்களோ, வானமாதர்கள் - தேவஸ்த்ரீகள், வசவராசையர்தம் - வசவேசருடைய, வடிவை - திவ்யசரீரத்தை, பானல் - நீலமலர்போலும், அம் - அழகிய, கண்ணால் - கண்களால், பார்க்க வந்து - தரிசிக்கவந்து, இழிந்த - இறங்கினதாகிய, அ - அந்த, பரிசோ - தன்மையோ, தேன் உலாம் - தேன்

பொருந்திய, மலர் - தாமரைமலரில் வாழ்கின்ற, திரு - இலக்குமியானவள், பல வடிவம் ஆம் - அநேக வுருவங்கள் கொண்டதாகிய, திரளோ - கூட்டங்களோ, எ - று.

(பொ - ரை.) மநோரம்யமான வீணையின் இனிய நாதங்களோ? மாதர்களுடைய சொற்களோ? தேவஸ்த்ரீகள் வசவேசருடைய திவ்யசரீரத்தை நீலமலர்போலும் அழகிய கண்களால் தரிசிக்கவந்து இறங்கினதாகிய அந்தத் தன்மையோ? தேன்பொருந்திய தாமரைமலரில் வாழ்கின்ற இலக்குமியானவள் அநேக வுருவங்கள்கொண்டதாகிய கூட்டங்களோ?

(வி - ரை.) பானல் - ஆகுபெயர். வசவராசையர்தம் என்பதில் தம் - சாரியை. (உங)

என்ன வெண்ணிலா மடந்தைய ரிருமருங் கெங்குந்
துன்னி யேவச வேசர்மெய்ச் சோதியைக் கண்டார்
பொன்னி றைந்ததம் புணர்முலை பூரிக்கக் காணு
வன்ன மன்னவ ரதிட்டமற் றனமென வயர்வார்.

(ப - ரை.) என்ன - என்றிவ்வாறு கண்டோர் உவமித்துச்சொல்லும்படி, எண் இல்லா - கணக்கற்ற, மடந்தையர் - மாதர்கள், இருமருங்கு - இரண்டு பக்கத்தில், எங்கும் - எவ்விடத்திலும், துன்னி - நெருங்கிநின்று, வசவேசர் - வசவதேவருடைய, மெய் - திவ்யவிக்ரஹத்தின், சோதியை - தேஜோமயத்தை, கண்டார் - பார்த்தார்கள், பொன் நிறைந்த - தேமல் படர்ந்த, தம் - தமது, புணர் - நெருங்கின, முலை - தனங்கள், பூரிக்க காணு - பூரிக்கப்பார்க்காத, அன்னம் - அன்னப்பறவைகளை, அன்னவர் - நிகர்த்த மாதர்கள், அதிட்டம் அற்றனம் - பாக்யமில்லாதவர்களாயினேமே, என்ன - என்று ஏக்கமுற்று, அயர்வார் - சோர்வாரானார்கள், எ - று.

(பொ - ரை.) என்றிவ்வாறு கண்டோர் உவமித்துச் சொல்லும்படிக் கணக்கற்ற மாதர்கள் இரண்டு பக்கத்திலெவ்விடத்திலும் நெருங்கிநின்று வசவதேவருடைய திவ்ய விக்ரஹத்தின் தேஜோமயத்தைப் பார்த்தார்கள், தேமல் படர்ந்த தமது நெருங்கின தனங்கள் பூரிக்கப் பார்க்காத அன்னப்பறவைகளை நிகர்த்த மாதர்கள் பாக்யமில்லாதவர் களாயினேமே யென்று ஏக்கமுற்றுச் சோர்வாரானார்கள்.

(வி - ரை.) அதிட்டம் - அத்ருஷ்டம் என்னும் வடசொற்றிரிபு (உச)

கண்ட நீர்வச வேசுரர் காட்சியை யுரைப்பீ
ரொண்ட ருங்குழ லீரென வொப்புநாங் கண்டே
விண்டு பேசிட வேண்டுமே வேளெனி னனங்க
னண்டர் நாட்டினி லுண்டெனி னவனையா மறிபேம்.

(ப - ரை.) ஒள்தரும் - (ஒரு பெண்ணானவள் மற்றப் பெண்களைப்பார்த்து) அழகிய, குழலீர் - கூந்தலையுடைய மாதர்களே, கண்ட - பார்த்த, நீர் - நீங்கள், வசவேசுரர் - வசவேசருடைய, காட்சியை - அற்புதக்காட்சியை, உரைப்பீர் - சொல்லுங்கள், என்ன - என்று மோகித்து கேட்டலும், நாம் - (அதுகேட்ட மாதர்கள்) நாங்கள், ஒப்பு - ஒரு உவமானத்தை, கண்டே - பார்த்தே, விண்டுபேசிடவேண்டும் - பகிரங்கமாய்ச் சொல்ல வேண்டும், வேள் என்னின் - மன்மதனோவென்றால், அனங்கன் - அவன் உருவமில்லாதவன், அண்டர் நாட்டினில் - தேவலோகத்தில், உண்டு என்னின் - இருக்கின்றானென்றால், அவனை - அம் மன்மதனை, யாம் - நாங்கள், அறியேம்-பார்த்தறியமாட்டோம், எ - று.

(பொ - ரை.) ஒரு பெண்ணானவள் மற்றப் பெண்களைப்பார்த்து, அழகுபொருந்திய கூந்தலையுடைய மாதர்களே! பார்த்த நீங்கள் வசவதேவருடைய அற்புதக்காட்சியைச் சொல்லுங்களென்று மோகித்துக் கேட்டலும், அதுகேட்ட மாதர்கள் நாங்கள் ஒரு உவ

மானத்தைப் பார்த்தே பகிரங்கமாய்ச் சொல்லவேண்டும், மன்மதனே? என்றால் அவன் உருவமில்லாதவன்; தேவலோகத்தி லிருக்கின்றானென்றால் அம் மன்மதனை நாங்கள் பார்த் தறியமாட்டோம்.

(வி - ரை.) வேள் - ஆகுபெயர். அனங்கன் - உடம்பில்லாதவன், இத்தன்மை மன்ம தனுக்குண்டானது சிவபெருமானது நுதற்கண்ணால் நீறுபட்டமையாலென்க. (உடு)

ஐய நுண்ணிடை யரிவைகங் காம்பையார் முன்னஞ்
செய்ய ருந்தவந் தவமலா லெமெலாஞ் செனித்தென்
றைய லாயென வல்லகாண் கண்டதே சாலும்
பைய நீயுறப் பார்த்தியான் பார்த்திலே னென்பார்.

(ப - ரை.) ஐயம் - உண்டோ இல்லையோவென்று ஸந்தேஹித்தற்குரிய, நுண் - நுட் பமாகிய, இடை - இடையையுடைய, அரிவை - பெண்ணரசியாகிய, கங்காம்பையார் - கங்காம்பையார், முன்னம் - முற்காலத்தில், செய் - பண்ணிய, அரு - மேன்மையாகிய, தவம் - தவமே, தவம் அல்லால் - தவம் அன்றி, நாம் - நாங்கள், எல்லாம் - எல்லோரும், செனித்து - பிறந்ததனாலுண்டான பயன், என் - யாது, தையலாய் - பெண்ணே, என்ன- என்று சொல்லுதலும், அல்ல - (அதுகேட்ட பெண்) அவ்வாறுரைப்பதுவும் சரியன்று, கண்டதே - அவருடைய திவ்ய விக்ரஹத்தைக் கண்களாற்பார்த்ததே, சாலும் - செய்த தவம் போதும் (என்றுரைத்தலும்), பைய - (அந்தப் பெண்) மெல்ல, நீ - நீயோ, உற - உற்று, பார்த்தி - பார்த்தனை, யான் - நானோ, பார்த்திலேன் - (அதனையும்) பார்க்க வில்லை, என்பார் - என்று சோகங்கொண்டு ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்வா ரானார்கள், எ - று.

(பொ - ரை.) உண்டோ? இல்லையோ? என்று ஸந்தேஹித்தற்குரிய நுட்பமாகிய இடையையுடைய பெண்ணரசியாகிய கங்காம்பையார் முற்காலத்தில் பண்ணிய மேன் மையாகிய தவமே தவமன்றி நாங்களெல்லோரும் பிறந்ததனாலுண்டான பயன் யாது? பெண்ணே! என்று சொல்லுதலும், அதுகேட்ட பெண் நீ யிவ்வாறுரைப்பதுவும் சரி யன்று, அவருடைய திவ்ய விக்ரஹத்தைக் கண்களாற் பார்த்ததே செய்த தவம் போது மென்றுரைத்தலும், அதற்கு அந்தப்பெண், நீயோ மெல்ல உற்றுப்பார்த்தனை, நானோ அதனையும் பார்க்கவில்லை! என்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்வாரானார்கள்.

(வி - ரை.) ஐயம் - அழகாகிய என்றுரைத்தலுமாம். அரிவை - பருவங்குறியாது பெண்ணென்னுந் துணையாய் நின்றது. தவம் - ஆகுபெயர். தையல் - தைபுனையப்பட்ட வள். காண் - முன்னிலை யசை யிடைச்சொல். (உசு)

பார்த்து நெஞ்சகம் பரிதவிப் பதனிலும் பாரா
தார்த்து நாமனம் பிடிப்பதே பெண்மைக ளாங்கா
ணோர்த்து யாமுள நிறுத்திடின் கண்களே யோடி
நேர்த்து நோக்கிடி னென்செய்வே மெனவக நெகிழ்வார்.

(ப - ரை.) பார்த்து - திவ்ய விக்ரஹத்தைக் கண்டு, நெஞ்சகம் - மனம், பரிதவிப்ப தனிலும் - பரிதவிப்பதைக் காட்டிலும், பாராது - காணாமல், நாம் - நாங்கள், மனம் - மனத்தை, ஆர்த்துப்பிடிப்பதே - (வெளிமுகமாகப் போகவிடாமல்) மிகவும் அடக்கிப் பொறுத்துக்கொள்வதே, பெண்மைகள் ஆம் - பெண்களுக்குரிய தர்மங்களாகும், ஓர்த்து - ஆராய்ந்து, யாம் - நாங்கள், உள்ளம் - மனத்தை, நிறுத்திடின் - நிறுத்தினால், கண்களே- கண்கள்தாமே, ஓடி - விரைவாகச்சென்று, நேர்த்து - நேராய், நோக்கிடின் - பார்த்து விட்டால், என்செய்வேம் - யாது செய்வோம், என்ன - என்று சில மாதர்கள் சொல்லி, அகம் நெகிழ்வார் - மனமுருகுவாரானார்கள், எ - று.

(போ - ரை.) திவ்ய விக்ரஹத்தைக் கண்டு மனம் பரிதவிப்பதைக்காட்டிலும் காணுமல் நாங்கள் மனத்தை வெளிமுகமாகப் போகவிடாமல் மிகவுமடக்கிப் பொறுத்துக்கொள்வதே பெண்களுக்குரிய தர்மங்களாகும், ஆராய்ந்து நாங்கள் மனத்தை நிறுத்திஞல் கண்கள்தாமே விரைவாகச்சென்று நோப்ப் பார்த்துவிட்டால் யாது செய்வோம்? என்று சில மாதர்கள் சொல்லி மனமுருகுவாராஞர்கள்.

(வி - ரை.) ஆர்த்தல் - கட்டுதல். பரிதவித்தல் - பரிதபித்தல் என்னும் வடசொற்றிரிபு. பெண்மை - பெண்டன்மை. ஓர்ந்து - ஓர்த்து என வலித்தலாயிற்று. காண் - முன்னிலை யசை யிடைச்சொல். (உஎ)

கரத்தி ஞலுறத் தொழுதுபாங் கண்களாற் கண்டுந்
தரிக்கு மோமனம் புயங்களை யோடியே தழுவ
வுருக்கு நெய்யெனக் கரைந்தது வுளமவ ருன்னிப்
பருத்த கண்களாற் பார்க்கினென் படுவமோ வென்பார்.

(ப - ரை.) யாம் - நாங்கள், கரத்திஞல் - கைகளால், உற - மிகவும், தொழுது - வணங்கி, கண்களால் - கண்களிஞல், கண்டும் - பார்த்தும், மனம் - மனம், தரிக்குமோ - பொறுக்குமோ, புயங்களை - தோள்களை, ஓடி - விரைவாகச்சென்று, தழுவ - ஆலிங்கனஞ் செய்தற்கு, உள்ளம் - மனமானது, உருக்கும் - உருக்கப்பட்ட, நெய் என்ன - நெய்போல, கரைந்தது - உருகிவிட்டது, அவர் - அந்தவசவேசர், உன்னி - திருவுளங்கொண்டு, பருத்த - பெரியவாகிய, கண்களால் - கண்களிஞல், பார்க்கின் - நம்மைக் கண்டுவிட்டால், என் படுவமோ - என்ன பாடுபடுவோமோ, என்பார் - என்று சில மாதர்கள் சோகங்கொண்டு சொல்வாராஞர்கள், எ - று.

(போ-ரை.) நாங்கள் கைகளிஞல் மிகவும் வணங்கிக் கண்களிஞற் பார்த்தும் மனம் பொறுக்குமோ? தோள்களை விரைவாகச்சென்று ஆலிங்கனஞ் செய்தற்கு மனமானது உருக்கப்பட்ட நெய்போல உருகிவிட்டது, அந்த வசவேசர் திருவுளங்கொண்டு பெரியவாகிய கண்களிஞல் நம்மைக் கண்டுவிட்டால் என்ன பாடுபடுவோமோ? என்று சில மாதர்கள் சோகங்கொண்டு சொல்வாராஞர்கள்.

(வி - ரை.) உன்னல் - நினைத்தல். (உஅ)

புண்ணி யத்தொழிற் பதிவிர தையர்கராம் புயத்தா
லெண்ணி லாலத்தி யெடுப்பவ ரிருகர மலராற்
றிண்ணி தானபுட் பாஞ்சலி செய்பவர் தெளிவா
லொண்ணி லாவுபூ வுருத்திர ரிவரென வுரைப்பார்.

(ப - ரை.) புண்ணியத்தொழில் - புண்யகர்மங்களைச் செய்கின்ற, பதிவிரதையர் - கற்புடைய மாதர்கள், கர அம்புயத்தால் - கைத்தாமரைமலர்களால், எண் இல் - கணக்கற்ற, ஆலத்தி எடுப்பவர் - ஆலத்தி யெடுப்பவர்களாகியும், இரு - இரண்டு, கரமலரால் - கைத்தாமரைமலர்களால், திண்ணிதான - மனோத்ருடமான, புட்ப அஞ்சலி செய்பவர் - புஷ்பாஞ்சலி செய்பவர்களாகியும், தெளிவால் - மனத்தெளிவிஞல், ஒள் நிலாவு - சுடர்வீசுகின்ற, பூ உருத்திரர் - பூலோகருத்ரர், இவர் - இந்த வசவேசரே, என்ன - என்றதிசயித்து, உரைப்பார் - சொல்வாராஞர்கள்.

(போ - ரை.) புண்யகர்மங்களைச் செய்கின்ற கற்புடைய மாதர்கள் கைத்தாமரை மலர்களாற் கணக்கற்ற வாலத்தி யெடுப்பவர்களாகியும், இரண்டு கைத்தாமரைமலர்களால் மனோத்ருடமான புஷ்பாஞ்சலி செய்பவர்களாகியும், மனத்தெளிவிஞல் சுடர்வீசுகின்ற பூலோகருத்ரர் இந்த வசவேசரே யென்றதிசயித்துச் சொல்வாராஞர்கள்.

(வி - ரை.) புண்ணியத்தொழிலென்று விதந்தமையால் வேறுதொழில் செய்தறியார் என்பது தெற்றென விளங்கிற்று. புட்பாஞ்சலி - புஷ்பாஞ்சலி என்னும் வடசொற்றிரிபு (இதற்கு மலர்தூவிக் கும்பிடுதல் என்பது பொருள்). பூவுருத்திரர் என்றமையால் வசவேசர் இரண்டாம்சம்பு வென்பது போதரும். உருத்திரர் - ருத்ரர் என்னும் வடசொற்றிரிபு. (உக)

விடுகி லார்களா யாடைகண் மிகவரிந் திடுவார்
வடவை யோமுத்த மாலையோ வெனமனந் தளர்வா
ருடைகு லைந்திரு கரங்களா லெடுத்துடுத் திடுவார்
படைம தன்பக்க பாதியோ பாவியே மென்பார்.

(ப - ரை.) ஆடைகள் - தமது வஸ்த்ரங்களை, விடுகிலார்கள் ஆய் - நழுவவிடாதவர்களாய், மிக - (சிலமாதர்கள்) மிகவும், வரிந்திடுவார் - இறுகக்கட்டுவார்கள், வடவையோ - வடவாமுகாக்நியோ, முத்தமாலையோ - முத்தாரங்களோ, என்ன - என்று, மனம் தளர்வார் - (சில மாதர்கள்) மனஞ்சோர்வடைவார்கள், உடை - ஆடையானது, குலைந்து - அவிழ்ந்து விழுதலும், இரு - இரண்டு, கரங்களால் - கைகளால், எடுத்து - (மறுபடியும்) எடுத்து, உடுத்திடுவார் - (சிலமாதர்கள்) உடுப்பார்கள், படை - சேனைகளையுடைய, மதன் - மன்மதன், பக்கபாதியோ - பக்ஷபாத முள்ளவனோ, பாவியேம் - பாவிகளாகிய நாங்கள் (அறியமாட்டோமே), என்பார் - என்று சிலமாதர்கள் சொல்லுவார்கள், எ - று.

(பொ - ரை.) தமது வஸ்த்ரங்களை நழுவ விடாதவர்களாய்ச் சில மாதர்கள் மிகவும் இறுகக் கட்டுவார்கள், வடவாமுகாக்நியோ? முத்தாரங்களோ? என்று சில மாதர்கள் மனஞ் சோர்வடைவார்கள், ஆடையானது அவிழ்ந்து விழுதலும் இரண்டு கைகளால் மறுபடியு மெடுத்துச் சில மாதர்கள் உடுப்பார்கள், சேனைகளையுடைய மன்மதன் பக்ஷபாத முள்ளவனோ? பாவிகளாகிய நாங்கள் அறியமாட்டோமே! என்று சில மாதர்கள் சொல்லுவார்கள்.

(வி - ரை.) முத்தமாலை மிகச்சுடுதலால் வடவையோவென்று மனந்தளர்வாராயினர். உடை - உடுக்கப்படுவது; உடுக்கையுமது. குலைந்து - செயவெனெச்சத்திரிபு. படை - மாதராகியசேனை. பக்கம் - பக்ஷம் என்னும் வடசொற்றிரிபு. (ஙo)

விரத ராரண வேதியர் வித்தையான் மிக்கார்
பரத நாண்டவ ரன்பர்கள் பல்லாண்டு பல்லாண்டென்
றுரைசெய் வாய்மையி னொலியுடன் விச்சல னுடனே
யரச னீடிய வம்மனை புகுந்தன ரன்னவர்.

(ப - ரை.) விரதர் - விரதங்காப்பவர்களும், ஆரணவேதியர் - வேதப்ராம்மணர்களும், வித்தையால் - அறுபத்து நான்கு கலைகளில், மிக்கார் - வல்ல பண்டிதர்களும், பாத நாண்டவர் அன்பர் - சிவபக்தர்களும், பல்லாண்டு பல்லாண்டு - பல்லாண்டு வாழ்க பல்லாண்டுவாழ்க, என்று - என்று, உரைசெய் - வாழ்த்துகின்ற, வாய்மையின் - சொற்களின், ஒலியுடன் - கோஷத்தோடும், விச்சலனுடன் - விஜ்ஜலராஜனோடும், அரசன் - வேந்தனது, நீடிய - பெரிய, அம் - அழகிய, மனைபுகுந்தனர் - அரண்மனையினுள்ளே, அன்னவர் - வசவேசர் பிரவேசிப்பாராயினர், எ - று.

(பொ - ரை.) விரதங்காப்பவர்களும், வேதப்ராம்மணர்களும், அறுபத்து நான்கு கலைகளில் வல்ல பண்டிதர்களும், சிவபக்தர்களும் பல்லாண்டுவாழ்க! பல்லாண்டு வாழ்க! என்று வாழ்த்துகின்ற சொற்களின் கோஷத்தோடும் விஜ்ஜலராஜனோடும் வேந்தனது பெரிய அரண்மனையினுள்ளே வசவேசர் பிரவேசிப்பாராயினர்.

(வி - ரை.) பல்லாண்டு - அநேக ஸம்வத்ஸரங்கள், இதனீற்றில் இசையெச்சம் வாழ்க வென்னும் வினைசேர்த்துரைத்துக்கொள்க. அம்மனை - அந்த மனை யெனினுமாம். பாதம் - பரதசாஸ்த்ரவிதிப்படி. தாண்டவன் - திருநடநஞ்செய்பவனாகிய சிவபெருமான். மனையதனுளே என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. (௧௧)

மதித வழ்ந்தொளிர் மண்டப மதனுளே வைகி
யதிக தன்பெரு வரிசையா யினவெலா மளித்தே
யெதிரி லாவெழி லமைச்சர் பன்னிருவர்க்குங் கடாங்கள்
குதிகொள் பன்னிரண் டாயிர மிபக்குழு வதற்கும்.

(ப - ரை.) மதி - சந்திரன், தவழ்ந்து - ஊர்ந்து, ஒளிர் - பிரகாசிக்கின்ற, மண்டபம் அதனுள் - ஆஸ்தான மண்டபத்தினுள்ளே, வைகி - தங்கி, தன் - தனது, அதிக பெரு - மிகப்பெரிதாகிய, வரிசையாயின எல்லாம் - திரண்டபொரு ளெல்லாவற்றையும், அளித்து - கொடுத்து, எதிர் இல்லா - நிகரற்ற, எழில் - வலியுடைய, அமைச்சர் பன்னிருவர்க்கும் - பன்னிரண்டு மந்திரிகளுக்கும், கடாங்கள் - மதஜலங்கள், குதிகொள் - பொலிந்திருக்கின்ற, பன்னிரண்டு ஆயிரம் - பன்னீராயிரக் கணக்கான, இபக்குழுவதற்கும் - யானைகளுக்கும், எ - று.

(பொ - ரை.) சந்திரன் ஊர்ந்துப் பிரகாசிக்கின்ற ஆஸ்தான மண்டபத்தினுள்ளே தங்கித் தனது மிகப்பெரிதாகிய திரண்டபொரு ளெல்லாவற்றையும் கொடுத்து, நிகரற்ற வலியுடைய பன்னிரண்டு மந்திரிகளுக்கும், மதஜலங்கள் பொலிந்திருக்கின்ற பன்னீரா யிரக் கணக்கான யானைகளுக்கும்.

(வி-ரை.) தவழ்ந்து - செயவெனெச்சத்திரிபு. மண்டபமதனுள் என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. வரிசை - சீர். குழுவதற்கும் என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி.

வாசி வாசிநூற் றறுபதி னாயிரம் வகைக்கு
மாசில் பன்னிரண் டிலக்கமாம் பதாதிகள் வகைக்குந்
தேசி லங்குதன் குடைநிழ லுலகிற்குஞ் சேர
நீசி றந்தநற் றண்டநா யகனென நிகழ்த்தி.

(ப - ரை.) நூற்று அறுபதின் ஆயிரம் - இலக்ஷத்தறுபதினாயிரக்கணக்கான, வாசி - திறமான, வாசிவகைக்கும் - குதிரைகளுக்கும், மாசு இல் - குற்றமற்ற, பன்னிரண்டு இலக்கம் ஆம் - பன்னிரண்டிலக்ஷக்கணக்கான, பதாதிகள் வகைக்கும் - காலாட்படைகளுக்கும், தேசு இலங்கு - ஒளிபொருந்திய, தன் - தனது, குடை - சந்த்ரவட்டக்குடையின், நிழல் - நிழலில் வாழ்கின்ற, உலகிற்கு - உலகத்தார்க்கும், சேர - ஒருங்கே, நீ - நீயே, சிறந்த நல் - மிகச்சிறந்த, தண்டநாயகன் - தண்டநாயகனாயிருக்கக்கடவை, என - என்று, நிகழ்த்தி - சொல்லி, எ - று.

(பொ - ரை.) இலக்ஷத்தறுபதினாயிரக் கணக்கான திறமான குதிரைகளுக்கும், குற்ற மற்ற பன்னிரண்டிலக்ஷக் கணக்கான காலாட் படைகளுக்கும், ஒளிபொருந்திய தனது சந்த்ரவட்டக்குடையின் நிழலில் வாழ்கின்ற உலகத்தார்க்கும் ஒருங்கே நீயே மிகச்சிறந்த தண்டநாயகனா யிருக்கக்கடவையென்று சொல்லி,

(வி - ரை.) உலகு - ஆகுபெயர். (௧௨)

தோக்க மைச்சர்க ளிருந்திடும் பீடத்தின் றூய
மிக்க பீடமே லிருத்திநற் கோசிக விதங்க
டக்க மாமணி யாரநற் றண்டநா யகர்க்கந்
தக்க ணத்தினில் விச்சல னளித்திருந் தனனில்.

(ப - ரை.) தொக்கு - கூடியிருக்கின்ற, அமைச்சர்கள் - (பன்னிரண்டு) மந்திரிகள், இருந்திடும் - வீற்றிருக்கின்ற, பீடத்தின் - ஆசநங்களினும், மிக்க - உயர்ந்த, தூய - பரிசுத்தமாகிய, பீடமேல் - ஓர் ஆசநத்தின்மீது, இருத்தி - எழுந்தருளச்செய்து, நல் - உயர்ந்த, கோசிக விதங்கள் - பட்டாடை களையும், தக்க - அணியத்தக்க, மா - அழகிய, மணி ஆரம் - ரத்நஹாரங்களையும், நல் - மேன்மைபொருந்திய, தண்டநாயகர்க்கு - வசவேசருக்கு, அங்கு - அவ்விடத்து, அக்கணத்தில் - அந்த க்ஷணத்தில், விச்சலன் - விஜ்ஜலராஜன், அளித்து - வெகுமதியாகக்கொடுத்து, இருந்தளவில் - கொலுவிருந்த மாத்திரத்தில், எ - று.

(பொ - ரை.) கூடியிருக்கின்ற பன்னிரண்டு மந்திரிகள் வீற்றிருக்கின்ற ஆசநங்களினும் மிக்க உயர்ந்த பரிசுத்தமாகிய வோர் ஆசநத்தின்மீது எழுந்தருளச்செய்து, உயர்ந்த பட்டாடைகளையும் அணியத்தக்க அழகிய ரத்நஹாரங்களையும் மேன்மைபொருந்திய வசவேசருக்கு அவ்விடத்து அந்தக்ஷணத்தில் விஜ்ஜலராஜன் வெகுமதியாகக்கொடுத்துக் கொலுவிருந்தமாத்திரத்தில். (கச)

வந்த வன்சபை முன்னரம் மன்னவன் காண
வந்த ரத்தினின் றரலிபி லிகித்ததோ ரோலை
சுந்த ரத்துடன் வீழ்ந்திடத் துணைக்கையா லரச
னிந்த வோலையி தென்னென வெடுத்துக்கொண் டின்பால்.

(ப - ரை.) அவண் - அவ்விடத்திற்கூடியிருக்கின்ற, சபை - மஹாஸபையார்க்கு, முன்னர் - எதிரில், அ - அந்த, மன்னவன் - விஜ்ஜலராஜன், காண - பார்க்கும்படி, அந்தரத்தில்நின்று - ஆகாயத்திலிருந்து, அர லிபி லிகித்தது - சிவலிபியினால் எழுதப்பட்டதாகிய, ஓர் - ஒரு, ஓலை - ஓலைச்சுருளானது, சுந்தரத்துடன் - அழகாக, வந்து - வந்து, வீழ்ந்திட - விழுந்தமாத்திரத்தில், அரசன் - விஜ்ஜலராஜன், துணை - (தனது) இரண்டு, கையால் - கைகளாலும், இந்த ஓலை - இந்த ஓலைச்சுருளைப்பார்த்து, ஈது - இது, என் என்ன - யாதாயிருக்குமென்று அதிசயித்து, இன்பால் - சந்தோஷத்துடன், எடுத்துக் கொண்டு - தூக்கிக்கொண்டு, எ - று.

(பொ - ரை.) அவ்விடத்திற் கூடியிருக்கின்ற மஹாஸபையார்க்கெதிரில் அந்த விஜ்ஜலராஜன் பார்க்கும்படி ஆகாயத்திலிருந்து சிவலிபியினு லெழுதப்பட்டதாகியவொரு ஓலைச்சுருளானது அழகாக வந்து விழுந்தமாத்திரத்தில், விஜ்ஜலராஜன் தனது இரண்டு கைகளாலும் இந்த ஓலைச்சுருளைப் பார்த்து இது யாதாயிருக்குமென்றதிசயித்து, சந்தோஷத்துடன் தூக்கிக்கொண்டு.

(வி - ரை.) அரலிபி - சிவாஜ்ஞையாலாகிய வெழுத்து. (கரு)

அரிய மாவட லிபிமுத லாயின வெல்லாந்
தெரிய வோதிட வல்லபேர் தமையெலாந் தெரிந்தே
வரவ ழைத்திது வாசியு மெனவவர் வாங்கிப்
பரிவி னெவ்வொரு பேர்களாய்ப் பார்த்தறிந் திலராய்.

(ப - ரை.) அரிய - படித்தற்கரிதாகிய, மா - பெருமைபொருந்திய, வடலிபி - வடமொழி எழுத்து, முதலாயின எல்லாம் - ஆதியான வெழுத்துக்க ளெல்லாவற்றையும், தெரிய - உணரும்படி, ஓதிடவல்ல - படிக்கக்கூடிய, பேர்தம்மை எல்லாம் - பண்டிதர்களனைவரையும், தெரிந்து - ஆராய்ந்து, வரவழைத்து - தருவித்து, இது - இந்த வோலைச்சுருளை, வாசியும் - படித்துப் பொருள் சொல்லுங்கள், என்ன - என்று கேட்டலும் அவர் - அந்தப் பண்டிதர்கள் (அவ்வோலைச்சுருளை), வாங்கி - கையில் வாங்கிக்கொண்டு,

பரிவின் - விருப்பத்தோடு, ஒவ்வொரு பேர்களாய் - ஒவ்வொருத்தராய், பார்த்து - வாசித்துப்பார்த்து, அறிந்திலர் ஆய் - பொருள் தெரியாதவர்களாகி, எ - று.

(பொ - ரை.) படித்தற்கரிதாகிய பெருமைபொருந்திய வடமொழி யெழுத்தாதியான வெழுத்துக்களெல்லாவற்றையும் உணரும்படிப் படிக்கக்கூடிய பண்டிதர்களனைவரையும் ஆராய்ந்துத் தருவித்து, இந்த வோலைச்சுருளைப் படித்துப் பொருள் சொல்லுங்களென்று கேட்டலும், அந்தப் பண்டிதர்கள் அவ்வோலைச்சுருளைக் கையில் வாங்கிக்கொண்டு விருப்பத்தோடு ஒவ்வொருத்தராய் வாசித்துப்பார்த்துப் பொருள் தெரியாதவர்களாகி.

(வி - ரை.) பேர்தமை என்பதில் தம் - சாரியை. (கூசு)

இவ்வெ ழுத்தினை யிதுவென வறிந்துரைத் திடுவார்
கொவ்வை வாயுமை பாகத்தன் கணபதி குமர
னவ்வ வர்க்கலா லமரர்க்கு மறியொணு வரசே
திவ்வி யத்ததிவ் வோலையென் றனைவருந் திகைத்தார்.

(ப - ரை.) இ - இந்த (புராதனமான), எழுத்தினை - எழுத்தை, இது - இதன்பொருள் இத்தன்மைத்து, என்ன - என்று, அறிந்து - உணர்ந்து, உரைத்திடுவார் - சொல்லக் கூடியவர்கள் (யாவரெனின்), கொவ்வை - கோவைக்கனிபோன்ற, வாய் - அதரத்தையுடைய, உமை - உமாதேவியாரின், பாகத்தன் - பாகத்தனாகிய சிவபெருமான், கணபதி - விநாயகன், குமரன் - முருகன் (ஆகிய இவர்களே யாவர்), அவ்வவர்க்கு அல்லால் - (அவ்வெழுத்தை யறிந்துப் பொருள்சொல்லுதல்) அவர்களுக்கேயன்றி, அமரர்க்கும் - (ஹரிப்ரஹ்மாதி) தேவர்களுக்கும், அறி ஒண்ணு - தெரிந்துகொள்ளமுடியா, அரசே - வேந்தனே, இ - இந்த, ஓலை - ஓலைச்சுருளானது, திவ்வியத்தது - தெய்வீகமானது, என்று - என்று சொல்லி, அனைவரும் - எல்லோரும், திகைத்தார் - பிரமித்தார்கள், எ - று.

(பொ - ரை.) இந்த புராதனமான வெழுத்தை இதன் பொருளித்தன்மைத்தென்று தெரிந்து சொல்லக்கூடியவர்கள் யாவரெனின் :—கோவைக்கனிபோன்ற அதரத்தையுடைய உமாதேவியாரின் பாகத்தனாகிய சிவபெருமான், விநாயகன், முருகனாகிய இவர்களே யாவர், அவ்வெழுத்தையறிந்து பொருள்சொல்லுதல் அவர்களுக்கேயன்றி ஹரிப்ரஹ்மாதி தேவர்களுக்குந் தெரிந்துகொள்ள முடியா, வேந்தனே! இந்த வோலைச்சுருளானது தெய்வீகமானதென்று சொல்லி எல்லோரும் பிரமித்தார்கள்.

(வி - ரை.) கொவ்வை, அரசு - ஆகுபெயர்கள். (கூஎ)

மன்ன னிதினை வாசிக்க வல்லவா ரென்றே
யுன்னி நந்திக ளொண்கரங் கொடுத்ததும் வாங்கி
யன்ன வோலையை யரசன்முன் னோதினா ரரச
னின்ன வாசகத் தத்தமே தென்னவங் கிசைப்பார்

(ப - ரை.) மன்னன் - விஜ்ஜலராஜன், இதினை - இந்த வோலைச்சுருளை, வாசிக்க வல்லவர் - படிக்கக்கூடியவர்களில், ஆர் - யார், என்று - இருக்கின்றார்களென்று, உன்னி - யோசித்து, நந்திகள் - வசவேசரது, ஒள் - அழகிய, கரம் - திருக்கரத்தில், கொடுத்தலும் - தந்தமாத்திரத்தில், அன்ன - (வசவதேவரும் யாவராலும் படித்தற்கரிதாகிய) அப்படிப்பட்ட, ஓலையை - ஓலைச்சுருளை, வாங்கி - வாங்கிக்கொண்டு, அரசன் முன் - விஜ்ஜலராஜனுக்கெதிரில், ஓதினார் - வாசித்தார், அரசன் - விஜ்ஜலராஜனும், இன்ன வாசகத்து - இந்த வசனத்தின், அத்தம் - பொருள், ஏது - யாது, என்ன - என்று கேட்டலும், அங்கு - அவ்விடத்தில், இசைப்பார் - (வசவதேவரும்) சொல்லுவாராளுர் (எவ்வாறெனின்), எ - று.

(பொ - ரை.) விஜ்ஜலராஜன் இந்தவோலைச்சுருளைப் படிக்கக்கூடியவர்களில் யார் இருக்கின்றார்கள்? என்று யோசித்து, வசவதேவரது அழகிய திருக்கரத்தில் தந்தமாத்

திரத்தில், வசவதேவரும் யாவராலும் படித்தற்கரிதாகிய வோலைச்சுருளை வாங்கிக்கொண்டு, விஜ்ஜலராஜனுக் கெதிரில் வாசித்தார், விஜ்ஜலராஜனும் இந்த வசனத்தின் பொருள் யாது? என்று கேட்டலும், அவ்விடத்தில் வசவதேவரும் சொல்லுவாராயினர், எவ்வாறெனின்:—

(வி - ரை.) அத்தம் - அர்த்தம் என்னும் வடசொற்றிரிவு. (௯௮)

நீசெ னிக்குமு னின்பிதா தாபித்த தாக
வாசி லெண்பத்தெண் கோடியா மருந்தன மரச
தேச ளிக்குநின் செய்யசிங் காதனத் தடியே
வாச மாயிருக் கின்றதென் கின்றதிவ் வசனம்.

(ப - ரை.) அரச - அரசனே, இ - இந்த, வசனம் - வாசகமானது, நீ - நீ, செனிக்கு முன் - பிறப்பதற்குமுன்பே, நின் - உன்னுடைய, பிதா - தந்தை, தாபித்ததாக - புதைத்ததாக, ஆசு இல் - குற்றமற்ற, எண்பத்து எண்கோடி ஆம் - எண்பத்தெட்டுக்கோடிக் கணக்கான, அரு - தேடுதற்கருமையாகிய, தனம் - பொன், தேசு அளிக்கும் - ஒளிவீசுகின்ற, நின் - உன்னுடைய, செய்ய - மேன்மைபொருந்திய, சிங்காதனத்து அடியே - சிங்காதனத்தின்கீழே, வாசமாயிருக்கின்றது - நிலைத்திருக்கின்றது, என்கின்றது - என்று சொல்லுகின்றது, எ - று.

(பொ - ரை.) அரசனே! இந்தவாசகமானது நீ பிறப்பதற்கு முன்பே உன்னுடைய தந்தை புதைத்ததாகக் குற்றமற்ற எண்பத்தெட்டுக்கோடிக் கணக்கான தேடுதற்கருமையாகிய பொன் உன்னுடைய ஒளிவீசுகின்ற மேன்மைபொருந்திய சிங்காதனத்தின் கீழே நிலைத்திருக்கின்றதென்று சொல்லுகின்றது.

(வி - ரை.) சிங்காதனம் பொன்னினாலும் மணிகளினாலு மியன்றதாதலால் தேசளிக்கும் சிங்காதனம் என்றார். (௯௯)

ஐய மில்லைநின் னங்கங்க ளருங்களிப் பெய்தத்
தூய நன்னிதி காட்டுவன் றோட்டுதி யென்ன
மெய்ய தென்னவே யகழ்ந்திட விளங்கொளிக் கதிரோ
னையைபா கத்தன் பாங்கன்முன் வைத்தவத் தனமோ.

(ப - ரை.) ஐயம் - இந்த வசனத்துக்கு ஸந்தேகமும், இல்லை - இன்று, நின் - உன்னுடைய, அங்கங்கள் - உறுப்புக்களாகச் சூழ்ந்திருக்கப்பட்டவர்களெல்லாரும், அரு - கிடைத்தற்கரிய, களிப்பு - மகிழ்ச்சி, எய்த - அடைய, தூய - பரிசுத்தமாகிய, நல் - சிறந்த, நிதி - பொன்னை, காட்டுவன் - காண்பிப்பேன், தோட்டுதி - தோண்டச்செய்யக் கடவை, என்ன - என்று வசவதேவர் சொல்லுதலும், மெய் என்னவே - அதுகேட்ட விஜ்ஜலராஜன் அவர் திருவாய்மலர்ந்தருளியது ஸத்யமென்றே துணிந்து, அகழ்ந்திட - தோண்டுதலும், ஒளிவிளங்கு - பிரகாசிக்கின்ற, கதிரோ - சூரியனோ, ஐயை - உமாதேவியாரை, பாகத்தன் - பக்கத்திலுடையவனாகிய சிவபெருமானது, பாங்கன் - தோழனாகிய குபேரன், முன் - முற்காலத்தில், வைத்த - புதைத்துவைத்த, அந்த - அந்த, தனமோ - ஸம்பத்தோ, எ - று.

(பொ - ரை.) இந்த வசனத்துக்கு ஸந்தேகமின்று, உன்னுடைய உறுப்புக்களாகச் சூழ்ந்திருக்கு மெல்லோரும் கிடைத்தற்கரிய மகிழ்ச்சியடைய பரிசுத்தமாகிய சிறந்த பொன்னைக் காண்பிப்பேன், தோண்டச்செய்யக் கடவையென்று வசவதேவர் சொல்லுதலும், அதுகேட்ட விஜ்ஜலராஜன் அவர் திருவாய் மலர்ந்தருளியது ஸத்யமென்றே துணிந்து தோண்டுதலும், பிரகாசிக்கின்ற சூரியனோ? உமாதேவியாரைப் பக்கத்திலுடைய சிவபெருமானது தோழனாகிய குபேரன் முற்காலத்தில் புதைத்துவைத்த அந்த ஸம்பத்தோ?

(வி-ரை.) தூய்ய நன்னிதி - நன்னெறியானீட்டிய தனம். கதிர் - ஆகுபெயர். அங்கங்கள் - தேகமடங்கலு மெனினுமாம். அங்கங்கள் களித்தல் - மயிர்சிலிர்த்தல் எனினுமாம்.

கனக வெற்பின்மேற் கவிசனை வாங்கிய கணக்கோ
வெனமி குத்தவண் சோதியா யெழுவது கண்டு
தனகி விச்சலன் றண்டநா யகர்தமைத் தொழுதே
யனக நீயிரண் டாஞ்சம்பு வென்பதின் றறிந்தேன்.

(ப - ரை.) கனகம் - பொன், வெற்பின் - மலையின், மேல் - மீதுபோர்த்திருந்த, கவிசனை - மூடுசீலையை, வாங்கிய - கழற்றியெடுத்துவிட்ட, கணக்கோ - தன்மையோ, என்ன - என்று அதிசயித்துச்சொல்லும்படி, மிகுத்த - மேலான, வண்சோதி ஆய் - பேரொளியாய், எழுவது - தோன்றுவதை, கண்டு - பார்த்து, தனகி - மனமகிழ்ச்சியுடையனாகிய, விச்சலன் - விஜ்ஜலராஜன், தண்டநாயகர்தம்மை - வசவேசரை, தொழுது - வணங்கி, அனக - பரிசுத்தனே, நீ - நீ, இரண்டாம்சம்பு - இரண்டாம்சிவம், என்பது - என்றுசொல்லும் வசநத்தினுண்மையை, இன்று - இன்றையத்தினம், அறிந்தேன் - உணர்ந்தனன், எ - று.

(பொ - ரை.) பொன்மலையின்மீது போர்த்திருந்த மூடுசீலையைக் கழற்றியெடுத்துவிட்ட தன்மையோ? என்று அதிசயித்துச் சொல்லும்படி மேலான பேரொளியாய்த் தோன்றுவதைப்பார்த்து, மனமகிழ்ச்சியுடையனாகிய விஜ்ஜலராஜன் வசவேசரை வணங்கி, பரிசுத்தனே! நீ இரண்டாம் சிவமென்று சொல்லும் வசநத்தினுண்மையை இன்றையத்தினம் உணர்ந்தனன்.

(வி-ரை.) கனகவெற்பு - மேருமலை. தனகு - மனக்களிப்பு, அதனையுடையவன் தனகி. தண்டநாயகர்தமை என்பதில் தம் - சாரியை. (௬௪)

என்ன வத்தன மெடுத்துநற் றிட்டம திடலு
மன்ன லக்கமா யிருத்தல்கண் டதிகவாச் சரிய
மன்னு நெஞ்சுடன் விச்சல னமாத்தியர் மற்றோர்
பின்னை யுந்தண்ட நாதரைத் துதித்தனர் பெரிதாய்.

(ப - ரை.) என்ன - என்றுசொல்லி, அ - அந்த, தனம் - பொன்னை, எடுத்து - எடுத்து, நல் - நன்றாக, திட்டம் இடலும் - (ஏவலாளர்களைக்கொண்டு) கணக்கிட்டுப்பார்த்தலும், அன்ன - அந்தவெண்பத்தெட்டுகோடி, லக்கம் ஆய் இருத்தல் - கணக்காயிருத்தலை, கண்டு - பார்த்து, அதிக - மிகுந்த, ஆச்சரியம் - அதிசயம், மன்னும் - பொருந்திய, நெஞ்சுடன் - மனத்தோடு, விச்சலன் - விஜ்ஜலராஜனும், அமாத்தியர் - மந்திரிகளும், மற்றோர் - மற்றவர்களும், பின்னையும் - பின்னும், தண்டநாதரை - வசவேசரை, பெரிதாய் - விசேஷமாக, துதித்தனர் - தோத்திரஞ்செய்தார்கள், எ - று.

(பொ - ரை.) என்றுசொல்லி, அந்தப் பொன்னையெடுத்து நன்றாக ஏவலாளர்களைக் கொண்டு கணக்கிட்டுப்பார்த்தலும், அந்த வெண்பத்தெட்டுகோடிக் கணக்காயிருத்தலைப் பார்த்து, மிகுந்த வதிசயம் பொருந்திய மனத்துடனே விஜ்ஜலராஜனும், மந்திரிகளும், மற்றவர்களும், பின்னும் வசவேசரை விசேஷமாகத் தோத்திரஞ்செய்தார்கள். (௬௫)

விச்ச லன்வச வேசரை விரும்பிநோக்கி
யிச்சை பேசியென் னங்கங்க ளனைத்தையு மெனையு
நிச்ச யந்தரும் பரிவினு னிறத்துதி யென்ன
வச்ச மில்லராந் தண்டநா யகருமங் கறைவார்.

(ப - ரை.) விச்சலன் - விஜ்ஜலராஜன், வசவேசரை - வசவதேவரை, விரும்பி - அன்புடன், நோக்கி - பார்த்து, இச்சை - தனக்கிஷ்டமானவற்றை, பேசி - சொல்லி;

என் - என்னுடைய, அங்கங்கள் அனைத்தையும் - சதுரங்கசேனை முதலியவெல்லாவற்றை யும், என்னையும் - அடியேனையும், நிச்சயம் தரும் - உறுதியான, பரிவினால் - அன்புடன், நிறுத்துதி - நிலைபெறச் செய்யக்கடவை, என்ன - என்றுபிரார்த்தித்த மாத்திரத்தில், அச்சம் இல்லர் ஆம் - பயமற்றவராகிய, தண்டநாயகரும் - வசவேசரும், அங்கு - அவ் விடத்து, அறைவார் - சொல்லுவாராயினர் (எவ்வாறெனின்) எ - று.

(பொ - ரை.) விஜ்ஜலராஜன் வசவதேவரை யன்புடன்பார்த்து தனக் கிஷ்டமான வற்றைச்சொல்லி, என்னுடைய சதுரங்கசேனை முதலியவெல்லாவற்றையும் அடியேனையும் உறுதியான அன்புடன் நிலைபெறச் செய்யக்கடவையென்று பிரார்த்தித்தமாத்திரத்தில், பயமற்றவராகிய வசவேசரும் அவ்விடத்துச் சொல்லுவாராயினர், எவ்வாறெனின் :—

(வி-ரை.) இதனால், விஜ்ஜலராஜன் வசவேசரது மஹிமையைப்பார்த்து, இவர் இரண் டாம்சம்பு வென்றுகொண்ட உறுதியினாலும், இவரால் தான் எவ்வகையினாலும் கடைத் தேறலாமென்னும் நிச்சயத்தினாலும், நற்கதி லபிக்கக்கூடுமென்னும் நம்பிக்கையினாலும், ஜீவன்முக்தரானவர் சகலமும் சிவார்ப்பணஞ்செய்தல்போன்று இவ்வரசனும் வசவேச ருக்குத் தனது உடல் பொருள் ஆவியென்னும் மூப்பொருளையும் தத்தஞ் செய்தனரென் பது பெறப்பட்டது. என்னை - உயிரை ; அங்கங்கள் - உடல், பொருள் எனினுமாம். (சஙு)

நிருத்த னீடில கனைத்தையு நிறுத்தர னின்னை
பொருத்த னைப்பரிந் தாள்வதோ பாரமோ ருரைகேள்
கருத்து ணீசிவன் கருத்தனென் றிருப்பையேற் கனமோ
திருத்தி மண்புரப் பதுவென நந்திகள் செப்ப.

(ப - ரை.) நிருத்தன் - சிவபெருமான், நீடு - பெரிய, உலகு அனைத்தையும் - உலக முழுமையும், நிறுத்து - நிலைபெறச்செய்தற்குரிய, அரன் - இறைவனாகும், நின்னை ஒருத் தனை - (ஆதலால்) உன்னைபொருவனை மாத்திரம், பரிந்து - கருணைசெய்து, ஆள்வதோ - ஆண்டருள்வதோ, பாரம் - அவனுக்குக்கனமாகும், ஓர் - ஒரு, உரை - நலவ வார்த் தையை, கேள் - கேட்கக்கடவை, நீ - நீ, கருத்துள் - உனது மனத்தில், சிவன் - சிவ பெருமானே, கருத்தன் - இறைவன், என்று - என்று நிச்சயித்து, இருப்பையேல் - இருப் பாயானால், மண் - பூமியை, திருத்தி - சீர்திருத்தி, புரப்பது - ஆள்வது, கனமோ - பார மாகுமோ, என்ன - என்று, நந்திகள் - வசவேசர், செப்ப - சொல்லுதலும், எ - று.

(பொ - ரை.) சிவபெருமான் பெரிய உலகமுழுமையும் நிலைபெறச் செய்தற்குரிய இறைவனாகும், ஆதலால் உன்னை பொருவனைமாத்திரம் கருணைசெய்தாண்டருள்வதோ அவனுக்குக் கனமாகும்? ஒரு நல்லவார்த்தையைக் கேட்கக்கடவை, நீ உனது மனத்தில் சிவபெருமானே இறைவனென்று நிச்சயித்திருப்பாயானால், பூமியைச் சீர்திருத்தி யாள் வது பாரமாகுமோ? என்று வசவேசர் சொல்லுதலும்.

(வி - ரை.) நிருத்தன் - கூத்தன். ஆள்வதோ, கனமோ என்னும் ஓகாரங்கள் எதிர் மறைகள். (சச)

தருக்கி விச்சல னுரைசெய்வான் மரங்களிற் றருவுங்
கிரிக்குள் மேருவுங் கிளரொளி மணியினு மவையு
ளருத்தி யானசிந் தாமணி யதுவுநற் பசுவுட்
டெரித்த தெய்வநற் றேனுவுந் தேவருட் சிவனும்.

(ப - ரை.) விச்சலன் - விஜ்ஜலராஜன், தருக்கி - செருக்கடைந்து, உரைசெய்வான் - சொல்லுவானாயினன் (எவ்வாறெனின்), மரங்களில் - விருக்ஷங்களில், தருவும் - கற்பக விருக்ஷமும், கிரிக்குள் - பர்வதங்களில், மேருவும் - மஹாமேருபர்வதமும், கிளர் ஒளி - மிகுந்த பிரகாசத்தையுடைய, மணியினம் அவையுள் - தேவமணிகளில், அருத்தி ஆன -

ஆசையுள்ள, சிந்தாமணியதுவும் - சிந்தாமணியும், நல் - சிறந்த, பசு உள் - பசுக்களில், தெரித்த - தெரிந்தெடுக்கப்பட்ட, தெய்வம் - தெய்வீகம் பொருந்திய, நல் - நல்ல, தேனுவும் - காமதேநுவும், தேவருள் - தேவர்களில், சிவனும் - சிவபெருமானும், எ-று.

(பொ - ரை.) விஜ்ஜலராஜன் செருக்கடைந்து சொல்லுவானாயினன், எவ்வாறெனின்:—வ்ருக்ஷங்களில் கற்பகவ்ருக்ஷமும், பர்வதங்களில் மேருமலையும், மிகுந்த பிரகாசத்தையுடைய தேவமணிகளில் ஆசையுள்ள சிந்தாமணியும், சிறந்த பசுக்களில் தெரிந்தெடுக்கப்பட்ட தெய்வத் தன்மையுள்ள நல்ல காமதேநுவும், தேவர்களில் சிவபெருமானும்.

(வி - ரை.) தரு - வ்ருக்ஷங்கள் ஐந்து:—மந்தாரம், பாரிசாதம், அரிசந்தநம், சந்தாநம், கற்பகம். கிரிகள் - மலைகள் எட்டு:— கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், மேரு, கந்தமாதநம். மணி - தேவமணி மூன்று:— சங்கநிதி, பத்மநிதி, சிந்தாமணி. பசுக்கள் - ஐந்துவகைத் தேவபசுக்கள்:—நந்தை, பத்திரை, சுரபி (காமதேநு), சுசீலை, சுமனை. தேவருள் என்பது இருவருள் என்றும்பாடம்; இருவர் என்றது சிவ விஷ்ணுக்களை. சிந்தாமணியதுவும் என்பதில் அது - பகுதிப்பொருள்விகுதி. (௬௩)

போல மைச்சர்க ளனைவருட் பூச்சிய ராகிக்
கோல மேவுதி ரென்றரு வளமெலாங் கொடுத்தே
சீல நற்பல தேவனா ரகத்தினிற் சென்றே
மேல ராயிரு மென்றெதிர் விச்சலன் விளம்ப.

(ப - ரை.) போல் - போல, அமைச்சர்கள் அனைவருள் - எல்லாமந்திரிகளில், பூச்சியர் ஆகி - பூஜ்யராய், கோலம் - அழகு, மேவுதிர் - பெறக்கடவீர், என்று - என்று சொல்லி, அரு - அருமையாகிய, வளம் எல்லாம் - செல்வமெல்லாவற்றையும், கொடுத்து - தந்து, சீலம் - சன்மார்க்கத்தையுடைய, நல் - சிறந்த, பலதேவனார் - ஸ்ரீ பலதேவராது, அகத்தினில் - திருமனைக்கு, சென்று - போய், மேலர் ஆய் - மேன்மையுடையவராய், இரும் என்று - இருக்கக்கடவீர் என்று, விச்சலன் - விஜ்ஜலராஜன், எதிர் - நேரே, விளம்ப - சொன்ன மாத்திரத்தில், எ - று.

(பொ - ரை.) போல எல்லா மந்திரிகளில் பூஜ்யராய் அழகுபெறக்கடவீரென்று சொல்லி, அருமையாகிய செல்வமெல்லாவற்றையுந் தந்து, சன்மார்க்கத்தையுடைய சிறந்த ஸ்ரீ பலதேவராது திருமனைக்குப்போய், மேன்மையுடையவராயிருக்கக்கடவீரென்று விஜ்ஜலராஜன் நேரே சொன்னமாத்திரத்தில்.

(வி - ரை.) பூச்சியர் - பூஜ்யர் என்னும் வடசொற்றிரிபு. பூஜ்யர் - பூஜிக்கப்படுதற்குரியர். (௬௪)

எழுந்து நற்றண்ட நாயகர் சிவபக்தர் புடையே
யொழுங்கி வந்திடச் சேனையோ டின்னிய முவரி
முழங்கல் போன்மிக முழங்கிமுன் னார்த்தெழச் சென்று
விழைந்த தம்கணன் மாமனா ரகத்தினை மேவி.

(ப - ரை.) நல் - சன்மார்க்கத்தையுடைய, தண்டநாயகர் - வசவேசுரர், அவ்விடத்தினின்றும் எழுந்து, சிவபக்தர் - சிவபக்தர்கள், புடையே - பக்கங்களிலே, ஒழுங்கி - ஒழுங்காக, வந்திட - வரவும், சேனையோடு - படைகளுடனே, இன் - இனிய வோசையையுடைய, இயம் - வாத்தியங்கள், உவரி - கடல், முழங்கல்போல் - சத்தித்தல் போல, மிக - மிகவும், முழங்கி - சத்தித்து, முன் - எதிரே, ஆர்த்து எழ - ஆரவாரித்தெழாநிற்கவும், சென்று - போய், தம்கண் - தம்மிடத்து, விழைந்த - விருப்பம் வைத்த, நல் - சிறந்த, மாமனார் - மாமனாராகிய ஸ்ரீ பலதேவராது, அகத்தினை - திருமனைக்குள்ளே, மேவி - சென்று, எ - று.

(பொ - ரை.) சன்மார்க்கத்தையுடைய வசவேசரும் அவ்விடத்தினின்று மெழுந்து, சிவபக்தர்கள் பக்கங்களிலே யொழுங்காக வரவும், படைகளுடனே இனிய வோசையையுடைய வாத்தியங்கள் கடல் சத்தித்தல்போலச் சத்தித்து எதிரே ஆரவாரித்தெழாநிற்கவும் போய்த் தம்மிடத்து விருப்பம்வைத்த சிறந்த மாமனாராகிய ஸ்ரீ பலதேவரது திருமனைக்குள்ளே சென்று. (சஎ)

சிவனருச்சனை சிவத்துதி நேயரா யிருந்தா
ரிவரை விச்சல னெய்தலா லிருநில முழுதுங்
கவலை நீங்கின கடவுளர் பூசனை கனத்த
தவிகொ ளாகுதி நிறைந்தன வளமெலா மணைந்த.

(ப - ரை.) சிவன் அருச்சனை - சிவபூஜையிலும், சிவத்துதி - சிவஸ்தோத்ரத்திலும், நேயர் ஆய் இருந்தார் - அன்புடையவராயிருந்தவராகிய, இவரை - இவ் வசவதேவரை, விச்சலன் - விஜ்ஜலராஜன், எய்தலால் - அடைந்திருத்தலால், இரு - பெரிய, நிலம் முழுதும் - உலகமுற்றிலும், கவலை - துக்கங்களும், நீங்கின - ஒழிந்தன, கடவுளர் பூசனை - தேவதாராதனைகளும், கனத்த - மிக்கன, அவிகொள் - அவிசைக்கொண்ட, ஆகுதி - ஆஹுதிகளும், நிறைந்தன - நிரம்பின, வளம் எல்லாம் - எல்லாச்செல்வங்களும், அணைந்த - சேர்ந்தன, எ - று.

(பொ - ரை.) சிவபூஜையிலும் சிவஸ்தோத்ரத்திலும் அன்புடையவராயிருந்தவராகிய இவ் வசவதேவரை விஜ்ஜலராஜன் அடைந்திருத்தலால் பெரியவுலக முற்றிலும் துக்கங்களு மொழிந்தன, தேவதாராதனைகளும் மிக்கன, அவிசைக்கொண்ட ஆஹுதிகளும் நிரம்பின, எல்லாச் செல்வங்களும் சேர்ந்தன.

(வி - ரை.) நிலம் - ஆகுபெயர். ஆகுதி - ஆஹுதி என்னும் வடசொற்றிரிபு. (சஅ)

இனைய நாளிலே யெம்பிரான் வசவேச னிகிழ்நாய்த்
தினமு நற்சிவ ராத்திரி விரதமே செய்வார்
புனித ரன்பரே புனிதனென் றென்னுமெய்ப் பரிவு
நினைவி லும்மவர் குற்றங்க ணினைந்திடா நெறியும்.

(ப - ரை.) இனையநாளிலே - இவ்வாறு நடைபெறு மகிழ்ந்திருக்குங் காலத்திலே, எம் - நமது, பிரான் - தலைவராகிய, வசவேசர் - வசவேசர், இகழ்நாய் - மகிழ்ச்சியுடன், தினமும் - நாடோறும், நல் - சிறந்த, சிவராத்திரி விரதமே - மஹா சிவராத்திரி விரதத்தையே, செய்வார் - அநுஷ்டிப்பவராயினர், புனிதர் அன்பரே - சிவபக்தர்களே, புனிதன் - சிவபெருமான், என்று - என்று, என்னும் - பாவிக்கின்ற, மெய் - உண்மையாகிய, பரிவும் - அன்பும், நினைவிலும் - மனத்திலும், அவர் - அச் சிவபக்தர்களது, குற்றங்கள் - பிழைகளை, நினைந்திடா - நினைக்காத, நெறியும் - சன்மார்க்கமும், எ - று.

(பொ - ரை.) இவ்வாறு நடைபெறு மகிழ்ந்திருக்குங்காலத்திலே, நமது தலைவராகிய வசவதேவர் மகிழ்ச்சியுடன் நாடோறும் சிறந்த மஹா சிவராத்திரிவிரதத்தையே யநுஷ்டிப்பவராயினர், சிவபக்தர்களே சிவபெருமானென்று பாவிக்கின்ற உண்மையாகிய அன்பும், மனத்திலும் அச் சிவபக்தர்களது பிழைகளை நினைக்காத சன்மார்க்கமும். (ருய)

விஞ்சி யாதுவ தன்பர்க்குக் கொடுத்திடும் வண்மை
நஞ்ச ருந்தின னிடத்திலுங் கேட்கலா வலமு
மஞ்சி முன்னென்று பின்னென்று மொழிதரா வறிவு
நெஞ்சி னுநடு நிலைமையே நீங்கிடா நிலையும்,

(ப - ரை.) உள்ளது - (தமக்கு) உள்ளபொருளை, அன்பர்க்கு - சிவபக்தர்களுக்கே, வஞ்சியாது - வஞ்சனை செய்யாமல், கொடுத்திடும் - தருகிற, வளப்பும் - அழகும், நஞ்சு அருந்தினன் இடத்திலும் - சிவபெருமானிடத்திலும், கேட்கலா - கேட்கப்படாத, நலமும் - விருப்பமும், அஞ்சி - பயந்து, முன் ஒன்று - முன்னொரு சொல்லும், பின் ஒன்று - பின்னொரு சொல்லும், மொழிதரா - சொல்லாத, அறிவும் - விவேகமும், நெஞ்சினும் - மனத்திலும், நடுநிலைமை - நடுவுநிலைமை, நீக்கிடா - நீக்காத, நிலையும் - உறுதியும், எ-று.

(போ - ரை.) தமக்குள்ள பொருளைச் சிவபக்தர்களுக்கே வஞ்சனை செய்யாமல் தருகிற வழகும், சிவபெருமானிடத்திலும் கேட்கப்படாத விருப்பமும், பயந்து முன்னொரு சொல்லும் பின்னொரு சொல்லும் சொல்லாத விவேகமும், மனத்திலும் நடுவு நிலைமை நீங்காத உறுதியும்.

(வி-ரை.) நடுவு நிலைமை - பகைவர், அயலோர், நட்பினரென்னும் மூவகையோரிடத்தும் அறத்தின் வழுவாமல் ஒப்பநிற்கும் நிலைமை. நஞ்சருந்தினோர் வேறொருவரு மின்மையால் சிவபெருமானை நஞ்சருந்தினன் என்றார். நஞ்சருந்தினனிடத்திலும் என்றவும்மை உயர்வு சிறப்பு. (௫௦)

குற்ற மன்பர்பாற் கூடினுந் தமதெனுங் குணமும்
வெற்றி யாற்பர சமயரை வென்றிடும் விறலு
முற்ற றிந்தர னிந்தையர்க் குட்கொடா வுரமு
நற்ற வத்தரை யிகழுரை கேட்கலா நலமும்.

(ப - ரை.) குற்றம் - பிழையானது, அன்பர்பால் - சிவபக்தர்களிடத்தில், கூடினும் - உண்டானாலும், தமது - அது தம்முடையது, எனும் - என்றே பாவிக்கின்ற, குண மும் - நற்குணமும், வெற்றியால் - ஜயத்தினால், பரசமயரை - பிறசமயவாதிகளை, வென்றிடும் - வெல்லுதற்குரிய, விறலும் - வலிமையும், உற்று அறிந்து - ஆராய்ந்தறிந்து, அரனிந்தையர்க்கு - சிவதூஷகர்களுக்கு, உள்கொடா - திருவுளங்கொடுக்காத, உரமும் - ஞானமும், நல் - சன்மார்க்கத்தையுடைய, தவத்தரை - ஜங்கமமூர்த்திகளை, இகழ் - அவமதிக்கின்ற, உரை - சொற்களை, கேட்கலா - கேட்காத, நலமும் - சன்மார்க்கமும், எ - று.

(போ - ரை.) பிழையானது சிவபக்தர்களிடத்தி லுண்டானாலும் அது தம்முடைய தென்றே பாவிக்கின்ற நற்குணமும், ஜயத்தினால் பிறசமயவாதிகளை வெல்லுதற்குரிய வலிமையும், ஆராய்ந்தறிந்து சிவதூஷகர்களுக்குத் திருவுளங்கொடுக்காத ஞானமும், சன்மார்க்கத்தையுடைய ஜங்கமமூர்த்திகளை யவமதிக்கின்ற சொற்களைக் கேட்காத சன்மார்க்கமும்.

(வி - ரை.) அன்பர்பால் என்பதில் பால் - ஏழனுருபு. (௫௧)

திரமி லன்னியர்க் கஞ்சலி செய்கலாத் திறமும்
பரவு சென்மத்துக் கேதுவாந் தொழிலுறாப் பயமு
நிரய வேதுவா மிந்திய வழிசெலா நினைவும்
வரையில் காமமே யாதியா றிலா மறப்பும்.

(ப - ரை.) திரம் இல் - நிலையில்லாத, அன்னியர்க்கு - பிறசமயவாதிகளுக்கு, அஞ்சலிசெய்கலா - கைகுவிக்காத, திறமும் - வலிமையும், பரவு - விரிந்த, சென்மத்துக்கு - பிறவிகளுக்கு, ஏது ஆம் - காரணமாகிய, தொழில் - கர்மங்கள், உறா - சேராத, பயமும் - அச்சமும், நிரயம் - நரகலோகத்துக்கு, ஏது ஆம் - காரணமாகிய, இந்தியவழி - பஞ்சேந்திரியமார்க்கத்தில், செலா - போகாத, நினைவும் - நினைப்பும், வரை இல் - அளவில்லாத, காமம் ஆதி ஆம் ஆறு இலா - காமம் முதலாகிய ஆறு விகாரங்களில்லாத, மறப்பும் - மறதியும், எ - று.

(போ - ரை.) நிலையில்லாத பிறசமயவாதிகளுக்குக் கைகுவிக்காத வலிமையும், விரிந்த பிறவிகளுக்குக் காரணமாகிய கர்மங்கள் சேராத அச்சமும், நரகலோகத்துக்குக் காரணமாகிய பஞ்சேந்த்ரிய மார்க்கத்திற்போகாத நிலைப்பும், அளவில்லாத காம முதலாகிய ஆறு விகாரங்களில்லாத மறதியும்.

(வி - ரை.) விரிந்தபிறவி - பலபிறவி. பஞ்சேந்த்ரியம் - மெய், வாய், கண், மூக்கு, செவி. காமாதிஆறு - காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மற்சரம், இவைகள் உட்பகையெனப்படும்; இவைகளை அரிஷட்வர்க்கம் என்பர் வடநூலார். (௫௨)

நவின்ற சொற்படி யெப்படி யப்படி நடையு
முவந்து சங்கமத் துயர்ச்சியே நிறுத்துநல் லூரமுஞ்
சிவன்ற னன்பர்பா லடிமையே செய்யுநற் றிறமு
மவன்றன் மேனியே கனவினும் பேணுமெய் யறிவும்.

(ப - ரை.) நவின்ற - சொன்ன, சொற்படி - சொல் விதம், எப்படி - எவ்விதமோ, அப்படி - அவ்விதமே, நடையும் - நடத்தையும், உவந்து - சந்தோஷித்து, சங்கமத்து - ஜங்கமமூர்த்திகளின், உயர்ச்சியே - மேன்மையையே, நிறுத்தும் - நிலைநாட்டுகின்ற, நல் - மஹா, ஊரமும் - பராக்ரமமும், சிவன் தன் அன்பர் பால் - சிவபக்தர்களிடத்தில், அடிமையே - பணிவிடையையே, செய்யும் - செய்கின்ற, நல் - நல்ல, திறமும் - வீரமும், அவன் தன் - அச் சிவபெருமானது, மேனியே - திருமேனியையே, கனவினும் - சொப்பனத்திலும், பேணும் - தரிசிக்க விரும்புகின்ற, மெய் அறிவும் - மெய்ஞ்ஞானமும், எ - று.

(போ - ரை.) சொன்ன சொல் விதம் எவ்விதமோ? அவ்விதமே நடத்தையும், சந்தோஷித்து ஜங்கமமூர்த்திகளின் மேன்மையையே நிலைநாட்டுகின்ற மஹாபராக்ரமமும், சிவபக்தர்களிடத்தில் பணிவிடையையே செய்கின்ற நல்ல வீரமும், அச் சிவபெருமானது திருமேனியையே சொப்பனத்திலும் தரிசிக்க விரும்புகின்ற மெய்ஞ்ஞானமும். (௫௩)

அத்த னன்பர்சொ னூலையே கேட்டுமப் பேராவுஞ்
சுத்த மாதவர் சேடமே யருந்துமா துணிவுஞ்
மெய்த்த வத்தர்சொற் கெதிர்மொழி கொடுக்கலா வெருளு
நித்த சங்கமந் தமதுயி ரிலிங்கமென் னினைவும்.

(ப - ரை.) அத்தன் அன்பர் - சிவபக்தர்கள், சொல் - ஓதுகின்ற, நூலையே - ஞான நூல்களையே, கேட்கும் - கேட்கின்ற, மப் - பெரிய, அவாவும் - ஆசையும், சுத்தம் - பரிசுத்தமாகிய, மாதவர் சேடம் - ஜங்கம ப்ரஸாதத்தையே, அருந்தும் - ஸ்வீகரிக்கின்ற, மா - பெரிய, துணிவும் - துணிச்சலும், மெய்த்தவத்தர் - ஜங்கமமூர்த்திகளது, சொற்கு - வார்த்தைக்கு, எதிர்மொழி - எதிர்வார்த்தையை, கொடுக்கலா - சொல்லாத, வெருளும் - பயமும், நித்தம் - சாசுவதராகிய, சங்கமம் - ஜங்கமமூர்த்திகளே, தமது - தமது, உயிர் இலிங்கம் - ப்ராணலிங்கம், என் - என்கின்ற, நினைவும் - கருத்தும், எ - று.

(போ - ரை.) சிவபக்தர்கள் ஓதுகின்ற ஞான நூல்களையே கேட்கின்ற பேராசையும், பரிசுத்தமாகிய ஜங்கம ப்ரஸாதத்தையே ஸ்வீகரிக்கின்ற பெரிய துணிச்சலும், ஜங்கமமூர்த்திகளது வார்த்தைக்கு எதிர்வார்த்தையைச் சொல்லாத பயமும், சாசுவதராகிய ஜங்கமமூர்த்திகளே தமது ப்ராணலிங்கமென்கின்ற கருத்தும்.

(வி - ரை.) யாவர்க்குந் தந்தையாதலால் சிவபெருமானை அத்தன் என்றார். அத்தன் அன்பர் சொல் நூல் என்றது வேதாகமங்களை. மா - மஹா என்னும் வடசொற்றிரிபு. (௫௪)

பத்தி நற்பயிர் வேலியா மவர்கண்மேற் பரிவு
முத்தி யில்லெனும் புல்லரைக் கண்டிடின் முனிவு
மொத்தி யேதுவந் தடுக்கினுந் தவர்த்தொழு முரமும்
புத்தி யாற்பவி காண்கிலாப் பூசனை யொளிப்பும்.

(ப - ரை.) பத்தி - சிவபக்தியாகிய, நல் - சிறந்த, பயிர் - பயிருக்கு, வேலி ஆம் - வேலிபோன்ற, அவர்கள்மேல் - அந்த ஜங்கமமூர்த்திகளின்மீது, பரிவும் - அன்பும், முத்தி - மோக்ஷம், இல் என்னும் - இல்லையென்கிற, புல்லரை - அற்பராகிய நாத்திகரை, கண்டிடின் - பார்த்துவிட்டால், முனிவும் - கோவமும், ஒத்தி - அடுத்தடுத்து, ஏதுவந்து அடுக்கினும் - எவ்விதமான இடுக்கண் வந்தடைந்தாலும், தவர் - ஜங்கமமூர்த்திகளை, தொழும் - வணங்குகின்ற, உரமும் - திறமையும், புத்தியால் - மனத்தில், பவி - அவிக்கிகள், காண்கிலா - பார்க்காத, பூசனை - சிவலிங்க பூஜைசெய்தலை, ஒளிப்பும் - மறைத்தலும், எ - று.

(பொ - ரை.) சிவபக்தியாகிய சிறந்த பயிருக்கு வேலி போன்ற அந்த ஜங்கமமூர்த்திகளின்மீது அன்பும், மோக்ஷமில்லையென்கின்ற அற்பராகிய நாத்திகரைப் பார்த்துவிட்டால் கோவமும், அடுத்தடுத்தெவ்விதமான விடுக்கண் வந்தடைந்தாலும் ஜங்கமமூர்த்திகளை வணங்குகின்ற திறமையும், மனத்தில் அவிக்கிகள் பார்க்காத சிவலிங்கபூஜை செய்தலை மறைத்தலும்.

(வி - ரை.) பவி - ப்ரக்ருதிஸம்பந்தமுடையவர்கள் (லிங்கதாரணமில்லாதவர்கள்). பவிகள் பார்க்காத மறைவிடங்களில் சிவலிங்கபூஜை செய்யவேண்டியதென்பது தோன்ற புந்தியால் பவி காண்கிலாப்பூசனையொளிப்பும் என்றார். (இரு)

துண்ட மாச்சிரம் வீழினு மரவெனுஞ் சொல்லு
முண்ட நீற்றர னன்பரைத் தொழுங்கர முகிழ்ப்பு
மண்டு நல்விர தத்தரா யிவையொன்று மாறாத்
தண்ட நாயகர் தருக்கியே சரிக்குமந் நாளில்.

(ப - ரை.) சிரம் - தலையானது, துண்டமா - இரண்டு துண்டாக, வீழினும் - அற்று விழுந்தாலும், அர - சிவ, என்னும் - என்று உச்சரிக்கின்ற, சொல்லும் - வார்த்தையும், முண்டம் - நெற்றியில், நீறு - திருவெண்ணீற்றினையணிந்த, அரன் அன்பரை - சிவபக்தர்களை, தொழும் - வணங்குகின்ற, கரமுகிழ்ப்பும் - கைகுவிப்பும், மண்டும் - மிகுந்த, நல் - நல்ல, விரதத்தர் ஆய் - தவத்தராய், இவை - இவ்வாசாரங்களினின்றும், ஒன்றும் - சற்றும், மாறா - தவறாத, தண்டநாயகர் - வசவேசர், தருக்கி - களித்து, சரிக்கும் - வாழ்கின்ற, அ - அந்த, நாளில் - காலத்தில், எ - று.

(பொ - ரை.) தலையானது இரண்டு துண்டாக அற்று விழுந்தாலும் சிவ என்றுச்சரிக்கின்ற வார்த்தையும், நெற்றியில் திருவெண்ணீற்றினையணிந்த சிவபக்தர்களை வணங்குகின்ற கைகுவிப்பும், மிகுந்த நல்லதவத்தராய் இவ்வாசாரங்களினின்றும் சற்றும் தவறாத வசவேசர் களித்து வாழ்கின்ற அந்தக் காலத்தில். (ருசு)

வரங்கொ ணந்திகள் பெரும்புகழ் மலர்மண மண்மேற்
பரந்த செய்தியாற் பரமனன் னேயர்கள் பரிவாற்
சிரங்க ரங்குவித் திறைஞ்சுவ மென்பவர் சிலரு
மிரந்து வாழுது மெனவரும் பெயர்களெண் ணிலரும்.

(ப - ரை.) வரங்கொள் - மேன்மைபொருந்திய, நந்திகள் - வசவேசரது, பெரு - பெரிய, புகழ் - கீர்த்தியாகிய, மலர் - பூவின், மணம் - வாசனையானது, மண்மேல் -

உலகத்தில், பரந்த - எங்கும் வியாபித்த, செய்தியால் - சமாசாரத்தினால், நல் - நல்ல, பரமன் நேயர்கள் - சிவபக்தர்கள், பரிவால் - அன்போடு, சிரம் - சிரத்தில், கரம் - கைகளை, குவித்து - கூப்பி, இறைஞ்சுவம் - வணங்குவோம், என்பவர் - என்கின்ற மனமுடையவர்கள், சிலரும் - சில பேர்களும், இரந்து - யாசித்து, வாழுதும் - ஜீவிப்போம், என்ன - என்று நினைத்து, வரும் பெயர்கள் - வருகிறவர்கள், எண் இலரும் - கணக்கில்லாதவர்களும், எ - று.

(பொ - ரை.) மேன்மைபொருந்திய வசவேசரது பெருங்கீர்த்தியாகிய பூவின் வாசனையானது உலகத்திலெங்கும் வியாபித்த சமாசாரத்தினால் நல்ல சிவபக்தர்கள் அன்போடு சிரத்தில் கைகளைக்கூப்பி வணங்குவோமென்கின்ற மனமுடையவர்கள் சில பேர்களும், யாசித்து ஜீவிப்போமென்று நினைத்து வருகிறவர்கள் கணக்கில்லாதவர்களும்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நந்திகைப் பூசை கொள்வோ மாமென நண்ணு வாரும்
புந்தியாற் கண்டாற் பாவம் போமெனப் போது வாரு
முந்தியே வசவ தீர்த்த முழுகுவோ மெனச்செல் வாரு
நிந்தியாப் பத்தி நேச நேடுவோ மெனச்செல் வாரும்.

(ப - ரை.) நாம் - யாம், நந்தி - வசவேசரது, கை - திருக்கரங்களால், பூசை - பாதபூஜை, கொள்வோம் - செய்யப்பெறுவோம், என்ன - என்று எண்ணங்கொண்டு, நண்ணுவாரும் - செல்கிறவர்களும், புந்தியால் - புத்திபூர்வகமாய், கண்டால் - தரிசித்த மாத்திரத்தில், பாவம் - பாவமானது, போம் - ஒழியும், என்ன - என்று எண்ணி, போதுவாரும் - செல்கிறவர்களும், முந்தியே - முற்பட்டே, வசவதீர்த்தம் - ஸ்ரீ வசவதீர்த்தத்தில், முழுகுவோம் - ஸ்நானஞ்செய்வோம், என்ன - என்று நினைத்து, செல்வாரும் - போகிறவர்களும், நிந்தியா - பழிக்கப்படாத, பத்திநேசம் - பக்தியாகிய அன்பினை, நேடுவோம் - தேடுவோம், என்ன - என்று கருதி, செல்வாரும் - போகிறவர்களும், எ - று.

(பொ - ரை.) யாம் வசவேசரது திருக்கரங்களால் பாதபூஜைசெய்யப் பெறுவோமென்றெண்ணங்கொண்டு செல்கிறவர்களும், புத்திபூர்வகமாய்த் தரிசித்தமாத்திரத்தில் பாவமானது ஒழியுமென்றெண்ணிச் செல்கிறவர்களும், முற்பட்டே ஸ்ரீ வசவதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்வோமென்று நினைத்துப் போகிறவர்களும், பழிக்கப்படாத பக்தியாகிய அன்பினைத் தேடுவோமென்று கருதிப் போகிறவர்களும். (௧அ)

கலிநிலைத்துறை.

ஆக வையம் பரிவண்டி லானையின் மீதும்
வாகு நந்தியின் சிவிகையின் மீதினும் வருவோர்
மோக கண்டியின் முடியினர் துகில்சேர் வேணிச்
சேக ரத்தினர் முண்டிதர் சிறுசடைத் திரளோர்.

(ப - ரை.) ஆக - இவ்வாறாக, வையம் - இரதங்கள், பரி - குதிரைகள், வண்டில் - வண்டில்கள், ஆனையின் - யானைகள் ஆகிய இவற்றின், மீதும் - மேலும், வாகு - அழகாகிய, நந்தியின் - எருதுகளின் (மேலும்), சிவிகையின் - பல்லக்குகளின், மீதினும் - மேலும், வருவோர் - (ஏறி) செல்கிறவர்களும், மோகம் - விருப்பத்தைத் தருதற்குரிய, கண்டியின் - உருத்திராக்க மணிகளின், முடியினர் - மகுடத்தை யுடையவர்களும், துகில் - ஆடையினால், சேர் - கட்டப்பட்ட, வேணி - பெரிய சடைக்கற்றையை யுடைய, சேகரத்தினர் - முடியையுடையவர்களும், முண்டிதர் - மொட்டைத்தலையையுடையவர்களும், சிறுசடைத்திரளோர் - சிறியசடைக்கற்றையையுடைய முடியையுடையவர்களும், எ - று.

(பொ-ரை.) இவ்வாறாக, இரதங்கள், குதிரைகள், வண்டில்கள், யானைகளாகிய இவற்றின்மேலும், அழகாகிய எருதுகளின் மேலும், பல்லக்குகளின்மேலு மேறிச்செல்கிறவர்களும், விருப்பத்தைத் தருதற்குரிய உருத்திராக்க மணிகளின் மகுடத்தையுடையவர்களும், ஆடையினாற்கட்டப்பட்ட பெரிய சடைக்கற்றையையுடைய முடியையுடையவர்களும், மொட்டைத்தலையை யுடையவர்களும் சிறிய சடைக்கற்றையையுடைய முடியையுடையவர்களும். (ருகூ)

சென்னி கந்தர முரங்கக்கஞ் செழுங்கர மிலிங்க
மன்னு வோர்கண்டி யாதியாங் குண்டல வகைசேர்
கன்ன ரம்மணி மாலையார் மார்பினோர் கரத்து
மின்னு சக்கரந் தண்டுமுத் தலைகொளும் விதத்தோர்.

(ப-ரை.) சென்னி - சிரம், கந்தரம் - கழுத்து, உரம் - மார்பு, கக்கம் - அக்குள், செழு - அழகாகிய, கரம் - கை (ஆகிய இவற்றினிடத்தில்), லிங்கம் - சிவலிங்கம், மன்னுவோர் - தாரணஞ் செய்யப்பெற்றிருப்பவர்களும், கண்டி - உருத்திராக்கமாலை, ஆதியாம் - முதலாகிய, குண்டலவகை - குண்டலவிதங்கள், சேர் - தாரணஞ்செய்யப்பெற்ற, கன்னர் - காதுகளையுடையவர்களும், அம் - அழகிய, மணிமாலை - உருத்திராக்க மாலை, ஆர் - நிறையப்பெற்ற, மார்பினோர் - மார்பையுடையவர்களும், கரத்து - கையில், மின்னு- பிரகாசிக்கிற, சக்கரம் - சக்ராயுதத்தையும், தண்டு - தண்டாயுதத்தையும், முத்தலை - சூலாயுதத்தையும், கொளும் - பிடித்துக்கொண்டிருக்கின்ற, விதத்தோர் - திறத்தோர்களும், எ - று.

(பொ-ரை.) சிரம், கழுத்து, மார்பு, அக்குள், அழகாகிய கையாகிய இவற்றினிடத்தில் சிவலிங்கதாரணஞ் செய்யப்பெற்றவர்களும், உருத்திராக்கமாலை முதலாகிய குண்டலங்கள் தாரணஞ்செய்யப்பெற்ற காதுகளை யுடையவர்களும், அழகிய உருத்திராக்கமாலை நிறையப்பெற்ற மார்பை யுடையவர்களும், கையில் பிரகாசிக்கின்ற சக்ராயுதத்தையும், தண்டாயுதத்தையும் சூலாயுதத்தையும் பிடித்துக்கொண்டிருக்கின்ற திறத்தோர்களும்.

(வி-ரை.) கக்கம் - கக்ஷம் என்னும் வடசொற்றிரிபு. கன்னம் - கர்னம் என்னும் வடசொற்றிரிபு. சிவலிங்கதாரணஞ் செய்யப் பெறுமிடங்கள் இவற்றிற் கூறியுள்ள விடங்களேயன்றி நாபியும் சேர்த்து ஆறாகக் கொள்க. இதன்விரிவைச் சித்தாந்த சிகாமணியிற் காண்க. (சூ0)

காவி வத்திரங் கம்பளங் கஷாயநல் லாடை
தாவில் வெள்ளையே யாதியாங் கந்தைக டரிப்போ
ரோவில் கீளுடை யாடையர் கோவண வுடையோர்
மேவு வத்திர முடுத்தொன்று புயத்தின்மேல் விரிப்போர்.

(ப-ரை.) காவி - காவியிற்றோய்த்த, வத்திரம் - வஸ்த்ரங்கள், கம்பளம் - கம்பளிவஸ்த்ரங்கள், நல் - நல்ல, கஷாய ஆடை - காஷாய வஸ்த்ரங்கள், தா இல் - குற்றமில்லாத, வெள்ளை - வெண்ணிறம், ஆதியாம் - முதலாகிய, கந்தைகள் - வஸ்த்ரங்கள் ஆகிய இவற்றையே, தரிப்போர் - உடுப்பவர்களும், ஓ இல் - நீக்குதலில்லாத, கீளுடை ஆடையர் கோவண உடையோர் - கீளுடன் கோவணத்தையே உடுப்பவர்களும், மேவு - பொருந்திய, வத்திரம் - ஒரு வஸ்த்ரத்தையே, உடுத்து - அரையிலும்கட்டி, ஒன்று - பொருந்திய, புயத்தின் - தோளின், மேல் - மீதும், விரிப்போர் - போர்த்திருப்பவர்களும், எ - று.

(போ - ரை.) காவியிற்றோய்த்த வஸ்த்ரங்கள் கம்பளி வஸ்த்ரங்கள் நல்ல காஷாய வஸ்த்ரங்கள் குற்றமில்லாத வெண்ணிறம் முதலிய வஸ்த்ரங்களாகிய யிவற்றையே வுடுப்பவர்களும், நீங்குதலில்லாத கீளுடன் கோவணத்தையே வுடுப்பவர்களும், பொருந்திய வொரு வஸ்த்ரத்தையே அரையிலுங்கட்டிப் பொருந்திய தோளின்மீதும் போர்த்திருப்பவர்களும்,

(வி-ரை.) தா ஓ என்பன முதனிலைத்தொழிற்பெயர்கள். கந்தை - பீறல் எனினுமாம். கீள் - லங்கோடு. (கூக)

பால மாதிமெய்ப் பாலன புண்டரந் தரிப்போர்
கோல மாமுடன் முழுதுமுத் தூளமே கொள்வோர்
மாலி லாதநற் றுறவுளோர் பவிபாக மறுத்தோர்
சீல சேடமே யருந்துவோர் சிவாநந்தத் தியானர்.

(ப - ரை.) பாலம் - லலாடம், ஆதி - முதலிய ஸ்தலங்களில், மெய் - தத்வஸ்வரூபமாகிய, பால் அன்ன - பால்போன்ற, புண்டரம் - விபூதியையே த்ரிபுண்டரமாக, தரிப்போர் - தாரணஞ்செய்பவர்களும், உடல்முழுதும் - ஸர்வாங்கமும், கோலம் ஆம் - அழகாகும்படி, உத்தூளமே - விபூதியையே உத்தூளநமாக, கொள்வோர் - தாரணஞ்செய்பவர்களும், மால் - மயக்கம், இல்லாத - அற்ற, நல் - நல்ல, துறவுளோர் - மனத்துறவினையே பூண்டவர்களும், பவி - அலிங்கிகளின், பாகம் - பிக்ஷையையே, அறுத்தோர் - ஏற்காதவர்களும், சீலம் - சிவாசாரத்திற்குரிய, சேடமே - குருலிங்கஜங்கமப்ரசாதத்தினையே, அருந்துவோர் - ஸ்வீகரிப்பவர்களும், சிவாநந்தத்தியானர் - சிவாநந்தத்திலேயே சிந்தனையுள்ளவர்களும், எ - று.

(போ - ரை.) லலாடம் முதலிய இடங்களில் தத்வஸ்வரூபமாகிய பால்போன்ற விபூதியையே த்ரிபுண்டரமாகத் தாரணஞ்செய்பவர்களும், ஸர்வாங்கமும் அழகாகும்படி விபூதியையே உத்தூளநமாகத் தாரணஞ் செய்பவர்களும், மயக்கமற்ற நல்ல மனத்துறவினையே பூண்டவர்களும், அலிங்கிகளின் பிக்ஷையையே யேற்காதவர்களும், சிவாசாரத்திற்குரிய குருலிங்கஜங்கம ப்ரஸாதத்தினையே ஸ்வீகரிப்பவர்களும், சிவாநந்தத்திலேயே சிந்தனையுள்ளவர்களும்,

(வி - ரை.) உத்தூளநம் - விபூதியை உதிரியாய் அணிந்து கொள்ளல். கூடாவொழுக்கம் முதலியவை யில்லாத துறவாதலால் நற்றுறவு என்றார். (கூஉ)

அவச முற்றநற் பிராணலிங் கயிக்கத்த ராவோர்
பவிக ளோடுரை பரிசம தறுத்தவர்ப் பாரார்
சிவம தொன்றலான் மற்றொன்று நோக்கிலாத் திடத்தோர்
மவுன ஞானநூல் வாசகர் தீர்த்தவா சியர்கள்.

(ப - ரை.) அவசம் உற்ற - பரவச மடைந்த, நல் - சிறந்த, பிராணலிங்க அயிக்கத்தர் ஆவோர் - ப்ராணலிங்க நிஷ்டாநுபவச் செல்வர்களும், பவிகளோடு - அலிங்கிகளுடனே, உரை - பேசுதலும், பரிசம் - தீண்டுதலும், அறுத்து - ஒழித்து, அவர் - அந்தப் பவிகளையே, பாரார் - நோக்காதவர்களும், சிவம் ஒன்று அல்லால் - பரம்பொருளாகிய சிவபெருமான் ஒருவனையே யன்றி, மற்று ஒன்றும் - அரிப்பிரமாதியர்க ளென்னும் மற்றச் சிறிய தேவர்களைச் சற்றும், நோக்கிலா - திரும்பிப்பார்க்காத, திடத்தோர் - திடசித்தமுடையவர்களும், மவுனம் - மௌந நிலையை யடைதற்குரிய, ஞானநூல் - ஞானசாஸ்த்ரங்களையே, வாசகர் - படநஞ்செய்பவர்களும், தீர்த்தவாசியர்கள் - யாத்திரை செய்பவர்களும், எ - று.

(பொ - ரை.) பரவசமடைந்த சிறந்த ப்ராணலிங்க நிஷ்டாநுபவச் செல்வர்களும், அலிங்கிகளுடனே பேசுதலும் நிண்டுதலுமொழிந்து அர்தப்பவிகளையே நோக்காதவர்களும், பரம்பொருளாகிய சிவபெருமானொருவனையேயன்றி அரிப்பிரமாதியர்களென்னும் மற்றச் சிறிய தேவர்களைச் சற்றும் திரும்பிப்பார்க்காத திடசித்தமுடையவர்களும், மௌனநிலையை யடைதற்குரிய ஞானசாஸ்த்ரங்களையே படனஞ்செய்பவர்களும், யாத்திரை செய்பவர்களும்,

(வி - ரை.) உரை - முதனிலைத் தொழிற்பெயர். சிவமது என்பதில் அது - பகுதிப் பொருள் விகுதி. (கஙஐ)

மறை சிவாகம மங்கங்கள் புராணங்கள் வல்லோ
ரறிவி னுன்மிகு மாரிய ரரன்றுதி படிப்போ
ரிறையை யல்லது பாடலார் மந்திரத் தினியோர்
நிறையு நல்லிசை வீணையா ழாதியா நிபுணர்.

(ப - ரை.) மறை - நான்கு வேதங்கள், சிவாகமம் - இருபத்தெட்டு சிவாகமங்கள், அங்கங்கள் - ஆறங்கங்கள், புராணங்கள் - பதினெண்புராணங்கள் (ஆகிய இவற்றில்), வல்லோர் - நிபுணர்களும், அறிவினுல் - மெய்ஞ்ஞானத்தினுல், மிகும் - மேன்மைபடைந்த, ஆரியர் - ஆசாரியர்களும், அரன்துதி - சிவஸ்தோத்ரங்களையே, படிப்போர் - பாராயணஞ் செய்பவர்களும், இறையை - சிவபெருமானையே, அல்லது - அன்றி, பாடலார் - மற்றச் சிறிய தேவர்களை ஸ்தோத்ரஞ் செய்யாதவர்களும், மந்திரத்து - சிவமந்திரங்களில், இனியோர் - மேன்மையுடையவர்களும், நிறையும் - பூரணமான, நல் - நல்ல, இசை - ஒலியையுடைய, வீணை யாழ் ஆதி ஆம் - வீணை யாழ் முதலியவற்றை வாசிப்பதில், நிபுணர் - வல்லவர்களும், எ - று.

(பொ - ரை.) நான்கு வேதங்கள் இருபத்தெட்டு சிவாகமங்கள் ஆறங்கங்கள் பதினெண் புராணங்களாகிய இவற்றில் நிபுணர்களும், மெய்ஞ்ஞானத்தினுல் மேன்மையடைந்த ஆசாரியர்களும், சிவஸ்தோத்ரங்களையே பாராயணஞ் செய்பவர்களும், சிவபெருமானையே யன்றி மற்றச் சிறிய தேவர்களை ஸ்தோத்ரஞ் செய்யாதவர்களும், சிவமந்திரங்களில் மேன்மையுடையவர்களும், பூரணமான நல்ல ஒலியையுடைய வீணை யாழ் முதலியவற்றை வாசிப்பதில் வல்லவர்களும், (கஙசு)

வடுகு கன்னட மாரியந் தமிழுடன் மலாட
மடிய தாயுள தேசத்தி லருந்தவ ரெல்லா
முடிவி லாதவர் வருதலை நந்திகண் முன்னிக்
கடிகொ ளம்மனை வீதிகண் மிகவலங் கரித்தார்.

(ப - ரை.) வடுகு - தெலுங்கு, கன்னடம் - கன்னடம், ஆரியம் - ஆரியம், தமிழ் உடன் - தமிழுடனே, மலாடம் - மல்லாடம், அடியதாய் - முதலாய், உள்ள - இருக்கின்ற, தேசத்தில் - நாடுகளில் வாழ்கின்ற, அரு - மேன்மையாகிய, தவர் எல்லாம் - மாஹேஶ்வரர்களனைவரும், முடிவு இல்லாதவர் - அளவற்றவராகி, வருதலை - எழுந்தருளி வருகின்ற விசேஷத்தை, நந்திகள் - வசவேசர், முன்னி - ஆலோசித்து, கடிகொள் - காவலைக்கொண்ட, அம் - அழகிய, மனை - திருமாளிகையையும், வீதிகள் - தெருக்களையும், மிக - மிகவும், அலங்கரித்தார் - அலங்காரஞ் செய்வித்தனர், எ - று.

(பொ - ரை.) தெலுங்கு, கன்னடம், ஆரியம், தமிழுடனே மல்லாட முதலாயிருக்கின்ற நாடுகளில் வாழ்கின்ற மேன்மையாகிய மாஹேஶ்வரர்களனைவரும் அளவற்றவராகி எழுந்தருளிவருகின்ற விசேஷத்தை வசவேசர் ஆலோசித்துக் காவலைக்கொண்ட அழகிய திருமாளிகையையும் தெருக்களையும் மிகவும் அலங்காரஞ்செய்வித்தனர். (கஙரு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நந்திகள் வாழ்கல் யாண நகரமே கடல தாகச்
சந்ததஞ் சிவமா யேசர் சங்கங்க ணதிகள் போல
வந்துற வெதிரே சென்று வசவதே சிகர்ப ணிந்து
தந்தலைக் கவர்தாட் போது சாத்தியுட் கொண்டு சென்று.

(ப - ரை.) நந்திகள் - வசவதேவர், வாழ் - வாழ்கின்ற, கல்யாணநகரமே - கல்யாணபுரியே, கடல் ஆக - கடல் போலவும், சந்ததம் - எப்போதும், சிவம் - சிவஸ்வரூபிகளாகிய, மாயேசர் - மாஹேஸ்வரர்களின், சங்கங்கள் - திருக்கூட்டங்களே, நதிகள்போல - யாறுகள் போலவும், வந்துஉற - வந்து சேர்தலும், எதிரே சென்று - அவர்களை யெதிர்கொண்டுபோய், வசவதேசிகர் - வசவேசர், பணிந்து - சாஷ்டாங்கமாய் வணங்கி, தம் - தமது, தலைக்கு - திருமுடியில், அவர் - அவர்களுடைய, தாள் - திருவடிகளாகிய, போது - தாமரைமலர்களை, சாத்தி - சூட்டி, உள்கொண்டு - அவர்களை யுள்ளே அழைத்துக் கொண்டு, சென்று - போய், எ - று.

(பொ - ரை.) வசவதேவர் வாழ்கின்ற கல்யாணபுரியே கடல்போலவும் எப்போதும் சிவஸ்வரூபிகளாகிய மாஹேஸ்வரர்களின் திருக்கூட்டங்களே யாறுகள்போலவும் வந்து சேர்தலும், அவர்களை யெதிர்கொண்டுபோய் வசவேசர் சாஷ்டாங்கமாய் வணங்கித் தமது திருமுடியில் அவர்களுடைய திருவடிகளாகிய தாமரைமலர்களைச் சூட்டி அவர்களை யுள்ளே யழைத்துக்கொண்டுபோய்.

(வி - ரை.) கடலது என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. (சுசு)

பொற்கல சத்து நீராற் புனிதபா தம்வி ளக்கி
நற்கதி யளிப்ப ரென்று நல்லவா தனத்தி ருத்திப்
பிற்கன பத்தி யாலே பெரியதா ணீர தாட்டி
யெற்கடி மலர்கள் சூட்டி யெழிற்றூப தீபங் காட்டி.

(ப - ரை.) பொன் கலசத்து - பொற்குடங்களில் நிறைந்திருக்கின்ற, நீரால் - சுத்தோதகத்தினால், புனிதம் - பரிசுத்தமாகிய, பாதம் - ஸ்ரீபாதங்களை, விளக்கி - கழுவி, நற்கதி - மோக்ஷபதவியை, அளிப்பர் என்று - அநுக்கிரகிப்பவர்களென்று, நல்ல - செம்மையான, ஆதனத்து - பீடங்களில், இருத்தி - எழுந்தருளச்செய்து, பின் - பிறகு, கனம் - சிறந்த, பத்தியால் - அன்புடன், பெரிய - மேன்மைபொருந்திய, தாள் - ஸ்ரீபாதங்களை, நீர் ஆட்டி - திருமஞ்சனமாட்டி (விபூதியைத்தாரணஞ் செய்து), எல் - ஒளியுள்ள, கடி - வாசனையுடன் கூடின, மலர்கள் - புஷ்பங்களை, சூட்டி - தரித்து, எழில் - அழகாகிய, தூபதீபம் காட்டி - தூபத்தையும் தீபத்தையும் கொடுத்து, எ - று.

(பொ - ரை.) பொற்குடங்களில் நிறைந்திருக்கின்ற சுத்தோதகத்தினால் பரிசுத்தமாகிய ஸ்ரீபாதங்களைக் கழுவி, மோக்ஷபதவியை யநுக்கிரகிப்பவர்களென்று செம்மையான பீடங்களி லெழுந்தருளச்செய்து, பிறகு சிறந்த அன்புடன் மேன்மைபொருந்திய ஸ்ரீபாதங்களைத் திருமஞ்சனமாட்டி, விபூதியைத்தாரணஞ்செய்து, ஒளியுள்ள வாசனையுடன் கூடின புஷ்பங்களைத் தரித்து, அழகாகிய தூபத்தையும் தீபத்தையும் கொடுத்து.

(வி - ரை.) திருமஞ்சனமாட்டி புஷ்பங்களைத்தரித்து தூபதீபத்தைச் சமர்ப்பித்து நின்றதனால் விபூதியையும் தாரணஞ்செய்து என்று வருவித்துப் பொருள்கொண்டாம். நீரதாட்டி என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. (சுஎ)

எழுந்தவர் செய்யும் பூசைக் கிதத்தவை யெல்லாஞ் செய்வித்
தழுந்துநற் பத்தி யாலே யறுசுவை யைந்து பேதச்
செழுந்திரு வமுத மூட்டித் தெண்டனிட் டெழுந்து நின்று
தொழுங்கரத் தினரா யன்பின் ஞோத்திர மிகவுஞ் செய்து.

(ப - ரை.) எழுந்து - மேலே யெழுந்து, அவர் - அம் மாஹேஶ்வரர்கள், செய்யும் - பண்ணுகின்ற, பூசைக்கு - சிவலிங்கபூஜைக்கு, இதத்தவையெல்லாம் - வேண்டியவற்றை முழுதும், செய்வித்து - தாமே பண்ணுவித்து, அழுந்தும் - ஆழ்ந்த, நல் - சிறந்த, பத்தியாலே - அன்புடன், அறுசுவை - ஆறுசுவைகளோடுகூடிய, ஐந்துபேதம் - ஐந்து வகையாகிய, செழு - வளமையுள்ள, திருவமுதம் - திருவமுதினை, ஊட்டி - உண்பித்து, தெண்டனிட்டு - சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து, எழுந்து நின்று - மேலே யெழுந்துநின்று, தொழும் - வணங்குகின்ற, கரத்தினர் ஆய் - திருக்கரங்களை யுடையவராய், அன்பின் - அன்புடன், மிகவும் - மிகுதியாக, தோத்திரஞ்செய்து - துதித்து, எ - று.

(பொ - ரை.) மேலேயெழுந்து அம் மாஹேஶ்வரர்கள் பண்ணுகின்ற சிவலிங்க பூஜைக்கு வேண்டியவற்றை முழுதும் தாமே பண்ணுவித்து, ஆழ்ந்த சிறந்த அன்புடன் ஆறுசுவைகளோடுகூடிய ஐந்துவகையாகிய வளமையுள்ள திருவமுதினை யுண்பித்து, சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து, மேலேயெழுந்து நின்று, வணங்குகின்ற திருக்கரங்களை யுடையவராய் அன்புடன் மிகுதியாகத் துதித்து.

(வி - ரை.) அறுசுவை - கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்பன. ஐவகை யுணவு - சுத்தாந்நம், திலாந்நம், முத்காந்நம், ததியந்நம், திந்த்ரிணியந்நம் என்பன. (கூஅ)

தாபத ரிருக்கச் சொல்லத் தாமிருந் தவர்கள் பாதப்
பாபநா சனமாந் தீர்த்தம் பரிகலச் சேட மெல்லாஞ்
சோபன முத்தி யென்னுஞ் சுகப்பயிர் வித்தி தென்று
கோபமில் வசவ தேவ ரன்பினுற் குலாவிக் கொண்டு.

(ப - ரை.) தாபதர் - மாஹேஶ்வரர்கள், இருக்கச்சொல்ல - உட்காரக்கட்டளையிட, தாம் - தாம், இருந்து - உட்கார்ந்து, பாபநாசனம் ஆம் - பாபவிமோசன மாதற்குரிய, அவர்கள் - அவர்களுடைய, பாததீர்த்தம் - பாதோதகம், பரிகலச்சேடம் - உண்கலத்துள்ள ப்ரஸாதம் (ஆகிய), எல்லாம் - யாவும், முத்திசோபனம் - மோக்ஷசோபானம், என்னும் - என்று சொல்லுகின்ற, சுகப்பயிர் - சிவாநந்தமாகிய பயிருக்கு, வித்து - விதை, இது என்று - இதுதானென்று, கோபம் இல் - பரமசாந்தமூர்த்தியாகிய, வசவதேவர் - வசவேசர், அன்பினுல் - விருப்பத்துடன், குலாவி - கொண்டாடி, கொண்டு - ஸ்வீகரித்து, எ - று.

(பொ - ரை.) மாஹேஶ்வரர்கள் உட்காரக் கட்டளையிடத் தாம் உட்கார்ந்து, பாபவிமோசனமாதற்குரிய அவர்களுடைய பாதோதகம் உண்கலத்துள்ள ப்ரஸாதமாகிய யாவும் மோக்ஷசோபானமென்று சொல்லுகின்ற சிவாநந்தமாகிய பயிருக்கு விதை இதுதானென்று பரமசாந்தமூர்த்தியாகிய வசவேசர் விருப்பத்துடன் கொண்டாடி ஸ்வீகரித்து.

(வி - ரை.) முத்திசோபானம் - மோக்ஷமாகிய மேல்வீட்டை யேறுதற்கமைத்தபடி. சோபானம் என்பது எதுகை யின்ப நோக்கி சோபனம் எனக்குறுகிற்று. (கூகூ)

அவர்கண்முன் மதுர கீத மன்பினுற் பாடி யாடி
யுவகைசேர் முகத்த ராகி யுத்தம தவத்தோர்க் கெய்து
நவமுறுங் குழுவைக் கண்டு நன்மன முடலங் கம்பித்
திவர்கள்வேண் டியதே தென்ன வெண்ணிமுன் னெண்ணிக் கேட்டு.

(ப - ரை.) அவர்கள்முன் - அம் மாஹேஶ்வரர்களுக்கெதிரே, மதுரம் - காதுக்கினிய, கீதம் - இசைப்பாட்டுகளை, அன்பினால் - பக்தியுடன், பாடி - பாடி, ஆடி - நடனஞ்செய்து, உவகைசேர் - சந்தோஷமுள்ள, முகத்தர் ஆகி - திருமுகத்தையுடையவராய், உத்தமம் - மேன்மையாகிய, தவத்தோர்க்கு - தவஞ்செய்த புண்யவான்களுக்கே, எய்தும் - கிடைத்தற்குரிய, நவம் உறும் - புதுமையான, குழுவை - மாஹேஶ்வரத் திருக்கூட்டத்தை, கண்டு - தரிசித்து, நல் - நல்ல, மனம் - மனமும், உடலம் - திருமேனியும், கம்பித்து - நடுங்கி, இவர்கள் - இம் மாஹேஶ்வரர்கள், வேண்டியது - விரும்பினது, ஏது - யாது, என்ன - என்று, எண்ணி - ஆலோசித்து, முன் - முன்னே, நண்ணி - போய், கேட்டு - வினவி, எ - று.

(பொ - ரை.) அம் மாஹேஶ்வரர்களுக்கெதிரே காதுக்கினிய இசைப்பாட்டுகளைப் பக்தியுடன்பாடி, நடனஞ்செய்து, சந்தோஷமுள்ள திருமுகத்தையுடையவராய், மேன்மையாகிய தவஞ்செய்த புண்யவான்களுக்கே கிடைத்தற்குரிய புதுமையான மாஹேஶ்வரத் திருக்கூட்டத்தைத் தரிசித்து, நல்ல மனமும் திருமேனியும் நடுங்கி, இம் மாஹேஶ்வரர்கள் விரும்பினது யாது? என்றாலோசித்து, முன்னேபோய் வினவி. (எ0)

தனமணி யார மாடை தையலர் தேனு பூமி
கனதிவா கனம்பு ரங்கள் கந்தசந் தனகற் பூர
மெனவுள விவையு மற்று மினியவு மீச னேசர்க்
கனவர தங்கொ டுத்திங் கன்பினாற் றொழுதி றைஞ்சி.

(ப - ரை.) தனம் - திரவியங்கள், மணி - தானியங்கள், ஆரம் - ஆபரணங்கள், ஆடை - வஸ்த்ரங்கள், தையலர் - மாதர்கள், தேனு - பசுக்கள், பூமி - நிலங்கள், கனதி - மேன்மையாகிய, வாகனம் - வாகனங்கள், புரங்கள் - ஊர்கள், கந்தம் - வாசனைத் திரவியங்களான, சந்தனம் - சந்தனம், கற்பூரம் - கற்பூரம், என்ன - என்று சொல்லப்பட்டு, உள்ள - இருக்கின்ற, இவையும் - இவைகளையும், மற்றும் - மேலும், இனியவும் - வேண்டிய பதார்த்தங்களையும், ஈசன் நேசர்க்கு - சிவபக்தர்களுக்கு, அனவரதம் - எப்போதும், கொடுத்து - தந்து, இங்கு - இவ்விடத்தில், அன்பினால் - அன்புடன், தொழுது - பணிந்து, இறைஞ்சி - வணங்கி, எ - று.

(பொ - ரை.) திரவியங்கள், தானியங்கள், ஆபரணங்கள், வஸ்த்ரங்கள், மாதர்கள், பசுக்கள், நிலங்கள், மேன்மையாகிய வாகனங்கள், ஊர்கள், வாசனைத்திரவியங்களான சந்தனம் கற்பூரமென்று சொல்லப்பட்டிருக்கின்ற இவைகளையும் மேலும் வேண்டிய பதார்த்தங்களையும் சிவபக்தர்களுக்கு எப்போதுந் தந்து, இவ்விடத்தில் அன்புடன் பணிந்து வணங்கி.

(வி - ரை.) வாகனம் - வாஹநம் என்னும் வடசொற்றிரிபு (சுமப்பதென்னும் பொருளது). தனம் - பொன், மணி - ரத்நம், ஆரம் - முத்துமாலை எனினுமாம். (எக)

விரதசீ லத்தர்க் கேற்ற விதமெலாம் வெவ்வே றாக
வரமுற வமைத்த மைத்து வைத்துத்தம் மடத்தில் வாராப்
பெரியவர் தமக்கு மன்னம் பிறங்குகா வடியின் மூடித்
திரமுறு பத்தி யாலே திரிவிதப் பொழுது நல்கி.

(ப - ரை.) விரதசீலத்தர்க்கு - சிவாசாரத்தவர்களுக்கு, ஏற்ற - தகுதியாகிய, விதம் - இனுசு பதார்த்தங்கள், எல்லாம் - யாவும், வெவ்வேறாக - வேறு வேறாக, வரம் உற - விருப்பமடையும்படி, அமைத்து அமைத்து - ஏற்படுத்தி யேற்படுத்தி, வைத்து - இட்டு, தம் - தமது, மடத்தில் - திருமடத்துக்கு, வாரா - எழுந்தருளுதற்கிசையாத, பெரியவர் தமக்கும் - மாஹேஶ்வரர்களுக்கும், அன்னம் - திருவமுதினை, பிறங்கு - பெருமை

பொருந்திய, காவடியில் - காவடிகளில், மூடி - மடிவஸ்த்ரங்களால்மறைத்து, திரம்உறு - உறுதியாகிய, பத்தியாலே - பக்தியுடன், திரிவிதப் பொழுதும் - முப்பொழுதும், நல்கி - கொடுத்தனுப்பி, எ - று.

(பொ - ரை.) சிவாசாரத்தவர்களுக்குத் தகுதியாகிய திருசுபதார்த்தங்கள் யாவும் வேறு வேறாக விருப்பமடையும்படி ஏற்படுத்தி யேற்படுத்திட்டு, தமது திருமடத்துக் கெழுந்தருள்வதற் கிசையாத மாஹேஶ்வரர்களுக்கும் திருவமுதினை பெருமைபொருந் திய காவடிகளில் மடிவஸ்த்ரங்களால் மறைத்து உறுதியாகிய பக்தியுடன் முப்பொழு தும் கொடுத்தனுப்பி.

(வி - ரை.) பெரியவர்தமக்கும் என்பதில் உம்மை - இறந்தது தழீஇயது, தம் - சாரியை. முப்பொழுது - காலை, மாலை, உச்சி. (எஉ)

வேசியர் மனைவி டாத விடர்களாஞ் சிவவே டத்தா
ராசிலா வெண்சே ரீரா றாயிர ராேனார்க் கெல்லாம்
வாசியா லவர்கள் வைகு மனைதொறும் வளங்க ணல்கி
நேசராய் வசவ தேவர் நிகரிலா திருக்கு நாளில்.

(ப - ரை.) வேசியர் - விலைமாதர்களுடைய, மனை - வீடுகளையே, விடாத - நீங்கா தவர்களாகிய, விடர்கள் ஆம் சிவ வேடத்தார் - விட ஜங்கமர்கள், ஆசு இல்லா - குற்றமற்ற, எண்சேர் - கணக்கோடுகூடிய, ஈர் ஆறு ஆயிரர் ஆனோர்க்கு எல்லாம் - பன்னீராயிரம்பேர்களனைவர்க்கும், வாசியால் - வழக்கத்தால், அவர்கள் - அவர்கள், வைகும் - வசிக்கின்ற, மனைதொறும் - வீடுகளிலெல்லாம், வளங்கள் - வேண்டிய செல் வங்களை, நல்கி - கொடுத்தனுப்பி, வசவதேவர் - வசவேசர், நேசராய் - அன்புடையவ ராயும், நிகர் இல்லாது - ஒப்பற்றவராயும், இருக்கும் நாளில் - வாழுங்காலத்தில், எ - று.

(பொ - ரை.) விலைமாதர்களுடைய வீடுகளை நீங்காதவர்களாகிய விடஜங்கமர்கள் குற்றமற்ற கணக்கோடுகூடிய பன்னீராயிரம்பேர்களனைவர்க்கும் வழக்கத்தால் அவர்கள் வசிக்கின்ற வீடுகளிலெல்லாம் வேண்டிய செல்வங்களைக் கொடுத்தனுப்பி வசவேசர் அன்புடையவராயும் ஒப்பற்றவராயும் வாழுங்காலத்தில்.

(வி - ரை.) விடர் - காமுகர். (எங)

ஆக திருவிருத்தம் - ௩௧௧.

உ

சிவமயம்.

# சென்னவசவ புராணம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சங்கமர் நேய மெல்லாந் தமக்குட லாகி யுள்ளார்
மங்கைநா காம்பை யார்தம் வயிற்றில்வந் துதய மானார்
பங்கபுண் ணியபா வத்தின் பரப்பெலாம் பறித்த நீரா
ரெங்கணந் திகளை யொப்பா மியல்புளார் மயலி லாதார்.

(ப - ரை.) சங்கமர் நேயம் எல்லாம் - ஜங்கமபக்திமுழுதும், தமக்கு - தமக்கு, உடல் ஆகி - திருமேனியாய், உள்ளார் - இருப்பவர், மங்கை - மங்கைப்பருவப் பெண்ணரசியும், நாகாம்பையார் - (வசவேசரது திருத்தங்கையாருமாகிய) நாகாம்பையாரது, வயிற்றில் - திருவயிற்றில், வந்து உதயமானார் - வந்தவதரித்தவர், பங்கம் - ஹீனமாகிய, புண்ணிய பாவத்தின் - புண்யபாபங்களின், பரப்பு எல்லாம் - விரிவைமுழுதும், பறித்த - ஒழித்த, நீரார் - தன்மையுள்ளவர், எங்கள் - அடியேங்களுடைய, நந்திகளை - வசவேசரை, ஒப்பு ஆம் - நிகர்த்த, இயல்பு - நற்குணம், உள்ளார் - உள்ளவர், மயல் - மயக்கம், இலாதார் - இல்லாதவர், எ - று.

(பொ - ரை.) ஜங்கமபக்தி முழுதும் தமக்குத் திருமேனியா யிருப்பவர், மங்கைப் பருவப்பெண்ணரசியும் வசவேசரது திருத்தங்கையாருமாகிய நாகாம்பையாரது திருவயிற்றில் வந்தவதரித்தவர், ஹீனமாகிய புண்யபாபங்களின் விரிவையெல்லாமொழித்த தன்மையுள்ளவர், அடியேங்களுடைய வசவேசரை நிகர்த்த நற்குணமுள்ளவர், மயக்கமில்லாதவர்.

(வி - ரை.) மங்கைப்பருவம் - பன்னிரண்டு வயதுள்ளபருவம். புண்யகர்மத்தால் ஸ்வர்க்காதிபோகங்களும், பாபகர்மத்தால் நரகாதிதுக்கங்களும் சித்திப்பதனாலும் அதனால் மீட்டும் துன்பத்தைத் தருகிற ஜநநமரணங்களுக்குக் காரணமாதலாலும் பங்க புண்ணியபாவம் என்றார். பங்கம் - பங்கப்படுத்தற்குரிய எனினுமாம். (4)

மலமிலா திருப்போர் சென்ன வசவைய ரென்னும் பேரா
ருலகியல் பேசா ராசா னுவப்புறு நேய முள்ளா
ரலைகொள்கா மாதி யில்லா ரனைத்துமெய் யிலிங்கங் கண்டா
ருலவுதத் துவஞா னத்தா லுயர்ந்துளா ருரையான் மிக்கார்.

(ப - ரை.) மலம் - மும்மலங்களும், இலாது இருப்போர் - இல்லாதவர், சென்ன வசவையர் - சென்னவசவதேவர், என்னும் - என்கிற, பேரார் - திருநாமத்தினையுடையவர், உலக இயல் - லௌகிக விஷயத்தையே, பேசார் - பேசாதவர், ஆசான் - ஆசாரியன், உவப்பு உறும் - சந்தோஷித்தற்குரிய, நேயம் உள்ளார் - அன்புடையவர், அலை கொள் - வருத்துகின்ற, காமாதி-காமம்முதலியவை, இல்லார் - இல்லாதவர், அனைத்தும் - சராசரங்களும், மெய் - தத்துவப்பொருளாகிய, இலிங்கம் கண்டார் - லிங்கஸ்வரூபமாகவே ப்ரத்யக்ஷமாய்ப் பார்த்தவர், உலவு - வழங்குகின்ற, தத்துவஞானத்தால் - மெய்ஞ்ஞானத்தாலும், உயர்ந்து உள்ளார் - மேன்மையுடையவர், உரையால் - புகழாலும், மிக்கார் - மேன்மை யுடையவர், எ - று.

(போ - ரை.) மும்மலங்களுமில்லாதவர், சென்னவசவதேவரென்கிற திருநாமத்தினையுடையவர், லௌகிக விஷயத்தையே பேசாதவர், ஆசாரியன் சந்தோஷித்தற்குரிய அன்புடையவர், வருத்துகின்ற காமம் முதலியவை யில்லாதவர், சராசரங்களும் தத்துவப்பொருளாகிய லிங்கஸ்வரூபமாகவே ப்ரத்யக்ஷமாய்ப் பார்த்தவர், வழங்குகின்ற மெய்ஞ்ஞானத்தாலும் மேன்மையுடையவர், புகழாலும் மேன்மையுடையவர்.

(வி - ரை.) மும்மலம் - ஆணவம், காமியம், மாயை. காமியம் - சுகதுக்கங்கள் தோற்றுகிறதற்கு முதற்காரணமாகியும், மாயை - அச்சுகதுக்கங்கள் எங்குந் தோன்றுதற்குத் தன்காரியமாகிய தநுகரணங்களையும் உயிரையுமியைவித்து நிற்றற்குத் துணைக்காரணமாகியும், ஆணவம் - அவற்றைக் காரியப்படுத்தற்கு நிமித்த காரணமாகியும் நிற்பது. காமப்பற்றை விளைப்பதால் 'உலகியல்' என்றார். குரோதம்முதலியவை யுண்டாதற்குக் காரணம் காமமாதலால் முதற்கண் காமம் வைக்கப்பட்டது. அகண்டபரிபூரண சிவலிங்கத்திலேயே யழுந்தி உள்ளும் புறம்பும் சிவத்தையுள்ளபடித் தரிசித்தவ ராதலால் அனைத்து மெய் யிலிங்கங் கண்டார் என்றார். தத்துவஞானத்தாருயர்ந்துளார் என்றும் பாடம். (உ)

ஆசையில் வாழ்க்கை யில்லா ரானந்த வனுப வத்தார்
பாசமில் சங்க மேசர் பரிகலத் திச்சை நீங்கார்
தேசுறு நித்த மான சிவபுண்ணி யத்தார் நல்லார்
நேசமோ டாறா றாறு மூன்றிரண் டொன்றி நின்றார்.

(ப - ரை.) ஆசை - யாவரும் விரும்புதற்குரிய, இல்வாழ்க்கை - மனைவாழ்க்கை, இல்லார் - இல்லாதவர், ஆனந்த அனுபவத்தார் - பரமாநந்தாநுபோகத்தையுடையவர், பாசம் - பந்தம், இல் - இல்லாத, சங்கமேசர் பரிகலத்து - ஜங்கம ப்ரஸாதத்தில், இச்சை - ஆசை, நீங்கார் - விடாதவர், தேசுஉறும் - மஹத்வமுடையதும், நித்தம் ஆன - சாசுவதமுமாகிய, சிவபுண்ணியத்தார் - சிவபுண்யத்தை யுடையவர், நல்லார் - அறிவுடையவர், நேசமோடு - அன்புடனே, ஆறு - ஷட்வித அங்கஸ்தலத்திலும், ஆறு - ஷட்வித லிங்கஸ்தலத்திலும், ஆறு - ஷடக்ஷரத்திலும், மூன்று - த்ரிவித லிங்கத்திலும், இரண்டு - த்வியாக்ஷரத்திலும், ஒன்றிநின்றார் - ஐக்யப்பட்டிருப்பவர், எ - று.

(போ - ரை.) யாவரும் விரும்புதற்குரிய மனைவாழ்க்கையில்லாதவர், பரமாநந்தாநுபோகத்தையுடையவர், பந்தமில்லாத ஜங்கமப்ரஸாதத்திலாசைவிடாதவர், மஹத்வமுடையதும் சாசுவதமுமாகிய சிவபுண்யத்தையுடையவர், அறிவுடையவர், அன்புடனே ஷட்வித அங்கஸ்தலத்திலும், ஷட்வித லிங்கஸ்தலத்திலும், ஷடக்ஷரத்திலும், த்ரிவித லிங்கத்திலும், த்வியாக்ஷரத்திலும் ஐக்யப்பட்டிருப்பவர்.

(வி - ரை.) ஷடக்ஷரம் - ஓம் ந ம சி வ ய வென்பன. ஷட்வித அங்கஸ்தலம் - பக்தஸ்தலம், மாஹேஸ்வரஸ்தலம், ப்ரஸாதஸ்தலம், ப்ராணலிங்கிஸ்தலம், சரணஸ்தலம், ஐக்யஸ்தலம். ஷட்வித லிங்கஸ்தலம் - ஆசாரலிங்கம், குருலிங்கம், சிவலிங்கம், ஜங்கமலிங்கம், ப்ரஸாத லிங்கம், மஹாலிங்கம். த்ரிவிதலிங்கம் - இஷ்ட ப்ராண பாவம். த்வியாக்ஷரம் - ஹம்ஸம் (ஸோஹம்பாவனை). பாசம் - கட்டு, இது ஐந்து வகைப்படும், அவை - தமம், மாயை, மோகம், அவித்தை, பொய்யுருவி. சிவபுண்யமாவது - கொல்லாமை, பொறுமை, உண்மைகூறல், பழிபாவத்திற்கஞ்சுதல், புண்யத்திலிச்சை, மனமுதலியவற்றை யொடுக்கல், கொடை, லிங்கார்ச்சனை, தவம், சிவத்யாநம் என்பன. துறவறத்தையே பூண்டொழுகு பவராதலால் ஆசையில்வாழ்க்கையில்லார் என்றார். இல்வாழ்க்கை - க்ருஹஸ்தாஸ்ரமம். பரிகலம் - ஜங்கமர்கள் உண்ணும்பாத்ரம், அதிலுள்ள ப்ரஸாதத்துக்காதலால் ஆகுபெயர். இச்செய்யுளால் வீரசைவஷட்ஸ்தலசித்தாந்தம் ஸம்க்ஷேபப்படுத்திக்கூறப்பட்டது. இதன் விரிவைச் சித்தாந்தசிகாமணியிற் கண்டுகொள்க. (ந)

ஒப்பரும் பரம யோக ருரைக்கருஞ் சிவானு போகர்
செப்பருஞ் சரணர் மோகர் திரிகால பரித்தி யாகர்
துப்பிலிங் காபி மான தாகர்தூய் தாகு மாகர்
தப்பருஞ் சோக ரேகர் சங்கர பத்தி யூகர்.

(ப - ரை.) ஒப்பு அரு - நிகரற்ற, பரமம் - மேலான, யோகர் - ஞானயோகத்தை யுடையவர், உரைக்கு அரு - சொல்லுதற்கரிய, சிவானுபோகர் - சிவாநுபவத்தையுடைய வர், செப்பு அரு - சொல்லுதற்கரிய, சரணர் - சிவசரணர்களிடத்தில், மோகர் - விருப் பத்தையுடையவர், திரிகாலபரித்தியாகர் - முக்காலமுங்கடந்தவர், துப்பு - ஆதரவாகிய, இலிங்க அபிமானம் - இஷ்டலிங்கபூஜைசெய்வதில், தாகர் - விருப்பத்தையுடையவர், தூய்து ஆகும் - பரிசுத்தமாகிய, ஆகர் - திருமேனியையுடையவர், தப்பு அரு - தப்பிப் போகாத, சோகர் - ஸோஹம்பாவனையில் நிலைத்தவர், ஏகர் - ஏகலிங்கைக்ய முக்திநிலையை யுடையவர், சங்கரபத்தி - சிவபக்திமார்க்கத்தை யனுசரித்தற்குரிய, யூகர் - விவேகத்தை யுடையவர், எ - று.

(போ - ரை.) நிகரற்ற மேலான ஞானயோகத்தையுடையவர், சொல்லுதற்கரிய சிவாநுபவத்தையுடையவர், சொல்லுதற்கரிய சிவசரணர்களிடத்தில் விருப்பத்தையுடை யவர், முக்காலமுங்கடந்தவர், ஆதரவாகிய இஷ்டலிங்கபூஜையில் விருப்பத்தையுடையவர், பரிசுத்தமாகிய திருமேனியையுடையவர், தப்பிப்போகாத ஸோஹம்பாவனையில் நிலைத் தவர், ஏகலிங்கைக்யமுக்திநிலையையுடையவர், சிவபக்திமார்க்கத்தை யனுசரித்தற்குரிய விவேகத்தையுடையவர்.

(வி - ரை.) முக்காலம் - இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம். துப்பு - ஆதரவு என்பதனை "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத் துப்பாயதூஉமழை" என்னும் திருக்குறளானுணர்க. (௬)

கூடல சங்க மேசன் குரைகழற் கன்பு செய்து
நீடவங் கிருந்து வாழ்ந்து நித்தரா நந்தி யார்தந்
தாடொழும் பிரிய மிக்குச் சங்கமே சுரத்தி னின்றுந்
தேடருங் கல்லி யாணச் செழுநகர் வந்து சேர்ந்தார்.

(ப - ரை.) கூடலசங்கமேசன் - கூடலஸங்கமேஶ்வரரது, குரை - ஒலிக்கின்ற, கழற்கு - வீரக்கழலையணிந்த திருவடிகளுக்கு, அன்புசெய்து - வழிபட்டு, நீட - நெடுநா ளாக, அங்கு - அந்தக் கூடலசங்கமேஶ்வரத்திலேயே, இருந்து - தங்கி, வாழ்ந்து - வாசஞ் செய்து, நித்தர் ஆம் - சிவஸ்வரூபியாகிய, நந்தியார் - வசவதேவரது, தாள் - திருவடிகளை, தொழும் - வணங்கவேண்டுமென்கிற, பிரியம் மிக்கு - அன்புமிகுந்து, சங்கமேசுரத்தில் நின்றும் - கூடலஸங்கமேஶ்வரத்தினின்றும், தேடு அரு - நாடுதற்கரிய, செழு - தெய்வீக ஸம்பத்தையுடைய, கல்லியாணநகர் - கல்யாணபட்டணத்தில், வந்து சேர்ந்தார் - எழுந் தருள்வாராயினர், எ - று.

(போ - ரை.) கூடலஸங்கமேஶ்வரரது ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த திருவடிக ளுக்கு வழிபட்டு, நெடுநாளாக அந்தக் கூடலஸங்கமேஶ்வரத்திலேயே தங்கி வாசஞ்செய்து, சிவஸ்வரூபியாகிய வசவதேவரது திருவடிகளை வணங்கவேண்டுமென்கிற அன்புமிகுந்து, கூடலஸங்கமேஶ்வரத்தினின்றும் நாடுதற்கரிய தெய்வீகஸம்பத்தையுடைய கல்யாணபட்ட ணத்தில் எழுந்தருள்வாராயினர்.

(வி - ரை.) அன்பு மூன்று வகைப்படும், அவையாவன :— தலையன்பு, இடையன்பு, கடையன்பு. தலையன்பாவது - தலைவி தலைவன் பெயர் குணம் கேட்டவழித் தன் வசமழி

தல், இடையன்பாவது அவனைக்கேட்டவண்ணம் கண்டபோது தன் வசமழிதல், கடையன்பாவது கூடினபோது தன் வசமழிதல். ஈண்டு வசவேசரிடத்து சென்னவசவேசரது அன்பு தலையன்பின்பொருளது. நந்தியார்தம் என்பதில் தம் - சாரியை. கழல் - ஆகுபெயர். (௫)

தேசிக வசவ தேவர் செய்யசன் னிதியிற் சென்றே
யாசைமேல் கொண்டு ரோம மானவை சிலிர்த்து மேனி
பேசரும் புளக மண்டிப் பெருவிழி யருவி யாறாய்
வாசகங் குன்றிச் சென்ன வசவரா சையர் பணிந்து.

(ப - ரை.) தேசிகர் - ஆசார்யராகிய, வசவதேவர் - வசவேசரது, செய்ய - அழகிய, சன்னிதியில் - சந்நிதானத்தில், சென்று - எழுந்தருளி, ஆசை - அன்பு, மேல் கொண்டு - தலைப்பட்டு, உரோமம் ஆனவை - மயிர்கள், சிலிர்த்து - பொடித்து, மேனி - திருமேனி, பேச அரு - சொல்லுதற்கரிய, புளகம் - பூரிப்பு, மண்டி - அதிகமாய்க் கொண்டு, பெரு - பெரிய, விழி - கண்களினின்றும் ஒழுகுகின்ற நீரானது, அருவியாறு ஆய் - நதிப்ரவாஹம்போலாகி, வாசகம் - வார்த்தை, குன்றி - குழறி, சென்னவசவராசையர் - சென்னவசவதேவர், பணிந்து - சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, எ - று.

(பொ - ரை.) ஆசார்யராகிய வசவேசரது அழகிய சந்நிதானத்தி லெழுந்தருளி, அன்பு தலைப்பட்டு, மயிர்கள் பொடித்து, திருமேனி சொல்லுதற்கரிய பூரிப்பு அதிகமாய்க் கொண்டு, பெரிய கண்களினின்று மொழுகுகின்ற நீரானது நதிப்ரவாஹம்போலாகி, வார்த்தை குழறி, சென்னவசவதேவர் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து.

(வி - ரை.) உரோமஞ் சிலிர்த்தலை ரோமாஞ்சலி என்பர் வடநூலார். தெய்வாசார்யரிடத்து அன்புமிக்கார்க்கு ரோமாஞ்சலிமுதலிய குறிகளுண்டாகு மென்பதிச் செய்யுளானினிது விளங்கும். (௬)

எழுகென வெழுந் திருந்தங் கிணைமலர்ப் பதம்பன் னீரா
லழகினா லாட்டிக் கந்த மணிமலர் சாத்தித் தூபஞ்
செழுமணித் தீப மெல்லாஞ் செலுத்திப்பின் சிரத்தை யாலே
தொழுகரஞ் சென்னி கூப்பித் தோத்திரஞ் செய்யா நிற்பார்.

(ப - ரை.) எழுக - எழுந்திருக்கக்கடவை, என்ன - என்றுகட்டளையிட்ட மாத்திரத்தில், எழுந்திருந்து - மேலேயெழுந்திருந்து, அங்கு - அவ்விடத்தே, மலர் - தாமரை மலர்போன்ற, இணை - இரண்டு, பதம் - சீர்பாதங்களையும், பன்னீரால் - பனிநீர்கொண்டு, அழகினால் - நன்றாக, ஆட்டி - அபிஷேகஞ்செய்து (விபூதியையும்), கந்தம் - வாசனையுடன் கூடின, மணி - அழகிய, மலர் - புஷ்பங்களையும், சாத்தி - அணிந்து, தூபம் - தூபம், செழு - அழகிய, மணி - ரத்நகசிதமான, தீபம் - தீபம், எல்லாம் - (ஆகிய) எல்லாவற்றையும், செலுத்தி - கொடுத்து, பின் - பின்பு, சிரத்தையால் - அன்புடன், தொழும் - வணங்குதற்குரிய, கரம் - திருக்கரங்களையும், சென்னி - திருமுடியின்மேல், கூப்பி - குவித்து, தோத்திரம் செய்யா நிற்பார் - துதிப்பவராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(பொ - ரை.) எழுந்திருக்கக்கடவையென்று கட்டளையிட்ட மாத்திரத்தில், மேலேயெழுந்திருந்து, அவ்விடத்தே தாமரைமலர்போன்ற இரண்டு சீர்பாதங்களையும் பனிநீர் கொண்டு நன்றாக அபிஷேகஞ்செய்து, விபூதியையும் வாசனையுடன்கூடின அழகிய புஷ்பங்களையுமணிந்து, தூபம் அழகிய ரத்நகசிதமான தீபமாகிய எல்லாவற்றையுங்கொடுத்து, பின்பு அன்புடன் வணங்குதற்குரிய திருக்கரங்களையும் திருமுடியின் மேற்குவித்துத் துதிப்பவராயினர், எவ்வாறெனின்:—

(வி - ரை.) எழுக எனவென்பது எழுகெனவென விகாரமாயிற்று. தூபம் - சாம்பிராணிப்புகை முதலியன. தீபம் - கும்பார்த்தி, கற்பூரார்த்தி முதலியன. (எ)

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அருளா ரமுதே சரணஞ் சரண மன்பர்க் கணியே சரணஞ் சரணங்
கருநா சனனே சரணஞ் சரணங் கண்ணே மணியே சரணஞ் சரணந்
தெருளே பொருளே சரணஞ் சரணந் திருவே தருவே சரணஞ் சரணந்
தருமா கரனே சரணஞ் சரணந் தவநற் குருவே சரணஞ் சரணம்.

(ப - ரை.) அருள் ஆர் அமுதே - கருணாம்ருதமே, சரணம் சரணம் - சரணார்த்தி சரணார்த்தி, அன்பர்க்கு - சிவபக்தர்களுக்கு, அணியே - பூஷணமே, சரணம் சரணம் - சரணார்த்தி சரணார்த்தி, கருநாசனனே - பவநாசகனே, சரணம் சரணம் - சரணார்த்தி சரணார்த்தி, கண்ணே - கண்ணே, மணியே - கண்மணியே, சரணம் சரணம் - சரணார்த்தி சரணார்த்தி, தெருளே - வீரசைவசித்தாந்தத்தெளிவே, பொருளே - தத்வார்த்தமே, சரணம் சரணம் - சரணார்த்தி சரணார்த்தி, திருவே - நிதியே, தருவே - கற்பகமே, சரணம் சரணம் - சரணார்த்தி சரணார்த்தி, தரும ஆகரனே - புண்யஸ்வரூபனே, சரணம் சரணம் - சரணார்த்தி சரணார்த்தி, தவம் - நிஷ்டையிற் சிறந்த, நல் குருவே - ஸத்குருவே, சரணம் சரணம் - சரணார்த்தி சரணார்த்தி, எ - று.

(போ - ரை.) கருணாம்ருதமே! சரணார்த்தி சரணார்த்தி, சிவபக்தர்களுக்குப் பூஷணமே! சரணார்த்தி சரணார்த்தி, பவநாசகனே! சரணார்த்தி சரணார்த்தி, கண்ணே! கண்மணியே! சரணார்த்தி சரணார்த்தி, வீரசைவ சித்தாந்தத்தெளிவே! தத்வார்த்தமே! சரணார்த்தி சரணார்த்தி, நிதியே! கற்பகமே! சரணார்த்தி சரணார்த்தி, புண்யஸ்வரூபனே! நிஷ்டையிற் சிறந்த ஸத்குருவே! சரணார்த்தி சரணார்த்தி.

(வி - ரை.) ஆர் - நிறைந்த. நாசகன் - அழித்தவன். கரு - பிறப்பு. மணி - கருவிழி. ஆகரன் - இடமாயிருப்பவன். (அ)

எங்கு மீசனோ டேகுவாய் சரண மென்க ருத்திருட் கிரவியே சரணம்
பங்க வாதரைப் பாற்றுவாய் சரணம் பரம பத்திவிற் பத்தியாய் சரணஞ்
சங்க ரன்றிரு வுருவமே சரணந் தரும ஞானமாஞ் சக்குவே சரணந்
திங்கள் வேணியார் செல்வமே சரணந் தெளிவி லேனருந் தேசிகா சரணம்.

(ப - ரை.) எங்கும் - எவ்விடத்தும், ஈசனோடு - சிவபெருமானுடனே, ஏகுவாய் - செல்வோனே, சரணம் - சரணார்த்தி, என் - அடியேனது, கருத்து இருட்கு - மனவிருளுக்கு, இரவியே - ஞானசூரியனே, சரணம் - சரணார்த்தி, பங்கம் - ஹீனரான, வாதரை - பிறசமயவாதிகளை, பாற்றுவாய் - ஓட்டுவோனே, சரணம் - சரணார்த்தி, பரமம் - மேலான, பத்தி - பக்திமார்க்கத்துக்குரிய, விற்பத்தியாய் - கல்வித்திறமை யுடையோனே, சரணம் - சரணார்த்தி, சங்கரன் திருவுருவமே - சிவஸ்வரூபமே, சரணம் - சரணார்த்தி, தருமம் ஆம் சக்குவே - தர்மநேத்ரமே, ஞானம் ஆம் சக்குவே - ஞானநேத்ரமே, சரணம் - சரணார்த்தி, திங்கள்வேணியார் - சிவபெருமானுடைய, செல்வமே - பாக்யமே, சரணம் - சரணார்த்தி, தெளிவிலேன் - அறிவில்லாதவனாகிய அடியேனது, அரு - மேன்மையாகிய, தேசிகா - ஸத்குருவே, சரணம் - சரணார்த்தி, எ - று.

(போ - ரை.) எவ்விடத்தும் சிவபெருமானுடனே செல்வோனே! சரணார்த்தி, அடியேனது மனவிருளுக்கு ஞானசூரியனே! சரணார்த்தி, ஹீனரான பிறசமயவாதிகளை யோட்டுவோனே! சரணார்த்தி, மேலான பக்திமார்க்கத்துக்குரிய கல்வித்திறமை யுடையோனே! சரணார்த்தி, சிவஸ்வரூபமே! சரணார்த்தி, தர்மநேத்ரமே! ஞானநேத்ரமே!

சரணார்த்தி, சிவபெருமானுடைய பாக்யமே! சரணார்த்தி, அறிவில்லாதவனாகிய அடியே னது மேன்மையாகிய ஸத்குருவே! சரணார்த்தி.

(வி - ரை.) சக்கு - சக்ஷுஃ என்னும் வடசொற்றிரிபு. விற்பத்தி - வ்யுத்பத்தி என்னும் வடசொற்றிரிபு. ஏகுவாய், பாற்றுவாய் என்பன வினையாலணையும் பெயர்கள், விளிவுருபேற்றுநின்றன. திங்கள்வேணியார் - சந்த்ரசேகரர். (கூ)

முந்தை நன்னெறி மூலமே சரண முத்தி யீதெனு மொழியனே சரண
நிந்தை யொன்றிலா நின்மலா சரண நிகரில் சைவநன் னிதியமே சரணம்
வந்த வெந்துயர் மாற்றுவாய் சரண மதத்த வெஞ்சமண் மறலியே சரணஞ்
சிந்தை யின்வழிச் சேரலாய் சரணந் தெளிவி லேனருந் தேசிகா சரணம்.

(ப - ரை.) முந்தை - பழமையாகிய, நல் நெறி - சிவாசாரத்துக்கு, மூலமே - காரணமே, சரணம் - சரணார்த்தி, முத்தி - மோக்ஷமார்க்கமென்பது, ஈது - இதுவே, என்னும் - என்று நிச்சயமாயுபதேசிக்கவல்ல, மொழியனே - திருவாக்கினையுடையவனே, சரணம் - சரணார்த்தி, நிந்தை - தூஷணமென்பது, ஒன்று - சற்றும், இல்லா - இல்லாத, நின்மலா - மலரஹிதனே, சரணம் - சரணார்த்தி, நிகர் இல் - ஒப்பற்ற, சைவம் - சைவமாகிய, நல் - நல்ல, நிதியமே - நிதியே, சரணம் - சரணார்த்தி, வந்த - அநேகஜந்மங்களில் பின்றொடர்ந்துவந்த, வெம் - கொடிய, துயர் - துன்பத்தை, மாற்றுவாய் - ஒழிப்பவனே, சரணம் - சரணார்த்தி, மதத்த - மதங்கொண்ட, வெம் - கொடிய, சமண் - சமணர்களுக்கு, மறலியே - யமனே, சரணம் - சரணார்த்தி, சிந்தையின் வழி - (அலையாநின்ற) மனத்தின்வழியிலே, சேரலாய் - செல்லாதவனே, சரணம் - சரணார்த்தி, தெளிவிலேன் - அறிவில்லாதவனாகிய அடியேனது, அரு - மேன்மையாகிய, தேசிகா - ஸத்குருவே, சரணம் - சரணார்த்தி, எ - று.

(பொ - ரை.) பழமையாகிய சிவாசாரத்துக்குக் காரணமே! சரணார்த்தி, மோக்ஷ மார்க்கமென்பது இதுவே என்று நிச்சயமாயுபதேசிக்கவல்ல திருவாக்கினை யுடையவனே! சரணார்த்தி, தூஷணமென்பது சற்றுமில்லாத மலரஹிதனே! சரணார்த்தி, ஒப்பற்ற சைவமாகிய நல்ல நிதியே! சரணார்த்தி, அநேக ஜந்மங்களில் பின்றொடர்ந்துவந்த கொடிய துன்பத்தை யொழிப்பவனே! சரணார்த்தி, மதங்கொண்ட கொடிய சமணர்களுக்கு யமனே! சரணார்த்தி, அலையாநின்ற மனத்தின்வழியிலே செல்லாதவனே! சரணார்த்தி, அறிவில்லாதவனாகிய அடியேனது மேன்மையாகிய ஸத்குருவே! சரணார்த்தி. (சo)

கொச்சகப்பா.

என்றுசென்ன வசவதேவ ரிங்ஙனந் துதிக்கவே
நின்றபேர்க டம்முளே நினைந்துநின்று செப்புவார்
நன்றுநந்தி தேவருண்மை நன்மைவல்ல ரிவரலா
தன்றனந்த னாவினா லளந்துரைக்க வரியதால்.

(ப - ரை.) என்று - என்று, சென்னவசவதேவர் - சென்னவசவேசர், இங்ஙனம் - இவ்வாறு, துதிக்கவே - தோத்திரஞ்செய்தலும், நின்றபேர்கள் - அங்கெழுந்தருளியிருந்த ஜங்கமமூர்த்திகள், தம் - தமது, உள்ளே - மனத்தில், நினைந்து நின்று - ஆலோசித்து நின்று, செப்புவார் - சொல்லுவாரானார்கள் (எவ்வாறெனின்), நன்று - பெருமைபொருந்திய, நந்திதேவர் - வசவேசரது, உண்மை நன்மை - சன்மார்க்க மெல்லாவற்றையும், வல்லர் - நன்குணரவல்லவர், இவர் - இந்தச் சென்னவசவேசரே, அலால் - அன்றி, அன்று - வேறொருவரும் வல்லவரல்லர், அனந்தன் - ஆதிசேஷனும், நாவினால் - தனது பல நாக்கினைக்கொண்டு, அளந்து - அளவிட்டு, உரைக்க - சொல்ல, அரியது - முடியாது, எ - று.

(பொ - ரை.) என்று சென்னவசவேசர் இவ்வாறு தோத்திரஞ்செய்தலும், அங்கெழுந்தருளியிருந்த ஜங்கமமூர்த்திகள் தமது மனத்தில் ஆலோசித்துநின்று சொல்லுவாரானார்கள், எவ்வாறெனின் :— பெருமைபொருந்திய வசவேசரது சன்மார்க்கமெல்லாவற்றையும் நன்குணரவல்லவர் இந்தச் சென்னவசவரேயன்றி வேறொருவரும் வல்லவரல்லர், ஆதிசேஷனும் தனது பல நாக்கனைக்கொண்டு அளவிட்டுச் சொல்லமுடியாது.

என வுரைத்த பின்னர்சென்ன வசவதேவ ரியல்பெலா
முனநினைந்து நந்திதேவர் மொழியவல்ல ரிருவர்தங்
கனமதான மகிமைநீதி கண்டிசைப்ப னத்தனென்
றனைவரும்பு கழ்ந்துநிற்கு மந்தநல்ல வெல்லையில்.

(ப - ரை.) என்ன - என்று, உரைத்த பின்னர் - புகழ்ந்துசொன்ன பிறகு, சென்னவசவதேவர் - சென்னவசவேசரது, இயல்பு எல்லாம் - சன்மார்க்க மெல்லாவற்றையும், முனம் - முன்னமே, நினைந்து - உணர்ந்து, நந்திதேவர் - வசவேசரே, மொழியவல்லர் - சொல்லவல்லவர், இருவர் - இவ்விரண்டு சிவசரணர்களது, கனம் ஆன - பெரிதான, மகிமை - மஹத்வம்பொருந்திய, நீதி - சன்மார்க்க மெல்லாவற்றையும், அத்தன் - சிவபெருமானே, கண்டு - உணர்ந்து, இசைப்பன் - சொல்லவல்லவன், என்று - என்று, அனைவரும் - எல்லாரும், புகழ்ந்துநிற்கும் - புகழ்கின்ற, அந்த - அந்த, நல்ல எல்லையில் - நல்ல காலத்தில், எ - று.

(பொ - ரை.) என்று புகழ்ந்து சொன்ன பிறகு, சென்னவசவேசரது சன்மார்க்க மெல்லாவற்றையும் முன்னமே உணர்ந்து வசவேசரே சொல்லவல்லவர், இவ்விரண்டு சிவசரணர்களது பெரிதான மஹத்வம்பொருந்தியசன்மார்க்கமெல்லாவற்றையும் சிவபெருமானே உணர்ந்துசொல்ல வல்லவனென்று எல்லாரும் புகழ்கின்ற அந்த நல்ல காலத்தில்.

(வி - ரை.) இசைப்பன் - வினையாலணையும் பெயர். மகிமை - மஹிமா என்னும் வடசொற்றிரிபு. இருவர்தம் என்பதில் தம் - சாரியை. கனமதான என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. (கஉ)

சென்னவசவ புராணம் - முற்றிற்று.



ஆக திருவிருத்தம் - ௩௨௩.



சிவமயம்.

# அல்லமப்பிரபு புராணம்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

செய்ய சங்கர னல்ல மாப்பிரபு தேவ ரென்றொரு தேகர்போல்
வைய முய்ய மகித லத்திடை வந்தி றங்கிய மகிமையார்
பொய்யெ னும்பிர வஞ்ச நீதி பொருந்தி லாத தபோதனை
ரைய மொன்றற மண்ணு ளோர்க ளகத்தி லுற்ற தறிந்துளார்.

(ப - ரை.) செய்ய - மேன்மைபொருந்திய, சங்கரன் - சிவபெருமானே, அல்லமாப் பிரபுதேவர் - அல்லமப்பிரபுதேவர், என்று - என்று சொல்லப்படும் திருநாமத்தினை யடைந்து, ஒரு தேகர் போல் - ஒரு திருமேனியையுடைய சாலிங்கமூர்த்தியைப்போல, வையம் - உலகமானது, உய்ய - உஜ்ஜீவிக்கும்பொருட்டு, மகிதலத்திடை - பூலோகத்தில், வந்து - (ஸ்ரீமஹா கைலாஸத்தினின்றும்) எழுந்தருளி வந்து, இறங்கிய - இறங்கின, மகி மையார் - மஹத்வத்தையுடையவர், பொய் என்னும் - பொய்யாகிய, பிரவஞ்சநீதி - லோகாசாரத்தை, பொருந்திலாத - அடைந்தில்லாத, தபோதனர் - ஜங்கமர், ஐயம் - ஸந் தேஹம், ஒன்று அற - சிறிதுமில்லாமல், மண்ணுளோர்கள் - உலகத்திலுள்ளவர்களுடைய, அகத்தில் உற்றது - மனத்திலுள்ளவற்றை யெல்லாம், அறிந்து உள்ளார் - உணர்ந்திருப் பவர், எ - று.

(போ - ரை.) மேன்மை பொருந்திய சிவபெருமானே அல்லமப் பிரபுதேவரென்று சொல்லப்படும் திருநாமத்தினையடைந்து ஒரு திருமேனியையுடைய சாலிங்கமூர்த்தி யைப்போல உலகமானது உஜ்ஜீவிக்கும்பொருட்டுப் பூலோகத்தில் ஸ்ரீமஹாகைலாஸத்தி னின்றும் எழுந்தருளிவந்திறங்கின மஹத்வத்தையுடையவர், பொய்யாகிய லோகாசாரத் தையடைந்தில்லாத ஜங்கமர், ஸந்தேஹஞ் சிறிதுமில்லாமல் உலகத்திலுள்ளவர்களுடைய மனத்திலுள்ளவற்றையெல்லா முணர்ந்திருப்பவர்.

(வி - ரை.) செய்ய - செம்மைப் பண்படியாகப் பிறந்த செய்யவென்னும் பெய ரெச்சம்; செந்நிறமுள்ள, நடுவுநிலையுள்ளவென்று பொருள்கொள்ளினுமமையும். மகி தலம், பூலோகம், தபோதனர் என்பன இருபெயரொட்டுப் பண்புத்தொகைகள். (௧)

கன்ம மில்லவர் மாயை யாரிடு காரி யங்கள் கடந்துளார்
சென்ம நாசனர் தூர திட்டி தெரிந்த செய்திய ரொப்பிலார்
நன்மை தீமை பகுத்த லற்றவர் நாடு பொன்மணி யோடெனும்
தன்மை யாகவி கழ்ந்து காமம தாதி யாறு தவிர்ந்துளார்.

(ப - ரை.) கன்மம் இல்லவர் - புண்யபாப கர்மமொழிந்தவர், மாயையார் இடுகாரி யங்கள் - மாயாகாரியங்களெல்லாவற்றையும், கடந்துளார் - வென்றவர், சென்மநாசனர் - பிறவியை யொழித்தவர், தூரதிட்டி தெரிந்த - தூரத்திலுள்ள பொருளைக்கிட்டப் பார்க்க வல்ல, செய்தியர் - செய்கையையுடையவர், ஒப்பு இல்லார் - நிகரற்றவர், நன்மை தீமை - சுகதுக்கங்களை, பகுத்தல் அற்றவர் - பகுத்தறிதலில்லாதவர், நாடு - (யாவரும்

விரும்பி) தேடுதற்குரிய, பொன் - பொன்னையும், மணி - ரத்நங்களையும், ஓடு என்னும் தன்மையாக - ஓடென்றே, இகழ்ந்து - சீயென்று பழித்து, காமம் ஆதி ஆறு - காமம் முதலிய ஆறும், தவிர்த்து உள்ளார் - ஒழித்திருப்பவர். எ - று.

(பொ-ரை.) புண்யபாபகர்மமொழித்தவர், மாயாகாரியங்களெல்லாவற்றையுங்கடந்தவர், பிறவியையொழித்தவர், தூரத்திலுள்ள பொருளைக்கிட்டப் பார்க்கவல்ல செய்கையையுடையவர், நிகரற்றவர், சுகதுக்கங்களைப் பகுத்தறிதலில்லாதவர், யாவரும் விரும்பித்தேடுதற்குரிய பொன்னையும் ரத்நங்களையும் ஓடென்றே சீயென்று பழித்துக் காமம் முதலியவாறு மொழித்திருப்பவர்.

(வி - ரை.) திட்டி - த்ருஷ்டி என்னும் வடசொற்றிரிபு. தூரதிட்டி தெரிந்த செய்தியர் - த்ரிகாலஜ்ஞானி என்றவாறு. நன்மைதீமை பகுத்தலற்றவர் என்றமையால் இரண்டும் சமமாக நோக்குவோர் என்றதாயிற்று. காமமதாதி என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. (உ)

உடல்வி கற்பமெ லாமொ ழித்தவ ரூழி நீரனல் காலுறு
தடல்ப டைத்தொரு கால முமன மாதி நாலணை யாதுளார்
விடலி லாத சிவானு பூதி விழிக்கு ளேவிழி விரவுவார்
நடைநி லத்தி லுறார்நி ழற்றொழி னாடொ ணாத நலத்தினர்.

(ப - ரை.) உடல் - உடம்புக்குரிய, விகற்பம் எல்லாம் - விகாரங்களெல்லாமும், ஒழித்தவர் - நீக்கியிருப்பவர், ஊழி - யுகமுடிவிலுண்டாகின்ற, நீர் - ஜலப்ரளயமும், அனல் - காலாக்நியும், கால் - ப்ரசண்டமாருதமும், உறுத - அடையவொண்ணாத, அடல் படைத்து - வல்லமையை யடைந்து, ஒரு காலமும் - ஒருகாலத்திலும், மனம் ஆதி நால் - மனம் முதலிய நான்கும், அணையாது - சேராமல், உள்ளார் - இருப்பவர், விடல் இல்லாத - விட்டு நீங்காத, சிவானுபூதி - சிவாநுபூதியாகிய, விழிக்குள்ளே - கண்மணிக்குள்ளே, விழி விரவுவார் - விழித்திருப்பவர், நிலத்தில் - பூமியில், நடை உறார் - நடக்காதவர், நிழல் - தமது நிழலின், தொழில் - செயலை, நாடு ஒண்ணாத - தேடமுடியாத, நலத்தினர் - மேன்மையையுடையவர், எ - று.

(பொ - ரை.) உடம்புக்குரிய விகாரங்களெல்லாமும் நீக்கியிருப்பவர், யுகமுடிவிலுண்டாகின்ற ஜலப்ரளயமும் காலாக்நியும் ப்ரசண்டமாருதமு மடையவொண்ணாத வல்லமையை யடைந்து ஒருகாலத்திலும் மனம் முதலிய நான்கும் சேராமலிருப்பவர், விட்டுநீங்காத சிவாநுபூதியாகிய கண்மணிக்குள்ளே விழித்திருப்பவர், பூமியில் நடக்காதவர், தமது நிழலின் செயலைத் தேடமுடியாத மேன்மையையுடையவர்.

(வி - ரை.) மனமாதிநால் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம்; இவற்றை அந்தக்கரண சதுஷ்டயம் என்பர் வடநூலார். விழியிரண்டிலுள்ளே பின்னையது அகக்கண்ணை யுணர்த்திற்று. நடையுறார் - அடிதோயாதவர் எனினுமாம். நிழல்தொழில் நாடொணாத நலத்தினர் - திருமேனியினது நிழலின் வ்யாபாரமில்லாதவர். உடல்விகற்பம் - காமம் முதலியன. (ந)

கரத்த லத்தி லிலிங்க முமலை கரிய குஞ்சியு நெற்றிமேற்
றரித்த புண்டர முந்து லங்கிய தன்மை யுள்ளவ ராபரோ
விரித்த வேத சிவாக மாதிக வித்தை யுள்ளவ ராகிநன்
னிருத்த னன்றரி யாக யோக நிலைக்க ருத்தின ராகியே.

(ப - ரை.) கரத்தலத்தில் - திருக்கரத்தில், இலிங்கமும் - சிவலிங்கமும், அலைசைகின்ற, கரிய - கருமையாகிய, குஞ்சியும் - சிகையும், நெற்றிமேல்-நெற்றியில்,தரித்த

தாரணஞ்செய்த, புண்டரமும் - (விபூதியின்) த்ரிபுண்டரமும், துலங்கிய - விளங்கிய, தன்மையுள்ளவர் ஆய் - லக்ஷணமுள்ளவராகியும், விரித்த - விளக்கப்பட்டுள்ள, வேதசிவாகமம் - வேதசிவாகமங்களில், அதிகவித்தை உள்ளவர் ஆகி - மஹாபண்டிதராகியும், நிருத்தன் - சிவபெருமான் விரும்புதற்குரிய, நல் - சிறந்த, அந்தரியாகம் - உட்பூசையாகிய, யோகநிலை - சிவயோகசமாதிநிலையில், கருத்தினர் ஆகி - திருவுளமுடையவராகியும், எ-று.

(பொ - ரை.) திருக்கரத்தில் சிவலிங்கமும் அசைகின்ற கருமையாகிய சிகையும் நெற்றியில் தாரணஞ்செய்த விபூதியின் த்ரிபுண்டரமும் விளங்கிய லக்ஷணமுள்ளவராகியும், விளக்கப்பட்டுள்ள வேதசிவாகமங்களில் மஹாபண்டிதராகியும், சிவபெருமான் விரும்புதற்குரிய சிறந்த உட்பூசையாகிய சிவயோகசமாதிநிலையில் திருவுள முடையவராகியும்.

(வி - ரை.) நிருத்தன் - நடராஜன். நிருத்தன் அந்தரியாகம் என்றமையால் ப்ராணலிங்க பூஜையைக் குறித்தது; கரதலத்தில் இலிங்கம் என்றமையால் இஷ்டலிங்க பூஜையைக்குறித்தது; இவ்விரண்டு பூஜைகளும் வீரசைவர்களுக்குரியன. கரதலம் - இருபெயரொட்டு (உள்ளங்கையில்). நெற்றிமேல் என்பதில் மேல் ஏழனுருபு. (ச)

பத்தர் நன்னிதி தூவி ரத்தர் பரந்த பேருள தில்லரோ
சத்த முள்ளது மில்ல ரோவென தானெ னத்தவர் சொல்லவே
யொத்த பாவனை யுள்ள துமில ரோவெ னும்படி யுடையராய்
நித்த சிந்தனை யிற ரோமறை யிற ரோவெனு நிலையராய்.

(ப - ரை.) பத்தர் - சிவபக்தர்களுக்கு, நல் - சிறந்த, நிதி - நிக்ஷேபமாகியும், தூ - பரிசுத்தரான, விரத்தர் - விரக்தியுள்ளவராகியும், பரந்த - விஸ்தாரமான, பேர் உளது இல்லரோ - பெயருமுள்ளவரோ பெயருமில்லாதவரோ, சத்தம் உள்ளதும் இல்லரோ - சப்தரூபமு முள்ளவரோ சப்தரூபமு மில்லாதவரோ, என்னதான் - மற்றெந்த தன்மையையுடையவரோ, என்ன - என்று வியந்து, தவர் - ஜங்கமமூர்த்திகள், சொல்ல - கூறும்படி, ஒத்த - பொருந்திய, பாவனையுள்ளதும் இல்லரோ - பாவனையு முள்ளவரோ பாவனையு மில்லாதவரோ, என்னும்படியுடையர் ஆய் - என்கின்ற தன்மையுடையவராகியும், நித்தன் சிந்தனை ஈறரோ - த்வைதரோ, மறை ஈறரோ - அத்வைதரோ, என்னும் - என்று சொல்லும்படியான, நிலையர் ஆய் - (வேற்றுமை காணமுடியாத) தன்மையையுடையவராகியும், எ - று.

(பொ - ரை.) சிவபக்தர்களுக்குச் சிறந்த நிக்ஷேபமாகியும், பரிசுத்தரான விரக்தியுள்ளவராகியும், விஸ்தாரமான பெயருமுள்ளவரோ? பெயருமில்லாதவரோ? சப்தரூபமுமுள்ளவரோ? சப்தரூபமுமில்லாதவரோ? மற்றெந்த தன்மையையுடையவரோ? என்று ஜங்கமமூர்த்திகள் வியந்து கூறும்படி பொருந்திய பாவனையுமுள்ளவரோ? பாவனையு மில்லாதவரோ? என்கிற தன்மையையுடையவராகியும், த்வைதரோ? அத்வைதரோ? என்று சொல்லும்படியான வேற்றுமை காணமுடியாத தன்மையையுடையவராகியும்.

(வி - ரை.) பாவனை - பாவித்தல். இறுதி - முடிவு (அந்தம்). விரத்தர் - விரக்தர் என்னும் வடசொற்றிரிபு. விரக்தி - வெறுப்பு, அதனையுடையவர் விரக்தர். நித்தன் சிந்தனை ஈறர் - தான் வேறாகவும் சிவபெருமான் வேறாகவும் சிந்தனைசெய்தல், இதன்முடிவாவது த்வைதம். மறையீறு - வேதாந்தம் (அத்வைதம்). நிக்ஷேபம் - புதையல். நித்தன் - சிவபெருமான். அரோ - அசை. சத்தம் - வார்த்தை. சத்தம்இல்லரோ - சப்தாதீதரோ, பாவனையிலரோ - பாவனாதீதரோ. சத்தம் - சப்தம் என்னும் வடசொற்றிரிபு. (ரு)

சரிக்கு மெல்லையி னுள்ள தாருவி னங்கள் காடுகள் சையமா
றிரைத்தெ ழுங்கட லேரி தம்மி லிறைஞ்சி யேற விலங்குமே
லருத்தி மேனிகொ டண்ட மூடுவ ரணுவ தாகுவர் மேகமே
லிருப்பர் நீரி னடப்பர் வானவ ரேகொணவிட மெய்துவார்.

(ப - ரை.) சரிக்கும் - சஞ்சரிக்கின்ற, எல்லையில் - காலத்தில், உள்ள - நிலைபெற்றிருந்தனவாகிய, தாரு இனங்கள் - மரக்கூட்டங்களும், காடுகள் - வனங்களும், சையம் - மலைகளும், மால் - பெரிய, திரைத்து எழும் - அலைகளை வீசியெழாநின்ற, கடல் - சமுத்திரங்களும், ஏரி - ஏரிகளும், தம்மில் - தத்தமக்குள்ளே யொருங்குகூடி, இறைஞ்சி - வணங்கி, ஏற விலங்கும் - தூரவிலகிப்போய்விடும், மேல் - அதன்பிறகு, அருத்தி - விரும்பின, மேனி - வடிவங்களை, கொடு - எடுத்து, அண்டம் - ஆகாயமெல்லாவற்றையும், மூடுவர் - மறைப்பார், அணு ஆகுவர் - அணுரூபமுமாவார், மேகம் மேல் - மேகமண்டலத்திலும், இருப்பர் - இருப்பார், நீரில் - நீர்மேலும், நடப்பர் - நடப்பார், வானவர் - தேவர்கள், ஏக ஒண்ணு - போகக்கூடாத, இடம் - ஸ்தலங்களிலும், எய்துவார் - போவார். எ-று.

(போ - ரை.) சஞ்சரிக்கின்ற காலத்தில், நிலைபெற்றிருந்தனவாகிய மரக்கூட்டங்களும், வனங்களும், மலைகளும், பெரிய அலைகளை வீசியெழாநின்ற சமுத்திரங்களும், ஏரிகளும், தத்தமக்குள்ளே யொருங்குகூடி வணங்கித் தூரவிலகிப்போய்விடும், அதன் பிறகு விரும்பின வடிவங்களை யெடுத்து ஆகாயமெல்லாவற்றையும் மறைப்பார், அணுரூபமுமாவார், மேகமண்டலத்திலுமிருப்பார், நீர்மேலும் நடப்பார், தேவர்கள் போகக்கூடாத ஸ்தலங்களிலும் போவார்.

(வி - ரை.) அணுவது என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. (௬)

இன்ன தன்மைய ரல்ல மாப்பிரபு வென்னு நற்கலி யாணனு
ரன்ன மேனிகொ டமல நந்திக ளதிக பத்தியி னன்புநீ
ணன்னி யாய நினைந்து விச்சல நகரு ணண்ணி நயப்புடன்
மன்ன ரும்புகழ் வசவ தேவர் மலர்க்கண் முன்னெதிர் வருதலும்.

(ப - ரை.) இன்ன - இப்படிப்பட்ட, தன்மையர் - நிலைமையையுடையவரும், அல்லமாப்பிரபு - அல்லமப்பிரபுதேவர், என்னும் - என்கின்ற திருநாமத்தையுடையவருமாகிய, நல் - திவ்ய, கலியாணனுர் - கல்யாணகுணங்களையுடையவர், அன்ன - அப்படிப்பட்ட மஹத்வம்பொருந்திய, மேனி - திவ்யசரீரத்தை, கொடு - எடுத்து, அமலம் - நிர்மலரான, நந்திகள் - வசவேசரது, அதிக - மிகுந்த, பத்தியின் - பக்தியினுல், அன்புநீள் - அன்புமிக்க, நல் நியாயம் - சன்மார்க்கத்தை, நினைந்து - திருவுளம்பற்றி, விச்சல நகருள் - விஜ்ஜலநகரமாகிய கல்யாணநகரத்தில், நண்ணி - சேர்ந்து, நயப்புடன் - அன்புடன், மன்னரும் - அரசர்களும், புகழ் - புகழத்தக்க, வசவதேவர் - வசவேசரது, மலர் - தாமரைமலர் போன்ற, கண்முன் - கண்களுக்கு எதிரே, வருதலும் - எழுந்தருளிவந்த மாத்திரத்தில் எ - று.

(போ - ரை.) இப்படிப்பட்ட நிலைமையையுடையவரும் அல்லமப்பிரபுதேவரென்கிற திருநாமத்தையுடையவருமாகிய திவ்ய கல்யாணகுணங்களையுடையவர் அப்படிப்பட்ட மஹத்வம் பொருந்திய திவ்யசரீரத்தை யெடுத்து நிர்மலரான வசவேசரது மிகுந்த பக்தியினுல் அன்புமிக்க சன்மார்க்கத்தைத் திருவுளம்பற்றி விஜ்ஜலநகரமாகிய கல்யாண நகரத்திற்சேர்ந்து, அன்புடன் அரசர்களும் புகழத்தக்க வசவேசரது தாமரைமலர் போன்ற கண்களுக்கெதிரே எழுந்தருளிவந்த மாத்திரத்தில். (௭)

நந்தி கேசுரர் நவம ணித்திர ணன்மை வல்லவர் போலெழுந்
தெந்தை யெய்தின னெனவ றிந்தெதி ரெய்தி யன்பினி றைஞ்சியே
செந்தி ரட்கதி ரென்ன லாமரி யாத னத்திடை சேரவைத்
தந்த மெய்த்தவர் சோதி மேனியி னதிச யந்தனை நாடியே.

(ப - ரை.) நந்திகேசுரர் - வசவதேவரானவர், நவமணித்திரள் - நவமணிராசியின், நன்மை - ப்ரயோஜநத்தை, வல்லவர்போல் - அடையவல்லவர்போல, எழுந்து - (தமது இருக்கையினின்றும்) மேலேயெழுந்து, எந்தை - எமது சுவாமி, எய்தினன் - எழுந்தருளினார், என்ன - என்று, அறிந்து - உணர்ந்து, எதிர் எய்தி - எதிர்சென்று, அன்பின் - அன்புடன், இறைஞ்சி - சாஷ்டாங்கமாக வணங்கி, செம் - சிவந்த, திரள்கதிர் - அநேக சூரியர்கள், என்னல் ஆம் - என்று சொல்லும்படியான, அரி ஆதனத்து இடை - (ரத்நகசிதமான) சிங்காதநத்தில், சேரவைத்து - எழுந்தருளச்செய்து, அந்த - அந்த, மெய்த்தவர் - ஜங்கமமூர்த்திகளாகிய அல்லமப்ரபுதேவரது, சோதி - காந்தியையுடைய, மேனியின் - திவ்யவிக்ரஹத்தின், அதிசயம் தன்னை - அற்புதத்தை, நாடி - நோக்கி எ - று,

(பொ - ரை.) வசவதேவரானவர் நவமணி ராசியின் ப்ரயோஜநத்தையடைய வல்லவர்போலத் தமது இருக்கையினின்று மேலேயெழுந்து, எமது சுவாமி எழுந்தருளினாரென்றுணர்ந்து, எதிர்சென்று, அன்புடன் சாஷ்டாங்கமாக வணங்கி, சிவந்த வநேக சூரியர்களென்று சொல்லும்படியான ரத்நகசிதமான சிங்காதநத்தி லெழுந்தருளச் செய்து, அந்த ஜங்கமமூர்த்திகளாகிய அல்லமப்ரபுதேவரது காந்தியையுடைய திவ்ய விக்ரஹத்தின் அற்புதத்தை நோக்கி.

(வி-ரை.) அதிசயந்தனை என்பதில் தன் - சாரியை. (அ)

விளங்கு பாதம் விளக்கி நீரை விரைந்த யின்று சிரத்தினு
முளங்கு ளிர்ந்திட வேதெ ளித்துட லுருகு நேய வுயர்ச்சியால்
வளங்கொள் பூதி யிருத்தி நின்று வணங்கி யென்னுயிர் வாழ்வுநீ
யளந்த முற்படி யன்ன முள்ள தருந்து மென்பழு தாறுவேன்.

(ப - ரை.) விளங்கு - பிரகாசிக்கின்ற, பாதம் - (அவர்) சீர்பாதங்களை, விளக்கி - கழுவி, நீரை - அந்தப் பாதோதகத்திற்சிறிது, விரைந்து - விரைவாக, அயின்று - ஸ்வீகரித்து, உள்ளம் - மனமானது, குளிர்ந்திட - குளிர்ச்சியடையும்படி, சிரத்தினும் - திருமுடியின்மீதும், தெளித்து - (சிறிது) ப்ரோக்ஷித்துக்கொண்டு, உடல் - திருமேனியானது, உருகும் - நெக்குவிட்டுக் கரையும்படியான, நேய உயர்ச்சியால் - அன்பின் மிகுதியால், வளம்கொள் - மேன்மைபொருந்திய, பூதி - விபூதியை, இருத்தி - திருமுன்னே வைத்து, நின்று - நின்றுகொண்டு, வணங்கி - சாஷ்டாங்கமாகப்பணிந்து, என் - அடியேனது, உயிர் வாழ்வு - ப்ராணாதாரமாகிய, நீ - தேவரீர், முன் - முன்னே, படிஅளந்த - படி கொடுத்தருளின, அன்னம் - திருவமுதானது, உள்ளது - அடியேனிடத்துண்டு, அருந்தும் - அமுதுசெய்யக்கடவீர், என் - அடியேனுடைய, பழுது - பாவங்களெல்லாவற்றையும், ஆறுவேன் - ஒழித்துக்கொள்வேன், எ - று.

(பொ - ரை.) பிரகாசிக்கின்ற அவர் சீர்பாதங்களைக்கழுவி, அந்தப் பாதோதகத்திற் சிறிது விரைவாக ஸ்வீகரித்து, மனமானது குளிர்ச்சியடையும்படித் திருமுடியின்மீதும் சிறிதுப்ரோக்ஷித்துக்கொண்டு, திருமேனியானது நெக்குவிட்டுக்கரையும்படியான அன்பின் மிகுதியால் மேன்மைபொருந்திய விபூதியைத் திருமுன்னே வைத்து நின்றுகொண்டு, சாஷ்டாங்கமாகப் பணிந்து, அடியேனது ப்ராணாதாரமாகிய தேவரீர் முன்னே படி கொடுத்தருளின திருவமுதானது அடியேனிடத்துண்டு, அமுதுசெய்யக்கடவீர், அடியேனுடைய பாவங்களெல்லாவற்றையு மொழித்துக்கொள்வேன். (௯)

என்ன நல்ல திடம்ப ணென்ன விலங்கு பொற்பரி யாணமே
லன்ன மாதிய தான திவ்விய வமுது டன்கறி யமுதெலா
மன்ன லம்பெற வேபடைத்து மலர்க்கை கொண்டு திரட்டியே
பன்ன ரும்புக ழல்லமாப் பிரபு தேவர் பாணியின் மீதரோ.

(ப - ரை.) என்ன - என்று வசவதேவர் பிரார்த்தித்த மாத்திரத்தில், நல்லது-(பிரபு தேவரும்) நல்ல காரியம் (அப்படியே ஆகட்டும்), இடம் பண் - இடம்பண்ணும், என்ன - என்று கட்டளையிட்ட மாத்திரத்தில், இலங்கு - பிரகாசிக்கின்ற, பொன்பரியாணமேல் - பொற்கலத்தில், அன்னம்ஆதியது ஆன - திருவமுது முதலிய பக்ஷணவகையாயுள்ள, திவ்வியம் - பரிசுத்தமான, அமுதுடன் - திருவமுதோடு, கறியமுது எல்லாம் - கறியமுதுகளெல்லாவற்றையும், மன் நலம் பெறவே - மிகவின்பமடையவே, படைத்து - சமர்ப்பித்து, மலர் - தாமரைமலர்போன்ற, கைகொண்டு - திருக்கரத்தால், திரட்டி - உருட்டி, பன் அரு - சொல்லுதற்கரிய, புகழ் - கீர்த்தியையுடைய, அல்லமாப்பிரபுதேவர் - அல்லமப்பிரபு தேவரது, பாணியின்மீது - திருக்கரங்களில், எ - று.

(பொ-ரை.) என்று வசவதேவர் பிரார்த்தித்தமாத்திரத்தில், பிரபுதேவரும் நல்ல காரியம் அப்படியே ஆகட்டும் இடம் பண்ணுமென்று கட்டளையிட்ட மாத்திரத்தில், வசவேசரும் பிரகாசிக்கின்ற பொற்கலத்தில் திருவமுது முதலிய பக்ஷணவகையாயுள்ள பரிசுத்தமான திருவமுதோடு கறியமுதுகளெல்லாவற்றையும் மிகவின்பமடையவே சமர்ப்பித்து, தாமரைமலர்போன்ற திருக்கரத்தால் உருட்டி, சொல்லுதற்கரிய கீர்த்தியையுடைய அல்லமப்பிரபுதேவரது திருக்கரங்களில். (௧0)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

ஐயர் சுரிகைச் சவுண்டைய ரரனார் கரத்திற் பிடிபிடியாய்ச்
செய்ய நண்பி னளித்ததுபோற் றிரட்டித் திரட்டி வசவேசர்
துய்ய ரல்ல மாப்பிரபுவின் றுணைக்கை கொடுக்க வேற்றேற்று
வெய்ய பசிகொண் டவர்போல மேன்மேன் மாறா தருந்துதலும்.

(ப - ரை.) ஐயர் - ஜங்கமமூர்த்திகளாகிய, சுரிகைச்சவுண்டையர் - சுரிகைச்சவுண்டையரானவர், அரனார் - சிவபெருமானுடைய, கரத்தில் - திருக்கரங்களில், பிடிபிடியாய் - கவளம்கவளமாக, செய்ய - செவ்வையான, நண்பின் - அன்புடனே, அளித்தது போல் - கொடுத்ததுபோல, வசவேசர் - வசவதேவரும், திரட்டி திரட்டி-உருட்டியுருட்டி, துய்யர் - பரிசுத்தராகிய, அல்லமாப்பிரபுவின் - அல்லமப்பிரபுதேவருடைய, துணை - இரண்டு, கை - திருக்கரங்களிலும், கொடுக்க - தருதலும், ஏற்று ஏற்று - (அல்லமப்பிரபுதேவரும்) வாங்கி வாங்கி, வெய்ய - கொடிய, பசிகொண்டவர் போல - பசியுடையவர்போல, மேல் மேல் - மேலும் மேலும், மாறாது - இடைவிடாமல், அருந்துதலும் - அமுதுசெய்தருளுதலும், எ - று.

(பொ - ரை.) ஜங்கமமூர்த்திகளாகிய சுரிகைச்சவுண்டையரானவர் சிவபெருமானுடைய திருக்கரங்களில் கவளம்கவளமாக செவ்வையான அன்புடனே கொடுத்ததுபோல வசவதேவரும் உருட்டியுருட்டிப் பரிசுத்தராகிய அல்லமப்பிரபுதேவருடைய இரண்டு திருக்கரங்களிலும் தருதலும், அல்லமப்பிரபுதேவரும் வாங்கி வாங்கிக்கொடிய பசியுடையவர்போல மேலும் மேலும் இடைவிடாமல் அமுதுசெய்தருளுதலும்.

(வி - ரை.) சுரிகை - கத்தி. கத்திநீங்காத கரத்தராகலின் இவர் சுரிகைச்சவுண்டையர் எனப்பட்டார். இவரது திவ்ய சரித்திரம் பின்னர்க் கூறப்பட்டுள்ளது. (௧௧)

எண்ணு மிலக்கத் தெண்பதினு யிரஞ்சங் கமத்திற் கினிதாகப்
பண்ணு மமுது கறியெல்லாம் படைத்துத் தொலைந்தும் பசிதீரா
தண்ண லமுது தருகென்னு மளவில் வசவே சுரர்தம்மைத்
திண்ண மாக நிவேதித்தார் சிந்தை மகிழ்ந்து பிரபுதேவர்.

(ப - ரை.) எண்ணும் - கணித்தற்குரிய, இலக்கத்து எண்பதினுயிரம் - லக்ஷத்தெண் பதினுயிரங்கணக்கான, சங்கமத்திற்கு - ஜங்கமமூர்த்திகளுக்கு, இனிதாக - மகிழ்ச்சி யுடன், பண்ணும் - சமைத்த, அமுது கறி எல்லாம் - திருவமுது கறியமுதுகள் யாவும் படைத்து - சமர்ப்பித்து, தொலைந்தும் - ஒழிந்தும், அண்ணல் - அல்லமப்பிரபுதேவர், பசிதீராது - பசிதீராமல், அமுது - அன்னம், தருக - இன்னமும் கொடுக்கக்கடவை, என் னும் அளவில் - என்றுகேட்டமாத்திரத்தில், வசவேசுரர் - வசவேசரும், தம்மை - தம் மையே, திண்ணமாக - மனோதிருடமாக, நிவேதித்தார் - நிவேதநஞ்செய்தனர், பிரபு தேவர் - (அதைக்கண்ட) அல்லமப்பிரபுதேவரும், சிந்தைமகிழ்ந்து - திருவுளமகிழ் ந்து, எ - று.

(பொ - ரை.) கணித்தற்குரிய லக்ஷத்தெண்பதினுயிரங்கணக்கான ஜங்கமமூர்த்தி களுக்கு மகிழ்ச்சியுடன் சமைத்த திருவமுது கறியமுதுகள் யாவும் சமர்ப்பித்தொழிந்தும், அல்லமப்பிரபுதேவர் பசிதீராமல் அன்னம் இன்னமும் கொடுக்கக்கடவையென்று கேட்ட மாத்திரத்தில், வசவேசரும் தம்மையே மனோதிருடமாக நிவேதநஞ்செய்தனர், அதைக் கண்ட அல்லமப்பிரபுதேவரும் திருவுளமகிழ்ந்து.

(வி - ரை.) அண்ணல் - பெருமையிற் சிறந்தோன். தம்மை நிவேதநம் செய்தலாவது உடல், பொருள், ஆவி மூன்றினையும் அறவே தத்தஞ்செய்தலாம். (கஉ)

நல்லை நல்லை கணேந்திரனே நாதன் பத்தி வித்தனையாய்
நல்லை நல்லை வசவண்ண நாடு மிரண்டாஞ் சம்புவே
நல்லை நல்லை திருநந்தி நரலோ கத்தி னுருத்திரனே
நல்லை நல்லை யுனைப்போல்வார் நாங்கண் டறியோ நானிலத்தில்.

(ப - ரை.) கணஇந்திரனே - கணநாதனே, நல்லை நல்லை - நல்லவன் நல்லவன், நாதன்பத்தி - சிவபக்திக்கு, வித்து - விதை, அனையாய் - போன்றவனே, நல்லை நல்லை - நல்லவன் நல்லவன், வசவண்ண - வசவண்ணனே, நாடும் - யாவரும் தேடுதற்குரிய, இரண்டாம் சம்புவே - இரண்டாம் சிவமே, நல்லை நல்லை - நல்லவன் நல்லவன், திருநந்தி - ஸ்ரீவசவேசனே, நரலோகத்தின் உருத்திரனே - பூலோகருத்ரனே, நல்லை நல்லை - நல்ல வன் நல்லவன், உன்னை - உன்னை, போல்வார் - ஒத்தவரை, நானிலத்தில் - உலகத்தில், நாம் - யாம், கண்டு அறியோம் - பார்த்தறியமாட்டோம், எ - று.

(பொ - ரை.) கணநாதனே! நல்லவன் நல்லவன், சிவபக்திக்கு விதைபோன்ற வனே! நல்லவன் நல்லவன், வசவண்ணனே! யாவருந்தேடுதற்குரிய இரண்டாம் சிவமே! நல்லவன் நல்லவன், ஸ்ரீவசவேசனே! பூலோக ருத்ரனே! நல்லவன் நல்லவன், உன்னை யொத்தவரை உலகத்தில் யாம் பார்த்தறியமாட்டோம்.

(வி - ரை.) உலகம் நால்வகை நிலங்களையுடைத்தாதலால் அதனை நானிலம் என்றார். நான்கு நிலமாவன - குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல். நிலமைந்தன்றோவெனின் பாலைதனக்கென நிலமுடைத்தன்றாதலால் அதனை யொழித்து நானிலமென வழங்கவே வழக்காயிற்று. (கங)

மருவின் மணம்போன் மாணிக்க வயின்சேரொளிபோற் கரும்பிடத்திற்
பெருகு மிரதம் போலமுதம் பிரியா மதுரம் போலநீ
யுருவ மெடுத்த வஞ்ஞான்றே யுன்ற னுடனே யுதித்தவோ
பொருவில் பத்தி பொறைஞானம் பொன்ரு நீதி புத்திரனே.

(ப - ரை.) புத்திரனே - மைந்தனே, மருவில் - மருக்கொழுந்திலிருக்கின்ற, மணம் - பரிமளம், போல் - போலவும், மாணிக்கவயின்சேர் - மாணிக்கத்திலிருக்கின்ற, ஒளி - பிரகாசம், போல் - போலவும், கரும்பு இடத்தில் - கரும்பில், பெருகும் - சுரக்கின்ற, இரதம் - இரசம், போல் - போலவும், அமுர்தம் - தேவாமிர்தத்தை, பிரியா - விட்டு நீங்காத, மதுரம் - மாதுர்யம், போல - போலவும், நீ - நீ, உருவம் எடுத்த - உடலெடுத்த, அ - அந்த, ஞான்றே - நாளிலேயே, உன் உடனே - உன்னோடு கூடவே, பொரு - ஒப்பு, இல் - இல்லாத, பத்தி - பக்திமார்க்கமும், பொறை - சாந்தகுணமும், ஞானம் - ஞானமார்க்கமும், பொன்ரு - அழியாத, நீதி - சிவாசாரமும், உதித்தவோ - பிறந்தனவோ, எ - று.

(பொ - ரை.) மைந்தனே! மருக்கொழுந்திலிருக்கின்ற பரிமளம்போலவும், மாணிக்கத்திலிருக்கின்ற பிரகாசம்போலவும், கரும்பில் சுரக்கின்ற இரசம்போலவும், தேவாமிர்தத்தைவிட்டு நீங்காத மாதுர்யம் போலவும், நீ உடலெடுத்த அந்த நாளிலேயே உன்னோடு கூடவே ஒப்பில்லாத பக்திமார்க்கமும், சாந்தகுணமும், ஞானமார்க்கமும், அழியாத சிவாசாரமும் பிறந்தனவோ?

(வி - ரை.) பிறந்தனவோ என்பதில் ஓகாரம் உடன்பாடு. (கச)

தேயுவி னுடல மெங்குஞ் சேரவா யானுற் போல
வாயுவின் மேனி யெல்லா மன்னிய தலையா னுற்போற்
பாயுநீ ராக முற்றும் படர்தரு காலா னுற்போ
னீயுறு முருவ னைத்தும் பத்திகா ணெனநி கழ்த்தி.

(ப - ரை.) தேயுவின் - நெருப்பினது, உடலம் - உடல், எங்கும் - முழுதும், சேர - ஒருமிக்க, வாய் ஆனுல் போல - வாயானதுபோலவும், வாயுவின் - காற்றினது, மேனி - உடல், எல்லாம் - முழுதும், மன்னிய - நிலைபெற்ற, தலை ஆனுல் போல் - தலையானது போலவும், பாயும் - பாய்ந்துசெல்லுகின்ற, நீர் - நீரினது, ஆகம் - உடல், முற்றும் - முழுதும், படர்தரு - நடக்கின்ற, கால் ஆனுல் போல் - காலானது போலவும், நீ - நீ, உறும் - பெற்றிருக்கின்ற, உரு - உடல், அனைத்தும் - முழுதும், பத்தி - பக்தியாகவே, என்ன - இருக்கின்றதென்று, நிகழ்த்தி - (புகழ்ந்து) சொல்லி, எ - று.

(பொ - ரை.) நெருப்பினது உடல் முழுதும் ஒருமிக்க வாயானதுபோலவும், காற்றினது உடல் முழுதும் நிலைபெற்ற தலையானதுபோலவும், பாய்ந்து செல்லுகின்ற நீரினது உடல்முழுதும் நடக்கின்ற காலானதுபோலவும் நீ பெற்றிருக்கின்ற உடல்முழுதும் பக்தியாகவே யிருக்கின்றதென்று புகழ்ந்து சொல்லி.

(வி - ரை.) காண் - முன்னிலையசை யிடைச்சொல். (கரு)

மற்றுநன் மொழிக ளாலே வாழ்த்திய பிரபுவின் முன்ன
முற்றமெய்ப் பத்தி யாலே நந்திக ளுறவ ணங்கிப்
பெற்றனன் பேறின் றென்னப் பேசிக்கை கூப்பி நின்று
பற்றறு நேய ராகிப் பரவிப்பின் பகரா நிற்பார்.

(ப - ரை.) மற்றும் - மேலும், நல் - ஹிதமாகிய, மொழிகளால் - வசநங்களால், வாழ்த்திய - புகழ்ந்த, பிரபுவின் - அல்லமப்பிரபுதேவரது, முன்னம் - திருமுன்னே, உற்ற - அடைந்திருக்கின்ற, மெய் - உண்மையான, பத்தியால் - அன்புடன், நந்திகள் - வசவேசர், உறவணங்கி - சாஷ்டாங்கமாகப்பணிந்து, இன்று - இன்றையத்தினம், பேறு - பாக்யத்தை, பெற்றனன் - அடைந்தேன், என்ன - என்று, பேசி - சொல்லி, கைகூப்பி - கைகுவித்து, நின்று - நின்று, பற்றுஅரு - பெறுதற்கரிய, நேயர் ஆகி - அன்புடையவராகி, பரவி - தோத்திரஞ்செய்து, பின் - பிறகு, பகராநிற்பார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(போ - ரை.) மேலும் ஹிதமாகிய வசநங்களால் புகழ்ந்த அல்லமப்பிரபுதேவரது திருமுன்னே அடைந்திருக்கின்ற உண்மையான அன்புடன் வசவேசர் சாஷ்டாங்கமாகப் பணிந்து, இன்றையத்தினம் பாக்யத்தை யடைந்தேனென்று சொல்லி, கைகுவித்து நின்று பெறுதற்கரிய அன்புடையவராகி தோத்திரஞ்செய்து, பிறகு சொல்வாராயினர், எவ்வாறெனின்:— (௧௬)

நித்தனே பரமா னந்தா நிர்க்குணா நிகரொன் றில்லா
முத்தனே முத்தர் வாழ்வே முற்றுணர் வுடைய மூர்த்தி
சத்தமே பொருளே துய்ய தருமியே பெருமை நீங்கா
வுத்தமா வுனக்கு நானே வுரியநல் லமுத ளிப்பேன்.

(ப - ரை.) நித்தனே - சாசுவதனே, பரமானந்தா - ப்ரஹ்மாநந்தனே, நிர்க்குணா - குணாதீதனே, ஒன்று - ஒருபொருளும், நிகர்இல்லா - நிகரில்லாத, முத்தனே - மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை யுடைய ஸம்பந்நனே, முத்தர் - ஜீவன்முக்தர்களுக்குரிய, வாழ்வே - நிதியே, முற்று உணர்வு உடைய மூர்த்தி - சர்வஜ்ஞமூர்த்தியே, சத்தமே - சப்தஸ்வரூபமே, பொருளே - தத்வார்த்தமே, துய்ய - பரிசுத்தராகிய, தருமியே - தர்மப்ரபுவே, பெருமை நீங்கா - மேன்மை யழியாத, உத்தமா - ஸத்குண ஸம்பந்நனே, உனக்கு - தேவரீர்க்கு, உரிய - தக்க, நல் - சிறந்த, அமுது - திருவமுது, அளிப்பேன் - படைக்க வல்லவன், நானே - எளியேனாகிய யானோ, எ - று.

(போ - ரை.) சாசுவதனே! ப்ரஹ்மாநந்தனே! குணாதீதனே! ஒருபொருளும் நிகரில்லாத மோக்ஷஸாம்ராஜ்யத்தையுடைய ஸம்பந்நனே! ஜீவன்முக்தர்களுக்குரிய நிதியே! ஸர்வஜ்ஞமூர்த்தியே! சப்தஸ்வரூபமே! தத்வார்த்தமே! பரிசுத்தராகிய தர்மப்ரபுவே! மேன்மையழியாத ஸத்குண ஸம்பந்நனே! தேவரீர்க்குத் தக்க சிறந்த திருவமுதுபடைக்க வல்லவன் எளியேனாகிய யானோ?

(வி - ரை.) முத்தன் - முக்தன் என்னும் வடசொற்றிரிபு (பாசநீக்க முடையவன் என்பது பொருள்). சத்தம் - ஶப்தம் என்னும் வடசொற்றிரிபு. அளிப்பேன் - வினையாலணையும்பெயர். நானே என்னும் ஓகாரம் எதிர்மறை. (௧௭)

அன்றுமா கயிலை யுச்சி யதனிடைக் கிரிப யந்த
மின்றரு மிடையா ளத்தன் மெய்க்கண நாதர்க் கன்ன
மின்றளித் திடுகே னென்ன வெண்ணியங் கவரை நோக்க
வொன்றிய நீல கண்ட னுருவரா யிருத்தல் கண்டே.

(ப - ரை.) அன்று - அக்காலத்தில், மா கயிலை - ஸ்ரீ மஹா கைலாஸத்தின், உச்சி அதன் இடை - சிகரத்தில், கிரி - பர்வதராஜன், பயந்த - ஈன்றருளிய, மின்தரும் - மின் கொடிபோலும், இடையாள் - இடையையுடையவளாகிய உமாதேவியார், அத்தன் - சிவ பெருமானது, மெய் - உண்மையாகிய, கணநாதர்க்கு - கணநாதர்களுக்கு, இன்று - இன்றையத்தினம், அன்னம் - திருவமுது, அளித்திடுகேன் - படைப்பேன், என்ன -

என்று, எண்ணி - திருவுளம்பற்றி, அங்கு - அவ்விடத்துள்ள, அவரை - அந்தச் சிவகண நாதரெல்லாரையும், நோக்க - த்ருஷ்டித்தலும், நீலகண்டன் ஒன்றிய உருவர் ஆய் - (அவர்கள்) சிவஸ்வரூபிகளாய், இருத்தல் - இருப்பதை, கண்டு - பார்த்து, எ - று.

(பொ - ரை.) அக்காலத்தில் ஸ்ரீ மஹாகைலாஸத்தின் சிகரத்தில் பர்வதராஜன் ஈன்றருளிய மின்கொடிபோலும் இடையையுடையவளாகிய உமாதேவியார் சிவபெருமானது உண்மையராகிய கணநாதர்களுக்கு இன்றையத்தினம் திருவமுதுபடைப்பேனென்று திருவுளம்பற்றி, அவ்விடத்துள்ள அந்தச் சிவகணநாதரெல்லாரையும் த்ருஷ்டித்தலும், அவர்கள் சிவஸ்வரூபிகளா யிருப்பதைப்பார்த்து.

(வி - ரை.) உச்சி யதனிடை என்பதில் அது - பகுதிப்பொருள்விகுதி, அன் - சாரியை. மின்தரும் என்பதில் தரும் - உவமையுருபு. ஒன்றல் - பொருந்தியிருத்தல். நீலகண்டன் - நீலகண்டத்தையுடையவன் (சிவபெருமான்). (சஅ)

சங்கர னந்த நாதன் றானெவன் கணங்க ளாரென்
றங்குமை யையம் எய்த வரனறிந் தவரை நோக்கச்
சிங்கமா முகத்த ராயுஞ் சிம்புளின் முகத்த ராயும்
வெங்கய மகிடங் கோமான் மேடவா னனத்த ராயும்.

(ப - ரை.) சங்கரன் - சிவபெருமானாகிய, அந்த - அந்த, நாதன் - தலைவன், எவன் - யார், கணங்கள் - சிவகணநாதர்கள், ஆர் - யாவர், என்று - என்று, அங்கு - அவ்விடத்தே, உமை - உமாதேவியார், ஐயம் - ஸந்தேஹம், எய்த - அடைந்தமாத்திரத்தில், அரன் - சிவபெருமான், அறிந்து - உணர்ந்து, அவரை - அந்தக்கணநாதர்களை, நோக்க - த்ருஷ்டித்த மாத்திரத்தில், சிங்கம் ஆம் முகத்தர் ஆயும் - சிங்கமுகத்தை யுடையவர்களாயும், சிம்புளின் முகத்தர்ஆயும் - சரபபக்ஷிமுகத்தை யுடையவர்களாயும், வெம் - கொடிய, கயம் ஆனனத்தர் ஆயும் - யானைமுகத்தை யுடையவர்களாயும், மகிடம் ஆனனத்தர் ஆயும் - எருமைமுகத்தை யுடையவர்களாயும், கோ ஆனனத்தர் ஆயும் - பசுமுகத்தை யுடையவர்களாயும், மா ஆனனத்தர் ஆயும் - மான்முகத்தை யுடையவர்களாயும், மேடம் ஆனனத்தர் ஆயும் - ஆட்டுமுகத்தையுடையவர்களாயும், எ - று.

(பொ - ரை.) சிவபெருமானாகிய அந்தத் தலைவன் யார்? சிவகணநாதர்கள் யாவர்? என்று அவ்விடத்தே உமாதேவியார் ஸந்தேஹமடைந்த மாத்திரத்தில், சிவபெருமான் உணர்ந்து அந்தக் கணநாதர்களை த்ருஷ்டித்தமாத்திரத்தில், சிங்கமுகத்தையுடையவர்களாயும், சரபபக்ஷிமுகத்தை யுடையவர்களாயும், கொடிய யானைமுகத்தை யுடையவர்களாயும், எருமைமுகத்தையுடையவர்களாயும், பசுமுகத்தையுடையவர்களாயும், மான்முகத்தை யுடையவர்களாயும், ஆட்டுமுகத்தையுடையவர்களாயும்.

(வி - ரை.) நாதன்றான் என்பதில் தான் - சாரியை. சரபபக்ஷி - எண்காற்புள். மகிடம் - மஹிஷம் என்னும் வடசொற்றிரிபு. மேடம் - மேஷம் என்னும் வடசொற்றிரிபு. சிங்கம் - ஸிம்ஹம் என்னும் வடசொற்றிரிபு. (கக)

புலிபரி வராகம் பூனை பொருந்திய முகத்த ராயு
மொலிகடன் மகர மாதி யுயர்ந்தமீன் முகத்த ராயும்
வலிகொள்பே ரண்டன் சேவன் மஞ்ஞையின் முகத்த ராயு
மெலிநடை யனம்ப ருந்து விடவரா முகத்த ராயும்.

(ப - ரை.) புலிபொருந்திய முகத்தர்ஆயும் - புலிமுகத்தை யுடையவர்களாயும், பரி பொருந்திய முகத்தர் ஆயும் - குதிரைமுகத்தை யுடையவர்களாயும், வராகம்பொருந்திய முகத்தர்ஆயும் - பன்றிமுகத்தை யுடையவர்களாயும், பூனைபொருந்திய முகத்தர்ஆயும்-

பூனைமுகத்தை யுடையவர்களாயும், ஒலி - சப்திக்கின்ற, கடல் - கடலிலுள்ள, மகரம் - மகரம், ஆதி - முதலிய, உயர்ந்த - மேன்மையாகிய, மீன்முகத்தர் ஆயும் - மீன்முகத்தை யுடையவர்களாயும், வலிகொள் - வல்லமையுள்ள, பேரண்டன் முகத்தர்ஆயும் - பேரண்ட பக்ஷிமுகத்தை யுடையவர்களாயும், சேவல்முகத்தர்ஆயும் - கோழிமுகத்தை யுடையவர்களாயும், மஞ்ஞையின் முகத்தர்ஆயும் - மயில்முகத்தை யுடையவர்களாயும், மெலி - தளர்ந்த, நடை - நடையையுடைய, அன்னம் முகத்தர் ஆயும் - அன்னப்பறவைமுகத்தை யுடையவர்களாயும், பருந்துமுகத்தர் ஆயும் - பருந்துமுகத்தை யுடையவர்களாயும், விடம் - விஷத்தையுடைய, அராமுகத்தர் ஆயும் - பாம்புமுகத்தை யுடையவர்களாயும், எ - று.

(பொ - ரை.) புலிமுகத்தை யுடையவர்களாயும், குதிரைமுகத்தை யுடையவர்களாயும், பன்றிமுகத்தை யுடையவர்களாயும், பூனைமுகத்தை யுடையவர்களாயும், சப்திக்கின்ற கடலிலுள்ள மகரமுதலிய மேன்மையாகிய மீன்முகத்தை யுடையவர்களாயும், வல்லமையுள்ள பேரண்டபக்ஷிமுகத்தை யுடையவர்களாயும், கோழிமுகத்தையுடையவர்களாயும், மயில்முகத்தை யுடையவர்களாயும், தளர்ந்த நடையையுடைய அன்னப்பறவைமுகத்தையுடையவர்களாயும், பருந்துமுகத்தை யுடையவர்களாயும், விஷத்தையுடைய பாம்புமுகத்தை யுடையவர்களாயும்.

(வி - ரை.) பரி - தாங்குவது என்பது பொருள் (முதனிலைத் தொழிலாகுபெயர்). வராகம் - வராஹம் என்னும் வடசொற்றிரிபு. விடம் - விஷம் என்னும் வடசொற்றிரிபு.

அழகிய முகமொன் றாதி யாயிர மீற தான
செழுவிய முகத்த ராயுஞ் செப்பிய முகங்கட் கொவ்வா
தெழுமவ யவத்த ராயு மெழினிறம் வெவ்வே றாயும்
பழுதறு கணத்தோர் நிற்கும் பான்மையை யுமையாள் பார்த்து.

(ப - ரை.) அழகிய - சுந்தரமுள்ள, முகம் - முகங்கள், ஒன்றுஆதி - ஒன்றுமுதல், ஆயிரம் ஈறு ஆன - ஆயிரம் கடையாயுள்ள, செழுவிய - செம்மையாகிய, முகத்தர் ஆயும் - முகங்களை யுடையவர்களாயும், செப்பிய - மேலே சொல்லப்பட்ட, முகங்கட்கு - முகங்களுக்கு, ஒவ்வாது - ஒத்திராமல், எழும் - விளங்குகின்ற, அவயவத்தர்ஆயும் - சரீரத்தை யுடையவர்களாயும், எழில் - அழகிய, நிறம் - நிறம், வெவ்வேறுஆயும் - வேறு வேறுவிதமாகியும், பழுது - குற்றம், அறு - இல்லாத, கணத்தோர் - கணநாதர்கள், நிற்கும் - வடிவங்கொண்டிருக்கின்ற, பான்மையை - அதிசயமான தன்மையை, உமையாள் - உமாதேவியார், பார்த்து - கண்டு, எ - று.

(பொ - ரை.) சுந்தரமுள்ள முகங்கள் ஒன்று முதல் ஆயிரம் கடையாயுள்ள செம்மையாகிய முகங்களை யுடையவர்களாயும், மேலே சொல்லப்பட்ட முகங்களுக்கு ஒத்திராமல் விளங்குகின்ற சரீரத்தையுடையவர்களாயும், அழகிய நிறம் வேறுவேறு விதமாகியும், குற்றமில்லாத கணநாதர்கள் வடிவங்கொண்டிருக்கின்ற அதிசயமான தன்மையை உமாதேவியார் கண்டு. (உ௫)

நம்மனத் தையங் கண்டு நற்கண நாதர் தாங்க
ளிம்மகா வடிவங் கொண்டா ரென்னவே பரைம கிழ்ந்து
செம்மையா ரிவர்கட் கெல்லாந் திருவமு தளிப்ப னென்று
கொம்மைவெம் முலையா ளத்தற் குறுகிவிண் ணப்பஞ் செய்ய.

(ப - ரை.) நம் - நமது, மனத்து - மனத்திலுண்டாகிய, ஐயம் - ஸந்தேஹத்தை, கண்டு - உணர்ந்து, நல் - சிறந்த, கணநாதர் தாங்கள் - கணநாதர்களே, இ - இந்த, மகா - மஹா, வடிவம் - ரூபங்களை, கொண்டார் - எடுத்தார்கள், என்ன - என்று, பரை - உமா

தேவியார், மகிழ்ந்து - சந்தோஷித்து, செம்மையார் - ஸத்குண ஸம்பந்நராகிய, இவர்கட்கு எல்லாம் - இவர்களனைவர்க்கும், திருவமுது - அந்நம், அளிப்பன் - படைப்பேன், என்று - என்று திருவுளங்கொண்டு, கொம்மை - திரட்சியை யுடையதும், வெம் - விரும்புதற்குரியதுமான, முலையாள் - திருத்தனங்களையுடைய உமாதேவியார், அத்தன் - சிவபெருமானை, குறுகி - சமீபித்து, விண்ணப்பஞ்செய்ய - வேண்டிக்கொள்ளுதலும், எ - று.

(போ - ரை.) நமது மனத்திலுண்டாகிய ஸந்தேஹத்தையுணர்ந்து, சிறந்தகணநாதர்களே இந்த மஹாரூபங்களை யெடுத்தார்களென்று உமாதேவியார் சந்தோஷித்து, ஸத்குணஸம்பந்நராகிய இவர்களனைவர்க்கும் அந்நம் படைப்பேனென்று திருவுளங்கொண்டு, திரட்சியை யுடையதும் விரும்புதற்குரியதுமான திருத்தனங்களையுடைய உமாதேவியார் சிவபெருமானைச் சமீபித்து வேண்டிக்கொள்ளுதலும். (உஉ)

நல்லது படைப்பா யென்ன நகமயின் மகிழ்ந்து போற்றி
யொல்லையிற் கடனீ ராற்ரு வுயர்பல பாண்டந் தோறு
முல்லையம் முகைபோ லன்ன மொழிவருங் கறியின் வர்க்க
மெல்லையி லப்ப வர்க்க மிருங்கனி நெய்பா லெல்லாம்.

(ப - ரை.) நல்லது - (சிவபெருமான்) நல்லகாரியம், படைப்பாய் - படைக்கக்கடவை, என்ன - என்று ஆஜ்ஞாபித்தலும், நகமயில் - பர்வதராஜபுத்ரியாகிய உமாதேவியார், மகிழ்ந்து - சந்தோஷித்து, போற்றி - வணங்கி, ஒல்லையில் - விரைவாக, கடல்நீர் - ஸமுத்ரஜலமும், ஆற்ரு - பற்ருத, உயர் - பெரிய, பல - அநேகமான, பாண்டம்தோறும் - மிடாக்களிலெல்லாம், அம் - அழகிய, முல்லைமுகைபோல் - முல்லையரும்புபோன்ற, அன்னம் - திருவமுது, ஒழிவுஅறு - குறைவற்ற, கறியின்வர்க்கம் - கறியமுதுதினுசு, எல்லையில் - அளவற்ற, அப்பவர்க்கம் - பணியாரவகை, இரு - மேன்மையாகிய, கனி - பழவர்க்கம், நெய் - நெய், பால் - பால், எல்லாம் - எல்லாவற்றையும், எ - று.

(போ - ரை.) சிவபெருமான் நல்லகாரியம் படைக்கக்கடவை யென்று ஆஜ்ஞாபித்தலும், பர்வதராஜபுத்ரியாகிய உமாதேவியார் சந்தோஷித்து வணங்கி, விரைவாக ஸமுத்ரஜலமும் பற்ருத பெரிய அநேகமான மிடாக்களிலெல்லாம் அழகிய முல்லையரும்பு போன்ற திருவமுது, குறைவற்ற கறியமுது தினுசு, அளவற்ற பணியாரவகை, மேன்மையாகிய பழவர்க்கம், நெய், பாலெல்லாவற்றையும்.

(வி - ரை.) நகம் - மலை. மயில் - மஞ்ஞையின்சாயலையுடைய பெண். (உங)

மலைகளோ வன்னக் குப்பை வண்கனி யப்ப வர்க்க
முலைவருங் கிரிக டானோ வொண்கறி வர்க்க பாண்ட
மலைகட லவையோ நெய்பா லரியபா ஞதி யென்னத்
தொலைவற வமைத்து வைத்துத் தோகையாள் கணிக்குங் காலை.

(ப - ரை.) அன்னக்குப்பை - அந்நராசிகளும், வண் - மிகுதியாகிய, கனிவர்க்கம் - பழவர்க்கங்களும், அப்பவர்க்கம் - பணியாரவகைகளும், மலைகளோ - பர்வதங்களோ, ஒண் - மேலான, கறிவர்க்கம் - கறியமுது தினுசுகள் நிறைந்திருக்கின்ற, பாண்டம் - மிடாக்கள், உலைவுஅரு - சலநமற்ற, கிரிகள்தானோ - மலைகளோ, நெய் - நெய்யும், பால் - பாலும், அரிய - அருமையாகிய, பானம் ஆதி - குடிநீர் முதலியவைகள், அலை - அசையாநின்ற, கடலவையோ - கடல்களோ, என்ன - என்று பார்ப்பவர் அதிசயித்துச் சொல்லும்படியாக, தொலைவுஅற-குறைவற, அமைத்துவைத்து - ஏற்படுத்திவிட்டு, தோகையாள் - உமாதேவியார், கணிக்குங்காலை- திருவமுதுபடைக்க மிக்க ஆவலோடிருக்கின்ற காலத்தில்.

(பொ - ரை.) அந்நராசிகளும், மிகுதியாகிய பழவர்க்கங்களும், பணியார வகைகளும், பர்வதங்களோ? மேலான கறியமுது திரளுகள் நிறைந்திருக்கின்ற மிடாக்கள் சலனமற்ற மலைகளோ? நெய்யும் பாலும் அருமையாகிய குடிநீர் முதலியவைகள் அசையாநின்ற கடல்களோ? என்று பார்ப்பவர் அதிசயித்துச் சொல்லும்படியாகக் குறைவற வேற்படுத்திவிட்டு உமாதேவியார் திருவமுதுபடைக்க மிக்கஆவலோடிருக்கின்ற காலத்தில்.

குறைவறு கணத்தோர் மற்றோர் குறுங்கண நாதன் றன்னை
யுறவழைத் தமுத மாய்த்தோ கேளென வோடி யன்ன
மிறைவியே யாய்த்தோ வென்ன வாய்த்தென வியம்ப வன்னே
சிறுபசி யாள னொந்தே னெனக்களி சிறிது னென்றான்.

(ப - ரை.) குறைவு அறு - வறுமையென்பதில்லாதவராகிய, கணத்தோர் - கணநாதர்கள், மற்று - வேறு, ஓர் - ஒரு, குறு - குறள்வடிவான, கணநாதன்தன்னை - கணநாதனை, உற அழைத்து - வரவழைத்து, அமுதம் - அந்நம், ஆய்த்தோ - சமைத்தாய்விட்டதோ, கேள் - கேட்கக்கடவை, என்ன - என்று அனுப்புதலும், ஓடி - (குறுங்கணநாதன்) விரைவாகச்சென்று (உமாதேவியாரை நோக்கி), இறைவியே - எம்பிராட்டி, அன்னம் - அந்நம், ஆய்த்தோ - சமைத்தாய்விட்டதோ, என்ன - என்று கேட்டலும் (உமாதேவியார்), ஆய்த்து - ஆய்விட்டது, என்ன - என்று, இயம்ப - சொல்லுதலும் (குறுங்கணநாதன்), அன்னே - தாயே, சிறுபசியாளன் - கடும்பசியையுடையவனாகிய அடியேன், நொந்தேன் - சோர்வடைந்தேன், எனக்கு - (ஆசையால்) அடியேனுக்கு, சிறிது - கொஞ்சம், ஊன் - அந்நம், அளி - படைக்கக்கடவை, என்றான் - என்று விரும்பிக் கேட்டனன், எ - று.

(பொ - ரை.) வறுமையென்பதில்லாதவராகிய கணநாதர்கள் வேறொரு குறள்வடிவான கணநாதனை வரவழைத்து, அந்நம் சமைத்தாய்விட்டதோ? கேட்கக்கடவையென்று அனுப்புதலும், குறுங்கணநாதன் விரைவாகச்சென்று, உமாதேவியாரை நோக்கி, எம்பிராட்டி! அந்நம் சமைத்தாய்விட்டதோ? என்று கேட்டலும், உமாதேவியார் ஆய்விட்டதென்று சொல்லுதலும், குறுங்கணநாதன், தாயே! கடும்பசியையுடையவனாகிய அடியேன் சோர்வடைந்தேன், ஆசையால் அடியேனுக்குக் கொஞ்சம் அந்நம் படைக்கக்கடவையென்று விரும்பிக்கேட்டனன்.

(வி - ரை.) குறுங்கணநாதன்றன்னை என்பதில் தன் - சாரியை. ஆய்த்தோ என்பது ஆயிற்றோ என்பதன் திரிபு. (௨௫)

சிவைமகிழ்ந் தவனை யங்கண் சிவார்ச்சனை செய்வித் தன்ன
நவமுறுங் கறிபா னாதி நலம்பெறப் படைத்த போழ்தி
லவனொரு கரத்தால் வெள்ளி யங்கிரி போலப் போலக்
கவளமா யனைத்துங் கொள்ளக் கண்டுமை யதிச யித்தாள்.

(ப - ரை.) சிவை - உமாதேவியார், மகிழ்ந்து - சந்தோஷித்து, அவனை - அந்தக் குறுங்கணநாதனை, அங்கண் - அவ்விடத்தில், சிவார்ச்சனை - லிங்கபூஜை, செய்வித்து - பண்ணுவித்து, நவம் உறும் - புதிதான, அன்னம் - திருவமுது, கறி - கறியமுது, பானம் - குடிநீர், ஆதி - முதலியவற்றை, நலம் பெற - இன்பமுண்டாக, படைத்த - பரிமாறின, போழ்தில் - காலத்தில், அவன் - அந்தக் குறுங்கணநாதன், ஒருகரத்தால் - ஓரேகையினால், அம் - அழகிய, வெள்ளிகிரிபோலப்போல - கைலாஸபர்வதம்போலக் கைலாஸபர்வதம்போல, கவளம்ஆய் - கவளம் கவளமாக, அனைத்தும் - முழுதும், கொள்ள - உண்டுவிடுதலும், உமை - உமாதேவியார், கண்டு - பார்த்து, அதிசயித்தாள் - ஆச்சரிய மடைந்தனள், எ - று

(பொ-ரை.) உமாதேவியார் சந்தோஷித்து, அந்தக் குறுங்கணநாதனை அவ்விடத்தில் லிங்கபூஜை பண்ணுவித்து, புதிதான திருவமுது கறியமுது குடிநீர் முதலியவற்றை இன்பமுண்டாகப்பரிமாறின காலத்தில், அந்தக் குறுங்கணநாதன் ஒரேகையினால் அழகிய கைலாஸபர்வதம்போலக் கைலாஸபர்வதம்போலக் கவளம் கவளமாக முழுதும் உண்டுவிடுதலும், உமாதேவியார் பார்த்து ஆச்சரியமடைந்தனள். (உகு)

கணங்களிற் சிறியோ னேகன் கடும்பசி யிவ்வா றானு
லிணங்கிலாப் பெரியோர் செய்தி யென்னையோ வென்ன வெண்ணி
மணந்ததம் பிரானூர் பாற்போய் வந்தவிச் செய்திசெப்ப
வணங்குநீ கேட்பாய் நந்த மருங்கண நாதர் மேன்மை.

(ப-ரை.) கணங்களில் - சிவகணநாதர்களில், சிறியோன் ஏகன் - ஒரு குறுங்கணநாதனுடைய, கடு - கொடிய, பசி - பசியானது, இவ்வாறு ஆனால் - இப்படியானால், இணங்கு - ஒப்பு, இல்லா - அற்ற, பெரியோர் - பெரிய கணநாதர்களின், செய்தி - செய்கையானது, என்னையோ - எப்படிமுடியுமோ, என்ன - என்று, எண்ணி - (உமாதேவியார்) யோசித்து, மணந்த - தம்மைத் திருமணஞ்செய்துகொண்ட, தம்பிரானூர்பால் - சிவபெருமானிடத்தில், போய் - சென்று, வந்த - நடந்த, இ - இந்த, செய்தி - (அற்புதமான) சமாசாரத்தை, செப்ப - விண்ணப்பித்தலும் (சிவபெருமான), அணங்கு - பெண்ணாகிய, நீ - நீ, நம் - நம்முடைய, அரு - புகழ்தற்கருமையாகிய, கணநாதர் - கணநாதர்களின், மேன்மை - மஹிமையை, கேட்பாய் - கேட்கக்கடவை, எ - று,

(பொ-ரை.) சிவகணநாதர்களில் ஒரு குறுங்கணநாதனுடைய் கொடிய பசியானது இப்படியானால் ஒப்பற்ற பெரிய கணநாதர்களின் செய்கையானது எப்படி முடியுமோ? என்று உமாதேவியார் யோசித்து, தம்மைத் திருமணஞ்செய்துகொண்ட சிவபெருமானிடத்திற் சென்று, நடந்த இந்த அற்புதமான சமாசாரத்தை விண்ணப்பித்தலும், சிவபெருமான் பெண்ணாகிய நீ நம்முடைய புகழ்தற்கருமையாகிய கணநாதர்களின் மஹிமையைக்கேட்கக்கடவை.

(வி-ரை.) நந்தம் என்பதில் தம் - சாரியை. (உஎ)

எம்முட லவர்க்கு மேனி யவருட லெமக்கு மேனி
நம்முயி ரவர்க்கா தார மவருயிர் நமக்கா தாரந்
தம்மைநே ரில்லா ருன்னிற் சலசரு ராகும் போகு
மிம்முறை யிவரி மைத்தாற் பிரளய மெங்கு மெய்தும்.

(ப-ரை.) எம் - நமது, உடல் - உடம்பானது, அவர்க்கு - அந்தக் கணநாதர்களுக்கு, மேனி - உடம்பாகும், அவர் - அந்தக் கணநாதர்களின், உடல் - உடம்பானது, எமக்கு - நமக்கு, மேனி - உடம்பாகும், நம் - நமது, உயிர் - பிராணனானது, அவர்க்கு - அந்தக் கணநாதர்களுக்கு, ஆதாரம் - ஆதாரமாகும், அவர் - அந்தக் கணநாதர்களின், உயிர் - பிராணனானது, நமக்கு - எமக்கு, ஆதாரம் - ஆதாரமாகும், தம்மைநேர் இல்லார் - (மஹிமையில்) தமக்கு நிகரற்றவர்களாகிய கணநாதர்கள், உன்னில் - மனத்தில் சற்றுநினைப்பாராயின், சலசர் ஊர் - (ஸகல) ப்ரஹ்மாண்டங்களும், ஆகும் - உண்டாகும், போகும் - அழியும், இம்முறை - இப்படியே, இவர் - இந்தக் கணநாதர்கள், இமைத்தால் - சற்று கண்ணிமைப்பாராயின், எங்கும் - எவ்விடத்தும், பிரளயம் - அழிவுகாலமும், எய்தும் - உண்டாகும், எ - று.

(பொ-ரை) நமது உடம்பானது அந்தக் கணநாதர்களுக்கு உடம்பாகும், அந்தக் கணநாதர்களின் உடம்பானது நமக்கு உடம்பாகும், நமது பிராணனானது அந்தக்

கணநாதர்களுக்காதாரமாகும், அந்தக் கணநாதர்களின் பிராணனானது எமக்காதாரமாகும், மஹிமையில் தமக்கு நிகரற்றவர்களாகிய கணநாதர்கள் மனத்தில் சற்று நினைப்பாராயின் ஸகல ப்ரஹ்மாண்டங்களும் உண்டாகும் அழியும், இப்படியே இந்தக் கணநாதர்கள் சற்று கண்ணிமைப்பாராயின் எவ்விடத்தும் அழிவுகாலமுமுண்டாகும்.

(வி - ரை.) சலசம் - தாமரை (சலம் - நீர். சம் - தோன்றுவது). சலசர் - தாமரையில் வீற்றிருப்பவர் (பிரமர்). ஊர் - அண்டம். (உ௮)

ஆதலா லுமையே நம்பா லடியவர் பெருமை தன்னை
யோதொணா தொரு வராலு மென்றலு முமையி றைஞ்சி
யீதெலா முனது லீலை யெனவிருந் தனளி யானோ
நாதனே யுனக்கிங் கன்ன நலம்பெறப் படைக்க வல்லேன்.

(ப - ரை.) ஆதலால் - ஆகையால், உமையே - உமாதேவியே, நம்பால் - நம்மிடத்தில் அன்பு பூண்டொழுகுகின்ற, அடியவர் - அடியார்களின், பெருமைதன்னை - மஹிமையை, ஒருவராலும் - ஒருவர்க்கும், ஓது ஒணாது - சொல்லமுடியாது, என்றலும் - என்று புகழ்ந்து சொல்லுதலும், உமை - உமாதேவியார், இறைஞ்சி - வணங்கி, ஈது - இந்தச்செய்தி, எல்லாம் - முழுதும், உனது - உம்முடைய, லீலை - திருவிளையாடல்களே, என்ன - என்று சொல்லி, இருந்தனள் - திருவமுது படைக்காமல் வெறுமனே நின்றுவிட்டனள்(ஆதலால்), நாதனே - சிவபெருமானே, யானோ - எளியேனாகிய நானோ, இங்கு - இவ்விடத்து, உனக்கு - தேவரீர்க்கு வேண்டிய, அன்னம் - திருவமுதினை, நலம்பெற - இன்பமுண்டாக, படைக்க - அளித்தற்குரிய, வல்லேன் - ஆற்றலுள்ளவனாவேன், எ - று.

(பொ - ரை.) ஆகையால் உமாதேவியே! நம்மிடத்திலன்பு பூண்டொழுகுகின்ற அடியார்களின் மஹிமையை ஒருவர்க்கும் சொல்லமுடியாதென்று புகழ்ந்து சொல்லுதலும், உமாதேவியார் வணங்கி இந்தச்செய்தி முழுதும் உம்முடைய திருவிளையாடல்களேயென்று சொல்லி, திருவமுது படைக்காமல் வெறுமனே நின்றுவிட்டனள், ஆதலால், சிவபெருமானே! எளியேனாகிய நானோ இவ்விடத்து தேவரீர்க்குவேண்டிய திருவமுதினையின்பமுண்டாக அளித்தற்குரிய ஆற்றலுள்ளவனாவேன்?

(வி - ரை.) ஓது - முதனிலைத் தொழிற்பெயர். யானோ என்னுமோகாரம் எதிர்மறை. (உக)

அனைத்துநின் செயல்க ளென்றே யம்புவி யுறப்ப ணிந்திங்
கெனைப்பரிந் தாள்வா யென்ன விருகையா லெடுத்த ணைத்திங்
குனக்கிணை யான நேய ரின்றென வுவந்து ரைத்தார்
கனத்ததங் கருணை நோக்காற் கண்டிருந் தருளிச் செய்வார்.

(ப - ரை.) அனைத்தும் - எல்லாமும், நின் - தேவரீருடைய, செயல்கள் என்றே - திருவிளையாடல்களே யென்று, அம்புவி உற - பூமியிற் படும்படிச் சாஷ்டாங்கமாக, பணிந்து - வணங்கி, இங்கு - இவ்விடத்தில், எனை - அடியேனை, பரிந்து - அன்புடன், ஆள்வாய் - ஆண்டருளக்கடவை, என்ன - என்று பிரார்த்தித்தலும், இருகையால் - (அல்லமப்பிரபுதேவரானவர்) தமது இரண்டு திருக்கரங்களினாலும், எடுத்து - தூக்கி, அணைத்து - தழுவி, இங்கு - இவ்வுலகத்தில், உனக்கு - உனக்கு, இணையான - ஒப்பான, நேயர் - பக்தர், இன்று - ஒருவருமில்லை, என்ன - என்று, உவந்து - சந்தோஷித்து, உரைத்தார் - புகழ்ந்தனர், கனத்த - மேன்மை பொருந்திய, தம் - தமது, கருணை நோக்கால் - க்ருபா கடாக்ஷத்தால், கண்டு - த்ருஷ்டித்து, இருந்து - ஆசைப்பெருக்கத்துடன், அருளிச்செய்வார் - அநுக்ரஹஞ் செய்வாராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(பொ - ரை.) எல்லாமும் தேவரீருடைய திருவிளையாடல்களே யென்று பூமியிற் படும்படிச் சாஷ்டாங்கமாக வணங்கி, இவ்விடத்தில் அடியேனை யன்புடன் ஆண்டருளக் கடவையென்று பிரார்த்தித்தலும், அல்லமப்பிரபுதேவரானவர் தமது இரண்டு திருக்கரங்களினாலும் தூக்கித் தழுவி, இவ்வுலகத்தில் உனக்கொப்பான பக்தர் ஒரு வருமில்லையென்று சந்தோஷித்துப் புகழ்ந்தனர், மேன்மைபொருந்திய தமது க்ருபாகடாக்ஷத்தால் த்ருஷ்டித்து ஆசைப்பெருக்கத்துடன் அநுக்ரஹஞ் செய்வாராயினர், எவ்வாறெனின் :—

காமதே னுவு நினைத்த கடிதருண் மணியுஞ் சங்குந்
தாமரை நிதியுங் கற்ப தாருவு நின்றன் முன்றிற்
சேமமா யிருக்கத் தந்தேஞ் சிந்தையி னினைத்த வெல்லாந்
தோமறப் பலிக்கத் தந்தேஞ் சொல்லெலாம் பலிக்கத் தந்தேம்

(ப - ரை.) காமதேனுவும் - காமதேநுவும், நினைத்த - விரும்பினவற்றை யெல்லாம், கடிது - விரைவாக, அருள் - கொடுக்கின்ற, மணியும் - சிந்தாமணியும், சங்கும் - சங்கநிதியும், தாமரை நிதியும் - பத்மநிதியும், கற்பதாருவும் - கற்பகவ்ருக்ஷமும், நின் - உன், முன்றில் - முற்றத்தில், சேமம்ஆய் - சுகமாக, இருக்க - வாழும்படியும், தந்தேம் - அநுக்ரஹஞ்செய்தோம், சிந்தையில் - உன் மனத்தில், நினைத்த - நினைத்தவை, எல்லாம் - முழுதும், தோம் - பழுது, அற - படாமல், பலிக்க - ஸித்திக்கும்படியும், தந்தேம் - அநுக்ரஹஞ் செய்தோம், சொல் - உன் வாய்ச்சொற்களெல்லாம், பலிக்க - ஸித்திக்கும்படியும், தந்தேம் - அநுக்ரஹஞ்செய்தோம், எ - று.

(பொ - ரை.) காமதேநுவும், விரும்பினவற்றை யெல்லாம் விரைவாகக் கொடுக்கின்ற சிந்தாமணியும் சங்கநிதியும் பத்மநிதியும் கற்பகவ்ருக்ஷமும் உன் முற்றத்தில் எக்காலமும் சுகமாக வாழும்படியும் அநுக்ரஹஞ்செய்தோம், உன் மனத்தில் நினைத்தவை முழுதும் பழுதுபடாமல் ஸித்திக்கும்படியும் அநுக்ரஹஞ்செய்தோம், உன் வாய்ச்சொற்களெல்லாம் ஸித்திக்கும்படியும் அநுக்ரஹஞ்செய்தோம்.

(வி - ரை-) தேநு - பசு. காமதேநு - விரும்பினவற்றை யெல்லாம் தருகிற பசு. இது சுவர்க்கலோகத்துளது. சங்கநிதி - வலம்புரிச்சங்குருவமாயிருப்பதோர்நிதி. பத்மநிதி - தாமரைமலருருவமாயிருப்பதோர்நிதி. நினைத்தவெல்லாம் பலிக்க என்றமையால் மனோஸித்தியையும், சொல்லெல்லாம் பலிக்க என்றமையால் வாக்ஸித்தியையும் குறித்தன. நின்றன் என்பதில் தன் - சாரியை. சேமமாய் - காவலாய் எனினுமாம். (௩௪)

இன்றுபோ லென்று நிற்க வேதுநீ தீண்டிற் றெல்லாம்
பொன்றிர ளாக விண்ணும் பொருந்திய கண்டிப் பாக
நன்றுட னமையும் வெல்ல நற்றவர் வெகுண்டு சொல்லுங்
குன்றுரை பொறுக்க வெல்லாக் குலவுசித் திகளுந் தந்தேம்.

(ப - ரை) இன்று - இந்நாள், போல் - போலவே, என்றும் - எந்நாளும், நிற்க - நிலைபெற்றிருக்கவும், நீ - நீ, தீண்டிற்று - தொட்டது, ஏது - யாதுயாதோ, எல்லாம் - அவைமுழுதும், பொன்திரள்ஆக - பொற்குவியலாகவும், விண்ணும் - அகண்டாகாரமான ஆகாயமும், பொருந்திய - சேர்மானமான, கண்டிப்பு ஆக - கண்டாகாரமாகவும், நன்றுடன் - பெருமையோடு, நம்மையும் - எம்மையும், வெல்ல - வெற்றியை யடையவும், நல் - சிறந்த, தவர் - ஜங்கமமூர்த்திகள், வெகுண்டு - கோபித்து, சொல்லும் - சொல்லுகின்ற, குன்று உரை - சாபமொழிகளை, பொறுக்க - பொறுத்துக்கொள்ளவும், குலவும் - மேலோர் கொண்டாடாநின்ற, எல்லாஸித்திகளும் - ஸகல ஸித்திகளையும், தந்தேம் - அநுக்ரஹஞ் செய்தோம், எ - று.

(பொ - ரை.) இந்நாள்போலவே எந்நாளும் நிலைபெற்றிருக்கவும், நீ தொட்டது யாது யாதோ? அவை முழுதும் பொற்குவியலாகவும், அகண்டாகாரமான ஆகாயமும் சேர்மானமான கண்டாகாரமாகவும், பெருமையோடு எம்மையும் வெற்றியடையவும், சிறந்த ஜங்கமமூர்த்திகள் கோபித்துச்சொல்லுகின்ற சாபமொழிகளைப் பொறுத்துக்கொள்ளவும், மேலோர் கொண்டாடாநின்ற ஸகலஸித்திகளையும் அநுக்ரஹஞ்செய்தோம்.

(வி - ரை.) குன்று உரை - குன்றுதற்கேதுவாகிய சொல். (௬௨)

இன்னமும் வேண்டிற் றீவோ மெழில்வர மனைத்து மென்று
மின்னெறி போல வேநிட் களத்தராம் வியப்பு நாடி
மன்னரும் பயத்த ராகி வணங்கியஞ் சலிக்க ரத்தா
னன்னய மதனுற் கண்டு நயந்துவந் திருக்கு நாளில்.

(ப - ரை.) இன்னமும் - மேலும், வேண்டிற்று - நீ விரும்பினவரம் யாது யாதோ, எழில் - வல்லபமுள்ள, வரம்அனைத்தும் - அவ்வரங்களெல்லாவற்றையும், ஈவோம் - அநுக்ரஹஞ்செய்வோம், என்று - என்றருளி, மின் எறி போல - மின்னல் விளங்குவது போல, நிட்களத்தர் ஆம் - அந்தர்த்தானமானவராகிய அல்லமப்ரபுதேவரின், வியப்பு - அற்புதத்தை, நாடி - பார்த்து, மன் - நிலைபெற்றதும், அரு - உண்டாதற்கரியதுமான, பயத்தர்ஆகி - பயத்தை யுடையவராகி, வணங்கி - (சாஷ்டாங்கமாக) பணிந்து, அஞ்சலிக்கரத்தால் - அஞ்சலிஹஸ்தத்தோடு, நல் - மிக்க, நயம் அதனால் - மேன்மையுடன், கண்டு - தரிசித்து, நயந்து - அன்புபூண்டு, உவந்து இருக்கும் நாளில் - சந்தோஷமாய் வாழுங்காலத்தில், எ - று.

(பொ - ரை.) மேலும் நீ விரும்பினவரம் யாது யாதோ? வல்லபமுள்ள அவ்வெல்லா வரங்களையும் அநுக்ரஹஞ்செய்வோமென்றருளி மின்னல் விளங்குவதுபோல அந்தர்த்தானமானவராகிய அல்லமப்ரபுதேவரின் அற்புதத்தைப்பார்த்து, நிலைபெற்றதும் உண்டாதற்கரியதுமான பயத்தையுடையவராகி, சாஷ்டாங்கமாகப்பணிந்து, அஞ்சலிஹஸ்தத்தோடு மிக்க மேன்மையுடன் தரிசித்து, அன்புபூண்டு, சந்தோஷமாய் வாழுங்காலத்தில்.

(வி - ரை.) பயத்தர் - பயஸ்தர் என்னும் வடசொற்றிரிபு. நயமதனால் என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. (௬௩)

அல்லமப்பிரபு புராணம் - முற்றிற்று.



ஆக திருவிருத்தம் - ௬௫௬.

தண்டநாயகச்சருக்கம் - முற்றிற்று.

சிவமயம்.

# திருவிளையாடற் சருக்கம்.

## கள்ளர்க்கருளிய புராணம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அன்பிலென் ஞதா போற்றி யவங்கள்பன் ஞதாய் போற்றி
துன்பமுன் ஞதாய் போற்றி துரிசுமுன் ஞதாய் போற்றி
நின்புகழ் நாதா போற்றி நினைவினென் ஞதா போற்றி
வன்புமுன் ஞதா போற்றி வரதண்ட நாதா போற்றி.

(ப - ரை.) அன்பு இல்லேன் - பக்தியில்லாதவனுகிய அடியேனுக்கும், நாதா - இறைவனே, போற்றி - சரணர்த்தி, அவங்கள் - வீண்வார்த்தைகளையும், பன்ஞதாய் - பேசாதவனே, போற்றி - சரணர்த்தி, துன்பம் - துயரத்தையும், முன்ஞதாய் - திருவுளம்பற்ருதவனே, போற்றி - சரணர்த்தி, துரிசும் - பிறர் குற்றங்களையும், உன்ஞதாய் - மதியாதவனே, போற்றி - சரணர்த்தி, நின் - உன்னையே, புகழ் - துதித்தற்குரிய, நா - நாவினை, தா - அநுக்ரஹஞ்செய்யக்கடவை, போற்றி - சரணர்த்தி, நினைவின் - மனத்திற்குடிகொண்டிருக்கின்ற, என் - அடியேனுடைய, நாதா - சிவபெருமானே, போற்றி - சரணர்த்தி, வன்பு - மனோத்ருடத்தில், முன் - முற்பட்ட, நாதா - குருவே, போற்றி - சரணர்த்தி, வரம் - மேன்மைபொருந்தியே, தண்டநாதா - தண்டநாயகனே, போற்றி - சரணர்த்தி, எ - று.

(பொ - ரை.) பக்தியில்லாதவனுகிய அடியேனுக்கும் இறைவனே! சரணர்த்தி, வீண்வார்த்தைகளைப் பேசாதவனே! சரணர்த்தி, துயரத்தையும் திருவுளம்பற்ருதவனே! சரணர்த்தி, பிறர்குற்றங்களையும் மதியாதவனே! சரணர்த்தி, உன்னையே துதித்தற்குரிய நாவினை யநுக்ரஹஞ் செய்யக்கடவை, சரணர்த்தி, மனத்திற்குடிகொண்டிருக்கின்ற அடியேனுடைய சிவபெருமானே! சரணர்த்தி, மனோத்ருடத்தில் முற்பட்ட குருவே! சரணர்த்தி, மேன்மைபொருந்திய தண்டநாயகனே! சரணர்த்தி. (க)

ஒருதினம் வசவ ராச ரோங்கிய மடத்திற் றுய்ய
பொருளினைக் கவர்வான் கள்வர் புகவரி தாகி யீசன்
றருமநற் றவர்போற் சென்ருற் றவறிலை யெனவ றிந்து
கருவழு துணங்கா யாடை சேர்த்துத்தங் கழுத்திற் கட்டி.

(ப - ரை.) ஒருதினம் - ஓர்நாள், வசவராசர் - வசவேசரது, ஓங்கிய - மேன்மைபொருந்திய, மடத்தில் - திருமடத்தில், துய்ய - சன்மார்க்கத்திலீட்டிய, பொருளினை - திரவியங்களை, கவர்வான் - திருடும்பொருட்டு, கள்வர் - திருடர்கள், புக - நுழைய, அரிது ஆகி - முடியாதாகி, ஈசன் தருமம் - சிவாசாரத்தில், நல் - மிக்க, தவர்போல் - ஜங்கமமூர்த்திகளைப்போல, சென்ருல் - போனுல், தவறு இல்லை என்ன - தாங்கள் செய்யும் திருட்டுத்தனத்திற்குப் பழுதுநேரிடாதென்று, அறிந்து - உணர்ந்து, கரு - கறுத்த, வழு

துணங்காய் - கத்தரிக்காய்களை, ஆடை - லிங்கவஸ்த்ரங்களில், சேர்த்து - முடிந்து, தம் - தங்களுடைய, கழுத்தில் - கண்டங்களில், கட்டி - தாரணஞ்செய்துகொண்டு.

(பொ - ரை.) ஓர்நாள் வசவேசரது மேன்மைபொருந்திய திருமடத்தில் சன்மார்க்கத்திலீட்டிய திரவியங்களைத் திருடும்பொருட்டுத் திருடர்கள் நுழைய முடியாதாகி, சிவாசாரத்தில் மிக்க ஜங்கமமூர்த்திகளைப்போலப்போனால் தாங்கள் செய்யும் திருட்டுத்தனத்திற்குப் பழுதுநேரிடாதென்று உணர்ந்து, கறுத்த கத்தரிக்காய்களை லிங்கவஸ்த்ரங்களில் முடிந்து, தங்களுடைய கண்டங்களில் தாரணஞ்செய்துகொண்டு.

(வி - ரை.) கவர்வான் - செயவென் வாய்பாட்டு வினையெச்சம். லிங்கவஸ்த்ரங்கள்- லிங்கதாரணஞ்செய்தற்கென்றே நெய்த சிறிய பட்டு வஸ்த்ரங்கள். (உ)

கொண்டுகண் டிகைவி பூதி கூடுத லின்றிச் சென்றே
யொண்டவ ரமுது செய்யுங் காலையி னுட்போய்ச் சேர
வண்டவ ரல்லா னந்த மடந் தனில் வாரா ரென்னத்
தண்டநா யகர்மகிழ்ந்து சரணார்த்தி யெனக்கை கூப்பி.

(ப - ரை.) கண்டிகை விபூதிகொண்டு - உருத்திராக்கமாலையையும் விபூதியையும் தாரணஞ்செய்துகொண்டு, கூடுதல் இன்றி - ஒன்றாய்ச்சேராமல், சென்று - போய், ஒள் - மேன்மைபொருந்திய, தவர் - ஜங்கமமூர்த்திகள், அமுது செய்யுங்காலையின் - போஜனம்பண்ணுகின்ற வேளையில், உள் - திருமடத்துள்ளே, போய்ச்சேர - தனித்தனியாய் வந்து சேர்தலும், வள் - மேன்மைபொருந்திய, தவர் - ஜங்கமமூர்த்திகள், அல்லால் - அல்லாமல், நந்தம் - நமது, மடம் தன்னில் - திருமடத்தில், வாரார் - எழுந்தருளமாட்டார்கள், என்ன - என்று நிச்சயித்து, தண்டநாயகர் - வசவேசர், மகிழ்ந்து - சந்தோஷித்து, சரணார்த்தி - சரணார்த்தி, என்ன - என்று, கைகூப்பி - கை குவித்து, எ - று.

(பொ - ரை.) உருத்திராக்கமாலையையும் விபூதியையும் தாரணஞ்செய்துகொண்டு, ஒன்றாய்ச்சேராமற்போய், மேன்மைபொருந்திய ஜங்கமமூர்த்திகள் போஜனம் பண்ணுகின்ற வேளையில் திருமடத்துள்ளே தனித்தனியாய் வந்துசேர்தலும், மேன்மைபொருந்திய ஜங்கமமூர்த்திகளல்லாமல் நமது திருமடத்திலெழுந்தருளமாட்டார்களென்று நிச்சயித்து, வசவேசர் சந்தோஷித்து, சரணார்த்தியென்று கைகுவித்து.

(வி - ரை.) மடந்தனில் தன்பதில் தன் - சாரியை. (ங)

பந்தியி லிருத்திப் பூசை பண்ணுமென் றுரைக்க வங்கண்
வெந்துயர் கொண்டு மேனி வியர்த்துள நடுங்கி வாடி
வந்துநா மகப்பட் டோமே மரணம்வந் ததுவே யென்ன
நொந்தொருத் தரையொ ருத்தர் நோக்கியுண் ணடுங்குங் காலை.

(ப - ரை.) பந்தியில் - (திருடர்களை) பந்தியில், இருத்தி - எழுந்தருளச்செய்து, பூசை- (ஜலம், விபூதி, கந்தம், புஷ்பாதிகளைக்கொடுத்து) லிங்கபூஜை, பண்ணும் - செய்யுங்கள், என்று - என்று, உரைக்க - விண்ணப்பித்தலும், அங்கண் - அவ்விடத்தில், வெம் - (அவர்கள்) மிக்க, துயர்கொண்டு - துக்கமடைந்து, மேனி - உடம்பு, வியர்த்து - வேர்த்து, உள்ளம் - மனம், நடுங்கி - பதறி, வாடி - முகம்சோர்ந்து, நாம் - யாம், வந்து - வந்து, அகப்பட்டோமே - சிக்கிக்கொண்டோமே, மரணம் - மரணகாலம், வந்ததுவே - நேரிட்டு விட்டதே, என்ன - என்று, நொந்து - வருத்தமடைந்து, ஒருத்தரை ஒருத்தர் நோக்கி - ஒருத்தர்முகத்தை யொருத்தர்பார்த்து, உள் - மனம், நடுங்குங்காலை - பதறுகின்ற காலத்தில், எ - று.

(போ - ரை.) திருடர்களைப் பந்தியிலெழுந்தருளச்செய்து, ஜலம் விபூதி கந்தம் புஷ்பாதிகளைக்கொடுத்து, லிங்கபூஜை செய்யுங்களென்று விண்ணப்பித்தலும், அவ்விடத்தில் அவர்கள் மிக்கதுக்கமடைந்து, உடம்புவேர்த்து, மனம்பதறி, முகம்சோர்ந்து, யாம் வந்து சிக்கிக்கொண்டோமே, மரணகாலம் நேரிட்டுவிட்டதே யென்று வருத்தமடைந்து, ஒருத்தர்முகத்தை யொருத்தர்பார்த்து மனம் பதறுகின்றகாலத்தில். (ச)

ஆயிடை யவர்கள் கள்ள மறிந்திவர் பவிக ளென்று
தீயவெங் கோப ராகித் தேசிக ரெழுந்த போது
நேயரா நந்தி தேவர் சித்தர்வே டத்தர் சித்த
ரேயென வழுது ணங்கா யிலிங்கமா யிருந்த வன்றே.

(ப - ரை.) ஆயிடை - அவ்வளவில், அவர்கள் - அந்தக் கள்ள ஜங்கமர்களின், கள்ளம்- திருட்டுத்தனத்தை, அறிந்து - உணர்ந்து, இவர் - இவர்கள், பவிகள் - பவிகளே, என்று- என்று (நிச்சயித்து), தீயவெம் - மிகக்கொடிய, கோபர்ஆகி - கோபமடைந்தவராய், தேசிகர் - ஸ்ரீ குருவானவர், எழுந்தபோது - (பந்தியைவிட்டு அவர்களைத் தண்டிக்க) எழுந்தகாலத்தில், நேயர் ஆம் - சிவபக்தராகிய, நந்திதேவர் - வசவேசர், சித்தர் வேடத்தர் - (ஸ்ரீ குருவைச்சாந்தப்படுத்தி) சிவவேஷதாரிகள் (திருடர்களல்லர்), சித்தரே - சிவபெருமானேயாவர், என்ன - என்று ஸங்கல்பித்தமாத்திரத்தில், வழுதுணங்காய் - கத்தரிக்காய்கள், இலிங்கம்ஆய் - இலிங்கங்களாக, இருந்த - இருந்தன, எ - று.

(போ - ரை.) அவ்வளவில் அந்தக் கள்ள ஜங்கமர்களின் திருட்டுத்தனத்தையுணர்ந்து, இவர்கள் பவிகளேயென்று நிச்சயித்து, மிகக்கொடிய கோபமடைந்தவராய், ஸ்ரீ குருவானவர் பந்தியைவிட்டு அவர்களைத் தண்டிக்க வெழுந்தகாலத்தில், சிவபக்தராகிய வசவேசர் ஸ்ரீ குருவைச்சாந்தப்படுத்தி, சிவவேஷதாரிகள் திருடர்களல்லர் சிவபெருமானே யாவரென்று ஸங்கல்பித்த மாத்திரத்தில் கத்தரிக்காய்கள் இலிங்கங்களாக விருந்தன.

(வி - ரை.) பவிகள் - அலிங்கிகள். அன்று, ஏ - அசை. (ரு)

சோரரே யீச னேயந் துன்னிய கருத்த ராகி
நேரின்மந் திரோப தேச நெறியெலா நிறையப் பெற்று
வீரசை வாசா ரத்து விதியுள மிகவி ளங்கிப்
பாரமாம் பெரியோ ரொப்பும் பான்மையா மேன்மை சார்ந்தார்.

(ப - ரை.) சோரரே - அந்தக் கள்ள ஜங்கமர்களே, ஈசன்நேயம் - சிவபக்தி, துன்னிய - பொருந்திய, கருத்தர்ஆகி - மனத்தையுடையவர்களாகியும், நேர் இல் - நிகரற்ற, மந்திர உபதேச நெறி எல்லாம் - ஸ்ரீ பஞ்சாக்ஷரீ மஹாமந்த்ரோபதேச க்ரமங்களெல்லாவற்றையும், நிறைய - ஸம்பூர்ணமாக, பெற்று - அடைந்தும், வீரசைவாசாரத்து - வீரசைவ மார்க்கத்தின், விதி - வேதாகமமுறைகளெல்லாவற்றையும், உளம் - மனத்தில், மிக- மிகவும், விளங்கி - தெளியக்கண்டும், பாரம்ஆம்-கனம்பொருந்திய, பெரியோர்-மேலோர்கள், ஒப்பும் - ஒத்துக்கொள்ளத்தக்க, பான்மையாம் - தன்மையான, மேன்மை - பெருமையையும், சார்ந்தார் - அடைந்தார்கள், எ - று.

(போ - ரை.) அந்தக் கள்ள ஜங்கமர்களே சிவபக்தி பொருந்திய மனத்தையுடையவர்களாகியும், நிகரற்ற ஸ்ரீ பஞ்சாக்ஷரீ மஹாமந்த்ரோபதேச க்ரமங்களெல்லாவற்றையும் ஸம்பூர்ணமாக வடைந்தும், வீரசைவமார்க்கத்தின் வேதாகமமுறைகளெல்லாவற்றையும் மனத்தில் மிகவும் தெளியக்கண்டும், கனம்பொருந்திய மேலோர்கள் ஒத்துக்கொள்ளத்தக்க தன்மையான பெருமையையும் அடைந்தார்கள். (சு)

பழுதிலா நந்தி தேவர் பாவனை நோக்கி னாலே
வழுதுணை யிலிங்க மான வளந்தனை மகத்தோ ரேத்தத்
தொழுதவண் வசவ தேவர் தொல்லையோர் செய்த வத்தின்
விழுமிய செய்தி தன்னை விரித்துமுன் விளம்பா நிற்பார்.

(ப - ரை.) பழுது இல்லா - பாபரஹிதராகிய, நந்திதேவர் - வசவேசரது, பாவனை - பாவநா, நோக்கினால் - கடாக்ஷத்தினால், வழுதுணை - கத்தரிக்காய்கள், இலிங்கம் ஆன - இலிங்கங்களான, வளம் தன்னை - மஹிமையை (நோக்கி), மகத்தோர் - ஜங்கமமூர்த்திகள், ஏத்த - (தம்மை) துதித்தலும், தொழுத - வணங்கிய, வண் - மேன்மை பொருந்திய, வசவ தேவர் - வசவேசர், தொல்லையோர் - முற்காலத்திலிருந்த சரணர்கள், செய் - பண்ணிய, தவத்தின் - விரதத்தின், விழுமிய - மஹத்வமுள்ள, செய்திதன்னை-சரித்திரத்தை, விரித்து - விரிவாக, முன் - மேலே, விளம்பாநிற்பார் - சொல்லுவாராயினர் (எவ்வா றெனின்), எ - று.

(பொ - ரை.) பாபரஹிதராகிய வசவேசரது பாவநாகடாக்ஷத்தினால் கத்தரிக்காய்கள் இலிங்கங்களான மஹிமையை நோக்கி ஜங்கமமூர்த்திகள் தம்மைத் துதித்தலும், வணங்கிய மேன்மை பொருந்திய வசவேசர் முற்காலத்திலிருந்தசரணர்கள் பண்ணிய விரதத்தின் மஹத்வமுள்ள சரித்திரத்தை விரிவாக மேலே சொல்லுவாராயினர், எவ்வா றெனின் :—

(வி - ரை.) பாவனை - பாவித்தல் (நினைத்தல்). வளந்தன்னை, செய்திதன்னை என்பதி லுள்ள தன் - சாரியை. (எ)

கள்ளர்க்கருளிய புராணம் - முற்றிற்று.



ஆக திருவிருத்தம் - ௩௬௩.



சிவமயம்.

# வணிகமல்லையர் புராணம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வசியரிற் றலைவ ரானோர் மல்லைய ரென்றோ ரன்பர்
சசிமுடி யத்த னாரைச் சந்தியா துணவு கொள்ளா
ருசிதவத் தகத்தின் மேலே யோரயற் பதியிற் சென்று
நிசியுமாய்ப் பசியு மாகி நித்தரா லயங்கா ணாமல்

(ப - ரை.) வசியரில் - வைசியகுலத்தரில், தலைவர் ஆனோர் - முதன்மையானவரும், மல்லையர் என்றோர் - மல்லையரென்னுந் திருநாமமுள்ளவருமாகிய, அன்பர் - ஓர் சிவபக்தரானவர், சசிமுடியத்தனாரை - சிவபெருமானை, சந்தியாது - தரிசிக்காமல், உணவுகொள்ளார் - போஜனஞ்செய்யாத நியமத்தையுடையவர், உசிதம்-நன்மைவாய்ந்த, வத்தகத்தின் மேலே - வியாபாரவிஷயமாய், அயல் - அருகாமையிலுள்ள, ஓர் - ஒரு, பதியில் - ஊருக்கு, சென்று - போய், நிசியும் ஆய் - இரவும் வந்து, பசியும் ஆகி - பசியுமெடுத்து, நித்தர் ஆலயம் - சிவன் கோயில், காணாமல் - காணாமையால், எ - று.

(பொ - ரை.) வைசியகுலத்தரில் முதன்மையானவரும் மல்லையரென்னுந் திருநாமமுள்ளவருமாகிய ஓர் சிவபக்தரானவர் சிவபெருமானைத் தரிசிக்காமல் போஜனஞ்செய்யாத நியமத்தையுடையவர், நன்மைவாய்ந்த வியாபாரவிஷயமாய் அருகாமையிலுள்ள ஊருக்குப்போய், இரவும் வந்து, பசியுமெடுத்து, சிவன்கோயிலைக் காணாமையால்.

(வி - ரை.) சசிமுடியத்தனார் - சந்திரனை முடிக்கணியாகத்தரித்துக்கொண்ட இறைவர். நித்தர் - சாசுவதர். (க)

வருந்திட வுடனி ருந்த மைத்துன ரிவர ருந்தா
தருந்தனு மொணுதென் றெண்ணி யந்தவூ ரயலோர் தூற்றின்
பெரும்படி யொன்றைவைத்து வாயில் போற் பிரித்துக் கட்டித்
திரும்பிவந் திலிங்கங் கண்டேம் வருதிரென் றவர்க்குச் செப்ப.

(ப - ரை.) வருந்திட - துக்கமடைதலும், உடன் இருந்த - அங்கேயிருந்த, மைத்துனர் - மைத்துனரானவர், இவர் - இந்த மல்லையர், அருந்தாது - உண்ணாமல், நாம்-யாம், அருந்தல் ஒண்ணாது - உண்ணக்கூடாது, என்று - என்று, எண்ணி - யோசித்து, அந்த - அந்த, ஊர் - ஊருக்கு, அயல் - பக்கத்திலுள்ள, ஓர் - ஒரு, தூற்றின் - புதலில், பெரு - பெரிய, படி ஒன்றை - (தானியமளக்கின்ற) ஒரு வள்ளத்தை, வைத்து -(கவிழ்த்து) இட்டு, வாயில் போல் - (கோயில்) வாசலைப்போல (தோன்றும்படி), பிரித்துக்கட்டி - (புற்களால்) கூறுபாடுசெய்து வேய்ந்து (ஷித்தப்படுத்தி), திரும்பிவந்து - மீண்டுவந்து, இலிங்கம் - சிவலிங்கப்பெருமானை, கண்டேம் - பார்த்தோம், வருதிர் - தரிசனஞ்செய்ய வாருங்கள், என்று - என்று, அவர்க்கு - அந்த மல்லையர்க்கு, செப்ப - சொல்லியழைத்தலும், எ - று.

(போ - ரை.) துக்கமடைதலும், அங்கேயிருந்த மைத்துனரானவர் இந்த மல்லையர் உண்ணாமல் யாம் உண்ணக்கூடாதென்று யோசித்து, அந்த ஊருக்குப்பக்கத்திலுள்ள ஒரு புதலில் தானியமளக்கின்ற ஒரு வள்ளத்தைக் கவிழ்த்திட்டு, கோயில்வாசலைப் போலத் தோன்றும்படிப் புற்களாற் கூறுபாடுசெய்து வேய்ந்து விளக்கப்படுத்தி, மீண்டு வந்து, சிவலிங்கப்பெருமானைப் பார்த்தோம், தரிசனஞ்செய்யவாருங்களென்று அந்த மல்லையர்க்குச் சொல்லியழைத்தலும்.

(உ)

வருதிரென் றுரைத்து நின்ற மைத்துன ருடன்றாஞ் சென்றங்
கருளுநே யத்த ராகி யவர்விளக் கேற்றிக் காட்டத்
தெரியுமெய்ப் புளக மெய்தித் தெண்டனிட் டெழுந்து போற்றி
யிருமைசே ரத்தன் கோயில் வலம்வந்து விடைகொண் டேகி.

(ப - ரை.) வருதிர் - (சிவலிங்கப்பெருமானை தரிசனஞ்செய்ய) வாருங்கள், என்று, உரைத்து - சொல்லி, நின்ற - நின்ற, மைத்தனருடன் - மைத்துனரோடு, தாம் - தாம், சென்று - போய், அங்கு - அந்தப் புதலினிடத்தில், அருளும் - சாத்துவிகக் குணத்துடன் கூடிய, நேயத்தர் ஆகி - அன்புடையவராகி, அவர் - அந்த மைத்துனர், விளக்கு - தீபம், ஏற்றி - ஏற்றி, காட்ட - காண்பித்தலும், தெரியும் - காணப்படுகின்ற, மெய் - சரீரம், புளகம் எய்தி - மயிர்க்குச்செறிதலடைந்து, தெண்டனிட்டு - ஸாஷ்டாங்கமாய்வணங்கி, எழுந்து - மேலேயெழுந்து, போற்றி - துதித்து, இருமைசேர் - பெருமைபொருந்திய, அத்தன்கோயில் - சிவாலயத்தை, வலம் வந்து - ப்ரதக்ஷணஞ்செய்து, விடைகொண்டு - உத்திரவுபெற்று, ஏகி - திரும்பிச்சென்று, எ - று.

(போ - ரை.) சிவலிங்கப்பெருமானைத் தரிசனஞ்செய்ய வாருங்களென்றுசொல்லி நின்ற மைத்துனரோடு தாம் போய், அந்தப் புதலினிடத்தில் சாத்துவிகக்குணத்துடன் கூடிய அன்புடையவராகி, அந்த மைத்துனர் தீபமேற்றிக்காண்பித்தலும், காணப்படுகின்ற சரீரம் மயிர்க்குச்செறிதலடைந்து, ஸாஷ்டாங்கமாய் வணங்கி, மேலேயெழுந்து துதித்து, பெருமைபொருந்திய சிவாலயத்தை ப்ரதக்ஷணஞ்செய்து, உத்திரவுபெற்று, திரும்பிச்சென்று,

(௩)

கருத்தினன் னியம முற்றுங் களிப்பினு லுணவ ருந்தித்
திருத்தரா யிருக்குங் காலை மைத்துனர் சிரித்தெ ழுந்து
பருத்ததோர் செடியுள் வைத்த படியினைப் பணிந்தார் வந்தார்
பெருத்ததம் பசித ணிந்தார் பெரியவர் வணிக ரென்று.

(ப - ரை.) கருத்தில் - (தம்) மனத்தில் கொண்ட, நல் - நல்ல, நியமம் - விரதமானது, முற்றும் - ஈடேறினதனாலுண்டான, களிப்பினால் - சந்தோஷத்தால், உணவு - சோற்றை, அருந்தி - உண்டு, திருத்தர் ஆய் - த்ருப்தியடைந்தவராய், இருக்கும் காலை - கவலையற்றிருக்கின்றகாலத்தில், மைத்துனர் - மைத்துனரானவர், சிரித்து - ஓ! ஓ! என நகைத்து, எழுந்து - மேலேயெழுந்து, பருத்தது - பெருத்ததாகிய, ஓர் - ஒரு, செடியுள் - புதலில், வைத்த - கவிழ்த்திட்ட, படியினை - வள்ளத்தை, பணிந்தார் - வணங்கி, வந்தார் - வந்தனர், பெருத்த - மிக்க, தம் - தமது, பசியும் - பசியும், தணிந்தார் - தணியப்பெற்றார், வணிகர் - இந்த வணிகமல்லையர், பெரியவர் - புத்திமானே, என்று - என்று (சொல்லிப் பரிஹாஸஞ்செய்து), எ - று.

(போ - ரை.) தம் மனத்திற்கொண்ட நல்ல விரதமானது ஈடேறினதனாலுண்டான சந்தோஷத்தால் சோற்றையுண்டு, த்ருப்தியடைந்தவராய், கவலையற்றிருக்கின்ற காலத்தில் மைத்துனரானவர், ஓ! ஓ! என நகைத்து, மேலேயெழுந்து, பெருத்ததாகிய ஒரு

புதலில் கவிழ்த்திட்ட வள்ளத்தை வணங்கி வந்தனர், மிக்க தமது பசியும் தணியப்பெற்றார், இந்த வணிகமல்லையர் புத்திமானேயென்று சொல்லிப் பரிஹாஸஞ்செய்து. (௪)

அளந்திடப் படியின் றோடி யச்செடி யூடி ருக்கும்
வளங்கொ ணாழியையெ டுத்து வாருமி னெனமல் லையர்
கிளர்ந்தெழு கோப ராகிக் கிரிமகள் கணவ ரென்று
தெளிந்திலீர் தீய சொன்னீர் சிவாவெனச் செவிகண் மூடி.

(ப - ரை.) அளந்திட - (நாம் தானியத்தை) யளக்கும்பொருட்டு, படி - வள்ளம், இன்று - இல்லை, ஓடி - (ஆதலால் நீர்) விரைந்துசென்று, அ - அந்த, செடியூடு - புதலினுள்ளே, இருக்கும் - கவிழ்த்திட்டிருக்கின்ற, வளம்கொள் - அழகிய, நாழியை - வள்ளத்தை, எடுத்துவாருமின் - எடுத்துக்கொண்டுவாருங்கள், என - என்று சொன்னமாத்திரத்தில், மல்லையர் - மல்லையரானவர், கிளர்ந்து எழும் - மூண்டெழுகின்ற, கோபர் ஆகி - கோபாக்கினையையுடையவராகி, கிரிமகள் கணவர் - சிவபெருமானே, என்று - என்று, தெளிந்து இல்லீர் - உணரமாட்டீர், தீய - பாபமானவார்த்தைகளை, சொன்னீர் - சொன்னீர், சிவா என - சிவா என்று சொல்லி, செவிகள்-(இரண்டு) காதுகளையும், மூடி - பொத்திக்கொண்டு, எ - று.

(போ - ரை.) நாம் தானியத்தை யளக்கும் பொருட்டு வள்ளமில்லை, ஆதலால் நீர் விரைந்துசென்று, அந்தப் புதலினுள்ளே கவிழ்த்திட்டிருக்கின்ற அழகிய வள்ளத்தையெடுத்துக்கொண்டு வாருங்களென்று சொன்னமாத்திரத்தில், மல்லையரானவர் மூண்டெழுகின்ற கோபாக்கினை யுடையவராகி, சிவபெருமானேயென்று உணரமாட்டீர், பாபமானவார்த்தைகளைச் சொன்னீர், சிவாவென்று சொல்லி, இரண்டு காதுகளையும் பொத்திக்கொண்டு.

(வி - ரை.) கிரிமகள் - மலைமகள் (உமாதேவியார்). (௫)

பண்டரே மிண்ட ரேயிப் படிபரி யாச கந்தான்
மண்டிநீ ருரைக்கு மாறென் வாருமின் மதன கால
னண்டர்நா யகனைக் காட்ட வென்றவர் தமைய ழைத்துக்
கொண்டுபோய்க் குறித்துப் பார்க்கச் செடிபெருங் கோயி லாகி.

(ப - ரை.) பண்டரே - துஷ்டரே, மிண்டரே - சண்டாளரே, இப்படி - இவ்வாறு, பரியாசகம் - நிந்தையான வார்த்தைகளை, நீர் - நீர், மண்டி - மிகுதியாக, உரைக்கும் - பேசுகின்ற, ஆறு - விதத்திற்குக் காரணந்தான், என் - யாது, மதனகாலன் - மன்மதனை நகைத்தெரித்தவனுகிய, அண்டர் நாயகனை - சிவபெருமானை, காட்ட-(நான் உமக்கு) காட்டும் பொருட்டு, வாருமின் - வாருங்கள், என்று - என்று, அவர் தம்மை - அந்த மைத்துனரை, அழைத்துக்கொண்டு - கூப்பிட்டுக்கொண்டு, போய் - சென்று, குறித்து - அளவறுத்து, பார்க்க - பார்த்தலும், செடி - அந்தப் புதலானது, பெரு - பெரிய, கோயிலாகி - ஆலயமாகியும், எ - று.

(போ - ரை.) துஷ்டரே! சண்டாளரே! இவ்வாறு நிந்தையான வார்த்தைகளை நீர் மிகுதியாக பேசுகின்ற விதத்திற்குக் காரணந்தான் யாது? மன்மதனை நகைத்தெரித்தவனுகிய சிவபெருமானை நான் உமக்குக் காட்டும்பொருட்டு வாருங்களென்று அந்த மைத்துனரைக் கூப்பிட்டுக்கொண்டு சென்று அளவறுத்துப் பார்த்தலும், அந்தப் புதலானது பெரிய ஆலயமாகியும்.

(வி - ரை.) பரியாசகந்தான் என்பதில் தான் - சாரியை. பரியாசகம் - பரிஹாஸம் என்னும் வடசொற்றிரிபு. அண்டர்நாயகன் - தேவர்பிரான். அவர்தமை என்பதில் தம் - சாரியை. (௬)

சிகரநற் கோபு ரங்க டிருமதி லாகி யுள்ளே
பகருமந் நாழி தானே பரமன்மெய் யிலிங்க மாகி
நிகரிலா நந்தி முன்னே நிகழ்தர வொளியார் தீபம்
புகரிலா தொளிரக் கண்ட புவியுளோர் வணங்கிப் போற்ற.

(ப - ரை.) நல் - சிறந்த, சிகரம் - சிகரங்களும், கோபுரங்கள் - திருக்கோபுரங்களும், திருமதில் - திருமதில்களும், ஆகி-உண்டாகியும், உள்ளே - புதலினுள்ளேயிருந்த, பகரும் - மேற்சொல்லப்பட்ட, அ - அந்த, நாழிதானே - வள்ளமே, பரமன் மெய் இலிங்கம் ஆகி - சிவலிங்காகாரமாகியும், நிகர் இல்லா - ஒப்பற்ற, நந்தி - நந்தி யெம்பெருமான், முன்னே - சந்நிதானத்தில், நிகழ்தர - பிரகாசிக்கவும், ஒளி ஆர் - மேன்மை பொருந்திய, தீபம் - விளக்குகள், புகர் இல்லாது - சுடர்விட்டு, ஒளிர - பிரகாசிக்கவும், கண்ட - பார்த்த, புவியுளோர் - பூலோகத்தாரெல்லோரும், வணங்கி - தொழுது, போற்ற - துதிக்கவும், எ - று.

(பொ - ரை.) சிறந்த சிகரங்களும் திருக்கோபுரங்களும் திருமதில்களுமுண்டாகியும், புதலினுள்ளே யிருந்த மேற்சொல்லப்பட்ட அந்த வள்ளமே சிவலிங்காகாரமாகியும், ஒப்பற்ற நந்தியெம்பெருமான் சந்நிதானத்தில் பிரகாசிக்கவும், மேன்மை பொருந்திய விளக்குகள் சுடர்விட்டு பிரகாசிக்கவும், பார்த்த பூலோகத்தாரெல்லோரும் தொழுது துதிக்கவும்.

(வி - ரை.) பரமன் - சிவபெருமான். மெய் - திருமேனி. நிகழ்தர என்பதற்குப் பகுதி நிகழ்தா. நாழிதானே என்பதில் தான் - சாரியை. புகர் - குற்றம். (எ)

மைத்துனர் வைத்து வந்த வள்ளத்தின் பேரி னாலே
நித்தர்வள் ளேச ரென்று நிகழ்த்துவர் மண்ணோ ரின்றும்
பத்தியே முத்தி மூலம் பகர்தரின் மற்றோ ரன்ப
ரித்தகை நெறியார் காட்டக் கோட்டைய ரென்னும் பேரார்.

(ப - ரை.) மைத்துனர் - மைத்துனரானவர், வைத்து வந்த - கவிழ்த்திட்டுவந்த, வள்ளத்தின் - வள்ளத்தின், பேரினாலே - பெயர்க்காரணத்தினாலே, நித்தர் - சிவபெருமானை, வள்ளேசர் என்று - வள்ளேசுவரரென்று, மண்ணோர் - பூலோகத்தார், இன்றும் - இக்காலத்திலும், நிகழ்த்துவர் - சொல்வார்கள் (ஆதலால்), பத்தியே-அன்பொன்றே, முத்திமூலம் - மோக்ஷத்துக்குக்காரணமாகும், பகர்தரின் - சொல்லுமிடத்து, மற்று - வேறு, ஓர் - ஒரு, அன்பர் - சிவபக்தர், இ - இந்த, தகை - தன்மையாகிய, நெறியார் - சிவபக்தி மார்க்கத்தை யுடையவர், காட்டக் கோட்டையர் என்னும் - காட்டக்கோட்டையரென்று சொல்லப்படுகிற, பேரார் - திருநாமத்தினையுடையவர், எ - று.

(பொ - ரை.) மைத்துனரானவர் கவிழ்த்திட்டுவந்த வள்ளத்தின் பெயர்க்காரணத்தினாலே சிவபெருமானை வள்ளேசுவரரென்று பூலோகத்தார் இக்காலத்திலும் சொல்வார்கள், ஆதலால் அன்பொன்றே மோக்ஷத்துக்குக் காரணமாகும், சொல்லுமிடத்து வேறொரு சிவபக்தர் இந்தத் தன்மையாகிய சிவபக்திமார்க்கத்தை யுடையவர், காட்டக்கோட்டைய ரென்று சொல்லப்படுகின்ற திருநாமத்தினை யுடையவர்.

(வி - ரை.) பகர்தரின் என்பதற்குப் பகுதி பகர்தா. (அ)

வண்ணிகமல்லையர் புராணம் - முற்றிற்று.



ஆக திருவிருத்தம் - ௩௭௧.

சிவமயம்.

# காட்டக்கோட்டையர் புராணம்.



கலிநிலைத்துறை.

ஆட்டி னோர்நல வெருவினை யழகுள தேந்திக்
காட்டி னோர்புடை வேதிகை செய்ததின் கண்ணே
வீட்டின் மேவுநம் பரனென விருப்பினு லிருத்திக்
கூட்டி யாவினை மந்தையாய்க் குடங்கரங் கொள்ளா.

(ப - ரை.) ஆட்டின் - ஆடுகளின், ஓர் - ஒப்பற்றதும், நல்ல - சிறந்ததும், அழகு உள்ளது - அழகுள்ளதுமாகிய, எருவினை - சாணத்தை, ஏந்தி - (பூமியிற் படுவதன் முன்னர் தமது திருக்கரத்தில்) தாங்கி, காட்டின் - வனத்தின், ஓர் - ஒரு, புடை - பக்கத்தில், வேதிகை - ஒரு மேடையை, செய்து - பண்ணி, அதின் கண்ணே - அதன்பேரிலே, வீட்டில் - (தமது) மனையில், மேவும் - இருக்கின்ற, நம் - நமது, பரன் என்ன - சிவலிங்கப் பெருமான்போலவே (ஒரு சிவலிங்கத்தை), விருப்பினுல் - அன்புடன் (செய்து), இருத்தி - எழுந்தருளப்பண்ணி, ஆவினை - பசுக்களை, மந்தையாய் - கூட்டமாக, கூட்டி - சேர்த்து, குடம் - குடத்தை, கரம் - (தமது) திருக்கரத்தில், கொள்ளா - கொண்டு, எ - று.

(பொ - ரை.) ஆடுகளின் ஒப்பற்றதும் சிறந்ததும் அழகுள்ளதுமாகிய சாணத்தைப் பூமியிற் படுவதன்முன்னர் தமது திருக்கரத்திற்முங்கி, வனத்தின் ஒருபக்கத்தில் ஒரு மேடையைப்பண்ணி, அதன்பேரிலே தமது மனையிலிருக்கின்ற நமது சிவலிங்கப்பெருமான் போலவே ஒரு சிவலிங்கத்தை அன்புடன்செய்து எழுந்தருளப்பண்ணி பசுக்களைக் கூட்டமாகச்சேர்த்து, குடத்தைத் தமது திருக்கரத்திற்கொண்டு.

(வி - ரை.) கொள்ளா - செய்யா வென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (க)

கறந்து பாலினைத் துய்யநற் கடத்தினிற் றணிந்தே
சிறந்த பாலையன் பாலரன் பாலுறச் சேர்த்தி
யுறைந்த காட்டினுண் மணந்தரு மொள்ளிய பூவாய்
நிறைந்த நேயராய்ப் பலாசிலைக் கல்லையி னிறையா.

(ப - ரை.) பாலினை - பாலை, கறந்து - கறந்து, துய்ய - பரிசுத்தமாகிய, நல் - நல்ல, கடத்தினில் - குடங்களில், தணிந்து - நிறைத்து, சிறந்த - உயர்ந்த, பாலை - பாலினை, அன்பால் - பக்தியுடன், அரன் - சிவலிங்கப்பெருமான், பால் உற - பக்கத்தில், சேர்த்தி - இருத்தியும், உறைந்த - (தாம்) வசிக்கிற, காட்டின்உள் - வனத்திலுள்ள, மணம் தரும் - வாசனைவீசுகின்றனவும், ஒள்ளிய - அன்று மலர்ந்தனவுமாகிய, பூ - புஷ்பங்களை, ஆய் - பறித்து, நிறைந்த - பூர்ணமான, நேயர் ஆய் - பக்தராகி, பலாசு இலை - முருக்கிலையாற் செய்த, கல்லையில் - தொன்னையில், நிறையா - நிறைத்து, எ - று.

(பொ - ரை.) பாலைக்கறந்து பரிசுத்தமாகிய நல்ல குடங்களில் நிறைத்து உயர்ந்த பாலினைப் பக்தியுடன் சிவலிங்கப்பெருமான் பக்கத்திலிருத்தியும், தாம் வசிக்கின்றவனத்தி

லுள்ள வாசனை வீசுகின்றனவும் அன்று மலர்ந்தனவுமாகிய புஷ்பங்களைப்பறித்து பூர்ண பக்தராகி முருக்கிலையாற்செய்த தொன்னையில் நிறைத்து.

(வி - ரை.) நிறையா - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். ஆய்- ஆராய்ந்து எனினுமாம். பாலினை என்பதில் இன் - சாரியை. (உ)

கோண்டு வந்தக மலரவம் மலரைமுன் கூட்டி
யெண்டு நம்பரற் கிருத்திய பின்புதா மிருந்து
மண்டு காதலிற் சாதலைப் பிறத்தலை மறுப்பா
ரண்ட நாயகர் சிரத்திலப் பாலினை யாட்டி.

(ப - ரை.) கொண்டுவந்து - கொணர்ந்து, அகம் - ஹ்ருதயகமலமானது, மலர - விகஸிக்க, அ - அந்த, மலரை - புஷ்பங்களை, முன் - திருமுன்னே, கூட்டி - சேர்த்தியும், எண்டு - (யாவராலும்) மதிக்கப்பட்ட, நம்-எமது, பரற்கு - சிவபெருமானுக்கு, இருத்திய - சேகரித்துவைத்த, பின்பு - பிறகு, தாம் - தாமே, இருந்து - நின்றுகொண்டு, மண்டு - மிகுந்த, காதலின் - அன்புடன், சாதலை-மரணத்தையும், பிறத்தலை - ஜநநத்தையும், மறுப்பார்- ஒழிப்பவராகிய காட்டக்கோட்டையரானவர், அண்டநாயகர் - சிவபெருமானது, சிரத்தில் - திருமுடியில், அ - அந்த, பாலினை - பாலை, ஆட்டி - அபிஷேகஞ்செய்து, எ - று.

(பொ - ரை.) கொணர்ந்து ஹ்ருதய கமலமானது விகஸிக்க அந்தப் புஷ்பங்களைத் திருமுன்னே சேர்த்தியும், யாவராலும் மதிக்கப்பட்ட எமது சிவபெருமானுக்கு சேகரித்து வைத்தபிறகு தாமே நின்றுகொண்டு, மிகுந்த அன்புடன் மரணத்தையும் ஜநநத்தையு மொழிப்பவராகிய காட்டக்கோட்டையரானவர் சிவபெருமானது திருமுடியில் அந்தப் பாலை யபிஷேகஞ்செய்து.

(வி - ரை.) விகஸித்தல் - விரிதல். அண்டநாயகர் - லோகநாதர். அகம் - உள்ளம். மலர என்றமையால் ஹ்ருதயகமலம் எனக்கொண்டாம். எண்டு என்பதை என் + து எனப்பிரித்து (எண் - வலிமை, து - சேர்தல்) ஸர்வவல்லமையுள்ள என்று பொருள் கொள்ளுதலு மொன்று. (௩)

கண்ணி றைந்தநீர் கொண்டுவண் கண்ணிறை மலரைத்
தண்ணி றைந்தநீர் முடிமிசை யழகுறச் சாத்திப்
பண்ணி றைந்ததம் பலதுளைக் குழலினை யழகா
லுண்ணி றைந்தபே ரன்பினு லூதிநின் றுருகி.

(ப - ரை.) கண் - கண்களில், நிறைந்த - நிரம்பின, நீர் - நீரை, கொண்டு - கொண்டு, வள் - தெளிவுபொருந்திய, கள் - தேன், நிறை - நிறைந்த, மலரை - புஷ்பங்களை, தண் - குளிர்ச்சி, நிறைந்த - நிரம்பின, நீர் - கங்கையை யணிந்த, முடி - திருமுடியின், மிசை - மீது, அழகுற - சுந்தரமாக, சாத்தி - தரித்து, பண் - இசைகள், நிறைந்த - நிரம்பின, தம் - தமது, பல - அநேக, துளை - த்வாரங்களையுடைய, குழலினை - வேய்ங்குழலை, அழகால் - சுத்தமாக, உள் - (தமது) மனத்தில், நிறைந்த - நிரம்பின, பேர் - மிக்க, அன்பினால் - விருப்பத்துடன், ஊதி - வாசித்து, நின்று - நின்றுகொண்டு, உருகி - மனமிளகி, எ - று.

(பொ - ரை.) கண்களில் நிரம்பின நீரைக்கொண்டு, தெளிவுபொருந்திய தேன் நிறைந்த புஷ்பங்களைக் குளிர்ச்சி நிரம்பின கங்கையை யணிந்த திருமுடியின்மீது சுந்தரமாகத்தரித்து, இசைகள் நிரம்பின தமது அநேக த்வாரங்களையுடைய வேய்ங்குழலைச் சுத்தமாகத் தமது மனத்தில் நிரம்பின மிக்க விருப்பத்துடன் வாசித்து, நின்றுகொண்டு, மனமிளகி.

(வி - ரை.) நீர் - ஆகுபெயர். முடிமிசையென மேல் வருதலால் நீர் என்றது கங்கையை யுணர்த்திற்று. வேய்ங்குழலிலமைந்த தொளைகள் நான்கு. அவற்றைச்சுட்டு விரல் முதலாக விட்டுப்பிடிப்பது ஆரோகணம், சிறுவிரல் முதலாக விட்டுப்பிடிப்பது அவரோகணம். இவற்றால் எழும் பண்கள் நூற்றுமூன்று. (௪)

பாடி யாடிமுன் பணிந்தபின் வலமுறப் படர்ந்து
நாடி நின்றுள முருகியே யருவிநீர் நயன
நீடி மெய்மயிர் சிலிர்த்தெழ நெடிதுயிர்த் தடியேன்
றேட ரும்பொரு ளேயரு ளேயெனச் செப்பி.

(ப - ரை.) பாடி - சிவகீர்த்தனம் பாடியும், ஆடி - நர்த்தனஞ்செய்தும், முன் - திருமுன்னே, பணிந்த - வணங்கின, பின் - பிறகு, வலம் உறப்படர்ந்து - ப்ரதக்ஷணஞ்செய்தும், நாடி - தரிசநஞ்செய்து, நின்று - நின்றும், உள்ளம் - மனம், உருகி - கசிந்தும், நயனம் - கண்களில், அருவி - அருவிபோல, நீர் - ஆநந்தபாஷ்பம், நீடி - பெருகியும், மெய் - சரீரத்தில், மயிர் - ரோமங்கள், சிலிர்த்து எழ - அரும்பிப் பொலிவடையவும், நெடிது உயிர்த்து - பெருமூச்செறிந்தும், அடியேன் - அடியனேன், தேடு அரு - நாடுதற்கரிய, பொருளே - பரவஸ்துவே, அருளே - க்ருபாமூர்த்தியே, என்ன - என்று, செப்பி - சொல்லி, எ - று.

(பொ - ரை.) சிவகீர்த்தனம் பாடியும், நர்த்தனஞ்செய்தும், திருமுன்னே வணங்கின பிறகு, ப்ரதக்ஷணஞ்செய்து தரிசித்து நின்றும், மனங்கசிந்தும், கண்களில் அருவிபோல ஆநந்தபாஷ்பம் பெருகியும், சரீரத்தில் ரோமங்கள் அரும்பிப் பொலிவடையவும், பெருமூச்செறிந்தும், அடியனேன் நாடுதற்கரிய பரவஸ்துவே! க்ருபாமூர்த்தியே! என்று சொல்லி.

இந்த வாறுசில் பகலருச் சித்தபி னிவர்தந்
தந்தை பால்சிறி தானது தனைத்தெளிந் திடுவா
னந்த மாடுறை காட்டினு ளயலொளித் திருந்தான்
முந்த வாவுட னன்பர்தம் பூசனை முயல்வார்.

(ப - ரை.) இந்த ஆறு - இந்த ப்ரகாரமாக, சில் பகல் - சிலநாள், அருச்சித்த - பூஜைசெய்த, பின் - பிறகு, இவர் - இந்தக் காட்டக்கோட்டையாரது, தந்தை - பிதாவானவன், பால் - பாலானது, சிறிது ஆனது - அளவிற் குறைந்திருந்ததை, தெளிந்திடுவான் - அறியும்பொருட்டு, மாடு - பசுக்கள், உறை - இருக்கின்ற, அந்த - அந்த, காட்டினுள் - வநத்தில், அயல் - (ஓர்) அண்டையில், ஒளித்திருந்தான் - பதுங்கியிருந்தான், அன்பர் - பக்தராகிய காட்டக்கோட்டையாரானவர், முந்து - முற்பட்ட, அவாவுடன் - அன்பினால், தம் - தமது, பூசனை - சிவபூஜைசெய்வதில், முயல்வார் - முயற்சிசெய்வாராயினர், எ - று.

(பொ - ரை.) இந்த ப்ரகாரமாகச் சிலநாள் பூஜைசெய்தபிறகு, இந்தக் காட்டக்கோட்டையாரது பிதாவானவன் பாலானது அளவிற் குறைந்திருந்ததை யறியும்பொருட்டு பசுக்கள் இருக்கின்ற அந்த வநத்தில் ஓர் அண்டையில் பதுங்கியிருந்தான், பக்தராகிய காட்டக்கோட்டையாரானவர் முற்பட்ட அன்பினால் தமது சிவபூஜைசெய்வதில் முயற்சிசெய்வாராயினர்.

(வி - ரை.) தெளிந்திடுவான் என்பதில் வான் - செய வென்வாய்பாட்டு வினையெச்சம். முந்து அவா - பேரன்பு எனினுமாம். இவர்தம் என்பதில் - தம் - சாரியை. (௬)

கோச்சகக்கலிப்பா.

இத்திறம் பாலெலா மிவன்கெ டுப்பனென்
றொத்திவந் தரன்றனை யுதாச னித்தலும்
பத்திசெய் யன்பர்தம் பரசு பற்றினர்
செத்திடு கெனப்பிதாச் சிரத்தை வெட்டினார்.

(ப - ரை.) இ திறம் - இவ்வாறாக, பால் எல்லாம் - பால்முழுதும், இவன் - இந்தக் காட்டக்கோட்டையன், கெடுப்பன் என்று-பாழாக்குவானென்று, ஒத்திவந்து-கிட்டிவந்து, அரன்தன்னை - சிவலிங்கப்பெருமானை, உதாசனித்தலும் - உதைத்தமாத்திரத்தில், பத்தி செய் - தொண்டு செய்கின்ற, அன்பர் - காட்டக்கோட்டையரானவர், தம் - தமது, பரசு-கோடரியை, பற்றினர் - வாங்கி, செச்சிடுக என்ன - இறக்கக்கடவையென்று சொல்லி, பிதா - தந்தையின், சிரத்தை - தலையை, வெட்டினார் - துணித்துவிட்டனர், எ - று.

(பொ - ரை.) இவ்வாறாகப் பால்முழுதும் இந்தக் காட்டக்கோட்டையன் பாழாக்கு வானென்று கிட்டிவந்து, சிவலிங்கப்பெருமானை யுதைத்தமாத்திரத்தில், தொண்டுசெய்கின்ற காட்டக்கோட்டையரானவர் தமது கோடரியை வாங்கி இறக்கக்கடவை யென்று சொல்லித் தந்தையின் தலையைத் துணித்துவிட்டனர்.

(வி- ரை.) உதாசனித்தல் - தூஷித்தலெனினுமாம். பற்றினர் - முற்றெச்சம். அரன்றனை என்பதில் தன் - சாரியை. (எ)

வெட்டினாற் றந்தைமண் வீழ்ந்தி றந்தனன்
சட்டென வானர்பூத் தரணி வீசினார்
மட்டறு துந்துமி வானி லார்த்தன
சிட்டர்க டோத்திரஞ் செய்து வாழ்த்தினார்.

(ப - ரை.) வெட்டினால் - (ஒரே) வெட்டினால், தந்தை - பிதாவானவன், மண் - பூமியின்மீது, வீழ்ந்து - விழுந்து, இறந்தனன் - மாண்டான், வானர் - (அவ்வதிசயத்தைக் கண்ட) தேவர்கள், சட்டென - சடுதியாக, பூ - புஷ்பங்களை, தரணி - பூமியின்மேல், வீசினார் - சொரிந்தார்கள், மட்டு - எல்லை, அறு - இல்லாத, துந்துமி - துந்துமி வாத்யங்கள், வானில் - ஆகாஸத்தில், ஆர்த்தன - முழங்கின, சிட்டர்கள் - சிவபக்தர்கள், தோத்திரஞ் செய்து - துதித்து, வாழ்த்தினார் - புகழ்ந்தார்கள் (இவ்வாறு நிகழ்கையில்), எ - று.

(பொ - ரை.) ஒரே வெட்டினால் பிதாவானவன் பூமியின்மீது விழுந்து மாண்டான், அவ்வதிசயத்தைக்கண்ட தேவர்கள் சடுதியாகப் புஷ்பங்களைப் பூமியின்மேல் சொரிந்தார்கள், எல்லையில்லாத துந்துமி வாத்யங்கள் ஆகாஸத்தில் முழங்கின, சிவபக்தர்கள் துதித்துப் புகழ்ந்தார்கள் இவ்வாறு நிகழ்கையில்.

வெண்ணிலா முடியினார் விடையிற் றோன்றினார்
மண்ணில்வீழ்ந் திறந்தவன் மரிப்பு நீக்கியே
யண்ணலாங் காட்டக்கோட் டையரை வாவென
வொண்ணிறக் கயிலையி னுவந்து வைத்தனர்.

(ப - ரை.) வெள் நிலா முடியினார் - சிவபெருமான், விடையில் - வ்ருஷபவாஹனத்தின்மீது, தோன்றினார் - ப்ரஸந்நமாகி, மண்ணில் - பூமியின்பேரில், வீழ்ந்து - விழுந்து, இறந்தவன் - மாண்டவனாகிய தந்தையின், மரிப்பு - மரணத்தை, நீக்கி - ஒழித்து, அண்ணல் ஆம் - பெரியோராகிய காட்டக்கோட்டையரை, வா என்ன - வாவென்றழைத்துக் கொண்டு, ஒள் நிறம் - ஒளிபொருந்திய, கயிலையின் - ஸ்ரீ மஹா கைலாஸத்தில், உவந்து - ஸந்தோஷித்து, வைத்தனர் - வாழச்செய்தருளினார், எ - று.

(பொ - ரை.) சிவபெருமான் வ்ருஷபவாஹனத்தின்மீது ப்ரஸந்நமாகி, பூமியின் பேரில் விழுந்து மாண்டவனாகிய தந்தையின் மரணத்தை யொழித்து, பெரியோராகிய காட்டக்கோட்டையரை வாவென்றழைத்துக்கொண்டு, ஒளிபொருந்திய ஸ்ரீ மஹா கைலாஸத்தில் ஸந்தோஷித்து வாழச்செய்தருளினார்.

(வி - ரை.) வெள் - வெண்ணிறமுள்ள. நிலா - சந்திரனைத்தரித்த. முடியினார் - திருமுடியையுடையவர். தோன்றினார் - முற்றெச்சம். (௯)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முக்கணன் பரசோ வேழ முகன்கரப் பரசு தானோ
மிக்கவண் பதங்கள் வீர மிகவருள் பரசு தானோ
செக்கரஞ் சடையார் வைகுந் திருக்கயி லாய வாயி
லக்கத வுறுந்தா ணீக்கு மரியபொற் றிறவு கோலோ.

(ப - ரை.) முக்கண்ணன் - சிவபெருமானது, பரசோ - (திருக்கரத்திலுள்ள) பரசாதாயுதமோ, வேழமுகன் - விநாயகக்கடவுளது, கரம் - திருக்கரத்திலுள்ள, பரசுதானோ - பரசாயுதமோ, மிக்க வள் - மிகச்சிறந்ததாகிய, பதங்கள் - இம்மை மறுமைச் செல்வங்களையும், வீரம் - பெருமையையும், மிக - மிகுதியாக, அருள் - அநுக்ரஹஞ் செய்தற்குரிய, பரசுதானோ - பரசாயுதமோ, செக்கர் அம் சடையார் - சிவபெருமான், வைகும் - எழுந்தருளியிருக்கின்ற, திருக்கயிலாயம் - ஸ்ரீ மஹா கைலாஸத்தின், வாயில் - வாசலிலுள்ள, அ - அந்த, கதவு உறும் - கதவிற்கிட்டிருக்கின்ற, தாள் - பூட்டை, நீக்கும் - திறத்தற்குரிய, பொன் - அழகிய, திறவுகோலோ - திறவுகோல்தானோ, எ - று.

(பொ - ரை.) சிவபெருமானது திருக்கரத்திலுள்ள பரசாயுதமோ? விநாயகக்கடவுளது திருக்கரத்திலுள்ள பரசாயுதமோ? மிகச்சிறந்ததாகிய இம்மை மறுமைச் செல்வங்களையும் பெருமையையும் மிகுதியாக அநுக்ரஹஞ் செய்தற்குரிய பரசாயுதமோ? சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ மஹா கைலாஸத்தின் வாசலிலுள்ள அந்தக் கதவிற்கிட்டிருக்கின்ற பூட்டைத் திறத்தற்குரிய அழகிய திறவுகோல் தானோ?

(வி - ரை.) முக்கண்ணன் - த்ரிநேத்ரதாரி. செக்கர் - செவந்த. அம் - அழகிய. சடையார் - ஜடாபாரத்தை யுடையவர். பரசுதானோ என்பதில் தான் - சாரியை. தானோ என்னும் ஓகாரம் உடன்பாட்டினைக் குறிக்கின்ற வினா. (க0)

பங்கராஞ் சிவத்து ரோகர் படவுறும் பரசோ தண்டி
வெங்கரப் பரசோ காலன் விடுங்கயிற றுக்க வல்லோர்
செங்கரப் பரசோ சென்ம சேதனப் பரசு தானோ
கங்கர னன்பர் காட்டக் கோட்டையர் கைக்கோ டாலி.

(ப - ரை.) பங்கர் ஆம் - பரம துஷ்டர்களாகிய, சிவத்துரோகர் - சிவத்ரோஹிகள், பட உறும் - மரித்தற்குரிய, பரசோ - பரசாயுதமோ, தண்டி - சண்டேசநாயனாருடைய, வெம் - விரும்புதற்குரிய, கரம் - திருக்கரத்திலுள்ள, பரசோ - பரசாயுதமோ, காலன் - யமன், விடும் - வீசுகின்ற, கயிறு - காலபாசத்தை, அறுக்க - துணிக்க, வல்லோர் - வல்லவர்களாகிய மஹாத்மாக்களுடைய, செம்கரம் - திருக்கரத்திலுள்ள, பரசோ - பரசாயுதமோ, சென்மம் - ஜநநத்தை, சேதனம் - அறுத்தற்குரிய, பரசுதானோ - பரசாயுதமோ, கம் கரன் அன்பர் - சிவபக்தராகிய, காட்டக்கோட்டையர் - காட்டக்கோட்டையருடைய, கை - திருக்கரத்திலுள்ள, கோடாலி - பரசாயுதமானது, எ - று.

(பொ - ரை.) பரம துஷ்டர்களாகிய சிவத்ரோஹிகள் மரித்தற்குரிய பரசாயுதமோ? சண்டேசநாயனாருடைய திருக்கரத்திலுள்ள கொடிய பரசாயுதமோ? யமன் வீசுகின்ற காலபாசத்தைத் துணிக்கவல்லவர்களாகிய மஹாத்மாக்களுடைய திருக்கரத்திலுள்ள பரசாயுதமோ? ஜநநத்தை யறுத்தற்குரிய பரசாயுதமோ? சிவபக்தராகிய காட்டக் கோட்டையருடைய திருக்கரத்திலுள்ள பரசாயுதமானது.

(வி - ரை.) கம் - தலை, கரன் - கையையுடையவன், கங்கரன் - கபாலபாணி என்றது பொருள். (கக)

எனச்சிவ கணங்கள் போற்ற விழிந்தமே டத்தெ ருத்தான்
கனச்சிவ லிங்க மாகக் காட்டக்கோட் டையர் செய்தி
மனச்சிவ நெறியி தல்லான் மற்றும்பா லூரிற் பொம்மர்
முனைச்செய வாதிற் சோள முத்திலிங் கமதாய்ச் சேர்ந்தார்.

(ப - ரை.) என்ன - என்றிவ்வாறு, சிவகணங்கள் - சிவகணங்கள், போற்ற - துதிக்கவும், இழிந்த - இழிவாகிய, மேடத்து எருத்தான் - ஆட்டுச்சாணமே, கனம் - மேலான, சிவலிங்கம் ஆக - சிவலிங்கமாகவும், காட்டக்கோட்டையர் - காட்டக்கோட்டையர், செய்தி - சரித்ரம், மன்ன - நிலைபெறவுமாகிய, சிவநெறி - சிவபக்திமார்க்கம், ஈது - இதுவாகும், அல்லால் - அன்றி, மற்றும் - மேலும், பாலூரில் - பாலூரென்னும் க்ஷேத்ரத்தில் எழுந்தருளியிருந்த, பொம்மர் - பொம்மதேவரென்பவர், முனை - முற்காலத்தில், செய் - செய்த, அ - அந்த, வாதில் - பிறஸமய வாதச்சண்டையில், சோளம் முத்து - சோளமணிகளை, இலிங்கம் ஆய் - சிவலிங்கங்களாக, செய்தார் - செய்தனர், எ - று.

(பொ - ரை.) என்றிவ்வாறு சிவகணங்கள் துதிக்கவும், இழிவாகிய ஆட்டுச்சாணமே மேலான சிவலிங்கமாகவும், காட்டக்கோட்டையர் சரித்ரம் நிலைபெறவுமாகிய சிவபக்திமார்க்க மிதுவாகும், அன்றி மேலும் பாலூரென்னும் க்ஷேத்ரத்திலெழுந்தருளியிருந்த பொம்மதேவரென்பவர் முற்காலத்திற் செய்த பிறஸமய வாதச்சண்டையில் சோளமணிகளைச் சிவலிங்கங்களாகச் செய்தனர்.

(வி - ரை.) எருத்தான் என்பதில் தான் - சாரியை. இலிங்கமதாய் என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. சோளமுத்து-முத்துப்போன்றதாகிய சோளம் எனினுமாம். (௪௨)

ஆதலா லன்பர் மேன்மைக் களவிலை யடிய னேனைப்
போதவோர் பொருள தாகப் புகழன்மி னெனவ ணங்கி
நாதனார் பெருமை நாட்டு நாளிலிச் செயலைக் கேளாப்
போதவே விச்ச லேசன் புத்தியிற் பொறுதா னாகி.

(ப - ரை.) ஆதலால் - ஆகையால், அன்பர் - சிவபக்தர்களுடைய, மேன்மைக்கு - பெருமைக்கு, அளவு இல்லை - மட்டேயில்லை, அடியனேனை - சரணனாகிய என்னையும், ஓர் - ஒரு, பொருள் ஆக - பொருளாக (மதித்து), போத - விசேஷமாக, புகழன்மின் - புகழாதேயுங்கள், என்ன - என்று (வசவேசர்) சொல்லி, வணங்கி - தொழுது, நாதனார் - சிவபெருமானது, பெருமை - மஹிமையை, நாட்டும் - நிலைபெறச் செய்கின்ற, நாளில் - காலத்தில், இ - இந்த, செயலை - செய்தியை, விச்சலேசன் - விஜ்ஜலராஜன், கேளா - கேட்டு, புத்தியில் - மனத்தில், போத - விசேஷமாக, பொறுதான் ஆகி - பொறுமை கொண்டவனாகி, எ - று.

(பொ - ரை.) ஆகையால், சிவபக்தர்களுடைய பெருமைக்கு மட்டேயில்லை, சரணனாகிய என்னையும் ஒரு பொருளாக மதித்து விசேஷமாகப் புகழாதேயுங்களென்று வசவேசர் சொல்லித் தொழுது, சிவபெருமானது மஹிமையை நிலைபெறச்செய்கின்ற காலத்தில், இந்தச் செய்தியை விஜ்ஜலராஜன் கேட்டு மனத்தில் விசேஷமாகப் பொறுமை கொண்டவனாகி.

(வி - ரை.) கேளா - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். பொறுதான் - ஸஹிக்காதவன் எனினுமாம். பொருளதாக என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. (௪௩)

காட்டக்கோட்டையர்புராணம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௩௮௪.

சிவமயம்.

# வஞ்சனைவடிவமாதவர்புராணம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பெருத்தவிச் செயலை நன்றாய்ப் பேதித்தின் றறிவோ மென்றே
மரத்தினான் மண்ணா னெண்ணின் மாதவர் வடிவ மாகத்
திருத்தமாய்ச் செய்வித் தஞ்சச் செறியிருள் சேர்த்தி ருத்தி
யருட்செறி வசவ தேவர்க் கறிவித்தா னறிவில் வேந்தன்.

(ப - ரை.) இ - இந்த, பெருத்த - மஹத்வமாகிய, செயலை - செய்தியை, நன்றாய் - பரிஷ்காரமாக, பேதித்து - பரிசோதித்து, இன்று - இன்றைத்தினமே, அறிவோம் - தெரிந்துகொள்ளக்கடவோம், என்று - என்று (நிச்சயித்து), மரத்தினால் - (வஞ்சகமாய்) மரத்தினாலும், மண்ணால் - மண்ணினாலும், எண் இல் - கணக்கற்ற, மா - பெருமை பொருந்திய, தவர் வடிவம் ஆக - ஜங்கமமூர்த்திகள்போல, திருத்தமாய் - ஒழுங்காக, செய்வித்து - பண்ணுவித்து, அஞ்ச - (கண்டவர்) பயப்படும்படியான, செறி - அடர்ந்த, இருள் - இருட்டில், சேர்த்து இருத்தி - (ஓரிடத்தில்) சேரவைத்து, அருள் செறி - சிவாநுக்ரஹத்தையுடைய, வசவதேவர்க்கு - வசவேசர்க்கு, அறிவு இல் - மூடனான, வேந்தன் - விஜ்ஜலராஜன், அறிவித்தான் - தெரிவித்தான், எ - று.

(பொ - ரை.) இந்த மஹத்வமாகிய செய்தியைப் பரிஷ்காரமாகப் பரிசோதித்து இன்றைத்தினமே தெரிந்துகொள்ளக்கடவோமென்று வஞ்சகமாய் மரத்தினாலும் மண்ணினாலும் கணக்கற்ற ஜங்கமமூர்த்திகள்போல ஒழுங்காகப் பண்ணுவித்து, கண்டவர் பயப்படும்படியான அடர்ந்த இருட்டில் ஓரிடத்தில் சேரவைத்து சிவாநுக்ரஹத்தையுடைய வசவேசருக்கு மூடனாகிய விஜ்ஜலராஜன் தெரிவித்தான்.

(வி - ரை.) இருள் - (ஆகு பெயர்) இராக்காலம். (க)

அவ்வுரை கேட்ட வாறே யறநெறித் தண்ட நாதர்
செவ்விய மனத்தாற் சென்று சிவதவ ரிவரென் றெண்ணி
யெவ்வமி லன்பி னாலே சரணார்த்தி யெனவி றைஞ்சித்
தெய்விகப் பெரியீர் சென்மின் றிருவமு தருந்த வென்றார்.

(ப - ரை.) அ - அந்த, உரை - வார்த்தையை, கேட்ட ஆறே - கேட்டவளவிலே, அறநெறி - தர்ம மார்க்கத்தையுடைய, தண்ட நாதர் - வசவேசரும், செவ்விய - ஸத்குணம் பொருந்திய, மனத்தால் - மனத்தோடும், சென்று - போய், சிவதவர் - (வஞ்சனை மாதவக் கோலங்களைப்பார்த்து) ஜங்கமர்கள், இவர் - இவர்களே, என்று - என்று, எண்ணி - நினைத்து, எவ்வம் - குற்றம், இல் - இல்லாத, அன்பினாலே - பக்தியுடன், சரணார்த்தி - சரணார்த்தி, என்று - என்று, இறைஞ்சி - (ஸாஷ்டாங்கமாய்) வணங்கி, தெய்விகம் - தெய்வத்தன்மை பொருந்திய, பெரியீர் - ஜங்கமர்களே, திருவமுது - அன்னம், அருந்த - உண்ணும்பொருட்டு, சென்மின் - எழுந்தருளுங்கள், என்றார் - என்று அழைத்தனர், எ - று.

(பொ - ரை.) அந்த வார்த்தையைக் கேட்டவளவிலே, தர்மமார்க்கத்தையுடைய வசவேசரும் ஸத்குணம்பொருந்திய மனத்தோடும்போய், வஞ்சனைமாதவக்கோலங்களைப் பார்த்து, ஜங்கமர்களிவர்களேயென்று நினைத்து, குற்றமில்லாத பக்தியுடன் சரணார்த்தி

யென்று ஸாஷ்டாங்கமாய் வணங்கி, தெய்வத்தன்மைபொருந்திய ஜங்கமர்களே! அந்நம் உண்ணும்பொருட்டு எழுந்தருளுங்களென்று அழைத்தனர். (உ)

சேடவடி வான வெல்லாஞ் செறிந்துயி ரறிந்து நோக்கி
யடல்பெறுந் தவத்தோ ராகி யரகரா வெனவெ ழுந்து
திடமிகுந் தண்டநாதர் பின்செல முன்னே செல்ல
மடமைசேர் விச்ச லேசன் மதிமிக மருண்டி ருந்தான்.

(ப - ரை.) செடவடிவான-(மரத்தாலும் மண்ணினாலும் செய்து) அசேதநமாயிருந்த அந்த வடிவங்கள், எல்லாம் - முழுதும், உயிர்செறிந்து - உயிர்பெற்று (அசைந்தும்), அறிந்து - (ஞானமடைந்து) உணர்ந்தும், நோக்கி - (கண்கள் பெற்று) பார்த்தும், அடல்பெறும் - வெற்றியையுடைய, தவத்தோர் ஆகி - ஜங்கமர்களாகி, அரகரா - ஹர: ஹரா:, என்ன - என்று (கோஷித்துக்கொண்டு), எழுந்து - (தம்தம் இருக்கையினின்றும் மேலே) எழுந்து, முன்னே - முன்னே, செல்ல - போகவும், திடம் மிகும் - மிக்க மனோத்ருடத்தையுடைய, தண்டநாதர் - வசவேசர், பின் - பின்னே, செல்ல - போகவும், மடமைசேர் - அறிவில்லாத, விச்சலேசன் - விஜ்ஜலராஜன், மதி - புத்தியானது, மிக - மிகவும், மருண்டு இருந்தான் - மயக்கமுற்றிருந்தனன், எ - று.

(பொ - ரை.) மரத்தினாலும் மண்ணினாலும் செய்துவைத்த அசேதநமாயிருந்த வடிவங்கள் முழுதும் உயிர்பெற்றசைந்தும், ஞானமடைந்துணர்ந்தும், கண்கள் பெற்று பார்த்தும், வெற்றியையுடைய ஜங்கமர்களாகி, ஹர: ஹரா: என்று கோஷித்துக்கொண்டு, தம் தம் இருக்கையினின்றும் மேலே யெழுந்து போகவும், மிக்க மனோத்ருடத்தையுடைய வசவதேவர் பின்னே போகவும், அறிவில்லாத விஜ்ஜலராஜன் புத்தியானது மிகவும் மயக்கமுற்றிருந்தனன்.

(வி - ரை.) செடம் - ஜடம் என்னும் வடசொற்றிரிபு. மடமை - அறிவின்மை.

அரமனை புகுந்தி ருந்தா னப்பதி யுள்ளோ ரெல்லாம்
பரிவினா னந்தி யாரைப் பன்முறை பணிந்து நின்றே
புரியுமிச் செயலைச் செய்வா ராரெனப் புகழ்ந்தார் விண்ணோர்
மருமலர் பொழிந்தா ரார்த்தார் மற்றைநாள் வசவ தேவர்.

(ப - ரை.) அரமனை - (விஜ்ஜலராஜன்) அரமனையில், புகுந்து-ப்ரவேசித்து, இருந்தான் இருந்தனன், அ - அந்த, பதி - கல்யாணநகரத்தில், உள்ளோர் எல்லாம் - இருந்தவர்களனைவரும், பரிவினால் - அன்புடன், நந்தியாரை - வசவேசரை, பன்முறை - பலகாலும், பணிந்து நின்று - வணங்கி நின்று, புரியும் - (தேவரீர்) செய்தருள்கின்ற, இ - இந்த, செயலை - (மஹத்தாகிய) கார்யத்தை, செய்வார் - செய்யவல்லவர், ஆர் - யார், என்ன - என்று, புகழ்ந்தார் - துதித்தார்கள், விண்ணோர் - தேவர்களும், மரு - வாசனை பொருந்திய, மலர் - புஷ்பங்களை, பொழிந்தார் - சொரிந்து, ஆர்த்தார் - ஆரவாரஞ்செய்தார்கள், மற்றை நாள் - அடுத்தநாள், வசவதேவர் - வசவேசர், எ - று.

(பொ - ரை.) விஜ்ஜலராஜன் அரமனையில் ப்ரவேசித்திருந்தனன், அந்தக் கல்யாணநகரத்திலிருந்தவர்களனைவரும் அன்புடன் வசவேசரை பலகாலும் வணங்கிநின்று, தேவரீர் செய்தருள்கின்ற இந்த மஹத்தாகிய கார்யத்தைச் செய்யவல்லவர் யார்? என்று துதித்தார்கள், தேவர்களும் வாசனைபொருந்திய புஷ்பங்களைச் சொரிந்து ஆரவாரஞ்செய்தார்கள், அடுத்தநாள் வசவேசர்.

(வி - ரை.) பொழிந்தார் - முற்றெச்சம். (௩)

வஞ்சனைவடிவமாதவர்புராணம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௩௮௮.

சிவமயம்.

# வங்கையர் புராணம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எண்ணெய்கண் ணுதற்குச் சாத்தி யினிதுபின் றமது சென்னி
தண்ணென வார்க்குங் காலைச் சங்கம ரொருவர் வந்தே
திண்ணிய வருச்ச னைக்குத் தினந்தொறுங் குறுணி முத்தத்
தொண்ணிறப் பொடியாற் கோல முவந்துயாம் வரைந்து கொள்வோம்.

(ப - ரை.) கண்ணுதற்கு - இஷ்டலிங்கப் பெருமானுக்கு, இனிது - மகிழ்ச்சியுடன், எண்ணெய்சாத்தி - எண்ணெய்க்காப்பிட்டு, பின் - அதன்பிறகு, தமது - தமது, சென்னி - தலைக்கு, தண்என - குளிர்ச்சியாக, வார்க்குங்காலை - எண்ணெய்க் காப்பிட்டுக்கொள்கின்ற காலத்தில், சங்கமர் ஒருவர் - ஒரு ஜங்கமமூர்த்தியானவர், வந்து - எழுந்தருளி, திண்ணிய - மனோத்ருடமாகச் செய்கின்ற, அருச்சனைக்கு - லிங்கபூஜையின் பொருட்டு, தினம்தொறும் - நாள்தோறும், குறுணி - குறுணிகணக்குள்ளதும், ஒள்நிறம் - அழகு பொருந்தியதுமான, முத்தத்து - முத்தின், பொடியால் - மாவினால், உவந்து - மனமகிழ்ச்சியுடன் (வ்ரதமாக), யாம் - நாம், கோலம் வரைந்துகொள்வோம் - கோலம்போட்டுக் கொள்வோம், எ - று.

(போ - ரை.) இஷ்டலிங்கப்பெருமானுக்கு மகிழ்ச்சியுடன் எண்ணெய்க்காப்பிட்டு, அதன்பிறகு தமது தலைக்குக் குளிர்ச்சியாக எண்ணெய்க்காப்பிட்டுக் கொள்கின்ற காலத்தில் ஒரு ஜங்கமமூர்த்தியானவர் எழுந்தருளி மனோத்ருடமாகச்செய்கின்ற லிங்கபூஜையின்பொருட்டு நாள்தோறும் குறுணிகணக்குள்ளதும் அழகுபொருந்தியதுமான முத்து மாவினால் மனமகிழ்ச்சியுடன் வ்ரதமாக நாம் கோலம் போட்டுக்கொள்வோம். (௧)

வருடமொன் றதற்க ளிப்பாய் வசவவென் றுரைத்த வாறே
பெருநெறி நந்தி கேசர் பிரியத்தாற் றொழுது போற்றி
யருகுறுஞ் சோளக் குப்பை யவையினை யருளாற் பார்க்கத்
திருமலி தரள ராசித் திரளதாய்த் திகழ்ந்து தோன்ற.

(ப - ரை.) வசவ - (ஆதலால்) வசவண்ணனே, வருடம் ஒன்று அதற்கு - ஒரு வருஷகாலத்திற்கு (போதுமான முத்துக்களை), அளிப்பாய் - அருள்செய்யக்கடவை, என்று - என்று, உரைத்த ஆறே - கேட்டமாத்திரத்தில், பெரு நெறி - உயர்ந்தநடையினையுடைய, நந்திகேசர் - வசவதேவர், பிரியத்தால் - அன்புடன், தொழுது - வணங்கி, போற்றி - துதித்து, அருகு உறும் - சமீபத்திலிருக்கின்ற, சோளக்குப்பை அவையினை - சோளக்குவியல்களை, அருளால் - க்ருபாகடாக்ஷத்துடன், பார்க்க - த்ருஷ்டித்த மாத்திரத்தில், திருமலி - அழகுபொருந்திய, தரளராசித் திரளதாய் - முத்துக்குவியல்களாகி, திகழ்ந்து - ப்ரகாசித்து, தோன்ற - விளங்குதலும், எ - று.

(போ - ரை.) ஆதலால், வசவண்ணனே! ஒருவருஷத்துக்குப் போதுமான முத்துக்களை அருள்செய்யக்கடவை யென்றுகேட்டமாத்திரத்தில், உயர்ந்தநடையினையுடைய வசவதேவர் அன்புடன் வணங்கித் துதித்து சமீபத்திலிருக்கின்ற சோளக்குவியல்களை

க்ருபாகடாக்ஷத்துடன் த்ருஷ்டித்தமாத்திரத்தில், அழகுபொருந்திய முத்துக்குவியல்களாகி ப்ரகாசித்து விளங்குதலும்.

(வி - ரை.) ஒன்றதற்கு, திரளதாய் என்பவைகளில் அது - பகுதிப்பொருள் விகுதி. வசவ - அண்மைவிளி. (உ)

நினைத்தலக் கங்கள் வேண்டா நித்திலக் குவைக ளாகு
மனைத்தையுந் தேவ ரீர்கொண் டருளுமென் றன்பி னாலே
வினைத்திற மில்லா ரான நந்திகள் விளம்பி முத்தந்
தனைப்பல வெருதி யானை யொட்டகந் தன்னி லேற்றே.

(ப - ரை.) தேவரீர் - ஸ்வாமின், நினைத்த-(நீர்) மனத்திற்கொண்ட, லக்கங்கள் - குறுணிக்கணக்குகள் என்பதே, வேண்டாம் - வேண்டியதில்லை, நித்திலக்குவைகள் - முத்துக்குவியல்கள், ஆகும் - ஆயிருக்கின்ற, அனைத்தையும் - எல்லாவற்றையும், கொண்டருளும் - பெற்றுக்கொண்டு போகக்கடவீர், என்று - என்று, அன்பினாலே - அன்புடன், வினைத்திறம் - வினைவலி, இல்லார்ஆன - இல்லாதவராகிய, நந்திகள் - வசவேசர், விளம்பி - சொல்லியருளி, முத்தம் தன்னை - முத்துக்களை, பல - அநேக, எருது தன்னில் - இடபங்களின்மீதும், யானை தன்னில் - யானைகளின்மீதும், ஒட்டகம் தன்னில் - ஒட்டகங்களின் மீதும், ஏற்று - சுமத்தி, எ - று.

(பொ - ரை.) ஸ்வாமின்! நீர் மனத்திற்கொண்ட குறுணிக்கணக்குகளென்பதே வேண்டியதில்லை, முத்துக்குவியல்களாயிருக்கின்ற எல்லாவற்றையும் பெற்றுக்கொண்டு போகக்கடவீரென்று அன்புடன் வினைவலியில்லாதவராகிய வசவேசர் சொல்லியருளி, முத்துக்களை அநேக இடபங்களின்மீதும் யானைகளின்மீதும் ஒட்டகங்களின்மீதும் சுமத்தி.

(வி - ரை.) முத்தந்தனை ஒட்டகந்தன்னில் என்பவைகளில் தன் - சாரியை. (ங)

கொடுத்தி றைஞ்சினர் மகேசர் கொண்டுசென் றனரி ருந்தோ
ரடுத்தநே யத்தாற் சொல்வா ரன்றுவங் கைய ரென்பார்
மடத்திலோர் சங்க மேசர் வந்துநல் லிருளார் காலை
பிடித்தநன் னியம மன்ப பேசக்கேள் பிறரைக் கேளேம்.

(ப - ரை.) கொடுத்து - தந்தருளி, இறைஞ்சினர் - (ஸாஷ்டாங்கமாக) வணங்கினர், மகேசர் - (வந்த) ஜங்கமரும், கொண்டு - (அவற்றையெல்லாம்) பெற்றுக் கொண்டு, சென்றனர் - போயினர், இருந்தோர்-(அவ்விடத் தவ்வதிசயத்தைப் பார்த்து) இருந்த பெரியோர்கள், அடுத்த - (தமக்கு) உண்டாயிருக்கின்ற, நேயத்தால் - அன்புடன், சொல்வார் - சொல்வாரானார்கள் (எவ்வாறெனின்), அன்று - முன்னொருகாலத்தில், வங்கையர் என்பார் - வங்கையரென்பவருடைய, மடத்தில் - திருமடத்தில், ஓர் - ஒரு, சங்கமேசர் - ஜங்கமமூர்த்தியானவர், நல் இருள் ஆர் காலை - நடுராத்திரிவேளையில், வந்து - எழுந்தருளி, அன்ப - பக்தனே, பிடித்த - (நாம்) மேற்கொண்ட, நல் - சிறந்த, நியமம் - வ்ரதத்தை, பேசக்கேள் - சொல்லக்கேட்பாய், பிறரை - (உம்மையன்றி) வேறொருவரையும், கேளேம் - கேட்கமாட்டோம், எ - று.

(பொ - ரை.) தந்தருளி ஸாஷ்டாங்கமாக வணங்கினர், ஜங்கமரும் அவற்றையெல்லாம் பெற்றுக்கொண்டுபோயினர், அவ்விடத்தவ்வதிசயத்தைப் பார்த்திருந்த பெரியோர்கள் தமக்குண்டாயிருக்கின்ற அன்புடன் சொல்வாரானார்கள், எவ்வாறெனின் :—முன்னொருகாலத்தில் வங்கையரென்பவருடைய திருமடத்தில் ஒரு ஜங்கமமூர்த்தியானவர் நடுராத்திரி வேளையில் எழுந்தருளி, பக்தனே! நாம் மேற்கொண்ட சிறந்த வ்ரதத்தை சொல்லக்கேட்பாய், உம்மையன்றி வேறொருவரையும் கேட்கமாட்டோம். (ச)

புதியநற் கோவின் பாலும் புனிதநம் முன்ப றித்த
வதிகசு விளமு நம்மை யாண்டரு ளமலர்க் காட்டி
மதியினுற் சாத்தி யல்லான் மகிழ்ந்தமு தருந்தோ மென்னக்
கதிபெறற் குரிய ரான வங்கையர் கசிந்தி றைஞ்சி.

(ப - ரை.) புதிய - புதியதும், நல் - சிறந்ததுமான, கோவின்பாலும் - பசுவின்பாலும், புனிதம் - பரிசுத்தமும், நம்முன் - நமக்கெதிரே, பறித்த - கொய்ததும், அதிகம் - மிகு தியுமான, கூவிளமும் - வில்வபத்ரமும் (கொண்டு), நம்மை - அடியேங்களை, ஆண்டு அருள் - ஆண்டருள்கின்ற, அமலர்க்கு - சிவபெருமானுக்கு, மதியினுல் - மனப்பூர்ணத் துடன், ஆட்டி - அபிஷேகஞ்செய்தும், சாத்தி - அணிந்தும் (பூஜைசெய்து), அல்லால் - அன்றி, மகிழ்ந்து - ஸந்தோஷித்து, அமுது - அன்னம், அருந்தோம், உண்ணமாட்டோம், என்ன - என்று (சொன்னமாத்ரத்தில்), கதிபெறற்கு உரியர் ஆன - மோக்ஷமடைதற்குப் பாத்திரரான, வங்கையர் - வங்கையர், கசிந்து - (அகாலத்தில் அவையிரண்டுமில்லாமை யால்) மனமுருகி, இறைஞ்சி - (ஜங்கமமூர்த்திகளை) வணங்கி, எ - று.

(பொ - ரை.) புதியதும் சிறந்ததுமான பசுவின்பாலும் பரிசுத்தமும் நமக் கெதிரே கொய்ததும் மிகுதியுமான வில்வபத்ரமும்கொண்டு, அடியேங்களை யாண் டருள்கின்ற சிவபெருமானுக்கு மனப்பூர்ணத்துடன் அபிஷேகஞ் செய்தும் அணிந்தும் பூஜைசெய்தன்றி ஸந்தோஷித்து அன்னம் உண்ணமாட்டோமென்று சொன்னமாத்ரத்தில் மோக்ஷமடைதற்குப் பாத்திரரான வங்கையர் அகாலத்தில் அவையிரண்டுமில்லாமையால் மனமுருகி, ஜங்கமமூர்த்திகளை வணங்கி. (ரு)

மடந்தனிற் கட்டி நின்ற மலட்டினைக் கறக்கத் துய்ய
குடந்தணி பால தாயக் கோவினைப் பிணித்து நின்ற
நெடுந்தறி வில்வ பத்திர நிறையவே தளிர்க்கக் கொய்து
விடஞ்செறி கண்ட னன்பர் விரும்பமுன் கொடுத்தா ரென்பர்.

(ப - ரை.) மடம்தன்னில் - (தமது) திருமடத்தில், கட்டிநின்ற - கட்டிநிற்கின்ற, மலட்டினை - மலட்டுப்பசுவை, கறக்க - கறந்தமாத்ரத்தில், துய்ய - பரிசுத்தமான, குடம் - குடம், தணி - நிறைந்த, பால் ஆய் - பாலாகியும், அ - அந்த, கோவினை - மலட் டுப்பசுவை, பிணித்துநின்ற - கட்டிநிற்கின்ற, நெடு - நீண்ட, தறி - தூணானது, வில்வபத்தி ரம் - வில்வபத்ரம், நிறைய - பூர்ணமாக, தளிர்க்க - தழைத்தலும், கொய்து - பறித்து, விடம் செறி கண்டன் அன்பர் - சிவபக்தர், விரும்ப - இஷ்டப்படும்படி, முன் - முன்னே, கொடுத்தார் - தந்தருளினர், என்பர் - என்று (உலகத்தார்) சொல்லுவார்கள், எ - று.

(பொ - ரை.) தமது திருமடத்திற் கட்டிநிற்கின்ற மலட்டுப்பசுவைக் கறந்தமாத் ரத்தில் பரிசுத்தமான குடம் நிறைந்த பாலாகியும், அந்த மலட்டுப்பசுவைக் கட்டிநிற் கின்ற நீண்ட தூணானது வில்வபத்ரம் பூர்ணமாகத் தழைத்தலும் பறித்துச் சிவபக்தர் இஷ்டப்படும்படி முன்னே தந்தருளினரென்று உலகத்தார் சொல்லுவார்கள்.

(வி - ரை.) மடந்தனில் என்பதில் தன் - சாரியை. பாலதாய் என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. பத்திரம் - பத்ரம் என்னும் வடசொற்றிரிபு. விடம் செறி கண் டன் - நீலகண்டன். விடம் - விஷம் என்னும் வடசொற்றிரிபு. செறி - கூடின. (சு)

இன்றுநங் கண்ட நாத ரிணைவிழிக் கருணை நோக்காற்
றுன்றுசோ ளக்கு வாலைத் தூயநித் திலங்க ளாக்கிச்
சென்றசங் கமர்க்க ளித்த தெய்விகம் பாரீ ரென்று
நின்றநற் பெரியோ ரேத்த நந்திக ணிகழு நாளில்.

(ப-ரை.) இன்று - இந்நாளில், நம் - நமது, தண்டநாதர் - வசவேசர், இணைவிழி - இரண்டு திருக்கண்களின், கருணைநோக்கால் - க்ருபாகடாக்ஷத்தால், துன்று - மிகுதியான, சோளக்குவாலை - சோளக்குவியல்களை, தூய - பரிஶுத்தமான, நித்திலங்கள் ஆக்கி - முத்துக்களாகச் செய்து, சென்ற - எழுந்தருளின, சங்கமர்க்கு - ஜங்கமமூர்த்திகளுக்கு, அளித்த - கொடுத்தருளின, தெய்விகம் - தெய்வத்தன்மையை, பாரீர் - பாருங்கள், என்று - என்று (அதிஶயித்துச்சொல்லி), நின்ற - நின்றிருந்த, நல் - நல்ல, பெரியோர் - சிவசரணர்கள், ஏத்த - புகழ, நந்திகள் - வசவேசர், நிகழும் நாளில் - வாழ்கின்ற காலத்தில், எ - று.

(பொ-ரை.) இந்நாளில் நமது வசவேசர் இரண்டுதிருக்கண்களின் க்ருபாகடாக்ஷத்தால் மிகுதியான சோளக்குவியல்களைப் பரிஶுத்தமான முத்துக்களாகச்செய்து, எழுந்தருளின ஜங்கமமூர்த்திகளுக்குக் கொடுத்தருளின தெய்வத்தன்மையைப்பாருங்களென்று அதிஶயித்துச்சொல்லி, நின்றிருந்த நல்ல சிவசரணர்கள் புகழ வசவேசர் வாழ்கின்றகாலத்தில்.

வங்கையர்புராணம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௯௬௫.

---

உ

சிவமயம்.

# சித்தராமையர் புராணம்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தண்ட நாயக மணிய ஞர்சசி தங்கு வேணி தருக்கினர்
மிண்டு றும்பர வாத காலர் விகார நெஞ்சரை மேவலார்
மண்ட லாதிப னுன விச்சல மன்ன னீள்சபை மன்னியே
கொண்ட பூமி புரக்கு நீதி குலாவி யாய்வுறு காலையில்.

(ப-ரை.) தண்ட நாயகன் - தண்டநாயகன் என்னும், மணி - மாணிக்கம், அன்னார் - போன்றவரும், சசிதங்குவேணி - சிவபெருமானிடத்தில், தருக்கினர் - மனமகிழ்ச்சியுடையவரும், மிண்டு உறும் - மிகக்கொடிய, பரவாதர் - பரஸமயவாதிகளுக்கு, காலர் - யமன்போன்றவரும், விகாரம் நெஞ்சரை - மனோவிகாரங்களையுடைய நீசர்களை, மேவலார் - சேராதவருமாகிய வசவேசர், மண்டலாதிபனான - ஏகசக்ராதிபதியாகிய, விச்சலமன்னன் - விஜ்ஜலராஜனுடைய, நீள் சபை - மஹாஸபையை, மன்னி - அடைந்து, கொண்ட - (தாம்) மேற்கொண்ட, பூமி - உலகத்தை, புரக்கும் - காத்தற்குரிய, நீதி - ந்யாயங்களை, குலாவி - பாராட்டி, ஆய்வு உறு - விசாரிக்கின்ற, காலையில் - ஸமயத்தில், எ - று.

(பொ-ரை.) தண்டநாயகனென்னும் மாணிக்கம்போன்றவரும், சிவபெருமானிடத்தில் மனமகிழ்ச்சியுடையவரும், மிகக்கொடிய பரஸமயவாதிகளுக்கு யமன்போன்றவரும், மனோவிகாரங்களையுடைய நீசர்களைச் சேராதவருமாகிய வசவேசர் ஏகசக்ராதிபதியாகிய விஜ்ஜலராஜனுடைய மஹாஸபையையடைந்து, தாம் மேற்கொண்ட உலகத்தைக் காத்தற்குரிய ந்யாயங்களைப் பாராட்டி விசாரிக்கின்ற ஸமயத்தில்.

(வி-ரை.) சசிதங்குவேணி - சந்த்ரனிருக்கின்ற ஜடாபாரத்தையுடையவர். (க)

சென்னி மீதொரு செங்கை கொண்டு திடத்த மர்த்தியோர் செங்கையா
னன்னி லத்தினு மருள லென்று நவின்றெ டுத்து நிரீஇயலு
மன்ன செய்தி யமைச்சர் கண்டி தெனற் புதம்மென விச்சல
னன்னி யாயம தென்ன தானுரை நந்தி யென்ன விசைத்தலும்,

(ப - ரை.) சென்னி - (தமது) திருமுடியின், மீது - மேல், ஒரு - ஒரு, செம் - அழகிய, கை கொண்டு - திருக்கரத்தால், திடத்து - உறுதியாக, அமர்த்தி - அமைத்து, ஓர் - ஒரு, செம் - அழகிய, கையால் - திருக்கரத்தால், நல் - நல்ல, நிலத்தினும் - பூமியின்மேலும் (அமைத்து), மருளல் என்று - (ஓ பெண்ணே !) பயப்படாதேயென்று, நவின்று - சொல்லி, எடுத்து - (மேலே) தூக்கி, நிறீ இயலும் - (வீழாதே நில்லென்று) நிறுத்துதலும், அன்ன - அந்த, செய்தி - செய்கையை, அமைச்சர் - (மற்ற) மந்திரிகள், கண்டு - பார்த்து, இது என் அற்புதம் என்ன - இதென்ன ஆச்சரியமென்று (தமக்குள்ளே ஒருவர்க்கொருவர் பேசிக் கொள்ளுதலும்), விச்சலன் - விஜ்ஜலராஜன் (நோக்கி), நந்தி - வசவேசரே, நல் - ஆச்சரியப்படத்தக்க, நியாயம் - விதத்திற்குக் காரணம், என்ன - யாது, உரை - சொல்லும், என்ன - என்று, இசைத்தலும் - கேட்டமாத்திரத்தில், எ - று.

(பொ - ரை.) தமது திருமுடியின்மேல் ஒரு அழகிய திருக்கரத்தால் உறுதியாக வமைத்து, ஒரு அழகிய திருக்கரத்தால் நல்ல பூமியின்மேலு மமைத்து, ஓ பெண்ணே! பயப்படாதேயென்று சொல்லி மேலேதூக்கி, வீழாதே நில்லென்று நிறுத்துதலும், அந்தச் செய்கையை மற்ற மந்திரிகள் பார்த்து, இதென்ன ஆச்சரியமென்று தமக்குள்ளே யொருவர்க்கொருவர் பேசிக்கொள்ளுதலும், விஜ்ஜலராஜன் நோக்கி, வசவேசரே! ஆச்சரியப்படத்தக்க விதத்திற்குக்காரணம் யாது? சொல்லுமென்று கேட்டமாத்திரத்தில்.

(வி - ரை.) நிறீஇ - சொல்லிசையளபெடை. நியாயமதுதான் என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி, தான் - சாரியை. (உ)

ஓதி னுலி துயர்ச்சி யாமென வுரைசெ யாமலு ணர்ந்துபி
னீதி தென்ன விசைத்தி டாவிடி லிந்த மன்ன னிணங்குறு
னாத லாலிது சொல்லு வாமென வரசன் முன்னுற வறைகுவார்
நீதி யாலுயர் சொன்ன லாபுர நித்த னூர்கபி லேசனூர்

(ப - ரை.) ஓதினுல் - (அதுகேட்ட வசவேசரும் இந்தச்செய்தியை நாம்) சொல்வோமாயின், உயர்ச்சி - மேன்மை, ஆம் - ஆகும், என்ன - என்று (நினைத்து), உரைசெய்யாமல் - (சிறிது நாழிகைபர்யந்தம்) மௌனமாயிருந்து, உணர்ந்து - தெளிந்து, பின் - பிறகு, ஈது - இது, இது - இத்தன்மைத்து, என்ன - என்று, இசைத்திடாவிடில் - சொல்லாவிட்டால், இந்த - இந்த, மன்னன் - அரசன், இணங்குறுன் - ஸம்மதிக்கமாட்டான், ஆதலால் - ஆகையால், இது - இதனை, சொல்லுவாம் என்ன - சொல்லக்கடவோமென்று (துணிந்து), அரசன் - விஜ்ஜலராஜன், முன் உற - முன்னிலையில், அறைகுவார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), நீதியால் - ஸந்மார்க்கத்தினுல், உயர் - மேன்மையடைந்திருக்கின்ற, சொன்னலாபுரம் - சொன்னலாபுரம் (என்னும் திவ்யக்ஷேத்ரத்தில் எழுந்தருளியிருக்கின்ற), நித்தனூர் - அழிவில்லாதவரும், கபிலேசனூர் - கபிலேசரென்பவருமாகிய, எ - று.

(பொ - ரை.) அதுகேட்ட வசவேசரும் இந்தச் செய்தியை நாம் சொல்வோமாயின் மேன்மையாகுமென்று நினைத்து, சிறிது நாழிகைபர்யந்தம் மௌனமாயிருந்து தெளிந்து, பிறகு இது இத்தன்மைத்தென்று சொல்லாவிட்டால் இந்த அரசன் ஸம்மதிக்கமாட்டான், ஆகையால் இதனைச் சொல்லக்கடவோமென்று துணிந்து, விஜ்ஜலராஜன் முன்னிலையில் சொல்வாராயினர், எவ்வாறெனின்:—ஸந்மார்க்கத்தில் மேன்மையடைந்திருக்கின்ற சொன்னலாபுரமென்னுந் திவ்யக்ஷேத்ரத்திலெழுந்தருளியிருக்கின்ற அழிவில்லாதவரும் கபிலேசரென்பவருமாகிய.

(வி - ரை.) சொன்னலாபுரம் - ஸ்வர்ணவல்லிபுரமென்றும், சொல்லாபுரமென்றும், சோலாப்பூரென்றும் வழங்குகிறது. (௩)

நடஞ்செய் வாரையோர் நல்ல தாபதர் நண்பு டன்பதி னாயிரங்
குடங்கள் பான்மிக வேகொ ணர்ந்து குலாவி யாட்டவ தூரெலா
மடைந்து வீதிகள் சேற தாயின வத்தெ ருக்களி லாயமா
மடந்தை காடக னின்று மோர்கொடு வந்து மாறிய வேலையில்.

(ப - ரை.) நடம் செய்வாரை - சிவபெருமானை, ஓர் - ஒரு, நல்ல - சிறந்த, தாபதர் - ஜங்கமர், நண்புடன் - அன்போடு, பதினாயிரம் - பதினாயிரங்கணக்குள்ள, குடங்கள் - குடங்களில் (நிறைந்த), பால் - பாலினை, மிக - மிகுதியாக, கொணர்ந்து - கொண்டு வந்து, குலாவி - கொண்டாடி, ஆட்ட - அபிஷேகஞ்செய்தலும், அது - அந்தப் பாலானது, ஊர் - நாடு, எல்லாம் - முழுதும், அடைந்து - பரவி, வீதிகள் - தெருக்களெல்லாம், சேறு ஆயின - (பெருவெள்ளமாகி) சேறாய்விட்டன, அ - அந்த, தெருக்களில் - வீதிகளில், மா - அழகிய, ஆயமடந்தை - (ஓர்) இடைச்சி, காடு அகம் நின்றும் - (தன்) ஊரினின்றும், மோர் - மோரை, கொடுவந்து - கொண்டுவந்து, மாறியவேலையில் - விற்றகாலத்தில், எ-று.

(பொ - ரை.) சிவபெருமானை ஒரு சிறந்த ஜங்கமர் அன்போடு பதினாயிரங்கணக்குள்ள குடங்களில் நிறைந்த பாலினை மிகுதியாகக் கொண்டுவந்து கொண்டாடி யபிஷேகஞ்செய்தலும், அந்தப் பாலானது நாடு முழுதும் பரவி, தெருக்களெல்லாம் பெருவெள்ளமாகிச் சேறாய்விட்டன, அந்த வீதிகளில் அழகிய ஓர் இடைச்சி தன் ஊரினின்றும் மோரைக் கொண்டுவந்து விற்றகாலத்தில்.

(வி - ரை.) சேறதாயின என்பதில் அது - பகுதிப்பொருள்விகுதி. (௪)

வழுவு சேறு வழுக்கி வீழ்பவள் வசவ னேயெனும் வசனநாம்
விழுமி தாக வறிந்து மண்ணவள் வீழ்த ராம லெடுத்தனங்
கழுமு செய்தியி தென்ற லும்புவி காவ லன்கன புதுமையென்
றொழுகி நீரவ னைக்கொ ணர்ந்திடு மென்ன நின்றவ ரோடினார்.

(ப - ரை.) வழுவு - சறுக்குகின்ற, சேறு - சேற்றில், வழுக்கி - சறுக்கி, வீழ்பவள் - விழுகின்றவள், வசவனே - (மற்றவரை நினையாது) வசவண்ணனே, என்னும் - என்று வருந்தியழைத்த, வசனம் - சொல்லை, நாம் - யாம், விழுமிதாக - நன்றாக, அறிந்து - உணர்ந்து, அவள் - அவள், மண் - பூமியின் (மீது), வீழ்தராமல் - விழாமல், எடுத்தனம் - (மோர்குடம் உடைவதற்கு முன்னமே) தூக்கிநிறுத்தினோம், கழுமு - நடந்த, செய்தி - வர்த்தமானம், இது - இது, என்றலும் - என்று சொன்னமாத்திரத்தில், புவிகாவலன் - விஜ்ஜலராஜன், கனம் - மஹா, புதுமை - அத்புதம், என்று - என்று (சொல்லி), நீர் - நீங்கள், ஒழுகி - ஓடி, அவனை - அவனை, கொணர்ந்திடும் - கொண்டு வாருங்கள், என்ன - என்று கட்டளையிட்டமாத்ரத்தில், நின்றவர் - அவ்விடத்திருந்த ஊழியர்கள், ஓடினார் - விரைந்து சென்றார்கள், எ - று.

(பொ - ரை.) சறுக்குகின்ற சேற்றில் சறுக்கிவிழுகின்றவள் மற்றவரை நினையாது, வசவண்ணனே! என்று வருந்தியழைத்த சொல்லை யாம் நன்றாகவுணர்ந்து, அவள் பூமியின்மீது விழாமல் மோர்குடம் உடைவதற்கு முன்னமே தூக்கிநிறுத்தினோம், நடந்த வர்த்தமானமிதுவென்று சொன்னமாத்ரத்தில், விஜ்ஜலராஜன் மஹாவத்புதமென்று சொல்லி, நீங்கள் ஓடி அவனைக் கொண்டுவாருங்களென்று கட்டளையிட்ட மாத்ரத்தில், அவ்விடத்திருந்த ஊழியர்கள் விரைந்து சென்றார்கள். (௫)

அன்று சொன்ன லவப்பு ரத்தி லணைந்த வட்டா வங்கையி
னொன்று சேறுடன் மோர்சு மந்துகொ டுலவு மானன விழியுடன்
றுன்று கொங்கைய ணின்று விச்சலன் வினவ வுள்ளது சொல்லவே
நன்று நந்திகண் மேன்மை நீமுன நாட லென்னென நவிலுவாள்,

(ப - ரை.) அன்று - அந்தநாள், அ - அந்த, சொன்னலபுரத்தில் - சொன்னலாபுரத்தில், அணைந்து - சேர்ந்து, அவள் - அவளை, தர - கொண்டு வருதலும், அகம் கையின் - (இடது) உள்ளங்கையில், ஒன்று - பொருந்தின, சேறுடன் - சேற்றோடு, மோர் - மோரை, சுமந்து - சுமந்துகொண்டு, உலவும் - திரிகின்ற, மான் - மான் (விழி), அன்ன - போன்ற, விழியுடன் - கண்களையும், துன்று - நெருங்கின, கொங்கையள் - தனங்களையுமுடைய இடைச்சியானவள், நின்று - (எதிரே) நின்று, விச்சலன் - விஜ்ஜலராஜன், வினவ - (நடந்த விஷயத்தை) கேட்டலும், உள்ளது - உண்மையை (மறைக்காது), சொல்ல - சொன்ன மாத்ரத்தில், நன்று (விஜ்ஜலராஜன்) நல்லகார்யம், நீ - நீ, முன்னம் - முன்னமே, நந்திகள் - வசவேசரின், மேன்மை - மஹத்வத்தை, நாடல் - கருதுதற்குக்காரணம், என் - யாது, என்ன - என்றுகேட்டலும், நவிலுவாள் - (அவள்) சொல்வாளாயினள் (எவ்வாறெனின்), எ - று.

(பொ - ரை.) அந்தநாள் சொன்னலாபுரத்திற்சேர்ந்து அவளைக் கொண்டுவருதலும், இடது உள்ளங்கையிற்பொருந்தின சேற்றோடு மோரைச் சுமந்துகொண்டு திரிகின்ற மான் விழிபோன்ற கண்களையும் நெருங்கின தனங்களையுமுடைய இடைச்சியானவள் எதிரே நின்று, விஜ்ஜலராஜன் நடந்தவிஷயத்தைக் கேட்டலும், உண்மையை மறைக்காது சொன்னமாத்ரத்தில், விஜ்ஜலராஜன், நல்லகார்யம் நீ முன்னமே வசவேசரின் மஹத்வத்தைக் கருதுதற்குக் காரணம் யாது? என்றுகேட்டலும், அவள் சொல்வாளாயினள், எவ்வாறெனின்:— (சா)

சொன்ன லாபுர மென்னு நற்பதி தூய நன்கதி யெய்துவான்
மன்ன நீடுய ரும்ப ருப்பத மல்லி கார்ச்சுன வள்ளல்போ
லுன்ன ருஞ்சிவ லிங்க மங்க ணுவப்பி னோடு பதிட்டியா
மின்னு வானணி கோயில் கண்டு மிகுத்த பூசை யமைத்தரோ.

(ப - ரை.) மன்ன - அரசனே, சொன்னலாபுரம் - சொன்னலாபுரம், என்னும் - என்று சொல்லப்படுகிற, நல் - சிறந்த, பதி - க்ஷேத்ரமானது, தூய - பரிசுத்தமான, நற்கதி எய்துவான் - முக்தியடையும்பொருட்டு, நீடு உயரும் - மிகவுயர்ந்த, பருப்பதம் - ஸ்ரீ சைலத்திலுள்ள, மல்லிகார்ச்சுனவள்ளல் போல் - மல்லிகார்ஜுநேஶ்வரர் போலவே - உன் அரு - நினைத்தற்கரிய, சிவலிங்கம் - சிவலிங்கப்பெருமானை, அங்கண் - அந்த க்ஷேத்ரத்தில், உவப்பினோடு - ஸந்தோஷத்துடன், பதிட்டியா - ப்ரதிஷ்டைசெய்தும் (மந்த்ர பூர்வகமாய்ச் சிவபெருமானை யெழுந்தருளப் பண்ணியும்), மின்னு - ப்ரகாசிக்கின்ற, வான் - ஆகாயத்தையளாவி, அணி - அலங்கரிக்கிற, கோயில் - திருவாலயத்தை, கண்டு - கட்டுவித்தும், மிகுத்த - அதிகப்பட்ட, பூசை - நித்யபூஜைகளை, அமைத்து - ஏற்படுத்தியும், எ - று.

(பொ - ரை.) அரசனே! சொன்னலாபுரமென்று சொல்லப்படுகிற சிறந்த க்ஷேத்ரமானது பரிசுத்தமான முக்தியடையும்பொருட்டு மிகவுயர்ந்த ஸ்ரீ சைலத்திலுள்ள மல்லிகார்ஜுநேஶ்வரர்போலவே நினைத்தற்கரிய சிவலிங்கப்பெருமானை அந்தக்ஷேத்ரத்தில் ஸந்தோஷத்துடன் ப்ரதிஷ்டைசெய்தும், மந்த்ரபூர்வகமாய்ச் சிவபெருமானை யெழுந்தருளப்பண்ணியும், ப்ரகாசிக்கின்ற ஆகாயத்தையளாவி யலங்கரிக்கிற திருவாலயத்தைக் கட்டுவித்தும், அதிகப்பட்ட நித்யபூஜைகளை யேற்படுத்தியும்.

(வி - ரை.) பருப்பதம் - பர்வதம் என்னும் வடசொற்றிரிபு. பதிட்டியா - ப்ரதிஷ்ட்டியா என்னும் வடசொற்றிரிபு. பதிட்டியா - செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். அரோ - அசை. (எ)

மற்றுமெண்பதி னாயி ரஞ்சிவ மந்தி ரங்கள் வகுத்துமுன்
சொற்ற ருஞ்சிவ னார்த மக்குயர் சித்த ராமையர் தூவிழா
வுற்ற நண்பி னடத்து கின்றமை யுலகு ளோர்க ளறிந்துபோ
மற்றை நாளெம தூரு ளோரொடும் யானு மன்பின் மகிழ்ந்துபோய்.

(ப - ரை.) மற்றும் - மேலும், எண்பதினாயிரம் - எண்பதினாயிரங் கணக்குள்ள, சிவமந்திரங்கள் - சிவாலயங்கள், வகுத்து - கட்டுவித்தும், முன் - முன்னர், சொல்தரும் - கூறிய, சிவனார்தமக்கு - மல்லிகார்ஜுனேஸ்வரருக்கு, உயர் - தெய்விகம்பெருக்கிய, சித்தராமையர் - சித்தராமதேவர், தூ - யாவரும் அன்புபூண்டொழுகுதற்குரிய, விழா - திருவிழாவை, உற்ற நண்பின் - மிகுந்த பக்தியுடன், நடத்துகின்றமை - (விதிப்படி) நடத்திவருகின்ற செய்தியை, உலகுளோர்கள் - உலகத்திலுள்ளவர்கள், அறிந்து - தெரிந்து, போம் - போகின்ற, அற்றைநாள் - அன்றைத்தினமே, எமது - நமது, ஊர் உள்ளோரொடும் - ஊர்ஜனங்களுடனும், யானும் - நானும், அன்பின் - பக்தியுடன், மகிழ்ந்து - ஸந்தோஷித்து, போய் - சென்று, எ - று.

(பொ - ரை.) மேலும் எண்பதினாயிரங் கணக்குள்ள சிவாலயங்கள் கட்டுவித்தும் முன்னர்க்கூறிய மல்லிகார்ஜுனேஸ்வரருக்குத் தெய்விகம்பொருந்திய சித்தராமதேவர்யாவரும் அன்புபூண்டொழுகுதற்குரிய திருவிழாவை மிகுந்தபக்தியுடன் விதிப்படி நடத்துகின்ற செய்தியை உலகத்தார்தெரிந்து போகின்ற அன்றைத்தினமே நமது ஊர்ஜனங்களுடனும் நானும் பக்தியுடன் ஸந்தோஷித்துச் சென்று.

(வி - ரை.) மந்திரம் - வீடு, அது ஈண்டைக்கேற்பக் கோயிலெனப் பொருள்பட்டு நின்றது. பாபரஹிதரானவரும், தேஹகுணரஹிதரானவரும், சிவயோகத்தல் மிக்கவரும், களங்கரஹிதரும், ஞானஸ்வரூபரும், பாலநேத்ரமுடையவருமாதலான் உயர் சித்தராமையரென்றார். சிவனார்தமக்கு என்பதில் தம் - சாரியை. (அ)

செய்ய வப்பதி யுட்பு குந்துசி வால யத்திடை சேரலு
மையர் மெய்த்தவர் சித்த ராமைய ரம்ப கஞ்செறி பாலராய்
மெய்யி னீழலு மின்றி யேபத மேதி னிக்க ணுறாமலத்
துய்யர் நிற்பது கண்டு மாதவர் தொழுது முன்ன ரிறைஞ்சியே.

(ப - ரை.) செய்ய - அழகிய, அ - அந்த, பதியுள் - சொன்னலாபுரியில், புகுந்து - ப்ரவேசித்து, சிவாலயத்து இடை - சிவாலயத்தில், சேரலும் - சேர்ந்தவுடன், ஐயர் - ஸ்வாமியானவரும், மெய் - உண்மையாகிய, தவர் - ஜங்கமருமாகிய, சித்தராமையர் - சித்தராமதேவர், அம்பகம் - கண்ணும், செறி - கூடின, பாலர் ஆய் - நெற்றியையுடையவராயும், மெய்யின் - திருமேனியின், நீழலும் - நிழலும், இன்றி - இல்லாமலும், பதம் - திருவடிகளும், மேதினிக்கண் - பூமியில், உறாமல் - தோயாமலும், அ - அந்த, துய்யர் - பரிஶுத்தர், நிற்பது - நிற்றலை, கண்டு - பார்த்து, மா - பெருமைபொருந்திய, தவர் - மாஹேஶ்வரர்கள், முன்னர் - திருமுன்னே, தொழுது - கும்பிட்டு, இறைஞ்சி - (ஸாஷ்டாங்கமாக) வணங்கி, எ - று.

(பொ - ரை.) அழகிய அந்தச் சொன்னலாபுரியில் ப்ரவேசித்து சிவாலயத்திற் சேர்ந்தவுடன் ஸ்வாமியானவரும் உண்மையாகிய ஜங்கமருமாகிய சித்தராமதேவர் கண்ணும்கூடின நெற்றியையுடையவராயும் திருமேனியின் நிழலுமில்லாமலும் திருவடிகளும் பூமியிற்றோயாமலும் அந்தப் பரிஶுத்தர் நிற்றலைப் பார்த்து பெருமை பொருந்திய மாஹேஶ்வரர்களெல்லாரும் திருமுன்னே கும்பிட்டு, ஸாஷ்டாங்கமாக வணங்கி.

(வி - ரை.) செய்ய - செம்மைப் பண்படியாகப்பிறந்த பெயரெச்சம். சிவாலயத்திடை என்பதில் இடை - ஏழனுருபு. மேதினிக்கண் என்பதில் கண் - ஏழனுருபு. பாலம் - நெற்றி. அம்பகம் செறி பாலர் - நெற்றிக்கண்ணையுடையவர். (க)

இத்த யாபரர் சித்த ராமைய ரீச ஞர்கயி லாயமே
நித்த மேகுவர் மீள்வர் நந்திக ணெறிவி ளுவது மென்னவே
யத்த போதனர் சொல்லு வார்வச வேச ரம்புவி யன்பிஞ
லொத்து மாகயி லாய மீதினு முறுவ ரென்பர்க ளுத்தமர்.

(ப - ரை.) இ - இந்த, தயாபரர் - க்ருபாமூர்த்தியாகிய, சித்தராமையர் - சித்தராம தேவர், ஈசஞர் - சிவபெருமான் (எழுந்தருளியிருக்கின்ற), கயிலாயம் - ஸ்ரீ மஹாகைலா ஸத்துக்கு, நித்தம் - நாடோறும், ஏகுவர் - (சிவயோகத்திஞல்) போவார், மீள்வர் - (சிவா நுபவஸேவைசெய்து) திரும்பிவருவார், நந்திகள் - (அச்சிவலோகத்திலுள்ள இந்த) வச வேசரது, நெறி - பெருமையை, வினுவுதும் - கேட்போம், என்ன - என்று (துணிந்து), அ - அந்த, தபோதனர் - மாஹேஶ்வரர்கள், சொல்லுவார் - விண்ணப்பஞ்செய்வா ரானுர்கள் (எவ்வாறெனின்), வசவேசர் - வசவதேவர், அன்பிஞல் - பக்தியுடன், அம்புவி - பூமியில் (எழுந்தருளியிருத்தல்), ஒத்து - போலவே, மா - பெருமைபொருந்திய, கயிலாய மீதினும் - ஸ்ரீ மஹாகைலாஸத்திலும், உறுவர் - எழுந்தருளியிருப்பர், என்பர்கள் - என்று சொல்லுவார்கள், உத்தமர் - மேலோர்கள், எ - று.

(பொ - ரை.) இந்த க்ருபாமூர்த்தியாகிய சித்தராமதேவர் சிவபெருமான் எழுந்த ருளியிருக்கின்ற ஸ்ரீ மஹாகைலாஸத்துக்கு நாடோறும் சிவயோகத்திஞல் போவார், சிவாநுபவஸேவைசெய்து திரும்பிவருவார், ஆதலால் அந்தச் சிவலோகத்திலுள்ள இந்த வசவேசரது பெருமையை கேட்போமென்று துணிந்து அந்த மாஹேஶ்வரர்கள் விண்ணப்பஞ்செய்வாரானுர்கள், எவ்வாறெனின் :—வசவதேவர் பக்தியுடன் பூமியில் எழுந்தருளியிருத்தல்போலவே பெருமைபொருந்திய ஸ்ரீ மஹா கைலாஸத்திலும் எழுந் தருளி யிருப்பரென்று சொல்லுவார்கள் மேலோர்கள்.

(வி - ரை.) அம்புவி - ஒருசொல் (அழகிய பூமியெனினுமாம்). (௪0)

போக பூமிபொ ருந்தி மற்றுயர் புனித ஞர்கயி லாயமேன்
மாக ராலு மணைந்தி டற்கரி தென்ன நூல்கள் வகுக்குமா
ஞக பூடணர் வெள்ளி வெற்பரு ணந்தி கேச ரிருந்தநீ
ராக மாதிக ரேயெ மக்கிதை யருளு மென்றபி னத்தவர்.

(ப - ரை.) ஆகம - சிவாகமவுணர்ச்சியில், அதிகரே - வல்லவரே, போகபூமி - (இழி வுற்ற போகாநுபவத்திற் கிருப்பிடமாகிய இந்த) பூலோகத்தை, பொருந்தி - அடைந்து, மற்று - மேலும், புனிதஞர் - சிவபெருமானது, உயர் - சிறப்புற்ற (பேரின்ப ஸுகாநு பவத்திற் கிருப்பிடமாகிய), கயிலாயமேல் - ஸ்ரீ மஹாகைலாஸத்தில், மாகராலும் (ப்ரஹ்ம விஷ்ண்வாதி) தேவர்களாலும், அணைந்திடற்கு - செல்லுவதற்கு, அரிது - முடியாது, என்ன - என்று, நூல்கள் - சிவாகமங்கள், வகுக்கும் - சொல்லாநிற்கும், ஆல் - ஆதலால், நாகபூடணர் - சிவபெருமானது, வெள்ளிவெற்பு - ஸ்ரீ மஹாகைலாஸத்தில், அருள் - ஆண் டருள்கின்ற, நந்திகேசர் - வசவேசர், இருந்த - எழுந்தருளிய, நீர் - தன்மையாகிய, இதை - இந்த மஹத்வமான செய்தியை, எமக்கு - எங்களுக்கு, அருளும் - அருள்செய்யவேண் டும், என்றபின் - என்று ப்ரார்த்தித்த பிறகு, அ - அந்த, தவர் - சித்தராமையர், எ - று.

(பொ - ரை.) சிவாகமவுணர்ச்சியில் வல்லவரே! இழிவுற்ற போகாநுபவத்திற் கிரு ப்பிடமாகிய இந்தப் பூலோகத்தையடைந்து, மேலும் சிவபெருமானது பேரின்ப ஸுகாநு பவத்திற்கிடமாகிய ஸ்ரீ மஹாகைலாஸத்தில் ப்ரஹ்மவிஷ்ண்வாதி தேவர்களாலும் செல் லுவதற்குமுடியாதென்று சிவாகமங்கள் சொல்லாநிற்கும், ஆதலால் சிவபெருமானது ஸ்ரீமஹாகைலாஸத்தில் ஆண்டருள்கின்ற வசவேசர் எழுந்தருளிய தன்மையாகிய இந்த

மஹத்வமான செய்தியை எங்களுக்கு அருள்செய்யவேண்டுமென்று ப்ரார்த்தித்த பிறகு சித்தராமையர்.

(வி - ரை.) மாகம் - ஆகாயம், மாகர் - ஆகாயவாஸிகள். பூடணர் - பூஷணர் என்னும் வடசொற்றிரிபு. நாகபூடணர் - ஸர்ப்பாபரணர். (கக)

இன்று சென்றினி தெம்பி ரானை யிறைஞ்சி நாளை யிறங்கிவந்
தொன்று நந்திகள் செய்தி தன்னை யுணர்த்து வாமென வோதியே
கன்று கண்டர்க னத்த கோயி லகன்று மாதவர் கைதொழா
நின்று காணவி யோம மேறி நிலாவ வோடி மறைந்தரோ.

(ப - ரை.) இன்று - இன்றைத்தினம், சென்று - (ஸ்ரீ மஹாகைலாஸத்துக்கு) போய், எம்பிரானை - சிவபெருமானை, இனிது - நன்றாக, இறைஞ்சி - வணங்கி, நாளை - நாளைத் தினம், இறங்கி வந்து - (அவ்விடத்தினின்றும்) இழிந்துவந்து, ஒன்றும் - எழுந்தருளியிருக்கின்ற, நந்திகள் - வசவேசர், செய்திதன்னை - வரலாற்றினை, உணர்த்துவாம் - அறிவிப்போம், என்ன - என்று, ஓதி - சொல்லி, கனத்த - மேன்மை பொருந்திய, கன்று கண்டர் கோயில் - சிவாலயத்தை, அகன்று - நீங்கி, மாதவர் - மாஹேஶ்வரர்கள், கை தொழா - கைகூப்பி வணங்கி, நின்று - நின்று, காண - பார்க்கும்படி, வியோமம் ஏறி - ஆகாயத்திலெழும்பி, நிலாவ - விளங்கும்படி, ஓடி - விரைவாகச்சென்று, மறைந்து - அந்தர்த்தானமாகி, எ - று.

(போ - ரை.) இன்றைத்தினம் ஸ்ரீ மஹாகைலாஸத்துக்குப்போய், சிவபெருமானை நன்றாக வணங்கி, நாளைத்தினம் அவ்விடத்தினின்றும் இழிந்துவந்து, எழுந்தருளியிருக்கின்ற வசவேசர் வரலாற்றினை அறிவிப்போமென்றுசொல்லி, மேன்மைபொருந்திய சிவாலயத்தை நீங்கி, மாஹேஶ்வரர்கள் கைகூப்பி வணங்கி நின்றுபார்க்கும்படி, ஆகாயத்திலெழும்பி, விளங்கும்படி விரைவாகச்சென்று, அந்தர்த்தானமாகி.

(வி - ரை.) கன்றுகண்டர் - நீலகண்டர் (கன்றல் - கறுத்தல்). தொழா - செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். வியோயம் - வ்யோமம் என்னும் வடசொற்றிரிபு. செய்திதன்னை யென்பதில் தன் - சாரியை. அரோ - அசை. (கஉ)

அந்த நாளி றவத்தர் சன்னிதி யங்க ணைந்ததி காலையே
வந்து மாதவ ரெதிர்செ றிந்து வணங்கி நின்று வழுத்தலுஞ்
சிந்தை யன்பொடு சித்த ராமைய தேவர் தாமு ரைசெய்குவ
ரெந்தை யங்கயி லாய நென்ன லிராவில் யானினி தெய்தியே.

(ப - ரை.) அந்த - அந்த, நாள் - தினம், இற - கழிதலும், அத்தர் - சிவபெருமான், சன்னிதி - ஸந்நிதானமாகிய, அங்கு - அந்த மஹாகைலாஸத்தில், அணைந்து - சேர்ந்து, அதி காலை - விடியற்காலத்தில், வந்து - மீண்டுவந்து, மாதவர் - மாஹேஶ்வரர்கள், வந்து - சென்று, எதிர் - (சித்தராமையர்) ஸந்நிதானத்திலே, செறிந்து - நெருங்கி, வணங்கி - தொழுது, நின்று - நின்று, வழுத்தலும் - துதித்தலும், சித்தராமையதேவர் - சித்தராமையர், சிந்தையன்பொடு - மனமகிழ்ச்சியுடன், உரைசெய்குவர் - சொல்லுவாராயினர் (எவ்வாறெனின்), எந்தை - சிவபெருமானது, அம் - அழகிய, கயிலயாம் - ஸ்ரீ மஹாகைலாஸத்தை, நென்னல் - நேற்று, இராவில் - இராத்திரியில், யான் - நான், இனிது - ஸுகமாக, எய்தி - சேர்ந்து, எ - று.

(போ - ரை.) அந்தத் தினம்கழிதலும், சிவபெருமான் ஸந்நிதானமாகிய ஸ்ரீ மஹாகைலாஸத்திற் சேர்ந்து, விடியற்காலத்தில் மீண்டு வந்து, மாஹேஶ்வரர்கள் சென்று சித்தராமையர் ஸந்நிதியில் நெருங்கித் தொழுது நின்று துதித்தலும், சித்தராமையர் மன

மகிழ்ச்சியுடன் சொல்லுவாராயினர், எவ்வாறெனின் :—சிவபெருமானது அழகிய ஸ்ரீ மஹாகைலாஸத்தை நேற்றிராத்திரியில் நான் ஸூக்ஷமாகச் சேர்ந்து. (௧௩)

இனிது டன்பதி னெண்க ணத்தரு மிறைவ வென்றுவ ணங்கவாழ்
புனித னன்றிரு முன்பு குந்து பணிந்து நின்றுடல் புளகமாய்க்
கனியு மென்மன நினைவ றிந்துயி ராளி யாகிய காவலன்
முனிவ வெண்ணிய தேது சொல்லென முன்னி றைஞ்சி யெழுந்தியான்.

(ப - ரை.) இனிதுடன் - ஸந்தோஷமாக, பதினெண் - பதினெட்டுவகையாயுள்ள, கணத்தரும் - தேவகணங்களும், இறைவ - தலைவனே, என்று - என்று, வணங்க - தொழ, வாழ் - எழுந்தருளியிருக்கிற, புனிதன் - சிவபெருமானது, நல் - மேன்மைபொருந்திய, திருமுன் - ஸந்நிதானத்தில், புகுந்து - ப்ரவேசித்து, பணிந்து - (ஸாஷ்டாங்கமாக) வணங்கி, நின்று - (மேலேயெழுந்து) நின்று, உடல் - சரீரம், புளகமாய் - மயிர்க்குச் செறிந்து, கனியும் - உருகுகின்ற, என் - எனது, மனம் நினைவு - மநோபாவத்தை, அறிந்து - உணர்ந்து, உயிர்ஆளியாகிய - ப்ராணநாயகனாகிய, காவலன் - இறைவன், முனிவ - மாஹேஸ்வரனே, எண்ணியது - (நீ) நினைத்த காரியம், ஏது - யாது, சொல் - சொல்லுக, என்ன - என்று கட்டளையிட்டமாத்ரத்தில், யான் - நான், முன் - திருமுன்பு, இறைஞ்சி - (ஸாஷ்டாங்கமாய்) நமஸ்காரஞ்செய்து, எழுந்து - மேலேயெழுந்து, எ - று.

(பொ - ரை.) ஸந்தோஷமாகப் பதினெட்டு வகையாயுள்ள தேவகணங்களும், தலைவனே! என்று தொழ வெழுந்தருளியிருக்கிற சிவபெருமானது மேன்மை பொருந்திய ஸந்நிதானத்தில் ப்ரவேசித்து, ஸாஷ்டாங்கமாக வணங்கி, மேலேயெழுந்து நின்று, சரீரம் மயிர்க்குச்செறிந்து, உருகுகின்ற எனது மநோபாவத்தை யுணர்ந்து ப்ராணநாயகனாகிய இறைவன், மாஹேஸ்வரனே! நீ நினைத்த காரியம் யாது? சொல்லுகவென்று கட்டளையிட்டமாத்ரத்தில், நான் திருமுன்பு ஸாஷ்டாங்கமாய் நமஸ்காரஞ்செய்து மேலே யெழுந்து.

(வி - ரை.) ஆளி - ஆள்பவன் (ஆள் - பகுதி). கணத்தர் பதினெண்மர் - அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், நிருதர், கிம்புருடர், கந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பைசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாயவாசிகள், போகபூமியர் என்பன. (௧௪)

அண்ண லேயென தாவி யேயடி யார்பெ ருந்திரு வாமரா
மண்ணின் மாதவர் வாழ்வ தாகிய வசவ ராசையர் வந்துநின்
கண்ணி ருப்பரெ னத்த போதனர் கட்டுரைப் பர்க ளுண்மையோ
தெண்ணி லாமுடி யாயெ னக்கிது திருவு ளஞ்செய் தியென்றலும்.

(ப - ரை.) அண்ணலே - இறைவனே, எனது - அடியேனது, ஆவியே - உயிரே, அடியார் - சரணர்களுக்கு, பெரு - பெரிய, திருஆம் - நிதியாகிய, அரா - சிவபெருமானே, மண்ணில் - மண்ணுலகத்தில், மாதவர் - மாஹேஸ்வரர்களுக்கு, வாழ்வாகிய - செல்வமாகிய, வசவராசையர் - வசவதேவர், வந்து - (பூலோகத்திலிருந்து) வந்து, நின்கண் - தேவரீரிடத்தில், இருப்பர் - எழுந்தருளியிருப்பார், என்ன - என்று, தபோதனர் - மாஹேஸ்வரர்கள், கட்டுரைப்பர்கள் - உறுதிப்படச் சொல்லுவார்கள், உண்மையோ - ஸத்யமோ, தெள் - ப்ரகாஸமுள்ள, நிலா - பிறைச்சந்திரனைத் தரித்திருக்கிற, முடியாய் - ஜடாபாரத்தையுடையவனே, எனக்கு - அடியேனுக்கு, இது - இந்தச்செய்தியை, திருவுளம்செய்தி - திருவுளம்பற்றியருள்செய்தல்வேண்டும், என்றலும் - என்று ப்ரார்த்தித்தலும், எ - று.

(பொ - ரை.) இறைவனே! அடியேனது உயிரே! சரணர்களுக்குப் பெரியநிதியாகிய சிவபெருமானே! மண்ணுலகத்தில் மாஹேஸ்வரர்களுக்குச் செல்வமாகிய வசவதே

வர் பூலோகத்திலிருந்து வந்து தேவரீரிடத்திலெழுந்தருளியிருப்பாரென்று மாஹேஶ்வரர்கள் உறுதிப்படச்சொல்லுவார்கள், ஸத்யமோ? ப்ரகாஶமுள்ள பிறைச்சந்திரனைத் தரித்திருக்கிற ஜடாபாரத்தையுடையவனே! அடியேனுக்கு இந்தச் செய்தியைத் திருவுளம் பற்றியருள்செய்தல்வேண்டுமென்று ப்ரார்த்தித்தனும்.

(வி - ரை.) அண்ணல் - பெருமையிற்சிறந்தோன். அரா - ஹரா என்னும் வடசொற்றிரிபு. வாழ்வதாகிய என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. (கரு)

அத்த னென்முக மன் பினுடிய துள்ள தெங்கணு மாகியும்
பத்தர் சங்கமர் சங்க மேவிய பாரி டந்தொறு மாகியு
மொத்த நங்கண நாய கர்க்கதி கத்த னாகியு முள்ளவன்
மெய்த்த வென்னித யத்து நாடொறு மேவுவ னவனு யிநாம்.

(ப - ரை.) அத்தன் - சிவபெருமான், என் - அடியேனது, முகம் - முகத்தை, அன்பின் - தயையுடன், நாடி - நோக்கி, அது - அந்தக் கட்டுரை, உள்ளது - ஸத்யமே, எங்கணும் - எவ்விடத்தும், ஆகியும் - நிறைந்தவனாகியும், பத்தர் - பக்தர்களும், சங்கமர் - ஜங்கமமூர்த்திகளும் (சேர்ந்த), சங்கம் - திருக்கூட்டம், மேவிய - எழுந்தருளியிருக்கிற, பார் இடம் தொறும் - பூப்ரதேஶமெங்கும், ஆகியும் - நிறைந்தவனாகியும், ஒத்த - தமக்குத்தாமே நிகரான, நம் - நமது, கணநாயகர்க்கு - கணநிபர்களுக்கு, அதிகத்தன் ஆகியும் - மேற்பட்டவனாகியும், உள்ளவன் - இருப்பான், மெய்த்த - தத்வஸ்வரூபமாகிய, என் - எனது, இதயத்தும் - ஹ்ருதயகமலத்திலும், நாள்தொறும் - தினமும், மேவுவன் - எழுந்தருளியிருப்பான், நாம் - யாம், அவன் - அவனுடைய, ஆவி - உயிர் (ஆவோம்), எ - று.

(போ - ரை.) சிவபெருமான் அடியேனுடைய முகத்தைத் தயையுடன் நோக்கி, அந்தக் கட்டுரையானது ஸத்யமேயாம், எவ்விடத்தும் நிறைந்தவனாகியும் பக்தர்களும் ஜங்கமமூர்த்திகளும் சேர்ந்த திருக்கூட்டம் எழுந்தருளியிருக்கிற பூப்ரதேஶமெங்கும் நிறைந்தவனாகியும் தமக்குத்தாமே நிகரான நமது கணநிபர்களுக்கு மேற்பட்டவனாகியு மிருப்பான், தத்வஸ்வரூபமாகிய எமது ஹ்ருதயகமலத்திலும் தினமும் எழுந்தருளியிருப்பான், யாம் அவனுடைய உயிராவோம்.

(வி - ரை.) சிவபெருமான் எல்லாவுயிர்களுக்குந் தந்தையாதலால் அவனை அத்தனென்றார். எக்கண்ணும் என்றது எங்கணும் என்று மெலிந்து நின்றது. இதயம் - ஹ்ருதயம் என்னும் வடசொற்றிரிபு. (கசு)

ஐய நீதெளி காணி தோவெனு மத்தன் மெய்யொளி யதனுளோ
செய்ய சோதிய தாகி யேயொரு செங்க ரத்திலி லிங்கமுந்
துய்ய மாதவர் தம்மை யோர்கை தொழுந்தி றத்தரு மாகியே
பொய்ய கன்றரு ணந்தி தேவர் பொருந்தல் கண்டு பணிந்தனன்.

(ப - ரை.) ஐய - ஐயனே, நீ - நீ, இதோ - இதோ, தெளி - அறிந்துகொள், என்னும் - என்று திருவாய்மலர்ந்த, அத்தன் - சிவபெருமானது, மெய் ஒளி அதனுள் - திவ்யவிக்ரஹமாகிய ஜ்யோதியில், செய்ய - அழகாகிய, சோதி ஆகி - ஜ்யோதியாகி, ஒரு - ஒரு, செம் - சிவந்த, கரத்தில் - (இடது) திருக்கரதலத்தில், இலிங்கமும் - சிவலிங்கமும், துய்ய - பரிஶுத்தரான, மாதவர்தம்மை - ஜங்கமமூர்த்திகளை, ஓர் - ஒரு, கை - திருக்கரம், தொழும் - வணங்குகிற, திறத்தரும் ஆகி - மேன்மையுடையவருமாகி, பொய் - துன்மார்க்கம், அகன்று - ஒழிந்து, அருள் - ஆண்டருள்கின்ற, நந்தி தேவர் - வசவேசர், பொருந்தல் - எழுந்தருளியிருத்தலை, கண்டு - தரிசித்து, பணிந்தனன் - (ஸாஷ்டாங்கமாக) வணங்கினன், எ - று.

(பொ - ரை.) ஐயனே ! நீ இதோ அறிந்துகொள்ளென்று திருவாய்மலர்ந்த சிவபெருமானது திவ்யவிக்ரஹமாகிய ஜ்யோதியில் ஜ்யோதியாகிய ஒரு சிவந்த இடது திருக்கரதலத்தில் சிவலிங்கமும் பரிபூர்த்தரான ஜங்கமமூர்த்திகளை ஒரு திருக்கரம் வணங்குகிற மேன்மையுடையவருமாகி துன்மார்க்கமொழிந்து ஆண்டருள்கின்ற வசவேசர் எழுந்தருளியிருத்தலைத் தரிசித்து ஸாஷ்டாங்கமாக வணங்கினன்.

(வி - ரை.) ஒளியதனுள் என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. காண் - முன்னிலை யசையிடைச்சொல். மாதவர்தம்மை என்பதில் தம் - சாரியை. (௧௭)

கண்ட வாசவ ளாதி தேவர்க ணேசர் மாதவர் நந்தியா
ரொண்ட ருந்திரு மேனி நன்மையு வந்து கைதொழு துருகியே
யண்டர் கோனுயர் பத்தி மூல வசஞ்ச லாதிக சத்தியா
மண்டு கோயி லுனக்க ரன்றிரு மெய்கொ லென்ன வழுத்தினர்.

(ப - ரை.) கண்ட - (வசவேசரை) தரிசித்த, வாசவன் - இந்திரன், ஆதி - முதலிய, தேவர் - தேவர்களும், கணேசர் - கணநிபர்களும், மாதவர் - தபோதனர்களும், நந்தியார் - வசவேசரது, ஒள்தரும் - ஒளி வீசுகின்ற, திரு மேனி - திவ்ய விக்ரஹத்தின், நன்மை - பேரழகை, உவந்து - மகிழ்ந்து, கைதொழுது - கைகூப்பி வணங்கி, உருகி - மனங்கசிந்து, உயர் - மேன்மையாகிய, அண்டர்கோன்பத்தி - சிவபக்திக்கு, மூல - காரணனே, அசஞ்சல - சலனமில்லாதவனே, அதிக சத்தியா - மஹாவீரனே, உனக்கு - உனக்கு, மண்டு - எழுந்தருள்வதற்குரிய, கோயில் - திருவாலயம், அரன் - சிவபெருமானது, திருமெய்கொல் - திவ்யவிக்ரஹமோ, என்ன - என்று, வழுத்தினர் - ஸ்தோத்ரஞ்செய்தார்கள், எ - று.

(பொ - ரை.) வசவேசரைத் தரிசித்த இந்திரன் முதலிய தேவர்களும் கணநிபர்களும் தபோதனர்களும் வசவேசரது ஒளிவீசுகின்ற திவ்யவிக்ரஹத்தின பேரழகை மகிழ்ந்து, கைகூப்பிவணங்கி, மனங்கசிந்து, மேன்மையாகிய சிவபக்திக்குக்காரணனே ! சலனமில்லாதவனே ! மஹா வீரனே ! உனக்கு எழுந்தருளியிருப்பதற்குரிய திருவாலயம் சிவபெருமானது திவ்யவிக்ரஹமோ ? என்று ஸ்தோத்ரஞ்செய்தார்கள். (௧௮)

அரிய சங்கர னமல மேனியு ளணையு நந்திக ளமைவினை
யுரிய சங்கரி யருகி ருந்தவ ளுளம கிழ்ந்தெதிர் நாடியே
புரித ரும்பல புகழ்பு கன்றனள் புனித னன்பொடு புகலுவா
னிருவ ருந்தவ முறுசி லாத னிடத்தி னன்ற ருணந்தியாய்.

(ப-ரை.) அரிய - (யாவராலும்) கருதற்கரிதாகிய, சங்கரன் - சிவபெருமானது, அமலம் - பரிபூர்த்தமாகிய, மேனியுள் - திவ்ய விக்ரஹத்தில், அணையும் - எழுந்தருளியிருக்கின்ற, நந்திகள் - வசவேசரது, அமைவினை - சிவானுபவத்தை, அருகு - பக்கத்தில், இருந்தவள் - வீற்றிருந்தவளும், உரிய - மனையாளுமான, சங்கரி - உமாதேவியார், உளம் மகிழ்ந்து - மனமகிழ்ந்து, எதிர் - எதிரே, நாடி - பார்த்து, புரிதரும் - விரும்புதற்குரிய, பல - அநேகமான, புகழ் - கீர்த்திகளை, புகன்றனள் - சொன்னாள், புனிதன் - சிவபெருமான், அன்பொடு - தயையுடன், புகலுவான் - சொல்லுவானுயினான் (எவ்வாறெனின்), இரு - பெருமைபொருந்திய, அரு - (யாவராலும்) இயற்றற்கரிதாகிய, தவம் உறு - தவத்தையுடைய, சிலாதனிடத்தின் - சிலாதருஷியினிடத்து, அன்று - முற்காலத்தில், அருள் - (திருக்குமாரனும்படி யாம்) அநுக்ரஹஞ்செய்த, நந்தியாய் - வ்ருஷபமாகி, எ - று.

(பொ - ரை.) கருதற்கரிதாகிய சிவபெருமானது பரிபூர்த்தமாகிய திவ்யவிக்ரஹத்தில் எழுந்தருளியிருக்கும் வசவேசரது சிவாநுபவத்தைப் பக்கத்தில் வீற்றிருந்தவளும் மனையாளுமான உமாதேவியார் மனமகிழ்ந்து எதிரே பார்த்து விரும்புதற்குரிய அநேகமான கீர்த்திகளைச் சொன்னாள், சிவபெருமான் தயையுடன் சொல்லுவானாயினன், எவ்வாறெனின் :— பெருமைபொருந்திய யாவராலுமியற்றற்கரிய தவத்தையுடைய சிலாதருஷியினிடத்து முற்காலத்தில் திருக்குமாரனும்படி யாம் அநுக்ரஹஞ்செய்த வ்ருஷபமாகி. (கக)

மேவி நின்றுயர் வடிவ மும்வச வேச னென்றொரு மேனியா
யாவி சங்கம மாகி மண்ணி லமர்ந்த தாமது ருவமுஞ்
சீவ னுமல தில்லை நல்ல சித்த ராம தெளிந்தியோ
யாவ ருந்தொழு நாமி வனிவ னாமி ரண்டிலை யென்றரன்.

(ப - ரை.) மேவிநின்று - பொருந்தி நிற்கப்பெற்ற, உயர் - மேலான, வடிவமும் - திருமேனியும், வசவேசன் என்று - வசவேசனென்று, ஒரு - ஒப்பற்ற, மேனியாய் - திருமேனியாகி, ஜங்கமம் - ஜங்கமமே, ஆவியாகி - உயிராகி, மண்ணில் - நிலவுலகத்தில், அமர்ந்தது - நிலைபெற்றுநின்றது, நமது - எமது, உருவமும் - உடம்பும், சீவனும் - உயிரும், அல்லது - அல்லாமல், இங்கே - இல்லை, நல்ல - சிறந்த, சித்தராம - சித்தராமையனே, தெளிந்தியோ - உணர்ந்தனையோ, யாவரும் - எல்லா ஆத்மகோடிகளும், தொழும் - வணங்குதற்குரிய, நாம் - யாம், இவன் - இந்த வசவேசன், இவன் - இந்த வசவேசன், நாம் - யாம், இரண்டு - இரண்டு வஸ்துக்கள், இல்லை - இல்லை, என்று - என்று, அரன் - சிவபெருமான், எ - று.

(பொ - ரை.) பொருந்தி நிற்கப்பெற்ற மேலான திருமேனியும் வசவேசனென்று ஒப்பற்ற திருமேனியாகி, ஜங்கமமே உயிராகி, நிலவுலகத்தில் நிலைபெற்றுநின்றது, எமது உடம்பும் உயிருமல்லாமலில்லை, சிறந்த சித்தராமையனே ! உணர்ந்தனையோ ? எல்லா ஆத்மகோடிகளும் வணங்குதற்குரிய யாம் இந்த வசவேசன், இந்த வசவேசன் யாம், ஆகையால் இரண்டு வஸ்துக்கள் இல்லையென்று சிவபெருமான். (உ0)

முத்தி நாயக மாகு நாமுயர் முத்தி மூலம தாகுமா
பத்தி நாயக நந்தி யெம்மன பான்மை யன்பரி பூரண
னொத்த மூவுல கத்த ருன்ன லுரைத்தல் செய்த லுணர்ந்துதன்
சித்தி நாம முரைத்த பேர்துயர் தேறுவ மென்றுரை செய்தனன்.

(ப - ரை.) நாம் - யாம், முத்தி - முக்திக்கு, நாயகம் ஆகும் - பதியாவோம், நந்தி - வசவேசன், முத்தி - முக்திக்கு, மூலம் ஆகும் - காரணமாகிய, மா - பெரிய, பத்தி - பக்திக்கு, நாயகம் - பதியாவான், எம் - எம்மை, அன்ன - ஒத்த, பான்மையன் - தன்மையுடையவன், பரிபூரணன் - எங்கும் நிறைந்துள்ளவன், ஒத்த - ஒன்றற்கொன்று நிகரான, மூவுலகத்தர் - த்ரிலோகத்தாரும், உன்னல் - (மனத்தால்) சிந்தித்தலும், உரைத்தல் - (வாக்கால்) துதித்தலும், செய்தல் - (காயத்தால்) பணிவிடைசெய்தலு மாகிய வழிபாட்டினை, உணர்ந்து - அறிந்து, தன் - தனக்கு, சித்தி - ஸித்தித்திருக்கும், நாமம் - வசவவென்னுந் திருநாமத்தினை, உரைத்தபேர் - சொன்னவர்களுடைய, துயர் - துன்பத்தை, தேறுவம் - ஒழிப்போம், என்று - என்று, உரைசெய்தனன் - சொல்லியருளினான், எ - று.

(பொ - ரை.) யாம் முக்திக்குப் பதியாவோம், வசவேசன் முக்திக்குக் காரணமாகிய பெரிய பக்திக்குப் பதியாவான், எம்மையொத்த தன்மையுடையவன், எங்கும்

நிறைந்துள்ளவன், ஒன்றற்கொன்று நிகரான த்ரிலோகத்தாரும் மனத்தால் சிந்தித்தலும், வாக்கால் துதித்தலும், காயத்தால் பணிவிடைசெய்தலுமாகிய வழிபாட்டினையறிந்து தனக்கு லிங்கதித்திருக்கிற வசவவென்னுந் திருநாமத்தினைச் சொன்னவர்களுடைய துயரத்தை யொழிப்போமென்று சொல்லியருளினான். (உக)

என்று தேசிக சித்தராம ரிசைத்த வெல்லையி லேயவ
ணொன்று மாதவர் வசவ தேவரை யுன்னி யொண்டுதி செய்தபி
னன்று நந்திகள் செய்தி தன்னை யறிந்த னனென வங்கவ
ணின்று சொல்லினள் விச்ச லன்னிது நிச்ச யம்மென நம்பியே.

(ப - ரை.) என்று - என்று, தேசிகர் - பரமாசார்யராகிய, சித்தராமர் - சித்தராமையர், இசைத்த எல்லையிலே - சொல்லியருளினபோழ்திலே, அவண் - அந்தச் சிவாலயத்தில், ஒன்றும் - கூடியிருந்த, மாதவர் - மாஹேஶ்வரர்களெல்லாரும், வசவதேவரை - வசவேசரை, உன்னி - த்யானித்து, ஒள் - சிறந்த, துதி - தோத்திரம், செய்த - பண்ணின, பின் - பிறகு, அன்று - அன்றைத்தினம், நந்திகள் - வசவேசரது, செய்திதன்னை - (மஹத்வமான) சரித்ரத்தை, அறிந்தனன் - உணர்ந்தனன், என்ன - என்று, அங்கு - அந்த ராஜஸபையில், அவள் - அவள், நின்று - நின்று, சொல்லினள் - சொன்னாள், விச்சலன் - விஜ்ஜலராஜன், இது - இது, நிச்சயம் - உண்மை, என்ன - என்று, நம்பி - நம்பி, எ-று.

(பொ - ரை.) என்று பரமாசார்யராகிய சித்தராமையர் சொல்லியருளின போழ்திலே அந்தச் சிவாலயத்தில் கூடியிருந்த மாஹேஶ்வரர்களெல்லாரும் வசவேசரை த்யானித்து, சிறந்த தோத்திரம்பண்ணின பிறகு, அன்றைத்தினம் வசவேசரது மஹத்வமான சரித்ரத்தை யுணர்ந்தனனென்று அந்த ராஜஸபையில் அவள் நின்று சொன்னாள், விஜ்ஜலராஜன் இது உண்மையென்று நம்பி. (உஉ)

அற்பு தம்பெரி துற்றி ருந்தன னவ்வ மைச்சரு மஞ்சினார்
நற்பொ னாரமோ டாடை மன்னவ னல்க லுங்கொடு காடகன்
சற்ப கங்கண னன்பர் நந்திகள் சன்னி திக்கணி றைஞ்சியே
வெற்பெ னுங்குயை தங்கள் சாதியர் வீதி யின்பொடு மேவினாள்.

(ப - ரை.) பெரிது - பெரிய, அற்புதம் - ஆஶ்சர்யம், உற்று இருந்தனன் - அடைந்திருந்தனன், அ - அந்த, அமைச்சரும் - மந்த்ரிகளும், அஞ்சினார் - அச்சமடைந்தார்கள், நல் - சிறந்த, பொன் - பொன்னினாற்செய்த, ஆரமோடு - ஆபரணத்தையும், ஆடை - சேலையையும், மன்னவன் - விஜ்ஜலராஜன், நல்கலும் - (அவளுக்கு வெகுமதியாக) கொடுத்தலும், கொடு - வாங்கிக்கொண்டு, காடு - மயானத்தை, அகன் - இடமாகக்கொண்டவனும், சர்ப்பகங்கணன் - பாம்புகங்கணத்தையுடையவனுமாகிய சிவபெருமானது, அன்பர் - பக்தராகிய, நந்திகள் - வசவேசரது, சன்னிதிக்கண் - ஸந்நிதியில், இறைஞ்சி - வணங்கி, வெற்பு - மலை, என்னும் - என்கின்ற, குயை - தனங்களையுடையவளாகிய இடைச்சி, தங்கள் - தங்களுடைய, சாதியார் - குலத்தாரது, வீதி - தெருவை, இன்பொடு - ஸந்தோஷத்துடன், மேவினாள் - சேர்ந்தனள், எ - று.

(பொ - ரை.) பெரிய ஆஶ்சர்யமடைந்திருந்தனன், அவ்விடம் கூடியிருந்த மந்த்ரிகளும் அச்சமடைந்தார்கள், சிறந்த பொன்னினாற்செய்த ஆபரணத்தையும் சேலையையும் விஜ்ஜலராஜன் அவளுக்கு வெகுமதியாகக் கொடுத்தலும், வாங்கிக்கொண்டு மயானத்தையிடமாகக்கொண்டவனும் பாம்புகங்கணத்தை யுடையவனுமாகிய சிவபெருமானது பக்தராகிய வசவேசரது ஸந்நிதியில் வணங்கி மலையென்கின்ற தனங்களையுடையவளாகிய இடைச்சி தங்களுடைய குலத்தாரது தெருவை ஸந்தோஷத்துடன் சேர்ந்தனள்.

(வி - ரை.) அகன் - அகம் என்பதன் போலி. குயம் - தனம். அதனையுடையவள் குயை. ஆரம் - ஹாரம் என்னும் வடசொற்றிரிபு. (உ௩)

தூர வேவசவ வேச வென்றவர் துயர முள்ளவை தூளதாய்த்
தூர வோடலி னந்தி யார்மிகு தூர திட்டிகள் காணலுந்
தூர சொல்லுரை துணித லும்வெகு தூர சிந்தனை சொல்லலுந்
தூர மன்றுயர் தண்ட நாயகர் பெருமை யாவர் துதிப்பவர்.

(ப - ரை.) தூரவே - வெகுதலையிலிருந்தே, வசவேச - வசவேச, என்றவர் - என்பவரது, துயரம் உள்ளவை - துன்பங்களெல்லாம், தூள் ஆய் - துகளாகி, தூரம் - வெகு தூரத்தில், ஓடலின் - ஓடிப்போதலால், நந்தியார் - வசவேசர், மிகு - வெகு, தூரதிட்டிகள் - வெகுதலையிலிருந்து காண்டற்கரிய பொருள்களை, காணலும் - (எளிதாக) பார்த்தலும், தூரசொல் - வெகுதலையிற்சொல்லும், உரை - சொற்களை, துணிதலும் - (நன்றாய்) அறிதலும், வெகுதூரசிந்தனை - வெகுதலையில் நிகழும் யோசனையை, சொல்லலும் - (முன்னதாக) சொல்லுதலும், தூரம் அன்று - அடுத்துள்ளது, உயர் - உயர்ந்த, தண்ட நாயகர் - வசவேசரது, பெருமை - மஹிமையை, துதிப்பவர் - புகழவல்லவர், யாவர் - எவர், எ - று.

(பொ - ரை.) வெகுதலையிலிருந்தே வசவேச! என்பவரது துன்பங்களெல்லாம் துகளாகி வெகுதூரமாயோடிப்போதலால் வசவேசர் வெகுதலையிலிருந்து காண்டற்கரிய பொருள்களை எளிதாகப் பார்த்தலும் வெகுதலையிற்சொல்லுஞ்சொற்களை நன்றாயறிதலும் வெகுதலையில் நிகழும் யோசனையை முன்னதாகச் சொல்லுதலும் அடுத்துள்ளது, உயர்ந்த வசவேசரது மஹிமையைப் புகழவல்லவர் எவர்?

(வி - ரை.) யாவர் என்னும் வினு எதிர்மறை. தூரதிட்டி - தலைப்பார்வை. திட்டி - த்ருஷ்டி என்னும் வடசொற்றிரிபு. (உ௪)

சித்தராமையர் புராணம் - முற்றிற்று.



ஆக திருவிருத்தம் - ௬௧௧.



உ

சிவமயம்.

# சாளிகைப்பெட்டி யழைப்பித்த புராணம்.

**கலிநிலைத்துறை.**

இன்ன வற்புத நாளிலே விச்சல னென்பான்
கொன்ன மணைந்தன படைக்கெலாஞ் சீவிதங் கொடுப்பான்
மன்னு சீர்வச வேசர் கைமாதன மளித்தா
னன்ன நீணிதி யமைச்ச ரோடிடைச் செலுமளவில்.

(ப - ரை.) இன்ன - இப்படிப்பட்ட, அற்புதம் - மஹத்வங்கள் (நடக்கின்ற), நாளிலே - காலத்திலே, விச்சலன் - விஜ்ஜலராஜன், என்பான் - என்பவன், கொன் - பெருமை, அணைந்தன - அடைந்திருப்பனவாகிய, படைக்கு - சேனைகளுக்கு, எல்லாம் - முழுதும், சீவிதம் - ஸம்பளத்தை, கொடுப்பான் - கொடுக்கும்பொருட்டு, மன்னு - நிலைபெற்ற, சீர் - சிறப்பையுடைய, வசவேசர் - வசவேசரது, கை - திருக்கரத்தில், மா - பெரிய, தனம் - த்ரவ்யத்தை, அளித்தான் - கொடுத்தான், அன்ன - அந்த, நீள் - பெரிய, நிதி - த்ரவ்யத்துடனும், அமைச்சரோடு - மந்த்ரிகளுடனும், இடை - நடுவழியில், செல்லும் - போகின்ற, அளவில் - ஸமயத்தில், எ - று.

(போ - ரை.) இப்படிப்பட்ட மஹத்வங்கள் நடக்கின்ற காலத்திலே விஜ்ஜலராஜனென்பவன் பெருமையடைந்திருப்பனவாகிய சேனைகளுக்கு முழுதும் ஸம்பளத்தைக் கொடுக்கும்பொருட்டு நிலைபெற்ற சிறப்பையுடைய வசவேசரது திருக்கரத்தில் பெருந்த்ரவ்யத்தைக் கொடுத்தான், அந்தப் பெருந்த்ரவ்யத்துடனும் மந்த்ரிகளுடனும் நடுவழியிற் போகின்ற ஸமயத்தில். (க)

உற்று மற்றொரு குமாரசங்கமர் தூர்த்த வுருவாய்க்
கொற்ற மாதன மனைத்தை யுங்கொடு நமக்கென்றார்
சற்று மவ்வயிற் றாழ்த்தி டாதவர் கையிற்றந்தே
முற்று மன்பினால் வணங்கி னரமைச்சர்கண் முனிந்து.

(ப - ரை.) ஒரு - ஒரு, குமாரர் - வாலிபர், சங்கமர் - ஜங்கமர், தூர்த்த உரு ஆய் - விடபுருஷவேஷத்துடன், உற்று - வந்து (வசவேசரைநோக்கி), கொற்றம் - வெற்றியைத் தருதற்குரிய, மா - பெரிய, தனம் - த்ரவ்யத்தை, அனைத்தையும் - முழுதும், நமக்கு - நமக்கு, கொடு - தாரும், என்றார் - என்று கேட்டனர், அவ்வயின் - அவ்விடத்தில் (வசவேசர்), சற்றும் - சிறிதும், தாழ்த்திடாது - தாமதிக்காமல், அவர் - அவர், கையில் - திருக்காத்தில், தந்து - கொடுத்து, முற்றும் - முதிர்ந்த, அன்பினால் - பக்தியுடன், வணங்கினர் - தொழுதனர், அமைச்சர்கள் - மந்த்ரிகள், முனிந்து - கோவித்து, எ - று.

(போ - ரை.) ஒரு வாலிபஜங்கமர் விடபுருஷவேஷத்துடன் வந்து, வசவேசரை நோக்கி, வெற்றியைத்தருதற்குரிய பெருந்த்ரவ்யத்தை முழுதும் நமக்குத்தாருமென்று கேட்டனர், அவ்விடத்தில் வசவேசர் சிறிதுந் தாமதிக்காமல் அவர் திருக்காத்திற்கொடுத்து முதிர்ந்த பக்தியுடன் தொழுதனர், மந்த்ரிகள் கோவித்து. (உ)

வந்து விச்சலன் முன்னுற வணங்கினர் மன்னீ
தந்த வப்பொரு ளனைத்தையுந் தண்டநா யகன்றான்
சுந்த ரத்தனோர் தூர்த்த சங்கமன் கையிற்கொடுத்தா
னிந்த மந்திரியா லுனக் காவதென் னென்றார்.

(ப - ரை.) விச்சலன் - விஜ்ஜலராஜனுக்கு, முன் - எதிரே, வந்து - (மந்த்ரிகள்) சென்று, உற - மிகவும், வணங்கினர் - தொழுது, மன்ன - அரசனே, நீ - நீ, தந்த - கொடுத்த, அ - அந்த, பொருள் - த்ரவ்யம், அனைத்தையும் - எல்லாவற்றையும், தண்டநாயகன் - வசவேசன், சுந்தரத்தன் - அழகனாகிய, ஓர் - ஒரு, தூர்த்தசங்கமன் - விடஜங்கமனது, கையில் - கரத்தில், கொடுத்தான் - தந்தான், இந்த - இந்த, மந்திரியால் - மந்த்ரியால், உனக்கு - உனக்கு, ஆவது - உண்டாகின்ற ப்ரயோஜநம், என் - யாது, என்றார் - என்று சொன்னார்கள், எ - று.

(பொ - ரை.) விஜ்ஜலராஜனுக்கெதிரே மந்த்ரிகள் சென்று, மிகவும் தொழுது, அரசனே! நீ கொடுத்த அந்த த்ரவ்யமெல்லாவற்றையும் வசவேசன் அழகனாகிய வொரு விடஜங்கமனது கரத்தில் தந்தான், இந்த மந்த்ரியாலுனக்குண்டாகின்ற ப்ரயோஜநம் யாது? என்று சொன்னார்கள். (௩)

கோவ நெஞ்சுடன் விச்சல மன்னவன் கொதியா
யாவ ரிப்படி செய்பவர் கரையென வெதிராய்
மாவ ரத்தராந் தண்டரை யழைக்கவந் திருந்து
காவ லாவென்னை யழையென்ற கருமமே தென்றார்.

(ப - ரை.) விச்சலமன்னவன் - விஜ்ஜலராஜன், கோவம் - கோவம் (கொண்ட), நெஞ்சுடன் - மனத்தோடு, கொதியா - கொதித்து, இப்படி - இவ்விதமாக, செய்பவர் - செய்யவல்லவர், யாவர் - யார், கரை - அழையும், என்ன - என்று கட்டளையிடுதலும், மா - மிக்க, வரத்தர் ஆம் - மேன்மையடைந்தவராகிய, தண்டரை - வசவேசரை, அழைக்க - அழைத்தலும், எதிராய் - எதிரே, வந்து இருந்து - வந்திருந்து, காவலா - அரசனே, என்னை - என்னை, அழை - அழை, என்ற - என்று சொல்லியனுப்பும்படியான, கருமம் - கார்யத்திற்குக் காரணம், ஏது - யாது, என்றார் - என்றுகேட்டனர், எ - று.

(பொ - ரை.) விஜ்ஜலராஜன் கோவங்கொண்ட மனத்தோடு கொதித்து, இவ்விதமாகச் செய்யவல்லவர் யார்? அழையுமென்று கட்டளையிடுதலும், மிக்க மேன்மையடைந்தவராகிய வசவேசரை யழைத்தலும், எதிரேவந்திருந்து, அரசனே! என்னை யழையென்று சொல்லியனுப்பும்படியான கார்யத்திற்குக் காரணம் யாது? என்று கேட்டனர்.

விச்ச லன்வச வேசுரர் முக மிகநோக்கிக்
கைச்ச வெஞ்சொ லாங்கடு மொழிகூறி நங்கனக
மச்ச மின்றிநீ யளித்தனை யரசர்தம் பொருளை
யிச்ச கத்திலா ரமைச்சர்கள் கொடுத்தன ரென்று.

(ப - ரை.) விச்சலன் - விஜ்ஜலராஜன், வசவேசுரர் - வசவேசரது, முகம் - திருமுகத்தை, மிக - உற்று, நோக்கி - பார்த்து, கைச்ச - கசந்த, வெம் - கொடிய, சொல் ஆம் - சொற்களாகிய, கடு - க்ரூரமாகிய, மொழி - வார்த்தைகளை, கூறி - சொல்லி, நம் - நமது, கனகம் - த்ரவ்யத்தை, அச்சம் - பயம், இன்றி - இல்லாமல், நீ - நீ, அளித்தனை - கொடுத்தாய், அரசர் - ராஜரது, பொருளை - த்ரவ்யத்தை, இ - இந்த, சகத்தில் - உலகத்தில், அமைச்சர்கள் - மந்த்ரிகளில், யார் - யார், கொடுத்தனர் - தந்தனர், என்று - என்று, எ - று.

(பொ - ரை.) அரசனே! தாமரைப்புஷ்பங்களில் ஸஞ்சரிக்கின்ற ப்ரமரங்கள் ஊமத்தம்புஷ்பங்களை விரும்பி நாடமாட்டா, சந்த்ர கிரணங்களை யுண்ணுகின்ற சகோர பக்ஷிகள் மின்னலின் ஒளியை நாடமாட்டா, கொடிய யானையின் கன்றுகள் பன்றியின் மூலைகளைத் தேடித் தொடமாட்டா, சிவபக்தர்கள் பரத்ரவ்யத்தை விரும்ப மாட்டார்கள்.

(வி - ரை.) பங்கயம் - பங்கஜம் என்னும் வடசொற்றிரிபு. கயம் - கஜம் என்னும் வடசொற்றிரிபு. ஆல் - அசை. (கo)

பாற்கட லன்ன முப்பின் பானிய மருந்தா தேமாஞ்
சீர்க்கனி யிருக்க வெட்டிக் கனியினைத் தேடா கிள்ளை
மூர்க்கமா சீயம் புல்லை மோகித்துத் தின்னா வென்று
மாற்கரி யோன்ற னன்பர் பரதன மருவார் மன்னா.

(ப - ரை.) மன்னா - அரசனே, பால்கடல் - பாற்கடலில் (ஸஞ்சரிக்கின்ற), அன்னம் - அன்னப்பறவைகள், உப்பின் - உப்புக்கடலின், பானியம் - நீரை, அருந்தா - உண்ணமாட்டா, கிள்ளை - கிளிகள், சீர் - சிறப்புற்ற, தேம் - தித்திக்கின்ற, மாங்கனி - மாம்பழங்கள், இருக்க - உண்டாயிருக்க, எட்டிக்கனியினை - எட்டிப்பழங்களை, தேடா - நாடமாட்டா, மூர்க்கம்ஆம் - கோபமுள்ள, சீயம் - சிங்கங்கள், புல்லை - புல்லை, மோகித்து - விரும்பி, தின்னா - தின்னமாட்டா, என்றும் - எக்காலத்திலும், மாற்கு - திருமாலுக்கு, அரியோன் - கிடையாதவனாகிய சிவபெருமானது, அன்பர் - பக்தர்கள், பரதனம் - பரத்ரவ்யத்தை, மருவார் - அடையமாட்டார்கள், எ - று.

(பொ - ரை.) அரசனே! பாற்கடலில் ஸஞ்சரிக்கின்ற அன்னப்பறவைகள் உப்புக் கடலின் நீரையுண்ணமாட்டா, கிளிகள் சிறப்புற்ற தித்திக்கின்ற மாம்பழங்களுண்டாயிருக்க எட்டிப்பழங்களை விரும்பி நாடமாட்டா, கோபமுள்ள சிங்கங்கள் புல்லை விரும்பித் தின்னமாட்டா, எக்காலத்திலும் திருமாலுக்குக் கிடையாதவனாகிய சிவபெருமானது பக்தர்கள் பரத்ரவ்யத்தை யடையமாட்டார்கள்.

(வி - ரை.) மோகித்து - மோஹித்து என்னும் வடசொற்றிரிபு. மாற்கரியோன்றன் என்பதில் தன் - சாரியை. (கக)

கலிவிருத்தம்.

தெண்கடல் வற்றினுஞ் சேடன் சாயினு
மண்கடி தலையினும் வடவை யாறினு
மொண்குல கிரிநெரிந் துகினு மன்னிய
ரெண்கன கங்கொளா ரீச னன்புளோர்.

(ப - ரை.) ஈசன் அன்பு உள்ளோர் - சிவபக்தர்கள், தெள் - தெளிவாகிய (நீரையுடைய), கடல் - கடல், வற்றினும் - சுவறினும், சேடன் - ஆதிசேஷன், சாயினும் - (தலை) சாய்க்கினும், மண் - பூமி, கடிது - விரைவாக, அலையினும் - அசையினும், வடவை - வடவைத்தீ, ஆறினும் - (வெப்பம்) தணியினும், ஒள் - மேன்மையாகிய, குலகிரி - அஷ்டகுலபர்வதங்கள், நெரிந்து - சிதைந்து, உகினும் - சிந்தினும், எண் - மதிக்கத்தக்க, அன்னியர் கனகம் - பரத்ரவ்யத்தை, கொளார் - அடையமாட்டார்கள், எ - று.

(பொ - ரை.) சிவபக்தர்கள் தெளிவாகிய நீரையுடைய கடல் சுவறினும், ஆதிசேஷன் தலைசாய்க்கினும், பூமிவிரைவாக அசையினும், வடவைத்தீ வெப்பம் தணியினும், மேன்மையாகிய அஷ்ட குலபர்வதங்கள் சிதைந்து சிந்தினும், மதிக்கத்தக்க பரத்ரவ்யத்தை யடையமாட்டார்கள். (கஉ)

சுடர்வடி வாயினோர் சுடரை யிச்சியா
ரிடைவிடா ஞானர்சிற் றின்ப மிச்சியார்
திடமுறெண் சித்திதான் சிந்தி யாத்தவ
ருடையநல் லன்புளே னுன்பொருட் கொளேன்.

(ப - ரை.) சுடர்வடிவாயினோர் - ஜ்யோதிஸ்வரூபிகள், சுடரை - ஜ்யோதியை, இச்சியார் - விரும்பமாட்டார்கள், இடைவிடா - ஒழியாத, ஞானர் - சிவஞானச்செல்வத்தையுடையவர்கள், சிறு இன்பம் - அல்பஸுகத்தை, இச்சியார் - விரும்பமாட்டார்கள், திடம் உறு - உறுதியாகிய, எண்சித்தி - அஷ்டமாஸித்திகளை, சிந்தியா - மதிக்காத, தவருடைய - ஜங்கமருடைய, நல் - சிறந்த, அன்பு - அநுக்ரஹத்தை, உள்ளேன் - பெற்றிருக்கின்றேன், உன் - உனது, பொருள் - த்ரவ்யத்தை, கொள்ளேன் - கைக்கொள்ளமாட்டேன், எ - று.

(பொ - ரை.) ஜ்யோதிஸ்வரூபிகள் ஜ்யோதியை விரும்பமாட்டார்கள், ஒழியாத சிவஞானச்செல்வத்தையுடையவர்கள் அல்பஸுகத்தை விரும்பமாட்டார்கள், உறுதியாகிய அஷ்டமாஸித்திகளை மதிக்காத ஜங்கமருடைய சிறந்த அநுக்ரஹத்தைப் பெற்றிருக்கின்றேன், உனது த்ரவ்யத்தைக் கைக்கொள்ளமாட்டேன்.

(வி - ரை.) திடம் - த்ருடம் என்னும் வடசொற்றிரிபு. எண்சித்தி - அணிமா (எல்லாப்பொருளினும் நுண்ணியதாதல்), மஹிமா (பெரியதாதல்), கரிமா (பாரமுள்ளதாதல்), லகிமா (லேஸாதல்), ப்ராப்தி (வேண்டுவ அடைதல்), ப்ராகாமயம் (நிறைவுள்ளவனாதல்), ஈஸத்வம் (ஆட்சியுள்ளவனாதல்), வஸித்வம் (எல்லாம் தன் வசத்தாக்கவல்லவனாதல்) என்பன. சித்திதான என்பதில் தான் - சாரியை. (கஙு)

விடுவிடுவ் வையமுன் மிக்க பொன்கொளே
னுடையவர் பொருளையென் னுடையர்க் கீந்தனன்
கடுகுநின் னிதியரைக் காணி குன்றினும்
படவராப் பணியினன் பத்த னலலேன்.

(ப - ரை.) இ - இந்த, ஐயம் - ஸந்தேஹத்தை, விடுவிடு - விடுவிடு, உன் - உனது, மிக்க - பெரிய, பொன் - த்ரவ்யத்தை, கொளேன் - கைக்கொள்ளமாட்டேன், உடையவர் - ஐயர், பொருளை - த்ரவ்யத்தை, என் - எனது, உடையர்க்கு - ஐயர்க்கு, ஈந்தனன் - கொடுத்துவிட்டேன், நின் - உனது, நிதி - த்ரவ்யம், கடுகு - கடுகளவாகிய, அரைக்காணி - அரைக்காணி, குன்றினும் - குறையினும், படம் - படத்தையுடைய, அரா - ஸர்ப்பம், பணியினன் - ஆபரணமாகிய சிவபெருமானது, பத்தன் - பக்தன், நான் - நான், அல்லேன் - ஆகமாட்டேன், எ - று.

(பொ - ரை.) இந்த ஸந்தேஹத்தை விடுவிடு, உனது பெருந்த்ரவ்யத்தைக் கைக்கொள்ளமாட்டேன், ஐயர்பொருளை எனது ஐயர்க்குக் கொடுத்துவிட்டேன், உனது த்ரவ்யம் கடுகளவாகிய அரைக்காணி குறையினும், படத்தையுடைய ஸர்ப்பாபரணனாகிய சிவபெருமானது பக்தன் நான் ஆகமாட்டேன். (கசா)

பெட்டியிற் சேர்த்தநின் பிணையற் சாளிகை
யொட்டிய முத்திரை யுள்ள வாறுநீ
திட்டமிட் டறிகெனச் செப்பிப் பேழையைக்
கட்டுடன் முன்னுறக் கண்டு மன்னவன்.

(ப - ரை.) பெட்டியில் - பேழையில், சேர்த்த - வைத்த, நின் - உனது, பிணையல் - கட்டோடு கட்டின, சாளிகை - பணப்பைகளும், ஒட்டிய - இட்ட, முத்தரை - முத்திரைக

ளும், உள்ளவாறு - இருந்தபடியே, நீ - நீ, திட்டம் இட்டு - சரிபார்த்து, அறி - தெரிந்து கொள், என்ன - என்று, செப்பி - சொல்லி (முன்னே வைத்தலும்), பேழையை - பெட்டியை, கட்டுடன் - கட்டின கட்டுடன், முன் உற - தனக்கெதிரேயிருக்க, கண்டு - பார்த்து, மன்னவன் - விஜ்ஜலராஜன், எ - று.

(பொ - ரை.) பேழையில் வைத்த வுனது கட்டோடுகட்டின பணப்பைகளும் இட்ட முத்திரைகளும் இருந்தபடியே சரிபார்த்துத்தெரிந்துகொள்ளென்று சொல்லி முன்னே வைத்தலும், பெட்டியைக் கட்டினகட்டுடன் தனக்கெதிரே யிருக்கப்பார்த்து விஜ்ஜலராஜன். (௧௫)

திறந்தரும் பெட்டியைத் திட்ட மிட்டலு
நிறைந்தமுன் முத்திரை நீங்க லின்றியே
யுறைந்தது கண்டிறை யுவந்து நந்தியார்
சிறந்தநற் பெருமையைச் செப்பி யேத்தினன்.

(ப - ரை.) அரு - மேன்மையாகிய, பெட்டியை - பேழையை, திறந்து - திறக்கச் செய்து, திட்டம் இட்டலும் - சரிபார்த்தலும், நிறைந்த - நிரம்பயிட்ட, முன் - முந்தின, முத்திரை - முத்திரைகள், நீங்கல் - கழலுதல், இன்றி - இல்லாமல், உறைந்தது - இருந்ததை, கண்டு - பார்த்து, இறை - விஜ்ஜலராஜன், உவந்து - ஸந்தோஷித்து, நந்தியார் - வசவ்வசரது, சிறந்த நல் - மிகச்சிறந்த, பெருமையை - மஹத்வத்தை, செப்பி - (பலவாறெடுத்து) சொல்லி, ஏத்தினன் - புகழ்ந்தான், எ - று.

(பொ - ரை.) மேன்மையாகிய பேழையைத் திறக்கச்செய்து சரிபார்த்தலும், நிரம்பயிட்ட முந்தின முத்திரைகள் கழலுதலில்லாமலிருந்ததைப் பார்த்து, விஜ்ஜலராஜன் ஸந்தோஷித்து, வசவ்வசரது மிகச் சிறந்த மஹத்வத்தைப் பலவாறெடுத்துச் சொல்லிப் புகழ்ந்தான். (௧௬)

வானவர் மலர்மழை வழங்கி வாழ்த்தினு
ரானசீர் வசவரா சையர் வேந்தன்மு
னூனமில் வாதவூ ரொண்ட வர்க்கரன்
னரி பரியெனத் தருதல் செப்பியே.

(ப - ரை.) வானவர் - தேவர்கள், மலர் - புஷ்பம், மழை - வருஷத்தை, வழங்கி - வருஷித்து, வாழ்த்தினர் - துதித்தார்கள், ஆன - துதிக்கப்பெற்றவரான, சீர் - சிறப்புற்ற, வசவராசையர் - வசவ்வசர், வேந்தன் - விஜ்ஜலராஜன், முன் - முன்னிலையில், ஊனம் இல் - பரிபூர்ணத்துடம், ஒள - மேன்மையுமுடைய, வாதவூர்தவர்க்கு - திருவாதவூரடிகளுக்கு, அரன்தான - (முற்காலத்தில்) சிவபெருமான், நரி - நரிகளை, பரி என்ன - குதிரைகளாகச்செய்து, தருதல - அருளிய திருவிளையாடலை, செப்பி - சொல்லி, எ - று.

(பொ - ரை.) தேவர்கள் புஷ்பவருஷத்தை வருஷித்துத் துதித்தார்கள், துதிக்கப் பெற்றவரான சிறப்புற்ற வசவேசர் விஜ்ஜலராஜன் முன்னிலையில் பரிபூர்ணத்துடம் மேன்மையுமுடைய திருவாதவூரடிகளுக்கு முற்காலத்தில் சிவபெருமான் நரிகளைக் குதிரைகளாகச் செய்தருளிய திருவிளையாடலைச் சொல்லி.

(வி - ரை.) வாதவூர்தவர் - திருவாதவூரிலவதரித்த மாணிக்கவாசக ஸ்வாமிகள். (௧௭)

ஆதலா லரனருட் களவி லென்றனர்
மாதரை மன்னவன் வசவ தேவரைப்
போதவே மகிழ்ந்துநீ புனித னென்றுமண்
ணேதுமா னுடனல னுண்மை யென்றரோ.

(ப - ரை.) ஆதலால் - ஆகையால், அரன் அருட்கு - சிவாநுக்ரஹத்துக்கு, அளவு - எல்லை, இல் - இல்லை, என்றனர் - என்றுசொன்னார், மா - பெரிய, தரை - பூமியைக் காக்கின்ற, மன்னவன் - விஜ்ஜலராஜன், வசவதேவரை - வசவேசரை, போத - மிகுதியாக, மகிழ்ந்து - ஸந்தோஷித்து, நீ - நீ, புனிதன் - சிவபெருமான், என்று - என்று, மண் - உலகம், ஓதும் - சொல்லும், மானுடன் - மனிதன், அல்லன் - அல்லன், உண்மை - (இது) மெய், என்று - என்று, எ - று.

(பொ - ரை.) ஆகையால் சிவாநுக்ரஹத்துக்கு எல்லையில்லையென்று சொன்னார், பெரிய பூமியைக் காக்கின்ற விஜ்ஜலராஜன் வசவேசரை மிகுதியாக ஸந்தோஷித்து நீ சிவபெருமானென்று உலகம் சொல்லும், மனிதனல்லன், இது மெய்யென்று. (௧௮)

கடற்குமுத் தளிப்பவர் கரங்கள் போலவே
சுடர்த்தரு மணியணி தூசு நல்கியே
சடக்கென நந்திமேற் றப்பு ரைத்தபே
ரடக்கமி னாவினை யரிவன் செல்கென.

(ப - ரை.) கடற்கு - கடலுக்கு, முத்து - (விலையுயர்ந்த) முத்தங்களை, அளிப்பவர் - கொடுப்பவர்களது, கரங்கள் - கைகள், போலவே - போலவே, சுடர்தரும் - ஒளிவீசுகின்ற, மணி - ரத்நம், அணி - ஆபரணங்களையும், தூசு - பீதாம்பரங்களையும், நல்கி - கொடுத்து, நந்தி - வசவேசர், மேல் - மீது, தப்பு - குற்றம், உரைத்தபேர் - சொன்னவர்களுடைய, அடக்கம் இல் - அடங்காத, நாவினை - நாக்களை, சடக்கு என - சடுதியாக, அரிவன் - அறுத்துவிடுவேன், செல்க - போகக்கடவை, என்ன - என்று, எ - று.

(பொ - ரை.) கடலுக்கு விலையுயர்ந்த முத்தங்களைக் கொடுப்பவர்களது கைகள் போலவே ஒளிவீசுகின்ற ரத்நாபரணங்களையும் பீதாம்பரங்களையும் கொடுத்து, வசவேசர்மீது குற்றஞ் சொன்னவர்களுடைய அடங்காத நாக்களைச் சடுதியாக அறுத்துவிடுவேன், போகக்கடவையென்று. (௧௯)

மன்னவ னுரைத்தனன் வசவ தேவர்தா
மன்னவிச் சலன்மகிழ்ந் தனுப்பத் தம்மனைப்
பன்னக வணியனைப் பரவி யேகினார்
தன்னிக ரின்றியே சரிக்கு நாளரோ.

(ப - ரை.) மன்னவன் - விஜ்ஜலராஜன், உரைத்தனன் - சொன்னான், வசவதேவர் தாம் - வசவேசர், அன்ன - அந்த, விச்சலன் - விஜ்ஜலராஜன், மகிழ்ந்து - ஸந்தோஷித்து, அனுப்ப - போகவிடுதலும், பன்னக அணியனை - சிவபெருமானை, பரவி - துதித்து, தம் - தமது, மனை - திருமடத்திற்கு, ஏகினார் - எழுந்தருளி, தன் - தன்னை, நிகர் - நிகர்ப்பவர், இன்றி - இல்லாமல், சரிக்கும் - வாழ்கின்ற, நாள் - காலத்தில், எ - று.

(பொ - ரை.) விஜ்ஜலராஜன் சொன்னான், வசவேசர் அந்த விஜ்ஜலராஜன் ஸந்தோஷித்துப் போகவிடுதலும், சிவபெருமானைத் துதித்து, தமது திருமடத்திற் கெழுந்தருளி, தன்னை நிகர்ப்பவரில்லாமல் வாழ்கின்ற காலத்தில்.

(வி - ரை.) பன்னகம்-பந்நகம் என்னும் வடசொற்றிரிபு; பாதத்தால் நடவாததென்பது பொருள். பன்னக அணியனை - ஸர்ப்பாபரணனை. ஏகினார் - முற்றெச்சம். (௨௦)

**சாளிகைப்பெட்டியழைப்பித்த புராணம் - முற்றிற்று.**



ஆக திருவிருத்தம் - ௬௩௧.

உ

சிவமயம்.

# நெற்றிக்கண்கேட்ட புராணம்.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இத்திறம் வசவ தேவ ரினியசங் கமமே நந்த
முத்தியுஞ் சித்தி தானு மூலமா முதலு மென்னும்
பத்தியின் பெருமை தன்னைப் பாருளோ ரறியப் பண்ணும்
புத்தியாற் கல்லி யாண புரத்தரன் புகுந்த பின்னர்.

(ப - ரை.) இ - இந்த, திறம் - விதம், வசவதேவர் - வசவேசர், இனிய - மேன்மை பொருந்திய, சங்கமமே - ஜங்கமரே, நம் - நமது, முத்தியும் - மோக்ஷமும், சித்திதானும் - பலிதமும், மூலம் ஆம் முதலும் - மூலத்ரவ்யமும், என்னும் - என்கின்ற, பத்தியின் - பக்தியின், பெருமைதன்னை - மேன்மையை, பார் உள்ளோர் - உலகத்தார், அறிய - தெரியும்படி, பண்ணும் - செய்யவேண்டுமென்கின்ற, புத்தியால் - திருவுளத்தினால், கல்லியாண புரத்து - கல்யாணநகரத்தில், அரன் - சிவபெருமான், புகுந்த - எழுந்தருளிய, பின்னர் - பிறகு, எ - று.

(போ - ரை.) இவ்விதம் வசவேசர் மேன்மைபொருந்திய ஜங்கமரே நமது மோக்ஷமும் பலிதமும் மூலத்ரவ்யமுமென்கின்ற பக்தியின் மேன்மையை உலகத்தார் தெரியும்படிச் செய்யவேண்டுமென்கின்ற திருவுளத்தினால் கல்யாணநகரத்தில் சிவபெருமான் எழுந்தருளியபிறகு.

(வி - ரை.) முத்தி - ஆத்மாக்கள் மும்மலங்களினின்றும் நீங்கி, பஞ்சேந்த்ரிய நிக்ரஹஞ்செய்து, மனமிறந்து, தம்மைமறந்து, சிவயோக ஸமாதிநிஷ்டையினின்று, இரண்டறக்கலந்து ஐக்யமாயிருத்தல். நந்தம் என்பதில் தம் - சாரியை. சித்திதானும் என்பதில் தான் - சாரியை. (க)

## எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

தங்கு வெண்பிறை யைந்த லைப்பணி தாவுநீர் நகுத லையுட
னங்கி யோர்விழி கா௱ நீல மராப்ப ணித்தொகை யக்குமான்
பங்கு நீடலை மாலை யாகிய பலவி தங்கள் மறைத்தருந்
துங்க மாதவ வடிவ மாய்வச வேசர் தம்மெதிர் தோன்றியே.

(ப - ரை.) தங்கு - நிலைபெற்றிருக்கிற, வெள் - வெண்ணிறம் பொருந்திய, பிறை - பாலசந்த்ரனும், ஐ - ஐந்து, தலை - தலைகளையுடைய, பணி - நாகமும், தாவும் - (அலைகள்) பாய்கின்ற, நீர் - கங்கையும், நகு - சிரிக்கின்ற, தலையுடன் - (ப்ரஹ்ம) கபாலமும், ஓர் - ஒப்பற்ற, அங்கி - நெருப்பு, விழி - கண்ணும், காளம் - விஷத்தின், நீலம் - கறுத்த நிறமும், அராப்பணி - ஸர்ப்பாபரணம், தொகை - ராஸிகளும், அக்கு - எலும்புமணியும், மான்பங்கு - உமாபாகமும், நீள் - நீண்ட, தலைமாலை - சிரமாலைகளும், ஆகிய - ஆகிய, பலவிதங்கள் - பலவகைப்பட்ட சின்னங்களை, மறைத்து - ஒளித்து, அரு - மேன்மை பொருந்

திய, துங்கம் - பரிஶுத்தத்தன்மையுடைய, மாதவவடிவம் ஆய் - ஜங்கமமூர்த்தியாய், வசவேசர் - வசவேசர், எதிர் - முன்னர், தோன்றி - எழுந்தருளி, எ - று.

(பொ - ரை.) நிலைபெற்றிருக்கின்ற வெண்ணிறம்பொருந்திய பாலசந்த்ரனும், ஐந்து தலைகளையுடைய நாகமும், அலைகள் பாய்கின்ற கங்கையும், சிரிக்கின்ற ப்ரஹ்மகபாலமும், ஸர்ப்பாபரணராஜிகளும், எலும்புமணியும், உமாபாகமும், நீண்டசிரமாலைகளுமாகிய பலவகைப்பட்ட சின்னங்களை யொளித்து மேன்மைபொருந்திய பரிஶுத்தத் தன்மையுடைய ஜங்கமமூர்த்தியாய் வசவேசர் முன்னர் எழுந்தருளி.

(வி - ரை.) பணம் - படம், அதனையுடைய தாதலால் பாம்பு பணி யெனப்பட்டது. அங்கி - அக்கி என்னும் வடசொற்றிரிபு. மான் - பெண். மான்பங்கு என்றமையால் உமாதேவியைக்குறித்தது. (௨)

நம்பி யுன்னிடை வந்த னம்மொரு நல்லு றுப்பினை நாடியே
யெம்பி ரானய னங்க ளென்ன வெமக்கு முக்கணி லிச்சையா
மம்பி காபதி யன்ப நெற்றியி னம்ப கந்தரு வாயென
வம்பி லாமன வசவ தேவர் வணங்கி நின்றுவ ழுத்துவார்.

(ப - ரை.) நம்பி - புருஷோத்தமனே, உன் இடை - உன்னிடத்தில், ஒரு - ஒரு, நல் - சிறந்த, உறுப்பினை - அவயவத்தை, நாடி - விரும்பி, வந்தனம் - வந்தோம், எம்பிரான் - சிவபெருமானது, நயனங்கள் - நேத்ரங்களை, என்ன - போலவே, எமக்கும் - நமக்கும், முக்கண்ணில் - த்ரிநேத்ரங்களில், இச்சை ஆம் - விருப்பமாகும், அம்பிகாபதி அன்ப - சிவபக்தனே, நெற்றியின் அம்பகம் - நெற்றிக்கண்ணை, தருவாய் - கொடுப்பாய், என்ன - என்று கேட்டமாத்ரத்தில், வம்பு - வஞ்சகம், இல்லா - இல்லாத, மனம் - மனத்தை யுடைய, வசவதேவர் - வசவேசர், வணங்கி - தொழுது, நின்று - நின்று, வழுத்துவார் - துதிப்பாராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(பொ - ரை.) புருஷோத்தமனே! உன்னிடத்தில் ஒரு சிறந்த அவயவத்தை விரும்பி வந்தோம், சிவபெருமானது நேத்ரங்களைப் போலவே எமக்கும் த்ரிநேத்ரங்களில் விருப்பமாகும், சிவபக்தனே! நெற்றிக்கண்ணைக் கொடுப்பாயென்று கேட்டமாத்ரத்தில், வஞ்சகமில்லாத மனத்தையுடைய வசவேசர் தொழுது நின்று துதிப்பாராயினர், எவ்வாறெனின்:—

(வி - ரை.) அம்பிகாபதி - சிவபெருமான் (அம்பிகா-உமாதேவி. பதி - கணவன்). (௩)

வீறு மானை முகத்தன் மூவிழி மிக்க வுக்கிர னன்னகண்
டேறு மாவொளிர் மாமு கன்னியல் செய்ய பன்னிரு துய்யக
ணீறில் சங்கர தாசர் முக்க ணிருக்க னெண்கணவ் விந்திர
னாறெ டொன்பது நூறு கண்கொடு நோக்க நல்கினை நீயலோ.

(ப - ரை.) வீறும் - மேன்மைபொருந்திய, ஆனைமுகத்தன் - விநாயகர், மூ-மூன்று, விழி - கண்களாலும், மிக்க - மேன்மைபொருந்திய, உக்கிரன் - வீரபத்ரர், அன்ன - அந்த, கண் - (மூன்று) கண்களாலும், தேறும் - நன்மைபொருந்திய, ஒளிர் - ப்ரகாசிக்கின்ற, மா - பெருமைபொருந்திய, ஆறுமுகன் - ஷண்முகர், இயல் - லக்ஷணம்பொருந்திய, செய்ய - செவந்த, துய்ய - பரிஶுத்தமுள்ள, பன்னிருகண் - பன்னிரண்டுகண்களாலும், ஈறு இல் - அழிவில்லாத, சங்கரதாசர் - சங்கரதாசையர், முக்கண் - மூன்றுகண்களாலும், இருக்கன் - ப்ரஹ்மதேவர், எண்கண் - எட்டுக்கண்களாலும், அ - அந்த, இந்திரன் - தேவேந்த்ரன், நூறெடு ஒன்பது நூறு - ஆயிரம், கண்கொடு - கண்களாலும், நோக்க - பார்க்க, நீ - நீ, நல்கினை - அநுக்ரஹஞ்செய்தாய், அலோ - அன்றோ, எ - று.

(போ - ரை.) மேன்மைபொருந்திய விநாயகர் மூன்று கண்களாலும், மேன்மை பொருந்திய வீரபத்ரர் அந்த மூன்றுகண்களாலும், நன்மைபொருந்திய ப்ரகாசிக்கின்ற பெருமைபொருந்திய ஷண்முகர் லக்ஷணம்பொருந்திய செவந்த பரிஸுத்தமுள்ள பன்னிரண்டு கண்களாலும், அழிவில்லாத சங்கரதாசையர் மூன்று கண்களாலும், ப்ரஹ்ம தேவர் எட்டுக்கண்களாலும், அந்தத் தேவேந்த்ரன் ஆயிரங்கண்களாலும் பார்க்க நீ அநுக்ரஹஞ்செய்தாயன்றோ?

(வி - ரை.) இருக்கன் - வேதன் (இருக்கு - வேதம், அதனையுடையவன்). (ச)

இல்ல தொன்றை யெமக்க ளித்திடு கென்று கொள்ளுமி யல்புளோர்
வல்ல பேர்முன மில்லை யென்கை வழக்க தன்று மனத்துளாய்
நல்ல தம்விழி தங்க ளுக்கு நயந்து காணவொ ணாதெனுஞ்
சொல்லு மக்கிலை யென்றெ ராடிது தித்து நின்றெதிர் காட்டினார்.

(ப - ரை.) இல்லது ஒன்றை - இல்லாத வொருபொருளை, எமக்கு - நமக்கு, அளித்திடுக - தாரும், என்று - என்று (கேட்டு), கொள்ளும் - ஏற்கின்ற, இயல்பு உள்ளோர் - தன்மை யுடையவர்களில், வல்லபேர் - வல்லவர், முன்னம் - முற்காலத்தில், இல்லை யென்கை - இல்லையென்பது, வழக்கு அது - வழக்கம், அன்று - அல்ல, மனத்து உள்ளாய் - பக்தரது ஹ்ருதயகமலத்தில் நித்யவாஸஞ்செய்பவனே, தம் - தங்கள், நல்ல - நல்ல, விழி - கண், தங்களுக்கு - தங்களுக்கு, நயந்து - நன்றாக, காண ஒண்ணாது - பார்க்கமுடியாது, என்னும் - என்கின்ற, சொல் - பழமொழி, உமக்கு - உமக்கு, இல்லை - இல்லை, என்று - என்று, துதித்து - புகழ்ந்து, நின்று - முன்னின்று, ஓர் - ஒரு, ஆடி - கண்ணாடியை, எதிர் - எதிரே, காட்டினார் - காண்பித்தனர், எ - று.

(போ - ரை.) இல்லாத வொருபொருளை நமக்குத் தாருமென்று கேட்டேற்கின்ற தன்மையுடையவர்களில் வல்லவர் முற்காலத்தி லில்லையென்பது வழக்கமல்ல; பக்தரது ஹ்ருதயகமலத்தில் நித்யவாஸஞ்செய்பவனே! தங்கள் நல்ல கண் தங்களுக்கு நன்றாக பார்க்கமுடியாதென்கின்ற பழமொழி உமக்கில்லையென்று புகழ்ந்து முன்னின்று ஒரு கண்ணாடியை யெதிரே காண்பித்தனர். (ரு)

காட்டு மாடியுண் முக்கணும் மெதிர் கண்டு கொண்டுக ருத்தினு
லீட்டு நாணமு ளோர்கள் போன்முக மினிமை குன்றியி றங்கியே
மீட்டு நின்றொரு மாற்ற மொன்று விளம்பி டாதுவி ரைந்துட
னாட்டு சங்கம தேவர் போலுரு நண்ணு மீசர்ந டத்தலும்.

(ப - ரை.) காட்டும் - (எதிரே) காட்டப்பட்ட, ஆடியுள் - கண்ணாடியில், முக்கண்ணும் - மூன்றுகண்களையும், எதிர் - நேரே, கண்டுகொண்டு - பார்த்துக்கொண்டு, கருத்தினுல் - மனத்தினுல், ஈட்டும் - சேர்த்துவைக்கப்பட்ட, நாணம் - வெட்கம், உள்ளோர்கள் போல் - உடையவர்கள்போல, முகம் - திருமுகம், இனிமை - பொலிவு, குன்றி - இல்லாமல், இறங்கி - தலைகுனிந்து, மீட்டும் - மறுபடியும், நின்று - நின்று, ஒரு - ஒரு, மாற்றம் - சொல்லை, ஒன்று - சிறிதும், விளம்பிடாது - சொல்லாமல், விரைந்து - விரைவாக, உடன் - உடனே, நாட்டு - ஊர், சங்கமதேவர்போல் - ஜங்கமையரைப்போல, உரு நண்ணும் - திருக்கோலத்தையுடைய, ஈசர் - சிவபெருமான், நடத்தலும் - சென்றமாத்ரத்தில், எ - று.

(போ - ரை.) எதிரே காட்டப்பட்ட கண்ணாடியில் மூன்று கண்களையும் நேரே பார்த்துக்கொண்டு, மனத்தினுற்சேர்த்து வைக்கப்பட்ட வெட்கமுடையவர்கள்போலத்

திருமுகம் பொலிவில்லாமல் தலைகுனிந்து, மறுபடியும் நின்று ஒருசொல்லைச் சிறிதுஞ் சொல்லாமல் விரைவாக வுடனே ஊர்ஜங்கமையரைப்போலத் திருக்கோலத்தையுடைய சிவபெருமான் சென்றமாத்ரத்தில். (சு)

நடக்கு மத்தரை நந்தி கேசர் நயந்து கண்டுல கெவையுநீ
கொடுக்க வல்லை யுனக்கொ ருத்தர் கொடுக்க வுள்ளவ ரெவர்களின்
னிடத்தி லில்லவை யுள்ள தேலடி யேன ளிப்பன தின்றிவண்
டிடத்தி னீவெருள் வோரெ னும்படி செல்வ தென்னென வுரைசெய்வார்.

(ப - ரை.) நடக்கும் - (விரைவாக) செல்கின்ற, அத்தரை - சிவபெருமானை, நந்தி கேசர் - வசவேசர், நயந்து - அன்புடன், கண்டு - நோக்கி, நீ - நீ, உலகு எவையும் - எல்லாவுலகங்களையும், கொடுக்கவல்லை - உண்டாக்கவல்லவன், உனக்கு - உனக்கு, ஒருத்தர் - ஒருவர், கொடுக்கவுள்ளவர் - தரவல்லவர், எவர்கள்-யார், நின் இடத்தில் - உன்னிடத்தில், இல்லவை - இல்லாதபொருள், உள்ளதேல் - இருக்குமாயின், அடியேன் - அடியேன், அளிப்பன் - கொடுப்பேன், இவண் - இவ்விடத்தில், அது - அந்தப்பொருள், இன்று - இல்லை, திடத்தின் - வலியுடைய, நீ - நீ, வெருள்வோர் - பயந்தவர், என்னும்படி- போல, செல்வது - போவதற்குக் காரணம், என் - யாது, என்ன - என்று, உரைசெய்வார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(பொ - ரை.) விரைவாகச் செல்கின்ற சிவபெருமானை வசவேசர் அன்புடன் நோக்கி, நீ எல்லாவுலகங்களையு முண்டாக்கவல்லவன், உனக்கு ஒருவர் தரவல்லவர் யார்? உன்னிடத்திலில்லாத பொருளிருக்குமாயின் கொடுப்பேன், இவ்விடத்தில் அந்தப் பொருள் இல்லை, வலியுடைய நீ பயந்தவர்போலப் போவதற்குக் காரணம் யாது? என்று சொல்வாராயினர், எவ்வாறெனின் :— (எ)

சுந்த ரன்னென வேம டந்தையர் தூது செல்லென வோதிலே
னந்த ருந்திரு நீல கண்ட னணைந்த வாலிப மளியெனே
னந்த ருநிதி சேட தாசையர் நண்ணல் போலுனை நல்கெனே
னொந்த வெம்மிடி மாற னாளை கைப்ப தந்தா நுவல்கிலேன்.

(ப - ரை.) சுந்தரன் - சுந்தரமூர்த்திஸ்வாமிகள், என்ன - (சொன்னது) போல, மடந்தையர் - மாதரிடத்தில், தூது - தூது, செல் - போம், என்ன - என்று, ஓதிலேன் - சொல்லமாட்டேன், அம் - அழகு, தரும் - கொடுக்கின்ற, திருநீலகண்டன் - திருநீலகண்ட நாயனர், அணைந்த - பெற்ற, வாலிபம் - இளமைப்பருவத்தை, அளி - கொடும், என்னேன் - என்று கேட்கமாட்டேன், நந்து - கெடுதல், அரு - இல்லாத, நிதி - செல்வத்தை, சேடதாசையர் - சேடதாசையர், நண்ணல்போல் - அடைந்ததுபோல, உனை - உன்னை, நல்கு - கொடும், என்னேன் - என்று கேட்கமாட்டேன், நொந்த - வருந்தின, வெம் - கொடிய, மிடி - வறுமையுடைய, மாறனர் - இளையான்குடிமாறநாயனர் (அடைந்தது போல), அளகைப்பதம் - குபேரபதவியை, தர - கொடுக்க, நுவல்கிலேன் - சொல்லமாட்டேன், எ - று.

(பொ - ரை.) சுந்தரமூர்த்திஸ்வாமிகள் சொன்னதுபோல மாதரிடத்தில் தூதுபோமென்று சொல்லமாட்டேன், அழகுகொடுக்கின்ற திருநீலகண்டநாயனர்பெற்ற இளமைப் பருவத்தைக் கொடுமென்று கேட்கமாட்டேன், கெடுதலில்லாத செல்வத்தைச் சேடதாசையர் அடைந்ததுபோல உன்னைக் கொடுமென்று கேட்கமாட்டேன், வருந்தின கொடிய வறுமையுடைய இளையான்குடிமாறநாயனர் அடைந்ததுபோலக் குபேரபதவியைக் கொடுக்கச் சொல்லமாட்டேன்.

(வி - ரை.) மடந்தையர் என்றது பருவங்குறியாது மாதர் என்னுந்துணையாய் நின்றது. அளகை - அளகாபுரி (இது குபேரபட்டணம்). (அ)

சொன்ன மாரி யெனக்கு நல்கெனுஞ் சோழர் போலது சொல்கிலே
னின்ன சொர்க்கம தாதி யான விருஞ்சு கந்தரு வாயெனேன்
மன்ன நின்கயி லாய நீயெனை வைத்த தெவ்விட மவ்விட
முன்ன லன்ப ரருந்து சேடம துண்டை யாகுறை யொன்றிலேன்.

(ப - ரை.) சொன்னம் - பொன், மாரி - மழையை, எனக்கு - எனக்கு, நல்கு - கொடும், என்னும் - என்றுகேட்ட, சோழர் - சோழர், போல - போல, அது - அந்தவார்த்தையை, சொல்கிலேன் - சொல்லமாட்டேன், இன்ன - இன்னும், சொர்க்கம் - ஸ்வர்க்கலோகம், ஆதியான - முதலாகிய, இரு - பெரிய, சுகம் - இன்பத்தை, தருவாய் - கொடுப்பாய், என்னேன் - என்றுகேட்கமாட்டேன், மன்ன - இறைவனே, நீ - நீ, நின் - உனது, கயிலாயம் - ஸ்ரீ மஹாகைலாஸத்தினின்றும், என்னை - அடியேனை, வைத்தது - இருத்தியருளியது, எவ்விடம் - எவ்விடமோ, அவ்விடம் - அவ்விடத்தில், உன் - உனது, நல் - சிறந்த, அன்பர் - ஜங்கமர், அருந்து - உண்ணப்பெற்ற, சேடம் அது - சேஷப்ரஸாதத்தை, உண்டு - அருந்தி, ஐயா - ஐயனே, குறையொன்று - ஒருகுறையும், இல்லேன் - இல்லாமலிருக்கின்றேன்.

(பொ - ரை.) பொன்மழையை யெனக்குக் கொடுமென்றுகேட்ட சோழர்போல அந்தவார்த்தையைச் சொல்லமாட்டேன், இன்னும் ஸ்வர்க்கலோகம் முதலாகிய பேரின்பத்தைக்கொடுப்பாயென்று கேட்கமாட்டேன், இறைவனே! நீ உனது ஸ்ரீ மஹாகைலாஸத்தினின்றும் அடியேனை யிருத்தியருளிய தெவ்விடமோ? அவ்விடத்தில் உனது சிறந்த ஜங்கமர் உண்ணப்பெற்ற சேஷப்ரஸாதத்தை யருந்தி, ஐயனே! ஒரு குறையுமில்லாமலிருக்கின்றேன்.

(வி - ரை.) சொன்னம் - ஸ்வர்ணம் என்னும் வடசொற்றிரிபு. சொர்க்கம் - ஸ்வர்க்கம் என்னும் வடசொற்றிரிபு. சேடம் - சேஷம் என்னும் வடசொற்றிரிபு. (௯)

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

உன்னையருச் சிப்பவர்கண் ணப்பன் றண்டி
யுடையளிப்பார் சேட தாசையர் நற்பூத்
தன்னைவிடா தேதருவர் புட்ப தந்தர்
சங்கிலிமா லைகடொடுப்பள் வாயி லாரே
நின்னிடமாங் கோவில்செய்வர் கலிய னார்தா
நேசத்தால் விளக்கிடுவார் மூத்தா லத்தி
துன்னவெடுத் துடன்பாடுஞ் சோம னன்றூன்
றுய்யதமிழ்ச் சம்பந்தன் றுதிக்க வல்லோன்.

(ப - ரை.) கண்ணப்பன் - கண்ணப்ப நாயனாரும், தண்டி - சண்டேசநாயனாரும், உன்னை - உன்னை, அருச்சிப்பவர் - பூஜிக்கவல்லவர், சேடதாசையர் - சேடதாசையர், உடை - ஆடையை, அளிப்பார் - கொடுக்கவல்லவர், புட்பதந்தர் - புஷ்பதந்தர், நல் - நல்ல, பூத்தன்னை - மலர்களை, விடாது - இடையறாமல், தருவர் - கொடுக்கவல்லவர், சங்கிலி - சங்கிலிநாச்சியார், மாலைகள் - பூமாலைகளை, தொடுப்பள் - கட்டிக்கொடுக்கவல்லவள், வாயிலார் - வாயிலார்நாயனார், நின் - உனது, இடம் ஆம் - நித்யவாஸஸ்தானமாகிய, கோவில்-ஹ்ருதயாலயத்தை, செய்வர்-கட்டிக்கொடுக்கவல்லவர், கலியனார்தாம் - கலியநாய

ஞர், நேசத்தால் - அன்புடன், விளக்கு - திருவிளக்கு, இடுவார் - ஏற்றவல்லவர், சோம ணன் - சோமண்ணதேவர், துன்ன - மிகுதியாக, முத்துஆலத்தி - முத்தாலத்தி, எடு த்து - எடுத்து, உடன் - கூட, பாடும் - பாடவல்லவர், துய்ய - பரிசுத்தமான, தமிழ் - தமிழ்க் கல்வியில் வல்லோராகிய, சம்பந்தன் - திருஞானசம்பந்தஸ்வாமிகள், துதிக்கவல் லோன் - ஸ்தோத்ரங்களைச் செய்யவல்லவர், எ - று.

(போ - ரை.) கண்ணப்பநாயனாரும் சண்டேசநாயனாரும் உன்னைப் பூஜிக்கவல்லவர், சேடதாசையர் ஆடையைக் கொடுக்கவல்லவர், புஷ்பதந்தர் நல்லமலர்களை யிடையறாமற் கொடுக்கவல்லவர், சங்கிலிநாச்சியார் பூமாலைகளைக் கட்டிக்கொடுக்கவல்லவள், வாயிலார் நாயனார் உனது நித்யவாஸஸ்தானமாகிய ஹ்ருதயாலயத்தைக் கட்டிக்கொடுக்கவல்லவர், கலியநாயனார் அன்புடன் திருவிளக்கேற்றவல்லவர், சோமண்ணதேவர் மிகுதியாக முத் தாலத்தி யெடுத்துக் கூட பாடவல்லவர், பரிசுத்தமான தமிழ்க்கல்வியில் வல்லோரா கிய திருஞானசம்பந்தஸ்வாமிகள் ஸ்தோத்ரங்களைச் செய்யவல்லவர். (௧0)

கந்தமரைப் பவர்மூர்த்தி கந்த தூபங்
    கலயரொரு வலையரிவர் கசிந்த ளிப்பர்
வந்தமுது படியளப்பர் தாய ஞர்தா
    மாசிலாக் கர்ப்பூர வடைக்காய் நல்குஞ்
சிந்தைமகிழ்ந் திரேசையர் தீம்பால் வங்கர்
    தினந்தருவர் திரண்டபால் கொடகூச் சவ்வை
தந்திடுவ ளேகாந்தத் தலத்துச் சாத்தர்
    சங்கரதா சையரிலங்கர் மாச்சி தேவர்.

(ப - ரை.) மூர்த்தி - மூர்த்திநாயனார், கந்தம் - சந்தனம், அரைப்பவர் - தேய்த்துக் கொடுக்கவல்லவர், கலயர் - குங்குலியகலயநாயனார், கந்தம் - நறுமணங்கமழ்கின்ற, தூபம் - தூபம் (கொடுக்கவல்லவர்), ஒரு - ஒப்பற்ற, வலையர் - பரதகுலத்திற்பிறந்த அதிபத்தநாயனாராகிய, இவர் - இவர், கசிந்து - (மனம்) உருகி, அளிப்பர் - (விலையுயர் ந்தபொருளை) கொடுக்கவல்லவர், தாயனார் - அரிவாட்டநாயனார், வந்து - சென்று, அமுது படி - அரிசியை, அளப்பர் - அளந்துகொடுக்கவல்லவர், இரேசையர் - ரேசையர், சிந்தை மகிழ்ந்து - மனமகிழ்ந்து, மாசு - குற்றம், இல்லா - இல்லாத, கர்ப்பூர அடைக்காய் - கர்ப்பூரவெற்றிலையை, நல்கும் - கொடுக்கவல்லவர், வங்கர் - வங்கையர், தினம் - நாடோ றும், தீ - மதுரமான, பால் - பாலை, தருவர் - கறந்துகொடுக்கவல்லவர், கொடகூச்சவ் வை - கோட்கூச்சவ்வை, திரண்ட - திரளக்காய்ச்சின, பால் - பாலை, தந்திடுவள் - கொடுக்க வல்லவள், சங்கரதாசையர் - சங்கரதாசையர், ஏகாந்தத்தலத்து - தனியானவிடத்தில், சாத்தர் - படைவீரராயிருக்கவல்லவர், மாச்சிதேவர் - மாச்சிதேவர், இலங்கர் - பணிவிடை செய்யவல்லவர், எ - று.

(போ - ரை.) மூர்த்திநாயனார் சந்தனந்தேய்த்துக் கொடுக்கவல்லவர், குங்குலியகலய நாயனார் நறுமணங்கமழ்கின்ற தூபங்கொடுக்கவல்லவர், ஒப்பற்ற பரதகுலத்திற்பிறந்த அதிபத்தநாயனாராகிய இவர் மனமுருகி விலையுயர்ந்த பொருளைக் கொடுக்கவல்லவர், அரி வாட்டநாயனார் சென்று அரிசி யளந்துகொடுக்கவல்லவர், ரேசையர் மனமகிழ்ந்து குற்ற மில்லாத கர்ப்பூரவெற்றிலையைக் கொடுக்கவல்லவர், வங்கையர் நாடோறும் மதுரமான பாலைக் கறந்து கொடுக்கவல்லவர், கோட்கூச்சவ்வை திரளக்காய்ச்சின பாலைக் கொடுக்க வல்லவள், சங்கரதாசையர் தனியானவிடத்தில் படைவீரரா யிருக்கவல்லவர், மாச்சிதேவர் பணிவிடை செய்யவல்லவர். (௧௧)

செலவழியா நினதுநெல்லுக் களஞ்சி யங்க
டினங்காப்பர் கோட்புலியார் சுங்கம் பார்க்க
வலரியல்சேர் பங்கைய ரங்கம் வெட்ட
வல்லர்முனை யடுவார்நின் கோயிற் காவ
னிலைதிரியார் சிவநிசிசெய் சங்கி தேவர்
நினக்கமுது படைப்பள்சிறுத் தொண்டன் றேவி
பலதளிகை யமுதேற்றுஞ் சோழர் நெஞ்சிற்
பக்கமெல்லாஞ் சென்னையர் பரிந்த ளிப்பார்.

(ப - ரை.) கோட்புலியார் - கோட்புலிநாயனர், செலவு அழியா - (மீந்து) செலவாகாத, நினது - உனது, நெல்லுக்களஞ்சியங்கள் - நெற்களஞ்சியங்களை, தினம் - நாடோறும், காப்பர் - காக்கவல்லவர், இயல்சேர் - ஸந்மார்க்கத்தையுடைய, பங்கையர் - பங்கையர், சுங்கம் - சுங்கவேலை, பார்க்கவல்லர் - பார்க்கவல்லவர், முனையடுவார் - முனையடுவார் நாயனர், அங்கம்வெட்ட - போர்செய்ய, வல்லர் - வல்லவர், சிவநிசிசெய் சங்கி தேவர் - சிவராத்ரி ஸங்கிதேவர், நின் - உனது, கோயில் - திருவாலயத்தில், காவல் - காவற்றெழிலினின்றும், நிலைதிரியார் - நிலைபெயராம லிருக்கவல்லவர், சிறுத்தொண்டன் - சிறுத்தொண்டநாயனரது, தேவி - மனைவி, நினக்கு - உனக்கு, அமுதுபடைப்பள் - திருவமுது படைக்கவல்லவள், சோழர் - கரிகாலசோழர், பல - அநேகவிதமான, தளிகை - உண்கலன்களில், அமுது - திருவமுதினை, ஏற்றும் - சேகரித்து வைக்கவல்லவர், சென்னையர் - சென்னையர், பக்கம் எல்லாம் - இஷ்டமானவற்றையெல்லாம், நெஞ்சில்பரிந்து - மனமகிழ்ந்து, அளிப்பார் - கொடுக்கவல்லவர், எ - று.

(பொ - ரை.) கோட்புலிநாயனர் மீந்து செலவாகாத உனது நெற்களஞ்சியங்களை நாடோறும் காக்கவல்லவர், ஸந்மார்க்கத்தையுடைய பங்கையர் சுங்கவேலைபார்க்க வல்லவர், முனையடுவார்நாயனர் போர்செய்யவல்லவர், சிவராத்ரிஸங்கிதேவர் உனது திருவாலயத்தில் காவற்றெழிலினின்றும் நிலைபெயராம லிருக்கவல்லவர், சிறுத்தொண்ட நாயனரது மனைவி உனக்குத் திருவமுதுபடைக்கவல்லவள், கரிகாலசோழர் அநேகவிதமான உண்கலன்களில் திருவமுதினைச் சேகரித்துவைக்கவல்லவர், சென்னையர் இஷ்டமானவற்றை யெல்லாம் மனமகிழ்ந்து கொடுக்கவல்லவர்.

(வி - ரை.) பக்கம் - பக்ஷம்என்னும் வடசொற் றிரிபு. (௪௨)

மிகவிதத்த கச்சாயம் படைக்க வல்லாள்
வீரசோ ளவ்வைநன்னீர்த் தடஞ்ச மைக்கத்
தகுவர்திரு வாரூரிற் றண்டி யார்தாஞ்
சாதமிடச் சாம்பவர்முன் றருக்கி நிற்ப
ரகமுருகிப் பாடிநிற்க வப்பர் வல்ல
ரருங்குளிர்நீர் தந்திடுவார் பொன்னி தேவர்
நெகுமனத்தா னின்கோயின் மெழுக வல்ல
னிம்மவ்வை மாறையர் நீள்விற களிப்பார்.

(ப - ரை.) வீரசோளவ்வை - வீரசோளவ்வை, மிகு - மிகுந்த, இதத்த - இனிமையான, கச்சாயம் - பணியாரங்களை, படைக்கவல்லாள் - பரிமாறவல்லவள், திருவாரூரில் - திருவாரூரில், தண்டியார்தாம் - தண்டியடிகணாயனர், நல் - நல்ல, நீர் - நீருள்ள, தடம் - குளங்களை, சமைக்க - தோண்ட, தகுவர் - வல்லவர், சாம்பவர் - சாம்பவர், சாதம் - திரு

வழுதினை, இட - பரிமாறும்பொருட்டு, முன் - முற்பட்டுவந்து, தருக்கி - செருக்கடைந்து, நிற்பர் - நிற்கவல்லவர், அப்பர் - திருநாவுக்கரசுஸ்வாமிகள், அகம் - மனம், உருகி - கசிந்து, பாடி - பாடி, நிற்கவல்லர் - நிற்கவல்லவர், பொன்னிதேவர் - பொன்னிதேவர், அரு - கிடைத்தற்கரிய, குளிர் - குளிர்ந்த, நீர் - நீரை, தந்திடுவோர் - (குடிக்க) கொடுக்கவல்லவர், நிம்மவ்வை - நிம்மவ்வை, நெகும் - உருகுகின்ற, மனத்தால் - மனத்துடன், நின் - உனது, கோயில் - திருவாலயத்தை, மெழுகவல்லள் - திருமெழுக்கிடவல்லவள், மாறையர் - மோளிகைமாறையர், நீள் - நீண்ட, விறகு - விறகுகளை, அளிப்பார் - கொடுக்கவல்லவர், எ - று.

(பொ - ரை.) வீரசோளவ்வை மிகுந்த இனிமையான பணியாரங்களைப் பரிமாறவல்லவள், திருவாரூரில் தண்டியடிகளுயனார் நல்ல நீருள்ள குளங்களைத் தோண்டவல்லவர், சாம்பவர் திருவழுதினைப் பரிமாறும்பொருட்டு முற்பட்டுவந்து செருக்கடைந்து நிற்கவல்லவர், திருநாவுக்கரசு ஸ்வாமிகள் மனங்கசிந்து பாடிநிற்க வல்லவர், பொன்னிதேவர் கிடைத்தற்கரிய குளிர்ந்த நீரைக் குடிக்கக் கொடுக்கவல்லவர், நிம்மவ்வை உருகுகின்ற மனத்துடன் உனது திருவாலயத்தைத் திருமெழுக்கிடவல்லவள், மோளிகைமாறையர் நீண்ட விறகுகளைக் கொடுக்கவல்லவர். (௧௩)

பிரதானர் கணநாதர் சூது நின்பாற்
பிழையாம லாடவல்லர் மூர்க்க னார்தாந்
திரமான கணக்குவல்லர் வாச்சி தேவர்
செய்யவிசு வாசருயர் கெம்பா விக்குள்
வரமேவு போகையர் மாவின் றுய்ய
மதுரகனி காரைக்கா லம்மை நல்கும்
வரமேவு மெய்ப்பொருளா ருன்ற னீற்றை
வணங்குவர்கா வியம்படிப்போர் சாம வேதர்.

(ப - ரை.) கணநாதர் - கணநாதர், பிரதானர் - ப்ரதானியாயிருக்க வல்லவர், மூர்க்கனார் - மூர்க்கநாயனார், நின்பால் - உன்னிடத்தில், பிழையாமல் - தவறாமல், சூது - சூது, ஆடவல்லர் - ஆடவல்லவர், வாச்சிதேவர் - வாச்சிதேவர், திரமான - திடமான, கணக்குவல்லர் - கணக்குவேலை பார்க்கவல்லவர், உயர் - சிறந்த, கெம்பாவிக்குள் - கெம்பாவியில், வரம்மேவும் - மேன்மைபொருந்திய, போகையர் - போகையர், செய்ய - நல்ல, விசுவாசர் - நண்பராயிருக்கவல்லவர், காரைக்காலம்மை - காரைக்காலம்மை, துய்ய - பரிசுத்தமானதும், மதுரம் - மதுரமானதுமான, மாவின்கனி - மாங்கனியை, நல்கும் - கொடுக்கவல்லவள், வரம்மேவும் - மேன்மைபொருந்திய, மெய்ப்பொருளார் - மெய்ப்பொருளுயனார், உன் - உனது, நீற்றை - திருவெண்ணீற்றினை, வணங்குவர் - தொழவல்லவர், சாமவேதர் - ஸாமவேதியர், காவியம்படிப்போர் - பண்டிதராயிருக்கவல்லவர், எ - று.

(பொ - ரை.) கணநாதர் ப்ரதானியாயிருக்கவல்லவர், மூர்க்கநாயனார் உன்னிடத்தில் தவறாமல் சூதாடவல்லவர், வாச்சிதேவர் திடமான கணக்குவேலை பார்க்கவல்லவர், சிறந்த கெம்பாவியில் மேன்மைபொருந்திய போகையர் நல்ல நண்பராயிருக்க வல்லவர், காரைக்காலம்மை பரிசுத்தமானதும் மதுரமானதுமான மாங்கனியைக் கொடுக்கவல்லவள், மேன்மைபொருந்திய மெய்ப்பொருளுயனார் உனது திருவெண்ணீற்றினைத் தொழவல்லவர், ஸாமவேதியர் பண்டிதராயிருக்கவல்லவர்.

(வி - ரை.) காவியம் - காவ்யம் என்னும் வடசொற்றிரிபு. காவியம்படிப்போர் - கவிவாணர் எனினுமாம். (௧௪)

ஆண்டருணின் றிருமேனி காவ லன்பர் பசுபதியா
ரம்மவ்வை யன்பாய்ப் போற்றி
வேண்டுறுநற் றாயர்நமித் தண்டி யார்தாம்
விமலவயித் தியர்கான வீணைக் காரர்
பூண்டுலகை யாண்டகன்ற மாதி ராசர்
புகழுமுருத் திரபசு பதியா ரென்பார்
காண்டகுமந் திரவாதர் பிப்பப் பாச்சர்
கசிந்துனது பிரசாதங் கருதிக் கொள்வார்.

(ப - ரை.) அன்பர் - பக்தராகிய, பசுபதியார் - பசுபதிநாயனார், ஆண்டு அருள் - அடிமைகொண்டருள்கின்ற, நின் - உனது, திருமேனி - திருமேனியை, காவல் - காக்கவல்லவர், அம்மவ்வை - பெச்சமாதேவி, அன்பாய் - விருப்பத்துடன், போற்றி - காப்பாற்றி, வேண்டு உறு - வேண்டியவுணவுகளைக்கொடுத்து வளர்க்கின்ற, நற்றாயர் - பெற்றதாயாராயிருக்கவல்லவள், நமித்தண்டியார் - நமித்தண்டிநாயனார், விமலம் - பரிசுத்தரான, வயித்தியர் - வைத்யராயிருக்கவல்லவர், பூண்டு - மேற்கொண்டு, உலகை - உலகத்தை, ஆண்டு - அரசாட்சிசெய்து, அகன்ற - வெறுத்தொழித்த, மாதிராசர் - சகளேசமாதிராசையர், கானவீணைக்காரர் - வீணைவாசிக்கவல்லவர், புகழும் - துதிக்கப்படுகின்ற, உருத்திரபசுபதியார் - ருத்ரபசுபதிநாயனார், என்பார் - என்பவர், காண்தகும் - வணங்குதற்குரிய, மந்திரவாதர் - மந்த்ரவாதியாயிருக்கவல்லவர், பிப்பப்பாச்சர் - பிப்பப்பாச்சையர், கசிந்து - (மனம்) உருகி, உனது - உனது, பிரசாதம் - ப்ரஸாதத்தை, கருதி - விரும்பி, கொள்வார் - உண்ணவல்லவர், எ - று.

(போ - ரை.) பக்தராகிய பசுபதிநாயனார் அடிமைகொண்டருள்கின்ற உனது திருமேனியைக் காக்கவல்லவர், பெச்சமாதேவி விருப்பத்துடன் காப்பாற்றி வேண்டிய வுணவுகளைக்கொடுத்து வளர்க்கின்ற பெற்ற தாயாராயிருக்க வல்லவள், நமித்தண்டிநாயனார் பரிசுத்தரான வைத்யராயிருக்கவல்லவர், மேற்கொண்டு உலகத்தை யரசாட்சிசெய்து வெறுத்தொழித்த சகளேசமாதிராசையர் வீணைவாசிக்கவல்லவர், துதிக்கப்படுகின்ற ருத்ரபசுபதிநாயனார் வணங்குதற்குரிய மந்த்ரவாதியாயிருக்கவல்லவர், பிப்பப்பாச்சையர் மனமுருகி உனது ப்ரஸாதத்தை விரும்பி யுண்ணவல்லவர். (௬௫)

உன்னலமுத் திரையிடுவார் கின்ன ரைய
ருன்வாயிற் றளவாய ரோங்குஞ் சேரர்
நின்னருணற் றவசமெலா மெருத்தி லேற்பார்
நீள்வணிக மல்லையர் நீநன் கார
நன்னெறியார் காட்டக்கோட் டையர் காப்பார்
நண்ணுபயிர்ச் செயல்செய்வோ ரிளைசை மாறர்
துன்னருள்சேர் மாமனர் மலைய ராசர்
சுரிகைசவுண் டையர்நின்கைச் சுரிகை யேற்பார்.

(ப - ரை.) கின்னரையர் - கிந்நரையர், உன் - உனது, நல்ல - (பொக்கிஷங்களுக்கு வேண்டிய) நிரமான, முத்திரையிடுவார் - முத்திரைபோடவல்லவர், ஓங்கும் - உயர்ந்த, சேரர் - சேரமான்பெருமானாயனார், உன் - உனது, வாயில் - திருவாயிலில், தளவாயர் - சோதனை செய்பவராயிருக்கவல்லவர், நீள் - சிறந்த, வணிகமல்லையர் - வணிகமல்லையர், நின் - உனது, அருள் - கருணைக்குரிய, நல் - நல்ல, தவசம் எல்லாம் - தானியங்களெல்லா லக்ஷ்மியையும், எருத்தின் - எருதுகளின்மேல், ஏற்பார் - சுமத்தவல்லவர், நல்நெறியார் - ஸ்ர்

மார்க்கத்தையுடையவராகிய, காட்டக்கோட்டையர்-காட்டக்கோட்டையர், நீ - நீ, நன்கு - நன்மையடையும்படி, ஆர - எழுந்தருளியிருக்க, காப்பார் - காக்கவல்லவர், இளைசைமாறர் - இளையான்குடிமாறநாயனார், நண்ணு - கிடைத்தற்குரிய, பயிர்ச்செயல் - பயிர்வேலை, செய்வோர் - பண்ணவல்லவர், மலையரசர் - பர்வதராஜர், துன் - மிக்க, அருள்சேர் - அன்புடைய, மாமனார் - மாமனாராயிருக்கவல்லவர், சுரிகைசவுண்டையர் - சுரிகைச்சவுண்டையர், நின் - உனது, கைச்சுரிகை - கைவாளை, ஏற்பார் - சுமக்கவல்லவர், எ - று.

(பொ - ரை.) இந்நரையர் உனது பொக்கிஷங்களுக்கு வேண்டிய கிரமமான முத்திரை போடவல்லவர், உயர்ந்த சேரமான்பெருமாணுயனார் உனது திருவாயிலில் சோதனை செய்பவராயிருக்கவல்லவர், சிறந்த வணிகமலையர் உனது கருணைக்குரிய நல்ல தானியங்களெல்லாவற்றையும் எருதுகளின்மேல் சுமத்தவல்லவர், ஸன்மார்க்கத்தை யுடையவராகிய காட்டக்கோட்டையர் நீ நன்மையடையும்படி யெழுந்தருளியிருக்கக் காக்கவல்லவர், இளையான்குடிமாறநாயனார் கிடைத்தற்குரிய பயிர்வேலை பண்ணவல்லவர், பர்வதராஜர் மிக்க அன்புடைய மாமனாராயிருக்கவல்லவர், சுரிகைச்சவுண்டையர் உனது கைவாளைச் சுமக்கவல்லவர். (கசு)

எறிபத்தர் நின்பூக்கூ டினிது காப்பா
ரியலுமடி யார்த்துதிப்பா ரெழிலா ரூரர்
நெறிபற்று மேகாந்த ராமர் நின்னை
நேசியாச் சமயிகளை நெருக்குந் தீர
ரறுவைத்தீ தகற்றுவோர் குறிப்புத் தொண்ட
ரதிகதிறன் மாச்சைய ரமலப் பொம்மர்
வெறியுற்ற நந்தவனம் விரும்பிக் காப்பார்
வீசிநிற்பார் மதவரச ரால வட்டம்.

(ப - ரை.) எறிபத்தர் - எறிபத்தநாயனார், நின் - உனது, பூக்கூடு - பூக்குடலையை, இனிது - நன்றாக, காப்பார் - காக்கவல்லவர், எழில் - அழகுபொருந்திய, ஆரூரர் - சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள், இயலும் - ஸன்மார்க்கத்தையுடைய, அடியார் - சரணர்களை, துதிப்பார் - ஸ்தோத்ரஞ் செய்பவல்லவர், நெறிபற்றும் - ஸன்மார்க்கத்தையுடைய, ஏகாந்தராமர் - ஏகாந்தராமையர், நின்னை - உன்னை, நேசியா - அன்புசெய்யாத, சமயிகளை - பரஸமயவாதிகளை, நெருக்கும் - கொல்லவல்ல, தீரர் - தைர்யத்தையுடையவர், குறிப்புத்தொண்டர் - திருக்குறிப்புத்தொண்டநாயனாரும், அதிகம் - மிகுந்த, திறல் - வெற்றியுடைய, மாச்சையர் - மடிவாலமாச்சையரும், அறுவை - வஸ்த்ரங்களை, தீது அகற்றுவோர் - வெளுக்கவல்லவர்கள், அமலம் - பரிஶுத்தரான, பொம்மர் - பொம்மையர், வெறியுற்ற - மணம்பொருந்திய, நந்தவனம் - பூங்காவனத்தை, விரும்பி - அன்புடன், காப்பார் - காக்கவல்லவர், மதவரசர் - மதவரசர், ஆலவட்டம் - ஆலவட்டம், வீசிநிற்பார் - வீசிநிற்க வல்லவர், எ - று.

(பொ - ரை.) எறிபத்தநாயனார் உனது பூக்குடலையை நன்றாகக் காக்கவல்லவர், அழகுபொருந்திய சுந்தரமூர்த்திஸ்வாமிகள் ஸன்மார்க்கத்தையுடைய சரணர்களை ஸ்தோத்ரஞ்செய்யவல்லவர், ஸன்மார்க்கத்தையுடைய ஏகாந்தராமையர் உன்னை யன்புசெய்யாத பரஸமயவாதிகளைக் கொல்லவல்ல தைர்யத்தையுடையவர், திருக்குறிப்புத்தொண்டநாயனாரும் மிகுந்த வெற்றியுடைய மடிவாலமாச்சையரும் வஸ்த்ரங்களை வெளுக்கவல்லவர்கள், பரிஶுத்தரான பொம்மையர் மணம்பொருந்திய பூங்காவனத்தை யன்புடன் காக்க வல்லவர், மதவரசர் ஆலவட்டம் வீசிநிற்கவல்லவர். (கஎ)



வசவண்ணர் அமைச்சராதல்.

திருநீல கண்டர்தா நவபாண் டங்க
　　டினந்தருவர் விறன்மிண்டர் சிவநே சர்க்கு
வெருவாரை வெட்டவல்லார் விபூதி தன்னை
　　விரும்பார்க்குக் குலச்சிறையார் கழுச் சமைப்பர்
மருவாரு மருவுதற்கு வாத வூரர்
　　மாணிக்க வாசகந்தான் வகுக்க வல்லார்
பெருவாயிற் பாலகரே லெச்சே கெத்தர்
　　பெரியவிட தாரிபர்பாம் பினக்கல் லையர்.

**(ப-ரை.)** திருநீலகண்டர்-திருநீலகண்டநாயனார், நவம்-புதிதாகிய, பாண்டங்கள்-மட்கலயங்களை, தினம்-பிரதிதினமும், தருவர்-கொடுக்கவல்லவர், விறன்மிண்டர்-விறன்மிண்டநாயனார், சிவநேசர்க்கு-சிவபக்தர்களுக்கு, வெருவாரை-பயப்படாதவர்களை, வெட்டவல்லார்-சேதிக்கவல்லவர், விபூதிதன்னை-திருவெண்ணீற்றினை, விரும்பார்க்கு-அபேக்ஷியாதவர்களுக்கு, குலச்சிறையார் - குலச்சிறைநாயனார், கழு-கழுமரங்களை, சமைப்பர்-நட்டுவைக்கவல்லவர், மருவாரும்-பகைவரும், மருவுதற்கு-சரணடைதற்குரிய, வாதவூரர்-திருவாதவூரடிகள், மாணிக்கம்-ரத்நம்போலும், வாசகம்-திருவாசகத்தை, வகுக்கவல்லார்-இயற்றவல்லவர், பெரு-பெரிய, வாயில்-வாயிலில், பாலகர்-த்வாரபாலகரா யிருக்கவல்லவர், லெச்சம்-திருவேலேச்வரத்திலுள்ள, கெத்தர் - கேதையர், பெரிய-சிறந்த, விடதாரியர்-விஷ வைத்தியத்தில் வல்லவர், பாம்பின்- திருஹாவின ஹள்ளியிலுள்ள,அ-அந்த, கல்லையர்-கல்லையர், எ-று.

**(பொ-ரை.)** திருநீலகண்ட நாயனார் புதிதாகிய மட்கலயங்களைப் பிரதிதினமும் கொடுக்கவல்லவர், விறன்மிண்டநாயனார் சிவபக்தர்களுக்குப் பயப்படாதவர்களைச் சேதிக்க வல்லவர், திருவெண்ணீற்றினை யபேக்ஷியாதவர்களுக்குக் குலச்சிறைநாயனார் கழுமரங்களை நட்டுவைக்கவல்லவர், பகைவரும் சரணடைதற்குரிய திருவாதவூரடிகள் ரத்நம் போலும் திருவாசகம் இயற்றவல்லவர், பெரியவாயிலில் த்வாரபாலகரா யிருக்கவல்லவர் திருவேலேச்வரத்திலுள்ள கேதையர், சிறந்த விஷவைத்தியத்தில் வல்லவர் திருஹாவின ஹள்ளியிலுள்ள கல்லையர்.

**(வி-ரை.)** பாம்பு என்பது கன்னடபாஷையில் ஹாவு, எனப் பொருள்படும், இது திசைச்சொல். அள்ளி-கிராமம். (கஅ)

ஏகமுக ராதியா யீரைஞ் ஞூறு
　　மெழின்முகத் தரந்தரமா மிருங்க ணத்தோர்
மாகவுமை பாகவர சங்க ராய
　　மகதேவ மறைமுதல்வ மாறு வின்ப
யோகபர சிவமுத்தி யுதார தீரா
　　வொருகாலு மிறவாதாய் பிறவா தாயென்
றுகவிலை முதலாக வனந்த நாம
　　மன்புடனே துதித்துநிற்க வமர்ந்து வாழ்வாய்.

**(ப-ரை.)** ஏகமுகர்-ஒருமுகமுள்ளவர், ஆதியாய்-முதலாக, ஈர் ஐஞ்ஞூறு ஆம்-ஆயிரமாகிய, எழில்-அழகுபொருந்திய, முகத்தர்-முகத்தையுடையவர்களும், அந்தரம் ஆம்-தேவர்களுமாகிய, இரு-மேன்மைபொருந்திய, கணத்தோர்-கூட்டத்தார், மாக-சிதாகாசனே, உமைபாக-உமாபாகனே, அர-ஹரனே, சங்கராய-சங்கரனே,

மகதேவ - மஹாதேவனே, மறைமுதல்வ - வேதமுதல்வனே, மாறு - இடையறாத, இன்ப-பேரின்பப்பொருளே, யோக-யோகீஸ்வரனே, பரசிவ-பரமசிவனே, முத்தி உதார-மோக்ஷதாயகனே, தீரா-தைர்ய சாலியே, ஒருகாலும்-ஒருகாலத்திலும், இறவாதாய்-சாவாதவனே, பிறவாதாய்-பிறவாதவனே, என்று ஆக-கோடிசூர்யப்ரகாசத்தினைப்போன்ற திவ்ய விக்ரஹத்தையுடையவனே, இவைமுதலாக-இவைமுதலாகிய, அனந்தநாமம்-அநேக திருநாமங்களினால், அன்புடனே-பக்தியுடனே, துதித்துநிற்க-தோத்திரஞ்செய்துநிற்க, அமர்ந்துவாழ்வாய்-எழுந்தருளியிருப்பவனே, எ-று.

(பொ-ரை.) ஒருமுகமுள்ளவர் முதலாக ஆயிரமாகிய அழகுபொருந்திய முகங்களுள்ள தேவர்களாகிய மேன்மையாகிய கூட்டத்தார்கள், சிதாகாசனே! உமாபாகனே! ஹரனே! சங்கரனே! மஹாதேவனே! வேதமுதல்வனே! இடையறாத பேரின்பப்பொருளே! யோகீஸ்வரனே! பரமசிவனே! மோக்ஷதாயகனே! தைர்யசாலியே! ஒருகாலத்திலும் சாவாதவனே! பிறவாதவனே! கோடிசூர்யப்ரகாசத்தைப்போன்ற திவ்ய விக்ரஹத்தையுடையவனே! இவைமுதலாகிய அநேகமான திருநாமங்களினால் பக்தியுடனே தோத்திரஞ்செய்துநிற்க வெழுந்தருளியிருப்பவனே.

(வி-ரை.) மாகம் - ஆகாயம். ஏகம்-ஒன்று. என்றாக- என்பதை என்றிவ்வாறாக எனப்பொருட் கோடலுமொன்று. (கக)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இப்படிப் படியி லாத விரும்பெருஞ் செல்வ முள்ளா
யொப்படி முடியொன் றில்லா வொருமுத லாகி நிற்பா
யெப்படி யென்னை முக்க ணீயெனக் கேட்டா யிந்தச்
செப்படி யென்மேல் வைத்த திருவுளக் கருணை யன்றோ.

(ப-ரை.) இப்படி-இவ்வாறு, படி-ஒப்பு, இல்லாத-அற்ற, இரும்பெரும்-மிகப்பெரிய, செல்வம் - ஐஸ்வர்யம், உள்ளாய்-உண்டாயிருப்பவனே, ஒப்பு - சமானமும், அடி-ஆதியும், முடி-அந்தமும், ஒன்று - ஆகிய ஒன்றும், இல்லா - இல்லாத, ஒரு-ஒப்பற்ற, முதல் ஆகி-முழுமுதற்பொருளாகி, நிற்பாய்-நிற்பவனே, என்னை-அடியேனை, முக்கண்-மூன்றுகண், நீ-தா, என்ன-என்று, எப்படி-எவ்வாறு, கேட்பாய்-கேட்கத் துணிந்தனை, இந்த-இந்த, செப்படி-மாயவித்தையானது, என்மேல்-அடியேன்மீது, வைத்த-வைத்த, திருவுளக்கருணை-திருவுளத்தி லெழுந்தருளிய திருவருள், அன்றோ-அல்லவா?, எ-று.

(பொ-ரை.) இவ்வாறு ஒப்பற்ற மிகப்பெரிய ஐஸ்வர்யமுண்டாயிருப்பவனே! சமானமும் ஆதியும் அந்தமுமாகிய ஒன்றுமில்லாத ஒப்பற்ற முழுமுதற் பொருளாகி நிற்பவனே! அடியேனை மூன்றுகண் தாவென்று எவ்வாறு கேட்கத் துணிந்தனை? இந்த மாயவித்தை யானது அடியேன்மீது வைத்த திருவுள்ளத்தி லெழுந்தருளிய திருவருளல்லவா? (உ0)

நின்களங் கறுக்கு முன்ன நெடும்புர மெரியா முன்ன
மன்கன மலையன் பெற்ற மாதைநீ வரையா முன்ன
முன்கக னதி யட்ட மூர்த்தநீ செய்யா முன்ன
மென்கம லத்தோன் மாலுன் விகாரத்திற் சனியா முன்னம்.

(ப-ரை.) நின்-உனது, களம்-ஸ்ரீகண்டமானது, கறுக்கும்-விஷத்தினால் கறுத்தற்கு, முன்னம்-முன்னரும், நெடு-பெரிய, புரம்-திரிபுரங்கள், எரியா-வெந்தொழியாத, முன்னம்-முன்னரும், மன்-நிலைபெற்ற, கனம்-மேன்மைபொருந்திய, மலையன்-பர்வதராஜன், பெற்ற-ஈன்றருளிய, மாதை-உமாதேவியாரை, நீ-நீ, வரையா-திருமணஞ்செய்யாத, முன்னம்-முன்னரும், முன்-முதன்முதலில், ககனாதி - ஆகாயம் முதலாகிய, அட்டமூர்த்தம்-அஷ்டமூர்த்தம், நீ-நீ, செய்யா-பண்ணாத, முன்னம் முன்னரும், மெல்-மென்மையாகிய, கமலத்தோன்-தாமரை மலரில் வசிக்கின்ற பிரமனும், மால்-திருமாலும், உன்-உனது, விகாரத்தின் - சக்திஸ்புரணத்தினால், சனியா-பிறவாத, முன்னம் - முன்னரும், எ-று.

(பொ-ரை.) உனது ஸ்ரீ கண்டமானது விஷத்தினாற் கறுத்தற்கு முன்னரும், பெரிய திரிபுரங்கள் சாம்பராதற்கு முன்னரும், நீ நிலைபெற்ற மேன்மைபொருந்திய பர்வதராஜன் ஈன்றருளிய உமாதேவியாரைத் திருமணஞ்செய்தற்கு முன்னரும், நீ முதன்முதலில் ஆகாயமுதலாகிய அஷ்டமூர்த்தம் பண்ணாத முன்னரும், மென்மையாகிய தாமரை மலரில் வசிக்கின்ற பிரமனும் திருமாலும் உனது சக்திஸ்புரணத்தினால் பிறவாததற்கு முன்னரும்.

(வி-ரை.) ககனம்-ஆகாயம். அட்டமூர்த்தம்-எட்டுவடிவம்-நிலம், நீர், நெருப்பு, வாயு, ஆகாயம், சந்திரன், சூரியன், ஆன்மா என்பனவாம். விகாரம் என்றது உருவத் திருமேனி யாதலை. (உக)

அதற்குமுன் னதற்கு முன்னீ யாண்டவ னடிமை நானின்
பதக்கம லங்க ளல்லாற் பற்றிலே னெனப்ப ணிந்து
மதத்துரை சிறிது மில்லா வசவேசர் முகம்பார்த் தெம்மா
னிதத்தநின் பத்தி காட்ட வெய்தினோ மெனம றைந்தான்.

(ப-ரை.) அதற்குமுன்-பிரமன் திருமால் பிறப்பதற்கு முன்னரும், அதற்குமுன் அதற்கு முன்னரும், நீ-நீ, ஆண்டவன்-இறைவன், நான்-நான், அடிமை-அடிமைக்காரன், நின்-உனது, பதம்-திருவடி, கமலங்கள்-தாமரைகள், அல்லால்-அல்லாது, பற்று-ஆதரவு, இல்லேன்-இல்லாதவனாயிருக்கிறேன், என்ன-என்று, பணிந்து-சாஷ்டாங்கமாய் வணங்கி, மதத்து-செருக்கான, உரை - வார்த்தைகள், சிறிதும்-சற்றும், இல்லா-இல்லாத, வசவேசர்-வசவண்ணராது, முகம்-திருமுகத்தை, பார்த்து-நோக்கி, எம்மான்-சிவபெருமான், இதத்த-விரும்புதற்குரிய, நின்-உனது, பத்தி-பக்தியை, காட்ட-உலகத்தார்க்குத் தெரிவிக்கும் பொருட்டு, எய்தினோம்-வந்தோம், என்ன-என்று சொல்லி, மறைந்தான்-அந்தர்த்தான மாயினன், எ-று.

(பொ-ரை.) பிரமன் திருமால் பிறப்பதற்கு முன்னரும், அதற்கு முன்னரும், நீ இறைவன், நான் அடிமைக்காரன், உனது திருவடித் தாமரைகளல்லாது வேறோராதரவில்லாத வனாயிருக்கிறேனென்றுசொல்லிச் சாஷ்டாங்கமாய்வணங்கிச்செருக்கான வார்த்தைகள் சற்று மில்லாத வசவண்ணரது திருமுகத்தைநோக்கிச் சிவபெருமான் விரும்புதற்குரிய உனது பக்தியை உலகத்தார்க்குத் தெரிவிக்கும் பொருட்டு வந்தோமென்று திருவாய்மலர்ந்து அந்தர்த்தானமாயினன். (உஉ)

நெற்றிக்கண்கேட்ட திருவிளையாடல் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௬௩௧.

சிவமயம்.

# ஆடைவளர்ந்த திருவிளையாடல்.

கலிநிலைத்துறை.

இந்த லீலையில் வசவேச ரின்புறு நாளில்
வந்த ரும்பொரு ளனுதின மிவர்கையில் வாங்குங்
கந்த வண்புயக் குமார சங் கமர்பொருண் மடவாள்
அந்த மாளிகை யிருந்தொரு தாதியை யழையா.

(ப-ரை.) இந்த-இந்த, லீலையில் - திருவிளையாடலில், வசவேசர் - வசவண்ணர், இன்பு உறும் - மனமகிழ்கின்ற, நாளில்-காலத்தில், அனுதினம்-நாடோறும், வந்து-சென்று, அரு - அரிதாகிய, பொருள் - திரவியத்தை, இவர் - இவ் வசவண்ணரது, கையில் - திருக்கரத்தில், வாங்கும் - பெற்றுக்கொண்டு போகின்ற, கந்தம் - சந்தனக் கலவை பூசப்பெற்ற, வள்-அழகு பொருந்திய, புயம் - தோள்களையுடைய, குமார சங்கமர் - விடஜங்கமரது, பொருள்மடவாள் - வேசியானவள், அந்தம் - அழகிய, மாளிகையிருந்து - வீட்டிலிருந்து, ஒரு - ஒரு, தாதியை - தோழியை, அழையா - அழைத்து, எ-று.

(பொ-ரை.) இந்தத் திருவிளையாடலில் வசவண்ணர் மனமகிழ்ச்சியாயிருக்குங் காலத்தில் நாடோறும் சென்று அரிதாகிய திரவியத்தை இவ் வசவண்ணரது திருக் கரத்தில் பெற்றுக்கொண்டு போகின்ற சந்தனக்கலவை பூசப்பெற்ற அழகு பொருந் திய தோள்களையுடைய விடஜங்கமரது வேசியானவள் அழகிய வீட்டிலிருந்து ஒரு தோழியை யழைத்து.

(வி-ரை.) அழையா-செய்யா வென்னும் வாய்பாட்டு-இறந்தகாலவினை யெச்சம்.

இன்று நஞ்செல வதற்கருள் வசவேச னீயும்
வென்றி சேர்பொருள் கேட்டுநாம் விடுத்தன மென்று
சென்று நீயுரை தருகுவன் கைக்கொடு செல்வாய்
மன்றி லங்குழ லாயென வுரைத்தனள் வருவாள்.

(ப-ரை.) மன்றல்-வாசனைபொருந்திய, அம்-அழகிய, குழலாய்-கூந்தலையுடைய வளே, இன்று - இன்றைக்கு, நம் - நமது, செலவு அதற்கு - வீட்டுச்செலவுக்காக, அருள்-கிருபையுள்ள, வசவேசன்-வசவண்ணன், ஈயும்-கொடுக்கின்ற, வென்றிசேர்-வெற்றியையுடைய, பொருள்-திரவியத்தை, கேட்டு-கேட்டு, நாம்-நாம், விடுத்தனம்-அனுப்பினோம், என்று-என்று, சென்று-போய், நீ-நீ, உரை-சொல், தருகுவன்-கொடுப்பான், கைக்கொடு-அந்தப்பொருளைப் பெற்றுக்கொண்டு, செல்வாய்-வருவாய், என்ன - என்று, உரைத்தனள் - சொன்னாள், வருவாள்-தோழிசெல்வாளாயினள், எ-று.

(பொ - ரை.) வாசனைபொருந்திய அழகிய கூந்தலையுடையவளே! இன்றைக்கு நமது வீட்டுச்செலவுக்காகக் கிருபையுள்ள வசவண்ணன் கொடுக்கின்ற வெற்றியையுடைய திரவித்தைக்கேட்டு நாம் அனுப்பினோமென்று போய் நீ சொல், கொடுப்பான், அந்தப்பொருளைப்பெற்றுக்கொண்டு வருவாயென்று சொன்னாள், தோழிசெல்வாளாயினள். எ-று.

(வி - ரை.) செல்வதற்கு என்பதில் அது-பகுதிப்பொருள் விகுதி. (ட)

தண்ட நாயக ரரமனை சார்ந்தகம் புகுந்தங்
கொண்ட ரும்பதி விரதைகங் காம்பிகை யுடுக்கு
மண்ட ரும்பெரு விலை பெறும் வளங்கொள் பட்டாடை
கண்ட கந்தனில் விரும்பிநில் லாமலே கடுகி.

(ப-ரை) தண்டநாயகர் - வசவண்ணரது, அரமனை - திருமாளிகையை, சார்ந்து - அடைந்து, அகம் - உள்ளே, புகுந்து - நுழைந்து, அங்கு - அவ்விடத்தில், ஒள்தரும் - சுந்தரமான, பதிவிரதை - பதிவிரதாசிரோமணியாகிய, கங்காம்பிகை - கங்காம்பிகையார், உடுக்கும் - தரித்திருக்கின்ற, மண்தரும் - மேன்மைபொருந்திய, பெரு - உயர்ந்த, விலைபெறும் - விலைபெற்ற, வளம்கொள் - அழகாகிய, பட்டாடை - பட்டுச்சேலையை, கண்டு - பார்த்து, அகம்தன்னில் - மனத்தில், விரும்பி-அதையிச்சித்து, நில்லாமல் - (பொருளை வேண்டாது) தாமதிக்காமல், கடுகி - விரைந்து, எ-று.

(பொ - ரை.) வசவண்ணரது திருமாளியையடைந்து, உள்ளே நுழைந்து, அவ்விடத்தில் சுந்தரமான பதிவிரதாசிரோமணியாகிய கங்காம்பிகையார் தரித்திருந்த மேன்மைபொருந்திய உயர்ந்தவிலைபெற்ற அழகாகிய பட்டுச்சேலையைப்பார்த்து, மனத்தில் அதையிச்சித்து பொருளைவேண்டாது தாமதிக்காமல் விரைந்து.

(வி - ரை.) பதிவிரதை - கணவனிடத்து மிகப்பிரியமுள்ளவள். அகந்தன்னில் என்பதில் தன்சாரியை. கங்காம்பிகையார் வசவண்ணரது மனைவியார். (௬)

திரும்பி வந்துதன் னாண்டவ ளுறைவிடஞ் சேர்ந்து
விரும்பி யம்மகே ளுனுரைக் கேனொரு விசேடங்
கருந் தடங்கணா ணந்திகள் பன்னிகங் காம்பை
வருந்து நுண்ணிடை யுடுத்திருக் கின்றவள் பட்டின்.

(ப-ரை.) திரும்பி - மீண்டு, வந்து - சென்று, தன் - தனது, ஆண்டவள் - தலைவியாகிய வேசி, உறை - வசிக்கின்ற, இடம் - வீட்டை, சேர்ந்து - அடைந்து, அம்ம - அம்மா, விரும்பி - கவனமாய், கேள் - கேட்பாய், நான் - நான், ஒரு - ஒரு, விசேடம் - முக்கியமான விஷயத்தை, உரைக்கேன் - சொல்லுவேன், கரு - கரிய, தடம் - விசாலம் பொருந்திய, கண்ணாள் - கண்களையுடையவளும், நந்திகள் - வசவண்ணரது, பன்னி - மனையாளுமாகிய, கங்காம்பை - கங்காம்பிகையார், வருந்தும் - துன்புறுகிற, நுண் - நுட்பமாகிய, இடை - இடையின்கண், உடுத்திருக்கின்ற - தரித்திருக்கின்ற, வள் - வளப்பம்பொருந்திய, பட்டின் - பட்டுச்சேலையின், எ-று.

(பொ-ரை.) மீண்டு சென்று, தனது தலைவியாகிய வேசி வசிக்கின்ற வீட்டையடைந்து, அம்மா! கவனமாய்க்கேட்பாய், நான் ஒரு முக்கியமான விஷயத்தைச் சொல்லுவேன், கரிய விசாலம்பொருந்திய கண்களையுடையவளும் வசவண்ணரது மனையாளுமாகிய கங்காம்பிகையார் துன்புறுகிற நுட்பமாகிய இடையின்கண் தரித்திருக்கின்ற வளப்பம் பொருந்திய பட்டுச்சேலையின்.

(வி-ரை.) பன்னி-பத்நி என்னும் வடசொற்றிரிபு. விசேடம்-விசேஷம் என்னும் வடசொற்றிரிபு. அம்ம-அண்மை விளி. (௪)

ஒளியு நல்லலங் காரமு மொண்மையு மொப்புந்
தெளியு மிவ்வுல கத்தினு ளில்லையச் சேலை
பளித குங்கும முலையுமை கயிலையம் பரமன்
களிகொ ளும்படி யுடுப்பளோ வறிகிலேன் கருதின்.

(ப-ரை.) ஒளியும்-பிரகாசமும், நல்-சிறந்த, அலங்காரமும் - அழகும், ஒண்மையும் - பெருமையும், ஒப்பும் - சமானமும், தெளியும் - ஆராய்ந்தறிதற்குரிய, இ - இந்த, உலகத்தினுள் - உலகத்தில், இல்லை - இல்லை, அ - அந்த, சேலை - பட்டுச்சேலையை, பளிதம் - பச்சைக்கற்பூரங்கலந்த, குங்குமம் - குங்குமக்குழம் பணிந்த, முலை - திருத்தனங்களையுடைய, உமை - உமாதேவி, கயிலை - திருக்கயிலாயமலையில் வீற்றிருக்கின்ற, அம் - அழகு பொருந்திய, பரமன் - சிவபெருமான், களிகொள்ளும்படி-(திருவுள்ளம்) சந்தோஷிக்கும்படி, உடுப்பளோ - தரிப்பளோ, கருதின் - நினைக்குமிடத்து, அறிகிலேன் - உணர்ந்திலேன், எ-று.

(பொ-ரை.) பிரகாசமும், சிறந்த அழகும், பெருமையும், சமானமும், ஆராய்ந்தறிதற்குரிய இந்த உலகத்தில் இல்லை. அந்தப்பட்டுச்சேலையைப் பச்சைக்கற்பூரங் கலந்த குங்குமக்குழம்பணிந்த திருத்தனங்களையுடைய உமாதேவி திருக்கயிலாயமலையில் வீற்றிருக்கின்ற சிவபெருமான் திருவுள்ளம் சந்தோஷிக்கும்படித் தரிப்பளோ? நினைக்குமிடத்து உணர்ந்திலேன். (௫)

அவ்வி சேடநற் றிவ்வியாம் பரநினை யணையுஞ்
செவ்வி சேர்முகச் சங்கமர் வசவணர்ச் சேர்ந்து
வவ்வி யாசையாற் கேட்டலு மகிழ்ந்தளிக் கின்று
னவ்வி போல்விழி யவ்வைநீ யுடுக்கலா நயப்பால்.

(ப-ரை.) அ - அந்த, விசேடம் - ஆச்சரியமான, நல் - சிறந்த, திவ்விய - தேவதாயோக்கியமான, அம்பரம் - பட்டுச்சேலையை, நின்னை - உன்னை, அணையும் - தழுவுகின்ற, செவ்விசேர் - அழகுபொருந்திய, முகம் - முகத்தினையுடைய, சங்கமர் - (உன் தலைவராகிய) ஜங்கமர், வசவண்ணர் - வசவேசரை, சேர்ந்து - அடைந்து, வவ்வி- கிரகிக்க, ஆசையால் - விருப்பத்துடன், கேட்டலும் - கேட்டமாத்திரத்தில், மகிழ்ந்து - சந்தோஷித்து, அளிக்கின்றுன் - கொடுக்கின்றுன், நவ்வி - மான் (கண்), போல் - போன்ற, விழி - கண்ணையுடைய, அவ்வை - அம்மா, நீ - நீ, நயப்பால் - விருப்பத்துடன், உடுக்கலாம் - தரித்துக்கொள்ளலாம், எ-று.

(பொ-ரை.) அந்த ஆச்சரியமான சிறந்த தேவதா யோக்கியமான பட்டுச் சேலையை உன்னைத்தழுவுகின்ற அழகுபொருந்திய முகத்தினையுடைய உன் தலைவராகிய ஜங்கமர் வசவேசரை யடைந்து கிரகிக்க விருப்பத்துடன் கேட்ட மாத்திரத்தில் மகிழ்ந்து கொடுக்கின்றுன். மான் கண் போன்ற கண்ணையுடைய அம்மா! நீ விருப்பத்துடன் தரித்துக்கொள்ளலாம்.

(வி - ரை) நவ்வி - ஆகுபெயர். அவ்வை - அண்மை விளி. (௬)

## கலிவிருத்தம்.

நந்தெரு விடந்தொறு நண்ணு சங்கமர்
தந்தெரி வையர்க்கு நற் றண்ட நாயகன்
சிந்தனை மகிழ்ந்தளித் திடத்தி னங்கொடு
வந்ததவர் தரத்தர மகிழ்ந்து டுத் திடும்.

(ப - ரை.) நம் - நமது, தெரு - வீதியிலுள்ள, இடம் தொறும் - வீடுகள்தோறும், நண்ணும் - சேர்ந்திருக்கின்ற, சங்கமர் - விடஜங்கமர்கள், தம் - தமது, தெரிவையர்க்கு - பெண்களுக்கு, நல் - மேன்மைபொருந்திய, தண்டநாயகன் - வசவண்ணர், சிந்தனைமகிழ்ந்து - மனமகிழ்ச்சிகொண்டு, அளித்திட - கொடுக்க, தினம் - நாடோறும், கொடுவந்து - கொண்டுவந்து, அவர் - அவர்கள், தரத்தர - கொடுக்கக்கொடுக்க, மகிழ்ந்து - (அப்பெண்கள்) சந்தோஷித்து, உடுத்திடும் - தரித்துக்கொள்கிற, எ-று.

(பொ - ரை.) நமது வீதியிலுள்ள வீடுகள்தோறும் சேர்ந்திருக்கின்ற விடஜங்கமர்கள் தமது பெண்களுக்கு மேன்மைபொருந்திய வசவண்ணர் மனமகிழ்ச்சிகொண்டு கொடுக்க நாடோறும்கொண்டுவந்து அவர்கள் கொடுக்கக் கொடுக்க அப்பெண்கள் சந்தோஷித்துத் தரித்துக்கொள்கிற.

(வி - ரை.) தொறும் - எஞ்சாமைபொருட்டு வருவதோர் இடைச்சொல், ஈண்டு வினையெச்சப் பொருட்டு நின்றது. தெரிவையர் - பருவங்குறியாது பெண்டிர் பொருட்பட்டுப் பொதுவாய் நின்றது. (எ)

## கலிநிலைத்துறை.

புதிய பல்வளஞ் செயரஞ்சி காம்போசஞ் சீனஞ்
சிதைவில் பரசிவத் திலகநற் புயனிறந் தேசரி
யுதய ராகமிவ் வகையகங் காம்பிகை யுடுக்கு
நிதியி னம்பரத் தோரிழை விலைபெறு நினைக்கின்.

(ப - ரை.) புதிய - புதியதும், பல் - அநேகமானதும், வளம் - வளப்பமானதுமாகிய, செயரஞ்சி - ஜெயரஞ்சி சேலைகள், காம்போசம் - காம்போஜ சேலைகள், சீனம் - சைன சேலைகள், சிதைவு இல் - அழிவற்ற, பரசிவத்திலகம் - ருத்ர திலகச் சேலைகள், நல் - சிறந்த, புயல்நிறம் - மேகவர்ணசேலைகள், தேசரி - தேசரிச்சேலைகள், உதயராகம் - உதயராகச்சேலைகள், இவ்வகைய - இவ்விதங்களாகிய சேலைகள், கங்காம்பிகை - கங்காம்பிகையார், உடுக்கும் - தரிக்கின்ற, நிதியின் - ஸ்வர்ணமயமான, அம்பரத்து - சேலையின், ஓர் - ஒரு, இழை - நூலின், விலை - விலை, பெறு - மதிக்கப்பெறுவாம், நினைக்கின் - யோசிக்குமிடத்து. எ-று.

(பொ - ரை.) புதியதும், அநேகமானதும், வளப்பமானதுமாகிய ஜயரஞ்சிசேலைகள், காம்போஜ சேலைகள், சைன சேலைகள், அழிவற்ற ருத்ர திலகச்சேலைகள், சிறந்த மேகவர்ண சேலைகள், தேசரிசேலைகள், உதயராகச்சேலைகள், இவ்விதங்களாகிய சேலைகள் எல்லாம் கங்காம்பிகையார் தரிக்கின்ற பீதாம்பரம்பரத்தின் ஒரு நூலின் விலைமதிக்கப் பெறுவாம்.

(வி - ரை.) ஜயரஞ்சி, காம்போஜம், சீனம் என்பன தேசங்களின் பெயர்கள். இவைகள் அவ்வந்தத்தேசத்தில் நெய்யப்பட்ட சேலைகளுக்குப் பெயர்களாயின. ருத்ரதிலகச்சேலை - சிவபெருமான் நெற்றியில் தரிக்கிற திலகம்போலப் பொட்டுகளுள்ளசேலைகள். உதயராகச்சேலை-அருணோதயக்காலத் துண்டாகின்ற செந்நிறச் சேலைகள். (அ)

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எனவுரைத்த தாதிதனை மகிழ்ந்து நோக்கி
யிதமுரைத்துச் சங்கமர்மு னினிய ராக
மனமுருகும் வகைபாடிக் கூடி நல்ல
மதனகலை விதமெல்லா மகிழச் செய்தே
யனகர்வச வேசுரர்மு னணைந்து நீரங்
கவர்தேவி கங்காம்பை யழகாற் சாத்துங்
கனகமிகப் பெறுஞ்சேலை கேட்டு வாங்கிக்
கடிதின்னே வரிலென்மேற் காத லுள்ளீர்.

(ப - ரை.) என்ன - என்று, உரைத்த - சொன்ன, தாதிதனை - தோழியை, மகிழ்ந்து - சந்தோஷித்து, நோக்கி - பார்த்து, இதம் - [illegible]வசனங்கள், உரைத்து - சொல்லி, சங்கமர் - விடஜங்கமர்க்கு, முன் - எ[illegible]ர, மனம் - நெஞ்சம், உருகும் வகை - கசியும்படி, இனிய - இரஞ்சிதமான, ராகம் - (பலவிதமான) இராகங்களை, பாடி - பாடி, கூடி - அணைந்து, நல்ல - சிற்றின்பரசமுள்ள, மதன கலை விதம் எல்லாம் - கொக்கோகசாத்திரத்தின்படியெல்லாம், மகிழச்செய்து - மனமகிழும்படி நடத்தி, நீர் - நீர், அனகர் - பரிசுத்தரான, வசவேசுரர் - வசவண்ணர், முன் - திருமுன்பு, அணைந்து - போய், அங்கு - அவ்விடத்தில், அவர் - அவருடைய, தேவி - மனைவியாராகிய, கங்காம்பை - கங்காம்பையார், அழகால் - அழகாக, சாத்தும் - உடுக்கின்ற, கனம் மிகப்பெறும் - மிக்க பொருள் மதிப்புள்ள, சேலை-பீதாம்பரத்தை, கேட்டு - (கொடுக்கும்படி) கேட்டு, வாங்கி - பெற்றுக்கொண்டு, கடிது - சீக்கிரமாக, இன்னே - இப்போதே, வரில் - வருவீராயின், என் மேல் - அடியவள்மீது, காதல் உள்ளீர் - விருப்பமுள்ளவராவீர், எ-று.

(போ - ரை.) என்று சொன்ன தோழியைச் சந்தோஷித்துப்பார்த்து, இனிய வசனங்கள்சொல்லி, விடஜங்கமர்க்கெதிரே நெஞ்சம் கசியும்படி இரஞ்சிதமான பலவிதமான விராகங்களைப்பாடி யணைந்து, சிற்றின்பரசமுள்ள கொக்கோக சாத்திரத்தின்படி யெல்லாம் மனமகிழும்படி நடத்தி, நீர் பரிசுத்தரான வசவண்ணர் திருமுன்புபோய் அவ்விடத்தில் அவருடைய மனைவியாராகிய கங்காம்பையார் அழகாக உடுக்கின்ற பீதாம்பரத்தைக் கொடுக்கும்படிக்கேட்டுப் பெற்றுக்கொண்டு சீக்கிரமாக இப்போதே வருவீராயின் அடியவள்மீது விருப்பமுள்ளவராவீர்.

(வி - ரை.) பீதாம்பரம் - கனகாம்பரம். கனகம், பீதம் - பொன். அம்பரம் - வத்திரம். (௯)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அவளுரைத் தனவச் சொற்கேட் டப்படி செய்து மென்று
தவளவெண் ணீற்று நெற்றிச் சங்கமர் விரைந்து சென்று
பவளமெய் வசவ தேவர் பாற்சென்று வசவ கேணின்
றவளுடுத் ணிடைகங் காம்பை யுடுக்குமென் றுகிலீ யென்றார்.

(ப - ரை.) அவள் - அவ் வேசி, உரைத்தன - சொன்னவையாகிய, அ - அந்த, சொல் - வார்த்தைகளை, கேட்டு - கேட்டு, அப்படி - அவ்வாறு, செய்தும் - செய்வோம், என்று - என்று சொல்லி, தவளம் - வெண்மையாகிய, வெள் நீறு - திருவெண்ணீற்றினை யணிந்த, நெற்றி - நெற்றியையுடைய, சங்கமர் - விடஜங்கமர், விரைந்து-விரைவாக, சென்று-போய், பவளம்-பவளம் போலும் செந்நிறம் வாய்ந்த, மெய் - திருமேனியையுடைய, வசவதேவர் பால் - வசவண்ணரிடத்து, சென்று - போய், வசவ - வசவண்ணனே, கேள் - கேட்பாய், நின் - உனது (மனைவியாராகிய), துவளும்-அசைகின்ற, நுண் - நுட்பமாகிய, இடை-இடையையுடைய, கங்காம்பை-கங்காம்பிகையார், உடுக்கும்-தரிக்கின்ற, மெல்-மிருதுவாகிய, துகில்-பீதாம்பரத்தை, ஈ - கொடு, என்றார் - என்று கேட்டனர். எ - று.

(பொ-ரை.) அவ் வேசியானவள் சொன்னவையாகிய அந்த வார்த்தைகளைக் கேட்டு, அவ்வாறுசெய்வோமென்றுசொல்லி, வெண்மையாகிய திருவெண்ணீற்றினை யணிந்த நெற்றியையுடைய விடஜங்கமர் விரைவாகப்போய், பவளம்போலும் செந்நிறம் வாய்ந்த திருமேனியையுடைய வசவண்ணரிடத்துப்போய், வசவண்ணனே! கேட்பாய், உனது மனைவியாராகிய அசைகின்ற நுட்பமாகிய இடையையுடைய கங்காம்பிகையார் தரிக்கின்ற மிருதுவாகிய பீதாம்பரத்தைக் கொடென்று கேட்டனர். (௧0)

சங்கம ருரைத்த சொல்லைச் சங்கமே சுரன்சொல் லென்றே
யங்கநற் புளகங் கொள்ள வத்தநின் னடியேன் செய்த
துங்கமா தவமின் றன்றோ துணைசெய்த தெனக்கென் றன்பான்
மங்கைகங் காம்பை தன்னை வரச்சொலு கென்றாள் விட்டார்.

(ப - ரை.) சங்கமர் - (வசவண்ணரும்) விடஜங்கமர், உரைத்த - சொன்ன, சொல்லை - வார்த்தைகளை, சங்கமேசுரன் - கூடலசங்கமேசுவரன், சொல் என்று-திருவாக்கென்று பாவித்து, அங்கம் - திருமேனியானது, நல் - (சந்தோஷ மேலீட்டால்) மிகவும், புளகம் கொள்ள - மயிர்ச்சிலிர்த்தல் கொண்டு (அவ் விடஜங்கமரை நோக்கி), அத்த - தந்தையே, நின்-உனது, அடியேன் - அடியனேன், செய்த - பண்ணிய, துங்கம் - பரிசுத்தமாகிய, மா - பெரிய, தவம் - தவம், இன்று - இந்த நாள், அன்றோ - அல்லவோ, எனக்கு - அடியேனுக்கு, துணை செய்தது - சித்தி பெற்றது, என்று-என்று, அன்பால் - விருப்பத்துடன், மங்கை - மனைவியாராகிய, காங்காம்பை தன்னை - கங்காம்பிகையாரை, வர - (இவ்விடத்திற்கு) வரும்படி, சொலுக - சொல்லக்கடவாய், என்று-என்று கட்டளையிட்டு, ஆள் - தூதனை, விட்டார் - அனுப்பினர். எ - று.

(பொ - ரை.) வசவண்ணரும், விடஜங்கமர் சொன்ன வார்த்தைகளைக் கூடல சங்கமேசுவரன் திருவாக்கென்று பாவித்து, திருமேனியானது சந்தோஷ மேலீட்டால் மிகவும் மயிர்ச்சிலிர்த்தல் கொண்டு, அவ் விடஜங்கமரை நோக்கி, தந்தையே! உனது அடியனேன் செய்த பரிசுத்தமாகிய பெரிய தவம் இந்த நாளல்லவோ அடியேனுக்குச் சித்திபெற்றதென்று, விருப்பத்துடன் மனைவியாராகிய கங்காம்பிகையாரை இவ்விடத்திற்கு வரும்படிச் சொல்லக் கடவாயென்று கட்டளையிட்டுத் தூதனை யனுப்பினர். (௧௧)

தூதியர் தூதர் வார்த்தை தன்னைக்கேட் டுண்ணு டுங்கி
நீதிசேர் தண்ட நாத னிறைந்தபட் டத்தி ராணி
கோதில்பத் தினியா சாரக் கூடத்தில் வருவ தென்னென்
றோதியுள் ளஞ்சிக் கங்காம் பிகைசெவி யுறவு ரைத்தார்.

(ப - ரை.) தாதியர் - (கங்காம்பிகையாரின்) தோழிமார்கள், தூதர் - ஆளினுடைய, வார்த்தை தன்னை - சொற்களை, கேட்டு - கேட்டு, உள் - மனம், நடுங்கி - அஞ்சி, நீதிசேர் - நீதியுள்ள, தண்டநாதன் - வசவண்ணரது, நிறைந்த - கற்புடைய, பட்டத்து இராணி - இராஜாத்தியாகிய, கோது இல் - குற்றமற்ற, பத்தினி - மனைவியார், ஆசாரக்கூடத்தில் - அத்தாணிமண்டபத்தில், வருவது - எழுந்தருளுதற்குக் காரணம், என் - யாது, என்று - என்று, ஓதி - தம்முள் பேசிக்கொண்டு, உள் - மனம், அஞ்சி - நடுங்கி, கங்காம்பிகை - கங்காம்பிகையார், செவி உற - காதிற் படும்படி, உரைத்தார் - சொன்னார்கள். எ - று.

(பொ - ரை.) கங்காம்பிகையாரின் தோழிமார்கள் ஆளினுடைய சொற்களைக் கேட்டு மனமஞ்சி, நீதியுள்ள வசவண்ணரது கற்புடைய இராஜாத்தியாகிய குற்றமற்ற மனைவியார் அத்தாணிமண்டபத்தில் எழுந்தருளுதற்குக் காரணம் யாது? என்று தம்முள் பேசிக்கொண்டு மனம் நடுங்கிக் கங்காம்பிகையார் காதிற்படும்படிச் சொன்னார்கள். (கஉ)

சிவனருச் சனைமேன் மோகி செய்யவெண் பூதி யாகி
தவநெறி விவேகி யாகி சதாசார நீதித் தாகி
பவநெறி விராகி தூய்ய பதிவிர தத்தா லேகி
யுவமையி லஞ்செ ழுத்தா யூகிதன் மத்தி யாகி.

(ப - ரை.) சிவன் அருச்சனை - (தாதிகளால் அத்தாணிமண்டபத்திற்கு எழுந்தருளவேணுமென்று சொல்லக்கேட்டலும்) சிவலிங்கபூஜையின், மேல் - மீது, மோகி - எப்போதும் விருப்பமுள்ளவளும், செய்ய - அழகிய, வெண்பூதி - திருவெண்ணீறணிந்த, ஆகி - திருமேனியுள்ளவளும், தவம் நெறி - தபோமார்க்கத்தினையுடைய, விவேகியாகி - ஞானமுள்ளவளும், சதாசாரம் - நல்லொழுக்கமாகிய, நீதி - ஸத்ய மார்க்கத்தில், தாகி - விருப்பமுள்ளவளும், பவநெறி - பிறவி மார்க்கத்தில், விராகி - வெறுப்புள்ளவளும், தூய்ய - பரிசுத்தமாகிய, பதிவிரதத்தால் - பதிவ்ரதா தர்மத்தில், ஏகி - ஒப்பற்றவளும், உவமை - சமானம், இல் - இல்லாத, அஞ்சு எழுத்து - ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தினை, ஆய் - ஆராய்ந்தறிவதில், ஊகி - விவேகமுள்ளவளும், தன்மம் - புண்ய மார்க்கத்தில், தியாகி - உதாரகுண முள்ளவளுமாகிய கங்காம்பிகையார், எ - று.

(பொ - ரை.) தாதிகளால் அத்தாணிமண்டபத்திற் கெழுந்தருளவேணுமென்று சொல்லக்கேட்டலும், சிவலிங்கபூஜையின்மீது எப்போதும் விருப்பமுள்ளவளும், அழகிய திருவெண்ணீறணிந்த திருமேனியுள்ளவளும், தபோமார்க்கத்தினையுடைய ஞானமுள்ளவளும், நல்லொழுக்கமாகிய ஸத்யமார்க்கத்தில் விருப்ப முள்ளவளும், பிறவிமார்க்கத்தில் வெறுப்புள்ளவளும், பரிசுத்தமாகிய பதிவ்ரதா தர்மத்தில் ஒப்பற்றவளும், சமானமில்லாத ஸ்ரீபஞ்சாக்ஷரத்தினை யாராய்ந்தறிவதில் விவேக முள்ளவளும், புண்யமார்க்கத்தில் உதாரகுணமுள்ளவளுமாகிய கங்காம்பிகையார். ()

நங்கநற் குகையிற் காய்ச்சித் தையலாய் வார்த்தி ழைத்த
பங்கமில் பாவை யாவி படைத்தொளி மணிகள் பூண்டு
மங்கல முறந டந்து வருதல்போற் றிரண்டு மாத
ரங்கணத் திரண்டு பாலும் வரச்சபை யணைந்தா ளந்தோ.

(ப-ரை.) நல் - சுத்தமான, தங்கம் - தங்கத்தை, குகையில் - மூசையில் (வைத்து), காய்ச்சி - உருக்கி, தையல் ஆய் - பெண்போல, வார்த்து - வார்த்து, இழைத்த -

செய்த, பங்கம் இல் - குற்றமற்ற, பாவை - பிரதிமை, ஆவி - உயிர், படைத்து - பெற்று, ஒளி - பிரகாசிக்கின்ற, மணிகள் - ரத்நாபரணங்களை, பூண்டு - அணிந்து, மங்கலம் உற - பொலிவுபெற, நடந்து - நடந்து, வருதல் போல் - போதல் போல, அங்கணத்து - முற்றத்தில், மாதர் - தோழிகள், திரண்டு - கூடி, இரண்டு பாலும் - இருபக்கங்களிலும், வர - செல்ல, சபை - ராஜசபையை, அணைந்தாள் - சேர்ந்தாள்.

(போ - ரை.) சுத்தமான தங்கத்தை மூசையில் வைத்துருக்கிப் பெண்போல் வார்த்துச்செய்த குற்றமற்ற பிரதிமை உயிர்பெற்றுப் பிரகாசிக்கின்ற ரத்நாபரணங்களை யணிந்து பொலிவுபெற நடந்து போதல்போல முற்றத்தில் தோழிகள் கூடி யிருபக்கங்களிலும் செல்ல ராஜசபையைச் சேர்ந்தாள். (௧௪)

வந்தகங் காம்பை தூய மதிமுகம் வசவ தேவர்
சிந்தனை மகிழ்ந்து நோக்கிச் செய்யவித் தம்பி ராற்கு
வந்தவள் சேலை தன்னை யிங்ஙனங் கொடுப்பா யென்று
ரந்தமொன் றில்லா நாண மதனினா லயர்ந்து நின்றாள்.

(ப - ரை.) வந்த - (ராஜசபைக்கு) வந்த, கங்காம்பை - கங்காம்பிகையானது, தூய - பரிசுத்தமாகிய, மதி - சந்திரனைப் போன்ற, முகம் - திருமுகத்தை, வசவ தேவர் - வசவண்ணர், சிந்தனை மகிழ்ந்து - மனமகிழ்ந்து, நோக்கி - பார்த்து, செய்ய-அழகிய, இ-இந்த, தம்பிராற்கு - ஜங்கமமூர்த்திக்கு, உன்-உனது, இந்த-இந்த, வள்-வளப்பம் பொருந்திய, சேலைதன்னை - பீதாம்பரத்தை, இங்ஙனம் - இவ்விடத்தில், கொடுப்பாய் - தருவாய், என்றார் - என்றுசொன்னார், அந்தம் ஒன்று இல்லா - முடிவில்லாத, நாணம் அதனினால் - வெட்கத்தினால், அயர்ந்து-சோர்ந்து, நின்றாள்-நின்றனள், எ - று.

(போ - ரை.) ராஜசபைக்குவந்த கங்காம்பிகையானது சந்திரனைப்போன்ற பரிசுத்தமாகிய திருமுகத்தை வசவண்ணர் மனமகிழ்ந்து பார்த்து, அழகிய இந்த ஜங்கமமூர்த்திக்கு உனது இந்த வளப்பம்பொருந்திய பீதாம்பரத்தை யிவ்விடத்தில் தருவாயென்றுசொன்னார், முடிவில்லாத வெட்கத்தினால் சோர்ந்து நின்றனள்.

(வி - ரை.) சேலைதன்னை என்பதில் தன் சாரியை. நாணமதனினால் என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி, இன் - சாரியை, ஆல் - மூன்றனுருபு. (௧௫)

இன்றுமா னவமான மின்றிநந் திரியு டுத்த
மின்றுனுஞ் சேலை வாங்கி விரையநா மிவர்க்க ளித்தால்
வன்றுயர்ப் பிறவிச் சேலை மண்ணின்மேல் மாறி மாறிப்
பொன்றுத லின்றிப் போம்போ மென்றுநற் புத்தி யன்பால்.

(ப-ரை.) இன்று-இந்த நாளில், மானவமானம்-மானமும் அவமானமும், இன்றி-மதிக்காமல், நம் - நமது, திரி - மனைவி, உடுத்த - தரித்திருக்கின்ற, மின் - ஒளி, துன்னும் - மிகுந்த, சேலை - சேலையை, வாங்கி - அவிழ்த்து, விரைய - சீக்கிரமாக, நாம் - நாம், இவர்க்கு - இந்த ஜங்கமமூர்த்திக்கு, அளித்தால் - கொடுப்போமாயின், வல் - வலிமையுடைய, துயர் - துன்பத்தைத் தருகிற, பிறவிச்சேலை - பிறவியாகிய சேலையை (உடுத்து), மண்ணின்மேல் - உலகத்தில், மாறி மாறி - (அலைபோல்) பல்காலும் மாறிப்பிறந்து, பொன்றுதல் - இறத்தல், இன்றி - இல்லாமல், போம்போம் - ஒழியுமொழியும், என்று - என்று, நல் புத்தியால்-பரமஞானத்தினாலும், அன்பு ஆல்-பக்திவிசேஷத்தினாலும், எ - று.

(போ - ரை.) இந்த நாளில் மானமும் அவமானமும் மதிக்காமல் நமது மனைவி தரித்திருக்கின்ற ஒளி மிருந்த சேலையை யவிழ்த்துச் சீக்கிரமாக நாம் இந்த ஜங்கம மூர்த்திக்குக் கொடுப்போமாயின் வலிமையுடைய துன்பத்தைத் தருகிற பிறவியாகிய சேலையை யுடுத்து உலகத்தில் அலைபோல் பல்காலும் மாறிப்பிறந்து இறத்தலில்லாமல் ஒழியு மொழியுமென்று பரமஞானத்தினுலும் பக்தியினுலும்.

(வி - ரை.) மானம் அவமானம் இன்றி - மானத்தில் விருப்பும் அவமானத்தில் வெறுப்புமில்லாமல். திரி - ஸ்த்ரீ என்னும் வடசொற்றிரிபு. தலம், தாணு, துதி, தூலம், படிகம் என்றற் ருெடக்கத்தனவும் இது போன்றனவே. போம் போம் என்றதனுல் துணிவுப் பொருட்டு நின்றது. (கக)

உரிந்தனர் தங்கை யாலே யொன்னுத றிரும்பா நிற்பப்
புரிந்தகங் காம்பை கற்பின் பொற்பதோ வசவ ராசர்
பரிந்தனைப் பரிச மேன்மைப் பான்மையோ வாங்க வாங்கத்
தெரிந்திட வரிதா நீளச் சேலையாய்த் துலைவ தின்றி.

(ப - ரை) ஒள் - பிரகாசம் பொருந்திய, நுதல் - நெற்றியையுடைய கங்காம்பிகையார், திரும்பாநிற்க - திரும்பத் திரும்ப, தம் - தமது, கையாலே - திருக்கரங்கொண்டே, உரிந்தனர் - அவிழ்த்தார், புரிந்த - தவஞ்செய்த, கங்காம்பை - கங்காம்பிகையாரின், கற்பின் பொற்பு அதோ - பதிவ்ரதா விசேஷமோ, வசவராசர் - வசவண்ணவாது, பரிந்த - அன்புள்ள, கைப்பரிச மேன்மை பான்மையோ - ஹஸ்த ஸ்பர்ஸ விசேஷமோ, வாங்க வாங்க - அவிழ்க்க வவிழ்க்க, தெரிந்திட - அறிவதற்கு, அரிது ஆ - முடியாமல், நீளம் - நீண்ட, சேலையாய் - சேலைபோல, துலைவது இன்றி - தொலையாமல், எ - று.

(போ - ரை.) பிரகாசம்பொருந்திய நெற்றியையுடைய கங்காம்பிகையார் திரும்பத்திரும்பத் தமது திருக்கரங்கொண்டே அவிழ்த்தார், தவஞ்செய்த கங்காம்பிகையாரின் பதிவ்ரதா விசேஷமோ? வசவண்ணாது அன்புள்ள ஹஸ்த ஸ்பர்ஸ விசேஷமோ? அவிழ்க்கவவிழ்க்க அறிவதற்கு முடியாமல் நீண்ட சேலைபோலத் தொலையாமல்.

(வி - ரை.) அரிது ஆ - அருமையாக எனினுமாம். பொற்பு - அழகு. பரிதல் - அன்பு. பரிசம் - தீண்டல். நுதல் - ஆகுபெயர். (கஎ)

வெய்யவ னுதிக்கும் வாரி மிசையெழு திரையோ விஞ்சு
செய்யநற் கொடிமின் ருனே திங்களுட் டுளங்கு மின்னே
துய்யவிச் சேலை யென்னத் துலைவற வளர்த லாலே
யையநற் றண்ட னாத வமையுங்கா ணமக்கி தென்ருர்.

(ப - ரை.) வெய்யவன் - சூரியன், உதிக்கும் - உதயஞ்செய்கின்ற, வாரி மிசை கடலில், எழு - எழுகின்ற, திரையோ - அலையோ, விஞ்சு - அதிகமான, செய்ய - அழகிய, நல் - நல்ல, கொடி மின் தானே - மின்னற்கொடியோ, திங்களுள்-சந்திரனிடத்தில், துளங்கும் - ஒளி செய்கின்ற, மின்னே - காந்தமோ, என்ன - என்று சொல்லும்படி, துய்ய - பரிசுத்தமாகிய, இ - இந்த, சேலை - சேலை, துலைவு அற - மாளாமல், வளர்தலாலே - வளர்ந்து வருவதாலே, ஐய - (விடஜங்கமர்பார்த்து) ஐயனே, நல் - நல்ல, தண்டநாத - வசவண்ணனே, நமக்கு - எமக்கு, இது - இவ் வளவு கொண்ட சேலை, அமையும் - போதும், என்ருர் - என்று சொன்னுர், எ - று.

(பொ - ரை.) சூரியன் உதயஞ்செய்கின்ற கடலில் எழுகின்ற அலையோ? மிக வழகிய நல்ல மின்னற்கொடியோ? சந்திரனிடத்தில் ஒளிசெய்கின்ற காந்தமோ? என்று சொல்லும்படி, பரிசுத்தமாகிய இந்தச்சேலை மாளாமல் வளர்ந்து வருதலாலே விடஜங்கமர் பார்த்து, ஐயனே! வசவண்ணனே! எமக்கு இவ் வளவுகொண்ட சேலை போதுமென்று சொன்னார்.

(வி - ரை.) வெப்பமாகிய கிரணங்களை யுடையவனாதலால் சூரியனை வெய்யவ னென்றார். வெய்யவன் - வெம்மைப் பண்படியாகப் பிறந்த பெயர். வாரிமிசை என்பதில் மிசை ஏழனுருபு. திரை - ஆகுபெயர். மின்கொடி தானோ என்பதில் தான் அசை. (௧௰)

அமையுமென் றவரு ரைத்த வளவிலக் குறிகொண் டற்ற
சமமுறுஞ் சேலை தன்னைச் சரணராம் வசவ தேவ
ருமையொரு பாகர் வேடர்க் குவந்தளித் திறைஞ்சி நின்றார்
கமையுறுங் கருத்த ராகிச் சங்கமர் களித்துச் சென்றார்.

(ப - ரை.) அவர் - அந்த விடஜங்கமர், அமையும் - போதும், என்று - என்று, உரைத்த - சொன்ன, அளவில் - வரையில், அ - அந்த, குறி - அடையாளம், கொண்டு - வைத்துக்கொண்டு, அற்ற - அறுக்கப்பட்ட, சமம் உறும் - சம்மதமான, சேலை தன்னை - சேலையை, சரணர் ஆம்-சிவசரணராகிய, வசவதேவர்-வசவண்ணர், உமையொருபாகர் வேடர்க்கு - சிவவேடத்தராகிய ஜங்கமமூர்த்திக்கு, உவந்து - மனமகிழ்ந்து, அளித்து - கொடுத்து, இறைஞ்சி - வணங்கி, நின்றார் - நின்றனர், எ - று.

(பொ-ரை.) அந்த விடஜங்கமர் போதுமென்று சொன்னவரையில் அடையாளம் வைத்துக் கொண்டு, அறுக்கப்பட்ட சம்மதமான சேலையைச் சிவசரணராகிய வசவண்ணர் சிவவேடத்தராகிய ஜங்கமமூர்த்திக்கு மனமகிழ்ந்துகொடுத்து வணங்கி நின்றனர்.

(வி - ரை.) உமையொருபாகர் - உமாதேவியாரை ஒப்பற்ற வாம பாகத்தில் அமைத்துக் கொண்டவர். (௧௧)

அம்மைகங் காம்பை யுள்ளே யன்னமோ பிடியோ வென்னச்
செம்மையா நடந்து மெல்லச் சென்றுறு போதி ருந்தோ
ரெம்மையா தரவிற் பெற்ற விவரைநாம் விழியாற் காண
வெம்மைதீர் தவநாஞ் செய்த மேன்மையே மேன்மை யென்றார்.

(ப-ரை.) அம்மை - (குலஸ்த்ரீகளுக்கெல்லாம்) மாதாவாகிய, கங்காம்பை - கங்காம்பிகையார், உள்ளே - அந்தப்புரத்திலே, அன்னமோ - அன்னப்பறவையோ, பிடியோ - பெண் யானையோ, என்ன - என்று சொல்லும்படி, செம்மையாய் - கெம்பீரமாக, நடந்து - நடந்து, மெல்ல-மெதுவாய், சென்று உறு போது - போன போது, இருந்தோர் - இருந்தவர்கள், எமமை - எங்களை, ஆதரவின் - அன்புடன், பெற்ற - ஈன்ற, இவரை - இவ் வம்மையாரை, நாம்-நாங்கள், விழியால் - கண்களால், காண - தரிசிக்க, வெம்மை - பிறவி வெப்பம், தீர்-தணிதற்குரிய, தவம் - தவத்தை, நாம் - நாங்கள், செய்த - பண்ணின, மேன்மையே - பெருமையே, மேன்மை - பெருமை, என்றார் - என்று புகழ்ந்தார்கள். எ-று.

(பொ-ரை.) குலஸ்திரீகளுக்கெல்லாம் மாதாவாகிய கங்காம்பிகையார் அந்தப் புரத்திலே அன்னப் பறவையோ? பெண் யானையோ? என்று சொல்லும்படிக்

கெம்பீரமாக நடந்து மெதுவாய்ப் போனபோது, இருந்தவர்கள் எங்களை அன்புடனின்ற இவ் வம்மையாரை நாங்கள் கண்களால் தரிசிக்கப் பிறவி வெப்பம் தணிதற்குரிய தவத்தை நாங்கள் பண்ணின பெருமையே பெருமை யென்று புகழ்ந்தார்கள்.

(வி-ரை.) விழி - முதனிலைத் தொழிலாகுபெயர். (உ0)

## கலிவிருத்தம்.

படிமக ளிவர்பதப் பரிசு வேண்டியே
முடிவரும் பொறையினை முன்ன மெய்தினள்
கடிமலர் மகளிவர் கனத்த நல்லியல்
வடிவினை விரும்பிவாழ் மனையி னுயினள்.

(ப - ரை.) படிமகள் - பூதேவியானவள், இவர்-இவரது, பதம் - திருவடிகளின், பரிசு - தன்மையை, வேண்டியே - (பெற) விரும்பியே, முடிவு அரு - அளவில்லாத, பொறையினை - உபசாந்த நிலையை, முன்னம் - முற்காலத்தில், எய்தினள் - அடைந்தாள், கடி - நறுமணங் கமழ்கின்ற, மலர் மகள் - தாமரைமலரில் வசிப்பவளாகிய சீதேவியானவள், இவர் - இவரது, கனத்த - மேன்மை பொருந்திய, நல் இயல் - நல்லிலக்கணமமைந்த, வடிவினை - திருவுருவத்தை, விரும்பி - (பெற) வேண்டியே, வாழ் - செல்வத்தோடிருக்கின்ற, மனையின்-திருமாளிகையில், ஆயினள் - வசித்தாள், எ - று.

(பொ - ரை.) பூதேவியானவள் இவரது திருவடிகளின் தன்மையைப் பெற விரும்பியே அளவில்லாத உபசாந்தநிலையை முற்காலத்தில் அடைந்தாள், நறுமணங் கமழ்கின்ற தாமரைமலரில் வசிப்பவளாகிய சீதேவியானவள் இவரது மேன்மை பொருந்திய நல்லிலக்கணமமைந்த திருவுருவத்தைப் பெறவேண்டியே செல்வத்தோடிருக்கின்ற திருமாளிகையில் வசித்தாள்.

(வி - ரை.) பூதேவியார், சீதேவியார் - திருமாலின் மனைவியர்கள். (உக)

கலைமக ளிவருரை கற்க வேண்டியே
நலமல ரயனிட நாவி னுயினள்
சிலைநுத லிவர்பதி விரதந் தேடியே
யுலைதலா லருந்ததி யுடலங் குன்றினள்.

(ப - ரை.) கலைமகள் - சரசுவதியானவள், இவர்-இவரது, உரை - சொற்களை, கற்க வேண்டியே-கற்றுக்கொள்ள விரும்பியே, நல்ல-மேலான, மலர்-தாமரைமலரில் வசிக்கின்ற, அயனிடம் - பிரமனது, நாவின் - நாவில், ஆயினள் - வசித்தாள், அருந்ததி - அருந்ததியானவள், சிலை - வில்போன்ற, நுதல் - நெற்றியையுடைய, இவர் - இவரது, பதிவிரதம் - பதிவ்ரதா தர்மத்தை, தேடியே - (பெற) விரும்பியே, உலைதலால் - வருந்துதலால், உடலம் - சரீரம், குன்றினள் - ஒடுங்கினள், எ - று.

(பொ - ரை.) சரசுவதியானவள் இவரது சொற்களைக் கற்றுக்கொள்ள விரும்பியே மேலான தாமரை மலரில் வசிக்கின்ற பிரமனது நாவில் வசித்தாள், அருந்ததியானவள் வில்போன்ற நெற்றியையுடைய இவரது பதிவ்ரதா தர்மத்தைப் பெற விரும்பியே வருந்துதலால் சரீரம் ஒடுங்கினள்.

(வி - ரை.) அருந்ததி - வசிட்டரது மனைவியார். (உஉ)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இவரபி மானம் பெற்ற விவரருங் கற்பி னாலுந்
தவநெறி வசவ தேவர் சற்பாவ நிலையு மென்றே
யவரவ ரிருந்தங் கேத்த வன்னரை யன்பாற் போற்றிச்
சிவநெறி வசவ தேவர் முன்னுளோர் செய்தி சொல்வார்.

(ப - ரை.) இவர் - இவரது, அபிமானம் பெற்ற - அபிமானத்தைப் பெற்ற, இவர் அரு - விரும்புதற்கரிய, கற்பினாலும் - கற்பிலக்கணத்தினாலும், தவம் நெறி - தபோமார்க்கத்தையுடைய, வசவதேவர்- வசவண்ணரது, சற்பாவம் -நல்லெண்ணம், நிலையும்- நிலைபெறும், என்று- என்று, அவர் அவர் -அவரவர்கள், அங்கு-அவ்விடத்தில், இருந்து - இருந்து, ஏத்த - துதித்தலும், அன்னரை - அவ்வாறு துதிப்பவர்களை, அன்பால் - அன்புடன், போற்றி - துதித்து, சிவநெறி - சிவாசாரச் செல்வரான, வசவதேவர்-வசவண்ணர், முன்-முற்காலத்தில், உள்ளோர்-இருந்த சிவசரணர்களின், செய்தி - சரித்திரத்தை, சொல்வார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ-று.

(பொ-ரை.) இவரது அபிமானத்தைப்பெற்ற விரும்புதற்கரிய கற்பிலக்கணத்தினாலும், தபோமார்க்கத்தையுடைய வசவண்ணரது நல்லெண்ணம் நிலைபெறுமென்று அவரவர்கள் அவ்விடத்திலிருந்து துதித்தலும், அவ்வாறு துதிப்பவர்களை யன்புடன் துதித்துச் சிவாசாரச் செல்வரான வசவண்ணர் முற்காலத்திலிருந்த சிவசரணர்களின் சரித்திரத்தைச் சொல்வாராயினர், எவ்வாறெனின். (உ௲)

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எந்நெறியு மோர்நெறியாய்த் தேவ ரீர்கள்
இயம்புவதென் னென்றஞ்சி யிச்சை யாலே
பன்னிரண்டாண் டிருந்துநெய்த பட்டோ ரன்பர்
பரிந்துதா வெனச்சேட தாச ரீந்தா
ரிந்நெறிவல் லாளரியற் பகைய ரானா
ரிருவருந்த மில்லாளை யிசைந்த ளித்தா
ரந்நிலையே மானக்கஞ் சாறர் பெற்ற
மகள்குழலை மணப்பந்தர் மகிழ்ந்து தந்தார்.

(ப-ரை.) என் - (ஞானமில்லாதவனாகிய) அடியேனுடைய, நெறியும் - பக்தி மார்க்கமும், ஓர் - ஒப்பற்ற, நெறியாய் - பக்திமார்க்கம் போல மதித்து, தேவரீர்கள்- சுவாமிகள், இயம்புவது - எடுத்துப் புகழ்ந்து பேசுவதற்குக் காரணம், என் - யாது, என்று - என்று, அஞ்சி - பயந்து, இச்சையாலே - (பணம் சம்பாதிக்கும்) விருப்பத்தாலே, பன்னிரண்டு ஆண்டு-பன்னிரண்டு வருடம், இருந்து - (வீட்டில்) இருந்து, நெய்த - (நேர்த்தியாக) நெசவு செய்த, பட்டு - பட்டுவஸ்திரத்தை (அரசனிடம் கொண்டுபோகும்வழியில்), ஓர் - ஒரு, அன்பர் - ஜங்கமர், பரிந்து - அன்புடன், தா - கொடு, என்ன - என்று கேட்டலும், சேடதாசர் - சேடதாசையரானவர், ஈந்தார் - கொடுத்தார், இந்நெறி - இவ்வாறே, வல்லாளர் ஆனார் - வல்லாளமஹாராஜா வென்பவரும், இயற்பகையர் ஆனார் - இயற்பகைநாயனாரென்பவருமாகிய, இருவரும்- இரண்டு சிவபக்தர்களும், தம் - தமது, இல்லாளை - மனைவியரை, இசைந்து - சம்மதித்து, அளித்தார் - கொடுத்தார்கள், அந்நிலையே - அவ்வாறே, மானக்கஞ்சாறர்

மானக்கஞ்சாற நாயனாரும்; பெற்ற-(தாம்) ஈன்ற, மகள் - மகளது, குழலே-கூந்தலை (அறுத்து), மணப்பந்தர் - திருமணப்பந்தரில், மகிழ்ந்து - சந்தோஷித்து, தந்தார் - கொடுத்தார், எ-று.

(போ - ரை.) ஞானமில்லாதவனாகிய அடியேனுடைய பக்தி மார்க்கமும் ஒப்பற்ற பக்திமார்க்கம்போல மதித்துச் சுவாமிகள் எடுத்துப் புகழ்ந்து பேசுவதற்குக் காரணம் யாது? என்று பயந்து, பணம் சம்பாதிக்கும் விருப்பத்தாலே பன்னிரண்டு வருடம் வீட்டிலிருந்து சேர்த்தியாக நெசவு செய்த பட்டுவஸ்திரத்தை அரசனிடம் கொண்டுபோகும் வழியில் ஒரு ஜங்கமர் அன்புடன் கொடென்று கேட்டலும், சேடதாசையரானவர் கொடுத்தார், இவ்வாறே வல்லாளமஹாராஜா வென்பவரும் இயற்பகைநாயனாரென்பவருமாகிய இரண்டு சிவபக்தர்களும் தமது மனைவியரைச் சம்மதித்துக் கொடுத்தார்கள், அவ்வாறே மானக்கஞ்சாறநாயனாரும் தாம் ஈன்ற மகளது கூந்தலை யறுத்துத் திருமணப்பந்தரில் சந்தோஷித்துக் கொடுத்தார். (உ௪)

விருப்பமுட னமர்நீதி நேய ரென்பார்
 விமலனன்பர்க் குடலாதி மிகுவாழ் வெல்லா
மருத்தியினு ளித்திலரோ வரிவை மோக
 ராந்தவர்க்கு நரசிங்க முனைய ராவார்
பெருத்தநிதி யிரட்டிகொடுத் தருள டைந்தார்
 பெருங்கருப்பி னெற்கவர்ந்தோர் பேச்சுக் கேளா
விரக்கமுட னிடங்கழியார் தமது செல்வ
 மெல்லாநம் மாதவத்தோர்க் கென்றன் றீந்தார்.

(ப - ரை) அமர்நீதிநேயர் என்பார்-அமர்நீதிநாயனாரென்பவர், விருப்பமுடன்-சந்தோஷத்துடன்; விமலன் அன்பர்க்கு - சிவபக்தர்களுக்கு, உடல் ஆதி - உடல் முதலாகிய, மிகு-மிகுந்த; வாழ்வு எல்லாம்-செல்வமெல்லாவற்றையும், அருத்தியினால்-விருப்பத்துடன், அளித்திலரோ-கொடுத்திலரோ, அரிவை-பெண், மோகர் ஆம்-ஆசையுள்ளவராகிய; தவர்க்கு - தபோதனர்க்கு, நரசிங்கமுனையர் ஆவார் - நரசிங்க முனையநாயனாரென்பவர்,பெருத்தநிதி-பெருஞ்செல்வத்தை,இரட்டி-இரண்டத்தனை, கொடுத்து - தந்து; அருள் - திருவருளை; அடைந்தார் - பெற்றார்; பெரு - பெரிய, கருப்பில் - பஞ்சகாலத்தில், நெல் - நெல்லை, கவர்ந்தோர் - திருடினவராகிய ஓர் தவத்தோரது; பேச்சு-சொற்களை, கேளா-கேட்டு, இரக்கமுடன் -அன்புடன், இடங்கழியார்-இடங்கழிநாயனாரானவர், தமது - தம்முடைய; செல்வம் எல்லாம்-பொருள் முழுதும்; நம்-நமது; மா - பெருமை பொருந்திய, தவத்தோர்க்கு - தபோதனர்க்கு, என்று-(உரியது) என்று; அன்று-அந்நாளில்; ஈந்தார் - கொடுத்தார், எ-று.

(போ-ரை) அமர்நீதி நாயனா ரென்பவர் சந்தோஷத்துடன் சிவபக்தர்களுக்கு உடல்முதலாகிய மிகுந்தசெல்வமெல்லாவற்றையும் விருப்பத்துடன் கொடுத்திலரோ? பெண்ணாசையுள்ளவராகிய தபோதனர்க்கு நரசிங்கமுனையநாயனாரென்பவர் பெருஞ் செல்வத்தை யிரண்டத்தனைத் தந்து திருவருளைப்பெற்றார், பெரிய பஞ்சகாலத்தில் நெல்லைத் திருடினவராகிய ஓர் தவத்தோரது சொற்களைக்கேட்டு அன்புடன் இடங் கழிநாயனாரானவர் தம்முடைய பொருள் முழுதும் நமது பெருமை பொருந்திய தபோதனர்க் குரிய தென்று அந்நாளில் கொடுத்தார்.

(வி - ரை) உடலாதி என்றது உடல் பொருள் ஆவி யென்பவற்றை. (உ௫)

என்றுவச வேசர்முன்னோர் செய்த செய்தி
யியம்பியே தம்மையெண்ணு திருந்தா ரிப்பாற்
றுன்றுகுழற் கங்காம்பை யம்மை யுந்தந்
தூயவந்த புரத்தரனைத் துதித்தே புக்கார்
நன்றுறுமிந் நாளின்மற்றோர் தூர்த்த வேடர்
நங்களன்னை கங்காம்பை நலத்த கன்ன
மின்றிகழ்கா தபரஞ்சி யோலை கேட்டார்
விரும்பியளித் தாரவரோர் வேசிக் கீந்தார்.

(ப - ரை.) என்று - என்றிவ்வாறு, வசவேசர் - வசவண்ணர், முன்னோர் - முற்காலத்திருந்த சரணர்கள், செய்த - பண்ணிய, செய்தி - மஹத்தான காரியங்களையெல்லாம், இயம்பி - எடுத்துச்சொல்லி, தம்மை - தம்மை, எண்ணாது - (ஒருபொருளாக) மதியாமல், இருந்தார் - எழுந்தருளியிருந்தார், இப்பால் - இப்புறம், துன்று - நெருங்கிய, குழல் - கூந்தலையுடைய, கங்காம்பை யம்மையும் - கங்காம்பிகையாரும், தம் - தமது, தூய - பரிசுத்தமாகிய, அந்தபுரத்து - அந்தப்புரத்தினுள்ளே, அரனை - சிவபெருமானை, துதித்து - தோத்திரஞ் செய்துகொண்டு, புக்கார் - பிரவேசித்தனர், நன்று உறும் - நன்மைமிக்க, இ - இந்த நாளில் - காலத்தில், மற்று ஓர் - வேறொரு, தூர்த்த வேடர் - விடஜங்கமர், நங்கள் - எங்களுடைய, அன்னை - மாதாவாகிய, கங்காம்பை - கங்காம்பிகையாரின், நலத்த - அழகுள்ள, கன்னம் - திருச்செவிகளில், மின் திகழ் - பிரகாசிக்கின்ற, அபரஞ்சி - தங்கத்தாற்செய்த, காது ஓலை - தோடினை, விரும்பி - இச்சித்து, கேட்டார் - கேட்டனர், அளித்தார் - (அவ்வாறே வசவண்ணர்) கொடுத்தருளினர், அவர் - அவ் விடஜங்கமர், ஓர் - ஒரு, வேசிக்கு - பொருட்பெண்டிர்க்கு, ஈந்தார் - கொடுத்தனர், எ - று.

(பொ - ரை.) என்றிவ்வாறு வசவண்ணர் முற்காலத்திருந்த சரணர்கள் பண்ணிய மஹத்தான காரியங்களையெல்லாம் எடுத்துச் சொல்லித் தம்மை யொரு பொருளாக மதியாமலெழுந் தருளியிருந்தார், இப்புறம் நெருங்கிய கூந்தலையுடைய கங்காம்பிகையாரும் தமது பரிசுத்தமாகிய அந்தப்புரத்தினுள்ளே சிவபெருமானைத் தோத்திரஞ் செய்துகொண்டுப் பிரவேசித்தனர், நன்மைமிக்க விந்தக்காலத்தில் வேறொரு விடஜங்கமர் எங்களுடைய மாதாவாகிய கங்காம்பிகையாரின் அழகுள்ள திருச்செவிகளில் பிரகாசிக்கின்ற தங்கத்தாற் செய்த தோடினை யிச்சித்துக் கேட்டனர், அவ்வாறே வசவண்ணர் கொடுத்தருளினர், அவ் விடஜங்கமர் ஒரு பொருட் பெண்டிர்க்குக் கொடுத்தனர். (உசு)

ஆடைவளர்ந்த திருவிளையாடல் முற்றிற்று.

ஆகதிருவிருத்தம்-சஅஎ.

சிவமயம்.

# முத்தசங்கையர் புராணம்.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அமலமெய் தரித்தாய் போற்றி யருளையா தரித்தாய் போற்றி
எமைநிரந் தரித்தாய் போற்றி யேதம தரித்தாய் போற்றி
கமையுழி தரித்தாய் போற்றி கருமமுத் தரித்தாய் போற்றி
சமணிலுத் தரித்தாய் போற்றி சைவம்வித் தரித்தாய் போற்றி.

**(ப - ரை.)** அமல - மலரஹிதமான, மெய் தரித்தாய் - திவ்ய ஸ்வரூபத்தை யுடையவனே, போற்றி - சரணார்த்தி, அருளை யாதரித்தாய் - க்ருபாமூர்த்தியே, போற்றி - சரணார்த்தி, எம்மை நிரம் தரித்தாய் - ஸர்வவ்யாபகனே, போற்றி - சரணார்த்தி, ஏதம் அது அரித்தாய் - பாபவிமோசகனே, போற்றி-சரணார்த்தி, கமை உழி தரித்தாய் - சாந்தமூர்த்தியே, போற்றி - சரணார்த்தி, கருமம் உத்தரித்தாய் - கர்மரஹிதனே, போற்றி-சரணார்த்தி, சமண் இல் உத்தரித்தாய் - சமணகண்டகனே, போற்றி - சரணார்த்தி, சைவம் வித்தரித்தாய் - சைவ ரக்ஷகனே, போற்றி - சரணார்த்தி, எ - று.

**(பொ-ரை.)** மலரஹிதமான திவ்ய ஸ்வரூபத்தை யுடையவனே! சரணார்த்தி, க்ருபாமூர்த்தியே! சரணார்த்தி, ஸர்வவ்யாபகனே! சரணார்த்தி, பாபவிமோசகனே! சரணார்த்தி, ஸாந்தமூர்த்தியே! சரணார்த்தி, கர்ம ரஹிதனே! சரணார்த்தி, சமண கண்டகனே! சரணார்த்தி, சைவரக்ஷகனே. சரணார்த்தி, எ - று.

**(வி-ரை.)** அமலம் - பரிசுத்தம். மெய் - திருமேனி. தரித்தல் - உடைத்தாயிருத்தல். அருள் - கிருபை. ஏதம் - குற்றம். அது-பகுப்பொருள்விகுதி. அரித்தல்-சேதித்தல். கமை - பொறுமை, க்ஷமை என்னும் வடசொற்றிரிபு. உழி-ஏழனுருபு. கருமம் - கர்ம மார்க்கம். சமண் - ஆருகத சமயம், இது புறச்சமயங்களிலொன்று, புறச்சமயங்கள் பொய் நெறிகளைக் கூறும். இல்-இல்லாமற்போம்படி. உத்தரித்தல்-கண்டித்தல். சைவம்-சிவசமயம். வித்தரித்தல்-அபிவிருத்திசெய்தல், விஸ்தரித்தல் என்னும் வடசொற்றிரிபு. (க)

## கலிநிலைத்துறை.

அறவ ராந்தண்ட நாயகர்க் கணியராந் தோழர்
செறியி லிங்கநன் னிட்டராய் மற்றொன்றுந் தேரா
ருறவு வெம்பகை தெரிவைய ரின்பமொன் றுன்னார்
முறைமை சேர்முத்த சங்கைய ரென்றொரு முனிவர்.

**(ப - ரை.)** அறவர் ஆம் - புண்ணிய மார்க்கத்தையுடையவராகிய, தண்டநாயகர்க்கு - வசவண்ணர்க்கு, அணியர் ஆம் - நெருங்கின, தோழர் - நண்பர், நல் - சிறந்த, இலிங்கம் செறி நிட்டர் ஆய்-லிங்க நிஷ்டாபரராகி, மற்று - வேறு, ஒன்றும்-ஒரு பொருளையும், தேரார் - அறியாதவர், உறவு - சிநேகத்தையும், வெம் - கொடிய

பகை - விரோதத்தையும், தெரிவையர் - பெண், இன்பம் - போகத்தையும், ஒன்று - சற்றும், உன்னூர் - நினையாதவர், முறைமை சேர் - சன்மார்க்கத்தையுடைய, முத்த சங்கையர்-முத்தசங்கையர், என்று - என்று சொல்லப்பட்ட, ஒரு-ஒப்பற்ற,முனிவர்-ஜங்கம மூர்த்தியானவர், எ-று.

(பொ-ரை.) புண்ணியமார்க்கத்தை யுடையவராகிய வசவண்ணர்க்கு நெருங்கின நண்பர், சிறந்த லிங்க நிஷ்டாபரராகி வேறொரு பொருளையும் அறியாதவர், சினேகத்தையும் கொடிய விரோதத்தையும் பெண் போகத்தையும் சற்றும் நினையாதவர், சன்மார்க்கத்தையுடைய முத்த சங்கையரென்று சொல்லப்பட்ட ஒப்பற்ற ஜங்கம மூர்த்தியானவர்.

(வி - ரை.) தெரிவையர் - பருவம் குறியாது மாதரெனப் பொதுவாய் நின்றது. அறம் - மற்றைப் பொருளின்பங்களைப் போலாகாமல் இம்மை மறுமை வீடென்கிற மூன்றையும் உயிர்களுக்குப் பயப்ப தோர் துணைக்காரண மாதலாலும், பொருள் - அறம் துணைக்காரணமாக ஈட்டும் பொருள் இம்மை மறுமைக்குரிய வாதலாலும், இன்பம் - பொருள் துணைக்காரணமாக ஐம்புலன்களால் நுகரும் காமம் இம்மைக்கே வுரியவாதலாலும், அறவரென்றும், மனம் இந்திரிய மூலமாய் விஷயங்களிற் சென்றுழலாமல் தைல தாரைபோல் இஷ்டலிங்கத்தில் எப்போதும் நிலைபெறச் செய்தவ ராதலால்செறியிலிங்க நன்னிட்டராயென்றும்,சிவலிங்கத்தில்மனம் இலயமடையவே துவந்துருபமான நட்பும், விரோதமும், சிற்றின்பமுமாகிய உலகத்தோற்றமொழியு மாதலால் உறவு வெம்பகை தெரிவையரின்ப மொன்றுன்னூரென்றும், உலகத் தோற்ற மொழியவே நிரதிசயாநந்த சிவலிங்கைக்யநிலை சித்திப்பதால் முறைமை சேர் முத்த சங்கையரென்றும் சொன்னூர். முத்தசங்கையர் - முக்தஸங்கைய ரெனினுமாம். (உ)

> தண்ட நாதர்பால் விடர்களாஞ் சங்கமர் சார்ந்தே
> யொண்ட ருந்தம தரிவையர்க் குதவுநன் னிதியுந்
> தண்ட ருந்துகில் குங்குமஞ் சந்தனம் பன்னீர்
> கொண்டு கொண்டனு தினஞ்செலுங் குறிப்பினைக் குறியா.

(ப - ரை.) தண்டநாதர் பால் - வசவண்ணரிடத்தில், விடர்கள் ஆம் ஜங்கமர் - விடஜங்கமர்கள், சார்ந்து - வந்து, ஒள் தரும் - அழகு பொருந்திய, தமது - தமது, அரிவையர்க்கு - வேசியர்க்கு, உதவும் - கொடுக்கின்ற, நல் - மிக்க, நிதியும் - பொருள்களையும், தண் தரும் - குளிர்ச்சி பொருந்திய, துகில் - சேலைகளையும், குங்குமம் - குங்குமத்தையும், சந்தனம் - சந்தனத்தையும், பன்னீர் - பன்னீரையும், கொண்டு கொண்டு - பெற்றுக்கொண்டு, அனுதினம் - நாடோறும், செல்லும் - போகின்ற, குறிப்பினை - நியமத்தை, குறியா - பார்த்து, எ - று.

(பொ - ரை.) வசவண்ணரிடத்தில் விடஜங்கமர்கள் வந்து அழகுபொருந்திய தமது வேசியர்க்குக் கொடுக்கின்ற மிக்க பொருள்களையும், குளிர்ச்சி பொருந்திய சேலைகளையும், குங்குமத்தையும், சந்தனத்தையும், பன்னீரையும் பெற்றுக்கொண்டு நாடோறும் போகின்ற நியமத்தைப் பார்த்து.

(வி - ரை.) அரிவையர் - பருவங்குறியாது பொதுவாய்ப் பெண்ணென்னுந் துணையாய் நின்றது. விடரென்று மேல்வருதலால் அரிவைய ரென்பதற்கு வேசிய ரெனப் பொருட்கொண்டோம். குறியா - செய்யா வென்னும் வாய்பாட்டிறந்த கால வினையெச்சம். விடர் - தூர்த்தர். (ங)

இவர்சி வார்ச்சனை புரிவதற் கிதத்தவை கொண்டு
தவமி ராத்தொறு மாதர்பாற் செய்யவே சார்வார்
நவம தாகயா மிவர்களைப் போலின்று நன்முஞ்
சிவன ருச்சனை யரிவைய ரிடஞ்சென்று செய்வாம்.

(ப - ரை.) இவர் - இந்த விடஜங்கமர்கள், சிவார்ச்சனை - சிவபூஜை, புரிவதற்கு - செய்வதற்கு, இதத்தவை - வேண்டிய பொருள்களை, கொண்டு - பெற்று, தவம் - விரதத்தை, இராத்தொறும் - இரவெல்லாம், மாதர்பால் - பெண்டிரிடத்தில், செய்யவே - அநுஷ்டிக்கவேண்டியே, சார்வார் - போகின்றார்கள், நவம் அது ஆக - நூதனமாக, யாம் - நாம், இவர்களைப்போல் - இவர்களைப்போலவே, இன்று - இன்றைத்தினம், நன்று ஆம் - நன்மையையுடைய, சிவன் அருச்சனை - சிவபூஜையை, அரிவையாரிடம்-மாதரிடத்தில், சென்று - போய், செய்வாம்-பண்ணுவோம், எ-று.

(பொ-ரை.) இந்த விடஜங்கமர்கள் சிவபூஜை செய்வதற்கு வேண்டிய பொருள்களைப்பெற்று விரதத்தை இரவெல்லாம் பெண்டிரிடத்தில் அநுஷ்டிக்கவேண்டியே போகின்றார்கள், நூதனமாக நாம் இவர்களைப்போலவே இன்றைத்தினம் நன்மையையுடைய சிவபூஜையை மாதரிடத்திற்போய்ப் பண்ணுவோம். (ச)

என்று தண்டநா யகர்தமை யழைத்தெதி ரிசைப்பார்
வென்றி மாதவர் போலயா மாதர்பான் மேவி
யொன்று நற்சிவ பூசனை புரிவதற் குடனு
நன்று மங்கையு மதற்குள பொருள்களு நல்கி

(ப - ரை.) என்று - என்று, தண்டநாயகர் தம்மை - வசவண்ணரை, அழைத்து - கூப்பிட்டு, எதிர் - நேரே, இசைப்பார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), வென்றி - வெற்றியையுடைய, மாதவர் போல - ஜங்கமமூர்த்திகளைப் போல, யாம் - நாம், மாதர்பால் - பெண்டிரிடத்தில், மேவி - சென்று, ஒன்றும் - மநோத்ருடத்தையுடைய, நல் - சிறந்த, சிவபூசனை - சிவபூஜையை, புரிவதற்கு - விரும்பிச்செய்வதற்கு, உடனாம் - உடன்படுவோம், நன்கு - நன்மையுடைய, மங்கையும் - பெண்ணையும், அதற்கு - அதற்கு, உள்ள - உண்டான, பொருள்களும் - திரவியங்களையும் நல்கி - கொடுத்து, எ-று.

(பொ-ரை.) என்று வசவண்ணரைக் கூப்பிட்டு நேரே சொல்வாராயினர், எவ்வாறெனின்:— வெற்றியையுடைய ஜங்கமமூர்த்திகளைப்போல நாம் பெண்டிரிடத்திற் சென்று மநோத்ருடத்தையுடைய சிறந்த சிவபூஜையை விரும்பிச் செய்வதற்குடன்படுவோம், நன்மையுடைய பெண்ணையும் அதற்குண்டான திரவியங்களையுங் கொடுத்து.

(வி - ரை.) மங்கை - பருவங் குறியாது பொதுவாய்ப் பெண்ணென்னுந் துணையாய் நின்றது. (ரு)

செல்லு மாதவர் தம்முட னம்மையுஞ் சேர்ப்பாய்
வல்லை யென்றலுந் தண்டநா யகருள மகிழ்ந்து
நல்ல தென்றுற நண்பினன் மெல்லென நகைத்துப்
புல்லி நேயரா யிருகரங் குவித்தெதிர் போற்றி.

(ப-ரை.) செல்லும் - போகின்ற, மாதவர் தம்முடன் - ஜங்கம மூர்த்திகளோடு, நம்மையும் - எம்மையும், வல்லே - விரைவாக, சேர்ப்பாய் - சேரப்பண்ணுவாய், என்றலும் - என்று கேட்டமாத்திரத்தில், தண்டநாயகர் - வசவண்ணர், உள்ளம் மகிழ்ந்து - மனமகிழ்ந்து, நல்லது - நல்லகாரியம், என்று - என்று, உறு - மிக்க, நண்பினால் - விருப்பத்துடன், மெல் என நகைத்து - புன்முறுவல் செய்து, புல்லி - தழுவிக்கொண்டு, நேயர்ஆய் - அன்புடையவராகி, இரு - இரண்டு, கரம்-திருக்கைகளையும், குவித்து - கூப்பி, எதிர் - எதிரே, போற்றி - வணங்கி, எ-று.

(பொ-ரை.) போகின்ற ஜங்கமமூர்த்திகளோடு எம்மையும் விரைவாகச் சேரப்பண்ணுவாயென்று கேட்டமாத்திரத்தில், வசவண்ணர் மனமகிழ்ந்து, நல்லகாரியமென்று மிக்க விருப்பத்துடன் புன்முறுவல் செய்து, தழுவிக்கொண்டன்புடையவராகி, இரண்டு திருக்கைகளையும் கூப்பி யெதிரே வணங்கி. (சு)

எனைத்து நெஞ்சினால் வாக்கினு மிகழ்ந்திடா திசைந்து
வனப்பின் மிக்கது சாரங்கள் மணவகை யடைக்காய்
கனத்த நன்னிதி புதுமல ரிவையெலாங் கட்டி
யனைத்து நின்றசெய் பரிசனர் கரங்களி லளித்தே.

(ப - ரை.) எனைத்தும் - எவ்வளவும், நெஞ்சினால் - மனத்தினாலும், வாக்கினால் - வாக்கினாலும், இகழ்ந்திடாது - இகழாமல், இசைந்து - சம்மதித்து, வனப்பில் - அழகில், மிக்க - மிகுந்த, துசு - சேலை, ஆரங்கள் - முத்து மாலைகள், மண வகை - வாசனைத் திரவியங்கள், அடைக்காய் - தாம்பூலம், கனத்த - மேன்மைபொருந்திய, நல்-மிக்க, நிதி-பொருள்கள், புது - புதிய, மலர் - புஷ்பங்களாகிய, இவை-இவற்றை, எல்லாம் - முழுதும், கட்டி-முடிந்து, அனைத்தும்-எல்லாக் காரியங்களையும், நின்று - முன்னின்று, செய் - பண்ணவல்ல, பரிசனர் - பரிசாரகருடைய, கரங்களில் - கைகளில், அளித்து - கொடுத்து, எ-று.

(பொ-ரை.) எவ்வளவும் மனத்தினாலும் வாக்கினாலு மிகழாமற் சம்மதித்து, அழகில் மிகுந்த சேலை, முத்து மாலைகள், வாசனைத் திரவியங்கள், தாம்பூலம், மேன்மை பொருந்திய பொருள்கள், புதிய புஷ்பங்களாகிய இவற்றை முழுதும் முடிந்து, எல்லாக் காரியங்களையும் முன்னின்று பண்ணவல்ல பரிசாரகருடைய கைகளிற் கொடுத்து.

(வி-ரை.) அன்றலர்ந்த மலரைப் புதுமலரென்றும், தரும மார்க்கத்தி லீட்டிய பொருளைக் கனத்த நன்னிதி யென்றும் சொன்னார். வாக்கு ஈண்டு நாவெனப் பொருள்பட நின்றது - அடைக்காய் - வெற்றிலைப்பாக்கு. (எ)

எழுது மோவியப் பாவையோ விருநிதி யதனாற்
பழுதி லாதுசெய் மங்கையோ பதுமையோ பவளக்
கொழுவி தாகிய கொடிகொலோ வென்னலாங் கோல
மொழுகு மேனியா ளுருத்திர கணிகைபா லுய்த்தார்.

(ப - ரை.) எழுதும்-எழுதப்பட்ட, ஓவியப்பாவையோ - சித்திரப்பிரதிமையோ, இரு - (மாற்று) உயர்ந்த, நிதி அதனால்-பொன்னினால், பழுது - குற்றம், இல்லாது - இல்லாமல், செய் - பண்ணப்பட்ட, மங்கையோ - பெண்ணோ, பதுமையோ - திருமகளோ, கொழுவிதாகிய-முதிர்ந்த, பவளக்கொடிகொலோ-பவளக்கொடியோ,

என்னல் ஆம் - என்பதுபோன்ற, கோலம்-அழகு; ஒழுகும்-ஒழுகுகின்ற, மேனியாள்-தேகத்தை யுடையவளாகிய, உருத்திர கணிகை பால்-வேசியினிடத்தில், உய்த்தார்-சேர்த்தார்கள்.

(பொ-ரை.) எழுதப்பட்ட சித்திரப் பிரதிமையோ? மாற்றுயர்ந்த பொன்னினால் குற்றமில்லாமற் பண்ணப்பட்ட பெண்ணோ? திருமகளோ? முதிர்ந்த பவளக் கொடியோ? என்பது போன்ற அழகொழுகுகின்ற தேகத்தை யுடையவளாகிய வேசியினிடத்திற் சேர்த்தார்கள்.

(வி-ரை.) பத்மத்தில் வசிப்பவளாதலால் திருமகளைப் பதுமையெனப்பட்டது. உருத்திர கணிகையின் பெயர் விசாரகாரி என்பது. ஜங்கமர்களை யன்றி பவிகளை நேசியாதவரும் சிவபக்தியிற் சிறந்தவருமாதலால் வேசியரை உருத்திரகணிகையென்றார். கொல் - அசை. (அ)

இதமு றும்பல வளம்பரி சனத்தர்கொண் டேக
முதிர்ம னத்தரா முத்தசங் கையரெனு முனிவர்
மதன காலனே மடந்தையர் தந்தையோ வென்ன
வதிக ரூபியாங் கணிகையா ளகத்துறு மளவில்.

(ப - ரை.) இதம் உறும் - விரும்புதற்குரிய, பல - பலவகைப்பட்ட, வளம் - பண்டங்களை, பரிசனத்தர் - பரிசாரகர், கொண்டு - கைகளிற் கொண்டு, ஏக - போதலும், முதிர் - பழுத்த, மனத்தர் ஆம் - மனத்தை யுடையவராகிய, முத்த சங்கையர்-முத்தசங்கையர், என்னும்-என்கின்ற, முனிவர்-ஜங்கமர், மதனகாலனே-மன்மதனைச் சுட்டெரித்தவனாகிய சிவபெருமானோ, மடந்தையர்க்கு - மாதர்க்கு, தந்தையோ - அப்பனோ; என்ன - என்று சொல்லும்படி, அதிக - மிகுந்த, ரூபி ஆம் - அழகை யுடையவளாகிய, கணிகையாள் - வேசியினது, அகத்து - வீட்டில், உறும் அளவில் - சேர்ந்தமாத்திரத்தில், எ - று.

(பொ - ரை.) விரும்புதற்குரிய பல வகைப்பட்ட பண்டங்களைப் பரிசாரகர் கைகளிற்கொண்டு போதலும், பழுத்த மனத்தை யுடையவராகிய முத்தசங்கைய ரென்கின்ற ஜங்கமர் மன்மதனைச் சுட்டெரித் தவனாகிய சிவபெருமானோ? மாதர்க்கு அப்பனோ? என்று சொல்லும்படி மிகுந்த அழகை யுடையவளாகிய வேசியினது வீட்டிற் சேர்ந்த மாத்திரத்தில். (௯)

வசவ தேவர்த மிசையெனும் வளரொளி வனப்பி
னசைவி லாமையைப் பருதிகண் டஞ்சிப்பி னிடைந்து
விசையில் வீழ்வது போலவே விரிகதிர் குறைந்தெண்
டிசையின் மேற்கதாங் கடலிடை வீழ்ந்துகீழ்ச் செறிந்தான்.

(ப-ரை.) வசவதேவர் - வசவேசருடைய, இசை - புகழ், என்னும் - என்கின்ற, வளர்-அதிகரிக்கின்ற, ஒளி - விளங்குகின்ற, வனப்பின்-அழகில், அசைவு-சலித்தல், இல்லாமையை - இல்லாதிருத்தலை, பருதி - சூரியன், கண்டு - பார்த்து, அஞ்சி - பயந்து, பின் இடைந்து - தோற்றுப்போய், விசையில் - வேகமாக, வீழ்வது போல - விழுதல் போல, விரி - பரந்த, கதிர் - கிரணங்கள், குறைந்து - தேய்ந்து, எண் - எட்டு, திசையில் - திக்குகளிலொன்றாகிய, மேற்கு அது ஆம் - மேற்குத் திக்கிலுள்ள, கடல் இடை - கடலில், வீழ்ந்து - விழுந்து, கீழ்- பாதாளலோகத்தை, செறிந்தான் - அடைந்தான், எ-று.

(போ-ரை.) வசவேசருடைய புகழென்கின்ற அதிகரிக்கின்ற விளங்குகின்ற அழகில் சலித்தலில் லாதிருத்தலைச் சூரியன் பார்த்துப் பயந்துத் தோற்றுப்போய் வேகமாக விழுதல்போலப் பரந்தகிரணங்கள் தேய்ந்து எட்டுத்திக்குகளிலொன்றாகிய மேற்குத் திக்கிலுள்ள கடலில் விழுந்து பாதாளலோகத்தை யடைந்தான்.

(வி-ரை.) இந்தச் செய்யுளில் சூரியாத்தமனம் கூறப்பட்டது. அது-பகுதிப்பொருள் விகுதி. (௧0)

அவந்த ரும்பர சமயர்மே னந்தியா ரங்கண்
சிவந்த போலவே மேல்கட லிடத்துவிண் சிவந்த
பவங்கொ ளப்பர வாதர்கள் பலமுக மொடுங்கிக்
குவிந்த போலவண் பங்கய மலரெலாங் குவிந்த.

(ப-ரை.) அவம் தரும் - பயனற்றவராகிய, பரசமயர் - பரசமயவாதிகளின், மேல் - மீது, நந்தியார் - வசவதேவருடைய, அம் கண்-திருக்கண்கள், சிவந்தபோல - செவந்துப்போனபோல, மேல்கடல் இடத்து - மேற்றிசைக்கடலில், விண் - ஆகாயம், சிவந்த - செவந்துப்போயிற்று, பவம் கொள்-பிறவிக்கேதுவாகிய, அ - அந்த, பரவாதர்கள்-பரசமயவாதிகளுடைய, பல-அநேக, முகம்-முகங்கள், ஒடுங்கி-சுருங்கி, குவிந்தபோல - கூம்பியபோல, வண்-அழகிய, பங்கயமலர்-தாமரைமலர்கள், எல்லாம் - சுருங்கிக் முழுதும், குவிந்த - கூம்பிய, எ-று.

(போ-ரை.) பயனற்றவராகிய பரசமயவாதிகளின்மீது வசவதேவருடைய திருக்கண்கள் செவந்துப் போனபோல மேற்றிசைக் கடலில் ஆகாயம் செவந்துப் போயிற்று, பிறவிக்கேதுவாகிய அந்தப் பரசமயவாதிகளுடைய அநேக முகங்கள் கூம்பிய போல அழகிய தாமரை மலர்கள் முழுதும் கூம்பிய.

(வி - ரை.) வாதர் — வாதுசெய்பவர். குவிதல் - மூடிக்கொள்ளுதல். விண் சிவந்த என்றது செவ்வானக்குறியை. கண் சிவந்த என்றது துஷ்ட நிக்கிரகத்தின் மீதெழுந்த கோவக்குறியை. இந்தச் செய்யுளில் சூரியோதயம் கூறப்பட்டது. (௧௧)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உததியிற் பிறந்த வெம்மோ டுதித்தமா வசவ தேவர்
விதமனை யிருக்கப் பெற்றாள் விதுவரன் சென்னி யுற்றா
னிதழுற வெம்மை மண்ணோ ரெச்சில்செய் கின்றா ரென்று
கதறுதல் போலக் கோயிற் கண்டொறுஞ் சங்க மார்த்த.

(ப - ரை.) உததியில் - திருப்பாற்கடலில், பிறந்த - தோன்றின, எம்மோடு - நம்முடன், உதித்த - தோன்றின, மா - திருமகள், வசவதேவர் - வசவேசரது, விதம் - மேன்மைபொருந்திய, மனை - திருமாளிகையில், இருக்கப் பெற்றாள்-வாழும் படியான பாக்கியத்தைத் தவஞ்செய்தடைந்தாள், விது - சந்திரன், அரன் - சிவ பெருமானது, சென்னி - திருமுடியில், உற்றான் - வாழும்படியான பாக்கியத்தைத் தவஞ்செய்தடைந்தான், இதழ் உற - உதடுபடும்படி, எம்மை - எங்களை, மண்ணோர்- உலகத்தார், எச்சில் செய்கின்றார்-(வாயில்வைத்தூதி) எச்சிலாக்குகின்றார், என்று - என்று, கதறுதல்போல-அழுவதுபோல, அ-அந்த, கோயில் கண் தொறும்-கோயில் களிலெல்லாம், சங்கம் - சங்கங்கள், ஆர்த்த - முழங்கிய, எ-று.

(போ - ரை.) திருப்பாற்கடலிற்றோன்றின நம்முடன் தோன்றின திருமகள் வசவேசரது மேன்மைபொருந்திய திருமாளிகையில் வாழும்படியான பாக்கியத்தைத் தவஞ் செய்தடைந்தாள்; சந்திரன் சிவபெருமானது திருமுடியில் வாழும்படியான பாக்கியத்தைத் தவஞ் செய்தடைந்தான்; உதடுபடும்படி எங்களை உலகத்தார் வாயில் வைத்தூதி யெச்சிலாக்குகின்றாரென்று அழுவதுபோல அந்தக் கோயில்களிலெல்லாம் சங்கங்கள் முழங்கிய.

(வி - ரை.) மா, விது - வடசொற்கள். ஆர்த்த - அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை வினைமுற்று. அரன் ஹர ன்னும் வடசொற்றிரிபு. திருப்பாற்கடலைக் கடையுங்காலத்தில் திருமகள், சந்திரன், சங்கு, முதலியவை பிறந்தனவென்பது வரலாறு. (கஉ)

இனியநம் வசவ தேவ ரியல்கண்டு சமணைப் பற்றி
வனிதைமார் நகுதல் போல மலர்ந்தன வாம்ப லெங்கு
மனியரா மமணர் முற்று மடங்குதல் போலத் தத்த
நனியுறு சேக்கை தோறு நண்ணின புட்க ளெல்லாம்.

(ப - ரை.) இனிய - இன்சொற்களையுடைய, நம் - நமது, வசவதேவர் - வசவண்ணரது, இயல் - சன்மார்க்கத்தை, கண்டு - பார்த்து, சமணை - சமணர்களை, பற்றி - குறித்து, வனிதைமார் - மாதர்கள், நகுதல்போல-சிரிப்பதுபோல, ஆம்பல்- செவ்வல்லி மலர்கள், எங்கும் - எவ்விடத்திலும், மலர்ந்தன - விரிந்தன, அன்னியர் ஆம் - பரசமய வாதிகளாகிய, அமணர் - சமணர்கள், முற்றும் - எல்லாம், அடங்குதல் போல - அடங்கிப்போவது போல, தத்தம் - தங்கள் தங்களுடைய, நனி உறு - மிக்க நெருக்கமாயுள்ள, சேக்கை தோறும் - கூடுகளிலெல்லாம், புட்கள்-பறவைகள், எல்லாம் - முற்றும், நண்ணின - அடங்கிப்போயின, எ - று.

(போ - ரை.) இன்சொற்களையுடைய நமது வசவண்ணரது சன்மார்க்கத்தைப் பார்த்துச் சமணர்களைக்குறித்து மாதர்கள் சிரிப்பதுபோலச் செவ்வல்லி மலர்கள் எவ்விடத்திலும் விரிந்தன, பரசமயவாதிகளாகிய சமணர்களெல்லாம் அடங்கிப் போவது போலத் தங்கள் தங்களுடைய மிக்க நெருக்கமாயுள்ள கூடுகளிலெல்லாம் பறவைகள் முற்றும் அடங்கிப் போயின. (கங)

## கலிநிலைத்துறை.

வெய்ய புன்சமண் கள்ளர்தாம் வெருவிட வந்த
செய்ய தண்டநா யகரென வெழுந்தது திங்க
ளையர் நந்திக ளருளினா லனைத்துளோர் நுதலி
னுய்ய வந்தவெண் ணீறுபோ லுதித்தன வுடுக்கள்.

(ப-ரை.) வெய்ய - கொடிய, புல் - அற்பர்களாகிய, சமண் கள்ளர் - கள்ளச் சமணர்கள், வெருவிட - பயப்பட்டொழிய, வந்த - உதித்த, செய்ய - சன்மார்க்கத்தையுடைய, தண்டநாயகர் - வசவண்ணர், என்ன - போல, திங்கள் - சந்திரன், எழுந்தது - உதித்தான், ஐயர் - இறைவராகிய, நந்திகள் - வசவண்ணரது, அருளினால் - அநுக்கிரகத்தினால், அனைத்து உள்ளோர் - எல்லாருடைய, நுதலின் - நெற்றியில், உய்ய - கடைத்தேறும்படி, வந்த - தோன்றின, வெண்ணீறு போல் - திருவெண்ணீறு போல், உடுக்கள் - நக்ஷத்திரங்கள், உதித்தன - தோன்றின, எ-று.

(பொ-ரை.) கொடிய அற்பர்களாகிய கள்ளச் சமணர்கள் பயப்பட்டொழிய உதித்த சன்மார்க்கத்தையுடைய சைவண்ணர் போல சந்திரன் உதித்தான்; இறைவராகிய சைவண்ணரது அநுக்கிரகத்தினால் எல்லாருடைய நெற்றியிலும் கடைத்தேறும்படித் தோன்றின திருவெண்ணீறு போல் நக்ஷத்திரங்கள் தோன்றின. (௧௪)

இந்த வாறிராத் திங்கள்வந் திசைதரும் பொழுதி
னந்த மெய்த்தவர் சங்கைய ரெழுந்தருள் வாரைச்
சந்த வோவிய முயிர்பெற்றுச் சரிக்குதல் போல
வந்து ருத்திர கணிகையா ளெதிருற வணங்கி.

(ப-ரை.) இந்த ஆறு - இவ்விதமாக, இரா - இரவில், திங்கள் - சந்திரன், வந்து - தோன்றி, இசை தரும் - வாய்த்த, பொழுதின் - காலத்தில், அந்த - அந்த, மெய் - உண்மையான, தவர் - ஜங்கமராகிய, சங்கையர் - முத்தசங்கையர், எழுந்தருள்வாரை - எழுந்தருள்பவரை, சந்தம் - அழகிய, ஓவியம் - சித்திரப் பிரதிமையானது, உயிர் - உயிரை, பெற்று - அடைந்து, சரிக்குதல்போல - நடந்து வருவது போல, உருத்திர கணிகையாள் - வேசியானவள், வந்து - சென்று, எதிர் - எதிரே, உற வணங்கி - சாஷ்டாங்கமாகப் பணிந்து, எ-று.

(பொ-ரை.) இவ்விதமாக இரவில் சந்திரன் தோன்றி வாய்த்த காலத்தில் அந்த உண்மையான ஜங்கமராகிய முத்தசங்கையர் எழுந்தருள் பவரை அழகிய சித்திரப் பிரதிமையானது உயிரை யடைந்து நடந்து வருவதுபோல வேசியானவள் சென்று எதிரே சாஷ்டாங்கமாகப் பணிந்து. (௧௫)

கரங்கொ டுத்தகங்கொண்டு போய்க் கழலிணை விளக்கி
யிரங்கு மன்பினாற் றீர்த்தம தருந்திநீ டெழிலாற்
றிரங்கொ ளாதனத் திருத்திமுன் னினியன செப்பி
வரந்த ருந்திரு நீறடைக் காய்வைத்து வணங்கி.

(ப-ரை.) கரம் கொடுத்து - கைபிடித்து, அகம் - உள்ளே, கொண்டு - அழைத்துக்கொண்டு, போய் - வந்து, கழல் இணை - இரண்டு திருவடிகளையும், விளக்கி - கழுவி, இரங்கும் - மனமுருகுதற்குரிய, அன்பினால் - அன்புடன், தீர்த்தம் - பாதோதகத்தை, அருந்தி - (சற்று) ஸ்வீகரித்து, நீடு - பெரிய, எழிலால் - அழகினால், திரம் கொள் - நிலைபெற்ற, ஆதனத்து - ஆசனத்தில், இருத்தி - எழுந்தருளப்பண்ணி, முன் - முன்னின்று, இனியன - இன்சொற்களை, செப்பி - சொல்லி, வரம் தரும் - மேன்மை பொருந்திய, திரு நீறு - விபூதியையும், அடைக்காய் - தாம்பூலத்தையும், வைத்து - இருத்தி, வணங்கி - தொழுது, எ-று.

(பொ-ரை.) கைபிடித்து, உள்ளே யழைத்துக்கொண்டுவந்து, இரண்டு திருவடிகளையுங் கழுவி, மனமுருகுதற்குரிய அன்புடன் பாதோதகத்தைச் சற்று ஸ்வீகரித்து, பேரழகினால் நிலைபெற்ற ஆசனத்தில் எழுந்தருளப்பண்ணி, முன்னின்று இன் சொற்களைச் சொல்லி, மேன்மை பொருந்திய விபூதியையும் தாம்பூலத்தையு மிருத்தித் தொழுது. (௧௬)

வளந்த ரும்பரி சனத்தரைச் செலுமென்று மகிழ்வா
துளங்கு ளிர்ந்தகம் புகும்பொழு துருத்திர கணிகை
தளங்கொண் மாளிகை படிகமா மணியினாற் சமைத்தங்
களந்தி டற்கரி தாமொளி மண்டப மதனில்.

(ப-ரை.) வளம்தரும் - நன்றியுடைய, பரிசனத்தரை - பரிசாரகரை, செல்லும் - போம், என்று - என்று விடைகொடுத்து, மகிழ்வால் - சந்தோஷத்துடன், உள்ளம் - மனம், குளிர்ந்து - குளிர்ச்சியடைந்து, அகம் - உள்ளே, புகும்பொழுது - பிரவேசிக்கின்றகாலத்தில், உருத்திரகணிகை - வேசியினுடைய, தளம் கொள் - உபரிகையையுடைய, மாளிகை - வீட்டில், படிகம் - பளிங்குக்கற்களினாலும், மா - அழகிய, மணி - ரத்னங்களினாலும், சமைத்து - இழைக்கப்பட்டு, அங்கு - அவ்விடத்தில், அளந்திடற்கு - (இதன்பெருமையித்தன்மைத்தென்று) வரையறுத்துச் சொல்வதற்கு, அரிதாம் - முடியாதகாரியமாம், ஒளி - பிரகாசிக்கின்ற, மண்டபம் அதனில் - உபரிகையில், எ-று.

(பொ-ரை.) நன்றியுடைய பரிசாரகரைப் போமென்று விடைகொடுத்துச் சந்தோஷத்தினால் மனம் குளிர்ச்சியடைந்து, உள்ளே பிரவேசிக்கின்ற காலத்தில்வேசியினுடைய உபரிகையையுடைய வீட்டில் பளிங்குக் கற்களினாலும் அழகிய ரத்னங்களினாலுமிழைக்கப்பட்டு அவ்விடத்தில் இதன் பெருமையை யித்தன்மைத்தென்று வரையறுத்துச் சொல்வதற்கு முடியாத காரியமாம், பிரகாசிக்கின்ற உபரிகையில். ()

கிள்ளை சாரிகை கபோதங்கண் முழங்கவே களித்த
வுள்ள நைந்திட வீணை யாழ்கின்னரி யொலிப்ப
வள்ளி தாகிய தமனியக் கட்டின்மேல் வனப்பார்
பள்ளி யொள்ளிய பஞ்சணை மேன்மலர் பரப்பி.

(ப-ரை.) கிள்ளை-கிளிகளும், சாரிகை-நாகணவாய்ப் புட்களும், கபோதங்கள்-புறாக்களும், முழங்க-சத்திக்க, களித்த-மகிழ்ச்சி யடைந்த, உள்ளம்-மனம், நைந்திட-வருத்தமடைய, வீணை - வீணைகளும், யாழ் - யாழ்களும், கின்னரி - கின்னரிகளும், ஒலிப்ப - சத்திக்க, வள்ளிதாகிய - அழகிய தாகிய, தமனியம் - பொன்னினாற் செய்யப்பட்ட, கட்டில்-கட்டிலின், மேல் - மீது, வனப்பு ஆர் - அழகு பொருந்திய, பள்ளி - படுக்கையாகிய, ஒள்ளிய - மேன்மை பொருந்திய, பஞ்ச அணை - பஞ்சமெத்தையின், மேல்- மீது, மலர் - புட்பங்களை, பரப்பி - பரவச்செய்து, எ-று.

(பொ-ரை.) கிளிகளும், நாகணவாய்ப் புட்களும், புறாக்களும் சத்திக்க, மகிழ்ச்சியடைந்த மனம் வருத்தமடைய வீணைகளும், யாழ்களும், கின்னரிகளும் சத்திக்க, அழகியதாகிய பொன்னினாற்செய்யப்பட்ட கட்டிலின்மீது அழகு பொருந்திய படுக்கையாகிய மேன்மை பொருந்திய பஞ்சமெத்தையின் மீது புஷ்பங்களைப் பரவச்செய்து.

(கஅ)

தூங்கு தீபங்கள் புடைதொறு மசைவறச் சுடர
வோங்கு மென்றிரை விரித்துமேற் கட்டிக ளொளிரப்
பாங்கு தாதியர் சவரங் களாஞ்சிகள் பற்றி
யாங்கு தெண்பனீர் தெளித்தபூ விசிறிக ளசைப்ப.

(ப-ரை.) தூங்கு - தொங்குகின்ற, தீபங்கள் - விளக்குகள், புடைதொறும் - பக்கங்களிலெல்லாம், அசைவு அற - அசையாமல், சுடர - பிரகாசிக்க, ஓங்கும் - உயர்ந்த, மெல் - மிருதுவாகிய, திரை - திரைச் சீலைகளை, விரித்து - தொங்கவிட்டு, மேற்கட்டிகள் - விதானங்கள், ஒளிர - பிரகாசிக்க, பாங்கு - பக்கங்களில், தாதியர்-தோழிமார்கள், சவரங்கள் - சாமரங்களையும், களாஞ்சிகள் - படிகங்களையும், பற்றி - ஏந்தி நிற்க, ஆங்கு - அவ்விடத்தில், தெள் - பரிசுத்தமாகிய, பனீர் - பன்னீரை, தெளித்த-இறைத்த, பூவிசிறிகள் - பூவிசிறிகளை, அசைப்ப - வீசர எ-று

(பொ - ரை.) தொங்குகின்ற விளக்குகள் பக்கங்களிலெல்லாம் அசையாமற் பிரகாசிக்க, உயர்ந்த மிருதுவாகிய திரைச்சீலைகளைத் தொங்கவிட்டு விதானங்கள் பிரகாசிக்க, பக்கங்களில் தோழிமார்கள் சாமரங்களையும் படிகங்களையு மேந்திநிற்க, அவ்விடத்தில் பரிசுத்தமாகிய பன்னீரை யிறைத்த பூவிசிறிகளை வீசா. (கக)

வாச நீர்சின்னக் கெண்டிகை நிறைத்துமுன் வைப்பார்
பூசு சந்தன மாதிசேர் பொற்கின்ன நிறைப்பா
ராசி லாவடைக் காய்தரு மடைப்பைமுன் பிடிப்பார்
தேசு லாவுபொற் படிநல வந்திகை சேர்ப்பார்.

(ப-ரை.) வாசம் நீர் - வாசனை நீரையுடைய, சின்ன - சிறிய, கெண்டிகை-கிண்ணங்களை, முன் - எதிரே, நிறைத்து வைப்பார் - நிறைப்பார்கள், பூசு - பூசிக்கொள்வதற்குரிய, சந்தனம் - சந்தனம், ஆதி - முதலியவை, சேர் - பொருந்திய, பொன் கின்னம் - பொற்கிண்ணங்களை, நிறைப்பார் - நிறைத்து வைப்பார்கள், ஆசு - குற்றம், இல்லா - இல்லாத, அடைக்காய் தரும் - தாம்பூலத்தையுடைய, அடைப்பை - வெற்றிலைப்பையை, முன் - எதிரே, பிடிப்பார் - ஏந்துவார்கள், தேசு உலாவு - பிரகாசிக்கின்ற, பொன் - பொன்னினாற்செய்த, படி - சோபானங்களையுடைய, நல - சிறந்த, வந்தி - ஏணியை, கை - கையில், சேர்ப்பார் - சேரப்பண்ணுவார்கள், எ-று.

(பொ-ரை.) வாசனை நீரையுடைய சிறிய கிண்ணங்களை நிறைப்பார்கள், பூசிக்கொள்வதற்குரிய சந்தன முதலியவை பொருந்திய பொற்கிண்ணங்களை நிறைத்து வைப்பார்கள், குற்றமில்லாத் தாம்பூலத்தையுடைய வெற்றிலைப்பையை எதிரே ஏந்துவார்கள், பிரகாசிக்கின்ற பொன்னினாற்செய்த சோபானங்களையுடைய சிறந்த ஏணியைக் கையிற் சேரப்பண்ணுவார்கள். (உ0)

ஆகு மெல்லையிற் கனகசோ பானமே லைய
ரேகு போதினி லுருத்திர கணிகையா ளிருகை
மோக மேல்கொடு கொடுத்திட முத்தசங் கையர்தாம்
போக நெஞ்சின ரன்றியே யேறியுட் புகுந்து.

(ப-ரை.) ஆகும் - (இவ்வாறு தோழிமார்கள் பணிவிடை) செய்கின்ற, எல்லையில் - காலத்தில், கனக சோபானம் - பொற்படியின், மேல் - மீது, ஐயர் - ஐங்கமராகிய முத்தசங்கையர், ஏகுபோதினில் - ஏறிப் போகும்போது, உருத்திர கணிகையாள் - வேசியானவள், மோகம் - காமம், மேல்கொடு - தலைக்கேறி, இரு - இரண்டு, கை - கரங்களை, கொடுத்திட - பிடித்தழைக்க, முத்தசங்கையார் - முத்தசங்கையரானவர், போகம் - சிற்றின்பத்தில், நெஞ்சினர் அன்றி - விருப்பமில்லாதவராகி, ஏறி - ஏறிப்போய், உள் - உள்ளே, புகுந்து - பிரவேசித்து, எ-று.

(பொ ரை.) இவ்வாறு தோழிமார்கள் பணிவிடை செய்கின்ற காலத்தில் பொற்படியின் மீது ஐங்கமராகிய முத்தசங்கையர் ஏறிப்போகும்போது, வேசியானவள் காமம் தலைக்கேறி இரண்டு கரங்களைப் பிடித்தழைக்க, முத்த சங்கையரானவர் சிற்றின்பத்தில் விருப்ப மில்லாதவராகி யேறிப்போய் உள்ளே பிரவேசித்து. (உக)

பைம்பொன் மாமணிப் பரியங்க சயனத்தைப் பார்த்தே
யெம்பி ரானிருந் தருளுற்ற பீடமீ தென்ன
நம்பி யன்பினு னனிமிகப் பயந்ததற் கருகாக்
கம்ப ளாதனம் போட்டதன் கண்ணிருந் தருளி.

(ப - ரை) பை - பசிய, பொன் - பொன்னினாற்செய்து, மா - அழகிய, மணி-ரத்நங்களினாலிழைக்கப்பட்ட, பரியங்கம்-கட்டிலின் (மீதுவிரித்துள்ள), சயனத்தை-படுக்கையை, பார்த்து - நோக்கி, ஈது - இது, எம்-எமது, பிரான் - சிவபெருமான், இருந்து அருள் உற்ற - எழுந்தருளுதற்குரிய, பீடம் - ஆசனம், என்ன-என்று, நம்பி-துணிந்து, அன்பினால் - அன்புடன், நனிமிக - மிகவும், பயந்து - அஞ்சி, அதற்கு-அதற்கு, அருகா - சமீபத்தில், கம்பள ஆதனம் - கம்பளியையாசனமாக, போட்டு-பரப்பி, அதன் கண் - அதன் மேல், இருந்தருளி - எழுந்தருளி, எ-று.

(பொ-ரை.) பசிய பொன்னினாற் செய்து அழகிய ரத்நங்களினாலிழைக்கப்பட்ட கட்டிலின் மீது விரித்துள்ள படுக்கையை நோக்கி, இது எமது சிவபெருமான் எழுந்தருளுதற்குரிய ஆசனமென்று துணிந்து, அன்புடன் மிகவும் அஞ்சி, அதற்குச் சமீபத்தில் கம்பளியை யாசனமாகப் பரப்பி யதன் மேல் எழுந்தருளி. (௨௨)

நெடிய வேணியை விட்டுமுன் கட்டிநே ரிழைநீ
சடைகள் கட்டிலை யென்னிது சாற்றென யாங்க
ளடையு மம்பிகை யெங்களுக் கநாதியி லளித்த
கடிகொண் மெல்லிய சடையிது வெனமயிர் காட்ட.

(ப - ரை.) நேர் இழை - பெண்ணே, நீ - நீ, நெடிய - நீண்ட, வேணியை - (ஒற்றை) சடையை, விட்டு - (பின்னி) விட்டு, முன் - முன் (கொண்டையாக), கட்டி - கட்டி, சடைகள் - சுற்றைச்சடையாக, கட்டிலை-கட்டவில்லை, இது - இதற்குக் காரணம், என்-யாது, சாற்று-சொல், என்ன-என்றுகேட்டலும் (வேசியானவள்), யாங்கள் - நாங்கள், அடையும் - சரணடைகின்ற, அம்பிகை - பார்வதியம்மையார், எங்களுக்கு - எங்களுக்கு, அநாதியில் - பூர்வத்தில், அளித்த - அநுக்கிரகஞ்செய்த, கடிகொள் - வாசனைபொருந்திய, மெல்லிய - மிருதுவாகிய, சடை - சடை, இது-இது, என்ன - என்று, மயிர் - கூந்தலை, காட்ட - காண்பிக்க, எ-று.

(பொ - ரை.) பெண்ணே! நீ நீண்ட ஒற்றைச் சடையைப் பின்னிவிட்டு முன் கொண்டையாகக் கட்டிச் சுற்றைச்சடையாகக் கட்ட வில்லை, இதற்குக் காரணம் யாது? என்று கேட்டலும், வேசியானவள் நாங்கள் சரணடைகின்ற பார்வதியம்மையார் எங்களுக்குப் பூர்வத்தில் அநுக்கிரகஞ்செய்த வாசனைபொருந்திய மிருதுவாகிய சடை யிதுவென்று கூந்தலைக் காண்பிக்க.

(வி - ரை.) நேரிழை - அன்மொழித் தொகைக் காரணப்பெயர், செவ்விய ஆபரணமணிந்தவளென்பது பொருள். சிவப்பிரசாதமாகிய புட்பத்தை யணிந்திருந்தமையால் கடிகொள் சடை யென்றார். (உங)

பொறையு றந்தம துருவெலாம் பூதியைப் பூசி
நிறைய விந்தநீ றென்முனே நீதரிக் கிலாய்
யறைதி யென்றலு மம்பிகை யெனக்குமுன் னளித்த
முறையி னீறிது வென்றுமெய் மஞ்சளை மொழிந்தாள்.

(ப - ரை.) பொறை - (நாற்ற) சுமையாகிய, தமது-உம்முடைய, உரு - உடம்பு, எல்லாம் - நிறைய, பூதியை - (மஞ்சள் நிறமுள்ள) விபூதியை, பூசி - அணிந்து, நீ - நீ என் - என், முன்னே - எதிரே, இந்த-இந்த, நீறு - (வெண்ணிறமுள்ள) விபூதியை, நிறைய - (உடம்பு) எல்லாம், தரிக்கிலாய் - அணியவில்லை, அறைதி - சொல்

என்றலும் - என்று கேட்டலும் (வேசியானவள்), அம்பிகை - பார்வதியம்மையார், எனக்கு - எனக்கு, முன் - முன்னமே, அளித்த - அநுக்ரஹஞ்செய்த, முறையின் - (வேதாகம) விதிப்படி நியமித்த, நீறு - விபூதி, இது - இது, என்று - என்று, மெய் - உடம்பில் (பூசுதற்குரிய), மஞ்சள் - மஞ்சளை, மொழிந்தாள் - சொன்னாள், எ-று.

(பொ-ரை.) நாற்றச் சுவையாகிய உம்முடைய உடம்பு நிறைய மஞ்சள் நிறமுள்ள விபூதியை யணிந்து, நீ என் எதிரே இந்த வெண்ணிறமுள்ள விபூதியை உடம்பெல்லாம் அணியவில்லை யென்று கேட்டலும், வேசியானவள் பார்வதியம்மையார் எனக்கு முன்னமே அநுக்ரஹஞ்செய்த வேதாகம விதிப்படி நியமித்த விபூதி யிது வென்று உடம்பிற் பூசுதற்குரிய மஞ்சளைச் சொன்னாள். (உச)

கண்டி தம்முடற் றரித்துநீ காரிகை யிவைமேற்
கொண்டி டாததென் கூறென வுவர்க்கடற் கரையின்
மண்டு மிம்மணி மாலையன் றரியபாற் கடற்றீ
வுண்டிவ் வெள்ளைநற் கண்டிகை யெனமுத்தை யுரைத்தாள்.

(ப-ரை.) காரிகை - பெண்ணே, நீ - நீ, தம் - உம்முடைய, உடல் - உடம்பில், கண்டி - ருத்ராக்ஷங்களை, தரித்து - அணிந்து, இவை - இந்த ருத்ராக்ஷங்களை, மேல் - (உடம்பின்) மீது, கொண்டு இடாதது - அணியாததற்குக் காரணம், என் - யாது, கூறு - சொல், என்ன - என்று கேட்டலும் (வேசியானவள்), உவர் - உப்பு, கடல் கரையில் - கடற் கரையிலே, மண்டும் - மிகுதியாய்க் கிடக்கின்ற, இ - இந்த, மணி மாலை - (கறுத்த) ருத்ராக்ஷமாலைகள், அன்று - அல்ல, அரிய - மேன்மையாகிய, பால் கடல் - திருப்பாற்கடலிலுள்ள, தீவு - தீபாந்திரத்தில், இ - இந்த, நல் - சிறந்த, வெள்ளை - வெண்மையாகிய, கண்டிகை - ருத்ராக்ஷங்கள், உண்டு - உள்ளன, என்ன - என்று, முத்தை - முத்துமாலைகளை, உரைத்தாள் - சொன்னாள் எ-று.

(பொ - ரை.) பெண்ணே ! நீ உம்முடைய உடம்பில் ருத்ராக்ஷங்களை யணிந்து இந்த ருத்ராக்ஷங்களை யுடம்பின்மீது அணியாததற்குக் காரணம் யாது? என்று கேட்டலும், வேசியானவள் உப்புக் கடற்கரையிலே மிகுதியாய்க் கிடக்கின்ற இந்தக் கறுத்த ருத்ராக்ஷ மாலைகளல்ல, மேன்மையாகிய திருப்பாற்கடலிலுள்ள தீபாந்தரத்தில் இந்தசிறந்த வெண்மையாகிய ருத்ராக்ஷங்கள் உள்ளன வென்று முத்துமாலைகளைச் சொன்னாள். (உ௫)

மூத்த சங்கையர் மூத்தமூக் குத்தியை நோக்கிச்
சுத்த ருத்திராக் கத்தைநற் சிரத்தினிற் றாய்தாய்
வைத்தி டாதிந்த மூக்கினில் வைத்ததே னென்ன
வத்த காரண நீதனே வல்லென வறைந்தாள்.

(ப - ரை.) முத்தசங்கையர் - மூத்தசங்கையர், மூத்தம் மூக்குத்தியை - முத்து மூக்குத்தியை, நோக்கி-பார்த்து, சுத்த-பரிசுத்தமான, ருத்திராக்கத்தை - (ஒற்றை) ருத்ராக்ஷத்தை, நல் - சிறந்த, சிரத்தினில் - தலையில், தூய்து ஆய் - பரிசுத்தமாய், வைத்திடாது - (விதிப்படி) அணியாமல், இந்த - இந்த, மூக்கினில் - நாசியில், வைத்தது - அணிந்ததற்குக் காரணம், என் - யாது, என்ன - என்று கேட்டலும் (வேசியானவள்), அத்த - ஐயனே, காரண அதீதன் - திருமாலுக்கெட்டாதவனாகிய சிவபெருமானது, எவல்-கட்டளை, என்ன - என்று, அறைந்தாள்-சொன்னாள், எ-று.

(போ - ரை.) முத்தசங்கையர் முத்து மூக்குத்தியைப் பார்த்து பரிசுத்தமான ஒற்றை ருத்ராக்ஷத்தை சிறந்த தலையில் பரிசுத்தமாய் விதிப்படி யணியாமல் இந்த நாசியி லணிந்ததற்குக் காரணம் யாது? என்று கேட்டலும், வேசியானவள், ஐயனே! திருமாலுக் கெட்டாதவனாகிய சிவபெருமானது கட்டளையென்று சொன்னாள். (உ௬)

சற்குணத்தி நீகச் சட்ட மொன்றையே தரியா
தெற்கொள் மெய்யெலாங் கலையினா லூடலே னென்னத்
துற்ப வித்திரட் டுணைவிழிக் கென்னுட றோன்றா
நற்கிரமத்தினாற் போர்த்தன னெனமன நயந்து.

(ப - ரை.) சற்குணத்தி - உத்தமியே, நீ - நீ, கச்சட்டம் ஒன்றை - ஒரு கவுபீனத்தை, தரியாது - உடுக்காமல், எல்கொள் - பிரகாசிக்கின்ற, மெய்-உடம்பு, எல்லாம் - நிறைய, கலையினால் - சேலையால், மூடல் - போர்த்தற்குக்காரணம், என் - யாது, என்ன - என்று கேட்டலும் (வேசியானவள்), துற் - துஷ்டர்களாகிய, பவித்திரர்-பவிஜனக் கூட்டத்தாருடைய, துணை-இரண்டு, விழிக்கு - கண்களுக்கு, என் - எனது, உடல் - உடம்பு, தோன்றா - காணப்படா, நல்-நல்ல, கிரமத்தினால்-முறைமையினால், மனம் நயந்து-மனமகிழ்ந்து, போர்த்தனன்-மூடிக்கொண்டேன், என்ன - என்று சொல்லுதலும், எ - று.

(போ - ரை.) உத்தமியே! நீ ஒரு கவுபீனத்தை யுடுக்காமல் பிரகாசிக்கின்ற உடம்பு நிறைய சேலையால் போர்த்தற்குக் காரணம் யாது? என்று கேட்டலும், வேசியானவள் துஷ்டர்களாகிய பவிஜனக் கூட்டத்தாருடைய இரண்டு கண்களுக்கு எனது உடம்பு காணப்படா, நல்ல முறைமையினால் மனமகிழ்ந்து மூடிக்கொண்டேனென்றுசொல்லுதலும்.

(வி - ரை) பவிஜனங்கள் என்றது வீரசைவ ரல்லாதாரை. (உ௭)

அரிவை யாளிவ ளனாதிலாஞ் சனமுடை யாளென்
றிருகை கூப்பிநின் றிந்தநல் வேடத்திற் கெவர்தாம்
பெரிய தேசிகர் நியமமே தாசார பேதத்
துரிமை யேதுநின் குருபரம் பரையேது வுரைப்பாய்.

(ப-ரை.) அரிவையாள்- பெண்ணாகிய, இவள்- இவள், அனாதி - பழமையாகிய, லாஞ்சனம் உடையாள்-தபோ சின்னங்களையுடையவள், என்று-என்று- (நிச்சயித்து), இரு - இரண்டு, கை - கரங்களை, கூப்பி - குவித்து (வணங்கி,) நின்று-(முன்) நின்று, இந்த-இந்த, நல்-நல்ல, வேடத்திற்கு-தவக்கோலத்தை யநுக்ரஹஞ் செய்தற் குரிய, பெரிய - பரமமான, தேசிகர் - ஆசாரியர், எவர் - யார், நியமம் - தவம், ஏது- யாது, ஆசார பேதத்து - சமயாசாரபேதத்தின், உரிமை - நிலை, ஏது யாது, நின்-உனது, குருபரம்பரை-குருவமிச பாரம்பரியம், ஏது - யாது, உரைப்பாய்-சொல்வாய், எ-று.

(போ - ரை) பெண்ணாகிய யிவள் பழமையாகிய தபோ சின்னங்களை யுடையவ ளென்று நிச்சயித் திரண்டு கரங்களைக் குவித்து வணங்கி, முன்னின்று, இந்த நல்ல தவக்கோலத்தை யநுக்ரஹஞ் செய்தற்குரிய பரமாசாரியர் யார்? தவம் யாது? சமயாசாரபேதத்தின் நிலை யாது? உனது குருவமிச பாரம்பரியம் யாது? சொல்வாய்.

(வி - ரை.) அரிவை - பருவங்குறியாது பொதுவாய்ப் பெண்ணென்னும்! துணையாய் நின்றது. (உ௮)

தவங்க ளெவ்வழி செய்வைநீ யாருடன் சங்க
முவந்து பண்ணுதி யுண்பதே துரையென நகையா
சிவந்த வாயினள் செப்புவாள் வாமதே வாசா
னவங்கொண் முன்னுப தேசத்தால் வெள்ளிமா நகமேல்.

(ப - ரை) நீ - நீ, தவங்கள் - விரதங்களை, எ - எந்த, வழி-வருணக்கிரமப்படி, செய்வை - அநுஷ்டிக்கின்றனை, யாருடன் - எவரோடு, உவந்து - மனமகிழ்ந்து, சங்கம்-சம்பந்தம், பண்ணுதி - செய்கின்றனை, உண்பது-உண்ணப்பட்ட பதார்த்தம், ஏது - யாது, உரை - சொல், என்ன - என்று கேட்டலும், சிவந்த - செந்நிறம் பொருந்திய, வாயினள்-அதரத்தையுடையவளாகிய வேசியானவள், நகையா-சிரித்து, செப்புவாள் - சொல்வாளாயினள் (எவ்வாறெனின்), வாமதேவ ஆசான் - வாமதேவ ருஷியினுடைய, நவம் கொள் - நூதனமானதும், முன் - முதன்மையானதுமான, உபதேசத்தால் - உபதேசக்கிரமத்தால், மா - பெருமைபொருந்திய, வெள்ளி நகம்-வெள்ளியங்கிரி, மேல் - மீது, எ - று.

(போ - ரை.) நீ விரதங்களை யெந்த வருணக்கிரமப்படி யநுஷ்டிக்கின்றனை? எவரோடு மனமகிழ்ந்து சம்பந்தஞ் செய்கின்றனை? சொல்லென்று கேட்டலும், செந்நிறம் பொருந்திய அதரத்தையுடையவளாகிய வேசியானவள் சிரித்துச்சொல்வாளாயினள், எவ்வாறெனின்:—வாமதேவ ருஷியினுடைய நூதனமானதும் முதன்மையானதுமான உபதேசக்கிரமத்தால் பெருமைபொருந்திய வெள்ளியங்கிரி மீது.(உக)

அகில நாயகி யருந்தவஞ் செய்தவன் றன்னை
மிகம கிழ்ந்திடப் பண்ணித்தன் மேனியோர் பாலுந்
தகுமவ் வேடமுந் தந்திடப் பெற்றவத் தையல்
சகம ளித்தரு டேசிகை யாமவன் சமயம்.

(ப - ரை-) அகில நாயகி - பார்வதியம்மையார், அரு - அருமையாகிய, தவம் - விரதத்தை, செய்து - அநுஷ்டித்து, அவன் தன்னை - சிவபெருமானை, மிக-மிகவும், மகிழ்ந்திட - சந்தோஷிக்க, பண்ணி - செய்து, தன்-தனது, மேனி-திருமேனியில், ஓர்-ஒரு, பாலும் - பாகத்தையும், தகும் - பெருமையையுடைய, அ-அந்த, வேடமும்-தவக்கோலத்தையும், தந்திடப் பெற்ற - அநுக்கிரகஞ் செய்யப்பெற்ற, அ - அந்த, தையல் - பார்வதி யம்மையார், சகம் - உலகங்களை, அளித்தருள் - ஈன்றருளிய, தேசிகை - ஆசாரியை, யாம் - நாம், அவன் - அவனுடைய, சமயம் - கௌரீ சமயம், எ - று.

(போ-ரை.) பார்வதியம்மையார் அருமையாகிய விரதத்தை யநுஷ்டித்துச் சிவபெருமானை மிகவும் சந்தோஷிக்கச் செய்துத் தனது திருமேனியில் ஒரு பாகத்தையும் பெருமையையுடைய அந்தத் தவக்கோலத்தையும் அநுக்கிரகஞ் செய்யப் பெற்ற அந்தப் பார்வதியம்மையார் உலகங்களை யீன்றருளிய ஆசாரியை, நாம் அவனுடைய கௌரீசமயம்.

(வி - ரை.) அகிலம்-உலகு (பிரளயகாலம் வரையிலு மழியாதென்பதுபொருள்).

தரணி மோகன ளஞ்சன தாரியர் யாங்க
ளருமறைப்புரை புராணங்க ணிறையவன் றன்பால்
வரமு றும்படி கேட்டவ ளனைத்தையும் வகுப்பாள்
பரம காரணி சந்ததிப் பாவையர் யாங்கள்.

(ப - ரை.) யாங்கள் - நாங்கள், தரணி மோகன லாஞ்சன தாரியர் - ஜகந் மோஹினிகள், யாங்கள் - நாங்கள், அரு - அருமையாகிய, மறை-வேதங்களை, புரை- ஒத்த, புராணங்கள் - புராணங்களை, நிறைய - சம்பூரணமாக, அன்று- அந்த நாளில், அரன்பால்-சிவபெருமானிடத்தில், வரம் உறும்படி-மேன்மை யடையும்படி, கேட்ட வள் கேட்டவளும், அனைத்தையும் - (சரா சரங்கள்) எல்லாவற்றையும், வகுப்பாள் - ஈன்றருளின வளுமாகிய, பரமம் - மேலான, காரணி - பார்வதியம்மையாருடைய, சந்ததி - வமிச பாரம்பரியத்தில் வந்த, பாவைமார் - பெண்கள், எ - று.

(பொ-ரை.) நாங்கள் ஜகந்மோஹினிகள், நாங்கள் அருமையாகிய வேதங்களை யொத்த புராணங்களைச் சம்பூரணமாக அந்த நாளில் சிவபெருமானிடத்தில் மேன்மை யடையும்படிக் கேட்டவளும், சராசரங்க ளெல்லாவற்றையும் ஈன்றருளினவளுமாகிய மேலான பார்வதி யம்மையாருடைய வம்சபாரம்பரியத்தில் வந்த பெண்கள்.

(வி - ரை.) தரணி - உலகத்தார். மோகனம் - மோகித்தற்குறிய. லாஞ்சன தாரியர் - சின்னங்களை யுடையவர். (௧௧)

அட்ட மொன்றதாய்க் காய்ந்தபால் சருக்கரை யன்பா
லிட்ட லிங்கத்துக் கீந்தியா மருந்துவ மினிதாய்த்
தட்டி லாமலொண் கந்தமூ லாதிக டவத்தோர்
நட்ட பத்தர்க டந்திடிற் கொள்ளுது நயந்து.

(ப - ரை.) அட்டம் - எட்டுப்பங்கினளவினை, ஒன்று அது ஆய் - ஒரு பங்கினள வாக, காய்ந்த-திரளக் காய்ச்சின, பால்-பாலையும், சருக்கரை-சருக்கரையையும், அன் பால் - விருப்பத்துடன், இட்டலிங்கத்துக்கு - இஷ்டலிங்க மூர்த்திக்கு, ஈந்து-சமர்ப் பித்து, யாம் - நாம், இனிதாய் - சந்தோஷமாக, அருந்துவம் - உண்போம், தவத் தோர் - ஜங்கம மூர்த்திகளும், நட்ட - சிநேகஞ்செய்த, பத்தர்கள்-சிவபக்தர்களும், ஒள் - மேலான, கந்த மூல ஆதிகள்-கந்தமூல முதலிய பதார்த்தங்களை, தட்டு இல் லாமல் - தடையின்றி, தந்திடின் - கொடுப்பார்களானால், நயந்து - விரும்பி, கொள் ளுதும் - பெறுவோம், எ-று.

(பொ-ரை.) எட்டுப் பங்கினளவினை ஒரு பங்கினளவாகத் திரளக்காய்ச்சின பாலையும் சருக்கரையையும் விருப்பத்துடன் இஷ்டலிங்க மூர்த்திக்குச் சமர்ப்பித்து நாம் சந்தோஷமாக உண்போம், ஜங்கமமூர்த்திகளும் சிநேகஞ்செய்த சிவபக்தர் களும் மேலான கந்தமூல முதலிய பதார்த்தங்களைத் தடையின்றிக் கொடுப்பார்க ளானல் விரும்பிப் பெறுவோம். (௧௨)

தனும னந்தனம் வஞ்சனை யின்றியே தவறு
தனுதி னந்தருஞ் சங்கமர் தம்மையா மணைவோந்
தினமு மியாஞ்செயுஞ் செயலெலாஞ் சிவலிங்க பூசை
புனித முத்தியும் பத்தியு மெமக்கவர் புகலின்.

(ப-ரை.) யாம் நாம், தனு - உடலையும், மனம் - மனத்தையும், தனம் - பொருளை யும், வஞ்சனை - கபடம், இன்றி - இல்லாமல், தவறுது - தடையின்றி, அனுதினம் - நாடோறும், தரும் - தத்தஞ்செய்கின்ற, சங்கமர் தம்மை - ஜங்கமமூர்த்திகளை, அணை வோம் - சேர்வோம், தினமும் - நாடோறும், யாம் - நாம், செய்யும் - பண்ணுகின்ற,

செயல் - செய்கை, எல்லாம் - முழுதும், சிவலிங்க பூசை - சிவலிங்கார்ச்சனையே, புனிதம் - பரிசுத்தமான, முத்தியும் - மோக்ஷமும், பத்தியும் - பக்தியும், எமக்கு-நமக்கு, அவர் - அவர்களே, புகலின் - சொல்லுமிடத்து, எ-று.

(பொ-ரை.) நாம் உடலையும் மனத்தையும் பொருளையும் கபடமில்லாமல் தடையின்றி நாடோறும் தத்தஞ்செய்கின்ற ஜங்கமமூர்த்திகளைச் சேர்வோம், நாடோறும் நாம் பண்ணுகின்ற செய்கை முழுதும் ஸ்ரீ சிவலிங்கார்ச்சனையே, பரிசுத்தமான மோக்ஷமும் பக்தியும் நமக்கு அவர்களே, சொல்லுமிடத்து.

(வி - ரை.) உடல் பொருளாவி என்பது வழக்கு, ஈண்டு ஆவிக்குப் பதிலாக மனமென்றனர், எல்லா விஷய சேஷ்டைகளுக்கு மனங் காரணமா யிருத்தலால். ()

மூவி தத்தவாம் பொறிகளால் யாங்கள்செய் முறையீ
தாவி போலுமெம் மாரியர் மார்க்கமா நிட்டை
மேவு வேடங்கள் விரதநற் சரித்திர மிவையெந்
தாவில் சந்ததி மடந்தையர் சிவாலயஞ் சார்வார்.

(ப - ரை.) யாங்கள் - நாங்கள், மூ விதத்த ஆம் - (மனம் வாக்குக் காயமென்கின்ற) மூன்று வகையாகிய, பொறிகளால் - கரணங்களினால், செய் - பண்ணுகின்ற, முறை - கிரமம், ஈது - இதுவே, ஆவி - உயிர், போலும் - போன்ற, எம் - எமது, ஆரியர் - ஆசாரியருடைய, மார்க்கம் ஆம் - சமயாசார பேதமாகிய, நிட்டை - நிலையானது, மேவும் - பூண்டிருக்கின்ற, வேடங்கள் - தவக்கோலங்களும், விரதம் - தவத்திற் குரிய, நல் - நல்ல, சரித்திரம் - மார்க்கமுமாகிய, இவை - இவைகளே, எம் - எங்களுடைய, தா - குற்றம், இல் - இல்லாத, சந்ததி - வமிசபரம்பரையில் வருகின்ற, மடந்தையர் - மாதர்கள், சிவாலயம் - சிவாலயங்களிலெல்லாம், சார்வார்-சேர்ந்திருப்பார்கள், எ-று.

(பொ - ரை.) நாங்கள் மனம் வாக்குக் காயமென்கின்ற மூன்று வகையாகிய கரணங்களினாற் பண்ணுகின்ற கிரமம் இதுவே, உயிர் போன்ற எமது ஆசாரியருடைய சமயாசார பேதமாகிய நிலையானது பூண்டிருக்கின்ற தவக்கோலங்களும் தவத்திற்குரிய நல்ல மார்க்கமுமாகிய இவைகளே, எங்களுடைய குற்றமில்லாத வமிச பரம்பரையில் வருகின்ற மாதர்கள் சிவாலயங்களிலெல்லாம் சேர்ந்திருப்பார்கள். (௩௪)

ஐய வென்றுமின் னிசைத்தலு முத்தசங் கையர்தா
மெய்யி தென்னவே யவளைநற் றவரென விரும்பிச்
செய்யு முன்வளம் பார்க்கெனத் தெளிசிவார்ச் சனைக்குத்
துய்ய மஞ்சன மலர்தரு வாயெனத் தோகை.

(ப-ரை.) ஐய - ஐயனே, என்று - என்று, மின் - வேசையானவள், இசைத்தலும் - சொன்ன மாத்திரத்தில், முத்தசங்கையர் - முத்தசங்கையர், இது - இது, மெய் - உண்மை, என்னவே - என்றே, அவளை - அவளை, நல் - சிறந்த, தவர் - ஜங்கமமூர்த்தி, என்ன - என்று, விரும்பி - அன்புடன், செய்யும் - பண்ணுகின்ற, உன் - உனது, வளம் - பெருமையை, பார்க்க - காணும்படி, என் - எனது, அ - அந்த, தெளி - பரிசுத்தமாகிய, சிவார்ச்சனைக்கு - சிவபூஜைக்கு, துய்ய - பரிசுத்தமாகிய, மஞ்சனம் - திருமஞ்சனத்தையும், மலர் - புஷ்பங்களையும், தருவாய் - கொடுப்பாய், என்ன - என்று கேட்டலும், தோகை - வேசியானவள், எ-று.

(பொ - ரை.) ஐயனே! என்று வேசியானவள் சொன்னமாத்திரத்தில்; முத்த சங்கையர் இது உண்மை யென்றே அவளைச் சிறந்த ஜங்கமமூர்த்தியென்று; அன்புடன் பண்ணுகின்ற உனது பெருமையைக் காணும்படி எனது அந்தப் பரிசுத்தமாகிய இஷ்டலிங்க பூஜைக்குப் பரிசுத்தமாகிய திருமஞ்சனத்தையும் புஷ்பங்களையும் கொடுப்பாயென்று கேட்டலும், வேசியானவள்.

(வி - ரை.) மின், தோகை - உவமையாகு பெயர்கள். (௬௫)

இவர்க்கி தத்தன செய்வதே கருமமென் றெண்ணி
யவர்க்கு மஞ்சன மலர்கந்த மாதியா மனைத்து
முவப்பி னல்கியே யூழியந் தவறற வுதவத்
தவத்த ராமுத்த சங்கையர் சிவார்ச்சனைத் தருக்கால்.

(ப-ரை.) இவர்க்கு- இந்த ஜங்கமமூர்த்திக்கு, இதத்தன - இஷ்டமானவற்றை, செய்வதே - பண்ணுதலே, கருமம் - (நல்ல) காரியம், என்று - என்று, எண்ணி - நினைத்து, அவர்க்கு-அவர்க்கு, மஞ்சனம் - திருமஞ்சனம், மலர்- புஷ்பங்கள், கந்தம்- சந்தனம், ஆதியாம்-முதலாகிய, அனைத்தும் - (பூஜா திரவியங்கள்) எல்லாவற்றையும், உவப்பின்-சந்தோஷத்துடன், நல்கி - கொடுத்து, தவறு - குற்றம், அற-இல்லாமல், ஊழியம் - பணிவிடை, உதவ - செய்ய, தவத்தர் ஆம் - தபோதனராகிய, முத்த சங்கையர் - முத்தசங்கையர், சிவார்ச்சனை - சிவலிங்கபூஜை செய்தவனுலுண்டாகின்ற, தருக்கால் - களிப்பினால், எ-று.

(பொ-ரை.) இந்த ஜங்கமமூர்த்திக்கு இஷ்டமானவற்றைப் பண்ணுதலே நல்ல காரியமென்று நினைத்து, அவர்க்குத் திருமஞ்சனம், புஷ்பங்கள், சந்தனமுதலாகிய பூஜா திரவியங்களெல்லாவற்றையும் சந்தோஷத்துடன் கொடுத்து, குற்றமில்லாமற் பணிவிடைசெய்ய, தபோதனராகிய முத்தசங்கையர் சிவலிங்கபூஜை செய்வதனுலுண்டாகிய களிப்பினால். (௬௬)

போதவர்ச்சனை செய்வதைக் கணிகையாள் புரியா
வாதரத்தினிற் றன்பரி சனத்தரை யழைக்கக்
கோதின் மாமயிற் றிரள்களோ ரன்னத்தின் குழுவோ
வோது சித்திரப் பாவையோ வெனப்பல ருறலும்.

(ப-ரை.) போத - மிகுதியாக, அர்ச்சனை செய்வதை - சிவலிங்கபூஜை பண்ணுதலை, கணிகையாள் - வேசியானவள், புரியா - விரும்பி, ஆதரத்தினில்-அன்புடன், தன் - தனது, பரிசனத்தரை - பரிசாரகர்களை, அழைக்க - அழைத்தலும், கோது- குற்றம், இல் - இல்லாத, மா - அழகிய, மயில் திரள்களோ - மயிற்கூட்டங்களோ, அன்னத்தின் - அன்னப்பறவைகளின், குழுவோ - கூட்டங்களோ, ஓது - சொல்லப்பட்ட, சித்திரப் பாவையோ - ஓவியங்களோ, என்ன - என்று சொல்லும்படி, பலர்- அநேகத் தோழிமார்கள், உறலும் - வந்து சேர்தலும், எ - று.

(பொ-ரை.) மிகுதியாகச் சிவலிங்கபூஜை பண்ணுதலை வேசியானவள் விரும்பி, அன்புடன் தனது பரிசாரகர்களை யழைத்தலும், குற்றமில்லாத அழகிய மயிற்கூட்டங்களோ! அன்னப்பறவைகளின்கூட்டங்களோ! சொல்லப்பட்ட ஓவியங்களோ! என்று சொல்லும்படி அநேகத் தோழிமார்கள் வந்து சேர்தலும். (௬௭)

ஒத்து மத்தளந் தாளங்க ளொத்துமின் காளஞ்
சுத்த மாகவே யூதுமின் றோத்திரந் துதிமின்
சத்த நல்லிசை பாடுமி னாடுமின் றவறுச்
சித்த மெய்த்தவர் பூசனைக் கேவனான் செய்வேன்.

(ப-ரை.) ஒத்து- (சாத்திர) விதிப்படி, மத்தளம் -மத்தளத்தையும், தாளங்கள்- தாளங்களையும், ஒத்துமின் - கொட்டுங்கள், காளம் - எக்காளத்தை, சுத்தமாக - நன்றாக, ஊதுமின் - ஊதுங்கள், தோத்திரம் துதிமின் - தோத்திரஞ் செய்யுங்கள், சத்தம் - ஏழு (சுரங்களோடு கூடிய), நல் - நல்ல, இசை - இசைப்பாட்டுகளை, பாடுமின் - பாடுங்கள், ஆடுமின் - நடனஞ் செய்யுங்கள், தவறு - சலனமில்லாத, சித்தம்- மனத்தை யுடைய, மெய் - உண்மையாகிய, தவர் - தபோதனருடைய, பூசனைக்கு - (சிவலிங்க) பூஜைக்கு, நான்-யான், ஏவல் செய்வேன்-பணிவிடைசெய்வேன், எ-று.

(போ - ரை.) சாத்திரவிதிப்படி மத்தளத்தையும் தாளங்களையும் கொட்டுங்கள், எக்காளத்தை நன்றாக ஊதுங்கள், தோத்திரஞ் செய்யுங்கள், ஏழு சுரங்களோடுகூடிய நல்லிசைப்பாட்டுகளைப் பாடுங்கள், நடனஞ்செய்யுங்கள், சலனமில்லாத மனத்தை யுடைய உண்மையாகிய தபோதனருடைய சிவலிங்கபூஜைக்கு யான் பணிவிடை செய்வேன்.

(வி - ரை.) எக்காளம் - ஊதுங்குழல். சத்தம்-ஸப்தமென்னும் வடசொற்றிரிபு, ஸப்தசுரம் என்றது ஸரிகமபதநி என்பவற்றை. ஒத்து ஒத்துமின் - ஒத்து பிடியுங்கள், மத்தளம் ஒத்துமின் - மத்தளம் கொட்டுங்கள், தாளங்கள் ஒத்துமின் - தாளங்கள் போடுங்கள் எனப் பொருட்கோடலு மொன்று. ஒத்து - ஊதும் தோற்கருவி. (௯௮)

என்று தூபதி பார்த் ததிநன் னிவேதன மெல்லா
நின்று ருத்திர கணிகையா ணேயத்தி னளிப்ப
வென்று மெய்த்தவர் சிவார்ச்சனை விருப்பமே மிகவு
மொன்று நெஞ்சரா யிரவெலா மெழாதிருந் துவந்தார்.

(ப - ரை.) என்று-என்று (திட்டஞ்செய்து), தூபார்த்தி-தூபார்த்தி, தீபார்த்தி-தீபார்த்தி, நல் - நல்ல, நிவேதனம் - நைவேத்தியம், எல்லாம் - எல்லாவற்றையும், நின்று - முன்னின்று, உருத்திர கணிகையாள் - வேசியானவள், நேயத்தின் - அன்புடன், அளிப்ப-உதவ, வென்று (பஞ்சேந்திரிய நிக்கிரகஞ்செய்து) வெற்றியடைந்து, மெய் - தத்துவப் பொருளையுணர்ந்த, தவர் - தபோதனர், சிவார்ச்சனை - சிவலிங்க பூஜையின், விருப்பமே - நாட்டமே, மிகவும்-அதிகமாக, ஒன்றும் - பொருந்துகின்ற, நெஞ்சர் ஆய் - மனமுடையவராகி, இரவு எல்லாம் - இராமுழுதும், எழாது - (சாக்கிராவத்தையில்) விழியாமல் (மனமிறந்து), இருந்து - (சிவயோக சமாதியில்) நிலைத்து, உவந்தார் - மோக்ஷானந்தத்தையடைந்தார், எ - று.

(போ - ரை.) என்று திட்டஞ்செய்து, தூபார்த்தி, தீபார்த்தி, நல்ல நைவேத்திய மெல்லாவற்றையும் முன்னின்று வேசியானவள் அன்புடன் உதவ, பஞ்சேந்திரிய நிக்கிரகஞ்செய்து வெற்றியடைந்து தத்துவப் பொருளையுணர்ந்த தபோதனர் சிவலிங்கபூஜையின் நாட்டமே அதிகமாகப் பொருந்துகின்ற மனமுடையவராகி, இராமுழுதும் சாக்கிராவத்தையில் விழியாமல் மனமிறந்து, சிவயோக சமாதியில் நிலைத்து, மோக்ஷானந்தத்தையடைந்தார். (௯௧)

ஆரிய மாதவர் முத்தசங் கையர்தந் துறவைப்
பரிவு பொங்கியே தோத்திரம் பண்ணுவார் போல
விரியி ராவிடைக் குக்குடம் புள்ளின மெல்லாம்
பெரிது கூவின சிலம்பின பிரிந்தது கங்குல்.

(ப - ரை.) அரிய - மேன்மைபொருந்திய, மாதவர் - ஜங்கமராகிய, முத்தசங்கையர் - முத்தசங்கையரது, துறவை - துறவறத்தினை, பரிவு - அன்பு, பொங்கி - மிகுந்து, தோத்திரம் பண்ணுவார் - துதிப்பவர்களை, போல - போன்று, விரி இரா இடை - விடியற்காலத்தில், குக்குடம் இனம் - கோழிக்கூட்டங்களும், புள் இனம் - பறவைக்கூட்டங்களும், எல்லாம் - அனைத்தும், பெரிது - பெருமையாக, கூவின - கூவின, சிலம்பின - ஆரவாரத்தின, கங்குல் - இரவு, பிரிந்தது - கழிந்தது, எ-று.

(போ-ரை.) மேன்மைபொருந்திய ஜங்கமராகிய முத்த சங்கையரது துறவறத்தினை யன்பு மிகுந்து துதிப்பவர்களைப் போன்று விடியற்காலத்திற் கோழிக்கூட்டங்களும் பறவைக்கூட்டங்களு மனைத்தும் பெருமையாய்க் கூவின ஆரவாரத்தின, இரவு கழிந்தது.

(வி-ரை.) துறவு-லிங்கநிஷ்டை பெறினுமாம். துறவு என்பது உட்டுறவென்றும் புறத்துறவென்றும் இருவகைப்படும். ஈண்டு உட்டுறவைக் குறித்தது. (௪௦)

பழுத கன்றிலாப் பரசம யாந்தகா ரங்கள்
முழுத கன்றிடச் சைவமா முளரிகண் மலரத்
தொழுப தாம்புயத் தண்டநா யகக்கதிர் தோன்றிற்
றெழுமி னென்பபோ லாலயந் தொறுஞ்சங்க மியம்ப.

(ப-ரை.) பழுது - குற்றத்தினின்றும், அகன்று இல்லா - நீங்காத, பரசமயம் - பரசமயங்களாகிய, அந்தகாரங்கள் - இருட்கூட்டங்கள், முழுது - முற்றிலும், அகன்றிட - ஒழியவும், சைவம் - சிவசமயமாகிய, மா - அழகிய, முளரிகள் - தாமரைகள், மலர - விரியவும், தொழு - (யாவரும்) வணங்குதற்குரிய, பதம் அம்புயம் - திருவடித் தாமரைகளையுடைய, தண்ட நாயகன் - வசவண்ணராகிய, கதிர் - சூரியன், தோன்றிற்று - உதித்தான், எழுமின் - எழுந்திருங்கள், என்ப - என்று சொல்லுவது, போல் - போல, ஆலயம் தொறும் - கோயில்களிலெல்லாம், சங்கம் - சங்கங்கள், இயம்ப - முழங்க, எ-று.

(போ-ரை.) குற்றத்தினின்று நீங்காத பரசமயங்களாகிய விருட்கூட்டங்கள் முற்றிலும் ஒழியவும், சிவசமயமாகிய வழகிய தாமரைகள் விரியவும், யாவரும் வணங்கு தற்குரிய திருவடித் தாமரைகளையுடைய வசவண்ணராகிய சூரியன் உதித்தான் எழுந்திருங்களென்று சொல்லுவதுபோலக் கோயில்களிலெல்லாம் சங்கங்கள் முழங்க.

(வி - ரை.) பரசமய அந்தகாரம்=பரசமயாந்தகாரம். பத அம்புயம்=பதாம்புயம். இவையிரண்டும் தீர்க்க சந்தி. (௪௧)

ஐய முத்தசங் கையர்தன் மாயையி லடங்கா
துய்யு மாற்றினை யுணர்ந்தஞ்சி யுருத்திர கணிகை
பைய வேநகை யொழிந்தவப் பான்மைபோற் குமுதச்
செய்ய மென்மலர்த் திரளெலாஞ் செவ்விபோய்க் குவிந்த.

(ப-ரை.) ஐயர் - ஐங்கமராகிய, முத்தசங்கையர்-முத்தசங்கையர், தன் - தனது, மாயையில்-மோகத்தில், அடங்காது-உட்படாமல், உய்யும்-ஈடேறுகின்ற, ஆற்றினை-(மோக்ஷ) மார்க்கத்தை, உணர்ந்து - அறிந்து, உருத்திர கணிகை - வேசியினது, நகை - அழகானது, அஞ்சி - பயந்து, பைய - மெல்ல, ஒழிந்த - நீங்கின, அ- அந்த, பான்மைபோல் - விதத்தைப்போல, செய்ய - அழகிய, மெல் - மிருதுவாகிய, குமுதமலர்த் திரள் - செவ்வல்லிமலர்க் கூட்டங்கள், எல்லாம் - முழுதும், செவ்வி - அழகு, போய் - ஒழிந்து, குவிந்த - கூம்பின, எ - று.

(பொ - ரை.) ஐங்கமராகிய முத்தசங்கையர் தனது மோகத்திலுட்படாமல் ஈடேறுகின்ற மோக்ஷமார்க்கத்தை யறிந்து, வேசியினது அழகானது பயந்து மெல்ல நீங்கின வவ் விதத்தைப்போல, அழகிய மிருதுவாகிய செவ்வல்லிமலர்க் கூட்டங்கள் முழுதும் அழகொழிந்து கூம்பின. (௬௨)

முற்று மெய்த்தவர் முத்தசங் கையரெனு முனிவர்
வெற்றி வேல்விழி யாருட னிருப்பினும் விருப்பஞ்
சற்று மில்லராந் தன்மைக்குச் சான்றியா னென்றே
யுற்ற நேயத்தி னிற்றல்போற் பகலவ னுதித்தான்.

(ப - ரை.) முற்றும் - (லிங்கநிஷ்டையில்) முதிர்ந்த, மெய் - உண்மையாகிய, தவர் - தபோதனராகிய, முத்தசங்கையர் - முத்தசங்கையர், எனும் - என்று சொல்லப்பட்ட, முனிவர் - சிவயோகியானவர், வெற்றி-ஜெயத்தை யுடைய, வேல்-வேற்படையையொத்த, விழியாருடன் - கண்களையுடைய மாதர்களோடு, இருப்பினும் - (கூடி) இருப்பாராயினும், விருப்பம் - மோகம், சற்றும் - கொஞ்சமேனும், இல்லர் ஆம் - இல்லாதவராகின்ற, தன்மைக்கு - பெருமைக்கு, சான்றி - சாக்ஷி, யான் - நான், என்று - என்று (சொல்லும்படி), உற்ற - மிகுந்த, நேயத்தில் - அன்புடன், நிற்றல்போல் - நின்றிருப்பதுபோல, பகலவன் - சூரியன், உதித்தான் - தோன்றினான், எ - று.

(பொ - ரை.) லிங்கநிஷ்டையில் முதிர்ந்த உண்மையாகிய ஐங்கமராகிய முத்தசங்கையரென்று சொல்லப்பட்ட சிவயோகியானவர் ஜெயத்தையுடைய வேற்படையை யொத்த கண்களையுடைய மாதர்களோடு கூடியிருப்பாராயினும் மோகம் கொஞ்சமேனு மில்லாதவராகின்ற பெருமைக்குச் சாக்ஷி நானென்று சொல்லும்படி மிகுந்த வன்புடன் நின்றிருப்பதுபோலச் சூரியன் தோன்றினான். (௬௩)

தண்ட நாயகர் தவநெறிப் பத்தியுந் தயாவு
மண்டர் கோனிடத் தவர்பெற்ற வருளுமுற் றறிந்து
கண்ட பேருளங் களிப்புற முகமலர்ந் ததுபோல்
வண்ட கன்றிலாப் பங்கய மலரெலா மலர்ந்த.

(ப-ரை.) தண்டநாயகர் - பசவண்ணரது, தவநெறி - தபோமார்க்கமாகிய, பத்தியும் - பக்தியையும், தயாவும் - ஜீவகாருண்யத்தையும், அண்டர் கோன் இடத்து - தேவர்களுக்குத் தலைவனாகிய சிவபெருமானிடத்தில், அவர் - அவர், பெற்ற - அடைந்த, அருளும் - அநுக்கிரகத்தையும், முற்று - முழுது, அறிந்து - உணர்ந்து, கண்ட பேர் - பார்த்தவர்களுடைய, உள்ளம் - மனம், களிப்பு உற - மகிழும்படி, முகம் - முகமானது, மலர்ந்தது போல்-மலர்ச்சியை யடைந்தது போல, வண்டு - வண்டுகள், அகன்று இல்லா - நீங்காத, பங்கயமலர் - தாமரை புஷ்பங்கள், எல்லாம் - முழுதும், மலர்ந்த - புஷ்பித்தன, எ-று.

(பொ-ரை.) வசவண்ணரது தபோமார்க்கமாகிய பக்தியையும், ஜீவகாருண்யத்தையும், தேவர்களுக்குத் தலைவனாகிய சிவபெருமானிடத்தில் அவர் அடைந்த அநுக்கிரகத்தையும், முழுது முணர்ந்து பார்த்தவர்களுடைய மனமகிழும்படி முகமானது மலர்ச்சியை யடைந்ததுபோல, வண்டுகள் நீங்காத தாமரை புஷ்பங்கள் முழுதும் புஷ்பித்தன. (சச)

காலை யெய்திய காலையின் முத்தசங் கையர்தாஞ்
சீல நந்திகண் முன்னணைந் தினிதுரை செய்வா
ரேல வென்னுட னிராத்திரி வந்தநிற் கிலையே
நீல கண்டனே வல்லன மடந்தையி னெறியை.

(ப - ரை.) - காலை - விடியற்காலம், எய்திய - அடைந்த, காலையில் - பொழுது, முத்தசங்கையர் - முத்தசங்கையர், சீலம் - சிவாசார சம்பன்னராகிய, நந்திகள் - வசவண்ணர், முன் - திருமுன், அணைந்து - சென்று, இனிது - இன்சொற்களை, உரை செய்வார் - சொல்லத்தொடங்கினார் (எங்ஙனெனின்), ஏல - (மனம்) ஒற்றுமைப் பட்டு, என்னுடன் - என்னோடு, இராத்திரி - நேற்றிரவு, வந்து - (நீ) வந்து, மடந்தையின் - கணிகை மாதினுடைய, நெறியை - தபோ மார்க்கத்தை, அறிந்து இல்லையே - உணரவில்லையே, நீலகண்டனே - சிவபெருமானே, வல்லன் - உணரவல்லவன், எ - று.

(பொ-ரை.) விடியற்கால மடைந்தபொழுது, முத்த சங்கையர் சிவாசார சம்பன்னராகிய வசவண்ணர் திருமுன் சென்று, இன்சொற்களைச் சொல்லத்தொடங்கினார், எங்ஙனெனின் :— மனமொற்றுமைப்பட்டு என்னோடு நேற்றிரவு நீ வந்து கணிகை மாதினுடைய தபோமார்க்கத்தை யுணரவில்லையே, சிவபெருமானே உணர வல்லவன். (சடு)

என்னை சொல்லுவ னிரவெலாந் துஞ்சுத லின்றி
யுன்னை யுன்னினன் சிவார்ச்சனைக் காலையி னுவந்து
முன்னை நல்வினை யுள்ளவ ரந்தமென் மொழியா
ணன்ன யஞ்செறி சிவார்ச்சனை மனையினை யணைவார்.

(ப - ரை.) என்னை - யாது, சொல்லுவன் - உரைப்பேன், இரவு - நேற்றிரவு, எல்லாம் - முழுதும், துஞ்சுதல் - தூக்கம், இன்றி - இல்லாமல், சிவார்ச்சனைகாலையில் - சிவபூஜா காலத்தில், உவந்து - சந்தோஷித்து, உன்னை - உன்னை, உன்னினன் - நினைத்தேன், முன்னை - முற்பிறப்பிற்செய்த, நல்வினையுள்ளவர் - புண்யத்தையுடைய மேலோர்கள், அந்த - அந்த, மென் - மிருதுவாகிய, மொழியாள் - வசனத்தையுடைய கணிகைமாதின், நல் நயம் - நன்மைமிக்க, செறி - சிவாசாரத் திற்குரிய, சிவார்ச்சனை மனையினை - சிவபூஜா க்ருஹத்தை, அணைவார் - சேர்வார்கள், எ - று.

(பொ-ரை.) யாது உரைப்பேன்? நேற்றிராத்திரி முழுதும் தூக்கமில்லாமல் சிவபூஜா காலத்தில் சந்தோஷித்து உன்னை நினைத்தேன், முற்பிறப்பிற்செய்த புண்யத்தையுடைய மேலோர்கள் அந்த மிருதுவாகிய வசனத்தையுடைய கணிகைமாதின் நன்மைமிக்க சிவாசாரத்திற்குரிய சிவபூஜா க்ருஹத்தைச் சேர்வார்கள். (சசு)

கண்ட னன்பல தவத்தரை யிப்படி காணேன்
வெண்ட ருங்கண்டி மென்சடை பொன்னன விபூதி
மண்டு றுஞ்சக லாங்களெ பீனமம் மடந்தை
கொண்ட வேடங்க ளவள்பரி சனருமக் குறியால்.

(ப - ரை.) (நான்) பல - அநேக, தவத்தரை - ஜங்கமர்களை, கண்டனன் - பார்த்திருக்கின்றேன், இப்படி - இவ்விதமாக, காணேன்-பார்த்திலேன், வெள் தரும்- வெண்ணிறம் பொருந்திய, கண்டி - ருத்ராக்ஷங்களும், மெல் - மிருதுவாகிய, சடை- ஜடையும், பொன் - பொன்னை, அன்ன - ஒத்த, விபூதி - திருவெண்ணீறும், மண்டு உறும் - நெருங்கின, சகல அங்க கௌபீனம் - ஸர்வாங்க லங்கோடும், அ - அந்த, மடந்தை - கணிகைமாது, கொண்ட - பூண்டிருந்த, வேடங்கள் - கோலங்கள், அவன் - அவனுடைய, பரிசனரும் - பரிசாரகர்களும், அ - அந்த, குறி - சின்னங்களை (பூண்டவர்கள்), எ - று.

(பொ-ரை.) நான் அநேக ஜங்கமர்களைப் பார்த்திருக்கின்றேன், இவ்விதமாகப் பார்த்திலேன், வெண்ணிறம் பொருந்திய ருத்ராக்ஷங்களும் மிருதுவாகிய ஜடையும் பொன்னையொத்த திருவெண்ணீறும் நெருங்கின ஸர்வாங்க லங்கோடும் அந்தக் கணிகைமாது பூண்டிருந்த கோலங்கள், அவனுடைய பரிசாரகர்களும் அந்தச் சின்னங்களைப் பூண்டவர்கள். (௪௭)

இனைய வாமுத்த சங்கைய ரிசைத்திட விருந்தோ
ரனைவ ருஞ்சிரித் தார்த்தனர் நந்திக ளன்பான்
முனையி னன்பினன் முறுவல்செய் தரனையே முன்னிப்
பினைய றிந்திலார் பெருமையைப் பேசரி தென்றார்.

(ப - ரை.) இனைய ஆறு - இவ்விதமாக, முத்தசங்கையர் - முத்தசங்கையர், இசைத்திட - சொல்லுதலும், இருந்தோர் - (வசவண்ணரிடம்) இருந்தவர்கள், அனைவரும் - எல்லாரும், சிரித்து - பரிஹாஸஞ்செய்து, ஆர்த்தனர் - ஆரவாரித்தார்கள், நந்திகள் - வசவண்ணர், அன்பால் - அன்புடன், முனை - வெறுப்பு, இல் - இன்றி, நண்பினால் - விருப்பத்துடன், முறுவல்செய்து - சிரித்து, அரனையே - சிவபெருமானையே, முன்னி - தியானித்து, பின்னை - வேறொன்றினையும், அறிந்திலார் - அறியாத ஜங்கமர்களுடைய, பெருமையை - மஹத்வத்தை, பேச அரிது - சொல்லமுடியாது, என்றார் - என்று சொன்னார், எ - று.

(பொ - ரை.) இவ்விதமாக முத்த சங்கையர் சொல்லுதலும், வசவண்ணரிட மிருந்தவர்கள் எல்லாரும் பரிஹாஸஞ்செய்து ஆரவாரித்தார்கள், வசவண்ணர் அன்புடன் வெறுப்பின்றி விருப்பத்துடன் சிரித்துச் சிவபெருமானையே தியானித்து வேறொன்றினையுமறியாத ஜங்கமர்களுடைய மஹத்வத்தைச்சொல்ல முடியாதென்று சொன்னார். (௪௮)

முத்தசங்கையர் புராணம் முற்றிற்று.



ஆக திருவிருத்தம்-௩௨௫.



உ

சிவமயம்.

# பசுபதிநாயனார் புராணம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இன்ன வாறு நந்தி கேச ரினிது ரைக்கு மெல்லையின்
மன்னு சென்ன வசவ தேவர் மாம னாரை நாடியே
நன்னெ டுங்க ரங்கு வித்து நம்ப னன்பின் மிக்கராய்
முன்ன ருந்த வத்த ரேழை முறைமை யான தென்னென.

(ப - ரை.) இன்ன ஆறு - இவ்விதமாக, நந்திகேசர் - வசவண்ணர், இனிது - சந்தோஷமாக, உரைக்கும் - சொல்லுகின்ற, எல்லையில்-காலத்தில், மன்னும் - நிலைபெற்ற, சென்னவசவதேவர் - சென்னவசவண்ணர், மாமனாரை - மாமனாராகிய வசவண்ணரை, நாடி - நோக்கி, நல் - நல்ல, நெடு - நீண்ட, கரம் - திருக்கைகளை, குவித்து - கூப்பி (வணங்கி), நம்பன் அன்பில் - சிவபக்தியில், மிக்கர் ஆய் - சிறந்தவராகி, முன் அரு-நினைத்தற்கரிய, தவத்தர்-ஜங்கமர்கள், முறைமையானது- (பேதைதன்மை யடைந்ததற்குக் காரணம், என் - யாது, என்ன - என்று கேட்டலும், எ-று.

(பொ-ரை.) இவ்விதமாக வசவண்ணர் சந்தோஷமாகச் சொல்லுகின்ற காலத்தில், நிலைபெற்ற சென்ன வசவண்ணர் மாமனாராகிய வசவண்ணரை நோக்கி, நல்ல நீண்ட திருக்கைகளைக்கூப்பி வணங்கி, சிவபக்தியிற் சிறந்தவராகி, நினைத்தற்கரிய ஜங்கமர்கள் பேதைத்தன்மை யடைதற்குக் காரணம் யாது? என்று கேட்டலும். (க)

சோதி சோதி துற்ற கண்ணர் துய்ய தார கைக்குழா
மேது முற்று ணர்ந்தி டாதி ருத்தல் போல வெம்பிரான்
மீதி லன்பு ளோர்க ணெஞ்சின் மிக்க லோக விதிகளா
நீதி யொன்று மின்ன தென்று நிச்ச யித்த றிந்திடார்.

(ப - ரை.) சோதி - சூரியனது, சோதி - பிரகாசத்தினால், துற்ற - நிறைந்த, கண்ணர் - கண்களையுடையவர்கள், துய்ய - பரிசுத்தமாகிய, தாரகைக் குழாம்-நக்ஷத்திரக் கூட்டங்களை, ஏதும் - கொஞ்சமேனும், உற்று - உணர்ந்து, உணர்ந்திடாது-அறியாமல், இருத்தல் போல - இருப்பதுபோல், எம்பிரான் - சிவபெருமான், மீதில்-பேரில், அன்புளோர் - அன்புள்ளவர்கள், நெஞ்சில்-மனத்தில், மிக்க-மிகுந்த, லோக விதிகள் ஆம் - லோகாசாரங்களாகிய, நீதி - கட்டுப்பாட்டினை, ஒன்றும் - சற்றும், நிச்சயித்து - துணிந்து, அறிந்திடார் - அறியமாட்டார்கள், எ - று.

(பொ-ரை.) சூரியப் பிரகாசத்தினால் நிறைந்த கண்களையுடையவர்கள் பரிசுத்தமாகிய நக்ஷத்திரக் கூட்டங்களைக் கொஞ்சமேனும் உணர்ந்தறியாம லிருப்பதுபோல் சிவபெருமான் பேரில் அன்புள்ளவர்கள் மனத்தில் மிகுந்த லோகா சாரங்களாகிய கட்டுப்பாட்டினைச் சற்றும் துணிந்தறிய மாட்டார்கள்.

(வி-ரை.) சோதி யிரண்டினுள் முன்னையது ஆகுபெயர். ஈண்டு இச்செய்யுளைக் கவனிக்க:—வள்ளலார்,
(உ)

வள்ளலார்.

“ ஆதவன் றன்னைப் பார்த்திட் டகிலத்தைப் பார்த்த போது
வாதவ னொளிமே லிட்டே யகிலந்தோன் ருத வாபோற்
சேதனச் சிவத்தை நோக்கிச் செகத்தினை நோக்குங் காலைச்
சேதன சிவமே லிட்டுச் செகமெலா மறைந்து போமே.”

பித்தர் பால ரொப்பர் ஞானர் பேசி லென்று செப்பவே
முத்த ரித்த வத்தர் போல முன்னு முள்ள ரோவென
வித்த வத்தர் போல னந்த ரென்ன வெங்க ணந்தியா
ரொத்த சென்ன வசவ ராசை யர்க்கு ரைத்த தோதுவாம்.

(ப-ரை.) பேசில் - சொல்லுமிடத்து, ஞானர்-ஞானிகளாகிய ஜங்கமமூர்த்திகள், பித்தர் - உன்மத்தர்களையும், பாலர் - சிறுவர்களையும், ஒப்பர் - ஒத்திருப்பார்கள், என்று - என்று, செப்ப - சொல்லுதலும், முத்தர் - துறவியாகிய, இ - இந்த, தவத்தர்போல - தபோதனராகியமுத்தசங்கையரைப்போல, முன்னும் - முற்காலத்திலும், உள்ளரோ - இருந்தனரோ, என்ன - என்றுகேட்டலும், இ - இந்த, தவத்தர்போல் - தபோதனராகிய முத்தசங்கையரைப்போல, அனந்தர் - அனேகம் பேர்கள், என்ன - (இருந்தார்கள்) என்று, எங்கள் - அடியேங்களுடைய, நந்தியார் - வசவண்ணர், ஒத்த - (தம்மை) நிகர்த்த, சென்னவசவராசையார்க்கு - சென்னவசவண்ணர்க்கு, உரைத்தது - திருவாய்மலர்ந்தருளிய சரித்திரத்தை, ஓதுவாம் - சொல்லத்தொடங்குவோம், (எவ்வாறெனின்), எ-று.

(பொ-ரை.) சொல்லுமிடத்து, ஞானிகளாகிய ஜங்கமமூர்த்திகள் உன்மத்தர்களையும், சிறுவர்களையும் ஒத்திருப்பார்களென்று சொல்லுதலும், துறவியாகிய இந்தத் தபோதனராகிய முத்தசங்கையரைப்போல முற்காலத்திலும் இருந்தனரோ? என்று கேட்டலும், இந்தத் தபோதனராகிய முத்தசங்கையரைப்போல அனேகம் பேர்கள் இருந்தார்களென்று அடியேங்களுடைய வசவண்ணர் தம்மை நிகர்த்த சென்னவசவண்ணர்க்குத்திருவாய்மலர்ந்தருளியசரித்திரத்தைச்சொல்லத்தொடங்குவோம், எவ்வாறெனின் :— (௩)

அரனி டத்தி லளவி னேய ரஞ்செ ழுத்தி னெஞ்சினர்
தரைவி ளங்க வந்த வெய்ய லூரெனுந் தலத்தினர்
விரகி லாத மெய்த்த வத்தர் வீர சைவ விதியினு
ருரமு லாவு ளத்தர் பாசு பதிக ளென்றொ ருத்தனர்.

(ப-ரை.) அரன் இடத்தில் - சிவபெருமானிடத்தில், அளவு - எல்லை, இல் - இல்லாத, நேயர்-அன்புடையவர், அஞ்சு எழுத்தில்-ஸ்ரீபஞ்சாக்ஷரத்தில்,நெஞ்சினர்-சிந்தனையுள்ளவர்கள், தரை - உலகம், விளங்க - தெளிவடையும்படி, வந்த - அவதரித்த, எய்யலூர் - திருவெய்யலூர், என்னும் - என்கின்ற, தலத்தினர் - ஸ்தலத்தையுடையவர், விரகு - காமநோய், இல்லாத - இல்லாத, மெய் - உண்மையாகிய, தவத்தர் - தபோதனர், வீரசைவவிதியினர் - வீரசைவாசாரத்தையுடையவர், உரம் உலாவு உளத்தர் - மனோ த்ருடத்தையுடையவர், பாசுபதிகள் - பசுபதி நாயனர், என்று - என்று சொல்லப்பட்ட, ஒருத்தனர் - ஒருவர், எ-று.

(பொ-ரை.) சிவபெருமானிடத்தில் எல்லையில்லாத வன்புடையவர், ஸ்ரீபஞ்சாக்ஷரத்தில் சிந்தனையுள்ளவர், உலகம் தெளிவடையும்படி யவதரித்த திருவெய்யலூரென்கின்ற ஸ்தலத்தையுடையவர், காமநோயில்லாத உண்மையாகிய தபோதனர், வீரசைவாசாரத்தை யுடையவர், மனோ த்ருடத்தையுடையவர், பசுபதிநாயனரென்று சொல்லப்பட்ட ஒருவர். (ச)

ஓரி டத்து வீர சைவ வுத்த மத்தர் கூடியே
பார நித்த னதிக நூல்ப டித்தி ருக்கு மெல்லையின்
வாரி யைக்க டைந்த போது வந்தெ ழுந்து வந்தமா
கோர முற்ற கார்வி டம்ப ரந்த றக்கொ திக்குநாள்.

(ப-ரை ஓர் - ஒரு, இடத்து - திருமடத்தில், வீரசைவ வுத்தமத்தர் - உத்தமர் களாகிய வீரமாஹேஸ்வரர்கள், கூடி - சேர்ந்து, பாரம் - மேன்மை பொருந்திய, நித்தன் அதிக நூல் - சிவ மஹா புராணத்தை, படித்திருக்கும் - வாசித்துக்கொண்டிருக்கின்ற, எல்லையின் - காலத்தில், வாரியை - திருப்பாற்கடலை, கடைந்தபோது - மத்தித்த பொழுது, வந்து - தோன்றி, எழுந்து - எழும்பி, வந்த - (கொல்ல) வந்த, மா - மிக்க, கோரம் உற்ற - பயங்கரமுள்ளதும், கார்-கறுத்த நிறமுள்ளதுமான, விடம் - (ஹாலாஹல மென்கின்ற) விஷம், பரந்து - (உலகெங்கும்) வியாபித்து, அற - முற்றிலும், கொதிக்கும்-அக்கி ஜ்வாலையைவீசிக்கொண்டெழுந்த, நாள்-காலத்தில், எ-று.

(பொ-ரை.) ஒரு திருமடத்தில் உத்தமர்களாகிய வீரமாஹேஸ்வரர்கள் சேர்ந்து மேன்மை பொருந்திய சிவமஹாபுராணத்தைவாசித்துக்கொண்டிருக்கின்ற காலத்தில் திருப்பாற்கடலை மத்தித்த பொழுது தோன்றி யெழும்பிக்கொல்ல வந்த மிக்க பயங்கரமுள்ளதும் கறுத்த நிறமுள்ளதுமான ஹாலாஹலமென்கின்ற விஷம் உலகமெங்கும் வியாபித்து முற்றிலும் அக்கி ஜ்வாலையை வீசிக்கொண்டெழுந்த காலத்தில். (ரு)

அஞ்சி வான ரசுரர் கூடி யபய மபய மபயமென்
றெஞ்சி யோடு மெல்லை யினெ ழுந்த வெய்ய விடமெலா
நஞ்சி தென்றெ ணாம லத்த னுண்ட சொன்ன விற்றனு
நெஞ்சு பாசு பதிக ளார ழிந்த ருண்ட நினைவராய்.

(ப-ரை.) வானர் - தேவர்களும், அசுரர் - இராக்கதர்களும், அஞ்சி - பயந்து, கூடி - ஒன்று சேர்ந்து, அபயம் அபயம் அபயம் - ஓலம் ஓலம் ஓலம், என்று -என்று, எஞ்சி-தப்பி, ஓடும் - ஓடுகின்ற, எல்லையின்-காலத்தில், எழுந்த - விளக்கமுற்றிருந்த, வெய்ய - கொடிய, விடம் - நஞ்சை, எல்லாம் - முழுதும், இது - இது, நஞ்சு-விஷம் (ஆயிற்றே), என்று - (கொன்றுவிடும்) என்று, எண்ணாமல் - யோசியாமல், அத்தன் - சிவபெருமான், உண்ட- (லோகரக்ஷணார்த்தமாக) திருவமுது செய்தருளின, சொல்-புகழினை, நவிற்றலும் - சொன்னமாத்திரத்தில், பாசுபதிகளார் - பசுபதிநாயனர், நெஞ்சுஅழிந்து - மதிமயங்கி, அருண்ட - கலங்கின, நினைவராய் - மனத்தையுடையவராகி, எ-று.

(பொ-ரை.) தேவர்களும் இராக்கதர்களும் பயந்து ஒன்று சேர்ந்து, ஓலம் ஓலம் ஓலமென்று தப்பியோடுகின்ற காலத்தில் விளக்கமுற்றிருந்த கொடிய நஞ்சை முழுதும் இது விஷமாயிற்றே, கொன்று விடுமென்று யோசியாமல் சிவபெருமான் லோகரக்ஷணார்த்தமாகத் திருவமுது செய்தருளின புகழினைச் சொன்னமாத்திரத்தில் பசுபதிநாயனர் மதிமயங்கிக் கலங்கின மனத்தையுடையவராகி. (சா)

என்ன வென்ன சொல்லு மால மெய்ம்பி ரான யின்றதெ
னன்ன செய்தி மெய்கொ லுள்ள தறைபு மென்ன வவர்களு
மன்ன வுள்ள தென்ன வேம யங்கி மண்ணின் மேல்விழுந்
தொன்ன லார்கொல் விண்ண ரென்று லைந்து நைந்து ருத்தெழா.

(ப-ரை.) என்ன - என்ன செய்தி, என்ன - என்ன செய்தி, சொல்லும் - (மறுபடியும்) சொல்லும், எம் - எமது, பிரான் - சிவபெருமான், ஆலம் - விஷத்தை, அயின்றது - திருவமுதுசெய்தற்குக் காரணம், என்-யாது, அன்ன - அந்த, செய்தி - செய்கை, மெய்கொல் - உண்மையோ, உள்ளது-உண்மையை, அறையும்-சொல்லும், என்ன-என்றுகேட்டலும், அவர்களும் - அவ்வீரமாஹேஸ்வரர்களும், அன்ன - அந்தச் செய்தி, உள்ளது - உண்மை, என்னவே - என்று சொன்னமாத்திரத்திலே, மயங்கி - புத்தி கலங்கி, மண்ணின் - பூமியின், மேல் - மீது, விழுந்து - வீழ்ந்து, விண்ணோர் - தேவர்கள், ஒன்னலார்கொல் - பகைவர்களோ, என்று - என்று, உலைந்து - வருத்த மடைந்து, நைந்து - மெலிந்து, உருத்து - கோவித்து, எழா - (மேலே) எழுந்து, எ-று.

(பொ-ரை.) என்னசெய்தி? என்னசெய்தி? மறுபடியும் சொல்லும், எமது சிவபெருமான் விஷத்தைத் திருவமுது செய்தற்குக் காரணம் யாது? அந்தச் செய்கை யுண்மையோ? உண்மையைச் சொல்லுமென்று கேட்டலும், அவ் வீர மாஹேஸ்வரர்களும் அந்தச்செய்தி உண்மையென்று சொன்னமாத்திரத்திலே, புத்தி கலங்கிப் பூமியின்மீது வீழ்ந்து, தேவர்கள் பகைவர்களோ? என்று வருத்த மடைந்து மெலிந்து கோவித்து மேலேயெழுந்து. (எ)

விடம ருந்து கென்றொ ருத்தர் வேண்டி லொன்றி யுண்பரோ
மடம ணைந்து ளோரு மால மனமி சைந்து கொள்வரோ
திடமி குந்த கால முண்டு செத்த பேரெ னைத்துளோ
ரடுமி தைத்தி ருப்பு மந்தி ரங்கள் வல்ல ரார்கொலோ.

(ப-ரை.) விடம் - நஞ்சை, அருந்துக - உண்ணும், என்று - என்று, ஒருத்தர் - ஒருத்தர், வேண்டில் - விரும்புவாராயின், ஒன்றி - (மனம்) ஒப்பி, உண்பரோ - சாப்பிடுவார்களோ, மடம் அணைந்து உள்ளோரும் - அறிவில்லாத மூடஜனங்களும், ஆலம் - விஷத்தை, மனம் இசைந்து - மனம் ஒப்பி, கொள்வரோ - உண்ணுவார்களோ, திடம் - வலிமை, மிகுந்த - மிக்க, காளம் - விஷத்தை, உண்டு - புசித்து, செத்தபேர் - இறந்தவர்கள், எனைத்து உள்ளோர் - எத்தனைபேர்கள், அடும் - கொல்ல வல்ல, இதை - இந்த விஷத்தை, திருப்பும் - மீட்கவல்ல, மந்திரங்கள் வல்லர் - மந்திரவாதி, ஆர்கொலோ - யாரோ, எ-று.

(பொ-ரை.) நஞ்சை யுண்ணுமென்று ஒருத்தர் விரும்புவாராயின் மனம் ஒப்பிச் சாப்பிடுவார்களோ! அறிவில்லாத மூடஜனங்களும் விஷத்தை மனம் ஒப்பி யுண்ணுவார்களோ! வலிமை மிக்க விஷத்தைப் புசித்து இறந்தவர்கள் எத்தனைபேர்கள்! கொல்லவல்ல இந்த விஷத்தை மீட்கவல்ல மந்திரவாதி யாரோ? (அ)

புக்க வால மந்த வேலை யிற்பு றப்ப டுத்தமெய்
யொக்க லாக வருகி ருந்து ளோர்க ளில்லை யானதே
திக்கெ னக்கு நீய லாது தேவ ரில்லை யென் செய்கே
னிக்க ணத்தி னஞ்சு மிழ்ந்தெ னக்கி தஞ்செ யெம்பிரான்.

(ப-ரை.) எம்பிரான் - சிவபெருமானே, புக்க - கொல்லவந்த, ஆலம்-விஷத்தை, அந்த - அந்த, வேலையில் - காலத்தில், புறப்படுத்த - அகற்ற, மெய் - உண்மையாகிய, ஒக்கல் ஆக - சுற்றத்தாராக, அருகு - சமீபத்தில், இருந்துளோர்கள் - இருந்தவர்கள், இல்லை - (உதவிசெய்ய) இல்லை, ஆனதே - ஆயிற்றே, எனக்கு - எனக்கு, திக்கு -

துணை, நீ - நீ, அல்லது - அல்லாமல், தேவர் - தேவர்கள், இல்லை - இல்லை, என் - யாது, செய்கேன் - செய்யமாட்டுவேன், இ - இந்த, கணத்தில் - நொடிப்பொழுதில், நஞ்சு - விஷத்தை, உமிழ்ந்து - துப்பிவிட்டு, எனக்கு - எனக்கு, இதம் - நன்மையை, செய் - செய்யும், எ - று.

(பொ-ரை) சிவபெருமானே! கொல்லவந்த விஷத்தை அந்தக் காலத்தில் அகற்ற உண்மையாகிய சுற்றத்தாராகச் சமீபத்திலிருந்தவர்கள் உதவி செய்யவில்லை யாயிற்றே! எனக்குத் துணை நீ யல்லாமல் தேவர்கள் இல்லை, யாது செய்யமாட்டு வேன், இந்த நொடிப்பொழுதில் விஷத்தைத் துப்பிவிட்டு எனக்கு நன்மையைச் **செய்யும்.** (கூ)

ஆல முண்ட போது தேவி யருகி ருந்த தில்லையோ
சால வேணி யுற்ற கங்கை தானு மொத்தி ருப்பதே
னோல வோல நந்தி கேச ருற்ற சுற்ற மல்லவோ
வேல நான றிந்த துண்டெ னிற்ற விர்ப்ப னென்செய்கேன்.

(ப-ரை) ஆலம் - விஷத்தை, உண்டபோது - திருவமுது செய்தகாலத்தில், தேவி - உமாதேவியார், அருகு - சமீபத்தில், இருந்தது இல்லையோ - இருப்ப தில்லையோ, சாலம் - கற்றையாகிய, வேணி - ஜடாபாரத்தை, உற்ற - அடைந்த, கங்கை தானும் - கங்காதேவியாரும், ஒத்து இருப்பது - சம்மதித் திருப்பதற்குக் காரணம், என் - யாது, ஓல ஓல - ஓல வோல, நந்திகேசர் - நந்தியெம்பெருமான், உற்ற - நெருங்கிய, சுற்றம் - உறவினர், அல்லவோ - அன்றோ, நான் - யான், ஏல- (மனம்) ஆர, அறிந்தது உண்டெனில் - தெரிந்த விஷயமாயிருந்தால், தவிர்ப்பன் - விலக்கி விடுவேன், என் - யாது, செய்கேன் - செய்யமாட்டுவேன், எ - று.

(பொ-ரை.) விஷத்தைத் திருவமுது செய்த காலத்தில் உமாதேவியார் சமீபத்திலிருப்பதில்லையோ? கற்றையாகிய ஜடாபாரத்தை யடைந்த கங்கா தேவி யாரும் சம்மதித் திருப்பதற்குக் காரணம் யாது? ஓல! ஓல! நந்தியெம்பெரு மான் நெருங்கிய உறவினரன்றோ? யான் மனமாரத் தெரிந்த விஷயமாயிருந்தால் விலக்கிவிடுவேன், யாது செய்யமாட்டுவேன்?

(வி-ரை.) ஓல வோல - துக்கக் குறிப்பு. (க0)

இந்த நூலை யிந்த மாத வத்தர் தாமி சைப்பதேன்
தந்தி யாமு கத்தர் வேலர் தந்தை யன்பி லார்கொலோ
பந்த ரான வீர பத்தி ராதி பல்க ணங்களீர்
வந்து கையி லும்ப றித்தெ றிந்தி லீர்ம றந்திரோ.

(ப-ரை.) இந்த - இந்த, நூலை - சிவ மஹாபுராணத்தை, இந்த - இந்த, மாதவத்தர்-வீர மாஹேஸ்வரர்கள், இசைப்பது-(புகழ்ந்து) சொல்வதற்குக்காரணம், என் - யாது, மா - பெருமைபொருந்திய, தந்திமுகத்தர் - யானைமுகத்தையுடையவ ராகிய விநாயகக்கடவுளும், வேலர் - வேலாயுதத்தை யுடையவராகிய முருகக் கடவுளும், தந்தை - அப்பன் (நீது), அன்பு - ஆசை, இல்லார் கொல் ஓ - இல்லாத வர்களோ, பந்தர் ஆன - சுற்றத்தாராகிய, வீரபத்திரர் - வீரபத்திரக்கடவுள், ஆதி- முதலாகிய, பல் - அநேக, கணங்கள் - சிவகணங்களாகிய, நீர் - நீங்கள், வந்து - (ஓடி) வந்து, கையிலும் - திருக்கரத்தினின்றும், பறித்து - (விஷத்தை) பிடுங்கி, எறிந்து இல்லீர் - வீசினீர்களில்லை, மறந்திரோ - மறந்துவிட்டீர்களோ, எ - று.

(பொ - ரை.) இந்தச் சிவமஹாபுராணத்தை யிந்த வீரமாஹேஸ்வரர்கள் புகழ்ந்து சொல்வதற்குக் காரணம் யாது? பெருமைபொருந்திய யானை முகத்தை யுடையவராகிய விநாயகக்கடவுளும் வேலாயுதத்தையுடையவராகியமுருகக்கடவுளும் அப்பன் மீது ஆசையில்லாதவர்களோ? சுற்றத்தாராகிய வீரபத்திரக் கடவுள் முதலாகிய அநேகச் சிவகணங்களாகிய நீங்கள் ஓடிவந்து, திருக்கரத்தினின்றும் விஷத்தைப் பிடுங்கி வீசினீர்களில்லை, மறந்துவிட்டீர்களோ? (௧௧)

இவ்வி டந்த லைக்கொள் கின்ற வேலை யிற்பு குந்துநீ
ரவ்வி டத்து நன்மை செய்த லன்ப தன்ற தற்குமுன்
வவ்வி யையர் தாளி லேவ ணங்கி யோர்ம ருந்தளித்
தெவ்வி தத்தெ னுந்தி ருப்பு மென்சொ லுக்கி ரங்கியே.

(ப-ரை.) நீர் - நீங்கள், இ - இந்த, விடம் - விஷம், தலைக்கொள்கின்ற - தலைக் கேறுகின்ற, வேலையில்-காலத்தில், புகுந்து-முயன்று, அவ்விடத்து - அவ்விடத்தில், நன்மை - இதம், செய்தல் - பண்ணுவது, அன்பு - காருண்யம், அன்று - அல்ல, அதற்கு - அதற்கு, முன் - முன்னர், வவ்வி - அன்புவைத்து, ஐயர் - தந்தையாராகிய சிவபெருமானது, தாளில் - திருவடிகளில், வணங்கி - (விழுந்து) பணிந்து, ஓர் - ஒப்பற்ற, மருந்து - ஔஷதத்தை, அளித்து - கொடுத்து, எவ்விதத்தெனும் - எப்படியாயினும், என் - எனது, சொல்லுக்கு - வார்த்தைக்கு, இரங்கி - (மனம்) உருகி, திருப்பும் - மீட்டுவிடுங்கள், எ-று.

(பொ-ரை.) நீங்கள் இந்த விஷம் தலைக்கேறுகின்ற காலத்தில் முயன்று அவ்விடத்தில் இதம் பண்ணுவது காருண்யமல்ல, அதற்கு முன்னர் அன்பு வைத்து தந்தையாராகிய சிவபெருமானது திருவடிகளில் விழுந்து பணிந்து ஒப்பற்ற ஔஷ தத்தைக்கொடுத்து எப்படியாயினும் எனது வார்த்தைக்கு மனமுருகி மீட்டு விடுங்கள். (௧௨)

தீய தத்தி தொன்றை யுந்தி ருப்பி லத்த னெம்பிரா
னாயு மற்ற னந்த நாளி ருப்ப னாரு மில்லையே
நாய கன்வி டத்தை யுண்ண நானி ருக்கி லேனெனப்
போயி ருங்க டற்கு திப்ப னென்று போது போதிலே.

(ப - ரை) தீய - கொடிய, தத்து இது ஒன்றையும் - இந்த வொரு கண்டத்தையும், திருப்பில் - மீட்டு விடுவீர்களாயின், அத்தன் - தந்தையாகிய, எம்பிரான் - சிவபெருமான், ஆயும்-வயது (என்பதே), அற்று-இல்லாமல், அனந்தம்-முடிவில்லாத, நாள்-காலம், இருப்பன்-பிழைத்திருப்பான், ஆரும்-(இந்தச்சமயத்தில் இவ்வநர்த்தத்தை யொழிப்பவர்) யாரும், இல்லையே - இல்லாமற் போயிற்றே, நாயகன் - சிவ பெருமான், விடத்தை - நஞ்சினை, உண்ண - திருவமுது செய்யவும், நான் - யான், இருக்கிலேன் - பிழைத்திருக்கமாட்டேன், என்ன - என்று, போய் - சென்று, இரு - பெரிய, கடல் - கடலில், குதிப்பன் - விழுந்துவிடுவேன், என்று ; என்று, போது - போகின்ற, போதில் - காலத்தில், எ - று.

(பொ - ரை.) கொடிய இந்த வொரு கண்டத்தையு மீட்டு விடுவீர்களாயின் தந்தையாகிய சிவபெருமான் வயதென்பதேயில்லாமல் முடிவில்லாத காலம் பிழைத் திருப்பான், இந்தச் சமயத்தில் இவ்வநர்த்தத்தை யொழிப்பவர் யாருமில்லாமற்

போயிற்றே ! சிவபெருமான் விஷத்தைத் திருவமுதுசெய்யவும் யான் பிழைத்திருக்க மாட்டேனென்று சென்று பெரிய கடலில் விழுந்துவிடுவேனென்று போகின்ற காலத்தில். (கக)

தேவ தேவன் விடையின் மீது தேவி பங்க னெய்தியே
பூவின் மாரி விண்ணு ளோர்பொ ழிந்து கைகு விக்கவே
யாவன் மீது சிவக ணத்த ரரவெ னுஞ்சொ லொலியுட
னாவ தொன்று னக்கி தத்த கேள ளித்து மென்னலும்.

(ப - ரை.) தேவ தேவன் - தேவர்களுக்குத் தலைவனும், தேவிபங்கன் - உமா தேவியாரை வாமபாகத் துடையவனுமாகிய சிவபெருமான், விடையின் - வ்ருஷப வாஹனத்தின், மீது - மேல், எய்தி - எழுந்தருளி, விண் உள்ளோர் - தேவர்கள், பூவின்மாரி - புஷ்பவருஷத்தை, பொழிந்து - வருஷித்து, கைகுவிக்க - கைகூப்பி வணங்க, ஆவல் மீது - அன்புமேலிட்டு, சிவகணத்தர் - சிவகணங்கள், அர - ஹர, என்னும் - என்கின்ற, சொல் - சொல்லின், ஒலியுடன் - கோஷத்தோடு, உனக்கு - உனக்கு, ஆவது - (கைகூட) வேண்டியதாகிய, ஒன்று - ஒரு, இதத்த-வரத்தை, கேள் - கேளும், அளித்தும் - அநுக்கிரகஞ்செய்வோம், என்னலும் - என்று கட்டளை யிட்டருளுதலும், எ - று,

(பொ-ரை.) தேவர்களுக்குத் தலைவனும் உமாதேவியாரை வாமபாகத்துடைய வனுமாகிய சிவபெருமான் வ்ருஷபவாஹனத்தின் மேலெழுந்தருளி, தேவர்கள் புஷ்ப வருஷத்தை வருஷித்து, கைகூப்பிவணங்க, அன்புடன் சிவகணங்கள் ஹரவென் கின்ற சொல்லின் கோஷத்தோடு உனக்கு வேண்டியதாகிய ஒரு வரத்தைக் கேளும், அநுக்கிரகஞ்செய்வோமென்று கட்டளையிட்டருளுதலும். (கஉ)

பாசு பதிக ளீசர் தாள்ப ணிந்து நின்று பகருவார்
தேச விறைவ நீய யின்ற தீய வால மொத்தியே
நாச மணையி லென்ன செய்வ னஞ்சை யிங்கு மிழ்ந்திடி
னாசி லாவ ரமெனக் களித்த தொக்கு மென்றலும்.

(ப - ரை) பாசுபதிகள் - பசுபதிநாயனர், ஈசர் - சிவபெருமானது, தாள் - திருவடிகளை, பணிந்து-வணங்கி, நின்று - (திருமுன்) நின்று, பகருவார் - சொல்லத் தொடங்கினர் (எவ்வாறெனின்), தேச - ஜ்யோதி ஸ்வரூபனே, இறைவ-தலைவனே, நீ - நீ, அயின்ற - திருவமுதுசெய்த, தீய - கொடிய, ஆலம் - விஷம், மொத்தி - மூடிக்கொண்டு, நாசம் - மரணம், அணையில்-உண்டாயின், என்ன-யாது, செய்வன்- செய்யமாட்டுவேன், நஞ்சை - விஷத்தை, இங்கு - இவ்விடத்தில், உமிழ்ந்திடின் - துப்பிவிடுவீராயின், ஆசு - குற்றம், இல்லா - இல்லாத, வரம் - வரத்தை, எனக்கு - என்க்கு, அளித்தது - அநுக்கிரகஞ்செய்ததை, ஒக்கும் - நிகர்க்கும், என்றலும் - என்று விடைதருதலும், எ - று.

(பொ - ரை.) பசுபதிநாயனர் சிவபெருமானது திருவடிகளை வணங்கித் திரு முன்னின்று சொல்லத் தொடங்கினர், எவ்வாறெனின்— ஜ்யோதி ஸ்வரூபனே ! தலைவனே ! திருவமுதுசெய்த கொடிய விஷம் மூடிக்கொண்டு மரணமுண்டாயின் யாது செய்யமாட்டுவேன் ? விஷத்தை யிவ்விடத்தில் துப்பிவிடுவீராயின் குற்றமில் லாத வரத்தை யெனக்கு அநுக்கிரகஞ்செய்ததை நிகர்க்குமென்று விடைதருதலும்.

மூத்த னெம்பி ரான்ம கிழ்ந்து முறுவல் செய்து நாடியே
பத்த விந்த வால நாமு மிழ்ந்தி டிற்ப ரந்துமண்
மெத்த வெந்து வானி றந்து விடுமி தெம்மி டற்றுமே
லொத்தி ருந்து போவ தன்றி யொன்று மின்றெ மக்கென.

(ப-ரை.) முத்தன் - பாசத்தினின்றும் நீங்கினவனுகிய, எம்பிரான் - சிவபெருமான், மகிழ்ந்து - சந்தோஷித்து, முறுவல்செய்து - நகைத்து, நாடி - நோக்கி, பத்த - பக்தனே, நாம் - யாம், இந்த - இந்த, ஆலம் - விஷத்தை, உமிழ்ந்திடின் - துப்பிவிடுவோமாயின், மண்-பூலோகம் (முழுதும்), பரந்து - வியாபித்து விடுதலால், மெத்த - மிகவும், வெந்து - சுட்டெரிந்து, வான் - தேவலோகமும், இறந்துவிடும்- அழிந்துப்போய்விடும், இது - இந்தவிஷம், எம் - எமது, மிடற்று - ஸ்ரீ கண்டத்தின், மேல்-மீது, ஒத்து - பொருந்தி, இருந்து - நிலைத்து, போவது - போவதே, அன்றி - அல்லாமல், ஒன்றும் - ஒருவிதமான தீங்கும், எமக்கு-நமக்கு, இன்று- (உண்டாவது) இல்லை, என்ன - என்று சொல்லியருளுதலும், எ - று.

(போ - ரை.) பாசத்தினின்றும் நீங்கினவனுகிய சிவபெருமான் சந்தோஷித்து நகைத்து நோக்கி, பக்தனே! யாம் இந்த விஷத்தைத் துப்பிவிடுவோமாயின் பூலோகமுழுதும் வியாபித்துவிடுதலால் மிகவும் சுட்டெரிந்து தேவலோகமும் அழிந்து போய்விடும், இந்த விஷம் எமது ஸ்ரீ கண்டத்தின்மீது பொருந்தி நிலைத்துப் போவதேயல்லாமல் ஒருவிதமான தீங்கும் எமக்குண்டாவதில்லையென்று சொல்லியருளுதலும். (கசு)

கண்ட முற்ற கடுவி ழிந்து கடுகி லென்ன செய்குவே
னண்ட நாத நம்ப கில்ல னுவி யங்க ழிப்பனென்
றெண்டி யங்கு மன்பர் சொல்ல வெம்பி ரானி ரங்கியா
முண்ட நஞ்சி ழிந்தி டாது நங்க ளத்தி னுழியலால்.

(ப - ரை.) எண் - மதி, தியங்கும் - மயங்குகின்ற, அன்பர் - பக்தராகிய பசுபதி நாயனுர், கண்டம் - ஸ்ரீ கண்டத்தை, உற்ற - அடைந்த, கடு - விஷமானது, இழிந்து - இறங்கி, கடுகில் - விரைந்துள்ளே சென்றுவிட்டால், என்ன - யாது, செய்குவேன் - செய்யமாட்டுவேன், அண்டநாத - லோகநாதனே, நம்பகில்லன் - நம்பமாட்டேன், ஆவியம் - உயிரை, கழிப்பன் - மாய்த்துக்கொள்ளுவேன், என்று- என்று, சொல்ல - சொல்லுதலும், எம்பிரான் - சிவபெருமான், இரங்கி - கருணை கூர்ந்து, யாம் - நாம், உண்ட - திருவமுதுசெய்த, நஞ்சு-விஷமானது, நம் - நமது, களத்தின்உழி - ஸ்ரீ கண்டத்திலிருப்பதே, அல்லாமல் - அல்லாமல், இழிந்திடாது - இறங்கமாட்டாது.

(போ - ரை.) மதிமயங்குகின்ற பக்தராகிய பசுபதிநாயனுர் ஸ்ரீ கண்டத்தை யடைந்த விஷமானது இறங்கி விரைந்துள்ளே சென்றுவிட்டால் யாது செய்யமாட்டுவேன்? லோகநாதனே! நம்பமாட்டேன், உயிரை மாய்த்துக்கொள்ளுவேனென்று சொல்லுதலும், சிவபெருமான் கருணைகூர்ந்து நாம் திருவமுதுசெய்த விஷமானது நமது ஸ்ரீ கண்டத்திலிருப்பதே யல்லாமல் இறங்கமாட்டாது. (கஎ)

நம்ப லாத போது நம்ம டித்த லத்து நண்ணியே
யெம்பெ ருங்க ளத்தி னஞ்சி ழிந்தி டாது பார்த்திரென்
றம்பர் கோன்வ லத்து டைக்க னுற்ற நண்பில் வைத்தன
னம்ப ரத்தர் மாரி போல லர்க்கை கொண்டு வீசினர்.

(ப - ரை.) நம்பலாதபோது - நம்பிக்கையில்லாமற் போவாயாயின், நம் - நமது, மடித்தலத்து - துடையின்மீது, நண்ணி - இருந்து, எம் - எமது, பெரு - பெருமை பொருந்திய, களத்தில் - ஸ்ரீ கண்டத்தில், நஞ்சு - விஷமானது, இழிந்திடாது - இறங்கிவிடாமல், பார்த்து - விழித்துக்கொண்டு, இரு - இரும், என்று - என்று, உம்பர்கோன் - தேவர்களுக்குத் தலைவனாகிய சிவபெருமான், வலம் - வலது, துடைக்கண் - திருத்துடையின்மீது, உற்ற - மிக்க, நண்பில் - அன்புடன், வைத்தனன் - எழுந்தருளச்செய்தனன், அம்பரத்தர் - தேவர்கள், மாரிபோல் - மழைபோல, அலர் - மலர்களை, கை - கரங்களில், கொண்டு - வாரி, வீசினர் - எறிந்தார்கள், எ-று.

(பொ-ரை.) நம்பிக்கையில்லாமற் போவாயாயின் எமது துடையின்மீதிருந்து, எமது பெருமை பொருந்திய ஸ்ரீகண்டத்தில் விஷமானது இறங்கிவிடாமல் விழித்துக்கொண்டிருமென்று தேவர்களுக்குத் தலைவனாகிய சிவபெருமான் வலது திருத்துடையின்மீது மிக்கவன்புடன் எழுந்தருளச்செய்தனன், தேவர்கள் மழைபோல மலர்களைக் கரங்களில் வாரி யெறிந்தார்கள். (கஅ)

கங்கை வேணி கொண்ட நஞ்சு கண்டம் விட்டி ழிந்திடா
தங்க ரன்ம டித்த லத்த மர்ந்து நாடு மன்பரா
மெங்கள் பாசு பதிக ளாரி லங்கு மேன்மை தன்னையார்
சங்கை செய்து ரைக்க வல்லர் தம்பி ரானை யன்றியே.

(ப - ரை.) கங்கை - கங்காதேவி (வசிக்கின்ற), வேணி - ஜடாபாரத்தையுடைய சிவபெருமான், கொண்ட - திருவமுது செய்த, நஞ்சு - விஷம், கண்டம் - ஸ்ரீ கண்டத்தை, விட்டு - விட்டு, இழிந்திடாது - இறங்காமல், அங்கு - அவ்விடத்து, அரன் - சிவபெருமான், மடித்தலத்து - திருத்துடையின்மீது, அமர்ந்து - இருந்து, நாடும் - விழித்துக்கொண்டிருக்கின்ற, அன்பர் ஆம் - பக்தராகிய, எங்கள் - அடியேங்களுடைய, பாசுபதிகளார் - பசுபதிநாயனார், இலங்கு - விளக்கமுற்றிருந்த, மேன்மை தன்னை - பெருமையை, தம்பிரானை - சிவபெருமானை, அன்றி - அல்லாமல், சங்கை செய்து - அளவிட்டு, உரைக்க - சொல்ல, வல்லர்-வல்லவர், யார்-யார், எ-று.

(பொ-ரை.) கங்காதேவி வசிக்கின்ற ஜடாபாரத்தையுடைய சிவபெருமான் திருவமுது செய்த விஷம் ஸ்ரீ கண்டத்தை விட்டிறங்காமல் அவ்விடத்துச் சிவபெருமானது திருத்துடையின் மீதிருந்து விழித்துக்கொண்டிருக்கின்ற பக்தராகிய அடியேங்களுடைய பசுபதிநாயனார் விளக்கமுற்றிருந்த பெருமையைச் சிவபெருமானை யல்லாமல் அளவிட்டுச் சொல்ல வல்லவர் யார்?

பசுபதிநாயனார் புராணம் முற்றிற்று.

ஆகதிருவிருத்தம் - ௩௩௬.

உ

சிவமயம்.

# கோட்கூச்சவ்வை புராணம்.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தாரணி புகழுங் கோளூ ரென்னுமத் தலத்தில் வாழுஞ்
சீரணி சைவ வேந்தர் சிவதேவ சரணா னென்னும்
பேரினா ரவர்ப யந்த பேதையர் கோட்கூச் சவ்வை
யேரிளம் பருவ மின்னா ரிவர்செய லியம்ப லுற்றாம்.

(ப - ரை.) தாரணி - உலகம் (முழுதும்), புகழும் - துதிக்கின்ற, கோளூர் - திருக்கோளூர், என்னும் - என்கின்ற, அ - அந்த, தலத்தில் - திவ்ய க்ஷேத்திரத்தில், வாழும் - வாசஞ்செய்கின்ற, சீர் அணி - சிறப்புப் பொருந்திய, சைவவேந்தர் - வீர சைவாசாரத்திற் றலைமைப்பட்டவராகிய, சிவதேவ சரணர் - சிவதேவ சரணர், என்னும் - என்கின்ற, பேரினார் - திருநாமத்தையுடையவர், அவர் - அவர், பயந்த - பெற்ற, பேதையர் - கன்னிகையாராகிய, கோட்கூச்சவ்வை - கோட்கூச்சவ்வையார், ஏர் - அழகிய, இளம்பருவம்-பேதைப்பருவத்தையுடைய, மின்னார் - மடவார், இவர் - இவருடைய, செயல் - சரித்திரத்தை, இயம்பல் உற்றாம் - சொல்லத்தொடங்கினோம் (எவ்வாறெனின்), எ - று.

(பொ - ரை.) உலகமுழுதும் துதிக்கின்ற திருக்கோளூ ரென்கின்ற திவ்ய க்ஷேத்திரத்தில்வாசஞ்செய்கின்ற சிறப்புப்பொருந்திய வீரசைவாசாரத்திற்றலைமைப் பட்டவராகிய சிவதேவசரணரென்கின்ற திருநாமத்தையுடையவர், அவர் பெற்ற கன்னிகையாராகிய கோட்கூச்சவ்வையார், அழகிய பேதைப் பருவத்தை யுடையவர், இவருடைய சரித்திரத்தைச் சொல்லத்தொடங்கினோம், எவ்வாறெனின்.

(வி - ரை.) மாதர்க்குரிய பருவங்கள் ஏழு - பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்பன. அவ்வேழ்ப் பருவங்களுக் கெல்லைகளாவன:—பேதை - ஐந்து வருடமுதல் ஏழுவருடம்வரையில், பெதும்பை- எட்டுமுதல் ஒன்பதுவரையில், மங்கை-பத்துமுதல் பன்னிரண்டுவரையில், மடந்தை- பதின்மூன்று முதல் பதினாறு வரையில், அரிவை - பதினேழு முதல் பதினெட்டு வரையில், தெரிவை - பத்தொன்பதுமுதல் இருபத்தொன்று வரையில், பேரிளம் பெண் - இருபத்திரண்டு முதல் நாற்பது வரையில். சிவதேவ சரணருடைய மனைவி யார் பெயர் கல்யாணம்மாள் என்பது. கோட்கூச் சவ்வையாரைக் கன்னடத்தில் கொட கூஸவ்வையாரென்று வழங்குதலுண்டு. (க)

செந்நெறி யினரா மந்தச் சிவதேவ சரணா ரென்பார்
நன்னெறி யாய தம்மூர் நம்பர்போ கேசர்க் கான்பாற்
றன்னரு நேயத் தாலே துகளறத் தினமு வேதித்
தென்னையா ளுடையாய் காப்பா யென்றுநின் றிறைஞ்சி யேத்தி.

(ப - ரை.) செம்நெறியினர் ஆம் - சன்மார்க்கத்தையுடையவராகிய, அந்த - அந்த, சிவதேவசரணர் - சிவதேவசரணர், என்பார் - என்பவர், நல்நெறி ஆய - சன்மார்க்கத்திற்குப் புகலிடமாயுள்ள, தம் - தமது, ஊர் - ஸ்தலத்தில் (எழுந்தருளியிருக்கின்ற), நம்பர் - நமது பிராணனாகிய, போகேசர்க்கு - போகேஸ்வரர்க்கு, ஆன்பால் - பசுவின் பாலை, துன் அரு - குற்றமில்லாத, நேயத்தால் - அன்புடன், துகள் அற - பாவத்தினின்றும் நீங்கும்பொருட்டு, தினம் - நாடோறும், நிவேதித்து - நைவேத்யஞ்செய்து, என்னை-(நாயினும் கடைப்பட்ட) அடியேனை, ஆள் உடையாய் - ஆட்கொண்டருளினவனே, காப்பாய் - காத்தருளுவாய், என்று - என்று, நின்று - (சந்நிதியில்) நின்று, இறைஞ்சி - வணங்கி, ஏத்தி - துதித்து, எ-று.

(போ-ரை.) சன்மார்க்கத்தையுடைய வராகிய அந்தச் சிவதேவசரணரென்பவர் சன்மார்க்கத்திற்குப் புகலிடமாயுள்ள தமது ஸ்தலத்தி லெழுந்தருளியிருக்கின்ற நமது பிராணனாகிய போகேஸ்வரர்க்குப் பசுவின்பாலைக் குற்றமில்லாத வன்புடன் பாவத்தினின்றும் நீங்கும் பொருட்டு நாடோறும் நைவேத்யஞ்செய்து நாயினும் கடைப்பட்ட அடியேனை யாட்கொண்டருளினவனே! காத்தருளுவாயென்று சந்நிதியில் நின்று வணங்கித் துதித்து.

(வி - ரை.) போகேஸ்வரர்க்குக் கல்லேஸ்வரரென்று மற்றொரு திருநாமமும் உண்டு. (உ)

ஒழுகுமந் நாளி லோர்நா ளும்பர்கோன் கரும மாகச்
செழுவிதோர் நகர்க்குச் செல்வார் சிறியதம் மகளை நோக்கி
வழுவிலெந் தம்பி ராற்கிவ் வள்ளத்தி லிந்தப் பாலைப்
பழுதிலா தமுது செய்யப் பண்ணுவாய் தினமும் பாவாய்.

(ப - ரை.) ஒழுகும் - வழிபடுகின்ற, அ - அந்த, நாளில் - காலத்தில், ஓர் - ஒரு, நாள் - தினம், உம்பர்கோன் - தேவர்களுக்குத் தலைவனாகிய சிவபெருமானது, கருமம் ஆக - கயிங்கர்யத்தின்பொருட்டு, செழுவிது - தெய்வீக ஸம்பத்தையுடைய, ஓர் - ஒப்பற்ற, நகர்க்கு - க்ஷேத்ரத்திற்கு, செல்வார் - போகநினைத்தவராகி, தம் - தமது, சிறிய - இளமைப் பருவத்தையுடைய, மகளை - குமார்த்தியை, நோக்கி - பார்த்து, பாவாய் - பெண்ணே, வழுவு இல் - பரிசுத்தமான, எம் - எமது, தம்பிராற்கு - சிவபெருமானுக்கு, இ - இந்த, வள்ளத்தில் - கிண்ணத்தில், இந்த - இந்த, பாலை - பாலை, பழுது - குறை, இலாது - இல்லாமல், தினமும் - நாடோறும், அமுது செய்ய - திருவமுது செய்யும்படி, பண்ணுவாய் - செய்வாய், எ-று.

(போ-ரை.) வழிபடுகின்ற வந்தக் காலத்தில், ஒருதினம் தேவர்களுக்குத் தலைவனாகிய சிவபெருமானது கயிங்கர்யத்தின்பொருட்டுத் தெய்வீக ஸம்பத்தையுடைய ஒப்பற்ற க்ஷேத்ரத்திற்குப் போக நினைத்தவராகித் தமது இளமைப்பருவத்தையுடைய குமார்த்தியை நோக்கி, பெண்ணே! பரிசுத்தமான எமது சிவபெருமானுக்கு இந்தக் கிண்ணத்தில் இந்தப் பாலைக் குறையில்லாமல் நாடோறும் திருவமுது செய்யும்படிச் செய்வாய், எ-று.

(வி-ரை.) ஊர் என்றது திவ்ய க்ஷேத்திரமாகிய ஸ்ரீ சைலத்தை. (ங)

அன்னையே யுனக்கு நற்சிற் றுடையுமங் கைச்சங் கும்
கன்னமா ரோலை யும்பொற் கடகமுங் கனகப் பொட்டும்
மின்னுமம் பாவை யுநின்வி ரற்குமோ திரமுங் கொண்டிங்
குன்னைவந் தணைவோ நாளை யுண்மையீ தென்று மஞ்சேல்.

(ப -ரை.) அன்னையே - தாயே, உனக்கு - உனக்கு, நல்-நல்ல, சிற்றுடையும்-சிற்றுடையையும், அம் - அழகிய, கை - கைக்கு, சங்கும் - வளையலையும், கன்னம் ஆர் ஓலையும் - காதோலையையும், பொன்கடகமும் - பொற் கங்கணத்தையும், கனகப் பொட்டும் - பொன்பொட்டையும், மின்னும் - பிரகாசிக்கின்ற, அம் - சுந்தரமான, பாவையும் - பிரதிமையையும், நின் - உன், விரற்கு - விரலுக்கு, மோதிரமும் - மோதிரத்தையும், கொண்டு - வாங்கிக்கொண்டு, இங்கு - இவ்விடத்தில், உன்னை - உன்னை, நாளை-நாளையத்தினம், வந்து-வந்து, அணைவோம் - சேர்வோம், உண்மை-சத்தியம், நீ - நீ, ஒன்றும் - சற்றும், அஞ்சேல் - பயப்படாதே, எ - று.

(பொ - ரை.) தாயே! உனக்கு நல்ல சிற்றுடையையும், அழகிய கைக்கு வளையலையும், காதோலையையும், பொற் கங்கணத்தையும், பொன் பொட்டையும், பிரகாசிக்கின்ற சுந்தரமானபிரதிமையையும், உன்விரலுக்கு மோதிரத்தையும்வாங்கிக் கொண்டு இவ்விடத்தில் உன்னை நாளையத்தினம் வந்து சேர்வோம், சத்தியம், நீ சற்றும் பயப்படாதே. (௪)

பாலைநம் பிராற்குக் காய்ச்சிப் பரிவினன் னிவேதஞ் செய்வாய்
காலமொன் றிடவே யென்று சென்றனர் கன்னி யார்தா
மேலவப் படியோர் வள்ளத் தினிதுறப் பெய்து கைக்கொண்
டாலமுண்ட ருள்வார் கோயி லணைந்தவர் முன்வைத் தன்பால்.

(ப-ரை.) காலம் - (நியமித்தகாலத்திற்கு), ஒன்றிட - ஏற்க, பாலை - பாலை, நம்-நமது, பிராற்கு - சிவபெருமானுக்கு, காய்ச்சி - (திரள) காயவைத்து, பரிவில் - அன்புடன், நல் - நல்ல, நிவேதம் - நைவேத்யம், செய்வாய் - பண்ணுவாய், என்று-என்று (திட்டஞ்செய்து), சென்றனர்- (தமது மனைவியாருடன் யாத்திரை) போனார், கன்னியார் தாம் - பேதைப்பருவமுள்ள கோட்கூச்சவ்வையார், ஏல- (காலத்திற்கு) ஏற்க, அப்படி - அவ்வாறே, ஓர் - ஒரு, வள்ளத்து - கிண்ணியில், இனிது உற - சந்தோஷமாக, பெய்து-(பாலை) வார்த்து, கை-கையில், கொண்டு-எடுத்துக்கொண்டு, ஆலம் உண்டு அருள்வார்கோயில் - சிவன்கோயிலை, அணைந்து - சேர்ந்து, அவர் - அப் போகேஸ்வரரது, முன் - சந்நிதியில், அன்பால் - அன்புடன், வைத்து - இருத்தி, எ - று.

(பொ - ரை.) நியமித்த காலத்திற் கேற்கப் பாலை நமது சிவபெருமானுக்குத் திரளக் காயவைத்து, அன்புடன் நல்ல நைவேத்யம் பண்ணுவாயென்று திட்டஞ் செய்து, தமது மனைவியாருடன் யாத்திரை போனார்; பேதைப் பருவமுள்ள கோட்கூச்சவ்வையார் காலத்திற்கேற்க அவ்வாறே ஒரு கிண்ணியில் சந்தோஷமாகப் பாலை வார்த்துக் கையிலெடுத்துக்கொண்டு சிவன்கோயிலைச் சேர்ந்து அப் போகேஸ்வரரது சந்நிதியில் அன்புடன் இருத்தி.

(வி - ரை.) ஆலம் - விஷம். உண்டு - திருவமுதுசெய்து. அருள்வார் - கிருபை செய்பவராகிய சிவபெருமான். கோயில் - திருவாலயம். (௫)

குடித்திபா லைய வென்று கூறிமுன் குலவு நண்பால்
அடிக்கடி யுபசா ரிப்பா ராகவு மருந்தா ராகி
நெடித்திருப் பதனைக் கண்டு நேசநன் னெஞ்சி னாலே
யெடுத்திரு கையி லேந்தி யேனையா விப்பால் வேண்டாய்.

(ப-ரை.) ஐய - ஐயனே, பால் - பாலை, குடித்தி-திருவமுது செய்வாய், என்று - என்று, கூறி - சொல்லி, முன் - திருமுன், குலவும் - புகழ்தற்குரிய, நண்பால் - அன்புடன், அடிக்கடி - பலகாலும், உபசரிப்பாராகவும் - வணங்கியும், அருந்தாராகி - திருவமுது செய்யாதவராகி, நெடித்து - நெடுநேரமாய், இருப்பதனை - இருப்பதை, கண்டு - பார்த்து, நேசம் - அன்புள்ள, நல் - நல்ல, நெஞ்சினுலே - மனத்தினுலே, இரு - இரண்டு, கை - கரங்களில், எடுத்து ஏந்தி - (கிண்ணத்தை) தூக்கிக்கொண்டு, ஐயா - ஐயனே, இ - இந்த, பால் - பாலை, வேண்டாய் - (திருவமுது செய்ய) விரும்ப மாட்டாய், என் - (இதற்குக் காரணம்) யாது, எ-று.

(பொ-ரை.) ஐயனே! பாலைத்திருவமுது செய்வாயென்று சொல்லித் திருமுன் புகழ்தற்குரிய அன்புடன் பலநாலும் வணங்கியும் திருவமுது செய்யாதவராய் நெடுநேரமா யிருப்பதைப் பார்த்து, அன்புள்ள நல்ல மனத்தினுலே இரண்டு கரங்களில் கிண்ணத்தைத் தூக்கிக்கொண்டு, ஐயனே! இந்தப் பாலைத் திருவமுது செய்ய விரும்பமாட்டாய், இதற்குக் காரணம் யாது? (௬)

செல்லப்பால் காய்ந்த தின்றோ செழுமண மின்றோ வாறிற்
றில்லையோ பசிதா னின்றோ திரிந்ததோ கண்டா ரென்றோ
வல்லதா னற்ப மென்றோ வறிவிலேன் றந்தே னென்றோ
சொல்லுற்றே டில்லை யென்றோ தூவட்டில் விளக்கே னென்றோ.

(ப-ரை.) செல்லம் - வளம் பொருந்திய, பால் - பால், காய்ந்தது இன்றோ - சூடேற வில்லையோ, செழு - மிக்க, மணம் இன்றோ - வாசனையில்லையோ, ஆறிற்று இல்லையோ - சூடாறவில்லையோ, பசிதான் - பசியென்பது, இன்றோ - இல்லையோ, திரிந்ததோ - முறிந்துபோயிற்றோ, கண்டார் என்றோ-பார்த்தவர்களுடைய த்ருஷ்டி தோஷம் பட்டதென்றோ, அல்லதான் - அல்லது, அற்பம் என்றோ-குறைவாயிருக்கிற தென்றோ, அறிவு இல்லேன்-ஞானமில்லாத மூடனாகிய அடியேன், தந்தேன்என்றோ-கொடுத்தேனென்றோ, சொல் உற்று - (மதுரமென்று) சொல்லப்பட்ட, ஏடு - ஏடு, இல்லையென்றோ-இல்லையென்றோ; தூ - பற்றுள்ள, வட்டில் - கிண்ணத்தை, விளக்கேன் - துலக்கமாட்டேன், என்றோ-என்றோ, எ-று.

(பொ-ரை.) வளம் பொருந்திய பால் சூடேறவில்லையோ? மிக்க வாசனையில்லையோ? சூடாறவில்லையோ? பசியென்பதில்லையோ? முறிந்து போயிற்றோ? பார்த்தவர்களுடைய த்ருஷ்டிதோஷம் பட்டதென்றோ? அல்லது குறைவா யிருக்கிறதென்றோ? ஞானமில்லாத மூடனாகிய அடியேன் கொடுத்தேனென்றோ? மதுரமென்று சொல்லப்பட்ட ஏடு இல்லையென்றோ? பற்றுள்ள கிண்ணத்தைத்துலக்க மாட்டேனென்றோ? (௭)

தண்ணென வாறிற் றென்றோ தண்ணீர்கூ டியபா லென்றோ
வண்ணியர்க் களித்தே னென்றோ வரவுநான் றாழ்த்தே னென்றோ
வொண்ணெய் கூடிய தில்லென்றோ வோடிமுன் கொணர்ந்தே னென்றோ
வெண்ணியித் தனையும் வேண்டா வென்பதோ பருகா தென்னீ.

(ப-ரை.) தண் என்ன - தண்ணென்று, ஆறிற்று என்றோ - ஆறிப்போயிற் றென்றோ; தண்ணீர் - தண்ணீர், கூடிய - கலந்த, பால் என்றோ - பாலென்றோ, வண்ணியர்க்கு - தாதியர்க்கு; அளித்தேன் என்றோ - கொடுத்தே னென்றோ, நான் - யான்; வரவு தாழ்த்தேன் என்றோ - வரத்தாமதித்தேனென்றோ; ஒள் - மேலான, நெய் - நெய், கூடியது இல் என்றோ - கலக்கவில்லை யென்றோ; ஓடி - விரைவாக

வந்து, முன் - (காலத்திற்கு) முன்னர், கொணர்ந்தேன் என்றோ - கொண்டுவந்தே னென்றோ, இத்தனையும்-இவ்வளவும், எண்ணி-நினைத்து, வேண்டா - தேவையில்லை, என்பதோ - என்றிருப்பதோ, நீ - நீ, பருகாது - திருவமுது செய்யாதிருத்தற்குக் காரணம், என் - யாது, எ - று.

(போ - ரை.) தண்ணென்று ஆறிப்போயிற்றென்றோ? தண்ணீர் கலந்த பாலென்றோ? தாதியர்க்குக் கொடுத்தேனென்றோ? யான் வரத் தாமதித்தேனென் றோ? மேலானநெய் கலக்கவில்லையென்றோ? விரைவாகவந்து காலத்திற்கு முன்னர் கொண்டுவந்தேனென்றோ? இவ்வளவும் நினைத்துத் தேவையில்லையென்றிருப்பதோ? நீ திருவமுதுசெய்யாததற்குக் காரணம் யாது?

(வி - ரை.) தண்மை-குளிர்ச்சி. வண்ணம் - அழகு. வண்ணியர்-அலங்கரிப்பவர்.

பாலுடன் சற்றுச் சோறு பழங்கலந் தில்லை னென்றோ
சாலவே யினிய தேனற் சர்க்கரை பண்ணி யாரங்
கோலவெம் மனையி லுண்டு கொணரவோ கோவி னெய்தான்
மேலுறு குடத்தி னுண்டு தருகவோ விருப்பே தன்றி.

(ப - ரை.) பாலுடன் - பாலும், சற்று - சிறிது, சோறு - சோறும், பழம் - பழமும், கலந்து இல்லேன் என்றோ - கலக்கவில்லையென்றோ, சால - மிகவும், இனிய - மதுரமாகிய, தேன் - தேனும், நல் - நல்ல, சர்க்கரை - சர்க்கரையும், பண்ணியாரம் - கஜ்ஜாயங்களும், கோலம் - அழகிய, எம்-எமது, மனையில்-வீட்டில், உண்டு - இருக்கின்றன, கொணரவோ - கொண்டுவரட்டுமோ, கோவின் - பசுவின், நெய் - நெய்யும், மேல் உறு - உறியின்மேலுள்ள, குடத்தின் - குடங்களில், உண்டு- நிறைந்திருக்கின்றது, தருகவோ - கொடுக்கட்டுமோ, விருப்பு - விருப்பம், ஏது - யாது, அன்றி - அல்லாமல், எ - று.

(போ-ரை.) பாலும் சிறிது சோறும் பழமும் கலக்கவில்லையென்றோ? மிகவும் மதுரமாகிய தேனும் நல்ல சர்க்கரையும் கஜ்ஜாயங்களும் அழகிய எமது வீட்டில் இருக்கின்றன, கொண்டுவரட்டுமோ? பசுவின் நெய்யும் உறியின் மேலுள்ள குடங் களில் நிறைந்திருக்கின்றது, கொடுக்கட்டுமோ? விருப்பம் யாது? அல்லாமல். (௬)

என்னையன் குருக்க ளானை யெழின்மயே சுரநற் பூசை
நன்னெய்பா லுடன ளிப்ப னுனை யழைத்துப் போவன்
பின்னையே னன்னை யப்பன் பெரிதவ றேங்காய் தந்தார்
முன்னுனக் கிடுவ னிப்பான் முந்திநீ யயின்றுன் மற்றும்.

(ப - ரை.) என் - எனது, ஐயன் - தந்தையார், நாளை-நாளையத்தினம், எழில் - மேன்மைபொருந்திய, நல் - (தமது திருமடத்தில்) நல்ல, குருக்கள் மயேசுரபூஜை - ஜங்கமாராதனை (நடத்தப் போகின்றமையால்), நல் - நல்ல, நெய் - நெய்யையும், பாலுடன் - பாலையும், அளிப்பன் - படைப்பார், நான் - நான், உன்னை - உன்னை, அழைத்துப்போவன் - அழைத்துக்கொண்டு போவேன், பின்னை - பிறகு, என் - (திருவமுது செய்தற்குத்தடை) யாது, அன்னை - தாயாரும், அப்பன்-தந்தையாரும், பெரிது - (ஊர்க்குப்போம்போது) மிகுதியாக, அவல் - அவலையும், தேங்காய் - தேங்காயையும், தந்தார் - கொடுத்தார்கள், முன் - முன்னே, உனக்கு - உனக்கு, இடுவன் - கொடுப்பேன், இ - இந்த, பால் - பாலை, முந்தி - முன்னே, நீ - நீ, அயின்றால் - திருவமுது செய்வாயாயின், மற்றும் - இன்னமும், எ - று.

(பொ - ரை.) எனது தந்தையார் நாளையத்தினம் மேன்மைபொருந்திய நமது திருமடத்தில் நல்ல ஜங்கமாராதனை நடத்தப்போகின்றமையால், நல்ல நெய்யையும் பாலையும் படைப்பார், யான் உன்னை யழைத்துக்கொண்டு போவேன், பிறகு திருவமுதுசெய்தற்குத் தடையாது? தாயாரும் தந்தையாரும் ஊர்க்குப்போம்போது மிகுதியாக அவலையும் தேங்காயையும் கொடுத்தார்கள், முன்னே உனக்குக்கொடுப்பேன், இந்தப் பாலை முன்னே நீ திருவமுதுசெய்வாயாயின், இன்னமும். (௧0)

(வி - ரை.) மயேசுரபூஜை - மாஹேஸ்வரபூஜை யென்னும் வடசொற்றிரிபு. மாஹேஸ்வரர் - மஹேஸ்வரனைப்பூஜிப்பவர்.

நாளையென் றந்தை தாயார் நற்பொன்மோ திரஞ்சி லம்பு
தோளுறுங் கானன் முத்தின் றாழ்வடந் துலங்கும் பாவை
நீளொளி சிற்றிற் றொட்டிற் றருவரிந் நிரைக ளெல்லாங்
கேளுனக் களிப்ப னிப்பால் கெடாமுன மருந்து கென்று.

(ப - ரை.) நாளை - நாளையத்தினம், என் - எனது, தந்தை - தகப்பனாரும், தாயார் - தாயாரும், நல் - நல்ல, பொன்மோதிரம்-பொன்மோதிரத்தையும், சிலம்பு - நூபுரத்தையும், தோள் உறும் - துளைக்கப்பட்ட, கானல்-ஒளிபொருந்திய, முத்தின் தாழ்வடம் - முத்துமாலையையும், துலங்கும் - விளங்குகின்ற, பாவை-பதுமையையும், நீள் - மிகுந்த, ஒளி - பிரகாசத்தையுடைய, சிற்றில் - சிற்றிலையும், தொட்டில் - தொட்டிலையும், தருவர் - கொடுப்பார்கள், இ - இந்த, நிரைகள் எல்லாம் - வரிசைகளெல்லாவற்றையும், உனக்கு - உனக்கு, அளிப்பன் - கொடுப்பேன், கேள் - (எனது சொல்லை) கேட்பாய், இ-இந்த, பால் - பாலானது, கெடா - கெட்டுப்போகாததற்கு, முன்னம் - முன்னமே, அருந்துக - திருவமுதுசெய்வாய், என்று - என்று, எ - று.

(பொ - ரை.) நாளையத்தினம் எனது தகப்பனாரும் தாயாரும் நல்ல பொன்மோதிரத்தையும், நூபுரத்தையும், துளைக்கப்பட்ட ஒளிபொருந்திய முத்துமாலையையும், விளங்குகின்ற பதுமையையும், மிகுந்த பிரகாசத்தையுடைய சிற்றிலையும், தொட்டிலையும்கொடுப்பார்கள், இந்த வரிசைகளெல்லாவற்றையும் உனக்குக் கொடுப்பேன், எனது சொல்லைக்கேட்பாய், இந்தப் பாலானது கெட்டுப்போகாததற்கு முன்னமே திருவமுது செய்வாயென்று. (௧௧)

இன்னநான் றந்த பாலை யின்றுநீ குடியா யேலென்
றந்தைதாய் கேட்கி லென்னைச் சாம்படி யடிப்ப ரந்தோ
வந்தவ ரறியா முன்ன மருந்துவா யெனவ ணங்கி
நொந்தழும் வட்டிற் பாலை நோக்குநித் தனையு நோக்கும்.

(ப - ரை.) நான் - யான், தந்த - கொடுத்த, இன்ன - இந்த, பாலை - பாலை, இன்று - இப்போது, நீ-நீ, குடியாயேல் - திருவமுது செய்யாயாயின், என் - எனது, தந்தை - தந்தையாரும், தாய் - தாயாரும், கேட்கில் - கேட்பார்களாயின், என்னை - என்னை, சாம்படி - சாகும்படி, அடிப்பர் - அடிப்பார்கள், அந்தோ - ஐயோ, வந்து - (ஊரிலிருந்து) வந்து, அவர் - அவர்கள், அறியா - தெரிந்துகொள்ளா, முன்னம் - முன்னமே, அருந்துவாய்-திருவமுது செய்வாய், என்ன-என்று, வணங்கி-தொழுது, நொந்து - மெலிந்து, அழும் - அழுவாள், வட்டில் - கிண்ணத்திலுள்ள, பாலை - பாலை, நோக்கும் - பார்ப்பாள், நித்தனையும் - போகேஸ்வரரையும், நோக்கும் - பார்ப்பாள், எ-று.

(பொ - ரை.) யான் கொடுத்த விந்தப் பாலை யிப்போது நீ திருவமுது செய்யாயாயின் எனது தந்தையாரும் தாயாரும் கேட்பார்களாயின் என்னைச் சாகும்படி யடிப்பார்கள், ஐயோ! ஊரிலிருந்து வந்து அவர்கள் தெரிந்து கொள்ளாமுன்னமே

திருவமுது செய்வாயென்று தொழுது மெலிந்தழுவாள், கிண்ணத்திலுள்ள பாலைப் பார்ப்பாள், போகேசுவரரையும் பார்ப்பாள். (கஉ)

திரும்பவு மிறைஞ்சி யேங்குந் தேம்புநின் றழுந்தி கைக்குங்
கரங்களை நெரித்தி ரங்குங் காலிலங் கோட்டுங் கண்ணீ
ரரும்பினைத் துடைக்கு மிவ்வா றுருகுமிப் பேதை யன்பை
விரும்பியங் கிருந்த பாலை விரைந்தர னமுது செய்தான்.

(ப - ரை.) திரும்பவும் - மறுபடியும், இறைஞ்சி - வணங்கி, ஏங்கும்-அழுவாள், தேம்பும் - தேம்பித்தேம்பி யழுவாள், நின்று - முன்னின்று, அழும் - அழுவாள், திகைக்கும் - தன்னை மறந்து நிற்பாள், கரங்களை - கைகளை, நெரித்து - முறித்து, இரங்கும் - அழுவாள், கால் - காலை, நிலம் - நிலத்தில், கோட்டும் - கீறுவாள், கண் - கண்களில், நீர் - நீர், அரும்பினை - முகிழ்த்தலை, துடைக்கும் - துடைப்பாள், இவ்வாறு ஆகும் - இவ்விதமான அலங்கோலத்துடன் கூடிய, இ - இந்த, பேதை - ஏழையின், அன்பை - பக்தியை, விரும்பி - அன்புடன் (பார்த்து), அங்கு - அவ்விடத்தில், இருந்த - வைத்த, பாலை - பாலை, விரைந்து - விரைவாக, அரன் - சிவபெருமான், அமுது செய்தான் - திருவமுது செய்தருளினன், எ-று.

(போ-ரை.) மறுபடியும் வணங்கியழுவாள், தேம்பித் தேம்பி யழுவாள், முன்னின்று அழுவாள், தன்னை மறந்து நிற்பாள், கைகளை முறித்தழுவாள், காலை நிலத்தில் கீறுவாள், கண்களில் நீர் முகிழ்த்தலைத் துடைப்பாள், இவ்விதமான வலங்கோலத்துடன் கூடிய இந்த யேழையின் பக்தியையன்புடன் பார்த்து அவ்விடத்தில் வைத்த பாலை விரைவாகச் சிவபெருமான் திருவமுது செய்தருளினன். (கங)

இம்முறை கன்னி யார்பா லிறைவற்கு நிவேதஞ் செய்து
தம்மன மகிழு நாளிற் றாயருந் தந்தை யாருஞ்
செம்மையாங் கரும முற்றிச் சென்றவூர் நின்று மீள்வா
ரம்மையோர் பாகர் கோயி லருகுற வணையு மங்கண்.

(ப - ரை.) இம் முறை - இவ்விதமாக, கன்னியார் - பேதையார், இறைவற்கு - சிவபெருமானுக்கு, பால் - பாலை, நிவேதம் செய்து - நிவேதித்து, தம் - தமது, மனம் - மனமானது, மகிழும் - மகிழ்ச்சியடைகின்ற, நாளில் - காலத்தில், தாயரும் - தாயாரும், தந்தையாரும் - தந்தையாரும், செம்மையாம் - மேன்மையாகிய, கருமம் - சிவகைங்கர்யத்தை, முற்றி - நிறைவேற்றி, சென்ற - போன, ஊர் நின்றும் - ஊரினின்றும், மீள்வார் - திரும்பி வருபவர்களாகி, அம்மை ஓர் பாகர் கோயில் - சிவாலயத்தை, அருகு உற - சமீபமாக, அணையும் - வருகின்ற, அங்கண் - அவ்விடத்தில், எ-று.

(போ-ரை.) இவ்விதமாகப் பேதையார் சிவபெருமானுக்குப் பாலைநிவேதித்துத் தமது மனமானது மகிழ்ச்சியடைகின்றகாலத்தில் தாயாரும் தந்தையாரும் மேன்மையாகிய சிவ கைங்கர்யத்தை நிறைவேற்றிப் போன ஊரினின்றும் திரும்பிவருபவர்களாகிச் சிவாலயத்தைச் சமீபமாக வருகின்ற அவ்விடத்தில்.

(வி - ரை.) அம்மை - உமாதேவியை. ஓர் - ஒப்பற்ற. பாகர் - வாமபாகத்திலுடையவராகிய சிவபெருமான். கோயில் - ஆலயம். (கச)

கோதிலாக் கோட்கூச் சவ்வை கொடியிடை பாகர்க் கான்பா
லாதர வுடனி வேதித் தங்கையின் வெறுங்கிண் ணங்கொண்
டேதியங் கொளச்செல் வாரை யுன்னிநற் றந்தை யார்கண்
டீதென்ன தம்பி ரான்பா லென்செய்தாய் பாவி யென்று.

(ப - ரை.) கோது இல்லா - குற்றத்தினின்றும் நீங்கிய, கோட்கூச்சவ்வை - கோட்கூச்சவ்வையார், கொடியிடை பாகர்க்கு - சிவபெருமானுக்கு, ஆன் - பசுவின், பால்-பாலை, ஆதரவுடன் - அன்போடு, நிவேதித்து - நைவேத்யஞ்செய்து, அங்கையின் - அகங்கையில், வெறும் - வெறுமையாகிய, கிண்ணம் - வட்டிலை, கொண்டு - எடுத்துக்கொண்டு, ஊதியம் - மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை, கொள்ள - அடைவதற்கு, செல்வாரை - போகின்றவராகிய கோட்கூச்சவ்வையாரை, நல்-சிறந்த, தந்தையார் - தந்தையானவர், உன்னி - யோசித்து, கண்டு - பார்த்து, ஈது - இந்தக் காரியஞ் செய்தற்குக் காரணம், என்ன - யாது, தம்பிரான் - சிவபெருமானுக்கு நிவேதித்த, பால் - பாலை, என் - யாது, செய்தாய் - பண்ணினை, பாவி - பாதகி, என்று-என்று, எ - று.

(பொ - ரை.) குற்றத்தினின்றும் நீங்கிய கோட்கூச்சவ்வையார் சிவபெருமானுக்குப் பசுவின்பாலை அன்போடு நைவேத்யஞ்செய்து, அகங்கையில் வெறுமையாகிய வட்டிலை யெடுத்துக்கொண்டு மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை யடைவதற்குப் போகின்றவராகிய கோட்கூச்சவ்வையாரைச் சிறந்த தந்தையானவர் யோசித்துப் பார்த்து, இந்தக்காரியஞ் செய்தற்குக் காரணம் யாது? சிவபெருமானுக்கு நிவேதித்த பாலை யாது பண்ணினை ? பாதகி ! என்று.

(வி-ரை.) கொடி-வல்லிக் கொடிபோலும் துவள்கின்ற. இடை-திருவிடையையுடைய உமாதேவியை. பாகர்க்கு - வாமபாகத்திலுடைய சிவபெருமானுக்கு. இடை-ஆகுபெயர். ஊதியம் - இலாபம். (சுடு)

எங்குநீ சென்றாய் வட்டிற் கினியபா லேதுமின்றி
யங்கையிற் றருவ தேதங் கார்க்குண வளித்தா யந்தோ
மங்குறக் கவிழ்த்திட் டாயோ மருவித்தா னருந்தி யப்பாற்
பங்கமாக் கினையோ வென்னோ பாவிநீ பகர்வா யென்ன.

(ப-ரை.) நீ - நீ, எங்கு-எவ்விடம், சென்றாய் - போயினை, வட்டிற்கு - கிண்ணத்தில், இனிய - மதுரமான, பால் - பால், ஏதும் - சிறுதும், இன்றி - இல்லாமல், அங்கையில் - அகங்கையில், தருவது - கொண்டு வருவதற்குக் காரணம், ஏது - யாது, அங்கு - அவ்விடத்து, ஆர்க்கு - யார்க்கு, உணவு - பாலை, அளித்தாய் - கொடுத்தனை, அந்தோ - ஐயோ, மங்குற-கெடும்படி, கவிழ்த்திட்டாயோ-கவிழ்த்துவிட்டனையோ, நீ தான் - நீயே, மருவி - (மனது) ஆர, அருந்தி - உண்டு, அ - அந்த, பால் - பாலை, பங்கம் ஆக்கினையோ - கெடுத்துவிட்டனையோ, என்னோ - (பின்னை) யாது செய்தனையோ, பாவி - பாதகி, பகர்வாய் - சொல்வாய், என்ன - என்று கேட்டலும் (கோட்கூச்சவ்வையார் பின்வருமாறு சொல்லத்தொடங்கினாள்.) எ - று.

(பொ-ரை.) நீ எவ்விடம் போயினை ? கிண்ணத்தில் மதுரமான பால் சிறிதுமில்லாமல் அகங்கையிற் கொண்டு வருவதற்குக் காரணம் யாது ? அவ்விடத்து யார்க்குப்பாலைக்கொடுத்தனை ? ஐயோ ! கெடும்படிக் கவிழ்த்துவிட்டனையோ ? நீயே மனதாரவுண்டு அந்தப் பாலைக்கெடுத்து விட்டனையோ ? பின்னை யாது செய்தனையோ ? பாதகி! சொல்வாயென்றுகேட்டலும், கோட்கூச்சவ்வையார் பின்வருமாறுசொல்லத் தொடங்கினாள்.

(வி - ரை.) உணவு - திருவமுது எனினுமாம். (சுசு)

இல்லைநீ சொன்ன வாறே யிந்தவள் ளம்மை ளக்கி
நல்லபா னிறைத்துச் சென்று நம்பன்முன் வைத்தி றைஞ்சிச்
சொல்லினன் குடிப்பா யென்று தொழுதுநின் றழுதே னுண்டான்
வல்லைநீ செல்கென் றென்கை வட்டிலைத் தந்தான் வந்தேன்.

(ப - ரை.) இல்லை - (தாம் சந்தேகித்த விஷயங்களில் ஒன்றும் நடக்க) இல்லை, நீ-நீ, சொன்னவாறே - சொல்லியபடியே, இந்த - இந்த, வள்ளம் - கிண்ணத்தை, விளக்கி-துலக்கி, நல்ல-நன்றாய்த்திரளக்காய்ச்சின, பால் - (பசும்) பாலை, நிறைத்து - நிரப்பி, சென்று - (சிவாலயத்திற்கு) போய், நம்பன் - சிவபெருமானது, முன் - சந்நிதியில், வைத்து - இருத்தி, துய்ப்பாய் - திருவமுது செய்வாய், என்று - என்று, இறைஞ்சி - வணங்கி, சொல்லினன் - துதித்தேன், தொழுது - வணங்கி, நின்று - நின்று, அழுதேன்-அழுதேன், உண்டான் - (சிவபெருமான்) திருவமுது செய்தான், வல்லி - பெண்ணே, நீ-நீ, செல்க - போருக, என்று - என்று (கட்டளையிட்டு), என் - எனது, கை - கையில், வட்டிலை - வள்ளத்தை, தந்தான் - கொடுத்தான், வந்தேன் - (நான் இதோ) வந்தேன், எ-று.

(போ-ரை.) தாம் சந்தேகித்த விஷயங்களில் ஒன்றும் நடக்கவில்லை, நீ சொல்லியபடியே இந்தக் கிண்ணத்தைத் துலக்கி நன்றாய்த் திரளக் காய்ச்சின பசும் பாலை நிரப்பிச் சிவாலயத்திற்குப் போய்ச் சிவபெருமானது சந்நிதியிலிருத்தித் திருவமுது செய்வாயென்று, வணங்கித் துதித்தேன், வணங்கி நின்று அழுதேன், சிவபெருமான் திருவமுது செய்தான், பெண்ணே! நீ போருகவென்று கட்டளையிட்டு, எனது கையில் வள்ளத்தைக் கொடுத்தான், நான் இதோ வந்தேன்.

(வி-ரை.) வல்லி - ஆகுபெயர், அண்மைவிளி. (கஎ)

என்றுகன் னிகையார் சொல்லச் சிவதேவ ரெழுந்து வெம்பி
நின்றுசா தித்தல் பாரீர் கள்ளிபோ லென்ன வையா
மன்றுளார் பால ருந்தன் மாயமீ தறிவோ மென்று
பின்றைநாட் டம்ம டத்து ளமுதையவ் வட்டிற் பெய்து.

(ப-ரை.) என்று - என்று, கன்னிகையார் - பேதையார், சொல்ல - கூறுதலும், சிவதேவர் - சிவதேவசரணர், எழுந்து - எழும்பி, வெம்பி - கோபித்து, கள்ளிபோல் - கள்ளிபோல், நின்று - (எதிரே) நின்று, சாதித்தல் - பிடிவாதஞ்செய்வதை, பாரீர் - பாருங்கள், என்ன - என்று, வையா - வைது, மன்று உள்ளார்-சிவபெருமான், பால் - பாலை, அருந்தல் - திருவமுது செய்வது, மாயம் - பொய், ஈது - இந்தச்செய்தியை, அறிவோம் - தெரிந்து கொள்வோம், என்று - என்று (யோசித்து), பின்றைநாள் - மறுதினம், தம் - தமது, மடத்துள் - வீட்டிலுள்ள, அமுதை - பாலை, அ - அந்த, வட்டில் - கிண்ணத்தில், பெய்து - வார்த்து, எ-று.

(போ - ரை.) என்று பேதையார் கூறுதலும், சிவதேவசரணர் எழும்பிக் கோபித்துக் கள்ளிபோல் எதிரே நின்று பிடிவாதஞ்செய்வதைப் பாருங்களென்று வைது, சிவபெருமான் பாலைத் திருவமுது செய்வது பொய், இந்தச் செய்தியைத் தெரிந்து கொள்வோமென்று யோசித்து, மறுதினம் தமது வீட்டிலுள்ள பாலை அந்தக் கிண்ணத்தில் வார்த்து.

(வி-ரை.) மன்று உள்ளார் - கனகசபையிலுள்ளவராகிய சிவபெருமான். (கஅ)

அரிவையார் கோட்கூச் சவ்வை யார்கையிற் கொடுத்து வாவென்
றெரியுறு கரத்தார் முன்சென் றிருத்தியிங் கமுது செய்கி
யுரியநின் பத்தி காண்ப னென்றனு முவந்து முன்போற்
பரிவினாற் பாலை வைத்துப் பாவையா ருபச ரிப்பார்.

(ப-ரை.) அரிவையார் - கன்னிகையாராகிய, கோட்கூச்சவ்வையார் - கோட்கூச்சவ்வையாரது, கையில் - கரத்தில், கொடுத்து - தந்து, வா-வா, என்று - என்று, எரியுறு - மழுவேந்தின, கரத்தார் - திருக்கரத்தையுடையவராகிய சிவபெருமானது, முன் - சந்நிதியில், சென்று - போய், இருத்தி - வைத்து, இங்கு - இவ்விடத்தில், அமுதுசெய்வி - திருவமுதுசெய்யச் செய்வாய், உரிய - பெருமைபாராட்டுதற்குரிய, நின் - உனது, பத்தி - பக்தியை, காண்பன் - பார்ப்பேன், என்றலும்-என்று சொல்லுதலும், பாவையார் - கன்னிகையார், முன்போல்-முன்னே செய்ததுபோல, உவந்து-மனமகிழ்ந்து, பரிவினால் - அன்புடன், பாலை - பாலை, இருத்தி - வைத்து, உபசரிப்பார்-வணங்குபவராயினர், எ-று.

(பொ-ரை.) கன்னிகையாராகிய கோட்கூச்சவ்வையாரது கரத்திற் றந்து, வாவென்று, மழுவேந்தின திருக்கரத்தையுடையவராகிய சிவபெருமானது சந்நிதியிற் போய் வைத்து, இவ்விடத்தில் திருவமுதுசெய்யச் செய்வாய், பெருமைபாராட்டுதற்குரிய உனது பக்தியைப் பார்ப்பேனென்று சொல்லுதலும், கன்னிகையார் முன்னே செய்தது போல மனமகிழ்ந்து அன்புடன் பாலை வைத்து வணங்குபவராயினர்.

(வி-ரை.) பத்தியென்பது ஒன்பது வகைப்படும்; அவையாவன:—ஸ்ரவணம் (சிவசரிதங்களைக்கேட்டல்), கீர்த்தனம் (சிவனைத் துதித்தல்), ஸ்மரணம் (சிவத்தியானஞ் செய்தல்), பாதசேவை(சிவசரணார்களைச்சேவித்தல்), அர்ச்சனை(சிவபூஜை செய்தல்), வந்தனம் (சிவபெருமானை நமஸ்கரித்தல்), தாஸ்யம் (சிவபெருமானுக்குத் தொண்டு பூண்டொழுகுதல்), ஸக்யம் (சிவபெருமானுடன் சிநேகமாயிருத்தல்), ஆத்மநிவேதனம் (சிவபெருமானுக்குத் தன்னைச் சமர்ப்பித்தல்). (கக)

பெண்ணிளம் பேதை யார்தம் பெரியநற் பத்தி நேயந்
திண்ணிமை யுலகர் காணத் தெரிவிப்பான் செங்க ணேற்றார்
தண்ணிறை பால ருந்தாத் தன்மைய ராயி ருந்தார்
கண்ணினைப் பிசைந்து போதக் கலுழ்ந்துகன் னிகையார் சொல்வார்.

(ப - ரை.) பெண் - பெருமைபொருந்திய, இளம் - இளம்பருவத்தையுடைய, பேதையார்தம் - கன்னிகையாரது, பெரிய - மேன்மைபொருந்திய, நல் - சிறந்த, பத்தி - அன்பு (என்கின்ற), நேயம் - பக்தியின், திண்ணிமை - உறுதிப்பாட்டினை, உலகர் - உலகத்தார், காண - பார்க்கும்படி, தெரிவிப்பான் - அறிவிக்கும்பொருட்டு, செம் - செவந்த, கண் - கண்களையுடைய, ஏற்றார் - வ்ருஷப வாஹனத்தையுடையவராகிய சிவபெருமான், தண்நிறை - மதுரமுள்ள, பால் - பாலை, அருந்தாத் தன்மையராய் - திருவமுது செய்யாதவராய், இருந்தார் - இருந்தார், கன்னிகையார் - பேதையார், கண்ணினை - கண்களை, பிசைந்து - கசக்கிக்கொண்டு, போத-மிகவும், கலுழ்ந்து - அழுது, சொல்வார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(பொ - ரை.) பெருமைபொருந்திய இளம்பருவத்தையுடைய கன்னிகையாரது மேன்மைபொருந்திய சிறந்த வன்பென்கின்ற பக்தியின் உறுதிப்பாட்டினை உலகத்தார் பார்க்கும்படி யறிவிக்கும்பொருட்டுச் செவந்த கண்களையுடைய வ்ருஷபவாஹனத்தை யுடையவராகிய சிவபெருமான் மதுரமுள்ள பாலைத் திருவமுது செய்யாதவராயிருந்தார், பேதையார் கண்களைக் கசக்கிக்கொண்டு மிகவுமழுதுச் சொல்வாராயினர், எவ்வாறெனின். (௨0)

இன்றுநீ பால ருந்தே னென்பதென் னெனவ ருந்தி
யொன்றிய தென்ன சிற்பா னுனக்கைய செரித்த தின்றே
வன்றியிங் கென்னைக் கொல்ல வகத்தினிற் குறித்தாய் கொல்லோ
வென்றலுஞ் சிவதே வைய ரியென வெகுண்டெ ழுந்து,

(ப - ரை.) நீ - நீ, இன்று - இப்போது, பால் - பாலை, அருந்தேன்-திருவமுது செய்யமாட்டேன், என்பது - என்றிருத்தற்குக் காரணம், என் - யாது, என்ன - என்று, வருந்தி - துக்கித்து, ஐய - ஐயனே, ஒன்றிய - (வயிற்றில்) இருக்கின்ற, நென்னலின் பால் - நேற்றுப்பால், உனக்கு - உனக்கு, செரித்தது இன்றோ - செரிக்கவில்லையோ, அன்றி-அல்லாமல், இங்கு - இவ்விடத்தில், என்னை - என்னை, கொல்ல - உயிர்வாங்கும்படி, அகத்தினில் - திருவுளத்தில், குறித்தாய் கொல் ஓ - நினைத்தனையோ, என்றலும் - என்று சொல்லுதலும், சிவதேவையர்-சிவதேவசரணர், எரி - நெருப்பு, என்ன - போல், வெகுண்டு-கோபித்து, எழுந்து - எழும்பி, எ - று.

(பொ - ரை.) நீ இப்போது பாலைத்திருவமுது செய்யமாட்டேனென் றிருத்தற்குக் காரணம் யாது? என்று துக்கித்து, ஐயனே! வயிற்றிலிருக்கின்ற நேற்றுப்பால் உனக்குச் செரிக்கவில்லையோ? அல்லாமல் இவ்விடத்தில் என்னை யுயிர்வாங்கும்படித் திருவுளத்தில் நினைத்தனையோ? என்று சொல்லுதலும், சிவதேவசரணர் நெருப்புப் போலக் கோபித்தெழும்பி. (உக)

தேவியோர் பாகன் பாலைச் சிந்தித்துத் தீண்டான் பாரான்
பாவிநீ யெம்பி ரான்றான் பருகினன் னென்ப கர்ந்தாய்
சாவிநீ யிழந்தாய் சென்னி யரிவனென் றடர்ந்து செல்லக்
காவியேர் விழியா ளஞ்சிக் கதறியே யபய மென்று.

(ப - ரை.) தேவி - உமாதேவியாரை, ஓர் - ஒப்பற்ற, பாகன் - வாமபாகத்தி லுடையவராகிய சிவபெருமான், பாலை - பாலை, சிந்தித்து - விரும்பி, தீண்டான் - தொடவுமாட்டான், பாரான் - பார்க்கவுமாட்டான், பாவி - பாதகி, நீ-நீ, எம்பிரான் தான்-சிவபெருமானே, பருகினன்-திருவமுதுசெய்தான், என்ன-என்று, பகர்ந்தாய்-சொல்லினை, நீ - நீ, சாவியிழந்தாய் - சாகப்போகின்றனை, சென்னி - தலையை, அரிவன் - அறுத்துவிடுவேன், என்று - என்று, அடர்ந்து - நெருங்கி, செல்ல - போனமாத்திரத்தில், ஏர் - அழகிய, காவி - நீலமலர்போன்ற, விழியாள் - கண்களை யுடையவராகிய கோட்கூச்சவ்வையார், அஞ்சி - பயந்து, கதறி - அழுது, அபயம் - அடைக்கலம், என்று - என்று, எ - று.

(பொ - ரை.) உமாதேவியாரை ஒப்பற்ற வாமபாகத்தி லுடையவராகிய சிவபெருமான் பாலை விரும்பித் தொடவுமாட்டான், பார்க்கவுமாட்டான், பாதகி! நீ சிவபெருமானே திருவமுது செய்தானென்று சொல்லினை, நீ சாகப்போகின்றனை, தலையை யறுத்து விடுவேனென்று நெருங்கிப்போன மாத்திரத்தில், அழகிய நீலமலர் போன்ற கண்களையுடையவராகிய கோட்கூச்சவ்வையார் பயந்தழுது அடைக்கல மென்று. (உஉ)

ஐயநின் னபய நானென் றத்தர்பா லலறி யோடுஞ்
செய்யமான் சிகழி பற்றிச் சிவதேவ ரீர்க்கும் போது
தையலா டந்த பாலைத் தம்பிரா னமுது செய்தா
ருய்யநீ நமது மார்வத் துறுமினென் றுவந்து வைத்தார்.

(ப-ரை.) ஐய - ஐயனே, நான் - நான், உன் - உனது, அபயம் - அடைக்கலம், என்று - என்று, அத்தர்பால் - சிவபெருமானிடத்தில், அலறி - அழுதுகொண்டு, ஓடும் - விரைவாகப்போகின்ற, செய்ய - அழகிய, மான் - மான்விழிபோன்ற விழி களையுடைய கோட்கூச்சவ்வையாரது, சிகழி - சிகையை, பற்றி - பிடித்து, சிவ தேவர்-சிவதேவசரணர், ஈர்க்கும்போது-இழுக்கின்ற சமயத்தில், தையலார் - கன்னி

கையார், தந்த - கொடுத்த, பாலை - பாலை, தம்பிரான் - சிவபெருமான், அமுது செய்தார் - திருவமுது செய்து, நீ - நீ, உய்ய - உஜ்ஜீவிக்கும்படி, நமது-நமது, மார்வத்து-மார்பினிடத்தில், உறுதின் - இரும், என்று-என்று, உவந்து - (திருவுளம்) மகிழ்ந்து, வைத்தார் - இருக்கச் செய்தருளினர், எ-று.

(பொ-ரை.) ஐயனே! நான் உனது அடைக்கலமென்றுச் சிவபெருமானிடத்தில் அழுதுக்கொண்டு விரைவாகப்போகின்ற வழுகிய மான் விழிபோன்ற விழிகளையுடைய கோட்கூச்சவ்வையாரது சிகையைப்பிடித்துச் சிவ்தேவசரணர் இழுக்கின்ற சமயத்தில், கன்னிகையார் கொடுத்த பாலைச் சிவபெருமான் திருவமுது செய்து, நீ உஜ்ஜீவிக்கும்படி நமது மார்பினிடத்தில் இருமென்றுத் திருவுள மகிழ்ந்து இருக்கச் செய்தருளினர். (உ௩)

இச்செயல் கண்ட ருண்டு சிவதேவ ரிளகு நெஞ்சா
னிச்சயாச் சரிய மெய்தி நின்றனர் நிமலர் மார்பின்
கொச்சைமான் சிகழி தோன்றுங் குறியினாற் குவல யத்தோர்
நச்சிடு கொப்பி லிங்க மெனவின்று நவிலா நிற்பார்.

(ப-ரை.) சிவதேவர் - சிவதேவசரணர், இ - இந்த, செயல் - (மஹத்வமாகிய) செய்தியை, கண்டு - பார்த்து, அருண்டு - பயந்து, இளகு - உருகுகின்ற, நெஞ்சால்-மனத்துடன், நிச்சய - உண்மையான, ஆச்சரியம் - அதிசயத்தை, எய்தி-அடைந்து, நின்றனர் - (தன்னை மறந்து) நின்றுவிட்டனர், நிமலர் - மலரஹிதராகிய சிவபெருமானது, மார்பின் - திருமார்பினிடத்தில், கொச்சை மான் - ஏழை யன்பருடைய, சிகழி - சிகையானது, தோன்றும் - காணப்படுகின்ற, குறியினால் - அடையாளத்தினால், குவலயத்தோர் - உலகத்தார், நச்சி-விரும்பி, கொப்பு இலிங்கம்-கொப்பிலிங்கேஸ்வரர், என்ன - என்று, இன்றும் - இப்போதும், நவிலா நிற்பர் - சொல்வார்கள், எ-று.

(பொ-ரை.) சிவதேவசரணர் இந்த மஹத்வமாகிய செய்தியைப் பார்த்துப் பயந்து, உருகுகின்ற மனத்துடன் உண்மையான வதிசயத்தையடைந்துத் தன்னை மறந்து நின்று விட்டனர், மலரஹிதராகிய சிவபெருமானது திருமார்பினிடத்தில் ஏழை யன்பருடைய சிகையானது காணப்படுகின்ற வடையாளத்தினால் உலகத்தார் விரும்பிக் கொப்பிலிங்கேஸ்வரரென்று இப்போதும் சொல்வார்கள். (உ௪)

கோட்கூச்சவ்வை புராணம் முற்றிற்று.



ஆக திருவிருத்தம் - ௫௭அ.

—()—

சிவமயம்.

# அம்மவை யென்னும்
# பெச்சமாதேவியார் புராணம்.

கோச்சகக்கலிப்பா.

அண்ணலிடஞ் சேர்கோட்கூச் சவ்வையா ரன்றிமற்று
மெண்ணிலிவ ரொருமடவா ரேழையன்பி னின்மிக்கார்
கண்ணுதலே யிட்டலிங்கக் காதலினு லருச்சிக்கும்
பெண்ணினல்லா ரிவர்திருப்பேர் பெச்சமகா தேவியார்.

(ப - ரை.) அண்ணல் இடம் - பெருமையிற் சிறந்தோனாகிய சிவபெருமானிடத்தில், சேர் - ஐக்யமான, கோட் கூச்சவ்வையார் - கோட் கூச்சவ்வையாரே, அன்றி - அல்லாமல், மற்றும் - இன்னமும். எண்ணில் - யோசிக்குமிடத்து, இவர் - இவரும், ஒரு - ஒரு, மடவார் - மடந்தையர், ஏழையன்பினில் - மூடபக்தியில், மிக்கார் - சிறந்தவர், கண்ணுதலே - நெற்றிக்கண்ணையுடையவனாகிய, இஷ்டலிங்கம் - இஷ்டலிங்கமூர்த்தியை, காதலினால் - அன்புடன், அருச்சிக்கும் - பூஜைசெய்கின்ற, பெண்ணில் - மடந்தையர்களில், நல்லார் - உத்தமர், இவர்-இவருடைய, திருப்பேர் - திருநாமம், பெச்சமாதேவியார் - பெச்ச மஹாதேவியாரென்பது, எ - று.

(போ - ரை.) பெருமையிற் சிறந்தோனாகிய சிவபெருமானிடத்தில் ஐக்யமான கோட் கூச்சவ்வையாரே யல்லாமல் இன்னமும் யோசிக்குமிடத்து, இவர் ஒரு மடந்தையர், மூடபக்தியிற் சிறந்தவர், நெற்றிக்கண்ணை யுடையவனாகிய இஷ்டலிங்க மூர்த்தியை யன்புடன் பூஜைசெய்கின்ற மடந்தையர்களில் உத்தமர், இவருடைய திருநாமம் பெச்ச மஹாதேவியாரென்பது.

(வி - ரை.) லிங்கதாரணம் அந்தர்லிங்கதாரணமென்றும், பஹிர்லிங்கதாரண மென்றும் இருவகைப்படும். சச்சிதாநந்தமாயும் சிரேஷ்டமாயும் சிவசம்பந்தமாயும் எல்லாவற்றிற்கும் மூலகாரணமாயும் எந்த லிங்கமிருப்பதோ அந்த லிங்கத்தைச் சித்தத்தில் த்யானரூபத்துடன் தாரணஞ்செய்வது அந்தர்லிங்கதாரணமாம். அந்தர் லிங்கத்தில் மஹாலிங்கத்தைத் தாரணஞ் செய்வதில் சமர்த்தனாயினும் அசமர்த்த னாயினும் அந்த மஹாலிங்கமே இதுவென்ற தெளிந்த புத்தியினால் பஹிரங்கத்தில் லிங்கத்தைக் குருமுகமாக வடைந்து தாரணஞ்செய்வது பஹிர்லிங்கதாரணமாம். இம் மஹாலிங்கமே பாவலிங்கமென்றும், பிராணலிங்கமென்றும், ஸ்தூலலிங்க மென்றும் மூவகைத்தாம். அவற்றுள் பாவலிங்கம் நிஷ்களமாயும், பரத்திற்குப் பரமாயும், ஸத்பாவத்தினு லறியக்கூடிய நிலைமையுடையது. பிராணலிங்கம் சகள நிஷ்களமாய் மனத்தினு லறியக்கூடிய நிலைமையுடையது. இஷ்டலிங்கம் சகளமாய்க் கட்புலனு லறியக்கூடிய நிலைமையுடையது. மேலும் பாவலிங்கம் ஸத்ரூபமென்றும், பிராணலிங்கம் சித்ரூபமென்றும், இஷ்டலிங்கம் ஆநந்தரூபமென்றும் சொல்லப்படும், தத்வமசி என்னும் மஹாவாக்கியத்திலுள்ள தத்பதம் இஷ்டலிங்கமென்றும், த்வம் பதம் பிராணலிங்கமென்றும், அசிபதம் பாவலிங்கமென்றும் பொருட்படும். பாவ

லிங்கம் காரணமென்றும், பிராணலிங்கம் ஸூக்ஷ்மமென்றும், இஷ்டலிங்கம் ஸ்தூலமென்றும் கொள்ளப்படும். வீரசைவரென்னும் ஆண் பெண்பாலாரனைவரும் இடைவிடாமல் உடலில் இஷ்டலிங்கத்தைத் தாரணஞ் செய்தல் வேண்டுமென்பது வேதாகமத் துணிபு. எந்த லிங்கமானது தன்னைப் பூஜிக்கின்ற பக்தர்களுக்கு இஷ்டார்த்தத்தை யநுக்ரஹஞ்செய்ய வல்லதோ அவ் விலிங்கம் இஷ்டலிங்கமாம். இதன் விரிவைச் சித்தாந்த சிகாமணிமுதலிய வீரசைவநூல்களிற் பார்க்கக்காணலாம்.

ஏழைமையாற் றம்பிராற் கெழின்மனையார் மக்கண்மற்றுந்
தாழடிமைத் திறம்படைத்துந் தாயிலாத் தன்மையனென்
றூழுமனத் துயரினு லாரிருந்தென் னன்னையின்றி
வாழுமக்கள் சுகமென்ன வெனநினைந்து மயங்குவார்.

(ப - ரை.) ஏழைமையால் - வறுமையினுல், தம்பிராற்கு - சிவபெருமானுக்கு, எழில் - அழகுள்ள, மனையார் - மனைவியாரும், மக்கள் - பிள்ளைகளும், மற்றும் - மேலும், தாழ் - வணக்கத்துடன் பணிவிடைசெய்கின்ற, அடிமை - தொண்டர்களுமாகிய, திறம் - செல்வத்தை, படைத்தும் - பெற்றிருந்தும், தாய் இல்லாத் தன்மையன் - தாயில்லாதவன், என்று-என்று, ஊழும்-துன்புறுதற்குரிய, மனத்துயரினுல் - மனவருத்தத்துடன், ஆர் - யார், இருந்து - இருந்தும், என் - யாது பயன், அன்னை - தாய், இன்றி - இல்லாமல், வாழும் - வாழ்கின்ற, மக்கள் - பிள்ளைகளின், சுகம் - சௌக்யத்தினு லுண்டாகின்ற பிரயோஜனம், என்ன - யாது, என்ன - என்று, நினைந்து - எண்ணி, மயங்குவார் - திகைப்பாராயினர், எ - று.

(பொ - ரை.) வறுமையினுல் சிவபெருமானுக்கு அழகுள்ள மனைவியாரும் பிள்ளைகளும் மேலும் வணக்கத்துடன் பணிவிடைசெய்கின்ற தொண்டர்களுமாகிய செல்வத்தைப் பெற்றிருந்தும் தாயில்லாதவனென்று துன்புறுதற்குரிய மனவருத்தத்துடன் யார் இருந்தும் யாது பயன்? தாயில்லாமல் வாழ்கின்ற பிள்ளைகளின் சௌக்யத்தினு லுண்டாகின்ற பிரயோஜனம் யாது? என்றெண்ணித் திகைப்பாராயினர். (௨)

பெண்டகையாம் பேதைசேர் பெச்சமா தேவியர்க்கு
மண்டருநற் சிவநேச மனத்தகத்து வளர்தலா
லண்டர்பிரான் றிருவருளா லாருயிர்க்கா ரியமாகக்
கொண்டகொண்ட திருக்கோலங் குறித்திரங்கிக் கூறுவார்.

(ப - ரை.) பெண்தகையாம் - பெண்ணுனவரும், பேதைசேர் - பேதையருமாகிய, பெச்சமாதேவியார்க்கு - பெச்ச மஹாதேவியார்க்கு, மண்தரும் - மேன்மைபொருந்திய, நல் - சிறந்த, சிவநேசம் - சிவபக்தி, மனத்து அகத்து - மனத்தில், வளர்தலால் - அதிகரித்தலால், அண்டர்பிரான் - தேவர்களுக்குத் தலைவனுகிய சிவபெருமான், திருவருளால் - திருவருளினுல், ஆர் - நிறைந்துள்ள, உயிர் - ஜீவாத்மாக்களின், காரியமாக - கடமையாக, கொண்ட கொண்ட-பலகாலும்பூண்டருளின, திருக்கோலம் - திருமேனியை, குறித்து - நினைத்து, இரங்கி - அழுது, கூறுவார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ-று.

(பொ - ரை.) பெண்ணுனவரும் பேதையருமாகிய பெச்ச மஹாதேவியார்க்கு மேன்மைபொருந்திய சிறந்த சிவபக்தி மனத்தில் அதிகரித்தலால் தேவர்களுக்குத் தலைவனுகிய சிவபெருமான் திருவருளினுல் நிறைந்துள்ள ஜீவாத்மாக்களின் கடமையாகப்பலகாலும் பூண்டருளின திருமேனியை நினைத்து அழுதுச் சொல்வாராயினர், எவ்வாறெனின். (௩)

அன்னையின்றி வளர்ந்ததெவ்வா றையநீ பிறந்ததற்பி
னன்னையுன்னை யிளங்குழவி யாகவைத்து மரித்தாளோ
வன்னையிருந் தாற்பொல்லா வதளுடுக்கு மாடலெவ
னன்னையிருந் தாலெலும்பா பரணனெனு மவத்தொனியேன்.

(ப - ரை.) ஐயா-ஐயனே, நீ-நீ, அன்னை-தாய், இன்றி - இல்லாமல், வளர்ந்தது - வளர்ந்தசெய்தி, எவ்வாறு - எப்படி, பிறந்து - பிறந்து, அதன்பின் - அதன்பிறகு, அன்னை - தாய், உன்னை - உன்னை, இளம் குழவியாக-சிறு குழந்தையாக, வைத்து - இருத்திவிட்டு, மரித்தாளோ-இறந்தாளோ, அன்னை-தாய், இருந்தால் - இருப்பாளாயின், பொல்லா - தீமையான, அதள் - தோலாடையை, உடுக்கும் - தரித்திருக்கின்ற, ஆடல் - ஆடம்பரத்திற்குக் காரணம், எவன் - யாது, அன்னை - தாய், இருந்தால் - இருப்பாளாயின், எலும்பு - என்பு, ஆபரணன் - மாலையையுடையவன், என்னும் - என்கின்ற, அவத்தொனி - அவசத்தம் பிறத்தற்குக் காரணம், ஏன் - யாது, எ-று.

(பொ - ரை.) ஐயனே! நீ தாயில்லாமல் வளர்ந்த செய்தி யெப்படி? பிறந்த பிறகு தாய் உன்னைச் சிறு குழந்தையாக விருத்திவிட்டு இறந்தாளோ? தாயிருப்பாளாயின் தீமையான தோலாடையைத் தரித்திருக்கின்ற வாடம்பரத்திற்குக்காரணம் யாது? தாயிருப்பாளாயின் என்பு மாலையையுடையவனென்கின்ற அவசத்தம் பிறத்தற்குக் காரணம் யாது?

(வி - ரை.) அவத்தொனி - அமங்கலமான வோசை (பயனற்றசொல்). (௪)

அன்னையிருந் தாற்பாம்புன் னாகமுறப் பொருந்தாளே
யன்னையிருந் தாற்சுடுகாட் டாடிவரப் பாராளே
யன்னையிருந் தாற்பேய்க்கூட் டத்திலுற விசையாளே
யன்னையிருந் தாலால மருந்தாம லகற்றுவளே.

(ப - ரை.) அன்னை - தாய், இருந்தால் - இருப்பாளாயின், உன்-உனது, ஆகம் - உடம்பில், பாம்புஉற-பாம்புகள் சூழ்ந்திருக்க, பொருந்தாளே-சம்மதிக்கமாட்டாளே, அன்னை - தாய், இருந்தால் - இருப்பாளாயின், சுடுகாடு - சுடலையில், ஆடிவர - விளையாட, பாராளே-பார்க்கமாட்டாளே, அன்னை-தாய், இருந்தால்-இருப்பாளாயின், பேய்-பிசாசு, கூட்டத்தில்-கும்பலில், உற-சேர, இசையாளே-சம்மதிக்கமாட்டாளே, அன்னை - தாய், இருந்தால் - இருப்பாளாயின், ஆலம் - விஷத்தை, அருந்தாமல் - உண்ணாமல், அகற்றுவளே - விலக்கிவிடுவாளே, எ-று.

(பொ - ரை.) தாயிருப்பாளாயின் உனது உடம்பில் பாம்புகள் சூழ்ந்திருக்கச் சம்மதிக்கமாட்டாளே! தாயிருப்பாளாயின் சுடலையில் விளையாடப் பார்க்கமாட்டாளே! தாயிருப்பாளாயின் பிசாசுக் கும்பலிற் சேரச் சம்மதிக்கமாட்டாளே! தாயிருப்பாளாயின் விஷத்தையுண்ணாமல் விலக்கிவிடுவாளே! (௫)

தாயிருந்தாற் றாயிலியென் சத்தநான் கேளேனே
தாயிருந்தாற் சடைகட்டித் தவம்புகுதப் பொருந்தாளே
தாயிருந்தாற் பிச்சையன்னந் தனையருந்த வொட்டாளே
தாயிருந்தால் வேடனெச்சிற் றசையுணுங்காற் றடுப்பாளே.

(ப - ரை.) தாய் - தாய், இருந்தால் - இருப்பாளாயின், தாய் இலி-தாயில்லாதவன், என் - என்கின்ற, சத்தம் - சொல்லை, நான் - நான், கேளேனே - கேட்கமாட்டேனே, தாய்-தாய், இருந்தால்-இருப்பாளாயின், சடைகட்டி-ஜடைமுடித்து,

தவம்புகுத - தவஞ்செய்ய, பொருந்தாளோ - சம்மதிக்கமாட்டாளோ, தாய் - தாய், இருந்தால்-இருப்பாளாயின், பிச்சை-பிச்சையெடுத்த, அன்னம் தன்னை-சோற்றை, அருந்த - உண்ண, ஒட்டாளோ - விடமாட்டாளோ, தாய் - தாய், இருந்தால்-இருப்பாளாயின், வேடன் - வேடன், எச்சில் - எச்சில்செய்த, தசை - மாமிசத்தை, உண்ணுங்கால் - உண்கின்றகாலத்தில், தடுப்பாளோ - மறுத்துவிடுவாளோ, எ - று.

(பொ - ரை.) தாயிருப்பாளாயின் தாயில்லாதவ னென்கின்ற சொல்லை நான் கேட்கமாட்டேனே! தாயிருப்பாளாயின் ஜடைமுடித்துத் தவஞ்செய்யச் சம்மதிக்க மாட்டாளே! தாயிருப்பாளாயின் பிச்சையெடுத்தசோற்றை யுண்ணவிடமாட்டாளே! தாயிருப்பாளாயின் வேடன் எச்சில்செய்த மாமிசத்தை யுண்கின்றகாலத்தில் மறுத்து விடுவாளே! (௬)

**தா**யுளதே லுடம்பெல்லாஞ் சாம்பரே னிறைந்திருக்குந்
தாய்முலைப்பால் வெண்ணெயெண்ணெய் தனையருத்திக் குளிப்பாட்டித்
தாய்வளவா திவ்வாறு தான்வளர்ந்த திருமேனி
தாயுளதே லெவ்வாறு தருக்கிவளர்ந் தோங்குமோ.

(ப-ரை.) தாய் - தாய், உளதேல் - இருப்பாளாயின், உடம்பு எல்லாம்-உடல் முழுதும், சாம்பர் - சாம்பல், நிறைந்திருக்கும் - நிரம்பியிருத்தற்குக் காரணம், என்-யாது, தாய் - தாயின், முலைப்பால் - முலைப்பாலையும், வெண்ணெய் - வெண்ணெயையும், எண்ணெய்தன்னை - எண்ணெயையும், அருத்தி - ஊட்டி, குளிப்பாட்டி - நீராட்டி, தாய் - தாய், வளவாது - போஷிக்காமலே, இவ்வாறு - இப்படி, தான் - தானாகவே, வளர்ந்த - வளர்ந்த, திரு-அழகிய, மேனி-உடம்பு, தாய்-தாயொருத்தி, உளதேல் - இருப்பாளாயின், எவ்வாறு - எவ்வளவு (அழகாக), தருக்கி - செழுத்து, வளர்ந்து - வளர்ந்து, ஓங்குமோ - பொலிவடையுமோ, எ - று.

(பொ - ரை.) தாயிருப்பாளாயின் உடல்முழுதும் சாம்பல் நிரம்பியிருத்தற்குக் காரணம் யாது? தாயின் முலைப்பாலையும் வெண்ணெயையும் எண்ணெயையு மூட்டி நீராட்டித் தாய் போஷிக்காமலே யிப்படித் தானாகவே வளர்ந்த வழகிய உடம்பு தாயொருத்தி யிருப்பாளாயின் எவ்வளவழகாகச் செழுத்து வளர்ந்து பொலிவடையுமோ? (எ)

**வ**துவையுட னோன்புநன்னாள் வந்தக்கா னீராட்டிப்
புதியமஞ்சட் காப்பணிந்து புத்தாடை புனைந்துடுத்தி
விதமுறுநன் பணிபூட்டி விழியார மிகப்பார்த்திங்
கிதமுறுநல் லமுதூட்டி யெடுத்தணைப்பா ரில்லையே.

(ப - ரை.) வதுவையுடன் - கல்யாணமும், நோன்பும் - வ்ருதமும், நல்நாள் - சுபதினமும், வந்தக்கால் - வருங்காலத்தில், நீராட்டி - குளிப்பாட்டி, புதிய - புதிதாகிய, மஞ்சள்காப்பு - மஞ்சட்காப்பு, அணிந்து - சாத்தி, புது - புதிய, ஆடை - வஸ்த்ரத்தை, புனைந்து - அலங்காரமாக, உடுத்தி - தரித்து, விதம் உறும் - அழகு பொருந்திய, நல் - நல்ல, பணி - ஆபரணங்களை, பூட்டி - தரித்து, விழியார - கண்ணிறைய, மிக - உற்று, பார்த்து - நோக்கி, இங்கு - இவ்விடத்தில், இதம்உறும் - விரும்புதற்குரிய, நல் - நல்ல, அமுது - சோற்றை, ஊட்டி - உண்பித்து, எடுத்து - ஏந்தி, அணைப்பார் - கட்டியணைத்துக்கொள்பவர், இல்லையே - இல்லாமற்போயிற்றே, எ - று.

(போ - ரை.) கல்யாணமும், சோமனும், விரதமும், சுபதினமும் வருங்காலத்தில், குளிப்பாட்டிப் புதிதாகிய மஞ்சட்காப்புசாத்திப் புதிய வஸ்த்ரத்தை யலங்காரமாகத் தரித்து அழகு பொருந்திய நல்ல ஆபரணங்களைத் தரித்துக் கண்ணிறைய வுற்று நோக்கி, இவ்விடத்தில் விரும்புதற்குரிய நல்ல சோற்றை யுண்பித்து, எடுத்தேந்திக் கட்டி யணைத்துக்கொள்வாரில்லையே! (அ)

என்செய்கோ நாமெனு மினித்தாயா யிருப்பமென
மின்செப்பு நுண்ணிடையார் மிகவிரும்பி நினைத்தளவின்
முன்செய்ய வடிவொழிந்து மோகமக வுருவானான்
றன்செய்ய நேயர்மனந் தனக்கிசைந்த தம்பிரான்.

(ப - ரை.) என்செய்கோ - யாதுசெய்வோம், நாமெனும் - நாமாயினும், இனி - இப்போது, தாயாய் - தாயாகி, இருப்பம்-இருந்துவளர்ப்போம், என்ன - என்று, மின் செப்பும்-மின்னலைப்போன்ற, நுண் - நுட்பமாகிய, இடையார் - இடையையுடையவராகிய பெச்சமஹாதேவியார், மிக - மிகவும், விரும்பி - அன்புடன், நினைத்த அளவில் - எண்ணினமாத்திரத்தில், தன் - தனது, செய்ய - மேன்மைபொருந்திய, நேயர்-பக்தர்கள், மனந்தனக்கு - மனத்தில் (நினைத்தது நினைத்தபடியே யநுக்ரஹஞ் செய்தற்கு), இசைந்த - திருவுளங்கொண்ட, தம்பிரான் - சிவபெருமான், முன் - பழமையாயுள்ள, செய்ய - அழகிய, வடிவு - திருமேனி, ஒழிந்து - நீங்கி, மோகம் - விரும்புதற்குரிய, மகவுரு - குழந்தைத்திருமேனி, ஆனான் - ஆயினான். எ - று.

(போ - ரை.) யாதுசெய்வோம்? நாமாயினும் இப்போது தாயாயிருந்து வளர்ப்போமென்று மின்னலைப்போன்ற நுட்பமாகிய இடையையுடையவராகிய பெச்சமஹாதேவியார் மிகவும் அன்புடன் எண்ணின மாத்திரத்தில் தனது மேன்மை பொருந்திய பக்தர்கள்மனத்தில் நினைத்தது நினைத்தபடியேயநுக்ரஹஞ்செய்தற்குத் திருவுளங்கொண்ட சிவபெருமான் பழமையாயுள்ள அழகிய திருமேனி நீங்கி விரும்புதற்குரிய குழந்தைத் திருமேனி யாயினான். (க)

ஆதலினாற் பெச்சமா தேவியா ரம்மனையாய்
மாதனங்கள் மிகச்சுரந்து மனமகிழ்ந்தே யமுதூட்டிப்
பேதமறத் தவம்பண்ணிப் பெற்றபிள்ளை யெனவுவந்து
காதலினாற் காணாக்கண் கண்டார்போற் களிகூர்ந்து.

(ப - ரை.) ஆதலினால்-ஆகையால், பெச்சமாதேவியார் - பெச்சமஹாதேவியார், அம்மனையாய் - தாயாய், மா - மேன்மைபொருந்திய, தனங்கள் - திருத்தனங்கள், மிக - மிகவும், சுரந்து - ஊறி, மனமகிழ்ந்து - சந்தோஷத்துடன், அமுது - பாலை, ஊட்டி - உண்பித்து, பேதம் அற - அபேதமாய், தவம் பண்ணி - தவஞ்செய்து, பெற்ற-ஈன்ற, பிள்ளையென்ன-குழந்தைபோல, உவந்து-சந்தோஷித்து, காதலினால் - அன்புடன், காணா - (பிறவிக்குருடாயிருந்து) பார்க்கமுடியாத, கண் - கண்ணை, கண்டார்போல் - பெற்றவர்போல, களிகூர்ந்து - மகிழ்ச்சியடைந்து. எ-று.

(போ - ரை.) ஆகையால் பெச்சமஹாதேவியார் தாயாய் மேன்மைபொருந்திய திருத்தனங்கள் மிகவும் ஊறிச் சந்தோஷத்துடன் பாலை யுண்பித்து, அபேதமாய்த் தவஞ்செய்து ஈன்ற குழந்தைபோலச் சந்தோஷித்து அன்புடன் பிறவிக்குருடாயிருந்து பார்க்கமுடியாத கண்ணைப்பெற்றவர்போல மகிழ்ச்சியடைந்து. (௧0)

இரண்டுருவி னும்பரனை யிருத்தியய னறியாத
சிரந்தனிலெண் ணெயைத்தேய்த்துச் செய்யமூக் கினைநீவிப்
பரந்தகண்ணி லெண்ணெய் சற்றும் படாதவகை பார்த்தன்பாற்
சுரந்தமுலை மேலொழுகத் தூயசெவித் துணையுருவி.

(ப-ரை.) இரண்டு - இரண்டு, உருவினும் - துடைமீதிலும், பரனை - சிவபெருமானை, இருத்தி - எழுந்தருளப்பண்ணி, அயன் - ப்ரஹ்மதேவன், அறியாத - தேடியுங் காணமுடியாத, சிரந்தனில் - திருமுடியில், எண்ணெயைத்தேய்த்து - எண்ணெய்க் காப்பிட்டு, செய்ய - அழகிய, மூக்கினை - திருநாசியை, நீவி - உருவி, பரந்த - விசாலமான, கண்ணில் - திருக்கண்களில், எண்ணெய் - எண்ணெய், சற்றும் - சிறிதும், படாதவகை - விழாதபடி, பார்த்து - கவனித்து, அன்பால் - அன்புடன், சுரந்த - ஊறின, முலை - முலைப்பால், மேல் - மீது, ஒழுக - சிந்த, தூய - பரிசுத்தமான, செவித்துணை - இரண்டு திருச்செவிகளையும், உருவி - நீவி, எ-று.

(போ-ரை.) இரண்டு துடைமீதிலும் சிவபெருமானை யெழுந்தருளப்பண்ணி, ப்ரஹ்மதேவன் தேடியுங்காணமுடியாத திருமுடியில் எண்ணெய்க்காப்பிட்டு, திருநாசியை யுருவி, விசாலமான திருக்கண்களில் எண்ணெய் சிறிதும் விழாதபடிக் கவனித்து, அன்புடன் ஊறின முலைப்பால் மீது சிந்த, பரிசுத்தமான இரண்டு திருச்செவிகளையும் நீவி. (கக)

உரமுதரங் களிற்றேய்த்தே யொண்சிரமெல் லெனவொத்திக்
கரமொடுமா லறியாத காலிரண்டுங் கரத்துருவி
யரவணிநீங் கியவுடல மானதெலாந் தைவந்து
பொருநமனை யுதைத்தவுள்ளம் புயப்பதமெல் லெனவருடி.

(ப-ரை.) உரம் - திருமார்பிலும், உதரங்களில் - திருவயிற்றிலும், தேய்த்து - (எண்ணெயை) இட்டு, ஒள் - அழகுபொருந்திய, சிரம் - திருமுடியில், மெல் என்ன - மெதுவாக, ஒத்தி - தேய்த்து, கரம் ஒடு - திருக்கரங்களையும், மால் - விஷ்ணுமூர்த்தி, அறியாத - தேடியுங் காணமுடியாத, கால் இரண்டும் - இரண்டு திருவடிகளையும், கரத்து - கைகளால், உருவி - நீவி, அரவு அணி - சர்ப்பாபரணம், நீங்கிய - ஒழிந்த, உடலமானது - திருமேனி, எல்லாம் - முழுதும், தைவந்து - தடவி, பொரு - போர்த்தொழிலையுடைய, நமனை - யமனை, உதைத்த - உதைத்தருளிய, அம்புயம் - தாமரைமலர்போன்ற, உள்பதம் - உள்ளங்கால்களை, மெல் என்ன - மெதுவாக, வருடி - தடவி, எ-று.

(போ-ரை.) திருமார்பிலும் திருவயிற்றிலும் எண்ணெயையிட்டு, அழகு பொருந்திய திருமுடியில் மெதுவாகத் தேய்த்து, திருக்கரங்களையும் விஷ்ணு மூர்த்தி தேடியுங் காணமுடியாத இரண்டு திருவடிகளையும் கைகளால் நீவி, சர்ப்பாபரண மொழிந்த திருமேனி முழுதும் தடவி, போர்த்தொழிலையுடைய யமனை யுதைத் தருளிய தாமரைமலர் போன்ற உள்ளங் கால்களை மெதுவாகத் தடவி. (கஉ)

எண்ணெய்விடுந் திரவியங்க ளிட்டிதத்திற் றேய்த்துவெந்நீர்
தண்ணெனுநீர்க் கலந்துகரந் தான்பொறுக்கத் தொட்டுப்பார்த்
தண்ணறிரு முடிமிசையி னள்ளியள்ளித் தப்பியபி
னுண்ணெகிழன் பினினீர்வாய் மூக்குறு துகந்தாட்டி.

(ப - ரை) எண்ணெய் - எண்ணெய், விடும் - போதற்குரிய, திரவியங்கள் - வஸ்துக்களை, இட்டு - பெய்து, இதத்தில் - சுகமாக, தேய்த்து - தேய்த்து, வெம் நீர் - சுடுநீரில், தண் என்னும் நீர் - தண்ணீரை, கலந்து - விளாவி, கரம் - கை, பொறுக்க - பொறுக்கும்படி, தொட்டுப்பார்த்து - தீண்டிப்பார்த்து, அண்ணல் - சிவபெருமானுடைய, திருமுடி மிசையின் - திருமுடியின்மேல், அள்ளி யள்ளி - மொண்டு மொண்டு, தப்பியபின் - குளிப்பாட்டிய பிறகு, உள் - மனம், நெகிழ் - உருகத்தக்க, அன்பினில் - அன்புடன், நீர் - நீரானது, வாய்-திருவாயிலும், மூக்கு - திருநாசியிலும், உறுது - போகவொட்டாமல், உகந்து-சந்தோஷத்துடன், ஆட்டி - குளிப்பாட்டி, எ - று.

(போ - ரை.) எண்ணெய் போதற்குரிய வஸ்துக்களைப் பெய்து, சுகமாகத் தேய்த்து, சுடுநீரில் தண்ணீரை விளாவிக் கைபொறுக்கும்படித் தீண்டிப்பார்த்து, சிவபெருமானுடைய திருமுடியின்மேல் மொண்டு மொண்டுக் குளிப்பாட்டினபிறகு, மனமுருகத்தக்க வன்புடன் நீரானது திருவாயிலும் திருநாசியிலும் போகவொட்டாமல் சந்தோஷத்துடன் குளிப்பாட்டி. (கசு)

அரிசனந்தந் துரைத்தெழிலா ராகமெலாந் தரித்துநீர்
பெரியநன்பா லாட்டியபின் பெருவிழிகண் மூக்குந்தி
யுரிமையினூ னூதியுகி ருறுமழுக்கு மேல்வாங்கி
யரியகண்ணே றணையாம லந்நீர்சூழ் வரவிறைத்தே.

(ப - ரை.) அரிசனம் - நலங்குபொடியினை, தந்து - தருவித்து, உரைத்து - தேய்த்து, எழில்ஆர் - அழகுபொருந்திய, ஆகம் எல்லாம் - திருமேனி முழுதும், தரித்து - அலங்கரித்து, பெரிய - மிகுந்த, நண்பால் - அன்புடன், நீர் ஆட்டிய - குளிப்பாட்டிய, பின் - பிறகு, பெரு - விசாலமான, விழிகள் - திருக்கண்களையும், மூக்கு - திருநாசியையும், உந்தி - திருவுந்தியையும், உரிமையினால் - செம்மையாக, ஊதி - (நீரற) ஊதி, உகிர் - நகங்களில், உறும் - படிந்திருக்கின்ற, அழுக்கு - அழுக்கை, மேல் - மேலாக, வாங்கி - எடுத்து, அரிய - அருமையாகிய, கண்ணேறு - த்ருஷ்டிதோஷம், அணையாமல் - படாமல், அ - அந்த, நீர் - மஞ்சனநீரை, சூழ்வர - (வலமாக) சூழவர, இறைத்து - தெளித்து, எ - று.

(போ - ரை.) நலங்குபொடியினைத் தருவித்துத் தேய்த்து, அழகு பொருந்திய திருமேனிமுழுதும் அலங்கரித்து, மிகுந்தவன்புடன் குளிப்பாட்டின பிறகு, விசாலமான திருக்கண்களையும் திருநாசியையும் திருவுந்தியையும் செம்மையாக நீரற ஊதி, நகங்களிற்படிந்திருக்கின்ற வழுக்கை மேலாக வெடுத்து, அருமையாகிய த்ருஷ்டி தோஷம் படாமல் அந்த மஞ்சனநீரை வலமாகச் சூழத் தெளித்து. (கஎ)

நிலத்துமிழ்ந்து விரற்றேய்த்து நெற்றியிலொண் டிலகமிட்டு
நலத்தவுலைத் தலத்துவெந்த நன்னீறு நுதற்சாத்தி
வலக்கைகொடு சிரங்கழுத்து வளையாமல் வயிறொடுரத்
தலத்திலிணைத் திருசுடராந் தன்விழிக்கஞ் சனமெழுதி.

(ப - ரை.) நிலத்து - பூமியில், உமிழ்ந்து - துப்பி, விரல் - சுட்டுவிரலால், தேய்த்து - இழைத்து, நெற்றியில் - திருநுதலில், ஒள் - அழகிய, திலகம் - (மண்) பொட்டு, இட்டு - வைத்து, நலத்த - அழகிய, உலைத் தலத்து - அடுப்பிலிருக்கின்ற, வெந்த - சுட்ட, நல் - நல்ல, நீறு - பூதியை, நுதல் - திருநுதலில், சாத்தி - தரித்து,

வலக்கைகொடு - வலக்கையினால், சிரம் - திருமுடியும், கழுத்து - ஸ்ரீகண்டமும் வளையாமல் - சாயாதபடி, வயிறொடு - வயிற்றினிடத்திலும், உரத்தலத்தில் - மார்பினிடத்திலும், அணைத்து - தழுவிக்கொண்டு, சுடர்ஆம் - சூரியசந்திரர்களாகிய, தண்-குளிர்ச்சிபொருந்திய, இரு - இரண்டு, விழிக்கு - திருக்கண்களுக்கு, அஞ்சனம்-மை, எழுதி - தீட்டி, எ - று.

(போ - ரை.) பூமியிற் றுப்பிச் சுட்டு விரலாலிழைத்துத் திருநுதலில் அழகிய மண்பொட்டு வைத்து, அழகிய வடுப்பிலிருக்கின்ற சுட்ட நல்ல பூதியைத் தரித்து, வலக்கையினால் திருமுடியும் ஸ்ரீகண்டமும் சாயாதபடி வயிற்றினிடத்திலும் மார்பினிடத்திலும் தழுவிக்கொண்டு, சூரியசந்திரர்களாகிய குளிர்ச்சிபொருந்திய விரண்டு திருக்கண்களுக்கு மைதீட்டி. (கடு)

திருநுதன்மேல் விழியதெனச் செய்யசுட்டி சேர்த்தார்த்து
விரலினிது மோதிரங்கள் மிகச்சாத்தி விருப்பினு
லரைவடங்காப் பணிந்துபல கறைவீக்கி யாராரென்
றிருமறைகேட் பார்செவிக ளின்பமுறத் தாலாட்டி.

(ப-ரை.) திரு - அழகிய, நுதல் மேல்விழி - நெற்றிக்கண்ணை, அன்ன - போல, செய்ய-அழகிய, சுட்டி - சுட்டிமணியை, சேர்த்து ஆர்த்து - சேரக்கட்டித் தொங்கவிட்டு, விரல் - திருவிரல்களில், மோதிரங்கள் - மோதிரங்களை, இனிது - சந்தோஷமாகவும், மிக - மிகுதியாகவும், சாத்தி - இட்டு, விருப்பினால் - அன்புடன், அரைவடம் - அரைஞாணையும், காப்பு - ரக்ஷாபந்தனத்தையும், அணிந்து-கட்டி, பலகறை-கவடிகளையும், வீக்கி - கட்டி, ஆர்ஆர் - ஆராரோ, என்று - என்று, இரு - மேன்மை பொருந்திய, மறை - சதுர்வேதங்களை, கேட்பார் - கேட்பவராகிய சிவபெருமானது, செவிகள் - திருச்செவிகள், இன்பம் உற - சந்தோஷிக்கும்படி, தாலாட்டி - (தொட்டிலிலிட்டு) தாலாட்டி, எ-று.

(போ - ரை.) அழகிய நெற்றிக்கண்ணைப்போல வழகிய சுட்டிமணியைச் சேரக்கட்டித் தொங்கவிட்டு, திரு விரல்களில் மோதிரங்களைச் சந்தோஷமாகவும் மிகுதியாகவுமிட்டு, அன்புடன் அரைஞாணையும் ரக்ஷாபந்தனத்தையும் கட்டி, கவடிகளையுங்கட்டி, ஆராரோவென்று மேன்மைபொருந்திய சதுர்வேதங்களைக்கேட்பவராகிய சிவபெருமானது திருச்செவிகள் சந்தோஷிக்கும்படித் தொட்டிலி லிட்டுத் தாலாட்டி. (கசு)

அருத்திமுலை யெண்ணெயழுக் கறக்கழுவி விழுங்கவிட்டுச்
சிரித்தருள முகமசைத்துச் சிரிப்பெழுப்பி நகைத்ததற்பின்
றரிப்பருமன் பினின்மகிழ்ந்து தாருமுத்த மெனக்கேட்டங்
கிருக்கொடுநான் மறையிருக்கு மெழிற்றிருவாய் முத்தமிட்டே.

(ப-ரை.) முலை-முலைப்பாலையும், எண்ணெய்-எண்ணெயையும் (கலந்து), அருத்தி-ஊட்டி, அழுக்கு அற - (எண்ணெய்) அழுக்குபோகும்படி, கழுவி - சுத்தம்பண்ணி, விழுங்கவிட்டு - விழுங்கும்படிச்செய்து, சிரித்து அருள - திருமுறுவல்செய்தருளும்படி, முகம் - திருமுகத்தை, அசைத்து - அசைத்து, சிரிப்பு - சிரிப்பு, எழுப்பி-உண்டாக்கி, நகைத்து-(தானும்) சிரித்து, அதன்பின்-அதன்பிறகு, தரிப்பு அரு - தாங்கமுடியாத, அன்பினில் - காதலால், மகிழ்ந்து - சந்தோஷித்து, முத்தம் - முத்தம், தாரும்-கொடும், என்ன-என்று, கேட்டு-கேட்டு, அங்கு-அவ்விடத்தில், இருக்கொடு - ருக்வேதத்தோடு, நால் மறை-சதுர்வேதங்களும், இருக்கும்-நித்யவாசஞ்செய்கின்ற, எழில் - அழகிய, திருவாய் - திருவாயினை, முத்தம் இட்டு - முத்தம் வைத்து, எ-று.

(போ-ரை.) முலைப்பாலையும் எண்ணெயையும் கலந்தூட்டி, எண்ணெயமுக்கு போகும்படிச் சுத்தம்பண்ணி, விழுங்கும்படிச் செய்து, திருமுறுவல் செய்தருளும் படித் திருமுகத்தையசைத்துச் சிரிப்புண்டாக்கி, தானும் சிரித்து, அதன்பிறகு தாங்க முடியாத காதலால் சந்தோஷித்து, முத்தம் கொடுமென்று கேட்டு, அவ்விடத்தில் ருக்வேதத்தோடு சதுர்வேதங்களும் நித்யவாசஞ்செய்கின்ற வழகிய திருவாயினை முத்தம் வைத்து. (கஎ)

மடித்தலத்து நீங்காமல் வைத்திருந்தென் வாழ்முதலென்
றடிக்கமலங் களைக்காவி யனவிழியி லணைத்தேந்தி
முடித்தலத்துஞ் சேர்த்தெனது முழுமுதலே யெனத்தழுவிப்
பிடித்தநண்பாற் பிறவாத பிள்ளைவளர்த் திடும்போதின்.

(ப-ரை.) மடித்தலத்தும் - துடையின் மீதிலும், நீங்காமல் - விடாமல், வைத்து இருந்து - இருத்தியிருந்து, என் - எனது, வாழ் - வாழ்க்கைக்குரிய முதலே - செல்வமே, என்று - என்று, அடிக்கமலங்களை - திருவடித்தாமரைகளை, காவி - நீலோத்பலமலர்களை, அன்ன - ஒத்த, விழியில் - கண்களில், அணைத்து - ஒற்றிக்கொண்டு, ஏந்தி - எடுத்து, முடித்தலத்தும் - தலைமீதிலும், சேர்த்து-ஒற்றிக் கொண்டு, எனது - எனது, முழுமுதலே - தெய்வமே, என்ன - என்று, தழுவி - அணைத்துக்கொண்டு, பிடித்த - பற்றியிருந்த, நண்பால் - அன்புடன், பிறவாத - பிறப்பென்பதில்லாத, பிள்ளை - சிவக்குழந்தையை, வளர்த்திடும்போதில்-வளர்த்து வருகின்ற காலத்தில், எ - று.

(போ-ரை) துடையின்மீதிலும் விடாமலிருத்தியிருந்து, எனது வாழ்க்கைக் குரிய செல்வமே! என்று, திருவடித்தாமரைகளை நீலோத்பல மலர்களை யொத்த கண்களிலொற்றிக்கொண்டு, எடுத்துத் தலைமீதிலு மொற்றிக்கொண்டு, எனது தெய்வமே! என்று அணைத்துக்கொண்டு, பற்றியிருந்த வன்புடன் பிறப்பென்ப தில்லாத சிவக்குழந்தையை வளர்த்து வருகின்ற காலத்தில். (கஅ)

பெண்ணணங்காம் பெச்சமா தேவியார் பேதையன்பின்
றிண்ணிமையை யுலகோர்க்குத் தெரிவிக்கத் திரிவிழியார்
வெண்ணெயுண்ணார் பால்பருகார் மெய்த்தாயர் முலையருந்தார்
கண்ணயரார் பிணிகொண்டு கலங்குமகப் போலிருந்தார்.

(ப-ரை.) பெண் அணங்கு ஆம் - பெண்ணரசியாகிய, பெச்சமாதேவியார் - பெச்ச மஹாதேவியார், பேதையன்பின்-மூடபக்தியின், திண்ணிமையை - உறுதிப் பாட்டினை, உலகோர்க்கு - உலகத்தார்க்கு, தெரிவிக்க - அறிவிக்கும்பொருட்டு, திருவிழியார் - த்ரிநேத்ரதாரியாகிய சிவபெருமானானவர், வெண்ணெய் - வெண் ணெயையும், உண்ணார் - உண்ணமாட்டார், பால் - பாலையும், பருகார் - உண்ண மாட்டார், மெய்த்தாயர் - நற்றாயாரின், முலை - முலைப்பாலையும், அருந்தார்-உண்ண மாட்டார், கண் அயரார் - தூங்கவுமாட்டாராகி, பிணிகொண்டு - நோயினால், கலங்கும் - துன்பப்படுகின்ற, மகப்போல் - குழந்தைபோல், இருந்தார் - இருந் தனர், எ - று.

(போ-ரை.) பெண்ணரசியாகிய பெச்ச மஹாதேவியார் மூடபக்தியின் உறுதிப் பாட்டினை யுலகத்தார்க் கறிவிக்கும்பொருட்டு த்ரிநேத்ர தாரியாகிய சிவபெருமா

ஞனவர் வெண்ணெயையு முண்ணமாட்டார், பாலையுமுண்ணமாட்டார், நற்றாயாரின் முலைப்பாலையு முண்ணமாட்டார், தூங்கவுமாட்டாராகி நோயினாற் றுன்பப்படுகின்ற குழந்தை போலிருந்தனர். (௧௯)

அச்சமுற்றுப் பெச்சமா தேவியா மம்மனையா
ரிச்செயலென் பாவியென யாவர்கண்ணே றெய்திற்றோ
பச்சைவெண்ணெய் பால்செரியாப் பான்மையோ வெனப்பசியாற்
றுச்சவனக் கறிக்குற்றஞ் சூழ்ந்ததோ தோன்றலே.

(ப - ரை.) பெச்சமாதேவியாம் - பெச்ச மஹாதேவியாராகிய, அம்மனையார் - தாயார், அச்சம் உற்று - அஞ்சி, இ - இந்த, செயல் - அநர்த்தமான செய்கைக்குக் காரணம், என் - யாது, பாவி - பாவி, என்ன - என்று, தோன்றலே - ராஜகுமாரனே, யாவர் - யாருடைய, கண்ணேறு - த்ருஷ்டிதோஷம், எய்திற்றோ - பட்டுவிட்டதோ, பச்சைவெண்ணெய் - பச்சைவெண்ணெயும், பால் - பாலும், செரியா - செரிக்காத, பான்மையோ-குணமோ, என்ன - என்றும், பசியால் - பசிமிகுதியால், துச்சம் - அற்பமாகிய, வனக்கறி - வனதேவதையின், குற்றம் - தோஷம், சூழ்ந்ததோ - மூடிக்கொண்டதோ, எ - று.

(பொ - ரை.) பெச்ச மஹாதேவியாராகிய தாயார் அஞ்சி, இந்த வநர்த்தமான செய்கைக்குக் காரணம் யாது? பாவி! என்று, ராஜகுமாரனே! யாருடைய த்ருஷ்டி தோஷம் பட்டுவிட்டதோ? பச்சை வெண்ணெயும் பாலும் செரிக்காத குணமோ? என்று, பசிமிகுதியால் அற்பமாகிய வனதேவதையின்தோஷம் மூடிக்கொண்டதோ?

முன்னைவினை யென்னைவந்து மூடிற்றோ கெட்டேனே
யுன்னையிந்த நோய்சூழ வுற்றுப்பார்த் திருக்கவோ
வென்னசெய்கே னையனே யென்றுபெரி துயிர்த்தேங்கிப்
பின்னயர்ந்து மிகத்தளர்ந்து பிள்ளையைப்பார்த் தரற்றியே.

(ப - ரை.) முன்னை - பழைய, வினை - வினையானது, என்னை - எளியேனை, வந்து - (பின்தொடர்ந்து) வந்து, மூடிற்றோ - மூடிக்கொண்டதோ, கெட்டேனே ஆ! கெட்டேனே, உன்னை - உன்னை, இந்த - இந்த, நோய் - பிணி, சூழ - மூடிக் கொள்ளவும், உற்று-மிகவும், பார்த்து இருக்கவோ-பார்த்துக்கொண்டிருக்கட்டுமோ, என்ன - யாது, செய்கேன் - செய்வேன், ஐயனே - கடவுளே, என்று - என்று, பெரிது உயிர்த்து - பெருமூச்செறிந்து, ஏங்கி - அழுது, பின் - பிறகு, அயர்ந்து - சோர்ந்து, மிக - மிகவும், தளர்ந்து - மெலிவடைந்து, பிள்ளையை - குழந்தையை, பார்த்து - நோக்கி, அரற்றி - புலம்பி, எ - று.

(பொ-ரை.) பழைய வினையானது எளியேனைப் பின்தொடர்ந்து வந்து மூடிக் கொண்டதோ? ஆ! கெட்டேனே! உன்னை யிந்தப் பிணி மூடிக்கொள்ளவும் மிகவும் பார்த்துக் கொண்டிருக்கட்டுமோ? யாதுசெய்வேன்? கடவுளே! என்று பெருமூச்செறிந்து அழுது, பிறகு சோர்ந்து, மிகவும் மெலிவடைந்து, குழந்தையை நோக்கிப் புலம்பி. (௨௧)

உலையுமனத் தாளுதரந் தட்டிப்பார்த் தோவென்று
முலையருந்தா தோவென்று மோகத்தாற் கொடுத்தழுதுந்
தலைகவிழ்ந்த தோவென்றுந் தழுவியெடுத் துறவயர்ந்து
நிலையெனக்கா ரினியென்று நினறுமுகத் தறைந்தறைந்தும்.

(ப-ரை.) உலையும் - வருந்துகின்ற, மனத்தால்-மனத்தினால், உதரம்-வயிற்றை, தட்டிப்பார்த்து - தட்டிப்பார்த்து, ஓவென்று - ஓவென்று (அலறியும்); முலையருந்தாதோ - முலையுண்ணமாட்டாதோ, என்று - என்று; மோகத்தால் - விருப்பத்துடன், கொடுத்து - (முலை) தந்தும் (முலைகறிக்காமையால்); அழுதும்-புலம்பியும், தலை - தலை, கவிழ்ந்ததோ - சாய்ந்து விட்டதோ, என்றும் - என்று (அழுதும்); தழுவி - அணைத்து; எடுத்து - ஏந்திக்கொண்டு, உற-மிகவும், அயர்ந்தும்-சோர்ந்தும், இனி - இப்போது, எனக்கு - எனக்கு, நிலை - ஆதரவாயிருப்பவர், ஆர் - யார், என்று - என்று (அழுதும்); நின்று-நின்றுகொண்டு; முகத்து - முகத்தில்; அறைந்து அறைந்தும் - அடித்தடித்துக்கொண்டும், எ - று.

(போ - ரை.) வருந்துகின்ற மனத்தினால் வயிற்றைத் தட்டிப்பார்த்து; ஓ! என்றலறியும், முலையுண்ணமாட்டாதோ? என்று விருப்பத்துடன் முலைதந்தும், முலை கறிக்காமையாற் புலம்பியும்; தலைசாய்ந்துவிட்டதோ? என்றழுதும், அணைத்தேந்திக் கொண்டு மிகவும் சோர்ந்தும், இப்போது எனக்கு ஆதரவாயிருப்பவர் யார்? என்றழுதும்; நின்றுகொண்டு முகத்திலடித்தடித்துக்கொண்டும். (உஉ)

இந்தவெந்நோய் முற்றிவிட்டா லென்செயுமோ விதற்குமுன
மந்தவென தாவியினை மாய்ப்பனென மனந்துணிந்து
கந்தரத்திற் படைவைத்துக் கனன்றரியக் கண்ணுதலா
ரந்தவுரு வேபழைய வாகமாய் முன்னின்றே.

(ப - ரை.) இந்த - இந்த, வெம் - கொடிய, நோய் - பிணியானது, முற்றி விட்டால் - முதிர்ந்துவிடுமாயின், என்செயுமோ - யாது பண்ணிவிடுமோ, இதற்கு- இதற்கு, முன்னம் - முந்தி, மந்த - யமனே, எனது - என்னுடைய, ஆவியினை - உயிரை, மாய்ப்பன் - மடித்துவிடுவேன், என்ன - என்று, மனம் துணிந்து-மனோ த்ருடங்கொண்டு, கந்தரத்தில் - கழுத்தில், படை - அரிவாளை, வைத்து - பூட்டி, கனன்று - கோவித்து, அரிய - அறுத்தமாத்திரத்தில், கண்ணுதலார் - நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமானனவர், அந்த - அந்த, உருவே - (குழந்தை) திரு மேனியே, பழைய - தொன்மையாகிய, ஆகமாய் - திருமேனியாகி, முன் - எதிரே, நின்று - காட்சிதந்தருளி, எ - று.

(போ-ரை.) இந்தக் கொடிய பிணியானது முதிர்ந்துவிடுமாயின் யாது பண்ணி விடுமோ? இதற்கு முந்தி, யமனே! என்னுடைய உயிரை மடித்துவிடுவேனென்று மனோத்ருடங்கொண்டுக் கழுத்திலரிவாளைப்பூட்டிக் கோவித்தறுத்தமாத்திரத்தில், நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமானனவர் அந்தக் குழந்தைத் திருமேனியே தொன்மையாகிய திருமேனியாகி யெதிரே காட்சிதந்தருளி. (உ௩)

மெய்ச்சினனு னினையம்ம வேண்டியகே ளளிப்பமெனப்
பெச்சமா தேவியார் பேசுவார் பெருமானி
னச்சிலுற்ற நோயகன்ற வவ்வளவே போதுமற்றொ
ரிச்சையிலை நீசுகமே யிருக்கவெனக் கிச்சையென்றாள்.

(ப - ரை.) அம்ம - தாயே, நான் - நான், நின்னை - உன்னை, மெய்ச்சினன் - மெச்சிக்கொண்டேன், வேண்டிய-விரும்பினவரங்களை, கேள்-கேட்பாய், அளிப்பம் - அநுக்ரஹஞ்செய்வோம், என்ன - என்று கட்டளையிடுதலும், பெச்சமாதேவியார் - பெச்சமஹாதேவியார், பேசுவார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), பெருமான் -

சிவபெருமானே, நின் - உனது, அக்கில் - திருமேனியில், உற்ற - அடைந்த, நோய் - பிணியானது, அகன்ற - நீங்கின, அவ்வளவே - அத்தனையே, போதும் - போதும், மற்று - வேறு, ஓர் - ஒரு, இச்சை - வரமும், இல்லை - (வேண்டியது) இல்லை, நீ - நீ சுகமேயிருக்க - சௌக்யமாய் வாழவேண்டுமென்பதே, எனக்கு - எனக்கு, இச்சை - வேண்டிய வரம், என்றாள் - என்று சொன்னாள்.

(பொ-ரை.) தாயே! நான் உன்னைமெச்சிக்கொண்டேன், விரும்பினவரங்களைக் கேட்பாய் அநுக்ரஹஞ்செய்வோமென்று கட்டளையிடுதலும், பெச்சமஹாதேவியார் சொல்வாராயினார், எவ்வாறெனின்:—சிவபெருமானே! உனது திருமேனியிலடைந்த பிணியானது நீங்கின வத்தனையே போதும், வேறொரு வரமும் வேண்டியதில்லை, நீ சௌக்யமாய் வாழவேண்டுமென்பதே யெனக்கு வேண்டிய வரமென்று சொன்னாள்.

நம்மவைநீ யிருத்தலினா னம்மையே னோய்சேரு
மிம்மையினி லுனக்குநித்த மினிதளித்தே மெம்மைநீ
செம்மையினால் வளர்த்தெடுத்த செய்தியினா னீநமக்கு
மம்மவைகா ணெனவுரைத்தங் கருஞ்சோதி யாயினார்.

(ப-ரை.) நம்-நமது, அவ்வை-தாயாராகிய, நீ-நீ, இருத்தலினால் - (க்ஷேமமாய்) இருப்பதனால், நம்மை - நம்மை, நோய் - பிணி, சேரும் - அணுகுவதற்குக்காரணம், என் - யாது, இம்மையினில்-இவ்வுலகத்தில், உனக்கு-உனக்கு, நித்தம்-மோக்ஷஸாம் ராஜ்யத்தை, இனிது-பரம ஸந்தோஷத்துடன், அளித்தேம்-அநுக்ரஹஞ்செய்தோம், நீ - நீ, எம்மை-நம்மை, செம்மையினால்-செவ்வையாக, வளர்த்து எடுத்த-வளர்த்து வந்த, செய்தியினால் - ஸத்கார்யத்தினால், நீ - நீ, நமக்கும் - நமக்கும், அம்மவ்வை - அம்மவ்வை, என்ன-என்று, உரைத்து-திருவாய்மலர்ந்தருளி, அங்கு-அவ்விடத்தில், அரு - மேன்மையாகிய, சோதியாயினார் - தேஜோரூபமானார்.

(பொ-ரை.) நமது தாயாராகிய நீ க்ஷேமமாயிருப்பதனால் நம்மை பிணியணுகுவதற்குக்காரணம் யாது? இவ்வுலகத்தில் உனக்கு மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைப் பரம ஸந்தோஷத்துடன் அநுக்ரஹஞ்செய்தோம், நீ நம்மை செவ்வையாக வளர்த்து வந்த ஸத்கார்யத்தினால் நீ நமக்கும்அம்மவ்வையென்று திருவாய்மலர்ந்தருளி யவ்விடத்தில் மேன்மையாகிய தேஜோரூபமானார். (௨௫)

பெச்சமாதேவியார் புராணம் முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - ௬0௩.

உ
சிவமயம்.

# கலியநாயனார் புராணம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மருவில் செய்தி யேழை யன்பர் மற்று நன்றொ ருத்தனா
ரறையு மஞ்செ ழுத்த லால வணைந்தி லாத நாவினார்
பிறைமு டித்த நித்த னிச்சை பெருகு கின்ற நெறியதா
முறைமை கண்டு கலிய ரென்று மொழியு நாம முற்றுளார்.

(ப-ரை.) மருவு இல் - அடைய முடியாத, செய்தி - பக்திமார்க்கத்தையுடைய, ஏழையன்பர் - மூடபக்தர், மற்றும் - மேலும், நன்று-சன்மார்க்கத்தில், ஒருத்தனார் - ஒப்பற்றவர், அறையும் - (வேதாகமங்களில்) சொல்லப்பட்ட, அஞ்சு எழுத்து - ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹாமந்த்ரத்தை, அல்லால்-அல்லாமல், அணைந்து இல்லாத - உச்சரிக்காத, நாவினார்-சொல்லையுடையவர், பிறை-பாலசந்த்ரனை, முடித்த - ஜடாபாரத்தில் தரித்த, நித்தன்-சிவபெருமானிடத்தில், இச்சை-அன்பு, பெருகுகின்ற-வளர்கின்ற, நெறியது ஆம்-சன்மார்க்கமாகிய, முறைமை-நீதியை, கண்டு-பார்த்து, கலியர் - கலிய நாயனார், என்று-என்று, மொழியும்-சொல்லப்பட்ட, நாமம் உற்று உள்ளார் - திருநாமத்தையுடையவர், எ-று.

(பொ-ரை.) அடையமுடியாத பக்திமார்க்கத்தையுடைய மூடபக்தர், மேலும் சன்மார்க்கத்தில் ஒப்பற்றவர், வேதாகமங்களிற் சொல்லப்பட்ட ஸ்ரீபஞ்சாக்ஷரமஹா மந்த்ரத்தையல்லாமல் உச்சரிக்காத சொல்லையுடையவர், பாலசந்த்ரனை ஜடாபாரத்திற் றரித்த சிவபெருமானிடத்தில் அன்பு வளர்கின்ற சன்மார்க்கமாகிய நீதியைப் பார்த்துக் கலியநாயனாரென்று சொல்லப்பட்ட திருநாமத்தையுடையவர். (க)

நல்ல சீலர் துய்ய சைவர் கலியர் மற்றோர் நற்பதி
செல்ல வேணு மென்றெ ழுந்து செல்லு கின்ற வதியிலே
வல்லி பாகர் கோயி லின்றி மாவ னத்து வைகல்கண்
டொல்லை யோடி நீடு துக்க முற்ற நெஞ்ச ராயரோ.

(ப-ரை.) நல்ல - சிறந்த, சீலர் - ஆசாரத்தையுடையவரும், துய்ய - பாவத்தினின்றும் நீங்கிய, சைவர் - சிவகுலத்திற் பிறந்தவருமாகிய, கலியர் - கலியநாயனார், மற்று ஓர் - வேறொரு, நல் - நல்ல, பதி - நகரத்திற்கு, செல்லவேணும் என்று - போக வேண்டுமென்கின்ற கருத்துடையவராய், எழுந்து - பயணப்பட்டு, செல்லுகின்ற - போகின்ற, வதியிலே-வழியிலே, வல்லிபாகர்-சிவபெருமான், கோயில்-திருவாலயம், இன்றி-இல்லாமல், மா-பெரிய, வனத்து-காட்டில், வைகல்-எழுந்தருளியிருப்பதை, கண்டு - பார்த்து, ஒல்லையோடி - மிகவும் விரைவாகப்போய், நீடு - பெரிய, துக்கம் உற்ற - துன்பமடைந்த, நெஞ்சராய் - மனத்தையுடையவராகி, எ-று.

(போ-ரை.) சிறந்த வாசாரத்தையுடையவரும், பாவத்தினின்று நீங்கிய சிவ குலத்திற் பிறந்தவருமாகிய கலியநாயனார் வேறொரு நல்ல நகரத்திற்குப் போக வேண்டுமென்கின்ற கருத்துடையவராய்ப் பயணப்பட்டுப் போகின்ற வழியிலே சிவ பெருமான் திருவாலயமில்லாமற் பெரிய காட்டில் எழுந்தருளியிருப்பதைப் பார்த்து, விரைவாகப்போய்ப் பெருந்துன்பமடைந்த மனத்தையுடையவராகி.

(வி-ரை.) வல்லி-உவமையாகுபெயர், பூங்கொடிபோல்பவளென்பது பொருள். பாகர் என மேல்வருதலால் இது உமாதேவியாரைக் குறித்தது. அரோ - அசை. (உ)

அணிந்து முன்ப ணிந்தெ ழுந்த ணைத்து நெஞ்ச கங்கரைந்
திணைந்த நேய ராயு யிர்த்தி ரண்டு கண்க ளொழுகுநீர்
தணிந்து வீழ வேத ளர்ந்து சங்கை யற்ற துன்பராய்த்
துணிந்து கைகு வித்தி ரங்கி நின்ற ருண்டு சொல்லுவார்.

(ப-ரை.) அணிந்து - (சமீபத்தில்) சேர்ந்து, முன் - சந்நிதியில், பணிந்து - (சாஷ்டாங்கமாக) வணங்கி, எழுந்து-(மேலே)எழுந்து, அணைத்து-தழுவிக்கொண்டு, நெஞ்சகம்-மனம், கரைந்து - உருகி, இணைந்த - பொருந்திய, நேயராய்-அன்புடையவராகி, உயிர்த்து-பெருமூச்செறிந்து, இரண்டு-இரண்டு, கண்கள்-கண்களினின்றும், ஒழுகும் - சிந்துகின்ற, நீர்-நீர், தணிந்து - நிறைந்து, வீழ - வீழ, தளர்ந்து - சோர்ந்து, சங்கையற்ற - அளவில்லாத, துன்பராய் - துக்கத்தையுடையவராய், துணிந்து - மனோத்ருடங்கொண்டு, கைகுவித்து-கைகூப்பி வணங்கி, இரங்கி-அழுது, நின்று - முன்னின்று, அருண்டு - பயந்து, சொல்லுவார் - சொல்லத் தொடங்கினார் (எவ்வாறெனின்), எ-று.

(போ-ரை.) சமீபத்திற்சேர்ந்து, சந்நிதியிற் சாஷ்டாங்கமாக வணங்கி, மேலே யெழுந்து தழுவிக்கொண்டு, மனமுருகிப் பொருந்திய வன்புடையவராகி, பெருமூச் செறிந்து, இரண்டு கண்களினின்றும் சிந்துகின்ற நீர் நிறைந்துவீழச் சோர்ந்து, அளவில்லாத துக்கத்தையுடையவராகி, மனோத்ருடங்கொண்டு கை கூப்பி வணங்கி யழுது, முன்னின்று பயந்து சொல்லத் தொடங்கினார், எவ்வாறெனின். (௩)

தக்கன் வேள்வி செற்ற போது தம்மு ளொர்ந்து தேவர்தா
மிக்க குற்ற மொன்று செய்யின் மேவி யார்வி லக்குவா
ரிக்கன் மேனி சுட்ட தற்கவ் விக்க னொன்று செய்யினா
னக்க ணென்ன செய்கு வன்சொ லைய னேயெ னத்தொழா.

(ப-ரை.) ஐயனே - ஐயனே, தக்கன் - தக்ஷனுடைய, வேள்வி - யாகத்தை, செற்ற போது - அழித்த காலத்தில், தம் - தமது, உள் - மனம், நொந்து - வருந்தி, தேவர்-தேவர்கள், மிக்க - பெரிதாகிய, குற்றம் ஒன்று - ஒரு தீங்கினை, செய்யின் - பண்ணுவார்களாயின், மேவி-வந்து, விலக்குவார்-நீக்கவல்லவர், யார்-யார், இக்கன் - மன்மதனது, மேனி - சரீரத்தை, சுட்டதற்கு - எரித்ததற்காக, அ - அந்த, இக்கன் - மன்மதன், ஒன்று - ஒரு தீங்கினை, செய்யின் - பண்ணுவானாயின், நான் - நான், அக்கண் - அவ்விடத்தில், என்ன - யாது, செய்குவன் - செய்வேன், சொல் - கூறும், என்ன - என்று, தொழா - தொழுது, எ - று.

(போ-ரை.) ஐயனே! தக்ஷனுடைய யாகத்தை யழித்த காலத்தில் தமது மனம் வருந்தித் தேவர்கள் பெரிதாகிய வோர் தீங்கினைப்பண்ணுவார்களாயின் வந்து நீக்க வல்லவர்யார்? மன்மனது சரீரத்தை யெரித்ததற்காக வந்த மன்மதன் ஒரு தீங்கினைப் பண்ணு வானாயின், நான் அவ்விடத்தில் யாது செய்வேன்? கூறுமென்று தொழுது,

(வி-ரை.) உள்-ஆகுபெயர். இக்கு-இக்ஷு என்னும் வடசொற்றிரிபு, கரும்பு என்பது பொருள், அதனை வில்லாகவுடையவன் இக்கன். (ச)

வேத னஞ் சிரந்து ணித்த வெம்ப கைக்க வன்றொடர்ந்
தேத மொன்று செய்யி னிறப்பன் மெய்ய தெம்பிரான்
பாத மொன்றி னாலு தைக்க வன்று லைந்த பகையமன்
றீது செய்கி லென்செய்கே னெனத்தி யங்கு சித்தராய்.

(ப-ரை.) எம்பிரான் - சிவபெருமானே, வேதன் - ப்ரஹ்மதேவனுடைய, அம் - அழகிய, சிரம் - தலையை, துணித்த - அறுத்த, வெம் - கொடிய, பகைக்கு - விரோதத்திற்காக, அவன்-அவன், தொடர்ந்து-தேடி, ஏதம் ஒன்று-ஒரு தீங்கினை, செய்யின் - செய்வானாயின், நான் - நான், இறப்பன் - செத்துப்போவேன், அது - அது, மெய் - உண்மை, பாதம் ஒன்றினால் - ஒரு திருவடியினால், உதைக்க - உதைக்க, அன்று - அக்காலத்தில், உலைந்த - வருத்தப்பட்ட, பகை - விரோதத்தையுடைய, யமன் - யமன், தீது - (ஒரு) தீங்கினை, செய்கில் - பண்ணுவானாயின், என் செய்கேன் - யாது செய்வேன், என்ன - என்று, தியங்கு - கலங்கின, சித்தராய் - மனத்தை யுடையவராகி எ-று.

(பொ-ரை.) சிவபெருமானே! ப்ரஹ்மதேவனுடைய வழகிய தலையை யறுத்த கொடிய விரோதத்திற்காக அவன் தேடி ஒரு தீங்கினைச் செய்வானாயின் நான் செத்துப்போவேன், அதுஉண்மை, ஒருதிருவடியினாலுதைக்க வக்காலத்தில் வருத்தப் பட்ட விரோதத்தையுடைய யமன் ஒரு தீங்கினைப் பண்ணுவானாயின் யாது செய்வேன்? என்று கலங்கின மனத்தையுடையவராகி.

(வி - ரை.) வேதாதிகாரியாதலால் ப்ரஹ்மதேவன் வேதன் எனப்பட்டான். ()

மிகைத்த நார சிங்கன் மேனி வீய நீபி ளந்தவப்
பகைக்க வன்செ றுத்து டன்று பற்றி லென்ன செய்குவே
னகைத்து முப்பு ரங்கள் சுட்ட னாடி யந்த வழியுளோ
ருகைத்து வந்த டர்க்கி லென்ன வுத்த ரங்க ளோதுவேன்.

(ப-ரை.) மிகைத்த - குற்றஞ்செய்த, நார சிங்கன் - நரசிங்கமூர்த்தியினுடைய, மேனி-சரீரம், வீய-அழியும்படி, நீ-நீ, பிளந்த-கிழித்தெறிந்த, அ-அந்த, பகைக்கு - விரோதத்திற்காக, அவன் - அவன், செறுத்து - கோபித்து, உடன்று - போர்செய்து, பற்றில் - பிடித்துக்கொள்வானாயின், என்ன - யாது, செய்குவேன் - செய்வேன், நகைத்து - திருமுறுவல்செய்து, முப்புரங்கள் - த்ரிபுரங்களை, சுட்டல் - எரித்ததை, நாடி - யோசித்து, அந்த - அந்த, வழியுளோர் - சந்ததியார், உகைத்து - மேலே யெழுந்து, வந்து - வந்து, அடர்க்கில் - போர்செய்வார்களாயின், என்ன - யாது, உத்தரங்கள் - பதில், ஓதுவேன் - சொல்வேன், எ-று.

(பொ - ரை.) குற்றஞ்செய்த நரசிங்கமூர்த்தியினுடைய சரீரம் அழியும்படி நீ கிழித்தெறிந்த வந்த விரோதத்திற்காக அவன் கோபித்துப் போர்செய்து பிடித்துக் கொள்வானாயின் யாது செய்வேன்? திருமுறுவல்செய்து த்ரிபுரங்களையெரித்ததை யோசித்து அந்தச் சந்ததியார் மேலேயெழுந்துவந்து போர்செய்வார்களாயின் யாது பதில் சொல்வேன்? (சு)

அந்த காசு ரற்பி ளந்த வப்ப கைக்கவ் வழியுளோர்
வந்த டார்க்கி லவரை யான் வதைக்க வெண்ணில் வல்லனோ
முந்து சக்க ரத்தி னன்மு டிந்த வச்ச லந்தர
னந்த வர்க்கர் வந்து றுக்கி லைய வென்ன செய்குவேன்.

(ப - ரை.) ஐய - ஐயனே, அந்தகாசுரன் - அந்தகாசுரனை, பிளந்த - கிழித்தெறிந்த, அ - அந்த, பகைக்கு - விரோதத்திற்கு, அ - அந்த, வழியுள்ளோர் - சந்ததியார், வந்து - வந்து, அடார்க்கில் - போர்செய்வார்களாயின், அவரை-அவர்களை, யான் - நான், வதைக்க - கொல்ல, எண்ணில் - நினைப்பேனாயின், வல்லனோ - சாமர்த்தியமுள்ளவனோ, முந்து - முற்காலத்தில், சக்கரத்தினால் - சக்கரத்தால், முடிந்த - மாண்ட, அ - அந்த, சலந்தரன் - ஜலந்தராசுரனுடைய, அந்த - அந்த, வர்க்கர் - சந்ததியார், வந்து - வந்து, உறுக்கில் - கோவிப்பார்களாயின், என்ன - யாது, செய்குவேன் - செய்வேன், எ - று.

(பொ - ரை.) ஐயனே! அந்தகாசுரனைக் கிழித்தெறிந்த வந்த விரோதத்திற்கு அந்தச் சந்ததியார் வந்து போர்செய்வார்களாயின் அவர்களை நான் கொல்லச் சாமார்த்தியமுள்ளவனோ? முற்காலத்தில் சக்கரத்தால் மாண்ட வந்த ஜலந்தராசுரனுடைய வந்தச் சந்ததியார் வந்து கோவிப்பார்களாயின் யாது செய்வேன்? (எ)

வலிய முன்னு ரித்த வந்த வார ணப்ப ழிக்குமப்
புலியி றம்ப ழிக்கு மிப்பு னத்து யானை புலிகணீ
மெலிய வொன்று செய்யின் யார் விலக்கு வார்வி ரைந்தெனக்
கலியர் நைந்தி ரங்கியே கலுழ்ந்து நின்று கழறு வார்.

(ப - ரை.) முன் - முற்காலத்தில், வலிய - தாமாகவேபோய், அந்த - அந்த, வாரணம் - யானையை, உரித்த - உரித்த, பழிக்கும் - தீங்கிற்காகவும், அ - அந்த, புலி - புலியை, இறும் - கொன்ற, பழிக்கும் - தீங்கிற்காகவும், இ - இந்த, புனத்து - காட்டிலுள்ள, யானை - யானைகளும், புலிகள் - புலிகளும், நீ - நீ, மெலிய - இளைத்துப்போகும்படி, ஒன்று-ஒருதீங்கினை, செய்யின் - பண்ணுமாயின், விரைந்து-சீக்கிரமாகவந்து, விலக்குவார் - நீக்கவல்லவர், யார் - யார், என - என்று, கலியர் - கலியநாயனார், நைந்து - மனம்வருந்தி, இரங்கி - துக்கப்பட்டு, கலுழ்ந்து - அழுது, நின்று - நின்றுகொண்டு, கழறுவார் - மீண்டும் சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(பொ - ரை.) முற்காலத்தில் தாமாகவேபோய் அந்த யானையையுரித்த தீங்கிற்காகவும், அந்தப் புலியைக்கொன்ற தீங்கிற்காகவும், இந்தக்காட்டிலுள்ள யானைகளும் புலிகளும் நீ இளைத்தும்போகும்படி யொரு தீங்கினைப் பண்ணுமாயின், சீக்கிரமாக வந்து நீக்கவல்லவர் யார்? என்று கலியநாயனார் மனம் வருந்தித் துக்கப்பட்டழுது நின்றுகொண்டு மீண்டும் சொல்வாராயினர், எவ்வாறெனின். (அ)

நம்பி னுஞ்சி றுத்த மானி டார்க்கு நம்ப தத்தினுஞ்
செம்மை சேர்ப தங்க ளைச்சி வன்கொ டுப்ப தேனெனத்
தம்மு ளேவெ றுத்தி ருக்கு மண்டர் நீத னித்துநின்
வெம்மை செய்யி னைய வென்ன செய்வ னென்று விம்மியே.

(ப - ரை.) ஐய - ஐயனே, நம்மினும் - நம்மைப்பார்க்கிலும், சிறுத்த-தாழ்ந்த, மானிடர்க்கு - மனிதர்களுக்கு, நம் - நமது, பதத்தினும் - பதவிகளைப்பார்க்கிலும், செம்மைசேர்-மேன்மை பொருந்திய, பதங்களை - பதவிகளை, சிவன்-சிவபெருமான், கொடுப்பது - அநுக்ரஹஞ் செய்தற்குக் காரணம், என் - யாது, என்ன - என்று, தம்முள் - தமது மனத்தில், வெறுத்து இருக்கும் - பகைத்திருக்கின்ற, அண்டர்-தேவர்கள், நீ - நீ, தனித்து உறின் - தனியாகவிருப்பீராயின், வெம்மை - ஒரு தீங்கினை, செய்யின் - பண்ணுவார்களாயின், என்ன-யாது, செய்வன் - செய்வேன், என்று - என்று, விம்மி - அழுது, எ - று.

(பொ - ரை.) ஐயனே! நம்மைப்பார்க்கிலும் தாழ்ந்த மனிதர்களுக்கு நமது பதவிகளைப்பார்க்கிலும் மேன்மைபொருந்திய பதவிகளைச்சிவபெருமான் அநுக்ரஹஞ் செய்தற்குக் காரணம் யாது? என்று தமது மனத்தில் பகைத்திருக்கின்ற தேவர்கள் நீ தனியாகவிருப்பீராயின் ஒரு தீங்கினைப் பண்ணுவார்களாயின் யாது செய்வேன்? என்றழுது. (௯)

மடப்ப மாம லைப்பி றந்த மயிலி ருத்தல் கண்டிலேன்
றிடத்து மாத வத்தர் பூசை செய்த செய்தி காண்கிலே
னெடுத்தொ ருத்த ரென்சி ரத்தி ருத்தி லிக்க ணத்திலே
யடுத்த வெங்க ளூரி லால யஞ்ச மைத்து மாற்றுகேன்.

(ப - ரை) மா - பெருமை பொருந்திய, மலை - இமயபர்வதத்தில், பிறந்த - தோன்றியருளின, மடப்பம்-மடமைக்குணத்தையுடைய, மயில்-மயில்போலும்சாயலையுடைய உமாதேவியார், இருத்தல்-எழுந்தருளியிருப்பதையும், கண்டிலேன்-பார்த்தேனில்லை, திடத்த-மனோதிருடமுள்ள, மா-பெருமையுடைய, தவத்தர்-தபோதனர்கள், பூசைசெய்த - பூஜித்த, செய்தி - செய்கையையும், காண்கிலேன் - பார்த்தேனில்லை, ஒருத்தர் - ஒருத்தர், எடுத்து - தூக்கி, என் - எனது, சிரத்து - தலையில், இருத்தில்-வைப்பாராயின், இ - இந்த, கணத்திலே - நொடிப்பொழுதிலே, அடுத்த - சமீபத்திலிருக்கின்ற எங்கள் - எங்களுடைய, ஊரில் - நாட்டில், ஆலயம் - திருக்கோயிலை, சமைத்து - கட்டுவித்து, மாற்றுகேன் (அதில் உன்னை யெழுந்தருளப் பண்ணிப் பயத்தை) ஒழிப்பேன், எ - று.

(பொ-ரை.) பெருமைபொருந்திய இமயபர்வதத்திற்றோன்றி யருளினமடமைக் குணத்தையுடைய மயில்போலுஞ்சாயலுடையஉமாதேவியார் எழுந்தருளியிருப்பதை யும்பார்த்தேனில்லை, மனோதிருடமுள்ள பெருமையுடைய தபோதனர்கள் பூஜித்த செய்கையையும் பார்த்தேனில்லை, ஒருத்தர் தூக்கி எனது தலையில் வைப்பாராயின் இந்த நொடிப்பொழுதிலே சமீபத்திலிருக்கின்ற எங்களுடைய நாட்டில் திருக் கோயிலைக் கட்டுவித்து அதில் உன்னை யெழுந்தருளப் பண்ணிப் பயத்தை யொழிப்பேன். (௧௦)

நினைத்திடாத வகையெலாநி னைக்கி லாவ தென்னெனு
வினைப்ப கைத்தி றங்கள் வல்ல மெய்ச்ச காய ரின்றிபே
யெனைத்து மொன்று மெண்ணி டாதி ருக்கு நந்த மீசனே
முனைத்த னத்த னருகு மென்று கலியர் நின்று முன்னியே.

(ப-ரை.) நினைத்திடாத-எண்ணிமுடியாத, வகையெல்லாம்-விதங்கள் முழுதும், நினைக்கில் - எண்ணுவேனாயின், ஆவது - உண்டாகின்ற பயன், என் - யாது, என்னு

என்று, வினை - தீவினையினாலுண்டாகின்ற, பகை - விரோதத்திற்குரிய, திறங்கள் எல்லாம் - காரணங்கள் எல்லாவற்றையும், வல்ல-அறியவல்ல, மெய்-உண்மையாகிய, சகாயர் - துணைவர், இன்றி - இல்லாமல், எனைத்தும் - எவ்வளவும், ஒன்றும் - ஒரு உபாயத்தையும், எண்ணிடாது - தேடிக்கொள்ளாமல், இருக்கும் - (மநோதிருடத்துடன் தனியாக) வீற்றிருக்கின்ற, நம் - நமது, ஈசனே - சிவபெருமானே, முனைத்தனத்தன் - யுத்தவீரன், ஆகும் - ஆவான், என்று - என்று, நின்று - நின்று, முன்னி - யோசித்து, எ-று.

(பொ-ரை.) எண்ணிமுடியாத விதங்கள் முழுதும் எண்ணுவேனாயின் உண்டாகின்ற பயன்யாது? என்று, தீவினையினாலுண்டாகின்ற விரோதத்திற்குரிய காரணங்களெல்லாவற்றையும் அறியவல்ல உண்மையாகிய துணைவரில்லாமல் எவ்வளவும் ஒரு உபாயத்தையுந்தேடிக்கொள்ளாமல் மநோதிருடத்துடன் தனியாக வீற்றிருக்கின்ற நமது சிவபெருமானே யுத்தவீரனாவானென்று நின்று யோசித்து. (கக)

ஆடு மைபர் தம்மை விட்ட கன்றி டாதி ருந்துதந்
தேடு மாத னங்க ளுஞ்செ ழுமணித்தி றங்களு
மாடு கன்று மடிமை யான வகையு மற்று முளவெலாங்
கூடு மன்பி லிட்ட ரற்கொ ராலயங்கு யிற்றுவார்.

(ப-ரை.) ஆடும்-திருநடனஞ்செய்கின்ற, ஐயர் தம்மை-சிவபெருமானை, விட்டு - நீங்கி, அகன்றிடாது-போகாமல், இருந்து-தங்கி, தம்-தமது, தேடும்-சம்பாதித்து வைத்த, மா - பெரிய, தனங்களும் - திரவியங்களும், செழு - மேன்மையாகிய, மணித் திறங்களும் - ரத்நங்களும், மாடு - மாடுகளும், கன்றும் - கன்றுகளும், அடிமையான வகையும் - கைவசத்திலுள்ளவைகளும், மற்றும்உள - இன்னமுமிருந்தவைகளும், எல்லாம் - (ஆகிய) எல்லாவற்றையும், கூடும் - பொருந்தியிருக்கின்ற, அன்பில் - அன்புடன், இட்டு - (திருப்பணிக்கென்றே)கொடுத்து, அரற்கு - சிவபெருமானுக்கு, ஒர் - ஒரு, ஆலயம்-திருக்கோயிலை, குயிற்றுவார் - கட்டத்தொடங்கினார், எ-று.

(பொ - ரை.) திருநடனஞ்செய்கின்ற சிவபெருமானை நீங்கிப்போகாமற்றங்கித் தமது சம்பாதித்து வைத்த பெருந்திரவியங்களும், மேன்மையாகிய ரத்நங்களும், மாடுகளும், கன்றுகளும், கைவசத்திலுள்ளவைகளும், இன்னமுமிருந்தவைகளுமாகிய வெல்லாவற்றையும் பொருந்தி யிருக்கின்ற வன்புடன் திருப்பணிக்கென்றே கொடுத்துச் சிவபெருமானுக்கு ஒரு திருக்கோயிலைக் கட்டத்தொடங்கினார். (க௨)

ஆன கெர்ப்பக் கமொ டத்த மண்டப மமைத் தபின்
வான மெட்டு கோபுர மதிற்பு றத்தி லகழ் சமைத்
தீன மற்ற வாயில் கட்கி ருங்க பாட மிட்டரோ
சேனை சுற்று முத்தி கைச்சி தைப்பு றுத வகையெலாம்.

(ப - ரை.) ஆன - திருவாலயத்துக்குரித்தான, கெர்ப்பக்கமொடு - கர்ப்பக்ருஹத்தையும், அத்தமண்டபம் - அர்த்தமண்டபத்தையும், அமைத்த-கட்டிமுடித்த, பின் - பிறகு, வானம் - ஸ்வர்க்கலோகம்வரையிலும், எட்டு - அளாவியிருக்கின்ற, கோபுரம் - திருக்கோபுரங்களையும், மதில் - திருமதில்களையும், புறத்தில் - சுற்றுப்பக்கத்திலும், அகழ் - அகழிகளையும், சமைத்து - கட்டி, ஈனமற்ற - நிலைபெற்ற, வாயில்கட்கு - திருவாயில்களுக்கு, இரு - பெரிய, கபாடம் - கதவுகளை, இட்டு - அமைத்து, சேனை - படைகளால், சுற்றும் - சூழ்ந்திருக்கின்ற, முத்திகை - கோட்டையானது, சிதைப்புறுதவகை - அழியாதபடி, எல்லாம் - முழுதும், எ-று.

(போ - ரை.) திருவாலயத்துக் குரித்தான கர்ப்பக்ருஹத்தையும், அர்த்த மண்டபத்தையுங் கட்டிமுடித்த பிறகு, ஸ்வர்க்க லோகம் வரையிலும் அளாவி யிருக்கின்ற திருக்கோபுரங்களையும், திருமதில்களையும், சுற்றுப்பக்கத்திலும் அகழி களையுங்கட்டி, நிலைபெற்றத் திருவாயில்களுக்குப் பெரிய கதவுகளை யமைத்து, படைகளாற் சூழ்ந்திருக்கின்ற கோட்டையானது அழியாதபடி யெல்லாம். (௧௩)

செய்த பின்பு கோயி லுட்செ ழுஞ்ச லங்கொள் கூவல்கண்
டையர் துய்ய வமுதி னுக்க ளக்கு நெல்லு முட்செறித்
துய்ய நல்ல பூம ரங்க ளொத்த வன்பின் வைத்தரன்
பொய்ய லாத துய்ய பூசை நாடொ றும்பு ரிந்துளார்.

(ப - ரை.) செய்தபின்பு - கட்டிமுடித்தபிறகு, கோயிலுள் - திருவாலயத்தில், செழும் - சிறந்த, சலம் - தீர்த்தத்தை, கொள் - மொள்ளுவதற்குரிய, கூவல் - கிணற்றை, கண்டு - தோண்டி, ஐயர் - சிவபெருமானது, துய்ய - பரிசுத்தமாகிய, அமுதினுக்கு - திருவமுதுக்காக, அளக்கும் - (அமுதுபடி) அளந்துகொடுத்தற்குரிய, நெல்லும் - நெற்களஞ்சியங்களையும், உள் - உள்ளே, செறித்து - சேர்த்துவைத்து, உய்ய - உஜ்ஜீவிக்கும்பொருட்டு, நல்ல - நல்ல, பூமரங்கள் - புஷ்பவ்ருக்ஷங்களையும், ஒத்த - பொருந்திய, அன்பின் - அன்புடன், வைத்து - பயிர்செய்து, அரன் - சிவ பெருமானுக்கு, பொய்யலாத - பொய்ப்படுதலில்லாத, துய்ய-மேன்மைபொருந்திய, பூசை - பூஜையை, நாள்தொறும் - தினமும், புரிந்துளார் - விரும்பிச் செய்தார், எ - று.

(போ - ரை.) கட்டிமுடித்த பிறகு, திருவாலயத்திற் சிறந்த தீர்த்தத்தை மொள்ளுதற்குரிய கிணற்றைத் தோண்டி, சிவபெருமானது பரிசுத்தமாகிய திரு வமுதுக்காக வமுதுபடி யளந்து கொடுத்தற்குரிய நெற் களஞ்சியங்களையும் உள்ளே சேர்த்துவைத்து, உஜ்ஜீவிக்கும்பொருட்டு நல்ல புஷ்ப வ்ருக்ஷங்களையும் பொருந்திய வன்புடன் பயிர்செய்து, சிவபெருமானுக்குப் பொய்ப்படுதலில்லாத மேன்மை பொருந்திய பூஜையைத் தினமும் விரும்பிச் செய்தார். (௧௪)

தம்மு டன்ற மக்கி தத்த தன்மை யாரை நேடியே
யெம்மு டன்ச லிப்ப தற்றி யங்க வல்ல பேர்களாய்
வம்மி னென்று நம்மை யாளும் வள்ள லார்ம திற்புறஞ்
செம்மி நின்றி ராப்ப கற்சி னேக மிக்க சித்தராய்.

(ப - ரை.) தம்முடன் - தாமும், தமக்கு இதத்த தன்மையாரை - தமது நண்பர்களை, நேடி - நோக்கி, எம்முடன்-நம்மோடு, சலிப்பு அற்று-இளைக்காதபடி, இயங்கவல்லபேர்களாய் - பதாதிகளாய், வம்மின் - வாருங்கள், என்று - என்று (அழைத்துக்கொண்டு), நம்மை - அடியேங்களை, ஆளும் - ஆட்கொண்டருள்கின்ற, வள்ளலார் - சிவபெருமானது, மதில் - திருமதில்களின், புறம்-சுற்றுப்பக்கத்திலும், செம்மி - நெருங்கி, நின்று - நிலைத்திருந்து, இராப்பகல் - இரவும்பகலும், சினேகம் மிக்க - அன்புமிகுந்த, சித்தராய் - மனத்தையுடையவராய், எ - று.

(போ - ரை.) தாமும் தமது நண்பர்களைநோக்கி நம்மோடு இளைக்காதபடிப் பதாதிகளாய் வாருங்களென்று அழைத்துக்கொண்டு, அடியேங்களை யாட்கொண் டருள்கின்ற சிவபெருமானது திருமதில்களின் சுற்றுப்பக்கத்திலும் நெருங்கி நிலைத் திருந்து, இரவும் பகலும் அன்புமிகுந்த மனத்தையுடையவராய். (௧௫)

மதிற்பு றங்க டந்து சத்து ருக்க டம்ம தத்தினுங்
கதத்தி னுங்க டக்கொ ணாத காவ லாள ராகியே
குதிப்பர் நிற்ப ரார்ப்ப ரிப்பர் கொக்க ரிப்பர் தம்மனத்
திதத்த வன்பி னித்திற மியற்று நாள்கள் சில் செலா.

(ப - ரை.) மதிற்புறம் - திருமதிற்புறங்களை, கடந்து - தாண்டி, சத்துருக்கள்- விரோதிகள், தம் - தமது, மதத்தினும் - இறுமாப்பினாலும், கதத்தினும் - கோவத்தினாலும், கடக்கவொண்ணாத - தாண்டிவரமுடியாத, காவலாளராகி - காவற்காரராகி, குதிப்பர் - பாய்வார், நிற்பர் - நிலைதிரியாமலிருப்பார், ஆர்ப்பரிப்பர்- ஆரவாரஞ்செய்வார், கொக்கரிப்பர் - கெர்ச்சனைசெய்வார், தம் - தமது, மனத்து - மனத்தில், இதத்த - விரும்பியவற்றையெல்லாம், அன்பின் - அன்புடன், இத்திறம்- இவ்விதமாக, இயற்றும்-திருப்பணி செய்கின்ற, நாள்கள் - தினங்களில், சில்செலா - சிலதினங்கள் கழிதலும், எ - று.

(போ-ரை) திருமதிற் புறங்களைத்தாண்டி விரோதிகள் தமது இறுமாப்பினாலும் கோவத்தினாலும் தாண்டி வரமுடியாத காவற்காரராகிப் பாய்வார், நிலைதிரியாம லிருப்பார், ஆரவாரஞ்செய்வார், கெர்ச்சனைசெய்வார், தமது மனத்தில் விரும்பிய வற்றையெல்லாம் அன்புடன் இவ்விதமாகத் திருப்பணி செய்கின்ற தினங்களிற் சிலதினங்கள் கழிதலும். (௧௬)

அளவி லாத தனமெ லாம மர்ந்தி டுநி மந்தர்கட்
குளப தாதி கட்கு நாளு முதவ லாலு றும்பொருள்
செலவ தாகி முன்னு ளோர் சிதைந்து போயு மத்தர்தம்
வளநி லாவு கோயில் காவல் வழுவி லாத வகையராய்.

(ப - ரை.) அளவு இல்லாத - கணக்கற்ற, தனம் எல்லாம் - எல்லாத்திரவியங் களையும், அமர்ந்திடும்-நியமித்திருக்கின்ற, நிமந்தர்கட்கு - கோயில் ஊழியர்களுக்கும், உள்ள - இருக்கின்ற, பதாதிகட்கும்-காலாட்படைகளுக்கும், நாளும்-தினந்தோறும், உதவலால் - சம்பளத்தைக் கொடுத்தமையால், உறும் - மிகுதியாயிருந்த, பொருள் - திரவியங்களெல்லாம், செலவு ஆகி - செலவழிந்து, முன்உள்ளோர் - முன்னிருந்த பதாதிகளெல்லாரும், சிதைந்துபோயும் - அழிந்துபோயும், வளம்நிலாவு - மேன்மை பொருந்திய, அத்தர்கோயில் - சிவாலயத்தை, காவல் - காத்தற்பணியினின்றும், வழுவு இல்லாத வகையராய் - நிலைபெயராதவராகி, எ - று.

(போ - ரை.) கணக்கற்ற வெல்லாத் திரவியங்களையும் நியமித்திருக்கின்ற கோயில் ஊழியர்களுக்கும் இருக்கின்ற காலாட் படைகளுக்குந் தினந்தோறும் சம்பளத்தைக்கொடுத்தமையால் மிகுதியாயிருந்த திரவியங்களெல்லாஞ் செலவழிந்து முன்னிருந்த பதாதிகளெல்லாரும் அழிந்துபோயும், மேன்மைபொருந்திய சிவால யத்தைக் காத்தற்பணியினின்றும் நிலைபெயராதவராகி. (௧௭)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தொனிமிகுத்த மணிகளரை சூழக் கட்டிச்
சுரிகையொரு கரத்தெடுத்துச் சோதிப் பந்தம்
புனிதமுறு கரத்தேந்திப் பிறவி வேங்கைப்
புலிவேட்டை யாடுவார் போலக் கொண்டே
நனிமணியி னோசைகணின் கணின தென்ன
நற்கரத்தின் சுரிகைகலின் கலின தென்ன
வனுதினமுங் கலியனா ரிரவ தெல்லா
மத்தர்திரு வாலயத்து ளன்பாற் காப்பார்.

(ப - ரை.) தொனிமிகுத்த - மிகுந்த சத்தத்தையுடைய, மணிகள் - மணிகளை, அரை - இடையில், சூழ - சுற்றிலும், கட்டி - இறுக்கி, சுரிகை - உடைவாளை, ஒருகரத்து - ஒருகையில், எடுத்து - பிடித்து, சோதி - தீபொருந்தியிருக்கின்ற, பந்தம் - தீவட்டியை, புனிதம் உறு - பரிசுத்தமான, கரத்து - (மற்றொரு) கையில், ஏந்தி - பிடித்து, பிறவி - பிறப்பாகிய, வேங்கைப்புலி-வேங்கைப்புலியை, வேட்டையாடுவார்போல - வேட்டையாடுபவர்போல, கொண்டு - கோலமடைந்து, மணியின்-மணிகளின், நனி - மிகுந்த, ஓசை - சத்தமானது, கணின் கணின் - கணீர் கணீர், என்ன - என்றும், நல் - நல்ல, கரத்தின் - கையிலிருக்கின்ற, சுரிகை - உடைவாளானது, கலின் கலின் - கலீர் கலீர், என்ன-என்றும், அனுதினமும்-நாடோறும், கலியனார் - கலியநாயனார், இரவு எல்லாம் - இராமுழுதும், அத்தர்-சிவபெருமானது, திருவாலயத்துள் - திருக்கோயிலில், அன்பால் - அன்புடன், காப்பார் - காவல் செய்வார், எ - று.

(பொ-ரை.) மிகுந்த சத்தத்தையுடைய மணிகளை யிடையிற் சுற்றிலு மிறுக்கி, உடைவாளை யொருகையிற்பிடித்து, தீ பொருந்தியிருக்கின்ற தீவட்டியைப் பரிசுத்தமான மற்றொருகையிற் பிடித்து, பிறப்பாகிய வேங்கைப்புலியை வேட்டையாடுபவர் போலக் கோலமடைந்து, மணிகளின் மிகுந்த சத்தமானது கணீர் கணீரென்றும், நல்ல கையிலிருக்கின்ற உடைவாளானது கலீர் கலீரென்றும் நாடோறும் கலியநாயனார் இராமுழுதும் சிவபெருமானது திருக்கோயிலில் அன்புடன் காவல்செய்வார்.

(வி - ரை.) தொனி - த்வநி என்னும் வடசொற்றிரிபு. கணின் கணின், கலின் கலின் என்பவை ஈரடுக்கொலிக்குறிப்பு. அது - பகுதிப்பொருள்விகுதி. (௧௮)

பலரிருந்து காப்பதென வொருவர் தாமே
பலகாலு மாள்வாரி யேறிப் பார்ப்பார்
சிலதினமிப் படிசெல்லக் கலிய னார்தாந்
திருக்கரத்திற் பந்தத்துக் கெண்ணெய் கொள்ள
நலமொருளொன் றின்றியணி யாடை யெல்லா
நற்பொருளுக் கீந்ததுவுஞ் செல்ல பின்பங்
குலரும்விற கினைப்பொறுக்கிச் சுளுந்தாச் சுட்டவ்
வொளியினுற் சிலவிரவங் குவந்து காத்தார்.

(ப - ரை.) பலர் - அநேகஜனங்கள், இருந்து - சுற்றியிருந்து, காப்பதுஎன்ன - காவல்செய்வதைப்போல, ஒருவர்தாமே - ஒருத்தரே, பலகாலும் - அடிக்கடி, ஆள்

வாரி - கோட்டைப்பத்தேரியை, ஏறிப்பார்ப்பார் - ஏறிப்பார்ப்பார், சிலதினம் - சிலநாட்கள், இப்படி - இவ்விதமாக, செல்ல - கழிதலும், கலியனூர் - கலியநாயனூர், திரு - அழகிய, கரத்தில் - கையிலிருக்கின்ற, பந்தத்துக்கு - தீவட்டிக்காக, எண்ணெய் - எண்ணெயை, கொள்ள - வாங்க, நல்ல - நன்மையுடைய, பொருள் - திரவியம், ஒன்று - சற்றும், இன்றி - இல்லாமல், அணி - ஆபரணங்களும், ஆடை - வத்திரங்களும், எல்லாம் - (ஆகிய) எல்லாவற்றையும், நல் - மிக்க, பொருளுக்கு - திரவியத்துக்கு, ஈந்து - கொடுத்துவிட்டு, அதுவும் - அந்தத்திரவியமும், செல்ல - செலவழிந்துபோயும், பின்பு - பிறகு, அங்கு - அந்தக்காட்டில், உலரும் - காய்ந்து கிடக்கின்ற, விறகினை - கட்டைகளை, பொறுக்கி - பொறுக்கிக்கட்டி, சுளுந்தா - சுளுந்துபோல, சுட்டு - கொளுத்தி, அ - அந்த, ஒளியினால் - வெளிச்சத்தினால், சில இரவு - சிலராத்திரி, அங்கு - அவ்விடத்தில், உவந்து - மகிழ்ச்சியுடன், காத்தார் - காவல்செய்தார், எ - று.

(பொ - ரை.) அநேக ஜனங்கள் சுற்றியிருந்து காவல் செய்வதைப்போல, ஒருத்தரே அடிக்கடிக் கோட்டைப்பத்தேரியை யேறிப் பார்ப்பார், சிலநாட்கள் இவ்விதமாகக் கழிதலும் கலியநாயனூர் அழகிய கையிலிருக்கின்ற தீவட்டிக்காக வெண்ணெயை வாங்க நன்மையுடைய திரவியம் சற்றுமில்லாமல் ஆபரணங்களும் வத்திரங்களுமாகிய வெல்லாவற்றையும் மிக்க திரவியத்துக்குக் கொடுத்துவிட்டு அந்தத்திரவியமும் செலவழிந்துபோயும், பிறகு அந்தக்காட்டிற் காய்ந்துகிடக்கின்ற கட்டைகளைப் பொறுக்கிக்கட்டிச் சுளுந்துபோலக்கொளுத்தி அந்தவெளிச்சத்தினால் சிலராத்திரி அவ்விடத்தில் மகிழ்ச்சியுடன் காவல்செய்தார். (௧௧)

ஆலயத்தை யாமகன்றிந் தனத்துக் கேகில்
 ஐயர்க்குத் தனியெனத்தா மரையிற் சாத்துஞ்
சேலையுடன் றலைவாசங் கொளுத்தி நோக்கிச்
 சென்றதற்பி னொன்றுமிலாச் செய லராகி
வேலைவிட முண்டபிரான் கோயில் காக்கும்
 விருப்பினாற் றலைமயிரை மேன்மு டிந்து
கோலமுறும் பந்தமெனக் கொளுத்தி யீசன்
 கோயில்வலம் வந்தன்பாற் குலவும் போதில்.

(ப - ரை.) யாம் - நாம், ஆலயத்தை - திருக்கோயிலை, அகன்று - விட்டு, இந்தனத்துக்கு-விறகுக்காக, ஏகில் - போவோமாயின், ஐயர்க்கு - சிவபெருமானுக்கு, தனி - தனித்திருத்தல்நேரிடும், என்ன - என்றுயோசித்து, தாம் - தாம், அரையில் - இடையில், சாத்தும் - உடுத்திருக்கின்ற, சேலையுடன் - வத்திரத்தையும், தலைவாசம் - தலைப்பாகையையும், கொளுத்தி - சுட்டெரித்து, நோக்கி-பார்த்து, சென்றதன்பின் - அதுவும் செலவழிந்து போனபிறகு, ஒன்றும் - ஒருபொருளும், இல்லாச்செயலராகி - இல்லாதவராகி, வேலை - திருப்பாற்கடலிலுண்டான, விடம் - விஷத்தை, உண்ட - திருவமுதுசெய்தருளிய, பிரான் - சிவபெருமானது, கோயில் - திருவாலயத்தை, காக்கும் - காவல்செய்யவேணுமென்கின்ற, விருப்பினால் - விருப்பத்தினால், தலைமயிரை - தலைமயிரை, மேல் - மேலே, முடிந்து - சேர்த்துக்கட்டி, கோலம்உறும் - அழகுபொருந்திய, பந்தம்என்ன - தீவட்டியைப்போல, கொளுத்தி - சுட்டெரித்து, ஈசன்கோயில் - சிவாலயத்தை, அன்பால் - அன்புடன், வலம்வந்து - பிரதக்ஷணஞ் செய்து, குலவும்போதில் - விளங்குகின்ற காலத்தில், எ - று.

**(போ - ரை.)** நாம் திருக்கோயிலைவிட்டு விறகுக்காகப் போவோமாயின் சிவ பெருமானுக்குத் தனித்திருத்தல் நேரிடுமென்று யோசித்து, தாம் இடையில் உடுத்திருக்கின்ற வத்திரத்தையும் தலைப்பாகையையும் சுட்டெரித்துப் பார்த்து, அதுவும் செலவழிந்துபோனபிறகு, ஒரு பொருளுமில்லாதவராகி, திருப்பாற்கடலி லுண்டான விஷத்தைத் திருவமுதுசெய்தருளிய சிவபெருமானது திருவாலயத்தைக் காவல்செய்யவேணுமென்கின்ற விருப்பத்தினால் தலைமயிரை மேலேசேர்த்துக்கட்டி யழகுபொருந்திய திவட்டியைப்போலச் சுட்டெரித்துச் சிவாலயத்தை யன்புடன் பிரதக்ஷிணஞ்செய்து விளங்குகின்ற காலத்தில். (௨௦)

**வெ**ந்துமயி ரங்கிகபா லத்தை மேவி
விரவுறவும் விமலர்பத்தி விலங்கா ராகிச்
சிந்தைமகிழ்ந் தாலிக்குங் கலிய னார்தஞ்
செய்யதுய்ய மனத்துறதிச் செயலை யெல்லாங்
கந்தவித ழிச்சடையார் திருவு ளத்தாற்
கண்டுலகர்க் கிவர்தன்மை காட்ட வேண்டி
யுந்துமழ விடையின்மே லுமையுந் தாமு
முருகுசிவ கலியர்முன முவந்து போந்து.

**(ப - ரை.)** மயிர்-தலைமயிர், வெந்து-சுட்டு, அங்கி-நெருப்பானது, கபாலத்தை - மண்டையை, மேவி-பற்றிக்கொண்டு, விரவுறவும்-கொழுந்து விட்டெரிந்து நெற்றி யின் கமலத்திலிருக்கின்ற பரஞ்சோதியும் வெளிப்படுதற்குரிய ஜ்யோதியாரம்பிக் கவும், விமலர்பத்தி - சிவபக்தியினின்றும், விலங்காராகி - நீங்காதவராகி, சிந்தை மகிழ்ந்து - மனமகிழ்ந்து, ஆலிக்கும் - ஆரவாரஞ்செய்கின்ற, கலியனார் - கலியநாயனு ருடைய, செய்ய - மேன்மைபொருந்திய, துய்ய - பரிசுத்தமான, மனத்துறுதி - மனோத்ருடத்தின், செயலை-திருப்பணியை, எல்லாம்-முழுதும், கந்தம்-நறு மணங் கமழ்கின்ற, இதழி - கொன்றைமலரைத்தரித்திருக்கின்ற, சடையார் - ஜடாபாரத் தையுடைய சிவபெருமானவர், திருவுளத்தால்-திருவுள்ளத்தில், கண்டு-உணர்ந்து, உலகர்க்கு - உலகத்தார்க்கு, இவர் - இவருடைய, தன்மை - பெருமையை, காட்ட வேண்டி - காண்பிக்கும்பொருட்டு, உந்தும்-செலுத்துகின்ற, மழவு-இளமைப்பருவத் தையுடைய, விடையின்மேல் - வ்ருஷபவாஹனத்தின்மீது, உமையும் - உமாதேவி யாரும், தாமும் - தாமும், உருகு - மனங்கசிகின்ற, சிவம் - மங்களகரம்பொருந்திய, கலியர்-கலியநாயனார்க்கு, முன்னம்-முன்னர், உவந்து-சந்தோஷத்துடன், போந்து - எழுந்தருளி, எ-று.

**(போ - ரை.)** தலைமயிர் சுட்டு நெருப்பானது மண்டையைப்பற்றிக்கொண்டு, கொழுந்து விட்டெரிந்து நெற்றியின் கமலத்திலிருக்கின்ற பரஞ்சோதியும் வெளிப் படுதற்குரிய ஜ்யோதி யாரம்பிக்கவும், சிவபக்தியினின்றும் நீங்காதவராகி மன மகிழ்ந்து ஆரவாரஞ்செய்கின்ற கலியநாயனாருடைய மேன்மைபொருந்திய பரிசுத்த மான மனோத்ருடத்தின் திருப்பணியை முழுதும் நறுமணங்கமழ்கின்ற கொன்றை மலரைத்தரித்திருக்கின்ற ஜடாபாரத்தையுடைய சிவபெருமானவர் திருவுள்ளத்தி லுணர்ந்து, உலகத்தார்க்கு இவருடையபெருமையைக்காட்டும் பொருட்டு, செலுத்து கின்ற இளமைப்பருவத்தையுடைய வ்ருஷபவாஹனத்தின்மீது உமாதேவியாரும் தாமும் மனங்கசிகின்ற மங்களகரம்பொருந்திய கலியநாயனார்க்கு முன்னர் சந்தோஷத்துடனெழுந்தருளி. (௨௧

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சடையணி கங்கை யாளுஞ் சந்திரத் துண்டுங் கண்டத்
தடைவுறு நீல வாலத் தழகுடன் மழுமான் கையும்
புடைபெயர் கருணை நோக்கும் பொருந்துவார் தம்மேற் பேரன்
புடைபராங் கலியர் தம்மை யுனக்குவேண் டியதே தென்றார்.

(ப-ரை.) சடையணி - ஜடாபாரத்திலிருக்கின்ற, கங்கையாளும் - காங்காதேவியாரும், சந்திரத்துண்டும் - பிறைச்சந்திரனும், கண்டத்து - ஸ்ரீகண்டத்தில், அடைவுறும் - இருக்கின்ற, நீலம் - கறுத்தநிறமுள்ள, ஆலத்து - விஷத்தின், அழகுடன் - அழகும், மழு-மழுப்படையும், மான்-மானும் (இருக்கின்ற) கையும்-திருக்கரங்களும், புடைபெயர் - பிறழ்கின்ற, கருணைநோக்கும் - க்ருபாகடாக்ஷமும், பொருந்துவார் - உடையவராகிய சிவபெருமானனவர், தம்மேல்-தமது மீது, பேர்அன்புடையவராம் - மிக்கவிருப்பத்தையுடையவராகிய, கலியர் தம்மை - கலியநாயனாரை (நோக்கி), உனக்கு - உனக்கு, வேண்டியது - தேவையானவரம், ஏது - யாது, என்றார் - என்று கேட்டருளினார், எ-று.

(பொ-ரை.) ஜடாபாரத்திலிருக்கின்ற கங்காதேவியாரும், பிறைச்சந்திரனும், ஸ்ரீகண்டத்திலிருக்கின்ற நீலநிறமுள்ள விஷத்தின் அழகும், மழுப்படையும் மானுமிருக்கின்ற திருக்கரங்களும், பிறழ்கின்றக்ருபாகடாக்ஷமுமுடையவராகிய சிவபெருமானனவர் தமது மீது மிக்க விருப்பத்தையுடையவராகிய கலியநாயனாரை நோக்கி, உனக்குத் தேவையான வரம் யாது? என்று கேட்டருளினார். (உஉ)

என்றலும் பணிந்தெ ழுந்தங் கெனக்குவேண் டியதா மின்ப
மொன்றுவிண் ணப்பஞ் செய்கே னுறமிடித் தேவர் போலத்
துன்றுமிவ் வனத்தி ராமற் றூயநின் கயிலா யத்தே
யின்றிவண் கணங்க ளோடுஞ் செல்லுதும் வாவா வென்றார்.

(ப-ரை.) என்றலும்-என்று (சிவபெருமான்) கேட்டருளுதலும் (கலியநாயனார்), பணிந்து - சாஷ்டாங்கமாக வணங்கி, எழுந்து-(மேலே) எழுந்து, அங்கு-அவ்விடத்தில், எனக்கு - அடியேனுக்கு, வேண்டியதாம் - தேவையான, இன்பம் ஒன்று - ஒரு வரத்தை, விண்ணப்பஞ்செய்கேன் - கேட்டுக்கொள்வேன், உறு - மிக்க, மிடி - தரித்திரம்பிடித்த, தேவர்போல - தேவர்களைப்போல, துன்றும் - அடர்ந்த, இவ் வனத்து-இந்தக்காட்டில், இராமல்-இருக்காமல், தூய-பரிசுத்தமாகிய, நின் - உனது, கயிலாயத்து - ஸ்ரீ மஹாகைலாஸத்திற்கு, இன்று - இப்போது, இவண் - இவ்விடத்திலுள்ள, கணங்களோடும் - சிவகணங்களுடனும், செல்லுதும் - போவோம், வாவா - விரைவாகவாரும், என்றார் - என்றழைத்தார், எ - று.

(பொ - ரை.) என்று சிவபெருமான் கேட்டருளுதலும், கலியநாயனார் சாஷ்டாங்கமாக வணங்கி மேலேயெழுந்து, அவ்விடத்தில் அடியேனுக்குத் தேவையானவொருவரத்தைக் கேட்டுக்கொள்வேன், மிக்க தரித்திரம்பிடித்த தேவர்களைப்போல வடர்ந்த இந்தக் காட்டிலிருக்காமல் பரிசுத்தமாகிய உனது ஸ்ரீ மஹாகைலாஸத்திற்கு இப்போது இவ்விடத்திலுள்ள சிவகணங்களுடனும் போவோம் விரைவாக வாருமென்றழைத்தனர். (உ௩)

உருகிநின் றிவ்விண் ணப்ப முரைக்குநங் கலிய னார்மு
னரியபூ விமானந் தோன்ற வதனிடை யரனு மத்த
னிருமைசேர் கோயி றானுங் கலியரு மேறித் தேவர்
மருமலர் விழிக்க ணங்கள் வாழ்த்தவண் கயிலை புக்கார்.

(ப - ரை.) உருகி - மனங்கசிந்து, நின்று - திருமுன்னின்று, இ - இந்த, விண்ணப்பம் - வரத்தை, உரைக்கும் - கேட்டுக்கொள்கின்ற, நம்-நமது, கலியனார்-கலியநாயனார்க்கு, முன் - எதிரே, அரிய - சிறந்த, பூவிமானம் - பூந்தேர், தோன்ற-விளங்குதலும், அதனிடை - அதில், அரனும் - சிவபெருமானும், இருமைசேர் - மேன்மைபொருந்திய, அத்தன் கோயில் தானும் - சிவாலயமும், கலியரும் - கலியநாயனாரும், ஏறி - ஆரோகணித்து, தேவர் - தேவர்களும், மரு-வாசனைபொருந்திய, மலர் - தாமரைமலர்போலும், விழி - கண்களையுடைய, கணங்கள்-சிவகணங்களும், வாழ்த்த - துதிக்க, வண் - மேன்மைபொருந்திய, கயிலை - ஸ்ரீ மஹாகைலாஸத்தில், புக்கார் - பிரவேசித்தார்கள், எ - று.

(பொ - ரை.) மனங்கசிந்துத் திருமுன்னின்று, இந்த வரத்தைக் கேட்டுக்கொள்கின்ற நமது கலியநாயனார்க்கெதிரே சிறந்த பூந்தேர் விளங்குதலும் அதில் சிவபெருமானும், மேன்மை பொருந்திய சிவாலயமும், கலியநாயனாரும் ஆரோகணித்துத் தேவர்களும் வாசனைபொருந்திய தாமரைமலர்போலும் கண்களையுடைய சிவகணங்களும் துதிக்க, மேன்மைபொருந்திய ஸ்ரீ மஹாகைலாஸத்திற் பிரவேசித்தார்கள். (௨௪)

அத்தனை யழைக்கச் சென்றார் கயிலைபி னன்ப ரெல்லா
மத்தனை நிலயத் தோடே கலியனா ரழைத்துக் கொண்டே
யத்தமா விமான மேறிக் கயிலையி லணைந்தா ரென்றே
யத்தலோ கத்தோர் மண்ணோ ரதிசய முற்று ரார்த்தார்.

(ப - ரை.) அத்தனை - சிவபெருமானை, அழைக்க - அழைத்தலும், அன்பரெல்லாம் - சிவபக்தர்களனைவரும், கயிலையில் - ஸ்ரீமஹாகைலாஸத்திற்கு, சென்றார் - போனார்கள், அத்தனை - (ஆனால்) சிவபெருமானை, நிலயத்தோடு-திருக்கோயிலுடன், கலியனார் - கலியநாயனாரே, அழைத்துக்கொண்டு - கூட்டிக்கொண்டு, மா-பெருமை பொருந்திய, அத்தம் விமானத்து-ஸ்வர்ணரதத்தில், ஏறி-ஆரோகணித்து, கயிலையில்-ஸ்ரீமஹாகைலாஸத்தில், அணைந்தார்-சேர்ந்தார்கள், என்று-என்று, அத்தலோகத்தார்-தேவலோகத்தாரும், மண்ணோர்-பூலோகத்தாரும், அதிசயமுற்று-ஆச்சரியமடைந்து, ஆர்த்தார் - ஆரவாரித்தார்கள்.

(பொ - ரை.) சிவபெருமானை வழைத்தலும் சிவபக்தர்களனைவரும் ஸ்ரீமஹாகைலாஸத்திற்குப் போனார்கள். ஆனால் சிவபெருமானைத் திருக்கோயிலுடன் கலியநாயனாரே அழைத்துக்கொண்டு பெருமை பொருந்திய ஸ்வர்ணரதத்தில் ஆரோகணித்து ஸ்ரீமஹாகைலாஸத்திற் சேர்ந்தார்களென்றுத் தேவலோகத்தாரும் பூலோகத்தாரும் ஆச்சரியமடைந்து ஆரவாரித்தார்கள்.

(வி - ரை.) அத்தம்-பொன், அர்த்தமென்னும் வடசொற்றிரிபு. அத்தலோகம் - பொன்னுலகு (தேவலோகமெனவுமாம்.) (௨௫)

கலியநாயனார் புராணம் முற்றிற்று.

---

ஆகதிருவிருத்தம் - ௬௨அ.

உ

சிவமயம்.

# நமிநந்தியடிகணாயனார் புராணம்.

## கோச்சகக்கலிப்பா.

அவ்வழிசேர் கலியர்சிவத் தணைந்ததற்பி னவரைப்போற்
செவ்வியரா மேழையன்பர் சிவநேயத் ததிகனார்
வவ்வியத மிட்டலிங்க வடிவமலான் மற்றறியா
ரிவ்வழிசேர் நமிநந்தி யடிகளெனு மெழிற்பெயரார்.

(ப - ரை.) அ - அந்த, வழிசேர் - சீலத்தையுடைய, கலியர் - கலியநாயனார், சிவத்துஅணைந்ததற்பின் - சிவைக்யமானபிறகு, அவரைப்போல்-அவரைப்போலவே, செவ்வியர்ஆம் - சீலத்தையுடையவராகிய, ஏழையன்பர் - மூடபக்தர், சிவநேயத்து - சிவபக்தியில், அதிகனார் - சிறந்தவர், வவ்விய - விரும்புதற்குரிய, தம் - தமது, இஷ்டலிங்கவடிவம் - இஷ்டலிங்கமூர்த்தியே, அல்லால் - அல்லாமல், மற்று - வேறொருமூர்த்தியையும், அறியார் - தெரியாதவர், இவ்வழிசேர் - இப்படிப்பட்ட (நாயனார்), நமிநந்தியடிகள் - நமிநந்திநாயனார், என்னும் - என்கின்ற, எழில்- அழகிய, பெயரார் - திருநாமத்தினையுடையவர், எ - று.

(பொ - ரை.) அந்தச் சீலத்தையுடைய கலியநாயனார் சிவைக்யமானபிறகு, அவரைப்போலவே சீலத்தையுடைய மூடபக்தர், சிவபக்தியிற்சிறந்தவர், விரும்புதற்குரிய தமது இஷ்டலிங்க மூர்த்தியே யல்லாமல் வேறொரு மூர்த்தியையுந் தெரியாதவர், இப்படிப்பட்டநாயனார் நமிநந்தி நாயனாரென்கின்ற அழகிய திருநாமத்தினையுடையவர், எ - று.

(வி - ரை.) சிவத்து - சிவபெருமானிடத்தில். அணைந்ததற்பின் - சேர்ந்தபிறகு. சிவத்தணைதல் என்றது சாயுஜ்யபதவியை. (க)

இக்கடல்சூழ் வையகத்தோ ரெழிற்பதியிற் றிருவெழுச்சித்
தக்கவிழாத் தரிசிக்கத் தாமணைந்து தாண்டவஞ்செய்
விக்கிரகங் கண்டென்ன வியாதியோ வெனவஞ்சாப்
புக்கரனைப் பூசிக்கும் பூசுரனை வினவுவார்.

(ப - ரை.) இ - இந்த, கடல் - கடல், சூழ் - சூழ்ந்த, வையகத்து - உலகத்தில், ஓர் - ஒரு, எழில் - அழகிய, பதியில் - (திருக்காஞ்சீபுரமென்கின்ற) ஸ்தலத்தில், தக்க - சேவிக்கத்தகுந்த, திருவெழுச்சிவிழா - ப்ரஹ்மோத்ஸவத்தை, தரிசிக்க - தரிசிக்கும்பொருட்டு, தாம் - தாம், அணைந்து - (ஏகம்பரநாதர் திருவாலயத்தில்) சென்று, தாண்டவம்செய்விக்கிரகம் - ஸ்ரீநடராஜமூர்த்தியை, கண்டு - தரிசித்து, என்ன வியாதியோ - என்னநோயோ, என்ன - என்று, அஞ்சா - அஞ்சி, புக்கு - உள்ளேபோய், அரனை - சிவபெருமானை, பூசிக்கும் - பூஜைசெய்கின்ற, பூசுரனை - ப்ராஹ்மணனை, வினவுவார் - கேட்பாராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(போ - ரை.) இந்த க்ஷணத்திலே யிந்த வாதரோகம் நீங்குதற்குரிய ஔஷதம் இல்லாமற்போமாயின் அழகு பொருந்திய திருமேனிக்கு யாதுண்டாகுமோ? தெரிய வில்லையே! தந்தையாகிய அடியேங்களுடைய சிவபெருமானது திருமுடியும் சிறிது வளைந்திருந்தது, ஐயோ! இந்த ஜந்மரோகம் விரைவாக வொழிதற்குரிய ஔஷதம் யாது? என்று கேட்பாராயினர். (௪)

இவர்மிகவு மேழையன்ப ரெனவறிந்து சிவமறையோன்
கவலைதரு மிவ்வாதங் கடுகவிடு மருந்துண்டு
நவநிதியம் போதவென்கை நல்குதிரே லென்றளவி
லுவகையினற் றமதுசெல்வ முள்ளவெலாங் கொணர்ந்தளித்தார்.

(ப - ரை.) இவர் - இவர், மிகவும் - மிகவும், ஏழையன்பர்-மூடபக்தர், என்ன, என்று, அறிந்து - தெரிந்துகொண்டு, சிவமறையோன் - சிவப்ராஹ்மணன், நவம் - விரும்புதற்குரிய, நிதியம் - பொருளை, போத - மிகுதியாக, என்கை-எனதுகையில், நல்குதிரேல் - கொடுப்பீராயின், கவலைதரும் - துன்பஞ்செய்கின்ற, இ - இந்த, வாதம் - வாதரோகம், கடுக - விரைவாக, விடும்-நீங்குதற்குரிய, மருந்து-ஔஷதம், உண்டு-இருக்கின்றது, என்றளவில் - என்று சொன்னமாத்திரத்தில், உவகையினல் - சந்தோஷத்துடன், தமது - தமது, செல்வம் உள்ள வெல்லாம் - பொருளெல்லா வற்றையும், கொணர்ந்து - கொண்டுவந்து, அளித்தார் - கொடுத்தார், எ - று.

(போ - ரை.) இவர் மிகவும் மூடபக்தரென்று தெரிந்துகொண்டு, சிவப்ராஹ்மணன் விரும்புதற்குரிய பொருளை மிகுதியாக எனதுகையிற் கொடுப்பீராயின் துன்பஞ் செய்கின்ற இந்த வாதரோகம் விரைவாக நீங்குதற்குரிய ஔஷதம் இருக்கின்றதென்று சொன்னமாத்திரத்தில் சந்தோஷத்துடன் தமதுபொருளெல்லா வற்றையுங் கொண்டுவந்து கொடுத்தார். (௫)

எனையாள்வான் பிணியின்று நின்றுவிட்டால் யானுமென்றன்
மனையாளு மக்களுநின் வழியடிமை யெனவணங்க
வினையேது வேதியனவ் வெறுக்கைமுற்றுங் கைக்கொண்டு
நினைவார மகிழ்ந்துந னேர்த்திமருந் தெண்ணெயென்று.

(ப - ரை.) என்னை - அடியேனை, ஆள்வான் - ஆண்டருள்பவனாகிய சிவபெருமானது, பிணி - வாதரோகம், இன்று - இப்போதே, நின்றுவிட்டால்-நீங்கிவிடுமாயின், யானும் - நானும், என் - எனது, மனையாளும் - மனைவியும், மக்களும் - பிள்ளைகளும், நின்-உனது, வழியடிமை - வம்சபாரம் பரியமான அடிமையாவோம், என்ன- என்று, வணங்க - தொழுதலும், வினையேது - பிறவிக்குரிய வினைக்குத்தக்க, வேதியன் - சிவப்ராஹ்மணன், அ - அந்த, வெறுக்கைமுற்றும் - பொருளெல்லா வற்றையும், கைக்கொண்டு - வாரிக்கொண்டு, நினைவார - மனப்பூர்வமாக, மகிழ்ந்து- சந்தோஷித்து, நல் - மிகவும், நேர்த்தி - சிறந்த, மருந்தெண்ணெய் - மருந்தெண்ணெய், என்று - என்று சொல்லி, எ - று.

(போ - ரை.) அடியேனை யாண்டருள்பவனாகிய சிவபெருமானது வாதரோகம் இப்போதே நீங்கிவிடுமாயின் நானும், எனது மனைவியும், பிள்ளைகளும், உனது வம்ச பாரம்பரியமான வடிமையாவோமென்று தொழுதலும் பிறவிக்குரிய வினைக்குத் தக்க சிவப்ராஹ்மணன் அந்தப் பொருளெல்லாவற்றையும் வாரிக்கொண்டு மனப் பூர்வமாகச் சந்தோஷித்து மிகவும் சிறந்த மருந்தெண்ணெயென்று சொல்லி. (௬)

உய்யவந்த நமித்தண்டி யுடையார்கையிற் கொடுத்தகன்றான்
செய்யசித்த மகிழ்ந்தன்பர் தேவர்பிரான் மருங்கணைந்து
மெய்யதெல்லா நிறையவிட்டு விருப்பினான் மிகவருடத்
தையல்பங்கன் மெய்வாதந் தவிராமற் றளர்ந்தயர்ந்தார்.

(ப - ரை.) உய்ய - (பிறவிப்பிணியினின்றும்) உஜ்ஜீவிக்கும்பொருட்டு, வந்த-அவதரித்த, நமித்தண்டியுடையார் - நமித்தண்டிநாயனாருடைய, கையில் - கரத்தில், கொடுத்து - தந்து, அகன்றான் - சென்றான், அன்பர் - சிவபக்தரானவர், செய்ய சித்தம் - செம்மையாகியமனம், மகிழ்ந்து - மகிழ்ச்சியடைந்து, தேவர்பிரான்-தேவர்களுக்குத் தலைவனாகிய நடராஜமூர்த்தியின், மருங்கு - அருகில், அணைந்து-போய், மெய் எல்லாம் - திருமேனிமுழுதும், நிறைய - (மருந்தெண்ணெயை) நிரம்ப, இட்டு-பூசி, விருப்பினால் - அன்புடன், மிக - மிகவும், வருட - தேய்த்தலும், தையல் பங்கன் - உமாபாகனாகிய நடராஜமூர்த்தியின், மெய் - திருமேனியையடைந்திருந்த, வாதம் - வாதரோகம், தவிராமல்-நீங்காமையினால், தளர்ந்து-மெலிந்து, அயர்ந்தார்-சோர்ந்தார், எ - று.

(பொ - ரை.) பிறவிப் பிணியினின்றும் உஜ்ஜீவிக்கும் பொருட்டு அவதரித்த நமித்தண்டி நாயனாருடைய கரத்திற்றந்து சென்றான், சிவபக்தரானவர் செம்மையாகிய மனம் மகிழ்ச்சியடைந்து, தேவர்களுக்குத் தலைவனாகிய நடராஜமூர்த்தியின் அருகிற்போய்த் திருமேனிமுழுதும் மருந்தெண்ணெயை நிரம்பப்பூசி யன்புடன் மிகவும் தேய்த்தலும் உமாபாகனாகிய நடராஜமூர்த்தியின் திருமேனியை யடைந்திருந்த வாதரோகம் நீங்காமையினால் மெலிந்து சோர்ந்தார். (எ)

அந்தோநின் றிருமேனிக் கணைவதே னிவ்வாத
மெந்தாயா னென்செய்கே னெனமுகத்தி லறைந்துகொண்டு
முந்தாவ லாலழுது மோகத்தால் விழுந்துபுரண்
டிந்தாயா னென்னுயிர்மாய்த் திறக்கின்றே னெனவெழுந்து.

(ப - ரை.) அந்தோ - ஐயோ, நின் - உனது, திருமேனிக்கு - திருமேனிக்கு, இ - இந்த, வாதம் - வாதரோகம், அணைவது - வருதற்குக் காரணம், என் - யாது, எந்தாய்-எமது அன்னையே, யான் - நான், என்செய்கேன்-யாதுசெய்வேன், என்ன-என்று, முகத்தில் - முகத்தில், அறைந்துகொண்டு - அடித்துக்கொண்டு, முந்து - முற்பட்ட, ஆவலால் - அன்பினால், அழுது - அழுது, மோகத்தால் - மயக்கத்தினால், விழுந்து - (கீழே) விழுந்து, புரண்டு - உருண்டு, இந்தா - இதோ, யான் - நான், என் உயிர் - எனது பிராணனை, மாய்த்து - மடித்து, இறக்கின்றேன் - சாகின்றேன், என்ன - என்று, எழுந்து - (மேலே) கிளம்பி, எ - று.

(பொ - ரை.) ஐயோ! உனது திருமேனிக்கு இந்த வாதரோகம் வருதற்குக் காரணம் யாது? எமது அன்னையே! நான் யாது செய்வேன்? என்று முகத்திலடித்துக்கொண்டு, முற்பட்ட அன்பினாலழுது, மயக்கத்தினால் கீழேவிழுந்துருண்டு, இதோ! நான் எனது பிராணனை மடித்துச் சாகின்றேனென்று மேலே கிளம்பி. (அ)

கழுத்தினிடைப் படைவைத்துக் கடுகவரிந் திடும்பொழுது
மழுக்கரத்தார் மதிப்பிளவும் வானதியு மாசுணமுஞ்
செழித்தசடை முடியுநெற்றிச் செய்யகண்ணுஞ் சிறுநகையு
முழுக்காள கந்தரமு மாகவந்து முன்னின்றே.

(ப - ரை.) கழுத்தினிடை - கண்டத்தில், படை - கத்தியை, வைத்து - பூட்டி, கடுக-விரைவாக, அரிந்திடும் பொழுது-அறுக்கின்றகாலத்தில், மழு-மழுப்படையை யுடைய, கரத்தார் - திருக்கரத்தை யுடைய சிவபெருமான், மதிப்பிளவும் - பிறைச்சந்திரனும், வான் - மேன்மைபொருந்திய, நதியும் - கங்கையும், மாசுணமும்- சர்ப்பாபரணமும், செழித்த-அழகிய, சடைமுடியும்-ஜடாபாரமும், செய்ய-அழகிய, நெற்றிக்கண்ணும்-நெற்றிக்கண்ணும், சிறுநகையும்-புன்சிரிப்பும், முழு-பூரணமான, காளகந்தரமும்-நீலகண்டமும், ஆக-ஆகிய (திருக்கோலமாக), வந்து-எழுந்தருளி, முன் - எதிரே, நின்று - நின்று, எ-று.

(பொ-ரை.) கண்டத்தில் கத்தியைப்பூட்டி விரைவாக வறுக்கின்ற காலத்தில் மழுப்படையையுடைய திருக்கரத்தையுடைய சிவபெருமான் பிறைச் சந்திரனும் மேன்மை பொருந்திய கங்கையும் சர்ப்பாபரணமும் அழகிய ஜடாபாரமும் அழகிய நெற்றிக்கண்ணும் புன்சிரிப்பும் நீலகண்டமுமாகிய திருக்கோலத்துடன் வந்தருளி யெதிரே நின்று. (க)

நில்லுநில்லு கழுத்தரிய னின்னைநன்று யாமகிழ்ந்தே
மெல்லையற்ற நேயத்தா யேதுனக்கு வேண்டியதா
னல்லதுகே ளளிப்பமென நமித்தண்டி யார்வணங்கிச்
சொல்லுமிகத் தழுதழுத்துத் தொழுதுநின்று சொற்றயர்வார்.

(ப-ரை.) எல்லையற்ற - மட்டில்லாத, நேயத்தாய் - அன்புடையவனே, நில்லு நில்லு - நிற்கநிற்க, கழுத்து - கண்டத்தை, அரியல் - அறுத்துக்கொள்ளாதே, யாம் - நாம், நின்னை - உன்னை, நன்றாய் - செவ்வையாய், மகிழ்ந்தேம் - சந்தோஷித்தோம், உனக்கு-உனக்கு, வேண்டியது-தேவையானவரம், ஏது-யாது, நல்லது-நல்லவரத்தை, கேள் - கேட்டுக்கொள்ளும், அளிப்பம் - அநுக்ரஹஞ்செய்வோம், என்ன - என்று கட்டளையிடுதலும், நமித்தண்டியார் - நமித்தண்டி நாயனார், வணங்கி - (சாஷ்டாங்கமாக) பணிந்து, சொல்லும்-நாவும், மிக-மிகவும், தழுதழுத்து-தடுமாறி, தொழுது - வணங்கி, நின்று - நின்று, சொற்று அயர்வார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்) எ-று.

(பொ - ரை.) மட்டில்லாத அன்புடையவனே! நிற்க நிற்க, கண்டத்தை யறுத்துக்கொள்ளாதே, நாம் உன்னைச்செவ்வையாய்ச் சந்தோஷித்தோம், உனக்குத்தேவையான வரம் யாது? நல்ல வரத்தைக் கேட்டுக்கொள்ளும், அநுக்ரஹஞ்செய்வோமென்று கட்டளையிடுதலும், நமித்தண்டிநாயனார் சாஷ்டாங்கமாகப்பணிந்து நாவும் மிகவும் தடுமாறி வணங்கி நின்று சொல்வாராயினர், எவ்வாறெனின். (௧0)

எனக்கொன்று மிச்சையிலை யெம்பெருமா னின்னுடைய
வனப்பொன்றுந் திருமேனி வாதத்தால் வளைந்ததெலா
முனக்கின்று குணமாகி யொண்மைபெற்றாற் போதுமென
வினைக்கஞ்சு நமித்தண்டி மெய்யன்பர் விளம்புதலும்.

(ப - ரை.) எம்பெருமான் - எமது சிவபெருமானே, எனக்கு - அடியேனுக்கு, ஒன்றும் - ஒருவரமும், இச்சையில்லை - தேவையில்லை, நின்னுடைய - உன்னுடைய, வனப்பு ஒன்றும் - அழகுபொருந்திய, திருமேனி - திருமேனியானது, வாதத்தால் - வாதரோகத்தினால், வளைந்தது-மடங்கியிருந்த பிணி, எல்லாம்-முழுதும், உனக்கு - உனக்கு, இன்று - இப்போது, குணமாகி-சுகப்பட்டு, ஒண்மை-நன்மை, பெற்றால் -

அடையுமாயின், போதும்-போதும், என்ன-என்று, வினைக்கு - (பிறவிக்கேதுவாகிய) இருவினைக்கு, அஞ்சும் - பயப்படுகின்ற, நமித்தண்டி - நமித்தண்டி நாயனாராகிய, மெய்-உண்மையான, அன்பர் - பக்தர், விளம்புதலும் - சொல்லுதலும், எ - று.

(பொ-ரை.) எமது சிவபெருமானே! அடியேனுக்கொருவரமும் தேவையில்லை, உன்னுடைய வழகுபொருந்திய திருமேனியானது வாதரோகத்தினால் மடங்கி யிருந்த பீடை முழுதும் உனக்கு இப்போது சுகப்பட்டு நன்மை யடையுமாயின் போதுமென்று பிறவிக்கேதுவாகிய இருவினைக்குப் பயப்படுகின்ற நமித்தண்டி நாயனாராகிய உண்மையான பக்தர் சொல்லுதலும். (௧௧)

வாதமல நமக்கிதுயாம் வையகத்தை யைந்தொழிலா
னீதிதர நிறுத்துகின்ற நிருத்தங்கா ணியறியென்
றாதரவா லெம்பெருமா னருணடமா டலையறைவான்
பூதலமும் பாதலமும் பொன்னுலகும் பவுரிகொள்ள.

(ப-ரை.) நமக்கு - நமக்கு (உண்டாயிருக்கின்ற), இது - இந்த வளைவானது, வாதம் - வாதரோகம், அல்ல - அல்ல, யாம் - நாம், வையகத்தை - உலகத்தை, ஐந் தொழிலால் - பஞ்சகிருத்யத்தினால், நீதிதர - ஒழுங்காக, நிறுத்துகின்ற - நிலைக்கச் செய்கின்ற, நிருத்தம் - நடனமாம், நீ - நீ, அறி - தெரிந்து கொள்ளும், என்று - என்று, ஆதரவால் - விருப்பத்துடன், எம்பெருமான் - எமது சிவபெருமான், அருள்-கிருபாரூபமாகிய, நடமாடலை-திருநடனத்தை, அறைவான்-சொல்லத்தொடங்கினான் (எவ்வாறெனின்), பூதலமும் - பூலோகமும், பாதலமும் - பாதாளலோகமும், பொன் உலகும் - ஸ்வர்க்கலோகமும், பவுரிகொள்ள - வலமிடமாகச் சூழ்ந்துவரப் பவுரி யாடுதலும், எ-று.

(பொ-ரை.) நமக்குண்டாயிருக்கின்ற யிந்த வளைவானது வாதரோகமல்ல, நாம் உலகத்தைப் பஞ்சகிருத்யத்தினால் ஒழுங்காக நிலைக்கச்செய்கின்ற நடனமாம், நீ தெரிந்து கொள்ளுமென்று, விருப்பத்துடன் எமது சிவபெருமான் கிருபாரூப மாகிய திருநடனத்தைச் சொல்லத்தொடங்கினான், எவ்வாறெனின் :—பூலோகமும் பாதாளலோகமும் ஸ்வர்க்கலோகமும் வலமிடமாகச் சூழ்ந்துவரப் பவுரியாடுதலும்.

(வி-ரை.) பவுரி-கூத்தின்விகற்பம். ஐந்தொழில்-ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபவம், அநுக்ரஹம் என்பன. ஆத்மாக்களுக்குத் தநு கரண புவந போக்கங்களைச் சக்தியாகிய மூலகாரணத்தினின்றுந் தோற்றுவிப்பதும், அவற்றை நிலைபெறச் செய்வதும், அவற்றை மூலகாரணத்தி லொடுக்குவதும், ஆத்மாக்களை யிருவினைப்பய னாகிய போக்யப்பொருள்களி லமிழ்த்துவதும், அவ்வாத்மாக்களுக்குப் பாசத்தை நீக்கிச் சிவைக்யத்தை விளைப்பதுமாகிய பஞ்சகிருத்யமாம். குமரகுருபரஸ்வாமிகள் அருளியதாவது :—

பூமலி கற்பகப் புத்தேள் வைப்பு
நாம நீர் வரைப்பி னனில வளாகமு
மேனைய புவனமு மெண்ணீங் குயிருந்
தானே வகுத்ததுன் றமருகக் கரமே
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
யனைத்தையுங் காப்பதுன் னமைத்தகைத் தலமே
தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலு

மாற்றுவ தாரழ லமைத்ததோர் கரமே
யீட்டிய வினைப்பய னெவற்றையு மறைத்துநின்
றூட்டுவ தாகுநின் றூன்றிய பதமே
யடுத்தவின் னுயிர்கட் களவில்பே ரின்பங்
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே
யித்தொழி லைந்துநின் மெய்த்தொழி லாக. (௪௨)

அரிபிரம ராதிவிண்ணோ ரனைவோரு மரகரெனப்
பரிபுரத்தின் றொனிபுவனப் பதினாலுஞ் செவிடுபட
வுரியவுமை கைத்தாள முறமுழக்க வுயிர்ப்பினாற்
றரணியெட்டுக் கிரிசேடன் றலைபுரட்டி யலையவே.

(ப - ரை.) அரி-விஷ்ணுமூர்த்தியும், பிரமர்-ப்ரஹ்மதேவரும், ஆதி-முதலாகிய, விண்ணோர் - தேவர்கள், அனைவோரும் - எல்லாரும், அர அர - ஹர: ஹர:, என்ன-என்று கோஷிக்கவும், பரிபுரத்தின் - பாதச்சிலம்பின், தொனி - சத்தமானது, புவனம்பதினாலும்-பதினான்குலோகங்களும், செவிடுபட-செவிப்புலனற்றுப்போகவும், உரிய - மனைவியாராகிய, உமை - உமாதேவியார், கைத்தாளம் - கைத்தாளம், உற-மிகவும், முழக்க - முழக்கஞ்செய்யவும், உயிர்ப்பினால் - மூச்சினால், தரணி - பூமியும், எட்டுக்கிரி - அஷ்டகுலபர்வதங்களும், சேடன் - ஆதிசேஷனது, தலை - தலைகளும், புரட்டி - உருட்டி, அலைய - வருந்தவும், எ - று.

(பொ - ரை.) விஷ்ணுமூர்த்தியும் ப்ரஹ்மதேவரு முதலாகிய தேவர்களெல்லாரும் ஹர: ஹர: என்று கோஷிக்கவும், பாதச்சிலம்பின் சத்தமானது பதினான்கு லோகங்களும் செவிப்புலனற்றுப் போகவும், மனைவியாராகிய உமாதேவியார் கைத்தாளம் மிகவும் முழக்கஞ்செய்யவும், மூச்சினாற் பூமியும் அஷ்டகுலபர்வதங்களும் ஆதிசேஷனது தலைகளும் உருட்டி வருந்தவும். (௪௩)

(வி - ரை.) பதினான்கு உலகம்-மேலுலகம் எழு, கீழுலகம் எழு. அவையாவன பூலோகம், புவலோகம், சுவலோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம், அதலம், விதலம், சுதலம், தராதலம், மஹாதலம், ரசாதலம், பாதாளம் என்பன. அஷ்டகிரி - கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம் என்பன.

சடைமுடியின் மதிவெதும்பித் தண்ணமுதந் தாழ்ந்துதலைத்
தொடைமிசையின் வீழவுயிர் தோன்றியவர் தோத்திரஞ்செய்
திடையறமுன் முறையிடயா மெழினடமா டுதல்புரிவே
மடையுமவர்க் கேதுவர மெனக்கேட்டங் கருளுவேம்.

(ப - ரை.) சடை முடியின் - ஜடாபாரத்திலுள்ள, மதி - சந்திரன், வெதும்பி-சோதித்து (அதனால்), தண் - குளிர்ச்சிபொருந்திய, அமுதம்-அமிர்ததாரையானது, தாழ்ந்து-சரிந்து, தலைத்தொடைமிசையின்-தலைமாலையின் (மேல்), வீழ-விழுந்தமையால், உயிர் - பிராணன், தோன்றியவர் - அடைந்ததேவர்கள், தோத்திரஞ்செய்து-துதித்து, இடையற - இடைவிடாமல், முன் - சந்நிதியில், முறையிட - விண்ணப்பஞ்செய்தலும், யாம் - நாம், எழில் - அழகுபொருந்திய, நடமாடுதல் - நடனம், புரிவேம் - விரும்பிச்செய்வோம், அடையும் அவர்க்கு - பிராணன் பெற்றதேவர்களுக்கு, வரம் - (வேண்டிய) வரம், ஏது - யாது, என்ன - என்று, கேட்டு - கேட்டு, அங்கு - அவ்விடத்தில், அருளுவேம் - அநுக்ரஹஞ்செய்வோம், எ - று.

(போ - ரை.) ஜடாபாரத்திலுள்ள சந்திரன் கொதித்ததனால் குளிர்ச்சிபொருந்திய அமிர்ததாரையானது சரிந்து சிரமாலையின்மேல் விழுந்தமையால் பிராணன் அடைந்ததேவர்கள் துதித்து இடைவிடாமல் சந்நிதியில் விண்ணப்பஞ்செய்தலும், நாம் அழகுபொருந்திய நடநம் விரும்பிச் செய்வோம், பிராணன் பெற்றதேவர்களுக்கு வேண்டிய வரம் யாது? என்று கேட்டு அவ்விடத்தில் அநுக்ரஹஞ் செய்வோம்.

(வி - ரை.) தலைமாலை யணிதலாவது - சர்வ சம்மார காலந்தோறும் ஒடுங்குகிற பிரமரது தலைகளையும் விஷ்ணுக்களது எலும்புகளையும் சிவபெருமான் மாலையாகத் தொடுத்து எப்பொழுதும் அழிவில்லாமல் எஞ்சிநின்ற பொருள் தாம் ஒருவரேயென்று அப்பிரமனாதியோர் அறிந்து வழிபட்டு நற்கதியடைதற்பொருட் டாபரணமாக வணிதலாம். (௧௪)

ஐந்தொழிலாந் தாண்டவத்தை யன்பரறிந் தாலிப்பா
ரிந்தநிலை நாட்டியத்தி னியல்பிதென வறிவித்தே
நந்தநமித் தண்டிகளை நம்பர்விமா னத்தேற்றி
வந்துறுநங் கயிலையென மகிழ்ந்துகொடு மன்னினார்.

(ப - ரை.) ஐந்தொழிலாம் - பஞ்சக்ருத்யமாகிய, தாண்டவத்தை - நடநத்தை, அன்பர் - பக்தகோடிகள், அறிந்து - உணர்ந்து, ஆலிப்பார் - ஆரவாரஞ் செய்வார்கள், இந்த நிலை - இவ்விதமான, நாட்டியத்தின் - நடநத்தின், இயல்பு - பெருமை, இது - இத்தன்மைத்து, என்ன - என்று, அறிவித்து - தெரிவித்து, நம் - நமது, நமித்தண்டிகளை - நமித்தண்டிநாயனாரை, நம்பர் - சிவபெருமான், விமானத்து - விமானத்தில், ஏற்றி - ஆரோகணிக்கச்செய்து, நம் - நமது, கயிலை - ஸ்ரீ மஹா கைலாஸத்திற்கு, வந்து உறும் - வந்துசேரும், என்ன - என்று, மகிழ்ந்து - சந்தோஷத்துடன், கொடு - அழைத்துக்கொண்டு, மன்னினார் - சேர்ந்தருளினார், எ.று.

(போ - ரை.) பஞ்சக்ருத்யமாகிய நடநத்தைப் பக்தகோடிகள் உணர்ந்து ஆரவாரஞ்செய்வார்கள், இவ்விதமான நடநத்தின் பெருமை இத்தன்மைத்தென்று தெரிவித்து, நமது நமித்தண்டிநாயனாரைச் சிவபெருமான் விமானத்திலாரோகணிக்கச்செய்து, நமது ஸ்ரீ மஹா கைலாஸத்திற்கு வந்துசேருமென்று சந்தோஷத்துடன் அழைத்துக்கொண்டு சேர்ந்தருளினார். (௧௫)

நமித்தண்டிநாயனார் புராணம் முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - ௯௪௩.

—()—

## திருவிளையாடற் சருக்கம் முற்றிற்று.

சிவமயம்.

# திருக்கூட்டச்சருக்கம்.

## சகளேசமாதிராசையர் புராணம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

துறத்தமே தகனே போற்றி சோதிமெய்த் தகனே போற்றி
கறுத்தபா தகனே போற்றி கைக்கொள்வித் தகனே போற்றி
யறத்தர்சா தகனே போற்றி யருட்கொள்வத் தகனே போற்றி
மறத்தர்பே தகனே போற்றி வசவபோ தகனே போற்றி.

(ப - ரை.) துறத்த - (முற்றும்) துறந்த, மேதகனே - ஞானியே, போற்றி - சரணார்த்தி, சோதிமெய்த்தகனே-தேஜோமயனே, போற்றி-சரணார்த்தி, கறுத்தர் - கோபிஷ்டர்களுக்கு, பாதகனே-பொல்லாதவனே, போற்றி-சரணார்த்தி; கைக்கொள் வித்தகனே - ஜ்ஞாநஸ்வரூபனே, போற்றி - சரணார்த்தி, அறத்தர் - புண்யாத்மாக் களுக்கு, சாதகனே - சிநேகனே, போற்றி - சரணார்த்தி, அருள்கொள் வத்தகனே - க்ருபாமூர்த்தியே, போற்றி - சரணார்த்தி, மறத்தர் - பாபிஷ்டர்களுக்கு, பேதகனே - பகைவனே, போற்றி - சரணார்த்தி, வசவபோதனே - வசவாசார்யனே, போற்றி - சரணார்த்தி, எ-று.

(பொ - ரை.) முற்றுந்துறந்த ஞானியே! சரணார்த்தி, தேஜோமயனே! சரணார்த்தி, கோபிஷ்டர்களுக்குப்பொல்லாதவனே! சரணார்த்தி, ஜ்ஞாநஸ்வரூபனே! சரணார்த்தி, புண்யாத்மாக்களுக்குச் சிநேகனே! சரணார்த்தி, க்ருபாமூர்த்தியே! சரணார்த்தி, பாபிஷ்டர்களுக்குப் பகைவனே! சரணார்த்தி, வசவாசார்யனே! சரணார்த்தி.

(வி - ரை.) துறத்த-மெலித்தல்விகாரம். மெய்-சரீரம். தகன் - குணமுள்ளவன். கறுத்தபாதகனே - பாபரஹிதனே எனினுமாம். வித்தகம் - ஞானம். அறம் - தர்மம், அதனையுடையவர் அறத்தர்.வத்தகன்-வர்த்தகன் என்னும் வடசொற்றிரிபு. பேதகம்-வேற்றுமை. போதகன் - போதிப்பவன். துறத்தலாவது தானல்லாதவுடம்மை யானென்னுமகப்பற்றினையும் தன்னோடியைபில்லாத பொருளை யெனதென்னும் புறப்பற்றினையும் அறவே கைவிடுதல். ஞானம்-பதிபசுபாசங்களையுள்ளவாறுணர்ந்து தன்னைத் தானறியு முணர்ச்சி. சோதி-எல்லா வொளியையும் உள்ளடக்கி நிற்பதோர் பரஞ்சோதி. பாவம் - கொலை, களவு, கள், காமம், குருத்ரோஹம் என்பன. (க)

பத்தருட் பத்த ராவார் பரமமா யேசர் தம்மு
ணித்தமா யேசா ராவார் நேயநற் சரணர் தம்பா
னெத்துமெய்ச் சரண ராவார் வேந்தருள் வேந்த ராவா
ரொத்தமா பெரியோர் தம்மு ளுயர்தரும் பெரியோ ராவார்.

(ப - ரை.) பத்தருள் - சிவபக்தர்களில், பத்தர் ஆவார் - ஸத்பக்தராயுள்ளவர், பரமம்-மேலான,மாயேசர்தம்முள்-மாஹேஶ்வரர்களில்,நித்தம்-அழிவில்லாத,மாயேசர் ஆவார் - வீரமாஹேஶ்வரராயுள்ளவர், நேயம்-அன்புசெய்தற்குரிய, சரணர்கம்பால்

சிவசரணர்களில், மெத்தும் - புகழத்தக்க, மெய்-உண்மையான, சரணர் ஆவார்-சிவ சரணராயுள்ளவர், வேந்தருள்-அரசர்களில், வேந்தர்ஆவர்-(சிறந்த) அரசராயுள்ளவர், ஒத்த - தமக்குத்தாமே நிகரான, மா - பெருமைபொருந்திய, பெரியோர்தம்முள் - ஜங்கம மூர்த்திகளில், உயர்தரும் - சிறந்த, பெரியோர் ஆவார் - ஜங்கமமூர்த்தியா யுள்ளவர், எ-று.

(பொ-ரை.) சிவபக்தர்களில் ஸத்பக்தராயுள்ளவர், மேலானமாஹேஶ்வரர்களில் அழிவில்லாத வீரமாஹேஶ்வரராயுள்ளவர், அன்புசெய்தற்குரிய சிவசரணர்களிற் புகழத்தக்க வுண்மையான சிவசரணராயுள்ளவர், அரசர்களிற் சிறந்த அரசரா யுள்ளவர், தமக்குத்தாமே நிகரான பெருமைபொருந்திய ஜங்கமமூர்த்திகளிற் சிறந்த ஜங்கம மூர்த்தியாயுள்ளவர்.

(வி-ரை.) நித்தம் - நித்யம்என்னும் வடசொற்றிரிபு. மெச்சும் என்னும் சொல் எதுகையின்பம் நோக்கி மெத்துமென்றாயிற்று. பத்தர்-பக்தர் என்னும் வட சொற்றிரிபு. மாயேசர் - மாஹேஶ்வரர் என்னும் வடசொற்றிரிபு. (உ)

பரமனை விரும்பார் தம்மைப் பரிசியார் பண்பான் மிக்கார்
விரவிய நாத கீத வீணைநற் பரதம் வல்லார்
திரமறை முடிவ றிந்தார் சித்தாந்தந் தெரிந்து வல்லா
ரரியவில் வாழ்க்கை யிச்சை யற்றுளார் போலி ருப்பார்.

(ப - ரை.) பரமனை - சிவபெருமானை, விரும்பார்தம்மை - நேசியாதவரை, பரிசியார்-(பிணமென்றுநினைத்து) தொடாதவர், பண்பால்- (வீரசைவ) ஆசாரத்தில், மிக்கார் - சிறந்தவர், விரவிய நாதம் - (இனிய) ஓசையையுடைய, கீதம் - சங்கீதம் (பாடுவதிலும்), வீணை - வீணை (வாசிப்பதிலும்), நல் - சிறந்த, பரதம் - பரத (நாட் டியத்திலும்), வல்லார் - வல்லவர், திரம் - அழிவில்லாத, மறைமுடிவு - வேதாந் தத்தை, அறிந்தார் - அறிந்தவர், சித்தாந்தம் - (வீரசைவ) சித்தாந்தத்தையும், தெரிந்து வல்லார் - அறிந்தவர், அரிய - (போற்றுதற்கு) அருமையாகிய, இல் வாழ்க்கை-இல்லறத்தில், இச்சை-விருப்பு, அற்று-இல்லாமலிருந்தும்,உள்ளார்போல்- (விருப்பு) உள்ளவர்போல, இருப்பார் - காணப்படுவர், எ - று.

(பொ - ரை.) சிவபெருமானை நேசியாதவரைப் பிணமென்று நினைத்துத் தொடாதவர், வீரசைவாசாரத்திற் சிறந்தவர், இனிய வோசையையுடைய சங்கீதம் பாடுவதிலும்வீணைவாசிப்பதிலும் சிறந்தபரதநாட்டியத்திலும் வல்லவர், அழிவில்லாத வேதாந்தத்தை யறிந்தவர், வீரசைவ சித்தாந்தத்தையு மறிந்தவர், போற்றுதற் கருமையாகிய இல்லறத்தில் விருப்பில்லாமலிருந்தும் விருப்புள்ளவர்போலக் காணப் படுவர்.

(வி-ரை.) பரதம் மூன்றுவகைப்படும்; அவை தாண்டவம், நிருத்தம், நாட்டியம் என்பன. அவற்றுள் தாண்டவமும் நிருத்தமும் அகக்கூத்தென்றும், நாட்டியம் புறக்கூத்தென்றுஞ் சொல்லப்படும். பரதமென்று நூற்குப் பெயர் வந்தது பாவம், ராகம், தாளமென மூன்றையு முணர்த்துங்காரணத்தால். இதன்விரிவைப் பரத சாத்திரத்திற்காண்க. கீதம் எழுவகைப்படும், அவை ஷட்கம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்பன. இவற்றிற்குரிய எழுத்துக்கள், ஸ ரி க ம ப த நி என்பன, இவை தமிழில் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. வீணை - ஒருவிதமான நரம்பினால் யாத்த கருவி. மறை - வேதம். முடிவு - அந்தம். வேதாந்தமென்றது உபநிஷத்துக்களை. வீரசைவ சித்

தாந்தம் - அங்கலிங்க ஸ்தலங்களையுணர்ந்து குருலிங்க ஜங்கம வழிபாட்டினால் உலக விச்சையையொழித்து மநோலயமெய்திச் சிவலிங்கைக்ய நிலையதாகிய சாயுஜ்ய பதமுத்தியை யுணர்த்துவதாம்.

இயமமா நியம மாதி யெண்வகை யோகம் வல்லார்
கமையுளார் கருணை மிக்கார் கனத்தநற் சரித்தி ரத்தா
ரமைதரு மிசைப டைத்தா ரணிமையி னம்பை யென்னுந்
சமமிலாத் தலத்தார் தம்பேர் சகளெச மாதி ராசர்.

(ப-ரை.) மா - பெருமைபொருந்திய, இயமம்நியமம்ஆதி - இயமநியமமுதலாகிய, எண்வகையோகம் - அஷ்டாங்கயோகத்தில், வல்லார் - வல்லவர், கமையுள்ளார் - உபசாந்தநிலையுடையவர், கருணை-ஜீவகாருண்யத்தில், மிக்கார் - சிறந்தவர், கனத்த - மேன்மை பொருந்திய, நல்சரித்திரத்தார் - நற்குணமுடையவர், அமைதரும் - (குணத்திற்கு) பொருந்திய, இசை - புகழினை, படைத்தார் - அடைந்தவர், அணிமையின் - அழகில், சமம்இல்லா - நிகரற்ற, அம்பை - திருவம்பை, என்னும் - என்கின்ற, தலத்தார் - ஸ்தலத்தையுடையவர், தம் - தமது, பேர் - திருநாமம், சகளேசமாதிராசர் - சகளேசமாதிராசையர் (என்பது), எ-று.

(பொ - ரை.) பெருமைபொருந்திய இயமநியமமுதலிய அஷ்டாங்கயோகத்தில் வல்லவர், உபசாந்தநிலை யுடையவர், ஜீவகாருண்யத்திற் சிறந்தவர், மேன்மை பொருந்திய நற்குணமுடையவர், குணத்திற்குப் பொருந்திய புகழினையடைந்தவர், அழகில்நிகரற்ற திருவம்பையென்கின்ற ஸ்தலத்தையுடையவர், தமது திருநாமம் சகளேசமாதிராசையரென்பது.

(வி - ரை.) அஷ்டாங்கயோகம் - இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதியென்பன. இவற்றுள் இயமமாகிய வைந்தும் பூர்வயோகமென்றும், தாரணை தியானம் சமாதியாகிய மூன்றும் உத்தர யோகமென்றும் கூறுப. இயமம் - கொல்லாமை முதலியன வாகப்பத்துபகுதியினை யுடையது. நியமம் - தபம் முதலியனவாகப் பத்து பகுதியினையுடையது. ஆசனம் - சுத்தாஸனம்முதலியனவாக வெண்பத்துநான்கு பகுதியினையுடையது.பிராணாயாமம்- ரேசகபூரக கும்பகங்களினால் சரீர ஜனிதவாயு நிரோதநஞ்செய்தல். பிரத்தியாகாரம்- விஷயங்களில் இந்திரியங்களைத்தடுத்து உண்ணோக்கி யிருத்தல்.தாரணை - அந்தக் கரணம் இடைவிடாது ஒரு வகைப்பட்டிருத்தல். தியானம் - கடவுளைச் சிந்தனை செய்தல். சமாதி - சுபாசுபவாசனைகள் ஒழிந்தடங்கியிருத்தல். இவ்விதமாகக் கர்மகாண்டிகள் அநுசரிப்பதாம். சிவலிங்கபூஜையை யறவே கைவிட்டபடியால் இயம முதலிய வைந்தும் கர்மயோகங்களாம். அவர்கள் குறிக்கப்படும் வஸ்துக்கள் உத்தரயோகமாகி மூன்றுவகைப்படும். முதலாவது - ஸாக்ஷாத் பரதத்வ மென்பது. இரண்டாவது-பிந்துவானது அகார உகார மகாரங்களா யிம்மூன்றும்சுத்தபிந்துவின் சம்பந்தமென்பது. மூன்றாவது - சந்திரனது கலாதாரையைப்போலவும், சூரியனது கிரணங்களைப் போலவும், மின்னலினது பிரகாசத்தைப் போலவும் பிரகாசித்த லென்பது. இவ்வெட்டும் பிறமதத்தர்களாற் கொள்ளற் பாலது. இந்தக் கர்ம காண்டத்தில் லிங்கமென்னும் ஸப்த ப்ரயோகமின்றாதலின் இவற்றை யங்கீகரித்தல் தக்கதன்று. ஆயின் வீரமஹேஸ்வரர்களின் சிவலிங்கயோகமென்பது யாதெனின், ப்ரஹ்மரந்த்ரத்திலிருக்கின்ற நாதசைதந்யம்போன்ற பரமசித் கலையையே பாவ மன மென்கின்ற கரங்களினால் ஸ்ரீ ஸத்குருவானவர் கொணர்ந்து சம்பந்தஞ்செய்தவராகி

பாவத்தில் ஸத்ஸ்வரூபம்போன்ற இஷ்டலிங்கமேயென்று துணிந்து ஒரு வஸ்து வானது தநு மந பாவங்களில் இஷ்ட ப்ராண பாவமென்கின்ற பேதமறியாமல் இஷ்டலிங்கத்தைக் கட்புலனாற் கிரகித்து, ப்ராணலிங்கத்தை மநோ ஜ்ஞானத்தினாற் கிரகித்து, த்ருப்திலிங்கத்தைப் பாவலிங்கத்தினாற் கிரகித்து, இம்மூவகைலிங்கங்களை யநுஷ்டித்து லிங்கத்துடன் கூடி லிங்கமே தான் தானாகி நிலைப்பதாம். (௪)

மேதினி புரப்பார் தூய்ய விதரண வித்தை யுள்ளம்
போதவே படைத்து வாழ்வார் புனிதநற் குருவி லிங்கத்
தாதர மிக்க பத்தி யன்பினா லதிக ராகி
யோதுந லுபசா ரங்க ளளவில வுவந்து செய்வார்.

(ப-ரை.) மேதினி - உலகத்தை, புரப்பார் - ஆளப்பட்டவர், தூய்ய - மேன்மை யாகிய, விதரணம் - விவேகமென்கின்ற, வித்தை - ஞானத்தை, போதவே - மிகுதி யாகவே, உள்ளம்படைத்துவாழ்வார் - மனத்திலுடையவர், புனிதநல் - மிகவும் பரி சுத்தமாகிய, குருலிங்கத்து - குரு லிங்க ஜங்கமத்தில், ஆதரம்மிக்க - மிகவும் விரும்பு தற்குரிய, பத்தி - பக்தியென்கின்ற, அன்பினால் - அன்புசெய்வதில், அதிகராகி - சிறந்தவராகி, ஓதும் - (வேதாகமங்களில்) சொல்லப்பட்ட, அளவில - கணக்கற்றவை யாகிய, நல் - சிறந்த, உபசாரங்கள் - உபசாரனைகளை, உவந்து - சந்தோஷத்துடன், செய்வார் - பண்ணுபவர், எ-று.

(பொ - ரை.) உலகத்தையாளப்பட்டவர், மேன்மையாகிய விவேகமென்கின்ற ஞானத்தை மிகுதியாகவே மனத்திலுடையவர், மிகவும் பரிசுத்தமாகிய குருலிங்க ஜங்கமத்தில் மிகவும் விரும்புதற்குரிய பக்தியென்கின்ற அன்புசெய்வதிற் சிறந்த வராகி, வேதாகமங்களிற் சொல்லப்பட்ட கணக்கற்றவையாகிய சிறந்த உபசரனை களைச் சந்தோஷத்துடன் பண்ணுபவர்.

(வி - ரை.) குருலிங்க மென்றதனால் ஜங்கமத்தையும் வருவித்துப்பொருட் கொண்டேம். உபசாரங்கள் மூன்று வகைப்படும், அவை சோடசோப சாரங்கள், தசோபசாரங்கள், பஞ்சோபசாரங்கள் என்பன. (௫)

அடிக்கடி பெரியோர் தம்மை யன்பினா லகலாதேத்திக்
கடிப்பல மலர்நீர் கொண்டு காதலாற் றம்ம கத்து
நெடிக்கிலா தருச்சித் துன்னி நிமலனைத் துதித்து மற்றும்
பிடித்ததண் டிகையின் மூப்பத் திரண்டிரா கம்பி ணித்தே

(ப - ரை.) அடிக்கடி - பலகாலும், பெரியோர் தம்மை - ஜங்கமமூர்த்திகளை, அன்பினால் - அன்புடன், அகலாது - விட்டு நீங்காமல், ஏத்தி - துதித்து, கடி - நறு மணங்கமழ்கின்ற, பல - நானாவிதமான, மலர்கொண்டு - புஷ்பங்களினாலும், நீர் கொண்டு - திருமஞ்சனத்தினாலும், காதலால் - அன்புடன், தம் - தமது, அகத்து - திருமாளிகையில், நெடிக்கிலாது - தாமதஞ்செய்யாமல், அருச்சித்து - பூஜைசெய்து, உன்னி - தியானித்து, நிமலனை - சிவபெருமானை, துதித்து - ஏத்தி, மற்றும் - மேலும், பிடித்த - (ஸ்வரம்) பிடித்த, தண்டிகையில் - வீணையில், மூப்பத்திரண்டுஇராகம் - முப்பத் திரண்டு ராகங்களையும், பிணித்து - தொடுத்து, எ-று.

(பொ-ரை.) பலகாலும் ஜங்கமமூர்த்திகளையன்புடன் விட்டு நீங்காமல் துதித்து, நறுமணங்கமழ்கின்ற புஷ்பங்களினாலும் திருமஞ்சனத்தினாலும் அன்புடன் தமது

திருமாளிகையில் தாமதஞ்செய்யாமல் பூஜைசெய்து தியானித்து, சிவபெருமானைத் துதித்து, மேலும் ஸ்வரம்பிடித்த வீணையில் முப்பத்திரண்டு ராகங்களையுந்தொடுத்து.

(வி - ரை.) இராகம் ௩௨ - பைரவிமுதலியவை. (௬)

நேரத்திற் கேற்ற ராக நித்தர்தஞ் சகளே சர்க்கே
யாரத்தாம் பாடி மற்று மகமகிழ்ந் தந்த வாறு
சீருற்ற கவுரி வீணை யிராவண வீணை செய்ய
மேருக்கொள் கரத்தான் வைகும் வெள்ளியங் கயிலை வீணை.

(ப - ரை.) நேரத்திற்கு ஏற்ற-காலத்திற்குத்தக்க, ராகம்-ராகங்களை, தம்-தமது, நித்தர் - சிவபெருமானாகிய, சகளேசர்க்கு - சகளேஸ்வரர்க்கு, ஆர - மனப்பூர்வமாக, தாம் - தாம், பாடி - பாடி, மற்றும் - மேலும், அகமகிழ்ந்து - மனமகிழ்ந்து, அந்த வாறு - அப்படியே, சீர் உற்ற - சிறந்த, கவுரிவீணை - கௌரீவீணை, இராவணவீணை - ராவணவீணை, செய்ய - அழகிய, மேருக்கொள் கரத்தான் வைகும் வெள்ளியங்கயிலை வீணை - கைலாஸவீணை, எ - று.

(பொ - ரை.) காலத்திற்குத் தக்க ராகங்களைத் தமது சிவபெருமானாகிய சகளேஸ்வரர்க்கு மனப்பூர்வமாகத் தாம் பாடி, மேலும் மனமகிழ்ந்து, அப்படியே சிறந்த கௌரீவீணை, இராவணவீணை, அழகிய கைலாஸவீணை.

(வி - ரை.) மேரு - மஹாமேருகிரியாகிய வில்லை. கொள் - ஏந்தின. கரத்தான்- திருக்கரத்தை யுடையவனாகிய சிவபெருமான். வைகும் - எழுந்தருளியிருக்கின்ற. அம் - அழகிய. வெள்ளிகயிலை - வெள்ளியங்கிரியாகிய மஹா கைலாஸம். (௭)

அம்பர வீணை மற்று மருந்திறற் பிநாகி வீணை
நம்புசா ரங்க வீணை நச்சுகச் சப்ப வீணை
யெம்பிரான் மாதி ராச ரினியரா கங்க ளாலே
தம்பிரான் சகளே சன்சீர் தாழ்வற நவிற்றி நாளும்.

(ப-ரை.) அம்பர வீணை-கின்னரவீணை, மற்றும்-மேலும், அரு - (கிடைத்தற்கு) அருமையாகிய, திறல் - வலிமையுடைய, பிநாகிவீணை - பிநாகிவீணை, நம்பு - விரும்புதற்குரிய, சாரங்கவீணை - சாரங்கவீணை, நச்சு - விரும்புதற்குரிய, கச்சப்பவீணை - கச்சபவீணை (ஆகியயிவற்றை), எம் - எமது, பிரான் - தலைவராகிய, மாதிராசர் - மாதிராசையர், இனிய - (செவிக்கு) இனிமையான, ராகங்களாலே-ராகங்களினாலே, தம்பிரான் - சிவபெருமானாகிய, சகளேசன் - சகளேஸ்வரனுடைய, சீர் - புகழினை, தாழ்வு அற - தவறில்லாமல், நாளும் - தினந்தோறும், நவிற்றி - வாசித்து, எ - று.

(பொ - ரை.) கின்னரவீணை, மேலும் கிடைத்தருமையாகிய வலிமையுடைய பிநாகிவீணை, விரும்புதற்குரிய சாரங்கவீணை, விரும்புதற்குரிய கச்சபவீணையாகிய யிவற்றை எமது தலைவராகிய மாதிராசையர் செவிக்கினிமையான ராகங்களினாலே சிவபெருமானாகிய சகளேஸ்வரனுடைய புகழினைத் தவறில்லாமல் தினந்தோறும் வாசித்து. (௮)

நல்லவ ரதிச யிக்கு நாளிலில் வாழ்க்கை யிச்சை
யில்லரா யுலகா ளின்ப மில்லரா மிவரோர் நாளின்
மல்லிரா சைய ரென்றோர் மன்னவ ருலகங் காத்தி
தல்லலென் றயன்று நித்த னரும்பருப் பதத்த ணைந்தே.

(ப - ரை.) நல்லவர் - ஜங்கமமூர்த்திகள், அதிசயிக்கும் - ஆச்சரியப்படுகின்ற; நாள்-காலத்தில், இல்வாழ்க்கை-இல்லறத்தில், இச்சையில்லராய் - பற்றற்றவராகியும், உலகு - உலகத்தை, ஆள் - ஆள்வதில், இன்பம் இல்லர் ஆம் - சுகமில்லாதவராகியிருக்கின்ற, இவர்-இவர், ஓர்நாளில்-ஒரு தினத்தில், மல்லிராசைபர்-மல்லிராசையர், என்று ஓர் மன்னவர் - என்றொரு அரசர், உலகம் - உலகத்தை, காத்து - (நெடுநாள்) ஆண்டு, ஈது - இந்த வரசாட்சி யானது, அல்லல் என்று - துன்பமென்று, அகன்று - துறந்து, சித்தன் - சிவபெருமானாகிய மல்லிகார்ஜுனேச்வரர் (எழுந்தருளியிருக்கின்ற), அரு - தரிசித்தற்கருமையாகிய, பருப்பதத்து - ஸ்ரீசைலத்தில், அணைந்து - சேர்ந்து, எ-று.

(பொ - ரை.) ஜங்கமமூர்த்திகள் ஆச்சரியப்படுகின்ற காலத்தில் இல்லறத்திற் பற்றற்றவராகியும் உலகத்தை யாள்வதில் சுகமில்லாதவராகியு மிருக்கின்ற இவர் ஒரு தினத்தில் மல்லிராசைய ரென்றொரு அரசர் உலகத்தை நெடுநாள் ஆண்டு இந்த வரசாட்சியானது துன்பமென்று துறந்து சிவபெருமானாகிய மல்லிகார்ஜுனேச்வரர் எழுந்தருளியிருக்கின்ற தரிசித்தற்கருமையாகிய ஸ்ரீசைலத்திற் சேர்ந்து.

(வி - ரை.) பருப்பதம் - பர்வதம் என்னும் வடசொற்றிரிபு. இதுமலைகளெல்லாவற்றிற்கும்பொதுப்பெயராயினும் ஈண்டைக்கேற்ப ஸ்ரீசைலத்தை யுணர்த்திற்று. பருப்பதம் என்றுமேல் வருதலினால் சித்தன் என்றதற்கு மல்லிகார்ஜுனேச்வரரென்று பொருட் கொண்டோம்.

அங்கணிச் சலத்த ராகி யானந்த மோக ராகித்
துங்கவில் லஞ்சூழ் காவிற் றுணிந்துறு மல்லி ராசர்
தங்கருத் ததிக பத்தித் தன்மையுஞ் சமாதி யோகம்
பொங்கலுஞ் சிவானு போகம் பொருந்தலுங் குணமும் பண்பும்.

(ப-ரை.) அங்கண் - அவ்விடத்தில், நிச்சலத்தராகி - (மனோ) சலனமற்றவராகி, ஆனந்தமோகராகி - சிவானந்தத்தில் விருப்பமுள்ளவராகி, துங்கம் - பரிசுத்தமாகிய, வில்லம் சூழ் காவில் - வில்வவனத்தில், துணிந்து - மனோத்ருடமடைந்து, உறும் - தவஞ்செய்கின்ற, மல்லிராசர்-மல்லிராசையருடைய, கருத்து-நோக்கத்தையும், அதிக- சிறந்த, பத்தி - பக்தியின், தன்மையும் - பெருமையையும், சமாதி யோகம் - சிவயோக சமாதியின், பொங்கலும் - சிறப்பையும், சிவானுபோகம் - சிவாநுபவச்செல்வத்தை, பொருந்தலும் - அடைந்திருத்தலையும், குணமும் - சன்மார்க்கத்தையும், பண்பும் - பெருமையையும், எ-று.

(பொ - ரை.) அவ்விடத்தில் மனோசலனமற்றவராகிச் சிவானந்தத்தில் விருப்பமுள்ளவராகிப் பரிசுத்தமாகிய வில்வவனத்தில் மனோத்ருடமடைந்து தவஞ்செய்கின்ற மல்லிராசையருடைய நோக்கத்தையும், சிறந்த பக்தியின் பெருமையையும், சிவயோக சமாதியின் சிறப்பையும், சிவாநுபவச்செல்வத்தை யடைந்திருத்தலையும், சன்மார்க்கத்தையும், பெருமையையும். (௧0)

வந்துமா பெரியோர் சொல்ல மகிழ்ந்துநம் மாதி ராசர்
சிந்தையி லன்பாய்க் கேளாத் தேசத்தி லாசை யின்றி
யந்தமா யோகி தன்னை யரும்பெருந் தவத்தி னானை
யெந்தநாட் கண்ட வன்று ளியான்வழி படுவே னென்று.

(ப - ரை.) மா - பெருமைபொருந்திய, பெரியோர் - ஜங்கமமூர்த்திகள், வந்து சொல்ல - வந்துசொல்லுதலும், நம் - நமது, மாதிராசர் - மாதிராசையர், மகிழ்ந்து - சந்தோஷப்பட்டு, சிந்தையில் - மனத்தில், அன்பாய் - விருப்பத்துடன், கேளா - கேட்டு, தேசத்தில் - உலகவாழ்க்கையில், ஆசையின்றி - பற்றற்று, அந்த - அந்த, மா - பெருமைபொருந்திய, யோகிதன்னை - சிவயோகியை, அரு - (கிடைத்தற்கு) அருமையாகிய, பெரு - மேன்மைபொருந்திய, தவத்தினானை - ஜங்கமமூர்த்தியை, எந்தநாள்-எக்காலத்தில், கண்டு-தரிசித்து, அவன்தாள் - அவனுடைய திருவடிகளை, யான்-அடியேன், வழிபடுவேன் - சேவிப்பேன், என்று - என்று, எ - று.

(பொ - ரை.) பெருமைபொருந்திய ஜங்கமமூர்த்திகள் வந்து சொல்லுதலும், நமது மாதிராசையர் சந்தோஷப்பட்டு, மனத்தில் விருப்பத்துடன் கேட்டு, உலக வாழ்க்கையிற் பற்றற்று, அழகுபொருந்திய சிவயோகியை கிடைத்தற் கருமை யாகிய ஜங்கமமூர்த்தியை யெக்காலத்திற் றரிசித்து, அவனுடைய திருவடிகளை யடியேன் சேவிப்பேனென்று. (௧௧)

அப்பருப் பதத்தை யுன்னி யஞ்சலி செய்து போற்றி
செப்பரு மாதி ராசர் செப்புவார் கேதா ரத்தி
லொப்பினீர் பருகிற் காசி யுற்றிறந் திடிலா முத்தி
யிப்பெருந் தவம்வ ருத்த மெளியதன் றென்ன வெண்ணி.

(ப - ரை.) அப்பருப்பதத்தை - அந்த ஸ்ரீசைலத்தை, உன்னி - தியானித்து, அஞ்சலிசெய்து - கைகூப்பிவணங்கி, போற்றி - துதித்து, செப்பு அரு-சொல்லுதற் கரிய, மாதிராசர் - மாதிராசையர், செப்புவார் - சொல்வாராயினர், (எவ்வாறெனின்), கேதாரத்தில் - ஸ்ரீ கேதார க்ஷேத்ரத்திலுள்ள, ஒப்பு இல் - நிகரற்ற, நீர்-தீர்த்தத்தை, பருகில் - உண்பாராயினும், காசி - ஸ்ரீ காசிக்ஷேத்ரத்தை, உற்று - அடைந்து, இறந்திடில் - மரிப்பாராயினும், முத்தியாம் - மோக்ஷம் சித்திக்கும், இப்பெருந்தவம்- இந்தப் பெரியதவஞ்செய்தலாலுண்டாகின்ற, வருத்தம் - துன்பம், எளியது அன்று- அல்பமல்ல, என்று எண்ணி - என்று நினைத்து, எ - று.

(பொ - ரை.) அந்த ஸ்ரீ சைலத்தைத் தியானித்துக் கைகூப்பி வணங்கித் துதித்துச் சொல்லுதற்கரிய மாதிராசையர் சொல்வாராயினர், எவ்வாறெனின்:— ஸ்ரீ கேதார க்ஷேத்ரத்திலுள்ள நிகரற்ற தீர்த்தத்தை யுண்பாராயினும் ஸ்ரீ காசி க்ஷேத்ரத்தையடைந்து மரிப்பாராயினும் மோக்ஷம் சித்திக்கும், இந்தப் பெரியதவஞ் செய்தலாலுண்டாகின்ற துன்பம் அல்பமல்லவென்று நினைத்து.

(வி - ரை.) ஸ்ரீ கேதாரக்ஷேத்ரம் இமயமலைச் சாரலிலுள்ளது. (௧௨)

அன்னகர்ச் சிகரங் கண்டார்க் கவ்வயின் முத்தி யாரு
மென்னல்சத் தியமா மந்த வெழிற்கிரி யடுத்துப் பார்ப்போர்
மன்னுபுண் ணியத்தி லக்க மட்டிலை யாத லாலே
முன்னியத் தலத்து வாழ்வோர் முக்கணா ராவ ரன்றே.

(ப-ரை.) அன்னகர் - அந்த க்ஷேத்ரத்தின், சிகரம் - சிகரத்தை, கண்டார்க்கு - (தூரத்திலிருந்து) தரிசனஞ்செய்பவர்களுக்கு, அவ்வயின்-அவ்விடத்திலேயே, முத்தியாகும் - மோக்ஷமுண்டாகும், என்னல் - என்று சொல்வது, சத்தியமாம் - உண்மை

யாகும், அந்த - அந்த, எழில் - அழகு பொருந்திய, கிரி-ஸ்ரீசைலத்தை, அடுத்து - அடைந்து, பார்ப்போர்-தரிசனஞ்செய்பவர்கள், மன்னும்-அடைகின்ற, புண்ணியத்து-புண்யத்தின், இலக்கம் - கணக்கு, மட்டில்லை - அளவில்லை, ஆதலால் - ஆகையால், முன்னி - யோசித்து, அத்தலத்து - அந்த க்ஷேத்ரத்தில், வாழ்வோர்-வசிப்பவர்கள், முக்கண்ணர் - சிவபெருமானே, ஆவர் - ஆவார்கள், எ-று.

(பொ-ரை.) அந்த க்ஷேத்ரத்தின் சிகரத்தைத் தூரத்திலிருந்து தரிசனஞ்செய்பவர்களுக்கு அவ்விடத்திலேயே மோக்ஷமுண்டாகுமென்று சொல்வதுண்மையாகும், அந்த வழகு பொருந்திய ஸ்ரீசைலத்தையடைந்து தரிசனஞ்செய்பவர்கள் அடைகின்றபுண்யத்தின் கணக்கு அளவில்லை, ஆகையால் யோசித்து அந்த க்ஷேத்ரத்தில் வசிப்பவர்கள் சிவபெருமானே யாவார்கள். (௧௩)

மிக்கநற் றீர்த்தங் கட்கும் விண்ணவர் முனிவோர் கட்குந்
தக்கமா தான மாகிச் சாதக சித்த ராஞேர்
பக்கமா னவைய ளித்துப் பணிந்தமா னிடருக் கன்பா
லக்கணத் தின்ப நல்கும் பருப்பதத் தளவார் சொல்வார்.

(ப - ரை.) மிக்க நல் - மிகச்சிறந்த, தீர்த்தங்கட்கும் - புண்யதீர்த்தங்களுக்கும், விண்ணவர் - தேவர்களுக்கும், முனிவோர்கட்கும் - தபோதனர்களுக்கும், தக்க - யோக்கியமான, மா - பெருமைபொருந்திய, தானமாகி - இருப்பிடமாகி, சாதகம் - யோகப்பயிற்சியில்வல்ல, சித்தராஞேர் - சித்தர்கள், பக்கம் ஆனவை - வேண்டினவைகளை, அளித்து-உதவி, பணிந்த-வணங்குகின்ற, மானிடர்க்கு-மனிதர்களுக்கு, அன்பால் - விருப்பத்துடன், அக்கணத்து - அந்த நிமிஷத்திலேயே, இன்பம் - பேரின்பத்தை, நல்கும் - அநுக்ரஹஞ்செய்யவல்ல, பருப்பதத்து - ஸ்ரீசைலத்தின், அளவு - மஹத்வத்தை, சொல்வார்-சொல்லவல்லவர், ஆர்-யார், (யாருமில்லை யென்றபடி), எ-று.

(பொ-ரை.) மிகச்சிறந்த புண்யதீர்த்தங்களுக்கும் தேவர்களுக்குந் தபோதனர்களுக்கும் யோக்கியமான பெருமைபொருந்திய விருப்பிடமாகி, யோகப்பயிற்சியில் வல்ல சித்தர்கள் வேண்டினவைகளை யுதவி, வணங்குகின்ற மனிதர்களுக்கு விருப்பத்துடன் அந்த நிமிஷத்திலேயே பேரின்பத்தை யநுக்ரஹஞ்செய்யவல்ல ஸ்ரீசைலத்தின் மஹத்வத்தைச் சொல்லவல்லவர் யார்? யாருமில்லையென்றபடி. (௧௪)

வந்தகத் தியன்பு டைக்க மண்ணுள்வீழ்ந் ததுபு தைந்து
விந்திய மந்த ரந்தான் விண்டுவின் கரத்தா னின்ற
தந்திவா னிறத்தோ னெந்தை யங்கைவில் லாய்த்து மேரு
வுந்தரிக் கஞ்சி முன்னீ ரொளித்தது மைநா கந்தான்.

(ப - ரை.) விந்தியம் - விந்தியபர்வதமானது, அகத்தியன் - அகஸ்த்யமஹாமுனிவர், வந்து - எழுந்தருளி, புடைக்க - மோத, மண்ணுள் - பூமியில், புதைந்து வீழ்ந்தது - சாய்ந்தமிழ்ந்துவிட்டது, மந்தரம் - மந்தரபர்வதமானது, விண்டுவின் - விஷ்ணுமூர்த்தியின், கரத்தால் - கையினல், நின்றது - (மத்தாகி) நிலைத்துவிட்டது, மேரு - மஹாமேருபர்வதமானது, அந்திவான் - செவ்வானம்போன்ற, நிறத்தோன்- செந்நிறமுடைய, எம் - எமது, எந்தை - தந்தையாகிய சிவபெருமானுடைய, அம் - அழகிய, கையில் - திருக்கரத்தில், வில் ஆய்த்து - வில்லாகி வளைந்துவிட்டது, மைநாகம் - மைநாகபர்வதமானது, உந்து - பின்றொடர்ந்து வருகின்ற, அரிக்கு - இந்திரனுக்கு, அஞ்சி-பயந்து, முன்னீர்-கடலில், ஒளித்தது-மறைந்துவிட்டது, எ-று.

(போ - ரை.) விந்திய பர்வதமானது அகஸ்த்ய மஹாமுனிவர் எழுந்தருளிமோதப் பூமியில் சாய்ந்தமிழ்ந்துவிட்டது, மந்தர பர்வதமானது விஷ்ணுமூர்த்தியின் கையினால் மத்தாகி நிலைத்துவிட்டது; மஹாமேரு பர்வதமானது செவ்வானம்போன்ற செந்நிறமுடைய எமது தந்தையாகிய சிவபெருமானுடைய அழகிய திருக்கரத்தில் வில்லாகி வளைந்துவிட்டது, மைநாக பர்வதமானது பின்றொடர்ந்து வருகின்ற இந்திரனுக்குப் பயந்து கடலில் மறைந்துவிட்டது. (௧௫)

> **வ**ருநதி கங்கை கொய்ய மாலிய வந்தங் குன்றிப்
> பெருகிலா தாத வன்றன் பெருகுவெங் கிரணத் தாலே
> சொரிபனி சுவறித் தோன்று மிமையமல் லாது தோன்று
> திரவியான் விளங்கு மல்லா திருள்கொளு முதய வோங்கல்.

(ப - ரை.) மாலியவந்தம் - மாலியவந்த பர்வதமானது, வரும் - (அடிக்கடிப் பிரவாகமாகி விசாலித்து) வருகின்ற, கங்கைநதி - கங்காநதி, கொய்ய-அறுப்பதனால், குன்றி - ஒடுங்கி, பெருகிலாது - வளரமாட்டாது, இமயம் - இமயபர்வதமானது, ஆதவன் - சூரியனுடைய, பெருகு - அதிகரிக்கின்ற, வெம் - உஷ்ணமாகிய, கிரணத்தாலே - கிரணங்களினாலே, சொரி - பெய்கின்ற, பனி - பனி, சுவறி - வற்றி; தோன்றும் - விளங்குமே, அல்லாது - அல்லாமல், தோன்றாது - விளங்கமாட்டாது, உதயவோங்கல்-உதயகிரி பர்வதமானது, இரவியான்-சூரியனைக்கொண்டு, விளங்கும்-தோன்றுமே, அல்லாது - அல்லாமல், இருள்கொளும் - இருண்டுவிடும், எ - று.

(போ - ரை.) மாலியவந்த பர்வதமானது அடிக்கடிப் பிரவாகமாகி விசாலித்து வருகின்ற கங்காநதி யறுப்பதனாலொடுங்கி வளரமாட்டாது; சூரியனுடைய அதிகரிக்கின்ற வுஷ்ணமாகிய கிரணங்களினாலே பெய்கின்ற பனிவற்றி விளங்குமேயல்லாமல் விளங்கமாட்டாது, உதயகிரிபர்வதமானது சூரியனைக்கொண்டுதோன்றுமேயல்லாமல் இருண்டுவிடும். (௧௬)

> **வ**ந்துத னுதரம் புக்க தினகரன் கிரண மாற்றி
> யந்தருங் கமலஞ் செற்ற தத்தம னஞ்சே ரோங்க
> லெந்தையை யொருநாட் டாங்க மானதோத் தரமி ளைத்த
> துந்துதன் மணியின் குற்ற முரோகணத் திரிய கற்று.

(ப-ரை.) அத்தமனஞ்சேர் ஓங்கல்-அஸ்தகிரி பர்வதமானது, வந்து-(உலகத்தை வலம் வருவதனாற்களைத்து) வந்து; தன் - தனது, உதரம் - வயிற்றில்; புக்க - புகுந்த, தினகரன் - சூரியன், கிரணம் - கிரணங்களை, மாற்றி - ஒழித்தமையால், அந்தரும் - அழகிய, கமலம் - தாமரைமலர்களெல்லாம், செற்றது - செத்துப்போய்விட்டது, மானதோத்தரம் - மாநஸோத்தரபர்வதமானது, ஒருநாள்-ஒருகாலத்தில்; எந்தையை - எமது தந்தையாகிய சிவபெருமானை; தாங்க - சுமத்தற்கு; இளைத்தது - மெலிந்து போய்விட்டது,உரோகணத்திரி-ரோஹணத்ரிபர்வதமானது,உந்து-மாறியிருக்கின்ற, தன் மணி - தனது கற்களின்; குற்றம் - தோஷத்தை; அகற்று - ஒழித்துக்கொள்ள மாட்டாது; எ-று.

(போ-ரை.) அஸ்தகிரிபர்வதமானது உலகத்தை வலம்வருவதனாற் களைத்து வந்து தனது வயிற்றிற்புகுந்த சூரியன் கிரணங்களை யொழித்தமையால் அழகிய தாமரைமலர்களெல்லாம் செத்துப்போய்விட்டது, மாநஸோத்தரபர்வதமானது ஒரு காலத்தில் எமது தந்தையாகிய சிவபெருமானைச் சுமத்தற்கு மெலிந்துபோய்விட்டது,

ரோஹணாத்ரிபர்வதமானது மாறியிருக்கின்ற தனது கற்களின் தோஷத்தை யொழித்துக்கொள்ள மாட்டாது. (௧௭)

இப்படி மலைகட் கொவ்வோ ரேதமுண் டெந்தை யார்வா
ழப்பருப் பதத்தை யொப்ப தாங்கிரி யில்லென் றேத்திச்
செப்பரு மாதி ராசர் சிரத்தையா லெழுந்தி றைஞ்சி
யொப்பருங் கிரீந்தி ரத்தை யுறுவனா னென்ன வுன்னி.

(ப - ரை.) இப்படி - இவ்விதமாக, மலைகட்கு - பர்வதங்களுக்கெல்லாம், ஒவ்வோர் - ஒவ்வொரு, ஏதம் - தோஷம், உண்டு - இருக்கின்றது, எந்தையார் - எமது தந்தையாகிய மல்லிகார்ஜுநேஶ்வரர், வாழ் - வீற்றிருக்கின்ற, அப்பருப்பதத்தை - அந்த ஸ்ரீசைலத்தை, ஒப்பதாம் - நிகர்ப்பதாகிய, கிரி-பர்வதம், இல் என்று - இல்லையென்று, ஏத்தி-துதித்து, செப்பு அரு - சொல்லுதற்கரிய, மாதிராசர்-மாதிராசையர், சிரத்தையால் - அன்புடன், எழுந்து - (மேலே) எழுந்து, இறைஞ்சி - வணங்கி, ஒப்பு அரு - நிகரற்ற, கிரீந்திரத்தை - பர்வதங்களுக்கெல்லாம் ராஜனாகிய ஸ்ரீசைலத்தை, நான்-அடியேன், உறுவன்-அடைவேன், என்னவுன்னி-என்று யோசித்து, எ-று.

(பொ-ரை.) இவ்விதமாகப் பர்வதங்களுக்கெல்லாம் ஒவ்வொரு தோஷமிருக்கின்றது, எமது தந்தையாகிய மல்லிகார்ஜுநேஶ்வரர் வீற்றிருக்கின்ற அந்த ஸ்ரீசைலத்தை நிகர்ப்பதாகிய பர்வதமில்லையென்று துதித்து, சொல்லுதற்கரிய மாதிராசையார் அன்புடன் மேலே யெழுந்து வணங்கி, நிகரற்ற பர்வதங்களுக்கெல்லாம் ராஜனாகிய ஸ்ரீசைலத்தை யடியேன் அடைவேனென்று யோசித்து. (௧௮)

திருப்பருப் பதத்தைச் சேர்ந்து செய்யமல் லையர் தாளைக்
கருத்துறக் காண்பே னென்னுங் காதலான் மாதி ராசர்
விருப்புடன் சென்று வெற்பின் மிக்கமா தீர்த்தத் துள்ளுந்
தெருட்டருந் தானத் துள்ளுஞ் செய்யமா நதிக ளுள்ளும்.

(ப - ரை.) திருப்பருப்பதத்தை-ஸ்ரீ சைலத்தை, சேர்ந்து-அடைந்து, மல்லையர்-மல்லிராசையருடைய, செய்ய - அழகிய, தாளை - திருவடிகளை, கருத்துற - மனப்பூர்வமாக, காண்பேன் - தரிசிப்பேன், என்னும் - என்கின்ற, காதலால் - மிக்க விருப்பத்தால், மாதிராசர் - மாதிராசையர், விருப்புடன்-அன்புடன், சென்று-வந்து, வெற்பின் - ஸ்ரீ சைலத்திலுள்ள, மிக்கமா - மிகவும் பெருமைபொருந்திய, தீர்த்தத்துள்ளும் - புண்யதீர்த்தங்களிலும், தெருள்தரும் - தெளிவித்தற்குரிய, தானத்துள்ளும் - புண்ய ஸ்தலங்களிலும், செய்ய-செம்மையான, மா-பெருமைபொருந்திய, நதிகளுள்ளும் - புண்ய நதிகளிலும், எ - று.

(பொ - ரை.) ஸ்ரீ சைலத்தையடைந்து மல்லிராசையருடைய வழகிய திருவடிகளை மனப்பூர்வமாகத் தரிசிப்பேனென்கின்ற மிக்க விருப்பத்தால் மாதிராசையர் அன்புடன்வந்து, ஸ்ரீ சைலத்திலுள்ள மிகவும் பெருமைபொருந்திய புண்ய தீர்த்தங்களிலும், தெளிவித்தற்குரிய புண்ய ஸ்தலங்களிலும், செம்மையான பெருமை பொருந்திய புண்ய நதிகளிலும். (௧௯)

மங்கல கிரிதுர்க் கத்தும் வனதுர்க்கஞ் சலதுர்க் கத்தும்
பொங்கிரு முழைக ளுள்ளும் பொலிதரும் பிலங்க ளுள்ளுஞ்
சங்கையில் படிக மேம வச்சிரச் சயிலத் துள்ளுங்
கொங்குலாங் கிரிபுட் டொன்று வனசரர் குறிச்சி யுள்ளும்.

(ப - ரை.) மங்கலகிரி துர்க்கத்தும் - மங்கலகிரி துர்க்கங்களிலும், வனதுர்க்கம்- வநதுர்க்கங்களிலும், சலதுர்க்கத்தும் - ஜலதுர்க்கங்களிலும், பொங்கு-மிக்க, இரு - பெரிய, முழைகள் உள்ளும் - குகைகளிலும், பொலிதரும் - அழகிய, பிலங்கள் உள்ளும் - பாதாளங்களிலும், சங்கையில் - கணக்கற்ற, படிக சயிலத்துள்ளும் - ஸ்படிக பர்வதங்களிலும், ஏமசயிலத்துள்ளும் - ஸ்வர்ண பர்வதங்களிலும், வச்சிர சயிலத்துள்ளும் - வஜ்ரபர்வதங்களிலும், கொங்கு உலாம் - நறுமணங்கமழ்கின்ற, கிரியுள் - பர்வதங்களில் வசிக்கின்ற, தொன்று ஆம் - பழமையாகிய, வனசரர்குறிச்சி யுள்ளும் - வேடச்சேரிகளிலும், எ - று.

(பொ - ரை.) மங்கலகிரி துர்க்கங்களிலும், வநதுர்க்கங்களிலும், ஜலதுர்க்கங் களிலும், மிக்க பெரியகுகைகளிலும், அழகிய பாதாளங்களிலும், கணக்கற்ற ஸ்படிக பர்வதங்களிலும், ஸ்வர்ண பர்வதங்களிலும், வஜ்ர பர்வதங்களிலும், நறுமணங்கமழ் கின்ற பர்வதங்களில் வசிக்கின்ற பழமையாகிய வேடச் சேரிகளிலும்.

(வி - ரை.) படிகம் - ஸ்படிகம் என்னும் வடசொற்றிரிபு. ஏமம் - ஹேமம் என்னும் வடசொற்றிரிபு (பொன் என்பது பொருள்). வச்சிரம் - வஜ்ரம் என்னும் வடசொற்றிரிபு. துர்க்கம் - அரண் எனினுமாம். (௨0)

பாதல வுழைக ளுள்ளும் பஞ்சலோ கக்குன் றத்துஞ்
சீதமார் பரிச வேதித் திரளினுந் தரிசித் தோர்க்கு
நீதியா முத்தி நல்கு நிலயத்து மலர்வ னத்துஞ்
சோதிசே ரிந்து காந்த நவமணித் தொகைக்குன் றத்தும்.

(ப - ரை.) பாதலம் - பாதாளங்களின், உழைகள் உள்ளும் - சுற்றுப்பக்கங் களிலும், பஞ்சலோகக்குன்றத்தும் - பஞ்சலோகபர்வதங்களிலும், சீதம் ஆர்-குளிர்ச்சி பொருந்திய, பரிசவேதித்திரளினும் - பரிசவேதிகளிலும், தரிசித்தோர்க்கு - தரிசிப் பவர்களுக்கு, நீதியாம் - யோக்யமாகிய, முத்தி - மோக்ஷத்தை, நல்கும் - அருள் செய்கின்ற, நிலயத்தும் - ஆலயங்களிலும், மலர்வனத்தும் - பூங்காவனங்களிலும், சோதிசேர் - பிரகாசிக்கின்ற, இந்து காந்தத் தொகை குன்றத்தும் - சந்த்ரகாந்த பர்வதங்களிலும், நவமணித் தொகை குன்றத்தும் - நவரத்ந பர்வதங்களிலும், எ - று.

(பொ - ரை,) பாதாளங்களின் சுற்றுப்பக்கங்களிலும், பஞ்சலோக பர்வதங் களிலும், குளிர்ச்சிபொருந்திய பரிசவேதிகளிலும், தரிசிப்பவர்களுக்கு யோக்ய மாகிய மோக்ஷத்தை யருள் செய்கின்ற வாலயங்களிலும், பூங்காவனங்களிலும், பிரகாசிக்கின்ற சந்த்ரகாந்த பர்வதங்களிலும், நவரத்ந பர்வதங்களிலும்,

(வி - ரை.) பரிசம் - ஸ்பர்சம் என்னும் வடசொற்றிரிபு. திரள் - கூட்டம். முத்தி-முக்தி என்னும் வடசொற்றிரிபு. சோதி - ஜ்யோதியென்னும் வடசொற்றிரிபு. தொகை - கூட்டம். (௨௧)

உரகமா விலங்கு புட்க ளுறைவிடத் துள்ளு மோங்கற்
சரிவுக ளிடிந்து வீழுஞ் சாரினுந் தங்கித் தங்கிக்
கரமுறு மிலிங்க பூசை காதலிற் செய்து வாழ்த்தி
வரமுறு வில்ல மோங்கு வனங்களைச் சமீப மான.

**(ப - ரை.)** மா-பெரிய, உரகம் - பாம்புகளும், விலங்கு-மிருகங்களும், புட்கள் - பறவைகளும், உறை-வசிக்கின்ற, இடத்துள்ளும்-இடங்களிலும், ஓங்கல்-மலைகளும், சரிவுகள்-சரிப்புகளும், இடிந்துவீழும்-உடைந்து விழுகின்ற, சாரினும்-இடங்களிலும், தங்கித்தங்கி - இருந்திருந்து, கரம்உறும் - கைத்தலத்தி லெழுந்தருளியிருக்கின்ற, இலிங்கம் - இஷ்டலிங்க மூர்த்தியை, காதலில் - அன்புடன், பூசைசெய்து-பூஜித்து, வாழ்த்தி-துதித்து, வரம் உறும்-மேன்மை பொருந்திய, ஓங்கு-உன்னதமாக வளர்ந்திருக்கின்ற, வில்லவனங்களை - வில்வவனங்களை, சமீபமான-அடுத்திருக்கின்ற, எ-று.

**(போ-ரை.)** பெரிய பாம்புகளும் மிருகங்களும் பறவைகளும் வசிக்கின்ற விடங்களிலும், மலைகளும் சரிப்புகளும் உடைந்து விழுகின்றவிடங்களிலும் இருந்திருந்து, கைத்தலத்தி லெழுந்தருளியிருக்கின்ற இஷ்டலிங்கமூர்த்தியை யன்புடன் பூஜித்துத் துதித்து மேன்மைபொருந்திய வுன்னதமாக வளர்ந்திருக்கின்ற வில்வவனங்களை யடுத்திருக்கின்ற. (௨௨)

கண்டிகை நகத்துங் கண்டி தருசிலைக் கணங்க ளுள்ளும்
வெண்டிரு நீற்று வெற்புத் தருச்சிலை மிகுமி டத்து
மொண்டரு மிலிங்க வோங்கன் மரஞ்சிலை செடிக ளுள்ளும்
புண்டர நுதன்மா யேசர் போலுமா கிரிக ளுள்ளும்.

**(ப - ரை.)** கண்டிகை நகத்தும் - ருத்ராக்ஷபர்வதங்களிலும், கண்டிதருக்கணங்கள் உள்ளும்-ருத்ராக்ஷ வ்ருக்ஷங்களிலும், கண்டிசிலைக்கணங்கள் உள்ளும்-ருத்ராக்ஷக்கற்களிலும், வெண்திருநீற்றுவெற்பு-விபூதிபர்வதங்களும், வெண் திருநீற்றுத் தரு - விபூதி வ்ருக்ஷங்களும், வெண் திருநீற்றுச் சிலை - விபூதிக்கற்களும், மிகும் - மிகுந்திருக்கின்ற, இடத்தும் - இடங்களிலும், ஒள்தரும் - பிரகாசிக்கின்ற, இலிங்கவோங்கல்கள் உள்ளும் - லிங்கபர்வதங்களிலும், இலிங்கமரங்கள் உள்ளும் - லிங்க வ்ருக்ஷங்களிலும், இலிங்கச்சிலைகள்-லிங்கக்கற்களிலும், இலிங்கச்செடிகள் உள்ளும் - லிங்கச்செடிகளிலும், புண்டரம் - த்ரிபுண்டரம் (தரித்திருக்கின்ற), நுதல் - நெற்றியையுடைய, மாயேசர் - வீரமாஹேஶ்வரர்களை, போலும் - போன்ற, மா-பெரிய, கிரிகள் உள்ளும் - பர்வதங்களிலும், எ-று.

**(போ-ரை.)** ருத்ராக்ஷபர்வதங்களிலும், ருத்ராக்ஷ வ்ருக்ஷங்களிலும், ருத்ராக்ஷக்கற்களிலும், விபூதிபர்வதங்களும் விபூதி வ்ருக்ஷங்களும் விபூதிக்கற்களும் மிகுந்திருக்கின்ற விடங்களிலும், பிரகாசிக்கின்ற லிங்கபர்வதங்களிலும், லிங்க வ்ருக்ஷங்களிலும், லிங்கக்கற்களிலும், லிங்கச்செடிகளிலும், த்ரிபுண்டரந் தரித்திருக்கின்ற நெற்றியையுடைய வீரமாஹேஶ்வரர்களைப் போன்ற பெரிய பர்வதங்களிலும். (௨௩)

சங்கமம் போலுந் தாருக் கொடிபுதற் றலங்க டோறு
மிங்கிதந் தம்முட் பேசுங் கிரிகொடிப் புதல்க டோறுந்
தங்களி லிதங்கள் பேசுந் துணைமலர்த் தருக்க டோறும்
பொங்கெரி போல விண்ணிற் பொருந்துமா வனங்க டோறும்.

(ப-ரை.) சங்கமம்-ஜங்கமமூர்த்திகளை, போலும்-போன்ற, தாரு-வ்ருக்ஷங்களும், கொடி - கொடிகளும், புதல் - புதர்களும் (இருக்கின்ற), தலங்கள்தோறும் - இடங்களிலும், இங்கிதம்-விரும்பினவற்றை, தம்முள்-தங்களுக்குள்ளே, பேசும்-பேசிக்கொள்கின்ற, கிரிகள்தோறும் - பர்வதங்களிலும், கொடிகள்தோறும்-கொடிகளிலும், புதல்கள்தோறும்-புதர்களிலும்,தங்களில்-தங்களுக்குள்ளே, இதங்கள்-இன்சொற்களை, பேசும்-பேசிக்கொள்கின்ற,துணை-இரட்டை, மலர்த்தருக்கள்தோறும்-புஷ்ப வ்ருக்ஷங்களிலும், பொங்கு-பிரகாசிக்கின்ற, எரிபோல-நெருப்புப்போல, விண்ணில் - ஆகாயம் வரையிலும், பொருந்தும் - அளாவியிருக்கின்ற, மா-பெரிய, வனங்கள் தோறும் - காடுகளிலும், எ-று,

(பொ-ரை.) ஜங்கமமூர்த்திகளைப்போன்ற வ்ருக்ஷங்களும் கொடிகளும் புதர்களுமிருக்கின்ற விடங்களிலும், விரும்பினவற்றைத் தங்களுக்குள்ளே பேசிக்கொள்கின்ற பர்வதங்களிலும் கொடிகளிலும் புதர்களிலும், தங்களுக்குள்ளே இன்சொற்களைப் பேசிக்கொள்கின்ற விரட்டை புஷ்ப வ்ருக்ஷங்களிலும், பிரகாசிக்கின்ற நெருப்புப் போல ஆகாயம் வரையிலும் அளாவியிருக்கின்ற பெரிய காடுகளிலும். (உ௪)

நடிக்குமா கிரியி னங்க ணற்கொடி செடியி டத்து
நடிக்குமா விலங்கு புட்க ணஞ்சரா விடங்க ளெங்கு
நடித்தெழு சிலையி னங்க ணண்ணின நிலங்கண் முற்று
நடித்துயர் தருவி னங்க ணனியுறுந் தலங்க ளெல்லாம்.

(ப - ரை.) நடிக்கும் - நாட்டியஞ்செய்கின்ற, மா - பெரிய, கிரியினங்கள் - பர்வதங்களும், நல் - நல்ல, கொடி - கொடிகளும், செடி - செடிகளும் (இருக்கின்ற), இடத்தும் - இடங்களிலும், நடிக்கும் - நாட்டியஞ்செய்கின்ற, மா - பெரிய, விலங்கு - மிருகங்களும், புட்கள் - பறவைகளும், நஞ்சு - விஷத்தையுடைய, அரா-பாம்புகளும் (இருக்கின்ற), இடங்கள் எங்கும் - எல்லாவிடங்களிலும், நடித்து-நாட்டியஞ்செய்து, எழு - விளங்குகின்ற, சிலையினங்கள் - கற்கள், நண்ணின - இருக்கின்ற, நிலங்கள் முற்றும்-எல்லாவிடங்களிலும், நடித்து - நாட்டியஞ்செய்து, உயர் - ஓங்கிவளர்ந்திருக்கின்ற, தருவினங்கள் - வ்ருக்ஷங்கள், நனியுறும் - மிகுதியாயிருக்கின்ற, தலங்கள் எல்லாம் - எல்லாவிடங்களிலும், எ - று.

(பொ - ரை.) நாட்டியஞ்செய்கின்ற பெரிய பர்வதங்களும் நல்ல கொடிகளும் செடிகளுமிருக்கின்ற விடங்களிலும், நாட்டியஞ்செய்கின்ற பெரிய மிருகங்களும் பறவைகளும் விஷத்தையுடைய பாம்புகளு மிருக்கின்ற வெல்லா விடங்களிலும், நாட்டியஞ்செய்து விளங்குகின்ற கற்களிருக்கின்ற வெல்லாவிடங்களிலும், நாட்டியஞ் செய்து ஓங்கி வளர்ந்திருக்கின்ற வ்ருக்ஷங்கள் மிகுதியாயிருக்கின்ற வெல்லா விடங்களிலும்.

(வி - ரை.) இனங்கள் - கூட்டங்கள். (உ௫)

பாடுமங் கிரிம ரங்கள் பலகொடி நெருங்கி டத்தும்
பாடுமீன் மிருகம் வண்டு பற்றுறுப் பலவி டத்தும்
பாடுமொண் சிலைகண் மந்தி பல்லரி தங்கி டத்தும்
பாடுமா கிரியி னங்கள் பறவைக ணெருங்கி டத்தும்.

(ப - ரை.) பாடும் - (சங்கீதம்) பாடுகின்ற, அம் - அழகிய, கிரி-பர்வதங்களும், மரங்கள் - வ்ருக்ஷங்களும், பல - பலவகைப்பட்ட, கொடி - கொடிகளும், நெருங்கு-மிகுதியாயிருக்கின்ற, இடத்தும் - இடங்களிலும், பாடும் - (சங்கீதம்) பாடுகின்ற,

நீள் - பெரிய, மிருகம் - மிருகங்களும், வண்டு - வண்டுகளும், பற்று அறு - விட்டு நீங்காத, பலவிடத்தும் - பலவிடங்களிலும், பாடும் - (சங்கீதம்) பாடுகின்ற, ஒள் - அழகிய, சிலைகள் - கற்களும், மந்தி - வானரங்களும், பல் - அநேகவிதமான, அரி - சிங்கங்களும், தங்கு - இருக்கின்ற, இடத்தும் - இடங்களிலும், பாடும் - (சங்கீதம்) பாடுகின்ற, மா - பெரிய, கிரியினங்கள் - பன்றிகளும், பறவைகள் - பக்ஷிகளும், நெருங்கு - மிகுதியாயிருக்கின்ற, இடத்தும் - இடங்களிலும், எ - று.

**(பொ - ரை.)** சங்கீதம் பாடுகின்ற வழகிய பர்வதங்களும் வ்ருக்ஷங்களும் பலவகைப்பட்ட கொடிகளும் மிகுதியிருக்கின்ற விடங்களிலும், சங்கீதம் பாடுகின்ற பெரிய மிருகங்களும் வண்டுகளும் விட்டு நீங்காத பலவிடங்களிலும், சங்கீதம்பாடுகின்ற வழகிய கற்களும் வானரங்களும் அநேகவிதமான சிங்கங்களு மிருக்கின்ற விடங்களிலும், சங்கீதம் பாடுகின்ற பெரிய பன்றிகளும் பக்ஷிகளும் மிகுதியாயிருக்கின்ற விடங்களிலும். (௨௬)

மின்னெறி காட்டப் பாலு மின்னெறி புட்கட் பாலு
மின்னெறி வாலு கங்கண் மிக்கெழு குவையின் பாலு
மின்னெறி நதியி னங்கண் மேவுதீர்த் தத்தின் பாலு
மின்னெறி பலநீ ரோங்கன் மரஞ்செடி மேவும் பாலும்.

**(ப-ரை.)** மின் எறி-ஒளிவீசுகின்ற, காட்டப்பாலும் - கட்டைகள் (இருக்கின்ற), இடங்களிலும், மின் எறி-ஒளிவீசுகின்ற, புட்கள் பாலும் - பறவைகள் (இருக்கின்ற), இடங்களிலும், மின் எறி - ஒளிவீசுகின்ற, வாலுகங்கள் - வெண்மணற் குன்றுகள், மிக்கு எழு - மிகுதியாயுயர்ந்துள்ள, குவையின் - குவியல்கள் (இருக்கின்ற), பாலும்-இடங்களிலும், மின் எறி - ஒளிவீசுகின்ற, நதியினங்கள் - நதிகள், மேவு - உண்டாயிருக்கின்ற, தீர்த்தத்தின்பாலும் - புண்யதீர்த்தங்கள் (இருக்கின்ற) இடங்களிலும், மின் எறி - ஒளிவீசுகின்ற, பல - பற்பலவகையான, நீர் ஓங்கல் - ஜலபர்வதங்களும், நீர்மரம் - ஜல வ்ருக்ஷங்களும், நீர்செடி - ஜலச்செடிகளும், மேவும் - இருக்கின்ற, பாலும் - இடங்களிலும், எ - று.

**(பொ-ரை.)** ஒளிவீசுகின்ற கட்டைகளிருக்கின்ற விடங்களிலும், ஒளிவீசுகின்ற பறவைகளிருக்கின்ற விடங்களிலும், ஒளிவீசுகின்றவெண்மணற்குன்றுகள் மிகுதியாயுயர்ந்துள்ள குவியல்களிருக்கின்ற விடங்களிலும், ஒளிவீசுகின்ற பற்பலவகையான ஜலபர்வதங்களும் ஜலவ்ருக்ஷங்களும் ஜலச்செடிகளுமிருக்கின்ற விடங்களிலும்.

**(வி - ரை.)** காட்டம் - காஷ்டம் என்னும் வடசொற்றிரிபு. (௨௭)

பலநிறத் தருவின் பாலும் பலநிறக் கொடிசூழ் பாலும்
பலநிறப் புதலின் பாலும் பலநிறச் சிலைசேர் பாலும்
பலவுருப் பாத வங்கள் பலபல பணைக்கும் பாலும்
பலவுருக் கொடியி னங்கள் செடியினம் படரும் பாலும்.

**(ப - ரை.)** பலநிறம் - பலவகைப்பட்ட வர்ணங்களையுடைய, தருவின்பாலும் - வ்ருக்ஷங்கள் (இருக்கின்ற) இடங்களிலும், பலநிறம் - பலவகைப்பட்ட வர்ணங்களையுடைய, கொடிகள் சூழ்பாலும் - கொடிகளிருக்கின்ற விடங்களிலும், பலநிறம் - பலவகைப்பட்ட வர்ணங்களையுடைய, புதலின்பாலும்-புதர்கள் (இருக்கின்ற) இடங்களிலும், பலநிறம்-பலவகைப்பட்ட வர்ணங்களையுடைய, சிலைசேர்பாலும்-கற்களிருக்கின்ற விடங்களிலும், பலவுரு - பலவகைப்பட்ட வடிவங்களையுடைய, பாதவங்கள் -

வ்ருக்ஷங்கள், பலபல - பற்பலவிதமாக, பிணைக்கும் பாலும் - கிளைத்து வளர்கின்ற விடங்களிலும், பலவுரு - பலவகைப்பட்ட வடிவங்களையுடைய, கொடியினங்கள் - கொடிகளும், செடியினம்-செடிகளும், படரும் பாலும் - வளர்கின்ற விடங்களிலும், எ - று.

(பொ - ரை.) பலவகைப்பட்ட வர்ணங்களையுடைய வ்ருக்ஷக்க ளிருக்கின்ற விடங்களிலும், பலவகைப்பட்ட வர்ணக்களையுடைய கொடிகளிருக்கின்ற விடங்களிலும், பலவகைப்பட்ட வர்ணங்களையுடைய புதர்களிருக்கின்ற விடங்களிலும், பலவகைப்பட்ட வர்ணங்களையுடைய கற்களிருக்கின்ற விடங்களிலும், பலவகைபட்ட வடிவங்களையுடைய வ்ருக்ஷங்கள்பற்பலவிதமாகக் கிளைத்துவளர்கின்றவிடங்களிலும், பலவகைப்பட்ட வடிவங்களையுடைய கொடிகளும் செடிகளும் வளர்கின்ற விடங்களிலும். (உ அ)

கேசரத் தருவின் பாலுங் கேசரச் சிலையின் பாலும்
பேசுறிற் கேச ரஞ்சேர் பெருங்கொடி செடியின் பாலு
மாசிலா மிருக ரூபர் மணிமரச் சயிலப் பாலுந்
தேசுலாம் பறவை போலுந் திரண்மரப் பொதும்பர் பாலும்.

(ப-ரை.) கேசரத்தருவின்பாலும்-சிக்கமரங்களிருக்கின்ற விடங்களிலும், கேசரச் சிலையின்பாலும்-சிங்கக்கற்களிருக்கின்ற விடங்களிலும், பேசுறில்-சொல்லுமிடத்து, பெரு - பெரிய, கேசரம்சேர்கொடி - சிங்கக்கொடிகளும், கேசரம்சேர் செடியின் பாலும் - சிங்கச்செடிகளுமிருக்கின்ற விடங்களிலும், மாசுஇல்லா - பரிசுத்தமாகிய, மிருகரூபர்மணி - மிருகரூபக் கற்களும், மிருகரூபர்மரம் - மிருகரூப வ்ருக்ஷங்களும், மிருகரூபர் சயிலப்பாலும் - மிருகரூப பர்வதக்களுமிருக்கின்ற விடங்களிலும், தேசு உலாம் - ஒளிவீசுகின்ற, பறவைபோலும் - பக்ஷிபோன்ற, திரள் - திரண்ட, மரப் பொதும்பர்பாலும் - மரத்தோப்புகளிருக்கின்ற விடங்களிலும், எ-று.

(பொ-ரை) சிங்கமரங்களிருக்கின்ற விடங்களிலும், சிங்கக்கற்களிருக்கின்ற விடங்களிலும், சொல்லுமிடத்துப் (பெரிய சிங்கக்கொடிகளும் சிங்கச்செடிகளு மிருக்கின்ற விடங்களிலும், பரிசுத்தமாகிய மிருகரூபக்கற்களும் மிருகரூப வ்ருக்ஷங் களும் மிருகரூப பர்வதங்களு மிருக்கின்ற விடங்களிலும், ஒளிவீசுகின்றபக்ஷிபோன்ற திரண்ட மரத்தோப்புகளிருக்கின்ற விடங்களிலும். (உகூ)

ஒளிவிடும் பறவை போலு மொண்மையா மோங்கற் பாலுந்
தெளிதருந் தேவர் போலும் பாதபவச் சிலையின் பாலுங்
குளிர்நிழற் றிரும்பாத் தாருச் சிலைகளின் குழுவின் பாலும்
வளர்நிழ லின்றி நிற்கு மரமலை யினத்தின் பாலும்.

(ப-ரை.) ஒளிவிடும் - ஒளிவீசுகின்ற, பறவைபோலும் - பக்ஷிகள்போன்ற, ஒண்மையாம்-அழகுபொருந்திய, ஓங்கல்பாலும் - பர்வதங்களிருக்கின்ற விடங்களிலும், தெளிதரும்-அறிவுடைய, தேவர்போலும்-தேவர்கள்போன்ற,பாதவம்-வ்ருக்ஷங்களும், சிலையின்பாலும் - கற்களுமிருக்கின்ற விடங்களிலும், குளிர் - குளிர்ந்த, நிழல்-நிழல், திரும்பா-சாயாதிருக்கின்ற, தாரு - வ்ருக்ஷங்களும், சிலைகளின் குழுவின்பாலும் - கற்களுமிருக்கின்றவிடங்களிலும், வளர்-வளர்கின்ற, நிழல்இன்றி-நிழலில்லாமல், நிற்கும்-நிலைத்திருக்கின்ற, மரம் - வ்ருக்ஷங்களும், மலையினத்தின்பாலும் - பர்வதங்களு மிருக்கின்ற விடங்களிலும், எ-று.

(போ-ரை.) ஒளிவீசுகின்ற பக்ஷிகள்போன்ற வழகுபொருந்திய பர்வதங்களிருக்கின்ற விடங்களிலும், அறிவுடைய தேவர்கள்போன்ற விருக்ஷங்களும் கற்களுமிருக்கின்ற விடங்களிலும், குளிர்ந்த நிழல் சாயாதிருக்கின்ற விருக்ஷங்களும் கற்களுமிருக்கின்ற விடங்களிலும், வளர்கின்ற நிழலில்லாமல் நிலைத்திருக்கின்ற விருக்ஷங்களும் பர்வதங்களு மிருக்கின்ற விடங்களிலும்.

(வி-ரை.) குழு-கூட்டம். இனம்-கூட்டம். (௩௦)

தூரத்தி னிழலாய்த் தோன்றுந் தோகைமா மலையின் பாலுஞ்
சேரப்போய்ப் பார்ப்போர்க் கெல்லாந் தினமொரு வடிவாய்த் தோன்றும்
பாரப்பூ தரத்தின் பாலும் பாதவத் திரளின் பாலுஞ்
சீருற்ற மாதி ராசர் மல்லிரா சையரைத் தேடா.

(ப - ரை.) தூரத்தில் - வெகுதூரமயில் (பார்க்கும்போதே), நிழலாய் - நிழலைப்போல, தோன்றும்-காண்கின்ற, மா - பெரிய, தோகைமலையின்பாலும் - மயூராசலங்களிருக்கின்ற விடங்களிலும், சேரப்போய் - சமீபத்திற்சென்று, பார்ப்போர்க்கு எல்லாம் - பார்ப்பவ ரனைவர்க்கும், தினம் - நாடோறும், ஒருவடிவாய் - ஒவ்வொரு வடிவம்போல, தோன்றும்-காண்கின்ற, பாரம்-பெரிய, பூதரத்தின்பாலும்-பர்வதங்களு மிருக்கின்ற விடங்களிலும், பாதவத்திரளின் பாலும் - விருக்ஷங்களுமிருக்கின்ற விடங்களிலும், சீர் உற்ற - சிறப்புப்பொருந்திய, மாதிராசர் - மாதிராசையர், மல்லிராசையரை - மல்லிராசையரை, தேடா - தேடி, எ - று.

(போ - ரை.) வெகுதூரமயிற் பார்க்கும்போதே நிழலைப்போலக் காண்கின்ற மயூராசலங்களிருக்கின்ற விடங்களிலும், சமீபத்திற்சென்று பார்ப்பவரனைவர்க்கும் நாடோறும் ஒவ்வொரு வடிவம்போலக் காண்கின்ற பெரிய பர்வதங்களுமிருக்கின்ற விடங்களிலும் விருக்ஷங்களுமிருக்கின்ற விடங்களிலும், சிறப்புப்பொருந்திய மாதிராசையர் மல்லிராசையரைத் தேடி.

(வி - ரை.) திரள் - கூட்டம். (௩௧)

மரங்களை மரங்க ளேறி மரங்கள்சே விக்க வாழும்
பெருந்தரு வினத்தைப் பார்த்தும் பிரியத்தி னேறிப் பார்ப்போர்
நெருங்குல கனைத்துங் காண நிற்கின்ற தருக்கள் பார்த்தும்
பொருந்திலப் படியே நிற்கும் பொருப்பின மவையைப் பார்த்தும்.

(ப - ரை.) மரங்கள் - விருக்ஷங்கள், மரங்களை - விருக்ஷங்களின்மீது, ஏறி - ஏறிக்கொண்டு, மரங்கள் - விருக்ஷங்களை, சேவிக்க - வணங்கும்படி, வாழும் - நிலைத்திருக்கின்ற, பெரு - பெரிய, தருவினத்தை - விருக்ஷங்களை, பார்த்தும்-பார்த்தும், பிரியத்தின் - ஆசையுடன், ஏறி-(தம்மீது) ஏறிக்கொண்டு, பார்ப்போர் - பார்க்கிறவர்கள், நெருங்கு-மிகுதியாயிருக்கின்ற, உலகுஅனைத்தும் - எல்லாவுலகத்தையும், காண - பார்க்கும்படி, நிற்கின்ற - நிலைத்திருக்கின்ற, தருக்கள் - விருக்ஷங்களை, பார்த்தும்—, பொருந்தில் - (தம்மீது) ஏறிக்கொண்டால், அப்படியே - அவ்வாறே (எல்லாவுலகத்தையும் பார்க்கும்படி), நிற்கும் - நிலைத்திருக்கின்ற, பொருப்பு இனம் அவையை - பர்வதங்களை, பார்த்தும்—, எ - று.

(போ - ரை.) விருக்ஷங்கள் விருக்ஷங்களின் மீதேறிக்கொண்டு விருக்ஷங்களை வணங்கும்படி நிலைத்திருக்கின்ற பெரிய விருக்ஷங்களைப் பார்த்தும், ஆசையுடன்

தம்மீதேறிக்கொண்டு பார்க்கின்றவர்கள் மிகுதியாயிருக்கின்ற வெல்லாவுலகத்தையும் பார்க்கும்படி நிலைத்திருக்கின்ற வ்ருக்ஷங்களைப் பார்த்தும், தம்மீதேறிக்கொண்டால் அவ்வாறே யெல்லாவுலகத்தையும் பார்க்கும்படி நிலைத்திருக்கின்ற பர்வதங்களைப் பார்த்தும்.

(வி - ரை.) இனம் - கூட்டம். அவை - கூட்டம். (௩௨)

ஓரிட முன்னி யேறி லவ்விடத் துய்க்கும் வெற்பைத்
தேரிலப் படியே சேர்க்குந் திரண்மரக் குழுவைப் பார்த்துஞ்
சாருரு வுடையோ ரேறிற் றமைக்காணாத் தருவைப் பார்த்துஞ்
சூரியன் போலத் தோன்றிச் சோமனுந் தருவைப் பார்த்தும்.

(ப-ரை.) ஓர்இடம்-ஒருஸ்தலத்தை, உன்னி-நினைத்து, ஏறில்-ஏறிக்கொண்டால், அவ்விடத்து-அவ்விடத்தில், உய்க்கும் - கொண்டுபோய்ச்சேர்க்கவல்ல, வெற்பை - பர்வதங்களையும், தேரில் - யோசிக்குமிடத்து, அப்படியே - அவ்வாறே, சேர்க்கும் - (கொண்டுபோய் நினைத்த விடத்தில்) சேர்க்கவல்ல, திரள்-திரண்ட, மரக்குழுவை - வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, சார் - அழகுபொருந்திய, உருவுடையோர் - மேனியை யுடையவர்கள், ஏறில்-ஏறிக்கொண்டால், தம்மை-தங்களை, காணா-பார்க்கமுடியாத, தருவை-வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, சூரியன் போல-சூரியனைப்போல, தோன்றி - விளங்கி, சோமனும்-சந்திரனுகவல்ல, தருவை-வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, எ-று.

(பொ-ரை.) ஒரு ஸ்தலத்தை நினைத்தேறிக்கொண்டால் அவ்விடத்திற்கொண்டு போய்ச் சேர்க்கவல்ல பர்வதங்களையும் யோசிக்குமிடத்து அவ்வாறே நினைத்த விடத்திற் கொண்டுபோய்ச் சேர்க்கவல்ல திரண்ட வ்ருக்ஷங்களையும் பார்த்தும், அழகுபொருந்திய மேனியை யுடையவர்கள் ஏறிக்கொண்டால் தங்களைப் பார்க்க முடியாத வ்ருக்ஷங்களைப் பார்த்தும், சூரியனைப்போல விளங்கிச் சந்திரனுகவல்ல வ்ருக்ஷங்களைப் பார்த்தும். (௩௩)

பாதிமா மிருக மாயும் பாதிமா மலைய தாயும்
பூதரம் பாதி புள்ளோர் பாதியாய்ப் பொருந்தும் வெற்பை
மேதகு வேலை தோறும் வெவ்வேறு பழுத்து வீழுங்
கோதிலா மரத்தை வெட்டிற் கூடுமா செடியைப் பார்த்தும்.

(ப-ரை.) பாதி - ஒருபாதிவடிவம், மா - பெரிய, மிருகமாயும் - மிருகத்தைப் போலவும், பாதி-ஒருபாதிவடிவம், மா - பெரிய, மலையாயும்-பர்வதத்தைப் போலவும், பாதி - ஒருபாதி வடிவம், பூதரமாய் - பர்வதத்தைப் போலவும், ஓர்பாதி - ஒருபாதி வடிவம், புள்ளாய்-பக்ஷியைப்போலவும், பொருந்தும் - சேர்ந்திருக்கின்ற, வெற்பை- பர்வதங்களையும், வேலைதோறும்-நொடிப்பொழுதுதோறும், மேதகு-மேன்மையாகிய, வெவ்வேறு-பலவிதமாக, பழுத்து - கனிகள் கனிந்து, வீழும் - உதிர்கின்ற, கோது இல்லா-பரிசுத்தமாகிய, மரத்தை-வ்ருக்ஷங்களையும், வெட்டில்-(துண்டமாக) தறித்து விட்டால், கூடும் - (மறுபடியும்) சேர்ந்துகொள்ளவல்ல, மா - பெரிய, செடியை - செடிகளையும், பார்த்தும்—, எ-று.

(பொ-ரை.) ஒரு பாதி வடிவம்பெரிய மிருகத்தைப்போலவும் ஒருபாதி வடிவம் பர்வதத்தைப்போலவும் ஒருபாதி வடிவம் பர்வதத்தைப்போலவும் ஒருபாதி வடிவம் பக்ஷியைப்போலவும் சேர்ந்திருக்கின்ற பர்வதங்களையும், நொடிப்பொழுது தோறும் மேன்மையாகிய பலவிதமாகக் கனிகள் கனிந்துதிர்கின்ற பரிசுத்தமாகிய வ்ருக்ஷங்களையும், துண்டாகத் தறித்துவிட்டால் மறுபடியும் சேர்ந்து கொள்ளவல்ல செடிகளையும் பார்த்தும். (௩௪)

தூரவே யெடுத்துப் போடிற் றொடர்ந்துவந் தவ்வி டத்தை
சேருமா கல்லே வெய்யோன் செறிந்தெழி லெழுந்து வீழிற்
பாரிடை யடங்குந் தாருப் பகுதியைப் பரிவாற் பார்த்துஞ்
சூரிய னெழிலவ் வாறே தோன்றிவீழ் கிரியைப் பார்த்தும்.

(ப - ரை.) தூரவே - வெகுதூரத்திலே, எடுத்து - தூக்கிக்கொண்டுபோய், போடில் - போட்டுவிட்டால், தொடர்ந்துவந்து - தேடிச்சென்று, அவ்விடத்தை - தாமிருந்த விடத்தையே, சேரும் - அடையவல்ல, மா - பெரிய, கல்லே - கற்களையும், வெய்யோன்எழில் - சூரியக்கிரணங்கள், செறிந்து - மிகுந்து, எழுந்து - தோன்றி, வீழில் - மறையுமாயின், பார்இடை - பூமிக்குள், அடங்கும் - மறைந்துபோகவல்ல, தாருப்பகுதியை - வ்ருக்ஷங்களையும், பரிவால் - விருப்பத்துடன், பார்த்தும்—, சூரியன்எழில் - சூரியக்கிரணங்கள், அவ்வாறே - (தோன்றி மறைகின்ற) அவ்விதமாகவே, தோன்றி - எழுந்து, வீழ் - மறைந்துபோகவல்ல, கிரியை - பர்வதங்களை, பார்த்தும்—, எ - று.

(பொ - ரை.) வெகுதூரத்திலே தூக்கிக் கொண்டுபோய்ப் போட்டு விட்டால் தேடிச்சென்றுத் தாமிருந்த விடத்தையே யடையவல்ல பெரிய கற்களையும் சூரியக்கிரணங்கள் மிகுந்துதோன்றி மறையுமாயின் பூமிக்குள் மறைந்துபோகவல்ல வ்ருக்ஷங்களையும் விருப்பத்துடன் பார்த்தும், சூரியக்கிரணங்கள் தோன்றிமறைகின்ற வவ்விதமாகவே யெழுந்து மறைந்துபோகவல்ல பர்வதங்களைப் பார்த்தும்.

(வி - ரை.) பகுதி - கூட்டம். (௩௫)

நாற்றிசைக் கொம்பி லேறி நாடுங்காற் கயிலா யத்து
நாற்றிசை வாயி றோன்று நல்லமா மரங்கள் பார்த்து
நாற்றிசைச் சிகர மேறி நாடுங்கால் வெள்ளி வெற்பி
னாற்றிசைத் துவாரத் தோடு புரந்தெரி நகங்கள் பார்த்தும்.

(ப - ரை.) நால்திசை - நான்கு திக்குகளிலும் (இருக்கின்ற), கொம்பில் - கிளைகளின்மீது, ஏறி - ஏறிக்கொண்டு, நாடுங்கால் - பார்க்கும்போது, கயிலாயத்து - ஸ்ரீமஹாகைலாஸத்தின், நால்திசை - நான்கு திக்குகளிலும் (இருக்கின்ற), வாயில் - திருக்கோபுரவாயில்கள், தோன்றும் - காணப்படுகின்ற, நல்ல-நல்ல, மா - பெரிய, மரங்கள்-வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, நால்திசை-நான்கு திக்குகளிலும் (இருக்கின்ற), சிகரம் - சிகரங்களின்மீது, ஏறி - ஏறிக்கொண்டு, நாடுங்கால் - பார்க்கும்போது, வெள்ளிவெற்பின் - ஸ்ரீமஹாகைலாஸத்தின், நால்திசை - நான்கு திக்குகளிலும் (இருக்கின்ற), துவாரத்தோடு - திருக்கோபுரவாயில்களும், புரம் - புண்யக்ஷேத்ரங்களும், தெரி - காணப்படுகின்ற, நகங்கள் - பர்வதங்களை, பார்த்தும்—, எ - று.

(பொ - ரை.) நான்குதிக்குகளிலு மிருக்கின்ற கிளைகளின் மீதேறிக்கொண்டு பார்க்கும்போது ஸ்ரீமஹா கைலாஸத்தின் நான்கு திக்குகளிலுமிருக்கின்ற திருக்கோபுரவாயில்கள் காணப்படுகின்ற நல்ல பெரிய வ்ருக்ஷங்களைப் பார்த்தும், நான்கு திக்குகளிலுமிருக்கின்ற சிகரங்களின்மீதேறிக்கொண்டு பார்க்கும்போது ஸ்ரீமஹா கைலாஸத்தின் நான்கு திக்குகளிலுமிருக்கின்ற திருக்கோபுரவாயில்களும் புண்ய க்ஷேத்ரங்களும் காணப்படுகின்ற பர்வதங்களைப் பார்த்தும்.

(வி - ரை.) வெள்ளிவெற்பு - வெள்ளியங்கிரி. (௩௬)

மீதுறு மாந்தர் தம்மை மிக்கபா தாள கங்கை
கோதற வாட்டு விக்குங் கோத்திரந் தருக்கள் பார்த்து
மாதர வுடனே சேரி னறுபத்தெட் டான தீர்த்த
மீதிது வென்னக் காட்டு மினக்கிரி தருக்கள் பார்த்தும்.

(ப - ரை.) மீது உறு - மேலே யேறிக்கொண்டிருக்கின்ற, மாந்தர்தம்மை - மனிதர்களை, மிக்க - மேன்மைபொருந்திய, பாதாளகங்கை - பாதாளகங்கையில், கோது அற - பாபத்தினின்றும் நீங்கும்பொருட்டு, ஆட்டுவிக்கும் - ஸ்நானஞ்செய்விக்கவல்ல, கோத்திரம் - பர்வதங்களையும், தருக்கள்-விருக்ஷங்களையும், பார்த்தும்—, ஆதரவுடனே-அன்புடனே, சேரின்-மேலேயேறிக்கொண்டால், அறுபத்தெட்டான-அறுபத்தெட்டென்று சொல்லப்பட்ட, தீர்த்தம் - புண்யதீர்த்தங்கள், ஈது இது-இது விது, என்ன - என்று, காட்டும் - காண்பிக்கவல்ல, இனக்கிரி - பர்வதங்களையும், தருக்கள் - விருக்ஷங்களையும், பார்த்தும்—, எ - று.

(போ - ரை,) மேலே யேறிக்கொண்டிருக்கின்ற மனிதர்களை மேன்மைபொருந்திய பாதாளகங்கையில் பாபத்தினின்றும் நீங்கும்பொருட்டு ஸ்நானஞ் செய்விக்கவல்ல பர்வதங்களையும் விருக்ஷங்களையும் பார்த்தும், அன்புடனே மேலேயேறிக்கொண்டால் அறுபத்தெட்டென்று சொல்லப்பட்ட புண்ய தீர்த்தங்கள் இதுவிதென்று காண்பிக்கவல்ல பர்வதங்களையும் விருக்ஷங்களையும் பார்த்தும்.

(வி - ரை.) இனம் - கூட்டம். (௩௭)

ஒன்றையொன் றுரிஞ்சித் தோன்று மொளியெரி யதனால் வேகு
முன்றிகழ் மரம்போய் வேறே முளைத்தெழு தருக்கள் பார்த்து
மின்றியுஞ் சீத மிஞ்சு மிடையிருள் வெயிலைத் தம்பாற்
சென்றபேர்க் களிக்குந் தாருக் குழூஉக்கிரித் திரளைப் பார்த்தும்.

(ப - ரை.) ஒன்றை - ஒரு மரத்தை, ஒன்று - மற்றொருமரம், உரிஞ்சி - உராய்வதனால், தோன்றும் - உண்டாகின்ற, ஒளி - பிரகாசம்பொருந்திய, எரியதனால் - நெருப்பினால், வேகும் - சுட்டெரிந்துபோகின்ற, முன் - முதலில், திகழ்-விளங்கின, மரம் - (பழைய) மரம், போய் - அழிந்து, வேறு - மற்றொரு புதிய மரம், முளைத்து-தோன்றி, எழு-வளர்கின்ற, தருக்கள் - மரங்களை, பார்த்தும்—, இன்றியும் - இதுவுமல்லாமலும், சீதம் - குளிர், மிஞ்சும் - அதிகரிக்கின்ற, இடையிருள் - நடுராத்ரியில், தம்பால் - தங்களிடத்தில், சென்றபேர்க்கு - வந்தவர்களுக்கு, வெயிலை - வெயிலை, அளிக்கும் - கொடுக்கவல்ல, தாருக்குழூஉ - மரங்களையும், கிரித்திரளை - பர்வதங்களையும், பார்த்தும்—, எ - று.

(போ-ரை.) ஒருமரத்தை மற்றொருமரம் உராய்வதனா லுண்டாகின்ற பிரகாசம்பொருந்திய நெருப்பினாற் சுட்டெரிந்துபோகின்ற முதலில் விளங்கின பழைய மரமழிந்து மற்றொரு புதியமரம் தோன்றி வளர்கின்ற மரங்களைப்பார்த்தும், இதுவுமல்லாமலும் குளிர் அதிகரிக்கின்ற நடுராத்ரியில் தங்களிடத்தில் வந்தவர்களுக்கு வெயிலைக் கொடுக்கவல்ல மரங்களையும் பர்வதங்களையும் பார்த்தும்.

(வி - ரை.) குழூஉ - கூட்டம், திரள் - கூட்டம். (௩௮)

வெயின்மிகும் போது தம்பான் மேவினோர் விரும்பத் திங்கள்
பயிலவே செய்யு மோங்கற் பகுதியன் மரங்கள் பார்த்து
மயிலுறும் பாலா றேரி யருஞ்சுனை யருவி பார்த்துந்
தயிர்நிறை தடாகங் கூபந் தண்சுனை நதிகள் பார்த்தும்,

(ப - ரை.) வெயில் - வெயில், மிகும்போது - அதிகரிக்கும்போது, தம்பால் - தங்களிடத்தில், மேவினோர் - (இளைப்புடன்) வந்தபேர்கள், விரும்ப - மகிழ்ச்சியடையும்படி, திங்கள்-சந்திரனை, பயிலச்செய்யும்-ஒளிசெய்விக்கவல்ல, ஓங்கல்பகுதி - மலைகளையும், பல் - பலவகைப்பட்ட, மரங்கள் - மரங்களையும், பார்த்தும்—, அயில் உறும்-உண்ணுதற்குரிய, பால்-பால் (நிறைந்த), ஆறு - நதிகளையும், ஏரி-ஏரிகளையும், அரு - (பார்த்தற்கருமையாகிய), சுனை - சுனைகளையும், அருவி - அருவியாறுகளையும், பார்த்தும்—, தயிர்நிறை - தயிர்நிரம்பிய, தடாகம் - குளங்களையும், கூபம் - கிணறுகளையும், தண் - குளிர்ச்சிபொருந்திய, சுனை - சுனைகளையும், நதிகள் - ஆறுகளையும், பார்த்தும்—, எ - று.

(பொ - ரை.) வெயில் அதிகரிக்கும்போது தங்களிடத்தில் இளைப்புடன் வந்தபேர்கள் மகிழ்ச்சியடையும்படிச் சந்திரனை யொளிசெய்விக்க வல்ல மலைகளையும் பலவகைப்பட்ட மரங்களையும் பார்த்தும், உண்ணுதற்குரிய பால்நிறைந்த நதிகளையும் ஏரிகளையும் பார்த்தற்கருமையாகிய சுனைகளையும் அருவியாறுகளையுங் பார்த்தும், தயிர் நிரம்பிய குளங்களையும் கிணறுகளையும் குளிர்ச்சிபொருந்திய சுனைகளையும் ஆறுகளையும் பார்த்தும். (௩௯)

நெய்யுறு மருவி யாறு சுனைநதி நின்று பார்த்தும்
பையவே மாதி ராசர் பலவில்ல வனம்பு குந்து
பொய்யில்பொன் கிரிம ரங்கள் கொடிசெடி விலங்கு புட்கள்
செய்யவம் மணத்துக் கோயில் செறியும்பா லனைத்தும் பார்த்தும்.

(ப - ரை.) நெய் - நெய், உறும் - நிறைந்த, அருவியாறு - அருவியாறுகளையும், சுனை - சுனைகளையும், நதி - நதிகளையும், நின்று - தங்கி, பார்த்தும்—, மாதிராசர் - மாதிராசையர், பல-பலவிதமான, வில்லவனம் - வில்வவனங்களில், பைய-மெதுவாக, புகுந்து - நுழைந்து, பொய்இல் - நிலைபெற்றிருக்கின்ற, பொன்கிரி - ஸ்வர்ண பர்வதங்களும், பொன்மரங்கள் - ஸ்வர்ண வ்ருக்ஷங்களும், பொன்கொடி - ஸ்வர்ணக் கொடிகளும், பொன்செடி - ஸ்வர்ணச் செடிகளும், பொன்விலங்கு - ஸ்வர்ண ம்ருகங்களும், பொன்புட்கள்-ஸ்வர்ணபக்ஷிகளும், செய்ய - அழகிய, அம்மணத்துக்கோயில் - சிவாலயங்களும், செறியும்-நிறைந்திருக்கின்ற, பால்அனைத்தும்-எல்லாவிடங்களையும், பார்த்தும்—, எ - று.

(பொ-ரை.) நெய்நிறைந்த வருவியாறுகளையும் சுனைகளையும் நதிகளையுந் தங்கிப் பார்த்தும், மாதிராசையர் பலவிதமான வில்வ வநங்களில் மெதுவாக நுழைந்து நிலைபெற்றிருக்கின்ற ஸ்வர்ண பர்வதங்களும் ஸ்வர்ண வ்ருக்ஷங்களும் ஸ்வர்ணக் கொடிகளும் ஸ்வர்ணச் செடிகளும் ஸ்வர்ண ம்ருகங்களும் ஸ்வர்ண பக்ஷிகளும் அழகிய சிவாலயங்களும் நிறைந்திருக்கின்ற வெல்லா விடங்களையும் பார்த்தும்.

(வி - ரை.) அம்மணம் - நிர்வாணம் (திகம்பரம்). சிவபெருமானுக்குத் திகம்பரனென்னும் திருநாமம் வழங்குதலால் அம்மணத்தனென்பதற்குச் சிவபெருமானெனப் பொருட்கொண்டாம். (௪0)

நவமணி யினங்கள் போலு நாகங்க ணனேகம் பார்த்து
நவமணி யினங்கள் போலு நற்கொடி செடிகள் பார்த்து
நவமணி யினங்கள் போலு நாற்பதம் புட்கள் பார்த்து
நவமணி யினங்கள் போலு நன்மலர்த் தருக்கள் பார்த்தும்.

(ப - ரை.) நவமணியினங்கள் - நவரத்நங்களை, போலும் - போன்ற, நாகங்கள்- பர்வதங்களை, நண்ணி - அடுத்து, பார்த்தும்—, நவமணியினங்கள் - நவரத்நங்களை, போலும் - போன்ற, நல் - சிறந்த, கொடி - கொடிகளையும், செடிகள் - செடிகளையும், பார்த்தும்—, நவமணியினங்கள் - நவரத்நங்களை, போலும் - போன்ற, நால் பதம் - நான்கு கால்களையுடைய, புட்கள் - பக்ஷிகளை, பார்த்தும்—, நவமணி யினங்கள் - நவரத்நங்களை, போலும் - போன்ற, நல்-சிறந்த, மலர்த்தருக்கள் - புஷ்ப வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, எ - று.

(போ - ரை.) நவரத்நங்களைப் போன்ற பர்வதங்களை யடுத்துப் பார்த்தும், நவரத்நங்களைப் போன்ற சிறந்த கொடிகளையும் செடிகளையும் பார்த்தும், நவரத்நங் களைப் போன்ற நான்கு கால்களையுடைய பக்ஷிகளைப் பார்த்தும், நவரத்நங்களைப் போன்ற சிறந்த புஷ்ப வ்ருக்ஷங்களைப் பார்த்தும்.

(வி - ரை.) இனம்-கூட்டம். நவமணி - முத்து, வயிரம், வைடூரியம், மாணிக்கம், மரகதம், புட்பராகம், பவளம், நீலம், கோமேதகம். (சக)

ஒருமுத லாகிப் பல்பே ருற்றபல் கொடிகள் பார்த்து
மருவொடு வாயு லிங்க மந்தரம் விளங்கல் பார்த்தும்
பரிவினன் னீர்தெ ளித்துப் பணியுமா மழையைப் பார்த்துந்
தருவினை மலராற் கோலஞ் சமைக்குமத் தகைமை பார்த்தும்.

(ப - ரை.) ஒரு - ஒரேவொரு, முதலாகி - வேறுடையதாகி, பல் - பற்பல, பேர்உற்ற - பெயர்களைப் பெற்றிருக்கின்ற, பல் - பற்பல, கொடிகள் - கொடிகளை, பார்த்தும்—, அருவொடு - அரூபத்துடன், வாயு - வாயுபகவான், லிங்கமந்தரம் - சிவாலயங்களை, விளங்கல் - பெறுக்குந்திறத்தை, பார்த்தும்—, பரிவில் -அன்புடன், நல்நீர் - சுத்தஜலத்தை, தெளித்து - இறைத்து, பணியும் - வணங்குகின்ற, மா - கறுத்த, மழையை - முகிலை, பார்த்தும்—, தருவினம் - மரங்கள், மலரால் - புஷ்பங் களினுல், கோலம் - கோலத்தை, சமைக்கும் - இடுகின்ற, அ - அந்த, தகைமை - பெருமையை, பார்த்தும்—, எ - று.

(போ - ரை.) ஒரேவொரு வேறுடையதாகிப் பற்பல பெயர்களைப் பெற்றிருக் கின்ற பற்பல கொடிகளைப் பார்த்தும், அரூபத்துடன் வாயுபகவான் சிவாலயங்களைப் பெறுக்குந்திறத்தைப் பார்த்தும், அன்புடன் சுத்தஜலத்தையிறைத்து வணங்குகின்ற கறுத்த முகிலைப் பார்த்தும், மரங்கள் புஷ்பங்களினுற் கோலத்தையிடுகின்ற அந்தப் பெருமையைப் பார்த்தும். (சஉ)

வந்துசங் கரனை யாட்டு மஞ்சனத் தீர்த்தம் பார்த்துஞ்
சந்தனந் தினமுஞ் சாத்துஞ் சந்தனத் தருக்கள் பார்த்துங்
கொந்தலர் தந்து சாத்து மலர்வனக் குழுக்கள் பார்த்து
மந்தருந் தூபங் காட்டு மருந்தூப மரங்கள் பார்த்தும்.

(ப - ரை.) வந்து - (திருவாலயத்துக்கு) சென்று, சங்கரனை - சிவபெருமானை, ஆட்டும் - அபிஷேகஞ்செய்கின்ற, மஞ்சனத்தீர்த்தம் - திருமஞ்சனத் தீர்த்தங்களை, பார்த்தும்—, சந்தனம் - சந்தனத்தை, தினமும் - நாடோறும், சாத்தும் - ஸமர்ப்பிக் கின்ற, சந்தனத்தருக்கள்-சந்தன வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, கொந்து-கொத்தாகிய அலர் - புஷ்பங்களை, தந்து - உண்டாக்கி, சாத்தும் - ஸமர்ப்பிக்கின்ற, மலர்வனக்

குழுக்கள் - நந்தவனங்களை, பார்த்தும்—, அம் தரும் - அழகுபொருந்திய, தூபம் - தூபத்தை, காட்டும் - ஸமர்ப்பிக்கின்ற, அரு- சிறந்த, தூப மரங்கள் - தூப வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, எ - று.

(பொ - ரை.) திருவாலயத்துக்குச் சென்று சிவபெருமானை யபிஷேகஞ்செய்கின்ற திருமஞ்சனத் தீர்த்தங்களைப் பார்த்தும், சந்தனத்தை நாடோறும் ஸமர்பிக்கின்ற சந்தன வ்ருக்ஷங்களைப்பார்த்தும், கொத்தாகிய புஷ்பங்களையுண்டாக்கி ஸமர்ப்பிக்கின்ற நந்தவனங்களைப் பார்த்தும், அழகுபொருந்திய தூபத்தை ஸமர்ப்பிக்கின்ற சிறந்த தூப வ்ருக்ஷங்களைப் பார்த்தும்.

(வி - ரை.) சங்கரன் - இன்பத்தைச்செய்பவன். (சஙு)

தீபநம் பரற்குக் காட்டுந் திரண்மணி யரவு பார்த்து
மேவுநற் பலநி வேதம் விரும்பிச்செய் தருக்கள் பார்த்து
மாவலா லடைக்கா யேற்று மம்மரக் கொடிகள் பார்த்துந்
தாவர மாதி ராசர் தருக்கியே செலுங்கான் மற்றும்.

(ப - ரை.) நம் - நமது, பரற்கு - சிவபெருமானுக்கு, தீபம்-தீபத்தை, காட்டும்-ஸமர்ப்பிக்கின்ற, திரள்-திரண்ட, மணி-ரத்நங்களையுடைய, அரவு-பாம்புகளை, பார்த்தும்—, மேவும்-உண்டாயிருக்கின்ற, நல்-சிறந்த, பலம்-கனிகளை, விரும்பி-அன்புடன், நிவேதஞ்செய் - நைவேத்யம்பண்ணுகின்ற, தருக்கள் - வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, ஆவலால் - அன்புடன், அடைக்காய்-தாம்பூலத்தை, ஏற்றும் - ஸமர்ப்பிக்கின்ற, அம் - அழகிய, மரம் - வ்ருக்ஷங்களையும், கொடிகள் - கொடிகளையும், பார்த்தும்—, எ - று.

(பொ - ரை.) நமது சிவபெருமானுக்குத் தீபத்தை ஸமர்ப்பிக்கின்ற திரண்ட ரத்நங்களையுடைய பாம்புகளைப் பார்த்தும், உண்டாயிருக்கின்ற சிறந்த கனிகளை யன்புடன் நைவேத்தியம் பண்ணுகின்ற வ்ருக்ஷங்களைப் பார்த்தும், அன்புடன் தாம்பூலத்தை ஸமர்ப்பிக்கின்ற அழகிய வ்ருக்ஷங்களையும் கொடிகளையும் பார்த்தும். ()

பாதவ வரவென் றேத்திப் பாதவம் பலவி றைஞ்சுங்
கோதிலாத் தருவி லிங்கங் குலவிடங் குறிகிப் பார்த்துந்
தீதறும் பறவை மன்ன வெனச்சொலி செய்ய புட்கள்
பூதல முறவி றைஞ்சும் புள்ளிலிங் கங்கள் பார்த்தும்.

(ப - ரை.) பாதவஅர - வ்ருக்ஷேந்த்ரனே, என்று - என்று, ஏத்தி - துதித்து, பல - பலவிதமான, பாதவம் - வ்ருக்ஷங்கள், இறைஞ்சும் - வணங்குகின்ற, கோது இலா - பரிசுத்தமாகிய, தருவிலிங்கம் - வ்ருக்ஷலிங்கங்கள், குலவு - விளங்குகின்ற, இடம் - ஸ்தலங்களை, குறுகி - அடுத்து, பார்த்தும்—, தீதுஅறும் - பரிசுத்தமாகிய, பறவைமன்ன - பக்ஷீந்த்ரனே, என்ன - என்று, சொலி - துதித்து, செய்ய - அழகிய, புட்கள் - பக்ஷிகள், பூதலம் உற - பூமியிற்படும்படி (ஸாஷ்டாங்கமாக), இறைஞ்சும் - வணங்குகின்ற, புள்இலிங்கங்கள்-பக்ஷிலிங்கங்களை, பார்த்தும்—, எ-று.

(பொ - ரை.) வ்ருக்ஷேந்த்ரனே! என்று துதித்து பலவிதமான வ்ருக்ஷங்கள் வணங்குகின்ற பரிசுத்தமாகிய வ்ருக்ஷலிங்கங்கள் விளங்குகின்ற ஸ்தலங்களையடுத்துப் பார்த்தும், பரிசுத்தமாகிய பக்ஷீந்த்ரனே ! என்று துதித்து அழகிய பக்ஷிகள் பூமியிற் படும்படிச் சாஷ்டாங்கமாக வணங்குகின்ற பக்ஷிலிங்கங்களைப் பார்த்தும்.

(வி - ரை) பாதவஅர - மரங்களுக்குத்தலைவனே. பறவைமன்ன - பக்ஷிகளுக்குத்தலைவனே. (சஎ)

மிருகமன் னவவென் றேத்தி விரும்பியே யிறைஞ்ச நாளுந்
தெரிதரு மிருக லிங்கஞ் சேரிடஞ் சென்று பார்த்து
முரகவல் லபவென் றேத்தி யுரகங்கள் பணிய நாளும்
வரமரு ளுரக லிங்க மன்னிட மகிழ்ந்து பார்த்தும்.

(ப - ரை.) மிருகமன்னவ - ம்ருகேந்த்ரனே, என்று - என்று, நாளும் - தினந்தோறும், ஏத்தி - துதித்து, விரும்பி - அன்புடன், இறைஞ்ச - வணங்க, தெரிதரு- விளங்குகின்ற, மிருகலிங்கம் - ம்ருகலிங்கங்கள், சேர் - வீற்றிருக்கின்ற, இடம் - ஸ்தலங்களை, சென்று-போய், பார்த்தும்—, நாளும் - தினந்தோறும், உரகவல்லப- நாகேந்த்ரனே, என்று - என்று, ஏத்தி - துதித்து, உரகங்கள் - நாகங்கள், பணிய - வணங்க, வரம் - வரத்தை, அருள் - அநுக்ரஹஞ்செய்கின்ற, உரகலிங்கம் - நாகலிங்கங்கள், மன் - வீற்றிருக்கின்ற, இடம் - ஸ்தலங்களை, மகிழ்ந்து - சந்தோஷத்துடன், பார்த்தும்—, எ - று.

(போ - ரை.) ம்ருகேந்த்ரனே ! என்று தினந்தோறுந் துதித்து அன்புடன் வணங்க விளங்குகின்ற ம்ருகலிங்கங்கள் வீற்றிருக்கின்ற ஸ்தலங்களைப் போய்ப் பார்த்தும், நாகேந்த்ரனே ! என்று தினந்தோறுந் துதித்து நாகங்கள் வணங்க வரத்தை யநுக்ரஹஞ் செய்கின்ற நாகலிங்கங்கள் வீற்றிருக்கின்ற ஸ்தலங்களைச் சந்தோஷத்துடன் பார்த்தும்.

(வி-ரை.) மிருகமன்ன-மிருகங்களுக்குத் தலைவனே. உரகவல்லப-நாகங்களுக்குத் தலைவனே. (௪௬)

அளிக்குல மன்ன வென்றே யளியின மிறைஞ்சி யேத்த
வெளிப்படு மளியி லிங்க மேவிடம் விரும்பிப் பார்த்துந்
தெளித்தநீர் மன்ன வென்று செழுஞ்சல மிறைஞ்ச நாளுங்
களிக்குநற் சலலிங் கத்தைக் காதலிற் சென்று பார்த்தும்.

(ப - ரை.) அளிக்குலமன்ன - ப்ரமரேஶ்வரனே, என்று - என்று, அளியினம் - வண்டுகள், இறைஞ்சி - வணங்கி, ஏத்த - துதிக்க, வெளிப்படும் - விளங்குகின்ற, அளியிலிங்கம் - ப்ரமரலிங்கங்கள், மேவும் - வீற்றிருக்கின்ற, இடம் - ஸ்தலங்களை, விரும்பி - அன்புடன், பார்த்தும்—, தெளித்த - பரிசுத்தமாக்குகின்ற, நீர்மன்ன - ஜலேஶ்வரனே, என்று-என்று, செழும் - மேன்மைபொருந்திய, சலம் - ஜலராசிகள், நாளும்-தினந்தோறும், இறைஞ்ச - வணங்க, களிக்கும் - ஆநந்தமடைகின்ற, நல் - சிறந்த,சலலிங்கத்தை - ஜலலிங்கங்களை, காதலில்-அன்புடன், சென்று - போய், பார்த்தும்—, எ - று.

(போ-ரை.) ப்ரமரேஶ்வரனே ! என்று வண்டுகள்வணங்கித் துதிக்க விளங்குகின்ற ப்ரமரலிங்கங்கள் வீற்றிருக்கின்ற ஸ்தலங்களை யன்புடன் பார்த்தும், பரிசுத்தமாக்குகின்ற ஜலேஶ்வரனே ! என்று மேன்மைபொருந்திய ஜலராசிகள் தினந்தோறும் வணங்க வாநந்தமடைகின்ற ஜலலிங்கங்களை யன்புடன் போய்ப் பார்த்தும்.

(வி - ரை.) அளி - வண்டு. குலம் - கூட்டம். அளிக்குலமன்ன - வண்டுகளுக்குத் தலைவனே. ப்ரமரம் - வண்டு. இனம் - கூட்டம். அளிக்குலமன்ன-வண்டுகளுக்குத் தலைவனே. ராசி-கூட்டம். நீர் மன்ன - ஜலராசிகளுக்குத்தலைவனே. (௪௭)

சவரவல் லபவென் றேத்திச் சவரர்க ளிறைஞ்ச நாளுந்
தவலற வரம ளிக்குஞ் சவரலிங் கங்கள் பார்த்தும்
விபுதவல் லபவென் றேத்தி விபுதர்க ளிறைஞ்ச நாளு
மவர்களுக் கினிமை நல்கு மமரலிங் கங்கள் பார்த்தும்.

(ப-ரை.) சவரவல்லப-ஶபரேஶ்வரனே, என்று-என்று, ஏத்தி-துதித்து, சவரர்கள்-வேடர்கள், நாளும் - தினந்தோறும், இறைஞ்ச-வணங்க, தவல்அற - குறைவில்லாதிருக்கும்படி, வரம்-வரத்தை, அளிக்கும் - அநுக்ரஹஞ்செய்கின்ற, சவரலிங்கங்கள் - ஶபரலிங்கங்களை, பார்த்தும்—, விபுதவல்லப - விபுதேஶ்வரனே, என்று - என்று, ஏத்தி - துதித்து, விபுதர்கள் - தேவர்கள், இறைஞ்ச - வணங்க, நாளும் - தினந்தோறும், அவர்களுக்கு - அவர்களுக்கு, இனிமை - வரத்தை, நல்கும் - அநுக்ரஹஞ்செய்கின்ற, அமரலிங்கங்கள் - தேவலிங்கங்களை, பார்த்தும்—, எ - று.

(போ - ரை.) ஶபரேஶ்வரனே! என்று துதித்து வேடர்கள் தினந்தோறும் வணங்கக் குறைவில்லாதிருக்கும்படி வரத்தை யநுக்ரஹஞ் செய்கின்ற ஶபரலிங்கங்களைப் பார்த்தும், விபுதேஶ்வரனே! என்று துதித்துத் தேவர்கள் வணங்கத் தினந்தோறும் அவர்களுக்கு வரத்தை யநுக்ரஹஞ்செய்கின்ற தேவலிங்கங்களைப்பார்த்தும்.

(வி - ரை.) சவரவல்லப - வேடர்களுக்குத் தலைவனே. விபுதவல்லப - தேவர்களுக்குத் தலைவனே. (௪௰)

மலையெனப் புற்று மூடி மறையுமா தவரைப் பார்த்து
மிலைமர மூடித் தாரு வெனவுறுந் தவரைப் பார்த்துஞ்
சிலையெனச் சிலைமேன் மூடிச் செறியுமா தவரைப் பார்த்துந்
தொலைவிலா மயிர்மேன் மூடித் தோன்றலா தவரைப் பார்த்தும்.

(ப - ரை.) மலையென்ன - பர்வதத்தைப்போல, புற்று - வன்மீகம், மூடி - போர்த்துக்கொண்டு, மறையும் - தோன்றாதிருக்கின்ற, மா - பெருமைபொருந்திய, தவரை - முநிவர்களை, பார்த்தும்—, இலை - இலைகள் (நிறைந்த), மரம்-வ்ருக்ஷங்கள், மூடி - சூழ்ந்துகொண்டு, தாருவென்ன - வ்ருக்ஷத்தைப்போல, உறும் - நிலைத்திருக்கின்ற, தவரை - முநிவர்களை, பார்த்தும்—, சிலை - கல், மேல் - தம்மீது, மூடி - வளைந்துகொண்டு, சிலையென்ன - கல்லைப்போல, செறியும் - நிலைத்திருக்கின்ற, மா - பெருமைபொருந்திய, தவரை - முநிவர்களை, பார்த்தும்—, தொலைவு இல்லாத - அழிவில்லாத, மயிர் - ரோமங்கள் (வளர்ந்து), மேல் - தம்மீது, மூடி-மூடிக்கொண்டு, தோன்றலா - மறைந்திருக்கின்ற, தவரை - முநிவர்களை, பார்த்தும்—, எ - று.

(போ - ரை.) பர்வதத்தைப்போல வன்மீகம் போர்த்துக்கொண்டு தோன்றாதிருக்கின்ற பெருமை பொருந்திய முநிவர்களைப் பார்த்தும், இலைகள் நிறைந்த வ்ருக்ஷங்கள் சூழ்ந்துகொண்டு வ்ருக்ஷத்தைப்போல நிலைத்திருக்கின்ற முநிவர்களைப் பார்த்தும், கல் தம்மீது வளைந்துகொண்டு கல்லைப்போல நிலைத்திருக்கின்ற பெருமை பொருந்திய முநிவர்களைப் பார்த்தும், அழிவில்லாத ரோமங்கள் வளர்ந்து தம்மீது மூடிக்கொண்டு மறைந்திருக்கின்ற முநிவர்களைப் பார்த்தும். (௪௧)

பரமயோ கத்தாற் காட்டப் பான்மையாந் தவரைப் பார்த்துஞ்
சிரநில மூன்றிக் கைகால் சேணிடை நீட்டி வாயுப்
பருகுமா தவரைப் பார்த்தும் பாதவங் குட்ட மொன்றே
தரையிடை யூன்றி நின்று சலிப்பின்மா தவரைப் பார்த்தும்.

(ப - ரை.) பரமம் - மேலான, யோகத்தால் - யோகப்பயிற்சியினால், காட்டப் பான்மையாம் - கட்டையைப்போன்று நிலைத்திருக்கிற, தவரை - முநிவர்களை, பார்த்தும்—, சிரம்-தலையை, நிலம் - பூமியில், ஊன்றி-நட்டுக்கொண்டும், கை-கைகளையும், கால் - கால்களையும், சேண் இடை - ஆகாயத்தில், நீட்டி - தூக்கிக்கொண்டும், வாயு-காற்றை, பருகும் - புசிக்கின்ற, மா - பெருமைபொருந்திய, தவரை - முநிவர்களை, பார்த்தும்—, பாதம் - காலின், அங்குட்டம் - பெருவிரல், ஒன்றே - ஒன்றினையே, தரையிடை - பூமியில், ஊன்றி - பதித்து, நின்று - நின்றுகொண்டு, சலிப்பு இல் சலனமில்லாமல் நிலைத்திருக்கின்ற, மா-பெருமைபொருந்திய, தவரை-முனிவர்களை, பார்த்தும்—, எ - று.

(பொ-ரை.) மேலான யோகப்பயிற்சியினால் கட்டையைப்போன்று நிலைத்திருக்கின்ற முநிவர்களைப்பார்த்தும், தலையைப்பூமியில் நட்டுக்கொண்டும் கைகளையும் கால்களையும் ஆகாயத்தில் தூக்கிக்கொண்டும் காற்றைப் புசிக்கின்ற பெருமைபொருந்திய முநிவர்களைப் பார்த்தும், காலின் பெருவிரலொன்றினையே பூமியிற் பதித்து நின்றுகொண்டு சலனமில்லாமல் நிலைத்திருக்கின்ற பெருமைபொருந்திய முனிவர்களைப் பார்த்தும். (௯௦)

பரந்தபஞ் சாங்கி யூடே பற்றுமா தவரைப் பார்த்து
முரந்தர வோடு மாற்றி னுற்றிருங் களம மிழ்ந்த
நிரந்தர மகிழ்ந்து நிற்கு நித்தமா தவரைப் பார்த்து
மருந்துநீர்த் துளிவா னூகத் தமையுமா தவரைப் பார்த்தும்.

(ப - ரை.) பரந்த - வியாபித்து ஜ்வாலைவீசுகின்ற, பஞ்சாங்கியூடு - பஞ்சாக்கிமத்தியில், பற்றும் - சலனமில்லாமல் தவஞ்செய்கின்ற, மா - பெருமைபொருந்திய, தவரை - முநிவர்களை, பார்த்தும்—, உரம்தர - மனோத்ருடத்துடன், ஓடும் - ஓடுகின்ற, ஆற்றின் - நதியில், உற்று - நின்று, இரு - பெருமையுள்ள, களம் - கண்டம் வரையிலும், அமிழ்ந்த - முழுதும்படி, நிரந்தரம் - சதாகாலமும், மகிழ்ந்து - சந்தோஷத்துடன், நிற்கும் - தவஞ்செய்கின்ற, நித்தம் - அழிவில்லாத, மா - பெருமை பொருந்திய, தவரை - முநிவர்களை, பார்த்தும்—, அருந்தும் - உண்ணுதற்குரிய, நீர்த்துளி - நீர்த்திவலைகளைச் சொட்டுகின்ற, வானூகத்து - வெண்மணற்குன்றுகளில், அமையும் - தவஞ்செய்கின்ற, மா - பெருமைபொருந்திய, தவரை - முநிவர்களை, பார்த்தும்—, எ - று.

(பொ-ரை.) வியாபித்து ஜ்வாலைவீசுகின்ற பஞ்சாக்கி மத்தியில் சலனமில்லாமற் றவஞ்செய்கின்ற பெருமைபொருந்திய முநிவர்களைப் பார்த்தும், மனோத்ருடத்துடன் ஓடுகின்ற நதியில் நின்று பெருமையுள்ள கண்டம் வரையிலும் முழுகும்படிச் சதாகாலமுஞ் சந்தோஷத்துடன் தவஞ்செய்கின்ற அழிவில்லாத பெருமை பொருந்திய முநிவர்களைப் பார்த்தும், உண்ணுதற்குரிய நீர்த்திவலைகளைச் சொட்டுகின்ற வெண்மணற்குன்றுகளில் தவஞ்செய்கின்ற பெருமை பொருந்திய முநிவர்களைப் பார்த்தும்.

(வி - ரை.) பஞ்சாக்கி - நான்கு திக்குகளிலும் அக்கி மூட்டப்பட்டு மேலிற் சூர்யாக்கியுங் கொண்டுள்ளதாம். (௯௧)

மரங்களை யையங் கேட்க விளைந்திடும் பலங்க ளுண்டும்
பெருங்கிரி வணங்கி நல்கும் பெருமரத் தேன யின்று
மிருந்துமா தவங்கள் செய்வோ ரிடங்களிற் சென்று பார்த்துந்
திருந்துநற் சலக்கி ரீடை செய்யுங்கர் திருவர்ப் பார்த்தும்.

(ப - ரை.) மரக்களை - மரங்களை, ஐயம் - பிச்சை, கேட்க - கேட்டலும், வளைந்து - வணங்கி, இடும் - கொடுக்கின்ற, பலங்கள் - பழங்களை, உண்டும் - புசித்தும், பெரு - பெருமையுடைய, கிரி - மலைகள், வணங்கி - தொழுது, நல்கும் - கொடுக்கின்ற, பெரு - மேலான, மரத்தேன் - கொம்புத்தேனை, அயின்றும்-உண்டும், இருந்து - தங்கி, தவங்கள் - பெருந்தவங்களை, செய்வோர் - பண்ணுகின்ற முனிவர்களுடைய, இடங்களில் - ஆச்சிரமங்களில், சென்று - போய், பார்த்தும்—, திருந்தும் - பொருத்தமாகிய, நல் - நல்ல, சலக்கிரீடை - ஜலக்கிரீடை, செய்யும் - செய்கின்ற, கந்திருவர் - கந்தர்வர்களை, பார்த்தும்—, எ-று.

(பொ-ரை.) மரங்களைப் பிச்சைகேட்டலும் வணங்கிக் கொடுக்கின்ற பழங்களைப் புசித்தும், பெருமையுடைய மலைகள் தொழுது கொடுக்கின்ற மேலான கொம்புத் தேனை யுண்டும், தங்கிப் பெருந்தவங்களைப் பண்ணுகின்ற முனிவர்களுடைய ஆச்சிரமங்களிற் போய்ப் பார்த்தும், பொருத்தமாகிய நல்ல ஜலக்கிரீடை செய்கின்ற கந்தர்வர்களைப் பார்த்தும். (௩௨)

செய்யநற் சிவார்ச்ச னாவற் சித்தரைப் பார்த்துந் தேவர்
தையலா ருடனே யாடுஞ் சமுகங்க டம்மைப் பார்த்து
முய்யநீ ரரமி னார்க ளுறுபிலங் களைநேர் பார்த்தும்
பையர வுலக ராடும் பாதல முழைகள் பார்த்தும்.

(ப - ரை.) செய்ய நல் - மிகச்சிறந்த, சிவார்ச்சனை - சிவபூஜையில், ஆவல் - விருப்பத்தையுடைய, சித்தரை - சித்தர்களை, பார்த்தும்—, தேவர் - தேவர்கள், தையலாருடன் - மாதர்களுடன், ஆடும் - நீர்விளையாடல் செய்கின்ற, சமுகங்கள் தம்மை - கூட்டங்களை, பார்த்தும்—, உய்ய - பிழைத்தற்குரிய, நீர் - ஜலத்தில் வசிக்கின்ற, அரமினார்கள் - (ஜலபுருஷர்களுடன்) ஜலகன்னிகைகளும், உறும் - நீர் விளையாடல்செய்கின்ற, பிலங்களை - பாதாளங்களை, நேர்-நேரே, பார்த்தும்—, பை - படங்களையுடைய, அரவு உலகர் - (நாகலோகத்திலுள்ள) நாகபுருஷர்களும் (நாக கன்னிகைகளும்), ஆடும் - நீர் விளையாடுகின்ற, பாதலமுழைகள் - பாதாளக்குகை களை, பார்த்தும்—, எ - று.

(பொ - ரை.) மிகச்சிறந்த சிவபூஜையில் விருப்பத்தையுடைய சித்தர்களைப் பார்த்தும், தேவர்கள் மாதர்களுடன் நீர்விளையாடல் செய்கின்ற கூட்டங்களைப் பார்த்தும், பிழைத்தற்குரிய ஜலத்தில் வசிக்கின்ற ஜலபுருஷர்களுடன் ஜலகன்னிகைகளும் நீர்விளையாடல் செய்கின்ற பாதாளங்களை நேரே பார்த்தும், படங்களையுடைய நாகலோகத்திலுள்ள நாகபுருஷர்களும் நாககன்னிகைகளும் நீர்விளையாடுகின்ற பாதாளக் குகைகளைப் பார்த்தும். (௩௩)

கரியரி புண்ட ரீகங் கரடிகண் முதலா யுள்ள
தெரிவரு மிருகந் தம்முட் செறிபகை யொழிந்து சேரு
முரிமையை மாதி ராச ருகந்துபார்த் துயர்ந்து வில்ல
விரிவனந் தன்னைப் பார்த்து மிகமன முருகிப் போற்றி.

(ப - ரை.) கரி - யானைகளும், அரி - சிங்கங்களும், புண்டரீகம் - புலிகளும், கரடிகள் - கரடிகளும், முதலாயுள்ள - முதலாயிருக்கின்ற, தெரிவு அரு - காண்டற் கரிய, மிருகம் - மிருகங்கள், தம்முள் - தம்மில், செறி - உண்டாயிருந்த, பகை - விரோதத்தினின்றும், ஒழிந்து - நீங்கி, சேரும் - (அந்யோந்யமாய்) கூடியிருக்கின்ற,

உரிமையை - பெருமையை, மாதிராசர் - மாதிராசையர், உகந்து-சந்தோஷத்துடன், பார்த்து—, உயர்ந்து-ஓங்கிவளர்ந்து, விரி-விசாலித்திருக்கின்ற, வில்லவனம் தன்னை-வில்வவநத்தை, பார்த்தும்—, மனம் - நெஞ்சம், மிக - அதிகமாக, உருகி - கரைந்து, போற்றி - துதித்து, எ - று.

(பொ-ரை.) யானைகளும் சிங்கங்களும் புலிகளும் கரடிகளு முதலாயிருக்கின்ற காண்டற்கரிய மிருகங்கள் தம்மில் உண்டாயிருந்த விரோதத்தினின்றும் நீங்கி, அந்யோந்யமாய்க் கூடியிருக்கின்ற பெருமையை மாதிராசையர் சந்தோஷத்துடன் பார்த்தும், ஓங்கி வளர்ந்து விசாலித்திருக்கின்ற வில்வ வநத்தைப்பார்த்தும், நெஞ்சம் அதிகமாகக் கரைந்துத் துதித்து. (௩௪)

மெய்த்தவ மல்லி ராசர் மேவிட மேதென் றெண்ணி
யத்தகை வில்லஞ் சூழு மருவன மனைத்துந் தேடி
முத்தரா மாதி ராசர் முறைமையை யறிவா மென்னுஞ்
சித்தரா யத்த வத்தர் திருவுள்ளத் துன்னித் தேர்ந்து.

(ப - ரை.) மெய் - உண்மையாகிய, தவம் - தவஞ்செய்கின்ற, மல்லிராசர் - மல்லிராசையர், மேவும் - எழுந்தருளியிருக்கின்ற, இடம் - ஆச்சிரமம், எது - யாது, என்று - என்று, எண்ணி - சிந்தித்து, அத்தகை-அந்தப்பெருமையுடையதும், சூழும்-சூழ்ந்திருக்கிறதும், அரு - சிறந்தது மாகிய, வில்லம்வனம் - வில்வ வநத்தை, அனைத்தும் - முழுதும், தேடும் - தேடுகின்ற, முத்தர்ஆம் - மலமுத்தராகிய, மாதிராசர் - மாதிராசையருடைய, முறைமையை - நிலைமையை, அறிவாம்என்னும் - சோதித்துத் தெரிந்துகொள்வோமென்கின்ற, சித்தர் ஆய் - மனத்தையுடையவராய், அத்தவத்தர்-அந்த ஜங்கமூர்த்தியாகிய மல்லிராசையர், திருவுள்ளத்து - திருவுளத்தில், உன்னி - யோசித்து, தேர்ந்து - அறிந்து, எ - று.

(பொ - ரை.) உண்மையாகிய தவஞ்செய்கின்ற மல்லிராசையர் எழுந்தருளியிருக்கின்ற வாச்சிரமம் யாது? என்று சிந்தித்து, அந்தப் பெருமையுடையதும் சூழ்ந்திருக்கிறதும் சிறந்ததுமாகிய வில்வ வநத்தைமுழுதும் தேடுகின்ற மலமுத்தராகிய மாதிராசையருடைய நிலைமையைச் சோதித்துத் தெரிந்து கொள்வோமென்கின்ற மனத்தையுடையவராய், அந்த ஜங்கமமூர்த்தியாகிய மல்லிராசையர் திருவுளத்தில் யோசித்தறிந்து

(வி - ரை.) திருவெண்ணீறு, கண்டிகை, காஷாய முதலிய சிவவேடச்சின்னங்களைப் புறத்திலணிந்து பெருந்துறவிகளைப்போல நடிக்கின்ற கூடாவொழுக்கமுள்ள போலித் தவத்தர்களைப் போலல்லாது எனதென்னும் புறப்பற்றினையும் யானென்னு மகப்பற்றினையு மறவே விட்டுத் துறவினைப் பூண்டாராதலின் மெய்த்தவ மல்லிராசரென்றார். (௩௫)

கலிநிலைத்துறை.

நல்ல தோர்பெரு வடிவினை நண்ணிமு னடுவே
மல்லன் மாமலை தொடங்கிவிண் ணளவதாய் வளர்ந்து
தொல்லை நீற்றருங் கிரியதோ சோதிமா மயமோ
வெல்லையற்ற ருத்தி ராக்கமா மரம்பட ரியல்போ.

(ப - ரை.) நல்லது - தெய்விகத்தன்மை யுடையதாகிய, ஓர் - ஒப்பற்ற, பெரு வடிவினை - விஸ்வரூபத்தை, நண்ணி - அடைந்து, முன்-(மாதிராசையர்க்கு) எதிரே, நடு-இடைவெளியிலே, மல்லல்-வளமையுடையதும், மா - பெருமையுடையதுமாகிய, மலை-ஸ்ரீசைலம், தொடங்கி-முதற்கொண்டு, விண் - ஆகாயம், அளவாய்-வரையிலும்,

வளர்ந்து - உயர்ந்து, தொல்லை - பழமையானதும், அரு - பார்த்தற்கருமையானது மாகிய, நீற்றுக் கிரியதோ - விபூதிபர்வதமோ, மா - மேன்மைபொருந்திய, சோதி மயமோ - ஜ்யோதிஸ்வரூபமோ, எல்லையற்ற - மதித்தற்கரியதும், மா - பெருமை பொருந்தியதும், படர்-வளர்ந்திருந்ததுமாகிய, ருத்திராக்க மரம் இயல்போ-ருத்ராக்ஷ வ்ருக்ஷமோ, எ - று.

(பொ-ரை.) தெய்விகத்தன்மையுடையதாகிய ஒப்பற்ற விச்வரூபத்தையடைந்து மாதிராசையர்க்கெதிரே இடைவெளியிலே வளமையுடையதும் மேன்மையுடையது மாகிய ஸ்ரீசைலம் முதற்கொண்டு ஆகாயம் வரையிலும் உயர்ந்து, பழமையானதும் பார்த்தற் கருமையானதுமாகிய விபூதி பர்வதமோ? மேன்மைபொருந்திய ஜ்யோதி ஸ்வரூபமோ ? மதித்தற்கரியதும் பெருமை பொருந்தியதும் வளர்ந்திருந்தது மாகிய ருத்ராக்ஷ வ்ருக்ஷமோ.

(வி - ரை.) எல்லையற்ற - கணக்கற்ற. ருத்திராக்கம் - ருத்ராக்ஷங்களையுடைய. மரம் - வ்ருக்ஷம். இயல்பு - தன்மை. (௬௬)

கோர சம்புவின் வடிவமோ குறித்துயா மொருகா
லோரி டத்திலுஞ் சொல்லொணு தென்னென வுணர்ந்து
தீரமா திராசை யர்தாஞ் சென்னியே தென்று
தேர வேணு மென்றுண்டு மூன்றியங்கியுந் தெரியார்.

(ப-ரை.) கோரசம்புவின் வடிவமோ- வீரபத்ரமூர்த்தியோ, யாம்-நாம், குறித்து- அளவிட்டு, ஒருகால் - ஒருகாலத்திலும், ஓர் இடத்திலும் - ஒருவிடத்திலும், சொல லொணுது-பேசமுடியாது, என்ன-இதற்குக்காரணம் யாது, என-என்று, உணர்ந்து- தெரிந்துகொண்டு, தீரம்-மனோத்ருடத்தைபுடைய, மாதிராசையர் - மாதிராசையர், சென்னி - (இதன்) திருமுடி, எது - யாது, என்று - என்று, தேரவேணுமென்று- பார்த்தறியவேணுமென்று, ஆண்டுமூன்று - மூன்றுவருஷம், இயங்கியும் - அலைந்தும், தெரியார் - அறிந்துகொள்ளாராகி, எ-று.

(பொ - ரை.) வீரபத்ரமூர்த்தியோ? நாம் அளவிட்டு ஒருகாலத்திலும் ஒரு விடத்திலும் பேசமுடியாது, இதற்குக் காரணம் யாது ? என்று தெரிந்துகொண்டு மனோத்ருடத்தைபுடைய மாதிராசையர் இதன் திருமுடி யாது ? என்று, பார்த்தறிய வேணு மென்று மூன்றுவருஷம் அலைந்தும் அறிந்துகொள்ளாராகி.

(வி-ரை.) கோரம் - அகோரம் என்பதன் சிதைவு. சாந்தமுடைமை என்பது பொருள். (௬௭)

பத்தி தப்பினம் பதமுனந் தேடிலா தென்னுஞ்
சித்த முற்றயர்ந் தனுதினஞ் செய்பதந் தேடி
யத்தி றத்தினி லையிரண் டாண்டுழன் றறியார்
முத்த விப்படி யடியனை முனிவதோ முறைமை.

(ப-ரை.) முன்னம்-முன்னதாகவே, பதம்-திருவடிகளை, தேடிலாது-தேடாமல் (இருந்த), பத்தி - பக்தி, தப்பினம் - தவறிவிட்டோம், என்னும் - என்கின்ற, சித்தம் உற்று-சிந்தைகொண்டு, அயர்ந்து-சோர்ந்து, அனுதினம்-நாடோறும், செய்பதம் - அழகிய திருவடிகளை, தேடி-தேடித்திரிகின்ற, அத்திறத்தினில்-அந்தவூக்கத்தில், ஐயிரண்டு ஆண்டு-பத்துவருஷம், உழன்று-அலைந்தும், அறியார்-தெரிந்து கொள்ளா ராகி, முத்த-மலமுக்தனே, இப்படி-இவ்வாறு, அடியனை - அடியேனை, முனிவதோ - கோவிப்பதோ, முறைமை - நீதி யாகும் எ-று.

(போ - ரை.) முன்னதாகவே திருவடிகளைத் தேடாமலிருந்த பக்தி தவறி விட்டேனென்கின்ற சிந்தைகொண்டு சோர்ந்து நாடோறும் அழகிய திருவடிகளைத் தேடித்திரிகின்ற அந்தஊக்கத்தில் பத்துவருஷம் அலைந்துந் தெரிந்துகொள்ளாராகி, மலமுக்தனே! இவ்வாறு அடியேனைக் கோவிப்பதோ? நீதியாகும். (௫௮)

உன்பெ ருந்திரு வடிவினை யீதென வுன்னி
யென்பெ ரும்படி யறிவினு லறிதர வெளிதோ
நின்பெ ருந்திரு வருளினு னின்பதங் காட்டென்
றன்பு டன்றுதித் தொருதிங்கள் பணிந்தெழா தழுவே.

(ப - ரை.) உன் - உனது, திரு - அழகிய, பெருவடிவினை - விஸ்வரூபத்தை, ஈது - இது, என்ன - எத்தன்மையுடைத்து (என்று), உன்னி - யூகித்து, என் - அடியேனது, பெரும்படி யறிவினுல் - மந்தபுத்தியினுல், அறிதர-தெரிந்துகொள்ள, எளிதோ - லேஸான காரியமோ, நின் - உனது, பெரு - மேன்மையுடைய, திரு வருளினுல்-திருவருளினுல், நின்-உனது, பதம் - திருவடிகளை, காட்டு - காண்பியும், என்று - என்று, அன்புடன் - அன்புடன், துதித்து-எத்தி, ஒரு திங்கள் - ஒருமாதம், பணிந்து- (ஸாஷ்டாங்கமாய் விழுந்தபடியே) வணங்கி, எழாது-(மேலே) எழுந்திருக்காமல், அழு - அழுதலும், எ - று;

(போ - ரை.) உனது அழகிய விஸ்வரூபத்தைக் கண்டு, இது எத்தன்மையுடைத் தென்று யூகித்து அடியேனது மந்த புத்தியினுல் தெரிந்துகொள்ள லேஸான காரியமோ? உனது மேன்மையுடைய திருவருளினுல் உனது திருவடிகளைக் காண்பியுமென்று அன்புடன் எத்தி, ஒருமாதம் ஸாஷ்டாங்கமாய் விழுந்தபடியே வணங்கி மேலே யெழுந்திருக்காமல் அழுதலும். (௫௯)

மெல்ல வேதிரு முறுவல்செய் தருண்மிகு நோக்கான்
மல்லி கார்ச்சுன யோகர்முன் வடிவினை மாற்றி
நல்ல தந்திரு வுருவினைக் கொண்டுமு னண்ணி
யல்ல னீயற வவ்வடி வானமென் றறையா.

(ப - ரை.) மல்லிகார்ச்சுன யோகர் - யோகீஸ்வராகிய மல்லிராசையர், மெல்ல-பைய, திருமுறுவல்செய்து - திருமுறுவல்செய்து, மிகு - மிகுந்த, அருள் நோக்கால்-க்ருபாகடாக்ஷத்தால், முன் - முன்னர் (அடைந்திருந்த), வடிவினை-விஸ்வ ரூபத்தை,மாற்றி - ஒழித்து, தம்-தமது, நல்ல-சிறந்த, திருவுருவினை - திருமேனியை, கொண்டு - அடைந்து, முன் - எதிரே, நண்ணி - எழுந்தருளி, ஐயா - ஐயனே, நீ - நீ, அல்லல் அற - துன்பத்தினின்றும் நீங்கும்பொருட்டு, அவ்வடிவு ஆனம் - அந்த விஸ்வரூபத்தை யெடுத்தோம், என்று - என்று, எ - று.

(போ - ரை.) யோகீஸ்வராகிய மல்லிராசையர் பையத் திருமுறுவல் செய்து, மிகுந்த க்ருபா கடாக்ஷத்தால் முன் அடைந்திருந்த விஸ்வரூபத்தை யொழித்து, தமது சிறந்த திருமேனியை யடைந்து, எதிரே யெழுந்தருளி, ஐயனே! நீ துன்பத்தினின்றும் நீங்கும்பொருட்டு அந்த விஸ்வரூபத்தை யெடுத்தோம். (௬௦)

சரண நீயினி யெழுகெனத் தன்னிரு கரத்தா
லருளின் மாதிரா சையரை யெடுத்துகந் தணையாப்
பரம பத்தியா னம்மையிக் கிரிமிசைப் பார்க்க
வுரமி குந்தவஞ் செய்தனை வருதியென் றுவப்பால்.

(ப - ரை.) சரண - சிவசரணனே, நீ - நீ, இனி - இப்போது, எழுக - எழுந்திருக்கக்கடவை, என்ன - என்று, தன் - தனது, இருகரத்தால் - இரண்டு திருக்கைகளினால், அருளில் - அன்புடன், மாதிராசையரை - மாதிராசையரை, எடுத்து - தூக்கி, உவந்து - சந்தோஷத்துடன், அணையா - தழுவிக்கொண்டு, பரமம் - மேன்மையான, பத்தியால் - அன்புடன், நம்மை - எம்மை, இக்கிரிமிசை - இந்த ஸ்ரீ சைலத்தில், பார்க்க - காணும்பொருட்டு, உரம் மிகும் - மிகுந்த மனோத்ருடத்துடன், தவம் - தவத்தை, செய்தனை - பண்ணினாய், வருதி - (எம்முடன்) வருவாய், என்று - என்று, உவப்பால் - சந்தோஷத்துடன், எ - று.

(பொ-ரை.) சிவசரணனே! நீ இப்போது எழுந்திருக்கக் கடவையென்று, தனது இரண்டு திருக்கைகளினால் அன்புடன் மாதிராசையரைத் தூக்கி, சந்தோஷத்துடன் தழுவிக்கொண்டு, மேன்மையான அன்புடன் எம்மை யிந்த ஸ்ரீசைலத்தில் காணும்பொருட்டு மிகுந்த மனோத்ருடத்துடன் தவத்தைப் பண்ணினாய், எம்முடன் வருவாயென்று சந்தோஷத்துடன். (௧௧)

தன்சி நேகநற் றவாச்சிர மங்கொடு சார்ந்து
நன்சி வார்ச்சனை வேளையிற் சேடமு நல்கிப்
பின்சி வானுப வத்துறை பெருகவே காட்டி
முன்சி னாழிகை வைத்திருந் தினியன மொழிவார்.

(ப-ரை.) தன்-தனது, சிநேகம்-உரிமையாகிய, நல்-நல்ல, தவாச்சிரமம்-தவஞ்செய்தற்குரிய பன்னசாலைக்கு, கொடு-அழைத்துக்கொண்டு, சார்ந்து-போய், நல் - நன்மையுடைய, சிவார்ச்சனை வேளையில் - இஷ்டலிங்கபூஜாகாலத்தில், சேடமும் - லிங்கப்ரஸாதத்தையும், நல்கி-கொடுத்து, பின்-பிறகு, சிவானுபவத்துறை - சிவதத்வாநுபவ ஸுக ரஸத்தில், பெருக-விளக்க, காட்டி-காண்பித்து, முன்-சந்நிதியில், சில் நாழிகை-சிறிது நாழிகை வரையில், வைத்திருந்து - இருத்தியிருந்து, இனியன-இனியவார்த்தைகளை, மொழிவார்-சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ-று.

(பொ-ரை.) தனது உரிமையாகிய நல்ல தவஞ்செய்தற்குரிய பன்னசாலைக்கு அழைத்துக்கொண்டுபோய், நன்மையுடைய இஷ்டலிங்கலிங்கபூஜாகாலத்தில் லிங்கப்ரஸாதத்தையும் கொடுத்து, பிறகு சிவதத்வாநுபவ ஸுக ரஸத்தில் விளக்கக் காண்பித்து, சந்நிதியில் சிறிது நாழிகைவரையில் இருத்தியிருந்து, இனிய வார்த்தைகளைச் சொல்வாராயினர். எவ்வாறெனின். (௧௨)

இன்ன நீதரை மீதினிற் சிலதின மிருந்து
பன்ன ருந்தவஞ் செய்தலா னம்மிடம் பலியா
தொன்ன லத்தினாற் செல்கென மல்லிகார்ச் சுனர்மு
னன்ன லம்பெறப் பணிந்தெழுந் தழுதன்பி னவில்வார்.

(ப - ரை.) நீ - நீ, இன்னம் - இன்னமும், தரைமீதினில் - பூமியில், சிலதினம் - சிலநாள், இருந்து - தங்கி, பன் அரு - சொல்லுதற்கரிய, தவம்செய்து - தவத்தைப் பண்ணி, அல்லால் - அல்லாமல், நம் - நமது, இடம் - பாக்யம், பலியா - சித்திக்கமாட்டா, தொல் - பழமையாகிய, நலத்தினால் - நல்லதனமாக, செல்க - போகக்கடவை, என்ன - என்று கட்டளையிடுதலும், மல்லிகார்ச்சுனர் - மல்லிராசையர், முன் - சந்நிதியில், நல் நலம் - நல்ல வார்த்தை, பெற - அடையும்பொருட்டு, பணிந்து - ஸாஷ்டாங்கமாக வணங்கி, எழுந்து - (மேலே) எழுந்திருந்து, அழுது - அழுது, அன்பில் - அன்புடன், நவில்வார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(போ-ரை.) நீ இன்னமும் பூமியில் சிலநாள் தங்கிச் சொல்லுதற்கரிய தவத்தைப் பண்ணி யல்லாமல் நமது பாக்யம் சித்திக்கமாட்டா, பழைமையாகிய நல்லதனமாகப் போகக்கடவையென்று கட்டளையிடுதலும், மல்லிராசையர் சந்நிதியில் நல்ல வரத்தை யடையும் பொருட்டு ஸாஷ்டாங்கமாக வணங்கி மேலே யெழுந்திருந்து அழுது அன்புடன் சொல்வாராயினர், எவ்வாறெனின். (௯௩)

பிறவி மாமிடி யாயினோர் பெருநிதி கண்டா
லுறவி னாற்கொள்வ ரல்லது விடுவரோ வுன்றா
ளிறைவ யானின்று கண்டினி மண்செலே னென்ன
வறவன் மென்னகை தன்னினா னன்றென வறைந்தே

(ப-ரை.) இறைவ - தலைவனே, மா - பெரிய, பிறவிமிடியாயினோர் - தரித்திராய்ப் பிறந்தவர்கள், பெரு - பெரிய, நிதி - செல்வத்தை, கண்டால் - பார்ப்பார்களாயின், உறவினால் - ஆசையுடன், கொள்வர் அல்லது - எடுத்துக்கொள்வார்களேயல்லாமல், விடுவரோ - விட்டுவிடுவார்களோ, யான் - அடியேன், உன் - உனது, தாள் - திருவடிகளை, இன்று - இப்போது, கண்டு - தரிசித்தும், இனி - இப்போது, மண்செலேன் - பூமிக்குப் போகமாட்டேன், என்ன - என்று விண்ணப்பித்தலும், அறவன் - ஜங்கமமூர்த்தியாகிய மல்லிராசையர், மென் நகைதன்னினால் - மெல்லிய திருமுறுவலுடன், நன்று என்ன - நல்ல கார்யமென்று, அறைந்து - சொல்லி, எ - று.

(போ-ரை) தலைவனே! பெருந்தரித்திராய்ப்பிறந்தவர்கள் பெருஞ்செல்வத்தைப் பார்ப்பார்களாயின் ஆசையுடன் எடுத்துக் கொள்வார்களே யல்லாமல் விட்டுவிடுவார்களோ? அடியேன் உனது திருவடிகளை யிப்போது தரிசித்தும் இப்போது பூமிக்குப் போகமாட்டேனென்று விண்ணப்பித்தலும், ஜங்கமமூர்த்தியாகிய மல்லிராசையர் மெல்லிய திருமுறுவலுடன் நல்ல கார்யமென்று சொல்லி. (௯௪)

(வி - ரை.) அறவன் - முனிவன்.

பத்தர் நன்னிதி யாகிய பரமன்மா திராசர்
சித்த மொப்பயாந் திட்டமிட் டகற்றுது மென்றே
மெத்து மோர்கரு வேனிழன் மெல்லெனக் கொடுபோ
யத்த லத்தினி லிருவென மறைந்தொரா யனைப்போல்.

(ப - ரை.) பத்தர் - சிவபக்தர்களுக்கு, நல் - சிறந்த, நிதியாகிய - செல்வமாகிய, பரமன் - ஜங்கமமூர்த்தியாகிய மல்லிராசையர், சித்தம் - (மாதிராசையரை) மனம், ஒப்ப - இசையும்படி, திட்டமிட்டு - திட்டஞ்செய்து, அகற்றுதும் - அனுப்பிவிடுவோம், என்று - என்று (யோசித்து), மெத்தும் - (தழைகளால்) நிறைந்திருக்கின்ற, ஓர் - ஒரு, கருவேல் நிழல் - கருவேலமரத்தின் நிழலில், மெல் என்ன - மெதுவாக, கொடு போய் - அழைத்துக்கொண்டுபோய், அத்தலத்தினில் - அவ்விடத்தில் இரு - இருக்கக் கடவை, என்ன - என்று (கட்டளையிட்டு), மறைந்து - (தாம்) ஒளித்து, ஓர் - ஒரு, ஆயனைப்போல் - இடையனைப்போலக் கோலங்கொண்டு, எ - று.

(போ-ரை.) சிவபக்தர்களுக்குச் சிறந்த செல்வமாகிய ஜங்கமமூர்த்தியாகிய மல்லிராசையர் மாதிராசையரை மனமிசையும்படித் திட்டஞ்செய்து, அனுப்பி விடுவோமென்று யோசித்து, தழைகளால் நிறைந்திருக்கின்ற ஒரு கருவேலமரத்தின் நிழலில் மெதுவாக அழைத்துக்கொண்டுபோய் அவ்விடத்திலிருக்கக் கடவையென்று கட்டளையிட்டுத் தாம் ஒளித்து ஒரு இடையனைப்போலக் கோலங்கொண்டு. (௯௫)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முருட்டுவன் காலி னிட்ட மொய்த்தவார்ச் செருப்புஞ் சுற்று
மிருட்கொள்கம் பளமே லார்த்த விருங்கயிற் றரையு மாடு
வெருட்டுதிண் கோலோர் கையும் வெறுங்கட மொருக ரத்து
மருட்டுறு விழியுங் கோணல் வதனமும் பாசிப் பல்லும்.

(ப-ரை.) முருட்டு-முரட்டானதும், வல்-கடினமானதுமாகிய, காலின் இட்ட-கால்களில் தொடுத்த, மொய்த்த-மூடிக்கொண்டிருக்கின்ற, வார்-தோல்வார்களையுடைய, செருப்பும்-மிதியடிகளும், சுற்றும்-உடுத்தியிருக்கின்ற, இருள்கொள்-கறுத்த, கம்பளம்மேல் - கம்பிளியின்மேல், ஆர்த்த - கட்டியிருக்கின்ற, இரு - பெரிய, கயிறு-கச்சையையுடைய, அரையும்-இடையும், ஆடு-ஆடுகளை, வெருட்டு-பயமுறுத்தற்குரிய, திண்-உரப்பான, கோல்-தடி, ஓர் கையும்-ஒரு கையிலும், வெறும் கடம்-வெறுங்குடம், ஒரு கரத்தும் - ஒரு கையிலும், மருட்டு உறு-பயமுறுத்தற்குரிய, விழியும்-கண்களும், கோணல் வதனமும்-கோணை முகமும், பாசிப்பல்லும்-ஊத்தைப் பல்லும், எ-று.

(பொ-ரை.) முரட்டானதும் கடினமானதுமாகிய கால்களிற்றொடுத்த மூடிக்கொண்டிருக்கின்ற தோல்வார்களையுடைய மிதியடிகளும், உடுத்தியிருக்கின்ற கறுத்த கம்பிளியின்மேல் கட்டியிருக்கின்ற பெரிய கச்சையையுடைய இடையும், ஆடுகளைப் பயமுறுத்தற்குரிய உரப்பான தடியொரு கையிலும், வெறுங்குடம் ஒருகையிலும், பயமுறுத்தற்குரிய கண்களும், கோணை முகமும், ஊத்தைப் பல்லும். (௬௬)

தடித்ததிண் காதுங் கட்டைத் தாடியும் பருத்த மூக்கு
மெடுத்தகோல் பின்னி றுத்தி யதனிடைச் சார்ந்தோர் காலை
மடித்தொரு காலி னின்று வலக்கர நுதற்க வித்தே
யடிக்கடி யாடு பார்க்கு மக்கமு மதட்டு வாயும்.

(ப-ரை.) தடித்த - கனத்ததும், திண் - முரட்டுமாகிய, காதும் - செவிகளும், கட்டைத்தாடியும் - முரட்டுத்தாடியும், பருத்தமூக்கும் - பெருத்த மூக்கும், எடுத்த - கையிற்பிடித்திருக்கிற, கோல் - தடியை, பின் - பின்னே, நிறுத்தி - நிற்கச்செய்து, அதன் இடை-அதன்கண், சார்ந்து - சாய்ந்து, ஓர்காலை - ஒருகாலை, மடித்து-மடக்கி, ஒரு காலில் - ஒரு காலில், நின்று - நின்றுகொண்டு, வலக்கரம்-வலக்கையை, நுதல்-நெற்றியின்மீது, கவித்து - கவிழ்த்து, அடிக்கடி - பலகாலும், ஆடு - ஆடுகளை, பார்க்கும் - பார்க்கின்ற, அக்கமும் - கண்களும், அதட்டு வாயும் - அதட்டுகின்ற வாயும், எ-று.

(பொ-ரை.) கனத்ததும் முரட்டுமாகிய செவிகளும், முரட்டுத்தாடியும், பெருத்த மூக்கும், கையிற் பிடித்திருக்கிற தடியைப் பின்னே நிற்கச்செய்து, அதன்கண் சாய்ந்து, ஒரு காலை மடக்கி, ஒரு காலில் நின்றுகொண்டு, வலக்கையை நெற்றியின் மீதுகவிழ்த்து, பலகாலும் ஆடுகளைப்பார்க்கின்ற கண்களும் அதட்டுகின்ற வாயும். (௬௭)

கொடுமைசேர் பரசி னோடுங் கூர்முடங் கணிம ருங்கு
முடையராய் நாய்வி ளிக்கு முறையரா யுள்வ ளர்ந்து
செடிதொறு மேயு மாட்டைத் திரட்டிவந் திவரி ருக்கு
நெடியமா வேலின் கொம்பை நெருமிர்த்துமை தின்ன விட்டார்.

(ப - ரை.) கொடுமைசேர் - கொடிய, பரசினோடும் - கோடாரியும், கூர்-கூர்மையுள்ள, மூடக்கு அணி - அரிவாளுமுள்ள, மருங்கும் - இடையையும், உடையராய் - உடையவராய், நாய் - நாய்களை, விளிக்கும் - கூப்பிடுகின்ற, உரையராய் - சொல்லையுடையவராய், உள் - உள்ளே, வளைந்து-சூழ்ந்துகொண்டு, செடிதொறும்-செடிகளிளெல்லாம், மேயும் - தின்னுகின்ற, ஆட்டை - ஆடுகளையெல்லாம், திரட்டி வந்து - சேர்த்துப்போய், இவர் இருக்கும் - இந்த மாதிராசையர் இருக்கின்ற, நெடிய-நீண்ட, மா - பெரிய, வேலின் கொம்பை - கருவேலமரத்தின் கிளைகளை, முறித்து-ஒடித்து, மை - ஆடுகளை, தின்னவிட்டார் - மேயவிட்டார். எ - று.

(பொ - ரை.) கொடிய கோடாரியும் கூர்மையுள்ள அரிவாளுமுள்ள இடையையுமுடையவராய், நாய்களைக் கூப்பிடுகின்ற சொல்லையுடையவராய், உள்ளே சூழ்ந்துகொண்டு செடிகளிளெல்லாம் தின்னுகின்ற ஆடுகளையெல்லாம் சேர்த்துப்போய், இந்த மாதிராசையர் இருக்கின்ற கருவேலமரத்தின் கிளைகளை யொடித்து, ஆடுகளை மேயவிட்டார். (௬அ)

விட்டிட மாதி ராசர் வெகுண்டியா மிருக்கு நீழ
லிட்டமா மரத்தை வெட்டி யிப்படி நிழற்கெ டுத்தாய்
மட்டறு காட்டி னிந்த மரமலா திலேயோ சொல்லாய்
துட்டனீ கட்டன் மூட்டன் றுச்சனன் மதத்தாய் கொல்லோ.

(ப-ரை.) விட்டிட-(ஆடுகளை) தின்னச்செய்தலும், மாதிராசர் - மாதிராசையர், வெகுண்டு-கோவித்து, யாம்-நாம், இருக்கும் - இருக்கின்றதும், நீழல் இட்ட-நிழலைக் கொடுக்கின்றதுமான, மா மரத்தை-பெரியமரத்தை, வெட்டி-தறித்துவிட்டு, இப்படி - இவ்வாறு, நிழல்-நிழலைக்கொடுப்பதை, கெடுத்தாய்-அழித்தனை, மட்டு அறு-எல்லையில்லாத, காட்டின்-வனத்தில், இந்த மரம் அல்லாது-இந்தக் கருவேல மரமல்லாமல், இல்லேயோ-(வேறொருமரமும்) இல்லாமற்போயிற்றோ, சொல்லாய்-கூறுவாய், நீ-நீ, துட்டன் கொல்லோ - துஷ்டனோ, கட்டன்கொல்லோ - கள்ளனோ, மூட்டன் கொல்லோ-மூடனோ, துச்சனன் கொல்லோ-துர்மார்க்கனோ, மதத்தாய் கொல்லோ-வெறியனோ. எ-று.

(பொ-ரை.) ஆடுகளைத் தின்னச்செய்தலும், மாதிராசையர் கோவித்து, நாம் இருக்கின்றதும் நிழலைக்கொடுக்கின்றதுமான பெரிய மரத்தைத் தறித்துவிட்டு இவ்வாறு நிழலைக் கொடுப்பதை யழித்தனை, எல்லையில்லாத வனத்தில் இந்தக் கருவேலமரமல்லாமல் வேறொரு மரமுமில்லாமற் போயிற்றோ? கூறுவாய், நீ துஷ்டனோ? கள்ளனோ? மூடனோ? துர்மார்க்கனோ? வெறியனோ? (௬௧)

பாவிநீ யிடையா வுன்னைப் பதறியான் சபிப்ப னென்று
ரேவமி லாய ராகு மிருடியார் சிரித்துச் சொல்வார்
கோவிநீ நன்று நன்று கோபியே பாவி யல்லா
னாவினுல் வெம்மை சொல்ல நானலன் பாவி யென்று.

(ப-ரை.) இடையா - இடையனே, நீ - நீ, பாவி-பாபிஷ்டன், உன்னை- உன்னை, யான்-நான், பதறி-பதைத்து, சபிப்பன்-சபித்துவிடுவேன், என்றார்-என்றுசொன்னார், ஏவம் இல்-பாவத்தினின்றும் நீங்கின, ஆயர் ஆகும்-இடையராகிய, இருடியார்-ஜங்கம மூர்த்தியாகிய மல்லிராசையர், சிரித்து - திருமுறுவல்செய்து, சொல்வார் - சொல்வா

ராயினர் (எவ்வாறெனின்), நீ-நீ, கோவி-கோபிஷ்டன், நன்றுநன்று-நல்லகார்யம் நல்ல கார்யம், கோபியே - கோபிஷ்டனே, பாவியல்லால் - பாபிஷ்டனல்லாமல், நாவினால்- நாக்கினால், வெம்மை - கடுஞ்சொற்களை, சொல்ல நான் அல்லன் - நான் சொல்ல மாட்டேன், பாவி - பாபிஷ்டனே, என்று - என்று, எ-று.

(பொ-ரை.) இடையனே! நீ பாபிஷ்டன், உன்னை நான் பதைத்துச் சபித்து விடுவேனென்று சொன்னார், பாவத்தினின்றும் நீங்கின இடையராகிய ஜங்கமமூர்த்தி யாகிய மல்லிராசையர் திருமுறுவல்செய்து சொல்வாராயினர், எவ்வாறெனின்:—நீ கோபிஷ்டன், நல்ல கார்யம், நல்ல கார்யம், கோபிஷ்டனே பாபிஷ்டனல்லாமல் நாக்கினால் கடுஞ்சொற்களை நான் சொல்லமாட்டேன், பாபிஷ்டனே! என்று. (எ0)

(வி - ரை.) இருடி - ருஷியென்னும் வடசொற்றிரிபு (முனிவர்).

கோபமே வதைக்குங் கூற்றங் கோபமே துன்ப மூலங்
கோபமே திருவை யோட்டுங் கோபமே குணத்தைக் கொல்லுங்
கோபமே நிந்தை யேது கோபமே கொடுஞ்சொற் கூட்டுங்
கோபமே நரகஞ் சேர்க்குங் கோபமே கொடுமை யாமால்.

(ப - ரை.) கோபமே-கோபமே, வதைக்கும்-கொல்லுகின்ற, கூற்றம்-யமனாகும், கோபமே—, துன்பம் - துக்கத்திற்கு, மூலம் - காரணமாகும், கோபமே—, திருவை- செல்வத்தை, ஓட்டும் - ஓடப்பண்ணிவிடும், கோபமே—, குணத்தை - பெருமையை, கொல்லும் - கெடுத்துவிடும், கோபமே—, நிந்தை-பழிச்சொற்களுக்கு, ஏது - காரண மாகும், கோபமே—, கொடும் சொல் - கடுஞ்சொற்களை, கூட்டும் - சேர்த்துவிடும், கோபமே—, நரகம் - நரகலோகத்தில், சேர்க்கும் - புகுத்திவிடும், கோபமே—, கொடுமையாம் - தீமையாகும், எ - று.

(பொ - ரை.) கோபமே கொல்லுகின்ற யமனாகும், கோபமே துக்கத்திற்குக் காரணமாகும், கோபமே செல்வத்தை யோடப்பண்ணிவிடும், கோபமே பெருமையைக் கெடுத்துவிடும், கோபமே பழிச்சொற்களுக்குக் காரணமாகும், கோபமே கடுஞ்சொற் களைச் சேர்த்துவிடும், கோபமே நரகலோகத்திற் புகுத்திவிடும், கோபமே தீமையாகும்.

சலமெனுந் திரையாற் றூய்ய தவமரக் கலஞ்சா யாதோ
சலமெனும் வெயிலா னெஞ்சத் தாமரை தான்கன் றுதோ
சலமெனு நெருப்பா லெல்லாத் தருமமும் பொடியா காதோ
சலமெனுங் காற்றான் ஞானத் தருவினஞ் சாய்ந்தி றாதோ.

(ப - ரை.) சலம் என்னும் - கோபமென்கின்ற, திரையால்-அலைகளினால், தூய்ய- பரிசுத்தமாகிய, தவம் - தவமாகிய, மரக்கலம் - மரக்கலம், சாயாதோ - அழிந்து போகாதோ, சலம்என்னும்-கோபமென்கின்ற, வெயிலால்-சூரியனால்,நெஞ்சத்தாமரை மனமாகிய தாமரைமலர், கன்றுதோ-அழிந்துபோகாதோ, சலம் என்னும் கோபமென் கின்ற, நெருப்பால் - தீயினால், எல்லாத் தருமமும் - புண்யங்களெல்லாமும், பொடி யாகாதோ - அழிந்துபோகாதோ, சலம் என்னும் - கோபமென்கின்ற, காற்றால் - காற்றினால், ஞானத்தருவினம் - ஜ்ஞானமாகிய வ்ருக்ஷங்கள், சாய்ந்து இறாதோ - அழிந்து போகாதோ, எ-று.

(பொ-ரை.) கோபமென்கின்ற அலைகளினால் பரிசுத்தமாகிய மரக்கலம் அழிந்து போகாதோ? கோபமென்கின்ற சூரியனால் மனமாகிய தாமரைமலர் அழிந்து போகாதோ? கோபமென்கின்ற தீயினால் புண்யங்களெல்லாமும் அழிந்துபோகாதோ? கோபமென்கின்ற காற்றினால் ஜ்ஞானமாகிய வ்ருக்ஷங்கள் அழிந்துபோகாதோ? (எ௨)

ஞானமே மேட்டோ வுன்ற னல்லவ தானக் கல்வி
யானவாங் காரந் தானோ வருந்தவத் தகந்தை தானோ
நீநல்ல னல்லன் கோப நெஞ்சின னீயி ருக்கக்
கானமிங் கிதனுள் வேறு கருதினன் னிழல்க ளின்றே.

(ப-ரை.) உன் - உன்னுடைய, ஞானம் - அறிவினாலுண்டாகிய, மேட்டோ - பெருமையோ, நல் - மிகுந்த, அவதானம் - நுட்பமாகிய, கல்வியான - கல்வியினாலுண்டான, ஆங்காரந்தானோ-மமதையோ, அரு-செய்தற்கரிய, தவத்து-தவத்தைச்செய்ததனாலுண்டான, அகந்தைதானோ-மமதையோ, நீ - நீ, நல்லன் - நல்லவன், நல்லன் - நல்லவனே, கோபநெஞ்சினன் - கோவமடைந்த மனமுள்ளவனாகிய, நீ - நீ, இருக்க - தங்கும்பொருட்டு, இங்கு - இவ்விடத்திலுள்ள, கானம் இதனுள்-காட்டில், கருதின் - யோசிக்குமிடத்து, வேறு - மற்ற, நல்-நல்ல, நிழல்கள்-நிழல்கள், இன்றே-இல்லாமற் போயிற்றே, எ-று.

(போ-ரை.) உன்னுடைய அறிவினாலுண்டாகிய பெருமையோ? மிகுந்த நுட்பமாகிய கல்வியினாலுண்டான மமதையோ? செய்தற்கரிய தவத்தைச்செய்ததனாலுண்டான மமதையோ? நீ நல்லவன் நல்லவனே, கோவமடைந்த மனமுள்ளவனாகிய நீ தங்கும்பொருட்டு இவ்விடத்திலுள்ள காட்டிலில் யோசிக்குமிடத்து மற்ற நல்ல நிழல்கள் இல்லாமற்போயிற்றே?

(வி-ரை.) நல்லனல்லன் என்பதை நல்லன் அல்லன் எனப் பதம்பிரித்து துஷ்டனென்று பொருட்கொடலு மொன்று. (௭௩)

நல்லனீ சாந்த மேவு நற்றவ ருன்னைப் போல
வில்லையிக் கிரியின் மேவு மிருந்தவர் தம்மு ளெல்லா
மொல்லையி னெல்லா மற்ற வுனக்கிந்த நிழலி னாசை
யெல்லைபற் றிருந்த தென்றாற் றெளிவுதா னெளிய தன்றே.

(ப-ரை.) நீ - நீ, நல்லன்-நல்லவன், இக்கிரியில்-இந்த ஸ்ரீ சைலத்தில், மேவும் தவஞ்செய்கின்ற, இரு - பெரிய, தவர் தம்முள் எல்லாம் - ஜங்கமமூர்த்திகளெல்லாம், உன்னைப்போல - உன்னைப்போல, சாந்தம்-உபசாந்த நிலையை, மேவும்-அடைந்திருக்கின்ற, நல் - நல்ல, தவர் - ஜங்கமமூர்த்தி, இல்லை - இல்லை, ஒல்லையின் - விரைவாக, எல்லாம் அற்ற உனக்கு - ஸர்வஸங்க பரித்யாகஞ்செய்த வுனக்கும், இந்த நிழலின் ஆசை - இந்த நிழலாசை, எல்லைபற்று - அளவுகடந்து, இருந்ததென்றால் - இருந்ததென்று சொல்வோமாயின், தெளிவுதான் - ஞானமென்பது, எளியது அன்று- லேசான விஷயமல்ல, எ - று.

(போ - ரை.) நீ நல்லவன், இந்த ஸ்ரீ சைலத்தில் தவஞ்செய்கின்ற முனிவர்களெல்லாம் உன்னைப்போல உபசாந்தநிலையை யடைந்திருக்கிற நல்ல ஜங்கமமூர்த்தியில்லை, விரைவாக ஸர்வஸங்க பரித்யாகஞ்செய்த வுனக்கும் இந்த நிழலாசை அளவுகடந்திருந்ததென்று சொல்வோமாயின் ஞானமென்பது லேசான விஷயமல்ல. (௭௪)

நேசமாய்த் தியில் வீழு நேரிழை யடுத்துச் செல்லும்
வாசமா ரழல்வே மென்று மனத்திடை மதித்தல் போன்று
கூசுத லின்றிச் சாகக் குறித்தவள் கூபம் வீழ்ந்தங்
காசையாற் றெப்பந் தேடி மறிவுபோ லாய்த்துன் னாசை.

(ப-ரை.) நேசமாய்-விருப்பத்துடன், தீயில் வீழும்-நெருப்பில் குதிக்கின்ற, நேர் இழை - பெண், உடுத்துச் செல்லும் - தரித்துக்கொண்டுபோகின்ற, வாசம் - சேலை, ஆர் அழல் - பெரு நெருப்பில், வேம் - (பற்றி) வெந்துபோய்விடுமே, என்று - என்று, மனத்து இடை - மனத்தில், மதித்தல் போன்று - நினைக்கின்ற ஞானத்தைப் போலவும், கூசுதல் இன்றி - பயமில்லாமல், சாகக் குறித்தவள் - இறக்க நினைக்கின்ற பெண், கூபம் வீழ்ந்து - கிணற்றில் குதித்தும், அங்கு - அவ்விடத்தில், ஆசையால் விருப்பத்துடன், தெப்பம்-தெப்பத்தை, தேடும்-தேடுகின்ற, அறிவுபோல-ஞானத்தைப் போலவும், உன் - உன்னுடைய, ஆசை - ஆசை, ஆய்த்து - ஆகிவிட்டது, எ-று.

(போ-ரை.) விருப்பத்துடன் நெருப்பில் குதிக்கின்ற பெண் தரித்துக்கொண்டு போகின்ற சேலை பெரு நெருப்பில் பற்றி வெந்து போய்விடுமே யென்று மனத்தில் நினைக்கின்ற ஞானத்தைப் போலவும், பயமில்லாமல் இறக்க நினைக்கின்ற பெண் கிணற்றில் குதித்தும் அவ்விடத்தில் விருப்பத்துடன் தெப்பத்தைத் தேடுகின்ற ஞானத்தைப் போலவும் உன்னுடைய ஆசை யாகிவிட்டது. (௭௫)

மருளெனக் கில்லை யுலக்கை வாங்கிவா விரைய வென்றன்
சிரமிசை சுற்ற வென்போர் செய்திபோற் சன்னி சஞ்செய்
தொருமறை யோன்றன் வாழ்வை யொருவன்கை யொப்பித் தேகு
மருமயல் போலு முன்ற னாசையை யறையுங் காலை.

(ப-ரை.) உன்-உன்னுடைய, ஆசையை-ஆசையை, அறையுங்காலை - சொல்லுமிடத்து, எனக்கு-எனக்கு, மருள் - பைத்தியகுணம், இல்லை-இல்லையென்றுசொல்லி, என்-என்னுடைய, சிரமிசை-தலையில், சுற்ற - (தலைப்பாகையாக) சுற்றிக்கொள்ளும் பொருட்டு, விரைய-சீக்கிரமாக, உலக்கை-உலக்கையை, வாங்கிவா-கொண்டுவா, என் போர் - என்று கேட்கின்ற வெறியனுடைய, செய்திபோல் - செய்கையைப்போலவும், சன்னிசஞ்செய்-ஸந்யாஸம் வாங்கிக்கொள்கின்ற, ஒரு மறையோன்-ஒரு ப்ராஹ்மணன், தன் - தன்னுடைய, வாழ்வை - செல்வத்தை, ஒருவன் - ஒருத்தனுடைய, கை - வசத்தில் (காப்பாற்றிவைக்கும்படியாக), ஒப்பித்து-கொடுத்து, ஏகும்-போகின்ற, அரு-நீக்கிக்கொள்வதற்கரிதாகிய, மயல் - பைத்திய குணத்தை, போலும்-போலவும, எ-று.

(போ-ரை.) உன்னுடைய ஆசையைச் சொல்லுமிடத்து, எனக்குப் பைத்திய குணமில்லையென்று சொல்லி யென்னுடைய தலையில் தலைப்பாகையாகச் சுற்றிக் கொள்ளும்பொருட்டுச் சீக்கிரமாக உலக்கையைக் கொண்டுவாவென்று கேட்கின்ற வெறியனுடைய செய்கையைப் போலவும், ஸந்யாஸம்வாங்கிக் கொள்கின்ற ஒரு ப்ராஹ்மணன் தன்னுடைய செல்வத்தை யொருத்தனுடைய வசத்திற் காப்பாற்றி வைக்கும்படியாகக் கொடுத்து போகின்ற நீக்கிக் கொள்வதற்கரிதாகிய பைத்திய குணத்தைப் போலவும். (௭௬)

கடுவிசை பெருகு மாற்றின் கரடிகம் பளமதென்று
முடுகிநீந் திப்பி டித்த மூடனை யதுதான் பற்றி
யடுதலிற் கரையி ருந்தோ ரதனைநீ விடுவி டென்ன
விடுகினும் விடாதென் செய்கே னென்றவன் வீழ்ந்த போல.

(ப-ரை.) கடுவிசை - அதிக வேகத்துடன், பெருகும் - பெருக்கெடுத்தோடுகின்ற, ஆற்றின்-நதியில், கரடி - (அடித்துக்கொண்டுவரப்பட்ட) கரடியை (பார்த்து), கம்பளம் என்று - கம்பளியென்று நினைத்து, முடுகி - விரைவாக, நீந்திப்பிடித்த -

நீந்திப் போய்ப் பற்றிக்கொண்ட, மூடனை - முட்டாளை, அது-அந்தக் கரடியானது, பற்றி - பிடித்து, அடுதலில் - கொல்லும்போது, கரையிருந்தோர் - கரையிலிருந்த பேர்கள், அதனை - அதை, விடுவிடு - விட்டுவிடு, என்ன - என்று கூக்குரலிடுதலும், விடுகினும் - (நான் அதை) விட்டாலும், விடாது - (அது என்னை) விடாதே, என் செய்கேன் என்று - யாது செய்வேனென்று, அவன்-அம்மூடன், வீழ்ந்தபோல - இறந்த கதையைப் போலவும், எ - று.

(பொ-ரை.) அதிக வேகத்துடன் பெருக்கெடுத் தோடுகின்ற நதியில் அடித்துக் கொண்டு வரப்பட்ட கரடியைப்பார்த்துக் கம்பளியென்று நினைத்து விரைவாக நீந்திப் போய்ப் பற்றிக்கொண்ட முட்டாளை அந்தக் கரடியானது பிடித்துக்கொல்லும்போது, கரையிலிருந்தபேர்கள் அதை விட்டுவிடென்று கூக்குரலிடுதலும், நான் அதை விட்டாலும் அது என்னை விடாதே யாது செய்வேனென்று அம்மூடன் இறந்த கதையைப் போலவும்.

(வி - ரை.) கரையிருந்தோர்-கரைவாசிகள். கரையென்பத னீற்றில் எழனுருபு தொக்கது. (எஎ)

விட்டவன் றனையு மாசை விடுகிலாக் கால மானு
லொட்டுமோ நன்றாய் நீங்க வுனக்கியா முரைப்ப தென்னுந்
தொட்டதோர் கருப்பு லக்கை சூதினுற் றுணிக்கத் தப்பி
லெட்டரு மளவ தேனுந் தோல்விகா ளெனவு ரைப்பார்.

(ப-ரை.) விட்டவன் தன்னையும் - ஸர்வஸங்கப்பரித்யாகஞ்செய்த முநிவனையும், ஆசை - ஆசை, விடுகிலாக்காலமானால் - விடமாட்டாத துற்காலம் நேரிடுமாயின், நன்றாய் - செவ்வையாய் (ஆசையினின்றும்), நீங்கவொட்டுமோ - விலகவிடுமோ, யாம் - நாம், உனக்கு - உனக்கு, உரைப்பது - உபதேசிப்பதனால், ஆம் - உண்டாகின்ற பயன், என் - யாது, சூதினால் - (ஒருவன்) சூதாட்டத்தில், தொட்டது-பந்தயம் (தொடங்கியதாகிய), ஓர் கருப்புலக்கை - ஒரு கரும்பை, துணிக்க-ஒரே வெட்டினால் இரண்டு துண்டாகும்படி வெட்டுதலும், எள்தரும் அளவதேனும் - எள்ளளவாயினும் (பற்று இருந்து அதையும் வெட்ட), தப்பில்-தவறிப்போவானாயின், தோல்வி-தோல்வியாம், என்ன - என்று, உரைப்பார் - (உலகத்தார்) சொல்வார்கள், எ - று.

(பொ-ரை) ஸர்வஸங்கப் பரித்யாகஞ்செய்த முநிவனையும் ஆசை விடமாட்டாத துற்காலம் நேரிடுமாயின், செவ்வையாய் ஆசையினின்றும் விலகவிடுமோ? நாம் உனக்கு உபதேசிப்பதனா லுண்டாகின்ற பயன் யாது? ஒருவன் சூதாட்டத்தில் பந்தயம் தொடங்கியதாகிய ஒரு கரும்பை ஒரேவெட்டினால் இரண்டு துண்டாகும்படி வெட்டுதலும், எள்ளளவாயினும் பற்றிருந்து அதையும் வெட்டத் தவறிப்போவானாயின் தோல்வியாமென்று உலகத்தார் சொல்வார்கள். (எஅ)

நாணியே யாசை யெல்லா நழுவினோர் திரும்பப் பற்றி
னாணியாய்ப் பற்றுஞ் சென்மத் தருவினை யெனத்த வத்தர்
பேணியங் குரைத்து முன்னைப் பெருகருள் வடிவங் காட்ட
பாணியாற் றொழுதி றைஞ்சிப் பரவிமுன் வெள்கி நின்றார்.

(ப - ரை.) நாணி - வெட்கப்பட்டு, ஆசையெல்லாம் நழுவினோர் - ஸர்வஸங்க பரித்யாகஞ் செய்தபெரியோர்களும், திரும்ப - மறுபடியும், பற்றின் - ஆசையைப் பிடித்துக் கொள்வார்களாயின், ஆணியாய் - ஆணிவேராகி, சென்மத் தருவினை - ஜனனமாகிய மரத்தை, பற்றும் என்ன-பிடித்துக்கொள்ளுமென்று, தவத்தர்-சிவயோகி

யாகிய மல்லிராசையர், பேணி - விருப்பத்துடன், அங்கு - அவ்விடத்தில், உரைத்து-உபதேசித்து, முன்னை-பழமையாகிய, பெருகு-மிகுந்த, அருள் - கிருபையையுடைய, வடிவம்-ஜங்கமமூர்த்தத்தை, காட்ட - காண்பித்தலும், பாணியால் - (மாதிராசையர்) கைகளால், தொழுது - கும்பிட்டு, இறைஞ்சி - வணங்கி, பரவி - துதித்து, முன் - சந்நிதியில், வெள்கி நின்றார் - வெட்கப்பட்டுநின்றனர், எ - று.

(பொ - ரை.) வெட்கப்பட்டு ஸர்வஸங்கபரித்யாகஞ்செய்த பெரியோர்களும் மறுபடியும் ஆசையைப்பிடித்துக் கொள்வாராயின், ஆணிவேராகி ஜனனமாகிய மரத்தைப் பிடித்துக்கொள்ளுமென்று சிவயோகியாகிய மல்லிராசையர் விருப்பத்துடன் அவ்விடத்தில் உபதேசித்து, பழமையாகிய மிகுந்த கிருபையையுடைய ஜங்கமமூர்த்தத்தைக் காண்பித்தலும், மாதிராசையர் கைகளாற் கும்பிட்டு வணங்கித் துதித்து, சந்நிதியில் வெட்கப்பட்டு நின்றனர். (௭௯)

அதிகதுக் கத்த ராகி யஞ்சிமெய் நடுங்க வென்பாற்
கதிநெறி யில்லை நீதிக் கருத்தில்லைப் பத்தி யில்லை
மதியின்மெய்ச் சாந்த மில்லை மதமுளே னேங்குற் றேனென்
விதிசக ளேச வென்னை விடுங்கொலோ விடாதே யையா.

(ப - ரை.) அதிகதுக்கத்தராகி - மிகவுந்துன்பமடைந்தவராகி, மெய் - உடல், நடுங்க - விதிர்க்கும்படி, அஞ்சி - பயந்து, என்பால் - அடியேனிடத்தில், கதிநெறி-மோக்ஷமார்க்கமும், இல்லை - கிடையாது, நீதி - சன்மார்க்கத்தில், கருத்தும் - மனமும், இல்லை-கிடையாது, மதியின் - யோசிக்குமிடத்து, மெய் - உண்மையாகிய, சாந்தம் - உபசாந்தநிலையும், இல்லை - கிடையாது, மதம் உள்ளேன் - அஹங்காரம் படைத்திருக்கின்றேன், சகளேச - சகளேஶ்வரனே, ஏங்குற்றேன் - பயப்படுகிறேன், ஐயா - ஐயனே, என் - அடியேனது, விதி - பழவினை, என்னை - அடியேனை, விடுங்கொலோ - விட்டொழியுமோ, விடாதே - விட்டொழியாதோ, எ - று.

(பொ - ரை.) மிகவும் துன்பமுடையவராகி, உடல் விதிர்க்கும்படிப் பயந்து, அடியேனிடத்தில் மோக்ஷமார்க்கமுங் கிடையாது, சன்மார்க்கத்தில் மனமுங் கிடையாது, பக்திமார்க்கமுங் கிடையாது, அஹங்காரம் படைத்திருக்கிறேன், சகளேஶ்வரனே! பயப்படுகிறேன், ஐயனே! அடியேனது பழவினை அடியேனை விட்டொழியுமோ? விட்டொழியாதோ?

(வி - ரை.) இச்செய்யுளில் சகளேஶ்வரர் மாதிராசையரது உபாசனாமூர்த்தியெனத் தெரிகிறது. (௮௦)

கருமமுள் ளளவு மந்தக் கருமத்திற் கேற்ற செய்து
திரியும தன்றி யென்றுஞ் சிவனருள் சித்தி யாது
நிருமல நெறியா காது நீண்டவா தரவாற் காயை
மருவியே கொய்தாற் றுய்ய மதுரமென் கனியா காதால்.

(ப - ரை.) கருமம் உள்ளளவும் - வினையிருக்கின்ற வரையிலும், அந்தக் கருமத்திற்கு-அந்தவினைக்கு, ஏற்ற-உரிய, செய்து-(புண்யபாபகர்மங்களை) செய்து, திரியும் அன்றி - (ஜீவன்) அலையுமேயல்லாமல், என்றும் - எக்காலத்திலும், சிவன் அருள் - சிவாநுக்ரஹமும், சித்தியாது - பலிக்கமாட்டாது, நிருமலன் நெறி - சிவபக்தியும், ஆகாது - உண்டாகமாட்டாது, நீண்ட - மிக்க, ஆதரவால் - விருப்பத்துடன், காயை-பச்சைக்காயை, மருவி - போய், கொய்தால் - அறுத்தால், துய்ய-பரிசுத்தமானதும்

மதுரம் - ருசிகரமானதும், மெல் - கனிந்ததுமாகிய, கனி - பழம், ஆகாது - ஆகமாட்டாது, எ - று,

(பொ-ரை.) வினையிருக்கின்ற வரையிலும் அந்த வினைக்குரிய புண்யபாப கர்மங்களைச் செய்து ஜீவன் அலைபடுமே யல்லாமல் எக்காலத்திலும் சிவாநுக்ரஹமும் பலிக்காது, சிவபக்தியு முண்டாகமாட்டாது, மிக்க விருப்பத்துடன் பச்சைக்காயைப்போ யறுத்தால் பரிசுத்தமானதும் ருசிகரமானதும் கனிந்ததுமாகிய பழம் ஆகமாட்டாது.

பரதபோ தனனே போற்றி பத்தர்பாக் கியமே போற்றி
சரணநின் சரணே யல்லாற் சார்விலே னென்று நின்ற
வரமுறு மாதி ராசர் மனங்கொளு மிரக்க நோக்கி
யருளுறு மல்லி ராச ரன்பினு லணைத்து கந்து.

(ப - ரை.) பரம் - மேன்மைபொருந்திய, தபோதனனே - ஜங்கமமூர்த்தியே, போற்றி - சரணார்த்தி, பத்தர் - சிவபக்தர்களுக்கு, பாக்கியமே-செல்வமே, போற்றி-சரணார்த்தி, சரண - சிவசரணனே, நின் - உன்னுடைய, சரணே - திருவடிகளை, அல்லாமல் - அல்லாமல், சார்வு இல்லேன்-வேறொரு கதியுமில்லாதவனுயிருக்கிறேன், என்று - என்று, நின்ற - முன்னின்ற, வரம் உறும்-மேன்மைபொருந்திய, மாதிராசர்-மாதிராசையர், மனம் கொள்ளும் - மனத்திலடைந்திருக்கிற, இரக்கம் - துக்கத்தை, நோக்கி - உணர்ந்து, அருள் உறும்-ஜீவகாருண்யமுள்ள, மல்லிராசர்-மல்லிராசையர், அன்பினுல் - விருப்பத்துடன், அணைத்து - தழுவிக்கொண்டு, உகந்து - சந்தோஷித்து, எ - று,

(பொ - ரை.) மேன்மைபொருந்திய ஜங்கமமூர்த்தியே ! சரணார்த்தி, சிவபக்தர்களுக்குச் செல்வமே ! சரணார்த்தி, சிவசரணனே ! உன்னுடைய திருவடிகளை யல்லாமல் வேறொரு கதியுமில்லாதவனு யிருக்கின்றேனென்று முன்னின்ற மேன்மை பொருந்திய மாதிராசையர் மனத்தி லடைந்திருக்கிற துக்கத்தை யுணர்ந்து, ஜீவகாருண்யமுள்ள மல்லிராசையர் விருப்பத்துடன் தழுவிக்கொண்டு சந்தோஷித்து. ()

அஞ்சநீ வேண்டாந் துக்கத் தழுந்துத லொழிவா யற்ப
நெஞ்சிடை யகந்தை யுள்ளோர் நம்மிடை நிற்கொ ணுகா
ணஞ்சொனீ கேளே னென்று நவின்றதா லிவ்வி கற்ப
விஞ்சையாஞ் செய்தோ மென்று மல்லிரா சையர்வி ளம்பி.

(ப - ரை.) நீ - நீ, அஞ்சவேண்டாம் - பயப்படாதே, துக்கத்து - துக்கத்தில், அழுந்துதல் ஒழிவாய்-முழுகாதே, நெஞ்சு இடை - மனத்தில், அற்பம் - சிறிதேனும், அகந்தையுள்ளோர் - அஹங்காரம்படைத்தவர்கள், நம் இடை - நம்மிடத்தில், நிற்க வொண்ணு - நிற்கக்கூடாது, நீ - நீ, நம்சொல் - நமது வார்த்தையை, கேளேன்என்று-கேட்கமாட்டேனென்று, நவின்றதால் - சொன்னபடியினுல், நாம் - நாம், இ - இந்த, விகற்பவிஞ்சைசெய்தோம் என்று-மாயவித்தைபண்ணினுேமென்று, மல்லிராசையர் - மல்லிராசையர், விளம்பி - சொல்லி, எ - று.

(பொ - ரை.) நீபயப்படாதே, துக்கத்தில் முழுகாதே, மனத்தில் சிறிதேனும் அஹங்காரம் படைத்தவர்கள் நம்மிடத்தில் நிற்கக்கூடாது, நீ நமது வார்த்தையைக் கேட்கமாட்டேனென்று சொன்னபடியினுல் நாம் இந்த மாயவித்தை பண்ணினுே மென்று மல்லிராசையர் சொல்லி.

(வி-ரை.) அழுந்துதல் - முழுகிக்கிடப்பதினின்றும். ஒழிவாய்-நீங்குவாய், (அக.)

மன்பரன் கருணை யாலே வந்தவன் வசவ ராச
னென்பவன் பத்தி யென்னு மிரும்பொரு ணிருத்த வேண்டித்
துன்பமண் ணகல நம்பாற் றோன்றினன் சுகானு பூதி
யன்புனக் கவன்ற னாலே யாகுநீ யவன்கண் செல்வாய்.

(ப - ரை.) மன் - நிலைபெற்ற, பரன் - சிவபெருமானது, கருணையால் - கிருபையினால், வந்தவன் - அவதரித்தவனாகிய, வசவராசன் என்பவன் - வசவண்ணனென்பவன், பத்தியென்னும் - பக்தியென்கின்ற, பெரும்பொருள் - பெரும்பாக்யத்தை, நிருத்தவேண்டி - நிலைநாட்டவிரும்பி, மண் - உலகத்தார், துன்பம் - துக்கத்தினின்றும், அகல - நீங்கும்பொருட்டு, நம்பால் - நமக்காக, தோனறினன் - உதயமாயிருக்கின்றான், அவன்தன்னால் - அவனால், உனக்கு - உனக்கு, சுகானுபூதி - மோக்ஷ ஜ்ஞானத்திற்குரிய, அன்பு - பக்தி, ஆகும் - உண்டாகும், நீ - நீ, அவன்கண் - அவனிடத்தில், செல்வாய் - போவாய், எ - று.

(பொ - ரை.) நிலைபெற்ற சிவபெருமானது கிருபையினால் அவதரித்தவனாகிய வசவண்ணனென்பவன் பக்தியென்கின்ற பெரும்பாக்யத்தை நிலைநாட்டவிரும்பி உலகத்தார் துன்பத்தினின்றும் நீங்கும்பொருட்டு நமக்காக, உதயமாயிருக்கின்றான், அவனால் உனக்கு, மோக்ஷ ஜ்ஞானத்திற்குரிய பக்தி யுண்டாகும், நீ அவனிடத்திற் போவாய். (௩௪)

வரசிவா சார வாரி வைகியே சரிப்பா யென்ற
னரனரு ளாற்ப திற்றைந் தாண்டுக ளறுநூ றாண்டு
தரையிடை வசவே சன்பாற் றங்கிப்பி னாம ழைக்கப்
பரிவினா லெம்பால் வந்தைம் பதுவரு டங்கள் சென்று.

(ப-ரை.) வரம் - மேன்மைபொருந்திய, சிவாசாரவாரி - வீரசைவமாகிய கடலில், வைகி - திளைத்து, சரிப்பாய் - வாழ்வாய், என் - எனது, அரன் அருளால் - சிவபெருமானது கிருபையால், பதிற்று ஐந்து ஆண்டுகள் அறுநூறு ஆண்டு - அறுநூற்றைம்பது வருஷம், தரையிடை - பூமியில், வசவேசன்பால் - வசவண்ணனிடத்தில், தங்கி - வாழ்ந்திருந்து, பின் - பிறகு, நாம் அழைக்க - நாம் அழைத்தலும், பரிவினால் - விருப்பத்துடன், எம்பால் வந்து - நம்மிடத்தில் வந்து, ஐம்பதுவருடங்கள் சென்று - ஐம்பது வருஷங்கள் கழிந்து, எ - று.

(பொ-ரை.) மேன்மையாகிய வீரசைவாசாரமாகிய கடலிற்றிளைத்து வாழ்வாய், எனது சிவபெருமானது கிருபையால் அறுநூற்றைம்பது வருஷம் பூமியில் வசவண்ணனிடத்தில் வாழ்ந்திருந்து, பிறகு நாம் அழைத்தலும் நம்மிடத்தில் வந்து, ஐம்பது வருஷங்கள் கழிந்து. (௩௫)

ஆகநிற் கெழுநூ றாண்டி னந்தத்தி லன்றி முத்தித்
தாகமுண் டாகா திங்ஙன் றருவதே தேனுங் கேட்பா
யீகநாஞ் சொல்வா யென்ன மாதிரா சைய நிரங்கி
யோகரா மல்லி ராசர்க் குறப்பணிந் துரைக்கு கின்றார்.

(ப - ரை.) நிற்கு - உனக்கு, ஆக - ஆகக்கூடிய, எழுநூறு ஆண்டின் அந்தத்தில் - எழுநூறுவருஷங்களின் முடிவிலே, அன்றி - அல்லாமல், முத்தித்தாகம் - மோக்ஷத்தில் விருப்பம், உண்டாகாது - உண்டாகமாட்டாது, இங்ஙன் - இவ்விடத்தில், தருவது - அநுக்ரஹஞ்செய்யவேண்டியது, ஏதேனும் - எந்த்வரத்தையாயினும், கேட்பாய் - கேட்டுக்கொள்வாய், நாம் - நாம், ஈகம் - அநுக்ரஹஞ்செய்வோம், சொல்வாய்-

கூறுவாய், என்ன-என்று கட்டளையிடுதலும், மாதிராசையர்-மாதிராசையர், இரங்கி-அழுது, யோகர்ஆம் - யோகீஸ்வரராகிய, மல்லிராசர்க்கு - மல்லிராசையரை, உறப் பணிந்து - ஸாஷ்டாங்கமாகவணங்கி, உரைக்குகின்றார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(பொ-ரை.) உனக்கு ஆகக்கூடிய எழுநூறுவருஷங்களின் முடிவிலே யல்லாமல் மோக்ஷத்தில் விருப்பமுண்டாகமாட்டாது, இவ்விடத்தில் அநுக்கிரஹஞ் செய்யவேண்டியது எந்த வரத்தையாயினும் கேட்டுக்கொள்வாயென்று கட்டளையிடுதலும், மாதிராசையர் அழுது யோகீஸ்வரராகிய மல்லிராசையரை ஸாஷ்டாங்கமாக வணங்கிச் சொல்வாராயினர், எவ்வாறெனின். (அசு)

திருவையிச் சிப்ப னென்னிற் பிறர்திரி யாயு வென்னி
லருளுறு மாயா ரூப மண்டர்போ கங்கள் வேண்டுந்
தரமல வனித்தத் தாலே தாழ்விலா முத்தி யென்னிற்
பரமனற் பதவி யாகும் பற்றிலே னென்று மென்று.

(ப - ரை.) திருவை - செல்வத்தை. இச்சிப்பன் என்னில் - விரும்புவேனாயின், பிறர் - அயலாருடைய, திரி - மனைவியாவாள், ஆயு - தீர்க்காயுளை, என்னில் - விரும்புவேனாயின், அருள் உறும் - சித்சக்தியாலுண்டாகின்ற, மாயாரூபம் - மாயா சரீரமாகும், அண்டர்போகங்கள் - ஸ்வர்க்காதியின்பங்கள், அனித்தத்தால் - அழியுந் தன்மையனவாதலினாலே, வேண்டும் தரம்அல்ல-விரும்பத்தக்கதல்ல, தாழ்வு இல்லா-மேலான, முத்தி - மோக்ஷத்தை, என்னில் - விரும்புவேனாயின், நல் -சிறந்த, பரமன்-சிவபெருமானது, பதவியாகும் - பொருளாகும், ஒன்றும் - (ஆதலால் நான்) சிறிதும், பற்று இல்லேன் - ஆசையில்லாதவனாயிருக்கிறேன், எ - று.

(பொ - ரை.) செல்வத்தை விரும்புவேனாயின், அயலாருடைய மனைவியாவாள், தீர்க்காயுளை விரும்புவேனாயின் சித்சக்தியாலுண்டாகிய மாயாசரீரமாகும், ஸ்வர்க்காதி யின்பங்கள் அழியுந் தன்மையனவாதலினால் விரும்பத்தக்கதல்ல, மேலான மோக்ஷத்தை விரும்புவேனாயின் சிறந்த சிவபெருமானது பொருளாகும், ஆதலால் நான் சிறிதும் ஆசையில்லாதவனாயிருக்கின்றேன்.

(வி - ரை.) திரு - தனலக்ஷ்மி. அயலார் - விஷ்ணுமூர்த்தி. த்ரி - ஸ்த்ரீஎன்னும் வடசொற்றிரிபு. (அஎ)

ஐயமுற் றுணர்வா ரீர மகத்துளா யத்த னேயென்
றுய்யமண் மீது நன்று யுறப்பணிந் தெழாத முன்னஞ்
செய்யநற் கல்வி யாணச் செழுநகர் நந்தி யாரா
மெய்யர்பான் மாதி ராசர் விரைந்துமுன் னிற்க நோக்கா.

(ப - ரை.) ஐய - ஐயனே, முற்று உணர்வார் - ஞானிகளுடைய, ஈரம் - அன்புள்ள, அகத்து - மனத்தில், உள்ளாய் - குடிகொண்டிருப்பவனே, அத்தனே - தந்தையே, என்று - என்று, உய்ய- உஜ்ஜீவிக்கும்பொருட்டு, மண்மீது - பூமியின்மேல், நன்றாய் - செவ்வையாய், உறப்பணிந்து - ஸாஷ்டாங்கமாகவணங்கி, எழாத (மேலே) எழுந்திருக்காத, முன்னம் - முன்னர், செய்ய - அழகியதும், நல் - சிறந்ததும், செழு-தெய்விக ஸம்பத்தையுடையதுமாகிய, கல்வியாணநகர் - கல்யாணபட்டினத்தில் வீற்றிருக்கின்ற, நந்தியார்ஆம் - வசவண்ணராகிய, மெய்யர்பால் - உண்மையாகிய சிவசரணரிடத்தில், மாதிராசர் - மாதிராசையர், விரைந்து - சீக்கிரமாக, முன் - சந்நிதானத்தில், நிற்க - நிற்றலும், நோக்கா - (வசவண்ணர்) பார்த்து, எ - று.

(போ-ரை.) ஐயனே! ஞானிகளுடைய அன்புள்ளமனத்திற் குடிகொண்டிருப்பவனே! தந்தையே! என்று, உஜ்ஜீவிக்கும்பொருட்டுப் பூமியின்மேல் செவ்வையாய் ஸாஷ்டாங்கமாக வணங்கி மேலேயெழுந்திருக்காத முன்னர், அழகியதும் சிறந்ததும் தெய்விக ஸம்பத்தை யுடையதுமாகிய கல்யாண பட்டினத்தில் வீற்றிருக்கின்ற வசவண்ணராகிய உண்மையாகிய சிவசரணரிடத்தில் மாதிராசையர் சீக்கிரமாகச் சந்நிதியில் நிற்றலும் வசவண்ணர் பார்த்து.

(வி-ரை.) முற்று உணர்வார் - ஸர்வஜ்ஞர். (அஅ)

கூடல சங்க மேச னென்னவே குலவி நோக்கா
நீடவட் டாங்க மாக நேசத்தாற் பணிந்து போற்றித்
தாடலை மீது சாத்திச் சகளேச மாதி ராசர்
சீடராம் வசவ ராச ரென்னநற் சேவை செய்யா.

(ப-ரை.) கூடலசங்கமேசன் - கூடலஸங்கமேஶ்வரன், என்னவே - என்றே, குலவி - கொண்டாடி, நோக்கா - விரும்பி, நீட - நெடுநேரமாக, நேசத்தால் - அன்புடன், அட்டாங்கமாகப்பணிந்து - ஸாஷ்டாங்கமாகவணங்கி, போற்றி-துதித்து, தாள் - திருவடிகளை, தலைமீது - (தமது) திருமுடியின்மேல், சாத்தி-சூட்டிக்கொண்டு, சகளேசமாதிராசர் - சகளேஶ்வரமாதிராசையரது, சீடர் ஆம் - சீடராகிய, வசவேசர் என்ன - வசவண்ணரென்று (உலகத்தார்சொல்லும்படி), நல் - நன்றாக, சேவை செய்யா - சேவித்து, எ - று.

(போ-ரை) கூடல ஸங்கமேஶ்வரனென்றே கொண்டாடி விரும்பி, நெடுநேரமாக அன்புடன் ஸாஷ்டாங்கமாக வணங்கித் துதித்து, திருவடிகளைத் தமது திருமுடியின்மேற் சூட்டிக்கொண்டு, சகளேஶ்வர மாதிராசையரது சீடராகிய வசவண்ணரென்று உலகத்தார் சொல்லும்படி நன்றாகச் சேவித்து.

(வி-ரை.) அட்டாங்கம்-அஷ்டாங்கமென்னும் வடசொற்றிரிபு (எட்டு உறுப்புகள்-தலை, இரண்டு கைகள், இரண்டு செவிகள், மோவாய், இரண்டு தோள்கள்). (அக)

நற்சிவ லிங்க பூசை நன்பரா யகத்து முள்ளு
மற்புதத் துடனே செய்தங் கானந்த வமுத மார்ந்து
சிற்குண மாதி ராசர் தேடரும் பத்த ரான
பொற்புறு நந்தி கேசர் பொருவற வைகு நாளில்.

(ப-ரை.) சிற்குணம் - ஞானநிலையினையுடைய மாதிராசர் - மாதிராசையரும், தேடுஅரு - நாடுதற்கரிய, பத்தர்ஆன - பக்தராகிய, பொற்பு உறு - அழகிய, நந்திகேசர்-வசவண்ணரும், நண்பராய்-தோழர்களாய், அகத்தும்-திருமடத்திலும், உள்ளும்-மனத்திலும், அற்புதத்துடனே - ஆச்சரியத்துடனே, நல் - நன்மையுள்ள, சிவலிங்க பூசைசெய்து - இஷ்டலிங்கபூஜை பண்ணிக்கொண்டு, அங்கு - அவ்விடத்தில், ஆனந்த அமுதம் - சிவாநந்தாமிர்தத்தை, ஆர்ந்து - உண்டு, பொருவுஅற-ஒப்பில்லாமல், வைகும் நாளில் - வாழ்கின்றகாலத்தில், எ - று.

(போ-ரை.) ஞானநிலையினையுடைய மாதிராசையரும் நாடுதற்கரிய பக்தராகிய அழகிய வசவண்ணரும் தோழர்களாய் திருமடத்திலும் மனத்திலும் ஆச்சரியத்துடனே நன்மையுள்ள இஷ்டலிங்கபூஜை பண்ணிக்கொண்டு அவ்விடத்தில் சிவாநந்தாமிர்தத்தையுண்டு நிகரில்லாமல் வாழ்கின்ற காலத்தில். (௯0)

சகளேசமாதிராசையர் புராணம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௭௩௩.

உ

சிவமயம்.

# சிக்கமாதையர் புராணம்.

## கலிவிருத்தம்.

திண்ணிய காலனைத் தீக்கண் மீதிலே
மண்ணினை யிறைத்தவன் வாய்ம டித்தயன்
பண்ணிய விதியினைப் பறித்து மாயையின்
கண்ணியை யறுத்தநற் கருத்த ராயரோ.

(ப - ரை.) திண்ணிய - வலிமையுடைய, காலனை - யமனுடைய, தீ - நெருப்பு, கண்மீதில் - கண்ணின்மேல், மண்ணினை - மண்ணை, இறைத்து - அள்ளிக் கொட்டியும், அவன் - அவனுடைய, வாய் - வாயை, மடித்து - அடக்கியும், அயன் - ப்ரஹ்மதேவன், பண்ணிய - ஏற்படுத்திய, விதியினை - விதிவசத்தை, பறித்து - (வேரோடும்) பிடுங்கியும், மாயையின் கண்ணியை - மாயாபாசத்தை, அறுத்த - ஒழித்த, நல் கருத்தராய் - நல்ல விவேகத்தையுடையவராய், எ - று.

(பொ - ரை.) வலிமையுடைய யமனுடைய நெருப்புக்கண்களின்மேல் மண்ணை யள்ளிக்கொட்டியும், அவனுடைய வாயையடக்கியும், ப்ரஹ்மதேவன் ஏற்படுத்திய விதிவசத்தை வேரோடும் பிடுங்கியும், மாயாபாசத்தை யொழித்த நல்ல விவேகத்தை யுடையவராய்.

(வி-ரை.) சகளேசமாதிராசையர் மரணமில்லாதவராதலின் திண்ணிய காலனைத் தீக்கண் மீதிலே மண்ணினை யிறைத்தவன் வாய் மடித்தென்றும், ஜனனமில்லாதவராதலின் அயன்பண்ணிய விதியினைப் பறித்தென்றும், மாயையைக் கடந்தவராதலின் மாயையின் கண்ணியை யறுத்தவென்றுஞ்சொன்னார். காலனை-உருபுமயக்கம். அயன்-அஜன் என்னும் வடசொற்றிரிபு. கண்ணி - கயிறு (கண்களை யுடையதெனினுமாம்).

மானிடர் தமக்குறும் வருட நூறெனத்
தானுல குரைப்பதைத் தவிர்க்க வல்லரா
யீனம துறும்வய தேழு நூறதா
யானுகந் தேறுவார்க் கதிக நண்பராய்.

(ப - ரை.) மானிடர்தமக்கு - மனிதர்களுக்கு, உறும் - ஏற்பட்ட (வயது), வருடம் நூறு தான் என்ன - நூறுவருஷந்தானென்று, உலகு - உலகத்தார், உரைப்பதை - சொல்லுகின்ற கட்டுரையை, தவிர்க்கவல்லராய் - ஒழிக்கவல்லமையுடையவராய், ஈனம்உறும் - இழிவாகிய, வயது ஏழுநூறு ஆய் - எழுநூறுவருஷ வயதுள்ளவராய், ஆன் - வ்ருஷபவாஹனத்தின்மேல், உகந்து - திருவுளமகிழ்ந்து, ஏறுவார்க்கு - ஆரோகணஞ்செய்பவராகிய சிவபெருமானுக்கு, அதிகம்-சிறந்த, நண்பராய்-பக்தராய், எ - று.

(பொ - ரை.) மனிதர்களுக் கேற்பட்ட வயது நூறுவருஷந்தானென்று உலகத்தார் சொல்லுகின்ற கட்டுரையை யொழிக்க வல்லமையுடையவராய், இழி

வாகிய எழுநூறு வருஷ வயதுள்ளவராய், விருஷப வாஹனத்தின்மேல் திருவுள மகிழ்ந்து ஆரோகணஞ் செய்பவராகிய சிவபெருமானுக்குச் சிறந்த பக்தராய்.

(வி - ரை.) உலகு - ஆகுபெயர். வயது எழுநூறுவருஷகாலம் வரையிலும் நீடித்திருந்தும் தேகம் நிலையாமையைப்பற்றி ஈனமதுறும் வயதென்றார். (௨)

முப்பொழு தருச்சனை முயலு நெஞ்சரா
யெய்ப்பறு நிட்டரா யிலிங்க சங்கமத்
தொப்பரு நேயரா யுற்ற பத்திசெய்
தப்பரு மகிழ்ச்சியா மமுத ருந்தியே.

(ப - ரை.) முப்பொழுது-மூன்றுகாலத்திலும், அருச்சனை - சிவலிங்கபூஜையை, முயலும் - முயற்சிசெய்கின்ற, நெஞ்சராய் - மனத்தையுடையவராய், எய்ப்பு அறு - இளைத்தலில்லாத, நிட்டராய் - விரதத்தையுடையவராய், இலிங்கசங்கமத்து - இஷ்டலிங்கமூர்த்தியிடத்திலும் ஜங்கமமூர்த்திகளிடத்திலும், ஒப்பு அரு - நிகரற்ற, நேயர் ஆய் - ஆசையுடையவராய், உற்ற - மிகுதியாகிய, பத்திசெய்து - அன்பு பூண்டு, அ - அந்த, பரு - பெரிய, மகிழ்ச்சியாம் - இன்பமாகிய, அமுது - அமிர்தத்தை, அருந்தி - ஸ்வீகரித்து, எ - று.

(போ - ரை.) மூன்று காலத்திலும் சிவலிங்க பூஜையை முயற்சிசெய்கின்ற மனத்தையுடையவராய், இளைத்தலில்லாத விரதத்தையுடையவராய், இஷ்டலிங்க மூர்த்தியிடத்திலும் ஜங்கமமூர்த்திகளிடத்திலும் நிகரற்ற ஆசையுடையவராய், மிகுதியாகிய அன்பு பூண்டு, அந்தப் பேரின்பமாகிய அமிர்தத்தை ஸ்வீகரித்து.

(வி - ரை.) மூன்று காலம் என்றது காலை மாலை உச்சி யென்னுங் காலங்களை. அமுது என்றது லிங்க ஜங்கம ப்ரஸாதங்களை. (௩)

தத்துவ ஞானராய்ச் சரண ராகியங்
கித்திறஞ் சரித்திவ ணியலு நாளிலே
யுத்தம பத்தரா யுண்மை நீங்கலாச்
சித்தரோ ரன்பர்பேர் சிக்க மாதையர்.

(ப - ரை.) தத்துவஞானராய் - மெய்ஞ்ஞானியாகி, சரணராகி - சிவசரணராகி, அங்கு - அந்தக் கல்யாணபட்டினத்தில், இத்திறம் - இவ்விதமாக, சரித்து - கூடியிருந்து இவண் - இந்தச் சகளேசமாதிராசையர், இயலும் நாளில் - வாழ்கின்ற காலத்தில், உத்தம பத்தராய்-சிறந்த பக்தியுடையவராய், உண்மை - ஸத்யமார்க்கத்தினின்றும், நீங்கலா - நீங்காத, சித்தர் - மனமுடையவராகிய, ஓர் - ஒப்பற்ற, அன்பர்- சிவபக்தருடைய, பேர் - திருநாமம், சிக்கமாதையர் - சிக்கமாதையரென்பது, எ-று.

(போ - ரை.) மெய்ஞ்ஞானியாகிச் சிவசரணராகி அந்தக் கல்யாணபட்டினத்தில் இவ்விதமாகக் கூடியிருந்து இந்தச் சகளேச மாதிராசையர் வாழ்கின்ற காலத்தில், சிறந்த பக்தியுடையவராய் ஸத்யமார்க்கத்தினின்றும் நீங்காத மனமுடையவராகிய ஒப்பற்ற சிவபக்தருடைய திருநாமம் சிக்கமாதையரென்பது.

(வி - ரை.) தத்துவஞானம் - உண்மைப்பொருளை யறியுமுணர்ச்சி (அதாவது லிங்காங்க ஸாமரஸ்யத்தை யுணர்கின்ற வறிவு). சரணர் - சிவபெருமானே புகலிடமென்று அவர் திருவடியில் அடைக்கல மடைந்தவர். (௪)

மருவுத மனைவியு மகனுந் தாமுமா
யருளுறு மாதிரா சைய ராந்தவ
ரிருகழ லனுதின மிறைஞ்சுஞ் செய்தியே
கருதரு முயிருநங் கதியு மென்றரோ.

(ப - ரை.) மருவும் - (இல்லறதர்மத்திற்கு) வாய்த்திருக்கின்ற, தம் - தமது, மனைவியும் - மனையாளும், மகனும் - புத்ரனும், தாமுமாய் - தாமுமாக, அருள் உறும் - க்ருபாகடாக்ஷத்தையுடைய, மாதிராசையராம் - சகளேசமாதிராசையராகிய, தவர் - ஜங்கம மூர்த்தியினுடைய, இரு - இரண்டு, கழல் - திருவடிகளையும், அனுதினம் - நாடோறும், இறைஞ்சும் - வணங்குகின்ற, செய்தியே - தொழிலே, கருதரும் - நினைத்தற்கரிய, நம்-நமது, உயிரும்-பிராணனும், கதியும் என்று-செல்வமுமென்று, எ-று.

(பொ - ரை.) இல்லறதர்மத்திற்கு வாய்த்திருக்கின்ற தமது மனையாளும் புத்ரனும் தாமுமாக க்ருபாகடாக்ஷத்தையுடைய சகளேசமாதிராசையராகிய ஜங்கம மூர்த்தியினுடைய இரண்டு திருவடிகளையும் நாடோறும் வணங்குகின்ற தொழிலே நினைத்தற்கரிய நமது பிராணனும் செல்வமுமென்று. (௫)

உன்னிய நெஞ்சரா யுற்ற தந்தொழி
லன்னிலை வருபொரு ளற்ப மாயினுந்
துன்னிய தாயினுந் துக்க நற்சுக
மன்னியல் பின்றிநீண் மகிழ்ச்சி பொங்கியே.

(ப - ரை.) உன்னிய - நினைத்த, நெஞ்சராய்-மனத்தையுடையவராய், உற்ற - அமைந்திருக்கின்ற, தம் தொழில் - தமது வேலைசெய்கின்ற, அந்நிலை-அவ்வழியால், வருபொருள்-கிடைக்கின்ற திரவியம், அற்பம் ஆயினும்-சிறிதேயானாலும், துன்னிய தாயினும்-பெரிதேயானாலும், துக்கம் நல் சுகம் மன் இயல்பு-சுகதுக்கங்கள், இன்றி - இல்லாமல், நீள்-பெரிய, மகிழ்ச்சி-களிப்பு, பொங்கி-மிகுந்து, எ-று.

(பொ-ரை.) நினைத்த மனத்தையுடையவராய், அமைந்திருக்கின்ற தமது வேலை செய்கின்ற அவ்வழியாய்க் கிடைக்கின்ற திரவியம் சிறிதேயானாலும் பெரிதேயானாலும் சுகதுக்கங்களில்லாமல் பெருங்களிப்பு மிகுந்து.

(வி - ரை.) சுகதுக்கங்களிரண்டையும் சமமாய்ப் பார்த்த மனத்துறவடைந்தவராதலின் துக்க நற் சுக மன்னியல்பின்றி யென்றார். சுகதுக்கங்களை த்வந்தமெனச் சொல்லப்படும். நல்-சிறந்த. மன்-நிலைபெற்ற. இயல்பு-தன்மை. (௬)

தந்தொழில் சாயினுந் தவறு சேரினு
மந்தரு மாதிரா சையர் சேவைமேற்
சிந்தையு நேயராய்ச் செய்யு நாளிலே
பொந்தன வுடலினைப் போட்ட கன்றனர்.

(ப - ரை.) தம்தொழில் - தமதுவேலை, சாயினும் - நடை பெற்றாலும், தவறு சேரினும்-நடைபெறாவிட்டாலும், அம்தரும்-அழகுபொருந்திய, மாதிராசையார்-மாதிராசையருடைய, சேவைமேல்-பணிவிடையின்மீது, சிந்தையும்-கருத்தும், நேயராய் - அன்புமுடையவராய், செய்யும் நாளிலே - வழிபட்டுவருகின்ற காலத்திலே, பொந்து அன்ன-மரப்பொந்தினைப்போன்ற, உடலினை-உடம்பை, போட்டு(வாயுதாரணையினால் சடுதியில்) நழுவவிட்டு, அகன்றனர்-பிரிந்தார் எ-று.

(பொ - ரை.) தமது வேலை நடைபெற்றாலும் நடைபெறாவிட்டாலும் அழகு பொருந்திய மாதிராசையருடைய பணிவிடையின் மீது கருத்தும் அன்புமுடையவராய் வழிபட்டுவருகின்ற காலத்திலே மரப்பொந்தினைப் போன்ற உடம்பை வாயுதாரணையினால் சந்நிதியில் நழுவவிட்டுப் பிரிந்தார். (எ)

அவரிட மனைவியா ரந்த வாக்கையைச்
சிவதவர் பாதநற் றீர்த்தத் தாட்டியொண்
டவளவெண் பொடியினைத் தணியச் சாத்தியே
துவளுநெஞ் சில்லராய்த் துணிந்த தூய்மையால்.

(ப - ரை.) அவரிட - அந்தச் சிக்கமாதையரது, மனைவியார் - தேவியார், அந்த ஆக்கையை - அந்த உடம்பை, நல் - சிறந்த, சிவதவர் பாதம் தீர்த்தத்து - ஜங்கமபாதோதகத்தினால், ஆட்டி - குளிப்பாட்டி, ஒள் - மேன்மையானதும், தவளம் வெள் - மிக்க வெண்ணிற முடையதுமான, பொடியினை - விபூதியை, தணிய - (ஸர்வாங்கமும்) ஸம்பூர்ணமாக, சாத்தி - தாரணஞ்செய்து, துவளும் - சலனமுள்ள, நெஞ்சில்லராய் - மனமில்லாதவராய், துணிந்த - நிச்சயித்து (முக்திமார்க்கத்தையடைகின்ற), தூய்மையால் - பரிசுத்தத் தன்மையினால், எ - று.

(பொ - ரை.) அந்தச் சிக்கமாதையரது தேவியார் அந்த உடம்பைச் சிறந்த ஜங்கமபாதோதகத்தினால் குளிப்பாட்டி, மேன்மையானதும் மிக்கவெண்ணிற முடையதுமான விபூதியை ஸர்வாங்கமும் ஸம்பூர்ணமாகத் தாரணஞ்செய்து, சலனமுள்ள மனமில்லாதவராய் நிச்சயித்து முக்திமார்க்கத்தை யடைகின்ற பரிசுத்தத் தன்மையினால்.

(வி - ரை.) சிக்கமாதையரது தேவியார் தமது கணவரைப்போலத் தாமும் ஜங்கமமூர்த்தியிடத்தில் வழிபாடுடையவ ராதலானும், பூதவுடல் அநித்தியமென்று துணிந்தவராதலானும், தமது உயிர்போன்ற கணவர் உயிர் துறந்தாராயினும், ஜீவகரணம் போய்ச் சிவகரணம் சித்திப்பதுண்மையாதலானும், மனோத்திடமுள்ளவ ராதலானும் துவளுநெஞ்சில்லராயென்றார். சிவதவர் - ஜங்கமர். பாததீர்த்தம் - பாதோதகம். (அ)

தக்கநல் லணையொடு சாய்த் திருத்தியே
யக்குறி யயலவ ரறிவு றாமலே
மிக்கதஞ் சிவார்ச்சனை விரும்பு மெல்லையின்
றொக்குறு சமாதியைத் தொட்டு மோசையால்.

(ப - ரை.) தக்க - பொருத்தமாகிய, நல் அணையொடு - சிறந்த மெத்தையின்கண், சாய்த்து - சாயச்செய்து, இருத்தி - உட்காரவைத்து, அக்குறி - அந்த விசேடத்தை, அயலவர் - அயலார், அறிவுறாமல் - தெரிந்துகொள்ளாதபடி, தம் - தமது, மிக்க - மேன்மைபொருந்திய, சிவார்ச்சனை - இஷ்டலிங்கபூஜையை, விரும்பும் - அன்புடன் செய்கின்ற, எல்லையின் - க்ருஹத்தில், தொக்கு உறு - உடம்பை யடக்கஞ்செய்தற்குரிய, சமாதியை - சமாதிக்குழியை, தொட்டும் - தோண்டுகின்ற, ஓசையால் - சத்தத்தினால், எ - று.

(பொ - ரை.) பொருத்தமாகிய சிறந்த மெத்தையின்கண் சாயச்செய்து உட்காரவைத்து, அந்த விசேடத்தை அயலார் தெரிந்துகொள்ளாதபடித் தமது மேன்மை பொருந்திய இஷ்டலிங்கபூஜையை யன்புடன் செய்கின்ற க்ருஹத்தில் உடம்பை யடக்கஞ் செய்தற்குரிய சமாதிக்குழியைத் தோண்டுகின்ற சத்தத்தினால்.

(வி - ரை.) தொக்கு - த்வக் என்னும் வடசொற்றிரிபு. சிவார்ச்சனை விரும்புமெல்லை - சிவபூஜாக்ருஹம். (௯)

துஞ்சிய வம்மகன் றுணுக்கெ னத்தெளிந்
தஞ்சியி தென்னதா னன்னை யெம்மையன்
பஞ்சணை யொன்றியோர் பகர்வுங் காண்கிலேன்
வெஞ்சமெம் முடனுள வெலாம்வி ளம்புவாய்.

(ப - ரை.) துஞ்சிய - தூங்கிக்கொண்டிருந்த, அம்மகன் - அந்தக் குமாரன், துணுக்கென - திடுக்கென்று, தெளிந்து - விழித்துக்கொண்டு, அஞ்சி - பயந்து, அன்னை - தாயே, ஈது-இந்தக் காரியஞ் செய்தற்குக் காரணம், என்னதான்-யாதோ, எம் ஐயன் - எமது அப்பன், பஞ்சு அணை - பஞ்சுமெத்தையின்கண், ஒன்றி - சாய்ந்துகொண்டு, ஓர் பகர்வும் - ஒரு பேச்சையும், காண்கிலேன் - பேசப் பார்க்கமாட்டேன், எம்முடன் - எம்மோடும், வெஞ்சம் உள்ளவெல்லாம் - கோவங்கொண்டிருக்கின்ற சங்கதிகள் எல்லாவற்றையும், விளம்புவாய் - (மறையாது) சொல்வாய், எ - று.

(பொ - ரை.) தூங்கிக்கொண்டிருந்த அந்தக் குமாரன் திடுக்கென்று விழித்துக்கொண்டு பயந்து, தாயே! இந்தக் காரியஞ் செய்தற்குக் காரணம் யாதோ? எமது அப்பன் பஞ்சுமெத்தையின்கண் சாய்ந்துகொண்டு, ஒரு பேச்சையும் பேசப்பார்க்க மாட்டேன், எம்மோடு கோவங்கொண்டிருக்கின்ற சங்கதிகளெல்லாவற்றையும் மறையாது சொல்வாய்.

(வி - ரை.) அன்னை - அண்மைவிளி. உளவெலாம் என்பதை உளவு எல்லாமெனப்பிரித்து ரஹஸ்யமுழுதுமென்று பொருட்கோடலுமொன்று. (௧௦)

ஐயனம் முடையர்க ளருகென் போகிலன்
செய்யநற் சிவார்ச்சனை செய்யு மெல்லைநின்
கையுற வகழுமிக் கரும மென்னதா
னுய்யநம் பரற்குநல் லூற்றம் வேண்டியோ.

(ப-ரை.) ஐயன்-(நமது) அப்பன், நம்-நமது, உடையர்கள் - ஜங்கமமூர்த்திகள், அருகு-அண்டை, என்போகிலன்- (வழக்கப்படி) ஏன்போகாமலிருக்கின்றான், செய்ய மிக்க-மிகவும் மேன்மைபொருந்திய, சிவார்ச்சனைசெய்யும் எல்லை-சிவபூஜாக்ருஹத்தில், நின்-உனது, கையுற - கைகளினால், அகழும் - தோண்டுகின்ற, இக்கருமம் - இந்தக் காரியம், என்னதான்-யாதோ, உய்ய-உஜ்ஜீவிக்கும் பொருட்டு, நம்-நமது, பரற்கு - சிவபெருமானுக்கு, நல்-சிறந்த, ஊற்றம்-கிணற்றை, வேண்டியோ-விரும்பியோ எ-று.

(பொ-ரை.) நமது அப்பன் நமது ஜங்கமமூர்த்திகளிடத்தில் அண்டை வழக்கப்படி யேன் போகாமலிருக்கின்றான்? மிகவும்மேன்மைபொருந்திய சிவபூஜாக்ருஹத்தில் உனது கைகளினால் தோண்டுகின்ற இந்தக் காரியம் யாதோ? உஜ்ஜீவிக்கும் பொருட்டு நமது சிவபெருமானுக்குச் சிறந்த கிணற்றை விரும்பியோ? (௧௧)

உன்னுடன் கோபமென் றொருதி னத்தினி
னின்னுடன் வெம்மைதா னிகழ்ந்த தாயினும்
பின்னுடன் றீர்வனிப் பெற்றி யின்றியு
மென்னொடும் பேசில னென்னை யன்னையே.

(ப-ரை.) அன்னையே - தாயே, உன்னுடன் - உன்னோடு, கோபம் - கோபங் கொண்டிருக்கிறான், என்று - என்றுசொல்லப்பட்ட, ஒருதினத்தினில் - ஒருநாளில், நின்னுடன் - உன்னோடு, வெம்மை நிகழ்ந்ததாயினும் - கோவமுண்டாயிருந்தாலும், பின் உடன் - பின்னோடு, தீர்வன் - தணிந்துவிடுவான், இப்பெற்றி - இந்தக்குணம், இன்றியும் - இல்லாமலும், என்னோடும் - என்னோடும், பேசிலன் - பேசாமலும் இருக்கின்றான், என்னை - (இதற்குக்காரணம்) யாது, எ-று.

(போ-ரை.) தாயே? உன்னோடு கோவங்கொண்டிருக்கின்றானென்று சொல்லப்பட்ட ஒரு நாளில் உன்னோடு கோவமுண்டாயிருந்தாலும் பின்னோடு தணிந்து விடுவான், இந்தக் குணமில்லாமலும் என்னோடும் பேசாமலுமிருக்கின்றான், இதற்குக் காரணம் யாது? (௧௨)

வேளையிற் சிவார்ச்சனை விரும்புங் காலையி
னாளதா யொன்றுநீ யமைத்தி லாய்கொலோ
நாளுநின் சிலநீ ணன்மை குன்றியோ
தாளுறத் தவத்தர்பாற் றாழ்ந்தி லாய்கொலோ.

(ப - ரை.) வேளையில் - குறித்தகாலத்தில், சிவார்ச்சனை விரும்பும் காலையில் - சிவலிங்கபூஜை செய்கின்ற காலத்தில், ஆள் ஆய் - அடிமைபோல், நீ - நீ, ஒன்றும் - சிறிதும், அமைத்திலாய் கொலோ - (பூஜாத்ரவ்யங்களை) அமர்த்திவைக்கவில்லையோ, நாளும் - தினந்தோறும், நின் - உனது, சீலம் - சிவாசாரமும், நீள் - பெரிய, நன்மை - உபசாரங்களும், குன்றியோ - குறைந்துவிட்டனவோ, தாள் உற - திருவடிகள் சிரம் பொருந்தும்படி ஸாஷ்டாங்கமாக, தவத்தர்பால் - ஜங்கமமூர்த்திகளிடத்தில் (சென்று), தாழ்ந்திலாய் கொலோ - (விழுந்து) வணங்கவில்லையோ, எ - று.

(போ - ரை.) குறித்தகாலத்தில் சிவலிங்கபூஜை செய்கின்றகாலத்தில் அடிமை போல நீ சிறிதும் பூஜாத்ரவியங்களை யமர்த்தி வைக்கவில்லையோ? தினந்தோறும் உனது சிவாசாரமும் பேருபசாரங்களும் குறைந்துவிட்டனவோ? திருவடிகள் சிரம் பொருந்தும்படி ஸாஷ்டாங்கமாக ஜங்கம மூர்த்திகளிடத்திற் சென்று விழுந்து வணங்கவில்லையோ?

(வி - ரை.) ஓகாரங்கள் ஐயப்பொருளில் வந்தன. (௧௩)

திருமெழுக் கிடுகையிற் செந்து செத்ததோ
வொருபுடை கோமய முற்ற தில்லையோ
வருமைசே ரரங்கநல் லாலயத்தழ
கொருவியே யிடையிடை யூன மானதோ.

(ப - ரை.) திருமெழுக்கு இடுகையில் - திருமெழுக்கிடுகின்ற காலத்தில், செந்து - ஜீவப்ராணிகள், செத்ததோ - இறந்துவிட்டனவோ, ஒரு புடை - ஒருபக்கத்தில் கோமயம் - சாணம், உற்றதில்லையோ - பட்டதில்லையோ, அருமைசேர் - அருமையானதும், நல் - சிறந்ததுமான, அரங்க ஆலயத்து - கோலத்தின், அழகு - சிங்காரம், ஒருவி - கெட்டு, இடையிடை - நடுநடுவில், ஊனமானதோ - அழிந்து போய் விட்டதோ, எ - று.

(போ - ரை.) திருமெழுக்கிடுகின்ற காலத்தில் ஜீவப்ராணிகள் இறந்துவிட்டனவோ? ஒரு பக்கத்தில் சாணம் பட்டதில்லையோ? அருமையானதும் சிறந்தது மான கோலத்தின் அழகு கெட்டு நடுநடுவில் அழிந்துவிட்டதோ?

(வி - ரை.) திருமெழுக்கு - சிவபூஜா க்ருஹத்தை மெழுகுதல். அரங்கவாலா - ரங்கவாலே என்னுந் திசைச்சொற்றிரிபு. பஞ்சவர்ணமுள்ள யாவிறைலிடுகின்ற கோலம்.

விஞ்சிய வுழைக்கலம் விளக்கி லாய்கொலோ
மஞ்சன சாலையின் மலின முற்றதோ
வஞ்சிநீ விந்திகை யழுக்க றுத்திடா
தெஞ்சியா சரணை யி னிழிவு வந்ததோ.

(ப-ரை.) விஞ்சிய-மிகுதியாயுள்ள, உழைக்கலம்-பூஜாபாத்ரங்களை, விளக்கிலாய் கொலோ-துலக்கவில்லையோ, மஞ்சனசாலையில் - திருமஞ்சனா க்ருஹத்தில், மலினம் உற்றதோ - அழுக்கு படிந்துவிட்டதோ, நீ அஞ்சி-நீ பயந்து, விந்திகை-(திருமஞ்சன) குடத்தை, அழுக்கறுத்திடாது-துலக்காமல், எஞ்சிய-மீதியாயுள்ள, ஆசரணையின் - உபசாரங்களில், இழிவு வந்ததோ-குறைவு நேரிட்டதோ, எ-று.

(பொ - ரை.) மிகுதியாயுள்ள பூஜாபாத்ரங்களைத் துலக்கவில்லையோ? திருமஞ்சனா க்ருஹத்தில் அழுக்கு படிந்துவிட்டதோ? நீ பயந்து திருமஞ்சனகுடத்தைத் துலக்காமல் மீதியாயுள்ள உபசாரங்களிற் குறைவு நேரிட்டதோ?

(வி-ரை.) உழை - உழைக்கப்பட்ட. கலம் - பாத்ரம். எண்டைக்கேற்பப் பூஜா பாத்ரமென்று பொருட் கொண்டாம். விந்திகை - பிந்திகெ யென்னுந் திசைச் சொற்றிரிபு. (௧௫)

வத்திரங் கொண்டுநீர் வடித்தி லாய்கொலோ
சுத்திநற் கந்தநீ துவள வைத்தியோ
வொத்திரா தக்கதை யொடிந்தி ருந்ததோ
கொத்தலர் புழுக்கடி கூடி யுற்றதோ

(ப-ரை.) நீ-நீ, வத்திரங்கொண்டு-சுத்தவஸ்த்ரத்தினால், நீர்-ஜலத்தை, வடித்திலாய் கொலோ-வடிகட்டவில்லையோ, சுத்திநல்-மிக்க பரிசுத்தமாகிய, கந்தம்-சந்தனத்தை, துவள வைத்தியோ-வரளச் செய்துவிட்டாயோ, ஒத்திராது-(ஒன்றுக்கொன்று) ஒவ்வாமல், அக்கதை-அக்ஷதை, ஒடிந்திருந்ததோ-முறிந்திருந்ததோ, கொத்து-திரளா யிருக்கின்ற, அலர்-மலர்கள், புழுக்கடி - புழுவெட்டுடன், கூடியுற்றதோ - சேர்ந்திருந் தனவோ, எ-று.

(பொ-ரை.) நீ சுத்த வஸ்த்ரத்தினால் ஜலத்தை வடிகட்டவில்லையோ? மிக்க பரிசுத்தமாகிய சந்தனத்தை வரளச் செய்துவிட்டாயோ? ஒன்றுக்கொன்றொவ்வாமல் அக்ஷதை முறிந்திருந்ததோ? திரளாயிருக்கின்ற மலர்கள் புழுவெட்டுடன் சேர்ந் திருந்தனவோ?

(வி-ரை.) அக்கதை-அக்ஷதையென்னும் வடசொற்றிரிபு. மஞ்சள் கலந்த முழு அரிசி. (௧௬)

எடுத்தநற் றூபதீ பார்த்தி யின்மணம்
படைத்தொளி யொன்றபோற் பரவிற் றில்லையோ
சுடர்த்தரு விளக்கினைத் தூண்டி லாமலே
கெடுத்தனை யோவிதென் கிளர்த்தி யன்னையே.

(ப - ரை.) அன்னையே - தாயே, எடுத்த - கொடுத்த, நல் - நல்ல, தூபதீபார்த்தியின் - தூபதீபார்த்திகளின், மணம் - (முறையே) பரிமளத்தையும், ஒளி - பிரகாசத்தையும், படைத்து - கொடுத்து, ஒன்றுபோல் - ஒரேமாதிரியாய், பரவிற்று இல்லையோ - பரவவில்லையோ, சுடர்த்தரும் - பிரகாசிக்கின்ற, விளக்கினை - தீபத்தை, தூண்டிலாமல் - தூண்டாமல், கெடுத்தனையோ - அவித்துவிட்டாயோ, இது - இந்தக் கோபத்திற்குக் காரணம், என் - யாது, கிளர்த்தி - சொல்வாய். எ - று.

(போ - ரை.) தாயே! கொடுத்த நல்ல தீபதூபார்த்திகள் முறையே பரிமளத்தையும் பிரகாசத்தையுங் கொடுத்து ஒரே மாதிரியாய்ப் பரவவில்லையோ? பிரகாசிக்கின்ற தீபத்தைத் தூண்டாமல் அவித்துவிட்டாயோ? இந்தக் கோவத்திற்குக் காரணம் யாது? சொல்வாய். (௯௭)

பரமன்முன் னமுதுநீ படைக்குங் காலையின்
முரலுநின் னாசியின் மூச்ச லைந்ததோ
வரனருஞ் சேடமோ டருத்தி லாதன
விரவிநீ படைத்தியோ விளம்பு கன்னையே.

(ப-ரை.) அன்னையே - தாயே, நீ-நீ, பரமன் - இஷ்டலிங்கமூர்த்தியின், முன் - முன்னர், அமுதுபடைக்கும் காலையில்-திருவமுதுபடைக்கின்ற காலத்தில், முரலும் - ஒலிக்கின்ற, நின்-உனது, நாசியின்-மூக்கின், மூச்சு - சுவாசம், அலைந்ததோ - பட்டுவிட்டதோ, நீ - நீ, அரு - கிடைத்தற்கரிய, அரன் சேடமோடு - சிவப்ரஸாதத்துடன், அருத்திலாதன - உண்ணக்கூடாத பதார்த்தங்களை, விரவி - கலந்து, படைத்தியோ - படைத்துவிட்டாயோ, விளம்புக-சொல்லக்கடவாய், எ-று.

(போ-ரை.) தாயே! நீ இஷ்டலிங்கமூர்த்தியின் முன்னர் திருவமுது படைக்கின்ற காலத்தில் ஒலிக்கின்ற உனது மூக்கின் சுவாசம் பட்டுவிட்டதோ? கிடைத்தற்கரிய சிவப்ரஸாதத்துடன் உண்ணக்கூடாத பதார்த்தங்களைக் கலந்து படைத்துவிட்டாயோ? சொல்லக்கடவாய்.

(வி-ரை.) உண்ணக்கூடாத பதார்த்தங்கள் முருங்கை முதலியன. சிவலிங்கார்ப்பிதமான பிரசாதத்தை நிவேதிக்குங்கால் மூக்கின் சுவாசம் பட்டால் பிராணிகள் வாய் வைப்பதனாலும் உண்டாகும் தோஷம் உண்டாகாதபடி வெளியிற்கொண்டுபோய் எறியாமலிருத்தல் வேணுமென்பது வீரசைவக்கொள்கை. ஆகையால் உண்கலம் விதிக்கப்பட்டிருக்கிறது. (௯௮)

உற்றதோ மூவித வுதக மொன்றொடொன்
றெற்றென வழைத்ததற் கென்னென் றில்லையோ
சற்றுநீ யையன்முன் சாற்றி டாதவிக்
குற்றமே னின்னொடேன் கூறி லான்கொலாய்.

(ப - ரை.) மூவிதம் - மூன்றுவகைப்பட்ட, உதகம் - பாதோதகங்கள், ஒன்றொடொன்று - ஒன்றுடனொன்று, உற்றதோ - கலந்துவிட்டனவோ, எற்று - என்ன, என்று - என்று, அழைத்ததற்கு - (சிவபூஜாகாலத்தில்) கூப்பிட்டதற்காக, என் என்று இல்லையோ - ஏனென்று பதில் சொல்லவில்லையோ, நீ-நீ, ஐயன்-அப்பனுக்கு, முன் - எதிரே, சற்றும் - ஒன்றும், சாற்றிடாத - பேசாதிருக்கின்ற, இக்குற்றம் - இந்தப் பிழைக்குக் காரணம், ஏன்-யாது, நின்னோடு-உன்னுடனும், ஏன் கூறிலான் - ஏன் பேசமாட்டான், ஏன் - இதற்குக் காரணம் யாது, எ - று.

(பொ - ரை.) மூன்றுவகைப்பட்ட பாதோதகங்கள் ஒன்றுடனொன்று கலந்து விட்டனவோ? என்னவென்று சிவபூஜாகாலத்திற் கூப்பிட்டதற்காக ஏனென்று பதில்சொல்லவில்லையோ? நீ அப்பனுக்கு எதிரே ஒன்றும் பேசாதிருக்கின்ற இந்த பிழைக்குக்காரணம் யாது? உன்னுடனும் பேசமாட்டான், இதற்குக்காரணம் யாது?

(வி - ரை.) மூவிதவுதகம் - குருபாதோதகம், லிங்கபாதோதகம், ஜங்கம பாதோதக மென்பன. (௧௯)

ஐயநின் சினத்தினை யாறு கென்றியாங்
கைதொழு தின்சொலாற் காலின் வீழ்ந்திடின்
வெய்யதன் வெகுட்கிபோய் விரும்பிப் பேசுவன்
செய்குது மிச்செயல் செய்தி யன்னையே.

(ப - ரை.) அன்னையே - தாயே, யாம்-நாங்கள், ஐய-ஐயனே, நின்சினத்தினை- உனது கோவத்தை, ஆறுக என்று - தணியக்கடவையென்று, கைதொழுது - கைகூப்பி வணங்கி, இன் சொல்லால்-ஹிதமான வசனங்களால், காலின் வீழ்ந்திடின்- பாதங்களில் ஸாஷ்டாங்கமாகவிழுந்து வணங்குவோமாயின், தன் - தனது, வெய்ய வெகுட்கி - பொல்லாதகோவம், போய் - தணிந்து, விரும்பி - அன்புடன், பேசுவன்- பேசுவான், இச்செயல் - இந்தக் காரியத்தை, செய்குதும் - பண்ணுவோம், செய்தி - செய்யக்கடவாய் எ - று.

(பொ - ரை.) தாயே! நாங்கள் ஐயனே, உனது கோவத்தைத் தணியக்கடவை யென்று கைகூப்பிவணங்கி ஹிதமான வசனங்களால் பாதங்களில் ஸாஷ்டாங்கமாக விழுந்து வணங்குவோமாயின் தனது பொல்லாத கோவந் தணிந்து அன்புடன் பேசு வான், இந்தக் காரியத்தைச் செய்வோம், செய்யக்கடவாய். (௨0)

பரமனற் சேடமேன் பசியி லார்கிலன்
நிரமம துடையர்பால் சென்றென் சேர்கிலன்
கரமலர் பற்றியான் கசிந்த ழைக்கவோ
வுரையென வன்னைதா னொண்டு ணைக்கையால்.

(ப-ரை.) நல் - சிறந்த, பரமன்சேடன் - சிவப்ரஸாதத்தை, பசியில் - பசியினால், ஆர்கிலன் - உண்ணமாட்டான், ஏன் - (இதற்குக்காரணம்) யாது, நிரம் - அறி வில்லாவதராகிய, நமது உடையர்பால் - நமது ஜங்கமமூர்த்திகளிடத்தில், சென்று - போய், சேர்கிலன் - சேரமாட்டான், ஏன் - (இதற்குக்காரணம்) யாது, யான் - நான், கரமலர் - கைத்தாமரைகளை, பற்றி - பிடித்து, கசிந்து - அழுது, அழைக்கவோ- அழைக்கட்டுமோ, உரை என்ன-சொல்லென்று (கேட்டலும்), அன்னை-தாயானவள், ஒள் - அழகாகிய, துணைக் கையால் - இரண்டு கைகளினால், எ - று.

(பொ-ரை.) சிறந்த சிவப்ரஸாதத்தைப் பசியினால் உண்ணமாட்டான், இதற்குக் காரணம் யாது? அறிவில்லாதவராகிய நமது ஜங்கமமூர்த்திகளிடத்திற் போய்ச் சேரமாட்டான், இதற்குக் காரணம் யாது? நான் கைத்தாமரைகளைப் பிடித்தழுது அழைக்கட்டுமோ? சொல்லென்று கேட்டலும், தாயானவள் அழகாகிய இரண்டு கைகளினால். (௨௧)

பற்றிமுன் வாங்கிநீ பத்த ரிற்சொறு
முற்றவர் சிவார்ச்சனை புரையை யூன்றியே
கற்றனை யல்லது கருத்தி லாயெனச்
சொற்றியிவ் வேதிகை தொட்டி லுன்னையன்.

(ப - ரை.) பற்றி - பிடித்து, முன் - முன்னே, வாங்கி - இழுத்து, நீ - நீ, பத்தர் - சிவசரணர்களுடைய, இல் தொறும் - திருமடக்களிலெல்லாம், உற்று - சென்று, அவர் - அவர்கள் (செய்கின்ற), சிவார்ச்சனை - சிவலிங்கபூஜையென்கின்ற, உரையை - சொல்லைமாத்திரம், ஊன்றி - (மனத்திற்) பதித்து, கற்றனை - கற்றுக் கொண்டாயே, அல்லது - அல்லாமல், கருத்தில்லாய் - அதன் பயன்பாட்டைக் களை யறிந்தாயில்லை, என்ன - என்று, சொற்றி-சொல்லி, இச்வேதிகை-இந்தத் திணற்றை, தொட்டில் - தோண்டுவேனாயின், உன் - உனது, ஐயன் - அப்பன், எ - று.

(போ - ரை.) பிடித்து முன்னேயிழுத்து, நீ சிவசரணர்களுடைய திருமடங் களிலெல்லாம் சென்று அவர்கள் செய்கின்ற சிவலிங்கபூஜை யென்கின்ற சொல்லை மாத்திரம் மனத்திற் பதித்துக் கற்றுக்கொண்டாயே யல்லாமல் அதன்பயன்பாட்டைக் களை யறிந்தாயில்லை, இந்தத் திணற்றைத் தோண்டுவேனாயின் உனது அப்பன். (௨௨)

சினமொழிந் துன்னுடன் செப்பு மையநீ
நனவொழி நித்திரை யென்னு சென்றுளங்
கனிவுறத் தலைவனைக் கண்டு நக்கபின்
முனமுறுஞ் செய்திதான் முயலுங் காலையில்.

(ப-ரை.) சினம் ஒழிந்து-கோபந்தணிந்து, உன்னுடன்-உன்னோடு, செப்பும் - பேசுவான், ஐய - ஐயனே, நீ-நீ, நனவு ஒழி - விழித்திருக்காதே, நித்திரை யென்னுக - தூக்கக்கடவை, என்று - என்று சொல்லி, உளம் கனிவுற - மனமுருகும்படி, தலைவனை - கணவனை, கண்டு - பார்த்து, நக்க பின் - சிரித்த பிறகு, தான் முன்னம் உறும் - தான் முன்னேதொடங்கிய, செய்தி-சமாதிக்குழி வெட்டுகின்ற தொழிலையே, முயலுங் காலையில் - முயற்சிசெய்கின்ற காலத்தில், எ-று.

(போ - ரை) கோபந்தணிந்து உன்னோடு பேசுவான், ஐயனே! நீ விழித்திருக் காதே, தூக்கக்கடவை யென்று சொல்லி மன முருகும்படிக் கணவனைப் பார்த்துச் சிரித்த பிறகு; தான் முன்னே தொடங்கிய சமாதிக்குழி வெட்டுகின்ற தொழிலையே முயற்சிசெய்கின்ற காலத்தில். (௨௩)

புதல்வனுட் புறப்படாப் புறத்து வாயிலின்
கதவினைத் திறந்துளங் கலங்கி முன்புதா
னிதமுறத் தந்தைபி னேகும் வீதிபோய்
மதமுறாத் தலத்தரா மாதி ராசர்முன்.

(ப - ரை.) புதல்வன்-குமாரன், உள்-திருமடத்திலிருந்து, புறப்படா-புறப்பட்டு, புறத்துவாயிலின்-வெளிவாசலின், கதவினைத் திறந்து - கதவைத் திறந்துகொண்டு, உள்ளம் கலங்கி - மனங்குழைந்து, முன்பு - முன்னே, தான் - தான், இதமுற-சந்தோஷத்துடன், தந்தை பின் - தந்தையின் பிறகே, ஏகும் வீதி - (வழக்கப்படி) போகின்ற தெருவில், போய்-சென்று, மதம் உறா - அகங்காரமில்லாத, தலத்தர் ஆம் - ஜங்கமமூர்த்தி யாகிய, மாதிராசர் முன் - மாதிராசையருடைய சந்நிதியில், எ-று.

(போ-ரை.) குமாரன் திருமடத்திலிருந்துப் புறப்பட்டு வெளிவாசலின் கதவைத் திறந்து கொண்டு, மனங்குழைந்து, முன்னே தான் சந்தோஷத்துடன் தந்தையின் பிறகே வழக்கப்படிப்போகின்ற தெருவிற்சென்று, அகங்காரமில்லாத ஜங்கமமூர்த்தி யாகிய மாதிராசையருடைய சந்நிதியில். (௨௪)

அன்புடன் வணங்கிநின் றைய வையகே
னென்பிதா வென்னேயோ வேதும் பேசிலான்
முன்பென தன்னைபான் முனிவி லாதவன்
வன்புறு சினத்துடன் மவுன மாகியே.

(ப - ரை.) அன்புடன் - பக்தியோடு, வணங்கி - தொழுது, நின்று - நின்று, ஐய ஐய-ஐயனே ஐயனே, கேள் - கேட்பாய், என்பிதா-எனது அப்பன், என்னேயோ-என்ன காரணமோ, ஏதும் பேசிலான் - சிறிதும் பேசமாட்டான், முன்பு - முன்னர், எனது அன்னை பால்-எனது தாயிடத்தில், முனிவு இல்லாதவன்-கோவமில்லாதவன், வன்பு உறு-பொல்லாத, சினத்துடன் - கோவத்துடன், மவுனம்ஆகி-பேசாமல், எ-று.

(போ - ரை.) பக்தியோடு தொழுது, ஐயனே! ஐயனே! கேட்பாய், எனது அப்பன் என்ன காரணமோ? சிறிதும் பேசமாட்டான், முன்னர் எனது தாயிடத்தில் கோவமில்லாதவன் பொல்லாத கோவத்துடன் பேசாமல். (உ௫)

நீற்றினை நுதல்புய நிறையச் சாத்தியே
நேற்றுநீ யளித்தமெ னீளத் தூசினை
மேற்றரித் தணையின்மேல் மேவிப் பேர்கலான்
சீற்றமுற் றென்றன்மேற் சினேக மெண்ணலான்.

(ப - ரை.) நீற்றினை - விபூதியை, நுதல் - நெற்றியிலும், தோள் - புயங்களிலும், நிறைய - நிரம்ப, சாத்தி - தாரணஞ்செய்துகொண்டும், நேற்று - நேற்றைத்தினம், நீ - நீ, அளித்த - கொடுத்தருளிய, மெல் - மென்மையாகிய, நீள் - நீண்ட, அ-அந்த, தூசினை -வஸ்த்ரத்தை, மேல் - மேலே, தரித்து - போர்த்துக்கொண்டும், அணையின் மேல் - மெத்தையின்மீது, மேவி-சாய்ந்துகொண்டும், பேர்கலான்-அசையமாட்டான், சீற்றம் உற்று - கோவமடைந்து, என்மேல் - என்மீதும், சினேகம் - பக்ஷம், எண்ணலான் - பாராட்டமாட்டான், எ - று.

(போ - ரை.) விபூதியை நெற்றியிலும் புயங்களிலும் நிரயத் தாரணஞ்செய்து கொண்டும், நேற்றைத்தினம் நீ கொடுத்தருளிய மென்மையாகிய நீண்ட அந்த வஸ்த்ரத்தை மேலே போர்த்துக்கொண்டும், மெத்தையின்மீது சாய்துகொண்டும் அசைய மாட்டான், கோவமடைந்து என்மீதும் பக்ஷம் பாராட்டமாட்டான். (உ௬)

அன்னைநற் சிவார்ச்சனை யகத்தைக் கொட்டினு
லென்னையோ வகழ்ந்துமண் ணெடுக்கு கின்றனள்
பின்னைவே றொருவராற் பிணக்குத் தீர்கலா
னுன்னையா னழைக்கவிங் கோடி வந்தனன்.

(ப - ரை.) அன்னை - தாய், நல் - சிறந்த, சிவார்ச்சனையகத்தை - சிவபூஜா க்ருஹத்தை, கொட்டினுல் - மண்வெட்டியைக்கொண்டு, என்னையோ - என்ன காரணமோ, அகழ்ந்து-தோண்டி, மண் - மண்ணை, எடுக்குகின்றனள்-எடுக்கின்றுள், பின்னை-பிறகு, வேறொருவரால் - மற்றொருத்தராலும், பிணக்கு-கோவம், தீர்கலான்-தணியமாட்டான், யான் - நான், உன்னை - உன்னை, அழைக்க - கூப்பிடும்பொருட்டு, இங்கு - இவ்விடத்தில், ஓடிவந்தனன் - ஓட்டமாய்வந்தேன், எ - று.

(போ - ரை.) தாய் சிவபூஜாக்ருஹத்தை மண்வெட்டியைக்கொண்டு என்ன காரணமோ? தோண்டி மண்ணையெடுக்கின்றாள், பிறகு மற்றொருத்தராலும் கோவக் துணியமாட்டான், நான் உன்னைக் கூப்பிடும் பொருட்டு இவ்விடத்தில் ஓட்டமாய் வந்தேன். (௨௭)

நேற்றள வென்னைநன் னேச நெஞ்சுடன்
காற்றுடை மீதினுங் கரத்தி னுங்கொடு
போற்றியின் சொல்லினாற் புறத்து மீதுற
வேற்றுகந் தணைத்தெனை யிருக ணொற்றியே.

(ப - ரை.) நேற்று அளவு - நேற்றைத்தினம் வரையிலும், என்னை - என்னை நல் நேசம் - மிகுந்தபக்ஷமுள்ள, நெஞ்சுடன் - மனத்தோடு, கால் துடை மீதினும் - கால்களின்மேலும் துடைகளின்மேலும், கரத்திலும்-கைகளிலும், கொடு - இருத்திக் கொண்டும், போற்றி - வளர்த்து, இன் சொல்லினால் - இனிய வார்த்தைகளால், புறத்து மீது உற - முதுகின் மேலுமிருக்க, ஏற்று - சுமந்துகொண்டும், உகந்து - சந்தோஷத்துடன், அணைத்து - தழுவிக்கொண்டும், என்னை - என்னை, இருகண் - இரண்டு கண்களில், ஒற்றி - ஒற்றிக்கொண்டும், எ - று.

(போ - ரை.) நேற்றைத்தினம் வரையிலும் என்னை மிகுந்த பக்ஷமுள்ள மனத்தோடு கால்களின்மேலும் துடைகளின்மேலும் கைகளிலும் இருத்திக் கொண்டு வளர்த்து, இனிய வார்த்தைகளால் முதுகின்மேலு மிருக்கச் சுமந்து கொண்டும், சந்தோஷத்துடன் தழுவிக்கொண்டும், என்னை யிரண்டுகண்களிலொற்றிக்கொண்டும்

விட்டபி னெங்குநான் மேவி னும்முடன்
மட்டறு மன்பினால் வால லிங்கவா
விட்டமே வாவென தெந்தை வாவெனக்
கட்டிமார் பணைத்திரு கண்ணா தென்னவே.

(ப - ரை.) விட்டபின் - (தேஹமிறக்கி) விட்டபிறகு, நான் - நான், எங்கு மேவினும் - எவ்விடம் போவேனாயினும், உடன் - பின்னோடு கூடவே வந்து, மட்டு அறும் - அளவில்லாத, அன்பினால் - பக்ஷத்துடன், வாலலிங்க - வாலலிங்கனே, வா-வா, இட்டமே - இஷ்டலிங்கமே, வா-வா, எனது எந்தை-எனது அப்பனே, வா-வா, என்ன - என்றுசொல்லி, மார்பு - மார்பில், கட்டி யணைத்து - சேர்த்துத்தழுவிக் கொண்டு, இரு கண் என்ன - இரண்டு கண்களைப்போல, எ - று.

(போ - ரை.) தேஹ மிறக்கிவிட்ட பிறகு நான் எவ்விடம் போவேனாயினும் பின்னோடு கூடவே வந்து, அளவில்லாத பக்ஷத்துடன் வாலலிங்கனே! வா, இஷ்ட லிங்கமே! வா, எனது அப்பனே! வாவென்று சொல்லி மார்பில் சேர்த்துத்தழுவிக் கொண்டு இரண்டு கண்களைப்போல,

(வி - ரை.) வாலலிங்கன்-குமாரனது திருநாமமே. இட்டம்-ஆசையுள்ள மகனே எனினுமாம். (௨௮)

சிறியவென் சினையினைச் சிக்க றுத்தொரு
குறியதோர் கயிற்றினாற் கூட்டி யார்த்துமெய்
யறுதுக ளறத்துடைத் துவந்து பார்த்தபி
னிறையவே நெற்றியி னீறு பூசவன்.

(ப-ரை.) என் - என்னுடைய, சிறிய சிகையினை - சிறிதாகிய குடுமியை, சிக்கு அறுத்து - வாரி, ஒரு - ஒரு, சிறியது - சிறிதாகிய, ஓர் - ஒப்பற்ற, கயிற்றினால் - கயிற்றைக்கொண்டு, கட்டியார்த்து - சேர்த்துக்கட்டி, மெய் உறு - உடம்பிற்படிந் திருக்கின்ற, துகள் அற - தூசுபோகும்படி, துடைத்து - துடைத்து, உவந்து - சந்தோஷத்துடன், பார்த்த பின் - நோக்கின பிறகு, நெற்றியில் - நெற்றியில், நீறு - விபூதியை, பூசுவன் - தாரணஞ்செய்வான், எ - று.

(பொ-ரை.) என்னுடைய சிறிதாகிய குடுமியை வாரி, ஒரு சிறிதாகிய ஒப்பற்ற கயிற்றைக்கொண்டு சேர்த்துக்கட்டி, உடம்பிற் படிந்திருக்கின்ற தூசு போகும்படித் துடைத்து, சந்தோஷத்துடன் நோக்கின பிறகு, நெற்றியில் விபூதியை நிரம்பத் தாரணஞ்செய்வான்.

(வி - ரை.) துகள் அற - தூசுமுழுது மெனினுமாம். துடைத்து - ஒழித்து. ()

மருவியஞ் செழுத்திசை மைந்த வென்பனு
முரைசெயுங் குதலைகேட் டுவந்து மோந்துநீ
யருள்வச வேசுர னகத்திற் றொண்டனோ
சுரிகைநற் சவுண்டையன் றொழும்புத் தாதனோ.

(ப-ரை.) மைந்த-மகனே, மருவி - (மனம்) இசைந்து, அஞ்செழுத்து - ஸ்ரீபஞ்சாக்ஷர மஹாமந்த்ரத்தை, இசை-சொல், என்பன்-என்று சொல்வான், நான்-நான், உரை செயும் - சொல்லுகின்ற, குதலைகேட்டு - மழலைச் சொற்களைக்கேட்டு, உவந்து - சந்தோஷத்துடன், மோந்து-மோந்து, நீ - நீ, அருள்-க்ருபாகடாக்ஷத்தையுடைய, வசவேசுரன் - வசவண்ணர்க்கு, அகத்தில் தொண்டனோ - அகம்படியாரனோ, நல் - மேன்மையான, சுரிகை - உடைவாளையுடைய, சவுண்டையன் - சவுண்டையனுக்கு, தொழும்பு - ஏவல்செய்கின்ற, தாதனோ - தொண்டனோ, எ-று.

(பொ-ரை.) மகனே! மனமிசைந்து ஸ்ரீபஞ்சாக்ஷர மஹாமந்த்ரத்தைச் சொல்லென்று சொல்வான், நான் சொல்லுகின்ற மழலைச் சொற்களைக்கேட்டுச் சந்தோஷத்துடன் மோந்து க்ருபாகடாக்ஷத்தையுடைய வசவண்ணர்க்கு அகம்படியாரனோ? மேன்மையான உடைவாளையுடைய சவுண்டையனுக்கு ஏவல் செய்கின்ற தொண்டனோ?

(வி-ரை.) அகத்தில்-திருமடத்தில் வேலைசெய்கின்ற. தொண்டனோ-பரிசாரகனோ.

இசைந்தபா திராசையர்க் கினிய சேயனோ
முசண்டிவாழ் சவுண்டையன் மோக மைந்தனோ
வசந்தனை புகழ்மடி வாலை யன்றனக்
கசங்கிடா தேவல்செ யடிமைப் பையலோ.

(ப-ரை.) இசைந்த - (யாவராலும்) புகழப்பட்ட, பாதிராசையர்க்கு - சகளேச மாதிராசையர்க்கு, இனிய - விருப்பமுள்ள, சேயனோ-மாணாக்கனோ, முசண்டி வாழ் சவுண்டையன்-முசண்டிச் சவுண்டையனுக்கு, மோகம் - விருப்பமுள்ள, மைந்தனோ-புத்ரனோ, வசந்தனை புகழ்-உலகத்தாரால் புகழப்பட்ட, மடிவாலையன் தனக்கு-மடிவாலமாச்சையனுக்கு, அசங்கிடாது - சலிக்காமல், ஏவல் செய்-ஊழியஞ்செய்கின்ற, அடிமைப் பையலோ - தவசிப்பிள்ளையோ, எ-று.

(பொ-ரை.) யாவராலும் புகழப்பட்ட சகளேச மாதிராசையர்க்குவிருப்பமுள்ள மாணாக்கனோ? முசண்டிச் சவுண்டையனுக்கு விருப்பமுள்ள புத்ரனோ? உலகத்தாரால் புகழப்பட்ட மடிவாலமாச்சையனுக்குச் சலிக்காமல் ஊழியஞ் செய்கின்ற தவசிப்பிள்ளையோ?

(வி-ரை.) முசண்டி-முசண்டியென்னும் ஸ்தலத்தில். வாழ்-வாழ்கின்ற. இனிய சீடன்-நன்மாணாக்கன். (௩௨)

சங்கர தாசையன் றானி லங்கனே
வெங்கடஞ் சேரமா னேவற் றொண்டனே
வங்கரு வூரில்வா ழபயற் காளதாந்
துங்கநற் றொழும்பனே சொற்றி யென்றபின்.

(ப-ரை.) சங்கரதாசையன் - சங்கரதாசையனுக்கு, தான் இலங்கனே - பாதசேவகனே, எங்கள்-எங்களுடைய, சேரமான்-சேரமான் பெருமாணாயனார்க்கு, ஏவல்-ஊழியஞ்செய்கின்ற, தொண்டனே - அடியனே, அம் - அழகிய, கருவூரில் - திருக்கருவூரில், வாழ் - வாழ்கின்ற, அபயற்கு - அபாய சோழனுக்கு, ஆளதாம் - அடிமையாகிய, துங்கம்-பரிசுத்தமான, நல்-நல்ல, தொழும்பனே - தொண்டனே, சொற்றி-சொல், என்றபின் - என்று கேட்ட பிறகு, எ - று.

(பொ - ரை) சங்கரதாசையனுக்குப் பாதசேவகனே? எங்களுடைய சேரமான் பெருமாணாயனார்க்கு ஊழியஞ்செய்கின்ற அடியனே? அழகிய திருக்கருவூரில் வாழ்கின்ற அபாய சோழனுக்கு அடிமையாகிய பரிசுத்தமான நல்ல தொண்டனே? சொல்லென்று கேட்டபிறகு. (௩௩)

நிம்மவை பெற்றநன் னேய மைந்தனே
நம்மவை காரைக்கா னங்கைப் பிள்ளையோ
வம்மவை புதல்வனே யார்கொ னீயெனச்
செம்மையாற் பார்த்தெனைச் செப்பு மென்னையன்.

(ப - ரை.) நிம்மவ்வை - நிம்மவ்வையார், பெற்ற - ஈன்ற, நல் நேய - மிகவும் விருப்பமுள்ள, மைந்தனே - மகனே, நம் அவ்வை-நமது அன்னையாகிய, காரைக்கால் நங்கை - காரைக்காலம்மையார் பெற்ற, பிள்ளையோ - மகனே, அம்மவ்வை - அம்மவ்வையென்கின்ற பெச்சமஹாதேவியார் பெற்ற, புதல்வனே - மகனே, நீயார்- நீ யார், என்ன - என்றுகேட்டு, என் - எனது, ஐயன் - அப்பன், செம்மையால் - செவ்வையாக, பார்த்து-நோக்கி, செப்பும்-சொல்லுவான், (எவ்வாறெனின்), எ - று.

(பொ - ரை.) நிம்மவ்வையார் ஈன்ற மிகவும் விருப்பமுள்ள மகனே? நமது அன்னையாகிய காரைக்காலம்மையார் பெற்ற மகனே? அம்மவ்வை யென்கின்ற பெச்சமஹாதேவியார் பெற்ற மகனே? நீ யார்? என்று கேட்டு, எனது அப்பன் செவ்வையாக நோக்கிச் சொல்லுவான், எவ்வாறெனின். (௩௪)

ஏதுவேண் டியதுனக் கென்று கேட்டென
தாதர வுடன்பசி யறிந்தெ னன்னையைப்
பேதுறப் பசியினாற் பிள்ளை நொந்தனன்
காதலால் வாலலிங் கனுக்க னம்படை.

(ப - ரை.) உனக்கு - உனக்கு, ஏது வேண்டியது - என்னதேவை, என்று - என்று, கேட்டு-கேட்டு, எனது பசியை-எனது பசியை, ஆதரவுடன்-விருப்பத்துடன், அறிந்து - தெரிந்துகொண்டு, என் - எனது, அன்னையை - தாயை (நோக்கி), பேது உற - மதிமயங்க, பசியினால் - பசியினால், பிள்ளைநொந்தனன் - மகன் வருத்தமடைந்திருக்கின்றான், காதலால் - அன்புடன், வாலலிங்கனுக்கு - வாலலிங்கனுக்கு, அன்னம் படை - சோற்றையிடு, எ - று

(பொ - ரை.) உனக்கென்ன தேவையென்று கேட்டு, எனது பரியை விருப்பத்துடன் தெரிந்துகொண்டு, எனது தாயை நோக்கி, மதிமயங்கப் பரிவினுல் மகன் வருத்தமடைந்திருக்கின்றான் அன்புடன் வாலலிங்கனுக்குச் சோற்றையிடு. (௧௫)

என்றபி னன்னைதாழ்ந் திருக்கி னின்னமு
தொன்றிய நண்பினி லிட்டூட் டியென்புறந்
தன்றிருக் கரத்தினுற் றைவந் துன்னிடஞ்
சென்றுறி னென்னையுஞ் செய்ய கைக்கொடே.

(ப-ரை.) என்ற பின்-என்று சொன்ன பிறகு, அன்னை-தாய், தாழ்ந்திருக்கின் - தாமதித்திருப்பாளாயின், இன்-இன்பமுள்ள, அமுது - சோற்றை, ஒன்றிய-(மனம்) இசைந்த, நண்பில் - அன்புடன், இட்டு - படைத்து, ஊட்டி - உண்பித்து, என் புறம்-எனது முதுகினை, தன் - தன்னுடைய, திருக்கரத்தினுல் - அழகிய கைகளால், தைவந்து-தடவிக்கொடுத்து, உன்னிடம் - உன்னிடம், சென்றுறின்-வருவாராயின், என்னையும் - என்னையும், செய்ய - அழகிய, கை - கைகளால், கொடு - பிடித்துக் கொண்டு, எ - று.

(பொ - ரை.) என்று சொன்ன பிறகு, தாய் தாமதித்திருப்பாளாயின் இன்பமுள்ள சோற்றை மனமிசைந்த அன்புடன் படைத்துண்பித்து, எனது முதுகினைத் தன்னுடைய அழகிய கைகளால் தடவிக்கொடுத்து, உன்னிடம் வருவாராயின் என்னையும் அழகிய கைகளாற் பிடித்துக்கொண்டு. (௧௬)

வந்துநின் மலர்ப்பதம் வணங்கி யுற்றபின்
மைந்தனல் லிச்சையான் மடியில் வைத்துயா
னந்தருந் தன்குரு நாம மாகையாற்
சந்தத மென்றனைச் சற்று நிந்தியான்.

(ப-ரை.) வந்து - வந்து, நின் - உனது, மலர் - தாமரைமலர்போன்ற, பதம்- திருவடிகளை, வணங்கியுற்ற பின்-பணிந்த பிறகு, நல்-சிறந்த, மைந்தன் இச்சையால்-புத்ரவாத்சல்யத்தினுல், மடியில் - மடியில், வைத்து - இருத்திக்கொண்டு, யான்-நான், நந்து அரு - அழியாத, தன்-தனது, குரு-குருநாதரின், நாமம்-திருநாமத்தினையுடையவன், ஆகையால்-ஆதலால், சந்ததம்-எக்காலத்திலும், என் றனை-என்னை, சற்றும்-கொஞ்சமேனும், நிந்தியான் - ஏசமாட்டான், எ-று.

(பொ-ரை.) வந்து உனது தாமரைமலர் போன்ற திருவடிகளைப் பணிந்த பிறகு, சிறந்த புத்ரவாத்சல்யத்தினுல் மடியிலிருத்திக்கொண்டு நான் அழியாத தனது குருநாதரின் திருநாமத்தினையுடையவனாதலால் எக்காலத்திலும் ஏசமாட்டான்.

(வி-ரை.) சிக்கமாதையாது குருநாதரின்பெயர் வாலலிங்கஸ்வாமிகளென்பது இச்செய்யுளாற் பெறப்பட்டது. (௧௭)

இப்பொழு தழைக்கினு மேது சொல்லினுஞ்
செப்பல னென்னுடன் றேவி தன்னுடன்
வெப்பம திப்படி மேவ லாகுமோ
வப்பனே யிக்குண மடைந்த தன்மைதான்.

(ப - ரை.) இப்பொழுது - இப்போது, எது அழைக்கினும் - என்ன அழைத்த போதிலும், எதுசொல்லினும்-என்ன சொன்ன போதிலும், என்னுடன்-என்னுடனும், தேவிதன்னுடன் - மனைவியாருடனும், செப்பலன்-பேசமாட்டான், இப்படி-இவ்விதமாக, வெப்பம் - கோவம், மேவல் ஆகுமோ - கொள்ளலாமோ, அப்பன் - தகப்பன், இக்குணம் - இந்தத் தன்மையை, அடைந்ததன்மை - பெற்றதற்குக் காரணம், என்-யாதோ, எ-று.

(பொ-ரை.) இப்போது என்ன வழைத்தபோதிலும் என்ன சொன்னபோதிலும் என்னுடனும் மனைவியாருடனும் பேசமாட்டான், இவ்விதமாகக் கோவங்கொள்ளலாமோ? தகப்பன் இந்தத் தன்மையைப் பெற்றதற்குக் காரணம் யாதோ? (௩௮)

பூசனை புரிந்திடும் போது மேல்விழே
னாசையார் பூசைமு னமுதி டென்றிலே
னேசமோ டரற்குநா னிவேதித் தன்றியோ
னேசுறு வீதியங் காடிக் கிச்சியேன்.

(ப-ரை.) பூசனைபுரிந்திடும்போது - சிவபூஜை செய்யுங்காலத்தில், மேல்விழேன்- மேலேவிழமாட்டேன், ஆசையார் - விருப்பமுற்ற, பூசைமுன்-சிவபூஜை செய்தற்கு முன்னரே, அமுது இடு - சோற்றைப்படை, என்றிலேன் - என்றுகேட்கமாட்டேன், நான் - நான், நேசமொடு - அன்புடன், அரற்கு - சிவபெருமானுக்கு, நிவேதித்து - நைவேத்யஞ்செய்தே, அன்று - அல்லாமல், உண்ணேன் - உண்ணமாட்டேன், ஏசு உறு-குற்ற முள்ள, வீதிஅங்காடிக்கு-தெருக்கடைகளில் விற்கின்ற சிற்றுண்டிகளுக்கு, இச்சியேன் - ஆசைப்படமாட்டேன், எ - று.

(பொ - ரை.) சிவபூஜை செய்புங்காலத்தில் மேலேவிழமாட்டேன், விருப்பமுற்ற சிவபூஜை செய்தற்கு முன்னரே சோற்றைப் படையென்று கேட்கமாட்டேன், நான் அன்புடன் சிவபெருமானுக்கு நைவேத்யஞ் செய்தேயல்லாமல் உண்ணமாட்டேன், குற்றமுள்ள தெருக்கடைகளில் விற்கின்ற சிற்றுண்டிகளுக்கு ஆசைப்படமாட்டேன்.

(வி - ரை.) பலிஜனங்களாற் செய்து விற்கப்பட்ட பதார்த்தங்கள் சிவார்ப்பிதத் திற்கும் உண்பதற்குந் தக்கவையன்றாதலின் ஏசுறு வீதியங்காடி என்றார். அங்காடி - ஆகுபெயர். அரன் என்றது இஷ்டலிங்க மூர்த்தியை. சிற்றுண்டி என்றது பிட்டாய் முதலியவற்றை. (௩௯)

என்னிடை தப்பிலை யிப்பி ணக்கெலா
நின்னிட நிமித்தமா நீங்கி னல்லது
பின்னையா ரொருவர்தம் பேச்சுங் கேட்கலா
னுன்னடி கண்டிடி னொழிவன் றன்சினம்.

(ப - ரை.) என்னிடை - என்னிடத்தில், தப்பிலை - குற்றமில்லை, இப்பிணக்கு எல்லாம் - இந்தக் கோவமுழுதும், நின்னிட நிமித்தமா - உன்பொருட்டாக, நீங்கின் அல்லது-தணிய வேண்டியதேயன்றி, பின்னை-பின்பு, ஒருவர் - வேறொருத்தருடைய, பேச்சும்கேட்கலான்-சொல்லையுங்கேட்கமாட்டான், உன்-உனது, அடி-திருவடிகளை, கண்டிடின் தரிசிப்பாணாயின், தன்-தனது, சினம்-கோவம், ஒழிவன்-தணிவான், எ-று.

(பொ-ரை.) என்னிடத்திற் குற்றமில்லை, இந்தக் கோவமுழுதும் உன்பொருட்டாகத் தணியவேண்டியதே யன்றிப் பின்பு வேறொருத்தருடைய சொல்லையுங் கேட்கமாட்டான், உனது திருவடிகளைத் தரிசிப்பாணாயின் தனது கோவந்தணிவான். (௪௰)

தாமத மின்றியே சரித்தின் றெம்மட
மேகிழ்ந் தணையென நின்று வேண்டியே
பூமியிற் பணிந்துமுன் புலம்பிப் போற்றியே
காமுறு மனத்தினாற் கலுழ்ந்து கைதொழா.

(ப-ரை.) நீ - நீ, தாமதமின்றி - ஆலஸ்யஞ்செய்யாமல், சரித்து - வந்து, இன்று - இப்போது, எம் மடம் - எமது மடத்தை, மகிழ்ந்து - சந்தோஷத்துடன், அணை - சேரக்கடவை, என்ன நின்று - என்று நின்று, வேண்டி - மன்றாடி, பூமியில்பணிந்து - பூமியின்மீது ஸாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி, முன் - சந்நிதியில், புலம்பி - புலம்பி, போற்றி - துதித்து, காமம் உறு - விசாரமடைந்த, மனத்தினால் - நெஞ்சத்துடன், கலுழ்ந்து - அழுது, கைதொழா - கைகூப்பி வணங்கி, எ - று.

(பொ - ரை.) நீ ஆலஸ்யஞ் செய்யாமல் வந்து இப்போது எமது மடத்தைச் சந்தோஷத்துடன் சேரக்கடவையென்று நின்று மன்றாடி, பூமியின்மீது ஸாஷ்டாங்கமாக விழுந்துவணங்கி, சந்நிதியிற் புலம்பித் துதித்து, விசாரமடைந்த நெஞ்சத்துடன் அழுது, கைகூப்பி வணங்கி. (௪௧)

ஐயர்தாஞ் சாத்திய வரிய வேட்டியைக்
கையினா லடிக்கடி கலுழ்ந்து வாங்கியே
துய்யதாள் பற்றிமுன் சோதித் தென்பிதாச்
செய்யுமந் முனிவுநீ சென்ற லால்விடான்.

(ப - ரை.) ஐயர் - ஐங்கமமூர்த்தியாகிய மாதிராசையர், சாத்திய - தரித்திருக்கின்ற, அரிய - மேன்மையாகிய, வேட்டியை - கல்லாடையை, கையினால் - கைகளால், அடிக்கடி - பலகாலும், கலுழ்ந்து - அழுது, வாங்கி - இழுத்து, துய்ய - பரிசுத்தமாகிய, தாள் - திருவடிகளை, பற்றி - இறுகப் பிடித்துக்கொண்டு, முன் - முன்னதாகவே, சோதித்து - ஆராய்ந்து, என் பிதா - என்னுடைய தகப்பன், செய்யும் - பண்ணுகின்ற, அம் முனிவு - அந்தப் பொல்லாத கோபம், நீ சென்றலால் - நீ வந்தாலல்லாமல், விடான் - தணியமாட்டான், எ - று.

(பொ - ரை.) ஐங்கமமூர்த்தியாகிய மாதிராசையர் தரித்திருக்கின்ற மேன்மையாகிய கல்லாடையைக் கைகளாற் பலகாலும் அழுதிழுத்து, பரிசுத்தமாகிய திருவடிகளை யிறுகப்பிடித்துக்கொண்டு, முன்னதாகவே யாராய்ந்து, என்னுடைய தகப்பன் பண்ணுகின்ற அந்தப்பொல்லாத கோபம் நீ வந்தாலல்லாமல் தணியமாட்டான். (௪௨)

கடிதுடன் வாவெனக் கரம்பி டித்திழா
மடமைசேர் கருத்தனும் வால லிங்கனை
விடுவரு குதுமென விளம்பி மெய்த்தயா
வொடுமன முருகியே யுரைசெய் கின்றனர்.

(ப-ரை.) கடிது-சீக்கிரமாக, உடன்-என்னோடுகூட, வாவென-வாவென்று, கரம்பிடித்து - திருக் கரங்களைப் பற்றிக்கொண்டு, இழா-இழுத்து (கேட்டுக்கொள்கின்ற), மடமை சேர்-பேதைக்குணம் பொருந்திய, கருத்தன் ஆம் - மனமுள்ளவனாகிய, வாலலிங்கனை - வாலலிங்கனை (நோக்கி), விடு - (கையை) விட்டுவிடு, வருகுதும் என்ன - வருகின்றோமென்று, விளம்பி - சொல்லி, மெய் - உண்மையாகிய, தயாவொடு - அன்புடன், மனம்-நெஞ்சம், உருகி-கரைந்து, உரை செய்கின்றனர்-சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ-று.

(பொ-ரை.) சீக்கிரமாக என்னோடு கூடவாவென்று, திருக்கரங்களைப்பற்றிக் கொண்டிழுத்துக் கேட்டுக்கொள்கின்ற பேதைக்குணம்பொருந்திய மனமுள்ள வணுகிய வாலலிங்கனைநோக்கி, கையை விட்டுவிடு வருகின்றோமென்று சொல்லி, உண்மையாகிய அன்புடன் மனம் கரைந்து சொல்வாராயினர், எவ்வாறெனின். (௩௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**த**ரைமிசை விரத சிலர் தம்மிடங் களிலே கோபம்
விரையவே வந்தா லில்லாள் விமலனர்ச் சனைசெய் வீட்டைப்
புரைபடத் தோட்டு கின்ற புதுமையாங் காணோங் கேளே
முறையிதன் விவர முண்டீ துற்றுட னுணர்து மென்னு.

(ப-ரை.) தரைமிசை - பூமியின்மீது, விரதசிலர் இடங்களில் - வீரசைவர் களிடத்தில், விரைய-சீக்கிரமாக, கோபம் வந்தால்-கோவமுண்டாயின், இல்லாள் - மனையாள், விமலன் அர்ச்சனை செய் வீட்டை - சிவபூஜாக்ருஹத்தை, புரைபட - குழியுண்டாகும்படி, தோட்டுகின்ற-தோண்டுகின்ற, புதுமை-அதிசயத்தை, யாம்-நாம், காணோம்-பார்த்ததுமில்லை, கேளோம்-கேட்டதுமில்லை, உரை-சொல்லப்பட்ட, இதன்-இந்தச்செய்தியின், விவரம் உண்டு - விருத்தாந்த மிருக்கிறது, ஈது-இதனை, உடன்-உடனே, உற்று-போய், உணர்தும்-தெரிந்துகொள்வோம், என்னு-என்று, எ-று.

(பொ-ரை.) பூமியின்மீது வீரசைவர்களிடத்தில் சீக்கிரமாகக் கோபமுண்டாயின் மனையாள் சிவபூஜாக்ருஹத்தைக் குழியுண்டாகும்படித் தோண்டுகின்ற அதிசயத்தை நாம் பார்த்ததுமில்லை கேட்டதுமில்லை, இந்தச் செய்தியின் விருத்தாந்த மிருக்கிறது, இதனை உடனே போய்த் தெரிந்துகொள்வோமென்று. (௩௪)

**வா**லலிங் காவா வென்று மாதிரா சையர் தம்மைச்
சாலவே யாண்டு கொண்ட சகளேசர் சரண முன்னி
நீலகண் டாவுன் னன்பர் நெஞ்சக நினைத்த தெல்லா
மேலநீ யறிந்த ளிக்கு மிறையவ னாத லாலே.

(ப - ரை.) வாலலிங்கா-வாலலிங்கனே, வாவென்று-வாவென்றுசொல்லி, மாதிராசையர்-மாதிராசையர், தம்மை-தம்மை, சாலவே-அதிகமாக, ஆண்டுகொண்ட - அடிமைகொண்டருளிய, சகளேசர்-சகளேசுவரரது, சரணம்-திருவடிகளை, முன்னி-தியானித்து, நீலகண்டா-நீலகண்டனே, உன்-உனது, அன்பர்-பக்தர்கள், நெஞ்சகம் - மனத்தில், நினைத்தது-எண்ணினதை, எல்லாம்-முற்றிலும், ஏல-பொருந்த, நீ யறிந்து-நீ உணர்ந்து, அளிக்கும் - அநுக்ரஹஞ்செய்கின்ற, இறையவன் - தலைவன், ஆதலால்-ஆகையால், எ - று.

(பொ-ரை.) வாலலிங்கனே! வாவென்று சொல்லிமாதிராசையர் தம்மை யதிகமாக அடிமை கொண்டருளிய சகளேசுவரரது திருவடிகளைத் தியானித்து, நீலகண்டனே! உனது பக்தர்கள் மனத்தில் எண்ணினதை முற்றிலும் பொருந்த நீ புணர்ந்து அநுக்ரஹஞ்செய்கின்ற தலைவனாகையால். (௩௫)

**ந**ம்புநி னடியேன் சொல்லு நற்றிரு வாக்குப் போல
வெம்பிரான் பலிக்கும் வண்ண மின்றருு ளென்றோர் செய்யுட்
டம்பிரான் மாதி ராசர் தஞ்சக ளேச ராய
செம்பரன் மீதிற் பாடிச் சிக்கமா தையரிற் சென்றார்.

(ப - ரை.) எம்பிரான் - சிவபெருமானே; நம்பும் - நம்புகின்ற, நின் - உனது, அடியேன்-சரணனுடைய, சொல்லும்-வாக்கும், நல்-நன்மையுள்ள, திருவாக்குப்போல-உனது திருவாக்கைப்போலவே, பலிக்கும் வண்ணம் - சித்திக்கும்படி, இன்று - இப்போது; அருள் என்று-அநுக்ரஹஞ்செய்யென்று, ஓர்-ஒப்பற்ற, செய்யுள்-திருப்பாசுரத்தை, தம்பிரான் - ஜங்கமமூர்த்தியாகிய, மாதிராசர் - மாதிராசையர், தம்-தமது, சகளேசராயசெம்பரன் மீதில் - சகளேஸ்வரர்பேரில், பாடி - திருவாய்மலர்ந்தருளி, சிக்கமாதையர் - சிக்கமாதையரது, இல் - திருமடத்திற்கு, சென்றார் - எழுந்தருள்வாராயினர், எ - று.

(பொ - ரை.) சிவபெருமானே ! நம்புகின்ற உனது சரணனுடைய வாக்கும் நன்மையுள்ள உனது திருவாக்கைப்போலவே சித்திக்கும்படி யிப்போது அநுக்ரஹஞ் செய்யென்று ஒப்பற்ற திருப்பாசுரத்தை ஜங்கமமூர்த்தியாகிய மாதிராசையர் தமது சகளேஸ்வரர் பேரில் திருவாய்மலர்ந்தருளிச் சிக்கமாதையரது திருமடத்திற் கெழுந்தருள்வாராயினர்.

(வி-ரை.) திருவாக்கு-திருவார்த்தை. செம்-செந்நிறமுள்ள. பரன்-சிவபெருமான்.

மனையகத் தென்செய் கின்றாய் மாதேயிவ் வால லிங்க
னினைவரு மிருளிற் செல்ல நீயறிந் திருந்த தென்னை
சினமுளா துடனென் சொல்லாய் சிக்கமா தையனுக் கென்று
வினவலு மனையுண் மாது விரைந்துவந் திறைஞ்சி நின்றார்.

(ப் - ரை.) மாதே-பெண்மணியே, நீ - நீ, மனையகத்து - சிவபூஜாக்ருஹத்தில், என் செய்கின்றாய்-என்ன பண்ணுகின்றனை, இவ் வாலலிங்கன் - இந்தவாலலிங்கன், நினைவரு - நினைத்தற்கரிய, இருளில் - இருட்டில், செல் - போக, அறிந்திருந்தது - பார்த்திருத்தற்குக் காரணம், என்னை - யாது, சிக்கமாதையனுக்கு - சிக்க மாதையனுக்கு, உனதுடன் - உன்னுடன், சினம்-கோவங்கொள்வதற்குக் காரணம், என்-யாது, சொல்லாய்-சொல்லக்கடவாய், என்றுவினவலும்-என்று கேட்டலும், மனையுள் மாது-சிவபூஜாக்ருஹத்திலிருக்கின்ற தேவியார், விரைந்து வந்து - சீக்கிரமாக வந்து, இறைஞ்சி நின்றார் - வணங்கி நின்றார், எ-று.

(பொ-ரை.) பெண்மணியே ! நீ சிவபூஜாக்ருஹத்தில் என்ன பண்ணுகின்றனை ? இந்த வாலலிங்கன் நினைத்தற்கரிய இருட்டில் போகப் பார்த்திருத்தற்குக் காரணம் யாது ? சிக்கமாதையனுக்கு உன்னுடன் கோவங்கொள்வதற்குக் காரணம் யாது ? சொல்லக்கடவாயென்று கேட்டலும் சிவபூஜாக்ருஹத்திலிருக்கின்றதேவியார் சீக்கிரமாக வந்து வணங்கி நின்றார்.

(௬௭)

அருமைசேர் மாதி ராச ரகத்திவ னணைந்து மைந்தன்
றெருமரல் விலக்கி டாதே சிக்கமா தண்ணே மோன
மருவிநீ யிருப்ப தென்ன வாசிவார்ச் சனைக்கு வேலை
யொருமைசேர் பத்தி யேகான் முத்தியி னுயர்ச்சி வாவா.

(ப - ரை.) அருமைசேர்-மேன்மைபொருந்திய, மாதிராசர்-மாதிராசையர், சிக்கமாதண்ணே - சிக்கமாதையனே, அகத்து - எமது திருமடத்தில், இவன் - இவன், அணைந்தும்-வந்து (முறையிட்டும்), மைந்தன்-புத்திரனுடைய, தெருமரல்-அலைச்சலை, விலக்கிடாது - தீர்க்காமல், நீ - நீ, மோனம் மருவி யிருப்பது - பேசாமலிருத்தற்குக்

காரணம், என்ன-யாது, சிவார்ச்சனைக்கு வேலை - சிவபூஜாகாலம் (ஆயிற்று), வா-வா, ஒருமைசேர் - மனமொற்றுமைப்பட்ட, பத்தியே - அன்பு (ஒன்றே), முத்தியின் உயர்ச்சி - முக்தி விசேஷமாம், வாவா-விரைவாக வா, எ-று.

(பொ-ரை.) மேன்மைபொருந்திய மாதிராசையர், சிக்கமாதையனே! எமது திருமடத்தில் வந்து முறையிட்டும் பத்தனுடைய அலைச்சலைத் தீர்க்காமலே நீ பேசாமலிருத்தற்குக் காரணம் யாது? சிவ பூஜாகாலமாயிற்று வா, மனமொற்றுமைப் பட்ட அன்பொன்றே முக்திவிசேஷமாம், விரைந்து வா.

(வி-ரை.) ஈண்டிச்செய்யுளை கவனிக்கத்தக்கது:—

திருமந்திரம்.

அன்புஞ் சிவமு மிரண்டென்பரறிவிலார்
அன்பே சிவமாவ தியாரு மறிகிலர்
அன்பே சிவமாவ தியாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே. (சஅ)

என்றுதங் கருணை நோக்கா லின்மொழி யுரைத்த வாறே
சென்றவப் பிராணன் வந்து தேகத்துட் புகுந்து தூக்கம்
பொன்றினர் போலெ ழுந்தார் பொறிபுலன் பொருந்தி னார்மு
னின்றமா தரசர் தம்மை நேர்கண்டார் நேசங் கொண்டார்.

(ப-ரை.) என்று - என்று, தம்-தமது, கருணைநோக்கால் - க்ருபாகடாக்ஷத்தால், இன்மொழி-இனியதிருவாக்கினை, உரைத்தவாறே-திருவாய்மலர்ந்தருளிய படியே, சென்ற-போன, அப் பிராணன்-அந்தவுயிர், வந்து-திரும்பிவந்து, தேகத்துட்புகுந்து-உடம்பிற்பிரவேசித்து, தூக்கம் பொன்றினர் போல்-நித்திரைதெளிந்தெழுந்தவரைப் போல, எழுந்தார் - எழுந்து, பொறி புலன் பொருந்தினார் - பொறிபுலன்களுக்குரிய இயக்கத்தையடைந்து, முன்னின்ற-எதிரேநிற்கின்ற, மாதரசர் தம்மை-மாதிராசையரை நேர்-நேரே, கண்டார்-தரிசித்து, நேசங்கொண்டார்-அன்புசெய்து, எ-று.

(பொ-ரை.) என்று தமது க்ருபாகடாக்ஷத்தால் இனிய திருவாக்கினைத் திருவாய் மலர்ந்தருளியபடியே போன அந்த உயிர் திரும்பி வந்து உடம்பிற் பிரவேசித்து நித்திரை தெளிந்தெழுந்தவரைப்போல வெழுந்து, பொறி புலன்களுக்குரிய இயக்கத்தையடைந்து, எதிரே நிற்கின்ற மாதிராசையரை நேரே தரிசித்து அன்புசெய்து

(வி-ரை.) எழுந்தார், பொருந்தினார், கண்டார், கொண்டார் என்பன முற்றெச்சங்கள். பொறி - செவி முதலிய பஞ்சேந்திரியங்கள். புலன் - சத்த முதலிய பஞ்சேந்த்ரியங்கள். (சகூ

பயந்தரு பத்தி பொங்கிப் பணிந்தவர் பதாம்புயங்க
ளயந்தரு நுதலிற் கண்ணி னற்புயத் தொன்றச் சாத்திச்
சயந்தரு புளகங் கொண்டு சலசமென் கரங்கள் கூப்பி
வியந்தெனை யாள வந்த விமலனே போற்றி போற்றி.

(ப-ரை.) பயம் தரும்-பயன்படுகின்ற, பத்தி-அன்பானது, பொங்கி-மேலிட்டு, பணிந்து - ஸாஷ்டாங்கமாக வணங்கி, அவர் - அவருடைய, பதாம்புயங்கள்-திருவடித் தாமரைகளை, நயம்தரும்-மேன்மையுடைய, நுதலில்-நெற்றியிலும், கண்ணில்-கண்களிலும், நல்-நல்ல, புயத்து-புயங்களிலும், ஒன்ற-படும்படி, சாத்தி-ஒற்றிக்கொண்டு

சயம்தரும் புளகம்கொண்டு - மயிர் சிலிர்த்து, சலசம் - தாமரைமலர்போன்ற, மெல்- மென்மையாகிய, கரங்கள் கூப்பி - கைகளைக்குவித்து வணங்கி, வியந்து - துதித்து, என்னை-அடியேனை, ஆள - அடிமைகொண்டருளும் பொருட்டு, வந்த - தோன்றின, விமலனே - சிவபெருமானே, போற்றி போற்றி-சரணார்த்தி சரணார்த்தி, எ-று.

(பொ - ரை.) பயன்படுகின்ற அன்பானது மேலிட்டு, ஸாஷ்டாங்கமாக வணங்கி, அவருடைய திருவடித்தாமரைகளை மேன்மையுடைய நெற்றியிலும் கண்களிலும் புயங்களிலும் படும்படி யொற்றிக்கொண்டு, மயிர்சிலிர்த்து, தாமரைமலர்போன்ற மென்மையாகிய கைகளைக் குவித்து வணங்கித் துதித்து, அடியேனை யடிமை கொண்டருளும் பொருட்டுத் தோன்றின சிவபெருமானே! சரணார்த்தி, சரணார்த்தி.

(வி-ரை.) சயம்தரும்-கூட்டமாகிய. புளகம் கொள்ளல்-மயிர்கள் சிலிர்த்தல்.

பாவநா சனனே போற்றி பத்தர்தம் வாழ்வே போற்றி
மாவரங் கொடுக்க வல்ல மாதிரா சையா போற்றி
சிவனே போற்றி யென்னுஞ் சிக்கமா தையர் மூன்று
மூவரும் பணிந்து நின்றார் முன்னுறுந் தவத்தோர் சொல்வார்.

(ப - ரை.) பாவநாசனே-பாபஹரிதனே, போற்றி-சரணார்த்தி, பத்தர்வாழ்வே - சிவபக்தர்களுக்குச் செல்வமே, போற்றி-சரணார்த்தி, மா வரம்-பெரிய வரங்களை, கொடுக்கவல்ல - அநுக்ரஹஞ்செய்ய சாமர்த்தியத்தையுடைய, மாதிராசையா - மாதிராசையனே, போற்றி-சரணார்த்தி, சிவனே-உயிரே, போற்றி-சரணார்த்தி, என்னும் - என்று துதிக்கின்ற, சிக்கமாதையர் மூன் ஆம் - சிக்கமாதையர் முதலாகிய, மூவரும் - மூன்று சிவசரணர்களும், பணிந்து நின்றார் - வணங்கி நின்றார்கள், முன்-எதிரே, உறும் - சூழ்ந்திருக்கின்ற, தவத்தோர் - ஜங்கமமூர்த்திகள், சொல்வார் - சொல்லத் தொடங்கினார்கள், (எவ்வாறெனின்), எ-று.

(பொ - ரை.) பாபஹரிதனே! சரணார்த்தி, சிவபக்தர்களுக்குச் செல்வமே! சரணார்த்தி, பெரிய வரங்களை யநுக்ரஹஞ்செய்ய சாமர்த்தியத்தையுடைய மாதிராசையனே! சரணார்த்தி, உயிரே! சரணார்த்தி என்று துதிக்கின்ற சிக்கமாதையர் முதலாகிய மூன்று சிவசரணர்களும் வணங்கி நின்றார்கள். எதிரே சூழ்ந்திருக்கின்ற ஜங்கமமூர்த்திகள் சொல்லத்தொடங்கினார்கள், எவ்வாறெனின். (௫௧)

தந்தைதன் பத்தி யாலே தனயன்ற னாவி யத்தன்
வந்திடச் செய்தா னிந்த மைந்தன்றன் பத்தி யாலே
யந்தமாந் தந்தை யாவி யளித்தமை யுனக்கே செல்லுந்
தொந்தபா சங்க ளுன்னைத் தூரத்திற் கண்டார்க் கின்றால்.

(ப-ரை.) தந்தை பத்தியாலே-தந்தையினுடைய பக்தியினாலே, தனயன்ஆவி - மகனுடைய உயிரை, அத்தன் - சிவபெருமான், வந்திட - வரும்படி, செய்தான்- செய்தருளினன், இந்த மைந்தன் பத்தியாலே - இந்த மகனுடைய பக்தியினாலே, அந்தமாம்-அழகிய, தந்தையாவி-தந்தையினுடைய உயிரை, அளித்தமை - வரும்படிச் செய்தருளிய மஹத்தான காரியம், உனக்கே - உனக்கே, செல்லும் - நிறைவேறும், உன்னை - உன்னை, தூரத்தில் - தொலையில் நின்று, கண்டார்க்கு - தரிசனஞ்செய்பவர் களுக்கும், தொந்த பாசங்கள் - த்வந்த ஸம்பந்தமாகிய பந்த பாசங்கள், இன்று - இல்லை, எ-று.

(பொ - ரை.) தந்தையினுடைய பக்தியினாலே மகனுடைய உயிரை சிவபெருமான் வரும்படிச் செய்தருளினன், இந்த மகனுடைய பக்தியினாலே அழகிய தந்தையினுடைய உயிரை வரும்படிச்செய்தருளிய மஹத்தான காரியம் உனக்கே நிறைவேறும், உன்னைத் துலையில்நின்று தரிசனஞ்செய்பவர்களுக்கும் த்வந்த ஸம்பந்தமாகிய பந்த பாசங்களில்லை.

(வி-ரை.) தந்தை தன் பத்தியாலே தனயன்றனுவி யத்தன்வந்திடச் செய்தது என்றது சிறுத்தொண்டநாயனாரை. தொந்தம் - த்வந்தம்என்னும் வடசொற்றிரிபு. இரட்டையென்பது பொருள். அதாவது சுகதுக்கம், உஷ்ணசீதம், பாபபுண்யமிவை போன்றவை. செல்லுதல்-காரியம் சித்தியடைதல். பாசங்கள்-தமம், மாயை, மோஹம், அவித்தை யென்பன. அந்தம் ஆம்-மரணமடைந்த வெனினுமாம். (௫௨)

செவிடர்கா துன்சொல் லுற்றாற் றெளிந்தெலாங் கேட்ப ரேநின்
னுவமையி னயன முற்ற வூமரு முரைப்ப ரேபுன்
பவமுறுங் குருட ரெல்லாம் பார்த்தறிந் திடுவ ரேமு
னவமுறு மாம யத்தோ ரனுமய ராவ ரன்றே.

(ப-ரை.) செவிடர்-செவிடர்களும், காது-(தங்கள்) செவிப்புலன்களில், உன் - உனது, சொல்-திருவாக்கு, உற்றால்-படுமாயின், தெளிந்து-தெளிவாக, எல்லாம் - எல்லா விஷயங்களையும், கேட்பர் - கேட்பார்கள், நின் - உனது உவமையில் - நிகரற்ற, நயனம்-திவ்ய த்ருஷ்டி, உற்ற-பட்ட, ஊமரும்-மூகர்களும், உரைப்பர் - பேசுவார்கள், புல்-ஈனமாகிய, பவம் உறும் குருடர்-பிறவிக்குருடர்களும், எல்லாம் - எல்லாப்பொருள்களையும், பார்த்து-கண்டு, அறிந்திடுவர் - தெரிந்துகொள்வார்கள், முன் - முன்னே, அவம் உறும் - பயனற்ற, ஆமயத்தோர் - ரோகிகளும், அனுமயர் ஆவர்-சுகஜீவிகளாவார்கள், எ-று.

(பொ - ரை.) செவிடர்களும் தங்கள் செவிப்புலன்களில் உனது திருவாக்கு படுமாயின் தெளிவாக எல்லா விஷயங்களையுங் கேட்பார்கள், உனது நிகரற்ற திவ்ய த்ருஷ்டிபட்ட மூகர்களும் பேசுவார்கள், ஈனமாகிய பிறவிக்குருடர்களும் எல்லாப் பொருள்களையுங் கண்டு தெரிந்துகொள்வார்கள், முன்னே பயனற்ற ரோகிகளும் சுகஜீவிகளாவார்கள்.

(வி - ரை.) பவம்-பிறவி. ஆமயம்-ரோகம். அனுமயம்-ரோகமின்மை. (௫௩)

விருத்தருன் கருணை நோக்கின் வெளிப்படின் வால ராவார்
மரித்தவ ரெழுந்து போற்றி மண்ணிடை நடத்த லாலே
யருத்தலா விடமுந் துய்ய வமுதமா மையா யாங்கள்
விரித்துனைப் புகழ்ந்து ரைக்கும் விளம்பல மெய்யே யென்றார்.

(ப-ரை.) விருத்தர்-கிழவர்களும், உன்-உனது, கருணை நோக்கின் வெளிப்படின்-க்ருபாகடாக்ஷம் வீக்ஷண்யமாயின், வாலர் ஆவார்-வாலிபராவார்கள், மரித்தவர் - இறந்தவரும், எழுந்து - (உயிர்பெற்று) எழுந்து, போற்றி - துதித்து, மண்ணிடை - பூலோகத்தில், நடத்தலாலே-சஞ்சரிக்கின்ற காரணத்தினாலே, அருத்தலா-உண்ணக் கூடாத, விடமும்-நஞ்சும், துய்ய - பரிசுத்தமாகிய, அமுதம் ஆம் - அமிர்தமேயாகும், ஐயா-ஐயனே, யாங்கள்-நாங்கள், விரித்து-விவரமாக, உன்னை-உன்னை, புகழ்ந்து - புகழ்ச்சிசெய்து சொல்லுகின்ற, உரைக்கும் - சொல்லையும், விளம்பலம்-சொல்லமாட்டோம், மெய் - இது உண்மை, என்று-என்று சொல்லி, எ-று.

(பொ - ரை.) கிழவர்களும் உனது க்ருபாகடாக்ஷம் வீக்ஷண்யமாயின் வாலி பராவார்கள், இறந்தவரும் உயிர் பெற்றெழுந்துத் துதித்துப் பூலோகத்தில் சஞ்சரிக்கின்ற காரணத்தினாலே உண்ணக்கூடாத நஞ்சும் பரிசுத்தமாகிய அமிர்தமே யாகும்; ஐயனே! நாங்கள் விவரமாகப் புகழ்ச்சிசெய்து சொல்லுகின்ற சொல்லையும் சொல்லமாட்டோம், இது உண்மை யென்று சொல்லி. (௩௪)

அழுதபிள் ளைக்குத் தந்தை யருந்தன மளித்து நன்மை
தழுவுநின் பெருமை தன்னைச் சங்கரன் வல்ல னென்றார்
வழுவிலா நண்பர் சிக்க மாதையர் வாழச் செய்த
விழுமிய மாதி ராசர் விரைந்துதம் மடத்த ணைந்தார்.

(ப - ரை.) அழுத பிள்ளைக்கு-கதறிய மகனுக்கு, அரு-பெறுதற்கரிய, தந்தை தனம்-தந்தையாகிய செல்வத்தை, அளித்து-கொடுத்தருளி; நன்மைதழுவும்-பரமோப காரத்தைச் செய்கின்ற, நின்-உனது, பெருமைதன்னை-பெருமையை, சங்கரன்-சிவ பெருமானே, வல்லன் - அறியவல்லவன், என்றார் - என்று சொன்னார்கள், வழுவுஇல்லா - பாபத்தினின்றும் நீங்கிய, நண்பர் - சிவபக்தராகிய, சிக்கமாதையர் - சிக்கமாதையர், வாழச்செய்த - ஜீவிக்கும்படிச்செய்தருளிய, விழுமிய - மேன்மை பொருந்திய, மாதிராசர் - மாதிராசையர், விரைந்து - விரைவாக, தம்-தமது, மடத்து அணைந்தார்-திருமடத்தி லெழுந்தருளினார், எ-று.

(பொ - ரை.) கதறிய மகனுக்குப் பெறுதற்கரிய தந்தையாகிய செல்வத்தைக் கொடுத்தருளிப் பரமோபகாரத்தைச் செய்கின்ற உனது பெருமையைச் சிவபெருமானே அறியவல்லவனென்று சொன்னார்கள், பாபத்தினின்றும் நீங்கிய சிவபக்த ராகிய சிக்கமாதையர் ஜீவிக்கும்படிச் செய்தருளிய மேன்மை பொருந்திய மாதி ராசையர்விரைவாகத் தமது திருமடத்தி லெழுந்தருளினார். (௩௫)

சிக்கமாதையர் புராணம் முற்றிற்று.



ஆகத் திருவிருத்தம் - ௭௮௮.



சிவமயம்.

# மடிவாலமாச்சையர் புராணம்.

## கலிவிருத்தம்.

மற்றுமொரு பேரன்பர் மடிவால மாச்சையர்
நெற்றிவிழி யாரன்பர் நேயரதி வீரத்தார்
வெற்றியுள்ளார் காலகன்ம மேவாதார் மெய்ச்சீலர்
பற்றியென்றும் பவிகளைத்தாம் பரிசியாப் பான்மையார்.

(ப-ரை.) மற்றும்-இன்னமும், ஒரு பேர் அன்பர்-ஒரு பெரிய சிவசரணரது திருநாமம், மடிவாலமாச்சையர்-மடிவாலமாச்சையரென்பது, நெற்றிவிழியார் அன்பர் - சிவபக்தர்களுக்கு, நேயர்-பக்திசெய்பவர், அதிவீரத்தார்-மிகுந்தபாரக்கிரமமுள்ளவர், வெற்றியுள்ளார் - ஜய முள்ளவர், காலம் மேவாதார் - முடிவில்லாதவர், கன்மம் மேவாதார்-கர்மமில்லாதவர், மெய்-உண்மையாகிய, சீலர்-வீரசைவாசார ஸம்பன்னர், பவிகளை - பவிகளை, பற்றி - சம்பந்தஞ்செய்து, என்றும் - எக்காலத்திலும், பரிசியாப் பான்மையார் - தொடாத பெருமை யுடையவர், எ - று.

(பொ-ரை.) இன்னமும் ஒரு பெரிய சிவசரணரது திருநாமம் மடிவாலமாச்சையரென்பது, சிவபக்தர்களுக்குப் பக்திசெய்பவர், மிகுந்த பராக்கிரமமுள்ளவர், முடிவில்லாதவர், கர்மமில்லாதவர், உண்மையாகிய வீரசைவாசார ஸம்பன்னர், பவிகளைச் சம்பந்தஞ்செய்து எக்காலத்திலும் தொடாத பெருமையுடையவர்.

(வி - ரை.) நெற்றிவிழியார்-நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான். காலம் - பூதபௌஷ்ய வர்த்தமான காலங்கள். காலம்மேவாதார்-காலங்கடந்தவரெனினுமாம். கன்மம்-வினை. கன்மமேவாதார் - கர்மங்கடந்தவரெனினுமாம். பவிகள்-அலிங்கிகள் (வீரசைவரல்லாதார்). பிறவிக்கேதுவான கர்மங்களைச் செய்பவர்களென்பது பொருள். கன்மம் - மனோவாக்காயங்களென்னும் த்ரிகரணங்களினாற் செய்கின்ற கிரியை. மடிவாலர்-ஈரங்கொல்லியர், (மடிவாளர் என்னும் திசைச்சொற்றிரிபு.) (க)

சிட்டர்கன்மஞ் சேராதார் திருந்தியமெய்ப் பத்தியினு
ருட்டருகா மாதியா றொன்றுமில்லார் சிதேந்திரியர்
நிட்டர்சுகர் நிட்டூரர் நியாயத்தர் நிமலமுத்த
ரிட்டமுறுங் கோட்டிநன்று மிசைக்கவல்ல விருந்தவத்தார்.

(ப - ரை.) சிட்டர்-சிஷ்டபரிபாலனஞ் செய்பவர், கன்மம் சேராதார்-கர்மமார்க்கத்தையடையாதவர், திருந்திய-சுத்தமாகிய, மெய்-உண்மையான, பத்தியினார்-பக்திமார்க்கத்தையுடையவர், உள்-மனத்தில், தரு-உண்டாகின்ற, காமாதி - காமம் முதலிய, ஆறு-ஆறுவிகாரங்கள், ஒன்றும் - கொஞ்சமேனும், இல்லார் - இல்லாதவர், சிதேந்திரியர் - பஞ்சேந்த்ரியநிக்ரஹஞ் செய்தவர், நிட்டர் - சிவலிங்க நிஷ்டையுடையவர், சுகர் - தர்மமார்க்கத்தையுடையவர், நிட்டூரர் - துஷ்டநிக்ரஹஞ்செய்பவர்,

நியாயத்தர் - நல்லொழுக்கமுடையவர், நிமலமுத்தர்-பரிசுத்தமான ஜீவன் முக்தர், இட்டம் உறும் - அன்புமிகுந்த, கோட்டி - ஜங்கமகோஷ்டிகளால், நன்றாய் - செவ்வையாய், இசைக்க வல்ல-புகழ்ந்துசொல்லக்கூடிய, இரு-மேன்மைபொருந்திய, தவத்தார்-ஜங்கமமூர்த்தியாயுள்ளவர், எ-று.

(பொ - ரை.) சிஷ்டபரிபாலஞ்செய்பவர், கர்மமார்க்கத்தையடையாதவர், சுத்தமாகிய உண்மையான பக்திமார்க்கத்தையுடையவர், மனத்திலுண்டாகின்ற காம முதலிய ஆறு விகாரங்கள் கொஞ்சமேனு மில்லாதவர், பஞ்சேந்த்ரிய நிக்ரஹஞ் செய்தவர், சிவலிங்கநிஷ்டை யுடையவர், தர்ம மார்க்கத்தையுடையவர், துஷ்ட நிக்ரஹஞ்செய்பவர், நல்லொழுக்கமுடையவர், பரிசுத்தமான ஜீவன்முக்தர், அன்பு மிகுந்த ஜங்கமகோஷ்டிகளாற் செவ்வையாய்ப் புகழ்ந்து சொல்லக்கூடிய மேன்மை பொருந்திய ஜங்கமமூர்த்தியாயுள்ளவர்.

(வி - ரை.) சிட்டர் - ஸிஷ்டர் என்னும் வடசொற்றிரிபு, சிதேந்திரியர் - ஜிதேந்த்ரியர் என்னும் வடசொற்றிரிபு. நிட்டர் - நிஷ்டர் என்னும் வடசொற்றிரிபு. நிட்டூரர்-நிஷ்டூரர் என்னும் வடசொற்றிரிபு. இட்டம் - இஷ்டம் என்னும் வடசொற்றிரிபு. கோட்டி - கோஷ்டி யென்னும் வடசொற்றிரிபு. சுகர் - ஸுகர் என்னும் வடசொற்றிரிபு. முத்தர் - முக்தர் என்னும் வடசொற்றிரிபு. நிஷ்டர் - விரதத்தை யுடையவர். கோஷ்டி - கூட்டம். காமாதியாறு என்பதனை அரிஷட் வர்க்கமெனக் கூறுவர் வடநூலார். காமாதியாறின் விவரம்:— காமம் (புத்ரமித்ர களத்ர க்ருஹ க்ராம க்ஷேத்ர தன தான்யாதிகள் மேலுமேலு முண்டாகவேணுமென்கின்ற சித்தம்), க்ரோதம் (தனக்குவேண்டிய கார்யங்களை யொருவன் தடைசெய்தால் அவனிடத்தில் அக்கிரமமாயெழுகின்ற சித்தம், இதனை வெகுளியென்பர் சிலர்), லோபம் (தான் சம்பாதித்த பொருள்களில் ஒருவர்க்கும் ஒரு காசளவுஞ் செலவுபண்ண லாகாதென் றெழுகின்ற சித்தம்), மோஹம் (தான் சம்பாதித்த பொருள்களின்மேல் ப்ரியமோத ப்ரமோதமாயெழுகின்ற சித்தம்), மதம் (ஐஸ்வர்யத்தின் பெருக்கத்தினாற் கர்வங் கொண்டு இதுசெய்யத்தக்ககார்யம் இதுசெய்யத்தகாத கார்யமென்றறியா தெழுகின்ற சித்தம்), மத்ஸரம் (பிறர் சுகமாயிருப்பாராயின் அவர்களைப்பார்த்துச் சகிக்காமலெழு கின்ற சித்தம்). (௨)

தர்க்ககரிக் கரியன்னா சன்மார்க்க மன்றியொல்லா
ரெற்புயத்தின் வலிமிக்கா ரிப்பரிக புரியென்னுஞ்
சொற்பதியார் தவராடை தூய்தாக்குந் தொழிற்குலத்தார்
நற்சரணர் நிதியனையார் நம்பனைநெஞ் சகலாதார்.

(பி - ரை.) தர்க்க கரிக்கு - தார்க்கிகர்களாகிய யானைகளுக்கு, அரியன்னார் - சிம்மத்தைப்போன்றவர், சன்மார்க்கமன்றி - சன்மார்க்கத்தையேயல்லாமல், ஒல்லார்- துர்மார்க்கத்தை விரும்பாதவர், எல் - பிரகாசத்தையுடைய, புயத்தில் வலி மிக்கார் - புஜபலபராக்ரமத்தை யுடையவர், இப்பரிகபுரியென்னும் - இப்பரிகபுரியென்கின்ற, சொல் - புகழையுடைய, பதியார் - ஸ்தலத்தையுடையவர், தவர் - ஜங்கமமூர்த்திக ளுடைய, ஆடை - வஸ்த்ரங்களை, தூய்தாக்கும் - வெளுக்கின்ற, தொழில் - தொழிலையுடைய, குலத்தார் - ஈரங்கொல்லியர் குலத்திற்றோன்றினவர், நல் - நல்ல, சரணர் - சிவசரணர்களுக்கு, நிதியனையார் - செல்வத்தைப்போன்றவர், நம்பனை - சிவபெருமானை, நெஞ்சு - ஹ்ருதயகமலத்தினின்றும், அகலாதார்-விட்டுப்பிரியாதவர், எ-று.

(போ - ரை) தார்க்கிகர்களாகிய யானைகளுக்குச் சிம்மத்தைப் போன்றவர், சன்மார்க்கத்தையே யல்லாமல் துர்மார்க்கத்தை விரும்பாதவர், பிரகாசத்தையுடைய புஜபல பராக்ரமத்தையுடையவர், இப்பரிசபுரியென்கின்ற ஸ்தலத்தையுடையவர், ஜங்கம மூர்த்திகளுடைய வஸ்த்ரங்களையே வெளுக்கின்ற ஈரங்கொல்லியர்குலத்திற் றோன்றினவர், நல்லசிவசரணர்களுக்குச் செல்வத்தைப் போன்றவர், சிவபெருமானை ஹ்ருதயகமலத்தினின்றும் விட்டுப் பிரியாதவர்.

(வி - ரை.) தர்க்கம் - வாதஞ்செய்தல். அரி - ஹரி என்னும் வடசொற்றிரிபு. ஈரங்கொல்லியர்-வண்ணார். புயம்-புஜம் என்னும் வடசொற்றிரிபு. மிக்கவர்-சிறந்தவர். வலி - வலிமை. நெஞ்சு - மனம். (௧)

வந்தசிவ தவராடை மகிழ்ந்தளிப்பா யெனக்கேட்கிற்
சிந்தைமகிழ்ந் தவர்க்குதவிச் சென்றுடையோர் கேட்குங்கா
லந்தவுடை யேகொடுக்கு மதிகவரம் பெற்றுள்ளா
ரிந்தநிலை மடிவால மாச்சையரெ னும்பெரியோர்.

(ப - ரை.) சிவதவர் - சிவசரணர்கள், வந்து - (தம்மிடத்தில்) வந்து, ஆடை - வஸ்த்ரங்களை, மகிழ்ந்து - சந்தோஷத்துடன், அளிப்பாய் - கொடுப்பாய், என - என்று, கேட்கில் - கேட்பார்களாயின், சிந்தை மகிழ்ந்து - மனமகிழ்ந்து, அவர்க்கு - அவர்களுக்கு, உதவி - கொடுத்து, உடையோர்-வஸ்த்ரங்களுக்குச் சொந்தக்காரர்கள், சென்று - வந்து, கேட்குங்கால் - கேட்கின்ற காலத்தில், அந்த உடையே - அந்த வஸ்த்ரங்களையே, கொடுக்கும் - தரவல்லமையுள்ள, அதிக வரம் பெற்றுள்ளார் - பெரிய வரத்தையடைந்தவர், இந்தநிலை-இம்முறைமையிலிருக்கின்ற, மடிவாலமாச்சையர் என்னும் பெரியோர்-மடிவாலமாச்சையரென்கின்ற ஜங்கமமூர்த்திகள், எ-று.

(போ - ரை.) சிவசரணர்கள் தம்மிடத்தில் வந்து வஸ்த்ரங்களைச் சந்தோஷத்துடன் கொடுப்பாயென்று கேட்பார்களாயின் மனமகிழ்ந்து அவர்களுக்குக் கொடுத்து, வஸ்த்ரங்களுக்குச் சொந்தக்காரர்கள் வந்து கேட்கின்ற காலத்தில் அந்த வஸ்த்ரங்களையே தரவல்லமையுள்ள பெரிய வரத்தை யடைந்தவர், இம்முறைமையிலிருக்கின்ற மடிவாலமாச்சையரென்கின்ற ஜங்கமமூர்த்திகள். (௨)

வசையறியா வசவேசர் வன்பத்தி யெனும்பெருமை
யிசையுலக மெங்கெங்கு மெய்தக்கேட் டின்புற்றே
விசையமிகு மாச்சையர் நந்திகன்பான் மேவியா
மசைவிலருந் தவராடை யழுக்கறுத்துய் வாமென்றே.

(ப-ரை.) வசை - பழிச்சொல்லென்பதே, அறியா - தெரியாத, வசவேசர் - வசவண்ணருடைய, வன்-மேன்மையாகிய, பத்தியெனும்-பக்தியென்கின்ற, பெருமை-மகிமையின், இசை - புகழ், உலகம்-உலகத்தில், எங்கு எங்கும்-எல்லாவிடங்களிலும், எய்தக்கேட்டு - பரவக் கேள்விப்பட்டு, இன்புற்று - சந்தோஷமடைந்து, விசையம் மிகும்-மிகுந்த வெற்றியினையுடைய, மாச்சையர் - மடிவாலமாச்சையர், நந்திகன்பால் - வசவண்ணரிடத்தில், மேவி-சென்று, யாம்-நாம், அசைவு இல்-மனோசலனமற்ற, தவர்-ஜங்கமமூர்த்திகளுடைய, ஆடை - வஸ்த்ரங்களை, அழுக்கறுத்து-வெளுத்து, உய்வாம் என்றே-ஜீவிப்போமென்று, எ-று.

(போ - ரை.) பழிச்சொல்லென்பதே தெரியாத வசவண்ணருடைய மேன்மையாகிய பக்தியென்கின்ற மகிமையின் புகழ் உலகத்தில் எல்லாவிடங்களிலும் பரவக்

கேள்விப்பட்டு, சந்தோஷமடைந்து, மிகுந்த வெற்றியினையுடைய மடிவாலமாசைய்யர் வசவண்ணரிடத்திற் சென்று, நாம் மனோசலனமற்ற ஜங்கமமூர்த்திகளுடைய வஸ்த்ரங்களை வெளுத்து ஜீவிப்போமென்று.

(வி-ரை.) விஜைபம்-விஜயமென்னும் வடசொற்றிரிபு. அழுக்கறுத்தலென்பது ஒருசொல்லாய் வெளுத்தலெனப்பொருட்பட நின்றது. (௫)

சென்றுகலி யாணமுற்றுத் திருநந்தி தனைப்பணிந்தார்
வென்றிவச வேசருமிகச்சரண மெனத்தொழுதா
ரொன்றுபெரி யோர்க்கிவர்சீ ருவந்துரைத்து மடங்கொடுத்தா
ரன்றுமுதற் றவராடை யழுக்கறுத்தங் கமர்நாளில்.

(ப - ரை.) சென்று - புறப்பட்டுப் போய், கலியாணம் உற்று - கல்யாண பட்டினத்தை யடைந்து, திருநந்திதனை - ஸ்ரீவசவண்ணரை, பணிந்தார் - (ஸாஷ்டாங்கமாக) வணங்கி (சரணார்த்தி) யென்றார், வென்றி - ஜெயப்ரதாபத்தை யுடைய, வசவேசரும் - வசவண்ணரும், மிகச் சரணம் என்ன - சரண சரணார்த்தி யென்று, தொழுதார் - (ஸாஷ்டாங்கமாக) வணங்கினார், ஒன்று - திருமடத்திற்கூடியிருக்கின்ற, பெரியோர்க்கு - ஜங்கமமூர்த்திகளுக்கு, இவர் - இவருடைய, சீர் - சிறப்பினை, உவந்து - சந்தோஷத்துடன், உரைத்து - புகழ்ந்து சொல்லி, மடம் - திருமடத்திலிருக்க விடம், கொடுத்தார் - தந்தனர், அன்று முதல் - அன்றைத்தினந் தொடங்கி, தவர் - ஜங்கமமூர்த்திகளுடைய, ஆடை - வஸ்த்ரங்களை, அழுக்கறுத்து - வெளுக்கின்ற பணிவிடை செய்துகொண்டு, அங்கு - அவ்விடத்தில், அமர் நாளில் - வசிக்கின்ற காலத்தில், எ - று.

(பொ - ரை.) புறப்பட்டுப் போய்க் கல்யாண பட்டினத்தை யடைந்து, ஸ்ரீ வசவண்ணரை ஸாஷ்டாங்கமாக வணங்கிச் சரணார்த்தி யென்றார், ஜெய ப்ரதாபத்தை யுடைய வசவண்ணரும் சரண சரணார்த்தி யென்று ஸாஷ்டாங்கமாக வணங்கினார், திருமடத்திற் கூடியிருக்கின்ற ஜங்கம மூர்த்திகளுக்கு இவருடைய சிறப்பினைச் சந்தோஷத்துடன் புகழ்ந்து சொல்லித் திருமடத்திலிருக்க இடம் தந்தனர், அன்றைத்தினந் தொடங்கி ஜங்கமமூர்த்திகளுடைய வஸ்த்ரங்களை வெளுக்கின்ற பணிவிடை செய்துகொண்டு அவ்விடத்தில் வசிக்கின்ற காலத்தில். (௬)

பரவிடத்தும் பணியாச்சொல் பத்தியல வென்பதனைத்
திரநலத்தா ரறிவிக்க நந்தியார் தெளிந்துன்னிக்
கரதலத்தாங் கண்ணுதலைக் காதலினா லருச்சிப்பா
ருரவுளத்தா லேத்துவா ருணரார்போ லோதுவார்.

(ப - ரை.) பரவு இடத்தும் - வணக்கமுள்ள விடத்திலும், பணியா - வணக்கமில்லாத, சொல் - வார்த்தையானது, பத்தி - பக்திமார்க்கத்திற்கு, அல்ல - (உரியது) அல்ல, என்பதனை - என்கின்ற கட்டளையை, திரம் - நிலைபெற்ற, நலத்தார் - ஜங்கமமூர்த்திகள், அறிவிக்க - தெரியப்படுத்தலும், நந்தியார் - வசவண்ணர், தெளிந்து - அறிந்து, உன்னி - யோசித்து, கரதலத்து ஆம் - கைத்தலத்திலெழுந்தருளியிருக்கின்ற, கண்ணுதலை - இஷ்டலிங்க மூர்த்தியை, காதலினால் - அன்புடன், அருச்சிப்பார் - பூஜைசெய்து, உர உளத்தால் - மனோத்ருடங்கொண்டு, ஏத்துவார் - துதித்து, உணரார்போல் - தெரியாதவர்போல், ஓதுவார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(பொ - ரை) வணக்கமுள்ள விடத்திலும் வணக்கமில்லாத வார்த்தையானது பக்திமார்க்கத் திற்குரியதல்ல வென்கின்ற கட்டுரையை நிலைபெற்ற ஜங்கமமூர்த்திகள் தெரியப்படுத்தலும், வசவண்ணர் அறிந்து யோசித்து, கைத்தலத்தி லெழுந்தருளி யிருக்கின்ற இஷ்டலிங்க மூர்த்தியை யன்புடன் பூஜைசெய்து மனோத்ருடங்கொண்டு துதித்து, தெரியாதவர்போல் சொல்வாராயினர், எவ்வாறெனின்.

(வி - ரை.) பணியாச்சொல் - அஹங்கார வார்த்தை. கரதலம்-இருபெயரொட்டு. கண்ணுதல் - நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான். திரம் - ஸ்திரமென்னும் வடசொற்றிரிபு. கரதலத்தாங் கண்ணுத லென்றதனால் இஷ்டலிங்கமூர்த்தியென்று பொருட்படுகின்றது. (எ)

என்னையொன்று கேட்குமன்ப ரில்லாம லென்னுடல
நன்னயம்போ யிளைத்ததென நம்பர்மே லொருவசனஞ்
சொன்னயத்தால் வசவேசர் சொலக்கற்றோர் மாச்சையர்
முன்னயந்து பாடுதலு முனிந்துகையாற் செவிமூடி.

(ப - ரை.) என்னை - அடியேனை, ஒன்று - ஒரு பொருளையும், கேட்கும் - இரந்து கேட்கின்ற, அன்பர் - பக்தர்கள், இல்லாமல்-கிடையாமற் போனமையால், என் - அடியேனுடைய, உடலம்-உடம்பு, நல்-மிக்க, நயம்-மகிழ்ச்சி, போய்-குன்றி யதனால், இளைத்தது-மெலிந்துவிட்டது, என்ன - என்று, நம்பர் மேல்-இஷ்டலிங்கமூர்த்தியின் பேரில், ஒரு வசனம் - ஒரு திருப்பாசுரத்தை, சொல்நயத்தால்-சொற் சுவையமைவுடன், வசவேசர் - வசவண்ணர், சொல்ல - பாடி யருள, கற்றோர் - கற்றுக்கொண்ட சிவசரணர்கள், மாச்சையர்-மடிவாலமாச்சையர்க்கு, முன்-எதிரே, நயந்து-அன்புடன், பாடுதலும் - பாடுதலும், முனிந்து - கோவித்து, கையால் - கைகளால், செவிமூடி - காதுகளைப் பொத்திக்கொண்டு, எ-று.

(பொ - ரை.) அடியேனை ஒருபொருளையும் இரந்து கேட்கின்ற பக்தர்கள் கிடையாமற் போனமையால் அடியேனுடைய உடம்பு மிக்க மகிழ்ச்சி குன்றியதனால் மெலிந்து விட்டதென்று இஷ்டலிங்க மூர்த்தியின்பேரில் ஒரு திருப்பாசுரத்தைச் சொற் சுவையமைவுடன் வசவண்ணர் பாடியருளக் கற்றுக்கொண்ட சிவசரணர்கள் மடிவாலமாச்சையர்க்கு எதிரே அன்புடன் பாடுதலும், கோவித்துக் கைகளாற் காதுகளைப் பொத்திக்கொண்டு. (அ)

அரகரா விந்தவுரை யார்கேட்பார் வசவேச
ரிரவலர்கள் போற்றவரை யெண்ணினரே யிந்தமொழி
திரநலோர் வாக்கினுற் செப்புவதோ தினரோ
பரனையா தரிக்குமன்பர் பாவியே னெனப்பகர்வார்.

(ப-ரை.) அரகரா-ஹர! ஹரா! இந்த உரை-இந்த அஹங்கார வார்த்தைகளை, கேட்பார் - கேட்பவர்கள், ஆர் - யார், வசவேசர் - வசவண்ணர், தவரை - ஜங்கம மூர்த்திகளை, இரவலர்கள்போல் - யாசகர்களைப்போல், எண்ணினரே - நினைத்து விட்டாரே, இந்த மொழி - இந்த வார்த்தைகளை, திரம்-நிலைபெற்ற, நல்லோர்-ஜங்கம மூர்த்திகளுடைய, வாக்கினால் - வாயினாலும், செப்புவதோ - சொல்லுந்தரமோ, பரனை யாதரிக்கும் - சிவபெருமானை யன்பு செய்கின்ற, அன்பர்-ஜங்கமமூர்த்திகளும், தீனரோ - ஏழைகளோ, பாவி - பாபிஷ்டனே, என் - (இவ்வாறு சொல்வதற்குக் காரணம்) யாது, என்ன-என்று, பகர்வார்-சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ-று

(போ-ரை.) ஹா ஹா : இந்த அஹங்கார வார்த்தைகளைக் கேட்பவர்கள்யார்? வசவண்ணர் ஜங்கமமூர்த்திகளை யாசகர்களைப்போல் நினைத்துவிட்டாரே! இந்த வார்த்தைகளை நிலைபெற்ற ஜங்கமமூர்த்திகளுடைய வாயினாலும் சொல்லுந்தரமோ? சிவபெருமானை யன்புசெய்கின்ற ஜங்கமமூர்த்திகளும் ஏழைகளோ? பாபிஷ்டனே! இவ்வாறு சொல்வதற்குக் காரணம் யாது? என்று சொல்வாராயினர், எவ்வாறெனின்.

முத்திநெறி யுத்தியல்ல முதிர்ந்தபே ரறிவல்ல
பத்தியல்ல சிவனன்பர் படிக்குநல்ல துதியல்ல
புத்தியுள நந்திகட்கிப் புத்தியென்ன போநீரென்
றொத்திமொழிந் தரனன்ப ருடையொலிக்க வுவந்துசென்றார்.

(ப-ரை.) முத்திநெறி-(அந்த அஹங்கார வார்த்தைகளானது) மோக்ஷமார்க்கத்திற்கு, யுத்தியல்ல - உபாயமுமல்ல, முதிர்ந்த - பழுத்த, பேர் அறிவு அல்ல - மூதறிவுமல்ல, பத்தியல்ல - பக்தி மார்க்கமுமல்ல, சிவன்அன்பர் - சிவ சரணர்கள், படிக்கும் - சொல்லுதற்குரிய, நல்ல - சிறந்த, துதியல்ல - தோத்திரமுமல்ல, புத்திபுள்ள - விவேகத்தையுடைய, நந்திகட்கு - வசவண்ணர்க்கு, இப்புத்தி - இந்தத் துற்புத்தி யுண்டாதற்குக் காரணம், என்ன - யாது, நீர் - நீங்கள், ஒத்திப்போம் - (என்முன் நிற்காது) விலகிப்போய்விடுங்கள், என்று-என்று, மொழிந்து-சொல்லி, அரன்அன்பர்-சிவபக்தர்களுடைய, உடை-வஸ்த்ரங்களை, ஒலிக்க - வெளுக்கும்பொருட்டு, உவந்து-சந்தோஷத்துடன், சென்றார் - (குளத்திற்கு) செல்வாராயினர், எ - று.

(போ - ரை.) அந்த அஹங்கார வார்த்தைகளானது மோக்ஷ மார்க்கத்திற்கு உபாயமுமல்ல, பழுத்த மூதறிவுமல்ல, பக்திமார்க்கமுமல்ல, சிவசரணர்கள் சொல்லுதற்குரிய சிறந்த தோத்திரமுமல்ல, விவேகத்தையுடைய வசவண்ணர்க்கு இந்தத் துற்புத்தி யுண்டாதற்குக் காரணம் யாது? நீங்கள் என்முன் நிற்காது விலகிப் போய்விடுங்களென்று சொல்லிச் சிவபக்தர்களுடைய வஸ்த்ரங்களை வெளுக்கும் பொருட்டுச் சந்தோஷத்துடன் குளத்திற்குச் செல்வாராயினர். (௧௦)

அவ்வசன மாச்சையர்முன் னணைந்துரைத்தோ ரகன்றஞ்சிச்
செவ்வியராம் வசவேசர் திருமுன்பு செப்புதலு
மெவ்வமுறு மனத்தரா யாமறியா திசைத்தவிந்த
வெவ்வியம்பின் குற்றமெந்த விதத்தினால் விடுமென்றே.

(ப - ரை) மாச்சையர்முன் - மடிவாலமாச்சையர்க் கெதிரே, அணைந்து - சென்று, உரைத்தோர் - பாடின ஜங்கமமூர்த்திகள், அகன்று - போய், அஞ்சி - பயந்து, செவ்வியர் ஆம் - நடுநிலைமையுடைய, வசவேசர் - வசவண்ணரது, திருமுன்பு - சந்நிதியில், அவ்வசனம் - (நிகழ்ந்த) அந்த வார்த்தைகளை, செப்புதலும் - சொல்லுதலும், எவ்வம் உறும் - ஆராத்துயரமடைந்த, மனத்தராய் - நெஞ்சமுடையவராய், யாம் - நாம், அறியாது - தெரியாமல், இசைத்த - சொன்ன, இந்த - இந்த, வெம் - கொடிய, இயம்பின் - சொல்லினா லுண்டாகிய, குற்றம் - பாவம், எந்த விதத்தினால் - எப்படி, விடும் என்றே - விமோசனமாகுமென்று, எ - று

(போ-ரை.) மடிவாலமாச்சையர்க் கெதிரே சென்று பாடின ஜங்கமமூர்த்திகள் போய்ப் பயந்து, நடுநிலைமையுடைய வசவண்ணரது சந்நிதியில் நிகழ்ந்த அந்த வார்த்தைகளைச்சொல்லுதலும், ஆராத்துயரமடைந்த நெஞ்சமுடையவராய் நாம் தெரியாமற் சொன்ன இந்தக் கொடிய பாவம் எப்படி விமோசனமாகுமென்று. (௧௧)

மடிவால மாச்சையர் மலர்ப்பதத்தில் வந்திறைஞ்சி
யடியேனு னபராதி யபராதி யாண்டருள்வாய்
கடியேனுங் காரிநொய்யன் கடுங்கோபி யசடன்மெய்ந்நூல்
படியாத துராசாரி ப்ராந்தியனிற் பாக்கியத்தேன்.

(ப-ரை.) வந்து - எழுந்தருளி, மடிவாலமாச்சையர் - மடிவாலமாச்சையரது, மலர்ப்பதத்தில் - தாமரைமலர்போன்ற திருவடிகளில், இறைஞ்சி - ஸாஷ்டாங்கமாக வணங்கி, அடியேன் - சரணனுகிய, நான் - நான், அபராதியபராதி - குற்றவாளிக் குற்றவாளி, ஆண்டு-அடிமைகொண்டு, அருள்வாய்-அநுக்ரஹஞ்செய்வாய், கடியேன்-கொடியவனுகிய வடியேன், ஆங்காரி - கர்வி, நொய்யன் - அற்பன், கடுங்கோபி - மஹாகோபிஷ்டன், அசடன் - நீசன், மெய்நூல் - ஞானசாத்திரங்களை, படியாத - கற்றறியாத, துராசாரி-துர்மார்க்கன், ப்ராந்தியன்-உன்மத்தன், நிற்பாக்கியத்தேன் - கதியொன்று மில்லாதவன், எ-று.

(பொ-ரை.) எழுந்தருளி மடிவாலமச்சையரது தாமரைமலர்போன்ற திருவடிகளில் ஸாஷ்டாங்கமாக வணங்கி, சரணனுகிய நான் குற்றவாளி குற்றவாளி, அடிமைகொண்டு அநுக்ரஹஞ்செய்வாய், கொடியனுகிய அடியேன் கர்வி, அற்பன், மஹாகோபிஷ்டன், நீசன், ஞான சாத்திரங்களைக் கற்றறியாத துர்மார்க்கன், உன்மத்தன், கதி யொன்றுமில்லாதவன்.

(வி - ரை.) துராசாரி-அநாசாரமுள்ளவன். கோபி-கோவமுள்ளவன். ஆங்காரி-அஹங்காரமுள்ளவன். நொய்யன் - நொய்மை யென்னும் பண்படியாகப் பிறந்த பெயர். (௧௨)

அவகுணிய னறிவில்லே னுசைவலை யகத்துறுவேன்
சிவகுருவின் வழிநில்லேன் றிறல்விடயத் தொழுகுவேன்
பவமதியன் வெந்நீதர் பாற்பிரியேன் பகரறியேன்
கவலைநெறி யேயென்றன் கருத்தகந்தை யகற்றுவாய்.

(ப-ரை.) அவகுணியன்-துற்குணன், அறிவில்லேன்-மூடன், ஆசைவலையகத்து உறுவேன் - பற்றுள்ளவன், சிவகுருவின் வழிநில்லேன் - குருத்ரோஹி, திறல்விடயத்து ஒழுகுவேன்-விஷயலோலன், பவமதியன்-பவரோகி, வெம் நீதர்பால்பிரியேன்-துராசாரப் பிரியன், பகர் அறியேன் - பேசத்தெரியாதவன், கவலை நெறியேன் - விசாரமுள்ளவன், என் - அடியேனுடைய, கருத்து - மனத்திலுள்ள, அகந்தை - அஹங்காரத்தை, அகற்றுவாய் - ஒழித்து விடுவாய். எ-று.

(பொ-ரை.) துற்குணன், மூடன், பற்றுள்ளவன், குருத்ரோஹி, விஷயலோலன், பவரோகி, துராசாரப்பிரியன், பேசத் தெரியாதவன், விசாரமுள்ளவன், அடியேனுடைய அஹங்காரத்தை யொழித்து விடுவாய்.

(வி - ரை.) ஆசை - மாயாபாசத்தில். வலையகத்து உறுவேன் - அகப்பட்டவன். சிவகுருவின் - சிவாசார்யரின். வழி - உபதேசிக்கின்ற மார்க்கத்தில். நில்லேன் - நிற்காதவன். திறல் - வலிமையுடைய. விடயத்து - விஷய பஞ்சக மார்க்கத்தில் ஒழுகுவேன்-நடப்பவன். வெம் நீதர் பால் - துராசாரமுள்ளவர் களிடத்தினின்றும், பிரியேன் - நீங்காதவன். பவம் - பிறவிக்கேதுவாகிய மார்க்கத்தில் நடக்கின்ற. மதியன் - புத்தியுடையவன். சிவகுரு என்றது கூடலஸங்கமேசுவரரை. ஆசைவலை - ஆசையாகிய வலையெனினுமாம். விஷயபஞ்சகம்-ஐம்புலன். இதனைக் கண்டு கேட்டு யிர்த்துற்றறியு மைம்புலனென்றூர் பெரியோர். விஷயங்களை வெல்லுதலருமை தோன்ற திறல்விடயமென்றூர். (௧௩)

நாலிலக்கத் தெண்பதினு யிரம்வசன நவின்றதெல்லாந்
தாலமலை யினைச்சுணங்கன் சந்தித்துக்கு ரைத்துநின்றாற்
போலுமென தடிமைநெறிப் புன்மைநீ பொருட்கொள்ளாத்
காலமெலா மென்பத்தி கண்ணுதலோர்க் கிதமன்றே.

(ப - ரை.) நால் இலக்கத்து எண்பதினுயிரம்-நான்கி லக்ஷத்தெண் பதினுயிரம், வசனம்-பாசுரங்களை, நவின்றதெல்லாம் - பாடினது முழுதும், தாலம் - உலகத்தில்; சுணங்கன் - நாய், மலையினை - மலையை, சந்தித்து - பார்த்து, குரைத்து நின்றால் போலும் - குலைத்து நின்ற விதத்தை யொக்கும், எனது - அடியேனது, அடிமை நெறி - தாஸோஹ மார்க்கத்தின், புன்மை - இழிவினை, நீ - நீ, பொருட்கொள்ளா - அங்கீகரிக்காத, காலம் எல்லாம்-காலமுழுதும், என்-அடியேனுடைய, பக்தி-அன்பு, கண்ணுதலோர்க்கு - சிவபெருமானுக்கு, இதம் அன்று - விருப்ப மல்ல, எ-று.

(பொ-ரை.) நான்கி லக்ஷத்தெண் பதினுயிரம் பாசுரங்களைப் பாடினது முழுதும் உலகத்தில் நாய் மலையைப் பார்த்துக் குலைத்து நின்ற விதத்தை யொக்கும், அடியேனுடைய தாஸோஹ மார்க்கத்தின் இழிவினை நீ அங்கீகரிக்காத காலமுழுதும் அடியேனது அன்பு சிவபெருமானுக்கு விருப்பமல்ல.

(வி - ரை.) இதம் - ஹிதமென்னும் வடசொற்றிரிபு. கண்ணுதலோர் - நெற்றிக் கண்ணர். இலக்கம்-லக்ஷம் என்னும் வடசொற்றிரிபு. (௧௪)

அஞ்சலென வெனைத்தெருட்டி யரும்பத்தி காட்டாயேற்
றஞ்செனச்சொ லையதுய்ப சொற்குருவே நற்பொருளே
வஞ்சகனே னவகுணத்தை வாட்டுகென்னு மிரங்குரையாற்
றஞ்சமளி யெனநிற்பார் தம்மொழிகே ளாதவர்போல்.

(ப-ரை.) ஐய-ஐயனே, துய்ய-பரிசுத்தனே, சொற்குருவே-போதகாசார்யனே, நற்பொருளே - பரவஸ்துவே, எனை - அடியேனை, அஞ்சல் என்ன - பயப்படாதே யென்று, தெருட்டி - தேற்றி, அரு - மேன்மையாகிய, பத்தி - பக்திமார்க்கத்தை, காட்டாயேல் - காண்பிக்காமற் போவாயாயின், துஞ்சு என்ன - சாவென்று, சொல் - சொல்லக்கடவாய், வஞ்சகனேன் - கபடகுணமுள்ள அடியேனது, அவகுணத்தை - துர்க்குணத்தை, வாட்டுக - ஒழிக்கக்கடவாய், என்னும் - என்கின்ற, இரங்கு - அழுது சொல்லுகின்ற, உரையால் - சொற்களினால், தஞ்சம் - (உனக்கு) அடைக்கலம், அளி-அநுக்ரஹஞ்செய்வாய், என்ன-என்று, நிற்பார் - நிற்கின்ற வசவண்ணருடைய, மொழி - சொற்களை, கேளாதவர்போல் - கேளாதவரைப்போல், எ-று.

(பொ-ரை.) ஐயனே! பரிசுத்தனே! போதகாசார்யனே! பரவஸ்துவே! அடியேனைப் பயப்படாதே யென்று தேற்றி மேன்மையாகிய பக்திமார்க்கத்தைக் காண்பிக்காமற் போவாயாயின் சாவென்று சொல்லக்கடவாய், கபடகுணமுள்ள அடியேனது துர்க்குணத்தை யொழிக்கக்கடவாயென்கின்ற அழுதுசொல்லுகின்ற சொற்களினால் உனக்கு அடைக்கலம் அநுக்கிரஹஞ் செய்வாயென்று நிற்கின்ற வசவண்ணருடைய சொற்களைக் கேளாதவரைப்போல். (௧௫)

அறிவிலார் தம்மனம்போ லாவதேனென வரனன்பர்
வறியருநாஞ் செல்வருமோ வசனமறிந் துரையாதென்
னெறிதெளிவிப் பாரில்லா நீதியோ நன்றுநாஞ்
செறியுநல்ல விதரணரோ சிவனடியா ரிரவலரோ,

(ப - ரை.) அறிவுஇல்லார் - மூடர்களுடைய, மனம் போல் - மனத்தைப்போல், ஆவது - ஆன விதத்திற்குக் காரணம், என்ன - யாது, அரன் அன்பர் - சிவபக்தர்கள், வறியரும் - தரித்திரர்களும், நாம் - நாங்கள், செல்வருமோ - சீமான்களோ, அறிந்து - சகலமுந்தெரிந்துகொண்டு, வசனம் - பாசுரங்களை, உரையாது - இயற்றாததற்குக் காரணம், என் - யாது, நெறி தெளிவிப்பார் இல்லா நீதியோ - ஸத்குருவில்லையோ, நன்று - நல்லது, நாம் - நாம், செறியும் - கூடிச் சிநேகஞ்செய்தற்குரிய, நல்ல - நல்ல, விதரணரோ - விவேகசாலியோ, சிவன் அடியார் - சிவபக்தர்கள், இரவலரோ - யாசகர்களோ, எ - று.

(பொ - ரை.) மூடர்களுடைய மனத்தைப்போல் ஆனவிதத்திற்குக் காரணம் யாது? சிவபக்தர்கள் தரித்திரர்களும் நாங்கள் சீமான்களோ? சகலமுந்தெரிந்துகொண்டு பாசுரங்களை யியற்றாததற்குக் காரணம் யாது? ஸத்குருவில்லையோ? நல்லது, நாம் கூடிச் சிநேகஞ்செய்தற்குரிய விவேகசாலியோ? சிவபக்தர்கள் யாசகர்களோ?

(வி - ரை.) நெறி - சன்மார்க்கம், தெளிவிப்பார் - அறிவிப்பார். நீதி - தர்மம். வறியர் - வறுமை யென்னும் பண்படியாகப்பிறந்த பெயர். ஓகாரங்கள் எதிர்மறைப் பொருளில் வந்தன. (௧௬)

வாங்கறிஞர்க் களிப்பவர்த மனத்தகந்தை யென்னுரைப்போ
நாங்கொடுக்கு மிபங்குதிரை நல்லாடை நாரியர்பொன்
றாங்கரும்பே ராசாரத் தவத்தோர்க்குச் சரக்கலவென்
றோங்கியதங் கரத்தாடை யுதகந்தோய்த் துதறினார்.

(ப - ரை.) வாக்கு - பிச்சையேற்றற்குரிய, அறிஞர்க்கு - ஜங்கமமூர்த்திகளுக்கு, அளிப்பவர் - கொடுப்பவர்களுடைய, மனத்து - மனத்திலுண்டாகின்ற, அகந்தை - அஹங்காரத்தை, என் உரைப்போம் - என்னவென்று சொல்லுவோம், நாம் - நாங்கள், கொடுக்கும் - பிச்சைகொடுக்கின்ற, இபம் - யானைகளும், குதிரை - குதிரைகளும், நல் - சிறந்த, ஆடை - வஸ்த்ரங்களும், நாரியர் - பெண்களும், பொன் - திரவியங்களும், தாங்கு அரு - பூண்டொழுகுதற்கரிதாகிய, பேர் - பெரிய, ஆசாரம் - சீலத்தையுடைய, தவத்தோர்க்கு - ஜங்கமமூர்த்திகளுக்கு, சரக்கு - (மதிக்கப்பட்ட) பொருள்கள், அல்ல - அல்ல, என்று - என்று, ஓங்கிய - (வெளுக்குப்பொருட்டு) உயரவெடுத்த, தம் - தம்முடைய, கரத்து - கரத்திலிருக்கின்ற, ஆடை - வஸ்த்ரத்தை, உதகம் - (பாதம் படிந்திருக்கின்ற) ஜலத்தில், தோய்த்து - நனைத்து, உதறினார் - விதிர்த்தினார், எ - று.

(பொ - ரை.) பிச்சையேற்றற்குரிய ஜங்கமமூர்த்திகளுக்குக் கொடுப்பவர்களுடைய மனத்திலுண்டாகின்ற அஹங்காரத்தை யென்னவென்று சொல்லுவோம்? நாங்கள் பிச்சை கொடுக்கின்ற யானைகளும் குதிரைகளும் சிறந்த வஸ்த்ரங்களும் பெண்களும் திரவியங்களும் பூண்டொழுகுதற்கரிதாகிய பெரிய சீலத்தையுடைய ஜங்கமமூர்த்திகளுக்கு மதிக்கப்பட்ட பொருள்களல்லவென்று, வெளுக்குப்பொருட்டு உயரவெடுத்த தம்முடைய கரத்திலிருக்கின்ற வஸ்த்ரத்தைப் பாதம் படிந்திருக்கின்ற ஜலத்தில் நனைத்து விதிர்த்தினார். (௧௭)

உதறியவத் திசைதோறு மொளிருநவ மணியினங்கள்
சிதறியெங்கும் பரந்தகுழுத் திரடிரட்டி யெடுக்கலாய்ப்
பதறியமின் னிறம்போலப் பல்கதிராய் விளங்குதலாற்
கதறியகன் றீணபசுப்போல் வசவேசர் கருத்தழிந்தார்.

(ப - ரை.) உதறிய-(வஸ்த்ரத்தை) விதிர்த்த; அத்திசைதோறும்-அந்தத் திக்குகளிலெல்லாம் (சிதறிய நீர்த்துளிகள்), ஒளிரும்-பிரகாசிக்கின்ற, நவமணியினங்கள்-நவரத்நராசிகளாகி, சிதறி - தெறித்து; எங்கும் - எவ்விடத்திலும், பரந்த-பெருகின, குழுத்திரள்-குவியில் குவியல்களாக, திரட்டி - சேர்த்து; எடுக்கலாய்-எடுக்கக்கூடியதாகவும், பதறிய-வேகத்தோடு செல்கின்ற, மின்னிறம்போல - மின்னற்கொடிகளைப் போலவும்,பல்-அநேக, கதிராய் - சூரியர்களைப் போலவும், விளங்குதலால்-பிரகாசிக்கின்ற காரணத்தினால், கதறிய-கூவின, கன்று - கன்றினை, அணை-(மனங்குழைந்து) சேர்கின்ற, பசுப்போல - தாய்ப்பசுவைப்போல, வசவேசர் - வசவண்ணர், கருத்து அழிந்தார் - மனங் குழைவாராஞர், எ-று.

(பொ-ரை.) வஸ்த்ரத்தை விதிர்த்த அத்திக்குகளிலெல்லாம் சிதறிய நீர்த்துளிகள் பிரகாசிக்கின்ற நவரத்நராசிகளாகித் தெறித்து எவ்விடத்திலும் பெருகின, குவியல் குவியல்களாக எடுக்கக்கூடியதாகவும் வேகத்தோடு செல்கின்ற மின்னற்கொடிகளைப் போலவும் அநேகச் சூரியர்களைப் போலவும் பிரகாசிக்கின்ற காரணத்தினால் கூவின கன்றினை மனங்குழைந்து சேர்கின்ற தாய்ப் பசுவைப் போல வசவண்ணர் மனங் குழைவாராஞர்.

(வி-ரை.) மனம்அழிதல்-மனமுருகுதல். கதிர்-ஆகுபெயர் சூரியனை யுணர்த்தலால். நவமணி - முத்து, பவளம், புஷ்பராகம், வயிரம், வைடூர்யம், மாணிக்கம், மரகதம் நீலம், கோமேதகம் என்பன. (கஅ)

பொங்கியவங் கலியாண புரத்தருடன் விச்சலன்வந்
தங்கியலு மணிக்குவைகண் டதிசயமுற் றஞ்சிநின்றே
தங்கியசீர்ச் சிவகணத்தோர் தங்கருணை மாச்சையர்போ
லிங்கிலைபெற் றவரென்ன வேத்திமகிழ்ந் தேகினான்.

(ப - ரை.) பொங்கிய - தெய்விக ஸம்பத்தால் மிகுந்திருக்கின்ற, அம் - அழகிய, கலியாணபுரத்தருடன் - கல்யாண பட்டினத்திலுள்ள ஜனங்களுடன், விச்சலன் - விஜ்ஜலராஜன், வந்து-சென்று, அங்கு-அவ்விடத்தில், இயலும்-நிறைந்திருக்கின்ற, மணிக்குவை-நவரத்நராசிகளை, கண்டு - பார்த்து, அதிசயமுற்று-ஆச்சரியமடைந்து, அஞ்சி - பயந்து, நின்று - (தூரத்தில்) நின்று, சீர்தங்கிய - சிறப்புப்பொருந்திய, சிவகணத்தோர் - சிவகணங்களில், கருணை - க்ருபாகடாக்ஷமுள்ள, மாச்சையர்போல் - மடிவாலமாச்சையரைப்போல், இங்கு - இவ்வுலகத்தில், பெற்றவர் - சிவாநுக்ரஹத்தை யடைந்தவர், இல்லை—என்ன-என்று, எத்தி-துதித்து, மகிழ்ந்து-சந்தோஷத்துடன், ஏகினான் - சென்றான், எ-று.

(பொ - ரை.) தெய்விக ஸம்பத்தால் மிகுந்திருக்கின்ற அழகிய கல்யாண பட்டினத்திலுள்ள ஜனங்களுடன் விஜ்ஜலராஜன் சென்று அவ்விடத்தில் நிறைந்திருக்கின்ற நவரத்நராசிகளைப் பார்த்து, ஆச்சரியமடைந்துப் பயந்து, தூரத்தில் நின்று, சிறப்புப்பொருந்திய சிவகணங்களில் க்ருபாகடாக்ஷமுள்ள மடிவாலமாச்சையரைப் போல் இவ்வுலகத்தில் சிவாநுக்ரஹத்தை யடைந்தவரில்லையென்று சந்தோஷத்துடன் சென்றான். (க௯)

வளர்பெருமை மடிவால மாச்சையர் வண்பதமேற்
கிளர்பயத்தாற் பணிந்துவச வேசரர்தாங் கிர்த்திப்பா
ரளவிலாப ராதியா யறிவிலியா யாக்கத்தாற்
றளர்வுறுவே னின்மேன்மை தனைப்பார்க்கத் தக்கவனோ.

(ப-ரை.) வளர் - விருத்தியடைகின்ற, பெருமை - மேன்மையுடைய, மடிவால மாச்சையர் - மடிவாலமாச்சையரது, வள் - அழகிய, பதம் மேல்-திருவடிகளின்மீது, கிளர் - மிகுந்த, பயத்தால் - அச்சத்தோடு, பணிந்து - ஸாஷ்டாங்கமாக வணங்கி, வச வேசுரர்-வசவண்ணர், கீர்த்திப்பார்-புகழ்ந்து, அளவுஇல்-மட்டில்லாத, அபராதியாய் - குற்றவாளியாயும், அறிவிலியாய்-மூடனாயும், ஆக்கத்தால்-செல்வப்பெருக்கத்தினால், தளர்வு உறுவேன் - மெலிவடைகின்றவனாகிய அடியேன், நின் - உனது, மேன்மை தன்னை - பெருமையை, பார்க்க - அறிதற்குரிய, தக்கவனோ - யோக்கியதையுடைய வனோ, எ-று.

(பொ - ரை.) விருத்தியடைகின்ற மேன்மையுடைய மடிவால மாச்சையரது அழகிய திருவடிகளின்மீது மிகுந்த அச்சத்தோடு ஸாஷ்டாங்கமாக வணங்கி வசவண்ணர் புகழ்ந்து மட்டில்லாத குற்றவாளியாயும் மூடனாயும் செல்வப்பெருக் கத்தினால் மெலிவடைகின்றவனாகிய அடியேன் உனது பெருமையை அறிதற்குரிய யோக்கியதையுடையவனோ? (௨0)

நின்மலனீ துன்மலனா னீதன்மி யானதமன்
கன்மமிலி நீவெய்ய கன்மியான் கடுப்பாசப்
புன்மையிலா னீபாசப் போதனான் பொறைஞானத்
தன்மையனீ யஃதில்லாச் சடநீதிச் சழக்கனான்.

(ப-ரை.) நீ-நீ, நின்மலன் - மலமில்லாதவன், நான்-நான், துன்மலன் - கெட்ட மலமுள்ளவன், நீ - நீ, தன்மி - தர்மகுணமுள்ளவன், யான் - நான், அதமன் - தர்ம குணமில்லாதவன், நீ-நீ, கன்மமிலி-கர்மமில்லாதவன், யான்-நான், வெய்ய-கொடிய, கன்மி-கர்மமுள்ளவன், நீ-நீ, கடு-மிகுந்த, பாசப் புன்மையிலான்-பாசபந்தமில்லாதவன், நான்-நான், பாசப்போதன்-பாசபந்தமுள்ளவன், நீ-நீ, பொறை ஞானத்தன்மையன் - பொறுமையுள்ளவன், நான் - நான், அஃது இல்லாச் சடம் நீதிச் சழக்கன் - அந்தப் பொறுமை யில்லாதவன், எ-று.

(பொ-ரை.) நீ மலமில்லாதவன், நான் கெட்ட மலமுள்ளவன், நீ தர்மகுண முள்ளவன், நான் தர்மகுணமில்லாதவன், நீ கர்மமில்லாதவன் நான் கொடிய கர்ம முள்ளவன், நீ மிகுந்த பாசபந்தமில்லாதவன், நான் பாசபந்தமுள்ளவன், நீ பொறுமையுள்ளவன், நான் அந்தப் பொறுமையில்லாதவன்.

(வி-ரை.) பாசம்-பாசபந்தத்தின். புன்மையிலான்-இழிவில்லாதவன். போதன் - ஞானமுள்ளவன். ஞானத்தன்மையன் - அறிவுள்ளவன். சடம் நீதி - மூடகுணமுள்ள. சழக்கன் - அறிவில்லாதவன். அதமன் என்பது அதன்மன் என்பதின் விகாரம். (௨௧)

சுத்தனீ யசுத்தனான் சொற்குருநீ சீடனா
னுத்தமனீ யதமனா னுதாரனீ யேற்போனான்
பத்தியுயிர் நீபத்திக் கீனனான் பற்றார்பாற்
பெத்தகுண முற்றக்காற் பெரியோர்கள் பார்ப்பரோ.

(ப - ரை.) நீ - நீ, சுத்தன் - பரிசுத்தமுள்ளவன், நான் - நான், அசுத்தன் - பரிசுத்தமில்லாதவன், நீ - நீ, சொற்குரு - போதகாசார்யன், நான் - நான், சீடன் - மாணாக்கன், நீ - நீ, உத்தமன் - மேம்பட்டவன், நான்-நான், அதமன்-கீழ்ப்பட்டவன், நீ - நீ, உதாரன் - கொடையாளன், நான் - நான், ஏற்போன் - யாசிப்பவன், நீ - நீ, பத்தியுயிர்-பக்திக்குப் பிராணன் போன்றவன், நான் - நான், பத்திக்கீனன்-பத்திக்கு

யமன் போன்றவன், பற்றார்பால்-அற்பர்களிடத்தில், பெத்த குணம் - பாசபந்தத்திற்குரிய துற்குணம், உற்றக்கால் - உண்டாயின், பெரியோர்கள் - ஜங்கமமூர்த்திகள், பார்ப்பரோ - கவனிப்பார்களோ, எ - று.

(போ - ரை.) நீ பரிசுத்தமானவன், நான் - பரிசுத்தமில்லாதவன், நீ போதகாசாரியன், நான் மாணாக்கன், நீமேம்பட்டவன், நான்கீழ்ப்பட்டவன், நீ கொடையாளன், நான் யாசிப்பவன், நீ பக்திக்குப் பிராணன் போன்றவன், நான் பக்திக்கு யமன் போன்றவன்,அற்பர்களிடத்தில் பாசபந்தத்திற்குரிய துற்குணம்உண்டாயின் ஜங்கமமூர்த்திகள் கவனிப்பார்களோ?

(வி - ரை.) ஈனன் - அழிக்கப்பட்டவன். (உஉ)

பணிமொழியும் பத்தியுமென் பாற்பார்க்கிற் சிறிதுமிலை
நுணியநெறி யெனகந்தை நூறியருள் வாழ்வளிப்பாய்
துணியுநல சன்மார்க்கத் தூநெறிதந் தெனையாள்வாய்
தணிபுநிறை யறிவிதெனத் தரும்பத்திப் பெருந்தருவே.

(ப - ரை.) பார்க்கில் - நோக்குமிடத்து, என்பால் - அடியேனிடத்தில், பணி - வணக்கமுள்ள, மொழியும் - சொல்லும், பத்தியும் - பக்தியும், சிறிதும் இல்லை - கொஞ்சமேனுமில்லை, நுண்ணிய நெறியேன் - துர்மார்க்கனாகிய அடியேனுடைய, அகந்தை - அஹங்காரத்தை, நூறி-ஒழித்து, அருள் - அநுக்ரஹஞ்செய்வாய், வாழ்வு அளிப்பாய் - மோக்ஷபாக்யத்தையும், அளிப்பாய் - அநுக்ரஹஞ்செய்வாய், துணியும் - தெளிதற்குரிய, நல - நல்ல, சன்மார்க்கம் - சன்மார்க்கமாகிய, தூ - பரிசுத்தமான, நெறி - ஒழுக்கத்தை, தந்து-அநுக்ரஹஞ்செய்து, என்னை - அடியேனை, ஆள்வாய் - அடிமைகொண்டருள்வாய், தணியும்-உபசாந்த நிலையை யடைதற்குரிய, நிறையறிவு-பூர்ண ஜ்ஞானம், இதுஎன்ன - இத்தன்மைத்தென்று, தரும்-அநுக்ரஹஞ் செய்கின்ற, பெரு - மேன்மையுடைய, பத்தித்தருவே - பக்தியாகிய கல்பக வ்ருக்ஷமே, எ - று.

(போ - ரை.) நோக்குமிடத்து அடியேனிடத்தில் வணக்கமுள்ள சொல்லும் பக்தியும் கொஞ்சமேனுமில்லை, துர்மார்க்கனாகிய அடியேனுடைய அஹங்காரத்தை யொழித்து அநுக்ரஹஞ் செய்வாய், மோக்ஷபாக்யத்தையும் அநுக்ரஹஞ் செய்வாய், தெளிதற்குரிய நல்ல சன்மார்க்கமாகிய பரிசுத்தமான ஒழுக்கத்தை யநுக்ரஹஞ் செய்து அடியேனை யடிமைகொண்டருள்வாய், உபசாந்தநிலையை யடைதற்குரிய பூர்ண ஜ்ஞானம் இத்தன்மைத்தென்று அநுக்ரஹஞ்செய்கின்ற மேன்மையுடைய பக்தியாகிய கல்பகவ்ருக்ஷமே! (உந)

நூறுயி ரங்குற்ற நோக்கிலென்பா லுண்டவற்றை
நீறுக்கி யாளென்று நின்றவச வேசுரரை
யூறுத புன்முறுவ லாலணைத்து மாச்சையர்
வேறுகா துகந்திடலும் விரும்பியருந் தவரெல்லாம்.

(ப - ரை.) நோக்கில்-பார்க்குமிடத்து, என்பால்-அடியேனிடத்தில், நூறுயிரம்-அநேகமாகிய, குற்றம்-பிழைகள், உண்டு-இருக்கின்றன, அவற்றை-அவைகளையெல்லாம், நீறு ஆக்கி - பொடிபடுத்தி, ஆள் - ஆட்கொள்வாய், என்று - என்று (இரங்கிக் கேட்டு), நின்ற - (எதிரே) நிற்கின்ற, வசவேசுரரை - வசவண்ணரை, மாச்சையர் - மடிவால மாச்சையர், ஆறுத - தணியாத, புன்முறுவலால் - புன்னகை யுடன், அணைத்து - தழுவிக்கொண்டு, வேறு ஆகாது - பேதம் பாராட்டாமல், உகந்திடலும் - சந்தோஷமடைதலும், அரு - மேன்மைபொருந்திய, தவர் எல்லாம் - ஜங்கமூர்த்திகளனைவரும், விரும்பி - சந்தோஷமடைந்து, எ-று.

(பொ-ரை.) பார்க்குமிடத்து அடியேனிடத்தில் அநேகமாகிய பிழைகள் இருக்கின்றன, அவைகளையெல்லாம் பொறுத்து யாட்கொள்வாயென்று இரங்கிக்கேட்டு நிற்கின்ற வசவண்ணரை மடிவாலமாச்சையர் தணியாத புன்னகைகொண்டு அணைத்துக்கொண்டு பேதம் பாராட்டாமல் சந்தோஷ மடைதலும், மேன்மை பொருந்திய ஜங்கமமூர்த்திகளனைவரும் சந்தோஷமடைந்து.

(வி - ரை.) நூறாயிரம் - லக்ஷமென்னு மெண்ணுப் பொருட்படாது அநேகமெனப்பொருட் கொள்ளப்பட்டது. (௯௪)

ஆராயி னரனிடத்து மருங்கோப மனுக்கிரகம்
பேராம லுண்டுலகர் பேணுநற்றா னியக்குற்றஞ்
சாராம னீக்கியுண்பார் தம்மடியார் களங்கத்திற்
சேராமற் கழறியன்றோ தெளிந்தநல்லோ ராட்கொள்வார்.

(ப - ரை) ஆராயின் - யோசிக்குமிடத்து, அரனிடத்தும் - சிவபெருமானிடத்திலும், அரு - போற்றுதற்கரிய, கோபம் - கோபமும், அனுக்கிரகம்-அநுக்ரஹமும், பேராமல் - எபேடாமல், உண்டு - இருக்கின்றன, உலகர் - உலகத்தார், பேணும் - விரும்புதற்குரிய, நல் - நல்ல, தானியம் - தானியங்களை, குற்றம் - உமி, சாராமல் - சேராமல், நீக்கி - போக்கி, உண்பார் - உண்ணுவார்கள், தெளிந்த - ஞானசாத்திரங்களைக் கற்றுணர்ந்த, நல்லோர் - ஜங்கமமூர்த்திகளும், தம் - தங்களுடைய, அடியார் - சரணர்கள், களங்கத்தில் - தப்புவழியில், சேராமல் - செல்லவிடாமல், கழறியன்றோ - உபதேசஞ்செய்தல்லவோ, ஆட்கொள்வார் - அடிமைகொண்டருள் செய்வார்கள், எ - று.

(பொ - ரை.) யோசிக்குமிடத்துச் சிவபெருமானிடத்திலும் போற்றுதற்கரிய கோபமும் அநுக்ரஹமும் எபேடாமல் இருக்கின்றன, உலகத்தார் விரும்புதற்குரிய நல்ல தானியங்களை உமி சேராமற் போக்கி யுண்ணுவார்கள், ஞானசாத்திரங்களைக் கற்றுணர்ந்த ஜங்கமமூர்த்திகளும் தங்களுடைய சரணர்கள் தப்புவழியிற் செல்லவிடாமல் உபதேசஞ்செய்தல்லவோ அடிமைகொண்டருள் செய்வார்கள்?

(வி - ரை.) கழறல் - சொல்லல். அடியார்களை ரக்ஷித் தற்பொருட்டெழுகின்ற கோபமாதலின் அருங்கோபமென்றார். (௯௫)

உடையதன்மேற் கோபமன்றே வொலித்தலழுக் கோடவன்றோ
வடைகளங்க மறவன்றோ வருநிதியைச் சுடுகின்றார்
விடையுடையார்க் கினியவச வேசுரர்தாம் விரும்பபத்தி
கடைசெலவே மாச்சையர் கழறுதலுங் கணக்கென்றார்.

(ப-ரை.) ஒலித்தல் - வெளுத்தலானது, உடையதன் மேல் - வஸ்திரத்தின் மீதெழுந்த, கோபம் அன்றே - கோபமல்லவே, அழுக்கு - (அவற்றின்மீது படிந்திருந்த) மாசு, ஓட - போகும்பொருட்டு, அன்றோ-அல்லவோ, அடை - சேர்ந்திருக்கின்ற, களங்கம் - அழுக்கு, அற - ஒழியும்பொருட்டு, அன்றோ - அல்லவோ, அரு-கிடைத்தற்கரிய, நிதியை - பொன்னை, சுடுகின்றார் - புடமிடுகின்றார்கள், விடையுடையார்க்கு - விருஷபவாஹநாரூடராகிய சிவபெருமானுக்கு, இனிய - அன்புள்ள, வசவேசுரர்-வசவண்ணர், தாம்விரும்பும்-தாம்விரும்பிச்செய்கின்ற, பக்தி-பக்தியானது, கடைசெல்லவே-நிறைவேறும் பொருட்டே, மாச்சையர் - மடிவாலமாச்சையர், கழறுதலும் - வற்புறுத்திச் சொல்லுதலும், கணக்கு என்றார் - சரியான கணக்குத்தான் என்று சொன்னார்கள், எ-று.

(பொ-ரை.) வெளுத்தலானது வஸ்திரங்களின் மீதெழுந்த கோவமல்லவே, அவற்றின்மீது படிந்திருந்த மாசு போகும் பொருட்டல்லவோ? சேர்ந்திருக்கின்ற அழுக்கு ஒழியும் பொருட்டல்லவோ கிடைத்தற்கரிய பொன்னைப் புடமிடுகின்றார்கள்? விருஷபவாகனாரூடராகிய சிவபெருமானுக்கு அன்புள்ள வசவண்ணர் விரும்பிச் செய்கின்ற பத்தியானது நிறைவேறும்பொருட்டே மடிவாலமாச்சையர் கற்புறுத்திச் சொல்லுதலும் சரியான கணக்குத்தானென்று சொன்னார்கள். (௨௧)

இந்நிலையங் கிருந்தவரும் பத்தர்களு மேத்திநிற்கு
மந்நிலையே தொழுங்கரத்த ரானவசவேசுரரை
நன்னிலைமா மாச்சையர் நாடிமனத் தகங்கரித்தாற்
புன்னிலையாம் பத்தியெனப் புகன்றுமுன்னோர் செயலுரைப்பார்.

(ப-ரை.) இந்நிலை-இவ்விதமாக, அங்கு-அவ்விடத்தில், இரு-மேன்மையாகிய, தவரும் ஜங்கமமூர்த்திகளும், பத்தர்களும்-சிவசரணர்களும், ஏத்தி நிற்கும்-துதித்து நிற்கின்ற, அந்நிலையே-அவ்விதமாகவே, தொழும்-வணங்குகின்ற, கரத்தரான-திருக்கரங்களையுடையவராகிய, வசவேசுரரை-வசவண்ணரை, நன்னிலையாம்-நல்ல நிலைமையிலுள்ள, மாச்சையர்-மடிவாலமாச்சையர், நாடி-பார்த்து, மனத்தில்-உள்ளத்தில், அகங்கரித்தால்-கர்வங்கொள்வார்களாயின், பத்தி-பக்தியானது, புல்நிலையாம்-அற்பமேயாகும், என-என்று, புகன்று-சொல்லியருளி, முன்னோர்-முற்காலத்திலிருந்த சிவசரணர்களுடைய, செயல்-சரித்திரங்களை, உரைப்பார்-சொல்லத்தொடங்கினார் (எவ்வாறெனின்), எ-று.

(பொ-ரை.) இவ்விதமாக அவ்விடத்தில் மேன்மையாகிய ஜங்கமமூர்த்திகளும் சிவசரணர்களும் துதித்து நிற்கின்ற அவ்விதமாகவே வணங்குகின்ற திருக்கரங்களையுடையவராகிய வசவண்ணரை நல்ல நிலைமையிலுள்ள மடிவாலமாச்சையர் பார்த்து உள்ளத்தில் கர்வங்கொள்வார்களாயின் பக்தியானது அற்பமேயாகுமென்று சொல்லியருளி, முற்காலத்திலிருந்த சிவசரணர்களுடைய சரித்திரங்களைச் சொல்லத் தொடங்கினார், எவ்வாறெனின்.

(வி-ரை.) தொழுதலானது கைகூப்புதலுக்காயிற்று. பக்தியின் குறிகளாவன - விநயம், சாந்தி, இந்திரியநிக்கிரகம், வஞ்சனையின்மை, ஸத்யம், ஸ்திரபுத்தி, நிரஹங்காரம், நிஷ்கர்த்வம், அச்சம், அநுசரணை என்பன. இச்செய்யுளால் அஹங்காரமொன்றே பக்திக்கழிவென்றுபெறப்பட்டது. இருந்தவரும்-கூடியிருந்தஜனங்களும்எனினுமாம்.

மடிவாலமாச்சையர் புராணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௮௧௫.

சிவமயம்.

# சங்கரதாசையர் புராணம்.

---

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திரைநரைமூப் பிடர்மரணஞ் சேராத் தீரர்
சேயிழையா ரிடையின்பஞ் சிந்தி யாதார்
தரையிலெதிர் பரவாதர் தர்க்கம் போதச்
சங்கரித்த தன்மையர்சங் கரதா சையர்
பரநெறிநித் தானந்தர் கால கன்மப்
பற்றிலார் பவித்திரத்தார் பரதெய் வங்கள்
வெருவவரு பராக்கிரமர் வீரே சன்றன்
வீரமன்ன வுக்கிரத்தார் விசயத் தோளார்.

(ப - ரை.) திரை - தோல் சுருங்குதலும், நரை - மயிர் வெளுத்தலும், மூப்பு - வயது முதிர்தலும், இடர் - துன்பங்களும், மரணம் - சாக்காடும், சேரா-வந்தடையாமைக்கேதுவாகிய, தீரர் - தைரியமுள்ளவர், சேய் இழையாரிடை யின்பம் - பெண் போகத்தை, சிந்தியாதார் - விரும்பாதவர், தரையில்-உலகத்தில், எதிர்-எதிர்க்கின்ற, பரவாதர் - பரசமயவாதிகளுடைய, தர்க்கம்-தர்க்கங்களை, போத-மிகவும், சங்கரித்த தன்மையர் - கண்டிக்கின்றவர், சங்கரதாசையர் - சங்கரதாசையரென்பவர், பர நெறி-மேலான மார்க்கமாகிய, நித்தானந்தர் - மோக்ஷாநந்தமுள்ளவர், கால கன்மம்-கால கர்மங்களின், பற்று இல்லார் - தொடர்பில்லாதவர், பவித்திரத்தார் - பரிசுத்தமானவர், பரதெய்வங்கள் - அந்ய தெய்வங்கள், வெருவ - அஞ்சும்படி, வரும் - அவதரித்த, பராக்கிரமர் - வீரமுள்ளவர், வீரசேனன் - வீரபத்திரக்கடவுளுடைய, வீரம் - பராக்கிரமத்தை, அன்ன - போன்ற, உக்கிரத்தார் - பராக்கிரமமுள்ளவர், விசயத்தோளர் - புஜபல பராக்கிரமமுள்ளவர், எ - று.

(போ - ரை.) தோல் சுருங்குதலும், மயிர் வெளுத்தலும், வயது முதிர்தலும், துன்பங்களும், சாக்காடும் வந்தடையாமைக்கேதுவாகிய தையர்முள்ளவர், பெண் போகத்தை விரும்பாதவர், உலகத்தில் எதிர்க்கின்ற பரசமயவாதிகளுடைய தர்க்கங்களை மிகவும் கண்டிக்கின்றவர், சங்கரதாசையரென்பவர், மேலான மார்க்கமாகிய மோக்ஷாநந்தமுள்ளவர், கால கர்மங்களின் தொடர்பில்லாதவர், பரிசுத்தமானவர், அந்ய தெய்வங்கள் அஞ்சும்படி யவதரித்த வீரமுள்ளவர், வீரபத்திரக்கடவுளுடைய பராக்கிரமத்தைப்போன்ற பராக்கிரமமுள்ளவர், புஜபல பராக்கிரமமுள்ளவர்.

(வி - ரை.) சேயிழையார் - அன்மொழித்தொகைக் காரணப்பெயர். ஆர் விகுதி பெற்று நின்றது. இடை - ஏழனுருபு. துன்பங்கள் - ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதெய்விகமாகிய இவற்றாலுண்டாகின்ற துக்கங்கள். மாதர்சுகம் - சிற்றின்பமெனினுமாம். இது ஒருகாலத் தொருபொருளால் ஐம்புலன்களும் அநுபவித்தற்குச் சிறப்புடையதாயுள்ள மாதரது புணர்ச்சியால் உண்டாகின்ற காமசுகம். அந்ய

தெய்வங்கள்-ப்ரஹ்மதேவன், விஷ்ணுமூர்த்தி, இந்திரன் முதலியவர்கள். நித்தானந்தர்-நித்யாநந்தரென்னும் வடசொற்றிரிபு. பராக்கிரமம் - பராக்ரமமென்னும் வடசொற்றிரிபு, விசயம் - விஜயமென்னும் வடசொற்றிரிபு. சங்காரம் - ஸம்ஹாரமென்னும் வடசொற்றிரிபு. சேயிழையாரிடை - மாதரிடத்தில். விசயம் - வெற்றியினையுடைய. தோளார் - தோளையுடையவர். (க)

சங்கமா புரியென்னுந் தலத்து வாழ்வார்
தாவாத பிறவிமரந் தனைத்த றித்தா
ரங்கவர்தந் தொழிறவத்தோர் கந்தை தைப்பா
ரஃதாதின மைஞ்ஞாழி நெற்கொ டுப்ப
மங்கையொரு பாகனன்பர் வந்தோர்க் கெல்லா
மாறாம லமுதளிக்கும் வரம்பெற் றுள்ளார்
பொங்குலகோ ரிவர்செயற்கை புதுமையென்று
போற்றிமகிழ்ந் திறைஞ்சவே பொருந்து நாளில்.

(ப - ரை.) சங்கமாபுரியென்னும் - ஜங்கமபுரமென்கின்ற, தலத்து-ஸ்தலத்தில், வாழ்வார் - வசிப்பவர், தாவாத - எட்டிப்பிடிப்பதற்குமுடியாத, பிறவி-பிறப்பாகிய, மரம் தன்னை - மரத்தை, தறித்தார் - வெட்டினவர், அங்கு - அவ்விடத்தில், அவர்-அவருடைய, தொழில்-வேலையானது, தவத்தோர்-ஜங்கமமூர்த்திகளுடைய, கந்தை-கந்தைத்துணிகளை, தைப்பார்-தைத்துக்கொடுத்து, அஃது-அந்தத் தையற்றொழில், தினம் - நாடோறும், ஐஞ்ஞாழி-ஐந்துபடி, நெல்கொடுப்ப-நெல்லைத்தருலும், மங்கையொரு பாகன் அன்பர் வந்தோர்க்கு எல்லாம் - தம்மிடத்து வந்த சிவபக்தர்களனைவர்க்கும், மாறாமல் - தவிராமல், அமுது அளிக்கும்-அமுது படைக்கவல்ல, வரம் பெற்றுள்ளார்-வரத்தைப் பெற்றவர், பொங்கு - மேன்மையுடைய, உலகோர் - உலகத்தார், இவர்-இவருடைய, செயற்கை - செயல், புதுமையென்று-அற்புதமென்று, போற்றி - துதித்து, மகிழ்ந்து - சந்தோஷத்துடன், இறைஞ்ச - வணங்க, பொருந்தும் - வாழ்கின்ற, நாளில்- காலத்தில், எ - று.

(பொ-ரை.) ஜங்கமபுரமென்கின்ற ஸ்தலத்தில் வசிப்பவர், எட்டிப்பிடிப்பதற்குமுடியாத பிறப்பாகிய மரத்தை வெட்டினவர், அவ்விடத்தில் அவருடைய வேலையானது ஜங்கமமூர்த்திகளுடைய கந்தைத் துணிகளைத் தைத்துக்கொடுத்து, அந்தத் தையற்றொழில் நாடோறும் ஐந்துபடி நெல்லைத் தருதலும் தம்மிடத்து வந்த சிவபக்தர்களனைவர்க்கும் தவிராமல் அமுதுபடைக்கவல்ல வரத்தைப்பெற்றவர், இவருடைய செயல் அற்புதமென்று துதித்துச் சந்தோஷத்துடன் வணங்க வாழ்கின்ற காலத்தில்.

(வி - ரை.) ஜனனமில்லாதவராதலின் தாவாத பிறவி மரந்தனைத் தறித்தாரென்றார். மங்கையொருபாகன்-உமாபாகனாகிய சிவபெருமான். சங்கமபுரியைச் சங்கரபுரியெனவழங்குதலு முண்டு. (உ)

சேர்ந்திலையச் சங்கமா புரியில் வாழுஞ்
சேடதா சையரெனுந் திருப்பே ருள்ளார்
பன்னிரண்டாண் டாகநெய்தோர் பட்டின் றாசு
பார்த்திபன்முன் விலைக்களிக்கப் பரிந்து செல்லு
மந்நிலையோர் சங்கமர்வந் தெமக்குத் தாவென்
றறைந்தளவி லளித்திறைஞ்ச வவரி லெல்லா
நன்னிதியு நெற்கூடு நிறைந்தெங் நாளு
நாசமுறா வகைபெற்றார் நம்ப னன்பால்.

(ப - ரை.) செந்நிலை - மேலாகிய ஸ்திதியிலுள்ள, அச்சங்கமாபுரியில் - அந்த ஜங்கமபுரத்தில், வாழும் - வசிக்கின்ற, சேடதாசையரென்னும் - சேடதாசையரென்கின்ற, திருப்பேர் உள்ளார் - திருநாமத்தினையுடையவர், பன்னிரண்டு ஆண்டாக - பன்னிரண்டு வருஷங்களாக, ஓர் பட்டின் தூசு - ஒரு பட்டு வஸ்த்ரத்தை, நெய்து - நெசவுசெய்து, பார்த்திபன்முன் - ராஜஸந்நிதானத்தில், விலைக்கு அளிக்க - விற்கும் பொருட்டு, பரிந்து-விருப்பத்துடன், செல்லும் - போகின்ற, அந்நிலை - அந்தமார்க்கத்தில், ஓர் சங்கமர் - ஒரு ஜங்கம மூர்த்தியானவர், வந்து - தோன்றி, எமக்குத் தா - நமக்குக் கொடு, என்று அறைந்தளவில் - என்று கேட்டமாத்திரத்தில், அளித்து - கொடுத்து, இறைஞ்ச - வணங்குதலும், அவர் - அவருடைய, இல் எல்லாம் - திருமடமுழுதும், நல் - சிறந்த, நிதியும் - பொன்னும், நெல்கூடும் - நெற்களஞ்சியங்களும், நிறைந்து-நிரம்பி, எந்நாளும்-எக்காலத்திலும், நாசம் உறுதலகை-அழியாதபடி, நம்பன் அன்பால் - சிவாநுக்ரஹத்தால், பெற்றார் - அடைந்தார், எ - று.

(பொ-ரை.) மேலாகிய ஸ்திதியிலுள்ள அந்த ஜங்கம புரத்தில் வசிக்கின்ற சேடதாசையரென்கின்ற திருநாமத்தினையுடையவர் பன்னிரண்டு வருஷங்களாக ஒரு பட்டு வஸ்த்ரத்தை நெசவுசெய்து ராஜஸந்நிதானத்தில் விற்கும்பொருட்டு விருப்பத்துடன் போகின்ற அந்த மார்க்கத்தில் ஒரு ஜங்கமமூர்த்தியானவர் தோன்றி நமக்குக் கொடுவென்று கேட்டமாத்திரத்திற் கொடுத்து வணங்குதலும், அவருடைய திருமடமுழுதும் சிறந்த பொன்னும் நெற்களஞ்சியங்களும் நிரம்பி எக்காலத்திலும் அழியாதபடிச் சிவாநுக்ஹரத்தால் அடைந்தார்.

(வி-ரை.) நம்பன் - சிவபெருமான். சேடர் - நெய்பவர். பார்த்திபன் - அரசன். அறைதல் - சொல்லுதல். அளித்தல் - கொடுத்தல். (௩)

தங்கியவித் தன்மையார் சேடதா சையர்
சங்கரதா சையர்தம்மைச் சந்தித் தன்பா
னங்கவலை யறத்தொழுவா மென்று சென்று
நண்ணியவர் பதத்திறைஞ்சி நண்பாப் பேசி
யங்கவர்த மகத்தக்க மொன்று மின்றி
யாயிருத்தல் கண்டுடன்றம் மனையு ளேகி
யிங்கதிகச் செல்வநா முற்றி ருந்து
மீந்திலஞ்சங் கரதாசர்க் கென்ன வெண்ணு.

(ப - ரை.) தங்கிய - வாசஞ்செய்கின்ற, இத்தன்மையார் - இந்தப்பெருமையுடையவராகிய, சேடதாசையர் - சேடதாசையர், சங்கரதாசையர்தம்மை - சங்கரதாசையரை, சந்தித்து - பார்த்து, நம் - நமது, கவலை - துக்கம், அற - ஒழியும் பொருட்டு, அன்பால் - அன்புடன், தொழுவாம் என்று - வணங்குவோமென்று, சென்று - போய், நண்ணி - அடுத்து, அவர் - அவருடைய, பதத்து - திருவடிகளில், இறைஞ்சி - ஸாஷ்டாங்கமாக வணங்கி, நண்பா - அன்புடன், பேசி - சம்பாஷித்து, அங்கு - அவ்விடத்தில், அவர் - அவருடைய, அகத்து - திருமடத்தில், அக்கம் - தானியம், ஒன்றும் - சிறியதும், இன்றியாயிருத்தல் - இல்லாமலிருப்பதை, கண்டு - பார்த்து, உடன் - அப்போதே, தம் - தமது, மனையுள் - திருமடத்தில், ஏகி - சென்று, இங்கு-இவ்விடத்தில், நாம்-நாம், அதிகச்செல்வம்-மிகுந்தசெல்வத்தை, உற்றிருந்தும்-பெற்றிருந்தும், சங்கரதாசர்க்கு-சங்கரதாசையர்க்கு, ஈந்திலம் - கொடுத்தோமில்லை, என்ன - என்று, எண்ணு - நினைத்து, எ-று.

(போ - ரை.) வாசஞ்செய்கின்ற இந்தப்பெருமையுடையவராகிய சேடதாசையர் சங்கரதாசையரைப் பார்த்து நமது துக்கம் ஒழியும்பொருட்டு அன்புடன் வணங்குவோமென்று, போயடுத்து, அவருடைய திருவடிகளில் ஸாஷ்டாங்கமாக வணங்கி, அன்புடன் சம்பாஷித்து, அவ்விடத்தில் அவருடைய திருமடத்தில் தானியம் சிறிதும் இல்லாமலிருப்பதைப் பார்த்து, அப்போதே தமது திருமடத்திற் சென்று, இவ்விடத்தில் நாம் மிகுந்த செல்வத்தைப் பெற்றிருந்தும் சங்கரதாசையர்க்குக் கொடுத்தோமில்லையென்று நினைத்து. (௬)

தப்பருநற் சிவானுபவச் சதுர ராகுஞ்
சங்கரதா சையர்மடத்திற் றவிடு தானு
நொய்ப்பிளவு முமியுமிலை யென்று நொந்து
நுடங்கிடைத்த மனையார்க்கு நுவன்ற தற்பி
னப்பொழுதங் கொருகூடை நெற்கொ டுத்தோ
ராளின்கை யனுப்புதலு மவன்கொண் டேகி
யொப்பறுசங் கரதாசர் முன்வைத் திந்நெ
லுவந்துசே டத்தாச ருமக்க ளித்தார்.

(ப - ரை.) தப்பு அரு-பாபத்தினின்றும் நீங்கிய, நல் - சிறந்த, சிவானுபவம் - சிவானுபவத்தில், சதுரர்ஆகும்-வல்லவராகிய, சங்கரதாசையர்-சங்கரதாசையருடைய, மடத்தில் - திருமடத்தில், தவிடு தானும் - தவிடும், நொய்ப்பிளவும் - குறுணையும், உமியும் - பொட்டும், இல்லையென்று - இல்லாமற்போயிற்றென்று, நொந்து - வருத்தமடைந்து, நுடங்கு - துவளுகின்ற, இடை - இடையையுடைய, தம் - தமது, மனையார்க்கு - மனைவியார்க்கு, நுவன்று - சொல்லி, அதன்பின் - அதன்பிறகு, அப்பொழுது - உடனே, அங்கு - அவ்விடத்திருந்த, ஒரு கூடை நெல் - ஒரு கூடை நெல்லை, ஓர் ஆளின் கை-ஒருவேலைக்காரனிடத்தில், கொடுத்து-தந்து, அனுப்புதலும்-அனுப்புதலும், அவன்-அவன், கொண்டு - எடுத்துக்கொண்டு, ஏகி-போய், ஒப்புஅறு-நிகரற்ற, சங்கரதாசர்முன் - சங்கரதாசையர் சந்நிதானத்தில், வைத்து - இருத்தி, இந்நெல் - இந்த நெல்லை, சேடதாசர் - சேடதாசையர், உவந்து - சந்தோஷத்துடன், உமக்கு - உமக்கு; அளித்தார் - கொடுத்தனுப்பினார், எ-று.

(போ-ரை.) பாபத்தினின்றும் நீங்கிய சிறந்த சிவானுபவத்தில் வல்லவராகிய சங்கரதாசையருடைய திருமடத்தில் தவிடும் குறுணையும் பொட்டுமில்லாமற் போயிற்றென்று வருத்தமடைந்து, துவளுகின்ற இடையையுடைய தமது மனைவியார்க்குச் சொல்லி, அதன்பிறகு உடனே அவ்விடத்திருந்த ஒரு கூடை நெல்லை ஒரு வேலைக்காரனிடத்திற்றந்து அனுப்புதலும், அவன் எடுத்துக்கொண்டுபோய் நிகரற்ற சங்கரதாசையர் சந்நிதானத்திலிருத்தி, இந்த நெல்லைச் சேடதாசையர் சந்தோஷத்துடன் உமக்குக் கொடுத்தனுப்பினார். (௭)

என்றலுஞ்சே டத்தாசர் நம்மேற் போத
வினியரென வின்றறிந்தோ மெம்பா லின்மை
குன்றவிந்த நெல்லளித்தார் நன்று நன்றோர்
கோசிகமெய்த் தவர்க்கீந்து குறையா நெற்கூ
டன்றுபெற்று நின்றிதனை யாங்கைக் கொண்டா
லறமிடிய ஞந்தடைக்கொன் றளிக்க மாட்டோ
மொன்றியத மனத்தன்பா லுகந்திந் நெற்று
முதவினத்தா லுத்தமருக் கமரென் றோதி.

(ப - ரை.) என்றலும் - என்று வேலைக்காரன் சொல்லுதலும், சேடத்தாசர் - சேடதாசையர், நம்மேல்-நமது பேரில், போத-மிகவும், இனியர் என்ன-அன்புள்ளவரென்று, இன்று - இப்போது, அறிந்தோம்-தெரிந்துகொண்டோம், எம்பால்-நம்மிடத்துள்ள, இன்மை-வறுமை, குன்ற-ஒழியும்பொருட்டு, இந்த நெல்-இந்த நெல்லை, அளித்தார் - கொடுத்தனுப்பினர், நன்று நன்று - நல்லது நல்லதே, ஓர் - ஒரு, கோசிகம் - பட்டு வஸ்த்ரத்தை, மெய் - உண்மையாகிய, தவர்க்கு - ஜங்கமமூர்த்திகளுக்கு, ஈந்து - கொடுத்து, குறையா - வற்றாத, நெற்கூடு - நெற்களஞ்சியங்களை, அன்று-அன்றைத்தினம், பெற்றார் - அடைந்தார், இன்று - இப்போது, இதனை - இந்த நெல்லை, யாம்-நாம், கைக்கொண்டால் - ஏற்றுக்கொள்வோமாயின், அற - மிகவும், மிடியன் - வறுமையுடையவனாகிய, நாம் - நாம், தமக்கு - அவர்க்கு, ஒன்று - சிறிதும், அளிக்க மாட்டோம் - கொடுக்கமாட்டோம், ஒன்றிய - பொருந்திய, தம் - தமது, மனத்து - மனத்திலுண்டாகிய, அன்பால் - அன்புடன், உகந்து - சந்தோஷித்து, இந் நெல் - இந்த நெல்லை, தாம்-அவர், உதவினத்தால் - கொடுத்தமையால், உத்தமர் உத்தமர்-நல்லவர் நல்லவரே, என்று ஓதி - என்றுசொல்லி, எ - று,

(போ-ரை.) என்று வேலைக்காரன் சொல்லுதலும், சேடதாசையர் நமதுபேரில் மிகவும் அன்புள்ளவரென்று இப்போது தெரிந்துகொண்டோம், நம்மிடத்துள்ள வறுமை யொழியும்பொருட்டு இந்த நெல்லைக் கொடுத்தனுப்பினர், நல்லது நல்லதே, ஒரு பட்டு வஸ்த்ரத்தை யுண்மையாகிய ஜங்கமமூர்த்திகளுக்குக் கொடுத்து வற்றாத நெற் களஞ்சியங்களை அன்றைத்தினம் அடைந்தார், இப்போது இந்த நெல்லை நாம் ஏற்றுக்கொள்வோமாயின் வறுமையுடையவனாகிய நாம் அவர்க்குச் சிறிதும் கொடுக்க மாட்டோம், பொருந்திய தமது மனத்திலுண்டாகிய அன்புடன் சந்தோஷித்து இந்த நெல்லை அவர் கொடுத்தமையால் நல்லவர் நல்லவரே என்று சொல்லி. (௬)

அந்தநெல்லை யோர்பிடியு ளடங்கும் வண்ண
மங்கையாற் சங்கரதா சையர்பி டிக்க
முந்தையகத் துளதனதா னியங்க ளெல்லா
முற்றுமற்றுச் செல்வமொன்று முன்னி லாம
லுந்துகளஞ் சியந்தோறும் பார்க்கப் பார்க்க
வொருநெல்லு மருந்திற்கு முளதா காமல்
வந்தமிடி கண்டுமிகச் சேட தாசர்
வருந்தவதற் கவர்தேவி வாடிச் சொல்வாள்.

(ப - ரை.) அந்த நெல்லை - அந்த நெல்லை, ஓர் பிடியுள் - ஒருபிடியில், அடங்கும் வண்ணம் - அடங்கும்படி, சங்கரதாசையர் - சங்கரதாசையர், அம்-அழகிய, கையால்-திருக்கரத்தினால், பிடிக்க - பிடித்தலும், முந்தை - முன்னே, அகத்துள்ள - திருமடத்திலிருந்த, தனதானியங்கள் எல்லாம் - தனதானியங்கள் முழுதும், முற்றும் - அடியோடே, அற்று - ஒழிந்து, செல்வம் - பொருளென்பது, ஒன்றும் - சிறிதும், முன் இல்லாமல் - முன்னமே யில்லாமையினாலும், உந்து - நிறைந்திருக்கின்ற, களஞ்சியம் தோறும் - களஞ்சியங்களிலெல்லாம், பார்க்கப் பார்க்க - தேடத்தேட, ஒரு நெல்லும் - ஒருநெல்லும், மருந்திற்கும் - மருந்திற்கும், உளதாகாமல்-இல்லாமையினாலும், வந்த - உண்டாகிய, மிடி - வறுமையை, கண்டு - பார்த்து, சேடதாசர் - சேடதாசையர், மிக - மிகவும், வருந்த - துக்கித்தலும், அதற்கு - அதற்கு, அவர்

தேவி - அவருடைய மனைவியார், வாடி - மெலிந்து, சொல்வாள் - சொல்லத் தொடங்கினாள் (எவ்வாறெனின்), எ - று,

(போ - ரை.) அந்த நெல்லை ஒரு பிடியிலடங்கும்படிச் சங்கரதாசையர் அழகிய திருக்கரத்தினாற் பிடித்தலும், முன்னே திருமடத்திலிருந்த தனதானியங்களெல்லாம் அடியோடே யொழிந்துப் பொருளென்பது சிறிதும் முன்னமே யில்லாமையினாலும் நிறைந்திருக்கின்ற களஞ்சியங்களிலெல்லாந் தேடத்தேட ஒருநெல்லும் மருந்திற்கும் இல்லாமையினாலும் உண்டாகிய வறுமையைப் பார்த்துச் சேடதாசையர் துக்கித்தலும், அதற்கு அவருடைய மனைவியார் மெலிந்து சொல்லத்தொடங்கினாள், எவ்வாறெனின்.

(வி - ரை.) சேடதாசையரது மனைவியார் திருநாமம் துக்களாதேவி யென்பது. முன்னில்லாமல் - எதிரே நிற்காமலு மென்பதாம். (எ)

தரமறிந்து செய்யாத பத்தி யெல்லாந்
தவறாகும் மனத்தகந்தைத் தன்மையாலே
யரனனைய சங்கரதா சையர்க்கு நெல்லின்
றாளின்கை யனுப்பநமக் காமோ நன்மை
பரமதவர் பசிதீர்க்கும் பத்தர்க் கின்மைப்
பகுதியிலை யவரிடத்துப் பரன்மு னின்று
வரமுனக்கு வேண்டியதே தென்ன வென்முன்
வந்துநீ நின்றதே வரமற் றொல்லேன்.

(ப - ரை.) தரம் - (பெரியோர்களுடைய) தன்மையை, அறிந்து - தெரிந்து, செய்யாத - பண்ணாத, பத்தியெல்லாம் - பக்திமுழுதும், தவறும் - குற்றமாகும், நம் மனத்து - நம்முடைய மனத்திலுண்டாகிய, அகந்தைத் தன்மையாலே - அஹங்காரத்தினாலே, அரன் அனைய - சிவபெருமானையொத்த, சங்கரதாசையர்க்கு - சங்கரதாசையர்க்கு, இன்று - இன்றைத்தினம், நெல் - நெல்லை, ஆளின் கை - வேலைக்காரனிடத்தில், அனுப்ப - கொடுத்தனுப்பியதால், நமக்கு - எங்களுக்கு, நன்மையாமோ - சுகமுண்டாகுமோ, பரமம் - மேன்மைபொருந்திய, தவர் - ஜங்கமமூர்த்திகளுடைய, பசி - பசியை, தீர்க்கும் - தணிக்கவல்ல, பத்தர்க்கு - சிவசரணர்களுக்கு, இன்மைப் பகுதி - வறுமையென்பதே, இல்லை - இல்லை, அவரிடத்து - அவரிடத்தில், பரன் - சிவபெருமான், முன்-எதிரே, நின்று - காட்சிகொடுத்தருளி, உனக்கு - உனக்கு, வரம் வேண்டியது - வேண்டிய வரம், எது என்ன - யாதென்றுகேட்டலும், என்முன் - அடியேனுக்கெதிரே, நீ - நீ, வந்து-எழுந்தருளி, நின்றதே-காட்சிகொடுத்ததே, வரம் - வரமாகும், மற்று - வேறொரு வரத்தையும், ஒல்லேன் - விரும்பமாட்டேன், எ - று.

(போ-ரை.) பெரியோர்களுடைய தன்மையைத் தெரிந்துபண்ணாத பக்திமுழுதும் குற்றமாகும், நம்முடைய மனத்திலுண்டாகிய அஹங்காரத்தினாலே சிவபெருமானையொத்த சங்கரதாசையர்க்கு இன்றைத்தினம் வேலைக்காரனிடத்திற் கொடுத்தனுப்பியதால் எங்களுக்கு சுகமுண்டாகுமோ? மேன்மைபொருந்திய ஜங்கமமூர்த்திகளுடைய பசியைத் தணிக்கவல்ல சிவசரணர்களுக்கு வறுமையென்பதேஇல்லை, அவரிடத்தில் சிவபெருமான் காட்சிகொடுத்தருளி, உனக்கு வேண்டிய வரம் யாது? என்று கேட்டலும் அடியேனுக்கெதிரே நீ எழுந்தருளி காட்சிகொடுத்ததே வரமாகும், வேறொரு வரத்தையும் விரும்பமாட்டேன்.

(அ)

என்னமற்று நாங்கொடுத்தல் வேண்டா மென்ப
 தியல்பல்ல வேதேனுங் கேட்பா யென்று
நன்னயத்தா லருளுதலு மாகி லையா
 நாட்டமெனக் கிரண்டுமிராப் பகற்போற் றோன்றி
மின்னுகரத் தூசியினிற் சரடு கோக்க
 விளங்கொளிதா வெனவத்தன் விரும்பி நோக்கித்
தன்னயனம் போனெற்றிக் கண்ணு மீயத்
 தாம்பெற்ற தலைமையர்சங் கரதா சையர்.

(ப - ரை.) என்ன - என்று சங்கரதாசையர் சொல்லுதலும் (சிவபெருமான்); மற்றும் - மேலும், நாம் - நாம், கொடுத்தல் - அநுக்ரஹஞ் செய்கின்ற வரத்தை, வேண்டாம் - தேவையில்லை, என்பது - என்று சொல்லுவது, இயல்புஅல்ல - தர்மமல்ல, ஏதேனும் - யாதாயினுமோர்வரத்தை, கேட்பாய் - கேட்டுக்கொள்வாய்; என்று - என்று, நல்நயத்தால் - மிகுந்த சந்தோஷத்துடன், அருளுதலும் - திருவாய் மலர்ந்தருளுதலும் (சங்கரதாசையர்), ஆகில் - அப்படியானால், ஐயா - ஐயனே, எனக்கு-அடியேனுக்கு, நாட்டம் இரண்டும்-இரண்டு கண்களும், பகல் போல்-பகலில் விளங்குவது போல், இரா - இரவிலும், தோன்றி - விளங்கி, மின்னும் - பிரகாசிக்கின்ற, கரத்து - கையிலுள்ள, ஊசியினில் - ஊசியில், சரடு - நூலை, கோக்க - கோக்கும்படி, விளங்கு - பிரகாசிக்கும்படியான, ஒளி - வெளிச்சத்தை, தா - கொடுப்பாய், என்ன-என்று கேட்டலும், அத்தன் - சிவபெருமான், விரும்பி - சந்தோஷத்துடன், நோக்கி - பார்த்து, தன் - தன்னுடைய, நயனம்போல் - (நெற்றி) கண்ணைப் போல், நெற்றிக்கண்ணும் - நெற்றிக்கண்ணையும், ஈய - அநுக்ரஹஞ் செய்தலும், தாம் - தாம், பெற்ற - பெற்றுக்கொண்ட, தலைமையார் - மேன்மையுடையவராகிய, சங்கரதாசையர் - சங்கரதாசையர், எ - று.

(பொ - ரை.) என்று சங்கரதாசையர் சொல்லுதலும், சிவபெருமான் மேலும் நாம் அநுக்ரஹஞ்செய்கின்ற வரத்தைத் தேவையில்லையென்று சொல்வது தர்மமல்ல, யாதாயினும் ஓர் வரத்தைக் கேட்டுக்கொள்வாயென்று மிகுந்த சந்தோஷத்துடன் திருவாய் மலர்ந்தருளுதலும், சங்கரதாசையர், அப்படியானால், ஐயனே! அடியேனுக்கு இரண்டு கண்களும் பகலில் விளங்குவதுபோல் இரவிலும் விளங்கிப் பிரகாசிக்கின்ற கையிலுள்ள ஊசியில் நூலைக் கோக்கும்படிப் பிரகாசிக்கும்படியான வெளிச்சத்தைக் கொடுப்பாயென்று கேட்டலும், சிவபெருமான் சந்தோஷத்துடன்பார்த்துத் தன்னுடைய நெற்றிக்கண்ணைப்போல் நெற்றிக்கண்ணையும் அநுக்ரஹஞ்செய்தலும், தாம் பெற்றுக்கொண்ட மேன்மையுடையவராகிய சங்கரதாசையர். (க)

குத்திரதெய் வங்கன்மதங் குலைப்பா ராயுங்
 குலவுமத மெனுங்கிரிக்கோர் குலிசம் போன்று
மத்திரராம் பரசமயக் கயங்கட் கெல்லா
 மடற்சிங்க மெனநெற்றி யம்ப கத்தா
லொத்திவிழித் திடப்படிலென் பொடிந்து நெக்கங்
 குருவமற நெறநெறென வுடைந்து வெந்தே
யத்தரைமேற் சிதறியெங்கும் வீழ்ந்து தூளா
 யழிந்ததுகண் டற்பதெய்வ மாம னைத்தும்.

(ப-ரை.) குத்திரதெய்வங்கள்-துஷ்டதெய்வங்களுடைய, மதம்-அஹங்காரத்தை, குலைப்பாராயும் - அழிப்பவராயும், குலவும் - விளங்குகின்ற, மதம் என்னும் கிரிக்கு-(சுரர் நரர்களுடைய) அஹங்காரமென்கின்ற பர்வதத்திற்கு, ஓர் - ஒப்பற்ற, குலிசம் போன்றும்-வஜ்ராயுதத்தைப் போலவும், அத்திரர் ஆம் - நிலையற்றவராகிய, பரசமயர் - பரசமயவாதிகளாகிய, கயக்கட்கு எல்லாம் - யானைகளுக்கெல்லாம், அடல் - கொல்லுகின்ற, சிங்கம் என்ன - சிங்கத்தைப்போலவும், நெற்றி யம்பகத்தால் - நெற்றிக் கண்ணினால், ஒத்தி-உறுத்து, விழித்திடப்படில்-பார்க்கப்பட்டால், என்பு-எலும்புகள், ஒடிந்து - முறிந்து, நெக்கு - உருகி, அங்கு - அவ்விடத்தில், உருவம் - உடம்பு, அற-அழியும்படி, நெறநெற என்ன-நெறநெறவென்று, உடைந்து-ஒடிந்து, வெந்து-சுட்டெரிந்து, அந் தரைமேல் - அந்தப் பூமியின்மீது, சிதறி - தெறித்து, எங்கும் - எவ்விடத்திலும், வீழ்ந்து - சாய்ந்து, தூளாய் - பொடியாய், அழிந்தது - பாழாய்ப் போனதை, கண்டு - பார்த்தமையால், அற்ப தெய்வமாம் அனைத்தும் - துஷ்ட தெய்வங்களாகிய எல்லாத் தெய்வங்களும், எ-று.

(பொ-ரை.) துஷ்டதெய்வங்களுடைய அஹங்காரத்தையழிப்பவராயும் விளங்குகின்ற சுரர் நரர்களுடைய அஹங்காரமென்கின்ற பர்வதத்திற்கு ஒப்பற்ற வஜ்ராயுதத்தைப் போலவும், நிலையற்றவராகிய பரசமயவாதிகளாகிய யானைகளுக்கெல்லாம் கொல்லுகின்ற சிங்கத்தைப் போலவும், நெற்றிக்கண்ணினால் உறுத்துப் பார்க்கப் பட்டால் எலும்புகள் முறிந்துருகி அவ்விடத்தில் உடம்பு அழியும்படி நெறநெற வென்றொடிந்து சுட்டெரிந்து, அந்தப் பூமியின்மீது தெறித்து, எவ்விடத்திலும் சாய்ந்துப் பொடியாய்ப் போனதைப் பார்த்தமையால் துஷ்டதெய்வங்களாகிய எல்லாத் தெய்வங்களும்.

(வி-ரை.) குத்திரம் - க்ஷுத்ரமென்னும் வடசொற்றிரிபு. அத்திரம் - அஸ்திரமென்னும் வடசொற்றிரிபு. கயம் - கஜமென்னும் வடசொற்றிரிபு. சிங்கம்-ஸிம்ஹமென்னும் வடசொற்றிரிபு.

(௧௦)

அஞ்சிமிக விரைந்துவந்தங் கவர்முன் னின்றுன்
னடியோங்கட் கானதொழி லருள்வா யென்ன
நெஞ்சினிடை யருள்கூர்ந்தங் கவரைக் காத்து
நீயினது நீயினது செய்வா யென்ன
நஞ்சிறுமை நீங்கியுய்ந்தே மென்று தத்த
நல்லடிமைத் தொழிலனைத்து நயந்து பற்றி
வஞ்சிநடைக் காளிமுத லான தெய்வ
மடந்தையர்கள் பணிசெய்து வணங்கு நாளில்.

(ப-ரை.) அஞ்சி - பயந்து, மிக விரைந்து வந்து - அதிசீக்கிரமாகச்சென்று, அங்கு - அவ்விடத்தில், அவர் - அவருடைய, முன்-சந்நிதானத்தில், நின்று - நின்று, உன் - உன்னுடைய, அடியோங்கட்கு - தொண்டர்களாகிய எங்களுக்கு, ஆன - தகுதியான, தொழில் - வேலையை, அருள்வாய் - நியமித்தருள்செய்வாய், என்ன - என்று விண்ணப்பித்தலும் (சங்கராசாரியர்), நெஞ்சினிடை - திருவுள்ளத்தில், அருள்கூர்ந்து - கருணைபுற்று, அங்கு - அவ்விடத்தில், அவரை - அந்தத் துஷ்ட தெய்வங்களை, காத்து - காப்பாற்றி, நீ - நீ, இன்னது - இந்த வேலையை, நீ - நீ, இன்னது - இந்த வேலையை, செய்வாயென்ன-பண்ணுவாயென்று கட்டளையிடுதலும், நம்-நமது, சிறுமை-துக்கம், நீங்கி-ஒழிந்து, உய்ந்தேமென்று-பிழைத்தோமென்று, தத்தம்-தங்கள்தங்களுடைய, நல்-நல்ல, அடிமைத்தொழில் அனைத்தும்-ஊழியத்தை

யெல்லாம், நயந்து - சந்தோஷத்துடன், பற்றி - (தலையின்மேல்) தாங்கிக்கொண்டு, வஞ்சி - வஞ்சிக்கொடிபோலுந்துவளுகின்ற, நடு - இடையையுடைய, காளிமுதலான - பத்திரகாளி முதலாகிய, தெய்வ மடந்தையர்கள் - தேவதைகள், பணிசெய்து - வேலைசெய்து, வணங்கும் நாளில் - தொழுகின்ற காலத்தில், எ - று.

(பொ - ரை.) பயந்து அதிசீக்கிரமாகச்சென்று, அவ்விடத்தில் அவருடைய சந்நிதானத்தில் நின்று, உன்னுடைய தொண்டர்களாகிய எங்களுக்குத் தகுதியான வேலையை நியமித்தருள்செய்வாயென்று விண்ணப்பித்தலும், சங்கரதாசையர் திருவுள்ளத்தில் கருணையுற்று அவ்விடத்தில் அந்தத் துஷ்டதெய்வங்களைக் காப்பாற்றி, நீ இந்த வேலையை, நீ இந்த வேலையைப் பண்ணுவாயென்று கட்டளையிடுதலும், நமது துக்கமொழிந்து பிழைத்தோமென்று, தங்கள் தங்களுடைய நல்ல ஊழியத்தை யெல்லாம் சந்தோஷத்துடன் தலையின்மேல் தாங்கிக்கொண்டு, வஞ்சிக்கொடிபோலுந் துவளுகின்ற இடையையுடைய பத்திரகாளி முதலாகிய தேவதைகள் வேலைசெய்து தொழுகின்ற காலத்தில்.

(வி - ரை) இனது என்பது இன்னதென்பதின் விகாரம். இன்னது இன்னது என்றது திருமெழுக்கிடுதல், திருவலகிடுதல், பசுமேய்த்தல், நெற்குத்தல், விறகு கொண்டு வருதல் முதலிய வேலைகளை. தேவதை - பெண்தெய்வம். (கக)

இப்படிசங் கரதாச ரீசன் கீர்த்தி
யெங்குநிறைத் திருப்பதனை யெண்ணா னாகி
யப்பெரிய கலியாணப் பட்ட ணத்தோ
ரரிதாசன் சகதேவ மல்ல னென்பான்
வெப்பமிகு மரிகரியைக் கோறல் போல
மிக்கதே வரையடர்த்தல் வீர மல்லாற்
றப்பறியாச் சிறுதேவர் தம்மைச் செற்றென்
சங்கரன்பாற் பெற்றநெற்றித் தழற்க ணாலே.

(ப - ரை.) இப்படி - இவ்விதமாக, சங்கரதாசர் - சங்கரதாசையர், ஈசன் - சிவபெருமானுடைய, கீர்த்தி - புகழ்ச்சியை, எங்கும் - எவ்விடங்களிலும், நிறைத்து - பரவச்செய்து, இருப்பதனை - இருக்கின்ற மஹத்வமான செய்தியை, எண்ணானாகி - மதியாதவனாகி, அ - அந்த, பெரிய - மேன்மையையுடைய, கலியாணப்பட்டணத்து - கல்யாண பட்டினத்தில், ஓர் - ஒரு, அரிதாசன் - விஷ்ணுபக்தனாகிய, சகதேவ மல்லன் - ஜகதேவமல்லன், என்பான் - என்பவன், வெப்பம் - கோவம், மிகும் - மிகுந்த, அரி - சிங்கம், கரியை - யானைகளை, கோறல் போல - கொல்வதைப்போல, மிக்க - பெரிய, தேவரை - தெய்வங்களை, அடர்த்தல் - கொல்வது, வீரம் - பராக்கிரமமே, அல்லால் - அல்லாமல், தப்பு - குற்றமென்பது, அறியாத - (சிறிதும்) தெரிந்துகொள்ளக்கூடாத, சிறு தேவர்தம்மை - சிறிய தெய்வங்களை, சங்கரன் பால் - சிவபெருமானிடத்தில், பெற்ற - அடைந்திருக்கின்ற, தழல் - நெருப்பாகிய, நெற்றிக்கண்ணால் - நெற்றிக்கண்ணினால், செற்று - கொன்று (அதனாலுண்டாகின்றபயன்), என் - யாது, எ - று.

(பொ - ரை.) இவ்விதமாகச் சங்கரதாசையர் சிவபெருமானுடைய புகழ்ச்சியை எவ்விடங்களிலும் பரவச் செய்திருக்கின்ற மஹத்வமான செய்தியை மதியாதவனாகி, அந்த மேன்மையுடைய கல்யாணபட்டினத்தில் ஒரு விஷ்ணுபக்தனாகிய ஜகதேவ மல்லனென்பவன் கோவமிகுந்த சிங்கம் யானைகளைக் கொல்வதைப்போலப் பெரிய தெய்வங்களைக்கொல்வது பராக்கிரமமேயல்லாமல் குற்றமென்பது சிறிதும் தெரிந்து

கொள்ளக்கூடாத சிறிய தெய்வங்களைச் சிவபெருமானிடத்தில் அடைந்திருக்கின்ற நெருப்பாகிய நெற்றிக்கண்ணினாற் கொன்றதனாலுண்டாகின்ற பயன் யாது?

(வி - ரை.) செற்று - காரணப்பொருட்டாகிய வினையெச்சம். (௧௨)

ஆதியெம்மா தவனைவென்றா லன்றோ வென்றி
யதுமாட்டா னஞ்சலின்றி மாயன் றன்னைப்
பூதிதரு நுதற்கண்ணா லெதிர்த்துப் பார்த்துப்
போவனேற் போதுமெனப் புகன்றி கழ்ந்து
தீதியலு மனத்தினனப் பட்ட ணத்துட்
செய்யதொரு கேசவா லயத்தைச் செய்யா
கோதரியு முக்கிலரி யுருவ மாகக்
குயிற்றியதன் மேற்பஞ்ச லோகங் கூட்டி.

(ப - ரை.) எம்-எமது, ஆதி-மூலகாரணனாகிய, மாதவனை - விஷ்ணுமூர்த்தியை, வென்றால் - (எரித்து) வெற்றியடைந்தால், அன்றோ - அல்லவோ, வென்றி-வெற்றியாகும், அது - அந்தக் காரியத்தை, மாட்டான் - செய்யமாட்டான், அஞ்சலின்றி - பயமில்லாமல், மாயவன்தன்னை-விஷ்ணுமூர்த்தியை, பூதிதரும்-பொடிபடுத்தற்குரிய, நுதல்கண்ணால் - நெற்றிக்கண்ணினால், எதிர்த்துப் பார்த்து - உற்றுப்பார்த்து, போவனேல் - (வெற்றியுடன்) செல்வானாயின், போதும் - சாலும், என்ன - என்று, புகன்று - சொல்லி, இகழ்ந்து - தூஷித்து, தீது இயலும்-தீமையாகிய, மனத்தினன்-மனத்தையுடையவன், அப்பட்டணத்துள்-அந்தக் கல்யாணபட்டினத்தில், செய்யது-அழகிய, ஒரு கேசவாலயத்தை-ஒரு விஷ்ணுகோயிலை, செய்யா-கட்டுவித்து, கோது அரியும் - குற்றமற்ற, உக்கில் - உருக்கினால், அரிவுருவமாக-விஷ்ணுவிக்ரஹத்தைப் போல, குயிற்றி - செய்வித்து, அதன்மேல் - அதன்மீது, பஞ்சலோகம் - ஐந்து லோகங்களையும், கூட்டி - சேர்த்துக் கவசஞ்செய்வித்து, எ - று.

(பொ - ரை.) எமது மூலகாரணனாகிய விஷ்ணுமூர்த்தியை யெரித்து வெற்றியடைந்தாலல்லவோ வெற்றியாகும்? அந்தக் காரியத்தைச் செய்யமாட்டான், பயமில்லாமல் விஷ்ணுமூர்த்தியைப் பொடிபடுத்தற்குரிய நெற்றிக்கண்ணினாலுற்றுப் பார்த்து வெற்றியுடன் செல்வானாயின் சாலுமென்று சொல்லித் தூஷித்துத் தீமையாகிய மனத்தையுடையவன் அந்தக் கல்யாணபட்டினத்தில் அழகிய ஒரு விஷ்ணு கோயிலைக் கட்டுவித்து, குற்றமற்ற உருக்கினால் விஷ்ணு விக்ரஹத்தைப்போலச் செய்வித்து, அதன்மீது ஐந்துலோகங்களையும் சேர்த்துக் கவசஞ்செய்வித்து.

(வி-ரை.) மாதவன்-லக்ஷ்மீபதியென்றும், பெருந்தவத்தினை யுடையவனென்றும் பொருட்படும். பஞ்சலோகம் - இரும்பு, ஈயம், செம்பு, பொன், வெள்ளியென்பன. அரிவுருவம் என்றது நரசிம்ம விக்ரஹத்தை. (௧௩)

நிறுத்தியதற் கேற்றதுகி லார மாதி
நேசத்தாற் றரித்தருச்சித் தேத்தி மேளங்
கறுத்தகட லெனவிரவும் பகலு மார்க்குங்
கடுமொலியைக் கேட்டதனைக் காண்ப மென்று
செறுத்தபெருங் கோபத்தாற் சென்று வென்றிச்
சித்தராய்ச் சரணரொடு சேர்ந்துட் சேறி
யொறுத்தநெற்றிக் கண்ணினா லூன்றிப் பார்க்க
யுயருமரி யுருவான துக்கு நெக்கே.

(ப - ரை.) நிறுத்தி - நிற்கவைத்து, அதற்கு ஏற்ற - அந்த விக்ரஹத்திற்குரிய தாகிய, துகில் - வஸ்த்ரம், ஆரம் - ஆபரணம், ஆதி - முதலியவற்றை, நேசத்தால் - அன்புடன், தரித்து - அணிந்து, அருச்சித்து - மந்த்ரபுஷ்பார்ச்சனைசெய்து, ஏத்தி - துதித்து, கறுத்த - கரிய, கடல் - கடலின் (முழக்கத்தை), என்ன - போல, இரவும் பகலும்- இரவும் பகலும், மேளம்-மேளவாத்யங்கள், ஆர்க்கும் - முழங்குகின்ற, கடும்- மிகுந்த, ஒலியை - முழக்கத்தை, கேட்டு - (சங்கரதாசையர்) கேட்டு, அதனை - அந்தவமர்க்களத்தை, காண்பம் என்று-பார்ப்போமென்று, செறுத்த-பகைகொண்ட, பெருங்கோபத்தால் - மிகுந்த சினத்தினால், சென்று - போய், வென்றி - வெற்றியின் மேலே, சித்தராய்-மனத்தையுடையவராகி, சரணரொடு-சிவசரணர்களுடன், சேர்ந்து- கூடிக்கொண்டு, உள் - கோயிலினுள்ளே, சேறி - சென்று, ஒறுத்த - அழிக்கும் வல்லமையுடைய, நெற்றிக்கண்ணினால் - நெற்றிக்கண்ணினால், ஊன்றிப்பார்க்க - உற்றுப்பார்த்த மாத்திரத்தில், உயரும் - மேன்மைபெற்றிருக்கின்ற, அரிவுருவானது- விஷ்ணுவிக்ரஹமானது, உக்கு-உடைந்து, நெக்கு-இளகிப்போய், எ - று.

(பொ-ரை.) நிற்கவைத்து, அந்த விக்ரஹத்திற்குரியதாகிய வஸ்த்ரம் ஆபரண முதலியவற்றை யன்புடன் அணிந்து, மந்த்ரபுஷ்பார்ச்சனைசெய்துத் துதித்து, கரிய கடலின் முழக்கத்தைப்போல இரவும் பகலும் மேளவாத்யங்கள் முழங்குகின்ற மிகுந்த முழக்கத்தைச் சங்கரதாசையர் கேட்டு, அந்த அமர்க்களத்தைப் பார்ப்போ மென்று, பகைகொண்ட மிகுந்த சினத்தினாற்போய், வெற்றியின்மேலே மனத்தை யுடையவராகி, சிவசரணர்களுடன் கூடிக்கொண்டு, கோயிலினுள்ளே சென்று, அழிக்கும் வல்லமையுடைய, நெற்றிக் கண்ணினால் உற்றுப்பார்த்த மாத்திரத்தில் மேன்மைபெற்றிருக்கின்ற விஷ்ணுவிக்ரஹமானது உடைந்து இளகிப்போய். (௧௭)

மீதினுற்ற பஞ்சலோ கங்க ளெல்லாம்
  வெள்ளமாய் மிகவுருகி விரைந்து வந்து
மாதவத்தர் சங்கரதா சையர் தாளின்
  வணங்குவார் போற்கிடந்த வாறு கண்டு
பூதலத்திற் பரசமயர் கூடிக் கூடிப்
  புகன்றஞ்ச லறிந்துநல்லோர் போதங் கேட்டு
மோதவத்தைப் பின்புள்ள வறிவும் போய்த்தென்
  றுரைப்பதுபோன் முன்னுணர்வு மொழிந்தே மென்று.

(ப-ரை.) மீதினுற்ற - (விக்ரஹத்தின்) மேலிருந்த, பஞ்சலோகங்களெல்லாம் - பஞ்சலோகங்கள் முற்றிலும், வெள்ளமாய்-பிரவாகத்தைப்போல், மிகவுருகி-மிகவும் கரைந்து, விரைந்து-சீக்கிரமாக, வந்து-சென்று, மா-பெருமைபொருந்திய, தவத்தர்- ஜங்கமமூர்த்திகளாகிய, சங்கரதாசையர் தாளின்-சங்கரதாசையருடைய திருவடிகளில் (விழுந்து), வணங்குவார்போல் - ஸாஷ்டாங்கமாகப் பணிகின்ற சரணரைப்போல், கிடந்தவாறு-படுத்திருக்கின்றதை, கண்டு-பார்த்து, பூதலத்தில்-உலகத்தில், பரசமயர்- பரசமயவாதிகள், கூடிக்கூடி - (பலவிடங்களிலும்) சேர்ந்துச் சேர்ந்து, புகன்று - சொல்லி, அஞ்சல்-தோல்வியை, அறிந்தும் - தெரிந்திருந்தும், நல்லோர் - பெரியோர் களுடைய, போதம்-ஜ்ஞானோபதேசத்தை, கேட்டும் - கேட்டிருந்தும், ஓது-சொல் லப்பட்ட, அவத்தை-அவஸ்தாத்ரயத்தின், பின்-பிறகு, உள்ள-உண்டாயிருக்கின்ற, அறிவும் - ஜ்ஞானமும், போய்த்து - போயிற்று, என்று - என்று, உரைப்பதுபோல் - சொல்வதைப்போல், முன்னுணர்வு - பூர்வஜ்ஞானமும், ஒழிந்தேமென்று - இல்லாமற் போனேமென்று, எ-று.

(பொ-ரை.) விக்ரஹத்தின் மேலிருந்த பஞ்சலோகங்கள் முற்றிலும் பிரவாகத்தைப்போல் மிகவும் கரைந்து, சீக்கிரமாகச்சென்று, பெருமைபொருந்திய ஜங்கம மூர்த்திகளாகிய சங்கரதாசையருடைய திருவடிகளில் விழுந்து ஸாஷ்டாங்கமாகப் பணிகின்ற சிவசரணரைப்போற் படுத்திருக்கின்றதைப் பார்த்து உலகத்தில் பரசமய வாதிகள் பலவிடங்களிலுஞ் சேர்ந்துச்சேர்ந்துச் சொல்லித் தோல்வியைத் தெரிந்திருந்தும், பெரியோர்களுடைய ஜ்ஞாநோபதேசத்தைக் கேட்டிருந்தும், சொல்லப்பட்ட அவஸ்தாத்ரயத்தின் பிறகு உண்டாயிருக்கின்ற ஜ்ஞாநமும் போயிற்றென்று சொல்வதைப்போல் பூர்வஜ்ஞாநமுமில்லாமற்போயிறேமென்று.

(வி-ரை.) பூதலம் - இரு பெயரொட்டு. அவஸ்தாத்ரயம் என்றது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தியென்பவற்றை. போய்த்தென்பது போயிற்றென்பதன்மரூஉ. ()

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வல்லே யாஞ்சங் கரதாசர் வயின்சென் றவர்தாள் வணங்கிமுன்னஞ்
சொல்லு மின்பா லானதெல்லாஞ் சொல்லித் துதித்தா னமைச்செல்வம்
புல்லும் படியா மெனத்தம்முட் பொருந்திப் பேசிப் போந்தவர்பா
லொல்லும் வகையாற் பணிந்தெழுந்தெம் முடையாய் கடையே முன்னடியேம்.

(ப - ரை.) யாம் - நாங்கள், வல்லே - சீக்கிரமாக, சங்கரதாசர்வயின் - சங்கரதாசையரிடத்தில், சென்று - போய், அவர் - அவருடைய, தாள் - திருவடிகளை, வணங்கி - தொழுது, முன்னம் - சந்நிதியில், இன்பால் - அன்புடன், சொல்லும் ஆனதெல்லாம்-சொல்லவேண்டியவற்றை யெல்லாம், சொல்லி - எடுத்துச்சொல்லி, துதித்தால் - தோத்திரஞ்செய்வோமாயின், செல்வம் - (இழந்துபோன) திரவியங்கள் (எல்லாம்), நம்மை - எங்களை, புல்லும்படி - (மறுபடியும்) வந்தடையும்படி, ஆம் - செய்யலாம், என்ன - என்று, தம்முள் - தங்களில், பொருந்திப்பேசி - கலந்து பேசிக்கொண்டு, போந்து - சென்று, அவர்பால் - அவரிடத்தில், ஒல்லும்வகையால்-கூடுமான வரையில் (முறையிட்டு), பணிந்துஎழுந்து - ஸாஷ்டாங்கமாக வணங்கியெழுந்து, எம்முடையாய்-எம்பெருமானே, கடையேம்-நாயினுங்கடைப்பட்டவர்களாகிய அடியேங்கள், உன் - உன்னுடைய, அடியேம் - தொண்டர்களாவோம், எ - று.

(பொ-ரை.) நாங்கள் சீக்கிரமாகச் சங்கரதாசையரிடத்திற்போய், அவருடைய திருவடிகளைத் தொழுது, சந்நிதியில் அன்புடன் சொல்லவேண்டியவற்றையெல்லாம் எடுத்துச்சொல்லித் தோத்திரஞ்செய்வோமாயின், இழந்துபோன செல்வங்களெல்லாம் எங்களை மறுபடியும் வந்தடையும்படிச் செய்யலாமென்று, அவரிடத்தில் கூடுமான வரையில் முறையிட்டு, ஸாஷ்டாங்கமாகவணங்கியெழுந்து, எம்பெருமானே! நாயினுங் கடைப்பட்டவர்களாகிய அடியேங்கள் உன்னுடைய தொண்டர்களாவோம். (கரு)

செய்த பிழையைப் பொறுத்தருள்வாய் திக்குங் கதியு நீயெம்பாற்
கைத வங்கள் வந்தக்காற் காக்க வுனக்கே கடனையா
வைத மக்கண் மடியேறின் மாதா தள்ளின் வளர்ப்பார்யா
ரெய்த வரிய வருட்கடனீ யாங்கள் பசுக்க ளினிதாள்வாய்.

(ப - ரை.) ஐயா - ஐயனே, செய்த - (அடியேங்கள்) பண்ணின, பிழையை - குற்றங்களை, பொறுத்து - மன்னித்து, அருள்வாய் - கிருபை செய்வாய், நீ - நீ, திக்கும்-துணையும், கதியும் - ஆதரவுமாவாய், எம்பால்-அடியேங்களிடத்தில், கைதவங்கள் - வஞ்சகச் செயல்கள், வந்தக்கால் - உண்டாகுமாயின், காக்க - காப்பாற்ற,

உனக்கே - உனக்கே, கடன் - கடமையாம், வைத - திட்டின, மக்கள் - பிள்ளைகள், மடி-மடியின்மீது, ஏறின் - ஏறி (உட்காருமாயின்), மாதா - தாய், தள்ளின் - நெட்டி விடுவாளாயின், வளர்ப்பார் - போஷிக்கவல்லவர், யார் - யார், நீ - நீ, எய்தரிய - கிடைத்தற் கருமையாகிய, அருட்கடல் - க்ருபாஸமுத்ரமாவாய், யாங்கள் - நாங்கள், பசுக்கள் - ஜீவர்களாவோம், இனிது - அன்புடன், ஆள்வாய் - ஆட்கொண்டருள் வாய், எ - று.

(போ - ரை.) ஐயனே! அடியேங்கள் பண்ணின குற்றங்களை மன்னித்துக் கிருபைசெய்வாய்; நீ துணையும் ஆதரவுமாவாய்; எங்களிடத்தில் வஞ்சகச்செயல்க ளுண்டாகுமாயின் காப்பாற்ற உனக்கே கடமையாம்; திட்டின பிள்ளைகள் மடியின் மீதேறி யுட்காருமாயின் தாய் நெட்டிவிடுவாளாயின் போஷிக்கவல்லவர் யார்? நீ கிடைத்தற்கருமையாகிய க்ருபாஸமுத்ரமாவாய்; நாங்கள் ஜீவர்களாவோம்;அன்புடன் ஆட்கொண்டருள்வாய். (௧௭)

உய்யுந் திறமீ தெனவருளி யுன்றாட் கடிமை யுகந்தியாஞ்
செய்யும் படியீ தெனக்காட்டித் தெருட்டி வளர்ப்பா யெனப்பணிந்து
நையு மனத்தா னிற்பவரை நாடிச் சிறிது நகையராய்ப்
பொய்யு மெய்யுங் கலந்தபத்தி புகல்வீ ரெங்குப் போகின்றீர்.

(ப-ரை) உய்யும் திறம்-பிழைக்கின்ற வழி; ஈது என்ன-இன்னதென்று, அருளி-அநுக்ரஹஞ்செய்து, யாம்-நாங்கள், உன்-உனது; தாட்கு-திருவடிகளுக்கு, உகந்து - சந்தோஷத்துடன், அடிமைசெய்யும்படி - தொண்டு செய்கின்ற விதம், ஈது என்ன - இன்னதென்று, காட்டி - காண்பித்து, தெருட்டி - தெளிவித்து, வளர்ப்பாய் என்ன- காப்பாற்றுவா யென்று, பணிந்து - ஸாஷ்டாங்கமாக வணங்கி, நையும் - துக்கப் படுகின்ற, மனத்தால் - மனத்துடன், நிற்பவரை - நிற்கின்ற சிவசரணரை, நாடி - பார்த்து, சிறிது நகையராய்-புன்முறுவலுடன், பொய்யும் மெய்யும் - பொய்யுமெய்யும், கலந்த - சேர்ந்த, பத்தி - அவபக்தியை, புகல்வீர்-போற்றுகின்றவராகிய நீர், எங்கு - எவ்விடத்திற்கு; போகின்றீர் - செல்லுகின்றீர், எ- று.

(போ-ரை.) பிழைக்கின்ற வழி இன்னதென்று அநுக்ரஹஞ்செய்து, நாங்கள் உனது திருவடிகளுக்குச் சந்தோஷத்துடன் தொண்டுசெய்கின்ற விதம் இன்ன தென்று காண்பித்துத் தெளிவித்துக் காப்பாற்றுவாயென்று, ஸாஷ்டாங்கமாக வணங்கித் துக்கப்படுகின்ற மனத்தால் நிற்கின்ற சிவசரணரைப் பார்த்துப் புன்முறுவ லுடன், பொய்யுமெய்யுஞ் சேர்ந்த அவபக்தியைப் போற்றுகின்றவராகிய நீர் எவ்விடத் திற்குச் செல்கின்றீர். (௧௮)

கொடையாற் பெரிய வுத்தமர்நீர் கொடுப்பீர் நும்பால் வருகுவோ
முடையா ரல்ல வெவ்வூர்போ யுற்றுத் திரும்பி யிங்கணைந்தீர்
படையா வகந்தை யுறும்பத்தி படைத்தீர் பத்தர் பாக்கியமே
விடையார் நேய மும்மிடத்தின் மேவிக் கீழாய் வீழ்ந்ததால்.

(ப-ரை.) கொடையால்-உதாரகுணத்திலுல், பெரிய உத்தமர்-மிகவும் மேம்பட்ட வராகிய, நீர் - நீர், கொடுப்பீர் - தரக்கூடியவர் (ஆதலால்); நும்பால் - உம்மிடத்தில், வருகுவோம்-வந்தோம், உடையார் - (நாங்கள்) செல்வர்கள், அல்ல - அல்ல (என்று சொல்லுதலும் சங்கரதாசையர்), எவ்வூர் - எந்த நாட்டிற்கு, போயுற்று-போயிருந்து, திரும்பி-மீண்டு, இங்கு - இவ்விடத்திற்கு; அணைந்தீர் - வந்தீர், படையா-அடையாத,

அகந்தையுறும் - அஹங்காரத்தையுடைய, பத்தி - அவபக்தியை,படைத்தீர் - அடைந்திருக்கின்றீர், பத்தர் - (இது) சிவசரணர்களுடைய, பாக்கியமே - அத்ருஷ்டமேயாம், விடையார் நேயம் - சிவபக்தியானது, உம்மிடத்தில் - உம்மிடத்தில், மேவி - அடைந்து, கீழாய் வீழ்ந்தது - அதோகதியாயிற்று, எ - று.

(பொ-ரை.) உதாரகுணத்தினால் மிகவும் மேம்பட்டவராகிய நீர் தரக்கூடியவரானதலால்உம்மிடத்தில் வந்தோம்;நாங்கள் செல்வர்களல்லவென்று சொல்லுதலும், சங்கராசையர், எந்த நாட்டிற்குப் போயிருந்து மீண்டு இவ்விடத்திற்கு வந்தீர்; அடையாத அஹங்காரத்தையுடைய அவபக்தியை யடைந்திருக்கின்றீர்; இது சிவசரணர்களுடைய அத்ருஷ்டமேயாம்; சிவபக்தியானது உம்மிடத்திலடைந்து அதோகதியாயிற்று. (௧௧)

அன்று தறுநற் றவத்தோர்க்கோ ராடை மாறி நீர்பெற்ற
பொன்று வந்தக் களஞ்சியத்தைப் பொருந்தும் பண்டம் போயிற்றோ
வின்று தரவி லெமக்கினிய வேதுந் தந்தீ ரிலையென்று
னின்றார் தம்மை யிவ்விடத்தைத் தொட்டுங் கொட்டா னீரென்றார்.

(ப - ரை.) அன்று - அன்றைத்தினம், ஆசு அறு - பாபத்தினின்றும் நீங்கிய, நல்- நன்மையுடைய, தவத்தோர்க்கு - ஜங்கமமூர்த்திகளுக்கு, ஓர் ஆடை-ஒரு பட்டு வஸ்த்ரத்தை, மாறி-விற்று, நீர் - நீர், பெற்ற-அடைந்த, பொன்று - அழியாத, அந்தக் களஞ்சியத்தை-அந்த நெற்கூடுகளை, பொருந்தும் - அடைந்திருந்த, பண்டம் - தானியங்களெல்லாம், போயிற்றோ - ஒழிந்துவிட்டதோ, இன்று-இப்போது, ஆதரவுஇல்- கதியில்லாத, எமக்கு - நமக்கு, இனிய - வேண்டிய பண்டம், ஏதும் - சிறிதும், தந்தீர் இல்லை - கொடுக்கமாட்டீர், என்ன - என்று, முன் - சந்நிதானத்தில், நின்றார் தம்மை - நிற்கின்றவரை (பார்த்து), நீர் - நீர், இவ்விடத்தை - இந்தப் பூமியை, கொட்டால்-மண்வெட்டியைக்கொண்டு,தொட்டும்-வெட்டும், என்றார்-என்று கட்டளையிட்டார், எ - று.

(பொ-ரை.) அன்றைத்தினம், பாபத்தினின்றும் நீங்கிய நன்மையுடைய ஜங்கமமூர்த்திகளுக்கு ஒரு பட்டு வஸ்த்ரத்தை விற்று நீர் அடைந்த அழியாத அந்த நெற்கூடுகளை யடைந்திருந்த தானியங்களெல்லாம் ஒழிந்துவிட்டதோ? இப்போது கதியில்லாத நமக்கு வேண்டிய பண்டம் சிறிதும் கொடுக்க மாட்டீரென்று, சந்நிதானத்தில் நிற்கின்றவரைப் பார்த்து, நீர் இந்தப் பூமியை மண்வெட்டியைக்கொண்டு வெட்டுமென்று கட்டளையிட்டார்.

(வி - ரை.) ஆதரவில் - அன்புடன் எனினுமாம். சேடதாசையர் வஸ்த்ரத்தை ஜங்கமமூர்த்திகளுக்குப் பொருளிச்சை நோக்காது பக்திவசத்தால் தத்தஞ்செய்தலும் ஜங்கமமூர்த்திகள் அதைப் பெற்றுக்கொண்டு போதலும் அளவிறந்த செல்வம் தமது திருமடத்தில் அந்த வஸ்த்ரத்தினிமித்த முண்டானதற்பற்றி ஆடைமாறியென்றார். ()

காண்டற் கரிய விருநிதிய மகழ வகழக் கணிப்பின்றி
நீண்ட பெருமை கண்டஞ்சி நின்று வாழ்த்து மிருவோரும்
பூண்ட நன்பா லட்டாங்கம் பூமி பொருந்தப் பணிந்தெழுந்துங்
காண்ட குருசங் கரதாச ரடிமேல் விழுந்தங் கழுந்துதலும்.

(ப - ரை.) காண்டற்கரிய - பார்க்கமுடியாத, இரு நிதியம் - பெருஞ்செல்வம், அகழ அகழ - தோண்டத்தோண்ட, கணிப்பு இன்றி - கணக்கில்லாமல், நீண்ட -

வளர்ந்து வருகின்ற, பெருமை-மகிமையை, கண்டு அஞ்சி-பார்த்துப்பயந்து, நின்று - நின்று, வாழ்த்தும் - துதிக்கின்ற, இருவோரும் - இரண்டுபேர்களும், பூண்ட - பூண்டிருக்கின்ற, நண்பால் - அன்பினால், பூமி - தரையில், பொருந்த - படிப்படி, அட்டாங்கம்பணிந்து-ஸாஷ்டாங்கமாக வணங்கி, எழுந்து-(மேலே) எழுந்து, ஆண்ட - அடிமைகொண்டருளிய, குரு - ஸத்குருநாதராகிய, சங்கரதாசர் - சங்கரதாசைய ருடைய, அடிமேல் - திருவடிகளின்மீது, வீழ்ந்து - விழுந்து, அங்கு-அவ்விடத்தில், அழுந்துதலும் - கிடந்திருத்தலும், எ - று.

(பொ - ரை.) பார்க்கமுடியாத பெருஞ்செல்வம் தோண்டத்தோண்டக் கணக்கில்லாமல் வளர்ந்து வருகின்ற மகிமையைப் பார்த்துப் பயந்து நின்று துதிக்கின்ற இரண்டு பேர்களும் பூண்டிருக்கின்ற அன்பினால் தரையிற்படிப்படி ஸாஷ்டாங்கமாக வணங்கி மேலேயெழுந்து அவ்விடத்தில் அடிமைகொண்டருளிய ஸத்குருநாதராகிய சங்கரதாசையருடைய திருவடிகளின்மீது விழுந்து அவ்விடத்தில் கிடந்திருத்தலும்

(வி - ரை.) உங்கு - அசை. (உக)

கேளீர் மிடிய ரடிகளின்மேற் கிட்டிப் பணிந்தாற் கிட்டுவதோ
நீடுஞ் செல்வம் படைத்துண்ண நேசத் துடுக்கக் கொளக்கொடுக்க
நாளும் படைத்தோர் தமைவணங்கி நன்றாய் வாழு நமக்குள்ள
தாளும் பெருமா னருளுமக்கிங் ககழ்ந்த நிதிய மவையளித்தேம்.

(ப - ரை.) கேளீர் - கேளுங்கள், மிடியர் - தரித்திரருடைய, அடிகளின்மேல்- பாதங்களின்மீது, கிட்டி - விழுந்து, பணிந்தால் - வணங்கினால், கிட்டுவதோ - செல்வம் கிடைப்பதோ, படைத்து - பரிமாறி, உண்ண - உண்பதற்கும், நேசத்து - விருப்பத்துடன், உடுக்க - உடுப்பதற்கும், கொள்ள - கொள்வதற்கும், கொடுக்க-கொடுப்பதற்கும், நாளும் - எப்போதும், நீடும் செல்வம் - பெருஞ்செல்வத்தை, படைத்தோர் தம்மை - அடைந்திருக் கின்றவர்களை, வணங்கி - தொழுது, நன்றாய் - சுகமாக, வாழும் - வாழுங்கள், நமக்கு - நமக்கு, உள்ளது - உண்டாயிருப்பது, ஆளும்-ஆட் கொண்டருள்கின்ற, பெருமான் - சிவபெருமானுடைய, அருள் - திருவருட்செல்வ மொன்றேயாம், உமக்கு - உமக்கு, இங்கு - இவ்விடத்தில், அகழ்ந்த - தோண்டி யெடுத்த, நிதியமவை - செல்வங்களை, அளித்தேம் - கொடுத்தோம், எ - று.

(பொ- ரை.) கேளுங்கள்! தரித்திரருடைய பாதங்களின்மீது விழுந்து, வணங்கினால் செல்வங்கிடைப்பதோ? பரிமாறியுண்பதற்கும், விருப்பத்துடன் உடுப்பதற்கும், கொள்வதற்கும், கொடுப்பதற்கும், எப்போதும் பெருஞ்செல்வத்தை யடைந்திருக்கின்றவர்களைத் தொழுது சுகமாய் வாழுங்கள்; நமக்கு உண்டாயிருப்பது ஆட்கொண்டருள்கின்ற சிவபெருமானுடைய திருவருட்செல்வமொன்றேயாம்; உமக்கு இவ்விடத்தில் தோண்டியெடுத்த செல்வங்களைக் கொடுத்தோம். (உஉ)

எருத்தி லேற்றிக் கொடுபோவீ ரிதனோ டெழுந்த மண்ணினையுங்
கருத்தி லிச்சை யுளதாகிற் கடுகக் கொடுபோ மெனத்தாசர்
விருத்த முடனிப் படியடியேன் வெருவத் திருவாக் கருளாதென்
பெருத்த பிழையைப் பரிகரித்துப் பேணி யருள்வா யெனப்பணிந்தார்.

(ப - ரை.) எருத்தில் - மாடுகளின்மேல், ஏற்றிக்கொடு - சுமத்திக்கொண்டு, போவீர் - போங்கள், இதனோடு - இத்துடன், எழுந்த - வந்த, மண்ணினையும் - மண்ணையும், கருத்தில் - மனத்தில், இச்சை - ஆசை, உளதாகில் - இருக்குமாயின்,

கடிக - விரைவாக, கொடுபோம் - சுமந்துகொண்டு போங்கள், என்ன - என்று (சங்கராதாசையர் கட்டளையிடுதலும்), தாசர் - சேடதாசையர், விருத்த முடன் - கடின மாக, இப்படி - இவ்வாறு, அடியேன் - அடியேன், வெருவ - பயப்படும்படி, திருவாக்கு அருளாது - திருவாய்மலர்ந்தருளாமல், என் - அடியேனுடைய, பெருத்த - பெரிய, பிழையை - குற்றங்களை, பரிகரித்து - மன்னித்து, பேணி - காப்பாற்றி, அருள்வாய் - அநுக்ரஹஞ்செய்வாய், என்ன - என்று, பணிந்தார் - ஸாஷ்டாங்கமாகவணங்கினார், எ - று,

(பொ - ரை.) மாடுகளின்மேல் சுமத்திக்கொண்டுபோங்கள்: இத்துடன் வந்த மண்ணையும் மனத்தில் ஆசையிருக்குமாயின் விரைவாகச் சுமந்துகொண்டுபோங்களென்று, சங்கரதாசையர் கட்டளையிடுதலும், சேடதாசையர் கடினமாக இவ்வாறு அடியேன் பயப்படும்படி திருவாய்மலர்ந்தருளாமல் அடியேனுடைய பெருங் குற்றங்களை மன்னித்துக் காப்பாற்றி யநுக்ரஹஞ் செய்வாயென்று ஸாஷ்டாங்கமாக வணங்கினார். (௨௩)

வணங்குஞ் சேட தாசரையும் வாழ்த்து மவர்த மனைவியையு
மிணங்கி லாச்சங் கரதாச ரினிது நோக்கி யெழுங்கருணைக்
குணங்க ளாலே வரவணைந்துக் குறையாச் செல்வ நுமக்கியாம்
மணங்கோர் பாக னருளாலே யளித்தோ மென்றா ரவர்பெற்றார்.

(ப-ரை.) வணங்கும் - வணங்குகின்ற, சேடதாசரையும் - சேடதாசையரையும், வாழ்த்தும் - துதிக்கின்ற, அவர் மனைவியையும் - அவருடைய மனைவியாரையும், இணங்கு இல்லா - நிகரற்ற, சங்கரதாசர் - சங்கரதாசையர், இனிது - சந்தோஷத்துடன், நோக்கி - பார்த்து, எழு - மிகுந்த, கருணைக் குணங்களால் - க்ருபாகடாக்ஷத்துடன், வர - சமீபத்தில் வரும்படிச்செய்து, அணைத்து - தழுவிக்கொண்டு, குறையா - அழியாத, செல்வம் - செல்வத்தை, நுமக்கு - உமக்கு, யாம் - நாம், அணங்கு ஓர்பாகன் அருளால் - சிவாநுக்ரஹத்தினால், அளித்தோம் - கொடுத்தோம், என்றார் - என்று சொல்லியருளினார், அவர் - அவர், பெற்றார் - பெற்றுக்கொண்டார்.

(பொ-ரை.) வணங்குகின்ற சேடதாசையரையும் துதிக்கின்ற அவருடைய மனைவியாரையும் நிகரற்ற சங்கரதாசையர் சந்தோஷத்துடன் பார்த்து, மிகுந்த க்ருபாகடாக்ஷத்துடன் சமீபத்தில் வரும்படி செய்து தழுவிக்கொண்டு, அழியாத செல்வத்தை உமக்கு நாம் சிவாநுக்ரஹத்தினாற் கொடுத்தோமென்று சொல்லியருளினார், அவர் பெற்றுக்கொண்டார்.

(வி - ரை.) அணங்கு ஓர்பாகன் - சிவபெருமான் (உமாதேவியாரை யோர்பாகத்தி லுடையவன்). ஓர் பாகன் என்றமையால் அணங்கு உமாதேவியாரைக் குறித்தது. இனிது பார்த்தல் - முகமலர்ச்சியுடன் நோக்குதல். (௨௪)

இந்த நெறியா லெழுங்காம மேதக் குரோத மிலையென்னு
மந்த லோப மருமோக மாகா மதமற் சரமிவைதான்
வந்த கருத்தர்க் கில்லையா மனத்துக் கருணை வசவண்ணு
நந்த மரணைப் பெற்றநங்தை நண்ணுந் தவரை யினிநவில்வாம்.

(ப-ரை.) இந்தநெறியால் - இவ்விதமாக, எழும் - (அஹங்காரத்தினால்) உண்டாகின்ற, காமம் - காமமும், ஏதம் - குற்றமுள்ள, குரோதம் - க்ரோதமும், இல்லை - இரப்பவர்களுக்கு) இல்லை, என்னும் - என்று சொல்லப்பட்ட, அந்தலோபம் - அந்த லோபமும், அரு - நீக்குதற்கரிதாகிய, மோகம் - மோஹமும், ஆகா - பொல்லாத, மதம் -

மதமும், மற்சரம் - மத்ஸரமும், இவை - (ஆகிய) இவைகள், வந்த - உண்டான, கருத்தர்க்கு-மனமுள்ளவர்களுக்கு, மனத்து-மனத்தில், கருணை-அன்பென்பது, இல்லையாம்-இல்லையாகும், வசவண்ண - வசவண்ணனே, நம் - நமது, அரனை - சிவபெருமானை, பெற்று (புண்யவசத்தினால்) அடைந்திருந்தும், அகந்தை-அஹங்காரத்தை, நண்ணும்-அடைந்திருக்கின்ற, தவரை - தபோதனரைப்பற்றி, இனி - இப்போது, நவில்வாம் - சொல்லத்தொடங்குவோம், எ-று.

(போ-ரை) இவ்விதமாக அஹங்காரத்தினாலுண்டாகின்ற காமமும், குற்றமுள்ள க்ரோதமும், இரப்பவர்களுக்கில்லையென்று சொல்லப்பட்ட அந்த லோபமும், நீக்குதற்கரிதாகிய மோஹமும், பொல்லாத மதமும், மத்ஸரமுமாகிய இவைகளுண்டான மனமுள்ளவர்களுக்கு மனத்தில் அன்பென்பது இல்லையாகும்; வசவண்ணனே! நமது சிவபெருமானைப் புண்யவசத்தினாலடைந்திருந்தும் அஹங்காரத்தையடைந்திருக்கின்ற தபோதனரைப்பற்றி யிப்போது சொல்லத்தொடங்குவோம்.

(வி-ரை.) காமமுதலியவற்றை அரிஷட்வர்க்கமென்பார் வடநூலார். இவற்றை முன்னரே விளக்கியுள்ளாம். (உரு)

சங்கரதாசையர் புராணம் முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம்-அசo.

---

சிவமயம்.

# நிம்மவைபுராணம்.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எந்த மவ்வை நிம்மவ்வை யென்னும் பேரா ரெழிற்சரணர்
புந்திக் கினிய செய்தியினர் புதலை யெனுமூர் பொருந்துவார்
சந்தத் தாசா ரத்தொழிலார் சாரா ரில்வாழ்க் கையின்மயக்க
நிந்தை யில்லா மெய்ப்பத்தி வீர விரத நிறைந்துள்ளார்.

(ப - ரை.) எம் - நமது, அவ்வை - அம்மையார், நிம்மவ்வையென்னும்-நிம்மவை யென்கின்ற, பேரார் - திருநாமத்தினையுடையவர், எழில் - தபோவல்லமையுடைய, சரணர் - சிவசரணர்களுடைய, புந்திக்கு - மனத்திற்கு, இனிய - விருப்பமுண்டாதற் குரிய, செய்தியினர் - ஒழுக்கத்தையுடையவர், புதலையென்னும் - புதலையென் கின்ற, ஊர் - ஸ்தலத்தில், பொருந்துவார் - வாழ்பவர், சந்தத்து - சிறப்புற்ற, ஆசாரத்தொழிலார் - ஆசாரத்திற்குரிய வேலைசெய்பவர், இல்வாழ்க்கையில் - மனை வாழ்க்கையில், மயக்கம் சாரார் - ஆசையில்லாதவர், நிந்தையில்லா - பழிச்சொற் கிடமில்லாத, மெய்ப்பத்தி - உண்மையாகிய பக்தியுடன்கூடிய, வீரவிரதம் நிறைந் துள்ளார் - வீரசைவாசாரத்தை யுடையவர், எ - று.

(பொ-ரை.) நமது அம்மையார் நிம்மவ்வையென்கின்ற திருநாமத்தினையுடையவர்; தபோவல்லமையுடைய சிவசரணர்களுடைய மனத்திற்கு விருப்பமுண்டாதற்குரிய ஒழுக்கத்தை யுடையவர்; புதலையென்கின்ற ஸ்தலத்தில் வாழ்பவர்; சிறப்புற்ற ஆசாரத்திற்குரிய வேலைசெய்பவர்; மனைவாழ்க்கையில் ஆசையில்லாதவர்; பழிச்சொற் கிடமில்லாத உண்மையாகிய பக்தியுடன்கூடிய வீரசைவாசாரத்தை யுடையவர். (க)

சித்த னன்ப ரகந்தோறு நீர்தா னளிக்கு நிலைத்தொழிலார்
மெய்த்த மைந்த னவர்பசுக்கண் மேய்க்குந் தொழிலாற் றினந்தோறுஞ்
சித்த மகிழ வரும்பொருளாற் சிவபுண் ணியத்திற் றிரியாதே
யத்த னேயர்க் கமுதளித்தங் கமர்ந்து வாழு மந்நாளில்.

(ப - ரை.) சித்தன் அன்பர் - சிவபக்தர்களுடைய, அகம்தோறும் - திருமடங் களிலெல்லாம், தான் - தான், நீர் - ஜலத்தை, அளிக்கும் - (திரட்டிக்கொண்டுவந்து) கொடுக்கின்ற, நிலை - நெறியினின்றும் நீங்காத, தொழிலார் - செய்கையுடையவர், மெய்த்த - ஸத்யமார்க்கத்தினையுடைய, மைந்தன் - (தனது) மகன், அவர் - அவர்க ளுடைய, பசுக்கள் மேய்க்கும் - பசுக்களை மேய்க்கின்ற, தொழிலால் - வேலையினால், தினம்தோறும் - நாடோறும், சித்தம் மகிழ - மனமகிழும்படி, வரும் - கிடைக்கின்ற, பொருளால் - பணத்தைக்கொண்டு, சிவபுண்ணியத்தில்-சிவபுண்ய கர்மத்தினின்றும், திரியாது - நிலைபேராமல், அத்தன் நேயர்க்கு - சிவபக்தர்களுக்கு, அமுது அளித்து - திருவமுதுபடைத்து, அங்கு - அவ்விடத்தில், அமர்ந்து-தங்கி, வாழும் - வாழ்கின்ற, அந்நாளில் - அந்தக் காலத்தில், எ - று.

(போ - ரை.) சிவபக்தர்களுடைய திருமடங்களிலெல்லாம் தான் ஜலத்தைத் திரட்டிக்கொண்டுவந்து கொடுக்கின்ற நெறியினின்றும் நீங்காத செய்கையுடையவர்; ஸத்ய மார்க்கத்தினையுடைய தனது மகன் அவர்களுடைய பசுக்களை மேய்க்கின்ற வேலையினால் நாடோறும் மனமகிழும்படிக் கிடைக்கின்ற பணத்தைக்கொண்டு சிவ புண்ய கர்மத்தினின்றும் நிலைபேராமல் சிவபக்தர்களுக்குத் திருவமுதுபடைத்து அவ்விடத்தில் தங்கி வாழ்கின்ற அந்தக் காலத்தில். (உ)

குற்ற மகன்ற செங்காட்டங் குடியுண் மறையோர் சிறுத்தொண்டர்
பெற்ற மகனைக் கறியாக்கிப் படைக்க மகிழ்ந்த பிரானருளான்
மற்று மணைந்த மகனுருந் தாமு மத்தன் வாருமென
வுற்ற கயிலை யிடத்தெம்மா னோலக் கத்தி னுறுங்காலை.

(ப - ரை.) குற்றம் அகன்ற - பரிசுத்தமாகிய, செங்காட்டங்குடியுள் - திருச்செங்காட்டங்குடியில், மறையோர் - வேதியராகிய, சிறுத்தொண்டர் - சிறுத்தொண்ட நாயனரென்பவர், பெற்ற மகனை - (தாம்) ஈன்ற மகனை, கறியாக்கி - கறியமுதாகச் சமையல்செய்து, படைக்க - அர்ப்பிதஞ் செய்தமையால், மகிழ்ந்த - திருவுளம் சந்தோஷமடைந்த, பிரான் - சிவபெருமானது, அருளால் - கிருபையினால், மற்றும் - மீண்டும், அணைந்த - (உயிர்பெற்றெழுந்து) வந்த, மகனும் - திருக்குமாரனும், தாமும் - தாமும், அத்தன் - சிவபெருமான், வாரும் என்ன - வாருங்களென்று கட்டளையிடுதலும், உற்ற - வந்துசேர்ந்த, கயிலையிடத்து - ஸ்ரீமஹாகைலாஸத்தில், எம்மான் - எமது சிவபெருமான், ஓலக்கத்தில் - திருவோலக்கத்தில், உறும் காலை - வீற்றிருக்கின்ற காலத்தில், எ - று.

(போ - ரை.) பரிசுத்தமாகிய திருச்செங்காட்டங்குடியில் வேதியராகிய சிறுத்தொண்டநாயனரென்பவர் தாம் ஈன்ற மகனைக் கறியமுதாகச் சமையல்செய்து அர்ப்பிதஞ்செய்தமையால் திருவுளம் சந்தோஷமடைந்த சிவபெருமானது கிருபையினால் மீண்டும் உயிர் பெற்றெழுந்து வந்த திருக்குமாரனும் தாமும், சிவபெருமான் வாருங்களென்று கட்டளையிடுதலும், வந்துசேர்ந்த ஸ்ரீமஹாகைலாஸத்தில் எமது சிவபெருமான் திருவோலக்கத்தில் வீற்றிருக்கின்ற காலத்தில்.

(வி - ரை.) சிறுத்தொண்ட நாயனரது பிள்ளைத்திருநாமம் பரஞ்சோதியார். அவருடைய குமாரனது திருநாமம் சீராளன். திருவோலக்கம் - மஹாஸபை. (௩)

அமல னிருக்கு மலங்கார மதனைப் பார்த்தங் கணைகணத்தோர்
கமல முகங்க டமைப்பார்த்துக் காதன் மகனைப் பார்த்தவனை
யுமையோர் பாகர்க் கரிந்தாக்கி யுவந்து படைத்த வுறுதியைப்பார்த்
தெமது பெருமைக் கொப்பவரிங் கில்லை யெனவே யெண்ணினர்.

(ப - ரை.) அமலன் - சிவபெருமான், இருக்கும் - எழுந்தருளி யிருக்கின்ற, அலங்காரம் அதனை - திருக்கோலத்தையும், பார்த்து - பார்த்து, அங்கு - அவ்விடத்தில், அணை - சூழ்ந்திருக்கின்ற, கணத்தோர் - சிவகணங்களுடைய, கமலம்-தாமரை மலர்போன்ற, முகங்கள்தம்மை - முகங்களையும், பார்த்து—, காதல் - அன்புள்ள, மகனை-மகனையும், பார்த்து—, அவனை - அவனை, உமையோர்பாகர்க்கு - சிவபெருமானுக்கு, அரிந்து - அறுத்து, ஆக்கி-சமைத்து, உவந்து-சந்தோஷத்துடன், படைத்த-அர்ப்பிதஞ்செய்த, உறுதியை - மனோதிருடத்தையும், பார்த்து—, எமது பெருமைக்கு-எமதுபுகழினுக்கு, ஒப்பவர் - சமானமுள்ளவர், இங்கு இல்லையென்ன - இவ்விடத்தி லில்லையென்று, எண்ணினர் - (அஹங்காரத்துடன்) நினைத்தார், எ - று.

(போ - ரை.) சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோலத்தையும் பார்த்து, அவ்விடத்தில் சூழ்ந்திருக்கின்ற சிவகணங்களுடைய தாமரைமலர் போன்ற முகங்களையும் பார்த்து, அன்புள்ள மகனையும் பார்த்து, அவனை சிவபெருமானுக்கு அறுத்துச் சமைத்துச் சந்தோஷத்துடன் அர்ப்பிதஞ்செய்த மனோத்ருடத்தையும் பார்த்து, எமது புகழினுக்குச் சமானமுள்ளவர் இவ்விடத்திலில்லை யென்று அஹங்காரத்துடன் நினைத்தார். (௪)

என்னு மளவி லரன்சிறிதே யினிய முறுவல் வதனத்தா
லண்ணும் பரையை யங்கிருத்தி யணைந்த கணத்தோ ரனைவரையு
நண்ணு மிடங்கள் செலவிடுத்து நன்மைச் சிறுத்தொண் டருந்தாமு
மண்ணி லிழிந்தார் நிம்மவ்வை மனையைக் குறித்தார் வந்தணைந்தார்.

(ப - ரை.) எண்ணுமளவில் - நினைத்தமாத்திரத்தில், அரன் - சிவபெருமான் - இனிய - இனிமையான, சிறிது முறுவல் - புன்னகையினையுடைய, வதனத்தால் - திருமுகத்துடன், அண்ணும் - பக்கத்தில் வீற்றிருக்கின்ற, பரையை - உமாதேவியாரை, அங்கு - அவ்விடத்தில், இருத்தி - நிறுத்திவிட்டு, அணைந்த - சூழ்ந்திருக்கின்ற, கணத்தோர் - சிவகணங்கள், அனைவரையும் - எல்லாரையும், நண்ணும் இடங்கள் - தங்கள் தங்களுடைய இருப்பிடங்களுக்கு, செல்ல - போகும்படி, விடுத்து - விடைகொடுத்தனுப்பிவிட்டு, நன்மை - நன்னெறியினையுடைய, சிறுத்தொண்டரும் தாமும் - சிறுத்தொண்டநாயனாரும் தாமும், மண்ணில் - பூலோகத்தில், இழிந்தார் - (ஜங்கமக் கோலம்பூண்டு) இறங்கி, நிம்மவ்வை - நிம்மவ்வையாருடைய, மனையை - திருமடத்தை, குறித்தார் - நோக்கி, வந்து அணைந்தார் - வந்துசேர்ந்தார்கள், எ - று.

(போ - ரை.) நினைத்தமாத்திரத்தில் சிவபெருமான் இனிமையான புன்னகையினையுடைய திருமுகத்துடன், பக்கத்தில் வீற்றிருக்கின்ற உமாதேவியாரை அவ்விடத்தில் நிறுத்திவிட்டு, சூழ்ந்திருக்கின்ற சிவகணங்க ளெல்லாரையும் தங்கள் தங்களுடைய இருப்பிடங்களுக்குப் போகும்படி விடைகொடுத் தனுப்பிவிட்டு, நன்னெறியினையுடைய சிறுத்தொண்டரும் தாமும் பூலோகத்தில் ஜங்கமக்கோலம் பூண்டு இறங்கி, நிம்மவ்வையாருடைய திருமடத்தை நோக்கி வந்துசேர்ந்தார்கள்.

(வி - ரை.) இழிந்தார், குறித்தார் என்பவை முற்றெச்சங்கள். (௫)

அணையுந் தவத்தோ ரடிகளின்மே லட்டாங் கத்தாற் பணிந்தெழுந்து
தணியு மன்பாற் பதம்விளக்கித் தருக்கி யுள்ளா தனத்திருத்தித்
துணியு முறுதி யுடனின்று தூயோர் மகிழத் துதித்திறைஞ்சிப்
பணியு மொழியாற் பசித்தனரெம் பரம ரென்று பரிந்தடிசில்.

(ப - ரை.) அணையும் - வந்து சேர்ந்திருக்கின்ற, தவத்தோர் - ஜங்கமமூர்த்திகளுடைய, அடிகளின்மேல் - திருவடிகளின்மீது, அட்டாங்கத்தால் பணிந்து - ஸாஷ்டாங்கமாக வணங்கி, எழுந்து - மேலேயெழுந்து, தணியும் - மனமுருகுகின்ற, அன்பால் - பக்தியுடன், பதம் விளக்கி - திருவடிகளைக் கழுவி, தருக்கி - மனமகிழ்ந்து, உள் - உள்ளேயிருந்த, ஆதனத்து - ஆசனங்களில், இருத்தி - எழுந்தருளப்பண்ணி, துணியும் - தெளிந்த, உறுதியுடன் - மனோத்ருடத்துடன், நின்று - நின்று, தூயோர் - ஜங்கமமூர்த்திகள், மகிழ - மனமகிழும்படி, துதித்து இறைஞ்சி - துதித்து வணங்கி, பணியும் - வணக்கமுள்ள, மொழியால் - சொற்களால், எம் - எமது, பரமர் - ஜங்கமமூர்த்திகள், பசித்தனர் - பசிகொண்டிருக்கிறார்கள், என்று - என்று, பரிந்து - துயரப்பட்டு, அடிசில் - அமுதினை, எ - று,

(பொ - ரை.) வந்து சேர்ந்திருக்கின்ற ஜங்கமமூர்த்திகளுடைய திருவடிகளின் மீது ஸாஷ்டாங்கமாக வணங்கி மேலேயெழுந்து, மனமுருகுகின்ற பக்திபுடன் திருவடிகளைக்கழுவி, மனமகிழ்ந்து உள்ளே யிருந்த ஆசனங்களில் எழுந்தருளப் பண்ணி, தெளிந்த மனோத்ருடத்துடன் நின்று, ஜங்கமமூர்த்திகள் மனமகிழும்படித் துதித்து வணங்கி, வணக்கமுள்ள சொற்களால் எமது ஜங்கமமூர்த்திகள் பசிகொண் டிருக்கின்றார்களென்று துயரப்பட்டு அழுதினே.

(வி - ரை.) ஆதனம் - ஆசனமென்னும் வடசொற்றிரிபு. தணியும் - மிகுந்த எனினுமாம். (௬)

முடுகி யமைத்தங் குள்ளிருத்தி மோக நன்னீர் தரவணைந்தார்
வடுவொன் றில்லா ரிருவருங்கண் வளர்வார் போன்றார் மைந்தன்வந்
தடுவெம் பசியா லன்னேயென் றழைத்துக் காணு துட்புகுந்து
கடிதி னெடுத்தோர் பணியாரங் காத லாலங் கருந்துதலும்.

(ப-ரை.) முடுகி-சீக்கிரமாக, அமைத்து-சமைத்து, அங்கு-அவ்விடத்திலுள்ள, உள்-உள்ளறையில், இருத்தி-வைத்துவிட்டு, மோகம்-(யாவரும்) விரும்புதற்குரிய, நல்நீர்-சுத்தஜலத்தை, தர-திரட்டிக்கொண்டு வரும்பொருட்டு, அணைந்தார்-சென்றார், வடு ஒன்று இல்லார் - மஹாபுண்யஸ்வரூபிகளாகிய, இருவரும் - இரண்டு ஜங்கம மூர்த்திகளும். கண்வளர்வார் போன்றார் - தூங்குபவர்களைப்போலப் பொய்த்தூக்கங் கொண்டிருந்தார்கள் (அச்சமயத்தில்), மைந்தன் வந்து - மகன் வந்து; அடு - வருத்து கின்ற, வெம் - கொடிய, பசியால் - பசிகொண்டமையினால், அன்னே யென்று - அம்மாவென்று, அழைத்து - கூப்பிட்டு, காணுது - காணுமையினால், உள்புகுந்து - அறையினுள்ளே நுழைந்து, கடிதின்-சீக்கிரமாக, ஓர் பணிபாரம்-ஒரு அதிரசத்தை, எடுத்து-எடுத்துக்கொண்டு, காதலால்-ஆசையுடன், அங்கு-அவ்விடத்தில், அருந்துதலும் - தின்றலும், எ-று.

(பொ-ரை.) சீக்கிரமாகச் சமைத்து, அவ்விடத்திலுள்ள உள்ளறையில் வைத்து விட்டு,யாவரும் விரும்புதற்குரிய சுத்தஜலத்தைத்திரட்டிக்கொண்டு வரும்பொருட்டுச் சென்றார்; மஹாபுண்யஸ்வரூபிகளாகிய இரண்டு ஜங்கமமூர்த்திகளும் தூங்குபவர் களைப்போலப் பொய்த்தூக்கங் கொண்டிருந்தார்கள்; அச்சமயத்தில் மகன் வந்து வருத்துகின்ற கொடிய பசி கொண்டமையினால் அம்மாவென்று கூப்பிட்டுக் காணு மையினால் அறையினுள்ளே நுழைந்துச் சீக்கிரமாக ஒரு அதிரசத்தை யெடுத்துக் கொண்டு ஆசையுடன் அவ்விடத்தில் தின்றலும். (௭)

தாயார் நீர்தந் துட்புகுந்தத் தன்மை கண்டு தண்ணீர்வைத்
தேயா வெம்மை யெழுவெகுண்டிங் கென்னேயென்னே யிதுசெய்தாய்
நாயா னதுவோ கெட்டேனென் னுத னமுதை நன்னுமெனத்
தீயாங் கோபத் துலக்கையினுன் மைந்த னுவி செலப்புடைத்தாள்.

(ப—ரை.) தாயார் - தாயாராகிய நிம்மவ்வையார், நீர்-ஜலத்தை, தந்து-திரட்டிக் கொண்டுவந்து, உள் - உள்ளே, புகுந்து - நுழைந்து, அத்தன்மை - அந்தத் தீச்செய் கையை, கண்டு-பார்த்து, தண்ணீர்-தண்ணீர் குடத்தை, வைத்து-இருத்திவிட்டு, வெம்மையெழ-வயிறு எரிய, வெகுண்டு-கோவித்து, ஏயா-அடே (சீச்சீ), இங்கு- இவ்விடத்தில், என்னே என்னே - என்ன என்ன, இது - இந்தத் தகாதகாரியத்தை, செய்தாய்-பண்ணிவிட்டாய், கெட்டேன்-ஆ கெட்டேன், நாயானதுவோ - நாயோ, என் - எனது, நாதன் - சிவபெருமானுக்கென்றே சமைத்திருக்கின்ற, அமுதை -

அமுதினை, நண்ணும் - தின்னும், என்ன-என்று, தீயாம்கோபத்து - கோபாக்கியுடன், உலக்கையினுல் - முசலத்தைக்கொண்டு, மைந்தன் - மகனுடைய, ஆவிசெல்ல-உயிர் போம்படி, புடைத்தாள் - (புத்ரவாஞ்சல்யமில்லாமலோங்கி) அடித்தாள், எ-று.

(பொ-ரை.) தாயாராகிய நிம்மவ்வையார் ஜலத்தைத் திரட்டிக்கொண்டு வந்து, உள்ளே நுழைந்து, அந்தத் தீச்செய்கையைப் பார்த்து,தண்ணீர்க்குடத்தை இருத்தி விட்டு, வயிறெரிய கோவித்து, அடே! சீச்சீ! இவ்விடத்தில் என்ன! என்ன! இந்தத் தகாத காரியத்தைப் பண்ணிவிட்டாய்; ஆ! கெட்டேன், நாயோ எனது சிவ பெருமானுக்கென்றே சமைத்திருக்கின்ற அமுதினைத் தின்னுமென்று கோபாக்கி யுடன் முசலத்தைக்கொண்டு மகனுடைய உயிர் போம்படி புத்ரவாஞ்சல்யமில்லா மல் ஓங்கியடித்தாள்.

(வி-ரை.) என்னேயென்னே - அதிசயவிரக்கச்சொல். அடே சீச்சீ - இகழ்ச்சிக் குறிப்பு. (அ)

இறந்த மகனைக் கதுமெனவே யீர்த்துப் புறத்து மூடியவன்
றிறந்த பாண்டத் தமுதுகறி சேர வப்பாற் செலவெறிந்து
நிறைந்த பயத்தான் மடமெங்கு நேய நிறைவான் மெழுகியபி
னறந்தங் கன்பர் முன்போலங் கடிசில் சமைக்கு மமயத்தில்.

(ப-ரை.) இறந்த மகனை-மாண்டுபோன மகனை, கதுமென-சீக்கிரமாக, ஈர்த்து - இழுத்துக்கொண்டுபோய், புறத்து - கொல்லையில், மூடி - மறைத்திட்டு, அவன் - அவன், திறந்த-திறந்து பார்த்ததனுலுண்டான த்ருஷ்டிதோஷம்பட்ட, பாண்டத்து - பாத்திரங்களிலிருந்த, அமுது - அமுதினையும், கறி - கறியமுதினையும், சேர-(பாத்தி ரங்களுடன்) ஒருமிக்க, அப்பால் - அப்புறத்தே, செல்ல - போய்விழும்படி, எறிந்து - வீசிவிட்டு, நிறைந்த பயத்தால் - பூர்ணபயத்துடனும், நேயநிறைவால் - பூர்ணபக்தி யுடனும், மடம் எங்கும்-திருமடமெல்லாம், மெழுகியபின் - மெழுகிட்ட பிறகு, அறம் தங்கு-சிவபுண்ய கயிங்கரியஞ்செய்கின்ற, அன்பர் - அன்புள்ள நிம்மவ்வையார், முன் போல்-முன்னமே சமைத்தது போல, அங்கு - அவ்விடத்தில், அடிசில் - அமுதினை, சமைக்கும் - சமையல் செய்கின்ற, அமயத்தில் - காலத்தில், எ-று.

(பொ-ரை.) மாண்டுபோன மகனைச் சீக்கிரமாக இழுத்துக்கொண்டு போய்க் கொல்லையில் மறைத்திட்டு, அவன் திறந்து பார்த்ததனுலுண்டான த்ருஷ்டி தோஷம் பட்ட பாத்திரங்களிலிருந்த அமுதினையும் கறியமுதினையும் பாத்திரங்களுடன் ஒரு மிக்க அப்புறத்தே போய்விழும்படி வீசிவிட்டு, பூர்ணபயத்துடனும் பூர்ணபக்தி யுடனும் திருமடமெல்லாம் மெழுகிட்ட பிறகு, சிவபுண்ய கயிங்கரியஞ்செய்கின்ற அன்புள்ள நிம்மவ்வையார் முன்னமே சமைத்தது போல அவ்விடத்தில் அமுதினைச் சமையல்செய்கின்ற காலத்தில். (க)

அந்தோ வையர் பசித்தனரென் னுவிக் காவி யினர்பசித்தா
ரந்தோ வந்தோ விந்நேர மமுது செய்யா திருப்பதே
யந்தோ வென்ன குறைசெய்தே னந்தோ நாயே னறக்கொடியே
னந்தோ வென்பா லொருபுதல்வ னுகிப் பாவி யவதரித்தான்.

(ப-ரை.) அந்தோ-ஐயோ, ஐயர்-ஜங்கமமூர்த்திகள், பசித்தனர்-பசிகொண்டி ருக்கின்ருர்கள், என்-எனது, ஆவிக்கு-உயிர்க்கு, ஆவியினர்-உயிராயிருப்பவர்கள், பசித்தார் - பசிகொண்டிருக்கின்ருர்கள், அந்தோ அந்தோ - ஐயையோ, இந்நேரம் -

இந்நேரமட்டும், அமுது செய்யாது இருப்பதே - திருவமுது செய்யாமலிருக்கலாமோ அந்தோ - ஐயோ, நாயேன் - நாய்க்குணமுள்ள அடியேன், அறக்கொடியேன் - மிகவும் துஷ்டத்தனமுள்ள அடியேன். அந்தோ - ஐயோ, என்ன குறைசெய்தேன் - என்ன பாபம் பண்ணினேன்; அந்தோ - ஐயோ, என்பால் - என்னிடத்தில், பாவி - பாபிஷ்டன், ஒரு புதல்வனாகி - ஒரு மகனாகி, அவதரித்தான் - பிறந்தான், எ-று.

(போ-ரை.) ஐயோ! ஐங்கமமூர்த்திகள் பசிகொண்டிருக்கின்றார்கள்; எனது உயிர்க்குயிராயிருப்பவர்கள் பசிகொண்டிருக்கின்றார்கள்; ஐயையோ! இந்நேரமட்டும் திருவமுது செய்யாமலிருக்கலாமோ? ஐயோ! நாய்க்குணமுள்ள அடியேன், மிகவும் துஷ்டத்தனமுள்ள அடியேன், ஐயோ! என்ன பாபம் பண்ணினேன்; ஐயோ! என்னிடத்தில் பாபிஷ்டன் ஒரு மகனாகிப் பிறந்தான். (௫௰)

வேண்டிப் பார்த்த விழியைப்போய் வேலாற் கிளறி விடுகேனோ
தீண்டுங் கரத்தைத் துணிக்கேனோ தின்ற வாயைக் குடைகேனோ
கோண்டங் கிருந்த குணனுடலைக் கொத்திக் கொத்தி யெறிகேனோ
வாண்ட பிரானார் பசிப்பரே யதினாம் பொழுதை யகற்றினால்.

(ப - ரை) வேண்டிப் பார்த்த - விரும்பிக் கண்ட, விழியை - கண்களை, போய் - சென்று, வேலால் - வேலாயுதத்தைக் கொண்டு, கிளறி விடுகேனோ - தோண்டி விட்டுமோ, தீண்டும் - தொட்ட, கரத்தை - கைகளை, துணிக்கேனோ - வெட்டி விட்டுமோ, தின்ற வாயை - மென்ற வாயினை, குடைகேனோ - துளைத்துவிட்டுமோ, கோள் தங்கு இருந்த குணன் - துஷ்டனுடைய, உடலை - உடம்பை, கொத்திக்கொத்தி - கொத்திக்கொத்தி, எறிகேனோ - வீசிவிட்டுமோ, அதில் - அந்தக் காரியங்களில், நாம் - நாம், பொழுதை - நேரத்தை, அகற்றினால் - போக்கினால், ஆண்ட - அடிமை கொண்டருள்கின்ற, பிரானார் - ஐங்கமமூர்த்திகள், பசிப்பரே - பசித்திருப்பார்களே, எ - று.

(போ - ரை.) விரும்பிக் கண்ட கண்களைச் சென்று வேலாயுதத்தைக்கொண்டு தோண்டிவிட்டுமோ? தொட்ட கைகளை வெட்டிவிட்டுமோ? மென்ற வாயினைத் துளைத்துவிட்டுமோ? துஷ்டனுடைய உடம்பைக் கொத்திக்கொத்தி வீசிவிட்டுமோ? அந்தக் காரியங்களில் நேரத்தைப் போக்கினால் அடிமைகொண்டருள்கின்ற ஐங்கமமூர்த்திகள் பசித்திருப்பார்களே.

(வி-ரை.) கோள்குணம்-துர்க்குணம். தங்கியிருந்தவன் - குடிகொண்டிருந்தவன்.

என்ன வயர்ந்து பயந்தன்பா லினிய வமுதஞ் சமைத்திடலு
மன்ன பத்தி யுறுதியினை யரனார் தொண்டர்க் கருள்விழியாற்
சொன்ன வளவி லதிசயித்தார் தூய வடிசில் சமைத்தளவி
லின்ன வரிபார் திருமேனிக் குவந்து திருமஞ் சனங்காய்ச்சி.

(ப - ரை.) என்ன - என்று, அயர்ந்து - சோர்ந்து, பயந்து - அஞ்சி, அன்பால் - அன்புடன், இனிய - மதுரமுள்ள, அமுதம் - அமுதினை, சமைத்து - சமையல்செய்து, இடலும் - வைத்தலும், அன்ன - அந்த, பத்தி - பக்தியின், உறுதியினை - உறுதிப் பாட்டினை, அரனார் - சிவபெருமான், தொண்டர்க்கு - சிறுத்தொண்டநாயனார்க்கு, அருள் - கிருபையுள்ள, விழியால் - திருக்கண்களினால், சொன்ன அளவில் - சொன்ன மாத்திரத்தில், அதிசயித்தார் - ஆச்சரியமடைந்தார், தூய - பரிசுத்தமாகிய, அடிசில் -

அமுதினை, சமைத்த அளவில் - சமையல்செய்தவுடனே, உன்ன அரியார் - நினைத்தற்கரிய ஜங்கமமூர்த்திகளுடைய, திருமேனிக்கு - திருமேனிக்கு, உவந்து-சந்தோஷத்துடன், திருமஞ்சனம் - ஸ்நானத்திற்குரிய ஜலத்தை, காய்ச்சி-காயவைத்து, எ-று.

(பொ - ரை.) என்று சோர்ந்து அஞ்சி அன்புடன் மதுரமுள்ள அமுதினைச் சமையல்செய்து வைத்தலும், அந்தப் பக்தியின் உறுதிப்பாட்டினைச் சிவபெருமான் சிறந்தொண்டநாயனார்க்குக் கிருபையுள்ள கண்களினால் சொன்ன மாத்திரத்தில் ஆச்சரியமடைந்தார்; பரிசுத்தமாகிய அமுதினைச் சமையல்செய்த வுடனே நினைத்தற்கரிய ஜங்கமமூர்த்திகளுடைய திருமேனிக்குச் சந்தோஷத்துடன் ஸ்நானத்திற்குரிய ஜலத்தைக் காயவைத்து.

(வி - ரை.) விழியால் சொன்ன வென்பது இலக்கணை (கண்ணால் ஜாடைகாட்டியென்றபடி). (௧௨)

அந்நீர் நன்றா யாட்டியபி னரிய சிவபூ சனைக்கிருத்தி
நன்னீர் மையினா லேவல்செய்து நம்பர்க் கமுது படைத்திடலும்
பொன்னீள் சடையார் புகலுவார் பின்னே நீர்க்குப்போய்த்தாழ்த்த
தென்னீ பயந்த மகன்பசியா லுன்னைத் தேடி யிந்நேரம்.

(ப-ரை.) அந்நீர்-அந்தவெந்நீரைக்கொண்டு, நன்றாய்-செவ்வையாக, ஆட்டியபின்-ஸ்நானஞ்செய்வித்த பிறகு, அரிய - கிடைத்தற்கரிய, சிவபூசனைக்கு - சிவபூஜை செய்தற்காக, இருத்தி - (ஆசனங்களில்) எழுந்தருளப்பண்ணி, நல் நீர்மையினால் - நன்றாக, ஏவல்செய்து - பணிவிடைசெய்து, நம்பர்க்கு - ஜங்கமமூர்த்திகளுக்கு, அமுதுபடைத்திடலும் - திருவமுதளித்தலும், பொன் நீள் சடையார்-சிவபெருமான், புகலுவார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), பின்னே - அம்மையே, நீர்க்கு - ஜலம் திரட்டிக்கொண்டுவர, போய் - போய், தாழ்த்தது - தாமதித்து வருதற்குக் காரணம், என்-யாது, நீ பயந்த மகன் - நீ பெற்ற மகன், பசியால்-பசியினால், உன்னை-உன்னை, இந்நேரம் - இந்நேரமட்டும், தேடி - பார்த்து, எ - று.

(பொ - ரை) அந்த வெந்நீரைக்கொண்டு செவ்வையாக ஸ்நானஞ் செய்வித்த பிறகு, கிடைத்தற்கரிய சிவபூஜைசெய்தற்காக ஆசனங்களி லெழுந்தருளப்பண்ணி, நன்றாகப் பணிவிடைசெய்து, ஜங்கமமூர்த்திகளுக்குத் திருவமுதளித்தலும், சிவபெருமான் சொல்வாராயினர்; எவ்வாறெனின்:—அம்மையே! ஜலம் திரட்டிக்கொண்டு வரப்போய்த் தாமதித்து வருதற்குக் காரணம் யாது? நீ பெற்ற மகன் பசியினால் உன்னை யிந்நேரமட்டும் பார்த்து.

(வி - ரை) பொன் - அழகிய. நீள் - நீண்ட. சடையார்-ஜடாபாரத்தையுடையவராகிய சிவபெருமான். பின்னே - பெண்ணே (ஆகுபெயர்). (௧௩)

அலறிப் பசியா லழைத்தங்ங னகன்றா னந்தோ வந்தோநீ
யுலகர் பிள்ளைப் பசியையறிந் தூட்டுங் கருணை காணாயோ
விலகு மகனெங் கணைந்தனனோ விரைந்து தேடி யழையவனை
நலவா தரவால் வரவணைத்து நன்று வளர்க்க வேண்டாவோ.

(ப - ரை.) பசியால் அலறி - பசியினாலழுது, அழைத்து - கூப்பிட்டு, அங்ஙன் - அப்படியே, அகன்றான் - போய்விட்டான், அந்தோ - ஐயோ, நீ - நீ, உலகர் - உலகத்தார், பிள்ளைப்பசியை - மக்களுடைய பசியை, அறிந்து - தெரிந்து, ஊட்டும்-

உண்பிக்கின்ற, கருணை - அன்பினை, காணுயோ - பார்த்ததில்லையோ, விலகு - வெளியிற்போன, மகன் - புத்திரன், எங்கு - எவ்விடம், அணைந்தனனோ-போனானோ, விரைந்து - சீக்கிரமாக, தேடி - விசாரித்துப் பார்த்து, அவனை - அவனை, அழை - கூப்பிடு, வர - மகன்வருதலும் (அவனை), நல்ல ஆதரவால் - மிகுந்த விருப்பத்துடன், அணைத்து - மார்போடு தழுவிக்கொண்டு, நன்று - செவ்வையாக, வளர்க்கவேண்டாவோ - போஷிக்க வேண்டாமோ, எ - று.

(போ-ரை.) பசியினாலழுதுக் கூப்பிட்டு, அப்படியே போய்விட்டான்; ஐயோ! நீ, உலகத்தார் மக்களுடைய பசியைத் தெரிந்துண்பிக்கின்ற அன்பினைப் பார்த்ததில்லையோ? வெளியிற் போன புத்திரன் எவ்விடம் போனானோ? சீக்கிரமாக விசாரித்துப் பார்த்து அவனைக் கூப்பிடு; மகன் வருதலும் அவனை மார்போடு தழுவிக்கொண்டு செவ்வையாகப் போஷிக்க வேண்டாமோ? (கஅ)

என்னே யென்னே யரகரா விநய மைந்தர் தமைநீக்கி
முன்னே யருந்தக் கையெழுமோ மோக மைந்தர் தமையாமு
நன்னே யத்தாற் பெற்றிலமோ நல்ல சமைக்கு நன்னாளின்
றன்னே யத்தாற் றனயருட னுண்பார் பிள்ளைத் தயாவிலிநீ.

(ப - ரை.) என்னே என்னே - என்னே யென்னே, அரகரா - ஹர: ஹரா:, விநயம் - சன்மார்க்கத்தினையுடைய, மைந்தர் தம்மை - புத்திரர்களை, நீக்கி - அகற்றிவிட்டு, முன்னே - முற்பட்டு, அருந்த - உண்ண, கையெழுமோ - கைவருமோ, மோகம் - (யாவராலும்) விரும்புதற்குரிய, மைந்தர் தம்மை - புத்திரர்களை, யாமும் - நாங்களும், நல் நேயத்தால்-மிகுந்தவிருப்பத்துடன், பெற்றிலமோ-பெற்றதில்லையோ, நல்ல-திவ்யமான பதார்த்தங்களை, சமைக்கும்-செய்து வைத்திருக்கின்ற, நல்நாளின் - சுபதினத்தில், நேயத்தால் - விருப்பத்துடன், தன் - தனது, தனயருடன் - புத்திரர்களோடு, உண்பார் - உண்ணுவார்கள், நீ-நீ, பிள்ளைத்தயாவிலி - மகன்மீது ஆசையில்லாதவளா யிருக்கின்றாய், எ-று.

(போ - ரை.) என்னே! என்னே! ஹர: ஹரா: சன்மார்க்கத்தினையுடைய புத்திரர்களை யகற்றிவிட்டு முற்பட்டுண்ணக் கைவருமோ? யாவராலும் விரும்புதற்குரிய புத்திரர்களை நாங்களும் மிகுந்த விருப்பத்துடன் பெற்றதில்லையோ? திவ்யமான பதார்த்தங்களைச் செய்து வைத்திருக்கின்ற சுபதினத்தில் விருப்பத்துடன் தனது புத்திரர்களோடு உண்ணுவார்கள்; நீ மகன் மீது ஆசை யில்லாதவளாயிருக்கின்றாய். (கக)

பரிவின் மைந்தன் பசித்தகல நமக்கே னமுது படைத்தனைபோய்த்
தெரியும் படியத் திசைதோறுந் தேடி மகனை யழையாமற்
பிரிய மிழந்து நிற்பதெல்லாம் பிழைகாண் விளிப்பா யெனநகைபா
வரியை யெனக்கு நீயேகா ணார்க்குன் மாயை யறைகின்றாய்.

(ப-ரை.) மைந்தன்-மகன், பரிவின் - வருத்தத்துடன், பசித்து - பசியடைந்து, அகல-போகவும், நமக்கு - எங்களுக்கு, அமுது படைத்தனை - அமுதுபடைத்தாய், ஏன் - (இதற்குக்காரணம்) யாது, போய் - (வெளியில்) சென்று, தெரியும்படி-(உன் மகன் காணமற்போன செய்தியை ஊரார்) அறியும்படி, அத்திசைதோறும் - (அவன் சென்ற) அந்தத் திக்குகளிலெல்லாம், தேடி - விசாரித்துப்பார்த்து, மகனை - மகனை, அழையாமல் - கூப்பிடாமலும், பிரியம் - ஆசை, இழந்தும் - இல்லாமலும், நிற்பது

எல்லாம்-சகித்திருப்பதெல்லாம், பிழை - குற்றம் (ஆதலின்), விளிப்பாய்-அழைத்துக் கொண்டு வருவாய், என்ன - என்று, நகையா - திருமுறுவல்செய்து (சொல்லுதலும் நிம்மவ்வையார்), நீ - நீ, எனக்கு-அடியேனுக்கு; அரியை-எளிதாகக் கிடைக்காதவன், ஆர்க்கு - யார்க்கு, உன் - உன்னுடைய, மாயை - மோசச் சொற்களை, அறைகின்றாய்-சொல்லுகின்றனை, எ - று.

(பொ - ரை.) வருத்தத்துடன் பசிபடைத்து போகவும், எங்களுக்கு அமுது படைத்தாய்; இதற்குக் காரணம் யாது? வெளியிற்சென்று உன் மகன் காணாமற் போன செய்தியை ஊரார் அறியும்படி, அவன் சென்ற அந்தத் திக்குகளிலெல்லாம் விசாரித்துப் பார்த்து மகனைக் கூப்பிடாமலும் ஆசையில்லாமலும் சகித்திருப்ப தெல்லாம் குற்றமாதலின் அழைத்துக்கொண்டு வருவாயென்று திருமுறுவல்செய்து சொல்லுதலும், நிம்மவ்வையார் நீ, அடியேனுக்கு எளிதாகக் கிடைக்காதவன்; யார்க்கு உன்னுடைய மோசச் சொற்களைச் சொல்லுகின்றனை? (௧௬)

பெண்ணொன் றறியா ளெனநினைந்தோ பிள்ளைக் கதைநீ பேசுகின்றாய்
திண்ண முடைய னென்னையந்தச் சிறுத்தொண் டரைப்போற் சிந்தித்த
லெண்ண மலநின் பெருந்தன்மைக் கிதுதா னியல்போ வெம்மானே
யண்ண லேயுன் னடியரகத் தடியா ணியம மறியாயோ.

(ப - ரை.) பெண்ணென்று-அடியேன் பெண்பிள்ளையென்று, அறியாள் என்ன-ஒன்றும் தெரியாதவளென்று, நினைந்தோ - எண்ணியோ, நீ - நீ, பிள்ளைக்கதை - விளையாட்டுப்பிள்ளைப்பேச்சை, பேசுகின்றாய் - பேசுகின்றாய், திண்ணம் உடையேன் என்னை - மனோத்திடத்தை யுடையவளாகிய அடியேனை, அந்தச் சிறுத்தொண்டரைப்போல் - அந்தச் சிறுத்தொண்டநாயனார் புத்ர வாஞ்சல்யத்திலுலைழைத் ததைப்போல், சிந்தித்தல் - நினைப்பது, எண்ணம் அல்ல - மதிஹீனம், நின்-உனது, பெருந்தன்மைக்கு-பெருமைக்கு; இது-இந்தக்கார்யம்;இயல்போ-தகுமோ, எம்மானே-எமது சிவபெருமானே, அண்ணலே-இறைவனே, உன்-உனது, அடியர் - சிவபக்தர்களுடைய, அகத்து அடியாள் - அகம்படியாள் பூண்டிருக்கின்ற, நியமம் - வீர விரதத்தை, அறியாயோ - பார்த்ததில்லையோ, எ - று.

(பொ - ரை.) அடியேன் பெண்பிள்ளையென்று, ஒன்றும் தெரியாதவளென்று எண்ணியோ நீ விளையாட்டுப்பிள்ளைப்பேச்சைப் பேசுகின்றாய்? மனோத்திடத்தை யுடையவளாகிய அடியேனை அந்தச் சிறுத்தொண்டநாயனார் புத்ர வாஞ்சல்யத்திலுலைழைத்ததைப்போல் நினைப்பது மதிஹீனம்; உனது பெருமைக்கு இந்தக்காரியம் தகுமோ? எமது சிவபெருமானே! இறைவனே! உனது சிவபக்தர்களுடைய அகம்படியாள் பூண்டிருக்கின்ற வீரவிரதத்தைப் பார்த்ததில்லையோ? (௧௭)

முடிய விந்த வமுதினைநீ மோகத் திங்ங னருந்தாயே
லடியொன் றுன்னை யிடவொட்டே னூர்க்குச் சமைத்தே னையனே
கொடிய குற்றஞ் செய்தோனைக் கொன்றேன் றிரும்பக் கூவென்றாற்
படியி லுயர்ந்த நின்கயிலைப் பதமே வேண்டேன் பரம்பொருளே.

(ப - ரை.) ஐயனே - ஐயனே, இந்த அமுதினை - (அருமையாகச் சமைத்துப் படைத்த) இந்தத் திருவமுதை, முடிய-முற்றிலும், நீ-நீ, மோகத்து-விருப்பத்துடன், இங்ஙன் - இவ்விடம், அருந்தாயேல் - உண்ணாமற்போவாயாயின், உன்னை - உன்னை, அடியொன்று-ஒருஅடி, இடவொட்டேன் - எடுத்துவைத்துப் போகவிடமாட்டேன்,

ஆர்க்கு - யார் பொருட்டு, சமைத்தேன் - சமையல்செய்தேன், கொடிய குற்றம் செய்தோனை - கொடும் பாவியை, கொன்றேன் - கொன்றுவிட்டேன், பரம்பொருளே - பரவஸ்துவே, திரும்ப - மறுபடியும், கூவென்றால் - அழையென்றுசொல்வாயாயின், படியில் - பூலோகவாழ்வினும், உயர்ந்த - மேலான, நின் - உன்னுடைய, கயிலைப் பதமே - சிவபதத்தையே, வேண்டேன் - விரும்பமாட்டேன், எ - று.

(போ-ரை.) ஐயனே! அருமையாகச் சமைத்துப் படைத்த இந்தத் திருவமுதை முற்றிலும் நீ விருப்பத்துடன் இவ்விடம் உண்ணுமற் போவாயாயின் உன்னை ஒரு அடி எடுத்து வைத்துப் போகவிடமாட்டேன்; யார்பொருட்டுச் சமையல்செய்தேன்? கொடும் பாவியைக் கொன்றுவிட்டேன்; பரவஸ்துவே! மறுபடியும் அழையென்று சொல்வாயாயின் பூலோக வாழ்வினுமேலான உன்னுடைய சிவபதத்தையே விரும்ப மாட்டேன்.

(வி - ரை.) கொடிய - பொல்லாத. குற்றஞ்செய்தோன் - பிழைசெய்தவன். கயிலைப்பதம் - கைலாஸபதவி. (க௪)

செய்யா வெய்ய குற்றமாஞ் சிவத்து ரோகஞ் செய்திறந்தா
னையா வந்தப் பாவியையா னறுவா யழையே னென்றலுமே
நையா நையாப் பெரிதுயிரா நாணா நாணத் தலையிறங்கா
மெய்யார் நடுக்கத் தினராகி வெருளுற் றிருந்தார் சிறுத்தொண்டர்.

(ப - ரை.) ஐயா - ஐயனே, செய்யா - யாவராலும் பண்ணத்தகாத, வெய்ய - கொடிய, குற்றமாம் - பாபமாகிய, சிவத்துரோகம் - சிவத்ரோஹத்தை, செய்து இறந்தான்-பண்ணி மாண்டுபோனான், அந்தப் பாவியை-அந்தப் பாபிஷ்டனை, யான் - அடியேன், அறுவாய் - சுத்தமாக, அழையேன் - அழைக்கமாட்டேன், என்றலும் - என்று சொல்லுதலும், சிறுத்தொண்டர் - சிறுத்தொண்டநாயனார், நையா நையா - நொந்து நொந்து, பெரிது உயிரா-பெருமூச்செறிந்து, நாணா நாணா-வெள்கி வெள்கி, தலையிறங்கா-தலைகுனிந்து, மெய் ஆர் நடுக்கத்தினராகி-உடல் நடுக்கமடைந்தவராகி, வெருள்உற்று - பயப்பட்டு, இருந்தார் - பிரமித்திருந்தார், எ - று.

(போ - ரை.) ஐயனே! யாவராலும் பண்ணத் தகாத கொடிய பாபமாகிய சிவத்ரோஹத்தைப் பண்ணி மாண்டுபோனான்; அந்தப் பாபிஷ்டனை அடியேன் சுத்தமாக அழைக்க மாட்டேனென்று சொல்லுதலும், சிறுத்தொண்ட நாயனார் நொந்து நொந்துப் பெருமூச்செறிந்து வெள்கி வெள்கித் தலைகுனிந்து மிகவும் உடல் நடுக்க மடைந்தவராகிப் பயப்பட்டுப் பிரமித்திருந்தார்.

(வி - ரை.) மெய் - உடம்பில். ஆர் - மிகுந்த. சண்டிச்செய்யுளைக் கவனிக்க:—

சிவதருமோத்தரம்.

அரிக சிரமுஞ் சிவதனத்தை யபகா ரகனை யஃதறிதே
லரிவித் திடுக விருத்திய மளித்தும் வலியா ரவராலே
யரிதே யஃது மப்புரிவிட் டகல்க வகலா துறைவாரே
லுரியா ரதிபா தகத்தவனுக் கொப்பார் நிரயத் தெய்ப்பாரே. (௧௧)

கண்டார் மொழியார் நிம்மவ்வை கருத்தி னுறுதி கண்டாரைக்
கொண்டார் பழைய கோலத்தைக் கோல மடவார் கூறுவா
ரண்டா திபகே ளுனக்கிதுதா னதிக மலக்கா னதிகர்க்கீ
தெண்டா னலக்கா ணியல்பலகா னினியோ ரேறு விண்ணப்பம்.

(ப - ரை.) கண்டு ஆர் - கற்கண்டுபோலும் மதுரம் நிறைந்த, மொழியார்-சொற்களையுடையவராகிய, நிம்மவ்வை - நிம்மவ்வையாரின், கருத்தின் உறுதி - மனோ த்ருடத்தை, கண்டு - பார்த்து, அரனார் - சிவபெருமான், பழைய - தொன்மையான, கோலத்தை - திருவுருவத்தை, கொண்டார் - எடுத்தருளினார், கோலம் - அழகிய, மடவார் - நிம்மவ்வையார், கூறுவார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), அண்ட ஆதிப - லோகநாதனே, கேள் - கேட்பாய், உனக்கு - உனக்கு, இது-இந்தக் கோலங் கொள்வது, அதிகமல்ல - பெரிய காரியமல்ல, அதிகர்க்கு - ஸர்வாதிக்யமுள்ள பரமாத்மாவுக்கு, இது - இந்தக் காரியம் பண்ணுவது, எண்ணல்ல - கணக்கல்ல, இயல்பு அல்ல - வல்லமையல்ல, இனி - இப்போது, ஏறு - திருச்செவிக்குட் புகுதற்கரிய, ஓர் விண்ணப்பம் - ஒரு விஞ்ஞாபனமுண்டு, எ - று.

(போ - ரை.) கற்கண்டு போலும் மதுரம் நிறைந்த சொற்களை யுடையவராகிய நிம்மவ்வையாரின் மனோத்ருடத்தைப் பார்த்து, சிவபெருமான் தொன்மையான திருவுருவத்தை யெடுத்தருளினார், அழகிய நிம்மவ்வையார் சொல்வாராயினர்; எவ்வாறெனின்:—லோகநாதனே! கேட்பாய்; உனக்கு இந்தக் கோலங்கொள்வது பெரிய காரியமல்ல, இந்தக் காரியம் பண்ணுவது கணக்கல்ல, வல்லமையல்ல, இப்போது திருச்செவியுட் புகுதற்கரிய ஒரு விஞ்ஞாபனமுண்டு.

(வி - ரை.) பழைய கோலமென்றது வ்ருஷபவாஹநாரூடரூபத்தை. மடவார்-மாதர். (உ0)

ஒழுகு முலைப்பா றன்னைவேண்டி யோலோ லென்னத் தாளுதறி
யழுது குழந்தை யாய்க்கரத்தா லன்பின் வருடி யருந்திமற்றும்
பழுதில் சங்கா லத்தனப்பால் பருகி யன்னைப் பயோதரத்தை
முழுது மகன்று சென்றாற்போன் மோசம் போக்கிச் செலவரிதால்.

(ப - ரை.) ஒழுகும் - சிந்துகின்ற, முலைப்பால் தன்னை - முலைப்பாலை, வேண்டி-விரும்பி, ஓல் ஓல் என்ன - ஓலோலென்று, தாள் உதறி - கால்களையுதறி, அழுது - அலறிக்கொண்டு, குழந்தையாய் - குழந்தைபோல, கரத்தால்-கைகளினால், அன்பின்-அன்புடன், வருடி - தடவி, அருந்தி - உண்டும், மற்றும் - மேலும், பழுது இல் - பரிசுத்தமாகிய, சங்கால் - சங்கினால், அ - அந்த, தனப்பால் - முலைப்பாலை, பருகி - உண்டும், அன்னை - தாயின், பயோதரத்தை - முலையை, முழுதும் - முற்றிலும், அகன்று-விட்டு, சென்றாற்போல - போன மோசச் செயலைப்போல, மோசம்போக்கி-மாயவித்தைசெய்து, செல்லவரிது - போகமுடியாது, எ - று.

(போ - ரை.) சிந்துகின்ற முலைப்பாலை விரும்பி ஓலோலென்று கால்களையுதறி யலறிக்கொண்டு குழந்தைபோல் கைகளினால் அன்புடன் தடவியுண்டும், மேலும் பரிசுத்தமாகிய சங்கினால் அந்த முலைப்பாலையுண்டும், தாயின்முலையை முற்றிலும் விட்டுப்போன மோசச்செயலைப்போல மாயவித்தை செய்து போகமுடியாது.

(வி - ரை.) பயோதரம் - தனம் (பயம் - பால். தரம் - தரித்தல்). பழுது-குற்றம். ஓல் ஓல் - துக்கக்குறிப்பு. (உக)

ஆவிக் குடலா மாதார மதனுக் காவி யாதார
மேவிக் கொளல்போற் குருலிங்க மேனி யிவற்றை விட்டுநீ
சேவுற் றிருந்த வடிவெடுத்தாற் செய்ய வந்த வருவினதாய்ப்
பாவிப் போர்க ளுன்றன்னையு மென்னையுஞ் சிரித்துப் பழிப்பாரே.

(ப - ரை.) ஆவிக்கு - உயிர்க்கு, உடல் - உடம்பு, ஆதாரம் ஆம் - ஆதாரவாகவும், அதனுக்கு - அவ்வுடம்பிற்கு, ஆவி-உயிர், ஆதாரம்-ஆதாரவாகவும், மேவிக்கொள்ளல் போல் - கலந்துகொள்வதுபோல், குருலிங்கம்-குருவுக்கு லிங்கமாதாரவாகவும் லிங்கத்திற்குக் குருவாதாரவாகவும் கலந்திருக்கின்ற, மேனியிவற்றை - திருமேனிகளாகிய இவைகளையுடைய ஜங்கமமூர்த்தத்தை, விட்டு - ஒழித்து, நீ - நீ, சேவுற்று இருந்த வடிவு - விருஷபவாஹநாரூட மூர்த்தத்தை, எடுத்தால் - கொள்வாயாயின், செய்ய - அழகுபொருந்திய, அந்த - அந்த, உருவினதாய் - ஜங்கமமூர்த்தத்தைப்போல, பாவிப்போர்கள் - பாவித்து வழிபடுகிறவர்கள், உன் தன்னையும் - உன்னையும், என்னையும் - அடியேனையும், சிரித்து - (கைகொட்டி) நகைத்து, பழிப்பாரே - இகழ்வார்களே, எ - று.

(போ-ரை.) உயிர்க்கு உடம்பு ஆதாரவாகவும் அவ்வுடம்பிற்கு உயிர் ஆதாரவாகவும் கலந்து கொள்வதுபோல் குருவுக்கு லிங்கமாதாரவாகவும் லிங்கத்திற்குக் குருவாதாரவாகவும் கலந்திருக்கின்ற திருமேனிகளாகிய இவைகளையுடைய ஜங்கமமூர்த்தத்தையொழித்து, நீ விருஷபவாஹநாரூட மூர்த்தத்தைக் கொள்வாயாயின், அழகுபொருந்திய அந்த ஜங்கமமூர்த்தத்தைப்போலப் பாவித்து வழிபடுகிறவர்கள் உன்னையும் அடியேனையும் கைகொட்டி நகைத்து இகழ்வார்களே.

(வி - ரை.) சே-இடபம். உறுதல்-ஏறுதல். இச்செய்யுளால் சிவசரணர்களுக்கு அருள்செய்யும் திருக்கோலம் ஜங்கமமூர்த்த மொன்றே யெனப் பெறப்பட்டது. ()

இந்த நிலைமைக் குடன்படே னிந்த வெகுரூ பேனுனக்கென்
சிந்தை யிடத்து முன்வடிவைச் சிறிது மிகந்த தில்லைகா
ணந்த விகற்ப மென்னிடநீ யளித்த தில்லை யறுவாக
நிந்தை யுளதோர் வடிவென்று மிலதொன் றென்று நினைக்கிலேன்.

(ப - ரை.) இந்த நிலைமைக்கு - இந்தச் செய்கைக்கு, உடன் ஆகேன்-சம்மதிக்கமாட்டேன், இந்த - இந்த, வெகு - பலவகைப்பட்ட, ரூப - வேடங்கள், உனக்கு - உனக்கு (உண்டானவிதம்), ஏன்-ஏன், என் சிந்தையிடத்து-என்னுடைய மனத்தில், முன் - நீ முன்னே (கொண்ட), வடிவை - ஜங்கமமூர்த்தத்தை, சிறிதும் - சற்றேனும், இகந்ததில்லை-பழிக்கவில்லை, அந்த-அந்த, விகற்பம்-பேதபுத்தியை, நீ-நீ, என்னிடம் - அடியேனிடத்தில், அறுவாக-சுத்தமாக, அளித்ததில்லை-கற்பிக்கவில்லை, ஓர் வடிவு - ஒரு வேடம், நிந்தையுள்ளது என்றும் - இகழ்ச்சியுடையதென்றும், ஒன்று-மற்றொரு வேடம், நிந்தையில்லதென்றும் - புகழ்ச்சியுடையதென்றும், நினைக்கிலேன் - எண்ணமாட்டேன், எ - று.

(போ - ரை.) இந்தச் செய்கைக்குச் சம்மதிக்கமாட்டேன்; இந்தப் பலவகைப்பட்ட வேடங்கள் உனக்குண்டான விதம் ஏன்? என்னுடைய மனத்தில் நீ முன்னே கொண்ட ஜங்கமமூர்த்தத்தைச் சற்றேனும் பழிக்கவில்லை; அந்தப் பேதபுத்தியை நீ அடியேனிடத்தில் சுத்தமாகக் கற்பிக்கவில்லை; ஒரு வேடம் இகழ்ச்சியுடைய தென்றும் மற்றொரு வேடம் புகழ்ச்சியுடைய தென்றும் எண்ணமாட்டேன்.

(வி - ரை.) வடிவம் - கோலம். விகற்பம் - வேற்றுமை. அளித்தல் - கொடுத்தல்.

இக்கண்மூன் றிவைக்கு மேலே யின்னமுக் கண்ணுண் டேனு
மக்கண தன்றி மற்றோ ராயிரக் கண்ணுண் டேனும்
பொக்கமா னுடர்தங் குற்றம் போம்படி போதிக் குங்கான்
மிக்கநீ முன்னங் கொண்ட வேடமே வேண்டு மன்றே.

(ப - ரை.) இக்கண் - இந்த மூன்று கண்களாகிய, இவைக்கும் - இவற்றிற்கும், மேலே-அதிகமாக, இன்னம் - இன்னும், மூக்கண் - மூன்று கண்கள், உண்டேனும் - படைத்திருப்பினும், அக்கண் அன்றி - அந்தக் கண்களுமே யல்லாமல், மற்று-வேறு, ஓர் - ஒப்பற்ற, ஆயிரம் - ஆயிரக்கணக்கான, கண் - கண்கள், உண்டேனும் - படைத்திருப்பினும், பொக்கம் - அன்புள்ள, மானுடர் - மனிதர்களுடைய, குற்றம்போம்படி - பாபம் விமோசநமாகும் பொருட்டு, போதிக்குங்கால் - ஜ்ஞானோபதேசஞ் செய்யுங்காலத்தில், மிக்க - (தேவர்களுக்கெல்லாம்) மேலான, நீ-நீ, முன்னம் - முன்னமே, கொண்ட - எடுத்தருளிய, வேடமே - ஜங்கமமூர்த்தத்தையே, வேண்டும் - விரும்புகின்றேன், எ-று.

(பொ - ரை.) இந்த மூன்று கண்களாகிய இவற்றிற்கும் அதிகமாக இன்னும் மூன்று கண்கள் படைத்திருப்பினும், அந்தக் கண்களுமே யல்லாமல் வேறு ஒப்பற்ற ஆயிரக்கணக்கான கண்கள் படைத்திருப்பினும், அன்புள்ள மனிதர்களுடைய பாபம் விமோசநமாகும் பொருட்டு ஜ்ஞானோபதேசஞ் செய்யுங்காலத்தில், தேவர்களுக்கெல்லாம் மேலான நீ, முன்னமே எடுத்தருளிய ஜங்கமமூர்த்தத்தையே விரும்புகின்றேன். (உச)

வாலிப நீல கண்டர் மகிழவே கொடுக்கப் போம்போ
தாலமார் கண்டங் கொண்டோ வணைந்தனை சேட தாசர்
சேலைநீ கேட்கு மங்கண் சென்னியிற் கங்கை யுண்டோ
பாலனூ னருந்துங் காலை பாலிலா ரணங்கு டைத்தோ.

(ப - ரை.) நீலகண்டர் - திருநீலகண்ட நாயனார்க்கு, மகிழ - மனமகிழும்படி, வாலியம்-இளமைப் பருவத்தை, கொடுக்க - அநுக்ரஹஞ்செய்யும் பொருட்டு, போம்போது - எழுந்தருள்கின்ற காலத்தில், ஆலம் ஆர் கண்டம் கொண்டோ - நீலகண்டத்துடனோ, அணைந்தனை-எழுந்தருளினாய், சேடதாசர்-சேடதாசையர் (விற்கக்கொண்டு போன), சேலை-பட்டு வஸ்த்ரத்தை, நீ நீ, கேட்கும்-(தரும்படி) கேட்கின்ற, அங்கண் - அவ்விடத்தில், சென்னியில்-திருமுடியில், கங்கையுண்டோ-கங்காநதி யிருந்ததோ, பாலன்-சிறுவனாகிய சீராளனுடைய, ஊன்-மாம்ஸத்தை, அருந்தும் காலை-திருவமுது செய்கின்ற காலத்தில், பாலில் - (வாம) பாகத்தில், ஆர் அணங்கு உடைத்தோ - உமா தேவியார் உண்டோ, எ-று.

(பொ - ரை.) திருநீலகண்டநாயனார்க்கு மனமகிழும்படி இளமைப்பருவத்தை யநுக்ரஹஞ்செய்யும் பொருட்டு எழுந்தருள்கின்ற காலத்தில், நீலகண்டத்துடனோ எழுந்தருளினாய்? சேடதாசையர் விற்கக்கொண்டு போன பட்டு வஸ்த்ரத்தை நீ தரும்படிக் கேட்கின்ற அவ்விடத்தில், திருமுடியில் கங்காநதி யிருந்ததோ? சிறுவனாகிய சீராளனுடைய மாம்ஸத்தைத் திருவமுது செய்கின்ற காலத்தில், வாம பாகத்தில் உமாதேவியார் உண்டோ?

(வி - ரை.) ஆலம் - விஷம். ஆர் - பொருந்திய. கண்டம் - ஸ்ரீ கண்டம். (உரு)

அன்றுவல் லாளன் றேவிக் காகநீ செலுங்கால் வேணி
மின்றிகழ் திங்க ளுண்டோ விரும்பிமா னக்கஞ் சாறர்
மன்றல்செய் மகளார் கூந்தல் வாங்கமுன் போங்கால் பாலத்
தோன்றிய நயனங் கொண்டோ வுற்றெனிர் பந்தர் நின்றாய்.

(ப - ரை.) அன்று - அக்காலத்தில், வல்லாளன் - வல்லாளமஹாராஜனுடைய, தேவிக்காக-தேவியார் பொருட்டு, நீ-நீ, செல்லுங்கால்-எழுந்தருளும்போது, வேணி -

ஜடாபாரத்தில், மின்திகழ்-பிரகாசிக்கின்ற, திங்கள் உண்டோ-சந்திரன் இருந்ததோ, முன்-முற்காலத்தில், மானக்கஞ்சாறர்-மானக்கஞ்சாறநாயனார், மன்றல்செய் - விவாஹஞ்செய்து கொடுக்கின்ற (காலத்தில்), மகளார்-(தமது) புத்திரியாருடைய, கூந்தல்-கூந்தலை, வாங்க -(பஞ்சவடிக்காகக்கேட்டு) பெற்றுக்கொள்ளும்பொருட்டு, போந்கால் - எழுந்தருளும்போது, பாலத்து ஒன்றிய நயனம் கொண்டோ -நெற்றிக்கண்ணுடனோ, ஒளிர்-பிரகாசிக்கின்ற, பந்தர்-திருமணப்பந்தலில், உற்றுநின்றாய் - எழுந்தருளினாய், எ-று.

(பொ - ரை.) அக்காலத்தில் வல்லாள மஹாராஜனுடைய தேவியார்பொருட்டு நீ எழுந்தருளும்போது, ஜடாபாரத்தில் பிரகாசிக்கின்ற சந்திரன் இருந்ததோ? முற்காலத்தில் விருப்பத்துடன் மானக்கஞ்சாறநாயனார் விவாஹஞ்செய்து கொடுக்கின்ற காலத்தில், தமது புத்திரியாருடைய கூந்தலைப் பஞ்சவடிக்காகக் கேட்டுப் பெற்றுக்கொள்ளும்பொருட்டு எழுந்தருளும்போது, நெற்றிக்கண்ணுடனோ பிரகாசிக்கின்ற திருமணப்பந்தலில் எழுந்தருளினாய்?

(வி - ரை.) பாலம் - நெற்றி. ஒன்றிய - பொருந்திய. நயனம்-கண். பஞ்சவடி - மயிரினால் அகலமாய்ச் செய்யப்பட்டு மார்பில் பூணூலாகத் தரிக்கப்படுகின்ற வடம்.()

தேறிய குறிப்புத் தொண்டர் சேருமத் துறைக்க ணந்தி
யேறியோ சென்று யுன்ற னிருகையின் மழுமான் கொண்டோ
வீறிய பசியான் மாறர் வீடுற்றாய் கோவ ணத்து
மாறமர் நீதி யார்பால் வாங்குநாட் புயநா லுண்டோ.

(பத - ரை.) தேறிய - மனோத்ருடத்தையுடைய, குறிப்புத்தொண்டர் - திருக்குறிப்புத்தொண்டநாயனார், சேரும் - வெளுக்கப்போகின்ற, அத்துறைக் கண் - அந்த நீர்த்துறையில், நந்தியேறியோ - வ்ருஷபவாஹநாரூடனாகியோ, சென்றாய் - எழுந்தருளினாய், வீறிய - மிகுந்த, பசியால் - பசியினால், மாறர் - இளையான்குடி மாறநாயனாருடைய, வீடு - திருமடத்திற்கு (எழுந்தருளும்போது), உன் - உனது, இரு கையில்-இரண்டு திருக்கரங்களில், மழு மான் கொண்டோ-மழுவுடனும் மானுடனுமோ, உற்றாய் - எழுந்தருளினாய், அமர்நீதியார் பால் - அமர்நீதிநாயனாரிடத்தில், கோவணத்து - கோவணத்தின்பொருட்டு, மாறு - ஈடாகப் பொருள்களை, வாங்கும் நாள் - பெற்றுக்கொள்ளும்போது, புயம் நால் - நான்கு திருத்தோள்கள், உண்டோ-இருந்தனவோ, எ-று.

(பொ - ரை.) மனோத்ருடத்தையுடைய திருக்குறிப்புத்தொண்ட நாயனார் வெளுக்கப் போகின்ற அந்த நீர்த்துறையில், வ்ருஷபவாஹநாரூடமாகவோ எழுந்தருளினாய்? மிகுந்த பசியினால் இளையான்குடிமாறநாயனாருடைய திருமடத்திற்கு எழுந்தருளும்போது, உனது இரண்டு திருக்கரங்களில் மழுவுடனும் மானுடனுமோ எழுந்தருளினாய்? அமர்நீதி நாயனாரிடத்தில் கோவணத்தின் பொருட்டு ஈடாகப் பொருள்களைப் பெற்றுக்கொள்ளும்போது, நான்கு திருத்தோள்கள் இருந்தனவோ?

(வி - ரை.) தேறிய - மனந்தெளிந்த. புயம் - புஜம் என்னும் வடசொற்றிரிபு. நந்தி - வ்ருஷபம். ஏறுதல் - ஆரோகணித்தல். (உஎ)

நின்னுை விதங்க ளான நெருங்குமந் திரங்க ளொன்றும்
பன்னுமற் றவிர்வா யையா வுனக்கெனப் படைத்த வன்ன
மென்னுணை யமுது செய்வா யென்றனு முறுவல் செய்து
பொன்னுன திருவா யாரப் புரிந்திருந் தமுது செய்தார்.

(ப - ரை.) ஐயா - ஐயனே, நின்-உன்னுடைய, நானா விதங்களான - பலவகைப் பட்ட, செருங்கு-மிகுதியாகிய, மந்திரங்கள் - தந்திரவார்த்தைகளை, ஒன்றும்-சிறிதும், பன்னுமல் - சொல்லாமல், தவிர்வாய் - விடுவாய், உனக்கு என்ன - உனக்கென்றே, படைத்த-அளித்த, அன்னம் - அமுதினை, என்ஆணை - என்மேல் ஆணைப்படி, அமுது செய்வாய் - உண்ணுவாய், என்றலும் - என்று சொல்லுதலும் (சிவபெருமான்), முறுவல்செய்து - திருமுறுவல்செய்து, புரிந்து - விருப்பத்துடன், இருந்து - தங்கி, பொன்றுன - அழகுபொருந்திய, திருவாய் ஆர-திருவாய் நிறைய, அமுதுசெய்தார் - உண்டருளினார், எ-று.

(பொ - ரை.) ஐயனே! உன்னுடைய பலவகைப்பட்ட மிகுதியாகிய தந்திர வார்த்தைகளைச் சிறிதும் சொல்லாமல் விடுவாய்; உனக்கென்றே அளித்த அமுதினை என் மேல் ஆணைப்படி யுண்ணுவாயென்று சொல்லுதலும், சிவபெருமான் திருமுறு வல்செய்து விருப்பத்துடன் தங்கி, அழகுபொருந்திய திருவாய் நிறைய உண் டருளினார். (உஅ)

அந்தமொன் றில்லார் தொண்டர்க் கறைகுவார் தண்டி யாதி
முந்தையர் நம்பொ ருட்டால் முனிந்துதந் தைபர்கள் மக்க
ளாந்தவே கொன்றார் மற்று நாமளித் தனவும் பெற்றார்
இந்தநிம் மவ்வை பத்தி யினிமைகண் டாயோ வென்று.

(ப - ரை.) அந்தம் - முடிவென்பது, ஒன்று-சற்றும், இல்லார்-இல்லாதவராகிய சிவபெருமான், தொண்டர்க்கு-சிறுத்தொண்டநாயனார்க்கு, அறைகுவார் - சொல்வா ராயினர் (எவ்வாறெனின்), தண்டி-சண்டேசநாயனார், ஆதி-முதலாகிய, முந்தையர் - முன்னோர்கள், நம் பொருட்டால் - நமது நிமித்தமாக, முனிந்து - கோவித்து, தந்தையர்கள் - பிதாக்களையும், மக்கள் - பிள்ளைகளையும், நந்த - சாம்பமு, கொன்றார்-கொன்றார்கள், மற்றும் - மேலும், நாம் - நாம், அளித்தனவும் - அநுக்ரஹஞ்செய்த வரங்களையும், பெற்றார் - வாங்கிக்கொண்டார்கள், இந்த - இந்த, நிம்மவ்வை - நிம்மவ்வையாருடைய, பத்தி - பக்தியின், இனிமை - விசேஷத்தை, கண்டாயோ - பார்த்தாயோ, என்று - என்று, எ - று.

(பொ-ரை.) முடிவென்பது சற்றுமில்லாதவராகிய சிவபெருமான் சிறுத்தொண்ட நாயனார்க்குச் சொல்வாராயினர்; எவ்வாறெனின்:— சண்டேசநாயனார் முதலாகிய முன்னோர்கள் நமது நிமித்தமாகக் கோவித்துப் பிதாக்களையும் பிள்ளைகளையும் சாம்பமுக் கொன்றார்கள்; இந்த நிம்மவ்வையாருடைய பக்தியின் விசேஷத்தைப் பார்த்தாயோ? என்று. (உகூ)

நாமிவட் கினிய தெல்லா நல்குது மென்னி லொன்றுங்
காமியாள் சற்று மன்பிற் கருத்தினுங் கருதாள் பாராய்
சேமமா மமல பத்தி செய்யுநிம் மவ்வை செய்தி
பாமலாப் பதங்க ளெல்லா மிலயமென் றிதயத் தெண்ணாள்.

(ப - ரை.) நாம் - நாம், இவட்கு - இந்த அம்மாளுக்கு, இனியதுஎல்லாம் - வேண்டிய வரங்களெல்லாவற்றையும், நல்குதும் என்னில் - அநுக்ரஹஞ்செய்வோ மென்றால், ஒன்றும் - சற்றும், காமியாள் - விரும்பமாட்டாள், அன்பில் - விருப்பத் துடன், கருத்தினும் - மனத்திலும், சற்றும் - சிறிதும், கருதாள்-நினைக்கமாட்டாள், சேமமாம் - (உயிர்) காவலாகிய, அமல - பரிசுத்தமான, பத்தி-பக்தியை, செய்யும் - பண்ணுகின்ற, நிம்மவ்வை - நிம்மவ்வையாருடைய, செய்தி-செய்கையை, பாராய் -

பார்ப்பாய், யாம்-நாம், அல்லா-அல்லாத, பதங்களெல்லாம்-பதவிகள் எல்லாம், இலயம் என்று - அழியுந்தன்மையுடையதென்று, இதயத்தில் - மனத்தில், எண்ணாள்-நினைக்க மாட்டாள், எ - று.

(போ - ரை.) நாம் இந்த அம்மாளுக்கு வேண்டிய வரங்களெல்லாவற்றையும் அநுக்ரஹஞ் செய்வோமென்றால் சற்றும் விரும்பமாட்டாள்; விருப்பத்துடன் மனத்திலும் சிறிதும் நினைக்கமாட்டாள்; உயிர்க்காவலாகிய பரிசுத்தமான பக்தியைப் பண்ணுகின்ற இம்மவ்வையாருடைய செய்கையைப் பார்ப்பாய்; நாமல்லாத பதவிகளெல்லாம் அழியுந் தன்மையுடையதென்று மனத்தில் நினைக்கமாட்டாள்.

(வி-ரை.) யாமல்லாப் பதங்களென்றது சிவபதமல்லாத மற்ற ப்ரஹ்ம விஷ்ணுக்கள் முதலாகிய தேவபதவிகளை. இதயம்-ஹ்ருதயமென்னும் வடசொற்றிரிபு. இச்செய்யுள் நிஷ்காம்ய பூஜையை ஓதவிற்று. லயம் என்பது முதற்கண் இகரம்பெற்று இலயமென்றாயிற்று. (௩௰)

குற்ற முற்றார் தமைக்கோறல் குற்ற மல்லக் கொடியார்தமை
மற்றுந் திரும்ப வழையென்ன மாட்டே னென்ற வாய்மையுநன்
றுற்ற யானிற் கிதத்தவையே துரைப்பாய் தருது மெனவொல்லாள்
பெற்ற பத்தி யரிதென்று பிரியத் துவந்து கொண்டாடி.

(ப - ரை.) குற்றம் உற்றார் தம்மை - சிவத்ரோஹிகளை, கோறல்-கொல்லுதல், குற்றமல்ல - பாபகார்யமல்ல, கொடியார் தம்மை - பாபிஷ்டர்களை, மற்றும் - மேலும், திரும்ப - மறுபடியும், அழை - அழைப்பாய், என்ன - என்று கட்டளையிடுதலும், மாட்டேன்-அழைக்கமாட்டேன், என்ற-என்று சொன்ன, வாய்மையும்-சொல்லும், நன்று - நல்ல கார்யமே, உற்ற - (இங்கே) வந்திருக்கின்ற, யான் - நான், நிற்கு - உனக்கு, இதத்தவை - வேண்டிய வரங்கள், ஏது - யாது, உரைப்பாய் - சொல்வாய், தருதும் - அநுக்ரஹஞ்செய்வோம், என்ன - என்று சொல்லினும், ஒல்லாள்-இணங்க மாட்டாள், பெற்ற - அடைந்திருக்கின்ற, பத்தி - பக்தி, அரிது என்று - அருமையானதென்று, பிரியத்து - அன்புடன், உவந்து - சந்தோஷித்து, கொண்டாடி - மெச்சிக் கொண்டு, எ-று.

(போ - ரை.) சிவத்ரோஹிகளைக் கொல்லுதல் பாபகார்யமல்ல; பாபிஷ்டர்களை மேலும் மறுபடியும் அழைப்பாயென்று கட்டளையிடுதலும், அழைக்கமாட்டேனென்று சொன்ன சொல்லும் நல்ல கார்யமே; இங்கே வந்திருக்கின்ற நான் உனக்கு வேண்டிய வரங்கள் யாது? சொல்வாய், அநுக்ரஹஞ்செய்வோமென்று சொல்லினும் இணங்கமாட்டாள்; அடைந்திருக்கின்ற பக்தி யருமையானதென்று அன்புடன் சந்தோஷித்து மெச்சிக்கொண்டு.

(வி - ரை.) குற்றம் உற்றார் தம்மை - குற்றவாளிகளை. கொடியர் தம்மை - கொடியர்களை. (௩௧)

இப்படி நம்பா லன்பி னிருமையோ ரனந்தர் நீயே
யொப்பெனக் கில்லை யென்னவுனைவியந் தனையென் றோதி
யப்படி யில்லா நேயத் தரியநிம் மவ்வை மைந்த
னப்பொழு தெழும்ப வத்த னங்கயி லாயஞ் சேர்ந்தான்.

(ப - ரை.) இப்படி - இவ்விதமாக, நம்பால் - நம்மிடத்தில், அன்பின் - பக்தி செய்வதில், இருமையோர் - மேன்மையடைந்த சரணர்கள், அனந்தர் - அளவில்லாத

பேர்கள் (இருக்கிறார்கள்); நீ - நீ; எனக்கு - எனக்கு; ஒப்பு இல்லை-நிகரில்லை, என்ன - என்று, உன்னை - உன்னை, வியந்தனை - மெச்சிக்கொண்டாய், என்று - என்று, ஓதி - சொல்லி; அப்படி - அவ்வாறு; இல்லாத - மெச்சிக்கொள்ளாத, நேயத்து - அன்பில், அரிய - சிறந்த, நிம்மவ்வை - நிம்மவ்வையாரின், மைந்தன் - மகன், அப்பொழுது - அந்தக் காலத்தில், எழும்ப - (உயிர்பெற்று) எழுந்து வருதலும், அத்தன் - சிவபெருமானது, அம் - அழகிய, கயிலாயம் - ஸ்ரீ மஹாகைலாஸத்தை, சேர்ந்தான்-அடைந்தான், எ - று.

(பொ - ரை.) இவ்விதமாக நம்மிடத்தில் பக்திசெய்வதில் மேன்மையடைந்த சரணர்கள் அளவில்லாத பேர்களிருக்கிறார்கள்; நீ எனக்கு நிகரில்லையென்று உன்னை மெச்சிக்கொண்டாயென்றுசொல்லி, அவ்வாறு மெச்சிக்கொள்ளாத நிம்மவ்வையாரின் மைந்தன் அந்தக் காலத்தில் உயிர்பெற்று எழுந்துவருதலும்,சிவபெருமானது அழகிய ஸ்ரீ மஹாகைலாஸத்தை யடைந்தான். (கூஉ)

ஆசிலா விலிங்க பூசை யரியமா தவத்தர் பூசை
பேசினற் பதத்து மேலாம் பெரியதென் றொருமை நெஞ்சி
னேசியா விருந்தாள் மன்னி நிம்மவ்வை நித்த னன்பர்
மாசிய லகந்தை சேரின் வருங்குற்றம் வசவ கேண்மோ.

(ப - ரை.) ஆசு இல்லா - பாபவிமோசநத்திற்குரிய, இலிங்கபூசை - இஷ்டலிங்கார்ச்சனையும்; அரிய - சிறந்த, மாதவத்தர்பூசை - ஜங்கமாராதனையும், பேசின் - சொல்லுமிடத்து, நால் பதத்தும் - நான்கு பதவிகளினும், மேலாம் பெரியது - மிகச் சிறந்தது, என்று - என்று; ஒருமை நெஞ்சில் - மனோத்ருடத்துடன், நேசியா - அன்பு செய்து, நிம்மவ்வை - நிம்மவ்வையார், மன்னி - நிலைபெற்று, இருந்தாள் - வாழ்ந்திருந்தாள், நித்தன் அன்பர் - சிவபக்தர், மாசு இயல் - குற்றமுள்ள, அகந்தை - அஹங்காரத்தை, சேரின் - அடைவார்களாயின், குற்றம் வரும் - பாபமுண்டாகும், வசவ - வசவண்ணனே, கேள் - கேட்பாயாக (என்று மடிவாலமாச்சையர் மற்றொரு சிவசரணருடைய சரித்திரத்தைச் சொல்லத்தொடங்கினர் (எவ்வாறெனின்), எ-று.

(பொ - ரை.) பாபவிமோசநத்திற்குரிய இஷ்டலிங்கார்ச்சனையும் சிறந்த ஜங்கமாராதனையும் சொல்லுமிடத்து நான்கு பதவிகளினும் மிகச்சிறந்ததென்று, மனோத்ருடத்துடன் அன்பு செய்து நிம்மவ்வையார் நிலைபெற்று வாழ்ந்திருந்தாள்; சிவபக்தர் குற்றமுள்ள அஹங்காரத்தை யடைவார்களாயின் பாபமுண்டாகும்; வசவண்ணனே! கேட்பாயாக வென்று மடிவாலமாச்சையர் மற்றொரு சிவசரணருடைய சரித்திரத்தைச் சொல்லத்தொடங்கினர்; எவ்வாறெனின்.

(வி - ரை.) நால் பதம் என்றது ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூபம், ஸாயுஜ்ய பதவிகளே! இவற்றிற்கு மேற்பட்டது தாஸோஹமாம். (கூகூ)

நிம்மவை புராணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - அ௰கூ.

சிவமயம்.

# அலாயுதர் புராணம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அங்கண னங்கண கன்றுறு தொண்டரொ டன்பர்கள் வேடமொடே
யங்கர கிங்கர ராகு மலாயுத ரம்மனை சாருதலுந்
தங்கிய மாதவர் தாள்கள் பணிந்துயர் தம்பி ரியத்துடனே
யிங்கித பாதம் விளக்கின ராதன மெய்த விருத்தியபின்.

(ப - ரை.) அங்கண்ணன்-சிவபெருமான், அங்கண்-(நிம்மவ்வையாருடைய) திருமடத்தினின்றும், அகன்று - சென்று, உறு - தம்முடனிருக்கின்ற, தொண்டரொடு - சிறுத்தொண்ட நாயனருடன், அன்பர்கள் வேடமொடு - ஜங்கமக் கோலங்களுடன், அங்கு-அவ்விடத்தில், அரகிங்கரராகும் - சிவசரணராகிய, அலாயுதர் - அலாயுதையருடைய,அம்-அழகிய, மனை - திருமடத்தை, சாருதலும் - சேர்ந்தருளுதலும், தங்கிய- அவ்விடத்திருந்த, மாதவர்-சிவசரணராகிய அலாயுதையர், தாள்கள் - (ஜங்கமமூர்த்திகளின்) திருவடிகளை, பணிந்து - ஸாஷ்டாங்கமாக வணங்கி, உயர்-அதிகரித்த, தம் - தமது, பிரியத்து - பக்தியுடன், இங்கிதம் - மநோபீஷ்டத்தை யடைதற்குரிய, பாதம் - திருவடிகளை, விளக்கினர் - கழுவி, ஆதனம் - ஆசனங்களில், எய்த யிருத்திய பின் - எழுந்தருளச்செய்த பிறகு, எ-று.

(போ-ரை.) சிவபெருமான் நிம்மவ்வையாருடைய திருமடத்தினின்றும் சென்று தம்முடனிருக்கின்ற சிறுத்தொண்டநாயனருடன் ஜங்கமக்கோலங்களுடன் அவ்விடத்தில் சிவசரணராகிய அலாயுதையருடைய அழகிய திருமடத்தைச் சேர்ந்தருளுதலும், அவ்விடத்திருந்த சிவசரணராகிய அலாயுதையர் ஜங்கமமூர்த்திகளின் திருவடிகளை ஸாஷ்டாங்கமாக வணங்கி, அதிகரித்த தமது பக்தியுடன் மநோபீஷ்டத்தை யடைதற்குரிய திருவடிகளைக் கழுவி ஆசனங்களி லெழுந்தருளச் செய்தபிறகு.

(வி - ரை.) கிங்கரர்-தொண்டர். விளக்கினர்-முற்றெச்சம். மாதவர்-பெருந்தவத்தினர். இங்கிதம் - கருத்து. (க)

அத்த ருரைத்தருள் வாரெம திச்சை யறிந்துள மாதவரோ
டொத்து நமக்கித மாகிய பத்த ருழிக்குறு வோமவரு
நித்த கரத்தல லிங்கம தென்ன நினைத்தெமை யேநினைவா
ரித்திற முற்றவர் தம்மையு நாமு மெழிற்பெற வேபுகழ்வோம்.

(ப - ரை.) அத்தர் - தந்தையாகிய சிவபெருமான், உரைத்து அருள்வார் - (க்ஷேமலாபங்களை விசாரித்து மதுர வசனங்களினால்) சொல்லியருள்வாராயினர் (எவ்வாறெனின்), எமது - நமது, இச்சை - மநோபீஷ்டத்தை, அறிந்து உள்ள - குறிப்பாகத்தெரிந்துகொண்டு நிறைவேற்றுகின்ற, மாதவரோடு-ஜங்கமமூர்த்திகளும், நமக்கு-நமக்கு, ஒத்து-மனமிசைந்து, இதமாகிய-விருப்பமாக நடந்துகொள்கின்ற.

பத்தர் - சிவபக்தர்களும், உழிக்கு-இருக்கின்ற விடங்களில், உறுவோம்-செல்வோம், அவரும் - அவர்களும், நித்தம் - அழிவில்லாத, சரத்தல லிங்கம் என்ன - இஷ்டலிங்க மூர்த்தியைப்போலவே, நினைத்து - பாவித்து, எம்மையே - நம்மையே, நினைவார் - தியானிப்பார்கள், இத்திறம் உற்றவர் தம்மையும் - இப்படிப்பட்டவர்களையும், நாமும்- நாமும், எழில் பெற - அழகாக, புகழ்வோம் - மெச்சிக்கொள்வோம் எ-று.

(போ - ரை.) தந்தையாகிய சிவபெருமான் க்ஷேம லாபங்களை விசாரித்து மதுர வசனங்களிற் சொல்லி யருள்வாராயினர்; எவ்வாறெனின்:— எமது மனோபீஷ்டத்தைக் குறிப்பாகத் தெரிந்துகொண்டு நிறைவேற்றுகின்ற ஜங்கமமூர்த்திகளும், நமக்கு மனமிசைந்து விருப்பமாக நடந்து கொள்கின்ற சிவபக்தர்களு மிருக்கின்ற விடங்களிற் செல்வோம்; அவர்களும் அழிவில்லாத இஷ்டலிங்க மூர்த்தியைப் போலவே பாவித்து, நம்மையே தியானிப்பார்கள்; இப்படிப்பட்டவர்களையும் நாமும் அழகாக மெச்சிக்கொள்வோம்.

(வி - ரை.) சரத்தல லிங்கமென்றதனால் இஷ்டலிங்கமூர்த்தியைக் குறித்தது. இதம் - ஹிதம் என்னும் வடசொற்றிரிபு. உழி - ஏழனுருபு (இடப்பொருளது). (௨)

உன்னிய சேர னுடன்சப சைய னுறுங்கரு வூரபயன்
சென்னய னன்புறு பொம்மை யன்ஞான சிகாமணி சம்பந்த
னின்னவ ரேமுத லாகிய பத்தர்க ளெம்மை யருச்சனைசெய்
தன்னிய மின்றி யிருக்கு மவர்க்கித மாகு மருந்தவர்யாம்.

(ப - ரை.) உன்னிய-(சிவாநுபூதிமான்களென்று) நினைக்கப்பட்ட, சேரனுடன்- சேரமான்பெருமானாயனாரும், சபசையன் - சிவபசையரும், கருர் உறும் - திருக் கருவையிலுள்ள, அபயன்-அநபாய சோழரும், சென்னயன்-மாதரசென்னையரும், அன்பு உறு - அன்புள்ள, பொம்மையன் - பாதறூர் பொம்மிதேவரும், ஞானசிகாமணி சம்பந்தன் - திருஞானசம்பந்தசுவாமிகளும், இன்னவர்-(ஆகிய) இப்படிப்பட்டவர்கள், முதலாகிய-தொடக்கமாகிய, பக்தர்கள்-சிவசரணர்கள், எம்மை - நம்மை, அருச்சனை செய்து - பூஜித்து, அன்னியம் இன்றி - அபேதமாய், இருக்கும் அவர்க்கு - பரமாநந்த சுகத்துடன் வாழ்பவர்களுக்கு, யாம் - நாம், இதம் ஆகும் - விரும்புதற்குரிய, அரு - கிடைத்தற்கரிய, தவர் - ஜங்கமமூர்த்திகளாவோம், எ - று.

(போ - ரை.) சிவாநுபூதிமான்களென்று நினைக்கப்பட்ட சேரமான் பெருமா ளாயனாரும், சிவபசையரும், திருக்கருவையிலுள்ள அநபாயசோழரும், மாதரசென் னையரும், அன்புள்ள பாதறூர் பொம்மிதேவரும், திருஞானசம்பந்தசுவாமிகளுமாகிய இப்படிப்பட்டவர்கள் தொடக்கமாகிய சிவசரணர்கள் நம்மைப்பூஜித்து அபேதமாய்ப் பரமாநந்த சுகத்துடன் வாழ்பவர்களுக்கு நாம் விரும்புதற்குரிய கிடைத்தற்கரிய ஜங்கம மூர்த்திகளாவோம்.

(வி - ரை.) ஞானசிகாமணி - ஞானசூளாமணி. (௩.)

யாமறி யாவுல கங்க ளருந்தவ ரின்புறு பத்தருமிப்
பூமிசை யின்றில வெம்மறி யாதுள புண்ணிய ருமிலகா
ளூழுறும் வேலை தரைக்குளி யங்குத ளுளு மனேகமதாங்
காமுறு மன்பரை பொப்புது மல்லர் கணங்களை யோநினையேம்.

(ப - ரை.) யாம் - நாம், அறியா - பார்க்காத, உலகங்கள் - தேசங்களும், அரு - மேன்மையான, தவர் - ஜங்கமமூர்த்திகளும், இன்பு உறு - அன்புள்ள, பத்தரும் - சிவபக்தர்களும், இப் பூமிசை - இவ்வுலகத்தில், இன்று - இப்போது, இல - இல்லை, எம் - நம்மை, அறியாது உள்ள-தெரியாமலிருக்கின்ற, புண்ணியரும்-தர்மசீலர்களும், இல்லை - இல்லை, நாம் - நாம், உறும் - செய்கின்ற, வேலை - தொழில், தரைக்குள் - பூமியில், நாளும்-தினந்தோறும், இயங்குதல்-சஞ்சரித்தலாம், காமம் உறும்-அன்புள்ள, அனேகமாம் - அநேகமாகிய, அன்பரை-சிவபக்தர்களை, நப்புதும் - அங்கீகரிப்போம், அல்லர் கணங்களை - துர்மார்க்கர்களை, நினையேம் - விரும்பமாட்டோம். எ-று.

(பொ-ரை.) நாம் பார்க்காத தேசங்களும், மேன்மையான ஜங்கமமூர்த்திகளும், அன்புள்ள சிவபக்தர்களும் இவ்வுலகத்தில் இப்போது இல்லை; நம்மைத் தெரியாமலிருக்கின்ற தர்மசீலர்களும் இல்லை; நாம் செய்கின்ற தொழில் பூமியில் தினந்தோறும் சஞ்சரித்தலாம்; அன்புள்ள அநேகமாகிய சிவபக்தர்களை யங்கீகரிப்போம்; துர்மார்க்கர்களை விரும்பமாட்டோம். (ச)

இம்முறை யேயுறு நாள்க ளகற்றுது மெம்மை வளர்ப்பவரு
நம்மிட சித்த மறிந்து நமக்கித நல்லவை யீபவருஞ்
செம்மை நெறிச்சிவ பத்தர் மயேசர் திருந்து திருச்செங்காட்
டம்ம கிமைத்தல முற்றரு ளாடி மரற்கதி கத்தொண்டன்.

(ப - ரை.) இம்முறை - இவ்வாறு, உறும் - (நமக்கு) உண்டாயிருக்கின்ற, நாள்கள் - தினங்களையெல்லாம், அகற்றுதும் - கழிப்போம், எம்மை - நம்மை, வளர்ப்பவரும் - போஷிப்பவர்களும், நம்மிட - நம்முடைய, சித்தம் - மனத்தை, அறிந்து - தெரிந்து, நமக்கு - நமக்கு, இதம் - வேண்டிய, நல்ல - நல்ல உணவுகளை, ஈபவரும் - கொடுப்பவர்களுமாகிய, செம்மை நெறி - சன்மார்க்கத்தையுடைய, சிவபத்தர் - சிவபக்தர்களும், மயேசர் - மாஹேஸ்வரர்களும், திருந்து - ஒழுங்குடன் வாழ்கின்ற, அ - அந்த, மகிமை - பெருமைபொருந்திய, திருச்செங்காட்டுத்தலம் - திருச்செங்காட்டங்குடியில், உற்று - தோன்றி, அருள் நாடும் - க்ருபாகடாக்ஷத்தையுடைய, அரற்கு - சிவபெருமானுக்கு, அதிக-சிறந்த, தொண்டன்-பக்தனாகிய சிறுத்தொண்டன். எ-று.

(பொ - ரை.) இவ்வாறு நமக்கு உண்டாயிருக்கின்ற தினங்களையெல்லாம் கழிப்போம்; நம்மைப் போஷிப்பவர்களும், நம்முடைய மனத்தைத்தெரிந்து நமக்குவேண்டிய நல்ல உணவுகளைக் கொடுப்பவர்களுமாகிய சன்மார்க்கத்தையுடைய சிவபக்தர்களும், மாஹேஸ்வரர்களும் ஒழுக்குடன் வாழ்கின்ற அந்தப் பெருமைபொருந்திய திருச்செங்காட்டங்குடியில் தோன்றி, க்ருபாகடாக்ஷத்தையுடைய சிவபெருமானுக்குச் சிறந்த பக்தனாகிய சிறுத்தொண்டன். (டு)

ஈசன தன்ப ரெனிற்பத மீதி லிறைஞ்சி யிதத்தமுத
நேச முடன்றின நல்கு மவன்றிட நெஞ்சி னிகழ்ந்தநலந்
தேச ரறிந்திட நாத னருந்தவ தேசிக னாகவனைந்
தாசை தரும்புதல் வர்க்கறி யாக வமைத்திடு வாயெனினும்.

(ப-ரை.) ஈசனது அன்பர் - சிவபக்தர்கள், எனில் - என்றால், பதம் - அவர்கள் பாதங்களின், மீதில் - மேல், இறைஞ்சி - (விழுந்து ஸாஷ்டாங்கமாக) வணங்கி, இதத்து - விரும்புதற்குரிய, அமுதம் - அமுதினை, நேசமுடன் - பக்தியுடன், தினம் நாடோறும், நல்கும்-படைப்பான், அவன் - அவனுடைய, திடம் நெஞ்சில் நிகழ்ந்த -

மனோத்ருடத்தினாலுண்டாகிய, நலம் - பலனை, தேசர் - உலகத்தார், அறிந்திட - தெரிந்துகொள்ளும்பொருட்டு, நாதன் - சிவபெருமான், அரு - காண்பதற்கருமையாகிய, தவதேசிகனாக-ஜங்கமமூர்த்திகளாக, அணைந்து - எழுந்தருளி, ஆசைதரும் - அன்புள்ள, புதல்வர்-குமாரனை, கறியாக-கறியமுதாக, அமைத்திடுவாய் - சமைத்துப் படைப்பாய், என்னலும் - என்றுகேட்டலும், எ - று.

(பொ-ரை.) சிவபக்தர்களென்றால் அவர்களுடைய பாதங்களின்மேல் விழுந்து ஸாஷ்டாங்கமாக வணங்கி, விரும்புதற்குரிய அமுதினைப் பக்தியுடன் நாடோறும் படைப்பான்; அவனுடைய மனோத்ருடத்தினாலுண்டாகிய பலனை உலகத்தார் தெரிந்துகொள்ளும் பொருட்டு, சிவபெருமான் காண்பதற்கருமையாகிய ஜங்கமமூர்த்திகளாக எழுந்தருளி,அன்புள்ளகுமாரனைக் கறியமுதாகச் சமைத்துப் படைப்பாயென்று கேட்டலும். (௬)

அவ்வுரை கொண்டரு மைந்தனென் றுமல ரிந்துயர் பத்தியினாற்
றிவ்விய வின்சுவை சேர்கறி செய்து தெளிந்து படைத்திடலுஞ்
செவ்வி யமைந்தனு மங்க ணுறும்படி செய்தன னன்பனுடன்
வவ்விய சுற்றமு மங்கயி லைக்கண் மகிழ்ந்துற வைத்தனனால்.

(ப-ரை.) அ - அந்த, உரை - வார்த்தையை, கொண்டு - (சிரத்தின்மேல்) தாங்கி, அரு - அருமையாகிய, மைந்தன் - மகன், என்றுமல - என்று சற்றும் யோசியாமல், அரிந்து - அறுத்து, உயர்-சிறந்த, பத்தியினால்-பக்தியுடன், திவ்வியம் - பரிசுத்தமும், இன்சுவைசேர் - மதுரமு முள்ளதாகிய, கறி - கறியமுது, தெளிந்து-மனோத்ருடத்துடன், செய்து-ஆக்கி, படைத்திடலும்-அளித்தலும், செவ்விய-அழகிய, மைந்தனும் - மகனும், அங்கண் - அவ்விடத்தில், உறும்படி-உயிர் பெற்று வரும்படி, செய்தனன் - பண்ணியருளி, அன்பனுடன் - சிறந்தொண்ட பக்தனும், வவ்விய - அவனைச் சேர்ந்திருக்கின்ற, சுற்றமும் - பந்துக்களும், அம் - அழகிய, கயிலைக்கண் - ஸ்ரீமஹா கைலாஸத்தில், மகிழ்ந்து - சந்தோஷத்துடன், உற-வாழும்படி, வைத்தனன்-சேர்த்தருளினன், எ-று.

(பொ - ரை.) அந்த வார்த்தையைச் சிரத்தின்மேல் தாங்கி, அருமையாகிய மகனென்று சற்றும் யோசியாமல் அறுத்து, சிறந்த பக்தியுடன் பரிசுத்தமும் மதுரமுமுள்ளதாகிய கறியமுது மனோத்ருடத்துடன் ஆக்கி யளித்தலும், அழகிய மகனும் அவ்விடத்தில் உயிர் பெற்று வரும்படிப் பண்ணியருளி, சிறந்தொண்ட பக்தனும் அவனைச் சேர்ந்திருக்கின்ற பந்துக்களும் அழகிய ஸ்ரீமஹாகைலாஸத்தில் சந்தோஷத்துடன் வாழும்படிச் சேர்த்தருளினன். (௭)

மண்ணிடை யிப்படி பத்திசெய் பத்தர் மகத்துவ நல்லதலா
னுண்ணிய பத்தி விசேட மிருந்து நுவன்றதி லென்னெனலுந்
திண்ணிய ராகு மனோரத நீதென செய்தி சிவாயசிவா
வெண்ணிய வித்தொழில் புண்ணிய மோவிட வித்தை யுரைக்குமதென்.

(ப - ரை.) மண்ணிடை-உலகத்தில், இப்படி-இவ்விதமாக, பத்திசெய்-அன்பு செய்கின்ற, பத்தர்-சிவபக்தருடைய, மகத்துவம் - பெருமையே, நல்லது அல்லால் - பெருமையல்லாமல், நுண்ணிய - அற்பமாகிய, பத்தி - பக்தியின், விசேடம்-உயர்ச்சி, இருந்தும் - உண்டாயிருப்பினும், நுவன்றதில் - புகழ்வதனாலுண்டாகின்ற பயன், என் - யாது, என்னலும் - என்று சொல்லுதலும், திண்ணியராகும் மனோத்ருடத்தை

யுடைய, அலாயுதர்-அலாயுதையர் ஈது-இது, என்ன செய்தி-என்ன செய்கை, சிவாய சிவா-சிவசிவா, எண்ணிய - (பெருமையாக) நினைத்த, இத்தொழில்-இந்தச் செய்கை, புண்ணியமோ - தர்மமோ, விடா-ஆர்த்தனே, இத்தை-இந்தப் பாவச்செய்கையை, உரைக்குமது - புகழ்வதனா லுண்டாகின்ற பயன், என் - யாது, எ-று.

(பொ - ரை.) உலகத்தில் இவ்விதமாக அன்பு செய்கின்ற சிவபக்தருடைய பெருமையே பெருமையல்லாமல் அற்பமாகிய பக்தியின் உயர்ச்சியுண்டாயிருப்பினும் புகழ்வதனாலுண்டாகின்ற பயன் யாது? என்று சொல்லுதலும், மனோத்ருடத்தை யுடைய அலாதையர், இது என்ன செய்கை? தர்மமோ? அார்த்தமோ! இந்தப் பாவச்செய்கையைப் புகழ்வதனாலுண்டாகின்ற பயன் யாது? (அ)

வெங்குண ராகிய துங்க வரக்கர் விரும்பி யருந்தலலாற்
சங்கரன் மானிடர் வெந்தசை தேட றகும்படி யோகெடுவா
யங்கவ னன்ப னிடத்துறு மைந்தனு மவ்வ ரனன்பனவன்
பங்கமி லாக மரிந்திடு தாதை பரிந்துசெய் பத்தியதென்.

(ப - ரை.) துங்க வெம் குணராகிய-பரமதுஷ்டர்களாகிய, அரக்கர்-ராக்ஷஸர்கள், விரும்பி - விருப்பத்துடன், அருந்தல் - உண்ணுதலே, அல்லால் - அல்லாமல், சங்கரன் - சிவபெருமான், வெம் - கோரமான, மானிடர் தசை - நரமாம்ஸத்தை, தேடல் தகும்படியோ - பார்க்கலாமோ, கெடுவாய் - ஆ! கெடுவாய், அங்கண்ணன் அன்பனிடத்து - சிவபக்தனிடத்தில், உறும் - உண்டாயிருக்கின்ற, மைந்தனும் - மகனும், அ-அந்த, அரன் அன்பன்-சிவபக்தனே யாவான், அவன்-அவனுடைய, பங்கமில் - பரிசுத்தமாகிய, ஆகம் - உடம்பை, அரிந்திடு - அறுத்துச் சமைத்துப் படைத்த, தாதை - தந்தை, பரிந்து - அன்புடன், செய் - செய்கின்ற, பத்தி - பக்தி, என்-என்ன பக்தி, எ-று.

(பொ-ரை.) பரம துஷ்டர்களாகிய ராக்ஷஸர்கள் விருப்பத்துடன் உண்ணுதலே யல்லாமல் சிவபெருமான் கோரமான நரமாம்ஸத்தைப் பார்க்கலாமோ? ஆ! கெடுவாய், சிவபக்தனிடத்தில் உண்டாயிருக்கின்ற மகனும் அந்தச் சிவபக்தனே யாவான்; அவனுடைய பரிசுத்தமாகிய உடம்பை யறுத்துச் சமைத்துப் படைத்த தந்தை அன்புடன் செய்கின்ற பக்தி என்ன பக்தி? (க)

இந்த விசேட மெனக்கைய மாகி யிருந்த தெனப்பெருமா
னந்தரை மீது மடந்தையர் பத்த ரரும்புதல் வோர்கடமைச்
சிந்த வெறிந்தவ ரெத்தனை பேருள ரின்னை மலாயுதனே
சந்தம தன்று சிவன்பெரு நன்பர் தவஞ்சிறி தென்பதெலாம்.

(ப - ரை.) இந்த-இந்த, விசேடம் - விதமானசெயல், எனக்கு-எனக்கு, ஐயமாகி யிருந்தது - சந்தேகமாயிற்று, என்ன-என்று சொல்லுதலும், பெருமான் - சிவபெருமான், அலாயுதனே - அலாயுதையனே, அம் - அழகிய, தரை மீது - பூமியின்மேல், மடந்தையர்-மாதர்களாகிய, பத்தர்-சிவபக்தர்கள், அரு-அருமையாகிய, புதல்வோர்கள் தம்மை - பிள்ளைகளை, சிந்த - சாய்படி, எறிந்தவர் - அடித்தவர்கள், எத்தனை - எத்தனையோ, பேர் - பேர்கள், உளர் - இருக்கிறார்கள், திண்ணம் - இது உண்மை, பெரு - மேன்மைபொருந்திய, சிவன் அன்பர் - சிவபக்தர்களுடைய, தவம் - வீர விரதங்கள், சிறிது என்பது எல்லாம்-தாழ்வென்றுசொல்லுகின்ற பேச்சு முழுதும், சந்தம் அன்று - அழகல்ல, எ-று.

(பொ-ரை.) இவ்விதமான செயல் எனக்குச் சந்தேகமாயிற்றென்று சொல்லுதலும், சிவபெருமான், அலாயுதையனே! அழகிய பூமியின் மேல் மாதர்களாகிய சிவ

பக்தர்கள் அருமையாகிய பிள்ளைகளைச் சாம்படி யடித்தவர்கள் எத்தனையோ போர்கள் இருக்கிறார்கள்; இது உண்மை; மேன்மைபொருந்திய சிவபக்தர்களுடைய வீர விரதங்கள் தாழ்வென்று சொல்லுகின்ற பேச்சு முழுதும் அழகல்ல. (௧0)

நல்லவை யானவை சங்கர னன்பர் நயந்து விரும்பியுறி
னில்லை யெனுமை ளிப்பது பத்த ரியற்கை யரற்குமிதஞ்
சொல்லிய மெய்ச்சிவ பத்தி யதச்சிறு தொண்ட னிடத்தலவோ
வொல்லை யுதித்தது நம்பலை யாகி லொருத்தரை விட்டறிவாய்.

(ப - ரை.) சங்கரன் அன்பர் - சிவபக்தர்கள், நல்லவை யானவை-நல்ல பதார்த்தங்களை, நயந்து - இச்சித்து, விரும்புறின் - வேண்டிக் கேட்பார்களாயின், இல்லையென்னுமல் - நாஸ்தி யென்று சொல்லாதபடி, அளிப்பது - படைப்பதே, பத்தர் - சிவபக்தர்களுடைய, இயற்கை - தர்மமாகும், அரற்கும் - சிவபெருமானுக்கும், இதம் - சந்தோஷமாகும், சொல்லிய - மேற்சொல்லிய, மெய் - உண்மையான, சிவபத்தி - சிவபக்தி, அ-அந்த, சிறு தொண்டனிடத்தில்-சிறுத்தொண்டனிடத்தில், அல்லவோ - அல்லவோ, ஒல்லை - விரைவாக, உதித்தது - பிறந்தது, நம்பலையாகில் - நம்பாமற் போவாயாயின், ஒருத்தரை - ஒரு ஆளை, விட்டு - அனுப்பி, அறிவாய் - தெரிந்து கொள்வாய், எ - று.

(பொ-ரை) சிவபக்தர்கள் நல்ல பதார்த்தங்களை யிச்சித்து வேண்டிக்கேட்பார்களாயின் நாஸ்தியென்று சொல்லாதபடிப் படைப்பதே சிவபக்தர்களுடைய தர்மமாகும்; சிவபெருமானுக்கும் சந்தோஷமாகும்; மேற்சொல்லிய உண்மையான சிவபக்தி அந்தச் சிறுத்தொண்டனிடத்திலல்லவோ விரைவாகப்பிறந்தது; நம்பாமற் போவாயாயின் ஒரு ஆளை யனுப்பித் தெரிந்துகொள்வாய். (௧௧)

அவ்வு லகத்தி லகந்தொறு மிக்கதை யன்பர்க ளாயினபேர்
செவ்வி பெறத்தின முந்துதி செய்வர்க டிண்ண மலாயுதகே
ளெவ்வுல கத்தினு மெய்த்தவர் சித்த மிதம்பெற வேபகர்வார்
கொவ்வை யெனும்பித ழ் மங்கையர் நெற்கள் குறும்பொழு தும்பகர்வார்.

(ப - ரை.) அலாயுத-அலாயுதையனே, கேள்-கேட்பாய், அ-அந்த, உலகத்தில் - தேசத்தில், அகம் தொறும் - வீடுகளிலெல்லாம், இ - இந்த, கதை - சிறுத்தொண்டன் சரித்திரத்தை, அன்பர்கள் ஆயின பேர்கள் - சிவபக்தர்களெல்லாம், செவ்வி பெற - அழகாக, தினமும் - நாடோறும், துதிசெய்வர்கள் - துதிப்பார்கள், திண்ணம் - இது உண்மை, எ - எந்த, உலகத்தினும் - தேசத்திலும், மெய்த்தவர் - ஜங்கம மூர்த்திகள், சித்தம் - மனம், இதம் பெற - மகிழும்படி, பகர்வார் - படிப்பார்கள், கொவ்வையென்னும் - கோவைக்கனிபோன்ற, இதழ்-அதரத்தையுடைய, மங்கையர்-பெண்கள், நெற்கள்-நெல்லை, குறும்பொழுதும் - குற்றுகின்ற காலத்திலும், பகர்வார்-பாடுவார்கள், எ-று.

(பொ-ரை.) அலாயுதையனே! கேட்பாய்; அந்தத்தேசத்தில் வீடுகளிலெல்லாம் இந்தச்சிறுத்தொண்டன் சரித்திரத்தைச் சிவபக்தர்களெல்லாம் அழகாக நாடோறும் துதிப்பார்கள்; இது உண்மை; எந்தத்தேசத்திலும் ஜங்கமமூர்த்திகள் மனமகிழும் படிப படிப்பார்கள்; கோவைக்கனிபோன்ற அதரத்தையுடைய பெண்கள் நெல்லைக் குற்றுகின்ற காலத்திலும் பாடுவார்கள். (௧௨)

சென்றவ ரோது செயற்கை விடும்படி செப்பவு ளல்வசமோ
வென்றறு மங்க ளெழுந்துறு கோபம தெய்தி யலாயுதரு
நன்றிது சங்கர னுந்தசை கொண்டிட நச்சி யிருந்தனனோ
நின்று மகன்றழி யொன்ற வறிந்து கொடுத்தன னேமறையோன்.

(ப - ரை.) சென்று-(அவ்விடங்களில்) போய், அவர்-அவர்கள், ஓது செயற்கை-சொல்வதை, விரிப்படி - விடும்படி, செப்ப-சொல்ல, உன்றால் - உன்றால், உகமோ - முடியுமோ, என்றலும்-என்று கேட்டலும், அங்கண் - அவ்விடத்தில், எழுந்து உறு-பொங்குகின்ற, கோபம் எய்தி - கோவத்தையடைந்து, அலாயதரும்-அலாயுதையரும், இது-இது, நன்று-நல்ல செய்தி, சங்கரனும் - சிவபெருமானும், தசை-நரமாம்ஸத்தை, கொண்டிட - உண்ண, நச்சியிருந்தனனோ - விரும்பினானோ, மறையோன் - ப்ராஹ்மணன், மகன் - மகனை, பொன்ற - சாம்பட, கொன்று - கொலைசெய்து, தடி-மாம்ஸத்தை, அரிந்து-அறுத்து, கொடுத்தனனோ - படைத்தானோ. எ - று.

(போ - ரை.) அவ்விடங்களிற் போய் அவர்கள் சொல்வதை விடும்படிச் சொல்ல உன்றால் முடியுமோ ? என்று கேட்டலும், அவ்விடத்தில் பொங்குகின்ற கோவத்தையடைந்து, அலாயதையரும், இது நல்ல செய்தி ; சிவபெருமானும் நரமாம்ஸத்தையுண்ணவிரும்பினானோ? ப்ராஹ்மணன் மகனைச் சாம்படிக் கொலைசெய்து மாம்ஸத்தையறுத்துப் படைத்தானோ ? (கங)

பத்த சனத்தை வளர்ப்பவ னத்த னெனும்பகர் பாவமலோ
பத்த ருயிர்க்கு மிரண்டு நினைத்துறு பாதக மென்சொலுவாம்
பத்த ரெனும்பெயர் சொன்னள வேயுயிர் பற்றல் பரன்றொழிலோ
பத்தனு மெய்த்தறி வாளன வன்பெறு பத்தி படைக்கரிதால்.

(ப - ரை.) பத்த சனத்தை - சிவபக்தர்களை, வளர்ப்பவன் - ரக்ஷிக்கின்றவன், அத்தன் - சிவபெருமான், என்னும் - என்று சொல்லப்பட்ட, பகர் - சொல்லும், பாவமலோ - பாவமல்லவோ, பத்தர் - சிவபக்தருடைய, உயிர்க்கும் - பிராணனுக்கும், இரண்டு-துரோகம், நினைத்துஉறு - நினைக்கின்ற, பாதகம்-பாதகத்தை, என் சொலுவாம் - என்னவென்று சொல்லுவோம், பத்தர் என்னும் பெயர் - சிவபக்தரென்கின்ற பெயரை, சொன்னஅளவே - சொன்ன மாத்திரத்திலே, உயிர் - பிராணனை, பற்றல் - வாங்குதல், பரன்-சிவபெருமானுடைய, தொழிலோ - செய்கையாகுமோ, பத்தனும்-சிறுத்தொண்டபக்தனும், மெய்த்த அறிவாளன் - மெய்ஞ்ஞானமுடையவன், அவன் பெறு - அவன் அடைந்திருக்கின்ற, பத்தி - பக்திமார்க்கத்தை, படைக்க அரிது - (யாவராலும்) அடையமுடியாது, எ - று.

(போ - ரை.) சிவபக்தர்களை ரக்ஷிக்கின்றவன் சிவபெருமானென்று சொல்லப்பட்ட சொல்லும் பாவமல்லவோ ? சிவபக்தருடைய பிராணனுக்கும் துரோகம் நினைக்கின்ற பாதகத்தை என்னவென்று சொல்லுவோம்; சிவபக்த ரென்கின்ற பெயரைச் சொன்ன மாத்திரத்திலே பிராணனை வாங்குதல் சிவபெருமானுடைய செய்கை யாகுமோ ? சிறுத்தொண்ட பக்தனும் மெய்ஞ்ஞான முடையவன்; அவன் அடைந்திருக்கின்ற பக்திமார்க்கத்தை யாவராலும் அடையமுடியாது. (கச)

பெற்றிடு மன்னை யரக்கி யெனிற்பெறு பிள்ளை பிழைக்குமதென்
சிற்றறி வற்ற சிவன்வய தித்தனை சென்று சிறுபிளைபோ
நற்றிய தேவர் முனங்கதி கேட்டுறு நன்ம ருளாயினனோ
முற்றுத லற்ற விளஞ்சிறு பிள்ளை முடிந்திட வெண்ணுமதோ.

(ப - ரை.) பெற்றிடும் - பெற்ற, அன்னை - தாய், அரக்கி என்னில் - ராக்ஷஸியாவாளாயின், பெறு-பெற்ற, பிள்ளை-குழந்தை, பிழைக்கும்அது- ஜீவித்திருத்தற்குக் காரணம், என் - யாது, சிறு அறிவு அற்ற - பேரறிவுடைய, சிவன் - சிவபெருமான்

வயது-வயசு, இத்தனை-இத்தனை, சென்று-கழிந்தும், சிறுபிள்ளையோ-குழந்தையோ, நற்றிய - தம்மை விரும்பியடைந்திருக்கின்ற, தேவர் - தேவர்கள், முன்னம் - முற்காலத்தில், கதி - மோக்ஷலோகத்தை, கேட்டு உறும் - கேட்டுப்பெற்றுக்கொண்டமையால், நல் - மிகவும், மருளாயினனோ - மயக்கத்தையடைந்தானோ, முற்றுதல்அற்ற-(வயது) முதிராத, இளம் - இளமைப்பருவத்தையுடைய, சிறுபிள்ளை - சிறுகுழந்தையை, முடிந்திட - சாக, எண்ணுமதோ-நினைப்பதோ, எ - று.

(பொ-ரை.) பெற்ற தாய் ராக்ஷஸியாவாளாயின் பெற்ற குழந்தை ஜீவித்திருத்தற்குக் காரணம் யாது? பேரறிவுடைய சிவபெருமான் வயசு இத்தனை கழிந்தும் குழந்தையோ? தம்மை விரும்பியடைந்திருக்கின்ற தேவர்கள் முற்காலத்தில் மோக்ஷலோகத்தைக்கேட்டுப் பெற்றுக்கொண்டமையால் மிகவும் மயக்கத்தையடைந்தானோ? வயது முதிராத இளமைப் பருவத்தையுடைய சிறு குழந்தையைச் சாக நினைப்பதோ?

கண்ணினாற் றசையைப் பார்க்கக் கையினாற் றீண்ட நெஞ்சி
னெண்ணினாற் பாவங் கெட்டே னித்தொழில் பத்தன் செய்தான்
மண்ணிலார் மதிப்பா ரத்தன் வந்துதன் னடியார் நெஞ்சிற்
றிண்ணிமை யறிவா னின்ன செய்யெனுஞ் செப்பு நன்றே.

(ப-ரை) தசையை - மாம்ஸத்தை, கண்ணினால் - கண்களால், பார்க்க - பார்த்தாலும், கையினால் - கைகளால், தீண்ட - தொட்டாலும், நெஞ்சின் - மனத்தில், எண்ணினால் - நினைத்தாலும், பாவம் - பாவமாம், கெட்டேன் - ஆ! கெட்டேன், இத்தொழில் - இந்தக் கார்யத்தை, பத்தன் - சிறுத்தொண்டபக்தன், செய்தான் - பண்ணினான், மண்ணில் - உலகத்தில், மதிப்பார் - மதிப்பவர், ஆர் - யார், அத்தன் - சிவபெருமான், வந்து-எழுந்தருளி, தன் - தனது, அடியார்-சரணருடைய, நெஞ்சில் திண்ணிமை-மனோத்ருடத்தை, அறிவான் - தெரிந்துகொள்ளும்பொருட்டு, இன்ன-இப்படிப்பட்ட கார்யத்தை, செய்-பண்ணுவாய், என்னும்-என்று கட்டளையிடுகின்ற, செப்பு-திருவாக்கும், நன்றே - பெருமையுடையதே, எ-று.

(பொ-ரை.) மாம்ஸத்தைக் கண்களால் பார்த்தாலும், கைகளால் தொட்டாலும், மனத்தில் நினைத்தாலும் பாவமாம்; ஆ! கெட்டேன், இந்தக் கார்யத்தைச் சிறுத்தொண்டபக்தன் பண்ணினான், உலகத்தில் மதிப்பவர் யார்? சிவபெருமான் எழுந்தருளித் தனது சரணருடைய மனோத்ருடத்தைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு இப்படிப்பட்ட கார்யத்தைப் பண்ணுவாயென்று கட்டளையிடுகின்ற திருவாக்கும் பெருமையுடையதே. (கசு)

மகன்கழுத் ததன்மே லெஃகம் வைத்தவவ் வளவே யொப்பிப்
புகழ்ந்துவேண் டினகொ டுத்துப் போவதே நன்மை யூனை
யகந்தனில் விரும்பிக் கண்ட மறுக்கவும் பொறுத்தி ருந்தான்
சகந்தனின் மக்க டம்மைத் தானும்பெற் றிலனோ வந்தோ.

(ப - ரை.) மகன் - மகனுடைய, கழுத்ததன்மேல் - கண்டத்தின் மீது, எஃகம்-கத்தியை, வைத்த அவ்வளவே - இட்ட மாத்திரத்திலே, ஒப்பி - ஒத்துக்கொண்டு, புகழ்ந்து-மெச்சி, வேண்டின-வேண்டிய வரங்களை, கொடுத்து-அநுக்ரஹஞ்செய்து, போவதே-செல்வதே, நன்மை-நல்ல கார்யமாம், ஊனை-மாம்ஸத்தை, அகம் தன்னில்-திருவுளத்தில், விரும்பி - இச்சித்து, கண்டம் - கழுத்தை, அறுக்கவும் - அரிதலும், பொறுத்திருந்தான் - சகித்திருந்தான், சகம் தன்னில் - உலகத்தில், மக்கள் தம்மை பிள்ளைகளை, தானும் - தானும், பெற்றிலனோ - பெற்றவனல்லவோ, அந்தோ-ஐயோ, எ-று.

(பொ - ரை.) மகனுடைய கண்டத்தின் மீது கத்தியை யிட்டமாத்திரத்திலே ஒத்துக்கொண்டு மெச்சி வேண்டிய வரங்களை யநுக்ராஹஞ்செய்து செல்வதே நல்ல கார்யம்; மாம்ஸத்தைத் திருவுளத்தில் இச்சித்துக் கழுத்தையரிதலும் சகித்திருந்தான்; உலகத்தில் பிள்ளைகளைத் தானும் பெற்றவனல்லவோ? ஐயோ!

(வி - ரை.) சகம் - ஜகம் என்னும் வடசொற்றிரிபு. இதற்குத் தோன்றியழியு மியற்கையுடைய தென்பது பொருள். (கஎ)

பத்தனுத் தமனே யல்ல பரருயிர் செகுத்தற் கொன்றி
நித்தமத் திமபா வத்தை நினைத்தில னெஞ்சிற் சற்று
மெத்ததன் னுடலைப் போத விரும்பித்தீ வினைக்கஞ் சாம
லத்தமெப் படியெ ழுந்த தாருயிர் கொல்லற் கந்தோ.

(ப - ரை.) பத்தன் - சிறுத்தொண்ட பக்தன், உத்தமனே - சிறந்தவனே, அல்ல-அல்ல, பரர்-பிறருடைய, உயிர்-உயிரை, செகுத்தற்கு-கொல்வதற்கு, ஒன்றி- சம்மதித்து, நித்தம் - அழிவில்லாத, மத்திம பாவத்தை - நடுநிலைமையை, நெஞ்சில் - மனத்தில், சற்றும் - சிறிதும், நினைத்திலன் - நினைத்தவனல்ல, மெத்த - மேன்மை பொருந்திய, தன் - தன்னுடைய, உடலை - உடம்பை, போத - மிகவும், விரும்பி - (காப்பாற்ற) வேண்டி, தீவினைக்கு - பாவத்திற்கு, அஞ்சாமல் - பயப்படாமல், ஆர் - நிறைந்துள்ள, உயிர் - உயிரை, கொல்லற்கு - கொல்வதற்கு, எப்படி - எவ்விதம், அத்தம் - கை, எழுந்தது - வந்தது, அந்தோ - ஐயோ, எ-று.

(பொ-ரை.) சிறுத்தொண்ட பக்தன் சிறந்தவனே யல்ல; பிறருடைய உயிரைக் கொல்வதற்குச் சம்மதித்து அழிவில்லாத நடுநிலைமையை மனத்தில் நினைத்தவனல்ல; மேன்மைபொருந்திய தன்னுடைய உடம்பை மிகவும் காப்பாற்றவேண்டிப் பாவத்திற்குப் பயப்படாமல் நிறைந்துள்ள உயிரைக் கொல்வதற்கு எவ்விதம் கை வந்தது? ஐயோ!

(வி - ரை.) நடுநிலைமை - பகைவர், அயலார், நட்பினர் என்னும் மூவகையோரிடத்தும் அறத்தின் வழுவாமல் ஒப்ப நிற்கும் நிலைமை. (கஅ)

அன்னிய ரில்லிற் றீயாலன் றித்தன தகத்தி னுள்ள
வன்னியாற் றானும் வேமே மனையென மறுத்தி ராதே
தன்னியன் மகனைக் கொன்றாற் றனக்குறும் பாவ மின்றோ
வென்னிது நல்லோர் கேட்கி லேலுமோ வேலா தென்றும்.

(ப - ரை.) அன்னியர் - பிறருடைய, இல்லில் - வீட்டிலிருக்கின்ற, தீயால் - நெருப்பினாலே, அன்றி - அல்லாமல், தன் தன்னுடைய, அகத்தில் உள்ள - வீட்டிலிருக்கின்ற, வன்னியால் தானும் - நெருப்பினாலும், மனை - வீடானது, வேமே - சுட்டெரிந்து போகுமே, என்ன - என்று, மறுத்திராதே - விலகிக்கொள்ளாமலே, தன்-தன்னுடைய, இயல்-நற்குணமுள்ள, மகனை-மகனை, கொன்றால்-கொல்வதனால், தனக்கு-தனக்கு, உறும்-உண்டாகின்ற, பாவம்-பாவம், இன்றோ-இல்லாமற்போமோ, இது - இந்தப் பாவச் செயலைச் செய்தற்குக் காரணம், என்-யாது, நல்லோர் - பெரியோர்கள், கேட்கில் - கேட்பார்களாயின், ஏலுமோ - ஒத்துக்கொள்ளக்கூடுமோ, என்றும் - எக்காலத்திலும், ஏலா-ஒத்துக்கொள்ளக்கூடா, எ-று.

(வி-ரை.) பிறருடைய வீட்டிலிருக்கின்ற நெருப்பினாலே யல்லாமல் தன்னுடைய வீட்டிலிருக்கின்ற நெருப்பினாலும் வீடானது சுட்டெரிந்து போகுமே என்று

விலகிக்கொள்ளாமலே தன்னுடைய நற்குணமுள்ள மகனைக் கொல்வதனால் தனக்குண்டாகின்ற பாவமில்லாமற் போகுமோ? இந்தப் பாதகச்செயலைச் செய்தற்குக் காரணம் யாது? பெரியோர்கள் கேட்பார்களாயின் ஒத்துக்கொள்ளக்கூடுமோ? எக்காலத்திலும் ஒத்துக்கொள்ளக்கூடா. (௧௯)

இந்நர விறைச்சி யன்றி யிறைவனுக் கிறங்கா தன்றோ
தன்னரும் பத்தி யிந்தத் தாழ்வுசெய் தாலோ தோன்று
மன்னமும் பாலுந் தேனு மரியநற் கறியு மின்றோ
பன்னகா பரணர்க் கிந்தப் பத்தியிற் பரிவா மாறென்.

(ப - ரை.) இ - இந்த, நர இறைச்சி - நரமாம்ஸமே, அன்றி-அல்லாமல், இறைவனுக்கு - சிவபெருமானுக்கு, இறங்காதோ- (தொண்டையில்) செல்லாதோ, தன் - தன்னுடைய, அரு - அருமையாகிய, பத்தி - பக்தி, இந்த-இந்த, தாழ்வுசெய்தாலோ- நீச கார்யத்தைப் பண்ணினாலோ, தோன்றும் - வெளிப்படும், அன்னமும்-அமுதும், பாலும் - பாலும், தேனும் - தேனும், அரிய - அருமையாகிய, நல் - நல்ல, கறியும் - கறியமுதும், இன்றோ-இல்லாமற்போயிற்றோ, பன்னகாபரணர்க்கு-சிவபெருமானுக்கு, இந்த பத்தியில்-இந்த பக்தியில், பரிவு - விருப்பம், ஆம் ஆறு - உண்டான விதத்திற்குக் காரணம், என் - யாது, எ-று.

(பொ-ரை.) இந்த நரமாம்ஸமே யல்லாமல் சிவபெருமானுக்குத் தொண்டையில் செல்லாதோ? தன்னுடைய அருமையாகிய பக்தி இந்த நீச கார்யத்தைப் பண்ணினாலோ வெளிப்படும்? அமுதும், பாலும், தேனும், அருமையாகிய நல்ல கறியமுதும் இல்லாமற் போயிற்றோ? சிவபெருமானுக்கு இந்த பக்தியில் விருப்பம் உண்டான விதத்திற்குக் காரணம் யாது?

(வி - ரை.) பன்னகாபரணர்-சர்ப்பாபரணத்தையுடைய சிவபெருமான். அன்று-அசை. (உO)

## கலிவிருத்தம்.

மெத்திய கயிலைமேன் மிகுங்க ணார்க்கெலா
மித்தரைப் பத்தர்மா மேசு ரர்க்கெலாஞ்
சுத்தனும் புறம்பு தொண்டனும் புறம்பதென்
றத்தம தறைந்த றைந்தா ரலாயுதர்.

(ப - ரை.) மெத்திய - மேன்மைபொருந்திய, கயிலைமேல் - ஸ்ரீ மஹாகைலாஸத்தில், மிகும் - மேம்பட்டிருக்கின்ற, கணார்க்கு எல்லாம் - எல்லாசிவகணங்களுக்கும், இத்தரை - இவ்வுலகத்திலிருக்கின்ற, பத்தர் மாமேசுரர்க்கு எல்லாம் - எல்லா பக்த மாஹேஶ்வரர்களுக்கும், சுத்தனும் - சிவபெருமானும், புறம்பு - புறம்பாவான், தொண்டனும் - சிறுத்தொண்ட பக்தனும், புறம்பு - புறம்பாவான், என்று - என்று, அலாயுதர் - அலாயுதையர், அத்தம் - கையை, அறைந்து - (பூமியின்மீது) அடித்து, அறைந்தார் - சொன்னார், எ - று.

(பொ-ரை.) மேன்மைபொருந்திய ஸ்ரீமஹாகைலாஸத்தில் மேம்பட்டிருக்கின்ற எல்லாசிவகணங்களுக்கும், இவ்வுலகத்திருக்கின்ற எல்லா பக்தமாஹேஶ்வரர்களுக்கும் சிவபெருமானும் புறம்பாவான், சிறுத்தொண்டபக்தனும் புறம்பாவானென்று அலாயுதையர் கையைப் பூமியின்மீது அடித்துச் சொன்னார்.

(வி - ரை.) அத்தம்-ஹஸ்தம் என்னும் வடசொற்றிரிபு. புறம்பாவது அடாத நீச கார்யத்தைச்செய்த ஒருவனைத் தனது இனத்தினின்றும் விலக்கிப் பஹிஷ்காரஞ்

செய்தலாகிய ஒரு வகைப்பட்ட கொடிய தண்டனையாம். அலாயுதையர் சிவபெருமானையும், சிறுத்தொண்ட பக்தனையும் அதிபாதகஞ் செய்தவர்களெனத் தீர்மானித்து சிவகணங்களினின்றும் பக்த மாஹேச்வரர்களினின்றும் புறம்பாக்கித் தள்ளிவிட்டன ரென்பதாம். புறம்பு - குலப்ரஷ்டத்வம். (உக)

புறம்பெனு முரைசெவிப் புலன்கட் சேர்தலு
மிறங்கிய சித்தரா யிருவ ரும்பயந்
துறங்கிய மனத்தரா யுன்னித் தத்தமி
னிறந்திரி முகங்களை நின்று நோக்கினர்.

(ப - ரை) புறம்பு—, என்னும் - என்கின்ற, உரை - சொல்லானது, செவிப் புலன்கண் - செவிகளில், சேர்தலும் - நுழைதலும், இறங்கிய - தளர்ந்த, சித்தர்ஆய் - மனத்தையுடையவர்களாய், இருவரும் - இரண்டு ஜங்கமமூர்த்திகளும், பயந்து-அஞ்சி, உறங்கிய - வாட்டமடைந்த, மனத்தர் ஆய் - மனத்தையுடைய வர்களாய், உன்னி - ஆலோசித்து, தத்தம்மில்-தங்கள் தங்களுக்குள்ளே, நிறம் திரி - அழகு இல்லாதிருக்கின்ற, முகங்களை—, நின்று—, நோக்கினர் - பார்த்தார்கள், எ - று.

(பொ-ரை.) புறம்பென்கின்ற சொல்லானது செவிகளில் நுழைதலும், தளர்ந்த மனத்தையுடையவர்களாய் இரண்டு ஜங்கம மூர்த்திகளும் அஞ்சி, வாட்டமடைந்த மனத்தையுடையவர்களாய் ஆலோசித்து, தங்கள் தங்களுக்குள்ளே அழகில்லா திருக்கின்ற முகங்களை நின்று பார்த்தார்கள். (உஉ)

மண்டனி லடியவர் மகிமை காட்டவோ
தொண்டுசெய் நெறிச்சிறுத் தொண்டர் காணவோ
வண்டநா யகன்றன தடியர்க் காப்பயங்
கொண்டுநின் றருடிருக் குறிப்பை யார்வலார்.

(ப-ரை.) மண்தன்னில் - உலகத்தில், அடியவர் - சிவசரணர்களுடைய, மகிமை- மஹத்வத்தை, காட்டவோ - காண்பிக்கும் பொருட்டோ, தொண்டு - பணிவிடை, செய் - செய்கின்ற, நெறி - தாஸமார்க்கத்தை, சிறுத்தொண்டர் - சிறுத்தொண்ட நாயனர், காணவோ - பார்க்கும் பொருட்டோ, அண்டநாயகன் - சிவபெருமான், தனது—, அடியார்க்கா - சரணர்களின்பொருட்டு, பயம்கொண்டு - அஞ்சி, நின்று—, அருள் - அநுக்ரஹஞ்செய்கின்ற, திருக்குறிப்பை - திருவுள்ளத்தை, வல்லார் - அறிய வல்லவர், ஆர் - யார், எ - று.

(பொ - ரை.) உலகத்தில் சிவசரணர்களுடைய மஹத்வத்தைக் காண்பிக்கும் பொருட்டோ? பணிவிடைசெய்கின்ற தாஸமார்க்கத்தைச் சிறுத்தொண்டநாயனர் பார்க்கும் பொருட்டோ? சிவபெருமான் தனது சரணர்களின்பொருட்டு அஞ்சிநின்று அநுக்ரஹஞ்செய்கின்ற திருவுள்ளத்தை யறியவல்லவர் யார்?

(வி - ரை.) அண்டநாயகன் - லோகநாதன். (உங)

அலாயுதர் பகருவா ரைய வையநீ
புலாலுணுங் கதையினைப் புண்ணி யங்கள்போற்
சொலாதொழி யொழியெதிர் செல்வ னென்னவே
நிலாநுத லுமையினை நித்த னுன்னினன்.

(ப - ரை.) அலாயுதர் - அலாயுதையர், பகருவார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), ஐய ஐய - ஐயனே ஐயனே, நீ—, புலால் - மாம்ஸத்தை, உண்ணும் -

புசிக்கின்ற, கதையினை-கதையை, புண்ணியங்கள்போல் - புண்ய கதைகளைப்போல, சொல்லாது - புகழாமல், ஒழி - விட்டுவிடு, எதிர் - எதிரே, ஒழி - நிற்காமற் போய் விடு, செல்வன் - நானும் போகிறேன், என்ன - என்று சொல்லுதலும், நிலா - பிறை போன்ற, நுதல் - நெற்றியையுடைய, உமையினை - உமாதேவியாரை, நித்தன் - சிவ பெருமான், உன்னினன் - நினைத்தான், எ - று.

(பொ - ரை.) அலாயுதையர் சொல்வாராயினர்; எவ்வாறெனின்:— ஐயனே! ஐயனே! நீ மாம்ஸத்தைப் புசிக்கின்ற கதையைப் புண்யகதைகளைப்போலப் புகழாமல் விட்டுவிடு; எதிரே நிற்காமற்போய்விடு; நானும் போகின்றேனென்று சொல்லுதலும், பிறைபோன்ற நெற்றியையுடைய உமாதேவியாரைச் சிவபெருமான் நினைத்தான்.

மங்கைபார்ப் பதிமன மயங்கி யங்கெழுந்
துங்கவெண் காட்டுட னொண்ட வத்தர்போற்
பொங்கிய வடிவொடு போந்த லாயுதர்
தங்கிய மணிமனை தருக்கிப் புக்கனள்.

(ப - ரை.) மங்கை - மங்கைப்பருவமுள்ள, பார்ப்பதி - உமாதேவியார், மனம் - புத்தி, மயங்கி-கலங்கி, அங்கு-அவ்விடத்தில்,எழும்-வந்திருக்கின்ற, துங்கம்-மேன்மை பொருந்திய, வெண்காட்டுடன் - திருவெண்காட்டு நங்கையாரோடு, ஒள் - சிறந்த, தவத்தர்போல் - ஜங்கம மூர்த்திகளைப்போல, பொங்கிய-மேன்மைபொருந்திய, வடி வொடு - கோலங்களுடன், போந்து - சென்று, அலாயுதர் - அலாயுதையர், தங்கிய - வசிக்கின்ற, மணி - அழகிய, மனை - திருமடத்தில், தருக்கி - களிப்புடன், புக்கனள்-பிரவேசித்தாள், எ-று.

(பொ - ரை.)மங்கைப்பருவமுள்ள உமாதேவியார் புத்திகலங்கி, அவ்விடத்தில் வந்திருக்கின்ற மேன்மை பொருந்திய திருவெண்காட்டு நங்கையாரோடு சிறந்த ஜங்கமமூர்த்திகளைப்போல மேன்மைபொருந்திய கோலங்களுடன் சென்று, அலா யுதையர் வசிக்கின்ற அழகிய திருமடத்தில் களிப்புடன் பிரவேசித்தாள்.

(வி - ரை.) பார்ப்பதி - பர்வதராஜனுடைய புத்திரி. (உ௬)

புக்கலு மலாயுதர் போற்றி யஞ்சலித்
தக்கணட் டாங்கமு மகலி டத்துறப்
பக்கமொன் றிதயராய்ப் பணிந்தெ ழுந்துபின்
மிக்கபா தங்களை விளக்கி யாவலால்.

(ப - ரை.) புக்கலும்-(தேவிமார் இருவரும்) பிரவேசித்தலும், அலாயுதர்-அலாயு தையர், போற்றி - துதித்து, அஞ்சலித்து-கும்பிட்டு, அக்கண்-அவ்விடத்தில், பக்கம் ஒன்று-அன்புடைய, இதயராய் - மனமுடையவராய், அகல்-பரந்த, இடத்து-பூமியின் மீதுவிழுந்து, அட்டாங்கமும் உற - ஸாஷ்டாங்கமாக, பணிந்து - வணங்கி, எழுந்து - மேலேயெழுந்து, பின் - பிறகு, ஆவலால் - அன்புடன், மிக்க - மேன்மைபொருந்திய, பாதங்களை - திருவடிகளை, விளக்கி - கழுவி, எ-று.

(பொ - ரை.) தேவிமார் இருவரும் பிரவேசித்தலும், அலாயுதையர் துதித்துக் கும்பிட்டு, அவ்விடத்தில் அன்புடைய மனமுடையவராய்ப் பரந்த பூமியின்மீது விழுந்து, ஸாஷ்டாங்கமாக வணங்கி, மேலே யெழுந்து, பிறகு அன்புடன் மேன்மை பொருந்திய திருவடிகளைக் கழுவி.

(வி - ரை.) பக்கம்-பக்ஷம் என்னும் வடசொற்றிரிபு. அட்டாங்கம்-அஷ்டாங்கம் என்னும் வடசொற்றிரிபு; எட்டு உறுப்புக்களென்பது பொருள். (உசு)

அருந்தவ ரமுதுசெய் மடத்துட் கொண்டுபோய்ப்
பொருந்திய வாதனம் புரிந்தி ருத்தியே
விரும்பிநற் றுதிபல விளம்பி நின்றன
ரருந்தவை யலாயுதர்க் கருளிச் செய்குவாள்.

(ப - ரை.) அரு - மேன்மை பொருந்திய, தவர் - ஜங்கம மூர்த்திகளை, அமுது செய் - அமுதுசெய்கின்ற, மடத்துள் - க்ருஹத்தில், கொண்டுபோய் - அழைத்துக் கொண்டுபோய், பொருந்திய - தகுதியாகிய, ஆதனம் - ஆசனங்களில், புரிந்து - விருப்பத்துடன், இருத்தி - எழுந்தருளப்பண்ணி, விரும்பி - அன்புடன், நல்-நல்ல, துதி பல - பலதோத்திரங்களை, விளம்பி - சொல்லி, நின்றனர் - நின்றார்; அரு - மேன்மையுடைய, தவை-ஜங்கமப்பெண்ணாகிய உமாதேவியார், அலாயுதர்க்கு-அலாயுதையர்க்கு, அருளிச்செய்குவாள் - சொல்லத்தொடங்கினாள் (எவ்வாறெனின்), எ-று.

(பொ - ரை.) மேன்மை பொருந்திய ஜங்கமமூர்த்திகளை அமுது செய்கின்ற க்ருஹத்தில் அழைத்துக்கொண்டுபோய், தகுதியாகிய ஆசனங்களில் விருப்பத்துடன் எழுந்தருளப்பண்ணி,அன்புடன் நல்ல பல தோத்திரங்களைச் சொல்லி நின்றார்; மேன்மையுடைய ஜங்கமப் பெண்ணாகிய உமாதேவியார் அலாயுதையர்க்குச் சொல்லத் தொடங்கினாள்; எவ்வாறெனின்.

(வி - ரை.) தவை - தவஞ் செய்பவள். (உஎ)

பொருளுட லாவியாப் பொருந்து மூன்றையு
மிருந்தவர்க் களிக்குநின் மகிமை யெங்கணும்
பெருகவள் பெரியவர் பேசக் கேட்டியாந்
தெருளுனைப் பார்க்கவே சென்ற மென்றனள்.

(ப - ரை.) பொருள் - செல்வமும், உடல் - உடம்பும், ஆவியா - உயிருமாக, பொருந்தும்-கூடியிருக்கின்ற, மூன்றையும்-மூன்று பொருள்களையும், இரு-மேன்மை பொருந்திய, தவர்க்கு - ஜங்கமமூர்த்திகளுக்கு, அளிக்கும் - தத்தஞ்செய்கின்ற, நின்-உனது, மகிமை-பெருமை, எங்கணும் - எவ்விடத்திலும், பெருக-வியாபித்தலும், வள்-மேன்மையாகிய, பெரியவர்-ஜங்கமமூர்த்திகள், பேச-சொல்ல, கேட்டு-கேள்விப்பட்டு, யாம் - நாங்கள், தெருள் - மநோத்ருடத்தையுடைய, உன்னை—, பார்க்கவே-காணும்பொருட்டே, சென்றம் - வந்தோம், என்றனள் - என்றுசொன்னாள், எ-று.

(பொ-ரை.) செல்வமும் உடம்பும் உயிருமாகக் கூடியிருக்கின்ற மூன்றுபொருள்களையும் மேன்மைபொருந்திய ஜங்கமமூர்த்திகளுக்குத் தத்தஞ்செய்கின்ற உனது பெருமை எவ்விடத்திலும் வியாபித்தலும், மேன்மையாகிய ஜங்கம மூர்த்திகள் சொல்லக் கேள்விப்பட்டு, நாங்கள் மநோத்ருடத்தையுடைய உன்னைக் காணும் பொருட்டு வந்தோமென்று சொன்னாள். (உஅ)

யாமுனை பொருபொரு ளெண்ணிக் கேட்குது
நீமன மகிழ்ந்துதா நித்த புண்ணியா
சேமமார் சைவநூற் செய்தி தப்பலாய்
தோமிலாச் சிவாதிகச் சுத்த நீங்கலாய்.

(ப - ரை.) யாம்-நாங்கள், உன்னை—, ஒரு—, பொருள்-பாக்யம், எண்ணி-பெற வேண்டி, கேட்குதும்-கேட்கின்றோம், நீ—,மனம் மகிழ்ந்து—, தா-கொடுப்பாய், நித்த ,

அழிவில்லாதவனே, புண்ணியா-தர்மசீலனே, சேமம் ஆர் - உயிர்க் காவலாகிய, சைவ நூல்-சிவாகமங்களின், செய்தி - விதிமார்க்கத்தினின்றும், தப்பலாய் - விலகாதவனே, தோம் இல்லா - குற்றமற்ற, சிவாதிகம் - சிவாதிக்யத்தை ப்ரதிபாதிக்கின்ற, சத்தம் - ஸத்யமார்க்கத்தினின்றும், நீங்கலாய் - விலகாதவனே, எ-று.

(பொ - ரை.) நாங்கள் உன்னை ஒரு பாக்யம் பெறவேண்டிக் கேட்கின்றோம்; நீ மனமகிழ்ந்து கொடுப்பாய்; அழிவில்லாதவனே! தர்மசீலனே! உயிர்க் காவலாகிய சிவாகமங்களின் விதிமார்க்கத்தினின்றும் விலகாதவனே! குற்றமற்ற சிவாதிக்யத்தை ப்ரதிபாதிக்கின்ற ஸத்யமார்க்கத்தினின்றும் விலகாதவனே! (உ௬)

பத்திமா ணிக்கமே பத்தித் தீபமே
மெத்திய சுத்தமே விளையும் பூமியே
சத்திய நெறியனே தவத்தர் செல்வமே
யத்தியா பரணனே யலாயு தாவென.

(ப - ரை.) பத்திமாணிக்கமே - பக்தி ரத்நமே, பத்தித்தீபமே - பக்திதீபமே, மெத்திய - மேன்மையுடைய, சுத்தம் - முத்தி, விளையும் - விளைகின்ற, பூமியே - நிலமே, சத்தியநெறியனே - சன்மார்க்கனே, தவத்தர் - ஜங்கம மூர்த்திகளுக்கு, செல்வமே - பாக்யமே, அத்தியாபரணனே - சிவபெருமானே, அலாயுதா - அலாயுதையனே, என்ன - என்று துதித்தலும், எ-று.

(பொ - ரை.) பக்திரத்நமே! பக்திதீபமே! மேன்மையுடைய முத்திவிளைகின்ற நிலமே! சன்மார்க்கனே! ஜங்கம மூர்த்திகளுக்குப் பாக்யமே! சிவபெருமானே! அலாயுதையனே! என்று துதித்தலும்.

(வி - ரை.) அத்தி - எலும்புமணிகளை, ஆபரணன் - பூஷணமாக உடையவன்.

சங்கமா ராதனைத் தாத னென்னை
யிங்குநீ துதிப்பதற் கெத்த னைக்குளே
னுங்குநின் னடியவ ருதவும் பாக்கியம்
பொங்கிய விதிதரும் பொருளைக் கேளென.

(ப-ரை.) சங்கம ஆராதனை-ஜங்கமபூஜை யொன்றினையே செய்கின்ற, தாதனும்-சரணனாகிய, என்னை - அடியேனை, இங்கு - இவ்விடத்தில், நீ—, துதிப்பதற்கு - புகழ்வதற்கு, எத்தனைக்கு உள்ளேன்-எவ்வளவு யோக்யதை யுள்ளவனாயிருக்கிறேன், நின்-உனது, அடியவர் - சரணர்கள், பாக்கியம் - பொருளை, உதவும்-கொடுப்பார்கள், பொங்கிய - சிறந்த, விதிதரும் - (சிவாகமங்கள்) விதிக்கின்ற, பொருளை-சம்பத்தை, கேள் - கேட்பாய், என்ன - என்று சொல்லுதலும், எ - று.

(பொ - ரை.) ஜங்கமபூஜை யொன்றினையே செய்கின்ற சரணனாகிய அடியேனை இவ்விடத்தில் நீ புகழ்வதற்கு எவ்வளவு யோக்யதை யுள்ளவனாயிருக்கிறேன்? உனது சரணர்கள் பொருளைக்கொடுப்பார்கள்; சிறந்த சிவாகமங்கள் விதிக்கின்ற சம்பத்தைக் கேட்பாயென்று சொல்லுதலும். (௨௧)

இவ்சிறத் தொண்டன்மே லினிய தேவியான்
புவனநா யகன்சிவன் பொருந்து மம்பிகை
யவரைநீ புறம்பென வறைந்த தன்மையாற்
றவனமுற் றனமறத் தளர்ந்த யர்ந்தனம்.

(ப-ரை.) இவள் - இந்த அம்மை, சிறுத்தொண்டன் - சிறுத்தொண்டபக்தன், மேல் - மீது, இனிய - விருப்பமுள்ள, தேவி - மனைவியாவாள், யான் - நான், புவன நாயகன் - லோகநாதனுகிய, சிவன் - சிவபெருமான், பொருந்தும் - விரும்புகின்ற, அம்பிகை-பார்வதிதேவியாவேன், அவரை-அவர்களை, நீ—, புறம்பு—, என்ன-என்று, அறைந்த தன்மையால் - சொன்னபடியினுல், தவனம் - மனோதுக்கத்தை, உற்றனம் - அடைந்தோம், அற - மிகவும், தளர்ந்து - மெலிந்து, அயர்ந்தனம் - சோர்ந்தோம், எ - று.

(பொ-ரை.) இந்த அம்மை சிறுத்தொண்டபக்தன் மீது விருப்பமுள்ள மனைவியாவாள்; நான் லோகநாதனுகிய சிவபெருமான் விரும்புகின்ற பார்வதி தேவியாவேன்; அவர்களை நீ புறம்பென்று சொன்னபடியினுல் மனோதுக்கத்தையடைந்தோம்; மிகவும் மெலிந்து சோர்ந்தோம். (கஉ)

பதியிலா மாதரும் பண்பிலான் செல்வமு
நிதியிலா னிளமையு நேரதா நித்தன்மே
லதிகமா நேயமி லாளரு மன்பெனும்
புதியமா மலரிலான் பூசையே போலுமால்.

(ப-ரை.) பதியில்லா-கணவனில்லாத, மாதரும்-பெண்டிரும், பண்பு இல்லான் நற்குணமில்லாதவனுடைய, செல்வமும் - பொருளும், நிதியிலான் - பொருளில்லாதவனுடைய, இளமையும் - இளமைப்பருவமும், நேர் ஆம் - சிறப்புபொருந்திய, நித்தன்மேல்-சிவபெருமான் மீது, அதிகமாம் - சிறந்த, நேயம் இல்லாளரும் - அன்பில்லாதவரும், அன்பு என்னும் - அன்பென்கின்ற, புதிய - அன்றலர்ந்த, மா-அழகிய, மலர் இல்லான் - புஷ்பமில்லாமற் பூஜைசெய்கின்ற பக்தனுடைய, பூசைபோலும்-சிவபூஜையை நிகர்க்கும், எ று.

(பொ - ரை.) கணவனில்லாத பெண்டிரும், நற்குண மில்லாதவனுடைய பொருளும், பொருளில்லாதவனுடைய இளமைப்பருவமும், சிறப்புபொருந்திய சிவ பெருமான்மீது சிறந்த அன்பில்லாதவரும், அன்பென்கின்ற அன்றலர்ந்த அழகிய புஷ்பமில்லாமற் பூஜைசெய்கின்ற பக்தனுடைய சிவபூஜையை நிகர்க்கும்.

எமக்கரும் புருட தானங்க ளீந்தவர்
தமக்குறுஞ் சுத்தவா சார நல்குவாய்
சுமைப்பெருங் காயனே கனத்த பத்தியாற்
சமத்தனே யலாயுதா தருமசீலனே.

(ப-ரை.) எமக்கு - எங்களுக்கு, அரு-பெறுதற்கருமையாகிய, புருடதானங்கள் ஈந்து - கணவர்களைத் தானஞ்செய்து, அவர் தமக்கு-அவர்களுக்கு, உறும்-உண்டாயிருந்த அநாசாரத்தை, சுத்தவாசாரம் - சுத்திசெய்து சிவாசாரத்தை, நல்குவாய் - கொடுப்பாய்,பெருங்கமைக்காயனே-பரமசாந்தமூர்த்தியே,கனத்த-சிறந்த, பத்தியால்-பக்தியினுல், சமத்தனே - வீரசைவனே, அலாயுதா-அலாயுதையனே, தருமசீலனே - புண்யவானே, எ-று.

(பொ-ரை.) எங்களுக்குப் பெறுதற்கருமையாகிய கணவர்களைத்தானஞ்செய்து, அவர்களுக்கு உண்டாயிருந்த அநாசாரத்தை சுத்திசெய்து சிவாசாரத்தைக் கொடுப்பாய்; பரம சாந்தமூர்த்தியே! சிறந்த பக்தியினுல் வீரசைவனே! அலாயுதையனே! புண்யவானே.

(வி-ரை.) கமை-க்ஷமை என்னும் வடசொற்றிரிபு; பொறுமை என்பதுபொருள். புருடன்-புருஷன் என்னும் வடசொற்றிரிபு. புருடதானம் - புருஷபிக்ஷை. சமத்தன்-சமர்த்தன் என்னும் வடசொற்றிரிபு; வீரன் என்பது பொருள்; பக்தியினால் வீரன் என்றது வீரசைவனை. (௰௪)

என்னமுன் னுமைபுகழ்ந் தினிய செப்பலு
மன்னவெண் காடுபோ யவ்வ லாயுதர்
பன்னல வடியின்மேற் பணிந்து போற்றவே
புன்னல முறுவலாற் புறம்பி லென்றனர்.

(ப-ரை.) என்ன - என்று, முன் - முன்னே, உமை - உமாதேவியார், புகழ்ந்து-துதித்து, இனிய - இன்சொற்களை, செப்பலும் - சொல்லுதலும், அன்ன - அந்த, வெண்காடு - திருவெண்காட்டு நங்கையார், போய் - (அருகில்) சென்று, அ - அந்த, அலாயுதர் - அலாயுதையருடைய, பல் - அநேக, நலம் - சம்பத்துகளைக் கொடுத்தற்குரிய, அடியின்மேல் - திருவடிகளின்மீது, பணிந்து - (ஸாஷ்டாங்கமாக) வணங்கி, போற்ற - துதித்தலும், நல்ல - நன்மையுடைய, புன் முறுவலால் - புன்சிரிப்புடன், புறம்பு—, இல் - இல்லை, என்றனர் - என்று சொன்னார், எ - று.

(போ-ரை.) என்று முன்னே உமாதேவியார்துதித்து இன்சொற்களைச்சொல்லுதலும், அந்தத் திருவெண்காட்டுநங்கையார் அருகிற்சென்று அந்தஅலாயுதையருடைய பல சம்பத்துகளைக் கொடுத்தற்குரிய திருவடிகளின்மீது ஸாஷ்டாங்கமாக வணங்கித் துதித்தலும், நன்மையுடைய புன்சிரிப்புடன் புறம்பு இல்லையென்று சொன்னார். (௰௫)

அண்ணல்விண் மதியொடா றணிந்த வேணியுந்
திண்ணநாற் புயங்களுஞ் செய்ய செங்கையி
னண்ணுமான் மழுவுமென் னகையு நெற்றியங்
கண்ணுமா விடையின்மேற் காண நின்றனன்.

(ப - ரை.) அண்ணல்-சிவபெருமான், விண்-ஆகாய சஞ்சாரியாகிய, மதியொடு-பிறைச்சந்திரனும், விண்ஆறு - ஆகாய கங்கையும், அணிந்த - சூடிய, வேணியும் - திருமுடியும், திண்ணம் - திருடமான, நால் - நான்கு, புயங்களும் - திருத்தோள்களும், செய்ய - அழகிய, செம் - செவந்த, கையில் - திருக்கரங்களில், நண்ணும் - ஏந்திய, மான் - மானும், மழுவும்—, மெல் நகையும் - புன்சிரிப்பும், அம் - அழகிய, நெற்றிக்கண்ணும்—, ஆ - ஆக, விடையின்மேல் - வ்ருஷபவாஹநத்தின்மீது, காண நின்றனன்-காட்சி கொடுத்தனன், எ - று.

(போ - ரை.) சிவபெருமான் ஆகாய சஞ்சாரியாகிய பிறைச்சந்திரனும் ஆகாய கங்கையும் சூடிய திருமுடியும், திருடமான நான்கு திருத்தோள்களும், அழகிய செவந்த திருக்கரங்களில் ஏந்திய மானும் மழுவும், புன் சிரிப்பும், அழகிய நெற்றிக் கண்ணுமாக வ்ருஷபவாஹநத்தின்மீது காட்சிகொடுத்தனன். (௰௬)

அரியயன் புரந்தர னைசப் பாலக
ருரியருத் திரர்பதி னொருவ ரொண்மதி
தெரிதரு பன்னிரு செய்ய சூரியர்
பரிவுறு வசுக்கண்முன் பரவி நின்றனர்.

(ப-ரை.) அரி-விஷ்ணுமூர்த்தியும், அயன் - ப்ரஹ்மதேவனும், புரந்தரன்-இந்த்ரனும், ஆசைப்பாலகர்-அஷ்டதிக்குப்பாலகர்களும், உரிய - துதித்தற்குரிய, ருத்திரர் பதினொருவர்-ஏகாதஸருத்ரர்களும், ஒள்-பிரகாசம் பொருந்திய,மதி-சந்த்ரபகவானும், தெரிதரு-காணப்படுகின்ற, செய்ய-செந்நிறத்தையுடைய, பன்னிரு சூரியர்-த்வாதஸாதித்யர்களும், பரிவு உறு - அன்புள்ள, வசுக்கள் - அஷ்டவஸுக்களும், முன்-சந்நிதியில், பரவி - துதித்து, நின்றனர் - நின்றார்கள், எ-று.

(பொ-ரை.) விஷ்ணு மூர்த்தியும், ப்ரஹ்மதேவனும், இந்த்ரனும், அஷ்டதிக்குப் பாலகர்களும், துதித்தற்குரிய ஏகாதஸ ருத்ரர்களும், பிரகாசம் பொருந்திய சந்த்ர பகவானும், காணப்படுகின்ற செந்நிறத்தையுடைய த்வாதஸாதித்யர்களும், அன்புள்ள அஷ்டவஸுக்களும் சந்நிதியில் துதித்து நின்றார்கள்.

(வி - ரை.) ஆசை - திக்கு. பாலகர் - காப்பவர். அஷ்டதிக்குப்பாலகர்கள் :— (கிழக்கில்) இந்த்ரன், (தென்கிழக்கில்) அக்நி, (தெற்கில்) யமன், (தென்மேற்கில்) நிருதி, (மேற்கில்) வருணன், (வடமேற்கில்) வாயு, (வடக்கில்) குபேரன், (வடகிழக்கில்) ஈஶானன். ஏகாதஸருத்ரர்:—மஹாதேவன், ஹரன், ருத்ரன், ஶங்கரன், நீலலோஹிதன், ஈஶானன், விஜயன், பீமதேவன், பவோத்பவன், காபாலி, ஸௌம்யன். த்வாதஸாதித்யர் :—தாத்ரு, சக்ரன், அரியமன், மித்ரன், வருணன், அம்ஸுமான், ஹிரண்யன், பகவான், திவச்சுவான், பூஷன், ஸவித்ரு, துவட்டன். இப்பெயர் சித்திரைமாதம் மேஷராசிமுதல் ஒவ்வோர்மாதத்து ஒவ்வோர் ராசியில் புகுந்த சூர்யனுக்கு முறையே செல்லுமென்பர். அஷ்டவஸுக்கள்:—அனலன், அனிலன், ஆபச்சைவன், ஸோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன். (௧௭)

தெருட்டருங் கின்னரர் சித்தர் வித்தியர்
பொருவருங் கருடர்கிம் புருடர் போற்றின
ரருட்டரு முனிவர்க ளாசி யார்த்தனர்
மருவுகந் திருவர்தா மகிழ்ந்து பாடினர்.

(ப - ரை.) தெருள்தரும் - தெளிவடைந்த, கின்னரர்-கின்னரர்களும், சித்தர் - சித்தர்களும், வித்தியர் - வித்யாதரர்களும், பொருவு அரு - நிகரற்ற, கருடர்-கருடர்களும், கிம்புருடர் - கிம்புருஷர்களும், போற்றினர் - துதித்தார்கள், அருள்தரும் - அநுக்ரஹஞ்செய்கின்ற, முனிவர்கள் - முநிவர்களும், ஆசியார்த்தனர் - வாழ்த்தினார்கள், மருவும் - கூடியிருக்கின்ற, கந்திருவர்-கந்தர்வர்களும், மகிழ்ந்து - சந்தோஷத்துடன், பாடினர் - பாடினார்கள், எ - று.

(பொ-ரை.) தெளிவடைந்த கின்னரர்களும், சித்தர்களும், வித்யாதரர்களும், நிகரற்ற கருடர்களும், கிம்புருஷர்களும் துதித்தார்கள்; அநுக்ரஹஞ்செய்கின்ற முநிவர்களும் வாழ்த்தினார்கள்; கூடியிருக்கின்ற கந்தர்வர்களும் சந்தோஷத்துடன் பாடினார்கள். (௧௮)

தேவது ரியங்களெத் திசையுஞ் செம்மின
தாவலா லலாயுத ரத்தன் பாதமேன்
மேவரு மன்பினால் விரும்பி நோக்கியே
தூவலர்க் கரங்களாற் றொழுது நின்றனர்.

(ப - ரை.) தேவதூரியங்கள் - தேவதுந்துபிகள், எத்திசையும் - எந்தத்திக்குகளிலும், செம்மின - முழங்கின, தாவலால் - (பிறவிக்கடலை) கடத்துவதனால், அலாயுதர்-அலாயுதையர், அத்தன் - சிவபெருமானது, பாதம் மேல் - ஸ்ரீபாதங்களின்மீது,

மேவு அரு - கிடைத்தற்கரிதாகிய, அன்பினால் - அன்புடன், விரும்பி - கவனமாக, நோக்கி - பார்த்து, தூ - பரிசுத்தமாகிய, அலர் - மலர்களையுடைய, கரங்களால் - கைகளினால், தொழுது நின்றனர் - வணங்கிநின்றார், எ - று.

(பொ-ரை.) தேவதுந்துபிகள் எந்தத் திக்குகளிலும் முழங்கின; பிறவிக்கடலைக் கடத்துவதனால் அலாயுதையர் சிவபெருமானது ஸ்ரீ பாதங்களின்மீது கிடைத்தற்கரிதாகிய அன்புடன் கவனமாகப் பார்த்துப் பரிசுத்தமாகிய மலர்களையுடைய கைகளினால் வணங்கி நின்றார். (ருக)

தொழுதுநின் றவர்தமைத் தூய நண்பினாற்
றழுவியங் கணைத்துறத் தருக்கி வாழ்த்தியே
பழுதுறா நேயநம் பத்தி மாசெலாங்
கழுவுவா னேயெனக் களித்துச் சங்கரன்.

(ப-ரை.) தொழுது நின்றவர் தம்மை-வணங்கிநின்ற அலாயுதையரை, சங்கரன்-சிவபெருமான், தூய-பரிசுத்தமான, நண்பினால்-அன்புடன், அங்கு-அவ்விடத்தில், தழுவி அணைத்து - கட்டியணைத்துக்கொண்டு, உற - மிகவும், தருக்கி - சந்தோஷமடைந்து, வாழ்த்தி - ஆசீர்வாதஞ்செய்து, பழுது உறா - குற்றமில்லாத, நேயம் - அன்பாகிய, நம் - நமது, பத்தி - பக்தியின், மாசு எல்லாம்-மலின மெல்லாவற்றையும், கழுவுவானே-சுத்தஞ்செய்பவனே, என-என்று, களித்து-திருவுளமகிழ்ந்து, எ-று.

(பொ - ரை.) வணங்கிநின்ற அலாயுதையரைச் சிவபெருமான் பரிசுத்தமான அன்புடன் அவ்விடத்தில் கட்டியணைத்துக்கொண்டு, மிகவும் சந்தோஷமடைந்து, ஆசீர்வாதஞ்செய்து, குற்றமில்லாத அன்பாகிய நமது பக்தியின் மலின மெல்லாவற்றையும் சுத்தஞ்செய்பவனே! என்று திருவுளமகிழ்ந்து. (சo)

ஆளுமா நவபுர மனையு மத்தனந்
தாளுறு மன்பனுஞ் சயிலக் கன்னியு
நீளுமா யிரங்கதிர் நிகர்பொற் றேர்புகா
வாளுலாங் கயிலைமா மலையின் மன்னினார்.

(ப-ரை) ஆளும் - அரசாட்சிசெய்கின்ற, மா - மேன்மைபொருந்திய, நவபுரம் அனையும் - ஒன்பது பட்டினங்களும், அத்தன் - சிவபெருமானது, அம் - அழகிய, தாள் உறும் - திருவடிகளுக்குத் தொண்டு செய்கின்ற, அன்பனும் - அலாயுதைய பக்தனும், சயிலக்கன்னியும் - பார்வதீ தேவியாரும், நீளும் - நீண்ட, ஆயிரம் கதிர் - ஆயிரக்கணக்கான சூரியர்களை, நிகர்-ஒத்த, பொன் தேர்-ஸ்வர்ணகசிதமான ரதத்தில், புகா-ஏறிக்கொண்டு, வாள் உலாம்-ஒளி வீசுகின்ற, மா-மேன்மைபொருந்திய, கயிலை மலையில் - ஸ்ரீமஹாகைலாஸத்தில், மன்னினார் - சேர்ந்தார்கள், எ-று.

(பொ-ரை.) அரசாட்சிசெய்கின்ற மேன்மைபொருந்திய ஒன்பது பட்டினங்களும், சிவபெருமானது அழகிய திருவடிகளுக்குத் தொண்டு செய்கின்ற அலாயுதைய பக்தனும், பார்வதீ தேவியாரும் நீண்ட ஆயிரக்கணக்கான சூரியர்களையொத்த ஸ்வர்ண கசிதமான ரதத்திலேறிக்கொண்டு ஒளிவீசுகின்ற மேன்மைபொருந்திய ஸ்ரீமஹாகைலாஸத்தில் சேர்ந்தார்கள். (சக)

அலாயுதர் புராணம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ககச.

சிவமயம்.

# சுந்தரப்பெருமாணுயனர் புராணம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மற்று நாவலூர்ச் சுந்தரன் மாதை
மணஞ்செய் பந்தரின் வந்தர னமக்கே
பற்று மேவல்செய் தொண்டனென் றாண்டு
பாடு நம்பத மென்னநற் பதிகஞ்
சொற்றவன் செங்கல் பொன்னெனச் செய்தோன்
றோகை பாகனைத் தூதென விடுத்தோன்
குற்ற வெங்கரா விழுங்கிய மகவைக்
கொணர்வித் தாற்றிட்ட நிதிதடத் தெடுத்தோன்.

(ப-ரை.) மற்றும் - மேலும், நாவலூர் - திருநாவலூரில்(அவதரித்த), சுந்தரன் - சுந்தரமூர்த்திசுவாமிகள், மாதை - பெண்ணை, மணஞ்செய் - (திருப்புத்தூரில்) திருமணஞ்செய்கின்ற, பந்தரின்-திருமணப்பந்தலில், அரன்-சிவபெருமான், வந்து-எழுந்தருளி, நமக்கு—, பற்றும் - (வம்ச பாரம்பர்யமாக) தொடர்ந்து வருகின்ற, ஏவல் செய்-ஊழியம்பண்ணுகின்ற, தொண்டன்-அடிமைக்காரன், என்று-என்று (முறிச்சீட்டைக்காட்டி), ஆண்டு - (திருவெண்ணெய் நல்லூரில்) தடுத்தாட்கொண்டு, நம் - நம்மீது, பதம் - பதிகம், பாடு - பாடுவாய், என்ன - என்று கேட்டலும், நல் - நல்ல, பதிகம் - திருப்பதிகங்களை, சொற்றவன் - பாடினவன், செங்கல் - (திருப்புகலூரில்) செங்கற்களை, பொன் என்ன - பொன்னாக, செய்தோன் - பண்ணினவன், தோகை பாகனை - சிவபெருமானை, தூது என்ன - (பரவைநாச்சியாரிடத்தில்) தூதாக, விடுத்தோன் - (நடுராத்திரியில்) அனுப்பினவன், குற்றம்-துன்பஞ்செய்கின்ற, வெம்-கொடிய, கரா-முதலை, விழுங்கிய-உண்ட, மகவை - ப்ராஹ்மணப்பிள்ளையை, கொணர்வித்து-அழைப்பித்து, ஆறு-(திருமணிமுக்தா)நதியில், இட்ட-போட்ட, நிதி-(பன்னீராயிரம்) பொன்னை, தடத்து-(திருவாரூரிலுள்ள) குளத்தில், எடுத்தோன்-எடுத்தவன், எ-று.

(பொ-ரை.) மேலும் திருநாவலூரில் அவதரித்த சுந்தரமூர்த்திசுவாமிகள் பெண்ணைத் திருப்புத்தூரில் திருமணஞ்செய்கின்ற திருமணப்பந்தலில் சிவபெருமான் எழுந்தருளி, நமக்கு வம்சபாரம்பர்யமாகத் தொடர்ந்து வருகின்ற அடிமைக்காரனென்று முறிச்சீட்டைக் காட்டி, திருவெண்ணெய்நல்லூரில் தடுத்தாட்கொண்டு, நம்மீது பதிகம் பாடுவாயென்று கேட்டலும், நல்ல திருப்பதிகங்களைப் பாடினவன்; திருப்புகலூரில் செங்கற்களைப் பொன்னாகப் பண்ணினவன்; சிவபெருமானைத் தூதாகப் பரவைநாச்சியாரிடத்தில் நடுராத்திரியில் அனுப்பினவன்; துன்பஞ்செய்கின்ற கொடிய முதலை யுண்ட ப்ராஹ்மணப் பிள்ளையை யழைப்பித்துத் திருமணிமுக்தாநதியிற் போட்ட பன்னீராயிரம் பொன்னைத் திருவாரூரிலுள்ள குளத்தில் எடுத்தவன்.

(வி-ரை.) சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாய் தந்தையர் பெயர்கள் இசைஞானியார் சடையனார் என்பது; இவர் நரசிங்கமுனையநாயனாரது அபிமானபுத்ரர்; இவருக்கு வன்றொண்டரென்னும் திருநாமமுண்டு. பதிகம் என்றது "பித்தா" என்னும்

சொல்லை முதலாகவுடைய பதிகத்தை. மாதை யென்றது சடங்கவி சிவாசாரியாரது திருமகளை. தோகைபாகன்-மங்கைபாகன்; உமாதேவியாரை வாமபக்கத்திலுடையவ னென்பது பொருள். அரன் என்றது வீதிவிடங்கப் பெருமானை. (க)

அணங்கு பாகனைக் காட்டினுண் மறித்தோ
னத்த னாரூரி னாலயத் தவரை
வணங்கி டாமலே யகந்தையாற் செல்லு
மறத்தை யவ்விறன் மிண்டர்தாங் கண்டு
துணிந்து செல்பவ னாரென நித்தன்
றோழ னென்னவித் தொண்டனு மிவனைப்
புணர்ந்த வத்தனும் புறம்பெனத் தவரைப்
போற்று கென்றரன் புகன்றிடப் புகழ்வான்.

(ப - ரை.) அணங்குபாகனை - சிவபெருமானை, காட்டினுள் - காட்டில், மறித்தோன் - தடுத்தவன், ஆரூரின் - திருவாரூரிலிருக்கின்ற, அத்தன் ஆலயத்தவரை - சிவாலயத்துள்ளதேவாசிரியமண்டபத்திலிருக்கின்றசிவனடியார்திருக்கூட்டத்தாரை, வணங்கிடாமல் - வணங்காமல், அகந்தையால் - அஹங்காரத்தினால், செல்லும் - (உள்ளே)போகின்ற, மறத்தை-அக்கிரமத்தை, அ-அந்த, விறன்மிண்டர்-விறன்மிண்ட நாயனார், கண்டு-பார்த்து, துணிந்து-மனோத்திடத்துடன், செல்பவன்-போகின்றவன், ஆர் - யார், என்ன - என்று கேட்டலும், நித்தன் தோழன் - தம்பிரான் தோழன், என்ன - என்று சுந்தரர் சொல்லுதலும், இ - இந்த, தொண்டனும் - அடியானும், இவனைப் புணர்ந்த-இவனைச் சேர்ந்த, அத்தனும்-சிவபெருமானும், புறம்பு—, என்ன- என்று சொல்லுதலும், தவரை - அடியாரை, போற்றுக - துதிக்கக்கடவாய், என்று—, அரன் - சிவபெருமான், புகன்றிட - கட்டளையிடுதலும், புகழுவான் - துதிப்பானாயினன் (எவ்வாறெனின்), எ - று.

(போ-ரை.) சிவபெருமானைக் காட்டில் தடுத்தவன்; திருவாரூரிலிருக்கின்ற சிவாலயத்துள்ள தேவாசிரிய மண்டபத்திலிருக்கின்ற சிவனடியார் திருக்கூட்டத்தாரை வணங்காமல் அஹங்காரத்தினால் உள்ளேபோகின்ற அக்கிரமத்தை அந்த விறன்மிண்ட நாயனார்பார்த்து, மனோத்திடத்துடன் போகின்றவன் யார்? என்று கேட்டலும், தம்பிரான் தோழனென்று சுந்தரர் சொல்லுதலும், இந்த அடியானும் இவனைச் சேர்ந்த சிவபெருமானும் புறம்பென்று சொல்லுதலும், அடியாரைத் துதிக்கக்கடவாயென்று சிவபெருமான் கட்டளையிடுதலும், துதிப்பானாயினன்; எவ்வாறெனின்.

(வி - ரை.) அணங்குபாகன் - மங்கைபாகன். சுந்தரர் சிவபெருமானைக் காட்டில் தடுத்தவரலாறு:— சுந்தரர் சிவனடியாரை வணங்காமல் திருக்கோயிலுட் செல்லுதலும், சிவபெருமான் சுந்தரரைப் பார்த்து, நீ அடாத காரியம் செய்தனை; அடியாரை வணங்காமல் வந்து நம்மை வணங்குதல் வணக்கமன்று; ஆகையால் நாம் இவ்விடம் இருக்கவொண்ணாதென்று அடியார் கோலங்கொண்டு பயணப்பட்டு, திருமதிற்சுவற்றிலுள்ள செங்கற்களைக் களைந்து, வழிசெய்துகொண்டு, ஒருவர்க்கும் தெரியாதபடி வெளிப்பட்டு போதலும், சுந்தரர் பின்றொடர்ந்து சென்றனர். சிவபெருமான் வெகுதூரம் திரும்பிப் பாராமற் சென்று ஒரு பெரிய காட்டிற் புகுதலும், சுந்தரர் நெருங்கிவந்து வழிமறுத்தனர். இருவரும் காட்டில் தங்கினர். சிவபெருமான் சுந்தரரை

நோக்கி, அடியாரைத் துதிக்காவிடின் நாம் கோயிலுட் செல்லோமென்று சொல்லுதலும், சுந்தரர் அவ்வாறே துதிக்கச் சம்மதித்தலும், இருவரும் நாட்டைக் கடந்து செல்லாமல் திரும்பி திருவாலயத்துட் சென்றனரென்பது. (௨)

நாச மில்லவ னடம்பயில் பெருமா
  னாம வர்க்குளே பொருவரா மென்னுந்
தேசு பெற்றுயர் பெருமையார் தெருள்சேர்
  தில்லை வாழுமூ வாயிரர்க் கடியே
னீச னாணை யெனுந்தைய லாள்பா
  லின்ப நீத்தற மூத்திறை யருளாற்
காசில் காளையா னவன்றிரு நீல
  கண்ட னாங்குயக் கருணையற் கடியேன்.

(ப-ரை.) நாசம் இல்லவன் - அழிவில்லாதவனாகிய, நடம் பயில் பெருமான்-நடராஜமூர்த்தி, நாம்—, அவர்க்குள் - அவர்களில், ஒருவர்—, ஆம் - ஆவோம், என்னும்-என்று சொல்கின்ற, தேசு பெற்று - கீர்த்தியடைந்து, உயர்-மிகுந்த, பெருமையார்-சிறப்புடையவர்களாகிய, தெருள்சேர்-தெளிவடைந்த, தில்லை வாழும் மூவாயிரர்க்கு-தில்லைவாழந்தணர் மூவாயிரவர்க்கும், அடியேன்—, ஈசன் - நீலகண்டன் மேல், ஆணையென்னும் - ஆணையென்று சொன்ன, தையலாள் பால் - மனையாளிடத்தில், இன்பம் - (இளமைப்பருவத்தடைகின்ற) பெண்போகத்தை, நீத்து - துறந்து, அற - மிகவும், மூத்து - வயது முதிர்ந்தும், இறை - சிவபெருமானது, அருளால் - கடாக்ஷத்தால், காசு இல்-குற்றமற்ற, காளையானவன் - இளமைப்பருவத்தையடைந்தவனும், திருநீலகண்டனும்-திருநீலகண்டனென்னுந் திருநாமத்தையுடையவனுமாகிய, குயன்-குயவர்குலத்துதித்த, கருணையர்க்கு - க்ருபாமூர்த்திக்கும், அடியேன்—, எ-று.

(பொ-ரை.) அழிவில்லாதவனாகிய நடராஜமூர்த்தி, நாம்அவர்களில் ஒருவராவோமென்று சொல்லுகின்ற கீர்த்தியடைந்து மிகுந்த சிறப்புடையவர்களாகிய தெளிவடைந்த தில்லைவாழந்தணர் மூவாயிரவர்க்கும் அடியேன்; நீலகண்டன்மேல் ஆணையென்று சொன்ன மனையாளிடத்தில் இளமைப்பருவத்தடைகின்ற பெண்போகத்தைத் துறந்து, மிகவும் வயது முதிர்ந்தும் சிவபெருமானது கடாக்ஷத்தால் குற்றமற்ற இளமைப்பருவத்தையடைந்தவனும், திருநீலகண்டனென்னுந் திருநாமத்தையுடையவனுமாகிய குயவர்குலத்துதித்த க்ருபாமூர்த்திக்கும் அடியேன்.

(வி-ரை.) திருநீலகண்டர் அவதரித்த ஸ்தலம் சிதம்பரம். மாது-பெண்பொதுப் பெயர்; அது இங்கு மனைவிக்காயிற்று. குயன் - குயவன் என்பதன் விகாரம். (௩)

அன்பர் போலா னணைந்துநின் மாதை
  யளிந மக்கெனக் கொடுத்துள மகிழ்ந்த
வின்பன் காவிரிப் பூம்பட் டினத்தி
  னினிது வாழ்ந்த வியற்பகைக் கடியே
னென்ப சிக்கமு தளியெனுந் தவத்தர்க்
  கின்மை யென்றிடா திருண்முளை வாரித்
துன்ப நீங்கமு துதவிய விளைசைத்
  சாயமா றன்ற னடியவர்க் கடியேன்.

(ப-ரை.) அரன் - சிவபெருமான், அன்பர் போல் - சிவபக்தரைப்போல், அணைந்து-எழுந்தருளி, நின்-உன்னுடைய, மாதை-மனைவியை, நமக்கு—, அளி-கொடுப்பாய், என்ன - என்று கேட்டலும், கொடுத்து-(அவ்வாறே) தந்து, உள்ளம் மகிழ்ந்த-மனமகிழ்ந்த, இன்பன் - கணவனும், காவிரிப்பூம்பட்டினத்தின் - காவிரிப்பூம்பட்டினத்தில், இனிது - சுகமாக, வாழ்ந்த-வசித்திருந்தவனுமாகிய, இயற்பகைக்கு-இயற்பகைநாயனார்க்கும், அடியேன்—, என் - என்னுடைய, பசிக்கு—; அமுது—; அளி - படைப்பாய், என்னும்-என்று கேட்ட, தவர்க்கு-சிவவேடத்தார்க்கு; இன்மை-இல்லை, என்றிடாது-என்று சொல்லாமல், இருள்-இருட்டில், மூளை-செந்நெல்முளைகளை, வாரி - வாரி (கொண்டுவந்து சமைத்து); துன்பம்-பசிநோய், நீங்கு-போதற்குரிய, அமுது - அமுதினை, உதவிய-படைத்த, தூய-பரிசுத்தமடைந்த, இளசைமாறன்-இளையான்குடிமாறநாயனாரது, அடியவர்க்கு - அடியார்க்கும், அடியேன்—, எ-று.

(பொ-ரை.) சிவபெருமான் சிவபக்தரைப்போல் எழுந்தருளி, உன்னுடைய மனைவியை நமக்குக் கொடுப்பாயென்று கேட்டலும், அவ்வாறே தந்து மனமகிழ்ந்த கணவனும், காவிரிப்பூம்பட்டினத்தில் சுகமாக வசித்திருந்தவனுமாகிய இயற்பகைநாயனார்க்கும் அடியேன்; என்னுடைய பசிக்கு அமுது படைப்பாயென்று கேட்ட சிவவேடத்தார்க்கு இல்லையென்று சொல்லாமல் இருட்டில் செந்நெல்முளைகளை வாரிக்கொண்டுவந்து சமைத்துப் பசிநோய் போதற்குரிய அமுதினைப் படைத்த பரிசுத்தமடைந்த இளையான்குடி மாறநாயனாரது அடியார்க்கும் அடியேன்.

(வி-ரை.) மாது-பெண்பொதுப்பெயர்; அது இங்கு மனைவிக்காயிற்று. இளசை-இளையான்குடி என்பதன் மரூஉ. காவிரிப்பூம்பட்டினம் சோழநாட்டிலுள்ளது. இயற்பகைநாயனார் வைசியகுலத்திற் பிறந்தவர். இளையான்குடி மாறநாயனார் வேளாளகுலத்திற் பிறந்தவர். (௪)

பொய்த்த வத்தனோர் புத்தக மேந்திப்
  புகுந்து வந்துயிர் போக்குமவ் வளவிற்
றத்தன் வந்தவற் கோறன்முன் றடுத்த
  தன்மைக் கோவலூர் மெய்ப்பொருட் கடியே
னத்த னேயரை வணங்கிடா தேகு
  மறிவி லேனையு மரனையும் வெகுண்டு
மெய்த்த யாவர்க்கும் புறம்பென்ற தீரன்
  விளங்குசெங் குன்றை விறன்மிண்டர்க் கடியேன்.

(ப-ரை.) பொய்த்தவத்தன் - வஞ்சகமாகிய சிவவேடத்தன், ஓர் புத்தகம்-ஒரு சுவடியை, ஏந்தி - எடுத்துக்கொண்டு, புகுந்து வந்து - (மாளிகையில்) நுழைந்து வந்து, உயிர் போக்கும் அவ்வளவில் - கொல்லுகின்ற அச்சமயத்தில், தத்தன் - தத்தனென்பவன், வந்து - (தனது தலைவனுக்கு உயிர்ச்சேதம் நேரிடுகின்ற செய்கையைப் பார்த்து விரைவாக) சென்று, அவன்-அவ்வஞ்சகனை, கோறல்-கொல்வதற்கு, முன்-முன்னமே, தடுத்த-விலக்கிய, தன்மை-நற்குணத்தையுடைய, கோவலூர்-திருக்கோவலூரிலவதரித்த, மெய்ப்பொருட்கு-மெய்ப்பொருணாயனார்க்கும், அடியேன்—, அத்தன் நேயரை - சிவபக்தரை, வணங்கிடாது - வணங்காமல், ஏகும் - செல்கின்ற, அறிவிலேனையும் - மூடனாகிய அடியேனையும், அரனையும் - சிவபெருமானையும், வெகுண்டு - கோபித்து, மெய்த்த - உண்மைத்தொண்டினைச் செய்கின்ற, யாவர்க்கும்-சிவனடியாரனைவர்க்கும், புறம்பு என்ற - புறம்பென்று சொன்ன, தீரன் - தைரிய

சாலியும், விளங்கும் - பிரகாசிக்கின்ற, செங்குன்றை - திருச்செங்குன்றூரி லவதரித் தவனுமாகிய, விறன்மிண்டர்க்கு-விறன்மிண்டநாயனார்க்கும், அடியேன்—, எ - று.

(பொ - ரை.) வஞ்சகமாகிய சிவவேடத்தன் ஒரு கவளியை எடுத்துக்கொண்டு மாளிகையில் நுழைந்துவந்து கொல்லுகின்ற அச்சமயத்தில், தத்தனென்பவன் தனது தலைவனுக்கு உயிர்ச்சேதம் சேர்க்கின்ற செய்கையைப் பார்த்து, விரைவாகச்சென்று, அவ்வஞ்சகனைக் கொல்வதற்கு முன்னமே விலக்கிய நற்குணத்தையுடைய திருக்கோவலூரி லவதரித்த மெய்ப்பொருணாயனார்க்கும் அடியேன்; சிவபத்தரை வணங்காமற் செல்கின்ற மூடனாகிய அடியேனையும், சிவபெருமானையும், உண்மைத் தொண்டினைச் செய்கின்ற சிவனடியாரனைவர்க்கும் புறம்பென்று சொன்ன தைரியசாலியும், பிரகாசிக்கின்ற திருச்செங்குன்றூரி லவதரித்தவனுமாகிய விறன்மிண்டநாயனார்க்கும் அடியேன்.

(வி-ரை.) பொய்த்தவன் என்றது பகைவனாகிய முத்தநாதனென்னும் அரசனை. புத்தகம் என்றது புத்தகக் கவளிபோலத் தோன்றும்படியாக ஆயுதத்தை மறைத்து வைத்திருந்த கவளியை. தத்தன் - மெய்ப்பொருணாயனாருடைய காவலாளன். திருக்கோவலூர் சேதிநாட்டிலுள்ளது. செங்குன்றூர் மலைநாட்டிலுள்ளது. மெய்ப்பொருணாயனார் குறுநிலமன்னர் குலத்திற் பிறந்தவர். விறன்மிண்டநாயனார் வேளாளகுலத்திற் பிறந்தவர். (௫)

கோவ ணத்தினேர் தவர்தரு கென்னக்
  கோதில்செல் வத்தைக் கோதையைத் தன்னை
மேவி யீந்தவ னியற்பழை யாறை
  விளங்க வந்தரு ளமர்நீதிக் கடியேன்
பூவரற் கென்றோர் மாதவன் கொய்து
  போதுங் காற்கரப் பொருப்பதைப் பறிக்க
ஏவ மென்றிபங் கொன்றவன் கருவூ
  ரென்னு மாநக ரெறிபத்தர்க் கடியேன்.

(ப - ரை.) தவர் - ஓர் சிவவேடத்தார், கோவணத்தின் நேர் - தமது கௌபீனத்திற்குச் சமானமானதோர் கௌபீனத்தை, தருக - கொடுக்கக்கடவாய், என்ன - என்று கேட்டலும் (அதனைக் கொடுக்கமுடியாமையினால் அதற்கீடாகத் தனது), கோது இல் - குற்றமற்ற, செல்வத்தை - நிதியையும், கோதையை - மனைவியையும், தன்னை - தன்னையும், மேவி - (மனம்) இசைந்து, ஈந்தவன் - (தராசிலிட்டு நிறுத்து) கொடுத்தவனும், இயல் - புகழ்பெற்ற, பழையாறை - திருப்பழையாறையென்கின்ற ஸ்தலம், விளங்க - பிரகாசிக்கும்படி, வந்து அருள் - அவதரித்தவனுமாகிய, அமர்நீதிக்கு - அமர்நீதிநாயனார்க்கும், அடியேன்—, பூ - மலர்களை, அரற்கு என்று - சிவபெருமானுக்கென்றே, ஓர் - ஒரு, மாதவன் - சிவவேடத்தன், கொய்து - பறித்து (பூக்குடலையை நிறைத்துக்கொண்டு), போதும்கால் - வருகின்றகாலத்தில், கரப்பொருப்பு-(பட்டத்து) யானையானது, அதை - அந்த மலர்களை, பறிக்க- (துதிக்கையால்) பிடுங்கிக்கொள்ளுதலும், ஏவம் என்று - (இச்செய்கையானது) பெரும்பாவமென்று, இபம் - யானையை, கொன்றவன் - உயிர்வாங்கினவனும், கருவூர்என்னும்- திருக்கருவூரையென்கின்ற, மா - மேன்மைபொருந்திய, நகர் - ஸ்தலத்திலவதரித்தவனுமாகிய, எறிபத்தர்க்கு - எறிபத்தநாயனார்க்கும், அடியேன்—, எ - று.

(பொ - ரை.) ஓர் சிவவேடத்தார் தமது கௌபீநத்திற்குச் சமானமானதோர் கௌபீநத்தைக் கொடுக்கக் கடவாயென்று கேட்டலும், அதனைக் கொடுக்கமுடியாமையினால் அதற்கீடாகத் தானது குற்றமற்றசீதியையும், மனைவியையும், தன்னையும் மனத்தைச் சேர்த்து தராசிலிட்டு சிறத்துக் கொடுத்தவனும், புகழ்பெற்ற திருப்பழையாறையென்கின்ற ஸ்தலம் பிரகாசிக்கும்படி அவதரித்தவனுமாகிய அமர்நீதிநாயனார்க்கும் அடியேன்; மலர்களைச் சிவபெருமானுக்கென்றே ஒரு சிவவேடத்தன் பறித்து பூக்குடலையை நிறைத்துக்கொண்டு வருகின்றகாலத்தில் பட்டத்து யானையானது அந்த மலர்களைத் துதிக்கையாற் பிடுங்கிக்கொள்ளுதலும், இச்செய்கையானது பெரும் பாவமென்று யானையை உயிர்வாங்கினவனும், திருக்கருவையென்கின்ற மேன்மை பொருந்திய ஸ்தலத்திலவதரித்தவனுமாகிய எறிபத்தநாயனார்க்கும் அடியேன்.

(வி - ரை.) கோதை - ஆகுபெயர். திருப்பழையாறை சோழநாட்டிலுள்ளது. மாதவன் என்றது சிவகாமியாண்டாரை. திருக்கருவூர் சோழநாட்டிலுள்ளது. கரப்பொருப்பு - யானை (கரம் - கை. பொருப்பு-மலை). அமர்நீதிநாயனார் வைசியகுலத்திற் பிறந்தவர். (௧)

காது மாற்றல னெற்றிவெண் ணீறு
கண்டு கைப்படை விட்டரற் கண்டோ
னீதியீ ழக்குலத் தோனெ யினனூர்
நீடுமே னாதி நாதனுக் கடியே
னாதி யார் திருக்காளத்தி யார்கண்
ணடைந்த சோரிகண் டங்கையம் பாற்றன்
சோதி யம்பக மிடந்தணிந் துடுப்பூர்
துலங்க வந்தருள் கண்ணப்பர்க் கடியேன்.

(ப-ரை.) காதும்-போர்செய்கின்ற, மாற்றலன்-பகைவனது, நெற்றி-நெற்றியில், வெண்ணீறு கண்டு - விபூதியைப்பார்த்து, கைப்படை - கையிலிருக்கின்ற வாளாயுதத்தை, விட்டு-எறிந்துவிட்டு, அரன்-சிவபெருமானென்றே, கண்டோன்-வணங்கினவனும், நீதி-நல்லொழுக்கத்தையுடைய, ஈழக்குலத்தோன்-சான்றார் குலத்திற்பிறந்தவனும், எயினனூர் - திருவெயினனூரில், நீடு - நெடுநாள்வாழ்ந்திருந்தவனுமாகிய, ஏனாதிநாதனுக்கு-ஏனாதிநாதநாயனார்க்கும், அடியேன்—, ஆதியார்-மூலகாரணராகிய, திருக்காளத்தியார்-திருக்காளத்திநாதரது, கண்-திருக்கண்களில், அடைந்த-ஒழுகின, சோரி - உதிரத்தை, கண்டு - பார்த்து, அங்கை - அகங்கையிலிருக்கின்ற, அம்பால் - அம்பினால், தன் - தனது, சோதி - ஒளியையுடைய, அம்பகம் - கண்ணை, இடந்து-தோண்டி, அணிந்து-அப்பி, உடுப்பூர் - திருவுடுப்பூரானது, துலங்க - விளங்கும்படி, வந்து அருள் - அவதரித்த, கண்ணப்பர்க்கு-கண்ணப்பநாயனார்க்கும், அடியேன்—, எ-று.

(பொ-ரை.) போர் செய்கின்ற பகைவனது நெற்றியில் விபூதியைப் பார்த்து, கையிலிருந்த வாளாயுதத்தை யெறிந்துவிட்டு, சிவபெருமானென்றே வணங்கினவனும், நல்லொழுக்கத்தையுடைய சான்றார் குலத்திற் பிறந்தவனும், திருவெயினனூரில் நெடுநாள் வாழ்ந்திருந்தவனுமாகிய ஏனாதிநாதநாயனார்க்கும் அடியேன்; மூலகாரணராகிய திருக்காளத்திநாதரது திருக்கண்களில் ஒழுகின உதிரத்தைப் பார்த்து அகங்கையிலிருக்கின்ற அம்பினால் தனது ஒளியையுடைய கண்ணைத் தோண்டி யப்பித் திருவுடுப்பூரானது விளங்கும்படி யவதரித்த கண்ணப்பநாயனார்க்கும் அடியேன்.

(வி - ரை.) பகைவன் என்றது அதிசூரனை. எயினனூர் சோழநாட்டிலுள்ளது. திருக்காளத்திநாதரை ஸ்ரீகாளஹஸ்தீஸ்வரர் என்பர் வடநூலார். ஸ்ரீ-லக்ஷ்மி. காளம்-விஷம்; அதனையுடைய பாம்புக்காயிற்று. அத்தி - யானை, (ஹஸ்தியென்னும் வடசொற்றிரிபு). லக்ஷ்மியும், பாம்பும், யானையும் பூசித்த ஸ்தலமாம் சீகாளத்தியென வழங்குதலுமுண்டு. இதற்குச் சிலந்திப்பூச்சியும், பாம்பும், யானையும் பூசித்த ஸ்தலமெனப் பொருட்படும். திருக்காளத்தி தொண்டைநாட்டிலுள்ளது. கண்ணப்ப நாயனார்க்குத் திண்ணனென்பது பிள்ளைத்திருநாமம். கண்களைத்தோண்டி சிவபெருமானுக்குச் சாத்தினதனால் கண்ணப்பா வென்று சிவபெருமானால் அழைக்கப் பட்டவர்; இவர் வேடக்குலத்திற் பிறந்தவர். (எ)

சாய்ந்து றும்பனந் தாளர னேராந்
தன்மை யேநிறீஇ மனைவியின் றாலி
வாய்ந்ததூ பத்திற் கீந்தவன் கடவூர்
வள்ள றெள்ளிய கலயனுக் கடியே
னாய்ந்த நன்மணப் பந்தரின் மகளா
ரரிய கூந்தலை யரிந்துமா தவருக்
கீந்த வண்புகழ்க் கஞ்சைநன் னகர்வா
ழினிய மானக்கஞ் சாறனுக் கடியேன்.

(ப - ரை.) பனந்தாள் - திருப்பனந்தாளென்கின்ற ஸ்தலத்தில், சாய்ந்து உறும்-(திருமேனி) வளைந்திருக்கின்ற, அரன் - சிவலிங்கப்பெருமானை, நேர் ஆம் தன்மை - சரியாகும்படி, நிறீஇ-(கட்டியிருந்ததோர் கயிற்றினைத்தனது கழுத்திற்கட்டியிழுத்து) நிறுத்தி, மனைவியின் - மனையாளின், தாலி - தாலியை, வாய்ந்த - (வழியில்) எதிர்ப் பட்ட, தூபத்திற்கு - தூப கைங்கர்யத்திற்குரிய குங்குலியத்திற்காக, ஈந்தவன் - கொடுத்தவனும், கடவூர் - திருக்கடவூரில் (அவதரித்தவனும்), வள்ளல் - கொடையாளனுமாகிய, தெள்ளிய - சிவஞானத்தெளிவடைந்த, கலயனுக்கு - குங்குலியகலய நாயனார்க்கும், அடியேன்—, ஆய்ந்த - ஆராய்ந்தமைத்த, நல்-சிறந்த, மணப்பந்தரில்-திருமணப்பந்தலில், மகளார்-திருமகளாரது, அரிய-சிறந்த, கூந்தலை - தலைமயிரை, அரிந்து - அறுத்து, மாதவர்க்கு - சிவவேடத்தார்க்கு, ஈந்த - கொடுத்த, வண் புகழ்-மிக்க கீர்த்தியையுடைய, நல்-சிறந்த, கஞ்சைநகர்-திருக்கஞ்சாறூரில், வாழ்-வாசஞ் செய்கின்ற, இனிய - மேன்மைபொருந்திய, மானக்கஞ்சாறனுக்கு - மானக்கஞ்சாற நாயனார்க்கும், அடியேன்—, எ-று.

(போ-ரை.) திருப்பனந்தாளென்கின்ற ஸ்தலத்தில் திருமேனி வளைந்திருக்கின்ற சிவலிங்கப் பெருமானைச் சரியாகும்படிக் கட்டியிருந்ததோர் கயிற்றினைத் தனது கழுத்திற் கட்டி, இழுத்து, நிறுத்தி, மனையாளின் தாலியை வழியில் எதிர்ப் பட்ட தூப கைங்கர்யத்திற்குரிய குங்குலியத்திற்காகக் கொடுத்தவனும், திருக்கடவூரிலவதரித்தவனும், கொடையாளனுமாகிய சிவஞானத்தெளிவடைந்த குங்குலிய கலயநாயனார்க்கும் அடியேன்; ஆராய்ந்தமைத்த சிறந்த திருமணப்பந்தலில் திருமகளாரது சிறந்த தலைமயிரை யறுத்து சிவவேடத்தார்க்குக் கொடுத்த மிக்க கீர்த்தியையுடைய சிறந்த திருக்கஞ்சாறூரில் வாசஞ்செய்கின்ற மேன்மைபொருந்திய மானக்கஞ்சாற நாயனார்க்கும் அடியேன்.

(வி - ரை.) திருக்கடவூர் சோழநாட்டிலுள்ளது. கஞ்சாறு என்றது கஞ்சை யென்று குறுக்கல் விகாரமாயிற்று. குங்குலியகலய நாயனார் ப்ராஹ்மணகுலத்திற் பிறந்தவர். மானக்கஞ்சாற நாயனார் வேளாளகுலத்திற் பிறந்தவர். (அ)

நமதரற் கென்று தண்டிலந் தருங்காற்
  சாய்ந்து மண்புகத் தங்களங் கொய்தங்
கமுது செய்வித் தவன்கண மங்கை
  யான்பெ றும்பயன் றாயனுக் கடியேன்
கமலநல் வேயினி லீசனன் புகழே
  கசிந்து சொற்றுளங் கரைந்துநின் றூதிச்
சமமி லார்க்கிதஞ் செய்தமங் கலம்வாழ்
  தாவி லானய ரடியவர்க் கடியேன்.

(ப - ரை.) நமது—, அரற்கு என்று - சிவபெருமானுக்கென்றே, தண்டிலம் - செந்நெல்லரிசியை, தருங்கால்-(நிவேதனத்திற்காக) கொண்டு போகும்போது, சாய்ந்து-(தாம்) தவறி விழுந்தமையால், மண்-(அது) நிலவெடிப்பில், புக-சிந்திப்போக (கண்டு), தம்-தமது, களம்-கழுத்தை, கொய்து-(அரிவாளினால்) அறுத்துக்கொண்டு, அங்கு-அவ்விடத்தில், அமுது செய்வித்தவன்-உண்ணப்பண்ணினவனும், கணமங்கை யான்-திருக்கணமங்கல மென்கின்ற ஸ்தலத்தி லவதரித்தவனும், பெறும் - அடைதற்குரிய, பயன்-மோக்ஷபதவியையடைந்தவனுமாகிய, தாயனுக்கு-அரிவாட்டாய நாயனார்க்கும், அடியேன்—, கமலம்-சத்த ஸ்வரம் நிறைந்த, நல்-சிறந்த, வேயினில்-வேய்ங்குழலில், ஈசன்-சிவபெருமானது, நல்-சிறந்த, புகழே-புகழாகிய ஸ்ரீபஞ்சாக்ஷர மஹா மந்த்ரத்தையே, கசிந்து - மனமுருகி, சொற்று - ஜபித்து, உள்ளம் கரைந்து-மனமுருகி, நின்று—, ஊதி-வாசித்து, சமம் இல்லார்க்கு-நிகரற்றவராகிய சிவபெருமானுக்கு, இதம் செய்த - திருவுளம் மகிழும்படிப் பண்ணிய, மங்கலம் - திருமங்கல மென்கின்ற ஸ்தலத்தில், வாழ்-வசிக்கின்ற, தாவு இல்-அழிவில்லாத, ஆனயர்-ஆனாய நாயனாரது, அடியவர்க்கு - அடியார்க்கும், அடியேன்—, எ-று.

(பொ-ரை.) நமது சிவபெருமானுக்கென்றே செந்நெல்லரிசியை நிவேதனத்திற்காகக் கொண்டுபோகும்போது தாம் தவறி விழுந்தமையால், அது நிலவெடிப்பிற் சிந்திப்போகக் கண்டு, தமது கழுத்தை யரிவாளினாலறுத்துக்கொண்டு, அவ்விடத்தில் உண்ணப்பண்ணினவனும், திருக்கணமங்கலமென்கின்ற ஸ்தலத்தி லவதரித்தவனும், அடைதற்குரிய மோக்ஷபதவியை யடைந்தவனுமாகிய அரிவாட்டாயநாயனார்க்கும் அடியேன்; சத்த ஸ்வரம் நிறைந்த சிறந்த வேய்ங்குழலில் சிவபெருமானது சிறந்தபுகழாகிய ஸ்ரீபஞ்சாக்ஷர மஹாமந்த்ரத்தையே மனமுருகி ஜபித்து, மனமுருகி நின்று வாசித்து, நிகரற்றவராகிய சிவபெருமானுக்குத் திருவுளம் மகிழும்படிப் பண்ணிய திருமங்கலமென்கின்ற ஸ்தலத்தில் வசிக்கின்ற அழிவில்லாத ஆனாயநாயனாரது அடியார்க்கும் அடியேன்.

(வி - ரை.) கணமங்கலம் சோழநாட்டிலுள்ளது. தாயனாரென்பது பிள்ளைத் திருநாமம். கழுத்தை யரிவாளினாலறுத்தமையால் அரிவாட்டாய நாயனாரென் றாயிற்று. மங்கலநகர் மழநாட்டிலுள்ளது. அரிவாட்டாயநாயனார் வேளாளகுலத்திற் பிறந்தவர். ஆனாயநாயனார் ஆயக்குலத்திற் பிறந்தவர். (கூ)

ஆர மீசற் கமணரான் முட்டனு
  மங்கை சந்தன மாக வரைத்தரன்
வார முற்றுல காண்டவன் மதுரை
  வாழ வந்தருண் மூர்த்தியார்க் கடியே
னேரில் பஞ்சாக் கரந்திகழ் நாவா
  னிகரில்சம் பந்தன் றோழனம் மலர்த்தார்
மூரியேற் றற்குத் தொடுப்பவன் புகலூர்
  முத்தி யெய்தவாழ் முருகனுக் கடியேன்.

(ப - ரை.) அமணரால்-சமணர்களினால், ஈசற்கு-சிவபெருமானது கைங்கர்யத்திற்காக, ஆரம் - சந்தனக்கட்டை, முட்டலும் - இல்லாமற்போதலும், அம்-அழகிய, கை - (தமது) முழங்கையினையே, சந்தனம் ஆக - சந்தனக்கட்டைபோல, அரைத்து-தேய்த்து, அரன் வாரம் - சிவாநுக்ரஹத்தை, உற்று - பெற்று, உலகு-உலகத்தை, ஆண்டவன் - அரசாட்சிசெய்தவனும், மதுரை - மதுரைப்பட்டினம், வாழ - செல்வமோங்கும்பொருட்டு, வந்து அருள் - அவதரித்தவனுமாகிய, மூர்த்தியார்க்கு-மூர்த்திநாயனார்க்கும், அடியேன்—, நேர் இல் - நிகரற்ற, பஞ்சாக்கரம் - ஸ்ரீபஞ்சாக்ஷர மஹாமந்த்ரத்தையே, திகழ் நாவான் - ஜபிப்பவனும், நிகர் இல் - ஒப்பில்லாத, சம்பந்தன்-திருஞானசம்பந்தசுவாமிகளுக்கு, தோழன்-ஸ்நேஹிதனும், அம்-அழகிய, மலர்த்தார் - திருப்பள்ளித்தாமத்தை, மூரியேற்றற்கு-சிவபெருமானுக்காக, தொடுப்பவன் - கட்டுபவனும், புகலூர் - திருப்புகலூரென்கின்ற ஸ்தலம், முத்தி - நற்கதி, எய்த - அடையும்பொருட்டு, வாழ் - வசிக்கின்றவனுமாகிய, முருகனுக்கு - முருகநாயனார்க்கும், அடியேன்—, எ - று.

(பொ - ரை.) சமணர்களினால் சிவபெருமானது கைங்கர்யத்திற்காகச் சந்தனக்கட்டை இல்லாமற்போதலும் அழகிய தமது முழங்கையினையே சந்தனக்கட்டைபோலத் தேய்த்து, சிவாநுக்ரஹத்தைப் பெற்று, உலகத்தை யரசாட்சிசெய்தவனும், மதுரைப்பட்டினம் செல்வமோங்கும்பொருட்டு அவதரித்தவனுமாகிய மூர்த்திநாயனார்க்கும் அடியேன்; நிகரற்ற ஸ்ரீபஞ்சாக்ஷர மஹாமந்த்ரத்தையே ஜபிப்பவனும், ஒப்பில்லாத திருஞானசம்பந்தசுவாமிகளுக்கு ஸ்நேஹிதனும், அழகிய திருப்பள்ளித்தாமத்தை சிவபெருமானுக்காகக் கட்டுபவனும், திருப்புகலூரென்கின்ற ஸ்தலம் நற்கதியடையும்பொருட்டு வசிக்கின்றவனுமாகிய முருகநாயனார்க்கும் அடியேன்.

(வி - ரை.) வாரம் - அன்பு. மதுரை பாண்டிநாட்டிலுள்ளது. பஞ்சாக்கரம் - பஞ்சாக்ஷரம் என்னும் வடசொற்றிரிபு. நாவான் - நாவினையுடையவன். மலர் என்று பொதுப்படக் கூறினமையால் நால்வகைப் பூக்களையும் குறிக்கும்; இவைகள் பூமாலையைத் தொடுக்க வேண்டியதாதலின். நால்வகைப்பூக்கள்:— கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்பன. மூரி - வல்லமையுடைய, ஏற்றற்கு - வ்ருஷப வாஹநமுடையவர்க்கு. புகலூர் சோழநாட்டிலுள்ளது. மூர்த்திநாயனார் வைசிய குலத்திற் பிறந்தவர். முருகநாயனார் ப்ராஹ்மண குலத்திற் பிறந்தவர். மலர்த்தார்-பூமாலை.
(௪௦)

புனலி னல்லும் பகலும் பொருந்தியே
போத ருத்திர மோதும் புரிவிஞ
னினைவு நைந்து திருத்தலை யூரிட
நின்ற ருத்திர பசுபதிக் கடியேன்
றுனியி லாத திருப்புறத் தொண்டனற்
றூய வாதனூர் வாழ்வான் புலையொழிந்
தினிய தியிற் சிதம்பர னன்பினு
லெழுந்து நாளைப்போ வான்றனக் கடியேன்.

(ப - ரை.) புனலின்-(கண்டத்தளவுள்ள) ஜலத்தில், அல்லும் பகலும்-அகோராத்ரமும், பொருந்தி - நின்று, போத - (இரண்டுகைகளையும் சிரசின் மேலேறக் குவித்து) மிகவும், ருத்திரம் - ஸ்ரீருத்ரத்தை, ஓதும் - ஜபிக்கின்ற, புரிவினல் - அன்புடன், நினைவு-மனம், நைந்து-உருகி, திருத்தலையூர் இடம்-திருத்தலையூரில், நின்ற - நிலை பெற்றிருக்கின்ற, ருத்திர பசுபதிக்கு - உருத்திர பசுபதி நாயனுர்க்கும், அடியேன்—, துனி - (இருவினை) துன்பத்தினின்றும், இல்லாத-நீங்கிய, திருப்புறத் தொண்டன் - திருப்புறத்தொண்டனும், நல்தூய - மிக்க பரிசுத்தமாகிய, ஆதனூர் - திருவாதனூரில், வாழ்வான் - வசிப்பவனும், புலை - நீசத்தன்மை, ஒழிந்து - நீங்கி, சிதம்பரன் அன்பினல்-சிவாநுக்ரஹத்தினல், இனிய-மேன்மையான, தீயில்-நெருப்பினின்றும், எழுந்து - முநிஸ்ரேஷ்டனுய் விளங்கினவனுமாகிய, நாளைப்போவான் தனக்கு - திருநாளைப்போவார் நாயனுர்க்கும், அடியேன்—, எ-று.

(பொ - ரை.) கண்டத்தளவுள்ள ஜலத்தில் அகோராத்ரமும் நின்று, இரண்டு கைகளையும் சிரசின்மேலேறக்குவித்து, மிகவும் ஸ்ரீருத்ரத்தை ஜபிக்கின்ற அன்புடன் மனமுருகித் திருத்தலையூரில் நிலைபெற்றிருக்கின்ற உருத்திர பசுபதிநாயனுர்க்கும் அடியேன்; இருவினைத் துன்பத்தினின்றும் நீங்கிய திருப்புறத்தொண்டனும், மிக்க பரிசுத்தமாகிய திருவாதனூரில் வசிப்பவனும், நீசத்தன்மை நீங்கி சிவாநுக்ரஹத்தினல் மேன்மையான நெருப்பினின்றும் முநிஸ்ரேஷ்டனுய் விளங்கினவனுமாகிய திருநாளைப்போவார் நாயனுர்க்கும் அடியேன்.

(வி - ரை.) ஸ்ரீருத்ரம் வேதபுருஷனுக்குக் கண்ணுகியது. திருத்தலையூரும் ஆதனூரும் சோழநாட்டிலுள்ளன. திருமதில் வரையிலே யன்றித் திருவாலயத்துட் செல்வதற்குரியனல்ல ஞாதனுல் திருநாளைப் போவாரைத் திருப்புறத்தொண்டனென்ருர்; இவர் புலையக்குலத்திற் பிறந்தவர்; இவருடைய பிள்ளைத்திருநாமம் நந்தனுர். (கக)

உமையி டத்தினன் கச்சியி லன்பர்தூ
சொலித்து லத்தற் கொழியா மழையினு
லமைவி னெஞ்சாற் சிலையிற் றலையறைந்
தருள்கொளுங் குறிப்புத் தொண்டர்க் கடியே
னெமையு டைப்பர னர்ச்சனை செற்றன
னென்று தந்தை யிருதா டுணித்தர
னமதுசே டங்கொ ளென்னமுன் பெற்றவ
னுடுஞ் சேய்ஞலூர் நற்றண்டிக் கடியேன்.

(ப - ரை.) கச்சியில் - ஸ்ரீ காஞ்சீபுரியில், உமையிடத்தினன் அன்பர் - சிவபக்தர்களது, தூசு-வஸ்த்ரங்களை, ஒலித்து - வெளுத்து, உலர்த்தற்கு - காயவைக்கும் பொருட்டு, ஒழியா-விடா, மழையினல்—, அமைவு இல்-சஞ்சலமுள்ள, நெஞ்சால்-மனத்துடன், சிலையில் - (வெளுக்கின்ற) பாறையில், தலை - தலையை, அறைந்து - மோதிக்கொண்டு, அருள்-சிவாநுக்ரஹத்தை, கொள்ளும்-பெற்றிருக்கின்ற, குறிப்புத் தொண்டர்க்கு - திருக்குறிப்புத்தொண்ட நாயனர்க்கும் அடியேன்—, எம்மை - நம்மை, உடை-அடிமையாகவுடைய, பரன் - சிவபெருமானது, அர்ச்சனை-பூஜையை, செற்றனன்-கெடுத்தான், என்று—, தந்தை - பிதாவினது, இரு - இரண்டு, தாள் - கால்களை, துணித்து - வெட்டி, அரன் - சிவபெருமான், நமது—, சேடம் - கொன்றைமாலை ப்ரஸாதத்தை, கொள் - பெற்றுக்கொள்வாய், என்ன-என்றருளிச் செய்ய, முன்-முற்காலத்தில், பெற்றவன் - பெற்றவனுகிய, நாடும்-யாவரும் விரும்புதற்குரிய, சேய்ஞலூர்-திருச்சேய்ஞலூரில் (அவதரித்த), நல்-சிறப்புற்ற, தண்டிக்கு-சண்டேசுர நாயனர்க்கும், அடியேன்—, எ - று.

(போ - ரை.) ஸ்ரீ காஞ்சீபுரத்தில் சிவபக்தர்களது வஸ்த்ரங்களை வெளுத்துக் காயவைக்கும் பொருட்டு விடாமழையினல் சஞ்சலமுள்ள மனத்துடன் வெளுக்கின்ற பாறையில் தலையை மோதிக்கொண்டு சிவாநுக்ரஹத்தைப் பெற்றிருக்கின்ற திருக்குறிப்புத்தொண்ட நாயனர்க்கும் அடியேன்; நம்மை அடிமையாகவுடைய சிவபெருமானது பூஜையைக்கெடுத்தானென்று, பிதாவினது இரண்டு கால்களை வெட்டி, சிவபெருமான், கொன்றைமாலை ப்ரஸாதத்தைப் பெற்றுக்கொள்வாயென்றருளிச் செய்ய முற்காலத்திற் பெற்றவனுகிய யாவரும் விரும்புதற்குரிய திருச்சேய்ஞலூரிலவதரித்த சிறப்புற்ற சண்டேசுரநாயனர்க்கும் அடியேன்.

(வி-ரை.) உமையிடத்தினன்-சிவபெருமான். கச்சி-காஞ்சீபுரம் என்பதன் மரூஉ; இது தொண்டை நாட்டிலுள்ளது. சிவனடியார்களது திருவுளத்தையறிந்து அவர்களுக்குத் தொண்டு செய்பவரானதால் இவர்க்குத் திருக்குறிப்புத்தொண்ட நாயனர் என்னும் பெயராயிற்று. தந்தை என்றது எச்சதத்தனை. சண்டேசுரர்க்குப் பிள்ளைத் திருநாமம் விசாரசருமர். சண்டேசுரபதவியையடைந்தமையால் இவரைச் சண்டேசுரர் என்று வழங்கலாயிற்று. சேய்ஞலூர் சோழநாட்டிலுள்ளது. காஞ்சீபுரம் தொண்டை நாட்டிலுள்ளது. திருக்குறிப்புத்தொண்டர் ஏகாலியக்குலத்திற் பிறந்தவர். சண்டேசுரர் ப்ராஹ்மண குலத்திற் பிறந்தவர். (கஉ)

கன்மி தப்பக் கடுவமு தாகவெங்
  கரிவ ணங்க மறைக்காட் டடைத்திடும்
வன்மை மிக்க கதவந் திறந்திட
  வன்னி நீற்றறை சூலைதண் ணென்றற
வன்மி குத்த பிறவி யகலவே
  யதிகவீ ரட்டர்க்கா ளாகிப் பாடினே
னன்மை மிக்குயர் வாய்மூர் வருந்திரு
  நாவி னிற்கரை யன்றனக் கடியேன்.

(ப-ரை.) கல்-கல்லானது, மிதப்ப-(தெப்பமாக) மிதக்கவும், கடு-விஷமானது, அமுது ஆக-அமிர்தமாகவும், வெம் - கொடிய, கரி-யானையானது, வணங்க - வணங்கவும், மறைக்காடு-திருமறைக்காட்டில், அடைத்திடும்-மூடப்பட்டிருந்த, வன்மை வலிமை, மிக்க-மிகுந்த, கதவம் - கபாடமானது, திறந்திட - திறக்கவும், வன்னி - சூட்டினையுடைய, நீற்றறை - சுண்ணநீற்றறையும், சூலை - சூலை நோயும், தண் என்று - குளிர்ந்து, அற - ஒழியவும், அல் - அஜ்ஞாநாந்தகாரம், மிகுத்த-மிகுந்திருக்

கின்ற, பிறவி-ஜன்மதுக்கமானது, அகல-ஒழியவும், அதிகம்-மேன்மை பொருந்திய, வீரட்டர்க்கு - வீரட்டானேஸ்வரர்க்கு, ஆள்ஆகி - தொண்டனாகி, பாடினேன் - துதித்தவனும், நன்மை - புண்யம், மிக்கு - மிகுந்து, உயர் - சிறந்த, வாய்மூர் - திருவாமூரென்னும் ஸ்தலத்தில், வரும்-அவதரித்தவனுமாகிய, திருநாவினிற்கு அரையன் - திருநாவுக்கரசு சுவாமிகளுக்கும், அடியேன்—, எ-று.

(பொ-ரை.) கல்லானது தெப்பமாக மிதக்கவும், விஷமானது அமிர்தமாகவும், கொடிய யானையானது வணங்கவும், திருமறைக்காட்டில் மூடப்பட்டிருந்த வலிமை மிகுந்தகபாடமானது திறக்கவும், சுட்டினையுடைய சுண்ணநீற்றறையும், சூலைநோயும் குளிர்ந்தொழியவும், அஜ்ஞானாந்தகாரம் மிகுந்திருக்கின்ற ஜன்ம துக்கமானது ஒழியவும், மேன்மைபொருந்திய வீரட்டானேஸ்வரர்க்குத் தொண்டனாகித் துதித்தவனும், புண்யம் மிகுந்து சிறந்த திருவாமூரென்னும் ஸ்தலத்தி லவதரித்தவனுமாகிய திருநாவுக்கரசு சுவாமிகளுக்கும் அடியேன்.

(வி-ரை.) மறைக்காட்டினை வேதாரண்யம் என்பர் வடநூலார். அம் - இருள். திருவாமூர் - திருமுனைப்பாடி நாட்டிலுள்ளது. திருநாவுக்கரசு சுவாமிகள் வேளாள குலத்திற் பிறந்தவர்; இவருக்கு அப்பர், சொல்லரசு, வாக்கின் மன்னர், தாண்டக வேந்து எனப் பல திருநாமங்களுள; இவற்றில் நாவுக்கரசு என்பது சிவபெருமான் அருளிச்செய்தது. அதனால் சொல்லரசு, வாக்கின்மன்னர் என்றும், தாண்டகங்களையே மிகுதியாக ஓதினமையால் தாண்டகவேந்து, தாண்டகச்சதுரர் என்றும் சேக்கிழார் சுவாமிகளாலுண்டானது; இவரை வாகீசர் என்பர் வடநூலார். இவர் பிள்ளைத் திருநாமம் - மருணீக்கியார். இவர் தாயார் - மாதினியார். இவர் தந்தையார்-புகழனார். இவர் தமக்கையார் - திலகவதியார். அப்பர் என்பது திருஞானசம்பந்தசுவாமிகளாலுண்டானது. வீரட்டானம் திருவதிகையிலுள்ளது. வன்னி-நெருப்பு. (கரு)

அரிய பாண்டியன் றன்னதி காரியா
 யமணா ரேறற் கருங்கழுச் சேர்த்தவன்
குருசி லாமணா மேற்குடிக் காவலன்
 குலச்சி றைக்கடி யார்தமக் கடியேன்
புரியு நற்சிவ யோகமெக் காலமும்
 போத நெஞ்சிற் புரிந்துணர்ந் தென்னையு
முரிமை யாக நினைப்போன் மிழலையோ
 ருய்ய வாழ்குறும் பன்றனக் கடியேன்.

(ப-ரை.) அரிய - மேன்மை பொருந்திய, பாண்டியன் - பாண்டியனுக்கு, அதிகாரியாய் - பிரதான மந்திரியாகி, அமணர் - சமணர்களை, ஏறற்கு அரு-ஏறமுடியாத, கழு - கழுமரங்களில், சேர்த்தவன் - ஏறச்செய்தவனும், குருசில் ஆம் - குறுநிலமன்னர் குலத்திற் பிறந்தவனும், மணமேற்குடி - திருமணமேற்குடியென்னும் ஸ்தலத்திற்கு, காவலன்-தலைவனுமாகிய, குலச்சிறைக்கு - குலச்சிறை நாயனாரது, அடியார் தமக்கு - அடியார்க்கும், அடியேன்—, புரியும்-விரும்பிச்செய்கின்ற, நல்-சிறந்த, சிவயோகம்-சிவராஜயோகத்தை, எக்காலமும் - எப்போதும், போத - மிகுதியாக, நெஞ்சில்-மனத்தில், புரிந்து-அப்பியாஸஞ்செய்து, உணர்ந்து-ப்ரத்யக்ஷத்தாலறிந்து, என்னையும்-அடியேனையும், உரிமையாக - சொந்தமாக, நினைப்போன் - நினைப்பவனும், மிழலையோர்-திருப்பெருமிழலையென்னும் ஸ்தலத்தில் வசிப்பவர்கள், உய்ய-கடைத்தேறும் பொருட்டு, வாழ் - வாழ்கின்றவனுமாகிய, குறும்பன் தனக்கு - குறும்பநாயனார்க்கும், அடியேன்—, எ - று.

(போ-ரை.) மேன்மை பொருந்திய பாண்டியனுக்குப் பிரதான மந்திரியாகிச் சமணர்களை ஏறமுடியாத கழுமரக்கழியிலேறச் செய்தவனும், குறுநிலமன்னர் குலத்திற்பிறந்தவனும், திருமணமேற்குடியென்னும் ஸ்தலத்திற்குத் தலைவனுமாகிய குலச்சிறை நாயனாரது அடியார்க்கும் அடியேன்; விரும்பிச்செய்கின்ற சிறந்த சிவராஜ யோகத்தை எப்போதும் உறுதியாக மனத்தில் அப்பியாஸஞ்செய்து, ப்ரத்யக்ஷத்தாலறிந்து, அடியேனையும் சொந்தமாக நினைப்பவனும், திருப்பெருமிழலையென்னும் ஸ்தலத்தில் வசிப்பவர்கள் கடைத்தேறும்பொருட்டு வாழ்கின்றவனுமாகிய குறும்ப நாயனார்க்கும் அடியேன்.

(வி-ரை.) பாண்டியன் என்றது நெடுமாறனை. மணமேற்குடி பாண்டிநாட்டிலுள்ளது. சுந்தரமூர்த்தி சுவாமிகளால் திருத்தொண்டத்தொகையில் குலச்சிறை நாயனார் பெருநம்பி யென்று வியந்துரைக்கப்பட்டவர். திருமிழலை மிழலைநாட்டிலுள்ளது. சுந்தரமூர்த்திசுவாமிகளது பெருமையை அறிந்து அவருடைய சீர்பாதங்களை மனோவாக் காயங்களினால் சிந்தித்துத் துதித்து வணங்குதலே சிவபெருமானது சீர்பாதங்களையடைதற்குரிய நெறியென்றுணர்ந்தமையால் என்னையு முரிமையாக நினைப்போன் என்றார்; இவர் திருஞானசம்பந்தசுவாமிகளது திருவருளைப்பெற்றவர். குறும்பநாயனார் குறுநிலமன்னர் குலத்திற் பிறந்தவர். (௧௪)

மாவி னன்கனி மாதவர்க் கிட்டிறை
வாழும் வெற்பிற் றலையாற் செலவர
னாவ லாலெம தம்மையெ னப்பெற்ற
வன்னைகா ரைக்கா லம்மைக்கு மடியேன்
றாவி னாவிற் கரை யன்றன் பேரினாற்
றண்ணி லாவுநீர்ப் பந்தரோ டேனையும்
பாவி னன்பி னமைத்தவன் றிங்களூர்ப்
பனவர் வேந்தனு மப்பூதிக் கடியேன்.

(ப-ரை.) நல் - சிறந்த, மாவின்கனி - மாங்கனியை, மாதவர்க்கு - சிவவேடத்தார்க்கு, இட்டு - படைத்து, இறை - சிவபெருமான், வாழும் - வீற்றிருக்கின்ற, வெற்பில் - ஸ்ரீமஹாகைலாஸத்திற்கு, தலையால் - தலையினால், செல்ல - நடந்துபோதலும், அரன் - சிவபெருமான், ஆவலால் - அன்புடன், எமது—, அம்மை—, என்ன - என்று அழைக்க, பெற்ற—, அன்னை - தாயாகிய, காரைக்காலம்மைக்கும் - காரைக்காலம்மையார்க்கும், அடியேன்—, தாவு இல் - அழிவற்ற, நாவிற்கு அரையன் - திருநாவுக்கரசு சுவாமிகள், பேரினால் - திருநாமத்தினால், தண் நிலாவு - குளிர்ச்சி பொருந்திய, நீர்ப்பந்தரோடு - தண்ணீர்ப்பந்தலையும், ஏனையும் - பிற தர்மங்களையும், பாவின் - அழகுடனும், அன்பின் - அன்புடனும், அமைத்தவன் - உண்டாக்கினவனும், திங்களூர் - திருத்திங்களூரிலவதரித்து, பனவர்-வேதியர்களுக்கு, வேந்தன் ஆம் - தலைவனுமாகிய, அப்பூதிக்கு - அப்பூதிநாயனார்க்கும், அடியேன்—, எ - று.

(போ-ரை.) சிறந்த மாங்கனியை சிவவேடத்தார்க்குப் படைத்து சிவபெருமான் வீற்றிருக்கின்ற ஸ்ரீமஹாகைலாஸத்திற்குத் தலையினால் நடந்து போதலும், சிவபெருமான் அன்புடன் எமது அம்மையென்றழைக்கப்பெற்ற தாயாகிய காரைக்காலம்மையார்க்கும் அடியேன்; அழிவற்ற திருநாவுக்கரசு சுவாமிகள் திருநாமத்தினால்

குளிர்ச்சி பொருந்திய தண்ணீர்ப்பந்தலையும், பிற தர்மங்களையும் அழகுடனும் அன்புடனும் உண்டாக்கினவனும், திருத்திங்களூரிலவதரித்து வேதியர்களுக்குத் தலைவனுமாகிய அப்பூதிநாயனார்க்கும் அடியேன்.

(வி - ரை.) காரைக்காலம்மையார் காரைக்கால் என்னும் ஸ்தலத்தையுடையவர்; இவர் புனிதவதியார் என்னும் திருநாமத்தைப்பெற்றவர். காரைக்காலும் திங்களூரும் சோழநாட்டிலுள்ளன. ஏனையும் என்றது திருமடங்கள், திருக்குளங்கள், திருநந்தவனம் முதலியவற்றை. அம்மையார் வைசியகுலத்திற் பிறந்தவர். அப்பூதிநாயனார் ப்ராஹ்மணகுலத்திற் பிறந்தவர். பாவின் - பரவுதல் எனினுமாம். வெற்பில் - உருபு மயக்கம். பனவர் வேந்தன் - ப்ராஹ்மணகுல ஶ்ரேஷ்டன் எனினுமாம். (௩௰)

சிலம்பி நம்முடற் சேரநின் பன்னிதான்
சென்றுமிழ்ந்ததாற் றீர்ந்தது நோயெனச்
சொலுஞ்சொ லத்தர்பாற் பெற்றவன் சாத்தைவாழ்
தூய நீல நக்கன்ற னக்கடியே
னிலங்குமே மப்பே றாரணூராற்
கேற்ற தீபநெய்க் கேதஞ்செய் வெஞ்சமண்
கலங்க வென்றுநன் னீரால் விளக்கிடுங்
கரவி லாத நமிநந்திக் கடியேன்.

(ப - ரை.) நம் - நமது, உடல் - திருமேனியின்மீது, சிலம்பி - சிலந்திப்பூச்சியானது, சேர - (மேலேநின்று வழுவி) விழுதலும், நின் - உனது, பன்னி - மனைவியானவள், சென்று - வந்து, உமிழ்ந்ததால்-ஊதித் துமிர்ந்ததனால், நோய் - (சிலந்திக் கொப்புளத்தினாலுண்டாகிய) நோயானது, தீர்ந்தது - போயிற்று, என்ன - என்று, சொல்லும் - சொல்லியருளின, சொல் - திருமொழியினை, அத்தர் பால்-சிவபெருமானிடத்தில், பெற்றவன் - பெற்றவனும், சாத்தை - திருச்சாத்தமங்கையென்னும் ஸ்தலத்தில், வாழ் - வாழ்கின்றவனும், தூய - பரிசுத்தனுமாகிய, நீலநக்கன் தனக்கு - திருநீலநக்கநாயனார்க்கும், அடியேன்—, இலங்கும் - விளங்குகின்ற, ஏமப்பேறான் - திருவேமப்பேறூரி லவதரித்தவனும், ஆரூர் - திருவாரூரில் வீற்றிருக்கின்ற, அரற்கு - சிவபெருமானுக்கு, ஏற்றும் - ஏற்றுதற்குரிய, தீபம் - திருவிளக்குக்காக, நெய்க்கு - நெய்யினுக்கு, ஏதம் - இடையூறு, செய்-பண்ணுகின்ற, வெம்-கொடிய, சமண் - சமணர்கள், கலங்க - துன்பப்படும்படி, வென்று - ஜயித்து, நல் - நல்ல, நீரால் - ஜலத்தினால், விளக்கு இடும் - திருவிளக் கேற்றினவனுமாகிய, கரவு இல்லாத - கபடமில்லாத, நமிநந்திக்கு - நமிநந்தியடிகளுநாயனார்க்கும், அடியேன்—, எ - று.

(போ - ரை.) நமது திருமேனியின்மீது சிலந்திப்பூச்சியானது மேலேநின்று வழுவி விழுதலும், உனது மனைவியானவள் வந்து ஊதித் துமிர்ந்ததனால் சிலந்திக் கொப்புளத்தினாலுண்டாகிய நோயானது போயிற்றென்று சொல்லியருளின திருமொழியினை சிவபெருமானிடத்திற் பெற்றவனும், திருச்சாத்த மங்கையென்னும் ஸ்தலத்தில்வாழ்கின்றவனும், பரிசுத்தனுமாகிய திருநீலநக்கநாயனார்க்கும் அடியேன்; விளங்குகின்ற திருவேமப்பேறூரி லவதரித்தவனும், திருவாரூரில் வீற்றிருக்கின்ற சிவபெருமானுக்கு ஏற்றுதற்குரிய திருவிளக்குக்காக நெய்யினுக்கு இடையூறு பண்ணுகின்ற கொடிய சமணர்கள் துன்பப்படும்படி ஜயித்து நல்ல ஜலத்தினால் திருவிளக்கேற்றினவனுமாகிய கபடமில்லாத நமிநந்தியடிகளுநாயனார்க்கும் அடியேன்.

(வி - ரை.) பன்னி - பத்நி என்னும் வடசொற்றிரிபு. சாத்தமங்கையும் ஏமப் பேறூரும் சோழநாட்டிலுள்ளன. ஏதம் - குற்றம். திருநீலநக்கநாயனாரும் நமிநந்தி யடிகணாயனாரும் ப்ராஹ்மணகுலத்திற் பிறந்தவர். அரற்கு என்றது வன்மீகநாதரை.

மண்ட ழைக்கச் சமணர் வலிகெட
வந்து செந்தமிழ்ப் பாட வுமைமுலைக்
கண்ட ரும்பய முண்டு புகலிமுக்
கண்ண னைத்துதித் தங்கம்பெண் ணாகவும்
பண்டு நீங்கு கதவ மடைக்கவும்
பாலை நெய்தலாய்ப் பாம்ப திறக்கவு
மிண்டு புத்தர் கெடவிடி வீழவு
மிக்கபாச் செய்த சம்பந்தர்க் கடியேன்.

(ப - ரை.) மண் - உலகத்தார், தழைக்க - செழிக்கவும், சமணர் - சமணர்கள், வலி - ஆற்றல், கெட - அழியவும், வந்து - அவதரித்து, செந்தமிழ் - செந்தமிழ்ப் பதிகங்களை, பாட - பாடும்பொருட்டு, உமை - உமாதேவியாரது, முலைக்கண்-திருத் தனங்களினின்றும், தரும் - ஒழுகுகின்ற, பயம் - பாலை, உண்டு - பருகி, புகலி - சீகாழியில் வீற்றிருக்கின்ற, முக்கண்ணனை - த்ரிநேத்ரதாரியாகிய தோணியப்பரை, துதித்து - ஏத்தி, அங்கம் - எலும்பு, பெண் ஆகவும் - பெண்ணாகவும், பண்டு - முற்காலத்தில், நீங்கு - திறக்கப்பட்டிருந்த, கதவம் - கபாடம், அடைக்கவும்-மூடவும், பாலை-பாலை நிலம், நெய்தல் ஆய் - நெய்தல் நிலமாகவும், பாம்பு-சர்ப்பம், இறக்கவும்-சாகவும், மிண்டு - மதத்தாலடர்க்கின்ற, புத்தர் - புத்தர்கள், கெட - அழியும்படி, இடி—, வீழவும்-விழவும், மிக்க-மேன்மையாகிய, பா - திருப்பதிகங்களை, செய்த - பாடியருளிய, சம்பந்தர்க்கு - திருஞானசம்பந்தசுவாமிகளுக்கும், அடியேன்—, எ-று.

(பொ - ரை.) உலகத்தார் செழிக்கவும், சமணர்கள் ஆற்றல் அழியவும் அவதரித்து, செந்தமிழ்ப் பதிகங்களைப் பாடும்பொருட்டு உமாதேவியாரது திருத்தனங்களினின்றும் ஒழுகுகின்ற பாலைப் பருகி, சீகாழியில் வீற்றிருக்கின்ற த்ரிநேத்ரதாரியாகிய தோணியப்பரை யேத்தி, எலும்பு பெண்ணாகவும், முற்காலத்தில் திறக்கப் பட்டிருந்த கபாடம் மூடவும், பாலை நிலம் நெய்தல் நிலமாகவும், சர்ப்பம் சாகவும், மதத்தாலடர்க்கின்ற புத்தர்கள் அழியும்படி இடிவிழவும், மேன்மையாகிய திருப்பதிகங்களைப் பாடியருளிய திருஞானசம்பந்தசுவாமிகளுக்கும் அடியேன்.

(வி - ரை.) மண் - ஆகுபெயர். கதவடைத்த ஸ்தலம் - திருமறைக்காடு. அங்கம் பெண்ணான ஸ்தலம் - திருமயிலாப்பூர். திருமுலைப்பாலுண்ட ஸ்தலம்-சீகாழி. புகலி சோழநாட்டிலுள்ளது. இதற்குப் பன்னிரண்டு பெயர்களுள:—பிரமபுரம், வேணு புரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சை, கழுமலம் என்பன. திருஞானசம்பந்தசுவாமிகள் ஸர்வாத்மாக்களுக்கும் பரமபிதாமாதாக்களாகிய சிவன் சத்தி இருவராலும் ஆளப்பட்டமையால் ஆளுடைய பிள்ளையாரென்றும், ஹரிப்ரஹ்மேந்த்ராதி தேவர்கட்கும் எட்டாத ஞானத்தோடு சம்பந்தஞ்செய்தமையால் ஞானசம்பந்தனென்றும் சொல்லப்படுவர். இவர் கௌணி யர்குலத்திற் பிறந்தவர். இவர் தாய்தந்தையர் பெயர்கள் பகவதியார் சிவபாத விருதயர் என்பது. அங்கம் பெண் என்றது அங்கம் பூம்பாவையை. புத்தர் - பௌத்தர் என்னும் வடசொற்றிரிபு. புத்தர் என்றது புத்தநந்தியை. இடிவிழச்செய்த ஸ்தலம் - திருப்போதிமங்கை. (கஎ)

எந்தைதன் றந்தை யேமுத லாயினோ
மெல்லா வர்க்கு மிறைவன்வன் றொண்டனே
வந்த நோயை யொழிப்ப னெனப்படை
வாங்கி வாழ்ந்த கலிக்காமர்க் கடியே
னந்து சாத்தனூ ராயன் குரம்பையி
னண்ணி யத்தர்க்கு நான்மறை யின்படி
முந்து செந்தமிழ் மூவாயி ரஞ்செய்த
முத்த னாகிய மூலனுக் கடியேன்.

(ப-ரை.) எந்தை தன் தந்தை-எமது மூதாதை, முதலாயினோம் எல்லவர்க்கும் - முதலானவர்களுக்கெல்லாம், இறைவன் - தலைவனாகிய சிவபெருமான் (தடுத்தாண்டருளிய), வன்றொண்டனே-சுந்தரனே, வந்த-நமக்கு உண்டாகிய, நோயை - சூலை நோயை, ஒழிப்பன்-தீர்க்கவல்லவன், என்ன-என்று, படை - வாளாயுதத்தை, வாங்கி-உருவி(எடுத்துத் தமது வயிற்றைக் குத்திக் கிழித்து), வாழ்ந்த-திருப்பெருமங்கலத்தில் வாழ்ந்திருந்த, கலிக்காமர்க்கு - ஏயர்கோன்கலிக்காம நாயனார்க்கும், அடியேன்—, நந்து-விருத்தி யடைந்திருக்கின்ற, சாத்தனூர்-திருச்சாத்தனூரில் (வாழ்ந்திருந்து மாண்டு போன), ஆயன் - இடையனது, குரம்பையில்-உடம்பில், நண்ணி - புகுந்து, அத்தர்க்கு - தந்தையாகிய சிவபெருமானுக்கு, நான் மறையின்படி-சதுர்வேத விதிப்படி, முந்து-தொன்மையான, செந்தமிழ் - செந்தமிழ்ப்பாடல்கள், மூவாயிரம் செய்த - மூவாயிரம் பாடியருளிய, முத்தனாகிய - ஜீவன்முக்தனாகிய, மூலனுக்கு - திருமூலநாயனார்க்கும், அடியேன்—, எ-று.

(போ - ரை.) எமது மூதாதை முதலானவர்களுக்கெல்லாம் தலைவனாகிய சிவபெருமான் தடுத்தாட்கொண்டருளிய சுந்தரனே நமக்கு உண்டாகிய சூலை நோயைத் தீர்க்க வல்லவன்? என்று வாளாயுதத்தை உருவி எடுத்துத் தமது வயிற்றைக் குத்திக் கிழித்து, திருப்பெருமங்கலத்தில் வாழ்ந்திருந்த ஏயர்கோன்கலிக்காம நாயனார்க்கும் அடியேன்; விருத்தியடைந்திருக்கின்ற திருச்சாத்தனூரில் வாழ்ந்திருந்து, மாண்டுபோன இடையனது உடம்பிற் புகுந்து, தந்தையாகிய சிவபெருமானுக்குச் சதுர்வேத விதிப்படித் தொன்மையான செந்தமிழ்ப்பாடல்கள் மூவாயிரம் பாடியருளிய ஜீவன்முக்தனாகிய திருமூல நாயனார்க்கும் அடியேன்.

(வி - ரை.) எந்தை - எம் தந்தை. சுந்தரரை சிவபெருமான் வலாத்காரமாய்த் தடுத்தாண்டருளினமையால் வன்றொண்டன் என்னலாயிற்று. படை-ஆயுதப்பொது; அது இங்கே வாளுக்காயிற்று. திருப்பெருமங்கலம் சோழநாட்டிலுள்ளது. ஏயர்கோன் கலிக்காமநாயனார் வேளாளகுலத்திற் பிறந்தவர். ஆயன் என்றது மூலன் என்பவனை. மூலனுடைய உடம்பிற் புகுந்தவர் ஓர் சிவயோகி; இவர் திருநந்திதேவருடைய திருவருளைப் பெற்ற மாணாக்கராகிய சிவயோகிகளிலொருவர்; இவர் பொதியமலைக்குச் போகின்ற மார்க்கத்தில் கிடந்திருந்த இடையன் உடம்பிற் புகுந்தவர். செந்தமிழ் மூவாயிரத்தைத் திருமந்திரமென்பர்; இது ஓர் சிறந்த ஞானநூல். (கஅ)

விழிக ளின்றிக் கயிறு குரியதாய்
வித்த கர்க்குந் தடஞ்செய்ப வெஞ்சமண்
பழியர் நிந்தித்துக் கண்ணறத் தாள்விழி
படைத்த வாரூர்ப் பதிதண்டிக் கடியே
னழகு நீர்வயல் வேற்காட்டூர் மன்னவ
ளூடு சூதி லிளைந்த பொருள்வர
முழுது மன்பர் பெறநற் குடந்தையின்
மோகத்திற் றந்த மூர்க்கனுக் கடியேன்.

(ப - ரை.) விழிகள் - (பிறந்தபோதே) கண்கள், இன்றி - இல்லாமல், கயிறு - கயிற்றை, குறியாய் - அடையாளமாக வைத்துக்கொண்டு, வித்தகர்க்கு - ஜ்ஞானஸ்வரூபியாகிய சிவபெருமானுக்கு. அம் - அழகிய, தடம் - திருக்குளத்தை, செய்ய - பெருக்கக் கட்டுகையில், வெம் - கொடிய, சமண் - சமணர்களாகிய, பழியர் - பழிகாரர்கள், நிந்தித்து - (பொறாமையினால்) அவமதித்து, கண் - (தங்களுக்குண்டாயிருந்த) கண்கள், அற - கெட்டுப்போகவும், தான்—, விழி - (தனக்கில்லாதிருந்த) கண்களை, படைத்த- (சிவாநுக்ரஹத்தினால்) பெற்றுக்கொண்ட, ஆரூர்ப்பதி-திருவாரூரென்னும் ஸ்தலத்தில் அவதரித்த, தண்டிக்கு - தண்டியடிகளுயனார்க்கும், அடியேன்—, அழகு - அழகுபொருந்திய, நீர்-நீர் நிறைந்த, வயல் - வயல்களாற் சூழ்ந்த, வேற்காட்டூர்-திருவேற்காடென்னும் ஸ்தலத்திற்கு, மன்னவன் - தலைவனும், ஆடும் - தாம் ஆடுகின்ற, சூதில் - சூதாட்டத்தில், அணைந்த-சம்பாதிக்கின்ற, பொருள் - பணம், வர - கிடைத்தலும், முழுதும் - எல்லாவற்றையும், அன்பர் - சிவபக்தர்களே, பெற - பெற்றுவாழும்படி, நல் - மேன்மையாகிய, குடந்தையில் - திருக்குடந்தையில், மோகத்தில் - அன்புடன், தந்த - கொடுத்தவனுமாகிய, மூர்க்கனுக்கு - மூர்க்கநாயனார்க்கும், அடியேன்—, எ - று.

(பொ - ரை.) பிறந்தபோதே கண்கள் இல்லாமல் கயிற்றை யடையாளமாக வைத்துக்கொண்டு ஜ்ஞானஸ்வரூபியாகிய சிவபெருமானுக்குத் திருக்குளத்தைப் பெருக்கக் கட்டுகையில் கொடிய சமணர்களாகிய பழிகாரர்கள் பொறாமையினால் அவமதித்துத் தங்களுக்குண்டாயிருந்த கண்கள்கெட்டுப்போகவும் தான் தனக்கில்லாதிருந்த கண்களை சிவாநுக்ரஹத்திற் பெற்றுக்கொண்ட திருவாரூரென்னும் ஸ்தலத்தில் அவதரித்த தண்டியடிகளுயனார்க்கும் அடியேன்; அழகுபொருந்திய நீர் நிறைந்த வயல்களாற் சூழ்ந்த திருவேற்காடென்னும் ஸ்தலத்திற்குத் தலைவனும், தாம் ஆடுகின்ற சூதாட்டத்தில் சம்பாதிக்கின்ற பணம் கிடைத்தலும் எல்லாவற்றையும் சிவபக்தர்களே பெற்று வாழும்படி மேன்மையாகிய திருக்குடந்தையில் அன்புடன் கொடுத்தவனுமாகிய மூர்க்கநாயனார்க்கும் அடியேன்.

(வி - ரை) திருவாரூர் சோழநாட்டிலுள்ளது. திருவேற்காடு தொண்டைநாட்டிலுள்ளது. குடந்தை-கும்பகோணம் என்பதன் மரூஉ. மூர்க்கநாயனார் வேளாளக்குலத்திற் பிறந்தவர்.

அஞ்செ ழுத்தறைந் தல்லான் மொழிகலா
வன்ப னந்தண னாவோன் றன் வேள்விக்கு
நெஞ்சு வந்தரன் வந்திடப் பெற்றமா
நேயன்சோ மாசி மாறனுக் கடியேன்
வஞ்சி பாக னருட்கச்சிக் கம்பன்மேல்
வந்து செங்கற் றினமு மெறிந்தவன்
றஞ்ச மென்றடைந் தோன்சங்க மங்கையிற்
சாக்கி யன்றன தடியவர்க் கடியேன்.

(ப - ரை) அஞ்சு எழுத்து - ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹாமந்த்ரத்தை, அறைந்து - ஜபித்தே, அல்லால்-அல்லாமல், மொழிகலா-(வேறொன்றினையும்) பேசாத, அன்பன்- பக்தனும், அந்தணன் ஆவோன்-(திருவம்பரென்னும் ஸ்தலத்தில் அவதரித்த) ப்ராஹ்மணனும், தன் தனது, வேள்விக்கு-யாகங்களுக்கு, அரன் - சிவபெருமான், நெஞ்சு- மனம், உவந்து - மகிழ்ந்து, வந்திடப்பெற்ற - எழுந்தருளப்பெற்ற, மா - மேன்மையாகிய, நேயன் - பக்தனுமாகிய, சோமாசிமாறனுக்கு - சோமாசிமாற நாயனார்க்கும்,

அடியேன்—, கச்சி-ஸ்ரீகாஞ்சீபுரத்தில் (ஓர் வெள்ளிடையிலிருக்கின்ற), வஞ்சிபாகன் உமாபாகனாகிய, அருள் - கருணையுடைய, கம்பன் - ஏகாம்பரநாதரின், மேல் - மீது, வந்து - சென்று, செங்கல் - செங்கற்களை, தினமும் - நாடோறும், எறிந்தவன் - எறிந்து, தஞ்சம் - அடைக்கலம், என்று—, அடைந்தோன் - சரணடைந்தவனும், சங்கமங்கையில் - திருச்சங்கமங்கையென்னும் ஸ்தலத்தில் அவதரித்தவனுமாகிய, சாக்கியன் தனது - சாக்கியநாயனாரது, அடியவர்க்கு - அடியார்க்கும், அடியேன்—, எ - று.

(பொ-ரை.) ஸ்ரீபஞ்சாக்ஷர மஹாமந்த்ரத்தை ஜபித்தேயல்லாமல் வேறொன்றினையும் பேசாத பக்தனும், திருவம்பரென்னும் ஸ்தலத்தில் அவதரித்த ப்ராஹ்மணனும், தனது யாகங்களுக்கு சிவபெருமான் மனமகிழ்ந்து எழுந்தருளப் பெற்ற மேன்மையாகிய பக்தனுமாகிய சோமாசிமாறநாயனார்க்கும் அடியேன்; ஸ்ரீகாஞ்சீபுரத்தில் ஓர் வெள்ளிடையிலிருக்கின்ற உமாபாகனாகிய கருணையுடைய ஏகாம்பரநாதரின் மீது சென்று செங்கற்களை நாடோறும் எறிந்து அடைக்கலமென்று சரணடைந்தவனும், திருச்சங்கமங்கை யென்னும் ஸ்தலத்தில் அவதரித்தவனுமாகிய சாக்கிய நாயனாரது அடியார்க்கும் அடியேன்.

(வி-ரை.) வஞ்சி-கொடி, அது உவமையாகு பெயராய்க் கொடிபோல்வாளை யுணர்த்தி, பாகன் என மேலே வருதலால் உமாதேவியாரைக்குறித்தது. திருவம்பர் சோழநாட்டிலுள்ளது. சாக்கியநாயனார் வேளாளக் குலத்திற் பிறந்தவர். எறிந்தவன்-முற்றெச்சம். கச்சி-காஞ்சீபுரம் என்பதன் மரூஉ. (௨0)

பூதி சாதன மேவும் புனிதராம்
புண்ணி யத்தரைப் பூசிக்கும் புந்தியன்
வேதி யக்குல னக்கூ ரதிபனு
மிக்க பத்தன் சிறப்புலிக் கடியே
னாதி யத்தர்க் கமுதாய் மகன்றனை
யாக்கி மற்று மரனழை யென்னவே
தீதி லன்பி னழைத்தருள் பெற்றசெங்
காட்டு மன்சிறுத் தொண்டனுக் கடியேன்.

(ப-ரை.) பூதி-விபூதி (ருத்ராக்ஷங்களாகிய),சாதனம்-சிவலாஞ்சனங்களை, மேவும்-தாரணஞ்செய்கின்ற, புனிதர் ஆம்-பரிசுத்தர்களாகிய, புண்ணியத்தரை - சிவனடியார்களையே, பூசிக்கும் - ஆராதிக்கின்ற, புந்தியன் - மனமுடையவனும், வேதியக்குலன் - ப்ராஹ்மணகுலத்திற் பிறந்தவனும், ஆக்கூர்-திருவாக்கூரென்னும் ஸ்தலத்திற்கு, அதிபன்-தலைவனும், மிக்க-சிறந்த, பத்தன் ஆம் - பக்தனுமாகிய, சிறப்புலிக்கு - சிறப்புலிநாயனார்க்கும், அடியேன்—, ஆதி - மூலகாரணனும், அத்தற்கு - தந்தையுமாகிய சிவபெருமானுக்கு, அமுது ஆய்-கறியமுதாக, மகன் தன்னை-மகனை, ஆக்கி-சமைத்து, மற்றும்-மேலும், அரன் - சிவபெருமான், அழை - அழைப்பாய், என்ன - என்று கட்டளையிடுதலும், தீது இல் - பரிசுத்தமாகிய, அன்பின் - அன்புடன், அழைத்து—, அருள் - அநுக்ரஹத்தை, பெற்ற - அடைந்த, செங்காடு-திருச்செங்காட்டங்குடியென்னும் ஸ்தலத்திற்கு, மன் - தலைவனாகிய, சிறுத்தொண்டனுக்கு - சிறுத்தொண்ட நாயனார்க்கும், அடியேன்—,எ-று.

(பொ-ரை.) விபூதி ருத்ராக்ஷங்களாகிய சிவலாஞ்சனங்களைத் தாரணஞ்செய்கின்ற பரிசுத்தர்களாகிய சிவனடியார்களையே யாராதிக்கின்ற மனமுடையவனும், ப்ராஹ்மணகுலத்திற் பிறந்தவனும், திருவாக்கூரென்னும் ஸ்தலத்திற்குத் தலைவனும், சிறந்த

பக்தனுமாகிய சிறப்புலிநாயனார்க்கும் அடியேன்; மூலகாரணனும் தந்தையுமாகிய சிவபெருமானுக்குக் கறியமுதாக மகனைச் சமைத்து, மேலும் சிவபெருமான் அழைப்பாயென்ற கட்டளையிடுதலும் பரிசுத்தமாகிய அன்புடன் அழைத்து, அநுக்ரஹத்தையடைந்த திருச்செங்காட்டங்குடியென்னும் ஸ்தலத்திற்குத் தலைவனாகிய சிறுத்தொண்டநாயனார்க்கும் அடியேன்.

(வி - ரை.) திருவாக்கூரும், திருச்செங்காட்டங்குடியும் சோழநாட்டிலுள்ளன. மகன் என்றது சீராளனை. சிறுத்தொண்டர்க்குப் பரஞ்சோதியாரென்னும் பிள்ளைத் திருநாமமுண்டு; இவர் மாமாத்திர ப்ராஹ்மண குலத்திற் பிறந்தவர். புண்ணியத்தர் - தர்மசீலர். (உக)

எதிர்த்த வண்ணா னுடலுவர் நீறதென்
றிறைஞ்ச நானடி வண்ணானென் றேத்தலு
மதித்து நாடினச் சேரனென் றேத்திய
வஞ்சி மன்னன் கழறிற் றறிபவன்
றுதித்த ரன்றிருத் தாண்டவம் பூசனை
தொலைவி னித்தலுந் தோன்றப்பெற் றெம்பிரான்
விதித்த நன்முகம் பாணராற் பெற்றருண்
மேவும் வேந்தனுஞ் சேரனுக் கடியேன்.

(ப - ரை.) எதிர்த்த - பார்த்த, வண்ணான் - வண்ணானது, உடல் - உடம்பில் (படிந்திருக்கின்ற), உவர்-உவர் மண்ணை, நீறு-திருவெண்ணீறு, என்று-என்றெண்ணி, இறைஞ்ச-வணங்குதலும், நான்—, அடிவண்ணான்—, என்று—, ஏத்தலும்-வணங்குதலும், மதித்து - (சேரன் அவனது நற்குணத்தை) கொண்டாடி, நான்—, அடிச்சேரன்—, என்று—, ஏத்திய-வணங்கிய, வஞ்சி-திருவஞ்சைக்களமென்னும் ஸ்தலத்திற்கு, மன்னன் - தலைவனும், கழறிற்று - சொன்னவற்றையெல்லாம், அறிபவன் - உணரவல்லவனும், அரன் - சிவபெருமானை, துதித்து-வணங்கி, திருத்தாண்டவம் - திருநடனத்தை, பூசனை - சிவபூஜை, தொலைவு இல்-முடிந்த அவ்வளவில், நித்தலும் - நாடோறும், தோன்ற - காட்சிதந்தருள, பெற்று—, எம்பிரான் - சிவபெருமான், விதித்த - திருவாய்மலர்ந்தருளிய, நல்முகம் - திருமுகத்தை, பாணரால் - பாணபத்திரரால், பெற்று—, அருள்மேவும் - சிவாநுக்ரஹத்தைப்பெற்ற, வேந்தன் ஆம் - அரசனுமாகிய, சேரனுக்கு - சேரமான்பெருமாணாயனார்க்கும், அடியேன்—, எ-று.

(பொ-ரை.) பார்த்த வண்ணானது உடம்பிற் படிந்திருக்கின்ற உவர் மண்ணைத் திருவெண்ணீறென்றெண்ணி வணங்குதலும், நான் அடிவண்ணானென்று வணங்குதலும், அவனது நற்குணத்தைக் கொண்டாடி நான் அடிச்சேரனென்று வணங்கிய திருவஞ்சைக்களமென்னும் ஸ்தலத்திற்குத் தலைவனும், சொன்னவற்றையெல்லாம் உணரவல்லவனும், சிவபெருமானை வணங்கித் திருநடனத்தை சிவபூஜை முடிந்த அவ்வளவில் நாடோறும் காட்சிதந்தருளப்பெற்று சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய திருமுகத்தைப் பாணபத்திரராற் பெற்று சிவாநுக்ரஹத்தைப் பெற்ற அரசனுமாகிய சேரமான் பெருமாணாயனார்க்கும் அடியேன்.

(வி - ரை.) கழறிற்றறிபவன் - கழறிற்றறிவார் எனினுமாம்; கழறிற்றறிவார் என்றது சேரமான்பெருமாணாயனாரை; இவர்க்குப் பிள்ளைத்திருநாமம் பெருமாக்கோதையார்; இவர் சேரவம்சத்திற் பிறந்தவர்; இவர் ஸ்தலம் மகோதையென்னும் கொடுங்கோளூர்; இது மலைநாட்டிலுள்ளது; இவர் திருவஞ்சைக்களத்தில் தொண்டு செய்திருந்தவர்; செங்கோற்பொறையன் என்னும் சேரன் அரசியலைத் துறந்துத்

தவஞ்செய்யத் தபோவநத்தை யடைந்தபிறகு, பெருமாக்கோதையார் மலைநாட்டிற்கு அரசனாக முடிசூட்டப்பெற்றவர். எம்பிரான் என்றது சோமசுந்தரக்கடவுளை; இவர் அனுப்பியருளிய திருமுகப்பாசுரமாவது:— (௨௨)

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதியிலை நிலவும் பாணிற வரிச்சிற
கன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
* குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமாம திபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
றன்போ லென்பா லன்பன் றன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

தீதி லன்பர்கள் செய்யுந் தொழிலெலாஞ்
செப்பிச் செய்வித் தரன்கண நாயக
நீதி பெற்றவன் கொச்சைக் கதிபனன்
னேய னாங்கண நாதனுக் கடியே
ணதன் பாத முடியாய்க் கவித்தரு
ணற்க ருத்தி லமைத்தது கொண்டுமண்
போத வாண்ட வருட்களப் பாளனும்
பொய்யில் கூற்றுவ னடியவர்க் கடியேன்.

(ப - ரை.) தீது இல் - பாபத்தினின்றும் நீங்கிய, அன்பர்கள் - பக்தர்கள், செய்யும் - பண்ணுதற்குரிய, தொழில் - பணிவிடை, எல்லாம் - எல்லாவற்றையும், செப்பி - கற்பித்து, செய்வித்து - பயில்வித்து, அரன் கணநாயகன் - சிவகணத்தலைவனென்கின்ற, நீதி - பெருமை, பெற்றவன் - அடைந்தவனும், கொச்சைக்கு - சீர்காழிக்கு, அதிபன் - தலைவனாகிய சிவபெருமானுக்கு, நல் - சிறந்த, நேயன் ஆம் - அன்பனுமாகிய கணநாதனுக்கு - கணநாதநாயனார்க்கும், அடியேன்—, நாதன் - சிவபெருமானது, பாதம் - திருவடிகளை, முடியாய் - (உலகத்தையாளுதற்குரிய) மகுடமாக, கவித்து - சூட்டிக்கொண்டு, அருள் - திருவருளை, நல் - நல்ல, கருத்தில - மனத்தில், அமைத்து - சிந்தித்து, அது கொண்டு - அதனால், மண் - உலகத்தை, போத - நெடுங்காலமாக, ஆண்ட - அரசுசெய்த, அருள் - சிவாநுக்ரஹத்தையுடைய, களப்பாளன் ஆம் - திருக்களந்தையென்னும் ஸ்தலத்தில் அவதரித்தவனும், பொய் இல் - சத்யமார்க்கத்தினின்றும் விட்டுப்பிரியாதவனுமாகிய, கூற்றுவன் - கூற்றுவநாயனாரது, அடியவர்க்கு - அடியார்க்கும், அடியேன்—, எ-று.

(பொ - ரை.) பாபத்தினின்றும் நீங்கிய பக்தர்கள் பண்ணுதற்குரிய பணிவிடையெல்லாவற்றையும் கற்பித்துப் பயில்வித்து சிவகணத்தலைவனென்ற பெருமையடைந்தவனும், சீர்காழிக்குத் தலைவனாகிய சிவபெருமானுக்குச் சிறந்த அன்பனுமாகிய கணநாதநாயனார்க்கும் அடியேன்; சிவபெருமானது திருவடிகளை உலகத்தையாளுதற்குரிய மகுடமாகச் சூட்டிக்கொண்டு திருவருளை நல்ல மனத்திற் சிந்தித்ததனால் உலகத்தை நெடுங்காலமாக அரசுசெய்த சிவாநுக்ரஹத்தையுடைய திருக்களந்தையென்னும்

---

* கொருமையி னுரிமையி னுதவி யணிதிகழ்
குருமாமணிதிகழ் குலவிய குடைக்கீழ் எனவும் பாடம்.

ஸ்தலத்தில் அவதரித்தவனும், சத்யமார்க்கத்தினின்றும் விட்டுப்பிரியாதவனுமாகிய கூற்றுவநாயனாரது அடியார்க்கும் அடியேன்.

(வி - ரை.) கொச்சைக்கதிபன் - தோணியப்பன். கொச்சை சோழநாட்டிலுள்ளது. கணநாதநாயனார் ப்ராஹ்மணகுலத்திற் பிறந்தவர். கூற்றுவநாயனார் குறுநில மன்னர் குலத்திற் பிறந்தவர். (௨௯)

சங்க மேவித் தமிழார் மதுரையிற்
சங்க ரனியற் சொக்கர்மேற் றண்டமிழ்
பொங்கு மன்பின் வகுத்தவ ராகிய
பொய்மை யற்ற புலவர்கட் கடியேன்
வெங்க யத்துட னென்னையுங் கொல்லென
மிக்க வாளளித் தருஞ்சடை முடிக்காய்ச்
செங்க னற்புகுந் தருள்பெறு கருவூர்ச்
செய்ய சோழ னடியவர்க் கடியேன்.

(ப-ரை.) தமிழ் ஆர் - செந்தமிழ் நிறைந்திருக்கின்ற, மதுரையில்—, சங்கம் - சங்கப்பலகையை, மேவி - அடைந்து, இயல் - புகழ்பெற்ற, சங்கரன் - சிவபெருமானாகிய, சொக்கர் - சோமசுந்தரக்கடவுளின், மேல் - மீது, தண் - காதுக்கினிய, தமிழ் - செந்தமிழ்ப்பாடல்களை, பொங்கும் - மிகுந்த, அன்பின் - அன்புடன், வகுத்தவராகிய - பாடினவராகிய, பொய்மை - பொய்யடிமை, அற்ற - இல்லாத, புலவர்கட்கு-புலவர்களுக்கும், அடியேன்—, வெம் - கொடிய, கயத்துடன் - யானையையும், என்னையும் - அடியேனையும், கொல் - கொன்றுவிடு, என்ன - என்று, மிக்க - மேலான, வாள் - வாளாயுதத்தை, அளித்து - கொடுத்து, அரு - சிறந்த, சடைமுடிக்காய் - ஒரு சடையிருக்கக்கண்ட அறபட்ட தலையின்பொருட்டு, செம் - மேன்மையான, கனல் - நெருப்பில், புகுந்து - குதித்து, அருள்பெறு - சிவாநுக்ரஹத்தையடைந்த, கருவூர் - திருக்கருவையென்னும் ஸ்தலத்தில் அவதரித்து, செய்ய - புகழ்பெற்ற, சோழன் - புகழ்ச்சோழநாயனாருடைய, அடியவர்க்கு - அடியார்க்கும், அடியேன்—, எ-று.

(பொ-ரை.) செந்தமிழ் நிறைந்திருக்கின்ற மதுரையில் சங்கப்பலகையை யடைந்து புகழ்பெற்ற சிவபெருமானாகியசோமசுந்தரக்கடவுளின்மீது காதுக்கினிய செந்தமிழ்ப் பாடல்களை மிகுந்தஅன்புடன் பாடினவராகிய பொய்யடிமையில்லாத புலவர்களுக்கும் அடியேன்; கொடிய யானையையும் அடியேனையும் கொன்றுவிடென்று மேலான வாளாயுதத்தைக் கொடுத்துச் சிறந்த ஒரு சடையிருக்கக் கண்ட அறபட்ட தலையின் பொருட்டு மேன்மையான நெருப்பிற் குதித்து சிவாநுக்ரஹத்தையடைந்த திருக்கருவையென்னும் ஸ்தலத்தில் அவதரித்துப் புகழ்பெற்ற புகழ்ச்சோழநாயனாருடைய அடியார்க்கும் அடியேன்.

(வி - ரை.) சங்கம் - சதுரமாய் இரண்டு சாணளவினதாகி மெய்ப்புலவர்களுக்கெல்லாம் முழம்வளர்ந்து இருத்தற்கு இடம் கொடுக்கின்ற சங்கப்பலகை. மதுரையை த்வாதசாந்த புரமென்பர் வடநூலார்; இது பாண்டிநாட்டிலுள்ளது. கருவூர் சோழநாட்டிலுள்ளது. தமிழ்மொழியை வளர்த்தவர்கள் கடைச்சங்கபுலவர்களாகிய கபிலர், பரணர், நக்கீரர்முதலாக நாற்பத்தொன்பதின்மராவார்கள்; இவர்கள் விபூதிருத்ராக்ஷதாரிகளாய், ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹாமந்த்ரத்தை ஜபிப்பவர்களாய், அகத்தியம் தொல்காப்பியம் என்னும் இலக்கணநூல்களின் விதிப்படி ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவிகளையும் செய்தவர்கள். (௨௪)

அருட்ட ருந்தவர்க் கம்பொனே கொடுப்போ
னன்ன மன்னவர்க் கிடுங்குறி யுடலர்க்
கிரட்டி பொன்றரு நரசிங்க முனைய
னென்னு மன்பன்ற னடியவர்க் கடியே
னிருகட்க டற்குண்மீன் படக்கின்முன் மீனை
யெம்பி ரார்கென விடுத்தின் மையாநாட்
பொருட்செய் மீன்வர விட்டர னருள்சேர்
போத நாகைவா ழதிபத்தர்க் கடியேன்.

(ப - ரை.) அருள்தரும் - அநுக்ரஹஞ்செய்கின்ற, தவர்க்கு-சிவவேடத்தார்க்கு (தனித்தனியே), அம் - அழகிய, பொன்-நூறுபொன், கொடுப்போன்-தருபவனும், அன்னம் அன்னவர்க்கு- அன்னநடைபோன்ற நடையையுடைய மாதர் இன்பத்திற்கு; இடும் குறி - இலக்காக வைத்திருக்கின்ற, உடலர்க்கு - சரீரத்தையுடைய ஆர்த்தர்க்கு;இரட்டி-இரண்டத்தனை, பொன்-பொன்னை, தரும்-கொடுப்பவனுமாகிய, நரசிங்கமுனையன் - நரசிங்க முனையரையநாயனார், என்னும் - என்கின்ற, அன்பன் - அன்பனுடைய, அடியவர்க்கு - அடியார்க்கும், அடியேன்—, இருள் - கரிய, கடற்குள் - கடலில், மீன்-மீன்கள், படக்கின்-(வலையில்) அகப்பட்டால், முன்மீனை- ஒரு தலைமீனை, எம்பிரார்கு-சிவபெருமானுக்கு, என்ன - என்றே, விடுத்து-கடலில் விட்டுவிடுவதனாலுண்டாகிய, இன்மையாம் - வறுமையடைந்த, நாள் - காலத்தில், பொருள் செய் - பொன்மயமான, மீன் - ஒரே மீன், வர-வலையிலகப்பட்டுவருதலும், விட்டு - (அதனை வழக்கப்படி கடலிற்போக) விட்டுவிட்டு, அரன் அருள்-சிவாநுக்ரஹத்தை,சேர்-அடைந்தவனும், போத-நெடுங்காலமாக, நாகை-திருநாகையில், வாழ்-வாழ்ந்திருந்தவனுமாகிய, அதிபத்தர்க்கு-அதிபத்தநாயனார்க்கும், அடியேன்—, எ-று.

(பொ - ரை.) அநுக்ரஹஞ்செய்கின்ற சிவவேடத்தார்க்கு அழகிய நூறுபொன் தருபவனும், அன்ன நடைபோன்ற நடையையுடைய மாதர் இன்பத்திற்கு இலக்காக வைத்திருக்கின்ற சரீரத்தையுடைய ஆர்த்தர்க்கு இரண்டத்தனை பொன்னைக் கொடுப்பவனுமாகிய நரசிங்கமுனையரையநாயனாரென்கின்ற அன்பனுடைய அடியார்க்கும் அடியேன்; கருங்கடலில் மீன்கள் வலையிலகப்பட்டால் ஒரு தலைமீனை சிவபெருமானுக்கென்றே கடலில் விட்டுவிடுவதனாலுண்டாகிய வறுமை யடைந்த காலத்தில் பொன்மயமான ஒரே மீன் வலையிலகப்பட்டு வருதலும் அதனை வழக்கப்படிக் கடலிற் போக விட்டுவிட்டு சிவாநுக்ரஹத்தையடைந்தவனும், நெடுங்காலமாகத் திருநாகையில் வாழ்ந்திருந்தவனுமாகிய அதிபத்தநாயனார்க்கும் அடியேன்.

(வி-ரை.) நரசிங்கமுனையரையநாயனார் திருமுனைப்பாடிநாட்டில் குறுநில மன்னர் குலத்திற் பிறந்தவர். அன்னம்-ஹம்ஸம் என்னும் வடசொற்றிரிபு. படுத்தல்-பிடித்தல். நாகை - நாகப்பட்டினம் என்பதன் மரூஉ; இது சோழநாட்டிலுள்ளது. இன்மை - இல்லாமை. பொருட்செய்-நவரத்நகசிதமானதும் விலைக்கு விற்கப்படுதற்குரியதுமான தெனினுமாம். அதிபத்தர் பரதவக்குலத்திற் பிறந்தவர். (உடு)

தொண்டன் பொய்ச்சிவ வேடமாய் வரத்தான்
றனைப்ப தங்கள் விளக்கநீர் வார்க்கக்
கண்டு நாணுமின் கரஞ்செற்ற பெண்ணொ
டகத்த லக்கலிக் கம்பனுக் கடியே
னண்டர் நாயகர்க் கணிவிளக் கேற்றற்
கம்பொ னின்றிச்செக் குழந்துகந் தரங்கொய்
தொண்ட ரும்விளக் கேற்றிநன் றருள்சே
ரொற்றி யூர்வருங் கலியனுக் கடியேன்

(ப - ரை.) தொண்டன் - (தனது) பணிவிடைக்காரன், பொய் - வஞ்சகமாகிய, சிவவேடம் ஆய் - சிவவேடத்துடன், வர - வருதலும், தான்—, துணை - இரண்டு, பதங்கள் - திருவடிகளை, விளக்க - கழுவும்பொருட்டு, நீர்-ஜலம், வார்க்க - விடுதலும், கண்டு - பார்த்து, நாணும் - வெட்கமடைகின்ற, மின் - மனைவியின், கரம் - கையை, செற்ற - வெட்டவல்லவனும், பெண்ணாடகத்தலம் - திருப்பெண்ணாடகமென்னும் ஸ்தலத்தில் அவதரித்தவனுமாகிய, கலிக்கம்பனுக்கு - கலிக்கம்பநாயனார்க்கும், அடியேன்—; அண்டர் நாயகர்க்கு-தேவநாயகராகிய சிவபெருமானுக்கு, அணி-அலங்காரமான, விளக்கு-விளக்குகளை, எற்றற்கு-(உள்ளும்புறம்பும்) ஏற்றுவதற்கு, அம்-அழகிய, பொன் - பொருள், இன்றி - இல்லாமல், செக்கு உழந்து - கூலிக்குச் செக்கோட்டி, கந்தரம் - கழுத்தை, கொய்து - அறுத்து, ஒள் தரும் - ஒளிபொருந்திய, விளக்கு - விளக்குகளை, எற்றி - ஏற்றிவைத்து, நன்று-மேன்மையாகிய, அருள் சேர்-சிவாநுக்ரஹத்தையடைந்த, ஒற்றியூர்-திருவொற்றியூரென்னும் ஸ்தலத்தில், வரும்-அவதரித்த, கலியனுக்கு - கலியநாயனார்க்கும், அடியேன்—, எ - று.

(பொ-ரை.) தனது பணிவிடைக்காரன் வஞ்சகமாகிய சிவவேடத்துடன் வருதலும், தான் இரண்டு திருவடிகளைக் கழுவும் பொருட்டு ஜலம் விடுதலும் பார்த்து வெட்கமடைகின்ற மனைவியின் கையை வெட்டவல்லவனும், திருப்பெண்ணாடகமென்னும் ஸ்தலத்தில் அவதரித்த வனுமாகிய கலிக்கம்பநாயனார்க்கும் அடியேன்; தேவநாயகராகிய சிவபெருமானுக்கு அலங்காரமான விளக்குகளை உள்ளும் புறம்பும் ஏற்றுவதற்கு அழகிய பொருள் இல்லாமற் கூலிக்குச் செக்கோட்டிக் கழுத்தையறுத்து, ஒளி பொருந்திய விளக்குகளை யேற்றி வைத்து, மேன்மையாகிய சிவாநுக்ரஹத்தையடைந்த திருவொற்றியூரென்னும் ஸ்தலத்தில் அவதரித்த கலியநாயனார்க்கும் அடியேன்.

(வி - ரை.) மின் - ஆகுபெயர். திருப்பெண்ணாடகம் நடுநாட்டிலுள்ளது. திருவொற்றியூர் தொண்டைநாட்டிலுள்ளது. கலிக்கம்ப நாயனார் வைசியக் குலத்திற் பிறந்தவர். கலியநாயனார் செக்காரக் குலத்திற்பிறந்தவர். கலியநாயனாரைக் கலிநீதியார் என்றும் வழங்குதலுண்டு. (உக)

சங்க ரன்றனக் கன்பரை யிகழ்ச்சி
 தன்மு னஞ்சொலிற் றானவர் நாவை
யங்க ரிந்திடு வோனியல் விரிஞ்சி
 யணிகொ ணன்னகர்ப் புகழ்சத்திக் கடியேன்
மங்கைபா கத்தன் றானங்க டோறு
 மாசி லொவ்வொரு வெண்பா வகுத்தவன்
கங்கை வேணியர்க் கன்பனை யடிகள்
 காட வன்றிரு வடியவர்க் கடியேன்.

(ப-ரை.) தன்முன்னம்-தனக்கெதிரே, சங்கரன் தனக்கு அன்பரை-சிவபக்தர்களை, இகழ்ச்சி சொல்லில் - அவமதிப்பார்களாயின், தான்-தானே, அவர் - அவர்களுடைய, நாவை - நாக்களை, அங்கு-அவ்விடத்திலேயே, அரிந்திடுவோன் - அறுக்கவல்லவனும், இயல்-புகழ்பெற்றதும், அணிகொள் - அழகுபொருந்தியதும், நல்-நல்லதுமான, விரிஞ்சி நகர்-திருவிரிஞ்சையென்னும் ஸ்தலத்தில் அவதரித்து, புகழ்-புகழ்பெற்றவனுமாகிய, சத்திக்கு-சத்திநாயனார்க்கும், அடியேன்—, மங்கைபாகத்தன் தானங்கள் தோறும் - சிவஸ்தலங்களுக்கெல்லாம், மாசு இல் - குற்றமற்ற, ஒவ்வொரு—, வெண்பா—, வகுத்தவன்-பாடினவனும், கங்கைவேணியர்க்கு அன்பன்-சிவபக்தனுமாகிய, ஐயடிகள்காடவன்-ஐயடிகள்காடவர் கோனாயனாருடைய, திருவடியவர்க்கு - திருத்தொண்டர்க்கும், அடியேன்—, எ-று.

(போ-ரை.) தனக்கெதிரே சிவபக்தர்களை யவமதிப்பார்களாயின் தானே அவர்களுடைய நாக்களை யவ்விடத்திலேயே அறுக்கவல்லவனும், புகழ்பெற்றதும் அழகு பொருந்தியதும் நல்லதுமான திருவிரிஞ்சை யென்னும் ஸ்தலத்தில் அவதரித்துப் புகழ் பெற்றவனுமாகிய சத்திநாயனார்க்கும் அடியேன்; சிவஸ்தலங்களுக்கெல்லாம் குற்றமற்ற ஒவ்வொரு வெண்பா பாடினவனும் சிவபக்தனுமாகிய ஐயடிகள் காடவர்கோனாயனாருடைய திருத்தொண்டர்க்கும் அடியேன்.

(வி-ரை.) சத்திநாயனார் வேளாளக்குலத்திற் பிறந்தவர். சங்கரன்தனக்கு - சிவபெருமானுக்கு. இகழ்ச்சி - நிந்தை. விரிஞ்சி-விரிஞ்சிபுரம் என்பதன் மரூஉ; இது சோழநாட்டிலுள்ளது. மங்கைபாகத்தன் - உமாபங்கனாகிய சிவபெருமான். கங்கை வேணியர்-கங்காதேவியாரை ஜடாபாரத்திலுடைய சிவபெருமான். ஐயடிகள் காடவர்கோனாயனார் தொண்டைநாட்டில் காஞ்சீபுரத்தில் பல்லவக்குலத்திற் பிறந்தவர்.

இருக்கு வேளூ ரெனுந்தலத் திருந்தே
யின்மை யெய்திப்பொ னம்பலத் தேகி
யருட்பு லீச்சரத் தரற்குப்புற் சிகையா
லணிவிளக் கிட்ட கணம்புல்லர்க் கடியேன்
சருக்க மாயின செய்தல கோரைத்
துதித்த யாவையு நலமெனச் செய்து
திருத்த னற்கிரி யடைந்தவன் கடவூர்
நீட வந்தருள் காரிக்கு மடியேன்.

(ப-ரை.) இருக்குவேளூர் - திருவிருக்குவேளூர், என்னும்-என்கின்ற, தலத்து-ஸ்தலத்தில், இருந்து - வாழ்ந்து, இன்மை - வறுமை, எய்தி - அடைந்து, பொன்னம்பலத்து - சிதம்பரத்திற்கு, ஏகி - சென்று, அருள் - அநுக்ரஹஞ்செய்யாநின்ற, புலீச்சரத்து-திருப்புலீச்சரமென்னும் திருக்கோயிலில் வீற்றிருக்கின்ற, அரற்கு - சிவபெருமானுக்கு; புல் - கணம்புல்லினாலும், சிகை - மயிர்முடியினாலும், அணி - அழகிய, விளக்கு - திருவிளக்கு, இட்ட-ஏற்றின, கணம்புல்லர்க்கு-கணம்புல்லநாயனார்க்கும், அடியேன்—; சருக்கம் ஆயின - சொல்விளங்கிப் பொருள்மறைந்துகிடக்கும்படித் தனது பெயரினாலே தமிழ்க்கோவை, செய்து - பாடி, உலகோரை - உலகத்தாரை, துதித்த - ஏத்தின, யாவையும் - எல்லாவற்றையும், நலம் என்ன - நன்மையாக, செய்து - பண்ணி, திருத்தன் - சிவபெருமானது, நல் - மேன்மையான, கிரி-ஸ்ரீ மஹாகைலாஸத்தை, அடைந்தவன் - சேர்ந்தவனும், கடவூர்-திருக்கடவூர், நீட-ஓங்க, வந்துஅருள் - அவதரித்தவனுமாகிய, காரிக்கும் - காரிநாயனார்க்கும், அடியேன்—, எ-று.

(போ-ரை.) திருவிருக்குவேளூரென்கின்ற ஸ்தலத்தில் வாழ்ந்து, வறுமையடைந்து, சிதம்பரத்திற்குச்சென்று, அநுக்ரஹஞ்செய்யாநின்ற திருப்புலீச்சரமென்னும் திருக்கோயிலில் வீற்றிருக்கின்ற சிவபெருமானுக்குக் கணம்புல்லினாலும் மயிர்முடியினாலும் திருவிளக்கேற்றின கணம்புல்லநாயனார்க்கும் அடியேன்; சொல் விளங்கிப் பொருள்மறைந்து கிடக்கும்படித் தனது பெயரினாலே தமிழ்க்கோவை பாடி உலகத்தாரை ஏத்தின எல்லாவற்றையும் நன்மையாகப் பண்ணி சிவபெருமானது மேன்மையான ஸ்ரீ மஹாகைலாஸத்தைச் சேர்ந்தவனும், திருக்கடவூர் ஓங்க அவதரித்தவனுமாகிய காரிநாயனார்க்கும் அடியேன்.

(வி - ரை.) இருக்குவேளூர் வடவெள்ளாற்றுத் தென்கரையிலுள்ளது. இன்மை-பெருளில்லாமை. பொன் அம்பலம் - பொற்சபை. நிருத்தன் - நடராஜன். காரிநாயனார் ப்ராஹ்மண குலத்திற்பிறந்தவர். புல் சிகை - புல்லாகிய தலைமயிர் எனினுமாம். (௨௪)

கோச்சை வேந்தனை யெதிர்மலைந் திடைந்த
குண்டர் தங்களைக் கொடுங்கழு மிசையின்
வைச்ச பஞ்சவ னெல்வேலி வென்ற
மாற னாகிய வழுதிக்கு மடியேன்
னிச்ச யாலய மனமென வறிவே
நீள்வி ளக்கெனத் தனைமல ரென்ன
நச்சு மன்பினாற் றொழுதவன் மயிலை
நகர்வி ளங்கவாழ் வாயிலார்க் கடியேன்.

(ப - ரை.) கொச்சை - சீர்காழிக்கு, வேந்தன் - இறைவனாகிய திருஞானசம்பந்தஸ்வாமிகளை, எதிர் - எதிர்த்து. மலைந்து - வாதில் போரிட்டு, இடைந்த - தோற்றுப்போன, குண்டர்தங்களை - சமணர்களை, கொடு - கொடிய, கழுமிசையின் - கழுமரத்தில். வைச்ச - ஏற்றின, பஞ்சவன் - பாண்டியனும், நெல்வேலி - (பகைவரை) திருநெல்வேலி (போர்க்களத்தில் யுத்தஞ்செய்து), வென்ற - ஜயித்தவனுமாகிய, மாறனாகியவழுதிக்கும்-நெடுமாறநாயனார்க்கும், அடியேன்—, மனம் - ஹ்ருதயகமலமே, நிச்சய ஆலயம் - நித்யாலயம், என்ன - ஆகவும், அறிவு - ஞானமே, நீள் - மேன்மையாகிய, விளக்கு - திருவிளக்கு, என்ன - ஆகவும், தன்னை - தன்னையே, மலர் - புஷ்பம், என்ன - ஆகவும், நச்சும் - யாவரும் விரும்புதற்குரிய, அன்பினால் - அன்புடன், தொழுதவன் - ஞானபூஜைசெய்து சிவபெருமானை வணங்கினவனும், மயிலைநகர்-திருமயிலாப்பூரென்னும் ஸ்தலமானது, விளங்க - மேன்மையடையும்படி, வாழ் - வாழ்கின்றவனுமாகிய, வாயிலார்க்கு - வாயிலார்நாயனார்க்கும், அடியேன்—, எ - று.

(பொ-ரை.) சீர்காழிக்கு இறைவனாகிய திருஞானசம்பந்தஸ்வாமிகளை எதிர்த்து வாதில்போரிட்டுத் தோற்றுப்போன சமணர்களைக் கொடிய கழுமரத்திலேற்றின பாண்டியனும், பகைவரைத் திருநெல்வேலிப் போர்களத்தில் யுத்தஞ்செய்து ஜயித்தவனுமாகிய நெடுமாறநாயனார்க்கும் அடியேன்; ஹ்ருதயகமலமே நித்யாலயமாகவும், ஞானமே மேன்மையாகிய திருவிளக்காகவும், தன்னையே புஷ்பமாகவும், யாவரும் விரும்புதற்குரிய அன்புடன் ஞானபூஜைசெய்து சிவபெருமானை வணங்கினவனும், திருமயிலாப்பூரென்னும் ஸ்தலமானது மேன்மை யடையும்படி வாழ்கின்றவனுமாகிய வாயிலார் நாயனார்க்கும் அடியேன்.

(வி - ரை.) வழுதி-பாண்டியன். நிச்சயம்-நித்யம் என்னும் வடசொற்றிரிபு. நெடுமாறனை நின்ற சீர்நெடுமாறனென்றும் சொல்வர்; இவர் மதுரையில் அரசு புரிந்தவர். மதுரை பாண்டிநாட்டிலுள்ளது. திருமயிலை தொண்டை நாட்டிலுள்ளது. வாயிலார் நாயனார் வேளாளக் குலத்திற் பிறந்தவர். (௨௫)

ஒன்ன லார்களை மலைதலை யறியா
ருதவு கூலிகொண் டவர்களை வென்றப்
பொன்னை வாஞ்சிவ தவர்க்கரு ளிநீர்
பொருந்து சீர்முனை யடுவாருக் கடியே
னன்னை பாகத்த னாரூரர்க் காய்ந்த
வந்தப் பூவினை மோந்தவத் தேவித்
தென்னர் மூக்கினைத் தவர்கொய்யக் கரமுஞ்
சென்ற ரிந்தவன் கழற்சிங்கற் கடியேன்.

(ப-ரை.) ஒன்னலார்களை - பகைவர்களை, மலைதலை - போர்செய்து வெல்லுதற்குரிய வகையினை, அறியார் - உணராதவர்கள், உதவு - கொடுக்கின்ற, கூலிகொண்டு- கூலிப்பணத்தைப்பெற்று, அவர்களை - அந்தப் பகைவர்களை, வென்று - ஜயித்து, அ- அந்த,பொன்-பொருள்,எல்லாம்-எல்லாவற்றையும், சிவதவர்க்கு-சிவனடியார்களுக்கே, அருள்-கொடுக்கின்ற, நீடூர்-திருநீடூரில், பொருந்து-வாழ்கின்ற, சீர்-சிறப்புற்ற, முனையடுவாருக்கு-முனையடுவார் நாயனார்க்கும், அடியேன்—, அன்னை பாகத்தர்-உமாதேவி பங்கராகிய, ஆரூரர்க்கு-திருவாரூரிலெழுந்தருளியிருக்கின்ற வன்மீகநாதர்க்காக, ஆய்ந்த-அன்று பறித்த, அ-அந்த, பூவினை-மலரை, மோந்த-மூகந்த, அ-அந்த, தேவி-மனைவியின், தென்னர் - குற்றஞ்செய்த, மூக்கினை - மூக்கை, தவர் - சிவவேடத்தாராகிய செருத்துணைநாயனார், கொய்ய - அறுத்தலும், கரமும் - (மனைவியின்) கையையும், சென்று-போய், அரிந்தவன்-அறுத்தவனாகிய, கழற்சிங்கற்கு-கழற்சிங்கநாயனார்க்கும், அடியேன்—, எ-று.

(போ-ரை.) பகைவர்களைப் போர்செய்து வெல்லுதற்குரிய வகையினை உணராதவர்கள் கொடுக்கின்ற கூலிப் பணத்தைப்பெற்றுஅந்தப் பகைவர்களை ஜயித்துஅந்தப் பொருளெல்லாவற்றையும் சிவனடியார்களுக்கே கொடுக்கின்ற திருநீடூரில் வாழ்கின்ற சிறப்புற்ற முனையடுவார் நாயனார்க்கும் அடியேன்; உமாதேவிபங்கராகிய திருவாரூரிலெழுந்தருளியிருக்கின்ற வன்மீகநாதர்க்காக அன்று பறித்த அந்த மலரை மூகந்த அந்த மனைவியின் குற்றஞ்செய்த மூக்கை சிவவேடத்தாராகிய செருத்துணை நாயனார் அறுத்தலும், மனைவியின் கையையும் போய் அறுத்தவனாகிய கழற்சிங்கநாயனார்க்கும் அடியேன்.

(வி-ரை.) திருநீடூர் சோழநாட்டிலுள்ளது. முனையடுவார் நாயனார் வேளாளக் குலத்திற் பிறந்தவர். எல்லா உயிர்களுக்கும் தாயானதால் உமாதேவியாரை அன்னையென்று பொதுப்படக் கூறினர். கழற்சிங்கநாயனார் பல்லவக்குலத்திற் பிறந்தவர். தென்னர் - அழகுபொருந்திய எனினுமாம். (௩௦)

நிலந்தி யங்குவெங் கருப்பின்மெய்த் தவர்க்காய்
நெற்க வர்ந்தவர் சொற்கரன் றமர்க்கெ
னிலங்கு செல்வங்க ளெனப்பறை யறைந்த
விருக்கு வேளூ ரிடங்கழிக் கடியே
னலங்கொண் மன்னவன் கழற்சிங்கன் றேவி
நம்பன் பூவினை மோந்தன ளென்னச்
சலஞ்செ றிந்தவன் மூக்கினை யரிந்தோன்
றஞ்சை மன்னவன் செருத்துணைக் கடியேன்.

(ப-ரை.) நிலம்-உலகம், தியங்கு-திகைத்தற்குரிய, வெம்-கொடிய, கருப்பில்- பஞ்சகாலத்தில், மெய் - உண்மையாகிய, தவர்க்காய்-சிவனடியார் பொருட்டு, நெல்- நெல்லை, கவர்ந்தவர் - திருடின அன்பர், சொற்கு - உண்மை பேசினதற்காக, அரன் தமர்க்கு-சிவனடியார்களுக்கு, என்-எனது, இலங்கு-மேலான, செல்வங்கள்-பொருள்கள் (எல்லாம் சொந்தமாய் விட்டதாதலால் வேண்டியவரையிலும் எடுத்துக்கொண்டு போகலாமென்று), பறை—, அறைந்த - சாற்றுவித்த, இருக்கு வேளூர் - திருவிருக்குவேளூரென்னும் ஸ்தலத்தில் அவதரித்த, இடங்கழிக்கு - இடங்கழிநாயனார்க்கும், அடியேன்—, நலம் கொள்-மேன்மை பொருந்திய, மன்னவன் - அரசனாகிய, கழற்சிங்கன்-கழற்சிங்க நாயனாரது, தேவி-மனைவி, நம்பன் - சிவபெருமானுக்குரிய, பூவினை-மலரை, மோந்தனள் - மூகந்தாள், என்ன - என்று, சலம் செறிந்து-கோவம் மிகுந்து,

அவள்-அவனுடைய, மூக்கினை - மூக்கை, அரிந்தோன் - அறுத்தவனும், தஞ்சை-தஞ்சாவூரென்னும் ஸ்தலத்திற்கு, மன்னவன் -அரசனுமாகிய, செருத்துணைக்கு-செருத்துணை நாயனார்க்கும், அடியேன்—, எ-று.

(பொ-ரை.) உலகம் திகைத்தற்குரிய கொடிய பஞ்சகாலத்தில் உண்மையாகிய சிவனடியார் பொருட்டு நெல்லைத் திருடின அன்பர் உண்மை பேசினதற்காக சிவனடியார்களுக்கு எனது மேலான பொருள்களெல்லாம் சொந்தமாய் விட்டதாதலால் வேண்டிய வரையிலும் எடுத்துக்கொண்டு போகலாமென்று பறை சாற்றுவித்த திருவிருக்குவேளூரென்னும் ஸ்தலத்தில் அவதரித்த இடங்கழி நாயனார்க்கும் அடியேன்; மேன்மை பொருந்திய அரசனாகிய கழற்சிங்கநாயனாரது மனைவி சிவபெருமானுக்குரிய மலரை முகர்ந்தாளென்று கோபம் மிகுந்து அவளுடைய மூக்கை யறுத்தவனும், தஞ்சாவூரென்னும் ஸ்தலத்திற்கு அரசனுமாகிய செருத்துணை நாயனார்க்கும் அடியேன்.

(வி-ரை.) தமர்-உறவினர். நிலம்-ஆகுபெயர். தஞ்சாவூர் சோழநாட்டிலுள்ளது. தஞ்சை தஞ்சாவூர் என்பதன் மரூஉ. இடங்கழிநாயனார் குறுநிலமன்னர் குலத்திற் பிறந்தவர். செருத்துணைநாயனார் வேளாளக்குலத்திற் பிறந்தவர். (௬௧)

தென்றரும் பொழிற் செருவிலி புத்தூர்ச்
செய்ய வேதியன் சிறுவிலை யாலூன்
பொன்றி மஞ்சனங் கரம்பொறு துகப்பொன்
புனிதனாற் பெற்ற புகழ்த்துணைக் கடியே
னன்றரற் கென வாணைசெய் நெல்லை
யயின்றசுற் றத்தை மகவினை வாளாற்
கொன்ற நாட்டியத் தான்குடி மன்னன்
குலவு கோட்புலி யடியவர்க் கடியேன்.

(ப-ரை.) தென் தரும்-அழகுபொருந்திய, பொழில்-சோலைகள் சூழ்ந்த, செருவிலி புத்தூர் - திருச்செருவிலி புத்தூரில் அவதரித்த, செய்ய - நல்லொழுக்கத்தையுடைய, வேதியன்-ஆதிசைவகுலத்தோனும், சிறுவிலையால்-பஞ்சகாலத்தினால், ஊன்-உடல், பொன்றி - இளைத்து, மஞ்சனம் - திருமஞ்சனாபிஷேகம் (பண்ணுகின்ற குடத்தை); கரம் - கைகள், பொறாது - தாங்கமுடியாமல், உக-(சிவபெருமான் திருமுடிமீது) விட்டுவிடுதலும், புனிதனால் - சிவபெருமானால், பொன் - (நித்தம் ஒரு) பொற்காசு, பெற்ற-பெற்றுக்கொண்டவனுமாகிய, புகழ்த்துணைக்கு - புகழ்த்துணை நாயனார்க்கும், அடியேன்—, அன்று - அக்காலத்தில், அரற்கு-சிவபெருமானது (திருவமுதின்பொருட்டு), ஆணைசெய் - ஆணையிட்டுப் போயிருந்த, நெல்லை—, அயின்ற - உண்ண உடன்பட்டவர்களாகிய, சுற்றத்தை-உறவினரையும், மகவினை-மகனையும், வாளால்-வாளாயுதத்தினால், கொன்ற - வெட்டிக் கொலைசெய்த, நாட்டியத்தான்குடி-திருநாட்டியத்தான்குடி யென்னும் ஸ்தலத்திற்கு, மன்னன் - அரசனாகிய, குலவு - மேன்மையான, கோட்புலி - கோட்புலிநாயனாரது, அடியவர்க்கு - அடியார்க்கும், அடியேன்—, எ-று.

(பொ-ரை.) அழகுபொருந்திய சோலைகள் சூழ்ந்த திருச்செருவிலி புத்தூரில் அவதரித்த ஆதிசைவகுலத்தோனும், பஞ்சகாலத்தினால் உடல் இளைத்துத் திருமஞ்சனாபிஷேகம் பண்ணுகின்ற குடத்தைக் கைகள் தாங்கமுடியாமல் சிவபெருமான் திருமுடியின்மீது விட்டுவிடுதலும், சிவபெருமானால் நித்தம் ஒரு பொற்காசு பெற்றுக்

கொண்டவனுமாகிய புகழ்த்துணை நாயனார்க்கும் அடியேன்; அக்காலத்தில் சிவபெருமானது திருவமுதின்பொருட்டு ஆணையிட்டுப் போயிருந்த நெல்லை உண்ண உடன்பட்டவர்களாகிய உறவினரையும் மகனையும் வாளாயுதத்தினால் வெட்டிக் கொலைசெய்த திருநாட்டியத்தான்குடி யென்னும் ஸ்தலத்திற்கு அரசனாகிய மேன்மையான கோட்புலிநாயனாரது அடியார்க்கும் அடியேன்.

(வி - ரை.) நாட்டியத்தான்குடி. சோழநாட்டிலுள்ளது. கோட்புலிநாயனார் வேளாளக் குலத்திற் பிறந்தவர். (௱௨)

பரவி யன்புசெய் பத்தர்கட் கடியேன்
பரமன் றாளையே பாடுவோர்க் கடியே
னரனை நெஞ்சகத் தழுத்தினோர்க் கடியே
னமல னாரூரிற் பிறந்தவர்க் கடியேன்
திருமெய் முப்போதுந் தீண்டுவார்க் கடியேன்
றிருந்து நீறணி தேகத்தார்க் கடியேன்
பொருவி லன்பராய்ச் சிவன்கழன் முன்னம்
புகுந்த மெய்யடி யார்கட்கு மடியேன்.

(ப - ரை.) பரவி - (சிவபெருமானையும் சிவனடியார்களையும் வேற்றுமை பாராட்டாமல் அர்ச்சனைசெய்து) துதித்து, அன்புசெய் - அன்புடன் பணிகின்ற, பத்தர்கட்கு பக்தர்களாகிய-பெரியோர்களுக்கும் அடியேன்—, பரமன்-(பசுக்களாகிய ப்ரஹ்மாதிதேவர்களை விட்டுப் பதியாகிய சிவபெருமானது மஹிமையை வேதாகம புராணேதிஹாஸ விதிப்படி உள்ளவாறு ஆராய்ந்தறிந்து அந்த) சிவபெருமானது, தாளையே-திருவடிகளையே, பாடுவோர்க்கு (மெய்யன்புடன் பாடித் தொண்டர்களா யிருக்கின்ற பெரியோர்களுக்கும், அடியேன்—, அரனை-சிவபெருமானையே, நெஞ்சு அகத்தில்-சித்தத்தில், அழுத்தினோர்க்கு-பதிய வைத்திருக்கின்ற பெரியோர்களுக்கும், அடியேன்—, அமலன் - நிர்மலனாகிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற, ஆரூரில் - திருவாரூரென்னும் ஸ்தலத்தில், பிறந்தவர்க்கு - பூர்வஜந்மபுண்யத்தினாற் பிறந்திருக்கின்ற பெரியோர்களுக்கும், அடியேன்—, திருமெய் - (சிவலிங்கப் பெருமானது) திருமேனியை, முப்போதும் - த்ரிகாலத்திலும், தீண்டுவார்க்கு - அர்ச்சனைசெய்கின்ற பெரியோர்களுக்கும், அடியேன்—, திருந்து - (சிவாகமவிதிப்படி) ஒழுங்காக, நீறு - முழுநீறு, அணி-பூசிய, தேகத்தார்க்கு - திருமேனியையுடைய முனிவர்களுக்கும், அடியேன்—, பொருவு இல்-நிகரற்ற, அன்பர் ஆய்-பக்தர்களாய், சிவன்-சிவபெருமானது, கழல் - திருவடிகளில், முன்னம் - முற்காலத்தில், புகுந்த - சரணடைந்திருக்கின்ற, மெய் அடியார்கட்கும் -உண்மை யடியார்களுக்கும், அடியேன்—, எ - று.

(பொ-ரை.) சிவபெருமானையும் சிவனடியார்களையும் வேற்றுமை பாராட்டாமல் அர்ச்சனைசெய்து அன்புடன் பணிகின்ற பக்தர்களாகியபெரியோர்களுக்கும் அடியேன்; பசுக்களாகிய ப்ரஹ்மாதி தேவர்களை விட்டுப் பதியாகிய சிவபெருமானது மஹிமையை வேதாகம புராணேதிஹாஸ விதிப்படி உள்ளவாறு ஆராய்ந்தறிந்து அந்த சிவபெருமானது திருவடிகளையே மெய்யன்புடன் பாடித் தொண்டர்களா யிருக்கின்ற பெரியோர்களுக்கும் அடியேன்; சிவபெருமானையே சித்தத்திற் பதிய வைத்திருக்கின்ற பெரியோர்களுக்கும் அடியேன்; நிர்மலனாகிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற திருவாரூரென்னும் ஸ்தலத்தில் பூர்வஜந்மபுண்யத்தினாற் பிறந்திருக்கின்றபெரியோர்களுக்கும் அடியேன்; சிவலிங்கப்பெருமானது திருமேனியை த்ரிகாலத்திலும் அர்ச்

சனைசெய்கின்ற பெரியோர்களுக்கும் அடியேன்; சிவாகம விதிப்படி லொழுங்காக முழுநீறு பூசிய திருமேனியையுடைய முனிவர்களுக்கும் அடியேன்; சிறந்த பக்தர்களாய் சிவபெருமானது திருவடிகளில் மூற்காலத்திற் சரணடைந்திருக்கின்ற உண்மை யடியார்களுக்கும் அடியேன்.

(வி - ரை.) முப்போது - காலை, உச்சி, மாலையென்பன. முழுநீறு பூசுதல் - விபூதி புத்தூளனஞ்செய்தல். முன்னம் என்றது திருத்தொண்டத் தொகையிற் சொல்லப்பட்ட அடியார்களுடைய காலத்திற்கு முற்பட்ட காலத்தை. ஆகாதென்று நீக்கிய அகற்பத்தையொழித்து ஆகுமென்றங்கீகரிக்கும் கற்பம், அநுகற்பம், உபகற்பமென்னும் மூவகைப்பட்டதும் சிவபெருமான் அருளினதுமான திருவெண்ணீறுனமையால் திருந்து நீறு என்றார்; இதன்விரிவைச் சித்தாந்தசிகாமணியிற் காண்க.

கோண்டல் போன்மிடற் றெந்தையார் வைகக்
  கோயி லன்பினிற் கோலியே யிதயப்
புண்ட ரீகத்தி லமைத்தரற் சேர்த்தோன்
  பொலன்கொ ணின்றவூர்ப் பூசலுக் கடியேன்
மண்ட ருங்குழ லுமைதிரு முலைப்பால்
  மகிழ்ந்து சம்பந்த ரயின்றன ரென்னத்
தண்ட ருந்தனஞ் சுரந்தவள் சமணைச்
  சாய்த்த மங்கையர்க் கரசிக்கு மடியேன்

(ப - ரை.) கொண்டல்-மேகத்தை, போல் - போல்(கறுத்த), மிடறு - ஸ்ரீகண்டத்தையுடைய, எந்தையார் - எமது தந்தையாராகிய சிவபெருமான், வைக - வீற்றிருக்கும்பொருட்டு, கோயில் - திருவாலயத்தை, அன்பினுல்-அன்பு என்கின்ற மனோபாவனையினுல், கோலி - கட்டிமுடித்து, இதயப்புண்டரீகத்தில் - இருதய கமலத்தில், அமைத்து - ப்ரதிஷ்டைசெய்து, அரன் - சிவபெருமானை, சேர்த்தோன் - வீற்றிருக்கச்செய்து பூஜைசெய்தவனும், பொலன் கொள்-அழகு பொருந்திய, நின்றவூர்-திருநின்றவூரென்னும் ஸ்தலத்தில் அவதரித்தவனுமாகிய, பூசலுக்கு-பூசலார்நாயனுர்க்கும் அடியேன்—; மண் தரும் - பெருமைபொருந்திய, குழல் - திருவளகத்தினையுடைய, உமை - உமாதேவியாரின், திருமுலைப்பால் - திருத்தனப்பாலை, மகிழ்ந்து-சந்தோஷத்துடன், சம்பந்தர்- திருஞானசம்பந்தசுவாமிகள், அயின்றனர் - உண்டார், என்ன-என்று கேட்டமாத்திரத்தில், தண் தரும்-இனிமையாகிய, தனம்-முலைப்பால், சுரந்தவள்-சுரக்கப்பெற்றவளும், சமணை - சமணர்களை, சாய்த்த-ஒழித்தவளுமாகிய, மங்கையர்க்கரசிக்கும் - மங்கையர்க்கரசியார்க்கும், அடியேன்—, எ-று.

(பொ - ரை.) மேகத்தைப்போற் கறுத்த ஸ்ரீ கண்டத்தையுடைய எமது தந்தையாராகிய சிவபெருமான் வீற்றிருக்கும்பொருட்டுத் திருவாலயத்தை அன்பென்கின்ற மனோபாவனையினுற் கட்டிமுடித்து இருதய கமலத்தில் வீற்றிருக்கச்செய்து பூஜை செய்தவனும், அழகு பொருந்திய திருநின்றவூரென்னும் ஸ்தலத்தில் அவதரித்தவனுமாகிய பூசலார்நாயனுர்க்கும் அடியேன்; பெருமை பொருந்திய திருவளகத்தினையுடைய உமாதேவியாரின் திருத்தனப்பாலைச் சந்தோஷத்துடன் திருஞானசம்பந்தசுவாமிகள் உண்டாரென்றுகேட்டமாத்திரத்தில் இனிமையாகிய முலைப்பால் சுரக்கப்பெற்றவளும்,சமணர்களை யொழித்தவளுமாகிய மங்கையர்க்கரசியார்க்கும் அடியேன்.

(வி - ரை.) அளகம் - கூந்தல். மிடறு - கண்டம். சுரத்தல் - ஊறுதல். திருநின்றவூர் தொண்டைநாட்டிலுள்ளது; இதனைத் தின்னனூரென்று வழங்குதலுண்டு.

பூசலார்நாயனார் ப்ராஹ்மணகுலத்திற் பிறந்தவர். மங்கையர்க்கரசியார் நெடுமாற நாயனார்க்கு மனைவியார்; சோழராஜனுக்குப் புத்திரியுமாவார். (௬௪)

ஈச னன்பர்க்குக் கீளுடை யுடனே
 யேற்ற கோவணம் நெய்தளித் தெம்மான்
வாச நற்பதம் பெற்றகாம் பீலி
 மன்னு சாலிய நேயனுக் கடியே
னேச நெஞ்சினு லரனையே கருதி
 நீள்சி லம்பியாய்ப் பந்தர்செய் தருளால்
மாசி லாலயம் பலகண்ட சோழன்
 மன்னு கோச்செங்கணாற் கடியேன்

(ப - ரை.) ஈசன் அன்பர்க்கு - சிவபக்தர்களுக்கு, உடை - உடுக்கும் வஸ்த்ரமாகிய, கீள் உடன் - கீளும், ஏற்ற-தகுதியாகிய, கோவணம்-கௌபீநமும், செய்து-நெசவுசெய்து, அளித்து - கொடுத்து, எம்மான் - எமது சிவபெருமான், வாசம் - வீற்றிருக்கின்ற, நல் - சிறந்த, பதம் - ஸ்ரீ மஹாகைலாஸபதவியை, பெற்ற - அடைந்த, காம்பீலி - காம்பீலியென்னும் ஸ்தலத்தில், மன்னும் - நெடுநாள் வாழ்ந்திருக்கின்ற, சாலியன் - பத்மசாலியக்குலத்தில் அவதரித்த, நேயனுக்கு - நேசநாயனார்க்கும், அடியேன்—, நேசம் - அன்புள்ள, நெஞ்சினால் - மனத்துடன், அரனை - சிவபெருமானையே, கருதி - சிந்தித்து, நீள்-மென்மையான, சிலம்பி ஆய்-சிலந்திப்பூச்சியாய் அவதரித்து, பந்தர்-(வாய்நூலினால்) மேற்கட்டியை, செய்து-உண்டாக்கி, அருளால்-சிவாநுக்ரஹத்தினால், மாசு இல் - குற்றமற்ற, பல - அநேக, ஆலயம்-சிவாலயங்களை, கண்ட - உண்டாக்கின, மன்னும் - நிலைபெற்ற, திரு - செல்வமிக்க, சோழன் கோ செங்கணாற்கு - கோச்செங்கட் சோழநாயனார்க்கும், அடியேன்—, எ - று.

(பொ - ரை.) சிவபக்தர்களுக்கு உடுக்கும் வஸ்த்ரமாகிய கீளும், தகுதியாகிய கௌபீநமும் நெசவுசெய்து கொடுத்து எமது சிவபெருமான் வீற்றிருக்கின்ற சிறந்த ஸ்ரீ மஹா கைலாஸபதவியை யடைந்த காம்பீலியென்னும் ஸ்தலத்தில் நெடுநாள் வாழ்ந்திருக்கின்ற பத்மசாலியக்குலத்தில் அவதரித்த நேசநாயனார்க்கும் அடியேன்; அன்புள்ள மனத்துடன் சிவபெருமானையே சிந்தித்து, மேன்மையான சிலந்திப் பூச்சியாய் அவதரித்து, வாய்நூலினால் மேற்கட்டியை யுண்டாக்கி, சிவாநுக்ரஹத்தினாற் குற்றமற்ற அநேக சிவாலயங்களை உண்டாக்கின நிலைபெற்ற செல்வ மிக்க கோச்செங்கட் சோழநாயனார்க்கும் அடியேன்.

(வி - ரை.) எம்மான் வாச நற்பதம் - சிறந்த சிவபதத்தையென்றும், எம்பெருமானது நறுமணமுள்ள சிறந்த திருவடியென்றும் பொருட்கொள்ளலாம். பந்தர் - பந்தல். (௬௫)

பொன்ற லாப்புக ழெருக்கத்தம் புலியூர்
 பொருந்திச் சம்பந்தன் றமிழிற்றன் னிசையை
யொன்ற வேபுனைந் தரனிடத் தணைந்தன்
 றுயர்ந்த நீலகண்டப் பாணருக் கடியே
னென்று நாவலூர்ச் சடையன்முன் றவத்தா
 லினிய தையலா மிசைஞானி தவத்தா
னன்று றப்பெற்ற சுந்தரன் றுதிக்க
 நற்ற வத்தரும் புறம்பிலை யென்றார்.

(ப-ரை.) பொன்றுதல் இல்லா - அழியாத. புகழ் - புகழினையுடைய. எருக்கத்தம்புலியூர் - திருவெருக்கத்தம்புலியூரில், பொருந்தி - வாழ்ந்திருந்து. சம்பந்தன் - திருஞானசம்பந்தசுவாமிகள் (பாடியருளிய), தமிழ்-இசைத்த திருப்பாடல்களில், தன - தனது, இசையை - யாழிசையை, ஒன்ற - பொருந்தும்படி, புனைந்து - சேர்த்து வாசித்து, அரன் இடத்தில் - சிவபெருமானிடத்தில், அணைந்து - சேர்ந்து, அன்று - அக்காலத்தில், உயர்ந்த - மேன்மையடைந்த, நீலகண்டபாணருக்கு - திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்க்கும், அடியேன் —, என்று - என்று (இவ்விதமாக), நாவலூர் - திருநாவலூரென்னும் ஸ்தலத்தில், சடையன் - சடையநாயனார், முன் - பூர்வஜன்மத்திற் செய்த, தவத்தால் - தவப்பயனாலும், இனிய - மேன்மைபொருந்திய, தையல் தம் - மனைவியாராகிய, இசைஞானி - இசைஞானியார், தவத்தால் - (பூர்வஜன்மத்திற்செய்த) தவப்பயனாலும், நன்று உற - (சமயாசாரியராதற்குரிய) யோக்யதையடையும்படி, பெற்ற - ஈன்ற, சுந்தரன் - சுந்தரமூர்த்திசுவாமிகள், துதிக்க - தோத்திரஞ்செய்தலும், நல் - சிறந்த, தவத்தரும் - சிவனடியாராகிய விறன்மிண்டநாயனாரும், புறம்பு இல்லை - புறம்பில்லை, என்றார் - என்று சொன்னார், எ-று.

(பொ-ரை.) அழியாதபுகழினையுடைய திருவெருக்கத்தம்புலியூரில் வாழ்ந்திருந்து, திருஞானசம்பந்தசுவாமிகள்பாடியருளிய இசைத்த திருப்பாடல்களில்தனதுயாழிசையைப் பொருந்தும்படிச் சேர்த்து வாசித்து, சிவபெருமானிடத்திற் சேர்ந்து, அக்காலத்தில் மேன்மையடைந்த திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்க்கும் அடியேனென்று, இவ்விதமாகத் திருநாவலூரென்னும் ஸ்தலத்தில் சடையநாயனார் பூர்வஜன்மத்திற்செய்த தவப்பயனாலும் மேன்மைபொருந்திய மனைவியாராகிய இசைஞானியார்பூர்வஜன்மத்திற்செய்த தவப்பயனாலும் சமயாசாரியராதற்குரிய யோக்யதையடையும்படி ஈன்ற சுந்தரமூர்த்திசுவாமிகள் தோத்திரஞ்செய்தலும், சிறந்த சிவனடியாராகிய விறன்மிண்டநாயனாரும் புறம்பில்லையென்று சொன்னார்.

(வி-ரை.) எருக்கத்தம்புலியூர் நடுநாட்டிலுள்ளது. சுந்தரரை நம்பியாரூரரென்றும் வழங்குதலுண்டு. (௯௬)

## கலிவிருத்தம்.

மனத்திடை யகந்தையிவ் வாறு மன்னியே
நினைத்துளோர் பத்தியை நின்று நேசியான்
றனக்கெதி ரில்லவன் சம்பு நம்பர
னெனச்சொல நந்தியா ரினிதி னேத்தினார்.

(ப-ரை.) மனத்து இடை - மனத்தில், அகந்தை - அஹங்காரம், இவ்வாறு - இவ்விதமாக, மன்னி - நிலைபெற்று, நினைத்து உள்ளோர் - நினைத்த பேர்களுடைய, பத்தியை - பக்தியை, தனக்கு —, எதிர் இல்லவன் - நிகரற்றவனும், சம்பு - சுகத்தைக்கொடுப்பவனுமாகிய, நம் - நமது, பரன் - சிவபெருமான், நின்று - நிலைப்படுத்தி, நேசியான் - விரும்பமாட்டான், என்ன - என்று, சொல - (மடிவாலமாச்சையர்) சொல்லுதலும், நந்தியார் - வசவண்ணர், இனிதின் - சந்தோஷத்துடன், ஏத்தினார் - துதித்தார், எ-று.

(பொ-ரை.) மனத்தில் அஹங்காரம் இவ்விதமாக நிலைபெற்று நினைத்தபேர்களுடைய பக்தியைத் தனக்கு நிகரற்றவனும் சுகத்தைக் கொடுப்பவனுமாகிய நமது சிவபெருமான் நிலைப்படுத்தி விரும்பமாட்டானென்று மடிவாலமாச்சையர் சொல்லுதலும், வசவண்ணர் சந்தோஷத்துடன் துதித்தார். (௯௭)

ஏத்திய நந்திக ளேனை யோர்களைத்
தேத்துறு மாச்சையர் செலவி டுத்தபின்
மாத்தவ ராடைகண் மாச றுத்தர
தோத்திர நாவராய்த் துறையி னின்றனர்.

(ப - ரை.) தேத்து உறு - கருணையிருந்த, மாச்சையர் - மடிவாலமாச்சையர், ஏத்திய - துதிசெய்த, நந்திகள் - வசவண்ணரையும், ஏனையோர்களை - மற்ற ஜங்கமமூர்த்திகளையும், செல்ல - போகும்படி, விடுத்த - அனுப்பிவிட்ட, பின் - பிறகு, மா - பெருமைபொருந்திய, தவர் - ஜங்கமமூர்த்திகளுடைய, ஆடைகள் - வஸ்த்ரங்களை, மாசு அறுத்து - வெளுத்துக்கொண்டு, அர தோத்திரம் நாவர்ஆய் - சிவஸ்தோத்ரஞ் செய்பவராய், துறையில் - நீர்த்துறையில், நின்றனர் - நின்றுவிட்டார், எ-று.

(பொ-ரை.) கருணையிருந்த மடிவாலமாச்சையர், துதிசெய்த வசவண்ணரையும், மற்ற ஜங்கமமூர்த்திகளையும் போகும்படி யனுப்பிவிட்டபிறகு, மேன்மை பொருந்திய ஜங்கமமூர்த்திகளுடைய வஸ்த்ரங்களை வெளுத்துக்கொண்டு சிவஸ்தோத்ரஞ்செய்பவராய் நீர்த்துறையில் நின்றுவிட்டார். (௩௮)

சுந்தரப்பெருமாளையனார் புராணம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௫௨.

உ

சிவமயம்.

# கின்னரப்பிரமையர் புராணம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

செல்வநற் பத்தி யாலே தெரிமணி வீர சைவர்
நல்லதோ ரமுத மன்னார் நற்கதி மகேச ரென்று
புல்லுவார் பாவ தூரர் பொருந்திய வித்தை மிக்கார்
சொல்லரும் பூதி மெய்யார் கருணையார் கொடையாற் றூயர்.

(ப - ரை.) செல்வம் - தெய்விக ஸம்பத்தினாலும், நல் - சிறந்த, பத்தியால் - சிவபக்தியினாலும், தெரி - ஆராய்ந்தெடுக்கப்பட்ட, மணி - ரத்நம் போன்ற உயர்ந்த பொருளாகிய, வீரசைவர் - வீரசைவகுலத்தில் அவதரித்தவர், நல்லது - (உயிர்க்கு) பயன்படுவதாகிய, ஓர் - ஒப்பற்ற, அமுதம் - அமிர்தம், அன்னார் - போன்றவர், நற்கதி - மோக்ஷபதவியானது, மகேசர் - மாஹேஸ்வரர்களே, என்று - என்று எண்ணி, புல்லுவார் - அவர்களுடன் சேர்ந்திருப்பவர், பாவதூரர்-பாவத்தினின்றும் நீங்கினவர், பொருந்திய - ஞானமார்க்கத்திற்குரிய, வித்தை - கல்வியில், மிக்கார், சிறந்தவர், சொல் அரு - புகழ்தற்கரிய, பூதி - விபூதியைத் தாரணஞ்செய்கின்ற, மெய்யார் - திவ்ய சரீரத்தையுடையவர், கருணையார் - ஜீவகாருண்யமுள்ளவர், கொடையால் - உதாரகுணத்தினால், தூயர் - மேன்மையடைந்தவர், எ - று.

(பொ - ரை.) தெய்விக ஸம்பத்தினாலும், சிறந்த சிவபக்தியினாலும் ஆராய்ந்தெடுக்கப்பட்ட ரத்நம் போன்ற உயர்ந்த பொருளாகிய வீரசைவ குலத்தில் அவதரித்தவர்; உயிர்க்குப் பயன்படுவதாகிய ஒப்பற்ற அமிர்தம் போன்றவர்; மோக்ஷமானது மாஹேஸ்வரர்களே என்றெண்ணி அவர்களுடன் சேர்ந்திருப்பவர்; பாபத்தினின்றும் நீங்கினவர்; ஞானமார்க்கத்திற்குரிய கல்வியிற் சிறந்தவர்; புகழ்தற்கரிய விபூதியைத் தாரணஞ்செய்திருக்கின்ற திவ்ய சரீரத்தையுடையவர்; ஜீவகாருண்ய முள்ளவர்; உதாரகுணத்தினால் மேன்மையடைந்தவர். (க)

உன்னினு மகந்தை யில்லா ரொழிவிலா விரத சீலர்
கின்னரப் பிரம ரென்னும் பேரினார் கிளரும் வாத
ரென்னுமா கிரிகள் வீழ்க்கு மிடியனார் மடியொன் றில்லார்
மன்னரு முலகர் போற்றுஞ் சரணரின் வரிசை மிக்கார்.

(ப - ரை.) உன்னிலும் - நினைக்கினும், அகந்தை - அஹங்காரம் (என்பதே), இல்லார்-இல்லாதவர், ஒழிவு இல்லா - நிலைபெற்ற, விரத சீலர் - தபோமார்க்கத்தை யுடையவர், கின்னரப்பிரமர் - கிந்நரப்ரஹ்மையர், என்னும் - என்கின்ற, பேரினார் - திருநாமத்தினையுடையவர், கிளரும் - விருத்தியடைகின்ற, வாதர்-பரசமயவாதிகள், என்னும் - என்கின்ற, மா - பெரிய, கிரிகள் - மலைகளை, வீழ்க்கும் - (தூளாய்ப் போம்படி) சாய்க்கின்ற, இடி அன்னார் - இடிபோன்றவர், மடி - சோம்பலென்பது, ஒன்று - சற்றும், இல்லார் - இல்லாதவர், மன்னரும் - அரசர்களும், உலகர் - உலகத்தாரும், போற்றும் - துதித்தற்குரிய, சரணரின் வரிசை-சிவனடியார் திருக்கூட்டத்தாரில், மிக்கார் - சிறந்தவர், எ - று.

(பொ - ரை.) நினைக்கினும் அஹங்காரமென்பதே இல்லாதவர்; நிலைபெற்ற தபோமார்க்கத்தையுடையவர்; சிந்தை ப்ரஹ்மையரென்கின்ற திருநாமத்தினையுடையவர்; விருத்தியடைகின்ற பரசமய வாதிகளென்கின்ற பெரிய மலைகளைத் தூளாய்ப் போம்படிச் சாய்க்கின்ற இடி போன்றவர்; சோம்பலென்பது சற்று மில்லாதவர்; அரசர்களும் உலகத்தாரும் துதித்தற்குரிய சிவனடியார் திருக்கூட்டத்தாரிற் சிறந்தவர்.

பொங்கிய விசையான் மிக்க பொருவில் பொண்டேரில் வைகித்
துங்கநற் கார கத்தாந் தூயதம் பொருளை யெல்லாஞ்
சங்கம சங்க நண்ணிச் சங்கையி லன்பி னுலே
யங்கவர்க் கவஞ்ச கத்தா லனுதின மளித்த லாலே.

(ப - ரை.) பொங்கிய - மிகுந்த, இசையால் - புகழினால், மிக்க - மேன்மையடைந்த, பொருவு இல் - ஒப்பில்லாத, பொண்டேரில் - திருப்பொண்டேரென்னும் ஸ்தலத்தில், வைகி - வாழ்ந்து, துங்கம் - பாபத்தினின்றும் நீங்கிய, நல் காரகத்து ஆம் - ஸத்கார்யத்தினாலுண்டானதும், தூய - பரிசுத்தமானதுமாகிய, தம் - தமது, பொருளை எல்லாம் - திரவியங்களெல்லாவற்றையும், சங்கமசங்கம் - ஜங்கமத் திருக்கூட்டத்தாரை, நண்ணி - அடைந்து, சங்கையில் - அளவுகடந்த, அன்பினால் - அன்புடன், அங்கு - அவ்விடத்தில், அவர்க்கு - அவர்களுக்கு, அவஞ்சகத்தால் - நிஷ்கபடத்துடன், அனுதினம் - நாடோறும், அளித்தலால் - கொடுப்பதனால், எ-று.

(பொ-ரை.) மிகுந்த புகழினால் மேன்மையடைந்த ஒப்பில்லாத திருப்பொண்டேரென்னும் ஸ்தலத்தில் வாழ்ந்து, பாபத்தினின்றும் நீங்கிய ஸத்கார்யத்தினாலுண்டானதும், பரிசுத்தமானதுமாகிய தமது திரவியங்களெல்லாவற்றையும் ஜங்கமத் திருக்கூட்டத்தாரை யடைந்து, அளவு கடந்த அன்புடன் அவ்விடத்தில் அவர்களுக்கு நிஷ்கபடத்துடன் நாடோறும் கொடுப்பதனால்.

(வி-ரை.) காரகம்-தொழில். சங்கை-கணக்கு; ஸங்க்யாஎன்னும்வடசொற்றிரிபு. அவஞ்சகம்-வஞ்சனையில்லாமை. (௩)

உள்ளநற் பொருள்க ளெல்லா மொழிந்துநல் குரவ ராயும்
வள்ளன்மை குன்று ராய மனத்தர்தங் கின்ன ரத்தைத்
தெள்ளிழைப் பாகர் முன்னந் திருந்தவா சிக்க நச்சிக்
கொள்ளுநீ பொற்கா சென்று தினந்தர வாங்கிக் கொள்வார்.

(ப-ரை.) உள்ள-தமக்குண்டாயிருந்த, நல்-மிக்க, பொருள்கள்-திரவியங்கள், எல்லாம்-முழுதும், ஒழிந்து - செலவழிந்து, நல்குரவர்ஆயும் - வறுமையடைந்தவராயும், வள்ளன்மை-உதாரகுணத்தினின்றும், குன்றாராய-நீங்காதவராகிய, மனத்தர்-மனத்தையுடையவர், தம்-தமது, கின்னரத்தை-வீணையை, தெள்-ஆராய்ந்தெடுத்த, இழை-ஆபரணத்தையணிந்த உமாதேவியாரை, பாகர் - வாமபாகத்திலுடையவராகிய சிவபெருமானது, முன்னம் - சந்நிதானத்தில், திருந்த - பொருத்தமாகிய இசையுடன், வாசிக்க-வாசித்துத்துதித்தலும், நச்சி-விருப்பத்துடன், நீ—, பொன் காசு ஒன்று-ஒரு பொற்காசினை, கொள்ளு - பெற்றுக்கொள்வாய், என்று—, தினம் - நாடோறும், தர-(சிவபெருமான்) அருள்செய்தலும், வாங்கிக் கொள்வார்-(கின்னரையர்) பெற்றுக்கொள்வார், எ-று.

(பொ-ரை.) தமக்குண்டாயிருந்த மிக்க திரவியங்கள் முழுதும் செலவழிந்து வறுமையடைந்தவராயும், உதாரகுணத்தினின்றும் நீங்காதவராகிய மனத்தையுடை

யவர், தமது வீணையை ஆராய்ந்தெடுத்த ஆபரணத்தை யணிந்த உமாதேவியாரை வாமபாகத்திலுடையவராகிய சிவபெருமானது சந்நிதானத்தில் பொருத்தமாகிய இசையுடன் வாசித்துத் துதித்தலும், விருப்பத்துடன் நீ ஒரு பொற்காசினை பெற்றுக் கொள்வாயென்று நாடோறும் சிவபெருமான் அருள்செய்தலும், கின்னரையர் பெற்றுக்கொள்வார்.

(வி - ரை.) தெள்ளிழை-அன்மொழித்தொகைக் காரணப்பெயர். வள்ளன்மை-இரவலர்க்கில்லை யென்னுதீயுந் தன்மை. (௪)

உலகராச் சரிய மெய்த வுவந்துமா தவரைப் பூசித்
திலகுநா ளாந்தி கேச ரிருஞ்சிவ பத்தி கீர்த்தி
நலமுறக் கேட்டு நச்சி நற்கலி யாண நண்ணச்
சலமிலா வசவ தேவர் சங்கமே சரன்போற் கண்டு.

(ப-ரை.) உலகர்-உலகத்தார், ஆச்சரியம் எய்த-அதிசயிக்கும்படி, உவந்து-விருப்பத்துடன், மாதவரை-ஜங்கமமூர்த்திகளை, பூசித்து-பூஜைசெய்து, இலகும்-மேன்மையடைகின்ற,நாள்-காலத்தில், நந்திகேசர்-வசவண்ணரது, இரு-மேன்மைபொருந்திய, சிவபத்தி-சிவபக்தியின், கீர்த்தி-புகழினை, நலம் உற-நன்றாக, கேட்டு-கேள்விப்பட்டு, நச்சி-விருப்பங்கொண்டு, நல்-சிறந்த, கலியாணம்-கல்யாண பட்டினத்தை, நண்ண-சேர்தலும், சலம் இல்லா-மனோத்திடத்தையுடைய, வசவதேவர் - வசவண்ணர், சங்கமேசரன் போல் - கூடலஸங்கமேஸ்வரனென்றே (எண்ணி), கண்டு-வணங்கி, எ-று.

(பொ-ரை.) உலகத்தார் அதிசயிக்கும்படி விருப்பத்துடன் ஜங்கமமூர்த்திகளைப் பூஜைசெய்து மேன்மையடைகின்ற காலத்தில், வசவண்ணரது மேன்மைபொருந்திய சிவபக்தியின் புகழினை நன்றாகக் கேள்விப்பட்டு, விருப்பங்கொண்டு,சிறந்த கல்யாண பட்டினத்தைச் சேர்தலும், மனோத்திடத்தையுடைய வசவண்ணர் கூடலஸங்கமேஸ்வரனென்றே எண்ணி வணங்கி. (௫)

அதிகநே யத்த ராகி யம்புவி யுறப்ப ணிந்து
விதியுப சார மெல்லாம் விரும்பியே செய்து வாழ்த்திக்
கதியெனத் தொழுது பாத கமலநீர்ச் சேட மார்ந்து
பதியர னுண்மை யாய்ந்து நந்திகள் பண்பார் நாளின்.

(ப - ரை.) அதிக - மிக்க, நேயத்தர் ஆகி - அன்புடையவராகி, அம்புவி உற - பூமியிற்படும்படி (ஸாஷ்டாங்கமாக), பணிந்து - வணங்கி, விதி-விதிப்படி, உபசாரம் எல்லாம்-சகலவிதமான உபசாரங்களையும், விரும்பி - அன்புடன், செய்து - பண்ணி, வாழ்த்தி-துதித்து, கதி-நீரே துணை, என-என்று, தொழுது-வணங்கி, பாத கமலம் நீர் சேடம் - ஸ்ரீ பாதபத்ம தீர்த்த ப்ரஸாதத்தை, ஆர்ந்து - ஸ்வீகரித்து, பதி - பதிப்பொருளாகிய, அரன் - சிவபெருமானது, உண்மை - தத்துவத்தை, ஆய்ந்து - ஆராய்ச்சிசெய்துகொண்டு, நந்திகள் - வசவண்ணர், பண்பு ஆர் - மேன்மையடைந்திருக்கின்ற, நாளில் - காலத்தில், எ - று.

(பொ - ரை.) மிக்க அன்புடையவராகி, பூமியிற் படும்படி ஸாஷ்டாங்கமாக வணங்கி, விதிப்படிச் சகலவிதமான உபசாரங்களையும் அன்புடன் பண்ணித்துதித்து, நீரே துணையென்று வணங்கி, ஸ்ரீ பாதபத்ம தீர்த்த ப்ரஸாதத்தை ஸ்வீகரித்து, பதிப்பொருளாகிய சிவபெருமானது தத்துவத்தை யாராய்ச்சிசெய்துகொண்டு வசவண்ணர் மேன்மை யடைந்திருக்கின்ற காலத்தில். (௬)

ஒருதினங் கல்லி யாணத் தொண்டிரி புராந்த கேசர்
மருவுமா லயத்துச் சென்று பிரமையர் வைகுங் காலை
விரவியோ ரிடன்ற னக்காம் வேசிக்கு மேடங் கொண்டு
தெருவிடை வருங்காற் றப்பிச் சிவாலயம் புகுதக் கண்டு.

(ப - ரை.) ஒரு தினம் - ஒரு நாள், கல்லியாணத்து-கல்யாணபட்டினத்திலிருக்கின்ற, ஒள் - மேன்மைபொருந்திய, திரிபுராந்தகேசர் - த்ரிபுராந்த கேஸ்வரர், மருவும் - வீற்றிருக்கின்ற, ஆலயத்து - திருக்கோயிலில், சென்று-போய், பிரமையர்-கிந்நரப்ரஹ்மையர், வைகும் காலை - (உல்லாசமாய்) இருக்கின்றபொழுது, விரவி - விரும்பி, ஓர்-ஒரு, விடன்-தூர்த்தன், தனக்கு—, ஆம் - (மனைவி) ஆகிய, வேசிக்கு-வேசிக்காக, மேடம் - ஒரு ஆட்டை, கொண்டு - வாங்கிக்கொண்டு, தெரு இடை - வீதியில், வரும் கால் - போகின்றபோது, தப்பி - (அது) தவறி, சிவாலயம் - சிவன் கோயிலில், புகுத - நுழைதலும், கண்டு - பார்த்து, எ - று.

(போ - ரை.) ஒரு நாள் கல்யாணபட்டினத்திலிருக்கின்ற மேன்மைபொருந்திய த்ரிபுராந்தகேஸ்வரர் வீற்றிருக்கின்ற திருக்கோயிலிற் போய் கிந்நரப்ரஹ்மையர் உல்லாசமா யிருக்கின்ற பொழுது, விரும்பி ஒரு தூர்த்தன் தனக்கு மனைவியாகிய வேசிக்காக ஒரு ஆட்டை வாங்கிக்கொண்டு வீதியிற் போகின்ற போது, அது தவறி சிவன்கோயிலில் நுழைதலும், பார்த்து.

(வி - ரை.) மேடம்-மேஷம் என்னும் வடசொற்றிரிபு. த்ரிபுராந்தகேஸ்வரர் - சிவபெருமான் திருநாமங்களிலொன்று; முப்புரங்களை யெரித்தவர் என்பது பொருள்.

பின்றொடர்ந் தம்மே டத்தைப் பிடிபிடி யெனவி டன்றான்
சென்றுறக் கின்ன ரையர் செய்யநற் கருணை யாலே
நன்றுற நோக்கி மேட நம்பரன் கோயில் புக்க
தின்றுநீ கோறற் கஞ்சி யெம்பிநீ தொடரே லென்று.

(ப - ரை.) பின் - பின்னே, தொடர்ந்து - சென்று, அ - அந்த, மேடத்தை - ஆட்டை, பிடிபிடி - பிடியுங்கள் பிடியுங்கள், என - என்று (கூவிக்கொண்டு), விடன் - தூர்த்தன், சென்று உற - போதலும், கின்னரையர் - கிந்நரப்ரஹ்மையர், செய்ய நல் - மிகச்சிறந்த, கருணையால் - ஜீவகாருண்யத்துடன், நன்று உற-நன்றாக, நோக்கி - பார்த்து, எம்பி - தம்பீ, நீ—, இன்று - இப்போது, கோறற்கு - கொல்லக் கொண்டுபோதற்கு, அஞ்சி - பயந்து, மேடம் - ஆடானது, நம் - நமது, பரன் - சிவபெருமானது, கோயில் - திருவாலயத்தில், புக்கது - சரணாகதி யடைந்தது, நீ—, தொடரேல் - பிடிக்காதே, எ - று.

(போ - ரை.) பின்னே சென்று அந்த ஆட்டைப் பிடியுங்கள் பிடியுங்களென்று கூவிக்கொண்டு தூர்த்தன் போதலும், கிந்நரப்ரஹ்மையர் மிகச் சிறந்த ஜீவகாருண்யத்துடன் நன்றாகப் பார்த்து, தம்பீ! நீ இப்போது கொல்லக் கொண்டுபோதற்குப் பயந்து ஆடானது நமது சிவபெருமானது திருவாலயத்தில் சரணாகதி யடைந்தது; நீ பிடிக்காதே. (அ)

கொல்லுதல் வெய்ய பாவங் கொண்டவவ் விலையீ தென்று
சொல்லுதி யதிக மான சொன்னநாந் தருது மன்றி
யல்லணி கண்ட னன்ப ரடைக்கல மான சீவன்
வெல்லவே காத்த னீதி நினக்கிது மிகுத்த நன்மை.

(ப-ரை.) சொல்லுதல் - கொலைசெய்தலானது, வெய்ய - கொடிய, பாவம்-பாவமாகும், கொண்ட-விலைக்குவாங்கின, அ-அந்த, விலை-கிரயம், ஈது என்று - இன்னதென்று, சொல்லுதி-சொல்வாய், அதிகமான-மிகுந்த,சொன்னம்-பொருளை, நாம்—, தருதும்-கொடுப்போம்,அன்றி-அல்லாமலும்,அல் அணி கண்டன் அன்பர்-சிவசரணர்கள், அடைக்கலம் ஆன - தம்மைச் சரணாகதியடைந்த, சீவன் - ஜீவபிராணிகள், வெல்ல-(பிழைத்து)வெற்றியடையும்படி, காத்தல் - (அவற்றை) ரக்ஷித்தலே, நீதி - தர்மமாகும், நினக்கு-உனக்கும், இது - இந்த ஜீவகாருண்யமாகிய காரியமே, மிகுத்த-மேன்மையாகிய, நன்மை-மோக்ஷ ஸாம்ராஜ்யமாகும், எ-று.

(பொ-ரை.) கொலைசெய்தலானது கொடிய பாவமாகும்; விலைக்கு வாங்கின அந்தக் கிரயம் இன்னதென்று சொல்வாய்; மிகுந்த பொருளை நாம் கொடுப்போம்; அல்லாமலும் சிவசரணர்கள் தம்மைச் சரணாகதி யடைந்த ஜீவப்ராணிகள் பிழைத்து வெற்றியடையும்படி,அவற்றைரக்ஷித்தலே தர்மமாகும்;உனக்கும் இந்த ஜீவகாருண்யமாகிய காரியமே மேன்மையாகிய மோக்ஷ ஸாம்ராஜ்யமாகும்.

(வி - ரை.) அல் - இருள் போன்ற கறுத்த நிறத்தையுடைய; அணி கண்டன் - ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமான். நிற்கும் என்ற இறந்தது தழுவிய உம்மை விகாரத்தாற் றொக்கது. (௯)

காரியந் தேவை யின்றிக் காளையுந் தேவை யின்று
னரியாம் பரத்தைக் கீந்து நன்றுரைத் தொப்பச் செய்வாய்
சீரிய பொருளி ரட்டித் தருகுதுஞ் செல்தி யென்ன
நீரியும் பொருளுன் கொள்ளேன் மேடமே நேய மென்ன.

(ப-ரை.) காரியம் தேவை-எடுத்த காரியம் ஆகவேண்டியதே, இன்றி-அல்லாமல், காளையும்-ஆடும், தேவை-வேண்டியது, இன்று-இல்லை, உன்-உனது, நாரியாம்-மனைவியாகிய, பரத்தைக்கு - வேசிக்கு, ஈந்து-(பொருளை) கொடுத்து, நன்று - செவ்வையாக, உரைத்து - சொல்லி, ஒப்ப - சம்மதிக்கும்படி, செய்வாய் - பண்ணுவாய், சீரிய-சிறந்த, பொருள் - பொன், இரட்டி - இரண்டத்தனை, தருகுதும் - கொடுப்போம், செல்தி - (பெற்றுக்கொண்டு) போவாய், என்ன - என்று (ப்ராஹ்மையர்) சொல்லுதலும், நீர்—, இயும்-கொடுக்கின்ற, பொருள்-பொன்னை, நான்—, கொள்ளேன் - பெற்றுக்கொள்ள மாட்டேன், மேடமே - ஆடே, நேயம்-தேவை, என்ன-என்று (ஆர்த்தன்) சொல்லுதலும், எ - று.

(பொ-ரை.) எடுத்த காரியம்ஆக வேண்டியதேயல்லாமல்,ஆடும் வேண்டியதில்லை; உனது மனைவியாகிய வேசிக்குப் பொருளைக் கொடுத்து செவ்வையாகச் சொல்லிச் சம்மதிக்கும்படிப் பண்ணுவாய்; சிறந்த பொன் இரண்டத்தனை கொடுப்போம்; பெற்றுக்கொண்டு போவாயென்று ப்ராஹ்மையர் சொல்லுதலும், நீர் கொடுக்கின்ற பொன்னை நான் பெற்றுக் கொள்ளமாட்டேன்; ஆடே தேவையென்று ஆர்த்தன் சொல்லுதலும்.

(வி-ரை.) எதுகை யின்பம் நோக்கி ஈயும் என்பது இயும் என்றாயிற்று. (௧0)

இவ்விலை யன்றி மற்றொன் றிரண்டுவேண் டினையே லனு
மவ்விலை தருவேம் கொள்கொன் றளித்தனு மாயி ரம்பொன்
செவ்விய விலையென் மேட மென்றலுஞ் சிவ னேயம்
வவ்விய கின்ன ரைய ராயிரம் பொன்னும் வைத்தார்.

(ப-ரை.) இ - (நான்சொன்ன) இந்த (இரண்டத்தனை), விலை-கிரயமே, அன்றி- அல்லாமல், மற்று-மேலும், ஒன்று-ஒன்றத்தனை (அல்லது), இரண்டு - இரண்டத்தனை கிரயம், வேண்டினையேல் எனும் - விரும்புவாயானாலும், அ - அந்த, விலை-கிரயம், தருவேம்-கொடுப்போம், கொள் என்று-பெற்றுக்கொள்வாயென்று, அளித்தலும்-(ப்ரஹ்மையர்) கொடுத்தலும், என்-எனது, மேடம்-ஆடு, ஆயிரம் பொன்—, செவ்விய-பொருமான, விலை-கிரயமுள்ளது, என்றலும் - என்று (ஆர்த்தன்) சொல்லுதலும், சீவன் நேயம்-ஜீவகாருண்யமே, வவ்விய-பூண்டிருக்கின்ற, இன்னரையர்-நிர்ரப்ரஹ்மையர், ஆயிரம் பொன்னும் - ஆயிரம் பொன்னையும், வைத்தார் - கொடுத்தார், எ - று.

(போ - ரை.) நான் சொன்ன இந்த யிரண்டத்தனை கிரயமே யல்லாமல், மேலும் ஒன்றத்தனை அல்லது இரண்டத்தனை கிரயம் விரும்புவாயானாலும், அந்தக் கிரயம் கொடுப்போம்; பெற்றுக்கொள்வாயென்று ப்ரஹ்மையர் கொடுத்தலும், எனது ஆடு ஆயிரம் பொன் பொருமான கிரயமுள்ளதென்று ஆர்த்தன் சொல்லுதலும், ஜீவ காருண்யமே பூண்டிருக்கின்ற நிர்ரப்ரஹ்மையர் ஆயிரம் பொன்னையும் கொடுத்தார்.

வைத்தலு மவன்ம கிழ்ந்து வாங்கிக்கொண் டேக மேட
மித்தையாங் கொண்டோ மத்தன் முத்திரை யிடுவோங் கண்டா
யொத்தனை யாகிற் சொல்லென் றுரைத்தலு மொத்தே னென்று
நித்தர்தஞ் சன்னி திக்க ணின்றுரை செய்து சென்றான்.

(ப - ரை.) வைத்தலும் - கொடுத்தலும், அவன்—, மகிழ்ந்து - சந்தோஷத்துடன், வாங்கிக்கொண்டு - பெற்றுக்கொண்டு, ஏக - போதலும், யாம் - நாம், மேடம் இத்தை - இந்த ஆட்டை, கொண்டோம் - விலைக்கு வாங்கிக் கொண்டோம், ஒத்தனை ஆகில்-நீ சம்மதிப்பாயாயின், அத்தன்முத்திரை-லிங்கமுத்திரை, இடுவோம்- போடுவோம், சொல் என்று - பதில் சொல்வாயென்று, உரைத்தலும் - (ப்ரஹ்மையர்) கேட்டலும், ஒத்தேன் என்று - (ஆர்த்தன்) சம்மதித்தேனென்று, நித்தர் சன்னிதிக்கண் - சிவபெருமான் சந்நிதியில், நின்று—, உரைசெய்து - சொல்லி, சென்றான் - போனான், எ - று.

(போ - ரை.) கொடுத்தலும், அவன் சந்தோஷத்துடன் பெற்றுக்கொண்டு போதலும், நாம் இந்தஆட்டை விலைக்கு வாங்கிக்கொண்டோம்; நீ சம்மதிப்பாயாயின் லிங்கமுத்திரை போடுவோம்; பதில் சொல்வாயென்று ப்ரஹ்மையர் கேட்டலும், ஆர்த்தன் சம்மதித்தேனென்று சிவபெருமான் சந்நிதியில் நின்று சொல்லிப் போனான்.

மேடமுன் னாப்பின் னாக மேவுத லின்றிச் செய்தா
லூடுவள் பரத்தை யென்ன வுன்னியோ ரதிக மையா
யாடகங் கொடுத்துக் கொண்டங் கவண்மனை கொடுபோங் காலைத்
தோடலர் குழலி யிவ்வா றனைத்தையுந் துணிந்து கேளா.

(ப - ரை.) மேடம்-ஆடு, முன்ஆக-முன்னாகவும், நாம—, பின்ஆக-பின்னாகவும், மேவுதல் இன்றிச் செய்தால் - போகாவிட்டால், பரத்தை - வேசி, ஊடுவள் - கோவிப்பாள், என்ன - என்று, உன்னி - யோசித்து, ஓர் - ஒரு, அதிகம் - விலையுயர்ந்த, மையாய் - ஆடாக (பார்த்து), ஆடகம் - பொன்னை, கொடுத்து - தந்து, கொண்டு - விலைக்கு வாங்கிக்கொண்டு, அங்கு-அவ்விடத்தில், அவள் - அவளுடைய, மனை - வீட்டிற்கு, கொடு - ஓட்டிக்கொண்டு, போம் காலை - போகின்றபோது, தோடு - பூவிதழ்கள், அலர் - மலர்கின்ற, குழலி - கூந்தலையுடையவளாகிய வேசி

யானவள், இவ்வாறு அனைத்தையும் - இந்தச் செய்தியை யெல்லாம், துணிந்து - நிச்சயமாய், கேளா - கேட்டு (அறிந்து), எ - று.

(போ - ரை.) ஆடு முன்னாகவும் நாம் பின்னாகவும் போகாவிட்டால் வேசி கோவிப்பாளென்று யோசித்து, ஒரு விலையுயர்ந்த ஆடாகப் பார்த்துப் பொன்னைத் தந்து விலைக்கு வாங்கிக்கொண்டு, அவ்விடத்தில் அவளுடைய வீட்டிற்கு ஓட்டிக் கொண்டு போகின்றபோது, பூவிதழ்கள் மலர்கின்ற கூந்தலையுடையவளாகிய வேசி யானவள் இந்தச் செய்தியை யெல்லாம் நிச்சயமாய்க் கேட்டறிந்து

(வி - ரை.) ஆடகம் - ஹாடகம் என்னும் வடசொற்றிரிபு. (௧௫)

வெம்பிநீ யெனது வீட்டின் மேவலென் வெள்கா தென்று
கொம்பியிவ் வூர்வி டர்க்குக் கூறுங்காற் சிரித்தெள் ளாரோ
வம்பவிங் கென்றன் முன்னம் வந்துநின் முகங்காட் டேலு
னம்பொனே யென்றன் வாழ்க்கைக் கானதா யுள்ள தென்னு.

(ப - ரை.) வெம்பி - பெருங்கோவங்கொண்டு, நீ—, எனது - என்னுடைய, வீட்டில்—, வெள்காது - நாணமில்லாமல், மேவல் - வருதற்குக் காரணம், என் - யாது, என்று-என்றேசி, இ - இந்த, ஊர் - நாட்டிலிருக்கின்ற, விடர்க்கு - தூர்த்தர்களுக்கு, கூறுங்கால் - சொல்வோமாயின், கொம்பி - கைகொட்டி, சிரித்து - பரிஹாஸஞ்செய்து, எள்ளாரோ - இகழமாட்டார்களோ, வம்ப - துஷ்டனே, இங்கு - இவ்விடத்தில், என் முன்னம் - எனக்கெதிரே, வந்து—, நின் - உனது, முகம் - முகத்தை, காட்டேல் - காண்பிக்காதே, உன் - உனது, அம் - அழகிய, பொன்னே - பொருளோ, என் - எனது, வாழ்க்கைக்கு - ஜீவனத்திற்கு, ஆனது ஆய் - உபயோக மானதாய், உள்ளது - இருப்பது, என்னு - என்று, எ-று.

(போ-ரை.) பெருங்கோவங்கொண்டு நீ என்னுடைய வீட்டில் நாணமில்லாமல் வருதற்குக் காரணம் யாது? என்றேசி, இந்த நாட்டிலிருக்கின்ற தூர்த்தர்களுக்குச் சொல்வோமாயின் கைகொட்டிப் பரிஹாஸஞ் செய்து இகழமாட்டார்களோ? துஷ்டனே! இவ்விடத்தில் எனக்கெதிரே வந்து உனது முகத்தைக் காண்பிக்காதே; உனது அழகியபொருளோ எனதுஜீவனத்திற்கு உபயோகமானதாயிருப்பது? என்று.

என்பெருஞ் செல்வம் பார்ப்பா யென்னினித் தெருக்க ளெல்லா
நன்பொனே பரப்பு விக்கே னாட்டுள விடர்க ளானோர்
பின்புமுன் படப்பை யிட்டுத் திரிந்தவர்க் கொவ்வாய் பேயா
மின்பொரு மிடையார் முன்னான் வெள்கவென் செய்தா யென்ன.

(ப - ரை.) என் - எனது, பெரு - மிகுதியாகிய, செல்வம் - பொருளை, பார்ப்பாய் என்னின்-காண்பாயானால், இ-இந்த, தெருக்கள் - வீதிகள், எல்லாம்-முழுதும், நல்-நல்ல, பொன்னே - பொருளே, பரப்புவிக்கேன் - நிறையச் செய்யமாட்டேனோ, நாட்டு-ஊரில், உள்ள - இருக்கின்ற, விடர்கள் ஆனோர் - தூர்த்தர்கள், பின்புமுன்பு-பின்னுமுன்னுமாக, அடப்பை - தாம்பூலப் பைகளை, இட்டு - வைத்துக்கொண்டு, திரிந்தவர்க்கு - அலைந்த பேர்களுக்கு, ஒவ்வாய் - நிகராகமாட்டாய், பேயா - புத்தி கெட்டவனே, மின் - மின்னற்கொடி, பொரும் - போலும், இடையார் - இடையை யுடைய வேசிகளுக்கு, முன் - எதிரே, நான்—, வெள்க - நாணும்படி, என் - என்ன வேலை, செய்தாய் - பண்ணிவிட்டனை, என்ன - என்று (வேசி) சொல்லுதலும், எ-று.

(பொ-ரை.) எனது பிருதியாகிய பொருளைக் காண்பாயானல், இந்த வீதிகள் முழுதும் நல்ல பொருளை நிறையச் செய்யமாட்டுவேன்; ஊரிலிருக்கின்ற தூர்த்தர் கள் பின்னும் முன்னுமாகத் தாம்பூலப் பைகளை வைத்துக்கொண்டு அலைந்த பேர் களுக்கு நிகராகமாட்டாய்; புத்திகெட்டவனே! மின்னற்கொடி போலும் இடையை யுடைய வேசிகளுக்கெதிரே நான் நாணும்படி என்ன வேலை பண்ணிவிட்டனை யென்று வேசி சொல்லுதலும். (௯௦)

இக்குறி யுடனே பொன்னு யிரமுமிட் டனேக மேடம்
புக்குடன் றருவ னேன்பு போதநீ செய்வாய் காயேற்
றக்கபொன் வேண்டி லின்னந் தருகுவ னென்னச் சீறி
யக்குறி தந்தா னேன்பின் றனுட்டிப்ப னல்லா லாகா.

(ப - ரை.) இ-இந்த, குறியுடன் - ஆடும், பொன்னாயிரமும்-ஆயிரம் பொன்னும், இட்டு - கொடுத்து, அனேகம்-பல, மேடம் - ஆடுகளை, புக்கு - (வாங்கி) வந்து, உடன் - உடனே, தருவன் - கொடுப்பேன், நீ—, நோன்பு - விரதத்தை, போத - விசேஷமாக, செய்வாய் - அநுஷ்டிப்பாய், காயேல் - கோவியாதே, தக்க-கூடுமான, பொன் - பொருள், வேண்டில் - விரும்புவாயாயின், இன்னம்-இன்னமும், தருகுவன்- கொடுப்பேன், என்ன - என்று (தூர்த்தன்) சொல்லுதலும், சீறி - பெருங்கோவங் கொண்டு, அ - அந்த, குறி - ஆட்டையே, தந்தால் - கொடுப்பாயாயின், நோன்பு - விரதத்தை, இன்று-இப்போது, அனுட்டிப்பன் - பண்ணுவேன், அல்லால்-இல்லாமற் போனல், ஆகா - விரதம் நிறைவேறமாட்டா, எ-று.

(பொ - ரை.) இந்த ஆடும், ஆயிரம் பொன்னும் கொடுத்து பல ஆடுகளை வாங்கி வந்து உடனே கொடுப்பேன்; நீ விரதத்தை விசேஷமாக யநுஷ்டிப்பாய்; கோவி யாதே; கூடுமான பொருள் விரும்புவாயாயின் இன்னமும் கொடுப்பேனென்று தூர்த்தன் சொல்லுதலும், பெருங்கோவங்கொண்டு அந்த ஆட்டையே கொடுப்பா யாயின், விரதத்தை இப்போது பண்ணுவேன்; இல்லாமற்போனல் விரதம் நிறை வேறமாட்டா. (௯௧)

என்னையத் தெய்வங் கொல்லு மென்னவே வெகுண்டா ளந்த
மின்னையொப் பவள்சொற் கஞ்சி மிக்ககா மனுக்குக் கண்ணின்
றுன்னிலென் றுரைக்குஞ் சொல்லை யுறுத்துவான் போன்று மூட
னிந்நிதி கொள்வீர் மேடம் விடுவீரென் றெதிரி சைத்தான்.

(ப - ரை.) என்னை—, அ-அந்த, தெய்வம் - குலதெய்வம், கொல்லும்-கொன்று விடும், என்ன-என்று, வெகுண்டாள் - கோவித்தாள், அந்த—, மின்னை ஒப்பவள் - மின்போன்ற விடையினையுடையவளாகிய வேசியின், சொற்கு-வார்த்தைக்கு, அஞ்சி- பயந்து, உன்னில் - யோசிக்குமிடத்து, மிக்க - பெரிய, காமனுக்கு - காமிக்கு, கண்- அறிவு, இன்று-இல்லை, என்று—, உரைக்கும்-வழங்குகின்ற, சொல்லை-பழமொழியை, உறுத்துவான் - நிலைப்பூட்டுபவன், போன்று-போல, மூடன்-மதிகெட்ட தூர்த்தன் (ப்ரஹ்மையரிடம் சென்று), இ - இந்த, நிதி - பொன்னை, கொள்வீர் - வாங்கிக் கொள்ளுங்கள், மேடம் - ஆட்டை, விடுவீர் - விட்டுவிடுங்கள், என்று—, எதிர் - எதிரே, இசைத்தான் - சொன்னன், எ - று.

(பொ-ரை.) என்னை அந்தக் குலதெய்வம் கொன்றுவிடுமென்று கோவித்தாள்; அந்த மின் போன்ற இடையினையுடையவளாகிய வேசியின் வார்த்தைக்குப் பயந்து,

யோசிக்குமிடத்து, பெருங்காயிக்கு அறிவில்லையென்று வழங்குகின்ற பழமொழியை நினைப்பூட்டுபவன்போல மதிகெட்ட ஆர்த்தன் ப்ரஹ்மையரிடஞ்சென்று இந்தப் பொன்னை வாங்கிக்கொள்ளுங்கள்; ஆட்டைவிட்டுவிடுங்களென்று எதிரேசொன்னான்.

முந்தயாங் குறிக்கு லிங்க முத்திரை தரித்தோ நீயேன்
வந்தனை விடுகி லேன்போ வென்றலு மதியி லாதா
னந்தமே டத்தை யோடி யடர்ந்தனன் கின்ன ரையர்
வெந்திறற் கோப மாகி வெகுண்டிதே னேடா வென்னு.

(ப-ரை.) முந்த - முன்னமே, யாம்-நாம், குறிக்கு-ஆட்டிற்கு, லிங்கமுத்திரை—, தரித்தோம் - இட்டுவிட்டோம், நீ—, என்—, வந்தனை - வந்தாய், விடுகிலேன் - விடமாட்டேன், போ - போய்விடுவாய், என்றலும்-என்று (ப்ரஹ்மையர்) சொல்லுதலும், மதியிலாதான் - மூடனாகிய ஆர்த்தன், அந்த—, மேடத்தை - ஆட்டை, ஓடி - விரைந்து சென்று, அடர்ந்தனன் - கிட்டிப்போனான், கின்னரையர் - கிந்நர ப்ரஹ்மையர், வெம் திறல்-மிக்ககொடிய, கோபம்ஆகி-கோவங்கொண்டு, வெகுண்டு-சீறி, இது - இந்தத் தகாத காரியஞ் செய்தற்குக் காரணம், என்-யாது, ஏடா-அடா, என்னு - என்று, எ-று.

(போ - ரை.) முன்னமே நாம் ஆட்டிற்கு லிங்கமுத்திரை யிட்டுவிட்டோம்; நீ ஏன் வந்தாய்? விடமாட்டேன்; போய்விடுவாயென்று ப்ரஹ்மையர் சொல்லுதலும், மூடனாகிய ஆர்த்தன் அந்த ஆட்டை விரைந்து சென்று கிட்டப் போனான்; கிந்நர ப்ரஹ்மையர் மிக்க கொடிய கோவங்கொண்டு சீறி இந்தத் தகாதகாரியஞ் செய்தற்குக் காரணம் யாது? அடா! என்று.

(வி-ரை.) குறி-திசைச்சொல்; ஆடு என்பது பொருள். என்னு-செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (கஅ)

மறியைநீ பிடித்தா யாகில் வசவரா சைய னாணை
சிறியனீ போபோ வென்று செப்பவுந் தெளியா னாகிக்
குறியினைத் தொடர லிங்கக் குறியுள்ள விதனைத் தீண்டிற்
றறியுமுன் றலையென் கையாற் சத்திய மஞ்சேன் கண்டாய்.

(ப - ரை.) நீ—, மறியை - ஆட்டை, பிடித்தாய் ஆகில் - பிடிப்பாயாயின், வசவராசையன் - வசவண்ணன் மேல், ஆணை—, நீ—, சிறியன் - அற்பப்பையன், போ போ - போய்விடு போய்விடு, என்ற—, செப்பவும் - (ப்ரஹ்மையர்) சொல்லுதலும், தெளியான்ஆகி - (ஆர்த்தன்) அறியாதவனாகி, குறியினை-ஆட்டை, தொடர-பிடித்தலும், லிங்கக்குறியுள்ள - லிங்கமுத்திரையிட்டிருக்கின்ற, இதனை - இதை, தீண்டில் - தொடுவாயாயின், என் - எனது, கையால் - கரத்தினால், உன் - உனது, தலை-சிரமானது, தறியும் - வெட்டுண்ணும், சத்தியம்-உண்மை, அஞ்சேன்-பயப்படமாட்டேன், எ - று.

(போ - ரை.) நீ ஆட்டைப் பிடிப்பாயாயின் வசவண்ணன் மேல் ஆணை; நீ அற்பப்பையன்; போய்விடு போய்விடென்று ப்ரஹ்மையர் சொல்லுதலும், ஆர்த்தன் அறியாதவனாகி ஆட்டைப் பிடித்தலும், லிங்க முத்திரை யிட்டிருக்கின்ற இதைத் தொடுவாயாயின் எனது கரத்தினால் உனது சிரமானது வெட்டுண்ணும்; உண்மை; பயப்படமாட்டேன். (கக)

அச்சமி லீச னன்பர்க் கடைக்கலம் புகுந்தோர் தங்கள்
வச்சிர பஞ்ச ரங்கா ணின்றலை மரையி னாளம்
பிச்சுடன் பிடுங்கும் வேழ மென்னவே பெரிது பேசிக்
கைச்சவன் றலையை யோடி வாளினாற் கண்டித் தார்த்தார்.

(ப-ரை.) அச்சம் - பயமென்பதே, இல் - இல்லா, ஈசன் அன்பர்க்கு - சிவபக்தர்களுக்கு, அடைக்கலம் புகுந்தோர்-சரணுகதியடைந்த தீனர்களுக்கு, வச்சிரப்பஞ்சரம்-(சிவபக்தர்கள்) வயிரக்குப்பாயம் போன்றிருப்பார்கள் (என்று), நின்று - (தடாகத்தில்) நிலேத்து, அலே-அசைகின்ற, மரையின் நாளம் - தாமரைத் தண்டினே, பிச்சு-பிய்த்து, உடன் - கூடவே, பிடுங்கு - பறித்துவிடுகின்ற, வேழம் என்ன-யானேபோல, பெரிது - அதிகப்பட, பேசி-சொல்லி, கைச்சு - கோவித்து, ஓடி - விரைந்து சென்று, அவன் - அவனுடைய, தலேயை - சிரத்தை, வாளினல் - வாளாயுதத்தால், கண்டித்து-வெட்டி, ஆர்த்தார்-ஆரவாரஞ்செய்தார், எ-று.

(பொ-ரை.) பயமென்பதேயில்லாத சிவபக்தர்களுக்கு சரணுகதியடைந்த தீனர்களுக்கு சிவபக்தர்கள் வயிரக்குப்பாயம் போன்றிருப்பார்களென்று, தடாகத்தில் நிலேத்து அசைகின்ற தாமரைத் தண்டினேப் பிய்த்துக் கூடவே பறித்துவிடுகின்ற யானேபோல அதிகப்படச் சொல்லிக் கோவித்து, விரைந்து சென்று, அவனுடைய சிரத்தை வாளாயுதத்தால் வெட்டி ஆரவாரஞ்செய்தார். (௨௦)

விசையினுற் சென்னி யத்தன் விமலவா லயத்து வீழ
லுசிதமன் றென்ன வோடி வீழ்வது போல வீழ்ந்த
தசைவிலா வீசன் கோயி லத்திர னுடறந் கொண்ணு
தசைகெடா தீர்ப்ப மென்ன மதிற்புறந் தந்திட் டாரால்.

(ப-ரை.) விசையினுல் - (வெட்டுண்ட) வேகத்தால், சென்னி-தலேயானது, விமலம் - பரிசுத்தமாகிய, அத்தன் ஆலயத்து-சிவன்கோயிலில், வீழல் - விழுதல், உசிதம் அன்று-அநுசிதம்,என்ன-என்று, ஓடி-விரைந்துசென்று, வீழ்வது-விழுவது,போல—, வீழ்ந்தது-விழுந்தது, (அலயத்து விழுதலும், ப்ரஹ்மையர், வீழ்வது அநுசிதமென்று நினேத்து ஓடி, அது வேகத்தால் வீழ்வது போலத் தாமும் வேகத்தால், அசைவு) இல்லா-நிலேபெற்ற, ஈசன்-சிவபெருமானது, கோயில் - திருவாலயத்தில், அத்திரன்-நிலேயில்லாத சண்டாளனது,உடல் - உடம்பு,தங்க ஒண்ணு-இருக்கக்கூடா, தசை-மாம்ஸம், கெடாது-பழுதாகாமல்,ஈர்ப்பம்-இழுப்போம், என்ன-என்று, மதிற்புறம்-திருமதிலுக்கு வெளியே, தந்து-கொண்டுவந்து, இட்டார்-எறிந்துவிட்டார் எ-று.

(பொ-ரை.) வெட்டுண்ட வேகத்தால் தலேயானது பரிசுத்தமாகிய சிவன் கோயிலில் விழுதல் அநுசிதமென்று விரைந்து சென்று விழுவது போல விழுந்தது; ஆலயத்து விழுதலும், ப்ரஹ்மையர், வீழ்வது அநுசிதமென்று நினேத்து ஓடி, அது வேகத்தால் வீழ்வது போலத் தாமும் வேகத்தால் நிலேபெற்ற சிவபெருமானது திருவாலயத்தில் நிலேயில்லாத சண்டாளனது உடம்பு இருக்கக்கூடா ; மாம்ஸம் பழுதாகாமல் இழுப்போமென்று திருமதிலுக்கு வெளியே கொண்டுவந்து எறிந்துவிட்டார்.

(வி-ரை.) உசிதமன்று - தக்கதல்ல. (௨௧)

இறந்தவ னுற்ருர் வந்தா ரவன்றனே யெடுத்துச் சென்ருர்
சிறந்தவிச் சலன்பா லிட்டார் தெருமந்தா ரபய மென்ரு
ரறந்தகு வேந்தே தப்பின் ருலயத் தாட்டின் பின்னர்
பிறிந்திடா தோடிச் சென்ருன் பிரமையர் கொன்ரு ரென்ருர்.

(ப-ரை.) இறந்தவன்-செத்துப்போன துஷ்டனுடைய, உற்ருர்-பந்துஜனங்கள், வந்தார்-வந்து, அவன் தன்னே - அவனுடைய பிணத்தை, எடுத்து-தூக்கிக்கொண்டு, சென்ருர் - போய், சிறந்த-மேன்மை பொருந்திய, விச்சலன் பால்-விஜ்ஜலராஜனிடத்தில், இட்டார்-வைத்து, தெருமந்தார்-மனங்கலங்கி, அபயம்-ஓலம், என்ருர் - என்று, அறந்தகு - செங்கோலோச்சுகின்ற, வேந்தே - அரசனே, தப்பு - (நாங்கள் சொல்வதில்) பிழை, இன்று - இல்லே, ஆலயத்து - சிவன்கோயிலில் (புகுந்த), ஆட்டின் பின்

னர்-ஆட்டின் பிறகே, பிறிந்திடாது-விட்டுநீங்காமல், ஓடிச்சென்றான் - ஓடிவந்தவனை, பிரமையர்-கிந்நரப்ரஹ்மையர், கொன்றார் - கொலைசெய்தார், எ - று.

(போ - ரை.) செத்துப்போன துஷ்டனுடைய பந்து ஜனங்கள் வந்து, அவனுடைய பிணத்தைத் தூக்கிக்கொண்டு போய், மேன்மைபொருந்திய விஜ்ஜலராஜனிடத்தில் வைத்து, மனங்கலங்கி, ஓலமென்று, செங்கோலோச்சுகின்ற அரசனே! நாங்கள் சொல்வதிற் பிழையில்லை; சிவன்கோயிலிற் புகுந்த ஆட்டின் பிறகே விட்டு நீங்காமல் ஓடிவந்தவனைக் கிந்நரப்ரஹ்மையர் கொலைசெய்தார்.

(வி-ரை.) வந்தார், சென்றார், இட்டார், தெருமந்தார், என்றார் என்பவை முற்றெச்சங்கள். தெருமந்தார் என்பதற்குப் பகுதி தெருமா. (௨௨)

இனியநந் திகண்மு கத்தை விச்சல னேறப் பார்த்து
நனிதயா பரனு மீச னற்பத்த ராகி யுள்ளோர்
மனிதரிற் பிழையி லாரை வதைப்பதோ பெருமை யிவ்வூர்
தனிலிரு நீரே யென்று தரைமன்னன் வெகுண்டு சொல்வான்.

(ப - ரை.) இனிய-மேன்மைபொருந்திய, நந்திகள்-வசவண்ணரது, முகத்தை-திருமுகத்தை, விச்சலன் - விஜ்ஜலராஜன், ஏற - உற்று, பார்த்து - நோக்கி, நனி-மிகுந்த, தயாபரன் ஆம் - க்ருபாகடாக்ஷமுள்ளவனுகிய, ஈசன் - சிவபெருமானுக்கு, நல் - சிறந்த, பத்தர் ஆகி உள்ளோர் - பக்தர்கள், மனிதரில் - மனிதர்களுக்குள்ளே, பிழையிலாரை - குற்றஞ்செய்யாதபேர்களை, வதைப்பதோ-கொல்வதோ, பெருமை-மேன்மையாகும், இ - இந்த, ஊர் தன்னில் - ஊரில், நீரே—, இரும் - சுகமாக வாழும், என்று—, தரை மன்னன் - புவனாதிபதியாகிய விஜ்ஜலராஜன், வெகுண்டு - கோவித்து, சொல்வான் - சொல்வானாயினான் (எவ்வாறெனின்), எ - று.

(போ-ரை.) மேன்மைபொருந்திய வசவண்ணரது திருமுகத்தை உற்றுநோக்கி, மிகுந்த க்ருபாகடாக்ஷமுள்ளவனாகிய சிவபெருமானுக்குச் சிறந்த பக்தர்கள் மனிதர்களுக்குள்ளே குற்றஞ் செய்யாத பேர்களைக் கொல்வதோ பெருமையாகும்? இந்த ஊரில் நீரே சுகமாக வாழுமென்று புவனாதிபதியாகிய விஜ்ஜலராஜன் கோவித்துச் சொல்வானாயினான்; எவ்வாறெனின். (௨௩)

நம்மையார் தெண்டிப் பார்க ணமக்கெதி ரில்லை யென்ன
வும்மைநீர் மதித்துச் செய்தி ரல்லதங் குடையோன் மேடஞ்
செம்மையிற் கொடுபோ கென்று விடாவகை சீறிக் கொன்ற
வெம்மையன் றவத்த னென்று விளம்புதன் மிகவுங் குற்றம்.

(ப - ரை.) நம்மை—, தெண்டிப்பார்கள் - கண்டிப்பவர்கள், யார்—, நமக்கு— எதிர் - நிகர், இல்லை—, என்ன - என்று, உம்மை - உம்மையே, நீர்—, மதித்து - மெச்சிக்கொண்டு, செய்திர் - (இந்தத் தகாதகார்யத்தை) பண்ணிவிட்டீரே, அல்லது-அல்லாமல், அங்கு - அவ்விடத்தில், உடையோன் - சொந்தக்காரனுடைய, மேடம்-ஆட்டை, செம்மையில்-நியாயத்தின்படி, கொடுபோக - பிடித்துக்கொண்டுபோகக் கடவை, என்று—, விடாவகை - விட்டுவிடாதபடி, சீறி - பெருங்கோவங்கொண்டு, கொன்ற - கொலைசெய்த, வெம்மையன் - பரமதுஷ்டனை, தவத்தன்-ஜங்கமமூர்த்திகள், என்று—, விளம்புதல் - (நாணமல்) சொல்வது, மிகவும் குற்றம்-பெரிய தப்பிதமாகும், எ - று.

(போ - ரை.) நம்மைக் கண்டிப்பவர்கள் யார்? நமக்கு நிகரில்லையென்று உம்மையே நீர் மெச்சிக்கொண்டு இந்தத் தகாத கார்யத்தைப் பண்ணிவிட்டீரே யல்லாமல் அவ்விடத்தில் சொந்தக்காரனுடைய ஆட்டை நியாயத்தின்படிக் கொண்டு

போகக் கடவையென்று விட்டுவிடாதபடிப் பெருங்கோவங்கொண்டு கொலைசெய்த பரமதுஷ்டனை ஜங்கமமூர்த்திகளென்று நாணமற் சொல்வது பெரிய தப்பிதமாகும்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

காலகொ டத்தனை யுதைத்தலு மூனைக்
 கடித ருத்தலுந் தனயனைக் கொலலுஞ்
சீல மின்றியே தந்தையைக் கொலலுந்
 தெரிவை யைத்தவர்க் களித்தலுங் குலத்தான்
மேலர் கீழின ரகத்தினி லுணலு
 மிக்க கல்லினு லீசன்மே லிடலு
மேலு நன்மையோ பாவநீர் நாவா
 லியம்ப லேயறங் கொடுமையே யியற்றல்.

(ப-ரை.) கால்கொடு-காலினால், அத்தனை-சிவபெருமானை, உதைத்தலும்-உதைப்பதும், ஊனை-மாம்ஸத்தை, கடிது-சீக்கிரமாக, அருத்தலும்-ஊட்டுவதும், தனயனை-மகனை, கொலலும்-கொல்வதும், சீலம்-தர்மம், இன்றி-இல்லாமல், தந்தையை-பிதாவை, கொலலும்-கொல்வதும், தெரிவையை-மனைவியை, தவர்க்கு-ஜங்கமமூர்த்திகளுக்கு, அளித்தலும்-கொடுப்பதும், குலத்தால் மேலர்-உயர்ந்த குலத்தார், குலத்தால் கீழினர்-தாழ்ந்த குலத்தாருடைய, அகத்தினில்-வீட்டில், உண்ணலும்-உண்பதும், மிக்க-மிகுதியாகிய, கல்லினால் - கற்களைக்கொண்டு, ஈசன்-சிவபெருமான், மேல் - மீது, இடலும்-அடிப்பதுமாகிய வினைகள், ஏலும்-செய்யக்கூடிய, நன்மையோ-புண்யகர்மங்களோ, பாவம்-பாபகர்மங்களாம், நீர்-நீங்கள், நாவால் - நாக்கால், இயம்பல்-சொல்வது, அறம்-புண்ய கர்மத்தையே, இயற்றல்-செய்வது, கொடுமையே-பாப கர்மத்தையே, எ-று.

(பொ-ரை.) காலினால் சிவபெருமானை யுதைப்பதும், மாம்ஸத்தை மிகுதியாக ஊட்டுவதும், மகனைக் கொல்வதும், தர்மமில்லாமல் பிதாவைக் கொல்வதும், மனைவியை ஜங்கமூர்த்திகளுக்குக் கொடுப்பதும், உயர்ந்த குலத்தார் தாழ்ந்த குலத்தாருடைய வீட்டில் உண்பதும், மிகுதியாகிய கற்களைக் கொண்டு சிவபெருமான் மீது அடிப்பதுமாகிய வினைகள் செய்யக்கூடிய புண்ய கர்மங்களோ? பாபகர்மங்களாம்; நீங்கள் நாக்கால் சொல்வது புண்யகர்மத்தையே; செய்வது பாபகர்மத்தையே.

(வி-ரை.) கால் கொடத்தனை யுதைத்தலு மூனைக்கடிதருத்தலும் என்றது கண்ணப்பநாயனரை. தனயனைக்கொலலும் என்றது சிறுத்தொண்ட நாயனரை. தந்தையைக்கொலலும் என்றது சண்டேஸ்வரநாயனரை. தெரிவையைத் தவர்க்களித்தலும் என்றது இயற்பகைநாயனரை. குலத்தான் மேலர் கீழினரகத்தினிலுணலும் என்றது அப்பர்சுவாமிகளை. மிக்க கல்லினலீசன் மேலிடலும் என்றது சாக்கிய நாயனரை. (உ௫)

அவனி யெம்மைநீ ராளவே பொருந்தி
 ரஞ்சினே முமை தான்மைக்கு மிகயாம்
புவனி முற்றுநீர் கைக்கொளு மென்று
 புரவ லன்சொல நந்திகள் புகல்வார்
தவநி யாயராங் கின்னரப் பிரமர்
 தம்மை நீயறி யாமலீ துரைத்தாய்
பவநி யாயரா மூலகரைப் போலப்
 பதற லாரவர் பராமரித் திசைப்பாய்.

(ப-ரை.) நீர்—, எம்மை-நம்மை, அவனி - உலகத்தை, ஆள - ஆளுதல்செய்ய, பொருந்தீர்-விடமாட்டீர்,யாம்-நாம்,உமது-உம்முடைய,ஆண்மைக்கு-பராக்ரமத்திற்கு, மிக-மிகவும், அஞ்சினேம்-பயந்தோம், புவனி-உலகத்தை, முற்றும்-எல்லாம், நீர்—, கைக்கொள்ளும் - ஒப்புக்கொள்ளும், என்று—, புரவலன் - விஜ்ஜலராஜன், சொல்ல-சொல்லுதலும், நந்திகள்-வசவண்ணர்,புகல்வார்-சொல்வாராயினர் (எவ்வாறெனின்), தவநியாயர்ஆம் - தபோமார்க்கத்தையுடையவராகிய, கின்னரப்பிரமர் தம்மை-கிந்நர ப்ரஹ்மையரை, நீ—, அறியாமல் - தெரிந்துகொள்ளமாட்டாமல், ஈது-இந்தத் தகாத வார்த்தைகளை, உரைத்தாய் - சொல்லினை, பவநியாயர்ஆம் - பிறவிமார்க்கத்தை யுடையவராகிய, உலகரை - உலகத்தாரை, போல—, அவர்—, பதறலார் - அவசரப் படமாட்டார், பராமரித்து-விசாரித்து, இசைப்பாய்-சொல்வாய், எ-று.

(பொ-ரை.) நீர் நம்மை உலகத்தையாளுதல் செய்யவிடமாட்டீர்; நாம் உம்முடைய பராக்ரமத்திற்கு மிகவும் பயந்தோம்;உலகத்தையெல்லாம் நீர் ஒப்புக்கொள்ளுமென்று விஜ்ஜலராஜன் சொல்லுதலும், வசவண்ணர் சொல்வாராயினர் ; எவ்வாறெனின்:— தபோமார்க்கத்தையுடையவராகிய கிந்நரப்ரஹ்மையரை நீ தெரிந்து கொள்ளமாட்டாமல் இந்தத் தகாத வார்த்தைகளைச் சொல்லினை ; பிறவி மார்க்கத்தையுடையவராகிய உலகத்தாரைப்போல அவர் அவசரப்படமாட்டார் ; விசாரித்துச் சொல்வாய்.

பன்ன கப்பணி யத்தனற் றருமப்
பான்மை குன்றலாப் பரமநற் பத்தர்
கின்ன ரப்பிர மையர்தம் பெருமை
கிளத்தி லெண்படா பாலரோ மிகைக்கண்
டுன்னி யல்லது கோற லரவணிற்
குரிய பேர்களை யோடவிட் டறிந்தே
பின்ன ரொன்றினைச் செய்யென வேந்தன்
பிழையு டன்படு மறிவினாள் விடுத்தான்.

(ப-ரை.) பன்னகப்பணி - சர்ப்பாபரணத்தையுடைய, அத்தன் - சிவபெருமானிடத்து, நல் - சிறந்த, தருமப்பான்மை - தேவபக்தியானது, குன்று அல்லா - குறையாதவரும், பரமம் நல்-மிகச்சிறந்த, பத்தர்-பக்தருமாகிய, கின்னரப்பிரமையர்-கிந்நரப்ரஹ்மையருடைய, பெருமை-மகிமையை, கிளத்தில் - சொல்லுமிடத்து, எண்படா-அளவிடக்கூடா, பாலரோ-(அவர்)சிறுவரோ(அல்லர்),மிகை-குற்றத்தை,கண்டு-பார்த்து, உன்னி - யோசித்தே, அல்லது - அல்லாமல், கோறலர்-கொல்லமாட்டார், அவண் - அவ்விடத்திற்கு, நிற்கு - உனக்கு, உரிய பேர்களை - தக்க தூதர்களை, ஓடவிட்டு - விரைவாகஅனுப்பி, அறிந்து-தெரிந்துகொண்டு, பின்னர்-பிறகு, ஒன்றினை-ஒரு கார்யத்தை, செய் - பண்ணுவாய், என்ன-என்று (வசவண்ணர்) சொல்லுதலும், வேந்தன் - விஜ்ஜலராஜன், பிழை யுடன்படும் அறிவின் - ஆராயாமற் குறைகூறின தன் பிழையை யுணர்ந்தவனாய், ஆள்-தூதர்களை, விடுத்தான்-அனுப்பினான், எ - று.

(பொ-ரை.) சர்ப்பாபரணத்தையுடைய சிவபெருமானிடத்துச் சிறந்த தேவபக்தியானது குறையாதவரும், மிகச் சிறந்த பக்தருமாகிய கிந்நர ப்ரஹ்மையருடைய மகிமையைச் சொல்லுமிடத்து அளவிடக்கூடா ; அவர் சிறுவரோ ? அல்லர்; குற்றத்தைப் பார்த்து யோசித்தே யல்லாமல் கொல்லமாட்டார்; அவ்விடத்திற்கு உனக்குத் தக்க தூதர்களை விரைவாக அனுப்பித் தெரிந்துகொண்டு, பிறகு ஒரு கார்யத்தைப் பண்ணுவாயென்று வசவண்ணர் சொல்லுதலும், விஜ்ஜலராஜன் ஆராயாமற் குறை கூறின தன் பிழை யுணர்ந்தவனாய்த் தூதர்களை யனுப்பினான்.

(வி-ரை.) பிழையுடன்படும் அறிவின்-மந்தமதியை யுடையவனாய் எனினுமாம்.

விடுத்த தூதினர் கடுச்செறி கண்டன்
மிக்க கோயிலின் விரைந்துசென் றணைந்தங்
கடைக்க லத்துயிர்க் காம்பிர மைய
ரரிய தாண்மிசைப் பணிந்துநின் றையா
கிடைக்க ரும்பெரி யோய்சிறி யோன்மேற்
கிட்டி யிப்பழி வந்ததே னருளென்
றொடுக்க முற்றுநின் றறைந்தன ரன்ப
ருள்ள வாறிது விதுவென வுரைத்தார்.

(ப - ரை.) விடுத்த - அனுப்பின, தூதினர் - தூதர்கள், கடு - விஷம், செறி- பொருந்தியிருக்கின்ற, கண்டன் - ஸ்ரீ கண்டத்தையுடையவனாகிய த்ரிபுராந்தகேஸ்வரனது, மிக்க - மேன்மைபொருந்திய, கோயிலின் - திருவாலயத்தில், விரைந்து - சீக்கிரமாக, சென்று - போய், அணைந்து - சேர்ந்து, அங்கு - அவ்விடத்தில், அடைக்கலத்து-சரணடைகின்ற, உயிர்க்கு-ஜீவப்ராணிகளுக்கு, ஆம்-துணைவராகிய, பிரமையர் - கிந்நரப்ரஹ்மையரது, அரிய - சிறந்த, தாள் - திருவடிகளின், மிசை - மீது, பணிந்து ஸாஷ்டாங்கமாக வணங்கி, நின்று - (மேலேயெழுந்து) நின்று, ஐயா- ஐயனே, கிடைக்க அரு - யாவராலும் காண்பதற்கரிய, பெரியோய் - ஜங்கம மூர்த்திகளே, சிறியோன் - அற்பன், மேல் - மீது, கிட்டி - கோவித்து, இ - இந்த, பழி-குற்றம், வந்தது - உண்டாக்கியதற்குக் காரணம், ஏன்-யாது, அருள் - சொல்லியருளவேண்டும், என்று—, ஒடுக்கம் உற்று - ஒடுங்கி, நின்று—, அறைந்தனர் - கேட்டார்கள், அன்பர் - ஜங்கமமூர்த்திகளாகிய கிந்நரப்ரஹ்மையர், உள்ளவாறு - உள்ளபடி, இது இது-இன்னது இன்னது, என்ன - என்று, உரைத்தார்- விவரமாய்ச் சொல்லியருளினார், எ - று.

(போ-ரை.) அனுப்பின தூதர்கள் விஷம் பொருந்தியிருக்கின்ற ஸ்ரீகண்டத்தை யுடையவனாகிய த்ரிபுராந்தகேஸ்வரனது மேன்மை பொருந்திய திருவாலயத்தில் சீக்கிரமாகப் போய்ச் சேர்ந்து, அவ்விடத்தில் சரணடைகின்ற ஜீவப்ராணிகளுக்குத் துணைவராகிய கிந்நரப்ரஹ்மையரது சிறந்த திருவடிகளின்மீது ஸாஷ்டாங்கமாக வணங்கி, மேலேயெழுந்து நின்று, ஐயனே ! யாவராலும் காண்பதற்கரிய ஜங்கமூர்த் திகளே! அற்பன்மீதுகோவித்து இந்தக்குற்றம் உண்டாக்கியதற்குக் காரணம் யாது? சொல்லியருளவேண்டு மென்று ஒடுங்கி நின்று கேட்டார்கள் ; ஜங்கமூர்த்திகளாகிய கிந்நரப்ரஹ்மையர் உள்ளபடி இன்னதின்னதென்று விவரமாய்ச்சொல்லியருளினார்.

(வி-ரை.) வந்தது - பிறவினைப்பொருளில் வந்தது.

இதற்கு நற்றிரி புராந்தகன் றனே
யினிய சான்றிதை யிசைவிப்பன் றெரிந்து
விதிக்க நும்மிறை வல்லனேற் சென்று
விளம்பு மென்றனு மவர்மிக வெரீஇப்போய்க்
கொதித்த கோபனும் விச்சலன் முன்னங்
கூற மற்றவன் கொடுஞ்சொலா னகையா
மதத்த னிவ்வுரை காண்டுநா மென்று
வளங்கொ டன்பரி சனத்தொடும் வந்தான்.

(ப-ரை.) இதற்கு-இந்தச் செய்திக்கு, நல்-மேன்மைபொருந்திய, திரிபுராந்தகன் தானே-த்ரிபுராந்தகேஸ்வரனே, இனிய- மேலான, சான்று-சாக்ஷியாவான், இதை-

இதனை, இசைவிப்பன் - சொல்லச்செய்வேன், நும் - உமது, இறை - அரசன், தெரிந்து - விசாரித்தறிந்து, விதிக்க வல்லனேல் - தீர்மானஞ்செய்யவல்லவனாயின், சென்று-போய், விளம்பும்-சொல்லுங்கள், என்றலும்-என்று சொல்லியருளுதலும், அவர்-அவர்கள், மிக-மிகவும், வெரீஇ-பயந்து, போய்-சென்று, கொதித்த-பொங்குகின்ற, கோபன் ஆம் - கோபமுள்ளவனாகிய, விச்சலன் - விஜ்ஜலராஜன், முன்னம்-முன்னே, கூற - சொல்லுதலும், அவன்—, கொடு - கொடிய, சொல்லால் - சொற்களினால், நகையா - சிரித்து, மதத்தன் - உன்மத்தனாகிய கிந்நரப்ரஹ்மையனது, இ-இந்த, உரை-வார்த்தையின் யதார்த்த நிலையை, நாம்—, கண்டும்-போய்ப் பரிசோதித்தறிந்துகொள்வோம், என்று—, வளம்கொள்-மேன்மையாகிய, தன்-தனது, பரிசனத்தோடும்-பரிவாரத்துடனும், வந்தான்-சென்றான், எ-று.

(பொ-ரை.) இந்தச் செய்திக்கு மேன்மை பொருந்திய த்ரிபுராந்தகேஶ்வரனே மேலான சாக்ஷியாவான்; இதைச் சொல்லச்செய்வேன்; உமது அரசன் விசாரித்தறிந்து தீர்மானஞ்செய்யவல்லவனாயின் போய்ச் சொல்லுங்களென்று சொல்லியருளுதலும், அவர்கள் மிகவும் பயந்து சென்று, பொங்குகின்ற கோபமுள்ளவனாகிய விஜ்ஜலராஜன் முன்னே சொல்லுதலும், அவன் கொடிய சொற்களினால் சிரித்து உன்மத்தனாகிய கிந்நரப்ரஹ்மையனது இந்த வார்த்தையின் யதார்த்தநிலையை நாம் போய்ப் பரிசோதித்து அறிந்துகொள்வோமென்று மேன்மையாகிய தனது பரிவாரத்துடனும் சென்றான்.

(வி-ரை.) வெரீஇ-சொல்லிசை யளபெடை. எல்-எனின் என்பதன் மரூஉ. (௨௧)

கலிநிலைத்துறை.

வந்து நந்திகள் கின்னரப் பிரமையர் மலர்த்தாள்
பந்த நெஞ்சராய்ப் பரவினர் தொழுதுமுன் பணிந்தா
ரந்த நன்னகர்ப் பத்தர்க ளனைவரு மணைந்து
புந்தி யன்பொடு தொழுதுற விறைஞ்சிமுன் புகுந்தார்.

(ப-ரை.) நந்திகள் - வசவண்ணர், வந்து - சென்று, கின்னரப்பிரமையர்-கிந்நரப்ரஹ்மையரது, மலர்-தாமரைமலர்போலும், தாள்-திருவடிகளுக்கு, பந்தம்-அன்புள்ள, நெஞ்சர் ஆய்-மனத்தையுடையவராய், பரவினர்-துதித்து, தொழுது-கும்பிட்டு, முன்-திருமுன்பு, பணிந்தார்-ஸாஷ்டாங்கமாக வணங்கினார், அந்த—, நல்-சிறந்த, நகர்-கல்யாணபட்டினத்திலுள்ள, பத்தர்கள் - சிவபக்தர்கள், அனைவரும் - எல்லாரும், அணைந்து-சென்று, புந்தியன்பொடு - அன்புள்ள மனத்துடன், தொழுது-கும்பிட்டு, உற - மிகவும், இறைஞ்சி-வணங்கி, முன் - ஈஶ்வரசந்நிதியில், புகுந்தார் - பிரவேசித்தார்கள், எ - று.

(பொ-ரை.) வசவண்ணர் சென்று கிந்நரப்ரஹ்மையரது தாமரைமலர் போலும் திருவடிகளுக்கு அன்புள்ள மனத்தையுடையவராய்த் துதித்துக் கும்பிட்டுத் திருமுன்பு ஸாஷ்டாங்கமாக வணங்கினார்; அந்தச் சிறந்த கல்யாணபட்டினத்திலுள்ள சிவபக்தர்களெல்லாரும் சென்று அன்புள்ள மனத்துடன் கும்பிட்டு மிகவும் வணங்கி ஈஶ்வர சந்நிதியில் பிரவேசித்தார்கள்.

(வி-ரை.) பரவினர்-முற்றெச்சம். (௨௦)

மங்க லங்களி னிறைவுசிங் காரத்தின் வனப்புத்
துங்க நற்பத்தர் நற்றுணை யரன்கரச் சுடர்வாள்
சங்க மர்களுக் காளனர் சான்றவர்க் கினியார்
பொங்கு வீர மதங்களின் றிருச்சையப் பொருப்பு.

(ப-ரை.) மங்கலங்களின்-மங்கலப்பொருள்களுக்கு, நிறைவு-பூர்ணகும்பம்போன்றவர், சிங்காரத்தின் - அழகினுக்கு, வனப்பு - அழகுபோன்றவர், துங்கம் -மேன்மையாகிய, நல் பத்தர்-ஸத்பக்தர்களுக்கு, நல் - சிறந்த, துணை - துணைவராயிருப்பவர்; அரன் - சிவபெருமானது, கரம் - திருக்கையிலுள்ள, சுடர் - ஒளிபொருந்திய, வாள்-வாளாயுதத்தையுடைய, சங்கமர்களுக்கு-ஜங்கமமூர்த்திகளுக்கு, ஆள்அன்னோர்-கிங்கரர் போன்றவர், சான்றவர்க்கு - ஞானிகளுக்கு, இனியார்-விருப்பமுள்ளவர், பொங்கு-மேன்மைபொருந்திய, வீரமதங்களின் - வீரசைவர்களுக்கு, திருச்சையப்பொருப்பு-ஸ்ரீசைலபர்வதம் போன்றவர், எ-று.

(பொ-ரை.) மங்கலப்பொருள்களுக்குப் பூர்ணகும்பம் போன்றவர்; அழகினுக்கு அழகுபோன்றவர்; மேன்மையாகிய ஸத்பக்தர்களுக்குச் சிறந்த துணைவராயிருப்பவர்; சிவபெருமானது திருக்கையிலுள்ள ஒளிபொருந்திய வாளாயுதத்தையுடைய ஜங்கமமூர்த்திகளுக்குக் கிங்கரர் போன்றவர்; ஞானிகளுக்கு விருப்பமுள்ளவர்; மேன்மை பொருந்திய வீரசைவர்களுக்கு ஸ்ரீசைலபர்வதம் போன்றவர். (௬௧)

அரிய பத்திமெய் யாயினர் சரணர்நெஞ் சாசை
பெரிய ரிச்சையார் சத்தியத் தருப்பெரு வயிர
மெரிய ஞர்பர வாதர்புற் கிடியனூர் கலர்கட்
குரிய சாந்தியா லுயர்ந்துளார் துயரமொன் றுறுதார்.

(ப-ரை.) அரிய-சிறந்த, பத்தி - பக்தியே, மெய்ஆயினர் - ஸ்வரூபமாயிருப்பவர், சரணர் - ஜங்கமமூர்த்திகளுடைய, நெஞ்சு - மனத்திற்கு, ஆசைபெரியர் - மிக்க விருப்பமுள்ளவர், இச்சையார் - வேண்டியவற்றின்பேரில் ஆசைபடுபவர்களுக்கு, சத்தியம் - உண்மையாகிய, தரு - கல்பக விருக்ஷம்போன்றவர், பரவாதர் - பரசமய வாதிகளாகிய, புற்கு - புல்லுகளுக்கு, பெரு - பெரிய, வயிரம் - கொடிய, எரி - நெருப்பு, அன்னர்-போன்றவர், கலர்கட்கு - சண்டாளர்களுக்கு, இடி—, அன்னார்-போன்றவர், உரிய-பெரியோர்களுக்குரிய, சாந்தியால்-சாந்தகுணத்தினால், உயர்ந்து உள்ளார் - மேன்மையடைந்திருப்பவர், துயரம் - துக்கமென்பது, ஒன்று - சற்றும், உறுதார் - அடையாதவர், எ-று.

(பொ-ரை.) சிறந்த பக்தியே ஸ்வரூபமாயிருப்பவர்; ஜங்கமமூர்த்திகளுடைய மனத்திற்கு மிக்கவிருப்பமுள்ளவர்; வேண்டியவற்றின்பேரில் ஆசைபடுபவர்களுக்கு உண்மையாகிய கல்பக விருக்ஷம் போன்றவர்; பரசமயவாதிகளாகிய புல்லுகளுக்குப் பெரிய கொடிய நெருப்பு போன்றவர்; சண்டாளர்களுக்கு இடிபோன்றவர்; பெரியோர்களுக்குரிய சாந்த குணத்தினால் மேன்மை யடைந்திருப்பவர்; துக்கமென்பது சற்றும் அடையாதவர்.

(வி-ரை.) எரி, இடி என்பவை வினைமுதற் பொருளதாகிய இகரவிகுதி புணர்ந்து கெட்டபெயர்கள். (௬௨)

என்று தோத்திர மனைவருஞ் செய்தங்கங் கிறைஞ்சி
யொன்று காலையின் விச்சலன் கோயிலி னுள்ளே
சென்று சோதனை செய்துநின் றோர்களை நீக்கி
வன்றி றற்கபா டங்களைத் தாழ்செறீஇ வந்து.

(ப-ரை.) என்று—, அனைவரும்-எல்லாரும், தோத்திரம் செய்து-துதித்து, அங்கு அங்கு-அவ்வவ்விடங்களில், இறைஞ்சி - வணங்கி, ஒன்று - சேர்ந்த, காலையின்-போது, விச்சலன்-விஜ்ஜலராஜன், கோயிலின்-திருவாலயத்தின், உள்ளே—, சென்று-புகுந்து, சோதனைசெய்து - சோதித்து, நின்றோர்களை - நின்றபேர்களை, நீக்கி - அகற்றிவிட்டு,

வல் திறல்-மிகவும் வலிதாகிய, கபாடங்களை-கோபுரக் கதவுகளை, தாழ்செறீஇ-தாழி ட்டு, வந்து-சென்று, எ-று.

(பொ-ரை.) என்று எல்லாரும் துதித்து அவ்விடத்தில் வணங்கிச் சேர்ந்த போது, விஜ்ஜலராஜன் திருவாலயத்தின் உள்ளே புகுந்து, சோதித்து, நின்ற பேர் களை யகற்றிவிட்டு, மிகவும் வலிதாகிய கோபுரக் கதவுகளைத் தாழிட்டுச் சென்று. ()

பகர்ந்தி டச்சொலும் பரமனைக் கரியெனப் பணிக்க
முகங்கு ளிர்ந்தவண் கின்னரப் பிரமையர் முன்னி
யுகந்து சென்றருங் கதவினிற் புழையினூ லூன்றி
மகிழ்ந்து நோக்கினர் திறந்தன கதவொலி மல்க.

(ப-ரை.) பரமனை-த்ரிபுராந்தகேச்வரனை, கரி-சாக்ஷி, பகர்ந்திடச்சொலும்-சொல்லச் சொல்லும், என்ன-என்று, பணிக்க-கட்டளையிடுதலும், அவண்-அவ்விடத் தில், கின்னரப்பிரமையர் - கிந்நரப்ரஹ்மையர், முகம் குளிர்ந்து - முகமலர்ச்சியுடன், முன்னி-த்யானித்து, உகந்து-சந்தோஷத்துடன், சென்று-போய், அரு-சிறந்த, கதவி னில்-(கர்ப்பக்ருஹத்தின்) கதவுகளிலிருக்கின்ற, புழையினூல்-த்வாரத்தின் வழியாக, மகிழ்ந்து-மனமகிழ்ந்து, ஊன்றி-உற்று, நோக்கினர்-பார்த்தார், கதவு-கதவுகள், ஒலி-ஓசை, மல்க-மிகும்படி, திறந்தன-திறந்துகொண்டன, எ-று.

(பொ - ரை.) த்ரிபுராந்தகேச்வரனை சாக்ஷி சொல்லச் சொல்லுமென்று கட் டளையிடுதலும், அவ்விடத்தில் கிந்நரப்ரஹ்மையர் முகமலர்ச்சியுடன் த்யானித்துச் சந்தோஷத்துடன் போய்ச் சிறந்த கர்ப்பக்ருஹத்தின் கதவுகளிலிருக்கின்ற த்வாரத் தின் வழியாக மனமகிழ்ந்து உற்றுப் பார்த்தார்; கதவுகள் ஓசை மிகும்படித் திறந்து கொண்டன. (சஈ)

கின்ன ரப்பிர மையர்தங் கிடைக்கருந் தவத்து
நன்ன யப்பினை யுரைப்பதே னூடிய வளவே
பன்ன கக்கர னாலயப் பல்கணிக் கதவந்
தன்னி லேதிறந் தனவினிக் கரியரன் சாற்றும்.

(ப-ரை.) கின்னரப்பிரமையர் - கிந்நரப்ரஹ்மையருடைய, கிடைக்க அரு - பெறு தற்கரிய, நல் - சிறந்த, தவத்து நயப்பினை - தபோபலத்தை, உரைப்பது என் - என்னவென்று சொல்வது, நாடிய அளவே - உற்றுப்பார்த்த மாத்திரத்திலே, பன்ன கம் - சர்ப்பங்களை யணிந்திருக்கின்ற, கரன் - திருக்கரங்களை யுடையவனாகிய த்ரி புராந்தகேச்வரனது, ஆலயம் - திருக்கோயிலின், பல்கணி - நுழைவாயில், கதவம் - கதவுகள், தன்னிலே - தானாகவே, திறந்தன - திறந்துகொண்டன, இனி - இப் போது, அரன் - த்ரிபுராந்தகேச்வரன், கரி-சாக்ஷி, சாற்றும் - சொல்லுவன், எ-று.

(பொ - ரை.) கிந்நரப்ரஹ்மையருடைய பெறுதற்கரிய சிறந்த தபோபலத்தை யென்னவென்று சொல்வது? உற்றுப்பார்த்த மாத்திரத்திலே சர்ப்பங்களை யணிந் திருக்கின்ற திருக்கரங்களை யுடையவனாகிய த்ரிபுராந்தகேச்வரனது திருக்கோயி லின் நுழைவாயிற் கதவுள் தானாகவே திறந்துகொண்டன; இப்போது த்ரிபுராந்த கேச்வரன் சாக்ஷி சொல்லுவன். (கூ௫)

ஐய மில்லென நின்றவர் துதித்தெழு மளவில்
பொய்யில் கின்னரப் பிரமைய ரத்தன்முன் புகல்வார்
செய்ய தாசமை யற்கெறும் புரைசெயச் செய்தா
யுய்யு மன்பர்பா லூர்ப்பொம்ம ருரையென வுரைத்தாய்.

(ப - ரை.) ஐயம் - சந்தேகமும், இல் - இல்லை, என்ன - என்று, நின்றவர் - நின்றபேர்கள், துதித்து - எத்தி, எழும் அளவில்-எழுந்த மாத்திரத்தில், பொய் இல்- உண்மையராகிய, கின்னரப்பிரமையர்-கிந்நரப்ரஹ்மையர், அத்தன் - த்ரிபுராந்தகேச்வரன், முன் - சந்நிதியில், புகல்வார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), செய்ய- மேன்மைபொருந்திய, தாசமையற்கு - தாசமையர்பொருட்டு, எறும்பு-எறும்பினை, உரைசெய்ய - பேச, செய்தாய் - பண்ணினை, உய்யும் - வாழ்கின்ற, அன்பர் - பக்தராகிய, பாஹூர்ப்பொம்மர்- பாஹூர்ப் பொம்மையர், உரை - பேச, என்ன - என்று சொல்லுதலும், உரைத்தாய் - பேசினை, எ - று.

(பொ-ரை.) சந்தேகமில்லை யென்று நின்ற பேர்கள் எத்தி யெழுந்த மாத்திரத்தில், உண்மையராகிய கிந்நரப்ரஹ்மையர் த்ரிபுராந்தகேச்வரன் சந்நிதியில் சொல்வாராயினர்; எவ்வாறெனின்:— மேன்மைபொருந்திய தாசமையர் பொருட்டு எறும்பினைப் பேசப்பண்ணினை; வாழ்கின்ற பக்தராகிய பாஹூர்ப்பொம்மையர் பேசென்று சொல்லுதலும், பேசினை.

(வி - ரை.) தாசமையர்வரலாறு:—இவர் முன்னொரு காலத்திற் செய்த பரசமய வாதத்தில் யானை முதல் எறும்பீறாயுள்ள சராங்களிலும் சிவபெருமான் நிறைந்திருக்கின்றானென்றலும்,அப்படியாயின் எறும்பினைப் பேசுவித்தால் சிவபெருமான் எங்கும் உளனென்பதை யொத்துக்கொள்வோமென்றதனால் எறும்பினைப் பேசச்செய்தாரென்பது. பாஹூர்ப் பொம்மையர் வரலாறு:—இவர் முன்னொருகாலத்திற் செய்த பரசமயவாதத்தில் சோளத்தை லிங்காகாரமாக்கிப் பேசச் செய்தாரென்பது. (௩௪)

இச்ச கத்தர்முன் கரியெனக் கப்படி யிசையென்
றச்ச மின்றியே கரத்துவா ளசைத்துநின் றார்த்தார்
முச்ச கங்களுஞ் செவிடுற வொலித்த தம்முழக்கங்
கச்ச பத்தின்மேற் சேடனற் கணபணங் கலங்க.

(ப - ரை.) இ-இந்த, சகத்தர்முன் - உலகத்தார்க்கெதிரே, எனக்கு-அடியேனுக்கும், அப்படி - அவ்விதமாக, கரி-சாக்ஷி, இசை-சொல்வாய், என்று—, அச்சம் இன்றி- பயமில்லாமல், கரத்து வாள்-கைவாளை, அசைத்து - விதிர்த்து, நின்று—, ஆர்த்தார்- ஆரவாரஞ்செய்தார், அ - அந்த, முழக்கம் - பேரொலியானது, முச்சகங்களும் - த்ரிலோகங்களும், செவிடு உற - செவிடுபடவும், கச்சபத்தின் - ஆமைமுதுகின், மேல்- மீதுள்ள, சேடன் - ஆதிசேஷனது, நல்-சிறந்த, கணம்-கூட்டமாகிய, பணம்-படங்களும், கலங்க-நடுங்கவும், ஒலித்தது-முழங்கியது, எ-று.

(பொ-ரை.) இந்த உலகத்தார்க்கெதிரே அடியேனுக்கும் அவ்விதமாக சாக்ஷி சொல்வாயென்று பயமில்லாமல் கைவாளை விதிர்த்து நின்று ஆரவாரஞ்செய்தார்; அந்தப் பேரொலியானது த்ரிலோகங்களும் செவிடுபடவும், ஆமை முதுகின் மீதுள்ள ஆதிசேஷனது சிறந்த கூட்டமாகிய படங்களும் நடுங்கவும் முழங்கியது.

(வி-ரை.) சகம்-ஜகம் என்னும் வடசொற்றிரிபு. முச்சகம்-மூன்று உலகங்கள்; ஸ்வர்க்க, மத்ய, பாதாளங்கள். ஆயிரம் படங்களை யுடையவனானதால் ஆதிசேஷனை சேடனற்கணபணமென்றார். (௩௫)

ஏழு நாழிகை யிப்படி முழங்கவே யெம்மான்
சூழு நேயரல் லாரெலா மூர்ச்சிதந் தொலையா
தாழு நெஞ்சராய் விச்சல னவசமுற் றதனால்
வாழு நந்திகள் பிரமையர் கழன்மிசை வணங்கி.

(ப-ரை.) எழுநாழிகை - எழுநாழிகை வரையிலும், இப்படி - இவ்விதமாக முழங்க-ஒலிக்கவும், எம்மான்-சிவபெருமானையே, ஞாளும்-சதாகாலமும் சிந்திக்கின்ற, நேயர்-வீரமாஹேச்வரர்கள், அல்லார்-அல்லாத பவிஜனங்கள், எல்லாம்-அனைவரும், மூர்ச்சிதம்-மூர்ச்சை, தொலையாது-தெளியாமல், ஆழும்-(துக்கத்தில்) முழுகுகின்ற, நெஞ்சர் ஆய்-மனத்தையுடையவராய், விச்சலன்-விஜ்ஜலராஜனும், அவசம் உற்றதனால் - மூர்ச்சையடைந்தமையால், வாழும்-உஜ்ஜீவிக்கின்ற, நந்திகள்-வசவண்ணர், பிரமையர்-நிந்நரப்ரஹ்மையரது, கழல்-திருவடிகளின், மிசை-மீது, வணங்கி-ஸாஷ்டாங்கமாகப் பணிந்து, எ-று.

(பொ-ரை.) எழுநாழிகை வரையிலும் இவ்விதமாக ஒலிக்கவும், சிவபெருமானையே சதாகாலமும் சிந்திக்கின்ற வீரமாஹேச்வரர்களல்லாத பவிஜனங்கள் அனைவரும் மூர்ச்சை தெளியாமல் துக்கத்தில் முழுகுகின்ற மனத்தையுடையவராய், விஜ்ஜலராஜனும் மூர்ச்சை யடைந்தமையால், உஜ்ஜீவிக்கின்ற வசவண்ணர் நிந்நரப்ரஹ்மையரது திருவடிகளின்மீது ஸாஷ்டாங்கமாகப் பணிந்து. (௧௮)

பெருமை யர்க்கிதம் பிரியலா யல்லரைப் பிணியாய்
மருவு புண்ணிய வாரியே யகந்தையை மதியாய்
சரணர் நீதியா தாரமே தருவன கரத்தாய்
துரிய மாயையின் றாரனே தீரனே தூயாய்.

(ப-ரை.) பெருமையர்க்கு-ஜங்கமமூர்த்திகளுக்கு, இதம் பிரியல் ஆய்-மிக்க அன்புள்ளவனே, அல்லரை - துஷ்டர்களை, பிணியாய் - சேராதவனே, மருவு - யாவரும் அடைதற்குரிய, புண்ணிய வாரியே - தர்ம சிந்துவே, அகந்தையை-அஹங்காரத்தை, மதியாய் - நினையாதவனே, சரணர் - சிவசரணர்களுக்கு, நீதியாதாரமே - நடுநிலைமையாயிருப்பவனே, தரு - கல்பவ்ருக்ஷம், அன்ன - போன்ற, கரத்தாய் - திருக்கைகளையுடையவனே, துரியமாயையின் றாரனே-சுத்தமாயாதீதனே, தீரனே-தைர்யசாலியே, தூயாய்-பரிசுத்தனே, எ-று.

(பொ-ரை.) ஜங்கமமூர்த்திகளுக்கு மிக்க அன்புள்ளவனே! துஷ்டர்களைச் சேராதவனே! யாவரும் அடைதற்குரிய தர்ம சிந்துவே! அஹங்காரத்தை நினையாதவனே! சிவசரணர்களுக்கு நடுநிலைமையாயிருப்பவனே! கல்பவ்ருக்ஷம் போன்ற திருக்கைகளையுடையவனே! சுத்தமாயாதீதனே! தைர்யசாலியே! பரிசுத்தனே!

(வி-ரை.) சுத்தமாயாதீதன் - சுத்தமாயையைக்கடந்தவன். துரியமாயையைச் சுத்தமாயையென்றும் சிவபெருமானுடைய பரிக்கிரக சத்தியென்றுங் கூறுப; மாயையானது சுத்தமாயையென்றும் அசுத்தமாயையென்றும் இருவகைத்து; முந்தியது மலகன்மங்களுடன் சேராமல் சுத்தகாரிய பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாயிருப்பது; பிந்தியது அசுத்தகாரிய பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாயிருப்பது; அசுத்தமாயையின் தூலபரிணாமத்தைப் பிரகிருதமாயை என்ப; இவைமூன்றையே விந்து, மோகினி, மான் எனப்படும். சுத்தமாயையானது தத்துவங்களுக்குத் தோற்றத்தையுண்டாக்கும்; அவை பின்னும் ஒடுங்குமாதலின் நிந்நரையர்க்கு அவ்வாறு தோற்றமும் ஒடுக்கமுமில்லாமையினால் அவரைத் துரியமாயையின் றாரனென்றார். (௧௯)

பத்தி மாதனை தலைவனே பரசிவ யோகர்
மெத்து சாதக மேவலாய் விமலபோதே சிகனே
சுத்த சித்தியாய் தவர்பத கமலத்தொண் சுரும்பா
நித்த நின்னரப் பிரமையா கருணையை நினைப்பாய்.

(ப-ரை.) திரிபுராந்தகன்-த்ரிபுராந்தகேஶ்வரன், நின்-உனது, உரை-சொல்லை, கேளா-கேட்டு, கரி-சாக்ஷி, செப்பு-சொல்வாய், என்ன-என்று சொல்லுதலும், செப்பினன்-(சாக்ஷி) சொன்னான், தேசம் - உலகத்தார், பெரிது - மிகவும், மூர்ச்சிதம்-மூர்ச்சை, எய்தலில்-அடைந்தமையால், நீ—, கருணைபெருகி - கிருபைகூர்ந்து, அலம்-வேண்டாம், என்றலும்-என்று சொல்லுதலும், ஒழிந்தான்-(ஓசையை) அடக்கினான், உரிய-உரிமையாகிய, நின்-உனது, பெரு-பெரிய, கருணை பால்-அருளினால், யாங்கள்-நாங்களெல்லாரும், உய்ந்து - பிழைத்து, எழுந்தனம் - எழுந்தோம், என்ன - என்று, துதித்தான்-தோத்திரஞ்செய்தான், பிரமர் - கிந்நரப்ரஹ்மையர், விச்சலன்-விஜ்ஜலராஜனுடைய, முகத்தினை-முகத்தை, பார்த்து-நோக்கி, பினாக பாணியை-பினாகமென்னும் வில்லைத் திருக்கரத்திலுடையவனாகிய சிவபெருமானை, பேணி-அன்பு செய்து, வாழ்க - மோக்ஷமடையக் கடவை, என்றார்-என்று சொல்லியருளினார், எ-று.

(பொ-ரை.) த்ரிபுராந்தகேஶ்வரன் உனது சொல்லைக் கேட்டு சாக்ஷி சொல்வாயென்று சொல்லுதலும், சாக்ஷிசொன்னான்; உலகத்தார் மிகவும் மூர்ச்சையடைந்தமையால் நீ கிருபைகூர்ந்து வேண்டாமென்று சொல்லுதலும், ஓசையையடக்கினான்; உரிமையாகிய உனது பேரருளினால் நாங்களெல்லாரும் பிழைத்தெழுந்தோமென்று தோத்திரஞ்செய்தான்; கிந்நரப்ரஹ்மையர் விஜ்ஜலராஜனுடைய முகத்தை நோக்கிப் பினாகமென்னும் வில்லைத் திருக்கரத்திலுடைய வனாகிய சிவபெருமானை யன்பு செய்து மோக்ஷமடையக் கடவையென்று சொல்லியருளினார். (௪௪)

தலையி ழந்துயி ரழிந்தவன் றன்னைத்
தாமெ ழுப்பினர் தரைமன்னன் மகிழ்ந்தங்
கலைவில் கின்னரப் பிரமையர் சிவனென்
றன்பி னேத்திய ரண்மனை யணைந்தா
னிலைமை நீங்கலாத் தண்டநா யகரு
நின்ற பத்தரு நேயத்தி னிறைஞ்சி
மலையெ னுந்தம தகங்களி னடைந்தார்
மன்னு கின்னரப் பிரமைய ருடனால்.

(ப-ரை.) தலை-தலையும், இழந்து-போய், உயிர்-பிராணனும், அழிந்தவன்தன்னை-போனவனாகிய ஆர்த்தனை, தாம்—, எழுப்பினர்-உயிர்பெற்றெழச் செய்தனர், தரைமன்னன்-புவனாதிபதியாகிய விஜ்ஜலராஜன், மகிழ்ந்து-சந்தோஷித்து, அங்கு-அவ்விடத்தில், அலைவு இல்-சலனமற்ற, கின்னரப்பிரமையர் - கிந்நரப்ரஹ்மையரை, சிவன்-சிவபெருமானே, என்று-என்று எண்ணி, அன்பின் - அன்புடன், ஏத்தி - துதித்து, அரண்மனை-அரண்மனையை, அணைந்தான் - சேர்ந்தான், நிலைமை - நடுநிலைமையினின்றும், நீங்குஅலா-விட்டுப்பிரியாத, தண்டநாயகரும்-வசவண்ணரும், நின்ற பத்தரும்-நின்றபக்தகோடிகளும், நேயத்தின் - அன்புடன், இறைஞ்சி - வணங்கி, மன்னு-நிலைபெற்றிருக்கின்ற, கின்னரப்பிரமையருடன்-கிந்நரப்ரஹ்மையரோடு, மலையென்னும்-பர்வதம் போன்ற, தமது-தங்கள் தங்களுடைய, அகங்களின்-வீடுகளில், அடைந்தார்-சேர்ந்தார்கள், எ-று.

(பொ-ரை.) தலையும் போய் பிராணனும் போனவனாகிய ஆர்த்தனைத் தாம் உயிர் பெற்றெழச்செய்தனர்; புவனாதிபதியாகிய விஜ்ஜலராஜன் சந்தோஷித்து அவ்விடத்தில் சலனமற்ற கிந்நரப்ரஹ்மையரை சிவபெருமானே யென்று எண்ணி, அன்புடன் துதித்து, அரண்மனையைச் சேர்ந்தான்; நடுநிலைமையினின்றும் விட்டுப் பிரியாத வசவண்ணரும், நின்ற பக்தகோடிகளும் அன்புடன் வணங்கி, நிலை பெற்றிருக்கின்ற கிந்நரப்ரஹ்மையரோடு பர்வதம் போன்ற தங்கள் தங்களுடைய வீடுகளிற் சேர்ந்தார்கள்.

கின்னரப்பிரமையர் புராணம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௬௬௭.

# கலைக்கேத்தபிரமையர் புராணம்.

### கோச்சகக் கலிப்பா.

மற்றுமொரு பேரன்பர் மதிமுடிப்பார் தமக்கினியார்
கற்றவரெண் ணிலைமையினார் கலைக்கேத்த பிரமையர்
நற்றவரே சிவமென்பார் நண்ணிலிங்க வபிமானர்
சொற்றசித்தப் பிரசாதர் சுகதுக்கந் துறந்துள்ளார்.

(ப-ரை.) மற்றும்-மேலும், ஒரு—, பேர்-பெரிய, அன்பர்-சிவபக்தர், மதி-பால சந்த்ரனை, முடிப்பார் தமக்கு-ஜடாபாரத்தில் தரித்திருக்கின்ற சிவபெருமானுக்கு, இனியார்-அன்புள்ளவர், கற்றவர் - ஞானநூல்களைக் கற்றுணர்ந்த பெரியோர்கள், எண்-மதித்தற்குரிய, நிலைமையினார் - பெருமையுடையவர், கலைக்கேத்தபிரமையர்-கலைக்கேத்த ப்ரஹ்மையரென்பவர், நல் - சிறந்த, தவரே-ஜங்கமமூர்த்திகளே, சிவம் - சிவபெருமான், என்பார்-என்று மதிப்பவர், நண்ணும் - (பூர்வஜந்மபுண்யத்தினால்) பெற்றிருக்கின்ற, இலிங்கம் - இஷ்டலிங்கமூர்த்தியில், அபிமானர் - விருப்பமுள்ளவர், சொற்ற-(சிவாகமங்களில்) விதிக்கப்பட்டிருக்கின்ற, சித்தப்பிரசாதர்-சித்த ப்ரஸாதத்தை ஸ்வீகரிப்பவர், சுகதுக்கம் - சுகதுக்கங்களாகிய த்வந்த்வத்தினின்றும், துறந்து உள்ளார்-விட்டு நீங்கியிருப்பவர், எ-று.

(பொ-ரை.) மேலும், ஒரு பெரிய சிவபக்தர்; பால சந்த்ரனை ஜடாபாரத்தில் தரித்திருக்கின்ற சிவபெருமானுக்கு அன்புள்ளவர்; ஞானநூல்களைக் கற்றுணர்ந்த பெரியோர்கள் மதித்தற்குரிய பெருமையுடையவர்; கலைக்கேத்த ப்ரஹ்மையரென்பவர்; சிறந்த ஜங்கமமூர்த்திகளே சிவபெருமானென்று மதிப்பவர்; பூர்வஜந்மபுண்யத்தினாற் பெற்றிருக்கின்ற இஷ்டலிங்கமூர்த்தியில் விருப்பமுள்ளவர்; சிவாகமங்களில் விதிக்கப்பட்டிருக்கின்ற சித்த ப்ரஸாதத்தை ஸ்வீகரிப்பவர்; சுகதுக்கங்களாகிய த்வந்த்வத்தினின்றும் விட்டு நீங்கி யிருப்பவர்.

(வி-ரை.) கற்றவரெண்ணிலைமையினார் என்றமையால் கலைக்கேத்தப்ரஹ்மையர் அந்தக் கற்றவர்களின் மேற்பட்ட கல்வியுடையவரென்பது பெறப்பட்டது. சித்தப்பிரசாதம்—இது த்ரிவித ப்ரஸாதங்களிலொன்று; த்ரிவித ப்ரஸாதங்களாவன:—சுத்த ப்ரஸாதம் (குருமுகத்தாற் பெறப்படுவது), சித்த ப்ரஸாதம் (இஷ்டலிங்கமுகத்தாற் பெறப்படுவது), ப்ரசித்த ப்ரஸாதம் (ஜங்கமமுகத்தாற் பெறப்படுவது) என்பன. பிரசாதர்-ப்ரஸாத: என்னும் வடசொற்றிரிபு. (௧)

உலகியலை யெண்ணாத வொருமையினா ரேகாந்தர்
சிலைமணிபொன் னொன்றாகத் தெரிசிக்குந் திரத்த
ரலைவறுமா யாதீத ரங்கலிங்க நிட்டையினார்
தலைமையுள்ள சத்தியமே தருஞ்சீவன் முத்தனார்.

(ப-ரை.) உலகு இயலை - லோகாசாரத்தை, எண்ணாத-மதிக்காத, ஒருமையினார்-ஒழுமைன்மையுடையவர், ஏகாந்தர் - தனிமையாயிருப்பவர், சிலை-கல்லையும், மணி-ரத்நத்

தையும், பொன்-பொன்னையும், ஒன்றாக-சமமாக, தெரிசிக்கும்-பார்க்கின்ற, தீரத்தர்-மனோத்ருடத்தையுடையவர், அலைவுஅறு - சலநமற்ற, மாயாதீதர்-சுத்தமாயையைக் கடந்தவர், அங்கலிங்க நிட்டையினர்-ஜீவேஶ்வரைக்ய நிலையுள்ளவர், தலைமையுள்ள-முதன்மையாகிய, சத்தியமே-தத்துவப்பொருளையே, தரும்-அநுக்ரஹஞ்செய்யவல்ல, சீவன் முத்தனர்-ஜீவன் முக்தராயுள்ளவர், எ-று.

(பொ-ரை.) லோகாசாரத்தை மதிக்காத மேன்மையுடையவர்; தனிமையாயிருப்பவர்; கல்லையும், ரத்நத்தையும், பொன்னையும் சமமாகப் பார்க்கின்ற மனோத்ருடத்தையுடையவர்; சலநமற்ற சுத்தமாயைக் கடந்தவர்; ஜீவேஶ்வரைக்ய நிலையுள்ளவர்; முதன்மையாகிய தத்துவப்பொருளையே யநுக்ரஹஞ்செய்யவல்ல ஜீவன் முக்தராயுள்ளவர்.

(வி-ரை.) அலைவு - தொழிற்பெயர். ஜீவன் முக்தர் - ஜீவதசையிற்றானே பாசவிமுக்தராயிருப்பவர். நிட்டை-நிஷ்டாவென்னும் வடசொற்றிரிபு. சத்தியம்-ஸத்யம் என்னும் வடசொற்றிரிபு. முத்தன்-முக்த: என்னும் வடசொற்றிரிபு. (உ)

முன்றலையிற் சிகைமுடிந்து மோக வெண்ணீ றணிந்ததன்மேற்
கன்றியவொண் டிலகமிட்டுக் காதுறச்செந் தளிர்சேர்த்தி
யன்றியுநற் கருந்துகிலை யணிந்தொருதா ணூபுரஞ்சேர்த்
தொன்றிலிணை சதங்கைபுனைந் துடலைவளைத் துறநகையா.

(ப-ரை.) தலையில்—, முன் சிகை - முன்குடுமியை, முடிந்து-கட்டி, மோகம்-விரும்புதற்குரிய, வெண்ணீறு-திருவெண்ணீற்றினை, அணிந்து-(நெற்றியில்)தரித்து, அதன்மேல்-அதன்மீது, ஒள்-அழகிய, கன்றிய-கறுத்த, திலகம் - மைப்பொட்டை—, இட்டு-வைத்து, காது உற-செவிகளில்(பொருந்த), செம்-செவந்த, தளிர்-தழைகளை, சேர்த்தி-செருகி, அன்றியும்-அல்லாமலும், நல்-மிகவும், கரு-கரிய, துகிலை-துணியை, அணிந்து-(இடையில்) உடுத்து, ஒரு—, தாள்-பாதத்தில், நூபுரம்-சிலம்பை, சேர்த்து-அணிந்து, ஒன்றில்-(மற்று) ஒரு பாதத்தில், இணை-கோக்கப்பட்ட, சதங்கை - சலங்கைகளை, புனைந்து-அணிந்து, உடலை-உடம்பை, வளைத்து-குனித்து, உற-மிகவும், நகையா-சிரித்து, எ-று.

(பொ-ரை.) தலையில் முன் குடுமியைக் கட்டி, விரும்புதற்குரிய திருவெண்ணீற்றினை நெற்றியில் தரித்து, அதன்மீது அழகிய மைப்பொட்டை வைத்து, செவிகளிற் பொருந்தச் செவந்த தழைகளைச் செருகி, அல்லாமலும் மிகவும் கரிய துணியை இடையில் உடுத்து, ஒரு பாதத்தில் சிலம்பை யணிந்து, மற்றொரு பாதத்தில் கோக்கப்பட்ட சலங்கைகளை யணிந்து, உடம்பைக் குனித்து, மிகவும் சிரித்து.

(வி-ரை.) நகையா-செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (ங)

சிலம்புசதங் கைகளார்ப்பச் செய்யவயன் றலைக்கோடென்
றிலங்குகலைக் கோடதுவொன் றிடக்கரத்தி லேந்திடுயே
வலங்கொள்கரத் தரிவெந்திற் றண்டென்ன மரத்தண்டு
கலங்கலின்றிப் பற்றிவெற்றிக் கலைக்கேத்த கோலராய்.

(ப - ரை.) சிலம்பு-நூபுரமும், சதங்கைகள்-சலங்கைகளும், ஆர்ப்ப-சத்திக்கவும், செய்ய - மேன்மைபொருந்திய, அயன் - ப்ரஹ்மதேவனுடைய, தலை - தலையிலிருக்கின்ற, கோடு-கொம்பு, என்று-என்று சொல்வதுபோல, இலங்கு-விளங்குகின்ற, கலைக்கோடு ஒன்று-ஒரு மான் கொம்பினை, இடம்-இடது, கரத்தில்-கையில், ஏந்தி-பிடித்து, வலம்கொள்-வலது, கரத்து-கையில், அரி - விஷ்ணுமூர்த்தியின், வெந்திறல்,

முதுகு; தண்டு—, என்ன - என்று சொல்வதுபோல, மரத்தண்டு - மரத்தடியை, கலக்கல் இன்றி - அஞ்சாமல், பற்றி - பிடித்து, வெற்றி - ஜயத்தையுடைய, கலைக்கு - கலைக்கோட்டு மாமுனிவர்க்கு, ஏத்த-தக்க, கோலம் ஆய்-தவவேடத்தை யுடையவராய், எ - று.

(போ-ரை.) நூபுரமும் சலங்கைகளும் சத்திக்கவும், மேன்மைபொருந்திய தக்ஷப்ரஹ்மதேவனுடைய தலையிலிருக்கின்ற கொம்பென்று சொல்வது போல விளங்குகின்ற ஒரு மான் கொம்பினை இடதுகையிற் பிடித்து, வலது கையில் விஷ்ணுமூர்த்தியின் முதுகு தண்டென்று சொல்வது போல மரத்தடியை யஞ்சாமற் பிடித்து, ஜயத்தையுடைய கலைக்கோட்டு மாமுனிவர்க்குத் தக்க தவவேடத்தை யுடையவராய்.

(வி-ரை.) கலைக்கோடது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. அயன் தலை என்றது மறித்தலையை; இது தக்ஷ ப்ரஹ்மதேவனுடைய யாகத்தில் தக்ஷனுடைய தலையை வீரபத்திரக் கடவுள் வெட்டி ஆட்டுத் தலையைப் பொருத்திய கதையைக் குறித்தது. அயன் - அஜன் என்னும் வடசொற்றிரிபு; ஆடு என்பது பொருள். அயன் என்பது அஜம் எனப் போலியாக்கி ஆடு எனப் பொருள் கொள்ளினுமையும். முதுகு தண்டினைக் கங்காளமென்பர். கலைக்கேத்த என்பது கலிக்கேத்த வெனவும் பாடம். கலி - கலியுகம். (ச)

அத்தனடி யாரவையு ளாடவல்ல பிருங்கிவந்தா
னித்தரையெண் ணிலிங்காங்கர்க் கேற்றலங்க னிங்குவந்தான்
மெய்த்தநெறி வெண்காடு வியந்துபெற்ற பிள்ளைவந்தான்
முத்திவல்ல துக்களவ்வை மோகநல்ல மகன்வந்தான்.

(ப - ரை.) அத்தன் அடியார் - சிவசரணர்களின், அவையுள்-திருக்கூட்டத்தில், ஆடவல்ல - நடனஞ்செய்யவல்ல, பிருங்கி - ப்ருங்கிமஹாமுனிவன், வந்தான்-வந்திருக்கின்றான், இ - இந்த, தரை - உலகத்தார், எண் - மதித்தற்குரிய, இலிங்காங்கர்க்கு - வீரசைவர்களுக்கு, ஏற்ற-தக்க, லங்கன்-லிங்கப்ராணி, இங்கு-இவ்விடம், வந்தான் - வந்திருக்கின்றான், மெய்த்த நெறி - சன்மார்க்கத்தையுடைய, வெண்காடு-திருவெண்காட்டு நங்கையார், வியந்து - அற்புதமாக, பெற்ற - ஈன்ற, பிள்ளை-மகன்,வந்தான் - வந்திருக்கின்றான், முத்தி - மோக்ஷத்தை, வல்ல - அடையவல்ல, துக்களவ்வை - துக்களதேவியார், மோகம் - விரும்புதற்குரிய, நல்ல - சிறந்த, மகன் - சரணன், வந்தான் - வந்திருக்கின்றான் (என்றுசொல்லிக்கொண்டு) எ - று.

(போ - ரை.) சிவசரணர்களின் திருக்கூட்டத்தில் நடனஞ்செய்யவல்ல ப்ருங்கி மஹாமுனிவன் வந்திருக்கின்றான்; இந்த உலகத்தார் மதித்தற்குரிய வீரசைவர்களுக்குத் தக்க லிங்கப்ராணி இவ்விடம் வந்திருக்கின்றான்; சன்மார்க்கத்தையுடைய திருவெண்காட்டு நங்கையார் அற்புதமாக ஈன்ற மகன் வந்திருக்கின்றான்; மோக்ஷத்தை யடையவல்ல துக்களதேவியார் விரும்புதற்குரிய சிறந்த சரணன் வந்திருக்கின்றானென்று சொல்லிக்கொண்டு.

(வி - ரை.) வெண்காடு பெற்றபிள்ளை என்றது சிராளனை. மகன் என்பது ஆண்பாற் பிள்ளையெனப் பொதுவாகப் பொருட்பட நின்றது. லங்கன் - லிங்கன் என்பதன் மரூஉ. (ரு)

அரனன்ப ரகந்தோறு மணைந்துமுகத் தவினயஞ்செய்
தரமொன்று கரத்தண்டி னுயர்கலைக்கோ டொத்தியே
பரனன்று பரசமயர் படவெறிந்த வடல்பகரா
திரமொன்றாத் தக்கன்மகத் தேவர்பட்ட படிபாடி.

(ப - ரை.) அரன் அன்பர் - சிவபக்தர்கள் (வசிக்கின்ற), அகம் தோறும் - திருமடங்களிலெல்லாம், அணைந்து - சென்று, முகத்து அவினயம் செய்து - முகஜாடைகாட்டி, உரம் ஒன்று - பலம்பொருந்திய, கரத் தண்டின் - கைத்தடியின் மீது, உயர் - மேன்மையாகிய, கலைக்கோடு - மான்கொம்பினை, ஒத்தி - தட்டி, பரன் - சிவபெருமான், அன்று-முன்னொரு காலத்தில், பரசமயர் - பரசமயவாதிகள், பட-அழியும்படி, எறிந்த - கொன்றருளிய, அடல் - பராக்ரமத்தை, பகரா - சொல்லி, திரம் ஒன்று - நிலையற்ற, தக்கன்-தக்ஷப்ரஹ்மதேவனுடைய, மகம்-யாகத்திற்கு வந்திருந்த, தேவர் - (ப்ரஹ்மாதி) தேவர்கள், பட்டபடி - பட்டபாட்டை, பாடி —, எ - று.

(பொ - ரை.) சிவபக்தர்கள் வசிக்கின்ற திருமடங்களிலெல்லாம் சென்று, முகஜாடைகாட்டி, பலம் பொருந்திய கைத்தடியின் மீது மேன்மையாகிய மான்கொம்பினைத் தட்டி, சிவபெருமான் முன்னொரு காலத்தில் பரசமயவாதிகள் ஒழியும்படிக் கொன்றருளிய பராக்ரமத்தைச் சொல்லி, நிலையற்ற தக்ஷ ப்ரஹ்மதேவனுடைய யாகத்திற்கு வந்திருந்த ப்ரஹ்மாதி தேவர்கள் பட்ட பாட்டைப் பாடி.

(வி - ரை.) அவினயம் - அபிநயம் என்னும் வடசொற்றிரிபு. (சு)

காமாதி யாறென்னுங் கரியினங்க ளரிவந்தா
னுமாவா கனனன்பர்க் கானவடி யான்வந்தான்
மாமாயை யற்றபத்தர் மனக்களிப்பா மகன்வந்தான்
சாமாறு நீங்குதவர் தருஞ்சேடத் தாகிவந்தான்.

(ப - ரை.) காமம் ஆதி - காமம் முதலாகிய, ஆறு - ஆறுவிகாரங்கள், என்னும் - என்கின்ற, கரியினங்கள்-யானைக்கூட்டங்களுக்கு, அரி-சிங்கம்போன்றவன், வந்தான் - வந்திருக்கின்றான், ஆமா - வ்ருஷபம், வாகனன்-வாஹநாரூடனாகிய சிவபெருமானை வழிபடுகின்ற, அன்பர்க்கு - பக்தர்களுக்கு, ஆன-பக்தனாகிய, அடியான் - சரணன், வந்தான் - வந்திருக்கின்றான், மா-மேன்மைபொருந்திய, மாயை-சுத்தமாயையினின்றும், அற்ற-விட்டு நீங்கிய, பத்தர்-ஜங்கமமூர்த்திகள், மனம் களிப்பு ஆம்-மனமகிழ்தற்குரிய, மகன்-குருபுத்ரன், வந்தான் - வந்திருக்கின்றான், சாம் ஆறு - மரணாவஸ்தையினின்றும், நீங்கு - விட்டு நீங்க வல்ல, தவர்-ஜங்கமமூர்த்திகள், தரும் - கொடுக்கின்ற, சேடம் - மோக்ஷ ப்ரஸாதத்தில், தாகி - விருப்பமுள்ளவன், வந்தான் - வந்திருக்கின்றான், எ-று.

(பொ - ரை.) காமம் முதலாகிய ஆறு விகாரங்களென்கின்ற யானைக் கூட்டங்களுக்குச் சிங்கம் போன்றவன் வந்திருக்கின்றான்; வ்ருஷப வாஹநாரூடனாகிய சிவபெருமானை வழிபடுகின்ற பக்தர்களுக்கு பக்தனாகிய சரணன் வந்திருக்கின்றான்; மேன்மைபொருந்திய சுத்த மாயையினின்றும் விட்டு நீங்கிய ஜங்கமமூர்த்திகள் மனமகிழ்தற்குரிய குருபுத்ரன் வந்திருக்கின்றான்; மரணாவஸ்தையினின்றும் விட்டு நீங்க வல்ல ஜங்கமமூர்த்திகள் கொடுக்கின்ற மோக்ஷ ப்ரஸாதத்தில் விருப்பமுள்ளவன் வந்திருக்கின்றான்.

(வி - ரை.) காமாதியாறு - இதனை முன்னர் விளக்கியுள்ளாம். ஆமா - இடபம்; இருபெயரொட்டுப் பண்புத்தொகை. தாகி - தாஹி என்னும் வடசொற்றிரிபு. சாம் ஆறு - இறக்கின்றவழி. தவர்தரும் சேடம் - ஜங்கமப்ரஸாதம். வாகனன் - வாஹனன் என்னும் வடசொற்றிரிபு. (எ)

அன்னையரே யெனமகிழ்ந்தங் கவர்களிடு மரிசிகறி
முன்னையினுங் குறைந்தாலு மொழிவரிதாய் வளர்ந்தாலு
நன்னயத்தாற் கொணர்ந்தன்பர் நயக்கநித்த மமுதுபடைத்
தென்னையவர் செய்தாலு மிறைஞ்சியுள்ள மினிதுறுநாள்.

(ப-ரை.) அன்னையரே-தாய்மார்களே, என்ன-என்று (அழைத்து), அங்கு-அவ்விடத்தில், அவர்கள்—, மகிழ்ந்து-சந்தோஷத்துடன், இடும்-(பிக்ஷை) கொடுக்கின்ற, அரிசி-அமுதுபடியும், கறி-காய்கறிகளும், முன்னையினும்-முன்னிலும்,குறைந்தாலும்-குறைவேயாயினும், மொழிவு அரிது ஆய் - சொல்லிமுடியாதபடி, வளர்ந்தாலும் - அதிகமேயாயினும், நல் - மிக்க, நயத்தால்-சந்தோஷத்துடன், கொணர்ந்து-கொண்டு வந்து, அன்பர்-ஜங்கமமூர்த்திகள், நயக்க-விரும்பும்படி, நித்தம்-நாடோறும், அமுது-அந்நம், படைத்து-அளித்து, அவர்-அவர்கள், என்னை - யாது, செய்தாலும் - பண்ணினாலும், இறைஞ்சி - வணங்கி, உள்ளம் - மனம், இனிது உறும் - மகிழ்கின்ற, நாள் - காலத்தில், எ - று.

(பொ-ரை.) தாய்மார்களே! என்று அழைத்து, அவ்விடத்தில் அவர்கள் சந்தோஷத்துடன் பிக்ஷைகொடுக்கின்ற அமுதுபடியும், காய் கறிகளும் முன்னிலும் குறைவேயாயினும், சொல்லிமுடியாதபடி அதிகமேயாயினும், மிக்க சந்தோஷத்துடன் கொண்டுவந்து, ஜங்கமமூர்த்திகள் விரும்பும்படி நாடோறும் அந்நம் அளித்து, அவர்கள் யாது பண்ணினாலும், வணங்கி மனமகிழ்கின்ற காலத்தில்.

(வி - ரை.) யாது செய்தலாவது குற்றங்கடிந்து திட்டுதலும் அடித்தலுமாம். ()

மிடியினு லொருபத்தன் மிகநொந்து கின்னரைய
ரடிகளணைந் துய்வமெனு மாவலாற் றேடிமிக
வடிவுதளர்ந் திவரிருக்கும் வழிவந்து வைகுதலு
முடலிளைந்து நீயிவ்வா றுற்றதென வுரையென்ன.

(ப - ரை.) மிடியினால்-வறுமையால், ஒரு—, பத்தன் - சிவபக்தன், மிக-மிகவும், நொந்து-வருத்தப்பட்டு, கின்னரையர் - கிந்நரப்ரஹ்மையருடைய, அடிகள்-திருவடிகளை, அணைந்து-அடைந்து, உய்வம்-பிழைப்போம், எனும்-என்கின்ற, ஆவலால்-ஆசையால், தேடி-(வழியை)பார்த்துக்கொண்டு, மிக-மிகவும், வடிவு-உடல், தளர்ந்து-இளைத்து, இவர்-இந்தக் கலைக்கேத்த ப்ரஹ்மையர், இருக்கும்-வசிக்கின்ற, வழி-திருமடத்தில், வந்து - சென்று, வைகுதலும்-தங்குதலும், நீ—, உடல்-உடம்பு, இளைத்து-மெலிந்து, இவ்வாறு-இப்படி, உற்றது-இருத்தற்குக் காரணம், என்ன-யாது, உரை-சொல்வாய், என்ன-என்று (ப்ரஹ்மையர்) கேட்டலும், எ-று.

(பொ-ரை.) வறுமையால் ஒரு சிவபக்தன் மிகவும் வருத்தப்பட்டு கிந்நர ப்ரஹ்மையருடைய திருவடிகளை யடைந்து பிழைப்போமென்கின்ற ஆசையால் வழியைப் பார்த்துக்கொண்டு மிகவும் உடல் இளைத்து, இந்தக் கலைக்கேத்த ப்ரஹ்மையர் வசிக்கின்ற திருமடத்திற் சென்று தங்குதலும், நீ உடம்பு மெலிந்து இப்படி யிருத்தற்குக் காரணம் யாது? சொல்வாயென்று ப்ரஹ்மையர் கேட்டலும். (௬)

கேட்டளவி லவன்மகிழ்ந்து கலைக்கேத்த பிரமையர்முன்
வாட்டமிகந் துரைசெய்வான் வன்றொண்டர்க் கரன்முன்ன
மீட்டுநிதி கொடுப்பனென்ப ரிக்காலங் கின்னரைய
ராட்டகைமைக் கத்தன்பொன் னனுதினமு மளிப்பனென்று.

(ப-ரை.) கேட்ட அளவில்-(ப்ரஹ்மையர் சொன்னசொல்லை) கேட்டமாத்திரத்தில், அவன்-அந்த வறியன், மகிழ்ந்து - சந்தோஷமடைந்து, கலைக்கேத்தபிரமையர்-கலைக்கேத்தப்ரஹ்மையர், முன் - சந்நிதியில், வாட்டம் - சோகம், இகந்து - ஒழிந்து, உரைசெய்வான்-சொல்வானாயினன் (எவ்வாறெனின்), முன்னம்-முன்னொரு காலத்தில்,அரன்-சிவபெருமான், வன்றொண்டர்க்கு-சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு, ஈட்டும்-சம்பாதித்தற்குரிய, நிதி - பொருளை, கொடுப்பன் - தந்தருளுவான், என்பர் - என்று சொல்வார்கள், இக்காலம்-இப்போது, கின்னரையர் - கிந்நரப்ரஹ்மையருடைய, ஆள் தகைமைக்கு- அடிமைத் திறமைக்கு, அத்தன் - சிவபெருமான், பொன் - பொருளை, அனுதினமும்-நாடோறும், அளிப்பன்-தந்தருளுவான், என்று—, எ-று.

(பொ - ரை.) ப்ரஹ்மையர் சொன்ன சொல்லைக் கேட்ட மாத்திரத்தில் அந்த வறியன் சந்தோஷமடைந்து, கலைக்கேத்த ப்ரஹ்மையர் சந்நிதியில் சோக மொழிந்து சொல்வானாயினன் ; எவ்வாறெனின்:— முன்னொரு காலத்தில் சிவ பெருமான் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சம்பாதித்தற்குரிய பொருளைத் தந்தருளுவானென்று சொல்வார்கள்; இப்போது கிந்நர ப்ரஹ்மையருடைய அடிமைத் திறமைக்கு சிவபெருமான் பொருளை நாடோறும் தந்தருளுவானென்று. (கo)

சொன்னார்க ளனைவருமச் சொற்கேட்ட வவ்வளவே
யென்னாரா மிடியவர்பா லெய்தியின்று தீர்ப்பனென்று
முன்னாவ லுடன்வந்தேன் மொழியுமவர் மடமேதங்
கன்னாரைக் காணிலென்ற னருமிலம்பா டாறுவேன்.

(ப - ரை.) அனைவரும்-(ஊரிலுள்ளவர்) எல்லாரும், சொன்னார்கள்—, அ-அந்த, சொல் - சொல்லை, கேட்ட அவ்வளவே - கேட்டமாத்திரத்திலே, என் - எனது, ஆரா - தீராத, மிடி - வறுமையை, அவர் பால் - அவரிடம், எய்தி - போய், இன்று-இப்போது, தீர்ப்பன்-ஒழித்துக்கொள்வேன், என்று-என்றுகருதி,முன்-அதிகப்பட்ட, ஆவலுடன் - ஆசையுடன், வந்தேன்—, மொழியும் - சொல்லப்பட்ட, அவர் - அவருடைய, மடம் - திருமடம், ஏது - எவ்விடம் இருப்பது, அங்கு - அவ்விடத்தில், அன்னாரை - அந்தப் பெரியோரை, காணில் - தரிசிப்பேனாயின், என்-எனது, அரு-சகிக்கமுடியாத, இலம்பாடு - வறுமையை, ஆறுவேன்-தீர்த்துக்கொள்வேன், எ-று.

(பொ - ரை.) ஊரிலுள்ளவர் எல்லாரும் சொன்னார்கள்; அந்தச் சொல்லைக் கேட்டமாத்திரத்திலே எனது தீராத வறுமையை அவரிடம்போய் இப்போது ஒழித்துக்கொள்வேனென்று கருதி அதிகப்பட்ட ஆசையுடன் வந்தேன்; சொல்லப்பட்ட அவருடைய திருமடம் எவ்விடம் இருப்பது? அவ்விடத்தில் அந்தப் பெரியோரைத் தரிசிப்பேனாயின், எனது சகிக்கமுடியாத வறுமையைத் தீர்த்துக்கொள்வேன். (கக)

எனமொழியு மவனைப்பார்த் தின்முறுவல் செய்தியம்பே
லனவரத மரன்கூலி யளிக்கக்கின் னரநவிற்றுந்
தனமயலன் றனக்கதிக சற்பத்தி தானுமில்லன்
கனசுகநிச் சிந்தனல்லன் காணவனைக் கணிப்பரோ.

(ப - ரை.) என்ன - என்று, மொழியும்-சொல்லுகின்ற, அவனை-அந்த மிடியனை, பார்த்து - நோக்கி, இன் - சந்தோஷத்துடன், முறுவல்செய்து-சிரித்து, இயம்பேல்-பேசாதே, அனவரதம் - சதாகாலமும், அரன் - சிவபெருமான், கூலி - சம்பளம், அளிக்க - கொடுத்தலும், கின்னரம் - வீணை, நவிற்றும் - வாசிப்பான், தனமயலன் -

பொருளாசையுள்ளவன், தனக்கு—, அதிக - மேன்மையாகிய, சற்பத்தி தானும் - ஸத்பக்தியென்பதும், இல்லன்-இல்லாதவன், கலம் சகம்-பேரின்பத்தோடுகூடிய, நிச்சிந்தன் அல்லன் - மனோலயமில்லாதவன், அவனை—, கணிப்பரோ - (பெரியோர்கள்) மதிப்பார்களோ, எ - று.

(பொ-ரை.) என்று சொல்லுகின்ற அந்த அடியனை நோக்கி, சந்தோஷத்துடன் சிரித்து, பேசாதே; சதாகாலமும் சிவபெருமான் சம்பளம் கொடுத்தலும் வீணே வாசிப்பான்; பொருளாசையுள்ளவன் ; தனக்கு மேன்மையாகிய ஸத்பக்தியென்பது மில்லாதவன்; பேரின்பத்தோடு கூடிய மனோலயமில்லாதவன் ; அவனைப் பெரியோர்கள் மதிப்பார்களோ ?

(வி - ரை.) முறுவல் - ஆகுபெயர். கணிப்பரோ என்னும் ஓகாரம் எதிர்மறை. நிச்சிந்தன் - நிஸ்சிந்தன் என்னும் வடசொற்றிரிபு. சற்பத்தி - ஸத்பக்தியென்னும் வடசொற்றிரிபு. (கஉ)

எம்பெருமான் மெய்யடியார்க் கிதுவுமொரு மேன்மையோ
நம்பன்மகிழ்ந் திடுங்கூலி நாடோறுமோர் பொற்காசாந்
தம்பெருமை யறக்கேட்குந் தவத்தோரைக் கெடுப்போனை
யம்புவியின் மெய்யன்ப ரறியின்மிக நகைப்பரால்.

(ப - ரை.) எம் - எமது, பெருமான் - சிவபெருமானது, மெய் - உண்மையாகிய, அடியார்க்கு-சரணர்களுக்கு, இதுவும்-இந்த வாழ்வும், ஒரு—, மேன்மையோ-பெருமையாமோ, நம்பன் - சிவபெருமான், மகிழ்ந்து-சந்தோஷத்துடன், இடும்-கொடுக்கின்ற; கூலி-சம்பளம், நாடோறும் - தினந்தோறும், ஓர்-ஒரு, பொன் காசு - பொன் பணம், ஆம் - ஆகும், தம்-தமது. பெருமை- மேன்மையை, அற - மிகவும், கேட்கும் - கேட்கின்ற, தவத்தோரை - ஜங்கமமூர்த்திகளை, கெடுப்போனை - கெடச்செய்கின்ற பாதகனை, அம்புவியில் - உலகத்தில், மெய் - உண்மையாகிய, அன்பர் - சிவபக்தர்கள், அறியின் - தெரிவார்களாயின், மிக - மிகவும், நகைப்பர் - சிரிப்பார்கள், எ - று.

(பொ - ரை.) எமது சிவபெருமானது உண்மையாகிய சரணர்களுக்கு இந்த வாழ்வும் ஒரு பெருமையாமோ? சிவபெருமான் சந்தோஷத்துடன் கொடுக்கின்ற சம்பளம் தினந்தோறும் ஒரு பொன் பணமாகும்; தமது பெருமையை மிகவும் கேட்கின்ற ஜங்கமமூர்த்திகளைக் கெடச்செய்கின்ற பாதகனை உலகத்தில் உண்மையாகிய சிவபக்தர்கள் தெரிவார்களாயின் மிகவும் சிரிப்பார்கள்.

(வி - ரை.) அறியின் என்றமையால் அறியாமை பெறப்பட்டது. அம்புவி - ஒரு சொல்; அம் புவி என விரண்டு சொற்களாகப் பிரித்து அழகிய பூமியென்றுரைத்தலுமாம்.

கின்னரனை யடிக்கடிநீ கிளரன்பாற் றுதிப்பதுவெ
னன்னைபங்க னிடத்துமன மடங்கினோ ரரும்புகழை
முன்னிநின்று பாராட்டின் முத்தியுண்ட தன்றியீ
தென்னநன்மை பொன்னவனோ தந்துன்ற னிடரொழிப்பான்.

(ப - ரை.) கின்னரனை - கிந்நர ப்ரஹ்மையனை, அடிக்கடி - பலகாலும், நீ—, கிளர் - மிக்க, அன்பால் - விருப்பத்துடன், துதிப்பது - புகழ்தற்குக் காரணம், என்யாது, அன்னை பங்கன் இடத்து-உமாபாகனாகிய சிவபெருமானிடத்தில், மனம்அடக்கினோர் - மனோலயமடைந்தவர்களாகிய ஜங்கமமூர்த்திகளது, அரு - சிறந்த, புகழை—,

முன்னி நின்று - தீர்க்காலோசனைசெய்து, பாராட்டின் - கொண்டாடுவோமாயின், முத்தி - மோக்ஷம், உண்டு - உண்டாகும், அது அன்றி - அதனைச் செய்யாமல், ஈது, இந்தச் செய்கை, என்ன—, நன்மை - பயனைத் தரும், அவனே—, பொன்-பொருளை, தந்து - கொடுத்து, உன் - உன்னுடைய, இடர் - வறுமையை, ஒழிப்பான் - தீர்க்க வல்லவன், எ - று.

(பொ - ரை.) கிந்நர ப்ரஹ்மையனைப் பலகாலும் நீ மிக்க விருப்பத்துடன் புகழ் தற்குக் காரணம் யாது? உமாபாகனாகிய சிவபெருமானிடத்தில் மனோலயமடைந்தவர்களாகிய ஜங்கமமூர்த்திகளது சிறந்த புகழைத் தீர்க்காலோசனைசெய்து கொண்டாடுவோமாயின், மோக்ஷம் உண்டாகும்; அதனைச் செய்யாமல் இந்தச் செய்கை என்ன பயனைத் தரும்? அவனே பொருளைத் தந்து உன்னுடைய வறுமையைத் தீர்க்க வல்லவன்?

(வி - ரை.) இடர் - துன்பம். (கச)

அவன்மடமோ வருந்தூர மஞ்சேனீ வேண்டுநிதி
கவலையறக் கோடியென்று கரத்தண்டிற் கலைமருப்பைச்
சிவனினைவிற் றட்டுதலுஞ் செழுநிதியக் குவையாக
நவமுறமுன் சொரிதல்கண்டு நல்குரவோன் பணிந்தேத்தி.

(ப - ரை.) அவன் - அவனுடைய, மடமோ - மடமென்றாலோ, அருந்தூரம் - வெகு தூரத்திலுள்ளது, அஞ்சேல் - பயப்படாதே, நீ—, வேண்டும் - தேவையான, நிதி - பொருளை, கவலை - துன்பம், அற - ஒழிய, கோடி - கொள்வாய், என்று—, கரத்தண்டில் - கைத்தடியின்மீது, கலைமருப்பை - மான்கொம்பை, சிவன் நினைவில் - சிவத்யானத்துடன், தட்டுதலும் - அடித்த மாத்திரத்தில், செழுநிதியம் - பசும்பொன், குவையாக - குவியல்குவியலாக, நவம்உற - அற்புதமாக, முன் - எதிரே, சொரிதல் - பொழிதலை, கண்டு - பார்த்து, நல்குரவோன் - மிடியன், பணிந்து - ஸாஷ்டாங்கமாக வணங்கி, ஏத்தி - துதித்து, எ - று.

(பொ-ரை) அவனுடைய மடமென்றாலோ வெகு தூரத்திலுள்ளது? பயப்படாதே; நீ தேவையான பொருளைத் துன்பமொழியக் கொள்வாயென்று, கைத்தடியின் மீது மான்கொம்பை சிவத்யானத்துடன் அடித்த மாத்திரத்தில் குவியல் குவியலாக அற்புதமாக எதிரே பொழிதலைப் பார்த்து, மிடியன் ஸாஷ்டாங்கமாக வணங்கித் துதித்து.

(வி - ரை.) கொள்ளுதி என்பது கோடி யென்றாயிற்று. (கரு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உடையினை விரித்து வப்பா லொளிதரு நிதியை யெல்லாப்
படியினு மெடுத்தெ டுத்துப் பரிவினாற் சேர்த்தங் கார்த்து
முடிமிசை தாங்கிச் சென்று முதுகன மாத லாலே
வடிவநொந் தெம்பி ரானார் நந்திகள் கடைமுன் வைத்து

(ப - ரை.) உடையினை - வஸ்த்ரத்தை, விரித்து - பரப்பி, உவப்பால் - சந்தோஷத்துடன், ஒளி தரும்-பிரகாசிக்கின்ற, நிதியை-பொன்னை, எல்லாப் படியிலும்-எல்லா விதத்திலும், எடுத்து எடுத்து-வாரி வாரியெடுத்து, பரிவினால்-ஆசையுடன், சேர்த்து-கூட்டி, அங்கு-அவ்விடத்தில், ஆர்த்து-கட்டி, முடிமிசை - தலையின்மீது,

தாங்கி-சுமந்துகொண்டு, சென்று - போய், மூது - அதிக, கனம் - பளுவு, ஆதலால் - ஆனபடியினால், வடிவம்-உடம்பு, நொந்து-வருந்தி, எம்-எமது, பிரானர்-தலைவராகிய, நந்திகள்-வசவண்ணரது, கடைமுன்-தலைவாயிலுக்கெதிரே, வைத்து - இட்டு, எ-று,

(போ - ரை.) வஸ்த்ரத்தைப் பரப்பி, சந்தோஷத்துடன் பிரகாசிக்கின்ற பொன்னை எல்லா விதத்தினாலும் வாரி வாரி யெடுத்து, ஆசையுடன் கூட்டி, அவ் விடத்தில் கட்டி, தலையின் மீது சுமந்துகொண்டுபோய், அதிக பளுவானபடியினால் உடம்பு வருந்தி, எமது தலைவராகிய வசவண்ணரது தலைவாயிலுக் கெதிரே யிட்டு.

அரன்மனை யுட்பு குந்தா னருள்வச வேசர் முன்னம்
வரநிதி வந்த துந்தான் வந்ததுங் கலைக்கேத் தைய
ருரைசெய்த வாறுஞ் செப்பி யோங்குமத் தனமெ டுத்தற்
கரிதெனக் கோரா ளிட்டூர்க் கனுப்புதி யைய வென்ன.

(ப - ரை.) அரன்மனையுள் - அரண்மனையில், புகுந்தான் - நுழைந்து, அருள் - க்ருபாகடாக்ஷத்தையுடைய, வசவேசர் - வசவண்ணர், முன்னம் - சந்நிதியில், வரம்-மேன்மையாகிய, நிதி-பொருள், வந்ததும்-உண்டானவிதத்தையும்,தான்—, வந்ததும்-சென்ற காரணத்தையும், கலைக்கேத்தையர் - கலைக்கேத்த ப்ராஹ்மையர், உரைசெய்த வாறும் - சொன்ன விதத்தையும், செப்பி-சொல்லி, ஓங்கும் - அதிகப்பட்டிருக்கின்ற, அ - அந்த, தனம் - பொருளை, எடுத்தற்கு - சுமப்பதற்கு, அரிது - முடியாது, ஐய - ஐயனே, எனக்கு—, ஓர் - ஒரு, ஆள் - ஆளை, இட்டு - அமர்த்தியனுப்பி, ஊர்க்கு - ஊர் போய்ச் சேர்தற்கு, அனுப்புதி - அனுப்புவாய், என்ன - என்று (மடியன்) கேட்டலும், எ - று.

(போ-ரை.) அரண்மனையில் நுழைந்து, க்ருபாகடாக்ஷத்தையுடைய வசவண்ணர் சந்நிதியில் மேன்மையாகிய பொருள் உண்டானவிதத்தையும், தான் சென்ற காரணத்தையும், கலைக்கேத்த ப்ராஹ்மையர் சொன்ன விதத்தையும் சொல்லி, அதிகப்பட்டிருக் கின்ற அந்தப் பொருளைச் சுமப்பதற்கு முடியாது; ஐயனே! எனக்கு ஒரு ஆளை யமர்த்தி யனுப்பி, ஊர் போய்ச் சேர்தற்கு அனுப்புவாயென்று மடியன் கேட்டலும். ()

நந்திக ளதிச யிக்கு நற்களிப் புடைய ராகிச்
சிந்தையின் மகிழ்ந்திவ் வாறு சிவனறிந் திடுவ னென்று
சந்தநற் காம தேனு தன்னைவேண் டினர்க்கே நல்கு
மிந்தநம் பிரமை யர்ப்போ லெவர்க்குநின் றருள்வா ரில்லை

(ப - ரை.) நந்திகள் - வசவண்ணர், அதிசயிக்கும் - ஆச்சரியமடைதற்குரிய, நல் - மிக்க, களிப்பு உடையர்ஆகி - சந்தோஷமடைந்தவராகி, சிந்தையில் மகிழ்ந்து-மனமகிழ்ச்சியுடன், இவ்வாறு-இந்த மஹத்தான கார்யத்தை, சிவன்-சிவபெருமானை, அறிந்திடுவன் - உணரவல்லவன், என்று—, சந்தம் நல் - மிக்க நற்குணத்தையுடைய, காமதேனு - காமதேநுவானது, தன்னை—, வேண்டினர்க்கே - விரும்பிக்கேட்ட பேர்களுக்கே, நல்கும் - கொடுக்கும், இந்த—, நம் - நமது, பிரமையர் - கலைக்கேத்த ப்ராஹ்மையரை, போல்—,எவர்க்கும் - யார்க்கும், நின்று - முன்னின்று,அருள்வார் - கொடுக்கவல்லவர், இல்லை—, எ - று.

(போ - ரை.) வசவண்ணர் ஆச்சரியமடைதற்குரிய மிக்க சந்தோஷமடைந்தவ ராகி, மன மகிழ்ச்சியுடன் இந்த மஹத்தான கார்யத்தை சிவபெருமானே உணர வல்லவனென்று, மிக்க நற்குணத்தையுடைய காமதேநுவானது தன்னை விரும்பிக்

கேட்ட பேர்களுக்கே கொடுக்கும்; இந்த நமது கலைக்கேத்த ப்ரஹ்மையரைப் போல் யார்க்கும் முன்னின்று கொடுக்கவல்லவரில்லை. (கஅ)

கலைக்கேத்த பிரமர் போலக் கனத்தகின் னரையர் சீரை
நிலைக்கேற்ற தல்ல வென்று நிந்திக்க வல்லர் யாவர்
சிலைக்காம நாச னென்னத் தெரிதராச் செயலார் தம்மை
யலைக்கேத்த வுலக ராலே யறிவதற் கெளிய தன்றால்.

(ப-ரை.) கலைக்கேத்த பிரமர் போல - கலைக்கேத்த ப்ரஹ்மையர் (இகழ்ந்து சொன்னது)போல், அ-அந்த, கனத்த-மேன்மைபொருந்திய,கின்னரையர்-கின்னரப்ரஹ்மையரது, சீரை-சிறந்த நிலையை, நிலைக்கு-மோக்ஷத்திற்கு,ஏற்றது-உரியது, அல்ல—, என்று—, நிந்திக்க வல்லர்-இகழவல்லவர், யாவர்-யார், சிலை-(கருப்பு) வில்லையுடைய, காமன்-மன்மதனை, நாசன் என்ன-சுட்டெரித்தவனாகிய சிவபெருமான் போல், தெரிதரா - அறிந்துகொள்ள முடியாத, செயலார் தம்மை - செய்கையுடைய பெரியோர்களை, அலைக்கு - துன்பத்திற்கு, ஏத்த-ஏதுவாகிய, உலகரால்-உலகத்தாரால், அறிவதற்கு - உணர்தற்கு, எளியது - லேசான காரியம், அன்று-அல்ல, எ-று.

(பொ-ரை.) கலைக்கேத்த ப்ரஹ்மையர் இகழ்ந்து சொன்னதுபோல் அந்த மேன்மைபொருந்திய கின்னர ப்ரஹ்மையரது சிறந்த நிலையை மோக்ஷத்திற்குரியதல்லவென்று இகழ வல்லவர் யார்? கருப்பு வில்லையுடைய மன்மதனைச் சுட்டெரித்தவனாகிய சிவபெருமான் போல் அறிந்துகொள்ள முடியாத செய்கையுடைய பெரியோர்களைத் துன்பத்திற் கேதுவாகிய உலகத்தாரால் உணர்தற்கு லேசான காரியமல்ல. ()

எனப்போற்றி நின்ற பத்தனி ருந்தன மெடுத்தற் காள்விட்
டனைப்பாகர்க் கன்ப ரான வத்தவர்க் காண்ப லென்னுங்
கனக்காதன் மனத்தாற் சென்று பிரமையர் கழலி றைஞ்சி
வனப்பாரக் கரங்கு வித்து வாழ்த்துநந் திகளை நோக்கி.

(ப - ரை.) என்ன - என்று, போற்றி - புகழ்ந்து, நின்ற - (எதிரே) நிற்கின்ற, பத்தன் - சிவபக்தனுடைய, இரு - மேன்மையான, தனம் - பொருளை, எடுத்தற்கு - சுமப்பதற்கு, ஆள் - ஆளை, விட்டு - அமர்த்தியனுப்பிவிட்டு, அனைப் பாகர்க்கு - உமாபாகனாகிய சிவபெருமானுக்கு, அன்பர் ஆன - பக்தராகிய, அ - அந்த, தவர் - ஜங்கமமூர்த்திகளை, காண்பல் - தரிசிப்போம், என்னும் - என்கின்ற, கனம் - மிக்க, காதல் - விருப்பத்துடன் கூடிய, மனத்தால் - மனத்தோடு, சென்று - போய், பிரமையர் - கலைக்கேத்த ப்ரஹ்மையரது, கழல் - திருவடிகளை, இறைஞ்சி - (ஸாஷ்டாங்கமாக) வணங்கி, வனப்பு ஆர-அழகுபொருந்த, கரம் குவித்து-கை கூப்பி, வாழ்த்தும்-துதிக்கின்ற, நந்திகளை - வசவண்ணரை, நோக்கி - பார்த்து, எ - று.

(பொ - ரை.) என்று புகழ்ந்து, எதிரே நிற்கின்ற சிவபக்தனுடைய மேன்மையான பொருளைச் சுமப்பதற்கு ஆளை யமர்த்தி யனுப்பிவிட்டு, உமாபாகனாகிய சிவபெருமானுக்குப் பக்தராகிய அந்த ஜங்கமமூர்த்திகளைத் தரிசிப்போமென்கின்ற மிக்க விருப்பத்துடன் கூடியமனத்தோடு போய், கலைக்கேத்த ப்ரஹ்மையரது திருவடிகளை ஸாஷ்டாங்கமாக வணங்கி, அழகு பொருந்தக் கைகூப்பித் துதிக்கின்ற வசவண்ணரைப் பார்த்து. (உ0)

சோலக்கேட்டி தண்ட நாத தூயநற் பத்தி மாதி
னிலைக்கான தலைவ னை நின்னிடைக் கின்ன ரையன்
மலக்காய மென்னு னல்லோர் மதிக்கின்ற வழிய னன்றே
விலைத்தாவென் றரணேகேட்கு நம்பிபோ லிவனு மாளுன்.

(ப - ரை.) தண்டநாத - வசவண்ணனே, சொல்ல—, கேட்டி - கேட்பாய், தூய நல்-மிக்க பரிசுத்தமாகிய, பத்திமாதின் - பக்திகாந்தையின், நிலைக்கு ஆன-பதிவ்ரதா தர்மத்திற்குரிய, தலைவன் ஆன - (முக்தி)காந்தனாகிய, நின் - உன், இடை-இடத்தி லிருக்கின்ற, கின்னரையன் - கிந்நரப்ரஹ்மையன், மலக்காயம் - உடலானது மல பாண்டமென்பதை, எண்ணான் - யோசிக்கமாட்டான், நல்லோர் - பெரியோர்கள், மதிக்கின்ற - மெச்சுதற்குரிய, வழியன் - மோக்ஷமார்க்கத்தையுடையவன், அன்று - அல்ல, இல்லை - மனைவியை, தா - கொடுப்பாய், என்ற—, அரனை - சிவபெருமானை, கேட்கும்-(பெண்ணாசையுடன்) கேட்டுவாங்கிக்கொள்கின்ற,நம்பிபோல்- சுந்தரமூர்த்தி யைப்போல், இவனும்—, ஆனான்-(பொருளாசையுள்ளவன்)ஆகிவிட்டான், எ - று.

(போ-ரை.) வசவண்ணனே! சொல்லக் கேட்பாய்; மிக்க பரிசுத்தமாகிய பக்தி காந்தையின் பதிவ்ரதா தர்மத்திற்குரிய முக்தி காந்தனாகிய உன்னிடத்திலிருக்கின்ற கிந்நர ப்ரஹ்மையன் உடலானது மலபாண்டமென்பதை யோசிக்கமாட்டான்; பெரி யோர்கள் மெச்சுதற்குரிய மோக்ஷமார்க்கத்தையுடையவனல்ல; மனைவியைக் கொடு ப்பாயென்று சிவபெருமானைப் பெண்ணாசையுடன்கேட்டு வாங்கிக்கொள்கின்ற சுந்தர மூர்த்தியைப் போல் இவனும் பொருளாசை யுள்ளவனாகிவிட்டான். (௨௧)

படிக்காசை யுற்றுக் கேட்டும் பரமனைப் பகர்வா யென்றும்
பிடித்தாடிப் பெறும்பே றீதே பெரிதுநம் பிரானைப் பேணிச்
சடக்காகப் பெற்றா ரன்றோ தனமிப் படிவேண் டாவோ
படித்தாவ தென்னி ருந்தும் பரமனை வழிப டாமல்.

(ப - ரை.) பரமனை - சிவபெருமானை, உற்று - அடைந்து, படிக்காசை—, கேட்டும் - (பொருளாசையினால்) கேட்டு வாங்கிக்கொண்டும், பகர்வாய் - (பெண் ணாசையினால் சாக்ஷி) சொல்வாய், என்றும் - என்று கேட்டுச் சொல்லச்செய்தும், பிடித்து ஆடி - போராட்டஞ்செய்து, பெறும் - அடைதற்குரிய, பேறு - பிரயோஜந மாகிய, ஈதே-இந்த வாழ்வுதானோ, பெரிது-பெருமையுடையது, நம்-நமது, பிரானை- சிவபெருமானை, பேணி - அன்புசெய்து, சடக்காக - விரைவாக, தனம் - பொருளை, பெற்றார் - அடைந்தார்கள், அன்றோ - அல்லவோ, இப்படி-இவ்வாறு, வேண்டாவோ- (அன்பு செய்து பொருளையடைய) வேண்டாவோ, பரமனை - சிவபெருமானை, வழி படாமல் - வணங்காமல், படித்து இருந்தும்-கல்வி கற்றிருப்பினும், ஆவது - உண்டா கின்ற பயன், என் - யாது, எ - று.

(போ-ரை.) சிவபெருமானை யடைந்து படிக்காசைப் பொருளாசையினாற்கேட்டு வாங்கிக்கொண்டும், பெண்ணாசையினால் சாக்ஷி சொல்வாயென்று கேட்டுச்சொல்லச் செய்தும், போராட்டஞ்செய்து, அடைதற்குரிய பிரயோஜநமாகிய இந்த வாழ்வு தானோ பெருமையுடையது? நமது சிவபெருமானை யன்புசெய்து விரைவாகப் பொருளை யடைந்தார்களல்லவோ? இவ்வாறு அன்பு செய்து பொருளை யடைய வேண்டாமோ? சிவபெருமானை வணங்காமல் கல்வி கற்றிருப்பினும் உண்டாகின்ற பயன் யாது?

(வி - ரை.) படிக்காசு - கூலிப்பணம். பரமனைப் பகர்வாய் என்றது சங்கிலி நாச்சியாரின் விவாஹத்தை. தனமது என்பதில் அது-பகுதிப்பொருள் விகுதி. (௨௨)

கிட்டுமோ பலநா ளாயாங் கெண்ணையங் கண்ணி பாகர்க்
கிட்டமா யினசெய் யாவா றினிதெமக் கொன்று மீயா
னட்டவர் செய்த பத்தி நன்மையைக் கண்டா நன்றாய்
முட்டயா மிடித்தோ மத்தன் மோகத்தாற் பெற்றார் செல்வம்.

(ப - ரை.) யாம் - நாம், பல நாளாய் - நெடுநாளாக, கெண்டை - கெண்டை மீனின் கண்களைப் போன்ற, அம்-அழகிய, கண்ணி - திருக்கண்களையுடையவளாகிய உமாதேவியாரை, பாகர்க்கு-வாமபாகத்திலுடையவராகிய சிவபெருமானுக்கு, இட்டம் ஆயின் - விருப்பமானவற்றையெல்லாம், செய்யா ஆறு - செய்து வணங்காவிட்டால், கிட்டுமோ - (பொருள்) கிடைக்குமோ, இனிது - சந்தோஷத்துடன், எமக்கு-நமக்கு, ஒன்றும்-ஒரு பொருளையும், ஈயான் - கொடுக்கமாட்டான், நட்டவர் - சிவபக்தர்கள், செய்த - பண்ணிய, பத்தி - பக்தியின், நன்மையை - பிரயோஜநத்தை, நன்றாய் - செவ்வையாய், கண்டாம் - பார்த்தோம், முட்ட - முற்றிலும், மிடித்தோம் - வறுமையடைந்தோம், அத்தன் மோகத்தால் - சிவபக்தியால், செல்வம்-பொருளை, பெற்றார்-அடைந்தார்கள், எ - று.

(பொ - ரை.) நாம் நெடுநாளாகக் கெண்டைமீனின் கண்களைப் போன்ற திருக்கண்களை யுடையவளாகிய உமாதேவியாரை வாமபாகத்திலுடையவராகிய சிவ பெருமானுக்கு விருப்பமானவற்றை யெல்லாஞ் செய்து வணங்காவிட்டால் பொருள் கிடைக்குமோ? சந்தோஷத்துடன் நமக்கு ஒருபொருளையும் கொடுக்கமாட்டான்; சிவபக்தர்கள் பண்ணிய பக்தியின் பிரயோஜநத்தைச் செவ்வையாய்ப் பார்த்தோம்; முற்றிலும் வறுமையடைந்தோம்; சிவபக்தியால் பொருளை யடைந்தார்கள். (உ௩)

காலையி லெழுந்து மாலை காணுமவ் வளவுந் தொண்டு
கோலமா யுழைத்து மஃகங் கொள்வதோர் படியொன் றில்லேஞ்
சீலநின் பிரமை யன்சீர் செப்பநம் மளவோ வோர்கா
லேலவே யிராகம் பாடி யிருந்தனம் பெற்ற செல்வன்.

(ப-ரை.) காலையில் - விடியற்காலத்தில், எழுந்து-(தூக்கத்தினின்றும்) கிளம்பி, மாலை-அந்திக்காலம், காணும்-வருகின்ற, அவ்வளவும்-அத்தனை காலம் வரையிலும், தொண்டு கோலம் ஆய்-வேலை செய்து, உழைத்தும்-பாடுபட்டும், அஃகம்-தானியம், கொள்வது-பெறுவதோ, ஓர்-ஒரு, படி-நாழியளவுடையதாம், ஒன்று-ஒருபொருளும், இல்லேம் - இல்லாதவரானோம், சீல-உத்தமனே, நின் - உன்னிடத்திலிருக்கின்ற, பிரமையன்-கிந்நரப்ரஹ்மையனுடைய, சீர்-பெருமையை, செப்ப-புகழ, நம் அளவோ-நம்மால் முடியுமோ, ஓர் கால்-ஒரே தடவை, ஏல-பொருத்தமாக, இராகம்பாடி-இசைப் பாட்டுப் பாடி, இரு-மேன்மையாகிய, தனம்-பொருளை, பெற்ற-அடைந்த, செல்வன்-சீமான் ஆவன், எ-று.

(பொ-ரை.) விடியற்காலத்தில் தூக்கத்தினின்றும் கிளம்பி அந்திக்காலம் வருகின்ற அத்தனை காலம் வரையிலும் வேலைசெய்து பாடுபட்டும் தானியம் பெறுவதோ ஒரு நாழியளவுடையதாம்; ஒரு பொருளுமில்லாதவரானோம்; உத்தமனே! உன்னிடத்திலிருக்கின்ற கிந்நரப்ரஹ்மையனுடைய பெருமையை யெடுத்துச்சொல்ல நம்மால் முடியுமோ? ஒரே தடவை பொருத்தமாக இசைப்பாட்டுப் பாடி மேன்மையாகிய பொருளையடைந்த சீமான் ஆவான்.

(வி-ரை.) நம் அளவோ என்னும் ஓகாரம் எதிர்மறை. அளவு-வசம். காலையிலெழுந்து மாலை காணு மவ்வளவும் என்பது நாள் முழுதும் என்றபடி. (உ௪)

மன்னுமோளார்க் கண்ணல் சான்று மகிழ்ந்துரை தரச்செய் தன்னை
யண்ணியே காண வந்தோர்க் கனமிடத் தனம்வேண் டாவோ
கண்ணுத றனக்க ளிக்குங் காசுடன் கலந்து கொள்வா
னண்ணுநங் கார கத்தா நன்னிதி யிவண்டா பித்தேம்.

(ப-ரை.) மண் உள்ளோர்க்கு-உலகத்தார்க்கு, அண்ணல்-த்ரிபுராந்தகேச்வரன், மகிழ்ந்து-சந்தோஷத்துடன், சான்று-சாக்ஷி, உரைதர-சொல்லும்படி, செய்-செய்த, தன்னை—, அண்ணி - அடுத்து, காண-தரிசிக்க, வந்தோர்க்கு - வருகின்ற சிவபக்தர்களுக்கு, அன்னம்-அமுது, இட - படைக்க, தனம்-பொருள், வேண்டாவோ - வேண்டாமோ, கண்ணுதல் - த்ரிநேத்ரதாரியாகிய சிவபெருமான், தனக்கு—, அளிக்கும்-அருள்செய்கின்ற, காசுடன்-பொற்காசோடு, கலந்து கொள்வான்-சேர்த்துக்கொள்ளும் பொருட்டு, நண்ணும்-கிடைத்திருக்கின்ற, நம்-நமது, காரகத்தாம்-கஷ்டார்ச்சிதத்தினாலுண்டாகின்ற, நல்-சிறந்த, நிதி-பொருளை, இவண்-இவ்விடத்தில், தாபித்தோம்-வைத்திருக்கின்றோம், எ-று.

(பொ-ரை.) உலகத்தார்க்கு த்ரிபுராந்தகேச்வரன் சந்தோஷத்துடன் சாக்ஷி சொல்லும்படிச் செய்த தன்னை யடுத்துத் தரிசிக்க வருகின்ற சிவபக்தர்களுக்கு அமுது படைக்கப் பொருள் வேண்டாமோ? த்ரிநேத்ரதாரியாகிய சிவபெருமான் தனக்கு அருள்செய்கின்ற பொற்காசோடு சேர்த்துக்கொள்ளும் பொருட்டு கிடைத்திருக்கின்ற கஷ்டார்ச்சிதத்தினாலுண்டாகின்ற சிறந்த பொருளை யிவ்விடத்தில் வைத்திருக்கின்றோம்.

(வி-ரை.) கண்ணுதல் - நெற்றிக்கண்ணன். கொள்வான் என்பதில் வான்-எதிர்கால வினையெச்சம். தாபித்தல்-ஸ்தாபித்தல் என்னும் வடமொழித்திரிபு. (௨௫)

வண்டில்கள் பலகொண் டெம்பால் வரச்சொனீ நண்ப னாகக்
கொண்டகின் னரனை யென்னக் கூறிநங் கலைக்கேத் தையர்
மண்டனி லத்தம் வைக்க மட்டறு கனக மாகக்
கண்டுநந் தண்ட நாதர் கசிந்துநின் றிறைஞ்சுங் காலை.

(ப - ரை.) நீ—, நண்பன் ஆக - சிநேகனாக, கொண்ட - பிரியம் வைத்திருக்கின்ற, கின்னரனை - கின்னரப்ரஹ்மையனை, வண்டில்கள் பல - அநேக வண்டிகளை, எம்பால் - எம்மிடத்தில், கொண்டுவரச் சொல் - கொண்டுவரும்படிச் சொல்வாய், என்ன - என்று, கூறி - சொல்லி, நம் - நமது, கலைக்கேத்தையர் - கலைக்கேத்தப்ரஹ்மையர், மண் தன்னில் - பூமியில், அத்தம் - திருக்கரத்தை, வைக்க - வைத்தமாத்திரத்தில், மட்டு அறு - அளவில்லாத, கனகம் - பொன், ஆக - உண்டாதலும், கண்டு - பார்த்து, நம் - நமது, தண்டநாதர் - வசவண்ணர், கசிந்து - மனமுருகி, நின்று—, இறைஞ்சும் - வணங்குகின்ற, காலை - காலத்தில், எ - று.

(பொ - ரை.) நீ சிநேகனாகப் பிரியம் வைத்திருக்கின்ற கின்னர ப்ரஹ்மையனை அநேக வண்டிகளை எம்மிடத்திற் கொண்டுவரும்படிச் சொல்வாயென்று சொல்லி, நமது கலைக்கேத்த ப்ரஹ்மையர் பூமியில் திருக்கரத்தை வைத்த மாத்திரத்தில் அளவில்லாத பொன் உண்டாதலும் பார்த்து, நமது வசவண்ணர் மனமுருகி, நின்று வணங்குகின்ற காலத்தில். (௨௬)

அறிந்துடன் கின்ன ரைய ரஞ்சியஞ் சலிக்க ரத்தா
னிறைந்தபத் தியினால் வந்து நெடிதுற விறைஞ்சி நின்றார்
மறங்கொளாக் கலைக்கேத் தையர் வரவினைத் தருகி ருத்திப்
பிறந்திறப் பதற்கு வோம் பிராந்தற வுபதே சித்தார்.

(ப - ரை.) கின்னரையர் - கிந்நரப்ரஹ்மையர், அறிந்து - (ஜ்ஞாந த்ருஷ்டியால்) உணர்ந்து, உடன் - உடனே, அஞ்சி - பயந்து, அஞ்சலிக் கரத்தால் - கூப்பின கைக ளுடனும், நிறைந்த பத்தியினால் - பூர்ண பக்தியுடனும், வந்து-சென்று, நெடிது உற- நெடு நேரமாக, இறைஞ்சி - ஸாஷ்டாங்கமாக வணங்கி, நின்றார் - (மேலேயெழுந்து) நின்றார், மறம் கொள்ளா-பாபத்தினின்றும் விட்டுநீங்கின, கலைக்கேத்தையர் - கலைக் கேத்த ப்ரஹ்மையர், வர - (அவரைச் சமீபத்தில் வரும்படிச் சொல்லி) வருதலும், அணைத்து-தழுவி, அருகு-சமீபத்தில், இருத்தி - வைத்துக்கொண்டு, பிறந்து இறப் பதற்கு - ஜநநமரணங்களுக்கு, வேர் ஆம் - காரணமாகிய, பிராந்தி - மயக்கம், அற - ஒழிய, உபதேசித்தார் - உபதேசஞ்செய்தருளினர், எ - று.

(பொ-ரை) கிந்நரப்ரஹ்மையர் ஜ்ஞாந த்ருஷ்டியினால் உணர்ந்து உடனே பயந்து, கூப்பின கைகளுடனும் பூர்ணபக்தியுடனும் சென்று, நெடுநேரமாக ஸாஷ்டாங்கமாக வணங்கி, மேலே யெழுந்து நின்றார்; பாபத்தினின்றும் விட்டு நீங்கின கலைக்கேத்த ப்ரஹ்மையர் அவரைச் சமீபத்தில் வரும்படிச் சொல்லி வருதலும் தழுவி, சமீபத்தில் வைத்துக்கொண்டு, ஜநநமரணங்களுக்குக் காரணமாகிய மயக்கம் ஒழிய உபதேசஞ் செய்தருளினார். (உஎ)

கிளர்புகழ் நந்தி யார்க்குங் கின்னரப் பிரமை யர்க்கு
முளமகிழ் லிங்க பூசை யுவந்துறச் செய்த மைத்தாங்
களவிலா வுபசா ரஞ்செய் தவர்களை யகலா நண்பான்
வளமுறு மினிய பத்தி மனத்தராய் வைகு நாளின்.

(ப-ரை.) கிளர்-விருத்தியடைகின்ற, புகழ்-புகழினையுடைய, நந்தியார்க்கும்-வசவண்ணர்க்கும், கின்னரப்பிரமையர்க்கும் - கிந்நரப்ரஹ்மையர்க்கும், உள்ளம் - மனம், மகிழ் - மகிழ்தற்குரிய, இலிங்கபூசை - இஷ்டலிங்கார்ச்சனையை, உவந்து உற - சந்தோஷத்துடன், செய்து அமைத்து - செய்யச்செய்து, ஆங்கு - அவ்விடத்தில், அளவு இல்லா-மட்டில்லாத, உபசாரம் - உபசரணைகளையெல்லாம், செய்து - பண்ணி, அவர் களை—, அகலா விட்டு நீங்காத, நண்பான்-அன்புடன், வளம் உறும்-மேன்மையாகிய, இனிய-இன்பத்தைப் பயக்கின்ற, பத்தி-அன்புடைய, மனத்தர் ஆய் - மனமுடைய வராய், வைகும்-வாழ்கின்ற, நாளின்-காலத்தில், எ-று.

(பொ-ரை.) விருத்தியடைகின்ற புகழினையுடைய வசவண்ணர்க்கும் கிந்நரப்ரஹ் மையர்க்கும் மனமகிழ்தற்குரிய இஷ்டலிங்கார்ச்சனையைச் சந்தோஷத்துடன் செய் யச்செய்து, அவ்விடத்தில் மட்டில்லாத உபசரணைகளையெல்லாம் பண்ணி, அவர்களை விட்டு நீங்காத அன்புடன் மேன்மையாகிய இன்பத்தைப் பயக்கின்ற அன்புடைய மனமுடையவராய் வாழ்கின்ற காலத்தில். (உஅ)

கலைக்கேத்தபிரமையர் புராணம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௧0உ௯.

சிவமயம்.

# மோளிகைமாறையர் புராணம்.

கலிவிருத்தம்.

நீளறி வார்சிவ லிங்க நிட்டனார்
மோளிகை மாறைய ரென்னு முத்தனா
ராளதி கந்தரு மன்பின் வித்தனார்
மீளரும் பிறப்புறா வீர சைவனார்.

(ப - ரை.) நீள் அறிவார் - த்ரிகாலஞ்ஞானமுள்ளவர், சிவலிங்கநிட்டனார் - சிவலிங்கநிஷ்டையுள்ளவர், மோளிகைமாறையர்—, என்னும் - என்கின்ற, முத்தனார் - ஜீவன்முக்தர், அதிகம் - மேன்மையாக, ஆள் தரும் - ஆண்டருள்கின்ற, அன்பின் - அன்பிற்கு; வித்தனார் - மூலமாயிருப்பவர், மீள் அரு - மீண்டுவர முடியாத, பிறப்பு - பிறவியை, உறா - அடையாத, வீரசைவனார் - வீரசைவர், எ - று.

(பொ-ரை.) த்ரிகால ஞ்ஞானமுள்ளவர்; சிவலிங்கநிஷ்டையுள்ளவர்; மோளிகைமாறையரென்கின்ற ஜீவன்முக்தர்; மேன்மையாக ஆண்டருள்கின்ற அன்பிற்கு மூலமாயிருப்பவர்; மீண்டுவர முடியாத பிறவியை யடையாத வீரசைவர்.

(வி - ரை.) நீள் அறிவர் - மூதறிஞர்; அதாவது நீண்டகாலத்துள்ள வர்த்தமானங்களை திவ்ய த்ருஷ்டியைக் கொண்டறிபவர். மோளிகைமாறையர்-விறகுவிற்பவர் என்பது பொருள். (க)

ஒருமைசேர் தருமர்நின் மலத்த ருத்தமர்
சரணர்சங் கரன்புகழ்த் தாகநீங் கலார்
பெரிதரன் பூசையுட் புறம்பும் பெற்றுளார்
விரதமண் டுள்ளர்மெய் விகாரமற் றுளார்.

(ப-ரை.) ஒருமை சேர் - நிகரற்ற, தருமர் - தர்மகுணத்தையுடையவர், நின்மலத்தர் - பரிசுத்தமானவர், உத்தமர் - பெருந்தன்மையுடையவர், சரணர் - சிவபெருமானுக்கு அடிமைப்பட்டவர், சங்கரன்புகழ் - சிவஸ்துதி (செய்கின்ற), தாகம் - அன்பினின்றும், நீங்கலார் - விலகாதிருப்பவர், பெரிது - மேன்மையாகிய, அரன் பூசை - சிவலிங்கார்ச்சனை (செய்வதில்), உள்ளும் - அந்தரங்கத்திலும், புறம்பும் - பஹிரங்கத்திலும், பெற்று உள்ளார்-நிலைபெற்றிருப்பவர், விரதம் - துறவறத்தை, மண்டு - மிகுதியாக, உள்ளர்-பெற்றிருப்பவர், மெய்விகாரம்-சரீரவிகாரமாகிய புறப்பகை, அற்று உள்ளார்- இல்லாதவர், எ - று.

(பொ - ரை.) நிகரற்ற தர்மகுணத்தையுடையவர்; பரிசுத்தமானவர்; பெருந்தன்மையுடையவர்; சிவபெருமானுக்கு அடிமைப்பட்டிருப்பவர்; சிவஸ்துதிசெய்கின்ற அன்பினின்றும் விலகாதிருப்பவர்; மேன்மையாகிய சிவலிங்கார்ச்சனை செய்வதில் அந்தரங்கத்திலும் பஹிரங்கத்திலும் நிலைபெற்றிருப்பவர்; துறவறத்தை மிகுதியாகப் பெற்றிருப்பவர்; சரீர விகாரமாகிய புறப்பகை யில்லாதவர்.

(வி - ரை.) ஒருமை - தனிமை. தாகம் - தாஹம் என்னும் வடசொற்றிரிபு. அரன் உட்பூசை என்றது ப்ராணலிங்கபூஜையை. அரன்புறம்பு பூசை என்றது இஷ்டலிங்கபூஜையை. சரணர் என்றது சரணஸ்தலமடைந்தவர்களை. இது ஷட் ஸ்தலங்களி லொன்று. மெய் விகாரம் - பசி, நீர் வேட்டல், பயம், வெகுளி, உவகை, வேண்டல், நினைப்பு, உறக்கம், நரை, துன்பம், நோய், ஜநநம், மரணம், மதம், இன்பம், அதிசயம், வியர்த்தல், செயலறல் என்பன. (௨)

அறுவகை யுட்பகை யற்ற கத்துளே
யுறுசுடர் நீங்கலா வுளத்தர் தீயரைச்
செறியலார் மயக்கிலார் திடம கத்தர்பாற்
பிறிவரும் பூசையுந் தொழும்பும் பேணுவார்.

(ப - ரை.) அறுவகை - ஆறுவிதமாகிய, உட்பகை —, அற்று - இல்லாமல், அகத்துள் - ஹ்ருதய கமலத்தில், உறும் - வீற்றிருக்கின்ற, சுடர் - பரஞ்சோதியி னின்றும், நீங்கு அலா - விட்டுப்பிரியாத, உள்ளத்தர்-சித்தத்தையுடையவர், தீயரை- துன்மார்க்கர்களை, செறியலார் - சேராதவர், மயக்கு - லோக ப்ராந்தி, இல்லார் - இல்லாதவர், திடம்-மநோத்ருடத்தையுடைய, மகத்தர்பால்-ஜங்கமமூர்த்திகளிடத்தில், பிறிவு அரு - நீங்கமுடியாத, பூசையும் - பூஜைசெய்தலையும், தொழும்பும் - தொண்டு செய்தலையுமே, பேணுவார் - விரும்புகின்றவர், எ - று.

(பொ-ரை.) ஆறுவிதமாகிய உட்பகையில்லாமல் ஹ்ருதய கமலத்தில் வீற்றிருக் கின்ற பரஞ்சோதியினின்றும் விட்டுப் பிரியாத சித்தத்தையுடையவர்; துன்மார்க்கர் களைச் சேராதவர்; லோகப்ராந்தியில்லாதவர்; மநோத்ருடத்தையுடைய ஜங்கமமூர்த்தி களிடத்தில் நீங்க முடியாத பூஜைசெய்தலையும் தொண்டு செய்தலையுமே விரும்பு கின்றவர்.

(வி-ரை.) அறுவகையுட்பகை யென்றது காமாதி அரிஷட்வர்க்கங்களை; இவற் றை முன்னர் விளக்கியுள்ளாம்; இவற்றின் கொடுமை தோன்றற்கு அறுவகையுட் பகையென்றநுவதித்தார். (ந)

பரசுகொண் டரும்பெரும் பரந்த கான்புகுந்
துரவிய விந்தன முறத்த டிந்துபின்
பெரிதெழிற் சுமையெனப் பிணித்துச் சென்னிகொண்
டுரியநல் விலைகடை யுற்று மாறியே.

(ப-ரை.) பரசு-கோடரியை, கொண்டு - எடுத்துக்கொண்டு, அரு-நுழைதற்கரி யதும், பெரு-பெரியதும், பரந்த-விசாலமானதுமாகிய, கான்-காட்டில், புகுந்து-நுழை ந்து, உரவிய-உரப்பாயிருக்கின்ற, இந்தனம்-விறகுகளை, உற-மிகுதியாக, தடிந்து-வெட்டி, பின்-பிறகு, பெரிது-பெருத்த, எழில்-அழகிய, சுமை யென்ன-சுமையாக, பிணித்து- கட்டி, சென்னி-தலையின் மீது, கொண்டு-சுமந்துகொண்டு, கடை-கடைத்தெருக்க ளில், உற்று-சென்று, உரிய - சுமைக்குத் தகுந்த, நல்-நல்ல, விலை-விலைக்கு, மாறி- விற்று, எ-று.

(பொ-ரை.) கோடரியை எடுத்துக்கொண்டு, நுழை தற்கரியதும், பெரியதும், விசாலமானதுமாகிய காட்டில் நுழைந்து, உரப்பாயிருக்கின்ற விறகுகளை மிகுதியாக வெட்டி, பிறகு பெருத்த அழகிய சுமையாகக் கட்டி, தலையின் மீது சுமந்துகொண்டு, கடைத் தெருக்களிற் சென்று, சுமைக்குத் தகுந்த நல்ல விலைக்கு விற்று.

(வி-ரை.) காட்டில் மரங்களின் நெருக்க மிகுதி தோன்ற புகுந்தென்றார். (ச)

அப்பொரு ளான்மகிழ்ந் தளவின் மாதவ
ரொப்பவின் னமுதளித் துவக்க நந்திகள்
செப்பருஞ் சுவையனந் தினமளிக்க வார்ந்
தெய்ப்பறு திவரிடத் தினித ருந்திடே.

(ப-ரை.) அ-அந்த விறகுவிற்ற, பொருளால்-பணத்தைக்கொண்டு, மகிழ்ந்து-சந்தோஷத்துடன், அளவு இல்-கணக்கற்ற, மாதவர்-ஜங்கமமூர்த்திகள், ஒப்ப-த்ருப்தியடையும்படி, இன் - சுவையுள்ள, அமுது-அந்நம், அளித்து - படைத்து, உவக்க-சந்தோஷமடைதலும், நந்திகள்-வசவண்ணரும், செப்பு அரு-சொல்ல முடியாத, சுவை-சுவையுள்ள, அன்னம்—, தினம்-நாடோறும், அளிக்க-படைத்தலும், ஆர்ந்து-அமுது செய்து, எய்ப்பு அறுது-சோம்பல்இல்லாமல், இவர் இடத்து-இவரிடத்திலும், இனிது-சந்தோஷத்துடன், அருந்தி-அமுது செய்து, எ-று.

(பொ-ரை.) அந்த விறகு விற்ற பணத்தைக்கொண்டு சந்தோஷத்துடன் கணக்கற்ற ஜங்கமமூர்த்திகள் த்ருப்தியடையும்படி சுவையுள்ள அந்நம் படைத்து சந்தோஷமடைதலும், வசவண்ணரும் சொல்ல முடியாத சுவையுள்ள அந்நம் நாடோறும் படைத்தலும் அமுதுசெய்து, சோம்பலில்லாமல் இவரிடத்திலும் சந்தோஷத்துடன் அமுது செய்து. (ரு)

சென்றுநந் திகண்முனஞ் சேர்ந்து செஞ்சொலால்
வன்றிறன் மாறையன் மகிமை போலுளா
னின்றென விசைத்துநீ யிடுமிட் டானத்தி
னன்றிமா றையனிற் புற்கை நன்றுகாண்.

(ப-ரை.) சென்று-(ஜங்கமமூர்த்திகள்) போய், நந்திகள்-வசவண்ணர், முன்னம்-திருமுன்பு, சேர்ந்து-அடைந்து, செம் சொல்லால்-வெளிப்படைச் சொற்களால், வன் திறல்-மிக்க மநோத்ருடத்தையுடைய, மாறையன்-மோளிகைமாறையனது, மகிமை-பெருமை, போல்—, உள்ளான்-பெருமையுடையவன், இன்று-இல்லை, என்ன-என்று, இசைத்து-சொல்லி, நீ—, இடும்-படைக்கின்ற, இட்ட அன்னத்தின்-இஷ்டாந்நத்தைக் காட்டிலும், நன்றி-நன்மையுடைய, மாறையன்-மோளிகை மாறையனது, இல்-திருமடத்து, புற்கை-கூழே, நன்று-சிறந்தது, எ-று.

(பொ-ரை.) ஜங்கமமூர்த்திகள் போய், வசவண்ணர் திருமுன்பு அடைந்து, வெளிப்படைச் சொற்களால் மிக்க மநோத்ருடத்தையுடைய மோளிகை மாறையனது பெருமைபோல் பெருமையுடையவன் இல்லையென்று சொல்லி, நீ படைக்கின்ற இஷ்டாந்நத்தைக் காட்டிலும் நன்மையுடைய மோளிகைமாறையனது திருமடத்துக் கூழே சிறந்தது.

(வி - ரை.) இட்டான்னம் - இஷ்டாந்நம் என்னும் வடசொற்றிரிபு; வகைவகையான உணவு என்பது பொருள். (சு)

இன்னநா ளென்றிடா தென்று மொப்பறத்
தன்னரும் தொழிலினாற் றருக்கித் தான்றரு
நன்னெறிப் பண்டமோ குருணி நற்றவ
ரென்னிலோ வளவிலை யிருந்த ருந்துவோர்.

(ப - ரை.) இன்ன - இந்த, நாள் - தினம், என்றிடாது-என்னாமல், என்றும்-சதாகாலமும், ஒப்பு அற-ஒரே விதமாக, அரு - (யாவராலும் செய்ய) முடியாத, தன்-

தனது, தொழிலினால் - கஷ்டமான வேலையினால், தருக்கி - மகிழ்ந்து, தான்—, தரும்-சம்பாதிக்கின்றதும்,நல்நெறி-தர்மமார்க்கத்தாலுண்டானதுமாகிய, பண்டமோ-தானியமோ, குருணி - ஒரு குருணியளவுடையது; இருந்து - (திருமடத்தில்) தங்கி, அருந்துவோர் - அமுதுசெய்பவர்களாகிய, நல் - சிறந்த, தவர் - ஜங்கமமூர்த்திகள், என்னிலோ - என்றாலோ, அளவு இல்லை - கணக்கில்லை, எ - று.

(பொ-ரை.) இந்தத் தினமென்றுமல் சதாகாலமும் ஒரே விதமாக யாவராலும் செய்யமுடியாத தனது கஷ்டமான வேலையினால் மகிழ்ந்து தான் சம்பாதிக்கின்றதும், தர்ம மார்க்கத்தாலுண்டானதுமாகிய தானியமோ ஒரு குருணியளவுடையது; திருமடத்திற் றங்கி யமுதுசெய்பவர்களாகிய ஜங்கமமூர்த்திகளென்றாலோ கணக்கில்லை.

எனப்பெரி யோரெலா மேத்தக் கேட்டருண்
மனத்தராய் நந்திகண் மகிழ்ந்து மாறையர்
கனத்தமா மடந்தனிற் கடிது சென்றவ
ருனற்கரு மனைவியை யுவந்து கும்பிடா.

(ப-ரை.) என்ன - என்று, பெரியோர்-ஜங்கமமூர்த்திகள், எல்லாம்-அனைவரும், ஏத்த-துதித்தலும், கேட்டு—, அருள்-க்ருபையுள்ள, மனத்தர்ஆய்-மனமுள்ளவராய், நந்திகள் - வசவண்ணர், மகிழ்ந்து - சந்தோஷத்துடன், மாறையர் - மோளிகை மாறையரது, கனத்த - மேன்மையாகிய, மா - பெரிய, மடம் தன்னில்-திருமடத்தில், கடிது - சீக்கிரமாக, சென்று-போய், அவர்-அவருடைய, உன்னற்கு அரு - நினைத்தற்கரிய, மனைவியை - மனைவியாரை, உவந்து - சந்தோஷத்துடன், கும்பிடா - கும்பிட்டு, எ - று.

(பொ - ரை.) என்று, ஜங்கமமூர்த்திகளனைவரும் துதித்தலும் கேட்டு, க்ருபையுள்ள மனமுள்ளவராய், வசவண்ணர் சந்தோஷத்துடன் மோளிகை மாறையரது மேன்மை பொருந்திய பெரிய திருமடத்தில் சீக்கிரமாகப் போய் அவருடைய நினைத்தற்கரிய மனைவியாரைச் சந்தோஷத்துடன் கும்பிட்டு.

(வி - ரை.) கும்பிடா-செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம்.

கோச்சகக்கலிப்பா.

மாதுநந்தி கனைவணங்கி மஞ்சனந்தாட் கேந்திநிற்க
வாதரவா லந்நீரை யஞ்சிநின்று வாங்கித்தம்
பாதமலர் கனைத்தாந்தம் பாணியினால் விளக்கிக்கொண்
டேதமிலென் பரற்கன்ன மிடுகன்னை யெனவிருந்து.

(ப - ரை.) மாது-மனைவியாரும், நந்திகளை-வசவண்ணரை, வணங்கி-கும்பிட்டு, தாட்கு - ஸ்ரீபாதங்களுக்கு, மஞ்சனம் - ஜலத்தை, ஏந்தி - தாங்கி, நிற்க - நிற்றலும், ஆதரவால் - அன்புடன், அ - அந்த, நீரை - ஜலத்தை, அஞ்சி - பயந்து, நின்று—, வாங்கி - பெற்றுக்கொண்டு, தம்-தமது, பாதமலர்-ஸ்ரீபாத பத்மங்களை, தாம்-தாமே, தம்-தமது, பாணியினால் - ஸ்ரீ ஹஸ்தங்களால், விளக்கிக்கொண்டு - கழுவிக்கொண்டு, ஏதம் இல் - பரிசுத்தராகிய, என்-எனது, பரற்கு-இஷ்டலிங்கமூர்த்திக்கு, அன்னம் - அமுது, இடுக - படைக்கக்கடவை, அன்னை - தாயே, என்ன - என்று கேட்டு, இருந்து—, எ - று.

(பொ-ரை.) மனைவியாரும் வசவண்ணரைக் கும்பிட்டு ஸ்ரீபாதங்களுக்கு ஜலத்தைத் தாங்கி நிற்றலும், அன்புடன் அந்த ஜலத்தைப் பயந்து நின்று பெற்றுக்கொண்டு,

தமது ஸ்ரீ பாத பத்மங்களைத் தாமே தமது ஸ்ரீஹஸ்தங்களாற் கழுவிக்கொண்டு, பரிசுத்தராகிய எனது இஷ்டலிங்கமூர்த்திக்கு அமுது படைக்கக்கடவை, தாயே! என்று கேட்டிருந்து. (கூ)

அகந்தையிலார் சிவார்ச்சனைப்போ தாதரத்தீ ராயிரம்பொன்
மகிழ்ந்துறுமஞ் சனச்சாலை வழிமறைய விருத்தியே
யுகந்தரன்பூ சனைபுரிந்தங் கொண்ணுதலா ரம்மடவார்
தகுங்கழற்குச் சரணென்று தம்பிரான் சேடமுண்பார்.

(ப - ரை.) அகந்தையில்லார்-அஹங்காரமில்லாதவராகிய வசவண்ணர், சிவார்ச்சனைப்போது-சிவபூஜாகாலத்தில், ஆதரத்து-அன்புடன், ஈர் ஆயிரம் பொன்-இரண்டாயிரம் பொற்காசு நிறைந்துள்ள பையை, மகிழ்ந்துஉறும்-சந்தோஷமடைதற்குரிய, மஞ்சனச்சாலை வழி-சிவபூஜா க்ருஹத்தில், மறைய-மறைவாக, இருத்தி-வைத்து, உகந்து-சந்தோஷத்துடன், அரன்பூசனை-சிவபூஜை, புரிந்து-செய்து, அங்கு-அவ்விடத்தில், ஒள்-அழகிய, நுதலார் - நெற்றியையுடையவராகிய, அ - அந்த, மடவார் - மனைவியாரது, தகும்-வணங்குதற்குரிய, கழற்கு - ஸ்ரீபாதங்களுக்கு, சரண் - சரணார்த்தி, என்று-என்று சொல்லி, தம்பிரான் சேடம்-சிவப்ரஸாதத்தை, உண்பார்-அமுது செய்வாராயினர் (எவ்வாறெனின்), எ-று.

(பொ-ரை.) அஹங்காரமில்லாதவராகிய வசவண்ணர் சிவபூஜா காலத்தில் அன்புடன் இரண்டாயிரம் பொற்காசு நிறைந்துள்ள பையைச் சந்தோஷமடைதற்குரிய சிவபூஜாக்ருஹத்தில் மறைவாக வைத்து, சந்தோஷத்துடன் சிவபூஜைசெய்து, அவ்விடத்தில் அழகிய நெற்றியையுடைய வராகிய அந்த மனைவியாரது வணங்குதற்குரிய ஸ்ரீபாதங்களுக்கு சரணார்த்தியென்று சொல்லி, சிவப்ரஸாதத்தை அமுது செய்வாராயினர்; எவ்வாறெனின்.

(வி-ரை.) மஞ்சனச்சாலை - இஷ்டலிங்கமூர்த்திக்குத் திருமஞ்சனாபிஷேகம் செய்யுமிடம். (கo)

மிடியனிதி கண்டாற்போன் மிகமகிழ்ந்தங் குடல்புளகித்
தடியவனுக் கிதுவன்றோ வருப்பிறவி மருந்தென்று
முடிவில்பத்தி வித்தென்று முத்தியென்றுஞ் சித்தியென்றுங்
கடிதருந்தி யெழுந்துமுன்றிற் கண்சென்று செப்புவார்.

(ப - ரை.) மிடியன்-வறியன், நிதி-பொருளை, கண்டால்-பார்த்தால், போல்—, மிக-மிகவும், மகிழ்ந்து - சந்தோஷித்து, அங்கு-அவ்விடத்தில், உடல் - உடம்பு, புளகித்து-பூரித்து, அடியவனுக்கு-அடியேனுக்கு, இது-இந்த சிவப்ரஸாதம், அன்றோ-அல்லவோ, அரு-தொலைக்க முடியாத, பிறவி-பிறவிப்பிணிக்கு, மருந்து - ஔஷதம், என்றும்—, முடிவு இல்-அழியாத, பத்தி-பக்தி வ்ருக்ஷத்திற்கு, வித்து - விதை, என்றும்—, முத்தி-மோக்ஷம், என்றும்—; சித்தி-கார்யசித்தி, என்றும் - என்றும் புகழ்ந்து, கடிது - சீக்கிரமாக, அருந்தி-அமுது செய்து, எழுந்து—, முன்றின்கண்-முற்றத்தில், சென்று-போய், செப்புவார்-சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ-று.

(பொ-ரை.) வறியன் பொருளைப் பார்த்தாற் போல் மிகவும் சந்தோஷித்து, அவ்விடத்தில் உடம்பு பூரித்து, அடியேனுக்கு இந்த சிவப்ரஸாதமல்லவோ தொலைக்க முடியாத பிறவிப்பிணிக்கு ஔஷதமென்றும், அழியாத பக்தி வ்ருக்ஷத்திற்கு விதையென்றும், மோக்ஷமென்றும், கார்யசித்தியென்றும் புகழ்ந்து, சீக்கிரமாக அமுது செய்து எழுந்து, முற்றத்திற் போய்ச் சொல்வாராயினர்; எவ்வாறெனின்.

(வி-ரை.) மருந்து, வித்து என மேல் வருதலால், பிறவி, பத்தி யென்பவற்றிற்கு முறையே பிறவிப்பிணி, பக்தி வ்ருக்ஷமென்று கூறலாயிற்று. முன்றில் - முற்றம்; இது இல்முன் என்பதன் மரூஉ. (கக)

இம்மடத்தைப் பார்த்தோர்கட் கில்லையே முன்றீமை
யிம்மடத்திற் கருகாக வியங்கினோர் முத்தரன்றோ
விம்மடத்தைச் சூழவந்தோர்க் கெண்சித்தி யெளிதாகு
மிம்மடத்தி லணுமீதி லேற்றினோர் பிறப்பிலரால்.

(ப-ரை.) இ-இந்த, மடத்தை - திருமடத்தை, பார்த்தோர்கட்கு-தரிசித்த பேர்களுக்கு,முன்-பூர்வஜந்மங்களிற் செய்த, தீமை-பாபம், இல்லை—, இ-இந்த,மடத்திற்கு-திருமடத்திற்கு, அருகாக-சமீபத்தில், இயங்கினோர்-தங்கின பேர்கள், முத்தர்-ஜீவன் முக்தர்கள், அன்றோ-அல்லவோ, இ-இந்த, மடத்தை-திருமடத்தை,சூழவந்தோர்க்கு-ப்ரதக்ஷணஞ்செய்த பேர்களுக்கு, எண் சித்தி-அஷ்டமஹா சித்திகளும், எளிது ஆகும்-லேசாகக் கைகூடும், இ-இந்த, மடத்தில் - திருமடத்திலிருக்கின்ற, அணு - தூசி, மீதில்-(உடம்பின்) பேரில், ஏற்றினோர்-படச்செய்த பேர்கள், பிறப்பு-பிறவி, இலர்-அடையமாட்டார்கள், எ-று.

(பொ-ரை.) இந்தத் திருமடத்தைத் தரிசித்த பேர்களுக்குப் பூர்வ ஜந்மங்களிற் செய்த பாபமில்லை; இந்தத் திருமடத்திற்குச் சமீபத்தில் தங்கின பேர்கள் ஜீவன்முக்தர்களல்லவோ? இந்தத் திருமடத்தை ப்ரதக்ஷணஞ்செய்த பேர்களுக்கு அஷ்டமஹா சித்திகளும் லேசாகக் கைகூடும்; இந்தத் திருமடத்திலிருக்கின்ற தூசி உடம்பின் மேற் படச்செய்த பேர்கள் பிறவியடையமாட்டார்கள். (௧௨)

இம்மடத்தி லன்னமின்றே லினிதாக நீரேனுங்
கைம்மடுத்திங் கயின்றாலுங் கடும்பிணிகள் விடுமென்றே
தம்மிடத்து வசவேசர் சாரவுச்சிக் காலத்தே
யம்மகிமை மாறையரிந் தனச்சுமைகொண் டங்கணைந்தார்.

(ப - ரை.) இ-இந்த, மடத்தில் - திருமடத்தில், அன்னம் - அமுது, இன்றேல்-இல்லாமற்போமாயின், இனிதாக-விருப்பத்துடன், நீர் ஏனும் - (வெறும்) ஜலத்தையாயினும், கைம்மடுத்து-கைநிறைய எடுத்து, இங்கு - இவ்விடத்தில், அயின்றாலும்-உண்பாராயினும், கடு - கொடிய, பிணிகள் - (கர்ம) நோய்கள், விடும் - விட்டொழியும், என்று - என்றும் புகழ்ந்து, வசவேசர் - வசவண்ணர், தம் - தமது, இடத்து-திருமடத்தில், சார-எழுந்தருள்தலும், உச்சிக்காலத்து-மத்தியானத்தில், அ - அந்த, மகிமை - பெருமையுடைய, மாறையர் - மோளிகைமாறையர், இந்தனச்சுமை - விறகு கட்டை, கொண்டு - சுமந்துகொண்டு, அங்கு - அவ்விடத்தில், அணைந்தார் - வந்தார், எ - று.

(பொ-ரை.) இந்தத் திருமடத்தில் அமுது இல்லாமற்போமாயின் விருப்பத்துடன் வெறும் ஜலத்தையாயினும் கைநிறைய எடுத்து இவ்விடத்தில் உண்பாராயினும் கர்ம நோய்கள் விட்டொழியுமென்றும் புகழ்ந்து, வசவண்ணர் தமது திருமடத்தில் எழுந்தருள்தலும், மத்தியானத்தில் அந்தப் பெருமையுடைய மோளிகைமாறையர் விறகு கட்டைச் சுமந்துகொண்டு அவ்விடத்தில் வந்தார்.

(வி - ரை.) இந்தனம் என்பது விறகு என்னும் பொருள் பயப்பதோர் வடசொல். (௧௩)

இந்தனந்தங் கடையிருத்தி யெழின்மடத்துட் புகுங்காலை
வந்தடிகண் மனைவியார் மகிழ்ந்துநின்று விளக்கியபின்
றந்தருமத் தவர்க்கமுதந் தருக்கியளித் தருச்சனையிற்
சிந்தைநயந் துறும்போது சிவார்ச்சனைசெய் படியகத்துள்.

(ப - ரை.) இந்தனம் - விறகை, தம் - தமது, கடை-தலைவாயிலில், இருத்தி-வைத்துவிட்டு, எழில்-அழகிய, மடத்து உள்-திருமடத்தினுள்ளே, புகும் காலை-நுழைகின்றகாலத்தில், மனைவியார்—, மகிழ்ந்து-சந்தோஷத்துடன், வந்து-(ஜலம்கொண்டு) வந்து, அடிகள்-ஸ்ரீபாதங்களை, நின்று—, விளக்கிய-கழுவின, பின்-பிறகு, தம்-தமது, தருமம் - புண்யஸ்வரூபிகளாகிய, தவர்க்கு - ஜங்கமமூர்த்திகளுக்கு, தருக்கி - சந்தோஷத்துடன், அமுதம் - அந்நம், அளித்து - படைத்து, அருச்சனையில் - சிவ பூஜையில், சிந்தை-மனம், நயந்து உறும்போது-மகிழ்கின்ற காலத்தில், சிவார்ச்சனை செய் படி யகத்துள் - சிவபூஜா க்ருஹத்தில், எ - று.

(போ-ரை.) விறகைத் தமது தலைவாயில் வைத்துவிட்டு, அழகிய திருமடத்தினுள்ளே நுழைகின்ற காலத்தில், மனைவியார் சந்தோஷத்துடன் ஜலம் கொண்டு வந்து, ஸ்ரீபாதங்களை நின்று கழுவின பிறகு, தமது புண்யஸ்வரூபிகளாகிய ஜங்கம மூர்த்திகளுக்குச் சந்தோஷத்துடன் அந்நம் படைத்து, சிவபூஜையில் மனமகிழ்கின்ற காலத்தில் சிவபூஜா க்ருஹத்தில். (கச)

வேளரியார்க் கினியவச வேசுரர்முன் வைக்கவுற்ற
சாளிகையைக் கண்டிதென்ன சார்ந்தவரா ரிவ்விடத்தி
லாளுடையா னர்ச்சனைசெ யகத்தென்ன வம்மடவார்
நீளறிவா லவ்விடத்து நிகழ்ந்தசெய்தி செப்பினார்.

(ப - ரை.) வேள் - மன்மதனுக்கு, அரியார்க்கு - பகைவராகிய சிவபெருமானுக்கு, இனிய - அன்புள்ள, வசவேசுரர் - வசவண்ணர், முன் - முன்னமே, வைக்க உற்ற மறைத்துவைத்திருந்த, சாளிகையை - பணப்பையை, கண்டு - பார்த்து, இது-இந்தப் பணப்பை வந்ததற்குக் காரணம், என்ன-யாது, இவ்விடத்தில்-இந்த இடமாகிய, ஆளுடையான் அர்ச்சனை செய் அகத்து - சிவபூஜா க்ருஹத்தில், சார்ந்தவர்-வந்தவர், ஆர்-யார், என்ன - என்று (மனைவியாரை) கேட்டலும், அ - அந்த, மடவார்-மனைவியார், நீள் அறிவால் - பேரறிவுடன், அவ்விடத்து - அவ்விடத்தில், நிகழ்ந்த-நடந்த, செய்தி-வரலாற்றினை யெல்லாம், செப்பினார் - சொன்னார், எ - று.

(போ - ரை.) மன்மதனுக்குப் பகைவராகிய சிவபெருமானுக்கு அன்புள்ள வசவண்ணர் முன்னமே மறைத்து வைத்திருந்த பணப்பையைப் பார்த்து, இந்தப் பணப்பை வந்ததற்குக் காரணம் யாது? இந்த இடமாகிய சிவபூஜா க்ருஹத்தில் வந்தவர் யார்? என்று மனைவியாரைக் கேட்டலும், அந்த மனைவியார் பேரறிவுடன் அவ்விடத்தில் நடந்த வரலாற்றினை யெல்லாம் சொன்னார்.

(வி - ரை.) ஆளுடையான் - சிவபெருமான். (கரு)

பாவனையான் மாறையர் பார்த்துவச வேசரெனத்
தாவகல வறிந்துநந்தி சற்பத்தி யுயிரன்றோ
மேவுநம தில்லம்பாட்டை விடுவிப்பார் வேறெவர்தாம்
பூவுலகிற் புண்ணியத்தோர் வறியர்துயர் போக்குவரார்.

(ப - ரை.) பாவனையால் - (சொன்ன) மாதிரியினால், மாறையர்-மோளிகை மாறையர், பார்த்து-ஆராய்ந்து, வசவேசர்-வசவண்ணரே, என்ன-என்று நிச்சயித்து, தாவு அகல-சந்தேஹ மில்லாமல், அறிந்து-உணர்ந்து, நந்தி-வசவண்ணர், சற்பத்தி - ஸத்பக்திக்கு, உயிர் - உயிராயிருப்பவர், அன்றோ - அல்லவோ, மேவும்-அடைந்திருக்

கின்ற, நமது—, இலம்பாட்டை-வறுமையை, விடுவிப்பார்-ஒழிக்கவல்லவர், வேறு-மற்று, எவர் - யார், பூவுலகில் - பூலோகத்தில், புண்ணியத்தோர் - செல்வர்களில், வறியர் - மிடியர்களுடைய, துயர் - துன்பத்தை, போக்குவர் - ஒழிக்கவல்லவர், ஆர்-யார் (ஒருவரும் இல்லை), எ - று.

(பொ-ரை.) சொன்ன மாதிரியினால் மோளிகைமாறையர் ஆராய்ந்து, வசவண்ணரே யென்று சந்தேகமில்லாமல் உணர்ந்து, வசவண்ணர் ஸத்பக்திக்கு உயிராயிருப்பவரல்லவோ? அடைந்திருக்கின்ற நமது வறுமையை யொழிக்கவல்லவர் மற்று யார்? பூலோகத்தில் செல்வர்களில் மிடியர்களுடைய துன்பத்தை யொழிக்கவல்லவர் யார்? ஒருவரு மில்லை. (கசு)

திண்ணியநற் கருணைநிதித் திருநந்தி யெம்மிடத்து
நண்ணியது தன்மக்க ளாமென்னு நண்பினா
லெண்ணியன்றோ வுய்ந்தனமியா மிதுபோது மெம்பிரான்
றண்ணளியா லளித்ததொழிற் றரும்பொருளே சாலுமென்ன.

(ப-ரை.) திண்ணிய நல்-மிகச்சிறந்த, கருணைநிதி - க்ருபாநிதியாகிய, திருநந்தி-ஸ்ரீவசவண்ணர், எம் - நமது, இடத்து - மடத்தில், நண்ணியது - எழுந்தருளியது, நாம் - நாங்கள், தன் - தனது, மக்கள் - பிள்ளைகள், என்னும் - என்கின்ற, நண்பினால்-அன்பினால், எண்ணி-நினைத்து, அன்றோ-அல்லவோ, யாம்-நாங்கள், உய்ந்தனம்-பிழைத்தோம், இது - இந்த அன்பே, போதும்—, எம் - நமது, பிரான் - சிவபெருமான், தண் அளியால் - க்ருபாகடாக்ஷத்தால், அளி - அநுக்ரஹஞ் செய்திருக்கின்ற, தொழில் - வேலையானது, தரும்-கொடுக்கின்ற, பொருளே-கஷ்டார்ஜிதமே, சாலும் - போதும், என்ன - என்று கருதி, எ-று.

(பொ-ரை.) மிகச் சிறந்த க்ருபாநிதியாகிய ஸ்ரீவசவண்ணர் நமதுமடத்திலெழுந்தருளியது நாங்கள் தனது பிள்ளைகளென்கின்ற அன்பினால் நினைத்தல்லவோ நாங்கள் பிழைத்தோம்? இந்த அன்பே போதும்; நமது சிவபெருமான் க்ருபாகடாக்ஷத்தால் அநுக்ரஹஞ் செய்திருக்கின்ற வேலையானது கொடுக்கின்ற கஷ்டார்ஜிதமே போதுமென்று கருதி.

(வி - ரை.) திண்ணிய - இங்குச் சிறப்புப் பொருட்டு. என்ன - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (கஎ)

இன்மையென்ப தியாமறியோ மெல்லாந்தான் வல்லனென்று
நன்மைநிதி யிணையிரண்டு நற்றவர்க்கீந் தவர்களரு
மென்மலர்த்தாள் விளக்கியந்நீர் விறகுகட்டின் மேல்வீசப்
பொன்மயமா மிந்தனத்தை மாறையர் போற்றாராய்.

(ப - ரை.) யாம்-நாங்கள், இன்மை யென்பது-வறுமை யென்பதே, அறியோம்-உணரமாட்டோம், தான்—, எல்லாம்-சகலமும், வல்லன்-உணரவல்லன், என்று-என்று (சொல்லி), நன்மை - உபகாரமாய் வந்திருக்கின்ற, நிதியினை - பொருளை, இரண்டு—, நல்-சிறந்த, தவர்க்கு-ஜங்கமமூர்த்திகளுக்கு, ஈந்து-(பங்கிட்டு)கொடுத்துவிட்டு, அவர்கள்-அவர்களுடைய, அரு-மேன்மையானதும், மெல்-மென்மையானதுமாகிய, மலர் - தாமரைமலர் போன்ற, தாள் - ஸ்ரீபாதங்களை, விளக்கி - கழுவி, அ-அந்த, நீர்-பாதோதகத்தை, விறகு கட்டின்-விறகு சுமையின், மேல்-மீது, வீச-தெளித்த மாத்திரத்தில், பொன்மயம் ஆம்-ஸ்வர்ணமயமாகிய, இந்தனத்தை - விறகை, மாறையர்-மோளிகை மாறையர், போற்றார் ஆய்-விரும்பாதவராய்,-எ-று.

(பொ - ரை.) நாங்கள் வறுமையென்பதே உணரமாட்டோம்; தான் சகலமும் உணரவல்லவனென்று சொல்லி, உபகாரமாய் வந்திருக்கின்ற பொருளை இரண்டு சிறந்த ஜங்கமமூர்த்திகளுக்குப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு, அவர்களுடைய மேன்மையானதும், மென்மையானதுமாகிய தாமரைமலர் போன்ற ஸ்ரீபாதங்களைக் கழுவி, அந்தப் பாதோதகத்தை விறகு சுமையின் மீது தெளித்த மாத்திரத்தில் ஸ்வர்ணமயமாகிய விறகை மோளிகைமாறையர் விரும்பாதவராய். (கஅ)

ஆயிரம்பொ னிறையாக வரிந்தரிந்து சங்கமத்திற்
கோய்வதின்றிக் கொடுக்கவவ ரொண்கரத்திற் கொடுபோந்து
நேயவச வேசுரர்மு னிகழ்த்தவறிந் ததிசயித்துத்
தூயபத்தித் திருவான மாறையரைத் துதிசெய்யா.

(ப-ரை.) ஆயிரம் பொன்-ஆயிரம் பொற்காசு, நிறையாக-நிறையுள்ளதாக, அரிந்து அரிந்து - அறுத்தறுத்து, சங்கமத்திற்கு - ஜங்கமமூர்த்திகளுக்கு, ஓய்வு இன்றி-ஓயாமல், கொடுக்க - தருதலும், அவர்-அவர்கள், ஒள்-அழகிய, கரத்தில் - கைகளில், கொடு போந்து-ஏற்றுக் கொண்டுவந்து, நேயர்-அன்புள்ளவராகிய, வசவேசுரர்-வசவண்ணர், முன்-சந்நிதியில், நிகழ்த்த-சொல்லுதலும், அறிந்து-உணர்ந்து, அதிசயித்து-ஆச்சரியமடைந்து, தூய-பரிசுத்தமான, பத்தித் திரு ஆன-பக்தி நிதியாகிய, மாறையரை-மோளிகை மாறையரை, துதிசெய்யா-துதித்து, எ-று.

(பொ-ரை.) ஆயிரம் பொற்காசு நிறையுள்ளதாக அறுத்தறுத்து, ஜங்கமமூர்த்திகளுக்கு ஓயாமல் தருதலும், அவர்கள் அழகிய கைகளில் ஏற்றுக்கொண்டு வந்து, அன்புள்ளவராகிய வசவண்ணர் சந்நிதியில் சொல்லுதலும், உணர்ந்து, ஆச்சரியமடைந்து, பரிசுத்தமான பக்தி நிதியாகிய மோளிகை மாறையரைத் துதித்து. (கக)

சடக்கெனவே பயந்துவந்து சரணரா மோளிகைய
ரடிக்கமலங் களிற்பணிந்துன் னடைக்கலங்காத் தருளென்று
முடிக்கண்மலர்க் கரமிரண்டு முகுளிதராய் நின்றளவி
லடற்பெரியோர் மாறையர் நந்திகண்முன் னருள்செய்வார்.

(ப-ரை.) சடக்கு எனவே-சீக்கிரமாக, பயந்து-அஞ்சி, வந்து-போய், சரணர் ஆம்-சிவசரணராகிய, மோளிகையர்-மோளிகை மாறையரது, அடிக் கமலங்களில்-ஸ்ரீ பாதபத்மங்களில், பணிந்து - ஸாஷ்டாங்கமாக வணங்கி, உன் அடைக்கலம் - அடியேன் உன்னைச் சரணமாகக் கருதி யடைந்தேன், காத்து-ரக்ஷித்து, அருள்-அநுக்ரஹஞ் செய்வாய், என்று-என்றுகேட்டு, முடிக்கண் - திருமுடியின்மீது, மலர் - தாமரைமலர் போலும், கரம் இரண்டும்-இரண்டு திருக்கைகளையும், முகிளிதர் ஆய்-கூப்பினவராகி, நின்ற அளவில்-(எதிரே) நின்ற மாத்திரத்தில், அடல்-வெற்றியையுடைய, பெரியோர்-சரணராகிய, மாறையர் - மோளிகைமாறையர், நந்திகள் - வசவண்ணர், முன் - திரு முன்பு, அருள் செய்வார்-சொல்லியருள்வாராயினர் (எவ்வாறெனின்), எ-று.

(பொ - ரை.) சீக்கிரமாக அஞ்சிப்போய் சிவசரணராகிய மோளிகைமாறையரது ஸ்ரீபாதபத்மங்களில் ஸாஷ்டாங்கமாக வணங்கி, அடியேன் உன்னைச் சரணமாகக் கருதியடைந்தேன்; ரக்ஷித்து அநுக்ரஹஞ்செய்வாயென்றுகேட்டு, திருமுடியின் மீது தாமரைமலர்போலும் இரண்டு திருக்கைகளையும் கூப்பினவராகி யெதிரே நின்ற மாத்திரத்தில், வெற்றியையுடைய சரணராகிய மோளிகை மாறையர் வசவண்ணர் திரு முன்பு சொல்லியருள்வாராயினர்; எவ்வாறெனின்.

(வி- ரை.) அடிக்கமலமென்றதனால் பாதங்களின் பெருமை விளங்கிற்று. (உ0)

இப்படியே யுரைக்குமதென் னேதுசொன்ளே நின்னையா
மெய்ப்புடைய மிடிப்பத்தர்க் கினியவுயி ராகுமுன்னை
யொப்புடையா ரிப்பாரி லுண்டோவெம் போலிகட்கு
வைப்பளித்து வாழ்விக்கும் வள்ளன்மை வசவேச.

(ப - ரை.) இப்படி - இவ்வாறு, உரைக்கும் அது - புகழ்ந்து சொல்வதற்குக் காரணம், என் - யாது, யாம் - நாம், நின்னை - உன்னை, ஏது - யாது, சொன்னோம்- கூறினோம், எய்ப்புடைய-தளர்ச்சியுடையவரும், மிடி-வறுமையுடையவருமாகிய, பத்தர்க்கு-சிவபக்தர்களுக்கு, இனிய - அன்புள்ள, உயிர் - உயிர்போன்றவர், ஆகும் - ஆகின்ற, உன்னை—, ஒப்பு உடையார்-நிகர்ப்பவர், இ-இந்த, பாரில்-உலகத்தில், உண்டோ—, எம்போலிகட்கு-நம்மைப்போன்ற ஏழைகளுக்கு, வைப்பு-செல்வத்தை, அளித்து - அருள்செய்து, வாழ்விக்கும் - வாழச்செய்யவல்ல, வள்ளன்மை - உதாரகுணமுள்ள, வசவேச - வசவண்ணனே, எ - று.

(போ-ரை.) இவ்வாறு புகழ்ந்து சொல்வதற்குக் காரணம் யாது? நாம் உன்னை யாது கூறினோம்? தளர்ச்சியுடையவரும், வறுமையுடையவருமாகிய சிவபக்தர்களுக்கு அன்புள்ள உயிர் போன்றவராகின்ற உன்னை நிகர்ப்பவர் இந்த உலகத்திலுண்டோ? நம்மைப் போன்ற ஏழைகளுக்குச் செல்வத்தை யருள்செய்து வாழச்செய்யவல்ல உதாரகுணமுள்ள வசவண்ணனே! (௨௧)

கேட்டியின்று யாமறிந்தேங் கிளர்கனகச் சாளிகைநம்
வீட்டில்வந்த துன்பொருட்டால் விடிந்தனநா மிகநல்லை
யீட்டுசெல்வப் பிரியைநல்லை யிணையிலாங் கருணைநல்லை
நாட்டிலுயிர்க் கிதந்தருவாய் நல்லைநல்லை யெனநவில்வார்.

(ப - ரை.) கேட்டி - கேட்பாய், இன்று - இப்போது, கிளர் - பிரகாசிக்கின்ற, கனகச் சாளிகை-பொற்காசப்பை, நம் - நமது, வீட்டில் - மடத்தில், உன் பொருட்டால் - உன்னால், வந்தது - வந்துசேர்ந்த செய்தியை, யாம் - நாம், அறிந்தோம் - உணர்ந்தோம், நாம்—, விடிந்தனம் - வறுமை தீர்ந்தோம், மிக - மிகவும், நல்லை - நீ நல்லவன், ஈட்டு - சம்பாதித்தற்குரிய, செல்வப்பிரியை - பொருளில் ஆசையுள்ளவனே, நல்லை - நீ நல்லவன், இணையில்லா-நிகரற்ற, கருணை - க்ருபையுடையவனே, நல்லை - நீ நல்லவன், நாட்டில் - ஊரில் (வாழ்கின்ற), உயிர்க்கு - ஸர்வ ஜீவப்ராணிகளுக்கும், இதம் - நன்மையை, தருவாய் - அருள்செய்பவனே, நல்லை - நீ நல்லவன், நல்லை-நீ நல்லவன், என்ன-என்று புகழ்ந்து, நவில்வார்- (மேலும்) சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(போ - ரை.) கேட்பாய்; இப்போது பிரகாசிக்கின்ற பொற்காசுப்பை நமது மடத்தில் உன்னால் வந்து சேர்ந்த செய்தியை நாம் உணர்ந்தோம்; நாம் வறுமைதீர்ந்தோம்; நீமிகவும் நல்லவன்; சம்பாதித்தற்குரிய பொருளில் ஆசையுடையவனே! நீ நல்லவன்; நிகரற்ற க்ருபையுடையவனே! நீ நல்லவன்! ஊரில் வாழ்கின்ற ஸர்வ ஜீவப்ராணிகளுக்கும் நன்மையை யருள்செய்பவனே! நீநல்லவன்; நீ நல்லவனென்று புகழ்ந்து, மேலும் சொல்வாராயினர்; எவ்வாறெனின். (௨௨)

திருக்கியெனக் களித்தனபோற் சற்பத்தர்க் களித்தனையோ
வரத்தின்மிகு மடிவால மாச்சையன் மைந்தனெனை
யிரக்கமுடன் வளர்த்திகண்டா யென்றினிய முறுவல்செய்யக்
கருத்திரங்கி வசவேசர் கலங்கியன்பாற் கழறுவார்.

(ப - ரை.) தருக்கி - சந்தோஷத்துடன், எனக்கு - அடியேனுக்கு, அளித்தது போல்-அருள்செய்தது போலவே, சற்பத்தர்க்கு-ஸத்பக்தர்களுக்கும், அளித்தனேயே-அருள்செய்தாயோ, வரத்தில் - தபோபலத்தில், மிகும்-சிறந்த, மடிவாலமாச்சையன்-மடிவாலமாச்சையனது, மைந்தன் - புத்ரனாகிய, என்னை - அடியேனையும், இரக்கமுடன்-அன்புடன், வளர்த்தி-காப்பாற்றுவாய், என்று - என்று சொல்லி, இனிய-சந்தோஷத்துடன், முறுவல் செய்ய-சிரித்தலும், வசவேசர்-வசவண்ணர், கருத்து-மனம், இரங்கி -நொந்து, கலங்கி - வருத்தப்பட்டு, அன்பால் - அன்புடன், கழறுவார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(போ - ரை.) சந்தோஷத்துடன் அடியேனுக்கு அருள்செய்தது போலவே ஸத்பக்தர்களுக்கும் அருள்செய்தாயோ? தபோபலத்திற் சிறந்த மடிவாலமாச்சையனது புத்ரனாகிய அடியேனையும் அன்புடன் காப்பாற்றுவாயென்றுசொல்லி, சந்தோஷத்துடன் சிரித்தலும், வசவண்ணர் மனம் நொந்து, வருத்தப்பட்டு, அன்புடன் சொல்வாராயினர்; எவ்வாறெனின். (உஙு)

பரிசமிரும் பிடைக்குறையைப் பார்க்குமோ பொன்மேரு
கரியகொடி யினக்குற்றங் காணுமோ கடியேன்றன்
பெரியகுற்றம் பெரியோய்நீ பிறித்தறியிற் பெரிதறியா
தரியநன்மை மோளிகைமா றையவென்னை யாண்டருள்வாய்.

(ப-ரை.) பெரியோய்-ஜங்கமமூர்த்திகளே, பரிசம்-பரிசவேதியானது, இரும்பு இடை-இரும்பிலுள்ள, குறையை - குற்றத்தை, பார்க்குமோ—, பொன்-ஸ்வர்ணமயமான, மேரு-மஹாமேருபர்வதமானது, கரிய - கறுத்த, கொடியினம்-காக்கைகளின், குற்றம்-குற்றத்தை, காணுமோ - பார்க்குமோ, கடியேன் - கொடியவனாகிய அடியேனுடைய, பெரிய குற்றம்-பெரும் பிழையானது, நீ—, பிரித்து - பகுத்து, அறியின்-உணர்வாயாயின், பெரிது-பெரிதாக, அறியாது-தோன்றமாட்டாது, அரிய-மேன்மையான, நன்மை - உபகாரகுணமுள்ள, மோளிகை மாறைய - மோளிகைமாறையனே, என்னை-அடியேனை, ஆண்டருள்வாய்-ஆட்கொண்டருள்வாய், எ-று.

(போ - ரை.) ஜங்கமமூர்த்திகளே! பரிசவேதியானது இரும்பிலுள்ள குற்றத்தைப் பார்க்குமோ? ஸ்வர்ணமயமான மஹாமேரு பர்வதமானது கறுத்த காக்கைகளின் குற்றத்தைப் பார்க்குமோ? கொடியவனாகிய அடியேனது பெரும் பிழையானது நீ பகுத்துணர்வாயாயின் பெரிதாகத் தோன்றமாட்டாது; மேன்மையான உபகாரகுணமுள்ள மோளிகை மாறையனே! அடியேனை ஆட்கொண்டருள்வாய். (உச)

இலவதனிற் கனியுண்டோ வெரிசூளைச் சீதமுண்டோ
சலமதனின் வெண்ணெயுண்டோ தழற்குழியிற் சலமுண்டோ
வலியகல்லி னெகிழ்ச்சியுண்டோ மறையுண்டோ புலையரிட
மலைமனத்தே னென்னிடைநல் லறிவில்லை யாண்டருள்வாய்.

(ப - ரை.) இலவு அதனில்-இலவமரத்தில், கனி-பழம், உண்டோ—, எரி-சுடுகின்ற, சூளை-சூளையில், குளிர்ச்சி—, உண்டோ—, சலம் அதனின்-நீரில், வெண்ணெய்-நவநீதம், உண்டோ—, தழல் குழியில்-அக்கி குண்டத்தில், சலம்-நீர், உண்டோ—, வலிய -கடினமான, கல்லில்—, நெகிழ்ச்சி-இளக்கம், உண்டோ—, புலையரிடம்-நீசரிடத்தில், மறை-வேதம், உண்டோ—, அலை மனத்தேன்-மனோதிருடமில்லாதவனாகிய,

என் இடை - அடியேனிடத்தில், நல் அறிவு - பேரறிவு, இல்லை—, ஆண்டருள்வாய்-ஆட்கொண்டருள்வாய், எ-று.

(போ - ரை.) இலவமரத்தில் பழமுண்டோ? சுடுகின்ற சூளையில் குளிர்ச்சியுண்டோ? நீரில் நவநீதமுண்டோ? அக்கினிகுண்டலத்தில் நீருண்டோ? கடினமான கல்லில் இளக்கமுண்டோ? நீசரிடத்தில் வேதமுண்டோ? மனோ த்ருடமில்லாதவனாகிய அடியேனிடத்தில் பேரறிவில்லை; ஆட்கொண்டருள்வாய். (உரு)

என்றுவச வேசர்பணிந் தெதிராக வின்முறுவ
லொன்றியருண் மாறைய ரொழிவிலன்பா லெடுத்தணைத்து
நன்றுரைத்து விடைகொடுப்ப நந்திகடம் மடத்தணைந்தார்
முன்றமது தொழிற்கொண்டு மோளிகைமா றையரிருந்தார்.

(ப-ரை.) என்று—, வசவேசர்-வசவண்ணர், பணிந்து - ஸாஷ்டாங்கமாக வணங்கி, எதிர் ஆக - எதிரே நிற்றலும், இன் - சந்தோஷத்துடன், முறுவல் ஒன்றி-சிரித்து, அருள்-க்ருபாகடாக்ஷமுள்ள, மாறையர் - மோளிகைமாறையர், ஒழிவு இல்-நிலைபெற்ற, அன்பால்-நேசத்துடன், எடுத்து-தூக்கி, அணைத்து-தழுவி, நன்று-ஞானமார்க்கங்களை, உரைத்து - உபதேசித்து, விடைகொடுப்ப - உத்தரவு கொடுத்தலும், நந்திகள்-வசவண்ணர், தம்-தமது, மடத்து-திருமடத்தில், அணைந்தார்-எழுந்தருளினர், மோளிகைமாறையர் - மோளிகைமாறையரும், முன் - முன்னுள்ள, தமது—, தொழில் கொண்டு - விறகு விற்கின்ற வேலை செய்துகொண்டு, இருந்தார் - வாழ்ந்திருந்தார், எ-று.

(போ-ரை.) என்று, வசவண்ணர் ஸாஷ்டாங்கமாக வணங்கி எதிரே நிற்றலும், சந்தோஷத்துடன் சிரித்து, க்ருபாகடாக்ஷமுள்ள மோளிகை மாறையர் நிலைபெற்ற நேசத்துடன் தூக்கித் தழுவி, ஞானமார்க்கங்களை யுபதேசித்து, உத்தரவு கொடுத்தலும், வசவண்ணர் தமது திருமடத்தில் எழுந்தருளினர்; மோளிகை மாறையரும் முன்னுள்ள தமது விறகு விற்கின்ற வேலை செய்துகொண்டு வாழ்ந்திருந்தார். (உசு)

மோளிகைமாறையர் புராணம்-முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - க0ருக

சிவமயம்.

# கன்னப்பிரமையர் புராணம்.

கோச்சகக்கலிப்பா.

தன்னைநிக ரில்லாத தம்பிராற் கினியநண்ப
ருன்னருநற் சங்கமத்திற் குரியவன்னம் படைத்தற்கா
யென்னதொழில் செய்தாலு மீனமில்லை யெனுமெண்ணம்
பின்னமிலார் பேர்கன்னப் பிரமைய ரெனப்பெற்றார்.

(ப-ரை.) தன்னை—, நிகர்-இல்லாத-ஒப்பாவாரில்லாத, தம்பிராற்கு-சிவபெருமானுக்கு, இனிய-அன்புள்ள, நண்பர்-பக்தர், உன் அரு-நினைத்தற்கரிய, நல்-சிறந்த, சங்கமத்திற்கு உரிய - ஜங்கமமூர்த்திகளுக்காக, அன்னம்-அமுது, படைத்தற்கு ஆய்-அளிக்கும் பொருட்டு, என்ன-எந்த, தொழில்-வேலையை, செய்தாலும்-பண்ணினாலும், ஈனம்-இழிவு, இல்லை—, என்னும்-என்கின்ற, எண்ணம் பின்னம் இல்லார் - மநோத்ருடமுள்ளவர், கன்னப்பிரமையர்-கன்னப்ரஹ்மையர், என்ன - என்கின்ற, பேர் பெற்றார்-திருநாமத்தினையுடையவர், எ-று.

(பொ-ரை.) தன்னை யொப்பாவாரில்லாத சிவபெருமானுக்கு அன்புள்ள பக்தர்; நினைத்தற்கரிய சிறந்த ஜங்கமமூர்த்திகளுக்காக அமுது அளிக்கும் பொருட்டு எந்த வேலையைப் பண்ணினாலும் இழிவில்லை யென்கின்ற மநோத்ருடமுள்ளவர்; கன்னப்ரஹ்மையரென்கின்ற திருநாமத்தினையுடையவர். (க)

பொருளாக மாவிதவர் பொருளென்னப் புரிந்திருப்பா
ரருளான னடிப்பூசை யகம்புறம்பி னகலாதார்
வெருளாத வீரசைவா சாரமே விரும்பியுள்ளார்
தெருளாரு மற்புதஞ்சேர் செய்கையார் சிவஞானர்.

(ப - ரை.) பொருள் -செல்வமும், ஆகம் - உடலும், ஆவி-உயிரும், தவர்-ஜங்கமமூர்த்திகளுடைய, பொருள்-சொத்து, என்ன - என்று எண்ணி, புரிந்து இருப்பார்-தத்தஞ்செய்திருப்பவர், அருளானன் அடிப் பூசை-சிவபாதபூஜை(செய்வதினின்றும்), அகம்-அந்தரங்கத்திலும், புறம்பின்-பஹிரங்கத்திலும், அகலாதார் - விட்டுப்பிரியாதவர், வெருளாத - அஞ்சாத, வீரசைவாசாரம் - வீரசைவவ்ரதத்தை, விரும்பி உள்ளார்-அநுஷ்டிப்பவர், தெருள் ஆரும்-தெளிந்ததும், அற்புதம் சேர்-மஹத்வம் பொருந்தியதுமாகிய, செய்கையார் - தொழிலையுடையவர், சிவஞானர் - சிவஞானச்செல்வத்தையுடையவர், எ-று.

(பொ-ரை.) செல்வமும், உடலும், உயிரும் ஜங்கமமூர்த்திகளுடைய சொத்தென்றெண்ணித் தத்தஞ்செய்திருப்பவர்; சிவபாத பூஜை செய்வதினின்றும் அந்தரங்கத்திலும் பஹிரங்கத்திலும் விட்டுப் பிரியாதவர்; அஞ்சாத வீரசைவ வ்ரதத்தை யநுஷ்டிப்பவர்; தெளிந்ததும் மஹத்வம் பொருந்தியதுமாகிய தொழிலையுடையவர்; சிவஞானச் செல்வத்தையுடையவர்.

(வி-ரை.) அருட்கடலாதலால் சிவபெருமானை அருளாளன் என்றார். அகப்பூசையென்றது அந்தரங்க (மானஸ) பூஜையாகிய ப்ராணலிங்கபூஜையை. புறப்பூசையென்றது பஹிரங்க பூஜையாகிய இஷ்டலிங்கபூஜையை. (உ)

முகமாய மிடுந்திலக முட்குல்லாக் கத்திரிகை
வெகுஞாளி வாய்க்கட்டு விழிக்கட்டு வீசுமணை
லகமேயோர் நாக்கட்டங் கவர்கண்கட் டருஞ்சொக்குப்
புகவோட்டு நாராசம் போடுகல்லுப் பொறிவண்டு.

(ப - ரை.) முகம் மாயம் - (கண்டவர் தமது) முகம் காணுமைக்காக, இடும்-(நெற்றியில்) வைக்கின்ற, திலகம்-மைப்பொட்டும், முள் குல்லா-(தம்மைக்காத்தற்குத் தலையிலிடுகின்ற) முட்கள் செறிந்த குல்லாவும், கத்திரிகை - கத்திரிக்கோலும், வெகு - அநேகமான, ஞாளி-வேட்டைநாய்களின், வாய் - வாய்களை, கட்டு - கட்டும் பொருட்டும், விழி - கண்களை, கட்டு - கட்டும் பொருட்டும், வீசு - தெளித்தற்குரிய, மணல்-மணலும், அகம் மேயோர் - வீட்டிலிருப்பவர்களின், நா-நாக்களை, கட்டு-கட்டும் பொருட்டும், அங்கு அவர் - அவ்விடத்திலிருப்பவர்களின், கண் - கண்களை, கட்டு-கட்டும் பொருட்டும் (உபயோகித்தற்குரிய), அரு-அருமையாகிய, சொக்கு - சொக்குப்பொடியும்,புக-(உடலில்) நுழையும்படி, ஓட்டும்-செலுத்தற்குரிய, நாராசம்-அம்புகளும், போடு- எறிதற்குரிய, கல்லு-கற்களும், பொறி-பிடுங்குதற்குரிய, வண்டு-வண்டுகளும், எ-று.

(பொ - ரை.) கண்டவர் தமது முகம் காணுமைக்காக நெற்றியில் வைக்கின்ற மைப்பொட்டும், தம்மைக் காத்தற்குத் தலையிடுகின்ற முட்கள் செறிந்த குல்லாவும், கத்திரிக்கோலும், அநேகமான வேட்டை நாய்களின் வாய்களைக் கட்டும்பொருட்டும், கண்களைக் கட்டும்பொருட்டும், தெளித்தற்குரிய மணலும், வீட்டிலிருப்பவர்களின் நாக்களைக் கட்டும்பொருட்டும், கண்களைக் கட்டும்பொருட்டும் உபயோகித்தற்குரிய அருமையாகிய சொக்குப்பொடியும், உடலில் நுழையும்படிச் செலுத்தற்குரிய அம்புகளும், எறிதற்குரிய கற்களும், பிடுங்குதற்குரிய வண்டுகளும்.

(வி - ரை.) நா-ஆகுபெயர். சொக்குதல்- மயங்குதல். நாராசம்-இருப்புச்சலாகையெனினுமாம். (ங)

கரியவுண்டை கரிக்கலசங் காராடை துறட்டுக்கோ
லரியபொரு டெரியவிழி யஞ்சனமேல் வழுக்கெண்ணெய்
யுருவுபடை யிவைமுதல்கொண் டோரடிவார்ச் செருப்பணிந்து
மருவுகன்னக் கோல்கொண்டு வாய்த்தசகு னங்கண்டு.

(ப - ரை.) கரிய - கறுத்த, உண்டை - நூலுருண்டையும், கரிக் கலசம் - கரித்தோண்டியும், கார் ஆடை-கரிய துணியும், துறட்டுக்கோல்- துறட்டுத்தடியும், அரிய-கிடைத்தற்கரிதாகிய, பொருள்-நிதியை, தெரிய-பார்க்கும்பொருட்டு, விழியஞ்சனம்-கண்மையும், மேல்-(உடம்பின்)மீது, வழுக்கு எண்ணெய்-சறுக்கெண்ணெயும், உருவு-உருவிய, படை-கத்தியும் (ஆகிய), இவை முதல்-இவை முதலானவற்றை, கொண்டு-எடுத்துக்கொண்டு, ஓர் - ஒரு, அடி-அடிடையும், வார் - வாருடைய, செருப்பு-பாதரக்ஷையை, அணிந்து-தொடுத்து, மருவு - பொருத்தமான, கன்னக்கோல் - கன்னக்கோலையும்,கொண்டு-எடுத்துக்கொண்டு, வாய்த்த - வெற்றியடைதற்குரிய, சகுனம்-சுபசகுனங்களையும், கண்டு-பார்த்துக்கொண்டு, எ-று.

(போ - ரை.) சுறுத்த நூலுருண்டையும், கரித்தோண்டியும், கரிய துணியும், துறட்டுத்தடியும், கிடைத்தற்கரிதாகிய நிதியைப் பார்க்கும் பொருட்டு கண் மையும், உடம்பின்மீது சுறுக்கெண்ணெயும், உருவிய கத்தியுமாகிய இவை முதலானவற்றை யெடுத்துக்கொண்டு, ஒரு அட்டையும் வாருமுடைய பாதரக்ஷையைத் தொடுத்து, பொருத்தமான கன்னக்கோலையும் எடுத்துக்கொண்டு, வெற்றியடைதற்குரிய சுபசகுனங்களையும் பார்த்துக்கொண்டு. (ச)

அணியுமிகு செல்வமுள்ளோ ரகமூலை மறைவறிந்து
தணியிருள்போய் நிலக்கன்னஞ் சுவர்க்கன்னந் தாழுதறத்
துணியுமிவை யாற்சென்றுட் சூலியன்பர் களைக்காணிற்
பணியுமுறை யாற்பணிந்து பரவிமற்றுந் திரும்பியே.

(ப - ரை.) அணியும்-ஆபரணங்களையும், மிகு-மிகுந்த, செல்வம் - பொருள்களையும், உள்ளோர்-உடைய சீமான்களுடைய, அகம்-வீடுகளிலுள்ள, மூலைமறைவு-மூடுக்காகிய ஒதுக்கிடங்களை, அறிந்து - தெரிந்துகொண்டு, தணி-நிறைந்த, இருள்-இருட்டில், போய்-சென்று, நிலக்கன்னம்-பூமியிற் கன்னமிடுவதும், சுவர்க்கன்னம்-சுவற்றிற் கன்னமிடுவதும், உதற-அசைத்த மாத்திரத்தில், தாழ்-பூட்டு, துணியும்-திறந்துகொள்வதும் (ஆகிய), இவையால் - இவற்றின் வழிகளால், உள் சென்று - உள்ளே நுழைந்து,சூலி யன்பர்களை-சிவபக்தர்களை, காணில்-பார்த்தால், பணியும் - வணங்குதற்குரிய,முறையால்-விதிப்படி, பணிந்து-வணங்கி, பரவி-துதித்து, மற்றும்-மேலும், திரும்பி-மீண்டு வந்து, எ-று.

(போ-ரை.) ஆபரணங்களையும், மிகுந்த பொருள்களையுமுடைய சீமான்களுடைய வீடுகளிலுள்ள முடுக்காகிய ஒதுக்கிடங்களைத் தெரிந்துகொண்டு, நிறைந்த யிருட்டிற் சென்று, பூமியிற் கன்னமிடுவதும், சுவற்றிற் கன்னமிடுவதும், அசைத்த மாத்திரத்தில் பூட்டு திறந்துகொள்வதுமாகிய இவற்றின் வழிகளால் உள்ளே நுழைந்து, சிவபக்தர்களைப் பார்த்தால் வணங்குதற்குரிய விதிப்படி வணங்கித் துதித்து, மேலும் மீண்டு வந்து.

(வி - ரை.) சூலாயுதத்தையுடையவனாதலால் சிவபெருமானைச் சூலியென்றார்.

அல்லாத பவிகண்மனை யடைந்தவரி லடைந்தபொரு
ளெல்லாங்கைக் கொண்டேகி யீசனன்பர்க் கினிதளித்தே
நல்லாவ லாற்பணிந்து நயந்தேத்து நாளினலம்
வல்லாராந் தபோதனர்கள் போதவர வணங்கியே.

(ப-ரை.) அல்லாத - வீரசைவர்களல்லாத, பவிகள்-பவிஜனங்களுடைய, மனை-வீடுகளில், அடைந்து-சென்று, அவர்-அவர்களுடைய, இல் அடைந்த-வீடுகளிலுள்ள, பொருள் எல்லாம்-செல்வமெல்லாவற்றையும், கைக்கொண்டு-வாரிக்கொண்டு, ஏகி-போய், ஈசன் அன்பர்க்கு-சிவபக்தர்களுக்கு, இனிது-சந்தோஷத்துடன், அளித்து-கொடுத்து, நல்-சிறந்த, ஆவலால்-பக்தியுடன், பணிந்து-வணங்கி, நயந்து-விரும்பி, ஏத்தும்-துதிக்கின்ற, நாளில்-காலத்தில், நலம்-வேதாகமசாத்திரத் திறமையில், வல்லார் ஆம்-வல்லவர்களாகிய, தபோதனர்கள்-ஜங்கமமூர்த்திகள், போத - மிகுதியாக, வர-எழுந்தருளுதலும், வணங்கி-(ஸாஷ்டாங்கமாக) பணிந்து, எ-று.

(பொ-ரை.) வீரசைவர்களல்லாத பவிஜனங்களுடைய வீடுகளிற் சென்று அவர்களுடைய வீடுகளிலுள்ள செல்வமெல்லாவற்றையும் வாரிக்கொண்டுபோய், சிவபக்தர்களுக்குச் சந்தோஷத்துடன் கொடுத்து, சிறந்த பக்தியுடன் வணங்கி, விரும்பித் துதிக்கின்ற காலத்தில், வேதாகம சாத்திரத்திறமையில் வல்லவர்களாகிய ஜங்கமமூர்த்திகள் மிகுதியாக எழுந்தருளுதலும், ஸாஷ்டாங்கமாகப் பணிந்து. (௬)

இருட்கன்ன மிடுவதென்ன விப்பகலே விச்சலனிற்
பொருட்கன்ன மிடுவமெனப் பொருந்தியநன் மனத்தராய்
வரத்தன்பர் பிரமையர் மறுகில்வர வசவேச
ரருட்கண்ணாற் கண்டுபணிந் தஞ்சலித்து நின்றளவில்.

(ப-ரை.) இருள்-இருட்டில், கன்னம் இடுவது-கன்னம் வைப்பதனாலுண்டாகின்ற பயன், என்ன-யாது, இ-இந்த, பகலே-பகற்பொழுதிலேயே, விச்சலன்-விஜ்ஜலராஜனுடைய, இல்-அரண்மனையிலுள்ள, பொருள்-பொக்கிஷச் சாலையில், கன்னம் இடுவம்-கன்னம் வைப்போம், என்ன-என்று நிச்சயித்து, பொருந்திய - இசைந்த, நல் மனத்தர் ஆய்-பூர்ண மனத்தையுடையவராகி, வரத்து-மேன்மையுடைய, அன்பர்-சிவபக்தராகிய, பிரமையர்-கன்னப்ரஹ்மையர், மறுகில் - தெருவில், வர - வருதலும், வசவேசர் - வசவண்ணர், அருட்கண்ணால் - க்ருபாகடாக்ஷத்துடன், கண்டு-பார்த்து, பணிந்து-ஸாஷ்டாங்கமாக வணங்கி, அஞ்சலித்து-கும்பிட்டு, நின்ற அளவில் - நின்ற மாத்திரத்தில், எ - று.

(பொ-ரை.) இருட்டில் கன்னம் வைப்பதனாலுண்டாகின்ற பயன் யாது? இந்தப் பகற்பொழுதிலேயே விஜ்ஜலராஜனுடைய அரண்மனையிலுள்ள பொக்கிஷச்சாலையில் கன்னம் வைப்போமென்று நிச்சயித்து, இசைந்த பூர்ணமனத்தையுடையவராகி மேன்மையுடைய சிவபக்தராகிய கன்னப்ரஹ்மையர் தெருவில் வருதலும், வசவண்ணர் க்ருபாகடாக்ஷத்துடன் பார்த்து, ஸாஷ்டாங்கமாக வணங்கிக் கும்பிட்டு நின்ற மாத்திரத்தில். (எ)

நந்திகளை யுறநோக்கி நகைத்தின்று பகற்கன்னம்
பிந்தலின்றி யிடவேண்டும் பிடிகன்னக் கோலைநீ
வந்தரசன் பண்டார மனைக்காட்டு வசவவெனத்
தந்தருமஞ் சங்கமச்சொற் றவறாமை யாதலால்.

(ப-ரை.) நந்திகளை-வசவண்ணரை, உற நோக்கி-உற்றுப்பார்த்து, நகைத்து-சிரித்து, இன்று-இப்போது, பிந்தல் இன்றி-பின்வாங்காமல், பகல்-பகற்பொழுதிலேயே, கன்னம்—, இடவேண்டும் - வைக்கவேண்டும், வசவ - வசவண்ணனே, கன்னக் கோலை—, பிடி-பிடித்துக்கொள்வாய், நீ—, வந்து-(என்னுடன்) சென்று, அரசன்-அரசனுடைய, பண்டார மனை-பொக்கிஷச்சாலையை, காட்டு-காண்பிப்பாய், என்ன-என்று கேட்டலும், தம் - தமது, தருமம் - ஒழுக்கமாவது, சங்கமர் - ஜங்கமமூர்த்திகளுடைய, சொல் - திருவாக்கை, தவறாமை-கடவாமையாம், ஆதலால் - ஆகையால், எ-று.

(பொ-ரை.) வசவண்ணரை உற்றுப் பார்த்து, சிரித்து, இப்போது பின்வாங்காமல் பகற்பொழுதிலேயே கன்னம் வைக்கவேண்டும்; வசவண்ணனே! கன்னக் கோலைப் பிடித்துக்கொள்வாய்; நீ என்னுடன் சென்று அரசனுடைய பொக்கிஷச் சாலையைக் காண்பிப்பாயென்று கேட்டலும், தமது ஒழுக்கமாவது ஜங்கமமூர்த்திகளுடைய திருவாக்கைக் கடவாமையாம்; ஆகையால். (அ)

முறைமைவழு விதுவென்று மொழியாமற் பிரமையரை
யிறைமனையிற் கொடுசென்றங் கிருநிதிய பண்டார
நிறைமனையீ தெனக்காட்டி நீடுகன்னக் கோலுமளித்
தறநெறியாம் வசவேச ரகன்றரச னருகணைந்தார்.

(ப-ரை.) இது-இந்தக் கன்னத் தொழிலானது, முறைமை - விதிமார்க்கமோ, வழுவு-(அல்லது) விலக்குமார்க்கமோ, என்று—, மொழியாமல்-பதில் சொல்லாமல், பிரமையரை - கன்னப்ரஹ்மையரை, இறை - விஜ்ஜலராஜனுடைய, மனையில்-அரண்மனையில், கொடுசென்று - கொண்டுபோய், அங்கு - அவ்விடத்தில், இரு - பெரிய, நிதியம்-செல்வம், நிறை - நிரம்பிய, பண்டார மனை - பொக்கிஷச்சாலை, ஈது-இது, என்ன-என்று, காட்டி - காண்பித்து, நீடு-நிலைபெற்ற, கன்னக்கோலும் - கன்னக்கோலையும், அளித்து-கொடுத்துவிட்டு, அறநெறி ஆம்-புண்யமார்க்கத்தையுடைய, வசவேசர்-வசவண்ணர், அகன்று-நீங்கி, அரசன் - விஜ்ஜலராஜன், அருகு சமீபத்தில், அணைந்தார்-எழுந்தருளினார், எ-று.

(பொ-ரை.) இந்தக் கன்னத் தொழிலானது விதிமார்க்கமோ? அல்லது விலக்குமார்க்கமோ? என்று பதில் சொல்லாமல், கன்னப்ரஹ்மையரை விஜ்ஜலராஜனுடைய அரண்மனையிற் கொண்டுபோய், அவ்விடத்தில் பெருஞ் செல்வம் நிரம்பிய பொக்கிஷச்சாலை இதுவென்று காண்பித்து, நிலைபெற்ற கன்னக்கோலையும் கொடுத்துவிட்டு, புண்யமார்க்கத்தையுடைய வசவண்ணர் நீங்கி, விஜ்ஜலராஜன் சமீபத்தில் எழுந்தருளினார்.

(வி-ரை.) முறையைவழு - நீதிதவறிய செயல் எனினுமாம். (௬)

வெளிக்கன்ன மிடிலென்ன வினையாமோ வென்றும
லளித்தெம்மை யாண்டதவ ரரும்பசியா லிளைப்பரென்று
வொளித்தங்கோர் புடையிருந் தொண்கோல்கொ ணூக்கத்தாற்
றளிர்ச்செங்கை வருந்தவுற்றுத் தந்தொழிலைச் சாதிப்பார்.

(ப-ரை.) வெளி-வெளிப்படையாய், கன்னம்—, இடில்-வைத்தால், என்ன - யாது, வினை-பொல்லாங்கு, ஆமோ-நேரிடுமோ, என்னாமல்-என்று சற்றும் யோசியாமல், எம்மை-நம்மை, அளித்து-காப்பாற்றி, ஆண்ட-ஆண்டருள்கின்ற, தவர்-ஜங்கமமூர்த்திகள், அரு - கொடிய, பசியால் - பசியினால், இளைப்பர் - மெலிவடைவார்கள், என்று-என்று சிந்தித்து, அங்கு-அவ்விடத்தில், ஓர்-ஒரு, புடை-பக்கத்தில், ஒளித்து இருந்து-பதுங்கி யிருந்து, ஒள்-மேன்மையாகிய, கோல்கொண்டு-கன்னக்கோலினால், ஊக்கத்தால்-உற்சாகத்துடன், தளிர்-துளிர்போன்ற, செம்-அழகிய, கை - திருக்கரங்கள், வருந்த - நோவ, உற்று-பெற்று, தம்-தமது, தொழிலை-வேலையை, சாதிப்பார்-முடிப்பாராயினர், எ-று.

(பொ-ரை.) வெளிப்படையாய்க் கன்னம் வைத்தால் யாது பொல்லாங்கு நேரிடுமோ? என்று சற்றும் யோசியாமல், நம்மைக் காப்பாற்றி யாண்டருள்கின்ற ஜங்கம மூர்த்திகள் கொடிய பசியினால் மெலிவடைவார்களென்று சிந்தித்து, அவ்விடத்தில் ஒரு பக்கத்தில் பதுங்கி யிருந்து, மேன்மையாகிய கன்னக்கோலினால் உற்சாகத்துடன் துளிர் போன்ற அழகிய திருக்கரங்கள் நோவப்பெற்று, தமது வேலையை முடிப்பாராயினர்.

நிலக்கன்ன மிடும்போதி னிதிக்குவையாய் நிறைந்திடவுங்
கலக்கங்க ளில்லாதார் கன்னத்தா லுட்புகுந்தே
யிலக்கஞ்செய் பொற்பெட்டி யெடுத்துக் கொண்டின்பத்தா
னலத்தன்பர் பிரமைய ரவ்வாயி னண்ணுங்கால்,

(ப-ரை.) நிலம்-பூமியில், கன்னம் இடும்-கன்னம் வைக்கின்ற, போதில்-காலத்தில், நிதி-பொன், குவையாய்-குவியலாய், நிறைந்திடவும்-நிரம்பவும், கலக்கங்கள்-துன்பங்கள், இல்லாதார்-இல்லாதவராகிய கன்னப்ப்ரஹ்மையர், கன்னத்தால்-கன்னம் வைத்த வழியாகவே, உள்-உள்ளே, புகுந்து-நுழைந்து, இலக்கம் செய்-லக்ஷக்கணக்குள்ள, பொன்-பொற்காசுகள் நிறைந்திருக்கின்ற, பெட்டி-பெட்டியை, எடுத்துக்கொண்டு-தூக்கிக்கொண்டு, இன்பத்தால்-சந்தோஷத்துடன், நலத்து-நன்மையடைகின்ற, அன்பர்-சிவபக்தராகிய, பிரமையர் - கன்னப்ப்ரஹ்மையர், அ - அந்த, வாயில்-(அரண்மனை) வாசலை, நண்ணுங்கால்-அடையுங்காலத்தில், எ-று.

(பொ-ரை.) பூமியில் கன்னம் வைக்கின்ற காலத்தில் பொன் குவியலால் நிரம்பவும், துன்பங்களில்லாதவராகிய கன்னப்ப்ரஹ்மையர் கன்னம் வைத்த வழியாகவே உள்ளே நுழைந்து, லக்ஷக்கணக்குள்ள பொற்காசுகள் நிறைந்திருக்கின்ற பெட்டியைத் தூக்கிக்கொண்டு, சந்தோஷத்துடன் நன்மையடைகின்ற சிவபக்தராகிய கன்னப்ப்ரஹ்மையர் அந்த அரண்மனை வாசலை யடையுங் காலத்தில். (கக)

துய்யசெய்கை வசவேசர் சொற்சித்தி தோற்றற்கோ
வையர்கன்னப் பிரமைய ரரும்பெருமை விளங்கற்கோ
செய்யகன்ன மண்டனமாய்ச் சிவனருளாற் றேவர்க்கு
மெய்யறியக் காண்பரியார் காவலர்முன் வெளிப்பட்டார்.

(ப-ரை.) துய்ய - பரிசுத்தமாகிய, செய்கை - கார்யங்களையே செய்கின்ற, வசவேசர்-வசவண்ணரது, சொல் சித்தி-வாக்கு சித்தியானது, தோற்றற்கோ-(உலகில்) விளங்கும்பொருட்டோ, ஐயர் - ஜங்கமமூர்த்திகளாகிய, கன்னப்பிரமையர் - கன்னப்ரஹ்மையரது, அரு - சிறந்த, பெருமை-மஹத்வம், விளங்கற்கோ - விளங்கும் பொருட்டோ, செய்ய-மேன்மையாகிய, கன்னம்-கன்னக்கோலினுலிழுத்த, மண் - மண்ணெல்லாம், சிவன் அருளால் - சிவாநுக்ரஹத்தினுல், தனம் ஆய் - பொன்னுகி, தேவர்க்கும்-(ப்ரஹ்மாதி) தேவர்களுக்கும், மெய்-திருமேனியை, அறிய-தேடி,காண்பு அரியார் - பார்க்கமுடியாதவராகிய கன்னப்ரஹ்மையர், காவலர் முன் - வாயில் காப்போர்களுக்கெதிரே, வெளிப்பட்டார்-காணப்பட்டார், எ-று.

(பொ-ரை.) பரிசுத்தமாகிய கார்யங்களையே செய்கின்ற வசவண்ணரது வாக்கு சித்தியானது உலகில் விளங்கும்பொருட்டோ? ஜங்கமமூர்த்திகளாகிய கன்னப்ரஹ்மையரது சிறந்த மஹத்வமானது விளங்கும்பொருட்டோ? மேன்மையாகிய கன்னக்கோலினுலிழுத்த மண்ணெல்லாம் சிவாநுக்ரஹத்தினுல் பொன்னுகி, ப்ரஹ்மாதி தேவர்களுக்கும் திருமேனியைத் தேடிப் பார்க்க முடியாதவராகிய கன்னப்ரஹ்மையர் வாயில் காப்போர்களுக்கெதிரே காணப்பட்டார். (க௨)

விச்சலன்முன் னறிவிக்க மிகவெகுண்டு வசவேச
னச்சுறவன் சிக்கினனே நன்றெனமீ சையைமுறுக்கித்
தைச்சுறவெவ் விதழ்கவ்வித் தக்கதிது தன்னைநம்பி
வைச்சநமக் கிரண்டென்னத் தண்டநாயகன் மதித்தான்.

(ப-ரை.) விச்சலன் முன் - விஜ்ஜலராஜன் முன்னர், அறிவிக்க-(காவலாளர்கள் நடந்த செய்தியை) தெரிவித்தலும், மிக-மிகவும், வெகுண்டு-கோவித்து, வசவேசன்-வசவண்ணன், நச்சு உற - சிநேகங்கொண்டிருக்கின்ற, அவன்-அந்தக் கள்ளன், சிக்கினனே - அகப்பட்டானே, நன்று-நல்லது, என்ன - என்று சொல்லி, மீசையை

முறுக்கி—, தைச்சு உற-தைக்கும்படி, வெம்-வெப்பமாகிய, இதழ்-உதட்டை, கவ்வி-கடித்து, இது-இந்தக் காரியம், தக்கது-(செய்ய) தகுந்ததே. தன்னை—, நம்பி வைச்ச-நம்பி (உத்தியோகத்தில் அமர்த்தி) வைத்த, நமக்கு-நமக்கே, இரண்டு - த்ரோஹம், உன்ன-நினைக்க, தண்டநாயகன் - வசவண்ணன், மதித்தான்-நிச்சயித்தான். எ-று.

(பொ-ரை.) விஜ்ஜலராஜன் முன்னர் காவலாளர்கள் நடந்த செய்தியைத் தெரிவித்தலும், மிகவும் கோவித்து, வசவண்ணன் சிநேகங் கொண்டிருக்கின்ற அந்தக் கள்ளன் அகப்பட்டானோ? நல்லதென்று சொல்லி, மீசையை முறுக்கித் தைக்கும்படி வெப்பமாகிய உதட்டைக்கடித்து, இந்தக் காரியஞ் செய்யத் தகுந்ததே; தன்னை நம்பி உத்தியோகத்தி லமர்த்திவைத்த எமக்கே த்ரோஹம் நினைக்க வசவண்ணன் நிச்சயித்தான். (கரு)

சிறியனென்ன வன்றுதன்னைத் தேராமன் மன்னித்த
முறைமைநன்றி தனையாற்றின் முழுதுமின்று கரைத்தனனென
றறியவொன்றிப் பகற்கன்ன மாண்டியைக்கொண் டிடுவித்தான்
குறியவனுக் கிதுவென்ன காட்டினனங் குடிகேடன்.

(ப-ரை.) சிறியன்-அற்பன், என்ன-என்று, அன்று - அப்போதே, தன்னை—, தேராமல்-விசாரிக்காமல், மன்னித்த-பொறுத்த, முறைமை-ஒழுங்காகிய, நன்றிதனை-உபகாரத்தை, முழுதும் - முற்றிலும், ஆற்றின்-நதியில், இன்று-இப்போது, கரைத்தனன்-(புளியைக்கரைத்தாற்போல்) கரைத்தான். என்று-என்று கூறி, அறிய-(உலகத்தார்) அறியும்படி, ஒன்றி - உடன்பட்டு, ஆண்டியைக்கொண்டு - ஜங்கமனால், பகற்கன்னம்-பகற்பொழுதிலேயே கன்னம், இடுவித்தான்-வைக்கச்செய்தான், அவனுக்கு-அந்த ஜங்கமனுக்கு, இது குறி என்ன-நமது இந்தப் பொக்கிஷச் சாலையைத் தான் கன்னமிடுதற்கு விரும்பியதென்று, நம்-நமது, குடிகேடன் - துஷ்டன், காட்டினன்-காண்பித்தான், எ-று.

(பொ-ரை.) அற்பனென்று அப்போதே தன்னை விசாரிக்காமல் பொறுத்த ஒழுங்காகிய உபகாரத்தை முற்றிலும் நதியில் புளியைக் கரைத்தாற்போற் கரைத்தானென்று கூறி, உலகத்தார் அறியும்படி உடன்பட்டு ஜங்கமனால் பகற்பொழுதிலேயே கன்னம் வைக்கச்செய்தான்; அந்த ஜங்கமனுக்கு இந்தப் பொக்கிஷச்சாலையைத் தான் கன்னமிடுதற்கு விரும்பியதென்று நமது துஷ்டன் காண்பித்தான்.

(வி-ரை.) குடிகேடன்-குடும்பநாசகன் எனினுமாம். (கசு)

தன்னகத்திற் கினியகள்வன் றனக்குத்தான் கொடுப்பதலான்
மன்னனகப் பொருள்கவர வழிகாட்டும் வகையென்ன
வென்னுயிர்க்கு மினியேத மெண்ணுவனு மென்றிகழ்ந்து
கன்னமிடு மவ்வாயிற் கடுகவந்து பார்க்குதலும்.

(ப-ரை.) தன்-தனது, அகத்திற்கு-மனத்திற்கு, இனிய-பிரியமுள்ள, கள்வன்தனக்கு-கள்ளனுக்கு, தான்—, கொடுப்பது-தருவதே, அலால்-அல்லாமல், மன்னன்அகப்பொருள் - ராஜக்ருஹ த்ரவ்யங்களை, கவர-திருடும்படி, வழி - தடம், காட்டும் வகை-காண்பித்தற்குக் காரணம், என்ன - யாது, என் - எனது, உயிர்க்கும்—, இனி - இப்போது, ஏதம்-தீங்கு, எண்ணுவன்-நினைப்பவன், ஆம்-ஆவான், என்று—, இகழ்ந்து-தூஷித்து, கன்னம்—, இடும்-வைத்திருக்கின்ற, அ-அந்த, வாயில்-இடத்தை, கடுக-சீக்கிரமாக, வந்து-சென்று, பார்க்குதலும்-பார்த்தலும், எ-று.

(போ-ரை.) தனது மனத்திற்குப் பிரியமுள்ள கள்ளனுக்குத் தான் தருவதேயல்லாமல் ராஜக்ருஹ த்ரவ்யங்களைத் திருடும்படித் தடம் காண்பித்தற்குக் காரணம் யாது? எனது உயிர்க்கும் இப்போது தீங்கு நினைப்பவனுவானென்று தூஷித்து, கன்னம் வைத்திருக்கின்ற இடத்தைச் சீக்கிரமாகச் சென்று பார்த்தலும்.

(வி - ரை.) எண்ணுவனும் - நினைப்பான் போலும் எனினுமாம். (கரு)

கன்னத்தால் வாங்கியமண் கற்கனக மணியாக
மின்னத்தான் விச்சலனும் வெகுளிவிட்டு விரும்பியவண்
டன்னத்த விரன்மூக்குத் தனின்வைத்தித் தனமேது
முன்னுற்ற கள்வனெவன் மொழியென்ன முறையென்றான்.

(ப - ரை.) கன்னத்தால்-கன்னக்கோலினால், வாங்கிய-தோண்டின, மண்-மண்ணும், கல்-கற்களும்(எல்லாம்), கனகம் ஆக-பொன்னாகவும், மணி ஆக-ரத்னங்களாகவும், மின்ன-பிரகாசித்தலும், விச்சலனும் - விஜ்ஜலராஜனும், வெகுளி - கோவம், விட்டு-தணிந்து, விரும்பி-நேசத்துடன், அவண்-அவ்விடத்தில், தன்-தனது, அத்தம்-கை, விரல்-விரலை,மூக்குத்தன்னின்-மூக்கின்(மேல்),வைத்து-வைத்து(ஆச்சரியமடைந்து), இ-இந்த, தனம்-பொருள் வருதற்குக் காரணம், ஏது-யாது, முன்-எதிரே, உற்ற-நிற்கின்ற, கள்வன்-கள்ளன், எவன்-யார், முறை-நடந்த செய்தி, என்ன-யாது, மொழி-சொல்வாய், என்றான்-என்று கேட்டான், எ-று.

(போ - ரை.) கன்னக்கோலினால் தோண்டின மண்ணும், கற்களுமெல்லாம் பொன்னாகவும், ரத்னங்களாகவும் பிரகாசித்தலும், விஜ்ஜலராஜனும் கோவம் தணிந்து, நேசத்துடன் அவ்விடத்தில் தனது கைவிரலை மூக்கின்மேல் வைத்து, ஆச்சரியமடைந்து, இந்தப் பொருள் வருதற்குக் காரணம் யாது? எதிரே நிற்கின்ற கள்ளன் யார்? நடந்த செய்தி யாது? சொல்வாயென்று கேட்டலும். (கசா)

நிருபன்முனம் வசவேசர் நிகழ்த்துவார் பிரமையர்
பெருமையினை யானறிந்து பேசினல்லா னரர்க்கடங்கா
தருளுடையா ரிவர்பதத்தி லமரர்தரு பிறப்பதிவர்
திருவிழிக ளிரண்டன்றோ சுரதேனு செனிக்குமிடம்.

(ப-ரை.) நிருபன்-விஜ்ஜலராஜன், முன்னம்-முன்னர், வசவேசர்-வசவண்ணர், நிகழ்த்துவார்-சொல்வாராயினர் (எவ்வாறெனின்), பிரமையர்-கன்னப்ரஹ்மையரது, பெருமையினை-மகிமையை, யான்-நான், அறிந்து-உணர்ந்து, பேசின்-சொன்னாலே, அல்லால்-அல்லாமல்,நரர்க்கு-மனிதர்கள் சொல்வதற்கு, அடங்காது-முடியாது,அருளுடையார்-க்ருபாமூர்த்தியாகிய, இவர்-இவருடைய, பதத்தில்-ஸ்ரீபாதங்களில், அன்றோ-அல்லவோ, அமரர் தரு-கல்பக வ்ருக்ஷம், பிறப்பது-உண்டாவது, இவர்-இவருடைய, திருவிழிகள் இரண்டு - இரண்டு திருக்கண்கள், அன்றோ-அல்லவோ, சுரதேனு-காமதேநு, செனிக்கும்-பிறக்கின்ற, இடம்-ஸ்தலமாயுள்ளது, எ-று.

(போ-ரை.) விஜ்ஜலராஜன் முன்னர் வசவண்ணர் சொல்வாராயினர்; எவ்வாறெனின்:—கன்னப்ரஹ்மையரது மகிமையை நான் உணர்ந்து சொன்னாலேயல்லாமல் மனிதர்கள் சொல்வதற்கு முடியாது; க்ருபாமூர்த்தியாகிய இவருடைய ஸ்ரீபாதங்களிலல்லவோ கல்பக வ்ருக்ஷமுண்டாவது? இவருடைய இரண்டு திருக்கண்களல்லவோ காமதேநு பிறக்கின்ற ஸ்தலமாயுள்ளது? (கஎ)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

இவரருட் சித்தத் தன்றோ வெண்ணிய தருங்கற் றோன்று
மிவர்கரப் பரிசத் தன்றோ பரிசவே திகள்வந் தெய்து
மிவர்பெருங் கருணை யன்றோ சித்திக ளீய வல்ல
திவர்கருத் துவப்பச் செய்தார்க் கெளிதுநன் முத்தி யின்பம்.

(ப-ரை.) இவர்-இவருடைய, அருள்-அன்புள்ள, சித்தத்து-மனத்தில், அன்றோ-அல்லவோ, எண்ணிய-நினைத்தவற்றை (எல்லாம்), தரும்-கொடுக்கவல்ல, கல்-சிந்தாமணி, தோன்றும்-உண்டாகும், இவர்-இவருடைய, கரப்பரிசத்து-ஸ்ரீஹஸ்தஸ்பரிஸத்தால், அன்றோ-அல்லவோ, பரிசவேதிகள்—, வந்து எய்தும் - வந்து சேரும், இவர்-இவருடைய, பெரு-மேன்மைபாகிய, கருணை-அன்பு, அன்றோ-அல்லவோ, சித்திகள்-அஷ்ட மஹாசித்திகளை, ஈய வல்லது-கொடுக்கக் கூடியது, இவர் - இவருடைய, கருத்து-மனம், உவப்ப-மகிழும்படி, செய்தார்க்கு-பணிவிடை பண்ணின பெரியோர்களுக்கு, நல்-சிறந்த, முத்தி யின்பம்-மோக்ஷாநந்தம், எளிது - லேசாகக் கிடைப்பது, எ-று.

(பொ-ரை.) இவருடைய அன்புள்ள மனத்திலல்லவோ நினைத்தவற்றையெல்லாம் கொடுக்கவல்ல சிந்தாமணி யுண்டாகும்? இவருடைய ஸ்ரீஹஸ்தஸ்பரிஸத்தாலல்லவோ பரிசவேதிகள் வந்து சேரும்? இவருடைய மேன்மையாகிய அன்பல்லவோ அஷ்ட மஹாசித்திகளைக் கொடுக்கக் கூடியது? இவருடைய மனம் மகிழும்படிப் பணிவிடை பண்ணின பெரியோர்களுக்குச் சிறந்த மோக்ஷாநந்தம் லேசாகக் கிடைப்பது. (௧௰)

இவர்நிலை கன்ன மிட்ட பொருளலா தெவையுங் கொள்ளார்
சிவனரு ளன்ப ரேது செய்யினுஞ் சிவனுக் கின்ப
மவமிவர் செய்தி யென்றிங் கறிவினிற் கொள்ளேல் வேந்தே
தவறல நித்த னன்பர் செய்வதே தரும மாகும்.

(ப-ரை.) இவர்-இவருடைய, நிலை-விரதமாவது, கன்னம் இட்ட-கன்னம் வைத்ததனாலுண்டாகிய, பொருள்-திரவியங்களே, அலாது-அல்லாமல், எவையும்-(வேறு) எந்தப் பொருள்களையும், கொள்ளார்-ஏற்றுக்கொள்ளமாட்டார், சிவன் அருள்-சிவாநுக்ரஹத்தையுடைய, அன்பர் - பக்தர்கள், ஏது-யாது, செய்யினும் - பண்ணினாலும், சிவனுக்கு-சிவபெருமானுக்கு, இன்பம்-சந்தோஷமாகும், இவர்-இவருடைய, செய்தி-செய்கை, அவம்-பயனற்றது, என்று—, இங்கு-இவ்விடத்தில், அறிவினில்-மனத்தில், கொள்ளேல்-வைக்காதே, வேந்தே-அரசனே, தவறு-குற்றம், அல—, நித்தன் அன்பர்-சிவபக்தர்கள், செய்வதே - பண்ணுகின்ற காரியங்களெல்லாமுமே, தருமம் - புண்யங்கள், ஆகும்—, எ-று.

(பொ-ரை.) இவருடைய விரதமாவது கன்னம் வைத்ததனாலுண்டாகிய திரவியங்களே யல்லாமல் வேறெந்தப் பொருள்களையும் ஏற்றுக்கொள்ளமாட்டார்; சிவாநுக்ரஹத்தையுடைய பக்தர்கள் யாது பண்ணினாலும் சிவனுக்குச் சந்தோஷமாகும்; இவருடைய செய்கை பயனற்றதென்று இவ்விடத்தில் மனத்தில் வைக்காதே; அரசனே! குற்றமல்ல; சிவபக்தர்கள் பண்ணுகின்ற காரியங்களெல்லாமுமே புண்யங்களாகும். (௧௧)

பாண்டவர் சூதாற் பூமி பற்றற்றார் மூர்க்கர் முத்தி
பூண்டனர் வேட்டை யாலே தசரதன் பொல்லாங் குற்றான்
வேண்டருங் கயிலை பெற்றார் கண்ணப்பர் வேந்தர் மின்னார்
நீண்டமா மயலாற் கெட்டார் சுந்தரர் நித்தர்க் கானார்.

(ப-ரை.) சூதால்-சூதாட்டத்தினால், பாண்டவர்-பாண்டுபுத்ரர்கள், பூமிராஜ்யத்தை, பற்று அற்றார் - இழந்தார்கள், மூர்க்கர்-மூர்க்கநாயனார், முத்தி - மோக்ஷத்தை, பூண்டனர் - அடைந்தார், வேட்டையாலே-வேட்டையாடுவதனால், தசரதன் - தசரத மஹாராஜன், பொல்லாங்கு உற்றான் - கெட்டுப்போனான், கண்ணப்பர் - கண்ணப்ப நாயனார், வேண்டு அரு - விரும்புதற்கரிய, கயிலை-ஸ்ரீமஹாகைலாஸத்தை, பெற்றார்-அடைந்தார், நீண்ட மா-மிகவும் அதிகப்பட்ட, மின்னார் மயலால்-ஸ்த்ரீமோஹத்தால், வேந்தர்-அரசர்கள், கெட்டார் - அழிந்தார்கள், சுந்தரர்-சுந்தரமூர்த்தி சுவாமிகள், நித்தர்க்கு-சிவபெருமானுக்கு, ஆனார்-தோழரானார், எ-று.

(பொ-ரை.) சூதாட்டத்தினால் பாண்டவர்கள் ராஜ்யத்தை யிழந்தார்கள், மூர்க்கநாயனார் மோக்ஷத்தை யடைந்தார்; வேட்டையாடுவதனால் தசரத மஹாராஜன் கெட்டுப்போனான், கண்ணப்பநாயனார் விரும்புதற்கரிய ஸ்ரீமஹாகைலாஸத்தை யடைந்தார்; மிகவும் அதிகப்பட்ட ஸ்த்ரீ மோஹத்தால் அரசர்கள் அழிந்தார்கள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமானுக்குத் தோழரானார். (௨௦)

கொன்றுமாண் டவத்தோ னுற்றான் கொடுங்கழுத் தண்டியார்தா
நன்றருட் பெற்றார் பொய்யா னரகத்தைத் தருமன் பார்த்தான்
சென்றருட் கயிலை பெற்றார் சிறுத்தொண்டர் செய்ய வேந்த
ரொன்றினர் நரக மன்ன ருயர்ந்தனர் சேரர் சோழர்.

(ப-ரை.) கொன்று - கொன்றமையால், மாண் - மாட்சிமைபொருந்திய, தவத்தோன்-தவத்தையுடைய மாண்டவ்ய முநிவன், கொடு-கோரமாகிய, கழு-கழுமரம், உற்றான்-ஏறினான்; தண்டியார்தான்-சண்டேசநாயனாராகிய அந்த சிவபக்தர், நன்று-மேலாகிய, அருள் - சிவாநுக்ரஹத்தை, பெற்றார்-அடைந்தார், பொய்-பொய் பேசினமையால், தருமன்-தர்மராஜன், நரகத்தை-நரகலோகத்தை, பார்த்தான்-கண்டான், சிறுத்தொண்டர்-சிறுத்தொண்டநாயனார், சென்று-போய், அருள்-அநுக்ரஹஞ்செய்கின்ற,கயிலை-ஸ்ரீமஹாகைலாஸத்தை, பெற்றார்-அடைந்தார், செய்ய-மேன்மையாகிய, வேந்தர்-அரசர்கள், நரகம் - நரகலோகத்தை, ஒன்றினர் - அடைந்தார்கள், மன்னர் - அரசர்களாகிய, சேரர் சோழர்-சேர சோழர்கள், உயர்ந்தனர்-மேன்மை யடைந்தார்கள் எ-று.

(பொ-ரை.) கொன்றமையால் மாட்சிமைபொருந்திய தவத்தையுடைய மாண்டவ்யமுநிவன் கோரமாகிய கழுமரம்ஏறினான், சண்டேசநாயனாராகிய அந்த சிவபக்தர் மேலாகிய சிவாநுக்ரஹத்தையடைந்தார்; பொய் பேசினமையால் தர்மராஜன் நரகலோகத்தைக் கண்டான், சிறுத்தொண்ட நாயனார் போய் அநுக்ரஹஞ்செய்கின்ற ஸ்ரீமஹா கைலாஸத்தை யடைந்தார்; அரசர்கள் நரகலோகத்தை யடைந்தார்கள், அரசர்களாகிய சேரசோழர்கள் மேன்மை யடைந்தார்கள்.

(வி-ரை.) அரசர்கள் ராஜ்யாந்தரத்தில் நரகப்ராப்தியடையவர்களென்பது சாத்திரச் சம்மதமாதலின் வேந்தரொன்றினர் நரகமென்றார். சேரர் என்றது சேரமான் பெருமாணாயனாரை. சோழர் என்றது கரிகால் சோழனை. (௨௧)

வேகமாங் களவால் வீந்தான் சூத்திர வீர னென்போ
னாகவ வத்தி யத்த னச்சுநல் லானதானை
னுகையா லிவர்செய் மார்க்க மதுவுஞ்சன் மார்க்கமாகுந்
தோகைபோர் பாகர்க் காச்செய் யதன்பழுந் தூய்தாந் தன்மம்.

(ப-ரை.) வேகம் ஆம் - கடுமையான, களவால் - திருட்டுத்தனத்தால், சூத்திர வீரன்-சூத்ரவீரன், என்போன்-என்பவன், வீந்தான்-(சூலத்திலகப்பட்டு) மாண்டான்,

ஆகலவத்தி - ஆகலவத்தியென்பவன், அத்தன் - சிவபெருமான், நச்சும் - விரும்புதற்குரிய, நல் சிறந்த, ஆள்-தொண்டன், ஆனான்—, ஆகையால் - ஆதலால், இவர்-இந்தக் கன்னப்ராஹ்மையர், செய்-பண்ணுகின்ற, மார்க்கம் அதுவும் - செயலும், சன்மார்க்கமாகும்-தர்மநீதியாகும், தோகை-உமாதேவியாரை, ஓர்-ஒரு, பாகர்க்கா-பாகத்திலுடையவராகிய சிவபெருமான்பொருட்டு, செய்-பண்ணுகின்ற, அதன்மமும் - பாபகார்யமும், தூய்து ஆம்-பரிசுத்தமாகிய, தன்மம்-புண்யகார்யமாகும்.

(போ-ரை.) கடுமையான திருட்டுத்தனத்தால் சூத்ரவீரனென்பவன் சூலத்தில் அகப்பட்டு மாண்டான், ஆகலவத்தி யென்பவன் சிவபெருமான் விரும்புதற்குரிய சிறந்த தொண்டனானான்; ஆதலால் இந்தக் கன்னப்ராஹ்மையர் பண்ணுகின்ற செயலும் தர்மநீதியாகும்; உமாதேவியாரை யொருபாகத்திலுடையவராகிய சிவபெருமான் பொருட்டு பண்ணுகின்ற பாபகார்யமும் பரிசுத்தமாகிய புண்யகார்யமாகும்.

(வி-ரை.) இச்செய்யுளின் கருத்தினைத்தழுவிய சிவஞானசித்தியார்கூறுவதாவது:—

> அரனடிக் கன்பர் செய்யும் பாவமு மறம தாகும்
> பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
> வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி
> நரரினிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே. (௨௨)

> எனச்சொலுஞ் சிவாக மங்க ளிவரரி யயர்க்கு மிக்கார்
> நினைத்திவர் மடத்திற் செல்லுந் தவர்க்கிந்த நெறியா லன்ன
> மனத்தவர்க் கிதத்த நல்கி மாழைகள் மாண்ட காலை
> யனத்திடற் கன்ப ரல்லா ரகத்தினிவ் வாறு செய்வார்.

(ப-ரை.) என்ன-என்ற, சிவாகமங்கள்—, சொல்லும்-கூறுகிற்கும், இவர்—, அரி அயர்க்கும்-ப்ரஹ்ம விஷ்ணுக்களுக்கும், மிக்கார்-மேம்பட்டவர், நினைத்து - விரும்பி, இவர்-இவருடைய, மடத்தில்-திருமடத்தில், செல்லும்-எழுந்தருள்கின்ற, தவர்க்கு - ஜங்கமமூர்த்திகளுக்கு, இந்த—, நெறியால்-வழியால், அன்ன-அந்த, தவர்க்கு-ஜங்கம மூர்த்திகளுக்கு, அன்னம்-அமுதினையும், இதத்த -விரும்பியவற்றையும், நல்கி-கொடுத்து, மாழைகள் - பொருள்கள், மாண்டகாலை - செலவழிந்தபோது, அன்னம் - அமுது, இடற்கு-படைப்பதற்காக, அன்பர் அல்லார்-சிவபக்தர்களல்லாத பவிஜனங்களுடைய, அகத்தின்-வீடுகளில், இவ்வாறு-இப்படி, செய்வர்-பண்ணுவார், எ-று.

(போ-ரை.) என்று சிவாகமங்கள் கூறுகிற்கும்; இவர் ப்ரஹ்மவிஷ்ணுக்களுக்கும் மேம்பட்டவர்; விரும்பி இவருடைய திருமடத்தில் எழுந்தருள்கின்ற ஜங்கம மூர்த்திகளுக்கு இந்த வழியால் அந்த ஜங்கமமூர்த்திகளுக்கு அமுதினையும் விரும்பியவற்றையும் கொடுத்து, பொருள்கள் செலவழிந்த போது அமுது படைப்பதற்காக சிவபக்தர்களல்லாத பவிஜனங்களுடைய வீடுகளில் இப்படிப் பண்ணுவார்.

(வி - ரை.) அன்னமனத்தவர்க்கு என்பதை உருபு பிரித்துக் கூட்டி அன்னம் தவர் மனதுக்கு என்றனுவயித்து அமுதினையும் ஜங்கமமூர்த்திகள் மனத்தில் எனப் பொருட்கோடலு மொன்று. அனத்திடற்கு என்பதில் அன்னம் அத்து இடற்கு எனப் பிரித்து, அன்னம் அத்து எதுகை யின்பம் நோக்கி அனத்து எனக் குறுகியது; அத்து என்பது சாரியை. (௨௩)

> அத்தவ முடையா ரத்தர்க் கன்புற வீது செய்யுஞ்
> சுத்தரா மிவர்தாள் சேர்ந்த மண்ணெலாஞ் சொன்ன மாய்த்தில்
> வுத்தம ரிவ்வி டத்து முன்னைவாழ் விக்க வுற்றா
> ரித்தகை யிவர்க்கென் செல்வ மென்பவை யெளிதா மென்ன.

(ப-ரை.) அ-அந்த, தவம் உடையார்-விரதத்தையுடையவரும், அத்தர்க்கு-சிவபெருமானுக்கு, அன்பு உற-சந்தோஷத்துடன், ஈது-இந்தச் செய்கையை, செய்யும்-பண்ணுகின்ற, சுத்தர் ஆம்-பரிசுத்தருமாகிய, இவர்-இவருடைய, தாள்-திருவடிகள், சேர்ந்த-பட்ட, மண்—, எல்லாம்-முழுதும் சொன்னம்-பொன், ஆய்த்து - ஆயிற்று, இ - இந்த, உத்தமர் - பெரியவர், இவ்விடத்தும் - இவ்விடத்திலும், உன்னை—, வாழ்விக்க-வாழச்செய்ய, உற்றார்-எழுந்தருளினார், இ-இந்த, தகை-மேன்மையுடைய,

இவர்க்கு—, என்-மதித்தற்குரிய, செல்வம் என்பவை-அறம், பொருள், இன்பம், வீடு என்கின்ற சதுர்வித புருஷார்த்தங்களென்னும் பொருள்கள், எளிது - லேசாக, ஆம்-கைகூடும், என்ன-என்று சொல்லி. எ-று.

(பொ-ரை.) அந்த விரதத்தையுடையவரும் சிவபெருமானுக்குச் சந்தோஷத்துடன் இந்தச்செய்கையைப் பண்ணுகின்ற பரிசுத்தருமாகிய இவருடைய திருவடிகள் பட்ட மண்முழுதும் பொன்னாயிற்று; இவ்விடத்திலும் உன்னை வாழச்செய்ய எழுந்தருளினார்; இந்த மேன்மையுடைய இவர்க்கு மதித்தற்குரிய அறம், பொருள், இன்பம் வீடென்கின்ற சதுர்வித புருஷார்த்தங்களென்னும் பொருள்கள் லேசாகக் கைகூடுமென்று சொல்லி. (௨௪)

இவர்கையிற் கன்னத் தாலே யெய்திய பொருளை நல்கித்
தவரிவர் பரிசத் தாலாந் தமனிய மனைத்துங் கொள்ளென்
றுவமையில் வசவ தேவ ருரைத்தவப் படிமன் னீந்தான்
சிவனரு ளாந்தி யார்பாற் பிரமையர் நண்பாற் சென்று.

(ப-ரை.) இவர்-இவருடைய, கையில்-திருக்கரத்திலிருக்கின்ற, கன்னத்தால்-கன்னக்கோலினால், எய்திய-உண்டான, பொருளை-திரவியங்களை (எல்லாம்), நல்கி-கொடுத்து, தவர்-ஜங்கமமூர்த்திகளாகிய, இவர்-இவருடைய, பரிசத்தால்-ஸ்ரீபாதங்கள் பட்டதனால், ஆம்-உண்டான, தமனியம்-பொன், அனைத்தும்-எல்லாவற்றையும், கொள்-பெற்றுக்கொள்வாய், என்று—, உவமையில்-நிகரற்ற, வசவதேவர்-வசவண்ணர், உரைத்த-சொன்ன, அப்படி-அவ்வாறே, மன்-விஜ்ஜலராஜன், ஈந்தான்-கொடுத்தான், சிவன் அருள்-சிவாநுக்ரஹத்தையுடைய, நந்தியார் பால்-வசவண்ணரிடத்தில், பிரமையர் - கன்னப்ரஹ்மையர், நண்புடன்-அன்புடன், சென்று-எழுந்தருளி, எ-று.

(பொ-ரை.) இவருடைய திருக்கரத்திலிருக்கின்ற கன்னக் கோலினாலுண்டான திரவியங்களைக் கொடுத்து, ஜங்கமமூர்த்திகளாகிய இவருடைய ஸ்ரீபாதங்கள் பட்டதனாலுண்டான பொன்னெல்லாவற்றையும் பெற்றுக்கொள்வாயென்று நிகரற்ற வசவண்ணர் சொன்ன அவ்வாறே விஜ்ஜலராஜன் கொடுத்தான்; சிவாநுக்ரஹத்தையுடைய வசவண்ணரிடத்தில் கன்னப்ரஹ்மையர் அன்புடன் எழுந்தருளி. (௨௫)

சங்கமர் தமக்கி றைஞ்சித் தம்மனை யாருந் தாமு
மங்கவர்க் கிசைந்த தூய வறுசுவை யமுத மைத்தே
பங்கமி லன்பி னாலே படைத்தவர் பரிக லங்கள்
பொங்கிய நேயத் தொன்றி யருந்திமுன் போலி ருந்தார்.

(ப-ரை.) சங்கமர் தமக்கு - ஜங்கம மூர்த்திகளுக்கு, இறைஞ்சி - வணங்கி, தம்-தமது, மனையாரும் - மனைவியாரும் தாமும்—, அங்கு - அவ்விடத்தில், அவர்க்கு—, இசைந்த - வேண்டியவையானதும், தூய - பரிசுத்தமானதுமாகிய, அறுசுவை-ஷட்ருசியுள்ள, அமுது-அன்னம், அமைத்து - சமைத்து, பங்கம்-குற்றம், இல்-இல்லாத, அன்பினால் - அன்புடன், படைத்து - அளித்து, அவர் - அவருடைய, பரிகலங்கள்-உண்கலங்களிலுள்ள ப்ரஸாதங்களை, பொங்கிய - மிக்க, நேயத்து - அன்புடன், ஒன்றி-மனமிசைந்து, அருந்தி-உண்டு, முன்-முந்நாள் நடந்தது, போல்-போலவே, இருந்தனர்-வாழ்ந்திருந்தனர், எ-று.

(பொ-ரை.) ஜங்கமமூர்த்திகளுக்கு வணங்கித் தமது மனைவியாரும் தாமும் அவ்விடத்தில் அவர்க்கு வேண்டியவையானதும் பரிசுத்தமானதுமாகிய ஷட்ருசியுள்ள அன்னஞ் சமைத்து, குற்றமில்லாத அன்புடன் அளித்து, அவருடைய உண்கலங்களிலுள்ள ப்ரஸாதங்களை மிக்க அன்புடன் மனமிசைந்து உண்டு முந்நாள் நடந்தது போலவே வாழ்ந்திருந்தனர். (௨௬)

கன்னப்பிரமையர் புராணம்-முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - ௧௦௭௭.

உ

சிவமயம்.

# முசுண்டிச்சவுண்டையர் புராணம்.

கலிநிலைத்துறை.

குண்டலி நாயகர் பாதம லாது குறிக்கொள்ளா
ரெண்டரு பேருமு சுண்டி சவுண்டைய ரென்றுள்ளார்
பண்டிதர் நேயர் தவர்க்கினி தான பரிந்தீவார்
மிண்டிய வாதர்க ளைக்கடி வாருடல் வீயாதார்.

**(ப - ரை.)** குண்டலிநாயகர்-குண்டலீச்வரரது, பாதம்-ஸ்ரீபாதங்களையே, அல்லாது-அல்லாமல், குறிக்கொள்ளார்-(வேறொன்றினையும்) சிந்திக்காதவர், எண்தரும்-மதிக்கப்பட்ட, முசுண்டி சவுண்டையர்-முசுண்டிச்சவுண்டையர், என்று-என்கின்ற, பேரும் உள்ளார்-திருநாமத்தையுமுடையவர், பண்டிதர்-வித்வான்களால், நேயர்-விரும்பப்பட்ட வ்யாகரணபண்டிதர், தவர்க்கு-ஜங்கமமூர்த்திகளுக்கு, இனிதான-விருப்பமானவற்றை யெல்லாம், பரிந்து-அன்புடன், ஈவார்-கொடுப்பவர், மிண்டிய-போர் செய்கின்ற, வாதர்களை-பரசமயவாதிகளை, கடிவார்-அழிக்கவல்லவர், உடல்-சரீரம், வீயாதார்-அழியாதவர், எ-று.

**(பொ-ரை.)** குண்டலீச்வரரது ஸ்ரீபாதங்களையே யல்லாமல் வேறொன்றினையும் சிந்திக்காதவர்; மதிக்கப்பட்ட முசுண்டிச்சவுண்டையரென்கின்ற திருநாமத்தையுமுடையவர்; வித்வான்களால் விரும்பப்பட்ட வ்யாகரணபண்டிதர்; ஜங்கமமூர்த்திகளுக்கு விருப்பமானவற்றை யெல்லாம் அன்புடன் கொடுப்பவர்; போர் செய்கின்ற பரசமய வாதிகளை யழிக்கவல்லவர்; சரீரம் அழியாதவர். (க)

நல்லவை யான முகந்தெரி வித்திடு நல்லாடி
யெல்லவ ருந்துதி செய்பவர் வெம்பவ மில்லாதார்
புல்லல ரிச்சைக ணற்குண மின்செயல் போடாதார்
சொல்லரு ஞான சுகத்த ரிரண்டுரை சொல்லாதார்.

**(ப - ரை.)** நல்லவையான-பெருஞ்சிறப்பினையுடைய சிவபக்தியையுடையதான, முகம்-முகத்தை, தெரிவித்திடும்-தெளிவாய்க் காட்டவல்ல, நல்-நல்ல, ஆடி-கண்ணாடி போன்றவர், எல்லவரும்-எல்லாரும், துதிசெய்பவர்-புகழப்பெற்றவர், வெம்-கொடிய, பவம் இல்லாதார் - பிறப்பில்லாதவர், இச்சைகள் புல்லலர்-பற்றற்றவர், நற்குணம் இன் செயல்-நற்குண நற்செயல்களை, போடாதார்-விடாதவர், சொல் அரு-புகழ்தற்கரிய, ஞானசுகத்தர் - ஜ்ஞாநாநந்த பரிபூர்ணர், இரண்டு உரை - புரளித்தனமான பேச்சு, சொல்லாதார்-பேசாதவர், எ-று.

**(பொ-ரை.)** பெருஞ்சிறப்பினையுடைய சிவபக்தியையுடையதான முகத்தைத் தெளிவாய்க் காட்டவல்ல நல்ல கண்ணாடி போன்றவர்; எல்லாரும் புகழப்பெற்றவர்; கொடிய பிறப்பில்லாதவர்; பற்றற்றவர்; நற்குண நற்செயல்களை விடாதவர்; புகழ்தற்கரிய ஜ்ஞாநாநந்த பரிபூர்ணர்; புரளித்தனமான பேச்சு பேசாதவர்.

**(வி-ரை.)** ஆடி-உவமையாகுபெயர். ஆசைகள் என்றது மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை யென்பவற்றை. நற்குணம்-ஸந்மார்க்கம். நற்செய்கை-ஸத்சரித்ரம். புல்லல்-சேர்தல். (உ)

மிக்குறு திட்டமொ டொன்றனு மான விதங்கண்டார்
தக்குயர் சாபவ னுக்கிர கஞ்செய் சமத்துள்ளார்
பொக்கமின் மாதவர் வீர தவத்துறை பொன்றாதா
ரக்கர வாபர ணர்க்கினி யார்பழு தண்டாதார்.

(ப-ரை.) மிக்கு உறு-மேன்மையாகிய, திட்டமொடு ஒன்று-ப்ரத்யக்ஷப்ரமாணத்துடன், அனுமான விதம்-அநுமான ப்ரமாணத்தையும், கண்டார்-அறிந்தவர், தக்கு-(தமது) வசப்பட்டிருக்கிற, உயர்-மேன்மையாகிய, சாப அனுக்கிரகம் செய் - சாபம் கொடுக்கவும் அநுக்ரஹஞ்செய்யவும் வல்ல, சமத்து உள்ளார்-சாமர்த்தியமுள்ளவர், பொக்கம்-பொய், இல்-இல்லாத, மாதவர்-ஜங்கமமூர்த்திகளுக்குரிய, வீரதவத்துறை-வீரசைவாசாரம், பொன்றாதார்-கெடாதவர், அக்கு-என்புமணியையும், அரவு-பாம்பையும், ஆபரணர்க்கு-ஆபரணமாயுடையவராகிய சிவபெருமானுக்கு, இனியார்-அன்புள்ளவர், பழுது அண்டாதார்-பாபமில்லாதவர், எ-று.

(பொ-ரை.) மேன்மையாகிய ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தையும், அநுமான ப்ரமாணத்தையும் அறிந்தவர்; தமது வசப்பட்டிருக்கின்ற மேன்மையாகிய சாபங்கொடுக்கவும் அநுக்ரஹஞ்செய்யவும் வல்ல சாமர்த்தியமுள்ளவர்; பொய்யில்லாத ஜங்கமமூர்த்திகளுக்குரிய வீரசைவாசாரம் கெடாதவர்; என்புமணியையும் பாம்பையும் ஆபரணமாயுடையவராகிய சிவபெருமானுக்கு அன்புள்ளவர்; பாபமில்லாதவர்.

(வி-ரை.) திட்டம்-த்ருஷ்டம் என்னும் வடசொற்றிரிபு; காண்டல் என்பது பொருள்; த்ருஷ்டத்திற்கு எதிர்மறை அத்ருஷ்டம்; இதற்கு மறைந்திருத்தல் என்பது பொருள்; திட்டமொடு ஒன்று அனுமான விதம் கண்டார்-த்ருஷ்டாத்ருஷ்ட சாக்ஷிபூதராயிருப்பவர்; இவ்வாறு கூறினமையால் சவுண்டையர் தர்க்க சாத்திரப் பண்டிதரெனப் பெற்றாம். சாபங்கொடுத்தல் என்றது துஷ்டநிக்ரஹத்தை. அநுக்ரஹஞ்செய்தல் என்றது சிஷ்டபரிபாலனத்தை. ப்ரமாணம்-அளவு; அதாவது உண்மையநுபவவறிவிற்குக் கருவியாயுள்ளது; இதனைப் பல மதத்தர் தத்தம் கொள்கைக்குச் சாதனமாகப் பலவாறு அங்கீகரித்திருக்கின்றனர்; அது அறுவகைப்படும்; அவை வருமாறு :—ப்ரத்யக்ஷப்ரமாணம் (காண்டலளவை; ஶ்ரோத்ராதி பஞ்சேந்த்ரியங்களால் ஶப்தாதி பஞ்சவிஷயங்களைக் கண்டறிதல்), அநுமானப்ரமாணம் (மறைந்திருக்கின்ற பொருளைக் குறியாலறிதல்; அதாவது புகையைப் பார்த்து நெருப்புண்டென்றறிதல்), ஶப்தப்ரமாணம் (ஆகமப்ரமாணமென்றும் ஆப்தவாக்யமென்றும்சொல்லப்படும்; சிவபெருமான் ஆதிகாலத்தில் ஜீவர்கள் உஜ்ஜீவிக்கும் பொருட்டு விதித்த ஶாஸ்த்ரம்), உபமானப்ரமாணம் (ஒப்புமையறிதல்), அருத்தாபத்திப்ரமாணம் (பொருந்தாமையான அர்த்தம் காணப்படுதலால் அதற்குச் சம்பந்தமான வேறு அர்த்தம் கற்பித்தல்), அநுபலப்தி ப்ரமாணம் (அபாவம்; அதாவது இன்மை யறிதற்பொருட்டு வேண்டப்படும்; என்றால் விளங்காமையென்பது). இவற்றை ந்யாய ஶாஸ்த்ரங்களில் விரிவாய்க் காணலாம். (௩)

ஏறொடு சங்கமர் பத்த ரிறக்கி லெழச்செய்வா
ராறுட னங்கி வழிக்கண் விலக்கி லடர்த்துள்ளா
ரீறுட விற்குறி னுஞ்சிவ பத்தியை யெள்ளாதார்
மாறின்மு சண்டி யெனும்பதி யுற்றிவர் வாழ்நாளில்.

(ப-ரை.) ஏறொடு - வ்ருஷபங்களும், சங்கமர்-ஜங்கமமூர்த்திகளும், பத்தர் - வீரமாஹேஶ்வரர்களும், இறக்கில் - சிவபதமடைவார்களாயின், எழச்செய்வார் - சமாதி செய்பவர், ஆறுடன்-நதியும், அங்கி-நெருப்பும், வழிக்கண்-தாம்(போகின்ற) வழியில், விலக்கில் - தடைசெய்யுமாயின், அடர்த்து உள்ளார்-கடந்து செல்ல வல்லவர், உடல்

விற்கு - உடம்பிற்கு, ஈறு-மரணம், உறினும் - உண்டாயினும், சிவபத்தியை - சிவ பக்தியை, எள்ளாதார்-இகழாதவர், மாறு இல்-அழிவில்லாத, முசண்டி—, என்னும்-என்கின்ற, பதி-ஸ்தலத்தில், உற்று-அவதரித்து, இவர்—, வாழ்-வாழ்கின்ற, நாளில்-காலத்தில், எ-று.

(போ - ரை.) வ்ருஷபங்களும், ஜங்கமமூர்த்திகளும், வீரமாஹேஶ்வரர்களும் சிவபதமடைவார்களாயின் சமாதிசெய்பவர்; நதியும், நெருப்பும் தாம் போகின்ற வழியில் தடைசெய்யுமாயின் கடந்து செல்ல வல்லவர்; உடம்பிற்கு மரணமுண்டாயினும் சிவபக்தியை யிகழாதவர்; அழிவில்லாத முசண்டியென்கின்ற ஸ்தலத்தில் அவதரித்து இவர் வாழ்கின்ற காலத்தில். (௪)

நந்திகள் செம்பு கழென்றெழு சோதி நயந்தெங்குந்
தொந்தம தான தறிந்து சவுண்டையர் தூய்நண்பாற்
புந்தி மகிழ்ந்தவ ரைத்தெரி சித்தல் புரிந்தோர்நா
ளந்தவர் தம்முட னேயுயர் கானக வாறுற்றார்.

(ப-ரை.) நந்திகள்-வசவண்ணரது, செம்-மேன்மையுடைய, புகழ்-கீர்த்தியாகிய, என்று-சூரியனிடத்து, எழு-உண்டான, சோதி - ஒளியானது, நயந்து-மிகுதியாக, எங்கும்-எவ்விடத்தும், தொந்தம் ஆனது-வியாபித்திருப்பதை, அறிந்து-உணர்ந்து, சவுண்டையர்—, தூய்-பரிசுத்தமான, நண்பால்-அன்புடன், புந்தி-மனம், மகிழ்ந்து—, அவரை—, தெரிசித்தல் - தெரிசனஞ்செய்தலை, புரிந்து - விரும்பி, ஓர்-ஒரு, நாள்-தினம், அம்-அழகிய, தவர் தம்முடன்-ஜங்கமமூர்த்திகளுடன், உயர்-வளர்ந்தோங்கிய, கானக ஆறு-காட்டுவழியே, உற்றார்-சென்றார், எ-று.

(போ-ரை.) வசவண்ணரது மேன்மையடைய கீர்த்தியாகிய சூரியனிடத்து உண்டான ஒளியானது மிகுதியாக எவ்விடத்தும் வியாபித்திருப்பதை யுணர்ந்து, சவுண்டையர் பரிசுத்தமான அன்புடன் மனமகிழ்ந்து, அவரைத் தெரிசனஞ்செய்தலை விரும்பி, ஒரு தினம் அழகிய ஜங்கமமூர்த்திகளுடன் வளர்ந்தோங்கிய காட்டு வழியே சென்றார். (௫)

அங்கணு யர்ந்தெழு மெட்டி நிறைந்த வலங்காரச்
செங்கனி கண்டதன் மேன்மன முற்றது நிர்வாக
நங்கர லிங்கநி வேதன மின்றினி நானல்கிச்
சங்கர சேடம ருந்துது மென்று தமிற்சொல்லா.

(ப-ரை.) அங்கண் - அவ்விடத்தில், உயர்ந்து - நிமிர்ந்து, எழும் - வளர்ந்திருக்கின்ற, எட்டி-எட்டி மரங்களில், நிறைந்த-நிரம்பியிருக்கின்ற, அலங்காரம்-அழகியதும், செம்-செவந்ததுமாகிய, கனி-பழங்களை, கண்டு-பார்த்து, அதன்மேல்-அவைகளின் மீது, மனம் உற்று-மனம் சென்று, அது-அந்த மனோபீஷ்டம், நிர்வாக-நிறைவேறும் பொருட்டு, நம்-நமது, கரம்-கையிலெழுந்தருளியிருக்கின்ற, லிங்கம்-இஷ்டலிங்கமூர்த்திக்கு, இன்று-இன்றைத்தினம், இனி-இப்போது, நாம்—, நிவேதனம் நல்கி-நிவேதித்து, சங்கர சேடம்-சிவப்ரஸாதத்தை, அருந்துதும்-உண்போம், என்று—, தம்மில்-தமக்குள்ளே, சொல்லா-சொல்லி, எ-று.

(போ-ரை.) அவ்விடத்தில் நிமிர்ந்து வளர்ந்திருக்கின்ற எட்டிமரங்களில் நிரம்பியிருக்கின்ற அழகியதும் செவந்ததுமாகிய பழங்களைப் பார்த்து, அவைகளின் மீது மனம் சென்று, அந்த மனோபீஷ்டம் நிறைவேறும் பொருட்டு நமது கையிலெழுந்தருளியிருக்கின்ற இஷ்டலிங்கமூர்த்திக்கு இன்றைத்தினம் இப்போது நிவேதித்து, சிவப்ரஸாதத்தை யுண்போமென்று தமக்குள்ளே சொல்லி.

(வி-ரை.) மனம் சென்று-இச்சித்து. பீஷ்டம்-விருப்பம். நல்கல்-கொடுத்தல்,

ஐயர்மு சண்டிச வுண்டையர் நெஞ்சக மாவிப்பால்
வெய்யன வாகிய வெட்டி மரத்தடி மேவுற்றே
கையக வேலைவி திர்த்தொளி ரக்கனி கைக்கொள்ளாத்
துய்யசி வாயவு னக்கமு தாக வெனச்சொல்லி.

(ப-ரை.) ஐயர்-ஜங்கமமூர்த்திகளாகிய, முசண்டிசவுண்டையர்-முசண்டிச்சவுண்டையர், நெஞ்சு அகம் ஆவிப்பால் - மனமகிழ்ச்சியுடன், வெய்யனவாகிய-கைப்பாகிய, எட்டிமரத்து - எட்டிமரத்தின், அடி - கீழே, மேவுற்று-சென்று, கையகம் வேலை - கைவேலைக்கொண்டு, விதிர்த்து-அசைத்து, ஒளிர்-விளங்குகின்ற, அ-அந்த, கனி-எட்டிப்பழங்களை, கை-திருக்கரங்களில், கொள்ளா-எடுத்துக்கொண்டு, துய்ய - பரிசுத்தமான, சிவாய-சிவபெருமானே, உனக்கு—, அமுது-திருவமுது, ஆக-ஆகக்கடவது, என்ன-என்று, சொல்லி-கூறி, எ-று.

(பொ-ரை.) ஜங்கமமூர்த்திகளாகிய முசண்டிச்சவுண்டையர் மன மகிழ்ச்சியுடன் கைப்பாகிய எட்டிமரத்தின் கீழேசென்று, கைவேலைக்கொண்டு, அசைத்து, விளங்குகின்ற அந்த எட்டிப்பழங்களைத் திருக்கரங்களில் எடுத்துக்கொண்டு, பரிசுத்தமான சிவபெருமானே! உனக்குத் திருவமுதாகக்கடவதென்று கூறி.

(வி - ரை.) மேவுற்று-ஒருசொல். கையகம் - திருக்கரத்திலுள்ள எனினுமாம். கொள்ளா-செய்யா வென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (எ)

அக்கனி போத வருந்தவர் கையி னளித்தன்பான்
மிக்கன தம்பர மற்குநி வேத மிகச்செய்தார்
தொக்க மகத்த ருடன்சிவ சேட சுகத்தாராய்
மைக்கட றந்த திருந்தமு தென்ன மகிழ்ந்துண்டார்.

(ப - ரை.) அ-அந்த, கனி-எட்டிப்பழங்களை, போத-மிகுதியாக, அரு-மேன்மை பொருந்திய, தவர்-ஜங்கமமூர்த்திகளுடைய, கையின்-கைகளில், அளித்து-கொடுத்து, அன்பால்-அன்புடன், மிக்கன-மிச்சமான பழங்களை, தம்-தமது, பரற்கு-இஷ்டலிங்கமூர்த்திக்கு, மிக-பெருமையாக, நிவேதம் செய்தார்-நிவேதித்தார், தொக்க-கூடியிருக்கின்ற, மகத்தருடன்-ஜங்கமமூர்த்திகளோடு, சிவசேடம் - சிவப்ரஸாதத்தாலுண்டான, சுகத்தர்ஆய் - ஆநந்தமடைந்தவராகி, மை - கரிய, கடல்—, தந்த - கொடுத்த, திருந்து-செழிப்பான, அமுது என்ன-அமிர்தம் போல, மகிழ்ந்து-சந்தோஷத்துடன், உண்டார்-அமுது செய்தார், எ-று.

(பொ-ரை.) அந்த எட்டிப் பழங்களை மிகுதியாக மேன்மைபொருந்திய ஜங்கமமூர்த்திகளுடைய கைகளில் கொடுத்து, அன்புடன் மிச்சமான பழங்களைத் தமது இஷ்டலிங்கமூர்த்திக்குப் பெருமையாக நிவேதித்தார்; கூடியிருக்கின்ற ஜங்கமமூர்த்திகளோடு சிவப்ரஸாதத்தாலுண்டான ஆநந்தமடைந்தவராகிக் கருங்கடல் கொடுத்த செழிப்பான அமிர்தம் போலச் சந்தோஷத்துடன் அமுது செய்தார்.

(வி-ரை.) அமிர்தம் தந்தது பாற்கடலாயிருக்க மைக்கடறந்ததிருந்தமுதென்றது ஜாதிப்பொதுமை நோக்கி. (அ)

முன்னிமு சண்டி யருந்த முசண்டி சவுண்டைய
ரென்னுநன் னாம முடன்கலி யாண மெனும்பேரா
மந்நகர் வீதி யணைந்தரு ணாந்திக ளார்வாழும்
பொன்னணி மாளிகை வாயில் கடந்து புகுந்தாரால்.

(ப - ரை.) முன்னி - த்யாகித்து, முசண்டி-எட்டிப்பழங்களை, அருந்த - அமுது செய்தமையால், முசண்டிசவுண்டையர்-முசண்டிச்சவுண்டையர், என்னும்-என்கின்ற,

நல் - சிறந்த, நாமமுடன் - திருநாமத்தோடு, கலியாணம் என்னும் - கல்யாணம் என்கின்ற, பேர் ஆம்-பெயரையுடைய, அ-அந்த, நகர்-பட்டினத்தின், வீதி-தெருவை, அணைந்து-சேர்ந்து, அருள் - க்ருபாகடாக்ஷத்தையுடைய, நந்திகளார் - வசவண்ணர், வாழும்-வாழ்கின்ற, பொன் - பொன்னினால், அணி - அலங்காரஞ் செய்யப்பெற்ற, மாளிகை - திருமாளிகையின், வாயில்-வாசலை, கடந்து-தாண்டி, புகுந்தார் - உள்ளே சென்றனர், எ-று.

(பொ - ரை.) த்யாகித்து எட்டிப்பழங்களை அமுதுசெய்தமையால் முசுண்டிச் சவுண்டையரென்கின்ற சிறந்த திருநாமத்தோடு கல்யாணமென்கின்ற பெயரையுடைய அந்தப் பட்டினத்தின் தெருவைச் சேர்ந்து, க்ருபாகடாக்ஷத்தையுடைய வசவண்ணர் வாழ்கின்ற பொன்னினலலங்காரஞ் செய்யப்பெற்ற திருமாளிகையின் வாசலைத் தாண்டி உள்ளே சென்றனர்.

(வி - ரை.) முசுண்டி-முஷ்டியென்னும் வடசொற்றிரிபு. கலியாணம் என்னும் பேராம் அந்நகர் - அந்தக் கல்யாணபட்டினம் எனினுமாம். (க)

நித்தர் சவுண்டைய தேவர் மகத்துவ நேரெல்லாம்
பத்தர் சிகாமணி நந்திகள் கண்டு பயந்தன்பா
லொத்த நலத்தொடு கூடல சங்கம ருற்றாற்போன்
மெத்த திகாதர வுற்றுயர் பத்தி விதத்தாலே.

(ப - ரை.) நித்தர் - அழிவில்லாதவராகிய, சவுண்டையதேவர்-சவுண்டையருடைய, மகத்துவம் - மஹத்வத்தின், நேர் - திறத்தை, எல்லாம் - எல்லாவற்றையும், பத்தர் சிகாமணி-பக்த சிரோமணியாகிய, நந்திகள் - வசவண்ணர், கண்டு-உணர்ந்து, பயந்து - அஞ்சி, அன்பால்-அன்புடனும், ஒத்த-பொருந்திய, நலத்தொடு-விருப்பத்துடனும், கூடலசங்கமர் - கூடலஸங்கமேச்வரரே, உற்றால்போல் - எழுந்தருளினாற்போல், மெத்து - உருக்கமாகிய, அதிக - மிகுந்த, ஆதரவு உற்று - அன்புசெய்து, உயர் - சிறந்த, பத்திவிதத்தால் - பக்திமேலிட்டால், எ-று.

(பொ - ரை.) அழிவில்லாதவராகிய சவுண்டையருடைய மஹத்வத்தின் திறத்தை யெல்லாவற்றையும் பக்தசிரோமணியாகிய வசவண்ணர் உணர்ந்து, அஞ்சி, அன்புடனும், பொருந்திய விருப்பத்துடனும், கூடலஸங்கமேச்வரரே எழுந்தருளினாற்போல், உருக்கமாகிய மிகுந்த அன்புசெய்து, சிறந்த பக்தி மேலிட்டால். (௧௦)

சடக்கென வங்க ணெழுந்து பணிந்து தருக்கன்பான்
மடத்திலெ ழுந்தரு ளப்பணி யாதன மன்னப்பின்
விடற்கரி தாகிய நல்லுப சார விதங்கொண்டு
நடத்தவி ருந்தன ரபின்னோர் மடத்து நயந்துற்றார்.

(ப - ரை.) சடக்கு என்ன - சீக்கிரமாக, அங்கண் - அவ்விடத்திலிருந்து எழுந்து—, பணிந்து - ஸாஷ்டாங்கமாக வணங்கி, தருக்கு - களிப்புடன் கூடிய, அன்பால் - அன்புடன், மடத்தில் - திருமடத்தில், எழுந்தருளப்பண்ணி - எழுந்தருளச்செய்து, ஆதனம் - பீடத்தில், மன்ன - வீற்றிருத்தலும், பின் - பிறகு, விடற்கு அரிதாகிய - விட்டுப்பிரியமுடியாத, நல் - சிறந்த, உபசாரவிதம்கொண்டு - உபசாரங்களினால், நடத்த - (மரியாதை) செய்ய, இருந்தனர் - வீற்றிருந்து, பின் - பிறகு, ஓர் - (மற்று) ஒரு, மடத்து - (ஸ்தலத்துள்ள) திருமடத்தில், நயந்து - விருப்பத்துடன், உற்றார் - எழுந்தருளினார், எ - று.

(பொ - ரை.) சீக்கிரமாக அவ்விடத்திலிருந்து எழுந்து, ஸாஷ்டாங்கமாக வணங்கி, களிப்புடன்கூடிய அன்புடன் திருமடத்திலெழுந்தருளச்செய்து, பீடத்தில்

வீற்றிருத்தலும், பிறகு விட்டுப்பிரியமுடியாத சிறந்த உபசாரங்களினால் மரியாதை செய்ய வீற்றிருந்து, பிறகு மற்றொரு ஸ்தலத்துள்ள திருமடத்தில் விருப்பத்துடன் எழுந்தருளினார்.

(வி - ரை.) இருந்தனர் - முற்றெச்சம். (கக)

மெய்த்தவ ராச சவுண்டையர் வீர சிவாசார
மத்தல மொப்ப நடந்து கிடந்திடு மந்நாளி
னித்தவர் முன்னமோர் பத்தன்விபூதி யிருத்தாவெ
னத்தவெ னில்லினோர் நற்கலி யாண மமைக்கின்றேன்.

(ப - ரை.) மெய் - உண்மையாகிய, தவராசர் - தவத்திற்சிறந்தவராகிய, சவுண்டையர் - சவுண்டையரது, வீரசிவாசாரம் - வீரசைவாசாரமானது, அ-அந்த, தலம் - இடத்திலும், ஒப்ப - யாவரும் ஒத்துக்கொள்ளும்படி, நடந்துகிடந்திடும் - நடந்தேறுகின்ற, அ - அந்த, நாளின் - காலத்தில், இ - இந்த, தவர் - ஜங்கமமூர்த்திகள்; முன்னம் - சந்நிதியில்; ஓர் - ஒரு, பத்தன் - சிவபக்தன்; விபூதி - விபூதியை, இருத்தா - வைத்து, என் - எனது, அத்த - தந்தையே, என் - எனது, இல்லின் - வீட்டில்; ஓர் - ஒரு; நல் - நல்ல, கலியாணம்-விவாஹம்; அமைக்கின்றேன்-செய்யப் போகின்றேன், எ - று.

(பொ - ரை.) உண்மையாகிய தவத்திற் சிறந்தவராகிய சவுண்டையரது வீரசைவாசாரமானது அந்த விடத்திலும் யாவரும் ஒத்துக்கொள்ளும்படி நடந்தேறுகின்ற அந்தக் காலத்தில், இந்த ஜங்கமமூர்த்திகள் சந்நிதியில் ஒரு சிவபக்தன் விபூதியை வைத்து, எனது தந்தையே! எனது வீட்டில் ஒரு நல்ல விவாஹம் செய்யப் போகின்றேன். (கஉ)

அக்கலி யாண நலம்பெற வென்பதி யன்பாலே
மிக்கரு ளுற்றிட வங்க ணெழுந்தருள் வீரென்ன
நக்கன தன்பர்ச வுண்டைய ரொப்பி நயந்தார்பின்
சிக்கன வான திடங்கொண் மகத்தர் செறிந்தெங்கும்.

(ப - ரை.) அ - அந்த, கலியாணம் - விவாஹமானது, நலம் - மேன்மை, பெற - அடையவும், என் - எனது, பதி - தம்பதிகள், அன்பால் - அன்புடன், மிக்கு - மிகுந்து, அருள் - அநுக்ரஹத்தை, உற - அடையவும், அங்கண் - அவ்விடத்திற்கு, எழுந்தருள்வீர்-எழுந்தருளக்கடவீர், என்ன - என்று வேண்டிக்கொள்ளுதலும், நக்கனது அன்பர்-சிவபக்தராகிய, சவுண்டையர்—, ஒப்பி-ஒத்துக்கொண்டு, நயந்தார்-சந்தோஷத்துடன் எழுந்தருளினார், பின் - பிறகே, சிக்கனம் ஆன - ஞானமார்க்கத்தையுடையவரும், திடம் கொள் - மனோத்ருடத்தையுடையவருமாகிய, மகத்தர் - ஜங்கமமூர்த்திகளும், செறிந்து - நெருங்கி, எங்கும் - எவ்விடத்திலும், எ - று.

(பொ - ரை.) அந்த விவாஹமானது மேன்மையடையவும், எனது தம்பதிகள் அன்புடன் மிகுந்து அநுக்ரஹத்தை யடையவும், அவ்விடத்திற் கெழுந்தருளக்கடவீரென்று வேண்டிக்கொள்ளுதலும், சிவபக்தராகிய சவுண்டையர் ஒத்துக்கொண்டு சந்தோஷத்துடன் எழுந்தருளினார்; பிறகே ஞானமார்க்கத்தையுடையவரும் மனோத்ருடத்தையுடையவருமாகிய ஜங்கமமூர்த்திகளும் நெருங்கி எவ்விடத்திலும்.

(வி - ரை.) சிக்கனம் - சித்கனம் என்னும் வடசொற்றிரிபு. (கங)

எண்ணில் சிறப்புட னெண்ணில் களிப்பொ டெழுந்தார்ப்ப
நண்ணி முசுண்டிச வுண்டையர் செல்லுறு நன்மார்க்கத்
துண்ணி லவும்பய மெய்திட வுந்திபொ லித்தெங்குந்
தண்ணி லவோர்நதி வந்தது கண்டு சவுண்டையர்.

(ப - ரை.) எண் இல் - அளவில்லாத, சிறப்புடன் - ஆடம்பரத்துடனும், எண் இல் - அளவில்லாத, களிப்பொடு - சம்பிரமத்துடனும், எழுந்து - அதிகரித்து, ஆர்ப்ப-ஆரவாரிக்கும்படி, நண்ணி - (சுற்றிலும்) அடைந்து, முசுண்டிசவுண்டையா-முசுண்டிச்சவுண்டையர், செல் உறுப்-போகின்ற, நல்-நல்ல, மார்க்கத்து - வழியில், உள் நிலவும்-மனத்தில், பயம்-அச்சம், எய்திட-உண்டாக, உந்தி - பொங்கி, ஒலித்து-முழங்கி, எங்கும்-எவ்விடத்திலும், தண் நிலவு - குளிர்ச்சிபொருந்திய, ஓர்-ஒரு, நதி-ஆறு, வந்தது-(எதிரே ப்ரவாஹமாய்) வருவதை, சவுண்டையர்—, கண்டு - பார்த்து, எ-று.

(போ - ரை.) அளவில்லாத ஆடம்பரத்துடனும், அளவில்லாத சம்பிரமத்துடனும் அதிகரித்து ஆரவாரிக்கும்படிச் சுற்றிலும் அடைந்து, முசுண்டிச்சவுண்டையர் போகின்ற நல்ல வழியில் மனத்தில் அச்சம் உண்டாகப் பொங்கி, முழங்கி, எவ்விடத்திலும் குளிர்ச்சிபொருந்திய ஒரு ஆறு எதிரே ப்ரவாஹமாய் வருவதைச் சவுண்டையர் பார்த்து. (கச)

ஆயந திக்கரை நின்றோ ரருந்தவ னவ்வாரி
மேயவந் நீரை யருந்தி யொழித்தல் விளங்காயோ
தீயப வித்திரள் விட்டிடு மப்புணை சேராதே
பாயுந திப்புன லாசையர் செற்றது பாராயோ.

(ப - ரை.) ஆய - (ப்ரவாஹமாய்) வருவதாகிய, நதிக்கரை - ஆற்றங்கரையில், நின்று—, ஓர்-ஒரு, அரு-சிறந்த, தவன்-தபோதனனாகிய அகத்திய முனிவன், அ-(உன் பதியாகிய) அந்த, வாரி-கடலில், மேய - உண்டான, அ - அந்த, நீரை - ஜலத்தை, அருந்தி-உண்டு, ஒழித்தல் - வற்றச்செய்த செய்தியை, விளங்காயோ - அறியாயோ, தீய-(சிவபக்தர்களல்லாத) கொடிய, பவித்திரள் - பவிஜனங்கள், விட்டிடும் - செலுத்துகின்ற, அ - அந்த, புணை - ஓடத்தில், சேராது - ஏறுமல், பாயும் - (ப்ரவாஹமாய்) ஓடுகின்ற, நதிப்புனல் - ஆற்றுநீரை, ஆசையர் - சங்கராசையர், செற்றது - வற்றச்செய்த செய்தியை, பாராயோ-காணுயோ, எ-று.

(போ - ரை.) ப்ரவாஹமாய் வருவதாகிய ஆற்றங்கரையில் நின்று, ஒரு சிறந்த தபோதனனாகிய அகத்தியமுனிவன் உன் பதியாகிய அந்தக் கடலில் உண்டான ஜலத்தை யுண்டு வற்றச்செய்த செய்தியை யறியாயோ? சிவபக்தர்களல்லாத கொடிய பவிஜனங்கள் செலுத்துகின்ற அந்த ஓடத்தில் ஏறுமல் ப்ரவாஹமாயோடுகின்ற ஆற்றுநீரை சங்கராசையர் வற்றச்செய்த செய்தியைக் காணுயோ?

(வி-ரை.) நதிக்கரை என்பதனீற்றில் ஏழனுருபு தொக்கது. திரள்-கூட்டம். ()

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மன்னுநற் கசேச ரென்னும் வள்ளலை வசுந்த ரைக்க
ணுன்னரு மசணி தேவ ரென்பவ ருளத்தாற் கொள்ளா
நன்னெறித் தியான ராகி நயப்புட னிருக்குங் காலை
முன்னிநீ யவர்மேல் வந்து முடிந்தனை முன்னுய் கொல்லோ.

(ப-ரை.) மன்னும் - நிலைபெற்றிருக்கின்ற, நல்-சிறந்த, கசேசர்-கஜேசுவரர், என்னும் - என்கின்ற, வள்ளலை - சிவபெருமானை, வசுந்தரைக்கண் - உலகில், உன் அரு - நினைத்தற்கரிய, மசணிதேவர் என்பவர்—, உளத்தால் கொள்ளா - மனத்திற் கொண்டு, நல்நெறி - சன்மார்க்கமுள்ள, தியானர் ஆகி-த்யானத்தைச் செய்பவராகி, நயப்புடன் - பக்தியுடன், இருக்கும் - சிவயோகசமாதி கூடியிருக்கின்ற, காலை - காலத்தில், நீ—, முன்னி - கோபித்து, அவர்—, மேல் - மீது, வந்து - (ப்ரவாஹமாய் விரைந்து) சென்று, முடிந்தனை-அழிந்தாய், முன்னுய்கொல்லோ-நினையாயோ, எ-று.

(போ - ரை.) நிலைபெற்றிருக்கின்ற சிறந்த கஜேஸ்வரரென்கின்ற சிவபெருமானை உலகில் நினைத்தற்கரிய பசணிதேவரென்பவர் மனத்திற்கொண்டு சன்மார்க்கமுள்ள த்யானத்தைச் செய்பவராகி, பக்தியுடன் சிவயோகசமாதி கூடியிருக்கின்ற காலத்தில், நீ கோபித்து அவர்மீது ப்ரவாஹமாய் விரைந்து சென்று அழிந்தாய்; நினையாயோ?

(வி - ரை.) வசுந்தரை - வசுந்தரா என்னும் வடசொற்றிரிபு. கொல் - அசை. பசணிதேவரை கஜேஸ பசணிதேவரென வழங்குதலு முண்டு. (கசு)

என்றுநின் மோக ரிப்பை விடுவிடு வதியென் றெய்தித்
துன்றுதங் கரத்து வாளை விதிர்த்துநீர் துண்டித் தார்த்தார்
சென்றிடு மாறி ரண்டு செய்யமே கங்க ளென்ன
நின்றநீர் மலைப தென்ன வழிவிடா நெடிது தூரம்.

(ப-ரை.) என்றும் - எப்போதும், நின் - உனது, மோகரிப்பை-அஹங்காரத்தை, விடுவிடு-விட்டுவிடு விட்டுவிடு, வதி-அடங்கியிரு, என்று-என்று திட்டமிட்டு, எய்தி-போய், தம் - தமது, கரத்து துன்று வாளை - கைவாளை, விதிர்த்து - அசைத்து, நீர்-ஜலத்தை, துண்டித்து-இரண்டு துண்டமாகப் பிளந்து, ஆர்த்தார் - ஆரவாரஞ்செய்தார், சென்றிடும்-ப்ரவாஹத்தோடு ஓடுகின்ற, நீர் - ஜலமானது, இரண்டு—, செய்ய - அழகிய, மேகங்கள்—, என்ன - போலவும், நின்ற - நிலைத்திருக்கின்ற, நீர்மலை-ஜலபர்வதங்கள், என்ன-போலவும்(உருக்கொண்டு), நெடிது தூரம் - வெகுதூரம் வரையிலும், வழிவிடா-வழிவிட்டு, எ-று.

(போ - ரை.) எப்போதும் உனது அஹங்காரத்தை விட்டுவிடு விட்டுவிடு, அடங்கியிருவென்று திட்டமிட்டுப் போய், தமது கைவாளை யசைத்து, ஜலத்தை இரண்டு துண்டமாகப் பிளந்து ஆரவாரஞ்செய்தார்; ப்ரவாஹத்தோடு ஓடுகின்ற ஜலமானது இரண்டு அழகிய மேகங்கள்போலவும், நிலைத்திருக்கின்ற ஜலபர்வதங்கள் போலவும் உருக்கொண்டு வெகுதூரம் வரையிலும் வழிவிட்டு. (கஎ)

அந்நதி யாகா யத்தி லணைந்தமை யரன்மெய் யன்ப
ருன்னரும் பெருமை தன்னை யுயர்சுர நதிபாற் கேட்பே
மென்னமே லெழுந்து சென்று சவுண்டையர்க் கிறைஞ்சு மாபோற்
றன்னரும் பாதா ளத்து வீழுமன் றவத்தோர் கண்டார்.

(ப-ரை.) அ - அந்த, நதி-ஆறு, ஆகாயத்தில் அணைந்தமை-ஆகாயத்தையளாவி நின்ற கோலமானது, மெய் - உண்மையாகிய, அரன்அன்பர் - சிவபக்தர்களுடைய, உன் அரு - நினைத்தற்கரிய, பெருமைதன்னை - மகிமையை, உயர் - மேன்மையாகிய, சுரநதிபால் - கங்கையினிடத்தில், கேட்பேம் - கேட்டறிந்துகொள்வோம், என்ன - என்று (யோசித்து), மேல் - ஆகாயத்தில், எழுந்து - எழும்பி, சென்று - போய், சவுண்டையர்க்கு—, இறைஞ்சும் ஆறு-வணங்கிப்பணிவதைப்போல, தன்-தனது, அரு-மேன்மையான, பாதாளத்து-பாதாளலோகத்தில், வீழ-வீழ்தலும், மன்-நிலைபெற்ற, தவத்தோர் - ஜங்கமமூர்த்திகள், கண்டார் - பார்த்தார்கள், எ-று.

(போ-ரை.) அந்தஆறு ஆகாயத்தை யளாவிநின்ற கோலமானது உண்மையாகிய சிவபக்தர்களுடைய மகிமையை மேன்மையாகிய கங்கையினிடத்திற் கேட்டறிந்து கொள்வோமென்று யோசித்து, ஆகாயத்தி லெழும்பிப் போய், சவுண்டையர்க்கு வணங்கிப் பணிவதைப்போலத் தனது மேன்மையான பாதாளலோகத்தில் வீழ்தலும், நிலைபெற்ற ஜங்கமமூர்த்திகள் பார்த்தார்கள். (கஅ)

கண்டமா தவர்க ணீரைக் கடிந்தடித் தாலி ரண்டு
துண்டம தாமோ வென்னுஞ் சொல்லினைத் தவிர்த்தா ரென்பார்
வண்டமா ராசராச சவுண்டையர் மகிழ்ந்து செல்ல
வண்டர்நா யகனைப் பாடி யாடுவார் களிப்பா ரார்ப்பார்.

(ப - ரை.) கண்ட - (ஆறு பாதாளலோகத்தில் விழுந்ததை) பார்த்த, மாதவர்கள் - ஜங்கமமூர்த்திகள், நீரை - ஜலத்தை, கடிந்து - கோபித்து, அடித்தால்—, இரண்டு—, துண்டம் - துண்டு, ஆமோ - ஆகுமோ, என்னும் - என்கின்ற, சொல்வினை - பழமொழியை, தவிர்த்தார் - ஒழித்தார், என்பார் - என்று புகழ்வார்கள், வள் - மேன்மையாகிய, தவராசராசர் - தவராஜசிங்கமாகிய, சவுண்டையர்—, மகிழ்ந்து - சந்தோஷத்துடன், செல்ல-(ஆற்றைக்கடந்து) போதலும், அண்டர்நாயகனை-தேவதேவனாகிய சிவபெருமானை, பாடி—, ஆடுவார்-(சிலர்) நாட்டியஞ்செய்வார்கள், களிப்பார் - (சிலர்) சந்தோஷமடைவார்கள், ஆர்ப்பார் - (சிலர்) ஆரவாரஞ் செய்வார்கள், எ-று.

(பொ-ரை.) ஆறு பாதாளலோகத்தில் விழுந்ததைப் பார்த்த ஜங்கமமூர்த்திகள் ஜலத்தைக் கோபித்து அடித்தால் இரண்டு துண்டாகுமோ? என்கின்ற பழமொழியையொழித்தாரென்று புகழ்வார்கள்; மேன்மையாகிய தவராஜசிங்கமாகிய சவுண்டையர் சந்தோஷத்துடன் ஆற்றைக் கடந்து போதலும், தேவதேவனாகிய சிவபெருமானைப் பாடிச் சிலர் நாட்டியஞ்செய்வார்கள்; சிலர் சந்தோஷமடைவார்கள்; சிலர் ஆரவாரஞ் செய்வார்கள். (௧௯)

கரம்புயங் களிற்பு டைப்பார் கரணங்கள் களித்துக் கொள்வார்
திரும்பியந் நதியை நோக்கிச் சிரித்துமே லெழுந்து பாய்வார்
பரம்பிமா கரங்கள் கொட்டிச் சவுண்டையர்ப் பாடா நிற்பா
ரிருஞ்சுடர்ப் பரசு சூல மெறிந்துநின் றெதிரே யேற்பார்.

(ப - ரை.) கரம் - (சிலர்) கைகளினால், புயங்களில் - தோள்களில், புடைப்பார்-தட்டுவார்கள், களித்து - (சிலர்) சந்தோஷத்துடன், கரணங்கள்-குட்டிக்கரணங்கள், கொள்வார் - போடுவார்கள், அ - (சிலர்) அந்த, நதியை - ஆற்றை, திரும்பி நோக்கி-திரும்பிப் பார்த்து, சிரித்து - நகைத்து, மேல் - ஆகாயத்தில், எழுந்து - எழும்பி, பாய்வார் - குதிப்பார்கள், பரம்பி - (சிலர்) விசாலமாக நின்றுகொண்டு, மா - பெரிய, கரங்கள் - கைகளை, கொட்டி - அடித்து, சவுண்டையர் - சவுண்டையரை, பாடா நிற்பார்-பாடுவார்கள், இரு - (சிலர்) பெரிய, சுடர் - ஒளிபொருந்திய, பரசு - பரசாயுதத்தையும், சூலம் - சூலாயுதத்தையும், எறிந்து - (மேலே) வீசி, நின்று—, எதிரே-நேரே, ஏற்பார் - பிடிப்பார்கள், எ-று.

(பொ - ரை.) சிலர் கைகளினால் தோள்களில் தட்டுவார்கள்; சிலர் சந்தோஷத்துடன் குட்டிக் கரணங்கள் போடுவார்கள்; சிலர் அந்த ஆற்றைத் திரும்பிப் பார்த்து நகைத்து ஆகாயத்தில் எழும்பிக் குதிப்பார்கள்; சிலர் விசாலமாக நின்றுகொண்டு பெரிய கைகளை யடித்துச் சவுண்டையரைப் பாடுவார்கள்; சிலர் பெரிய ஒளிபொருந்திய பரசாயுதத்தையும் சூலாயுதத்தையும் மேலே வீசிநின்று நேரே பிடிப்பார்கள்.

(வி-ரை.) கரம் கொட்டல் - கொம்மையடித்தல். (௨0)

காளமார் கண்டா வென்பார் காலனைக் காய்ந்தா யென்பார்
வேளினை யெரித்தா யென்பார் வெம்புரஞ் சுட்டா யென்பார்
நாளள வில்லா யென்பார் நரவரி பிளந்தா யென்பார்
நீளராப் பணியா யென்பார் நெடுந்தலைத் தொடையா யென்பார்.

(ப - ரை.) காளம் - விஷம், ஆர் - பொருந்திய, கண்டா - ஸ்ரீ கண்டத்தையுடையவனே, என்பார் - என்று (சிலர்) துதிப்பார்கள், காலனை-யமனை, காய்ந்தாய்-கொன்றவனே, என்பார் - என்று (சிலர்) துதிப்பார்கள், வேளினை - மன்மதனை, எரித்தாய் - சுட்டவனே, என்பார் - என்று (சிலர்) துதிப்பார்கள், வெம் - கொடிய, புரம் - த்ரிபுரங்களை, சுட்டாய்-எரித்தவனே, என்பார்-என்று (சிலர்) துதிப்பார்கள்,

நாள்அளவு-காலவரை, இல்லாய்-இல்லாதவனே, என்பார்-என்று(சிலர்) துதிப்பார்கள், நரஅரி - நரசிங்கத்தை; பிளந்தாய் - கிழித்தெறிந்தவனே, என்பார் - என்று (சிலர்) துதிப்பார்கள், நீள்-நீண்ட, அராப்பணியாய்-சர்ப்பாபரணத்தையுடையவனே, என்பார்-என்று (சிலர்) துதிப்பார்கள், நெடு - பெரிய, தலைத்தொடையாய் - சிரமாலையை யுடையவனே, என்பார் - என்று (சிலர்) துதிப்பார்கள், எ-று.

(பொ - ரை.) விஷம்பொருந்திய ஸ்ரீகண்டத்தை யுடையவனே! என்று சிலர் துதிப்பார்கள்; யமனைக் கொன்றவனே! என்று சிலர் துதிப்பார்கள்; மன்மதனைச் சுட்டவனே! என்று சிலர் துதிப்பார்கள்; கொடிய த்ரிபுரங்களை யெரித்தவனே! என்று சிலர் துதிப்பார்கள்; காலவரை யில்லாதவனே! என்று சிலர் துதிப்பார்கள்; நரசிங்கத்தைக் கிழித்தெறிந்தவனே! என்று சிலர் துதிப்பார்கள்! நீண்ட சர்ப்பாபரணத்தை யுடையவனே! என்று சிலர் துதிப்பார்கள்; பெரிய சிரமாலையை யுடையவனே! என்று சிலர் துதிப்பார்கள். (உக)

ஆகவெல் லோருங் கூடி யாகங்கள் புளகங் கொண்டங்
கேகநா யகனை நீங்காச் சவுண்டையர் தமையு மேத்த
மாகலோ கத்தோர் போற்ற மண்ணவர் மகிழ்ந்து வாழ்த்த
மோகமாம் பகையைக் காய்ந்த சவுண்டையர் முனைந்து சென்று.

(ப-ரை.) ஆக-இவ்வாறு துதிப்பாராகி, எல்லோரும்-(ஜங்கமமூர்த்திகள்) அனைவரும், கூடி - சேர்ந்து, ஆகங்கள் - உடம்புகள், புளகம்கொண்டு - மயிர்க்குச்செறிந்து, அங்கு-அவ்விடத்தில், ஏகநாயகனை - சிவபெருமானை, நீங்கா-(த்யானம்செய்தலினின்றும்) விட்டுப்பிரியாத, சவுண்டையர் தம்மையும் - சவுண்டையரையும், ஏத்த - துதிக்கவும், மாகலோகத்தோர் - விண்ணுலகத்தார், போற்ற - துதிக்கவும், மண்ணவர் - பூலோகத்தார், மகிழ்ந்து - சந்தோஷத்துடன், வாழ்த்த - துதிக்கவும், மோகம் ஆம் - ஆசையாகிய, பகையை - பகைவனை, காய்ந்த - வென்ற, சவுண்டையர்—, முனைந்து - துணிவுடன், சென்று - போய், எ-று.

(பொ-ரை.) இவ்வாறு துதிப்பாராகி ஜங்கமமூர்த்திகளனைவரும் சேர்ந்து, உடம்புகள் மயிர்க்குச்செறிந்து, அவ்விடத்தில் சிவபெருமானை த்யானஞ் செய்தலினின்றும் விட்டுப்பிரியாத சவுண்டையரையும் துதிக்கவும், விண்ணுலகத்தார் துதிக்கவும், பூலோகத்தார் சந்தோஷத்துடன் துதிக்கவும், ஆசையாகிய பகைவனைவென்ற சவுண்டையர் துணிவுடன் போய். (உஉ)

பெருங்கலி யாண மெய்தும் பெரும்பதி தன்னுண் மேவி
யருந்தவ ரனேகர் சூழ வளவில்வாச் சியந்த முங்கப்
பொருந்தருஞ் சிறப்பி னோடு புண்ணிய வதுவை தன்னின்
விருந்துப சார நல்க வருந்தினர் மீண்டு செல்வார்.

(ப - ரை.) பெரு - மேன்மையாகிய, கலியாணம் - விவாஹம், எய்தும் - நடக்கின்ற, பெரு - பெரிய, பதிதன்னுள் - வீட்டில், மேவி - எழுந்தருளி, அரு - மேன்மையான, தவர் அனேகர் - அநேக ஜங்கமமூர்த்திகள், சூழ - சுற்றிலுமிருக்கவும், அளவு இல்-கணக்கில்லாத, வாச்சியம் - மங்கலவாத்தியங்கள், தழங்க - முழங்கவும், பொருந்து அரு-பெறுதற்கரிய, சிறப்பினோடு - ஆடம்பரத்துடன், புண்ணியம் - இல்லறதர்மத்திற்குரிய, வதுவைதன்னின் - விவாஹத்தில், விருந்து - விருந்தினர்க்குரிய, உபசாரம் - மரியாதைகளை, நல்க - நடத்தலும், அருந்தினர் - அமுதுசெய்து, மீண்டுசெல்வார் - திரும்புவாராயினர், எ-று.

(பொ-ரை.) மேன்மையாகிய விவாஹம் நடக்கின்ற வீட்டில் எழுந்தருளி, மேன்மையான அநேக ஜங்கமமூர்த்திகள் சுற்றிலுமிருக்கவும், கணக்கில்லாத மங்கலவாத்தி

யங்கள் முழங்கவும், பெறுதற்கரிய ஆடம்பரத்துடன் இல்லறதர்மத்திற்குரிய விவாஹத்தில் விருந்தினர்க்குரிய மரியாதைகளை நடத்தலும், அமுதுசெய்து திரும்புவாராயினர்.

(வி - ரை.) அருந்தினர் - முற்றெச்சம். (உகூ)

அப்பெரு வதியின் மற்று மளப்பருங் காட்சி மன்ன
செப்பருந் தவத்தர் நாவிற் சிவத்துதி முழக்க மோங்க
வெய்ப்பருங் கலியி யாண புரத்தவ ரெதிர்கொண் டேத்த
வொப்பரும் விரத நிட்ட சவுண்டைய ருவகை பொங்க.

(ப - ரை.) அ - அந்த, பெரு - பெரிய, வதியில் - கல்யாணவீட்டில்; மற்றும்- மேலும், அளப்பு அரு-அளவில்லாத, காட்சி - விநோதங்கள், மன்ன - நிலைபெற்றிருக்கவும், செப்பு அரு-சொல்லுதற்கரிய, தவத்தர்-ஜங்கமமூர்த்திகளுடைய, நாவில்-நாக்களில், சிவத்துதிமுழக்கம் - சிவஸ்தோத்ரகோஷம், ஓங்க - பெருகவும், எய்ப்பு அரு - (அன்புசெய்வதில்) தளர்ச்சியில்லாத, கலியாணபுரத்தவர் - கல்யாணபட்டிணத்திலுள்ள ஜனங்கள், எதிர்கொண்டு—, ஏத்த-துதிக்கவும், ஒப்பு அரு - நிகரற்ற, விரதநிட்டர் - வீரசைவராகிய, சவுண்டையர்—, உவகை பொங்க - மிகவும் சந்தோஷிக்கவும், எ-று.

(பொ - ரை.) அந்தப் பெரிய கல்யாண வீட்டில் மேலும் அளவில்லாத விநோதங்கள் நிலைபெற்றிருக்கவும், சொல்லுதற்கரிய ஜங்கமமூர்த்திகளுடைய நாக்களில் சிவஸ்தோத்ர கோஷம் பெருகவும், அன்புசெய்வதில் தளர்ச்சியில்லாத கல்யாண பட்டிணத்திலுள்ள ஜனங்கள் எதிர்கொண்டு துதிக்கவும், நிகரற்ற வீரசைவராகிய சவுண்டையர் மிகவும் சந்தோஷிக்கவும்.

வீதியுட் புகுந்து செல்லும் வேலையின் வந்தோர் கன்னி
நீதியார் சவுண்டை யர்க்கு நேயத்தாற் பணிந்து நிற்பத்
தீதிலா யுனக்கு மின்னே தீர்க்காயு வெனப்பு கன்று
கோதிலா மகிழ்ச்சி பொங்கக் குலவித்தம் மடத்துட் புக்கார்.

(ப - ரை.) வீதியுள் - தெருவில், புகுந்து - பிரவேசித்து, செல்லும் - போகின்ற, வேலையின் - காலத்தில், ஓர் - ஒரு, கன்னி - பெண், வந்து - சென்று, நீதியார்- சீலமுள்ள, சவுண்டையர்க்கு—, நேயத்தால் - அன்புடன், பணிந்து - வணங்கி, நிற்ப - நிற்றலும், மின்னே-பெண்ணே, தீது இல்லா - புண்யவதியாகிய, உனக்கு—, தீர்க்காயு - தீர்க்காயுசுண்டாகக்கடவது, என்ன - என்று, புகன்று - வாழ்த்தி, கோது - குற்றம், இல்லா-இல்லாத, மகிழ்ச்சி - சந்தோஷம், பொங்க - பெருக, குலவி - கொண்டாடி, தம் - தமது, மடத்துள் - திருமடத்தில், புக்கார் - சென்றார், எ-று.

(பொ - ரை) தெருவில் பிரவேசித்துப் போகின்ற காலத்தில் ஒரு பெண் சென்று சீலமுள்ள சவுண்டையர்க்கு அன்புடன் வணங்கி நிற்றலும், பெண்ணே! புண்யவதியாகிய உனக்குத் தீர்க்காயுசுண்டாகக்கடவதென்று வாழ்த்திக் குற்றமில்லாத சந்தோஷம் பெருகக் கொண்டாடித் தமது திருமடத்திற் சென்றார். ()

புக்கபின் சிவார்ச்ச னைக்குப் புகுந்துள நெகிழ்ந்து போற்றி
மிக்கமெய் யன்பி னொட்டு விதார்ச்சனை பதிற்றென் னுந்
தக்கநல் லுபசா ரங்க டாழ்வறச் செய்து வந்து
செக்கரஞ் சடையார்க் கண்டு சிவானந்தத் திருக்கு நாளில்.

(ப - ரை). புக்க - (திருமடத்தில்) சென்ற, பின் - பிறகு, சிவார்ச்சனைக்கு - சிவபூஜை செய்தற்காக, புகுந்து - தொடங்கி, உள்ளம் மகிழ்ந்து - மனமகிழ்ந்து, போற்றி - துதித்து, மிக்க - மேலான, மெய்-உண்மையாகிய, அன்பின்-அன்புடன்,

எட்டுவித அர்ச்சனை - அஷ்டவிதார்ச்சனையையும், தக்க - தகுதியாகிய, நல் - சிறந்த, பதினாறு என்னும் உபசாரங்கள் - ஷோடசோபசாரங்களையும், தாழ்வு அற - குறைவில்லாமல், செய்து - பண்ணி, உவந்து-சந்தோஷத்துடன், செக்கர் - செவ்வானம் போன்று செந்நிறமுள்ள, அம் - அழகிய, சடையார் - திருமுடியையுடையவராகிய சிவபெருமானை, கண்டு - வணங்கி, சிவானந்தத்து - சிவாநந்தத்தில், இருக்கும் - நிலைத்திருக்கின்ற, நாளில் - காலத்தில், எ-று.

(பொ-ரை.) திருமடத்திற் சென்ற பிறகு, சிவபூஜை செய்தற்காகத் தொடங்கி, மனமகிழ்ந்து துதித்து, மேலான உண்மையாகிய அன்புடன் அஷ்டவிதார்ச்சனையையும், தகுதியாகிய சிறந்த ஷோடசோபசாரங்களையும் குறைவில்லாமல் பண்ணி, சந்தோஷத்துடன் செவ்வானம்போன்று செந்நிறமுள்ள அழகிய திருமுடியையுடையவராகிய சிவபெருமானை வணங்கி, சிவாநந்தத்தில் நிலைத்திருக்கின்ற காலத்தில்.

(வி - ரை.) அஷ்டவிதார்ச்சனை, ஷோடசோபசாரங்களைப் பற்றி முன்னர் விளக்கியுள்ளாம். அஷ்டவிதார்ச்சனை-ஜலம், சந்தனம், அக்ஷதை, புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம், தாம்பூலமாகிய இவ்வெட்டும் சேர்ந்தது. (உ௬)

சின்மய சவுண்ட தேவர் திருமொழி தப்பா தென்னு
நன்மையை விண்ணோர் மண்ணோர் நலம்பெற நம்பு தற்கோ
மென்மொழித் தந்தை தாயர் வினைத்திற நீங்கி யத்தன்
றன்மல ரடிக்கா ளாகுந் தன்மையோ சின்னாட் பின்னர்.

(ப - ரை.) சின்மயம் - ஜ்ஞானஸ்வரூபியாகிய, சவுண்டதேவர் - சவுண்டையாரது, திருமொழி - திருவாக்கானது, தப்பாது - பொய்யாகாது, என்னும் - என்கின்ற, நன்மையை - பெருமையை, விண்ணோர் - தேவர்களும், மண்ணோர் - மனிதர்களும், நலம்பெற - நன்றாக, நம்புதற்கோ - நம்பும்பொருட்டோ, மென் - மிருதுவான, மொழி - சொற்களையுடைய, தந்தை தாயர் - பிதாமாதாக்கள், வினைத்திறம் - வினை வலி, நீங்கி - ஒழிந்து, அத்தன் - சிவபெருமானது, மலர் - தாமரைமலர்போலும், அடிக்கு - திருவடிகளுக்கு, ஆள் ஆகும் - அடிமையாகின்ற, தன்மையோ - பெருமையடையும் பொருட்டோ, சிலநாள் - சிலதினம் (கழிந்த), பின்னர் - பிறகு, எ-று.

(பொ - ரை.) ஜ்ஞானஸ்வரூபியாகிய சவுண்டையாரது திருவாக்கானது பொய்யாகாதென்கின்ற பெருமையைத் தேவர்களும், மனிதர்களும் நன்றாக நம்பும்பொருட்டோ? மிருதுவான சொற்களையுடைய பிதாமாதாக்கள் வினைவலி யொழிந்து சிவபெருமானது தாமரைமலர் போலுந் திருவடிகளுக்கு அடிமையாகின்ற பெருமையை யடையும்பொருட்டோ? சிலதினம் கழிந்த பிறகு. (உ௭)

அந்தநல் வாழ்த்துப் பெற்ற வாயிழை மரிக்க வங்கண்
டந்தைதா யழுது வீழ்ந்து தரைமிசைப் புரண் டெழுந்து
கொந்தலர்க் குழலை யேந்திக் கொண்டுவந் தையர் முன்னிட்
டிந்தமி னுன்றாண் முன்ன மிறைஞ்சுமின் னென்று சொல்வார்.

(ப-ரை.) அந்த—; நல்-சிறந்த, வாழ்த்து-ஆசீர்வாதம், பெற்ற - அடைந்த, ஆய்-ஆராய்ந்தெடுத்த, இழை-ஆபரணத்தையுடைய பெண், மரிக்க-இறத்தலும், அங்கண்-அவ்விடத்தில், தந்தை தாய்-பிதாமாதாக்கள், அழுது—, தரைமிசை - பூமியின்மீது, வீழ்ந்து—, புரண்டு-உருண்டு, எழுந்து—,கொந்து அலர்-பூங்கொத்துக்களையணிந்த, குழலை - கூந்தலையுடைய பெண்ணை, ஏந்திக்கொண்டு - எடுத்துக்கொண்டு, வந்து—, ஐயர்-சவுண்டையார், முன் - சந்நிதியில், இட்டு-படுக்கவைத்து, இந்த—, மின்-பெண், உன் - உனது, தாள் - திருவடிகளை, முன்னம் - முன்பு, இறைஞ்சும் - (வணங்கி) ஆசீர்வாதம்பெற்ற, மின் என்று - பெண்ணென்று, சொல்வார் - சொல்லிப் பின்னும் சொல்லத் தொடங்கினார்கள் (எவ்வாறெனின்); எ-று.

(பொ-ரை.) அந்தச் சிறந்த ஆசீர்வாதமடைந்த ஆராய்ந்தெடுத்த ஆபரணத்தை யுடைய பெண் இறத்தலும், அவ்விடத்தில் பிதாமாதாக்கள் அழுது, பூமியின்மீது விழுந்து, உருண்டு, எழுந்து, பூங்கொத்துக்களை யணிந்த கூந்தலையுடைய பெண்ணை யெடுத்துக் கொண்டுவந்து, சவுண்டையர் சந்நிதியில் படுக்கவைத்து, இந்தப் பெண் உனது திருவடிகளை முன்பு வணங்கி யாசீர்வாதம் பெற்ற பெண்ணென்று சொல்லிப் பின்னும் சொல்வாரானார்கள்; எவ்வாறெனின்.

(வி - ரை.) ஆயிழை, குழலை என்பவை அன்மொழித் தொகைகள். (௨௮)

ஐயநின் வாழ்த்துப் பொய்யா தடியனேற் கருள்செ யென்னத்
துய்யதன் றாளில் வீழ்ந்து துயரிப்பார் தம்மை நோக்கிப்
பொய்யதொன் றில்லா மெய்ய ரெழுமினீ ரெனப்பு கன்று
செய்யதங் கருணை கூர்ந்து திருவுள மகிழ்ந்தென் செய்வார்.

(ப-ரை.) ஐய-ஐயனே, நின்-உனது, வாழ்த்து-ஆசீர்வாதமானது, பொய்யாது - தப்பமாட்டாது, அடியனேற்கு-அடியேங்களுக்கு, அருள்செய்-அநுக்ரஹஞ்செய்வாய், என்ன-என்று(வேண்டி), தன்-தனது, துய்ய-பரிசுத்தமாகிய, தாளில்-திருவடிகளில், வீழ்ந்து-ஸாஷ்டாங்கமாகப் பணிந்து, துயரிப்பார் தம்மை - விசனப்படுகிறவர்களை, நோக்கி-பார்த்து, பொய்யது - பொய்யென்பது, ஒன்று - சிறிதும், இல்லா- (அறிந்து) இல்லாத, மெய்யர்-சத்யவான்களே, நீர்-நீங்கள், எழுமின் - எழுந்திருங்கள், என்ன-என்று, புகன்று - திருவாய்மலர்ந்து, தன் - தனது, செய்ய-மேன்மையாகிய, கருணை கூர்ந்து – அன்பு மிகுந்து, திருவுளம் மகிழ்ந்து —, என் செய்வார் - என்ன பண்ணு வார், பாவம், எ-று.

(பொ-ரை.) ஐயனே! உனது ஆசீர்வாதமானது தப்பமாட்டாது; அடியேங் களுக்கு அநுக்ரஹஞ்செய்வாயென்று தனது பரிசுத்தமாகிய திருவடிகளில் ஸாஷ்டாங்கமாகப் பணிந்து, விசனப்படுகிறவர்களைப் பார்த்துப் பொய்யென்பது சிறிதும் அறிந்தில்லாத சத்யவான்களே! நீங்கள் எழுந்திருங்களென்று திருவாய்மலர்ந்து, தனது மேன்மையாகிய அன்பு மிகுந்து, திருவுளம் மகிழ்ந்து, என்ன பண்ணுவார், பாவம்? (௨௯)

புண்ணிய வயது நூறு புக்கிரு மென்ப தல்லா
துண்ணில வுயிர்ப்பி ணைக்கு மொப்புவ ருளரோ வென்று
நுண்ணியர் நின்று சொல்லு நுவலினைப் பரிக ரிப்பார்
திண்ணிய சவுண்ட தேவர் தெரிவையைச் சிறிது தட்டா.

(ப-ரை.) புண்ணியம் - தர்மமான, வயது-வயசு, நூறு-நூறும், புக்கு-பெற்று, இரும்-சுகமாக வாழ்ந்திரும், என்பது-என்று ஆசீர்வாதஞ்செய்வதே, அல்லால்-அல்லா மல், உள் - உடம்பில், நிலவு-விளங்குகின்ற, உயிர்-உயிரை, பிணைக்கும் - சேர்ப்பதற் கும், ஒப்புவர் உளரோ-ஒத்துக்கொள்வார்களோ, என்று —, நுண்ணியர்-பெரியோர் கள், நின்று-நிச்சயமாக, சொல்லும்-கூறுகின்ற, நுவலினை - பழமொழியை, பரிகரிப் பார்-தவிர்த்து, திண்ணிய-மனோத்ருடத்தையுடைய, சவுண்டதேவர்-சவுண்டையர், தெரிவையை - பெண்ணை, சிறிது-கொஞ்சநேரம், தட்டா-தட்டி, எ-று.

(பொ-ரை.) தர்மமான வயசு நூறும் பெற்றுச் சுகமாக வாழ்ந்திருமென்று ஆசீர்வா தஞ் செய்வதே யல்லாமல், உடம்பில் விளங்குகின்ற உயிரைச் சேர்ப்பதற்கும் ஒத்துக் கொள்வார்களோ? என்று பெரியோர்கள் நிச்சயமாகக் கூறுகின்ற பழமொழியைத் தவிர்த்து, மனோத்ருடத்தையுடைய சவுண்டையர் பெண்ணைக் கொஞ்ச நேரம் தட்டி.

(வி-ரை.) நுவல்-சொல். பரிகரிப்பார்-முற்றெச்சம். தட்டா - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (௩௦)

கரத்துவாள் விதிர்த்தெ ழுந்து கனவயி ராக்கி யத்தா
லுரத்துவா மின்னே யென்று பெயரினை யுரைத்த ழைத்தார்
சிரத்தொனி கேளா முன்னஞ் சவுண்டையர் திருநோக் கத்து
வரத்தினாற் றுயின்றெ ழுந்தோர் வண்மைபோன் மதித்தெ ழுந்தாள்.

(ப-ரை.) கரத்துவாள்-கைப்படையாகிய வாளை, விதிர்த்து-அசைத்து, எழுந்து-எழும்பி, கனம்-மிக்க, வயிராக்கியத்தால்-வைராக்யத்துடன், உரத்து-பெலத்த சப்தத்தினால், மின்னே - பெண்ணே, வாவென்று - வருவாயென்று, பெயரினை - பெயரை, உரைத்து-சொல்லி, அழைத்தார் - கூப்பிட்டார், சிரத்தொனி - உரத்த சத்தத்தை, கேளா-கேட்காத, முன்னம்-முன்னமே, சவுண்டையர்-சவுண்டையரது, திருநோக்கத்து - க்ருபாகடாக்ஷத்தின், வரத்தினால்-மேன்மையினால், துயின்று - தூங்கி, எழுந்தோர் வண்மை - (தெளிந்து) எழுந்தவரைப்போல், மதித்து-தெளிந்து, எழுந்தாள்-எழுந்து, எ-று.

(பொ-ரை.) கைப்படையாகிய வாளை யசைத்து, எழும்பி, மிக்க வைராக்யத்துடன் பெலத்த சத்தத்தினால், பெண்ணே! வருவாயென்று பெயரைச் சொல்லிக் கூப்பிட்டார்; உரத்த சத்தத்தைக் கேட்காத முன்னமே சவுண்டையரது க்ருபாகடாக்ஷத்தின் மேன்மையினால் தூங்கித் தெளிந்தெழுந்தவரைப் போல் தெளிந்தெழுந்து. (௯௧)

(வி-ரை.) எழுந்தாள்-முற்றெச்சம்.

பார்த்துநற் சவுண்ட தேவர் பதுமநற் பதம்ப ணிந்து
கூர்த்தமெய் யன்பி னாலே கும்பிடுங் கரத்த ளாகி
நேர்த்துமுன் னிற்கு மாதை நேயத்தாற் பிதாவுந் தாயு
மார்த்தெழுந் தணைத்துக் கொண்டா ரங்கங்கள் புளக நீட.

(ப-ரை.) பார்த்து - நோக்கி, நல் - சிறந்த, சவுண்டதேவர் - சவுண்டையரது, நல் - சிறந்த, பத்மம் - தாமரைமலர்போன்ற, பதம் - திருவடிகளை, பணிந்து - ஸாஷ்டாங்கமாக வணங்கி, கூர்த்த - மிகுந்த, மெய் - உண்மையாகிய, அன்பினால் - அன்புடன், கும்பிடும் - கூப்புகின்ற, கரத்தள் ஆகி - கைகளையுடையவளாகி, நேர்த்து - சமீபத்தில், முன் - எதிரே, நிற்கும் - நின்று வணங்குகின்ற, மாதை - பெண்ணை, நேயத்தால் - அன்புடன், பிதாவும்-தந்தையும், தாயும்—, ஆர்த்து-ஆரவாரஞ்செய்து, எழுந்து—, அங்கங்கள் - உடம்புகள், புளகம் - மயிர்க்குச்செறிவு, நீட - பெருகும்படி, அணைத்துக்கொண்டார் - (மார்போடு) தழுவிக்கொண்டார்கள், எ - று.

(பொ - ரை.) நோக்கி, சிறந்த சவுண்டையரது சிறந்த தாமரைமலர் போன்ற திருவடிகளை ஸாஷ்டாங்கமாக வணங்கி, மிகுந்த உண்மையாகிய அன்புடன் கூப்புகின்ற கைகளையுடையவளாகி, சமீபத்தில் எதிரே நின்று வணங்குகின்ற பெண்ணை அன்புடன் தந்தையுந்தாயும் ஆரவாரஞ்செய்து, எழுந்து, உடம்புகள் மயிர்க்குச்செறிவு பெருகும்படி மார்போடு தழுவிக்கொண்டார்கள். (௯௨)

துதித்தனர் மண்ணோர் விண்ணோர் துந்துமி யைந்து மார்த்தார்
மதித்தெழும் பிதாவுந் தாயுஞ் சவுண்டையர் மலர்த்தாள் போற்றி
விதித்தவட் டாங்க மெல்லா மேதினி யுறப்ப ணிந்தார்
நிதித்திரள் கண்டாற் போல நெஞ்சக முருகிச் சொல்வார்.

(ப-ரை) மண்ணோர்-மனிதர்கள், துதித்தனர்-ஸ்துதித்தார்கள்; விண்ணோர்-தேவர்கள், துந்துமி ஐந்தும்-பஞ்ச துந்துபி வாத்யங்களையும், ஆர்த்தார்-முழக்கினார்கள், மதித்து-தெளிந்து, எழும்-எழுகின்ற, பிதாவும்-தந்தையும், தாயும்—, சவுண்டையர்-சவுண்டையரது, மலர் - தாமரைமலர்போன்ற, தாள் - திருவடிகளை, போற்றி - துதித்து, விதித்த- (சாஸ்திரங்கள்) நியமித்த, அட்டாங்கம் எல்லாம்-எட்டு உறுப்புக்களும், மேதினியுற-பூமியிற் படும்படி, பணிந்தார் - வணங்கி, நிதித்திரள் - பொற்குவியலை, கண்டால் - பார்த்தால், போல—, நெஞ்சம் - மனம், உருகி - கரைந்து சொல்வார்-கூறுவாரானார்கள் (எவ்வாறெனின்), எ - று.

(பொ-ரை.) மனிதர்கள் எத்தினார்கள்; தேவர்கள் பஞ்ச துந்துமி வாத்யங்களையும் முழக்கினார்கள்; தெளிந்தெழுகின்ற தந்தையும் தாயும் சவுண்டையரது தாமரை மலர்போன்ற திருவடிகளைத் துதித்து, சாஸ்திரங்கள் நியமித்த எட்டு உறுப்புக்களும் பூமியிற்படும்படி வணங்கி, பொற்குவியலைப் பார்த்தாற்போல மனம் கரைந்து கூறுவாரானார்கள்; எவ்வாறெனின்.

(வி-ரை.) பணிந்தார் - முற்றெச்சம். (௧௩)

தருந்தவ ராச ராச சவுண்டைய வெமக்கு நீசெய்
பெரும்பிரா ணோப காரப் பெருமைக்கு நேர தாக
வருந்தியே யாங்கள் செய்யுங் கைம்மாறு மற்றொன் றில்லேம்
பொருந்திநின் னடிமை யாகப் புகுவதே கரும மென்றார்.

(ப-ரை.) தரும் - (வேண்டிய வரங்களை யெல்லாம்) அநுக்ரஹஞ்செய்யவல்ல, தவராசராசன் - தவராஜசிங்கமாகிய, சவுண்டைய - சவுண்டையனே, நீ—, எமக்கு - எங்களுக்கு, செய் - அநுக்ரஹஞ்செய்தருளிய, பெரு - பெரிய, பிராணோபகாரம் - ப்ராணோபகாரத்தின், பெருமைக்கு - பெருந்தன்மைக்கு, நேராக - சமானமாக, யாங்கள் - நாங்கள், வருந்தி - பிரயாசைப்பட்டு, செய்யும் - பண்ணுகின்ற, கைம்மாறு - பிரதியுபகாரம், மற்று - வேறு, ஒன்று - ஒன்றும், இல்லேம் - இல்லாமற்போயினோம், பொருந்தி - (மனம்) இசைந்து, நின் - உனது, அடிமையாக - தொண்டர்களாக, புகுவதே - போவதே, கருமம் - கடமை, என்றார் - என்று சொன்னார்கள், எ-று.

(பொ-ரை.) வேண்டிய வரங்களை யெல்லாம் அநுக்ரஹஞ்செய்யவல்ல தவராஜசிங்கமாகிய சவுண்டையனே! நீ எங்களுக்கு அநுக்ரஹஞ்செய்தருளிய பெரிய ப்ராணோபகாரத்தின் பெருந்தன்மைக்குச் சமானமாக நாங்கள் பிரயாசைப்பட்டு பண்ணுகின்ற ப்ரதியுபகாரம், வேறொன்று மில்லாமற்போயினோம்; மனமிசைந்து உனது தொண்டர்களாகப் போவதே கடமையென்று சொன்னார்கள். (௧௪)

மடிந்தெழுந் திருந்து நின்ற மாதிற்குந் தாதை யார்க்கும்
வெடிந்தன னெனப்பு கன்ற தாய்க்குநல் விருப்பி னாலே
படிந்தசீ ரிலிங்க நேசப் பார்வையாற் றரித்துப் பின்னுங்
கடிந்துதுற் சமயம் வெல்லுங் கருத்தினார் மடத்தி ருந்தார்.

(ப-ரை.) மடிந்து - இறந்து, எழுந்திருந்து - உயிர் பெற்றெழுந்திருந்து, நின்ற - நிற்கின்ற, மாதிற்கும் - பெண்ணுக்கும், தந்தையார்க்கும் - பிதாவுக்கும், வெடிந்தனன் - கடைத்தேறினேன், என - என்று, புகன்ற - சொன்ன, தாய்க்கும் - மாதாவுக்கும், நல் - சிறந்த, விருப்பினால் - அன்புடன், படிந்த - பலஜந்மங்களிற்செய்த புண்ய விசேஷத்தினால் சித்தியடைந்ததனாலுண்டாகிய, சீர் - சிறப்புற்ற, இலிங்கம் - சிவலிங்கத்தை, நேசப்பார்வையால் - க்ருபாகடாக்ஷத்துடன், தரித்து - தாரணஞ்செய்து, பின்னும் - மேலும், துற்சமயம் - துஷ்ட பரசமயவாதிகளை, கடிந்து - கொன்று, வெல்லும் - வெற்றியடைதற்குரிய, கருத்தினார் - திருவுளங்கொண்டவராகிய சவுண்டையர், மடத்து - திருமடத்தில், இருந்தார் - (சுகமாக) வீற்றிருந்தனர், எ-று.

(பொ-ரை.) இறந்து, உயிர் பெற்றெழுந்திருந்து, நிற்கின்ற பெண்ணுக்கும், பிதாவுக்கும், கடைத்தேறினேனென்று சொன்ன மாதாவுக்கும் சிறந்த அன்புடன் பல ஜந்மங்களிற் செய்த புண்ய விசேஷத்தினால் சித்தியடைந்ததனாலுண்டாகிய சிறப்புற்ற சிவலிங்கத்தை க்ருபாகடாக்ஷத்துடன் தாரணஞ்செய்து, மேலும் துஷ்ட பரசமயவாதிகளைக் கொன்று வெற்றியடைதற்குரிய திருவுளங்கொண்டவராகிய சவுண்டையர் திருமடத்தில் சுகமாக வீற்றிருந்தனர்.

(வி-ரை.) வேதாகம பாஹ்யமதஸ்தர்களை வென்று, சகல ஜீவப்ராணிகளை சன்மார்க்கமாகிய சிவபக்தி மார்க்கத்திற் புகுவித்து, நற்கதி பெறச் செய்பவராதலின் கடிந்து துற்சமயம் வெல்லுங் கருத்தினாரென்றார். (௧௫)

முசுண்டிச்சவுண்டையர் புராணம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௧௧௧௨.

சிவமயம்.

# சரிகைச்சவுண்டையர் புராணம்.

கோச்சகக்கலிப்பா.

மருவமல வொளிவீசும் வண்புகழா ரொண்கருணைப்
புருடமணி கலியாண புரத்துறையும் விரத்தனார்
பெருகுநெறிச் சரிகைசவுண் டையரெனும் பேர்பெற்றார்
குருவருளா லவர்மனத்துக் கொண்டநிட்டை கூறுவாம்.

(ப-ரை.) அமலம் மருவு-வெண்ணிறம் பொருந்திய, ஒளி வீசும்-ஒளி வீசுகின்ற, வண்-மேன்மையாகிய, புகழார்-புகழினையுடையவர், ஒண்-மேன்மையாகிய, கருணை-அன்புடைய, புருடமணி-புருஷரத்நமாயிருப்பவர், கலியாணபுரத்து-கல்யாணபட்டினத்தில், உறையும் விரத்தனார்-துறவறத்தையடைந்து வாழ்பவர், பெருகு-உயர்ந்த, நெறி-நடையினையுடைய, சரிகைசவுண்டையர் என்னும்-சரிகைச்சவுண்டையரென்கின்ற, பேர்பெற்றார்-திருநாமத்தினையுடையவர், குரு அருளால்-ஸ்ரீஸத்குருகடாக்ஷத்தினால், அவர்—, மனத்து-மனத்தில், கொண்ட-உறுதியாய்க்கொண்டிருக்கின்ற, நிட்டை-வீரவிரதத்தை, கூறுவாம்-சொல்லத் தொடங்குவோம் (எவ்வாறெனின்), எ-று

(பொ-ரை.) வெண்ணிறம் பொருந்திய ஒளிவீசுகின்ற மேன்மையாகிய புகழினையுடையவர்; மேன்மையாகிய அன்புடைய புருஷரத்நமாயிருப்பவர்; கல்யாணபட்டினத்தில் துறவறத்தை யடைந்து வாழ்பவர்; சரிகைச்சவுண்டையரென்கின்ற திருநாமத்தினையுடையவர்; ஸ்ரீஸத்குருகடாக்ஷத்தினால் அவர் மனத்தில் உறுதியாய்க் கொண்டிருக்கின்ற வீரவிரதத்தைச் சொல்லத் தொடங்குவோம்; எவ்வாறெனின்.

(வி-ரை.) விரத்தி - விரக்தி என்னும் வட சொற்றிரிபு. விரத்தி - வெறுப்பு. அமலம் - பரிசுத்தம். (க)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இட்டலிங்கத் தட்டவிதார்ச் சனையி னிட்டை
யீரெட்டா முபசாரத் தியல்பி னிட்டை
மட்டறுநற் குருபத்தி மகிமை நிட்டை
வருஞ்சரலிங் கத்தினிட்டை மருவு சேடம்
விட்டகலா நிட்டைபர தத்து வங்கள்
விளங்கவறிந் திடுநிட்டை விமல நிட்டை
துட்டமனை வாழ்க்கையிச்சை துணிக்கு நிட்டை
சுகானந்த பரவசத்தாற் றாங்கு நிட்டை.

(ப-ரை.) இட்டலிங்கத்து-இஷ்டலிங்கமூர்த்திக்கு, அட்டவிதார்ச்சனையின் - அஷ்டவிதார்ச்சனை செய்கின்ற, நிட்டை-வீரவிரதமும், ஈர் எட்டு ஆம் உபசாரத்து இயல்பின் - ஷோடசோபசாரங்களைச் செய்கின்ற, நிட்டை-வீர விரதமும், நற்குரு-ஸத்குரு நாதர்க்கு, மட்டு அறு-அளவில்லாத, பத்தி-பக்திசெய்கின்ற, மகிமை-மேன்மையாகிய, நிட்டை-வீரவிரதமும், வரும்- (அநுக்ரஹஞ்செய்ய) எழுந்தருளுகின்ற, சரலிங்கத்தின் - ஜங்கமலிங்கமூர்த்திகளுக்கு பக்திசெய்கின்ற, நிட்டை-வீரவிரதமும், மருவும் - (குரு லிங்க ஜங்கமர்களால்) அடைகின்ற, சேடம் - ப்ரஸாதப்ரஸாதங்களை, விட்டு அகலா - ஸ்வீகரிப்பதினின்றும் விட்டுநீங்காத, நிட்டை-வீரவிரதமும், பரதத்துவங்கள் - சிவதத்வங்களை, விளங்க - (நிகமாகமாதிகளைக்கொண்டு விசாரித்து) தெளிய, அறிந்திடும்-உணர்கின்ற, நிட்டை-வீரவிரதமும், விமலன்-சிவபெருமானையே

(நோக்கி விரதம் அநுஷ்டிக்கின்ற), நிட்டை-வீரவிரதமும், துட்ட - கொடிய, மனை வாழ்க்கை யிச்சை-இல்லறப் பற்றினை, துணிக்கும்-ஒழிக்கின்ற, நிட்டை - வீரவிரதமும், சுகானந்த பரவசத்தால் - பேரின்ப வசத்தினால், தூங்கும் - யோகநித்திரை செய்கின்ற, நிட்டை-வீரவிரதமும், எ-று.

(பொ-ரை.) இஷ்டலிங்கமூர்த்திக்கு அஷ்டவிதார்ச்சனை செய்கின்ற வீர விரதமும், ஷோடசோபசாரங்களைச் செய்கின்ற வீரவிரதமும், ஸத்குருநாதர்க்கு அளவற்ற பக்தி செய்கின்ற மேன்மையாகிய வீரவிரதமும், அநுக்ரஹஞ்செய்ய எழுந்தருளுகின்ற ஜங்கமலிங்க மூர்த்திகளுக்கு பக்தி செய்கின்ற வீரவிரதமும், குருலிங்க ஜங்கமர்களால் அடைகின்ற ஸேஷப்ரஸாதங்களை ஸ்வீகரிப்பதினின்றும் விட்டு நீக்காத வீரவிரதமும், சிவதத்வங்களை நிகமாகமாதிகளைக்கொண்டு விசாரித்துத் தெளிய உணர்கின்ற வீரவிரதமும், சிவபெருமானையே நோக்கி விரதம் அநுஷ்டிக்கின்ற வீர விரதமும், பேரின்ப வசத்தினால் யோகநித்திரை செய்கின்ற வீரவிரதமும்.

(வி - ரை.) இட்டம் - இஷ்டம் என்னும் வடசொற்றிரிபு. அட்டம் - அஷ்டம் என்னும் வடசொற்றிரிபு. நிட்டை-நிஷ்டை என்னும் வடசொற்றிரிபு. அஷ்டவிதார்ச்சனையையும் ஷோடசோபசாரத்தையும் முன்னர் விளக்கியுள்ளாம். ஈரெட்டு-பதினாறு. பத்தி - பக்தி என்னும் வடசொற்றிரிபு. சரம் - சஞ்சரித்தல். சேடம் - ஸேஷம் என்னும் வடசொற்றிரிபு. தத்துவம் - தத்வம் என்னும் வடசொற்றிரிபு. துட்ட - துஷ்ட என்னும் வடசொற்றிரிபு. புண்யபாபகர்மங்களைச் செய்து வாழ்ந்து ஜநநமரணமுண்டாகித் துன்பத்தையே மீண்டும் மீண்டும் தருவது ஸம்ஸார ப்ரபஞ்சவாசனை யாதலால் துட்ட மனைவாழ்க்கையிச்சை யென்றார். பரவசம்-தன்னை மறந்திருத்தல். தூங்கும் நிட்டை என்றது நினைவிற் சுழுத்தியை. இச்செய்யுள் சிவலிங்கபூஜையையும், மூவித பக்தியையும், மூவித ப்ரஸாதத்தையும், சிவதத்வவிசாரணையையும், உலக வெறுப்பினையும், சிவயோகத்தையும், சுகாநுபவத்தையும் கூறிற்று. குருபக்தியென்பது காயக்ரியையினால் உடல், பொருள், ஆவிகளை யர்ப்பணஞ்செய்தல். லிங்கபக்தியென்பது மானஸக்ரியையினால் உடல், பொருள், ஆவிகளை யர்ப்பணஞ்செய்தல். ஜங்கமபக்தியென்பது ஞானக்ரியையினால் உடல், பொருள், ஆவிகளை யர்ப்பணஞ்செய்தல். (உ)

பரவுசிவ வீரவிர தத்தி னிட்டை
  பகரிலிங்க வபிமானம் பற்று நிட்டை
கரவுகர ணாதார விந்தி யத்தின்
  விதியொழுகா மிகுநிட்டை விசீல நிட்டை
கரவுகன வினுமில்லாக் கருணை நிட்டை
  கருதுசக லாங்கலிங்கங் காணு நிட்டை
சிரமுதற்பஞ் சாங்கசுத்தி சேரு நிட்டை
  தேகத்து மோகமிலாத் திர நிட்டை.

(ப-ரை.) பரவு-(எல்லாராலும்) புகழப்படுகின்ற, சிவ வீரவிரதத்தின்-வீரசைவாசாரத்தை யநுசரிக்கின்ற, நிட்டை-வீரவிரதமும், பகர்-(சிவாகமங்களில்) சொல்லப்பட்ட, இலிங்க அபிமானம்-லிங்காபிமானத்தை, பற்றும் - அடைந்திருக்கின்ற, நிட்டை-வீரவிரதமும் ,கரணம்-பஞ்ச கரணங்களுக்கு, ஆதாரம்-உதவியாயிருக்கின்ற, இந்தியத்தின் - பஞ்சேந்த்ரியங்களின், விதி-மார்க்கத்தில், ஒழுகா - செல்லாதிருக்கின்ற, மிகு-மேன்மையாகிய, நிட்டை-வீரவிரதமும், விசீலம்-(பரிசுத்தமான) வீரசைவ சீலங்களை (யநுசரிக்கின்ற), நிட்டை-வீரவிரதமும், கரவு-வஞ்சகச்செயல்கள், கனவினும்-சொப்பனத்திலும், இல்லா-ஒழிந்த, கருணை - கிருபைபொருந்திய, நிட்டை-வீரவிரத

மும், கருது-நினைத்தற்குரிய, சகலம் - சராசரங்களெல்லாவற்றையும், அங்கலிங்கம்-ஜீவப்ரஹ்மைக்யமாக, காணும் - அறிகின்ற, நிட்டை-வீரவிரதமும், சிரம்-தலை, முதல்-ஆதியாகிய, பஞ்ச அங்கம்-ஐந்து அவயவங்களை, சுத்திசேரும்-பரிசுத்தஞ்செய்கின்ற, நிட்டை-வீரவிரதமும், தேகத்து மோகம் - தேகாபிமானம், இல்லாத - ஒழிந்த, தீர-மனோத்ருடமான, நிட்டை-வீரவிரதமும், எ-று.

(பொ-ரை.) எல்லாராலும் புகழப்படுகின்ற வீரசைவாசாரத்தை யநுசரிக்கின்ற வீரவிரதமும், சிவாகமங்களிற் சொல்லப்பட்ட லிங்காபிமானத்தை யடைந்திருக்கின்ற வீரவிரதமும், பஞ்ச கரணங்களுக்கு உதவியாயிருக்கின்ற பஞ்சேந்த்ரியங்களின் மார்க்கத்திற் செல்லாதிருக்கின்ற மேன்மையாகிய வீரவிரதமும், பரிசுத்தமான வீரசைவ சீலங்களை யநுசரிக்கின்ற வீரவிரதமும், வஞ்சகச் செயல்கள் சொப்பனத்திலும் ஒழிந்த கிருபைபொருந்திய வீரவிரதமும், நினைத்தற்குரிய சராசரங்களெல்லாவற்றையும் ஜீவப்ரஹ்மைக்யமாக அறிகின்ற வீரவிரதமும், தலையாதியாகிய ஐந்து அவயவங்களைப் பரிசுத்தஞ்செய்கின்ற வீரவிரதமும், தேகாபிமானம் ஒழிந்த மனோத்ருடமான வீரவிரதமும்.

(வி-ரை.) சகலாங்கலிங்கம்-ஸர்வம் சிவமயம் ஜகத் எனினுமாம். பஞ்சாங்கம்-ஹ்ருதயம், சிரம், சிகை, கவசம், நேத்ரம் என்பன. இச்செய்யுள் வீரசைவாசாரத்தையும், லிங்காபிமானத்தையும், வீரசைவ சீலங்களையும், பஞ்சேந்த்ரிய நிக்ரஹத்தையும், வஞ்சகமொழிதலையும், சிவமயம் ஜகத் என்பதையும், பஞ்சாங்க சுத்தியினையும், தேகாபிமான மொழிதலையும் உதலிற்று. சீலம்-ஐந்து ஆசாரங்கள்; அவையாவன லிங்காசாரம், ஸதாசாரம், ப்ருத்யாசாரம், சிவாசாரம், கணாசாரம் என்பன. வீரசைவ சமயத்தில் க்ரியாமார்க்கமும், ஜ்ஞாநமார்க்கமும் முக்தி சாதனங்களாம். அஷ்டாவரணமும், பஞ்சாசாரமும் க்ரியைகளாம். சிவாகமங்களின் பொருளின் தத்வத்தை பாஷ்ய வ்யாக்யானங்களின் உதவியைக்கொண்டு தெளிதலே ஜ்ஞாநமாம். இவ்விரண்டினுல் லிங்காங்க ஸாமரஸ்ய ரூபமான முக்தியை யடைதலே வீரசைவ மதத்தின் பயனும். அஷ்டாவரணம் என்பது குரு, லிங்க, ஜங்கமம், பாதோதகம், ப்ரஸாதம், விபூதி, ருத்ராக்ஷம், பஞ்சாக்ஷர மஹாமந்த்ரங்களாம். பஞ்சாசாரம் என்பது - லிங்காசாரம் முதலியன. சிவபெருமானை யல்லாது மற்ற தெய்வங்களைப் பூஜியாதிருப்பதே லிங்காசாரம். தினந்தோறும் த்ரிகாலங்களிலும் ஸ்நானபான மடியுடன் விதிப்படி சிவலிங்கார்ச்சனை செய்வதே ஸதாசாரம். சிவபக்தர்க்கெல்லாம் தான் தொண்டனாயிருப்பதே ப்ருத்யாசாரம். விருத்திஷயங்களில் அசுசியில்லாமல் அழிவில்லாத லிங்கதாரண லிங்கபூஜாதி விரதங்களை யநுசரிப்பதே சிவாசாரம். சிவநிந்தை, சிவபக்தர் நிந்தையே முதலியவற்றைச் சகியாமலிருப்பதே கணாசாரம். இவைகளே யன்றி வீரசைவனுக்குத் தபம், கர்மம், ஜபம், த்யானம், ஜ்ஞானமென்னும் ஐந்து வேள்விகளும் உண்டு. விரிக்கிற் பெருகுமென்றஞ்சி இம்மட்டே நிறுத்தினேம். மற்ற சாஸ்திரங்களிற் கண்டு தெளிக.

இந்தவெகு விதநிட்டை யனைத்தா லாசா
னின்னருளாற் சங்கமத்தை யினிது பூசித்
தந்தமுற வைந்துவகை யமுதந் துய்ய
வறுசுவையும் படைத்ததிக பத்தியாலே
யெந்தனைசெய் தாகமத்திற் பத்தர் நாவின்
மகிழ்ந்தன்பே மெனுநின்றன் வாக்கி னாலே
பந்தமிலன் பர்களுவி னமுது செய்வாய்
பரமவெனச் சவுண்டையர் பகர்ந்தங் கம்மா.

(ப-ரை.) இந்த—, வெகு விதம் - பலவகைப்பட்ட, நிட்டை - வீரவிரதங்கள், அனைத்தால் - எல்லாவற்றினுலும், இன் - விரும்புதற்குரிய, ஆசான் அருளால் - ஸ்ரீஸத்குரு கடாக்ஷத்தால், இனிது - அன்புடன், ஜங்கமத்தைப் பூசித்து - ஜங்கமாரா

தனை செய்து, அந்தம் உற-அழகாக, ஐந்து வகை அமுதும்-பஞ்சாங்கத்தையும், அறு சுவையும்-ஷட்ருசி பதார்த்தங்களையும், படைத்து-அளித்து, அதிகம் - மிகுந்த, பத்தியில்-பக்தியினால், வந்தனை செய்து-வணங்கி, ஆகமத்தில் - காமிகாதி சிவாகமங்களில், பத்தர்-ஜங்கமமூர்த்திகளுடைய, நாவின் - நாக்கு நுனியின்கண் நின்று, மகிழ்ந்து-சந்தோஷத்துடன், உண்பேம் - அமுதுசெய்வோம், என்னும் - என்றருளிய, நின்-உனது, வாக்கின் - திருவாக்கின்படி, பந்தம் - பாசத்தினின்றும், இல் - நீங்கிய, அன்பர்கள்-ஜங்கமமூர்த்திகளுடைய, நாவின் - நாக்கு நுனியின்கண் நின்று அமுதுசெய்வதுபோலவே, பரம - பரமேசுவரனே, அமுதுசெய் - (இப்போது) திருவமுதுசெய்வாய், என்ன - என்று, சவுண்டையர் —, பகர்ந்து - சொல்லி, அங்கு - அவ்விடத்தில், எ-று.

(பொ-ரை.) இந்தப் பலவகைப்பட்ட வீரவிரதங்கள் எல்லாவற்றினாலும் விரும்புதற்குரிய ஸ்ரீஸத்குரு கடாக்ஷத்தால் அன்புடன் ஜங்கமாராதனைசெய்து, அழகாகப் பஞ்சாங்கத்தையும், ஷட்ருசி பதார்த்தங்களையும் அளித்து, மிகுந்த பக்தியினால் வணங்கி, காமிகாதி சிவாகமங்களில் ஜங்கமமூர்த்திகளுடைய நாக்கு நுனியின்கண் நின்று சந்தோஷத்துடன் அமுதுசெய்வோமென்றருளிய உனது திருவாக்கின்படி பாசத்தினின்றும் நீங்கிய ஜங்கமமூர்த்திகளுடைய நாக்கு நுனியின்கண் நின்று அமுதுசெய்வதுபோலவே இப்போது திருவமுதுசெய்வாயென்று சவுண்டையர் சொல்லி, அவ்விடத்தில். (௬)

அன்புடன்மா யேசரெலா மமருங் காலை
யத்தலிங்க மருச்சிப்பா னமர்ந்தி ருந்து
முன்புறுமஞ் சனமாட்டா முன்ன நெஞ்சின்
முதுமகிழ்வா மஞ்சனத்தை முழுது மாட்டி
நன்புனித மலர்சாத்தா முந்த வுள்ள
நளினமல ரினைச்சாத்தி நாறுந் தூப
மின்புறநல் காமுதலே யந்த ரங்க
விருங்கரண வாதனையை யினிதா வீந்து.

(ப-ரை.) அன்புடன்-பக்தியுடன், மாயேசர்-வீரமாஹேசுவரர்கள், எல்லாம்-அனைவரும், அமரும்காலை-(இஷ்டலிங்கார்ச்சனை செய்ய) எழுந்தருளியிருக்கின்ற காலத்தில், அத்தம் - (தாமும் தமது) கரதலத்தில் வீற்றிருக்கின்ற, லிங்கம் - இஷ்டலிங்கமூர்த்தியை, அருச்சிப்பான்-பூஜைசெய்யும் பொருட்டு, அமர்ந்திருந்து-ஆசனத்தில் உட்கார்ந்திருந்து, முன்பு-எதிரே, உற-அமைத்திருக்கின்ற, மஞ்சனம்-சுத்த ஜலத்தை, ஆட்டா முன்னம்-அபிஷேகஞ்செய்யா முன்னர், நெஞ்சின் - மனத்திலுண்டாகிய, முது மகிழ்வாம்-பேரானந்த கண்ணீராகிய, மஞ்சனத்தை-சுத்த ஜலத்தை, முழுதும்-முற்றிலும், ஆட்டி-அபிஷேகஞ்செய்து, நல்-மிக்க, புனிதம் - பரிசுத்தமாகிய, மலர்-புஷ்பங்களை, சாத்தா-அணியா, முந்த - முன்னர், உள்ளம்-மனமாகிய, நளினமலரினை - தாமரை புஷ்பத்தை, சாத்தி-அணிந்து, நாறும்-நறுமணம் கமழ்கின்ற, தூபம்-தூபார்த்தியை, இன்பு உற - சந்தோஷத்துடன், நல்கா முதலே - கொடுக்கா முன்னர், அந்தரங்கம்-உள்ளேயிருக்கின்ற, இரு-பெரிய, கரண வாதனை-பஞ்ச கரணங்களின் வாசனையாகிய தூபத்தை, இனிதா-சந்தோஷத்துடன், ஈந்து-கொடுத்து, எ-று.

(பொ-ரை.) பக்தியுடன் வீரமாஹேசுவரர்கள் அனைவரும் இஷ்டலிங்கார்ச்சனை செய்ய எழுந்தருளியிருக்கின்ற காலத்தில், தாமும் தமது கரதலத்தில் வீற்றிருக்கின்ற இஷ்டலிங்கமூர்த்தியைப் பூஜைசெய்யும் பொருட்டு ஆசனத்தில் உட்கார்ந்திருந்து, எதிரே அமைத்திருக்கின்ற சுத்த ஜலத்தை யபிஷேகஞ் செய்யா முன்னர், மனத்திலுண்டாகிய பேரானந்த கண்ணீராகிய சுத்த ஜலத்தை முற்றிலும் அபிஷேகஞ்செய்து, மிகவும் பரிசுத்தமாகிய புஷ்பங்களை யணியா முன்னர், மனமாகிய தாமரை

புஷ்பத்தை யணிந்து, நறுமணம் கமழ்கின்ற தூபார்த்தியைச் சந்தோஷத்துடன் கொடுக்கா முன்னர், உள்ளேயிருக்கின்ற பெரிய பஞ்ச கரணங்களின் வாசனையாகிய தூபத்தைச் சந்தோஷத்துடன் கொடுத்து.

(வி-ரை.) இது முதல் மூன்று செய்யுட்கள் பஹிரங்க பூஜையாகிய இஷ்டலிங்க பூஜையையும், அந்தரங்க பூஜையாகிய ப்ராணலிங்க பூஜையையும் நுதலிற்று. இவ் விரண்டுவிதமான பூஜையை வீரசைவர் செய்ய விதிக்கப்பட்டுள்ளது. (௫)

ஒளிதிகழ்தீ பார்த்திபணி மாறு முன்ன
முள்ளறிவாஞ் சோதியினை யுவப்பா லேற்றித்
தெளியுமறு சுவையமுதஞ் செலுத்தா முந்தத்
திகழ்தருமான் மாவைநிவே தித்துப் பின்னுங்
களிகொண்மன முருகியுடற் சேட்டை யெல்லாங்
கழன்றலிங்கச் சோதியினைக் கண்டு கொண்டு
நளினமுக மலரவரும் பரமா னந்த
நல்லமுதுண் டுண்டுசுவை நயத்தா னையா.

(ப-ரை.) ஒளி திகழ்-ஒளி வீசுகின்ற, தீபார்த்தி - தீபார்த்தியை, பணிமாறு-கொடுக்கா, முன்னம் - முன்னர், உள் - உள்ளேயிருக்கின்ற, அறிவாம் - அறிவாகிய, சோதியினை - தீபத்தை, உவப்பால் - சந்தோஷத்துடன், ஏற்றி - கொடுத்து, தெளியும் - வளமையாகிய, அறுசுவை - ஷட்ருசி பதார்த்தங்களையும், அமுதம் - பஞ்சாங்நத்தையும், செலுத்தா - ஆராதிக்கா, முந்த - முன்னர், திகழ்தரும் - விளங்குகின்ற, ஆன்மாவை - ஆத்மாவை, நிவேதித்து - ஆராதித்து, பின்னும் - மேலும், களிகொள் - சந்தோஷம்பொருந்திய, மனம் - நெஞ்சம், உருகி - கரைந்து, உடல் - உடம்பிலுள்ள (கருவி கரணங்களின்), சேட்டை-துஷ்ட கார்யங்கள், எல்லாம்-முழுதும், கழன்று - ஒழிந்து, லிங்கச்சோதியினை - ஜ்யோதிர்லிங்கத்தை, கண்டுகொண்டு-தரிசித்துக்கொண்டு, நளினம் - தாமரைமலர்போலும், முகம்—, மலர - மலர்தலும், அரு - மேன்மையாகிய, பரமானந்தம் - சிவாநந்தமாகிய, நல்-சிறந்த, அமுது-அமுதினை, உண்டு உண்டு - அடிக்கடி புசித்து; சுவை - ருசிகரமுள்ள, நயத்தால் - இன்பத்தினால், நையா - மெலிந்து, எ - று.

(பொ-ரை.) ஒளிவீசுகின்ற தீபார்த்தியைக் கொடுக்கா முன்னர், உள்ளே யிருக்கின்ற அறிவாகிய தீபத்தைச் சந்தோஷத்துடன் கொடுத்து, வளமையாகிய ஷட்ருசி பதார்த்தங்களையும், பஞ்சாநத்தையும் ஆராதிக்கா முன்னர், விளங்குகின்ற ஆத்மாவை யாராதித்து, மேலும் சந்தோஷம்பொருந்திய நெஞ்சம் கரைந்து உடம்பிலுள்ள கருவி கரணங்களின் துஷ்ட கார்யங்கள் முழுதும் ஒழிந்து ஜ்யோதிர்லிங்கத்தைத் தரிசித்துக் கொண்டு தாமரைமலர்போலும் முகம் மலர்தலும், மேன்மையாகிய சிவாநந்தமாகிய சிறந்த அமுதினை அடிக்கடி புசித்து, ருசிகரமான இன்பத்தினால் மெலிந்து. (௯)

(வி-ரை.) ஏற்றி - எரித்து.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நற்சுகா கரத்தின் வீழ்ந்து நலம்பெற மூழ்கி மூழ்கித்
தற்சுக வந்த ரங்கத் தன்மையாஞ் சோதி தன்னைச்
சிற்சுகப் பிராண லிங்கத் திரங்க மொன்றச் சேர்த்தங்
கற்சனை புரிந்து துய்ய வமுதுசெய் விப்பா ராகி.

(ப-ரை.) நல்-சிறந்த, சுகாகரத்தின்-பேரின்பக்கடலில், வீழ்ந்து-குதித்து, நலம்-நன்மை, பெற-அடையும்பொருட்டு, மூழ்கிமூழ்கி-அமிழ்ந்தமிழ்ந்து, தற்சுகம்-ஆத்மாநந்தமானதும், அந்தரங்கத்தன்மையாம்-ஏகாந்தமானதுமாகிய, சோதிதன்னை-ஜ்யோ

*திர்லிங்கத்தை, சிற்சுகம் - ஜ்ஞாந ஸ்வரூபமாகிய, பிராணலிங்கத்து - ப்ராணலிங்கத்தினது, ஏர்-அழகிய, கரம்-கைத்தலத்தில், ஒன்றச் சேர்த்து - வீற்றிருக்கச்செய்து, அங்கு-அவ்விடத்தில், அர்ச்சனை புரிந்து - பூசை செய்து, தூய்ய-பரிசுத்தமாகிய, அமுது-அந்நத்தை, செய்விப்பாராகி-திருவமுது செய்யப்பண்ணுபவராகி, எ-று.*

(பொ-ரை.) *சிறந்த பேரின்பக் கடலிற் குதித்து, நன்மையடையும் பொருட்டு அமிழ்ந்தமிழ்ந்து, ஆத்மாநந்தமானதும், ஏகாந்தமானதுமாகிய ஜ்யோதிர்லிங்கத்தை ஜ்ஞாநஸ்வரூபமாகிய ப்ராணலிங்கத்தினது அழகிய கைத்தலத்தில் வீற்றிருக்கச் செய்து, அவ்விடத்தில் பூஜைசெய்து, பரிசுத்தமாகிய அந்நத்தைத் திருவமுது செய்யப் பண்ணுபவராகி.*

(வி-ரை.) *ஈரம் என்பது ஏர் எனத்திரிந்து நின்றது.* (எ)

தொடருநற் றுணிவி னூலே சரிகையை யுறையின் வாங்கி
யடலுற வலப்பால் வைத்திவ் வமுதினை யமுது செய்யா
விடினுயிர் துறப்பே னென்னு மெய்விர தத்த ராகித்
திடமுட னமுது செய்யுந் திறமுன்பின் றெரிந்தி ருந்து.

(ப-ரை.) *தொடரும் - (பழமையாக) தொடர்ந்து வருகின்ற, நல்-சிறந்த, துணிவினூலே-மநோத்ருடத்துடனே, சரிகையை-உடைவாளை, உறையின்-உறையினின்றும், வாங்கி-உருவி, அடல் உற-வெற்றியடையும்பொருட்டு, வலப்பால்-வலது பக்கத்தில், வைத்து - இருத்தி, இ - இந்த, அமுதினை - அந்நத்தை, அமுது செய்யாவிடில்-உண்ணுமற்போவாயாயின், உயிர்-உயிரை,துறப்பேன்-விடுவேன்,என்னும்-என்கின்ற, மெய்-உண்மையாகிய, விரதத்தர் ஆகி-வீரவிரதத்தை யநுஷ்டிப்பவராகி, திடமுடன்-தைர்யத்துடன், முன் - முற்காலத்திலும், பின்-பிற்காலத்திலும், அமுது செய்யும்-உண்ணுகின்ற,திறம்-மேன்மையை, தெரிந்து இருந்து-உணர்ந்திருந்தமையால், எ-று.*

(பொ-ரை.) *பழமையாகத் தொடர்ந்து வருகின்ற சிறந்த மநோத்ருடத்துடனே உடைவாளை உறையினின்றும் உருவி, வெற்றியடையும் பொருட்டு வலது பக்கத்திலிருத்தி, இந்த அந்நத்தை யுண்ணுமற் போவாயாயின் உயிரை விடுவேனென்கின்ற உண்மையாகிய வீரவிரதத்தை யநுஷ்டிப்பவராகி, தைர்யத்துடன் முற்காலத்திலும் பிற்காலத்திலும் உண்ணுகின்ற மேன்மையை யுணர்ந்திருந்தமையால்.* (அ)

கையினு லிதத்த நல்ல கறியமு தமுத னைத்துஞ்
செய்யத மன்பி னூலே திரட்டிமுன் னென்றொன் ருக
வையநீ யமுது செய்யென் றடிக்கடி தரவேற் றேற்று
வெய்யவெம் பசியர் போல விருப்பினு லமுது செய்து.

(ப-ரை.) *கையினுல்-திருக்கரத்தால், இதத்த-விரும்பின, நல்ல-பரிசுத்தமாகிய, கறியமுது - கறியமுதும், அமுது - அந்நமும் (ஆகிய), அனைத்தும்-எல்லாவற்றையும், செய்ய-மேன்மையாகிய, தம்-தமது, அன்பினுல் - அன்புடன், முன்-எதிரே, திரட்டி-உருண்டைசெய்து வைத்துக்கொண்டு, ஒன்று ஒன்று ஆக - ஒவ்வொரு உருண்டையாக, ஐய - ஐயனே, நீ—, அமுதுசெய்யென்று-உண்ணென்று, அடிக்கடி-பலகாலும், தர-கொடுத்தலும், ஏற்று ஏற்று-வாங்கி வாங்கி, வெய்ய வெம்-மிகக்கொடிய, பசியர் போல-பசிகொண்டவர்போல, விருப்பினுல்-அன்புடன், அமுது செய்து-உண்டருளி, எ-று.*

(பொ-ரை.) *திருக்கரத்தால் விரும்பின பரிசுத்தமாகிய கறியமுதும், அந்நமுமாகிய எல்லாவற்றையும் மேன்மையாகிய தமது அன்புடன் எதிரே உருண்டைசெய்து வைத்துக்கொண்டு, ஒவ்வொரு உருண்டையாக, ஐயனே! நீ உண்ணென்று பலகாலும் கொடுத்தலும், வாங்கி வாங்கி மிகக் கொடிய பசிகொண்டவர் போல் அன்புடன் உண்டருளி.* (௯)

மிக்கலிங் கத்திற் சேட மெய்த்தவர் சேட மெல்லாம்
பக்கமொன் றிடமுக் காலம் பரிவினு லருந்தி வாழுந்
தக்கசீர்ச் சவுண்ட தேவர் பெரும்புகழ் தரணி யெங்கும்
புக்கபி னவரை நல்லோர் புகழ்ந்தவா புகல லுற்றேன்.

(ப - ரை.) மிக்க-மேன்மையாகிய, லிங்கத்தின் சேடம்-சிவப்ரஸாதமும், மெய்-உண்மையாகிய, தவர் சேடம்-ஜங்கமப்ரஸாதமும் (ஆகிய), எல்லாம் - எல்லாவற்றையும், ஒன்றிட - அன்புண்டாக, முக்காலம் - த்ரிகாலங்களிலும், பரிவினுல் - இன்பத்துடன், அருந்தி - உண்டு, வாழும் - வாழ்கின்ற, தக்க - தகுதியாகிய, சீர் - சிறப்பையுடைய, சவுண்டதேவர்-சவுண்டையருடைய, பெரு-மேன்மையாகிய, புகழானது-கீர்த்தியானது, தரணி - உலகம், எங்கும்-முழுதும், புக்க - வியாபித்த, பின் - பிறகு, அவரை—, நல்லோர் - பெரியோர்கள், புகழ்ந்தவா - புகழ்ந்த விதத்தை, புகலல் உற்றேன்-சொல்லத் தொடங்கினேன், எ - று.

(பொ-ரை.) மேன்மையாகிய சிவப்ரஸாதமும், உண்மையாகிய ஜங்கமப்ரஸாதமுமாகிய எல்லாவற்றையும் அன்புண்டாக த்ரிகாலங்களிலும் இன்பத்துடன் உண்டு வாழ்கின்ற தகுதியாகிய சிறப்பையுடைய சவுண்டையருடைய மேன்மையாகிய கீர்த்தியானது உலகம் முழுதும் வியாபித்த பிறகு, அவரைப் பெரியோர்கள் புகழ்ந்த விதத்தைச் சொல்லத் தொடங்கினேன்.

(வி - ரை.) முக்காலம் - காலை, உச்சி, மாலை. பக்கம்-பக்ஷம் என்னும் வடசொற்றிரிபு. புகழ்ந்தவாறு என்பது புகழ்ந்தவா வென ஈறு தொகுத்தலாயிற்று. (௧௦)

சோழன்.

உறநெறி யபயன் முன்னு ளுழைக்கரர்க் கமுது செய்ய
மறுவிலா வசனத் துக்கொண் வாலிய வரிசி மூந்நூற்
றறுபதின் கலங்க றிக்கா மிளகுமுக் கலம ளந்து
நறுவிய நெய்பால் சீனி நறுங்கனி மிகவு நல்கி

(ப-ரை.) உற நெறி-பெரிய நடையினையுடைய, அபயன்-(கரிகால்) சோழன், முன் நாள் - முன்னொரு காலத்தில், உழை-மான் (ஏந்திய), கரர்க்கு - திருக்கையையுடையவராகிய சிவபெருமானுக்கு, அமுது செய்ய - திருவமுது செய்யும் பொருட்டு, மறு இல்லா-குற்றமில்லாத, அசனத்துக்கு - திருவமுதுக்காக, ஒள்-உயர்ந்த, வாலிய-வெள்ளிய, அரிசி - (சம்பா) அரிசி, மூந்நூற்று அறுபதின் கலம் - மூந்நூற்றறுபது கலமும், கறிக்கு ஆம்-கறியமுதுக்காக, மிளகு—, முக்கலம்-மூன்று கலமும், அளந்து-அளந்து (கொடுத்து), நறுவிய-நறுமணங் கமழ்கின்ற, நெய்-நெய்யையும், பால்-பாலையும், சீனி - சீனிசர்க்கரையையும், நறும் - நல்ல பரிமளமுள்ள, கனி - பழங்களையும், மிகவும் - அதிகமாக, நல்கி - கொடுத்து, எ - று.

(பொ-ரை.) பெரிய நடையினையுடைய கரிகால் சோழன் முன்னொரு காலத்தில் மானேந்திய திருக்கையை யுடையவராகிய சிவபெருமானுக்குத் திருவமுதுசெய்யும்பொருட்டு, குற்றமில்லாத திருவமுதுக்காக உயர்ந்த வெள்ளிய சம்பா அரிசி மூந்நூற்றறுபது கலமும், கறியமுதுக்காக மிளகு மூன்று கலமும் அளந்து கொடுத்து, நறுமணங் கமழ்கின்ற நெய்யையும், பாலையும், சீனிசர்க்கரையையும், நல்ல பரிமளமுள்ள பழங்களையும் அதிகமாகக் கொடுத்து. (௧௧)

அளப்பருஞ் சிறப்பு நல்கி யரியபொற் றளிகை யெல்லாம்
வளப்பமெய் துறப்ப டைத்து மறைபவர் மந்தி ரங்க
ளுளப்பரி வுடனங் கோத வுயர்திரைக் கப்பா னிற்குந்
துளக்கமி லன்பிற் சோழன் கண்களிற் றோன்றும் வண்ணம்.

(ப-ரை.) அளப்பு அரு-அளவில்லாத, சிறப்பும்-செல்வங்களையும், நல்கி-கொடுத்து, அரிய-சிறந்த, பொன் கலிகை-பொற்கலங்கள், எல்லாம்-எல்லாவற்றையும், படைத்து-கொடுத்து, மறையவர் - ப்ராஹ்மணர்கள், மந்திரங்கள் - சிவமந்த்ரங்களை, உளப் பரிவுடன் - மனமகிழ்ச்சியுடன், அங்கு-அவ்விடத்தில், ஓத - ஜபித்தலும், உயர்-உயர்ந்த, திரைக்கு-திரைச்சீலைக்கு, அப்பால் - அப்புறத்தில், துளக்கம் இல்-சலனமற்ற, அன்பின்-அன்புடன், நிற்கும்-நிற்கின்ற, சோழன் - (கரிகால்) சோழனுடைய, கண்களில்-கண்களுக்கு, தோன்றும் வண்ணம் - தெரியும்படி, எ-று.

(பொ-ரை.) அளவில்லாத செல்வங்களையும் கொடுத்து, சிறந்த பொற்கலங்களெல்லாவற்றையும் கொடுத்து, ப்ராஹ்மணர்கள் சிவமந்த்ரங்களை மனமகிழ்ச்சியுடன் அவ்விடத்தில் ஜபித்தலும், உயர்ந்த திரைச்சீலைக்கு அப்புறத்தில் சலனமற்ற அன்புடன் நிற்கின்ற கரிகால் சோழனுடைய கண்களுக்குத் தெரியும்படி. (கஉ)

கையினாற் படைத்தி ருந்த கறியமு தரும்பா னாதி
யையனார் கடித்து றிஞ்சிக் குடித்தமு தன்று செய்யுந்
துய்யநல் லோசை சோழன் றுணைச்செவி மகிழ்ந்து கேட்டல்
வையகர் சொல்ல வறிந்தோ மன்றியு மற்றோ ரன்பர்.

(ப-ரை.) படைத்து இருந்த-பரிமாறியிருக்கின்ற, கறியமுது-கறியமுதினையும், அரு-சிறந்த, பான ஆதி - குடிநீர் முதலியவற்றையும், ஐயனார் - சிவபெருமான், கையினால்-திருக்கரத்தினால் (எடுத்து), கடித்து-கடித்தும், உறிஞ்சி-உறிஞ்சியும், குடித்து-குடித்தும், அன்று-அப்போது, அமுதுசெய்யும்-திருவமுது செய்கின்ற, துய்ய-பரிசுத்தமாகிய, நல்-மிக்க, ஓசை-சத்தத்தை, சோழன்-கரிகால் சோழன், துணைச்செவி-இரண்டு காதுகள், மகிழ்ந்து-சந்தோஷத்துடன், கேட்டல்-கேட்ட செய்தியை, வையகர் - உலகத்தார், சொல்ல-கூற, அறிந்தோம் - தெரிந்திருக்கின்றோம், அன்றியும்-அல்லாமலும், மற்று-வேறு, ஓர்-ஒரு, அன்பர்-சிவபக்தர், எ-று.

(பொ-ரை.) பரிமாறியிருக்கின்ற கறியமுதினையும், சிறந்த குடிநீர் முதலியவற்றையும் சிவபெருமான் திருக்கரத்தினால் எடுத்துக் கடித்தும், உறிஞ்சியும், குடித்தும் அப்போது திருவமுது செய்கின்ற பரிசுத்தமாகிய மிக்க சத்தத்தைக் கரிகால் சோழன் இரண்டு காதுகள் சந்தோஷத்துடன் கேட்ட செய்தியை உலகத்தார் கூறத் தெரிந்திருக்கின்றோம்; அல்லாமலும் வேறொரு சிவபக்தர். (கங)

## மாதிராச சென்னையர்.

பரிவின்மா திராச சென்னர் பசித்திருந் தருந்துங் கூழி
னுரியவின் பாற்ப ரர்க்கென் றுரைத்திட வவரொண் ணாவே
யரியபொற் கலமா யுண்ப தமுதமா யயின்றோ மென்று
சுரிகுழல் பாகர் வாக்குத் தொனித்ததென் றுரைப்பர் மற்றும்.

(ப-ரை.) மாதிராச சென்னர்-மாதிராச சென்னையர், பசித்திருந்து-பசிகொண்டிருந்து, பரிவின்-விருப்பத்துடன், அருந்தும்-உண்கின்ற, கூழின் உரிய-கூழினுடைய, இன்பால்-மதுரத்தினால், பரர்க்கு-சிவபெருமானுக்கு, என்று-(அர்ப்பிதமாகக்கடவது) என்று, உரைத்திட-சொன்ன மாத்திரத்தில், அவர்-அவருடைய, ஒள்-அழகிய, நாவே-நாக்கே, அரிய-சிறந்த, பொன் கலம் ஆய்-பொன் கலமாகவும், உண்பது-அமுதுசெய்கின்ற கூழே, அமுதம் ஆய் - அமிர்தம் போலவும், அயின்றோம் - அமுது செய்தோம், என்று—, சுரி - சுருண்ட, குழல் - திருக்கூந்தலையுடைய உமாதேவியாரை, பாகர் - வாமபாகத்திலுடையவராகிய சிவபெருமானது, வாக்கு - திருவாக்கு, தொனித்தது-முழங்கியது, என்று—, உரைப்பர் - (உலகத்தார்) சொல்வார்கள், மற்றும் - மேலும், எ-று.

(பொ-ரை.) மாதிராச சென்னையர் பசிகொண்டிருந்து விருப்பத்துடன் உண்கின்ற கூழினுடைய மதுரத்தினால் சிவபெருமானுக்கு அர்ப்பிதமாகக்கடவதென்று சொன்ன மாத்திரத்தில், அவருடைய அழகிய நாக்கே சிறந்த பொன் கலமாகவும், அமுதுசெய்கின்ற கூழே அமிர்தம் போலவும், அமுது செய்தோமென்று சுருண்ட திருக்கூந்தலையுடைய உமாதேவியாரை வாமபாகத்தி லுடையவராகிய சிவபெருமானது திருவாக்கு முழங்கியதென்று உலகத்தார் சொல்வார்கள்; மேலும்.

(வி-ரை.) சுரிகுழல் - அன்மொழித்தொகை. (௧௪)

வீரசோளவ்வையர்.

வீரசோ ளவ்வை யென்னு மென்கொடி தாக்கா ராமத்
தேரிய றன்னை யறிந்தன் றிதந்தரும் பிட்டிற் கேற்கச்
சேருநற் றிரவி யந்தான் சேர்த்திருந் தருந்துங் காலை
நேரிலா மதுர நாவி னிகழ்தலா னிமலர்க் கென்று.

(ப-ரை.) வீரசோளவ்வை-வீரசோளவ்வையார், என்னும் - என்கின்ற, மெல்-மிருதுவாகிய, கொடி - வஞ்சிக்கொடிபோன்றவராகிய மடவார், தாக்காராமத்து - தாக்ஷாராம் என்கின்ற ஸ்தலத்தினுடைய, ஏர் இயல் தன்னை-நன்மையை, அறிந்து-கண்டு,அன்று-முன்னொரு காலத்தில், இதம் தரும்-விரும்புதற்குரிய, பிட்டிற்கு-பிட்டமுதிற்கு, ஏற்க - தகுந்தபடி, சேரும் - சேர்க்கின்ற, நல் - சிறந்த, திரவியம்-வாசனை வஸ்துக்களை, சேர்த்து-கூட்டி, இருந்து-உட்கார்ந்து, அருந்தும் காலை - உண்கின்ற போது, நேர் இல்லா-நிகரற்ற, மதுரம்-சுவை, நாவில்-நாக்கில், நிகழ்தலால் - உண்டானமையால், நிமலர்க்கு - சிவபெருமானுக்கு, என்று - (அர்ப்பிதம் ஆகக்கடவது) என்று, எ-று.

(பொ - ரை.) வீரசோளவ்வையாரென்கின்ற மிருதுவாகிய வஞ்சிக்கொடிபோன்றவராகிய மடவார் தாக்ஷாராமென்கிற ஸ்தலத்தினுடைய நன்மையைக் கண்டு முன்னொரு காலத்தில் விரும்புதற்குரிய பிட்டமுதிற்குத் தகுந்தபடிச் சேர்க்கின்ற சிறந்த வாசனை வஸ்துக்களைக் கூட்டி, உட்கார்ந்து உண்கின்ற போது நிகரற்ற சுவை நாக்கி லுண்டானமையால் சிவபெருமானுக்கு அர்ப்பிதமாகக்கடவதென்று.

(வி-ரை.) மென் கொடி - அன்மொழித்தொகை. ஏர் - அழகிய. இயல் - குணம்.

அஞ்சியப் பிட்டை நல்ல வதிகவத் திரத்தான் மூடி
விஞ்சிய விஞ்சிக் கோயில் வீமேசர்க் கமுது செய்ய
வஞ்சிநீ செலுத்தி வாவென் றளித்திட வாங்கிச் சென்று
நஞ்சினி துண்டார் கோயி னண்ணிமு னயந்து நின்று.

(ப - ரை.) அஞ்சி - பயந்து, அ - அந்த, பிட்டை - பிட்டமுதை, நல்ல அதிக-மிகச் சிறந்த, வத்திரத்தால் - (பட்டு) ஆடையினால், மூடி—, விஞ்சிய - உயர்ந்திருக்கின்ற, இஞ்சி - திருமதிலையுடைய, கோயில் - திருவாலயத்தில் (வீற்றிருக்கின்ற), வீமேசர்க்கு-பீமேஶ்வரர்க்கு, அமுதுசெய்ய-திருவமுதுசெய்யும்பொருட்டு (தாதியை நோக்கி), வஞ்சி - பெண்ணே, நீ—, செலுத்தி - படைத்து, வா - வருவாய், என்று-என்று (சொல்லி), அளித்திட - கொடுத்தனுப்புதலும், வாங்கி - பெற்றுக்கொண்டு, சென்று - போய், நஞ்சு - விஷத்தை, இனிது - சந்தோஷத்துடன், உண்டார்-திருவமுது செய்தருளினவராகிய பீமேஶ்வரரது, கோயில் - திருவாலயத்தை, நண்ணி-அடைந்து, முன் - சந்நிதானத்தில், நயந்து - அன்புடன், நின்று—, எ - று.

(பொ-ரை.) பயந்து, அந்தப் பிட்டமுதை மிகச்சிறந்த பட்டாடையினால் மூடி, உயர்ந்திருக்கின்ற திருமதிலையுடைய திருவாலயத்தில் வீற்றிருக்கின்ற பீமேஶ்வரர்க்குத் திருவமுதுசெய்யும்பொருட்டுத் தாதியை நோக்கி, பெண்ணே! நீ படைத்து வரு

வாவென்று சொல்லிக் கொடுத்தனுப்புதலும், பெற்றுக்கொண்டு போய் விஷத்தைச் சந்தோஷத்துடன் திருவமுதுசெய்தருளினவராகிய பிரமேஸ்வரரது திருவாலயத்தை யடைந்து சந்நிதானத்தில் அன்புடன் நின்று.

(வி - ரை.) வஞ்சி - உவமையாகுபெயர்; வஞ்சிக்கொடிபோன்ற பெண் என்பது பொருள். (௧௬)

என்னமை தேவ ரீர்க்கிப் பிட்டினை யினித ளிக்கச்
சொன்னதாற் கொணர்ந்தே னென்னச் சோமசே கரன்றன் கையால்
நன்னயப் புடனே வாங்கி நண்பினா வுதர மார
முன்னமு துண்டா ரென்று மூதறி வுடையோர் சொல்வார்.

(ப-ரை.) என் - எனது, அம்மை - தலைவி, தேவரீர்க்கு —, இ - இந்த, பிட்டினை - பிட்டமுதை, இனிது - சந்தோஷத்துடன், அளிக்க - படைத்துவர, சொன்னதால் - சொன்னமையால், கொணர்ந்தேன் - கொண்டு வந்தேன், என்ன - என்று சொல்லுதலும், சோமசேகரன் - பிறைச்சந்திரனை யணிந்த திருமுடியையுடையவனாகிய சிவபெருமான், தன் - தனது, கையால் - திருக்கரங்களினால், நல் - மிக்க, நயப்புடன் - அன்புடன், வாங்கி - பெற்றுக்கொண்டு, நண்பின் - விருப்பத்துடன், நா ஆர - நாவாரவும், உதரம் ஆர - வயிறாரவும், முன் - எதிரே, அமுது - பிட்டமுதினை, உண்டார் - திருவமுதுசெய்தருளினார், என்று —, மூதறிவுடையோர் - உலகத்தார், சொல்வார் - சொல்வார்கள், எ - று.

(பொ - ரை.) எனது தலைவி தேவரீர்க்கு இந்தப் பிட்டமுதைச் சந்தோஷத்துடன் படைத்துவரச் சொன்னமையாற் கொண்டு வந்தேனென்று சொல்லுதலும், பிறைச்சந்திரனை யணிந்த திருமுடியையுடையவனாகிய சிவபெருமான் தனது திருக்கரங்களினால் மிக்க அன்புடன் பெற்றுக்கொண்டு விருப்பத்துடன் நாவாரவும் வயிறாரவும் எதிரே பிட்டமுதினைத் திருவமுதுசெய்தருளினாரென்று உலகத்தார் சொல்வார்கள்.

(வி - ரை.) ஆர - நிறைய. பிட்டமுதினை த்ருப்தியுடன் உண்டமையால் நாவுதரமார வுண்டாரென்றார். (௧௭)

இன்று சரிகைச் சவுண்டைய ரினிய வமுதம் பிடிபிடியா
யென்று மன்பாற் றரத்தரமு னுமையோர் பாக ரேற்றேற்றுத்
துன்று பசிகொண் டவர்போலச் சுவைத்தா ரென்று தவத்தோர்கள்
நன்று துதிப்பக் கலியாண நகர்க்கு ளிருந்து நயந்திடுநாள்.

(ப-ரை.) இன்று - இப்போது, சரிகைச்சவுண்டையர் —, இனிய - மதுரமுள்ள, அமுதம் - அன்னத்தை, பிடிபிடியாய் - கவளம் கவளமாக, என்றும் - எப்போதும், அன்பால் - அன்புடன், தரத் தர - கொடுக்கக் கொடுக்க, முன் - எதிரே, உமை - உமாதேவியாரை, ஓர் - ஒப்பற்ற, பாகர் - வாமபாகத்திலுடையவராகிய சிவபெருமான், ஏற்று ஏற்று - வாங்கி வாங்கி, துன்று - மிகக்கொடிய, பசிகொண்டவர்போல - பசியுடையவர் போல, சுவைத்தார் - திருவமுது செய்தருளினார், என்று —, தவத்தோர்கள் - ஜங்கம மூர்த்திகள், நன்று - நன்றாக, துதிப்ப - புகழ, கலியாணநகர்க்குள் - கல்யாணபட்டினத்தில், இருந்து - வாழ்ந்து, நயந்திடும் - சிறப்புற்றிருக்கின்ற, நாள் - காலத்தில், எ - று.

(பொ-ரை.) இப்போது சரிகைச் சவுண்டையர் மதுரமுள்ள அன்னத்தைக் கவளம் கவளமாக எப்போதும் அன்புடன் கொடுக்கக் கொடுக்க, எதிரே உமாதேவியாரை ஒப்பற்ற வாமபாகத்திலுடையவராகிய சிவபெருமான் வாங்கி மிகக்கொடிய பசியுடையவர்போலத் திருவமுது செய்தாரென்று ஜங்கமமூர்த்திகள் நன்றாகப் புகழக் கல்யாணபட்டினத்தில் வாழ்ந்து சிறப்புற்றிருக்கின்ற காலத்தில். (௧௮)

சரிகைச்சவுண்டையர் புராணம்-முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - ௧௧௩௦.

உ

சிவமயம்.

# தெலுங்கச்சோமையர் புராணம்.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நிருமலன் பாத மல்லா னினையலார் மற்றோ ரன்பர்
பெருமல மூன்றுஞ் சேரார் சங்கமப் பிரிய முள்ளார்
தருமநன் னேய மிக்கார் தாழ்விலாச் சிவாசா ரத்தார்
துரிதர்பா லுறார்தெ லுங்கச் சோமைய ரென்னும் பேரார்.

(ப-ரை.) நிருமலன் - சிவபெருமானுடைய, பாதம் - திருவடிகளையே, அல்லால்- அல்லாமல், நினையலார்- (வேறொன்றினையும்) சிந்திக்காதவராகிய, மற்று—வேறு, ஓர்- ஒரு, அன்பர் - சிவபக்தர், பெரு - பெரிய, மலம் மூன்றும்-மும்மலங்களும், சேரார் - அடையப் பெறாதவர், சங்கமம்-ஜங்கமமூர்த்திகளிடத்தில், பிரியம் உள்ளார் - அன்புள்ளவர், தருமம் – சிவபுண்யத்தில், நல் நேயம் மிக்கவர்-மிகுந்த விருப்பமுள்ளவர், தாழ்வு இல்லா-குற்றமில்லாத, சிவாசாரத்தார்- வீரசைவர், துரிதர்பால் - பாபிஷ்டர்களிடத்தில், உறார்-சேராதவர், தெலுங்கச்சோமையர்—, என்னும்-என்கின்ற, பேரார்- திருநாமத்தினையுடையவர், எ-று.

(பொ-ரை.) சிவபெருமானுடைய திருவடிகளையே யல்லாமல் வேறொன்றினையும் சிந்திக்காதவராகிய வேறொரு சிவபக்தர்;பெரிய மும்மலங்களும் அடையப்பெறாதவர்; ஜங்கமமூர்த்திகளிடத்தில் அன்புள்ளவர்; சிவபுண்யத்தில் மிகுந்த விருப்பமுள்ளவர் ; குற்றமில்லாத வீரசைவர் ; பாபிஷ்டர்களிடத்திற் சேராதவர் ; தெலுங்கச்சோமைய ரென்கின்ற திருநாமத்தினையுடையவர்.

(வி-ரை.) நிருமலன்-நிர்மலன் என்னும் வடசொற்றிரிபு ; மலமில்லாதவன் என்பது பொருள். மும்மலம்-ஆணவம், மாயை, கன்மம்; மலங்கள் ஜநநமரணங்களுக்குக் காரணமாதலானும் அநாதியாய் ஜீவான்மாக்களைப் பற்றியிருத்தலானும் பெருமல மூன்றென்றார். (க)

கலியுக நிலையொன் றில்லார் கருதுருத் திரரோ வென்னு
நிலையுளார் பரமா னந்த நித்திரை நீங்க லாதார்
நலகுண மணிபி றக்கு நற்கடல் விடய நாடா
ரிலகுதிவ் வியச ரீர ரென்றுல கேத்தப் பெற்றார்.

(ப-ரை.) கலியுகம் நிலை - கலிகாலக் கொடுமை, ஒன்று-சிறிதும், இல்லார்-அடையப் பெறாதவர், கருது-நினைத்தற்குரிய, உருத்திரரோ-ருத்ரமூர்த்தியோ, என்னும்- என்கின்ற, நிலையுள்ளார்-பெருமைபெற்றவர், பரம ஆனந்த நித்திரை-சிவாநந்த நித்திரையினின்றும், நீங்கலாதவர் - விட்டுப்பிரியாதவர், நல்ல குணம் - உத்தமமாகிய, மணி - ரத்நம், பிறக்கும் - உண்டாகின்ற, நல்-நல்ல, கடல் - கடல்போன்றவர், விடயம் - (பஞ்சேந்த்ரியங்களுக்குரிய) விஷயாநந்தத்தை, நாடார்-விரும்பாதவர், இலகு - விளங்குகின்ற, திவ்வியம் - தெய்விகம் பொருந்திய, சரீரர் - தேகத்தை யுடையவர், என்று—, உலகு-உலகத்தாரால், ஏத்தப்பெற்றார்-துதிக்கப் பெற்றவர், எ-று.

(பொ-ரை.) கலிகாலக் கொடுமை சற்றும் அடையப்பெறாதவர்; நினைத்தற்குரிய ருத்ரமூர்த்தியோ வென்கின்ற பெருமைபெற்றவர் ; சிவாநந்த நித்திரையினின்றும் விட்டுப்பிரியாதவர் ; உத்தமமாகிய ரத்நம் உண்டாகின்ற நல்ல கடல் போன்றவர் ; பஞ்சேந்த்ரியங்களுக்குரிய விஷயாநந்தத்தை விரும்பாதவர் ; விளங்குகின்ற தெய்விகம் பொருந்திய தேகத்தையுடையவரென்று உலகத்தாரால் துதிக்கப்பெற்றவர்.

(வி-ரை.) கலியுகநிலை-துர்மார்க்கம். விடயம்-விஷயம் என்னும்வடசொற்றிரிபு. திவ்வியம் - திவ்யம் என்னும்வடசொற்றிரிபு. உருத்திரர்-ருத்ரர் என்னும் வடசொற்றிரிபு. ப்ராஹ்மணர்களை பூசுரரென்றும், வீரசைவர்களை பூருத்ரரென்றும் வழங்குதல் மரபு. (௨)

புவனபா வனரா யத்தன் பூசனை தவத்தோர் பூசை
யவதரந் தன்னிற் றம்மை யறியலா தவிழ்ந்த விழ்ந்து
நவநிறை கல்லி யாண நன்னக ரிவர்வா ழ்ஞான்றின்
சிவனுறை பருப்ப தப்பாற் சிவானந்த ரென்றோ ரன்பர்.

(ப - ரை.) புவனம்-உலகத்தாரை, பாவனர் ஆய் - பரிசுத்தராக்க வல்ல புண்ய புருஷராய், அத்தன் பூசை-சிவபூஜையையும், தவத்தோர்பூசை-ஜங்கமராதனையையும் (செய்கின்ற), அவதரம் தன்னில் - சமயத்தில், தம்மை—, அறியலாது-அறியாமல், அவிழ்ந்து அவிழ்ந்து - மறந்துமறந்து, நவம் - அற்புதங்கள், நிறை - நிரம்பப்பெற்றிருக்கின்ற, நல் - சிறந்த, கலியாணநகர் - கல்யாணபட்டினத்தில், இவர்—, வாழ் - வாழ்கின்ற, ஞான்றின்-காலத்தில், சிவன்-சிவபெருமான், உறை-வீற்றிருக்கின்ற, பருப்பதப்பால்-ஸ்ரீசைலத்தில், சிவானந்தர்—, என்று—, ஓர்-ஒரு, அன்பர்-முநிவர், எ-று.

(பொ-ரை.) உலகத்தாரைப் பரிசுத்தராக்க வல்ல புண்யபுருஷராய் சிவபூஜையையும், ஜங்கமாராதனையையும் செய்கின்ற சமயத்தில் தம்மை யறியாமல் மறந்து மறந்து அற்புதங்கள் நிரம்பப் பெற்றிருக்கின்ற சிறந்த கல்யாணபட்டினத்தில் இவர் வாழ்கின்றகாலத்தில் சிவபெருமான் வீற்றிருக்கின்ற ஸ்ரீசைலத்தில் சிவாநந்தரென்றொரு முநிவர்.

(வி-ரை.) புவனம்-இடவாகுபெயர்; உலகத்தாருடைய பாபங்களெல்லாவற்றையுமொழித்தற்குரிய தெய்விகத் தன்மையை யுடையவராதலால் சோமையரைப் புவனபாவனரென்றார். சிவன் என்றது ஸ்ரீமல்லிகார்ஜுநேச்வரரை. பருப்பதம் - பர்வதம் என்னும் வடசொற்றிரிபு. தம்மை மறத்தல் - பரவசமாதல். (௩)

சாற்றருந் தவம்பொ ருந்திச் சமாதியோ கத்த ராகிக்
காற்றரு நகங்க ணீண்டு காசினி யுறப்ப ரந்து
மேற்றிகழ் கானங் கண்டு வெள்ளிவெண் கொடிகள் போன்று
நீற்றுமெய் மறைய ரோம நிறைபவேர் வீழ்ந்தி ருக்க.

(ப-ரை.) சாற்று அரு - சொல்லுதற்கரிய, தவம் - வீரவிரதத்தை, பொருந்தி - அநுஷ்டித்து, சமாதி யோகத்தர் ஆகி-சிவயோக சமாதியிலிருப்பவராகி, கால் தரும்-ஸ்ரீபாதங்களிலுள்ள, நகங்கள் - உகிர்கள், நீண்டு - வளர்ந்து, காசினி - பூமியில், உற-மிகுதியாக, பரந்து - படர்ந்து, மேல் - மேலே, திகழ் - விளங்குகின்ற, கானம் - காட்டை, கண்டு - அடைந்து, வெள் - வெண்மையாகிய, வெள்ளிக்கொடிகள்—, போன்றும் - போலவும், நீறு - விபூதியுத்தூளனஞ் செய்திருக்கின்ற, மெய்-திருமேனி, மறைய - மூடும்படி, ரோமம் - மயிர்கள், நிறைய - நிறைந்து, வேர்—, வீழ்ந்து - இறங்கியும், இருக்க - (நிலைத்து) இருத்தலும், எ - று.

(பொ-ரை.) சொல்லுதற்கரிய வீரவிரதத்தை யநுஷ்டித்து, சிவயோகசமாதியிலிருப்பவராகி, ஸ்ரீபாதங்களிலுள்ள உகிர்கள் வளர்ந்து, பூமியில் மிகுதியாக படர்ந்து, மேலே விளங்குகின்ற காட்டை யடைந்து, வெண்மையாகிய வெள்ளிக்கொடிகள் போலவும், விபூதியுத்தூளனஞ் செய்திருக்கின்ற திருமேனி மூடும்படி மயிர்கள் நிறைந்து வேரிறங்கியும் நிலைத்திருத்தலும். (௪)

இத்தவர்க் கினிய சீட ரிவரைவிட் டேகா ராகிப்
பத்திமோ கத்தான் மூல பலமதுண் டிருக்கு நாளின்
மெத்துகாந் தருவர் தங்கண் மெல்லிய லாருந் தாமு
மத்தரு வனத்தில் வந்தங் கன்பினா லாடு வாராய்.

(ப - ரை.) இ - இந்த, தவர்க்கு - முனிவர்க்கு, இனிய - அன்புள்ள, சீடர் - மாணாக்கர்கள், இவரை—, விட்டு-நீங்கி, ஏகாதார் ஆகி - போகாதவர்களாகி, பத்தி- அன்பு செய்வதில், மோகத்தால் - விருப்பமிருந்தமையால், மூலம் - கிழங்குகளையும், பலம் - கனிகளையும், உண்டு - புசித்துக்கொண்டு, இருக்கும் - இருந்து காக்கின்ற, நாளில் - காலத்தில், மெத்து - மிகுதியாகிய, காந்தருவர் - கந்தர்வர்கள், தங்கள்- தங்கள் தங்களுடைய, மெல்லியலாரும் - மனைவிகளும், தாமும் - தாங்களும், அ - அந்த, தரு-மரங்கள் (அடர்ந்திருக்கின்ற), வனத்தில் - காட்டில், வந்து - சென்று, அங்கு - அவ்விடத்தில், அன்பினால் - விருப்பத்துடன், ஆடுவாராய் - ஜலக்rீடைசெய்பவர்களாய், எ - று.

(பொ - ரை.) இந்த முனிவர்க்கு அன்புள்ள மாணாக்கர்கள் இவரை நீங்கிப் போகாதவர்களாகி, அன்புசெய்வதில் விருப்பமிருந்தமையால் கிழங்குகளையும், கனிகளையும் புசித்துக்கொண்டிருந்து காக்கின்ற காலத்தில், மிகுதியாகிய கந்தர்வர்கள் தங்கள் தங்களுடைய மனைவிகளும் தாங்களும் அந்த மரங்கள் அடர்ந்திருக்கின்ற காட்டிற் சென்று, அவ்விடத்தில் விருப்பத்துடன் ஜலக்rீடை செய்பவர்களாய்.

(வி - ரை.) சீடர் - சிஷ்யர் என்னும் வடசொற்றிரிபு. கந்தருவர் - தேவஜாதியிலோர் வகையார். மெல்லியல் - பெண். மெத்து - மென்மையாகிய எனினுமாம். (௫)

சத்திய முனிவர் வாழுந் தபோவனஞ் சார்ந்த வர்க்கண்
டுத்தம வெள்ளி வல்லி யொழுங்குகொள் புதலோ கல்லோ
வத்திறக் கொடியல் கல்லன் றுந்தருப் பன்னங் காணோ
நித்திரை கொள்ளும் பொல்லா நெடுமுது கரடி யென்றார்.

(ப - ரை.) சத்திய முனிவர் - உண்மையராகிய சிவானந்த முனிவர், வாழும் - வாழ்கின்ற, தபோவனம் தபோவனத்தில், சார்ந்து-வந்து, அவர் - அவரை, கண்டு- பார்த்து, உத்தமம்-உயர்ந்த, வெள்ளி வல்லி - வெள்ளிக்கொடிகள், ஒழுங்கு கொள்- ஒழுங்காகப் படர்ந்துள்ள, புதலோ - புதரோ, கல்லோ - சிலையோ, அத்திறம் - அவ்விதமான, கொடி-கொடிகளும், அல் - அல்ல, கல் - சிலையும், அன்று - அல்ல, தரு - மரம், ஆம்-ஆகும், பன்னம்-(ஆனால்) இலைகளையும், காணோம்-பார்த்தோமில்லை, நித்திரைகொள்ளும்-தூங்குகின்ற, பொல்லா-பொல்லாத, நெடு-பெரிய, முதுகரடி - கிழக்கரடியே, என்றார் - என்று (விசாரியாமல்) சொன்னார்கள், எ-று.

(பொ - ரை.) உண்மையராகிய சிவானந்த முனிவர் வாழ்கின்ற தபோவனத்தில் வந்து, அவரைப் பார்த்து, உயர்ந்த வெள்ளிக்கொடிகள் நிறை ஒழுங்காகப்படர்ந்துள்ள புதரோ? சிலையோ? அவ்விதமான கொடிகளுமல்ல; சிலையுமல்ல; மரமாகும்; ஆனால் இலைகளையும் பார்த்தோமில்லை; தூங்குகின்ற பொல்லாத பெரிய கிழக்கரடியே யென்று விசாரியாமல் சொன்னார்கள்.

(வி - ரை.) பன்னம் - பர்ணம் என்னும் வடசொற்றிரிபு. (௬)

இப்படி கேச ரத்தா ரியம்பிய சொல்லை யைய
ரொப்பிய சீடர் கேளா வவர்களை யூன்றிப் பார்த்து
வெப்பமாங் கோப மெய்தி வீணையீர் காணீர் கொல்லோ
செப்பருந் தவத்தோ ரெங்கள் சிவானந்த முனிவர் தேகம்.

(ப - ரை.) இப்படி - இவ்விதமாக, கேசரத்தார் - கந்தர்வர்கள், இயம்பிய - சொன்ன, சொல்லை - வார்த்தைகளை, ஐயர் - சிவாநந்த முநிவரை, ஒப்பிய - நிகர்த்த, சீடர்-மாணாக்கர்கள், கேளா - கேட்டு, அவர்களை—, ஊன்றிப் பார்த்து-உற்றுப்பார்த்து,வெப்பம் ஆம் - கொடிய, கோபம் எய்தி - கோவங்கொண்டு, வீணையீர்-கந்தர்வர்களே, செப்பு அரு - சொல்லுதற்கரிய, தவத்தோர் - முநிவராகிய, எங்கள் - எங்களுடைய, சிவாநந்த முனிவர் - சிவாநந்தமுநிவரது, தேகம் - திருமேனியை, காணீர் கொல்லோ - காணீர்களோ, எ-று.

(பொ-ரை.) இவ்விதமாகக் கந்தர்வர்கள் சொன்ன வார்த்தைகளை சிவாநந்தமுநிவரை நிகர்த்த மாணாக்கர்கள் கேட்டு, அவர்களை உற்றுப் பார்த்து, கொடிய கோவங்கொண்டு, கந்தர்வர்களே! சொல்லுதற்கரிய முநிவராகிய எங்களுடைய சிவாநந்த முனிவரது திருமேனியைக் காணீர்களோ?

(வி - ரை.) கேசரத்தார் - ஆகாய ஸஞ்சாரிகள். காணீர்களோ - பார்த்தீர்களில்லையோ. கொல்-அசை. (எ)

அருமையா னந்த மேனி யதனைநீ ரவம தித்துக்
கருமைசேர் கரடி யென்ற கடியவிப் பாவத் தாலே
பொருவிலாக் கேச ரம்போய்ப் பூதலம் புகுந்திப் பொல்லா
மிருகமா யுழலு மென்று சபித்தபின் வீணை யோர்கள்.

(ப-ரை.) அருமை - மேன்மைபொருந்திய, ஆனந்தம் மேனி யதனை - ப்ரஹ்மாநந்த ஸ்வரூபத்தையுடைய முநிவரது திருமேனியை, நீர் - நீங்கள், அவமதித்து - இகழ்ந்து, கருமை சேர் - பொல்லாத, கரடியென்ற-கரடி யென்று சொன்ன, கடிய - கொடிய, இ - இந்த, பாவத்தாலே - குற்றத்தினாலே, பொருவு இல்லா-நிகரற்ற, கேசரம் - விண்ணுலகத்தை, போய் - இழந்து, பூதலம் - மண்ணுலகத்தை, புகுந்து - அடைந்து, இ - இந்த, பொல்லா-கொடிய, மிருகம் ஆய் - கரடிகளாய், உழலும் - அலைந்து திரியுங்கள், என்று—, சபித்த-சாபமிட்ட, பின் - பிறகு, வீணையோர்கள் - கந்தர்வர்கள், எ-று.

(பொ-ரை.) மேன்மைபொருந்திய ப்ரஹ்மாநந்த ஸ்வரூபத்தையுடைய முநிவரது திருமேனியை நீங்கள் இகழ்ந்து, கொடிய கரடி யென்று சொன்ன இந்தக் குற்றத்தினாலே நிகரற்ற விண்ணுலகத்தை யிழந்து, மண்ணுலகத்தை யடைந்து, இந்தக் கொடிய கரடிகளாய் அலைந்து திரியுங்களென்று சாபமிட்ட பிறகு, கந்தர்வர்கள். ()

அஞ்சிவந் தடியில் வீழ்ந்தின் றடியரே மவகு ணத்தால்
வெஞ்சநீர் கொண்டு செய்த மிக்கசா பம்போ மெந்நா
ணெஞ்சுவந் தருள்வீ ரென்ன நீர்கலி யாணஞ் சூழ்ந்த
மஞ்சணி வனத்திற் சென்று வன்னிய மாகிச் சின்னாள்.

(ப - ரை.) அஞ்சி - பயந்து, வந்து - போய், அடியில் - திருவடிகளில், வீழ்ந்து-(ஸாஷ்டாங்கமாக) வணங்கி, இன்று - இப்போது, அடியரேம் - அடியேங்களது, அவகுணத்தால் - துர்மார்க்கத்தினால், நீர்-நீங்கள், வெஞ்சம் கொண்டு - கோவித்து, செய்த - கொடுத்த, மிக்க - பெரிய, சாபம்—, எந்நாள் - எக்காலத்தில், போம் - விமோசநமாகும், நெஞ்சு-மனம், உவந்து-மகிழ்ந்து, அருள்வீர்-கிருபைசெய்யக்கடவீர்கள், என்ன - என்று பிரார்த்தித்தலும், நீர் - நீங்கள், கலியாணம் - கல்யாணபட்டினத்தை, சூழ்ந்த - சூழ்திருக்கின்ற, மஞ்சு - மேகங்கள், அணி - தவழ்கின்ற, வனத்தில்-காட்டில், சென்று-போய், வன்னியம் ஆகி-காட்டுமிருகங்களாகப் பிறந்து, சில் நாள்-சில காலம், எ-று.

(பொ - ரை.) பயந்துபோய், திருவடிகளில் ஸாஷ்டாங்கமாக வணங்கி, இப்போது அடியேங்களது துர்மார்க்கத்தினால் நீங்கள் கோபித்துக் கொடுத்த பெருஞ் சாபம் எக்காலத்தில் விமோசநமாகும்? மனமகிழ்ந்து கிருபைசெய்யக்கடவீர்களென்று பிரார்த்தித்தலும், நீங்கள் கல்யாணபட்டினத்தைச் சூழ்ந்திருக்கின்ற மேகங்கள் தவழ்கின்ற காட்டிற் போய்க் காட்டு மிருகங்களாகப் பிறந்து, சில காலம். (௯)

சரித்தபி னவ்வ னத்தோர் தவத்தர்சோ மைய ரென்பார்
தெரித்தலோ கங்க ளுய்வான் சனித்தவர் கையி னம்பான்
மரிக்கிலிச் சாப நீங்கு மற்றுநன் முத்தி சேர்வீர்
விரித்தவிம் மாற்ற மெய்யென் றுரைக்கவம் மிருக மானார்.

(ப - ரை.) சரித்த - அலைந்து திரிந்த, பின் - பிறகு, அ - அந்த, வனத்து - காட்டில், ஓர்-ஒப்பற்ற, தவத்தர்-ஜங்கமமூர்த்திகளும், சோமையர் என்பார்-சோமையரென்கின்ற திருநாமத்தையுடையவரும், தெரித்த - சொல்லப்பட்ட, லோகங்கள் - உலகங்கள், உய்வான் - கடைத்தேறும்பொருட்டு, சனித்தவர்-அவதரித்தவருமாகிய பெரியோருடைய, கையின் - கரத்திலுள்ள, அம்பால் - பாணத்தினால், மரிக்கில் - சாவீர்களாயின், இ - இந்த, சாபம்—, நீங்கும் - விமோசநமாகும், மற்றும் - மேலும், நல்-சிறந்த, முத்தி - மோக்ஷத்தையும், சேர்வீர் - அடைவீர்கள், விரித்த - சொன்ன, இ - இந்த, மாற்றம் - சொல், மெய்-உண்மை, என்று—, உரைக்க - சொன்ன மாத்திரத்தில், அ - அந்த, மிருகம் ஆனார் - கரடிகளானார்கள், எ - று.

(பொ-ரை.) அலைந்து திரிந்தபிறகு, அந்தக் காட்டில் ஒப்பற்ற ஜங்கமமூர்த்திகளும், சோமையரென்கின்ற திருநாமத்தையுடையவரும்,சொல்லப்பட்ட உலகங்கள் கடைத்தேறும் பொருட்டு அவதரித்தவருமாகிய பெரியோருடைய கரத்திலுள்ள பாணத்தினால் சாவீர்களாயின், இந்தச் சாபம் விமோசநமாகும்; மேலும், சிறந்த மோக்ஷத்தையும் அடைவீர்கள்; சொன்ன இந்தச் சொல் உண்மையென்று சொன்ன மாத்திரத்தில், அந்தக் கரடிகளானார்கள்.

(வி-ரை.) உய்வான் என்பதில் வான் என்பது எதிர்கால வினையெச்ச விகுதி. மிருகம் - விலங்கு ; ஈண்டைக்கேற்ப கரடியெனப் பொருட் கொள்ளலாயிற்று. (௧௦)

சென்றருங் கல்லி யாணத் திருநகர்ச் சமீபக் காட்டிற்
றுன்றியங் கியங்கித் தூய்ய சோமையர் வரவு பார்த்து
நின்றிரங் கிடுநா ளையர் நிமலர்சோ மையர் பூசைக்
கின்றுமென் மலரெ டுப்ப மென்றந்த வனத்திற் சென்றார்.

(ப-ரை.) சென்று-(கரடிகளாகி) போய், அரு - மேன்மைபொருந்திய, திரு - தெய்விக ஸம்பத்தையுடைய, கல்லியாணநகர் - கல்யாணபட்டினத்தை, சமீபம் - அடுத்த, காட்டில் - வனத்தில், துன்றி - சேர்ந்து, அங்கு - அவ்விடத்தில், இயங்கி - சஞ்சரித்து, தூய்ய - பரிசுத்தராகிய, சோமையர் - சோமையரை, வரவு பார்த்து - எதிர்பார்த்துக்கொண்டு, நின்று இரங்கிடும் - வருத்தத்துடன் தங்கியிருக்கின்ற, நாள்-காலத்தில், ஐயர்-ஜங்கமமூர்த்திகளும், நிமலர்-பரிசுத்தருமாகிய, சோமையர்—, பூசைக்கு - சிவபூஜைசெய்தற்காக, இன்று - இப்போது, மென்-மிருதுவாகிய, மலர்-புஷ்பங்களை, எடுப்பம்-பறிப்போம், என்று - என்று (நினைத்து),அந்த—, வனத்தில்-காட்டில், சென்றார் - போனார், எ - று.

(பொ-ரை.) கரடிகளாகிப் போய், மேன்மைபொருந்திய தெய்விக ஸம்பத்தையுடைய கல்யாணபட்டினத்தை யடுத்த வனத்திற்சேர்ந்து, அவ்விடத்திற் சஞ்சரித்து, பரிசுத்தராகிய சோமையரை எதிர்பார்த்துக்கொண்டு வருத்தத்துடன் தங்கியிருக்கின்ற காலத்தில், ஜங்கமமூர்த்திகளும் பரிசுத்தருமாகிய சோமையர் சிவபூஜைசெய்

தற்காக இப்போது மிருதுவாகிய புஷ்பங்களைப் பறிப்போமென்று நினைத்து அந்தக் காட்டிற் போனார். (கக)

செம்மலர் கொய்யும் போதத் திரண்மிரு கங்கள் கண்டு
சொம்மைய ரிவரா மென்று சூழ்ந்துற நெருங்கி நின்றங்
கம்மற விலங்கி லொன்றெம் மையநின் கையி னாலே
யெம்முட லொழிந்தா னீங்கு மெங்கள்சா பந்தா னென்று.

(ப-ரை.) செம் - அழகிய, மலர் - புஷ்பங்களை, கொய்யும்போது - பறிக்கின்ற காலத்தில், அ - அந்த, திரள் - கூட்டமாகிய, மிருகங்கள் - காடிகள், கண்டு - பார்த்து, சொம்மையர் - சோமையர், இவர் ஆம் - இவரே யாகும், என்று - என்று (நிச்சயித்து), சூழ்ந்து - வளைந்துகொண்டு, உறநெருங்கி - மிகவும் சமீபத்திற்சென்று, நின்று—, அங்கு-அவ்விடத்தில், அ - அந்த, மறம் - பாவஞ்செய்த, விலங்கில்-காடிகளில், ஒன்று - ஒரு காடியானது, எம் - அடியேங்களுடைய, ஐய - ஐயனே, நின் - உனது, கையினால் - கரத்தினால், எம் - அடியேங்களுடைய, உடல் - தேகங்கள், ஒழிந்தால் - அழிந்துபோமாயின், எங்கள் - அடியேங்களுக்கு நேரிட்டிருக்கின்ற, சாபம்—, நீங்கும் - விமோசனமாகும், என்று-என்று (சொல்லி), எ - று.

(பொ-ரை.) அழகிய புஷ்பங்களைப் பறிக்கின்ற காலத்தில், அந்தக் கூட்டமாகிய காடிகள் பார்த்து, சோமையர் இவரே யாகுமென்று நிச்சயித்து, வளைந்துகொண்டு, மிகவும் சமீபத்திற் சென்று நின்று, அவ்விடத்தில் அந்தப் பாவஞ் செய்த காடிகளில் ஒரு காடியானது அடியேங்களுடைய தேகங்கள் அழிந்துபோமாயின் அடியேங்களுக்கு நேரிட்டிருக்கின்ற சாபம் விமோசனமாகுமென்று சொல்லி. (கஉ)

சாபம தணைந்த வாற்றைத் தங்கள்முன் சனனந் தன்னை
யேவம தறமுன் கூறி யிரங்கியே யிறைஞ்சி நின்று
நீபல தினமா வேட்டை நினைந்தெமைக் கொல்வை யாயின்
கோபமொன் றில்லாய் முத்தி கூடுவங் கூடுங்காலை

(ப-ரை.) சாபம்—, அணைந்த - நேரிட்ட, ஆற்றை - வரலாற்றையும், தங்கள் - தங்களுடைய, முன் சனனம் தன்னை - பூர்வஜந்மத்தையும், ஏவம் அற - குற்றமில்லாமல், முன் - முன்னர், கூறி - சொல்லி, இரங்கி - வருத்தத்துடன், இறைஞ்சி - (ஸாஷ்டாங்கமாக) வணங்கி, நின்று—, கோபம் ஒன்று இல்லாய் - பரம சாந்தமூர்த்தியே, நீ—, பல தினமா - அநேக நாளாக, வேட்டை - வேட்டையை, நினைந்து - விரும்பி, எம்மை - அடியேங்களை, கொல்வையாயின் - கொல்லுவாயாயின், முத்தி - மோக்ஷத்தை, கூடுவம் - அடைவோம், கூடும் காலை - அடையும்போது, எ - று.

(பொ-ரை.) சாபம் நேரிட்ட வரலாற்றையும், தங்களுடைய பூர்வஜந்மத்தையும், குற்றமில்லாமல் முன்னர் சொல்லி, வருத்தத்துடன் ஸாஷ்டாங்கமாக வணங்கி, நின்று, பரம சாந்தமூர்த்தியே! நீ அநேக நாளாக வேட்டையை விரும்பி அடியேங்களைக் கொல்லுவாயாயின் மோக்ஷத்தை யடைவோம்; அடையும்போது. (கரு)

நிதிமணி விமான மேறி நீயுநீ ணிலமுங் காண
வதிகமா நதிகொள் வேணி யத்தனங் கயிலை சேர்வே
மிதுவுமெங் களோச்ச பித்த முனிவர ரிசைத்த வாய்மை
கதியெமக் கருள்வாய் விண்ணோர் வணங்குநற் கழலா யென்ன.

(ப-ரை.) நிதி-பொன்னினாற் செய்த, மணி - ரத்நங்களினால் இழைக்கப்பட்ட, விமானம் - விமானத்தில், ஏறி - ஏறிக்கொண்டு, நீயும்—, நீள் - பெரிய, நிலமும் - உலகத்திலுள்ளவர்களும், காண - பார்க்கும்படி, அதிகம் - மிகவும், மா - மேன்மை பொருந்திய, நதி - கங்கையை, கொள் - அணிந்திருக்கின்ற, வேணி - திருமுடியை

யுடைய, அத்தன்-சிவபெருமான் (வீற்றிருக்கின்ற), அம் - அழகிய, கயிலை-ஸ்ரீமஹா கைலாஸத்தை, சேர்வேம் - அடைவோம்; இதுவும் - இந்தச் செய்தியும்; எங்களை-அடியேங்களை, சபித்த-சாபமிட்ட, முனிவரர்-முநிஶ்ரேஷ்டர்கள், இசைத்த-சொன்ன, வாய்மை-சொல்லாகும்; விண்ணோர் - தேவர்கள், வணங்கும் - தொழுதற்குரிய, நல் - அழகிய, கழலாய் - ஸ்ரீபாதங்களையுடையவனே, எமக்கு - அடியேங்களுக்கு, கதி - மோக்ஷத்தை, அருள்வாய்-அநுக்ரஹஞ்செய்வாய், என்ன-என்று வேண்டிக்கொள்ளுதலும், எ-று.

(பொ-ரை.) பொன்னினாற்செய்து ரத்நங்களினாலிழைக்கப்பட்ட விமானத்தில் ஏறிக்கொண்டு, நீயும் பெரிய உலகத்திலுள்ளவர்களும் பார்க்கும்படி மிகவும் மேன்மைபொருந்திய கங்கையை யணிந்திருக்கின்ற திருமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருக்கின்ற அழகிய ஸ்ரீ மஹாகைலாஸத்தை யடைவோம்; இந்தச் செய்தியும் அடியேங்களைச் சாபமிட்ட முநிஶ்ரேஷ்டர்கள் சொன்ன சொல்லாகும்; தேவர்கள் தொழுதற்குரிய அழகிய ஸ்ரீபாதங்களையுடையவனே! அடியேங்களுக்கு மோக்ஷத்தை யநுக்ரஹஞ்செய்வாயென்று வேண்டிக்கொள்ளுதலும். (௧௪)

ஐயர்சோ மைய ரச்சொற் கையமுற் றறிவா னோக்கிப்
பொய்யல வெனத்தெ ளிந்தே யவைகண்முன் பொருந்தப் பேசிச்
செய்யதஞ் சிவார்ச்ச னைக்காஞ் செழுமலர் கொண்டு சென்று
மெய்யர்தம் மடத்தி ருந்து மற்றைநாள் வேட்டை செல்வார்.

(ப-ரை.) ஐயர்-ஜங்கமமூர்த்திகளாகிய, சோமையர்—, அ - அந்த, சொற்கு - வார்த்தைகளுக்கு, ஐயம் உற்று-சந்தேகமடைந்து, அறிவால்-ஜ்ஞாந த்ருஷ்டியினால், நோக்கி-பார்த்து, பொய் அல்ல-உண்மையே, என்ன-என்று, தெளிந்து - அறிந்து, அவைகள் முன்-அவைகளுக்கெதிரே, பொருந்த-தக்கபடி, பேசி-சொல்லி, செய்ய-மேன்மையாகிய, தம்-தமது, சிவார்ச்சனைக்கு - சிவபூஜைக்கு, ஆம்-ஆகிய, செழும்-அழகிய, மலர்-புஷ்பங்களை, கொண்டு-எடுத்துக்கொண்டு, சென்று-போய், மெய்யர்-ஜங்கமமூர்த்திகளாகிய சோமையர், தம் - தமது, மடத்து இருந்து-திருமடத்தினின்றும், மற்றை நாள் - மறுநாள், வேட்டை-மிருக வேட்டையை (விரும்பி), செல்வார்-புறப்படுவாராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(பொ - ரை.) ஜங்கமமூர்த்திகளாகிய சோமையர் அந்த வார்த்தைகளுக்குச் சந்தேகமடைந்து, ஜ்ஞாந த்ருஷ்டியினாற் பார்த்து, உண்மையே யென்றறிந்து, அவைகளுக் கெதிரே தக்கபடிச் சொல்லி, மேன்மையாகிய தமது சிவபூஜைக்காகிய அழகிய புஷ்பங்களை யெடுத்துக்கொண்டு போய், ஜங்கமமூர்த்திகளாகிய சோமையர் தமது திருமடத்தினின்றும் மறுநாள் மிருக வேட்டையை விரும்பிப் புறப்படுவாரா யினர்; எவ்வாறெனின். (௧௫)

பச்சையொண் குப்பா யத்தைப் பசிதமெய் யுறவே சாத்தி
யச்செழுந் தூசு சென்னி யார்த்தங்கைச் சிலையம் பேந்தி
முச்சுமவ் வனத்தை நோக்கி முனிவிலா முனிவர் வேட்டை
நச்சுவா ராகப் புக்கார் நல்விலங் கினமுஞ் சூழ்ந்த.

(ப-ரை.) ஒள் - அழகிய, பச்சை-பச்சை நிறமுள்ள, குப்பாயத்தை-சட்டையை, பசிதம் - விபூதி தரித்திருக்கின்ற, மெய் உற - உடம்பிற் பொருந்த, சாத்தி-அணிந்து, செழும்-அழகிய, அ-அந்தப் பச்சை நிறமுள்ள, தூசு-வஸ்த்ரத்தை, சென்னி-முடியில், ஆர்த்து-கட்டி, அம்-அழகிய, கை-கரங்களில், சிலை-வில்லையும், அம்பு-பாணங்களையும், ஏந்தி-பிடித்து, (முச்சும்-மரங்கள்) சூழ்ந்திருக்கின்ற, அ - அந்த, வனத்தை-காட்டை, நோக்கி-அடைந்து, முனிவு இல்லா-சாந்தகுணத்தையுடைய, முனிவர்-ஜங்கமமூர்த்திகளாகிய சோமையர், வேட்டை-வேட்டையை, நச்சுவாராக - விரும்புபவர் போல, புக்கார்-(வேட்டையாட) தொடங்கினர், நல்-சிறந்த, விலங்கு இனமும்-காடிக்கூட்டங்களும், சூழ்ந்த - சுற்றிக்கொண்டன, எ-று.

(பொ-ரை.) அழகிய பச்சை நிறமுள்ள சட்டையை விபூதி தரித்திருக்கின்ற உடம்பிற் பொருந்த அணிந்து, அழகிய அந்தப் பச்சை நிறமுள்ள வஸ்திரத்தை முடியிற் கட்டி, கரங்களில் வில்லையும் பாணங்களையும் பிடித்து, மரங்கள் சூழ்ந்திருக்கின்ற அந்தக் காட்டை யடைந்து, சாந்த குணத்தையுடைய ஜங்கமமூர்த்திகளாகிய சோமையர் மிருக வேட்டையை விரும்புபவர் போல வேட்டையாடத் தொடங்கினார்; சிறந்த காடிக் கூட்டங்களும் சுற்றிக்கொண்டன. (கசு)

வில்லினை யேற்றி யோசை மிகவெழ நாணை றிந்து
கொல்லுமா சரந்தெ ரிந்து கொண்டெழ விலங்கி னங்கள்
வல்லெனத் தம்மேற் செல்ல வாளியொன் றொன்றி லொவ்வோர்
சல்லிய முதல்வி லங்கு சாய்ந்தவ ணிறந்த வாறே.

(ப-ரை.) வில்லினை-வில்லை, ஏற்றி-வளைத்து, ஓசை-ஒலியானது, மிக - மிகுதியாக, எழ - உண்டாகும்படி, நாண் - நாணினை, எறிந்து - வலித்து, கொல்லும் - கொல்லுதற்குரிய, மா - பெரிய, சரம் - அம்புகளை, தெரிந்து - பார்த்து, கொண்டு - எடுத்துக்கொண்டு, எழ - புறப்படுதலும், விலங்கு இனங்கள்-காடிக்கூட்டங்கள், வல் என்ன - விரைந்து, தம் மேல் - தம்மீது, செல்ல - வருதலும், வாளி ஒன்று ஒன்றில்-ஒவ்வொரு அம்பினால், ஒவ்வோர் - ஒவ்வொரு, சல்லியம்-அம்பு (பாய்தல்), முதல்-தொடங்கி, விலங்கு-காடிகள், சாய்ந்து -துவண்டு, அவண் - அவ்விடத்தில், இறந்த-செத்த, ஆறே - விதமே, எ-று.

(பொ-ரை.) வில்லை வளைத்து, ஒலியானது மிகுதியாக உண்டாகும்படி நாணினை வலித்து, கொல்லுதற்குரிய பெரிய அம்புகளைப் பார்த்தெடுத்துப் புறப்படுதலும், காடிக் கூட்டங்கள் விரைந்து தம்மீது வருதலும், ஒவ்வொரு அம்பினால் ஒவ்வொரு அம்பு பாய்தல் தொடங்கிக் காடிகள் துவண்டு அவ்விடத்திற் செத்த விதமே.

(வி - ரை.) சல்லியம் முதல் - முட்பன்றி முதலிய எனவும் கலக்கத்துக்குக் காரணமான எனவும் பொருட்கொண்டு, விலங்கு - மிருகங்களெனப் பொதுவாய்ப் பொருட்கோடலுமமையும். (கஎ)

வீணையர் வடிவ மெய்தி மெய்யர்சோ மையர் தாளில்
நீணில முறப்ப ணிந்து நிற்கமே தினிவி மானஞ்
சேணிடைத் தோன்ற வேறித் திருக்கயி லாயஞ் சென்றார்
மாணய முனிவர் பார்த்தார் வனசரர் மகிழ்ந்து கண்டார்.

(ப - ரை.) வீணையர் வடிவம் - கந்தர்வ ரூபங்களை, எய்தி - அடைந்து, மெய்யர் - ஜங்கமமூர்த்திகளாகிய, சோமையர் - சோமையருடைய, தாளில் - ஸ்ரீபாதங்களில், நீள் - பெரிய, நிலம் - பூமியில், உற - பொருந்தும்படி, பணிந்து - (ஸாஷ்டாங்கமாக) வணங்கி, மேதினி - பூமியின்மேல், நிற்க - நிற்றலும், விமானம்—, சேண் இடை - ஆகாயத்தில், தோன்ற - விளங்குதலும், ஏறி - ஏறிக்கொண்டு, திருக்கயிலாயம் - ஸ்ரீமஹா கைலாஸத்தில், சென்றார் - போனார்கள், மாண் நயம்-மிக்க மேன்மையுடைய, முனிவர்-ஜங்கமமூர்த்திகளாகிய சோமையரும், பார்த்தார்—, வனசரர்-வேடர்களும், மகிழ்ந்து - சந்தோஷத்துடன், கண்டார் - பார்த்தார்கள், எ-று.

(பொ-ரை.) கந்தர்வ ரூபங்களை யடைந்து, ஜங்கமமூர்த்திகளாகிய சோமையருடைய ஸ்ரீபாதங்களில் பூமியிற் பொருந்தும்படி ஸாஷ்டாங்கமாக வணங்கிப் பூமியின் மேல் நிற்றலும், விமானம் ஆகாயத்தில் விளங்குதலும், ஏறிக்கொண்டு ஸ்ரீமஹா கைலாஸத்திற் போனார்கள்; மிக்க மேன்மையுடைய ஜங்கமமூர்த்திகளாகிய சோமையரும் பார்த்தார்; வேடர்களும் சந்தோஷத்துடன் பார்த்தார்கள்.

கண்டவர் காட்டு நாயுங் கயிலையிற் சென்ற திந்த
வண்டவர் பெருமை யென்றார் மற்றுள சாப மாக்கண்
மிண்டிய வனத்து வேடர் விடுங்கணைக் ககப்ப டாதித்
திண்டவர் கரத்தி னாலே தினஞ்செத்தப் படியே செல்ல.

(ப-ரை.) கண்டவர்-பார்த்த பேர்கள், காட்டு நாயும் - காட்டு நாய்களும், கயிலையில்-ஸ்ரீமஹாகைலாஸத்தில், சென்றது-சேர்ந்தன, இந்த—, வள் - மேன்மையாகிய, தவர்-ஜங்கமமூர்த்திகளுடைய, பெருமை-மகிமை, என்றார் - என்று சொன்னார்கள்; மற்று உள்ள-வேறுள்ள, சாபம்-சாபம் (அடைந்த), மாக்கள் - கரடிகள்; மிண்டிய-அடர்ந்த, வனத்து - காட்டில் (சஞ்சரிக்கின்ற), வேடர் - வேடர்கள், விடும் - செலுத்துகின்ற, கணைக்கு-அம்புகளுக்கு, அகப்படாது-சிக்காமல், இ-இந்த, திண்-மனோதிருடமுள்ள, தவர்-ஜங்கமமூர்த்திகளுடைய, கரத்தினால்-கையினால், தினம்-நாடோறும், செத்து-மரித்து, அப்படியே-அவ்வாறே, செல்ல- (ஸ்ரீமஹாகைலாஸத்தில்) சேர்தலும், எ-று.

(பொ-ரை.) பார்த்த பேர்கள் காட்டு நாய்களும் ஸ்ரீமஹாகைலாஸத்தில் சேர்ந்தன, இந்த மேன்மையாகிய ஜங்கமமூர்த்திகளுடைய மகிமையென்று சொன்னார்கள்; வேறுள்ள சாபமடைந்த கரடிகள் அடர்ந்த காட்டிற் சஞ்சரிக்கின்ற வேடர்கள் செலுத்துகின்ற அம்புகளுக்குச் சிக்காமல் இந்த மனோதிருடமுள்ள ஜங்கமமூர்த்திகளுடைய கையினால் நாடோறும் மரித்து அவ்வாறே ஸ்ரீமஹாகைலாஸத்திற் சேர்தலும். (௧௯)

(வி - ரை.) மாக்கள் - விலங்குகள்.

அப்பெரு வனத்து வேட ரதிசயித் தெங்கை யம்பிற்
றப்பியித் தவத்த ரம்பு தனக்கெதிர் நிற்ப தென்னோ
செப்பிலிவ் விலங்கி னங்கள் சென்றவா றென்னோ வாரு
மொப்பிலம் முனிவர் தாமே வல்லரென் றுரைப்ப ராகி.

(ப - ரை.) அ - அந்த, பெரு - பெரிய, வனத்து - வனத்தில் (இருக்கின்ற), வேடர் - வேடர்கள், அதிசயித்து - ஆச்சரியமடைந்து, எம் - எங்களுடைய, கை - கைகளிலுள்ள, அம்பில் - அம்புகளுக்கு, தப்பி-பிழைத்து, இ - இந்த; தவத்தர்-ஜங்கமமூர்த்திகளுடைய, அம்பு தனக்கு - அம்புகளுக்கு; எதிர் - எதிரே, நிற்பது - நிற்பதற்குக் காரணம், என்னோ - யாதோ, செப்பில் - சொல்லுமிடத்து, இ - இந்த, விலங்கு இனங்கள் - கரடிக் கூட்டங்கள், சென்ற வாறு-வந்த சரித்திரம், என்னோ - யாதோ, ஆரும் - யாரும், ஒப்பு இல் - நிகரில்லாத, அ - அந்த, முனிவர் தாமே - ஜங்கமமூர்த்திகளே, வல்லார் - அறியவல்லவர், என்று—, உரைப்பாராகி - சொல்லுபவர்களாகி, எ-று.

(பொ-ரை.) அந்தப் பெரிய வனத்திலிருக்கின்ற வேடர்கள் ஆச்சரியமடைந்து, எங்களுடைய கைகளிலுள்ள அம்புகளுக்குப் பிழைத்து இந்த ஜங்கமமூர்த்திகளுடைய அம்புகளுக் கெதிரே நிற்பதற்குக் காரணம் யாது? சொல்லுமிடத்து, இந்தக் கரடிக் கூட்டங்கள் வந்த சரித்திரம் யாதோ? யாரும் நிகரில்லாத அந்த ஜங்கமமூர்த்திகளே அறியவல்லவரென்று சொல்பவர்களாகி. (௨௦)

பூவுருத் திரரா மிந்தப் பொருவிலா முனிவ ரம்பிற்
சாவதென் வீணை யோராய்த் தமனிய விமானத் தேறி
மேவருங் கயிலா யத்தின் மேவலெ னிவ்வா றெல்லாங்
காவலன் விச்ச லன்பாற் கழறுது மெனப்போய்ச் சொன்னார்.

(ப-ரை.) பூ உருத்திரர் ஆம் - பூலோக ருத்ராராகிய, இந்த—, பொருவு இல்லா - நிகரில்லாத, முனிவர் - ஜங்கமமூர்த்திகளுடைய, அம்பில் - அம்புகளுக்கே, சாவது - இறப்பதற்குக் காரணம், என்-யாது, வீணையோர் ஆய் - கந்தர்வர்களாகி, தமனியம் - ஸ்வர்ணம், விமானத்து - விமானத்தில், ஏறி - ஏறிக்கொண்டு, மேவு அரு-அடைதற்கரிய, கயிலாயத்தில்-ஸ்ரீமஹாகைலாஸத்தில், மேவல்-செல்வதற்குக் காரணம், என்-யாது, இ-இந்த, ஆறு-செய்தியை, எல்லாம்-முழுதும், காவலன் விச்சலன் பால்-விஜ்ஜல ராஜனிடத்தில், கழறுதும் - சொல்வோம், என்ன - என்று, போய் - சென்று, சொன்னார் - சொன்னார்கள். எ-று. (௨௧)

(போ-ரை.) பூலோக ருத்ரராகிய இந்த நிகரில்லாத ஜங்கமமூர்த்திகளுடைய அம்புகளுக்கே இறப்பதற்குக் காரணம் யாது? கந்தர்வர்களாகி ஸ்வர்ண விமானத்தில் ஏறிக்கொண்டு அடைதற்கரிய ஸ்ரீமஹா கைலாஸத்திற் செல்வதற்குக் காரணம் யாது? இந்தச் செய்தியை முழுதும் விஜ்ஜலராஜனிடத்திற் சொல்வோமென்று சென்று சொன்னார்கள்.

(வி-ரை.) வீரசைவரை பூருத்ரரென்றும், வேதியரை பூசுரரென்றும் கூறுவர்.

விச்சலன் வசவ தேவர் விச்சல புரியோ ரெல்லா
மச்செய லறிய வந்தா ரவர்முன மந்த வாறே
நிச்சயம் பெறமேற் செல்லு நீதியை நிருபன் கண்டு
நச்சினன் றொழுது நின்று னந்திக ணவிலா நிற்பார்.

(ப-ரை.) விச்சலன்-விஜ்ஜலராஜனும், வசவதேவர்-வசவண்ணரும், விச்சலபுரியோர்-கல்யாணபட்டினத்திலுள்ளஜனங்கள், எல்லாம்-அனைவரும், அ-அந்த, செயல்-செய்தியை, அறிய - தெரிந்துகொள்ளும்பொருட்டு, வந்தார் - வந்து சேர்ந்தார்கள், அவர் முனம்-அவர்களுக்கெதிரே, அந்த ஆறே-அப்படியே, நிச்சயம் பெற-உண்மையாக, மேல் - ஆகாயத்தில், செல்லும்-போகின்ற, நீதியை-பெருமையை, நிருபன்-அரசன், கண்டு-பார்த்து, நச்சினன்-அன்புடையவனாகி, தொழுது-வணங்கி, நின்றான்—, நந்திகள்-வசவண்ணர், நவிலா நிற்பார் - சொல்லத் தொடங்கினார் (எவ்வாறெனின்), எ-று.

(போ - ரை.) விஜ்ஜலராஜனும், வசவண்ணரும், கல்யாணபட்டினத்திலுள்ள ஜனங்க ளனைவரும் அந்தச் செய்தியைத் தெரிந்துகொள்ளும்பொருட்டு வந்துசேர்ந்தார்கள்; அவர்களுக்கெதிரே அப்படியே உண்மையாக ஆகாயத்திற் போகின்ற பெருமையை அரசன் பார்த்து, அன்புடையவனாகி, வணங்கி நின்றான்; வசவண்ணர் சொல்லத் தொடங்கினார்; எவ்வாறெனின்.

(வி-ரை.) விச்சலபுரி - விஜ்ஜலராஜன் ஆள்கின்ற நகரம். நச்சினன்-முற்றெச்சம்.

குருபத சேவை யென்னுங் கோலநற் சுரிகை யாலே
மருவுமில் வாழ்க்கை யிச்சை மரையினை மாயச் செய்தும்
பரவுயி ரயிக்க மென்னும் பாரவெங் குந்தத் தாலே
கருமமாங் குஞ்ச ரங்கள் கலங்கியங் கிறக்கச் செய்தும்.

(ப - ரை.) குருபதசேவை - குருபாதபூஜை, என்னும் - என்கின்ற, கோலம் - அழகியதும், நல் - சிறந்ததுமாகிய, சுரிகையால் - உடைவாளினால், மருவும் - அகப்பட்டுக் கொண்டிருக்கின்ற, இல்வாழ்க்கை - மனைவாழ்க்கையின், இச்சை - பற்றாகிய, மரையினை-மரையை, மாயச்செய்தும்-சாவப்பண்ணியும், பர உயிர் அயிக்கம் - ஜீவேஸ்வரைக்யம், என்னும் - என்கின்ற, பாரம் - கனமானதும், வெம் - கொடியதுமாகிய, குந்தத்தால் - கைவேலினால், கருமம் ஆம் - ப்ராக்ருத கர்மங்களாகிய, குஞ்சரங்கள் - யானைகளை, கலங்கி - வருத்தத்துடன், அங்கு - அவ்விடத்தே, இறக்கச் செய்தும் - சாவப் பண்ணியும், எ - று.

(போ - ரை.) குருபாதபூஜை யென்கின்ற அழகியதும், சிறந்ததுமாகிய உடைவாளினால் அகப்பட்டுக்கொண்டிருக்கின்ற மனைவாழ்க்கையின் பற்றாகிய மரையைச் சாவப் பண்ணியும், ஜீவேஸ்வரைக்யமென்கின்ற கனமானதும், கொடியதுமாகிய கைவேலினால் ப்ராக்ருத கர்மங்களாகிய யானைகளை வருத்தத்துடன் அவ்விடத்தே சாவப் பண்ணியும்.

(வி - ரை.) மரை - மானினத்ததாகிய ஓர்வகை மிருகம். பரவுயிரயிக்கமென்பது பாவுயிரிரக்கமெனவும் பாடம்; மேலான ஜீவகாருண்யமெனப் பொருளுரைக்க. கருமமாங் குஞ்சரங்களென்பது கருமமாஞ் சராசரங்களெனவும்பாடம்; கர்மமாகிய ப்ரபஞ்சமெனப் பொருளுரைக்க; பிந்தியது பொருத்தமின்று. ௨௩

ஈசனல் லாணை யாகு மெழிற்றரும் பாசி ஞலே
பாசவா தனைக ளென்னும் பகர்புலிக் கணம்ப டுத்துந்
தேசுறு ஞான மான செய்யகட் கத்தி ஞலே
ஆசையஞ் ஞான வெய்ய வடவிமே திவை யடர்த்தும்.

(ப - ரை.) நல் - மேன்மைபொருந்திய, ஈசன் ஆணை - சிவாஜ்ஞை, ஆகும் - ஆகிய, எழில் தரும் - அழகிய, பாசினல் - கோடாரியினல், பாசவாதனைகள் - பூர்வாப்ரய ஸம்ஸ்காரங்கள், என்னும் பகர் - என்று சொல்லப்பட்ட, புலிக்கணம் - புலிக்கூட்டங்களை, படுத்தும் - சாவச்செய்தும், தேசு உறு - ஒளிபொருந்திய, ஞானம் ஆன - ஸுஜ்ஞாநமாகிய, செய்ய - அழகிய, கட்கத்தினல் - வாளினல், ஆசை யஞ்ஞானம் - மோஹாந்தகாரமாகிய, வெய்ய - கொடிய, அடவி மேதியை - காட்டெருமையை, அடர்த்தும் - சாவச்செய்தும், எ - று.

(பொ-ரை.) மேன்மைபொருந்திய சிவாஜ்ஞையாகிய அழகிய கோடாரியினல் பூர்வாப்ரய ஸமஸ்காரங்களென்று சொல்லப்பட்ட புலிக்கூட்டங்களைச் சாவச்செய்தும், ஒளிபொருந்திய ஸுஜ்ஞாநமாகிய அழகிய வாளினல் மோஹாந்தகாரமாகிய கொடிய காட்டெருமையைச் சாவச்செய்தும். (உச)

துய்யநற் கிரியை யென்னுஞ் சுடர்தரு வாளி ஞலே
மையல்கொண் மாயா பேத வன்கலை யினைய றுத்து
முய்யநற் றியான வீட்டி யொன்றினு லொழியாச் சன்மக்
கையுடைக் கரியி னங்கள் கட்டறக் காதிச் செற்றும்.

(ப-ரை.) துய்ய-பரிசுத்தமாகிய, நல் கிரியை - ஸத்கர்மம், என்னும்-என்கின்ற, சுடர்தரு - ஒளிபொருந்திய, வாளினல்-வாளாயுதத்தினல், மையல் கொள் - மயக்கங்கொண்ட, மாயாபேதம்-மாயாவிகாரம் (என்கின்ற), வன்-வல்லமையுள்ள, கலையினை-கலையை, அறுத்தும் - வெட்டிக்கொன்றும், உய்ய - கடைத்தேறும்பொருட்டு, நல்-நல்ல, தியானம்-சிவத்யாநம் (என்கின்ற), ஈட்டி ஒன்றினல்-ஒரு ஈட்டியினல், ஒழியா-விட்டு நீங்காத, சன்மம்-பிறவி (என்கின்ற), கையுடை - துதிக்கையினையுடைய, கரியினங்கள் - யானைக்கூட்டங்களை, கட்டு-வலிமை, அற - அற்றுப்போகும்படி, காதிச் செற்றும் - வெட்டிக் கொன்றும், எ-று.

(பொ-ரை.) பரிசுத்தமாகிய ஸத்கர்மமென்கின்ற ஒளிபொருந்திய வாளாயுதத்தினல் மயக்கங்கொண்ட மாயாவிகாரமென்கின்ற வல்லமையுள்ள கலையை வெட்டிக்கொன்றும், கடைத்தேறும் பொருட்டு நல்ல சிவத்யாநமென்கின்ற ஒரு ஈட்டியினல் விட்டுநீங்காத பிறவி யென்கின்ற துதிக்கையினையுடைய யானைக்கூட்டங்களை வலிமை அற்றுப் போரும்படி வெட்டிக் கொன்றும்.

(வி-ரை.) கலை-மானினத்ததாகிய ஓர்வகை மிருகம். கட்டு-விலங்கு எனினுமாம்.

வீரமெய்ப் பத்தி யென்னு மிக்ககட் டாரி யாலே
யாரவெங் காம மாதி யாயவெண் கினத்தைக் காய்ந்து
நேரில்சத் தியம தாகு நெடுங்கதை விடாம னின்று
பாரிலே டணைக ளாய பாம்பினம் படவ டித்தும்.

(ப-ரை.) மெய்-உண்மையாகிய, வீரபத்தி—, என்னும்-என்கின்ற, மிக்க-மேன்மையாகிய, கட்டாரியால்—, ஆர-மிகவும், வெம்-கொடிய, காமம் ஆதியாய-காமம் முதலாகிய, எண்கு இனத்தை-கரடிக்கூட்டங்களை, காய்ந்தும் - கொன்றும், நேர் இல்-ஒப்பற்ற, சத்தியம் ஆகும்-தர்மமாகிய, நெடு-பெரிய, கதை-தண்டாயுதத்தை, விடாமல்-விட்டு நீங்காமல், நின்று-நிலைத்து, பார் இல்-உலகத்திலுள்ள, எடணைகள் ஆய-எடணைகளாகிய, பாம்பு இனம் - சர்ப்பக்கூட்டங்களை, பட அடித்தும் - சாவக்கொன்றும், எ-று.

(பொ-ரை.) உண்மையாகிய வீரபக்தி யென்கின்ற மேன்மையாகிய கட்டுபு யால் மிகவும் கொடிய காமம் முதலாகிய கரடிக்கூட்டங்களைக் கொன்றும், ஒப்பற்ற தர்மமாகிய பெரிய தண்டாயுதத்தை விட்டு நீங்காமல் நிலைத்து உலகத்திலுள்ள ஏடணைகளாகிய சர்ப்பக்கூட்டங்களைச் சாவக் கொன்றும்.

(வி - ரை.) வீரபக்தி-உலகவாழ்க்கையில் வெறுப்புற்றுச் சிவபெருமானிடத்தி லுண்டாகும் வைராக்யமுள்ள பக்தி. காமாதி என்றது காம க்ரோத லோப மோஹ மத மத்ஸரங்களை; இவற்றை முன்னர் விளக்கியுள்ளாம். ஏடணைகள்-விருப்பங்கள்; இவைகள் மூவகைப் படும்; அவையாவன:—அருத்த ஏடணை, புத்திரவேடணை, உலக வேடணை; இவற்றை மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை யென்று மூவிதமாகவும் சொல்லுவர்; இவற்றை ஈஷணாத்ரயமென்பர் வடநூலார். ஏடணை-ஈஷணா என்னும் வடசொற்றிரிபு.

நேயநீள் சமயா சார நெடியதோ மரத்தாற் பாவத்
தீயகோ ணையை வீழ்த்துஞ் சிவனருட் சினேக மென்னுஞ்
சாயகஞ் சிலைகொண் டோடித் தாவுமிந் திரியப் புள் ளெய்து
மேயநற் காட்சி வேலாற் றர்க்கசீ யங்கள் வீழ்த்தும்.

(ப-ரை.) நேயம்-சிவபக்தியை, நீள்-விருத்தியாக்குதற்குரிய, சமயாசாரம்-வீர சைவ சமயாசாரமாகிய, நெடிய-நீண்ட, தோமரத்தால்-இருப்புலக்கையினால், பாவம்-பாவமாகிய, தீய-பொல்லாத, கோணையை-ஓணையை, வீழ்த்தும் - கொன்றும், சிவன் அருள் - சிவாநுக்ரஹமும், சினேகம் - சிவ பக்தியும், என்னும் - என்கின்ற, சாயகம் கொண்டு-வில்லினாலும், சிலைகொண்டு-அம்பினாலும், ஓடித்தாவும்-விரைந்து சென்று பறக்கின்ற, இந்தியம்-பஞ்சேந்த்ரியங்களாகிய, புள்-பறவைகளை, எய்தும்-கொன்றும், மேய-அடைந்திருக்கின்ற, நல்-சிறந்த, காட்சி-சிவஜ்ஞாநமாகிய, வேலால்-வேலினால், தர்க்க சீயங்கள்-பரசமயவாதிகளாகிய சிங்கங்களை, வீழ்த்தும்-கொன்றும், எ-று.

(பொ-ரை.) சிவபக்தியை விருத்தியாக்குதற்குரிய வீரசைவ சமயாசாரமாகிய நீண்ட இருப்புலக்கையினால் பாவமாகிய பொல்லாத ஓணையைக் கொன்றும், சிவாநுக்ரஹமும், சிவபக்தியு மென்கின்ற வில்லினாலும், அம்பினாலும் விரைந்து சென்று பறக்கின்ற பஞ்சேந்த்ரியங்களாகிய பறவைகளைக் கொன்றும், அடைந்திருக்கின்ற சிறந்த சிவஜ்ஞாநமாகிய வேலினால் பரசமய வாதிகளாகிய சிங்கங்களைக் கொன்றும்.

(வி-ரை.) சினேகம்-ஸ்நேஹம் என்னும் வடசொற்றிரிபு. காட்சி-அறிவு. (உஎ)

இம்முறை மாயா ரூப மெனைத்தையும் வென்ற தீரச்
சொம்மையர்க் கிதுவோ பார மென்னவே துதித்தி றைஞ்சித்
தம்மிலே மகிழ்ந்தி ருந்தார் தண்டநா யகர்கல் யாணத்
தம்முறை நீங்கா ராகிச் சொம்மைய ரருளால் வாழ்ந்தார்.

(ப - ரை) இம்முறை-இவ்விதமாக, மாயாரூபம்-மாயாரூபமாகிய உலகப்பற்றுக் கள், எனைத்தையும் - எல்லாவற்றையும், வென்ற - ஜயித்த, தீரன்-தைர்யசாலியாகிய, சொம்மையர்க்கு - சோமையர்க்கு, இதுவோ - இந்தக் கரடிகளைக் கர்தர்வ ரூபங் களாக்கினதோ, பாரம் - பெரிய கார்யம், என்ன - என்று, துதித்து - புகழ்ந்து, இறைஞ்சி - வணங்கி, தண்டநாயகர் - வசவண்ணர், தம்மில் - தமது திருவுளத்தில், மகிழ்ந்திருந்தார் - மகிழ்ச்சியடைந்திருந்தார், கல்யாணத்து - கல்யாணபட்டினத்தில், அ - அந்த, முறை - பெருமையினின்றும், நீங்கார் ஆகி-விட்டுப்பிரியாதவராகி, சொம் மையர்-சோமையர், அருளால் - சிவாநுக்ரஹத்தினால், வாழ்ந்தார் - வாழ்ந்திருந்தார், எ - று.

(பொ-ரை) இவ்விதமாக மாயாரூபமாகிய உலகப்பற்றுக்க ளெல்லாவற்றையும் ஜயித்த தைர்யசாலியாகிய சோமையர்க்கு இந்தக் கரடிகளைக் கர்தர்வ ரூபங்களாக் கினதோ பெரிய கார்யம்? என்று புகழ்ந்து, வணங்கி, வசவண்ணர் தமது திருவுளத் தில் மகிழ்ச்சி யடைந்திருந்தார்; கல்யாணபட்டினத்தில் அந்தப் பெருமையினின்றும் விட்டுப் பிரியாதவராகி சோமையர் சிவாநுக்ரஹத்தினால் வாழ்ந்திருந்தார். (உஅ)

தெலுங்கச்சோமையர் புராணம் - முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - ககரு அ.

உ

சிவமயம்.

# ஏகாந்தராமையர் புராணம்.

## கோச்சகக் கலிப்பா.

பேராத வமலகுணம் பெற்றபெருந் தோற்றத்தா
ரேராருந் திருநாம மேகாந்த ராமைய
ராராத சிவநேய ரப்பாலூ ரெனுந்தலத்திற்
சீராக வாழ்ந்திருப்பார் தேசர்தொழுந் திருத்தாளார்.

(ப - ரை.) பேராத-நிலைபெற்ற, அமல குணம் - பரிசுத்தத் தன்மை, பெற்ற - அடைந்த, பெரு - மிக்க, தோற்றத்தார் - மதிப்புள்ளவர், ஏர் ஆரும் - அழகுபொருந்திய, திருநாமம்—, ஏகாந்த ராமையர் - ஏகாந்தராமையரென்பது, ஆராத - முடிவில்லாத, சிவநேயர்-சிவபக்தியுள்ளவர், அப்பாலூர்—, என்னும்-என்கின்ற, தலத்தில்-ஸ்தலத்தில், சீர் ஆக - சிறப்புடன், வாழ்ந்திருப்பார் - வாசஞ்செய்பவர், தேசர்-(த்ரி) லோகத்தாரும், தொழும்-வணங்குதற்குரிய, திருத்தாளார் - திருவடிகளையுடையவர், எ-று.

(பொ-ரை.) நிலைபெற்ற பரிசுத்தத்தன்மை யடைந்த மிக்க மதிப்புள்ளவர்; அழகு பொருந்திய திருநாமம் ஏகாந்தராமையரென்பது; முடிவில்லாத சிவபக்தியுள்ளவர்; அப்பாலூரென்கின்ற ஸ்தலத்தில் வாசஞ்செய்பவர்; த்ரிலோகத்தாரும் வணங்குதற்குரிய திருவடிகளையுடையவர்.

(வி-ரை.) அமல குணம் - சம தமாதி ஸத்குணமெனினுமாம். அப்பாலூர் என்பது அப்பலூர் என வழங்குதலுண்டு. தேசர்-உலகத்தார்; தேசம்-உலகம்; அதிலுள்ளவர் தேசர்; தேசர் எனப் பொதுப்படக் கூறினமையால் ஏகாந்தராமையரது மஹத்வதை நோக்கி த்ரிலோகத்தாரெனப் பொருளுரைக்கலாயிற்று. ஆராத-வெறுக்காத எனினுமாம். (க)

உலகவுருத் திரரென்னு முரையுடையா ருக்கிரன்போல்
விலகரிய வீரத்தார் விமலகுரு விருப்புள்ளார்
பலபரவா தரைத்துணிக்கும் பரசன்னார் பரஞானர்
நிலவியதஞ் சிவசமய நீதியே நிறுத்துவார்.

(ப-ரை.) உலக உருத்திரர்-பூலோக ருத்ரர், என்னும்-என்கின்ற, உரை உடையார் - புகழையுடையவர், உக்கிரன் போல் - வீரபத்திரக்கடவுளைப் போல், விலகு அரிய - நீங்குதலில்லாத, வீரத்தார்-பராக்ரமத்தையுடையவர், விமல குரு-ஜ்ஞாநாசார்யரிடத்தில், விருப்பு உள்ளார் - அன்புடையவர், பல-அநேக, பரவாதரை - பரசமயவாதிகளை, துணிக்கும்-சேதித்தற்குரிய, பரசு-கோடாரியை, அன்னார் - போன்றவர், பரஞானர்-சிவஞானச்செல்வத்தை யுடையவர், நிலவிய - விளங்குகின்ற, தம் - தமது, சிவசமயநீதியே - வீரசைவ சமயாசாரத்தையே, நிறுத்துவார் - நிலைபெறச் செய்ய வல்லவர், எ-று.

(பொ-ரை.) பூலோக ருத்ரரென்கின்ற புகழையுடையவர்; வீரபத்திரக்கடவுளைப் போல் நீங்குதலில்லாத பராக்ரமத்தையுடையவர்; ஜ்ஞாநாசார்யரிடத்தில் அன்புடையவர்; அநேக பரசமயவாதிகளைச் சேதித்தற்குரிய கோடாரியைப் போன்றவர்; சிவஞானச் செல்வத்தையுடையவர்; விளங்குகின்ற தமது வீரசைவ சமயாசாரத்தையே நிலைபெறச் செய்யவல்லவர். (உ)

வாதமுறுஞ் சமண்சமய மாசறுக்கு மனத்தினர்
பேதமுறும் பவிச்சனத்தைப் பேணாத பெருமையார்
நீதிதரா மாயாங்க நெறிசெல்லா நெஞ்சினர்
நாதனெழுத் தஞ்சல்லா னவிலாத நாவினர்.

(ப-ரை.) வாதம் உறம் - வாதஞ் செய்கின்ற, சமண் சமயம் - சமணசமயமாகிய, மாசு-அழுக்கை, அறக்கும் - ஒழிக்கின்ற, மனத்தினர் - மனத்தையுடையவர், பேதம் உறம் - (சமய) வேற்றுமைகளையுடைய, பாிச்சனத்தை - பவிகளை, பேணுத-விரும்பாத, பெருமையார்-மேன்மையுடையவர், நீதி-வீரசைவ சமயாசாரத்தை, தரா-போதிக்காத,மாயாங்கம்-மாயாரூபமாகிய, நெறி-லோகாசாரத்தில், செல்லா-ஒழுகாத, நெஞ்சினர்-மனத்தையுடையவர், நாதன்-சிவபெருமானது, எழுத்து அஞ்சு - ஸ்ரீபஞ்சாக்ஷர மஹா மந்த்ரத்தையே, அல்லால்-அல்லாமல், நவிலாத-(வேறொன்றினையும்) ஜபிக்காத, நாவினர்-நாவினையுடையவர், எ-று.

(பொ-ரை.) வாதஞ்செய்கின்ற சமணசமயமாகிய அழுக்கையொழிக்கின்ற மனத்தையுடையவர்; சமய வேற்றுமைகளையுடைய பவிகளை விரும்பாத மேன்மையுடையவர்; வீரசைவ சமயாசாரத்தை போதிக்காத மாயாரூபமாகிய லோகாசாரத்தில் ஒழுகாத மனத்தையுடையவர்; சிவபெருமானது ஸ்ரீபஞ்சாக்ஷர மஹா மந்த்ரத்தையேயல்லாமல் வேறொன்றினையும் ஜபிக்காத நாவினையுடையவர். (௯)

அத்தனருச் சனையந்தத் தமலமதி ராமைய
ருத்தமநற் கயிலையில்வா ழுருத்திரனு ரோலக்க
மத்தியினற் றரிசித்தங் கமர்ந்தசிவ கணத்தோரைப்
பத்தியினற் றொழுதவரைப் பரிவினற் பரவியரோ.

(ப-ரை.) அத்தன் அருச்சனை - சிவபூஜையின், அந்தத்து - முடிவில், அமலமதி-ஸுஜ்ஞானமுள்ள, ராமையர்-ஏகாந்தராமையர், உத்தமம் நல் - மிகவும் மேன்மை பொருந்திய, கயிலையில்-ஸ்ரீமஹாகைலாஸத்தில், வாழ்-வீற்றிருக்கின்ற, உருத்திரனர்-சிவபெருமானது, ஓலக்கம்-திருவோலக்கத்தை, மதியினல்-அன்புடன், தரிசித்து-தரிசனஞ்செய்து, அங்கு - அவ்விடத்தில், அமர்ந்த - இருக்கின்ற, சிவகணத்தோரை-சிவகணங்களையும், பத்தியினல்-அன்புடன், தொழுது-வணங்கி, அவரை-அவர்களை, பரிவினல் - அன்புடன், பரவி-துதித்து, எ-று.

(பொ-ரை) சிவபூஜையின் முடிவில் ஸுஜ்ஞானமுள்ள ஏகாந்தராமையர் மிகவும் மேன்மைபொருந்திய ஸ்ரீமஹாகைலாஸத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானது திருவோலக்கத்தை அன்புடன் தரிசனஞ்செய்து, அவ்விடத்திலிருக்கின்ற சிவகணங்களையும் அன்புடன் வணங்கி, அவர்களை அன்புடன் துதித்து.

(வி-ரை.) மதி என்பது மத்தியென்று எதுகை யின்பம் நோக்கி நின்றது. திருவோலக்கம் - மஹாசபை. அரோ-அசை.

சங்கரன்மே னேயத்தாற் றத்துவநற் சுகானுபவத்
திங்கிதத்தா லேகாந்தத் தினிதிலிருந் தின்புற்றே
யங்கமெலாம் புளகமெய்தி யங்கணனர் கயிலையினும்
பொங்குநெறிப் புவியிடத்தும் பொருந்தியிவர் வாழ்நாளில்.

(ப-ரை.) சங்கரன் - சிவபெருமான், மேல் - மீதுள்ள, நேயத்தால் - அன்பினலும், தத்துவம் - உண்மையானதும், நல் - சிறந்ததுமாகிய, சுகானுபவத்து - சிவானுபவ சுகத்தினலுண்டாகிய, இங்கிதத்தால் - பரம சந்தோஷத்தினலும், ஏகாந்தத்து-ஏகாந்த ஸ்தானத்தில், இனிதில் - சந்தோஷத்துடன், இருந்து - (சிவயோகசமாதியில்) வீற்றிருந்து, இன்பு உற்று-பேரின்பத்தை யநுபவித்து, அங்கம் - உடல், எல்லாம் - முழுதும், புளகம் எய்தி - மயிர்க்குச்செறிந்து, அங்கணனர் - சிவபெருமானது, கயிலையினும் - ஸ்ரீ மஹாகைலாஸத்திலும், பொங்கு நெறி - தர்மார்க்கத்தையுடைய, புவியிடத்தும் - பூலோகத்திலும், பொருந்தி - அமர்ந்து, இவர்—, வாழ்-வாழ்கின்ற, நாளில் - காலத்தில், எ - று.

(பொ - ரை.) சிவபெருமான் மீதுள்ள அன்பினலும், உண்மையானதும், சிறந்ததுமாகிய சிவாநுபவ சுகத்தினலுண்டாகிய பரம சந்தோஷத்தினலும், ஏகாந்த ஸ்தானத்தில் சந்தோஷத்துடன் சிவயோக சமாதியில் வீற்றிருந்து, பேரின்பத்தை யநுபவித்து, உடல் முழுதும் மயிர்க்குச்செறிந்து, சிவபெருமானது ஸ்ரீ மஹாகைலாஸத்திலும், தர்மார்க்கத்தையுடைய பூலோகத்திலும் அமர்ந்து, இவர் வாழ்கின்ற காலத்தில். (௰)

வசவேசர் குருலிங்க மலர்ப்பதத்து வண்பத்தி
யிசைநீதி யேகாந்த ராமையர்கேட் டின்புறு
நசைமேவி நந்திகளை நாங்காண்ப மெனக்கடகத்
தசையாத நண்பினு லவர்க்கண்டங் கமர்ந்திருந்தார்.

(ப-ரை.) வசவேசர்-வசவண்ணர், குருலிங்கம்-குருலிங்க(ஜங்கம)மூர்த்திகளின், மலர் - தாமரைமலர்போன்ற, பதத்து - திருவடிகளில், வண் - மேன்மையாகிய, பத்தி - அன்புசெய்கின்ற, இசை - புகழை, நீதி-ஒழுக்கத்தையுடைய, ஏகாந்தராமையர்—, கேட்டு - கேள்விப்பட்டு, இன்பு உறு - சந்தோஷமடைந்து, நசை மேவி - விருப்பங்கொண்டு, நாம்—, நந்திகளை - வசவண்ணரை, காண்பம் - தரிசிப்போம், என்ன - என்று, கடகத்து-கல்யாண பட்டினத்தில், அசையாத - உறுதியான, நண்பினுல் - அன்புடன், அவர் - அவரை, கண்டு - தரிசித்து, அங்கு - அவ்விடத்தில், அமர்ந்து இருந்தார் - வாழ்ந்திருந்தார், எ - று.

(பொ - ரை.) வசவண்ணர் குருலிங்கஜங்கமமூர்த்திகளின் தாமரைமலர்போன்ற திருவடிகளில் மேன்மையாகிய அன்புசெய்கின்ற புகழை ஒழுக்கத்தையுடைய ஏகாந்தராமையர் கேள்விப்பட்டு, சந்தோஷமடைந்து, விருப்பங்கொண்டு, நாம் வசவண்ணரைத் தரிசிப்போமென்று, கல்யாண பட்டினத்தில் உறுதியான அன்புடன் அவரைத் தரிசித்து, அவ்விடத்தில் வாழ்ந்திருந்தார்.

(வி - ரை.) வீரசைவர்களுக்கு ஜங்கம பக்தியும் உடன்பாடாதலின் குருலிங்கம் என்பதற்குக் குருலிங்கஜங்கமமூர்த்திகளெனப்பொருளுரைக்கலாயிற்று. கடகம் என்பது உருண்டையாகிய பொருளென்பது பொருள்; அது உருண்டை வடிவான உலகத்திற்காகி, ஈண்டைக்கேற்பக் கல்யாணபட்டினத்தைக் குறித்தது ; இது-இருமடியாகு பெயர். இன்புறு - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (௬)

### வாச்சையர், சிவநாகமையர்.

மற்றுமொரு பேரன்பர் வாச்சைய ரெனும்பேரார்
நற்றவஞ்சேர் நல்லசிவ நாகமைய ரெனுநாம
முற்றநண்பா னந்திகளை யொன்றியுய்வா மெனவந்து
பற்றியமே னேயத்தாற் பரவிமகிழ்ந் துடனிருந்தார்.

(ப - ரை.) மற்றும் - இன்னமும், ஒரு—, பேர் - பெரிய, அன்பர் - சிவபக்தராகிய, வாச்சையர் என்னும் - வாச்சையரென்கின்ற, பேரார் - திருநாமத்தையுடையவரும், நல் - சிறந்த, தவம் சேர் - வீரவிரதத்தையுடையவரும், நல்ல - மேன்மை பொருந்தியவருமாகிய, சிவநாகமையர் என்னும் - சிவநாகமையரென்கின்ற, நாமர் - திருநாமத்தையுடையவரும்(ஆகிய இரண்டு ஜங்கமமூர்த்திகள்), உற்ற - மிகுந்த, நண்பால்-அன்புடன், நந்திகளை - வசவண்ணரை, ஒன்றி - அடைந்து, உய்வாம் - கடைத்தேறுவோம், என்ன-என்று நினைத்து, வந்து - சென்று, பற்றிய - மனத்திற் கொண்டிருக்கின்ற, மேல் - சிறந்த, நேயத்தால் - அன்புடன், பரவி - துதித்து, மகிழ்ந்து-சந்தோஷத்துடன், உடன் - வசவண்ணரோடு, இருந்தார்-வாழ்ந்திருந்தார்கள், எ-று.

(பொ-ரை.) இன்னமும் ஒரு பெரிய சிவபக்தராகிய வாச்சையரென்கின்ற திருநாமத்தையுடையவரும், சிறந்த வீரவிரதத்தையுடையவரும், மேன்மைபொருந்திய சிவநாகமையரென்கின்ற திருநாமத்தையுடையவருமாகிய இரண்டு ஜங்கமமூர்த்திகள் மிகுந்த அன்புடன் வசவண்ணரை யடைந்து, கடைத்தேறுவோமென்று நினைத்துச் சென்று, மனத்திற் கொண்டிருக்கின்ற சிறந்த அன்புடன் துதித்து, வசவண்ணரோடு வாழ்ந்திருந்தார்கள்.

ஏகாந்தராமையர் புராணம் - முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - ௧௧௬.

# சங்கமப்பிராணியான புராணம்.

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நந்தி யாரரு ணற்றவர் பூசை
நண்ணி முற்றிய பின்புதாங் கசிந்து
புந்தி யாவலா லிட்டலிங் கத்தைப்
போத வின்புறு பூசனை செய்வா
ருந்தி மேலிடும் பரவச மதனா
லும்பர் கோன்றனை யொழிவற நோக்கிச்
சிந்தை யாருநற் சிவானந்த வமுதஞ்
சென்று சென்றுறத் தெவிட்டிடா தருந்தி.

(ப-ரை.) நந்தியார் - (ஒரு தினம்) வசவண்ணர், அருள் - க்ருபா கடாக்ஷத்தை யுடைய, நல்-சிறந்த, தவர்-ஜங்கமமூர்த்திகளை, பூசை-பூஜை செய்ய, நண்ணி-விரும்பி, முற்றிய-முடிந்த, பின்பு-பிறகு, தாம்—, கசிந்து-மனமுருகி, புந்தி ஆவலால்-மனோ பீஷ்டத்துடன், இட்டலிங்கத்தை-இஷ்டலிங்கமூர்த்தியை, போத-மிகவும், இன்பு உறு-அன்புள்ள, பூசனைசெய்வார்-பூஜைபண்ணுவாராயினர்(எவ்வாறெனின்), உந்தி-உயர்ந்து, மேலிடும்-அதிகப்படுகின்ற, பரவசம் அதனால்-பரவசத்தால், உம்பர்-தேவர் களுக்கு, கோன் தன்னை-இறைவனாகிய சிவபெருமானை, ஒழிவு அற - இடையறாமல், நோக்கி-(ஜ்ஞான த்ருஷ்டியால்) தரிசித்து, சிந்தை யாரும் - மனோ த்ருப்தியடைதற் குரிய, சிவானந்தம் - சிவாநந்தமாகிய, அமுதம்-தேவாம்ர்தத்தை, சென்று சென்று-பலகாலும் முயன்று, உற-மிகவும், தெவிட்டிடாது - தேக்காமல், அருந்தி-உண்டு, எ-று.

(பொ-ரை.) ஒரு தினம் வசவண்ணர் க்ருபா கடாக்ஷத்தையுடைய சிறந்த ஜங்கம மூர்த்திகளைப் பூஜைசெய்ய விரும்பி, முடிந்த பிறகு, தாம் மனமுருகி, மனோபீஷ்டத் துடன் இஷ்டலிங்கமூர்த்தியை மிகவும் அன்புள்ள பூஜை பண்ணுவாராயினர் ; எவ் வாறெனின்:—உயர்ந்து அதிகப்படுகின்ற பரவசத்தால் தேவர்களுக்கு இறைவனாகிய சிவபெருமானை இடையறாமல் ஜ்ஞான த்ருஷ்டியினால் தரிசித்து, மனோ த்ருப்தியடை தற்குரிய சிவாநந்தமாகிய தேவாம்ர்தத்தை பலகாலும் முயன்று, மிகவும் தேக்காமல் உண்டு.

பரிவி னாலடிக் கடியுப சாரப்
பரிசஞ் செய்தனற் படுமெழு கினராய்ப்
புரியு நேயமே பொருந்தியுண் ணெக்குப்
புளக மெய்யரா யையர்தாம் புலம்பி
யரிய மேனியின் குணங்களோன் றின்றி
யதிக வானந்த ராகமே ததும்பி
யுரிய தோத்திரங் கண்கணீ ரொழுக
வோதி யோதியன் புததியு ளாழ்ங்கால்.

(ப-ரை.) பரிவினால்-அன்புடன், அடிக்கடி-பலகாலும், உபசாரப் பரிசம் செய்து-தியானித்துத் தொழுது வணங்கி, அனல் படும்-நெருப்பிற்பட்ட, மெழுகினர் ஆய் - மெழுகு உருகுவதுபோல் மனம் உருகுபவராகி, புரியும்-விரும்பிச் செய்கின்ற, நேயம்-பக்தியை,பொருந்தி-மேற்கொண்டு, உள்-மனம், நெக்கு-நெகிழ்ந்து,புளகம்-மயிர்க்குச்

செறிந்த, மெய்யராய்-மேனியையுடையவராகி, ஐயர்தாம்-தலைவராகிய வசவண்ணர், புலம்பி - அழுது, அரிய-மேன்மைபொருந்திய, மேனியின் - உடம்பின், குணங்கள் - தொழில்கள், ஒன்று-சிறிதும், இன்றி-இல்லாமல், அதிக ஆனந்த ராகம்-பேரின்பத்தில் விருப்பம், மேல் அரும்பி - அதிகரித்து, கண் - நேத்ரங்களினின்றம், நீர் - (ஆநந்த) பாஷ்பம், ஒழுக - சிந்தும்படி, உரிய-தகுதியாகிய, தோத்திரங்கள் - தோத்திரங்களை, ஓதி ஓதி-பலகாலும் சொல்லி, அன்பு - பக்தியாகிய, உததியுள் - கடலில், உறும் கால்-மூழ்கியிருக்கின்ற காலத்தில், எ-று.

(பொ - ரை.) அன்புடன் பலகாலும் தியானித்துத் தொழுது வணங்கி, நெருப்பிற்பட்ட மெழுகு உருகுதல் போல் மனமுருகுபவராகி, விரும்பிச் செய்கின்ற பக்தியை மேற்கொண்டு, மனமகிழ்ந்து, மயிர்க்குச்செறிந்த மேனியையுடையவராகி, தலைவராகிய வசவண்ணர் அழுது, மேன்மைபொருந்திய உடம்பின் தொழில்கள் சிறிதுமில்லாமல் பேரின்பத்தில் விருப்பம் அதிகரித்து, நேத்ரங்களினின்றும் ஆநந்த பாஷ்பம் சிந்தும்படித் தகுதியாகிய தோத்திரங்களைப் பலகாலும் சொல்லி, பக்தியாகிய கடலில் மூழ்கியிருக்கின்ற காலத்தில். (௨)

(வி-ரை.) உபசாரம்-வணங்கல். பரிசம் செய்து-பயின்று. மேனி-உடம்பு; உடம்பென்று பொதுப்படக் கூறினமையால், ஸ்தூல சரீரத்தையும், ஸூக்ஷ்ம சரீரத்தையும் கொள்ளப்படும்; அவற்றுள் ஸ்தூல சரீரமாவது இரத்தம் முதலிய எழு தாதுக்களாலாக்கப்பட்டது; ஸூக்ஷ்ம சரீரமாவது மெய், வாய், கண், மூக்கு, செவியென்கின்ற ஐந்துவகைப்பட்ட ஜ்ஞாநேந்திரியங்களாலும், வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தமென்கின்ற ஐந்து வகைப்பட்ட கர்மேந்த்ரியங்களாலு முண்டாகும் ஞானத்துடனும், பிராணன், அபானன், வியானன், உதானன், சமானனென்கின்ற ஐந்து வகைப்பட்ட வாயுக்களுடனும், பொருள்களை விரும்புவதாகிய காமமும், நல்வினை தீவினைகளின் சம்ஸ்காரமும், நல்வினை தீவினைகளால் சம்ஸ்காரவாயிலாக வருகின்ற சுக துக்கங்களுடனும் கூடிய மனம். மேனியின் குணங்கள் ஒன்று இன்றி-உடம்பு அசையாமலும், மனம் சலநமில்லாமலும் என்றபடி. ராகம்-ஆசை.

என்று மெய்திடாச் சங்கமர் புதியோ
ரெய்தி நந்திக ளிருஞ்சிவார்ச் சனையி
னொன்று செய்தியைத் துவாரபா லகரா
லுணர்ந்து நீங்கவவ் வுத்தம ருடனே
சென்ற டைந்தது தண்டநா யகனார்
செய்ய வாவியச் செய்தியா லுடல
நின்ற கம்பம தென்னவே யோக
நித்த ரானந்த நிலையரா யிருந்தார்.

(ப-ரை.) என்றும்-எக்காலத்திலும், எய்திடா-எழுந்தருளாத, சங்கமர் புதியோர்-ஒரு புதிய ஜங்கமமூர்த்திகள், எய்தி - எழுந்தருளி, நந்திகள் - வசவண்ணர், இரு-மேன்மைபொருந்திய, சிவார்ச்சனையின் ஒன்று - சிவபூஜை செய்கின்ற, செய்தியை-ஸத்கார்யத்தை, துவாரபாலகரால்-வாயிற்காப்பவர்களால், உணர்ந்து-அறிந்து, நீங்க-சென்ற மாத்திரத்தில், அ - அந்த, உத்தமருடன்-சிறப்புற்ற ஜங்கமமூர்த்திகளோடு, தண்டநாயகனார் - வசவண்ணருடைய, செய்ய - மேன்மையாகிய, ஆவி-உயிரானது, சென்று-போய், அடைந்தது-சேர்ந்தது, அ-அந்த, செய்தியால்-செய்கையால், உடலம்-மேனியானது, கம்பம் என்ன-தறி போல, நின்ற-(அசையாது) நின்றுவிட்ட, யோக நித்தர் - சிவயோக நித்திரையிலுள்ள வசவண்ணர், ஆனந்த நிலையர் ஆய்-பேராநந்த பரிதராகி, இருந்தார்-ஜ்யோதிர்லிங்க நிஷ்டையில் நிலைத்திருந்தனர், எ-று.

(போ-ரை.) எக்காலத்திலும் எழுந்தருளாத ஒரு புதிய ஜங்கமமூர்த்திகள் எழுந்தருளி, வசவண்ணர் மேன்மைபொருந்திய சிவபூஜை செய்கின்ற ஸத்காரியத்தை வாயிற் காப்பவர்களால் அறிந்து சென்ற மாத்திரத்தில், அந்தச் சிறப்புற்ற ஜங்கமமூர்த்திகளோடு வசவண்ணருடைய மேன்மையாகிய உயிரானது போய்ச் சேர்ந்தது; அந்தச் செய்கையால் மேனியானது தறிபோல அசையாது நின்று விட்ட; சிவயோக நித்திரையிலுள்ள வசவண்ணர் பேரானந்த பரிதராகி ஜ்யோதிர்லிங்க நிஷ்டையில் நிலைத்திருந்தனர்.

புதிய மெய்த்தவத் தம்பிரா னிடத்தே
　புக்க வாருயிர் புறப்படா தாகி
யதிக சங்கமா ராதனைப் பத்தி
　யமுத ருந்துவா ரத்தவ ரடிக்காம்
விதியி னொன்றியங் கரங்களாற் செய்யு
　மேவு செய்கையு மெல்லென நழுவித்
துதியு நாவிடை மறந்திரு கண்ணீர்
　தொலைய வப்பெருஞ் சோதியுட் டங்கி.

(ப-ரை.) புதிய-நூதனமாக எழுந்தருளின, மெய்த் தவம்-உண்மையாகிய வீர விரதத்தை யுடையவராகிய, தம்பிரானிடத்து - ஜங்கமமூர்த்திகளிடத்தில், புக்க - சென்ற, ஆர்-மேன்மையாகிய, உயிர்-உயிரானது, புறப்படாதாகி - வெளிப்படாமையினால், அதிகம் - மேன்மையாகிய, சங்கம ஆராதனை - ஜங்கமாராதனை செய்கின்ற, பத்தி - பக்தியும், அமுது - அந்நத்தை, அருந்துவார் - அமுது செய்பவர்களாகிய, அ- அந்த, தவர்-ஜங்கமமூர்த்திகளுடைய, அடிக்கு - திருவடிகளுக்கு, ஆம்-உரித்தாகிய, விதியின் ஒன்றிய - (வேதாகம) விதிப்படி (தாமே தமது), அம் - அழகிய, கரங்களால் - கைகளினால், செய்யும் - பண்ணுகின்ற, செய்கையும்-செயலும், ஏவும்- கட்டளையிட்டுச் செய்கின்ற, செய்கையும்-செயலும், மெல் என்ன - பைய, நழுவி- ஒழிந்து, நாவிடை - நாவினிடத்தில், துதியும்-தோத்திரங்களையும், மறந்து—, இரு- இரண்டு, கண் நீர்-நேத்ரங்களினின்று மொழுகுகின்ற ஆநந்த பாஷ்பம், தொலைய - ஒழிதலும், அ-அந்த, பெருஞ்சோதியுள்-பரஞ்சோதியில், தங்கி-கலந்து, எ-று.

(போ - ரை.) நூதனமாக எழுந்தருளின உண்மையாகிய வீரவிரதத்தை யுடையவராகிய ஜங்கமமூர்த்திகளிடத்திற் சென்ற மேன்மையாகிய உயிரானது வெளிப்படாமையினால் மேன்மையாகிய ஜங்கமாராதனை செய்கின்ற பக்தியும், அந்நத்தை அமுதுசெய்பவர்களாகிய அந்த ஜங்கமமூர்த்திகளுடைய திருவடிகளுக்கு உரித்தாகிய வேதாகம விதிப்படித் தாமே தமது கைகளினாற் பண்ணுகின்ற செயலும், கட்டளையிட்டுச் செய்கின்ற செயலும் ஒழிந்து, நாவினிடத்தில் தோத்திரங்களையும் மறந்து, இரண்டு நேத்ரங்களினின்றும் ஒழுகுகின்ற ஆநந்த பாஷ்பம் ஒழிதலும், அந்தப் பரஞ்சோதியிற் கலந்து. (ச)

நான்ற வூசலின் கயிறதற் றுற்போ
　னன்னு மிந்தியங் கரணங்க ளடங்கிச்
சான்ற வன்விழிற் கதிர்களு மவன்பின்
　சாருந் தன்மைபோற் சங்கம ரடிக்கீ
மூன்று சிந்தையி னுடனறி வனைத்து
　மொடுங்கி யுட்புறம் பொன்றையு மறியா
தான்ற வெட்டித ழிதயவம் புயமே
　யவர்ப தாம்புய மாகவந் தழுந்தி.

(ப - ரை.) நான்ற - தொங்கின, ஊசலின் கயிறு - ஊஞ்சற்கயிறு, அற்ருல்
போல்-தெறித்துப்போய் அசைபுந்தொழில் ஒழிவதைப்போல், நண்ணும் - பொருந்தி
யிருக்கின்ற, இந்தியம் - பஞ்சேந்த்ரிய வ்யாபாரங்களும், கரணங்கள் - அந்தக்கரண
வ்யாபாரங்களும், அடங்கி - ஒழிந்து, சான்றவன் - சூரியன், விழின் - அஸ்தமிப்பா
ஞயின், கதிர்களும் - கிரணங்களும், அவன் பின் - அவன் பிறகே, சாரும் - செல்லு
கின்ற, தன்மை போல் - குணம் போல், சங்கமர் - ஜங்கமமூர்த்திகளுடைய, அடிக்
கீழ்-ஸ்ரீபாதங்களில், ஊன்று - பதிந்திருக்கின்ற, சிந்தையினுடன் - மனமும், அறிவு-
அறிவும், அனைத்தும் - முழுதும், ஒடுங்கி - ஒழிந்து, உள் - அந்தரங்கத்திலும்,
புறம்பு - பஹிரங்கத்திலும், ஒன்றையும் - ஒரு வ்யாபாரத்தையும், அறியாது - காணு
மல், ஆன்ற - விகசித்த, எட்டு இதழ் - அஷ்ட தளங்களையுடைய, இதய அம்புயமே-
ஹ்ருதய கமலமே, அவர் - அந்த ஜங்கமமூர்த்திகளது, பத அம்புயம் ஆக - ஸ்ரீபாத
கமலமாக, அங்கு-அவ்விடத்தில், அழுந்தி-பதிந்து, எ-று.

(போ-ரை.) தொங்கின ஊசற்கயிறு தெறித்துப்போய் அசையுந்தொழில் ஒழி
வதைப்போல் பொருந்தியிருக்கின்ற பஞ்சேந்த்ரிய வ்யாபாரங்களும், அந்தக்கரண
வ்யாபாரங்களு மொழிந்து, சூரியன் அஸ்தமிப்பாஞயின் கிரணங்களும் அவன்பிறகே
செல்லுகின்ற குணம் போல் ஜங்கமமூர்த்திகளுடைய ஸ்ரீபாதங்களிற் பதிந்திருக்
கின்ற மனமும், அறிவும் முழுதும் ஒழிந்து, அந்தரங்கத்திலும், பஹிரங்கத்திலும்
ஒரு வ்யாபாரத்தையும் காணுமல், விகசித்த அஷ்ட தளங்களையுடைய ஹ்ருதய கமல
மே அந்த ஜங்கமமூர்த்திகளுடைய ஸ்ரீ பாதகமலமாக அவ்விடத்திற் பதிந்து.

(வி-ரை.) நான்ற என்பதற்குப் பகுதி நால். அகன்ற என்பது ஆன்ற என்பதன்
மரூஉ. அம்புயம் - அம்புஜம் என்னும் வடசொற்றிரிபு; நீரிற் பிறப்பதென்பது
பொருள்; அம்பு-நீர்; ஜம்-பிறப்பது. சிந்தையினுடன் என்பதில் இன்-சாரியை. (௫)

மண்டொ ணுதவற் புதவனு பவத்து
மன்னி மேனிமிர்ந் திருந்துபே ரின்பங்
கொண்ட ருட்சிவ யோகமுத் திரையுட்
குலவு நந்திகள் குறிப்பினை யறிவாற்
கண்டு மெய்ச்சென்ன வசவேசர் பணிந்து
கழறுவார் சற்றுங் காண்பரி தாய்நீர்
மொண்ட மிழ்ந்தநற் கடமெனச் சோதி
மூழ்கி யேபுற முன்னலாச் சுகமோ.

(ப-ரை.) மண்டு ஒண்ணுத-(யாவராலும்) அடைய முடியாத, அற்புதம்-ஆச்சரிய
மாகிய, அனுபவத்து-சிவாநுபோகத்தில், மன்னி-நிலைத்து, மேல் நிமிர்ந்து இருந்து-
இறுமாந்திருந்து; பேர் இன்பம் கொண்டு - பேரானந்தமடைந்து, அருள்-க்ருபா ஸ்வ
ரூபமாகிய, சிவயோகமுத்திரையுள் - சிவயோக சமாதியில், குலவும் - விளங்குகின்ற,
நந்திகள்-வசவண்ணருடைய, குறிப்பினை - நிலைமையை, அறிவால் - ஜ்ஞாந த்ருஷ்டி
யினுல், கண்டு - தெரிந்து, மெய் - உண்மையராகிய, சென்னவசவேசர் - சென்னவச
வண்ணர், பணிந்து - வணங்கி, கழறுவார் - துதிப்பாராயினர் (எவ்வாறெனின்); சற்
றும்-கொஞ்சமேனும், காண்பு அரிதாய்-காணமுடியாதாகி, நீர்-ஜலத்தை, மொண்டு-
முகந்து, அமிழ்ந்த - மூழ்கிப்போன, நல் - நல்ல, கடம் என்ன-குடம்போல, சோதி-
ஜ்யோதிர்லிங்கத்தில், மூழ்கி - கலந்து, புறம் உன்னலா - வெளிநாட்டமில்லாத, சுக
மோ - சிவாநந்தமோ, எ - று.

(போ - ரை.) யாவராலுமடைய முடியாத ஆச்சரியமாகிய சிவாநுபோகத்தில்
நிலைத்து, இறுமாந்திருந்து, பேரானந்தமடைந்து; க்ருபா ஸ்வரூபமாகிய சிவயோக
சமாதியில் விளங்குகின்ற வசவண்ணருடைய நிலைமையை ஜ்ஞாந த்ருஷ்டியினுல்

இதனால் ஸ்கந்தன் நந்திதேவர்க்கு தர்மஸ்தாபனத்தில் எக்காலத்திலும் சகாயமாயுள்ளவனெனல் பெறப்படும். ஈண்டு வசவண்ணராகிய நந்திதேவரிடத்தில் சகாயமுள்ளவனாகி அவர்க்குச் சென்னன் (சகாயகன்) ஆனதனால், அந்த ஷண்முகனே சென்னவசவரென்று கூறுதல் உசிதமாம். தாம் அருளிய ஷட் ஸ்தல வசனங்களினால் அந்தச் சென்னவசவண்ணரே ஷண்முகனென்று நன்கு விளங்கும். ஷட்ஸ்தல பராஸ்த்ரங்களைப் பாத்துகாத்தலினால் குகனென்றும், ஷட் ஸ்தலங்களினால் ஒளியுள்ளவனாதலால் குமாரனென்றும் கூறுவர். எடுத்திருக்கிற அவதார கார்யத்தை யநுசரித்து சென்னவசவண்ணரென்னும் திருநாமத்தை யொத்துக்கொள்ளல் வேண்டும்.

பாச நித்திரை நீங்குபே ரின்பப்
பரம நித்திரை நந்தியென் னாசான்
வீச மத்திரை யற்றதோர் கடற்கால்
விரவி டாத விளக்கென வசங்கா
தாசை மெத்துமிந் தியமெலா மகன்றே
யடரு மேகங்க ளற்றவிண் போன்று
நேச நற்சிவா னந்தயிக் கியத்து
நிறைசு கத்தினாற் றனைமறந் தனனே.

(ப-ரை.) பாசம் - மாயாசம்பந்தமுள்ள உடம்பின் குற்றமாகிய, நித்திரை - தூக்கத்தினின்றும், நீங்கு - விழித்து, பேர் இன்பம் - பேரானந்தமாகிய, பரம நித்திரை - சிவயோக நித்திரையையுடைய, நந்தி - வசவண்ணராகிய, என் - எனது, ஆசான் - ஜ்ஞானாசார்யன், வீசம் - எறிகின்ற, அ - அந்த, திரை - அலை, அற்றது - இல்லாததாகிய, ஓர் - ஒப்பற்ற, கடல் என்ன - கடல் போலவும், கால் - காற்று, விரவிடாத - கலவாத, விளக்கு என்ன - தீபம் போலவும், அசங்காது - அசையாமல், ஆசை - ஆசையானது, மெத்தும் - அதிகரிக்கின்ற, இந்தியம் - இந்த்ரியங்கள், எல்லாம் - முற்றும், அகன்று - ஒழிந்து, அடரும் - நெருங்கியிருக்கின்ற, மேகங்கள் - மேகக்கூட்டங்கள், அற்ற - இல்லாத, விண் - ஆகாயம், போன்று - போலவும், நேசம் - விரும்புதற்குரிய, நல் ஆனந்தம் - பேரானந்தத்தையுடைய, சிவ அயிக்கியத்து - சிவைக்யத்தில் (உண்டாகிய), நிறை சுகத்தினால் - பரிபூரணானந்தத்தினால், தன்னை மறந்தனனே - பரவசமானானே, எ-று.

(போ-ரை.) மாயா சம்பந்தமுள்ள உடம்பின் குற்றமாகிய தூக்கத்தினின்றும் விழித்து, பேரானந்தமாகிய சிவயோக நித்திரையையுடைய வசவண்ணராகிய எனது ஜ்ஞானாசார்யன் எறிகின்ற அந்த அலையில்லாததாகிய ஒப்பற்ற கடல்போலவும், காற்று கலவாத தீபம் போலவும் அசையாமல், ஆசையானது அதிகரிக்கின்ற இந்த்ரியங்கள் முற்றும் ஒழிந்து, நெருங்கியிருக்கின்ற மேகக்கூட்டங்கள் இல்லாத ஆகாயம் போலவும், விரும்புதற்குரிய பேரானந்தத்தையுடைய சிவைக்யத்தினாலுண்டாகிய பரிபூரணானந்தத்தினால் பரவசமானானே?

(வி-ரை.) திரை, கால்-வினைமுதல் விகுதி புணர்ந்து கெட்ட பெயர்கள். அயிக்கியம்-ஐக்யம் என்னும் வடசொற்றிரிபு; ஒன்றுதல் என்பது பொருள். திரையற்ற கடல் - நிஸ்தரங்க ஸமுத்ரம். கால் விரவிடாத விளக்கு நிவாததீபம். மேகங்களற்ற விண் - பராத்கால ஆகாசம்.

தன்ன லர்க்கர மத்தன்மே னியின்மேற்
றாக்கி னொந்திடு மென்றுதன் னிதய
மன்னு மம்புயச் சுகாதனத் திருத்தி
வாயு வெய்யில்சேர் மஞ்சன மாட்டி
னுன்ன ருந்திரு மேனி கன்றிடுமென்
றுண்மை நீரினைச் சொரிந்துமண் ணுதிக்கு
மின்ன மாமலர் கடினமென் றண்டத்
திலங்கு பங்கய விதழ்தரிப் பதுவோ.

(ப-ரை.) தன் - தனது, அலர்-தாமரைமலர் போன்ற, கரம்-கரபீடமானது, அத்தன்-சிவபெருமானது, மேனியின்-திருமேனியின், மேல்-மீது, தாக்கின்-படுமாயின், நொந்திடும்-வருந்தும், என்று-என்று நினைத்து, தன்-தனது, இதயம்-ஹ்ருதயத்தில், மன்னும்-நிலைபெற்றிருக்கின்ற, அம்புயம் - கமலமாகிய, சுகாதனத்து-சுகாஸநத்தில், இருத்தி - எழுந்தருளச்செய்து, வாயு-காற்றும், வெய்யில்-வெய்யிலும், சேர் - பட்ட, மஞ்சனம்-ஜலத்தை, ஆட்டின்-அபிஷேகம் பண்ணுவோமாயின், உன் அரு-நினைத்தற்கரிய, திருமேனி—, கன்றிடும்-கன்றிப்போகும், என்று-என்று நினைத்து, உண்மை - ஸத்யமாகிய, நீரினை-ஜலத்தை, சொரிந்து - அபிஷேகம்பண்ணி, மண்-பூமியில், உதிக்கும் - முளைக்கின்ற, இன்ன-இந்த, மா-அழகிய, மலர்-புஷ்பங்கள், கடினம் - முரடானவை, என்று-என்று நினைத்து, அண்டத்து-சிதாகாமசத்தில், இலங்கு-விளங்குகின்ற, பங்கய இதழ்-கமலதளங்களை, தரிப்பதுவோ - அணிவதோ, எ-று.

(பொ-ரை.) தனது தாமரைமலர் போன்ற கரபீடமானது சிவபெருமானது திருமேனியின் மீது படுமாயின் வருந்துமென்று நினைத்து, தனது ஹ்ருதயத்தில் நிலைபெற்றிருக்கின்ற கமலமாகிய சுகாஸநத்தில் எழுந்தருளச்செய்து, காற்றும் வெய்யிலும் பட்ட ஜலத்தை யபிஷேகம் பண்ணுவோமாயின் நினைத்தற்கரிய திருமேனி கன்றிப்போகுமென்று நினைத்து, ஸத்யமாகிய ஜலத்தை யபிஷேகம்பண்ணி, பூமியில் முளைக்கின்ற இந்த அழகிய புஷ்பங்கள் முரடானவையென்று நினைத்து, சிதாகாமசத்தில் விளங்குகின்ற கமலதளங்களை யணிவதோ?

(வி - ரை.) சிதாகாசத்திலுள்ள கமலம் நூறுயிரம் தளங்களையுடையது. அண்டம் - ஆகாயம். (அ)

காது வன்னியிற் றூபதூ மத்தாற்
கறுக்கு மெய்யெனக் கருதிமெய்ஞ் ஞானத்
தீதி லங்கியிற் பொறையெனுந் தூபஞ்
சேர்த்தளித் திந்தத் தீபங்க ளெல்லா
மாதி மெய்க்கன லென்றுதன் னறிவா
மரிய சோதியை யெடுத்திந்த வமுதங்
கோதெ னக்கொடு சாரவொண் பத்திக்
குணத்தை நல்லமு தாய்க்கொடுப் பதுவோ.

(ப-ரை.) காது - கொல்லுகின்ற, வன்னியில்-நெருப்பிலிட்ட, தூபதூமத்தால்-தூபப் புகையினால், மெய்-திருமேனி, கறுக்கும் - கறுத்துப்போகும், என்ன - என்று, கருதி-நினைத்து, மெய்ஞ்ஞானம்-மெய்ஞ்ஞானமாகிய, தீது இல்-குற்றமில்லாத, அங்கியில் - நெருப்பில், பொறை - உபசாந்தம், எனும்-என்கின்ற, தூபம் - தூபத்தை, சேர்த்து - இட்டு, அளித்து - கொடுத்து, இந்த—, தீபங்கள்—, எல்லாம்-முழுதும், ஆதி - சிவபெருமானது, மெய்க்கு - திருமேனிக்கு, அனல்-நெருப்பு, என்று - என்று நினைத்து, தன்-தனது, அறிவு ஆம் - அறிவாகிய, அரிய-சிறந்த, சோதியை-தீபத்தை, எடுத்து-கொடுத்து, இந்த—, அமுதம்-திருவமுதானது, கோது-சக்கை, என்ன-என்று,

கொண்டு - நினைத்து, சாரம் - சுவையுள்ளதும், ஒள் - மேன்மையானதுமாகிய, பத்திக் குணத்தை - பத்திவிசேஷத்தை, நல் - நல்ல, அமுது ஆய் - திருவமுதாக, கொடுப்பதுவோ - படைப்பதோ, எ-று.

(பொ-ரை.) கொல்லுகின்ற நெருப்பிலிட்ட தூபப் புகையினால் திருமேனி கறுத்துப்போகுமென்று நினைத்து, மெய்ஞ்ஞானமாகிய குற்றமில்லாத நெருப்பில் உபசாந்தமென்கின்ற தூபத்தை யிட்டுக் கொடுத்து, இந்தத் தீபங்கள் முழுதும் சிவபெருமானது திருமேனிக்கு நெருப்பென்று நினைத்து, தனது அறிவாகிய சிறந்த தீபத்தைக் கொடுத்து, இந்தத் திருவமுதானது சக்கையென்று நினைத்து, சுவையுள்ளதும் மேன்மையானதுமாகிய பத்திவிசேஷத்தை நல்ல திருவமுதாகப் படைப்பதோ?

திட்டி கொண்டுதான் விரும்பியே நோக்கின்
செய்ய மேனிக்கு நன்மையன் றென்று
நட்ட பாவனை கொண்டுபார்ப் பதுவோ
நற்கை தீண்டிய சாரங்க ளதனாற்
றட்டி னாலுறத் திடுமென நினைந்து
சத்தெ னுங்கை யாற்றைவருந் தரமோ
விட்ட மெய்புள கித்திடில் வேர்வா
மென்று ளேபுள கித்திடு மியல்போ.

(ப-ரை.) திட்டிகொண்டு - கண்களால், தான் —, விரும்பி - அன்புடன், நோக்கின் - பார்த்தால், செய்ய - அழகிய, மேனிக்கு - திருமேனிக்கு, நன்மை யன்று - தோஷம், என்று - என்று நினைத்து, நட்ட - பழகின, பாவனைகொண்டு - தியானத்தினால், பார்ப்பதுவோ - நோக்குவதோ, நல் - மேன்மையாகிய, கைதீண்டும் - கைதொட்டுச்செய்கின்ற, உபசாரங்கள் அதனால் - உபசாரணைகளுடன், தட்டினால் - தடவினால், உறுத்திடும் - ஒற்றும், என்ன - என்று, நினைந்து - நினைத்து, சத்து - ஸாத்வீக குணம், என்னும் - என்கின்ற, கையால் - கையினால், தைவரும் தரமோ - தடவுவதோ, விட்ட - ஒழித்த, மெய் - உடம்பானது, புளகித்திடில் - மயிர்க்குச்செறிந்தால், வேர்வு ஆம் - வியர்வை யுண்டாகும், என்று - என்று நினைத்து, உள்ளே - மனத்தில், புளகித்திடும் இயல்போ - மகிழ்வதோ, எ-று.

(பொ-ரை.) கண்களால் தான் அன்புடன் பார்த்தால் திருமேனிக்கு தோஷமென்று நினைத்து, பழகின தியானத்தினால் நோக்குவதோ? மேன்மையாகிய கைதொட்டுச்செய்கின்ற உபசாரணைகளுடன் தடவினால் ஒற்றுமென்று நினைத்து ஸாத்வீக குணமென்கின்ற கையினால் தடவுவதோ? ஒழித்த உடம்பானது மயிர்க்குச் செறிந்தால் வியர்வை யுண்டாகுமென்று நினைத்து மனத்தில் மகிழ்வதோ?

(வி-ரை.) திட்டி - த்ருஷ்டியென்னும் வடசொற்றிரிபு. (௧௦)

கிறியை யாலுட லிந்திய மனந்தற்
கிளர்வ னைத்தையுங் கிரமத்தி லொழித்தே
குறிகி யத்தனே டொன்றுமெய்ச் சமாதி
கூடி நற்சிவ யோகமுத் திரையோ
வறியை யாதிபார்க் களித்தறி விக்கு
மறிவெ னும்பிர சாதமார் நிலையோ
மறவி லாதவவ் வறிவினுற் றுடல
மனமு றாந்தொழின் மறந்திருப் பதுவோ.

(ப-ரை.) கிறியையால் - ஸத்கர்மங்களினால், உடல்-உடம்பும், இந்தியம்-இந்திரியங்களும், மனம்-மனமும், தற்கிளர்வு-தற்கிளர்ச்சியும் (ஆகிய), அனைத்தையும்-எல்லாவற்றையும், கிரமத்தில் - ஒழுங்காக, ஒழித்து-விட்டு, குறுகி - ஒடுங்கி, அத்தனோடு-சிவபெருமானோடு, ஒன்றும் - ஐக்யமாகின்ற, மெய் - உண்மையாகிய, சமாதி கூடும்-சமாதி கூடுகின்ற, நல் - சிறந்த, சிவ யோகமுத்திரையோ - சிவயோக நிலையோ, அறிவை - ஆத்மாவை, அதியார்க்கு-சிவபெருமானுக்கு, அளித்து - படைத்து, அறிவிக்கும்-விளங்குகின்ற, அறிவு-ஸுஜ்ஞாநம், என்னும்-என்கின்ற, பிரசாதம்-ப்ரஸாதத்தை, ஆர்-உண்கின்ற, நிலையோ-தன்மையோ, மறு இல்லாத-குற்றமில்லாத, அ-அந்த, அறிவில்-ஸுஜ்ஞாநத்தில், உற்ற-முழுகி, உடலம்-உடம்பும், மனம்-மனமும், உறும்-அடைந்திருக்கின்ற, தொழில்-கார்யங்களை, மறந்து இருப்பதுவோ-மறந்திருக்கின்ற தன்மையோ, எ-று.

(பொ-ரை.) ஸத்கர்மங்களினால் உடம்பும், இந்த்ரியங்களும், மனமும், தற்கிளர்ச்சியுமாகிய எல்லாவற்றையும் ஒழுங்காக விட்டொடுங்கி, சிவபெருமானோடு ஐக்யமாகின்ற உண்மையாகிய சமாதிகூடுகின்ற சிறந்த சிவயோக நிலையோ? ஆத்மாவைச் சிவபெருமானுக்குப் படைத்து விளங்குகின்ற ஸுஜ்ஞாநமென்கின்ற ப்ரஸாதத்தை யுண்கின்ற தன்மையோ? குற்றமில்லாத அந்த ஸுஜ்ஞாநத்தில் முழுகி, உடம்பும், மனமும் அடைந்திருக்கின்ற கார்யங்களை மறந்திருக்கின்ற தன்மையோ?,

(வி-ரை.) கிரியை என்பது கிறியை என்றாயிற்று எதுகை யின்பம் நோக்கி. தற்கிளர்ச்சி-தனக்குத்தானே விளங்குதல். உடல், இந்தியம், மனம்-மநோவாக்காயமெனினுமாம். மேற்போந்த எட்டுச் செய்யுட்களும் அஷ்டாங்க நிர்க்குணாஷ்டாங்க யோகங்களையும் நுதலிற்று. இந்த்ரிய நிக்ரஹஞ்செய்வதே இயமமும், எல்லாவற்றையும் ப்ராணலிங்கமென்றறிவதே நியமமும், யோக நித்திரைசெய்வதே ஆஸநமும், ஸ்வாஸத்தைப் பையப் பையத் தடுப்பதே ப்ராணாயாமமும், இந்த்ரிய வ்யாபாரங்களை யடக்கி யந்தர்முகப்படுத்துவதே ப்ரத்யாஹாரமும், ஸ்வப்பனத்திற் கண்டது போல லிங்கஜங்கமர்களைத் தரிசிப்பதே த்யாநமும், இவற்றையெல்லாம் இடையறாமல் தரித்திருப்பதே தாரணையும், த்ருடமான பக்தியினால் ப்ராப்தமான சிவயோகநித்திரையின் சித்தைகாக்ரமே சமாதியும், ஆதாராதி ஷட்சக்ரங்களிலுள்ள ஆசாராதி ஷட்லிங்கங்களைத் தரிசிப்பதே ப்ரஹ்மாநந்தமுமாயுள்ளது. (கக)

என்று தங்குரு நந்திக டிருமு
  னிறைஞ்சி யேசென்ன வசவேச ரேத்தி
நின்று நெஞ்சமு முடலமு முருகி
  நேய மெய்யராய் நீர்விழி ததும்பித்
துன்று மேனியி லுரோமங்கள் சிலிர்த்துத்
  தோன்ற லாப்பெரும் புளகமேற் றேன்றி
யொன்றி டும்பர வசத்தரா யைய
  முற்ற சித்தரா யுலாவுமக் காலை.

(ப-ரை.) என்று - என்று புகழ்ந்து, சென்னவசவேசர் - சென்னவசவண்ணர், தம் - தமது, குரு - ஜ்ஞாநாசார்யராகிய, நந்திகள் - வசவண்ணரது, திருமுன்-ஸந்நிதானத்தில், இறைஞ்சி-வணங்கி, எத்தி - துதித்து, நின்று—, நெஞ்சமும் - மனமும், உடலமும் - உடம்பும், உருகி-இளகி, நேயம் மெய்யராய் - பக்திஸ்வரூபிகளாய், நீர்—, விழி - கண்களில், ததும்பி-நிறைந்து, துன்றும் - ஒழுகிக் கிடக்கின்ற, மேனியில் -

உடம்பில், உரோமங்கள் சிலிர்த்து-மயிர்க்குச்செறிந்து, தோன்றலா - (எப்போதும்) உண்டாகாத, பெரும் புளகம் - பூரிப்பு, மேல் - வெளியில், தோன்றி - காணப்பட்டு, ஒன்றிடும் - பொருந்தியிருக்கின்ற, பரவசத்தர் ஆய் - மெய் மறந்தவராயும், ஐயம் உற்ற- சந்தேகமடைந்த, சித்தர் ஆய் - மனத்தையுடையவராயும், உலாவும் - இங்கு மங்கும் உலாவிக்கொண்டிருக்கின்ற, அ-அந்த, காலே - காலத்தில், எ - று.

(பொ-ரை.) என்று புகழ்ந்து, சென்னவசவண்ணர் தமது ஜ்ஞாநாசார்யராகிய வசவண்ணரது ஸந்நிதானத்தில் வணங்கித் துதித்து நின்று, மனமும், உடம்புமிளகி, பக்தி ஸ்வரூபியாய், நீர் கண்களில் நிறைந்தொழுகிக் கிடக்கின்ற உடம்பில் மயிர்க்குச் செறிந்து, எப்போதும் உண்டாகாத பூரிப்பு வெளியிற் காணப்பட்டு, பொருந்தி யிருக்கின்ற மெய் மறந்தவராயும், சந்தேகமடைந்த மனத்தை யுடையவராயும் இங்குமங்கும் உலாவிக்கொண்டிருக்கின்ற அந்தக் காலத்தில். (கஉ)

வேறு.

இந்தநெறி கலியாணத் திருக்கும் பத்த
ரிருமைசெறி தவத்தோர்க ளெல்லாங் கேளா
வந்தணைந்து வசவேசர் பூசைக் காலே
வந்தசிவ யோகநிலே மகிமை கண்டு
தந்தமிலற் புதமெய்தி யிந்தத் தன்மை
சார்ந்தகா ரணமதனைத் தம்முளாய்வார்
முந்தியநட் பினரறிஞர் துவார பாலர்
முதலோரை யழைக்கவவர் முடுகி வந்தார்.

(ப - ரை.) இந்த நெறி-இந்தச் செய்தியை, கலியாணத்து - கல்யாணபட்டினத்தில், இருக்கும் - வசிக்கின்ற, பத்தர் - பக்தர்களும், இருமை செறி - மேன்மைபொருந்திய, தவத்தோர்கள் - ஜங்கமமூர்த்திகளும் (ஆகிய), எல்லாம் - அனைவரும், கேளா - கேட்டு, வந்து - போய், அணைந்து - சேர்ந்து, வசவேசர் - வசவண்ணர், பூசைக்காலே-லிங்கபூஜைசெய்கின்ற காலத்தில், வந்த - உண்டாகிய, சிவயோகநிலே- சிவயோகஸமாதி நிலையின், மகிமை-பெருமையை, கண்டு - பார்த்து, தம் தமில்- தங்கள் தங்களுக்குள்ளே, அற்புதம்-ஆச்சரியம், எய்தி-அடைந்து, இந்த—, தன்மை- நிலையை, சார்ந்த - அடைந்த, காரணம் அதனை - காரணத்தை, தம்முள் - தங்களுக்குள்ளே, ஆய்வார் - விசாரிக்கத்தொடங்கினார்கள், முந்திய-முதன்மையாகிய, நட்பினர் - சிநேகிதர்களாகிய, அறிஞர் - ஜங்கமமூர்த்திகள், துவாரபாலர் - வாயிற்காப்பவர்கள், முதலோரை - முதலானவர்களை, அழைக்க - அழைப்பித்தலும், முடுகி - (அவர்கள்) விரைவாக, வந்தார் - வந்து சேர்ந்தார்கள், எ - று.

(பொ - ரை.) இந்தச் செய்தியைக் கல்யாணபட்டினத்தில் வசிக்கின்ற பக்தர்களும், மேன்மைபொருந்திய ஜங்கமமூர்த்திகளுமாகிய அனைவரும் கேட்டுப் போய்ச் சென்று வசவண்ணர் லிங்கபூஜைசெய்கின்ற காலத்திலுண்டாகிய சிவயோகஸமாதி நிலையின் பெருமையைப் பார்த்து, தங்கள் தங்களுக்குள்ளே ஆச்சரியமடைந்து, இந்த நிலையை யடைந்த காரணத்தைத் தங்களுக்குள்ளே விசாரிக்கத்தொடங்கினார்கள்; முதன்மையாகிய சிநேகிதராகிய ஜங்கமமூர்த்திகள் வாயிற்காப்பவர்கள் முதலானவர்களை யழைப்பித்தலும், அவர்கள் விரைவாக வந்து சேர்ந்தார்கள். (கங)

கலி விருத்தம்.

இங்குவச வேசர்சிவ பூசனையி லின்பாற்
பொங்கமகிழ் போதென பொருந்துசெய லும்பாற்
றங்கியவர் போனவர் சடக்கென வறிந்தே
யெங்கண்முன மிங்ஙன மியம்பிடுமி னென்ன.

(ப - ரை) இங்கு - இவ்விடத்தில், வசவேசர் - வசவண்ணர், சிவபூசனையில் - சிவபூஜைசெய்கையில், இன்பால்-சிவாநந்தத்தினால், பொங்க-மிகவும், மகிழ்போது- சந்தோஷமடைகின்ற காலத்தில், பொருந்து - நடந்த, செயல் - செய்தி, என்ன - யாது, நும்பால் - உங்களிடத்தில், தங்கியவர் போனவர் - வந்திருந்து போனவர்களை, சடக்கு என்ன-விரைவாக, அறிந்து - தெரிந்து, எங்கள் முன்னம் - எங்களிடத்தில், இங்ஙனம் - இவ்விடம், இயம்பிடுமின் - சொல்லுங்கள், என்ன - என்று கேட்டலும், எ - று.

(பொ - ரை.) இவ்விடத்தில் வசவண்ணர் சிவபூஜைசெய்கையில் சிவாநந்தத்தினால் மிகவும் சந்தோஷமடைகின்ற காலத்தில், நடந்த செய்தி யாது? உங்களிடத்தில் வந்திருந்து போனவர்களை விரைவாகத் தெரிந்து எங்களிடத்தில் இவ்விடம் சொல்லுங்களென்று கேட்டலும். (கச)

மற்றவர்க டம்மி லுயர் வாயி லுறு கொல்ல
ருற்றசெய்தி யொன்றுள துரைக்குது மதென்னு
நற்றவரொ ருத்தரெமை நண்ணியெதிர் நின்றார்
வெற்றிவச வேசருறு வேலையென வென்றார்.

(ப-ரை.) அவர்கள் தம்மில்-அவர்களில், உயர்-சிறந்தவரும், வாயில் உறு கொல்லர்-(புத்திசாலியும்)ஆகிய ஒரு த்வாரபாலகர், உற்ற-நடந்ததாகிய, செய்தி ஒன்று-ஒரு சமாசாரம், உள்ளது - உண்டு, அது-அதை, உரைக்குதும்-சொல்லுவோம், என்னு - என்று, நல்-மேன்மையாகிய, தவர் ஒருத்தர்-ஒரு ஜங்கமமூர்த்திகள், எம்மை நண்ணி- எங்களிடத்தில் வந்து, எதிர் - எதிரே, நின்றார் - நின்று, வெற்றி - ஜயத்தைபுடைய, வசவேசர் - வசவண்ணர், உறு-செய்கின்ற, வேலை - கார்யம், என்ன-யாது, என்றார்- என்று கேட்டார், எ - று.

(பொ-ரை.) அவர்களிற் சிறந்தவரும் புத்திசாலியுமாகிய ஒரு த்வாரபாலகர் நடந்ததாகிய ஒரு சமாசாரம் உண்டு; அதைச் சொல்லுவோமென்று, மேன்மையாகிய ஒரு ஜங்கமமூர்த்திகள் எங்களிடத்தில் வந்து, எதிரே நின்று, ஜயத்தையுடைய வசவண்ணர் செய்கின்ற கார்யம் யாது? என்று கேட்டார்.

(வி-ரை.) நின்றார் - முற்றெச்சம். மற்று-அசை. (கரு)

நித்தசிவ பூசனைசெய் நிட்டையி லடைந்தே
யொத்தசுக மேவியயர் வுற்றுளுறை கின்றார்
மெய்த்தவ வெனப்பெரியர் மீளவு நடந்தா
ரித்தகைமை யாமறிவ தென்றெதி ரிசைத்தார்.

(ப-ரை.) மெய்த்தவ - ஜங்கமமூர்த்திகளே, நித்தம் - அழிவில்லாத, சிவபூசனை செய் நிட்டையில் - சிவயோகத்தில், அடைந்து - நிலைத்து, ஒத்த - தன்னைத் தான் நிகர்த்த, சுகம் - பேரின்பத்தை, மேவி - அடைந்து, அயர்வு உற்று - மெய் மறந்து, உள் - உள்ளே, உறைகின்றார்-இருக்கின்றார், என்ன - என்று சொல்லுதலும், பெரியர் - ஜங்கமமூர்த்திகள், மீளவும் - (ஒன்றும்பேசாது) திரும்பி, நடந்தார் - போய்விட்டார், இத்தகைமை - இது, யாம் - நாம், அறிவது-அறிந்த செய்தி, என்று—, எதிர் இசைத்தார் - பதில் சொன்னார், எ - று.

(பொ-ரை.) ஜங்கமமூர்த்திகளே! அழிவில்லாத சிவயோகத்தில் நிலைத்து, தனக்குத் தானே நிகர்த்த பேரின்பத்தையடைந்து, மெய்மறந்து, உள்ளேயிருக்கின்றாரென்று சொல்லுதலும், ஜங்கமமூர்த்திகள் ஒன்றும் பேசாது திரும்பிப் போய் விட்டார்; இது நாம் அறிந்த செய்தி யென்று சொன்னார். (கசு)

துய்யவுரை யங்கணவர் சொன்னளவி னல்லோ
ரையவச வேசரவ சத்தறை திறந்தே
பையவவர் சொல்விரத பான்மையறி வோநாஞ்
செய்வதிது வென்னவெதிர் சென்னவச வேசர்.

(ப-ரை.) அங்கண் - அவ்விடத்தில், அவர்—, துய்ய - பரிசுத்தமாகிய, உரை- சொல்லை, சொன்ன அளவில் - சொன்ன மாத்திரத்தில், நல்லோர்-ஜங்கமமூர்த்திகள், ஐய-ஐயனே, வசவேசர்-வசவண்ணர், அவசத்து - சிவயோகத்திலிருக்கின்ற, அறை- பூஜாக்ருஹத்தை, பைய-மெல்ல, திறந்து—, அவர்—, சொல்-சொல்லுகின்ற, விரதம்- சிவயோகத்தின், பான்மை-பெருமை (இத்தன்மைத்தென்பதை), நாம்-நாங்கள், அறிவோம் - தெரிந்துகொள்வோம், இது-இதுவே, செய்வது - செய்யத்தக்க காரியம், என்ன-என்று சொல்லுதலும், எதிர்-முன்னே (நிற்கின்ற), சென்னவசவேசர்-சென்ன வசவண்ணர், எ-று.

(பொ-ரை.) அவ்விடத்தில் அவர் பரிசுத்தமாகிய சொல்லைச் சொன்ன மாத்திரத்தில், ஜங்கமமூர்த்திகள், ஐயனே! சிவயோகத்திலிருக்கின்ற பூஜாக்ருஹத்தை மெல்லத் திறந்து அவர் சொல்லுகின்ற சிவயோகத்தின் பெருமை யித்தன்மைத்தென்பதை நாங்கள் தெரிந்துகொள்வோம்; இதுவே செய்யத்தக்க காரியமென்று சொல்லுதலும், முன்னே நிற்கின்ற சென்னவசவண்ணர். (௧௭)

இந்தமுறை மெய்யடிய னென்றறிவ னென்னு
வந்தனைசெய் தவ்வுரை வகுத்துமொழி கின்றா
ருந்தியவி லிங்கவுயி ரோதுகுரு லிங்கம்
பந்தமறு பத்தர்கள் பரிக்குமுயிர் பன்னின்.

(ப-ரை.) இந்த—, முறை-நிலைமையினால், மெய் - (வசவண்ணர்) உண்மையாகிய, அடியன் என்று-சிவசரணனென்று, அறிவன்-அறிவேன், என்னு-என்று, வந்தனைசெய்து-வணங்கி, அ-அந்த, உரை-பெருமையை, வகுத்து-விளக்கி, மொழிகின்றார்-சொல்லத்தொடங்கினார் (எவ்வாறெனின்), உந்திய - மேன்மையாகிய, லிங்கம்- லிங்கத்திற்கு, உயிர்-உயிரானது, ஓது-சொல்லப்பட்ட, குரு - குருவேயாகும், லிங்கம்- லிங்கமானது, பந்தம்-ஆசாபாசத்தை, அறு - ஒழித்தற்குரிய, பத்தர்கள்-பக்தர்கள், பரிக்கும்-தாங்கியிருக்கின்ற, உயிர்-உயிரேயாகும், பன்னின்-சொல்லுமிடத்து, எ-று.

(பொ-ரை.) இந்த நிலைமையினால் வசவண்ணர் உண்மையாகிய சிவசரணனென்று அறிவேனென்று வணங்கி, அந்தப் பெருமையை விளக்கிச் சொல்லத் தொடங்கினார்; எவ்வாறெனின்:—மேன்மையாகிய லிங்கத்திற்கு உயிரானது சொல்லப்பட்ட குருவே யாகும்; லிங்கமானது ஆசாபாசத்தை யொழித்தற்குரிய பக்தர்கள் தாங்கியிருக்கின்ற உயிரேயாகும்; சொல்லுமிடத்து. (௧௮)

அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பொங்கரு நண்பா லென்னைப் போதிக்கு நந்திக் கென்றுஞ்
சங்கம முயிரி தற்குச் சங்கமே சரனே சான்று
துங்கநும் பாத தீர்த்தந் தூயசே டத்து நேயந்
தங்கிய பெரியோர் கிட்டைத் தன்மைநீர் வல்லி ரென்றார்.

(ப-ரை.) பொங்கு - மிகவும், அரு - சிறந்த, நண்பால் - அன்புடன், என்னை- எனக்கு, போதிக்கும் - ஜ்ஞாநோபதேசஞ்செய்கின்ற, நந்திக்கு - வசவண்ணர்க்கு, என்றும் - எப்போதும், உயிர்-உயிரானது, ஜங்கமம் - ஜங்கமமூர்த்திகளே யாவார், இதற்கு - இந்த வசனத்திற்கு, சங்கமேசரனே - கூடலஸங்கமேஶ்வரனே, சான்று-

ஸாக்ஷியாவான், துங்கம்-பரிசுத்தமாகிய, நும்-உங்களுடைய, பாததீர்த்தம்-பாதோதகத்திலும், தூய - பரிசுத்தமாகிய, சேடத்தும் -(உங்களுடைய) சேஷ ப்ரஸாதத்திலும், சேயம் தங்கிய - விருப்பமுள்ள, பெரியோர் - ஜ்ஞாநிகளுடைய, நிட்டை - சிவயோகத்தின், தன்மை - பெருமையை, நீர்-நீங்கள், வல்லீர் - அறிய வல்லவர்கள், என்றார்-என்று சொன்னார், எ - று.

(பொ-ரை.) மிகவும் சிறந்த அன்புடன் எனக்கு ஜ்ஞாநோபதேசஞ்செய்கின்ற வசவண்ணர்க்கு எப்போதும் உயிரானது ஜங்கமமூர்த்திகளே யாவார்; இந்த வசனத்திற்குக் கூடலஸங்கமேச்வரனே ஸாக்ஷியாவான்; பரிசுத்தமாகிய உங்களுடைய பாததீர்த்தத்திலும், பரிசுத்தமாகிய உங்களுடைய சேஷ ப்ரஸாதத்திலும் விருப்பமுள்ள ஜ்ஞாநிகளுடைய சிவயோகத்தின் பெருமையை நீங்கள் அறியவல்லவர்களென்று சொன்னார்.

(வி - ரை.) என்னை-உருபு மயக்கம். உலகத்தில் பக்தர்களுக்கு உயிர் லிங்கமாகும்; லிங்கத்திற்கு உயிர் குருவாகும்; ஆனால் வசவண்ணர்க்கு உயிர் ஜங்கமமூர்த்திகளாவர். (கக)

அப்படி தப்பா திந்த வரும்பிர மாத நிட்டை
யொப்பவும் வாக்கி னாலே யுரைக்கவு முரைத்தாற் போலத்
தப்புத லின்றி நன்றாய்ச் சரிக்கவும் வல்ல நந்திக்
கிப்படி மீதி லொப்பா ரில்லையென் றேத்தி னாரால்.

(ப-ரை.) அப்படி - அவ்விதமாக, இந்த—, அரு - அருமையானதும், பிரமாதம்-அசாத்தியமானதுமாகிய, நிட்டை - சிவயோகம், தப்பாது - தவறிப்போகமாட்டாது, ஒப்பவும்-(மேலோர்கள்) ஒத்துக்கொள்ளவும், வாக்கினால் - வாயால், உரைக்கவும் - சொல்லவும், உரைத்தால் போல-சொன்னபடி, தப்புதல் இன்றி - (ஒழுக்கத்தினின்றும்) தவறாமல், நன்றாய் - செவ்வையாய், சரிக்கவும் - நடக்கவும், வல்ல - வல்லமையுள்ள, நந்திக்கு - வசவண்ணர்க்கு, இ-இந்த, படி - பூமியின், மீதில்-பேரில், ஒப்பார்-சமானமானவர், இல்லையென்று—, ஏத்தினார் - துதித்தார், எ - று.

(பொ - ரை.) அவ்விதமாக இந்த அருமையானதும் அசாத்தியமானதுமாகிய சிவயோகம் தவறிப் போகமாட்டாது; மேலோர்கள் ஒத்துக்கொள்ளவும், வாயாற் சொல்லவும், சொன்னபடி ஒழுக்கத்தினின்றும் தவறாமல் செவ்வையாய் நடக்கவும் வல்லமையுள்ள வசவண்ணர்க்கு இந்தப் பூமியின்பேரில் சமானமானவரில்லையென்று துதித்தார். (உ0)

நந்திகள் சிவபூ சைக்க ணயந்துறுங் காலை வந்து
சந்திபா தேகுந் தூய்ய சங்கமர் தம்மை நேடிப்
புந்தியால் வணங்கிக் கொண்டு போதுமென் றுரைக்கத் தூத
ரந்திவா னனைய மெய்ய ராலய மடங்க ளெங்கும்.

(ப - ரை.) நந்திகள் - வசவண்ணர், சிவபூசைக்கண் - சிவபூஜையில், நயந்து-விரும்பி, உறும் காலை-யோகத்திலிருந்த காலத்தில், வந்து-எழுந்தருளி, சந்தியாது-பார்க்க முடியாமல், ஏகும்-திரும்பிச்சென்ற, தூய்ய-பரிசுத்தராகிய, சங்கமர் தம்மை-ஜங்கமமூர்த்திகளை, நேடி - தேடி, புந்தியால் - அன்புடன், வணங்கி - தொழுது, கொண்டு போதும்-அழைத்துவாருங்கள், என்று—, உரைக்க-சொல்லுதலும், தூதர்-ஆட்கள், அந்திவான் அனைய - செவ்வானம் போன்ற நிறத்தையுடைய, மெய்யர்-திருமேனியை யுடையவராகிய சிவபெருமானது, ஆலயம் - திருக்கோயில்கள், மடங்கள்-திருமடங்கள், எங்கும் - முழுதிலும், எ - று.

(பொ - ரை.) வசவண்ணர் சிவபூஜையில் விரும்பி யோகத்திலிருந்த காலத்தில் எழுந்தருளி,பார்க்க முடியாமல் திரும்பிச்சென்ற பரிசுத்தராகிய ஜங்கமமூர்த்திகளைத் தேடி யன்புடன் தொழுது அழைத்துவாருங்களென்று சொல்லுதலும், ஆட்கள் செவ்வானம் போன்ற நிறத்தையுடைய திருமேனியை யுடையவராகிய சிவபெருமானது திருக்கோயில்கள், திருமடங்கள் முழுதிலும். (உக)

ஓடினர் தேடிக் கண்டங் குவப்புடன் வணங்கி மன்று
ளாடியா ரனையார் தம்மை யழைத்துவந் தருந்த வத்தோர்
கூடிய குழுவிற் கொண்டு குறுகலு மாவி யின்றி
வாடிய வசவ தேவ ரெழுந்தனர் வணங்கி நின்றார்.

(ப-ரை.) ஓடினர்-ஓடிப்போய், தேடிக்கண்டு-தேடிப்பார்த்து, அங்கு-அவ்விடத்தில், உவப்புடன்-அன்புடன், வணங்கி-தொழுது, மன்றுள் ஆடியார்-சிதாகாசத்தில் நடிப்பவராகிய சிவபெருமான், அனையார் தம்மை - போன்றவராகிய ஜங்கமமூர்த்திகளை, அழைத்து வந்து—, அரு - மேன்மைபொருந்திய, தவத்தோர்-ஜங்கமமூர்த்திகள், கூடிய-சேர்ந்திருக்கின்ற, குழுவில் - திருக்கூட்டத்தில், கொண்டு-அழைத்துக்கொண்டு, குறுகலும் - வருதலும், ஆவி-உயிர், இன்றி-இல்லாமல், வாடிய - அசையாதிருந்த, வசவதேவர்-வசவண்ணர், எழுந்தனர்-எழுந்து, வணங்கி-தொழுது, நின்றார்—, எ-று.

(பொ-ரை.) ஓடிப்போய்த் தேடிப்பார்த்து, அவ்விடத்தில் அன்புடன் தொழுது, சிவபெருமான் போன்றவராகிய ஜங்கமமூர்த்திகளை யழைத்து வந்து, மேன்மை பொருந்திய ஜங்கமமூர்த்திகள் சேர்ந்திருக்கின்ற திருக்கூட்டத்தில் அழைத்துக்கொண்டு வருதலும், உயிரில்லாமல் அசையாதிருந்த வசவண்ணர் எழுந்து தொழுது நின்றார்.

(வி-ரை.) ஓடினர், எழுந்தனர் என்பவை முற்றெச்சங்கள். மன்றுள் ஆடியார்-நடராஜப் பெருமான். (உ௨)

மன்னுமா சபையி ருந்த மாதவ ரனைத்து ளோரு
மன்னவெம் பெரியோர் செய்யு மருந்தவ மென்னோ வென்றார்
பின்னரெந் தண்ட நாதர் பெருமைமே பிறங்க வேத்தி
மின்னணி மாட நீடு தம்மட மேவிச் சென்றார்.

(ப-ரை.) மன்னும் - கூடியிருக்கின்ற, மா-மேன்மைபொருந்திய, சபை - திருக்கூட்டத்தில், இருந்த-எழுந்தருளியிருந்த, மாதவர் - ஜங்கமமூர்த்திகள், அனைத்துள்ளோரும்-அனைவரும், அன்ன-அந்த, வெம்-அன்புடைய, பெரியோர்-(புதிய) ஜங்கமமூர்த்திகள், செய்யும்-அநுஷ்டிக்கின்ற, அரு - மேன்மையாகிய, தவம் - வீரவிரதம், என்னோ-யாதோ, என்றார் - என்று (வியந்து) சொன்னார்கள், பின்னர்-பிறகு, எம்-எமது, தண்டநாதர் - வசவண்ணரது, பெருமை - மகிமை, பிறங்க - விளங்கும்படி, ஏத்தி - துதித்து, மின்-ஒளி வீசுகின்றதும், அணி-அழகுபொருந்தியதுமாகிய,மாடம்-உபரிகைகள், நீடும்-நிலைத்திருக்கின்ற, தம் - தங்களுடைய, மடம் - திருமடங்களில், மேவி-போய், சென்றார்-சேர்ந்தார்கள், எ-று.

(பொ-ரை.) கூடியிருக்கின்ற பெருமைபொருந்திய திருக்கூட்டத்தில் எழுந்தருளியிருந்த ஜங்கமமூர்த்திகளனைவரும் அந்த அன்புடைய புதிய ஜங்கமமூர்த்திகள் அநுஷ்டிக்கின்ற மேன்மையாகிய வீரவிரதம் யாதோ? என்று வியந்து சொன்னார்கள்; பிறகு எமது வசவண்ணரது மகிமை விளங்கும்படித் துதித்து, ஒளி வீசுகின்றதும், அழகு பொருந்தியதுமாகிய உபரிகைகள் நிலைத்திருக்கின்ற தங்களுடைய திருமடங்களிற் போய்ச் சேர்ந்தார்கள். (உ௩)

சங்கமப்பிராணியான புராணம் - முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம்- ௧௧௩௮.

உ

சிவமயம்.

# கின்னரையர் புராணம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

இன்ன நாளில் வசவதேவ ரிட்ட மான நண்பராங்
கின்ன ரையு ருடலகன்று கிரிமினத்த ரடியுற
வன்ன நண்பர் பெருமைநாடி வசவ ராச ரன்பினுன்
முன்ன ருந்து யர்க்கடற்றுள் மூழ்கி நைந்து மொழிகுவார்.

(ப - ரை.) இன்ன - இந்தப் பெருமையடைந் திருக்கின்ற, நாளில் - காலத்தில், வசவதேவர் - வசவண்ணர்க்கு, இட்டமான - அன்புள்ள, நண்பர்ஆம் - தோழராகிய, கின்னரையர் - கிந்நரப்ரஹ்மையர், உடல் அகன்று-தேக வ்யோகமடைந்து, கிரிமின்-பார்வதீ தேவியார்க்கு, அத்தர்-இறைவராகிய சிவபெருமானது, அடி-திருவடிகளை, உற-அடைதலும், அன்ன-அந்த, நண்பர்-தோழரது, பெருமை-மஹத்வத்தை, நாடி-நோக்கி, வசவராசர் - வசவண்ணர், அன்பினுல்-அன்புடன், முன் அரு - நினைத்தற்கரிய, துயர்க்கடற்றுள்-துக்கசாகரத்தில், மூழ்கி-அமிழ்ந்து, நைந்து-வருந்தி, மொழிகுவார் - சொல்லுவாராயினர் (எவ்வாறெனின்), எ-று.

(பொ-ரை.) இந்தப் பெருமை யடைந்திருக்கின்ற காலத்தில் வசவண்ணர்க்கு அன்புள்ள தோழராகிய கிந்நரப்ரஹ்மையர் தேக வ்யோகமடைந்து, பார்வதீ தேவியார்க்கு இறைவராகிய சிவபெருமானது திருவடிகளை யடைதலும், அந்தத் தோழரது மஹத்வத்தை நோக்கி, வசவண்ணர் அன்புடன் நினைத்தற்கரிய துக்க சாகரத்தில் அமிழ்ந்து, வருந்திச் சொல்லுவாராயினர்; எவ்வாறெனின்.

(வி - ரை.) கிரி - மலை; மின் - பெண் (ஆகுபெயர்); கிரிமின் - பர்வதராஜபுத்ரீ.

என்னை யாவெ னக்குநல்ல வின்ப மேயெ னுவியே
யென்னை யாளு மெம்பிரா னென்னைத்தெ ருட்டு தேசிகா
வென்னை யாவி சோரவிங் கிருத்தி யெங்க ணைந்தனை
யென்னை யானி னிச்செய்கே னெனக்கி சைந்த செல்வமே.

(ப-ரை.) என்-எனது, ஐயா-ஐயனே, எனக்கு—, நல்ல,இன்பமே-பேரின்பமே, என் - எனது, ஆவியே - உயிரே, என்னை—, ஆளும் - ஆண்டருள்கின்ற, எம்பிரான்-இறைவனே, என்னை—, தெருட்டு - தெளிவிக்கின்ற, தேசிகா-ஜ்ஞாநாசார்யனே, ஆவி - உயிர், சோர - வாடும்படி, என்னை—, இருத்தி - வைத்துவிட்டு, எங்கு - எவ்விடம், அணைந்தனை-சென்றாய், யான்-நான், இனி-இப்போது, என்னை-யாது, செய்கேன்-பண்ணட்டும், எனக்கு—, இசைந்த-உற்ற, செல்வமே-பாக்யமே, எ-று.

(பொ-ரை.) எனது ஐயனே! எனக்கு பேரின்பமே! எனது உயிரே! என்னை யாண்டருள்கின்ற இறைவனே! என்னைத் தெளிவிக்கின்ற ஜ்ஞாநாசார்யனே! உயிர் வாடும்படி என்னை இவ்விடம் வைத்துவிட்டு எவ்விடம் சென்றாய்? நான் இப்போது யாது பண்ணட்டும்? எனக்கு உற்ற பாக்யமே! (உ)

பரிச வேதி யேதருப் பணைத்தெ ழுந்த சோலையே
யுரிய காம தேனுவே யுயர்ந்த சங்க நிதியமே
மருவி னோர்நி னைத்தநல்கு மணியொ டான வனசமே
பொருவின் மேரு வேயருட் பிறந்த நல்ல பூமியே.

(ப - ரை.) பரிசவேதியே—, தரு-கல்பக விருக்ஷங்கள், பணைத்து - செழித்து, எழுந்த-வளர்ந்த, சோலையே-அடவியே, உரிய-நற்குணம் பொருந்திய, காமதேனுவே—, உயர்ந்த-மேன்மையாகிய, சங்கநிதியமே-சங்கநிதியே, மருவினோர்-அடுத்தவர்கள், நினைத்த-எண்ணினவற்றை யெல்லாம், நல்கும்-தரவல்ல, மணியொடு-சிந்தாமணியுடன், ஆன - கூடிய, வனசமே-பத்மநிதியே, பொருவு இல்-நிகரற்ற, மேருவே-பொன் மலையே, அருள்-கிருபை, பிறந்த-உண்டான, நல்ல பூமியே-புண்ய க்ஷேத்ரமே, எ-று.

(பொ-ரை.) பரிசவேதியே! கல்பக விருக்ஷங்கள் செழித்து வளர்ந்த அடவியே! நற்குணம் பொருந்திய காமதேனுவே! மேன்மையாகிய சங்கநிதியே! அடுத்தவர்கள் எண்ணினவற்றை யெல்லாம் தரவல்ல சிந்தாமணியுடன் கூடிய பத்மநிதியே! நிகரற்ற பொன் மலையே! கிருபை யுண்டான புண்ய க்ஷேத்ரமே! (௩)

விரும்பு நல்ல சுற்றமேயென் மெய்க்குலத்தர் தெய்வமே
திருந்து பத்தி மூவிதஞ் செறிந்த நன்னி தானமே
பெருந்த வத்தர் நீரனே பிஞகி யென்னை விட்டுனைப்
பரிந்த ழைக்க நீயகன்ற பான்மை யென்ன பான்மையே.

(ப - ரை.) விரும்பும் - மதித்தற்குரிய, நல்ல - சிறந்த, சுற்றமே - பந்துவே, என் - எனது, மெய்-உண்மையாகிய, குலத்தர் தெய்வமே - குலதெய்வமே, திருந்து-ஒழுக்க முள்ள, பத்தி மூவிதம் - மூவகைப் பக்தி, செறிந்த - சேர்ந்த, நல் - நல்ல, நிதானமே - ஸ்வரூபமே, பெரு-மேன்மையாகிய, தவத்தர் நீரனே - தபோசூரனே, பிஞகி - சிவபெருமான், என்னை—, விட்டு - நீக்கிவிட்டு, உன்னை—, பரிந்து - அன்புடன், அழைக்க - அழைத்துக்கொண்டு போதலும், நீ—, அகன்ற பான்மை - சென்ற விதம், என்ன பான்மை - எவ்விதம், எ - று.

(பொ-ரை.) மதித்தற்குரிய சிறந்த பந்துவே! எனது உண்மையாகிய குலதெய்வமே! திருத்தமாகிய மூவகைப் பக்தி சேர்ந்த நல்ல ஸ்வரூபமே! மேன்மையாகிய தபோசூரனே! சிவபெருமான் என்னை நீக்கிவிட்டு உன்னை யன்புடன் அழைத்துக் கொண்டு போதலும், நீ சென்ற விதம் எவ்விதம்?

(வி - ரை.) மூவகைப்பக்தி - குருபக்தி, லிங்கபக்தி, ஜங்கமபக்தி. பிஞகி - பிநாகமென்னும் தநுசையுடையவன். (௪)

நம்ப னன்ப கின்னரப் பிரமை யாந லங்கிபா
னிம்ப ரென்பு நைந்திருக்க வென்னை விட்ட கன்றுநீ
யும்பர் கோனை யுற்றதென்ன வுத்த மாவெ னக்குறுந்
தம்ப மேயு னைப்பிரிந்த தமிய னேனை நினைவையோ.

(ப - ரை.) நம்பன் அன்ப - சிவபக்தனே, கின்னரப்பிரமையா - கிந்நரப்ரஹ்மையனே, யான்-நான், இம்பர் - இவ்வுலகத்தில், நலங்கி - மனம் நொந்து, என்பு - எலும்பு, நைந்திருக்க - உருகியிருத்தலும், என்னை—, விட்டு - நீங்கி, அகன்று - சென்று, நீ—, உம்பர் கோனை-தேவர்களுக்குத் தலைவனாகிய சிவபெருமானை, உற்றது-அடைந்ததற்குக் காரணம், என்ன-யாது, உத்தமா-ஸத்குணஸம்பந்நனே, எனக்கு—, உறும் - கிடைத்திருக்கின்ற, தம்பமே - பற்றுக்கோடே, உன்னை—, பிரிந்த - விட்டு நீங்கிய, தமியனேனை-துணையில்லாத அடியேனை, நினைவையோ-நினைப்பாயோ, எ-று.

(பொ - ரை.) சிவபக்தனே! கிந்நரப்ரஹ்மையனே! இவ்வுலகத்தில் நான் மனம் நொந்து என்பு உருகியிருத்தலும், என்னை நீங்கிச் சென்று, நீ தேவர்களுக்குத் தலைவனாகிய சிவபெருமானை யடைந்ததற்குக் காரணம் யாது? ஸத்குண ஸம்பந்நனே! எனக்குக் கிடைத்திருக்கின்ற பற்றுக்கோடே! உன்னை விட்டு நீங்கிய துணையில்லாத அடியேனை நினைப்பாயோ?

(௫)

பிரம ஞான வமுதமே பலிப்பெ னக்கு நீயலோ
திரம தாக வென்மனந் திருந்து சோதி நீயலோ
வரம லோவெ னக்கணீர் மறாது மாரி போல்விழுந்
துரமி ழந்து வசவதேவ ருடன்ம றந்த வுணர்வராய்.

(ப-ரை.) பிரம ஞான அமுதமே-சிவஜ்ஞாநாமிர்தமே, நீ—, எனக்கு—, பலிப்பு-எல்லாச் சித்திகளும், அல்லோ - அல்லவோ, நீ—, என் - எனது, மனம் - நெஞ்சம், திரம் ஆக - உறுதியாக, திருந்து - தெளிதற்குரிய, சோதி - பரஞ்சுடர், அல்லோ-அல்லவோ, வரம் - வேண்டிய வரம், அல்லோ - அல்லவோ, என்ன - என்று அலறி, கண் நீர் - கண்களினின்றும் நீரானது, மறாது - இடையறாமல், மாரி போல் - மழை போல், விழுந்து- (தாரைதாரையாய்) பொழிந்து, உரம் - பலம், இழந்து - குன்றி, வசவதேவர் - வசவண்ணர், உடல் மறந்த உணர்வர் ஆய்-மெய்மறந்தவராய், எ - று.

(பொ-ரை.) சிவஜ்ஞாநாமிர்தமே! நீ எனக்கு எல்லாச் சித்திகளுமல்லவோ? நீ எனது நெஞ்சம் உறுதியாகத் தெளிதற்குரிய பரஞ்சுடரல்லவோ? வேண்டிய வரமல்லவோ? என்று அலறி, கண்களினின்றும் நீரானது இடையறாமல் மழை போல் தாரைதாரையாய்ப் பொழிந்து, பலம் குன்றி, வசவண்ணர் மெய்மறந்தவராய்.

(வி-ரை.) உடல் மறந்த வுணர்வராய்-பரவசப்பட்டவராய் எனினுமாம். திரம்து என்பதில் அது-பகுதிப்பொருள் விகுதி. (சு)

ஐயர் கின்ன ரப்பிரம ரறிவை யுமகந் தைதீர்
துய்ய சொல்லை யுமனந் துலங்கு தூய்மை தன்னையு
மெய்மையையும் விரும்பி யங்கி மேவு வெண்ணெ யென்னலாய்ச்
செய்ய மேனி யுருகியே தியங்கி யுண்ம யங்கலும்.

(ப - ரை.) ஐயர்-ஜங்கமமூர்த்திகளாகிய, கின்னரப்பிரமர்-கிந்நரப்ரஹ்மையரது, அறிவையும்-புத்திசாலித்தனத்தையும், அகந்தை தீர் - அஹங்காரமில்லாததும், துய்ய-பரிசுத்தமானது மாகிய, சொல்லையும்-சொற்களையும், துலங்கு-விளங்குகின்ற, மனம் தூய்மை தன்னையும் - மநோசுத்தியையும், மெய்மையையும் - வாய்மையையும், விரும்பி-நினைத்து, அங்கி-நெருப்பில், மேவும்-பட்ட, வெண்ணெய்—, என்னல் ஆய்-போலாகி, செய்ய-அழகிய, மேனி - திருமேனியானது, உருகி- ஒடுங்கி, தியங்கி - சோர்ந்து,உள்-மதி, மயங்கலும் - கலங்குதலும், எ-று.

(பொ-ரை.) ஜங்கமமூர்த்திகளாகிய கிந்நரப்ரஹ்மையரது புத்திசாலித்தனத்தையும், அஹங்காரமில்லாததும், பரிசுத்தமானதுமாகிய சொற்களையும், விளங்குகின்ற மநோ சுத்தியையும், வாய்மையையும் நினைத்து, நெருப்பிற் பட்ட வெண்ணெய் போலாகி, அழகிய திரு மேனியானது ஒடுங்கி, சோர்ந்து, மதி கலங்குதலும். (எ)

வசவ தேவர் துயர மெய்தி மனந டுங்கு மெல்லையி
னிசைநி றைந்த சங்கமேச ரெங்க ணுநி றைந்துளோ
ரசைவி லாத சிவமத மணைந்த ருந்தி றற்செயும்
விசைய ரான மாச்சிதேவர் விரைய வந்தி லாரதென்.

(ப - ரை.) வசவதேவர்-வசவண்ணர், துயரம்-துக்கம், எய்தி-அடைந்து, மனம்-நெஞ்சம், நடுங்கும்-தடுமாறுகின்ற, எல்லையின்-காலத்தில், இசை நிறைந்த-புகழுடைய, சங்கமேசர்-ஜங்கமமூர்த்திகள், எங்கணும்-எவ்விடத்திலும், நிறைந்து உள்ளோர்-நிரம்பினவர்களாகி, அசைவு இல்லாத-நிலைபெற்ற, சிவமதம்-வீரசைவ குலத்தில், அணைந்து-அவதரித்து (வீரசைவமதஸ்தாபனஞ்செய்வதில்), அரு-மேன்மையாகிய, திறல்-போர், செய்யும்-புரிபவரும், விசையர் ஆன-வெற்றியடைந்தவருமாகிய, மாச்சி தேவர்-மடிவாலமாச்சையர், விரைய - சீக்கிரமாக, வந்து இல்லார்-வந்தாரில்லை, அது - அப்படி அவர் வராததற்குக் காரணம், என்-யாது, எ-று.

(பொ-ரை.) வசவண்ணர் துக்கமடைந்து, நெஞ்சம் தடுமாறுகின்ற காலத்தில் புகழுடைய ஜங்கமமூர்த்திகள் எவ்விடத்திலும் நிரம்பினவர்களாகி, நிலை பெற்ற வீர சைவ குலத்தில் அவதரித்து, வீரசைவ ஸ்தாபனஞ் செய்வதில் மேன்மையாகிய போர் புரிபவரும், வெற்றியடைந்தவருமாகிய மடிவாலமாச்சையர் சீக்கிரமாக வந்தாரில்லை; அப்படி அவர் வராததற்குக் காரணம் யாது? (அ)

### கோச்சகக் கலிப்பா.

படியாரிப் பாச்சையரைப் பார்த்தழைத்துப் பரிவினன்
மடிவால மாச்சையரை வணங்கியிந்த வாறெல்லாங்
கடிதோடி யுரைத்தவரைக் கடிதுகொண்டு வருதியென்று
ரடிவேகத் தேகியவ ரடிக்கமலந் தாழ்ந்தரே.

(ப - ரை.) படியாரிப் பாச்சையரை—, பார்த்து - நோக்கி, அழைத்து - கூப்பிட்டு, மடிவாலமாச்சையரை—, பரிவினல் - அன்புடன், வணங்கி - தொழுது இந்த—, ஆறு - செய்தியை, எல்லாம் - முழுதும், கடிது ஓடி - வேகமாகப்போய் உரைத்து - சொல்லி, அவரை—, கடிது - சீக்கிரமாக, கொண்டு - அழைத்துக்கொண்டு, வருதி - வரக்கடவாய், என்றார் - என்று கட்டளையிட்டார்கள், அடிவேகத்து - வாயுவேகத்துடன், ஏகி - சென்று, அவர் - அவருடைய, அடிக்கமலம் - திருவடித்தாமரைகளை, தாழ்ந்து - வணங்கி, எ-று.

(பொ - ரை.) படியாரிப் பாச்சையரை நோக்கிக் கூப்பிட்டு, மடிவாலமாச்சையரை அன்புடன் தொழுது, இந்தச் செய்தியை முழுதும் வேகமாகப்போய்ச் சொல்லி, அவரைச் சீக்கிரமாக அழைத்துக்கொண்டு வரக்கடவாயென்று கட்டளையிட்டார்கள்; வாயுவேகத்துடன் சென்று அவருடைய திருவடித் தாமரைகளை வணங்கி,

(வி-ரை.) படியாரி-ஊழியர். அடி-கால் (காற்று). (௯)

இந்தவுரை யியம்பவறிந் தெழிற்றவத்தர் மாச்சையர்
வந்தவரா ரவ்விடத்தில் வசவேசர் செய்வதுவென்
சந்தமுற வுரைத்தியெனச் சகளேச மாதரசர்
முந்தையர்தா மகத்தர்பெருஞ் சமுகத்தி னந்தியார்.

(ப - ரை.) இந்த—, உரை - சொல்லை, இயம்ப - (படியாரிப்பாச்சையர்) சொல்லுதலும், எழில் - பராக்ரமத்தையுடைய, தவத்தர் - ஜங்கமமூர்த்திகளாகிய மாச்சையர் - மடிவாலமாச்சையர், அறிந்து - உணர்ந்து, வந்தவர் - வந்திருக்கின்ற பேர்கள், ஆர் - யார், அவ்விடத்தில்—, வசவேசர் - வசவண்ணர், செய்வது - பண்ணுகின்ற காரியம், என் - யாது, சந்தம் உற - உண்மையாக, உரைத்தி - சொல்லக்கடவாய், என்ன - என்று கேட்டலும், சகளேசமாதரசர் - சகளேசமாதிராசையர், முந்தையர் தாம் - முதலானவர்களாகிய, மகத்தர் - ஜங்கமமூர்த்திகள் (எழுந்தருளியிருக்கின்ற), பெரு - மேன்மையாகிய, சமுகத்தில் - திருக்கூட்டத்தில், நந்தியார் - வசவண்ணர், எ-று.

(பொ - ரை.) இந்தச் சொல்லைப் படியாரிப் பாச்சையர் சொல்லுதலும், பராக்ரமத்தையுடைய ஜங்கமமூர்த்திகளாகிய மடிவாலமாச்சையர் உணர்ந்து, வந்திருக்கின்ற பேர்கள் யார்? அவ்விடத்தில் வசவண்ணர் பண்ணுகின்ற காரியம் யாது? உண்மையாகச் சொல்லக்கடவாயென்று கேட்டலும், சகளேசமாதிராசையர் முதலானவர்களாகிய ஜங்கமமூர்த்திகள் எழுந்தருளியிருக்கின்ற மேன்மையாகிய திருக்கூட்டத்தில் வசவண்ணர். (௧0)

பிரமையர்தந் திருவுருவைப் பிரியாம லணைத்துக்கொண்
டிரமதொன்று மின்றியவிழ்ந் திருகுகின்றா ரென்றலுமே
வரமிகுத்த மகத்தோர்முன் வாடியழும் வருத்தமிதெ
னரதவத்தோர் தமக்காவி யானதெல்லா மிவ்வளவோ,

(ப - ரை.) பிரமையர்தம் - கிங்கரப்ரஹ்மையரது, திருவுருவை - திருமேனியை, பிரியாமல் - விட்டுநீங்காமல், அணைத்துக்கொண்டு - கட்டிக்கொண்டு, உரம் - பலம், ஒன்றும்-சற்றும், இன்றி - இல்லாமல், அவிழ்ந்து-மெய்மறந்து, உருகுகின்றார்-அழுகின்றார், என்றலும் - என்று (படியாரிப்பாச்சையர்) சொல்லுதலும், வரம் மிகுத்த - மேன்மைபொருந்திய, மகத்தோர் முன் - ஜங்கமமூர்த்திகளுக்கெதிரே, வாடி-மெலிந்து, அழும் - அழுகின்ற, வருத்தம் இது - இந்தத் துக்கத்திற்குக் காரணம், என் - யாது, அர தவத்தோர் - சிவஸ்வரூபிகளாகிய ஜங்கமமூர்த்திகள், தமக்கு—, ஆவியானது-உயிரென்று சொன்ன சொல்லானது, எல்லாம்-முழுதும், இவ்வளவோ-இம்மாத்திரந்தானோ, எ - று.

(பொ - ரை.) கிங்கரப்ரஹ்மையரது திருமேனியை விட்டுநீங்காமல் கட்டிக்கொண்டு, பலம் சற்றுமில்லாமல் மெய் மறந்து அழுகின்றாரென்று படியாரிப்பாச்சையர் சொல்லுதலும், மேன்மைபொருந்திய ஜங்கமமூர்த்திகளுக்கெதிரே மெலிந்து அழுகின்ற இந்தத் துக்கத்திற்குக் காரணம் யாது? சிவஸ்வரூபிகளாகிய ஜங்கமமூர்த்திகள் தமக்கு உயிரென்று சொன்ன சொல்லானது முழுதும் இம்மாத்திரந்தானோ?

(வி - ரை.) அரதவத்தோர் - சிவபெருமானையே நோக்கி வீரவிரதமநுஷ்டிப்பவர். உரமது என்பதில் அது-பகுதிப்பொருள் விகுதி. (௧௧)

சங்கமந்த முயிரென்னுஞ் சாற்றெலா மிவ்வளவோ
சங்கமந்தங் கதியென்னுஞ் சற்குணமு மிவ்வளவோ
சங்கமந்த மதியென்னுந் தருக்கெல்லா மிவ்வளவோ
சங்கமந்தங் கரத்திலிங்கந் தானெனுஞ்சொ லிவ்வளவோ.

(ப - ரை.) சங்கமம் - ஜங்கமமூர்த்திகள், தம் - தமது, உயிர் என்னும் - உயிரென்கின்ற, சாற்று - சொல், எல்லாம் - முழுதும், இவ்வளவோ - இம்மாத்திரந்தானோ, சங்கமம் - ஜங்கமமூர்த்திகள், தம் - தமது, கதி - மோக்ஷம், என்னும் - என்கின்ற, சற்குணமும் - நற்குணமும், இவ்வளவோ - இம்மாத்திரந்தானோ, சங்கமம் - ஜங்கமமூர்த்திகள், தம் - தமது, மதி - வரம், என்னும் - என்கின்ற, தருக்கு - மகிழ்ச்சி, எல்லாம் - முழுதும், இவ்வளவோ - இம்மாத்திரந்தானோ, சங்கமம் - ஜங்கமமூர்த்திகள், தம் - தமது, கரத்து - கைத்தலத்திலெழுந்தருளியிருக்கின்ற, இலிங்கம் தான் - இஷ்டலிங்கமூர்த்தி, என்னும் - என்கின்ற, சொல் - சொல்லும், இவ்வளவோ - இம்மாத்திரந்தானோ, எ - று.

(பொ-ரை.) ஜங்கமமூர்த்திகள் தமது உயிரென்கின்ற சொல் முழுதும் இம்மாத்திரந்தானோ? ஜங்கமமூர்த்திகள் தமது மோக்ஷமென்கின்ற நற்குணமும் இம்மாத்திரந்தானோ? ஜங்கமமூர்த்திகள் தமது வரமென்கின்ற மகிழ்ச்சி முழுதும் இம்மாத்திரந்தானோ? ஜங்கமமூர்த்திகள் தமது கைத்தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற இஷ்டலிங்கமூர்த்தி யென்கின்ற சொல்லும் இம்மாத்திரந்தானோ? (௧௨)

பிடித்தகிட்டை மறந்துடலைப் பேணியின்று பற்றினரோ
வடித்தபத்தி மயராகி வளம்பெறுஞ்சொல் வகுத்திருந்து
படித்தவுரை யறியாமற் பரிந்துயிரைப் பரிந்தனரோ
துடித்தபத்தி தலையேறிற் சொல்லிமற்றுஞ் சோர்வரோ.

(ப-ரை.) பிடித்த - பற்றிய, கிட்டை - வீரவிரதத்தை, மறந்து - நெகிழ விட்டு, உடலை-உடம்பை, பேணி - விரும்பி, இன்று-இப்போது, பற்றினரோ - இறுகப் பிடித்துக்கொண்டாரோ, வடித்த - தெளிந்த, பத்தி-பக்தியே, மயர் ஆகி - திருமேனியாகவுடையவராகி, வளம்பெறும்-மேன்மையாகிய, சொல் - சொல்லை, வகுத்து - விளக்கி, இருந்து-இருந்தும், படித்த - சொன்ன, உரை - சொல்லை, அறியாமல்-உணராமல்,

பரிந்து-போக்கிவிட்டு, உயிரை—, பரிந்தனரோ-விரும்பினாரோ, துடித்த-உருக்க மான, பத்தி - பக்தியானது, தலையேறின் - மேற்கொண்டால், சொல்லி - ஒப்பாரி வைத்து, மற்றும்-மேலும், சோர்வரோ-சோகப்படுவரோ, எ-று.

(பொ-ரை.) பற்றிய வீரவிரதத்தை நெகிழவிட்டு உடம்பை விரும்பி, இப்போது இறுகப் பிடித்துக்கொண்டாரோ? தெளிந்த பக்தியே திருமேனியாகவுடையவராகி, மேன்மையாகிய சொல்லை விளக்கியிருந்தும், சொன்ன சொல்லை உணராமற் போக்கி விட்டு உயிரை விரும்பினாரோ? உருக்கமான பக்தியானது மேற்கொண்டால் ஒப் (௯) பாரி வைத்து மேலும் சோகப்படுவரோ?

அதிகதவர்க் கதிகதவ ரருணெறிசேர் பிரமையர்
மதிநலத்தா லானவரை வரவழைக்க வழக்கன்றே
நதிமுடியா னிடத்தணைந்த நன்மையென நயந்துகந்து
புதியபெரு மகிழ்ச்சியுடன் புளகிக்கும் படியலால்.

(ப-ரை.) நதி-கங்கையை யணிந்திருக்கின்ற, முடியான் இடத்து - திருமுடியை யுடைய சிவபெருமானிடத்தில், அணைந்த-ஐக்யப்பட்ட, நன்மை-மோக்ஷம், என்ன- (இதுவாம்)என்று (தெரிந்து), நயந்து-விருப்பத்துடன், உகந்து-சந்தோஷமடைந்து, புதிய-அற்புதமான, பெருமகிழ்ச்சியுடன்-பேரானந்தத்துடன், புளகிக்கும்படி-பூரிப்ப தே, அல்லால்-அல்லாமல், அதிகம்-மேன்மையாகிய, தவர்க்கு-ஜங்கமமூர்த்திகளுக்கு, அதிகம்-மேன்மையாகிய, தவர்-ஜங்கமமூர்த்திகளும், அருள்நெறிசேர் - க்ருபாகடா க்ஷத்தையுடைய, பிரமையர் - நிர்ஙராப்ரஹ்மையரும், மதி - விரும்புதற்குரிய, நலம் ஆனவரை - மோக்ஷமடைந்தவருமாகிய பெரியோரை, வரவழைக்க-(இவ்வுலகத்தில்) திரும்பிவரச்செய்ய, வழக்கு-நியாயம், அன்று-அல்ல, எ-று.

(பொ-ரை.) கங்கையை யணிந்திருக்கின்ற திருமுடியையுடைய சிவபெருமானி டத்தில் ஐக்யப்பட்ட மோக்ஷமிதுவாமென்று தெரிந்து, விருப்பத்துடன் சந்தோஷ மடைந்து, அற்புதமான பேரானந்தத்துடன் பூரிப்பதே யல்லாமல், மேன்மையாகிய ஜங்கமமூர்த்திகளுக்கு மேன்மையாகிய ஜங்கமமூர்த்திகளும், க்ருபாகடாக்ஷத்தை யுடைய நிர்ஙராப்ரஹ்மையரும், விரும்புதற்குரிய மோக்ஷமடைந்தவருமாகிய பெரி யோரை இவ்வுலகத்தில் திரும்பி வரச்செய்ய நியாயமல்ல. (௧௦)

(வி-ரை.) ஓ, ஆல் என்பவை அசைநிலைகள். அத்து-சாரியை.

அழுவதுவென் விழுவதுவெ னந்தோவென் றரற்றுவதெ
னொழுகுகண்ணீர் மாறாம லூற்றாகச் சாப்பதுவென்
பழுதிலத்த னன்பர்முனம் பத்தர்செயும் பான்மையோ
நழுவுநெறி யுலகத்தோர் நண்ணுதொழி னமக்கதென.

(ப-ரை.) அழுவது-அழுவதற்குக் காரணம். என்-யாது, விழுவது-வீழ்ந்து புரள் வதற்குக் காரணம். என் - யாது, அந்தோ - ஐயோ, என்று—, அரற்றுவது - கூக்குர லிடுவதற்குக்காரணம், என்-யாது, ஒழுகு-வடிகின்ற,கண்ணீர்—, மாறாமல்-இடையறா மல், ஊற்று ஆக - ஊற்று போல், சாப்பது - ஜபிப்பதற்குக் காரணம், என் - யாது, பழுது இல் - பாபத்தினின்றும் நீங்கினவர்களும், அத்தன் அன்பர் முன்னம் - சிவ பக்தர்களுமாகிய ஜங்கமமூர்த்திகளுக்கெதிரே, பத்தர்-சிவபக்தர்கள், செய்யும் -செய் கின்ற, பான்மையோ - செய்கையோ, நழுவு நெறி-தப்புவழியில் நடக்கின்ற, உலகத் தோர்-உலகத்திலுள்ள பாமர ஜனங்கள், நண்ணும் - விரும்பிச்செய்கின்ற, தொழில்- செய்கையாகும், நமக்கு—, அது-அதனாலுண்டாகின்ற பயன், என்ன-யாது, எ-று.

(பொ - ரை.) அழுவதற்குக் காரணம் யாது? ஐயோவென்று கூக்குரலிடுவதற் குக் காரணம் யாது? வடிகின்ற கண்ணீர் இடையறாமல் ஊற்றுபோல் ஜபிப்பதற்குக் காரணம் யாது? பாபத்தினின்றும் நீங்கினவர்களும், சிவபக்தர்களுமாகிய ஜங்கமமூர் த்திகளுக்கெதிரே சிவபக்தர்கள் செய்கின்ற செய்கையோ? தப்புவழியில் நடக் கின்ற உலகத்திலுள்ள பாமர ஜனங்கள் விரும்பிச் செய்கின்ற செய்கையாகும்; நமக்கு அதனாலுண்டாகின்ற பயன் யாது? (௧௧)

ஆயிடைவந் தவர்துயர மாற்றறியே மருங்கண்ணீர்
நேயமுடன் றுடைக்கறியே நெடிதுயிர்க்கும் படியறியேம்
வாயதனாற் பகர்ந்தநிட்டை மறந்தோரைப் பாரேநீ
போயவர்கள் செயுஞ்செயலைப் புகுந்தியற்றப் புகலென்று.

(ப - ரை.) ஆயிடை - அவ்விடத்தில், வந்து - சென்று, அவர் - அவருடைய, துயரம் - துக்கத்தை, ஆற்ற - தீர்க்கின்ற வழியையும், அறியேம் - அறியமாட்டோம், அரு - அருமையாகிய, கண்ணீர்—, நேயமுடன் - அன்புடன், துடைக்க - துடைக்கின்ற வழியையும், அறியேம் - அறியமாட்டோம், நெடிது - நீண்ட காலம், உயிர்க்கும் - பிழைக்கச் செய்கின்ற, படி - வழியையும், அறியேம் - அறியமாட்டோம், வாய் அதனால் - வாயினால், பகர்ந்த - சொன்ன, நிட்டை - வீரவிரதத்தை, மறந்தோரை - மறந்துவிட்டவரையும், பாரேம் - பார்க்கமாட்டோம், நீ—, போய் - சென்று, அவர்கள்—, செய்யும் - செய்கின்ற, செயலை - கிரியைகளை, புகுந்து - தொடங்கி, இயற்ற-செய்ய, புகல்-சொல்வாய், என்று—, எ-று.

(பொ - ரை.) அவ்விடத்திற் சென்று அவருடைய துக்கத்தைத் தீர்க்கின்ற வழியையும் அறியமாட்டோம்; அருமையாகிய கண்ணீரை யன்புடன் துடைக்கின்ற வழியையும் அறியமாட்டோம்; நீண்ட காலம் பிழைக்கச் செய்கின்ற வழியையும் அறிய மாட்டோம்; வாயினாற் சொன்ன வீரவிரதத்தை மறந்து விட்டவரையும் பார்க்கமாட்டோம்; நீ சென்று அவர்கள் செய்கின்ற கிரியைகளைத் தொடங்கிச் செய்யச் சொல்வாயென்று. (௧௬)

பணித்தளவிற் படியாரிப் பாச்சையர் விரைந்துவந்தங்
கணித்தொகையா மருந்தவத்தோர்க் கஞ்சலிசெய் தஞ்சியே
துணித்தவர்சொல் வைராகஞ் சொன்னளவிற் றமதுநிட்டை
கணித்துவச வேசருயிர் பிரமையர்பாற் கலந்ததால்.

(ப-ரை.) பணித்த அளவில் - கட்டளையிட்ட மாத்திரத்தில், படியாரிப்பாச்சையர்—, விரைந்து-வேகமாக, வந்து-போய், அங்கு-அவ்விடத்தில், அணி-சேர்ந்து, தொகை ஆம்-திருக்கூட்டத்தாராகிய, அரு-மேன்மைபொருந்திய, தவத்தோர்க்கு-ஜங்கமமூர்த்திகளுக்கு, அஞ்சலிசெய்து-கும்பிட்டு, அஞ்சி - அச்சமடைந்து, துணி-மனோத்ருடத்தையுடைய, தவர்-ஜங்கமமூர்த்திகளாகிய மடிவாலமாச்சையர், சொல்-சொன்ன, வைராகம்-வைராக்யமான சொல்லை, சொன்ன அளவில்-சொன்ன மாத்திரத்தில், வசவேசர் - வசவண்ணர், தமது—, நிட்டை - வீரவிரதத்தை, கணித்து-யோசித்தமையால், உயிர் - உயிரானது, பிரமையர் பால் - நிராப்ரஹ்மையரிடத்தில்; கலந்தது - சேர்ந்தது, எ-று.

(பொ-ரை.) கட்டளையிட்ட மாத்திரத்தில் படியாரிப்பாச்சையர் வேகமாகப் போய், அவ்விடத்திற் சேர்ந்து, திருக்கூட்டத்தாராகிய மேன்மை பொருந்திய ஜங்கமமூர்த்திகளுக்குக் கும்பிட்டு, அச்சமடைந்து, மனோத்ருடத்தையுடைய ஜங்கமமூர்த்திகளாகிய மடிவாலமாச்சையர் சொன்ன வைராக்யமான சொல்லைச் சொன்ன மாத்திரத்தில், வசவண்ணர் தமது வீரவிரதத்தை யோசித்தமையால், உயிரானது நிராப்ரஹ்மையரிடத்திற் சேர்ந்தது. (௧௭)

கலந்தளவில் வசவேசர் காயத்தைக் கண்டுநல்லோர்
புலந்தமுக ராயிதென்ன புதுமையெனப் புலம்பியே
வலங்கொணிட்டை மடிவால மாச்சையர்சொற் செவியுறலும்
விலங்கலின்றித் தமதுயிரை விட்டதனை வியந்தயர்வார்.

(ப - ரை.) கலந்த அளவில் - உயிர் சேர்ந்த மாத்திரத்தில், நல்லோர் - ஜங்கமமூர்த்திகள், பசவேசர் - பசவண்ணருடைய, காயத்தை - திருமேனியை, கண்டு - பார்த்து, புலர்ந்த - வாடின, முகர் ஆய் - முகத்தையுடையவர்களாய், இது என்ன புதுமை என்ன - இது என்ன அற்புதமென்று, புலம்பி - அழுது, வலம் கொள் - மனோத்ருடத்தையுடையவரும், நிட்டை - வீரவிரதத்தையுடையவருமாகிய, மடிவாலமாச்சையர் - மடிவாலமாச்சையரது, சொல் - சொல்லானது, செவி புறலும் - காதிற் பட்ட மாத்திரத்தில், விலங்கல் இன்றி - தடையில்லாமல், தமது—, உயிரை—, விட்டதனை - விட்டதை (நோக்கி), வியந்து - அதிசயமடைந்து, அயர்வார் - சோகப்படுவாரானார்கள், எ-று.

(பொ-ரை.) உயிர் சேர்ந்த மாத்திரத்தில் ஜங்கமமூர்த்திகள் பசவண்ணருடைய திருமேனியைப் பார்த்து, வாடின முகத்தையுடையவர்களாய், இது என்ன அற்புதமென்று அழுது, மனோத்ருடத்தையுடையவரும், வீரவிரதத்தையுடையவருமாகிய மடிவால மாச்சையரது சொல்லானது காதிற் பட்ட மாத்திரத்தில் தடையில்லாமல் தமது உயிரை விட்டதை நோக்கி யதிசயமடைந்து சோகப்படுவாரானார்கள். (கஅ)

மாச்சையரே வன்மநிட்டை வகுத்துரைக்க வல்லரந்தப்
பேச்சரிய நந்திகளிப் பெருமைசிவ னேயறிவன்
வாய்ச்சொல்லே யன்றியிந்த மாபத்தி வல்லவரா
ரேச்சுடலம் விரும்புநமக் கிதுவெளிதன் றெனவுரைத்தார்.

(ப - ரை.) மாச்சையரே - மடிவாலமாச்சையரொருவரே, வன்ம நிட்டை - வீரவிரதத்தை, வகுத்து - விளக்கி, உரைக்க - சொல்ல, வல்லர் - வல்லவர், அந்த—, பேச்சு அரிய - புகழ்ந்து சொல்லுதற்கரிய, நந்திகள் - பசவண்ணருடைய, இ-இந்த, பெருமை - மஹத்வத்தை, சிவனே - சிவபெருமானொருவனே, அறிவன் - அறிய வல்லவன், வாய்ச் சொல்லே - வாயாற் சொல்வதே, அன்றி - அல்லாமல், இந்த—, மா - பெருமைபொருந்திய, பத்தி - வீரபக்தியை, வல்லவர் - செய்யவல்லவர், ஆர் - யார், ஏச்சு - இகழப்பட்ட, உடலம் - உடம்பை, விரும்பும் - இச்சிக்கின்ற, நமக்கு - (மூடர்களாகிய) எங்களுக்கு, இது - இந்தப் பெருங் கார்யத்தைச் செய்தல், எளிது அன்று என்று - லேசல்லவென்று, உரைத்தார் - சொன்னார்கள், எ - று.

(பொ-ரை.) மடிவாலமாச்சையரொருவரே வீரவிரதத்தை விளக்கிச்சொல்ல வல்லவர்; புகழ்ந்து சொல்லுதற்கரிய அந்த பசவண்ணருடைய இந்த மஹத்வத்தைச் சிவபெருமானொருவனே அறியவல்லவன்; வாயாற் சொல்வதே யல்லாமல் இந்தப் பெருமைபொருந்திய வீரபக்தியைச் செய்யவல்லவர் யார்? இகழப்பட்ட உடம்பை யிச்சிக்கின்ற மூடர்களாகிய எங்களுக்கு இந்தப் பெருங் கார்யத்தைச் செய்தல் லேசல்லவென்று சொன்னார்கள்.

(வி - ரை.) பேச்சு, ஏச்சு என்பவை தொழிற்பெயர்கள். வல்லவர் என்பதில் வன்மை சிறப்பின் மேற்று. வன்மம் - வைராக்யம். மா - மஹாவென்னும் வடசொற்றிரிபு. (கக)

பார்ப்பதற்கு முரைப்பதற்கும் பாவிக்கும் படியதற்கு
மார்க்குமிது செயவரிதா லரகரா வெனத்தொழுதார்
நேர்த்துநின்ற படியாரிப் பாச்சையரை நின்றநல்லோர்
சேர்த்திமடி வாலையற்குச் செப்புகெனச் சென்றுரைத்தார்.

(ப - ரை.) பார்ப்பதற்கும் - (கண்களால்) காண்பதற்கும், உரைப்பதற்கும் - (வாயால்) சொல்லுவதற்கும், பாவிக்கும்படியதற்கும் - (மனத்தால்) நினைப்பதற்கும், ஆர்க்கும் - யார்க்கும், இது - இந்தப் பெருங் காரியத்தை, செய்ய - பண்ண, அரிது- அரிதாம், அரஅரா - ஹர: ஹர:, என்ன - என்று துதித்து, தொழுதார் - வணங்கினார்கள், நேர்த்து - சமீபத்தில், நின்ற - நிற்கின்ற, படியாரிப்பாச்சையரை—, நின்ற- நிலைபெற்ற, நல்லோர் - ஜங்கமமூர்த்திகள், சீர்த்தி - மேன்மைபொருந்திய, மடிவாலையற்கு - மடிவாலமாச்சையர்க்கு, செப்புக - (நடந்த செய்தியை) சொல்லக்கடவாய், என்ன - என்று கட்டளையிடுதலும், சென்று-(அவர்) போய், உரைத்தார்-சொன்னார், எ-று.

(பொ-ரை.) கண்களாற் காண்பதற்கும், வாயாற் சொல்லுவதற்கும், மனத்தால் நினைப்பதற்கும் யார்க்கும் இந்தப் பெருங் காரியத்தைப் பண்ண வரிதாம்; ஹர: ஹர: என்று துதித்து வணங்கினார்கள்; சமீபத்தில் நிற்கின்ற படியாரிப்பாச்சையரை நிலை பெற்ற ஜங்கமமூர்த்திகள் மேன்மைபொருந்திய மடிவாலமாச்சையர்க்கு நடந்த செய்தியைச் சொல்லக்கடவாயென்று கட்டளையிடுதலும், அவர் போய்ச் சொன்னார்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

கேட்ட பொழுதே மாச்சையர் கிளர்ந்த வின்ப மனத்தராய்க்
கோட்ட மறுநற் சங்கமமே குலவு முயிரென் றுரைத்தவுரை
நாட்ட வல்ல நலதீரா நழுவா விரத நந்தியே
யாட்ட மொழிந்த மணிவிளக்கே யரனார்க் கினிதா மன்பனே.

(ப - ரை.) கேட்ட பொழுதே - கேட்ட மாத்திரத்திலே, மாச்சையர் - மடிவாலமாச்சையர், கிளர்ந்த - மிகுந்த, இன்ப மனத்தர் ஆய் - மனமகிழ்ச்சியுடையவராய், கோட்டம் அறு - பாபத்தினின்றும் நீங்கிய, சங்கமமே - ஜங்கமமூர்த்திகளே, குலவும்-விளங்குகின்ற, உயிர்—, என்று—, உரைத்த-சொன்ன, உரை - சொல்லை, நாட்ட வல்ல-நிலைநிறுத்தவல்ல, நல்ல-மிக்க, தீரா - மனோத்ருடத்தையுடையவனே, நழுவா - மறவாத, விரத - வீரவிரதத்தை யுடையவனே, நந்தியே-வசவண்ணனே, ஆட்டம் - சலசம், ஒழிந்த - அற்ற, மணிவிளக்கே - ரத்நதீபம்போன்றவனே, அரனார்க்கு - சிவபெருமானுக்கு, இனிது ஆம் - அன்புள்ள, அன்பனே - பக்தனே, எ-று.

(பொ-ரை.) மடிவாலமாச்சையர் கேட்ட மாத்திரத்திலே மிகுந்த மனமகிழ்ச்சியுடையவராய், பாபத்தினின்றும் நீங்கிய ஜங்கமமூர்த்திகளே விளங்குகின்ற உயிரென்று சொன்ன சொல்லை நிலைநிறுத்தவல்ல மிக்க மனோத்ருடத்தையுடையவனே! மறவாத வீரவிரதத்தையுடையவனே! வசவண்ணனே! சலசமற்ற ரத்நதீபம் போன்றவனே! சிவபெருமானுக்கு அன்புள்ள பக்தனே!

(வி-ரை.) கோட்டம் - குற்றம்; இதற்குப் பகுதி கோடு; கோடுதல் - கோணுதல்.

என்று புகழ்ந்து மாச்சைய ரெழுந்து வாத ரெனுமரங்கள்
பொன்ற முறிக்குங் கடகளிறே பொருந்தா ரென்னுங் கரிக்குழுவைச்
சென்று முறிக்குஞ் சிங்கமோ சிவத்து ரோகச் சிலோச்சயங்கள்
குன்ற வடிக்கும் பெருங்காற்றே கொடிய வினையின் கூற்றமோ.

(ப-ரை.) என்று—, மாச்சையர் - மடிவால மாச்சையர், புகழ்ந்து - துதித்து, எழுந்து—, வாதர் - பரசமயவாதிகள், எனும் - என்கின்ற, மரங்கள்-விருக்ஷங்களை, பொன்ற - பட்டுப்போகும்படி, முறிக்கும் - ஒடித்துத் தள்ளவல்ல, கடம் களிறே - மத யானையே, பொருந்தார் - பகைவர்கள், என்னும் - என்கின்ற, கரி - யானை,

குழுவை - கூட்டத்தை, சென்று - போர்க்குப் போய், முரிக்கும் - கொல்லுவல்ல, சிங்கமோ—, சிவத்துரோகர் - சிவத்ரோஹிகளாகிய, சிலோச்சயங்கள்-பர்வதங்களை, குன்ற - அழியும்படி, அடிக்கும் – வீசித் தள்ளவல்ல, பெரும் காற்றோ - சண்டமாருதமோ, கொடிய வினையின் - தீவினையின், கூற்றமோ-யமனோ,எ-று.

(பொ-ரை.) என்று மடிவாலமாச்சையர் துதித்து, எழுந்து, பரசமயவாதிகளென்கின்ற விருக்ஷங்களைப் பட்டுப்போகும்படி யொடித்துத் தள்ளவல்ல மதயானையோ? பகைவர்களென்கின்ற யானைக்கூட்டத்தைப் போர்க்குப் போய்க் கொல்லவல்ல சிங்கமோ? சிவத்ரோஹிகளாகிய பர்வதங்களை யழியும்படி வீசித் தள்ளவல்ல சண்டமாருதமோ? கொடிய தீவினையின் யமனோ?

(வி-ரை.) கூற்றம் - உடலுயிர்களைக் கூறுபடுத்துவோன். (௨௨)

தக்கன் வேள்வி தகர்த்தவனோ சமனை யுதைக்குந் தாளினனோ
பொக்க நெறியாம் பெருங்காட்டைப் பொடியா யெரிக்கும் பொங்கழலோ
தொக்க புரத்தை யெரித்தபரன் சூலா யுதமோ சுடர்மழுவோ
மிக்க வீர விருதகலா விமலன் கணத்து ளொருவனோ.

(ப - ரை.) தக்கன் வேள்வி - தக்ஷயாகத்தை, தகர்த்தவனோ - அழித்த வீரபத்திரக்கடவுளோ, சமனை - யமனை, உதைக்கும் - உதைத்துக் கொல்லுகின்ற, தாளினனோ-திருவடியையுடைய சிவபெருமானோ, பொக்கம் நெறி ஆம் - துர்மார்க்கமாகிய, பெரு - பெரிய, காட்டை - வனத்தை, பொடியாய் - சாம்பராம்படி, எரிக்கும் - சுட்டழிக்கின்ற, பொங்கு அழலோ-பெரு நெருப்போ, தொக்க கூட்டமாகிய, புரத்தை - த்ரிபுரங்களை, எரித்த - சுட்டெரித்த, பரன் - சிவபெருமானுடைய, சூலாயுதமோ—, மழுவோ-மழுப்படையோ, மிக்க-மேன்மையாகிய, வீர்விருது - சுத்தவீரனது வெற்றிக் கொடியானது, அகலா - விட்டுப்பிரியாத, விமலன் கணத்துள் - சிவகணங்களில், ஒருவனோ—, எ - று.

(பொ-ரை.) தக்ஷயாகத்தை யழித்த வீரபத்திரக்கடவுளோ? யமனை உதைத்துக் கொல்லுகின்ற திருவடியை யுடைய சிவபெருமானோ? துர்மார்க்கமாகிய பெரிய வனத்தைச் சாம்பராம்படிச் சுட்டழிக்கின்ற பெரு நெருப்போ? கூட்டமாகிய த்ரிபுரங்களைச் சுட்டெரித்த சிவபெருமானுடைய சூலாயுதமோ? மழுப்படையோ? மேன்மையாகிய சுத்தவீரனது வெற்றிக்கொடியானது விட்டுப்பிரியாத சிவகணங்களிலொருவனோ? (௨௩)

என்ன நடந்து சிவகணத்தோ ரிருக்கு மவையி லிறைஞ்சியெழுந்
தன்னர் பாதம் பிடித்தவர்த மத்தம் பால மணைத்ததற்பி
னுன்னு மவர்தா ளுள்ளங்கொண் டுத்த ரங்கொண் டுறுதிகொண்டு
கின்ன ரைய ரருகணைந்து மாச்சி தேவர் கிளத்துவார்.

(ப-ரை.) என்ன - என்று (வியந்து) சொல்லும்படி, நடந்து-சென்று, சிவகணத்தோர்-ஜங்கமமூர்த்திகள், இருக்கும் - நிறைந்திருக்கின்ற, அவையில் - திருக்கூட்டத்தில், இறைஞ்சி-(ஸாஷ்டாங்கமாக) வணங்கி, எழுந்து-(மேலே) எழுந்து, அன்னர் - அந்த ஜங்கமமூர்த்திகளுடைய, பாதம் - திருவடிகளை, பிடித்து—, அவர் - அவர்களுடைய, அத்தம் - திருக்கரங்களை, பாலம் - நெற்றியில், அணைத்து - சூட்டி, அதன் பின் - அதன் பிறகு, உன்னும் - நினைத்தற்குரிய, அவர் - அவர்களுடைய, தாள் - திருவடிகளை, உள்ளம்-மனத்தில், கொண்டு - இருத்தி, உத்தரம் கொண்டு - விடைபெற்று, உறுதி கொண்டு - மனோத்ருடத்துடன், கின்னரையர் - கின்னரப்ரம்மையர், அருகு - சமீபத்தில், அணைந்து - சென்று, மாச்சிதேவர் - மடிவாலமாச்சையர், கிளத்துவார் - சொல்லத்தொடங்கினர் (எவ்வாறெனின்), எ-று

(பொ-ரை.) என்று வியந்து சொல்லும்படிச் சென்று, ஜங்கமமூர்த்திகள் நிறைந்திருக்கின்ற திருக்கூட்டத்தில் ஸாஷ்டாங்கமாக வணங்கி, மேலே யெழுந்து, அந்த ஜங்கமமூர்த்திகளுடைய திருவடிகளைப்பிடித்து, அவர்களுடைய திருக்கரங்களை நெற்றியிற் சூட்டி, அதன் பிறகு நினைத்தற்குரிய அவர்களுடைய திருவடிகளை மனத்திலிருத்தி, விடைபெற்று, மனோத்ருடத்துடன் கின்னரப்ரஹ்மையர் சமீபத்திற் சென்று, மடிவாலமாச்சையர் சொல்லத் தொடங்கினார்; எங்ஙனெனின். (உச)

பத்த ருயிரே மெய்ப்பொருளே பத்தி மணியா நந்தியெனு
முத்த மனை நீ யுடன்கொண்டங் கும்பர் கோனை யுறலாமோ
வித்த ரையின்மே லரன்பெருமை யெங்கு நிறைத்துக் காட்டாதே
சித்த மிருவீர் களும்பொருந்திச் செல்லும் படிதான் செல்லுமோ.

(ப-ரை.) பத்தர் - சிவபக்தர்களுக்கு, உயிரே - உயிர்போன்றவரே, மெய்ப்பொருளே-தத்துவப்பொருளே, மணி ஆம் - பக்தி ரத்நமாகிய, நந்தி - வசவண்ணன், என்னும்-என்கின்ற, உத்தமனை - பெரியோனை, நீ—, உடன் - கூட, கொண்டு - அழைத்துக்கொண்டு, அங்கு - அவ்விடத்தில், உம்பர் - தேவர்களுக்கு, கோனை - இறைவனாகிய சிவபெருமானை, உறலாமோ - சேரலாமோ, இ - இந்த, தரையின் - பூமியின், மேல் - மீது, அரன் பெருமை - சிவாதிக்யத்தை, எங்கும்-எவ்விடத்திலும், நிறைத்து - வியாபிக்கச்செய்து, காட்டாதே - காண்பிக்காமலே, இருவீர்களும் - நீங்கள் இரண்டு சிவசரணர்களும், சித்தம் - மனம், பொருந்தி-ஒருமித்து, செல்லும்-போகின்ற, படிதான்—(அந்த)காரியமும், செல்லுமோ - முடிவு பெறுமோ, எ-று.

(பொ-ரை.) சிவபக்தர்களுக்கு உயிர்போன்றவரே ! தத்துவப்பொருளே ! பக்தி ரத்நமாகிய வசவண்ணனென்கின்ற பெரியோனை நீ கூட அழைத்துக்கொண்டு அவ்விடத்தில் தேவர்களுக்கு இறைவனாகிய சிவபெருமானைச் சேரலாமோ ? இந்தப் பூமியின் மீது சிவாதிக்யத்தை எவ்விடத்திலும் வ்யாபிக்கச்செய்து காண்பிக்காமலே நீங்கள் இரண்டு சிவசரணர்களும் மனம் ஒருமித்துப் போகின்ற அந்தக் காரியமும் முடிவு பெறுமோ ? (உரு)

சிவமா கணத்தோ ரறியாமற் சிவனுந் தமைக்கொண் டேகுமதெ
னவமா மூன்று விதபத்தி நயந்து வளர்க்கு நந்திகளைத்
தவமா கேச ரிடத்தகற்றித் தன்பாற் கொண்டு சார்தனன்றே
புவிமேற் றனது பெருமையார் புதுக்கி நின்று பொலிவிப்பார்.

(ப-ரை.) மா - மேன்மைபொருந்திய, சிவகணத்தோர்-ஜங்கமமூர்த்திகள், அறியாமல் - தெரியாதபடி, சிவனும் - சிவபெருமானும், தம்மை - தங்களை, கொண்டு - அழைத்துக்கொண்டு, ஏகும் அது-போகும்படியான அந்தக்காரணம், என்-யாது, நவம் ஆம் - அற்புதமாகிய, மூன்று விதம் - மூவகைப்பட்ட, பத்தி - பக்தியை, நயந்து - விரும்பி, வளர்க்கும் - காப்பாற்ற வல்ல, நந்திகளை - வசவண்ணரை, தவம் - வீரவிரதத்தையுடைய, மாகேசரிடத்து - வீரமாஹேஶ்வரர்களிடத்தினின்றும், அகற்றி - விலக்கி விட்டு, தன்பால் - தன்னிடத்தில், கொண்டு - அழைத்துக்கொண்டு, சார்தல் - போவது, நன்றே - நன்மையோ, புவிமேல் - பூமியின்மீது, தனது —, பெருமை - மஹத்வத்தை, புதுக்கி - சிறப்பித்து, நின்று - முன்னின்று, பொலிவிப்பார் - மேன்மையடையப் பண்ணவல்லவர், யார்—, எ-று.

(பொ-ரை.) மேன்மைபொருந்திய ஜங்கமமூர்த்திகள் தெரியாதபடிச் சிவபெருமானும் தங்களை யழைத்துக்கொண்டு போகும்படியான அந்தக் காரணம் யாது ? அற்புதமாகிய மூவகைப்பட்ட பக்தியை விரும்பிக் காப்பாற்றவல்ல வசவண்ணரை

வீரவிரதத்தையுடைய வீரமாஹேஸ்வரர்களிடத்தினின்றும் விலக்கிவிட்டுத் தன்னிடத்தில் அழைத்துக்கொண்டு போவது நன்மையோ? பூமியின் மீது தனது மஹத்வத்தைச் சிறப்பித்து முன்னின்று மேன்மையடையப் பண்ணவல்லவர்யார்?

(வி-ரை.) நன்றே என்னும் ஏகாரமும், யார் என்னும் வினாவும் எதிர்மறைகள். மூவிதபக்தி - குருலிங்க ஜங்கம பக்திகள். (௨௬)

நந்தி யகன்றான் மண்மீதி னம்ப னன்பின் பேரகலு
மிந்த முறையா னும்மனத்தி னிச்சைப் படியே செலவொண்ணு
புந்தி மகிழ்ந்து நந்திதரை பொருந்துங் கால மெல்லாநீர்
சிந்தை மகிழ்ந்தங் குடனிருப்பீ ரெழுவீ ரென்னத் தெளிந்துரைத்தார்.

(ப-ரை.) நந்தி-வசவண்ணர், அகன்றால் - (உலகத்தை) விட்டுப்போவாராயின், மண் மீதில் - பூமியின் மீது, நம்பன் அன்பின்-சிவபக்தியென்கின்ற, பேர் - பெயரே, அகலும் இல்லாமற்போய்விடும், இந்த—, முறையானும் - நோக்கத்தினாலும், மனத்தின் இச்சைப்படி - மனோப்ரியத்தினாலும், செல்ல போக, ஒண்ணு-முடியா, நந்தி-வசவண்ணர், புந்தி மகிழ்ந்து - மனமகிழ்ந்து, தரை - பூமியில், பொருந்தும் - வாழ்கின்ற, காலம்—, எல்லாம் - முழுதும், நீர்—, சிந்தை மகிழ்ந்து - மனமகிழ்ந்து, அங்கு - அவ்விடத்தில், உடன் - கூட, இருப்பீர் - வாழுங்கள், என்ன - என்று, தெளிந்து - மனோத்ருடத்துடன், உரைத்தார் - சொல்லியருளினார், எ-று.

(பொ - ரை.) வசவண்ணர் உலகத்தை விட்டுப் போவாராயின் பூமியின் மீது சிவபக்தியென்கின்ற பெயரே யில்லாமற் போய்விடும்; இந்த நோக்கத்தினாலும் மனோப்ரியத்தினாலும் போகமுடியா; வசவண்ணர் மனமகிழ்ந்து வாழ்கின்ற காலம் முழுதும் நீர் மனமகிழ்ந்து அவ்விடத்தில் கூட வாழுங்களென்று மனோத்ருடத்துடன் சொல்லியருளினார். (௨௭)

தனுமெல் லெனவே யசைந்தசைந்து தவக்கின் னரையர் சயனக்கண்
கனவு தெளிந்தங் கெழுவார்போற் கடிதி னெழவக் கணத்தினிலே
மனமா திடத்தர் மாச்சையர் மலர்த்தாள் மீதில் வசவேச
ரனகா வெனமு னெழுந்திறைஞ்சி யருகிற் றவத்தோ ரடிபணிந்தார்.

(ப - ரை.) தனு - திருமேனியானது, மெல்லென - பையப்பைய, அசைந்து அசைந்து - அசைவுற்று அசைவுற்று, தவம் - வீரவிரதத்தையுடைய, கின்னரையர் - கின்னரப்ரஹ்மையர், சயனக்கண் - நித்திரையில், கனவு தெளிந்து—, அங்கு - அவ்விடத்தில், எழுவார் போல் - எழுந்திருப்பவர் போல், கடிதின் - சீக்கிரமாக, எழ - எழுந்திருக்கவும், அக் கணத்திலே - அந்த க்ஷணத்திலே, மா - மேன்மையாகிய, மனதிடத்தர்-மனோத்ருடத்தையுடையவராகிய, மாச்சையர் - மடிவாலமாச்சையாது, மலர் - தாமரைமலர் போன்ற, தாள் - திருவடிகளின், மீது-மீதில், வசவேசர் - வசவண்ணர், அனகா - சிவபெருமானே, என்ன - என்று (துதித்து ஸாஷ்டாங்கமாகப் பணிந்து), முன் - எதிரே, எழுந்து - எழுந்திருந்து, இறைஞ்சி - வணங்கி, அருகில் - சமீபத்திலிருக்கின்ற, தவத்தோர்-ஜங்கமமூர்த்திகளுடைய, அடி - திருவடிகளையும், பணிந்தார் - (ஸாஷ்டாங்கமாக) வணங்கினார், எ - று.

(பொ-ரை.) திருமேனியானது பையப்பைய அசைவுற்றசைவுற்று, வீரவிரதத்தையுடைய கின்னரப்ரஹ்மையர் நித்திரையில் கனவு தெளிந்து அவ்விடத்தில் எழுந்திருப்பவர் போல் சீக்கிரமாக எழுந்திருக்கவும், அந்த க்ஷணத்திலே மேன்மைபொருந்திய மனோத்ருடத்தையுடையவராகிய மடிவாலமாச்சையாது தாமரைமலர் போன்ற திருவடிகளின் மீதில் வசவண்ணர், சிவபெருமானே! என்று துதித்து, ஸாஷ்டாங்கமாகப் பணிந்து, எதிரே எழுந்திருந்து, வணங்கி, சமீபத்திலிருக்கின்ற ஜங்கமமூர்த்திகளுடைய திருவடிகளையும் ஸாஷ்டாங்கமாக வணங்கினார். (௨௮)

எழுந்த விருவோர் களுமகத்தோர்க் கிறைஞ்சி நின்று ரிருந்தவத்தோ
ரொழுங்கு தீரா மாச்சையரை யுவந்து புவனி யுருத்திரா
வழுந்து வீர தவத்திரா வருளா கரனே யறமுதல்வா
வெழுந்த சூர சிங்கார மெழிலா பரண மெனவுடையாய்.

(ப - ரை.) எழுந்த-எழுந்திருந்த, இருவோர்களும் - இரண்டு சிவசரணர்களும், மகத்தோர்க்கு-ஜங்கமமூர்த்திகளை, இறைஞ்சி நின்றார் - வணங்கி நின்றார்கள், இரு-மேன்மைபொருந்திய, தவத்தோர் - ஜங்கமமூர்த்திகளும், ஒழுங்கு - ஒழுக்கத்தினின்றும், தீரா - விட்டுப்பிரியாத, மாச்சையரை - மடிவாலமாச்சையரை, உவந்து - சந்தோஷத்துடன், புவனி உருத்திரா - பூலோக ருத்ரனே, அழுந்து - உறுதியாகிய, வீரதவம் - வீரவிரதத்தை யநுஷ்டிப்பதில், தீரா - தைர்யமுள்ளவனே, அருள் ஆகரனே - க்ருபாமூர்த்தியே, அறம் முதல்வா - தர்மமூர்த்தியே, எழுந்த - பிரகாசிக்கின்ற, சூரம்-வீரமாகிய, சிங்காரம் - அழகே, ஆபரணம் என்ன - பூஷணமாக, உடையாய் - உடையவனே, எ-று.

(பொ-ரை.) எழுந்திருந்த இரண்டு சிவசரணர்களும் ஜங்கமமூர்த்திகளை வணங்கி நின்றார்கள்; மேன்மைபொருந்திய ஜங்கமமூர்த்திகளும் ஒழுக்கத்தினின்றும் விட்டுப்பிரியாத மடிவாலமாச்சையரைச் சந்தோஷத்துடன், பூலோக ருத்ரனே! உறுதியாகிய வீரவிரதத்தை யநுஷ்டிப்பதில் தைர்யமுள்ளவனே! க்ருபாமூர்த்தியே! தர்மமூர்த்தியே! பிரகாசிக்கின்ற வீரமாகிய அழகே பூஷணமாகவுடையவனே! (௨௯)

உறுதி யுரைக்கிற் கோபியா யுவந்த விடத்தி லுயிரளிக்கு
மறுதி மானே யசஞ்சலனே யரிய சீல மாதரிப்போய்
பெறுதி சிவமே யெனத்தெளிந்திவ் வுலக நீதி பேணுதா
யிறுதி வரினுஞ் செய்யாத தென்றுஞ் செய்யா வெண்ணத்தாய்.

(ப-ரை.) உறுதி - உறுதிச்சொற்களை, உரைக்கின் - சொல்லுவோமாயின், கோபியாய் - கோவியாதவனே, உவந்த - திருவுளம் மகிழ்ந்த, இடத்தில் - இடங்களில், உயிர் - உயிரை, அளிக்கும் - அநுக்ரஹஞ்செய்யவல்ல, அறுதிமானே-ஸ்வயாதிபதியே, அசஞ்சலனே-மனோத்ருடமுள்ளவனே, அரிய-மேன்மை பொருந்திய, சீலம்-வீரசைவாசாரத்தை, ஆதரிப்போய் - காப்பாற்றவல்லவனே, பெறுதி - அடைகின்ற பொருள், சிவமே - சிவமொன்றே, என்ன-என்று, தெளிந்து - அறிந்து, இ - இந்த, உலக நீதி - லோகாசாரத்தை, பேணுதாய் - விரும்பாதவனே, இறுதி - மரணம், வரினும் - உண்டாயினும், செய்யாதது-பண்ணத்தகாத காரியத்தை, என்றும் - எப்போதும், செய்யா-பண்ணுத, எண்ணத்தாய்-திருவுளத்தையுடையவனே, எ-று.

(பொ-ரை.) உறுதிச்சொற்களைச் சொல்லுவோமாயின் கோவியாதவனே! திருவுளம் மகிழ்ந்த இடங்களில் உயிரை யநுக்ரஹஞ்செய்யவல்ல ஸ்வயாதிபதியே! மனோத்ருடமுள்ளவனே! மேன்மைபொருந்திய வீரசைவாசாரத்தைக் காப்பாற்றவல்லவனே! அடைகின்ற பொருள் சிவமொன்றே யென்றறிந்து இந்த லோகாசாரத்தை விரும்பாதவனே! மரணமுண்டாயினும் பண்ணத் தகாத காரியத்தை எப்போதும் பண்ணுத திருவுளத்தையுடையவனே! (௩௦)

மாறு நலத்த வெலற்கரிய மடிவா லைய வெனப்பெரியோர்
கூறு நின்று ரவர்தம்மைக் கும்பிட் டேத்திக் கொடியேனைத்
தேறு வென்னை யொருபொருளாய்ச் செய்யும் படியெ னடியனே
னேறு விண்ணப் பந்தருவீ ரென்று நின்றங் கிறைஞ்சினர்.

(ப-ரை.) மாரு - அழியாத, நலத்த - சித்தியையுடையவனே, வெலற்கு அரிய - (யாவராலும்) ஜயிக்கமுடியாத, மடிவாலைய - மடிவாலமாச்சையனே, என்ன - என்று, பெரியோர் - ஜங்கமமூர்த்திகள், கூறுகின்றார் - துதித்தார்கள், அவர் தம்மை - அவர்களை, கும்பிட்டு - கைகூப்பி வணங்கி, எத்தி - துதித்து, கொடியேனை - தீயோனாகிய அடியேனை, தேரு-அறிவில்லாதவனாகிய, என்னை-அடியேனை, ஒருபொருளாய்ச் செய்யும் - ஒரு பொருட்படுத்தி மதிக்கின்ற, படி - விதத்திற்குக் காரணம், என் - யாது, அடியனேன் - அடியேனை, ஏறு விண்ணப்பம் தருவீர் - உயர்த்திச் சொல்லாதிருங்கள், என்று - என்று சொல்லி, நின்று—, அங்கு - அவ்விடத்தில், இறைஞ்சினார் - (மடிவாலமாச்சையர்) வணங்கினார், எ - று.

(பொ-ரை.) அழியாத சித்தியையுடையவனே! யாவராலும் ஜயிக்கமுடியாத மடிவாலமாச்சையனே! என்று ஜங்கமமூர்த்திகள் துதித்தார்கள்; அவர்களை கைகூப்பி வணங்கித் துதித்து, தீயோனாகிய அடியேனை, அறிவில்லாதவனாகிய அடியேனை ஒரு பொருட்படுத்தி மதிக்கின்ற விதத்திற்குக் காரணம் யாது? அடியேனை உயர்த்திச் சொல்லாதிருங்களென்று சொல்லி நின்று, அவ்விடத்தில் மடிவாலமாச்சையர் வணங்கினார். (கூக)

இறைஞ்சி யதற்பின் வசவேச ரெழிலார் முகத்தை யெதிர்நோக்கி
நிறைஞ்ச தவத்தோர் புகல்கின்றார் நிதியங் கொடுக்க லாமுடலஞ்
செறிஞ்சு கொடுக்க முடியாது செயலாற் கொடுக்க லாமனத்தைப்
பிறிஞ்சு கொடுக்க முடியாது பிரிய மதனாற் பிடித்திடலாம்.

(ப - ரை.) இறைஞ்சி அதன் பின் - (மடிவாலமாச்சையர்) வணங்கிய பிறகு, வசவேசர்-வசவண்ணரது, எழில் ஆர் - அழகுபொருந்திய, முகத்தை-திருமுகத்தை, எதிர்-நேரே, நோக்கி-பார்த்து, நிறைஞ்ச - நிறைந்திருக்கின்ற, தவத்தோர் - ஜங்கமமூர்த்திகள், புகல்கின்றார் சொல்லுகின்றார்கள் (எவ்வாறெனின்), நிதியம்-செல்வத்தை,கொடுக்கலாம்-தரக்கூடும், உடலம்-உடம்பை,செறிஞ்சு-சேர்த்து, கொடுக்க முடியாது - தரக்கூடாது, செயலால் - செய்கையினால், கொடுக்கலாம் - தரக்கூடும், மனத்தை-உள்ளத்தை, பிறிஞ்சு-பிரித்து, கொடுக்க முடியாது-தரக்கூடாது, பிரியம் அதனால் - அன்பினால், பிடித்திடலாம் - பற்றக்கூடும், எ - று.

(பொ - ரை.) மடிவால மாச்சையர் வணங்கிய பிறகு, வசவண்ணரது அழகு பொருந்திய திருமுகத்தை நேரே பார்த்து, நிறைந்திருக்கின்ற ஜங்கமமூர்த்திகள் சொல்லுகின்றார்கள்; எவ்வாறெனின்:— செல்வத்தைத் தரக்கூடும்; உடம்பைச் சேர்த்துத் தரக்கூடாது; செய்கையினால் தரக்கூடும். உள்ளத்தைப் பிரித்துத் தரக்கூடாது; அன்பினாற் பற்றக்கூடும்.

(வி - ரை) நிதியம் என்பதில் அம் - சாரியை. நிறைஞ்ச என்பது நிறைந்த என்பதன் திரிபு; செறிஞ்சு என்பது செறிந்து என்பதன் திரிபு. பிறிஞ்சு என்பதுபிரிந்து என்பதன் திரிபு; இவை செறிஞ்சு பிறிஞ்சுஎன்பன பிறவினைப்பொருளில் வந்தன.

மருவு முயிரை யளிக்கொணு வைராக் கியத்தாற் கொடுக்கலா
மருமை யுயிர்சங் கமத்துடனே யகன்று லகற லனைவுற்றால்
வருத விசர்த நந்திகட்கே வருமென் றேத்த வசவேசர்
பரிவி னிறைஞ்சி யிம்மொழிக்குப் பற்றே னடியே னென்றிருந்தார்.

(ப-ரை.) மருவும் - சரீர ஸம்பந்தமாயிருக்கின்ற, உயிரை—, அளிக்க ஒண்ணு - தரக்கூடா, வைராக்கியத்தால் - வைராக்யத்தினால், கொடுக்கலாம் - தரக்கூடும், அருமை - அருமையாகிய, உயிர் - உயிரானது, சங்கமத்துடனே - ஜங்கமமூர்த்திகளுடனே, அகன்றால் - (அவர் உயிர்) சென்றால், அகறல் (கூடவே) செல்லுதலும்,

அணைவு உற்றால் - (அவர் உயிர்) வந்தால், வருதல் - (கூடவே) வருதலும், இந்த—, நந்திகட்கே - வசவண்ணரொருவர்க்கே, வரும் - முடியும், என்று—, ஏத்த - துதித் தலும், வசவேசர் - வசவண்ணர், பரிவின் - அன்புடன், இறைஞ்சி - வணங்கி, இ - இந்த, மொழிக்கு - புகழ்ச்சிக்கு, அடியேன்—, பற்றேன் - ஒப்பமாட்டேன், என்று - என்று சொல்லி, இருந்தார்—, எ - று.

(பொ-ரை) சரீர ஸம்பந்தமாயிருக்கின்ற உயிரைத் தாக்கூடா; வைராக்யத் தினல் தாக்கூடும்; அருமையாகிய உயிரானது ஜங்கமமூர்த்திகளுடனே அவர் உயிர் சென்றால் கூடவே செல்லுதலும், அவர் உயிர் வந்தால் கூடவே வருதலும், இந்த வச வண்ணரொருவர்க்கே முடியுமென்று துதித்தலும், வசவண்ணர் அன்புடன் வணங்கி, இந்தப் புகழ்ச்சிக்கு அடியேன் ஒப்பமாட்டேனென்று இருந்தார். (கூரு)

இருந்த பெரியோ ரிருவரையு மேத்தித் தத்த மிடத்தணைந்தார்
திருந்து தவத்தர் மாச்சையர் வசவே சுரரிற் செலவிடுத்தே
பொருந்து புகழ்த்தம் மடம்புகுந்தார் கின்ன ரையர்தம் புனிதவகம்
பெருந்தன் மையராய் மகிழ்ந்துற்றார் மடிவா லையர்சீர் பேசியே.

(ப - ரை.) இருந்த—நிறைந்திருந்த, பெரியோர் - ஜங்கமமூர்த்திகள், இருவரை யும் - இரண்டு சிவசரணர்களையும், ஏத்தி - துதித்து, தத்தம் - தங்கள் தங்களுடைய, இடத்து - திருமடங்களில், அணைந்தார் - எழுந்தருளினார்கள், திருந்து - தெளிந்த, தவத்தர் - வீரவிரதத்தையுடையவராகிய, மாச்சையர் - மடிவாலமாச்சையர், வசவே சுரர் - வசவண்ணரை, இல் — (தமது) திருமாளிகைக்கு, செல்ல - எழுந்தருளும்படி, விடுத்து—விடைகொடுத்து, பொருந்து - நிலைபெற்றிருக்கின்ற, புகழ் - புகழையுடைய, தம் தமது, மடம் - திருமடத்திற்கு, புகுந்தார் - எழுந்தருளினார், கின்னரையர் - கிந்நரப்ரஹ்மையரும், தம் - தமது, புனிதம் - பரிசுத்தமாகிய, அகம் - திருமடத்தில், பெருந்தன்மையர் ஆய் - பெருமையுடையவராகி, மகிழ்ந்து -சந்தோஷத்துடன், மடி வாலையர் - மடிவாலமாச்சையரது, சீர் - பெருமையை, பேசி - புகழ்ந்து, உற்றார் - சென்றார், எ - று.

(பொ-ரை) நிறைந்திருந்த ஜங்கமமூர்த்திகள் இரண்டு சிவசரணர்களையும் துதி த்து, தங்கள் தங்களுடைய திருமடங்களில் எழுந்தருளினார்கள்; தெளிந்த வீரவிரத த்தை யுடையவராகிய மடிவாலமாச்சையர் வசவண்ணரைத் தமது திருமாளிகைக்கு எழுந்தருளும்படி விடைகொடுத்து, நிலைபெற்றிருக்கின்ற புகழையுடைய தமது திரு மடத்திற்கு எழுந்தருளினார்; கிந்நரப்ரஹ்மையரும் தமது பரிசுத்தமாகிய திருமடத் தில் பெருமையுடையவராகி, சந்தோஷத்துடன் மடிவாலமாச்சையரது பெருமை யைப் புகழ்ந்து சேர்ந்தார். (கூசு)

கின்னரையர்புராணம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - கஉஉஉ.

சிவமயம்.

# மேதாகேதையர் புராணம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பெருமூ விதபத் தியெனுந் திருவைப் பேணுந் திருநந் திகள்பே ருயிர்தான்
கருணா கரசங் கமமென் பதைமுக் காலு முலகத் தவர்காண் டகவே
வரமே தாகே தையரா வியைமா மதிவே ணியர்வவ் வவகன் றிடலுந்
தருமே வியவிச் சலநன் னகர்வாழ் சற்பத் தருடன் வசவே சுரரும்.

(ப - ரை.) பெரு - மேன்மைபொருந்திய, மூவித பத்தி - மூன்று வகைப்பட்ட பக்தி, என்னும் - என்கின்ற, திருவை - செல்வத்தை, பேணும் - விரும்புகின்ற, திருநந்திகள் - ஸ்ரீவசவண்ணர், பேர் - சிறந்த, உயிர்—, கருணாகரன் - க்ருபாமூர்த்தியாகிய, சங்கமம் - ஜங்கமமூர்த்திகளே, என்பதை-என்று சொல்லுகின்ற சொல்லை. முக்காலும் - த்ரிகாலங்களிலும், உலகத்தவர் - உலகத்தார், காண் தக - பார்த்தறியும்பொருட்டு, வரம் - மேன்மைபொருந்திய, மேதாகேதையர் - மேதாகேதையரது, ஆவியை - உயிரை, மா - அழகிய, மதி - சந்திரனைத் தரித்திருக்கின்ற, வேணியர் - ஜடாபாரத்தை யுடையவராகிய சிவபெருமான், வவ்வ - கவர்ந்துபோதலும், அகன்றிடலும் - (அவர்) திருமேனியை விட்டுச் சிவபதமடைந்த மாத்திரத்தில், தரு - மரங்கள், மேவிய - சூழ்ந்திருப்பதும், விச்சலன் - விஜ்ஜலராஜன் ஆள்கின்றதும், நல் - மேன்மையானதுமாகிய, நகர் - கல்யாண பட்டினத்தில், வாழ் - வாழ்கின்ற, சற்பத்தருடன் - சிவபக்தர்களும், வசவேசுரரும் - வசவண்ணரும், எ - று.

(பொ - ரை.) மேன்மைபொருந்திய மூன்று வகைப்பட்ட பக்தியென்கின்ற செல்வத்தை விரும்புகின்ற ஸ்ரீவசவண்ணர் சிறந்த உயிர் க்ருபாமூர்த்தியாகிய ஜங்கம மூர்த்திகளே யென்று சொல்லுகின்ற சொல்லை த்ரிகாலங்களிலும் உலகத்தார் பார்த்தறியும்பொருட்டு மேன்மைபொருந்திய மேதாகேதையரது உயிரை அழகிய சந்திரனைத் தரித்திருக்கின்ற ஜடாபாரத்தை யுடையவராகிய சிவபெருமான் கவர்ந்து போதலும், அவர் திருமேனியை விட்டுச் சிவபதமடைந்த மாத்திரத்தில், மரங்கள் சூழ்ந்திருப்பதும், விஜ்ஜலராஜன் ஆள்கின்றதும், மேன்மையானதுமாகிய கல்யாண பட்டினத்தில் வாழ்கின்ற சிவபக்தர்களும், வசவண்ணரும். (க)

உவமிக் கவொணு துயர்சங் கமமு மோலக் கமிகுத் தொலியின் னியமோ
டவணுற் றபினம் மடிவா லையவர்வந் தாரில் லையழைத் திடுகென் றளவின்
பவமற் றுளமாச் சையர்தம் மிடைபோய்ப் படியா ரிகள்பாச் சர்பணிந் துகரங்
குவிவுற் றையமே தாகே தையர்நங் கோமா னடிகூ டினரென் றளவில்.

(ப-ரை.) உவமிக்க ஒண்ணுது - ஒப்பிட்டுச்சொல்லக்கூடாமல் (அவ்வளவு), உயர் - மேன்மைபொருந்திய, சங்கமமும் - ஜங்கமமூர்த்திகளும், ஓலக்கம் மிகுத்து - பெருங் கூட்டமாகி, ஒலி - ஆரவாரிக்கின்ற, இன் - இனிய, இயமோடு - வாத்தியங்களுடன், அவண் - அவ்விடத்தில், உற்ற - அடைந்த, பின் - பிறகு, அ - அந்த மடிவாலையர் - மடிவாலமாச்சையர், வந்தார் இல்லை - வந்திலர், அழைத்திடுக - அழைத்துவாருங்கள், என்ற அளவின் - என்று கட்டளையிட்ட மாத்திரத்தில், படியாரிகள்பாச்சர் படியாரிப்பாச்சையர், பவம் அற்று உள்ள - பிறவியில்லாதவராகிய, மாச்சையர் தம்

இடை - மடிவாலமாச்சையிடத்தில், போய் - சென்று, பணிந்து-(ஸாஷ்டாங்கமாக) வணங்கி, கரம் குவி உற்று - அஞ்சலிசெய்து, ஐய - ஐயனே, மேதாகேதையர்—; நம் - நமது, கோமான் - சிவபெருமானுடைய, அடி - திருவடி நீழலில், கூடினர்- சேர்ந்தார், என்ற அளவில் - என்று சொன்ன மாத்திரத்தில், எ - று.

(பொ - ரை.) ஒப்பிட்டுச் சொல்லக்கூடாமலவ்வளவு மேன்மை பொருந்திய ஜங்கமமூர்த்திகளும் பெருங்கூட்டமாகி, ஆரவாரிக்கின்ற இனிய வாத்தியங்களுடன் அவ்விடத்தில் அடைந்த பிறகு, அந்த மடிவாலமாச்சையர் வந்திலர்; அழைத்து வாருங்களென்று கட்டளையிட்ட மாத்திரத்தில், படியாரிப்பாச்சையர் பிறவியில்லாதவராகிய மடிவாலமாச்சைய ரிடத்திற் சென்று, வணங்கி, அஞ்சலிசெய்து, ஐயனே! மேதாகேதையர் நமது சிவபெருமானுடைய திருவடி நீழலிற் சேர்ந்தாரென்று சொன்ன மாத்திரத்தில். (உ)

வேறு.

அவ்வழியார் பெரியோர்கள் வந்தா ரென்ன
வல்லையர் மதுவைய ரல்ல மையர்
செவ்வியராஞ் சகதேவத் தண்ட நாதர்
சகளேச மாதரசர் தெசரி தேவ
ரெவ்வமிலா விப்பையர் கின்ன ரைய
ரியற்றெலுங்கச் சோமையர் கேசி ரர்சர்
கைவருநற் பாச்சரசர் தாசி மையர்
காசிநா தையருடன் கல்லி தேவர்.

(ப-ரை.) அவ்வழி - அவ்விடத்தில், பெரியோர்கள்-ஜங்கமமூர்த்திகளில்,வந்தார்- வந்தவர்கள், யார்—, என்ன - என்று (மடிவாலமாச்சையர்) கேட்டலும், அல்லையர் - அல்லையரும், மதுவையர் - மதுவையரும், அல்லமையர் - அல்லமையரும், செவ்வியர் ஆம் சன்மார்க்கராகிய, சகதேவத்தண்டநாதர்-ஜகதேவத்தண்டநாதரும், சகளேசமாதரசர் - சகளேசமாதிராசையரும், தெசரிதேவர் - தெசரையரும், எவ்வம் இல்லா - பாபத்தினின்றும் நீங்கிய, இப்பையர்-இப்பையரும், கின்னரையர் - கின்னரப்ரஹ்மையரும், இயல் - சன்மார்க்கத்தையுடைய, தெலுங்கச்சோமையர் - தெலுங்கச் சோமையரும், கேசிராசர் - கேசிராசையரும், கைவரும் - (ஜங்கமபக்தியில்) தேர்ந்த, நல் - மேன்மையராகிய, பாச்சரசர் - பிப்ப பாச்சையரும், தாசிமையர் - தாசிமையரும், காசிநாதையருடன் - காசிநாதையரும், கல்லிதேவர் - கல்லையரும், எ - று.

(பொ - ரை.) அவ்விடத்தில் ஜங்கமமூர்த்திகளில் வந்தவர்கள் யார்? என்று மடிவாலமாச்சையர் கேட்டலும், அல்லையரும், மதுவையரும், அல்லமையரும், சன்மார்க்கராகிய ஜகதேவத்தண்டநாதரும், சகளேச மாதிராசையரும், தெசரையரும், பாபத்தினின்றும் நீங்கிய இப்பையரும், கின்னர ப்ரஹ்மையரும், சன்மார்க்கத்தையுடைய தெலுங்கச் சோமையரும், கேசிராசையரும், ஜங்கமபக்தியில் தேர்ந்த மேன்மையராகிய பிப்ப பாச்சையரும், தாசிமையரும், காசிநாதையரும், கல்லையரும். (ங)

பொமுசண்டிச் சவுண்டையர் சங்க ரையர்
மாயிதே வையர்கண தாசி மையர்
சுரிகைசவுண் டையர்மொறட வேமி தேவர்
துய்யகன்னப் பிரமையர் கலக்கேத் தையர்
கரவில்சிவ நாகமைய ருடன்கொக் கையர்
கருணையராங் கக்கையரே காந்த ராமர்
திரளடப்பத் தண்ணரொடு செய்ய ஞானத்
திரளனைய சென்னவசவேசர் முன்னும்,

(ப - ரை.) வரம் - மேன்மையாகிய, முசுண்டிச்சவுண்டையர் - முசுண்டிச்சவுண்டையரும், சங்கரையர் - சங்கரையரும், மாயிதேவையர் - மாயிதேவரும், கணதாசிமையர் - கணதாசி பீமையரும், சுரிகைசவுண்டையர் - சுரிகைச்சவுண்டையரும், மொறடவேமிதேவர் - மொறடவேமையரும், தூய்ய - பரிசுத்தராகிய, கன்னப்பிரமையர் - கந்நப்ரஹ்மையரும், கலேக்கேத்தையர் - கலேக்கேத்த ப்ரஹ்மையரும், கரவு இல் - வஞ்சகமில்லாத, சிவநாகமையருடன் - சிவநாகமையரும், கொக்கையர் - கொக்கிதேவரும், கருணையர் ஆம் - அன்புடையவராகிய, கக்கையர் - கக்கையரும், ஏகாந்தராமர் - ஏகாந்தராமையரும், திரள் - மிகுதியாகிய, அடப்பத்து - வெற்றிலைப் பையைச் சுமக்கின்ற, அண்ணரொடு - விளாசித்தேவரும், செய்ய - மேன்மையாகிய, ஞானத்திரள் - ஜ்ஞாநக்கும்பம், அனைய - போன்ற, சென்னவசவேசர் - சென்னவசவண்ணரும், முன்னும் - முதலாகிய, எ - று.

(பொ-ரை.) மேன்மையாகிய முசுண்டிச் சவுண்டையரும், சங்கரையரும், மாயிதேவரும், கணதாசி பீமையரும், சுரிகைச் சவுண்டையரும், மொறட வேமையரும், பரிசுத்தராகிய கந்ந ப்ரஹ்மையரும், கலேக்கேத்த ப்ரஹ்மையரும், வஞ்சகமில்லாத சிவநாகமையரும், கொக்கிதேவரும், அன்புடையவராகிய கக்கையரும், ஏகாந்தராமையரும், மிகுதியாகிய வெற்றிலைப்பையைச் சுமக்கின்ற விளாசித்தேவரும், மேன்மையாகிய ஞானக்கும்பம் போன்ற சென்னவசவண்ணரும் முதலாகிய.

(வி-ரை.) அடைப்பம் என்றது அடப்பம் எனத் திரிந்தது. அடப்பத்து அண்ணர்-அடைப்பைத் தேவர் (விளாசித்தேவர்); விளாசி என்றால் கன்னடத்தில் வெற்றிலையென்பது பொருள். அடை - வெற்றிலை. (௬)

பத்தர்சங்க மேசருடன் வசவ தேவர்
பரிந்துவந்து மேதாகே தையர் முன்ன
மொத்தசமு கத்தரா யின்னி யங்க
ளொழியாது முழங்கவிருக் கின்றாரென்னச்
சுத்தமடி வாலையர் நகைத்து நந்தி
தொல்லையுள தன்விரதந் துறந்து மற்று
மித்தரையி லிருப்பதென வவரோ டாவி
யேகாம நாணன்கொ லென்னே யென்னே.

(ப - ரை.) பத்தர் - பக்த மாஹேஶ்வரர்களும், சங்கமேசருடன் - ஜங்கமமூர்த்திகளும், வசவதேவர் - வசவண்ணரும், பரிந்து - அன்புடன், வந்து - எழுந்தருளி, மேதாகேதையர்—, முன்னம் - முன்னிலையில், ஒத்த - தம்மைத் தாமே நிகர்த்த, சமுகத்தர் ஆய் - திருக்கூட்டத்தராய், இன் - இனிய, இயங்கள் - வாத்தியங்கள், ஒழியாது - இடையறாமல், முழங்க - முழக்கஞ்செய்ய, இருக்கின்றார் - நிறைந்திருக்கின்றார்கள், என்ன - என்று (படியாரிப்பாச்சையர்) சொல்லுதலும், சுத்தம் - பரிசுத்தராகிய, மடிவாலையர் - மடிவாலமாச்சையர், நகைத்து - சிரித்து, நந்தி - வசவண்ணர், தொல்லை - பூர்வத்தில், உள்ள - இருந்த, தன் - தனது, விரதம் - வீரவிரதத்தை, துறந்து - நெகிழவிட்டு, மற்றும் - மேலும், இத் தரையில் - இவ்வுலகத்தில், அவரோடு - அவருடன், ஆவி - உயிர், ஏகாமல் - போகாமல், இருப்பது - ஜீவித்திருத்தற்குக் காரணம், என்ன - யாது, நாணன் - வெட்கப்படமாட்டான், என்னே—, என்னே—, எ - று.

(பொ-ரை.) பக்தமாஹேஶ்வரர்களும், ஜங்கமமூர்த்திகளும், வசவண்ணரும் அன்புடன் எழுந்தருளி, மேதாகேதையர் முன்னிலையில் தம்மைத் தாமே நிகர்த்த திருக்கூட்டத்தராய், இனிய வாத்தியங்கள் முழக்கஞ்செய்ய நிறைந்திருக்கின்றார்களென்று படியாரிப்பாச்சையர் சொல்லுதலும், பரிசுத்தராகிய மடிவாலமாச்சையர் சிரித்து,

வச்சவண்ணர் பூர்வத்திலிருந்த தனது வீரவிரதத்தை நெகிழவிட்டு, மேலும் இவ்வுல கத்தில் அவருடன் உயிர் போகாமல் ஜீவித்திருத்தற்குக் காரணம் யாது? வெட்கப்பட மாட்டான்; என்னே! என்னே!

(வி-ரை.) என்னேயென்னே - அதிசய விளக்கச் சொல். கொல்-அசை. (௩)

அங்கணுறுந் தவத்தோரென் சொல்வா ரிவ்வா
றவன்றனக்குச் சங்கமமே யாவி யென்னுந்
துங்கவுரை யினைமறந்த விரத கீனன்
றொல்லையுடல் பார்க்கவொண்ணு தொடவு மொண்ணு
சங்கரன்மே தாகேதர் தமைய ழைக்கத்
தான்சென்று லவருடனே தானுஞ் செல்லாப்
பங்கனுறு மவையினையும் பார்க்கக் குற்றம்
பாவியே னிம்மாற்றம் பகர்வ தென்னே.

(ப-ரை.) அங்கண் - அவ்விடத்தில், உறும் - நிறைந்திருக்கின்ற, தவத்தோர் - ஜங்கமமூர்த்திகள், என் - என்னவென்று, சொல்வர்-சொல்வார்கள், அவன் தனக்கு- அவனுக்கு, சங்கமமே-ஜங்கமமூர்த்திகளே, ஆவி-உயிர், என்னும்-என்கின்ற, துங்கம்- பரிசுத்தமாகிய, உரையினை-சொல்லை, மறந்த - மறந்துவிட்ட, விரதகீனன் - வ்ரதபங் கனுடையதும், தொல்லை - பழவினையை யுடையதுமாகிய, உடல் - உடம்பை, பார் க்க ஒண்ணு - காணவுங் கூடாது, தொடவும் ஒண்ணு - தீண்டவுங் கூடாது, சங்கரன்- சிவபெருமான், மேதாகேதர் தம்மை - மேதாகேதையரை, அழைக்க - அழைத் தருளுதலும், தாம்—, சென்றால் - போவாராயின், அவருடனே - அவரோடு கூடவே, தானும்—, செல்லா - போகாத, பங்கன் - வ்ரதப்ரஷ்டன்; உறும் - இருக்கின்ற, அவையினையும் - சபையையும், பார்க்க - பார்த்தலும், குற்றம் - பாபமாகும், பாவி யேன் - (அவனை) நினைக்கவுமாட்டேன்; இ - இந்த, மாற்றம் - சொல்லை, பகர்வது - சொன்னதனுலுண்டாகும் பயன், என் - யாது, எ-று.

(பொ-ரை.) அவ்விடத்தில் நிறைந்திருக்கின்ற ஜங்கமமூர்த்திகள் என்னவென்று சொல்வார்கள்? அவனுக்கு ஜங்கமமூர்த்திகளே உயிரென்கின்ற பரிசுத்தமாகிய சொல்லை மறந்துவிட்ட வ்ரதபங்கனுடையதும், பழவினையையுடையதுமாகிய உடம் பைக் காணவுங் கூடாது; தீண்டவுங் கூடாது; சிவபெருமான் மேதாகேதையரை யழைத்தருளுதலும், தாம் போவாராயின் அவரோடு கூடவே தானும் போகாத வ்ரத ப்ரஷ்டன் இருக்கின்ற சபையையும் பார்த்தலும் பாபமாகும்; அவனை நினைக்கவுமாட் டேன்; இந்தச் சொல்லைச் சொன்னதனு லுண்டாகும் பயன் யாது? (௬)

அளவிறந்த பத்தருந் தவத்தோ ரெல்லா
மவணிருக்க யாம்வந்தங் காவ தென்ன
கிளர்கரும நமக்குண்டு நீசெல் லென்னக்
கிளத்தளவிற் படியாரிப் பாச்சர் கேளா
வுளநடுங்கி யுடல்கம்பித் தோடி வந்தங்
குற்றமகத் தோர்கடம்மை யுறவ ணங்கி
வளர்பயத்தா னின்றளவிற் சங்க மேசர்
மாச்சியரேன் வந்ததில்லை வரச்சொல் லென்ன.

(ப-ரை.) அளவு இறந்த - கணக்கற்ற, பத்தர் - பக்த மாஹேஶ்வரர்களும், அரு மேன்மையாகிய, தவத்தோர் - ஜங்கமமூர்த்திகளும், எல்லாம் - யாவரும், அவண் - அவ்விடத்தில், இருக்க - நிறைந்திருக்கவும், யாம் - நாம், வந்து - போய், அங்கு - அவ் விடத்தில், ஆவது - செய்கின்ற காரியம், என்ன - யாது, கிளர்-மிகுதியாகிய, கருமம்-

காரியங்கள், நமக்கு - எமக்கு, உண்டு - (இவ்விடத்தில்) இருக்கின்றன, நீ—, செல்-போகக்கடவாய், என்ன - என்று, கிளத்த அளவில் - (மாச்சையர்) சொன்ன மாத்திரத்தில், படியாரிப்பாச்சர் - படியாரிப்பாச்சையர், கேளா - கேட்டு, உள்ளம்-மனம், நடுங்கி - பதறி, உடல் - உடம்பு, கம்பித்து - நடுங்கி, ஓடிவந்து - ஓட்டமாய்ச்சென்று, அங்கு - அவ்விடத்தில், உற்ற - நிறைந்திருக்கின்ற, மகத்தோர்கள் தம்மை - ஜங்கமமூர்த்திகளை, உற வணங்கி - ஸாஷ்டாங்கமாகப் பணிந்து, வளர் - மிகுந்த, பயத்தால்-அச்சத்துடன், நின்ற அளவில் - நின்ற மாத்திரத்தில், சங்கமேசர் - ஜங்கமமூர்த்திகள் (அவரைநோக்கி), மாச்சியர் - மடிவாலமாச்சையர், என்—, வந்தது இல்லை - வரவில்லை (என்று விசாரித்து), வரச்சொல் - வரச்சொல்லக்கடவாய், என்ன - என்று கட்டளையிடுதலும், எ - று.

(பொ-ரை.) கணக்கற்ற பக்த மாஹேஶ்வரர்களும், மேன்மையாகிய ஜங்கமமூர்த்திகளும், யாவரும் அவ்விடத்தில் நிறைந்திருக்கவும், நாம் போய் அவ்விடத்திற் செய்கின்ற காரியம் யாது? மிகுதியாகிய காரியங்கள் எமக்கு இவ்விடத்தில் இருக்கின்றன; நீ போகக்கடவாயென்று மடிவாலமாச்சையர் சொன்ன மாத்திரத்தில், படியாரிப் பாச்சையர் கேட்டு, மனம் பதறி, உடம்பு நடுங்கி, ஓட்டமாய்ச் சென்று, அவ்விடத்தில் நிறைந்திருக்கின்ற ஜங்கமமூர்த்திகளை ஸாஷ்டாங்கமாகப் பணிந்து, மிகுந்த அச்சத்துடன் எழுந்து நின்ற மாத்திரத்தில், ஜங்கமமூர்த்திகள் அவரை நோக்கி, மடிவாலமாச்சையர் என் வரவில்லை? என்று விசாரித்து, அவரை வரச்சொல்லக் கடவாயென்று கட்டளையிடுதலும். (எ)

அஞ்சுவனு னந்திகண்முன் னுரைக்க வொல்லே
னப்படியேன் பயமின்றி யறைவா யென்ன
நெஞ்சமுகந் தவர்பகர்ந்த நேர்மை யெல்லா
நிகழ்த்தளவில் வசவேசர் நினைவு தோன்றிச்
செஞ்சொன்மடி வாலையரைத் தோத்தி ரஞ்செய்
திறத்தராய்ச் சிவன்கயிலை சேர்ந்த வாறே
துஞ்சினர்நந் திகளென்று தவத்தோர் பத்தர்
தூயவந்த நகருளோர் துயர ராகி.

(ப - ரை.) நான்—, நந்திகள் - வசவண்ணர், முன் - திருமுன்பு, உரைக்க-சொல்ல, அஞ்சுவன் - பயப்படுவேன், ஒல்லேன் - (சொல்ல) மாட்டேன் (என்றுபடியாரிப்பாச்சையர் சொல்லுதலும்), அப்படி - அவ்வாறு சொல்லுதற்குக் காரணம், என் - யாது, பயம் இன்றி - அச்சமில்லாமல், அறைவாய் - சொல்லுவாய், என்ன-என்று (ஜங்கமமூர்த்திகள்) கட்டளையிடுதலும், நெஞ்சம் - மனம், உகந்து - மகிழ்ந்து, அவர்—, பகர்ந்த - சொன்ன, நேர்மை - உறுதிச்சொல், எல்லாம் - எல்லாவற்றையும், நிகழ்த்து அளவில் - (படியாரிப்பாச்சையர்) சொன்ன மாத்திரத்தில், வசவேசர் - வசவண்ணர், நினைவு - ஞாபகம், தோன்றி - வந்து, செஞ்சொல் - வெளிப்படைச் சொல்லையுடைய, மடிவாலையரை - மடிவாலமாச்சையரை, தோத்திரம்செய்-துதிக்கின்ற, திறத்தர் ஆய் - செய்கையுடையவராய், சிவன் கயிலை - சிவலோகத்தை, சேர்ந்தவாறே-அடைந்தமாத்திரத்திலே, நந்திகள் - வசவண்ணர், துஞ்சினர் - தேகவ்யோகமடைந்தனர், என்று-என்று கருதி, தவத்தோர்-ஜங்கமமூர்த்திகளும், பத்தர்-பக்த மாஹேஶ்வரர்களும், தூய-பரிசுத்தமாகிய, அந்த—, நகர் உள்ளோர் - கல்யாண பட்டினத்திலுள்ளவர்களும், துயரர் ஆகி - துக்கமடைந்தவர்களாகி, எ - று.

(பொ-ரை.) நான் வசவண்ணர் திருமுன்பு சொல்லப் பயப்படுவேன்; சொல்ல மாட்டேனென்று படியாரிப்பாச்சையர் சொல்லுதலும், அவ்வாறு சொல்லுதற்குக் காரணம் யாது? அச்சமில்லாமற் சொல்லுவாயென்று ஜங்கமமூர்த்திகள் கட்டளையிடுதலும், மனமகிழ்ந்து அவர் சொன்ன உறுதிச்சொல் லெல்லாவற்றையும் படியா

ரிப்பாச்சையர் சொன்ன மாத்திரத்தில், வசவண்ணர் ஞாபகம் வந்து, வெளிப்படைச் சொல்லேயுடைய மடிவாலமாச்சையரைத் துதிக்கின்ற செய்கையுடையவராய்ச் சிவலோகத்தை யடைந்த மாத்திரத்திலே, வசவண்ணர் தேகவியோகமடைந்தனரொன்று கருதி, ஜங்கமமூர்த்திகளும், பக்த மாஹேஸ்வரர்களும், பரிசுத்தமாகிய அந்தக் கல்யாண பட்டினத்தி லுள்ளவர்களும் துக்கமடைந்தவர்களாகி. (அ)

மேதாகே கையருடன் வசவ தேவர்
மிக்கவுயி ரினைப்பரமன் விளித்துக் கொண்டான்
பூதலத்தி லினியென்ன சிவநற் பத்தி
போய்த்தந்தோ வரகரா வெனப்பு லம்பி
மாதவத்தோர் படியாரி தன்னை நோக்கி
மாச்சையற்கிவ் வாறுரைத்து வருவா யென்ன
வாதரத்தா லோடியவர்க் கந்கை கூப்பி
யையர் தண்ட நாதர்செய்தி யறைந்த வாறே.

(ப - ரை) மேதாகேதையருடன்-மேதாகேதையரோடு, வசவதேவர்-வசவண்ணருடைய, மிக்க - மேன்மையாகிய, உயிரினை - உயிரை, பரமன் - சிவபெருமான், விளித்துக்கொண்டான் - அழைத்துக்கொண்டு போனான், பூதலத்தில் - பூலோகத்தில், இனி - இப்போது, என்ன (அடைகின்ற பயன்) யாது, நல் - சிறந்த, சிவபத்தி - சிவபக்தி யென்பதே, போய்த்து - தொலைந்து விட்டது, அந்தோ - ஐயோ, அர அரா - ஹர: ஹர:, என்ன - என்று புலம்பி - அழுது, மா - பெருமைபொருந்திய, தவத்தோர் - ஜங்கமமூர்த்திகள் படியாரி தன்னை - படியாரிப்பாச்சையரை, நோக்கி- பார்த்து, மாச்சையற்கு - மடிவாலமாச்சையர்க்கு, இ - இந்த, ஆறு - செய்தியை, உரைத்து - சொல்லி வருவாய் - வரக்கடவாய், என்ன - என்று கட்டளையிடுதலும், ஆதரத்தால் - (அவர்) அன்புடன், ஓடி - ஓட்டமாய்ப் போய், அவர்க்கு—, அம் - அழகிய, கை - கைகளை, கூப்பி - குவித்து(வணங்கி), ஐயர் - தலைமையுடையவராகிய, தண்டநாதர் - வசவண்ணரது, செய்தி - செய்கையை, அறைந்தவாறே - சொன்ன மாத்திரத்திலே, எ - று.

(பொ - ரை.) மேதாகேதையரோடு வசவண்ணருடைய மேன்மையாகிய உயிரைச் சிவபெருமான் அழைத்துக்கொண்டுபோனான்; பூலோகத்தில் இப்போது அடைகின்ற பயன் யாது? சிறந்த சிவபக்தி யென்பதே தொலைந்துவிட்டது; ஐயோ! ஹர: ஹர: என்று அழுது, ஜங்கமமூர்த்திகள் படியாரிப்பாச்சையரைப் பார்த்து, மடிவாலமாச்சையர்க்கு இந்தச் செய்தியைச் சொல்லிவரக்கடவாயென்று கட்டளையிடுதலும், அவர் அன்புடன் ஓட்டமாய்ப் போய், அவர்க்கு அழகிய கைகளைக் குவித்து வணங்கி, தலைமையுடையவராகிய வசவண்ணரது செய்கையைச் சொன்ன மாத்திரத்திலே.

(வி - ரை.) போய்த்து என்பது போயிற்று என்பதன் மரூவு. (க)

கேட்டளவின் மடிவால மாச்சர் சித்தங்
கிளர்மகிழ்ச்சி யுடனங்கம் புளக மெய்தித்
தாட்டருதா மரையென்ன முகம லர்ந்து
சாற்றுவார் நன்னியமந் தவறு வண்ண
நாட்டினனே பிறவிவேர் களைந்திட் டோனே
நவின்றவுரை சிவாலிங்கி னலம்போ லாய்த்தா
லோட்டமின்போற் புற்பதம்போ லோடுங் கால்போ
லொளிர்மதிபோன் மாறுமெ லொருதன் மைத்தாய்.

(ப-ரை.) கேட்ட அளவில் - சொல்லக் கேட்ட மாத்திரத்தில், மடிவாலமாச்சர்- மடிவாலமாச்சையர், சித்தம் - திருவுளம். கிளர் - மிகுந்த, மகிழ்ச்சியுடன் - மகிழ்ச்சியடைந்தும், அங்கம்-திருமேனி, புளகம் எய்தி - பூரிப்படைந்தும், தாள் தரும் - நாளத்தையுடைய, தாமரை - தாமரைமலர், என்ன - போன்ற, முகம் - திருமுகம், மலர்ந்து- மலர்ச்சியடைந்தும், சாற்றுவார் - சொல்லத்தொடங்கினர் (எவ்வாறெனின்), நல் - மேன்மையாகிய, நியமம் - வீரவிரதமானது, தவறு வண்ணம் - பங்கமாகாதபடி, நாட்டினனே - ஸ்தாபித்தவனே, பிறவி - பிறப்பின், வேர் - வேரை, களைந்திட்டோனே- பறித்தெறிந்தவனே, நவின்ற - சொன்ன, உரை - சொல்லானது, சிலா லிபியின் - சிலாசாசனத்தின், நலம் - ப்ரயோஜனம், போல்—, ஆய்த்து - ஆயிற்று, ஆல் - ஆகையால், ஓட்டம் - ஓட்டத்தையுடைய, மின் - மின்னல், போல் - போலவும், புற்புதம் - நீர்க்குமிழி, போல் - போலவும், ஓடும் - ஓடுகின்ற, கால் - காற்று, போல் - போலவும், ஒளிர் - ஒளிபொருந்திய, மதி - சந்திரன், போல் - போலவும், மாறுமல் - வேறுபடாமல், ஒரு தன்மைத்தாய் — ஒரே விதமாய், எ-று.

(பொ - ரை.) சொல்லக் கேட்ட மாத்திரத்தில், மடிவாலமாச்சையர் திருவுளம் மிகுந்த மகிழ்ச்சியடைந்தும், திருமேனி பூரிப்படைந்தும், நாளத்தையுடைய தாமரை மலர் போன்ற திருமுகம் மலர்ச்சியடைந்தும் சொல்லத்தொடங்கினர்; எவ்வாறெனின்:— மேன்மையாகிய வீரவிரதமானது பங்கமாகாதபடி ஸ்தாபித்தவனே! பிறப்பின் வேரைப் பறித்தெறிந்தவனே! சொன்ன சொல்லானது சிலாசாசனத்தின் ப்ரயோஜநம் போலாயிற்று; ஆகையால் ஓட்டத்தையுடைய மின்னல் போலவும் நீர்க்குமிழி போலவும், ஓடுகின்ற காற்றுப் போலவும், ஒளிபொருந்திய சந்திரன் போலவும் வேறுபடாமல் ஒரே விதமாய்.

(வி-ரை.) புளகமெய்தல் - மயிர்க்குச்செறிதல் எனினுமாம். தவறல் - கெடுதல். ஆய்த்து என்பது ஆயிற்று என்பதன் மரூஉ. ஓட்டம்-நிலையில்லாத எனினுமாம். சிலா லிபி-கல்லில் வெட்டின எழுத்து. (௧௦)

மறந்தநிட்டை நினைவித்த மாத்தி ரத்தான்
 மகிழ்ந்துயிர்ப்போய் மேதாகே தையர் பாலே
செறிந்தரனைச் சேர்ந்ததனாற் செப்பு மாறென்
 செயற்கரிய செய்வனந்தி தேவ னென்று
நிறைந்ததுதி செய்துமட நின்று போந்து
 நீண்மகத்தோர் திருமுன்பு நேய நீட
விறைஞ்சிநிற்ப மாச்சைய ரிங்கன் வம்மி
 னிருந்தருள்வீ ரெனப்பெரியோ ரியம்புங் காலே.

(ப-ரை.) மறந்த - மறந்துபோன, நிட்டை - வீரவிரதத்தை, நினைவித்த - நினைப்பூட்டின, மாத்திரத்தால் - அளவிலே, மகிழ்ந்து - சந்தோஷத்துடன், உயிர்—, போய்- சென்று, மேதாகேதையர் பால் - மேதா கேதையரிடத்தில், செறிந்து - சேர்ந்து, அரனை - சிவபெருமானை, சேர்ந்ததனால் - அடைந்து விட்டபடியினால், செப்பும் ஆறு- சொல்லுந் தரந்தான், என் - யாது, செயற்கு அரிய - (யாவராலும்) பண்ண முடியாதவற்றையெல்லாம், நந்திதேவன்-வசவண்ணன், செய்வன் - பண்ணவல்லவன், என்று—, நிறைந்த - மேன்மையாகிய, துதி - தோத்திரங்களை, செய்து - பண்ணி, மடம் நின்று- திருமடத்தினின்றும், போந்து - எழுந்தருளி, நீள்-நிலைபெற்றிருக்கின்ற, மகத்தோர்- ஜங்கமமூர்த்திகள், திருமுன்பு - முன்னிலையில், நேயம் நீட - அன்பு பெருக, இறைஞ்சி-(ஸாஷ்டாங்கமாக) வணங்கி, நிற்ப - நிற்றலும் (அவரைப்பார்த்து), மாச்சையர் - மடிவாலமாச்சையரே, இங்கன் - இவ்விடம், வம்மின் - வாருங்கள், இருந்தருள்வீர் - எழுந்தருளுங்கள், என்ன - என்று, பெரியோர் - ஜங்கமமூர்த்திகள், இயம்பும் காலே- சொல்லுகின்ற போது, எ-று.

(பொ-ரை.) மறந்துபோன வீரவிரதத்தை நினைப்பூட்டின வளவிலே, சந்தோஷத்துடன் உயிர் சென்று, மேதாகேதையரிடத்திற் சேர்ந்து, சிவபெருமானை யடைந்துவிட்டபடியினால் சொல்லுந் தரந்தான் யாது? யாவராலும் பண்ணமுடியாதவற்றையெல்லாம் வசவண்ணன் பண்ணவல்லவனென்று, மேன்மையாகிய தோத்திரங்களைப் பண்ணி, திருமடத்தினின்றும் எழுந்தருளி, நிலைபெற்றிருக்கின்ற ஜங்கமமூர்த்திகள் முன்னிலையில் அன்பு பெருக ஸாஷ்டாங்கமாக வணங்கி நிற்றலும், அவரைப் பார்த்து, மாச்சையரே! இவ்விடம் வாருங்கள்; எழுந்தருளுங்களென்று ஜங்கமமூர்த்திகள் சொல்லுகின்ற போது. (௧௧)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

சங்கமர் பத்தர் நொந்து சாற்றுவார் தண்ட நாதா
சங்கமா தார மான தாருவே வசவ தேவா
சங்கமா ராத னைக்கார் தாபரஞ் சகத்தி லையா
சங்கமர்க் குற்ற நின்போற் றாழ்ந்துளந் தருக்கு வாரார்.

(ப-ரை.) சங்கமர் - ஜங்கமமூர்த்திகளும், பத்தர் - பக்த மாஹேஸ்வரர்களும், நொந்து - துயரமுற்று, சாற்றுவார் - சொல்லத் தொடங்கினார்கள் (எவ்வாறெனின்), தண்டநாதா - தண்டநாயகனே, சங்கம ஆதாரமான - ஜங்கமமூர்த்திகளுக்குத் துணைவஞகிய, தாருவே - கல்பக வ்ருக்ஷமே, வசவதேவா - வசவண்ணனே, சங்கம ஆராதனைக்கு-ஜங்கமபூஜைக்கு, தாபரம் - ஆதாரம், ஆர் - யார், ஐயா - ஐயனே, சகத்தில்-உலகத்தில், சங்கமர்க்கு - ஜங்கமமூர்த்திகளுக்கு, உற்ற - உகந்த, நின் - உன்னை, போல்—, தாழ்ந்து - பணிவுடன் வணங்கி, உள்ளம் - மனம், தருக்குவார் - மகிழ்பவர், ஆர் - யார், எ-று.

(பொ-ரை.) ஜங்கமமூர்த்திகளும், பக்த மாஹேஸ்வரர்களும் துயரமுற்றுச் சொல்லத் தொடங்கினார்கள்; எவ்வாறெனின்:—தண்டநாயகனே! ஜங்கமமூர்த்திகளுக்குத்துணைவஞகிய கல்பக வ்ருக்ஷமே! வசவண்ணனே! ஜங்கமபூஜைக்கு ஆதாரம் யார்? ஐயனே! உலகத்தில் ஜங்கமமூர்த்திகளுக்கு உகந்த உன்னைப் போல் பணிவுடன் வணங்கி மனமகிழ்பவர் யார்? (௧௨)

பானுவில் பகலுந் தூய்ய பனிமதி யில்லி ராவு
மானமில் லாத மாதும் வண்சுட ரில்லா வில்லுந்
தானமில் லாதான் வாழ்வுஞ் சதுரங்க மில்லா வேந்து
மானதே வசவ தேவ ரகன்றரன் பத்தி யந்தோ.

(ப-ரை.) வசவதேவர் - வசவண்ணர், அகன்று - சென்றமையால், அரன் பத்தி - சிவபக்தியானது, பானு - சூரியன், இல் - இல்லாத, பகலும்—, தூய்ய - பரிசுத்தமானதும், பனி - குளிர்ச்சி பொருந்தியதுமாகிய, மதி - சந்திரன், இல் - இல்லாத, இராவும் - இரவும், மானம் - வெட்கம், இல்லாத—, மாதும் - பெண்ணும், வள் - ஒளிபொருந்திய, சுடர் - தீபம், இல்லா - இல்லாத, இல்லும் - வீடும், தானம் - ஈகை, இல்லாதான் - இல்லாதவனுடைய, வாழ்வும் - செல்வமும், சதுரங்கம் - நால்வகைச்சேனை, இல்லா - இல்லாத, வேந்தும் - அரசனும், ஆனது - போன்றது, அந்தோ - ஐயோ, எ-று.

(பொ-ரை.) வசவண்ணர் சென்றமையால் சிவபக்தியானது சூரியனில்லாத பகலும், சந்திரனில்லாத இரவும், வெட்கமில்லாத பெண்ணும், ஒளிபொருந்திய தீபமில்லாத வீடும், ஈகையில்லாதவனுடைய செல்வமும், நால்வகைச் சேனையில்லாத அரசனும் போன்றது; ஐயோ!

(வி-ரை.) சுடர், வேந்து என்பவை ஆகுபெயர்கள். நால்வகைச்சேனை - ரத கஜ துரக பதாதிகள்.

அண்ணனீ விடுப்ப வந்த வருள்வச வேசர் தம்மை
யெண்ணியிவ் வகாலந் தன்னி லிப்படி யழைத்துக் கொண்டாற்
மண்ணிலுன் புண்ணி யந்தான் வளங்கெடும் வரவி டுப்பாய்
கண்ணுதற் கடவு ளானே யெனப்பத்தர் கழறு நின்றார்.

(ப - ரை.) அண்ணல் - இறைவனே, நீ—, விடுப்ப - அனுப்பியதனால், வந்த - அவதரித்த, அருள் - கிருபையுடைய, வசவேசர் தம்மை - வசவண்ணரை, எண்ணி - விரும்பி, இ - இந்த, அகாலம் தன்னில் - அகாலத்தில், இப்படி - இவ்வாறு, அழைத்துக்கொண்டால் - அழைத்துக்கொண்டு போவாயாயின், மண்ணில் - உலகத்தில், உன் - உனது, புண்ணியம் தான் - தர்மமானது, வளம் கெடும் - மேன்மை குன்றும், கண் நுதல் - நெற்றிக்கண்ணையுடைய, கடவுளானே - கடவுளே, வர - (இவ்வுலகத்தில் மறுபடியும்) வரும்படி, விடுப்பாய் - விடைகொடுத்தருள்யாய், என்ன - என்று, பத்தர் - பக்த மாஹேஸ்வரர்கள், கழறு நின்றார் - முறையிட்டார்கள், எ-று.

(பொ - ரை.) இறைவனே! நீ அனுப்பியதனால் அவதரித்த கிருபையுடைய வசவண்ணரை விரும்பி இந்த அகாலத்தில் இவ்வாறு அழைத்துக்கொண்டு போவாயாயின் உலகத்தில் உனது தர்மமானது மேன்மை குன்றும்; நெற்றிக்கண்ணையுடைய கடவுளே! இவ்வுலகத்தில் மறுபடியும் வரும்படி விடைகொடுத்தருள்வாயென்று பக்த மாஹேஸ்வரர்கள் முறையிட்டார்கள்.

(வி - ரை.) அண்ணல் - பெருமையிற் சிறந்தோன்; அண்மைவிளி. அகாலம் - துற்காலம். கண்ணுதல் என்பதனை நுதற்கண்ணென மாற்றிப் பொருளுரைக்கலாயிற்று. கழறல் - சொல்லல். (௧௪)

ஆரினி யிலக்கத் தெண்ப தாயிரந் தவர்க்கி தத்தோ
ராரினி யெமக்குன் பத்தி யருமையை யறிவிக் கும்பே
ராரினிச் சிவத்து ரோக மகற்றுவா ரஞ்செ ழுத்தை
யாரினி வளரச் செய்வா ரத்தவென் றரற்று நின்றார்.

(ப - ரை.) இனி - இப்போது, இலக்கத்து எண்பது ஆயிரம் - லக்ஷத்தெண்பதினாயிரம், தவர்க்கு - ஜங்கமமூர்த்திகளுக்கு, இதத்தோர் - அன்புள்ளவராயிருப்பவர், ஆர் - யார், இனி - இப்போது, எமக்கு - எங்களுக்கு, உன் - உனது, பத்தி - பக்தியின், அருமையை - மேன்மையை, அறிவிக்கும் பேர் - தெரிவிக்கவல்லவர், ஆர் - யார், இனி - இப்போது, சிவத்துரோகம் - சிவத்ரோஹத்தை, அகற்றுவார் - ஒழிக்க வல்லவர், ஆர் - யார், இனி - இப்போது, அஞ்சு எழுத்தை - ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹாமந்த்ரத்தை, வளரச்செய்வார் - காப்பாற்றவல்லவர், ஆர் - யார், அத்த - தந்தையே, என்று - என்று சொல்லி, அரற்று நின்றார் - புலம்பினார்கள், எ - று.

(பொ - ரை.) இப்போது லக்ஷத்தெண்பதினாயிரம் ஜங்கமமூர்த்திகளுக்கு அன்புள்ளவராயிருப்பவர் யார்? இப்போது எங்களுக்கு உனது பக்தியின் மேன்மையைத் தெரிவிக்கவல்லவர் யார்? இப்போது சிவத்ரோஹத்தை யொழிக்கவல்லவர் யார்? இப்போது ஸ்ரீபஞ்சாக்ஷர மஹா மந்த்ரத்தைக் காப்பாற்றவல்லவர் யார்? தந்தையே! என்று சொல்லிப் புலம்பினார்கள். (௧௫)

அலமரு மவரை நோக்கி மாச்சைய ரறைவா ரஞ்சல்
பலதுயர் மாற்றம் பேசிப் பரிதவித் திரங்க லெல்லா
நிலவுமா வீர சைவ நிட்டையர்க் கேலா நீங்க
ளுலைதலுங் கிலேசஞ் செய்யு மோசையு மொழிமி னென்று.

(ப - ரை.) அலமரும் - துக்கப்படுகின்ற, அவரை - அவர்களை, நோக்கி - பார்த்து, மாச்சையர் - மடிவாலமாச்சையர், அறைவார் - சொல்லத்தொடங்கினர் (எவ்வாறெனின்), அஞ்சல் - பயப்படாதீர்கள், பல-பலவிதமாகிய, துயர் மாற்றம் - துக்க வார்த்தைகளை, பேசி - சொல்லி, பரிதவித்து - துக்கப்பட்டு, இரங்கல் - அழுவது, எல்லாம் - முழுதும், திலவும் - விளங்குகின்றவரும், மா - மேன்மையானவருமாகிய, வீர்சைவ நிட்டையர்க்கு - வீரசைவர்களுக்கு, ஏலா - அடுக்காது, நீங்கள்—, உலைதலும் - துக்கப்படுவதையும், கிலேசம் செய்யும் - துக்கத்தை யுண்டுபண்ணுகின்ற, ஓசையும் - ஆரவாரத்தையும், ஒழிமின் - விடுங்கள், என்று - என்று சொல்லி, எ - று.

(பொ - ரை.) துக்கப்படுகின்ற அவர்களைப்பார்த்து மடிவாலமாச்சையர் சொல்லத்தொடங்கினர்; எவ்வாறெனின்:— பயப்படாதீர்கள்; பலவிதமாகிய துக்க வார்த்தைகளைச் சொல்லித் துக்கப்பட்டு அழுவது முழுதும் விளங்குகின்றவரும்,மேன்மையானவருமாகிய வீர்சைவர்களுக்கு அடுக்காது; நீங்கள் துக்கப்படுவதையும், துக்கத்தை யுண்டுபண்ணுகின்ற ஆரவாரத்தையும் விடுங்களென்று சொல்லி.

(வி - ரை.) அலமரும் என்பதற்குப் பகுதி அலமா. அஞ்சல் - வியங்கோள்.(கசு)

அமலசங் கமப்பி ராணி யருள்வச வேச னென்னுங்
கமழுணர் விக்க வேண்டிக் கருணைமே தாகே தைபர்
நிமலமா முயிரை யத்த னீக்கியே தன்பாற் சேர்த்தான்
விமலனு நந்தி யாவி விடுத்துத்தன் விரதங் காத்தான்.

(ப - ரை.) அமலம் - பரிசுத்தராகிய, சங்கமம்-ஜங்கமமூர்த்திகளுக்கு, பிராணி- உயிராயிருப்பவன், அருள் - சிவாநுக்ரஹத்தையுடைய, வசவேசன் - வசவண்ணனே, என்னும் - என்கின்ற, கமம் - பெருமையை, உணர்விக்க - தெரிவித்தற்கு, வேண்டி- விரும்பி, கருணை - அன்புள்ள, மேதாகேதையர் - மேதாகேதையரது, நிமலம் ஆம் - பரிசுத்தமாகிய, உயிரை—, அத்தன் - சிவபெருமான், நீக்கி - அகற்றி, தன்பால் - தன்னிடத்தில், சேர்த்தான் - சேரப்பண்ணிக்கொண்டான், விமலன் ஆம் - பரிசுத்தனாகிய, நந்தி - வசவண்ணன், ஆவி - உயிரை, விடுத்து - விட்டு, தன் - தனது, விரதம் - வீரவிரதத்தை, காத்தான் - காப்பாற்றிக்கொண்டான், எ-று.

(பொ-ரை.) பரிசுத்தராகிய ஜங்கமமூர்த்திகளுக்கு உயிராயிருப்பவன் சிவாநுக்ரஹத்தையுடைய வசவண்ணனே யென்கின்ற பெருமையைத் தெரிவித்தற்கு விரும்பி, அன்புள்ள மேதாகேதையரது பரிசுத்தமாகிய உயிரைச் சிவபெருமான் அகற்றித் தன்னிடத்தில் சேரப்பண்ணிக்கொண்டான்; பரிசுத்தனாகிய வசவண்ணன் உயிரை விட்டுத் தனது வீரவிரதத்தைக் காப்பாற்றிக்கொண்டான். (கஎ)

பத்திகா ரணம தாகப் பாரிடை யுற்ப விப்பா
யுத்தம சிவாசா ரத்தை யுயர்விப்பா யெனவி டுத்தா
லத்திறம் வசவ தேவ னாக்குமுன் னழைத்த தன்றி
மெய்த்தவர்க் கிதத்த பூசை விக்கினஞ் செய்தா னத்தன்.

(ப - ரை.) பத்தி - பக்தியை, காரணம் ஆக - மூலமாகக்கொண்டு, பார் இடை - உலகத்தில், உற்பவிப்பாய் - அவதரிப்பாய், உத்தமம் - மேன்மையாகிய, சிவாசாரத்தை - வீரசைவ தர்மத்தை, உயர்விப்பாய் - சிறப்பிக்கச்செய்வாய், என்ன - என்று கட்டளையிட்டு, விடுத்தால் - விடைகொடுத்தனுப்பினல், அத்திறம் - அவ்வாறு, வசவதேவன் - வசவண்ணன், ஆக்கும் - செய்யும், முன் - முன்னர், அத்தன் - சிவபெருமான், அழைத்தது - அழைத்துக்கொண்டதே, அன்றி - அல்லாமல், மெய் - உண்மையாகிய, தவர்க்கு இதத்த பூசை — ஜங்கமாராதனைக்கும், விக்கினம் - இடையூறு, செய்தான் - பண்ணினன், எ-று.

(பொ-ரை.) பக்தியை மூலமாகக்கொண்டு உலகத்தில் அவதரிப்பாய், மேன்மை யாகிய வீரசைவ தர்மத்தைச் சிறப்பிக்கச்செய்வாயென்று கட்டளையிட்டு, விடை கொடுத்தனுப்பினால், அவ்வாறு வசவண்ணன் செய்யும் முன்னர் சிவபெருமான் அழைத்துக்கொண்டதே யல்லாமல், உண்மையாகிய ஜங்கமாராதனைக்கும் இடை யூறு பண்ணினான்.

(வி - ரை.) இதத்த - உரிய. உற்பவம் - உத்பவம் என்னும் வடசொற்றிரிபு. உத் தம - உத்தமனே எனினுமாம். காரணமது என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி.

உருத்திர ரறிக்கை யின்றி யுயர்கண ரறிக்கை யின்றித்
தருக்குமை யறிக்கை யின்றித் தபோதன ரறிக்கை யின்றி
யருட்டரு புராத னத்த ரறிக்கையு மின்றி யத்தன்
றெரித்திரு வரையுங் கொண்டான் றிருவுளக் கருணை மாறி.

(ப - ரை.) உருத்திரர் - சிவகணங்கள், அறிக்கையின்றி - அறியாமலும், உயர் - மேன்மைபொருந்திய, கணர் - சிவ கணநாதர்கள், அறிக்கையின்றி - அறியாமலும், தருக்கு - மகிழ்ச்சிபொருந்திய, உமை - உமாதேவியார், அறிக்கை யின்றி - அறியாம லும், தபோதனர் - முனிவர்கள், அறிக்கை யின்றி - அறியாமலும், அருள் தரு - அநுக்ரஹத்தையுடைய, புராதனத்தர் - நாயன்மார்கள், அறிக்கையும் இன்றி - அறி யாமலும் (இருக்கின்ற செய்தியை), அத்தன் - சிவபெருமான், தெரித்து - தெரிந் திருந்தும், இருவரையும் - இரண்டு சிவசரணர்களையும், திருவுளம் - திருவுளத்தில், கருணை - கிருபையென்பதே, மாறி - இல்லாமல், கொண்டான் - அழைத்துக்கொண் டான், எ-று.

(பொ - ரை.) சிவகணங்கள் அறியாமலும், மேன்மைபொருந்திய சிவகண நாதர்கள் அறியாமலும், மகிழ்ச்சிபொருந்திய உமாதேவியார் அறியாமலும், முனிவர் கள் அறியாமலும், அநுக்ரஹத்தையுடைய நாயன்மார்கள் அறியாமலுமிருக்கின்ற செய்தியைச் சிவபெருமான் தெரிந்திருந்தும் இரண்டு சிவசரணர்களையும் திருவுளத் தில் கிருபையென்பதே யில்லாமல் அழைத்துக்கொண்டான்.

(வி - ரை.) உயர் கணர் என்றமையால் கணநாதரெனப் பொருட்கொள்ளலா யிற்று. (கக)

மேதா கேதையர் தம்மை விரைவுடன் வரவி டாம
லாதர வுடனே நந்தி யவருட னங்க ணைந்தா
னீதியோ தண்ட நாத னித்தசங் கமப் பிராணி
யோதுமூ விதநற் பத்தி யுருவமா யுலகில் வந்தோன்.

(ப - ரை.) மேதாகேதையர் தம்மை - மேதாகேதையரை, விரைவுடன் - சீக்கிர மாக, வர - வரும்படி, விடாமல் - விடைகொடுத்தனுப்பாமையால், ஆதரவுடன் - அன்புடன், நந்தி - வசவண்ணனும், அவருடன் - அவரோடு கூடவே, அங்கு - அவ் விடத்தில், அணைந்தான் - சேர்ந்தான், நீதியோ - நியாயமாகுமோ, தண்டநாதன் - தண்டநாயகனும், நித்தர்-அழிவில்லாதவர்களாகிய, சங்கமர் - ஜங்கமமூர்த்திகளுக்கு, பிராணி - உயிராயிருப்பவனும், ஓதும் - (சிவாகமங்களில்) சொல்லப்பட்ட, நல் - மேன்மையாகிய, மூவித பத்தி - த்ரிவித பக்தியே, உருவம் ஆய் - திருமேனியாய், உலகில் - உலகத்தில், வந்தோன் - அவதரித்தவனும், எ - று.

(பொ - ரை.) மேதாகேதையரைச் சீக்கிரமாக வரும்படி விடைகொடுத்தனுப் பாமையால் அன்புடன் வசவண்ணனும் அவரோடுகூடவே அவ்விடத்திற் சேர்ந்தான்; நியாயமாகுமோ? தண்டநாயகனும், அழிவில்லாதவர்களாகிய ஜங்கமமூர்த்திகளுக்கு உயிராயிருப்பவனும், சிவாகமங்களிற் சொல்லப்பட்ட மேன்மையாகிய த்ரிவித பக்தியே திருமேனியாய் உலகத்தில் அவதரித்தவனும். (உ0)

சங்கமச் செல்வந் தக்கோர் தருக்கன சரீரன் றன்னை
யிங்குநீ யிருத்தா தங்க னிருக்கவே யிசைந்தி ருந்தாற்
றுங்கனே நீயி ரண்டு சொல்லுடைக் கடவுளாகி
லங்கணா வென்றன் செய்தி யறிகையே யறவும் பொல்லேன்.

(ப - ரை.) சங்கமர் - ஜங்கமமூர்த்திகளுக்கு, செல்வம் - நிதியாயிருப்பவனும், தக்கோர் - ஞானிகளுக்கு, தரு - கல்பக வ்ருக்ஷமாயிருப்பவனும், கனம் - சிறப்புள்ள, சரீரன் தன்னை - திருமேனியையுடையவனுமாகிய வசவண்ணனை, இங்கு - இவ்விடத்தில், நீ—, இருத்தாது - தங்கவொட்டாமல், அங்கன் - அவ்விடத்தில், இருக்க - தங்கும்படி, இசைந்து இருந்தால் - சம்மதித்திருப்பாயாயினும், துங்கனே - சிவபெருமானே, நீ—, இரண்டு சொல் உடை - இரண்டகமுள்ள, கடவுள் ஆகில் - தெய்வமாயிருப்பாயாயினும், அம் கண்ணா - க்ருபாகடாக்ஷமுள்ளவனே, என் - அடியேனுடைய, செய்தி - சமாசாரத்தை, அறிகையே - உணர்வாயே, அறவும் - மிகவும், பொல்லேன் - கொடியனாவேன், எ - று.

(பொ - ரை.) ஜங்கமமூர்த்திகளுக்கு நிதியாயிருப்பவனும், ஞானிகளுக்குக் கல்பக வ்ருக்ஷமாயிருப்பவனும், சிறப்புள்ள திருமேனியையுடையவனுமாகிய வசவண்ணனை இவ்விடத்தில் நீ தங்கவொட்டாமல் அவ்விடத்தில் தங்கும்படிச் சம்மதித்திருப்பாயாயினும், சிவபெருமானே! நீ இரண்டகமுள்ள தெய்வமாயிருப்பாயாயினும், க்ருபாகடாக்ஷமுள்ளவனே! அடியேனுடைய சமாசாரத்தை உணர்வாயே; மிகவும் கொடியனாவேன்.

(வி - ரை.) இரண்டுபேச்சு - முன்னுக்குப் பின் விரோதமாய்ப் பேசுகின்ற வஞ்சகமான வார்த்தை. மேலிரண்டு செய்யுட்களும் குளகம். (உக)

என்றுமாச் சையரு ரைத்த தெம்பிரான் வெள்ளி வெற்பிற்
றன்றிரு வுளத்திற் கண்டு சகலதன் கணத்தை நோக்கி
மென்றிரு முறுவல் கொண்டு விளம்புவான் விமல பத்தி
யொன்றின னம்மே லன்பா லுயர்மடி வாலமாச்சன்.

(ப - ரை.) என்று - என்று கோவித்து, மாச்சையர் - மடிவாலமாச்சையர், உரைத்தது - சொன்னவற்றையெல்லாம், எம்பிரான்-எமது சிவபெருமான், வெள்ளி வெற்பில் - ஸ்ரீ மஹாகைலாஸத்தில், தன் - தனது, திருவுளத்தில்—, கண்டு - தெரிந்து, தன் - தனது, சகல கணத்தை - சிவகணங்களனைவரையும், நோக்கி - பார்த்து, மெல் - மெல்ல, திருமுறுவல்கொண்டு - திருமுறுவல் செய்து, விளம்புவான் - திருவாய்மலர்ந்தருள்வாராயினன் (எவ்வாறெனின்), விமலம் - பரிசுத்தமாகிய, பத்தி-சிவபக்தியை, ஒன்றினன் - அடைந்து, நம்—, மேல் - மீது, அன்பால் - அன்புகொண்டு, உயர் - மேன்மையாகிய, மடிவாலமாச்சன் - மடிவாலமாச்சையன், எ - று.

(பொ-ரை.) என்று கோவித்து, மடிவாலமாச்சையர் சொன்னவற்றை யெல்லாம் எமது சிவபெருமான் ஸ்ரீமஹாகைலாஸத்தில் தனது திருவுளத்தில் தெரிந்து, தனது சிவகணங்களனைவரையும் பார்த்து, மெல்லத் திருமுறுவல்செய்து, திருவாய்மலர்ந்தருள்வாராயினன்: எவ்வாறெனின்:— பரிசுத்தமாகிய சிவபக்தியை யடைந்து, நம் மீது அன்புகொண்டு, மேன்மையாகிய மடிவாலமாச்சையன்.

(வி - ரை.) வெள்ளிவெற்பு - வெள்ளியங்கிரி: இது வெள்ளியினாலே யியன்றதாதலால் வெள்ளிவெற்பெனப்பட்டது. திருவுளம் - திவ்யசித்தம். முறுவல் - சிரித்தல். ஒன்றினன் - முற்றெச்சம். (உஉ)

### கலி நிலைத்துறை.

இந்த மேதா கேதையன் றன்னையா மழைக்க
வந்த னனிவன் றன்னொடு நந்தியும் வரலா
லந்த மாநிலத் தமலநம் பத்திபோய்த் தென்றே
யெந்த மேல்முனி கின்றனன் யாமென செய்தும்.

(ப-ரை.) இந்த - (இதோ நிற்கின்ற) இந்த, மேதாகேதையன் தன்னை - மேதாகேதையனை, யாம் - நாம், அழைக்க - அழைத்துக்கொண்ட மாத்திரத்தில், வந்தனன் - வந்தான், இவன் தன்னொடு - இவனுடன் கூடவே, நந்தியும் - வசவண்ணனும், வரலால் - வந்தமையால், அந்த—, மா - பெரிய, நிலத்து - உலகத்தில், நம் - நம்மீதுள்ள, அமலம் - பரிசுத்தமாகிய, பத்தி - பக்தியானது, போய்த்து - போயிற்று, என்று - என்று சொல்லி, எம் மேல் - நம்மீது, முனிகின்றனன் - கோவிக்கின்றான், யாம் - நாம், என்ன - யாது, செய்தும் - பண்ணுவோம், எ - று.

(பொ - ரை.) இதோ நிற்கின்ற இந்த மேதா கேதையனை நாம் அழைத்துக் கொண்ட மாத்திரத்தில் வந்தான் ; இவனுடன் கூடவே வசவண்ணவனும் வந்தமையால், அந்தப் பெரிய உலகத்தில் நம்மீதுள்ள பரிசுத்தமாகிய பக்தியானது போயிற்றென்று நம்மீது கோவிக்கின்றான் ; நாம் யாது பண்ணுவோம் ?

(வி - ரை.) போய்த்து என்பது போயிற்று என்பதன் திரிபு. மேலிரண்டு செய்யுட்களும் குளகம். (உ௩)

என்ன வீரபத் திராதிபல் கணத்தரு மிறைஞ்சிப்
பன்னகா பரணு நின்றன் பதத்தினிற் பற்றுந்
துன்னு பத்தியாற் சங்கமார்ச் சனைசெயுந் தொழும்பாற்
பின்னை நந்தியை யொப்பவ ரெங்குளார் பேசின்.

(ப - ரை.) என்ன - என்று (சிவபெருமான்) சொல்லியருளுதலும், வீரபத்திர ஆதி-வீரபத்திரக்கடவுள் முதலாகிய, பல் - பல, கணத்தரும் - சிவகணங்களும், இறைஞ்சி - வணங்கி, பன்னகாபரணு - சர்ப்பாபரணனே, நின்தன் - உனது, பதத்தினில் - திருவடிகளில், பற்றும் - அன்பு செய்கின்ற, துன்னு - மிக்க, பத்தியால் - பக்தியினாலும், சங்கமார்ச்சனை - ஜங்கமாராதனை, செய்யும் - பண்ணுகின்ற, தொழும்பால் - பணிவிடையினாலும், பேசின் - சொல்லுமிடத்து, பின்னை - பிறகு, நந்தியை - வசவண்ணனை, ஒப்பவர் - நிகர்ப்பவர், எங்கு - எவ்விடத்தில், உள்ளார் - இருக்கின்றார், எ - று.

(பொ - ரை.) என்று சிவபெருமான் சொல்லியருளுதலும், வீரபத்திரக் கடவுள் முதலாகிய பல சிவகணங்களும் வணங்கி, சர்ப்பாபரணனே ! உனது திருவடிகளில் அன்பு செய்கின்ற மிக்க பக்தியினாலும், ஜங்கமாராதனை பண்ணுகின்ற பணிவிடையினாலும், சொல்லுமிடத்து, பிறகு வசவண்ணனை நிகர்ப்பவர் எவ்விடத்தி லிருக்கின்றார் ?

(வி-ரை.) பன்னகம் - பாம்பு ; இது வடசொல் ; காலால் நடவாத தென்பது பொருள். எங்குளார் என்னும் வினா எதிர்மறை. (உ௪)

நின்ப தத்தினுக் கியன்றநன் மைந்தனை நின்போற்
றுன்ப மில்லனைச் சுகானந்த ஞானர்தந் துணைவை
மன்பெ ருந்தவர் வைப்பினை மாச்சையர் மகிழ்வ
ரன்பர் மன்னிடை மல்குவா னங்கனி விடுப்பாய்.

(ப - ரை.) நின் - உனது, பதத்தினுக்கு - பதவிக்கு, இயன்ற - உகந்தவனாகிய, நல் மைந்தனை - ஸத்புத்ரனை, நின் - உன்னை, போல் - போலவே, துன்பம் - துக்கம், இல்லவனை - இல்லாதவனை, சுகானந்தம் - மோக்ஷாநந்தத்தையுடைய, ஞானர் -

ஞானிகளுக்கு, துணையை - கதியா யிருப்பவனை, மன் - நிலைபெற்ற, பெரு - மேன்மையாகிய, தவர் - ஜங்கமமூர்த்திகளுக்கு, வைப்பினை - நிதியாயிருப்பவனை, மாச்சையர் - மடிவால மாச்சையர், மகிழ்வர் - சந்தோஷிப்பார், அன்பர் - சிவபக்தர்கள், மண் இடை - உலகத்தில், மல்குவான் - விருத்தியடையும் பொருட்டு, அங்கண் - அவ்விடத்திற்கு, நீ—, விடுப்பாய் - விடை கொடுத்தனுப்புவாய், எ - று.

(பொ-ரை.) உனது பதவிக்கு உகந்தவனாகிய ஸத்புத்ரனை, உன்னைப் போலவே துக்கமில்லாதவனை, மோக்ஷாநந்தத்தையுடைய ஞானிகளுக்குக் கதியாயிருப்பவனை, நிலைபெற்ற மேன்மையாகிய ஜங்கமமூர்த்திகளுக்கு நிதியாயிருப்பவனை மடிவால மாச்சையர் சந்தோஷிப்பார்; சிவபக்தர்கள் உலகத்தில் விருத்தியடையும் பொருட்டு அவ்விடத்திற்கு நீ விடைகொடுத்தனுப்புவாய்.　　(௨௪)

என்றி றைஞ்சநம் பிரானிரு வோரையு மழையா
சென்று றுங்கட கத்தின்று நீரெனச் செப்ப
நின்றி றைஞ்சியே நும்மிடை நீங்கல மென்று
ரன்று சொல்லுநா நும்மிடை யற்பமு மகலேம்.

(ப - ரை.) என்று - என்று சொல்லி, இறைஞ்ச - வணங்குதலும், நம்பிரான் - நமது சிவபெருமான், இருவோரையும் - இரண்டு சிவசரணர்களையும், அழையா - அழைத்து, நீர் - நீங்கள், இன்று - இப்போது, கடகத்து - கல்யாண பட்டினத்தில், சென்று - போய், உறும் - சேருங்கள், என்ன - என்று, செப்ப - கட்டளையிடுதலும், நின்று- (அவர்கள்) நின்று, இறைஞ்சி - வணங்கி, நும் இடை - உம்மிடத்தினின்றும், நீங்கலம் விலகமாட்டோம், அன்று-அந்நாளில், சொல்லும் - சொல்லியனுப்பப்பட்ட, நாம் - நாங்கள், நும் இடை - உம்மிடத்தினின்றும், அற்பமும் - சற்றும், அகலேம் - விலகமாட்டோம், என்றார் - என்று சொன்னார்கள், எ-று.

(பொ-ரை.) என்று சொல்லி வணங்குதலும், நமது சிவபெருமான் இரண்டு சிவசரணர்களையும் அழைத்து, நீங்கள் இப்போது கல்யாண பட்டினத்திற் போய்ச் சேருங்களென்று கட்டளையிடுதலும், அவர்கள் நின்று வணங்கி, உம்மிடத்தினின்றும் விலகமாட்டோம்; அந்நாளில் சொல்லியனுப்பப்பட்ட நாங்கள் உம்மிடத்தினின்றும் சற்றும் விலகமாட்டோமென்று சொன்னார்கள்.

(வி - ரை.) கடகம் - வட்டம்; அது உலகுக் காயிற்று; உலகம் வட்டவடிவமாயிருப்பதால்; அது கல்யாணநகரத்திற்காயிற்று; இருமடியாகுபெயர்.　　(௨௫)

நம்பெ ருந்தவர் பூசையே நமக்கிஷ்ட பூசை
யம்பு விக்குணீர் செல்விரென் றணைத்துகந் தருளத்
தம்பி ரான்கழ லிருவருந் தாழ்ந்துறப் பணிந்தங்
கெம்பி ரான்றிருக் கருணையால் விடை கொண்டங் கேத்தி.

(ப - ரை.) நம் - நமது, பெரு - மேன்மைபொருந்திய, தவர் - ஜங்கமமூர்த்திகளுக்குச் செய்கின்ற, பூசையே - பூஜையே, நமக்கு—, இஷ்டம் - உகந்த, பூசை - பூஜையாகும், நீர் - நீங்கள், அம்புவிக்குள் - உலகத்தில், செல்வீர் - போங்கள், என்று- என்று கட்டளையிட்டு, அணைத்து - தழுவிக்கொண்டு, உகந்து - சந்தோஷத்துடன், அருள - விடைகொடுத்தருளின மாத்திரத்தில், இருவரும் - இரண்டு சிவசரணர்களும், தம்பிரான் - சிவபெருமானுடைய, கழல் - திருவடிகளை, தாழ்ந்து - அன்புடன், உறப் பணிந்து - ஸாஷ்டாங்கமாக வணங்கி, அங்கு - அவ்விடத்தில், எம்பிரான் - எமது சிவபெருமானது, திருக்கருணையால் - திருவருளால், விடைகொண்டு-உத்தரவு பெற்று, அங்கு - அவ்விடத்தில், ஏத்தி - துதித்து, எ-று.

(பொ-ரை.) நமது மேன்மைபொருந்திய ஐங்கமமூர்த்திகளுக்குச் செய்கின்ற பூஜையே நமக்கு உகந்த பூஜையாகும்; நீங்கள் உலகத்திற் போங்களென்று கட்டளையிட்டுத் தழுவிக்கொண்டு, சந்தோஷத்துடன் விடைகொடுத்தருளின மாத்திரத்தில், இரண்டு சிவசரணர்களும் சிவபெருமானுடைய திருவடிகளை அன்புடன் ஸாஷ்டாங்கமாக வணங்கி, அவ்விடத்தில் எமது சிவபெருமானது திருவருளால் உத்தரவு பெற்று, அவ்விடத்தில் துதித்து.

இறைவர் தந்திருக் கூட்டராங் கணங்களை யிறைஞ்சி
நிறையு மங்கவ ரருள்கொடு நீங்கினர் கடக
முறையு மாதவர் முன்னுறுந் தமதுட லுற்றார்
தறையி னின்றெழுந் தன்பர்மெய்ச் சமுகத்தைத் தாழ்ந்தார்.

(ப - ரை.) இறைவர்தம் - சிவபெருமானது, திருக்கூட்டர் ஆம் - திருக்கூட்டத்தாராகிய, கணங்களை-சிவகணங்களையும், இறைஞ்சி - வணங்கி, அங்கு - அவ்விடத்தில், நிறையும் - நிறைந்திருக்கின்ற, அவர் - அவர்களுடைய, அருள் - கிருபையை, கொண்டு - பெற்று, நீங்கினர் - அகன்று, கடகம் - கல்யாணபட்டினத்தில், உறையும் - நிறைந்திருக்கின்ற, மாதவர் - ஜங்கமமூர்த்திகள், முன் - சந்நிதியில், உறும் - கிடக்கின்ற, தமது - தங்கள் தங்களுடைய, உடல் - திருமேனிகளை, உற்றார்-அடைந்து, தறையில் நின்று - பூமியினின்றும், எழுந்து - (மேலே) எழுந்திருந்து, மெய் - உண்மையராகிய, அன்பர் சமுகத்தை - ஜங்கமத்திருக்கூட்டத்தவரை, தாழ்ந்தார் - வணங்கினார்கள், எ - று.

(பொ - ரை.) சிவபெருமானது திருக்கூட்டத்தாராகிய சிவகணங்களையும் வணங்கி, அவ்விடத்தில் நிறைந்திருக்கின்ற அவர்களுடைய கிருபையைப் பெற்று, அகன்று, கல்யாணபட்டினத்தில் நிறைந்திருக்கின்ற ஜங்கமமூர்த்திகள் சந்நிதியில் கிடக்கின்ற தங்கள் தங்களுடைய திருமேனிகளை யடைந்து, பூமியினின்றும் மேலே எழுந்திருந்து, உண்மையாகிய ஜங்கமத்திருக்கூட்டத்தவரை வணங்கினார்கள்.

(வி - ரை.) நீங்கினர், உற்றார் என்பவை முற்றெச்சங்கள். (உஅ)

பற்று நேயராய் மாச்சையர் பதத்தினும் பணிந்தார்
மற்று நன்மடி வாலையர் தவத்தரை வணங்கி
யுற்று நும்மடி யார்கள்வந் தார்நுமக் குரிய
நற்றி றத்தொழும் பானவை கொளுமென்று நவின்றார்.

(ப - ரை.) பற்றும் - அன்புசெய்கின்ற, நேயர்ஆய் - பக்தியுள்ளவர்களாய், மாச்சையர் - மடிவாலமாச்சையருடைய, பதத்தினும் - திருவடிகளிலும், பணிந்தார் - வணங்கினார்கள், மற்றும் - மேலும், நல் - மேன்மைபொருந்திய, மடிவாலையர் - மடிவாலமாச்சையரும், தவத்தரை-ஜங்கமமூர்த்திகளை, வணங்கி - பணிந்து, நும் - உங்களுடைய, அடியார்கள்-சிவசரணர்கள், உற்று வந்தார் - வந்துசேர்ந்தார்கள், நுமக்கு- உங்களுக்கு, உரிய - ஆகவேண்டிய, நல் திறம் - நற்குணமாகிய, தொழும்பானவை- பணிவிடைகளை யெல்லாம், கொளும் - பெறுங்கள், என்று—, நவின்றார்-சொல்லியருளினார், எ - று.

(பொ-ரை.) அன்புசெய்கின்ற பக்தியுள்ளவர்களாய் மடிவாலமாச்சையருடைய திருவடிகளிலும் வணங்கினார்கள்; மேலும் மேன்மைபொருந்திய மடிவாலமாச்சையரும் ஜங்கம மூர்த்திகளைப் பணிந்து, உங்களுடைய சிவசரணர்கள் வந்து சேர்ந்தார்கள்; உங்களுக்கு ஆகவேண்டிய நற்குணமாகிய பணிவிடைகளை யெல்லாம் பெறுங்களென்று சொல்லியருளினார்.

திருந்து நந்திகள் சங்கமப் பிராணியாஞ் சீரை
யருந்தி றற்றரு மாச்சையர் புகழினை யங்க
ணிருந்த மாதவ ரேத்தலு மிருவரு மிறைஞ்சிப்
பொருந்து மன்பினும் மடஞ்செலு மின்னெனப் புகன்று.

(ப - ரை.) திருந்து - மேன்மைபொருந்திய, நந்திகள் - வசவண்ணர், சங்கமப் பிராணி - ஜங்கமப்பிராணி, ஆம் - ஆகிய, சீரை - சிறப்பையும், அரு - மேன்மையாகிய, திறல் தரும் - வெற்றிபொருந்திய, மாச்சையர் - மடிவாலமாச்சையாது, புகழினை - புகழையும், அங்கண் - அவ்விடத்தில், இருந்த - நிறைந்திருக்கின்ற, மாதவர் - ஜங்கம மூர்த்திகள், ஏத்தலும் - துதித்தலும், இருவரும் - இரண்டு சிவசாணர்களும், இறைஞ்சி - வணங்கி, பொருந்தும் - அமைந்திருக்கின்ற, அன்பின் - அன்புடன், நும் - உங்களுடைய, மடம் - திருமடங்களுக்கு, செல்லுமின் - எழுந்தருளுங்கள், என்ன - என்று, புகன்று - சொல்லி, எ - று.

(பொ - ரை.) மேன்மைபொருந்திய வசவண்ணர் ஜங்கம ப்ராணியாகிய சிறப்பையும், மேன்மையாகிய வெற்றிபொருந்திய மடிவாலமாச்சையாது புகழையும் அவ்விடத்தில் நிறைந்திருக்கின்ற ஜங்கமமூர்த்திகள் துதித்தலும், இரண்டு சிவசாணர்களும் வணங்கி, அமைந்திருக்கின்ற அன்புடன் உங்களுடைய திருமடங்களுக்கு எழுந்தருளுங்களென்று சொல்லி.

(வி - ரை.) அன்பின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றாவதன் கருவிப் பொருளில் வந்தது. (கo)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஐயர்மாச் சையர் தாளிற் கஞ்சலி செய்துபோற்றிச்
செய்யதம் மடத்திற் செல்லச் செப்பியே நந்தி தேவ
ருய்யமே தாகே தைய ருடன்சென்று தம்ம டத்து
மெய்யரா மடிவா லையர் பெருமையை வியந்தி ருந்தார்.

(ப-ரை.) ஐயர் - ஜங்கமமூர்த்திகளாகிய, மாச்சையர் - மடிவாலமாச்சையாது, தாளிற்கு - திருவடிகளுக்கு, அஞ்சலிசெய்து - கும்பிட்டு, போற்றி - வணங்கி, தம் - தமது, செய்ய - அழகிய, மடத்திற்கு - திருமடத்திற்கு, செல்ல - எழுந்தருளும்படி, செப்பி - சொல்லி, நந்திதேவர் - வசவண்ணர், உய்ய - கடைத்தேறும்பொருட்டு, மேதாகேதையருடன் - மேதாகேதையரோடு, சென்று - எழுந்தருளி, தம் - தமது, மடத்து - திருமாளிகையில், மெய்யர் ஆம் - ஜங்கமமூர்த்திகளாகிய, மடிவாலையர் - மடிவாலமாச்சையாது, பெருமையை - மஹத்வத்தை, வியந்து - அதிசயித்து, இருந்தார் - (சுகமாக வாழ்ந்து) இருந்தார், எ-று.

(பொ-ரை.) ஜங்கமமூர்த்திகளாகிய மடிவாலமாச்சையாது திருவடிகளுக்குக் கும்பிட்டு வணங்கித் தமது திருமடத்திற்கு எழுந்தருளும்படிச் சொல்லி, வசவண்ணர் கடைத்தேறும்பொருட்டு மேதாகேதையரோடு எழுந்தருளித் தமது திருமாளிகையில் ஜங்கமமூர்த்திகளாகிய மடிவாலமாச்சையாது மஹத்வத்தை அதிசயித்து, சுகமாக வாழ்ந்திருந்தார். (கக)

மேதாகேதையர்புராணம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - சஉருக.

---

திருக்கூட்டச்சருக்கம்-முற்றிற்று.

---

உ

சிவமயம்.

# திருவாதுச்சருக்கம்.

## சிவநாகமையர்வாது.

### கலிவிருத்தம்.

எதிகள்சது ரார்த்த வினியசர ணார்த்தி
விதிதமதி காத்த விரதசர ணார்த்தி
யதிககதி பார்த்த வமலசர ணார்த்தி
வதியதவி தாச்சொல் வசவசர ணார்த்தி.

(ப - ரை.) எதிகள் - ஜங்கமமூர்த்திகள் விரும்புதற்குரிய, சதுரார்த்தம் - சதுர்வித புருஷார்த்தங்களை யநுசரிப்பதற்கு, இனிய - விருப்பமுள்ளவனே, சரணார்த்தி—, விதிதமதி - ஜங்கம தர்மத்தை, காத்த - பரிபாலனஞ்செய்யவல்ல, விரத - வீரவிரத சீலனே, சரணார்த்தி—, அதிகம் - மேன்மையாகிய, கதி – மோக்ஷமார்க்கத்தை, பார்த்த – கண்டுபிடித்த, அமல – பரிசுத்தாத்மாவே, சரணார்த்தி—, வதிய – உஜ்ஜீவிக்கும்பொருட்டு, தவிதாச் சொல் – உறுதிச்சொல்லையுடைய, வசவ – வசவண்ணனே, சரணார்த்தி—, எ – று.

(பொ – ரை.) ஜங்கமமூர்த்திகள் விரும்புதற்குரிய சதுர்வித புருஷார்த்தங்களை யநுசரிப்பதற்கு விருப்பமுள்ளவனே! சரணார்த்தி; ஜங்கம தர்மத்தைப் பரிபாலனஞ் செய்யவல்ல வீரவிரத சீலனே! சரணார்த்தி; மேன்மையாகிய மோக்ஷமார்க்கத்தைக் கண்டுபிடித்த பரிசுத்தாத்மாவே! சரணார்த்தி; உஜ்ஜீவிக்கும்பொருட்டு உறுதிச் சொல்லையுடைய வசவண்ணனே! சரணார்த்தி.

(வி – ரை.) சரணார்த்தி – நமஸ்காரம். சதுரார்த்தம் – அறம், பொருள், இன்பம், வீடு என்பன. விதிதன் – யோகி. அதிக கதி – பர கதி. தவிதா – இளைக்காத.

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

இப்படி தவத்தோர் பத்த ரிணையிலா மகத்தோ ரன்பா
லொப்பருந் தண்ட நாத ருடன்றிருக் கூட்ட ராகிச்
செப்பரு மஞ்செ ழுத்தாஞ் செழுஞ்சுடர் வாளால் வாத
வெப்பம தறத்து ணித்த வாதினை விளம்ப லுற்றும்.

(ப – ரை.) இப்படி – இவ்விதமாக, தவத்தோர் – சிவயோகிகளும், பத்தர்– பக்தமாஹேஸ்வரர்களும், இணையில்லா - நிகரற்ற, மகத்தோர் - ஜங்கமமூர்த்திகளும், அன்பால் – அன்புடன், ஒப்பு அரு – நிகரற்ற, தண்டநாதருடன் – வசவண்ணரோடு, திருக்கூட்டராகி – திருக்கூட்டத்தவர்களாகி, செப்பு அரு – சொல்லுதற்கரிய, அஞ்சு எழுத்தாம் - ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹாமந்த்ரமாகிய, செழும் - மிக்க, சுடர் - ஒளி பொருந்திய, வாளால் – வாளாயுதத்தைக்கொண்டு, வாதம் – பரசமயவாதிகளுடைய துர்வாதமாகிய, வெப்பம் அது - அந்தக் கொடுமையை, அற - முற்றிலும், துணித்த– கண்டித்தொழித்த, வாதினை – திருவாதத்தைப்பற்றிய திவ்யசரிதத்தை, விளம்பல் உற்றும் – சொல்லத் தொடங்கினோம் (எவ்வாறெனின்), எ – று.

(பொ - ரை.) இவ்விதமாகச் சிவயோகிகளும், பக்த மாஹேஸ்வரர்களும், ஜங்கம மூர்த்திகளும், அன்புடன் நிகரற்ற வசவண்ணரோடு திருக்கூட்டத்தவர்களாகி, சொல்

லுதற்கரிய ஸ்ரீபஞ்சாக்ஷர மஹாமந்த்ரமாகிய மிக்க ஒளிபொருந்திய வாளாயுதத்தைக் கொண்டு, பாசமயவாதிகளுடைய துர்வாதமாகிய அந்தக் கொடுமையை முற்றிலும் கண்டித்தொழித்த திருவாதத்தைப் பற்றிய திவ்ய சரிதத்தைச் சொல்லத் தொடங்கினோம்; எவ்வாறெனின். (உ)

சிவநாக மைய ரென்னுந் திருப்பெருங் குலத்தோ ரன்பர்
பவநாச ருண்மை ஞானப் பரிவின ரரிய நீரார்
தவநாய கத்தர் சுத்தர் தயாநிதி நயானு பூதர்
புவனாதி பதியாந் தண்ட நாதர்பாற் பொருந்து நாளில்.

(ப-ரை.) சிவநாகமையர்—, என்னும் - என்கின்ற திருநாமத்தினையுடையவரும், பெரு - பெரிய, திருக்குலத்து - திருக்குலத்தில் அவதரித்தவருமாகிய, ஓர் - ஒப்பற்ற, அன்பர் - சிவபக்தர், பவநாசர் - பிறப்பில்லாதவர், உண்மை ஞானம் - தத்துவ வாராய்ச்சிசெய்து பேரறிவடைவதில், பரிவினர் - மிக்க விருப்பமுள்ளவர், அரிய - கிடைத்தற்கரிய, நீரார் - நற்குணமுள்ளவர், தவநாயகத்தர் - தவராஜயோகியர், சுத்தர் — மனத் தூய்மையுடையவர், தயாநிதி — ஜீவகாருண்யமுள்ளவர், நய அநுபூதர்— நிகமாகம பாஸ்த்ரங்களைக் கற்றுணர்ந்த ப்ரஹ்ம ஜ்ஞானமுள்ளவர், புவனாதிபதி யாம் — பூலோகநாதராகிய, தண்டநாதர் பால் — வசவண்ணரிடத்தில், பொருந்தும் நாளில் — வாழ்கின்ற காலத்தில், எ—று.

(போ-ரை) சிவநாகமையரென்கின்ற திருநாமத்தினையுடைய வரும், பெரிய திருக்குலத்தில் அவதரித்தவருமாகிய ஒப்பற்ற சிவபக்தர்; பிறப்பில்லாதவர்; தத்துவ வாராய்ச்சி செய்து பேரறிவடைவதில் மிக்க விருப்பமுள்ளவர்; கிடைத்தற்கரிய நற்குணமுள்ளவர்; தவராஜயோகியர்; மனத் தூய்மையுடையவர்; ஜீவகாருண்யமுள்ளவர்; நிகமாகம பாஸ்த்ரங்களைக் கற்றுணர்ந்த ப்ரஹ்மஜ்ஞானமுள்ளவர்; பூலோகநாதராகிய வசவண்ணரிடத்தில் வாழ்கின்ற காலத்தில்.

(வி-ரை.) திருக்குலத்தாரின் வரலாறு:— உலகத்தில் ஜாதிபேதத்தினால் விருத்திபேதமும், யோக்யதா பேதமும் சாத்திர சம்மதமாயிருப்பினும் மோக்ஷமென்பது எல்லா ஜாதியார்களுக்கும் அவசியமாயிருத்தலானும், மோக்ஷ விஷயத்தில் எல்லாரும் உரிமையுடையவர்களாயிருத்தலானும், பஞ்சமனும் தனது மனதிற்கு இஷ்டமான மதத்தையநுசரிப்பதில் அம் மதாசார்யர் அவனுக்குக் குருவாயிருக்காம லிருக்கமுடியாது. பஞ்சமர்களுக்கு ஸ்ரீவைஷ்ணவர் குருக்களல்லவென்று சொல்லமுடியாதன்றோ? சந்நியாசிக்குச் சிகா யஜ்ஞோபவீத த்யாகம் கர்த்தவ்ய மாகும்போது அது தோஷரஹிதமென்பது போல, லிங்கதாரியான பஞ்சமனுக்கும் ஜங்கமமூர்த்திகள் குருக்களாவதும் கர்த்தவ்யமேயாம். வீரசைவன் பஞ்சமனுக்குக் குருக்களானதனால் யாதொரு தோஷமும் நேரிடாது. ஸ்ரீவைஷ்ணவர்கள் சூத்திரர்களுக்கும், மற்றுமுள்ள கீழ் ஜாதியார்களுக்கும் முத்ராங்கநத்தையும் (அதாவது காய்ச்சின லோக முத்திரையினால் உடம்பின் மேல் தழும்பேறும்படிச் சுடுகிற கர்மம்), மற்றுமுள்ள ஸம்ஸ்காரங்களையுஞ் செய்து, தங்கள் மதத்திற்குச் சேர்த்திருக்கின்றார்கள். இப்போதும் அவ்விதமான வைஷ்ணவ சூத்திரர்முதலானவர்களுக்குத் திருக்குலத்தாரெனப் பெயர் வழங்குகிறது. ஆயினும் மேற்போந்த ஸம்ஸ்காரங்களினால் ஸ்ரீவைஷ்ணவர்கள் அவர்களைத் தமது ஜாதியில் சேர்த்திருக்கிறார்களென்பதற்கு யாதாமொரு அத்தாக்ஷியிருப்பதாக ஊகிக்கவிடமில்லை. ஆனால் வீரசைவமதாசார்யர் செய்யும் ஸமஸ்காரங்களினால் நீசகுலத்திற் பிறந்தோனாயினும் அவன் சிவகுலத்தனாகி நற்கதியடைவான். (ங)

மறையவ ரிதனைக் கண்டு மனம்பொறா ராகித் தம்மு
ளுறைதருஞ் செவிச்சொற் பேசி யுருத்தெழுங் கருத்தராகி
யிறைவனும் விச்ச லேச னெதிர்நின்று நந்தி கேச
னிறைதரு மந்த ணாளர் கெடுங்குல நீங்கிற் றென்றார்.

(ப-ரை.) மறையவர் — ப்ராஹ்மணர்கள், இதனை — (நீசகுலத்தாரென்று நினைத்த சிவயோகியராகிய சிவநாகமையர் வசவண்ணரிடத்தில் வாழ்கின்ற) இந்தச் செயலை கண்டு - பார்த்து, மனம்—, பொறாராகி - பொறுக்காதவர்களாகி, தம்முள் - தங்களுக்குள்ளே, உறைதரும் — அந்தரங்கமாயிருக்கின்ற, செவிச்சொல் — ரஹஸ்யவார்த்தைகளை, பேசி - (கண்டுங் காணுலும்) சொல்லிக்கொண்டு, உருத்து - கோவித்து, எழும்பொங்குகின்ற, கருத்தராகி — மனமுள்ளவர்களாகி, இறைவனும் — அரசனாகிய, விச்சலேசன் எதிர்-விஜ்ஜலராஜனுக்கெதிரிலே, நின்று—, நந்திகேசன்-வசவண்ணனது, நிறை தரும் - மேன்மைபொருந்தினதும், செடு - உயர்வடைந்ததுமாகிய, அந்தணர் குலம் — ப்ராஹ்மண ஜாதியானது, நீங்கிற்று - அழிந்தது, என்றார் - என்று சொன்னார்கள், எ—று.

(பொ-ரை.) ப்ராஹ்மணர்கள், நீசகுலத்தாரென்று நினைத்த சிவயோகியராகிய சிவநாகமையர் வசவண்ணரிடத்தில் வாழ்கின்ற இந்தச் செயலைப் பார்த்து, மனம் பொறுக்காதவர்களாகி, தங்களுக்குள்ளே அந்தரங்கமாயிருக்கின்ற ரஹஸ்ய வார்த்தைகளைக் கண்டுங் காணுமலும் சொல்லிக்கொண்டு, கோவித்துப் பொங்குகின்ற மனமுள்ளவர்களாகி, அரசனாகிய விஜ்ஜலராஜனுக் கெதிரிலே நின்று, வசவண்ணனது மேன்மைபொருந்தினதும், உயர்வடைந்ததுமாகிய ப்ராஹ்மணஜாதியானது அழிந்ததென்று சொன்னார்கள். (௬)

திருக்குலாந் திருக்கு லத்தோர் திருக்குல ரென்ற வர்க்கே
பெருக்கவே வணங்கிச் செய்யாப் பிரியங்க ளெல்லாஞ் செய்வ
னுருத்திர னென்னக் காண்ப னுண்டுமிக் கனவு முண்பன்
குருக்களு மவரே மேலாங் குலத்தரு மவரே யென்பன்.

(ப — ரை.) திருக்குலாம் - மேன்மைபொருந்திய, திருக்குலத்தோர்-திருக்குலத்தார், திருக்குலர் — திருக்குலத்தார், என்று — என்று புகழ்ந்து, அவர்க்கே — அந்தக் குலத்தார்க்கே, பெருக்க — விசேஷமாக, வணங்கி — (பாதங்களில் விழுந்து)பணிந்து, செய்யா — பண்ணத்தகாத, பிரியங்கள் எல்லாம் — உபசார வகைளெல்லாவற்றையும், செய்வன் - பண்ணுவான், உருத்திரன் என்ன - மஹா ருத்ரமூர்த்தி போல, காண்பன்- உக்கிரமாகப் பார்ப்பான், உண்டு — (அவர் பாதங்களைக் கழுவிய பாதோதகத்தையும்) உண்டு, மிக்கனவும் — (அவர் உண்டு மீதியாயிருக்கின்ற) எச்சிலையும், உண்பன் — உண்பான், குருக்களும் - ஆசார்யரும், அவரே—, மேல் ஆம் குலத்தரும் — உயர்ந்த ஜாதியாரும், அவரே—, என்பன் — என்று சொல்லுவான், எ — று.

(பொ ரை.) மேன்மைபொருந்திய திருக்குலத்தார், திருக்குலத்தாரென்று புகழ்ந்து அந்தக் குலத்தார்க்கே விசேஷமாகப் பாதங்களில் விழுந்து பணிந்து, பண்ணத்தகாத உபசார வகைகளெல்லாவற்றையும் பண்ணுவான்; மஹா ருத்ரமூர்த்தி போல உக்கிரமாகப் பார்ப்பான்; அவர் பாதங்களைக் கழுவிய பாதோதகத்தையும் உண்டு, அவர் உண்டு மீதியாயிருக்கின்ற எச்சிலையும் உண்பான்; ஆசார்யரும் அவரே, உயர்ந்த ஜாதியாரும் அவரே என்று சொல்லுவான். (௭)

மேதினி மன்ன வெங்கள் வேள்வியே முதலாங் கன்ம
நீதிபோய்ச் சாதி தன்ம நிலைமைபோய்க் கல்வி யாண
வீதியுள் யாங்கள் செல்ல வெருவினே மிலிங்கங் கண்டி
பூதியே சாதி யாகப் புலையுறை போய்த்தென் சொல்வாம்.

(ப — ரை.) மேதினி மன்ன — லோகநாதனே, எங்கள் — எங்களுடைய, வேள்வி-யாகம், முதலாம் — முதலாகிய, கன்மம் நீதி — கர்மாநுஷ்டானங்ளெல்லாம், போய் - ஒழிந்து, சாதி தன்மம் நிலைமை — குலாசார தர்மங்களெல்லாம், போய் — ஒழிந்து,

**கல்லியாண வீதியுள்** – கல்யாண பட்டினத்துள்ள தெருக்களில், **யாங்கள்** – நாங்கள், **செல்ல** - நடக்கவும், **வெருவினோம்** - அஞ்சினோம், **இலிங்கம்** - லிங்கதாரணமும், **கண்டி** - ருத்ராக்ஷதாரணமும், **பூதியே** – விபூதிதாரணமுமுள்ளவர்களே, **சாதியாக** – மேல் ஜாதியாராகவே (இக்கல்யாணபட்டினம்), **புலையுறை** - பறைச்சேரி, **போய்த்து** - ஆக மாறியது, **என்** - (இந்தக் கொடுமையை) என்ன (என்று), **சொல்வாம்** - சொல்லுவோம், எ – று.

(**போ – ரை.**) லோகநாதனே ! எங்களுடைய யாகம் முதலாகிய கர்மாநுஷ்டானங்களெல்லாம் ஒழிந்து, குலாசார தர்மங்களெல்லாம் ஒழிந்து, கல்யாண பட்டினத்துள்ள தெருக்களில் நாங்கள் நடக்கவும் அஞ்சினோம் ; லிங்கதாரணமும், ருத்ராக்ஷதாரணமும், விபூதிதாரணமுமுள்ளவர்களே மேல் ஜாதியாராகவே இக் கல்யாணபட்டினம் பறைச்சேரியாக மாறியது ; இந்தக் கொடுமையை என்னவென்று சொல்லுவோம்.

(**வி–ரை.**) ஹிந்து சாஸ்த்ரங்களுக்கு மூலமான வேதாகமங்களோவெனின், வேதங்களில் ஆகமமென்கின்ற விவகாரமும், அவ்வாகமங்களில் வேதமென்கின்ற விவகாரமுமிருப்பதுடன், அந்த வேதங்கள் ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைச்ய வென்கின்ற மூன்று வர்ணங்களின் விஷயமாயிருப்பதென்றும், ஆகமங்கள் ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைச்ய, சூத்ரனென்கின்ற ஸர்வ வர்ணங்களின் விஷயமாயிருப்பதென்றும் இரண்டு வகைப்படும். மேலும் பரசிவமூர்த்தியினுடைய உயிர்ப்பே வேதங்களாயிருத்தலினாலும், பரசிவமூர்த்தியின் மூலமாய் வைகரிரூபமாகியும், லோகோபகாரார்த்தமாகியும் பார்வதீ தேவியார்க்கு உபதேசிக்கப்பட்ட திவ்ய வாக்யங்களே ஆகமங்களாயிருத்தலினாலும், வேதங்களுக்கும் ஆகமங்களுக்கும் பரசிவமூர்த்தியொருவனே கர்த்தாவாவான் என்பது **ஈசாநஸ்ஸர்வவித்யாநாம், அஸ்யமஹதோநுபூதஸ்ய நிச்வஸிதம்** என்கின்ற பிரமாணங்களே சான்றாகும். மேலும்,

அஷ்டாதஶாநா மேதாஸாம் வித்யாநாம் பின்னவர்த்மநாம் ।
ஆதிகர்த்தா கவிஸ்ஸாக்ஷாச் சூலபாணி ரிதிஶ்ருதி: ॥

அஷ்டாதசாநா மேதாஸாம் வித்யாநாம் பின்னவர்த்மநாம் |
ஆதிகர்த்தா கவிஸ்ஸாக்ஷாச் சூலபாணி ரிதிச்ருதி ||

என்கின்ற ஸ்ம்ருதியும் கூறும். ஆதலால் வேதாகமங்களுக்குப் பரசிவமூர்த்தியே கர்த்தாவாதலினால் வேதாகமங்கள் ஏகார்த்தமாய் முக்கியப் பிரமாணமாயிருக்கின்றன. என்றால் குரு, லிங்கம், ஜங்கமம், விபூதி, ருத்ராக்ஷம், பாதோதகம், ப்ரஸாதம், மந்த்ரம் என்னும் அஷ்டாவரணங்கள் வேதங்களிலும், ஆகமங்களிலும் சொல்லப்பட்டிருப்பதனால் அவ்விரண்டையும் ஒரே சமமாகக் கொள்ளல்வேண்டுமெனப் பெறப்பட்டது. இதற்குப் பிரமாணம் அடியில் வருமாறு:—

க்ரியாஸாரே.

வேதஶிவாகமயோ ரைக்ய ஶௌர்ய த்ருதிவாதநாஶ ।
ப்ராமாண்யம் ஸத்ருஶம்ஜ்ஞேயம் ஸம்ஹிதே பேதயோஸ்ஸதா ॥
யத்வா ஶிவநிஶ்வாஸ ஶ்ருதிப்யஸ்து ஶிவாகமா: ।
யத்வா ஶிவ வக்த்ரேப்ய ஸ்ஸாக்ஷாதேவ விநிர்கதா: ॥
ஸர்வஸாரா விஶிஷ்டார்த்தா ஶிவோக்தா நிகமாகமா: ।
ஸர்வ பாஷிதி ரஹஸ்யார்த்த விஶேஷ: ஸர்வக்ஷேத்ரே ॥
நிகமாநா மாகமாநாம் ஸாரபேதோ விஶேஷத: ।
ப்ராமாண்யம் விஶேஷேண ஜ்ஞாதவ்யம் தத்த்வதர்ஶிபி: ॥

## க்ரியாஸாரம்.

*வேதஶிர்தார்தயோ ரைக்ய மேகார்த்த ப்ரதிபாதநாத்।*
*ப்ராமாண்யம் ஸத்ருஶம்ஜ்ஞேயம் பண்டிதை ரேதயோஸ் ஸதா॥*
*அதவா ஶிவநிஶ்ஶ்வாஸ ஶ்ருதிப்யஸ்தெ ஶிவாகமா:।*
*அதவா ஶிவ வக்த்ரேப்யஸ் ஸாக்ஷாதேவ விநிர்கதா:॥*
*பரஸ்பரா விருத்தார்த்தாஶ் ஶிவோக்தா நிகமாகமா:।*
*அல்பபுத்திபி ரேயோர்ய விரோத: பரிகல்ப்யதெ॥*
*நிகமாநா மாகமாநாம் பரமாப்தோ பதேஶத:।*
*ப்ராமாண்ய மவிஶேஷேண ஜ்ஞாதவ்யம் தத்த்வதர்ஶிபி:॥*

வேதங்கள் மூன்று வர்ணத்தார்களைக் கொண்ட விஷயமாவது:—வேத சம்பந்தமாகிய உபநயனமென்கின்ற ப்ரஹ்ம ஸம்ஸ்காரத்தை யடைந்து, வேத சம்பந்தமாகிய கர்மங்களைச் செய்தற்கு ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைஶ்யனென்கின்ற மூன்று வர்ணத்தார்களுக்கு அதிகாரமிருப்பதே யல்லாமல் ப்ராஹ்மண ஸ்த்ரீகளுக்கும், க்ஷத்ரிய ஸ்த்ரீகளுக்கும், வைஶ்ய ஸ்த்ரீகளுக்கும் அதிகாரமில்லையென்பதாம்.

ஆகமங்கள் ஸர்வ வர்ணத்தார்களையுங் கொண்ட விஷயமாவது:—ஆகம சம்பந்தமாகிய சிவ ஸம்ஸ்காரத்தை யடைந்து, ஆகம சம்பந்தமாகிய கர்மங்களைச் செய்தற்கு ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைஶ்ய, ஶூத்ரனென்கின்ற ஸர்வ வர்ணத்தார்களுக்கும், இவர்களுடைய ஸ்த்ரீகளுக்கும் அதிகாரமுண்டென்பதாம்.

உபநயனமென்கின்ற ப்ரஹ்ம ஸம்ஸ்காரத்தை யடைந்த ப்ராஹ்மணனுக்கு யஜனம், யாஜனம், அத்யயனம், அத்யாபனம், தானம், ப்ரதிக்ரஹமென்கின்ற ஷட்கர்மங்களும், தேவ யஜ்ஞம், ருஷி யஜ்ஞம், பித்ரு யஜ்ஞம், பூத யஜ்ஞம், மநுஷ்ய யஜ்ஞமென்கின்ற பஞ்ச மஹா யஜ்ஞங்களும், ப்ரஹ்மசர்யம், க்ருஹஸ்தம், வாநப்ரஸ்தம், ஸந்யாஸமென்கின்ற நான்கு ஆஶ்ரமங்களும் தர்மங்களாம். அந்த ஷட்கர்மங்களில் வேதங்களை யோதுவித்தலும், பிறர்களால் கர்மங்களைச் செய்வித்தலும், பிறர் விதிப்படிக் கொடுக்கின்ற தானங்களை யேற்றுக்கொள்ளுதலுமாகிய மூன்றும் ஜீவநோபாயங்களாம். உபநயனமென்கின்ற ப்ரஹ்ம ஸம்ஸ்காரத்தை யடைந்த க்ஷத்ரியனுக்கு யஜனம், அத்யயனம், தானம், யுத்தம், ஆயுத தாரணம், ப்ரஜாபாலனமாகிய இவைகள் தர்மங்களாம். அவற்றில் ஆயுதத்தைப் பிடித்தலும், சத்துருக்களுடன் போர் புரிதலும், பிரஜைகளைக் காத்தலுமென்கின்ற மூன்றும் ஜீவநோபாயங்களாம். உபநயனமென்கின்ற ப்ரஹ்ம ஸம்ஸ்காரத்தை யடைந்த வைஶ்யனுக்கு யஜனம், அத்யயனம், தானம், கிருஷி, வாணிபம், பசுக்களைக் காத்தலாகிய இவைகளும், ப்ரஹ்மசர்யம், க்ருஹஸ்தமென்கின்ற இரண்டு ஆஶ்ரமங்களும் தர்மங்களாம். ஶூத்திரனுக்கு ஸம்ஸ்காரமென்பதே யில்லை ப்ராஹ்மணன், க்ஷத்ரியன், வைஶ்யனென்பவர்களை வணக்கத்துடன் சேவித்துக்கொண்டிருப்பதே இவனுடைய ஜீவநோபாயமாம். இவ்விதமாக மநு ஸ்ம்ருதி முதலிய தர்ம ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுளது.

ஹிந்துக்களனைவரும் இந்த விதியையே அநுசரித்து வந்தார்கள். மற்றும் நித்ய கர்மங்களுக்கு லோபமுண்டாயின் பிராயச்சித்தமும் செய்துகொண்டார்கள். ஒரு ஜாதியார் மற்றொரு ஜாதியாருடைய தொழிலைச் செய்து ஜீவிக்கின்ற செய்தியை அதிகாரிகள் அறிவார்களாயின், அன்னவர்களை விசாரித்துத் தண்டிப்பார்கள். இந்தப் பயத்தினால் வர்ணாஶ்ரமங்களின் கட்டுப்பாடு சரியாய் நடந்தேறியது. இப்பால் வெவ்வேறு காரணங்களினால் வர்ணாஶ்ரமங்களின் கட்டுப்பாடு சிதையத் தொடங்கின. **வர்ணாஶ்ரம விபாகோயம் வ்ருத்திதோ நது ஜாதித:** என்னும் சாத்திரப் பிரமாணத்தின்படி மனிதனுக்கு ப்ராஹ்மணன் முதலாகிய பெயர்களும், ப்ரஹ்மசாரி முதலாகிய பெயர்களும், விருத்தி பேதத்தினால் வந்தனவே யல்லாமல் பிறப்பினால் வந்ததன்று. **ப்ராஹ்மணோஸௌ ஷட்கர்ம யாகாதி பிர்யுத:** என்னும் அமரகோசத்தின்

படி ஷட்கர்ம, பஞ்ச யஜ்ஞாதிகளையுடையனே ப்ராஹ்மணனெனப்படுவான். அவ்வாறே ப்ராஹ்மணுதிகாரம் ஒவ்வொருவனுக்கும் சாத்திரச் சம்பந்தமான கர்மங்களினுல் வரத்தக்கதாம்.

இனி ப்ராஹ்மண்யமானது வைதிகமென்றும், பாரமார்த்திகமென்றும் இரண்டு வகைப்படும். கர்மத்தினுலுண்டாகின்ற ப்ராஹ்மண்யம் வைதிகமெனப்படும். ஞானத்தினுலுண்டாகின்ற ப்ராஹ்மண்யம் பாரமார்த்திகமெனப்படும். கர்மமானது நித்யம், நைமித்திகம், காம்யம், ப்ராயஸ்சித்தமென்று நான்கு வகைப்படும். பஞ்ச யஜ்ஞாதிகள் நித்ய கர்மங்களாம். கர்ப்பாதானுதிகள் நைமித்திக கர்மங்களாம். அக்நிஷ்டோமாதிகள் காம்ய கர்மங்களாம். சாந்த்ராயணுதிகள் ப்ராயஸ்ச்சித்த கர்மங்களாம்.

கௌதமர் தர்ம சூத்திரத்தின்படி வேதியர்க்குரிய கர்மங்கள் நாற்பத்தெட்டு. அவற்றின் விவரம் வருமாறு:— (1.) கர்ப்பாதானம், (2.) பும்ஸவனம், (3.) ஸீமந்தோந்நயனம், (4.) ஜாதகர்மம், (5.) நாமகரணம், (6.) அந்நப்ராஸனம், (7.) சௌளம், (8.) உபநயனம், (9.) ப்ராஜாபத்யம், (10.) ஸௌம்யம், (11.) ஆக்நேயம், (12.) வைஸ்வதேவம், (13.) ஸமாவர்த்தனம், (14.) விவாஹம், (15.) தேவ யஜ்ஞம், (16.) பித்ரு யஜ்ஞம், (17.) பூத யஜ்ஞம், (18.) மநுஷ்ய யஜ்ஞம், (19.) ப்ரஹ்ம யஜ்ஞம், (20.) அஷ்டகம், (21.) பார்வணம், ( 2.) ஸ்ராத்தம், (23.) ஸ்ராவணீ, (24.) ஆக்ரஹாயணீ, (25.) சைத்ரீ, (26.) ஆஸ்வயுஜீ, (27.) அக்ந்யாதேயம், (28.) அக்நிஹோத்ரம், (29.) தர்ஸபூர்ணமாஸம், (30.) சாதுர்மாஸ்யாநி, (31.) ஆக்ரயணேஷ்டி, (32.) நிரூடபஸுபந்தம், (33. ஸௌத்ராமணீ, (34.) அக்நிஷ்டோமம், (35.) அத்யக்நிஷ்டோமம், (36.) உக்த்யம், (37.) ஷோடஸீ, (38.) வாஜபேயம், (39.) அதிராத்ரி, (40.) அப்தோர்யாமம், (41.) தயா, (42.) க்ஷாந்தி, (43.) அநஸூயை, (44.) ஸௌசம், (45.) அநாயாஸம், (46.) மாங்கல்யம், (47.) அகார்ப்பண்யம், (48.) அஸ்ப்ருஹம் என்பனவாம். இவற்றில் முதல் நாற்பது கர்மங்கள் ஸம்ஸ்காரங்களென்றும், பின்னுள்ள எட்டு ஆத்ம குணங்களென்றும் சொல்லப்படும். இக் குணஷ்டகங்களை யநுசரிப்பவர்களுக்குத் தவறாமல் சித்த சுத்தியுண்டாகும். ஸம்ஸ்காரங்கள் பூர்வமெனறும், உத்தரமென்றும் இரண்டு வகைப்படும். கர்ப்பாதானம் முதல் விவாகம் வரையிலுமுள்ளவை பூர்வ ஸம்ஸ்காரங்களாம். மற்றுள்ளவை உத்தர ஸம்ஸ்காரங்களாம். பூர்வ உத்தர ஸம்ஸ்காரங்களினுல் ஸம்ஸ்கரிக்கப்பட்டவனுகி, பூத தயை முதலாகிய எட்டு குணங்களையுடையவன் வைதிக ப்ராஹ்மணனென்று சொல்லப்படுவான். நாற்பது கர்மங்களைச்செய்து, எட்டு ஆத்ம குணங்களில்லாவிடின் ப்ராஹ்மணனென்று சொல்லப்படான். இதற்குப் பிரமாணம் வருமாறு:—

𑌅𑌥𑌾𑌷𑍍𑌟𑌾 𑌵𑌾𑌤𑍍𑌮𑌗𑍁𑌣𑌾𑌃 𑌦𑌯𑌾𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁
𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌨𑌸𑍂𑌯𑌾 𑌶𑍌𑌚𑌮𑌨𑌾𑌯𑌾𑌸𑍋 𑌮𑌙𑍍𑌗𑌲
𑌮𑌕𑌾𑌰𑍍𑌪𑌣𑍍𑌯𑌮𑌸𑍍𑌪𑍃𑌹𑌾 𑌯𑌸𑍍𑌯𑍈𑌤𑍇 𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑌿𑌂
𑌶𑌤𑍍𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌾 𑌨 𑌚𑌾𑌷𑍍𑌟𑌾𑌵𑌾𑌤𑍍𑌮𑌗𑍁𑌣𑌾 𑌨 𑌸 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣
𑌸𑌾𑌯𑍁𑌜𑍍𑌯𑌂 𑌸𑌾𑌲𑍋𑌕𑍍𑌯𑌂 𑌚 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ।
𑌯𑌸𑍍𑌯 𑌤𑍁 𑌖𑌲𑍁 𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌾𑌣𑌾
𑌮𑍇𑌕𑌦𑍇𑌶𑍋𑌽𑌪𑍍𑌯𑌷𑍍𑌟𑌾𑌵𑌾𑌤𑍍𑌮𑌗𑍁𑌣𑌾 𑌅𑌥 𑌸 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣
𑌸𑌾𑌯𑍁𑌜𑍍𑌯𑌂 𑌸𑌾𑌲𑍋𑌕𑍍𑌯𑌂 𑌚 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿.

அதாஷ்டா வாத்மகுணா: தயாஸர்வ பூதேஷு
க்ஷாந்தி ரநஸூயா ஸௌச மநாயாஸோ மங்கள
மகார்ப்பண்ய மஸ்ப்ருஹா யஸ்யைதே சத்வாரிம்
ஸத்ஸம்ஸ்காரா ந சாஷ்டாவாத்மகுணா ந ஸப்ராஹ்மணஸ்

ஸாயுஜ்யம் ஸாலோக்யம்ச் கச்சதி
யஸ்ய து கலு சத்வாரிம் ஸத்ஸம்ஸ்காராணு
மேகதேஸோபி அஷ்டாவாத்மகுணு அத ஸப்ராஹ்மணஸ்
ஸாயுஜ்யம் ஸாலோக்யம்ச கச்சதி.

மேலும் அநேக அங்கங்களினுல் சித்ரகர்மம் பையப்பையக் கண்திறப்பது போல ப்ராஹ்மணத்வம் விதி பூர்வமாகிய ஸம்ஸ்காரங்களினுல் பையப்பையக் கண் திறக்கும். மேற்போந்த நாற்பது ஸம்ஸ்காரங்களைச் செய்தவன் எட்டு குணங்களையடைந்த பின்னரும் கர்மியெனப்படுவான். இதுவுமன்றி ஸ்ரீ சங்கராசாரியரால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்ற அத்வைத மதத்தில் கர்மி, முமுக்ஷு, அப்யாஸி, அநுபவி, ஆரூடனென்பதாக ஐந்து சோபானங்களுமுளதாம். அவற்றுள் முதலாவதாகிய சோபானத்தையடைந்த கர்மிகள் விசார, வைராக்யங்களினுல் முமுக்ஷு, அப்யாஸி, அநுபவி, ஆரூடனென்னும் சோபானங்களை முறையாக அடையத் தக்கவர்களாம். இவர்களில் ஆரூட சோபானமடைந்தவர்களுக்கே வர்ணுச்ரமங்களில்லை யென்பது சித்தமாகும்.

மேற்சொல்லிய நாற்பத்தெட்டு ஸம்ஸ்காரங்களில் ஸ்மார்த்த கர்மங்கள் அல்லது ப்ராஹ்ம கர்மங்கள் பதினுறு. ஸ்ரௌத கர்மங்கள் அல்லது தேவ கர்மங்கள் இருபத்து நான்கு. ஸ்மார்த்த கர்மங்களை ஷோடஷ கர்மமென்பர். இவற்றைப் பெரும்பாலார் அநுசரிக்கின்றனர். அவையாவன:— (1.) கர்ப்பாதானம் (பிண்டோற்பத்தியின் பொருட்டுச் செய்கின்ற கிரியை), (2.) பும்ஸவனம் (பிண்டம் அசைவதற்கு முன் செய்கின்ற கிரியை), (3.) சீமந்தம் (மூன்று முதல் ஒன்பதாவது மாதம் வரையில் செய்கின்ற கிரியை), (4.) ஜாதகர்மம் (குழந்தை பிறந்தவுடன் செய்கின்ற கிரியை), (5.) நாமகரணம் (குழந்தைக்குப் பெயரிடும்போது செய்கின்ற கிரியை), (6.) அந்நப்ராஸநம் (குழந்தை சோறுண்ணச்செய்கின்றபோது செய்கின்ற கிரியை), (7.) சௌளம் (குழந்தைக்கு மயிர் களையச்செய்கின்ற கிரியை), (8.) உபநயனம் (ஞானக்கண் திறப்பதற்குரிய தீக்ஷைசெய்கின்ற கிரியை), (9.) ப்ராஜாபத்யம்(வேதத்திற்குக் காண்டர்ஷியாகிய ப்ரஜாபதியின் அநுக்ரஹத்தைப் பெறும்பொருட்டு விரதம் அநுஷ்டிக்கின்ற கிரியை), (10.) ஸௌம்யம் (வேதத்திற்குக் காண்டர்ஷியாகிய ஸோமனது அநுக்ரஹத்தைப் பெறும்பொருட்டு விரதம் அநுஷ்டிக்கின்ற கிரியை), (11) ஆக்நேயம் (வேதத்திற்குக் காண்டர்ஷியாகிய அக்கியின் அநுக்ரஹத்தைப் பெறும்பொருட்டு விரதம் அநுஷ்டிக்கின்ற கிரியை), 12.) வைஸ்வதேவம் (வேதத்திற்குக் காண்டர்ஷியாகிய விஸ்வதேவனது அநுக்ரஹத்தைப் பெறும்பொருட்டு விரதம் அநுஷ்டிக்கின்ற கிரியை), (13.) ஸமாவர்த்தனம் (குருகுலவாஸத்தை விட்டு க்ருஹஸ்தாஸ்ரமத்தை யடையும்போது செய்கின்ற கிரியை; இதனை ஸ்நாதகமென்றுஞ்சொல்லுவர்), (14.) விவாஹம் (தேவ பித்ருக்களின் கடன்களை தீர்ப்பதற்காக மணம் செய்கின்ற கிரியை); இப்பதினுன்குடன் நாமகர்ணத்தின் பின்னர் நிஷ்கர்மணம், ஸூர்யாவலோஹநமாகிய இரண்டையும் சேர்த்துப் பதினுறு கர்மங்களெனவும், மேற்சொல்லிய பதினுன்குடன் அந்த்யேஷ்டி, சபிண்டீகரணமாகிய இரண்டையும் சேர்த்து பதினுறு கர்மங்களெனவும் கூறுவர். நிஷ்கர்மணம் - குழந்தை சந்திரனைத் தரிசிக்கவும், சந்திமிதிக்கவும் செய்கின்ற கிரியை. ஸூர்யாவலோஹநம் - குழந்தை சூரியனைத் தரிசிக்கச்செய்கின்ற கிரியை. அந்த்யேஷ்டி - பிரேதத்திற்குச் செய்கின்ற கிரியை. சபிண்டீகரணம் - ஸ்வர்க்கமடையச் செய்கின்ற கிரியை. இப்பதினுறு கிரியைகளை வேறு விதமாகவும் கூறுவர். தேவ கர்மங்களாவன - ப்ரஹ்ம யஜ்ஞம் முதலாகிய இருபத்து நான்கு. விரிவஞ்சி இம்மட்டில் நிறுத்துவாம்.

ப்ராஹ்மணர் செய்திருக்கின்ற தர்ம ஸாஸ்த்ரங்களிலெல்லாம் பதினுறு கர்மங்களின் விஷயமே பலகாலும் காணப்படுகின்றது. இவற்றில் ஜாதகர்மம், விவாஹம்,

கர்ப்பாதானம், அந்த்ய கர்மம் முதலியவற்றின் விதி வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இவைகள் கிறிஸ்து, முகமதிய, பௌத்த முதலிய மத தர்மங்களிலினும் காணப்படினும் அவைகளுக்கு இந்தத் தர்மங்களைப்பற்றி யாதொரு மேன்மையையும் கற்பிக்கவில்லை. ஆனால், இந்த விதி புரோஹிதர்களுக்குத் திரவிய லாபம் உண்டாக்குவதனால் ப்ராஹ்மணர்களால் செய்யப்பட்ட நூல்களில் இவைகளுக்கு மேன்மை சொல்லப்பட்டிருக்கிறது. அவ்வாறே ப்ராயஶ்சித்த விதிக்கும் அவர்கள் மேன்மை கொடுத்திருக்கிறார்கள். ஆனால், சிவாநுபவ ஶாஸ்த்ராதிகாரிகள் இந்தக் கர்மங்களுக்கு மேன்மை கொடுக்கவேயில்லை; ஏனெனின், அவைகள் கேவலம் விவகாரத்திற்கேயன்றித் தர்மாசாரத்திற்குச் சம்பந்தபட்டவையன்று. இவ் விதியை யநுசரிப்பதனால் மனிதர்களுக்கு மோக்ஷ ப்ராப்தி யுண்டாகுமென்று சொல்லமுடியாது. இவ்விதமான விவகாரங்களெல்லாம் சாமானிய ஜனங்களுக்கே தர்மங்களாகும். ஆதலால் இந்தக் கர்மங்களுக்கு அவர்கள் எவ்விதமான நிர்ப்பந்தங்களையும் கற்பிக்காமல் ஜனங்கள் பழகவேண்டிய அநுகூலமே செய்திருக்கிறார்கள். ஸர்வ வர்ணத்தார்களுக்குரிய ஆகமங்களோவெனின்,

𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌾𑌗𑌮𑍇.

𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌂 𑌯𑍋𑌗𑌃 𑌪𑌾𑌞𑍍𑌚𑌰𑌾𑌤𑍍𑌰𑌂 𑌵𑍇𑌦𑌾𑌃 𑌪𑌾𑌶𑍁𑌪𑌤𑌂 𑌤𑌥𑌾 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑍍𑌯𑍇𑌤𑌾𑌨𑌿 𑌪𑌞𑍍𑌚𑍈𑌤𑍇 𑌜𑍍𑌞𑍇𑌯𑌶𑍍𑌚𑍈𑌕𑍋 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 ॥

ஸித்தாந்தாகமம்.

*ஸாங்க்யம்யோக: பாஞ்சராத்ரம் வேதா: பாஶுபதம் ததா |*
*ஜ்ஞாநாந்யேதாநி பஞ்சைதே ஜ்ஞேயஶ்சைகோ மஹேஶ்வர: ||*

என்னும் ஆகம வசனப்படிச் சாங்கிய மதம், யோக மதம், பாஞ்சராத்ர மதம், வேதமதம் பாசுபதமத மென்று ஐந்து முக்கியமான மதங்களாம்; அவற்றில் பாசுபதமத மானது வைதிகமென்றும், அவைதிகமென்றும் இரண்டு வகைப்படும்; அவற்றில் சிவதீக்ஷாபூர்வகமான லிங்கதாரணம் செய்தல் வைதிக பாசுபதமத மெனப்படும். தப்தலிங்காங்கம், த்ரிஶூலாங்கமென்பவற்றை யடைதல் அவைதிக பாசுபதமத மெனப்படும். அந்த வைதிக பாசுபதமத மானது அலிங்க வைதிக பாசுபதமத மென்றும், லிங்கதாரி வைதிக பாசுபதமதமென்றும் இரண்டு வகைப்படும். அந்த லிங்கதாரி வைதிக பாசுபதமதமானது சிவாராத்யமதமென்றும், சிவாசார்யமதமென்றும் இரண்டு வகைப்படும். தந்துமயமான யஜ்ஞோபவீதத்துடன் சிவலிங்கதாரணம் செய்தல் சிவாராத்ய மதமெனப்படும். சிவலிங்கரூபமான யஜ்ஞோபவீததாரணம் செய்தல் சிவாசார்ய மதமெனப்படும். இந்தச் சிவாசார்யமதத்தை யநுசரிப்பவர்

𑌸𑍍𑌕𑌾𑌨𑍍𑌦𑌸𑌂𑌹𑌿𑌤𑌾.

𑌯𑍋 𑌹𑌸𑍍𑌤𑌪𑍀𑌠𑍇 𑌨𑌿𑌜𑌮𑌿𑌷𑍍𑌟𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌵𑌿𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌤𑌲𑍍𑌲𑍀𑌨𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌚𑌾𑌰𑌕𑌃 ।
𑌬𑌾𑌹𑍍𑌯𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑌙𑍍𑌕𑍁𑌲𑌨𑌿𑌃𑌸𑍍𑌪𑍃𑌹𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌮𑍍𑌪𑍂𑌜𑌯𑌤𑍍𑌯𑌙𑍍𑌗 𑌸 𑌵𑍀𑌰𑌶𑍈𑌵𑌃 ॥

**சங்கரசங்கிதை.**

*யோஹஸ்தபீடே நிஜமிஷ்டலிங்கம் விந்யஸ்யதல்லீநமந: ப்ரசாரக: |*
*பாஹ்யக்ரியாஸங் குலநிஸ்ப்ருஹாத்மா ஸம்பூஜயத்யங்க ஸவீரஶைவ: ||*

(பூஜாகாலத்தில் இஷ்டலிங்கமூர்த்தியைக் கைத்தலத்தி லெழுந்தருளப்பண்ணி அதனிடத்தில் மநோலயமடைந்து, ஆஹ்வாநம், விஸர்ஜநம் முதலிய பாஹ்யக்கிரியைகளை மறந்து, த்ரிகாலங்களிலும் பூஜைசெய்பவன் வீரஶைவனெனப்படுவான்).

என்னும் வசனப்படி வீரசைவமதத்த ரெனப்படுவர். இவ் வீரசைவ மதத்தார்களுக்கு அஷ்டாவரணம், பஞ்சாசாரம், ஷட்ஸ்தலம், லிங்காங்க ஸாமரஸ்யமாகிய இவைகள் அவயவங்களாம். இவ் வீரசைவமதத்தை ப்ராஹ்மணன் முதலாகிய ஸர்வ வர்ணத்தார்களும் அநுசரிப்பது லோக ப்ரஸித்தமாம். மேலும் வேதங்களின் சார்பாய் ஸாங்

க்யம், யோகம், ந்யாயம், வைசேஷிகம், பூர்வ மீமாம்ஸா, உத்தர மீமாம்ஸா வென்னும் ஷட்தர்ஶநங்கள் உண்டாயிருத்தல் போல ஆகமங்களின் சார்பாய் வீர ஶைவ மதம், வைஷ்ணவமதம், ஶாக்தமதம், ஸௌரமதம், வைநாயகமதம், காபாலிகமதமென்னும் ஆகம சாம்பிரதாயமான ஷட்தர்ஶநங்கள் உண்டாயிருக்கின்றன. இது

**வீரஶைவ தர்ம ஶிரோமணி.**

ஶ்ரீவீரஶைவ மத வைஷ்ணவ ஶாக்த ஸௌர
வைநாயகாதி மஹிதாநி ஶிவாகமேஷு ।
காபாலிகேந ஸஹிதாநி வதந்தி ஸந்த
ஷட்தர்ஶநாநி விதிதாகம ஸம்ப்ரதாயா꞉ ॥

**வீரசைவ தர்ம சிரோமணி.**

ஸ்ரீவீரஶைவ மத வைஷ்ணவ ஶாக்த ஸௌர
வைநாயகாதி மஹிதாநி சிவாகமேஷு |
காபாலிகேந ஸஹிதாநி வதந்தி ஸந்தஷ்
ஷட்தர்ஶநாநி விதிதாகம ஸம்ப்ரதாயா꞉ ||

**பாரமேஶ்வராகமம்.**

வீரஶைவம் வைஷ்ணவம் ஶாக்தம் ஸௌரம் விநாயகம் ।
காபால மிதிவிஜ்ஞேயம் தர்ஶநாநி ஷடேவஹி ॥

**பாரமேஶ்வராகமம்.**

வீரஶைவம் வைஷ்ணவம் ஶாக்தம் சஸௌரம் விநாயகம் |
காபால மிதிவிஜ்ஞேயம் தர்ஶநாநி ஷடேவஹி ||

என்னும் பிரமாணங்களினால் நன்கு விளங்கும். அவற்றில் வீரசைவமதமானது அநாதிசைவம், ஆதிசைவம், அநுசைவம், மஹாசைவம், யோகசைவம், ஜ்ஞாநசைவம், வீரசைவமென்று ஏழுசோபானங்களையுடையது ; அவற்றில் அநாதிசைவம் முதலாகிய ஆறுசோபானங்களில் வர்ணாஶ்ரம பேதங்களுண்டு ; ஏழாவதாகிய வீரசைவ சோபானத்தில் வர்ணாஶ்ரமங்களின் விவகாரமேயில்லாததனால் வீரசைவனுக்கு அதிவர்ணாஶ்ரமி, ஷட்ஸ்தல ப்ரஹ்மி, ஶிவயோகி, லிங்காருடனென்று பர்யாய நாமங்கள் விளங்குகின்றன. மேலும் சைவமானது அநாதிசைவம், ஆதிசைவம், மஹாசைவம், அநுசைவம் அவாந்தரசைவம், ப்ரவரசைவமென்று ஏழுவிதமான பேதங்களும், ஸாமாந்ய சைவம், மிஶ்ர சைவம், ஶுத்த சைவம், வீரசைவமென்று நான்கு முக்கியமான பேதங்களும், வீரசைவத்தில் ஸாமாந்ய வீரசைவம், விசேஷ வீரசைவம், நிராபார வீரசைவமென்று மூன்று விதமான பேதங்களும் உடையதாகவும் கூறப்படுகின்றது. இதற்குப் பிரமாணம் அடியில் வருமாறு:—

**ஸூக்ஷ்ம தந்த்ரம்.**

ஆசாரபேதாச் சைவஸ்ய பேதஸ் ஸங்கத்யதே துநா ।
ஸாமாந்யஶைவம் ப்ரதமம் மிஶ்ரஶைவம் தத꞉ பரம் ॥
ஶுத்தஶைவம் ததா ஜ்ஞேயம் வீரஶைவம் தத꞉ பரம் ॥

**ஸூக்ஷ்ம பேதாகமம்.**

ஆசாரபேதாச் சைவஸ்ய பேதஸ் ஸங்கத்யதே துநா |
ஸாமாந்யஶைவம் ப்ரதமம் மிஶ்ரஶைவம் தத꞉ பரம் ||
ஶுத்தஶைவம் ததா ஜ்ஞேயம் வீரஶைவம் தத꞉ பரம் ||

இனி, பாசுபதமத மானது தாந்த்ரிகம், வைதிகம், மிஶ்ரமென்று மூவகைப்படும். தப்தலிங்கமுத்திரை, சூலம் முதலியவற்றைத் தரித்தல் தாந்த்ரிக பாசுபதமத மெனப்படும். லிங்கதாரணமும், பஸ்ம ருத்ராக்ஷங்களும் கூடியிருத்தல் வைதிக பாசுபதமத மெனப்படும். சிவம், சக்தி, கணபதி, சூரியன், விஷ்ணுவாகிய இவ் வைந்து தெய்வங்களைச் சமான புத்தியினால் ஆராதித்தல் மிஶ்ர பாசுபதமத மெனப்படும். வேதமார்க்கத்தில் விருப்பமுள்ள முமுக்ஷுக்கள் வைதிக பாசுபதமதத்தையே யல்லாமல் ஏனைய மிஶ்ர பாசுபதம், தாந்த்ரிக பாசுபதமாகிய மதங்களை அநுசரிக்கக்கூடாது. உலகத்தில் கர்மத்தைக்கொண்டு ப்ராஹ்மணாதி ஜாதிகள் உண்டாயினவே யல்லாமல் ஜாதிகளைக்கொண்டு கர்மங்களுண்டாகவில்லையென்பது திண்ணம். ஆதலினால் ப்ராஹ்மணன் சிவார்ச்சனை முதலியவைகளும், ஸந்த்யாவந்தனம் முதலியவைகளுமாகிய நித்ய கர்மத்தை நெகிழவிடுவானாயின் ப்ராஹ்மண்யாதிகளினால் விடுபட்டவனென்று சிவாகம வசநங்களும், தர்ம ஶாஸ்த்ரங்களும் கூறும்.

𑌯𑌾𑌜𑍍𑌞𑌵𑌲𑍍𑌕𑍍𑌯𑌃.

𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑍋𑌽𑌪𑌿 𑌕𑍃𑌷𑌿𑌂𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 𑌵𑌿𑌪𑍍𑌰𑌾𑌂𑌶𑍍𑌚 𑌪𑍂𑌜𑌯𑍇𑌤𑍍 ।
𑌵𑍈𑌶𑍍𑌯𑌶𑍍𑌶𑍂𑌦𑍍𑌰𑌸𑍍 𑌤𑌥𑌾𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 𑌕𑍃𑌷𑌿𑌵𑌾𑌣𑌿𑌜𑍍𑌯 𑌶𑌿𑌲𑍍𑌪𑌕𑌮𑍍 ॥

யாஜ்ஞவல்க்யர்.

க்ஷத்ரியோபி க்ருஷிம்க்ருத்வா தேவாந் வ்ப்ராம்ஶ்ச பூஜயேத் ।
வைஶ்யஶ்ஶூத்ரஸ் ததாகுர்யாத் க்ருஷிவாணிஜ்ய ஶில்பகம் ॥

(வாணிபமானது வைசியர், சூத்திரர்களுக்கே யல்லாமல் ப்ராஹ்மணர்களுக்கு விதிக்கப்படவில்லையென்பது சொல்லக்கூடாத காரியமாகும்).

𑌮𑌨𑍁𑌸𑍍𑌮𑍃𑌤𑌿.

𑌸𑌦𑍍𑌯𑌃 𑌪𑌤𑌤𑌿 𑌮𑌾𑌂𑌸𑍇𑌨 𑌲𑌾𑌕𑍍𑌷𑌯𑌾 𑌲𑌵𑌣𑍇𑌨 𑌚 ।
𑌤𑍍𑌰𑍍𑌯𑌹𑍇𑌣 𑌶𑍂𑌦𑍍𑌰𑍋𑌭𑌵𑌤𑌿 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃 𑌕𑍍𑌷𑍀𑌰𑌵𑌿𑌕𑍍𑌰𑌯𑍀 ॥

மநுஸ்ம்ருதி

ஸத்ய: பததி மாம்ஸேந லாக்ஷயா லவணேந ச
த்ர்யஹேண ஶூத்ரோபவதி ப்ராஹ்மண: க்ஷீரவிக்ரயீ ॥

(ப்ராஹ்மணன், மாம்ஸம், உப்பு, அரக்கு ஆகிய இந்தப் பதார்த்தங்களை விற்பனை செய்தால் உடனே பதிதனாகின்றான். பாலை மூன்று நாள் விற்பனைசெய்தால் சூத்திரனாகின்றான்).

𑌲𑌾𑌕𑍍𑌷𑌾𑌲𑌵𑌣 𑌮𑌾𑌂𑌸𑌾𑌨𑌿 𑌵𑌰𑍍𑌜𑌨𑍀𑌯𑌾𑌨𑌿 𑌵𑌿𑌕𑍍𑌰𑌯𑍇 ।
𑌪𑌯𑍋𑌦𑌧𑌿 𑌚𑌮𑌦𑍍𑌯𑌂𑌚 𑌹𑍀𑌨𑌵𑌰𑍍𑌣 𑌕𑌰𑌾𑌣𑌿𑌚 ॥

லாக்ஷாலவண மாம்ஸாநி வர்ஜநீயாநி விக்ரயே ।
பயோததி சமத்யம்ச ஹீநவர்ண கராணிச ॥

(அரக்கு, உப்பு, மாம்ஸமாகிய இந்தப் பதார்த்தங்களை விற்பனைசெய்யத்தகாது. பால், தயிர், கள்ளாகிய இந்தப் பதார்த்தங்களை விற்பனைசெய்தால் கீழ்ஜாதியனாகின்றான்).

மேற்போந்த வசனங்களினால் ப்ராஹ்மணன் நிஷித்த பதார்த்தங்களை விட்டு மீதியான பதார்த்தங்களை யெல்லாம் விற்கலாமென்பது விளங்கும். இத் தகையினர் கோதாவரி, ஊரியா முதலிய தேசங்களில் கிருஷிசெய்து வமிச பாரம்பரியமாக ஜீவிக்கின்றனர்; வங்காளம் முதலிய தேசங்களிலும் வாணிபம் செய்து ப்ராஹ்மண ஜாதிக்குத் தக்கபடி ஜீவிக்கின்றனர்.

சாதுர்ணுட்பி வர்ண நாமேஷதர்மஸ் ஸநாதந: என்னும் ஶ்ருதிவசநப்படி நான்கு ஜாதியார்களுக்கும் கிருஷியும், வாணிபமும் சாதாரணமான ஜீவனமென்று சொல்லப்பட்டிருப்பதில் ஸநாதந: என்னும் சொல்லுக்குக் கலியுகங்களிலும் கிருஷியும், வாணிபமும் உண்டென்பது உறுதிபடுகின்றது.

**ஜந்மநா ஜாயதே ஶூத்ர: கர்மணு த்விஜவுச்யதே ||**

என்னும் பாரத வசநத்தினுலும்,

**𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾, 𑌅 - 4, 𑌶𑍍𑌲𑍋 - 13.**

𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍍𑌣𑍍𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌸𑍃𑌷𑍍𑌟𑌂 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃 ।
𑌤𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌪𑌿 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ।

**பகவத்கீதை, அ - 4, சு - 13.**

*சாதுர்வர்ண்யம் மயாஸ்ருஷ்டம் குணகர்ம விபாகஶ: |*
*தஸ்ய கர்த்தாரமபிமாம் வித்யகர்த்தார மவ்யயம் ||*

என்னும் வசநத்தினுலும்,

**வேதாப்யாஸேந விப்ரஸ் ஸ்யாத் ப்ரஹ்மவித் ப்ராஹ்மணோ பவேத்|**

என்னும் வசநத்தினுலும், ஒருவன் ஜந்மத்தினுல் ஶூத்திரனும், கர்மாதிகார ஸம்பாதகமான தீக்ஷாபநயநாதி ஸம்ஸ்காரத்தை யடைந்ததனுல் த்விஜனும், வேதாத்யயன ஸம்பந்நனுனதனுல் விப்ரனும், ப்ரஹ்மஜ்ஞாநமடைந்ததனுல் ப்ராஹ்மணனுமாவானென்பது பெறப்படும். மேற்போந்த காரணங்களினுல் ப்ராஹ்மணத்வம் பிறப்பினுலேயே சித்திக்காதென்பது நிச்சயிக்கப்பட்டது.

பறைச்சேரியின் வரலாறு:— ஸுஜ்ஞாநோதயமாகி, ஸ்ரீகுரு காருண்யத்தையடைந்து, தேகத்தில் இஷ்ட லிங்கமூர்த்தியைத் தாரணஞ்செய்த ஸத்பக்தன் அந்த இஷ்ட லிங்கத்தை ஸ்தூல சரீரத்தில் சம்பந்தப்படுத்தி, அந்த ஸ்தூல சரீரத்தின் ப்ருக்ருதியை ஸத் க்ரியா ப்ரகாஶத்தில் தஹித்து (அதாவது குருவுக்கு உடலைத் தத்தஞ்செய்து), அந்த இஷ்டலிங்கத்தின் சித்கலா ஸ்வரூபமான ப்ராணலிங்கத்தை ஸூக்ஷ்ம சரீரத்தில் சம்பந்தப்படுத்தி, அந்த ஸூக்ஷ்ம சரீர சம்பந்தமான மநோப்ருக்ருதியை ஸுஜ்ஞாந ப்ரகாஶத்தில் தஹித்து (அதாவது லிங்கத்திற்கு ஆவியைத் தத்தஞ்செய்து), அந்த இஷ்டலிங்கத்தின் ஸ்வரூபமான பாவலிங்கத்தைக் காரணசரீரத்தில் சம்பந்தப்படுத்தி, அந்தக் காரணசரீர சம்பந்தமான ஆத்மப்ருக்ருதியை மஹா ஜ்ஞாந ப்ரகாஶத்தில் தஹித்து (அதாவது ஜங்கமத்திற்குப் பொருளைத் தத்தஞ்செய்து), இப்படிப்பட்ட த்ரிவித சரீரத்தினிடத்தில் த்ரிவித லிங்கஸ்வாயத்தம்செய்து, ஸத்பக்தன் பறைச்சேரியை யடைகிறுன்; என்றுல், சித்க்ராமம் அதாவது ப்ரஹ்மரந்த்ரத்தை யடைகின்றுன். எவ்வாறெனின்:—ஊர்க்குப் புறம்பிலுள்ளது பறைச்சேரி. அப்பறைச்சேரியில் எவ்விதமான கிரியைகளும், சில விரதாசாரங்களும், சுத்தாசுத்தம் முதலானவைகளுமில்லாத காரணத்தினுல் பஞ்சமிஶ்ரமான தேகத்திற்கு விலக்ஷணமான சித்க்ராமமாகும். அந்த நியம நித்ய கர்மங்கள் இல்லாமை பறைச்சேரியும், சித்க்காரமமுமாகிய இவ்விரண்டிற்கும் ஒரே சமமாம். அந்தச் சித்க்ராமமென்னும் ப்ரஹ்மரந்த்ரத்தில் பிரவேசித்து, நூற்றொரு ஸ்தலங்களின் ஆசரணைகள் நஷ்டமடைந்தவனே லிங்காங்க ஸாமரஸ்யமான ஸத்பக்தனுவான். இவ்வாறு த்ரிவிதத்திற்குக் கொடுத்துப் பறைச்சேரியை யடைந்து, குலாதீதமானவனே சிவபக்தன் எனப்படுவான். (௪)

தரையினர் செய்புங் குற்றந் தாரணி வேந்தர்க் காகும்
புரவலர் செய்யு நீதி புரோகிதர்க் காகும் யாங்க
ளுரைசெயி னிந்தத் தீமை யுனக்கலா தெம்மைச் சூழா
திரமிவை யுன்றன் சித்தந் தெரிந்துகொள் செங்கோன் மன்னு.

(ப - ரை.) தரையினர் - உலகத்தார், செய்யும் - பண்ணுகின்ற, குற்றம் - பாவங்களெல்லாம், தாரணி - உலகத்தை யாள்கின்ற, வேந்தர்க்கு ஆகும் - அரசர்களைச் சேரும், புரவலர் - அரசர்கள், செய்யும் - பரிபாலஞ்செய்கின்ற, நீதி- தர்மமானது, புரோகிதர்க்கு ஆகும் - புரோஹிதர்களைச் சேரும், யாங்கள் - நாங்கள், உரைசெயின் - சொல்லுமிடத்து, இந்த—, தீமை - பாவங்களெல்லாம், உனக்கு - உன்னை (சுற்றிக்கொள்ளுமே), அல்லாது - அல்லாமல், எம்மை — எங்களை, சூழா-சுற்றிக்கொள்ளமாட்டாது, இவை - இந்த வார்த்தைகளெல்லாம், திறம் - உண்மையாம், உன் - (இதற்குமேல்) உனது, சித்தம் - இஷ்டம், தெரிந்துகொள் - பார்த்து நடந்துகொள்ளக்கடவாய், செங்கோல் - நீதி செலுத்துகின்ற, மன்ன - அரசனே, எ-று.

(போ-ரை.) உலகத்தார் பண்ணுகின்ற பாவங்களெல்லாம் உலகத்தை யாள்கின்ற அரசர்களைச் சேரும்; அரசர்கள் பரிபாலனஞ்செய்கின்ற தர்மமானது புரோஹிதர்களைச் சேரும்; நாங்கள் சொல்லுமிடத்து, இந்தப் பாவங்களெல்லாம் உன்னைச் சுற்றிக் கொள்ளுமே யல்லாமல் எங்களைச் சுற்றிக் கொள்ளமாட்டாது; இந்த வார்த்தைகளெல்லாம் உண்மையாம்; இதற்கு மேல் உனது இஷ்டம்; பார்த்து நடந்துகொள்ளக்கடவாய்; நீதி செலுத்துகின்ற அரசனே!

(வி - ரை.) புரவலன் - காவற்றொழிலில் வல்லவன். உனக்கு - உருபுமயக்கம். புரோகிதர் - பௌரோஹிதர் என்னும் வடசொற்றிபு; புரோகிதத்தொழிலையுடைய அந்தணன்; புரோஹிதர் - ஊர்களிலுள்ள ஜனங்களுக்கு நன்மை செய்பவரென்பது பொருள்; அவர் தொழிலாவது:—அரசனிடத்தில் தினப்படிச் சென்று பஞ்சாங்கம் படிப்பதும், அமாவாசை, பூரணை முதலிய பர்வங்களையும், மாதப்பிறப்பு, வருடப்பிறப்பு, கிருத்திகை, ஏகாதசி முதலிய விசேஷ தினங்களையும், விநாயகசதுர்த்தி, சரஸ்வதிபூஜை, தீபாவளி, மகர சங்கராந்தி முதலிய பண்டிகைகளையும், கிரகணம், உத்தராயணம், தக்ஷிணாயனம் முதலிய புண்யகாலங்களையும் தெரிவிப்பதும், கல்யாணம், சீமந்தம் முதலிய சுபகார்யங்களைச் செய்ய முகூர்த்தங்க ளேற்படுத்துவதும், மகப்பேற்றில் ஜாதகம் குறித்து அதன் பலாபலங்களைத் தெரிவிப்பதும், இறந்தவர்களின் திதியை எழுதிவைத்து வருடந்தோறும் சிராத்தம் செய்விப்பதும், கல்யாணம் முதலிய காலங்களில் சுபஹோமம் செய்விப்பதும், பிறவுமாம். (எ)

உன்னைநீ பேணிக் கொள்ளென் றுரைத்தனர் வெகுண்டு வேந்த
னிந்நெறித் தண்ட நாதன் றன்னையழை யென்னச் செல்வார்
சென்னெறி கோடா ராய சிவநாக மையர் தம்மைக்
கொன்னருஞ் சிவிகை யேற்றிக் குலவிக்கை கொடுத்துச் செல்ல.

(ப - ரை.) உன்னை—, நீ—, பேணிக்கொள் - காப்பாற்றிக்கொள்ளக்கடவாய், என்று—, உரைத்தனர் - சொன்னார்கள், வேந்தன் - அரசன், வெகுண்டு - கோவித்து, இந் நெறி - இவ்விடத்திற்கு, தண்டநாதன் தன்னை - வசவண்ணனை, அழை- அழைத்துவாருங்கள், என்ன - என்று கட்டளையிடுதலும், செல்வார்- (தூதர் அதனைத் தெரிவிக்கக் கேட்டு) அரசனிடம் செல்லுகின்ற வசவண்ணர், செல் நெறி - தாம் ஒழுகிவருகின்ற சன்மார்க்கத்தினின்றும், கோடாராய - (சற்றும்) தவறுவதராகிய, சிவநாகமையர் தம்மை - சிவநாகமையரை, கொன் - மேன்மையானதும், அரு - கிடைத்தற்கருமையானதுமாகிய, சிவிகை - (பொன்) பல்லக்கில், ஏற்றி - எழுந்தருளப்பண்ணி, குலவி - கொண்டாடி, கைகொடுத்து—, செல்ல - பாதசாரியாய் வருதலும், எ - று.

(போ - ரை.) உன்னை நீ காப்பாற்றிக்கொள்ளக்கடவாயென்று சொன்னார்கள்; அரசன் கோவித்து இவ்விடத்திற்கு வசவண்ணனை யழைத்து வாருங்களென்று கட்டளையிடுதலும், தூதர் அதனைத் தெரிக்கக் கேட்டு அரசனிடம் செல்லுகின்ற

வசவண்ணர் தாமொழுகி வருகின்ற சன்மார்க்கத்தினின்றும் சற்றும் தவறாதவராகிய சிவநாகமையரை மேன்மையானதும், கிடைத்தற்கருமையானதுமாகிய பொன் பல்லக்கில் எழுந்தருளப்பண்ணி, கொண்டாடி, கைகொடுத்து, பாதசாரியாய் வருதலும்.

(வி - ரை.) கொன்னருஞ் சிவிகை யென்றதனல் பொற்பல்லக்கெனப் பொருட் கொள்ளலாயிற்று. (அ)

தூரத்திற் கண்ட பார்ப்பார் சொல்லுவார் பாராய் வேந்தே
யாரித்தாழ் வியற்று வாரிங் கரும்புலை கலக்க வேண்டிப்
பாரத்தண் டிகையி லேற்றிப் பார்த்திபன் முன்னஞ் சாமற்
சேரத்தன் கரங்கொ டுத்துச் செல்கின்றான் சிறிது நாணன்.

(ப - ரை.) தூரத்தில் - தூரமாக வரும்போதே, கண்ட - பார்த்த, பார்ப்பார் - ப்ராஹ்மணர்கள், சொல்லுவார் - குறைசொல்லத் தொடங்கினர்கள் (எவ்வாறெனின்); வேந்தே - அரசனே, பாராய் - பார்க்கக்கடவாய், இ - இந்த, தாழ்வு - நீச கார்யத்தை, இயற்றுவார் - செய்யவல்லவர், யார் —, இங்கு - இவ்விடத்தில், அரு - பச்சையாக, புலை - சண்டாளத்தை, கலக்கவேண்டி - கலத்தற்பொருட்டு, பாரம் - மேன்மையாகிய பொன்னினற் செய்யப்பட்ட, தண்டிகையில் - பல்லக்கில், ஏற்றி - ஏற்றிக் கொண்டு, பார்த்திபன் முன் - ராஜசமுகத்திற்கு; அஞ்சாமல் - பயப்படாமல், சேர - நெருங்க, தன் - தனது, கரம் கொடுத்து - கைகொடுத்து, செல்கின்றான் - பாதசாரியாய் வருகின்றான், சிறிதும் - கொஞ்சமேனும், நாணன் - வெட்கப்படமாட்டான், எ - று.

(பொ - ரை.) தூரமாக வரும்போதே பார்த்த ப்ராஹ்மணர்கள் குறை சொல்லத் தொடங்கினர்கள்; எவ்வாறெனின்:— அரசனே! பார்க்கக்கடவாய்; இந்த நீசகார்யத்தைச் செய்யவல்லவர் யார்? இவ்விடத்தில் பச்சையாகச் சண்டாளத்தைக் கலத்தற் பொருட்டு மேன்மையாகிய பொன்னினற் செய்யப்பட்ட பல்லக்கில் ஏற்றிக் கொண்டு ராஜசமுகத்திற்குப் பயப்படாமல் நெருங்கத் தனது கைகொடுத்து, பாதசாரியாய் வருகின்றான்; கொஞ்சமேனும் வெட்கப்படமாட்டான்.

(வி - ரை.) வேந்து; தாழ்வு என்பவை ஆகுபெயர்கள். பச்சை - மிகுதி. (௯)

கோற்றவன் றனையெ ணாதிக் கொடுமைசெய் நந்தி கேசன்
மற்றவர்க் கஞ்சு மாறென் னென்றனர் வன்னி போல
முற்றிய சினத்த னாகி விச்சலன் முனிந்தெ ழுந்து
தெற்றெனப் புறவோ லக்கஞ் சேர்ந்தங்க ணிருக்க லுற்றான்.

(ப - ரை.) கொற்றவன் தன்னை - அரசனையும், எண்ணாது - மதிக்காமல், இ - இந்த, கொடுமை - கொடிய கார்யத்தை, செய் - பண்ணுகின்ற, நந்திகேசன் - வசவண்ணன், மற்றவர்க்கு - இதர ஜனங்களுக்கு, அஞ்சும் ஆறு - பயப்படுகின்ற விதம், என் - யாது, என்றனர் - என்று (ப்ராஹ்மணர்கள்) சொன்னர்கள், விச்சலன் - விஜ்ஜலராஜனும்; வன்னி போல - நெருப்பு போல், முற்றிய - கொடிய, சினத்தனாகி - கோவமுடையவனாகி, முனிந்து - வெறுத்து, எழுந்து - எழுந்திருந்து, தெற்றென - விரைவாக, புறம் - வெளியில், ஓலக்கம் - சபை, சேர்ந்து - கூடி, அங்கண் - அவ்விடத்தில், இருக்கல் உற்றான் - இருந்தான், எ - று.

(பொ - ரை.) அரசனையும் மதிக்காமல் இந்தக் கொடிய கார்யத்தைப் பண்ணுகின்ற வசவண்ணன் இதர ஜனங்களுக்குப் பயப்படுகின்ற விதம் யாது? என்று ப்ராஹ்மணர்கள் சொன்னர்கள்; விஜ்ஜலராஜனும் நெருப்பு போலக் கொடிய கோவமுடையவனாகி, வெறுத்து, எழுந்திருந்து, விரைவாக வெளியில் சபைகூடி, அவ்விடத்திலிருந்தான். (௧௦)

கடிதுபோய் வசவ தேவர் காவலன் சபையுட் சென்று
படிமிசை தாமேற் சாத்தும் படாத்தைடா தனம தாக்கித்
திடமுறு நாக மைய ரிருந்திடச் செய்த பின்னர்
முடியனு வென்னை யழைத்த முந்துகா ரியஞ்சொ லென்றார்.

(ப - ரை.) வசவதேவர் - வசவண்ணர், கடிது - சீக்கிரமாக, போய் - சென்று, காவலன்சபையுள் - ராஜசபையில், சென்று - போய், படி மிசை - பூமியின்மீது, தாம்—, மேல் - மேலே, சாத்தும் - போர்த்திருக்கின்ற, படாத்தை - உத்தரீயத்தை, ஆதனம் ஆக்கி - ஆசனமாகச்செய்து (அதன்மீது), திடம் உறு - மனோத்ருடத்தையுடைய, நாகமையர் - சிவநாகமையரை. இருந்திடச் செய்த - எழுந்தருளப் பண்ணின, பின்னர் - பிறகு, முடி மன்னு - க்ரீடாதிபதியே, என்னை—, அழைத்த - அழைத்துவரும்படிச் செய்த, காரியம் - செய்தியை, முந்து - முதலில், சொல் - சொல்லக்கடவாய், என்றார் - என்று கேட்டார், எ - று.

(பொ - ரை.) வசவண்ணர் சீக்கிரமாகச் சென்று, ராஜசபையிற் போய், பூமியின் மீது தாம் மேலே போர்த்திருக்கின்ற உத்தரீயத்தை ஆசனமாகச் செய்து, அதன் மீது மனோத்ருடத்தையுடைய சிவநாகமையரை எழுந்தருளப்பண்ணின பிறகு, க்ரீடாதி பதியே! என்னை அழைத்துவரும்படிச் செய்த செய்தியை முதலில் சொல்லக் கடவாயென்று கேட்டார்.

(வி - ரை.) படாம் - வஸ்த்ரம். காவலன் - காவற்றொழிலில் வல்லவன். (௧௧)

என்றலு மதிக மெய்திவிச் சலனு ரைப்பா
னன்றுகாண் தண்ட நாத நற்குல ருடனே நீதி
பொன்றிய சாதி யான புலையருங் கலந்து போன
துன்றனுன் மேல்கீ ழென்ப தொழிந்ததே யிந்த வூரும்.

(ப-ரை) என்றலும் - என்று (வசவண்ணர்) கேட்டமாத்திரத்தில், விச்சலன் - விஜ்ஜலராஜன், அதிகம் - மிகுந்த, கோபம் - கோபத்தை, எய்தி - அடைந்து, உரைப்பான் - சொல்லுவானாயினன் (எவ்வாறெனின்), தண்டநாத-வசவண்ணனே, நன்று - காரியம் நன்றாயிருக்கின்றது, நல் - நல்ல, குலருடன் - ஜாதியாரோடு, நீதிபொன்றிய சாதியான - நீசஜாதியாராகிய, புலையரும் - பறையரும், கலந்து போனது - கலந்துவிட்டார்கள், இந்த—, ஊரும் - நாட்டிலும், உன் தன்னால் - உன்னால், மேல் - உயர்ந்த ஜாதியார், கீழ் - தாழ்ந்த ஜாதியார், என்பது - என்கின்ற வேற்றுமையே, ஒழிந்தது - அழிந்தது, எ-று.

(பொ-ரை.) என்று வசவண்ணர் கேட்ட மாத்திரத்தில், விஜ்ஜலராஜன் மிகுந்த கோபத்தை யடைந்து, சொல்லுவானாயினன் ; எவ்வாறெனின்:— வசவண்ணனே காரியம் நன்றாயிருக்கின்றது ; நல்ல ஜாதியாரோடு நீச ஜாதியாராகிய பறையரும் கலந்து விட்டார்கள் ; இந்த நாட்டிலும் உன்னால் உயர்ந்த ஜாதியார், தாழ்ந்தஜாதியா ரென்கின்ற வேற்றுமையே அழிந்தது. (௧௨)

சங்கரன் பத்தி யுன்பாற் சனித்தபின் சாதி நீதி
மங்கின நீயி ருந்த மண்ணிடை மழையும் பெய்யா
பொங்கிய விளைவும் பொன்றும் போதநா நீயி ருத்தி
யிங்கென மன்னன் முன்ன நந்திக ளியம்பு கின்றார்.

(ப-ரை.) சங்கரன்பத்தி - சிவபக்தியானது, உன்பால் - உன்னிடத்தில், சனித்த பின் - உண்டான பிறகு, சாதி நீதி - குலாசாரங்கள், மங்கின - கெட்டுப்போயின, நீ—, இருந்த - வாழ்கின்ற, மண் இடை - பூமியில், மழையும்—, பெய்யா-

பொழியாது, பொங்கிய - செழிப்பான, விளைவும் - விளைச்சலும், பொன்றும் - அழியும், நாம்—, போதும்- (நாட்டைவிட்டு) போகின்றோம், நீ - நீயே, இங்கு - இந் நாட்டில், இருத்தி - (சுகமாக)வாழ்வாய், என்ன - என்று சொல்லுதலும், மன்னன் முன்னம் - ராஜசமூகத்தில், நந்திகள் - வசவண்ணர், இயம்புகின்றார் - சொல்லலாயி னார் (எவ்வாறெனின்), எ-று.

(பொ-ரை.) சிவபக்தியானது உன்னிடத்தில் உண்டான பிறகு, குலாசாரங்கள் கெட்டுப்போயின; நீ வாழ்கின்ற பூமியில் மழையும் பெய்யாது; செழிப்பான விளைச்சலும் அழியும்; நாம் நாட்டைவிட்டுப் போகின்றோம்; நீயே இந்நாட்டில் சுக மாக வாழ்வாயென்று சொல்லுதலும், ராஜசமூகத்தில் வசவண்ணர் சொல்லலாயினர்; எவ்வாறெனின்.

(வி-ரை.) பொங்கிய - மிகுதியாகிய எனினுமாம். (௧௩)

மாசலதேவி.

மன்னவ கேட்பாய் நீச மங்கையைப் பார்ப்பார் கூடி
நன்னெறி யரசி யாக நாட்டுது மென்று தாங்கள்
பொன்னினோர் பசுவைச் செய்வித் ததனிடைப் புகுத்தி மாதைச்
சொன்னவக் கோவின் மீது தனத்தினைச் சொரியச் சொல்லி.

(ப-ரை.) மன்னவ - அரசனே, கேட்பாய் - (நான் சொல்ல நீ கவனமாய்) கேட்கக்கடவாய், பார்ப்பார் - (முற்காலத்தில்) ப்ராஹ்மணர்கள், கூடி - (திரளாக) சேர்ந்து, நீச மங்கையை - (ஒரு) நீச ஸ்த்ரீயை, நல் நெறி - சுகவாழ்க்கைக்குரிய, அரசியாக - ராஜ ஸ்த்ரீயாகும்படி, நாட்டுதும் - நிஜப்படுத்துவோம், என்று - என்று சொல்லி, தாங்கள்—, பொன்னின் - தங்கத்தினால், ஓர் - ஒரு, பசுவை—, செய் வித்து - பண்ணச்செய்து, அதன்—, இடை - வயிற்றில், மாதை - (அந்த) நீச ஸ்த்ரீ யை, புகுத்தி - நுழையச்செய்து, சொன்ன - மேற் சொல்லிய, அ - அந்த, கோவின் மீது - பசுவின்மேல், தனத்தினை - பொன்னை, சொரிய - கொட்டும்படிச் சொல்லி, எ-று.

(பொ-ரை.) அரசனே! நான் சொல்ல நீ கவனமாய்க் கேட்கக்கடவாய்; முற்காலத்தில் ப்ராஹ்மணர்கள் திரளாகச் சேர்ந்து, ஒரு நீச ஸ்த்ரீயைச் சுகவாழ்க் கைக்குரிய ராஜ ஸ்த்ரீயாகும்படி நிஜப்படுத்துவோமென்று சொல்லி, தாங்கள் தங்கத் தினால் ஒரு பசுவைப் பண்ணச்செய்து, அதன் வயிற்றில் அந்த நீச ஸ்த்ரீயை நுழை யச் செய்து மேற்சொல்லிய அந்தப் பசுவின் மேல் பொன்னைக் கொட்டும்படிச் சொல்லி.

(வி-ரை.) பொன்னின் என்பதில் இன் மூன்றுவதன் கருவிப்பொருளில் வந் தது. செய்வித்து, புகுத்தி என்பவை பிறவினைகள். கோ - ஓரெழுத்தொருமொழி. நீச மங்கையின்பெயர் படலமாசலதேவி யென்பது. சண்டாள ஸ்த்ரீயை ராஜ ஸ்த்ரீ யாகச் செய்த செய்கை நளன் அரசாண்டகாலத்தது. நாட்டல் - நிலைபெறச் செய்தல். (௧௪)

அக்குல கீனம் போய்ப்பி னரசியா யினளென் றெண்ணிப்
பக்கமுற் றந்த மாதைப் பரிந்தவண் மிச்சிற் பாலை
யெக்கிலா தருந்தி மற்று மிச்சையா விழிவாங் கோவின்
மிக்கவவ் வுறப்பை யெல்லாம் வெட்டிவெவ் வேற தாக்கி.

(ப-ரை.) அ - அந்த, குலகீனம் - நீச ஜாதியான்து, போய் - ஒழிந்து, பின் - பிறகு, அரசியாயினள் - ராஜ ஸ்த்ரீயானாள், என்று - என்று சொல்லி, எண்ணி -

ஏமாத்த(கருதி), பக்கம் உற்று - ஆசையுடன், அந்த—, மாதை - நீச ஸ்த்ரீயை, பரிந்து- விரும்பி, அவள்—, மிச்சிற்பாலே - (உண்டுமீந்த) எச்சிற்பாலே, எக்கு - வெட்கம், இல் லாது-இல்லாமல், அருந்தி - உண்டு, மற்றும் - மேலும், இச்சையால் - (பொருள்) ஆசையினால், இழிவாம் - நீசமாகிய, கோவின் - பசுவின், மிக்க - மிச்சமாயிருந்த, அ - அந்த, உறுப்பை - அவயவங்களை, எல்லாம் - முற்றிலும், வெட்டி - அறுத்து, வெவ்வேறு ஆக்கி - வேறு வேறாகக் கூறுசெய்து, எ - று.

(பொ - ரை.) அந்த நீச ஜாதியானது ஒழிந்து, பிறகு ராஜஸ்திரீயானேனென்று ஏமாத்தக் கருதி, ஆசையுடன் அந்த நீச ஸ்த்ரீயை விரும்பி, அவள் உண்டு மீந்த எச்சிற்பாலே வெட்கமில்லாமல் உண்டு, மேலும் பொருளாசையினால் நீசமாகிய பசுவின் மிச்சமாயிருந்த அவயவங்களை முற்றிலும் அறுத்து, வேறு வேறாகக் கூறுசெய்து.

(வி - ரை.) கீனம் - ஹீனம் என்னும் வடசொற்றிரிபு. குலகீனம் என்பதைக் கீனகுலமென்று மாற்றிப் பொருளுரைக்கலாயிற்று. பக்கம் - பக்ஷம் என்னும் வட சொற்றிரிபு. வேறது என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. (கஉ)

நெற்றிசோ மாசி கட்கு நேர்பாகம் வலது பாகம்
வெற்றிவே தாந்தர் பாக மிக்குற மிடது பாக
முற்றபண் டிதர்கள் பாக முபாத்தியார் பாக நாப்பண்
சொற்றரி னன னந்தான் றூயதீக் கிதர்தம் பாகம்.

(ப-ரை.) நெற்றி—, சோமாசிகட்கு - ஸோமயாஜிகளுக்கு, நேர் - உரிய, பாகம்- பாகமாகும், வலது பாகம் - வலப்பக்கம், வெற்றி - வெற்றியையுடைய, வேதாந்தர்- வேதாந்திகளுக்குரிய, பாகம் - பாகமாகும், மிக்கு உறும் - மிச்சமாயிருக்கின்ற, இடது பாகம் - இடப்பக்கம், உற்ற - மிக்க, பண்டிதர்கள் - பண்டிதர்களுக்குரிய, பாகம் - பாகமாகும், நாப்பண் - நடுப்பக்கம், உபாத்தியார் - உபாத்தியாயர்களுக்குரிய, பாகம்- பாகமாகும், சொல்தரின் - சொல்லுமிடத்து, ஆனனம் - முகம், தூய - பரிசுத்தர் களாகிய, தீக்கிதர்தம் - தீக்ஷிதர்களுக்குரிய, பாகம் - பாகமாகும், எ-று.

(பொ-ரை.) நெற்றி ஸோமயாஜிகளுக்குரிய பாகமாகும்; வலப்பக்கம் வெற்றியையுடைய வேதாந்திகளுக்குரிய பாகமாகும்; மிச்சமாயிருக்கின்ற இடப்பக்கம் மிக்க பண்டிதர்களுக்குரிய பாகமாகும்; நடுப்பக்கம் உபாத்தியாயர்களுக்குரிய பாக மாகும்; சொல்லுமிடத்து, முகம் பரிசுத்தர்களாகிய தீக்ஷிதர்களுக்குரிய பாகமாகும்.

(வி-ரை.) சோமாசி - ஸோமயாஜிஎன்னும் வடசொற்றிரிபு. தீக்கிதர் - தீக்ஷிதர் என்னும் வடசொற்றிரிபு. ஸோமரஸ பானஞ் செய்பவர் ஸோமயாஜி எனப்படுவர். நேர்-சரியான. தான் - அசை. (கக)

நலத்திரு முன்கு றங்கு நாலாய வேதர் பாக
மிலக்குறி னிடது வூரு வெச்சவே தியர்தம் பாகம்
வலத்துடை கலையின் சன்ம மார்பினர் பாக நாப்பண்
பலத்தரா மத்தி யான பட்டர்தம் பாக மாகும்.

(ப - ரை.) நலத்திரு - மிகவும் மேலானதாகிய, முன் குறங்கு - முன் தொடை, நாலாயவேதர்-சதுர் வேதியர்களுக்குரிய, பாகம் - பாகமாகும், இலக்கு உறின்-கருது மிடத்து, இடது ஊரு - இடது தொடை, எச்சவேதியர்தம் - யாகப்ராஹ்மணர்களுக் குரிய,பாகம் - பாகமாகும், வலத்தொடை - வலது தொடை, கலையின் சன்மம் மார்பி னர்-மான்தோலே யணிந்திருக்கின்ற மார்பையுடைய ப்ராஹ்மணர்களுக்குரிய,பாகம்- பாகமாகும், நாப்பண் - நடுப்பக்கம், பலத்தர் ஆம் - வல்லமையுள்ள, அத்தியானம் பட் டர்தம் - வேதபாராயணஞ்செய்கின்ற ப்ராஹ்மணர்களுக்குரிய, பாகமாகும்—, எ-று.

(பொ - ரை.) மிகவும் மேலானதாகிய முன்தொடை சதுர் வேதியர்களுக்குரிய பாகமாகும்; கருது மிடத்து, இடது தொடை யாகப்ராஹ்மணர்களுக்குரிய பாகமாகும்; வலது தொடை மான் தோலை யணிந்திருக்கின்ற மார்பையுடைய ப்ராஹ்மணர்களுக்குரிய பாகமாகும்; நடுப்பக்கம் வல்லமையுள்ள வேதபாராயணஞ்செய்கின்ற ப்ராஹ்மணர்களுக்குரிய பாகமாகும்.

(வி - ரை.) சன்மம் - சர்மம் என்னும் வடசொற்றிரிபு. அத்தியானம் - அத்யயனம் என்னும் வடசொற்றிரிபு. (௧எ)

அளவுறு முதர மெல்லா மாரணப் பட்டர் பாகம்
வளமைசேர் வெங்கிற் றண்டு மந்திரர் பாக மாமற்
றுளபர தேசி கட்கென் றோதியப் பசுவின் மெய்யைக்
குளமுதற் பகுந்து கொள்ளுங் கொடியசண் டாள கோலர்

(ப - ரை.) அளவு உறும் - அளவுள்ள, உதரம் - வயிறு, எல்லாம் - முழுதும்; ஆரணப்பட்டர் - வேதப்ராஹ்மணர்களுக்குரிய, பாகம் - பாகமாகும், வளமைசேர் - செழிப்பாகிய, வெங்கில் தண்டு - முதுகெலும்புத் தண்டு, மந்திரர் - மாந்த்ரிகர்களுக்குரிய, பாகமாம் - பாகமாகும், மற்று உள்ள - வேறாயிருக்கின்ற உறுப்புக்கள் (எல்லாம்), பரதேசிகட்கு - பரதேசிகளுக்குரிய (பாகமாகும்), என்று--, ஓதி-சொல்லி, அ - அந்த, பசுவின்—, மெய்யை - உடம்பை, குளம் - நெற்றி, முதல் - முதலாகிய உறுப்புக்களை யெல்லாம், பகுந்து கொள்ளும் - பங்கிட்டு வாரிக்கொள்ளுகின்ற, கொடிய - துஷ்டர்களாகிய, சண்டாள கோலர் - நீச வேஷதாரிகளே யாவார்கள், எ - று.

(பொ - ரை.) அளவுள்ள வயிறு முழுதும் வேதப்ராஹ்மணர்களுக்குரிய பாகமாகும்; செழிப்பாகிய முதுகெலும்புத் தண்டு மாந்த்ரிகர்களுக்குரிய பாகமாகும்; வேறாயிருக்கின்ற உறுப்புக்களெல்லாம் பரதேசிகளுக்குரிய பாகமாகு மென்று சொல்லி, அந்தப் பசுவின் உடம்பை நெற்றி முதலாகிய உறுப்புக்களை யெல்லாம் பங்கிட்டு வாரிக்கொள்ளுகின்ற துஷ்டர்களாகிய நீசவேஷதாரிகளே யாவார்கள்.

(வி-ரை) க்ருஷ்ண யஜுர்வேதம், தைத்தரிய ப்ராஹ்மணம், கோபத ப்ராஹ்மணம், ஶ்ரௌத ஸூத்ரம், ஆஶ்வலாயன க்ரிஹ்ய ஸூத்ரம் முதலியவைகள் யாகாதிகளைப்பற்றி விரிவாகக்கூறும். மேற்போந்த 14-வது முதல் 18-வது வரை உள்ள செய்யுட்கள் குளகம்.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

வேத முன்னமு ரைத்திடுஞ் சாதிகள்
 விதியி தென்றுவி ரித்துவி ளம்புதி
னோது மாரணத் தன்னினு தித்துமண்
 ணுலவு சாதியி ரண்டவை யுன்னினுற்
றீதில் வத்தக ரென்றுநி வத்தகச்
 செய்தி யோரென்றுஞ் செப்புமி ருவரின்
சாத கன்மவி சுத்தனே வத்தகன்
 சங்க ரனுப தேசனி வத்தகன்.

(ப - ரை.) வேதம் - (நான்கு) வேதங்கள், முன்னம் - ஆதியில், உரைத்திடும் - சொன்ன, சாதிகள் - ஜாதிகளின், விதி - நிருமானம், இது - இத்தன்மைத்து, என்று—, விரித்து - விரிவாக விளக்கி, விளம்பும் – சொல்லும் (எவ்வாறெனின்), ஓதும் - சொல்லப்பட்ட, நின் - உனது, ஆரணம் தன்னில் - வேதங்களில், உதித்து- உண்டாகி, மண் - பூலோகத்தில், உலவும் - வழங்கிவருகின்ற, சாதி - ஜாதியானது,

இரண்டு - இரண்டேயாகும், அவை - அவற்றை, உன்னில் - யோசிக்குமிடத்து, தீது இல் - பரிசுத்தராகிய, வத்தகர் - ப்ரவ்ருத்திமார்க்கத்தையுடையவர், என்றும்—, நிவர்த்தகச் செய்தியோர் - நிவ்ருத்திமார்க்கத்தையுடையவர், என்றும்—, செப்பும் - சொல்லுகின்ற, இருவரில் - இரண்டு ஜாதியார்களில், சாதகன்மம் விசுத்தன் - பிறவி மார்க்கத்திற்குரிய கர்ம ஸம்ஸ்காரத்தையடைந்தவன், வத்தகன் - ப்ரவ்ருத்திமார்க்கத்தையுடையவனும், சங்கரன் உபதேசன்- ஜ்ஞானமார்க்கத்திற்குரிய சிவதீக்ஷையடைந்தவன், நிவத்தகன் - நிவ்ருத்திமார்க்கத்தையுடையவனும், எ-று.

(பொ-ரை.) நான்கு வேதங்கள் ஆதியில் சொன்ன ஜாதிகளின் நிருமானம் இத்தன்மைத்தென்று விரிவாக விளக்கிச்சொல்லும்; எவ்வாறெனின்:—சொல்லப்பட்ட உனது வேதங்களில் உண்டாகிப் பூலோகத்தில் வழங்கிவருகின்ற ஜாதியானது இரண்டேயாகும்; அவற்றை யோசிக்குமிடத்து, பரிசுத்தராகிய ப்ரவ்ருத்திமார்க்கத்தையுடையவரென்றும், நிவ்ருத்திமார்க்கத்தையுடையவரென்றும் சொல்லுகின்ற இரண்டு ஜாதியார்களில் பிறவிமார்க்கத்திற்குரிய கர்ம ஸம்ஸ்காரத்தை யடைந்தவன் ப்ரவர்த்திமார்க்கத்தை யுடையவனும்; ஜ்ஞானமார்க்கத்திற்குரிய சிவதீக்ஷையடைந்தவன் நிவ்ருத்திமார்க்கத்தையுடையவனும்.

(வி-ரை.) உலகத்தில் மனிதர்கள் வழிபடுதற்குரிய தர்மகர்மங்களைப்போதிக்கின்ற வித்தைகளில் மிகவும் புராதனமாயுள்ளவை வேதங்களென்பதை நிரூபிக்கப் போதிய பிரமாணங்களுண்டு. அவ் வேதங்களில் ருக்வேதம் 10-வது மண்டலம் வரையிலும் மனிதரில் இரண்டு ஜாதிகளுண்டெனக் கூறியதே யன்றி, தற்காலத்தில் வழங்கிவருவதும், பிறப்பினாலுண்டாகிய ஜாதியே சிறப்பென்ற காரணத்தினால் நேரிட்ட தர்க்க வாதங்களுக்கிட மானதுமாகிய சதுர்வர்ணத்தைப் பற்றிய விஷயம் சற்றேனும் கூறியதாகக் காணப்படவில்லை யென்றும், ஆனால் கடையதாகிய 12-ம் மண்டலத்தினிறுதியில் ப்ராஹ்மணாதி வர்ண சதுஷ்டய மந்த்ரம் சேர்க்கப்பட்டு ஆக்ஷேபனைக்கிடமா யுள்ளதாகக் காணப்படுகிறதென்றும், சிலகாலத்திற்குப் பின்னர் ஸ்வய மதஸ்தாபகர்களாகிய துஷ்டர்களில் யாரோ நூதனமாக அந்த மந்த்ரத்தை நுழைத்திருப்பார்களென்றும் பூர்வாபர வாக்யங்களைக்கொண்டு சிலர் ஊகிக்கின்றனர். இவற்றைச் சிலர் இன்னும் அநேக விதமாகவும் பொருட்படுத்துகின்றனர். ஆனால் நான்கு ஜாதிகள் பூர்வமுள்ள இரண்டு ஜாதிகளுக்கு முன்னர் இல்லை யென்பதை உறுதியாகச் சொல்லலாம்.

இனி, ருக்வேதத்தில் ஆர்ய, தாஸ்யுகளென்னும் இரண்டு ஜாதிகளின் பெயரே பல விடங்களிலும் காணப்படுகின்றன. பிறகு ஏற்பட்ட வேற்றுமைகளினால் மனிதரில் ஞானி (ஆர்யர்), அஞ்ஞானி (தாஸ்யு) என்னும் பொருட் பிரிவினைகள் உண்டாக்கப்பட்டன.

வேதகாலத்திலிருந்த ஞானி, அஞ்ஞானிகளென்னும் இரண்டு வகுப்புகளும் ஒரே ஸ்திதியில் நடைபெற்றுச் சிலகாலம் கழிந்த பின்னர், ஜனத்தொகை அதிகரிக்கத் தொடங்கியவாறே, அவ் வப்போதிருந்த அரசாக்ஷிக் குட் பட்டிருந்த ஜனங்கள் தங்கள் தங்களில் தொழில்களை யநுசரித்து நான்கு வகுப்புகளை யுண்டாக்கிக்கொண்டார்கள். அவைகள் நாளடைவில் விருத்தியடையவும் தொழில்களையொழித்து ஜாதியைப் பிறப்பின் மேலேற்றவும் ஜாதிவாதத்திற்கிடமுண்டாகியது. ஒருக்கால் ப்ராஹ்மணர்கள் உயர்ந்தவர்களென்று காணியாட்சி பெறவே, அவர்கள் சந்ததியாரும் அஞ்ஞான மமதையை விடாது, தேசத்தைப் பயங்கரமான கோலாஹலத்தில் அமிழ்த்தியதேயல்லாமல், அந்தப் பெருமையால் தாங்கள் வஞ்சகக் குணமுள்ளவர்களாகி, மற்றவர்கள் அப் பெருமையை யடையாவாறு நிராகரிக்கச்செய்தார்கள்.

மேலும் மனிதர்களில் ப்ரவ்ருத்தி மார்க்கத்தையுடையவரை ப்ராக்ருதரென்றும், நிவ்ருத்திமார்க்கத்தை யுடையவரை அப்ராக்ருதரென்றும், ப்ராக்ருதரை ப்ரஹ்ம ஸ்ருஷ்டியென்றும், அப்ராக்ருதரைச் சிவஸ்ருஷ்டியென்றும் கூறும் ஶ்ருதிவசநங்கள் பலவுள. சிவபெருமானல் ஸ்ருஷ்டிக்கப்பட்டவர்கள் ஸ்தாவர லிங்கத்தைப் பூஜிப்பதுடன் சிவாகமங்களையும், ஸ்ம்ருதிகளையும் அநுசரிக்கின்ற சாமானிய சைவரென்றும், மிஶ்ரசைவரென்றும், இஷ்டலிங்க மூர்த்தியைப் பூஜிப்பதுடன் சிவாகமங்களையும், ஸ்ம்ருதிகளையும் அநுசரிக்கின்ற சுத்த சைவரென்றும், வீரசைவரென்றும் நான்கு வகைப்படுவர்.

ப்ரஹ்மதேவனல் ஸ்ருஷ்டிக்கப்பட்டவர்கள் ப்ராஹ்மணர், க்ஷத்ரியர், வைஶ்யர், ஶூத்ரரென்று நான்கு வகைப்படுவர். இவர்கள் ஸ்ம்ருதிகளையே அனுசரிப்பவர்கள்.

ப்ராஹ்மணோஸ்ய முகமாஸீத் ।
பாஹூ ராஜந்ய꞉ ॥
ஊரூ ததஸ்ய யத்வைஶ்ய꞉ ।
பத்ப்யாம் ஶூத்ரோ அஜாயத꞉ ॥

ப்ராஹ்மணோஸ்ய முகமாஸீத் |
பாஹூராஜந்ய꞉ |
ஊரூ ததஸ்ய யத்வைஶ்ய꞉ |
பத்ப்யாம் ஶூத்ரோஜாய க்ருத꞉ ||

வீரசைவர்கள் அப்ராக்ருத ஸ்ருஷ்டியைச் சேர்ந்தவர்களாதலின் யாகம் அதாவது ப்ராண பலியைக் குறித்த வேதபாகங்களை யநுசரிக்கக்கூடாதென்றும், கர்மம் இரண்டு வகை யென்றும், அவற்றுள் லோகாசாரத்தைப் பற்றியதொன்றென்றும், ஞானத்தைப் பற்றியதொன்றென்றும் கூறுவர். ப்ராஹ்மணர்கள் மோக்ஷ மென்பது லோகாசாரத்திலீடுபட்டுச் சுவர்க்கத்திற்குப் போய் அவ்விடத்தில் நிரந்தரமான சுகத்தை யநுபவிப்பதென்பர். வீரசைவர்கள் ஈஶ்வரனுடன் ஐக்யப்படுவதென்பர். ஆதலால், வீரசைவர்கள் சுவர்க்கத்திற்குரிய கர்மங்களை யெல்லாம் செய்யக்கூடா தென்றும், ஞானமார்க்கத்தைத் தாங்கள் தெரிந்தவாறே மோக்ஷத்திற்குரிய தர்மத்தையே கொள்ள வேண்டு மென்றும் கூறுவர். வேதத்திற் கூறிய தாஶ்யு-ஆர்யர் என்னும் பதங்களுக்குப் பொருட்டுருவதாகிய பக்த மாஹேஶ்வரரென்கின்ற பிரதிபதங்களையே வீரசைவமதாசார்யர்கள் தமது பாஷ்யம் முதலாகிய கிரந்தங்களிலும், ஶ்ருதிகளிலும் வழங்கியிருப்பதனல் வீரசைவமதம் வேதசம்பந்த முடைய தென்பது நன்கு விளங்கும். தென்தேசமாதியாகிய சில விடங்களிலுள்ள பாமர ஜனங்கள் ஆழ்ந்து விசாரியாத குறையினல் வீரசைவமதம் பாஷண்ட மதமெனத் தூற்றும் கூற்று அவக்கூற்றுயிற்று.

வேதம் நான்கு:—ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வவேதம் என்பன.

(1) ருக்வேதம்:—இது 8 அஷ்டகங்களையும், 94 அத்யாயங்களையும், 2009 வர்க்கங்களையும், மற்றொரு விதமாக 10 மண்டலங்களையும், 1007 ஸூத்ரங்களையுமுடையது. இதற்கு ஐதரேய ப்ராஹ்மணமென்றும், ஶாங்க்யாயன ப்ராஹ்மணமென்றும் இரண்டு ப்ராஹ்மணங்களுண்டு. ஆஶ்வலாயந, ஶாங்க்யாயந ஸூத்ரங்கள் இவ் வேதத்திற்குச் சம்பந்தப்பட்டவைகள்.

(2) யஜுர்வேதம்:— இது க்ருஷ்ண யஜுர்வேதமென்றும், ஶுக்ல யஜுர்வேதமென்றும் இருவகைப்படும்.

க்ருஷ்ண யஜுர்வேதத்திற்குத் தைத்திரீய ஶாகையென்ற பெயர் வழங்கும். இது ஸம்ஹிதா, ப்ராஹ்மணம், ஆரண்யகமென்று மூவகைப்படும். இதில் ஸம்ஹிதா 44, ப்ராஹ்மணம் 28, ஆரண்யகம் 10, ஆக 82 ப்ரஶ்நங்களைக் கொண்டது. ஆபஸ்தம்ப, போதாயந, ஸத்யாஷாட, ஹிரண்யகேஶீய, பாரத்வாஜ, வைகாநஸ கல்பஸூத்ரமாகிய இவைகள் இவ் வேதத்திற்குச் சம்பந்தப்பட்டவைகள்.

ஶுக்ல யஜுர்வேதம்:—இது மாத்யந்தின ஶாகையென்றும், கண்வ ஶாகையென்றும் இரு வகைப்படும். மாத்யந்தின ஶாகைக்கு வாஜஸநேய ஸம்ஹிதா என்று பெயர் வழங்கும். இவைகள் 40 அத்யாயங்களையுடையன. இவ் வேதத்திற்கு ஶதபத ப்ராஹ்மணமென்னும் ஒரு ப்ராஹ்மணமுண்டு. பாரஸ்கர, காத்யாயனாதி கல்பஸூத்ரங்கள் இவ் வேதத்திற்குச் சம்பந்தப்பட்டவைகள்.

(3) **ஸாமவேதம்:**— இது பூர்வார்ச்சிகமென்றும், உத்தரார்ச்சிகமென்றும் இரு வகைப்படும். அவற்றில் பூர்வார்ச்சிகம் 6 ப்ரபாடகங்களையும், உத்தரார்ச்சிகம் 9 ப்ரபாடகங்களையும் உடையன. இந்த வேதத்திற்குத் தாண்ட்ய ப்ராஹ்மணம், ஷட்விம்ஶ ப்ராஹ்மணம், ஸாமவிதாந ப்ராஹ்மணம், வம்ஶ ப்ராஹ்மணம், ஆர்ஷேய ப்ராஹ்மணம், தேவதாத்யாய ப்ராஹ்மணம், ஸம்ஹிதோபநிஷத்ப்ராஹ்மணம்முதலிய அஷ்டவித ப்ராஹ்மணங்களுண்டு. கோபில, லாட்யாயன, த்ராஹ்யாயணாதி ஸூத்ரங்கள் இவ் வேதத்திற்குச் சம்பந்தப்பட்டவைகள்.

(4) **அதர்வவேதம்:**— இது 20 காண்டங்களை யுடையது. ஒவ்வொரு காண்டத்தில் சிலபாகங்கள் அநுவாகங்களாகப் பிரிக்கப் பட்டிருக்கின்றன. இவற்றிற்குக் கோபத ப்ராஹ்மணமென்னும் ஒரு ப்ராஹ்மணமுண்டு. கௌஶிக கல்பஸூத்ரம் இவ் வேதத்திற்குச் சம்பந்தப்பட்டது.

ருக்வேதம் 21 ஶாகைகளும், யஜுர் வேதம் 101 ஶாகைகளும், சாமவேதம் 1000 ஶாகைகளும், அதர்வவேதம் 9 ஶாகைகளுமாக 1131 ஶாகைகளுளவென்றும், சிலர் 1127 ஶாகைகளுளவென்றும் சொல்லுவர். ருக்வேதம் தோத்திரங்களையும், யஜுர்வேதம் யாகங்களையும், சாமவேதம் பலாபலங்களையும், அதர்வவேதம் சத்துரு நாசத்திற்குரிய மந்திரங்களையும் சொல்லுவனவாம்.

ஆறு வேதாங்கங்கள் - ஶிக்ஷா, வ்யாகரணம், சந்தஸ்ஸு, நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்பன.

உபாங்கங்கள் — பூர்வமீமாம்ஸா, உத்தரமீமாம்ஸா (வேதாந்தம்), ஸாங்க்யம், யோகம், வைஶேஷிகம், ந்யாயமாகிய ஷட்தர்ஶநங்களாம்.

பூர்வமீமாம்ஸா (தர்மாசாரம்) ஜைமினிமுநிவரால் சொல்லப்பட்டது. உத்தரமீமாம்ஸா வியாசமுனிவரால் சொல்லப்பட்டது.

புராதனமாயுள்ள ஆர்யர்களுக்குரிய ஶாஸ்த்ரங்கள் ஶ்ருதியென்றும், ஸ்ம்ருதியென்றும் இரண்டு வகைப்படும்.

நான்கு மந்த்ர ஸம்ஹிதாவும், ருக், யஜுர், ஸாம, அதர்வவேதங்களும் ஶ்ருதியெனப்படும். இவைகள் ஈஶ்வர வாக்கென்பர்.

ப்ராஹ்மணங்களும், உபநிஷத்துக்களும், ஆறு தர்ஶநங்களும், மநுமுதலிய தர்ம ஶாஸ்த்ரங்களும் ஸ்ம்ருதியெனப்படும். இவைகள் மாநுட வாக்கென்பர்.

ருக், யஜுர், ஸாமமாகிய மூன்றுவேதங்களே முக்கியமென்றும், அதர்வவேதம் யஜுர்வேதத்தில் சேர்ந்துளதென்றும் கூறுவர்.

வத்தகர் - வர்த்தகர் என்னும் வடசொற்றிரிபு. நிவத்தகர் - நிவர்த்தர் என்னும் வடசொற்றிரிபு. வர்த்தகரை ப்ராக்ருதரென்றும், நிவர்த்தகரை அப்ராக்ருத ரென்றும் சொல்லுமிடத்து உலகத்தில் அவ்வந்த ஜாதிப்ராணிகளின் சிருட்டிக் கிரமமானது ஒரே படித்தாயிருப்பது போலவே மனிதஜாதியாரான எல்லாருடைய சிருட்டிக் கிரமமும் ஒரு படித்தாயிருக்கிறது. மேற்சொல்லியபடி சிவசிருட்டிக்கு உட்பட்டவீரசைவர்கள் அப்ராக்ருத ரெனப்படுவர்; பிரமசிருட்டிக்கு உட்பட்டவராதலின் வீரசைவரல்லாத ஏனையோர் ப்ராக்ருத ரெனப்படுவர். ஆனால் இவ்வாறு கூறுதல் அசம்பவமென்றே சொல்லலாம். ஏனெனின் உலகத்தோற்றத்திற்குப் பரம்பரா கிரமப்படிக் கர்த்தாவாகிய ப்ரமேஶ்வரன் வீரசைவரையும், ஏனையோரையும் வெவ்வேருகப் பிரித்துக் காட்டும்படியான பேதத்தை யுண்டாக்கி யிருப்பானன்றே? ஆனால் அவ்வாறில்லை. ஆதலின் எல்லோரும் பிரமசிருட்டிக்கு உட்பட்டவரென்றும், ஜந்மத: ப்ராக்ருதரென்றும் சொல்லுதலே நீதியாகும். பின்னர்,

> விப⁴க்தா: ப்ராக்ருதாஶ்சேதி த்³விவிதா⁴ மாநுஷா ஸ்ம்ருதா: ।
> ஶிவஸம்ஸ்காரிண: ப⁴க்தா: ப்ராக்ருதா இதரே மதா: ॥

> விப⁴க்தா: ப்ராக்ருதாஶ் சேதி த்³விவிதா⁴ மாநுஷாஸ் ஸ்ருதா:।
> ஶிவஸம்ஸ்காரிணஶ் ப⁴க்தா: ப்ராக்ருதா யிதரே மதா:

என்னும் பிரமாணப்படிச் சிவதீக்ஷா ஸம்ஸ்காரபூர்வகமாய் ஸ்ரீகுருநாதரால் அநுக்ரஹஞ்செய்யப்பட்ட லிங்காங்க சம்பந்தமே அப்ராக்ருத ஸ்ருஷ்டியெனப்படும். மேலும் மாயா ப்ரக்ருதி கார்யங்களான கலா, வித்யா, ராகம், காலம், நியதியாகிய இவற்றினல் பந்தப்பட்டவனகி, மனம், புத்தி, சித்தம் அஹங்காரமென்பதோடு பஞ்சபூதங்களாகிய தேகத்தில் ஆத்மாவென்னும் அறிவினல் சமுசாரத்தின் சுகதுக்கங்களுக்குரித்தானவர்கள் ப்ராக்ருதரெனப்படுவர். இந்தப் பாவனையைத் தாண்டி ப்ரக்ருதி ப்ராக்ருததத்வாதீதமான சிவதத்வத்தில் அழுந்தினவர்கள் அப்ராக்ருதரெனப்படுவர். அப்ராக்ருதருடைய தன்மை சிவபக்தியினலே யல்லாமல் வேறெவ்வாற்ருனும் சித்திக்கமாட்டாது. குணகர்ம மயமான ப்ராக்ருத ப்ரபஞ்சத்தில் குணகர்ம தாரதம்யத்தினல் ஜீவன், தேவ, மனித, த்ரியக்குகளென்கின்ற பிறப்பினையடைவான். அப்போது அவ்வந்த யோனிகளில் தாரதம்யமுள்ளவனவான். மனித ஜந்மத்திலுள்ள தாரதம்யமே ஜாதி முதலியனவாம். ஆனதனல் **சாதுர்வர்ணம் மயாஸ்ருஷ்டம் குணகர்ம விபாகச:** என்றது பகவத்கீதை. ஆனல் மனிதர்கள் ராக த்வேஷாதிகளின் வசப்பட, பிறப்பினல் ஜாதி வந்ததென்று, கிருத்திமமான ஜாதி பேதங்களை யேற்படுத்தி, ஜந்மத்தினலேயே ஒரு வகையான உயர்ச்சியையும், மற்ருெரு விதமான தாழ்ச்சியையும் சாதிக்க ப்ராஹ்மணர்கள் முயன்ருர்கள். ஆகம ஸம்ஹிதாக்களில் ப்ராக்ருதர்களில் வைதிகியென்றும், ஸ்வகீயமென்றும் இரண்டு ஜாதிகள் அங்கீகரிக்கப்பட்டுள்ளன. அதனுற்ருன் சுத்தம், மிஶ்ரம், அந்தரம் முதலாகிய சைவபேதங்களுண்டாயின. ஆனல் வீரசைவசமயத்தில் ஜாதிபேதங்கள் தோன்ருவாம்.

ஸூக்ஷ்மாகமே, ப-5. ஶ்லோ-66.

> ஸத்வஸ்த² ப்ராத்³ருநம் ஜந்ம நாமஜாத்யாதி³கம் ச யத் ।
> ஸர்வேஷாம் ப⁴வேத்³ ப⁴க்திஸமாவேஶாத் பாதகிநாம் வர: ॥

ஸூக்ஷ்மாகமம் ப-ஃ, ஸ்-63.

பக்தஸ்ய ப்ராக்தநம் ஜந்ம நாமஜாத்யாதிகம் ச யத்।
ப்ருச்சேத்வா கதயேத் வாபி ஸவை பாதகிநாம்வர:॥

ஸாமவேதம்.

[Grantha script verse]

சாமவேதம்

அபிவாயம்சாண்டாலம் ஶிவேதி வா ஸம்வதேத்
தேந ஸஹ ஸம்வஸேத் தேந ஸஹ விசேத்தேத்
ஸஹ புஞ்ஜீதத் தேந ஸஹ புஞ்ஜீத॥

மலமாயைகளினாலும், மாயையின் கார்யங்களினாலும் சம்பந்தப்பட்ட ஆத்மாஅவ் வந்தப் பலப்ராப்திக்காகச் செய்கின்ற பிரயத்தனமே கர்மமென்பதாயிற்று. மலமாயா கர்மங்களினால் சம்பந்தப்பட்டவர்கள் ப்ராக்ருதரெனப்படுவர். இவற்றின் பற்றற்றவர்கள் அப்ராக்ருதரென்றும், வீரசைவரென்றும், லிங்கவந்த ரென்றும் சொல்லப்படுவர். பாசபந்தநாசத்திற்குச் சிவதீக்ஷையே ஹேதுவாம். ஸ்வரூப விஸ்ம்ருதையினால் மாயையானது ஆத்மாவைச் சமுசாரத்திற் புகுத்திப் பலவகைப்பட்ட த்ருஶ்ய பதார்த்தங்களைக் காண்பிக்கிறது; ஆனதால் மாயையை ஜகத்பீஜமென்று ஆகமங்கள் கூறும். மேலும்,

ம்ருகேந்த்ரம்.

ததேகம்ஶிவம் பீஜம்ஜகத்ப்சித்ரஶக்திமத்।

என்னும் வசநமும் சான்றாம். அதன் சக்திவிசித்ரமெவ்வாறெனின்:—இந்த மாயையானது ஜகத்தென்கின்ற அங்குரத்தை வெளிப்படுத்துவதற்கு மலம் இன்றியமையாதது. பீஜத்திற்குத் தவிடில்லாமல் அங்குரோத்பத்தியாகாதவாறு, மலமிருந்தால் மாயையானது ஜகத்தையுண்டாக்கும். அதனால் மலத்திற்குத் தவிடு உவமிக்கப் பட்டுள்ளது. மேலும் அடியில் வரும் ஆகமவாசகமும் கூறும்:—

[Grantha script verse]

ஸ்வாயம்பாகமம்.

அதாநாதிமல: பும்ஸ: பஶுத்வம் பரிகீர்த்திதம்।
துஷகம் புகவத் ஜ்ஞேயம் மாயா பீஜாங்குரஸ்ய தத்॥

மாயாகார்யங்களான கலாதிகளென்கின்ற அங்குரத்தின் உத்பத்திற்கு மலம் உமி தவிடுகளாம்

என்று வேதமி யம்பிய நீதிவிட்
டிடையி லுற்றகு லவுரை யென்பெறத்
தன்ற நாட்டுறு மன்னன்வ குத்தவிச்
சாதி சங்கர மெங்கட்குத் தானிலைத்
துன்று புண்ணிய னீரை கத்துறாஞ்
சொன்ன மோடது போலவே தோன்றிடு
மொன்று மீசனு ருவினர் மேனியு
மூலகர் கண்ணுக்கு லகர்போற் றோன்றிடும். (கக)

(ப - ரை.) என்று—, வேதம் - வேதங்கள், இயம்பிய - சொன்ன, நீதி - விதியை, விட்டு - நெகிழவிட்டு, இடையில் - நடுவில், உற்ற - உண்டாகிய, குலவுரை - ஜாதிக்கட்டு, என் பெற - என்ன பயனை யடையும்பொருட்டு, தன் தன் - தனது தனது, நாட்டு உறும் - ஊரிலுள்ள, மன்னன் - அரசன், வகுத்த - வகைப்படுத்திய, இ - இந்த, சாதிசங்கரம் - ஜாதிக்கொடுமை, எங்கட்கு - எங்களுக்கு, இல்லை—, துன்று - (துற்குணம்) மிகுதியாயுள்ள, புண்ணியகீனர் - பாவிகளுக்கு, அகத்து உறும் - (தமது) வீட்டிலுள்ள, சொன்னம் - பொன், ஓடு போலவே - ஓடாகவே, தோன்றிடும் - காணப்படும், ஈசன் ஒன்றும் உருவினர் - சிவலிங்கதாரிகளுடைய, மேனியும் - உடலும், உலகர் - உலகப்பற்றுள்ள பாமரஜனங்களுடைய, கண்ணுக்கு - கண்களுக்கு, உலகர்போல் - உலகத்தாராகவே, தோன்றிடும் - காணப்படும், எ - று.

(பொ - ரை.) என்று வேதங்கள் சொன்ன விதியை நெகிழவிட்டு, நடுவிலுண்டாகிய ஜாதிக்கட்டு என்ன பயனை யடையும் பொருட்டு? தனது தனது ஊரிலுள்ள அரசன் வகைப்படுத்திய இந்த ஜாதிக்கொடுமை எங்களுக்கில்லை; துற்குணம் மிகுதியாயுள்ள பாவிகளுக்குத் தமது வீட்டிலுள்ள பொன் ஓடாகவே காணப்படும்; லிங்கதாரிகளுடைய உடலும் உலகத்திலுள்ள பாமர ஜனங்களுடைய கண்களுக்கு உலகத்தாராகவே காணப்படும்.

(வி - ரை.) புண்ணியகீனர் - தர்மமில்லாதவர். கீனர் - ஹீனர் என்னும் வடசொற்றிரிபு. ஓடது என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. சொன்னம் - ஸ்வர்ணம் என்னும் வடசொற்றிரிபு. ஈசன் ஒன்றும் உருவினர் - சிவலிங்கதாரணமுள்ள மேனியையுடைய ஜங்கமமூர்த்திகள். (௨0)

வாம ரிக்கிணை யோவூர்ச்சுவாவெலாம்
வார ணங்கள னவோவ ராகமிப்
பூமி யுற்றம ரங்கள்விண் டாருவை
போலு மோவொண்பு வியிற்சி லைகள்சிந்
தாம ணிக்குநி கரோச முத்திரந்
தன்னை யொத்திடு மோநீர்த்த டமெலா
மேம வெற்புக்குங் கங்கா நதிக்குமொப்
பெய்து மோமண்ட ருமலை யாறெலாம்.

(ப-ரை.) வாம் - தாவிச்செல்லுகின்ற, அரிக்கு - சிங்கத்திற்கு, ஊர் - நாட்டிலுள்ள, சுவா எல்லாம் - நாய்களெல்லாம், இணையோ - ஒக்குமோ, வாரணங்கள் - யானைகளுக்கு, வராகம் - பன்றிகளெல்லாம், அன்னவோ — ஒக்குமோ, விண் - தேவலோகத்திலுள்ள, தாருவை - கல்பக வ்ருக்ஷத்தை, இ - இந்த, பூமியுற்ற - பூலோகத்திலுள்ள, மரங்கள் - வ்ருக்ஷங்களெல்லாம், போலுமோ-ஒக்குமோ, சிந்தாமணிக்கு—, ஒண் - அழகு பொருந்திய, புவியின் - பூலோகத்திலுள்ள, சிலைகள் - கற்களெல்லாம், நிகரோ - ஒக்குமோ, சமுத்திரந்தன்னை - சமுத்திரத்தை, நீர்த்தடம் எல்லாம்- நீர் நிறைந்த குளங்களெல்லாம், ஒத்திடுமோ-ஒக்குமோ, ஏம வெற்புக்கும் - மேருமலைக்கும், கங்கா நதிக்கும் - கங்கையாற்றுக்கும், மண் தரும் - பூலோகத்திலுள்ள, மலையெல்லாம் - பர்வதங்களெல்லாமும், ஆறு எல்லாம் - நதிகளெல்லாமும், ஒப்பு எய்துமோ - ஒக்குமோ,

(பொ-ரை.) தாவிச் செல்லுகின்ற சிங்கத்திற்கு நாட்டிலுள்ள நாய்களெல்லாம் ஒக்குமோ? யானைகளுக்குப் பன்றிகளெல்லாம் ஒக்குமோ? தேவலோகத்திலுள்ள கல்பக வ்ருக்ஷத்தை இந்தப் பூலோகத்திலுள்ள வ்ருக்ஷங்களெல்லாம் ஒக்குமோ? சிந்தாமணிக்கு அழகு பொருந்திய பூலோகத்திலுள்ள கற்களெல்லாம் ஒக்குமோ? சமுத்

திரத்தை நீர் நிறைந்த குளங்களெல்லாம் ஒக்குமோ? மேருமலைக்கும், கங்கையாற்றுக்கும் பூலோகத்திலுள்ள பர்வதங்களெல்லாமும், நதிகளெல்லாமும் ஒக்குமோ ?

(வி-ரை.) சுவா - ஸ்வா என்னும் வடசொற்றிரிபு. ஏமவெற்பு - பொன்மலை. (உக)

## ஸ்ரீ பதிபண்டிதர்.

உம்பர் தேனுவோ டூர்ப்பசு வன்னவோ
  வுமையி டத்தர்க்கி மையோர்க ளொப்பரோ
வம்ப ராஞ்சிவ திக்ஷைப்ப ணவரின்
  மன்ன ருட்சிவ நாகமையர்க் கொவ்வா
ரெம்பொ ணாகிய சீபதி பண்டித
  ரென்றொ ரன்பரி றையடி யார்தமக்
கிம்பர் கோடிம றையவ ரொப்பரென்
  றிசைத்த நாவரி வேனென்றி றைமுனம்.

(ப ரை.) உம்பர் - தேவலோகத்திலுள்ள, தேனுவோடு - காமதேநுவுடன், ஊர் - நாட்டிலுள்ள, பசு - பசுக்களெல்லாம், அன்னவோ - ஒக்குமோ, உமை - உமாதேவியாரை, இடத்தர்க்கு - வாமபாகத்தி லுடையவராகிய சிவபெருமானுக்கு, இமையோர்கள் - தேவர்களெல்லாம், ஒப்பரோ - நிகர்ப்பார்களோ, வம்பர் ஆம் - தீக்குணமுள்ளவர்களும், சிவநிந்தை - சிவதூஷகர்களுமாகிய, பணவர் - ப்ராஹ்மணர்கள், மன் - நிலைபெற்றவரும் , அருள் - சிவாநுக்ரஹத்தையுடைய வருமாகிய, சிவநாகமையர்க்கு—, ஒவ்வார் - ஒப்பாகமாட்டார்கள், எம் - எமது, பொன்னாகிய - பொன்போன்ற, சீபதி பண்டிதர் - ஸ்ரீபதிபண்டிதர், என்று - என்று சொல்லப்பட்ட, ஓர் - ஒப்பற்ற, அன்பர் - சிவபக்தரும், இறையடியார் தமக்கு - சிவசரணருமாகிய ஒரு ஜங்கமமூர்த்திகளுக்கு, இம்பர் - இவ்வுலகத்திலுள்ள, கோடி - ஒரு கோடி, மறையவர் - ப்ராஹ்மணர்கள், ஒப்பர்-சமானமாவார்கள், என்று—, இசைத்த - சொன்ன, நா - நாக்கை, அரிவேன் - அறுத்துவிடுவேன், என்று - என்று சபதஞ்செய்து, இறைமுன்னம் - அரசனுக்கெதிரே, எ - று.

(பொ-ரை.) தேவலோகத்திலுள்ள காமதேநுவுடன் நாட்டிலுள்ள பசுக்களெல்லாம் ஒக்குமோ? உமாதேவியாரை வாமபாகத்திலுடையவராகிய சிவபெருமானுக்குத் தேவர்களெல்லாம் நிகர்ப்பார்களோ? தீக்குணமுள்ளவர்களும், சிவதூஷகர்களுமாகிய ப்ராஹ்மணர்கள் நிலைபெற்றவரும், சிவாநுக்ரஹத்தையுடையவருமாகிய சிவநாகமையர்க்கு ஒப்பாகமாட்டார்கள் ; எமது பொன்போன்ற ஸ்ரீபதிபண்டிதரென்று சொல்லப்பட்ட ஒப்பற்ற சிவபக்தரும், சிவசரணருமாகிய ஒரு ஜங்கமமூர்த்திகளுக்கு இவ்வுலகத்திலுள்ள ஒரு கோடி ப்ராஹ்மணர்கள் சமானமாவார்களென்று சொன்ன நாக்கை அறுத்துவிடுவேனென்று சபதஞ்செய்து, அரசனுக்கெதிரே.

(வி-ரை.) பணவரின் என்பதில் இன் - சாரியை. அரசன் என்றது அநந்தபாலனென்னும் ராஜனை. இறையடியார் தமக்கிம்பர் கோடி மறையவர் ஒப்பரென்றிசைத்த நாவரிவேன் என்றதனால் ஒருஜங்கம மூர்த்திகளுக்கு ஒரு கோடி ப்ராஹ்மணர்கள் சமானமாகமாட்டார்களென்பது பெறப்பட்டது. (உஉ)

கல்லையர்.

நெருப்பை யோரம்ப ரத்தினிற் கட்டியோர்
நீண்ட வன்னியிற் றூக்கம றையவ
ருருத்த வூரிற்ற ழலென்றி ராமலே
யுலந்த செய்தியு லகம றியுமே
தருக்கு பாம்பின தாளமென் றோர்பதி
சங்க ராலய முற்றத வத்தரை
விருத்த மாயராக் கவ்வித்தி னங்கொலும்
விதிய றிந்தொரு மெய்த்தவர் கல்லையர்

(ப - ரை.) நெருப்பை - (பயங்கரமாகிய) அக்கினியை, ஓர் - ஒரு, அம்பரத்தினில்-வஸ்த்ரத்தில், கட்டி - முடிந்து, ஓர் - ஒரு, நீண்ட - பெரிய, வன்னியில் - மரத்தில், தூக்க - தொங்கக்கட்டின மாத்திரத்தில், மறையவர்-ப்ராஹ்மணர்கள், உருத்த-மிகுதியாயிருந்த, ஊரில் - அக்ரஹாரத்தில், தழல் என்று - நெருப்பென்பதே, இராமல் - இல்லாமல், உலந்த - ஒழிந்துபோன, செய்தி - சமாசாரத்தை, உலகம் - உலகத்தார், அறியுமே - அறிவார்களே, தருக்கு - வீரங்கொண்டிருந்த, பாம்பின தாளம் —, என்று-என்று சொல்லப்பட்ட, ஓர் - ஒரு, பதி - ஸ்தலத்திலுள்ள, சங்கராலயம் - சிவாலயத்தை, உற்ற - அடைந்த, தவத்தரை - ஜங்கமமூர்த்திகளை, விருத்தமாய் - வீணாக, அரா - (ஒரு) பாம்பு, கவ்வி - கடித்து, தினம் - நாடோறும், கொல்லும் - கொல்லுகின்ற, விதி - நியமத்தை, அறிந்து - உணர்ந்து, ஒரு—, மெய் - உண்மையரும், தவர் - ஜங்கமமூர்த்திகளுமாகிய, கல்லையர்—, எ - று.

(பொ - ரை.) பயங்கரமாகிய அக்கினியை ஒரு வஸ்த்ரத்தில் முடிந்து, ஒரு பெரிய மரத்தில் தொங்கக்கட்டின மாத்திரத்தில், ப்ராஹ்மணர்கள் மிகுதியாயிருந்த அக்ரஹாரத்தில் நெருப்பென்பதே யில்லாமல் ஒழிந்துபோன சமாசாரத்தை உலகத்தார் அறிவார்களே; வீரங்கொண்டிருந்த பாம்பின தாளமென்று சொல்லப்பட்ட ஒரு ஸ்தலத்திலுள்ள சிவாலயத்தை யடைந்த ஜங்கமமூர்த்திகளை வீணாக ஒரு பாம்பு கடித்து நாடோறும் கொல்லுகின்ற நியமத்தை உணர்ந்து, ஒரு உண்மையரும், ஜங்கமமூர்த்திகளுமாகிய கல்லையர்.

(வி - ரை.) பாம்பினதாளம் - ஹாவினஹாளு என்னும் திசைச்சொற்றிரிபு. ஹாவு - பாம்பு. ஹாவினஹாளு - பாம்பூர். கல்லையரைக் கல்லிநாதரெனவும் வழங்குதலுண்டு. (உஙு)

அந்த வாலயத் தூற்றங்கி ருந்துவா
ழமயந் தன்னில வரைக்க டித்தரா
வந்தி றந்தமை நோக்கிக்க ருணையான்
மதித்தெ ழுப்பிய மாநகர் தன்னிலே
யிந்த மாதவர் தாமுறு நாடனி
லிவர்ம டத்தடி யான்மஞ்ச னந்தரச்
சந்த வோர்குடங் கொண்டுந டக்கவோர்
தக்க வேதியன் றன்கரந் தீண்டலும்.

(ப - ரை.) அந்த—, ஆலயத்து - சிவாலயத்தில், உற்று - சேர்ந்து, அங்கு - அவ்விடத்தில், இருந்து - தங்கி, வாழ் - வாழ்கின்ற, அமயம் தன்னில் - சமயத்தில், அவரை - (சிவயோகத்திலிருக்கின்ற) அந்த ஜங்கமமூர்த்திகளை, அரா - பாம்பு, வந்து - போய், கடித்து—, இறந்தமை - செத்துப்போன செய்தியை, நோக்கி - (ஜ்ஞான த்ருஷ்டியால்) உணர்ந்து, கருணையால் - ஜீவகாருண்யத்தினால், மதித்து -

சிவத்யானஞ்செய்து, எழுப்பி - (உயிர்பெற்று) எழச்செய்வித்து, அ - அந்த, மா - பெரிய, நகர் தன்னில் - பட்டினத்தில், இந்த—, மா - மேன்மைபொருந்திய, தவர் தாம் - ஜங்கமமூர்த்திகள், உறும் - வாழ்கின்ற, நாள் தன்னில் - காலத்தில், இவர் - இவருடைய, மடத்து - திருமடத்திலுள்ள, அடியாள் - தாதி, மஞ்சனம் தர - ஜலம் திரட்டிக்கொண்டு வரும்பொருட்டு, சந்தம் - அழகிய, ஓர் - ஒரு, குடம் - குடத்தை, கொண்டு - எடுத்துக்கொண்டு, நடக்க - (வீதியில்) போதலும், தக்க - பண்டிதர்களால் போற்றத் தக்கவனாகிய, ஓர் - ஒரு, வேதியன் தன் - ப்ராஹ்மணனது, கரம் - கை, தீண்டலும் - (குடத்தின்மீது) படுதலும், எ - று.

(போ - ரை.) அந்தச் சிவாலயத்திற் சேர்ந்து, அவ்விடத்தில் தங்கி வாழ்கின்ற சமயத்தில். சிவயோகத்திலிருக்கின்ற அந்த ஜங்கமமூர்த்திகளைப் பாம்பு போய்க் கடித்துச் செத்துப்போன செய்தியை ஜ்ஞாநத்ருஷ்டியால் உணர்ந்து, ஜீவகாருண்யத்தினால் சிவத்யானஞ்செய்து, உயிர்பெற்றெழச்செய்வித்து, அந்தப் பெரிய பட்டினத்தில் இந்த மேன்மைபொருந்திய ஜங்கமமூர்த்திகள் வாழ்கின்ற காலத்தில், இவருடைய திருமடத்திலுள்ள தாதி ஜலம் திரட்டிக் கொண்டுவரும்பொருட்டு அழகிய ஒரு குடத்தை யெடுத்துக்கொண்டு வீதியில் போதலும், பண்டிதர்களால் போற்றத்தக்கவனாகிய ஒரு ப்ராஹ்மணனது கை குடத்தின்மீது படுதலும். (௨௪)

தாதி கண்டக்க டத்தைத்த கர்தரச்
சங்க ராவெனத் தாரணி மோதியே
பூதி மெய்யிற்பு னைந்தோர்பு துக்கடம்
புக்கெ டுத்துமுன் போற்செலும் போதவண்
காதி வேதிய ரிந்தவெள் ளாட்டிநங்
கைய ணைந்தக லம்பழு தாய்த்தென
மோதி மண்ணிலு டைத்தன ளன்னியர்
முட்டி லந்தணர் மூழ்குவ தன்றியே.

(ப - ரை.) தாதி—, கண்டு - பார்த்து, அ - அந்த, கடத்தை - குடத்தை, தகர் தர - உடையும்படி, சங்கரா—, என்ன - என்று சொல்லி, தாரணி — தரையில், மோதி - அடித்து, புக்கு - (மடத்தில்) சென்று (குளித்து), மெய்யில் - உடம்பில், பூதி - விபூதியை, புனைந்து - தரித்து, ஓர் - (வேறு) ஒரு, புது - புதிய, கடம் - குடத்தை, எடுத்து - எடுத்துக்கொண்டு, முன் போல் - முன்னே போனது போலவே, செல்லும்போது - போகின்ற காலத்தில், அவண் - அவ்விடத்திலிருந்த, வேதியர் - ப்ராஹ்மணர்கள், காதி - (அவளை) அடித்து, இந்த—, வெள்ளாட்டி - தாதி, நம் - நமது, கை—, அணைந்த - பட்ட, கலம் - குடம், பழுது ஆய்த்து - தீட்டாகிவிட்டது, என்ன - என்று நினைத்து, மண்ணில் - தரையில், மோதி - அடித்து, உடைத்தனள் - உடைத்தாள், அன்னியர் - சூத்திரர்கள், முட்டில் - தீண்டினால், அந்தணர் - ப்ராஹ்மணர்கள், மூழ்குவது - குளிப்பதே, அன்றி - அல்லாமல், எ - று.

(போ - ரை.) தாதி பார்த்து, அந்தக் குடத்தை உடையும்படிச் சங்கரா என்று சொல்லி, தரையிலடித்து, மடத்திற் சென்று குளித்து, உடம்பில் விபூதியைத்தரித்து, வேறொரு புதிய குடத்தை யெடுத்துக்கொண்டு, முன்னே போனது போலவே போகின்ற காலத்தில், அவ்விடத்திலிருந்த ப்ராஹ்மணர்கள் அவளை அடித்து, இந்தத் தாதி நமது கை பட்ட குடம் தீட்டாகிவிட்டதென்று நினைத்து, தரையிலடித்து உடைத்தாள்; சூத்திரர்கள் தீண்டினால் ப்ராஹ்மணர்கள் குளிப்பதே யல்லாமல்.

(வி - ரை.) ஆய்த்து என்பது ஆயிற்று என்பதன் மரூஉ. அன்னியர் - ப்ராஹ்மணரல்லாத வேறு ஜாதியார். (௨௫)

அந்த ணாளர்ப ரிசித்த சூத்திரர்க்
காம சுத்தமென் றாகமங் கூறுமோ
யிந்த மாநிலந் தன்னிற்பு துமையென்
றிவளை நாம்பிடித் தீர்த்துறக் கட்டி யூன்
சிந்த மோதுவங் கல்லையர்க் கோர்மொழி
செப்பி யென்னத்தி ரண்டவர் சேர்விடம்
வந்த மெய்த்தவர் முன்னம றையவர்
மதித்த வின்சொல வமதிப் பாயரோ.

(ப-ரை.) அந்தணாளர் - ப்ராஹ்மணர்கள், பரிசித்த - தீண்டின, சூத்திரர்க்கு—, அசுத்தம் - தீட்டு, ஆம் - உண்டாகும், என்று—, ஆகமம் - சிவாகமங்களும், கூறுமோ - சொல்லுமோ, இந்த—, மா - பெரிய, நிலம் தன்னில் - பூலோகத்தில், புதுமை - அற்புதமாயிருக்கிறது, என்று - என்று சொல்லி, இவளை—, நாம்—, பிடித்து—, ஈர்த்து - இழுத்துக்கொண்டு, கல்லையர்க்கு—, ஓர் - ஒரு, மொழி - வார்த்தை, செப்பி — சொல்லி, உறக்கட்டி - சேர்த்துக்கட்டி, ஊன் - மாம்ஸம், சிந்த - சிதறும்படி, மோதுவம் - அடிப்போம், என்ன - என்று யோசித்து, திரண்டு - கும்பலாகக் கூடி, அவர் - அவருடைய, சேர்வு இடம் - திருமடத்தில், வந்து - சென்று, அ - அந்த, மெய்த்தவர் - ஜங்கமமூர்த்திகளாகிய கல்லையர், முன்னம் - சந்நிதியில், மறையவர் - ப்ராஹ்மணர்கள், மதித்த - பெருமையோடு பாராட்டிவந்த, இன்சொல் - நயமானசொற்களெல்லாம், அவமதிப்பாய் - அவமானமடைந்து, எ -று.

(பொ - ரை.) ப்ராமணர்கள் தீண்டின சூத்திரர்க்குத் தீட்டு உண்டாகுமென்று சிவாகமங்களும் சொல்லுமோ? இந்தப் பெரிய பூலோகத்தில் அற்புதமாயிருக்கிறதென்று சொல்லி, இவளை நாம் பிடித்து, இழுத்துக்கொண்டு, கல்லையர்க்கு ஒரு வார்த்தை சொல்லி, சேர்த்துக்கட்டி, மாம்ஸம் சிதறும்படி அடிப்போமென்று யோசித்து, கும்பலாகக் கூடி, அவருடைய திருமடத்திற் சென்று, அந்த ஜங்கமமூர்த்திகளாகிய கல்லையர் சந்நிதியில் ப்ராஹ்மணர்கள் பெருமையோடு பாராட்டிவந்த நயமான சொற்களெல்லாம் அவமானமடைந்து.

(வி - ரை.) சேர்வு - மடம். இடம் - ஏழனுருபு. அரோ-அசை. (௨௬)

கல்லை யர்க்கிணை யில்லெனச் சொல்லுவர்
கடித்தி றந்தவக் கட்செவி தன்னைநீர்
நல்ல நேயத்தெ ழுப்பிய வன்றுமை
நாங்கள் கண்டன மின்றுபின் கண்டனம்
பொல்லி ரல்லீர்நற் புண்ணிய ரென்னவே
புகழ்வ ரெல்லவ ருமிப்பு கழிறு
லெல்லை யற்றம கிழ்ச்சிய ராகியா
மெண்ணி றும்மையி னிதுகொண் டாடுவோம்.

(ப - ரை.) கல்லையர்க்கு—, இணை - சமானமானவர்கள், இல் - ஒருவருமில்லை, என்ன - என்று, சொல்லுவர் - (எல்லாரும்) புகழ்வார்கள், கடித்து—, இறந்த - செத்துப்போன, அ - அந்த, கட்செவி தன்னை - பாம்பை, நீர்—, நல்ல நேயத்து - பேரன்போடு, எழுப்பிய - உயிர்ப்பித்த, அன்று - அந்நாளில், உம்மை—, நாங்கள்—, கண்டனம் - பார்த்தோம், பின் - (அதன்) பிறகு, இன்று - இன்றைத்தினம், கண்டனம் - பார்த்தோம், பொல்லிர் அல்லீர் - உத்தமரே, நல்-மிகவும், புண்ணியர்-

(உம்மை) நல்லவர், என்ன - என்று, எல்லவரும் - எல்லாரும், புகழ்வர் - துதிப்பார்கள், இ - இந்த, புகழினால் - புகழ்ச்சியினால், எல்லையற்ற - மட்டில்லாத, மகிழ்ச்சியாகி - சந்தோஷமுள்ளவர்களாகி, யாம் - நாங்கள், எண்ணி - மதித்து, நும்மை - உம்மை, இனிது - நன்றாக, கொண்டாடுவோம் - மெச்சிக்கொள்ளுவோம், எ - று.

(போ-ரை.) கல்லையர்க்குச் சமானமானவர்கள் ஒருவருமில்லையென்று எல்லாரும் புகழ்வார்கள்; கடித்துச் செத்துப்போன அந்தப் பாம்பை நீர் போன்போடு உயிர்ப்பித்த அந்நாளில் உம்மை நாங்கள் பார்த்தோம்; அதன் பிறகு இன்றைத்தினம் பார்த்தோம்; உத்தமரே! உம்மை மிகவும் நல்லவரென்று எல்லாரும் துதிப்பார்கள்; இந்தப் புகழ்ச்சியினால் மட்டில்லாத சந்தோஷமுள்ளவர்களாகி, நாங்கள் மதித்து உம்மை நன்றாக மெச்சிக்கொள்ளுவோம்.

(வி - ரை.) பாம்பு கண்ணினையே காதாகவுடையதாதலின் கட்செவியென்றார். பொல்லிர்-பொல்லாதவர். (௨௭)

துப்ப நும்மிற்றொ ழும்பிப யந்தவோர்
  தொழுத்தை நீர்க்கோர்க டங்கொண்டு செல்குவாள்
செய்ய நான்மறை வல்லசற் பாத்திரன்
  றிவ்வி யாறங்கத் தர்க்கசி காமணி
கைய ணைந்தெத னவக்க டந்தனைக்
  கடிது டைத்தனள் பார்ப்பார்க டையரோ
வெய்ய சூத்திரர் தீண்டின்ம றையவர்
  மிக்க நீர்புக்கு மூழ்கவி தியலால்.

(ப - ரை.) துய்ய - பரிசுத்தமாகிய, நும் - உமது, இல் - மடத்திலிருக்கின்ற, தொழும்பி - தாதி, பயந்த - பெற்றவளாகிய, ஓர்-ஒரு, தொழுத்தை - தாதி, நீர்க்கு- ஜலம் திரட்டிவருதற்கு, ஓர் - ஒரு, கடம் - குடத்தை, கொண்டு - எடுத்துக்கொண்டு, செல்குவாள் - போவாளாகி, செய்ய - மேன்மைபொருந்திய, நான்மறை - சதுர் வேதங்களில், வல்ல-வல்லமையுள்ள, சற்பாத்திரன் - உத்தமனும், திவ்வியம் - மேன்மையாகிய, ஆறு அங்கம் - ஆறு வகைப்பட்ட வேதாங்கங்களிலும், தர்க்கம் - தர்க்க ஶாஸ்த்ரத்திலும் (வல்லமையுள்ள), சிகாமணி-சிரோரத்நம் போன்றவனுமாகிய ப்ராஹ்மணனது, கை—, அணைந்தது - பட்டது, என்ன - என்று தெரிந்து, அ - அந்த, கடம் தன்னை - குடத்தை, கடிது - சீக்கிரமாக, உடைத்தனள் - உடைத்தாள், பார்ப்பார் - ப்ராஹ்மணர்கள், கடையரோ - தாழ்ந்தவர்களோ, வெய்ய - கொடிய, சூத்திரர்- சூத்திரர்கள், தீண்டின் - தொடுவார்களாயின், மறையவர் - ப்ராஹ்மணர்கள், மிக்க - மிகுந்த, நீர் - ஜலத்தில், புக்கு- விழுந்து, மூழ்க-குளித்தல், விதி- நியமமே, அல்லால்- அல்லாமல், எ-று.

(போ - ரை.) பரிசுத்தமாகிய உமது மடத்திலிருக்கின்ற தாதி பெற்றவளாகிய ஒரு தாதி ஜலம் திரட்டி வருதற்கு ஒரு குடத்தை யெடுத்துக்கொண்டு போவாளாகி, மேன்மைபொருந்திய சதுர்வேதங்களில் வல்லமையுள்ள உத்தமனும்,மேன்மையாகிய ஆறு வகைப்பட்ட வேதாங்கங்களிலும், தர்க்க ஶாஸ்த்ரத்திலும் வல்லமையுள்ள சிரோரத்நம் போன்றவனுமாகிய ப்ராஹ்மணனது கை பட்டதென்று தெரிந்து, அந்தக் குடத்தைச் சீக்கிரமாக உடைத்தாள்;ப்ராஹ்மணர்கள் தாழ்ந்தவர்களோ? கொடிய சூத்திரர்கள் தொடுவார்களாயின் ப்ராஹ்மணர்கள் மிகுந்த ஜலத்தில் விழுந்து குளித்தல் நியமமே யல்லாமல்.

(வி - ரை.) ஈண்டு கூறிய தாதியானவள் வீரசைவகுலத்திற் பிறந்தவள். வீரசைவமடங்களில் ஜலம்திரட்டி வருதற்குப் பலிகளை யமர்த்துவதில்லை.

ஈன சாதிகட் கந்தணர் தீண்டினு
லிழுக்க தென்றுசி லநூலி யம்புமோ
ஞானி லத்திலி துவென்ற ருமநீர்
நாட்டு சாத்திர மேதுநற் பத்தியே
தூன விந்தப்பி ழையைப்பொ றுப்பதே
துத்த மத்தர்நீ ரொள்ளிதல் லாநெறி
மானி லத்திந டத்துகின் றீரிது
மகிமை யோதர்க்க மாகின்ம றுப்பிரோ.

(ப - ரை.) அந்தணர் - ப்ராஹ்மணர்கள், தீண்டினுல் - தொடுவார்களாயின், ஈனசாதிகட்கு - சூத்திரர்களுக்கு, இழுக்கு என்று - தீட்டுண்டென்று, சிலநூல் - சில சிவாகமங்களும், இயம்புமோ - சொல்லுமோ, நால் நிலத்தில் - நிலவுலகத்தில், இது - இந்தச் செய்கைக்கு, என் தருமம் - ந்யாயப்ரமாணம் யாது, நீர்—, நாட்டும்- உருசுப்படுத்துகின்ற, சாத்திரம் - சாத்திரங்களும், ஏது - யாது, நற்பத்தி - நல்ல பக்தி யென்பது, ஏது - யாது, ஊனம் - ஈனமாகிய, இந்த—, பிழையை - குற்றத்தை, பொறுப்பது - மன்னித்தற்குக் காரணம், ஏது - யாது, உத்தமத்தர் - உத்தமராகிய, நீர்—, ஒள்ளிது அல்லாநெறி - அநீதி, நடத்துகின்றீர் - செலுத்துகின்றீர், இது - இந்தச் செய்கையும், மகிமையோ - பெருமையுடையதோ, தர்க்கமாகில் - சமயவாத முண்டாயின், மறுப்பிரோ - கண்டிக்கவல்லிரோ, எ - று.

(பொ - ரை.) ப்ராஹ்மணர்கள் தொடுவார்களாயின் சூத்திரர்களுக்குத் தீட்டுண்டென்று சில சிவாகமங்களும் சொல்லுமோ? நிலவுலகத்தில் இந்தச் செய்கைக்கு ந்யாயப்ரமாணம் யாது? நீர் உருசுப்படுத்துகின்ற சாத்திரங்களும் யாது? நல்ல பக்தி யென்பது யாது? ஈனமாகிய இந்தக் குற்றத்தை மன்னித்தற்குக் காரணம் யாது? உத்தமராகிய நீர் அநீதி செலுத்துகின்றீர் ; இந்தச் செய்கையும் பெருமையுடையதோ ? சமயவாத முண்டாயின் கண்டிக்கவல்லிரோ ?

(வி - ரை.) ஒள்ளியது - மேன்மை ; நெறி - மார்க்கம் ; ஒள்ளிது அல்லா நெறி - துர்மார்க்கம். நால் நிலம் - பாலை நீங்கலாக நான்கு வகைப்பட்ட நிலம் ; அவை யாவன:— குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல். ஈனசாதி - கீழ்ஜாதி. இழுக்கது என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி. (உக)

என்ற லுங்கல்வி தேவரி வர்க்குயா
மெதிர்த்தோ ருத்தர மிட்டுக்கொ டுப்பமென்
றொன்று மச்சபை தன்னில மலனை
யுன்னு மன்பர கத்துறு ஞாளியுஞ்
சென்று நும்மைப்ப ரிசிக்கொ ணுதவர்
சேவைத் தாதியர் தீண்டத்த குவதோ
பின்றை யொன்றுரைப் பம்வெகு ளாதிரும்
பேசு நீங்கள்பி ராமணா ரெப்படி.

(ப - ரை.) என்றலும் - என்று (ப்ராஹ்மணர்கள்) கேட்டலும், கல்விதேவர் - கல்லையர், இவர்க்கு - இவர்களுக்கு, யாம் - நாம், எதிர்த்து - கண்டித்து, ஓர் - ஒரு, உத்தரம் கொடுப்பம் - பதில் சொல்லியனுப்புவோம், என்று-என்று யோசித்து, ஒன்றும் - கூடியிருக்கின்ற, அ - அந்த, சபை தன்னில் - கூட்டத்தில், அமலனை உன்னும் - சிவத்யானஞ்செய்கின்ற, அன்பர் - ஜங்கமமூர்த்திகளுடைய, அகத்து உறும் - மடத்தில் காத்துக்கொண்டிருக்கின்ற, ஞாளியும் - நாயும், சென்று - வந்து, நும்மை - உங்களை, பரிசிக்க ஒண்ணுது - தொடக்கூடாதென்றுல், அவர் - அவர்

களுடைய, சேவை - பணிவிடையிலிருக்கின்ற, தாதியர் - தாதிகள், தீண்டத்தகு வதோ - தொடலாமோ, பின்றை - பிறகு, ஒன்று - ஒரு செய்தி, உரைப்பம் - சொல்லுவோம், வெகுளாது - கோவங்கொள்ளாமல், இரும் - இருங்கள் (அதாவது), பேசும் - புகழ்ந்து கொள்ளுகின்ற, நீங்கள்—, பிராமணர் - ப்ராஹ்மணர்களென்று சொல்லுவது, எப்படி - எவ்வாறு, எ - று.

(பொ - ரை.) என்று ப்ராஹ்மணர்கள் கேட்டலும், கல்லையர் இவர்களுக்கு நாம் கண்டித்து, ஒரு பதில் சொல்லியனுப்புவோமென்று யோசித்து, கூடியிருக்கின்ற அந்தக் கூட்டத்தில் சிவத்யானஞ்செய்கின்ற ஜங்கமமூர்த்திகளுடைய மடத்திற் காத்துக்கொண்டிருக்கின்ற நாயும் வந்து உங்களைத் தொடக்கூடாதென்றால் அவர்களுடைய பணிவிடையிலிருக்கின்ற தாதிகள் தொடலாமோ? பிறகு ஒரு செய்தி சொல்லுவோம்; கோவங்கொள்ளாமல் இருங்கள்; புகழ்ந்து கொள்ளுகின்ற நீங்கள் ப்ராஹ்மணர்களென்று சொல்லுவது எவ்வாறு?

(வி - ரை.) இட்டு - இடைச்சொல். அமலன் - நிர்மலனாகிய சிவபெருமான். உன்னுதல் - தியானித்தல். உத்தரம் - மறுமொழி. (௬௦)

பிரம ஞானிபி ராமண னென்பவன்
பிரம ஹீனன்பி ராமண னாவனோ
பரம வேதம்ப ரப்பிர மம்பரம்
பரசி வன்பர மேசனெ னும்பெய
ரரன்ம கேசுரர்க் கன்றிப்ப சுக்களா
மரிய யர்க்குப்ப ரசத்த மாக்கியே
வரமு றத்திரி வீர்நீர் பரத்துறு
மனத்த ராகும யேசுரர்க் கொப்பிரோ.

(ப - ரை.) பிரமஞானி - ப்ராஹ்மஜ்ஞானமுள்ளவனே, பிராமணன் - ப்ராஹ்மணன், என்பவன் - என்று சொல்லப்படுவான், பிரமஹீனன் - ப்ராஹ்மஜ்ஞானமில்லாதவன், பிராமணன் ஆவனோ - ப்ராஹ்மணனாவானோ, பரமம் - மேன்மையாகிய, வேதம்—, பரப்பிரமம் - பரப்ராஹ்மம், பரம்—, பரசிவன் - பரமசிவன், பரமேசன் - பரமேஸ்வரன், என்னும் - என்று சொல்லுகின்ற, பெயர் - நாமங்களெல்லாம், அரன் - ஆத்மாக்களுடைய பாசத்தை யரிப்பவனும், மகேசுரர்க்கு - மஹேஸ்வரனுமாகிய சிவபெருமான் (ஒருவனுக்கே செல்லும்), அன்றி - அல்லாமல், பசுக்கள் ஆம் - ஜீவாத்மாக்களாகிய, அரிக்கு - விஷ்ணுமூர்த்திக்கும், அயர்க்கு - ப்ராஹ்மதேவனுக்கும், பரசத்தம் - பரமென்கின்ற வார்த்தையை, ஆக்கி - கற்பித்து, வரம் உற - மேன்மையடையும்படி, திரிவீர் - உழன்று திரிகின்ற பதிதர்களே, நீர் - நீங்கள், பரத்து - மஹேஸ்வரனிடத்தில், உறும் - ஐக்யப்பட்டிருக்கின்ற, மனத்தர் ஆகும் - மனத்தையுடையவர்களாகிய, மயேசுரர்க்கு - வீரமாஹேஸ்வரர்களுக்கு, ஒப்பிரோ - சமானமாவீர்களோ, எ - று.

(பொ - ரை.) ப்ரஹ்மஞானமுள்ளவனே ப்ராஹ்மணனென்று சொல்லப்படுவான்; ப்ரஹ்மஜ்ஞானமில்லாதவன் ப்ராஹ்மணனாவானோ? மேன்மையாகிய வேதம், பரப்ரஹ்மம், பரம், பரமசிவன், பரமேஸ்வரனென்று சொல்லுகின்ற நாமங்களெல்லாம் ஆத்மாக்களுடைய பாசத்தை யரிப்பவனும், மஹேஸ்வரனுமாகிய சிவபெருமானொருவனுக்கே செல்லும். அல்லாமல் ஜீவாத்மாக்களாகிய விஷ்ணுமூர்த்திக்கும், ப்ராஹ்மதேவனுக்கும் பரமென்கின்ற வார்த்தையைக் கற்பித்து மேன்மையடையும்படி உழன்று திரிகின்ற பதிதர்களே! நீங்கள் மஹேஸ்வரனிடத்தில் ஐக்யப்பட்டிருக்கின்ற மனத்தையுடையவர்களாகிய வீரமாஹேஸ்வரர்களுக்குச் சமானமாவீர்களோ?

(வி-ரை.) ஒப்பிரோ என்பதில் உள்ள ஓகாரம்-எதிர்மறை. பாசத்தம் - பரத்வம்.

ப்ரஹ்மஜ்ஞாநமுள்ளவன் ப்ராஹ்மணன் என்பது அடியில்வரும் வசனத்திலைல் விளங்கும்:—

ஜந்மநா ஜாயதே ஶூத்ர: க்ரியயா ஜாயதே த்விஜ: |
ஶ்ருதேஶ்ச ஶ்ரோத்ரியஶ் சைவ ப்ரஹ்மசர்யாத் ப்ராஹ்மண: ||

ஜந்மநா ஜாயதே ஶூத்ரஃ க்ரியயா ஜாயதே த்விஜஃ |
ஶ்ருதேஶ்ச ஶ்ரோத்ரியஶ் சைவ ப்ரஹ்மசர்யாத் ப்ராஹ்மணஃ ||

ஜந்மத்திலைல் சூத்திரனும், கர்மத்திலைல் த்விஜனும், வேதாப்யாஸத்திலைல் விப்ரனும், ப்ரஹ்மஜ்ஞாநத்திலைல் ப்ராஹ்மணனுமாவன்.

சிவபெருமான் வேதஸ்வரூபியென்பது,

" வேதஶ்ஶிவஶ் ஶிவோவேத: வேதாத்யாயீ ஸதாஶிவ:

என்னும் பிரமாணத்திலைல் விளங்கும்.

இனி, சிவபெருமான் பரப்ரஹ்மமென்பது அடியில்வரும் பிரமாணத்திலைல் விளங்கும்:—

ஸூதஸம்ஹிதா.

அஹோ முநீஶ்வரா: புண்யம் ப்ருஷ்டமேதந் மஹாத்புதம் |
அத்ர வக்தா மஹாதேவோ நாந்யோஸ்தி புருஷ: க்வசித் ||
ஶிவேநோக்தம் ப்ரவக்ஷ்யாமி ஶ்ருணுத ஶ்ரத்தயா ஸஹ |
ஶிவேநைவ ப்ரஹ்மஶப்தேந நிஷ்கல: பரிகீர்த்தித: ||
ப்ரக்ருத்யா ஸ்வச்ச ஸத்வஸ்தா ஸகலநிஷ்கல: |
நிஷ்கலா நிராகாரம் ஹி தஸ்ய ஸமாகதம் ||
ஸகலஸ்தாஸ்ய ததாகாரம் ஸாகாரம் தஸ்ய ஸம்மதம்
ஸகலாகாரஶப்தேந ப்ரஹ்மஶப்தாபிதேய: பர: |
அவிஶேஷ ச பேதே ச நித்யம் ஏவ ஶ்ருதே ஜநை: ||
ப்ரஹ்மஶப்தேந துஷ்டம் நிஷ்கலம் ந ஹி க்வசித் |
த்வதோ தே நிஷ்கலே ம்ருஷ நாராயணே ஸஞ்சரா: ||
ப்ரஹ்மஶப்தம் து ஜீவஶப்தேந த்யோதேவதா கணா: |
தத்த்வம் ஸகலோ த்ருஶ்யாத்யஞே பௌராத்ருகே ||
ஜீவஶப்தம் ஶங்கரேஷ்டம் ப்ரஹ்மஶப்தம் ஶங்கரஸ்ய ச |
வேதாந்தஸாரஸம்ஸித்தம் ப்ரணவாயே ப்ரகாஶநாத் |
ஸகலைவ பரா ப்ரஹ்மா ஸேநேந நிர்திஶ்யா: |
ஸநத்காரேண நிநா ப்ரஹ்மஶப்தேந பீடிதா ||

சூதஸம்ஹிதை.

" அஹோ முநீஶ்வரா: புண்யம் ப்ரஶ்நமேதந் மஹாத்புதம்|
அத்ர வக்தா மஹாதேவோ நாந்யோஸ்தி புருஷ: க்வசித்||

ஶிவேநோக்தம் ப்ரவக்ஷ்யாமி க்ரமாத் குரு முகாச் ச்ருதம்।
ஶிவைகோ ப்ரஹ்ம ரூபத்வாந் நிஷ்கல: பரிகீர்த்தித:॥

ரூபித்வாத் ஸகலஸ் தத்வத் தஸ்மாத் ஸகல நிஷ்கல:।
நிஷ்கலத்வாந் நிராகாரம் லிங்கம் தஸ்ய ஸமாகதம்॥

ஸகலத்வாத் ததாபேரம் ஸாகாரம் தஸ்ய ஸங்கதம்।
ஸகலாகல ரூபத்வாத் ப்ரஹ்ம ஶப்தாபித: பர:॥

அபிலிங்கேச பேரேச நித்யம்வை சார்ச்யதே ஜநை:।
அப்ரஹ்மத்வாத் ததந்யேஷாம் நிஷ்கலத்வம் நஹி க்வசித்॥

தஸ்மாத்தே நிஷ்கலே லிங்கே நாராத்யந்தே ஸுரேஶ்வரா:।
அப்ரஹ்மத்வாச் சஜீவத்வாத் ததந்யே தேவதா கணா:॥

தூஷ்ணீம் ஸகலமா த்ருத்வாச்ரயந்தே பேர மாத்ரகே।
ஜீவத்வம் ஶங்கராந்யேஷாம் ப்ரஹ்மத்வம் ஶங்கரஸ்யச।
வேதாந்தஸார ஸம்ஸித்தம் ப்ரணவார்த்தே ப்ரகாஶநாத்॥

ஏவமேவ புரா ப்ருஷ்டோ மந்தரே நந்திகேஶ்வர:।
ஸநத்குமார முநிநா ப்ரஹ்ம புத்ரேண தீமதா॥

(இ - ள்.) ஓ! முனிவர்களே! கவனமாய்க் கேளுங்கள்; நீங்கள் கேட்ட கேள்விகளோ புண்யரூபமானவை. மேலும் அதிசயமானவை. உபமாநீதமாகிய சிவபெருமானது விஷயத்தைப் பற்றிய கேள்விகளுக்கு உத்தரம் கொடுப்பது கஷ்டமாயினும், அந்தச் சிவபெருமானாலேயே அருளப்பட்டதாகி, அது ஒருவரிடமிருந்து மற்றொருவர்க்குப் பரம்பரா உபதேசமாகி வந்து, ஸத்குரு கடாக்ஷத்தினால் உணர்ந்திருக்கின்ற விஷயத்தையே உங்களுக்கு உபதேசிக்கின்றேன். அதாவது சிவபெருமானொருவனே பரப்ரஹ்ம ரூபமுள்ளவனானதலால் அந்தச் சிவபெருமானுக்கே நிராகாரரூபமும், ஸாகாரரூபமும் பிரசித்தமாயிருக்கின்றது. அவன் நிஷ்களனானதனால் உலகத்தில் லிங்கரூபமாகவும், ஸகளனானதனால் சந்த்ரசேகராதி மூர்த்தங்களாகவும் விளங்குகின்றான். ஸகளத்தன்மையும் நிஷ்களத்தன்மையுமாகிய இவ்விரண்டும் பொருந்தியிருப்பதனால் பரப்ரஹ்மமென்று புகழப்பட்டுள்ளான். ஜனங்கள் (நிஷ்களம்) லிங்கமூர்த்தியையும், (ஸகளம்) ஸாகாரமூர்த்தியையும் பூஜித்தே க்ருதார்த்தராகின்றார்கள். சிவபெருமானையேயன்றி மற்றைத் தேவர்களுக்குப் பரப்ரஹ்மமென்கின்ற வார்த்தை செல்லாமையினால் நிராகாரரூபமில்லாமற் போயிற்று. எங்கனும் நிஷ்களரூபத்தைப் பூஜித்தலில்லை. சிவபெருமானொருவனே ஸகள, நிஷ்களனென்பது வேதாந்த சாஸ்த்ரத்தை நன்றாய்ப் படித்தறிந்து, அதிற் சொன்னபடி நடக்கின்ற அநுபவத்தினாலும், "ஓம்" என்னும் ப்ரணவார்த்த விசாரத்தினாலும் தானாகவே விளங்கும். முனிவர்களே! நீங்கள் இப்போது கேட்ட கேள்விகளையே முற்காலத்தில் ப்ரஹ்மபுத்ரனாகிய ஸநத்குமாரமுனிவர் நந்திகேஶ்வரரிடத்தில் கேட்டதும், அவர் நான் உங்களுக்கு உபதேசிக்கின்ற விஷயத்தையே நன்றாய் விரித்துப் போதித்தனர்.

சிவலிங்கமூர்த்தத்தைச் சில சிவாகமங்கள் சகள நிஷ்களரூபமெனக்கூறும்.

இனி, சிவபெருமான் பரம்பொருளென்பது அடியில் வரும் வசனத்தினால் விளங்கும்:—

வேதசிரோபநிஷத்

[illegible]।
[illegible]॥

### ஐதரேயோபநிஷத்.

*பராத் பரதரம் ப்ரஹ்ம தத் பராத்பரதோ ஹரி:|*
*தத் பராத்பரதோ ஹீஶஸ் தந்மேமந: ஶிவஸங்கல்பமஸ்து||*

(இ-ள்) தேவர்களில் ப்ரஹ்மதேவன் உயர்ந்தவன்; இவனினும் உயர்ந்தவன் விஷ்ணுமூர்த்தி; இவனினும் உயர்ந்தவன் சிவபெருமான்.

இனி, சிவபெருமான் பரமேஶ்வரனென்பது அடியில் வரும் வசநத்தினுல் விளங்கும்:—

### 𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍.

𑌉𑌮𑌾𑌸𑌹𑌾𑌯𑌂 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌪𑍍𑌰𑌭𑍁𑌂 𑌤𑍍𑌰𑌿𑌲𑍋𑌚𑌨𑌂 𑌨𑍀𑌲𑌕𑌣𑍍𑌠𑌂 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌮𑍍।
𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑍁𑌨𑌿𑌰𑍍𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌭𑍂𑌤𑌯𑍋𑌨𑌿𑌂 𑌸𑌮𑌸𑍍𑌤𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌂 𑌤𑌮𑌸𑌃 𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍॥

### கைவல்யோபநிஷத்.

*உமாஸஹாயம் பரமேஶ்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரஶாந்தம்|*
*த்யாத்வா முநிர்கச்சதி பூதயோநிம் ஸமஸ்தஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத்||*

(இ-ள்.) பார்வதிதேவியைச் சகாயமாயுடையவனும், பிரபுவாயிருப்பவனும், மூன்று கண்களையுடையவனும், நீலநிறமுள்ள கண்டத்தையுடையவனும், விசேஷ சாந்தகுணமுள்ளவனும், ஜீவராசிகளுக்குக் காரணமாயிருப்பவனும், எல்லாவற்றிற்கும் சாக்ஷியாயிருப்பவனுமாகிய பரமேஶ்வரனை த்யாநித்து ஜ்ஞானியானவன் துக்கத்தைக் கடந்த மோக்ஷத்தை யடைவான்.

இனி, ப்ரஹ்ம விஷ்ணுக்கள் பசுக்களென்பது அடியில்வரும் வசநங்களினுல் விளங்கும்:—

### 𑌪𑍈𑌪𑍍𑌪𑌲𑌾𑌦𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃.

𑌸𑌰𑍍𑌵𑍇 𑌦𑍇𑌵𑌾𑌃 𑌪𑌶𑍁𑌤𑌾𑌮𑌵𑌾𑌪𑍁 𑌯𑍇𑌯𑌾𑌨𑍍 𑌵𑌿𑌷𑍍𑌣𑍍𑌵𑌾𑌦𑌿𑌕𑌾𑌨𑍍 𑌸𑍁𑌰𑌾𑌨𑍍॥

### பைப்பலாத ஶ்ருதி:.

*ஸர்வேதேவா: பஶுதாமவாபு யேயார் விஷ்ணவாதிகாந் ஸுராந்||*

(இ-ள்) எல்லாத்தேவர்களும் பசுக்கள்; விஷ்ணுமூர்த்தியும் அத்தேவர்களில் ஒருவர்.

### 𑌨𑌿𑌰𑌾𑌲𑌮𑍍𑌬𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍.

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌷𑍍𑌣𑍍𑌵𑍀𑌶𑌾𑌨𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌦𑍀𑌨𑌾𑌂।
𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌦𑍍𑌵𑌾𑌰𑌾 𑌸𑍍𑌥𑍂𑌲𑍋𑌽𑌹𑌮𑌿𑌤𑌿 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌸𑌵𑌶𑌾𑌜𑍍𑌜𑍀𑌵𑌾𑌃॥

### நிராலம்போபநிஷத்.

*ப்ரஹ்ம விஷ்ண்வீஶாநேந்த்ராதீநாம்|*
*நாமரூபத்வாராஸ்தூ லோஹமித்யத்யாஸவஶாஜ் ஜீவா:||*

(இ-ள்) ப்ரஹ்ம, விஷ்ணு, ருத்ரேந்த்ரர்கள் ஜீவர்கள்.

### 𑌸𑍍𑌕𑌾𑌨𑍍𑌦𑌪𑍁𑌰𑌾𑌣𑌮𑍍.

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌮𑌹𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌦𑍍𑌯𑌾𑌃 𑌪𑌶𑌵𑌃 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌃।
𑌤𑍇𑌷𑌾𑌂 𑌪𑌤𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌦𑍇𑌵𑍇𑌶𑌃 𑌶𑌿𑌵𑌃 𑌪𑌶𑍁𑌪𑌤𑌿𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃॥

## ஆதித்ய புராணம்.

ப்ரஹ்ம விஷ்ணு ஸுரேந்த்ராத்யாஃ பஶவஃ பரிகீர்த்திதாஃ|
தேஷாம் பதித்வாத் தேவேஶஶ் ஶிவஃ பஶுபதிஸ் ஸ்ம்ருதஃ||

(இ-ள்) ப்ரஹ்ம, விஷ்ணு, ருத்ர, தேவேந்த்ரர்கள் பசுக்கள்; இவர்களுக்குப் பதியாயுள்ளவர் பசுபதியென்னும் சிவபெருமான்.

### 𑌕𑌾𑌰𑌿𑌕𑌾.

𑌆𑌖𑌁𑌃 𑌆𑌸𑌮𑌨𑍍𑌤𑌾𑌤𑍍 𑌖𑌨𑌤𑌿 𑌵𑌿𑌦𑌾𑌰𑌯𑌤𑍀𑌤𑍍𑌯𑌾𑌖𑌁𑌃।
𑌆𑌦𑌿𑌵𑌾𑌰𑌾𑌹𑌰𑍂𑌪𑍀 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃॥

### காரிகா.

ஆகுஃ ஆஸமந்தாத் கநதி விதாரயதீத்யாகுஃ |
ஆதிவாராஹ ரூபீ விஷ்ணுஃ||

(இ - ள்.) ஆகு என்பதில் ஆ என்பதற்கு நாலாபக்கம் என்பது பொருள். க என்பதற்கு வெட்டுதல் என்பது பொருள். நாலாபக்கத்திலும் பற்களினால் கல்லுவதால் பெருச்சாளிக்கு ஆகு எனப் பெயராயிற்று. விஷ்ணுமூர்த்தியும் ஆதிவாராஹரூபியாயிருந்து பெருச்சாளியைப்போலப் பூமியை நாலாபக்கத்திலும் கல்லினார்.

### 𑌜𑌾𑌬𑌾𑌲𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍.

𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑌸𑌂𑌸𑌾𑌰𑍀 𑌜𑍀𑌵𑌸𑍍𑌸 𑌏𑌵 𑌪𑌶𑍁𑌃॥

### ஜாபாலோபநிஷத்.

அஹங்காராவிஷ்டஸ் ஸம்ஸாரீ ஜீவஸ் ஸ ஏவ பஶுஃ||

(இ-ள்) அகங்கார சமுசார பந்தமுள்ளவன் பசுவெனப்படுவன்.

### 𑌤𑍈𑌤𑍍𑌤𑌿𑌰𑍀𑌯𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍.

𑌈𑌶𑌾𑌨𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌧𑌿𑌪𑌤𑌿𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋𑌽𑌧𑌿𑌪𑌤𑌿𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌶𑌿𑌵𑍋।
𑌮𑍇 𑌅𑌸𑍍𑌤𑍁 𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑍋𑌮𑍍॥

### தைத்திரீயோபநிஷத்.

ஈஶாநஸ் ஸர்வவித்யாநா மீஶ்வரஸ் ஸர்வ பூதாநாம்|
ப்ரஹ்மாதிபதிர் ப்ரஹ்மணோதிபதிர் ப்ரஹ்மா ஶிவோ|
மே அஸ்து ஸதாஶிவோம்||

(இ-ள்) சிவபெருமானே எல்லா வித்தைகளுக்கும் அதிபதியாவான்; ஸர்வ பூதங்களுக்கும் இறைவனாவான்; மேலும் ப்ரஹ்மதேவனுக்கும் தலைவனாவான்; ப்ரஹ்ம ருஷிகணங்களுக்கும் பிரபுவாவான்; அப்படிப்பட்ட ப்ரஹ்மமென்னும் சிவபெருமானே எப்போதும் எனக்கு மங்கலகரமாயிருக்கட்டும். அவனே ப்ரணவ ஸ்வரூபியாவான்.

### 𑌶𑍍𑌰𑍁𑌤𑌂.

𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌸𑌾𑌰𑌨𑌿𑌰𑌤𑍋 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌂।
[illegible]
[illegible]॥

ஸ்காந்தம்.

ஶ்ரௌத ஸ்மார்த்த ஸதாசாரை: ப்ராஹ்மண: பரமேஶ்வரம்।
மஹா ப்ராஹ்மண மீஶாந முபகச்சேத் ஸதைவது
தச்சேஷத்வோ விஷ்ண்வாதீந் ஸர்வேஷாம் ஹ்யாஸ்திகோத்தம:॥

(இ-ள்.) ஶ்ருதி, ஸ்ம்ருதிகளிற் சொல்லப்பட்ட ஸதாசாரங்களினால் எவர்களினும் உத்தம ஆஸ்திகனாயிருக்கின்ற ப்ராஹ்மணன் மஹா ப்ராஹ்மணனாகிய பரமேஶ்வரனை எப்போதும் உபாசித்தல்வேண்டும். அந்தப் பரமேஶ்வரனுடைய நிர்மால்யங்களினால் விஷ்ணுமூர்த்தியாதியாகிய தேவர்களை உபாசித்தல் வேண்டும்.

க்ஷீரகோஶம்.

ஶம்புஶ்ஶர்வஶ் ஶம்பாநஸ்ஸ்தாணுஶ்ச ஶிவோ ஹர:।

அமரகோஶம்.

ஈஶ்வரஶ்ஶர்வ ஈஶாநஶ் ஶங்கரஶ் சந்த்ரஶேகர:।

(இ-ள்.) ஈஶ்வரன், ஶர்வன், ஈஶானன், சங்கரன் சந்த்ரசேகரன் ஆகிய இவ்வைந்தும் பரமேஶ்வரனுக்குப் பொருள்.

மேலும் ப்ராஹ்மணன் என்னும் சொல்லை வருணத்தின்பேரிலேற்றின் தேவர்களிலும் ஜாதிபேதமேற்படுகின்றது. அதற்குப் பிரமாணங்கள் வருமாறு:—

பாரமேஶ்வராகமம்.

ப்ராஹ்மணோ ஹ்யபவத் ருத்ர: க்ஷத்ரிய: பரமோ ஹரி:।
வைஶ்ய: பிதாமஹஶ்சைவ இந்த்ரஶ் ஶூத்ர அஜாயத॥

பாரமேஶ்வராகமம்.

ப்ராஹ்மணோ பகவாந் ருத்ர: க்ஷத்ரிய: பரமோ ஹரி:।
வைஶ்ய: பிதாமஹஶ்சைவ இந்த்ரஶ் ஶூத்ர அஜாயத॥

(இ-ள்) சிவபெருமான், திருமால், ப்ரஹ்மதேவன், இந்திரன் ஆகிய இவர்கள் முறையே ப்ராஹ்ம, க்ஷத்ரிய, வைஶ்ய, ஶூத்ரரெனப்படுவர்.

உஶநஸ்ம்ருதி.

ப்ராஹ்மணாநாம் ஶிவோ தேவ: க்ஷத்ரியாணாந்து மாதவ:।
வைஶ்யாநாந்து பவேத்ப்ரஹ்மா ஶூத்ராணாம் க்ராமதேவதா॥

மநுஸ்ம்ருதி.

ப்ராஹ்மணாநாம் ஶிவோதேவ: க்ஷத்ரியாணாந்து மாதவ:।
வைஶ்யாநாந்து பவேத் ப்ரஹ்மா ஶூத்ராணாம் க்ராமதேவதா॥

(இ-ள்) ப்ராஹ்மணனுக்குச் சிவபெருமானும், க்ஷத்ரியனுக்கு விஷ்ணுமூர்த்தியும், வைஶ்யனுக்கு ப்ரஹ்மதேவனும், ஶூத்திரனுக்குக் கிராமதேவதையும் கடவுளாகும்.

ஶிவாகமம்.

ஶக்ராத்யாஸ்ஸர்வதேவாஶ்ச வ்ருஷலாஸ்தே வராநரா:।
பிதாமஹஸ்து வைஶ்யஸ்ஸ்யாத் க்ஷத்ரிய: பரமோ ஹரி:।
ப்ராஹ்மணோ ஹ்யபவத்ருத்ர: ஸர்வேஷாம் உத்தமோத்தம:॥

ஶிவாகமம்.

ஸங்கராஸ் ஸர்வதேவாஶ்ச க்ருஷலஸ்து புரந்தர:|
பிதாமஹஸ்து வைஶ்யஸ் ஸ்யாத் க்ஷத்ரிய: பரமோஹரி:|
ப்ராஹ்மணோ பகவாந் ருத்ரஸ் ஸர்வேஷா முத்தமோத்தம:||

(இ-ள்) கருட கந்தர்வாதி தேவர்கள் சங்கர ஜாதியார்; இந்திரன் சூத்திரன்; ப்ரஹ்மதேவன் வைஶ்யன்; விஷ்ணுமூர்த்தி க்ஷத்ரியன்; சதாசிவன் ப்ராஹ்மணன். இந்தப் பரசிவமாகிய ப்ராஹ்மணனே பரமோத்தமன்.

ஆதலால் ப்ராஹ்மணனாகிய தேவனைப் பூஜிப்பது அவசியமாகும். வீரசைவனுக்குச் சிவோபாஸனை யொன்றே யல்லாமல் வேறெவ்விதமான தேவோபாஸனையுமில்லாமையினால் உலகத்தில் சிவபக்தனென்னும் பெயர் பிரசித்தமாயுளது.

[illegible]

[illegible]
[illegible]

ஸூப்ர பேதாகமம்.

பதிவ்ரதா ஸ்வபாவேந விஹாயாந்யத்து தைவதம்|
ஶிவமேகம் பஜேத் பக்த்யா வீரஶைவோ மஹாவ்ரதீ||

(இ-ள்.) பதிவிரதையானவள் ஒரு புருஷனையே யல்லாமல் பிற புருஷர்களை எவ்வாறு விரும்புவதில்லையோ அவ்வாறு வீரவிரதத்தையுடைய வீரசைவன் சிவபெருமானையே யன்றி மற்றைத் தேவர்களை எக்காலத்திலும் விரும்புவதில்லை.

[illegible]
[illegible]

மத்யபாநீ மாம்ஸபக்ஷீ சாந்ய தேவஸ்ய பூஜக:|
அலிங்க்யபிச தத்ஸங்கீ பஞ்சைதே பவிநஸ் ஸ்ம்ருதா:||

(இ-ள்.) சுராபானஞ் செய்பவனும், மாம்ஸம் புசிப்பவனும், குருதத்தமான இஷ்டலிங்கமூர்த்தியைப் பூஜியாமல் வேறொரு தெய்வத்தைப் பூஜிப்பவனும், லிங்கதாரணமில்லாதவனும், அவர்களோடுகூடி யிருப்பவனுமாகிய இந்த ஐந்து பேர்கள் பவிகளெனப்படுவர். (பவியென்றால் ஜநந மரண ரூபமாகிய பவமுள்ளவனென்பது பொருள். பவதுக்கத்தை நிவாரணஞ்செய்து கொள்ளவேண்டின் பவஹரனாகிய சிவபெருமானையே பூஜித்தல்வேண்டும். சிவபெருமானை அபவனெனக்கூறுவர்.)

லிங்காங்கியாகிய வீரசைவ ப்ராஹ்மணனுடைய கோட்பாடியாதெனின்:—

[illegible]
[illegible]

நாந்ய தேவார்ச்சகாந் மர்த்யாந் பூஜகாலே நிரீக்ஷயேத்|
யத் க்ருஹேஷ்வந்ய தேவோஸ்தி தத் க்ருஹாணி பரித்யஜேத்||

(இ-ள்.) யார் பிறதெய்வங்களைப் பூஜிப்பார்களோ அவர்களை லிங்கபூஜாகாலத்தில் பார்க்கக்கூடாது; யாருடைய வீடுகளில் பிற தெய்வங்கள் இருப்பனவோ அவர்களுடைய வீடுகளுக்குப் போகக்கூடாது.

𑌨𑌾𑌰𑍍𑌚𑌯𑍇𑌦𑌨𑍍𑌯𑌦𑍇𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑍁 𑌨𑌸𑍍𑌮𑌰𑍇𑌨𑍍𑌨𑌚 𑌕𑍀𑌰𑍍𑌤𑌯𑍇𑌤𑍍।
𑌨𑌤𑌨𑍍𑌨𑌿𑌵𑍇𑌦𑍍𑌯𑌮𑌶𑍍𑌨𑍀𑌯𑌾𑌤𑍍 𑌶𑌿𑌵𑌭𑌕𑍍𑌤𑍋 𑌦𑍃𑌢𑌵𑍍𑌰𑌤𑌃॥

*நார்ச்சயேதந்ய தேவாம்ஸ்து நஸ்மரேந் நச கீர்த்தயேத்।*
*நதந் நிவேத்ய மஶ்நீயாச் சிவபக்தோ த்ருடவ்ரதஃ॥*

(இ-ள்) ஜீவாதி த்ருட வ்ரதத்தையுடைய சிவபக்தனாகிய வீரசைவன் பிற தெய்வங்களைப் பூஜிக்கக்கூடாது; மற்றொரு தெய்வத்தைச் சிந்திக்கக்கூடாது; மற்றொரு தெய்வத்தின் பெயரை உச்சரிக்கக்கூடாது; மற்றைத் தெய்வங்களுக்குப் படைத்த ப்ரஸாதங்களைப் புசிக்கக்கூடாது.

𑌸𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌲𑌿𑌙𑍍𑌗𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇।
𑌶𑍍𑌵𑌾𑌨𑌯𑍋𑌨𑌿𑌶𑌤𑌂 𑌗𑌤𑍍𑌵𑌾 𑌚𑌣𑍍𑌡𑌾𑌲𑌗𑍃𑌹𑌮𑌾𑌵𑌿𑌶𑍇𑌤𑍍॥

*ஸ்வேஷ்டலிங்கம் பரித்யஜ்ய யோந்ய லிங்கமுபாஸதே।*
*ஶ்வாநயோநி ஶதம் கத்வா சண்டால க்ருஹமாவி ஶேத்॥*

(இ-ள்) குருதத்தமான இஷ்டலிங்கமூர்த்தியைப் பூஜியாது எவன் வேறொரு லிங்கமூர்த்தியைப் பூஜிப்பானோ அவன் நூறுபிறவிகளில் நாய் வயிற்றிற் பிறந்து சண்டாளன் வீட்டில் பிரவேசிப்பான்.

𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑍈𑌕𑍍𑌯𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌂 𑌵𑍀𑌰𑌶𑍈𑌵𑌾𑌤𑍍𑌵𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑌾𑌂।
𑌨𑌹𑌿 𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌨𑌾𑌂 𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌲𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑍁𑌪𑌭𑍁𑌜𑍍𑌯𑌤𑍇॥

*ஸதாஶிவைக்ய நிஷ்டாநாம் வீரஶைவாத்வ வர்த்திநாம்।*
*நஹி ஸ்தாவர லிங்காநாம் நிர்மால்யாத் யுபபுஜ்யதே॥*

(இ-ள்) சதாசிவனொருவனிடத்திலேயே த்யாநமுள்ளவர்களும், வீரசைவாசாரத்தை யநுஷ்டிப்பவர்களும் பூ ப்ரதிஷ்டை செய்திருக்கின்ற ஸ்தாவரலிங்கங்களின் ப்ரஸாத முதலானது உபயோகப் படுத்தப்படுவதில்லை.

ப்ராஹ்மணனுக்குச் சிவபெருமானே தெய்வம்; சிவப்ரஸாதமே சிறப்புடையதென்பது:—

𑌜𑌾𑌬𑌾𑌲𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍.

𑌰𑍁𑌦𑍍𑌰𑍇𑌣𑌾𑌤𑍍𑌤𑌮𑌶𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌰𑍁𑌦𑍍𑌰𑍇𑌣 𑌪𑍀𑌤𑌂𑌪𑌿𑌬𑌨𑍍𑌤𑌿
𑌰𑍁𑌦𑍍𑌰𑍇𑌣𑌾𑌘𑍍𑌰𑌾𑌤𑌂 𑌜𑌿𑌘𑍍𑌰𑌨𑍍𑌤𑌿 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌃।
𑌬𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑌸𑍋 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂𑌸𑍋
𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌲𑍍𑌯𑌮𑍇𑌵 𑌭𑌕𑍍𑌷𑌯𑌨𑍍𑌤𑌿 𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌲𑍍𑌯𑌮𑍇𑌵𑌾𑌶𑍍𑌨𑍀𑌯𑌾𑌤𑍍 ॥

**ஜாபாலோபநிஷத்.**

*ருத்ரேணாத் தமஶ்நந்தி ருத்ரேண பீதம்பிபந்தி*
*ருத்ரேணா க்ராதம் ஜிக்ரந்தி தஸ்மாத் ப்ராஹ்மணாஃ।*
*ப்ரஶாந்த மநஸோ வித்வாம்ஸோ*
*நிர்மால்யமேவ பக்ஷயந்தி நிர்மால்ய மேவாஶ்நீயாத்॥*

(இ-ள்) சாந்தகுணமுள்ளவர்களும், விவேகிகளுமாகிய ப்ராஹ்மணர்கள் ருத்ரமூர்த்தியினால் ஸ்வீகரிக்கப்பட்ட ப்ரஸாதத்தையே ஸ்வீகரித்தல் வேண்டும்; ருத்ரமூர்த்தியினால் பானஞ்செய்யப்பட்டவற்றையே பானஞ்செய்தல் வேண்டும்; ருத்ரமூர்த்தியினால் முகரப்பட்டவற்றையே முகரல்வேண்டும்; எப்போதும் சிவப்ரஸாதத்தையே ஸ்வீகரித்தல் வேண்டும்.

மேற்கூறியவற்ருல் ப்ராஹ்மணனுக்குச் சிவபெருமானே உபாஸ்யனென்றும், சிவப்ரஸாதமே ஸேவ்யமென்றும் சித்தமாயிற்று. கடவல்லியும் இவ்வாறே கூறுகிற்கும். ஆகையால் ப்ராஹ்மணன் ஸர்வ தேவோத்தமனுகிய சிவபெருமானையே பூஜித்தல் வேண்டுமென்பது பெறப்பட்டது.

ஸாமவேதம்.

கூ்ஹ ஜெடுவெஷு ஬்ராஹ்ஹணோவஸி அஹம் மநுஷ்யெஷு ஬்ராஹ்ஹணோ।
ஜெவ ஬்ராஹ்ஹணஉபயாவதி உபஜாதாவாஹி॥

ஸாமவேதம்.

த்வம் தேவேஷு ப்ராஹ்மணேவஸி அஹம் மநுஷ்யேஷு ப்ராஹ்மணோ।
வை ப்ராஹ்மண முபதாவதி உபத்வாதாவாநி॥

(இ-ள்) ஓ! சுககரனுகிய சங்கரனே! நீ தேவர்களில் ப்ராஹ்மணனு யிருக்கின்ருய்; உனது அடிமையாகிய நான் மனிதர்களில் ப்ராஹ்மணனுகப் பாவித்திருக்கின்றேன்; ப்ராஹ்மணன் ப்ராஹ்மணனையே ஆசரிப்பவனுதலின் நான் ப்ராஹ்மணனுகிய உன்னை ஆசரிக்கின்றேன்.

ஆதலால் ப்ராஹ்மணன் ப்ராஹ்மணனுகிய சிவபெருமானைப் பூஜைசெய்யாமல் தன்னினும் தாழ்ந்துள்ள நீச ஜாதியார்களைச் சேவிக்கக்கூடாது. அவ்வாறே கீழ் ஜாதியாராகிய தேவர்களைச் சேவிப்பவர்க்கு ப்ராஹ்மணத்வம் சித்திக்காது.

வீரமாஹேஸ்வரர் யார்? என்பது:— உபசாரார்த்தமாக ஈஶ என்னும் வார்த்தை யேற்றிய ப்ரஹ்ம விஷ்ணுக்களுக்கு அதிபதியாகிய மஹேஸ்வரனைப் பூஜிப்பவரும், பரஸ்த்ரீ கமனஞ்செய்யாதவரும், பரத்ரவ்யத்தை யிச்சியாதவரும், சிவசம்பந்தமான கார்யங்களைச் செய்பவரும், சிவாகமங்களில் தேர்ந்தவரும், சிவஸ்தோத்ரங்களில் மனமுள்ளவரும், சிவாதிக்யத்திற்குரிய பரமான நூல்களைச் சம்பாதிப்பதில் மனமுள்ளவரும், அஹங்கார மமகார மில்லாதவரும், பஞ்ச க்லேஸங்களற்றவரும், காம க்ரோதாதிகளை வென்றவரும், எப்போதும் சந்தோஷமாயிருப்பவரும், எல்லாப் பிராணிகளிடத்திலும் ஹிதத்தைச் செய்பவரும், சிவசம்பந்தமுள்ள கார்யங்களுக்கு விரோதிகளாயிருப்பவர்களைக் கண்டிப்பதில் ஊக்கமுள்ளவரும், சிவாதிக்யத்தைக் குறித்த உபந்யாஸங்களைச் செய்கின்ற திருக்கூட்டத்தாருடன் சஞ்சரிப்பவரும், சிவாதிக்யத்திற்கு இடையூறு நேரிடுங்கால் ப்ராணத்யாகஞ் செய்பவரும், துர்வாதியர்களைக் கண்டிப்பவரும், சிவபெருமானிடத்தில் விசேஷ நிஷ்டையுள்ளவருமாகிய இவர் வீரமாஹேஸ்வரராவார்.

ப்ராஹ்மணன் யார்? என்பது:— ஸ யோ ஹ ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி என்னும் தைத்தரீய வசனப்படி எவன் ப்ரஹ்மத்தை யறிந்தவனே அவன் ப்ரஹ்மமே யாகின்ருன். இந்த வசனப்படி ப்ரஹ்மத்தை யறிந்தவன் ப்ரஹ்மமாகவும், ப்ராஹ்மணன் எப்படி யாவான்? என்னும் கேள்விக்கு உத்தரமானது ப்ரஹ்மமான ருத்ரன் த்வம் தேவேஷு ப்ராஹ்மணஃ என்னும் பிரபல ஸ்ருதி வசனப்படியும், ப்ராஹ்மணோ பகவாந் ருத்ரஃ க்ஷத்ரியஃ பரமோ ஹரிஃ। என்னும் வசனப்படியும் ப்ராஹ்மணனைது போலவே ப்ரஹ்மத்தை யறிந்தவன் ப்ராஹ்மணனுகின்ருன்.

ப்ரஹ்மவித்தைக்கு அதிகாரி யார்? என்பது:—

வாஸிஷ்டலைங்கம்.

உபவெஷ்டூம் ஹ்ருதிய்யாநம் ஷேமெகெ யிஜயாரணழு।
ஶிவொவாகூஹஸாஹி உதிவ்ராஹ்ஹணஸுக்ஷணழு॥

பாரமேஶ்வராகமம்.

ஶ்ரூமுகே மந்த்ரம் ஹ்ருதி த்யாநம் மஸ்தகே லிங்கதாரணம்।
ஶிகே ருத்ராக்ஷ பஸ்மாதி இதி ப்ராஹ்மண லக்ஷணம்॥

(இ-ள்.) வாக்கில் பஞ்சாக்ஷரஜபமும், மனதில் சிவத்யானமும், தலையில் லிங்க தாரணமும், குடுமியில் ருத்ராக்ஷதாரணமும், பஸ்மதாரணமுமாகிய இவைகள் ப்ராஹ்மண லக்ஷணமாகும்.

இந்த ஸ்லோகம் ஆராத்யர்களுக்குச் சம்பந்தப்பட்டதே யல்லாமல் வீரசைவர்களுக்குச் சம்பந்தப்பட்டதில்லையென்று ப்ராஹ்மணர்கள் கூறுவார்கள். ஆனால் யஞ்ஞோபவீதம், லிங்கதாரணமாகிய இரண்டினைத் தரித்தவன் ப்ராஹ்மணனென்று கூறாமல் கேவலம் மந்த்ர த்யானம், ருத்ராக்ஷ, பஸ்மங்களுடன் கூடின சிவலிங்கமொன்றினையே தரித்தவன் ப்ராஹ்மணனென்று கூறுவதனால் இது ஆராத்ய ப்ராஹ்மணனுக்குச் சம்பந்தபட்டதில்லையென்பது பெறப்பட்டது.

கைவல்யோபநிஷத்.

விவிக்ததேஶே ச ஸுகாஸநஸ்த:।
ஶுசிஸ்ஸமக்ரீவ ஶிரஶ்ஶரீர: அத்யாஶ்ரமஸ்த:॥

கைவல்யோபநிஷத்.

விவிக்த தேசே ச ஸுகாஸநஸ்தத:
ஸுசஸ் ஸமாக்ரீ த ஶிரஶ் ஶரீர: அத்யாஶ்ரமஸ்த:।

(இ-ள்.) சுத்தமான இடங்களில் சுகமான ஆசனமுடையவனாகி நிமிர்ந்த தலையுடைய சரீரமுடையவனும், ஆஶ்ரமத்தைக் கடந்தவனுமாயிருந்து கொண்டு.

என்னும் வசநத்தின்படியும்,

ஶிவபுராணம்.

பலிஸம்ஸர்க ரஹிதே விவிக்தே ச ஸுகாஸநே।
ஸுகாஸநஸ்தித: ஸ்வஸ்தஸ்ஸமக்ரீவஶிரோங்கவாந் விரஜோऽநலஜம் பஸ்ம
க்ருஹீத்வாத்யந்தபாவந:। அக்நிருத்ராதிபிர்மந்த்ரை
ஸ்ஸப்தபிஶ்சாபிமந்த்ரிதம்॥
ஶரீரோத்தூளநம் க்ருத்வா।
த்ரிபுண்ட்ரஸ்ய ச தாரணம்।
ருத்ராக்ஷதாரணஞ்சைவ ஷடக்ஷரஜபஸ்ததா॥
யஸ்தேஷு நிஷ்டயா ஜீவ ஸம்ஸாராத் விமுக்திகா:।
அத்யாஶ்ரமீ ஸ விஜ்ஞேயோ ஸாந்நித்யஸ்தத்வதர்ஶிபி:॥

உபப்ராஹ்மணம்.

பலிஸம்ஸர்க ரஹிதே விவிக்தே ச ஸுகாவஹே।
ஸுகாஸந ஸ்திதஸ் ஸ்வஸ்தஸ் ஸமக்ரீவா ஶிரோங்கவாந் விரஜோநலஜம் பஸ்ம
க்ருஹீத்வாத்யந்த பாவந:। அக்நி ருத்ராதிபிர் மந்த்ரைஸ்
ஸப்த பிஸ்சாபி மந்த்ரிதம்॥
ஶரீரோ தூளநம் க்ருத்வா।

த்ரிபுண்ட்ரஸ்யது தாரணம்|
ருத்ராக்ஷதாரணம் சைவ ஷடக்ஷர ஜபஸ்ததா||
த்ருதேஷ்ட லிங்கபூஜாச ஸம்ஸ்காராஃ பஞ்சகீர்த்திதாஃ|
அத்யாஸ்ரம இதிக்யாதோ முநிபிஸ் தத்வதர்ஸிபிஃ||

(இ - ள்) பலிசம்பந்தமில்லாததும், ஏகாந்தமானதும், சுகத்தைக் கொடுக்கக் கூடியதுமான சுகாசனத்திலிருந்துகொண்டு சித்தியுடையவனாய், நிமிர்ந்த கழுத்தும், தலையுமுள்ள அங்கங்களடைந்து பரிசுத்தனாய், அக்நியினாலுண்டாகிய பஸ்மத்தைத் தரித்தவனாய், அக்நி, ருத்ரம், முதலான ஏழு மந்திரங்களினால் அபிமந்திரிக்கப்பட்ட பஸ்மத்தால் உத்தூளநமும், த்ரிபுண்ட்ரதாரணமும், ருத்ராக்ஷதாரணமும், ஷடக்ஷர ஜபமும், இஷ்டலிங்கபூஜையுமாகிய ஐந்து ஸம்ஸ்காரங்களையடைந்தவனாகிய சிவபக்தன் அத்யாஸ்ரமி யெனப்படுவான்.

என்னும் வசநத்தின்படியும், த்ரிபுண்ட்ரதாரணமும், ருத்ராக்ஷதாரணமும், ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹாமந்த்ர ஜபமும், பஸ்மோத்தூளநமும், இஷ்டலிங்க பூஜையுமாகிய இவ்வைந்து ஸம்ஸ்காரங்களையடைந்த அத்யாஸ்ரமியே ப்ரஹ்மவித்தைக்கு அதிகாரி யென்று ப்ரஹ்மதேவன் ஆஸ்வாலயந ருஷிகளுக்கு உபதேஸித்தனன். இந்த ஸ்லோகத்தில் யஞ்ஞோபவீததாரணம் கூறப்படாமையினால் இது ஆராத்ய ப்ராஹ்மணர்களுக்குச் சம்பந்தப்படாது வீரசைவர்களுக்குச் சம்பந்தப்பட்டதாகும். (நக)

ஆத லாலுமை யீசன டியவ
  ரணைந்து நெஞ்சினு மங்கீக ரிக்கொணா
தோது முத்தர மென்றலு நன்றுநன்
  றுன்ம டத்துஞ மலியு முன்மடத்
தாதி தன்னினுந் தாழ்வென வெங்களைச்
  சாற்று நின்குலத் தாருத்த றிப்பதோர்
பாத கப்பர சாயினை முள்ளினைப்
  பறித்தொ ராப்பைப்ப தித்தது போன்றதால்.

(ப - ரை.) ஆதலால் - ஆகையால், உம்மை - உங்களை, ஈசன் அடியவர் - சிவசரணர்கள், அணைந்து - அடுத்து, நெஞ்சினும் - மனத்திலும், அங்கிகரிக்க ஒண்ணாது - நினைக்கக்கூடாது, உத்தரம் - (இதற்கு) பதில், ஓதும் - சொல்லுங்கள், என்றலும் - என்று (கல்லையர்) கேட்டலும், நன்று - (அதற்கு அவர்கள்) நல்ல கார்யம், நன்று - நல்ல கார்யம், உன் - உனது, மடத்து - மடத்திலுள்ள, ஞமலியும் - நாயினும், உன் - உனது, மடத்தாதி தன்னினும்-மடத்திலுள்ள தாதியினும், தாழ்வு - தாழ்ந்தவர்கள், என்ன - என்று நினைத்து, எங்களை —, சாற்றும் - சொல்லுகின்ற, நின் - உனது, குலத்தாரு - ஜாதியாகிய மரத்தை, தறிப்பது - வெட்டுதற்குரிய, ஓர் - ஒரு, பாதகம் - பாபரூபமான, பரசு - கோடாரி, ஆயினை - ஆனாய், முள்ளினை - முள்ளை, பறித்து - பிடுங்கி, ஓர் - ஒரு, ஆப்பை - முளையை, பதித்தது - செருகினது, போன்றது - போலாகிவிட்டது, எ - று.

(போ - ரை.) ஆகையால் உங்களைச் சிவசரணர்கள் அடுத்து மனத்திலும் நினைக்கக்கூடாது; இதற்குப் பதில் சொல்லுங்களென்று கல்லையர் கேட்டலும், அதற்கு அவர்கள் நல்ல கார்யம், நல்ல கார்யம்; உனது மடத்திலுள்ள நாயினும், உனது மடத்திலுள்ள தாதியினும் தாழ்ந்தவர்களென்று நினைத்து, எங்களைச் சொல்லுகின்ற உனது ஜாதியாகிய மரத்தை வெட்டுதற்குரிய ஒரு பாபரூபமான கோடரியானாய்; முள்ளைப் பிடுங்கி ஒரு முளையைச் செருகினது போலாகிவிட்டது.

(வி - ரை.) அங்கீகரித்தல் - ஏற்றுக்கொள்ளுதல். ஆல்-ஆசை. (நஉ)

என வுரைத்தும றையவர் ஞாளியை
யெம்மு னாரண மோதுவி யென்னவே
யனகர் நற்கல்வி தேவர்சு ணங்கனை
யங்கு லத்தினு டித்தழைத் தார்சுவா
வெனது மன்னன ழைத்தன னென்றுவந்
திறைஞ்சி லக்கண மெய்தவி ருக்கநின்
றனது நெஞ்சிற்ச துமறை தன்னிலோர்
சாகை யோதுச டக்கென வென்னலும்.

(ப-ரை.) என்ன - என்று, மறையவர் - ப்ராஹ்மணர்கள், உரைத்து - சொல்லி, ஞாளியை-நாயை, எம் முன் - எங்களுக்கெதிரே, ஆரணம் ஓதுவி - வேதபாராயணஞ் செய்யப் பண்ணுவாய், என்ன - என்று கேட்டலும், அனகர் - பரிசுத்தரும், நல் - மேன்மை யானவருமாகிய, கல்விதேவர்-கல்லையர், சுணங்கனை-நாயை, அங்குலத்தில்-விரலினால், டித்து-சிடிகைபோட்டு, அழைத்தார் - கூப்பிட்டார், சுவா-நாயானது, எனது—, மன்னன் - இறைவன், அழைத்தனன் - கூப்பிட்டான், என்று—, உவந்து-சந்தோஷித்து, இறைஞ்சு - வணங்குதற்குரிய, இலக்கணம் எய்த - ஸர்வ லக்ஷணத்தோடு, இருக்க - வணங்கி உட்காருதலும், நின் தனது - உனது, நெஞ்சில் - மனத்தில் (பதிந்து பாடமாயிருக்கின்ற), சதுமறை தன்னில் - சதுர் வேதங்களில், ஓர் - ஒரு, சாகை - சாகையை, சடக்கென - விரைவாக, ஓது - சொல், என்னலும்-என்று கட்டளையிடுதலும், எ - று.

(பொ-ரை.) என்று ப்ராமணர்கள் சொல்லி, நாயை எங்களுக் கெதிரே வேதபாராயணஞ்செய்யப் பண்ணுவாயென்று கேட்டலும், பரிசுத்தரும், மேன்மையானவருமாகிய கல்லையர் நாயை விரலினால் சிடிகைபோட்டு கூப்பிட்டார்; நாயானது எனது இறைவன் கூப்பிட்டானென்று சந்தோஷித்து, வணங்குதற்குரிய ஸர்வ லக்ஷணத்தோடு வணங்கி உட்காருதலும், உனது மனத்தில் பதிந்து பாடமாயிருக்கின்ற சதுர் வேதங்களில் ஒரு சாகையை விரைவாகச் சொல்லென்று கட்டளையிடுதலும்.

(வி - ரை.) சதுர்மறையின் சாகைகளைப் பற்றி முன்னர் விளக்கியுள்ளோம். அங்குலம் - அங்குலி யென்பதன் திரிபு. இலக்கணம் - லக்ஷணம் என்னும் வடசொற்றிரிபு. (௩௨)

ஓதி லக்கண மெல்லாம்பெ றமறை
யோது கின்றசு வாவினை நோக்கினோர்
வேத பாரகர் நாணிப்ப யத்துடன்
மெத்த வேகல்வி தேவர்க்கி றைஞ்சினா
ராதி யீசன டியார்பெ ருமையை
யந்த ணாள றிந்திலி ரோவெனப்
போத வேதப்பி தாமக னேயினிப்
பூசை யென்னப்பு கன்மறை போய்ந்ததால்.

(ப - ரை.) ஓது - (பண்டிதர்களால்) சொல்லப்பட்ட, இலக்கணம் எல்லாம் - ஸர்வ ஸ்வர லக்ஷணங்கள், பெற - பொருந்த, மறையோதுகின்ற - வேதபாராயணஞ் செய்கின்ற, சுவாவினை-நாயை, நோக்கினோர்-பார்த்து, வேதபாரகர் - ப்ராஹ்மணர்கள், நாணி - வெட்கமடைந்து, பயத்துடன் - அச்சத்தோடு, கல்விதேவர்க்கு-கல்லையர்க்கு, மெத்த - மிகவும், இறைஞ்சினார் - வணங்கினார்கள், அந்தணாளர் - (கல்லையர்) ப்ராஹ்மணர்களே, ஆதி - மூலகாரணனாகிய, ஈசன் - சிவபெருமானுக்குத் தொண்டுசெய்கின்ற, அடியார்-பக்தர்களுடைய, பெருமையை-மகிமையை, அறிந்திலிரோ-உணர்ந்தீர் களில்லையோ, என்ன - என்று சொல்லி (நாயைப்பார்த்து), போதம் - (ஞானத்

தை) போதிக்கின்ற, வேதம் - வேதங்களையே (ஓதுகின்ற); பிதாமகனே - ப்ரஹ்ம தேவனே, இனி -இப்போது, பூரை-(வேதபாராயணத்தை) பூர்த்திசெய்யக்கடவாய், என்ன - என்று கட்டளையிடுதலும்; புகல் - பாராயணஞ்செய்யப்பட்ட, மறை - வேதம், ஓய்ந்தது - நின்றது, எ - று.

(போ-ரை.) பண்டிதர்களால் சொல்லப்பட்ட ஸர்வ ஸ்வர லக்ஷணங்கள் பொருந்த வேதபாராயணஞ் செய்கின்ற நாயைப் பார்த்து, ப்ராஹ்மணர்கள் வெட்கமடைந்து, அச்சத்தோடு கல்லையர்க்கு மிகவும் வணங்கினார்கள்; கல்லையர், ப்ராஹ்மணர்களே! மூலகாரணனாகிய சிவபெருமானுக்குத் தொண்டுசெய்கின்ற பக்தர்களுடைய மகிமையை உணர்ந்தீர்களில்லையோ? என்று சொல்லி நாயைப் பார்த்து, ஞானத்தைப் போதிக்கின்ற வேதங்களையே ஓதுகின்ற ப்ரஹ்மதேவனே! இப்போது வேதபாராயணத்தைப் பூர்த்திசெய்யக்கடவாயென்று கட்டளையிடுதலும், பாராயணஞ் செய்யப்பட்ட வேதம் நின்றது.

(வி - ரை.) நோக்கினர் - முற்றெச்சம். பாரகர்-கரைகண்டவர். புகல்-சொல்லல். புகல் மறை என்றதை மறைபுகல் என மாற்றி வேதபாராயணமெனப் பொருட்கோடலு மமையும். முதலிலுள்ள 'என' என்பது என்று என்னும் செய்தெனெச்சத் திரிபு.

(ருசு)

### காளிதேவர். சிவசித்தர்.

காளி தேவர்சம் பூரின்ம றையவர்
　கடிந்த வாதிற்க டிந்தெழுந் தாரணை
ஞாளி யோடுதன வோதுவித் தார்மற்று
　நம்ப னன்பர்சி வசித்தர் வாதியர்
தூளி யாகப்ப றக்கப்ப டிப்பவர்
　சுத்த நேயரைச் சூத்திர ரென்றிடுங்
கோளி வேதிய ரொவ்வார ரன்புகழ்
　கூறு நேயத்தி ருக்குலர்க் கென்றலும்.

(ப - ரை.) காளிதேவர் - (முன்னொரு காலத்தில்) மஹா காளிதேவரென்பவர், சம்பூரில்-சம்பூரென்கின்ற நகரத்தில், மறையவர் - ப்ராஹ்மணர்கள், கடிந்த-கோவித்தெழுந்து தர்க்கஞ் செய்ய வந்த, வாதில் - சமயவாதத்தில், கடிந்து - கோவித்து, எழுந்து—, ஞாளி - நாயை, ஆரணம் ஓது - வேதபாராயணஞ் செய்வாய், என்ன - என்று கட்டளையிட்டு, ஓதுவித்தார் - பாராயணஞ்செய்வித்தார், மற்றும் - மேலும், நம்பன் அன்பர் - சிவபக்தராகிய, சிவசித்தர் - சிவசித்தையரென்பவர், வாதியர் - பரசமயவாதிகள், தூளியாக - தூளாக, பறக்கப்படிப்பவர்-பறக்கடிப்பவராகி, சுத்தன் நேயரை - சிவபக்தர்களை, சூத்திரர்—, என்றிடும் - என்று சொல்லுகின்ற, கோளி - துஷ்டர்களாகிய, வேதியர் - ப்ராஹ்மணர்கள், அரன் புகழ் கூறும் - சிவஸ்துதிசெய்கின்ற, நேயர் - பக்தர்களாகிய, திருக்குலர்க்கு - திருக்குலத்தார்களுக்கு, ஒவ்வார் - சமானமாகமாட்டார்கள், என்றலும் - என்று சொல்லுதலும், எ - று.

(போ - ரை.) முன்னொரு காலத்தில் மஹா காளிதேவரென்பவர் சம்பூரென்கின்ற நகரத்தில் ப்ராஹ்மணர்கள் கோவித்தெழுந்து தர்க்கஞ்செய்ய வந்த சமயவாதத்தில் கோவித்தெழுந்து, நாயை வேதபாராயணஞ்செய்வாயென்று கட்டளையிட்டுப் பாராயணஞ் செய்வித்தார்; மேலும், சிவபக்தராகிய சிவசித்தையரென்பவர் பரசமயவாதிகள் தூளாகப் பறக்கடிப்பவராகி, சிவபக்தர்களைச் சூத்திரரென்று சொல்லுகின்ற துஷ்டர்களாகிய ப்ராஹ்மணர்கள் சிவஸ்துதிசெய்கின்ற பக்தர்களாகிய திருக்குலத்தார்களுக்குச் சமானமாகமாட்டார்களென்று சொல்லுதலும்.

(வி - ரை.) அரன் - சிவபெருமானை. புகழ்கூறும் - துதிக்கின்ற.　(ருரு)

எங்கள் காலிற்செ ருப்புக்கொவ் வாதவ
ரெங்க ளுக்குமே லென்னும தென்னென
வெங்க தத்தும றையவர் கூறலு
மெய்த்த வத்தர்சி வசித்த ரென்பவ
ரங்க ணன்புகழ் பாடாத வந்தண
ரத்தி ருக்குலத் தார்கள டிகளிற்
றங்கு மந்தச்செ ருப்பிற்கொவ் வாரிது
சத்தி யஞ்சத்தி யமெனச் சாற்றவே.

(ப - ரை.) எங்கள்—, காலில் - காலிலிருக்கின்ற, செருப்புக்கு—, ஒவ்வாதவர் - சமானமாகாத திருக்குலத்தார்களை, எங்களுக்கு-எங்களினும், மேல் - உயர்ந்தவர்கள், என்னும் அது - என்று சொல்லுகின்ற அந்தக் காரணம், என் - யாது, என்ன - என்று, வெம் கதத்து - கடுங்கோவத்தையுடைய, மறையவர் - ப்ராஹ்மணர்கள், கூறலும் - வினவுதலும், மெய்த்தவத்தர் - உண்மையாகிய வீரவிரதத்தையுடையவராகிய, சிவசித்தர் என்பவர் - சிவசித்தையரென்பவர்; அங்கண்ணன் புகழ்பாடாத - சிவஸ்துதிசெய்யாத, அந்தணர் - ப்ராஹ்மணர்கள், அ - அந்த, திருக்குலத்தார்கள் - திருக்குலத்தார்களது, அடிகளில் - பாதங்களில், தங்கும் - இருக்கின்ற, அந்த—, செருப்பிற்கு—, ஒவ்வார் - சமானமாக மாட்டார்கள், இது-இந்த வார்த்தையானது, சத்தியம் சத்தியம் - உண்மை உண்மை, என்ன - என்று, சாற்ற - சொல்லுதலும், எ - று.

(பொ - ரை.) எங்கள் காலிலிருக்கின்ற செருப்புக்குச் சமானமாகாத திருக்குலத்தார்களை எங்களினும் உயர்ந்தவர்களென்று சொல்லுகின்ற அந்தக் காரணம் யாது? என்று, கடுங்கோவத்தையுடைய ப்ராஹ்மணர்கள் வினவுதலும், உண்மையாகிய வீரவிரதத்தை யுடையவராகிய சிவசித்தையரென்பவர் சிவஸ்துதிசெய்யாத ப்ராஹ்மணர்கள் அந்தத் திருக்குலத்தார்களது பாதங்களில் இருக்கின்ற அந்தச் செருப்புக்குச் சமானமாகமாட்டார்கள்; இந்த வார்த்தையானது உண்மை, உண்மையென்று சொல்லுதலும்.

(வி - ரை.) திருக்குலத்தார் - பஞ்சமரைக்குறிக்கும் மங்கலச்சொல். அங்கண்ணன் - சிவபெருமானை. புகழ்பாடாத - துதிக்காத. சத்தியம் - ஸத்யம் என்னும் வடசொற்றிரிபு. (௬௪)

என்ன வந்தண ரெல்லாம்வெ குண்டெழுந்
திவரை வந்துபி டித்துத்த ரஞ்சொலப்
பின்னி டைந்தொரு காட்சியைக் காட்டெனப்
பெரிய பத்தர்செ ருப்போர்பு டையதாய்ச்
சொன்ன மாமறை யோரிலொ ருவனைத்
துலையி லோர்புடை வைத்துறத் தூக்கின
ரன்ன வேதியர் தோற்றன ராதலா
லத்த னன்பர திகர்மற் றன்றியும்.

(ப - ரை.) என்ன - என்று சொல்லுதலும், அந்தணர் எல்லாம் - ப்ராஹ்மணர்களனைவரும், வெகுண்டு - கோவித்து, எழுந்து—, இவரை—, வந்து-போய், பிடித்து-மல்லுக்கட்டி வாதஞ்செய்தும், உத்தரம்சொல்ல - பதில்கொடுக்க, பின்னிடைந்து-தோற்றுப்போயினமையால், ஒரு—, காட்சியை - திருஷ்டாந்தத்தை, காட்டு-காண்பிப்பாய், என்ன - என்று கேட்டலும், பெரிய - மேன்மைபொருந்திய, பத்தர் -(ஒரு) சிவபக்தருடைய, செருப்பு - செருப்பை, துலையில்-தராசின், ஓர்-ஒரு, புடையதாய்-

பக்கத்துத் தட்டிலும், சொன்ன- (மேல் ஜாதியாரென்று) சொல்லிய, மா-மேன்மையுடைய, மறையோரில் - ப்ராஹ்மணர்களில், ஒருவனை—, ஓர் புடை - மற்றொரு பக்கத்துத் தட்டிலும், வைத்து - இருத்தி, உற - பொருந்தும்படி, தூக்கினார் - நிறுத்தார், அன்ன - அந்த, வேதியர்-ப்ராஹ்மணர்கள், தோற்றனர் - தோல்வியடைந்தார்கள், ஆதலால் - ஆகையால், அத்தன் அன்பர் - சிவபக்தர்கள், அதிகர் - மேல் ஜாதியாராகிய ப்ராஹ்மணர்களினு மேலானவர்களாவார்கள், அன்றியும் - அல்லாமலும், எ - று.

(பொ - ரை.) என்று சொல்லுதலும், ப்ராஹ்மணர்களனைவரும் கோவித்தெழுந்து, இவரைப் போய் மல்லுக்கட்டி வாதஞ்செய்தும், உத்தரம் கொடுக்கத் தோற்றுப் போயினமையால், ஒரு திருஷ்டாந்தத்தைக் காண்பிப்பாயென்று கேட்டலும், மேன்மை பொருந்திய ஒரு சிவபக்தருடைய செருப்பைத் தராசின் ஒரு பக்கத்துத் தட்டிலும் மேல் ஜாதியாரென்று சொல்லிய மேன்மையுடைய ப்ராஹ்மணர்களில் ஒருவனை மற்றொரு பக்கத்துத் தட்டிலும் இருத்திப் பொருந்தும்படி நிறுத்தார்; அந்த ப்ராஹ்மணர்கள் தோல்வியடைந்தார்கள்; ஆகையால் சிவபக்தர்கள் மேல் ஜாதியாராகிய ப்ராஹ்மணர்களினு மேலானவர்களாவார்கள்; அல்லாமலும்.

(வி - ரை.) மற்று - அசை.	(௩௭)

பிப்பபாச்சையர்.

குரும கேசரி லிங்கநற் சேடமே
　கொண்டு மேனிகு லவிய கொள்கையா
ரொருவ ராலும ளப்பரு மேன்மையா
　ரொப்பில் வீரவி ரதத்தி லுற்றுளார்
பெருகு மந்தணர் தம்முளொ ருவர்பேர்
　பிப்ப பாச்சையர் கொப்பூரெ னும்பதி
மருவி வாழ்பவர் தங்குல நீதியின்
　மன்னு நீர்மைம றுத்தநெ றியினர்.

(ப- ரை.) நல் - மேன்மையாகிய, குரு மகேசர் இலிங்க சேடமே - குரு லிங்க ஜங்கம ப்ரஸாதங்களையே, கொண்டு - ஸ்வீகரித்து, மேனி - உடல், குலவிய - பூரிக்கின்ற, கொள்கையார் - நற்குணமுடையவர், ஒருவராலும்—, அளப்பு அரு - (இத்தன்மையரென்று) அளவிட்டுச் சொல்லுதற்கரிய, மேன்மையார் - பெருமையுடையவர், ஒப்பு இல் - நிகரற்ற, வீரவிரதத்தில் உற்று உள்ளார் - வீரசைவர், பெருகும் - விருத்தியடைகின்ற, அந்தணர் தம்முள் - ப்ராஹ்மணர்களில், ஒருவர் - ஒப்பற்றவர், பேர் - (அவர்) திருநாமம், பிப்பபாச்சையர் - பிப்பபாச்சையரென்பது, கொப்பூர் என்னும் - கொப்பூரென்கின்ற, பதி - ஸ்தலத்தை, மருவி - அடைந்து, வாழ்பவர் - வாழ்கின்றவர், தம் - தமது, குலநீதியில் - ப்ராஹ்மண குலாசாரத்தில், மன்னும் - இருக்கின்ற, நீர்மை - பெருமையை, மறுத்த - ஒழித்த, நெறியினர்-சன்மார்க்கத்தையுடையவர், எ - று.

(பொ - ரை.) மேன்மையாகிய குருலிங்க ஜங்கம ப்ரஸாதங்களையே ஸ்வீகரித்து உடல் பூரிக்கின்ற நற்குணமுடையவர்; ஒருவராலும் இத்தன்மையரென்று அளவிட்டுச் சொல்லுதற்கரிய பெருமையுடையவர்; நிகரற்ற வீரசைவர்; விருத்தியடைகின்ற ப்ராஹ்மணர்களில் ஒப்பற்றவர்; அவர் திருநாமம் பிப்பபாச்சையரென்பது; கொப்பூரென்கின்ற ஸ்தலத்தை யடைந்து வாழ்கின்றவர்; தமது ப்ராஹ்மண குலாசாரத்திலிருக்கின்ற பெருமையை யொழித்த சன்மார்க்கத்தை யுடையவர்,

(வி-ரை) தீர்த்த ப்ரஸாதங்களின்சிறப்பு:—குரு லிங்க ஜங்கம பாதோதக ப்ரஸாதங்களில்லாத வீரசைவனுக்கு வேறெவ்விதமான சாதனங்களிருப்பினும் காரண சாமக்ரியில்லாமையினால் ஜநந மரண ரூபமான ப்ரவாஹம் தவிர்ந்து, அழிவற்றதும், உண்மையானதுமாகிய கைவல்ய ரூபமான கார்யம் கைகூடாமல் சிரமத்தை யடைவான். ஆதலால் சிவபக்தர்கள் பாதோதக ப்ரஸாதங்களின் கிரமத்தைக் குருமுகத்தினால் தெரிந்து கொண்டு ஶாஸ்த்ர விதிப்படி குரு ஜங்கம பாதோதக ப்ரஸாதங்களைத் தினந்தோறும் ஸ்வீகரித்து, சுத்தாந்தக்கரணமுள்ளவர்களாயிருத்தல் வேண்டும். அடியில் வரும் வசனங்களினால் தீர்த்த ப்ரஸாதங்களின் சிறப்பு அறியப்படும்.

பக்தியென்பது மூடபக்தியென்றும் ப்ரௌட பக்தியென்றும் இரண்டு வகைப்படும். எவ்விதமான விஷயஜ்ஞானமில்லாமலும், பதார்த்தங்களின் விபாகஜ்ஞானமில்லாமலும் யாதாயினும் ஒரு கண்ட வஸ்துவில் மற்றொரு வஸ்துவின் அவிச்சின்ன ஸ்ம்ருதி சந்தானத்தினால் நினைத்து வஸ்துலாபமாவதே மூடபக்தியெனப்படும். பதார்த்தவிசார பூர்வகமாய் ஶாஸ்த்ரத்தில் விதித்தபடி லிங்கலக்ஷணம், குருலக்ஷணம், ஜங்கமலக்ஷணம் முதலியவற்றை நன்றாய்த் தெரிந்து, குரு ஜங்கமர்களின் தரிசனமாத்திரத்தானே ரத்ந பரீக்ஷகனுக்கு ரத்நத்தைப் பார்த்தவுடனே இது நல்லது, கெட்டதென்று விபாகஞ் செய்வது போல, ஜங்கமகுணமுள்ள ஜங்கமமூர்த்தியை அர்ச்சிப்பதே ப்ரௌட பக்தியெனப்படும். அப்படிக்கின்றித் தீர்த்த ப்ரஸாதங்களைக் கொடுக்கின்ற குருக்களிடத்தில் இவ்விதமான அசாதாரண தர்மங்களைச் சித்தாந்திகள் ஏற்படுத்தாமலிருப்பின், கண்ட கண்ட சிலைகளையும், கண்ட கண்ட மனிதர்களையும், கண்ட கண்ட பைராகிகளையும் பூஜித்து, அவர்களது பாதோதக ப்ரஸாதங்களைப்பெற்றுக்கொள்ளநேரிடுமன்றோ? அப்போது ஶாஸ்த்ரங்களெல்லாம் பொய்த்துப்போகும். ஆதலால் ப்ரௌட பக்தியைப் பற்றி ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. மூடபக்தியென்பது ஸ்வயமானது. மேலும் உலக விவகாரத்தைப் பாராமலிருப்பவர்களுக்குப் பொய்யே மெய்யாகத் தோன்றும். இது ஶாஸ்த்ர விதியன்று. இவ்விதமான நிலைமை 10 கோடியிலொன்று கிடைத்தலரிது. அது ஒருவனிடத்தில் உண்டாயினும் அவனுடனே முடிவெய்தும். பிறர்க்குப் போதிக்க ஒவ்வொருவனும் ஶாஸ்த்ரவிதியை அநுசரித்து அப்பியாசம் செய்தல்வேண்டும். அவ்வாறு செய்யும் அப்பியாச பிரயத்தனமும் குருபதேஶமுமில்லாமல் ஞானம் சித்திக்காது. ஒருவனுக்குண்டான ஞானம் எல்லாராலும் அநுஷ்டிப்பதல்ல. அநுஷ்டிப்பினும் சித்திப்பதில்லை. ஆதலால் ஶாஸ்த்ரோக்தமான பதார்த்த விசாரபூர்வகமாய் உண்மை நிலை யடைதல் வேண்டும். ஆதலால் ஜங்கமமூர்த்திகள் மந்த்ரம், வித்தை, ஜ்ஞானமாகிய இவைகளை நிதியாயுள்ளவர்களாயிருத்தல்வேண்டும். மேலும் பிக்ஷையெடுத்து உலகத்தில் சஞ்சரித்து, குகை முதலான நிர்மாநுஷ்யமான தேசங்களில் சமாதியோகத்திலிருந்து, எவ்விதமான திரவிய சம்பந்தமில்லாது, லோகோபகாரமாய்ப் பஞ்சமுத்ராதாரிகளாயிருக்கின்ற ஜங்கமமூர்த்திகளென்னும் சிவயோகியானவர் நமது நித்ய கர்மங்களுக்குக் கிடைக்கமாட்டார். அப்படிப்பட்ட சிவயோகி ஒரு க்ஷணத்தில் தர்ஶநமாயின் அவித்தை முதலிய தோஷங்களெல்லாம் ஒழிந்து, முக்தி கைகூடிப் பவரோகம் ஒழியும்.

𑌶𑌿𑌵𑌯𑍋𑌗𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑍇 𑌸𑌂𑌤𑍃𑌪𑍍𑌤𑍇 𑌤𑍃𑌪𑍍𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌶𑌙𑍍𑌕𑌰𑌃 ।
𑌤𑌤𑍍𑌤𑍃𑌪𑍍𑌤𑍍𑌯𑌾 𑌤𑌨𑍍𑌮𑌯𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 𑌤𑍃𑌪𑍍𑌤𑌿𑌮𑍇𑌤𑌿 𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍 ॥
𑌶𑌤𑌾𑌨𑍁 𑌹𑌸𑍍𑌤𑍍𑌯 𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌗𑍍𑌰𑌾 𑌊𑌶𑍍𑌨𑌾𑌤𑌿 𑌕𑌬𑌳𑍋𑌦𑍍𑌭𑌵 ।
𑌭𑌿𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌨𑌂 𑌭𑍁𑌕𑍍𑌤𑌂 𑌯𑍇𑌨 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌶𑌿𑌵𑌯𑍋𑌗𑌿𑌨𑌾 ।
𑌤𑌤𑍍𑌫𑌲𑌂 𑌸𑌹𑌸𑍍𑌰𑌂 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌯𑌜𑍍𑌞𑌕𑍋𑌟𑌿𑌶𑌤𑌿𑌰𑌪𑌿 ।

ஶிவயோகிநி ஸம்த்ருப்தே த்ருப்தோ பவதி ஶங்கர:|
தத்த்ருப்த்யா தந்மயம் விஶ்வம் த்ருப்தி மேதி சராசரம்|
ரஸாந் பக்தஸ்ய ஜிஹ்வாக்ரா தஶ்நாமி கமலோத்பவ|
பிக்ஷா மாத்ர ப்ரதாநேந ஶாந்தாய ஶிவயோகிநே|
தத்பலம் ஸத்ருஶம் நாஸ்தி யஜ்ஞகோடி ஶதைரபி||

(இ - ள்) சிவயோகியானவன் திருப்தியடைந்தால் சிவபெருமான் சந்தோஷமடைகின்றான். அவர் திருப்தியடைவதனால் அவர் மயமாயும், சராசர ரூபமாயுமிருக்கின்ற உலகமானது திருப்தியடைகின்றது. ப்ரஹ்மதேவனே! பக்தனுடைய நாவின் நுனியினின்றும் ரசஸங்களைப் புசிக்கின்றேன். சாந்தகுணமுள்ள சிவயோகியின் பொருட்டு கேவலம் பிக்ஷைகொடுப்பதனாலுண்டாகின்ற பலனுக்குக் கோடிக்கணக்கான வேள்வியினாலுண்டாகின்ற பலன் சமானமாகாது.

இந்த வசநத்தின்படி ஜங்கமமூர்த்திகள் சிவபக்தனுக்குத் தினமும் கிடைத்தலரிதாதலின், நித்ய கர்மம் நிறைவேறுதன்றோ யெனின்,

[illegible]
[illegible]
ப்ராணலிங்க பரோ பக்தோ லப்த்வா தத்ர பதோதகம்|
குருஜங்கம பாதோதம் லப்த்வா சைவது பக்தித:||

(இ - ள்) பிராணலிங்கத்தைத் தரித்தவனாகிய பக்தன் அதன் பாதோதகத்தை அடைந்து, பக்தியினால் குருபாதோதகத்தை அடைந்து.

என்னும் வசநத்தின்படி குரு ஜங்கமர்கள் கிடைத்தலரிதாயின், லிங்கத்தினிடத்திலே த்ரிவித ப்ரஸாதங்களும், த்ரிவித தீர்த்தங்களும் சித்திக்கும். குருலிங்கங்கள் இரண்டும் உடைத்தாயிருந்தால்,

[illegible]
[illegible]

ஸமவாயே குரோஸ்தத்ர குரோர்லப்த்வா பதோதகம்|
பாதோதகம் ஜங்கமஸ்ய லப்த்வாந் மநஸைவதம்||

(இ - ள்) குருமுன்னிலையில் குருபாதோதகத்தை யடைந்தும், மனத்தில் ஜங்கம பாதோதகத்தை யடைந்தும்.

என்னும் வசநத்தின்படிக் குரு பாதோதகத்தையும், குரு ப்ரஸாதத்தையும் உட்கொண்டால், ஜங்கம பாதோதகமும் ஜங்கம ப்ரஸாதமும் சித்திப்பது போன்றதாம்.

[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

அகம்யகமநாஶ்சைவ பாபாசாரரதாஶ்ச யே।
தேவி பூதா பவந்த்யாஶு ஶிவபாதாம்புதாரணாத்॥
பாதோதகம் தரேத்யஸ்து லிங்கமூர்த்திஶ்ஶிவஸ்ய து।
ப்ரகாஶயதி தத்தோயம் ப்ரஹ்மஹத்யாதிபாதகம்॥
ஶம்போ: பாதோதகம் பீத்வா பஶ்சாதஶுசிஶங்கயா।
ய ஆசமதி மோஹேந தம் வித்யாத் ப்ரஹ்மகாதகம்॥
பாதோதகம் பரப்ரஹ்ம பவித்ரம் பாபநாஶநம்।
அஜடம் ஜடமிஶ்ரந்து யோ ஜாநாதி ஸபாதகீ॥

ப்ரஹ்மாண்ட புராணம்.

அகாலம்ருத்யுமதநம் ஸர்வவ்யாதிவிநாஶநம்।
ஸர்வபாபப்ரஶமநம் ஶம்போ: பாதோதகம் ஶுபம்॥
ஸர்வமங்களமாங்கள்யம் ஸர்வபாவநபாவநம்।
பாதோதகம் ஸர்வதீர்த்தபலதம் மூர்த்நி தாரணாத்॥
ஸர்வோத்பாதப்ரஶமநம் ஸர்வரோகப்ரபேதநம்।
ஸர்வக்ரஹோபஶமந மிஷ்டஸித்தி ப்ரதாயகம்॥
அகம்யகமநாஶ்சைவ பாபாசாரரதாஶ்ச யே।
தேபி பூதா பவந்த்யாஶு ஶிவபாதாம்புதாரணாத்॥
பாதோதகம் தரேத்யஸ்து லிங்கமூர்த்திஶ்ஶிவஸ்ய து।
ப்ரகாஶயதி தத்தோயம் ப்ரஹ்மஹத்யாதிபாதகம்॥
ஶம்போ: பாதோதகம் பீத்வா பஶ்சா தஶுசிஶங்கயா।
ய ஆசமதி மோஹேந தம் வித்யாத்ப்ரஹ்மகாதகம்॥
பாதோதகம் பரப்ரஹ்ம பவித்ர மகநாஶநம்।
அஜடம் ஜடமிஶ்ரந்து யோ ஜாநாதி ஸபாதகீ॥

(இ-ள்) சுபமான சிவலிங்க பாதோதக ஸ்வீகாரமானது அகாலத்திலுண்டாகின்ற மரணத்தைப் போக்குவதும், சகல வியாதிகளை நீக்குவதும், சகல பாபங்களைப் போக்குவதும், சகல மங்கலத்திற்கும் மங்கலமானதுமாகும். லிங்கமூர்த்தியின் பாதோதகத்தைச் சிரத்தினில் புரோக்ஷித்துக்கொள்வதனால் கங்காதி சகல தீர்த்தங்களினாலுண்டாகின்ற பலனைக் கொடுப்பதும், சகல அரிஷ்டங்களை யகற்றுவதும், சகல ரோகங்களைப் போக்குவதும், சகல துஷ்ட க்ரஹங்களைச் சாந்திசெய்வதும், இஷ்ட சித்திகளைக் கொடுப்பதுமாகும். சிவபாதோதகத்தைப் புரோக்ஷித்துக்கொள்வதனால் போகத்தகாத விடங்களில் சென்றவர்களும், பாபவினைகளில் ஈடுபட்டவர்களும் சீக்கிரத்தில் பரிசுத்தமடைகிறார்கள்.

சிவலிங்கதாரியாகிய எவனொருவன் சிவபாதோதகத்தைப் புரோக்ஷித்துக்கொள்ளுகிறானோ, அந்தத் தீர்த்தமானது ப்ரஹ்மஹத்யாதி பாதகங்களைப் பிரகாசப்படுத்தி விலக்கிவிடும். சிவபாதோதகத்தை ஸ்வீகரித்து, பிறகு அபரிசுத்தமென்று நினைத்து எவன் அஞ்ஞானத்தினால் ஆசமனம்செய்வானோ, அவன் ப்ரஹ்மகாதகனென்றறி. பரப்ரஹ்மஸ்வரூபமாயும், பரிசுத்தமாயும், பாபத்தைப் போக்கக்கூடினதும், ஜடமல்லாததுமான சிவபாதோதகத்தை ஜடத்தோடு கலந்ததாக எவன் அறிகிறானோ, அவன் அதமனெனப்படுவான். (முற்காலத்தில் சிவபாதோதகம், சிவநிர்மால்யமாகிய இவைகளினால் கூடின காற்றை ஆதிசேஷன் ஆகாரமாக உட்கொண்டதனால் பூபாரத்தைச் சுமக்கின்ற வல்லமை அவனுக்குண்டாயிற்று. மேலும் சர்ப்பராஜனென்னும் நிலையற்ற

ஆதிக்யமடையப் பெற்று, சிவபெருமானது திருவலயங்களில் ஆபரணமாகிப் பரிணமித்தான்).

𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌶𑍇𑌖𑌰𑌮𑍍.

𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑍂𑌲𑌨𑌾𑌶𑌾𑌯 𑌜𑌨𑍍𑌮𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌯𑍇 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌗𑍁𑌰𑍋𑌃 𑌪𑌾𑌦𑍋𑌦𑌕𑌂 𑌪𑌿𑌬𑍇𑌤𑍍 ॥
𑌅𑌭𑌿𑌷𑌿𑌕𑍍𑌤𑌜𑌲𑌂 𑌪𑍍𑌰𑌾𑌤𑌃 𑌪𑌿𑌬𑍇𑌨𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌦𑌿𑌨𑍇 𑌦𑌿𑌨𑍇 ।
𑌶𑍂𑌲𑌕𑍁𑌷𑍍𑌠𑌾𑌦𑍍𑌯𑌪𑌸𑍍𑌮𑌾𑌰𑌜𑍍𑌵𑌰𑌾𑌣𑌾𑌂 𑌭𑍇𑌷𑌜𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑍇 ।

ஸித்தாந்த ஶேகரம்.

*அவித்யாமூலநாஶாய ஜந்மகர்ம நிவ்ருத்தயே।*
*ஜ்ஞாநவைராக்யஸித்யர்த்தம் குரோ: பாதோதகம் பிபேத்॥*
*அபிஷிக்தஜலம்ப்ராத: பிபேந்நித்யம் திநேதிநே।*
*ஶூலகுஷ்டாத்யபஸ்மார ஜ்வராணாம் பேஷஜம் ப்ரியே॥*

(இ - ள்) அஜ்ஞானத்திற்கு மூலமாயிருப்பதை நசிக்கச்செய்வதின்பொருட்டும், ஜந்ம கர்மங்களை நிவர்த்திசெய்யும் பொருட்டும், ஞானவைராக்கியங்கள் சித்தியாதற் பொருட்டும் குருபாதோதகத்தை உட்கொள்ளல்வேண்டும். தேவியே! சூலம், குஷ்டம் முதலிய விஷவியாதிகளுக்கு ஔஷதமாகிய பாதோதகத்தைக் காலையில் தினந்தோறும் தவிராமல் உட்கொள்ளல் வேண்டும்.

𑌸𑍍𑌕𑌾𑌨𑍍𑌦𑌮𑍍.

𑌪𑍍𑌰𑌾𑌣𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌙𑍍𑌗𑌸𑌮𑍍𑌪𑌰𑍍𑌤𑌿 𑌪𑌾𑌦𑌪𑍍𑌰𑌕𑍍𑌷𑌾𑌲𑌨𑍋𑌦𑌕𑌮𑍍 ।
𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌙𑍍𑌗𑌸𑌙𑍍𑌗𑌸𑌹𑌿𑌤𑍈𑌃 𑌪𑌿𑌬𑍇𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌪𑍁𑌣𑍍𑌯𑌦𑌮𑍍 ॥

ஸ்காந்தம்.

*ப்ராணலிங்காங்கஸம்பர்த்தி பாதப்ரக்ஷாள நோதகம்।*
*லிங்காங்க ஸங்கஸஹிதை: பிபேத்தத்தஸ்ய புண்யதம்॥*

(இ - ள்) அவரவர்கள் புண்ணியத்திற் கேற்பப் பலத்தைத் தரத்தக்க பிராண லிங்கியாகிய ஜங்கமனது பாதோதகத்தை லிங்கதாரிகளுடன் உட்கொள்ளல் வேண்டும்.

𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌪𑍁𑌰𑌾𑌣𑌮𑍍.

𑌪𑌾𑌦𑍋𑌦𑌕𑌂 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌨𑍍𑌨𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌾𑌸𑍇𑌵𑌤𑌾𑌂 𑌨𑍃𑌣𑌾𑌮𑍍 ।
𑌦𑌶𑌪𑌾𑌤𑌕𑌨𑌾𑌶𑌸𑍍𑌤𑍁 𑌕𑌥𑍍𑌯𑌤𑍇 𑌗𑌣𑌪𑍁𑌙𑍍𑌗𑌵𑍈𑌃 ॥

ஆதித்யபுராணம்.

*பாதோதகம் ப்ரஸாதாந்நம் நித்யமாஸேவதாம் ந்ருணாம்।*
*தஶபாதகநாஶஸ்து கத்யதே கணபுங்கவை:॥*

(இ - ள்) பாதோதகத்தையும், ப்ரஸாதத்தையும் தவிராமல் புசிப்பவர்களுக்குப் பத்து விதமான பாதகங்கள் நாசமாகுமென்று சிவகண ஶ்ரேஷ்டர்களால் சொல்லப் படுகிறது.

𑌵𑍀𑌰𑌾𑌗𑌮𑍇.

𑌪𑌾𑌕𑌾𑌰𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌦𑍋𑌕𑌾𑌰𑍋 𑌦𑍋𑌷𑌨𑌾𑌶𑌕𑌃।
𑌦𑌕𑌾𑌰𑍋 𑌜𑌨𑍍𑌮 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌕𑌕𑌾𑌰𑌃 𑌕𑌰𑍍𑌮𑌨𑌾𑌶𑌨𑌃।
𑌗𑌙𑍍𑌗𑌾𑌦𑌿𑌸𑌰𑍍𑌵𑌤𑍀𑌰𑍍𑌥𑌾𑌨𑌿 𑌮𑌾𑌲𑌿𑌨𑍍𑌯𑌂 𑌕𑍃𑌨𑍍𑌤𑌿 𑌬𑌾𑌹𑍍𑌯𑌕𑌮𑍍।
𑌜𑌙𑍍𑌗𑌮𑌸𑍍𑌯 𑌪𑌦𑌾𑌮𑍍𑌭𑍋𑌜𑌸𑌲𑌿𑌲𑌂 𑌪𑌾𑌪𑌨𑌾𑌶𑌨𑌮𑍍।
𑌗𑍁𑌰𑍁𑌪𑌾𑌦𑍋𑌦𑌕𑌂 𑌗𑌙𑍍𑌗𑌾 𑌨𑌾𑌤𑍍𑌰 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾 𑌵𑌿𑌚𑌾𑌰𑌣𑌾।
𑌅𑌹𑌮𑌤𑍍𑌰𑌰𑌹𑌸𑍍𑌯𑌂 𑌤𑍇 𑌕𑌥𑌯𑌾𑌮𑌿 𑌶𑍃𑌣𑍁𑌷𑍍𑌵 𑌤𑌤𑍍॥
𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍋𑌦𑌕𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌾𑌤𑍍𑌪𑍁𑌣𑍍𑌯𑌮𑌤𑍍𑌰 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇।
𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍋𑌦𑌕𑌂 𑌪𑍀𑌤𑍍𑌵𑌾 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌤𑌤𑍍𑌕𑍍𑌷𑌣𑌾𑌤𑍍॥
𑌪𑍍𑌰𑌾𑌯𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌯𑌦𑌿 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌂 𑌕𑍃𑌚𑍍𑌛𑍍𑌰𑌂 𑌵𑌾𑌪𑍍𑌯𑌘𑌮𑌰𑍍𑌷𑌣𑌮𑍍।
𑌸 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍋𑌦𑌕𑌂 𑌪𑍀𑌤𑍍𑌵𑌾 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌤𑌤𑍍𑌕𑍍𑌷𑌣𑌾𑌤𑍍॥

வீராகமம்.

*பாகாரம் பரமம் ஜ்ஞாநம் தோகாரோ தோஷநாஶக꞉|*
*தகாரோ ஜந்மஹந்தி ககார꞉ கர்ம நாஶந꞉||*
*கங்காதி ஸர்வதீர்த்தாநி மாலிந்யம் க்ருந்தி பாஹ்யகம்|*
*ஜங்கமஸ்ய பதாம்போஜ ஸலிலம் பாபநாஶநம்||*
*குருபாதோதகம் கங்கா நாத்ர கார்யா விசாரணா|*
*அஹமத்ரரஹஸ்யம் தே கதயாமி ஶ்ருணுஷ்வதத்||*
*தத்ப்ரஸாதோதக ஸ்பர்ஶாத்புண்யமத்ரநவித்யதே|*
*தத்ப்ரஸாதோதகம் பீத்வா ஸித்தி மாப்நோதி தத்க்ஷணாத்||*
*ப்ராயஶ்சித்தம் யதி ப்ராப்தம் க்ருச்ச்ரம்வாப்யகமர்ஷணம்|*
*ஸ ப்ரஸாதோதகம் பீத்வா ஸித்திமாப்நோதி தத்க்ஷணாத்||*

(இ-ள்) பா என்பது உத்தம ஞானமாகும். தோ என்பது தோஷத்தை நிவர்த்திப்பதாகும். த என்பது ஜந்மத்தைச் சுடுவதாகும். க என்பது கர்மத்தை நாசஞ்செய்வதாகும். கங்கை முதலிய தீர்த்தங்கள் புறத்திலுள்ள அழுக்கைப் போக்குவதாகும். ஜங்கம பாதோதகமானது பாவத்தைப் போக்குவதாகும். குருபாதோதகமானது கங்கையெனப்படும். இதைப்பற்றி வேறுவிதமாக யோசிக்கவேண்டாம். நான் வேறுவிதமான ரஹஸ்யங்களைச் சொல்லப்போகிறேன். ஜங்கமனது பாதோதகம், ப்ரஸாதமாகிய இவற்றைப் பரிசிப்பதனால் புண்ணியமுண்டாகும். இதனினும் மேலான புண்ணியமில்லை. ஜங்கமனுடைய ப்ரஸாதத்தையும், பாதோதகத்தையும் உட்கொண்டு, அதனால் அவன் அக்ஷணமே சித்தியடைகிறான். கிருச்சரம், அகமர்ஷணமாகிய பிராயச்சித்தங்கள் யாதேனும் செய்ய நேரிடின், அவன் ஜங்கம ப்ரஸாதத்தையும், பாதோதகத்தையும் உட்கொண்டு, அதனால் அக்ஷணமே சித்தியடைகிறான்.

𑌸𑍍𑌕𑌾𑌨𑍍𑌦𑌪𑍁𑌰𑌾𑌣𑍇.

𑌶𑌿𑌵𑌾𑌤𑍍𑌮𑌕𑌪𑌦𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 𑌪𑍍𑌰𑌕𑍍𑌷𑌾𑌳𑌨𑌜𑌲𑌂 𑌨𑌰𑌾𑌃।
𑌯𑍇 𑌪𑌿𑌬𑌨𑍍𑌤𑌿 𑌪𑍁𑌨𑌸𑍍𑌤𑌨𑍍𑌯𑌂 𑌨 𑌪𑌿𑌬𑌨𑍍𑌤𑌿 𑌕𑌦𑌾𑌚𑌨॥

ப்ரஹ்மாண்ட புராணம்.

*ஶிவாத்மகபதத்வாத்வ ப்ரக்ஷாளநஜலம் நரா꞉|*
*யே பிபந்தி புநஸ்தந்யம் ந பிபந்தி கதாசந||*

(இ - ள்) சிவசம்பந்தமான பாதோதகத்தை யார் உட்கொள்ளுகிறார்களோ, அவர்கள் எக்காலத்திலும் வேறு ஜலத்தை உட்கொள்ளமாட்டார்கள்.

வைத்யஶாஸ்த்ரம்.

இதிஹாஸபுராணேஷு ஶிவஸ்யாப்யதிதிர்குருः।
அதிதேः பாத ஸலிலமதிகம் ஹி ஜகத்ரயே॥

வைத்ய ஶாஸ்த்ரம்.

இதிஹாஸபுராணேஷு ஶிவஸ்யாப்யதிதிர்குருः।
அதிதேः பாத ஸலிலமதிகம் ஹி ஜகத்ரயே॥

(இ - ள்) மூவுலகத்திற்கும் அன்னையே! சிவபெருமானினும் ஜங்கமன் சிறந்தவன்; அவனினும் பாதோதகம் சிறந்ததன்றோ? என்று இதிஹாஸ புராணங்கள் கூறும்.

ஸ்காந்தம்.

குரோரங்க்ரிஸ்ப்ருஶந்தோயம் ஶிரஸாதாரயந் ஸக்ருத்।
ஸர்வதீர்த்தாபிஷேகஸ்ய பலமாப்னோதி மாநவः॥

ஸ்காந்தம்.

குரோரங்க்ரிஸ்ப்ருஶந்தோயம் ஶிரஸாதாரயந் ஸக்ருத்।
ஸர்வதீர்த்தாபிஷேகஸ்ய பலமாப்னோதி மாநவः॥

(இ - ள்) மனிதன் குருபாதோதகத்தைச் சிரத்தினில் ஒருக்கால் புரோக்ஷிப்பானாயின், ஸர்வ தீர்த்தாபிஷேக பலத்தை யடைகிறான்.

ஶிவரஹஸ்யம்.

ப்ரோக்ஷணம் பாபபங்கஸ்ய தீபநம் ஜ்ஞாநதேஜஸः।
குருபாதோதகம் சித்ரம் ஸம்ஸாரத்ரும நாஶநம்॥
ஜங்கமாங்க்ரிஸ்ததோயோத்த பிந்து ஸம்யுத மாருதம்।
புபுஜே புஜகஸ்தேந தஸ்கரஶ்சோரோ விமுக்தவாந்॥

ஶிவரஹஸ்யம்.

ப்ரோக்ஷணம் பாபபங்கஸ்ய தீபநம் ஜ்ஞாநதேஜஸः।
குருபாதோதகம் சித்ரம் ஸம்ஸாரத்ரும நாஶநம்॥
ஜங்கமாங்க்ரிஸ்ததோயோத்த பிந்து ஸம்யுத மாருதம்।
புபுஜே புஜகஸ்தேந தஷ்டஶ்சோரோ விமுக்தவாந்॥

(இ - ள்) குருபாதோதகமானது பாபமாகிய சேற்றை வறளச்செய்யும், ஜ்ஞாநப்ரகாஶத்தை வளரச்செய்யும், விசித்திரமாயுள்ளது, ஸம்ஸாரமாகிய விருக்ஷத்தை யழிக்கும். ஜங்கம பாதோதக ரேணுவுடன் சம்பந்தப்பட்ட காற்றைச் சர்ப்பம் புசித்தது; அதனால் கடியுண்ட திருடன் மரணத்தினின்றும் விடுபட்டான்.

ப்ரஹ்மாண்டபுராணம்.

ஸத்யஸாமர்த்யஸம்பந்நம் தீர்த்தஸாந்நித்ய ஸம்யுதம்।
குரோரங்க்ரிஜலம் பிந்துமாத்ரம் ஸம்ஸாரநாஶநம் ஹி॥

## ப்ரஹ்மாண்ட புராணம்.

ஸப்தஸாகரபர்யந்த தீர்த்தஸ்நாநபலம்மஹத்|
குரோரங்க்ரிஜலே பிந்து ஸஹஸ்ராம்ஶ ஸமம் ந ஹி||

(இ-ள்) ஸப்தஸாகர பர்யந்தமுள்ள தீர்த்தங்களின் ஸ்நானத்தினுலுண்டாகின்ற பலனனது சிறந்ததே; ஆனல் அது குருபாதோதக ரேணுவினுலுண்டாகின்ற பலத்தில் ஆயிரத்திலொரு அம்சத்திற்குச் சமானமாகாது.

## 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌮𑌹𑌿𑌮𑌾.

𑌪𑍍𑌰𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 𑌶𑌿𑌵𑍋 𑌜𑍍𑌞𑍇𑌯 𑌸𑌾𑌶𑌬𑍍𑌦𑌾 𑌚𑍍𑌛𑌕𑍍𑌤𑌿𑌰𑍁𑌚𑍍𑌯𑌤𑍇।
𑌤𑌯𑍋𑌰𑍍𑌯𑍋𑌗𑌸𑍍𑌤𑍁 𑌤𑌂 𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌵𑌰𑍍𑌣𑌮𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇।
𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍋 𑌯𑌂 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌸𑌾𑌕𑌾𑌰𑍋 𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑍁𑌚𑍍𑌯𑌤𑍇।
𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌪𑍂𑌰𑍍𑌵𑌿𑌕𑌾 𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌦𑍇𑌤𑌿 𑌦𑌕𑌾𑌰𑌤𑌃।
𑌪𑍍𑌰𑌶𑌬𑍍𑌦𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑌾𑌶𑌬𑍍𑌦𑍋 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌧𑌨𑌮𑍍।
𑌦 𑌶𑌬𑍍𑌦𑍋 𑌧𑌰𑍍𑌮𑌰𑍂𑌪𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍋 𑌹𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇।
𑌗𑍁𑌰𑍁𑌜𑌙𑍍𑌗𑌮𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌨𑌾𑌂 𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌲𑍍𑌯𑌂 𑌭𑍁𑌕𑍍𑌤𑌶𑌿𑌷𑍍𑌟𑌕𑌮𑍍।
𑌸𑌦𑍍𑌮𑍇 𑌵𑌾𑌨𑌾𑌨𑍁𑌭𑌵𑍇𑌦𑍍 𑌦𑍇𑌵𑌿 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌸𑍍𑌥𑌲𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍॥

## ப்ரஸாத மஹிமா.

ப்ரஶப்தேந ஶிவோஜ்ஞேயஸ்ஸாஶப்தாச்சக்திருச்யதே|
தயோர்யோகஸ்து தம் ஶப்தஸ்த்ரிவர்ணமபிதீயதே||
ப்ரகாரோ தம் ப்ரஸாதஸ்ஸ்யாத்ஸாகாரோ பக்திருச்யதே|
ப்ரஸாதபூர்விகாபக்திர்முக்திதேதி தகாரத:||
ப்ரஶப்த: பரமம் ஜ்ஞாநம் ஸாஶப்தோ முக்திஸாதநம்|
த ஶப்தோ தர்மரூபஶ்ச ப்ரஸாதோ ஹ்யபிதீயதே||
குருஜங்கமலிங்காநாம் நிர்மால்யம் புக்தஶிஷ்டகம்|
ஸத்மேவாநுபவேத்தேவீ ப்ரஸாதஸ்தலமுத்தமம்||

(இ-ள்) **ப்ர** என்பது சிவபெருமானென்று அறியத்தக்கது. **ஸா** என்பது சக்தியென்று சொல்லப்படும். அவ்விரண்டு அக்ஷரங்களின் சேர்க்கையே **தம்** பதமாகும். அதே மூன்று அக்ஷரங்களென்று சொல்லப்படும். **ப்ர** என்பது ப்ரஸாதமாகும். ஸா என்பது பக்தியாகும். ப்ரஸாதத்தை முன்னிட்ட பக்தியானது **த** என்பதனுல் முக்திகொடுக்கும். **ப்ர** என்பது உத்தம ஞானமாகும். ஸா என்பது முக்திஸாதனமாகும். **த** என்பது தர்மரூபமாகும். ஆகவே ப்ரஸாதமென்று சொல்லப்படும். தேவியே! குருஜங்கமர்கள் உண்டு மீதியாயிருக்கின்ற ப்ரஸாதமானது வீட்டிலே உண்ணத்தக்கது. அவ்விடமே ப்ரஸாதத்தை உட்கொள்ளச் சிறந்த ஸ்தலமாகும். (சாதாரணமாகச் சிவபக்தன் தான் உண்ணவேண்டியதற்குத்தக்க பதார்த்தங்களை பரிமாறிக்கொண்டு, சிவார்ப்பிதமான உணவை மிச்சப்படுத்தாமல் வீட்டிலே உண்ணல்வேண்டும். அளவுக்கு மிஞ்சின உணவை பரிமாறிக்கொண்டு சிவார்ப்பிதமான உணவைத் தெருவில் எறிவானுயின் நாய் முதலிய நீசப்ராணிகள் வாய் வைப்பதனுல் மிகுந்த பாவமுண்டாகும். சிவபக்தனுடைய உணவே இவ்விதமாயின், சிவஸ்வரூபமுள்ள ஜங்கமனது ப்ரஸாதத்தை வெளியில் உண்டாலும், இட்டாலும் யாது விபரீதம் உண்டாகும்?) (௩அ)

சேக்க ரஞ்சடை யீசன டியவர்
செய்ய தாளின்செ ருப்பின்கு ணுக்கினை
மிக்க சென்னிக ளங்கரஞ் சேர்த்தவர்
மேவு பாதத்து கடிரு நீறதாய்ப்
பக்க மாகவ ணிந்தப்பு ரப்புடைப்
பாவு மூவிரு காதத்துட் பத்தர்தா
முக்க ணெந்தைத வத்தினர் பூசனை
முயலக் கேட்டிடின் மோகத்தி லேகுவார்.

(ப - ரை.) செக்கர் - செந்நிறமுள்ள, அம் - அழகிய, சடை - திருமுடியை யுடைய, ஈசன் - சிவபெருமானுக்கு அன்புசெய்கின்ற, அடியவர் - சரணராகிய ஜங்கமமூர்த்திகளது, செய்ய - அழகிய, தாளின் - பாதங்களிலிருக்கின்ற, செருப்பின் - செருப்பிலுள்ள, குணுக்கினை - துண்டுகளையே, மிக்க - மேன்மையாகிய, சென்னி - சிரத்திலும், களம் - கண்டத்திலும், கரம் - கைகளிலும், சேர்த்தவர் - பூஷணமாகத் தரித்திருப்பவர், மேவும் - படிந்திருக்கின்ற, அவர் - அவர்களுடைய, பாதத்துகள் - பாததூளியையே, திருநீறு அது ஆய் - அந்த மேன்மையாகிய விபூதியாக, பக்கமாக - விருப்பத்துடன், அணிந்து - உத்தூளனஞ்செய்து, அ - அந்த, புரம் - நகரத்திற்கு, புடை - பக்கத்தில், பாவும் - விசாலித்திருக்கின்ற, மூவிருகாதத்துள் - ஆறுகாத தூரவழியிலுள்ள ஊரில், பத்தர் தாம்-சிவபக்தர்கள், முக்கண் - த்ரிநேத்ரதாரியாகிய, எந்தை - சிவபெருமானையே நோக்கி, தவத்தினர் - வீரவிரதத்தை யநுஷ்டிக்கின்ற ஜங்கமமூர்த்திகளது, பூசனை - ஆராதனை, முயல - செய்யப்போகின்ற செய்தியை, கேட்டிடின் - கேட்பாராயின், மோகத்து - அன்புடன், ஏகுவார் - போவார், எ - று.

(போ - ரை.) செந்நிறமுள்ள அழகிய திருமுடியையுடைய சிவபெருமானுக்கு அன்புசெய்கின்ற சரணராகிய ஜங்கமமூர்த்திகளது அழகிய பாதங்களிலிருக்கின்ற செருப்பிலுள்ள துண்டுகளையே மேன்மையாகிய சிரத்திலும், கண்டத்திலும், கைகளிலும் பூஷணமாகத் தரித்திருப்பவர்; படிந்திருக்கின்ற அவர்களுடைய பாததூளியையே அந்த மேன்மையாகிய விபூதியாக விருப்பத்துடன் உத்தூளனஞ்செய்து, அந்த நகரத்திற்குப் பக்கத்தில் விசாலித்திருக்கின்ற ஆறு காததூரவழியிலுள்ள ஊரில் சிவ பக்தர்கள் த்ரிநேத்ரதாரியாகிய சிவபெருமானையே நோக்கி வீரவிரதத்தை யநுஷ்டிக்கின்ற ஜங்கமமூர்த்திகளது ஆராதனை செய்கின்ற செய்தியைக் கேட்பாராயின் அன்புடன் போவார்.

(வி - ரை.) காதம் - நாலு கூப்பிடுகொண்ட தூரம். (௩௧)

சூல வண்டியின் மீதுவி டைக்கொடி
தோர ணங்கள்ச வரந்து லங்கவண்
காலு லாவுமெ ருத்தங்க ழுத்தெலாங்
கண்டை கண்டிகை கூட்டிக்க னகப்பூண்
மேல தாமிரு கோட்டினி லேற்றியோர்
மிக்க தாளிற்ச தங்கைக ளார்ப்புடன்
கோல மேவிந டக்கமுன் சென்றுதாங்
குலவிச் சாங்குப லாவெனக் கூறியே.

(ப-ரை.) சூலவண்டியின்மீது-சூலமுத்திரை போட்ட வண்டியின் மேல், விடைக் கொடி-நந்தி த்வஜத்தையும், தோரணங்கள் - தோரணங்களையும், சவரம்-சாமரங்களை யும், துலங்க-விளங்கக் கட்டி, வள் - பலமுள்ளதும்; கால் உலாவும்-வாயுவேகமாயோடு கின்றதுமாகிய, எருத்தம் - எருதின், கழுத்து எல்லாம் - கண்டம் சுற்றிலும்,

கண்டை-பெரிய மணிகளையும், கண்டிகை - ருத்ராக்ஷ மாலைகளையும், கூட்டி - பூட்டி, கனகப் பூண் - பொன்னுபரணங்களை, மேல் ஆம் - மேன்மையாகிய, இரு - இரண்டு, கோட்டினில் - கொம்புகளில், ஏற்றி - பூட்டி, ஏர் மிக்க - மிகவும் அழகுபொருந்திய, தாளில்-கால்களில் (பூட்டியிருக்கின்ற), சதங்கைகள் - சலங்கைகளின், ஆர்ப்புடன் - ஓசை யோடு, கோலம் மேவி - அழகாக, நடக்க - (அது) போகவும், தாம்—, முன் சென்று-முன்னே நடந்து, குலவி - சந்தோஷத்துடன், சாங்கு - ஓட்டமாகச்செல், பலா-பலே, என்ன - என்று (எருதை) அதட்டி, கூறி - ஆரவாரஞ்செய்து, எ - று.

(போ - ரை.) குலமுத்திரை போட்ட வண்டியின்மேல் நந்தி த்வஜத்தையும், தோரணங்களையும், சாமரங்களையும் விளங்கக் கட்டி, பலமுள்ளதும், வாயுவேகமா யோடுகின்றதுமாகிய எருதின் கண்டம் சுற்றிலும் பெரிய மணிகளையும், ருத்ராக்ஷ மாலைகளையும் பூட்டி, பொன்னுபரணங்களை மேன்மையாகிய இரண்டு கொம்புகளில் பூட்டி, மிகவும் அழகு பொருந்திய கால்களில் பூட்டியிருக்கின்ற சலங்கைகளின் ஓசை யோடு அழகாக அது போகவும், தாம் முன்னே நடந்து, சந்தோஷத்துடன் ஓட்ட மாகச் செல்; பலே ! என்று எருதை அதட்டி, ஆரவாரஞ்செய்து.

(வி - ரை.) எருத்தம் - எருது என்பதன் மரூஉ. மேல் ஆம் - வேலையிருக் கின்ற எனினுமாம். சாங்கு-சாகு என்னும் திசைச்சொற்றிரிபு; சீக்கிரமாகப் போ என்பது பொருள். (௬௦)

சென்று சங்கம பூசனை யூருழிச்
சேர்ந்த மாதவர் தாளிற்ப ணிந்தவ
ரன்ற ருந்திமி குந்துறுஞ் சேடம
தாவி போல வகத்துனிச் சேர்த்திடாத்
துன்று வண்டியின் மீதினி லேற்றிவண்
சுத்த முத்திப்ப தமிது வென்னவே
யொன்று தம்மடங் கொண்டிபு குந்தபி
னுற்ற நண்பி லருந்தியு வக்குநாள்.

(ப - ரை.) சென்று - (ஆரவாரஞ்செய்து) போய், சங்கமபூசனை - ஜங்கமாரா தனை நடக்கின்ற, ஊர் உழி - ஊரில், சேர்ந்த - நிறைந்திருக்கின்ற, மாதவர் - ஜங்கம மூர்த்திகளுடைய, தாளில் - பாதங்களில், பணிந்து - (ஸாஷ்டாங்கமாக) வணங்கி, அவர் - அவர்கள், அன்று - அப்போது, அருந்தி - உண்டு, மிகுந்து உறும் - மிச்சமா யிருக்கின்ற, சேடம் அது - அந்தப் பரிசுத்தமான சேஷப்ரஸாதங்களையெல்லாம், ஆவி போல-உயிராக, அகத்து-மனத்தில், உன்னி-பாவித்து, சேர்த்து இடா-சேர்த்திட்டு, துன்று - அடுத்திருக்கின்ற, வண்டியின் மீதினில் - வண்டியின் மேல், ஏற்றி-சுமத்தி, வள்-மேன்மையானதும், சுத்தம் - பரிசுத்தமானதுமாகிய, முத்திப்பதம்-மோக்ஷபதவி, இது - இதுவே, என்ன - என்று நினைத்து, ஒன்று - ஒப்பற்ற, தம் - தமது, மடம் - திருமடத்தில், கொண்டு - எடுத்துக்கொண்டு வந்து, புகுந்த பின் - சேர்ந்த பிறகு, உற்ற - மிகுந்த, நண்பில் - அன்புடன், அருந்தி - உண்டு, உவக்கும் நாள் - சந்தோ ஷிக்கின்ற காலத்தில், எ - று.

(போ-ரை.) ஆரவாரஞ்செய்து போய், ஜங்கமாராதனை நடக்கின்ற ஊரில் நிறை ந்திருக்கின்ற ஜங்கமமூர்த்திகளுடைய பாதங்களில் ஸாஷ்டாங்கமாக வணங்கி, அவர் கள் அப்போது உண்டு மிச்சமாயிருக்கின்ற அந்தப் பரிசுத்தமான சேஷப்ரஸாதங் களையெல்லாம் உயிராக மனத்தில் பாவித்து, சேர்த்திட்டு, அடுத்திருக்கின்ற வண்டி யின்மேல் சுமத்தி, மேன்மையானதும், பரிசுத்தமானதுமாகிய மோக்ஷபதவி இதுவே

யென்று நினைத்து, ஒப்பற்ற தமது திருமடத்தில் எடுத்துக்கொண்டு வந்து சேர்த்த பிறகு, மிகுந்த அன்புடன் உண்டு சந்தோஷிக்கின்ற காலத்தில். (சுசு)

இன்ன செய்தியை யந்தணர் கண்டுகண்
டென்னி தென்னவெ னச்செவிச் சொல்லரா
யுன்னு நாளிலவ் வூரிற்றி ருக்குலத்
தொருவ ரில்லிலிச் செய்தியு றுதலா
லன்ன செய்திய றிந்திவர் சென்றவ
ராருஞ் சேடங்கள் வண்டியிற் பெய்துபின்
மின்னு மம்பர மேலுற வேமறை
மிக்க வேதியர் வீதியுட் செல்லலும்.

(ப-ரை.) இன்ன செய்தியை-இந்தச் செய்கையை, அந்தணர்-ப்ராஹ்மணர்கள், கண்டு கண்டு - பார்த்துப் பார்த்து, என் - என்ன, இது என் - இது என்ன, என்ன-என்று (சொல்லி அருசமடைந்து), செவிச்சொல்லராய்-ரஹஸ்யமாய்ப் பேசிக்கொள்பவர்களாகி, உன்னும் - ஆலோசிக்கின்ற, நாளில் - காலத்தில், அ - அந்த, ஊரில்—, திருக்குலத்து - திருக்குலத்தாராகிய, ஒருவர் - ஒரு சிவசரணரது, இல்லில் - வீட்டில், இ - இந்த, செய்தி - ஜங்கமாராதன ஸம்ப்ரமம், உறுதலால் - நடப்பதனால், அன்ன - அந்த, செய்தி - சமாசாரத்தை, அறிந்து - உணர்ந்து, இவர்—, சென்று - போய், அவர் - அவர்கள், ஆரும் - உண்டு மிச்சமாயிருக்கின்ற, சேடங்கள் - சேஷப்ரஸாதங்களை (எல்லாம் சேர்த்து எடுத்து), வண்டியில்—, பெய்து - கொட்டி, பின்-பிறகு, மின்னும் - பிரகாசிக்கின்ற, அம்பரம் - பட்டு வஸ்த்ரத்தை, மேல் உற - மேலே மிகுதியாய் மூடி, மறை மிக்க - வேதகோஷம் மிகுதியாயிருக்கின்ற, வேதியர் வீதியுள் - அக்ரஹாரத் தெருவில், செல்லலும் - சென்ற மாத்திரத்தில், எ - று.

(பொ-ரை,) இந்தச் செய்கையை ப்ராஹ்மணர்கள் பார்த்துப் பார்த்து, என்ன! இதென்ன! என்று சொல்லி, அருசமடைந்து, ரஹஸ்யமாய்ப் பேசிக்கொள்பவர்களாகி, ஆலோசிக்கின்ற காலத்தில், அந்த ஊரில் திருக்குலத்தாராகிய ஒரு சிவசரணரது வீட்டில் இந்த ஜங்கமாராதன ஸம்ப்ரமம் நடப்பதனால், அந்தச் சமாசாரத்தை யுணர்ந்து, இவர் போய் அவர்கள் உண்டு மிச்சமாயிருக்கின்ற சேஷப்ரஸாதங்களை யெல்லாம் சேர்த்தெடுத்து, வண்டியில் கொட்டி, பிறகு பிரகாசிக்கின்ற பட்டு வஸ்த்ரத்தை மேலே மிகுதியாக மூடி, வேதகோஷம் மிகுந்திருக்கின்ற அக்ரஹாரத் தெருவில் சென்ற மாத்திரத்தில். (சுஎ)

அந்த ணாள ரதுகண் டடர்ந்தெழுந்
தையர் பிப்பபாச் சையரை நோக்கிமே
யிந்த வண்டியின் மேற்கொடு செல்லுமத்
தென்னி தென்னச்செ னவிருத் தங்கடான்
சந்த வெள்ளிக்க யிலையி னின்றுதான்
சாரப் போகின்ற தன்மைய தோவிது
நிந்தை யினர தமர்த மிச்சிலெ
நெடிய வீதியு ணீர்கொடு செல்வதென்.

(ப - ரை.) அந்தணாளர் - ப்ராஹ்மணர்கள், அது - அந்த ஜங்கம ப்ரஸாதத்தைக் கொண்டுவருவதை, கண்டு - பார்த்து, அடர்ந்து எழுந்து - கோவித்தெழுந்து, ஐயர் - வீரசைவ ப்ராஹ்மணராகிய, பிப்பபாச்சையரை—, நோக்கி - பார்த்து, இந்த வண்டியின்மேல்—, கொடுசெல்லும் - ஏற்றிக்கொண்டுபோகின்ற, அது - அந்தப்

பண்டம், என் - யாது, இது என்ன—, ஜனவிருத்தங்கள் தான் - ஊர்ஜன விரோதமாகும், இது - இந்தச் செய்கை, சந்தம் - அழகுபொருந்திய, வெள்ளிக்கயிலையின் - ஸ்ரீமஹாகைலாஸத்தில், இன்று தான் - இப்போதே, சாரப்போகின்ற - சேரப்போகின்ற, தன்மையதே - பெருமையுடையதோ, நிந்தை - பழிப்பினையுடையவரும், ஈனர் - குலஹீனரும், அதமர் தம் - சண்டாளருமாகிய இவர்களுடைய, மிச்சில் - எச்சிற்சோற்றை, எம் - எங்களுடைய, நெடிய வீதியுள் - ராஜபாட்டையில், நீர்—, கொடுசெல்வது - ஏற்றிக்கொண்டுபோதற்குக் காரணம், என் - யாது, எ-று.

(பொ-ரை.) ப்ராஹ்மணர்கள் அந்த ஜங்கம ப்ரஸாதத்தைக் கொண்டுவருவதைப் பார்த்து, கோவித்தெழுந்து, வீரசைவ ப்ராஹ்மணராகிய பிப்பபாச்சையரை நோக்கி, இந்த வண்டியின்மேல் ஏற்றிக்கொண்டுபோகின்ற அந்தப்பண்டம் யாது? இதென்ன? ஊர்ஜன விரோதமான கார்யமாகும்; இந்தச் செய்கை அழகுபொருந்திய ஸ்ரீமஹாகைலாஸத்தில் இப்போதே சேரப்போகின்ற பெருமையுடையதோ? பழிப்பினையுடையவரும், குலஹீனரும், சண்டாளருமாகிய இவர்களுடைய எச்சிற்சோற்றை எங்களுடைய ராஜபாட்டையில் நீர் ஏற்றிக்கொண்டு போதற்குக் காரணம் யாது?

(வி - ரை.) பிப்பபாச்சையர் செய்யும் ஸத்கார்யத்தினால் இன்றே சிவலோக ப்ராப்தியாதல் நிச்சயமல்லவாதலினாலும், ப்ராஹ்மணர்கள் விரோதஞ்செய்து சேர்ந்து புடைக்கப் போவதால் மரணம் நேரிடுதல் நிச்சயமாதலினாலும் கயிலையினின்று தான் சாரப்போகின்ற தன்மையதோ வென்றார். (௩௩)

இத்தை யோர்பொரு ளாகம றைத்துமே
 விடப மாக்கொடி யேற்றியெம் மூருளே
சுத்தர் போலவ ருகின்ற வும்மையாஞ்
 சொல்ல வஞ்சுதுந் தூரவிவ் வூரைவிட்
டெத்த லத்திடை யாகினு மேகுநீ
 ரெங்க ளுக்கிது சற்றுமி தமல
வொத்து நும்பெரு மைக்கிங் கதிகநா
 முன்னொ ணாதென்று ணர்ந்துபொ றுத்தனம்.

(ப-ரை.) இத்தை-இந்த எச்சிற் சோற்றை, ஓர்-ஒப்பற்ற, பொருளாக - பாக்யம் போல, மறைத்து - மூடி, மேல் - மேலே, மா - பெரிய, இடபக்கொடி - நந்தி த்வஜத்தையும், ஏற்றி - உயர்த்திக்கட்டி, எம் - எங்கள், ஊர் உள்ளே-அக்ரஹாரத்திலே, சுத்தர்போல-பரமபவித்திரரைப்போல, வருகின்ற-செல்லுகின்ற, உம்மை—, யாம்-நாங்கள், சொல்ல-(ஒன்றும்) பேச, அஞ்சுதும் - பயப்படுகிறோம், நீர்—, இந்த—, ஊரை-அக்ரஹாரத்தை, விட்டு—, தூர - தூரமாக, எத்தலத்திடையாகினும் - எவ்விடத்திலாயினும், ஏகும்-போம், எங்களுக்கு—, இது - இந்த அடாத கார்யம், சற்றும் - கிஞ்சித்தேனும், இதம் அல்ல-இஷ்டமில்லை, ஒத்தும் - விலகிப்போம், நும்-உமது, பெருமைக்கு-பெருந்தன்மைக்கு, இங்கு - இவ்விடத்தில், நாம் - நாங்கள், அதிகம் - அதிகமாக, உன் ஒணாது - (இன்னும் ஒன்றையும் செய்ய) நினைக்கக்கூடாது, என்று—, உணர்ந்து - அறிந்து, பொறுத்தனம் - மன்னித்தோம், எ-று.

(பொ-ரை.) இந்த எச்சிற் சோற்றை ஒப்பற்ற பாக்யம் போல மூடி, மேலே பெரிய நந்தி த்வஜத்தையும் உயர்த்திக் கட்டி, எங்கள் அக்ரஹாரத்திலே பரம பவித்திரரைப்போலச் செல்லுகின்ற உம்மை நாங்கள் ஒன்றும் பேசப் பயப்படுகிறோம்; நீர் இந்த அக்ரஹாரத்தை விட்டுத் தூரமாக எவ்விடத்திலாயினும் போம்; எங்களுக்கு இந்த அடாத கார்யம் கிஞ்சித்தேனும் இஷ்டமில்லை; விலகிப்போம்; உமது பெருந்

தன்மைக்கு இவ்விடத்தில் நாங்கள் இன்னும் அதிகமாக ஒன்றையும் செய்ய வினைக்கக்கூடாதென்று அறிந்து மன்னித்தோம்.

(வி-ரை.) அதிகாமுன்னொன்றென்றது தண்டப் பிரயோகத்தைக் குறித்தது.

புலையை யிப்படி தந்துக லப்பரோ
  போது மெங்கள்பு ரத்தினு மென்னவே
யுலையி லங்கியெ னப்பிப்ப பாச்சைய
  ருள்ள நீடுசி னத்தின ராகியே
யிலய மில்லர னன்பர்கள் சேடமீ
  தெச்சி லெச்சிலெ னுமுரை யீனரே
யலையு மந்தந ரகினுக் காளரே
  யழிவு காலம ணைந்தது மக்கென.

(ப-ரை.) புலையை - அநாசாரத்தை, இப்படி-இவ்வாறு, தந்து - கொண்டுவந்து, கலப்பரோ - கலந்து விடுவார்களோ, எங்கள்—, புரத்தினும்-அக்ரஹாரத்தினின்றும், போதும் - போவோம், என்ன - என்று (ப்ராஹ்மணர்கள்) சொன்னமாத்திரத்தில், உலையில் - உலைமுகத்திலிருக்கின்ற, அங்கியென்ன - நெருப்புப்போல, பிப்பபாச்சையர்—, உள்ளம் - மனத்தில், நீடு சினத்தராகி - பெருங்கோவமுடையவராகி, இலயம் இல் - அழிவில்லாதவராகிய, அரன் - சிவபெருமானுடைய, அன்பர்கள் - பக்தர்களது, சேடம்-சேஷப்ரஸாதமாகிய, ஈது - இந்தப் பெரும் பாக்யத்தை, எச்சில் எச்சில் - எச்சிற்சோறு எச்சிற்சோறு, என்னும் - என்று சொல்லுகின்ற, உரை - சொல்லையுடைய, ஈனரே - சண்டாளர்களே, அலையும் - (நெடுங்காலம்) வருந்துதற்குரிய, அந்த—, நரகினுக்கு - (மஹாகோரமாகிய) நரகத்திற்கு, ஆளரே - ஆளாயிருப்பவர்களே, உமக்கு - உங்களுக்கு, அழிவு காலம்-முடிவு காலம், அணைந்தது-கிட்டியது, என்ன - என்று சொல்லி, எ - று.

(போ-ரை.) அநாசாரத்தை இவ்வாறு கொண்டு வந்து கலந்து விடுவார்களோ ? எங்கள் அக்ரஹாரத்தினின்றும் போவோமென்று ப்ராஹ்மணர்கள் சொன்ன மாத்திரத்தில், உலைமுகத்திலிருக்கின்ற நெருப்புப்போலப் பிப்பபாச்சையர் மனத்தில் பெருங்கோவமுடையவராகி, அழிவில்லாதவராகிய சிவபெருமானுடைய பக்தர்களது சேஷப்ரஸாதமாகிய இந்தப் பெரும் பாக்யத்தை எச்சிற்சோறு, எச்சிற்சோறென்று சொல்லுகின்ற சொல்லையுடைய சண்டாளர்களே! நெடுங்காலம் வருந்துதற்குரிய அந்த மஹாகோரமாகிய நரகத்திற்கு ஆளாயிருப்பவர்களே! உங்களுக்கு முடிவு காலம் கிட்டியதென்று சொல்லி.

(வி-ரை.) இலயம் - லயம் என்னும் வடசொற்றிரிபு. அரன் அன்பர்கள்-ஜங்கம மூர்த்திகள். (சுடு)

எச்சி லல்லவி துநம்பி ரேர்க்கமு
  திகழ்ந்த பேறை யிறப்பிப்ப தென்றலுங்
கச்செ ழும்விட மோசிங்க மோவெய்ய
  கால னோவெங்க தப்புலி யோவென
வச்ச மின்றிம றையவர் கூறவே
  யையர் பிப்பபாச் சையர துதனை
முச்சு மாடையை நீக்கிக்க ரத்தினன்
  மொண்டு வேதிய ரில்லின்மு னிந்திட,

(ப-ரை.) இது - இந்த ஜங்கமப்ரஸாதமானது, எச்சில் - எச்சிற்சோறு, அல்ல—, நம்பினோர்க்கு - அன்புள்ளவர்களுக்கு, அமுது - தேவாமிர்தம் போன்றது, இகழ்ந்த பேரை - தூஷித்தவர்களை, இறப்பிப்பது - செத்துபோகப்பண்ணுவது, என்றலும்- என்று சொன்னமாத்திரத்தில், கச்சு - கொதித்து, எழும் - எழுகின்ற, விடமோ- விஷமோ, சிங்கமோ—, வெய்ய - கொடிய, காலனோ - யமனோ, வெம் - கொடிய, கதம் - கோபத்தையுடைய, புலியோ—, என்ன - என்று (பரிகாசஞ்செய்து), அச்சமின்றி- பயமில்லாமல், மறையவர் - ப்ராஹ்மணர்கள், கூற - சொன்ன மாத்திரத்தில், ஐயர் - வீரசைவ ப்ராஹ்மணராகிய, பிப்பபாச்சையர்—, அது தன்னை-அந்த ஜங்கம ப்ரஸாதத்தை, மூச்சும் - மூடியிருக்கின்ற, ஆடையை - (பட்டு) வஸ்த்ரத்தை, நீக்கி- விலக்கி, கரத்தினால்-(இரண்டு) திருக்கைகளால், மொண்டு - அள்ளி, வேதியர் இல்லில் - ப்ராஹ்மணர்களது வீடுகளின்மேல், முனிந்து - கோவித்து, இட - வீசின மாத்திரத்தில், எ-று.

(போ-ரை.) இந்த ஜங்கம ப்ரஸாதமானது எச்சிற்சோறு அல்ல ; அன்புள்ளவர்களுக்குத் தேவாமிர்தம் போன்றது, தூஷித்தவர்களைச் செத்துப்போகப்பண்ணுவதென்று சொன்ன மாத்திரத்தில், கொதித்தெழுகின்ற விஷமோ? சிங்கமோ? கொடிய யமனோ? கொடிய கோபத்தையுடைய புலியோ? என்று பரிகாசஞ்செய்து, பயமில்லாமல் ப்ராஹ்மணர்கள் சொன்னமாத்திரத்தில், வீரசைவ ப்ராஹ்மணராகிய பிப்பபாச்சையர் அந்த ஜங்கம ப்ரஸாதத்தை மூடியிருக்கின்ற பட்டு வஸ்த்ரத்தை விலக்கி, இரண்டு திருக்கைகளால் அள்ளி, ப்ராஹ்மணர்களுடைய வீடுகளின்மேல் வீசின மாத்திரத்தில். (௩௯)

பல்வி தத்தில்வி ழுந்தீயி டிகளோ
பரவு மின்னின மோவட வங்கியோ
சொல்லு தற்கரி தாம்வட வாவனற்
றொனிய தாகச்சொ டில்படி லென்றெழுந்
திரிபுர மோவெழி
லீச னெற்றிவி ழியங்கி யோவெனப்
புல்ல ரந்தணர் கொப்பூர்த் தெருவெலாம்
புகைந்தெ ழுந்துபொ டிபட வேகவே.

(ப-ரை.) பல்விதத்தில் - பலவகையாக, வீழும் - விழுகின்ற, தீயிடிகளோ- நெருப்பிடிகளோ, பரவும் - பிரகாசிக்கின்ற, மின் இனமோ-மின்னற் கூட்டங்களோ, வடவங்கியோ - வடவாமுகாக்கியோ, சொல்லுதற்கு அரிது ஆம் - (என்று) சொல்லக் கூடாவாம், இல்லம் எங்கும் - வீடுகளெல்லாம், வடவா அனல் - வடவாமுகாக்கியின், தொனியாக - சத்தம்போல, சொடில் படில்—, என்று - என்று சத்தித்து, எழுந்து- எழும்பி, திரிபுரமோ - திரிபுரசம்மாரமோ, எழில் - ஸர்வ வல்லமையுள்ள, ஈசன் - சிவபெருமானது, நெற்றிவிழி - நெற்றிக்கண்ணினின்று முண்டாகிய, அங்கியோ - நெருப்போ, என்ன - என்று சொல்லும்படி, புல்லர்-சண்டாளர்களாகிய, அந்தணர் - ப்ராஹ்மணர்களுடைய, கொப்பூர் - கொப்பூர் அக்ரஹாரத்திலுள்ள, தெருவு எல்லாம் - வீதிகளெல்லாம், புகைந்து - எரிந்து, எழுந்து - ஜ்வாலித்து, பொடிபட - தூளாகப் போகும்படி, வேக - வெந்துபோதலும், எ-று.

(போ ரை.) பலவகையாக விழுகின்ற நெருப்பிடிகளோ? பிரகாசிக்கின்ற மின்னற் கூட்டங்களோ? வடவாமுகாக்கியோ? என்று சொல்லக்கூடாவாம். வீடுகளெல்லாம் வடவாமுகாக்கியின் சத்தம் போலச் சொடில் படிலென்று சத்தித்தெழும்பி, திரிபுரசம்மாரமோ? ஸர்வ வல்லமையுள்ள சிவபெருமானது நெற்றிக்கண்ணி

னின்று மூண்டாகிய நெருப்போ ? என்று சொல்லும்படி, சண்டாளர்களாகிய ப்ராஹ்மணர்களுடைய கொப்பூர் அக்ரஹாரத்திலுள்ள வீதிகளெல்லாம் எரிந்து, ஜ்வாலித்து, தூளாகப் போகும்படி வெந்து போதலும்.

(வி-ரை.) வடவங்கி -படபாக்நி என்னும் வடசொற்றிரிபு; படபா-பெண்குதிரை; ஊழித்தீ என்பது பொருள்; வடவாவனல் என்பதும் அதுவே. தொனியதாக என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. (சஎ)

துட்ட ராமைய ரில்லுந்தா மோதரர்
துய்ய வில்லமு மச்சுத ரில்லமு
முட்ட வெந்தது பாற்கர பட்டரில்
முடிய வெந்தது நாசிங் கையர்தம்
பட்ட சாலையு மாரணப் பட்டரப்
பண்ண ரில்லும்ப ரந்தெரிக் கொத்ததே
தட்டி லாதசன் னியாசிபு ராணிகர்
சாம வேதர்ம டம்வெந்த தென்றபின்.

(ப-ரை.) துட்ட - துஷ்டராகிய, ராமையர் - ஸ்ரீராமபட்டருடைய, இல்லும்- வீடும், தாமோதரர்-தாமோதரபட்டருடைய, துய்ய-மேலான, இல்லமும்-வீடும், அச்சுதர் - அச்சுதபட்டருடைய, இல்லமும்-வீடும், முட்ட - முற்றிலும், வெந்தது-வெந்து போய் விட்டன, பாற்கரபட்டர் - பாஸ்கரபட்டருடைய, இல் - வீடும், முடிய - அடியோடே, வெந்தது - வெந்துபோய்விட்டது, நாசிங்கையர்தம் - நரசிம்மபட்டருடைய, பட்டசாலையும் - வீடும், ஆரணப்பட்டர் - வேத ப்ராஹ்மணரும், அப்பண்ணர்- அப்பண்ணபட்டரும் (ஆகிய இவர்களுடைய), இல்லும்-வீடுகளும், பரந்து-ஜ்வாலித்துப் பரவிய, எரிக்கு - நெருப்புக்கு, ஒத்தது - சரியாய்ப் போய்விட்டன, தட்டு இல்லாத - குற்றமற்ற, சன்னியாசி—, புராணிகர்—, சாமவேதர் - சாமவேதியர் (ஆகிய இவர்களுடைய), மடம் - வீடுகளும், வெந்தது - வெந்துபோய் விட்டன, என்றபின் - என்று சொன்ன பிறகு, எ-று.

(பொ-ரை.) துஷ்டராகிய ஸ்ரீராமபட்டருடைய வீடும், தாமோதரபட்டருடைய மேலான வீடும், அச்சுத பட்டருடைய வீடும் முற்றிலும் வெந்துபோய்விட்டன ; பாஸ்கரபட்டருடைய வீடும் அடியோடே வெந்துபோய் விட்டது ; நரசிம்மபட்டருடைய வீடும், வேதப்ராஹ்மணரும், அப்பண்ணபட்டருமாகிய இவர்களுடைய வீடுகளும் ஜ்வாலித்துப் பரவிய நெருப்புக்குச் சரியாய்ப் போய்விட்டன ; குற்றமில்லாத சன்னியாசி, புராணிகர், சாமவேதியாகிய இவர்களுடைய வீடுகளும் வெந்துபோய்விட்டன வென்று சொன்ன பிறகு.

(வி-ரை.) துட்டர் - துஷ்டரென்னும் வடசொற்றிரிபு. சன்னியாசி - துறவி. புராணிகர்-புராணஞ்சொல்பவர். சாமவேதர்-சாமவேதபாராயணஞ்செய்பவர். (சஅ)

ஓடு வாருமொ ளிக்கும்பெ யர்களு
மூள்ள மஞ்சியு ளறிடு வார்களு
மாடு தங்கள்சி கழியெ ரியுதென்
றங்கை யானின்ற வித்திடு வார்களும்
பீடை கொண்டா லயம் புக்குயிர்
பேணு வாரும்பெ ருத்ததந் தாடியு
நீடு மீசையும் வெந்ததென் பார்களு
நீர்க்கி ணற்றைநி னைந்துறு வார்களும்.

(ப-ரை.) ஓடு வாரும் - ஓடிப்போகிறவர்களும், ஒளிக்கும் பெயர்களும் - ஒளித்துக்கொள்ளுகிறவர்களும், உள்ளம் - மனம், அஞ்சி - நடுக்கங்கொண்டு, உளறிடுவார்களும் - வாய் குளறுகிறவர்களும், ஆடு - அசைகின்ற, தங்கள்—, சிகழி - குடுமி, எரியுது-எரிகின்றதே, என்று - என்று அழுது, அங்கையால்-அகங்கைகளினால், நின்று—, அவித்திடுவார்களும் - அவிக்கிறவர்களும், பீடைகொண்டு - வருத்தத்தினால், அரன் ஆலயம் - சிவாலயங்களில், புக்கு - நுழைந்து, உயிர்-உயிரை, பேணுவாரும்-காப்பாற்றிக்கொள்ளுகிறவர்களும், பெருத்த-பருத்த, தம் - தமது, தாடியும்—,நீடு - நீண்ட, மீசையும்—, வெந்தது-வெந்து போய்விட்டன, என்பார்களும்-என்று சொல்லுகிறவர்களும், நீர்-ஜலம் நிறைந்துள்ள, கிணற்றை - கிணறுகளை, நினைந்து - நினைத்து, உறுவார்களும்-போகின்றவர்களும், எ-று.

(பொ-ரை.) ஓடிப்போகிறவர்களும், ஒளித்துக்கொள்ளுகிறவர்களும், மனம் நடுக்கங்கொண்டு வாய் குளறுகிறவர்களும், அசைகின்ற தங்கள் குடுமி எரிகின்றதேயென்றழுது அகங்கைகளினால் நின்று அவிக்கிறவர்களும், வருத்தத்தினால் சிவாலயங்களில் நுழைந்து உயிரைக் காப்பாற்றிக்கொள்ளுகிறவர்களும், பருத்த தமது தாடியும், நீண்ட மீசையும் வெந்துபோய்விட்டன வென்று சொல்லுகிறவர்களும், ஜலம் நிறைந்துள்ள கிணறுகளை நினைத்துப் போகிறவர்களும். (௬௯)

உடுத்த வாடையெ ரிகின்ற தேயென
வோடி யோடியு தறிடு வார்களு
மடைக்க லஞ்சிவ னன்பர்க்கென் பார்களு
மவர்பு றங்கடை யங்கொளிப் பார்களுந்
துடைத்து நாமத்தை நீறிடு வார்களுஞ்
சூலி நேயர்க்குத் தொண்டரென் பார்களு
மெடுத்த கையின ராய்த்தொழு வார்களு
மெரியு தேயுட லெங்குமென் பார்களும்.

(ப-ரை.) உடுத்த - தரித்த, ஆடை - வஸ்த்ரங்கள், எரிகின்றதே—, என்ன-என்று சொல்லி, ஓடி ஓடி - பலகாலும் விரைந்து சென்று, உதறிடுவார்களும் - உதறுகிறவர்களும், சிவன் அன்பர்க்கு - சிவபக்தர்களுக்கு, அடைக்கலம் - அபயம், என்பார்களும்-என்றுசொல்லி வணங்குகிறவர்களும், அவர்-அவர்களுடைய, புறங்கடையங்கு-தலைவாயில்களில், ஒளிப்பார்களும் - ஒளித்துக்கொள்ளுகிறவர்களும், நாமத்தை-திருமண்ணை, துடைத்து - அழித்து, நீறு இடுவார்களும்-விபூதிதாரணஞ்செய்துகொள்ளுகிறவர்களும், சூலிநேயர்க்கு - சிவபக்தர்களுக்கு, தொண்டர் - அடியார், என்பார்களும் - என்று சொல்லுகிறவர்களும், எடுத்த கையினராய் - அஞ்சலித்த கைகளையுடையவர்களாகி, தொழுவார்களும் - வணங்குகிறவர்களும், உடல் எங்கும் - ஸர்வாங்கமும், எரியுதே - எரிகின்றதே, என்பார்களும் - என்று சொல்லிப் புலம்புகிறவர்களும், எ-று.

(பொ-ரை.) தரித்த வஸ்த்ரங்கள் எரிகின்றதே யென்று பலகாலும் விரைந்து சென்று உதறுகிறவர்களும், சிவபக்தர்களுக்கு அபயமென்று சொல்லி வணங்குகிறவர்களும், அவர்களுடைய தலைவாயில்களில் ஒளித்துக்கொள்ளுகிறவர்களும், திருமண்ணை யழித்து விபூதிதாரணஞ்செய்துகொள்ளுகிறவர்களும், சிவபக்தர்களுக்கு அடியாரென்று சொல்லுகிறவர்களும், அஞ்சலித்த கைகளையுடையவர்களாகி வணங்குகிறவர்களும், ஸர்வாங்கமும் எரிகின்றதே யென்று சொல்லிப் புலம்புகிறவர்களும்.

(வி-ரை.) சூலி - சூலத்தையுடையவனாகிய சிவபெருமான். (௭0)

தப்பு மில்லுடைத் தாமோத ரருடன்
சாது வேதியர் தக்கணர் தம்முடன்
செப்பு நாரசிங் கையர்பு ரோகித
தேவர் கேசவ தேவரி வரெலாம்
பிப்ப பாச்சையர் முன்பணிந் தியாங்கள்செய்
பிழைபொ றுத்திடு பெரியோயெ னத்துதித்
தொப்பி யன்றுச னமய னீந்தவிவ்
வூரெ மக்கின்று தகஞ்செய் தாயென.

(ப - ரை.) தப்பும் - (நெருப்பினின்றும்) தப்பிப்போன, இல் உடை - வீட்டையுடைய, தாமோதரருடன் - தாமோதர பட்டரும், சாதுவேதியர் - சாதுவேதியரும், தக்கணர் தம்முடன்-தக்ஷணரும், செப்பும் - சொல்லப்பட்ட, நாரசிங்கையர் - நரசிம்ம பட்டரும், புரோகிததேவர் - புரோஹித பட்டரும், கேசவதேவர் - கேசவபட்டரும் (ஆகிய), இவர் எல்லாம் - இவர்களெல்லாரும், பிப்பபாச்சையர் முன் - பிப்பபாச்சையர்க்கெதிரே, பணிந்து - (ஸாஷ்டாங்கமாக) வணங்கி, யாங்கள் - நாங்கள், செய் - செய்த, பிழை - குற்றத்தை, பொறுத்தி - மன்னிப்பாய், பெரியோய் - பெரியோனே, என்ன - என்று சொல்லி, துதித்து - ஏத்தி, ஒப்பி - மனமிசைந்து, அன்று - அந்நாளில், சனமயன் - ஜனமேஜெயமஹாராஜன், எமக்கு - எங்களுக்கு, ஈந்த - (மானியமாக) கொடுத்த, இ - இந்த, ஊர் - கொப்பூர் (அக்ரஹாரத்தை), இன்று - இந்நாளில், தகஞ்செய்தாய்-சுட்டெரித்து விட்டனை, என்ன-என்று சொல்லி, எ-று.

(பொ-ரை.) நெருப்பினின்றும் தப்பிப்போன வீட்டையுடைய தாமோதரபட்டரும், சாதுவேதியரும், தக்ஷணரும், சொல்லப்பட்ட நரசிம்மபட்டரும், புரோஹித பட்டரும், கேசவபட்டருமாகிய இவர்களெல்லாரும் பிப்பபாச்சையர்க்கெதிரே ஸாஷ்டாங்கமாக வணங்கி, நாங்கள் செய்த குற்றத்தை மன்னிப்பாய்; பெரியோனே! என்று சொல்லி யேத்தி, மனமிசைந்து அந்நாளில் ஜனமேஜெயமஹாராஜன் எங்களுக்கு மானியமாகக் கொடுத்த இந்தக் கொப்பூர் அக்ரஹாரத்தை இந்நாளில் சுட்டெரித்துவிட்டனை யென்று சொல்லி. (௬௪)

மற்று முள்ளம றையவர் கூடியே
வந்தி றைஞ்சவ வர்தமை நோக்கியே
சற்று நெஞ்சிற்க ருணைபி றந்துமுன்
றாழ்ந்து ளோர்க்குத்த யாச்செய வேணுமென்
றற்ற மற்றவ ராம்பிப்ப பாச்சைய
ரங்கை யோரிரண் டேற்றர சேடமே
யுற்றி டென்கர மென்றன்பிற் போற்றலு
மோடி வந்தவ ரொண்கையி லுற்றதால்.

(ப - ரை.) மற்றும் உள்ள - இன்னமுமுள்ள, மறையவர் - ப்ராஹ்மணர்கள் (எல்லாம்), கூடி வந்து - சேர்ந்து போய், இறைஞ்ச - (ஸாஷ்டாங்கமாக) வணங்கின மாத்திரத்தில், அவர் தம்மை - அவர்களை, நோக்கி - பார்த்து, நெஞ்சில் - மனத்தில், சற்று - சிறிது, கருணை - கிருபை, பிறந்து - உண்டாகி, முன் - எதிரே, தாழ்ந்து உள்ளோர்க்கு - வணங்கினபேர்களுக்கு, தயா - கிருபை, செய்யவேணும் - பண்ண வேண்டும், என்று - என்று திருவுளங்கொண்டு, அற்றம் அற்றவராம் - அழிவில்லாதவராகிய, பிப்பபாச்சையர்—, அம் - அழகியதும், ஓர்-ஒப்பற்றதுமாகிய, கையிரண்டு - இரண்டு திருக்கரங்களை, ஏற்றி - ஏந்தி, அரசேடமே - சிவமஹாப்ரஸாதமே, என் -

(போ - ரை.) இந்த க்ஷணத்திலே யிந்த வாதரோகம் நீங்குதற்குரிய ஔஷதம் இல்லாமற்போமாயின் அழகு பொருந்திய திருமேனிக்கு யாதுண்டாகுமோ? தெரிய வில்லையே! தந்தையாகிய அடியேங்களுடைய சிவபெருமானது திருமுடியும் சிறிது வளைந்திருந்தது, ஐயோ! இந்த ஜங்மரோகம் விரைவாக வொழிதற்குரிய ஔஷதம் யாது? என்று கேட்பாராயினர். (௪)

இவர்மிகவு மேழையன்ப ரெனவறிந்து சிவமறையோன்
கவலைதரு மிவ்வாதங் கடுகவிடு மருந்துண்டு
நவநிதியம் போதவென்கை நல்குதிரே லென்றளவி
லுவகையினுற் றமதுசெல்வ முள்ளவெலாங் கொணர்ந்தளித்தார்.

(ப - ரை.) இவர் - இவர், மிகவும் - மிகவும், ஏழையன்பர்-மூடபக்தர், என்ன, என்று, அறிந்து - தெரிந்துகொண்டு, சிவமறையோன் - சிவப்ராஹ்மணன், நவம் - விருப்புதற்குரிய, நிதியம் - பொருளை, போத - மிகுதியாக, என்கை-எனதுகையில், நல்குதிரேல் - கொடுப்பீராயின், கவலைதரும் - துன்பஞ்செய்கின்ற, இ - இந்த, வாதம் - வாதரோகம், கடுக - விரைவாக, விடும்-நீங்குதற்குரிய, மருந்து-ஔஷதம், உண்டு-இருக்கின்றது, என்றளவில் - என்று சொன்னமாத்திரத்தில், உவகையினுல் - சந்தோஷத்துடன், தமது - தமது, செல்வம் உள்ள வெல்லாம் - பொருளெல்லா வற்றையும், கொணர்ந்து - கொண்டுவந்து, அளித்தார் - கொடுத்தார், எ - று.

(போ - ரை.) இவர் மிகவும் மூடபக்தரென்று தெரிந்துகொண்டு, சிவப்ராஹ்மணன் விரும்புதற்குரிய பொருளை மிகுதியாக எனதுகையிற் கொடுப்பீராயின் துன்பஞ் செய்கின்ற இந்த வாதரோகம் விரைவாக நீங்குதற்குரிய ஔஷதம் இருக்கின்றதென்று சொன்னமாத்திரத்தில் சந்தோஷத்துடன் தமதுபொருளெல்லா வற்றையுங் கொண்டுவந்து கொடுத்தார். (௫)

எனையாள்வான் பிணியின்று நின்றுவிட்டால் யானுமென்றன்
மனையாளு மக்களுநின் வழியடிமை யெனவணங்க
வினையேது வேதியனவ் வெறுக்கைமுற்றுங் கைக்கொண்டு
நினைவார மகிழ்ந்துநனி நேர்த்திமருந் தெண்ணெயென்னு.

(ப - ரை.) என்னை - அடியேனை, ஆள்வான் - ஆண்டருள்பவனுகிய சிவபெருமானது, பிணி - வாதரோகம், இன்று - இப்போதே, நின்றுவிட்டால்-நீங்கிவிடுமாயின், யானும் - நானும், என் - எனது, மனையாளும் - மனைவியும், மக்களும் - பிள்ளைகளும், நின்-உனது, வழியடிமை - வம்சபாரம் பரியமான அடிமையாவோம், என்ன-என்று, வணங்க - தொழுதலும், வினையேது - பிறவிக்குரிய வினைக்குத்தக்க, வேதியன் - சிவப்ராஹ்மணன், அ - அந்த, வெறுக்கைமுற்றும் - பொருளெல்லா வற்றையும், கைக்கொண்டு - வாரிக்கொண்டு, நினைவார - மனப்பூர்வமாக, மகிழ்ந்து-சந்தோஷித்து, நனி - மிகவும், நேர்த்தி - சிறந்த, மருந்துஎண்ணெய் - மருந்தெண்ணெய், என்னு - என்று சொல்லி, எ - று.

(போ - ரை.) அடியேனை யாண்டருள்பவனுகிய சிவபெருமானது வாதரோகம் இப்போதே நீங்கிவிடுமாயின் நானும், எனது மனைவியும், பிள்ளைகளும், உனது வம்ச பாரம்பரியமான வடிமையாவோமென்று தொழுதலும் பிறவிக்குரிய வினைக்குத் தக்க சிவப்ராஹ்மணன் அந்தப் பொருளெல்லாவற்றையும் வாரிக்கொண்டு மனப் பூர்வமாகச் சந்தோஷித்து மிகவும் சிறந்த மருந்தெண்ணெயென்று சொல்லி. (௬)

உய்யவந்த நமித்தண்டி யுடையார்கையிற் கொடுத்தகன்றான்
செய்யசித்த மகிழ்ந்தன்பர் தேவர்பிரான் மருங்கணைந்து
மெய்யதெல்லா நிறையவிட்டு விருப்பினான் மிகவருடத்
தையல்பங்கன் மெய்வாதந் தவிராமற் றளர்ந்தயர்ந்தார்.

(ப - ரை.) உய்ய - (பிறவிப்பிணியினின்றும்) உஜ்ஜீவிக்கும்பொருட்டு, வந்த- அவதரித்த, நமித்தண்டியுடையார் - நிமித்தண்டிநாயனாருடைய, கையில் - கரத்தில், கொடுத்து - தந்து, அகன்றான் - சென்றான், அன்பர் - சிவபக்தரானவர், செய்ய சித்தம் - செம்மையாகியமனம், மகிழ்ந்து - மகிழ்ச்சியடைந்து, தேவர்பிரான்-தேவர் களுக்குத் தலைவனாகிய நடராஜமூர்த்தியின், மருங்கு - அருகில், அணைந்து-போய், மெய் எல்லாம் - திருமேனிமுழுதும், நிறைய - (மருந்தெண்ணெயை) நிரம்ப, இட்டு- பூசி, விருப்பினால் - அன்புடன், மிக - மிகவும், வருட - தேய்த்தலும், தையல் பங்கன் - உமாபாகனாகிய நடராஜமூர்த்தியின், மெய் - திருமேனியையடைந்திருந்த, வாதம் - வாதரோகம், தவிராமல்-நீங்காமையினால், தளர்ந்து-மெலிந்து, அயர்ந்தார்- சோர்ந்தார், எ - று.

(பொ - ரை.) பிறவிப் பிணியினின்றும் உஜ்ஜீவிக்கும் பொருட்டு அவதரித்த நமித்தண்டி நாயனாருடைய கரத்திற்றந்து சென்றான், சிவபக்தரானவர் செம்மை யாகிய மனம் மகிழ்ச்சியடைந்து, தேவர்களுக்குத் தலைவனாகிய நடராஜமூர்த்தியின் அருகிற்போய்த் திருமேனிமுழுதும் மருந்தெண்ணெயை நிரம்பப்பூசி யன்புடன் மிகவும் தேய்த்தலும் உமாபாகனாகிய நடராஜமூர்த்தியின் திருமேனியை யடைந் திருந்த வாதரோகம் நீங்காமையினால் மெலிந்து சோர்ந்தார். (எ)

அந்தோநின் றிருமேனிக் கணைவதே னிவ்வாத
மெந்தாயா னென்செய்கே னெனமுகத்தி லறைந்துகொண்டு
முந்தாவ லாலழுது மோகத்தால் விழுந்துபுரண்
டிந்தாயா னென்னுயிர்மாய்த் திறக்கின்றே னெனவெழுந்து.

(ப - ரை.) அந்தோ - ஐயோ, நின் - உனது, திருமேனிக்கு - திருமேனிக்கு, இ - இந்த, வாதம் - வாதரோகம், அணைவது - வருதற்குக் காரணம், என் - யாது, எந்தாய்-எமது அன்னையே, யான் - நான், என்செய்கேன்-யாதுசெய்வேன், என்ன- என்று, முகத்தில் - முகத்தில், அறைந்துகொண்டு - அடித்துக்கொண்டு, முந்து - முற்பட்ட, ஆவலால் - அன்பினால், அழுது - அழுது, மோகத்தால் - மயக்கத்தினால், விழுந்து - (கீழே) விழுந்து, புரண்டு - உருண்டு, இந்தா - இதோ, யான் - நான், என் உயிர் - எனது பிராணனை, மாய்த்து - மடித்து, இறக்கின்றேன் - சாகின்றேன், என்ன - என்று, எழுந்து - (மேலே) கிளம்பி, எ - று.

(பொ - ரை.) ஐயோ! உனது திருமேனிக்கு இந்த வாதரோகம் வருதற்குக் காரணம் யாது? எமது அன்னையே! நான் யாது செய்வேன்? என்று முகத்தி லடித்துக்கொண்டு, முற்பட்ட அன்பினாலழுது, மயக்கத்தினால் கீழேவிழுந்துருண்டு, இதோ! நான் எனது பிராணனை மடித்துச் சாகின்றேனென்று மேலே கிளம்பி. (அ)

கழுத்தினிடைப் படைவைத்துக் கடுகவரிந் திடும்பொழுது
மழுக்கரத்தார் மதிப்பிளவும் வானதியு மாசுணமுஞ்
செழித்தசடை முடியுநெற்றிச் செய்யகண்ணுஞ் சிறுநகையு
முழுக்காள கந்தரமு மாகவந்து முன்னின்றே.

(ப - ரை.) கழுத்தினிடை - கண்டத்தில், படை - கத்தியை, வைத்து - பூட்டி, கடுக-விரைவாக, அரிந்திடும் பொழுது-அறுக்கின்றகாலத்தில், மழு-மழுப்படையை யுடைய, கரத்தார் - திருக்கரத்தை யுடைய சிவபெருமான், மதிப்பிளவும் - பிறைச்சந்திரனும், வான் - மேன்மைபொருந்திய, நதியும் - கங்கையும், மாசுணமும்- சர்ப்பாபரணமும், செழித்த-அழகிய, சடைமுடியும்-ஜடாபாரமும், செய்ய-அழகிய, நெற்றிக்கண்ணும்-நெற்றிக்கண்ணும், சிறுநகையும்-புன்சிரிப்பும், முழு-பூரணமான, காளகந்தரமும்-நீலகண்டமும், ஆக-ஆகிய (திருக்கோலமாக), வந்து-எழுந்தருளி, முன் - எதிரே, நின்று - நின்று, எ-று.

(பொ-ரை.) கண்டத்தில் கத்தியைப்பூட்டி விரைவாக வறுக்கின்ற காலத்தில் மழுப்படையையுடைய திருக்கரத்தையுடைய சிவபெருமான் பிறைச் சந்திரனும் மேன்மை பொருந்திய கங்கையும் சர்ப்பாபரணமும் அழகிய ஜடாபாரமும் அழகிய நெற்றிக்கண்ணும் புன்சிரிப்பும் நீலகண்டமுமாகிய திருக்கோலத்துடன் வந்தருளி யெதிரே நின்று. (௯)

நில்லுநில்லு கழுத்தரிய னின்னைநன்று யாமகிழ்ந்தே
மெல்லையற்ற நேயத்தா யேதுனக்கு வேண்டியதா
னல்லதுகே ளளிப்பமென நமித்தண்டி யார்வணங்கிச்
சொல்லுமிகத் தழுதழுத்துத் தொழுதுநின்று சொற்றயர்வார்.

(ப-ரை.) எல்லையற்ற - மட்டில்லாத, நேயத்தாய் - அன்புடையவனே, நில்லு நில்லு - நிற்கநிற்க, கழுத்து - கண்டத்தை, அரியல் - அறுத்துக்கொள்ளாதே, யாம் - நாம், நின்னை - உன்னை, நன்றாய் - செவ்வையாய், மகிழ்ந்தேம் - சந்தோஷித்தோம், உனக்கு-உனக்கு, வேண்டியது-தேவையானவரம், ஏது-யாது, நல்லது-நல்லவரத்தை, கேள் - கேட்டுக்கொள்ளும், அளிப்பம் - அநுக்ரஹஞ்செய்வோம், என்ன - என்று கட்டளையிடுதலும், நமித்தண்டியார் - நமித்தண்டி நாயனார், வணங்கி - (சாஷ்டாங்க மாக) பணிந்து, சொல்லும்-நாவும், மிக-மிகவும், தழுதழுத்து-தடுமாறி, தொழுது - வணங்கி, நின்று - நின்று, சொற்று அயர்வார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்) எ-று.

(பொ - ரை.) மட்டில்லாத அன்புடையவனே! நிற்க நிற்க, கண்டத்தை யறுத் துக்கொள்ளாதே, நாம் உன்னைச்செவ்வையாய்ச் சந்தோஷித்தோம், உனக்குத்தே வையான வரம் யாது? நல்ல வரத்தைக் கேட்டுக்கொள்ளும், அநுக்ரஹஞ்செய்வோ மென்று கட்டளையிடுதலும், நமித்தண்டிநாயனார் சாஷ்டாங்கமாகப்பணிந்து நாவும் மிகவும் தடுமாறி வணங்கி நின்று சொல்வாராயினர், எவ்வாறெனின். (௧௦)

எனக்கொன்று மிச்சையிலை யெம்பெருமா னின்னுடைய
வனப்பொன்றுந் திருமேனி வாதத்தால் வளைந்தடெலா
முனக்கின்று குணமாகி யொண்மைபெற்றாற் போதுமென
வினைக்கஞ்சு நமித்தண்டி மெய்யன்பர் விளம்புதலும்.

(ப - ரை.) எம்பெருமான் - எமது சிவபெருமானே, எனக்கு - அடியேனுக்கு, ஒன்றும் - ஒருவரமும், இச்சையில்லை - தேவையில்லை, நின்னுடைய - உன்னுடைய, வனப்பு ஒன்றும் - அழகுபொருந்திய, திருமேனி - திருமேனியானது, வாதத்தால் - வாதரோகத்தினால், வளைந்தது-மடங்கியிருந்த பீடை, எல்லாம்-முழுதும், உனக்கு - உனக்கு, இன்று - இப்போது, குணமாகி-சுகப்பட்டு, ஒண்மை-நன்மை, பெற்றால் -

அடையுமாயின், போதும்-போதும், என்ன-என்று, வினைக்கு - (பிறவிக்கேதுவாகிய) இருவினைக்கு, அஞ்சும் - பயப்படுகின்ற, நமித்தண்டி - நமித்தண்டி நாயனாராகிய, மெய்-உண்மையான, அன்பர் - பக்தர், விளம்புதலும் - சொல்லுதலும், எ - று.

(போ-ரை.) எமது சிவபெருமானே! அடியேனுக்கொருவரமும் தேவையில்லை, உன்னுடைய வழகுபொருந்திய திருமேனியானது வாதரோகத்தினால் மடங்கி யிருந்த பீடை முழுதும் உனக்கு இப்போது சுகப்பட்டு நன்மை யடையுமாயின் போதுமென்று பிறவிக்கேதுவாகிய இருவினைக்குப் பயப்படுகின்ற நமித்தண்டி நாயனாராகிய உண்மையான பக்தர் சொல்லுதலும். (கக)

வாதமல நமக்கிதுயாம் வையகத்தை யைந்தொழிலா
னீதிதர நிறுத்துகின்ற நிருத்தங்கா ணியறியென்
றாதரவா லெம்பெருமா னருணடமா டலையறைவான்
பூதலமும் பாதலமும் பொன்னுலகும் பவுரிகொள்ள.

(ப-ரை.) நமக்கு - நமக்கு (உண்டாயிருக்கின்ற), இது - இந்த வலிவானது, வாதம் - வாதரோகம், அல்ல - அல்ல, யாம் - நாம், வையகத்தை - உலகத்தை, ஐந் தொழிலால் - பஞ்சக்ருத்யத்தினால், நீதிதர - ஒழுங்காக, நிறுத்துகின்ற - நிலைக்கச் செய்கின்ற, நிருத்தம் - நடநமாம், நீ - நீ, அறி - தெரிந்து கொள்ளும், என்று - என்று, ஆதரவால் - விருப்பத்துடன், எம்பெருமான் - எமது சிவபெருமான், அருள்-க்ருபாரூபமாகிய, நடமாடலை-திருநடனத்தை, அறைவான்-சொல்லத்தொடங்கினான் (எவ்வாறெனின்), பூதலமும் - பூலோகமும், பாதலமும் - பாதாளலோகமும், பொன் உலகும் - ஸ்வர்க்கலோகமும், பவுரிகொள்ள - வலமிடமாகச் சூழ்ந்துவரப் பவுரி யாடுதலும், எ-று.

(போ-ரை.) நமக்குண்டாயிருக்கின்ற யிந்த வலிவானது வாதரோகமல்ல, நாம் உலகத்தைப் பஞ்சக்ருத்யத்தினால் ஒழுங்காக நிலைக்கச்செய்கின்ற நடநமாம், நீ தெரிந்து கொள்ளுமென்று, விருப்பத்துடன் எமது சிவபெருமான் க்ருபாரூப மாகிய திருநடனத்தைச் சொல்லத்தொடங்கினான், எவ்வாறெனின் :—பூலோகமும் பாதாளலோகமும் ஸ்வர்க்கலோகமும் வலமிடமாகச் சூழ்ந்துவரப் பவுரியாடுதலும்.

(வி-ரை.) பவுரி-கூத்தின்விகற்பம். ஐந்தொழில்-ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், த்ரோபவம், அநுக்ரஹம் என்பன. ஆத்மாக்களுக்குத் தநு கரண புவந போக்கங்களைச் சக்தியாகிய மூலகாரணத்தினின்றுந் தோற்று விப்பதும், அவற்றை நிலைபெறச் செய்வதும், அவற்றை மூலகாரணத்தி லொடுக்குவதும், ஆத்மாக்களை யிருவினைப்பய னாகிய போக்யப்பொருள்களி லமிழ்த்துவதும், அவ்வாத்மாக்களுக்குப் பாசத்தை நீக்கிச் சிவைக்யத்தை விளைப்பதுமாகிய பஞ்சக்ருத்யமாம். குமரகுருபரஸ்வாமிகள் அருளியதாவது :—

பூமலி கற்பகப் புத்தேள் வைப்பு
நாம நீர் வரைப்பி னனில வளாகமு
மேனைய புவனமு மெண்ணிங் குயிருந்
தானே வகுத்தது னுமருகக் கரமே
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
யனைத்தையுங் காப்பதுன் னமைத்தகைத் தலமே
தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலு

மாற்றுவ தாரழ லமைத்ததோர் கரமே
யீட்டிய வினைப்பய னைவற்றையு மறைத்துநின்
றூட்டுவ தாகுநின் றூன்றிய பதமே
யடுத்தவின் னுயிர்கட் களவில்பே ரின்பங்
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே
யித்தொழி லைந்துநின் மெய்த்தொழி லாக. (௪௨)

அரிபிரம ராதிவிண்ணோ ரனைவோரு மரகரெனப்
பரிபுரத்தின் றொனிபுவனப் பதினாலுஞ் செவிடுபட
வுரியவுமை கைத்தாள முறமுழக்க வுயிர்ப்பினாற்
றரணியெட்டுக் கிரிசேடன் றலைபுரட்டி யலையவே.

(ப - ரை.) அரி-விஷ்ணுமூர்த்தியும், பிரமர்-ப்ரஹ்மதேவரும், ஆதி-முதலாகிய, விண்ணோர் - தேவர்கள், அனைவோரும் - எல்லாரும், அர அர - ஹர: ஹர:, என்ன-என்று கோஷிக்கவும், பரிபுரத்தின் - பாதச்சிலம்பின், தொனி - சத்தமானது, புவனம்பதினாலும்-பதினான்குலோகங்களும், செவிடுபட-செவிப்புலனற்றுப்போகவும், உரிய - மனைவியாராகிய, உமை - உமாதேவியார், கைத்தாளம் - கைத்தாளம், உற-மிகவும், முழக்க - முழக்கஞ்செய்யவும், உயிர்ப்பினால் - மூச்சினால், தரணி - பூமியும், எட்டுக்கிரி - அஷ்டகுலபர்வதங்களும், சேடன் - ஆதிசேஷனது, தலை - தலைகளும், புரட்டி - உருட்டி, அலைய - வருந்தவும், எ - று.

(பொ - ரை.) விஷ்ணுமூர்த்தியும் ப்ரஹ்மதேவரு முதலாகிய தேவர்களெல்லாரும் ஹர: ஹர: என்று கோஷிக்கவும், பாதச்சிலம்பின் சத்தமானது பதினான்கு லோகங்களும் செவிப்புலனற்றுப் போகவும், மனைவியாராகிய உமாதேவியார் கைத்தாளம் மிகவும் முழக்கஞ்செய்யவும், மூச்சினாற் பூமியும் அஷ்டகுலபர்வதங்களும் ஆதிசேஷனது தலைகளும் உருட்டி வருந்தவும். (௧௩)

(வி - ரை.) பதினான்கு உலகம்-மேலுலகம் ஏழு, கீழுலகம் ஏழு. அவையாவன பூலோகம், புவலோகம், சுவலோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம், அதலம், விதலம், சுதலம், தராதலம், மஹாதலம், ரசாதலம், பாதாளம்என்பன. அஷ்டகிரி - கைலை, இமயம், மந்தாரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம் என்பன.

சடைமுடியின் மதிவெதும்பித் தண்ணமுதந் தாழ்ந்துதலைத்
தொடைமிசையின் வீழவுயிர் தோன்றியவர் தோத்திரஞ்செய்
திடையறமுன் முறையிடயா மெழினடமா டுதல்புரிவே
மடையுமவர்க் கேதுவர மெனக்கேட்டங் கருளுவேம்.

(ப - ரை.) சடைமுடியின் - ஜடாபாரத்திலுள்ள, மதி - சந்திரன், வெதும்பி-சோதித்து (அதனால்), தண் - குளிர்ச்சிபொருந்திய, அமுதம்-அமிர்ததாரையானது, தாழ்ந்து-சரிந்து, தலைத்தொடைமிசையின்-தலைமாலையின் (மேல்), வீழ-விழுந்தமையால், உயிர் - பிராணன், தோன்றியவர் - அடைந்ததேவர்கள், தோத்திரஞ்செய்து-துதித்து, இடையற - இடைவிடாமல், முன் - சந்நிதியில், முறையிட - விண்ணப்பஞ்செய்தலும், யாம் - நாம், எழில் - அழகுபொருந்திய, நடமாடுதல் - நடனம், புரிவேம் - விரும்பிச்செய்வோம், அடையும் அவர்க்கு - பிராணன் பெற்றதேவர்களுக்கு, வரம் - (வேண்டிய) வரம், ஏது - யாது, என்ன - என்று, கேட்டு - கேட்டு, அங்கு - அவ்விடத்தில், அருளுவேம் - அநுக்ரஹஞ்செய்வோம், எ - று.

(போ - ரை.) ஜடாபாரத்திலுள்ள சந்திரன் கொதித்ததனால் குளிர்ச்சிபொருந்திய அமிர்ததாரையானது சரிந்து பிரமாலையின்மேல் விழுந்தமையால் பிராணன் அடைந்ததேவர்கள் துதித்து இடைவிடாமல் சந்நிதியில் விண்ணப்பஞ்செய்தலும், நாம் அழகுபொருந்திய நடனம் விரும்பிச் செய்வோம், பிராணன் பெற்றதேவர்களுக்கு வேண்டிய வரம் யாது? என்று கேட்டு அவ்விடத்தில் அநுக்ரஹஞ் செய்வோம்.

(வி - ரை.) தலைமாலை யணிதலாவது - சர்வ சம்மார காலந்தோறும் ஒடுங்குகிற பிரமாது தலைகளையும் விஷ்ணுக்களது எலும்புகளையும் சிவபெருமான் மாலையாகத் தொடுத்து எப்பொழுதும் அழிவில்லாமல் எஞ்சிநின்ற பொருள் தாம் ஒருவரே யென்று அப்பிரமனாதியோர் அறிந்து வழிபட்டு நற்கதியடைதற்பொருட் டாபரணமாக வணிதலாம். (௧௪)

ஐந்தொழிலாந் தாண்டவத்தை யன்பரறிந் தாலிப்பா
ரிந்தநிலை நாட்டியத்தி னியல்பிதென வறிவித்தே
நந்தநமித் தண்டிகளை நம்பர்விமா னத்தேற்றி
வந்துறுநங் கயிலையென மகிழ்ந்துகொடு மன்னினார்.

(ப - ரை.) ஐந்தொழிலாம் - பஞ்சக்ருத்யமாகிய, தாண்டவத்தை - நடநத்தை, அன்பர் - பக்தகோடிகள், அறிந்து - உணர்ந்து, ஆலிப்பார் - ஆரவாரஞ் செய்வார்கள், இந்த நிலை - இவ்விதமான, நாட்டியத்தின் - நடநத்தின், இயல்பு - பெருமை, இது - இத்தன்மைத்து, என்ன - என்று, அறிவித்து - தெரிவித்து, நம்- நமது, நமித்தண்டிகளை - நமித்தண்டிநாயனாரை, நம்பர்-சிவபெருமான், விமானத்து- விமானத்தில், ஏற்றி - ஆரோகணிக்கச்செய்து, நம் - நமது, கயிலை - ஸ்ரீ மஹா கைலாஸத்திற்கு, வந்து உறும் - வந்துசேரும், என்ன - என்று, மகிழ்ந்து - சந்தோஷத்துடன், கொடு-அழைத்துக்கொண்டு, மன்னினார்-சேர்ந்தருளினார், எ.று.

(போ - ரை.) பஞ்சக்ருத்யமாகிய நடநத்தைப் பக்தகோடிகள் உணர்ந்து ஆரவாரஞ்செய்வார்கள், இவ்விதமான நடநத்தின் பெருமை இத்தன்மைத்தென்று தெரிவித்து, நமது நமித்தண்டிநாயனாரைச் சிவபெருமான் விமானத்திலாரோகணிக்கச்செய்து, நமது ஸ்ரீ மஹா கைலாஸத்திற்கு வந்துசேருமென்று சந்தோஷத்துடன் அழைத்துக்கொண்டு சேர்ந்தருளினார். (௧௫)

நமித்தண்டிநாயனார் புராணம் முற்றிற்று.

---

ஆ க தி ரு வி ரு த் த ம் - ௯௪௩.

---

திருவிளையாடற் சருக்கம் முற்றிற்று.

# திருக்கூட்டச்சருக்கம்.

## சகளேசமாதிராசையர் புராணம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

துறத்தமே தகனே போற்றி சோதிமெய்த் தகனே போற்றி
கறுத்தபா தகனே போற்றி கைக்கொள்வித் தகனே போற்றி
யறத்தர்சா தகனே போற்றி யருட்கொள்வத் தகனே போற்றி
மறத்தர்பே தகனே போற்றி வசவபோ தகனே போற்றி.

(ப - ரை.) துறத்த - (முற்றும்) துறந்த, மேதகனே - ஞானியே, போற்றி - சரணார்த்தி, சோதிமெய்த்தகனே-தேஜோமயனே, போற்றி-சரணார்த்தி, கறுத்தர் - கோபிஷ்டர்களுக்கு, பாதகனே-பொல்லாதவனே, போற்றி-சரணார்த்தி; கைக்கொள் வித்தகனே - ஜ்ஞாநஸ்வரூபனே, போற்றி - சரணார்த்தி, அறத்தர் - புண்யாத்மாக்களுக்கு, சாதகனே - சிநேகனே, போற்றி - சரணார்த்தி, அருள்கொள் வத்தகனே - க்ருபாமூர்த்தியே, போற்றி - சரணார்த்தி, மறத்தர் - பாபிஷ்டர்களுக்கு, பேதகனே - பகைவனே, போற்றி - சரணார்த்தி; வசவபோதனே - வசவாசார்யனே, போற்றி - சரணார்த்தி, எ-று.

(பொ - ரை.) முற்றுந்துறந்த ஞானியே! சரணார்த்தி, தேஜோமயனே! சரணார்த்தி, கோபிஷ்டர்களுக்குப்பொல்லாதவனே! சரணார்த்தி, ஜ்ஞாநஸ்வரூபனே! சரணார்த்தி, புண்யாத்மாக்களுக்குச் சிநேகனே! சரணார்த்தி, க்ருபாமூர்த்தியே! சரணார்த்தி, பாபிஷ்டர்களுக்குப் பகைவனே! சரணார்த்தி, வசவாசார்யனே! சரணார்த்தி.

(வி - ரை.) துறத்த-மெலித்தல்விகாரம். மெய்-சரீரம். தகன் - குணமுள்ளவன். கறுத்தபாதகனே - பாபரஹிதனே எனினுமாம். வித்தகம் - ஞானம். அறம் - தர்மம், அதனையுடையவர் அறத்தர்.வத்தகன்-வர்த்தகன் என்னும் வடசொற்றிரிபு. பேதகம்-வேற்றுமை. போதகன் - போதிப்பவன். துறத்தலாவது தானல்லாதவுடம்மை யானென்னுமகப்பற்றினையும் தன்னோடியைபில்லாத பொருளை யெனதென்னும் புறப்பற்றினையும் அறவே கைவிடுதல். ஞானம்-பதிபசுபாசங்களையுள்ளவாறுணர்ந்து தன்னைத் தானறியு முணர்ச்சி. சோதி-எல்லா வொளியையும் உள்ளடக்கி நிற்பதோர் பரஞ்சோதி. பாவம் - கொலை, களவு, கள், காமம், குருத்ரோஹம் என்பன. (க)

பத்தருட் பத்த ராவார் பரமமா யேசர் தம்மு
ணித்தமா யேசா ராவார் நேயநற் சரணர் தம்பா
மெத்துமெய்ச் சரண ராவார் வேந்தருள் வேந்த ராவா
ரொத்தமா பெரியோர் தம்மு ளுயர்தரும் பெரியோ ராவார்.

(ப - ரை.) பத்தருள் - சிவபக்தர்களில், பத்தர் ஆவார் - ஸத்பக்தராயுள்ளவர், பரமம்-மேலான,மாயேசர்தம்முள்-மாஹேஶ்வரர்களில்,நித்தம்-அழிவில்லாத,மாயேசர் ஆவார் - வீரமாஹேஶ்வரராயுள்ளவர், நேயம்-அன்புசெய்தற்குரிய, சரணர்கம்பால்

சிவசரணர்களில், மெத்தும் - புகழத்தக்க, மெய்-உண்மையான, சரணர் ஆவார்-சிவ சரணராயுள்ளவர், வேந்தருள்-அரசர்களில், வேந்தர்ஆவர்-(சிறந்த) அரசராயுள்ளவர், ஒத்த - தமக்குத்தாமே நிகரான, மா - பெருமைபொருந்திய, பெரியோர்தம்முள் - ஜங்கம மூர்த்திகளில், உயர்தரும் - சிறந்த, பெரியோர் ஆவார் - ஜங்கமமூர்த்தியா யுள்ளவர், எ-று.

(பொ-ரை.) சிவபக்தர்களில் ஸத்பக்தராயுள்ளவர், மேலானமாஹேஶ்வரர்களில் அழிவில்லாத வீரமாஹேஶ்வரராயுள்ளவர், அன்புசெய்தற்குரிய சிவசரணர்களிற் புகழத்தக்க வுண்மையான சிவசரணராயுள்ளவர், அரசர்களிற் சிறந்த அரசரா யுள்ளவர், தமக்குத்தாமே நிகரான பெருமைபொருந்திய ஜங்கமமூர்த்திகளிற் சிறந்த ஜங்கம மூர்த்தியாயுள்ளவர்.

(வி-ரை.) நித்தம் - நித்யம்என்னும் வடசொற்றிரிபு. மெச்சும் என்னும் சொல் எதுகையின்பம் நோக்கி மெத்துமென்றாயிற்று. பத்தர்-பக்தர் என்னும் வட சொற்றிரிபு. மாயேசர் - மாஹேஶ்வரர் என்னும் வடசொற்றிரிபு. (உ)

பரமனை விரும்பார் தம்மைப் பரிசியார் பண்பான் மிக்கார்
விரவிய நாத கீத வீணைநற் பரதம் வல்லார்
திரமறை முடிவ றிந்தார் சித்தாந்தந் தெரிந்து வல்லா
ரரியவில் வாழ்க்கை யிச்சை யற்றுளார் போலி ருப்பார்.

(ப - ரை.) பரமனை - சிவபெருமானை, விரும்பார்தம்மை - நேசியாதவரை, பரிசியார்-(பிணமென்றுநினைத்து) தொடாதவர், பண்பால்- (வீரசைவ) ஆசாரத்தில், மிக்கார் - சிறந்தவர், விரவிய நாதம் - (இனிய) ஓசையையுடைய, கீதம் - சங்கீதம் (பாடுவதிலும்), வீணை - வீணை (வாசிப்பதிலும்), நல் - சிறந்த, பரதம் - பரத (நாட் டியத்திலும்), வல்லார் - வல்லவர், திரம் - அழிவில்லாத, மறைமுடிவு - வேதாந் தத்தை, அறிந்தார் - அறிந்தவர், சித்தாந்தம் - (வீரசைவ) சித்தாந்தத்தையும், தெரிந்து வல்லார் - அறிந்தவர், அரிய - (போற்றுதற்கு) அருமையாகிய, இல் வாழ்க்கை-இல்லறத்தில், இச்சை-விருப்பு, அற்று-இல்லாமலிருந்தும்,உள்ளார்போல்- (விருப்பு) உள்ளவர்போல, இருப்பார் - காணப்படுவர், எ - று.

(பொ - ரை.) சிவபெருமானை நேசியாதவரைப் பிணமென்று நினைத்துத் தொடாதவர், வீரசைவாசாரத்திற் சிறந்தவர், இனிய வோசையையுடைய சங்கீதம் பாடுவதிலும்வீணைவாசிப்பதிலும் சிறந்தபரதநாட்டியத்திலும் வல்லவர், அழிவில்லாத வேதாந்தத்தை யறிந்தவர், வீரசைவ சித்தாந்தத்தையு மறிந்தவர், போற்றுதற் கருமையாகிய இல்லறத்தில் விருப்பில்லாமலிருந்தும் விருப்புள்ளவர்போலக் காணப் படுவர்.

(வி-ரை.) பரதம் மூன்றுவகைப்படும்; அவை தாண்டவம், நிருத்தம், நாட்டியம் என்பன. அவற்றுள் தாண்டவமும் நிருத்தமும் அகக்கூத்தென்றும், நாட்டியம் புறக்கூத்தென்றுஞ் சொல்லப்படும். பரதமென்று நூற்குப் பெயர் வந்தது பாவம், ராகம், தாளமென மூன்றையு முணர்த்துங்காரணத்தால். இதன்விரிவைப் பரத சாத்திரத்திற்காண்க. கீதம் எழுவகைப்படும், அவை ஷட்கம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்பன. இவற்றிற்குரிய எழுத்துக்கள், ஸ ரி க ம ப த நி என்பன, இவை தமிழில் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. வீணை - ஒருவிதமான நரம்பினால் யாத்த கருவி. மறை - வேதம். முடிவு - அந்தம். வேதாந்தமென்றது உபநிஷத்துக்களை. வீரசைவ சித்

தாந்தம் - அங்கலிங்க ஸ்தலங்களையுணர்ந்து குருலிங்க ஜங்கம வழிபாட்டினால் உலக விச்சையையொழித்து மனோலயமெய்திச் சிவலிங்கைக்ய நிலையதாகிய சாயுஜ்ய பதமுத்தியை யுணர்த்துவதாம்.

இயமமா நியம மாதி யெண்வகை யோகம் வல்லார்
கமையுளார் கருணை மிக்கார் கனத்தநற் சரித்தி ரத்தா
ரமைதரு மிசைப டைத்தா ரணிமையி னம்பை யென்னுஞ்
சமமிலாத் தலத்தார் தம்பேர் சகளெச மாதி ராசர்.

(ப-ரை.) மா - பெருமைபொருந்திய, இயமம்நியமம்ஆதி - இயமநியமமுதலாகிய, எண்வகையோகம் - அஷ்டாங்கயோகத்தில், வல்லார் - வல்லவர், கமையுள்ளார் - உபசாந்தநிலையுடையவர், கருணை-ஜீவகாருண்யத்தில், மிக்கார் - சிறந்தவர், கனத்த - மேன்மை பொருந்திய, நல்சரித்திரத்தார் - நற்குணமுடையவர், அமைதரும் - (குணத்திற்கு) பொருந்திய, இசை - புகழினை, படைத்தார் - அடைந்தவர், அணிமையின் - அழகில், சமம்இல்லா - நிகரற்ற, அம்பை - திருவம்பை, என்னும் - என்கின்ற, தலத்தார் - ஸ்தலத்தையுடையவர், தம் - தமது, பேர் - திருநாமம், சகளேசமாதிராசர் - சகளேசமாதிராசையர் (என்பது), எ- று.

(பொ - ரை.) பெருமைபொருந்திய இயமநியமமுதலிய அஷ்டாங்கயோகத்தில் வல்லவர், உபசாந்தநிலை யுடையவர், ஜீவகாருண்யத்திற் சிறந்தவர், மேன்மை பொருந்திய நற்குணமுடையவர், குணத்திற்குப் பொருந்திய புகழினையடைந்தவர், அழகில்நிகரற்ற திருவம்பையென்கின்ற ஸ்தலத்தையுடையவர், தமது திருநாமம் சகளேசமாதிராசையரென்பது.

(வி - ரை.) அஷ்டாங்கயோகம் - இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதியென்பன. இவற்றுள் இயமமாகிய வைந்தும் பூர்வயோகமென்றும், தாரணை தியானம் சமாதியாகிய மூன்றும் உத்தர யோகமென்றும் கூறுப. இயமம் - கொல்லாமை முதலியன வாகப்பத்துபகுதியினை யுடையது. நியமம் - தபம் முதலியனவாகப் பத்து பகுதியினையுடையது. ஆசனம் - சுத்தாஸனம்முதலியனவாக வெண்பத்துநான்கு பகுதியினையுடையது. பிராணாயாமம்- ரேசகபூரக கும்பகங்களினால் சரீர ஜனிதவாயு நிரோதனஞ்செய்தல். பிரத்தியாகாரம்- விஷயங்களில் இந்திரியங்களைத்தடுத்து உண்ணோக்கி யிருத்தல். தாரணை - அந்தக் கரணம் இடைவிடாது ஒரு வகைப்பட்டிருத்தல். தியானம் - கடவுளைச் சிந்தனை செய்தல். சமாதி - சுபாசுபவாசனைகள் ஒழிந்தடங்கியிருத்தல். இவ்விதமாகக் கர்மகாண்டிகள் அநுசரிப்பதாம். சிவலிங்கபூஜையை யறவே கைவிட்டபடியால் இயம முதலிய வைந்தும் கர்மயோகங்களாம். அவர்கள் குறிக்கப்படும் வஸ்துக்கள் உத்தரயோகமாகி மூன்றுவகைப்படும். முதலாவது - ஸாக்ஷாத் பரதத்வ மென்பது. இரண்டாவது-பிந்துவானது அகார உகார மகாரங்களா யிம்மூன்றும்சுத்தபிந்துவின் சம்பந்தமென்பது. மூன்றாவது - சந்திரனது கலாதாரையைப்போலவும், சூரியனது கிரணங்களைப் போலவும், மின்னலினது பிரகாசத்தைப் போலவும் பிரகாசித்த லென்பது. இவ்வெட்டும் பிறமதத்தர்களாற் கொள்ளற் பாலது. இந்தக் கர்ம காண்டத்தில் லிங்கமென்னும் ஸப்த ப்ரயோகமின்மையின் இவற்றை யங்கீகரித்தல் தக்கதன்று. ஆயின் வீரமஹேஸ்வரர்களின் சிவலிங்கயோகமென்பது யாதெனின், ப்ரஹ்மரந்த்ரத்திலிருக்கின்ற நாதசைதந்யம்போன்ற பரமசித் கலையையே பாவ மன மென்கின்ற கரங்களினால் ஸ்ரீ ஸத்குருவானவர் கொணர்ந்து சம்பந்தஞ்செய்தவராகி

பாவத்தில் ஸத்ஸ்வரூபம்போன்ற இஷ்டலிங்கமேயென்று துணிந்து ஒரு வஸ்துவானது தநு மந பாவங்களில் இஷ்ட ப்ராண பாவமென்கின்ற பேதமறியாமல் இஷ்டலிங்கத்தைக் கட்புலனாற் கிரகித்து, ப்ராணலிங்கத்தை மநோ ஜ்ஞானத்தினாற் கிரகித்து, த்ருப்திலிங்கத்தைப் பாவலிங்கத்தினாற் கிரகித்து, இம்மூவகைலிங்கங்களை யநுஷ்டித்து லிங்கத்துடன் கூடி லிங்கமே தான் தானாகி நிலைப்பதாம். (௪)

மேதினி புரப்பார் தூய்ய விதரண வித்தை யுள்ளம்
போதவே படைத்து வாழ்வார் புனிதநற் குருவி லிங்கத்
தாதர மிக்க பத்தி யன்பினா லதிக ராகி
யோதுந லுபசா ரங்க ளளவில வுவந்து செய்வார்.

(ப-ரை.) மேதினி - உலகத்தை, புரப்பார் - ஆளப்பட்டவர், தூய்ய - மேன்மையாகிய, விதரணம் - விவேகமென்கின்ற, வித்தை - ஞானத்தை, போதவே - மிகுதியாகவே, உள்ளம்படைத்துவாழ்வார் - மனத்திலுடையவர், புனிதம்நல் - மிகவும் பரிசுத்தமாகிய, குருலிங்கத்து - குரு லிங்க ஜங்கமத்தில், ஆதரம் மிக்க - மிகவும் விரும்புதற்குரிய, பத்தி - பக்தியென்கின்ற, அன்பினால் - அன்புசெய்வதில், அதிகராகி - சிறந்தவராகி, ஓதும் - (வேதாகமங்களில்) சொல்லப்பட்ட, அளவில - கணக்கற்றவையாகிய, நல் - சிறந்த, உபசாரங்கள் - உபசாரணைகளை, உவந்து - சந்தோஷத்துடன், செய்வார் - பண்ணுபவர், எ-று.

(போ - ரை.) உலகத்தையாளப்பட்டவர், மேன்மையாகிய விவேகமென்கின்ற ஞானத்தை மிகுதியாகவே மனத்திலுடையவர், மிகவும் பரிசுத்தமாகிய குருலிங்க ஜங்கமத்தில் மிகவும் விரும்புதற்குரிய பக்தியென்கின்ற அன்புசெய்வதிற் சிறந்தவராகி, வேதாகமங்களிற் சொல்லப்பட்ட கணக்கற்றவையாகிய சிறந்த உபசரணைகளைச் சந்தோஷத்துடன் பண்ணுபவர்.

(வி - ரை.) குருலிங்க மென்றதனால் ஜங்கமத்தையும் வருவித்துப்பொருட்கொண்டேம். உபசாரங்கள் மூன்று வகைப்படும், அவை சோடசோப சாரங்கள், தசோபசாரங்கள், பஞ்சோபசாரங்கள் என்பன. (௫)

அடிக்கடி பெரியோர் தம்மை யன்பினா லகலாதேத்திக்
கடிப்பல மலர்நீர் கொண்டு காதலாற் றம்ம கத்து
நெடிக்கிலா தருச்சித் துன்னி நிமலனைத் துதித்து மற்றும்
பிடித்ததண் டிகையின் முப்பத் திரண்டிரா கம்பி ணித்தே

(ப - ரை.) அடிக்கடி - பலகாலும், பெரியோர் தம்மை - ஜங்கமமூர்த்திகளை, அன்பினால் - அன்புடன், அகலாது - விட்டு நீங்காமல், ஏத்தி - துதித்து, கடி - நறுமணங்கமழ்கின்ற, பல - நானாவிதமான, மலர்கொண்டு - புஷ்பங்களினாலும், நீர் கொண்டு - திருமஞ்சனத்தினாலும், காதலால் - அன்புடன், தம் - தமது, அகத்து - திருமாளிகையில், நெடிக்கிலாது - தாமதஞ்செய்யாமல், அருச்சித்து - பூஜைசெய்து, உன்னி - தியானித்து, நிமலனை - சிவபெருமானை, துதித்து - ஏத்தி, மற்றும் - மேலும், பிடித்த - (ஸ்வரம்) பிடித்த, தண்டிகையில் - வீணையில், முப்பத்திரண்டுஇராகம் - முப்பத்திரண்டு ராகங்களையும், பிணித்து - தொடுத்து, எ-று.

(போ-ரை.) பலகாலும் ஜங்கமமூர்த்திகளையன்புடன் விட்டு நீங்காமல் துதித்து, நறுமணங்கமழ்கின்ற புஷ்பங்களினாலும் திருமஞ்சனத்தினாலும் அன்புடன் தமது

திருமாளிகையில் தாமதஞ்செய்யாமல் பூஜைசெய்து தியானித்து, சிவபெருமானைத் துதித்து, மேலும் ஸ்வரம்பிடித்த வீணையில் முப்பத்திரண்டு ராகங்களையுந்தொடுத்து.

(வி - ரை.) இராகம் ௩௨ - பைரவிமுதலியவை. (௬)

நேரத்திற் கேற்ற ராக நித்தர்தஞ் சகளே சர்க்கே
யாரத்தாம் பாடி மற்று மகமகிழ்ந் தந்த வாறு
சீருற்ற கவுரி வீணை யிராவண வீணை செய்ய
மேருக்கொள் கரத்தான் வைகும் வெள்ளியங் கயிலை வீணை.

(ப - ரை.) நேரத்திற்கு ஏற்ற-காலத்திற்குத்தக்க, ராகம்-ராகங்களை, தம்-தமது, நித்தர் - சிவபெருமானாகிய, சகளேசர்க்கு - சகளேஸ்வரர்க்கு, ஆர - மனப்பூர்வமாக, தாம் - தாம், பாடி - பாடி, மற்றும் - மேலும், அகமகிழ்ந்து - மனமகிழ்ந்து, அந்தவாறு - அப்படியே, சீர் உற்ற - சிறந்த, கவுரிவீணை - கௌரீவீணை, இராவணவீணை - ராவணவீணை, செய்ய - அழகிய, மேருக்கொள் கரத்தான் வைகும் வெள்ளியங்கயிலை வீணை - கைலாஸவீணை, எ - று.

(பொ - ரை.) காலத்திற்குத் தக்க ராகங்களைத் தமது சிவபெருமானாகிய சகளேஸ்வரர்க்கு மனப்பூர்வமாகத் தாம் பாடி, மேலும் மனமகிழ்ந்து, அப்படியே சிறந்த கௌரீவீணை, இராவணவீணை, அழகிய கைலாஸவீணை.

(வி - ரை.) மேரு - மஹாமேருகிரியாகிய வில்லை. கொள் - ஏந்தின. கரத்தான்-திருக்கரத்தை யுடையவனாகிய சிவபெருமான். வைகும் - எழுந்தருளியிருக்கின்ற. அம் - அழகிய. வெள்ளிகயிலை - வெள்ளியங்கிரியாகிய மஹா கைலாஸம். (௭)

அம்பர வீணை மற்று மருந்திறற் பிநாகி வீணை
நம்புசா ரங்க வீணை நச்சுகச் சப்ப வீணை
யெம்பிரான் மாதி ராச ரினியரா கங்க ளாலே
தம்பிரான் சகளே சன்சீர் தாழ்வற நவிற்றி நாளும்.

(ப-ரை.) அம்பர வீணை-கின்னரவீணை, மற்றும்-மேலும், அரு - (கிடைத்தற்கு) அருமையாகிய, திறல் - வலிமையுடைய, பிநாகிவீணை - பிநாகிவீணை, நம்பு - விரும்புதற்குரிய, சாரங்கவீணை - சாரங்கவீணை, நச்சு - விரும்புதற்குரிய, கச்சப்பவீணை - கச்சபவீணை (ஆகியயிவற்றை); எம் - எமது, பிரான் - தலைவராகிய, மாதிராசர் - மாதிராசையர், இனிய - (செவிக்கு) இனிமையான, ராகங்களாலே-ராகங்களினாலே, தம்பிரான் - சிவபெருமானாகிய, சகளேசன் - சகளேஸ்வரனுடைய, சீர் - புகழினை, தாழ்வு அற - தவறில்லாமல், நாளும் - தினந்தோறும், நவிற்றி - வாசித்து, எ - று.

(பொ - ரை.) கின்னரவீணை, மேலும் கிடைத்தருமையாகிய வலிமையுடைய பிநாகிவீணை, விரும்புதற்குரிய சாரங்கவீணை, விரும்புதற்குரிய கச்சபவீணையாகிய யிவற்றை எமது தலைவராகிய மாதிராசையர் செவிக்கினிமையான ராகங்களினாலே சிவபெருமானாகிய சகளேஸ்வரனுடைய புகழினைத் தவறில்லாமல் தினந்தோறும் வாசித்து. (௮)

நல்லவை ரதிச யிக்கு நாளிலில் வாழ்க்கை யிச்சை
யில்லரா யுலகா ளின்ப மில்லரா மிவரோர் நாளின்
மல்லிரா சைய ரென்றோர் மன்னவ ருலகங் காத்தி
தல்லலென் றயன்று நித்த னரும்பருப் பதத்த ணைந்தே.

(ப - ரை.) நல்லவர் - ஜங்கமமூர்த்திகள், அதிசயிக்கும் - ஆச்சரியப்படுகின்ற, நாள்-காலத்தில், இல்வாழ்க்கை-இல்லறத்தில், இச்சையில்லராய் - பற்றற்றவராகியும், உலகு - உலகத்தை, ஆள் - ஆள்வதில், இன்பம் இல்லர்ஆம் - சுகமில்லாதவராகியு மிருக்கின்ற, இவர்-இவர், ஓர்நாளில்-ஒரு தினத்தில், மல்லிராசையர்-மல்லிராசையர், என்று ஓர் மன்னவர் - என்றொரு அரசர், உலகம் - உலகத்தை, காத்து - (நெடுநாள்) ஆண்டு, ஈது - இந்த வரசாட்சி யானது, அல்லல் என்று - துன்பமென்று, அகன்று - துறந்து, நித்தன் - சிவபெருமானாகிய மல்லிகார்ஜுனேஸ்வரர் (எழுந்தருளியிருக்கின்ற); அரு - தரிசித்தற்கருமையாகிய, பருப்பதத்து - ஸ்ரீசைலத்தில், அணைந்து - சேர்ந்து, எ-று.

(பொ - ரை.) ஜங்கமமூர்த்திகள் ஆச்சரியப்படுகின்ற காலத்தில் இல்லறத்திற் பற்றற்றவராகியும் உலகத்தை யாள்வதில் சுகமில்லாதவராகியு மிருக்கின்ற இவர் ஒரு தினத்தில் மல்லிராசைய ரென்றொரு அரசர் உலகத்தை நெடுநாள் ஆண்டு இந்த வரசாட்சியானது துன்பமென்று துறந்து சிவபெருமானாகிய மல்லிகார்ஜுனேஸ்வரர் எழுந்தருளியிருக்கின்ற தரிசித்தற்கருமையாகிய ஸ்ரீசைலத்திற் சேர்ந்து.

(வி - ரை.) பருப்பதம் - பர்வதம் என்னும் வடசொற்றிரிபு. இது மலைகளெல்லா வற்றிற்கும்பொதுப்பெயராயினும் ஈண்டைக்கேற்ப ஸ்ரீசைலத்தை யுணர்த்திற்று. பருப்பதம் என்றுமேல் வருதலினால் நித்தன் என்றதற்கு மல்லிகார்ஜுனேஸ்வர ரென்று பொருட் கொண்டேம்.

அங்கணிச் சலத்த ராகி யானந்த மோக ராகித்
துங்கவில் லஞ்சூழ் காவிற் றுணிந்துறு மல்லி ராசர்
தங்கருத் ததிக பத்தித் தன்மையுஞ் சமாதி யோகம்
பொங்கலுஞ் சிவானு போகம் பொருந்தலுங் குணமும் பண்பும்.

(ப-ரை.) அங்கண் - அவ்விடத்தில், நிச்சலத்தராகி - (மனோ) சலனமற்றவராகி, ஆனந்தமோகராகி - சிவானந்தத்தில் விருப்பமுள்ளவராகி, துங்கம் - பரிசுத்தமாகிய, வில்லம் சூழ் காவில் - வில்வவனத்தில், துணிந்து - மனோத்ருடமடைந்து, உறும் - தவஞ்செய்கின்ற, மல்லிராசர்-மல்லிராசையருடைய, கருத்து-நோக்கத்தையும், அதிக-சிறந்த, பத்தி - பக்தியின், தன்மையும் - பெருமையையும், சமாதி யோகம் - சிவயோக சமாதியின், பொங்கலும் - சிறப்பையும், சிவானுபோகம் - சிவானுபவச்செல்வத்தை, பொருந்தலும் - அடைந்திருத்தலையும், குணமும் - சன்மார்க்கத்தையும், பண்பும் - பெருமையையும், எ-று.

(பொ - ரை.) அவ்விடத்தில் மனோசலனமற்றவராகிச் சிவானந்தத்தில் விருப்பமுள்ளவராகிப் பரிசுத்தமாகிய வில்வவனத்தில் மனோத்ருடமடைந்து தவஞ்செய்கின்ற மல்லிராசையருடைய நோக்கத்தையும், சிறந்த பக்தியின் பெருமையையும், சிவயோக சமாதியின் சிறப்பையும், சிவானுபவச்செல்வத்தை யடைந்திருத்தலையும், சன்மார்க்கத்தையும், பெருமையையும். (௧0)

வந்துமா பெரியோர் சொல்ல மகிழ்ந்துநம் மாதி ராசர்
சிந்தையி லன்பாய்க் கேளாத் தேசத்தி லாசை யின்றி
யந்தமா யோகி தன்னை யரும்பெருந் தவத்தி னானை
யெந்தநாட் கண்ட வன்று ளியான்வழி படுவே னென்று.

(ப - ரை.) மா - பெருமைபொருந்திய, பெரியோர் - ஜங்கமமூர்த்திகள், வந்து சொல்ல - வந்துசொல்லுதலும், நம் - நமது, மாதிராசர் - மாதிராசையர், மகிழ்ந்து - சந்தோஷப்பட்டு, சிந்தையில் - மனத்தில், அன்பாய் - விருப்பத்துடன், கேளா - கேட்டு, தேசத்தில் - உலகவாழ்க்கையில், ஆசையின்றி - பற்றற்று, அந்த - அந்த, மா - பெருமைபொருந்திய, யோகிதன்னை - சிவயோகியை, அரு - (கிடைத்தற்கு) அருமையாகிய, பெரு - மேன்மைபொருந்திய, தவத்தினானை - ஜங்கமமூர்த்தியை, எந்தநாள்-எக்காலத்தில், கண்டு-தரிசித்து, அவன்தாள் - அவனுடைய திருவடிகளை, யான்-அடியேன், வழிபடுவேன் - சேவிப்பேன், என்று - என்று, எ - று.

(பொ - ரை.) பெருமைபொருந்திய ஜங்கமமூர்த்திகள் வந்து சொல்லுதலும், நமது மாதிராசையர் சந்தோஷப்பட்டு, மனத்தில் விருப்பத்துடன் கேட்டு, உலக வாழ்க்கையிற் பற்றற்று, அழகுபொருந்திய சிவயோகியை கிடைத்தற் கருமை யாகிய ஜங்கமமூர்த்தியை யெக்காலத்திற் றரிசித்து, அவனுடைய திருவடிகளை யடியேன் சேவிப்பேனென்று. (௧௧)

அப்பருப் பதத்தை யுன்னி யஞ்சலி செய்து போற்றி
செப்பரு மாதி ராசர் செப்புவார் கேதா ரத்தி
லொப்பினீர் பருகிற் காசி யுற்றிறந் திடிலா முத்தி
யிப்பெருந் தவம்வ ருத்த மெளியதன் றென்ன வெண்ணி.

(ப - ரை.) அப்பருப்பதத்தை - அந்த ஸ்ரீசைலத்தை, உன்னி - தியானித்து, அஞ்சலிசெய்து - கைகூப்பிவணங்கி, போற்றி - துதித்து, செப்பு அரு-சொல்லுதற் கரிய, மாதிராசர் - மாதிராசையர், செப்புவார் - சொல்வாராயினர், (எவ்வாறெனின்), கேதாரத்தில் - ஸ்ரீ கேதார க்ஷேத்ரத்திலுள்ள, ஒப்பு இல் - நிகரற்ற, நீர்-தீர்த்தத்தை, பருகில் - உண்பாராயினும், காசி - ஸ்ரீ காசிக்ஷேத்ரத்தை, உற்று - அடைந்து, இறந்திடில் - மரிப்பாராயினும், முத்தியாம் - மோக்ஷம் சித்திக்கும், இப்பெருந்தவம்- இந்தப் பெரியதவஞ்செய்தலாலுண்டாகின்ற, வருத்தம் - துன்பம், எளியது அன்று- அல்பமல்ல, என்று எண்ணி - என்று நினைத்து, எ - று.

(பொ - ரை.) அந்த ஸ்ரீ சைலத்தைத் தியானித்துக் கைகூப்பி வணங்கித் துதித்துச் சொல்லுதற்கரிய மாதிராசையர் சொல்வாராயினர், எவ்வாறெனின்:— ஸ்ரீ கேதார க்ஷேத்ரத்திலுள்ள நிகரற்ற தீர்த்தத்தை யுண்பாராயினும் ஸ்ரீ காசி க்ஷேத்ரத்தையடைந்து மரிப்பாராயினும் மோக்ஷம் சித்திக்கும், இந்தப் பெரியதவஞ் செய்தலாலுண்டாகின்ற துன்பம் அல்பமல்லவென்று நினைத்து.

(வி - ரை.) ஸ்ரீ கேதாரக்ஷேத்ரம் இமயமலைச் சாரலிலுள்ளது. (௧௨)

அன்னகர்ச் சிகரங் கண்டார்க் கவ்வயின் முத்தி யாரு
மென்னல்சத் தியமா மந்த வெழிற்கிரி யடுத்துப் பார்ப்போர்
மன்னுபுண் ணியத்தி லக்க மட்டிலை யாத லாலே
முன்னியத் தலத்து வாழ்வோர் முக்கணா ராவ ரன்றே.

(ப-ரை.) அன்னகர் - அந்த க்ஷேத்ரத்தின், சிகரம் - சிகரத்தை, கண்டார்க்கு - (தூரத்திலிருந்து) தரிசனஞ்செய்பவர்களுக்கு, அவ்வயின்-அவ்விடத்திலேயே, முத்தி யாகும் - மோக்ஷமுண்டாகும், என்னல் - என்று சொல்வது, சத்தியமாம் - உண்மை

யாகும், அந்த - அந்த, எழில் - அழகு பொருந்திய, கிரி-ஸ்ரீசைலத்தை, அடுத்து - அடைந்து, பார்ப்போர்-தரிசனஞ்செய்பவர்கள், மன்னு-அடைகின்ற, புண்ணியத்து-புண்யத்தின், இலக்கம் - கணக்கு, மட்டில்லை - அளவில்லை, ஆதலால் - ஆகையால், முன்னி - யோசித்து, அத்தலத்து - அந்த க்ஷேத்ரத்தில், வாழ்வோர்-வசிப்பவர்கள், முக்கண்ணர் - சிவபெருமானே, ஆவர் - ஆவார்கள், எ-று.

(பொ-ரை.) அந்த க்ஷேத்ரத்தின் சிகரத்தைத் தூரத்திலிருந்து தரிசனஞ்செய்பவர்களுக்கு அவ்விடத்திலேயே மோக்ஷமுண்டாகுமென்று சொல்வதுண்மையாகும், அந்த வழகு பொருந்திய ஸ்ரீசைலத்தையடைந்து தரிசனஞ்செய்பவர்கள் அடைகின்றபுண்யத்தின் கணக்கு அளவில்லை, ஆகையால் யோசித்து அந்த க்ஷேத்ரத்தில் வசிப்பவர்கள் சிவபெருமானே யாவார்கள். (௧௩)

மிக்கநற் றீர்த்தங் கட்கும் விண்ணவர் முனிவோர் கட்குந்
தக்கமா தான மாகிச் சாதக சித்த ரானோர்
பக்கமா னவைய ளித்துப் பணிந்தமா னிடருக் கன்பா
லக்கணத் தின்ப நல்கும் பருப்பதத் தளவார் சொல்வார்.

(ப - ரை.) மிக்க நல் - மிகச்சிறந்த, தீர்த்தங்கட்கும் - புண்யதீர்த்தங்களுக்கும், விண்ணவர் - தேவர்களுக்கும், முனிவோர்கட்கும் - தபோதனர்களுக்கும், தக்க - யோக்கியமான, மா - பெருமைபொருந்திய, தானமாகி - இருப்பிடமாகி, சாதகம் - யோகப்பயிற்சியில்வல்ல, சித்தரானோர் - சித்தர்கள், பக்கம் ஆனவை - வேண்டினவைகளை, அளித்து-உதவி, பணிந்த-வணங்குகின்ற, மானிடர்க்கு-மனிதர்களுக்கு, அன்பால் - விருப்பத்துடன், அக்கணத்து - அந்த நிமிஷத்திலேயே, இன்பம் - பேரின்பத்தை, நல்கும் - அநுக்ரஹஞ்செய்யவல்ல, பருப்பதத்து - ஸ்ரீசைலத்தின், அளவு - மஹத்வத்தை, சொல்வார்-சொல்லவல்லவர், ஆர்-யார், (யாருமில்லை யென்றபடி), எ-று.

(பொ-ரை.) மிகச்சிறந்த புண்யதீர்த்தங்களுக்கும் தேவர்களுக்குந் தபோதனர்களுக்கும் யோக்கியமான பெருமைபொருந்திய விருப்பிடமாகி, யோகப்பயிற்சியில்வல்ல சித்தர்கள் வேண்டினவைகளை யுதவி, வணங்குகின்ற மனிதர்களுக்கு விருப்பத்துடன் அந்த நிமிஷத்திலேயே பேரின்பத்தை யநுக்ரஹஞ்செய்யவல்ல ஸ்ரீசைலத்தின் மஹத்வத்தைச் சொல்லவல்லவர் யார்? யாருமில்லையென்றபடி. (௧௪)

வந்தகத் தியன்பு டைக்க மண்ணுள்வீழ்ந் ததுபு தைந்து
விந்திய மந்த ரந்தான் விண்டுவின் கரத்தா னின்ற
தந்திவா னிறத்தோ னெந்தை யங்கைவில் லாய்த்து மேரு
வுந்தரிக் கஞ்சி முன்னீ ரொளித்தது மைநா கந்தான்.

(ப - ரை.) விந்தியம் - விந்தியபர்வதமானது, அகத்தியன் - அகஸ்த்யமஹாமுநிவர், வந்து - எழுந்தருளி, புடைக்க - மோத, மண்ணுள் - பூமியில், புதைந்து வீழ்ந்தது - சாய்ந்தமிழ்ந்துவிட்டது, மந்தரம் - மந்தரபர்வதமானது, விண்டுவின் - விஷ்ணுமூர்த்தியின், கரத்தால் - கையினால், நின்றது - (மத்தாகி) நிலைத்துவிட்டது, மேரு - மஹாமேருபர்வதமானது, அந்திவான் - செவ்வானம்போன்ற, நிறத்தோன் - செந்நிறமுடைய, எம் - எமது, எந்தை - தந்தையாகிய சிவபெருமானுடைய, அம் - அழகிய, கையில் - திருக்கரத்தில், வில் ஆய்த்து - வில்லாகி வளைந்துவிட்டது, மைநாகம் - மைநாகபர்வதமானது, உந்து - பின்றொடர்ந்து வருகின்ற, அரிக்கு - இந்திரனுக்கு, அஞ்சி-பயந்து, முன்னீர்-கடலில், ஒளித்தது-மறைந்துவிட்டது, எ-று.

(பொ - ரை.) விந்திய பர்வதமானது அகஸ்த்ய மஹாமுனிவர் எழுந்தருளி மோதப் பூமியில் சாய்ந்தமிழ்ந்துவிட்டது, மந்தர பர்வதமானது விஷ்ணுமூர்த்தியின் கையினால் மத்தாகி நிலைத்துவிட்டது; மஹாமேரு பர்வதமானது செவ்வானம்போன்ற செந்நிறமுடைய எமது தந்தையாகிய சிவபெருமானுடைய அழகிய திருக்கரத்தில் வில்லாகி வளைந்துவிட்டது, மைநாக பர்வதமானது பின்தொடர்ந்து வருகின்ற இந்திரனுக்குப் பயந்து கடலில் மறைந்துவிட்டது. (கடு)

வருநதி கங்கை கொய்ய மாலிய வந்தங் குன்றிப்
பெருகிலா தாத வன்றன் பெருகுவெங் கிரணத் தாலே
சொரிபனி சுவறித் தோன்றா மிமையமல் லாது தோன்றா
திரவியான் விளங்கு மல்லா திருள்கொளு முதய வோங்கல்.

(ப - ரை.) மாலியவந்தம் — மாலியவந்த பர்வதமானது, வரும் - (அடிக்கடிப் பிரவாகமாகி விசாலித்து) வருகின்ற, கங்கைநதி - கங்காநதி, கொய்ய-அறுப்பதனால், குன்றி - ஒடுங்கி, பெருகிலாது - வளரமாட்டாது, இமயம் - இமயபர்வதமானது, ஆதவன் - சூரியனுடைய, பெருகு - அதிகரிக்கின்ற, வெம் - உஷ்ணமாகிய, கிரணத்தாலே - கிரணங்களினாலே, சொரி - பெய்கின்ற, பனி - பனி, சுவறி - வற்றி; தோன்றும் - விளங்குமே, அல்லாது - அல்லாமல், தோன்றாது - விளங்கமாட்டாது, உதயவோங்கல்-உதயகிரி பர்வதமானது, இரவியான்-சூரியனைக்கொண்டு, விளங்கும்-தோன்றுமே, அல்லாது - அல்லாமல், இருள்கொளும் - இருண்டுவிடும், எ - று.

(பொ - ரை.) மாலியவந்த பர்வதமானது அடிக்கடிப் பிரவாகமாகி விசாலித்து வருகின்ற கங்காநதி யறுப்பதனாலொடுங்கி வளரமாட்டாது; சூரியனுடைய அதிகரிக்கின்ற வுஷ்ணமாகிய கிரணங்களினாலே பெய்கின்ற பனிவற்றி விளங்குமேயல்லாமல் விளங்கமாட்டாது, உதயகிரிபர்வதமானது சூரியனைக்கொண்டுதோன்றுமேயல்லாமல் இருண்டுவிடும். (கசு)

வந்துத னுதரம் புக்க தினகரன் கிரண மாற்றி
யந்தருங் கமலஞ் செற்ற தத்தம னஞ்சே ரோங்க
லெந்தையை யொருநாட் டாங்க மானதோத் தரமி ளைத்த
தந்துதன் மணியின் குற்ற முரோகணத் திரிய கற்றா.

(ப-ரை.) அத்தமனஞ்சேர் ஓங்கல்-அஸ்தகிரி பர்வதமானது, வந்து-(உலகத்தை வலம் வருவதனாற்களைத்து) வந்து, தன் - தனது, உதரம் - வயிற்றில், புக்க - புகுந்த, தினகரன் - சூரியன், கிரணம் - கிரணங்களை, மாற்றி - ஒழித்தமையால், அம்தரும் - அழகிய, கமலம் - தாமரைமலர்களெல்லாம், செற்றது - செத்துப்போய்விட்டது, மானதோத்தரம் - மாநஸோத்தரபர்வதமானது, ஒருநாள்-ஒருகாலத்தில், எந்தையை - எமது தந்தையாகிய சிவபெருமானை, தாங்க - சுமத்தற்கு, இளைத்தது - மெலிந்து போய்விட்டது,உரோகணத்திரி-ரோஹணத்ரிபர்வதமானது,உந்து-மாறியிருக்கின்ற, தன் மணி - தனது கற்களின், குற்றம் - தோஷத்தை, அகற்றா - ஒழித்துக்கொள்ள மாட்டாது, எ-று.

(பொ-ரை.) அஸ்தகிரிபர்வதமானது உலகத்தை வலம்வருவதனாற் களைத்து வந்து தனது வயிற்றிற்புகுந்த சூரியன் கிரணங்களை யொழித்தமையால் அழகிய தாமரைமலர்களெல்லாம் செத்துப்போய்விட்டது, மாநஸோத்தரபர்வதமானது ஒரு காலத்தில் எமது தந்தையாகிய சிவபெருமானைச் சுமத்தற்கு மெலிந்துபோய்விட்டது,

ரோஹணாத்ரிபர்வதமானது மாறியிருக்கின்ற தனது கற்களின் தோஷத்தை யொழித்துக்கொள்ள மாட்டாது. (௧௭)

இப்படி மலைகட் கொவ்வோ ரேதமுண் டெந்தை யார்வா
ழப்பருப் பதத்தை யொப்ப தாங்கிரி யில்லென் றேத்திச்
செப்பரு மாதி ராசர் சிரத்தையா லெழுந்தி றைஞ்சி
யொப்பருங் கிரீந்தி ரத்தை யுறுவனா னென்ன வுன்னி.

(ப - ரை.) இப்படி - இவ்விதமாக, மலைகட்கு - பர்வதங்களுக்கெல்லாம், ஒவ்வோர் - ஒவ்வொரு, ஏதம் - தோஷம், உண்டு - இருக்கின்றது, எந்தையார் - எமது தந்தையாகிய மல்லிகார்ஜுநேஸ்வரர், வாழ் - வீற்றிருக்கின்ற, அப்பருப்பதத்தை - அந்த ஸ்ரீசைலத்தை, ஒப்பதாம் - நிகர்ப்பதாகிய, கிரி-பர்வதம், இல் என்று - இல்லையென்று, ஏத்தி-துதித்து, செப்பு அரு - சொல்லுதற்கரிய, மாதிராசர்-மாதிராசையர், சிரத்தையால் - அன்புடன், எழுந்து - (மேலே) எழுந்து, இறைஞ்சி - வணங்கி, ஒப்பு அரு - நிகரற்ற, கிரீந்திரத்தை - பர்வதங்களுக்கெல்லாம் ராஜனாகிய ஸ்ரீசைலத்தை, நான்-அடியேன், உறுவன்-அடைவேன், என்னவுன்னி-என்று யோசித்து, எ-று.

(பொ-ரை.) இவ்விதமாகப் பர்வதங்களுக்கெல்லாம் ஒவ்வொரு தோஷமிருக்கின்றது, எமது தந்தையாகிய மல்லிகார்ஜுநேஸ்வரர் வீற்றிருக்கின்ற அந்த ஸ்ரீசைலத்தை நிகர்ப்பதாகிய பர்வதமில்லையென்று துதித்து, சொல்லுதற்கரிய மாதிராசையார் அன்புடன் மேலே யெழுந்து வணங்கி, நிகரற்ற பர்வதங்களுக்கெல்லாம் ராஜனாகிய ஸ்ரீசைலத்தை யடியேன் அடைவேனென்று யோசித்து. (௧௮)

திருப்பருப் பதத்தைச் சேர்ந்து செய்யமல் லையர் தாளைக்
கருத்துறக் காண்பே னென்னுங் காதலான் மாதி ராசர்
விருப்புடன் சென்று வெற்பின் மிக்கமா தீர்த்தத் துள்ளுந்
தெருட்டருந் தானத் துள்ளுஞ் செய்யமா நதிக ளுள்ளும்.

(ப - ரை.) திருப்பருப்பதத்தை-ஸ்ரீசைலத்தை, சேர்ந்து-அடைந்து, மல்லையர்-மல்லிராசையருடைய, செய்ய - அழகிய, தாளை - திருவடிகளை, கருத்துற - மனப்பூர்வமாக, காண்பேன் - தரிசிப்பேன், என்னும் - என்கின்ற, காதலால் - மிக்க விருப்பத்தால், மாதிராசர் - மாதிராசையர், விருப்புடன்-அன்புடன், சென்று-வந்து, வெற்பின் - ஸ்ரீசைலத்திலுள்ள, மிக்கமா - மிகவும் பெருமைபொருந்திய, தீர்த்தத்துள்ளும் - புண்யதீர்த்தங்களிலும், தெருள்தரும் - தெளிவித்தற்குரிய, தானத்துள்ளும் - புண்ய ஸ்தலங்களிலும், செய்ய-செம்மையான, மா-பெருமைபொருந்திய, நதிகளுள்ளும் - புண்ய நதிகளிலும், எ - று.

(பொ - ரை.) ஸ்ரீசைலத்தையடைந்து மல்லிராசையருடைய வழகிய திருவடிகளை மனப்பூர்வமாகத் தரிசிப்பேனென்கின்ற மிக்க விருப்பத்தால் மாதிராசையர் அன்புடன்வந்து, ஸ்ரீசைலத்திலுள்ள மிகவும் பெருமைபொருந்திய புண்ய தீர்த்தங்களிலும், தெளிவித்தற்குரிய புண்ய ஸ்தலங்களிலும், செம்மையான பெருமைபொருந்திய புண்ய நதிகளிலும். (௧௯)

மங்கல கிரிதுர்க் கத்தும் வனதுர்க்கஞ் சலதுர்க் கத்தும்
பொங்கிரு முழைக ளுள்ளும் பொலிதரும் பிலங்க ளுள்ளுஞ்
சங்கையில் படிக மேம வச்சிரச் சயிலத் துள்ளுங்
கொங்குலாங் கிரிபுட் டொன்று வனசரர் குறிச்சி யுள்ளும்.

(ப - ரை.) மங்கலகிரி துர்க்கத்தும் - மங்கலகிரி துர்க்கங்களிலும், வனதுர்க்கம் - வநதுர்க்கங்களிலும், சலதுர்க்கத்தும் - ஜலதுர்க்கங்களிலும், பொங்கு - மிக்க, இரு - பெரிய, முழைகள் உள்ளும் - குகைகளிலும், பொலிதரும் - அழகிய, பிலங்கள் உள்ளும் - பாதாளங்களிலும், சங்கையில் - கணக்கற்ற, படிக சயிலத்துள்ளும் - ஸ்படிக பர்வதங்களிலும், ஏமசயிலத்துள்ளும் - ஸ்வர்ண பர்வதங்களிலும், வச்சிர சயிலத்துள்ளும் - வஜ்ரபர்வதங்களிலும், கொங்கு உலாம் - நறுமணங்கமழ்கின்ற, கிரியுள் - பர்வதங்களில் வசிக்கின்ற, தொன்று ஆம் - பழமையாகிய, வனசரர்குறிச்சி யுள்ளும் - வேடச்சேரிகளிலும், எ - று.

(பொ - ரை.) மங்கலகிரி துர்க்கங்களிலும், வநதுர்க்கங்களிலும், ஜலதுர்க்கங் களிலும், மிக்க பெரியகுகைகளிலும், அழகிய பாதாளங்களிலும், கணக்கற்ற ஸ்படிக பர்வதங்களிலும், ஸ்வர்ண பர்வதங்களிலும், வஜ்ர பர்வதங்களிலும், நறுமணங்கமழ் கின்ற பர்வதங்களில் வசிக்கின்ற பழமையாகிய வேடச் சேரிகளிலும்.

(வி - ரை.) படிகம் - ஸ்படிகம் என்னும் வடசொற்றிரிபு. ஏமம் - ஹேமம் என்னும் வடசொற்றிரிபு (பொன் என்பது பொருள்). வச்சிரம் - வஜ்ரம் என்னும் வடசொற்றிரிபு. துர்க்கம் - அரண் எனினுமாம். (உ0)

பாதல வுழைக ளுள்ளும் பஞ்சலோ கக்குன் றத்துஞ்
சீதமார் பரிச வேதித் திரளினுந் தரிசித் தோர்க்கு
நீதியா முத்தி நல்கு நிலயத்து மலர்வ னத்துஞ்
சோதிசே ரிந்து காந்த நவமணித் தொகைக்குன் றத்தும்.

(ப - ரை.) பாதலம் - பாதாளங்களின், உழைகள் உள்ளும் - சுற்றுப்பக்கங் களிலும், பஞ்சலோகக்குன்றத்தும் - பஞ்சலோகபர்வதங்களிலும், சீதம் ஆர் - குளிர்ச்சி பொருந்திய, பரிசவேதித்திரளினும் - பரிசவேதிகளிலும், தரிசித்தோர்க்கு - தரிசிப் பவர்களுக்கு, நீதியாம் - யோக்யமாகிய, முத்தி - மோக்ஷத்தை, நல்கும் - அருள் செய்கின்ற, நிலயத்தும் - ஆலயங்களிலும், மலர்வனத்தும் - பூங்காவனங்களிலும், சோதிசேர் - பிரகாசிக்கின்ற, இந்து காந்தத் தொகை குன்றத்தும் - சந்த்ரகாந்த பர்வதங்களிலும், நவமணித் தொகை குன்றத்தும் - நவரத்ந பர்வதங்களிலும், எ - று.

(பொ - ரை,) பாதாளங்களின் சுற்றுப்பக்கங்களிலும், பஞ்சலோக பர்வதங் களிலும், குளிர்ச்சிபொருந்திய பரிசவேதிகளிலும், தரிசிப்பவர்களுக்கு யோக்ய மாகிய மோக்ஷத்தை யருள் செய்கின்ற வாலயங்களிலும், பூங்காவனங்களிலும், பிரகாசிக்கின்ற சந்த்ரகாந்த பர்வதங்களிலும், நவரத்ந பர்வதங்களிலும்,

(வி - ரை.) பரிசம் - ஸ்பர்ஶம் என்னும் வடசொற்றிரிபு. திரள் - கூட்டம். முத்தி - முக்தி என்னும் வடசொற்றிரிபு. சோதி - ஜ்யோதியென்னும் வடசொற்றிரிபு. தொகை - கூட்டம். (உக)

உரகமா விலங்கு புட்க ளுறைவிடத் துள்ளு மோங்கற்
சரிவுக ளிடிந்து வீழுஞ் சாரினுந் தங்கித் தங்கிக்
கரமுறு மிலிங்க பூசை காதலிற் செய்து வாழ்த்தி
வரமுறு வில்ல மோங்கு வனங்களைச் சமீப மான.

**(ப - ரை.)** மா-பெரிய, உரகம் - பாம்புகளும், விலங்கு-மிருகங்களும், புட்கள் - பறவைகளும், உறை-வசிக்கின்ற, இடத்துள்ளும்-இடங்களிலும், ஓங்கல்-மலைகளும், சரிவுகள்-சரிப்புகளும், இடிந்துவீழும்-உடைந்து விழுகின்ற, சாரினும்-இடங்களிலும், தங்கித்தங்கி - இருந்திருந்து, கரம்உறும் - கைத்தலத்தி லெழுந்தருளியிருக்கின்ற, இலிங்கம் - இஷ்டலிங்க மூர்த்தியை, காதலில் - அன்புடன், பூசைசெய்து-பூஜித்து, வாழ்த்தி-துதித்து, வரம் உறும்-மேன்மை பொருந்திய, ஓங்கு-உன்னதமாக வளர்ந் திருக்கின்ற, வில்லவனங்களை - வில்வவநங்களை, சமீபமான-அடுத்திருக்கின்ற, எ-று.

**(போ-ரை.)** பெரிய பாம்புகளும் மிருகங்களும் பறவைகளும் வசிக்கின்ற விடங் களிலும், மலைகளும் சரிப்புகளும் உடைந்து விழுகின்றவிடங்களிலும் இருந்திருந்து, கைத்தலத்தி லெழுந்தருளியிருக்கின்ற இஷ்டலிங்கமூர்த்தியை யன்புடன் பூஜித்துத் துதித்து மேன்மைபொருந்திய வுன்னதமாக வளர்ந்திருக்கின்ற வில்வவநங்களை யடுத்திருக்கின்ற. (௨௭)

கண்டிகை நகத்துங் கண்டி தருசிலைக் கணங்க ளுள்ளும்
வெண்டிரு நீற்று வெற்புத் தருச்சிலை மிகுமி டத்து
மொண்டரு மிலிங்க வோங்கன் மரஞ்சிலை செடிக ளுள்ளும்
புண்டர நுதன்மா யேசர் போலுமா கிரிக ளுள்ளும்.

**(ப - ரை.)** கண்டிகை நகத்தும் - ருத்ராக்ஷபர்வதங்களிலும், கண்டிதருக்கணங் கள் உள்ளும்-ருத்ராக்ஷ வ்ருக்ஷங்களிலும், கண்டிசிலைக்கணங்கள் உள்ளும்-ருத்ராக்ஷக் கற்களிலும், வெண்திருநீற்றுவெற்பு-விபூதிபர்வதங்களும், வெண் திருநீற்றுத் தரு - விபூதி வ்ருக்ஷங்களும், வெண் திருநீற்றுச் சிலை - விபூதிக்கற்களும், மிகும் - மிகுந் திருக்கின்ற, இடத்தும் - இடங்களிலும், ஒள்தரும் - பிரகாசிக்கின்ற, இலிங்கவோங் கல்கள் உள்ளும் - லிங்கபர்வதங்களிலும், இலிங்கமரங்கள் உள்ளும் - லிங்க வ்ருக்ஷங் களிலும், இலிங்கச்சிலைகள்-லிங்கக்கற்களிலும், இலிங்கச்செடிகள் உள்ளும் - லிங்கச் செடிகளிலும், புண்டரம் - த்ரிபுண்டரம் (தரித்திருக்கின்ற), நுதல் - நெற்றியை யுடைய, மாயேசர் - வீரமாஹேஶ்வரர்களை, போலும் - போன்ற, மா-பெரிய, கிரிகள் உள்ளும் - பர்வதங்களிலும், எ-று.

**(போ-ரை.)** ருத்ராக்ஷபர்வதங்களிலும், ருத்ராக்ஷ வ்ருக்ஷங்களிலும், ருத்ராக்ஷக் கற்களிலும், விபூதிபர்வதங்களும் விபூதி வ்ருக்ஷங்களும் விபூதிக்கற்களும் மிகுந்திருக் கின்ற விடங்களிலும், பிரகாசிக்கின்ற லிங்கபர்வதங்களிலும், லிங்க வ்ருக்ஷங்களிலும், லிங்கக்கற்களிலும், லிங்கச்செடிகளிலும், த்ரிபுண்டரந் தரித்திருக்கின்ற நெற்றியை யுடைய வீரமாஹேஶ்வரர்களைப் போன்ற பெரிய பர்வதங்களிலும். (௨௮)

சங்கமம் போலுந் தாருக் கொடிபுதற் றலங்க டோறு
மிங்கிதந் தம்முட் பேசுங் கிரிகொடிப் புதல்க டோறுந்
தங்களி லிதங்கள் பேசுந் துணைமலர்த் தருக்க டோறும்
பொங்கெரி போல விண்ணிற் பொருந்துமா வனங்க டோறும்.

(ப-ரை.) சங்கமம்-ஜங்கமமூர்த்திகளை, போலும்-போன்ற, தாரு-வ்ருக்ஷங்களும், கொடி - கொடிகளும், புதல் - புதர்களும் (இருக்கின்ற), தலங்கள்தோறும் - இடங்களிலும், இங்கிதம்-விரும்பினவற்றை, தம்முள்-தங்களுக்குள்ளே, பேசும்-பேசிக்கொள்கின்ற, கிரிகள்தோறும் - பர்வதங்களிலும், கொடிகள்தோறும்-கொடிகளிலும், புதல்கள்தோறும்-புதர்களிலும்,தங்களில்-தங்களுக்குள்ளே, இதங்கள்-இன்சொற்களை, பேசும்-பேசிக்கொள்கின்ற,துணை-இரட்டை, மலர்த்தருக்கள்தோறும்-புஷ்ப வ்ருக்ஷங்களிலும், பொங்கு-பிரகாசிக்கின்ற, எரிபோல-நெருப்புப்போல, விண்ணில் - ஆகாயம் வரையிலும், பொருந்தும் - அளாவியிருக்கின்ற, மா-பெரிய, வனங்கள் தோறும் - காடுகளிலும், எ-று,

(பொ-ரை.) ஜங்கமமூர்த்திகளைப்போன்ற வ்ருக்ஷங்களும் கொடிகளும் புதர்களுமிருக்கின்ற விடங்களிலும், விரும்பினவற்றைத் தங்களுக்குள்ளே பேசிக்கொள்கின்ற பர்வதங்களிலும் கொடிகளிலும் புதர்களிலும், தங்களுக்குள்ளே இன்சொற்களைப் பேசிக்கொள்கின்ற விரட்டை புஷ்ப வ்ருக்ஷங்களிலும், பிரகாசிக்கின்ற நெருப்புப் போல ஆகாயம் வரையிலும் அளாவியிருக்கின்ற பெரிய காடுகளிலும். (உச)

நடிக்குமா கிரியி னங்க ணற்கொடி செடியி டத்து
நடிக்குமா விலங்கு புட்க ணஞ்சரா விடங்க ளெங்கு
நடித்தெழு சிலையி னங்க ணண்ணின நிலங்கண் முற்று
நடித்துயர் தருவி னங்க ணனியுறுந் தலங்க ளெல்லாம்.

(ப - ரை.) நடிக்கும் - நாட்டியஞ்செய்கின்ற, மா - பெரிய, கிரியினங்கள் - பர்வதங்களும், நல் - நல்ல, கொடி - கொடிகளும், செடி - செடிகளும் (இருக்கின்ற), இடத்தும் - இடங்களிலும், நடிக்கும் - நாட்டியஞ்செய்கின்ற, மா - பெரிய, விலங்கு - மிருகங்களும், புட்கள் - பறவைகளும், நஞ்சு - விஷத்தையுடைய, அரா-பாம்புகளும் (இருக்கின்ற), இடங்கள் எங்கும் - எல்லாவிடங்களிலும், நடித்து-நாட்டியஞ்செய்து, எழு - விளங்குகின்ற, சிலையினங்கள் - கற்கள், நண்ணின - இருக்கின்ற, நிலங்கள் முற்றும்-எல்லாவிடங்களிலும், நடித்து - நாட்டியஞ்செய்து, உயர் - ஓங்கிவளர்ந்திருக்கின்ற, தருவினங்கள் - வ்ருக்ஷங்கள், நனியுறும் - மிகுதியாயிருக்கின்ற, தலங்கள் எல்லாம் - எல்லாவிடங்களிலும், எ - று.

(பொ - ரை.) நாட்டியஞ்செய்கின்ற பெரிய பர்வதங்களும் நல்ல கொடிகளும் செடிகளுமிருக்கின்ற விடங்களிலும், நாட்டியஞ்செய்கின்ற பெரிய மிருகங்களும் பறவைகளும் விஷத்தையுடைய பாம்புகளு மிருக்கின்ற வெல்லா விடங்களிலும், நாட்டியஞ்செய்து விளங்குகின்ற கற்களிருக்கின்ற வெல்லாவிடங்களிலும், நாட்டியஞ்செய்து ஓங்கி வளர்ந்திருக்கின்ற வ்ருக்ஷங்கள் மிகுதியாயிருக்கின்ற வெல்லா விடங்களிலும்.

(வி - ரை.) இனங்கள் - கூட்டங்கள். (உரு)

பாடுமங் கிரிம ரங்கள் பலகொடி நெருங்கி டத்தும்
பாடுமீன் மிருகம் வண்டு பற்றுறுப் பலவி டத்தும்
பாடுமொண் சிலைகண் மந்தி பல்லரி தங்கி டத்தும்
பாடுமா கிரியி னங்கள் பறவைக ணெருங்கி டத்தும்.

(ப - ரை.) பாடும் - (சங்கீதம்) பாடுகின்ற, அம் - அழகிய, கிரி-பர்வதங்களும், மரங்கள் - வ்ருக்ஷங்களும், பல - பலவகைப்பட்ட, கொடி - கொடிகளும், நெருங்கு-மிகுதியாயிருக்கின்ற, இடத்தும் - இடங்களிலும், பாடும் - (சங்கீதம்) பாடுகின்ற,

நீள் - பெரிய, மிருகம் - மிருகங்களும், வண்டு - வண்டுகளும், பற்று அறு - விட்டு நீங்காத, பலவிடத்தும் - பலவிடங்களிலும், பாடும் - (சங்கீதம்) பாடுகின்ற, ஒள் - அழகிய, சிலைகள் - கற்களும், மந்தி - வானரங்களும், பல் - அநேகவிதமான, அரி - சிங்கங்களும், தங்கு - இருக்கின்ற, இடத்தும் - இடங்களிலும், பாடும் - (சங்கீதம்) பாடுகின்ற, மா - பெரிய, கிரியினங்கள் - பன்றிகளும், பறவைகள் - பக்ஷிகளும், நெருங்கு - மிகுதியாயிருக்கின்ற, இடத்தும் - இடங்களிலும், எ - று.

**(போ - ரை.)** சங்கீதம் பாடுகின்ற வழகிய பர்வதங்களும் விருக்ஷங்களும் பலவகைப்பட்ட கொடிகளும் மிகுதியிருக்கின்ற விடங்களிலும், சங்கீதம் பாடுகின்ற பெரிய மிருகங்களும் வண்டுகளும் விட்டு நீங்காத பலவிடங்களிலும், சங்கீதம்பாடுகின்ற வழகிய கற்களும் வானரங்களும் அநேகவிதமான சிங்கங்களு மிருக்கின்ற விடங்களிலும், சங்கீதம் பாடுகின்ற பெரிய பன்றிகளும் பக்ஷிகளும் மிகுதியாயிருக்கின்ற விடங்களிலும். (௨௬)

மின்னெறி காட்டப் பாலு மின்னெறி புட்கட் பாலு
மின்னெறி வாலு கங்கண் மிக்கெழு குவையின் பாலு
மின்னெறி நதியி னங்கண் மேவுதீர்த் தத்தின் பாலு
மின்னெறி பலநீ ரோங்கன் மரஞ்செடி மேவும் பாலும்.

**(ப-ரை.)** மின்எறி-ஒளிவீசுகின்ற, காட்டப்பாலும் - கட்டைகள் (இருக்கின்ற), இடங்களிலும், மின்எறி-ஒளிவீசுகின்ற, புட்கள் பாலும் - பறவைகள் (இருக்கின்ற), இடங்களிலும், மின்எறி - ஒளிவீசுகின்ற, வாலுகங்கள் - வெண்மணற் குன்றுகள், மிக்குஎழு - மிகுதியாயுயர்ந்துள்ள, குவையின் - குவியல்கள் (இருக்கின்ற), பாலும் - இடங்களிலும், மின்எறி - ஒளிவீசுகின்ற, நதியினங்கள் - நதிகள், மேவு - உண்டாயிருக்கின்ற, தீர்த்தத்தின்பாலும் - புண்ணியதீர்த்தங்கள் (இருக்கின்ற) இடங்களிலும், மின்எறி - ஒளிவீசுகின்ற, பல - பற்பலவகையான, நீர்ஓங்கல் - ஜலபர்வதங்களும், நீர்மரம் - ஜல விருக்ஷங்களும், நீர்செடி - ஜலச்செடிகளும், மேவும் - இருக்கின்ற, பாலும் - இடங்களிலும், எ - று.

**(போ-ரை.)** ஒளிவீசுகின்ற கட்டைகளிருக்கின்ற விடங்களிலும், ஒளிவீசுகின்ற பறவைகளிருக்கின்ற விடங்களிலும், ஒளிவீசுகின்றவெண்மணற்குன்றுகள் மிகுதியாயுயர்ந்துள்ள குவியல்களிருக்கின்ற விடங்களிலும், ஒளிவீசுகின்ற பற்பலவகையான ஜலபர்வதங்களும் ஜலவிருக்ஷங்களும் ஜலச்செடிகளுமிருக்கின்ற விடங்களிலும்.

**(வி - ரை.)** காட்டம் - காஷ்டம் என்னும் வடசொற்றிரிபு. (௨௭)

பலநிறத் தருவின் பாலும் பலநிறக் கொடிசூழ் பாலும்
பலநிறப் புதலின் பாலும் பலநிறச் சிலைசேர் பாலும்
பலவுருப் பாத வங்கள் பலபல பணைக்கும் பாலும்
பலவுருக் கொடியி னங்கள் செடியினம் படரும் பாலும்.

**(ப - ரை.)** பலநிறம் - பலவகைப்பட்ட வர்ணங்களையுடைய, தருவின்பாலும் - விருக்ஷங்கள் (இருக்கின்ற) இடங்களிலும், பலநிறம் - பலவகைப்பட்ட வர்ணங்களையுடைய, கொடிகள் சூழ்பாலும் - கொடிகளிருக்கின்ற விடங்களிலும், பலநிறம் - பலவகைப்பட்ட வர்ணங்களையுடைய, புதலின்பாலும்-புதர்கள் (இருக்கின்ற) இடங்களிலும், பலநிறம்-பலவகைப்பட்ட வர்ணங்களையுடைய, சிலைசேர்பாலும்-கற்களிருக்கின்ற விடங்களிலும், பலவுரு - பலவகைப்பட்ட வடிவங்களையுடைய, பாதவங்கள் -

வ்ருக்ஷங்கள், பலபல - பற்பலவிதமாக, பணைக்கும் பாலும் - கிளைத்து வளர்கின்ற விடங்களிலும், பலவுரு - பலவகைப்பட்ட வடிவங்களையுடைய, கொடியினங்கள் - கொடிகளும், செடியினம்-செடிகளும், படரும் பாலும் - வளர்கின்ற விடங்களிலும், எ - று.

(**பொ - ரை.**) பலவகைப்பட்ட வர்ணங்களையுடைய வ்ருக்ஷங்க ளிருக்கின்ற விடங்களிலும், பலவகைப்பட்ட வர்ணங்களையுடைய கொடிகளிருக்கின்ற விடங்களிலும், பலவகைப்பட்ட வர்ணங்களையுடைய புதர்களிருக்கின்ற விடங்களிலும், பலவகைப்பட்ட வர்ணங்களையுடைய கற்களிருக்கின்ற விடங்களிலும், பலவகைபட்ட வடிவங்களையுடைய வ்ருக்ஷங்கள் பற்பலவிதமாகக் கிளைத்துவளர்கின்றவிடங்களிலும், பலவகைப்பட்ட வடிவங்களையுடைய கொடிகளும் செடிகளும் வளர்கின்ற விடங்களிலும். (உஅ)

கேசரத் தருவின் பாலுங் கேசரச் சிலையின் பாலும்
பேசுறிற் கேச ரஞ்சேர் பெருங்கொடி செடியின் பாலு
மாசிலா மிருக ரூபர் மணிமரச் சயிலப் பாலுந்
தேசுலாம் பறவை போலுந் திரண்மரப் பொதும்பர் பாலும்.

(**ப-ரை.**) கேசரத்தருவின்பாலும்-சிங்கமரங்களிருக்கின்ற விடங்களிலும், கேசரச் சிலையின்பாலும்-சிங்கக்கற்களிருக்கின்ற விடங்களிலும், பேசுறில்-சொல்லுமிடத்து, பெரு - பெரிய, கேசரம்சேர்கொடி - சிங்கக்கொடிகளும், கேசரம்சேர் செடியின் பாலும் - சிங்கச்செடிகளுமிருக்கின்ற விடங்களிலும், மாசுஇல்லா - பரிசுத்தமாகிய, மிருகரூபர்மணி - மிருகரூபக் கற்களும், மிருகரூபர்மரம் - மிருகரூப வ்ருக்ஷங்களும், மிருகரூபர் சயிலப்பாலும் - மிருகரூப பர்வதங்களுமிருக்கின்ற விடங்களிலும், தேசு உலாம் - ஒளிவீசுகின்ற, பறவைபோலும் - பக்ஷிபோன்ற, திரள் - திரண்ட, மரப் பொதும்பர்பாலும் - மரத்தோப்புகளிருக்கின்ற விடங்களிலும், எ-று.

(**பொ-ரை**) சிங்கமரங்களிருக்கின்ற விடங்களிலும், சிங்கக்கற்களிருக்கின்ற விடங்களிலும், சொல்லுமிடத்துப் (பெரிய சிங்கக்கொடிகளும் சிங்கச்செடிகளு மிருக்கின்ற விடங்களிலும், பரிசுத்தமாகிய மிருகரூபக்கற்களும் மிருகரூப வ்ருக்ஷங்களும் மிருகரூப பர்வதங்களு மிருக்கின்ற விடங்களிலும், ஒளிவீசுகின்றபக்ஷிபோன்ற திரண்ட மரத்தோப்புகளிருக்கின்ற விடங்களிலும். (உக)

ஒளிவிடும் பறவை போலு மொண்மையா மோங்கற் பாலுந்
தெளிதருந் தேவர் போலும் பாதபவச் சிலையின் பாலுங்
குளிர்நிழற் றிரும்பாத் தாருச் சிலைகளின் குழுவின் பாலும்
வளர்நிழ லின்றி நிற்கு மரமலை யினத்தின் பாலும்.

(**ப-ரை.**) ஒளிவிடும் - ஒளிவீசுகின்ற, பறவைபோலும் - பக்ஷிகள்போன்ற, ஒண்மையாம்-அழகுபொருந்திய, ஓங்கல்பாலும் - பர்வதங்களிருக்கின்ற விடங்களிலும், தெளிதரும்-அறிவுடைய, தேவர்போலும்-தேவர்கள்போன்ற,பாதவம்-வ்ருக்ஷங்களும், சிலையின்பாலும் - கற்களுமிருக்கின்ற விடங்களிலும், குளிர் - குளிர்ந்த, நிழல்-நிழல், திரும்பா-சாயாதிருக்கின்ற, தாரு - வ்ருக்ஷங்களும், சிலைகளின் குழுவின்பாலும் - கற்களுமிருக்கின்றவிடங்களிலும், வளர்-வளர்கின்ற, நிழல்இன்றி-நிழலில்லாமல், நிற்கும்-நிலைத்திருக்கின்ற, மரம் - வ்ருக்ஷங்களும், மலையினத்தின்பாலும் - பர்வதங்களு மிருக்கின்ற விடங்களிலும், எ-று.

(பொ-ரை.) ஒளிவீசுகின்ற பக்ஷிகள்போன்ற வழகுபொருந்திய பர்வதங்களிருக்கின்ற விடங்களிலும், அறிவுடைய தேவர்கள்போன்ற வ்ருக்ஷங்களும் கற்களுமிருக்கின்ற விடங்களிலும், குளிர்ந்த நிழல் சாயாதிருக்கின்ற வ்ருக்ஷங்களும் கற்களுமிருக்கின்ற விடங்களிலும், வளர்கின்ற நிழலில்லாமல் நிலைத்திருக்கின்ற வ்ருக்ஷங்களும் பர்வதங்களு மிருக்கின்ற விடங்களிலும்.

(வி-ரை.) குழு-கூட்டம். இனம்-கூட்டம். (௩௰)

தூரத்தி னிழலாய்த் தோன்றுந் தோகைமா மலையின் பாலுஞ்
சேரப்போய்ப் பார்ப்போர்க் கெல்லாந் தினமொரு வடிவாய்த் தோன்றும்
பாரப்பூ தரத்தின் பாலும் பாதவத் திரளின் பாலுஞ்
சீருற்ற மாதி ராசர் மல்லிரா சையரைத் தேடா.

(ப-ரை.) தூரத்தில் - வெகுதூலையில் (பார்க்கும்போதே), நிழலாய் - நிழலைப் போல, தோன்றும்-காண்கின்ற, மா - பெரிய, தோகைமலையின்பாலும் - மயூராசலங்களிருக்கின்ற விடங்களிலும், சேரப்போய் - சமீபத்திற்சென்று, பார்ப்போர்க்கு எல்லாம் - பார்ப்பவ ரனைவர்க்கும், தினம் - நாடோறும், ஒருவடிவாய் - ஒவ்வொரு வடிவம்போல, தோன்றும்-காண்கின்ற, பாரம்-பெரிய, பூதரத்தின்பாலும்-பர்வதங்களுமிருக்கின்ற விடங்களிலும், பாதவத்திரளின் பாலும் - வ்ருக்ஷங்களுமிருக்கின்ற விடங்களிலும், சீர் உற்ற - சிறப்புப்பொருந்திய, மாதிராசர் - மாதிராசையர், மல்லிராசையரை - மல்லிராசையரை, தேடா - தேடி, எ - று.

(பொ-ரை.) வெகுதூலையிற் பார்க்கும்போதே நிழலைப்போலக் காண்கின்ற மயூராசலங்களிருக்கின்ற விடங்களிலும், சமீபத்திற்சென்று பார்ப்பவரனைவர்க்கும் நாடோறும் ஒவ்வொரு வடிவம்போலக் காண்கின்ற பெரிய பர்வதங்களுமிருக்கின்ற விடங்களிலும் வ்ருக்ஷங்களுமிருக்கின்ற விடங்களிலும், சிறப்புப்பொருந்திய மாதிராசையர் மல்லிராசையரைத் தேடி.

(வி-ரை.) திரள் - கூட்டம். (௩௧)

மரங்களை மரங்க ளேறி மரங்கள்சே விக்க வாழும்
பெருந்தரு வினத்தைப் பார்த்தும் பிரியத்தி னேறிப் பார்ப்போர்
நெருங்குல கனைத்துங் காண நிற்கின்ற தருக்கள் பார்த்தும்
பொருந்திலப் படியே நிற்கும் பொருப்பின மவையைப் பார்த்தும்.

(ப-ரை.) மரங்கள் - வ்ருக்ஷங்கள், மரங்களை - வ்ருக்ஷங்களின்மீது, ஏறி - ஏறிக்கொண்டு, மரங்கள் - வ்ருக்ஷங்களை, சேவிக்க - வணங்கும்படி, வாழும் - நிலைத்திருக்கின்ற, பெரு - பெரிய, தருவினத்தை - வ்ருக்ஷங்களை, பார்த்தும்-பார்த்தும், பிரியத்தின் - ஆசையுடன், ஏறி-(தம்மீது) ஏறிக்கொண்டு, பார்ப்போர் - பார்க்கிறவர்கள், நெருங்கு-மிகுதியாயிருக்கின்ற, உலகுஅனைத்தும் - எல்லாவுலகத்தையும், காண - பார்க்கும்படி, நிற்கின்ற - நிலைத்திருக்கின்ற, தருக்கள் - வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, பொருந்தில் - (தம்மீது) ஏறிக்கொண்டால், அப்படியே - அவ்வாறே (எல்லாவுலகத்தையும் பார்க்கும்படி), நிற்கும் - நிலைத்திருக்கின்ற, பொருப்பு இனம் அவையை - பர்வதங்களை, பார்த்தும்—, எ - று.

(பொ-ரை.) வ்ருக்ஷங்கள் வ்ருக்ஷங்களின் மீதேறிக்கொண்டு வ்ருக்ஷங்களை வணங்கும்படி நிலைத்திருக்கின்ற பெரிய வ்ருக்ஷங்களைப் பார்த்தும், ஆசையுடன்

தம்மீதேறிக்கொண்டு பார்க்கின்றவர்கள் மிகுதியாயிருக்கின்ற வெல்லாவுலகத்தையும் பார்க்கும்படி நிலைத்திருக்கின்ற வ்ருக்ஷங்களைப் பார்த்தும், தம்மீதேறிக்கொண்டால் அவ்வாறே யெல்லாவுலகத்தையும் பார்க்கும்படி நிலைத்திருக்கின்ற பர்வதங்களைப் பார்த்தும்.

(வி - ரை.) இனம் - கூட்டம். அவை - கூட்டம். (௩௨)

ஓரிட முன்னி யேறி லவ்விடத் துய்க்கும் வெற்பைத்
தேரிலப் படியே சேர்க்குந் திரண்மரக் குழுவைப் பார்த்துஞ்
சாருரு வுடையோ ரேறிற் றமைக்காணாத் தருவைப் பார்த்துஞ்
சூரியன் போலத் தோன்றிச் சோமனாந் தருவைப் பார்த்தும்.

(ப-ரை.) ஓர்இடம்-ஒருஸ்தலத்தை, உன்னி-நினைத்து, ஏறில்-ஏறிக்கொண்டால், அவ்விடத்து-அவ்விடத்தில், உய்க்கும் - கொண்டுபோய்ச்சேர்க்கவல்ல, வெற்பை - பர்வதங்களையும், தேரில் - யோசிக்குமிடத்து, அப்படியே - அவ்வாறே, சேர்க்கும் - (கொண்டுபோய் நினைத்த விடத்தில்) சேர்க்கவல்ல, திரள்-திரண்ட, மரக்குழுவை - வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, சார் - அழகுபொருந்திய, உருவுடையோர் - மேனியை யுடையவர்கள், ஏறில்-ஏறிக்கொண்டால், தம்மை-தங்களை, காணா-பார்க்கமுடியாத, தருவை-வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, சூரியன் போல-சூரியனைப்போல, தோன்றி - விளங்கி, சோமனாம்-சந்திரனாகவல்ல, தருவை-வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, எ-று.

(பொ-ரை.) ஒரு ஸ்தலத்தை நினைத்தேறிக்கொண்டால் அவ்விடத்திற்கொண்டு போய்ச் சேர்க்கவல்ல பர்வதங்களையும் யோசிக்குமிடத்து அவ்வாறே நினைத்த விடத்திற் கொண்டுபோய்ச் சேர்க்கவல்ல திரண்ட வ்ருக்ஷங்களையும் பார்த்தும், அழகுபொருந்திய மேனியை யுடையவர்கள் ஏறிக்கொண்டால் தங்களைப் பார்க்க முடியாத வ்ருக்ஷங்களைப் பார்த்தும், சூரியனைப்போல விளங்கிச் சந்திரனாகவல்ல வ்ருக்ஷங்களைப் பார்த்தும். (௩௩)

பாதிமா மிருக மாயும் பாதிமா மலைய தாயும்
பூதரம் பாதி புள்ளோர் பாதியாய்ப் பொருந்தும் வெற்பை
மேதகு வேலை தோறும் வெவ்வேறு பழுத்து வீழுங்
கோதிலா மரத்தை வெட்டிற் கூடுமா செடியைப் பார்த்தும்.

(ப-ரை.) பாதி - ஒருபாதிவடிவம், மா - பெரிய, மிருகமாயும் - மிருகத்தைப் போலவும், பாதி-ஒருபாதிவடிவம், மா - பெரிய, மலையாயும்-பர்வதத்தைப் போலவும், பாதி - ஒருபாதி வடிவம், பூதரமாய் - பர்வதத்தைப் போலவும், ஓர்பாதி - ஒருபாதி வடிவம், புள்ளாய்-பக்ஷியைப்போலவும், பொருந்தும் - சேர்ந்திருக்கின்ற, வெற்பை- பர்வதங்களையும், வேலைதோறும்-நொடிப்பொழுதுதோறும், மேதகு-மேன்மையாகிய, வெவ்வேறு-பலவிதமாக, பழுத்து - கனிகள் கனிந்து, வீழும் - உதிர்கின்ற, கோது இல்லா-பரிசுத்தமாகிய, மரத்தை-வ்ருக்ஷங்களையும், வெட்டில்-(துண்டமாக) தறித்து விட்டால், கூடும் - (மறுபடியும்) சேர்ந்துகொள்ளவல்ல, மா - பெரிய, செடியை - செடிகளையும், பார்த்தும்—, எ-று.

(பொ-ரை.) ஒரு பாதி வடிவம் பெரிய மிருகத்தைப்போலவும் ஒருபாதி வடிவம் பர்வதத்தைப்போலவும் ஒருபாதி வடிவம் பர்வதத்தைப்போலவும் ஒருபாதி வடிவம் பக்ஷியைப்போலவும் சேர்ந்திருக்கின்ற பர்வதங்களையும், நொடிப்பொழுது தோறும் மேன்மையாகிய பலவிதமாகக் கனிகள் கனிந்துதிர்கின்ற பரிசுத்தமாகிய வ்ருக்ஷங்களையும், துண்டாகத் தறித்துவிட்டால் மறுபடியும் சேர்ந்து கொள்ளவல்ல செடிகளையும் பார்த்தும். (௩௪)

**தூ**ரவே யெடுத்துப் போடிற் றொடர்ந்துவந் தவ்வி டத்தை
சேருமா கல்லை வெய்யோன் செறிந்தெழி லெழுந்து வீழிற்
பாரிடை யடங்குந் தாருப் பகுதியைப் பரிவாற் பார்த்துஞ்
சூரிய னெழிலவ் வாறே தோன்றிவீழ் கிரியைப் பார்த்தும்.

**(ப - ரை.)** தூரவே - வெகுதூரத்திலே, எடுத்து - தூக்கிக்கொண்டுபோய், போடில் - போட்டுவிட்டால், தொடர்ந்துவந்து - தேடிச்சென்று, அவ்விடத்தை - தாமிருந்த விடத்தையே, சேரும் - அடையவல்ல, மா - பெரிய, கல்லை - கற்களையும், வெய்யோன்எழில் - சூரியக்கிரணங்கள், செறிந்து - மிகுந்து, எழுந்து - தோன்றி, வீழில் - மறையுமாயின், பார்இடை - பூமிக்குள், அடங்கும் - மறைந்துபோகவல்ல, தாருப்பகுதியை - வ்ருக்ஷங்களையும், பரிவால் - விருப்பத்துடன், பார்த்தும்—, சூரியன்எழில் - சூரியக்கிரணங்கள், அவ்வாறே - (தோன்றி மறைகின்ற) அவ்விதமாகவே, தோன்றி - எழுந்து, வீழ் - மறைந்துபோகவல்ல, கிரியை - பர்வதங்களை, பார்த்தும்—, எ - று.

**(பொ - ரை.)** வெகுதூரத்திலே தூக்கிக் கொண்டுபோய்ப் போட்டு விட்டால் தேடிச்சென்றுத் தாமிருந்த விடத்தையே யடையவல்ல பெரிய கற்களையும் சூரியக்கிரணங்கள் மிகுந்துதோன்றி மறையுமாயின் பூமிக்குள் மறைந்துபோகவல்ல வ்ருக்ஷங்களையும் விருப்பத்துடன் பார்த்தும், சூரியக்கிரணங்கள் தோன்றிமறைகின்ற வவ்விதமாகவே யெழுந்து மறைந்துபோகவல்ல பர்வதங்களைப் பார்த்தும்.

**(வி - ரை.)** பகுதி - கூட்டம். (௧௫)

**நா**ற்றிசைக் கொம்பி லேறி நாடுங்காற் கயிலா யத்து
நாற்றிசை வாயி லேன்று நல்லமா மரங்கள் பார்த்து
நாற்றிசைச் சிகர மேறி நாடுங்கால் வெள்ளி வெற்பி
னாற்றிசைத் துவாரத் தோடு புரந்தெரி நகங்கள் பார்த்தும்.

**(ப - ரை.)** நால்திசை - நான்கு திக்குகளிலும் (இருக்கின்ற), கொம்பில் - கிளைகளின்மீது, ஏறி - ஏறிக்கொண்டு, நாடுங்கால் - பார்க்கும்போது, கயிலாயத்து - ஸ்ரீமஹாகைலாஸத்தின், நால்திசை - நான்கு திக்குகளிலும் (இருக்கின்ற), வாயில் - திருக்கோபுரவாயில்கள், தோன்றும் - காணப்படுகின்ற, நல்ல-நல்ல, மா - பெரிய, மரங்கள்-வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, நால்திசை-நான்கு திக்குகளிலும் (இருக்கின்ற), சிகரம் - சிகரங்களின்மீது, ஏறி - ஏறிக்கொண்டு, நாடுங்கால் - பார்க்கும்போது, வெள்ளிவெற்பின் - ஸ்ரீமஹாகைலாஸத்தின், நால்திசை - நான்கு திக்குகளிலும் (இருக்கின்ற), துவாரத்தோடு - திருக்கோபுரவாயில்களும், புரம் - புண்யக்ஷேத்ரங்களும், தெரி - காணப்படுகின்ற, நகங்கள் - பர்வதங்களை, பார்த்தும்—, எ - று.

**(பொ - ரை.)** நான்குதிக்குகளிலு மிருக்கின்ற கிளைகளின் மீதேறிக்கொண்டு பார்க்கும்போது ஸ்ரீமஹா கைலாஸத்தின் நான்கு திக்குகளிலுமிருக்கின்ற திருக்கோபுரவாயில்கள் காணப்படுகின்ற நல்ல பெரிய வ்ருக்ஷங்களைப் பார்த்தும், நான்கு திக்குகளிலுமிருக்கின்ற சிகரங்களின்மீதேறிக்கொண்டு பார்க்கும்போது ஸ்ரீமஹா கைலாஸத்தின் நான்கு திக்குகளிலுமிருக்கின்ற திருக்கோபுரவாயில்களும் புண்ய க்ஷேத்ரங்களும் காணப்படுகின்ற பர்வதங்களைப் பார்த்தும்.

**(வி - ரை.)** வெள்ளிவெற்பு - வெள்ளியங்கிரி. (௧௬)

மீதுறு மாந்தர் தம்மை மிக்கபா தாள கங்கை
கோதற வாட்டு விக்குங் கோத்திரந் தருக்கள் பார்த்து
மாதர வுடனே சேரி னறுபத்தெட் டான தீர்த்த
மீதிது வென்னக் காட்டு மினக்கிரி தருக்கள் பார்த்தும்.

(ப - ரை.) மீது உறு - மேலே யேறிக்கொண்டிருக்கின்ற, மாந்தர்தம்மை - மனிதர்களை, மிக்க - மேன்மைபொருந்திய, பாதாளகங்கை - பாதாளகங்கையில், கோது அற - பாபத்தினின்றும் நீங்கும்பொருட்டு, ஆட்டுவிக்கும் - ஸ்நானஞ்செய்விக்கவல்ல, கோத்திரம் - பர்வதங்களையும், தருக்கள்-விருக்ஷங்களையும், பார்த்தும்—, ஆதரவுடனே-அன்புடனே, சேரின்-மேலேயேறிக்கொண்டால், அறுபத்தெட்டான-அறுபத்தெட்டென்று சொல்லப்பட்ட, தீர்த்தம் - புண்யதீர்த்தங்கள், ஈது இது-இது விது, என்ன - என்று, காட்டும் - காண்பிக்கவல்ல, இனக்கிரி - பர்வதங்களையும், தருக்கள் - விருக்ஷங்களையும், பார்த்தும்—, எ - று.

(பொ - ரை.) மேலே யேறிக்கொண்டிருக்கின்ற மனிதர்களை மேன்மைபொருந்திய பாதாளகங்கையில் பாபத்தினின்றும் நீங்கும்பொருட்டு ஸ்நானஞ் செய்விக்கவல்ல பர்வதங்களையும் விருக்ஷங்களையும் பார்த்தும், அன்புடனே மேலேயேறிக்கொண்டால் அறுபத்தெட்டென்று சொல்லப்பட்ட புண்ய தீர்த்தங்கள் இதுவிதென்று காண்பிக்கவல்ல பர்வதங்களையும் விருக்ஷங்களையும் பார்த்தும்.

(வி - ரை.) இனம் - கூட்டம். (௩௭)

ஒன்றையொன் றுரிஞ்சித் தோன்று மொளியெரி யதனால் வேகு
முன்றிகழ் மரம்போய் வேறே முளைத்தெழு தருக்கள் பார்த்து
மின்றியுஞ் சீத மிஞ்சு மிடையிருள் வெயிலைத் தம்பாற்
சென்றபேர்க் களிக்குந் தாருக் குழூஉக்கிரித் திரளைப் பார்த்தும்.

(ப - ரை.) ஒன்றை - ஒரு மரத்தை, ஒன்று - மற்றொருமரம், உரிஞ்சி - உராய்வதனால், தோன்றும் - உண்டாகின்ற, ஒளி - பிரகாசம்பொருந்திய, எரியதனால் - நெருப்பினால், வேகும் - சுட்டெரிந்துபோகின்ற, முன் - முதலில், திகழ்-விளங்கின, மரம் - (பழைய) மரம், போய் - அழிந்து, வேறு - மற்றொரு புதிய மரம், முளைத்து-தோன்றி, எழு-வளர்கின்ற, தருக்கள் - மரங்களை, பார்த்தும்—, இன்றியும் - இதுவுமல்லாமலும், சீதம் - குளிர், மிஞ்சும் - அதிகரிக்கின்ற, இடையிருள் - நடுராத்திரியில், தம்பால் - தங்களிடத்தில், சென்றபேர்க்கு - வந்தவர்களுக்கு, வெயிலை - வெயிலை, அளிக்கும் - கொடுக்கவல்ல, தாருக்குழூஉ - மரங்களையும், கிரித்திரளை - பர்வதங்களையும், பார்த்தும்—, எ - று.

(பொ-ரை.) ஒருமரத்தை மற்றொருமரம் உராய்வதனா லுண்டாகின்ற பிரகாசம் பொருந்திய நெருப்பினாற் சுட்டெரிந்துபோகின்ற முதலில் விளங்கின பழைய மரமழிந்து மற்றொரு புதியமரம் தோன்றி வளர்கின்ற மரங்களைப்பார்த்தும், இதுவுமல்லாமலும் குளிர் அதிகரிக்கின்ற நடுராத்திரியில் தங்களிடத்தில் வந்தவர்களுக்கு வெயிலைக் கொடுக்கவல்ல மரங்களையும் பர்வதங்களையும் பார்த்தும்.

(வி - ரை.) குழூஉ - கூட்டம், திரள் - கூட்டம். (௩௮)

வெயின்மிகும் போது தம்பான் மேவினோர் விரும்பத் திங்கள்
பயிலவே செய்யு மோங்கற் பகுதிபன் மரங்கள் பார்த்து
மயிலுறும் பாலா றேரி யருஞ்சுனை யருவி பார்த்துந்
தயிர்நிறை தடாகங் கூபந் தண்சுனை நதிகள் பார்த்தும்,

(**ப - ரை.**) வெயில் - வெயில், மிகும்போது - அதிகரிக்கும்போது, தம்பால் - தங்களிடத்தில், மேவினோர் - (இளைப்புடன்) வந்தபேர்கள், விரும்ப - மகிழ்ச்சியடையும்படி, திங்கள்-சந்திரனை, பயிலச்செய்யும்-ஒளிசெய்விக்கவல்ல, ஓங்கல்பகுதி - மலைகளையும், பல் - பலவகைப்பட்ட, மரங்கள் - மரங்களையும், பார்த்தும்—, அயில் உறும்-உண்ணுதற்குரிய, பால்-பால் (நிறைந்த), ஆறு - நதிகளையும், ஏரி-ஏரிகளையும், அரு - (பார்த்தற்கருமையாகிய), சுனை - சுனைகளையும், அருவி - அருவியாறுகளையும், பார்த்தும்—, தயிர்நிறை - தயிர்நிரம்பிய, தடாகம் - குளங்களையும், கூபம் - கிணறுகளையும், தண் - குளிர்ச்சிபொருந்திய, சுனை - சுனைகளையும், நதிகள் - ஆறுகளையும், பார்த்தும்—, எ - று.

(**போ - ரை.**) வெயில் அதிகரிக்கும்போது தங்களிடத்தில் இளைப்புடன் வந்தபேர்கள் மகிழ்ச்சியடையும்படிச் சந்திரனை யொளிசெய்விக்க வல்ல மலைகளையும் பலவகைப்பட்ட மரங்களையும் பார்த்தும், உண்ணுதற்குரிய பால்நிறைந்த நதிகளையும் ஏரிகளையும் பார்த்தற்கருமையாகிய சுனைகளையும் அருவியாறுகளையும் பார்த்தும், தயிர்நிரம்பிய குளங்களையும் கிணறுகளையும் குளிர்ச்சிபொருந்திய சுனைகளையும் ஆறுகளையும் பார்த்தும். (௩௯)

நெய்யுறு மருவி யாறு சுனைநதி நின்று பார்த்தும்
பையவே மாதி ராசர் பலவில்ல வனம்பு குந்து
பொய்யில்பொன் கிரிம ரங்கள் கொடிசெடி விலங்கு புட்கள்
செய்யவம் மணத்துக் கோயில் செறியும்பா லனைத்தும் பார்த்தும்.

(**ப - ரை.**) நெய் - நெய், உறும் - நிறைந்த, அருவியாறு - அருவியாறுகளையும், சுனை - சுனைகளையும், நதி - நதிகளையும், நின்று - தங்கி, பார்த்தும்—, மாதிராசர் - மாதிராசையர், பல-பலவிதமான, வில்லவனம் - வில்வவநங்களில், பைய-மெதுவாக, புகுந்து - நுழைந்து, பொய்இல் - நிலைபெற்றிருக்கின்ற, பொன்கிரி - ஸ்வர்ண பர்வதங்களும், பொன்மரங்கள் - ஸ்வர்ண வ்ருக்ஷங்களும், பொன்கொடி - ஸ்வர்ணக் கொடிகளும், பொன்செடி - ஸ்வர்ணச் செடிகளும், பொன்விலங்கு - ஸ்வர்ண ம்ருகங்களும், பொன்புட்கள்-ஸ்வர்ணபக்ஷிகளும், செய்ய - அழகிய, அம்மணத்துக்கோயில் - சிவாலயங்களும், செறியும்-நிறைந்திருக்கின்ற, பால்அனைத்தும்-எல்லாவிடங்களையும், பார்த்தும்—, எ - று.

(**போ-ரை.**) நெய்நிறைந்த வருவியாறுகளையும் சுனைகளையும் நதிகளையுந் தங்கிப் பார்த்தும், மாதிராசையர் பலவிதமான வில்வ வநங்களில் மெதுவாக நுழைந்து நிலைபெற்றிருக்கின்ற ஸ்வர்ண பர்வதங்களும் ஸ்வர்ண வ்ருக்ஷங்களும் ஸ்வர்ணக் கொடிகளும் ஸ்வர்ணச் செடிகளும் ஸ்வர்ண ம்ருகங்களும் ஸ்வர்ண பக்ஷிகளும் அழகிய சிவாலயங்களும் நிறைந்திருக்கின்ற வெல்லா விடங்களையும் பார்த்தும்.

(**வி - ரை.**) அம்மணம் - நிர்வாணம் (திகம்பரம்). சிவபெருமானுக்குத் திகம்பரனென்னும் திருநாமம் வழங்குதலால் அம்மணத்தனென்பதற்குச் சிவபெருமானெனப் பொருட்கொண்டாம். (௪0)

நவமணி யினங்கள் போலு நாகங்க ணனேகப் பார்த்து
நவமணி யினங்கள் போலு நற்கொடி செடிகள் பார்த்து
நவமணி யினங்கள் போலு நாற்பதம் புட்கள் பார்த்து
நவமணி யினங்கள் போலு நன்மலர்த் தருக்கள் பார்த்தும்.

(ப - ரை.) நவமணியினங்கள் - நவரத்நங்களை, போலும் - போன்ற, நாகங்கள்-பர்வதங்களை, நண்ணி - அடுத்து, பார்த்தும்—, நவமணியினங்கள் - நவரத்நங்களை, போலும் - போன்ற, நல் - சிறந்த, கொடி - கொடிகளையும், செடிகள் - செடிகளையும், பார்த்தும்—, நவமணியினங்கள் - நவரத்நங்களை, போலும் - போன்ற, நால் பதம் - நான்கு கால்களையுடைய, புட்கள் - பக்ஷிகளை, பார்த்தும்—, நவமணியினங்கள் - நவரத்நங்களை, போலும் - போன்ற, நல்-சிறந்த, மலர்த்தருக்கள் - புஷ்ப வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, எ - று.

(போ - ரை.) நவரத்நங்களைப் போன்ற பர்வதங்களை யடுத்துப் பார்த்தும், நவரத்நங்களைப் போன்ற சிறந்த கொடிகளையும் செடிகளையும் பார்த்தும், நவரத்நங்களைப் போன்ற நான்கு கால்களையுடைய பக்ஷிகளைப் பார்த்தும், நவரத்நங்களைப் போன்ற சிறந்த புஷ்ப வ்ருக்ஷங்களைப் பார்த்தும்.

(வி - ரை.) இனம்-கூட்டம். நவமணி - முத்து, வயிரம், வைடூரியம், மாணிக்கம், மரகதம், புட்பராகம், பவளம், நீலம், கோமேதகம். (சக)

ஒருமுத லாகிப் பல்பே ருற்றபல் கொடிகள் பார்த்து
மருவொடு வாயு லிங்க மந்தரம் விளங்கல் பார்த்தும்
பரிவினன் னீர்தெ ளித்துப் பணியுமா மழையைப் பார்த்துந்
தருவின மலராற் கோலஞ் சமைக்குமத் தகைமை பார்த்தும்.

(ப - ரை.) ஒரு - ஒரேவொரு, முதலாகி - வேறுடையதாகி, பல் - பற்பல, பேர்உற்ற - பெயர்களைப் பெற்றிருக்கின்ற, பல் - பற்பல, கொடிகள் - கொடிகளை, பார்த்தும்—, அருவொடு - அரூபத்துடன், வாயு - வாயுபகவான், லிங்கமந்தரம் - சிவாலயங்களை, விளங்கல் - பெறுக்குந்திறத்தை, பார்த்தும்—, பரிவில் -அன்புடன், நல்நீர் - சுத்தஜலத்தை, தெளித்து - இறைத்து, பணியும் - வணங்குகின்ற, மா - கறுத்த, மழையை - முகிலை, பார்த்தும்—, தருவினம் - மரங்கள், மலரால் - புஷ்பங்களினால், கோலம் - கோலத்தை, சமைக்கும் - இடுகின்ற, அ - அந்த, தகைமை - பெருமையை, பார்த்தும்—, எ - று.

(போ - ரை.) ஒரேவொரு வேறுடையதாகிப் பற்பல பெயர்களைப் பெற்றிருக்கின்ற பற்பல கொடிகளைப் பார்த்தும், அரூபத்துடன் வாயுபகவான் சிவாலயங்களைப் பெறுக்குந்திறத்தைப் பார்த்தும், அன்புடன் சுத்தஜலத்தையிறைத்து வணங்குகின்ற கறுத்த முகிலைப் பார்த்தும், மரங்கள் புஷ்பங்களினாற் கோலத்தையிடுகின்ற அந்தப் பெருமையைப் பார்த்தும். (சஉ)

வந்துசங் கரனை யாட்டு மஞ்சனத் தீர்த்தம் பார்த்துஞ்
சந்தனந் தினமுஞ் சாத்துஞ் சந்தனத் தருக்கள் பார்த்துங்
கொந்தலர் தந்து சாத்து மலர்வனக் குழுக்கள் பார்த்து
மந்தருந் தூபங் காட்டு மருந்தூப மரங்கள் பார்த்தும்.

(ப - ரை.) வந்து - (திருவாலயத்துக்கு) சென்று, சங்கரனை - சிவபெருமானை, ஆட்டும் - அபிஷேகஞ்செய்கின்ற, மஞ்சனத்தீர்த்தம் - திருமஞ்சனத் தீர்த்தங்களை, பார்த்தும்—, சந்தனம் - சந்தனத்தை, தினமும் - நாடோறும், சாத்தும் - ஸமர்ப்பிக்கின்ற, சந்தனத்தருக்கள்-சந்தன வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, கொந்து-கொத்தாகிய அலர் - புஷ்பங்களை, தந்து - உண்டாக்கி, சாத்தும் - ஸமர்ப்பிக்கின்ற, மலர்வனக்

குழுக்கள் - நந்தவனங்களை, பார்த்தும்—, அம் தரும் - அழகுபொருந்திய, தூபம் - தூபத்தை, காட்டும் - ஸமர்ப்பிக்கின்ற, அரு- சிறந்த, தூப மரங்கள் - தூப வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, எ - று.

(போ - ரை-) திருவாலயத்துக்குச் சென்று சிவபெருமானை யபிஷேகஞ்செய்கின்ற திருமஞ்சனத் தீர்த்தங்களைப் பார்த்தும், சந்தனத்தை நாடோறும் ஸமர்பிக்கின்ற சந்தன வ்ருக்ஷங்களைப்பார்த்தும், கொத்தாகிய புஷ்பங்களையுண்டாக்கி ஸமர்ப்பிக்கின்ற நந்தவனங்களைப் பார்த்தும், அழகுபொருந்திய தூபத்தை ஸமர்ப்பிக்கின்ற சிறந்த தூப வ்ருக்ஷங்களைப் பார்த்தும்.

(வி - ரை.) சங்கரன் - இன்பத்தைச்செய்பவன். (௪௩)

தீபநம் பரற்குக் காட்டுந் திரண்மணி யரவு பார்த்து
மேவுநற் பலநி வேதம் விரும்பிச்செய் தருக்கள் பார்த்து
மாவலா லடைக்கா யேற்று மம்மரக் கொடிகள் பார்த்துந்
தாவர மாதி ராசர் தருக்கியே செலுங்கான் மற்றும்.

(ப - ரை.) நம் - நமது, பரற்கு - சிவபெருமானுக்கு, தீபம்-தீபத்தை, காட்டும்-ஸமர்ப்பிக்கின்ற, திரள்-திரண்ட, மணி-ரத்நங்களையுடைய, அரவு-பாம்புகளை, பார்த்தும்—, மேவும்-உண்டாயிருக்கின்ற, நல்-சிறந்த, பலம்-கனிகளை, விரும்பி-அன்புடன், நிவேதஞ்செய் - நைவேத்யம்பண்ணுகின்ற, தருக்கள் - வ்ருக்ஷங்களை, பார்த்தும்—, ஆவலால் - அன்புடன், அடைக்காய்-தாம்பூலத்தை, ஏற்றும் - ஸமர்ப்பிக்கின்ற, அம் - அழகிய, மரம் - வ்ருக்ஷங்களையும், கொடிகள் - கொடிகளையும், பார்த்தும்—, எ - று.

(போ - ரை.) நமது சிவபெருமானுக்குத் தீபத்தை ஸமர்ப்பிக்கின்ற திரண்ட ரத்நங்களையுடைய பாம்புகளைப் பார்த்தும், உண்டாயிருக்கின்ற சிறந்த கனிகளையன்புடன் நைவேத்தியம் பண்ணுகின்ற வ்ருக்ஷங்களைப் பார்த்தும், அன்புடன் தாம்பூலத்தை ஸமர்ப்பிக்கின்ற அழகிய வ்ருக்ஷங்களையும் கொடிகளையும் பார்த்தும். ()

பாதவ வரவென் றேத்திப் பாதவம் பலவி றைஞ்சுங்
கோதிலாத் தருவி லிங்கங் குலவிடங் குறிகிப் பார்த்துந்
தீதறும் பறவை மன்ன வெனச்சொலி செய்ய புட்கள்
பூதல முறவி றைஞ்சும் புள்ளிலிங் கங்கள் பார்த்தும்.

(ப - ரை.) பாதவஅர - வ்ருக்ஷேந்த்ரனே, என்று - என்று, ஏத்தி - துதித்து, பல - பலவிதமான, பாதவம் - வ்ருக்ஷங்கள், இறைஞ்சும் - வணங்குகின்ற, கோது இல்லா - பரிசுத்தமாகிய, தருவிலிங்கம் - வ்ருக்ஷலிங்கங்கள், குலவு - விளங்குகின்ற, இடம் - ஸ்தலங்களை, குறுகி - அடுத்து, பார்த்தும்—, தீது அறும் - பரிசுத்தமாகிய, பறவைமன்ன - பக்ஷீந்த்ரனே, என்ன - என்று, சொல்லி - துதித்து, செய்ய - அழகிய, புட்கள் - பக்ஷிகள், பூதலம் உற - பூமியிற்படும்படி (ஸாஷ்டாங்கமாக), இறைஞ்சும் - வணங்குகின்ற, புள்இலிங்கங்கள்-பக்ஷிலிங்கங்களை, பார்த்தும்—, எ-று.

(போ - ரை.) வ்ருக்ஷேந்த்ரனே! என்று துதித்து பலவிதமான வ்ருக்ஷங்கள் வணங்குகின்ற பரிசுத்தமாகிய வ்ருக்ஷலிங்கங்கள் விளங்குகின்ற ஸ்தலங்களையடுத்துப் பார்த்தும், பரிசுத்தமாகிய பக்ஷீந்த்ரனே ! என்று துதித்து அழகிய பக்ஷிகள் பூமியிற் படும்படிச் சாஷ்டாங்கமாக வணங்குகின்ற பக்ஷிலிங்கங்களைப் பார்த்தும்.

(வி - ரை) பாதவஅர - மரங்களுக்குத்தலைவனே. பறவைமன்ன - பக்ஷிகளுக்குத்தலைவனே.
(௪௫)

மிருகமன் னவவென் றேத்தி விரும்பியே யிறைஞ்ச நாளுந்
தெரிதரு மிருக லிங்கஞ் சேரிடஞ் சென்று பார்த்து
முரகவல் லபவென் றேத்தி யுரகங்கள் பணிய நாளும்
வரமரு ளுரக லிங்க மன்னிட மகிழ்ந்து பார்த்தும்.

(ப - ரை.) மிருகமன்னவ - ம்ருகேசுவரனே, என்று - என்று, நாளும் - தினந்தோறும், ஏத்தி - துதித்து, விரும்பி - அன்புடன், இறைஞ்ச - வணங்க, தெரிதரு- விளங்குகின்ற, மிருகலிங்கம் - ம்ருகலிங்கங்கள், சேர் - வீற்றிருக்கின்ற, இடம் - ஸ்தலங்களை, சென்று-போய், பார்த்தும்—, நாளும் - தினந்தோறும், உரகவல்லப- நாகேசுவரனே, என்று - என்று, ஏத்தி - துதித்து, உரகங்கள் - நாகங்கள், பணிய - வணங்க, வரம் - வரத்தை, அருள் - அநுக்ரஹஞ்செய்கின்ற, உரகலிங்கம் - நாகலிங்கங்கள், மன் - வீற்றிருக்கின்ற, இடம் - ஸ்தலங்களை, மகிழ்ந்து - சந்தோஷத்துடன், பார்த்தும்—, எ - று.

(போ - ரை.) ம்ருகேசுவரனே! என்று தினந்தோறுந் துதித்து அன்புடன் வணங்க விளங்குகின்ற ம்ருகலிங்கங்கள் வீற்றிருக்கின்ற ஸ்தலங்களைப் போய்ப் பார்த்தும், நாகேசுவரனே! என்று தினந்தோறுந் துதித்து நாகங்கள் வணங்க வரத்தை யநுக்ரஹஞ் செய்கின்ற நாகலிங்கங்கள் வீற்றிருக்கின்ற ஸ்தலங்களைச் சந்தோஷத்துடன் பார்த்தும்.

(வி-ரை.) மிருகமன்ன-மிருகங்களுக்குத் தலைவனே. உரகவல்லப-நாகங்களுக்குத் தலைவனே. (௪௬)

அளிக்குல மன்ன வென்றே யளியின மிறைஞ்சி யேத்த
வெளிப்படு மளியி லிங்க மேவிடம் விரும்பிப் பார்த்துந்
தெளித்தநீர் மன்ன வென்று செழுஞ்சல மிறைஞ்ச நாளுங்
களிக்குநற் சலலிங் கத்தைக் காதலிற் சென்று பார்த்தும்.

(ப - ரை.) அளிக்குலமன்ன - ப்ரமரேசுவரனே, என்று - என்று, அளியினம் - வண்டுகள், இறைஞ்சி - வணங்கி, ஏத்த - துதிக்க, வெளிப்படும் - விளங்குகின்ற, அளியிலிங்கம் - ப்ரமரலிங்கங்கள், மேவும் - வீற்றிருக்கின்ற, இடம் - ஸ்தலங்களை, விரும்பி - அன்புடன், பார்த்தும்—, தெளித்த - பரிசுத்தமாக்குகின்ற, நீர்மன்ன - ஜலேசுவரனே, என்று-என்று, செழும் - மேன்மைபொருந்திய, சலம் - ஜலராசிகள், நாளும்-தினந்தோறும், இறைஞ்ச - வணங்க, களிக்கும் - ஆநந்தமடைகின்ற, நல் - சிறந்த, சலலிங்கத்தை - ஜலலிங்கங்களை, காதலில்-அன்புடன், சென்று - போய், பார்த்தும்—, எ - று.

(போ-ரை.) ப்ரமரேசுவரனே! என்று வண்டுகள்வணங்கித் துதிக்க விளங்குகின்ற ப்ரமரலிங்கங்கள் வீற்றிருக்கின்ற ஸ்தலங்களை யன்புடன் பார்த்தும், பரிசுத்தமாக்குகின்ற ஜலேசுவரனே! என்று மேன்மைபொருந்திய ஜலராசிகள் தினந்தோறும் வணங்க வாநந்தமடைகின்ற ஜலலிங்கங்களை யன்புடன் போய்ப் பார்த்தும்.

(வி - ரை.) அளி - வண்டு. குலம் - கூட்டம். அளிக்குலமன்ன - வண்டுகளுக்குத் தலைவனே. ப்ரமரம் - வண்டு. இனம் - கூட்டம். அளிக்குலமன்ன-வண்டுகளுக்குத் தலைவனே. ராசி-கூட்டம். நீர் மன்ன - ஜலராசிகளுக்குத்தலைவனே. (௪௭)

சவரவல் லபவென் றேத்திச் சவரர்க ளிறைஞ்ச நாளுந்
தவலற வரம ளிக்குஞ் சவரலிங் கங்கள் பார்த்தும்
விபுதவல் லபவென் றேத்தி விபுதர்க ளிறைஞ்ச நாளு
மவர்களுக் கினிமை நல்கு மமரலிங் கங்கள் பார்த்தும்.

(ப-ரை.) சவரவல்லப-ஈசபரேஸ்வரனே, என்று-என்று, ஏத்தி-துதித்து, சவரர்கள்-வேடர்கள், நாளும் - தினந்தோறும், இறைஞ்ச-வணங்க, தவல்அற - குறைவில்லாதிருக்கும்படி, வரம்-வரத்தை, அளிக்கும் - அநுக்ரஹஞ்செய்கின்ற, சவரலிங்கங்கள் - ஈசபரலிங்கங்களை, பார்த்தும்—, விபுதவல்லப - விபுதேஸ்வரனே, என்று - என்று, ஏத்தி - துதித்து, விபுதர்கள் - தேவர்கள், இறைஞ்ச - வணங்க, நாளும் - தினந்தோறும், அவர்களுக்கு - அவர்களுக்கு, இனிமை - வரத்தை, நல்கும் - அநுக்ரஹஞ்செய்கின்ற, அமரலிங்கங்கள் - தேவலிங்கங்களை, பார்த்தும்—, எ - று.

(பொ - ரை.) ஈசபரேஸ்வரனே! என்று துதித்து வேடர்கள் தினந்தோறும் வணங்கக் குறைவில்லாதிருக்கும்படி வரத்தை யநுக்ரஹஞ் செய்கின்ற ஈசபரலிங்கங்களைப் பார்த்தும், விபுதேஸ்வரனே! என்று துதித்துத் தேவர்கள் வணங்கத் தினந்தோறும் அவர்களுக்கு வரத்தை யநுக்ரஹஞ்செய்கின்ற தேவலிங்கங்களைப்பார்த்தும்.

(வி - ரை.) சவரவல்லப - வேடர்களுக்குத் தலைவனே. விபுதவல்லப - தேவர்களுக்குத் தலைவனே. (௩௯)

மலையெனப் புற்று மூடி மறையுமா தவரைப் பார்த்து
மிலைமர மூடித் தாரு வெனவுறுந் தவரைப் பார்த்துஞ்
சிலையெனச் சிலைமேன் மூடிச் செறியுமா தவரைப் பார்த்துந்
தொலைவிலா மயிர்மேன் மூடித் தோன்றலா தவரைப் பார்த்தும்.

(ப - ரை.) மலையென்ன - பர்வதத்தைப்போல, புற்று - வன்மீகம், மூடி - போர்த்துக்கொண்டு, மறையும் - தோன்றுதிருக்கின்ற, மா - பெருமைபொருந்திய, தவரை - முநிவர்களை, பார்த்தும்—, இலை - இலைகள் (நிறைந்த), மரம்-வ்ருக்ஷங்கள், மூடி - சூழ்ந்துகொண்டு, தாருவென்ன - வ்ருக்ஷத்தைப்போல, உறும் - நிலைத்திருக்கின்ற, தவரை - முநிவர்களை, பார்த்தும்—, சிலை - கல், மேல் - தம்மீது, மூடி - வளைந்துகொண்டு, சிலையென்ன - கல்லைப்போல, செறியும் - நிலைத்திருக்கின்ற, மா - பெருமைபொருந்திய, தவரை - முநிவர்களை, பார்த்தும்—, தொலைவு இல்லாத - அழிவில்லாத, மயிர் - ரோமங்கள் (வளர்ந்து), மேல் - தம்மீது, மூடி-மூடிக்கொண்டு, தோன்றலா - மறைந்திருக்கின்ற, தவரை - முநிவர்களை, பார்த்தும்—, எ - று.

(பொ - ரை.) பர்வதத்தைப்போல வன்மீகம் போர்த்துக்கொண்டு தோன்றுதிருக்கின்ற பெருமை பொருந்திய முநிவர்களைப் பார்த்தும், இலைகள் நிறைந்த வ்ருக்ஷங்கள் சூழ்ந்துகொண்டு வ்ருக்ஷத்தைப்போல நிலைத்திருக்கின்ற முநிவர்களைப் பார்த்தும், கல் தம்மீது வளைந்துகொண்டு கல்லைப்போல நிலைத்திருக்கின்ற பெருமை பொருந்திய முநிவர்களைப் பார்த்தும், அழிவில்லாத ரோமங்கள் வளர்ந்து தம்மீது மூடிக்கொண்டு மறைந்திருக்கின்ற முநிவர்களைப் பார்த்தும். (௪௧)

பரமயோ கத்தாற் காட்டப் பான்மையாந் தவரைப் பார்த்துஞ்
சிரநில மூன்றிக் கைகால் சேணிடை நீட்டி வாயுப்
பருகுமா தவரைப் பார்த்தும் பாதவங் குட்ட மொன்றே
தரையிடை யூன்றி நின்று சலிப்பின்மா தவரைப் பார்த்தும்.

(ப -ரை.) பரமம் - மேலான, யோகத்தால் - யோகப்பயிற்சியினால், காட்டப் பான்மையாம் - கட்டையைப்போன்று நிலைத்திருக்கிற, தவரை - முனிவர்களை, பார்த்தும்—, சிரம்-தலையை, நிலம் - பூமியில், ஊன்றி-நட்டுக்கொண்டும், கை-கைகளையும், கால் - கால்களையும், சேண் இடை - ஆகாயத்தில், நீட்டி - தூக்கிக்கொண்டும், வாயு-காற்றை, பருகும் - புசிக்கின்ற, மா - பெருமைபொருந்திய, தவரை - முனிவர்களை, பார்த்தும்—, பாதம் - காலின், அங்குட்டம் - பெருவிரல், ஒன்றே - ஒன்றினையே, தரையிடை - பூமியில், ஊன்றி - பதித்து, நின்று - நின்றுகொண்டு, சலிப்பு இல் சலனமில்லாமல் நிலைத்திருக்கின்ற, மா-பெருமைபொருந்திய, தவரை-முனிவர்களை, பார்த்தும்—, எ - று.

(பொ-ரை.) மேலான யோகப்பயிற்சியினால் கட்டையைப்போன்று நிலைத்திருக்கின்ற முனிவர்களைப்பார்த்தும், தலையைப்பூமியில் நட்டுக்கொண்டும் கைகளையும் கால்களையும் ஆகாயத்தில் தூக்கிக்கொண்டும் காற்றைப் புசிக்கின்ற பெருமைபொருந்திய முனிவர்களைப் பார்த்தும், காலின் பெருவிரலொன்றினையே பூமியிற் பதித்து நின்றுகொண்டு சலனமில்லாமல் நிலைத்திருக்கின்ற பெருமைபொருந்திய முனிவர்களைப் பார்த்தும். (௫௦)

பரந்தபஞ் சாங்கி யூடே பற்றுமா தவரைப் பார்த்து
முரந்தர வோடு மாற்றி னுற்றிருங் களம மிழ்ந்த
நிரந்தர மகிழ்ந்து நிற்கு நித்தமா தவரைப் பார்த்து
மருந்துநீர்த் துளிவா னூகத் தமையுமா தவரைப் பார்த்தும்.

(ப - ரை.) பரந்த - வியாபித்து ஜ்வாலைவீசுகின்ற, பஞ்சாங்கியூடு - பஞ்சாக்கினி மத்தியில், பற்றும் - சலனமில்லாமல் தவஞ்செய்கின்ற, மா - பெருமைபொருந்திய, தவரை - முனிவர்களை, பார்த்தும்—, உரந்தர - மனோத்ருடத்துடன், ஓடும் - ஓடுகின்ற, ஆற்றின் - நதியில், உற்று - நின்று, இரு - பெருமையுள்ள, களம் - கண்டம் வரையிலும், அமிழ்ந்த - முழுகும்படி, நிரந்தரம் - சதாகாலமும், மகிழ்ந்து - சந்தோஷத்துடன், நிற்கும் - தவஞ்செய்கின்ற, நித்தம் - அழிவில்லாத, மா - பெருமை பொருந்திய, தவரை - முனிவர்களை, பார்த்தும்—, அருந்தும் - உண்ணுதற்குரிய, நீர்த்துளி - நீர்த்திவலைகளைச் சொட்டுகின்ற, வானூகத்து - வெண்மணற்குன்றுகளில், அமையும் - தவஞ்செய்கின்ற, மா - பெருமைபொருந்திய, தவரை - முனிவர்களை, பார்த்தும்—, எ - று.

(பொ-ரை.) வியாபித்து ஜ்வாலைவீசுகின்ற பஞ்சாக்கினி மத்தியில் சலனமில்லாமற் றவஞ்செய்கின்ற பெருமைபொருந்திய முனிவர்களைப் பார்த்தும், மனோத்ருடத்துடன் ஓடுகின்ற நதியில் நின்று பெருமையுள்ள கண்டம் வரையிலும் முழுகும்படிச் சதாகாலமுஞ் சந்தோஷத்துடன் தவஞ்செய்கின்ற அழிவில்லாத பெருமை பொருந்திய முனிவர்களைப் பார்த்தும், உண்ணுதற்குரிய நீர்த்திவலைகளைச் சொட்டுகின்ற வெண்மணற் குன்றுகளில் தவஞ்செய்கின்ற பெருமை பொருந்திய முனிவர்களைப் பார்த்தும்.

(வி - ரை.) பஞ்சாக்கினி - நான்கு திக்குகளிலும் அக்கினி மூட்டப்பட்டு மேலிற் சூர்யாக்கினியுங் கொண்டுள்ளதாம். (௫௧)

மரங்களை யையங் கேட்க வளைந்திடும் பலங்க ளுண்டும்
பெருங்கிரி வணங்கி நல்கும் பெருமரத் தேன யின்று
மிருந்துமா தவங்கள் செய்வோ ரிடங்களிற் சென்று பார்த்துந்
திருந்துநற் சலக்கி ரீடை செய்யுங்கர் திருவர்ப் பார்த்தும்.

(**ப - ரை.**) மரக்களை - மரங்களை, ஐயம் - பிச்சை, கேட்க - கேட்டலும், வளைந்து - வணங்கி, இடும் - கொடுக்கின்ற, பலங்கள் - பழங்களை, உண்டும் - புசித்தும், பெரு - பெருமையுடைய, கிரி - மலைகள், வணங்கி - தொழுது, நல்கும் - கொடுக்கின்ற, பெரு - மேலான, மரத்தேன் - கொம்புத்தேனை, அயின்றம்-உண்டும், இருந்து - தங்கி, தவங்கள் - பெருந்தவங்களை, செய்வோர் - பண்ணுகின்ற முனிவர்களுடைய, இடங்களில் - ஆச்சிரமங்களில், சென்று - போய், பார்த்தும்—, திருந்தும் - பொருத்தமாகிய, நல் - நல்ல, சலக்கிரீடை - ஜலக்ரீடை, செய்யும் - செய்கின்ற, கந்திருவர் - கந்தர்வர்களை, பார்த்தும்—, எ-று.

(**போ-ரை.**) மரங்களைப் பிச்சைகேட்டலும் வணங்கிக் கொடுக்கின்ற பழங்களைப் புசித்தும், பெருமையுடைய மலைகள் தொழுது கொடுக்கின்ற மேலான கொம்புத் தேனை யுண்டும், தங்கிப் பெருந்தவங்களைப் பண்ணுகின்ற முனிவர்களுடைய ஆச்சிரமங்களிற் போய்ப் பார்த்தும், பொருத்தமாகிய நல்ல ஜலக்ரீடை செய்கின்ற கந்தர்வர்களைப் பார்த்தும். (௬௨)

**செ**ய்யநற் சிவார்ச்ச னுவற் சித்தரைப் பார்த்துந் தேவர்
தையலா ருடனே யாடுஞ் சமூகங்க டம்மைப் பார்த்து
முய்யநீ ரரமி னர்க ளுறுபிலங் களைநேர் பார்த்தும்
பையர வுலக ராடும் பாதல முழைகள் பார்த்தும்.

(**ப - ரை.**) செய்ய நல் - மிகச்சிறந்த, சிவார்ச்சனை - சிவபூஜையில், ஆவல் - விருப்பத்தையுடைய, சித்தரை - சித்தர்களை, பார்த்தும்—, தேவர் - தேவர்கள், தையலாருடன் - மாதர்களுடன், ஆடும் - நீர்விளையாடல் செய்கின்ற, சமூகங்கள் தம்மை - கூட்டங்களை, பார்த்தும்—, உய்ய - பிழைத்தற்குரிய, நீர் - ஜலத்தில் வசிக்கின்ற, அரமினர்கள் - (ஜலபுருஷர்களுடன்) ஜலகன்னிகைகளும், உறும் - நீர் விளையாடல்செய்கின்ற, பிலங்களை - பாதாளங்களை, நேர்-நேரே, பார்த்தும்—, பை - படங்களையுடைய, அரவு உலகர் - (நாகலோகத்திலுள்ள) நாகபுருஷர்களும் (நாக கன்னிகைகளும்), ஆடும் - நீர் விளையாடுகின்ற, பாதலமுழைகள் - பாதாளக்குகை களை, பார்த்தும்—, எ - று.

(**போ - ரை.**) மிகச்சிறந்த சிவபூஜையில் விருப்பத்தையுடைய சித்தர்களைப் பார்த்தும், தேவர்கள் மாதர்களுடன் நீர்விளையாடல் செய்கின்ற கூட்டங்களைப் பார்த்தும், பிழைத்தற்குரிய ஜலத்தில் வசிக்கின்ற ஜலபுருஷர்களுடன் ஜலகன்னிகை களும் நீர்விளையாடல் செய்கின்ற பாதாளங்களை நேரே பார்த்தும், படங்களை யுடைய நாகலோகத்திலுள்ள நாகபுருஷர்களும் நாககன்னிகைகளும் நீர்விளையாடு கின்ற பாதாளக் குகைகளைப் பார்த்தும். (௬௩)

**க**ரியரி புண்ட ரீகங் கரடிகண் முதலா யுள்ள
தெரிவரு மிருகந் தம்முட் செறிபகை யொழிந்து சேரு
முரிமையை மாதி ராச ருகந்துபார்த் துயர்ந்து வில்லை
விரிவனந் தன்னைப் பார்த்து மிகமன முருகிப் போற்றி.

(**ப - ரை.**) கரி - யானைகளும், அரி - சிங்கங்களும், புண்டரீகம் - புலிகளும், கரடிகள் - கரடிகளும், முதலாயுள்ள - முதலாயிருக்கின்ற, தெரிவு அரு - காண்டற் கரிய, மிருகம் - மிருகங்கள், தம்முள் - தம்மில், செறி - உண்டாயிருந்த, பகை - விரோதத்தினின்றும், ஒழிந்து - நீங்கி, சேரும் - (அந்யோந்யமாய்) கூடியிருக்கின்ற,

உரிமையை - பெருமையை, மாதிராசர் - மாதிராசையர், உகந்து-சந்தோஷத்துடன், பார்த்து—, உயர்ந்து-ஓங்கிவளர்ந்து, விரி-விசாலித்திருக்கின்ற, வில்லவனம் தன்னை-வில்வவநத்தை, பார்த்தும்—, மனம் - நெஞ்சம், மிக - அதிகமாக, உருகி - கரைந்து, போற்றி - துதித்து, எ - று.

(பொ-ரை.) யானைகளும் சிங்கங்களும் புலிகளும் காடிகளு முதலாயிருக்கின்ற காண்டற்கரிய மிருகங்கள் தம்மில் உண்டாயிருந்த விரோதத்தினின்றும் நீங்கி, அந்யோந்யமாய்க் கூடியிருக்கின்ற பெருமையை மாதிராசையர் சந்தோஷத்துடன் பார்த்தும், ஓங்கி வளர்ந்து விசாலித்திருக்கின்ற வில்வ வநத்தைப்பார்த்தும், நெஞ்சம் அதிகமாகக் கரைந்துத் துதித்து. (௩௪)

மெய்த்தவ மல்லி ராசர் மேவிட மேதென் றெண்ணி
யத்தகை வில்லஞ் சூழு மருவன மனைத்துந் தேடி
முத்தரா மாதி ராசர் முறைமையை யறிவா மென்னுஞ்
சித்தரா யத்த வத்தர் திருவுள்ளத் துன்னித் தேர்ந்து.

(ப - ரை.) மெய் - உண்மையாகிய, தவம் - தவஞ்செய்கின்ற, மல்லிராசர் - மல்லிராசையர், மேவும் - எழுந்தருளியிருக்கின்ற, இடம் - ஆச்சிரமம், எது - யாது, என்று - என்று, எண்ணி - சிந்தித்து, அத்தகை-அந்தப்பெருமையுடையதும், சூழும்-சூழ்ந்திருக்கிறதும், அரு - சிறந்தது மாகிய, வில்லம்வனம் - வில்வ வநத்தை, அனைத்தும் - முழுதும், தேடும் - தேடுகின்ற, முத்தர்ஆம் - மலமுத்தராகிய, மாதிராசர் - மாதிராசையருடைய, முறைமையை - நிலைமையை, அறிவாம்என்னும் - சோதித்துத் தெரிந்துகொள்வோமென்கின்ற, சித்தர் ஆய் - மனத்தையுடையவராய், அத்தவத்தர்-அந்த ஜங்கமூர்த்தியாகிய மல்லிராசையர், திருவுள்ளத்து - திருவுளத்தில், உன்னி - யோசித்து, தேர்ந்து - அறிந்து, எ - று.

(பொ - ரை.) உண்மையாகிய தவஞ்செய்கின்ற மல்லிராசையர் எழுந்தருளியிருக்கின்ற வாச்சிரமம் யாது? என்று சிந்தித்து, அந்தப் பெருமையுடையதும் சூழ்ந்திருக்கிறதும் சிறந்ததுமாகிய வில்வ வநத்தைமுழுதும் தேடுகின்ற மலமுத்தராகிய மாதிராசையருடைய நிலைமையைச் சோதித்துத் தெரிந்து கொள்வோமென்கின்ற மனத்தையுடையவராய், அந்த ஜங்கமமூர்த்தியாகிய மல்லிராசையர் திருவுளத்தில் யோசித்தறிந்து

(வி - ரை.) திருவெண்ணீறு, கண்டிகை, காஷாய முதலிய சிவவேடச்சின்னங்களைப் புறத்திலணிந்து பெருந்துறவிகளைப்போல நடிக்கின்ற கூடாவொழுக்கமுள்ள போலித் தவத்தர்களைப் போலல்லாது எனதென்னும் புறப்பற்றினையும் யானென்னு மகப்பற்றினையு மறவே விட்டுத் துறவினைப் பூண்டாராதலின் மெய்த்தவ மல்லிராச ரென்றார். (௩௫)

## கலிநிலைத்துறை.

நல்ல தோர்பெரு வடிவினை நண்ணிமு னடுவே
மல்லன் மாமலை தொடங்கிவிண் ணளவதாய் வளர்ந்து
தொல்லை நீற்றருங் கிரியதோ சோதிமா மயமோ
வெல்லையற்ற ருத்தி ராக்கமா மரம்பட ரியல்போ.

(ப - ரை.) நல்லது - தெய்விகத்தன்மை யுடையதாகிய, ஓர் - ஒப்பற்ற, பெரு வடிவினை - விஸ்வரூபத்தை, நண்ணி - அடைந்து, முன்-(மாதிராசையர்க்கு) எதிரே, நடு-இடைவெளியிலே, மல்லல்-வளமையுடையதும், மா - பெருமையுடையதுமாகிய, மலை-ஸ்ரீசைலம், தொடங்கி-முதற்கொண்டு, விண் - ஆகாயம், அளவாய்-வரையிலும்,

வளர்ந்து - உயர்ந்து, தொல்லை - பழமையானதும், அரு - பார்த்தற்கருமையானது மாகிய, நீற்றுக் கிரியதோ - விபூதிபர்வதமோ, மா - மேன்மைபொருந்திய, சோதி மயமோ - ஜ்யோதிஸ்வரூபமோ, எல்லையற்ற - மதித்தற்கரியதும், மா - பெருமை பொருந்தியதும், படர்-வளர்ந்திருந்ததுமாகிய, ருத்திராக்க மரம் இயல்போ-ருத்ராக்ஷ வ்ருக்ஷமோ, எ - று.

(பொ-ரை.) தெய்விகத்தன்மையுடையதாகிய ஒப்பற்ற விச்வரூபத்தையடைந்து மாதிராசையர்க்கெதிரே இடைவெளியிலே வளமையுடையதும் மேன்மையுடையது மாகிய ஸ்ரீசைலம் முதற்கொண்டு ஆகாயம் வரையிலும் உயர்ந்து, பழமையானதும் பார்த்தற் கருமையானதுமாகிய விபூதி பர்வதமோ? மேன்மைபொருந்திய ஜ்யோதி ஸ்வரூபமோ ? மதித்தற்கரியதும் பெருமை பொருந்தியதும் வளர்ந்திருந்தது மாகிய ருத்ராக்ஷ வ்ருக்ஷமோ.

(வி - ரை.) எல்லையற்ற - கணக்கற்ற. ருக்திராக்கம் - ருத்ராக்ஷங்களையுடைய. மரம் - வ்ருக்ஷம். இயல்பு - தன்மை. (௫௬)

கோர சம்புவின் வடிவமோ குறித்துயா மொருகா
லோரி டத்திலுஞ் சொல்லொணா தென்னென வுணர்ந்து
தீரமா திராசை யர்தாஞ் சென்னியே தென்று
தேர வேணு மென்றாண்டு மூன்றியங்கியுந் தெரியார்.

(ப-ரை.) கோரசம்புவின் வடிவமோ- வீரபத்ரமூர்த்தியோ, யாம்-நாம், குறித்து-அளவிட்டு, ஒருகால் - ஒருகாலத்திலும், ஓர் இடத்திலும் - ஒருவிடத்திலும், சொல்லொணாது-பேசமுடியாது, என்ன-இதற்குக்காரணம் யாது, என்ன-என்று, உணர்ந்து-தெரிந்துகொண்டு, தீரம்-மனோத்ருடத்தையுடைய, மாதிராசையர் - மாதிராசையர், சென்னி - (இதன்) திருமுடி, ஏது - யாது, என்று - என்று, தேரவேணுமென்று-பார்த்தறியவேணுமென்று, ஆண்டுமூன்று - மூன்றுவருஷம், இயங்கியும் - அலைந்தும், தெரியார் - அறிந்துகொள்ளாராகி, எ-று.

(பொ - ரை,) வீரபத்ரமூர்த்தியோ ? நாம் அளவிட்டு ஒருகாலத்திலும் ஒருவிடத்திலும் பேசமுடியாது, இதற்குக் காரணம் யாது ? என்று தெரிந்துகொண்டு மனோத்ருடத்தையுடைய மாதிராசையர் இதன் திருமுடி யாது ? என்று, பார்த்தறிய வேணு மென்று மூன்றுவருஷம் அலைந்தும் அறிந்துகொள்ளாராகி.

(வி-ரை.) கோரம் - அகோரம் என்பதன் சிதைவு. சாந்தமுடைமை என்பது பொருள். (௫௭)

பத்தி தப்பினம் பதமுனந் தேடிலா தென்னுஞ்
சித்த முற்றயர்ந் தனுதினஞ் செப்பதந் தேடி
யத்தி றத்தினி லையிரண் டாண்டுழன் றறியார்
முத்த விப்படி யடியனை முனிவதோ முறைமை.

(ப-ரை.) முன்னம்-முன்னதாகவே, பதம்-திருவடிகளை, தேடிலாது-தேடாமல் (இருந்த), பத்தி - பக்தி, தப்பினம் - தவறிவிட்டோம், என்னும் - என்கின்ற, சித்தம் உற்று-சிந்தைகொண்டு, அயர்ந்து-சோர்ந்து, அனுதினம்-நாடோறும், செப்பதம் - அழகிய திருவடிகளை, தேடி-தேடித்திரிகின்ற, அத்திறத்தினில்-அந்தஊக்கத்தில், ஐயிரண்டு ஆண்டு-பத்துவருஷம், உழன்று-அலைந்தும், அறியார்-தெரிந்து கொள்ளாராகி, முத்த-மலமுக்தனே, இப்படி-இவ்வாறு, அடியனை - அடியேனை, முனிவதோ - கோவிப்பதோ, முறைமை - நீதி யாகும் எ-று.

(போ - ரை.) முன்னதாகவே திருவடிகளைத் தேடாமலிருந்த பக்தி தவறிவிட்டேனென்கின்ற சிந்தைகொண்டு சோர்ந்து நாடோறும் அழகிய திருவடிகளைத் தேடித்திரிகின்ற அந்தஊக்கத்தில் பத்துவருஷம் அலைந்துந் தெரிந்துகொள்ளாராகி, மலமுக்தனே! இவ்வாறு அடியேனைக் கோவிப்பதோ ? நீதியாகும். (௫௮)

உன்பெ ருந்திரு வடிவினை யீதென வுன்னி
யென்பெ ரும்படி யறிவினு லறிதர வெளிதோ
நின்பெ ருந்திரு வருளினு னின்பதங் காட்டென்
றன்பு டன்றுதித் தொருதிங்கள் பணிந்தெழா தழவே.

(ப - ரை.) உன் - உனது, திரு - அழகிய, பெருவடிவினை - விஸ்வரூபத்தை, ஈது - இது, என்ன - எத்தன்மையுடைத்து (என்று); உன்னி - யூகித்து, என் - அடியேனது, பெரும்படி யறிவினால் - மந்தபுத்தியினால்; அறிதர-தெரிந்துகொள்ள, எளிதோ - லேஸான கார்யமோ, நின் - உனது; பெரு - மேன்மையுடைய, திருவருளினால்-திருவருளினால், நின்-உனது, பதம் - திருவடிகளை, காட்டு - காண்பியும், என்று - என்று; அன்புடன் - அன்புடன், துதித்து-ஏத்தி, ஒரு திங்கள் - ஒருமாதம், பணிந்து- (ஸாஷ்டாங்கமாய் விழுந்தபடியே) வணங்கி; எழாது-(மேலே) எழுந்திருக்காமல், அழ - அழுதலும், எ - று;

(போ - ரை.) உனது அழகிய விஸ்வரூபத்தைக் கண்டு, இது எத்தன்மையுடைத்தென்று யூகித்து அடியேனது மந்த புத்தியினால் தெரிந்துகொள்ள லேஸான கார்யமோ ? உனது மேன்மையுடைய திருவருளினால் உனது திருவடிகளைக் காண்பியுமென்று அன்புடன் ஏத்தி, ஒருமாதம் ஸாஷ்டாங்கமாய் விழுந்தபடியே வணங்கி மேலே யெழுந்திருக்காமல் அழுதலும். (௫௯)

மெல்ல வேதிரு முறுவல்செய் தருள்மிகு நோக்கான்
மல்லி கார்ச்சுன யோகர்முன் வடிவினை மாற்றி
நல்ல தந்திரு வுருவினைக் கொண்டுமு னண்ணி
யல்ல னீயற வவ்வடி வானமென் றறைய.

(ப - ரை.) மல்லிகார்ச்சுன யோகர் - யோகீஸ்வராகிய மல்லிராஜையர், மெல்ல-பைய, திருமுறுவல்செய்து - திருமுறுவல்செய்து, மிகு - மிகுந்த, அருள் நோக்கால்-க்ருபாகடாக்ஷத்தால், முன் - முன்னர் (அடைந்திருந்த), வடிவினை-விஸ்வரூபத்தை, மாற்றி - ஒழித்து, தம்-தமது, நல்ல-சிறந்த, திருவுருவினை - திருமேனியை, கொண்டு - அடைந்து, முன் - எதிரே, நண்ணி - எழுந்தருளி, ஐயா - ஐயனே, நீ - நீ, அல்லல் அற - துன்பத்தினின்றும் நீங்கும்பொருட்டு, அவ்வடிவு ஆனம் - அந்த விஸ்வரூபத்தை யெடுத்தோம், என்று - என்று, எ - று.

(போ - ரை.) யோகீஸ்வராகிய மல்லிராஜையர் பையத் திருமுறுவல் செய்து, மிகுந்த க்ருபா கடாக்ஷத்தால் முன் அடைந்திருந்த விஸ்வரூபத்தை யொழித்து, தமது சிறந்த திருமேனியை யடைந்து, எதிரே யெழுந்தருளி, ஐயனே! நீ துன்பத்தினின்றும் நீங்கும்பொருட்டு அந்த விஸ்வரூபத்தை யெடுத்தோம். (௬௦)

சரண நீயினி யெழுகெனத் தன்னிரு கரத்தா
லருளின் மாதிரா சையரை யெடுத்துகந் தணையாப்
பரம பத்தியா னம்மையிக் கிரிமிசைப் பார்க்க
வுரமி குந்தவஞ் செய்தனை வருதியென் றுவப்பால்.

(ப - ரை.) சரண - சிவசரணனே, நீ - நீ, இனி - இப்போது, எழுக - எழுந்திருக்கக்கடவை, என்ன - என்று, தன் - தனது, இருகரத்தால் - இரண்டு திருக்கைகளினால், அருளில் - அன்புடன், மாதிராசையரை - மாதிராசையரை, எடுத்து - தூக்கி, உவந்து - சந்தோஷத்துடன், அணையா-தழுவிக்கொண்டு, பரமம்-மேன்மையான, பத்தியால் - அன்புடன், நம்மை-எம்மை, இக்கிரிமிசை-இந்த ஸ்ரீ சைலத்தில், பார்க்க - காணும்பொருட்டு, உரம் மிகும் - மிகுந்த மனோத்திடத்துடன், தவம் - தவத்தை, செய்தனை - பண்ணினாய், வருதி - (எம்முடன்) வருவாய், என்று-என்று, உவப்பால் - சந்தோஷத்துடன், எ - று.

(பொ-ரை.) சிவசரணனே! நீ இப்போது எழுந்திருக்கக் கடவையென்று, தனது இரண்டு திருக்கைகளினால் அன்புடன் மாதிராசையரைத் தூக்கி, சந்தோஷத்துடன் தழுவிக்கொண்டு, மேன்மையான அன்புடன் எம்மை யிந்த ஸ்ரீசைலத்தில் காணும்பொருட்டு மிகுந்த மனோத்திடத்துடன் தவத்தைப் பண்ணினாய், எம்முடன் வருவாயென்று சந்தோஷத்துடன். (௬௧)

தன்சி நேகநற் றவாச்சிர மங்கொடு சார்ந்து
நன்சி வார்ச்சனை வேளையிற் சேடமு நல்கிப்
பின்சி வானுப வத்துறை பெருகவே காட்டி
முன்சி னாழிகை வைத்திருந் தினியன மொழிவார்.

(ப-ரை.) தன்-தனது, சிநேகம்-உரிமையாகிய, நல்-நல்ல, தவாச்சிரமம்-தவஞ்செய்தற்குரிய பன்னசாலைக்கு, கொடு-அழைத்துக்கொண்டு, சார்ந்து-போய், நல் - நன்மையுடைய, சிவார்ச்சனை வேளையில் - இஷ்டலிங்கபூஜாகாலத்தில், சேடமும் - லிங்கப்ரஸாதத்தையும், நல்கி-கொடுத்து, பின்-பிறகு, சிவானுபவத்துறை - சிவதத்வாநுபவ ஸுக ஸ்தலத்தில், பெருக-திளைக்க, காட்டி-காண்பித்து, முன்-சந்நிதியில், சில் நாழிகை-சிறிது நாழிகை வரையில், வைத்திருந்து - இருத்தியிருந்து, இனியன-இனியவார்த்தைகளை, மொழிவார்-சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ-று.

(பொ-ரை.) தனது உரிமையாகிய நல்ல தவஞ் செய்தற்குரிய பன்னசாலைக்கு அழைத்துக்கொண்டுபோய், நன்மையுடைய இஷ்டலிங்கலிங்கபூஜாகாலத்தில் லிங்கப்ரஸாதத்தையும் கொடுத்து, பிறகு சிவதத்வாநுபவ ஸுக ஸ்தலத்தில் திளைக்கக் காண்பித்து, சந்நிதியில் சிறிது நாழிகைவரையில் இருத்தியிருந்து, இனிய வார்த்தைகளைச் சொல்வாராயினர், எவ்வாறெனின். (௬௨)

இன்ன நீதரை மீதினிற் சிலதின மிருந்து
பன்ன ருந்தவஞ் செய்தலா னம்மிடம் பலியா
தொன்ன லத்தினாற் செல்கென மல்லிகார்ச் சுனர்மு
னன்ன லம்பெறப் பணிந்தெழுந் தழுதன்பி னவில்வார்.

(ப - ரை.) நீ - நீ, இன்னம் - இன்னமும், தரைமீதினில் - பூமியில், சிலதினம்-சிலநாள், இருந்து - தங்கி, பன்அரு - சொல்லுதற்கரிய, தவம்செய்து - தவத்தைப் பண்ணி, அல்லால் - அல்லாமல், நம் - நமது, இடம் - பாக்யம், பலியா - சித்திக்கமாட்டா, தொல் -பழமையாகிய, நலத்தினால்-நல்லதனமாக, செல்க-போகக்கடவை, என்ன - என்று கட்டளையிடுதலும், மல்லிகார்ச்சுனர் - மல்லிராசையர், முன் - சந்நிதியில், நல் நலம் - நல்ல வரத்தை, பெற - அடையும் பொருட்டு, பணிந்து - ஸாஷ்டாங்கமாக வணங்கி, எழுந்து - (மேலே) எழுந்திருந்து, அழுது - அழுது, அன்பில் - அன்புடன், நவில்வார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(போ-ரை.) நீ இன்னமும் பூமியில் சிலநாள் தங்கிச் சொல்லுதற்கரிய தவத்தைப் பண்ணி யல்லாமல் நமது பாக்யம் சித்திக்கமாட்டா, பழைமையாகிய நல்லதனமாகப் போகக்கடவையென்று கட்டளையிடுதலும், மல்லிராசையர் சந்நிதியில் நல்ல வரத்தை யடையும் பொருட்டு ஸாஷ்டாங்கமாக வணங்கி மேலே யெழுந்திருந்து அழுது அன்புடன் சொல்வாராயினர், எவ்வாறெனின். (௯௩)

பிறவி மாமிடி யாயினோர் பெருநிதி கண்டா
லுறவி னாற்கொள்வ ரல்லது விடுவரோ வுன்றா
ளிறைவ யானின்று கண்டினி மண்செலே னென்ன
வறவன் மென்னகை தன்னினா னன்றென வறைந்தே

(ப-ரை.) இறைவ -தலைவனே, மா-பெரிய, பிறவிமிடியாயினோர்- தரித்திராய்ப் பிறந்தவர்கள், பெரு -பெரிய, நிதி - செல்வத்தை, கண்டால் - பார்ப்பார்களாயின், உறவினால் - ஆசையுடன், கொள்வர் அல்லது - எடுத்துக்கொள்வார்களேயல்லாமல், விடுவரோ-விட்டுவிடுவார்களோ, யான்-அடியேன், உன் - உனது, தாள்-திருவடிகளை, இன்று - இப்போது, கண்டு - தரிசித்தும், இனி - இப்போது, மண்செல்லேன் - பூமிக்குப் போகமாட்டேன், என்ன - என்று விண்ணப்பித்தலும், அறவன் - ஜங்கமமூர்த்தியாகிய மல்லிராசையர், மென் நகைதன்னினால் - மெல்லிய திருமுறுவலுடன், நன்று என்ன - நல்ல கார்யமென்று, அறைந்து - சொல்லி, எ - று.

(போ-ரை) தலைவனே! பெருந்தரித்திராய்ப்பிறந்தவர்கள் பெருஞ்செல்வத்தைப் பார்ப்பார்களாயின் ஆசையுடன் எடுத்துக் கொள்வார்களே யல்லாமல் விட்டுவிடுவார்களோ? அடியேன் உனது திருவடிகளை யிப்போது தரிசித்தும் இப்போது பூமிக்குப் போகமாட்டேனென்று விண்ணப்பித்தலும், ஜங்கமமூர்த்தியாகிய மல்லிராசையர் மெல்லிய திருமுறுவலுடன் நல்ல கார்யமென்று சொல்லி. (௯௪)

(வி - ரை.) அறவன் - முனிவன்.

பத்தர் நன்னிதி யாகிய பரமன்மா திராசர்
சித்த மொப்பயாந் திட்டமிட் டகற்றுது மென்றே
மெத்து மோர்கரு வேனிழன் மெல்லெனக் கொடுபோ
யத்த லத்தினி லிருவென மறைந்தொரா யனைப்போல்.

(ப - ரை.) பத்தர்-சிவபக்தர்களுக்கு, நல் - சிறந்த, நிதியாகிய - செல்வமாகிய, பரமன்-ஜங்கமமூர்த்தியாகிய மல்லிராசையர், சித்தம்- (மாதிராசையரை) மனம், ஒப்ப- இசைபும்படி, திட்டமிட்டு-திட்டஞ்செய்து, அகற்றுதும்-அனுப்பிவிடுவோம், என்று- என்று (யோசித்து), மெத்தும்-(தழைகளால்) நிறைந்திருக்கின்ற, ஓர்-ஒரு, கருவேல் நிழல் - கருவேலமரத்தின் நிழலில், மெல் என்ன - மெதுவாக, கொடு போய்-அழைத்துக்கொண்டுபோய், அத்தலத்தினில்-அவ்விடத்தில் இரு-இருக்கக் கடவை, என்ன - என்று (கட்டளையிட்டு), மறைந்து-(தாம்) ஒளித்து, ஓர் - ஒரு, ஆயனைப்போல் - இடையனைப்போலக் கோலங்கொண்டு, எ-று.

(போ-ரை.) சிவபக்தர்களுக்குச் சிறந்த செல்வமாகிய ஜங்கமமூர்த்தியாகிய மல்லிராசையர் மாதிராசையரை மனமிசையும்படித் திட்டஞ்செய்து, அனுப்பி விடுவோமென்று யோசித்து, தழைகளால் நிறைந்திருக்கின்ற ஒரு கருவேலமரத்தின் நிழலில் மெதுவாக அழைத்துக்கொண்டுபோய் அவ்விடத்திலிருக்கக் கடவையென்று கட்டளையிட்டுத் தாம் ஒளித்து ஒரு இடையனைப்போலக் கோலங்கொண்டு. (௯௫)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முருட்டுவன் காலி னிட்ட மொய்த்தவார்ச் செருப்புஞ் சுற்று
மிருட்கொள்கம் பளமே லார்த்த விருங்கயிற் றரையு மாடு
வெருட்டுதிண் கோலோர் கையும் வெறுங்கட மொருக ரத்து
மருட்டுறு விழியுங் கோணல் வதனமும் பாசிப் பல்லும்.

(ப-ரை.) முருட்டு-முரட்டானதும், வல்-கடினமானதுமாகிய, காலின் இட்ட - கால்களில் தொடுத்த, மொய்த்த-மூடிக்கொண்டிருக்கின்ற, வார்-தோல்வார்களையுடைய, செருப்பும்-மிதியடிகளும், சுற்றும்-உடுத்தியிருக்கின்ற, இருள்கொள்- கறுத்த, கம்பளம்மேல் - கம்பிளியின்மேல், ஆர்த்த - கட்டியிருக்கின்ற, இரு - பெரிய, கயிறு-கச்சையையுடைய, அரையும்-இடையும், ஆடு-ஆடுகளை, வெருட்டு-பயமுறுத்தற்குரிய, திண்-உரப்பான, கோல்-தடி, ஓர் கையும்-ஒரு கையிலும், வெறும் கடம்-வெறுங்குடம், ஒரு கரத்தும் - ஒரு கையிலும், மருட்டு உறு-பயமுறுத்தற்குரிய, விழியும்-கண்களும், கோணல் வதனமும்-கோணை முகமும், பாசிப்பல்லும்-ஊத்தைப் பல்லும், எ-று.

(போ-ரை.) முரட்டானதும் கடினமானதுமாகிய கால்களிற்றொடுத்த மூடிக்கொண்டிருக்கின்ற தோல்வார்களையுடைய மிதியடிகளும், உடுத்தியிருக்கின்ற கறுத்த கம்பிளியின்மேல் கட்டியிருக்கின்ற பெரிய கச்சையையுடைய இடையும், ஆடுகளைப் பயமுறுத்தற்குரிய உரப்பான தடியொரு கையிலும், வெறுங்குடம் ஒருகையிலும், பயமுறுத்தற்குரிய கண்களும், கோணை முகமும், ஊத்தைப் பல்லும். (௧௬)

தடித்ததிண் காதுங் கட்டைத் தாடியும் பருத்த மூக்கு
மெடுத்தகோல் பின்னி றுத்தி யதனிடைச் சார்ந்தோர் காலை
மடித்தொரு காலி னின்று வலக்கர நுதற்க விழ்த்தே
யடிக்கடி யாடு பார்க்கு மக்கமு மதட்டு வாயும்.

(ப-ரை.) தடித்த - கனத்ததும், திண் - முரட்டுமாகிய, காதும் - செவிகளும், கட்டைத்தாடியும் - முரட்டுத்தாடியும், பருத்தமூக்கும் - பெருத்த மூக்கும், எடுத்த - கையிற்பிடித்திருக்கிற, கோல் - தடியை, பின் - பின்னே, நிறுத்தி - நிற்கச்செய்து, அதன் இடை-அதன்கண், சார்ந்து - சாய்ந்து, ஓர்காலை - ஒருகாலை, மடித்து-மடக்கி, ஒரு காலில் - ஒரு காலில், நின்று - நின்றுகொண்டு, வலக்கரம்-வலக்கையை, நுதல்-நெற்றியின்மீது, கவித்து - கவிழ்த்து, அடிக்கடி - பலகாலும், ஆடு - ஆடுகளை, பார்க்கும் - பார்க்கின்ற, அக்கமும் - கண்களும், அதட்டு வாயும் - அதட்டுகின்ற வாயும், எ-று.

(போ-ரை.) கனத்ததும் முரட்டுமாகிய செவிகளும், முரட்டுத்தாடியும், பெருத்த மூக்கும், கையிற் பிடித்திருக்கிற தடியைப் பின்னே நிற்கச்செய்து, அதன்கண் சாய்ந்து, ஒரு காலை மடக்கி, ஒரு காலில் நின்றுகொண்டு, வலக்கையை நெற்றியின் மீதுகவிழ்த்து, பலகாலும் ஆடுகளைப்பார்க்கின்ற கண்களும் அதட்டுகின்ற வாயும். (௧௭)

கொடுமைசேர் பரசி னோடுங் கூர்முடங் கணிம ருங்கு
முடையராய் நாய்வி ளிக்கு முறையரா யுள்வ ளோர்ந்து
செடிதொறு மேயு மாட்டைத் திரட்டிவந் திவரி ருக்கு
நெடியமா லேவின் கொம்பை நெருமிர்த்துமை தின்ன விட்டார்.

(ப - ரை.) கொடுமைசேர் - கொடிய, பரசினேடும் - கோடாரியும், கூர்-கூர்மையுள்ள, மூடக்கு அணி - அரிவாளுமுள்ள, மருங்கும் - இடையையும், உடையராய் - உடையவராய், நாய் - நாய்களை, விளிக்கும் - கூப்பிடுகின்ற, உரையராய் - சொல்லையுடையவராய், உள் - உள்ளே, வளைந்து-சூழ்ந்துகொண்டு, செடிதொறும்-செடிகளினெல்லாம், மேயும் - தின்னுகின்ற, ஆட்டை - ஆடுகளையெல்லாம், திரட்டி வந்து - சேர்த்துப்போய், இவர் இருக்கும் - இந்த மாதிராசையர் இருக்கின்ற, நெடிய-நீண்ட, மா - பெரிய, வேலின் கொம்பை - கருவேலமரத்தின் கிளைகளை, ஒருயிர்த்து-ஒடித்து, மை - ஆடுகளை, தின்னவிட்டார் - மேயவிட்டார், எ - று.

(பொ - ரை.) கொடிய கோடரியும் கூர்மையுள்ள அரிவாளுமுள்ள இடையையுமுடையவராய், நாய்களைக் கூப்பிடுகின்ற சொல்லையுடையவராய், உள்ளே சூழ்ந்துகொண்டு செடிகளினெல்லாம் தின்னுகின்ற ஆடுகளையெல்லாம் சேர்த்துப்போய், இந்த மாதிராசையர் இருக்கின்ற கருவேலமரத்தின் கிளைகளை யொடித்து, ஆடுகளை மேயவிட்டார். (௬௮)

விட்டிட மாதி ராசர் வெகுண்டியா மிருக்கு நீழ
லிட்டமா மரத்தை வெட்டி யிப்படி நிழற்கெ டுத்தாய்
மட்டறு காட்டி னிந்த மரமலா தில்லையோ சொல்லாய்
துட்டனீ கட்டன் மூட்டன் றுச்சனன் மதத்தாய் கொல்லோ.

(ப-ரை.) விட்டிட-(ஆடுகளை) தின்னச்செய்தலும், மாதிராசர் - மாதிராசையர், வெகுண்டு-கோவித்து, யாம்-நாம், இருக்கும் - இருக்கின்றதும், நீழல் இட்ட-நிழலைக் கொடுக்கின்றதுமான, மா மரத்தை-பெரியமரத்தை, வெட்டி-தறித்துவிட்டு, இப்படி - இவ்வாறு, நிழல்-நிழலைக்கொடுப்பதை, கெடுத்தாய்-அழித்தனை, மட்டு அறு-எல்லையில்லாத, காட்டின்-வனத்தில், இந்த மரம் அல்லாது-இந்தக் கருவேல மரமல்லாமல், இல்லையோ-(வேறொருமரமும்) இல்லாமற்போயிற்றோ, சொல்லாய்-கூறுவாய், நீ-நீ, துட்டன் கொல்லோ - துஷ்டனோ, கட்டன்கொல்லோ - கள்ளனோ, மூட்டன் கொல்லோ-மூடனோ, துச்சனன் கொல்லோ-துர்மார்க்கனோ, மதத்தாய் கொல்லோ-வெறியனோ, எ-று.

(பொ-ரை.) ஆடுகளைத் தின்னச்செய்தலும், மாதிராசையர் கோவித்து, நாம் இருக்கின்றதும் நிழலைக்கொடுக்கின்றதுமான பெரிய மரத்தைத் தறித்துவிட்டு இவ்வாறு நிழலைக் கொடுப்பதை யழித்தனை, எல்லையில்லாத வனத்தில் இந்தக் கருவேலமரமல்லாமல் வேறொரு மரமுமில்லாமற் போயிற்றோ? கூறுவாய், நீ துஷ்டனோ? கள்ளனோ? மூடனோ? துர்மார்க்கனோ? வெறியனோ? (௬௯)

பாவிநீ யிடையா வுன்னைப் பதறியான் சபிப்ப னென்று
ரேவமி லாய ராகு மிருடியார் சிரித்துச் சொல்வார்
கோவிநீ நன்று நன்று கோபியே பாவி யல்லா
னவினால் வெம்மை சொல்ல நானலன் பாவி யென்று.

(ப-ரை.) இடையா - இடையனே, நீ - நீ, பாவி-பாபிஷ்டன், உன்னை- உன்னை, யான்-நான், பதறி-பதைத்து, சபிப்பன்-சபித்துவிடுவேன், என்றார்-என்றுசொன்னார், ஏவம் இல்-பாவத்தினின்றும் நீங்கின, ஆயர் ஆகும்-இடையராகிய, இருடியார்-ஜங்கமமூர்த்தியாகிய மல்லிராசையர், சிரித்து - திருமுறுவல்செய்து, சொல்வார் - சொல்வா

ராயினர் (எவ்வாறெனின்), நீ-நீ, கோவி-கோபிஷ்டன், நன்றுநன்று-நல்லகார்யம் நல்ல கார்யம், கோபியே - கோபிஷ்டனே, பாவியல்லால் - பாபிஷ்டனல்லாமல், நாவினால்-நாக்கினால், வெம்மை - கடுஞ்சொற்களை, சொல்ல நான் அல்லன் - நான் சொல்ல மாட்டேன், பாவி - பாபிஷ்டனே, என்று - என்று, எ-று.

(பொ-ரை.) இடையனே! நீ பாபிஷ்டன், உன்னை நான் பதைத்துச் சபித்து விடுவேனென்று சொன்னார், பாவத்தினின்றும் நீங்கின இடையராகிய ஜங்கமமூர்த்தியாகிய மல்லிராசையர் திருமுறுவல்செய்து சொல்வாராயினர், எவ்வாறெனின்:—நீ கோபிஷ்டன், நல்ல கார்யம், நல்ல கார்யம், கோபிஷ்டனே பாபிஷ்டனல்லாமல் நாக்கினால் கடுஞ்சொற்களை நான் சொல்லமாட்டேன், பாபிஷ்டனே! என்று. (௭௰)

(வி - ரை.) இருடி - ருஷியென்னும் வடசொற்றிரிபு (முனிவர்).

கோபமே வதைக்குங் கூற்றங் கோபமே துன்ப மூலங்
கோபமே திருவை யோட்டுங் கோபமே குணத்தைக் கொல்லுங்
கோபமே நிந்தை யேது கோபமே கொடுஞ்சொற் கூட்டுங்
கோபமே நரகஞ் சேர்க்குங் கோபமே கொடுமை யாமால்.

(ப - ரை.) கோபமே-கோபமே, வதைக்கும்-கொல்லுகின்ற, கூற்றம்-யமனாகும், கோபமே—, துன்பம் - துக்கத்திற்கு, மூலம் - காரணமாகும், கோபமே—, திருவை-செல்வத்தை, ஓட்டும் - ஓடப்பண்ணிவிடும், கோபமே—, குணத்தை - பெருமையை, கொல்லும் - கெடுத்துவிடும், கோபமே—, நிந்தை-பழிச்சொற்களுக்கு, ஏது - காரணமாகும், கோபமே—, கொடும் சொல் - கடுஞ்சொற்களை, கூட்டும் - சேர்த்துவிடும், கோபமே—, நரகம் - நரகலோகத்தில், சேர்க்கும் - புகுத்திவிடும், கோபமே—, கொடுமையாம் - தீமையாகும், எ - று.

(பொ - ரை.) கோபமே கொல்லுகின்ற யமனாகும், கோபமே துக்கத்திற்குக் காரணமாகும், கோபமே செல்வத்தை யோடப்பண்ணிவிடும், கோபமே பெருமையைக் கெடுத்துவிடும், கோபமே பழிச்சொற்களுக்குக் காரணமாகும், கோபமே கடுஞ்சொற்களைச் சேர்த்துவிடும், கோபமே நரகலோகத்திற் புகுத்திவிடும், கோபமே தீமையாகும்.

சலமெனுந் திரையாற் றூய்ய தவமரக் கலஞ்சா யாதோ
சலமெனும் வெயிலா னெஞ்சத் தாமரை தான்கன் றாதோ
சலமெனு நெருப்பா லெல்லாத் தருமமும் பொடியா காதோ
சலமெனுங் காற்றான் ஞானத் தருவினஞ் சாய்ந்தி றாதோ.

(ப - ரை.) சலம் என்னும் - கோபமென்கின்ற, திரையால்-அலைகளினால், தூய்ய-பரிசுத்தமாகிய, தவம் - தவமாகிய, மரக்கலம் - மரக்கலம், சாயாதோ - அழிந்து போகாதோ, சலம்என்னும்-கோபமென்கின்ற, வெயிலால்-சூரியனால், நெஞ்சத்தாமரை மனமாகிய தாமரைமலர், கன்றாதோ-அழிந்துபோகாதோ, சலம் என்னும் கோபமென்கின்ற, நெருப்பால் - தீயினால், எல்லாத் தருமமும் - புண்யங்களெல்லாமும், பொடியாகாதோ - அழிந்துபோகாதோ, சலம் என்னும் - கோபமென்கின்ற, காற்றால் - காற்றினால், ஞானத்தருவினம் - ஜ்ஞானமாகிய வ்ருக்ஷங்கள், சாய்ந்து இறாதோ - அழிந்து போகாதோ, எ-று.

(பொ-ரை.) கோபமென்கின்ற அலைகளினால் பரிசுத்தமாகிய மரக்கலம் அழிந்து போகாதோ? கோபமென்கின்ற சூரியனால் மனமாகிய தாமரைமலர் அழிந்து போகாதோ? கோபமென்கின்ற தீயினால் புண்யங்களெல்லாமும் அழிந்துபோகாதோ? கோபமென்கின்ற காற்றினால் ஜ்ஞானமாகிய வ்ருக்ஷங்கள் அழிந்துபோகாதோ? (௭௨)

ஞானமே மேட்டோ வுன்ற னல்லவ தானக் கல்வி
யானவாங் காரந் தானோ வருந்தவத் தகந்தை தானோ
நீநல்ல னல்லன் கோப நெஞ்சின னீயி ருக்கக்
கானமிங் கிதனுள் வேறு கருதினன் னிழல்க ளின்றே.

(ப-ரை.) உன் - உன்னுடைய, ஞானம் - அறிவினாலுண்டாகிய, மேட்டோ - பெருமையோ, நல் - மிகுந்த, அவதானம் - நுட்பமாகிய, கல்வியான - கல்வியினாலுண்டான, ஆங்காரந்தானோ-மமதையோ, அரு-செய்தற்கரிய, தவத்து-தவத்தைச்செய்ததனாலுண்டான, அகந்தைதானோ-மமதையோ, நீ - நீ, நல்லன் - நல்லவன், நல்லன் - நல்லவனே, கோபநெஞ்சினன் - கோவமடைந்த மனமுள்ளவனாகிய, நீ - நீ, இருக்க - தங்கும்பொருட்டு, இங்கு - இவ்விடத்திலுள்ள, கானம் இதனுள்-காட்டில், கருதின் - யோசிக்குமிடத்து, வேறு - மற்ற, நல்-நல்ல, நிழல்கள்-நிழல்கள், இன்றே-இல்லாமற் போயிற்றோ, எ-று.

(பொ-ரை.) உன்னுடைய அறிவினாலுண்டாகிய பெருமையோ? மிகுந்த நுட்பமாகிய கல்வியினாலுண்டான மமதையோ? செய்தற்கரிய தவத்தைச்செய்ததனாலுண்டான மமதையோ? நீ நல்லவன் நல்லவனே, கோவமடைந்த மனமுள்ளவனாகிய நீ தங்கும்பொருட்டு இவ்விடத்திலுள்ள காட்டிலில் யோசிக்குமிடத்து மற்ற நல்ல நிழல்கள் இல்லாமற்போயிற்றோ?

(வி-ரை.) நல்லனல்லன் என்பதை நல்லன் அல்லன் எனப் பதம்பிரித்து துஷ்டனென்று பொருட்கொடலுமொன்று. (எ௩)

நல்லனீ சாந்த மேவு நற்றவ ருன்னைப் போல
வில்லையிக் கிரியின் மேவு மிருந்தவர் தம்மு ளெல்லா
மொல்லையி னெல்லா மற்ற வுனக்கிந்த நிழலி னாசை
யெல்லைபற் றிருந்த தென்றாற் றெளிவுதா னெளிய தன்றே.

(ப-ரை.) நீ - நீ, நல்லன்-நல்லவன், இக்கிரியில்-இந்த ஸ்ரீ ஸைலத்தில், மேவும் தவஞ்செய்கின்ற, இரு - பெரிய, தவர் தம்முள் எல்லாம் - ஜங்கமமூர்த்திகளிளெல்லாம், உன்னைப்போல - உன்னைப்போல, சாந்தம்-உபசாந்த நிலையை, மேவும்-அடைந்திருக்கின்ற, நல் - நல்ல, தவர் - ஜங்கமமூர்த்தி, இல்லை - இல்லை, ஒல்லையின் - விரைவாக, எல்லாம் அற்ற உனக்கு - ஸர்வஸங்க பரித்யாகஞ்செய்த வுனக்கும், இந்த நிழலின் ஆசை - இந்த நிழலாசை, எல்லைபற்று - அளவுகடந்து, இருந்ததென்றால் - இருந்ததென்று சொல்வோமாயின், தெளிவுதான் - ஞானமென்பது, எளியது அன்று - லேசான விஷயமல்ல, எ-று.

(பொ-ரை.) நீ நல்லவன், இந்த ஸ்ரீ ஸைலத்தில் தவஞ்செய்கின்ற முனிவர்களிளெல்லாம் உன்னைப்போல உபசாந்தநிலையை யடைந்திருக்கிற நல்ல ஜங்கமமூர்த்தி யில்லை, விரைவாக ஸர்வஸங்க பரித்யாகஞ்செய்த வுனக்கும் இந்த நிழலாசை அளவு கடந்திருந்ததென்று சொல்வோமாயின் ஞானமென்பது லேசான விஷயமல்ல. (எ௪)

நேசமாய்த் தீயில் வீழு நேரிழை யுடுத்துச் செல்லும்
வாசமா நழல்வே மென்று மனத்திடை மதித்தல் போன்று
கூசுத லின்றிச் சாகக் குறித்தவள் கூபம் வீழ்ந்தங்
காசையாற் றெப்பந் தேடி மறிவுபோ லாய்த்துன் னாசை.

(ப-ரை.) நேசமாய்-விருப்பத்துடன், தீயில் வீழும்-நெருப்பில் குதிக்கின்ற, நேர் இழை - பெண், உடுத்துச் செல்லும் - தரித்துக்கொண்டுபோகின்ற, வாசம் - சேலை, ஆர் அழல் - பெரு நெருப்பில், வேம் - (பற்றி) வெந்துபோய்விடுமே, என்று - என்று, மனத்து இடை - மனத்தில், மதித்தல் போன்று - நினைக்கின்ற ஞானத்தைப் போலவும், கூசுதல் இன்றி - பயமில்லாமல், சாகக் குறித்தவள் - இறக்க நினைக்கின்ற பெண், கூபம் வீழ்ந்து - கிணற்றில் குதித்தும், அங்கு - அவ்விடத்தில், ஆசையால் விருப்பத்துடன், தெப்பம்-தெப்பத்தை, தேடும்-தேடுகின்ற, அறிவுபோல-ஞானத்தைப் போலவும், உன் - உன்னுடைய, ஆசை - ஆசை, ஆய்த்து - ஆகிவிட்டது, எ-று.

(போ-ரை.) விருப்பத்துடன் நெருப்பில் குதிக்கின்ற பெண் தரித்துக்கொண்டு போகின்ற சேலை பெரு நெருப்பில் பற்றி வெந்து போய்விடுமே யென்று மனத்தில் நினைக்கின்ற ஞானத்தைப் போலவும், பயமில்லாமல் இறக்க நினைக்கின்ற பெண் கிணற்றில் குதித்தும் அவ்விடத்தில் விருப்பத்துடன் தெப்பத்தைத் தேடுகின்ற ஞானத்தைப் போலவும் உன்னுடைய ஆசை யாகிவிட்டது. (௭௫)

> மருளெனக் கில்லை யுலக்கை வாங்கிவா விரைய வென்றன்
> சிரமிசை சுற்ற வென்போர் செய்திபோற் சன்னி சஞ்செ
> யொருமறை யோன்றன் வாழ்வை யொருவன்கை யொப்பித் தேகு
> மருமயல் போலு முன்ற னாசையை யறையுங் காலை.

(ப-ரை.) உன்-உன்னுடைய, ஆசையை-ஆசையை, அறையுங்காலை - சொல்லுமிடத்து, எனக்கு-எனக்கு, மருள் - பைத்தியகுணம், இல்லை-இல்லையென்றுசொல்லி, என்-என்னுடைய, சிரமிசை-தலையில், சுற்ற - (தலைப்பாகையாக) சுற்றிக்கொள்ளும் பொருட்டு, விரைய-சீக்கிரமாக, உலக்கை-உலக்கையை, வாங்கிவா-கொண்டுவா, என்போர் - என்று கேட்கின்ற வெறியனுடைய, செய்திபோல் - செய்கையைப்போலவும், சன்னிசம்செய்-ஸந்யாஸம் வாங்கிக்கொள்கின்ற, ஒரு மறையோன்-ஒரு ப்ராஹ்மணன், தன் - தன்னுடைய, வாழ்வை - செல்வத்தை, ஒருவன் - ஒருத்தனுடைய, கை - வசத்தில் (காப்பாற்றிவைக்கும்படியாக), ஒப்பித்து-கொடுத்து, ஏகும்-போகின்ற, அரு-நீக்கிக்கொள்வதற்கரிதாகிய, மயல் - பைத்திய குணத்தை, போலும்-போலவும், எ-று.

(போ-ரை.) உன்னுடைய ஆசையைச் சொல்லுமிடத்து, எனக்குப் பைத்திய குணமில்லையென்று சொல்லி யென்னுடைய தலையில் தலைப்பாகையாகச் சுற்றிக் கொள்ளும்பொருட்டுச் சீக்கிரமாக உலக்கையைக் கொண்டுவாவென்று கேட்கின்ற வெறியனுடைய செய்கையைப் போலவும், ஸந்யாஸம்வாங்கிக் கொள்கின்ற ஒரு ப்ராஹ்மணன் தன்னுடைய செல்வத்தை யொருத்தனுடைய வசத்திற் காப்பாற்றி வைக்கும்படியாகக் கொடுத்து போகின்ற நீக்கிக் கொள்வதற்கரிதாகிய பைத்திய குணத்தைப் போலவும். (௭௬)

> கடுவிசை பெருகு மாற்றின் கரடிகம் பளம தென்று
> முடுகிநீந் திப்பி டித்த மூடனை யதுதான் பற்றி
> யடுதலிற் கரையி ருந்தோ ரதனைநீ விடுகி டென்ன
> விடுகினும் விடாதென் செய்கே னென்றவன் வீழ்ந்த போல.

(ப-ரை.) கடுவிசை - அதிக வேகத்துடன், பெருகும் - பெருக்கெடுத்தோடுகின்ற, ஆற்றின்-நதியில், கரடி - (அடித்துக்கொண்டுவரப்பட்ட) கரடியை (பார்த்து), கம்பளம் என்று - கம்பளியென்று நினைத்து, முடுகி - விரைவாக, நீந்திப்பிடித்த -

நீந்திப் போய்ப் பற்றிக்கொண்ட, மூடனை - முட்டாளை, அது-அந்தக் கரடியானது, பற்றி - பிடித்து, அடுதலில் - கொல்லும்போது, கரையிருந்தோர் - கரையிலிருந்த பேர்கள், அதனை - அதை, விடுவிடு - விட்டுவிடு, என்ன - என்று கூக்குரலிடுதலும், விடுகினும் - (நான் அதை) விட்டாலும், விடாது - (அது என்னை) விடாதே, என் செய்கேன் என்று - யாது செய்வேனென்று, அவன்-அம்மூடன், வீழ்ந்தபோல - இறந்த கதையைப் போலவும், எ - று.

(பொ-ரை.) அதிக வேகத்துடன் பெருக்கெடுத் தோடுகின்ற நதியில் அடித்துக் கொண்டு வரப்பட்ட கரடியைப்பார்த்துக் கம்பளியென்று நினைத்து விரைவாக நீந்திப் போய்ப் பற்றிக்கொண்ட முட்டாளை அந்தக் கரடியானது பிடித்துக்கொல்லும்போது, கரையிலிருந்தபேர்கள் அதை விட்டுவிடென்று கூக்குரலிடுதலும், நான் அதை விட்டாலும் அது என்னை விடாதே யாது செய்வேனென்று அம்மூடன் இறந்த கதையைப் போலவும்.

(வி - ரை.) கரையிருந்தோர்-கரைவாசிகள். கரையென்பத னீற்றில் ஏழனுருபு தொக்கது. (எஎ)

விட்டவன் றனையு மாசை விடுகிலாக் கால மாஞல்
லொட்டுமோ நன்றாய் நீங்க வுனக்கியா முரைப்ப தென்னாந்
தொட்டதோர் கருப்பு லக்கை சூதினாற் றுணிக்கத் தப்பி
லெட்டரு மளவ தேனுந் தோல்விகா ணெனவு ரைப்பார்.

(ப-ரை.) விட்டவன் தன்னையும் - ஸர்வஸங்கப்பரித்யாகஞ்செய்த முனிவனையும், ஆசை - ஆசை, விடுகிலாக்காலமானால் - விடமாட்டாத துற்காலம் நேரிடுமாயின், நன்றாய் - செவ்வையாய் (ஆசையினின்றும்), நீங்கவொட்டுமோ - விலகவிடுமோ, யாம் - நாம், உனக்கு - உனக்கு, உரைப்பது - உபதேசிப்பதனால், ஆம் - உண்டாகின்ற பயன், என் - யாது, சூதினால் - (ஒருவன்) சூதாட்டத்தில், தொட்டது-பந்தயம் (தொடங்கியதாகிய), ஓர் கருப்புலக்கை - ஒரு கரும்பை, துணிக்க-ஓரே வெட்டினால் இரண்டு துண்டாகும்படி வெட்டுதலும், எள்தரும் அளவதேனும் - எள்ளளவாயினும் (பற்று இருந்து அதையும் வெட்ட), தப்பில்-தவறிப்போவானாயின், தோல்வி-தோல்வியாம், என்ன - என்று, உரைப்பார் - (உலகத்தார்) சொல்வார்கள், எ - று.

(பொ-ரை) ஸர்வஸங்கப் பரித்யாகஞ்செய்த முனிவனையும் ஆசை விடமாட்டாத துற்காலம் நேரிடுமாயின், செவ்வையாய் ஆசையினின்றும் விலகவிடுமோ? நாம் உனக்கு உபதேசிப்பதனா லுண்டாகின்ற பயன் யாது? ஒருவன் சூதாட்டத்தில் பந்தயம் தொடங்கியதாகிய ஒரு கரும்பை ஓரேவெட்டினால் இரண்டு துண்டாகும்படி வெட்டுதலும், எள்ளளவாயினும் பற்றிருந்து அதையும்வெட்டத் தவறிப்போவானாயின் தோல்வியாமென்று உலகத்தார் சொல்வார்கள். (எஅ)

நாணியே யாசை யெல்லா நழுவினோர் திரும்பப் பற்றி
னணியாய்ப் பற்றுஞ் சென்மத் தருவினை யெனத்த வத்தர்
பேணியங் குரைத்து முன்னைப் பெருகருள் வடிவங் காட்ட
பாணியாற் றொழுதி றைஞ்சிப் பரவிமுன் வெள்கி நின்றார்.

(ப - ரை.) நாணி - வெட்கப்பட்டு, ஆசையெல்லாம் நழுவினோர் - ஸர்வஸங்க பரித்யாகஞ் செய்தபெரியோர்களும், திரும்ப - மறுபடியும், பற்றின் - ஆசையைப் பிடித்துக் கொள்வார்களாயின், ஆணியாய் - ஆணிவேராகி, சென்மத் தருவினை - ஜனனமாகிய மரத்தை, பற்றும் என்ன-பிடித்துக்கொள்ளுமென்று, தவத்தர்-சிவயோகி

யாகிய மல்லிராசையர், பேணி - விருப்பத்துடன், அங்கு - அவ்விடத்தில், உரைத்து- உபதேசித்து, முன்னை-பழமையாகிய, பெருகு-மிகுந்த, அருள் - கிருபையையுடைய, வடிவம்-ஜங்கமமூர்த்தத்தை, காட்ட - காண்பித்தலும், பாணியால் - (மாதிராசையர்) கைகளால், தொழுது - கும்பிட்டு, இறைஞ்சி - வணங்கி, பரவி - துதித்து, முன் - சந்நிதியில், வெள்கி நின்றார் - வெட்கப்பட்டுநின்றனர், எ - று.

(பொ - ரை.) வெட்கப்பட்டு ஸர்வஸங்கபரித்யாகஞ்செய்த பெரியோர்களும் மறுபடியும் ஆசையைப்பிடித்துக் கொள்வாராயின், ஆணிவேராகி ஜனனமாகிய மரத்தைப் பிடித்துக்கொள்ளுமென்று சிவயோகியாகிய மல்லிராசையர் விருப்பத்துடன் அவ்விடத்தில் உபதேசித்து, பழமையாகிய மிகுந்த கிருபையையுடைய ஜங்கமமூர்த்தத்தைக் காண்பித்தலும், மாதிராசையர் கைகளாற் கும்பிட்டு வணங்கித் துதித்து, சந்நிதியில் வெட்கப்பட்டு நின்றனர். (எக)

அதிகதுக் கத்த ராகி யஞ்சிமெய் நடுங்க வென்பாற்
கதிநெறி யில்லை நீதிக் கருத்தில்லைப் பத்தி யில்லை
மதியின்மெய்ச் சாந்த மில்லை மதமுளே னேங்குற் றேனென்
விதிசக ளேச வென்னை விடுங்கொலோ விடாதே யையா.

(ப - ரை.) அதிகதுக்கத்தராகி - மிகவுந்துன்பமடைந்தவராகி, மெய் - உடல், நடுங்க - விதிர்க்கும்படி, அஞ்சி - பயந்து, என்பால் - அடியேனிடத்தில், கதிநெறி- மோக்ஷமார்க்கமும், இல்லை - கிடையாது, நீதி - சன்மார்க்கத்தில், கருத்தும் - மனமும், இல்லை-கிடையாது, மதியின் - யோசிக்குமிடத்து, மெய் - உண்மையாகிய, சாந்தம் - உபசாந்தநிலையும், இல்லை - கிடையாது, மதம் உள்ளேன் - அஹங்காரம் படைத்திருக்கின்றேன், சகளேச - சகளேஶ்வரனே, ஏங்குற்றேன் -பயப்படுகிறேன், ஐயா - ஐயனே, என் - அடியேனது, விதி - பழவினை, என்னை - அடியேனை, விடுங்கொலோ - விட்டொழியுமோ, விடாதே - விட்டொழியாதோ, எ - று.

(பொ - ரை.) மிகவும் துன்பமுடையவராகி, உடல் விதிர்க்கும்படிப் பயந்து, அடியேனிடத்தில் மோக்ஷமார்க்கமுங் கிடையாது, சன்மார்க்கத்தில் மனமுங் கிடையாது, பக்திமார்க்கமுங் கிடையாது, அஹங்காரம் படைத்திருக்கிறேன், சகளேஶ்வரனே! பயப்படுகிறேன், ஐயனே! அடியேனது பழவினை அடியேனை விட்டொழியுமோ? விட்டொழியாதோ?

(வி - ரை.) இச்செய்யுளில் சகளேஶ்வரர் மாதிராசையரது உபாசனாமூர்த்தி யெனத் தெரிகிறது. (அ௦)

கருமமுள் ளளவு மந்தக் கருமத்திற் கேற்ற செய்து
திரியும தன்றி யென்றுஞ் சிவனருள் சித்தி யாது
நிருமல நெறியா காது நீண்டவா தரவாற் காயை
மருவியே கொய்தாற் றூய்ய மதுரமென் கனியா காதால்.

(ப - ரை.) கருமம் உள்ளளவும் - வினையிருக்கின்ற வரையிலும், அந்தக் கருமத்திற்கு-அந்தவினைக்கு, ஏற்ற-உரிய, செய்து-(புண்யபாபகர்மங்களை) செய்து, திரியும் அன்றி - (ஜீவன்) அலையுமேயல்லாமல், என்றும் - எக்காலத்திலும், சிவன் அருள் - சிவாநுக்ரஹமும், சித்தியாது - பலிக்கமாட்டாது, நிருமலன் நெறி - சிவபக்தியும், ஆகாது - உண்டாகமாட்டாது, நீண்ட - மிக்க, ஆதரவால் - விருப்பத்துடன், காயை- பச்சைக்காயை, மருவி - போய், கொய்தால் - அறுத்தால், தூய்ய-பரிசுத்தமானதும்

மதுரம் - ருசிகரமானதும், மெல் - கனிந்ததுமாகிய, கனி - பழம், ஆகாது - ஆகமாட்டாது, எ - று,

(பொ-ரை.) வினையிருக்கின்ற வரையிலும் அந்த வினைக்குரிய புண்யபாப கர்மங்களைச் செய்து ஜீவன் அலைபுமே யல்லாமல் எக்காலத்திலும் சிவாநுக்ரஹமும் பலிக்காது, சிவபக்தியு முண்டாகமாட்டாது, மிக்க விருப்பத்துடன் பச்சைக்காயைப்போயறுத்தால் பரிசுத்தமானதும் ருசிகரமானதும் கனிந்ததுமாகிய பழம் ஆகமாட்டாது.

பரதபோ தனனே போற்றி பத்தர்பாக் கியமே போற்றி
சரணநின் சரணே யல்லாற் சார்விலே னென்று நின்ற
வரமுறு மாதி ராசர் மனங்கொளு மிரக்க நோக்கி
யருளுறு மல்லி ராச ரன்பினு லணைத்து கந்து.

(ப - ரை.) பரம் - மேன்மைபொருந்திய, தபோதனனே - ஜங்கமமூர்த்தியே, போற்றி - சரணார்த்தி, பத்தர் - சிவபக்தர்களுக்கு, பாக்கியமே-செல்வமே, போற்றி-சரணார்த்தி, சரண - சிவசரணனே, நின் - உன்னுடைய, சரணே - திருவடிகளே, அல்லாமல் - அல்லாமல், சார்வு இல்லேன்-வேறொரு கதியுமில்லாதவனாயிருக்கிறேன், என்று - என்று, நின்ற - முன்னின்ற, வரம் உறும்-மேன்மைபொருந்திய, மாதிராசர்-மாதிராசையர், மனம் கொள்ளும் - மனத்திலடைந்திருக்கிற, இரக்கம் - துக்கத்தை, நோக்கி - உணர்ந்து, அருள் உறும்-ஜீவகாருண்யமுள்ள, மல்லிராசர்-மல்லிராசையர், அன்பினால் - விருப்பத்துடன், அணைத்து - தழுவிக்கொண்டு, உகந்து - சந்தோஷித்து, எ - று;

(பொ - ரை.) மேன்மைபொருந்திய ஜங்கமமூர்த்தியே! சரணார்த்தி, சிவபக்தர்களுக்குச் செல்வமே! சரணார்த்தி, சிவசரணனே! உன்னுடைய திருவடிகளே யல்லாமல் வேறொரு கதியமில்லாதவனா யிருக்கின்றேனென்று முன்னின்ற மேன்மை பொருந்திய மாதிராசையர் மனத்தி லடைந்திருக்கிற துக்கத்தை யுணர்ந்து, ஜீவகாருண்யமுள்ள மல்லிராசையர் விருப்பத்துடன் தழுவிக்கொண்டு சந்தோஷித்து. ()

அஞ்சநீ வேண்டாந் துக்கத் தழுந்துத லொழிவா யற்ப
நெஞ்சிடை யகந்தை யுள்ளோர் நம்மிடை நிற்கொ ணாதா
ணஞ்சொனீ கேளே னென்று நவின்றதா லிவ்வி கற்ப
விஞ்சையாஞ் செய்தோ மென்று மல்லிரா சையர்வி ளம்பி.

(ப - ரை.) நீ - நீ, அஞ்சவேண்டாம் - பயப்படாதே, துக்கத்து - துக்கத்தில், அழுந்துதல் ஒழிவாய்-முழுகாதே, நெஞ்சு இடை - மனத்தில், அற்பம் - சிறிதேனும், அகந்தையுள்ளோர் - அஹங்காரம்படைத்தவர்கள், நம் இடை - நம்மிடத்தில், நிற்க ஒண்ணு - நிற்கக்கூடாது, நீ - நீ, நம்சொல் - நமது வார்த்தையை, கேளேன்என்று-கேட்கமாட்டேனென்று, நவின்றதால் - சொன்னபடியினால், நாம் - நாம், இ - இந்த, விகற்பவிஞ்சைசெய்தோம் என்று-மாயவித்தைபண்ணினோமென்று, மல்லிராசையர் - மல்லிராசையர், விளம்பி - சொல்லி, எ - று.

(பொ - ரை.) நீபயப்படாதே, துக்கத்தில் முழுகாதே, மனத்தில் சிறிதேனும் அஹங்காரம் படைத்தவர்கள் நம்மிடத்தில் நிற்கக்கூடாது, நீ நமது வார்த்தையைக் கேட்கமாட்டேனென்று சொன்னபடியினால் நாம் இந்த மாயவித்தை பண்ணினோமென்று மல்லிராசையர் சொல்லி.

(வி-ரை.) அழுந்துதல் - முழுகிக்கிடப்பதினின்றும், ஒழிவாய்-நீங்குவாய், (அக.)

மன்பரன் கருணை யாலே வந்தவன் வசவ ராச
னென்பவன் பத்தி யென்னு மிரும்பொரு ணிருத்த வேண்டித்
துன்பமண் ணகல நம்பாற் றோன்றினன் சுகானு பூதி
யன்புனக் கவன்ற னாலே யாகுநீ யவன்கண் செல்வாய்.

(ப - ரை.) மன் - நிலைபெற்ற, பரன் - சிவபெருமானது, கருணையால் - கிருபையினால், வந்தவன் - அவதரித்தவனாகிய, வசவராசன் என்பவன்- வசவண்ணனென்பவன், பத்தியென்னும் - பக்தியென்கின்ற, பெரும்பொருள் - பெரும்பாக்யத்தை, நிருத்தவேண்டி - நிலைநாட்டவிரும்பி, மண்-உலகத்தார், துன்பம்-துக்கத்தினின்றும், அகல - நீங்கும்பொருட்டு, நம்பால் - நமக்காக, தோனறினன் - உதயமாயிருக்கின்றான், அவன்தன்னால் - அவனால், உனக்கு - உனக்கு, சுகானுபூதி - மோக்ஷ ஜ்ஞானத்திற்குரிய, அன்பு - பக்தி, ஆகும் - உண்டாகும், நீ - நீ, அவன்கண் - அவனிடத்தில், செல்வாய் - போவாய், எ - று.

(பொ - ரை.) நிலைபெற்ற சிவபெருமானது கிருபையினால் அவதரித்தவனாகிய வசவண்ணனென்பவன் பக்தியென்கின்ற பெரும்பாக்யத்தை நிலைநாட்டவிரும்பி உலகத்தார் துன்பத்தினின்றும் நீங்கும்பொருட்டு நமக்காக, உதயமாயிருக்கின்றான், அவனால் உனக்கு ,மோக்ஷ ஜ்ஞானத்திற்குரிய பக்தி யுண்டாகும், நீ அவனிடத்திற் போவாய். (௩௪)

வரசிவா சார வாரி வைகியே சரிப்பா யென்ற
னரனரு ளாற்ப திற்றைந் தாண்டுக ளறுநூ றாண்டு
தரையிடை வசவே சன்பாற் றங்கிப்பி னாமை ழைக்கப்
பரிவினா லெம்பால் வந்தைம் பதுவரு டங்கள் சென்று.

(ப-ரை.) வரம்-மேன்மைபொருந்திய, சிவாசாரவாரி - வீரசைவமாகிய கடலில், வைகி-திளைத்து, சரிப்பாய்-வாழ்வாய், என்-எனது, அரன் அருளால்-சிவபெருமானது கிருபையால், பதிற்று ஐந்துஆண்டுகள் அறுநூறு ஆண்டு-அறுநூற்றைம்பதுவருஷம், தரையிடை-பூமியில், வசவேசன்பால்-வசவண்ணனிடத்தில், தங்கி - வாழ்ந்திருந்து, பின்-பிறகு, நாம் அழைக்க - நாம் அழைத்தலும், பரிவினால் - விருப்பத்துடன், எம்பால் வந்து-நம்மிடத்தில் வந்து, ஐம்பதுவருடங்கள் சென்று - ஐம்பதுவருஷங்கள் கழிந்து, எ-று.

(பொ-ரை.) மேன்மையாகிய வீரசைவாசாரமாகிய கடலிற்றிளைத்து வாழ்வாய், எனது சிவபெருமானது கிருபையால் அறுநூற்றைம்பது வருஷம் பூமியில் வசவண்ணனிடத்தில் வாழ்ந்திருந்து, பிறகு நாம் அழைத்தலும் நம்மிடத்தில் வந்து, ஐம்பது வருஷங்கள் கழிந்து. (௩௫)

ஆகநிற் கெழுநூ றாண்டி னந்தத்தி லன்றி முத்தித்
தாகமுண் டாகா திங்ஙன் றருவதே தேனுங் கேட்பா
யீகநாஞ் சொல்வா யென்ன மாதிரா சைய நிரங்கி
போகரா மல்லி ராசர்க் குறப்பணிந் துரைக்கு கின்றார்.

(ப - ரை.) நிற்கு - உனக்கு, ஆக - ஆகக்கூடிய, எழுநூறு ஆண்டின் அந்தத்தில் - எழுநூறுவருஷங்களின் முடிவிலே, அன்றி - அல்லாமல், முத்தித்தாகம் - மோக்ஷத்தில் விருப்பம், உண்டாகாது-உண்டாகமாட்டாது, இங்ஙன் - இவ்விடத்தில், தருவது - அநுக்ரஹஞ்செய்யவேண்டியது, ஏதேனும் - எந்த்வரத்தையாயினும், கேட்பாய் - கேட்டுக்கொள்வாய், நாம் - நாம், ஈகம்-அநுக்ரஹஞ்செய்வோம், சொல்வாய்-

கூறுவாய், என்ன-என்று கட்டளையிடுதலும், மாதிராசையர்-மாதிராசையர், இரங்கி-அழுது, யோகர்ஆம் - யோகீச்வரராகிய, மல்லிராசர்க்கு - மல்லிராசையரை, உறப்பணிந்து - ஸாஷ்டாங்கமாகவணங்கி, உரைக்குகின்றார் - சொல்வாராயினர் (எவ்வாறெனின்), எ - று.

(பொ-ரை.) உனக்கு ஆகக்கூடிய எழுநூறுவருஷங்களின் முடிவிலே யல்லாமல் மோக்ஷத்தில் விருப்பமுண்டாகமாட்டாது, இவ்விடத்தில் அநுக்கிரஹஞ் செய்யவேண்டியது எந்த வரத்தையாயினும் கேட்டுக்கொள்வாயென்று கட்டளையிடுதலும், மாதிராசையர் அழுது யோகீச்வரராகிய மல்லிராசையரை ஸாஷ்டாங்கமாக வணங்கிச் சொல்வாராயினர், எவ்வாறெனின். (அசு)

திருவையிச் சிப்ப னென்னிற் பிறர்திரி யாயு வென்னி
லருளுறு மாயா ரூப மண்டர்போ கங்கள் வேண்டுந்
தரமல வனித்தத் தாலே தாழ்விலா முத்தி யென்னிற்
பரமனற் பதவி யாகும் பற்றிலே னொன்று மென்று.

(ப - ரை.) திருவை - செல்வத்தை, இச்சிப்பன் என்னில் - விரும்புவேனாயின், பிறர் - அயலாருடைய, திரி - மனைவியாவாள், ஆயு - தீர்க்காயுளை, என்னில் - விரும்புவேனாயின், அருள் உறும் - சித்ஸக்தியாலுண்டாகின்ற, மாயாரூபம் - மாயா சரீரமாகும், அண்டர்போகங்கள் - ஸ்வர்க்காதியின்பங்கள், அனித்தத்தால் - அழியுந் தன்மையனவாதலினாலே, வேண்டும் தரம்அல்ல-விரும்பத்தக்கதல்ல, தாழ்வு இல்லா-மேலான, முத்தி - மோக்ஷத்தை, என்னில் - விரும்புவேனாயின், நல் -சிறந்த, பரமன்-சிவபெருமானது, பதவியாகும் - பொருளாகும், ஒன்றும் - (ஆதலால் நான்) சிறிதும், பற்று இல்லேன் - ஆசையில்லாதவனாயிருக்கிறேன், எ - று.

(பொ - ரை.) செல்வத்தை விரும்புவேனாயின், அயலாருடைய மனைவியாவாள், தீர்க்காயுளை விரும்புவேனாயின் சித்சக்தியாலுண்டாகிய மாயாசரீரமாகும், ஸ்வர்க்காதி யின்பங்கள் அழியுந் தன்மையனவாதலினால் விரும்பத்தக்கதல்ல, மேலான மோக்ஷத்தை விரும்புவேனாயின் சிறந்த சிவபெருமானது பொருளாகும், ஆதலால் நான் சிறிதும் ஆசையில்லாதவனாயிருக்கின்றேன்.

(வி - ரை.) திரு - தனலக்ஷ்மி. அயலார் - விஷ்ணுமூர்த்தி. த்ரி - ஸ்த்ரீஎன்னும் வடசொற்றிரிபு. (அஎ)

ஐயமுற் றுணர்வா ரீர மகத்துளா யத்த னேயென்
றுய்யமண் மீது நன்று யுறப்பணிந் தெழாத முன்னஞ்
செய்யநற் கல்வி யாணச் செழுநகர் நந்தி யாரா
மெய்யர்பான் மாதி ராசர் விரைந்துமுன் னிற்க நோக்கா.

(ப - ரை.) ஐய - ஐயனே, முற்று உணர்வார் - ஞானிகளுடைய, ஈரம் - அன்புள்ள, அகத்து - மனத்தில், உள்ளாய் - குடிகொண்டிருப்பவனே, அத்தனே - தந்தையே, என்று - என்று, உய்ய- உஜ்ஜீவிக்கும்பொருட்டு, மண்மீது - பூமியின்மேல், நன்றாய் - செவ்வையாய், உறப்பணிந்து - ஸாஷ்டாங்கமாகவணங்கி, எழாத (மேலே) எழுந்திருக்காத, முன்னம் - முன்னர், செய்ய - அழகியதும், நல் - சிறந்ததும், செழு-தெய்விக ஸம்பத்தையுடையதுமாகிய, கல்வியாணநகர் - கல்யாணபட்டினத்தில் வீற்றிருக்கின்ற, நந்தியார்ஆம் - வசவண்ணராகிய, மெய்யர்பால் - உண்மையாகிய சிவசரணரிடத்தில், மாதிராசர் - மாதிராசையர், விரைந்து - சீக்கிரமாக, முன் - சந்நிதானத்தில், நிற்க - நிற்றலும், நோக்கா - (வசவண்ணர்) பார்த்து, எ - று.

(போ-ரை.) ஐயனே! ஞானிகளுடைய அன்புள்ளமனத்திற் குடிகொண்டிருப்பவனே! தந்தையே! என்று, உஜ்ஜீவிக்கும்பொருட்டுப் பூமியின்மேல் செவ்வையாய் ஸாஷ்டாங்கமாக வணங்கி மேலேயெழுந்திருக்காத முன்னர், அழகியதும் சிறந்ததும் தெய்விக ஸம்பத்தை யுடையதுமாகிய கல்யாண பட்டினத்தில் வீற்றிருக்கின்ற வசவண்ணராகிய உண்மையாகிய சிவசரணரிடத்தில் மாதிராசையர் சீக்கிரமாகச் சந்நிதியில் நிற்றலும் வசவண்ணர் பார்த்து.

(வி - ரை.) முற்று உணர்வார் - ஸர்வஜ்ஞர். (அஅ)

கூடல சங்க மேச னென்னவே குலவி நோக்கா
நீடவட் டாங்க மாக நேசத்தாற் பணிந்து போற்றித்
தாடலை மீது சாத்திச் சகளேச மாதி ராசர்
சீடராம் வசவ ராச ரென்னநற் சேவை செய்யா.

(ப - ரை.) கூடலசங்கமேசன் - கூடலஸங்கமேச்வரன், என்னவே - என்றே, குலவி - கொண்டாடி, நோக்கா - விரும்பி, நீட - நெடுநேரமாக, நேசத்தால் - அன்புடன், அட்டாங்கமாகப்பணிந்து - ஸாஷ்டாங்கமாகவணங்கி, போற்றி-துதித்து, தாள் - திருவடிகளை, தலைமீது- (தமது) திருமுடியின்மேல், சாத்தி-சூட்டிக்கொண்டு, சகளேசமாதிராசர் - சகளேச்வரமாதிராசையரது, சீடர் ஆம் - சீடராகிய, வசவேசர் என்ன - வசவண்ணரென்று (உலகத்தார்சொல்லும்படி), நல் - நன்றாக, சேவை செய்யா - சேவித்து, எ - று.

(போ - ரை) கூடல ஸங்கமேச்வரனென்றே கொண்டாடி விரும்பி, நெடுநேரமாக அன்புடன் ஸாஷ்டாங்கமாக வணங்கித் துதித்து, திருவடிகளைத் தமது திருமுடியின்மேற் சூட்டிக்கொண்டு, சகளேச்வர மாதிராசையரது சீடராகிய வசவண்ணரென்று உலகத்தார் சொல்லும்படி நன்றாகச் சேவித்து.

(வி-ரை.) அட்டாங்கம்-அஷ்டாங்கமென்னும் வடசொற்றிரிபு (எட்டு உறுப்புகள்- தலை, இரண்டு கைகள், இரண்டு செவிகள், மோவாய், இரண்டு தோள்கள்). (அ௯)

நற்சிவ லிங்க பூசை நன்பரா யகத்து முள்ளு
மற்புதத் துடனே செய்தங் கானந்த வமுத மார்ந்து
சிற்குண மாதி ராசர் தேடரும் பத்த ரான
பொற்புறு நந்தி கேசர் பொருவற வைகு நாளில்.

(ப - ரை.) சிற்குணம் - ஞானநிலையினையுடைய மாதிராசர் - மாதிராசையரும், தேடுஅரு - நாடுதற்கரிய, பத்தர்ஆன - பக்தராகிய, பொற்பு உறு - அழகிய, நந்திகேசர்-வசவண்ணரும், நண்பராய்-தோழர்களாய், அகத்தும்-திருமடத்திலும்,உள்ளும்-மனத்திலும், அற்புதத்துடனே - ஆச்சரியத்துடனே, நல் - நன்மையுள்ள, சிவலிங்க பூசைசெய்து - இஷ்டலிங்கபூஜை பண்ணிக்கொண்டு, அங்கு - அவ்விடத்தில், ஆனந்த அமுதம் - சிவாநந்தாமிர்தத்தை, ஆர்ந்து - உண்டு, பொருவுஅற-நிகரில்லாமல், வைகும் நாளில் - வாழ்கின்றகாலத்தில், எ - று.

(போ - ரை.) ஞானநிலையினையுடைய மாதிராசையரும் நாடுதற்கரிய பக்தராகிய அழகிய வசவண்ணரும் தோழர்களாய் திருமடத்திலும் மனத்திலும் ஆச்சரியத்துடனே நன்மையுள்ள இஷ்டலிங்கபூஜை பண்ணிக்கொண்டு அவ்விடத்தில் சிவாநந்தாமிர்தத்தையுண்டு நிகரில்லாமல் வாழ்கின்ற காலத்தில். (௯0)

சகளேசமாதிராசையர் புராணம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௭௩௩.

உ

சிவமயம்.

# சிக்கமாதையர் புராணம்.

### கலிவிருத்தம்.

திண்ணிய காலனைத் தீக்கண் மீதிலே
மண்ணினை யிறைத்தவன் வாய்ம டித்தயன்
பண்ணிய விதியினைப் பறித்து மாயையின்
கண்ணியை யறுத்தநற் கருத்த ராயரோ.

(ப - ரை.) திண்ணிய - வலிமையுடைய, காலனை - யமனுடைய, தீ - நெருப்பு, கண்மீதில் - கண்ணின்மேல், மண்ணினை - மண்ணை, இறைத்து - அள்ளிக் கொட்டியும், அவன் - அவனுடைய, வாய் - வாயை, மடித்து - அடக்கியும், அயன் - ப்ரஹ்மதேவன், பண்ணிய - ஏற்படுத்திய, விதியினை - விதிவசத்தை, பறித்து - (வேரோடும்) பிடுங்கியும், மாயையின் கண்ணியை - மாயாபாசத்தை, அறுத்த - ஒழித்த, நல் கருத்தராய் - நல்ல விவேகத்தையுடையவராய், எ - று.

(பொ - ரை.) வலிமையுடைய யமனுடைய நெருப்புக்கண்களின்மேல் மண்ணை யள்ளிக்கொட்டியும், அவனுடைய வாயையடக்கியும், ப்ரஹ்மதேவன் ஏற்படுத்திய விதிவசத்தை வேரோடும் பிடுங்கியும், மாயாபாசத்தை யொழித்த நல்ல விவேகத்தை யுடையவராய்.

(வி-ரை.) சகளேசமாதிராசையர் மரணமில்லாதவராதலின் திண்ணிய காலனைத் தீக்கண் மீதிலே மண்ணினை யிறைத்தவன் வாய் மடித்தென்றும், ஜனனமில்லாதவராதலின் அயன்பண்ணிய விதியினைப் பறித்தென்றும், மாயையைக் கடந்தவராதலின் மாயையின் கண்ணியை யறுத்தவென்றுஞ்சொன்னார். காலனை-உருபுமயக்கம். அயன்- அஜன் என்னும் வடசொற்றிரிபு. கண்ணி - கயிறு (கண்களை யுடையதெனினுமாம்).

மானிடர் தமக்குறும் வருட நூறெனத்
தானுல குரைப்பதைத் தவிர்க்க வல்லரா
யீனமு றும்வய தேழு நூறதா
யானுகந் தேறுவார்க் கதிக நண்பராய்.

(ப - ரை.) மானிடர்தமக்கு - மனிதர்களுக்கு, உறும் - ஏற்பட்ட (வயது), வருடம் நூறு தான் என்ன - நூறுவருஷந்தானென்று, உலகு - உலகத்தார், உரைப்பதை - சொல்லுகின்ற கட்டுரையை, தவிர்க்கவல்லராய் - ஒழிக்கவல்லமையுடையவராய், ஈனம்உறும் - இழிவாகிய, வயது ஏழுநூறு ஆய் - எழுநூறுவருஷ வயதுள்ளவராய், ஆன் - வ்ருஷபவாஹனத்தின்மேல், உகந்து - திருவுளமகிழ்ந்து, ஏறுவார்க்கு - ஆரோகணஞ்செய்பவராகிய சிவபெருமானுக்கு, அதிகம்-சிறந்த, நண்பராய்-பக்தராய், எ - று.

(பொ - ரை.) மனிதர்களுக் கேற்பட்ட வயது நூறுவருஷந்தானென்று உலகத்தார் சொல்லுகின்ற கட்டுரையை யொழிக்க வல்லமையுடையவராய், இழி

வாகிய எழுநூறு வருஷ வயதுள்ளவராய், வ்ருஷப வாஹனத்தின்மேல் திருவுள மகிழ்ந்து ஆரோகணஞ் செய்பவராகிய சிவபெருமானுக்குச் சிறந்த பக்தராய்.

(வி - ரை.) உலகு - ஆகுபெயர். வயது எழுநூறுவருஷகாலம் வரையிலும் நீடித்திருந்தும் தேகம் நிலையாமையைப்பற்றி ஈனமதுறும் வயதென்றார். (உ)

மூப்பொழு தருச்சனை முயலு நெஞ்சரா
யெய்ப்பறு நிட்டரா யிலிங்க சங்கமத்
தொப்பரு நேயரா யுற்ற பத்திசெய்
தப்பரு மகிழ்ச்சியா மமுத ருந்தியே.

(ப - ரை.) முப்பொழுது-மூன்றுகாலத்திலும், அருச்சனை - சிவலிங்கபூஜையை, முயலும் - முயற்சிசெய்கின்ற, நெஞ்சராய் - மனத்தையுடையவராய், எய்ப்பு அறு - இளைத்தலில்லாத, நிட்டராய் - விரதத்தையுடையவராய், இலிங்கசங்கமத்து - இஷ்ட லிங்கமூர்த்தியிடத்திலும் ஜங்கமமூர்த்திகளிடத்திலும், ஒப்பு அரு - நிகரற்ற, நேயர் ஆய் - ஆசையுடையவராய், உற்ற - மிகுதியாகிய, பத்திசெய்து - அன்பு பூண்டு, அ - அந்த, பரு - பெரிய, மகிழ்ச்சியாம் - இன்பமாகிய, அமுது - அமிர்தத்தை, அருந்தி - ஸ்வீகரித்து, எ - று.

(பொ - ரை.) மூன்று காலத்திலும் சிவலிங்க பூஜையை முயற்சிசெய்கின்ற மனத்தையுடையவராய், இளைத்தலில்லாத விரதத்தையுடையவராய், இஷ்டலிங்க மூர்த்தியிடத்திலும் ஜங்கமமூர்த்திகளிடத்திலும் நிகரற்ற ஆசையுடையவராய், மிகுதியாகிய அன்பு பூண்டு, அந்தப் பேரின்பமாகிய அமிர்தத்தை ஸ்வீகரித்து.

(வி - ரை.) மூன்று காலம் என்றது காலை மாலை உச்சி யென்னுங் காலங்களை. அமுது என்றது லிங்க ஜங்கம ப்ரஸாதங்களை. (௩)

தத்துவ ஞானராய்ச் சரண ராகியங்
கித்திறஞ் சரித்திவ ரியலு நாளிலே
யுத்தம பத்தரா யுண்மை நீங்கலாச்
சித்தரோ ரன்பர்பேர் சிக்க மாதையர்.

(ப - ரை.) தத்துவஞானராய் - மெய்ஞ்ஞானியாகி, சரணராகி - சிவசரணராகி, அங்கு - அந்தக் கல்யாணபட்டினத்தில், இத்திறம் - இவ்விதமாக, சரித்து - கூடியிருந்து இவர் - இந்தச் சகளேசமாதிராசையர், இயலும் நாளில் - வாழ்கின்ற காலத்தில், உத்தம பத்தராய்-சிறந்த பக்தியுடையவராய், உண்மை - ஸத்யமார்க்கத்தினின்றும், நீங்கலா - நீங்காத, சித்தர் - மனமுடையவராகிய, ஓர் - ஒப்பற்ற, அன்பர்- சிவபக்தருடைய, பேர் - திருநாமம், சிக்கமாதையர் - சிக்கமாதையரென்பது, எ-று.

(பொ - ரை.) மெய்ஞ்ஞானியாகிச் சிவசரணராகி அந்தக் கல்யாணபட்டினத்தில் இவ்விதமாகக் கூடியிருந்து இந்தச் சகளேச மாதிராசையர் வாழ்கின்ற காலத்தில், சிறந்த பக்தியுடையவராய் ஸத்யமார்க்கத்தினின்றும் நீங்காத மனமுடையவராகிய ஒப்பற்ற சிவபக்தருடைய திருநாமம் சிக்கமாதையரென்பது.

(வி - ரை.) தத்துவஞானம் - உண்மைப்பொருளை யறியுமுணர்ச்சி (அதாவது லிங்காங்க ஸாமரஸ்யத்தை யுணர்கின்ற வறிவு). சரணர் - சிவபெருமானே புகலிடமென்று அவர் திருவடியில் அடைக்கல மடைந்தவர். (௪)

மருவுத மனைவியு மகனுந் தாமுமா
யருளுறு மாதிரா சைய ராந்தவ
ரிருகழ லனுதின மிறைஞ்சுஞ் செய்தியே
கருதரு முயிருநங் கதியு மென்றரோ.

(ப - ரை.) மருவும் - (இல்லறதர்மத்திற்கு) வாய்த்திருக்கின்ற, தம் - தமது, மனைவியும் - மனையாளும், மகனும் - புத்ரனும், தாமுமாய் - தாமுமாக, அருள்உறும் - க்ருபாகடாக்ஷத்தையுடைய, மாதிராசையராம் - சகளேசமாதிராசையராகிய, தவர் - ஜங்கம மூர்த்தியினுடைய, இரு - இரண்டு, கழல் - திருவடிகளையும், அனுதினம் - நாடோறும், இறைஞ்சும் - வணங்குகின்ற, செய்தியே - தொழிலே, கருதரும் - நினைத்தற்கரிய, நம்-நமது, உயிரும்-பிராணமும், கதியும் என்று-செல்வமுமென்று, எ-று.

(போ - ரை.) இல்லறதர்மத்திற்கு வாய்த்திருக்கின்ற தமது மனையாளும் புத்ரனும் தாமுமாக க்ருபாகடாக்ஷத்தையுடைய சகளேசமாதிராசையராகிய ஜங்கம மூர்த்தியினுடைய இரண்டு திருவடிகளையும் நாடோறும் வணங்குகின்ற தொழிலே நினைத்தற்கரிய நமது பிராணமும் செல்வமுமென்று. (௫)

உன்னிய நெஞ்சரா யுற்ற தந்தொழி
லன்னிலை வருபொரு ளற்ப மாயினுந்
துன்னிய தாயினுந் துக்க நற்சுக
மன்னியல் பின்றிநீண் மகிழ்ச்சி பொங்கியே.

(ப - ரை.) உன்னிய - நினைத்த, நெஞ்சராய்-மனத்தையுடையவராய், உற்ற - அமைந்திருக்கின்ற, தம் தொழில் - தமது வேலைசெய்கின்ற, அந்நிலை-அவ்வழியால், வருபொருள்-கிடைக்கின்ற திரவியம், அற்பம் ஆயினும்-சிறிதேயானாலும், துன்னிய தாயினும்-பெரிதேயானாலும், துக்கம் நல் சுகம் மன் இயல்பு-சுகதுக்கங்கள், இன்றி - இல்லாமல், நீள்-பெரிய, மகிழ்ச்சி-களிப்பு, பொங்கி-மிகுந்து, எ-று.

(போ-ரை.) நினைத்த மனத்தையுடையவராய், அமைந்திருக்கின்ற தமது வேலை செய்கின்ற அவ்வழியாய்க் கிடைக்கின்ற திரவியம் சிறிதேயானாலும் பெரிதேயானாலும் சுகதுக்கங்களில்லாமல் பெருங்களிப்பு மிகுந்து.

(வி - ரை.) சுகதுக்கங்களிரண்டையும் சமமாய்ப் பார்த்த மனத்துறவடைந்தவராதலின் துக்க நற் சுக மன்னியல்பின்றி யென்றார். சுகதுக்கங்களை த்வந்தமெனச் சொல்லப்படும். நல்-சிறந்த. மன்-நிலைபெற்ற. இயல்பு-தன்மை. (௬)

தந்தொழில் சாயினுந் தவறு சேரினு
மந்தரு மாதிரா சையர் சேவைமேற்
சிந்தையு நேயராய்ச் செய்யு நாளிலே
போந்தன வுடலினைப் போட்ட கன்றனர்.

(ப - ரை.) தம்தொழில் - தமதுவேலை, சாயினும் - நடை பெற்றாலும், தவறு சேரினும்-நடைபெறாவிட்டாலும், அம்தரும்-அழகுபொருந்திய, மாதிராசையார்-மாதிராசையருடைய, சேவைமேல்-பணிவிடையின்மீது, சிந்தையும்-கருத்தும், நேயராய் - அன்புமுடையவராய், செய்யும் நாளிலே - வழிபட்டுவருகின்ற காலத்திலே, பொந்து அன்ன-மரப்பொந்தினைப்போன்ற, உடலினை-உடம்பை, போட்டு(வாயுதாரணையினால் சடுதியில்) நழுவவிட்டு, அகன்றனர்-பிரிந்தார் எ-று.

(பொ - ரை.) தமது வேலை நடைபெற்றாலும் நடைபெறாவிட்டாலும் அழகு பொருந்திய மாதிராசையருடைய பணிவிடையின் மீது கருத்தும் அன்புமுடையவராய் வழிபட்டுவருகின்ற காலத்திலே மரப்பொந்தினைப் போன்ற உடம்பை வாயுதாரணையினால் சந்நிதியில் நழுவவிட்டுப் பிரிந்தார். (எ)

அவரிட மனைவியா ரந்த வாக்கையைச்
சிவதவர் பாதநற் றீர்த்தத் தாட்டியொண்
டவளவெண் பொடியினைத் தணியச் சாத்தியே
துவளுநெஞ் சில்லராய்த் துணிந்த தூய்மையால்.

(ப - ரை.) அவரிட - அந்தச் சிக்கமாதையரது, மனைவியார் - தேவியார், அந்த ஆக்கையை - அந்த உடம்பை, நல் - சிறந்த, சிவதவர் பாதம் தீர்த்தத்து - ஜங்கமபாதோதகத்தினால், ஆட்டி - குளிப்பாட்டி, ஒள் - மேன்மையானதும், தவளம் வெள் - மிக்க வெண்ணிற முடையதுமான, பொடியினை - விபூதியை, தணிய - (ஸர்வாங்கமும்) ஸம்பூர்ணமாக, சாத்தி - தாரணஞ்செய்து, துவளும் - சலனமுள்ள, நெஞ்சில்லராய் - மனமில்லாதவராய், துணிந்த - நிச்சயித்து (முக்திமார்க்கத்தையடைகின்ற), தூய்மையால் - பரிசுத்தத் தன்மையினால், எ - று.

(பொ - ரை) அந்தச் சிக்கமாதையரது தேவியார் அந்த உடம்பைச் சிறந்த ஜங்கமபாதோதகத்தினால் குளிப்பாட்டி, மேன்மையானதும் மிக்கவெண்ணிற முடையதுமான விபூதியை ஸர்வாங்கமும் ஸம்பூர்ணமாகத் தாரணஞ்செய்து, சலனமுள்ள மனமில்லாதவராய் நிச்சயித்து முக்திமார்க்கத்தை யடைகின்ற பரிசுத்தத் தன்மையினால்.

(வி - ரை.) சிக்கமாதையரது தேவியார் தமது கணவரைப்போலத் தாமும் ஜங்கமமூர்த்தியிடத்தில் வழிபாடுடையவ ராதலானும், பூதவுடல் அநித்தியமென்று துணிந்தவராதலானும், தமது உயிர்போன்ற கணவர் உயிர் துறந்தாராயினும், ஜீவகரணம் போய்ச் சிவகரணம் சித்திப்பதுண்மையாதலானும், மனோதிருட முள்ளவ ராதலானும் துவளுநெஞ்சில்லராயென்றார். சிவதவர் - ஜங்கமர். பாததீர்த்தம் - பாதோதகம். (அ)

தக்கநல் லணையொடு சாய்த் திருத்தியே
யக்குறி யயலவ ரறிவு றாமலே
மிக்கதஞ் சிவார்ச்சனை விரும்பு மெல்லையின்
றொக்குறு சமாதியைத் தொட்டு மோசையால்.

(ப - ரை.) தக்க - பொருத்தமாகிய, நல் அணையொடு - சிறந்த மெத்தையின்கண், சாய்த்து - சாயச்செய்து, இருத்தி - உட்காரவைத்து, அக்குறி - அந்த விசேடத்தை, அயலவர் - அயலார், அறிவுறாமல் - தெரிந்துகொள்ளாதபடி, தம் - தமது, மிக்க - மேன்மைபொருந்திய, சிவார்ச்சனை - இஷ்டலிங்கபூஜையை, விரும்பும் - அன்புடன் செய்கின்ற, எல்லையின் - க்ருஹத்தில், தொக்கு உறு - உடம்பை யடக்கஞ்செய்தற்குரிய, சமாதியை - சமாதிக்குழியை, தொட்டும் - தோண்டுகின்ற, ஓசையால் - சத்தத்தினால், எ - று.

(பொ - ரை.) பொருத்தமாகிய சிறந்த மெத்தையின்கண் சாயச்செய்து உட்காரவைத்து, அந்த விசேடத்தை அயலார் தெரிந்துகொள்ளாதபடித் தமது மேன்மை பொருந்திய இஷ்டலிங்கபூஜையை யன்புடன் செய்கின்ற க்ருஹத்தில் உடம்பை யடக்கஞ் செய்தற்குரிய சமாதிக்குழியைத் தோண்டுகின்ற சத்தத்தினால்.

(வி - ரை.) தொக்கு - த்வக் என்னும் வடசொற்றிரிபு. சிவார்ச்சனை விரும்புப் எல்லை - சிவபூஜாக்ருஹம். (௯)

துஞ்சிய வம்மகன் றுணுக்கெ னத்தெளிந்
தஞ்சியி தென்னதா னன்னை யெம்மையன்
பஞ்சனை யொன்றியோர் பகர்வுங் காண்கிலேன்
வெஞ்சமெம் முடனுள வெலாம்வி ளம்புவாய்.

(ப - ரை.) துஞ்சிய - தூங்கிக்கொண்டிருந்த, அம்மகன் - அந்தக் குமாரன், துணுக்கென - திடுக்கென்று, தெளிந்து - விழித்துக்கொண்டு, அஞ்சி - பயந்து, அன்னை - தாயே, ஈது - இந்தக் காரியஞ் செய்தற்குக் காரணம், என்னதான் - யாதோ, எம் ஐயன் - எமது அப்பன், பஞ்சு அணை - பஞ்சுமெத்தையின்கண், ஒன்றி - சாய்ந்துகொண்டு, ஓர் பகர்வும் - ஒரு பேச்சையும், காண்கிலேன் - பேசப் பார்க்கமாட்டேன், எம்முடன் - எம்மோடும், வெஞ்சம் உள்ளவெல்லாம் - கோவங்கொண்டிருக்கின்ற சங்கதிகள் எல்லாவற்றையும், விளம்புவாய் - (மறையாது) சொல்வாய், எ - று.

(போ - ரை.) தூங்கிக்கொண்டிருந்த அந்தக் குமாரன் திடுக்கென்று விழித்துக்கொண்டு பயந்து, தாயே! இந்தக் காரியஞ் செய்தற்குக் காரணம் யாதோ? எமது அப்பன் பஞ்சுமெத்தையின்கண் சாய்ந்துகொண்டு, ஒரு பேச்சையும் பேசப்பார்க்கமாட்டேன், எம்மோடு கோவங்கொண்டிருக்கின்ற சங்கதிகளெல்லாவற்றையும் மறையாது சொல்வாய்.

(வி - ரை.) அன்னை - அண்மைவிளி. உளவெலாம் என்பதை உளவு எல்லாமெனப்பிரித்து ரஹஸ்யமுழுதுமென்று பொருட்கோடலு மொன்று. (௧௦)

ஐயனம் முடையர்க ளருகென் போகிலன்
செய்யமிக் சிவார்ச்சனை செய்பு மெல்லைநின்
கையுற வகழுமிக் கருமமென்னதா
னுய்யநம் பரக்குநல் லூற்றம் வேண்டியோ.

(ப - ரை.) ஐயன் - (நமது) அப்பன், நம் - நமது, உடையர்கள் - ஜங்கமமூர்த்திகள், அருகு - அண்டை, என்போகிலன் - (வழக்கப்படி) என்போகாமலிருக்கின்றான், செய்ய மிக்க - மிகவும் மேன்மைபொருந்திய, சிவார்ச்சனைசெய்யும் எல்லை - சிவபூஜாக்ருஹத்தில், நின் - உனது, கையுற - கைகளினால், அகழும் - தோண்டுகின்ற, இக்கருமம் - இந்தக் காரியம், என்னதான் - யாதோ, உய்ய - உஜ்ஜீவிக்கும் பொருட்டு, நம் - நமது, பரக்கு - சிவபெருமானுக்கு, நல் - சிறந்த, ஊற்றம் - கிணற்றை, வேண்டியோ - விரும்பியோ எ - று.

(போ - ரை.) நமது அப்பன் நமது ஜங்கமமூர்த்திகளிடத்திலண்டை வழக்கப்படி யேன் போகாமலிருக்கின்றான்? மிகவும்மேன்மைபொருந்திய சிவபூஜாக்ருஹத்தில் உனது கைகளினால் தோண்டுகின்ற இந்தக் காரியம் யாதோ? உஜ்ஜீவிக்கும் பொருட்டு நமது சிவபெருமானுக்குச் சிறந்த கிணற்றை விரும்பியோ? (௧௧)

உன்னுடன் கோபமென் றொருதி னத்தினி
னின்னுடன் வெம்மைதா னிகழ்ந்த தாயினும்
பின்னுடன் றீர்வனிப் பெற்றி யின்றியு
மென்னொடும் பேசில னென்னை யன்னையே.

(ப-ரை.) அன்னையே - தாயே, உன்னுடன் - உன்னோடு, கோபம் - கோபங் கொண்டிருக்கிறான்; என்று - என்றுசொல்லப்பட்ட, ஒருதினத்தினில் - ஒருநாளில், நின்னுடன் - உன்னோடு, வெம்மை நிகழ்ந்ததாயினும் - கோவமுண்டாயிருந்தாலும், பின் உடன் - பின்னோடு, தீர்வன் - தணிந்துவிடுவான், இப்பெற்றி - இந்தக்குணம், இன்றியும் - இல்லாமலும், என்னோடும் - என்னோடும், பேசிலன் - பேசாமலும் இருக்கின்றான், என்னை - (இதற்குக்காரணம்) யாது; எ-று.

(போ-ரை.) தாயே? உன்னோடு கோவங்கொண்டிருக்கின்றானென்று சொல்லப்பட்ட ஒரு நாளில் உன்னோடு கோவமுண்டாயிருந்தாலும் பின்னோடு தணிந்து விடுவான், இந்தக் குணமில்லாமலும் என்னோடும் பேசாமலுமிருக்கின்றான், இதற்குக் காரணம் யாது? (௧௨)

வேளையிற் சிவார்ச்சனை விரும்புங் காலையி
னாளதா யொன்றுநீ யமைத்தி லாய்கொலோ
நாளுநின் சீலநீ ணன்மை குன்றியோ
தாளுறத் தவத்தர்பாற் றாழ்ந்தி லாய்கொலோ.

(ப - ரை.) வேளையில் - குறித்தகாலத்தில், சிவார்ச்சனை விரும்பும் காலையில் - சிவலிங்கபூஜை செய்கின்ற காலத்தில், ஆள் ஆய் - அடிமைபோல், நீ - நீ, ஒன்றும் - சிறிதும், அமைத்திலாய் கொலோ - (பூஜாத்ரவ்யங்களை) அமர்த்திவைக்கவில்லையோ, நாளும் - தினந்தோறும், நின் - உனது, சீலம் - சிவாசாரமும், நீள் - பெரிய, நன்மை- உபசாரங்களும், குன்றியோ - குறைந்துவிட்டனவோ, தாள் உற - திருவடிகள் சிரம் பொருந்தும்படி ஸாஷ்டாங்கமாக, தவத்தர்பால் - ஜங்கமமூர்த்திகளிடத்தில் (சென்று), தாழ்ந்திலாய் கொலோ - (விழுந்து) வணங்கவில்லையோ, எ - று.

(போ - ரை.) குறித்தகாலத்தில் சிவலிங்கபூஜை செய்கின்றகாலத்தில் அடிமை போல நீ சிறிதும் பூஜாத்ரவியங்களை யமர்த்தி வைக்கவில்லையோ? தினந்தோறும் உனது சிவாசாரமும் பேருபசாரங்களும் குறைந்துவிட்டனவோ? திருவடிகள் சிரம் பொருந்தும்படி ஸாஷ்டாங்கமாக ஜங்கம மூர்த்திகளிடத்திற் சென்று விழுந்து வணங்கவில்லையோ?

(வி - ரை.) ஓகாரங்கள் ஐயப்பொருளில் வந்தன. (௧௩)

திருமெழுக் கிடுகையிற் செந்து செத்ததோ
வொருபுடை கோமய முற்ற தில்லையோ
வருமைசே ரரங்கநல் லால யத்தழ
கொருவியே யிடையிடை யூன மானதோ.

(ப - ரை.) திருமெழுக்கு இடுகையில் - திருமெழுக்கிடுகின்ற காலத்தில், செந்து - ஜீவப்ராணிகள், செத்ததோ - இறந்துவிட்டனவோ, ஒரு புடை - ஒருபக்கத்தில் கோமயம் - சாணம், உற்றதில்லையோ - பட்டதில்லையோ, அருமைசேர் - அருமை யானதும், நல் - சிறந்ததுமான, அரங்க ஆலயத்து - கோலத்தின், அழகு - சிங்காரம், ஒருவி - கெட்டு, இடையிடை - நடுநடுவில், ஊனமானதோ - அழிந்து போய் விட்டதோ, எ - று.

(போ - ரை.) திருமெழுக்கிடுகின்ற காலத்தில் ஜீவப்ராணிகள் இறந்துவிட்டனவோ? ஒரு பக்கத்தில் சாணம் பட்டதில்லையோ? அருமையானதும் சிறந்தது மான கோலத்தின் அழகு கெட்டு நடுநடுவில் அழிந்துவிட்டதோ?

(வி - ரை.) திருமெழுக்கு - சிவபூஜா க்ருஹத்தை மெழுகுதல். அரங்கவாலா - ரங்கவாலே என்னுந் திசைச்சொற்றிரிபு. பஞ்சவர்ணமுள்ள பாவினலிடுகின்ற கோலம்.

விஞ்சிய வுழைக்கலம் விளக்கி லாய்கொலோ
மஞ்சன சாலேயின் மலின முற்றதோ
வஞ்சிநீ விந்திகை யழுக்க றுத்திடா
தெஞ்சியா சநேயி னிழிவு வந்ததோ.

(ப-ரை.) விஞ்சிய-மிகுதியாயுள்ள, உழைக்கலம்-பூஜாபாத்ரங்களை, விளக்கிலாய்கொலோ-துலக்கவில்லேயோ, மஞ்சனசாலேயில் - திருமஞ்சனா க்ருஹத்தில், மலினம் உற்றதோ - அழுக்கு படிந்துவிட்டதோ, நீ அஞ்சி-நீ பயந்து, விந்திகை-(திருமஞ்சன) குடத்தை, அழுக்கறுத்திடாது-துலக்காமல், எஞ்சிய-மீதியாயுள்ள, ஆசநேயின் - உபசாரங்களில், இழிவு வந்ததோ-குறைவு நேரிட்டதோ, எ-று.

(பொ - ரை.) மிகுதியாயுள்ள பூஜாபாத்ரங்களைத் துலக்கவில்லேயோ? திருமஞ்சனா க்ருஹத்தில் அழுக்கு படிந்துவிட்டதோ? நீ பயந்து திரு மஞ்சனகுடத்தைத் துலக்காமல் மீதியாயுள்ள உபசாரங்களிற் குறைவு நேரிட்டதோ?

(வி-ரை.) உழை - உழைக்கப்பட்ட. கலம் - பாத்ரம். ஈண்டைக்கேற்பப் பூஜா பாத்ரமென்று பொருட் கொண்டாம். விந்திகை - பிந்திகெ யென்னுந் திசைச் சொற்றிரிபு. (௧௫)

வத்திரங் கொண்டுநீர் வடித்தி லாய்கொலோ
சுத்திநற் கந்தநீ துவள வைத்தியோ
வொத்திரா தக்கதை யொடிந்தி ருந்ததோ
கொத்தலர் புழுக்கடி கூடி யுற்றதோ

(ப-ரை.) நீ-நீ, வத்திரங்கொண்டு-சுத்தவஸ்த்ரத்தினுல், நீர்-ஜலத்தை, வடித்திலாய்கொலோ-வடிகட்டவில்லேயோ, சுத்தி நல்-மிக்க பரிசுத்தமாகிய, கந்தம்-சந்தனத்தை, துவள வைத்தியோ-வரளச் செய்துவிட்டாயோ, ஒத்திராது-(ஒன்றுக்கொன்று) ஒவ்வாமல், அக்கதை-அக்ஷதை, ஒடிந்திருந்ததோ-முறிந்திருந்ததோ, கொத்து-திரளாயிருக்கின்ற, அலர்-மலர்கள், புழுக்கடி - புழுவெட்டுடன், கூடியுற்றதோ - சேர்ந்திருந்தனவோ, எ-று.

(பொ-ரை.) நீ சுத்த வஸ்த்ரத்தினுல் ஜலத்தை வடிகட்டவில்லேயோ? மிக்க பரிசுத்தமாகிய சந்தனத்தை வரளச் செய்துவிட்டாயோ? ஒன்றுக்கொன்றொவ்வாமல் அக்ஷதை முறிந்திருந்ததோ? திரளாயிருக்கின்ற மலர்கள் புழுவெட்டுடன் சேர்ந்திருந்தனவோ?

(வி-ரை.) அக்கதை-அக்ஷதையென்னும் வடசொற்றிரிபு. மஞ்சள் கலந்த முழு அரிசி. (௧௬)

எடுத்தநற் றூபதீ பார்த்தி யின்மணம்
படைத்தொளி யொன்றுபோற் பரவிற் றில்லேயோ
சுடர்த்தரு விளக்கினைத் தூண்டி லாமலே
கெடுத்தனை யோவிதென் கிளர்த்தி யன்னேயே.

(ப - ரை.) அன்னையே - தாயே, எடுத்த - கொடுத்த, நல் - நல்ல, தூபதீபார்த்தியின் - தூபதீபார்த்திகளின், மணம் - (முறையே) பரிமளத்தையும், ஒளி - பிரகாசத்தையும், படைத்து - கொடுத்து, ஒன்றுபோல் - ஒரேமாதிரியாய், பரவிற்று இல்லையோ - பரவவில்லையோ, சுடர்த்தரும் - பிரகாசிக்கின்ற, விளக்கினை - தீபத்தை, தூண்டிலாமல் - தூண்டாமல், கெடுத்தனையோ - அவித்துவிட்டாயோ, இது - இந்தக் கோபத்திற்குக் காரணம், என் - யாது, கிளர்த்தி - சொல்வாய். எ - று.

(போ - ரை.) தாயே! கொடுத்த நல்ல தீபதூபார்த்திகள் முறையே பரிமளத்தையும் பிரகாசத்தையுங் கொடுத்து ஒரே மாதிரியாய்ப் பரவவில்லையோ? பிரகாசிக்கின்ற தீபத்தைத் தூண்டாமல் அவித்துவிட்டாயோ? இந்தக் கோவத்திற்குக் காரணம் யாது? சொல்வாய். (௪௭)

பரமன்முன் னமுதுநீ படைக்குங் காலையின்
முரலுநின் னாசியின் மூச்ச ணைந்ததோ
வரனருஞ் சேடமோ டருத்தி லாதன
விரவிநீ படைத்தியோ விளம்பு கன்னையே.

(ப-ரை.) அன்னையே - தாயே, நீ-நீ, பரமன் - இஷ்டலிங்கமூர்த்தியின், முன் - முன்னர், அமுதுபடைக்கும் காலையில் - திருவமுதுபடைக்கின்ற காலத்தில், முரலும் - ஒலிக்கின்ற, நின் - உனது, நாசியின் - மூக்கின், மூச்சு - சுவாசம், அணைந்ததோ - பட்டுவிட்டதோ, நீ - நீ, அரு - கிடைத்தற்கரிய, அரன் சேடமோடு - சிவப்ரஸாதத்துடன், அருத்திலாதன - உண்ணக்கூடாத பதார்த்தங்களை, விரவி - கலந்து, படைத்தியோ - படைத்துவிட்டாயோ, விளம்புக - சொல்லக்கடவாய், எ - று.

(போ-ரை.) தாயே! நீ இஷ்டலிங்கமூர்த்தியின் முன்னர் திருவமுது படைக்கின்ற காலத்தில் ஒலிக்கின்ற உனது மூக்கின் சுவாசம் பட்டுவிட்டதோ? கிடைத்தற்கரிய சிவப்ரஸாதத்துடன் உண்ணக்கூடாத பதார்த்தங்களைக் கலந்து படைத்துவிட்டாயோ? சொல்லக்கடவாய்.

(வி-ரை.) உண்ணக்கூடாத பதார்த்தங்கள் முருங்கை முதலியன. சிவலிங்கார்ப்பிதமான பிரசாதத்தை நிஷேதிப்பதனாலும், ஈய்முதலிய சேதன பிராணிகள் வாய் வைப்பதனாலும் உண்டாகும் தோஷம் சேராதபடி வெளியிற்கொண்டுபோய் எறியாமலிருத்தல் வேணுமென்பது வீரசைவக்கொள்கை. ஆகையால் உண்கலம் விதிக்கப்பட்டிருக்கிறது. (௪௮)

உற்றதோ மூவித வுதக மொன்றொடொன்
றெற்றென வழைத்ததற் கென்னென் றில்லையோ
சற்றுநீ யையன்முன் சாற்றி டாதவிக்
குற்றமே னின்னொடேன் கூறி லான்கொலாய்.

(ப - ரை.) மூவிதம் - மூன்றுவகைப்பட்ட, உதகம் - பாதோதகங்கள், ஒன்றொடொன்று - ஒன்றுடனொன்று, உற்றதோ - கலந்துவிட்டனவோ, எற்று - என்ன, என்று - என்று, அழைத்ததற்கு - (சிவபூஜாகாலத்தில்) கூப்பிட்டதற்காக, என் என்று இல்லையோ - ஏனென்று பதில் சொல்லவில்லையோ, நீ-நீ, ஐயன் - அப்பனுக்கு, முன் - எதிரே, சற்றும் - ஒன்றும், சாற்றிடாத - பேசாதிருக்கின்ற, இக்குற்றம் - இந்தப் பிழைக்குக் காரணம், என் - யாது, நின்னோடு - உன்னுடனும், ஏன் கூறிலான் - ஏன் பேசமாட்டான், என் - இதற்குக் காரணம் யாது, எ - று.

(பொ - ரை.) மூன்றுவகைப்பட்ட பாதோதகங்கள் ஒன்றுடனொன்று கலந்துவிட்டனவோ? என்னவென்று சிவபூஜாகாலத்திற் கூப்பிட்டதற்காக ஏனென்று பதில்சொல்லவில்லையோ? நீ அப்பனுக்கு எதிரே ஒன்றும் பேசாதிருக்கின்ற இந்த பிழைக்குக்காரணம் யாது? உன்னுடனும் பேசமாட்டான், இதற்குக்காரணம் யாது?

(வி - ரை.) மூவிதவுதகம் - குருபாதோதகம், லிங்கபாதோதகம், ஜங்கமபாதோதக மென்பன. (௧௯)

ஐயநின் சினத்தினை யாறு கென்றியாங்
கைதொழு தின்சொலாற் காலின் வீழ்ந்திடின்
வெய்யதன் வெகுட்கிபோய் விரும்பிப் பேசுவன்
செய்குது மிச்செயல் செய்தி யன்னையே.

(ப - ரை.) அன்னையே - தாயே, யாம்-நாங்கள், ஐய-ஐயனே, நின்சினத்தினை - உனது கோவத்தை, ஆறுக என்று - தணியக்கடவையென்று, கைதொழுது - கைகூப்பி வணங்கி, இன் சொல்லால்-ஹிதமான வசனங்களால், காலின் வீழ்ந்திடின் - பாதங்களில் ஸாஷ்டாங்கமாகவிழுந்து வணங்குவோமாயின், தன் - தனது, வெய்ய வெகுட்கி - பொல்லாதகோவம், போய் - தணிந்து, விரும்பி - அன்புடன், பேசுவன் - பேசுவான், இச்செயல் - இந்தக் காரியத்தை, செய்குதும் - பண்ணுவோம், செய்தி - செய்யக்கடவாய் எ - று.

(பொ - ரை.) தாயே! நாங்கள் ஐயனே, உனது கோவத்தைத் தணியக்கடவையென்று கைகூப்பிவணங்கி ஹிதமான வசனங்களால் பாதங்களில் ஸாஷ்டாங்கமாக விழுந்து வணங்குவோமாயின் தனது பொல்லாத கோவந் தணிந்து அன்புடன் பேசுவான், இந்தக் காரியத்தைச் செய்வோம், செய்யக்கடவாய். (௨0)

பரமனற் சேடமேன் பசியி லார்கிலன்
றிரமு துடையர்பால் சென்றென் சேர்கிலன்
கரமலர் பற்றியான் கசிந்த ழைக்கவோ
வுரையென வன்னைதா னொண்டு ணைக்கையால்.

(ப-ரை.) நல் - சிறந்த, பரமன்சேடன் - சிவப்ரஸாதத்தை, பசியில் - பசியினால், ஆர்கிலன் - உண்ணமாட்டான், என் - (இதற்குக்காரணம்) யாது, திரம் - அறிவில்லாவதராகிய, நமது உடையர்பால் - நமது ஜங்கமமூர்த்திகளிடத்தில், சென்று - போய், சேர்கிலன் - சேரமாட்டான், என் - (இதற்குக்காரணம்) யாது, யான் - நான், கரமலர் - கைத்தாமரைகளை, பற்றி - பிடித்து, கசிந்து - அழுது, அழைக்கவோ - அழைக்கட்டுமோ, உரை என்ன-சொல்லென்று (கேட்டலும்), அன்னை-தாயானவள், ஒள் - அழகாகிய, துணைக் கையால் - இரண்டு கைகளினால், எ - று.

(பொ-ரை.) சிறந்த சிவப்ரஸாதத்தைப் பசியினால் உண்ணமாட்டான், இதற்குக காரணம் யாது? அறிவில்லாதவராகிய நமது ஜங்கமமூர்த்திகளிடத்திற் போய்ச் சேரமாட்டான், இதற்குக் காரணம் யாது? நான் கைத்தாமரைகளைப் பிடித்தழுது அழைக்கட்டுமோ? சொல்லென்று கேட்டலும், தாயானவள் அழகாகிய இரண்டு கைகளினால். (௨௧)

பற்றிமுன் வாங்கிநீ பத்த ரிற்றொறு
முற்றவர் சிவார்ச்சனை யுரையை யூன்றியே
கற்றனை யல்லது கருத்தி லாயெனச்
சொற்றியிவ் வேதிகை தொட்டி லுன்னையன்.

(ப - ரை.) பற்றி - பிடித்து, முன் - முன்னே. வாங்கி - இழுத்து; நீ - நீ, பத்தர் - சிவசரணர்களுடைய, இல் தொறும் - திருமடக்களிலெல்லாம், உற்று - சென்று, அவர் - அவர்கள் (செய்கின்ற), சிவார்ச்சனை - சிவலிங்கபூஜையென்கின்ற, உரையை - சொல்லைமாத்திரம், ஊன்றி - (மனத்தில்) பதித்து, கற்றனை - கற்றுக் கொண்டாயே, அல்லது - அல்லாமல், கருத்திலாய் - அதன் றாற்பரியார்த்தங்களை யறிந்தாயில்லை, என்ன - என்று, சொற்றி-சொல்லி, இச்வேதிகை-இந்தக் கிணற்றை, தொட்டில் - தோண்டுவேனாயின், உன் - உனது, ஐயன் - அப்பன், எ - று.

(போ - ரை.) பிடித்து முன்னேயிழுத்து, நீ சிவசரணர்களுடைய திருமடங் களிலெல்லாம் சென்று அவர்கள் செய்கின்ற சிவலிங்கபூஜை யென்கின்ற சொல்லை மாத்திரம் மனத்திற் பதித்துக் கற்றுக்கொண்டாயே யல்லாமல் அதன்றாற்பரியார்த்தங் களை யறிந்தாயில்லை, இந்தக் கிணற்றைத் தோண்டுவேனாயின் உனது அப்பன். (௨௨)

சினமொழிந் துன்னுடன் செப்பு மையநீ
நனவொழி நித்திரை யென்னு மென்றுளங்
கனிவுறத் தலைவனைக் கண்டு நக்கபின்
முனமுறுஞ் செய்திதான் முயலுங் காலையில்.

(ப-ரை.) சினம் ஒழிந்து-கோவந்தணிந்து. உன்னுடன்-உன்னோடு, செப்பும் - பேசுவான், ஐய - ஐயனே, நீ-நீ, நனவு ஒழி - விழித்திருக்காதே, நித்திரை யென்னும் - தூக்கக்கடவை, என்று - என்று சொல்லி, உளம் கனிவுற - மனமுருகும்படி, தலைவனை - கணவனை, கண்டு - பார்த்து, நக்க பின் - சிரித்த பிறகு, தான் முன்னம் உறும் - தான் முன்னேதொடங்கிய, செய்தி-சமாதிக்குழி வெட்டுகின்ற தொழிலையே, முயலுங் காலையில் - முயற்சிசெய்கின்ற காலத்தில், எ-று.

(போ - ரை.) கோவந்தணிந்து உன்னோடு பேசுவான், ஐயனே! நீ விழித்திருக் காதே, தூக்கக்கடவை யென்று சொல்லி மன முருகும்படிக் கணவனைப் பார்த்துச் சிரித்த பிறகு; தான் முன்னே தொடங்கிய சமாதிக்குழி வெட்டுகின்ற தொழிலையே முயற்சிசெய்கின்ற காலத்தில். (௨௩)

புதல்வனுட் புறப்படாப் புறத்து வாயிலின்
கதவினைத் திறந்துளங் கலங்கி முன்புதா
னிதமுறத் தந்தைபி னேகும் வீதிபோய்
மதமுறாத் தவத்தரா மாதி ராசர்முன்.

(ப - ரை.) புதல்வன்-குமாரன், உள்-திருமடத்திலிருந்து, புறப்படா-புறப்பட்டு, புறத்துவாயிலின்-வெளிவாசலின், கதவினைத் திறந்து - கதவைத் திறந்துகொண்டு, உள்ளம் கலங்கி - மனங்குழைந்து, முன்பு - முன்னே, தான் - தான், இதமுற-சந்தோஷத்துடன், தந்தை பின் - தந்தையின் பிறகே, ஏகும் வீதி - (வழக்கப்படி) போகின்ற தெருவில், போய்-சென்று, மதம் உறா - அகங்காரமில்லாத, தவத்தர் ஆம் - ஜங்கமமூர்த்தி யாகிய, மாதிராசர் முன் - மாதிராசையருடைய சந்நிதியில், எ-று.

(போ-ரை.) குமாரன் திருமடத்திலிருந்துப் புறப்பட்டு வெளிவாசலின் கதவைத் திறந்து கொண்டு, மனங்குழைந்து, முன்னே தான் சந்தோஷத்துடன் தந்தையின் பிறகே வழக்கப்படிப்போகின்ற தெருவிற்சென்று, அகங்காரமில்லாத ஜங்கமமூர்த்தி யாகிய மாதிராசையருடைய சந்நிதியில். (௨௪)

அன்புடன் வணங்கிநின் றைய வையகே
ளென்பிதா வென்னையோ வேதும் பேசிலான்
முன்பென தன்னைபான் முனிவி லாதவன்
வன்புறு சினத்துடன் மவுன மாகியே.

(ப - ரை.) அன்புடன் - பக்தியோடு, வணங்கி - தொழுது, நின்று - நின்று, ஐய ஐய-ஐயனே ஐயனே, கேள் - கேட்பாய், என்பிதா-எனது அப்பன், என்னையோ-என்ன காரணமோ, ஏதும் பேசிலான் - சிறிதும் பேசமாட்டான், முன்பு - முன்னர், எனது அன்னை பால்-எனது தாயிடத்தில், முனிவு இல்லாதவன்-கோவமில்லாதவன், வன்பு உறு-பொல்லாத, சினத்துடன் - கோவத்துடன், மவுனம்ஆகி-பேசாமல், எ-று.

(போ - ரை.) பக்தியோடு தொழுது, ஐயனே! ஐயனே! கேட்பாய், எனது அப்பன் என்ன காரணமோ? சிறிதும் பேசமாட்டான், முன்னர் எனது தாயிடத்தில் கோவமில்லாதவன் பொல்லாத கோவத்துடன் பேசாமல். (உ௫)

நீற்றினை நுதல்புய நிறையச் சாத்தியே
நேற்றுநீ யளித்தமெ னீளத் தூசினை
மேற்றரித் தணையின்மேன் மேவிப் பேர்கலான்
சீற்றமுற் றென்றன்மேற் சினேக மெண்ணலான்.

(ப - ரை.) நீற்றினை - விபூதியை, நுதல் - நெற்றியிலும், தோள் - புயங்களிலும், நிறைய - நிரம்ப, சாத்தி - தாரணஞ்செய்துகொண்டும், நேற்று - நேற்றைத்தினம், நீ - நீ, அளித்த - கொடுத்தருளிய, மெல் - மென்மையாகிய, நீள் - நீண்ட, அ-அந்த, தூசினை -வஸ்த்ரத்தை, மேல் - மேலே, தரித்து - போர்த்துக்கொண்டும், அணையின் மேல் - மெத்தையின்மீது, மேவி-சாய்ந்துகொண்டும், பேர்கலான்-அசையமாட்டான், சீற்றம் உற்று - கோவமடைந்து, என்மேல் - என்மீதும், சினேகம் - பக்ஷம், எண்ணலான் - பாராட்டமாட்டான், எ - று.

(போ - ரை.) விபூதியை நெற்றியிலும் புயங்களிலும் நிரயத் தாரணஞ்செய்துகொண்டும், நேற்றைத்தினம் நீ கொடுத்தருளிய மென்மையாகிய நீண்ட அந்த வஸ்த்ரத்தை மேலே போர்த்துக்கொண்டும், மெத்தையின்மீது சாய்ந்துகொண்டும் அசையமாட்டான், கோவமடைந்து என்மீதும் பக்ஷம் பாராட்டமாட்டான். (உ௬)

அன்னைநற் சிவார்ச்சனை யகத்தைக் கொட்டினு
லென்னையோ வகழ்ந்துமண் ணெடுக்கு கின்றனள்
பின்னைவே றொருவராற் பிணக்குத் தீர்கலா
னுன்னையா னழைக்கவிங் கோடி வந்தனன்.

(ப - ரை.) அன்னை - தாய், நல் - சிறந்த, சிவார்ச்சனையகத்தை - சிவபூஜா க்ருஹத்தை, கொட்டினல் - மண்வெட்டியைக்கொண்டு, என்னையோ - என்ன காரணமோ, அகழ்ந்து-தோண்டி, மண் - மண்ணை, எடுக்குகின்றனள்-எடுக்கின்றாள், பின்னை-பிறகு, வேறொருவரால் - மற்றொருத்தராலும், பிணக்கு-கோவம், தீர்கலான்-தணியமாட்டான், யான் - நான், உன்னை - உன்னை, அழைக்க - கூப்பிடும்பொருட்டு, இங்கு - இவ்விடத்தில், ஓடிவந்தனன் - ஓட்டமாய்வந்தேன், எ - று.

(பொ - ரை.) தாய் சிவபூஜாக்கிரமத்தை மண்வெட்டியைக்கொண்டு என்ன காரணமோ? தோண்டி மண்ணையெடுக்கின்றாள், பிறகு மற்றொருத்தராலும் சோவந் தணியமாட்டான், நான் உன்னைக் கூப்பிடும் பொருட்டு இவ்விடத்தில் ஓட்டமாய் வந்தேன். (௨௰)

நேற்றள வென்னைநன் னேச நெஞ்சுடன்
காற்றுடை மீதினுங் கரத்தி னுங்கொடு
போற்றியின் சொல்லினாற் புறத்து மீதுற
வேற்றுகந் தணைத்தெனை யிருக ணொற்றியே.

(ப - ரை.) நேற்று அளவு - நேற்றைத்தினம் வரையிலும், என்னை - என்னை நல் நேசம் - மிகுந்தபக்ஷமுள்ள, நெஞ்சுடன் - மனத்தோடு, கால் துடை மீதினும் - கால்களின்மேலும் துடைகளின்மேலும், கரத்திலும்-கைகளிலும், கொடு - இருத்திக் கொண்டும், போற்றி - வளர்த்து, இன் சொல்லினால் - இனிய வார்த்தைகளால், புறத்து மீது உற - முதுகின் மேலுமிருக்க, ஏற்று - சுமந்துகொண்டும், உகந்து - சந்தோஷத்துடன், அணைத்து - தழுவிக்கொண்டும், என்னை - என்னை, இருகண் - இரண்டு கண்களில், ஒற்றி - ஒற்றிக்கொண்டும், எ - று.

(பொ - ரை.) நேற்றைத்தினம் வரையிலும் என்னை மிகுந்த பக்ஷமுள்ள மனத்தோடு கால்களின்மேலும் துடைகளின்மேலும் கைகளிலும் இருத்திக் கொண்டு வளர்த்து, இனிய வார்த்தைகளால் முதுகின்மேலு மிருக்கச் சுமந்து கொண்டும், சந்தோஷத்துடன் தழுவிக்கொண்டும், என்னை யிரண்டுகண்களிலொற்றிக்கொண்டும்

விட்டபி னெங்குநான் மேவி னும்முடன்
மட்டறு மன்பினால் வால லிங்கவா
விட்டமே வாவெனா தெந்தை வாவெனக்
கட்டிமார் பணைத்திரு கண்ண தென்னவே.

(ப - ரை.) விட்டபின் - (கீழேயிறக்கி) விட்டபிறகு, நான் - நான், எங்கு மேவினும் - எவ்விடம் போவேனாயினும், உடன் - பின்னோடு கூடவே வந்து, மட்டு அறும் - அளவில்லாத, அன்பினால் - பக்ஷத்துடன், வாலலிங்க - வாலலிங்கனே, வா-வா, இட்டமே - இஷ்டலிங்கமே, வா-வா, எனது எந்தை-எனது அப்பனே, வா-வா, என்ன - என்றுசொல்லி, மார்பு - மார்பில், கட்டி யணைத்து - சேர்த்துத்தழுவிக் கொண்டு, இரு கண் என்ன - இரண்டு கண்களைப்போல, எ - று.

(பொ - ரை.) கீழே யிறக்கிவிட்ட பிறகு நான் எவ்விடம் போவேனாயினும் பின்னோடு கூடவே வந்து, அளவில்லாத பக்ஷத்துடன் வாலலிங்கனே! வா, இஷ்ட லிங்கமே! வா, எனது அப்பனே! வாவென்று சொல்லி மார்பில் சேர்த்துத்தழுவிக் கொண்டு இரண்டு கண்களைப்போல,

(வி - ரை.) வாலலிங்கன்-குமாரனது திருநாமமே. இட்டம்-ஆசையுள்ள மகனே எனினுமாம். (௨௧)

சிறியவென் சிகையினைச் சிக்க றுத்தொரு
குறியதோர் கயிற்றினாற் கூட்டி யார்த்துமெய்
யுறுதுக ளறத்துடைத் துவந்து பார்த்தபி
னிறையவே நெற்றியி னீறு பூசுவன்.

(ப-ரை.) என் - என்னுடைய, சிறிய சிகையினை - சிறிதாகிய குடுமியை, சிக்கு அறுத்து - வாரி, ஒரு - ஒரு; சிறியது - சிறிதாகிய; ஓர் - ஒப்பற்ற, கயிற்றினால் - கயிற்றைக்கொண்டு; கட்டியார்த்து - சேர்த்துக்கட்டி, மெய் உறு - உடம்பிற்படிந்திருக்கின்ற. துகள் அற - தூசுபோகும்படி, துடைத்து - துடைத்து, உவந்து - சந்தோஷத்துடன், பார்த்த பின் - நோக்கின பிறகு, நெற்றியில் - நெற்றியில், நீறு - விபூதியை, பூசுவன் - தாரணஞ்செய்வான், எ - று.

(பொ-ரை.) என்னுடைய சிறிதாகிய குடுமியை வாரி, ஒரு சிறிதாகிய ஒப்பற்ற கயிற்றைக்கொண்டு சேர்த்துக்கட்டி, உடம்பிற் படிந்திருக்கின்ற தூசு போகும்படித் துடைத்து, சந்தோஷத்துடன் நோக்கின பிறகு, நெற்றியில் விபூதியை நிரம்பத் தாரணஞ்செய்வான்.

(வி - ரை.) துகள் அற - தூசுமுழுது மெனினுமாம். துடைத்து - ஒழித்து. ()

மருவியஞ் செழுத்திசை மைந்த வென்பனா
னுரைசெயுங் குதலைகேட் டுவந்து மோந்துநீ
யருள்வசவேசரா லயத்திற் றொண்டனோ
சரிகைநற் சவுண்டையன் றொழும்புத் தாதனோ.

(ப-ரை.) மைந்த-மகனே, மருவி - (மனம்) இசைந்து, அஞ்செழுத்து - ஸ்ரீபஞ்சாக்ஷர மஹாமந்த்ரத்தை, இசை-சொல், என்பன்-என்று சொல்வான், நான்-நான், உரை செய்யும் - சொல்லுகின்ற; குதலைகேட்டு - மழலைச் சொற்களைக்கேட்டு, உவந்து - சந்தோஷத்துடன், மோந்து-மோந்து, நீ - நீ, அருள்-க்ருபாகடாக்ஷத்தையுடைய, வசவேசரன் - பசவண்ணார்க்கு, அகத்தில் தொண்டனோ - அகம்படியாரனோ, நல் - மேன்மையான, சரிகை - உடைவாளையுடைய, சவுண்டையன் - சவுண்டையனுக்கு; தொழும்பு - ஏவல்செய்கின்ற, தாதனோ - தொண்டனோ; எ-று.

(பொ-ரை.) மகனே! மனமிசைந்து ஸ்ரீபஞ்சாக்ஷர மஹாமந்த்ரத்தைச் சொல்லென்று சொல்வான், நான் சொல்லுகின்ற மழலைச் சொற்களைக்கேட்டுச் சந்தோஷத்துடன் மோந்து க்ருபாகடாக்ஷத்தையுடைய பசவண்ணார்க்கு அகம்படியாரனோ? மேன்மையான உடைவாளையுடைய சவுண்டையனுக்கு ஏவல் செய்கின்ற தொண்டனோ?

(வி-ரை.) அகத்தில்-திருமடத்தில் வேலைசெய்கின்ற. தொண்டனோ-பரிசாரகனோ.

இசைந்தமா திராசையர்க் கினிய சேடனோ
முசண்டிவாழ் சவுண்டையன் மோக மைந்தனோ
வசந்தரை புகழ்மடி வாலை யன்றனக்
கசங்கிடா தேவல்செ யடிமைப் பையலோ.

(ப-ரை.) இசைந்த - (யாவராலும்) புகழப்பட்ட, மாதிராசையர்க்கு - சகளேச மாதிராசையர்க்கு; இனிய - விருப்பமுள்ள, சேடனோ-மாணாக்கனோ, முசண்டி வாழ் சவுண்டையன்-முசண்டிச் சவுண்டையனுக்கு, மோகம் - விருப்பமுள்ள, மைந்தனோ-புத்ரனோ, வசந்தரை புகழ்-உலகத்தாரால் புகழப்பட்ட, மடிவாலையன் தனக்கு-மடிவாலமாச்சையனுக்கு; அசங்கிடாது - சலிக்காமல், ஏவல் செய்-ஊழியஞ்செய்கின்ற, அடிமைப் பையலோ - தவசிப்பிள்ளையோ, எ-று.

(பொ-ரை.) யாவராலும் புகழப்பட்ட சகளேச மாதிராசையர்க்குவிருப்பமுள்ள மாணாக்கனோ? முசண்டிச் சவுண்டையனுக்கு விருப்பமுள்ள புத்ரனோ? உலகத்தாரால் புகழப்பட்ட மடிவாலமாச்சையனுக்குச் சலிக்காமல் ஊழியஞ் செய்கின்ற தவசிப்பிள்ளையோ?